Government of Madras.






MADRAS GOVERNMENT ORIENTAL SERIES

Published under the authority
of
The Government of Madras.

*General Editor:*
**Sri T. CHANDRASEKHARAN**, M.A., L.T.,
Curator, Government Oriental
Manuscripts Library, Madras.

No. CLXX

# ஹோமர் இலியதம்

# HŌMAR ILIYATHAM

EDITED BY

SRI M. PERIYASWAMI THOORAN, B.A., L.T.,
Editor, Tamil Encyclopaedia, Madras.

AND

SRI P. TIRUKUTASUNDARAM, M.A., B.L.,
Joint Editor, Tamil Encyclopaedia, Madras.

GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY,
MADRAS.

1961

Price Rs. 22·25

# INTRODUCTION

The public are perhaps aware of the fact that the Government of Madras have launched upon a scheme of publication of rare manuscripts treasured in two premier institutions of this State, namely, the Madras Government Oriental Manuscripts Library, Madras, and the Tañjōre Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore. Financial help has also been extended to Dr. U. V. Swaminatha Iyer's Library, Adyar, Madras, for similar purpose. Though the publication of rare manuscripts was started as early as 1909 by this library, only 12 works were taken up for publication till 1942. Of these, the printing of three works has not yet been completed.

Only in the year 1949—50 a regular scheme for the publication of manuscripts was prepared and accepted by the Government of Madras under the MADRAS GOVERNMENT ORIENTAL SERIES. This scheme included the manuscripts in all the South Indian Languages in which there are manuscripts in the library. Till now 158 manuscripts in different languages have been printed. Of these, 35 manuscripts are from the Tanjore Maharaja's Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore, and three from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar. In addition, four manuscripts, three from this library and one from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, are in the press.

All the manuscripts under the Madras Government Oriental Series were edited by various scholars drawn from different learned institutions. The publication of manuscripts under the Madras Government Oriental Manuscripts Series was resumed in the year 1950—51. All the manuscripts published under this series before 1942 were in Sanskrit But since 1950—51 the manuscripts in other languages also were included. These are edited by the Curator with the assistance of the Pandits in respective languages. Till now 60 works have been printed including 51 works since 1951.

The Government of India also have decided upon a programme of printing rare and useful manuscripts in the different languages of India. For this purpose the Ministry of Scientific Research and Cultural Affairs has come forward with grants-in-aid for some of the manuscripts libraries maintained by the State Governments and also for certain reputed private libraries. In the year 1959—60 the Government of Madras in G. O. No. 81859 E6/59—15 Education dated 5th January, 1960 Sanctioned the publication of the following seven manuscripts.

1. Tanippādarrirattu.
2. Kēraladesa Varalāru.
3. Kattabomman Varalāru.

4. Kalambakakkottu.
5. Uttara Rāmāyana Natākam.
6. Yāpparumkalam.
7. Palamolittirattu.

Of these the last one was dropped as it was found to contain a large number of colloquial terms. The printing of the other six manuscripts has been completed in the Madras Government Oriental Manuscripts Series as numbers 55, 56, 67, 68, 69 and 66.

During the year 1960—61 the Government of Madras have sanctioned in Memorandom No. 47522-E6/60-9 Education dated 30—12—60 and in G. O. No. 2749 Education dated 31—12—60, the publication of the following manuscripts.

TAMIL

1. S'ivapurānatottiramañjari.
2. Tiruvāymoli-Īttupravesa Sañgraham.
3. Vētālakkathai.
4. Homer's iliad.
5. Saptarishi Nādi-Kanyā lagnam.
6. Kunrakkudi Kumaran pēril Kīrtanaikal.
7. Divya Prabanda Akarādi.

PERSIAN

8. Tarikh-i-Hafeesullakhan.
9. Bahare-i-Azamzahe.
10. Sawanihat-i-Mumtaz.

SANSKRIT

11. Nyāyaratna Dipāvali.
12. Nyāyasāra.
13. Stotrārnavam.
14. Brahmasiddhi.

CATALOGUES

15. Triennial Catalogue of Tamil Mss. Vol. 12.
16. do do do 13.
17. Descriptive Catalogue of Marāthi Mss. Vol. 3.

The Government of India will be contributing 50% of the cost for the printing of the above works, which has to be completed by the end of March, 1961. With the exception of Brahmasiddhi in Sanskrit and the Catalogue of the Marāthi manuscripts, the other works may be printed before the end of the financial year. Except the Catalogues and Stotrārnava in Sanskrit, all the other works have been edited by outside scholars and hence they have been issued under the Madras Government Oriental Series as numbers 166 to 177. Stotrārnavam in Sanskrit

is edited by the Curator himself under the Madras Government Oriental Manuscripts Series as number 70.

The Government of Madras have constituted an Expert Committee for each South Indian Language in which there are manuscripts in the Government Oriental Manuscripts Library, for the purpose of selecting rare and important manuscripts for publication in the Madras Government Oriental Series. Till now the following number of manuscripts has been published in different languages.

| | | |
|---|---|---|
| Tamil | ... | [illegible] |
| Sanskrit | ... | 23 |
| Telugu | ... | 20 |
| Malayalam | ... | 20 |
| Kannada | ... | 14 |
| Persian | ... | 8 |
| Arabic | ... | [illegible] |

Under the same series the number of works published from the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore is as follows.

| | | |
|---|---|---|
| Tamil | ... | 12 |
| Sanskrit | ... | 10 |
| Telugu | ... | 5 |
| Marathi | ... | 6 |

The Dr. V. Swaminatha Iyer Library, Adyar has published under this series three Tamil works.

An Editorial Committee has been formed under the orders of the Director of Public Instruction, Madras, for selecting manuscripts in different South Indian Languages for publication in the Madras Government Oriental Manuscripts Series. The number of manuscripts published by this Library in this series is as follows.

| | | |
|---|---|---|
| Tamil | ... | 21 |
| Sanskrit | ... | 18 |
| Telugu | ... | 7 |
| Malayalam | ... | 9 |
| Kannada | ... | 7 |
| Marathi | ... | 2 |
| Persian | ... | 3 |

All the manuscripts in this series are edited by the Curator of this library with the help of the staff in different languages except the Stotrārṇavam that is edited by the Curator himself.

The present edition of " Homar Iliyatham " is based on four paper manuscripts preserved in this library described under R. Nos. 2456, 2457, 2458 and 2459. The size of the volumes is 13 × 8½ inches. The whole work is in four volumes containning 326 pages (volume I), 336 pages (Volume II), 496 pages (Volume III) and 397 pages (Volume IV), with 35—40 lines a page. This was presented in the year 1950—51 by Sri S. R. Anantarama Aiyar, Kulpathi, Palghat.

This is a direct Tamil translation from Alexander Pope's English version of Homer's Iliad.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the library aud consequently the mistakes that are found in them could not be corrected by collating them with other copies. The editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets. When different readings are found, they have been given in the foot-notes except in the case of a few books in which the correct readings have been given in the foot-note or incorporated in the text itself in square brackets.

The Government of India and the Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee and the Editorial Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field for readily consenting to edit the manuscripts and see them through the press. The various presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

It is hoped that the Government of India will be continuing their financial grant to this library year after year for undertaking the printing of other manuscripts.

Madras<br>21—2—1961

T. CHNDRASEKHARAN,<br>*Curator,*<br>*Govt. Oriental Manuscripts Library.*

# ஹோமர்

ஐரோப்பா, அமெரிக்கா ஆகிய கண்டங்களிலுள்ள நாடுகள், ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா, நியூஜீலாந்து முதலிய நாடுகள் இவை அனைத்தின் நாகரிகத்தின் அடிநிலை மூவாயிரம் ஆண்டுகளுக்குமுன் கிரீஸ் நாட்டில் தோன்றி வளர்ந்த நாகரிகமேயாகும். கிரேக்க மக்கள் தோற்றுவித்து வளர்த்த கலைகள், காவியங்கள், சமயம், ஒழுக்கம் முதலிய சகலவிதமான பண்பாட்டு அம்சங்களை வைத்தே வெள்ளை நிற மக்கள் அனைவரும் தங்கள் பண்பாட்டு அம்சங்களை வகுக்கவும், வளர்க்கவும் செய்தனர்.

கிரீஸ் நாட்டில் முதன் முதல் தோன்றிய காவியம் இலியதம் என்பது. அதை இயற்றியவர் ஹோமர் என்னும் மகாகவி. இவருடைய வாழ்க்கை வரலாறுகளைப் பலர் பண்டைக் காலத்திலேயே எழுதியுள்ளனர். ஆனால் அவை பலவிதங்களில் மாறுபடுகின்றன. ஆயினும் அறிஞர்கள் முடிவாக இவர் பிறந்த இடம் என்று ஏற்றுக்கொள்வது ஸ்மிர்னா (Smryna) அல்லது சியாஸ் (Chios). இவர் இருந்த காலம் கி. மு. 900க்கும், கி. மு. 800க்கு மிடையில் என்பர்.

ஹோமருடைய தாய்தந்தையர் எவர் என்று தெரியவில்லை. பண்டைக் கவிஞரான ஆன்டிபேட்டர் (Antipater) என்பவர் "ஹோமருடைய நாடு தேவலோகம், அவருடைய அன்னையார் காலியோப் (Calliope) என்ற நாமமுடைய கலைமகளே" என்று கூறுவதையே ஏற்றுக்கொள்ளவேண்டியதாக இருக்கின்றது.

ஹோமர் கண் குருடராயிருந்தார். சில பண்டைப் புலவர்கள் ஹோமர் என்னும் கிரேக்கச் சொல்லே குருடு என்று பொருள்படுவதாகும் என்பர். அதனால் கவிஞருடைய இயற்பெயர் இது என்று தெரிய மார்க்கமில்லை. ஆயினும் சிலர் அவருடைய இயற்பெயர் மெலிஸிஜினிஸ் (Melesignes) என்பர்.

ஹோமர் தாம் வாழ்ந்த காலத்துக்கு இருநூறு ஆண்டுகளுக்குமுன் நடந்த துரோஜப்போர் என்ற ஒரு நிகழ்ச்சியை வைத்து, அதனுடன் தாமாகப் பல கற்பனைப் பொருள்களும் சேர்த்து, இலியதம் என்னும் பெயருள்ள ஒரு காவியத்தை இயற்றினார். அது வால்மீகி இயற்றிய இராமாயணத்தையும், வியாசர் இயற்றிய மகாபாரதத்தையும் போன்ற இதிகாச காவியமாகும்.

ஹோமர் வறிஞராயிருந்தார். குருடராயிருந்த படியால் ஒரு சிறுவன் அவரைக் கூட்டிக்கொண்டு போவான். ஹோமர் கையில் ஒரு யாழ்போன்ற லயர் (Lyre) என்னும் வாத்தியத்தில் வாசித்துக்கொண்டு தாம் இயற்றிய கவிதைகளைப் பாடுவார். இத்தகைய பாணர்கள் பலர் இவருக்கு முன்னரும் பின்னருமிருந்தனர். இவருடைய கவிதைகளைப் பாடிச் சென்ற பாணர்கள் ஹோமரிடே

(Homeride) அதாவது ஹோமர் குழுவினர் என்று அழைக்கப் பட்டனர்.

கி. மு. 500ஆம் ஆண்டின்பின், ஹோமருடைய காவியங் கள் ஸ்பார்ட்டா நாட்டில் பாடப்பெற்று வரலாயின. அதுமுதல் அவற்றின் புகழ் வளர்ந்து வரலாயிற்று. அரசர்கள் அதைப் பெரி தும் விரும்பி அவற்றைச் செப்பம் செய்ய விரும்பினர். ஆதன்ஸ் நகரத்து அரசர் பிஸிஸ்டிரேட்டஸ் (Pisistratus கி. மு. 600—527) என்பவருடைய முயற்சியினுலேயே ஹோமருடைய காவி யங்கள் முதன்முதலாக எழுதப்பெற்றன. அதற்குமுன் அவை வாய்ப்பாட்டுக்களாகவே பயிலப்பட்டு வந்தன.

அதன்பின் கிரேக்க நாட்டிலிருந்த ஒவ்வொரு நகரத்திலும் ஹோமருடைய காவியங்கள் ஓர் அரிய கருவூலமாகப் பாதுகாக்கப் பட்டு வந்தன. மகா அலக்ஸாண்டர் என்னும் பேர்பெற்ற சக்கர வர்த்தி தமது தலையணைக்குக் கீழ் ஹோமருடைய இதிகாசங்களை வைத்துக்கொண்டு உறங்குவார் என்று கூறுவர்.

பிற்காலத்தில் ரோம இராச்சியத்திலிருந்த கவிஞர்கள் ஹோமருடைய கவிதைப்பாணியைப் பின்பற்றி வந்தனர். லத்தீன் மொழியிலுள்ள தலைசிறந்த இதிகாச காவியம் இனியதம் (Aeneid) எனப்பெறும். அதை விர்ஜில் என்னும் மகாகவி ஹோமருடைய இலியதத்தை முன்மாதிரியாக வைத்தே யாத்தார்.

ஐரோப்பிய வரலாற்றில் இருண்ட காலத்தில் (Dark Ages) ஹோமருடைய காவியங்கள் வழங்காதிருந்து மறைந்தன. ஆனுல் மத்திய காலத்தில் அக்காவியங்கள் போற்றப்பட்டு ஐரோப்பிய மறுமலர்ச்சிக்கு அடிகோலின. ஹோமருடைய காவியங்களே உலக காவியங்களுள் தலைசிறந்தவை என்று போற்றப்பெற்றன. அக்காலத்தில் கல்வித்திட்டங்களில் ஹோமருடைய காவியங்கள் சிறப்பான இடம்பெற்றிருந்தன.

பிரான்ஸ் நாட்டுப் பேரறிஞர் செயின்ட் பூவே (Sainte Beuve) "ஹோமருடைய காவியங்கள் மனிதகுலம் படைத்த கவிதையிற் தலைசிறந்தது" என்று போற்றுகின்றுர். ஆங்கில மகாகவி மாத்யூ ஆர்னுல்டு (Mathew Arnold) என்பவர் "ஹோம ருடைய இலியதம் என்னும் காவியமே மனிதன் கவிதைத் தேவ தைக்கு எழுப்பிய உன்னதமான நினைவுச் சின்னமாகும்" என்று கூறுகின்றுர்.

இத்தகைய புகழ்பெற்ற இலியதம் என்னும் காவியத்தை அலாக்ஸாண்டர் போப் என்னும் ஆங்கில மகாகவி மொழி பெயர்த்துக் காவியம் இயற்று முன்னர் பலர் மொழி பெயர்த்திருந் தனர். இவருக்குப் பின்னும் சிலர் செய்ததுண்டு. ஆனுல் போப் இயற்றிய காவியமே எல்லோராலும் போற்றப்படுகின்றது.

---

# ஹோமருடைய இலியதம்

ஹோமர் என்னும் கிரேக்க மகாகவி மூவாயிரம் ஆண்டு கட்கு முன்னர் கிரேக்கர்களுக்கும் துரோஜர்கட்கும் நடைபெற்ற போரை ஆதாரமாக வைத்து இலியதம் என்னும் காவியத்தை இயற்றினர். அந்தப் போர் நடைபெற்ற ஒன்றே. ஆனல் ஹோமருடைய காவியம், நடந்த நிகழ்ச்சிகள் எவை, அவருடைய கற்பனைகள் எவை, என்று பிரித்தறிய முடியாத விதத்தில் ஒன்ருய் இணைந்து அழகான ஒரு சித்திரத்தைத் தீட்டுகின்றது.

சின்ன ஆசியா என்று கூறும் பகுதியில் ட்ராய் என்னும் நகரம் இருந்தது. அதனல் அங்குள்ள மக்கள் துரோஜர்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்களுடைய அரசன் பிரியம், அவருடைய இராணி ஹெக்குபா. இவர்களுக்குப் பல குமாரர்கள் இருந்தனர். அவர்களுள் ஹெக்டர் என்பவன் வீரத்துக்கும், பாரிஸ் என்பவன் அழகுக்கும் பேர் பெற்றிருந்தனர்.

அக்காலத்தில் கிரீஸ் நாட்டில் ஒரு பகுதியாகிய ஸ்பார்ட்டா நாட்டை மனேல்லாஸன் என்ற அரசன் ஆண்டு கொண்டிருந் தான். அவனுடைய இராணி ஹெலன் கிரீஸ் நாடு முழுவதிலும் இணையற்ற அழகுடையவளாக விளங்கினுள்.

துரோஜ மன்னன் பிரியத்தின் மகன் பாரிஸ் என்னும் அழகன் மனேல்லாஸ மன்னனிடம் தூதுவனுக வர நேர்ந்தது. ஆனல் அவன் வந்த சமயம் அரசன் அயலூர் போயிருந்தான். பாரிஸ் பெண்களை மயக்கும் ஆற்றலை சில தேவதைகளிடமிருந்து பெற் றிருந்தான். அதனல் ஹெலன் பாரிஸின் வசமானுள். அவன் அவளைக் கூட்டிக்கொண்டு தனது ட்ராய் நகரத்துக்குச் சென்ருன்.

மனேல்லாஸன் அதனல் அவளை மீட்கவேண்டும் என்று விரும்பி கிரேக்க மன்னர்கள் சபையைக் கூட்டினன். அவன் ஹெலனை மணந்த சமயத்தில், அவசியம் ஏற்பட்டால் தாங்கள் வந்து உதவுவதாக கிரேக்க மன்னர்கள் மனேல்லாஸனுக்கு வாக்கு அளித்திருந்தனர்.

ஆகவே அவர்கள் ட்ராய்மீது படை எடுக்க முடிவு செய்து தங்கள் படைகளுக்குச் சேனதிபதியாக மனேல்லாஸனுடைய சகோதரனுகிய ஆகமனனைத் தேர்ந்தெடுத்தார்கள். போருக்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் செய்தனர்.

போர் தொடுக்கச் சென்ற வீரர்களில் மிகவும் முக்கியமான வர்கள் அகிலேசன், யுலிஸ்ஸீஸ், நெஸ்டார். அகிலேசனே கிரேக்க வீரர்களின் சிகாமணி. யுலிஸ்ஸீஸ் யோசனைகள்

சொல்லுவதில் பேர்பெற்றவன். நெஸ்டார் வயதானவர், அனுபவம் நிறைந்தவர், எல்லோராலும் மதிக்கப்பெற்றவர்.

படைகள் திரட்டிய பின்னர் கிரேக்க மன்னர்கள் ட்ராய்க்குச் சென்று முற்றுகையிட்டனர். ஒன்பது ஆண்டுகள் போர் நடந்தும் வெற்றி தோல்வி நிச்சயமாகவில்லை.

பத்தாம் ஆண்டில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. கிரேக்க சைனிகர்களும் வீரர்களும் போரில் சிறைபிடித்த ஒரு பெண்ணை அகிலேசனுக்கு அளித்தனர். ஆனால் ஆகமனன் அவளைத் தனக்கு வேண்டும் என்று கைப்பற்றினான். அதன் காரணமாக அகிலேசனுக்கு அடங்காக் கோபம் உண்டாயிற்று.

இதிலிருந்தே ஹோமர் தமது கதையை ஆரம்பித்துப் பாடுகின்றார். அதனால் ஹோமருடைய காவியமானது அகிலேசனுடைய கோபத்தைக் கூறுவதே பிரதான நோக்கமுடையது என்று அறிஞர்கள் கூறுவர்.

அகிலேசன் கடைசியில் ஹெக்டரைக் கொன்று தன்னுடைய தேர்க்காலில் கட்டி இழுத்து வருகிறான். ஹெக்டர் உடலைத் தருமாறு அவனுடைய தந்தை பிரியம் அகிலேசனிடம் வந்து இரக்கின்றார். அகிலேசன் மனமிரங்கி ஹெக்டர் உடலைத் தந்து பிரியம் மகாராஜனை உபசரித்து அனுப்புகின்றான்.

இத்துடன் ஹோமருடைய காவியம் முடிவடைகின்றது.

# ஹோமர் இலியதம்

## ஆங்கிலக் கவிதையாகச் செய்த
## அலெக்ஸாண்டர் போப்
## Alexander Pope 1688—1744

இவர் இங்கிலாந்தில் தோன்றிய மகாகவிகளுள் ஒருவர். இவர் லண்டன் மாநகரத்தில் ஓர் அறுவை வணிகருடைய மகனு ராகப் பிறந்தார். இவர் தந்தையைப் போல் பலவீனராகவும், தாயைப்போல் இடைவிடாத தலைவலி உடையவராகவுமிருந்தார்.

இவர் முதலிற் பள்ளியில் கல்வி பயின்றார். ஆனால் இவர் ஆசிரியர்மீது கேலிக்கவிதை இயற்றியதால் தண்டனைபெற்றார். அதனால் பள்ளிப்படிப்பு நின்றது. வீட்டில் இருந்துகொண்டு தாமே தம்முடைய ஆசிரியராக இருந்து கல்வி பயின்று வந்தார். இவர் சிறு வயதில் அளவுக்கு மிஞ்சிப் படித்து வந்த படியால் இவ ருடைய முதுகு வளைந்து போயிற்று. அதனால் இவருடைய வளர்ச்சி குன்றியது. உடல் நலம் குறைந்தது. இவர் தமது வாழ்வை ஒரு நீண்டகால நோய் என்றே கூறுவார்.

இவர் சிறுவயதிலேயே கவிதைகளைக் கற்பதில் மிகுந்த பற்றுடையவராயிருந்தார். அதனால் இவர் ஆங்கிலக் கவிதை களைப் போலவே பிரெஞ்சு, இத்தாலி, லத்தீன், கிரீக் ஆகிய மொழிகளிலுள்ள சிறந்த கவிதைகளையும் மிகுந்த ஆவலுடன் படித்து வந்தார்.

இவர் பிற்காலத்தில் தம் கல்வி பற்றிக் கூறும்போது பூங்கா வில் பூக்கள் பறிப்பதுபோல் நான் நூல்களிலிருந்து அறிவும் மொழி யும் பெற்றேன் என்று கூறுவார்.

இவர் தாமாகக் கற்று வந்ததால் இளமையிலேயே கவிதை புனையும் ஆற்றல் பெற்றார். கவிதை வருகிறது, கவிதை எழுது கிறேன் என்று கூறுவார். இவர் தாம் கற்கும் கவிஞர்களுடைய கவிதைகளைப் போல் கவிதைகள் இயற்றுவார். இவ்வாறு இயற்றியவற்றுள் 'தனிமைக் கவிதை' (Ode on Solitude) என்பது சிறந்ததாகும்.

இவர் தமது 21-ஆம் வயதில் தம்முடைய கவிதைகளை முதன் முதலாக வெளியிட்டார். இரண்டு ஆண்டுகள் சென்ற பின்னர் 'மதிப்புரைக் கட்டுரை' (An Essay on Criticism) என்ற கவிதையை இயற்றினார். அடுத்த ஆண்டில் 'தலைமுடி அபகரணம்' (Rape of the Lock) என்ற கேலிச் சித்திரக் கவிதையை இயற்றினார்.

போப் 1715—20-ல் ஹோமருடைய இலியதம் (Illiad) என்ற காவியத்தையும், 1725—26-ல் அதிசயம் (Odyssey) என்ற காவியத்தையும் ஆங்கிலச் செய்யுள் நடையில் மொழி பெயர்த் தார். இவை அவருக்குப் போதுமான பண வருவாய் அளித்தன.

அதன்பின் போப், ஷேக்ஸ்பியர் நாடகங்களிலுள்ள இக் காலத்துக்கு ஒவ்வாத பகுதிகளை நீக்கிவிட்டுப் பதிப்பித்தார். இதைச் சிலர் கண்டித்து எழுதினர். அதன் மேல் போப் டன்ஸியட் (Dunciad) என்ற கவிதையை எழுதினார். டன்ஸ் (Dunce) என்னும் சொல்லின் பொருள் முட்டாள் என்பதாகும். இந்தக் கவிதையில் போப் தம்மைக் கண்டித்தவர்களை இலக்கியச் சுவை அறியாத முட்டாள்கள் என்று கூறிக் கேலி செய்தார்.

அதன் பின் போப் அறநெறி பற்றிய கட்டுரைகள் (Moral Essays) நான்கு கவிதைகளாக இயற்றினார், அவற்றுள் மனிதன் பற்றிய கட்டுரை (The Essay on Man) என்பது புகழ் வாய்ந்த தாகும்.

அதன் பின் போப் பல எள்ளித் திருத்தும் கவிதைகள் (Satires) யாத்தார். இவற்றிலும், அறநெறிக் கவிதைகளிலும் போப் சிறந்த ஒழுக்கங்களை அழகாக மனத்தில் பசுமரத்தாணிபோல் பதியுமாறு தந்துள்ளார்.

போப் நோயாகவே யிருந்தபடியால் எந்த நேரமும் பேனா வும் கையுமாகவே இருப்பார். இவர் பல வசன நடை நூல்களும் எழுதியுள்ளார். இவருடைய கடிதங்கள் (Letters) ஐந்து தொகுதி களாக வெளிவந்துள்ளன.

போப் ஹோமருடைய காவியத்தின் மொழி பெயர்ப்பை வெளியிட்டபோது 1717-ல் சிஸ்விக் என்ற ஊரில் வசித்தார். அவ் வருஷம் தந்தை இறக்கவே போப் தாயாருடன் டுவிக்கன்ஹாம் என்ற ஊரில் போய் வசிக்கலானார். இங்கு தான் இறக்கும் வரை வாழ்ந்து வந்தார். 1733-ல் தாயார் இறந்தார். போப் தாயா ரிடத்தில் அளவற்ற அன்புடையவர். அவருக்கு வேண்டிய சிசுருஷைகள் எல்லாம் இறுதிவரை மிகுந்த வாஞ்சையுடன் செய்தார்.

போப் மணம் செய்துகொள்ளவில்லை. பத்து ஆண்டுகள் சென்ற பின் 1744 மே முப்பதாம் நாள் போப் இறந்தார். அவ ரைப் புதைத்த கோயில் கல்லறையில் 17 ஆண்டுகள் சென்றபின் ஒரு நினைவுச் சின்னம் நிறுவப் பெற்றது.

போப் எட்டு வயதாயிருக்கும் போதே ஹோமருடைய காவியங்களைப் படித்து மகிழ்ந்தார். 'எனக்குக் கவிதை எழுத வேண்டுமென்ற ஆவலை எழுப்பியவர் ஹோமரே' என்று அவர் கூறுகின்றார். போப் சிறுவயதில் ஹோமர் போலக் கவிதைகள் எழுதப் பல தடவைகள் முயன்றார். அதனாலேயே அவர் 1713லேயே ஹோமருடைய காவியங்களை மொழிபெயர்த்துத் வெளியிடத் துணிவு கொண்டார். ஆங்கில மொழிமட்டும் தெரிந்த மக்கள் ஹோமருடைய காவியங்களைப் பயின்று மகிழவும் பயன் பெறவும் கூடிய வாய்ப்பை அலெக்ஸாண்டர் போப்பினாலேயே பெற்றுள்ளனர் என்று கூறினால் அது மிகையாகாது.

---

# காவியத்தில் வரும் பெயர்களின் அகராதி

***அக்கேயர்*** Achaeans: கிரீஸில் பெலப்பொனேஸியா என்ற பகுதியின் வட பாகத்தின் ஆதிப் பெயர் அக்கேயா என்பது. அதனால் இங்குள்ள மக்கள் அக்கேயர் என்று அழைக்கப்படுவர்.

*அகிலேசன்* Achilles: இவனே இலிதயம் என்னும் ஹோமருடைய காவியத்தின் கதா நாயகன். மிர்மிடோனியர்களின் அரசனான பீலியஸ்ஸின் புத்திரன். தெட்டிஸ்தேவி என்னும் நீரதையிடம் பிறந்தவன். இவன் தந்தை பெயரை வைத்து பிலீதீசன் என்றும், பிலியன் என்றும் அழைக்கப்படுவான். இவனுக்கு பீனிக்ஸ் என்பவன் நாவன்மையும் யுத்த தந்திரங்களும் கற்றுக் கொடுத்தான். ஸிரான் இவனுக்கு மருத்துவம் கற்றுத்தந்தான். இவன் தாயான தெட்டிஸ்தேவி இளமையில் புகழுடன் இறத்தல், அல்லது முதுமையில் இகழுடன் இறத்தல் எது தேவை என்று கேட்டபோது இவன் முந்தியதை விரும்பினான். இவன் துரோஜ யுத்தத்தில் கலந்தான். உயிருடன் திரும்புவதில்லை என்று தெரியும்.

அகிலேசனுக்கு வீரர்கள் அளித்த பிரைஸீஸ் என்னும் அழகியை ஆகமனன் கைப்பற்றியதால் அகிலேசன் யுத்தத்தில் ஈடுபடாமல் விலகியிருந்தான். அக்கேயர் என்னும் கிரேக்கர்கள் அகிலேசனைக் கௌரவிக்கும்வரை துரோஜர்களே வெற்றி பெறுவர் என்று ஜோவ் தேவர் அவனுடைய தாயாகிய தெட்டிஸ் தேவிக்கு வாக்களித்தார். கிரேக்கர்களுக்கு கஷ்டம் ஏற்படவே பிரைஸீஸையும் பரிசுகளும் தருவதாகவும், போர்புரிய வரவேண்டும் என்பதாகவும் தூது அனுப்பினர். அகிலேசன் இசையவில்லை. அனால் அவன் நண்பன் பத்ரகலுஷன் வேண்டிய பின்னர் அவனைத் தன் ஆயுதங்களை அணிந்து போர்க்குச் செல்ல அனுமதித்தான். பத்ரகலுஷன் கொல்லப்பட்டான். அகிலேசன் துக்கத்தில் ஆழ்ந்தான். தெட்டிஸ் தேவி அவனுக்கு வல்க்கனிடமிருந்து புதிய ஆயுதங்கள் கொண்டு வந்து தரவே போர்க்களம் சென்று ஹெக்டரைக் கொன்று அவன் பிணத்தைத் தன் தேரில் கட்டி இழுத்து வந்தான். பிரியம் பிரார்த்தித்தபோது ஹெக்டர் உடலை அவனிடம் தந்தான். அகிலேசனே கிரேக்கர்கள் அனைவரிலும் அழகிலும் வீரத்திலும் தலையானவன்.

***அதிசயம்*** Odyssey: ஹோமர் எழுதிய மற்றொரு இதிகாச காவியம். இதில் யுலிஸ்ஸீஸ் என்னும் அதிசியஸ் என்னும் கிரேக்க வீரன் துரோஜ யுத்தத்துக்குப் பின்னர் கிரீஸ் நாட்டுக்குச் செல்லும்போது ஏற்பட்ட அவனுடைய பிரயாணங்களும் துன்பங்களும் கூறப்பட்டுள்ளன. இந்தக் காவியம் அதன் அழகான கவிதைச் சுவைக்குப் பேர் பெற்றது.

***அதிரிதீசன்*** Atrides: அதிரீசன் மக்களான ஆகமனனும் மனேல்லாஸனும் அதிரிதீசர் என்று அழைக்கப்பட்டனர்.

***அதிரீசன்*** Atrius தன் மகன் பிளிஸ்தெனீஸ் இறந்தபின் அவனுடைய மனைவி எரோப்பி என்பவளை மணந்தாள். அவளுக்கு ஆகமனன், மனேல்லாசன். அனக்ஸிலியா என்ற மூன்று குமாரர்கள் பிறந்தனர். அதிரீசன் மைசீனியா அரசனுடைய மகன்.

***அதீனு*** Athena: இவள் மறுபெயர் மினர்வா. பார்க்க மினர்வா.

*அந்திலோக்கஸ்* Antilochus: நெஸ்டாரின் புதல்வன். துரோஜ யுத்தத்துக்குத் தந்தையுடன் சென்று வீரத்தைக் காட்டினுன். இத்தியோப்பியனுன மெம்னுன் இவனைக் கொன்றுன்.

*அப்பால்லோ* Apollo: கிரேக்கர்களுடைய முக்கியமான தேவர்களுள் ஒருவன். இவனே சூரிய பகவான். இவன் கலை, கவிதை, மருத்துவம் ஆகியவற்றின் தேவதை. ஜோவ் தேவருக்கு லேட்டா தேவியிடம் பிறந்தவன். ஆர்ட்டிமிஸ்ஸும் இவனும் இரட்டைப் பிள்ளைகள். பார்க்க: பீபஸ்.

***அஜாக்ஷன்*** Ajax,: அஜாக்ஷன் என்ற பெயருடைய கிரேக்க வீரசிகாமணிகள் இருவர் இருந்தனர். ஒருவன் அஜாக்ஷன் திலயான். மற்றவன் ஆயிலிய அஜாக்ஷன்.

அஜாக்ஷன் திலமான்: இவன் சலாமஸ் நாட்டு அரசனுன திலமானுடைய மகன். இவனை ஹோமர் அஜாக்ஷன் என்று மட்டுமோ அஜாக்ஷன் திலமான் என்றே குறிப்பிடுவார். இவனே மற்றவனினும் சிறந்த வீரன். அதனுல் மகா அஜாக்ஷன் என்றும் அழைக்கப்படுவான். இவன் வீரத்தில் அகிலேசனுக்கு அடுத்த படியில் எண்ணப்படுவான். பார்க்க: ஆயிலிய அஜாக்ஷன்.

***அஜினுர்*** Agenor: துரோஜ விருத்தர் ஆந்தினுரின் புதல்வன் மிகச் சிறந்த துரோஜ வீரர்களுள் ஒருவன்.

***ஆட்டோமிடான்*** Automedon: அகிலேசனுடைய சாரதி, அகிலேசன் இறந்தபின் பைரஸின் நண்பன்.

***ஆந்திரமகி*** Andromache: ஹெக்டரின் மனைவி, பதிவிரதா தர்மத்துக்குப் பேர் போனவள். இவளுக்கு ஒரு மகன், அவன் சியாமந்திரியன் என்றும் ஆஸ்தியனுக்ஷன் என்றும் அழைக்கப்படுவான். ட்ராய் யுத்தம் தோற்றதும் இவள் அகிலேசன் மகன் நியோப்தோலிமஸ் என்பவனுக்குத் தரப்பட்டாள், அவன் அவளை ஹெக்டரின் தம்பி ஹெலனஸ் என்பவனுக்குத் தந்தான்.

***ஆயிலிய அஜாக்ஷன்*** Oileun Ajax: இவர் இயற் பெயர் அஜாக்ஷன். இவன் ஆயிலியஸ் என்பவர் மகன். விரைவாக ஓடுவதில் பேர் பெற்றவன். இவன் ட்ராய் வீழ்ந்தபின் அதீனு தேவியின் கோயிலில் பிரியம் அரசனுடைய மகள் கசாந்தராவைக் கற்பழித்தான். அதனுல் ஊருக்குத் திரும்பிச் செல்லும்போது இவனுடைய கப்பலை உடையுமாறு தேவர்கள் செய்தனர்.

***ஆர்ட்டிமிஸ்*** Artemus: ஜோவ் தேவருக்கு லெட்டோவிடம் அப்பால்லோ என்பவரும் ஆர்ட்டிமிஸ் என்பவளும் இரட்டைப் பிள்ளைகளாகப் பிறந்தனர். ஆர்ட்டிமிஸ் மிகச் சிறந்த கிரேக்க தேவதைகளுள் ஒருத்தியாவாள். இவள் நித்திய கன்னி. வில்லும் அம்பும் தரித்த வேட்டுவச்சி. ஆடுமாடு மந்தைகளுடைய இரட்சகி, கற்புத் தெய்வம்,

***ஆஸ்திஞக்ஷன்*** Astyanax: ஹெக்டருக்கு ஆந்திரமகியிடம் பிறந்தவன். டிராய் பிடிபட்டதும் கிரேக்கர்கள் இவனை ட்ராய்க் கோட்டைச் சுவரிலிருந்து தள்ளிவிட்டனர். இவஞல் டிராய் இராச்சியம் உயிர்த்தெழலாகாது என்பதே அவ்வாறு செய்ததன் நோக்கம்.

***இத்தாக்கா*** Ithaca: இது கிரீஸ் நாட்டிற்குக் கிழக்கிலுள்ள அயோனியன் கடலிலுள்ள ஒரு தீவு. இதை ஆண்ட யுலிஸ்ஸஸ் என்ற வீரன் கிரேக்கர்களுக்கு துரோஜ யுத்தத்தில் உதவி செய்தான். பார்க்க: யுலிஸ்ஸிஸ்.

***இலியம்*** Illium: என்பது ஆசியா மைனரில் இருந்த கடற்கரைப் பட்டினம். இது ட்ராய் என்றும் அழைக்கப்பெறும். இப்பெயர் காரணமாகவே இங்கு நடந்த யுத்தத்தைப்பற்றி ஹோமர் எழுதிய காவியம் இலியதம் எனப்பட்டது. பார்க்க: டிராய்.

***எரினீஸ்*** Erineys: இவர்கள் இரவின் புத்திரிகள். சிறகுகள் உடையவர்கள். இவர்கள் தலை மயிரில் பாம்புகள் பின்னியிருக்கும். இவர்கள் கண்களிலிருந்து இரத்தம் சொட்டிக் கொண்டிருக்கும். இவர்கள், பெற்ருேர் நிந்தனை, விருத்தரிடம் அவமரியாதை, பொய்ச் சான்று பகர்தல், கொலை, விருந்து கொல்லுதல், இரங்குவோரிடம் தவருக நடத்தல் ஆகியவைகளைத் தண்டிப்பர். இவர்கள் பழி வாங்கும் தேவதைகள் எனப்படுவர்.

***ஐடோமெனியஸ்*** Idomeneus: இவன் துரோஜ யுத்தத்தில் ட்ராய்க்கு விரோதமாகக் கிரேக்கர்களுக்கு உதவி செய்யச் சென்ற கீரீட் தீவின் அரசன்.

***ஐரிஸ்*** Iris: தேவர்களின் தூதி, வானவில் போன்ற உருவமுடையவள்.

***கஸாந்தரா*** Cassandra: பிரியம் மகாராஜன், ஹெக்குபா இருவர்க்கும் பிறந்த மகள். இவளும் ஹெலனஸூம் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தனர். இவளுடைய அழகைக் கண்டு மயங்கி அப்பால்லோ இவள் தன் இச்சைக்கு இசைந்தால் இவளுக்கு வருங்காலம் உரைக்கும் ஆற்றலை அருளுவதாகக் கூறிஞர். அவள் அந்த ஆற்றலைப் பெற்றபின், தன் வாக்கின்படி நடக்க மறுத்தாள். அதன் மேல் அப்பால்லோ தேவர் அவள் கூறுவது பலிக்காது என்று சபித்தார். ட்ராய் பிடிபட்டபோது இவள் அதிஞ கோவிலுக்கு ஓடிஞள். ஆயிலிய அஜாக்ஷன் அவளைப் பிடித்து வந்தான். யுத்த முடிவில் ஆகமனனுக்கு இவள் கிடைத்தாள். ஆகமனன் தன் ஊருக்குக் கொண்டுபோனபோது அவன் மனைவி இவளைக் கொன்ருள்.

***சியமந்தர நதி*** Scamander: துரோஜ நாட்டிலுள்ள புகழ் பெற்ற ஆறு. இந்த ஆற்றின் தேவன் ஸாந்தஸ் என்று அழைக்கப்பட்டான்.

***சியமந்திரியஸ்*** Scamandrius என்பவன் ஹெக்டர் ஆந்திரமகி, இருவருடைய மகன். இவன் தந்தை ஹெக்டர் டிராய் நகரத்தின் பாதுகாவலன் என்று மக்கள் கருதியதால் மக்கள் ஹெக்டர் மகனை ஆஸ்திஞக்ஷன் என்று அழைத்தனர்.

*ட்ராய்* Troy: ஆசியா மைனரிலுள்ள கடற்கரைப்பட்டினம். இந் நகரத்தார் துரோஜர்கள் எனப்படுவர். அதனால் இவர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் நடந்த யுத்தம் துரோஜ யுத்தம் எனப்படும். இதற்குமற்றொரு பெயர் இலியம், இந்தப் பெயரை வைத்தே ஹோமர் எழுதிய காவியம் இலிதயம் எனப்பட்டது. இந்த நகரம் கிரேக்கர் களின்படையெடுப்பால் வீழ்ந்தது கி. மு. 1184-ல் என்பர்.

*டால்திபியஸ்* Talthybius என்பவன் ட்ராய் யுத்தகளத்தில் ஆகமனனுடைய கட்டியக்காரன்.

*டியூஸர்* Teucer: இவன் அஜாக்ஷன் திலமான் என்பவ னுடைய தம்பி. துரோஜ யுத்தத்துக்குச் சென்ற வீரர்களுள் அம்பு எய்வதில் தலையாய திறமையுள்ளவன்.

*தயானு* Diana: இவள் ஆர்ட்டிமிஸ் தேவி என்னும் பெயர் பெறுவள். இவள் நித்தியகன்னி. கன்னிகளுடன் வேட்டையாடு வதிலேயே விருப்பமுள்ளவள். பார்க்க: ஆர்ட்டிமிஸ்

*தயோமதி* Diomedes: இவன் தீடியஸ்ஸின் மகன். ஆதலால் திடிதீசன் என்றும் அழைக்கப்பெறுவான். இவன் அட்ராஸ்டன் இறந்தபின்னர் ஆர்காஸ் நாட்டின் அரசன் ஆனான். இவன் துரோஜ யுத்தத்துக்கு 80 கப்பல்களுடன் சென்றான். அகிலேசனுக்கு அடுத்த படியில் வைத்து எண்ணப்படும் மகாவீரன். இவன் அதினு தேவி யின் விசேஷப் பாதுகாப்புப் பெற்றிருந்தான்.

*திடிதீசன்* Tydides: இவன் தீடியஸ்ஸின் மகன். இவன் இயற் பெயர் தயோமதி. தந்தை பெயரை வைத்து திடிதீசன் என்றும் அழைக்கப்படுவான். பார்க்க: தயோமதி.

*தெட்டிஸ்தேவி* Thetis: இவள் ஒரு கடல் தேவதை. இவள் தன்னுடைய சகோதரிகளான நீரதைகளுடன் கடலின் அடித்தளத் தில் வசித்தாள். இவள் ஒரு சமயம் டயோனிஸஸ் என்பவரை வர வேற்றதால் அவர் இவளுக்குத் தங்கக் கிண்ணம் ஒன்று தந்தார். வல்க்கனை ஜூனோ விண்ணுலகிலிருந்து தள்ளியபோது அவனை தெட்டிஸ் தேவி வரவேற்று உதவி செய்தாள். ஜூனோதான் இவளை வளர்த்தவள். பீலியஸ் என்ற அரசனை தெட்டில் தேவி மணந்து அவனுக்கு அகிலேசனைப் பெற்றாள்.

*நியோப்டோலிமஸ்* Neoptolemus: இவன் அகிலேசனுடைய மகன். பிர்ரஸ் என்றும் அழைக்கப் பட்டான். இதற்குக் காரணம் இவன் தலை மயிர் அழகாயிருந்ததே என்பர். நியோப்டோலிமஸ் என்பது இளவீரன் என்று பொருள்படும். தந்தை பெயரை வைத்து அகிலிதீசன் என்றும் அழைக்கப்படுவான். பாட்டன் பெயரை வைத்து பிலிதீசன் என்றும் அழைப்பதுண்டு. இவனும் பிலோக் டிட்டீஸ் என்பவனும் வந்தால்தான் ட்ராய் வீழும் என்று ஜோசியம் சொல்லப்பட்டதால், யுலிஸ்ஸீஸ் இவனை ஸ்கைரோஸ் என்னுமிடத்தி லிருந்து கொண்டு வந்தான். டிராய் வீழ்ந்தபின் இவன் பிரியம் மகாராஜனைக் கொன்றான்.

**நியோபி** Niobe: இவள் தந்தாலஸ் என்னும் தேவனுடைய மகள். தீப அரசர் ஆம்பியானை மணந்து ஏழு புதல்வர்களையும் ஏழு புதல்விகளையும் பெற்றாள். புதல்வர்கள் அறிஞர்களாகவும் புதல்விகள் அழகிகளாகவும் இருந்ததால் நியோபி அப்பாலோவுக்கும் ஆர்டிமிஸ்ஸூக்கும் தாயான லாதனு தேவிக்குச் செய்யும் வழிபாடுகளை விடத் தனக்கே அதிகம் செய்யவேண்டும் என்றாள். அதனால் லாதானுவின் சொற்படி அவளுடைய மக்கள் இருவரும் சேர்ந்து குழந்தைகளில் குளோரிஸ் என்னும் புதல்வியைத் தவிர ஏனையோர் அனைவரையும் தங்கள் அம்பால் கொன்றனர். நியோபி அழுது புலம்பினாள், தேவர்கள் இவளைக் கல்லாக ஆக்கிய பின்னரும் அழுதுகொண்டே இருந்தாள். ஆம்பியான் தற்கொலை செய்து கொண்டான்.

**நெப்தியூன்** Neptune: இவன் சமுத்திர தேவன், இவன் போர்த் தேவனாகவுமிருந்தான். இவன் தந்தை குரோனஸ், தாய் ரீயா. கிரேக்கர்கள் இவனை பாஸிடான் என்று அழைத்தனர். இவன் ஜூப்பிடரின் சகோதரன். ஜூப்பிடருக்கு அடுத்தபடியாக உலகத்தை ஆள்பவன். இவனுக்கே உலகிலுள்ள எல்லா நீர்களும் அடங்கியிருந்தன.

நெப்தியூன் தன்னுடைய பங்குக்கு அதிகமாகக் கேட்டபோது ஜூப்பிடர் இவனை ட்ராய் நகரத்தின் மதில்களை அதன் அரசன் லயோமீடானுக்குக் கட்டித்தருமாறு கூறித் தண்டித்தார். அப்பால்லோ இசை மீட்டி அதன் சுவர்களைத்தாமாக எழுமாறு செய்து உதவி செய்தார். ஆனால் அரசன் அவர்கள் இருவருக்கும் பரிசு தர மறுத்தான். ஆதலால் அவர்கள் இருவரும் துரோஜ யுத்தத்தில் துரோஜர்களுக்கு விரோதமாகக் கிரேக்கர்களுக்கு உதவி செய்தனர்.

**நெஸ்டார்** Nestor: கிரீஸ் நாட்டின் தென் பகுதியில் பைலாஸ் என்ற பிராந்தியத்தின் அரசர் இவர். நீலியஸ் என்பவருடைய பதினொரு புத்திரர்களை ஹெர்குலீஸ் கொன்றார். பன்னிரண்டாம் புதல்வரான நெஸ்டார் மட்டும் தப்பினார். இவர் 75 வருஷ காலம் அரசு செய்தார். இவர் வயதான விருத்தராகவிருந்தும் மற்ற கிரேக்க வீரர்களுடன் சென்று துரோஜ யுத்தத்தில் கலந்துகொண்டார். இவர் நாவன்மை, நீதியுணர்ச்சி, யுத்த முறை அறிவு ஆகியவற்றுக்குப் பேர்போனவர். இவர் வயதாய்விட்டபடியால் வழவழ என்று பேசிக் கொண்டே இருப்பார். டிராய் நகரம் வீழ்ந்தபின் இவர் சுகமாகத் தம் பைலாஸ் நாட்டுக்கு வந்து சேர்ந்தார். ஹோமர் இவருடைய அறிவைப் புகழ்கின்றார். இக்காலத்தில் மிகுந்த அறிவுள்ளவரை மேனாட்டில் "நெஸ்டார்" என்று கூறுவர்.

**பத்ரகலுஷன்** Patroclus: இவன் சிறுவனாயிருக்கும்போது தன்னை அறியாமலே ஒருவனைக் கொலை செய்துவிட்டான். அதனால் இவன் தந்தை இவனை பீலியஸிடம் அழைத்துச் சென்றான். அப்போது பத்ரகலுஷன் அகிலேசனுடைய நட்பைப் பெற்றான். துரோஜ யுத்த களத்துக்கு அவனுடன் சென்றான். அகிலேசன் யுத்தம் புரியாமல் விலகியபோது, இவனும் விலகி அவனுடன் தங்கினான். பின்னர் அகிலேசன் அனுமதி பெற்று யுத்தம் செய்தான். ஹெக்டரால் கொல்லப் பெற்றான். அகிலேசன் கோபங் கொண்டு

யுத்தம் செய்து ஹெக்டரைக் கொன்று பழிக்குப் பழி வாங்கினுன். அகிலேசன் பத்ரகலுஷனிடம் கொண்ட அன்பு ஹோமருடைய இலியத்தில் படித்து இன்புறத் தக்கது.

*பாரிஸ்* Paris: டிராய் மன்னன் பிரியம், ஹெக்குபா இருவருடைய மக்களுள் ஒருவன். ஹெக்டருடைய தம்பி. மிகுந்த அழகுடையவன். இவன் ஹெலனைத் தூக்கி வந்ததால் துரோஜ யுத்தம் நடந்தது.

*பாலஸ்* Pallas: அதீனு என்னும் யுத்த தேவதை. பார்க்க அதீனு.

*பாலிடோர்* Polydore: டிராய் மன்னன் பிரியத்தின் கடைசி மகன். அகிலேசனுல் கொல்லப்பட்டான்.

*பிரிஜியா* Phrygia: என்பது சின்ன ஆசியாவிலுள்ள ஒரு நாடு. பிரிஜியர்கள் திரேசிய வம்சத்தவர்கள். இவர்களே மேனுட்டில் புள்ளாங்குழலை உண்டாக்கியவர்கள். பண்டைப் புலவர்கள் துரோஜர்கள் என்று கூறுவதை பிரிஜியர்கள் என்ற பெயராலுங் கூறுவர். பிரிஜியர்கள் ஸங்கேரியஸ் நதிக் கரையில் வாழ்ந்து வந்ததாக ஹோமர் கூறுவர்.

*பிலிதீசன்* Pelides: அகிலேசன் என்னும் மகாவீரன் பிலியஸின் மகன்; அதனுல் பிலிதீசன் என்றும் அழைக்கப்படுவான்.

*பீபஸ்* Phoebus என்பது அப்பால்லோஸின் பெயர்களுள் ஒன்று. அது பிரகாசமான என்றும் தூய்மையான என்றும் பொருள் படும். பார்க்க: அப்பால்லோ.

*பீலியஸ்* Peleus: தெஸ்ஸலே நாட்டில் மிர்மிடோனியர்களுடைய அரசனுயிருந்தான். இவன் தெட்டிஸ் என்னும் தேவியை மணந்து அகிலேசனைப் பெற்ருன். விருத்தனுக இருந்தபடியால் இவன் அகிலேசனுடன் வந்து டிராய் யுத்தத்தில் கலந்துகொள்ள வில்லை. அகிலேசன் இறந்த பின்னரே இவன் இறந்தான்.

*பீனிக்ஸ்* Phoenix அமிந்தாருக்கு கிளியோபூல் என்பவளிடம் பிறந்தவன். தந்தை ஒரு பரத்தையிடம் காதல் செய்தபோது தாய் இவனை அப்பரத்தையின் காதலைப் பெறுமாறு தூண்டினுள். இவன் அவ்வாறே செய்ததால் தந்தை கோபங் கொண்டு இவனைச் சபித்தான். இவன் பித்தியாவுக்கு ஓடினுன். அங்கு பீலியஸ் வரவேற்று இவனை டோலோப்ஸ் என்னும் நாட்டின் அரசனுகவும் தன் மகன் அகிலேசனுக்கு ஆசானுகவும் ஆக்கினுன். பீனிக்ஸ் அகிலேசனுடன் துரோஜ யுத்தத்துக்குச் சென்ருன்.

*புளுட்டோ* Pluto: இவர் நரகலோகத்தின் அதிபதி. இவர் ஜூப்பிட்டர் என்னும் ஜோவ் தேவருக்கும் பாஸிடான் என்னும் நெப்தியூனுக்கும் சகோதரர். இவர் குரூர குணமுடையவரல்லர். ஆனுல் வேறு எந்தத் தேவனும் தன்னைவிட பலமுடையவனுக இருக்க இவர் விரும்புவதில்லை. மக்கள் இவருக்குக் கறுப்பு நிற

முள்ள ஆடுகளையே பலியிடுவர். பலியிடும்போது இவரைப் பாராமல் முகத்தைத் திருப்பிக் கொள்வர். புளூட்டோ பூலோகத்திலிருந்த பெர்ஸிபோனே என்ற அழகியைக் கண்டு மோகங் கொண்டு தம் உலகிற்குத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டார். இவருடைய உலகத்தின் வாயிலில் நின்று பாதுகாவல் செய்வதற்காக இவர் வைத்திருந்த மூன்றுமுக நாய் ஸெரிபெரஸ் என்று பெயர்பெறும்.

**மார்ஸ்** Mars : யுத்தத் தேவன்.

**மினர்வா** Minerva : இவள் மனிதனுடைய சிந்தனு சக்தியின் தெய்வம். கிரேக்கர்கள் இவளை அதீனு என்று அழைப்பர். இவள் கலைகளின் தேவதை. இவள் யுத்தங்களில் வீரர்களுக்கு உதவுவாள். இவளே இசைக்கருவிகளைப் படைத்தவள். இவள் ஜூப்பிட்டர்க்கு மெத்திஸ்ஸிடம் பிறந்தவள். ஜூப்பிட்டர் இவள் பிறக்கு முன்னர் மெத்திஸ்ஸை விழுங்கிவிடவே, இவள் ஜூப்பிட்டர் நெற்றி வாயிலாக ஆயுதபாணியாகப் பிறந்தாள். இவளுடைய கிரேக்கப் பெயரான அதீனு என்பதை வைத்தே தேவர்கள் கிரேக்க நகரத்தை ஆதன்ஸ் என்று பெயரிட்டனர். பார்க்க : அதீனு.

**மெம்னுன்** Memnon : இத்தியோப்பியர்களின் அரசன். துரோஜ யுத்தத்தின் இறுதி நாட்களில் பிரியம் மகாராஜனுக்கு உதவி செய்தான். நெஸ்டாரின் மகன் அந்திலோக்கஸ்ஸைக் கொன்றுன். அகிலேசனுல் இவன் கொல்லப்பட்டான்.

**லாடோனு** Latona : அப்பால்லோ தேவருக்கும் ஆர்ட்டிமிஸ் தேவிக்கும் தாய். ஜோவ் தேவருக்கு இவர்களைப் பெற்றுள். ஜோவ் தேவர் இவளிடம் காதல் கொண்டதால் இவளிடம் ஹீரா என்னும் ஜூனே தேவி துவேஷம் கொண்டாள்.

**வீனஸ்** Venus என்னும் தேவி அப்புரோடைட் என்றும் அழைக்கப் படுவாள். இவள் காதல், அழகு, மக்கட்பேறு இவற்றின் கிரேக்க தேவதை. மாலுமிகளும் போர்வீரர்களும் இவளைத் தங்கள் குலதெய்வமாக வணங்கினர். இவள் ஜோவ் தேவருக்கு தயானு விடம் பிறந்தவள். இவள் ஹெப்பாஸ்டஸ்ஸை மணந்தாள். ஆனுல் ஆரிஸ் என்னும் யுத்த தேவனிடமே காதலுடையவளாக இருந்தாள். இவளுடைய மேகலையை அணிவோரிடம் பிறர் கட்டாயமாகக் காதல் கொள்வர். எல்லோரிலும் மிகுந்த அழகுடையவள் என்று மதித்துப் பாரிஸ் இவளுக்கே பரிசளித்தான்.

**ஹெக்குபா** Hecuba : ட்ராய் நகரத்து அரசன் பிரியத்தின் மனைவி. அவளுடைய மூத்த குமாரன் ஹெக்டர். அடுத்தவன் பாரிஸ். ஹெக்டர் இறந்து ட்ராய் நகரம் கிரேக்கர்கள் வசமான பொழுது கிரேக்கர்களால் அடிமையாக்கப் பட்டாள்.

**ஹெக்டர்** Hector : ட்ராய் நகரத்தின் அரசன் பிரியம், அவன் மனைவி ஹெக்குபா இருவரின் மூத்த புதல்வன். துரோஜ யுத்தத்தில் துரோஜ வீரர்களுள் தலைசிறந்தவன். ஆந்திரமகியின் கணவன். சியாமந்திரியனின் தந்தை. அகிலேசனுடைய நண்பன் பத்திரகலுஷுடன் போர் செய்து அவனைக் கொன்றுன். அதனுல் யுத்தத்தை

விட்டு விலகி இருந்த அகிலேசன் மீண்டும் போர் புரிய வந்தான். அவனைக் கண்டு பயந்து துரோஜர்கள் அனைவரும் டிராய் நகரத்துக் கோட்டைக்குள் ஓடி ஒளிந்து கொண்டனர். ஹெக்டர் மட்டும் கோட்டைக்கு வெளியே தங்கினான். தந்தையும் தாயும் கோட்டைக் குள் வந்துவிடுமாறு வேண்டினர். வரமறுத்தான். ஆனால் அகிலேச னைக் கண்டதும் பயந்து ஓட்டம் பிடித்தான். மூன்று முறை நகரைச் சுற்றி ஓடினான். அகிலேசன் துரத்தி வந்து அவன் மேல் ஈட்டியை எறிந்தான். ஹெக்டர் இறந்தான். அகிலேசன் அவன் உடலைத் தன்னுடைய தேரில் கட்டிக் கொண்டு ட்ராய் நகரைச் சுற்றினான். ஜோவ் தேவர் கட்டளையிட்டதால் அகிலேசன் பிரியம் மகாராஜ னுடைய வேண்டுகோளுக்கு இணங்கி ஹெக்டரின் உடலைத் தந்தை யிடம் கொடுத்தான். அதை அவர் ஆடம்பரங்களுடன் புதைத்தார்.

*ஹெர்மீஸ்* Hermes : ஜோவ் தேவருக்கும் அட்லஸின் மகள் மேயாவுக்கும் பிறந்தவன். கலைகளில் தேர்ந்தவன். நாவன்மை யுடையவன். விளையாட்டுக்களின் தேவதை. ஜோவ் தேவரின் கட்டியக்காரன்.

*ஹெலன்* Helen : ஜோவ் தேவருக்கும் தைந்தாரியஸின் மனைவி லீடாவுக்கும் பிறந்தவள். ஸ்பார்ட்டாவின் அரசன் மனேல் லாசனுடைய மனைவி. அவளுக்கு இணையான அழகுள்ளவள் கிடையாது என்ற புகழ் பெற்றவள். பாரிஸ் அவளை ஏமாற்றி ட்ராய்க்குக் கொண்டுபோய் தன் மனைவியாக வைத்துக் கொண் டான். அவளைக் கைப்பற்ற ஒப்பந்தம் செய்திருந்த கிரேக்கர்கள் ட்ராய்மீது படையெடுத்தனர். பாரிஸ் இறந்த பின் அவன் தம்பிக்கு மனைவியானாள். ட்ராய் தோற்ற பின் மனேல்லாசனுடன் ஸ்பார்ட்டா வுக்குச் சென்றாள்.

*ஸ்டிக்ஸ்* Styx : என்பது நரக லோகத்தை ஏழு தரம் சுற்றி வரும் ஆறு. இதன் பெயர் 'வெறுக்கப்படுவது' என்று பொருள் படும். இந்த நதிதேவதை ஓஷியானஸ், டெத்திஸ் ஆகியவர்க் குப் பிறந்தவள். இந் நதியின் நீரைச் சொரிந்தே தேவர்கள் ஆணை யிடுவது வழக்கம். இறந்தவர்களின் ஆவிகள் இந்த ஆற்றைக் கடந்தே நரகலோகம் புகவேண்டும். கேரான் என்பவன் அவர்களைத் தன் தோணியில் ஏற்றி அக்கரை சேர்ப்பான். தோணிச் சத்தம் தருவதற்காக பிணத்தின் வாயில் ஒரு நாணயம் இட்டுப் புதைப்பர்.

*ஸ்பெர்க்கியஸ்* Spercheus : இது தெஸ்ஸலே நாட்டின் தெற் கில் ஓடும் ஆறு. இந்நதியை தேவனாக வணங்கினர். இத்தேவன் ஓஷியானஸ் என்பவனுக்கு கீ என்பவளிடம் பிறந்தவன். இவனுக்கு பீலியஸின் மகளான பாலிடோராவிடம் மெனஸ்தியஸ் என்பவன் பிறந்தான்.

*ஸாட்டர்னியா* Satturnia என்பது ஜூனோ தேவிக்கு மற்றொரு பெயர். பார்க்க : ஜூனோ.

*ஸார்ப்பீடன்* Sarpedon : லிஸியர்களின் அரசன், ஜோவ் தேவ ருக்கும் ஈரோப்பாவுக்கும் பிறந்தவன். துரோஜ யுத்தத்தில் துரோஜர்

களுக்கு உதவி செய்தான். யுத்த களத்தில் பத்ரகலுஷனுல் கொல்லப் பட்டான்.

*ஸிரான்* Chiron : ஸெண்டார்கள் அனைவரிலும் அதிக அறிவும் நியாய புத்தியும் உடையவன். இலியன் மலையில் வசித்தான். அப்பால்லோவும் ஆர்ட்டிமிஸூம் இவன் ஆசிரியர்கள். வேட்டை யாடுதல், மருத்துவம், இசை, உடற்பயிற்சி, வரும்பொருளுரைத்தல் இவற்றில் வல்லுநன். இக்கலைகளில் இவன் அகிலேசனுடைய ஆசிரியன்.

———o———

ஶ்ரீ:

# (ஹோமர்) இலியதம்

## முதலாவது அத்தியாயம்

## அகிலேச — ஆகமன யுத்தம்

[பூர்வ கதா ஸங்கிரஹமும், இந்த அத்தியாய கதா சங்கிரஹமும்]

*ட்ராய் யுத்தத்தில் கிரேக்கர்கள் ட்ராய்க்கு சமீபத்திலிருந்த சில நகரங்களைப் பாழாக்கி, அவைகளிலிருந்து கிரைஸீஸ், பிரைஸீஸ் என்னும் இரண்டு கட்டழகிகளைப் பிடித்து அவ்விருவரையும் முறையே ஆகமனனுக்கும், அகிலேசனுக்கும் கொடுத்து விட்டனர்.*

*ட்ராய் யுத்தத்தின் பத்தாவது வருஷத்தில் நடந்த இந்த ஸம்பவத்தைக் கொண்டுதான் இந்தக் காவியம் ஆரம்பிக்கின்றது.*

*கிரைஸீஸின் தகப்பனும் அப்பாலோவின் பூஜாரியுமான கிரைஸஸ் என்பவர் அவளை மீட்டுச்செல்ல வேண்டுமென்று கிரேக்கர்களது பாளையத்துக்கு வருகின்றார்.*

*ஆகமனன் அவரது பிரார்த்தனையை மறுத்ததுமன்றி அவரை அவமதித்தும் விட்டதால், அவர் தமது இஷ்ட தேவதையிடம் சென்று தன் குறைகளை முறையிட்டு, ஆகமனனுக்குச் சரியான கூலி கொடுக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பாலோ தனது பக்தனுடைய பிரார்த்தனைக்கு இரங்கி, கிரேக்கர்களது பாளையத்தில் ஒரு பெருத்த (தொத்து) வியாதியை ஏவி விடுகின்றார்.*

*அப்போது அகிலேசன் கிரேக்கர்களையெல்லாம் ஒரு சபை(யாகக்) கூட்டி, கால்கஸ் என்னும் ஜோஸ்யரை நோக்கி மேற்சொல்லிய வியாதியின் காரணத்தைச் சொல்லும்படி நியமிக்கின்றான். அவர் கிரைஸீஸை அவளது தந்தையிடம் திருப்பியனுப்பாததுதான் காரணம் என்கின்றார். அப்போது கிரேக்கர்களது அரசனான ஆகமனன் தனக்குக் கிடைத்த கன்னி(கை)யை இழந்துவிட வேண்டியதாகிவிட்டதால், அவன் அகிலேசன் மீது சீறி அவனுடன் சண்டையிட்டான். அந்தச் சண்டையை நெஸ்ட(ர்) என்னும் விருத்தர் நிறுத்தி சமாதானப் படுத்துகின்றார் என்றாலும், ஆகமனன் சாந்தமடையாமல், தானே சேனையின் தலைவன் என்ற இறுமாப்புடன் அகிலேசனுக்கு வசமாயிருந்த பிரைஸீஸ் என்பவளைப் பிடித்துக் கொள்ளுகின்றான். அகிலேசன் இதனால் மனக்குறை கொண்டு, தனது சேனையைக் கிரேக்கர்களது சேனையிலிருந்து பிரித்துக்கொண்டு யுத்தத்திலிருந்து விலகிவிடுகின்றான். //பின்பு (தனது தாயான தெடிஸ் தேவியினிடம் சென்று முறையிட அவள் ஜூப்பிட்டர் பகவா*

னிடஞ் சென்று தன் மகனுக்குண்டான அநீதியை யுரைத்து, அது கிரேக்கர்கள் மனதை நைக்குமாறு அவர்களுக்கு அபஜயத்தையும், துரோஜர்களுக்கு ஜயத்தையும் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றூர்.

ஜூப்பிட்டர் அவ்வாறே செய்கின்றூர். அது ஜூனோதேவிக்கு அடங்காக் கோபத்தையுண்டாக்க, அதனுல் அவ்விருவருக்கும் வெகு கொடிய வாக்குவாதம் உண்டாகின்றது. கடைசியாக வல்க்கன் மத்யஸ்தம் செய்ய, அவர்கள் சாந்தமடைகின்றனர். இந்த அத்தியாயத்தில் இருபத்திரண்டு நாட்களில் நடந்த சம்பவங்கள் சொல்லப்படுகின்றன.

அவற்றில் ஒன்பது தினங்களின் நிகழ்ச்சிகள் தொத்துவியாதி சம்பந்தமுடையன. பத்தாம் நாளில் கிரேக்கர்களது சபையும் அகிலேச ஆகமனர்களுடைய சண்டை சச்சரவுகளும் நடக்கின்றன. மீந்த பன்னிரண்டு தினங்களில் ஜூப்பிட்டர் இத்தியோப்பியர்களது விருந்தினராக இருந்ததும், அங்கிருந்து திரும்பிவந்தபின், தெடீஸ் அவருக்குச் செய்த பிரார்த்தனையும் நிகழ்கின்றன. இந்த சம்பவங்களெல்லாம் கிரேக்க சேனைகளின் பாளையத்திலும் பின்பு கிரீஸாவிலும் கடைசியாக ஒலிம்பஸிலும் நிகழ்கின்றன.

## நூல்

தேவர்களின் தேவியே! கிரேக்கர்களின் கணக்கற்ற அங்கங்களின் பயங்கரமான ஊற்றுகிய அகிலேசனது சீற்றத்தை ஆற்றலுடன் சாற்றுமம்மா!

அந்தச் சீற்றத்தினுல் அதிபராக்கிரமசாலிகளான காளைகள் அகால மரணமடைந்து அவர்களுடைய ஆவிகளும் புளூட்டோவின் இருட்டுலகத்திற்கு ஓட்டமாய் ஓடிவிட்டன. அடக்கஞ் செய்வாரின்றி பாழுங் கடற்கரையில் கிடந்த அவர்கள் தேகங்களை ஆவலுடன் கவ்வும் நாய்களும், கடும்பசியுடன் பாயும் கழுகுகளும் கொத்திக் கிழித்தன. அதிவீரனை அகிலேசனும், அதரிதேசனும் அதியுக்கிரமாகப் பொருததால், ஜோவ் தேவரின் திருவுளப்படி அதிகோரமான இந்தப் பெருந்துக்கம் உண்டாகிவிட்டது.

உத்பாதமான எந்த முகூர்த்தத்தில் இந்த வெஞ்சமர் உற்பத்தியாயிற்றென்றும், யாரை உபேட்சித்ததினுல், லாதனு தேவியின் மகன் இந்தக்குல க்ஷயமான வியாதியை வியாபிக்கச் செய்து போர்க்களத்தில் பிணங்களை மலைபோற் குவித்தான் என்றும், எந்த மூர்த்தியின் உண்மையான பக்தியுள்ள உபாஸகனை ஜனுதிபன் அவமதித்ததற்காக அவன் பிரஜைகள் தங்களது பிராணனைவிட்டனர் என்றும் கலைமகளே விஸ்தாரமாய் உரைத்தருளுவீர்!

கிரைஸஸ் என்பவர் தமது குமாரியைப் பிடித்துக்கொண்ட ஆகமனனிடம் சென்று விலையுயர்ந்த பரிசுகளை அவன் முன் வைத்துச், சிறையிருந்த தன் குமாரியைத் தம்மிடம் திருப்பிக் கொடுத்துவிடும்படி பிரார்த்தித்தார் ; வணங்கத் தகுந்தவரான அந்தத் தகப்பனர் தமது கைகளைக் கூப்பிக்கொண்டு நின்றார் ; அப்பாலோவின் பயங்கரமான ஆயுதங்கள் அவருடைய இரு கரங்களையும் அலங்கரித்து நின்றன ; அவற்றை முன்வைத்து அவர் தம் பிரார்த்தனைகளை வெளியிட்டார். பின்பு தலைகுனிந்து தாழ்ந்து செங்கோலையும் பச்சிலைத் தலைமாலையையும் அவனிடம் நீட்டினர். எல்லோரிடமும் முறையிட்டார். விசேஷமாக அத்ரியஸ்ஸின் வம்சத்தில் வந்தவர்களான ஸஹோதர அரசர்கள் இருவரையும் தமக்குக் கிருபை செய்யுமாறு அவர்களை நோக்கி “ அரசர்களே ! வீரர்களே ! உங்கள் கோரிக்கைகள் கைகூடட்டும் ! ட்ராயின் வானமளாவிய உன்னதமான மதில்கள் தரைமட்டமாகட்டும் ! உங்களுடைய காரியங்களெல்லாம் முடிந்தபின் நீங்கள் முன்போல் சுகமனுபவித்து வருமாறு ஜோவ் பகவான் உங்களை ஜன்ம தேசத்திற்கு க்ஷேமமாய்த் திருப்பிக்கொண்டுபோய்ச் சேர்க்கட்டும் ! தௌர்பாக்கியவானுன ஒரு தகப்பனது துக்கத்தை நிவிருத்தி செய்யுங்கள் ! கிரைஸீஸை இதோ இந்தக் கைகளில் திருப்பிக் கொடுத்துவிடுங்கள் ! இயற்கையான பெருந்தன்மையுடன் இந்தக் கிருபையைச் செய்ய முடியாதென்றுல், இதோ ! நான் வெகுமான

மாகக் கொண்டுவந்திருக்கும் இந்த திரவியங்களை ஏற்றுக் கொண்டாவது எனது பிரார்த்தனையை நிறைவேற்றுங்கள்! ஜோவின் புத்திரரான பீபஸின் பழிக்கஞ்சுங்கள்!" என்று பிரார்த்தித்தார்.

கிரேக்கர்கள் அனைவரும் ஏகமனதினராய் "அடிகளை கௌரவிக்க வேண்டும். அழகியைக் காவலிலிருந்து விட்டுவிடவும் வேண்டும்!" என்று கோஷங்கள் செய்தனர்.

அதரிதேசன் (ஆகமனன்) இதற்குச் சம்மதிக்கவில்லை. தான் "அரசன்" என்று கர்வங்கொண்டு புனிதரான கிரைஸஸைப் பார்த்து "உனக்கு உயிரின்மேல் ஆசையிருந்தால், உடனே இங்கு விட்டு விட்டு ஒரே ஓட்டமாக ஓடிவிடு. உன் வைரிகள் உள்ள இந்த இடத்தில் நில்லாதே! காற்றுப் பறந்து செல். அரசன் தனக்கென்று பிடித்துவைத்துக் கொண்டதைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்கின்ற நீ, மதம் பிடித்தவனல்லவா? உனது பச்சிலை மாலையையும் பொன் கோலையும் எடுத்துச் செல். இங்கே நில்லாதே. உனது தெய்வத்தின் இந்தச் சின்னங்களால் உனது ஜபம் நிச்சயமாய்ப் பலிக்கும் என்று சிறிதும் நம்பாதே. உன் மகள் என் கையில் அகப்பட்டுவிட்டாள். அவள் எனக்குத்தான் சொந்தம்; என்னிடந்தான் இருப்பாள். ஆகையால் ஏ, பூசாரீ! அவள் நிமித்தம் நீ செய்யும் பிரார்த்தனைகளும், வடிக்கும் கண்ணீரும், கொடுக்கும் வெகுமதிகளும், லஞ்சமும் வீண் என்று அறிந்துகொள். உன் மகள் தன் யௌவனலாவண்ணியங்கள் காலக்கிரமத்தில் வாடி வதங்கிப் போகுமளவும் என்னிடந்தான் இருப்பாள். விருத்தாப்பியத்தில் அவளை நான் ஆலிங்கனம் செய்வதை நிறுத்தும்வரையிலும் அவள் என்னிடந்தான் இருப்பாள். அதன்பின் தினந்தோறும் நெசவுத் தரியில் உழைத்தோ அல்லது சயனித்து வந்த பஞ்சணை மெத்தையை அலங்கரித்தோ தனது காலத்தைக் கழிப்பாள். நீ இங்கு நில்லாதே! அவள் தனது பிறந்தவூருக்கும் தன்னைப் பெற்றோருக்கும் வெகுதூரத்திலுள்ள ஆர்காஸில் பத்திரமாகவிருப்பாள்" என்று சொன்னான்.

கிரைஸஸ் தமது புத்திரியை இவ்வாறு உயிருடனேயே பறிகொடுக்க நேர்ந்ததேயென்று துன்புற்று நடுங்கிக்கொண்டு கரையோரமாகத் தமது ஊரை நோக்கித் திரும்பிச் சென்றார்.

அவர் தமது துக்க நிவிருத்திக்கு உபாயம் இது என்று அறியாதவராகவும், தமது குறைகளை வாய்விட்டுச் சொல்ல அஞ்சியவராகவும் முழங்கும் கடற்கரையின் ஓரமாய் மௌனமாய் அங்குமிங்கும் திரிந்தார்.

கடைசியாய் அவர் தம் எதிரிகளின் எல்லையைக் கடந்து, தூரமாகச் சென்று, பயந்தெளிந்து, தம் இஷ்ட தேவதையும் உலகத்தைச் சுற்றிலும் தம் கிரணங்களைச் சொரிபவருமான சூரிய பகவானை நோக்கிப் பிரார்த்தித்தார்.

"ஸ்மிந்தீசரே! லாதனு தேவியின் லாவண்ணியமான மணி வயிறு வாய்த்தவரே! ஒளியின் மூலமே தெனிதாஸ்வாசிகள் வழிபடும் கடவுளே! கிரிஸாவின் கரைகளைத் தமது பிரகாசமான பிரசன்னத்தினுல் ஜ்வலிக்கச் செய்பவரே! உம்முடைய பரிசுத்த மான க்ஷேத்திரத்தில் நான் மலர்மாலைகளைச் சாத்தியதும் காளை களின் கொழுப்பிலிருந்து ஆட்டியெடுத்த எண்ணெயை விட்டுத் தீபத்தை ஏற்றியதும் உண்மையானுல், வெள்ளிவில்தரித்தவரே! உமது சரத்தைப்பொழியும்; உமது அடிமையின் பழியைத் தீரும். இந்த கிரேக்கர்களை அடியோடு ஒழித்துவிடும்!" என்று பிரார்த் தித்தார்.

பக்தர்க்குக் கிருபை செய்பவரான அந்தப் பராக்கிரமமுள்ள கடவுள், தமது இருப்பிடமான மிகவும் உயர்ந்த ஒலிம்பஸ் மலைச் சிகரத்திலிருந்து இறங்கினுர். கிரேக்கர்களது மனத்தைக் குலைப் பதற்காக, அவரது வில்லானது வளைந்துபோயிற்று. அவர் அதி உக்கிரமாக அசைந்தபொழுது, வெள்ளிபோல் மின்னிய அவரது கண்கள் "கணீர் கணீர்" என்று ஒலித்தன. அவர் 'இதோ பழி வாங்கினேன்' என்று சீறிக்கொண்டு அகஸ்மாத்தாக ஓர் அஸ்த மனத்தை உண்டாக்கினுர். அப்பொழுது பயங்கரமான ஓர் இருள் அவரது தலையைச் சூழ்ந்து சுழன்றது. அவர் தம் அம்புகள் செல்லவேண்டிய தூரத்தைக் கணக்கிட்டுக் கொண்டு, ஜீவராசி களின் உயிரை வாங்கக்கூடிய தமது வில்லைத் தொனிப்பித்தார். அக்கணமே அவரது ஆணையைநிறைவேற்றுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்த விதியைப் போன்ற அஸ்திரங்கள், இறக்கைகளைக் கொண்ட பக்ஷிகளைப்போல் சீறிக்கொண்டு கீழ்நோக்கிப் பறந்தன. அவை முதன் முதலாகக் கோவேறு கழுதைகளையும், நாய்களையும் தாக்கின. கடைசியாகப் பழிவாங்குவதிலேயே கண்ணுங்கருத்து மாயிருந்த அவை மனிதர்களையும் துளைத்து அவர்களின்மேல் ஊன்றி நின்றுவிட்டன. அப்பொழுது இராக்காலமானது பகற் காலத்தைவிட அதிகமாக நீண்டிருந்தது. அவ்வாறு நீண்ட நள் ளிருள் சூழ்ந்திருந்த ஒன்பது ராத்திரிகளில் சிதையிலிருந்து கிளம் பிக் கொழுந்துவிட்டெழுந்த பெருஞ்ஜ்வாலைகள் கறுத்த வானத்தை ஊடுருவிக்கொண்டு பயங்கரமாகப் பாய்ந்து சென்றன.

இவ்வாறு வீரர்கள் கணக்கில்லாமல் மாண்டு போவதைக் கண்டுதுக்கித்த ஜூனே தேவியானவள், இந்தப் பெரிய ஆபத்தை விட்டுத் தப்புவதற்குத் தகுந்த வழியென்னவென்று ஆலோசனை செய்யும்படி தெடீஸ் தேவியின் திவ்விய குமாரனை அகிலே சனைத் தூண்டினுள். அவன் அர்க்க சக்கரம் பத்தாம் தரம் சுழலு முன் கிரேக்கர்களது பரிவாரத்திலிருந்து சகல ஜனங்களையும் ஒன் ருகக் கூட்டினுன். சகலரும் வந்து சபையில் அமர்ந்தபின், அந்த அகிலேசன் எழுந்து நின்று ஜனுதிபனை நோக்கி "இந்தப் பாழான துரோஜர்களது கரையில் நமக்கு இன்னும் என்ன வேலை? இதை விட்டு அகல நமக்கு ஏன் இன்னும் மனம் வரவில்லை? நாம் ஏன் முன் வந்த வழியே திரும்பிக் கடலைக் கடந்து செல்லாமல் இங்கு நமது காலத்தைக் கழிக்கின்ருேம்.

கத்திக்குத் தப்பியவர்களை இந்தத் தொத்துவியாதி அழித்து விடுகின்றது. யுத்தத்தில் இதுவரை மிகுந்திருப்பவர்களையாவது ரக்ஷிக்க வேண்டியது நமது கடனாகி விட்டதல்லவா? ஆதலால் ஞான திருஷ்டியுடைய ஒரு ஜோஸ்யரையோ அல்லது ஸஹ்ருதயரான ஒரு மகானையோ அழைத்து வந்து அப் பாலோ பகவானது கோபத்திற்குக் காரணம் என்ன என்று விசாரி யுங்கள். அல்லது ரஹஸ்யார்த்தங்களுள்ள ஸ்வப்னங்களைப் பரீக்ஷித்து இந்தக் கஷ்டங்களை விளக்கும் பழி பாவங்களை நீக்கு வதற்கான உபாயங்களைத் தேடுங்கள். ஸ்வப்னங்களெல்லாம் ஜோவின் நியமனத்தினால் தானே நம்மிடம் இறங்கி வருகின்றன?

நமது ஸங்கல்பங்களை நிறைவேற்றாத குற்றங்களினால் தான் நாம் இந்தப் பெருஞ் சாபத்திற்கு ஆளாகி விட்டோமென்று தெரிந்து விட்டால் ஹோம குண்டங்களை வளர்த்துங்கள். விசேஷ மான பலிகளை இடுங்கள். அப்படிச் செய்தால் கடவுள் மனங் குளிர்ந்து வாடி வருந்தும் கிரேக்கர்களுக்கு ஊக்கமும் உயிரும் தரு வார். பீபஸ் பகவானும் தன் சுடு சரங்களை நிறுத்தி விடுவார்" என்று உரைத்து, அகிலேசன் தனது ஆசனத்தில் அமர்ந்து கொண்டான்.

அகிலேசன் தனது ஆசனத்தில் அமர்ந்ததும் அதிபுத்தி மானும் கிரேக்கர்களது புரோஹிதரும் குருவுமானவரும் இறந்த கால நிகழ்கால எதிர்கால நடவடிக்கைகளை ஸாங்கோபாங்கமாக அறிந்தவரும் மகாஞானியும் பூஜ்யருமான காலசேகர் நிதானமாக எழுந்திருந்து தமது வயதுக்குத் தகுந்தபடி யுக்தாயுக்தங்களையும் பயாபயங்களையும் பின்வருமாறு சொல்லலானார்:-

"ஜோவ் தேவரின் அன்பிற்குப் பாத்திரனான அகிலேசா! பீபஸ் பகவான் ஏன் கோபங்கொண்டு நாசத்தை விளைக்கும் தமது வில்லை வளைக்கின்றார் என்று கேட்கின்றாய்;? சொல்லுகின்றேன்; பக்தியுடன் கேள்.

முதலில் எனக்கு ஒருவிதத் தீங்கும் உண்டாகாமல் என்னை ரக்ஷிப்பதாக உனது உன்னத பதவியின்மீதும் உடைவாளின் மீதும் உறுதியாக ஆணையிட்டுச் சொல். ஏனெனில் புத்திமான்கள் ஒளித்து விடக்கூடிய விஷயங்களையும் பெரியோரைப் புண்படுத்தக் கூடிய உண்மையான ரகசியங்களையும் நான் எடுத்து உரைக்க வேண்டியது அவசியமாகின்றது. பிரஜைகள் அதிபிராஞ்ஞர் களாகி முதிர்ந்து தங்களது சக்கரவர்த்திக்கு முன்னின்று அவன் தவறுகளை எடுத்துச் சொல்வது என்பது மிகவும் துணிகரமான காரியமல்லவா?

இராஜாக்கள் தங்களது கோபத்தை அந்த க்ஷணமே அடக்கி விட்டனர் என்று நாம் கருதினாலும் அதிபராக்கிரமசாலி களாதலால் அவர்கள் சமயம் பார்த்துத் தங்களுக்கு விரோதமாகப் பேசியவர்களை மடக்கிப் பழிக்குப் பழி வாங்கியே விடுவார்கள்!" என்றார்.

அதைக்கேட்டு பிலிதீசன், "நீங்கள், உங்கள் மனத்தினுல் சூழ்ந்து ஆலோசித்து, ஆராய்ந்து அறியும் உண்மைகளைச் சிறிதும் தங்கு தடையின்றிச் சொல்லலாம். பகற் பொழுதுக்கு அதிபதியும் கிரேக்கர்கள் தம் கரங்களால் செலுத்தும் பிரார்த்தனைகளை ஏற்றுக் கொண்டு தமது வாக்கின் மூலமாகவே தமது திருவுள்ளத்தைத் தெரிவிப்பவருமான அந்தக் கடவுளின்மீது இதோ ஆணையிட்டேன். அகிலேசனுக்கு இந்தப் பிராணுதாரமான சுவாசம் இருக்கும் வரை, அவன் இங்குள்ள அகில கிரேக்கர்களிலும் ஒருவனுவது அந்தப் பரம்பொருளின் புரோஹிதரை அவமதிக்க வேண்டுமென்ற கெட்ட எண்ணத்துடன் கையைத் தூக்கவும் மாட்டான். இது மட்டுமல்ல; இந்த நமது மஹாசமூகத்தின் தலைவனுன இராஜாதிராஜனுங் கூட அந்தப் பூஜ்யரின் தலையில் தன் கையைவைக்கமாட்டான்!" என்ருன்.

இவ்வாறு உறுதி சொல்லப்பட்ட பின்னர், அந்தக் குற்றமற்றவர் பின்வருமாறு சொல்லலானுர்:- "நோன்புகளை நிறைவேற்ருததனுலும், பலிகளைக் கொடாததனுலும் இந்தத் துன்பம் நமக்கு உண்டாகவில்லை. நமது தலைவரான அப்பாலோ பகவான் தான் இந்தக் கொடிய நோயைக் கிளப்பி விட்டு விட்டார். தமது அடிமைக்குச் செய்த அபராதத்தையே காரணமாக வைத்துக் கொண்டு அவர் இவ்வாறு நம்மை வாட்டிப் பழிவாங்குகின்ருர்.

பணமோ, பரிசோ, லஞ்சமோ வாங்கிக் கொள்ளாமல் கிருஷ்ணுக்ஷியான அந்தச் செல்வியை அவளது பிறந்தகமாகிய பிரஸாவுக்கு அனுப்பிவிட்டாலன்றி அக்கடவுளின் உள்ளங் கவர்ந்தெழுந்தோங்கிய சினம் தணியாது; அதற்கு ஓய்வும் உண்டாகாது. இந்தக் கொடிய நோய்கள் இன்னும் பரவும், தகன அக்கினிகளும் அதிகரிக்கும்.

ஆனுல் சம்மானங்களுடனும் சுப வசனங்களுடனும் பிரார்த்தனைகளுடனும் இந்தச் செல்வியை அவளது பிதாவினிடம் திருப்பிச் சேர்த்து விட்டால், அவர் நாம் செய்த அபராதத்தை ஒருவேளை மன்னித்து விடலாம். அதன் பின், அவர் வழிபடுங் கடவுளும் நம்மைப் பீடிக்க மாட்டார்" என்ருர்.

திரிகால ஞானியான புரோகிதர் இவ்வாறு சொல்லி முடித்த பின், மஹாராஜன் பெருங் கோபங்கொண்டு கறுத்த பார்வையுடன் பளிச்சென்று பிரகாசிக்கும் தனது சிங்காதனத்திலிருந்து சட்டென்று எழுந்திருந்தான். கோபம் கொதித்துப் பொங்கிக் கொண்டிருந்த அவனது மனத்தில் ஊறிய கறுத்த காரமே நிறைந்திருந்தது. அவனுடைய விழிகளிலிருந்து எதிர்ப்பட்ட வஸ்துக்களைப் பஸ்மமாக்கக்கூடிய தீப்பொறிகள் பறந்தன. அவன் புனிதரான புரோகிதரை நோக்கி "பாழாய்ப் போன புரோகிதரே! எப்போதும் அதர்மம், அநீதி, அக்கிரமம் என்று பிதற்றுவதே உமது தொழில். பெருவாரியும் பெருத்த ஆபத்தும் வரப்போகின்றது என்று கதறுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கின்றீர். மனத்தைப் புண்படுத்தும் சமாசாரத்தைத்தான்

இந்த வாய் சதா புலம்பிக்கொண்டிருக்க வேண்டுமா? திரு ஸ்தானம் படைத்தோமென்று கர்வங்கொண்டு நீர் உமது அரசனை யுங்கூட அவமதிக்க வேண்டுமா? இதற்காகத்தான் பீபஸின் உபாசகர்களைக் குறிகேட்க நினைத்தார்களா? தங்களது அரசனை வெறுத்து அவனை நோக்கி சபம் செய்யவேண்டுமென்று கிரேக்கர்களுக்குப் போதனை செய்வதற்கு இதுதானா உபாயம்?

என் முன் மலைபோல் குவித்த பொன்னைவிட எனக்குப் பரிசாக அளிக்கப்பட்ட பெண்ணரசியிடம் நான் அனுபவிக்கும் இன்பமே மேலானது என்று நினைத்து நான் அந்தப் பொன்னும் வேண்டாம், பெண்ணையும் விடமாட்டேன் என்று சொன்னதற் காக என்மேல் பொய்யான குற்றங்களைச் சுமத்தி என் மான மரியாதைகளைக் கெடுக்கவேண்டுமா? தெய்வத்தைப் பழிக்க வேண்டுமா? புரோஹிதனைப் பொல்லாதவனாக்க வேண்டுமா?

அந்தப் பெண்மணி ரூபலாவண்ணியங்களிலாகட்டும் நடையுடைபாவனைகளிலாகட்டும் நிகரற்றவள். சகல கலைகளி லும் தேர்ந்தவள்; சகல சம்பத்தும் ஒருங்கே படைத்தவள். சர்வ சௌந்தர்யங்களும் பொருந்தியவளாகவும் பேதைப்பருவ நீங்கிப் பெதும்பைப் பருவமடைந்தவளாகவுமிருந்த கிருதமன ஸ்திராவை இந்தக் கைகள் தழுவியணைத்துக் கொண்டபொழுது, அவளுக்கு இவளது அழகில் பாதிகூட இருக்கவில்லை.

“என்றாலும் இவளை விட்டுவிடவேண்டும் என்பது தெய்வங் களின் ஆஜ்ஞை என்றால் இவள் போகட்டும்; கப்பல் ஏறட்டும்; மகாஜனங்களது க்ஷேமத்தை நாடுவதே எனது கடமையாதலால் எனது பிரஜைகள் பட்டு விழுந்து போவதைக் காட்டிலும் நானே சகல துக்கங்களுக்கும் காரணம் என்று மதிக்கப்பட்டுக் கஷ்டங் களை அனுபவிப்பதே மேலானது.

“எனக்கு லபித்த பாக்கியத்தை அஃதாவது அதிரூபவதி யான பாக்கியவதியை இழந்துவிட நான் சித்தமாக இருக்கின் றேன். அவள் என்னால் வெகு உயர்வாக மதிக்கப்பட்டவள். நியாயமாகவும் எனக்கு வாய்த்தவள். அந்த ஸுந்தராங்கியை நான் பஹுஜன க்ஷேமத்திற்காக இழந்து விடச் சம்மதித்துவிட்ட தால் நன்றியறிவுள்ள கிரேக்கர்கள் எனக்கு ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு செய்தே தீரவேண்டும்.

“கைம்மாறு சிறிதும் பெறாமல், தான் ஒருவன் மாத்திரம் பொறுதான், தனது இரத்தத்தை வடித்தான் என்று உங்களது அரசன் குறைகூற இடங்கொடாதீர்கள்” என்றான்.

அப்போது அகிலேசன் ஆகமனனை நோக்கி “திருப்தி என்பது சிறிதுமில்லாத பேராசைப் பேய்பிடித்த தலைவரே! நீர் அதிகாரத்தின் மேலேயே கண்ணாயிருக்கின்றீர். ஆத்ம லாபத்தின் மேலும் கண்ணாயிருக்கின்றீர்.

தங்களுக்கு நியாயமாகக் கிடைத்த லாபத்தைக் கிரேக்கர் கள் விட்டுக் கொடுத்துவிட வேண்டுமென்பது உமது அபிப் பிராயமா ?

பல யுத்தகளங்களிலும் பெருத்த யுத்தங்கள் செய்தல்லவா அவர்கள் இந்த லாபங்களை முறையாகச் சம்பாதித்திருக்கின்றனர்.

தரை மட்டமாய்ப் பாழாக்கின பட்டணங்களிலிருந்தும் வதையுண்ட வீரர்களிடமிருந்தும் வாரி வழித்துத் திரட்டிக் கொள்ளையடித்த பொருள்களை நாம் எல்லோருமே சிரமப்பட்டுச் சம்பாதித்தோம். அவற்றை நாம் பங்கிட்டுக் கொள்வதும் நியாயந்தான்.

பேராசை கொண்டு தங்களிஷ்டப்படி பிறர் பொருளைக் கவர்வது கொடியவர்களது ஸ்வபாவம், அதை அடிமைகள் தான் சகித்து வருவார்கள். என்றாலும் கொள்ளையடிக்க வேண்டு மென்றே எங்களது தலைவரான நீர் இந்த யுத்தத்தில் சேர்ந்து கொண்டீர் என்று வைத்துகொண்டால், இனிமேல் ஜோவ் தேவரின் கிருபையால் மாத்திரம் அந்த இலியன் நகரத்து வான ளாவிய மதில்கள் நம் சூரபராக்கிரமங்களால் தரைமட்ட மாகட்டும்! இலியனில் நாம் கொள்ளையடிக்கக்கூடிய சகல மான தனதானியங்களையும் வேறு சம்பத்துக்களையும் நாங்கள் தங்களது நஷ்டத்திற்கு ஈடாகக் கொடுத்து விடுகின்றோம்" என்றான்.

அப்போது அரசன் "நான் மாத்திரம் எனக்கு வெகுமான மாகக் கொடுக்கப்பட்ட வஸ்துவைச் சிறிதும் மனம் கோணாது சந்தோஷமாகத் திருப்பிக் கொடுத்து விட்டுத் திருப்தி அடைய வேண்டும்! உனக்குக் கிடைத்ததை நீ சுகமாக அனுபவித்து வரவும் வேண்டும்! இதுதான் நியாயம் அல்லவா ?

நீ பெரியவன்தான். தேவலோகத்து வீரனைப் போலவும் யுத்தம் செய்கின்றாய்! ஒரு வீரனை எனக்கு நியாயமாகக் கிடைத்த பொருளையும் அபகரித்துப் பிடுங்கிவிடலாம் என்றும் நினைக்கின் றாய்! அந்த யோசனை பலிக்காது. உன் கட்டளைக்கு இணங்கி நான் அந்தக் கட்டழகியை விட்டுவிடுவேனா ? மாட்டேன்!

முதன் முதலாக அவளுக்குச் சமமான ஒரு பொருளை எனக்குக் கொடுக்கவேண்டும். அதுவும் ஓர் அரசன் விரும்பிக் கேட்க கூடியதாகவே இருத்தல் வேண்டும். அஃது எனது கட்டழகிக்கு இணையானதாகவும் எனது அந்தஸ்துக்கு ஏற்றதாக வும் இருத்தல் வேண்டும்.

இல்லை; அது முடியாது என்றால், அரசனாகிய நான் என் னிஷ்டப்படி நம்மிடம் சிறைப்பட்டுள்ள வேறொரு கட்டழகியை இதோ இந்தக்கையினாலேயே பிடித்துக்கொண்டு விடுவேன்!

மஹா வீரனுன அஜாக்ஷன் வெகுமதியாகப் பெற்ற வளேயோ, யுலிஸ்ஸிஸ் பிடித்துக்கொண்டவளேயோ, அல்லது நீயே வைத்துக் கொண்டவளேயோ நான் சுவீகரித்துக் கொண்டு விடுவேன். தனது பொருளே இழந்து தவிப்பவன் உரத்துக் கூவிக் குறை கூறலாம், முறையிடலாம், கோபத்துடன் சீறலாம்! அவனது சீற்றமெல்லாம் சிறிதும் பயனற்றதாக முடிந்தும் விடலாம். அஃது இருக்கட்டும். அந்தக் காலம் வரும் பொழுது அதைப்பற்றி வேண்டிய யோசனைகளேச் செய்து கொள்ளலாம்! இப்போது நாம் செய்ய வேண்டியதைக் கவனிப்போம். ஜலமான பிரதேசத்தை உழுது செல்லக்கூடிய ஒரு மரக்கலத்தை நாம் இப்பொழுது சித்தமாக்க வேண்டும். கிரிஸா கரைக்கு நம் நைவேத்தியங்களே அதில் ஏற்றி அனுப்ப வேண்டும். பொறுக்கி யெடுத்த வழிகாட்டிகளேயும் சலிப்பின்றி உழைக்கும் மாலுமி களேயும் அதில் அமர்த்த வேண்டும். அதன்பின் அந்தக் கிருஷ்ண வாகனத்தில் அந்தக் கட்டழகியை ஏற்றி விடலாம். நாம் தெரிந்தெடுத்த ஒரு ராஜ புத்திரனேயும் அவளுக்குத் துணேயாக அனுப்பலாம். இந்தக் காரியத்தில் கிரீட்டாக்கோ மகனேயோ அல்லது அஜாக்ஷனேயோ நியமிக்கலாம். அல்லது மஹா புத்திமானுன நமது யுலிஸ்ஸீஸே நமது கட்டளேயை நிறை வேற்றலாம். அல்லது அரசராகிய நாம் அகிலேசருக்கே இந்தப் பெருங்காரியத்தைச் செய்து வரும்படி கிருபையுடன் ஆணேயிட லாம்! அவர் கடல்களேக் கடந்து சென்று இந்தச் செல்வியை அவளது ஸ்வதேசத்தில் கொண்டுபோய் விட்டு வரலாம். அகிலேசர் அதிக் கோபிஷ்டராகவும் அதிக் குரூரமான குரோத முள்ளவருமாக வல்லவோ இருக்கின்ருர்! அவரே இந்தக் கடவுளேத் திருப்தி செய்யட்டும். இந்தக் கொடிய நோயையும் தீர்க்கட்டும்" என்ருன்.

இதைக் கேட்ட பிலிதீசன் "அடங்காக் கோபங் கொண்டு, கட்டுக் கடங்காத மட்டு மரியாதை யற்று, மதம் பிடித்த கொடியோய்! சுயலாபத்திலேயே கண்ணுங் கருத்து மாயிருக்கும் சீர் கெட்ட மட ஜன்மமே! ஓர் அரசனுக்கு அழகில்லாத துரோக சிந்தனேகளேயே சதா செய்து வருபவனே!

உனது ஆணேக்கு அடங்கியவனும் பெருந்தன்மையு முடைய எந்த கிரேக்கனுவது உன்னே வஞ்சித்து ஒளிந்திருந்து உன்னேத் தாக்குவானு? உனக்கு விரோதமாகத் தன் கத்தியைத் தூக்குவானு?

உன்னிஷ்டப்படி இந்த யுத்தத்தில் கலந்து கொள்ள எனக்கு என்ன காரணம் இருக்கின்றது? அதி தூரத்திலுள்ள துரோஜர்கள் எனக்கு ஒருக்காலும் தீங்கு செய்யவில்லே.

விதியா தேசத்திற்கு விரோதமாக அவர்கள் எந்தச் சேனேயையும் அனுப்பவில்லே.

துரிதமுள்ள என் துரகங்கள் எனது நாட்டுத் தடங்களில் சுகமாக மேய்ந்து வந்தன.

ஓயாமல் அலைத்துருமும் பெருங்கடலும் பாறைகளாலான மதில்களும் இங்கிருந்து வெகுதூரத்திலுள்ள எனது ராஜ்யத்தைக் காத்து வருகின்றன.

வளமுள்ள அந்நாட்டில் பயிர்கள் செழிப்பாக விளை கின்றன.

அங்கு பழ வகைகளும் புறங்கொடா வீரர்களும் விசேஷ மாக உண்டு.

நம்மைப் போன்ற ஒரு மனிதனுக்கு உண்டான ஓர் அக்கிரமத்தைக் கண்டிக்க வேண்டுமென்று நாங்களல்லோரும் ஒருவராலும் வேண்டப்படாமலே கடலைக் கடந்து இங்கு வந்தோமேயன்றி, பொதுவாக நமது சமூகத்துக்கு நேர்ந்துவிட்ட ஒரு கஷ்டத்தை நிவிருத்திப்பதற்காக நாங்கள் வரவில்லை.

நன்றிகெட்ட உன்னிமித்தமாகவும் உனது உடன் பிறந் தான் நிமித்தமாகவுமன்றி வேறு எந்த நிமித்தமாக இந்த டிராய்க்கு அகில தேச ஜனங்களும் வந்து சேர்ந்திருக்கின்றன? நாங்கள் எங்கள் ரத்தத்தை வடிப்பதற்கும் இரவு பகலாக உழைப்பதற்கும் இதுதானு கூலி?

நாங்கள் சேவிக்கும் மனிதன் எங்களுக்கு அவமரியா தையையும் நஷ்டத்தையுமா செய்யவேண்டும்?

பல நாட்களிலும் பயங்கரமான சந்தர்ப்பங்களில் நான் செய்த பல காரியங்களுக்குப் பலனுகை எனக்கு வாய்த்த வெகு மதியைப் பிடுங்கிக் கொள்ளுவேன் என்று மிரட்டு கின்ருயே! உனக்கு என்ன தைரியம்! நீதியற்றவனே!

உன் சாகஸங்கள் என் சாகஸங்களைவிட எவ்வளவோ அல்பமானவை. என்ருலும் உனக்குக் கிடைத்ததைவிட அல்ப மான பஹுமானமே கிடைத்தது.

நாம் பிடித்த ஒவ்வோரிடத்திலும் கிடைத்த ஏராளமான பொருள்களை நீ சுவீகரித்துக் கொண்டாய்! அன்ருடம் ஏற்பட்ட ஆபத்துக்களுக்கு ஆளாகி வியர்வையை நான் வடித்தேன்! அதுதான் நான் அடைந்த லாபம்! இந்த யுத்தத்தில் எனக்குக் கிடைத்த அல்பஸ்வல்பமான வஸ்துக்களைத்தான் நான் என் கப்பலில் சேர்த்து வைத்திருக்கிறேன். அந்த அல்பவஸ்துக் களும் கிடைக்காத பொழுது இந்த யுத்தத்தில் நான் படும் காயங்களுக்கு ஒரு பிரயோசன மில்லாத உபசார மொழிகளே எனக்குக் கிடைக்கின்றன!

மதம் பிடித்த மன்னு! இந்த க்ஷணம் முதல் நான் உன் அடிமை அல்ல! அதை நன்ருக அறிந்துகொள்! இதோ என் கப்பல்களில் ஏறி, நான் தெஸ்ஸாலியா கரைக்குப் போய்ச் சேருவேன். அதன்பின் அகிலேசனது சாகஸமில்

லாமல் துரோஜர்களுடைய நாடுகளில் அதிரிதேசன் என்னஎன்ன கொள்ளைகள் அடிக்கப் போகின்ருன், எந்தஎந்த ஊர்களைப் பிடிக்கப் போகின்ருன் என்பதையும் பார்க்கலாம் " என்ருன்.

இதைக் கேட்டு அரசன் "மகாவீர! பறந்து செல்! இறகு கொண்டு பறந்து செல்! நமக்கு உனது சகாயம் வேண்டவே வேண்டாம்! உனது மிரட்டுதலுக்கும் நாம் அஞ்ச வில்லை. அவற்றை நாம் திருணமாக மதிக்கிருேம். இந்தக் கட்சியில் சண்டை பிடிக்க வீரர்களுக்குப் பஞ்சமில்லை. எதேஷ்டமாக இருக்கிருர்கள். ஓர் அரசனது க்ஷேமலாபத்தை ஜோவ் பகவானே கருத்துடன் காத்து வருவார். கடவுளின் விசேஷமான கிருபைக்குப் பாத்திரர்களான அரசர்களில் ஒருவனுவது தன் மேலதிகாரியிடம் உன்னைப்போல் துவேஷம் பாராட்டக் காணேம்! சண்டையும் சச்சரவுமே உன் சஞ்சல புத்தியின் சேஷ்டைகளாயிருக்கின்றன!

யுத்தங்களாலும் கோர சம்பவங்களாலும் ஜனங்கள் துடிப்பதைக் கண்டு நீ சிறிதும் இரக்கமின்றி ஆனந்திக்கின்ருய்.

நீ அதிவீரசூர பராக்கிரமங்கள் படைத்துள்ளோம் என்ற அகம்பாவம் உள்ளவனுயிருக்கின்ருய். அந்த வீண் பெருமை வேண்டாம். உனது சகலமான வலிமைக்கும் கடவுள்தான் காரணம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். அவரது அருளால்தான் அஃது உனக்குக் கிடைத்திருக்கின்றது.

ஆதலால் ஜல்தி புறப்படு ; உனது கப்பல்களை ஓட்டு, காற்ருய்ப் பறந்து செல்! உனது தேசத்தை உனது மனம் போல் மஹாராஜனுக ஆண்டு வா! எனக்கு உன்னுல் ஆக வேண்டியது ஒன்றுமில்லை. கொஞ்ச காலம் நீ என்னுடன் சினேகம் கொண்டிருந்தாய்! இப்பொழுது காரணமின்றிக் கோபங் கொண்டிருக்கின்ருய்! உனது சினேகத்தினுல் லாபமோ, விரோதத்தினுல் நஷ்டமோ எனக்குக் கிடையாது! இரண்டும் ஒன்றுதான். உன் முழு மடையர்களான மிர்மிடோன் என்னும் மண்ணுங்கட்டிகளைப் போய் மிரட்டு. இங்கு மிரட்டுகிற ஆள் நான், வாய் பொத்திக் கை கட்டி நிற்க வேண்டியவன் நீ என் பதைக் கொஞ்சம் ஞாபகத்தில் வைத்துக் கொள்.

இந்தக் கட்டழகியைக் கொடுத்து விடவேண்டியது தெய்வ ஆஞ்ஞைதான் என்ருல், நானே எனது கப்பலிலேயே அவளை அவளது பிறந்தகத்திற்கு அனுப்பிவிடுவேன்.

அப்போது, துரஹங்காரங் கொண்ட அரசே! கடுங் கோபங் கொண்டு கொதிப்பவனே! நீ பிடித்து வைத்துக் கொண் டுள்ள அழகியை இந்தப் பக்கம் சேர்த்து விட நீ சித்தமாயி ருக்க வேண்டும்.

ஜ்வலிக்கும் கண்களையுடையவளும், கண்டோர் மனத் தைக் கவர்பவளும், களையுடன் விளங்குபவளுமான அவளை நான்

உனது கூடாரத்திலிருந்தே பிடித்துக் கொண்டு விடுவேன். நீ அப்போது என்னுடைய பராக்கிரமத்தையும் பார்ப்பாய். ராஜாதி ராஜனது கட்டளையை மறுத்து அவனுக்கு விரோதமாகக் கிளம்பிய முகூர்த்தத்தையும் நொந்து கொள்வாய். அதனால் நமது பரிவாரத்திலுள்ள ஜனங்கள் அனைவரும் அரசர்கள் அமரர்களுக்குத்தான் அடங்கியவர்கள், உத்தரவாதிகள். உன்னைப் போன்ற தான்றோன்றிகளை லட்சியம் செய்ய மாட்டார்கள் என்பதையும் அறிந்து கொள்வார்கள்'' என்றான். இவ்வாறு உரைக்கக் கேட்ட அகிலேசனது மனம் துக்கத்திலும் கோபத்திலும் அழுந்தியது. அவனது மார்பு படபட வென்று துடித்தது; அவனது நெஞ்சம் சோர்ந்தது; பலவிதமான முறனான எண்ணங்கள் அவனது மனதில் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றித் தம்முள் போராடின; அவனது மனம் தடுமாறியது; அஃது ஒரு நிலையில் நிற்கவில்லை. ஒரு நிமிஷம் அது கோபத்தினால் பொங்கிப் புழுங்கியது. மறு நிமிஷம் சாந்தத்தினால் குளிர்ந்தது.

கோபமானது "உயிரை வாங்கும் உடை வாளை உருவிக் கொண்டு கிரேக்கர்களது சபை நடுவே ஊடுருவிச் சென்று திமிர் கொண்ட இந்தத் தலைவனைக் குத்தி விடு" என்று அவனைத் தூண்டியது.

மறு நிமிஷம் இந்த மனக்கொதிப்பு வேண்டாம். இதைத் தணித்துக் கொள். இந்த ஆத்திரத்தை அடக்கு;

"உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கும் சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு"

என்ற சாந்த புத்தியை அவனது காதில் ரகஸ்யமாக உபதேசம் செய்தது.

இவ்வாறு இன்னது செய்வது என்று தெரியாமல் உறையிலிருந்து அரைவாசி உருவியதும் பளிச்சென்று மின்னிக்கொண்டிருந்ததுமான தனது கத்தியுடன் அகிலேசன் தட்டுத் தடுமாறிக் கொண்டிருக்கையில், ஜோவின் சகோதரியும் மனைவியும் அகிலேசனுக்கும் ஆகமனனுக்கும் அனுக்கிரகம் செய்ய வேண்டு மென்ற எண்ண முள்ளவளுமான தேவியினால் அனுப்பப்பட்ட மினர்வா தேவியானவள் விண்ணுலகை விட்டு விரைந்து இறங்கி வந்து அகிலேசனது பின்புறமாக நின்று கொண்டு அவனது பொன்னிற மயிரைப் பிடித்து இழுத்தாள். தான் வந்த காரியம் இன்னதென்று அவனுக்கு மாத்திரம் சொன்னாள்.

ஒரு கறுத்த மேகம் அவளை வேறொருவரது கண்ணுக்கும் புலப்படாமல் மறைத்திருந்தது. அகிலேசன் அவளைக் கண்ணுற்று அவளது கண்களிலிருந்து பறந்த தீப்பொறிகளின் அடையாளத்தினால் அவள் யாரென்று அறிந்து கொண்டு உடனே

"அத்ரியஸ்ஸின் புத்திரனால் எனக்கு விளைந்த துன்பங்களைத் தாமே நேராகக் காண வேண்டுமென்றே என்னைக் காக்கும் தெய்வமான மினர்வா தேவி விண்ணுலகை விட்டு இறங்கி வந்து விட்டனரா? அப்படியானால் அவர் இந்த அபாரமான அநீதி யையும் இதை நான் நீக்கிப் பழி வாங்குவதையும் தமது கண் கொண்டே பார்க்கட்டும்" என்று கதறினான்.

ஜோவின் புத்திரியான மினர்வா அதைக் கேட்டு "என் அன்பனே, சிறிது பொறு. உனது கோபத்தைத் தணிப்பதற்காக வே நான் விண்ணுலகை விட்டு இங்கு வந்தேன். மகாபலவா னை அகிலேசன் தனது வழக்கைத் தேவர்களிடம் ஒப்புக் கொடுத்து விட்டு தனது மனத்தை அடக்கி அதை நியாயத்திற்குக் கட்டுப் படுத்தட்டும் என்பது ருத்திரஸ்வரூபியாகிய ஜூனோ தேவியின் கட்டளை. அரசனும் நீயும் ஆகிய இருவரும் தேவாதி தேவனுக்குப் பிரியமானவர்களே. அவர் இந்த வழக்கை நியாய மாகவே தீர்த்து விடுவார். அவனுக்குச் சரியான தண்டனையும் விதிப்பார். அப்போது அவன் இழைத்த கொடுமைகள் அவ னது மனத்தை நன்றாய்க் குத்தித் தைக்கும். ஆதலால் தேவர் களின் கட்டளைக்கு இணங்கி நீ பழி வாங்க வேண்டு மென்று உருவிய உனது கத்தியை அதன் உறையில் திரும்பச் செருகு. இவள் சக்தியுள்ள தெய்வந்தான் என்று என்னை நம்பு. நான் சொல்வதைக் கேள். உனக்கு ஏற்பட்ட மானபங்கத்திற்குப் பரிகாரமானது காலத்தையனுசரித்து வந்தே தீரும். அது நிச்ச யம். மகா கர்வியான் அரசன் மிகவும் மன்றாடி உனது உதவி யை நாடவே போகின்றான். அளவற்ற ஐசுவரியங்களை உனக் குக் காணிக்கையாக அளித்து உனது நட்பைக் கோரவும் போகின்றான். ஆதலால் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணத் தை ஒழித்து விட்டு, உன் மனோ விகாரங்களை அடக்கினவ னாய், தேவ ஆஜ்ஞையை அனுசரித்து நடப்பாயாக" என்றாள்.

அப்போது நீலாயதாக்ஷியான மினர்வா தேவியை நோக்கிப் பிலிதீசன், "பெருந்தேவியே! தங்கள் ஆஜ்ஞைகளை நான் பணி வுடன் செவி கொடுத்துக் கேட்டேன். அதுவே எனது கடமை யும் நியாயமும் ஆகும். பழி வாங்க வேண்டு மென்ற எண்ணத் தை ஒழிப்பது மிகவும் சிரமமாகவே இருந்தாலும் நான் அதை ஒழித்து விட்டேன். தெய்வங்களைக் கொண்டாடுவோர்களை அந்த தெய்வங்களே ரக்ஷித்துத் தீருவார்கள்" என்று கூறினான். கூறித் தனது உடைவாளையும் அதன் உறையிற் செருகினான்.

அந்த தேவியும் அதியுன்னதமான ஒலிம்பஸ்ஸுக்கு விரை விற் பறந்து சென்று அங்குள்ள தேவர்களது சபையை அடைந் தாள். ஆனால், அகிலேசனுக்கு மாத்திரம் அவனது மனத்தில் கொதித்துக் கொண்டிருந்த கோபமானது தணியவில்லை. அது முன்னிலும் இருமடங்கு அதிகமாகவே அவனை வாட்டியது. அவன் அத்ரிதேசனை நோக்கி "அட கொடியா! நீ வெகு துடுக்காய் வெளி வேஷம் போடுகின்றாய்! உனது உள்ளம்

கிடு கிடு வென்று பயந்து துடிக்கின்றது, பார்ப்போர் கண்ணுக்கு நீ ஒரு வேட்டை நாயைப்போல் தோன்றுகின்றாய். ஆனால் உனது மனமோ மானைப்போல் அச்சத்தால் நடுங்குகின்றது! நீ எப்போதாயினும் மறைந்திருந்தாவது தைரியமாய்ச் சண்டை செய்ததுண்டா? அல்லது ஒரு சுத்த வீரனைப் போல் கோரமான போர் முனையில் நின்றதாவது உண்டா? வெற்றியோ தோல்வியோ போர்க்களத்தில் தோள்வலி கைவலிகளைக் காட்ட வேண்டியது எங்கள் கடன்! வேடிக்கை பார்த்து கொண்டு வீரர்களைப் பலியிடுவது உனது விளையாட்டு!

ஒரு பகைவனை எதிர்த்துப் போர் செய்ய உன்னால் ஆகாது; உனது பாளையத்துக்குள்ளேயே உலாவித் திரிந்து கொண்டு உனது அதிகாரத்துக்கு உட்பட்டவர்களின் பொருள்களை அபகரிக்க மாத்திரம் உனக்குத்தெரியும்? அதுவே உனக்கு லகுவான காரியமாக இருக்கின்றது!

உன் பிரஜைகளுக்கு ஒரு சனியனாகவல்லவா நீ விளங்குகின்றாய்! நீ ஒரு மஹா துராத்மா, இழிந்தவன். மானங் கெட்டவன்! அடிமை ஜனங்களின்மேல் கோபங்கொண்டு ஜோவ் தேவர் இட்ட சாபமே உனது உருவெடுத்து வந்து விட்டது போலும்! அதனால்தான் ஸ்வாதீனத்தைத் தாராளமாக அனுபவித்து வந்த ஜனங்கள் தங்களது பூர்வஸ்திதியை மறந்தவர்களாக இப்போது தங்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளைத் தடையின்றிப் பொறுத்து விடுகின்றனர். அவ்வாறு பிழைகளைப் பொறுப்பது அவர்களுக்குச் சாதகமுமாக ஆகிவிட்டது.

இன்றேல் இதுவே உனது கடைசியான துரோகமாக முடிந்திருக்கும்!

இதோ இந்தப் புனிதமான எனது செங்கோலின் மேல் ஆணையிட்டு நான் சத்தியமாகச் சொல்வதைக் கேள். இது நான் உன்னை விட்டுப் பிரிந்து போவது போல் கற்பாறையில் நின்று வளர்ந்த தனது தாய் மரத்திலிருந்து வெட்டப்பட்டது. இனிமேல் இது தழைக்கவோ பூக்கவோ செய்யாது. இது தர்ம சாஸ்திரங்களுக்கும் நீதி சாஸ்திரங்களுக்கும் சக்தியை அளிப்பவரான ஜோவ் பகவானுடைய தூதர்களின் சின்னமாக உபயோகமாகும்படி நல்ல பதமான உருக்கினால் ஆக்கப்பட்டுள்ளது. இந்தச் செங்கோலின் மேல் நான் செய்யும் ஆணையானது அதி பயங்கரமானது. இந்தச் செங்கோலை அலட்சியம் செய்ய அரசர்களும் துணியார்கள்! இதன்மேல் ஆணையிட்டு நான் சொல்வதைக் கேள்! இந்த இரணகளத்தில் கிரேக்கர்கள் தங்களது இரத்தத்தைக் கணக்கில்லாமல் வடிப்பார்கள். அகிலேசனைத் திரும்பி வரும்படி உரத்துக் கூப்பிடுவார்கள். அவன் வாரான்! அப்போது அவர்களுடைய கூக்குரல்களெல்லாம் வீணாகவே ஆகி விடும்.

எதிரிகளைச் சம்ஹாரம் செய்து விட்டோம் என்ற பெருமையுடன் ஹெக்டர் ஜெய சீலனாக ரத்தக்கறை கொண்ட இந்தக் கடற்

கரைக்கு வருவான்! மடிந்தோரது உடல்களை மலையாய்க் குவிப் பான்! அப்பொழுதுதான் மதம் பிடித்த வெறியனென நீ எனக்கி ழைத்த நிந்தனைகளை நினைத்து வருந்தித் துக்கிப்பாய்! அப்போது நீ உன் சேனைகளை ரக்ஷிக்கச் சக்தியற்றவனாகத் தவிப்பாய், அழு வாய், புலம்புவாய்!

இந்தக் காரியத்தினாலல்லவா கிரேக்கர்களெல்லோரினும் தைரியவானான வீரன் நமது பகைவனாக ஆகி விட்டான் என்று மனங் கசந்து உருகுவாய்!" என்றான்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் நக்ஷத்திரங்கள் போல் மின்னும் பொன் குமிழ்களால் வட்ட வடிவமாக அலங் கரிக்கப் பட்டிருந்த தனது செங்கோலை வெகு கோபத்துடன் தரை யின் மேல் வீசி எறிந்து விட்டு, வெகு உக்கிரமான தோற்றத்துடன் மூச்சா பேச்சா இல்லாமல் உட்கார்ந்து விட்டான்.

அவனைப் போலவே கோபங் கொண்டிருந்த அரசனும் அவனையுற்றுப் பார்த்துப் பின்னும் பொங்கிக் கொதித்தான். அப் போது முது மொழிகளை யுரைத்து, அவர்களது கோபத்தைத் தணிக்க எண்ணங் கொண்டவராய், உபதேசங்கள் செய்வதில் சமர்த்தரும் உலக அனுபவங்கள் நிறைந்தவரும் பைலியப்பெருந்த கையுமான நெஸ்டார் என்பவர் தமது ஆசனத்திலிருந்து மெதுவாக எழுந்து தேன்போன்ற ஆராய்ந்தெடுத்த மொழிகளைத் தமது திரு வாயினின்று வெளியிட்டார்.

அவர் இராஜ்யபாரம் செய்ய ஆரம்பித்தது முதல் அது வரை தமது நியாயமான நியமங்களின் மூலமாகத் தம் பிரஜை களின் க்ஷேமத்தைக் கோரியே செங்கோல் செலுத்தி இரண்டு தலைமுறைகள் கழித்தவர்.

இரண்டு தலை முறைகளிலும் அவருடைய நாட்டு ஜனங் கள் அவரது நல்ல ஆட்சியைக் கண்டு களித்தது போக மூன்றாம் தலை முறையாகும். அவரது ஞானோபதேசங்களை நேரில் கேட்ப தற்கு இந்தச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அங்கிருந்தோர் அனைவரும் வெகு ஆவலுடனும் பய பக்தியுடனும் இந்தப்புண்ணிய புருஷனை நோக்கிய வண்ண மிருந்தனர். அவர் பின் வருமாறு வெகு நிதா னமாயும் பிரியமாயும் பேச ஆரம்பித்தார்:-

"கிரீஸுக்கே பெருத்த அவமானத்தையும் துக்கத்தையும் உண்டாக்கக் கூடியதாகவன்றோ இந்தச் சச்சரவு வளர்ந்து விட் டது! ஆஹா! இஃது என்ன கஷ்டம்! அதி கர்வியான ட்ராய் வேந் தனும் அவனது சினேகிதர்களும் இதை யறிந்து மிகவும் மகிழ்வார் களே! கிரேக்கர்களில் சிரேஷ்டர்களென்றும் மிகத் தைரியசாலிக ளென்றும் மதிக்கப்பட்ட வீரர்கள் தம்முள் இவ்வாறு சண்டை சச்சரவுகள் செய்து கொள்வதானால் அவர்கள் பங்கில் தெய்வம் இல்லையென்றே தோன்றுகின்றது என்றன்றோ அவர்கள் குதிப் பார்கள்!

நீங்கள் இன்னும் இளைஞர்கள். இளைஞர்கள் இயல்பாகவே எளிதில் கோபத்தின் வசமாகி விடுபவர்கள். இந்தக் கோபத்தைத் தணித்துக் கொள்ளுங்கள். விருத்தரான நெஸ்டாரின் நெடுங்கால அனுபவத்தையும் புத்திமதியையும் யோசனைகளையும் கேளுங்கள்; அவற்றை அலட்சியம் செய்யாதீர்கள்.

தேவர்களுக்குச் சமமான வீரர்களை ஒரு காலத்தில் என்னுடைய இந்தக் கண்கள் கண்டு களித்திருக்கின்றன. எனது விருத்தாப்பிய தசையில் என் கண்கள் அத்தகைய வீரர்களைக் காணும் என்று நான் நம்பவில்லை. கீர்த்திமானான பிரிதியோஜுஸுக்கும் தைரியசாலியான தீரேசனனுக்கும் அழியாப் புகழ்பெற்ற சீநேசனுக்கும் சமானமான அரசர்கள் இப்போது எங்கேயாவது இருக்கின்றார்களா? மனிதர்களையெல்லாம் மிஞ்சிய புஜ பல பராக்கிரமங்களுடன் விளங்கிய திஸியஸ்ஸுக்கோ அல்லது யுத்தத்தில் தேவர்களுக்குச் சமானமாக விளங்கிய பாலிபீமஸ்ஸுக்கோ இணையான அரசர்கள் இப்போது எங்கேயாவது ஜீவித்திருக்கின்றார்களா?

நான் முன் காலத்தில் வாழ்ந்திருந்த இந்தப் பெரியார்களுடன் பழகி யுத்த சம்பந்தமான பெருங்காரியங்களில் ஈடுபட்டு எனது இளம் பருவத்தை வெகு கடினமான அப்பியாசங்கள் செய்வதில் கழித்தேன். மேற்கூறிய அக்காலத்திய வீரர்களெல்லாம் அதிபலவான்களாக விளங்கினர். செய்யும் தொழிலில் தேர்ச்சி பெற்றுச் சதா கீர்த்தியுடன் விளங்கவேண்டுமென்ற உத்தமமான ஆவல் கொண்டவர்களாயிருந்தனர். அவர்கள் மலைப்பன்றிகளை ஈட்டியால் குத்திக் கொன்றனர். அரக்கர்களது இரத்தம் பெருகி வந்த ரங்கங்களில் அவர்கள் யதேச்சையாய்த் திரிந்து வந்தனர். சடை போர்த்த சென்டார்களை (கின்னரர்களை) அவர்கள் அவைகளின் உறைவிடங்களான மலைகளிலேயே வேட்டையாடிக் கிழித்தனர். என்றாலும் அவர்களை நான் என் இனிய வசனங்களாலும் நயமான போதனைகளாலும் நல்வழிகளில் திருப்பினேன். நெஸ்டார் பேசுகையில் அவர்கள் அவர் மொழிகளைக் கவனித்துக் கேட்டு அவற்றின்படி நடப்பார்கள். மேற்கூறிய பிரசித்தி பெற்றவர்கள் எனது பால்யத்திலேயே என்னை ஒரு புத்திமானென்று கருதி வந்தார்களானால், இந்த விருத்தாப்பிய தசையில் நான் உங்களுக்குச் சொல்லப்போகும் யோசனைகளை, பால வீரர்களான நீங்கள் செவிசாய்த்துக் கேட்பீர்களல்லவா?

அதிரிதீசா! உன் மனதைக் கவர்ந்தவளும் அதிரூபவதியுமான அந்த அடிமைப்பெண் எனக்குத்தான் வேண்டும் என்று நீ பிடிவாதம் செய்யாதே! எல்லாக் கிரேக்கர்களும் ஒரே மனதாக அவளை அகிலேசனுக்கு இனாமாகக் கொடுத்தனர்.

அகிலேசா! உனக்கும் ஒரு வார்த்தை சொல்கின்றேன். நமது இறைவனான அதிரிதீசனை நீ அவமதித்துப் பேசுவது கூடாது. அரசன் நீதி தவறாமல் நடக்கவும் வேண்டும். அரசனது ஆஜ்ஞையை எல்லோரும் தங்குத்தடையின்றி நிறைவேற்ற

வும் வேண்டும். நீ தேவர்களுக்குச் சமமான வீரன். ஒரு தேவியின் புத்திரனும் ஆனவன். யுத்தத்தில் உனக்கே முதலாவது மரியாதைகள் செய்யப்படுகின்றன. அவன் மகாமாட்சிமை தங்கியவன். ஜோவின் புத்திரர்களும் செங்கோல் ஏந்துபவர்களுமான இந்தப் பூவுலகத்திலுள்ளவர்களுக்கெல்லாம் மேலானவன். நீங்கள் இருவரும் விரோதமின்றி ஒருமித்து ஒரே மனத்தினராய் ஒழுக வேண்டும். அப்போதுதான் அதிகாரமும் வீரமும் பராக்கிரமும் ஒன்று சேர்ந்து சோபையுடன் விளங்கும்.

அரசே! அகிலேசனது கோபத்தை நான் தணித்து விடுகின்றேன். நீர் அவனைவிட வயதில் பெரியவரானதினால் நீரே உமது மனத்தை அடக்கியாண்டு தணிந்துவிடும்.

தேவர்களே! கிரேக்கர்களது பெருமைக்குக் காரணமானவனும் எங்கள் எல்லோருக்கும் ரக்ஷகனுமான அகிலேசன் எங்களை விட்டு அகலாமலிருக்குமாறு கிருபை செய்வீர்களாக" என்றார்.

அவர் இவ்வாறு சொல்லி முடித்தபின் ஜனாதிபதி பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான்:- "தாங்கள் மஹா விருத்தர். அதியுன்னதமான மரியாதைகளுக்கு அருகரானவர். தங்களது வார்த்தைகளும் மிகவும் உசிதமாகவிருக்கின்றன. ஆனால் அவன் கட்டுங்கடங்காதவன். அவனது மனது சட்டங்களையோ, மரியாதைகளையோ சட்டை செய்யாதல்லவா? அவன் மஹா அகம்பாவமுள்ளவன். தனக்கு மேலான ஸ்தானத்திலுள்ளவர்கள் அனைவரும் தன்னையே விழுந்து வணங்கிக் கும்பிடவேண்டுமென்ற ஆத்திரமுள்ளவன். தான் சொல்வதுதான் சட்டம், தானே எல்லோருக்கும் அதிபதி என்ற மஹா கர்வமுடையவன். அவனையே நாமும் நமது பரிவாரத்திலுள்ள சகல ஜனங்களும் அரசர்களும் அடிபணிந்து வணங்க வேண்டுமாம்! இவ்வாறு தனக்கு விரோதியாக மாற்றான் ஒருவன் கிளம்பிவிட்டால் ஒரு ஜனாதிபன் அவனைக் கண்டு சகித்துக்கொண்டிருக்க முடியுமா?

சகல தேவர்களும் அவனுக்கே அனைவரையும் விட அதிகமான பராக்கிரமத்தை அளித்திருப்பதாக வைத்துக் கொள்வோம்; ஆனால் அவன் வசைச் சொற்களை வழங்கவும் அவனுக்கு அவர்கள் அவ்வாறே அதிகார வரம் கொடுத்திருக்கின்றார்களா?" என்று பேசிக்கொண்டிருக்கையிலேயே அகிலேசன் கொடுங் கோபத்துடன் பொங்கி யெழுந்து அவனைத் தடுத்து 'அட கொடியா! உனது அநியாயமான ஆஞ்ஞைகள் ஒவ்வொன்றையும் நான் பணிவுடன் ஏற்று வருவேனானால் நான் உன் கொடிய விலங்குகளுக்குக் கட்டுண்டு உனது அடிமையாகவே உனக்குச் சேவகம் செய்து எனது வாழ்நாளைக் கழிக்க வேண்டும். ஆனால் உனது அதிகாரம் என்னிடம் செல்லாது. அதை உனது அடிமைகளிடம் செலுத்து.

இந்த யுத்தத்தில் கிரேக்கர்கள் பிரைஸீஸை எனக்கு இனாமாகக் கொடுத்தனர்! அவளை நீ பிடித்துக்கொண்டு விடு! கிரேக்கர்

களும் தட்டிப் பேசாமல் உனது அக்கிரமத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கட்டும்!

சிறிதும் ஆக்ஷேபிப்பாரின்றி நீயும் அவளை ஸ்வீகாரித்துக் கொள்! பத்திரப்படுத்தி வைத்துக்கொள்! அகிலேசன் இனிமேல் எந்த ஸ்திரீ சம்பந்தமான வியவஹாரத்திலும் தனது வெற்றி தரும் கத்தியை உருவமாட்டான் என்பதைக் கெட்டியாய் அறிந்து கொள்!

ஏற்கெனவே நடந்துவிட்ட காரியங்களை மன்னித்து விடும்படி தேவர்களெல்லாம் எனக்கு ஆணையிடுகின்றனர். நீ எனக்குச் செய்ய நினைத்த அக்கிரமங்களை இத்துடன் நிறுத்தி விடு! இதுவே நீ எனக்குச் செய்யக் கூடிய முதலுங் கடைசியுமான துரோகமாக விருக்கட்டும்!

இனிமேல் மறுபடியும் என் விஷயத்தில் ஏதேனும் அக்கிரமஞ் செய்ய நீ நினைப்பாயாகில் உனது இரத்தம் எனது பொறி பறக்கும் கத்தியின் வாயிலிருந்து ஆருய்ப் பெருகும். இதை நன்ருய் ஞாபகத்தில் வைப்பாய்" என்ருன்.

இத்துடன் இவர்களது கொடிய சம்பாஷணையும் நின்றது. தங்களது வயிற்றெரிச்சல் தீர வீரர்கள் இருவரும் ஒருவரையொருவர் நிந்தித்துக் கொண்டனர். பின்பு கடுங் கோபத்துடன் அவ்விருவரும் தம் தம் இடம் சென்றனர்.

அகிலேசன் பத்திரகலுஷனுடன் எழுந்து புறப்பட்டுத் தனது கூடாரத் தருகில் காலியாயிருந்த தன் கப்பல்களை நோக்கிச் சென்ருன்.

அவன் அவ்வாறு செல்லுகையில் அதிரிதேசன் கிரிஸாவின் புண்ணிய தீரத்திற்குச் செல்வதற்காகக் கணக்கற்ற மாலுமிகளுள்ளதும் பலமாகக் கட்டப்பட்டதுமான ஒரு கப்பலைச் சித்தம் செய்தான். கட்டழகியான கிரைஸீஸ் கப்பலின் மேல் தட்டில் அமர்ந்திருக்க அதிபுத்திமானுன யுலிஸ்ஸீஸ் இந்த யாத்திரையைச் செவ்வனே செய்து வரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு அக் கப்பலின் தலைவராகப் பொலிவுடன் விளங்கினுர். கப்பலோட்டிகளும் அக்கப்பலின் இரு மருங்கிலும் நூற்றுக் கணக்கான காளைகளைப் பலியிட்டு விட்டு அதை ஓட்டத் தொடங்கினர். அது வெகு துரிதமாகப் புறப்பட்டு நீர் வழியைக் கீறிக்கிழித்துக் கொண்டு சென்றது.

பின்பு அரசன் தனது சமூகத்திற்கு உண்டாகியிருந்த பீடைகளுக்குப் பரிகாரம் செய்ய உத்தேசித்து வேண்டிய பிரயத்தனங்களைச் செய்தான். பிராயச்சித்தமான மேலான சடங்குகளையும் உருக்கமான பிரார்த்தனைகளையும் நடத்தினுன். சகலரும் கடல் ஸ்நானம் செய்து தங்களது பாபத்தைப் போக்கடித்து கொண்டனர். சமுத்திரத்தின் ஜலத்தையும் அர்க்கியமாக விட்டனர். அதன்பின் நூற்றுக்கணக்கான எருதுகளைக் கரையோரமாக

வரிசையாய் நிறுத்திப் பலியிட்டனர் ; பீபஸின் பலிபீடங்களிலும் எருதுகளும் ஆடுகளும் வெட்டப்பட்டன. அப்பொழுது ஹோம குண்டங்களிலிருந்து உண்டான கறுத்த மேகம் போன்ற புகைகள் தங்களுக்குக் கிடைத்த ஹவ்யங்களுக்கு நன்றி செலுத்தும் பாவனை யுடன் கோபுரங்கள்போல் உயர்ந்து சுழன்று எழுந்து பிரியமான ஸுகந்தத்தை வானமெங்கும் பரப்பின.

இவ்வாறு சேனையிலிருந்தோர் அனைவரும் இந்த நற்கிரியை களில் கண்ணுயிருக்கையில் அதிரிதேசன் மாத்திரம் கோபந்தணி யாமல் மிகுந்த ஆக்கிரஹத்துடன் கொதித்துக்கொண்டே யிருந்தான்.

அவனருகில் அவன் ஆணைகளை நிறைவேற்றுவதற்காக டால்திபியஸ் என்றும், நல்லோனுன யூரிபேட்டீஸ் என்றும் பெய ருடைய இரண்டு உத்தமரான மெய்காவலர்கள் காத்திருந்தனர். அவர்களை நோக்கி அவன் "கொடியோனுன அகிலேசனது கூடாரத்துக்கு ஓட்டமாய் ஓடிச் சென்று அங்கிருந்து அரசரான நமக்கு வெகுமானமாக பிரைஸீஸை இங்கு பிடித்து வாருங்கள். அவன் அவளை நமக்கு விட்டுக்கொடுத்துத்தான் தீரவேண்டும். இன்றேல் நாமே ஆயுதபாணியாய்ச் சென்று அவர்களைப் பிரித்து அவளை இழுத்து வந்துவிடுவோம்! அவன் அவளைத் தன் மனத்தி லேயே ஒளித்து வைத்திருந்தாலுங்கூட நாம் அவனது மார்பைப் பிளந்து அவளை இழுத்து வந்துவிடுவோம்" என்ருன். இந்தக் காரியஞ்செய்யச் சிறிதும் மனமில்லாதவர்களாகவிருந்தும் அவ்விரு கிங்கரர்களும் தீராப் பொறியே யென்று தங்களை நொந்து கொண்டு தங்களது தலைவனது ஆணையை நிறைவேற்றப் புறப் பட்டு மணல் மலிந்த பாழான பாலை நிலத்தின் ஓரமாய் மிகுந்த துக்கத்துடன் சென்று அகிலேசனது கூடாரத்தை யடைந்தனர். அப்போது அங்கே அகிலேசன் விசனத்தினுல் வாடிய முகத்துடன் தனது கையை ஊன்றிக்கொண்டு ஒருக்கணித்துப் படுத்துக்கொண் டிருந்தான். முன்செல்லத் தயங்கியவர்களாகவும் தங்களுக்கு விதிக்கப்பட்ட கொடிய கட்டளையை வாய்விட்டுச் சொல்ல நடுங்கி யவர்களாகவும் அவ்விருவரும் அகிலேசன் முன் நெடுந்தூரத்தில் வெகுநேரம் மௌனமாக நின்றனர். அவர்களது ஸ்திதி மகாதர்ம சங்கடமானதாக விருந்தது.

தேவர்களுக்குச் சமானமான அந்த மகான் இதைக் குறிப் பால் அறிந்து அவர்களை நோக்கிப் பின்வரும் இனிய வசனங்களை யுரைத்தான் :—

"மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் உபசாரங்கள் செய்யும் புண்ணியர்களே! தாராளமாகவும் நமது நன்மதிப்புடனும் நமது கிருஹங்களுக்கு வாருங்கள்! நீங்கள் வந்த காரியம் இன்னதென்று நான் அறிவேன். நீங்கள் மிகுந்த நிர்ப்பந்தத்தின் மேல்தான் இங்கு வந்தீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். நான் உங்களைக் குற்றம் சொல்லவில்லை. குற்றமெல்லாம் உங்களது மதம் பிடித்த அரசனதே யாகும்!" என்று சொல்லிவிட்டுப்

பத்திரகலுஷனை நோக்கி "பத்திரகலுஷா, எழுந்திரு. விரைந்து வா. எனக்கு வாய்த்த அந்தப் பேதைப் பெண்ணை அந்தப் பாதகனுன அரசனிடம் கொண்டுபோய் விட்டுவிடு" என்று சொல்லி, மறுபடியும் தூதர்களை நோக்கி "தூதர்களே இதோ உங்கள் முன்பாக நான் செய்யும் சபதத்தைக் கேளுங்கள்! அதை எல்லோரிடமும் சொல்லுங்கள். உங்களைக் கட்டளை யிட்டு இங்கு அனுப்பிய நெறிகெட்ட தான்தோன்றிப் பயலான உங்களது அரசனிடம் அதை முதன்முதலாக உரத்துச் சொல் லுங்கள். கிரேக்கர்கள் ஒருவர் தவருமல் அனைவரும் அடியற்ற மரங்கள் போல் விழுந்து தங்கள் இரத்தத்தை வடிப்பார்கள். அப்போதும் அகிலேசன் யமனைப் போல் சிறிதும் அசையாமல் இருந்துவிடுவான். அச்சமயம் மூர்க்கமான கோபத்துக்காளாகிப் பொங்கிக் கொதிக்கும் இந்தப் பெரிய அதிபதியானவன் தன் லாப நஷ்டங்களை யறியாத கண்ணிழந்த குருடனைப் போலவும், தன் சேனு சமூகத்திற்குச் சிறிதும் பிரயோசனமில்லாதவனுகவும், முன் நடந்த சமாசாரங்களை ஆதாரமாக வைத்துக் கொண்டு ஆலோசித்து, பின் வருபவைகளை யோசிக்கும் திறமையில்லாத வனுகவும், கடைசியாக இரத்தக் காயம் பட்டு வெட்டுண்டு மடிந்து போகையிலும் தன் கொடுமைகளை நினைந்து மன முருகுவான்" என்றுன்.

அப்போது பத்திரகலுஷன் அகிலேசனை விட்டுப்பிரிய மனமில்லாதிருந்த அந்தக் கட்டழகியை அங்கு அழைத்து வந்தான். அவள் தன் துக்கங்களை மிகவும் பொறுமையுடன் வகித்தவளாகவும், தனக்கு இன்னும் மேன்மேலும் என்ன என்ன துக்கங்கள் விளையவிருக்கின்றனவோ என்ற சிந்தனையில் ஆழ்ந்தவளாகவும், மௌனமாய் அங்கு விட்டு நகர்ந்தாள். அவளது தளர்ச்சியை அறிந்து தூதர்கள் அவளது கையைப் பிடித்துக் கொண்டனர். அவள் வெகு மெதுவாக அந்தக் கடற்கரை யோரம் நடந்து செல்லுகையில் பன்முறையும் அகிலேசனை திரும்பித் திரும்பிப் பார்த்தாள்.

சத்துருக்களைத் தபிப்பவனுன அகிலேசன் தனது நஷ்டத்தை இவ்வாறு மௌனமாகவும் அடக்கமாகவும் பொறுத்து வரவில்லை. அவன் அதிக துக்கமுடையவனுய்த் தன் தாயின் தாயும் தனது பந்துவுமான அந்த முழங்குங் கடலின் கரைக்குச் சென்று, அந்தப் பரந்த கரையிலிருந்த ஒரு கொடும் பாறையின் மேல் சாய்ந்து கொண்டு கோபத்தினுலும் வெறுப்பினுலும் வடிந்த கண்ணீர்களால் தனது அங்கம் முழுவதும் நனையப் பெற்றவனுய், அந்தக் கொந்தளிக்கும் கடலை நோக்கித் தன் குறைகளைப் பின் வருமாறு கூவியுரைத்தான்: கதறினுன். "எனது தாயான தெய்வமே! நன்ருகச் செழித்து வாழ வேண்டிய இளம் பருவத்தில் உமது மகன் ஒரு மிகக் கொடியோனது ஆஞ்ஞையினுல் அழிந்துபோகும் தருணமும் வந்து விட்டதே! அதிசீக்கிரம் அழிந்து போகக்கூடிய அல்பமான கீர்த்தியேந்திய சாண் நீளமுள்ள அவனது வாழ்வை மஹானுன ஜோவ் பகவான்

அலங்கரிக்க வேண்டியது நியாயமல்லவா? இடிக்கரசன் பேரும் கீர்த்தியுமாவது எனக்குத் தரவேண்டாமா? அதோ அங்குள்ள செருக்குடைய அரசன் உமது மகனை இவ்வாறு அவமதித்தும் அவன் பெருமைகளைக் குறைத்தும் அவனுக்குக் கிடைத்த சம்மானங்களைப் பிடுங்கியும் கொண்டனனே! கடவுள் செய்த வாக்குறுதிகளெல்லாம் எங்கே போயின? இப்படித்தான் தனது வாக்கைக் கடவுள் நிறைவேற்றுவதா?" என்று முறையிட்டான்.

அவனது கூக்குரலும், பிரார்த்தனைகளும் விருத்தனுன சமுத்திர ராஜன் (ஓஷன்) ஆண்டுவந்த சமுத்திரத்தின் கரைக்கு வெகு தூரத்தில் மிகவும் ஆழமும் ரஹஸ்யமுமான ஓர் இடத்தி லிருந்த அவனது தேவாம்சமான அன்னையின் காதில் விழுந்தன. அப்போது அலைகள் வழிவிட அந்த தேவியும் வெண்பனியைப் போல் திரைகளின் மேல் விளங்கினுள். புற்பூண்டுகள் கூட விளையாத அந்தக் கரையில் இருந்த வண்ணம் கதறிக் கொண் டிருந்த தனது புதல்வனைக் கண்ணுற்ருள். அவனுடைய மனக் குறைகள் என்ன என்று விசாரித்தாள். "எனதுஅரும் புதல்வன் அழுவானேன்? உனக்கு என்ன ஆபத்து வந்து விட்டது? அதை எனக்குச் சொல். அதை நானும் அறியட்டும். அதன் காரணமென்ன? நான் உன்னைப் பெற்றவளாயிற்றே! நான் அதற்கு வேண்டிய விமோசனத்தைத் தேடுவேனே! என்னை நம்பு" என்ருள்.

அவன் நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு பின் வருமாறு உரைத்தான்: "எனது துக்கங்களெல்லாம் தங்களுக்கு வெகு நன்ருகத் தெரியும்! அவைகளைத்தான் நான் சொல்லவேண்டும்! அப்பாலோ வாக்கு பிரியமானதும் அயீஷனது அதிகாரத்துக்கு உட்பட்டதுமான திபீயிலிருந்து ஜெய சீலர்களான எங்கள் சேனைகள் மூட்டை மூட்டையாக திரவியங்களையும் கொள்ளை யடித்த வேறு சாமான்களையும் கொண்டுவந்தன.

வீரர்களெல்லாம் அவைகளை நியாயமாகப் பங்கிட்டுக் கொண்டு, தங்கள் தங்கள் சிரமத்திற்கு ஏற்ற லாபம் கிடைத்தது என்று சந்தோஷித்திருந்தனர். அப்போது அதிக தேக காந்தி யுள்ளவளும் தேவர்களும் விரும்பக்கூடியவளுமான கிரைஸீஸை மாத்திரம் எல்லாரும் ஏக மனத்தினராய் அரசனது மஞ்சத்திற்குத் தகுந்தவள் என்று கருதி அவனுக்கு அளித்தனர். அதன்பின் பீபஸின் பக்தரான அவளது தகப்பனுர் அழகு நிறைந்த தனது புத்திரியை அவளைக் கைப்பற்றிக்கொண்ட வீரனது பாசத்தி லிருந்து விடுவித்துக்கொண்டு செல்ல நினைத்து விசேஷமான காணிக்கைகளுடன் வந்தார்.

அவர் நமது கப்பற்படை தங்கியிருந்த இடத்தையடைந்து தலைகுனிந்து தாழ்ந்து செங்கோலையும் பச்சைத் தலை மாலையையும் முன் நீட்டி எல்லாரையும் பிரார்த்தித்தார்.

விசேஷமாக அத்ரியஸ் மஹாராஜனது குலத்தில் வந்தவர்களான சகோதர அரசர்கள் இருவரையும் அவர் வேண்டிக் கொண்டார்.

பெருந்தன்மை வாய்ந்த கிரேக்கர்கள் அனைவரும் அடிகளைப் போற்றவேண்டும், கட்டழகியைக் கட்டவிழ்த்து விடவும் வேண்டும் என்று ஏக மனத்தினராய் ஒத்து உரைத்தனர். அதிரிதேசன் அதற்கு இணங்கவில்லை. அவன் தனது பிறவிக் குணமான கர்வத்தின் வசமாகிப் பெரியவரை அவமதித்தான். அவரது காணிக்கைகளையும் மறுத்தான். அவ்வாறு அவமதிக்கப் பட்ட அந்தப் பெரியவர் பீபஸின் அந்தரங்க பக்தர். அந்தக் கடவுளின் விசேஷமான கருணைக்குப் பாத்திரமானவர். அவர் தமது கடவுளிடம் தம் குறைகளைச் சொல்லி முறையிட்டார். பீபஸ் பகவானும் அவருடைய பிரார்த்தனைகளைச் செவியுற்றுக் கேட்டார். அதன் பயனாக ஒரு கோரமான பெருவியாதி உண்டாயிற்று. பழிக்குப்பழி வாங்கி விடுவதேயென்று அக் கடவுளின் சுடுசரங்கள் அக்கணமே பறந்து வந்தன. அவை கிரேக்கர்களது மார்புகளைத் துளைத்தன.

அப்போது தெய்வப் பிரஸாதத்தினால் ஞான திருஷ்டி பெற்ற ஒரு மஹான் எழுந்து முன்வந்து குற்றத்தைச் சுட்டிக்காட்டி அதுவே கஷ்டங்களுக்கெல்லாம் மூலம் என்றார். அப்போது நான் அங்குக் கூடியிருந்த மன்னர்களுக்கெல்லாம் முன்பாக முதன் முதலாக எழுந்து இந்த தெய்வ அபராதத்தினால் ஏற்பட்டுவிட்ட கஷ்டங்களை நிறுத்தவேண்டியது அவசியம் என்று அடிகளின் ஆப்த வாக்கியங்களை ஆமோதித்துப் பேசினேன். அதைக்கண்டு அரசன் கடுங்கோபங்கொண்டு எழுந்து புயல்போல் பொங்கினான். ஆவேசத்துடன் மிரட்டினான். பயமுறுத்தினான். மிரட்டினபடியே கொடுமைகளையுஞ் செய்தான்.

கட்டழகியான கிரைஸீஸை அவளது தகப்பனிடம் திருப்பி அனுப்பினான். தெய்வத்தின் மனம் குளிருமாறு காணிக்கைகளையும் அனுப்பினான்.

அதன்பின் அதி திவ்யமான ரூபலாவண்யங்களுள்ளவளும் என் வீர பராக்கிரமங்களுக்கு ஸம்மானமாக கிரேக்கர்கள் அனைவராலும் எனக்குக் கொடுக்கப்பட்டவளுமான பிரைஸீஸைப் பிடித்து கொண்டுவிட்டான். எனது ஊழியத்தையும் பக்தி விசுவாசத்தையும் ராஜ நீதியையும் அவன் சிறிதும் லக்ஷியம் செய்யவில்லை. அவையனைத்தும் பயனில்லாமல் போய்விட்டன.

ஆதலால், தேவியே! உமது மகனான எனது மனக்குறைகளுக்குச் செவி சாய்ப்பீராக!

பொலிவுடன் பளிச்சென்று விளங்கும் உன்னதமான ஒலிம்பஸ் மலைக்குச் சென்று இடி முழக்கங்களின் தலைவராகிய அந்தப் பெருந்தேவரிடம் தாங்கள் முன்பு அவருக்குச் செய்துள்ள உபகாரங்

களையும் அவற்ருல் தங்களுக்கும் அவருக்கும் ஏற்பட்டுள்ள பரஸ்பர சம்பந்தத்தையும் வலியுறுத்திச் சொல்லி எனக்குச் செய்த பழியைத் தீர்க்கவேண்டுமென்று பிரார்த்திப்பீராக ?

முன்னொரு காலத்தில் தேவலோகத்தில் பெருத்த கலகங்கள் உண்டாகி அஃது அடியோடு நடுங்கியபொழுது தாங்கள் தேவலோக வாசிகள் அனைவருக்கும் முன்பாக நின்றுகொண்டு இளைக்காமல் மேகனுதனை ஜோவ் பகவானைக் காவல்காத்து வந்ததாகப் பன்முறையும் தங்கள் வீரப் பிரதாபங்களைப் பெருமையாய்ச் சொல்லியிருக்கின்றீர்கள் ! தம்முடன் சமமாக வீற்றிருந்து அதி கம்பீரமாக அரசாட்சியை நடத்திவந்தவளும் யுத்தத்தில் தேர்ந்த பெண்மணியும் சமுத்திர ராஜ்யத்தின் ஏகாதிபதியும் அதிதேஜஸ்வியுமான தமது மனைவி துரோகிகளான சில்லரை தேவதைகளுடன் சேர்ந்து சதிசெய்து மதங்கொண்டு பேராசையினுல் தூண்டப்பட்டு சர்வ வல்லமையுள்ளவரும் தேவாதி தேவருமான தமக்கு விலங்குகளிடுவதாக பயமுறுத்தி வெருட்டியபொழுது தாங்கள் அவரைக் காப்பாற்றுவதற்காக தேவர்களால் பிரியாரியஸ் என்றும் மனிதர்களால் ஈஜீயான் என்றும் அழைக்கப்பட்ட தைத்தியாஸுரனைக் கூவியழைத்தீர்கள். அவனும் வந்தான். தனது பிரமாண்டமான உருவத்துடன் அவன் ஆகாய வீதியில் அடிமேல் அடிவைத்துக் கொண்டு உல்லாசமாக வந்தபொழுது அங்கிருந்தவர்களெல்லாரும் அவனைக் கண்டு ஆச்சரியப்பட்டு பிரமித்து போயினர் ! அசையாமல் நின்றுள்ள இந்த உலகத்தை ஆட்டிவைக்கும் தேவருக்கும் கூட அந்த அசுரனது சக்தியில்லை ! ராக்ஷஸனுன அவன் தனது பலத்தில் கர்வம் கொண்டவனுய் ஜோவின் உன்னதமான ஸிம்மாஸனத்தின் சமீபத்தில் நின்றுகொண்டு தன் நூறு கைகளையும் அவரைச் சுற்றிச்சுழற்றினுன். அப்போது சில்லரைத் தேவர்களெல்லாம் அவனைக் கண்டு பயந்தவர்களாய்த் தங்களது தலைவருக்குத் தலைவணங்கித் தங்களது பிழையைப் பொறுத்துக் கொள்ளும்படி தாங்கள் கொண்டுவந்திருந்த விலங்குகளை விட்டெறிந்துவிட்டு மிகவும் நடுநடுங்கி அவரை வந்தித்தனர்.

தாயே ! தேவியே ! இதைத் தாங்கள் அவருக்கு ஞாபகப் படுத்துங்கள்.

அவரது முழங்கால்களைக் கட்டிக் கொள்ளுங்கள். அவரது சபையின் முன் விழுந்து வணங்குங்கள்.

இந்த கிரேக்கச் சமூகத்தை வெகு தூரத்துக்குத் துரத்தியடிக்க வேண்டும். இவை தலை குப்புற ஓடிச்சென்று தங்கள் கப்பலேறிக் கடலைக் கடந்து செல்லும்படி இவைகளைப் புடைக்க வேண்டும் ! கடற்கரையில் அபரிமிதமான சவங்களைக் குவிக்க வேண்டும். அரசனது அநீதியினுல் தங்களுக்கு நேர்ந்த சாபம் இத்தகையது என்பதைக் கிரேக்கர்கள் அறியவேண்டும் என்று அவரை வேண்டுங்கள். அதன்பின் வணங்காமுடியான ஆகமனன் தனது தலையைத் தூக்கிப் பிணக்குவியலான தனது அகண்ட ஏகாதிபத்தியத்தைக் கண்ணுற்று " கிரேக்கர்களிலெல்

லாம் சிறந்தவனுன வீரனைத் தான் அவமதித்ததனுல் இந்த இரத் தப் பெருக்காயிற்றே ! என்று நொந்து மனமுருகட்டும்!'' என்ருன்.

இவ்வாறு அவன் சொல்லக் கேட்ட திவ்யஸ்ரூபியான தெடீஸ்தேவி வானின்று சொரியும் மழைபோல் கண்ணீரை வடித் துக் கொண்டு "பாக்கியமில்லாத மகனே! உனது தாயாகிய நான் ஏன் பத்துமாதம் சுமந்து பல பிரஸவ வேதனைகளையனுபவித்து உன்னைப் பெற்றேன்! நக்ஷத்திரங்களுக்கும், கிரஹங்களுக்கும் வேண்டாதவனும் ஜன்மம் முழுவதும் கஷ்டங்களையே அனு பவிக்க வேண்டியவனுமாகவன்ரே நீ பிறந்தாய்? நீ கண்ணைத் திறந்து வான வெளிச்சத்தைப் பார்க்க ஆரம்பித்து வெகுகாலம் ஆரம்பிக்கவில்லையே! அற்ப காலந்தானே ஆகியிருக்கின்றது! அந்த அற்பகாலத்திலும் உனது வாழ்வு இவ்வளவு ஆபத்துக்கள் நிறைந்ததாகவா வேண்டும்! பெற்றவளான நான் உனது க்ஷேமத் தைக் கோரிச் சொல்லும் வார்த்தையைக் கேட்டு அதன் படி நடப்பாயானுல் நீ இந்த ஆபத்துக்குத் தப்பிவிடுவாய். நான் சொல்வதைக் கேள். நீ உன் கப்பல்களுடன் இந்த இலியத்தை விட்டு வெகு வேகமாக ஓடிவிடு. தூரமான ஒரு தேசத்திற்குப் போய்ச் சேர். நீ பிழைப்பாய்!

ஐயோ தெய்வமே! என் வார்த்தை எங்கு நடக்கப் போகின்றது! எனது மகனும் இந்த ஆபத்துக்கு இன்ரே நாளையோ ஆளாகி விடுவான் போல் தோன்றுகின்றதே. நான் என்ன செய்வேன்? என்ருலும் என்னுல் கூடியதைச் செய்கின் றேன். உனது பிரார்த்தனையைச் செலுத்தப் பஞ்சுபோல் மஞ்சு படிந்துள்ள ஒலிம்பஸ்ஸுக்குச் செல்லுவேன். நீ அதுவரை க்ஷேமமாக உன் கப்பல்களுக்குள்ளேயே வெகுதூரத்தில் இருந்த வண்ணம் இந்த யுத்தத்தைப் பார்த்து வா. இதில் கலந்து கொள் ளாதே. இப்போது தேவாதி தேவனும் அவனது பரிவாரத்தில் சேர்ந்த எல்லா தேவர்களும் நெடுந்தூரத்திலுள்ள உஷ்ண பிர தேசமான சமுத்திரக்கரையில் ஈத்தோப்பியாவிலுள்ள சிறிதும் தோஷமற்ற ஜனங்கள் நடத்திவரும் திருவிழாக்களில் கலந்து கொண்டு களித்து வருகின்றனர். அவ்வாறு மானிட ஜன்ம மெடுத்து வருபவர்களுடன் களித்து வருவது தங்களது ஏற்றத்திற்குக் குறைவென்று அவர்கள் கருதவில்லை. சர்வ வல்லமையுள்ள அந்த தேவர்கள் அங்கு வெகு குதூகலத்துடன் பன்னிரண்டு தினங்கள் செய்யப்படும் உற்சவங்களில் களித்துவிட்டு, பன்னிரண்டாம் நாள் இரவில் தம் தம் இடங்களுக்குத் திரும்பி வருவார்கள். அதன் பின் நான் பித்தளை மண்டபமேறி அமரர் கோனுன ஜோவின் உன்னதமான மந்திர சபைக்குச் சென்று அங்கு என் குறைகளை முறையிடுவேன்" என்று பதிலுரைத்தாள்.

திரண்டு உருண்டு வந்த அலைகள் திரும்பவும் தங்கள் அகன்ற வாய்களைத் திறந்தன; வழிவிட்டன. அந்த தேவியும் தான் புறப்பட்டு வந்த பாதாளத்திலிருந்து தனது ஸ்தலத்தை நோக்கிச் செங்குத்தாய்ப் பறந்து சென்ருள். அப்போது, தான்

இழந்த கட்டழகியை நினைத்துத் தபித்த வண்ணம் அகிலேசன் இந்த நிர்மானுஷ்யமான கடற்கரையில் புலம்பித் துக்கித்துக் கொண்டிருந்தான். இது நிற்க.

கிரைஸீஸைக் கூட்டிச் சென்ற யுலிஸ்ஸிஸ் என்ன செய்தான் என்பதைச் சற்றுக் கவனிப்போம். பேரறிஞனை யுலிஸ்ஸிஸ் கிரிஸா துறைமுகத்தினுள் ஓட்டமாய் ஓடி நுழைந்தான். கப்பலிலிருந்த அவன் பணியாட்கள் பீபஸ் பகவானுக்குப் பலியிட உத்தேசித்திருந்த வஸ்துக்களைக் கப்பலின் மேல்தட்டின் அடியில் வைத்தனர். பாய்களைச் சுருட்டிப் பாய்மரங்களை ஓர் ஓரமாகக் கட்டி நங்கூரங்களை இறக்கிவிட்டுச் சிறு படகுகளைக் கட்டினர். பின்பு பலி கொடுப்பதற்காகக் கொண்டுவந்திருந்த மிருகங்களைக் கரையில் இறக்கினர். கடைசியில் கிரைஸீஸும் கரையில் இறங்கினாள்.

இவ்வாறு அலைகளால் மோதப்பட்ட கடலிலிருந்து திரும்பி வந்த அந்தச் செல்வியை அதிவீரனான யுலிஸ்ஸிஸ், பீபஸின் திருக்கோயிலுக்குக் கூட்டிச் சென்று அந்தக் கடவுளின் முன்பாக அவரது திவ்விய சன்னிதியில் அவளது தகப்பனாரான கிரைஸை ஸினிடம் கொடுத்துப் பின்வருமாறு உரைத்தான் :

"புனிதரான வேதியரே! வருக, வருக! பீபஸ் பகவானைத் தொழுது வரும்படி மகானான அதிரிதேசனால் அனுப்பப்பட்டவனாய் நான் அதியுன்னதமாக அந்தக் கடவுளின் திருக்கோவிலுக்கு வந்திருக்கின்றேன். சிறிதும் பிரதிபலமோ காணிக்கையோ கொடாமல் தங்களது மகளான மாசற்ற மங்கையை இதோ ஏற்றுக் கொள்ளுங்கள். கிரேக்கர்கள் பக்குவஞ் செய்துவரும் நைவேத்தியங்களையும் நூற்றுக்கணக்கான காளைகளையும் ஏற்றுக் கொள்ளுங்கள். நாற்புறமும் சரங்களைப் பொழிந்து வரும் தங்களது இஷ்ட தேவதையானவர் இந்த நைவேத்தியங்களால் திருப்தியடைந்து எங்களுக்கு உபத்திரவம் செய்வதைச் செய்யாராக" என்றான்.

தனது மகளை இழந்து துன்பத்தில் ஆழ்ந்திருந்தவரும் அவளை திரும்பிப் பெறுவதற்காகத் தாம் சமீபத்தில் செய்த பிரயத்தனங்கள் அனைத்தும் வீணாயிற்றே என்று ஏங்கியிருந்த வருமான அந்தத் தந்தையான கிரைஸைஸ் அதைக் கேட்டபொழுது தமது மகளைத் திரும்பவும் மார்போடணைத்துக் கொண்டார்.

அதன்பின் யுலிஸ்ஸிஸின் ஆட்கள் நைவேத்தியம் செய்ய நியமிக்கப்பட்டிருந்த வஸ்துக்க ளெல்லாவற்றையும் சரவர்ஷியான அந்த தெய்வத்தின் பலிபீடத்தின் அருகில் ஒழுங்காகக் கொண்டு வந்து வைத்தனர். பின்பு அனைவரும் கைகளைத் தண்ணீரால் சுத்தி செய்துகொண்டு பிண்டங்களாகப் பிடிக்கப் பட்டிருந்த உப்புக் கலந்த அந்த நைவேத்தியங்களைத் தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டு வெகு வணக்கத்துடன் தங்கள்

கைகளை உயரத் தூக்கி, பயபக்தியுடன் ஏந்திநிற்க அப்புரோகிதர் பின்வருமாறு பிரார்த்தித்தார்:—

"வெள்ளி வில்லைத் தரித்த தேவரே! செவி சாய்ப்பீர்! ஸில்லா க்ஷேத்திரத்தைச் சுற்றிக் காப்பாற்றி வரும் பெரும் வீரரே! தெரிடாஸ் பிரதேசத்தைப் பெருங் கருணையுடன் கடாக்ஷித்து வருபவரே! அழகாக கிரிஸாவைப் பிரகாசமான கிரணங்களால் பொன்மயமாகப் பிரகாசிக்கச் செய்பவரே! செவி சாய்ப்பீர்! உமது அடிமையின் பிரார்த்தனைக்கு இணங்கி அவனுக்கு உண்டான பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்ற உமது திருவுளப் படிதான் உம் அடுசரங்கள் இவ்வாறு இந்தக் கொடிய நோயை உண்டாக்குகின்றன என்பது உண்மையானல் நான் இப்போது செய்யும் பிரார்த்தனையையும் கேட்பீராக! எனது கோரிக்கை நிறைவேறிவிட்டது. ஆதலால் நீர் ஜனங்களை நாசஞ் செய்யும் இந்தக் கொடுமையை நிறுத்துவீராக! கிருபையுடன் புன்னகை செய்வீராக! வில்லின் நாணை அறுப்பீராக!" என்ருர்.

இவ்வாறு கிரைஸைஸ் செய்த பிரார்த்தனையைஅப்பாலோ பகவான் மனமுவந்து ஏற்ருர். அப்போது கிரேக்கர்கள் தங்கள் நைவேத்தியங்களைச் சமர்ப்பிக்க ஆரம்பித்தனர். அவர்கள் முதன் முதலாக நியமித்திருந்த காளைகளின் கொம்புகளின் மத்தியில் உப்பிட்ட வாற்கோதுமைகளைச் சொரிந்து பின்பு அக்காளைகளின் தலைகளை வானத்தை நோக்கி உயர்த்தி அவற்றை வெட்டினர். பின்பு அக் காளைகளின் அவயங்களை அவற்றின் தோல்களினின்றும் பிரித்தெடுத்து தெய்வங்களுக்குச் சேரவேண்டிய தொடைப் பாகத்தை அவ்வத் தெய்வங்களுக்குப் பகிர்ந்து வைத்தனர். அவற்றின் மேல் வெகு விசித்திரமாக இரட்டை இழைகளில் பின்னப்பட்ட சல்லடைகளில் அக்காளைகளின் ஒவ்வொரு அவயத்திலுமிருந்தும் எடுக்கப்பட்ட அதிருசியான கண்டங்களையும் வைத்தனர். புரோஹிதர் தாமே தமது கடவுளின் சன்னிதியில் முன்நின்று தம் திருக்கைகளைக் கொண்டே அந்தத் திரவியங்களை ஹோமஞ் செய்தார். பின்பு அவர் ஹோமாக்கினியில் கறுத்த நிறமுள்ள சாராயத்தைப் பெய்தார். அப்போது அக்கினியிலிருந்து கொழுந்து விட்டுக்கொண்டு ஜ்வாலைகள் உயரக் கிளம்பின. அவை அவருக்குக் கட்டுலனுயின.

அச்சமயம் அங்குக் கூடியிருந்த சிறுவர்கள் அந்த ஹோமாக்கினியைச் சுற்றி நின்றுகொண்டு தங்கள் வாத்தியங்களை முழக்கினர். இவ்வாறு காளைகளின் தொடைகளும் ஹோமாக்கினியில் இடப்பட்ட அவைகளின் குடல்களும் நன்ருகப் பக்குவமான பின் புரோஹிதரின் சஹாயிகள் காளைகளின் உடல்களில் மீந்திருந்த மாம்சங்களை எடுத்துத் துண்டித்துத் துளைத்து அனலிலிட்டு வாட்டி வறுத்தனர். பின்பு அவர்கள் எல்லாருக்கும் உண்கலங்களை ஒழுங்காக அமைத்து வைத்து அவற்றில் போஜனம் பரிமாறினர். அனைவரும் தம் தமக்கு ஏற்படுத்தப்பட்ட இடத்தில் உட்கார்ந்துகொண்டு தங்களுக்குப் பரிமாறப்பட்ட பிரஸாதங்களை அருந்தினர்.

இவ்வாறு தம் பசியை ஆற்றிக்கொண்ட பின் அவர்கள் உத்தமமான கலப்பில்லாத பானவகைகளை யருந்தித் தங்களது திரு விழாவைப் பூர்த்தி செய்தனர். சிறுவர்களெல்லாம் மிதம் மீறிய அளவுகொண்ட கிண்ணங்களில் சாருயத்தை வழிய வழியப் பெய்து அதிக சந்தோஷத்துடன் அவற்றை அங்குள்ளோருக்கு வழங்கினர். இவ்வாறு வெகு சந்தோஷமாக நடந்த விருந்தானது ஈசுவர விஷயமான திருப்பாடல்களுடன் முடிவு பெற்றது. ஆடல் பாடல்களெல்லாம் ஸூரிய அஸ்தமனம்வரை நிகழ்ந்தன. அதன் பின்னும் களைதீர்ந்த கிரேக்கர்கள் தங்களது வினைதீர்ந்ததென்று களிப்புற்றுத் தங்கள் வாழ்த்துப் பாக்களைப் பாடிக்கொண்டே யிருந்தனர். அப்பாலோ பகவானும் அவர்களுடைய பாடலைக் கேட்டு அங்கீகாரம் செய்தார்.

இரவு வந்ததும் தலைவர்கள் தங்களது கப்பலின் சமீபத்தில் வந்து படுத்துக்கொண்டனர். மறுநாட் காலையில் வானம் செந்நிறம் பூண்டு இளஞ் சிவப்புடன் பிரகாசிக்கும் வரை அவர் கள் உறங்கினர். பின்பு அவர்கள் தங்களது கப்பலை இறக்கிப் பாய்மரத்தை உயர்த்தி நிறுத்தினர். பீபஸ் பகவானின் அனுக் கிரகத்தினுல் காற்றும் அனுகூலமாக அடித்தது. கப்பற்பாய் களும் அக்காற்றை மடமடவெனக் குடித்துக் கொப்பளித்தன. பால் போன்ற வெண்ணிறம் கொண்ட அந்தப் படுதாக்கள் தங்களது வயிற்றைப் பூரணமாய் நிறைத்துக் கொண்டன. கப்பல் கீறிக்கொண்டு செல்லுகையில் பிளவு பட்ட கடலானது நுரை களைக் கக்கிக்கொண்டு தன் அடி வயிற்றினின்றும் உறுமியது. அப்போது துள்ளிப் பாய்ந்த அலைகளைத் தாண்டிக் கொண்டு அவர்கள் வெகு வேகமாகப் பறந்து சென்றனர். கடைசியாக கிரேக்கர்களது பாளையமும் கட்புலனுயிற்று. அந்தப் பாளையத் திற்கு நெடுந்தூரத்தில் கரையோரத்தில் அவர்கள் தங்களது கப்பலை நிறுத்தினர். அப்போது அங்கு அடித்த காற்றினுல் அஃது அசைந்தாடிய பொழுது அது தனது வளைவான ஏராக் கட்டை களைக் கொண்டு மஞ்சள் நிறமான மணலை உழுவதுபோல் தோன் றியது. கப்பலிலிருந்து இறங்கியபின் அவர்கள் அந்த விரிவான கழிமுகத்தின் ஓரமாய் அங்குமிங்கும் நின்று கொண்டிருந்த கப்பல் களுக்கும் கூடாரங்களுக்கும் இடையே வேறு வேருகப் பிரிந்து சென்றனர்.

அப்போதும் சீறிச்சினந்தவனும் கோபந்தணியாதவனு மான அகிலேசன் தீராப்பகை கொண்டாடிக்கொண்டே தன் கப்பல்களின் இடையில் வீற்றிருந்தான். அவன் அப்போது நடந்துவந்த சண்டையிலாவது ஆலோசனைச் சபைகளிலாவது கலந்து கொள்ளவில்லை. உடல் வலியையும் மேனியழகையும் அழிக்கும் கவலையே அவனது மனத்தில் ஒரு பெருஞ் சுமையாகக் கிடந்தது. இருள் மூண்டிருந்த அவனது மனத்தில் "பழி வாங்க வேண்டும். பிராணனையும் வாங்க வேண்டும்" என்ற எண் ணங்களே பொங்கிப் புரண்டு கொண்டிருந்தன. அவனது அந்த ராத்மாவில் ரத்தம் பருகும் அதி பயங்கரமான காட்சிகளே ஒன்றன்பின் ஒன்ருய்த் தோன்றி வந்தன.

இதற்குள்ளாகப் பன்னிரண்டு நாட்கள் கழிந்துவிட்டன. அடுத்ததாக சூரியோதயமான பொழுது தேவர்களெல்லாம் ஒலிம்பஸ் மலையை வந்தடைந்தனர். ஜலமட்டத்திற்கடியில் கட்டப்பட்டிருந்த அந்தரங்க ஸ்தலங்களிலிருந்து ஜோவ் பகவான் முதன்முதலாக உயர்ந்தெழுந்து வந்தார். மற்றைய தேவர்கள் அனைவரும் வெகுதூரம் வரை அவரைப் பின் தொடர்ந்து வந்தனர். சமுத்திர ராஜனது புதல்வியும் அதிகாலையில் வனத்தில் உயர்ந்து செல்லும் பனித்திரையைப்போல் அந்த சமுத்திரத்தினின்றும் எழுந்து தேவர்களின் ஆஸ்தானங்களை நோக்கிப் பறந்து சென்றாள். அங்கு மற்றைய தேவர்களுக்கெல்லாம் உயரமாகவும் அவர்களை எல்லாம் விட்டு வெகுதூரத்தில் தனியாகவும் அமர்த்தப்பட்டிருந்த ஒரு சிம்மாசனத்தில் இடிமுழக்கங்களுக்கு அதிபதியான மேகநாதர் அமர்ந்துகொண்டார்.

அந்த ஒலிம்பஸ்ஸானது வானமளாவியுயர்ந்த தன் நூறு சிகரங்களால் மேகங்களைத் தாங்கிக்கொண்டு நின்ற ஒரு புராணமான மலை வரை அதன் பின் சமுத்திர ராஜனது புதல்வியான தேவி தன் கரங்களில் ஒன்றால் மேகநாதரது தாடிகளை ஏந்திக் கொண்டும் மற்றொன்றால் அவருடைய இரு முழங்கால்களையும் கட்டிக்கொண்டும் மிகவும் வணக்கத்துடன் அவர் முன் நின்று பின் வருமாறு அவரைப் பிரார்த்தித்தாள் :—

“தேவர்களின் தந்தையே! என்னுடைய வசனங்களிலாவது பணிவிடைகளிலாவது தங்களுக்குப் பிரியமுண்டானால் தாங்கள் அதற்கு அடையாளங்களாக எனது மகனுக்கு ஏதேனும் கௌரவத்தைச் செய்யுங்கள். தேகத்தால் நான் செய்த உழைப்பிற்குப் பிரதியாக தங்களது அன்பைக் காட்டுங்கள். கியாதியைக் கொடுங்கள். அல்ப ஆயுளுள்ள எனது மகனுக்குத் தேவர்கள் வாக்குகள் கொடுத்துள்ள பிரகாரம் நல்ல பெயராவது வேண்டாமா? அவன் இப்போது அவமானத்திற்கும் ஆளாகி விட்டானே! ஒரு பொழுதும் நீதி தவறாதவரும் சர்வஞ்ஞருமான தேவரே! இந்தப் பழியைத் தீரும்! அகம்பாவம் கொண்ட அரசனும் அக்கேயர்களும் தற்காலம் இகழ்ந்து வரும் வீரனை அவர்கள் வாழ்த்தித் துதித்துப் பொன் மொழிகள் மொழிந்து போற்றும் வரை கிரேக்கர்களுக்குத் தாழ்ச்சியும் துரோஜர்களுக்கு ஏற்றமும் உண்டாகட்டும்” என்றாள்.

இவ்வாறு தெடீஸ் தேவி புகன்ற மொழிகளைக் கேட்ட ஜோவ் பகவான் அப்போது தமது திருவுளத்தில் தோன்றிய எண்ணங்களை மறைத்துக்கொண்டு மௌனமாயிருந்தார். ஆனால் தெடீஸ் தேவி மனந்தளரவில்லை. அவள் திரும்பவும் அந்த பகவானது பக்கத்தில் நெருங்கி அவரது முழங்கால்களை முன்னிலும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு தன் பிரார்த்தனைகளை மறுபடியும் வற்புறுத்திச் செய்தாள் :—

“தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் தந்தையே! தங்களது அடிமையின் குறைகளைக் கேளும். ஒரு பதில் சொல்லும்.

இல்லை அல்லது உண்டு என்று ஒரு வார்த்தை சொல்லும். ஜோவ் பகவான் யாரைக் குறித்துப் பயப்பட வேண்டும்? விண்ணுலகிலுள்ள சகல தேவதைகளிலும் தெடீஸ் தேவியே பாக்கியமில்லாதவளா? ஜோவ் பகவானுக்கு அவளிடம் தான் சிறிதும் கருணையோ அன்போ ஆதரவோ இல்லையா? அதையாவது சொல்லும்" என்றாள்.

கவிந்துள்ள வளைந்த வானின்மேல் இடியையுருட்டும் அந்தக் கடவுள் அதைக் கேட்டுப் பெருமூச்செறிந்து பின்வருமாறு பதிலுரைத்தார் :—

"நீ செய்யும் பிரார்த்தனை என்ன? அன்னியர்களுடைய சண்டை சச்சரவுகளிலும் ஒருவரோடொருவர் மனஸ்தாபப்பட்டுக் கோபங் கொள்ளும் பிணக்குக்களிலும் ஜோவ் பகவான் பிரவேசிப்பானேன்? அதிபக்ஷபாதத்தினால் நான் துரோஜர்களது கக்ஷியிலிருந்துகொண்டு அவர்களுக்கு உதவி செய்தேனுல் தேவர்கள் எல்லோருமே கூக்குரலிடுவார்கள். ஜூனோ தேவி மூர்க்கங் கொண்டு மிரட்டுவாள். எனது அதிகாரத்தில் அரைவாசியை அவள் வஹித்து விடுகின்றாள். அவள் எனது சஹ-தர்மிணி. எதிராளிக்குச் சிறிதும் இடம் கொடாதவள். நீ என்னருகில்நெருங்கியிருப்பதை அவள் காணலாகாது. அஃது அவளுக்குப் பொறுக்காது. ஆதலால் இங்கு விட்டு ஓடிவிடு. உன் பிரார்த்தனைகளை நான் பெற்றுக்கொண்டு விட்டேன் என்று நிச்சயமாக நம்பிக்கொண்டு மனவமைதியுடன் திரும்பி செல். நமது தலையின் மேலுள்ள திவ்யமான அலங்காரங்களைப் பார். நாம் தலையை அசைப்போம். அதுவே நமது ஆஞ்ஞையை அறிவிக்கும் அடையாளம். நமது ஆஞ்ஞை தவறாது; ஸ்திரமானது; மாற்றவும் முடியாதது. ஆதலால் உனது பிரார்த்தனை நிறைவேறி விட்டது. உனது கோரிக்கைகளும் பூர்த்தியடைந்து விட்டன" என்று சொல்லிக்கொண்டே தம் பயங்கரமான கறுத்த புருவங்களை வளைத்தார். அதி மதுரமான வாசனைத் திரவியங்களிடப்பட்ட தம் மயிர்ச்சுருள்களைத் தூக்கினார். இவ்வாறு அவர் தாம் தமது திருவுள்ளத்தில் செய்துவிட்ட தீர்மானத்தையும் அவளுக்குச் செல்ல விடை கொடுத்து விட்டதையும் குறிப்பாலுணர்த்தினார்.

உன்னதமான விண்ணுலகிலுள்ள தேவர்கள் இவ்வாறு ஜோவ் பகவான் செய்த ஜாடைகளைக் கண்ணுற்ற பொழுது, அவர்கள் அனைவரும் 'கிடு—கிடு' வென்று நடுங்கினர். ஒலிம்பஸ் பர்வதம் அனைத்தும் தனது அஸ்திவாரம் ஆதியாகக் குலுங்கியது!

அதன் பின் தெடீஸ் தேவியானவள் தான் புறப்பட்டு வந்த பிரமாண்டமான சமுத்திரங்களை நோக்கிப் பறந்து சென்றாள்.

ஜோவ் பகவானும் வானத்திலிருந்த தம் நக்ஷத்திர மண்டலங்களுக்குச் சென்றார். தேஜோமயமான அந்தச் சபையில்

அமர்ந்திருந்த அமரர்கள் அனைவரும் இந்த மகா தேவரின் வருகையை எதிர் பார்த்துக் காத்திருந்தனர். தேவாதி தேவன் அங்கு வந்து சேர்ந்தவுடன் அவர்கள் அனைவரும் சிறிதும் சந்தடி செய்யாமல் தங்கள் தங்கள் ரத்னகசிதமான சிம்மாசனங்களிலிருந்து எழுந்து அதி பயபக்தி மேற் கொண்டவர்களாய் அவரது மகா சன்னிதா தனத்தில் பிரசன்னரானார்கள். ஜோவ் தேவர் சிம்மாசனமேறுகையில் அவர்கள் அனைவரும் வெகு நடுக்கத்துடனும் பய பக்தியுடனும் நின்று கொண்டிருந்தனர். அந்த தேவர் குழாத்தில் தேவதேவனது வணங்கா முடியாகிய தேவி மாத்திரம் இருக்கவில்லை!

வெள்ளிக் கால்களையுடைய தேவியை அவள் சற்று முன் தான் சந்தித்திருந்தாள். அந்த க்ஷணம் முதல் அவள் கோபாக்கினியுடன் பொங்கிக் கொதித்து கொண்டிருந்தாள். அவள் ஜோவ் பகவானை நோக்கி :—

"தெய்வலோகத்தை ஆட்டி வைக்கும் தந்திரஸ்வரூபமே! வானமளாவிய இந்த மண்டலத்து ரகஸ்யங்களை யாரிடம் சொன்னீர்? உம் ஆஞ்ஞைகளையும் நடவடிக்கைகளையும் ஜூனோ அறியக் கூடாதென்றால், அவள் உமக்குச் சமமாக அதிகாரம் வகித்து வருவதில் என்ன பயன்? தனது சக-தர்மிணியிடம் சொல்லலாகாதென்று ஜோவ் பகவான் வெகு சமத்தாக விஷயங்களை ஒளித்து வைக்கிறீரே? அந்த ரகஸ்யங்களைத் தெரிந்துக் கொண்டிருக்கும் அவ்வளவு பிரியமான அந்தரங்க விசுவாசமுள்ள தேவிதான் யார்? சொல்லும்?" என்றாள்.

இதைக் கேட்ட இடி முழக்கங்களின் அதிபதியான ஜோவ் பகவான் :—

"சர்வ வல்லமையுள்ள தேவாதி தேவனது அதிரகஸ்யமான எண்ணங்களை அறிய வேண்டுமென்று நீ ஆசைப்படாதே. நாம் விதித்திருக்கும் மகத்தான ஆஜ்ஞையானது ஒருவரது மனத்திற்கும் புலப்படாது. அது மிகவும் ரகஸ்யமானது. ஒருவரது அறிவுக்கும் எட்டாதது. அந்தகாரத்தில் ஆழ்ந்துள்ளது. விதியின் மூலத்தை உன்னால் அறியமுடியுமா? நீ அறியத் தகுந்ததைத் தானே உனக்குச் சொல்லலாம்! அது உனக்கே முதன் முதலாக சொல்லப் படும்! விண்ணுலகத்திலுள்ள தேவர்களுள்ளும் மண்ணுலகத்திலுள்ள மனிதர்களுள்ளும் நீயே அவைகளை முதன் முதலாக அறிவாய். ஆனால் நீதான் ஆகட்டும், அவர்கள்தான் ஆகட்டும், எனது ஆழ்ந்த மனத்தின் அதிபாதாளத்தில் ஆழ்ந்து கிடந்து அலைந்து வரும் எண்ணங்களை அறிய முயல்வது அடாத காரியம்" என்றார்.

அப்போது விண்ணுலக அரசியாகிய அந்த தேவி தன் கம்பீரமான பெருத்த உருண்ட விழிகளால் அக்கடவுளை உருட்டிப் பார்த்து—

"சத்தியந்தவருத ஸாட்டர்னியஸ்ஸே! உமக்கு ஏன் இந்தக் கோபம்? நீர் யாருடைய வார்த்தையைக் கேட்டுக் கொண்டு இவ்வாறு ஆட்டம் போடுகின்றீர்? தங்களது ஆஜ்ஞை வரம்பு கடந்ததுதான். அதை ஆக்ஷேபிப்பார் ஒருவரும் இல்லை. அதை நானும் மறுக்கவில்லை. அது ஸ்திரமாகத்தான் இருக்கின்றது. தங்கள் யோசனைகளெல்லாம் தாங்கள் விதித்த பிரகாரமே நடக்கவும் செய்யும். என்றாலும் கிரீஸை நினைத்துத் தான் நான் பயப்படுகின்றேன். நான் சற்று முன்புதான் வெள்ளிக்காலரசி தங்களுடன் ரகஸ்யமாகப் பேசிவிட்டுச் சென்றதைக் கண்டேன். தனக்குப் பிரியமான தெடீஸ் தேவி கேட்டதை ஜோவ் தேவர் கொடுத்தே தீருவார். ஒன்றையும் மறுக்கமாட்டார்! ஆகாசமே கிடு கிடு வென்று அசைந்ததே! காரணமில்லாமலா அஃது அப்படி அசைந்தது? மூர்க்கனும் கடின ஸ்வாபமுள்ளவனுமான தனது மகனுக்குத் திருப்தியாக வேண்டும், அனுகூலமாக வேண்டும்" என்று அந்த தேவி என்ன பாழான வரத்தைத் தான் பெற்றுச் சென்றாள்? சொல்லும்.

'போர்க் களத்தில் கிரேக்கர்களது ரத்தத்தைச் சிந்துவாய், ஜூனோவின் பிரஜைகளைக் கொன்று உனது பழியைத் தீர்த்துக் கொள்ளுவாய்' என்று அவனை ஆசீர்வதித்தீர்!" என்றாள்.

அதற்கு அந்த மகாதேவர் "ஒருவருக்கும் தெரியாத ரகஸ்யமாக இருக்கவேண்டும் என்று தேவாதி தேவன் மதித்து வரும் விஷயத்தை அறிந்தே தீரவேண்டும்" என்று ஓய்வு-ஒழிச்சல் இல்லாமல் போராடி வரும் அகம்பாவஸ்வரூபமே! உனது சிரமம் வீண். இது மகா அதிகப் பிரஸங்கமானது! பயங்கரமானது. வெறுக்கத் தக்கது. உனக்கு இதனால் கவலைதான் உண்டாகும். உனது புருஷனுக்கும் இதனால் அகௌரவம்தான் உண்டாகும். ஆதலால் இது போதும். இதை நிறுத்து. நான் விதித்த விதியை மாற்ற ஒருவராலும் முடியாது. அந்த சக்தி ஒருவருக்கும் இல்லை. நான் விதித்தது நடந்துதான் தீரும். ஆதலால், தேவி! அடங்கி விடு. நமது ஆஜ்ஞையை மறுக்கக் கனவிலும் துணியாதே. இந்தக்கை பழி வாங்க வல்லது என்ற பயமிருக்கட்டும். விண்ணுலகிலுள்ள சகல தேவர்களும் ஒன்றாய்ச் சேர்ந்தாலும் அவர்கள் அனைவரின் பலமும் சர்வ வல்லமையுள்ள ஜோவ் பகவான் ஒருவருடைய பலத்திற்கு நிகராகாது. அதை எதிர்க்க நினைப்பதும் வீண்" என்றார்.

இடியின் இறைவன் இவ்வாறு இரைந்து பேசிய பொழுது அவரது இல்லக்கிழத்தி அவருக்கு ஒரு விதமாகவும் மறுமொழி சொல்லத் துணியவில்லை.

விண்ணுலகத்தார் அனைவரும் அதி பயபக்தியும் நடுக்கமும் உற்றவர்களாயினர்.

அப்போது நடக்கவிருந்த விருந்து இவ்வாறு தடைப்பட்டதையும் தனது அன்னைக்கு அவமானம் உண்டாகி விட்டதையும்

தேவர்களெல்லாம் நடுங்கிக்கொண்டிருந்ததையும் துக்கத்துடன் கண்ணுற்ற விசுவகர்மாவான வல்க்கன் தனது மனத்தைச் சாந்தப் படுத்திக்கொண்டு, சபையோரைச் சந்தோஷிப்பிக்க வேண்டு மென்ற நோக்கத்துடன் பின்வருமாறு பேசலுற்ருன் :—

'தேவர்களே! அழிந்து போகும் ஸ்திதியிலுள்ள மானிட ஜன்மங்களது இழிவான சண்டை சச்சரவுகளில் நீங்கள் தலையிட்டு வாதம் செய்வது உங்களுக்குச் சிறிதும் அழகில்லை. மானிடப் பிறப்பெடுத்தவர்கள் மதியிழந்து சண்டை சச்சரவுகள் செய்து கொண்டு தங்கள் வாழ்நாட்களைக் கழித்து வரட்டும். நாம் அவர்கள் வியவஹாரங்களில் தலையிடாமல் சாசுவதமான சாந்தமும் நித்திய சந்தோஷமும் உள்ளவர்களாகவே இருப்போமே! என் தாயே! என் தெய்வமே! தாங்கள் நமது தந்தையின் ஆஞ்ஞையை அங்கீகரிக்க வேண்டுமென்று நான் கெஞ்சுகின்றேன். புண்ணிய உலகமான இந்த விண்ணுலகத் தில் கலகம் உண்டாகலாகாது. இங்கு உள்ளவர்கள் அனைவரும் ஒரே மனத்தினராய் இருத்தல் வேண்டும். இன்றேல் அவர் கோபம் மூண்டு எழுந்து புண்ணிய உலகங்கள் அனைத்தையும் அசைத்தாட்டி செஞ்சுடர்களுடன் கூடிய மின்னல் களை ஏவி விட்டுச் சகல தேவர்களையும் அவரவர் ஸ்தானங்களி லிருந்து வீழ்த்தி உருட்டி விடுவார். தாங்கள் தணிந்து விட்டால் இடிக்கு அரசரான அவரும் தணிந்து விடுவார்! சாந்தியடைந்து விடுவார்! தம்மை நாடுபவருக்குப் பிரியத்தை உண்டாக்க வேண்டு மென்றே காத்திருப்பவரல்லவா அவர்! அவர் அடியார்க்கு எளிய வராயிற்றே!" என்ருன்.

இவ்வாறு பேசி முடித்து அவன் சட்டென எழுந்து தள தளவென்று மின்னும் அமிர்தம் வழிய வழிய நிறைந்துள்ள இரண்டு பாத்திரங்களைத் தன் இரு கரங்களிலும் ஏந்திக்கொண்டு மலர்ந்த முகத்துடன் ஜூனோ தேவியின் எதிரில் நின்று பின்னும் "தேவி! தயை செய்து பொறுமையைக் கைப்பற் றுங்கள்! தேவரது ஆணைப்படி நடவுங்கள். ஜோவ் பகவான் மாத்திரம் தமது கையை நீட்டி விட்டாராஞல் அதனுல் எனக்குத் துக்கம் தான் உண்டாகும். தாங்கள் எனக்கு எவ்வளவோ வேண் டியவராக விருந்தாலும் அப்போது தங்களுக்குப் பரிந்து அவரை எதிர்த்து நிற்க என்னுல் இயலாது. அவருக்கு விரோதமாகவும் தங்களுக்குப் பரிந்து எழக்கூடிய தெய்வமும் ஒன்று உளதோ? ஜோவின் பராக்கிரமத்தையும் ஒருகை பார்த்து விடுகின்றேன் என்று தன் கையைத் துணிவுடன் ஓங்கக்கூடிய தெய்வமும் ஒன்று உண்டா?

தங்களுக்குப் பரிந்து நான் ஒருகால் அவரிடம் போர் புரிந் தேன். அப்போது தான் நான் அவரது பராக்கிரமம் இணையற் றது என்று அறிந்தேன். அப்பொழுது அவர் இந்த உன்னதமான விண்ணுலகத்திலிருந்து என்னைத் தலைகீழாகக் கீழே உருட்டி விட்

டார்! நான் வெகு வேகமாகச் சுழன்று சுழன்று அன்று முழுவதும் வட்டம் போட்டுக் கொண்டேயிருந்தேன். சூரிய அஸ்தமன சமயத்தில் தான் பூ ஸ்பர்சம் செய்தேன். அதுவரை பூமியைத் தொட முடியவில்லை. சிறிதும் மூச்சில்லாமல் கீழே விழுந்தேன். வேகமாய்க் கிறு கிறு வென்று சுழன்று கொண்டிருந்ததால் எனது மூச்சு அடைபட்டு விட்டது. அப்பொழுது நான் லெம்னஸ் கரையில் விழுந்து விட்டேன். ஸிந்தியர்கள் என்னை எடுத்து நிறுத்தினார்கள்" என்று சொல்லிக் கொண்டே அந்தக் கிண்ணங்களை அவரது கைக்கு எட்டுமாறு உயர்த்தினான். வெள்ளைக் கரங்களையுடைய தேவியும் புன்சிரிப்புடன் அவற்றை ஏற்றுக் கொண்டாள்.

பின்பு அவன் மற்றையோருக்கும் அந்த அமிர்தத்தைப் பரிமாறினான். அவன் முறைப்படி ஒவ்வொருவருக்கும் அந்தக் கிண்ணியை நிரப்பி அதை அவரவர் உதட்டினிடம் ஏந்தி நின்றான். அவ்வாறு அவன் பரிமாறினது கோரமாக விருந்ததனால் அதைக் கண்டு விண்ணுலகமெல்லாம் ஒரே சிரிப்பாய்ச் சிரித்தது. கலகலவென்று அதிர்ந்து நடுங்கியது. பாக்கியவான்களான தேவர்கள் அனைவரும் இவ்வாறு அமிர்தபானம் செய்து கொண்டும் அன்றைய தினத்தை வெகு சந்தோஷமாகக் கழித்தனர்.

அப்பாலோ வீணையை மீட்டினார். தேவ கன்னிகைகள் அவரைச் சுற்றிக்கொண்டு கணீர்-கணீர் என்று வெள்ளியைப் போல் ஒலிக்கும் அந்த வீணாநாதத்தை யனுசரித்து ஒவ்வொருவராக ஒத்துப் பாடினர்.

இவை நிகழ்ந்து வருகையில் கிரணங்களுடன் பளிச்சென்று பிரகாசித்து வந்த சூர்யபகவான் மர்த்தியர்களுக்குக் கட்புலனாகாமல் வேகமாய் இறங்கி விரைவில் வெளிச்சத்தை ஓட்டி விட்டான். பின்பு நக்ஷத்திர மண்டலங்களில் உள்ளவையும், வல்க்கனது கைத்திறத்தைப் பிரகாசிக்கச் செய்பவையுமான தங்கள் மாளிகைகளுக்குச் சகல தேவர்களும் திரும்பிச் சென்றனர்.

ஜோவ் பகவானும் தமது பயங்கரமான முடியைத் தமது மஞ்சத்தில் சாய்த்தார்.

ஜூனோ தேவியும் தனது பொற்கட்டிலில் கண் வளர்ந்தாள்.

———:o:———

## இரண்டாவது அத்தியாயம்

# சேனைகளின் பலாபலமும் அவற்றின் விவரமும்

[கதைச் சுருக்கம் :—தெடீஸ்தேவியின் பிரார்த்தனைக்கு இணங்கி ஜூப்பிட்டர் பகவான் அகிலேசனது பிரிவினால் தங்களுக்கு நேர்ந்தப் பலக் குறைவைக் கிரேக்கர்களுக்கு அறிவிக்குமாறு ஆகமனனுக்கு எதிராக ஒரு மாயையை உண்டாக்கி ட்ராயை நோக்கித் தனது சேனையுடன் சண்டைக்குப் புறப்படும்படி அவனுக்கு போதனை செய்து விடுகின்றார்.

அவனும் அகிலேசனது உதவியின்றி ட்ராயைப் பிடித்து விடுவோம் என்று நம்பிவிடுகின்றான் என்றாலும், அகிலேசனது பிரிவினாலும், சமீபத்தில் உண்டாயிருந்த பெருவியாதியினாலும், யுத்தம் நீடித்து வருவதனாலும், கலங்கிய தன் சேனையின் மன நிலையை முன்னாடியே அறியவேண்டுமென்று நினைத்து அவன் தந்திரமான ஒரு யோசனை செய்தான். அந்த யோசனையை முதன்முதலாகத் தன் சிற்றரசர்களுக்கும் அறிவித்தான். அஃதாவது தன் சேனையிலுள்ளோருக்குத் தாங்கள் அனைவரும் சொந்த தேசத்திற்குத் திரும்பிப் போவதுதான் நல்லதென்று தான் யோசனை சொல்வதென்றும் அவர்கள் அந்த யோசனை தகாது என்று சொல்லி அதை எதிர்த்துப் பேச வேண்டுமென்பதே.

இவ்வாறு ஏற்பாடுகள் செய்துகொண்டு அவன் சகலமான கிரேக்கர்களையும் ஒருங்குக் கூட்டி 'எல்லோரும் கிரீஸுக்குத் திரும்பிப்போய்விடுவதுதான் நல்லது' என்று சொல்ல, அவர்கள் ஒரே மனதாய் அதுதான் சரி என்று சொல்லி, உடனே தம்தம் கப்பல்களை நோக்கி ஓடினர்.

### சேனைகளின் பலா பலம் முதலியன

அப்போது யுலிஸ்ஸிஸ் சாமர்த்தியமாய்ப் பேசி அவர்களைத் திரும்ப வரும்படி செய்துவிடுகின்றான். துடுக்காய்ப் பேசி வந்த தெர்ஸைடீஸ் என்பவனையும் அடக்கிவிடுகின்றான்.

கிரேக்கர்கள் அனைவரும் திரும்பி வந்தபின் மறுபடியும் சபை கூடுகின்றது. வீரர்கள் பலர் பேசுகின்றனர். கடைசியாகச் சண்டைக்குப் புறப்படுமுன் சேனைகள் அனைத்தையும் ஒன்றாய்த் திரட்டி அவைகளை ஜாதி ஜாதியாகப் பிரித்து அணிவகுக்க வேண்டுமென்று நெஸ்டார் சொல்லிய யோசனையை ஏற்றுக் கொண்டு அதன்படியே நடக்கின்றனர்.

இந்த சந்தர்ப்பத்தை யனுசரித்துக் கவியானவர் கிரேக்கர்களுடையவும் துரோஜர்களுடையவும் சைந்நியங்களை வெகு விஸ்தாரமாக வர்ணிக்கிறார்.

இந்த அத்தியாயத்தில் சொல்லப்படும் சம்பவங்களெல்லாம் நிகழ்வதற்கு ஒருநாள் கூட பூர்த்தியாகப் பிடிக்கவில்லை. சம்பவங்களெல்லாம் முதலில் கிரேக்கர்களது பாளையத்திலும் பின்பு கரையோரத்திலும் கடைசியாய் ட்ராயிலும் நிகழ்கின்றன.]

---

இப்பொழுது மர்த்தியர்களான மனிதர்கள் அனைவரது நேத்திரங்களும் இனிமையான நித்திரையின் முத்திரைக்கு வசமாயின. கிரேக்கத் தலைவர்கள் அனைவரும் தம்தம் கூடாரங்களில் காலை நீட்டிப் படுத்துக்கொண்டனர். அமரர்களும் வானுலகத்தில் தங்கள் சிம்மாசனங்களில் அமர்ந்தபடியே கண்வளர்ந்தனர். ஆனால் எப்போதும் விழித்திருப்பவரான ஜோவ் பகவான் மாத்திரம் தமது கண்ணைக் கொட்டாமல் விழித்த வண்ணமாயிருந்தார். அவர் தெடீஸ் தேவியின் குமாரனை எவ்வாறு கனப்படுத்தலாம்; யுத்தத்தினால் விளையக்கூடிய சகல விதமான துன்பங்களுக்கும் கிரேக்கர்களை எவ்வாறு ஆளாக்கலாம் என்பதையே யோசனை செய்தவராயிருந்தார். வெகுநேரம் யோசனை செய்த பின் அவர் நிசாசரமும் மாயாரூபமுமான ஒரு பூதத்தைக் கூப்பிட்டு, அதற்குப் பின்வருமாறு கட்டளையிட்டார்:

“மாயாஸ்வரூபமான ஸ்வப்பனமே! நீ இங்கிருந்து ஒரு மிருதுவான காற்றைப்போல் பறந்து ஆகமனனது விஸ்தாரமான கூடாரத்திற்குச் சென்று அவனிடம் ‘உன் அணிஅணியான சேனைகள் அனைத்தையும் அவற்றின் ஆயுதங்களுடன் கூடாரங்களிலிருந்து வெளிப்படுத்திப் புழுதியெழும்பும் போர்க்களத்திற்குக் கொண்டுவந்து வரிசை வரிசையாக நிறுத்து; அதி விஸ்தாரமான ட்ராய் நகரின் வானமளாவிய கோபுரங்களைத் தகர்த்தெரிவதற்கு உனக்கு இதுதான் சமயம். தெய்வங்கள் இப்பொழுது முன்னைய வினைகளுடன் போராடுவதை நிறுத்தி விட்டனர். ஜூனோதேவி கூறிய குறைகளை கேட்டபின் விண்ணுலகத்தவர்கள் தங்கள் சண்டை சச்சரவுகளை நிறுத்திக் கொண்டு விட்டனர்; அதோ அங்கே காணும் மதிலுக்கு அழிவு காலம் வந்துவிட்டது! அது தப்பாது! இலியன் ஆடி அசைந்து கொண்டிருக்கின்றது. இப்பொழுதோ மறுநிமிஷமோ அடியோடு கீழே விழுந்து தரை மட்டமாகப் போகின்றது.’ என்று சொல்” என்றார்.

ஜோவ் பகவானது கட்டளைப்படி அந்த மாயாரூபம் ஞானத்திற் சிறந்தவரும் வயதில் முதிர்ந்தவருமான பைலியப் பெருந்தகையின் உருவத்தைத் தரித்துக்கொண்டு, துரிதமாகப் பறந்து சென்று, அதிரிதேசனது கூடாரத்தில் இறங்கி, அவனது ‘தலையைச் சுற்றி வட்டமிட்டுச் சுழன்று, பின்பு அவனது நெற்றியின் இருபக்கங்களிலும் தனது ஸ்வர்ணகசிதமான இறக்கைகளை விரித்துக் கொண்டு பின்வரும் இச்சகமான வசனங்களை யுரைத்து அவனை மயக்கியது:

“அத்ரியஸ் புத்திரா! ராஜாதி ராஜனான உனக்குப் பல கவலைகளிருக்க, நீ இவ்வாறு சுகமாக இளைப்பாறலாமா? உறங்கலாமா?

பராக்கிரமசாலிகளான பல ஜாதிஜனங்களுக்கும் துணைவனும், அவர்களுக்கு யோசனைகள் சொல்பவனும், யுத்தத்தில் அவர்களுக் குத் தலைமை வகிப்பவனும், ஒரு பெரிய ஜன சமூகத்தின் க்ஷேமத் தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளவனும், பெருந்தலைவனுமான நீ, இவ்வாறு கவலையின்றி இந்த அகண்ட ராத்திரிக்காலமெல்லாம் நித்திரையில் கழிக்கலாமா ? இஃது உனக் குச் சிறிதும் அழகில்லையே. இராஜராஜ! எழுந்திரு! நான் ஜோவ்பகவானது தூதன். அவர் தமது ஆஞ்ஞையை உனக்கு அறிவிக்கும் பொருட்டு என்னை இங்கு அனுப்பியிருக்கின்றார். உனது க்ஷேமத்தையும் உனது சதகீர்த்தியையும் அந்த மகாதேவர் சதா கவனித்தவராகவே இருக்கின்றார். வீரர்களையெல்லாம் கூப்பிடு. அவர்கள் எல்லோரையும் ஆயுதமணிந்து கொண்டு அணி அணியாய் ஒழுங்காய் வெளியே வரச்சொல். உன் கிரேக்கர்கள் அனைவரையும் புழுதியெழும்பும் போர்க்களத்திற்குக் கொண்டுவந்து வரிசையாக நிறுத்து. நீ அவர்களது தலைவனாகப் போர்க்களத்திற்குப் புறப்படு. அரசே! அதிவிஸ்தாரமான ட்ராய் நகரின் வானமளாவிய கோபுரங்களைத் தகர்த்தெறிவதற்கு உனக்கு இதுதான் சமயம். தெய்வங்கள் இப்போது முன்னைய வினைக ளுடன் போராடுவதை நிறுத்திவிட்டனர். ஜூனோதேவி கூறிய குறைகளைக் கேட்ட பின், விண்ணுலகத்தவர்கள் தங்கள் சண்டை சச்சரவுகளை நிறுத்திக் கொண்டுவிட்டனர். அதோ அங்கு காணும் மதிலுக்கு அழிவுகாலம் வந்துவிட்டது! அது தப்பாது! இலியன் அசைந்து ஆடிக்கொண்டிருக்கின்றது! இப்பொழுதோ மறுநிமிஷமோ அஃது அடியோடு கீழே விழுந்து தரைமட்டமாகப் போகின்றது. ஆதலால் தூக்கம் விட்டு எழுந்திரு! எழுந்திருந்து இந்த யோசனை சரியானதுதான் என்றும், ஜோவ் பகவானது ஆணையின்மேல் உனக்கு உண்டான இந்த ஸ்வப்பனம் உண்மை யைத்தான் உரைத்தது என்றும் நம்பு!" என்று உரைத்துவிட்டு அந்த மாயாரூபமானது அவனது கண்ணுக்கு மறைந்து வாயுவாக மாறி இருளுடன் கலந்துவிட்டது.

அதன்பின் அரசனது மனத்தில் ஆயிரக்கணக்கான யோச னைகள் உண்டாயின. ட்ராய் நகரத்தைப் பிடிப்பதற்கும் முன்ன தாகவே அதைப் பிடித்தே விடுவோம் என்ற உறுதியான நம்பிக்கை யினால் உற்சாகங்கொண்டு அவன் அதைத் தான் பாழாக்கி விட்டதாகவே நினைத்து விட்டான்.

அவன் மஹா அகம்பாவமுள்ளவனாகவும் தனக்கு இனி வரப்போகும் கதி இன்னது என்று அறியாதவனாகவும் இருந்தத னால், தனக்கு ஜோவ் பகவானது ஊழ்வினை என்ன தண்ட னையை விதிக்க இரஹஸ்யமாகக் கருதியுள்ளது என்பதுவது, யுத்தத்தில் கலந்துள்ள இரு கக்ஷியாரும் இனிமேலும் செய்ய வேண்டிய மிகவும் சிரமமான காரியங்கள் எவ்வளவு உள்ளன என்பதுவது, எவ்வளவு துக்கச் சம்பவங்களைக் கண்ணால் காண வேண்டும், எவ்வளவு ஜனங்களைக் கொன்று தீரவேண்டும் என்பதுவது அவனது புத்திக்குப் புலனாகவில்லை. ஆதலால்

அவன் தேவ வாக்கே தன் காதுகளில் இவ்வாறு முணுமுணுவென்று கேட்கின்றது என்று பாவித்துக் கொண்டு, உடனே வெகு ஆத்திரத்துடன் தனது படுக்கையை விட்டு எழுந்து, முதன்முதலாக ஒரு லேசான அங்கியைத் தரித்துக் கொண்டு, பின்பு அதன்மேல் அரசர்களுக்குரிய ஆடைகளையும் அணிந்துகொண்டான். அவனுடைய பரிவாரர்கள் சித்திராலங் காரங்கள் செய்யப்பட்டிருந்த அவன் பாதரக்ஷைகளை அவன் பாதங்களில் கட்டினார்கள். அவனது ஓர் அள்ளப்புறத்தில் நக்ஷத் திரங்களைப் போன்ற அவனது உடைவாள் மின்னியது. கடைசியாக அவன் சிறிதும் பழுதில்லாததும் அபஜயமறியாததும் தேவப்பிர ஸாதமானதும் கனமுள்ளதுமான தனது பிரமாண்டமான செங் கோலையும் தன் கையில் எடுத்துக்கொண்டான். அச்சமயம் இளஞ்சிவப்புடன் விளங்கிய அருணன் ஜோவ் பகவானது சபைக்கு ஏறிச் சென்று, அங்குத் தனது ஜோதியை உயர எடுத்துக் காட்டிப் பொழுது புலர்ந்துவிட்டதைத் தெரிவித்தான்.

அப்போது அரசன் தன் கிங்கரர்களைக் கூப்பிட்டு "நம் பாளையத்துக்கு செல்லுங்கள். நம் வீரர்கள் அனைவரையும் அழையுங்கள்" என்றான். அவர்களும் அவனது ஆணையை நிறைவேற்ற விரைந்து சென்றனர். சிறிது நேரத்திற்குள்ளாக அங்குக் கூடியிருந்த சகல வீரர்களும் இராஜராஜனது ஆணைப்படி தம்தம் இடங்களில் வந்து நின்றனர். அவ்வாறு சேனைகள் அணி அணியாய் வந்துகொண்டிருக்கையில், இராஜராஜன் தன் கப்பற்படைகளைப் பார்க்கச் சென்றான்.

அங்கு பைலியப் பெருந்தகையானவர் கறுத்த நிறத்துடன் விளங்கிய தமது கப்பலில் இருக்கக் கண்டு, அவன் அதிலேயே ஒரு சபை கூட்ட நினைத்து, தனது கோஷ்டியிலிருந்த அரசர்களை யெல்லாம் அழைத்தான். அவர்கள் அங்கு வந்து சேர்ந்தபின், அவர்கள் முன்னிலையில் கபடமான தனது மனத்தை உறுத்திக் கொண்டிருந்த எண்ணங்களை வெளியிட்டான்.

"நண்பர்களே துணைவர்களே! தயைசெய்து நான் சொல் லும் வார்த்தைகளைக் கவனமாகக் கேளுங்கள். அவை உண்மை யானவை என்று நம்புங்கள். நேற்று ராத்திரி வெகு நாழிகை கழிந்தபின் நான் அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கையில், எனக்கு ஒரு திவ்யமான ஸ்வப்பனம் உண்டாயிற்று. அந்த ஸ்வப்பனத் தில் நான் ஒரு ரூபத்தைக் கண்டேன். அதன் ஆடையும் பாவனை யும் நமது நெஸ்டாரைப் போலவே யிருந்தன. அவை சிறிதும் வேறுபட்டிருக்கவில்லை. அந்த திவ்ய ரூபமானது எனது தலைக்கு மேல் வட்டமிட்டுக்கொண்டு, 'ஆத்ரியஸ் புத்திரா! நீயும் தூங்கு கின்றாயா! பராக்கிரமசாலிகளான பலஜாதி ஜனங்களுக்கும் துணைவனும் அவர்களுக்கு யோசனைகள் சொல்பவனும் அவர் களுக்கு யுத்தத்தில் தலைமை வகிப்பவனும் ஒரு பெரிய ஜன சமூகத் தின் க்ஷேமத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ள வனும் பெருந்தலைவனுமான நீ, இவ்வாறு கவலையின்றி இந்த

அகண்ட ராத்திரி காலமெல்லாம் நித்திரையில் கழிக்கலாமா? இஃது உனக்கு அழகில்லையே! இராஜராஜ! எழுந்திரு. நான் ஜோவ் பகவானது தூதன். அவர் தமது ஆஞ்ஞையைஉனக்கு அறிவிக்கும் பொருட்டு என்னை இங்கு அனுப்பியிருக்கின்றார். உனது க்ஷேமத்தையும் உனது சதகீர்த்தியையும் அந்த மகா தேவர் சதா கவனித்தவராகவே இருக்கின்றார். வீரர்களையெல்லாம் கூப்பிடு. அவர்கள் எல்லோரையும் ஆயுதமணிந்துகொண்டு அணியணியாய் ஒழுங்காக வெளியே வரச் சொல். உன் கிரேக்க வீரர்கள் அனைவரையும் புழுதியெழும்படி போர்க்களத்துக்குக் கொண்டுவந்து வரிசையாக நிறுத்து. நீ அவர்களது தலைவனாகப் போர்க்களத்துக்குப் புறப்படு. அரசே! அதிவிஸ்தார மான ட்ராய் நகரின் வானமளாவிய கோபுரங்களைத் தகர்த்தெறிவதற்கு உனக்கு இதுதான் சமயம். தெய்வங்கள் இப்போது முன்னைய வினைகளுடன் போராடுவதை நிறுத்திவிட்டனர். ஜூனோ தேவி கூறிய குறைகளைக் கேட்டபின் விண்ணுலகத்தவர்கள் தங்கள் சண்டை சச்சரவுகளை நிறுத்திக்கொண்டு விட்டனர். அதோ அங்கே காணும் மதிலுக்கு அழிவுகாலம் வந்துவிட்டது. அதுதப்பாது! இலியன் அசைந்து ஆடிக்கொண்டிருக்கின்றது. இப்பொழுதோ அல்லது மறுநிமிஷமோ அஃது அடியோடு கீழே விழுந்து தரைமட்டமாகப் போகின்றது. இதைக் கவனமாய்க் கேட்டுத் தேவர்களின் ஆணைப்படி நட' என்றது. இவ்வாறு சொல்லியபின் அந்த ரூபம் வாயுவில் கலந்துவிட்டது. ஆதலால் வீரர்களான தலைவர்களே! தெய்வமே இவ்வாறு ஏவுவதனால் நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கிரேக்கர்கள் எல்லோரையும் ஆயுதபாணிகளாகச் சண்டைக்குப் புறப்படும்படி உற்சாகப்படுத்துங்கள்! எழுப்புங்கள்! ஆனால் அவ்வாறு செய்யுமுன் நாம் முதன்முதலாக ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். இப்போது இதுவரை நாம் ஒன்பது வருஷகாலம் இங்குப் போராடி வந்து கொண்டிருக்கிறோம். ஒரு லாபத்தையும் அடையவில்லை. சலித்தும் போயிருக்கிறோம். ஆதலால் நம் சேனைகள் சண்டை செய்வதில் ஆவல் கொண்டவைகளாக இருக்கின்றனவா? நம் வீரர்களின் மனநிலை எவ்வாறு இருக்கின்றது? என்பதை நாம் முதலில் அறியவேண்டும். நாம் இதற்கு ஒரு தந்திரம் செய்வோம். நாம் இந்தச் சமுத்திரத்தைக் கடந்து நம் நாடுகளுக்குத் திரும்பிச் செல்வோம் என்று நான் அவர்களுக்குப் போதனை செய்கின்றேன். அந்த யோசனை வேண்டாம்; இன்னும் கொஞ்சம் பார்ப்போம் என்று நீங்கள் போதனை செய்யுங்கள். இதனால் அவர்களது மனநிலை வெளிப்பட்டுவிடும்" என்றான்.

இவ்வாறு சொல்லி அவன் உட்கார்ந்த பின், மணற்காடுகள் நிறைந்துள்ள பைலியப் பிராந்தியத்தின் அரசரான நெஸ்டார் எழுந்திருந்து "கிரீஸ் தேசத்து அரசர்களே! நான் சொல்வதைச் சிறிது கவனத்துடன் கேளுங்கள். தேவர்களது நியமனத்தின் பேரில் நமக்கு முன் தோன்றும் கனவுகளை நாம் சிறிதும் சந்தேகிக்கலாகாது. இந்தக் கனவு நமது சமூகத்திற்குத் தலைவரான அரசனுக்கு உண்டாயிருக்கின்றது. மேலும், மகாதேவரான ஜோவ்

தேவரே அந்தக் கனவை அனுப்பிவைத்திருக்கிறுர். இவ்வாறு அவரது நியமனப்படி நமக்கு முன்னதாகக் கிடைத்த எச்சரிக்கையை நாம் அலட்சியம் செய்யலாகாது. அவ்வாறு அலட்சியம் செய்யாமலிருக்கக் கடவுள் நமக்கு நல்ல புத்தியும் கொடுக்க வேண்டும். ஆதலால் நாம் சிறிதும் காலதாமதம் செய்யாமல் விரைவாகக் காரியங்களைச் செய்வோமாக! கடவுள் ஜாடையாய் அறிவித்துள்ள ஆஞ்ஞைப்படி நடப்போமாக! அனைவரும் ஒருங்கு சேர்ந்து கிரேக்கர்களெல்லோரையும் ஆயுதபாணிகளாய்ப் புறப்படும்படி உற்சாகப்படுத்துவோமாக” என்றுர்.

அவர் சொல்லிய பிரகாரம் அரசர்களெல்லாம் சிறிதும் தாமதஞ் செய்யாமல் சபையிலிருந்து எழுந்து தங்களது தலைவன் நியமித்தபடி காரியங்களைச் செய்வாராயினர். செங்கோலேந்திய அந்த அரசர்கள் வழிகாட்ட, அவர்கள் பரிவாரங்களிலிருந்த ஆயிரக்கணக்கான வீரர்கள் தடதடவென முன் வந்தனர். அவர்கள் திரளாகக் கூடிய கூட்டத்திஞல் அந்தச் சமுத்திரக்கரை முழுவதும் இருண்டு போயிற்று.

ஒரு பிளவுபட்ட பாறையின் வெடிப்பிலிருந்து கும்பல் கும்பலாகப் புறப்பட்டு வெளிச்சத்தை மறைத்து இருளையுண்டாக்கிக் கொண்டும், முன்னைய கூட்டத்தைவிட பின்னையது அதிதீர்க்கமாக ரீங்காரம் செய்து கொண்டும், கரகரவென்று உறுமிக்கொண்டும், உருண்டு புரண்டுவரும் தேனீக் கூட்டங்கள் ஓர் இடையனது கண்ணுக்குப் புலப்பட்டால் அவை எவ்வாறு இருக்குமோ, அவ்வாறு இந்த கிரேக்க சேனைகள் தங்கள் பாசறைகளிலிருந்து புறப்பட்டன. அச் சேனைக்கூட்டங்கள் வெகு நெருக்கமாக வந்து விரிந்து இருளைப்போல் பரவின. அப்போது அந்தக் காட்சியானது ஒரு ஜீவனுள்ள மேகமே அந்தத் தடத்தில் வந்து இறங்கியது போல் தோன்றியது. போர் வீரர்களெல்லாம் இவ்வாறு கூடாரங்களிலிருந்தும், கப்பல்களிலிருந்தும் கரையோரமாக நெடுந்தூரம் வரை திரை திரையாகப் பரவி நிறைத்ததுமன்றி, கரையின் ஓரமாயிருந்த விசாலமான மைதானத்தையும் ஆக்ரமித்தனர். அதஞல் அந்தப் பிராந்தியத்திலெல்லாம் செவிடுபடும்படியான ஒரு பேரிரைச்சல் உண்டாயிற்று. வீரர்கள் தடதடவென்று நடந்து வந்தபொழுது பூமியானது கிடுகிடுவென்று நடுங்கியது.

அப்போது ஜோவ் பகவானது கட்டியங்காரஞகிய ஸீரியனுக்கும் முன்ஞக அதிவேகமாகக் கீர்த்தியென்னும் தெய்வமானது ஓடிப் பறந்துவந்து, பளிச்சென்று மின்னிக்கொண்டு, மேன்மேலும் உயர்ந்து பறந்தது. அப்போது அஃது ஒரு பறவை தன் சிறகுகளை அடித்துக் கொள்வதுபோல் தோற்றியது! அதன் பின் புனிதரான ஒன்பது கட்டியங்காரர்கள் முன்வந்து அரசனது ஆணையை உரத்துக் கூவ, அங்குக் கூடியிருந்தோர் அதை மெய் மறந்தவர்கள் போல் மௌனமாகச் செவி கொடுத்துக் கேட்டனர். இவ்வாறு இந்தச் சேனு சமுத்திரமானது ஒழுங்காகவும், அணியணியாகவும் வந்து நின்று, அவைகள் முணு முணுவென்று செய்த சப்தமும்

செவிக்குப் படாமல் அடங்கியபின், பயங்கர ரூபியான இராஜாதி ராஜன் அங்குள்ளோர் எல்லோருக்கும் மேலாக உயர்ந்து எழுந் தான். அவனது கையில் பொன்னாலான ஒரு நீண்ட செங்கோல் பளிச்சென்று உயர்ந்து துலங்கியது. அந்தச் செங்கோலானது தேவலோகத்திலுள்ள கொல்லுலைக்கூடத்தில் வல்கனால் உண்டாக்கப்பட்டு ஜோவ் பகவானால் ஹெர்மிஸுக்கும் ஹெர்மிஸி னால் பிலுப்ஸுக்கும் பிலிப்ஸினால் அத்ரியஸ்ஸுக்கும் கொடுக்கப் பட்டு, அவனுடன் நில்லாமல் அவனிடமிருந்து பாக்கியவானான தியஸ்டீஸுக்கும் கைவசமாயிற்று. அதன் பின், அழிவில்லாத செங்கோலானது பிரகிருதத்தில் ஆகமனனுக்கும் பிராப்தமாகி ஆர்காஸ் நாட்டையும் அதையொட்டிய சமுத்திரப் பிரதேசத்தை யும் அவன் அடக்கியாண்டு வந்தபொழுது அவனது அதிகாரத் திற்கும் ஓர் இணையற்ற சின்னமாக விளங்கி வந்தது.

இராஜராஜன் பளிச்சென்று மின்னும் அந்தச் செங்கோ லின்மேல் குனிந்து சாய்ந்துகொண்டு பின்வருமாறு தான் யோசித் திருந்த கபடமான வார்த்தைகளைச் சொன்னான்:—

" மார்ஸ் புத்திரர்களே ! கிரேக்க வீரர்களே ! இந்த யுத்தத் தில் எனக்குச் சகோதரர்களாக வாய்த்திருப்பவர்களே ! உங்க ளது தலைவனான நான் என் கவலைகளைச் சொல்லுகின்றேன்; கேளுங்கள். ஜோவ் பகவான் நமக்கு அளித்த வாக்குக்களில் நான் பூரணமான விசுவாசமுள்ளவனாக விருந்தேன். அந்த வாக் குக்கள் நிறைவேறவில்லை. அவை வீணாகிவிட்டன. அவரும் பக்ஷபாதமுள்ளவராக ஆகிவிட்டார். இந்தக் காரணங்களை முன்னிட்டு நான் அவர்மேல் குறை கூறுவது நியாயமென்றே தோன்றுமல்லவா ? நாம் கியாதியடைந்தவர்களாகவும் ஜயசீலர் களாகவும் ஏராளமான தனங்களையும் திரவியங்களையும் கொள்ளை யடித்து வாரி வழித்துக்கொண்டு நம் கப்பல்களில் க்ஷேமமாய் திரும்பி வருவோம் என்றன்றோ அவர் நமக்குத் தமது உறுதி யான ஆசியைக் கூறியிருந்தார். இந்தக் காரியத்தில் நாம் இது வரை நமது இரத்தத்தைக் கணக்கில்லாமல் வடித்தவர்களாகவும், ஏராளமான திரவியத்தைச் செலவழித்தவர்களாகவும், நம் கியாதிகளை இழந்தவர்களாகவும் ஆகிவிட்டோம். இப்பொழுது மானமிழந்து கடைசியாகப் புறங்காட்டியோடி உயிர் தப்பிப் பிழைக்கும் ஸ்திதிக்கும் வந்துவிட்டோம். நம்மெல்லோருக்கும் மேலானவரும் தன்னையெதிர்ப்பாரில்லாதவருமான ஜோவ் பகவா னது திருவுள்ளம் இவ்வாறு இருக்கின்றது. அவர் நினைத்தமாத்தி ரத்தில் பிரமாண்டமான இராஜ்யங்கள் ஒரேயடியாய் உன்னதப் பதவிக்கோ அல்லது அதிபிரதானமான கேவல ஸ்திதிக்கோ வந்து விடுகின்றன! உரமானவைகளென்று மனிதர்கள் நம்பி வரும் ஊன்றுகோல்களை அவர் எளிய பலவீனமான புற்களைப்போல் அசைத்து ஆட்டிக் குலுக்கி விடுவதுமன்றிப் பட்டணங்களையும் பட்டாளங்களையும் மண்ணோடு மண்ணாய்த் தரைமட்டமாக்கி விடுகின்றார். இவ்வாறு துக்கமே பிராப்தமாகி வரும் இந்த யுத் தத்தைக் கிரேக்கர்கள் நடத்திவருவது ஒரு மானக்கேடான காரிய

மல்லவா ? இதனுல் இனிவரும் யுகங்களிலெல்லாம் கிரேக்கர் களுக்கு அழியாத அபகீர்த்திதானே உலகத்தில் உலாவி வரும்! ஒரு காலத்தில் நாம் ஆயுதபாணிகளுள் அக்ரேசுரர்களாகவும் விளங்கி வந்தோம். இப்போது மிக்க கேவலமும் அல்பமுமான விரோதிகளுக்கு மடங்கித் தோற்றுவிட்டோம்! கண்டோரெல்லாம் திரஸ்க்கரித்து நம்மை வெறுக்கும்படியான ஈனஸ்திதியையடைந்து விட்டோம். துரோஜர்களது ஸங்கியை எவ்வளவு அல்பமானது என்பதை ஒரு சிறு உதாரணத்தால் விளக்குகின்றேன்; கேளுங்கள். இந்த யுத்தமும் முடிந்துவிட்டது. கிரேக்கர்களும் ஜயித்துவிட்டார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது கிரேக்கர்களெல்லாம் தங்களது வெற்றியைக் கொண்டாட ஒரு விருந்தை ஏற்பாடு செய்து பத்துப் பத்துப் பேராக ஒவ்வொரு பந்தி யில் உட்கார்ந்து கொண்டாலுங்கூட அவர்களுக்குப் பானகம் பரிமாறுவதற்குப் பந்தியொன்றுக்கு ஒரு துரோஜன் கூடக் கிடைக்கமாட்டான். அதனுல் பதின்மடங்கான பந்தியிலுள்ளவர் கள் மற்றைப் பந்திகளில் உள்ளவர்களுக்கு உபசாரங்கள் முடியும் வரை காத்தே யிருக்கவேண்டிவரும்! அவ்வாறு அவர்கள் நம்மில் பத்தில் ஒரு பங்குகூட இல்லை! இதற்குக் காரணம் என்ன ?

"நாம் மனப்பால் குடித்து வந்தபடி காரியங்கள் நிறை வேருமல் போனதற்கு வேறு பலமான காரணங்கள் இருக்கின்றன. ட்ராயின் வெற்றிக்கு அன்னியர்களது ஆயுத ஸஹாயமே காரணம். அவர்கள் தங்கள் வீர சூர பராக்கிரமங்களால் வெற்றியடைந்து விடவில்லை. நாம் சிரமம் மிகுந்த இந்த யுத்தத்தை ஆரம்பித்தது முதல் இதுவரை அதிகக் குரூரமான இந்த வியாழ திசையில், ஒரு நாளல்ல, இரண்டு நாளல்ல, ஒன்பது வருஷங்கள் கழிந்துவிட்டன! நம் கப்பல்களில் கட்டியிருந்த வடக் கயிறுகளெல்லாம் அறுந்து போய்விட்டன! நம் கப்பல்களும் வெயிலில் உலர்ந்து மழையில் நனைந்து வெடித்தும், உளுத்தும் கெட்டுப் போய்விட்டன. நாம் அவைகளில் ஏறிக்கொண்டு இந்த இடத்தை விட்டுப் போக நினைப்பதும் மிகவும் ஆபத்தான காரியம். இவைகளையெல்லாம் யோசித்து நாம் இந்த ட்ரோஜன் கோட்டையைப் பிடிப்போம் என்ற ஆசையை விட்டுவிட்டு ஒரேயடியாய் ஓட்டம் பிடிக்கத் தீவிரமான பிரயத்தனங்களைச் செய்வோமாக! நமது நாட்டில் நாம் விட்டு வந்த நம் மனைவிமார்களும், இளங்குழந்தைகளும் நம்மைக் கூவியழைக்கின்றனர். அவர்களிடம் நாம் கொண்டுள்ள அன்பும், நாம் அவர்களுக்குச் செலுத்தவேண்டிய கடமையும் இங்கு நாம் அனுபவித்து வரும் ஆபத்துக்களும் அவற்றிற்குத் தப்பிப் பிழைக்க வேண்டுமென்ற கவலையும் ஆகிய இவையெல்லாம் இங்கிருந்து ஓட்டம் பிடிக்கும்படி நம்மை வற்புறுத்துகின்றன. இது மனிதஸ்வபாவந்தான் அல்லவா ? மனித ஸ்வபாவத்தை அனுசரித்துத்தானே நாம் ஒழுகல் வேண்டும் ? நம் கப்பல்க ளெல்லாம் நான் சொல்லியபடி சிதைந்தே போயிருந்தாலும் அவை அக்கரையிலுள்ள நமது நாட்டிற்கு நம்மைக்கொண்டு சென்று சேர்க்க இன்னும் உதவலாம். நாமும் மானமிழந்தவர்களேயாயி னும் உயிருடனுவது ஊர் போய்ச் சேரலாம். ஆதலால், கிரேக்கர்

களே ! இங்கிருந்து காற்ருய் பறவுங்கள் ! உங்கள் கப்பற் பாய்களை விரித்துக் கட்டுங்கள். துடுப்புக்களையும் வலியுங்கள். ட்ராயைக் கனவிலும் நினையாதீர்கள்! அதற்கு தேவ அனுக்கிரஹம் பூரண மாய் இருக்கின்றது" என்ருன்.

அங்குக் கூடியிருந்த கிரேக்கர்கள் அனைவரும் அவனது உட்கருத்து இன்னதென்று அறியாதவர்களாயிருந்ததனுல் அவன் சொல்லியது நியாயந்தான் என்று நம்பி, அதை ஆமோதித்தனர். கணக்கிலடங்காத அவர்கள் அனைவரும் தங்களது இடம் விட்டுப் பெயர்ந்தனர். அவர்களது புறப்பா டானது இக்காரியன் கரையை நோக்கிக் கிழக்கிலிருந்தும் தெற்கி லிருந்தும் புரண்டு வரும் அலைகளை ஒத்திருந்தது. அவ்வலைகள் மிகவும் பிராமாண்டமானவை. அவை மேக மண்டலங்களி லுள்ள இருண்ட மாளிகைகளை இடித்துத் தகர்த்துக் கொண்டு வெளியேறிக் குழம்பிக் கொந்தளிக்கும் ஆழ்கடலின் நீர் மட்டத் தின்மேல் மிதந்து வெண்ணுரையைச் சுழற்றிக் கொண்டு கர் ஜனையுடன் வரும் காற்றுகளினுல் உண்டாவன.

அந்த ஜன சமூகம் இவ்வாறு அந்தப் பிரதேசத்திலிருந்து எழுந்து நகர்ந்த பொழுது, அது பயிர்களின் மேல் மேற்றிசையி லிருந்து காற்றடிக்கையில் ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ள கதிர்கள் தலை குனிவது போலும் இருந்தது. அப்பொழுது அசைந்தாடிய கொடிகளும் வீரர்கள் சுழற்றிவந்த ஈட்டிகளும் இடம் விட்டுப் பெயர்ந்து நகர்ந்துவரும் ஒரு வனத்தை நிகர்த்தன.

அவர்கள் முணுமுணுவென்று செய்துவந்த சப்தமானது அந்த சமூஹம் முழுவதிலும் வியாபித்து, அவர்கள் அந்தக் கரை யோரமிருந்த இளகிய மணலின்மேல் திமுதிமுவென மிதித்துக் கொண்டு நடந்து வந்து தங்கள் கப்பல்களை நோக்கித் திரளாகச் சென்று "இவற்றைப் பிரயாணத்திற்குச் சித்தம் செய்யுங்கள் ; நீரில் இறக்குங்கள்" என்று தங்களது பரிசாரகர்களுக்குக் கட்டளை யிட்டனர். அவர்கள் அப்பொழுது உரத்து உரைத்த குரலின் சப்தமானது எதிரொலியைக் கிளப்பிக்கொண்டு வெகுதூரம் வரை சென்றது.

அந்தப் பரிசாரகர்கள் நெற்றிநீர் நிலத்தில்விழும் வண்ணம் ஓயாமல் உழைத்தனர். கப்பலுக்கும் கரைக்குமாக அவர்கள் முன்னும் பின்னும் சென்று வந்த பொழுது இருள் கொண்ட மேகங்களைப்போல் புழுதியானது எழுந்தது. அப்பொழுது அவர்கள் இட்ட இரைச்சலும் அதன் எதிரொலியும் வான மளாவிச் சென்றன. இந்தப் பிரயத்தனங்களெல்லாம் நிறைவேறியிருந்தால் கிரேக்கர்கள் அனைவரும் தங்கள் சத்துருக் களது பிரதேசத்தை விட்டு அகன்றே போயிருப்பர். ட்ராயின் மதில்கள் மண்ணைக் கவ்வும் என்று ஜோவ் பகவான் கொடுத் திருந்த வாக்கும் பலிக்காமல் வீணுய்ப் போயிருக்கும். ஆனுல் காரியங்கள் அவ்வாறு நிகழவில்லை.

அவர்கள் அவ்வாறு ஓட்டம் பிடிப்பதை ஜோவ் தேவரின் மாட்சிமை பொருந்திய பட்ட மகிஷி கண்ணுற்று, இப்படியும் ஆயிற்றே! என்று பெருமூச்செறிந்து நீலாயதாட்சியைக் கூவி யழைத்து, கிரேக்கர்கள் ஓட்டந்தான் பிடிக்கவேண்டுமா ? அந்தக் காலமும் வந்துவிட்டதா ? வேறு வழியில்லையா ? ஆஹா ! இஃது என்ன வெட்கக்கேடு ! இந்த துரோகிகளது குலத்தை அழிக் காமல் விட்டுவிடலாமா ? ட்ராயும் பிரியமும் விபசாரியான அந்த ஸ்திரீயும் நியாயந்தவறி நடந்தும் சிறிதும் கவலையின்றிச் சுகமனுபவித்து வருதல் தகுமா? ஹெலன் விஷயமாக உண்டான இந்த விவாதத்தில் கலந்துகொண்ட அதிபராக்கிரமசாலிகளான வீரர்கள் தங்களது பிராணனை இழப்பதும் பழி வாங்குவாரன்றி, அதோ அந்தப் பாழும் மைதானத்தில் வானம் பார்த்த வண்ணம் கிடப்பதும் தான் சரியா ? அது சிறிதும் சரியல்ல ! என் கிரேக்க வீரர்களெல்லாம் வீணுன பீதிகளுக்குக் கலங்காதவர்க ளாகவும் மழுங்காத ஆயுதங்களை அணியாதவர்களாகவும் பின்னும் ஒருமுறை பளிச்சென்று விளங்க வேண்டும் ; தேவியே ! ஓட்டமாய் ஓடு. சட்டென்று ஓடு. புறப்படு. ஓட்டம் பிடிக்கும் ஜனங்களைத் தடுத்து நிறுத்து. கடலில் ஒரு பாயைக்கூட விரிக்க விடாதே " என்ருள்.

இந்தக் கட்டளையை பாலாஸ் தேவி சிரமேற் கொண்டு உன்னதமான ஒலிம்பஸ் சிகரத்தை விட்டுப் புறப்பட்டு ஓட்டமாய் ஓடிக் கப்பல்களின் எதிரில் வந்து நின்ருள். முதன்முதலாக அவள் யுலிஸ்ஸிஸைக் கண்டாள். அவன் நாட்டிலுள்ள ஜனங்கள் அனைவருடைய நன்மையையும் சதா கோரி வந்தவர் களில் முதல்வன். யோசனைகள் சொல்வதில் தேவர்களுக்குச் சமமானவன். மகா விவேகமுள்ளவன் என்று பிரசித்தி பெற்றவன். அவன் மிதமிஞ்சிய துக்கத்தில் ஆழ்ந்தவனுய் ஓர் இடத்தில் நின்றுகொண்டிருந்தான். கறுப்பு நிறமுள்ள அவனுடைய கப்பல்கள் பிரயாண ஏற்பாடுகளுடன் நிற்கவில்லை.

யுத்தங்களின் தேவதையான அவள் அவனை நோக்கி " தேவர்களுக்குச் சமானனுன லியார்ட்டீஸ் புத்திரா! கிரேக்கர்கள் செய்யும் இந்தக் காரியம் அழகா ? அவர்கள் இவ்வாறு ஓட்டம் பிடிக்கலாமா ? பிரியம் குலத்தாருக்கு அழியாப் புகழைச் சூட்டி விட்டுத் தங்களது அவமானத்தைத் தாங்களே தங்களது ஜன்ம தேசத்திற்குச் சுமந்து செல்லலாமா ? எழில் வாய்ந்த ஹெலனை இன்னும் காவலிலே இருந்து வரும்படி விட்டு விடலாமா ? அவளுக்கு விளைந்த பழிக்குப் பழி வாங்காமல் இருப்பது தகுமா ? ஆயிரக்கணக்கான விரர்கள் தங்களது இரத்தத்தை வடித்தாய் விட்டதே ! இத்தாக்கா அரசே ! வேகமாக எழுந்திரு. நீ மிகுந்த உதார குணமுள்ளவன். இந்த அவமானத்தைத் தடுத்து மானத்தைக் காப்பாற்று ! உன் சேனைகளைத் திருப்பியழை ! உன் வீரர்களையும் திரும்பி வரச்சொல் ! நீ சொல்வன்மை பொருந்தியவன். உன்னைத் தட்டிப் பேச ஒருவராலும் ஆகாது. உனது வாக்குச் சாதுரியத்தை இப்பொழுது காட்டு ! அமரர்கள்

ட்ராயை நிச்சயமாய்த் தரைமட்டமாக்கி விடுவார்கள் என்றே நம்பு !" என்ருள்.

கடைசியாக அவள் தானே யுத்தங்களின் தேவதை என்பதையும் அவனுக்கு அறிவித்துக் கொண்டாள். அவள் சொல்லிய வார்த்தைகள் அனைத்தையும் யுலிஸ்ஸிஸ் அமைதியுடன் கேட்டு அவற்றின்படியே செய்ய உற்சாகம் கொண்டான்.

அவன் உடனே அதிரிதேசனைத் தேடிச்சென்று அவனுக்குத் தான் வந்த காரியத்தைத் தெரிவித்து தன் வார்த்தைகளைக் கேட்பவர்களது கவனத்தையும் மரியாதையையும் கவர்வதற்காக அவனிடமிருந்த சர்வாதிகாரச்சின்னமாகிய செங்கோலைப் பெற்று அதைத் தன் கையில் பிடித்துக்கொண்டு கிரேக்கர்களது பாளையம் முழுவதையும் ஊடுருவிச் சென்ருன், ஓடினுன், பறந்தான் ! பிரசித்திபெற்ற ஒவ்வோர் அரசனையும், ஆயுதப் பயிற்சியில் வல்லவனென்று மதிக்கப் பட்டிருந்த ஒவ்வொரு வீரனையும் அவன் புகழ்ந்தும் போதனைகள் செய்தும் உத்ஸாகப் படுத்தித் தன் வசமாக்கிக் கொண்டான். அவர்களைப் பார்த்து இவன் கூறியதாவது :—

" புஜ பராக்கிரமங்களும் ஞான வைராக்கியங்களும் நிறையப் பெற்ற பாக்கியவான்களே ! உங்களைப் போன்ற வீரர்கள் மற்றையோருக்கு விசேஷமான உதாரணங்களாக வல்லவோ விளங்க வேண்டும் ! நீங்கள் அவர்களுக்குத் தைரியத்தையும் மன உறுதியையும் ஊக்கத்தையும் புகட்ட வேண்டும். இப்பொழுது நமக்கு நமது அரசரது உண்மையான கருத்து இன்னதென்று புலப்படவில்லை யென்றே தோன்றுகின்றது. அவர் நமது தைரியத்தைப் பரீக்ஷை செய்கின்ருர். நாம் எளிதில் பயங்கொண்டு விட்டதை யறிந்து நம்மை வெறுக்கின்ருர் !

கிரேக்கர்கள் ஜாக்கிரதையாக இல்லாவிடில் அவருக்கு அதியுக்கிரமான கோபமே யுண்டாகிவிடும்.

மந்திராலோசனை சபையில் பேசிய பொழுது, அவர் உங்கள் முன்பாகப் பேசியபடி பேசவில்லை.

ஜோவ் பகவான் நமது அரசரிடம் விசேஷமான அன்பு உடையவர். அவரது அனுக்கிரகமே நமது அரசரின் ஏற்றத்திற்குக் காரணம் என்பதை நீங்கள் மறவாமல் இருக்க வேண்டும். ஆதலால் ஜாக்கிரதை !

அரசர்களது சீற்றம் அதிபயங்கரமானது" என்று கூறினுன். அவன் அவ்வாறு பேசி வருகையில் ஆட்சேபங்கள் கூறிக் கீழ் மகன் எவனுவது ஒருவன் தன் தலையைக் கிளப்பினுல் அவனை அதட்டிப் பேசியோ அல்லது நையப் புடைத்தோ அடக்கி விடுவான். " அட மடையா ! வாயை மூடு. பெரியவர்கள் சொல்வதைக்

கேட்டு அதன்படி நட! உனக்கு யுக்தியா, யோசனையா, யுத்தமா என்ன தெரியும்? ஆஹா! தேவர்களே! இந்தப் பேடிகளும் நம் படைகளை அடக்கி ஆள முன் வருகின்றார்களே! இஃது என்ன கஷ்ட காலம்! பிழைக்க வழியில்லாமல் பூமிக்குப் பாரமாக விருந்த இவர்கள் சோற்றுக்கும் துணிக்கும் ஆசைப்பட்டன்றோ ஓடி வந்து இந்த யுத்தத்தில் சேர்ந்து கொண்டனர். அடே அயோக்கியா! அல்ப பயலே! உன் வாயை மூடு. மூச்சும் விடாதே. தான் தோன்றிப் பயல்கள் எவ்வளவுபேர் வந்தாலும் அவர்களது ஜம்பம் இங்கே சாயாது. வெட்கக்கேடான இந்த இழிந்த காரியம் இங்கே நடவாது. ஒரே ஒரு சக்கரவர்த்திக்குத் தான் ஜோவ் பகவான் சகல அதிகாரங்களையும் அளித்திருக்கின்றார்! அந்தச் சக்கரவர்த்தி இட்டதுதான் சட்டம். அவருக்குத் தான் எல்லோரும் அடிபணிந்து நடக்க வேண்டும்" என்றும் இதைப் போன்ற வேறு வசனங்களையும் உரைத்து யுலிஸ்ஸிஸ் அந்தச் சேனைகளை யெல்லாம் தன்வசமாக்கினான்.

அதனால் உரத்துக் குறை கூறியவர்களும் அதிகக் கோபத்தினால் கொதித்திருந்தவர்களும் அடங்கித் தணிந்தனர். அதன் பின் திரளான அந்த ஜனங்கள் அனைவரும் தங்கள் கப்பல்களை விட்டு விட்டு ஒரு பெருத்த மழை போல் மைதானத்தில் இறங்கி மந்திர சபையை நோக்கி வெள்ளம் போல் புரண்டு சென்றனர்.

ஏற்கெனவே நடுங்கிக் கொண்டிருக்கும் கரையை நோக்கிக் கர்ஜித்துக் கொண்டு வந்து, அதைத் தன் பிரமாண்டமான அலைகளால் ஓங்கியடிக்கும் விருத்தனான சமுத்திர ராஜனைப் போல் முறைத்துக் கொண்டு அவர்கள் நகர்ந்து முன் சென்றனர். அதைத் தாங்க முடியாமல் புலம்பிக் கொண்டிருந்த அந்தக் கடற் கரையும் பேரிரைச்சலுடன் வெடித்தது. அங்கிருந்த பாறைகளும் அதை அனுசரித்து முணுமுணுத்தன. ஆழமான குண்டு குழிகளிலிருந்து எதிரொலியும் உண்டாயிற்று. கடைசியாக இந்தக் குழப்பம் நின்றது. அரவம் அடங்கியது. பாளையத்திலிருந்தோர் அனைவரும் அமைதியான மௌன நிஷ்டர்களாகவும் சாந்த ஸ்வரூபிகளாகவும் தணிந்து விட்டனர்.

அந்தக் கூட்டத்தில் தெரிஸைட்டீஸ் என்பவன் ஒருவன் மாத்திரம் கூப்பாடு போட்டுக் கொண்டே யிருந்தான். அவன் மஹா அலப்புவாயன். உரத்துப் பேசுவான். துடி துடிக்கக் கொடுஞ் சொற்களையும் சொல்லுபவன். மானம் மரியாதைக்குச் சிறிதும் அஞ்சாதவன். ஒருவரிடமாவது பயபக்தி இல்லாதவன். பிறர் சிறுமைகளைத் தூற்றுவதே அவனது தொழில். அவன் அவர்களை நேரிலும் துடுக்காகத் தூஷிப்பான். தனது கண்ணுக்கு எதிர்ப்பட்டவர்கள் அனைவரையும் அவமானப்படுத்த வேண்டுமென்பதே காரியமாகக் கங்கணம் கட்டிக்கொண்டு, அவன் கேட்போரது மனத்தைத் தைக்கக் கூடிய உதாசீனமான வசனங்களைப் பரிஹாசமாக உரைத்துக்கொண்டு அஸூயையிலேயே திருப்தியும் சிரிப்பிலேயே நோட்டமும் உள்ளவனாயிருந்

தான். மட்டுமிதமின்றிப் பெரியோரைத் தாக்குவதனுலும் அரசர்களை அவமதிப்பதனுலுமே தனக்கு விசேஷமான கௌரவம் உண்டாகுமென்று அவன் கருதியிருந்தான்.

'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்றபடி, அவனது உருவமானது அவனது மனத்தில் உறைந்து வந்த கருத்துக்களை வெளிப்படையாய்க் காட்டும் கண்ணுடி போல் இருந்தது.

அவனுக்கு ஒரு கண் சிமிட்டுக்கண். ஒரு கால் நொண்டி. அவனது மார்பின் அரைவாசிக்கு மேலான பாகத்தை அவனது மலை போன்ற பிரம்மாண்டமான புஜங்கள் விழுங்கி யிருந்தன. நீண்டும் விகாரமாகவும் இருந்த அவனது தலையில் அபூர்வமாகவே சில மிருதுவான ரோமங்கள் காணப்பட்டன. அவனது மனத்தில் பெருமைப் பேயே தாண்டவமாடிக் கொண்டிருந்தது. மனித வர்க்கத்திலுள்ள அனைவரின்மேலும் அவன் பூரணமான துவேஷம் உள்ளவனுக விருந்தான் என்ருலும், மனிதரில் பெரியோரிடமும் சிறந்தோரிடமுமே அவனுக்கு மட்டுமிதமில்லாத பகையுண்டாயிருந்தது. அவன் யுலிஸ்ஸிஸ்ஸையோ அகிலேசனையோ ஒரு நிமிஷம் கூட இடைவிடாமல் தூஷிப்பதே காரியமாக விருந்தான். விசேஷமாக இராஜாதி ராஜனுன அதிரிதேசனைத் தூஷிப்பதில் அவனுக்கு உற்சாகமும் மகிழ்ச்சியும் அதிகமாக விருந்தன. 'சண்டாளனுக்குச் சத ஆயுஸ்' என்பது போல் அவன் அகில கிரேக்கர்களது இகழ்ச்சிக்கும் இலக்காக வெகு காலம் ஜீவித்திருந்தான். அவன் சொற்களைக் கேட்டவர்கள் மனவருத்தமே யடைந்தனர். என்ருலும் அவர்கள் அதன் பின்னும் அவன் வசனங்களை மேன்மேலும் கேட்டே வந்தனர். அவனது குரலும் அதிகர்ண கொடூரமாக விருந்தது. கீச்சு கீச்சென்ற உரத்த தொனியுடன் அவன் பின் வருமாறு இராஜாதிராஜனைப் பழித்துரைத்தான் :—

"இவ்வளவு பிரசித்தமாகப் பேரும் புகழும் படைத்து இராஜ்யபாரம் செய்து வரும் அதிரி தேச மஹாராஜனுக்கு என்ன கேடுகாலம் வந்துவிட்டது! அவன் ஏன் கூக்குரலிட்டு முறையிடுகின்ருன்? (அவனை நோக்கி) எந்த வீரனது வயிறு எப்படி எரிந்தாலென்ன என்று சிறிதும் கவலையின்றி நீ அவனுடையை ஆஸ்திகள் அனைத்தையும் உன் வாயில் போட்டுக் கொண்டு விடுகின்ருய்! ஸ்வர்ணமோ நகைநட்டுகளோ சுந்தரிகளான ஸ்திரீரத்னங்களோ, எதுவானுலும் சரி, சகலத்தையும் நீ உனக்குஸ் வாதீனம் செய்து கொண்டு விடுகின்ருய். நம் யுத்தங்களும் ரத்தத்தை வடிக்கும் வீரர்களுமாகச் சம்பாதிக்கும் சகலமும் உனக்கே சொந்தமாகி விடுகின்றன. அவை அனைத்தையும் நீ உன் கூடாரங்களில் வைத்துக் கொள்ளுவதுமன்றி, உன் பெட்டிகளில் திணித்தும் வைத்துக்கொண்டு விடுகின்ருய். இவ்வாறு சிறிதும் சிரமமில்லாமல் (சர்வ சம்பத்துக்களும்) மலை மலையாக் குவித்தும் உனக்குத் துக்கம் உண்டாகக் காரணமென்ன? உனக்கு இன்னும் பொன்னுசையா?

அபஜயமென்பது அணுவளவுமறியாத கிரேக்கர்களும் நானும் நம் விரோதிகளான இலியன் நகரத்தார்களுடைய

கோட்டை கொத்தளங்களுக்குச் சென்று அங்குள்ள ராஜ வம்சத்தைச் சேர்ந்த அவிசாரி மக்களை இங்குப் பிடித்துவர வேண்டுமா? அவர்களை மீட்டுச்செல்ல வேண்டுமென்று ட்ராய் நகரத்தார் இங்கே வந்தால் நாம் அவர்களது சக்திக்கு மீறின பணத்தைக் கீழே வைத்தால்தான் அவர்களை விடுவோம் என்று சொல்ல வேண்டுமா? உனது நோக்காடுதான் இன்னது என்று சொல்; கேட்போம்.

இவ்வளவு சிரமந்தான் எதற்கு? உனது பரிவாரத்திலுள்ள ஜனங்களையே நீ வெகுலகுவாகவும் சிறிதும் பயமின்றியும் கொள்ளையடிக்கலாமே! ஏதாவது ஒரு வீரனுக்குச் சம்மானமாகக் கொடுக்கப்பட்ட வஸ்துவை அபகரிக்க வேண்டுமென்பது உனது ஆசையா? அல்லது நமது கையில் அகப்பட்ட ஏதாவது ஒரு கட்டழகி உனது ரஞ்சிதமான மஞ்சத்தை அலங்கரிக்கவேண்டுமென்ற ஆசையினுல் உனது மனம் மட்டுமிதமில்லாத காமவலையில் அகப்பட்டுத் தவிக்கின்றதா? சொல்! எங்கள் இறைவன் இச்சைப்படுவதை நாங்கள் வஞ்சிக்கமுடியுமா? முடியாதே! கொடுத்தே தீரவேண்டுமல்லவா! அவனது பெருமையே எங்கள் பெருநோய்! அவனது துராசையே எங்கள் துரதிருஷ்டம்! அவனுக்காக நாங்கள் அடியோடு மடியவேண்டும். அரும்பாடு ஆயிரம்பட்டுச் சம்பாதித்தவைகளை இழக்கவும் வேண்டும்.

அக்கேயர்களே! பேடிகளே! நீங்கள் இனிமேல் ஆண் மக்கள் என்று சொல்லிக் கொள்வதை விட்டு விடுங்கள். நீங்கள் அபலைகள் ஆய்விட்டீர்களே! நாம் இங்கு விட்டுக் காற்ருய்ப் பறப்போம், புறப்படுங்கள். இவன் இந்தப் பிரிஜியாக் கரையில் இருந்துகொண்டு காம விளையாட்டுக்கள் ஆடிக்கொண்டும் உண்டும் களித்தும் தான் குவித்து வைத்திருக்கும் திரவியங்களை விரயஞ்செய்து வரட்டும்!

ஒருநாள் ஹெக்டர் இங்கு வரவே வருவான்! அன்றைக்குத்தான் இவனுக்கு சுணையும் வரும். நம்மையும் கூவியழைப்பான். அகிலேசனையும் இரந்தழைப்பான். அவனுக்கு வெகுமானமாக நாமெல்லோரும் ஒரேமனதாய்க் கொடுத்த கட்டழகியை இவன் அவனிடமிருந்து பிடுங்கிக்கொண்டு விட்டானல்லவா? அகிலேசன் எவ்வளவு தீரன்! எவ்வளவு அஞ்சாநெஞ்சன்! எவ்வளவு மனவுறுதியுள்ளவன்! அவன்மாத்திரம் தனக்குச் செய்த சிறுமைகளை முன்னிட்டு இவன்மேல் சீறினுல் இவனது சீரும் சிறப்பும் பறந்தே போய்விடுமல்லவா? இவனது பெருமையும் அப்பொழுது பார்ப்போமே! இவனது பெருவாழ்வும் வெறும் வாழ்வே ஆகிவிடுமல்லவா?'' என்ருன்.

இதைக்கேட்ட யுலிஸ்ஸிஸ், இவ்வாறு இராஜாதிராஜனுக்குச் செய்யப்பட்ட அவமரியாதையைக் கண்டிக்க வேண்டுமென்ற பெருந்தன்மையுடன் வெகு கோபத்தோடு தனது ஆசனத்திலிருந்து ஆத்திரத்துடன் குதித்து எழுந்திருந்து தீப்பொறி பறக்கும் தன்கண்களால் அந்தக் கொடியபாதகனை நன்ருக உற்றுப்பார்த்து விட்டுப் பின்வருமாறு கடிந்து பேசினுன்:

“அட அடங்காப்பிடாரி! உனது வாயை மூடு. அடாத வழக்குகளும் விதண்டா வாதங்களுமே செய்யப் பழகியிருக்கின்ருய்! இந்த ராஜ்யத்தைஅழிப்பதற்கே பிறந்தும் இருக்கின்ருய். போதும் போதும். உனது அலுப்பு வாயை மூடு. இந்த வெட்டித்துடுக்கு வேண்டாம். இந்தப் பைத்தியமும் வேண்டாம். நமக்குச் சமானம் ஒருவருமே இல்லை என்று மதங்கொண்டிருக்கின்ருய்! ஓரிபோல் பெரியோனை வைகின்ருய்! இராஜராஜன் மீது பழிகளைச் சுமத்துகின்ருய்! அடமடையா! நீ யார் என்று எங்களுக்குத் தெரியாதா ? நமது சமூகத்திலேயே உன்னையன்றி வேறு எந்த ஆள் தனது விரலைக்கூடச் சற்றும் அசைக்காமல், ஒரு வேலையும் செய்யாமல், வெட்டிச் சோறு தின்றுகொண்டு மட்டுமிதமின்றி எல்லோரையும் திட்டி வருகின்ருன் ? சொல்லு பார்ப்போம்?

“உனது வார்த்தையைக் கேட்டு, கிரேக்கர்கள் இங்கிருந்து புறங்காட்டி ஓடிவிடுவார்கள்; தங்கள் மானத்தைப் போக்கிக் கொள்வார்கள் என்று நினைக்காதே! உன்னுடைய அந்த புழுத்த நாக்கினுல் இனி நமது அரசனைக் குறித்துப் “பல்லத்தனை” வார்த்தையும் சொல்லாதே! ஜாக்கிரதை!

இங்கிருந்து க்ஷேமமாகத் திரும்பிச் செல்வதற்கு நாங்கள் தெய்வ சகாயத்திலேயே பூரணமான நம்பிக்கை வைத்திருக்கின்ஞேம். எங்களை ரக்ஷிக்கவேண்டியது தெய்வத்தின் கடன். அது விஷயமாக நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம். வீரர்களைப்போல் பொரவேண்டியதுதான் நமது கடன். அஃது இருக்கட்டும். நீ சொல்கிறபடி கிரேக்கர்கள் அனைவருமே தங்களது தலைவனுக்குப் பலவிதமான சம்மானங்களையும் செய்தார்கள் என்றே வைத்துக்கொள்வோம். நீ என்ன சம்மானம் செய்தாய் ? சொல் ?

ஏதோ ஒரு வீரன் ஒரு கொள்ளையில் தனக்குக் கிடைத்த வஸ்துக்களைத் திருப்பிக்கொடுத்து விடுகிருன் என்ருல், அதனுல் உனக்கு உண்டான நஷ்டம் என்ன ? அப்படி நஷ்டமடைந்த வீரன் நீயா ? அந்த வஸ்துக்களை நீயா சம்பாதித்தாய்?

இதோ சகல தேவர்களுக்கும் முன்பாக நான் செய்யும் இந்த சபதத்தைக் கேள். நீ மாத்திரம் மறுபடியும் இவ்வாறு குறும்பு செய். நான் உன் ஆயுதங்களைப் பிடுங்கிவிடுவேன். ஆயுதந் தரிக்க யோக்யதையற்ற உன்னை நிராயுதனுக ஆக்கிவிடுவேன்! உன்னை நம் அரசர்களது சபையிலிருந்தும் துரத்திவிடுவேன்! உன்னைச் சாட்டையால் வீக்கியடித்து நம் கப்பல்களின் இடையில் ஊளையிட்டு அலறிக்கொண்டு ஓடும்படியும் செய்துவிடுவேன். அப்படி மாத்திரம் நான் செய்யத் தவறினேன் என்ருல், நான் எனது மகனது முகத்தைப் பாராமல் இந்தப் பாழான கடற் கரைக்கே இரையாகி அழிந்துபோவேன்!” என்ருன்.

இவ்வாறு அவன் அதட்டிப் பேசியபொழுது அந்த மானிடப்பதர் வெருண்டு பயந்து தலைகுனிந்து ஒரு மூலையில் ஒடுங்கிக் கொண்டான்.

யுலிஸ்ஸிஸ் அவனை அத்துடன் விடவில்லை! தான் கையில் பிடித்திருந்த பளுவான செங்கோலைக் கொண்டு ஓங்கி ஓர் அடி அடித்தான். அப்பொழுது சுருண்டு கிடந்த அவனது சரீரத்தி லிருந்து இரத்தம் கட்டி கட்டியாகக் கிளம்பியது. ஆழமாய்க் குழிந்துபோன அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் ஒரு சுனை போல் சொரிந்தது.

அவன் இன்னும் மேன்மேலும் என்ன தீங்குகள் நேருமோ என்று பயந்து நடுநடுங்கிக் கொண்டும் தனது விகாரமான முகத் தில் சுடச்சுட வழிந்தோடிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டும் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

அதைக் கண்ணுற்றவர்கள் அனைவரும் தம்தம் அருகி லிருந்தவர்களுடன் பின்வருமாறு பேசிக்கொண்டனர்:—"ஆஹா! தேவர்களே! யுலிஸ்ஸிஸ் செய்த அற்புதங்களே அற்புதங்கள்! அவன் நடவடிக்கைகளினாலும் மனவுறுதியினாலும் நமக்கு எவ் வளவு நன்மைகள் உண்டாகிவிட்டன! அவன் சபையிலிருந்து யோசனைகள் சொல்வதிலும் போர்க்களத்தில் தனது கைவரிசை யைக் காட்டுவதிலும் சமர்த்தன்தான். அவனது வாய் வாய் தான்; கையும் கைதான்; அரசனுக்குப் பரிந்து பேசிக் குறும்புக்கார னுடைய துடுக்கான வார்த்தைகளைக் கண்டிக்க வேண்டுமென்று நினைத்து அவன் வெகு தாராளமாக எழுந்து முன்வந்தான்! துரோகிகளுக்கு இவ்வாறு சூடுபோட வேண்டியது நியாயந்தான்! அப்படிச் செய்வதால்தான் கலகம் அடங்கும். அரசனது அதி காரமும் செல்லும்" என்றனர்.

இவ்வாறு எல்லோருமே பொதுவாக வீரனை யுலிஸ்ஸி ஸைப் புகழ்ந்தனர்.

அவன் தான் வீற்றிருந்த இடத்தைவிட்டு எழுந்து தன் கையிலிருந்த செங்கோலையுயர்த்தினன். அப்பொழுது அவனது தேவலோக நட்பாளியும் நீலாயதாக்ஷியுமான பாலாஸ் தேவியா னவள் ஒரு தூதனது வேஷங்கொண்டு அந்தச் சேனைக்கூட்டத் தின் முன்நின்று தமது தலைவன் சொல்லப் போகும் வார்த்தைகளை அவர்கள் கேட்கவேண்டுமென்று ஆஞ்ஞாபித்தாள்.

இவன் இன்னும் என்ன சொல்லப்போகின்றான்? இவனது திருவாயினின்று இன்னும் என்ன அமிர்தவசனங்கள் பொழியப் போகின்றன? அவற்றையும் கேட்போம் என்ற ஆவலுள்ளவர் களாய் அந்தக் கூட்டத்திலிருந்த சகல ஜனங்களும் சிறிதும் சந்தடி செய்யாமல் அவன் மொழிகளைக் கவனமாய் கேட்பாராயினர்.

புத்திமானான அந்த மகாவீரன் நிதானமாக ஆழ்ந்த யோசனைகள் செய்து தான் சொல்லவிருந்த விஷயங்களையும் வசனங்களையும் வரிசையாக வகுத்துக்கொண்டு கடைசியாக மௌனம் நீங்கிப் பின்வருமாறு பேசலானான்:—

“ பாக்கியமற்ற பெருமானே! மானங்கெட்ட கிரேக்க வர்க்கத்தார் அனைவரும் உம்மைக் கைவிட்டது மன்றி மேன் மேலும் உம்மீது அவதூறான பழிகளைச் சுமத்துகின்றார்களே! ஆர்காஸில் வெகு தாராளமாக ஆணையிட்டு வாக்களித்தபொழுது தாங்கள் இவ்வாறு செய்யப் போவதாகச் சொல்லவில்லையே! அன்று எல்லோரும் ஒரே நீதியாக ஒரே வார்த்தையையன்றோ சொன்னார்கள்? அதை அவர்கள் மறந்து விட்டார்களே! ஐயோ! இது என்ன கஷ்டம்! ட்ராய் நகரத்தின் மதம் பிடித்த மதில்கள் மண்ணோடு மண்ணாகப் போகும் வரை நாங்கள் திரும்பி வரமாட்டோம் என்றல்லவா அவர்கள் ஒரே மனத்தினராகச் சொன்னார்கள்! இப்பொழுது அவர்கள் தங்கள் சொந்த ஊர்களுக்குப் போக வேண்டுமென்று கதறியழுகின்றனரே! அவர்களுடைய அபலைகளான மனைவிமார்களும் குழந்தை குட்டிகளும் அவர்களைப் போலவேதான் துக்கிப்பார்கள். அவர்களால் வேறு என்னதான் செய்யமுடியும்! இது சகஜந்தான். விரைவில் கழிந்துவிடக்கூடிய அதிஸ்வல்பமான ஒரே ஒருமாத காலம் மாத்திரமே தனது இளங்குடும்பத்தை விட்டுவிட்டுக் கடல் கடந்து அக்கரையில் சென்று அங்கு குளிரில் அடிப்பட்டுக் கிடக்க வேண்டும் என்றாலே எல்லாருக்கும் மனம் உருகத்தான் உருகும். யாருக்குத்தான் உருகாது? நம் வீடுகளை விட்டு இரண்டொரு காதம் தூரமுள்ள அதி சமீபமான ஓரிடத்திற்கு நாம் சென்றிருக்கையில் நமது கப்பல் ஆடி அசைந்து விட்டாலாவது புயல் அடித்து விட்டாலாவது நாம் நமது சொந்த இடத்திற்குத் திரும்பிப் போய்ச் சுகமாக இருக்கவேண்டும் என்றேயல்லவா ஆத்திரப் படுகின்றோம்?

நாம் இங்கு வந்து ஒன்றல்ல இரண்டல்ல ஒன்பது வருஷங்கள் கழிந்துவிட்டன. வசந்தமும், வேனிலும், காற்றும், குளிரும் ஒன்பது முறை வரிசை வரிசையாக வந்து சென்றுவிட்டன. நமக்குச் சலித்தும் போய்விட்டது. இவ்வாறு நமது தேசாந்தர வாசம் வெகுவாக நீடித்து விட்டதனால், நம்மவர்கள் கண்ணீர் வடிப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை. அது நியாயந்தான். இது காரணமாக கிரேக்கர்கள் துக்கப்படுவதற்காக நாம் அவர்களின் மேல் குறை கூறவில்லை. தோல்வியுடனும் எடுத்த காரியத்தை முடிக்காமலும் நாம் திரும்பிப் போனோமானால் நமக்கு அதைவிட மேலான அவமானம் வேறு என்ன உண்டு? நமக்கு அழியாத பழிதானே உலகெங்கும் எந்நாளும் நிலவி வரும்! ஆதலால் ட்ராய்க்கு விதிக்கப்பட்ட அழிவுகாலம் வரும் வரை, நாம் பொறுத்து வருவோம். காலகேசரது திடமான நம்பிக்கையையும், தேவாதிதேவனது வாக்கின் உண்மையையும் பரீக்ஷித்து விடுவோம்.

ஆலிஸ்ஸில் நடந்த நடவடிக்கைகள் அனைத்தும் சகலமான கிரேக்கர்களுக்கும் தெரியும்! அவை இந்தப் பிரிஜீயாவில் இன்னும் ஜீவனுடன் இருக்கும் ஜனங்களுக்குக்கூடத் தெரியும். ஒரு புண்ணிய தீர்த்தத்தின் கரையில் நாம் பச்சைத் தோரணங்கள்

கட்டிப் பலிபீடங்களையமைத்து அவற்றில் பலிகளைக் கொடுத்தோம். அவை கொழுந்து விட்டுக்கொண்டு பொலிவுடன் பிரகாசித்தன.

மரங்களின் விசாலமான நிழலில் நாம் நம் ஹோமகுண்டங்களை வளர்த்தோம். அவை ஆகாயத்தையளாவிக் கொண்டு உயர்ந்தன. அந்த ஹோமத்தினுல் நீருய்ப்போன பூமியிலிருந்து அபசகுனக் குறிகளுடன் ஒரு பிரமாண்டமான நாக பக்ஷியானது விஷாக்கினியைக் கக்கிக்கொண்டு திடீரெனப் புறப்பட்டது. ஜோவ் பகவானிடமிருந்து அந்தப் பயங்கரமான உத்பாத சூசகம் நமக்கு அனுப்பப்பட்டு வந்தது. அது கோபுரம்போல் கொழுந்து விட்டெரியும் செந்தணல்களைக் கக்கிக்கொண்டும் அத்தணல்களை அலைபோல் சுழற்றியுருட்டிக்கொண்டும் அந்த மரத்தையே குறியாக வைத்துக்கொண்டு அதையே நேராக நோக்கிச் சென்றது ; அஃது அந்த மரத்தை ஒரு வஸ்திரம்போல் பன்முறையும் சுற்றிக் கொண்டது. அப்போது அந்த மரத்தின் உச்சியிலிருந்த கொம்பில் ஒரு தாய்ப்பறவையும் இறகு முளையாத அதன் எட்டுக் குஞ்சுகளும் அதே மரத்திலிருந்த எட்டுப் பாசிக் கூடுகளும் இருந்தன. இந்த நாக பக்ஷியானது அந்த மரத்திலிருந்த ஒன்பதாவது கூட்டினுள் பிரவேசித்து அதிலிருந்தபடியே தனது கறுத்த வாயை நீட்டித் தொங்கிக்கொண்டு அந்தப் பக்ஷியின் குஞ்சுகள் இவ்வாறு அழிந்து போனதைக் கண்ணுற்றுப் பதைபதைத்துத் துக்கித்துப் புலம்பிக் கொண்டு கடைசியாக அந்தக் கொடிய பூதத்தின் கூட்டைச் சுற்றித் தனது சிறகையடித்துக் கொண்டு பறந்து வந்த பொழுது அந்தப் பூதம் அதையும் அதன் சிறகைப் பிடித்து இழுத்துக் கொன்றுவிட்டது. அதன்பின் அந்தப் பூதம் வெகுகாலம் ஜீவித்திருக்கவில்லை. அது கல்லாக மாறி ஆலிஸ்ஸின் கடற்கரையோரமாக ஓர் அழிவில்லாத அற்புதமான வஸ்துவாக விளங்கி வருகின்றது. இஃது இவ்வாறு நடக்கவேண்டுமென்றே ஜோவ் பகவானது திருவுள்ளம். ஆதலால் அவர் நமக்குக் காட்டிய இந்த ஜாடையை நாம் தைரியமாய் நம்பவே வேண்டும். யுத்தத்தை மேலே நடத்தவும் வேண்டும். இவ்வாறு இந்த உத்பாதம் நம்மெதிரில் புலப்பட்டபொழுது பிரமித்தவர்களாய் அங்குமிங்கும் நம்மைச்சுற்றிப் பார்த்துக்கொண்டு நமது கையில் நைவேத்தியங்களை ஏந்தியவர்களாய் அதிபக்தியுடன் தேவர்களை எதிர்நோக்கியிருந்தோம். அப்பொழுது நமது இஷ்டதேவதையின் பூரண கருணையைப் பெற்றவரும் மஹானுமான காலசேகர் "ஓ கிரேக்க வீரர்களே ! உங்களது பயத்தை ஒழித்துவிடுங்கள். நாம் இடைவிடாமல் நெடுநாள் உழைத்து வந்தால் அழியாப் புகழ் அடைவோம்" என்று அறிவிக்கவே, ஜோவ் பகவான் இவ்வாறு அற்புதமாக ஜாடை செய்கின்ருர். பாம்பு எவ்வளவு பக்ஷிகளைக் கொன்றதோ அவ்வளவு வருஷகாலம் கிரேக்கர்கள் இடைவிடாமல் சிரமப்படவேண்டும். ஒன்பதாம் வருஷம் வரை பொறுங்கள். பத்தாம் வருஷம் இலியன் அழிவது நிச்சயம் என்று எல்லோரும் அறிய உரத்துக் கூறினர்.

திரிகால ஞானியின் வாக்கும் தேவர்களது சங்கல்பமும் இசைந்தே யிருக்கின்றன. ஆதலால் கிரேக்கர்களே! தேவ ஆஞ்ஞைப்படி நடவுங்கள். பணிவுடன் காலத்தை எதிர்பார்த்திருங்கள். நீங்கள் ஓட்டம் பிடித்துவிட்டீர்களானால் ட்ராயின் அழிவு தடைப்பட்டுப்போகும். அப்படிச் செய்யாதீர்கள்" என்றான்.

அவன் அவ்வாறு உரைக்கக் கேட்டு அந்தக் கரையில் குழுமியிருந்தோர் அனைவரும் பெரும் இறைச்சலிட்டு ஆரவாரித்தனர். செவிடுபடும்படியான அந்த இரைச்சல் காலியாயிருந்த கப்பல்களைத் தாக்கி முன் செல்லமுடியாமல் தடையுண்டு திரும்பி வந்தது.

அதன்பின் நெஸ்டார் எழுந்திருந்து பின்வருமாறு புகன்றார்:

"இந்த வீணான வாதங்களை நிறுத்திவிடுங்கள். நீங்கள் குழந்தைகளைப்போல் பிதற்றுகின்றீர்களேயன்றி வீரர்களைப்போல் தைரியமாக இருக்கவில்லையே! நீங்கள் முதன் முதலில் செய்த சபதங்களெல்லாம் இப்போது எங்கே போயின? பிரமாதமாக ஒப்பந்தங்களும், கட்டுப்பாடுகளும் செய்துகொண்டீர்கள். செய்வதாக ஒப்புக்கொண்ட காரியங்களை மறந்தே விட்டீர்கள்! ஆஹுதிகளும் நைவேத்தியங்களும் செய்து கங்கணங்கள் கட்டிக்கொண்டீர்கள்! அவை எல்லாம் எங்கே? அவையெல்லாம் அப்போது உண்டான புகையைப் போலவே அழிந்து போய்விட்டன! இதுதானா உங்களது திறமை! காரியத்தின்மேல் கண்ணில்லாமல் வெற்றுப் பேச்சியிலேயே நாம் நமது காலத்தைக் கழித்து வந்தால் ட்ராய் எப்படி நமது கைவசமாகும்? அதுவோ ஒரு கை பார்க்கலாம் என்று நம்மை எதிர்த்துத்தான் நிற்கும். அதில் என்ன ஆச்சர்யம்! ஆதலால் அதிரிதேசப் பெருந்தகையே! எழுந்திரும். தைரியமாய் உம் உத்தரவுகளை இடும். இன்ன திசையில் நாங்கள் செல்லவேண்டியது என்று நீர் சொல்வதுதான் தாமதம்! அத் திசையில் செல்ல நாங்கள் காத்திருக்கின்றோம். தங்களுடைய ஆஞ்ஞைகளை மறுக்கவேண்டுமென்று துணிவுடன் கிளம்பும் அல்பப்பயல் சிலரைத் தாங்கள் சட்டை செய்யவேண்டாம்! அவர்கள் கிரேக்கர்களது கட்சியைக் கை நழுவவிடும் கடையர்கள். மகா பராக்கிரமசாலியான ஜோவ் பகவான் நமக்கு லாபகரமாக முடியும்படி செய்யும் ஏற்பாடுகளைக் கண்டு அஸூயைப் படுவார்கள். இந்த யுத்தத்தில் எங்கு நமக்கு ஜயம் வந்துவிடப் போகின்றதோ என்று நம்மைப் பொறாமையுடன் கண்ணுற்றுவருபவர்கள்! அவர்கள் அந்தப் பொறாமையினால் வெந்து வீங்கிவெடித்துப் போகட்டும்.

இலியனைச் சனியன் பெரியதாகப் பிடித்துக்கொண்ட அன்றைய தினம் நமது சைன்னியம் அணியணியாகக் கடலைக் கடந்து வருகையில் ஜோவ் பகவான் வலது பக்கமாக விருந்துகொண்டு நமக்கு ஒரு சுபகரமான சகுனத்தை அனுப்பி வைத்தார். அப்பொழுது கடகடவென்று உருண்டுவந்த ஓர் இடியானது ஆகாயத்தையே ஆட்டிவிட்டது. அந்தச் சகுனத்தில் பூரண

மான நம்பிக்கையுள்ளவர்களாய் நாம் அனைவரும் நமக்குப் புகழைத் தரக்கூடிய இந்த யுத்தத்தைக் கைவிடாமல் நடத்தியே வரவேண்டும்! கிரேக்கர்கள் ஒவ்வொருவனும் ஒவ்வொரு பிர்ஜியன் ஸ்திரீயைப் பிடித்துக்கொள்ளும் வரையிலும், ஹெலனுக்கு நேர்ந்துள்ள சிறுமைகளுக்குச் சரியான பழிவாங்கி விட்டதாக நமது புத்திக்குப் புலனாகும் வரையிலும் ட்ராயிலுள்ள பாட்டிமார்கள் நாம் கண்ணீர் வடிப்பது போல் நமது ஒவ்வொரு சொட்டுக்கும் ஒவ்வொரு சொட்டாகக் கண்ணீர் வடிக்கும் வரையிலும் நாம் இந்த யுத்தத்தை நடத்தியே வரவேண்டும்! அந்த நாள் வருமுன் இங்குள்ள எந்த கிரேக்கனாவது நாம் நமது ஊருக்குத் திரும்பி ஓட்டம் பிடிக்கலாம் என்ற இழிவும் அபகீர்த்திகரமுமான ஒரு யோசனையைத் தன் சேனைகளுக்குச் செய்ய நினைத்தானால் அவன் இப்பொழுதே நமக்கு முன்வந்து நிற்கட்டும்! அவன் தனது கப்பலின் பாயை விரித்துக் கட்டிக்கொண்டு இப்பொழுதே காற்றாய்ப் பறந்து செல்லட்டும்.

தவிர, தனது பிராணனைக் கொடுக்கப் பின்வாங்கும் பேடி எவனாவது இங்கு இருந்தால் அவனும் இப்பொழுதே நமது முன்பாகத் தனது பிராணனை முதன்முதலாக விட்டு மடியட்டும். அவன் நமது இனத்தை விட்டு ஒழியட்டும்!

மஹாராஜரே! இத்துடன் இது நிற்கட்டும். இப்பொழுது தங்களது சேனைத் தலைவர்கள் தங்களுக்குச் சொல்லும் யோசனைகளைத் தாங்கள் செவிசாய்த்துக் கேளும். அவர்களது வார்த்தையை அலட்சியம் செய்யாதீர். அவர்களுடைய யோசனைகளுடன் எனது யோசனையையும் கேளும். அதைப் பயனற்றதென்று கருதாதீர்!

தங்களது பரிவாரத்திலுள்ள ஒவ்வொரு தலைவனும் தன் ஆட்களை ஜாதி ஜாதியாகவும் இனம் இனமாகவும் பிரித்து நிறுத்தட்டும். அவர்கள் அனைவரும் ஒருவரோடொருவர் உற்சாகமாகப் பேசி வரட்டும். பரஸ்பரம் ஊக்கமுள்ளவர்களாக ஆகட்டும். அப்படிச் செய்து அனைவரும் ஒரே ரீதியாகத் தைர்யமுள்ளவர்களாக ஆகட்டும். சண்டைகளைச் செய்து வரட்டும். இவ்வாறு அவர்கள் தனித்தனியே சண்டை செய்துவந்தால் அப்போது நமது சேனாசமுத்திரத்திலுள்ள எந்தத் தலைவன், எந்த வீரன் நன்றாகப் பொருகின்றான் என்பதும், எவன் அரசனது ஆணையை மீறி நடக்கின்றான் என்பதும் நமக்கு உடனே தெளிவாக விளங்கிவிடும். அதன்பின் இதுவரை இலியன் இடிந்து விழாததற்கு யார்தான் காரணம் என்பதும், அதிர்ஷ்டம் தான் விரோதமாக விருக்கின்றதா அல்லது நம் சேனைகள்தான் சலித்துப்போயினவா என்பதும் தெரிந்துவிடும். நாம் காரிய ஸித்தி பெறாமல் தடையாயிருப்பதற்குத் தெய்வங்கள் தான் காரணமா அல்லது மண்ணுலகிலுள்ள மனிதர்களா என்பதும் தெரிந்துபோகும்" என்றார்.

அப்பொழுது அரசன் அவரை நோக்கி "விருத்தரான தாங்கள் நல்ல யோசனைகள் சொல்வதிலும் அவற்றை நயம்பட உரைப்பதிலும் சிறந்து விளங்குகின்றீர்கள். தங்களது பெருமையே பெருமை!

தங்களைச் சிருஷ்டித்த தெய்வங்கள் குறைந்தபக்ஷம் தங்களைப் போன்ற இன்னும் பல பெரியோர்களைச் சிருஷ்டிக்க லாகாதா? அப்படிச் செய்திருந்தால் கிரீஸ் மிகவும் சீரும் சிறப்புமாய் விளங்குமே. தங்களைப் போன்றவர்களது ஞானோபதேசத்தினால் பிரியத்தினுடைய சேனை அழிந்தே போய் விடுமல்லவா! ஆகாயமளாவியும் நமக்கு நிகர் யார் என்று இறுமாந்து நிற்கும் ட்ராய் மதில்களும் மண்ணைக் கவ்வி விடு மல்லவா? அவை இடிந்து விழுந்து விடுமே! அவ்வாறு செய்ய ஜோவ் பகவானுக்கு மனமில்லை போலும்! தனக்குப் பிடிக்காதவர்களை அவர் கொடிய வாதங்களிலும் வீணான வழக்குகளிலுமல்லவா ஆழ்த்திவிடுகின்றார்! மஹா வீரனான அகிலேசன் என்னால் கோபம் மூட்டப்பட்டவனாய் இப்பொழுது நமக்குத் தனது உதவியை மறுத்து விலகிப் பிரிந்து போய் விட்டான். நாம் சிறைபிடித்த ஒரு பெண்தான் இதற்குக் காரணம். நாம் மறுபடியும் நேசங்கொண்டு ஒத்துழைத்தால் ட்ராய் நகரின் மதில்கள் அசைந்தாடுமே! நாம் நமது மனது திருப்தியடையும் வரை பழியும் வாங்குவோமே! அஃதிருக்கட்டும்!

இப்பொழுது வீரர்களே! நீங்கள் சிறிது இளைப்பாறுங் கள். உங்களது களைப்பை நன்றாகத் தீர்த்துக் கொண்டபின் யுத்த சன்னத்தர்களாக விரைந்து வாருங்கள். அந்த யுத்தத்தில் நல்ல ரத்தப்பெருக்கு உண்டாகவேண்டும்!

ஒவ்வொரு கிரேக்கனும் நன்றாகத் தீட்டிய தனது ஈட்டி யைத் தன் கையில் ஏந்திவர வேண்டும். அப்படியே ஒவ்வொரு வனும் தனது வெண்கலக் கவசத்தை இறுகக் கட்டிக்கொள்ள வேண்டும். எல்லோரும் நெருப்புப் பொறி பரக்க ஓடும் குதிரை களை உற்சாகப்படுத்தி சவாரி செய்து வரவேண்டும். கடகட வென்று ஓடும் இரதத்தையும் ஒவ்வொருவனும் யுத்த தளவாடங் களால் ஜோடித்துக்கொண்டு வர வேண்டும்.

விசேஷமான விபத்துகள் விளையக்கூடிய இன்றைய தினம் ஒருவர் தவறாமல் அனைவரும் சண்டையிட வேண்டும். இருளானது பூமியைக் கவரும் வரை எல்லோரும் சிறிதும் அலுப்போ சலிப்போ இன்றிப் பொர வேண்டும்; இருளோ அல்லது மரணமோ உண் டாகும் வரை எல்லாரும் பொர வேண்டும்.

இரண களத்தில் இரத்தம் வெள்ளமாய்ப் பெருக வேண் டும். வீரர்களும் அடியற்ற பனைபோல் விழுந்து மடியவேண்டும். அஞ்சா நெஞ்சர்களான வீரர்கள் தங்களது தேகத்தில் வடியும் வேர்வைகளினாலேயே ஸ்நானம் செய்தவர்களாக ஆகவேண்டும்.

பிரம்மாண்டமான கவசங்களை யணிந்த பலவானுன ஒவ்வொரு வீரனுடைய கையும் அந்தக் கவசங்களாலேயே அழுந்தி நொறுங்க வேண்டும். அவர்கள் நாடிகளெல்லாம் சோர்ந்து தளர்ந்து போய் ஓர் ஈட்டியை எறியக் கூடச் சக்தியற்றுப் போக வேண்டும்.

சலித்துப் போன ஒவ்வொரு குதிரையும் தான் கட்டப்பட்டிருக்கும் இரதத்தை உதைத்து இடித்துப் பொடியாக்க வேண்டும்.

இந்த விசேஷமான தினத்தில் எவன் மானமின்றித் தனது கப்பலிலேயே இருந்துவிடத் தீர்மானித்து விடுகின்ருனே அல்லது இன்றைக்கு நிகழவிருக்கும் சம்பவங்களைக் குறித்துக் கதறித் திகிலடைகின்ருனே அந்தப் பதர் யுத்தத்தில் மாளப்பிறந்த வீரனல்ல. அவன் காக்கை கழுகு முதலிய பக்ஷிகள் கொத்தித் தின்னவும் நாய்கள் விழுங்கவுமே பிறந்தவன்!” என்ருன்.

மஹாராஜன் உரைத்த அந்த க்ஷணமே அந்தச் சபையில் முணுமுணு வென்ற ஒரு சப்தம் கிளம்பியது. அஃது ஒரு கடலில் புயலடிக்கையில் அங்குண்டாகும் அலைகள் எவ்வாறு அக்கடலின் கரையோரமாக வுள்ள பாறைகளின் மேல் நுரையைக் கக்கிக் கொண்டும் அப்பாறைகளை இடிபோல் மோதித் தாக்கி இடித்துப் பொடித்துக் கொண்டும் இரைந்து ஓசையிடுமோ அவ்வாறு இருந்தது.

அங்குக் கூடியிருந்த சேனையிலுள்ளோர் அனைவரும் அந்த க்ஷணமே தத்தம் இடம்விட்டுப் பெயர்ந்து தங்கள் கூடாரங்களை நோக்கிப் பிரிந்து சென்று அடுப்புக்களை மூட்டினர். அவற்றினின்றும் புகை ஆகாயத்தையளாவிக் கிளம்பியது.

பின்பு அவர்கள் அவசரமாகப் பலவிதமான பக்ஷணங்களைச் சமைத்து அவற்றைத் தங்களது இஷ்டத் தேவதைகளுக்கு நைவேத்தியங்களாகச் சமர்ப்பித்து அன்று விளையக்கூடிய சம்சய ஆஸ்பதமான வெற்றி தோல்விகளால் தங்களுக்கு ஒருவிதமான ஆபத்தும் நேரிடாமல் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தனைகளும் செய்தனர்.

பின்பு ஐந்து வயதுள்ளதும் பெருத்த அவயவங்களுள்ளதும் புஷ்டியாய்த் தீனியை யருந்தியுமிருந்த ஒரு ரிஷபத்தை ஆகமனன், ஜோவ் பகவானது உன்னதமான பலிபீடத்திற்கு நடத்திக்கொண்டு, கிரேக்கர்களில் உத்தமர்களான பிரபுக்களைத் தன் பின் வரும்படி அழைத்தான்.

அப்பொழுது அங்கிருந்தவர்களிலெல்லாம் அதிவிருத்தரான நெஸ்டார் முதன்முதலாக எழுந்துவந்தார். அவருக்குப் பின்னுல் இதோமினியஸ்ஸும், திதியஸ்ஸின் மகனும் இளையவனுன அஜாக்ஷனும், அஜாக்ஷதிலமான் என்பவனும் வரிசையாக வந்தார்கள். அதன்பின் புத்திமானுன யுலிஸ்ஸிஸுக்கு

அவனுடைய அந்தஸ்துக்குத் தகுந்த ஆசனம் அளிக்கப்பட்டது கடைசியாக ஒருவரும் அழைக்காமலே மெனிலாஸ்ஸூம் வந்தான்.

தலைவர்கள் அனைவரும் நைவேத்தியத்திற்காகச் செய்யப் பட்டிருந்த உப்பிட்ட பிண்டங்களைக் கையில் எடுத்துக்கொண்டு பலியாக நியமிக்கப்பட்டிருந்த மிருகத்தைச் சுற்றி நின்றனர். அச்சமயம் அரசன் பின்வருமாறு உருக்கமாக ஒரு பிரார்த்தனை யைச் செய்தான்:— "ஓ தெய்வமே! மேகங்கள் நிறைந்துள்ள ஆகாசத்தை இடியினால் பிளப்பவரே! சகல தேவர்களுடைய லோகங்களுக்கும் மேலான தேவலோகத்தில் உன்னதமான சிம்மாசனத்தில் வீற்றிருப்பவரே! தேவாதி தேவரே! அளவு கடந்தவரே! ஏக நாதரே! எனது இந்தப் பிரார்த்தனையைச் செவிசாய்த்துக் கேளும்! அடுஞ்சரங்களை விடுஞ் சூரியன் இன்று அஸ்தமிப்பதற்குள்ளாகவும், இருளானது தனது இருண்ட திரையினால் இவ்வுலகை மறைப்பதற்குள்ளாகவும், அதோ அங்குக் காணும் எங்கள் விரோதிகளின் கோட்டை கொத்தளங்கள் எல்லாம் புழுதியின் அடியில் புதைந்துபோக வேண்டும்! பிரியத்தி னுடைய அரண்மனையானது கிரேக்கர்களது தீக்கிரையாக வேண்டும். ஹெக்டருடைய மார்பை இந்தப் பிரகாசமான வாள் துளைக்கவேண்டும்! வதையுண்ட வீரர்கள் தங்களது தலைவனைச் சுற்றிக் கதற வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

இந்தப் பிரயோசனமற்ற பிரார்த்தனையை ஜோவ் பகவான் புறக்கணித்து விட்டார். அது காற்றின் எதிரில் வைத்த பதர் போல் ஆயிற்று.

இவ்வாறு இந்தப் பிரார்த்தனைகளுக்கு இரங்காத அந்தக் கடவுள் தம்மை யுத்தேசித்துச் செய்யப்பட்டு வந்த ஹோமாதி களிலிருந்து புகைகள் எழும்பிக் கொண்டிருக்கையிலேயே கிரேக்கர்களுக்கு மேலும் இருமடங்கு கஷ்டங்கள் உண்டாகு நிமித்தம் புதிய ஆபத்துக்களை உண்டாக்கினார்.

தலைவர்கள் தங்கள் பிரார்த்தனைகளைச் செய்துமுடித்த பின் தாங்கள் ஆரம்பித்த சடங்குகளை முடிக்கக் கருதி கோது மையை யிறைத்துப் பலியிட உத்தேசித்திருந்த ரிஷபத்தையும் வெட்டினர். பின்பு அவர்கள் அக்காளையின் அவயங்களை அவற்றின் தோல்களினின்றும் பிரித்தெடுத்து தெய்வங்களுக்குப் பகிர்ந்து வைத்தனர். அவற்றின்மேல் வெகு விசித்திரமாக இரட்டை இழைகளால் பின்னப்பட்ட சல்லடைகளில் அக்காளை யின் ஒவ்வோர் அவயத்திலிருந்தும் எடுக்கப்பட்ட அதி ருசியான துண்டங்களையும் வைத்தனர்.

அப்போது நெருப்பினால் வெடித்த சுள்ளிகளிலிருந்து பட படவென்ற சப்தத்துடன் ஜ்வாலைகள் உயரக் கிளம்பின. ஆஹூதி செய்யப்பட்ட கொழுத்த அங்கங்களும் அந்த ஹோமாக்கினியை வளர்த்து வந்தன. இவ்வாறு காளையின் ஊருக்கள் ஹோமாக் கினியில் இடப்பட்டுத் தன் குடல்களும் நன்றாகப் பக்குவமானபின்

அரசன் ஆட்கள் காளையின் உடல்களில் மீந்திருந்த மாம்சங்களை யெடுத்துத் துண்டித்துத் துளைத்து அனலிலிட்டு வாட்டி வறுத்தனர். பின்பு அவர்கள் எல்லோருக்கும் உண்கலங்களை ஒழுங்காக அமைத்து வைத்து அவற்றில் போஜனம் பரிமாறினர். அனைவரும் தம் தமக்கு ஏற்பட்டுள்ள இடத்தில் உட்கார்ந்து கொண்டு தங்களுக்குப் பரிமாறப்பட்ட பிரஸாதங்களை அருந்தினர். இவ்வாறு தங்களது பசிப்பிணி ஆறியவுடன் உதாசீலரான நெஸ்டார் அரசனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார்:

"அரசே! சங்குகளை உரத்து ஊதும்படி தங்களுடைய கட்டியக்காரர்களுக்கு இப்போது உத்தரவு இடுங்கள். வெண்கலக் கவசந் தரித்தவராய் வீரர்களெல்லாம் இங்கு வரவேண்டும் என்று ஆணையிடுங்கள். எல்லோரும் வந்து சேர்ந்த பின் அந்தச் சேனையை ஏற இறங்கப்பாருங்கள். அதற்கு இதுதான் சமயம். அதற்குப் பின் தெய்வம் வழி காட்டுகையில் சேனையின் தலைமையை வகித்து யுத்தத்திற்குப் புறப்படுங்கள்" என்றார். அரசனும் அவ்வாறே உத்தரவிட்டான்.

அக்கணமே உரத்த குரலுடைய கட்டியக்காரர்கள் அங்கு கூட்டங் கூட்டமாய்க் கூடியிருந்த சேனைகளைக் கூவியழைத்தனர்.

அப்போது தலைவர்கள் அனைவரும் புறப்பட்டு வந்து அரசனை வளைந்து கொண்டனர். சகலமான வீரர்களும் ஜாதி ஜாதியாகவும் குலங் குலமாகவும் பிரிந்து அணியணியாய் அரசனெதிரில் இருபுறமும் ஒழுங்காய் வந்து நின்றனர். அவ்வாறு அணிவகுத்து நின்ற அந்தச் சேனைகளை நீலாயதாக்ஷியானவள் ஒரு கோடியிலிருந்து மறு கோடிவரை வெகு ஆத்திரத்துடன் கண்ணுற்றுக்கொண்டு அவர்கள் மத்தியில் உயரப்பறந்து சென்றாள்.

சகலமான பயங்களையும் நாசஞ்செய்யக்கூடியதும் அழிவில்லாததுமான ஜோவ்பகவானது ரக்ஷையானது அவளது கையிலிருந்து ஜ்வலித்தது. அஃது அங்கிருந்தவண்ணம் பளிச்சென்று பிரகாசித்தபொழுது அந்த இரணகளம் முழுவதுமே ஒரே வெளிச்சத்துடன் விளங்கியது.

வட்ட வடிவமான அந்த பிரமாண்டமான ரக்ஷையின் விளிம்பில் உருக்கிய பொன்னைப்போல் பளிச்சென்று பிரகாசித்துக் கொண்டு நூறு சர்ப்பங்கள் அதைச் சுற்றி வளைந்து புரண்டு வந்தன. அந்த அடையாளத்தைக் கூறி அவள் தைரியசாலியான கிரேக்கன் ஒவ்வொருவனுடைய மனத்திலும் உற்சாகத்தை ஊட்டினாள். அவர்களுடைய உள்ளங்கள் பொங்கின. புழுங்கின. ஏற்கெனவே மனவுறுதியுடையவர்களாகவிருந்த அவர்கள் பின்னும் ஆவேசம் கொண்டனர். வலிவுடைய அவர்கள் கைகள் துடித்தன. "மானமிழந்து மடங்கிச்செல்ல வேண்டுமே"! என்று ஏங்கிப் பெருமூச்சு விடுவதை அவர்கள் அறவே யொழித்தனர். "பழி வாங்கியே தீருவோம். அவர்களை விட்டோமா?" என்று

ஆத்திரமுள்ளவர்களாய் அவர்கள் யுத்தத்தில் பிரவேசிக்கத் துடி துடித்தனர்.

அப்பொழுது நன்ருக மெருகிடப்பட்டுப் பளிச்சென்று மின்னிய அவர்கள் ஆயுதங்களிலிருந்தும் வெண்கலக்கவசங்களி லிருந்தும் பிரகாசித்த காந்தியானது அந்தப்போர்க்களம் முழுவதை யும் வியாபித்து ஊடுருவிச் சென்றது. அந்தக் காட்சியானது ஒரு மலையின்மேல் ஆகாயமளாவி வளர்ந்து நிற்கும் மரங்கள் நிறைந்த ஒரு காட்டினிடையே உண்டாகி உயர்ந்து எழுந்து அம் மரங்களின் உச்சிக்கும் மேலாகக் கிளம்பிக் கொழுந்து விட்டெரியும் ஒரு பெரு நெருப்பைப்போலும், அத்துடன் சேர்ந்துவிட்ட ஒரு பெருங் காற்றைப்போலுமே யிருந்தது. நெருப்பு எரிந்து வருகையில் காற்றும் அடிக்க ஆரம்பித்து விட்டால் அந்த நெருப்பு நாற்புறமும் பரவி விடுமல்லமா? அதிலிருந்து உண்டாகும் ஜ்வாலைகளும் வில்லிலிருந்து எய்த அம்புகளைப்போல் வெகுதூரஞ்சென்று வானத்திலும் பாதியைக் கொளுத்தி விடுமல்லவா? அவ்வாறும் இருந்தது அந்தக் காட்சி.

அந்தச் சேனைகளின் ஸங்கியையும் ஸ்வல்பமானதாக விருக்கவில்லை. அஃது, ஆஸியஸ்ஸின் நீர் வளமுள்ள சமவெளி களில் யதேச்சையாக உலாவிக் கூட்டங் கூட்டமாகச் சஞ்சரித்து வரும் நாரைகளையும் பால்போல் வெளுத்த நிறமுடைய அன்னக் கூட்டங்களையும் போல எண்ணிறந்ததாகவே யிருந்தது.

கேய்ஸ்டரிலுள்ள ஊற்றுக்களிலிருந்து பெருகி வளைந்து வளைந்து செல்லும் நீரோடைகளில் தங்கள் நீண்ட கழுத்துக்களை நீட்டிக்கொண்டும், கச கச வென்று சப்திக்கும் தங்கள் சிறகுகளை அடித்துக்கொண்டும், ஒரு நிமிஷத்தில் ஆகாயத்தை மண்டல மிட்டு உயரப் பறந்து, மறு நிமிஷம் பெருத்த ஆரவாரத்துடன் பொத்தெனப் பூமியில் இறங்கும் அந்த நாரைகளையும் அன்னங் களையும் போல அந்தச் சேனைகள் ஆர்ப்பரித்தன! அந்தக் களம் அந்த ஆரவாரத்தினல் அல்லோலகல்லோலப்பட்டது. இவ்வாறு அந்தச் சேனையிலிருந்த ஏராளமான வீரர்கள் பெருத்த ஆரவாரத் துடனும் குழப்பத்துடனும் தாறுமாருக வெகுதூரம் வியாபித்துக் கொண்டும் பூஞ்சோலைகள் நிறைந்த இயமந்திரத்தில் ஒரே கூட்ட மாகக் கூடினர். வெள்ளம்போல் உருண்டு ஓடி வந்த அந்தச் சேனைகளால் அந்தச் சமவெளிகள் அனைத்தும் ஆக்ரமிக்கப் பட்டன. அவர்கள் தடதடவென்று நடந்து வந்த பொழுது உண் டான இடிபோன்ற சப்தத்தினல் அங்கு அருகில் ஆரவாரஞ் செய்து வந்த கடற்கரையும் நடுங்கிவிட்டது. வசந்த காலத்தில் பூமியை அலங்கரிக்கும் இலைகளைப்போலவும், அவர்கள் இடை விடாது நெருங்கி அந்த நதியோரமாகவிருந்த சமவெளிகளில் நின்றனர். அவர்கள் அங்கு வந்து நின்றது பின்னும், எப்படி யிருந்த தென்ருல், வெயில் காலத்தில் சாயங்கால வேளைகளில் உண்டாகும் பால் போன்ற வெண்ணிறமான மேகங்களைக் கண்டு அவற்றின்மேல் ஆசை கொண்டு உடனே தங்களது இருப்

பீடத்தைவிட்டுப் பெயர்ந்து அம்மேகங்களைப் பின் தொடர்ந்து சென்று கிராமாந்தரங்களிலுள்ள பூஞ்சோலைகளைச் சூழ்ந்துக் கொண்டு கிண்ணம்போல விரிந்துள்ள மலர்களில் இருக்கும் தேனைக் குடித்துவிட்டு ஒரு மலரைவிட்டு மறு மலருக்குத் தாவி வெகுதுரிதமாய் 'ஙொய்' என்று ரீங்காரஞ்செய்து கொண்டும் சூரிய வெளிச்சத்தில் பளிச்சென்று மின்னிக்கொண்டும் பறக்கும் வித விதமான வர்ணங்களுள்ள பூச்சிக்கூட்டங்களையு மொத்திருந்தது.

இவ்வாறு துரோஜர்களது இரத்தத்தைக் குடிக்க வேண்டு மென்ற பெருந் தாகங்கொண்டவர்களாய், அந்த கிரேக்க வீரர்கள் அனைவரும் தங்கள் தங்கள் பிரகாசமான ஆயுதங்களை ஏந்திக் கொண்டு கூட்டங்கூட்டமாக நெருங்கி நின்றனர். அதன்பின், தலைவர்கள் தம் தம் சேனையிலிருந்து சிதறிப்போய் வெவ்வேறு இடங்களில் நின்று கொண்டிருந்த வீரர்களையும் கூட்டித் தம் சேனையைப் பலப்படுத்திக்கொண்டனர்.

ஒரே பிரமாண்டமாய்ப் பரந்துள்ள மந்தைவெளியில் மேயும் ஆயிரக்கணக்கான ஆடுகளிலிருந்து ஆடுகளை ஒரு சமர்த்தனான இடையன் எளிதில் பொறுக்கிச் சேர்த்துக்கொண்டு விடுவதுபோல், அவர்கள் தங்கள் வீரர்களைத் திரட்டினர். அவர்கள் தங்கள் வீரர்களைத் திரட்டியதைவிட அதிக லகுவாக எந்த இடையனாலும் தன்னுடைய ஆடுகளைச் சேர்த்து விடமுடியாது.

அப்பொழுது அதி கம்பீரமான தோற்றமும் அதியுன்னத மான உயரமுமுடைய இராஜாதிராஜன் தன் சேனைகள் அனைத் திற்கும் மேலாகப் பளிச்சென்று பிரகாசத்துடன் விளங்கினான். அவனெதிரில் மற்றையோருடைய ஒளிகளெல்லாம் மங்கியே போயின.

தனது அதிகாரத்துக்கு உட்பட்ட மாட்டுக் கூட்டங்களை மேய்ப்பதற்காக ஓட்டிச்செல்லும் மந்தைவெளி மன்னனான ஒரு மதங்கொண்ட காளையைப்போல் இராஜாதிராஜன் தேவர்களைப் போன்ற பேருருவத்துடன் விளங்கினான். அவன் நெப்தியூனைப் போன்ற பராக்கிரமமும் மார்ஸைப்போன்ற கம்பீரமான தோற்ற மும் உடையவனாயிருந்தான். அவனுடைய கண்களில் ஜோவ் பகவான் திவ்வியமான லாவண்யங்களைப் பொழிந்திருந்தார். ஜய லக்ஷ்மியும் அவனது தலையைச்சுற்றி வட்டமிட்டு விளையாடினாள்.

---

### தேவதைகளை முன்னிட்டு ஹோமர் செய்த துதி

தேவாதி தேவனது திவ்விய சிம்மாசனத்தைச் சுற்றி வீற்றி ருக்கும் கன்னிகைகளே! சகலமுமறிந்த தெய்வங்களே! சிரஞ்ஜீவி களான நவநிதிகளே!

அகண்டாகாரமுடைய பூலோகத்திலுள்ள பிரதேசங்களி லாவது, அளவிடமுடியாத அதியுன்னதமான விண்ணுலகிலாவது,

அதிபாதாளமான நரக லோகத்திலாவது தங்கள் கண்களுக்குப் புலப்படாத விஷயம் ஒன்றுமே இல்லை. நாங்களோ மிகவும் கேவல ஜீவன்கள்! அல்ப ஆயுள் உள்ளவர்கள். அழிந்துபோகக் கூடிய வர்கள். உலக நடவடிக்கைகளை உள்ளபடி அறியாதவர்கள். சம்சயங்களிலும் சந்தேகங்களிலுமே உழலுபவர்கள். ஊரார் சொல்லும் வசனங்களைக் கேட்டு விஷயங்களை மனம் போனபடி ஊகித்துக் கொள்பவர்கள். உண்மையை உள்ளபடி அறியாதவர் கள். எல்லாம் தெரிந்தவர்கள் என்று பெருமை பேசிக்கொள்ளுப வர்கள். ஆதலால், தாய்மார்களே! பேரும் புகழும் வேண்டுமென்ற ஆத்திரத்தினாலோ அல்லது தங்களுக்குச் செய்யப்பட்ட தீமைக ளுக்குப் பழி வாங்கிவிடவேண்டுமென்ற வைரத்தினாலோ தூண்டப்பட்டவர்களாய் எந்தஎந்த வீரர்கள் ட்ராயை அழிக்க முன்வந்தனர் என்பதைச் சொல்லுங்கள்.

அவர்கள் எல்லோரையும் கணக்கிட்டுச் சொல்ல ஆயிரம் நாவுகளும் வேண்டும். பித்தளையைப் போன்ற சலியாத கெட்டி யான தொண்டையும் வேண்டும். மூச்சு விடாமல் சொல்வதற்கு வஜ்ஜிரம் போன்ற உரமான நுரையீரல்களும் வேண்டும்.

ஜோவ் தேவரின் புத்திரிகளே! தயைசெய்யுங்கள்! உதவி செய்யுங்கள்!

தங்களுடைய சகாயத்தைப் பெற்றவனாய் நான் இந்தப் பிரமாண்டமான பெருங்காரியத்தைச் செய்வதற்குச் சிறிதும் கலங் காமல் முன்வந்து விட்டேன். திரளாகக் கூடிவந்த எந்தஎந்த சேனைகளை எந்த எந்த தேசங்களிலிருந்து அவர்கள் திரட்டி வந்தனர். அவர்களுடைய பெயர்கள், ஸங்கியைகள், அவர்களுக் குத்தலைவர்கள் முதலிய விஷயங்களை நான் இங்கு இசைத் துரைப்பேன்.

---

I

பினிலியஸ், லீட்டஸ், ப்ரோத்தினர் என்பவர்கள் பியோஷி யாவில் பிறந்து வளர்ந்துவந்த பராக்கிரமமுள்ள வீரர்களைக் கூட்டி வந்தனர். அவர்களது சமீபத்தில் அவர்களுக்குச் சமான மாகவே ஆயுதங்களணிந்து கொண்டும் அதிகாரஞ் செலுத்திக் கொண்டும் ஆர்ஸிசைலஸ்ஸும், குளோனியஸ்ஸும் நின்றனர்.

இவர்களெல்லாம் ஆலிஸ் மலைப்பிரதேசங்களிலும் ஈட்டி யான் குன்றுகளிலும் நீர்வளமுள்ள ஹைரீநாட்டிலும், ஸ்கோனஸ், ஸ்கோலாஸ், கடலையடுத்த கிரியா, தேவதாரு வளரும் விஸ்தார மான மைகலிஸ்ஸியா மைதானம் ஆகிய இடங்களிலுமிருந்து வந்த சேனைகளின் தலைமையை வகித்தவர்கள்.

பின்னும் பீட்டியானிலும் இலிஷியானிலும் வசிப்பவர்களும், அப்பாலோவின் அடியார் அடிசாய்ந்து வீழ்ந்த ஆர்மாவில் வசிப் பவர்களும், வழிந்தோடும் நீர்வளமுள்ள ஹெலியானிலும் ஹைலி லும் இருந்து வந்தவர்களும், அதிமேடான மிடியானிலும் பள்ளத்தி

லுள்ள உக்காலியாவிலும் இருந்து வந்தவர்களும், ஹலியார்ட்டஸ் வனங்களில் வழிதப்பி சஞ்சரிப்பவர்களும், தினகரனுக்குப் பிரியமான தெஸ்பியா க்ஷேத்திரவாஸிகளும், நெப்தியூனது சோலை யென்ற பிரசித்தமான ஆன்செஸ்டஸ்ஸிலிருந்தும் வெண்புருக்களுக்குப் பேர்போன கோப்பிதிஸ்பிலிருந்தும், ஆட்டு மந்தைகளுக்குப் பேர்போன இரித்திரியாவிலிருந்தும், திராக்ஷைக் கொடிக்குப் பேர்போன கினஸ்ஸாவிலிருந்தும், என்றும் பசுமையான பிளாட்டியாவிலிருந்தும், திவ்ய மங்கள ஸ்வரூபமுள்ள நைஸாவிலிருந்தும் வந்தவர்களும், நன்ருகக் கட்டப்பட்ட தீபிக் கோட்டைக்குள் வசிப்பவர்களும், அந்தக் கோட்டைக்குள்ளேயே உள்ள மைடீயூட்ரிஸீஸ் கோரோணி நகரவாசிகளும், பொன் போன்ற தானியங்கள் விளைவதும் சகல செல்வங்களும் நிறைந்துள்ளதுமான ஆரணியிலிருந்தும் பியோஷியாவின் எல்லையின் கோடியிலுள்ள அந்தத் திடலிலிருந்தும் வந்தவர்களுமான ஜனங்கள் அந்தச் சேனையில் சேர்ந்திருந்தனர்.

அந்த நாட்டார் கணக்காக ஐம்பது கப்பல்களை அனுப்பியிருந்தனர். நுரை மலிந்த கடலைக் கடந்துவந்த அக்கப்பல்கள் ஒவ்வொன்றிலும் ஈராறு பத்து வீரர்கள் இருந்தனர்.

## II

இவர்களுக்குப் பின் ஆஸ்பினிடன் நாட்டு வீரர்கள் வந்தனர். இவர்கள் ஆர்க்கோமினியன் நாட்டிலுள்ள விசாலமான நிலங்களை உழுது பயிர்செய்து ஜீவிப்பவர்கள். அஞ்சா நெஞ்சினரான அந்த மகாஜனங்களுக்கு இயால்மன் என்பவனும் அதி வீரனை அஸ்கலேபஸ் என்பவனுமான இரண்டு சகோதரர்கள் அரசர்களாக விருந்தனர். அவ்விருவரும் மகாதீரர்கள்.

அவ்விருவரும், தேவலோக ஸ்திரீயைப்போல் ரூபலாவண்யங்களிற் சிறந்தவளாக விளங்கிய ஆஸ்தியோஷி என்பவளின் புத்திரர்கள். அவள் நாட்டிய மண்டபத்தில் நடித்துவிட்டுத் தனது அறைக்குட் சென்று சிரம பரிகாரஞ்செய்து கொண்டிருக்கையில், அவளது அழகைக் கண்டு மோகங்கொண்ட சமர்க்கடவுள் அவளைப் பிசைந்து கசக்கி அவளிடம் தமது வீரியத்தைச் செலுத்தினர். மங்கையும் நாணி இணங்கினுள்.

அவர்களுடைய சேனைகள், முப்பது கறுத்த கப்பல்களில் ஏறிக்கொண்டு ஓயாமல் அலைந்துருமும் இந்த ஆழ்கடலைச் சிறிதும் இளைக்காமல் வலித்துக் கடந்து வந்தன. ஒவ்வொரு கப்பலிலும் சரியாக முப்பது ஆட்கள் துடுப்புங் கையுமாயிருந்தனர்.

## III

அதன்பின் நாற்பது கப்பல்களில் ஏறிக்கொண்டு போஷியர்கள் வந்தனர். அந்த வீரர்களின் தலைவர்களுக்கு எபிஸ்ட்ரோபஸ் என்றும் ஷிடியஸ் என்றும் பெயர்.

அவர்கள் புஷ்பங்கள் மலிந்துள்ள வனங்களினிடையே செல்லும் வெள்ளிக் கொடியைப் போன்ற ஸெபிஸஸ் நதி பாயும் செழிப்பான பிரதேசங்களிலிருந்தும், பனேப்பியாவிலும் கிரிஸா என்னும் திவ்வியமான க்ஷேத்திரத்திலும் ஆகாயமளாவிப் பளிச்சென்று விளங்கும் கம்பீரமான கோபுரங்களையுடைய அனிமேரியாவிலும், பைத்தோ டாலிஸ் ஸ்பாரிஸ்ஸஸ் நகரங்களிலும் அந்நதி கரைபுரண்டு பொங்கிப் பொழிகையில் அதன் நீர்ப்பெருக்கைக் கண்டு களித்துவரும் அழகான லிலியா நகரிலுமிருந்து அந்தக் கப்பல்களில் வந்தனர்.

அந்தக் கப்பல்கள் அந்த அலைக்கும் கடலில் நின்றுகொண்டிருந்த தைரியசாலிகளான பியோஷியர்களுடைய கப்பல்களை அடுத்து நெருங்கி அவைகளின் இடப்பக்கத்தில் அணியணியாகவும் ஒழுங்காகவும் மிதந்து நின்றன.

IV

அதன்பின் ஆலியஸ்ஸின் புத்திரனும் வீரனும் இளைய அஜாக்ஷன் என்ற பெயரையுடையவனுமான பயங்கர ரூபமுடைய அஜாக்ஷன் என்பவன் லோக்ரிய கோஷ்டியுடன் வந்தான். அவன் காற்ருய்ப் பறக்கும் அம்பைக் குறிபார்த்து நேராக எய்வதிலும் எதிரிகளைத் தொடர்ந்து துரிதமாய் ஓடுவதிலும் சலிக்காமல் போர் புரிவதிலும் அதிசமர்த்தன்.

பெஸ்ஸா நகரத்தாரும் துரோனஸ் நகரத்தாரும் செழிப்பான ஸைநாஸ் நகரத்தாரும் பொறுக்கியெடுத்து அனுப்பிய வீரர்கள் அவனைத் தலைவனுகக்கொண்டு அவனுணைப்படி நடந்து வந்தனர். அவ்வாறே ஊபூஸ்கல்வியாரஸ் ஸ்கார்வி யென்னும் இடங்களிலும் இருந்து வந்த கணங்களும் கண்ணுக்கினிமையாக விளங்கிவரும் ஆஜீஸ் நகரவாசிகளும், போகிரியஸ் நதியின் ஜலம் தேங்கி நிற்கும் பள்ளமான பிரதேசங்களில் வசிப்பவர்களும், அதிரம்யமான காடுகளிலுள்ள தார்பி வனவாசிகளும் அவனது கையின் கீழிருந்தனர்.

அவர்கள் நாற்பது கப்பல்களில் ஏறிவந்தனர். கடலில் அடித்த அலைகள் அவர்களுடைய கப்பல்களுக்கு இசைந்து வழி விட்டன.

V

அதன்பின் இந்த யுத்தத்தில் சேர்த்துகொள்ளுவதற்காகத் தக்க தளவாளங்களுடனும் ஏற்பாடுகளுடனும் யூபியா தேசத்தவர்கள் அனுப்பியிருந்த வீரர்களான தைரியம் மிக்க அபான்டியர் வந்தனர்.

பழிவாங்கியே தீருவோம்! என்று சீறிக்கொண்டு அவர்கள் ஆயுதபாணிகளாகக் கோட்டை கொத்தளங்களுள்ள கால்ஸிஸ்ஸிலிருந்தும் அரணுன இரிட்ரியாவிலிருந்தும் புறப்பட்டு வந்தனர்.

திராக்ஷைக் கொடிகள் தாராளமாய்ப் பயிராகும் பிரதேச மென்று பிரசித்திபெற்ற இஸ்தியன் நாட்டிலிருந்தும் அதிநேர்த்தி யான கரிஸ்டோஸிலிருந்தும் ஸ்திரியன் கண்டத்திலிலிருந்தும் அடி வாரத்திலுள்ள சமவெளிகளை நோக்கி வானமளாவிய கோபுரங்க ளுடன் விளங்கும் தியோஸ்ஸிலிருந்தும் மேட்டு நிலத்திலிருந்து அருகிலுள்ள கடலைக் கண்ணுற்றுவரும் ஸெரிந்தஸ்ஸிலிருந்தும் அவர்கள் வந்தனர்.

அவர்களுடைய தலைமயிரானது அவர்களுடைய அகன்ற புஜங்களுக்குங் கீழாகத் தாழ்ந்து நீண்டு தொங்கியது. அவர்கள் தங்கள் நீளமான வேல்களைக்கொண்டு போர்க்களத்தில் தங்களை யெதிர்த்து நின்ற சத்துருக்களின் கெட்டியான மார்புக்கவசங்களை யும் வெண்கலக் கேடயங்களையும் துளைக்கப் பழகியவர்களேயன்றி, அவ்வேல்களை உயரத் தூக்கிச் சத்துருக்களை நோக்கி எய்யப் பழகியவர்களல்லர். ஈரிருபது கப்பல்களில் ஏறிக்கொண்டு அந்த வீரர்கள் அங்கு வந்தனர். பயங்கரமான ஆயுதங்களையணிந்த வனும் தைரியசாலியுமான எல்பினுர் என்பவன் அந்தச் சேனையின் தலைவனுகவிருந்தான்.

## VI

ஆதென்ஸ் அதி நேர்த்தியான ஒரு நகரம். அங்குப் பெரும் புகழ் எய்திய இரிக்தியூஸ் என்பவன் முன்னுளில் ஆட்சி செலுத்தி வந்தான். அவன் போஜனத்திற்கு உபயோகமாகக் கூடிய சகல விதமான தானியங்களும் விளையும் பூமி பெற்ற ஒரு பராக்கிரம சாலி. நன்ருக உழுது பண்படுத்தப்பட்ட படைச்சாலில் பிறந்த வன். நீலாயதாக்ஷியினுல் எடுத்து வளர்க்கப்பட்டு வந்தவன். அவனை பாலாஸ் தேவியானவள் விசேஷமான நைவேத்தியங் களுடனும் ரிஷப-பலிகளுடனும் ஆராதித்து, தனம் மிகுந்த தனது கோவிலிலே பிரதிஷ்டை செய்தாள். அந்தக் கோவிலி லுள்ள ஹோமகுண்டங்களில் வருஷாவருஷம் செய்யப்படும் ஆஹுதிகளினுல் அவற்றிலுள்ள அக்கினியானது இடைவிடாமல் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டு வருகின்றது. எல்லா ஜனங் களும் அந்தத் தேவியின் பெருமையைப் புகழ்ந்துப்பாடி வருகின்ற னர். அவர்களுக்குப் பண்டைக் காலத்தில் மெனிஸ்தியூஸ் என் பவர் தலைவராக இருந்தார். மெனிஸ்தியூஸே! புழுதி படிந்த போர்க்களத்தில் சேனைகளை அணிவகுத்து நிறுத்தவாவது, ஒரு பறவை தனது சிறகுகளைச் சிறிது சிறிதாக விரிப்பது போல் சேனைகளைச் சிறிது சிறிதாகப் பரப்பி யுத்தகளத்தைப் பிரமாண்டமாகப் பெருக்கவாவதுக், கூட்டங் கூட்டமாக கூடியுள்ளவர்களும் பல ஜாதி மக்கள் சேர்ந்தவர்களுமான ஜனங் களை அசைக்கவோ அழிக்கவோ முடியாமல் அணிவகுக்கவாவது, உம்மைப் போல் சக்தியுள்ள ஒரு தலைவன் இப்பொழுது கிரீஸில் இல்லவே இல்லை. நெடுங்கால அனுபவமுள்ள விருத்தரான நெஸ்டார் மாத்திரம் யுத்தத்தை நடத்துவதில் உமக்குச் சமான மான கியாதியைப் பெற்றவர். அதற்கு ஆதன்ஸ் நகரத்திலிருந்து ஐம்பது கறுத்த கப்பல்கள் வந்தன.

## VII

இவர்களுடன் ஸலாமிஸிலிருந்து வந்த படைகளும் வந்தன. பிரமாண்டமான உருவமுடைய திலமான் என்பவன் அவைகளின் தலைமையை வகித்திருந்தான். அந்தச் சேனைகள் கறுப்பு நிறமுள்ள பன்னிரண்டு கப்பல்களிலேறிக் கடலைக் கடந்து வந்து அத்தீனியர்களது பெருத்த சேனைகளுடன் சேர்ந்து கொண்டனர்.

## VIII

அடுத்தபடியாக, ஆர்க்காஸிலிருந்து ஆத்திரத்துடன் புறப்பட்ட வீரர்கள் வந்தனர். அவர்கள் குன்றின் மேலுள்ள டர்ஜீனிலிருந்தும், மைதானத்திலுள்ள மாஸிட்டாவிலிருந்தும், கடல் சூழ்ந்த ஈஜுனுவிலிருந்தும் வந்தவர்கள். உயர்ந்த மதில்களையுடைய பலமான திரிந்துக் கோட்டை வாசிகளும், திராக்ஷைத் தோட்டங்களைச் சிரோ பூஷணமாகக் கொண்ட எபிடாரிஸ் நாட்டாரும், ஆகாயமளாவிய குன்றுகளுடனும் அடிவாரத்தில் அகன்ற கழிகளுடனும் அழகாக விளங்கும் அஸினன் ஹெர்மோயி நாட்டாரும் அந்தக் கோஷ்டியில் சேர்ந்திருந்தனர். அவர்களைத் தைரியசாலிகளான யுரியாலஸ் என்பவனும் மஹானுன ஸ்தெனிலஸ் என்பவனும் அவனினும் பெரியவனுன தியோமதி என்பவனும் தலைமை தாங்கி நடத்தி வந்தனர். அவர்கள் எல்லோருக்கும் மேலாக, திடிதீசன் என்பவன் சர்வாதிகாரம் வகித்து வந்தான். அவர்கள் எண்பது கப்பல்களில் ஏறிக்கொண்டு வந்தனர்.

## IX

அதிகர்வமுள்ள மைஸீனியர்களும் தங்கள் வீரர்களை ஆயுதபாணிகளாக்கினர். ஒப்பும் உயர்வும் இல்லாத கோபுரங்களையுடைய கிளியோனிலிருந்தும், காரிந்திலிருந்தும் அழகான அரித்திரியாவிலிருந்தும் செழிப்பான ஆரணியா மைதானத்திலிருந்தும் ஈஜியானிலிருந்தும் ஆதிகாலத்தில் அதிராஸ்டஸ் ஆண்டு வந்த தேசத்திலிருந்தும் வந்த வீரர்களும் அவர்களுடன் சேர்ந்திருந்தனர்.

மேலும், கடற்கரையினேரம் வசித்து வந்தவர்களும், ஆட்டு மயிரை விசேஷமாக உற்பத்தி செய்யும் பெல்லினியாரும், ஹெலிஸிஹைபெரிஸாக்காரரும் ஆகாயத்திற்குக் கைகூப்பிக் கும்பிடு போடும் கோபுரங்களையுடைய கோனேயிஸ்ஸாக்காரரும், அந்தக் கூட்டத்தில் சேர்ந்திருந்தனர். இந்தக் கணக்கற்ற சேனுசமுத்திரத்திற்கு மஹாராஜனுன ஆகமனன் அதிபதியாயிருந்தான்.

பல தேசங்களையும் ஜாதிகளையும் சேர்ந்த திரளான ஜனங்கள் அவனது ஆஞ்ஞையை நடுநடுங்கிக் கொண்டு எதிர்பார்த்தவர்களாய் நூறு கப்பல்களில் ஏறி வந்தனர். அந்தக் கப்பல்கள் ஒரே வரிசையாய் வெகு தூரம் நின்றிருந்தன.

ஜனுதிபனுன அந்த அரசன் சோபையுடன் விளங்கும் தன் ஆயுதங்களை அணிந்துகொண்டு கப்பலின் மேல்தட்டில் உயர்ந்து நின்ருன்.

பின்பு, அவன் தன் சேனையைக் கண்ணுற்று, அது பிரமாண்டமானது என்றும், தனக்குச் சமமான அதிகாரமுள்ளவன் ஒருவனுமேயில்லை யென்றும் கர்வங் கொண்டு அதிகௌரவமாகவும் பெருமையுடனும் கடலோரம் அடிமேல் அடிவைத்து மெதுவாக நடந்து வந்தான்.

## X

அவனது தம்பியானவன் பழிவாங்க வேண்டுமென்று ஆயுத வித்தைகள் பயின்ற வீரர்களான ஸ்பார்ட்டர்களை உற்சாகப் படுத்திக் கொண்டு அவனுக்குப் பின்னால் வந்தான்.

பேரிஸ் நாட்டாரும் பிரிஸியா நாட்டாருமான வல்லமை பொருந்திய வீரர்களையும், உன்னதமான மலைகள் சூழ்ந்த லஸிடிமான் பிரதேசத்தாரையும், வெள்ளி போன்ற வெண்ணிறத்துடன் விளங்கும் புருக்களுக்குப் பிரசித்தி பெற்றதும் கோபுரங்களையுடையதுமான மெஸ்ஸி நாட்டாரையும், அமிக்கினிலேயாஸ் ரம்மியமான தோட்டங்களையுடைய ஒழியா முதலிய நாட்டாரையும் சிறிய கோட்டைகள் மதில்களுடைய ஈடிலாஸ் வாசிகளையும், கடலோரமுள்ள ஹிலாஸ் நகரத்தாரையும் ஹெலனுடைய வழக்கானது ஒன்றாய்க் கூட்டிவிட்டது.

அஃது, அந்த வீரர்களையும் மெனிலாஸையும் அறுபது கப்பல்களில் ஏற்றிக்கொண்டு அலைகளால் மோதுண்டு முறிந்து போன ஆழ்கடலின் மேல் இழுத்து வந்தது.

அவனது கண்கள் பழி வாங்க வேண்டுமென்று கொதித்தன. கோபத் தீயுடன் ஜ்வலித்தன. அவன் வெகு ஆத்திரத்துடன் உரத்துக் கூவிக்கொண்டு அங்கிருந்த மனிதன் ஒவ்வொருவனிடமும் ஓடிச் சென்றான். சுந்தரியான ஹெலனிடம் வைத்திருந்த அன்பை நினைத்து அவள் துக்கித்துப் புலம்புவதைத் தான் கேட்பது போலவும் அவளது கண்களிலிருந்து பொங்கிப் பொழியும் கண்ணீரைத் தான் தன் கண்ணால் பிரத்யக்ஷமாய் பார்ப்பது போலவும் பாவித்துக் கொண்டு அவன் வீணாய் அலைந்தான்.

## XI

மஹா ஞானியான நெஸ்டார் என்பவர், பொறுக்கி எடுத்த தம் வீரர்களைத் தொண்ணூறு கப்பல்களில் ஏற்றிக் கொண்டு பைலாஸ் மணற் கரையினின்றும் புறப்பட்டார்.

அந்த வீரர்கள், உன்னதமான ஈப்பி உருவத்திற் சிறியதான திலியான் என்னும் மலைகளுள்ளதும் அழியாச் செழிப்புடையதுமான ஆம்பிஜினியா விலிருந்தும், திவ்வியமான மாட மாளிகைகளும் கூடகோபுரங்களுமுடைய ஆரணியிலிருந்தும், ஆல்பியூஸ் நதி சூழும் திரியோன் கோட்டையிலிருந்தும், தாமிரிஸ்ஸுக்கு மானபங்கம் விளைந்த பிரசித்தி பெற்ற ஸ்தலமான டோரியானிலிருந்தும் வந்தனர்.

அந்த தாமிரீஸ் என்பவன், ஒருகால் ஸங்கீத வித்வான் கள் அனைவரிலும் சிறந்தவனாக விளங்கி வந்தான். மனிதர்கள் தன்னைப் புகழ்ந்து வருவதைக் கண்டு செருக்கடைந்து மேகாதிபதி யான ஜோவின் சந்ததிகளாகிய கலை மக்களையும் அவமதிக்க ஆரம்பித்தான். அவர்களைத் தனக்குச் சரியாகவோ தனக்கு மிஞ்சியோ பாட முடியுமானால் வரலாம் என்று வலுவில் சண் டைக்கு இழுத்தான். அம்மம்மா! அவனது துணிவே துணிவு!

அழிவில்லாத அந்த தேவமாதர்கள் அவனது கர்வத்தை ஒரு தந்திரத்தினால் அடியோடு அடக்கி விட்டனர். அவன் தோற்றே போனான்.

தங்களுக்கு அவன் செய்த அவமதிப்பை அகற்றி விட வேண்டுமென்று தீர்மானித்து பகலில் ஒளியைப் பரப்பும் பரம் பொருளின் புத்திரிகளான அவர்கள் அவனது கண்ணை அவித் தனர். நாவையும் இழுத்துப் பிடுங்கி விட்டனர்.

அக்கணமே தேவர்களைப் போல் கானம் செய்து வந்த அவனது குரல் குன்றிப்போய்விட்டது. அவனது பாடல்கள் கேட்கப்படவில்லை. அவனது கையும் வெள்ளிக் கம்பியை மீட்டு வதை நிறுத்தி விட்டது!

## XII

பின்பு ஆர்க்கேடியா நாட்டார் அறுபது கப்பல்களில் ஏறி வந்தனர்.

புராண புருஷரான ஈபிட்டஸ்ஸின் ஸமாதியிலிருந்த சோலையைத் தன் அடிவாரத்திலும் அடர்ந்த காடுகளைத் தனது சிகரத்திலும் கொண்டு நின்ற ஸில்லெனியிலிருந்தும், டிஜியாவின் எல்லைப்புற நகரங்களான ரைப்பியிலிருந்தும், ஸ்ட்ராட்டீயிலிருந் தும், புஷ்டியான பசுக்கள் மேயும் செழிப்பான புல்தரைகளுள்ள வினியன் மைதானங்களிலிருந்தும், ஆர்க்கோமினியன் சரிவுகளிலி ருந்தும், வனஞ்சூழ்ந்த ஸ்டிம்பிலஸ்ஸிலிருந்தும், பனிக்குன்றுகளின் மேலுள்ள பார்ஹஸியாவிலிருந்தும், குளிர்காலத்துக் காற்றினால் அசைந்தாடும் அதியுன்னதமான ஹெனிஸ்பியிலிருந்தும், என்றும் ரம்மியமாக விளங்கும் மனோகரமான மான்டீனியாவிலிருந்தும் அவர்கள் வந்தனர்.

அன்ஸீயஸ்ஸின் மகனும் தைரியசாலியுமான அகப்பினார் என்பவன் அந்தப் பிரமாண்டமான சேனையின் தலைமையை வகித்து வந்தான். அவன் வெகு பெருமையுடன் விளங்கினான். ஆகமனானலே சகல வசதிகளுடனும் அளிக்கப்பட்ட அந்தக் கப்பல்கள் கர்ஜனை செய்யும் கடல்களைக் கடந்து வந்தன.

அந்தக் கப்பல்களில் வந்த வீரர்கள், ரணகளத்தில் யுத்தம் செய்வோரில் முன்வைத்து எண்ணப்படுபவர்கள்தான் என்றாலும்,

சமுத்திர யாத்திரையில் உண்டாகும் ஆபத்துக்களைச் சிறிதும் அறியாதவர்களாக விருந்தனர். அவர்களுக்கு இந்த யாத்திரை யானது ஒரு புதுமையாகவே இருந்தது. அவர்கள் மிகவும் ஆச்சரியப் பட்டனர்.

## XIII

அநீகான எலிஸஊம் புப்ராஸியமும் சந்திக்கும் இடத்திலிருந் தும் ஒரு புறம் ஹிர்மினும் மறுபுறம் மிர்ஸைநஸ்ஸஊம் எல்லைகளாக வுள்ள பிரதேசத்திலிருந்தும், பள்ளத்தாக்குகளுக்கும் மேலாக உயர்ந்து விளங்கும் ஒலினியன் பாறையிலிருந்தும், அலிஸியன் பாயு மிடங்களிலிருந்தும் ஒரு கணக்கற்ற சேனையானது நான்கு தலைவர் களுடன் வந்தது.

இபியன் என்ற புகழுக்குக் காரணமாயிருந்த தீரர்களான வீரர்களே அந்தச் சேனையில் சேர்ந்திருந்தனர்.

அவர்கள் தங்கள் பரிவாரங்களை வேறு வேருகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவையும் பத்துப் பத்துக் கப்பல்களில் ஏற்றி, அலை களைக் கடந்து வந்தனர். அவர்களது தலைவர்களில் ஒருவனுக்கு அம்பிமாக்கஸ் என்று பெயர் ; பின்னெருவன் தால்பியஸ் என் பவன். அவர்கள் முறையே தியாட்டஸ் யூரிட்டஸ் என்பவர் களின் புத்திரர்கள்.

அமாரின்ஸியஸ் வம்சத்தில் உதித்தவனான ட்யோரிஸ் என்பவனும், தேவர்களின் அனுக்கிரஹத்தினுல் பிறந்த மகானான பாலிக்ஸீனஸ் என்பவனும் மற்றைய இரண்டு தலைவர்கள்.

## XIV

அழகான எலிஸ்கரையின் எதிராகக் கடலுக்கு அப்பால் உள்ளவையும், சகல வளங்களும் நிறைந்தவையும், தெய்வ கடாக்ஷம் பெற்றவையுமான எசினேடிஸ் தீப கணவாஸிகள் நாற் பது கப்பல்களில் மீஜீஸ் என்பவனைத் தலைவனுகக் கொண்டு வந்தனர்.

அவன் ஜோவ் பகவானது அன்பிற்குப் பாத்திரனான பைலியூஸ் என்பவனது புத்திரன்.

அவன் தன் தகப்பனை விட்டுப் பிரிந்து பலமான கோட்டை கொத்தளங்களுள்ள துலிச்சயத்திற்கு அங்கிருந்து தன் வீரர்களைத் திரட்டிக்கொண்டு அவர்களை ட்ராய்க்குக் கூட்டிவந்தான்.

## XV

அவனுக்குப் பின்னுல் ஒரு தெய்வத்திற்குச் சமானமான ஞானமுடைய யுலிஸ்ஸிஸ் என்னும் தலைவன் கடல் மார்க்கமாக வந்தான்.

ஸிபிலேனியாவின் எல்லைக்குள்ளிருந்தும் சமுத்திரக் கரை யோரம் வரைப் பரந்திருந்த பிரதேசங்களிலும் அழகான இத்தாக் காவிலிருந்து அலை மோதும் ஆழிகட் புலனுகும்வரையுள்ள பிரதேசங்களிலிருந்தும், அசைந்தாடும் காடுகளையுடைய உன்னத மான நெரிட்டாஸிலிருந்தும், இஜிலிப்பாவின் கரடுமுரடான இடங் கள் கட்புலனுகும் இடங்களிலிருந்தும், க்ரோஸிலியாப் பாறையி லிருந்தும், பச்சைப் பசேலென்றுள்ள ஜாஸிந்தஸ்ஸிலிருந்தும் வந்த வீரர்களுடன் அவன் வந்தான்.

அவனைத் தலைவனுகக் கொண்ட அந்த வீரர்கள் சிந்தூரச் சாயமடித்த பன்னிரண்டு கப்பல்களில் ஏறிக்கொண்டு பிரிஜியன் கரைகளை நோக்கி வந்தனர்.

அதன்பின் அந்திரிமானது புத்திரனும் அதி பலவானுமான தோவாஸ் என்பவன் வந்தான். ஈட்டோலியன் கரையோரமாக விருந்த பிளியூரன் கோட்டைகளிலும் வெண்சாந்தைப் போன்ற வெளுத்த காலிடனிலும் கல்லும் முள்ளும் நிறைந்த பைலினியலும் செங்குத்தாய் நின்ற ஒலினியன் மலையிலும் உருண்டு புரளும் ஆழ் கடலின் அலைகள் மோதும் கால்ஸிஸ்ஸிலும் இருந்து வந்த வீரர் களுடன் அவன் வந்தான்.

ஈனியஸ்ஸின் சந்ததியார் அழிந்து போயிருந்தனுலும், அதி பராக்கிரமசாலிகளான அவர்களது பேரும் புகழும் வெகு நாட்களுக்கு முன்னமேயே பறந்து போய்விட்டதனுலும், ஈனியஸ் ஸும் மிலீகரும் கூட இறந்து போய்விட்டதனுலும், அந்த வீரர் குழாம் தேவாஸ்ஸையே தலைவனுகக்கொண்டு நாற்பது கப்பல் களில் ஏறிக் கடலைக் கடந்து வந்தது.

## XVI

அடுத்தபடியாக நாஸ்ஸஸ், லிக்டஸ், கோர்டினு முதலிய நாட்டு வீரர்களை எண்பது கப்பல்களில் ஏற்றிக்கொண்டு கிரீட் நாட்டரசன் வந்தான்.

உன்னதமான கோபுரங்களையுடைய ரைட்டியன் உயர்ந்த வானில் பளபளவென்று மின்னும் வெண்மயமான லிக்காஸ்டஸ் வெள்ளியைப் போல் வளைந்து ஒழுகும் ஜார்டான் நதியோரமுள்ள வீஸ்டஸ் ஆகிய நகரங்களிலிருந்தும், கிரீட்டிலுள்ள மற்றைய நூறு நகரங்களிலிருந்தும் தங்கு தடையின்றிப் புறப்பட்டுவந்த வீரர் கள் இதோனிமியஸின் பராமரிப்புடனும் யுத்தங்களின் தெய்வம் போல் அதிபயங்கரமாக விளங்கிய மெரியானுடனும் வந்தனர்.

## XVII

நிரந்தரமான பளபளப்புள்ள சூரிய வெளிச்சத்தையுடைய ரோட்ஸிலிருந்தும், ஜாலிஸ்ஸஸ், லிண்டஸ், வெண் மயமான காமி

ரஸ் முதலிய இடங்களிலிருந்தும் வந்த வீரர்களை ஒன்பது கப்பல் களில் ஏற்றிக்கொண்டு ஹெர்குலீஸின் புதல்வனான திலிபோலிமஸ் வந்தனன். நுரை நிறைந்த கடல்களை அவர்கள் விரைவாய்க் கடந்து வந்தனர்.

வளைந்த செல்லிக் கரைக்கும் ஈவிர்கோட்டைக்கும் சமீபத் தில் பிரமாண்டமான பழுதடைந்த பட்டணங்களும் காளைகளைப் போன்ற இளம் வீரர்கள் கொலையுண்ட களங்களும் நிறைந்த ஒரு விஸ்தாரமான பிரதேசம் இருக்கின்றது.

அங்கிருந்துதான் திலிபோலிமஸ்ஸின் தாயாரை, பயங்கர ரூபியான அல்ஸைடீஸ் என்று மறுநாமம் புனைந்த ஹெர்குலீஸ் சிறைபிடித்துச் சென்றான். காளைப்பருவம் வந்தபொழுது அந்த வீரன் அல்ஸைடீஸின் சிற்றப்பனும் கிழவனுமான விஸிம்னி ஸைக் கொன்றான். இந்தக் குற்றத்திற்கு ஹெர்குலியஸின் வம்சத்தாரது பழிக்குத் தப்பிவிட வேண்டுமென்று தீர்மானித்து அவன் தன்னைப்போலவே பிற நாடுகளுக்கு ஓட்டம் பிடித்துப் பிழைக்கச் சம்மதித்த கணக்கற்ற வீரர்களுடன் ஒரு கப்பற் படையைத் திரட்டிக் கொண்டு கடலெல்லாம் திரிந்தான். பல சமுத்திரங்களிலும் அலைந்து திரிந்து கணக்கற்ற கஷ்டங்களையும் அனுபவித்துக் கடைசியாய் அவன் ரம்மியமான ரோட்ஸ் தீவை அடைந்து தன் ஆட்களை மூன்று பிரிவுகளாகப் பிரித்து, அந்தப் புதிய தேசத்தில் அவர்களை வெகு அமைதியுடன் ஆண்டு வரு கின்றான். அவர்கள் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் பிதாவும் பராக்கிரமசாலியுமான ஜோவ் பகவானது கிருபையினால் வெகு வாகப் பெருகிச் செழித்து வாழ்ந்து வருகின்றனர். தேவர்கள் சகலவிதமான சம்பத்துக்களையும் தங்கள் மேல் மாரிபோல் பொழிந்து வருவதையும், தங்களது ராஜ்யம் வெகு விசாலமாக அகன்றும் அதியுன்னதமாக உயர்ந்தும் வருவதையுங்கண்டு அவர்கள் களிப்படைந்திருக்கின்றனர்.

## XVIII

அதன்பின் மூன்று கப்பல்கள் நிரியஸ்ஸுடன் ட்ரோஜன் கரைகளை நோக்கி வந்தன. அந்த நிரியஸ் என்பவன் சரோபஸ் என்பவனுக்கு அகலியிடம் பிறந்தவன். அவன் சிறிதும் அங்கஹீனமில்லாதவனாகவும், செழிப்பான சௌந்தரியங்களுள்ள வனாகவும் கிரேக்கர்கள் அனைவரிலுமே அதிலாவண்ணியமுள்ள இளங்காளையாகவும் விளங்கினான். இவ்வாறு களையுடன் விளங்கிய அந்த இளம் வீரனுக்கு, பிலிதீசனை மாத்திரமே சமான மாகச் சொல்லலாம்.

ஆனால் அவனுடைய வீரர்களின் ஸங்கியையும் குறைவு. ஆயுத முஸ்தீப்புக்களும் அதிகமாயில்லை.

XIX

அதன்பின் கடல் சூழ்ந்த காலித்தீனித் தீவுகளின்வாசிகள் திரவப் பிரதேசத்தைப் பிளந்து கொண்டு முப்பதுகலங்களில் வந்தனர்.

அவர்களுடன் பலவானுன காஸஸ் என்பவனும் அழகனுன கிரிபாத்தஸ் என்பவனும் வந்தனர். அவர்கள் நிஸிரஸ் நாட்டு இளம் வீரர்கள்.

கோஸ் நாட்டாரும் அந்த கோஷ்டியில் இருந்தனர். பலவானுன அல்ஸைடீஸ் என்பவன் அந்த நாட்டை ஜயித்து அதைத் தனது அதிகாரத்திற்கு உட்படுத்திக் கொண்டதற்கு முன் அது யூரிப்பைலஸ் என்பவனது ஆட்சியில் இருந்தது. தேவாம்சத்துடன் பிறந்த அந்த அல்ஸைடீஸின் மரபினுன தெஸ்ஸலஸ் ராஜாவின் புத்திரர்களான அண்டீபஸ் என்பவனும் பலவானுன டிடிப்பஸ் என்பவனும் அவர்களைக் கூட்டிவந்தனர்.

XX

கலைமகளே! இனி ஆலோஸ், ஆலோபி கோபுரங்கள் நிறைந்த ட்ரெக்கின் முதலாகவுள்ள பிலாஸ்கிய (புராதன) ஆர்காஸர்களின் சேனைகளைக் கணக்கிட்டுச் சொல்லுமம்மா! அகன்ற தடங்களுள்ள விதியாவிலிருந்தும், உலகத்திலேயே மற்றெல்லோரையும்விட மிகச்சிறந்த அழகுடன் விளங்கும் லோகஸுந்திரிகளது ஜன்ம தேசமான ஹெல்லாவிலிருந்தும் யார் யார் வந்தனரென்று சொல்லுமம்மா!

அகிலேசனை அதிபதியாகவும் அக்கேயர்களையும் மிர்மிடான்களையும் ஹெல்லெனியர்களையும் அதி நெருக்கமாக ஏற்றிக் கொண்டு ஐம்பது கப்பல்கள் வந்தன. அவர்களுக்கு வெவ்வேறு பெயர்கள் இடப்பட்டிருந்தாலும் அவர்கள் அனைவரும் தெஸ்ஸாலியர்களே. அவர்கள் அனைவரும் ஒரே ஜாதியினர். அவர்களது தலைவனும் ஒருவனே.

இப்பொழுது அவர்கள் சிறிதும் மானமில்லாதவராய்க் கரையோரத்தில் தங்கள் உடல்களை நீட்டிக்கொண்டு கட்டைபோல் கிடக்கின்றனர்.

சண்டைக்குச் சித்தமாகி வரும்படி எல்லோரையும் அழைத்த வெண்கலச்சங்கின் முழக்கத்தை அவர்கள் சிறிதும் கவனிக்கவில்லை.

அவர்கள் வழக்கப்படி பயங்கரமான வியூகங்களாகப் பிரிந்து தங்கள் பகைவர்களை முகமெடுத்துப் பார்க்கவுமில்லை.

கோபங்கொண்டிருந்த அவர்களது தலைவன், தனது கப்பலில் ஒரு மூலையில் சுருண்டுகிடந்தான். தீபன் கரைகளைத்

தரைமட்டமாக்கியும், தைரியசாலிகளான இவின்ஸின் புத்திரர் களைக் கொன்றும், லிர்நிஸ்ஸஸ்ஸைப் பாழாக்கியும், அங்கிருந்து கொள்ளையடித்துக்கொண்டுவந்த சரக்குகளில் அதிவிசேஷமான பிரைஸீஸ் என்னும் அழகியைத் தான் பலவந்தமாகக் கைவிட்டு இழக்க வேண்டிவந்ததனுல் அகிலேசன் மிகுந்த துக்கமடைந்து துயர்க்கடலில் சூழ்ந்தும் கிடந்தான்.

ஆனுல் அவன் எவ்வாறு வெகு சீக்கிரத்தில் தனது துக்கத்தை நிறுத்தி விட்டுச் சத்துருக்களை வதைக்கவும், இரண களத்தில் இரத்த வெள்ளத்தைப் பெருக்கிக் கொடும்போர் புரியவும் புறப்பட்டான் என்பதையும் அந்தச்சமயம் வரும்போது சொல்லுவோம்!

## XXI

இவர்களுக்குப் பின்னுல் வைலேசி நாட்டு வாலிபர்களும், உறுதியான ரோமந்தரும், ஆடுகள் விசேஷமாகவுள்ள ஐட்டோ னே நாட்டாரும், கண்ணுக்கினிய பசும் பாத்திகளையும் ஸ்ரீ தேவியின் பவனங்களையும் காடுகள் சூழ்ந்த உத்யாவனங்களையும் பூஷணங்களாகக் கொண்டு விளங்கிய புற்றரைகள் மிக்க திலியோன் நாட்டாரும், மலர்ந்த சிறு பூக்களை முடிமேல் தரித்து விளங்கும் பிரியமான பிரியஹாஸஸிலும் நீர் நிறைந்த அணைகளுள்ள அந்திராணத்திலும் பெருங்குகைகளுள்ள வேறு பிரதேசங்களிலுமிருந்து புறப்பட்ட ஜனங்களும் வந்தனர். அவர்களுக்கு மனவுறுதியுடைய பிரதிசீலன் என்பவன் தலைவனுக விருந்தான். அவன் இப்பொழுது மறைந்து மௌனமாகிக் கிடக்கின்றுன். துரோஜர்களது கரைக்குத் தைரியமாகச் சென்று சேர்ந்து பிரிஜியர்களது ஈட்டியில் கிரேக்கர்களது இரத்தத்தைப் பிழிந்து பூசியவர்களில் அவனே முதல்வன்.

தனது சொந்த தேசத்திலிருந்து வெகு தூரத்தில் அவன் கிடக்கின்றுன். அவன் கட்ட ஆரம்பித்த பிரமாண்டமான அரண்மனைகள் கட்டி முடியாமல் அரைகுறையாய் நிற்கின்றன.

துக்கங்கொண்ட அவனது பட்டமகிஷி மார்பில் அடித்துக்கொண்டு தனது காலத்தை வீணே கழித்து வருகின்றுள்.

நாற்பது கப்பல்களில் வந்த அவன் சேனைகளுக்கு இப் பொழுது இபிக்கலுக்ஷனது புத்திரனும், புடார்ஸிஸ் என்ற பெயருடையவனுமான அவனது உடன் பிறந்தான் தலைவனுக விளங்குகின்றுன். அந்தப் பெருஞ் சேனையின் தலைமையை வகித்துவர அவனுக்கு யோக்யதைக் குறைவு சிறிதும் இருக்க வில்லை யென்றுலும், அந்தச் சேனையிலிருந்த வீரர்கள் அனைவரும் இறந்து போன தங்களது பழைய தலைவனையே நினைத்து வருந்தி வந்தனர்.

## XXII

அதன்பின் பள்ளத்திலுள்ள பீபி ஏரியை வட்டமிட்டுச் சூழ்ந்து நிற்கும் குன்றுகளையுடையதும், வீரிக்குச் சமீபத்தில் பேரரவங்களுடன் விழும் மலையருவிகளையுடையதும், வானத்தைக் குடைந்து கொண்டு மிக உயர்ந்து நிற்கும் மதில்களைப் போன்ற மலைச் சிகரங்களையுடையதும், பல பாகங்களாகப் பிரிந்துள்ளதுமான கிளாபிரா நாட்டார் பத்துக் கறுத்த கப்பல்களில் ஏறிக் கொண்டு இலியனை நோக்கி வந்தனர்.

பீலியாஸ் வம்சத்தில் வந்தவர்களெல்லாம் ரூபலாவண்ணியங்களிலும் நற்குண நற்செய்கைகளிலும் சிறந்து விளங்கிய அல்ஸெஸ்டியின் புத்திரனும் அதி தைரியசாலியுமான யூமிலஸ் என்பவன் அவர்களுக்குத் தலைவனாக விருந்தான்.

## XXIII

மிதுனியிலிருந்தும் தௌமேஸியாவிலிருந்தும் வந்த சேனைகளும் ஒலிஸன் பாறைகளிலிருந்தும் மெலிபியா நாட்டிலிருந்தும் வந்த வீரர்களும் பிலோக்டீஸ் என்பவனுடன் வந்தனர்.

உறுதியான வில்லிலிருந்து இறகுபோல் பறக்கும் அம்புகளை எய்வதில் அவன் நிகரற்ற சாமர்த்தியமுள்ளவனாக விருந்தான். அவன் ஏழு கப்பல்களில் தன் பரிவாரங்களை ஏற்றிவந்தான். அந்தக் கப்பல்கள் ஒவ்வொன்றிலும் அவனைப் போலவே வில்லம்புகளைக் கையாளுவதில் தேர்ந்த ஐம்பது வீரர்கள் இருந்தனர்.

ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் அவன் பல தலைகள் கொண்ட ஓர் அனந்தனால் கடிக்கப்பட்டு அதன் விஷப் பற்களால் உண்டான நெருப்புப்போல் எரியும் காயத்தைப் பொறுக்க முடியாமல் கதறிக்கொண்டு லெம்னியன் கரையில் கிடக்கின்றான். வேதனை பொறுக்காமல் புரண்டு கிடந்த அந்த வீரனுக்குத் தேகம் குணப்படவேண்டுமென்று கிரேக்கர்கள் அனைவரும் ஒரே மனத்தினராய் கோரிவந்தனர். முடிவில் அவர்களது பிரார்த்தனையும் வீணாகவில்லை.

அவனது சேனையை அந்த லெம்னஸ் கரையிலிருந்து மிடன் என்பவன் நடத்தி வந்தான். அவன் ஒயிலிஸ்ஸுக்கு அழகான ரேணுதேவியிடம் பிறந்தவன்.

## XXIV

உயர்ந்த கோபுரங்களையுடையதும் முன்னொரு காலத்தில் அதிக கௌரவமுள்ள யூரிட்டஸ் என்பவன் பெருமையுடன் ஆண்டுவந்ததுமான இக்கேலியா நாட்டாரும், சிறிய சிகரங்களையுடைய டிரிக்கா வாசிகளும், பாறைகள் மலிந்துள்ள

இத்தோயில் இருப்பவர்களும், முப்பது கப்பல்களில் ஏறிக்கொண்டு பளிச்சென்று விளங்கும் அலைகளைக் கிழித்துக்கொண்டு வந்தனர். அவர்களுக்குப் புடாவிரியஸ்ஸும் மச்சயோனும் தலைவர்களாக விருந்தனர். அவர்கள் வைத்தியக் கலைகளின் அதிஷ்டான தேவரின் புத்திரர்கள். அந்த தெய்வத்தின் பிரசாதத்தினாலேயே அவர்கள் வைத்தியம் சம்பந்தமான சகல கலைகளையும் ஐயந்திரி பறக் கற்று, தேவர்களைப் போலேவே விளங்கி வந்தனர்.

## XXV

அதற்குப்பின் தனது நெடிய முடியைப் பனியில் மறைத்துக்கொண்டு விளங்கும் தைத்தான் வரையிலிருந்தும், வெள்ளிக்கம்பியைப் போல் வழிந்து வரும் ஹைப்பீரியா நதியின் ஓரத்திலிருந்தும் புறப்பட்டவர்களான அஞ்சா நெஞ் சுடைய வருமேனியர்களும் அஸ்திரியர்களும் வந்தனர். அவர்கள் நாற்பது கப்பல்களில் ஏறிக் கொண்டு யூரிப்பைலஸ்ஸின் தலைமையில் வந்தனர்.

## XXVI

அக்ரிஸ்ஸா நாட்டு வீரர்களையும், ஒலிம்பஸ்ஸின் நிழலிலுள்ள இலியோான் வீரர்களையும், கிரித்தோணி வீரர்களையும், ஆர்த்தி நாட்டாரையும், மலைபோல் குவிந்துள்ள வெள்ளைச் சுண்ணும்பு உற்பத்தியாகும் உலுஸ்ஸன்னிலிருந்து வந்த வீரர்களையும் பாலிபிடீஸ் நடத்திக் கொண்டு வந்தான். அவர்களும் நாற்பது கப்பல்களில் வந்தனர். அந்த நாற்பது கப்பல்களுக்கும் பாலிடிடீஸைப் போலவே லியோன்டியஸ் என்பவனும் சமமான அதிகாரத்தை வகித்துவந்தான். பாலி பீடீஸ் என்பவன் முன்பு சடைபோல் மயிர் போர்த்துக்கொண்டு விளங்கிய ஸெண்டார்களை மேகமண்டலத்திலுள்ள பிலியான் மலைச்சிகரங்களிலிருந்து குப்புறத் தள்ளி நெடுந்தூரத்திலிருந்த குகைகளில் ஒளிந்து கொள்ளும்படி ஓடிய தேவம்சமாகப் பிறந்த பிரித்தூஸ் என்பவனுக்கு அழகிற் சிறந்த ஹிப்போ தாமியாவினிடம் பிறந்தவன்.

## XXVII

ஸைபஸ் நாட்டிலுள்ள தைரிய சாலிகளான பேரேபி யர்கள் இருபது கப்பல்களில் ஏறிக்கொண்டு வந்தனர். அவர் களது தலைவனுக்குக் குனியஸ் என்று பெயர். அவர்களுடன் இனியன் வர்க்கத்தாரும், உயரமாக வளர்ந்த தேவ விருக்ஷங் களைக் கொண்ட டோடோனமலையின் குளிரினால் நடுங்கியவர்களும், சிறு அலைகளுடன் பினியஸ் நதியில் கலக்கும் இனிய டிடார்டியஸ் ஆருனது இழைந்து ஒழுகும் நாட்டு வாசிகளும் கலந்து கொண்டனர்.

அந்த நதி அதி புனிதமானது மன்றி, பார்வைக்கு பயங்கரமுமானது. தனது அடியில் பாய்ந்துவரும் ஆறுகளுடன் கலவாத அந்தப் புனித நதியில் உண்டாகும் அலைகள் சுத்த

மானதும் வெள்ளிபோல் மின்னுவதுமான ஜலத்தின் மீது அடித்து கொண்டு ஓடுகின்றன.

இருண்ட குகைகளிலுள்ள ஸ்டிஸ்லிருந்துதான் தெய்வங்களின் கொடுஞ் சாபங்களுக்கு ஆளான அந்நதிகளெல்லாம் உற்பத்தியாகின்றன.

## XXVIII

கடைசியாக, துரிதமாகச் செல்பவனும், தெந்திடனது புராதன வம்சத்தில் பிறந்தவனுமான புரோதஸின் தலைமையில் மக்னீஸியர்கள் வந்தனர். அவர்கள் பிலியன் மலையிலிருந்தும், அதன் நிழலின் கீழ் விசாலமாகப் பரவியுள்ளதும் பினியஸ் நதி பாயப் பெற்றதுமான புஷ்பவனங்கள் நிறைந்த டெம்பி என்னும் பிரதேசத்திலிருந்தும் வந்தவர்கள். அந்தப் பிலியன் மலையின் உச்சியிலும் அதன் சரிவுகளிலுமுள்ள தேவதாரு மரங்களின் கிளைகள் அதன் சிரோபூஷணமாகவும் அசைந்தாடும் சடைகள் போலவும் விளங்குகின்றன. அதன் அடிவாரத்திலுள்ள சோலைகள் இருள் மூடிக்கிடக்கின்றன. அவர்கள் கறுப்பு நிறமுள்ள நாற்பது கப்பல்களில் ஏறிக்கொண்டு அலைகளைக் கடந்து வந்தனர். கிரேக்கருடைய தலைவர்களும் அவர்களுடைய பரிவாரத்தாரும் இவ்வாறு பெருமை வாய்ந்தவர்கள்.

### குதிரை வீரர்களின் வருணனை

கலைமகளே! இனி, அக்கேயா நாட்டு மிருகங்களில் எவை வெகு மிகத்தைரியமாகப் பொருதன வென்றும், அந்நாட்டு வீரர்களில் எந்த வீரன் உத்தமமான துரகங்களையடக்கி அவற்றின் மேல் சவாரி செய்தனன் என்பதையும் சொல்லுமம்மா!

வெரிஷியன் குலத்தில் பிறந்தவையும், கழுகைப்போல் வேகமாகப் பறக்கக்கூடியவையுமான யூமிலஸ்ஸின் குதிரைகள் வேட்டைகள் ஆடுவதில் முன்னணியில் நிற்பவையெனப் பிரசித்தியடைந்திருந்தன. அவை பியரியா நதி பாயும் செழிப்பான பிரதேசங்களில் வளர்ந்து, வெள்ளி வில்லைத் தரித்த வீரனால் பழக்கப்பட்டவை; அவை யுத்தத்தில் உற்சாகங்கொண்டு தங்கள் மூக்குகளிலிருந்து நெருப்புப் பொறியுடன் மூச்சுவிட்டன! அவையனைத்தும் ஒரே உயரமும் ஒரே நிறமும் ஒரே வயதும் உடையவையாயிருந்தன. அக்குதிரைகள் இறந்துபோன வீரர்களின் பிணங்கள் மலைபோல் குவிந்து கிடந்த அந்த போர்க்களத்தில் தங்களுக்குப் பூட்டியிருந்த இரதங்களை விரைவாக இழுத்துக்கொண்டு வட்டம் வட்டமாகச் சுழன்றுவந்தன! வீரர்களின் அணிவகுப்புகளைப் பிளந்தன. இடிபோல் முழக்கஞ் செய்தன.

அகிலேசன் கோபங்கொண்டு யுத்தத்திலிருந்து விலகிக் கொண்டுவிட்டதால் அப்போது பொருத வீரர்களிலெல்லாம் அஜாக்ஷனே முதன்மையான கீர்த்தியைச் சம்பாதித்தான்.

அகிலேசனது வல்லமையானது கேவலம் மர்த்தியர்களான மனிதர்களது வல்லமைக்கு மிகவும் மிஞ்சியது. அவனுடைய நிகரற்ற குதிரைகளும் தேவாம்சமானவை. ஆனல் தெடீஸ் தேவி யின் மகனுன அவன் அப்போது ஆயுதபாணியாக விளங்கவில்லை. அவன் சேனைகளும் சட்டைசெய்வாரின்றி, அந்த மணற் கடற் கரையிற் கிடக்கின்றன. அந்தச் சேனைகளிலிருந்தோரனைவரும் தங்கள் ஈட்டிகளை விளையாட்டாக ஆகாயத்தில் எறிந்துகொண்டும் சக்கரங்களைச் சுழற்றிக்கொண்டும் பெரும்வில்லை வளைத்துக் கொண்டுமிருந்தனர். போர்வைபோர்த்த அவர்கள் இரதங்களும் இரத்தக்கறை சிறிதும் படாமல் அதனதன் இடத்தில் நிற்கின்றன. அவர்களுடைய அழிவில்லாத குதிரைகளும் அந்தச் சமுத்திரக்கரை யோரத்தில் மேய்ந்துகொண்டிருக்கின்றன. ஆனல் அகிலே சனது சேனைத் தலைவர்களுக்கு மாத்திரம் இவ்வாறு அகௌரவ மாகக் காலங் கழித்து வருவது சிறிதும் பிடிக்கவில்லை. அவர்கள் தங்களது பாளையத்தைச் சுற்றிச் சுற்றித் திரிந்துகொண்டு, கடைசி யாய்த் தங்களது தலைவனைச் சேர்ந்தனர்.

அப்பொழுது உற்சாகங்கொண்டு பளிச்சென்று விளங்கிய சேனைகளெல்லாம் ஒரு பெரும் பிரளயத்தைப்போல் தங்களைச் சுற்றியிருந்த பிரதேசங்களையெல்லாம் நிறைத்துக்கொண்டு அக் களத்தின் ஓரமாய்ச் சென்றன. பெரும் புயல்களடிக்கையில் கொந் தளிக்கும் ஒரு சமுத்திரத்தை நிகர்த்த அந்த விசாலமான போர்க் களமானது, வேகமாகச் சுழன்று வந்த நெருப்பலைகளின்மேல் மிதக்கும் ஒரு தெப்பம்போல் தோன்றியது. ஒரே வெளிச்சத்துடன் வானளாவி யுயர்ந்து பளிச்சென்று விளங்கியது. சேனைகள் தட தட வென்று நடந்துவந்தபொழுது பூமியானது கிடுகிடுவென்று நடுங்கியது.

விண்ணுலகத்திலுள்ள தனது ஸ்தானத்திலிருந்து ஜோவ் பகவான் கொக்கிமின்னல்களைச் சொரிந்தும், அரிம பர்வதத்தை இடிகளால் இடித்தும், டைப்பியஸ்ஸைத் தீப்பொறி பறக்க அடிமே லடித்துக் கொளுத்தியும் வருகையில், எவ்வாறு டைபான் மலை யானது அந்தக் கொடுந்தேவர் கொளுத்தும் நெருப்புக்காட்டில் விளையும் ஹிம்சைகளைச் சலிப்பின்றிப் பொறுத்துக்கொண்டு வரு கின்றதோ, அவ்வாறு பூமியானது அந்தச் சேனைகளின் சேஷ்டை களைப் பொறுத்துவந்தது.

அப்போது ஜோவ் பகவானுடைய ஆணைகளைச் சிரமேற் கொண்டவளும், பல வர்ணங்களுடன் விளங்கியவளுமான ஐரிஸ் தேவியானவள் திரவரூபமான வானத்தை யூடுருவிக்கொண்டு வாயு வேகமாக ப்பறந்துசென்று, பிரியத்தின் அரண்மனைவாயிலையடைந் தாள். அங்கு ட்ரோஜ வீரர்கள் அனைவரும் கூடியிருந்தனர். முதியோர் யோசனைகள் செய்து கொண்டிருக்க, இளையோர் அவர் களைச் சூழ்ந்து வீற்றிருந்தனர்.

அப்பொழுது (பிரியம்) அரசனது மகனுன பொலைட்டீஸ் என்பவன் ஈஸீதீசனுக்குச் சமாதி கட்டப்பட்டிருக்கும் மேட்டின்

மேலிருந்துகொண்டு எதிராளிகளின் சைன்னியங்களுடைய நட வடிக்கைகளைக் கவனித்துவந்தான். அந்த உயர்ந்த இடத்திலி ருந்தவண்ணம் எதிராளிகள் தங்கியிருந்த வனங்களையும், அவர் களது கூடாரங்களையும், கப்பற்படையையும், அவை நின்று வந்த பரந்த கடலையும் பார்ப்பது வெகு இலகுவாயிருந்தது.

ஐரிஸ் தேவியானவள் அந்தப் பொலைட்டீஸின் ரூபத்தைத் தரித்துக் கொண்டு பிரிஜியன் அரசனுக்குப் பிரியமில்லாத ஒரு சமாசாரத்தைச் சொல்ல வேகமாய் ஓடினாள்.

"இதுவரை செய்துவந்த யோசனைகள் போதும்; அவற்றை நிறுத்துங்கள்! அருந்தொழில் செய்ய வேண்டிய காலம் அணுகி விட்டது! கோரமான கொடும் போர் "வந்தேன்-வந்தேன்" என்று உங்களது கோட்டை மதில்களை நாடி வந்து கொண்டிருக் கின்றது!

"இதற்கு முன் எத்தனையோ சேனைகளை நான் பார்த்திருக் கின்றேன். ஆனால் இதுவரை இப்போது அந்தக் களத்தில் கூடி யுள்ள சமுத்திரம் போன்ற ஒரு பெரிய சேனையை நான் கண்டதே யில்லை! அவை சரத்ருதுவில் மரங்களிலிருந்து சரமாரியாய் உதிரும் இலைகளைப்போலவும், உருண்டு புரண்டுவரும் மணற்றிரைகளைப் போலவும் கணக்கில்லாமல் கூடியிருக்கின்றன. அவை நகர்ந்து வருகையில் உண்டான புழுதியினால் கடற்கரை இருண்டே போய் விட்டது.

"தேவர்களுக்குச் சமானமான ஹெக்டரே! உனது வலிமை எங்கே போயிற்று? அதை இப்பொழுது காட்டு! ட்ராயில் கூட்டங் கூட்டமாக மலிந்துள்ள சேனைகளை எல்லாம் ஒன்றாய்த் திரட்டு. ஒவ்வொரு தலைவனும் பிறநாட்டுச் சேனைகளை அணி யாய் வகுத்து நிறுத்தட்டும். இன்று அவர்கள் அனைவரும் வந்தே தீரவேண்டும்" என்றாள்.

இந்த தெய்வாதீமான வாக்கானது அந்த மகாவீரனுடைய மனத்தைக் கலக்கிவிட்டது. உடனே அந்த மந்திராலோசனை சபை கலைந்தது. வீரர்களும் தங்கள் தங்கள் ஆயுதங்களைக் கையி லெடுக்க ஓட்டமாய் ஓடினார்கள். நகரத்துக்கோட்டை வாயில்கள் திறந்தன. கோட்டையில் அடைந்துகிடந்த சேனா வீரர்கள் அனை வரும் வரிசை வரிசையாய் வெளியேவந்தனர். அவர்கள் ஜாதி ஜாதியாகப் பிரிந்து, ஒருவர்மேல் ஒருவர் விழுந்துகொண்டு, முன் வந்து, அந்தக் களத்தில் வந்து நிறைந்து, அதை ஒரு பேரிருள் போல் மறைத்தனர். ஆட்களும் அசுவங்களும் தேர்களும் நெருங்கி வந்தபொழுது, பூமியானது அதிர்ந்து நடுங்கியது. குழப்பம் அதிகரித்தது. அப்போது உண்டான சப்தத்தினால் வானத்தில் பிரமாண்டமான எதிரொலியும் உண்டாயிற்று.

இலியனுக்கு எதிராகவுள்ள மைதானத்தின் மத்தியில் மனி தர்களால் உண்டாக்கப்பட்ட ஓர் உயர்ந்த மேடு காணப்படு

கின்றது. அந்த மேட்டிற்கு அமரர்கள் மிரணனது சமாதியென்றும், மனிதர்கள் பாட்டியாவென்றும் பெயர் வழங்கி வருகின்றனர்.

அந்த இடத்தில்தான் துரோஜர்களுடைய சேனைகளும் அவர்களுக்கு உதவி செய்ய வந்த பிறநாட்டுச் சேனைகளும் தங்கள் தங்கள் தலைவர்களின் கீழ் அணியணியாய்ப் பிரிந்து யுத்தசன்னத்தங்களுடன் நின்றன.

அப்பொழுது தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர், மற்றையோர் அனைவருக்கும் மேலாகத் தனது பிரமாண்டமான ஈட்டியை உயர்த்திக் குலுக்கிக்கொண்டு, புஷ்பாலங்கிருதமான தனது தலையைத் துளக்கினான். அவனது ஸ்வதேச வீரர்கள் அணியணியாக அவனைச் சூழ்ந்து நெருங்கி வந்தனர். அவர்கள் தரித்திருந்த கணக்கற்ற வேல்கள் தோப்புகளைப்போல் ஆகாயத்தில் பளிச்சென மின்னின.

அவனுடைய சேனைகளையும் வருணிப்போம்:

I

தேவாம்சத்துடன் பிறந்தவனான ஈனியன் என்பவன் தார்தானிய வீரர்களுடன் வந்தான். அவன் நர மனுஷ்யனான அஞ்சைஸீன் என்பவனுடன் திருட்டுத்தனமாய்ப் புணர்ந்து கர்ப்பந்தரித்த வீனஸ் என்னும் காமதேவிக்குச் சோலைகள் நிறைந்த ஐடா மலையின் ரகஸ்யமான ஒரு மலையில் பிறந்தவன்.

ஆர்க்கிலோகஸ் என்பவனும் அக்காமஸ் என்பவனும் அவனுடன் சேர்ந்து அந்தச் சேனையை ரக்ஷித்தும் யுத்தத்தில் பழக்கியும் வந்தனர்.

II

ஐடா என்னும் திருமலையின் அடிவாரத்தில் உள்ளதும், நீர் வளமும் நில வளமும் மிக்குச் சீரும் சிறப்புமாய் விளங்குவதுமான சீலியாத் தடங்களில், உழுது பயிர் செய்து ஜீவனம் செய்து வந்தவர்களையும், ஈஸிப்பஸ் நதியின் கன்னங்கரேலென்ற கறுத்த நிறமுள்ள நீரைப் பருகுபவர்களையும் இராஜ குலத்திலுதித்த பாண்டாரஸ் என்பவன் நடத்தி வந்தான்.

அப்பாலோ பகவான் கிருபை கூர்ந்து அவனுக்கு வில் வித்தை கற்றுக்கொடுத்தது மன்றித் தன் வில்லம்புகளையும் வெகுமானமாகக் கொடுத்திருந்தான்.

III

செழிப்பான அபீஸ்ஸஸ்ஸிலிருந்தும், கோபுரங்கள் மலிந்துள்ள அதிரிஸ்தியாவிலிருந்தும், மிகவும் உயர்ந்த தேரீ என்னும் மேடுகளிலிருந்தும், சோலைகள் நிறைந்த பிட்டியாவிலிருந்தும் கூட்டங் கூட்டமாய் புறப்பட்டு வந்த சேனைகளைக் குமார வீரர்களான அம்பியஸ் என்பவனும் அத்ராஸ்டஸ் என்பவனும் சம அதிகாரம் வகித்து நடத்தி வந்தனர்.

அவர்கள் இருவரும் விருத்தனுன மீராப்ஸ் என்பவனுடைய புத்திரர்கள். அவன் வருங்காலத்தில் சம்பவிக்கக் கூடிய விஷயங்களை அறிவதில் சமர்த்தனுயிருந்ததனுல், தன் மக்களுக்குக் கேடு விளையுமென்று அறிந்து, அவர்களை அந்த யுத்தத்தில் சேரவேண்டாமென்று எச்சரித்தான். ஆனுல் விதி வலிதன்ருே! அஃது அவர்களைக் கழுத்தைப் பிடித்து உந்தித் தள்ளியது! அவர்கள் தங்கள் தந்தையின் மந்திரத்தை அலட்சியஞ் செய்து அந்த யுத்தத்தில் ஆவலுடன் சேர்ந்து கொண்டனர்; அதில் கொலையுண்டு தங்கள் ஆவிகளையும் துறந்தனர்.

IV

பிராக்டியஸ் நதிக்கரையினின்றும், புற்றரைகள் மலிந்துள்ள பெர்க்கோட்டியிலிருந்தும், ஸெஸ்டாஸுக்கும் அபிடாஸுக்கும் அருகிலுள்ள கடற்கரைகளிலிருந்தும், ஆகாயமளாவிய மதில்கள் சூழ்ந்த அரிஸ்டாவிலிருந்தும், செல்லக் கரையிலிருந்தும் வந்த தன் ஆட்களைக் கூட்டிக்கொண்டு ஆலியஸ்-ஹித்தாஸிடீஸ் என்பவன் வந்தான்.

தனது தேருக்கு மேலாக உயர்ந்து பறக்கும்படிக் கடிவாளங்களைத் தாராளமாக விட்டுப் பிடித்து ஆட்டியசைத்துக் கொண்டு அவன் தன் குதிரைகளை ஓட்டி வர, அவை இடிமுழக்கத்துடன் நெருப்புப் பொறி பறக்க மூச்சுவிட்டுக்கொண்டு வேகமாய் ஓடி அந்த மைதானத்தைக் கடந்து வந்தன.

V

அதன்பின் யுத்தத்தில் பிரசித்தி பெற்றவர்களும் பயங்கர ரூபிகளுமான பிளாஸ்கியர் அழியாச் செழிப்புள்ள லாரிஸ்ஸா நாட்டிலிருந்து புறப்பட்டு வந்தனர். தைரியவானுன ஹிப்போதௌசனும் தேவாம்சமான பைலியூஸ் என்பவனும் ஆகிய சகோதரர்கள் அந்தச் சேனையின் தலைவர்களாகப் பொலிவுடன் விளங்கினர்.

VI

பின்பு ஹெல்லஸ்பாண்ட்டஸ் ஜலசந்தியானது உருமிக் கோஷித்துவரும் சுவேதப் பிரதேசங்களைச் சுற்றியும் கரகரவென்று குரைத்துக் கதறும்படி போரியாஸ் மோதிவரும் கடற்கரைகளிலும் குளிர் நிறைந்த திரேஸியாவில் கரையோரங்களிலும் வசிக்கும் வீரர்கள், கண்டோர் மனத்தைக் கலக்கும்படி அணியணியாய் வகுத்துக்கொண்டு அகாமாஸுடம் பைரூஸும் வந்தனர்.

VII

ஜோவ் பகவானது அன்பிற்குப் பாத்திரனுன ட்ரோஜினியன்கள் ஸியூஸ் என்பவனது மரபில் வந்தவர்களாகிய ஸிகோனியர்கள் மகனுன யூபீமஸ்ஸுடன் வந்தனர்.

## VIII

தங்களது கோணலான வில்லை வளைத்துச் சண்டை செய்வதில் சமர்த்தர்களான பியோனியன் படைகளை, பைரிக்மீஸ் என்பவன் கவனித்து வந்தான். அவர்கள் அக்ஷய நதிபாயும் அகண்ட பிரதேசத்திலிருந்து வந்தவர்கள்.

அந்த அக்ஷய நதியானது வெகு தூரத்திலுள்ள அமிடானையும் அபிஷேகஞ்செய்து வருகின்றது. அஃது அக்கம்பத்திலுள்ள சகலமான சிற்ருறுகளின் சேர்க்கையினுல் பெருக்கமடைந்து, தன்னைச் சுற்றி வெகு தூரத்திலுள்ள பிரதேசங்களை முழுக்கி மிதக்கும்படி செய்யும் ஒரு மஹாநதி.

## IX

பைலிமீனஸ் என்பவனைத் தலைவனுகக் கொண்டு பாவலகோனியர்கள் வந்தனர்.

அவர்கள், கொடிய சுவபாவமுள்ள கோவேறு கழுதைகள் வளரும் செழிப்பான ஹெனீஷியாவிலிருந்தும், மேன்மேலும் உயர்ந்து விளங்கும் குன்றுகளுள்ள இரத்தினஸ்ஸிலிருந்தும், அழியாப் பசுமையுடன் விளங்குவதும் புன்னை மரக்காடுகள் நிறைந்துள்ளதுமான ஸைட்டோரஸ்ஸிலிருந்தும், ஈஜியாலஸ் ஸூம் குரோம்னுவும் உள்ள பிரதேசத்திலிருந்தும், ஆகாயத்தைக் கவரும் உன்னதமான ஸிஸாமஸ்ஸிலிருந்தும், பார்த்தீனியஸ் நதியின் கரையோரங்களிலுமிருந்தும் வந்தவர்கள். அந்தப் பார்த்தீனியஸ் நதியானது தன் இரு கரைகளிலுமுள்ள அரண்மனைகளையும் அந்தப்புரங்களையும் தனது நெற்றியில் பிரதிபிம்பித்துக் கொண்டு புஷ்பங்கள் மலிந்துள்ள சோலைகளின் இடையே புரண்டு ஓடுகின்றது.

## X

ஓடியஸ்ஸூம் இபிஸ்ட்ரோவஸூவும் நடத்திவர ஹலிஜோனிய வீரர்களும், வந்தோம் வந்தோம் என்று ஆயுதபாணிகளாக அணியணியாய் வந்தனர். அவர்கள் சூரிய வெப்பத்தினுல் கோதொழிந்து காந்தியுடன் விளங்குகின்ற மூப்பேறிய வெள்ளி விளையும் அலிபியன்களிலுள்ள அதிதூரமான பிரதேசங்களிலிருந்து வந்தார்கள்.

## XI

மகாவீரனுன குரோமிஸ் என்பவனும், இன்னேமஸ் என்னும் ஜோஸ்யனும், மைசியாப் படைகளைக் கொண்டு முன் வந்தனர். “நமக்குத்தான் வெற்றி” என்று அந்த இன்னேமஸ் சொல்லிய ஜோஸியம் பலிக்காமல் போய்விட்டது. மஹாவீரனுன அகிலேசன் புண்ணியாத்மாவான அவனது தலையை வீசிவிட,

அது, சியமந்த நதியில் மற்றைய பாமர ஜனங்களுடைய தலைகளு டன் சேர்ந்து உருண்டு ஓடிவிட்டது.

## XII

யுத்தஞ் செய்ய வேண்டுமென்று ஆவல் கொண்டி ருந்தவர்களாகிய அஸ்கானியப் பிரிஜியர்களை ஒன்ருய்க் கூட்டித் திரட்டிக்கொண்டு போர்ஸிஸ் என்பவனும் அஞ்சாநெஞ்சனை அஸ்கானியஸ்ஸும் வந்தனர்.

## XIII

மியோனியா பிரதேசத்தைச் சுற்றி வசிப்பவர்களையும், திம்மோலஸ் மலைநிழலின் கீழுள்ள சரிவுகளில் மறைந்து வசிப்பவர் களையும் சலனமற்ற கைஸ் ஏரிக்கரையில் பிறந்தவர்களாகிய மெஸ்லிஸ் என்பவனும் அண்டிபஸ் என்பவனும் சமஅதிகாரம் வகித்து நடத்திவந்தனர்.

## XIV

பியாண்டா என்னும் காட்டாறு பாயும் உன்னதமான மைக்கேலியிலிருந்தும், நிழலின் கீழுள்ள லாட்மஸ் மலைச்சரிவுகளி லிருந்தும் காரிய ஜாதியைச் சேர்ந்த வீரர்கள் ஏககாலத்தில் இரைச்சலிட்டுக்கொண்டும், பிராகிருத பாஷைகளைப் பேசிக் கொண்டும் வந்தனர். அந்த கோஷ்டிக்கு அம்பிமாக்கஸ் என்ப வனும் நாஸ்தீஸ் என்பவனும் தலைவர்களாகவிருந்தனர். நாஸ்தீஸ் நெஞ்சுறுதியுள்ளவன். அம்பிமாக்கஸ் அகம் பாவம் நிறைந்தவன். அலங்காரப் பிரியன். அவன் ஒரு ஸ்திரீயைப்போல் ஸ்வர்ணாபரணங்களை யணிந்து கொண்டும் பளிச்சென்று மின்னிக்கொண்டும் ரதமேறி யுத்த களத்திற்கு வந்தான். அவன் மஹாமடையன்!

அதிகக் குரூரனை அகிலேசனுல் கொல்லப்பட்டு அவன் அருகிலிருந்த ஒரு நதியில் விழ, அந்த நதி அவனது உடலை உவர்க்கடலில் உருட்டி ஓட்டிவிட்டது! டம்பாச்சாரியான அந்த வீரன் அலைகளால் மோதுண்டு அங்கே கிடக்கின்ருன். அவனு டைய ஆபரணங்களனைத்தும் அவனை வென்ற வீரனது வச மாயின.

## XV

கடைசியாகக் குண்டும் குழியும் நிறைந்துள்ளதும் கரை புரண்டு ஓடுவதுமான ஜாந்தஸ்நதி பாயப்பெற்ற வெகு தூரத்தி லுள்ள லிஸியாவிலிருந்து புறப்பட்ட வீரர் குழாங்களெல்லாம் அழகாக அணியணியாய் வந்தன. தோஷமற்ற கிளாக்கஸ் என்பவனும் ஸார்ப்பிடானும் அவைகளுடைய தலைவர்களாக னுர்கள்.

## மூன்ரும் அத்தியாயம்

# மனேலஸ்ஸனும் பாரிஸ்ஸூம் செய்த துவந்துவ யுத்தம்

**கதைச் சுருக்கம் :** இரண்டாம் அத்தியாயத்தில் கூறியபடி இருதிறத்துச் சேனைகளும் யுத்தத்திற்குச் சித்தமாயிருக்கையில் மனேல்லாஸனும் பாரிஸ்ஸூம் துவந்து யுத்தம் செய்தால் இந்த வழக்கு ஒரேயடியாய்த் தீர்ந்து போமென்று ஹெக்டர் யோசனை சொல்ல, அதை எல்லோரும் ஒப்புக்கொண்டு துவந்த யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்கின்றனர்.

அந்த யுத்தத்தைக் கண்ணுறுவதற்கு ஹெலனை யழைத்து வரும்படி ஐரிஸ்தேவியை விண்ணுலகிலுள்ள தேவர்கள் அனுப்பு கின்றனர். அவள் ஹெலனை அழைத்துக்கொண்டு ட்ராயின் கோட்டை மதில்களிடம் வருகின்ருள். அங்கு பிரியம் மகாராஜன் தன் மந்திரிகளுடன் அந்த மதில்களின் கீழுள்ள மைதானத்தில் கூடியிருந்த கிரேக்க வீரர்களைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந் தான். ஹெலன் வந்தபின் "அவர்கள் யார்? அவர்களுடைய விருத்தாந்தங்கள் என்ன?" என்று அவளைக் கேட்க அவள் அவை களை உரைக்கின்ருள்.

துவந்துவ யுத்தத்தின் நிபந்தனைகளைத் தீர்மானித்து விட்டு அவற்றைத் தவருமல் நிறைவேற்றுவதற்காக அரசர்கள் இருவரும் தெய்வசாக்ஷியாகச் சத்தியம் செய்கின்றனர். அதன்பின் துவந்துவ யுத்தம் நடைபெறுகின்றது. அதில் பாரிஸ் தோற்றுப்போக, அவனை வீனஸ் தேவியானவள் ஒரு மேகத்தினுல் மறைத்து அவனது பள்ளியறைக்குத் தூக்கிக் கொண்டுபோய் விடுகின்ருள். அதன்பின் அவள் ஹெலனையும் கோட்டை மதில்களிலிருந்து கூட்டி வந்து அவனிடம் சேர்த்து விடுகின்ருள். அவர்கள் இரு வரும் காம போகங்களில் அழுந்தி விடுகின்றனர்.

அதன் பின் கிரேக்கக் கக்ஷியைச் சேர்ந்தவனுன ஆக மனன், துவந்துவ யுத்த ஒப்பந்தப் பிரகாரம் துரோஜர்கள் ஹெலனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்றும், மற்றைய நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டுமென்றும் வற்புறுத்து கின்ருன்.

இந்த அத்தியாயத்தில் இரண்டாம் அத்தியாயம் ஆரம் பித்த இருபத்து மூன்ரும் நாளில் நிகழ்ந்த சம்பவங்களே தொடர்ச்சியாகச் சொல்லப்படுகின்றன.

அந்த நிகழ்ச்சிகளிற் சில ட்ராய் நகரத்தின் முன்னுள்ள மைதானத்திலும் மீந்தவை ட்ராயிலுமே நிகழ்கின்றன!

---

இவ்வாறு தங்கள் தங்கள் தலைவர்களின் துணையுடன் வந்த அந்தச் சேனைகளெல்லாம் தனித்தனியாக அணியணியாக நகர்ந்து அந்த நீண்ட போர்க்களம் முழுவதையும் நிறைத்து விட்டன.

துரோஜர்கள் "இதோ வந்தோம்-வந்தோம்! உங்களையும் இந்த யுத்தத்தில் ஒரு கை பார்த்து விடுகின்றோம்!" என்று பெருங் கூச்சலிட்டுக் கொண்டு நெடுந்தூரத்திலிருந்து ஒருவர்மேல் ஒருவர் நெருங்கிப் பாய்ந்து விழுந்துகொண்டே ஓட்டமாய் ஓடி வந்தனர்.

உறைந்த பனியும் கனத்த மழையும் பெய்து நிலத்தை நொறுக்கு நொறுக்கு என்று ஊசிபோல் குத்தி நடுக்கி விடும் குளிர் காலத்தில், அதன் கொடுமையைத் தாங்கமாட்டாத கொக்குகள் தங்களது இருப்பிடத்தை விட்டு அக்குளிர் காலம் தீரும் வரை ஜீவித்து வருவதற்கு வசதியான ஓர் இடத்தைத் தேடிக் கொண்டு உஷ்ணப் பிரதேசங்களை நோக்கி ஒழுங்காகவும் கூட்டங் கூட்டமாகவும் கூடி கோஷம் செய்து கொண்டு ஆகாய மத்தியில் பறந்து சென்று வசதியான ஒரு தகுந்த இடத்தைக் கண்டு பிடித்தவுடன் அதை ஆக்ரமிக்க நினைத்து அவையனைத்தும் சிறிதும் சந்தடி செய்யாமலும் வெகு ஆத்திரத்துடன் துரிதமாகவும் ஒன்றாய்க் கூடி ஒத்துழைத்து அந்நிலத்தின் மேல் ஒரேயடியாய்ப் பாய்ந்து யுத்தம் செய்பவர்களைப் போல் அங்கு வசிக்கும் கேவல ஜீவிகளான மனிதர்களைக் குத்திக் காயப்படுத்தியும் விடுவதுபோல், கிரேக்க வீரர்களும் தட தடவென்று வந்தனர். அப்படி அவர்கள் வந்த பொழுது பூமியிலிருந்து துரிதமாக எழுந்த புழுதியானது அவர்களைச் சூழ்ந்து மறைத்து விட்டது.

தென்றற் காற்று தன் நீண்ட கொடிகளைப் போன்ற இறகுகளிலிருந்து காரிருளை யொத்த மேகங்களை மலைச் சிகரங்களின் நாற்புறமும் பொழிகையில், எவ்வாறு அம்முகில்களாலுண்டாகும் மப்பு மந்தாரங்கள் அம்மலைச் சரிவுகளின் வழியே விரைவாக வழிந்து சென்று அவற்றின் அடிவாரத்திலுள்ள மைதானங்களை ஆக்ரமித்து இருட்டித் திருடர்களுக்கு அதிக சந்தோஷத்தையும், ஆடு மாடுகளைக் காத்து வரும் இடையர்களுக்குத் தங்கள் மந்தைகளிலிருந்து தப்பித் தவறிப் போய்விட்ட உருப்படிகள் இன்னவையென்று அறியவோ அவற்றைத் தேடிப் பிடிக்கவோ முடியாதபடி சங்கடத்தையும் விளைவித்து விடுகின்றனவோ, அவ்வாறு மேன் மேலும் எழுந்த புழுதியினால் சூழப்பட்டு வந்த கிரேக்க சேனா சமுத்திரமானது அந்த யுத்த களத்தை மறைத்துக் கொண்டு வேகமாய் நகர்ந்து வந்த ஒரு மேகம் போலிருந்தது.

இவ்வாறு இரு திறத்தாருடைய சேனைகளும் யுத்தத்தில் உற்சாக முள்ளவைகளாகவும் தங்கள் தலைவர்களின் உத்தரவை மாத்திரம் எதிர்பார்த்தவர்களாகவும் ஒன்றையொன்று பார்த்துக் கொண்டு அணியணியாய் நின்றனர்.

அப்பொழுது ட்ராயிலிருந்து புறப்பட்டு வந்த பிரதாப சீலர்களான வீரர்களின் முன்பாக அதிசுந்தரனான பாரிஸ் வந்து நின்றான்.

அவன் உருவத்தில் ஒரு தெய்வத்தைப் போலவே விளங்கினான். அவன் தனது போர்க் கவசத்தின் மேல் அணிந்திருந்த புள்ளி கொண்ட புலித் தோலானது வெகு கம்பீரமாகத் தழைந்து அசைந்தாடியது. அவனது வளைந்த வில்லை அவனுடைய இரு தோள்களும் தாங்கி வந்தன. அவனது கத்தியும் அவனது அள்ளையில் ஒரு புறத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. அவன் சிரத்தையுடன் தரித்துக் கொண்டதாகத் தெரியவில்லை.

கூரான முனைகளுள்ள இரண்டு ஈட்டிகளை அவன் தன் கைகளில் எடுத்துக் கொண்டு வெகு கம்பீரமான தோரணைகளுடன் அவற்றை யசைத்துக் குலுக்கி "கிரேக்கர்களில் வீரன் எனப்படுவான் எவனாவது ஒருவன் இருந்தால் என்னிடம் சண்டைக்கு வரலாம்" என்றான்.

இவ்வாறு வெகு கம்பீரமான பாவனையுடனும் தனக்குச் சமமானவன் ஒருவனுமே யில்லை, தானே அந்தக் களத்தில் விளங்கும் வீரர்களிலெல்லாம் முதல்வன் என்ற இறுமாப்புடனும் அவன் வெகு தைரியமாகவும் உல்லாசமாகவும் அடிமேலடிவைத்துக் கொண்டு முன்னும் பின்னுமாக நடந்தான்.

அதைக் கண்ட மார்ஸின் அன்பிற்குப் பாத்திரனான மனேல்லாஸன் "நமக்குச் சரியான வைரி இவன்தான்" என்று களித்து உற்சாகங் கொண்டு அவனை உற்று நோக்கினான்.

தைரியசாலிகளான இளைஞர்களும் குரைக்கும் வேட்டை நாய்களும் வெகு சிரமப்பட்டு வேட்டையாடித் துரத்திய கலைமானையோ மலையாட்டையோ கண்ட ஒரு சிங்கமானது எவ்வாறு அவைகளது சிரமத்தை வீணாக்கி 'இது நமக்கு ஒரு நல்ல விருந்துதான்' என்று சந்தோஷித்து அவற்றையடித்துக் கொன்று விழுங்கிவிடுமோ, அவ்வாறு பழிவாங்க வேண்டுமென்று வெகு நாளாகக் கருதி வந்த மனேல்லாஸன் அவனைக் கண்டவுடன் தான் அணிந்திருந்த ஆயுதங்களெல்லாம் கலகல வென்று ஒலிக்க உயரமான தனது இரதத்திலிருந்து ஒரே பாய்ச்சலாய் அதி வேகமாய்ப் பாய்ந்து தரையின் மேல் குதித்தான்.

அவன் தன்னை நோக்கி வருவதைக் கண்ட அந்த அழகனான வீரன் பாய்ந்து நடு நடுங்கித் தன் குற்றங்களை நினைத்துக் கொண்டு அவற்றால் சுடப்பட்டவனாய் முன் வைத்த காலைப் பின் வைத்துக் கொண்டு பின்னடைந்தான்! தனக்குக் கிடைக்கக் கூடியதும் வெகு நியாயமானதுமான தண்டனைக்குத் தப்பிக் கொண்டான்.

கசகசவென்று சப்திக்கும் மரங்களின் உச்சியில் படமெடுத் தாடும் ஒரு பாம்பைக் கண்ட இடையன் எவ்வாறு திடுக்கிட்டு நடுங்கி வெளுத்து விரைந்து வெருண்டு கதறிக் கொண்டு, இன்னது செய்வதென்று தெரியாமல் தலைகீழாகக் குப்புற விழுந்து ஓரே ஓட்டமாய் ஓட்டம் பிடிப்பானோ, அவ்வாறு அரசனுன மனேல் லாஸனைக் கண்ட அழகனுன வீரன் காற்ருய்ப் பறந்து துரோஜர் கள் நெருக்கமாகக் கூடியிருந்த இடத்திற்கு ஓடிச் சென்று அவர் களிடையிற் புகுந்து ஒளிந்து கொண்டான்.

இராஜ குமாரன் இவ்வாறு புறங்கொடுத்து ஓடியதைக் கண் ணுற்றபொழுது, ஒரு தெய்வத்திற்குச் சமமான வீரியமுடைய ஹெக்டர், அவனுடைய கோழைத் தனத்துக்கு இரங்கி ஆத்திரத் துடன் அவனைக் கடிந்து பின் வருமாறு பேசினுன்: "அடபேடிப் பாரிஸ்! பாக்கிய மற்றவனே! உனக்கு எப்படிச் சுகமுண்டாகும்? மைவிழியார் முன்புதான் உனது மதத்தைக் காட்ட வேண்டுமா? சுந்தர புருஷனுக விளங்குகின்ருய்! மந்திர தந்திரங்களும் செய் கின்ருய்! நீ கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டவுடனேயாவது அல்லது உன் கல்யாணச்சடங்குகள் நடந்ததற்கு முன்பாவது நீ மரித்துப் போயிருந்தால், அஃது எவ்வளவோ கௌரவமாயிருந் திருக்குமே! அப்படி நீ மரித்துப் போயிருந்தால் இன்று இவ்வாறு வீணுகப் பெருமையடித்துக்கொண்டு, போர் முனையில் புறங் கொடுத்து ஓடி துரோஜர்கள் சமூகத்திற்கே உலகமுள்ளவரைக்கும் அவமானத்தை உண்டாக்கியிருக்கமாட்டாயே! ஆஹா! தெய் வங்களே! இந்த கிரேக்கர்கள் நம்மைத் திருணமாக நினைத்துக் குதிக்கின்ருர்களே! உன்னைப்போன்ற வீரர்கள்தான் இங்கு இருக் கின்ருர்கள் என்று நினைத்து பயமற்று இருக்கின்ருர்களே! குளிர் விட்டவர்களாக இருக்கின்ருர்களே! பயந்தெளிந்து விளங்கு கின்ருர்களே! தாங்கள் பயப்படக் காரணமில்லை யென்றும் மோசம் போய்ப் பயந்திருந்தோம் என்றும் அறிந்து விட்டார்களே! நீ ஒரு சூரனைப்போல் பகட்டான உருவத்துடன் விளங்குகின்ருயே! பருவமறியாத பேதை மனம் உனது உடலில் உறைந்து வருகின் றதே! இஃது என்ன கேவலம்!

முன்னுட்களில் நீ மிகவும் மதம் பிடித்தவனுய்ப் பகட்டான வர்ணமிட்ட பாய்மரங்களைப் பறக்கவிட்டுக்கொண்டு மலைபோன்ற உன் உயர்ந்த கப்பல்களில் அலைகளைக் கடந்து செல்லுகையில், கிரேக்கர்கள் திரளாகக் கூடிக் கரையோரம் நின்று கொண்டு தங்களைக் கடந்து சென்ற உன்னைக் கண்டு ஆச்சரியப்பட வில்லையா? அப்பொழுது உன்னை நாடி வந்த ஸ்பார்ட்டன் ராணியை நீ இவ்வாறுதான் ஏங்கி யிளைத்த ஸ்வரூபத்துடன் எதிர் கொண்டு வரவேற்றனையோ? அந்தக் கட்டழகியைத் தூக்கிக் கொண்டு அவளது ராஜ்யத்திலிருந்து ஓட்டமாய் ஓடி வந்தனையே! அப்பொழுது உன்னிடம் இந்தப் பேடித்தனம் இருக்கவில்லையே! ஹெலனின் கண்ணெதிரில் அவளுடைய ரக்ஷகர்களான வீரர்கள் இருவருக்கும் மிஞ்சிய வீர பராக்கிரமங்கள் உள்ளவனுகவல்லவோ நீ விளங்குகின்ருய்!

இந்தப் பேடித்தனம் உனது சத்துருவுக்கு சந்தோஷத்தை யும் உனக்கு அவமானத்தையும் உனது தகப்பனுக்குத் துக்கத்தை யும் உனது குலத்துக்கு நாசத்தையும் தரும். வலுவில் வந்த இந்தச் சண்டையை நீ புறக்கணித்து ஓடலாகாது. திரும்பி வந்து ஒரு கை பார்த்தே தீரவேண்டும். அல்லது நீ செய்த அநியாயத்தை ஒப்புக் கொண்டு அதற்குத் தக்க பரிகாரத்தைச் செய்ய வேண்டும்; இந்த இரண்டில் ஒன்றைச் செய்யாவிடில் நீ பெருத்த அபராதி தான்!

உன்னிலும் அதிகமான பராக்கிரமமுள்ள ஒரு வைரியின் மனைவியை நீ அபகரித்து வைத்துக்கொண்டிருக்கின்றாய் என்பதை இந்த யுத்தகளம் வெகு சீக்கிரத்தில் பளிச்சென்று விளக்கிக் காட்டிவிடப் போகின்றது.

சிற்றின்பத்தைப் புகட்டும் சுந்தர வடிவும், சுருட்டை மயி ரும், வெள்ளி வீணையும், அழகும், யௌவனமும் உன்னை ரக்ஷிக் கும் என்று நம்புகின்றாய்! அந்த எண்ணம் வீண்! உனது யௌவ னமும், அழகும் மண்ணோடு மண்ணாகவே போக விருக்கின்றன.

ட்ராய் நகரத்தாரே தங்களது ராஜ்யத்திற்கு இந்தப் பெருங் கஷ்டத்தை விளைவித்தவனுக்கு விரோதமாகக் கிளம்பி அவனை ஒரேயடியாய் அழித்துத் தங்களது பழியைத் தீர்த்து கொள்ளுவார்கள்" என்றான்.

அதுவரை மௌனமாயிருந்த பாரிஸ் இப்போது தனது வாயைத் திறந்து, பின்வரும் வசனங்களை உரைத்தான்:—

"அண்ணா! நீ இவ்வாறு கோபித்துப் பேசுவது நியாயந் தான். உன்னைப்போல் எதற்கும் கலங்காத சாந்தமுள்ள மனத்தையுடையவர் யாரேனும் உண்டா? நீ விதியின் பயனாக வரும் சகலமான துன்பங்களுக்கும் சிறிதும் அசையாத திடமான மனத்தை உடையவனாகவிருக்கின்றாய்.

உனது சக்தி, உருக்கிய எஃகைப்போல் ஆணித்தரமாக உறுதியாக விருக்கிறது. சமயோசிதமாகத் தன் சத்துருக்களைக் குத்திப் புண்ணாக்கக் கூடயதாகவும் தங்குதடையோ சலிப்போ இல்லாததுமாக விருக்கின்றது.

சலிப்பின்றி உழைத்துவரும் ஒரு கோடரிக்காரன் எப்படிக் காட்டிலுள்ள மரங்களையெல்லாம் ஓங்கி உடைத்து வெட்டிப் பிளந்து, அந்தக் காட்டைப் பாழாக்கி விடுகின்றானோ, அப்படி உனது சக்தியானது இந்தக் களத்துள்ள வீரர்களெல்லோரையும் வெட்டி வீழ்த்தக் கூடியது.

நீ மகாபாக்யசாலி! உன்னை நான் மெச்சுகின்றேன் என்றா லும் நீ சொர்ணும்பாளான வீனஸ் தேவியின் பிரசாதத்தை

நிந்திக்கலாகாது. எனது சுந்திர வடிவத்திற்கு அவள்தான் காரணம். கேட்டோர் கண்டோர் உள்ளத்தைக் கவரும் சுந்தர வடிவம், ஆசைப்பட்டுப் பிரார்த்தனைகள் செய்வதனால் கிடைக்கக் கூடியதல்ல. இஃது இப்படியிருக்கட்டும்!

நாம் இப்பொழுது இந்தச் சண்டையைப் பிடித்தே தீர வேண்டுமென்று நீ வற்புறுத்துகின்றாய் அல்லவா! நீ ஒரு காரியம் செய். கிரேக்கர்களையும் துரோஜர்களையும் அவரவர்கள் இடத்தில் உட்காரும்படி சொல்; இருதிறத்துச் சேனைகளுக்கும் இடையில் கொஞ்சம் காலியிடமும் இருக்கட்டும். அந்த ரணரங்கத்தில் அந்த வழக்கைத் தீர்த்துவிடலாம்.

ஸ்பார்ட்டன் அரசனுடன் இந்தப் பாரிஸ் பொருவான். (தனது மார்பைத் தட்டிக் கொள்கிறான்,) கட்டழகி ஹெலனும் அவளுடைய பாக்கிய விசேஷங்களுமே பந்தயம்!

ஆயுதப் பயிற்சியில் எவன் வெல்லுகின்றானோ அவனுக்கு அந்த அழகியும் தோற்றவனுடைய சகலமான ஆஸ்திகளும் கைவசமாக வேண்டும்.

இந்த நிபந்தனைகள் கொண்ட ஓர் ஒப்பந்தஞ்செய்து கொண்டு உன் சிரமங்களைத் தீர்த்து விடலாம்.

அதன்பின் ட்ராய் நாடு தன் செழிப்பான பிரதேசங்களையும், தோட்டம் துரவுகளையும், வயல்கள் வனங்களையும் கவலையின்றி சுகமாக அனுபவிக்கலாம். கிரேக்கர்களும் உயர்ந்த ஜாதிக் குதிரைகளுக்கும் விசேஷமான சுந்தரவல்லிகளுக்கும் ஸுப்பிரசித்தி பெற்ற தங்களது சொந்த தேசத்திற்குச் சென்று அவைகளைக்கண்டு களிக்கலாம்'' என்றான்.

இவன் இவ்வாறு சொல்லிய வீரமொழிகளைக் கேட்டு மகிழ்ந்து, ஹெக்டர் தனது கையிலிருந்த வேலைக் குறுக்காக மத்தியில் பிடித்துக்கொண்டு ட்ராயிலிருந்து வந்த இளம் வீரர்களை யெல்லாம் அடக்கி ஒழுங்காக உட்காரவைத்தான்.

அதன்பின் அவன் வெகு நிதானமாகவும், கம்பீரமாகவும் அடிமேல் அடி வைத்துக்கொண்டு எதிர்க்கக்ஷிக்காரர்களான கிரேக்கர்களை நோக்கி முன்சென்றான். அவ்வாறு சிறிதும் பய மின்றி வந்த அவனைக் கண்ணுற்ற கிரேக்கர்கள், தங்கள் கையில் அகப்பட்ட கற்களையும் அம்புகளையும் அவனை நோக்கிச் சரமாரி யாய்ப் பொழிந்தனர். அவை அவனது தலையைச் சுற்றி நாற்புற மும் விழுந்தன.

அப்பொழுது மகாராஜனான அதிரிதீசன் தன் சைன்னியங் களை நோக்கி "வீரர்களே! சற்றுப் பொறுங்கள். உங்களது வில்லம் புகளை ஒரு புக்கத்தில் வையுங்கள். ஹெக்டர் ஏதோ சமாசாரம்

சொல்ல வருகின்ருன். நம்மிடம் பேச வருகின்ருன். அவன் அணிந்துள்ள மாலையைப் பாருங்கள். அது யுத்தத்திற்கு வருபவன் அணியும் மாலையல்லவென்று, நன்ருகத் தெரிகின்றதே'' என்ருன்.

சர்வாதிகாரியான அவன், இட்ட ஆணையைச் சிரமேற் கொண்டவர்களாய், கிரேக்கர்கள் அனைவரும் அக்கணமே தங்கள் சேஷ்டைகளை அடக்கிக் கொண்டு அமைதியடைந்தனர். தாங்கள் ஆரம்பித்த விற்போர் கற்போர்களையும் நிறுத்தினர்.

அதன்பின் ஹெக்டர் அந்த இரண்டு சேஞ சமூகங்களின் மத்தியில் நின்றுகொண்டு, அவ்விரண்டையும் தன் விழிகளால் நன்ருக உருட்டிப் பார்த்துப், பின்பு அவ்விரு கக்ஷியாரும் கேட் கும்படி பின் வருமாறு உரைத்தான் :

''துரோஜர்களே! கிரேக்கர்களே! இந்த யுத்தத்திற்குக் காரண பூதனை பாரிஸ் என்பவன் என்ன சொல்லுகின்ருன் என்பதை நீங்கள் அனைவரும் கேளுங்கள். பளிச்சென்று பிரகாசிக்கும் உங்கள் வாள்களை அவற்றின் உறைகளில் போட்டு விடுங்கள். உங்கள் ஈட்டிகளையும் வேல்களையும் இந்த இளகிய களத்தில் நட்டு விடுங்கள். இங்கு இரு திறத்துச் சேனைகளுக்கும் இடையிலுள்ள இந்த மத்யஸ்தானத்தில் இரண்டு சேனைகளுக்கும் முன்பாக, அவன் ஸ்பார்ட்டன் அரசனுடன் துவந்த யுத்தம் செய்ய விரும்பு கின்ருன். தைரியமிருந்தால் அந்த ஸ்பார்ட்டன் அரசன் வரட்டும். இந்த யுத்தத்தில் வெற்றி பெறுபவன் இந்த யுத்தத்திற்குக் காரண மான ஹெலனையும் அவளிடமிருந்து அபகரிக்கப்பட்ட ரூபலா வண்ய சௌந்தர்யங்களான சகல சம்பத்துக்களையும் அடை யட்டும் என்கின்ருன். வெற்றி பெற்றவன் சகலமான பாக்கியங் களுடன் விளங்குவான். அதன்பின் இரு திறத்தாரும் தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குப் பிரிந்து செல்லலாம்'' என்ருன்.

அப்பொழுது இரு திறத்துச் சேனைகளும் சிறிதும் சந்தடி யின்றிச் சற்று நேரம் மௌனமாயிருந்தன. கடைசியாக ஸ்பார்ட்டன் அரசன் பின் வருமாறு பதிலுரைத்தான் :

''வீரர்களே! எனக்கு நேர்ந்துவிட்ட தீராத பெருத்த கஷ்ட நஷ்டங்களை முன்னிட்டுக் கொண்டல்லவா உலகமே இந்தப் பெருத்த யுத்தத்தில் இறங்கிவிட்டது. ஆதலால் நான் சொல்லும் என் வார்த்தைகளையும் கொஞ்சம் கேளுங்கள்! யுத்த களத்திற் செய்ய வேண்டிய காரியங்கள் அனைத்தையும் எனக்கே விட்டு விடுங்கள். அவற்றை நானே செய்கின்றேன். என்னைத்தானே இந்த பாரிஸ் கெடுத்தான்? ஆதலால் இந்த யுத்தம் முழுவதையும் நானே செய்வேன். எல்லாம் விதிப்படி நடக்கும். தனது சத்துரு வின் ஆயுதங்களால் வெட்டுண்டு மடிய வேண்டியவன் மடிந்தே போவான். அதில் சந்தேகமில்லை. அதன் பின் மீந்தவ ரெல்லாம் ஆபத்துக்களின்றிச் சுகமாக வாழலாம். ஆதலால் துரோஜர்களே! உங்களது தேச வழக்கப்படி பூமிக்குப் பலியிட

ஒரு கறுத்த ஆட்டையும் சூரியனுக்குப் பலியிட ஒரு வெள்ளை ஆட்டையும் ஆக இரண்டு ஆடுகளை வெட்டிப் பலியிடுங்கள். நாங்களும் அபராஜிதரான ஜோவ் பகவானுக்குப் பலியிடுவதற்கு உரித்தான ஓர் ஆட்டைப் பொறுக்கி யெடுத்துக் கொண்டு வருகின்றோம்.

கண்ணியமுள்ளவரும் விருத்தருமான பிரியம் மகாராஜா வானவர் ஆழ்ந்து யோசனைகள் செய்து, நம் வழக்குக்களைத் தீர்த்துக் கொண்டு சமாதானப்பட்டுப் போவதற்கு இதுதான் நல்ல வழியென்று இதற்கு அனுமதி தரட்டும். அவருடைய மக்கள் நம்பத் தகாதவர்களாகவும் தலைகால் தெரியாமல் தர்க்கிப்பவர் களாகவும் இருக்கின்றனர்.

இளமையின்பம் நிலையில்லாதது; அறிவில்லாதது; முதி யோர் மனத் தெளிவுடையவர்கள். அவர்கள் செய்யுங் காரியங் களும் சீராக முடிகின்றன. முதுமைப் பருவமெய்துபவர் ஞான வான்களாகவும் மற்றையோரது நன்மதிப்புக்கும் கண்ணியத் துக்கும் பாத்திரராகவும் ஆகின்றனர். அவர்கள் விஷயங்களை யெல்லாம் ஆற அமர விசாரித்து அவற்றின் குணதோஷங்களைத் தெளிவாக அறிவார்கள். முன் நடந்த விஷயங்களையும் இனி நடக்கவிருக்கும் விஷயங்களையும் அறிவார்கள். இவ்வாறு இரு கக்ஷிகளையும் ஆராய்ந்து பக்ஷபாதமில்லாமல் சமன் செய்து சீர் தூக்குங் கோல்போல் அமைந்து ஒருபாற் கோடாமல் அனைவருக்கும் அறம்புரிபவர்களாக ஆவார்கள்" என்றான்.

நற்காலம் பிறக்குமோ வென்று ஏங்கியிருந்த இரு திறத்துச் சேனைகளிலுமிருந்த பல ஜாதி ஜனங்களும் இந்த வசனங்களைக் கேட்டு உற்சாகங் கொண்டு, தங்கள் இரதங்களிலிருந்து கீழே இறங்கித் தங்கள் குதிரைகளையும் போர் முனையிலிருந்து திருப்பி அவற்றின் லாயங்களில் கொண்டு சென்று நிறுத்தினர். பின்பு அவர்கள் அனைவரும் தங்கள் போர்க்கவசங்களைக் கழற்றினர். பளிச்சென்று பிரகாசித்த தங்கள் ஆயுதங்களையும் அந்தக் கன்னங் கரேலென்று விளங்கிய கடற்கரையில் அடுக்கி வைத்தனர். பின்பு அவர்கள் ஒன்றாய்க் கலந்து தங்களுக்கு இடையிலிருந்த காலி நிலத்தை வளைத்து அதைச் சுற்றிலும் தங்கள் ஈட்டிகளை நட்ட னர். சமாதானத்தைக் கோரிச் செய்யப்பட்ட இந்த ஏற்பாடு களெல்லாம் ஆனபின், மேலே நடக்கவிருந்த ஆட்டுப் பலியைப் பார்ப்பதற்காகப் பிரிஜியன் அரசனை அழைத்துவர இரண்டு தூதர்கள் ட்ராய்க்குச் சென்றனர்.

அக்கணமே அபராஜிதரான ஜோவ் பகவானுக்குப் பலி யிடுவதற்காக ஓர் ஆட்டுக் குட்டியைக் கொண்டுவர வேண்டு மென்று கால்திபியஸ்ஸும் கிரேக்கர்களுடைய கப்பல்களை நோக்கி ஓடினான்.

இவ்வாறு காரியங்கள் நிகழ்ந்து வருகையில், சஞ்சல ஸ்வரூபியும் நினைத்த உருவத்தை எடுத்துக்கொள்ளக் கூடியவளுமான வானவில்லரசி பிரியம் வம்சத்தில் வந்த அதிரூபலாவண்ணியங்களுள்ள லயோதசியைப் போல் உருவமும், முகமுங்கொண்டு, ஆகாய வீதி வழியாக எழில் வாய்ந்த ஹெலனை நோக்கிப் பறந்து சென்றாள். அப்பொழுது ஹெலன் தன் அரண்மனையில் தன் நெசவுத் தரியில் நெய்து கொண்டிருந்தாள். அவள் தன் பொன் மயமான தரியில் தன் சங்கட சம்பவங்களையே பாவு நூலாகவும் காலாந்தகமான தன் கண்ணின் கருவிழிகளில் உற்பத்தியானதும் தன்னை வியாஜமாகவுமுடைய துரோஜன் யுத்தத்தைத் தார் நூலாகவும் பாவித்துக்கொண்டு ஒரு புடவை நெய்து கொண்டிருந்தாள்.

வர்ணங்களிட்ட வில்லையேந்திய அந்த தேவியானவள் அவளை நோக்கி, "ஹெலன் இங்கே வா, இதோ கீழே நடக்கும் இந்த அற்புதமான காக்ஷியையும் பார்! நல்ல கட்டுள்ள தேகம் படைத்த ஒவ்வொரு கிரேக்கனும் வலியுள்ள ஒவ்வொரு துரோஜ வீரனும் ஒருவரையொருவர் கண்டால் சண்டை பிடிக்கவேண்டுமென்று துடித்து வந்தனரே. இப்பொழுது அவர்கள் தங்கள் ஈட்டிகளை உறையில் போட்டுவிட்டனர். தங்கள் கவசங்களின் மேல் சாய்ந்து கொண்டுவிட்டனர். யுத்தம் முடிந்து விட்டது. யுத்த களமும் நிசப்தமாயிருக்கின்றது. பாரிஸும் ஸ்பார்ட்டன் அரசனும் மாத்திரம் தனித்தனியாகத் தங்கள் மின்னல்போன்ற வேல்களை யெறிந்து பொரப்போகின்றனர். உன்னிடம் அவர்கள் கொண்டுள்ள காதலையே காரணமாகவும் உன் சௌந்தர்யங்களை யடைவதையே சம்மானமாகவும் கொண்டு அவர்கள் ஒருவரோடொருவர் கை கலந்து சண்டை செய்து இந்த யுத்தத்தைத் தீர்த்து விடலாமென்றிருக்கின்றனர்." என்றாள்.

பல நிறங்கொண்ட அந்த மங்கையானவள் இவ்வாறு ஹெலனுக்குச் சொல்லியபொழுது, அவள் தன் புருஷன் தன்னிடம் வைத்திருந்த அன்பையும், தான் அவனிடம் அனுபவித்து வந்த சுகங்களையும் நினைத்து உருகினாள். அவள் மனம் கொதித்தது. தன் ஜன்ம தேசமும் தாய் தந்தையரும் மற்றும் முன்பு தனக்குப் பிரியமாயிருந்த சகலமான விஷயங்களும் வேகமாக ஒன்றன்பின் ஒன்றாக அடித்து விழுந்துகொண்டு அவளது ஞாபகத்திற்கு வந்தன. அவள் அவைகளை நினைத்து உருகி முத்துப்போன்ற கண்ணீர் வடித்தாள்.

பின்பு அவள் பனியை நிகர்த்த ஒரு துகிலினால் எழில் வாய்ந்த தன் முகத்தை மூடிக்கொண்டு, மெதுவாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, தன் தரியிலிருந்து எழுந்தாள்.

பின்பு அவள் ஸ்கியன் கோட்டை வாசலை நோக்கி மெதுவாக நடந்து சென்றாள். அப்பொழுது அவளுடைய தாதிகளாகிய கிளிமினியும் இதிரையும் அவளுக்குத் துணையாகப் பின்னால் சென்றனர்.

அங்கு பிரியம் மகாராஜாவின் பிரஜைகளில் முன்வைத்து எண்ணப்படுபவர்களும் பிரியத்தின் பிரீதிக்குப் பாத்திரர்களுமான துரோஜ சமூகத்துப் பெரிய தனக்காரரெல்லோரும் கூடியிருந்தனர். எல்லோருக்கும் முன்பாக மகாராஜனும் அவனுக்கு அடுத்தாற் போல் தைமூட்டிஸ் என்பவனும் இருந்தனர். மந்திராலோசனை கள் சொல்வதில் சிறந்தவராக வெகுகாலம் உழைத்த லாம்பஸ் ஸூம் கிளேட்டியஸ்ஸூம் ஒருகாலத்தில் மகா வீரர்களாக விளங்கி யிருந்த பாந்தஸ், ஹிஸித்தியான் என்பவர்களும் இருந்தனர். அவர்களுக்கு அடுத்தாற்போல் அதிகௌரவமாக விளங்கி வந்த அந்தச் சபையோர்களே அதி புத்திமான்களென்று மதித்து வந்த அதி கம்பீரமான அந்தினரும் ஞானவானான யூகலேகன் என்பவ ரும் சுவர்களின் மேல் சாய்ந்து கொண்டு, சூரியன் முன்னால் வெயில் காய்ந்து கொண்டிருந்தனர்.

இவர்கள் அனைவரும் பெரியவர்களே. இவர்கள் இரத்த வெள்ளம் பெருகும் சண்டை சச்சரவுகளிலிருந்து விலகிக்கொண்ட வர்கள். காலங்கண்ட கிழவர்கள். முதிர்ந்த ஞானமுடையவர்கள். பழைய விஷயங்களையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு தங்களது மீந்த காலத்தைக் கழித்து வந்தவர்கள். வெய்யில் காலத்தில் களிக்கும் தத்துக்கிளிகளைப் போல் சந்தோஷிப்பவர்கள். ரத்தப் பசையில்லாதவர்கள். தாழ்ந்து சோர்ந்த குரலில் தங்கள் சொற்களை உரைப்பவர்கள்.

ஸ்பார்ட்டன் ராணியானவள் அந்தக் கோட்டையின் சமீ பம் வந்தபொழுது இந்தக் கிழவர்களுங்கூட அவளது அழகைக் கண்டு மயங்கினார்கள்! இவ்வளவு அழகைக் கண்டு மயங்காமல் தப்புவது முடியாத காரியந்தான் என்று அவர்கள் தம் தம் மனத் தில் தீர்மானித்துக் கொண்டனர்.

“இவ்வளவு திவ்யமான ரூபலாவண்யங்களுடைய கட்டழ கிக்காக இந்த உலகமே ஒன்பது வருஷகாலம் கக்ஷிப் பிரதிகக்ஷிக ளாகப் பிரிந்து போராடுவதில் என்ன அதிசயம்! ஓர் அதிசயத் தையும் காணோம்?!

அவள் வனப்புக்களின் வசீகரமென்ன? அவள் கம் பீரப் பார்வையென்ன? அவள் ஒரு தேவியைப் போலவே நடக் கின்றாள். ஓர் அரசியைப் போலும் விளங்குகின்றாள்! என்றாலும் தெய்வமே! எங்களது குலத்தைக் கெடுக்கவந்த இந்த திவ்ய ரூபத்தை இங்கு விட்டு அகற்றுவீராக. துரோஜர்களது வம்சம் அழியாமல் காப்பாற்றுவீராக” என்று உரத்துக் கூவினர்.

அப்பொழுது அதி விருத்தனான பிரியம் அவளுக்கு முகமன் கூறி வரவேற்று “என் மகளே இங்கு வா; உன் தகப்பனான என் சமீபத்தில் வந்து மலர்ந்த முகத்துடன் சுகமாக உட்கார்ந்து கொள்! அதோ அந்தக் களத்தில் உன் பழைய சிநேகிதர்களும் உறவினர்களும் இருக்கின்றனர். அவர்களைப் பார்! நாம் இப் போது அனுபவிக்கும் கஷ்டங்களுக்குத் தெய்வ நியமனந்தான்

காரணமேயன்றி நீயோ அல்லது நீ செய்த யாதொரு குற்றமோ காரணமல்ல. தெய்வங்களே இந்தச் சேனைகளையும் இவ்வளவு ஜனங்களையும் இவ்வாறு ஆட்டிவைக்கின்றன. ட்ராய்க்கு விரோதிகளான தெய்வங்கள் அந் நகரையழிக்க யோசித்திருக்கின்றன.

இப்போது நீ நிமிர்ந்து பார்த்து அதோ அங்கே வெகு தூரத்தில் நிற்கின்ருனே அந்த கிரேக்கன் யார் என்று சொல், நான் கிழவனுனுலும் அவன் என் கண்ணுக்குத் தெரிகின்ருன், அவன் வீரக்களையுடன் பளிச்சென்று விளங்கும் முகத்தையுடையவனுய் அதிகமாக உயர்ந்து அதி பயங்கரமான தோற்றத்துடன் ஒரு தெய்வம் போலவே விளங்குகின்ருன்! அவனிலும் உயரமாக உள்ள சிலர் இந்தக் காலத்தில் நடமாடி வருகின்றனர் என்ருலும், அவனுக்குச் சமமான கம்பீரமும் உன்னதமான தோற்றமும் உடையவர்கள் ஒருவரையும் நான் காணேன். அவன் ஒரு மகா ராஜனைப் போலும் தன் இராஜ்யத்திலேயே ஒப்புயர்வில்லாத பெரும் பேறு பெற்ற மகா பாக்கியவான் போலவும் விளங்குகின்ருன்'' என்ருன்.

அரசன் அவ்வாறு உரைத்து முடித்ததும் அந்த அழகி பின் வருமாறு பதிலுரைத்தாள் :

"என் தந்தையே! வெகு நாணத்துடனும் என் நடத்தைக்கு வெட்கியும் தங்களிடம் பயத்துடனும் பக்தியுடனும் நான் தங்களது சன்னிதானத்திற்கு வந்து விட்டேன்; என் தேசத்திற்கும் என்னைக் கட்டின புருஷனுக்கும் துரோகஞ் செய்து, அவர்களைத் துறந்து மதில்கள் சூழ்ந்த இந்த நகரத்திற்கு நான் ஓடி வந்ததற்கு முன், நான் செத்துப் போயிருந்தேனுனல் அது எவ்வளவோ நன்ருயிருந்திருக்குமே! தன் அழகினுல் ஆடவர்களை மயக்கித் தானும் கெட்டுப்போன மகாபாவஞ் செய்த இந்தக் கட்டையானது துக்கத்தினுலோ அல்லது தீராத பெரு நோயினுலோ அழிந்து போகும் வரை நான் என் சகோதரர்களையும் சிநேகிதர்களையும் எனக்குப் பிறந்த பெண்ணையும் விட்டு விட்டு அவர்கள் அனைவருக்கும் துரோகம் செய்து வஞ்சித்துப் பாரிஸின் மேல் மாத்திரம் வாஞ்சையும் அன்பும் உடையவளாய் வந்துவிட்டேனே என்று அழுது புலம்புவேன்.

தாங்கள் கண்ணுறும் அவர் அதிரிதீசர். இராஜாதி ராஜர்! ரணதீரர்! ராஜ தந்திரங்களிலும் அதி நிபுணர்! நான் மானங் கெட்டு மதியிழந்து போவதற்கு முன், என் சகோதரராக விருந்தவர். ஆஹா, அவரை இன்னும் சகோதரர் என்றே நான் கருத மாட்டேனு!'' என்ருள்.

அப்பொழுது பிரிய மகாராஜனுனவன் ஒரு தெய்வத்தைப் போல் விளங்கிய அந்த மனுஷ்யனை ஏற இறங்கப் பார்த்து ஆச்சரியப்பட்டு, பாக்கியவானுன அவனைப் பின்வருமாறு புகழ்ந்தான் :

"பாக்கியவானுன அதிரிதேசா! மேன்மேலும் அபிவிருத்தி யடையக்கூடிய நல் வினையுடன் பிறந்தவனே! ஒரு பிரம்மாண்ட மான ராஜ்யத்தைச் சீருடனும் சிறப்புடனும் அடக்கி ஆண்டு வரும் ஏகாதிபதியே! உனது ராஜ்யம் எவ்வளவு விசாலமானது! ஒப்பற்ற உனது பரிவாரத்தில் இருந்தவர்களில் இதுவரை எவ் வளவு பெயர்கள் மடிந்து போயினர்! அம்மம்ம அவர்களைக் கணக்கிடவும் முடியுமா? முன்ஞெரு காலத்தில் வெகு நாட்களுக்கு முன் பிரிஜியாவிலும் பிரமாண்டமான சேனைகள் இருந்தன. ஒட்டி ரியஸ் என்பவன் அந்நாட்டுச் சிங்காதனத்தில் அமர்ந்திருக்கையில் தெய்வத்திற்குச் சமானமான மிக்டன் என்பவன் அந்நாட்டுக் குதிரைப் படைகளைந் திரட்டிக் கொண்டு வந்த பொழுது, நானும் துரோஜர்களது சேனையைத் திரட்டிக்கொண்டு அவர்களுடன் சேர்ந்தேன்.

நாங்களனைவரும் புருஷர்களைப்போல் அச் சேனைகளை யெதிர்த்துப் பொருதோம். அப்பொழுது அந்தச் சேனைகள் வடித்த இரத்தமானது ஸாங்கார் நதியையே கலக்கிவிட்டது. அந்நதி இரத்த வெள்ளத்துடன் பெருகியது. ஆனுல் அந்தச் சேனைகளுக் கும் இந்த கிரேக்க சேனு சமூகத்திற்கும் சிறிதும் இணையில்லை. அணிவகுப்பிலும் ஸங்கியையிலும் அவை இந்தகிரேக்க சேனைக்கு மிகவும் குறைந்தவையாகவேயிருந்தன" என்று சொல்லிவிட்டு அவன் மறுபடியும் அந்த வீரர் குழாத்தைக் கண்ணுற்றுன். பின்பு அவன் ஹெலனை நோக்கி:

"தன் ஆயுதங்களைத் தரையில் எறிந்துவிட்டு நிற்கின் றுனே அவன் யார்? அவன் பரந்த மார்பும் மார்பைவிட அதிக விசாலமாக விரிந்துள்ள தோள்களும் உடையவனுய் விளங்குகின் றுனே அவன் யார்? அதிரிதேசன் மாத்திரம் அவனது தலைக்கும் மேலாக உயர்ந்து விளங்குகின்றுன் என்றுலும் அவன் அதிரிதேச னுக்குக் குறையாத கண்ணும் கருத்தும் கவலையும் உள்ளவனுகவே விளங்குகின்றுன். ரணரங்கம் ஒன்றிலிருந்து மற்ருென்றிற்கு வெகு விரைவாகச் செல்லுகின்றுன். எல்லோருக்கும் கட்டளையிடு கின்றுன். ஓர் ஆட்டு மந்தையின் தலைமையை வகித்துத் தன் ஆடுகளனைத்தையும் கவனித்துக்கொண்டு ஒய்யாரமாக மந்தை வெளியில் நடமாடிவரும் ஒரு கம்பீரமான ஆட்டுக் கடாவைப் போல் அடிமேலடி எடுத்து வைத்துக்கொண்டு நடக்கின்றுனே அவன் யார்?" என்றுன்.

ஹெலன் "தங்கள் தெளிவான கண்களுக்குப் பொறுக்கி யெடுத்தாற்போல் புலப்படும் அந்த வீரன் அதிஞானவானுன இத்தாக்கஸ் என்பவர், என்றும் விளையாத தரிசான ஒரு தீவில் பிறந்தவர். இந்தப் பிரதாப சீலரது ஜனனமே அத்தீவின் பெருமைக்குக் காரணமாகிவிட்டது. பரந்த உலகிலுள்ள அனை வரும் அபாரமான அவரது ஞானத்தைப் போற்றுவார்கள்" என்றுள்.

அந்த வார்த்தையைப் பிடித்துக்கொண்டு அந்திஞர் என்பவர் பின்வருமாறு உரைத்தார்.

“மகாராஜரே! ஜோவ் பகவானது கிருபையிலும் அதிதி சத்கார விதிகளிலும் நம்பியவர்களாய் கிரேக்கர்களது வழக்கை விளக்கிச் சொல்வதற்காக அந்த அற்புதமான மகா புருஷர் ட்ராய்க்கு வந்தபொழுது நான் அவரை நேராகப் பார்த்திருக்கின்றேன். மகாராஜஞன மனேல்லாஸனும் அதே காரியமாகத்தான் வந்தான். அதிதிகளாக வந்த அந்த அரசர்கள் இருவரும் எனது கிருகத்தில் தங்கியிருந்தனர். எனது கிருகத்தை அவர்கள் கௌரவித்தனர். நான் அவர்களது அங்க மச்ச அடையாளங்களை அறிந்துகொண்டேன். அவர்கள் மனேபாவங்களைக் கண்டு வியந்தேன். அவர்கள் ஆயுதப் பயிற்சியில் மிகவும் தேர்ந்தவர்கள். கலைகளிலும் வல்லவர்கள்.

மகாராஜரே! மனேல்லாஸன் எங்களெதிரில் நேராக நிமிர்ந்து நின்ருன். நாங்கள் அவரை ஏற இறங்கப் பார்த்து வியந்தோம். யுலிஸ்ஸிஸ் தம் இடத்தில் உட்கார்ந்த வண்ணம் அவரிலும் அதிகமாக எங்களது மதிப்பைக் கவர்ந்தார்! அத்ரியஸ்ஸின் புத்திரன் சபை நடுவே நின்று தன் மொழிகளையுரைத்த பொழுது அவனுடைய நியாயங்கள் சரியானவையாகவும் மொழிகள் தெளிவாகவும் சுருக்கமாகவும் அர்த்த புஷ்டியுள்ளவைகளாகவும் தோஷமில்லாதவைகளாகவும் இருந்தன. அவன் வரம்பு கடந்த சொல் ஒன்றுகூடச் சொல்லவில்லை. காரியமயச் சொல்லவேண்டிய வார்த்தைகளை மாத்திரமே சொன்ஞன்.

அதன் பின் உயர்ந்த கருத்துக்கள் நிறைந்த தம் வசனங்களையுரைக்க எழுந்த யுலிஸ்ஸிஸ் குளிர்ந்த பார்வையுடன் தரையை உற்றுப் பார்த்துக்கொண்டு ஒரு சொல்வன்மையில்லாதவனையோ அல்லது ஊமையையோ போல் சிறிது நேரம் நின்ருர். அவர் தம் தலையை உயர்த்த வில்லை. செங்கோலேந்தியிருந்த தம் கையையும் நீட்டவில்லை! ஆனல் அவர் பேச ஆரம்பித்த பொழுது அவரது வாயினின்றும் வந்த வார்த்தைகள் ஆஹா! எவ்வளவு அலங்காரமாக வெள்ளம் போல் பிரவகித்தன! ஒரு மலையினின்று கீழே வழிந்து வரும் பனித்தூள்களைப்போல் மிருதுவாகவும் தங்கு தடையின்றியும் அவர் மொழிந்த சோர்வில்லாத சொற்கள் மடமடவென்று அவரது வாயினின்றும் வழிந்தன. அவை சிறிதும் சிரமமின்றியும் வெகு லகுவாகவும் திறமாகவும் கேட்டோரது மனதையுருக்கி, அவர்களது மனத்தில் ஆழப்பதிந்து விட்டன. நாங்கள் அவற்றைக் கேட்டு அதிசயித்தோம். ஆச்சரியக்கடலில் ஆழமாக அழுந்தியே போனேம்! எங்கள் கண்கள் செய்த இகழ்ச்சியை எங்கள் காதுகள் கண்டித்தன” என்ருர்.

பின்பு பிரியம் அரசன் மறுபடியும் அந்தக் களத்தைக் கண்ணுற்று “பிரமாண்டமான பலமுடையவஞகவும் மற்றெல்

லோரையும் விட அதிகத் திடமான தோள்களுடனும் உயர்ந்த ஆகிருதியுடனும் அதோ விளங்குகின்ருனே அவன் யார்?'' என்ருன். அப்பொழுது அந்த அழகிற் சிறந்த அழகி

"அவர் அஜாக்ஷர். மகா பலவான். பலவான்களான பல வீரர்களுக்குச் சமானமான பலமுடையவர். கிரேக்கர்களது சக்திக்கும் பெருமைக்கும் காரணமாயிருப்பவர்!

இன்னும் பாருங்கள்! அதோ அங்கு வட்டவடிவங் கூடியிருக்கும் கீரிட்டன் வீரர்களின் மத்தியில் இதோமினீயஸ் என்பவர் உயர்ந்து விளங்குகின்ருர். அவர் ஒரு தெய்வத்திற்கே சமானமானவர். மகாபலசாலி. முன்பு ஒரு கால் ஸ்பார்ட்டன் கரையில் மனேல்லாஸனுடன் இருக்கையில் நான் அவரைப் பார்த்திருக்கிறேன். மற்றையோர்களையும் நான் அறிவேன்.

அவர்கள் அனைவரின் பெயர்களையும் நான் ஒழுங்காகச் சொல்லுவேன். அவர்கள் அனைவரும் வல்லமையுள்ள வீரர்கள். மகா பலசாலிகள் என்று பிரசித்தி பெற்றவர்கள்!

என்ருலும் இந்தப் பிரமாண்டமான கூட்டத்தில் இரண்டு வீரர்களை மாத்திரம் நான் காணவில்லை. அவர்களை நான் வெகு தூரம்வரைத் தேடிப்பார்த்தும் அவர்கள் என் கண்களுக்குப் புலனுகவில்லை. எனது சிரமம் வீணே ஆகிவிட்டது!

காஸ்டர், பாலிக்ஷர் என்னும் அவர்கள் சுத்த வீரர்களில் முன்வைத்து எண்ணப்படுபவர்கள். ஒருவர் தரையில் நின்று பொருவார். மற்றவர் குதிரை மீதிருந்து கொடும்போர் புரிவார். அவர்கள் இருவரும் என் உடன் பிறந்தவர்கள். நாங்கள் எல்லோரும் கடற்கரையோரமுள்ள ஒரே ஊரில் பிறந்தோம். ஒரே வீட்டில் வளர்ந்தோம். ஒரே தாயின் வயிற்றில் பிறந்தோம். அந்தத் தலைவர்கள் இந்தச் சண்டையும் சச்சரவும் நமக்கு எதற்கு, நாம் இங்கேயே சுகமாக இருக்கலாம் என்று நினைத்துத் தங்கள் சொந்த ஊரைவிட்டுக் கடலைக் கடந்து தூரமாகவுள்ள இந்த ட்ராய்க்கு வர மறுத்து விட்டார்கள் போல் தோன்றுகின்றது. அல்லது அவர்கள் தங்களது சகோதரிக்குப் பரிந்து சண்டைக்கு வருவது தங்களுக்கு குறைவென்று நினைத்துப் பேரும் புகழும் தருவதான வேறு யுத்தங்களுக்குச் சென்றிருக்கலாம்'' என்ருள்.

தன் சகோதரர்களுக்கு நேர்ந்து விட்ட கதியை அந்த அழகி அப்பொழுது அறியாள். அதனுல் தான் அவள் அவ்வாறு பேசினுள். அவர்கள் தங்கள் ஜன்ம தேசத்துக் கடற்கரையில் அலங்கார மரியாதைகளுடன் குளிர்ந்த கல்லறையையே போர்வையாகக்கொண்டு மௌனமாக உறங்கிக் கிடந்தனர். யுத்த சம்பந்தமான வார்த்தைகள் அவர்கள் காதுகளில் விழுவதும் அறவே நின்று விட்டது.

இவ்வாறு இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், ஜனங்கள் திரளாகக் கூடியிருந்த அந்தப் பட்டணத்துத்தெருக்களின் வழியே, அரசனுடைய ஏவலாளர்கள் நன்குக ஊறிய சாராயத்தையும் பலியிட உத்தேசித்திருந்த மிருகங்களேயும் கொண்டு வந்தனர்.

தம் கைகளால் பொற்குடங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த இடியஸ் என்பவன் பூஜ்யனுன அந்த அரசனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான் :-

"துரோஜ ராஜ்யத்தின் பிதாவே! எழுந்திரும். இந்தக் கொடுஞ் சண்டை சச்சரவுகளை யொழித்து விட்டு, சாசுவதமான சமாதான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று சந்தோஷங் கொண்டுள்ள தங்கள் பிரஜைகள் தங்கள் வரவை எதிர்பார்க்கின் றனர். ஸகல ஜாதியாரும் தங்களை அழைக்கின்றனர். தங்கள் புத்திரன் பாரிஸும் ஸ்பார்ட்டா மன்னனும் வேல் களால் வளைத்த இந்தக் களத்தில் தங்கள் வேல்களைக்கொண்டு ஒரு துவந்த யுத்தஞ்செய்ய முன் வந்திருக்கின்றனர். அந்த யுத்தத்தில் வெற்றி பெறுபவனுக்கு எழில் வாய்ந்த ஹெலனும் தோற்றவனது சகல ஆஸ்திகளும் சேரவேண்டும் என்ற நிபந்தனை யுள்ள ஓர் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டு இந்தக் கஷ்டங்களைத் தீர்த்துவிட யோசித்திருக்கின்றனர். அதன் பின் ட்ராய் நகர் தன் செழிப்பான பிரதேசங்களைக் கவலையின்றி அனுபவித்து வரலாம். கிரேக்கர்களும் உயர்ந்த ஜாதிக் குதிரைகளுக்கும் விசேஷமான சுந்தராங்கிகளுக்கும் பிரசித்திபெற்ற தங்கள் சொந்த தேசத்திற்குச் சென்று அவைகளைக் கண்டு களிக்கலாம்" என்முன்.

அரசன் அந்த வசனங்களை விசனத்துடன் கேட்டுத் தன் வெண்ணிறமான குதிரைகளைத் தன் இரதத்தில் பூட்டும் படிக்குத் தன் பிரதானிகளுக்குக் கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே செய்தபின் அவன் அதில் ஏறித் தன் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டான். பின்பு பிரதானிகள் அந்தக் குதிரைகளை ஸ்கீயா கோட்டை வாசல் வழியே பிடித்துக் கொண்டு சென்றனர்.

யுத்த களத்தில் வந்து சேர்ந்த பின், அவ்விருவரும் இரதத் திலிருந்து கீழேயிறங்கி கிரேக்கர்களது கோஷ்டிக்கும் திரளாகக் கூடியிருந்த துரோஜர்களுக்கும் மத்தியில் மெதுவாக நடந்து சென்றனர்.

அப்போது ஞானவானுன யுலிஸ்ஸிஸ் தன் இடத்தை விட்டு எழுந்தான். மனிதர்களுக்கெல்லாம் அரசனும் அவ்வாறே செய்தான். அந்தக் களத்தின் இரு பக்கங்களிலும் ஓரோர் பூஜாரி நின்று கொண்டிருந்தான். அவர்கள் தங்களது கையிலிருந்த சாராயத்தை ஒரே பாத்திரத்தில் பெய்து அது முழுவதையும் ஒன்முய்ச் சேர்த்துக் கலக்கி அரசர்கள் இருவர்களது கையிலும் வடித்தனர். அதன் பின் கிரேக்க மகாராஜனுனவன் தன் இடுப்பில் தனது பெருத்த வாளின் சமீபமாக ஓர் உறையிற்

கிடந்த பட்டாக் கத்தியை உருவியெடுத்துப் பலியிட நியமிக்கப் பட்டிருந்த மிருகங்களின் சுருட்டை மயிர்களைக் கத்தரித்தான். அதன் பின் பூஜாரிகள் அவற்றைப் பங்கிட்டு அரசர்களிடம் கொடுக்க அவர்கள் அவற்றை ஏற்றுக் கொண்டனர். அதன் பின் ஜனுதிபன் வெகு கவனத்துடன் இருந்த அந்த கோஷ்டிகளின் முன்பாகத் தன் கைகளை உயரத்தூக்கி விரித்துக்கொண்டு தெய் வங்களை யழைத்துப் பின்வருமாறு உரத்துக் கூவினுன்:

"ஆதியானவரே! அமிதமான பராக்கிரமும் உடையவரே! எல்லோராலும் வணங்கப் படுபவரே! பரி சுத்தமான ஐடாமலையின் உச்சியிலிருந்து கொண்டு தமது ஆட்சியைச் செலுத்துபவரே! நித்தியரே! ஜோவ் தேவரே! ஒரு துருவத்திலிருந்து மறு துருவம் வரையில் உள்ள சகலமான சராசரங்களையும் கண்ணுற்றுக் கொண்டு கிழக்கிலிருந்து மேற்கே உருண்டு ஓடும் பிரகாசமான மண்டல ஸ்வரூபியே!

தாயே! பூமா தேவியே!

ஜலஸ்மிருத்தியுள்ள சகலமான ஜீவ நதிகளே!

மரித்தவர்களை அடக்கியாண்டு கொண்டும், அநீதியாய் ஆண்டுவரும் அரசர்களுக்கும் பொய்ப்பிரமாணங்களைச் செய்பவர் களுக்கும் பயங்கரமான கொடுந்துன்பங்களை உண்டாக்கிக் கொண்டும் பாதாள லோகத்தில் வசித்துவரும் பூத பிசாசங்களே!

தார்தாரிய தெய்வங்களே!

நான் சொல்வதை நீங்கள் எல்லோரும் செவிசாய்த்துக் கேளுங்கள்! சாக்ஷிகளாக விருங்கள்!

மகானுன மனேல்லாஸன் பாரிஸினுல் கொல்லப்பட்டு இந்தப் பாழான நிலத்தில் அழுந்திப் போய் விடுவானுனல், அவனது மஹிஷியையும் ஆஸ்தியையும் துரோஜன் ஸ்வீகரித்துக் கொள்ளட்டும். கிரேக்கர்களும் நீர்நிறைந்த ஆழ்கடலைக் கடந்து தங்களது சொந்த தேசத்திற்குத் திரும்பிச் செல்லட்டும்.

அப்படியின்றி என் உடன் பிறந்தானது வேலினுல் இந்த துரோஜன் காயம்பட்டு இரத்தத்தை வடிப்பானேல், இவனது ஆஸ்தியும் அந்த அழகான ஸ்திரியும் அவனுக்குச் சேரட்டும். இந்தப் பிரகாரம் நியாயமாகவுள்ள அபராதங்களை செலுத்துவ தாக இலியன் ஒப்புக்கொள்ளட்டும். அப்படியானுல் இந்த விசேஷமான தினத்தை உலகமானது என்றென்றும் மறவாமல் கொண்டாடிவரும்.

இந்த நிபந்தனைகளுக்கு பிரிஜியர்கள் ஒப்புக்கொள்ள மறுப் பார்களானுல் இந்த அநீதியானது ஆயுதங்களால்தான் தீர வேண்டும்.

இந்த வழக்கை மார்ஸ் பகவான் யுத்தகளத்தில் தீர்த்து விடுவார்'' என்ருன்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் இளங்குட்டிகளை வெட்டினுன். இரத்தம் வடிந்து கொண்டிருந்த அவற்றின் பிரதேங்களைப் புழுதியின்மேல் எறிந்தான். அப்பொழுது அவற்றின் சக்திக்குக் காரணமாயிருந்த ஆவியானது வெட்டுக் காயத்தின் வழியே வெளிக்கிளம்பி அவற்றின் அங்கங்களைத் துடிக்கத்துடிக்க நிலத்தின் மேல் கிடத்திவிட்டு ஓட்டம் பிடித்தது.

பின்பு அவர்கள் மேலே சொல்லிய பாத்திரத்திலிருந்த கலப்புச் சாராயத்தை அருந்தினர். அதிலிருந்தே தேவர்களுக்கு அர்க்கியமும் கொடுத்தனர்.

பின்பு அவர்கள் அனைவரும் ஒருமித்து விண்ணுலகை நோக்கி அடியில் வருமாறு பிரார்த்தித்தனர்:

“அதிபலவானுன ஜோவ் தேவரே! விண்ணுலகிலுள்ள தேவர்களே! கேளுங்கள்! இந்த ஒப்பந்தத்தை யார்யார் முதன் முதலாக மீறி நடக்கின்ருர்களோ, அவர்களது உதிரமானது இந்தச் சாராயத்தைப் போல் பெருகக் கடவது! தாகங்கொண்டுள்ள இந்தப் போர்க்களமும் அந்த உதிரத்தைக் குடித்துப் பாழாய்ப் போகக் கடவது. அவர்களுடைய ஸ்திரிகளெல்லாம் ஸங்கர காமிகளுக்கு உபசாரஞ் செய்பவர்களாக ஆகக் கடவர்! அவர்களுடைய ஆசைகளெல்லாம் நாசமடைந்து தூசிபோல் பறக்கக் கடவன!''

இவ்வாறு இருதிறத்துச் சேனைகளும் ஒன்ருய்ச் சேர்ந்து ஆணையிட்டுக் கொண்டன.

ஆனுல் ஜோவ்பகவான் அவற்றை ஒப்புக்கொள்ளவில்லை! அந்த ஆணைகளெல்லாம் காற்றில் கலந்துவிட்டன!

இவ்வாறு சடங்குகளெல்லாம் முடிந்தபின் பூஜ்யனுன பிரியம் எழுந்திருந்து தனது மனத்தில் பொங்கிப் பொழிந்து கொந்தளித்துக் கொண்டிருந்த துக்கத்தைப் பின்வருமாறு வெளியிட்டான்:

“கிரேக்கர்களே! துரோஜர்களே! இந்த ஒப்பந்தப்படி உங்கள் தலைவர்கள் பொரட்டும். நான் விருத்தன், பலம் குறைந்தவன். நான் இங்கே இருக்க விரும்பவில்லை. எனக்குத் திரும்பிச் செல்ல விடை கொடுங்கள். நான் அதோ அந்தக் கோட்டைக்குள் போய் விடுகின்றேன். நான் இந்த துவந்த யுத்தத்தையோ அல்லது என் அரும்புதல்வனுக்கு உண்டாகக்கூடிய ஆபத்தையோ பார்க்க ஆவலுள்ளவனுக விருக்கவில்லை. யாருடைய ஆயுதங்கள் வெற்றிபெறும், எந்த ராஜகுமாரன் வெட்டுண்டு வீழ்வான் என்பது தெய்வத்திற்குத்தான் தெரியும்! எல்லாம் தெய்வாதீனம்!'' என்ருன்.

இவ்வாறு சொல்லிவிட்டு அந்த விருத்தனை மகாராஜன் உடனே அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டுத் தன் தேரின்மேல் பலியிட்ட ஆடுகளை எடுத்து வைத்துகொண்டு தன் சாதுவான குதிரைகளின் கடிவாளக் கயிறுகளைப் பிடித்துக்கொண்டு அந்தினுருடன் தேரில் ஏறி ட்ராயை நோக்கிச் சென்றான்.

அதன்பின் தைரியசாலியான ஹெக்டரும் யுலிஸிஸும் துவந்த யுத்தம் நடத்த உத்தேசித்திருந்த இடத்தை ஒழுங்குபடுத்தி அதை வளைத்துக் கட்டினர். பின்பு அவர்கள் யார் முதன்முதலாகத் தனது வேலை ஆகாயத்தை நோக்கி எறிவது என்பதைத் தீர்மானிப்பதற்காகத் திருவுளச் சீட்டுக்களைச் சித்தம் செய்தனர். அதன்பின் அங்கு கூடியிருந்த ஜனங்கள் அனைவரும் தங்கள் கைகளை உயரத் தூக்கிப் பின்வருமாறு பிரார்த்தித்தனர் :

"என்றும் அழிவில்லாத ஜோவ் பகவானே! உயர்ந்த விண்ணுலகத்தையாளும் பெருந்தேவரே! உன்னதமான ஐடா மலை என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தில் ஆராதிக்கப்படுபவரே! இந்தக் கொடிய வழக்கிற்கு எங்களை ஆளாக்கியவன் யாராகவிருந்தாலும் சரி, அவனைக் கடுவினைக்கு ஆளாக்கிவிடும். அவனை அழிவில்லாத காரிருளில் தள்ளிவிடும்! எங்களுக்குள் உள்ள பேதங்கள் ஒழிந்துபோக வேண்டும்! சகல ஜாதியருமான நாங்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து சந்தோஷமுள்ளவர்களாய் சமாதான ஒப்பந்தங்கள் செய்துகொள்ள வேண்டும்!" என்றார்கள்.

அப்பொழுது ஹெக்டர் தன் கண்களைத் தனக்குப் பின்னால் திருப்பிக்கொண்டு, திருவுளச் சீட்டுக்களை ஒரு வெண்கலக் கிண்ணத்தில் இட்டு அதை வெகு விரைவாகக் குலுக்கினான். அப்படிக் குலுக்கியபொழுது பாரிஸின் சீட்டு மேலே குதித்து எழுந்து வந்ததால் ஹெக்டர் பாரிஸை நோக்கி "இதோ உன் சீட்டு! பளுவான வேலாயுதத்தை முதன்முதலாகச் சுழற்றவேண்டியது உனது தலைவிதி! இது தெய்வ நியமனம்!" என்றான்.

அதன் பின் இருதிறத்துச் சேனைகளும் அந்த யுத்தத்தைக் கண்ணுறுவதற்காகத் தம்தம் இடங்களில் உட்கார்ந்தன. ஒவ்வொரு வீரனும் தன் நீலநிறக் கவசத்தைக் கழற்றித் தன்னருகே வைத்தான். கம்பீரமான தோற்றத்தையுடைய உத்தம ஜாதிக் குதிரைகளும் அந்த துவந்த யுத்தம் நடக்கவிருந்த களத்தைச் சுற்றிலும் நின்றுகொண்டு கனைத்தன. அப்பொழுது அழகனான பாரிஸ் பளிச்சென்று மின்னிக்கொண்டு பிரகாசிக்கும் தன் ஆயுதங்களையணிந்துகொண்டு அந்த யுத்தத்திற்குச் சித்தமானான்.

வெள்ளிப் பூண்கள் கொண்டதும் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான இரண்டு ஊதாக்கவசங்களை அவன் தன் இரு துடைகளைச் சுற்றிலும் இறுகக் கட்டிக்கொண்டிருந்தான். லிக்கேயன் கவசத்தையும் அவன் தன் உடலில் தரித்துக்கொண்டி

ருந்தான். அது அவனது மார்பைக் கவர்ந்து அதற்குச் சரியாகப் பொருந்தியிருந்தது. அவன் தோளில் கட்டப்பட்டிருந்த பளிச் சென்று மின்னிய ஒரு வடமானது அவன் பக்கத்தில் ஜ்வலித்துக் கொண்டிருந்த அவனது வாளைக் காத்து வந்தது. அவன் இள முகத்தின்மேல் நன்ருக மெருகிடப்பட்ட ஒரு கிரீடமும் கவிந்திருந் தது. குதிரை மயிரால் செய்யப்பட்டிருந்த ஒரு கொண்டையும் அவன் தலையின் மேல் அசைந்தாடியது. அவன் ஒரு கையில் சித்திர அலங்காரங்களுடன் பளிச்சென்று மின்னிய ஒரு கோளவடிவமான கேடயத்தைப் பிடித்துக்கொண்டு மறுகையில் ஒரு கூரான ஈட்டியை எடுத்துக் குலுக்கி ஆட்டினுன்.

அவனைப்போலவே துரிதமாகவும் அவனுக்குச் சமானமான அலங்காரங்களுடனும் விளங்க வேண்டுமென்ற ஆவலுடன் ஸ்பார்ட்டன் வீரனும் தன் ஆயுதங்களையும் ஆபரணங்களையும் தன் அங்கங்களில் அணிந்துகொண்டான்.

அதன்பின் கிரேக்கர்களது கோஷ்டியிலும் துரோஜர்களது கோஷ்டியிலுமிருந்த வீரர்கள் தங்கள் ஈட்டிகளை நிலத்தில் நாட்டிவிட்டு, அந்த இரண்டு தலைவர்களின் ரூபலாவண்ணியங் களையும் ஆயுதங்களையும் ஆடையாபரணங்களையும் கண்டு வியந்தவர்களாய் அந்தக் களத்தைச் சுற்றி நின்றனர். அப்பொழுது கோபமிகுதியினுல் மேனி வெளுத்துக் களையிழந்து போயிருந்த அந்தத் தலைவர்கள் இருவரும் முன்வந்து, திகில் உண்டாக்குகின்ற அந்த ரண ரங்கத்தின் மையத்தையடைந்து தங்கள் பயங்கரமான வேல்களை வெகு வேகமாகச் சுழற்றினர்.

முதன்முதலாக துரோஜன் பளபளவென்று மின்னிய தன் ஈட்டியை எறிந்தான். அது அதிரிதேசனது கவசத்தை நோக்கி விர்ரென்று பறந்து சென்று அதைத் தாக்க அது கலகலவென்று சப்தித்தது. ஆனுல் அது கோளவடிவமான வெண்கலக் கேடயத்தைத் துளைக்க முடியவில்லை. அது அந்தக் கேடயத்தினின்றும் ஒரே பாய்ச்சலாய்ப் பின்புறமாகத் துள்ளிப் பாய்ந்து தரையில் விழுந்தது.

அதன்பின் அதிரிதேசன் தன் எதிரியின் மேல் எய்வதற்காகத் தனது கனம் மிகுந்த வேலையெடுத்து அதைப் பரீக்ஷை செய்தான். முதன்முதலாக அவன்பின் வருமாறு பிரார்த்தனைகளைச் செய்தான்:

“ஜோவ் பகவானே! மகாதேவரே! அக்கிரமமான இந்தக் கொடும் காமத்தைக் கண்டிக்கவும், இந்த துரோஜனை மூச்சுப்பேச்சின்றி புழுதியில் வீழ்த்தவும் எனக்குச் சக்தியைத்தாரும்! கிருபை செய்யும்! அக்கிரமியை அடியோடு அழியும்! நியாயமான என் கட்சியிலிருந்து கொண்டு எனக்கு சஹாயம் செய்யும்! அதிதிகளுக்கு விதிக்கப்பட்டுள்ள வரம்பு களைக் கடந்த இவனுக்குச் சரியான தண்டனையைக் கொடும்!

இந்த உதாரணத்தினுல் இனிமேல் வருபவர்களெல்லோரும் நெறி தவருமல் நடக்கவேண்டும்! உண்மையான நட்பின் பெருமைக்குக் குறைவு ஏற்படாமலும் இருக்கவேண்டும்!" என்று சொல்லிவிட்டுத் தன் ஈட்டியை யெடுத்துக் காற்றின் திசையையும் வேகத்தையும் கவனித்து அதற்குச் சரியாகத் தூக்கி நன்ருகக் குறிபார்த்து பாரிஸின்மேல் எறிந்தான். அவ்வாறு வேகத்துடன் எறியப்பட்ட அந்த வலிமிகுந்த ஈட்டியானது பாரிஸின் கவசத்தை ஊடுருவிச் சென்று துளைத்து அவனது மார்புக் கவசத்தையும் போர்வைகளையும் குத்திக் கிழித்துக் கடைசியாய்க் கீழ் நோக்கிச் சென்று அவன் அள்ளைப்புறமாகச் சரிந்து இறங்கியது.

ஆனுல் எதிராளியை எச்சரிக்கையுடன் கவனித்து வந்த துரோஜன் தன் தலையைக் குனிந்துக் கொடுத்து அந்தப் போட்டிக்குத் தப்பி யமனையும் ஏமாற்றி விட்டான்! தன் சத்துருவையும் சதித்துவிட்டான்!

ஆனுல் கடுங்கோபங் கொண்ட அதிரிதேசன் மாத்திரம் சிறிதும் பின்வாங்கவில்லை. அவன் பாரிஸின் சிரசாபரணத்தை நோக்கித் தன் வாளை வீசி நன்ருகப் புடைத்தான்! அப்பொழுது ஆபரணங்களுடன் விளங்கிய அந்தத் தலைப்பாகையானது நிலை குலைந்து அசைந்தாடியது. மிருதுவான அவனது கேடயமும் கையை விட்டு நழுவிக் கீழே விழுந்துவிட்டது. அதன் பிடியும் உடைந்து போயிற்று! சில்லுச்சில்லாய்ப் பிளவுண்ட அந்தத் துண்டுகள் அங்கிருந்த மணலின் மேல் பளபளவென்று மின்னிக் கொண்டு சிதறிக் கிடந்தன.

இவ்வாறு தன் சிரமங்களெல்லாம் வீணுய்விட்டதைக் கண்டு ஸ்பார்ட்டன் அரசன் தன் கண்களில் தீப்பொறி பறக்க மிகுந்த கோபங்கொண்டு சீறி ஆகாய மளாவிப் பரந்துள்ள வானுலகத்திலுள்ளோருக்கும் கேட்கும்படி உரத்துக் கூவித் தன் குறைகளை முறையிட்டான் :—

"அப்படியானுல் ஜோவ் தேவரை நம்புவதில் என்ன பிரயோசனம்? ஒரு பிரயோசனமும் இல்லை! அது வீண்தான். நன்னெறியில் ஒழுகுபவர்களுக்குத் தெய்வங்கள் சகாயம் செய்வதும் இப்படித்தானு? நமக்குச் செய்யப்பட்ட துரோகங்களுக்குப் பழி வாங்கிவிடவேண்டுமென்று நாம் யுத்தத்திற்குப் புறப்பட்டால், தெய்வங்கள் நமக்கு சகாயம் செய்கிறதில்லை. நமக்கு ஜயத்தைக் கொடுக்கவும் மறுத்துவிடுகின்றன. என் ஈட்டியினுல் அவன் பட்டு விழவில்லை. அவனுக்கு ஓர் அபாயமும் உண்டாகவில்லை. அதுதான் கீழே விழுந்துவிட்டது. பட்டாக் கத்தியும் பறந்து போய்விட்டது!" என்று வெகு ஆத்திரத்துடன் கதறிக்கொண்டு அவன் பாரிஸின் தலைக் கொண்டையைப் பிடித்து அவனைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு கிரேக்கர்களது குழாம் இருந்த பக்கத்தை நோக்கி வந்தான். அவன் பிடியிலிருந்து விடுபட வேண்டுமென்று

துரோஜன் வெகுவாய்த் திமிறினன். ஆனல் அவனுடைய பிரயத்தனங்களும் சிரமமும் வீணுயின. அவன் தலையில் அவனுடைய கிரீடத்தைச் சேர்த்துக் கட்டியிருந்த சித்திர வேலைப் பாடுகளுடன் விளங்கிய வடமே அவனை இவ்வாறு இழுத்துச் சென்றது !!

அவன் அவ்வளவில் அழிந்தே போயிருப்பான் ; அதிரிதேசனும் மகிழ்ச்சியடைந்திருப்பான். ஆனல் அது வீனஸ் தேவியினல் தடைப்பட்டுப் போயிற்று. ட்ராய் ராஜகுமாரனுடைய க்ஷேமத்தைக் குறித்துக் கவலை கொண்டு தவித்தவளாய் அவள், மனிதர்களது கண்ணுக்குப் புலப்படாமல் அங்குவந்து, அந்தப் பொன் வடத்தைத் துண்டித்து விட்டாள்! அதனல் பாரிஸின் காலியான கிரீடம் மாத்திரமே ஸ்பார்ட்டன் கையில் மிஞ்சி நின்றது ! அப்பொழுது அதிரிதேசன் அளவிடமுடியாத கோபமுடையவனய் அந்தக் கிரீடத்தைக் கிரேக்கர்களது மத்தியில் வீசியெறிந்தான்! அவர்கள் அவன் அவ்வாறு சிரமப் பட்டுக் கொண்டுவந்த அந்தப் பளபளவென்று மின்னிய வெற்றிப் பொருளான வெறும் மூடியைப் புன்னகையுடன் திருப்பித் திருப்பிப் பார்த்துப் பரீக்ஷித்தனர் !

பின்பு அவன் இந்தப் பழியைத் தீர்த்தே விடுவேன் என்று பெருந்தாகங் கொண்டு, தன் எதிரியின் மார்புக்குச் சரியாகக் குறி பார்த்து எறிய நினைத்துத் தன் சத்துருக்களுக்கு எமன் போன்ற தன் ஈட்டியை மறுபடியும் உயரத் தூக்கினன்.

அப்பொழுது காமதேவதையானவள் தன் அன்பிற்குப் பாத்திரனை அந்த துரோஜனை ஒரு மேகத்தால் மறைத்து விட்டாள் ! அவன் ஒருவருக்கும் புலனகவில்லை. தேவர்கள் சர்வ வல்லமையும் பொருந்தியவர்கள் அல்லவா ? அவர்கள் செய்யும் அனைத்தும் நியாயமும் ஆகுமே !

பின்பு அவள், மூச்சுவிட முடியாமல் அந்தக் களத்தில் துடித்துக்கொண்டு கிடந்த அந்த இளங் குமரனைத் தூக்கியெடுத்து அவனது கலியாண மண்டபத்திலிருந்த பள்ளியறைக்குக் கொண்டு சென்று அவன் படுக்கையில் மெதுவாகக்கிடத்தினள். அதன்பின் அவள் அவனுக்கு ருசியான பக்ஷணங்களைக் கொடுத்து அவனது தளர் வெல்லா மொழித்து உணர்ச்சியையும் உண்டாக்கினள். அவன் கிடந்த மண்டபமனைத்திலும் தேவ லோக வாஸிகளும் ஆவலுடன் முகரும் நறுமணங்களைக் கமழச் செய்தாள்.

காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்து வருகையில், மாதர்களிலெல்லாம் மிக்க காந்தியுடன் விளங்கியவளும் ஒப்பற்ற எழில் வாய்ந்தவளுமான ஹெலன் அந்த ட்ராய் கோட்டை மதிற் சுவர்களின் மேல் சாய்ந்து நின்று கொண்டிருந்தாள். அவள் அழகிற் சிறந்த

துரோஜன் வனிதைகளின் மத்தியில் ஓர் உத்தமமான ரத்தினம் போல் விளங்கினுள்.

அவ்வாறு இருக்கையில் களிப்பிலேயே கண்ணுகவிருந்த வீனஸ் தேவியானவள் ஒரு வயது வந்த கிழவியைப் போல் வேஷங் கொண்டு அவளை நோக்கி வந்தாள். அவள் பருத்தியைப் பிரித்துப் பஞ்சுபோல் பின்னுவதிலும் முறுக்கிய பஞ்சைத் திரிப்பதிலும் தேர்ந்தவளாகத் தோற்றினுள்.

அந்த தேவி ஹெலனை நோக்கி வந்து, நறுமணம் பொழிந்து வந்த அவளது பட்டு ரவிக்கையை லகுவாகப் பிடித்துக் குலுக்கி அவளது செவியில் மெல்லிய குரலில் பின்வரும் வார்த்தைகளை யுரைத்தாள் :—

"பாக்கியவதி! ஸுந்தரி! விரைந்து எழுந்திரு. உன் பிரியனுன பாரிஸ் உன்னை வருந்தியழைக்கின்ருன். அவன் யுத்தத்திலிருந்து க்ஷேமமாகத் திரும்பி வந்துவிட்டான். அரணுன மதில்களுள்ள அதோ விளங்கும் அந்தக் கோட்டைக்குள் இருக்கின்ருன். ஒரு தெய்வத்தைப் போல் காந்தியுடன் விளங்குகின்ருன். பரிமளங்கள் சொரியும் படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கின்ருன். உனக்கு அந்தப் படுக்கை நன்ருகத் தெரியுமே! உன் வரவை அவன் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ருன்! அவன் இப்பொழுது ஒரு சத்துருவின் பிடியிலிருந்து பிரிந்து வந்த ஒரு வீரனைப் போல் விளங்கவில்லை. பஹிரங்கமான தெருக் கூத்தில் உல்லாசமாக ஆடும் ஒரு கூத்தாடியைப் போலவே விளங்குகின்ருன்!" என்ருள்.

அந்த வசனங்களைக் கேட்டபொழுது ஹெலனின் அந்தராத்மாவானது ஒரேயடியாய்க் கலங்கிவிட்டது. அவள் பாரிஸிடம் அளவற்ற அன்புடையவளாக இருந்தாள் என்ருலும், அவனுக்காக மேற்கூறியபடி வெளிப்படையாய்ப் பரிந்து பேசிய கிழவியை அவள் அறவே வெறுத்தாள். அவளிடம் அவளுக்குச் சிறிதும் பிரியமிருக்கவில்லை. அந்தக் கிழவியானவள் வீனஸ் தேவியின் கருத்தும் நெருப்புப் பொறி பரக்கும் கண்களும் மார்பும் உடையவளாயிருந்ததைக் கண்டு அவள் "இந்தக் கிழம் சிற்றின்ப விலாஸினி தான்" என்று அறிந்து கொண்டாள். அந்த தேவி அப்பொழுது தன் பிழையைக் கண்டு திடுக்கிட்டுத் திகைத்துப் போயினுள். அவளது கன்னத்திலிருந்த இரத்தம் போன்ற சிவப்பு அக்கணமே மறைந்து பறந்து ஓடிப்போய் விட்டது! அவள் அந்தக் கிழவியை நோக்கி நடுநடுங்கிக் கொண்டு பின் வருமாறு பதிலுரைத்தாள் :—

"நீ இதுவரை எனக்குச் செய்த துரோகங்கள் போதாவோ? இன்னும் மோசங்களே செய்ய வேண்டுமென்பது உன் உத்தேசமா? மோசங்கள் செய்த நீ திருப்தியடைய வேண்டாமா? களிப்படைய வேண்டாமா? தங்கள் காதில் விழும் கற்பனைகள்

எல்லாம் உண்மைதானென்று அபலைகளான ஸ்திரி ஜனங்கள் எப்பொழுதும் நம்பி வரவேண்டுமா? நான் இன்னும் கடலைக் கடந்து வேறு எந்த ராஜ்யங்களுக்குச் செல்ல வேண்டும்? இன்னும் ஆசியாவிலுள்ள எந்த சுபிக்ஷமான பிரதேசத்திற்கு இந்த யுத்தங்களைக் கொண்டு செல்ல வேண்டும்? சொல்லு கேட்போம்! நான் ஏற்கெனவே பதிவிரதைகளின் தரும நெறியினின்றும் வழுவியாய் விட்டது.

இன்னும் வேறு யாரின் மேல் ஆசை கொண்டு மீண்டும் நான் அந்த நெறியைக் கைநழுவ விடவேண்டும் என்கின்ருய்?

இப்பொழுது உனக்குப் பிரியமாக வேறு ஒரு பாரிஸும் முளைத்து விட்டானே? அவன் யார் எங்கே யிருக்கின்ருன்?

அதிரிதேசர் இந்தக் கேவலமான யுத்தத்தில் வெற்றி பெற்றுத் தமது மனைவியாகிய என்னைச் சிறையினின்று மீட்டுத் திரும்பியடைந்து இங்கு விட்டுக் கடலைக் கடந்து என்னைக் கூட்டிச் சென்ருல் அதுவே எனக்குப் போதும்! என் பிரிவை உன் பாரிஸ் தரிக்க முடியாமல் வருந்துவாரைனல், நீ அவனது ஆசையைப் பூர்த்தி செய்யலாமே! நீ வீனஸ் தேவியாயிற்றே!

நீ உன் தேவலோக போகங்களைத் துறந்து விட்டுச் சதா துரோஜன் கரையிலேயே வேரூன்றியவளாக இருந்துவிடலாம்! அவனது சமீபத்தில் அவன் விருஷலியா யிருக்கலாம்! அவன் மனைவியாகவோ தாசியாகவோ விருக்கலாம்! விண்ணுலகை எட்டிப் பார்க்கவும் வேண்டாம்!

நான் இந்தப் பேடியைக் கண்ணெடுத்தும் பாரேன்! அவனது படுக்கையையும் அறவே வெறுக்கின்றேன்! அக்கிரமமான காம போகத்தை இனி நான் நாடேன்! இனி இந்த நிலையினின்று தவறினல் நான் ஊழிக் காலம் வரை இழி குழியிலேயேயன்ரே உழன்று வருவேன்? பிரிஜியன் ஸ்திரீகள் அனைவரும் தங்கள் ஆயுளளவும் என்னை நன்ருக நிந்திப்பார்கள்!

இந்தச் சமயத்தில் காம போகங்களைப் பற்றி நினைப்பதும் அனுசிதம்! சிறிதும் சரியல்ல! என் வேதனைக்கும் சங்கடத்திற்கும் நான் ஆழங்காணவில்லை! என் துக்கமும் மகா கொடியது"! என்ருள்.

இவ்வாறு ஹெலன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு பாபியன் பெருந் தேவியானவள் பிரமாதமாகக் கோபங் கொண்டு பின்வருமாறு அவளுக்குப் பதிலுரைத்தாள் :—

"உன் பாக்கியங்களுக்கெல்லாம் உற்பத்திஸ்தானமான பராக்கிரமமுள்ள பெருந் தேவியின் ஆணைப்படி நட! வீனஸ் தேவி உன்னைக் கைவிட்டு விட்டால் உன் ரூபலாவண்ணியங்கள் அனைத்தும் ஒருங்கே ஒரே ஓட்டமாகப் பறந்து ஓடிவிடும்! இது உன் ஞாபகத்தில் நன்ருயிருக்கட்டும்!

உன் கன்னம் வாடிப்போம்; கண்கள் குழிந்து சோர்ந்து போம்; நீ இதுவரை பேசியது போதும்! இனியும் என் எரிச்சல் களைக் கிளப்பாதே! அப்படிச் செய்வாயானால் இதுவரை உன் னிடம் எவ்வளவோ அன்பும் ஆதரவும் உடையவர்களாகவிருந்த உலகத்தாரை அதற்குப் பதின் மடங்கு அதிகமாக உன்னிடம் அஸூயையும் அருவருப்பும் உள்ளவர்களாக ஆக்கி விடுவேன்!

இப்போது உன்மேல் ஆசை கொண்டு உன்னைக் கவர்ந்து விட வேண்டுமென்று உலகமே இரண்டு கக்ஷிகளாய் பிரிந்து போரிடுகின்றது! நீ என் சொற்படி நடவாவிடில் அதே உலகம் உன்னைக் கண்ணெடுத்தும் பாராது. உன்னை வெறுக்கும். அப் பொழுது நீயும் இந்த அவமதிப்புக்கு ஆளோனோமே என்று வருந் துவாய்" என்றாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட பொழுது பெண்பாலாரெல் லோரிலும் பேரழகியாக விளங்கிய அவள் தன் மன நிலை குலைந்து, வீனஸ் தேவியின் யோசனைகளுக்கு இணங்கி, நாணித் தலை குனிந்து, ஒரு பட்டு வஸ்திரத்தினால் தன் திவ்வியமான முகத்தை மூடிக்கொண்டு தன்னுடன் இருந்தவர் அறியாமலும் மெதுவாகவும் அந்தக் கூட்டத்திலிருந்து பிரிந்து சிரிப்பும் களிப் புமே மணியமாயிருந்த அந்தத் தேவியின் பின் சென்றாள்.

அவ்விருவரும் அரண்மனைக்கு வந்து அதன் வாசலில் நுழைந்தபொழுது அங்குக் காத்திருந்த தாதிப் பெண்களெல்லாம் அவளைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு அவளுடைய கட்டளைகளை எதிர் பார்த்து நின்றனர்.

அவர்கள் அனைவரும் தங்களுக்கு நியமிக்கப்பட்ட காரியங் களைக் கவனிக்கச் சென்றபின் அழகிற்கரசியும் அந்த தேவியும் மாத்திரம் பாரிஸ் இருந்த உயர்ந்த மண்டபத்தின் மீது ஏறினர்.

அங்குச் சென்று சேர்ந்த பின், காமதேவியான ஜோவ் தேவரின் புத்திரி அந்த சுந்தரியை பாரிஸின் முன்னால் அவன் நன்றாகப் பார்க்கும்படி உட்கார வைத்தாள்.

அவன் அப்பொழுது அவளது அற்புதமான அழகையும் ரூபலாவண்ணியங்களையும் ஏற இறங்கப் பார்த்து வருகையில், அவள் கோபத்தீயுடன் ஜ்வலித்த தன் கண்களை ஒரேயடியாய்ச் சட்டெனத் திருப்பிக்கொண்டு பின்வருமாறு பேசலானாள்:—

"இப்பொழுது யுத்த களத்திலிருந்து புறங்கொடுத்து ஓடி வந்து மானத்தையும் வெட்கத்தையும் அறவே துறந்து இன்னும் உயிருடன் இருக்கின்றானே, இந்த வீரனைப் பார்க்கவா இவள் என்னைக் கூட்டி வந்தாள், இவனும் ஒரு வீரனா?

ஆஹா என் பிராணநாதர் என்று நான் முன்னொருக்கால் கருதிவந்த அந்த தைரியசாலியின் நெறிதவறாத அரைவாளினால் நீ வெட்டுண்டு மடிந்து போயிருந்தால் எவ்வளவோ நன்றா யிருந்திருக்குமே!

இந்தப் பாரிஸ், ஸ்பார்ட்டன் அரசனுடன் தனியாகத் துவந்த யுத்தம் செய்யப்போகிறேன் என்று துடித்தானே! பன் முறையும் குதித்து வந்தானே! தான் மகா பராக்கிரமசாலியென்று பெருமையடித்துக் கொண்டிருந்தானே!

அடே, எழுந்திருடா! இன்னும் ஒருமுறை சென்று உன் சத்துருவைச் சண்டைக்கு இழுத்து அவனுடன் திரும்பவும் சண்டை செய்துவிட்டு வாடா?

அதிரிதேசருக்கு ஆத்திரத்தையும் எரிச்சலையும் ஆக்கிரஹத் தையும் கிளப்படா.

ஐயோ உன்னை வெறுத்து நான் இவ்வாறு பேசினாலும் உன்னைத் திரும்பவும் சண்டைக்கு அனுப்ப இந்த ஹெலனுக்கு மனம் வரவில்லை! அவளது மனம் உன்னைக்கண்டு வருந்துகின்றது! உனக்கு யுத்தத்தில் பழக்கமில்லை. நீ படுகளத்தில் சட்டென்று பட்டு விழுந்து மடிந்துவிடுவாய் என்றே எனது மனது பதை பதைத்துத் தபிக்கின்றது'' என்றாள்.

அதைக் கேட்ட அந்த இளங்குமரன் பின்வருமாறு பதி லுரைத்தான்: "தேவீ! வடிவழகீ! சுந்தராங்கீ! சற்று பொறு நான் வெகுவாகக் காயங்கள் பட்டுக் கிடக்கின்றேன்! அது போதும், நீயும் என்னைத் தூஷிக்க வேண்டாம். என் சத்துருவானவன் இன்று பாலாஸ் தேவியின் சகாயத்தினால் என்னை வென்று விட்டான்! நமக்கும் நல்லகாலம் வரும்! அது வரும்பொழுது அவனை வென்று துரத்தி ஓட்டிவிடுவேன்! நமக்கு உதவி செய்ய விண்ணுலகில் தேவர்கள் இருக்கவே செய்கின்றார்கள். இல்லா மல் போகவில்லை.

அதெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். நாம் இப்போது காமலீலைகளைச் செய்துகொண்டு நமது காலத்தைச் சுகமாக கழிப் போம், வா!

மிருதுவாகக் காற்று வீசும் இந்தச் சமயத்தை நாம் சுகமாகக் கழிக்கவேண்டும். இன்பம் விரைவில் சென்று விடக்கூடியது. அப்படிச் செல்லவிடாமல் நாம் அதைக் கைப்பிடியாய்ப் பிடித் துக் கொள்ளவேண்டும். நாம் இருவரும் அன்புடன் ஒருவரை யொருவர் தழுவிக்கொள்ள வேண்டும். கட்டியணைத்துக்கொள்ள வேண்டும்!

என்னுடன் ஓடிவந்துவிட இசைந்துவிட்ட உன்னை நான் உன் காவலர்களைத் தோற்கடித்துவிட்டுப் பலவந்தமாய் ஸ்பார் டாக் கரையினின்றும் தூக்கிக்கொண்டு ஓடி, கிரினியாய்த் தீவில் உன்னுடன் சேர்ந்து ஈருடலும் ஓருயிருமாய் மெய்ம்மறந்து அமோக மாகக் களித்துச் சுகபோகமனுபவித்து மயங்கிக் கிடக்கையில் நான் இப்படியா இருந்தேன்! அதையெல்லாம் நீ ஒரேயடியாய் மறந்தேவிட்டாய் போல் தோன்றுகின்றது! உனக்கு அவைகளின் ஞாபகங்கூட இல்லையா?'' என்றான்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே வசீகரனை அந்தப் பிரிஜிப்பயல் சிற்றின்ப நுகர்ச்சியில் ஆவலுள்ளவனாய்த் தன் படுக்கையை நோக்கி பாய்ந்தோடினான். ஹெலனும் மெதுவாக நாணித் தலைகுனிந்து கொண்டு புன்சிரிப்புடன் அவனுக்குப் பின் சென்று கலையுடன் விளங்கிய அந்தக்காளையை இரு கைகளாலும் இறுகத் தழுவியணைத்துக் கட்டிக்கொண்டாள்.

இவ்வாறு இவ்விருவரும் காமலீலைகளைச் செய்துகொண்டு ஆனந்தக் கடலில் ஆழ்ந்து நீந்திக் கொண்டிருக்கையில், ஸ்திர புத்தியுள்ளவனான அதிரிதேசன் கடுங்கோபத்துடன் அந்த யுத்த களம் முழுவதையும் சுற்றிப் பார்த்தான். காடுகளுக்கு அரசனாக விருந்தும் பசியினால் வருந்தும் ஒரு சிங்கமானது தன் இரையைத் தேடிக்கொண்டு ஒரு பாலைவனத்தில் கர்ஜித்துக்கொண்டு செல்வதுபோல், அவன் பாரிஸை நாற்புறமும் துளைந்து துளைந்து தேடினான்! அவனை அழித்தே விடவேண்டுமென்ற ஆவலுள்ள வனாக விளங்கினான்! ஆனால் அந்த பாரிஸ் ட்ராய் சேனைகள் நின்றிருந்த அணியில் இருக்கவில்லை! அவனது சிரமமும் வீணே ஆயிற்று. பிணக்குழியைப்போல் வெறுக்கத்தக்கவனான அந்தப் படைக்கலந்தாங்கிய பேடியானவன் அந்தச் சமயம் தங்களது கோஷ்டியில் இருந்திருப்பானேல் அவர்களே அவனை அக்கணமே கோவீரனும் தங்களது சத்துருவுமான அதிரிதேசனிடம் ஒப்புவித் திருப்பார்கள்!

அதன்பின் ராஜாதிராஜன் தன் இடத்தைவிட்டு எழுந்து பின்வருமாறு உரைத்தான்: "துரோஜர்களே, தார்தார்களே! எதிர்க்கட்சியிலுள்ள பெரியோர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். அது நியாயமா அநியாயமா என்பதையும் ஆலோ சித்துத் தீர்மானம் சொல்லுங்கள். இப்பொழுது தெய்வ கிருபை யினால் நமது சகோதரனுக்கு ஜயம் உண்டாய் விட்டது. அந்த ஜயமும் அவனுக்கு நியாயமாகவே சித்தித்துவிட்டது. அவனுக்கு இரு கைகளும் ஜயக்கோலம் கொண்டு விளங்குகின்றன. இனிமேல் ஸ்பார்ட்டனுடைய சகலமான ஐசுவரியங்களையும் துரோஜர்கள் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்; ஆர்கிய ஹெலனும் தன்னைக் கட்டிய புருஷனைச் சேர்ந்துவிடவேண்டும். நாம் ஒப்பந்தம் செய்து கொண்டபடியே இலியனும் பிராயச்சித்தமாக நிச்சயிக்கப்பட்ட நஷ்ட ஈடான பணத்தை நியாயப்படி செலுத்திவிடவேண்டும். அப்படிச் செய்தால் வருங்காலத்தவர் அனைவரும் யுகாயுகங்கள் தோறும் இந்த தினத்தை விசேஷமான ஒரு தினமாகக் கொண் டாடுவார்கள்" என்றான்.

அவன் அவ்வாறு பேசி முடிந்ததும் அவனது கக்ஷியிலிருந் தோர் அனைவரும் அவனுடைய வார்த்தையை அங்கீகரித்து உரத்துக் கூச்சலிட்டு ஆரவாரித்தனர். அப்பொழுது அவர்கள் இட்ட சப்தமானது ஆகாயமெங்கும் பரவி வெகு தூரம் ஓடிச் சென்றது.

———:o:———

## நான்காம் அத்தியாயம்

# ஒப்பந்தத்தின் அழிவும் யுத்தத்தில் நிகழ்ந்த முதலாவது சண்டையும்

கதைச் சுருக்கம்: விண்ணுலகிலுள்ள தேவர்களெல்லாம் இந்த துரோஜன் யுத்தத்தை முன்னிட்டு ஒரு சபை கூடுகின்றனர்; இந்த யுத்தத்தை விடாமல் நடத்தவேண்டுமென்றே தீர்மானிக்கின்றனர். அதன்பின் துரோஜர்களும், கிரேக்கர்களும் செய்து கொண்ட ஒப்பந்தத்தைக் கலைத்துவிட்டு வரும்படி ஜூபிட்டர் பகவான் மினர்வாதேவியை அனுப்புகின்றார். அவள் போதனை செய்த பிரகாரம் பாண்டாரஸ் என்பவன் மனேலாஸனை நோக்கி ஓர் அம்பையெய்ய, அதனால் மனேலாஸன் காயமடைந்து விடுகின்றான். அந்தக் காயத்தை மாக்கோன் என்பவன் ஆற்றுகின்றான். இதன் மத்தியில் துரோஜ சேனையிலிருந்த சில வீரர்கள் கிரேக்கர்களைத் தாக்கி அடிக்கின்றனர்.

ஆகமனன் தன் சேனையை ஆளுவதில் பலவிதத்திலும் தேர்ந்த ஒரு சேனாதிபதியாகவே விளங்குகின்றான். அவன் அணி வகுத்து நின்ற தன் சேனையை ஆதியோடந்தம் பரிசை்ஷ செய்து தன் தளகர்த்தர்களில் சிலரைப் புகழ்ந்தும் வேறு சிலரை எச்சரித்தும் எல்லோரையும் உற்சாகப்படுத்துகின்றான். தம் சேனையை நன்றாகப் பழக்கி இருந்ததற்காக நெஸ்டார் விசேஷமாகப் புகழ்ந்து பாராட்டப்படுகின்றார். யுத்தம் ஆரம்பிக்கின்றது. இரு கக்ஷியிலும் ஏராளமான ஜன நஷ்டம் உண்டாகின்றது.

முந்திய அத்தியாயத்தில் சொல்லப்பட்ட நடவடிக்கைகள் நிகழ்ந்த இருபத்து மூன்றும் தினத்திலேயே இந்த அத்தியாய சம்பவங்கள் நிகழ்கின்றன. இந்த அத்தியாயத்திலும் இதன் பின் வரும் ஐந்தாம் ஆறும் அத்தியாயங்களிலும் ஏழாம் அத்தியாயத்தின் பெரும்பாகத்திலும் சொல்லப்படும் சம்பவங்களெல்லாம் அந்த இருபத்து மூன்றும் நாளிலேயே நடைபெறுகின்றன. இவையனைத்தும் ட்ராயின் முன்னுள்ள மைதானத்தில் நடைபெறுகின்றன.

இப்போது நாம் ஒலிம்பஸ்ஸில் நிகழ்ந்த சம்பவங்களைச் சிறிது கவனித்தல் வேண்டும்.

---

ஒலியுடன் ஜொலிக்கும் அந்த ஒலிம்பஸ் சபையின் கதவுகள் திறக்கப்பட்டன். அந்தச் சபையில் ஜோவ் பகவானுடன் சகலமான தேவர்களும் தங்கள் தங்கள் ஸ்வர்ண சிம்மாசனங்களில் அமர்ந்தனர். அப்பொழுது திவ்வியமான இளங்களையுடன் விளங்கிய சிரஞ்சீவியான ஹூபி என்பவள் பொன் கிண்ணத்தில் ஊதா நிறமுடைய சாராயத்தை விட்டு நிரப்பி அதை அச் சபையில் வீற்றிருந்த தேவர்களுக்கெல்லாம் வழங்கினாள். அந்த தேவர்

களெல்லாம் அந்த மதுவைக் குடித்துக்கொண்டே வெகுநாளாகச் சண்டைக்குக் காரணமாகவிருந்த ட்ராயைக் கவனித்து அதையே கண்ணுற்றவராயிருந்தனர்.

அப்போது ஜோவ் பகவானுனவர் பக்ஷபாதமுடையவளும் தன் பட்ட மகிஷியுமான ஸ்ட்டார்னியா தேவிக்குக் கோபத்தை யுண்டாக்க வேண்டுமென்று நினைத்தவராய் பின்வருமாறு பேச ஆரம்பித்தார் :

“ அத்திரியஸ்ஸின் புத்திரனுக்கு இப்பொழுது பராக்கிரம முள்ள இரண்டு தெய்வங்கள் சகாயம் செய்துவருகின்றனர். ஒருத்தி மகாதேவியான ஜூனோ ; மற்றொருத்தி யுத்தங்களின் அதிஷ்டான தேவதை. அவர்கள் புரிந்து வரும் உதவியையும் சொல்லுகின்றேன். அதைச் சற்றுக் கேளுங்கள் ! அவர்கள் இரு வரும் யுத்த களத்திற்கு வெகு தூரத்திலுள்ள இந்த விண்ணுலகத் தில் உட்கார்ந்த வண்ணம் இந்த யுத்தத்தில் செய்துவரும் தீரச் செயல்களைக் கண்ணுற்று வருகின்றனர். தங்களுக்கு இந்த யுத்தத்தில் ஆகவேண்டியது ஒன்றுமேயில்லை யென்ற பாவனை யுடன் அவர்கள் அந்த நடவடிக்கைகளை மேனேக்காகப் பார்த்து வருகின்றனர். அவர்களது உதவி எவ்வாறு அழகாக இருக்கிறது பாருங்கள்.

அழகியான வீனஸ் தேவியானவள் தன் அன்பிற்குப் பாத்திரனுன வீரனுக்கு எவ்வாறு உதவி செய்துவருகின்ருள் என் பதையும் சொல்லுகின்றேன் கேளுங்கள். இந்த இருவிதமான உதவிகளுக்கும் உள்ள பேதங்களை நீங்களே அறிவீர்கள் ! வீனஸ் தேவியானவள் இந்த யுத்தத்தில் தனது வீரன் படும் சிரமங்களில் ஒரு பாகத்தைத் தானே, ஏற்று வருகின்ருள். அவனுக்கு உண்டா கும் ஆபத்து ஒவ்வொன்றையும் தடுத்துவருகின்ருள். அவனுடைய க்ஷேமத்தில் சலியாத கவனம் செலுத்தி வருகின்ருள். கடைசியாக அவன் அதைரியப்பட்டு மனம் நெகிழ்ந்து போன பொழுதும் சமய மறிந்து அவள் அவனை ரக்ஷிக்கின்ருள். மகா வீரனுன அதிரி தேசன் இந்த யுத்த களத்தில் வெற்றிபெற்று கீர்த்தியுடன் விளங்கி ஞலும், வீனஸ் தேவி பாரிஸுக்குச் செய்துவந்த சகாயத்தினுல் அவன் தன் உயிரை இழக்காமல் தப்பிப்பிழைத்தான். ஆதலால் தேவர்களே ! நீங்கள் இந்த விஷயங்களை ஆற அமர ஆலோசனை செய்து இந்த வெற்றிக்குப் பின் இன்னும் என்ன விசேஷம் நடக்க வேண்டும் என்பதையும், இது கடைசியாய் எவ்வாறு முடிய வேண்டும் என்பதையும் சொல்லுங்கள். தேவர்களான நாம் இந்த இரண்டு கட்சிக்காரர்களுக்கும் சமாதானம் செய்து இவ்வாறு இரத்த வெள்ளம் பெருகும் இராஜ்யங்களைக் காப்பாற்றி விடுவது நல்லதா ? அல்லது பின்னும் அவர்களுடைய பழைய விரோதங் களைக் கிண்டிக் கிளறிவிட்டு யுத்தத்தை நீடித்து வளர்த்துவது நல்லதா ? தேவர்களெல்லாம் மனிதர்களது நன்மையைக் கோரு வார்களானுல் அதிரிதேசன் தனது மனைவியான அந்த ரூபவதி யைத் திரும்பிப்பெறலாம், பிரியம் மகாராஜனது கோட்டை கொத்

தளங்களும் பயமோ சண்டை சச்சரவுகளோ இன்றிச் செழித்து மேன்மேலும் கியாதியுடன் விருத்தியடைந்து விளங்கலாம். அவனுடைய கோட்டை வாயில்களின் வழியாகப் பல ஜாதியரான ஜனங்களும் திரள் திரளாக வெள்ளம்போல் போகலாம், வரலாம்'' என்றார்.

இவ்வாறு அவர் சொல்லியபொழுது தேவலோக ராணியானவள் மிகுந்த கோபங்கொண்டு, யுத்தங்களின் தேவியையழைத்து, அவளுடன் ரகசியமாய் யோசனைகள் செய்தாள். அவர்கள் இருவரும் மற்றைய தேவர்களை விட்டு விலகி ஓர் ஓரமாக உட்கார்ந்துக்கொண்டு ட்ராயை அழிக்க என்ன வழி என்று ஆழ்ந்து யோசனைகள் செய்தனர்.

மினர்வாவின் மனதில் மட்டற்ற மாத்ஸரியம் பொங்கிக் கொண்டிருந்தாலும், அவள் அதை வெளிக் காட்டலாகாது; அதுவே விவேகமான காரியம் என்று நினைத்து, அதை ரகஸ்யமாக வைத்துக்கொண்டு, ஜூனோவின் வார்த்தைகளை மௌனமாகக் கேட்டு வந்தாள்.

ஜூனோ தேவியானவள் தன் உள்ளங் கவர்ந் தெழுந் தோங்கிய சினத்தைத் தரிக்கிலாளாய் பொறுமையை அறவே கை நழுவ விட்டுத் தனது மனத்தை அதிவேகமாக உறுத்திக்கொண்டிருந்த வயிற்றெரிச்சலைப் பின்வருமாறு வெளியிட்டாள் :—

"விண்ணுலகையாண்டு வரும் கண்ணில்லாக் கொடுங்கோல் மன்னா! என் யோசனைகளும் சிரமங்களும் என் கோரிக்கைகளும் எண்ணங்களும் வீணாகத்தான் போகவேண்டுமா? இதற்காகத்தான் நான் இலியனைப் பயமுறுத்திக் கலக்கினேனோ! ஆட்டி வைத்தேனோ! இதற்காகத்தான் சகலமான ஜனங்களையும் நான் இங்கே திரளாகக் கூட்டிவைத்தேனோ? இதற்காகத்தான் நான் இந்த உலகத்தையே இரண்டாகப் பிளந்து ஒருவரோடொருவர் பொரும்படிச் செய்தேனோ? இந்த யுத்தத்தைப் பரப்புவதற்காக நான் கரைகரையாய்ப் பறந்து சென்றேனே! அழிவில்லாதவையும் சலிப்பே யறியாமல் பறப்பவையுமான என் குதிரைகளுக்கும் இந்த ஓட்டத்தினால் அலுப்பு உண்டாகிவிட்டதே?

கடைசியாக இப்பொழுது நான் பட்ட பாடுகளுக்குப் பலன் கிடைக்கும் சமயம் நெருங்கி வந்துவிட்டது. பழிக்குப் பழிவாங்கும் சமயமும் நெருங்கிவிட்டது. அவர்களது விநாசகாலமும் விரைந்து வந்துவிட்டது. அந்தச் சமயத்தில் ஜோவ் பகவானே அந்த அயோக்கியப் பிரகிருதிகளுக்கு அபயமளிக்கின்றாரே! இது என்ன அநியாயம்! இது என்ன அக்கிரமம்!

அக்கிரமிகளான காமிகளைத் தண்டிக்க உமக்குத்தான் மனமில்லையென்றால், மற்றெல்லா தேவர்களும் உம்மைப் போலவே பக்ஷவாதிகளாகவும் அநீதியுள்ளவர்களாகவும் இருப்பார்களா? மாட்டவே மாட்டார்கள்!'' என்றாள்.

கார்மேகங்கொண்ட உன்னதமான வானத்தைபிடித்துப் பொடிப்பவரான அந்தப் பெருந்தேவர் தமது தேவியின் வசனங்களைக் கேட்டுப் பெருமூச்செறிந்து தமது வயிற்றில் கொதித்துக் கொண்டிருந்த எண்ணங்களைப் பின் வருமாறு சுடச்சுட வெளியிட்டார்:

“ஆஹா இதென்ன திரத்காரம்! பிரிஜியா அரசனிடமும் பிரிஜியா நாட்டின் மீதும் ஏன் இவ்வளவு மட்டு மித மில்லாத கோபம்! ஜோவின் தர்ம பத்தினிக்கு யார் என்ன பெருந்தீங்கு விளைவித்து விட்டனர்? அவள் ஏன் இப்படிக்கோபத் தீயுடன் எரிகின்ருள்? கேவலமான மர்த்தியர்களால் விண்ணுலகிலுள்ள அமரர்களுக்குத் தீங்கு செய்யவும் இயலுமா? அவர்களை ஒரு பொருட்டாக நினைத்து நீ ட்ராய் நகரத்தையும் அந்நகர வாசிகள் அனைவரையும் அழித்துவிடக் கங்கணம் கட்டிக்கொள்ளலாமா? அதோ அங்கே விளங்கும் திவ்யமான மாடமாளிகைகளையும் கூட கோபுரங்களையும் தரைமட்டமாக்க நினைக்கலாமா?

நீ இந்த விண்ணுலகை விட்டு வேகமாய் இறங்கு. உன் ஆத்திரத்தையும் தணித்துக்கொள். உன் ஆசையையும் பூர்த்தி செய்துகொள். ட்ராயின் கோட்டை வாசல்களைப் பிளந்தெறி; அதன் மதிற்சுவர்களைச் சுற்றிலும் நெருப்பை வைத்துக்கொளுத்து. பிரியமும் காயப்பட்டு இரத்தத்தை வடிக்கட்டும். இவ்வளவெல்லாம் ஆன பின்னும் உன் தாகம் தணியாவிட்டால், அவன் மக்கள் அனைவருமே காயப்பட்டுக் குருதியைக் கொட்டட்டும்! இலியனும் இரத்தத்தில் தெப்பமாகட்டும்! அந்த விசாலமான இராஜ்ய முழுவதும் அடியோடு அழிந்து போகட்டும். மட்டுமிதமின்றி கொள்ளை போகட்டும். அவ்வாறு அதை நிர்மூலமாக்கி அழித்து தேவலோகராணி திருப்தியடையட்டும்! அதன்பின் இந்த தேவ லோகத்தில் ஒருவரும் ட்ராயின் பெயரைக்கூடச் சொல்லமாட்டார்கள்! ஜோவ் தேவரும் நிம்மதியாயிருப்பார்!

இவையெல்லாம் மாத்திரம் உன்னிஷ்டப்படி நடக்கட்டும். அப்புறம் என்ன நடக்கும் என்பதையும் சொல்வேன் கேள்! ஜோவ் தேவர் சும்மா இருந்து விடுவார் என்ற எண்ணம் உனக்கு வேண்டாம்!

உனக்குப் பிரியமான நாடுகளின்மேல் நான் எனது திருஷ்டியைச் செலுத்துவேன். அவைகள் செய்த துரோகத்திற்குத் தகுந்த கூலியைக் கொடுப்பேன். பழிவாங்க வெண்டுமென்று தீர்மானித்து விடுவேன். அப்படித் தீர்மானித்து நான் என் கையையெடுத்து ஓங்கி உயர்த்தி விட்டேனுனல், அதைத் தடுத்து விடலாம் என்ற எண்ணம் உனக்கு வேண்டாம்! அது முடியாத காரியம்! அப்பொழுது நீ ட்ராயை நினைத்து, இந்த தண்டனை நமக்குக் கிடைத்தது நியாயந்தான் என்று அடங்கியிருத்தல் வேண்டும்! உருண்டோடும் சூரியனுக்கும் நக்ஷத்திர மண்டலங்களுக்கும் அடியேயுள்ள பூமண்டலத்தில் தேவர்களால்

நிருமாணிக்கப்பட்டோ அல்லது மண்ணுலக மாந்தர்களால் கட்டப்பட்டோ ஓங்கி உயர்ந்து விளங்கும் கணக்கற்ற பட்டணங்களிலெல்லாம் ட்ராயைப் போல் ஜோவ் பகவானுக்குப் பிரியமான பட்டணம் இல்லவே இல்லை!

பிரியம் ஒரு தேவனுக்குச் சமானமானவன். அவனுக்கோ அல்லது அவனுடைய சந்ததியாருக்கோ நிகராக ஜோவ் பகவானது கிருபைக்குப் பாத்திரர்களான மர்த்தியர்கள் இல்லவேயில்லை! அவர்கள் நமக்குச் சதா மிருகங்களைக் பலிகொடுத்துக் கொண்டு வருகின்றனர். அவர்கள் மூட்டிய ஹோமாக்கினியானது அணையாமல் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கின்றது!'' என்றார்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்த தேவியானவள் பளிச் சென்று மின்னும் தன் கண்களை யுருட்டி விழித்து, அந்த இடிக் கடவுளை யுற்றுப்பார்த்துப் பின் வருமாறு பதிலுரைத்தாள்:-

''கிரேக்க ராஜ்யத்திலுள்ள சமவெளிகளில் மூன்று பட்டணங்கள் ஜூனோ தேவிக்குச்சேர்ந்தவை. விசாலமாகப் பரந்துள்ள பூமண்டலத்திலுள்ள எல்லாவற்றையும் காட்டிலும் அவளுக்கு அந்தப் பட்டணங்களின்மேல்தான் பிரியம் அதிகம். அவை மைஸினி, ஆர்காஸ், மதில் சூழ்ந்த ஸ்பார்ட்டா. உமக்கு இஷ்டமானால் நீர் அவற்றைத்தரைமட்டமாக்கி விடலாம். நான் அதைத் தடுக்கவில்லை! அவைகளுக்கு உண்டாகக் கூடிய அழிவை நீக்கவும் என்னால் ஆகாது. நான் அவைகளின்மேல் வைத்துள்ள அன்பே அவைகளின் கஷ்டத்திற்குக் காரணம். அதுவே அவைகளிடமுள்ள தோஷம்! அந்த தோஷம் போதும். நான் யார் மீதும் குறை கூறுவதில் என்ன பயன்? அவற்றை நினைத்து நான் நொந்துகொள்ளலாம், அவ்வளவுதான், வேறு ஒரு லாபமும் இல்லை! அதை ஒருவரும் சட்டைசெய்யவும் மாட்டார்கள், என்றாலும் நீர் ஜூனோ தேவிக்குக் கொஞ்சம் விசேஷமான கௌரவம் கொடுத்துத்தான் தீரவேண்டும். நான் உம்மைப்பெற்ற தெய்வத்தையே தகப்பனாகக் கொண்ட உமது உடன் பிறந்தவள்; ஒரு தேவியாகவும் பிறந்தவள்; விண்ணுலகத்தில் உம்முடன் சம அதிகாரம் செலுத்தும் பாக்கியமும் பெற்றவள். இடி முழக்கங்களின் அதிபதியாகிய ஜோவ் தேவரின் மனைவியென்ற பட்டத்துடனும் விளங்குபவள்!

ஒரு சகோதரிக்கும் மனைவிக்கும் உள்ள உரிமைகளை நீர் மறுக்க மாட்டீர் என்றே நான் நம்புகிறேன். ஆதலால் நாம் இருவரும் ஒத்துப்போவோமாக! ஓர் ஒப்பந்தத்திற்குக் கட்டுப்பட்டு அதன்படி நடப்போமாக! அப்படிச்செய்தால் சகலமான தேவர்களும் நாம் இருவரும் சேர்ந்து இடும் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பார்கள். இந்த விண்ணுலகமும் நாம் காட்டிய வழியில் நடந்து வரும்.

அதோ பார்த்தீரா? பாலாஸ் தேவியானவள் தங்கள் உன்னதமான ஆக்ஞைகளை எதிர்பார்த்தவளாகக் காத்துக் கொண்டிருக்கின்ருள். அவளது சொல்வன்மையினுல் கிரேக்கர் களும் பிர்ஜியன் சமூகத்தாரும் இந்த யுத்தத்தின் மத்தியில் திடீ ரென்று செய்து கொண்ட சமாதானத்தைக் கலைத்துக்கொண்டு விடுவார்கள். ஆயுதபாணிகளாகவும் கிளம்பி விடுவார்கள்; தாங்கள் ஆஞ்ஞையிட வேண்டியதுதான் தாமதம்! கர்விகளான துரோஜர்கள் அந்த சமாதானத்தைக் கலைக்க முன் வருவார்கள்" என்ருள்.

விண்ணுலக வேந்தரும் மண்ணுலகில் வாழும் மாந்தரின் பெருந்தந்தையுமான அந்த தேவர் தமது தேவியின் யோசனையை அங்கீகாரம் செய்து மினர்வாவை யழைத்து,

"நீ மகா சாமர்த்தியமும் சாதுர்யமும் உள்ளவள். பக்குவ மாக போதனைகள் செய்வதில் தேர்ந்தவள். நீ உன்னுலான சகல மான உபாயங்களையும் தந்திரங்களையும் போதனைகளையும் பிரயத் தனங்களையும் செய்து இந்த ஒப்பந்தத்தைக் கலைத்து விட்டுவா. ட்ராய் நகரத்தாரின் துரோகத்தினுல் இந்தச் சமாதானம் நின்று போகவேண்டும். இரு கக்ஷியாருக்கும் வேற்றுமைகள் உண்டாக வேண்டும். உடனே காற்றைப்போற் பறந்துசென்று இந்தக் காரி யத்தைச்செய்துவா" என்ருர்.

அந்த தேவியானவள் இந்தக் கட்டளையைச் சிரமேற் கொண்டு ஒலிம்பஸ்ஸின் உன்னதமான அந்தக் கொடு முடியி னின்றும் வெகு ஆத்திரத்துடன் புறப்பட்டுத் தலைகுப்புறப் பறந்து ஒரு மின்னலைப்போல் பாய்ந்து சென்ருள்.

ஸ்பார்ட்டினியஸ்ஸினுல் அனுப்பப்பட்ட சிவந்த நிறமுள்ள தூமகேதுவானது எவ்வாறு யுத்தகளத்தில் கூடியிருக்கும் சேனை களுக்கும், குளிர்காலத்தில் நடுக்கியெடுக்கும் கடல்களில் பிரயாணஞ் செய்யும் யாத்திரிகர்களுக்கும், மொத்தத்தில் பூலோக வாஸிகளான சகலமான ஜனங்களுக்குமே நாசகாலம் வருகிற தென்று முன்னுடியே அறிவிக்கும் நிமித்தம், கொழுந்து விட்டெறி யும் தன் வாள்களின் நுனிகளிலிருந்து பொறிகளைக் கக்கிக் கொண்டு அதி கம்பீரமாக ஆகாய வீதியில் தங்கு தடையின்றிப் பறந்து செல்லுமோ, அவ்வாறு அந்தப் பிரகாசமுள்ள தேவியானவள் இரண்டு சேனைகளுக்கும் மத்தியில் ஜோதியைப் பொழிந்துகொண்டு ஓர் அம்பைப்போல் பாய்ந்து சென்ருள். இரு திறத்துச் சேனைகளிலும் இருந்த சகல ஜனங்களும் அவளைக் கண்டு கண்கொட்டாமல் அவளையே உற்றுப் பார்த்துக்கொண்டு பிரமித்து நின்றனர். ஆகாயமே தீப்பற்றிக் கொண்டு விட்டதோ என்று ஐயுற்றனர் !

அவர்கள் " ஐயோ, நமக்கு வரப்போகும் ஒரு மகத்தான அழிவை முன்னுடியே அறிவிப்பதற்காகத்தான் தேவர்கள்

இந்த உற்பாதத்தை அனுப்பியுள்ளனர்! இது தேவர்களுடைய காரியந்தான்! சிறிதும் ஐயமில்லை! ஜோவ் பகவான் இந்தச் சமாதானத்தை ஊர்ஜிதப்படுத்துகின்றாரோ அல்லது இதுவரை நிகழ்ந்த இரத்தப் பெருக்கைவிட இன்னும் கோரமான காட்சிகளை நடத்தத்தான் ஏற்பாடுகள் செய்கின்றாரோ ஒன்றும் விளங்கவில்லை. சமாதானம் செய்யவும் சமர்களை விளைவிக்கவும் ஜோவ் பகவான் மகா வல்லமையுள்ளவரல்லவா ?'' என்று கதறினர்.

அவர்கள் அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கையில் பாலாஸ் தேவியானவள் அதிகௌரவமான அந்தனரின் வம்சத்தில் பிறந்தவனும் தீரனுமான லயோடோக்கஸ் என்பவனைப்போல் மானிடவுருவங்கொண்டு, துரோஜர்களது கூட்டத்தின் நடுவே நடந்து, அந்த துரோஜர்களது அணியில் பராக்கிரமசாலியென்று பிரசித்தி பெற்றவனும் லிக்கேயனது மகனும் அதி வீரனுமான பாண்டாரஸ் என்பவனைத் தேடிச் சென்றாள்.

அப்பொழுது அவன் கறுத்த நிறங்கொண்ட இஸிப்ஸ் நதிகளிலிருந்து புறப்பட்டு வந்தவர்களும், பளிச்சென்று மின்னும் ஆயுதங்களை அணிந்துகொண்டு அணிவகுப்பில் நின்றுகொண்டிருந்தவர்களுமான தன் வீரர்களின் மத்தியில் நின்று கொண்டிருந்தான். அவள் அவனை நோக்கி "பிரிஜியா! யாரேனும் ஒருவர் உனக்குச் சமயோசிதமான நல்ல யோசனை சொன்னால் அதை நீ செவி கொடுத்துக் கேட்பாயல்லவா? இப்பொழுது ஜய சீலனாக விளங்கும் ஸ்பார்ட்டனை நோக்கி அவனது மார்பைத் துளைக்குமாறு நீ உன் அம்பை எய்தாயானால், அது உனக்கு எவ்வளவு பெருமையைத் தரும்! அப்படிச் செய்து உன் தேசத்தின் சத்துருவான கிரேக்கனது புகழை அழித்து விடுவாயானால், ட்ராய் நாடு உனக்கு என்னென்ன சம்மானங்கள் செய்யும்! பாரிஸ் உனக்கு என்னென்ன வெகுமதிகள் கொடுப்பான்! உனக்கு இது நல்ல சமயம்! இதை நழுவ விடாமல் இந்தத் தீவிரனமான காரியத்தை செய்; அவனது மார்பைப் பார்த்துக் குறிவைத்து உன் அம்பைவிடு; உன் குறி தவறாது! அதற்கு நான் உத்திரவாதி!

முதன்முதலாக உன் அம்பு ஜயமடையவேண்டுமென்று கோரி வெள்ளி வில்லைத் தரித்தவரான லிஸியன் பீபஸ்ஸைப் பிரார்த்தித்துக்கொள். உன் ஆடுகளின் தலைச்சன் குட்டிகளைத் தினகரனுக்கு ஜீலியா க்ஷேத்திரத்தில் பலிகொடுப்பதாக வேண்டிக்கொள்'' என்றாள்.

அவன் அந்த வார்த்தைகளைக்கேட்டு அந்த தேவி சொன்ன யோசனையை மிகுந்த உற்சாகத்துடன் ஏற்றுக் கொண்டான். பைத்தியம் பிடித்தவன் போல் முன்பின் யோசனை செய்யாமல், பளபளவென்று மெருகுடன் விளங்கிய தன் வில்லை வெகு ஆத்திரத்துடன் கையில் எடுத்தான்.

அந்த வில்லானது விசித்திரமான வேலைப்பாடுகளுடன் வெகு சிரமப்பட்டு வழவழவென்று இழைக்கப்பட்ட ஒரு கொம்பினால் உண்டாக்கப்பட்டிருந்தது.

முன்னொரு காலத்தில் அவன் மலைப் பிராந்தியங்களில் வேட்டையாடிய பொழுது ஒரு பிரம்மாண்டமான மலையாடானது குத்துண்டு காயப்பட்டு இரத்தத்தை வடித்துக் கடைசியாய் அந்த மலைக்காடுகளின் நடுவில் தன் உயிரையும் துறந்து இறந்துபோயிற்று. பதினாறு கை நீளமுள்ள அதன் கொம்புகள் அதன் நெற்றியின் ஓரமாகப் பளிச்சென்று மின்னிக்கொண்டு அதற்கு ஓர் ஆபரணமாக விளங்கின. அவன் அந்தக் கொம்புகளை அதன் உடலிலிருந்து வெட்டியெடுத்து வேருகப் பிரித்துத் தன் வேலைக்காரர்களைக் கொண்டு ஒழுங்காக சீவிச் செதுக்கி இசைத்து ஒன்ருகச் சேர்த்து அதன் இரு முனைகளிலும் தங்கக் கட்டியினால் செய்த இரண்டு பூண்களையும் பூட்டினான்.

அவன் கிரேக்கர்களது கண்ணுக்குப் புலப்படாமல் தன்னைச்சுற்றியிருந்த தன் சினேகிதர்களது கேடயங்களின் மறைவிலிருந்து கொண்டு, அந்த வில்லை வளைத்து கிரேக்க வீரனது மார்புக்குச் சரியாகக் குறிபார்த்து, பின்பு தரையின் மேல் குனிந்து பதுங்கி தன்னிடமிருந்த நூற்றுக்கணக்கான அம்புகளி லிருந்து எதிராளியின் உயிரை வாங்கக்கூடியதும் அவனை நன்ருகக் காயப்படுத்தக்கூடியதுமான ஓர் அம்பைப் பொறுக்கி யெடுத்து அதை அந்த வில்லில் தொடுத்தான். அதுவே பின் நிகழ்ந்த அனர்த்தங்களுக்கெல்லாம் காரணமாயிற்று.

பின்பு அவன் சொந்த ஊரிலுள்ள அப்பாலோ தேவருக்கு விசேஷமாகப் பலிகள் கொடுப்பதாகச் சங்கல்பம் செய்துகொண்டு, தன் முழு பலத்துடனும் அந்த வில்லைப் பிறைபோல் வளைத்துத் தன் மார்பின்மேல் சாய்த்துப் பிடித்துக் கொண்டு, அதன் கூரான இரு முனைகளும் விருத்தா காரமாகச் சேரும்படிப் புனைந்தான். அப்பொழுது அதுவரை ஆத்திரத்துடன் துடித்துக்கொண்டிருந்த அந்த அஸ்திரமானது இறக்கைகொண்ட ஒரு பறவையைப் போல் சீறி ஒலித்து இரைச்சலிட்டுக் கொண்டு பறந்து சென்றது. அந்தத்திடமான வில்லும் ஒலித்தது; நடுங்கித் துடித்துக் கொண்டிருந்த நாணும் குணத்தொனி செய்தது.

அதிரிதேசா! அந்த அபாயமான சந்தர்ப்பத்தில் உன் இஷ்ட தேவதையாவது மற்றுமுள்ள வேறு தேவர்களாவது உன்னை மறந்து விடவில்லை. அந்தச் சமயத்தில் உன்னை ரக்ஷிக்க அந்த பாலாஸ் தேவியே உனக்கு முன் வந்து உதவினாள். தன் இளங்குழந்தை கண் வளர்ந்து வருகையில் அதை மொய்க்க வரும் ஒரு விஷமுள்ள ஈயை எவ்வாறு ஒரு தாயானவள் ஓடித் துரத்தி அந்தக் குழந்தையைக் கட்டிக்காத்து வருவாளோ, அவ்வாறு பாலாஸ்தேவி அந்த அஸ்திரத்தின் விசையைக்

குறைத்து அதை அதற்கு நியமித்திருந்த வழியிற் செல்ல வொட்டா மல் வேறு வழியாய்த் திருப்பி விலக்கிவிட்டாள்.

உயரமாகப் படமெடுத்துச் சீறிக்கொண்டு வரும் ஒரு ஸர்ப்பத்தைப்போல் வந்த அந்த அம்பை அந்தத் தேவியானவள் அதிரிதேசனது அரைஞாணை நழுவ விடாமல் பிடித்துக் கொண்டிருந்த பொன்கொக்கிகளின் மேலும், இரட்டை யிழையினுல் செய்யப்பட்ட அவனது மார்புக் கவசத்தின் அடிப் பாகத்திலிருந்த துணி மடிப்புக்களின் மேலும் பாயும்படித் திருப்பி விட்டாள்.

அவ்வாறு பாய்ந்த அந்த அம்பானது அவனது அகலமான அரைஞாண் பட்டையைத் துளைத்ததுமன்றி அவனது மார்க் கவசத்தையும் ஊடுருவிச் சென்று அதன் அடியிலிருந்த துணி மடிப்புகளைக் குத்திக்கிழித்து அவனுடைய உடலில் பாய்ந்து தோலைக் கீறிக் காயத்தையுண்டாக்கி இரத்தத்தையும் வடியச் செய்தது.

அப்பொழுது அதிரிதேசா! உன் தேகத்திலிருந்து வடிந்த உனது உத்கிருஷ்டமான இரத்தமானது பனியைப் போன்ற உன் வெண்ணிறமான தொடையின் வழியாகக் கீழே மாலை மாலையாய்ப் பொங்கி வழிந்து ஓடியது! அது எவ்வாறு இருந்த தென்றுல் சொல்லுவேன் கேள்! அதிவேகமாய்த் துள்ளிக் குதித் தோடும் தனது குதிரையின் மேல் சவாரிவரும் ஒரு ராஜாதி ராஜனுக்கு மரியாதைகளும் வரிசைகளும் வழங்க நியமிக்கப்பட்ட காரியாவிலோ அல்லது மியோனியாவிலோ வளர்ந்து வந்த ஒரு வனதேவதையானவள் மாசற்ற தந்தத்தில் பளிச்சென்று இரத்தச் சிவப்பான சாயத்தைத் தீட்டி அலங்கரித்தால் அந்தத் தந்தமானது எவ்வாறு தனது பிரகாசமான வெளுப்பும், தயரியன் சிவப்பும் ஆகிய இரண்டு மாருன வர்ணங்களுடன் ஒன்றுக் கொன்று தோல்வியுடன் விளங்குமோ அவ்வாறு இருந்தது.

ஜனுதிபனுன ஆகமனன் தன் உடன் பிறந்தான் அவ் வாறு அம்பினுல் குத்துண்டு நிற்பதையும், அதனுல் உண்டாகிய காயத்திலிருந்து இரத்தமானது ஒரு பெரிய அலையைப் போல் பெருகி வருவதையும் கண்ணுற்று, மிகவும் திகிலடைந்து நடுங் கினுன். அவ்வாறு அந்தக் கோலங்களுடன் அவனைப் பார்ப் பதற்கு முன்னுகே அவனுக்கு ஏற்கனவே இருந்த பயத்திற்கு குறை வில்லை! ஆதலால் அந்தக்காயத்தையும் அதன் மேல் பளிச் சென்று மின்னிக்கொண்டு நின்ற கூரான அம்பையும் கண்ணுற்ற பொழுது, அவனது தைரியமான மார்பும் படபடவென்று துடித்துக் கொண்டு பொங்கியது. அவன் பெருமூச்சு விட்டுத் தனது உடன் பிறந்தானது கையைப்பிடித்துக்கொண்டு பின்வருமாறுதுக்கித்துப் புலம்பினுன். அப்பொழுது அங்கு சூழ்ந்து நின்ற பெரியோர்கள் அவனையனுசரித்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு கதறியழுதனர்.

“ஆஹா என் உயிருக்குயிரான அன்பனே! இந்தச் சமாதானம் உன் அழிவுக்கல்லவா காரணமாகி விட்டது! இது இவ்வாறு முடியும் என்று நினைத்தா நான் வெகு சிரமப்பட்டு இந்தச் சமாதானத்திற்கு வெகு நம்பிக்கையுடனும் பயபக்தியுடனும் உடன் பட்டேன்! இவ்வாறு கிரீஸுக்காகப் பரிந்து புறப்பட்டு வந்து திரளான சத்துருக்களை எதிர்த்துப் பொருது அவர்களது சரவருஷங்களைத் தடுத்துக் கடைசியாய் அவர்களைப் போரிலும் வென்று பின்பு உன் பிராணனையும் இழக்கவா நீ இவ்வாறு சிரமப்பட்டாய்? இவ்வளவு ஆபத்துக்களுக்கு ஆளானாய்?

உன்னை ஒரேயடியாய் ஒழித்து விட வேண்டுமென்று துரோஜர்கள் அனைவரும் ஒன்றாய்ச் சேர்ந்து விட்டனரே! பொய்ச் சத்தியம் செய்தவர்கள் அனைவரும் நாம் தெய்வத்தினிடம் வைத்துள்ள நம்பிக்கையைக் கண்டு ஏளனம் செய்கின்றனரே!

சாராயத்தையும் இரத்தத்தையும் விசேஷமாகக் கொட்டிக் கைகளைக் கூப்பிக் கொண்டு நின்று நாம் செய்த பிரார்த்தனைகளும் சங்கல்பங்களும் சபதங்களும் ஆகிய அனைத்தும் இவ்வாறு வீணாகப் போகுமா? அவை வீணாய்ப்போகா!

இந்த மகாபாவிகளுக்கு ஜோவ் பகவான் மிகவும் கொடியதும் கோரமுமான ஒரு தண்டனையை விதிக்க யோசித்து வருகின்றார். அதனால் தான் தேவதண்டனை வருவதற்குத் தாமதமாகின்றது. அந்த நாள் வரவே வரும். அந்தப் பழிவாங்கும் பெரிய நாளில் ட்ராயின் கர்வமும் பெருமைகளும் புழுதியில் மறைந்து அழுந்திப் போய் விடும். பிரியத்தின் பராக்கிரமசாலிகளான வீரர்கள் அடியற்ற பனைகள் போல் விழுவார்கள். பிரியமுங் கூடப் பட்டுவிழுவான். ஒரே ஒரு பிரமாண்டமான ஆபத்து வரும். அது அவர்கள் எல்லோரையும் ஒரே விழுங்காய் விழுங்கி விடும்.

அதோ நமது தலைக்கு மேல் உயரமாக வீற்றிருக்கும் பெருந்தேவர் சிவந்த நிறமுள்ள தனது வெறுங்கரத்தை உயரத் தூக்கி விட்டார்.

உருண்டு செல்லும்படி இடிக்கும் கணங்களுக்கும் உத்தரவிட்டு விட்டார். அதை என் கண்ணால் இதோ நான் பார்க்கின்றேன். அழிவற்றவரான அந்தப் பெருந்தேவர் தமது சீற்றமனைத்தையும் பொழிகின்றார். தம் சக்திகளனைத்தையும் அந்தப் பொல்லாத பிரகிருதிகளின் தலையில் செலுத்துகின்றார். அயோக்கியர்களான அரசர்களுக்கு மிகவும் அபாரமான ஆபத்துக்கள் வரப்போகின்றன; அது நிச்சயம் தான்!

ஆனால் ஐயோ! உனக்கு இந்தக்கதி வந்து விட்டதே! நீ பாக்கியவானாக வாழ வேண்டியவனாயிற்றே! நீ உயிரோடிருக்கும் வரையிலும் தான் உன்னைப் பார்த்து நான் உருக வேண்டுமா?

வேறு வழியில்லையா ? உன்னை வாழ்த்திப் புகழ்ந்து பேசும் பாக்கியம் எனக்குக் கிடையாதா? நீ போய் விட்டால் கிரேக்கர்கள் தைரியத்தைக் கைவிட்டு விடுவார்களே ! எதிரிகளது கரையில் தங்களுக்கு வெற்றிகள் கிடைக்கும் என்ற எண்ணத்தையும் கனவிலும் நினைக்க மாட்டார்களே ! அப்புறம் ஹெலனை ட்ராயி லிருந்து மீட்போம் என்ற யோசனையே நமக்கு வேண்டாம் ! அவள் துரோஜர்கள் வசமே ஆகிவிடுவாள் ; நாம் நமது பெருமையையும் இழந்து விடுவோம். உன் எலும்புகளும் அன்னியனது கடற் கரையில் கரையானுக்கு இரையாகி விடும். அப்பொழுது மதங் கொண்ட ஒவ்வொரு துரோஜனும் மனேலாஸன் பட்டுக் கிடக்கு மிடத்தில் படிந்துள்ள புழுதியை மிதித்துத் துவைத்து இடித்து 'கிரேக்கர்கள் இலியனிலிருந்து வெற்றியுடன் கொள்ளை யடித்து வந்த வஸ்துக்களை இதோ பாருங்கள் ! ராஜாதி ராஜன் கைப்பற்றிக்கொண்ட பெருந்தனத்தையும் திரவியங்களையும் பாருங்கள்! வெகு கம்பீரமாக வந்த அவனுடைய கப்பல்களெல் லாம் உடைந்து நொறுங்கிப் பொடியுண்டு கரையோரமாக சிதறிக் கிடக்கின்றன ! அவனுக்கு உண்டான பழிக்குப் பழி வாங்கு வோருமில்லை ! ஏன் என்று கேட்பாருமில்லை! பராக்கிரமசாலியான அவனது உடன் பிறந்தானும் கொல்லப்பட்டு விட்டான்' என்று நம்மெல்லோரையும் இகழ்ந்து கூறுவானே ! ஆஹா பூமா தேவி ! என் புகழுக்கு அவ்விதமான தாழ்வு வருமுன் என்னை விழுங்கி விடுவாய் ! ஒரு சக்கரவர்த்தியின் மானக் கேட்டையும் மறைத்து விடுவாய்" என்றான்.

இவ்வாறு தனது தலைவனும் உடன் பிறந்தானுமான அவன் பயந்து கதறுவதைக் கண்டு மனமுருகியவனாய் ஸ்பார்ட்டா மன்னன் அவனைத் தேற்றுமாறு பின் வரும் பிரிய வசனங்களை யுரைத்தான்:

"அண்ணா ! தங்கள் மொழிகளால் கிரேக்கர்களது உற்சாகம் குறைந்து போகலாகாது. இந்த அல்பமான அம்பில் ஒரு தோஷமும் இல்லை. இதனால் எனக்கு ஒரு குறைவும் உண்டாக வில்லை. பல வர்ணங்கள் கொண்ட எனது அரைக்கச்சையானது, என்னைக் காயப்படுத்த வேண்டு மென்று பறந்து வந்த இந்த அம்பைத் தடுத்து விட்டது. சித்திரங்களும் சரிகைகளும் உள்ள இந்தக் கச்சையின் விளிம்புகள் மெத்தென்று இருக்கின்றன அல்லவா !" என்றான்.

அதைக் கேட்ட இராஜாதி ராஜன் "என் தம்பி. என் அன்ப ! என் நண்ப ! இந்தப் பிரகாரமே தேவர்கள் எப்பொழுதும் உன்னைக் காப்பாற்றுவார்களாக ! உன் பிராணனை ரக்ஷிப்பார் களாக ! நாம் இப்பொழுது ஒரு கை தேர்ந்த வைத்தியனைத் தேடி, அவனது உதவியினால் இந்த அம்பைப் பிடுங்க வேண்டும் ! அடே யாரடா அங்கே ! மக்கேயனிடம் துரிதமாக ஓடிச் சென்று ஸ்பார்ட்டன் அரசனது புண்ணை அதிவேகத்தில் ஆற்றக்கூடிய மருந்தை உடனே கொண்டு வரும்படி சொல் ! துரோஜர்கள் எய்த

அம்பினுல் அவன் குத்துண்டு கிடக்கின்ருன்! கிரேக்கர்களுக்குத் துக்கமும் தார்தானியர்களுக்கு மகிழ்ச்சியும் உண்டாகியிருக் கின்றன '' என்ருன்.

அந்த வார்த்தைகளேக் கேட்டு வேக கதியுடைய டால்தி பியஸ் என்பவன் துரிதமாகப் பறந்து சென்று, திரளாக நெருங்கி அணியணியாய் நின்று கொண்டிருந்த ஜனங்களின் மத்தியில் துளேந்து துளேந்து தன் கண்களேச் செலுத்தி மக்கேயனேத் தேடி ஞன். அவன் அப்போது ஆயுதபாணிகளாக விருந்த தன் சொந்த தேச சனங்களின் மத்தியில் வெகு கம்பீரமாக நின்று கொண்டிருந்தான்.

டால்திபியஸ் அவனேக் கண்டு, "மக்கேயா! எழுந்திரு, புறப்படு, அரசரிடம் விரைந்து செல். அவரது தம்பி காயப்பட்டுக் கிடக்கின்ருர். நீ அவருக்குச் சமயோசிதமான சிகிச்சையைச் செய்யவேண்டும். அவர் உன் உதவியை நாடுகின்ருர். ஒரு லிஸியனே அல்லது தார்தானியனே அவரைத் தன் அம்பினுல் குத்தித் துளேத்து விட்டான். நாங்கள் எல்லோரும் தவிக்கின்ருேம்! நமது எதிரிகள் குதிக்கின்றனர்." என்ருன்.

தேவர்களுக்குச் சமானமான மக்கேயன் அந்த மகா துக்க கரமான சங்கதியைக் கேட்டு மிகவும் வருந்தித் திரளான அந்தச் சேனு சமுத்திரத்தைப் பிளந்து கொண்டு, அந்த வீரனுக்குச் சிகிச்சை செய்ய விரைந்து ஓடினுன்.

அபராஜிதனுன அந்த அரசன் அதுவரை திடமாகவே நின்று கொண்டிருந்தான். மற்றைய தலேவர்களும் அவனேச் சுற்றி மிகுந்த கவலேயுடன் நின்று கொண்டிருந்தனர்.

மக்கேயன் அவனேக் கண்ணுற்று அவனது காயத்தைப் பரி சோதித்துப் பரீக்ஷை செய்து அம்பின் இரு முனேகளேயும் சேர்த்துப் பிடித்துக் கொண்டிருந்த நாணற்குச்சியைப் பிடித்து இழுத்து எடுத்துவிட்டு, அம்பின் முனேயை மாத்திரம் புண்ணிலேயே விட்டு விட்டான். பின்பு அவன் மனேல்லாஸன் அணிந்திருந்த விசித் திரமான வேலேப்பாடுகளுடன் விளங்கிய அழகான அரைக் கச்சையைத் தளர்த்தி அவனது மார்புக் கவசத்தையும் அவ னுடைய மார்பிலிருந்து அவிழ்த்துப், புண்ணிலிருந்து வடிந்து கொண்டிருந்த இரத்தத்தை உறிஞ்சினுன். கடைசியாக கீரோ னுல் கொடுக்கப்பட்டதும் ஈஸ்குலேப்பியஸ்ஸினுல் கையாளப் பட்டு வந்ததுமான அதியுத் கிருஷ்டமான தைலத்தை அந்தப் புண்ணில் தடவித் தேய்த்தான்.

இவ்வாறு கிரேக்கர்களெல்லாம் கவலேயுடன் அந்த ராஜ குமாரனேச் சுற்றிக் கொண்டு அவனுக்கு வேண்டிய சிகிச்சைகளேச் செய்து வருகையில், துரோஜர்கள் பெருத்த ஆரவாரஞ் செய்து கொண்டு அவர்களே நோக்கிச் சண்டைக்கு ஓடி வந்தனர். அவர் கள் முன்போல் பின்னும் ஒரு முறை தங்கள் காந்தியுள்ள ஆயுதங்

களுடன் பளிச்சென்று விளங்கினர். போர்க்களங்களிலெல்லாம் பின்னும் ஒரு முறை அதிபயங்கரமான கூக்குரல்களே நிரம்பின.

என்றாலும் ஜனாதிபன் மாத்திரம் மனங் கலங்கினவனாக வாவது சோர்ந்து இளைத்தவனாகவாவது பயத்தினால் திகிலடைந்த வனாகவாவது தோன்றவில்லை. கீர்த்தியும் பேரும் புகழும் சம்பா திக்க வேண்டுமென்பதே நோக்க முள்ளவனாக, அதிகுதூஹல முள்ளவனாக விருந்தான். துரோஜர்கள் மறுபடியும் மேன்மேலும் சண்டைக்கு வருவதைக் கண்டு உற்சாகமே கொண்டான். அவ னது மார்பு படபட வென்று வேகமாகத் துடித்தது. அவன் யுத் தத்திலேயே கண்ணாகவிருக்கப் பழக்கப்பட்ட தன் குதிரைகளின் சமீபத்திலாவது பளபள வென்று பித்தளைக் கட்டுகளுடனும் சித்தி ரங்களுடனும் விளங்கிய இரதத்திலாவது உட்கார்ந்திராமல், தன் குதிரைகளின் கடிவாளக் கயிறுகளை யுறிமீடன் என்பவனிடம் கொடுத்து விட்டு, அக்குதிரைகள் ஓர் இடத்தில் நெருப்புப் பொறி யைப் போல் மூச்சு விட்டுக் கொண்டு நிற்கத், தன் இரதத்தை விட்டுக் கீழே இறங்கித் தன் வீரர்கள் ஒழுங்காக நின்று கொண்டிருந்த அணிகளின் இடையே சரசர வென்று விரைந்து சென்று, அங்குள்ளோர் அனைவரையும் அவர்கள் யோக்யதைக்கும் திறமைக்கும் தக்கபடி உற்சாகப்படுத்திக் கொண்டும் எச்சரித்து கொண்டும் இருந்தான்.

அவன் இனி நடக்கவிருக்கும் யுத்தத்தில் விரைவாக ஓடக் கூடிய தங்கள் குதிரைகளின் மீது ஏறிக் கொண்டு தைரியமாகச் சண்டை பிடிக்கக் கூடிய வீரர்களை நோக்கி,

“தைரியமுள்ள வீரர்களே! சூரர்களே! நீங்கள் மகா பலவான்கள் என்ற கியாதியைச்சம்பாதித்திருக்கின்றீர்கள். உங்க ளுடைய வீர சூர பராக்கிரமங்களை நீங்கள் இப்போது நம்முடைய சத்துருக்களிடம் காட்ட வேண்டும். ஜோவ் பகவான் கிரேக்கர் களது கட்சியில் தான் இருக்கின்றார். நாம் அவரை நம்புவோமாக! நாம் சிறிதும் அஞ்சவோ பயப்படவோ, மனந்தளரவோ வேண் டிய அவசியமில்லை. அந்தக் கஷ்டங்களெல்லாம் ட்ராய்க்குத் தான்! அங்குள்ளவர்கள் தான் அபராதிகள்! அவர்கள் செய்த அநீதிகளுக்கும் அக்கிரமங்களுக்கும் பொய்ச் சத்தியங்களுக்கும் சரியான கூலி கிடைக்கப் போகின்றது. அது அவர்களது தலையில் எழுதியிருக்கின்றது! அவர்கள் எப்போது என்ன ஆபத்து வரப் போகின்றதோ என்று பயந்தவர்களாக விருக்கின்றனர். அவர் களுடைய புத்திரர்களையும் தாய்மார்களையும் மனைவிமார்களையும் கிரேக்கர்கள் சிறை பிடித்து விலங்கிட்டு இழுத்துக் கொண்டு செல்லவே செல்லுவார்கள்! ட்ராய் நகரத்து வீரர்களெல்லாம் பட்டு விழுந்து பிராணனை விடுவார்கள்! அழுது புரளும் அவர்க ளுடைய சுற்றத்தார்கள் கூடியுள்ள இந்தக் களத்தில் அவர்க ளுடைய பிரேதங்கள் அடக்கஞ் செய்வாரின்றிச் சிதறிக் கிடக்கப் போகின்றன” என்று ஏற்கெனவே தைரியமுடன் இருந்த அவர்க ளது உற்சாகம் அதிகரிக்குமாறு உரைத்து விட்டுப் பின்பு கோழை மனதுள்ளவர்களைப் பார்த்து அவர்களுக்குச் சுணையும் சுறுசுறுப்பும்

உண்டாகுமாறு அவர்களைப் பின்வருமாறு சுடச்சுட இழித்துரைத்தான்:

"உங்களது தேசத்தின் பெயரைக் கெடுக்கவும் உங்களது புகழையும் பெருமையையும் அழிக்கவுமா நீங்கள் பிறந்தீர்கள்? இந்தக் கதி உங்களுக்குக் கிடைத்தது நியாயந்தான். இந்தப் பயங்கரமான யுத்தகளத்தில் ஏன் முன்னும் பின்னும் பார்த்த வண்ணம் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு நிற்கின்றீர்கள்? ஓட்டம் பிடிக்கலாம் என்பது உங்களது உத்தேசமா? யோசனையா! அந்த ஜபம் பலிக்காது! வேட்டையில் அகப்பட்ட மானானது, தான் தப்பியோடிப் பிழைக்கக் கூடிய திக்கும் திசையும் அறியாமல் திகைத்துத் தவித்து ஓடி நடுக்குற்றுக் கடைசியாய்த் தனது பயமே காரணமாக அந்த ஓட்டத்திலேயே நடுவழியில் தடுக்கி விழுந்து பிராணனை விட்டுவிடும். அதுபோல் நீங்களும் உங்கள் பிராணனை விட வேண்டுமென்பது உங்களது ஆசையா? அப்படியில்லை யென்றால் நீங்கள் ஏன் இன்னும் நம்முடைய சத்துருக்கள் இங்கே வருவதை எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவர்கள் வந்த பின் அவர்களுக்குப் புறங்காட்டி ஓடி விடலாம் என்று நினைக்கின்றீர்களா? அதோ அங்கே நிற்கும் உன்னதமான நம்முடைய கப்பல்களுக்கு துரோஜர்கள் நெருப்பு வைத்துக் கொளுத்தும் வரை நீங்கள் உங்கள் கைகளைக் கட்டிக் கொண்டு சும்மா இருக்க வேண்டுமா? பதறி நடுங்குகின்றவர்களுக்கும் நெஞ்சுறுதி யில்லாதவர்களுக்கும் பயங்கொள்ளிகளுக்கும் பரிந்து அவர்களை ரக்ஷிக்க வேண்டுமென்று ஜோவ் பகவான் வருவார் என்று நினைக்கின்றீர்களா? பலவானை உங்களது சத்துருவை அவர் துரத்தி விடுவார் என்று நம்புகின்றீர்களா?" என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் வீரனை கிரீட் சேனாதிபதியும் அவனது சேனைக் கூட்டமும் இருந்த இடத்தை நோக்கித் தன் காலையெட்டி எட்டி அடி வைத்து ஒய்யாரமாக நடந்தான். அந்த மகாவீரன் தன் சேனையின் தலைமையை வகித்து அதன் முன்னணியில் நின்று கொண்டிருக்க, தைரியசாலியான மெரியோனியஸ் என்பவன் அவர்களது பின்னணியில் நின்றுகொண்டு அங்குள்ள வீரர்களுக்கு உற்சாகமூட்டி வந்தான்.

அரசன் அதைக் கண்ணுற்று மிகவும் சந்தோஷித்து, அந்த வீரனை அதிதாராளமாக மெச்சி அவனைத் தன் கவசங் கொண்ட மார்புடன் அணைத்து,

"திவ்விய ஸ்வரூபியான இதோமினியஸ்ஸே! உன்னைப் போன்ற உத்தமர்களுக்கு நாங்கள் எவ்வளவு கடன் பட்டவர்களாகவிருக்கின்றோம்! உங்களைச் சரியானபடி புகழவும் எங்களால் ஆகுமோ? யுத்தத்திலும் உத்தமமான ஊழியங்களைச் செய்வதிலும் முன்னணியில் நிற்பவனுமான உனக்கு அதியுன்னதமான மரியாதைகளைச் செய்யும்படி உத்தரவிட்டேன்! நாம் பந்தி போஜனம் அருந்துகையில் தளர்ந்து கிடக்கும் நமது இரத்தம்

ஊறவும் நமக்கு உற்சாகம் உண்டாகவும் நாம் மதுபானம் செய்கின்றேமல்லவா? அப்பொழுது வீரர்களுக்கு உற்சாகமும் ஊக்கமும் உண்டாகுமாறு நாம் கிண்ணங்களில் மதுவைத் தாராளமாகப் பெய்து அவர்களுக்குப் பரிமாறுகின்றேம். அந்த மதுவை மட்டு மிதமாகவும், கணக்காகவும் பரிமாறுகின்றேம் என்றுலும் நீ நமக்குச் செய்துவரும் உபகாரங்களுக்காக உன் கிண்ணங்களில் கலப்பில்லாத மதுவை கணக்கில்லாமலும் அளவின்றியும் நிரப்பித் தர வேண்டுமென்று ஆணையிட்டு விட்டோம்! ஆயுதமணிந்த வீரர்களுக்கெல்லாம் வீரனுக நீ என்றென்றும் விளங்குவாயாக! இந்த மரியாதைகளைக் குறைவின்றி வகித்துக்கொண்டு, மேன் மேலும் பேரும் புகழும் உள்ளவனுய் விளங்குவாயாக"! என்றுன்.

அதைக்கேட்ட அந்தக் கிரீடன் பின்வருமாறு பதிலுரைத்தான்:— "அரசே நான் தங்களது உற்ற நண்பன் என்று திடமாக நம்புங்கள்! மற்றையோருக்குத் தங்களது போதனையைச் செய்யுங்கள். தங்களது கக்ஷியில் ஊன்றி நின்றவனுக நான் இந்த சிரமமான காரியங்கள் ஒவ்வொன்றிலும் தங்களுடன் சேர்ந்து ஒத்துழைக்து வருவேன்! யுத்த தினத்தில் நான் தங்களது இடைவிடாத மாறுத் துணைவனுகவே விளங்குவேன்! இந்த நிமிஷம் தாங்கள் யுத்தத்திற்கு இறங்கு என்று உத்தரவிட வேண்டுவதுதான் தாமதம். நான் அதில் பிரவேசிக்கச் சித்தம்தான்! அதுவே நான் தெய்வத்தை மன்றுடிக் கேட்பது! பொய்ச் சத்தியஞ் செய்பவர்களது வாழ்வு எவ்வளவு காலம் என்பதை யுத்த களத்தில் காட்டிவிடலாம்! நம் சத்துருக்களைச் சிறைப் பிடித்தோ அல்லது சாக அடித்தோ நமக்குச் செய்த பழிகளுக்குப் பழிவாங்கி விடலாம்!" என்றுன்.

இதோமினியஸ் இவ்வாறு ஆத்திரத்துடன் சொல்லிய வசனங்களைக் கேட்டு மகிழ்ந்த அரசன் பின்பு அஜாக்ஷர்கள் இருவருடைய சேனைகளிலெல்லாம் ஓர் உறுதியான கோள வடிவமாக அணிவகுக்கப்பட்டிருந்தன. அவைகளிலிருந்த வீரர்களெல்லாம் ஒரு மேகம்போல் பூமி முழுவதையும் கவர்ந்து நின்றுகொண்டிருந்தனர்.

கடலிற் பாய்ந்துள்ள ஓர் உயர்ந்த முனையின் சரிவில் உட்கார்ந்திருக்கும் ஓர் இடையன் தன்னெதிரில் கீழேயுள்ள சமுத்திரத்திலிருந்து கனத்த நீராவியானது வெகு நிதானமாக உயரக் கிளம்பி இருண்டு திரண்டு பருத்து ஆறுகப் பெருகிச் சமுத்திரத்தில் பிரயாணம் செய்யும் கப்பல்களைப்போல் ஆகாய வீதியில் சஞ்சரித்துப் பின்பு இரவில் உண்டாகும் காரிருளைப்போல் இருண்டு ஒரு கனத்த மேகமாகப் பரிணமித்துக் கடைசியாய் மேல் காற்று அடிக்கையில் கெட்டியாக இறுகி "வந்தேன் வந்தேன்" என்று மிரட்டிக் கொண்டு ஒரு பிரமாண்டமான புயலாக வருவதைக் கண்டு பயந்து தன் இடம்விட்டுப் பெயர்ந்து எழுந்து வில்லைப்போல் வளைத்து மறைவாகவுள்ள ஓர் ஒடுக்கமான பாறையை நோக்கித் தன் ஆட்டு மந்தைகளை ஓட்டிக்கொண்டு போவதுபோல், யுத்த ஸன்னத்தர்களான அந்த வீரர்கள்

நெருங்கி நின்றனர். அவர்களுடைய ஈட்டிகளெல்லாம் அசைந்தாடும் ஓர் இருப்புக்காடு போல் உயர்ந்து நின்றன. பளிச்சென்று மின்னிய அவர்களுடைய கேடயங்களிலிருந்து வீசிய வெளிச்சமானது அதே கேடயங்களால் முன் செல்லாமல் தடுக்கப்பட்ட அம்புபோல் திரும்பப் பாய்ந்து வந்தது. அவர்கள் ஏந்தியுள்ள கறுத்த நிறமுள்ள ஆயுதங்களெல்லாம் ஏற்கெனவே இருள் மூடியிருந்த அந்தக் களங்களைப் பின்னும் அதிகமாக இருட்டி மறைத்துவிட்டன.

அரசன் அவர்களை நோக்கி "ஆஹா, வீரர்களே! சலியாத வீரர் குழாம் என்ற பெயர் உங்களுக்குத்தான் தகும்! நீங்கள் தேவர்களைப்போல் உத்தம குணங்களையுடையவர்களாய் விளங்குகின்றீர்கள்! உங்களுக்கு நாம் உற்சாகமூட்ட வேண்டியது அனுவசியம்! நீங்கள் வெகு ஆவலுள்ளவர்களாக விளங்குகின்றீர்கள்! உங்களுக்குக் கடினமான கட்டளைகள் இடவேண்டியது அனுவசியம்! நீங்கள் மற்றையோருக்குப் பெரிய உதாரணங்களாகவே விளங்குகின்றீர்கள்! ஆஹா உங்களுடைய உத்தமமான இருதயங்களில் பொங்கிப் பொழியும் உத்ஸாகத்தை நம் தெய்வங்கள் நம் மற்றைய வீரர்களுக்கும் உண்டாக்குவார்களானால், வெகு சீக்கிரம் இந்த தர்ம யுத்தத்தில் நம் ஆயுதங்கள் வெற்றியுடன் பிரகாசித்து விளங்குமே! ட்ராயின் உயர்ந்த மதில்களும் மண்ணைக் கவ்விக் கொண்டு புகையில் மறைந்து கிடக்குமே!'' என்றான்.

பின்பு அவன் பெருமிதங்கொண்ட மனதுடன் தனது சேனாபலத்தை கண்டு மகிழ்ந்தவனாய், அங்கு விட்டு அடுத்தாற்போலிருந்த தலைவனை நோக்கிச் சென்றான். அங்கு விருத்தரும் கௌரவிக்கத் தக்கவருமான நெஸ்டார் தம் பைலிய சேனைகளை அணிவகுத்து நிறுத்திக்கொண்டு, அவைகளுக்கு உற்சாகமுண்டாகுமாறு தைரியமான வீரமொழிகளை உரைத்துக் கொண்டிருந்தார். அவர் தம் பரிவாரங்களைச் சிறிதும் பிறழாத ஒழுங்கில் அணிவகுத்து ஆயுதபாணிகளாக நிறுத்திச் சேனைத் தலைவர்களுக்கு உபதேசம் செய்துகொண்டும் வீரர்களுக்கு உற்சாகமூட்டிக் கொண்டும் இருந்தார்.

அவரைச் சுற்றிலும் அவரது ஆக்ஞைகளை எதிர்பார்த்தவர்களாய் அலாஸ்டாரும் குரோமியஸ்ஸூம், ஹூமானும் நல்லோனான வியாஸனும் மஹானான பிலகான் என்பவனும் காத்திருந்தனர்.

அவர் தம் குதிரைப் படைகளையும் ரதங்களையும் முன்னணியில் நிறுத்தி, ஒரு சேனைக்குப் பலத்தைத் தருவதான காலாட்படைகளைப் பின்னணியில் நிறுத்தியிருந்தார். சந்தேகப் பேர்வழிகளையும் கோழை மனமுள்ளவர்களையும் புறங்கொடுத்து ஓட வழியில்லாமல் தடுப்பதற்காக, அவர் மேற்கூறிய சேனைகளின் மத்தியில் நிறுத்தியிருந்தார்.

அவர் அந்த சைன்னியங்களை நோக்கி "நெருப்புப் பொறியைக் கக்கும் வேகங்கொண்ட குதிரையை இறுகப் பிடியுங்கள். அணியில் குழப்பமுண்டாக்காதீர்கள். உங்கள் இடங்களை விட்டு அசையாமல் இருங்கள்! முன்னுலிருப்பவர்களின் மேல் விழுந்து அவர்களை வேகமாக நெருக்கித் தள்ளாதீர்கள்! அவசரப் படாமல் உங்கள் சக்தியையும் கெட்டிக்காரத்தனத்தையும் காலமறிந்து காட்டுங்கள்! எதிரியைத் தாக்கவேண்டுமென்று இடம் விட்டுப் பெயர்ந்தபின் குதிரை வீரன் ஒருவனாவது தன் குதிரையின் கடிவாளக் கயிற்றை பின்புறமாகத் திருப்பலாகாது. ஒன்று அவன் முன் சென்று சண்டை பிடிக்கவேண்டும் அல்லது அந்தச் சண்டையில் அடிபட்டு மடியவேண்டும். இவ்வாறு நீங்கள் அனைவரும் உறுதியான ஒரே மனமுடையவர்களாக விருத்தல் வேண்டும்!

யுத்த களத்தில் அதிர்ஷ்ட வசத்தால் நேரக்கூடிய லாப நஷ்டங்களால் எந்த வீரனாவது தன் தேரை இழக்க நேர்ந்து விட்டால், அவன் உடனே வேறு தேரில் ஏறிக்கொள்ளவேண்டும். திண்டாடிக்கொண்டு நிற்கக் கூடாது. தேரோட்டப் பழகாதவன் தேரில் நின்று யுத்தம் செய்ய முன் வரக்கூடாது. அவன் ஈட்டிகளைக்கொண்டு யுத்தம் செய்தால் போதுமானது. நமது முன்னோர்களான பெரியோர்களெல்லாம் இது தான் புத்திசாலித் தனமென்று கருதி வந்தனர். அவ்வாறு கருதியவர்களாய் அவர்கள் தங்களது ஆத்திரத்தை அடக்கியாண்டு தங்கள் சக்திகளும் சேனைகளும் வீணாகாமல் பாதுகாத்து வந்தனர். இவைகளைப்போன்ற நெறிகளில் ஒழுகி வந்து அவர்கள் திக்விஜயங்கள் செய்து, என்றும் அழியாத புகழை எய்தினர். உலகத்தை வருத்தி வந்த கொடியோர்களை மாய்த்துச் சாம்பலாக்கி அவர்களைப் பூமியில் ஆழத்திலும் புதைத்தனர்" என்றார்.

இவ்வாறு யுத்த தந்திரத்தில் தேர்ந்தவரான அவர் சொல்லியதைக் கேட்டு, மகானான அதிரிதேசன் குதூகலமடைந்தான். அவன் மனம் குளிர்ந்தது. அவன் நெஸ்டாரை நோக்கி, "ஐயா தீவிரமாக விரும்பும் காரியங்களை நிறைவேற்றுவதற்கும் உறுதியான தங்களது மனது தங்களுக்கு ஊட்டும் உற்சாகப்படி நடப்பதற்கும் தங்களுக்கு சக்தியிருக்க வேண்டும். ஆஹா! மனித வர்க்கத்தையே உதிர்த்து வரும் விருத்தாப்பியமானது தினந்தோறும் முதிர்ந்து வருகின்றது. அது தங்கள் சக்திகளைக் குறைத்துக்கொண்டும் தங்கள் ஆயுதங்களைத் தங்கள் கையிலிருந்து நழுவும்படி செய்து கொண்டும் வருகின்றதே! தாங்கள் முன்பு விளங்கியபடி எப்போதும் இளைஞராகவே இருக்கலாகாதா? தங்களை யொழிந்த மற்றைய வீரர்களுக்கு மாத்திரம் வயோதிகம் என்பது வரட்டுமே" என்று உரைத்தான்.

அவ்வாறு அவன் உரத்துக் கூறியதைச் செவியுற்ற அந்த அனுபோகம் நிறைந்த நெஸ்டார் தமது நரைத்த தலையையும் தாடியையும் அசைத்து ஆட்டிக்கொண்டு பின்வருமாறு பதிலுரைத்தார் :—

" மனிதர்கள் நினைக்கும் பிரகாரம் மாத்திரம் காரியங்களெல்லாம் நிகழ்ந்து விடுமாயின், நானும் என் பாலியத்தில் அனுபவித்து வந்த புஷ்டியான வீர பராக்கிரமங்கள் இப்பொழுது எனக்குத் திரும்பி வரவேண்டுமென்றே விரும்புவேன். அவ்வாறு நான் பராக்கிரமசாலியாக விருக்கையில் தான், இந்தக் கையினுல் எருதாலியன் கொலையுண்டு களத்தில் தன் காலை நீட்டிக் கொண்டு கிடந்தான். ஆனுல் தேவர்கள் தங்கள் பிரஸாதங்களனைத்தையும் ஜனங்களுக்கு ஏக காலத்தில் வழங்கி விடுவதில்லை. சிலருக்கு முதிர்ந்த வயதில் முற்றின புத்தியை யளிக்கின்றனர். வேறு சிலருக்குச் செய்தொழிலில் சத்தியை யளிக்கின்றனர். யுத்தகளமானது இளைஞருக்கும் இளையாத நெஞ்சுறுதியுள்ளோருக்குமே தகுதியான இடம். மந்திராலோசனை மண்டபமே முதியோருக்கு ஏற்ற இடம். கீர்த்தியைத் தரக்கூடிய ரண களத்தை நான் உங்களெல்லோருக்கும் விட்டுக் கொடுத்து விட்டேன். இப்பொழுது முதியோருக்குப் பெருமையைத் தரக் கூடிய காரியமான ஆப்தவாக்கியங்களை உபதேசிப்பதே என் கடமையாக ஆகட்டும் " என்ருர்.

இதைக் கேட்டு ராஜராஜன் மிகவும் சந்தோஷித்து முன் சென்று புழுதி படிந்திருந்த அந்தக் கரையோரத்தில் மெனிஸ்தியஸ் என்பவன் நிற்பதைக் கண்டான். அவனுடன் அணுவளவும் அசையாமல் அதீனியர்கள் அணியணியாய் நின்றிருந்தனர், அவனுக்கு அடுத்தாற்போல் யுலிஸ்ஸீஸூம் தன் ஆட்களுடன் நின்று கொண்டிருந்தான்.

அவர்கள் யுத்த களத்திற்கு வெகு தூரத்தில் நின்று கொண்டிருந்ததினுல் இருதிறத்தாரும் செய்து கொண்டிருந்த ஒப்பந்தம் கலைந்துபோய் விட்டதும் யுத்த கோஷங்கள் திரும்ப உண்டாய் விட்டதும் அவர்கள் அறிந்திருக்கவில்லை. சமீபத்தில் உண்டான துவந்தயுத்தம் எவ்வாறு முடியுமோ என்பதை மாத்திரம் சிந்தித்து ஏங்கிக் கவலை கொண்டவர்களாக விருந்தனர். அவர்கள் அவ்வாறு சிறிதும் சலனமின்றித் தம்தம் இடங்களில் அசையாமல் நின்றுக்கொண்டிருந்ததைக் கண்ணுற்று, அரசன் வெகுவாக ஆத்திரப்பட்டு முன்பின் யோசனை செய்யாமல் அந்தச் சேனைகளின் தலைவர்களை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான்:—

" பிலியூஸ்ஸின் புத்திரனும் ஓர் யுத்த வீரனது கடமையை மறந்து விடலாமா? சகல கலைகளிலும் தேர்ந்தவனுன யுலிஸ்ஸீஸூம் பயந்து விட்டானு! நீங்கள் ஏன் இவ்வளவு தூரத்தில் விலகி நிற்கின்றீர்கள்? நீங்கள்வேண்டாமென்று கழித்து விட்டு விட்ட யுத்தத்தில் உங்களை யொழிந்து மீந்துள்ள வேறு வீரர்கள் கலந்து கொள்வார்கள் என்று நினைக்கின்றீர்களா? சத்துருக்களுடைய சேனைகளின் சாமர்த்தியத்தையும் ஒரு கை பார்த்து விடலாம் என்று நீங்கள் தான் யுத்தத்தை ஆரம்பிப்பீர்கள் என்றல்லவா எல்லோரும் நினைத்திருந்தனர்! ஆஹா இதற்காகவல்லவா பிரீதிபோஜன மளிக்கையில் உல்லாஸமாக

உண்டு களிக்க வேண்டுமென்று உங்களையெல்லாம் முதலாவது பந்திக்கு வரும்படி ஒவ்வொருவரையும் தனித் தனியாய், பேர் பேராய் அழைத்தோம்! அவ்வாறிருக்க வீரர்களே! பெருத்த சேனைகள் யுத்தத்தில் சிக்கிக்கொண்டு தத்தளிக்கையில் நீங்கள் சிறிதும் வெட்க மின்றி அவைகளைப் பார்த்துக்கொண்டு வாளா விருக்கலாமா? உங்களுக்குச் செய்த உபகாரங்களுக்கு நீங்கள் செய்யும் பிரதியுபகாரம் இது தானா? ஊணுக்கு முந்திக்கொண்டு வேலைக்குப் பிந்திக்கொள்ளலாமா?'' என்றான்.

இதைக் கேட்டு யுலிஸ்ஸிஸ் பொங்கிக்கொதித்து ரோஷங் கொண்டு தன் கன்னங்கள் சிவக்கக் கடுகடுத்துப் பின்வருமாறு உரைத்தான் :—

" நீர் இவ்வாறு குறை கூறுவது சிறிதும் நியாயமில்லை! இது மகா அநியாயம்! இது தவறு என்று ஒப்புக்கொள்ளும்! பளிச் சென்று விளங்கும் எங்கள் ஆயுதங்களை ஏந்திக்கொண்டு நாங்கள் உமது கட்டளையை எதிர்பார்த்தவர்களாய் நிற்கின்றோமே! இதை நீர் காணவில்லையா? வீர சூர பராக்கிரமங்களைக் கண்டுகளிக்க வேண்டுமென்பது உமது விருப்பமானால், இதோ பாரும் நான் அதி மும்முரமான சண்டையிலும் இறங்கச் சித்தம் தான்! நீர் உமது கண்ணால் பார்க்க வேண்டுமென்று விரும்பும் ஸாகச காரியம் எதுவானாலும் சரி, அந்தக் காரியத்தைச் செய்ய நான் காத்திருக் கிறேன். அதன் பின் நானும் ஒரு வீரர்களின் தலைவன் தான் என்று நீர் சம்மதித்தால் நீர் அந்த வீரனுக்குத் தகுந்த ஸம்மானங் களைச் செய்யலாம் " என்றான்.

இவ்வாறு அவன் சிறிதும் கபடமின்றி வெளிப்படையாகவும் ரோஷத்துடனும் சொல்லிய வசனங்களைக் கேட்டுத் திடுக்கிட்டு அரசன் பின்வருமாறு அவனுக்கு மறுமொழி பகர்ந்தான் :—" நீ செய் தொழிலிலும் சிறந்தவன். யோசனைகள் சொல்வதிலும் சமர்த்தன். நம்மிருவருக்கும் எவ்விதமான அபிப்ராய பேதமும் கிடையாது. நாம் இருவரும் ஒரே ஆத்திரமும் கவலையும் உடைய வர்கள். நான் குணமோ, தோஷமோ ஒன்றும் சொல்லவேண்டிய தில்லை. நீ மகா புத்திமான். மனித ஸ்வாபத்தையும் நன்றாக அறிந்தவன். ஆதலால் யுத்த காரியங்களிலேயே கவனம் செலுத்தி வந்த நான் ஆத்திரத்தில் சொல்லிவிட்ட வார்த்தை களைப் பொறுத்துக் கொள்வாய். அவற்றைக் கவனிக்க வேண் டாம். யுத்தத்திற்கு விரைந்து செல். உனக்குச் செய்த தோஷங் களுக்குத் தகுந்த பரிகாரங்களை நான் தவறாமல் செய்து விடுவேன் என்று நம்பு. தெய்வங்கள்தான் ஆப்த நண்பர்களைக் கூட்டி வைக்கின்றனர். அவர்களே அந்த நட்பு கெடாமலும் காத்து வருவார்கள் " என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் திடிதீசன் என்ற மகா வீரனிருந்த இடத்தை நாடிச்சென்றான். அவனுடைய குதிரை களும், தேர்களும் வெகு கெட்டியாக அடித்த ஓர் ஆப்புப்போல்

உறுதியாக அணியணியாய் நின்றிருந்தன. யுத்தத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருந்த ஸ்தினிலஸ் என்பவன் அவனது சமீபத்தில் இருந்த வண்ணம் அந்தச் சேனைகளைக் கவனித்து வந்தான். அரசன் திடிதீசனை நோக்கிப் பின்வருமாறு நிஷ்டூரமான கொடிய வசனங்களை உரைத்தான் :—

" திடியஸ்ஸின் மகனே! உனது தகப்பன் மஹா பலசாலியாக விளங்கியவன். அவன் அடங்காத குதிரைகளை அடக்கி விடுவான்! ஆயுதபாணிகளில் சிறந்தவன் என்ற கியாதியும் அடைந்தவன். அப்படியிருக்க அவனுடைய மகனை நீ இங்கே வெகுதூரத்தில் விலகி நின்றுகொண்டு, எது எப்படிப்போனாலென்னவென்று சிறிதும் கவலையின்றிச் செயலாற்றும் உன் கையைக் கட்டிக்கொண்டு இருப்பது அழகா? சண்டையில் கலந்து கொண்டுள்ள சேனா சமுத்திரத்தைப் பார்த்துகொண்டு வாளாவிருப்பது அழகா? மிகக் கொடிய யுத்தங்களைக் கண்டும் உன் தகப்பன் இவ்வாறு பயப்பட்டதில்லையே?

அந்த இணையற்ற இளங்காளை எப்போதும் யுத்த முனையில் முதல்வனாகவல்லவோ விளங்கிவந்தான். ரண ரங்கங்களை ஊடுருவிக்கொண்டு சென்று அவன் அதி துரிதமாகவும், சுறுசுறுப்பாகவும் செய்த சாகஸ காரியங்களைக் கண்ணுற்றவர்கள் அவை எவ்வளவோ அற்புதமானவை என்றல்லவோ வெகுவாய் வியந்து பாடுகின்றனர். நானும் அவனை ஒருக்கால் பார்த்திருக்கிறேன். தன் சேனைக்கு ஆள் சேர்க்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அவன் ஒருக்கால் மதில் சூழ்ந்த மைஸீனுக்கு சினேகித பாவத்துடன் என்னுடைய விருந்தாளியாக வந்தான். அவன் கேட்டபடியே சிறிதும் மறுக்காமல் நாங்கள் அவனுக்கு வேண்டிய சேனைகளைக்கொடுத்தோம். ஆனால் தெய்வ சங்கல்பம் வேறாக விருந்து விட்டது விண்ணுலக வாஸியான ஜோவ் தேவர் அவனுடைய ஏற்பாடுகளைக் கலைத்துத் தடுத்துவிட்டார். நெடுந்தூரத்திலிருந்து நெருப்பைக் கக்கிக் கொண்டுவந்த பயங்கரமான தூமகேதுகள் தீபன் யுத்தத்தில் பெருந்துன்பந்தான் விளையுமென்று எச்சரித்து அறிவித்தன. அதனால் அவனது எண்ணம் நிறைவேறவில்லை.

பின்பு அஞ்சாநெஞ்சனான அவன் அஸோப்பஸ் நதிக்கரையில் வசிப்பவர்களான கிரேக்கர்களது தூதனாக அவர்களுடைய சத்துருக்களிடம் சென்றான். தனியாகவும் துணைவர்கள் ஒருவராவதுஇன்றியும் அவன் ஒருவனே சத்துருக்களும் அரணான கோட்டைக்குள் வசிப்பவருமான தீபன்களிடம் சென்று வெகு தைரியமாகவும் அதிகாரத்துடனும், தோரணையுடனும் அந்த நாட்டு அரசைத் தன்னிடம் ஒப்புவித்து விடும்படி மிரட்டிக் கேட்டான். அந்தச் சமயம் தீப நாட்டாரின் கொடுங்கோன் மன்னன் தன் பிரதானிகள் புடைசூழ உட்கார்ந்துகொண்டு வெகு கோலாகலத்துடன் போஜன மருந்திக் கொண்டிருக்கக் கண்டு, அவன் அங்கு கூடியிருந்த வீரர்கள் அனைவரையும் ஒருகை பார்த்தே விடுவேன்!

என்று மிரட்டினுன். வலுவில் சண்டைக்கு இழுத்தான். அவர்கள் ஒருவராவது முன்வரவில்லை! ஆதலால் அவன் அவர்கள் அனைவரையும் இறுமாந்திருந்த கர்வியான அவர்களுடைய அரசனது முன்னிலையிலேயே தோற்கடித்து அடக்கினுன்.

பாலாஸ் தேவியின் அனுக்கிரகத்தினுல் கம்பி போல் வளையும் கை வன்மையுடனும், கூரான வாளுடனும் விளங்கிய அவனைக் கண்ணுற்ற அந்த ஐம்பது வீரர்களும் ஒருவன் தனியாக நம்மை இவ்வாறு அவமதிப்பதா? என்று சீறிக்கொண்டு அவன் தங்களுக்குத் தப்பி வெளியே போகவிடாமல் தடுத்துவிடவேண்டுமென்று நினைத்து, அந்த போஜன மண்டபத்தை வளைந்துள்ள ஒடுக்கமான வழியைத் தடுத்துவிட ஓட்டமாய் ஓடினர். பயங்கரனை மியானும் தீரனை லிக்கோபன் என்பவனும் அவ்வாறு இரகஸ்யமாகச் சென்ற வீரர்களின் தலைவர்களாக விருந்தனர்.

அந்த ஐம்பது வீரர்களையும் திடியஸ் அந்த இரகஸ்யமும் ஒடுக்கமுமான சந்திலேயே சம்ஹாரம் பண்ணிவிட்டான். அந்தப் பயங்கரமான சங்கதியைச் சென்று சொல்ல அந்த வீரர்களில் ஒருவனை மாத்திரம் வதைக்காமல் உயிருடன் விட்டான்.

யுத்தத்தில் அவன் கொண்டிருந்த உற்சாகமும் காட்டிய வீரமும் அவ்வளவு விசேஷமாக விருந்தது.

“ஆஹா! தெய்வங்களே! அவனது மகன் தன் தந்தையின் பெயரையும் புகழையும் பெருமையையும் கெடுத்துவிட்டானே! இது என்ன கேவலம்!” என்ருன்.

இந்த வசனங்களைக்கேட்ட தேவர்களுக்கொப்பான தயோமதி என்பவன் மறுமொழியொன்றுமே பகரவில்லை. அவன் அந்த நிந்தைச்சொற்களை வெகு அமைதியுடன் கேட்டு வந்தானென்ருலும் அவனுடைய மனமானது கபகபவென்று வெந்து எரிந்து கொண்டிருந்தது. ஆனுல் அவன் சமீபத்தில் நின்றுகொண்டிருந்த கபானியஸ்ஸின் மகன் அவ்வாறு பொறுமையுடன் இருக்கவில்லை. தன் தகப்பனைப் போலவே வெட்டெனப் பேசும் இயல்புள்ளவனும் அஞ்சா நெஞ்சனும் வீண் பெருமை பேசுபவனுமான அவன் அரசனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான்:—

“அரசே! தாங்கள் இவ்வாறு எங்களை இகழ்ந்தும் எங்களது தந்தையைப் புகழ்ந்தும் எங்களது மனதைப் புண்படுத்துமாறு பேச என்ன காரணம்? என்ன அவசியம்? அதிரிதேசரே! நீர் அறநெறியிலேயே தவருமல் ஒழுகி வரவேண்டுமேயென்று கண்ணுங் கருத்துமாக இருக்கக் கடவீர்! எங்கள் முன்னேர்களைப் போல்மூர்க்க குணமும் ஆக்கிரகமும் உள்ளவர்களாக இல்லாவிடினும், நாங்களும் அவர்களைப் போலவே பெரியவர்கள்தான் என்று நீர் மதித்துவரக் கடவீர்! எங்களது தகப்பன் கொண்டு சென்ற சேனைகளைவிட மிகச் சிறிய சேனைகளைக்கொண்டே சென்று நாங்

கள் தீபன் கோட்டைகளைத் தாக்கினோம். ஏழு மதில்கள் கொண்ட அந்த நகரமும் எங்களுடைய வசமாயிற்று. நாங்களும் சந்தோஷித்தோம். செய்யத்தகாதனவும் தெய்வ சம்மதமில்லாதனவுமான காரியங்களைச் செய்து அபராதியான எங்களது தகப்பன் மடிந்தார்! அவர் மக்களான நாங்கள் அந்தப் பட்டணத்தை ஜெயித்தோம். தெய்வமும் எங்கள் பங்கில் இருந்தது. எங்களது கியாதியினால் எங்கள் தகப்பன்மாரது கீர்த்திகளெல்லாம் மங்கிப்போய்விட்டன வேயன்றி, அவர்களது பெருமையினால் நாங்கள் பிரகாசிக்கவில்லை'' என்றான்.

அவ்வாறு அவன் சொல்லியதைக் கேட்ட திடிதீசன் "என் நண்ப! சற்றுப்பொறு. உன் கோபத்தைத் தணித்துக்கொள். அரசனை வணங்கு. அவர் பெருத்த கவலையுள்ளவராக இருக்கின்றார். அதனால்தான் இவ்வாறு கடிந்து பேசுகின்றார். அதனால் தோஷமில்லை. நாம் அவரது காரியமாகத்தானே இங்கு வந்திருக்கின்றோம். அவருடைய யுத்தங்களைத்தானே செய்கின்றோம்! இலியன் கோட்டைகளை நாம் இடித்து வீழ்த்தி விட்டால் அவரே முதன் முதலாக நம்மைப் புகழ்ந்து பாராட்டுவாரன்றோ? வியந்து கொண்டாடுவாரன்றோ? அப்படியின்றி நாம் தோற்று விட்டால் அதனால் உண்டாகும் அபகீர்த்தியின் பெரும் பாகம் அவரைத்தானே சேரும்! கிரேக்கர்களாகிய நாம் செய்யவேண்டிய சிரமமான காரியங்கள் இன்னும் அதிகமாகவிருக்கின்றன. அவற்றை அவர்கள் ஊக்கத்துடன் கண்ணுங் கருத்துமாயிருந்து செய்து வருமாறு அவர் அவர்களுக்கு உற்சாகமளித்துப் பேசியே வரட்டும்! இந்த விசேஷமான யுத்தத்தில் பொருது கியாதியைச் சம்பாதிக்க வேண்டியதுதான் நமது கடன்'' என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் வெகு ஆவலுடன் தன் தேரிலிருந்து ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து திடீரென்று கீழே குதித்தான். அவன் குதித்த வேகத்தினால் பூமியும் திடுக்கிட்டு அதிர்ந்து ஆடியது; அவன் அணிந்திருந்த ஆயுதங்களும் கலகலவென்று ஒலித்தன.

ஆயுதபாணியாகிய திடிதீசன் அவ்வாறு யுத்தத்திற்குத் தடதடவென்று ஓடிச்சென்றபொழுது உண்டான கணகண வென்ற சப்தமானது அதிபயங்கரமாயிருந்தது. அந்த யுத்த களத்தில் வெகுதூரத்திலிருந்தவர்களும் அதைக் கேட்டு நடுங்கினார்கள்.

சமுத்திர ஜல மட்டத்தின் மேலுள்ள வெண்ணிறமான நுரையானது எவ்வாறு படிப்படியாக உயர்ந்து எழும்பும் மாருதங்களால் அடிபட்டு அசைவுற்றுக் கலந்து அலைகளின் மேல் அணியணியாய் மிதந்து கரையோரம் செல்லுமோ, எவ்வாறு பின்னாக வரும் அலைகள் முன்னாலுள்ள அலைகளின் மீது மோதிக் கொண்டு உருண்டு செல்லுமோ, எவ்வாறு இந்தப்

பிரகாரம் விருத்தியாகும் புயலுடன் கடலின் அடிப்பாகத்திலுள்ள ஜலமும் உயரக்கிளம்பி அக்கடலிலுள்ள பாறைகளின் மேல் பாய்ந்து நுரையைத் தெறித்துக்கொண்டு வானம் வரை யுயர்ந்து அந்த வானத்தையும் இடித்துக்கொண்டு உயருமோ, அவ்வாறு நெருக்கமாகக் கூடியிருந்த அந்த சேனை சமுத்திரமானது அந்த யுத்த களத்தில் குழம்பிக் கொத்தளித்தது.

அணியணியாகக் கூடியிருந்த அந்தக் கணக்கற்ற வீரர்கள் தங்கள் கேடயங்களை ஒன்றன்மேல் ஒன்றாய் ஓங்கி உயர்த்தி அசைத்து ஆட்டிக் கொண்டும், தங்களுக்கு முன்னிருந்தவர்களை உந்தித் தள்ளிக்கொண்டும் வெகு மெதுவாகவும் சிறிதும் சந்தடியின்றியும் முன்சென்றனர்.

அப்போது சேனைத்தலைவன் இட்ட கட்டளைகள் மாத்திரமே கேட்கப்பட்டன. வேறு ஒரு பிராணியின் பேச்சா, மூச்சா கேட்கப்படவில்லை! அவர்கள் அனைவரின் நாவுகளையும் ஏதோ ஒரு தெய்வம் இழுத்துக்கொண்டு போய் விட்டது போல் தோன்றியது! அவர்கள் அனைவரும் தங்களது அரசனது ஆணைப்படியே ஒழுகினர்.

ஆனால் துரோஜர்கள் அவ்வாறு இருக்கவில்லை. அவர்களது கோஷ்டியிலிருந்து ஒரு பெருத்த கூச்சல் உண்டாயிற்று, அதனால் அந்தப் பிரதேசமே உடைந்து தகர்ந்து போய்விட்டது.

செழிப்பான பட்டிகளில் மந்தை மந்தையாய்க் கூடியுள்ள சடை போர்த்த கணக்கற்ற ஆடுகள் தங்களைக் கறப்பவனது வருகையை எதிர்பார்த்துக்கொண்டு ஓயாமல் உரத்துக் கத்தி, அந்தப் பட்டிகள் உள்ள பள்ளத்தாக்குகளையெல்லாம் தங்களது கூக்குரலால் நிரப்பிக் கொண்டிருக்கையில் அந்தக் கூக்குரலைக் கேட்டு அருகேயுள்ள குன்றுகளில் இருக்கும் வேறு ஆடுகள் அதற்கு மறுமொழி பகர்வது போல் கத்தி வருவதைக் கேட்டால் அது எவ்வாறிருக்குமோ, அவ்வாறு அங்கு கூடியிருந்த நானா தேசத்தவரான வீரர்கள் இட்ட கூக்குரலானது கேட்கப்பட்டது. அவர்கள் முணுமுணுவென்று செய்த சப்தத்தினால் அந்தக் களத்தில் குழப்பமே நிறைந்திருந்தது. அவர்கள் உரத்துச் செய்த கூச்சலினாலும் அங்கு கலவரமே உண்டாயிருந்தது.

இவ்வாறு இருதிறத்தாரும் சண்டைக்கு ஆயத்தமுள்ளவர்களாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு எதிரெதிராய் அணியில் நிற்கையில் ஒவ்வொரு கக்ஷியிலும் ஓரோர் தெய்வம் இருந்துகொண்டு அந்தக் கக்ஷிக்கு ஊக்கமளித்து வந்தது. ஒரு கக்ஷியில் மார்ஸ் பகவானும், மறு கக்ஷியில் மினர்வா தேவியுமாக விருந்து ஒருவர்மேல் ஒருவர் சீறி விழுமாறு அவர்களுக்கு ஊக்கமூட்டி வந்தனர்.

அப்பொழுது பயமடைந்த பேடிகள் வளைந்து வளைந்து ஒரு புறம் ஓட்டம் பிடிக்க, மறுபுறமிருந்த பயங்கர ஸ்வரூபிகளான வீரர்கள் கோரமான கிருத்தியங்களைச் செய்துவந்தனர். அவ்வாறு விபரீதமான காரியங்கள் இரு கட்சியிலும் வெகு மும்முரமாக நடந்து வருகையில், அந்த ரணகளத்தில் இரத்த வெள்ளம் ஆருய்ப் பெருகியது.

ஆஹா! வேற்றுமை என்னும் தேவியினுல் என்ன விபரீதங்கள் விளைந்துவிடுகின்றன! கொலைக்கஞ்சாத பராக்கிரமசாலிகளின் கொடிய சகோதரியாகிய அவள் சிறிய உருவத்துடன் பிறந்து பொழுதொரு வண்ணமாய்ப் பெருத்து விண்ணுலகத்தையும் தன் தலையினுல் இடித்துக்கொண்டு ஓங்கியுயர்ந்து உலகம் முழுவதும் ஒரேயடியால் நடமாடுகின்ருளல்லவா? அவள் அவ்வாறு நடமாடுகையில் உலகம் முழுவதும் ஒரேயடியாய் நடுங்குகின்றதே! சகல தேச ஜனங்களும் தங்கள் இரத்தத்தைத் தங்கு தடையின்றியும் வடிக்கின்றனரே! அவள் தன் காலைத் திருப்பும் திசையெல்லாம் அழுகையும் புலம்பலுமே மேன்மேலும் விருத்தியாகின்றனவே! யுத்த களமும் ஒரு பெருத்த நெருப்புக்காடு ஆகிவிடுகின்றதே!

இந்தப் பிரகாரம் இரு திறத்துச் சேனைகளும் யுத்தத்தில் கலந்தபொழுது, கேடயங்கள் கேடயங்களின் மேலும், தலைக் காப்புகள் தலைக்காப்புகளின் மேலும், மார்புக்கவசம் மார்புக் கவசத்துடனும், ஈட்டிகள் ஈட்டிகளுடனும் எதிரெதிராகத் தாக்க, அந்த வீரர்கள் நிழலைப்போல் தங்களைத் தொடர்ந்து வந்த சத்துருக்களின் மேல் விழுந்து பொருதனர். அப்பொழுது அவர்கள் எறிந்த அம்புகள் விர்ரென்று சப்தித்துக்கொண்டு சென்ற பொழுது கனத்த இரும்பு மழை ஒன்று பொழிவது போலவேயிருந்தது.

வென்றவர்களும் தோற்றவர்களும் வேற்றுமையின்றிக் கலந்துக்கொண்டு பெருங்கூச்சலிட்டனர். ஜெயசீலர்கள் கீச்சு கீச்சென்று செய்த கோஷமும் அவர்களால் தோல்வியுற்று மடிந்தவர்கள் புலம்பிய அழுகுரலும் ஒன்ருய்க் கலந்தன. அந்தக் களத்தில் அப்பொழுது ஆருகப் பெருகின இரத்த வெள்ளத்தினுல் நிலமெல்லாம் நனைந்து கறைப்பட்டுச் சேறும் சகதியுமாக ஆகிவிட்டது. கால் வைத்த இடமெல்லாம் வழுக்கியே வந்தது. வெற்றுண்ட வீரர்களின் வெற்றுடல்கள் அந்த பயங்கரமான வெள்ளத்தில் மிதந்து வந்தன.

அப்போது இரு திறத்துக்குச் சேனைகளும் ஒன்ருய்க் கலந்து பொருது வருகையில், அவைகள் இட்ட பேரிரைசைச்சலானது கணக்கற்ற சிற்ருறுகள் கூடிப் பெருக்கடைந்து எதிரொலிசெய்யும் குன்றுகளின் அடிவாரத்திலுள்ள பள்ளத்தாக்குக்களை நோக்கித் தட தடவென்று வேகமாய்ப்புரண்டு சென்று, பின்பு சமவெளிகளில் பாய்ந்து, கடைசியாய் ஆயிரக்கணக்கான கால்வாய்களின்

வழியே ஓடிச்சென்று, கடலில் கலக்கையில் அப்பெருத்த வெள்ளம் செய்யும் கர்ஜனையானது திகிலுடன் வெகு தூரத்தில் உட்கார்ந் திருக்கும் ஓர் இடையன் காதில் விழுந்தால் எவ்வாறிருக்குமோ அவ்வாறு இருந்தது.

தைரியவானுன அந்திலோக்கஸ் என்பவன் வீரனுன ஒரு துரோஜனை வெட்டி வீழ்த்தி, இந்த வதத்தை முதன் முதலாக ஆரம்பித்தான். அவனுடைய ஈட்டியானது மகானுன எச்சிபோல்ஸ் என்பவனைத் தாக்கி அவனது உயர்ந்த மகுடத்தை யடித்துத் தள்ளி பின்பு அவன் தலையையும் உடைத்து அதை ஊடுருவிச் சென்றது. பித்தளையினுல் உண்டாக்கப்பட்டிருந்த அந்த ஆயுதமானது அவன் மண்டையைப் பிளந்து அதனுட் பிரவேசித்து அம் மண்டையில் இருந்த கணகணப்பான அனலில் குளிர்காய்ந்து கொண்டிருந்தது.

பலமான இடிகளுக்கும் தீக்கும் இலக்காகி வெகு காலம் வரை கீழே விழாமல் நின்று வரும் கோபுரமும் கடைசியாய் இவ் வாறு தான் அழியும்! அதன் மதில்கள் எல்லாவற்றிலும் இரத்தக் கறையும் விசேஷமாய்ப் படிந்திருக்கும்.

அவந்திய வீரர் குழாத்தின் தலைவனும் தைரியசாலியுமான அவன் கோபுரம் போல் உயர்ந்து நின்றிருந்த எச்சிப்போலஸ் என்பவனைப் பிடித்து அவன் ஆடை ஆபரணங்களைப் பறித்து விட வேண்டுமென்ற நோக்கத்துடன், அவனது உயிரற்ற உடலைத் தர தரவென்று இழுத்துவந்தான். அந்த வீரனது உடலில் பாய்ந் திருந்த அம்பை அவன் இழுத்துப் பிடுங்கிக் கொண்டிருக்கையில், அஜினுர் என்பவன் அவனுடைய ஈட்டிகளை அள்ளைகளின் வழி யாய் அவனுடைய மார்பை நோக்கித் துளைக்க, அது தங்கு தடை யின்றி அவனது உடலிற் பாய்ந்து சென்றது. அவனது கேடயம் மிகவும் பெரிதாகவே இருந்தது. என்றுலும் அதனுல் அவனுடைய அள்ளைகளுக்கு அணுவளவும் ரக்ஷை உண்டாயிருக்கவில்லை. ஆதலால் அவன் அடியற்ற பனைபோல் கீழே விழுந்தான்; போர்க் களத்தையும் வெறுத்தான். கட்டழிந்த அவனுடைய நரம்புகள் அவனுடைய உறுப்புக்களின் உருவத்தை அழித்துவிட்டன. அவ னுடைய ஆவியும் அப்போது உண்டான இரத்த வெள்ளத்தின் மேல் மிதந்து சென்றது.

இவ்வாறு சிறிது பொழுது நின்றிருந்த யுத்தம் திரும்பவும் ஆரம்பித்துவிட்டது. கிரேக்கர்களும் துரோஜர்களும் வெட்டுண்டு மடிந்த வீரர்களைச் சுற்றிக் கூட்டங் கூட்டமாகக் கூடினர். வீரர்களும் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து மடிந்தனர். தங்கள் இரத்தத்தை வடித்தனர். அந்தக் களத்தில் கண்டவிடமெல்லாம் இரத்தப் பெருக்கும் கோபக்குறியுமே நிறைந்திருந்தன.

இவ்வாறு நிகழ்ந்த யுத்தத்தில் இளங்காளைபோல் சுந்தர வடிவுடன் விளங்கிய ஸிமோஸ்லியஸ் என்பவன் மடிந்து விழுந்

தான். மகா வீரனுன அஜாக்ஷனுல் எமனுலகத்திற்கு அனுப்பப் பட்ட அவன் நரக லோகத்து நிழலின் கீழ் இருந்து வருகின்றுன்.

அந்த ஸிமோஸ்ஸியஸ் என்பவனை ஆட்டு மந்தைகள் நிறைந்ததும் வெள்ளிபோல் மின்னுவதுமான ஸிமோயஸ்ஸின் கரையில் அவனது அன்னை ஈன்றுள். அவள் வன தேவதை. தன் தாய் தகப்பனுரைத் தேடிக்கொண்டு அவள் ஐடா பர்வதத் திலிருந்து இறங்கி வருகையில், அவனைப்பெற்று அவர்களிடம் கொடுக்க அவ்விருவரும் அவனை வெகு அன்புடனும் ஆதர வுடனும் வளர்த்து வந்து, ஸிமோயிஸ்ஸில் பிறந்தவனுதலால் அவனுக்கு ஸிமோயிஸ்ஸியஸ் என்னும் பெயரும் இட்டனர். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அதி சுந்தரனுய் வளர்த்துவந்தான் என்றுலும் நீண்ட ஆயுள் உள்ளவ னுகவேயிருந்தான். பயங்கரனுன அஜாக்ஷனுல் வெட்டப்பட்டு அவன் மடிந்து விட்டதனுல் அவனது பாட்டியும் பாட்டனுமான அவர்கள் அவன் விஷயமாகக்கொண்ட கவலைகளும் பட்ட சிரமங் களும் வீணுகிவிட்டன.

வட்ட வடிவமான சக்கரத்திற்கு உதவக்கூடிய உத்திரத் திற்காக ஒரு கைதேர்ந்த தச்சன் தன் பளபளவென்று மின்னும் இருப்பாயுதங்களால் ஜலக்கரையில் சேற்று நிலத்தில் கம்பீரமான கிளைகளை சிரோபூஷணமாகக் கொண்டு வானமளாவி நிற்கும் ஒரு மரத்தை வெட்டிக் கீழே வீழ்த்தி விட்டானென்றுல், எவ்வாறு அந்த நீளமும் வழவழப்புள்ளதுமான மரமானது தன் தலைக்கு அலங்காரமாகத் தன் கிளைகளை விரித்துப் பரப்பிக்கொண்டு காற் றிலும் மழையிலும் அடிபட்டு வெயிலில் நன்றுக உலர்ந்து, வெட்ட வெளியில் பட்டுக்கிடக்குமோ, அவ்வாறு அஜாக்ஷனுல் துளைக்கப் பெற்ற ஸிமோஸ்ஸியஸ் என்பவன் அந்த யுத்த களத்தில் கிடந் தான். அவன் தன் காலை நீட்டிக்கொண்டும் ஏன் என்று கேட் பாரற்றும் கவனித்துக் கண்ணெடுத்துப் பார்ப்பாரற்றும், அந்தக் கடற்கரையில் பிராணனை விட்டான். அப்பொழுது அந்திப்பஸ் என்பவன் தன் ஈட்டியை எறிந்தான். அது குறிதப்பி வெகு வேகத்துடன் பறந்து சென்று யுலிஸ்ஸிஸின் அன்பிற்குப் பாத் திரனுன லியுக்கஸ் என்பவனைத்தாக்கி, அவனைக் கொன்றது. அப் பொழுது அவன் ஸிமோஸ்ஸியஸின் உயிரற்ற உடலை எடுத்துச் சென்று கொண்டிருந்ததால், அதை நழுவ விட்டுத் தன் உயிரை யும் துறந்தான். அதைக் கண்ணுற்ற யுலிஸ்ஸீஸ் துக்கம் மேலிட்டு அதி கோபங்கொண்டு, தனது கக்ஷிக்கு வைரிகளில் முதல்வனுன அவன் மும்மரமாய் யுத்தஞ் செய்து வந்த இடத்தை நோக்கி ஈட்டியும் கையுமாய் விரைந்து ஓடிச்சென்று, அவனைத் தவறுமல் குத்திக்கொல்ல வேண்டுமென்று நினைத்து நன்றுகக் குறி பார்த் தான். தன்னைச் சுற்றி நாற்புறமும் கவனித்து உற்று நோக்கினுன். அப்பொழுது அவனது பயங்கரமான ரூபத்தைக் கண்ணுற்ற துரோஜர்கள் வெருண்டு பின்னடைந்தனர். அந்த ஈட்டியானது தங்கள் பக்கமாய்ப் பறந்து வந்தபொழுது அதுசெய்த சப்தத்தைக் கேட்டு அவர்கள் நடுங்கிக் கலக்க முற்றனர்.

அச்சமயம் விருத்தனுன பிரியம் மகாராஜனது புத்திரனும் அபிடாஸ் என்னும் ஊரிலிருந்து வந்தவனும் திமோக்கோன் என்ற பெயருள்ளவனுமான ஒரு வீரன் மற்றெல்லோருக்கும் மேலாக உயர்ந்து நின்று கொண்டிருக்க, அந்த ஆயுதமானது அவன் காதைத் தொட்டாற் போல் அதற்கு மேலாக அவனது கன்னப் பொறிகளைத் தொட்டுக் கொண்டு " துரு துரு " வென்று விரைந்து செல்ல, அந்த இளங் காளை வீறிட்டுக் கதறிக் கொண்டு மூச்செறிந்து பிராணனை விட்டான்! அவனுடைய இரு கண் விழி களும் காலனது கறுத்த நிழலுக்கு வசமாயின. பிரமாண்டமான தேகத்தையுடைய அவன் திடீரென்று கீழே விழுந்தான். அவனது கனமான ஆயுதங்கள் கலகல வென்று சப்தித்தன. அவன் அணிந் திருந்த அகலமான அரைக் கச்சையும் நிலத்தில் விழுந்து கண கண வென்று ஒலித்தது.

அப்போது அதைக் கண்ணுற்ற அதி தைரியசாலிகளான வீரர்களும் பயமடைந்து " கிடு கிடு " வென்று நடுங்கினர். தேவர் களைப் போல் விளங்கி வந்த ஹெக்டரும் பயந்தவனுகவே தோன் றினுன். அவன் போர்க் களத்தை விட்டு மெதுவாக நழுவினுன். மற்றைய வீரர்களும் தங்கள் இடங்களை விட்டுப் பெயர்ந்து ஒரு வரை யொருவர் மோதிக் கொண்டு விழுந்து நாற்புறமும் ஓட்டம் பிடித்தனர்.

அந்தச் சமயத்தில் கிரேக்கர்கள் இதுதான் தருணம் என்று நினைத்துப் பெருங் கூச்சலிட்டுக் கொண்டு விரைந்து ஓடி முன் வந்து, அந்தக் களத்தில் மடிந்து கிடந்த வீரர்களின் ஆடையா பரணங்களைக் கொள்ளையடிப்பாராயினர்.

அதே சமயத்தில் உன்னதமான லியன் மலைச் சிகரத் திலிருந்து பீபஸ் பகவானுனவர் எல்லோருக்கும் புலனுகும் படிப் பிரகாசித்து வந்ததினுல், அந்த யுத்தத்தில் கலந்திருந்த இரு திறத்தாரும் அதை அத்துடன் நிறுத்தி விடாமல் மேன் மேலும் ஊக்கத்துடன் நடத்த வேண்டும் என்றே உற்சாகங் கொண்டனர்.

" துரோஜர்களே! தைரியமாயிருங்கள். வேகத்துடன் வரும் உங்கள் சத்துருக்களை நீங்களும் வேகத்துடன் எதிர்த்துப் போராடுங்கள். நுரையைக் கக்கிக் கொண்டு ஓடும் உங்கள் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு அவற்றை உங்கள் சத்துருக் களை நோக்கித் தலைகுப்புற ஓட்டிச் செல்லுங்கள். அவர் கள் உடல்கள் பாறையுமல்ல, நரம்புகள் இரும்புமல்ல. உங்கள் ஆயுதங்கள் அவர்கள் உடல்களில் பாய்ந்தே செல்லும். நீங்கள் அடிக்கும் அடியும் அவர்களுக்கு உறைக்கவே உறைக்கும். இது வரை உங்களுக்கு யாரால் பயமுண்டாயிருந்தது என்பது உங் களுக்கு ஞாபகம் இருக்கின்றதா? அவனை மறந்து விட்டீர்களா? மகாவீரனும் பயங்கரனுமான அந்த அகிலேசன் இப்பொழுது இந்தச் சண்டையிலிருந்து விலகிக் கொண்டு விட்டானே!" என்று அப்பாலோ பகவானுனவர் இலியனது வானளாவிய கோபுரங்

களில் இருந்த வண்ணம் தம் கிரணங்களை வெகு உக்கிரமாகப் பொழிந்து கொண்டு ஏங்கிக் கிடந்த துரோஜர்களை நோக்கி உரத்துக் கூவி அவர்களைத் தட்டி யெழுப்பினர்.

அதே சமயத்தில் உக்கிரஸ்வரூபியான யுத்தத்தின் தேவி யும், அவ்வாறே துரோஜர்களுடைய விரோதிகளான கிரேக்கர் களை உற்சாகப் படுத்தி வந்தாள். அவள் அந்த யுத்தகளத்தில் கொஞ்சம் தாழ்ந்த நிலத்தில் இருந்த கிரேக்கர்களை உரத்துக் கூவி ஞள். இடி முழக்கங்களுடன் கர்ஜனை செய்தாள். அப்பொழுது மகாஞன டயேரிஸ் என்பவன் தெய்வ நியமனப் பிரகாரம் விழுந்து மறைந்தான். அவனுடைய புஜ பலாக்கிரமங்களாவது அவன் தோன்றிய உத்தம குலத்தின் கியாதியாவது இந்த யுத்தத்தில் பயன்படவில்லை. அவை அவனைக் காப்பாற்ற முடியவில்லை. குளிர்ந்த பிரதேசமான ஈனஸ்ஸிலிருந்து வந்த திரேஸியர்களது தலைவஞன பைரஸ் என்பவன் ஒரு பாறையைப் பிளந்து அவன் மேல் ஏறிய அந்தப் பிரமாண்டமான பாறை அதி வேகத்துடன் அவனது கணுக்காலில் திடீரென்று விழுந்து அவனுடைய உறுதி யான நரம்புகளைப் பிளந்ததுமன்றிக் கெட்டியான அவனுடைய எலும்புகளையும் நொறுக்கிப் பொடியாக்கி விட்டது. இவ்வாறு சக்தியற்றுப் போய்விட்ட அவன் அஞதைகளாகி விட்ட தன் சிநேகிதர்களையும் சொந்த ஊராரையும் தன் உதவிக்கு வருமாறு வேண்டிக் கொண்டும் தன் கைகளை விரித்துக் கொண்டும் செய லற்றவஞய், ரத்தம் வடிந்து சிவந்து கிடந்த மணற் பிரதேசத்தில் தடுமாறி விழுந்தான். அவன் அவ்வாறு மூச்சு விடவும் முடியா மல் திணறிக் கொண்டிருந்ததைக் கண்ணுற்ற அவனது சத்துரு வானவன் அதி வேகத்துடன் அவன் மேற் பாய்ந்து, அவனது கொப்பூழின் வழியாகத் தன் கூரான ஆயுதத்தைக் குத்த, அவன் அந்த ஆயுதத்திஞல் மாண்டான். அவன் குடல்கள் உடலிலிருந்து வேகமாக வெளிப்பட்டு பூமியில் விழுந்து புகைந் தன; கொதிப்புண்ட அவனது ஆவியும் அந்தக் காயத்தின் வழி யாகவே வெளிப்பட்டுப் பறந்து சென்றது.

அதன்பின் அவ்வாறு ஜெயசீலஞக விளங்கிய அந்தபைரஸ் ஸின் மீது, தைரியவாஞன தோவசன் என்பவன் தன் வேலை எறிந் தான். சிறகுகள் கொண்ட பறவையைப்போல் விரைவாகச் சென்ற அந்த வேலானது அவனுடைய மார்பில் முலைக்காம்பின் மேல் அழுந்திப் பாய்ந்து அவனுடைய அள்ளைகளின் மத்தியில் ஊன்றி நின்று விட்டது. அந்தக் கனமான வேலானது தன்னை விடுத்த ஈட்டோலிய வீரன் மரணவஸ்தையிலிருந்த அந்தத் தலைவனது சமீபம் வந்து படபட வென்று துடிக்கும் அவனது மார்பினின்று தன்னை இழுத்துப் பிடுங்கும் வரையில், அவ்விடத்திலேயே இருந்த வண்ணம் அசைந்தாடிக் கொண்டிருந்தது. பின்பு அந்த வீரன் பளபள வென்று மின்னும் தன் உடைவாளைச் சட்டென்று வேக மாகச் சுழற்றி, அந்தத் தோல்வியடைந்த தலைவனது வயிற்றைக் கிழித்து, அதில் ஒரு பயங்கரமான காயத்தை உண்டுபண்ண,

அவனது உயிரும் விலகியது. அவனது உயிரற்ற உடலும் அந்த உதிரப் பெருக்குற்ற ரண களத்தில் விழுந்தது.

இவ்வாறு வெற்றி பெற்ற அந்த வீரன் தோற்றவனது ஆயுதங்களையும் ஆபரணங்களையும் கொள்ளை கொள்ளலாமென முன் வந்தான். ஆனால் அவனது எண்ணம் நிறைவேறாமல் போய் விட்டது. அவன் பிரயத்தனங்களும் வீணாயின ; ஜயசீலனாகை விளங்கிக் கொண்டு அவன் அந்த எண்ணத்துடன் முன் வருகை யில் திரேஸிய வீரர்கள் அனைவரும் அவனைத் திரளாகச் சூழ்ந்து கொண்டு, அவனுடைய மார்பை நோக்கிக் குறிவைத்துத் தங்கள் கணக்கற்ற வேல்களைப் பொழிந்தனர். அந்த வேல்கள் பளபள வென்று மின்னிக் கொண்டு அவன் மார்பின் மேல் ஒரு பெரிய தோப்பைப் போல் விளங்கின. ஆதலால் பழிவாங்க வேண்டு மென்று நினைத்து வந்தவனும் அதிபராக்கிரம சாலியாக விளங்கிய வனுமான அந்த தோவாஸ் தன் எண்ணம் பலிக்காமலும், தான் கொள்ளையடிக்க விரும்பிய பொருள்கள் கிடைக்காமலும் போகவே, தன் கண்களில் தீப்பொறி பறக்கக் கோபமும் சங்கடமும் சலிப்பு முள்ளவனாய், அந்தக் களத்தை விட்டு மெதுவாக விலகினான். தன் பிராணனை விட்டான், மடிந்தான் !

இவ்வாறு கிரீஸ் நாட்டாரின் பெருமைக்குக் காரணமான வனும் ஈப்பியன் வர்க்கத்தவர்களின் தலைவனும் ஆகிய இந்த இரண்டு வீரர்களும் மடிந்தனர். யமதர்மராஜனது கறுத்த போர் வைகள் அவ்விருவர்களின் கண்களையும் ஒரே கணத்தில் மூடிவிட் டன. வென்றவனும் தோற்றவனும் ஒரு களத்தில் பட்டு விழுந் தனர். புழுதியில் அழுந்தினர். அந்தக் களம் முழுவதும் அந்த யுத்தத்தில் காயம் பட்டவர்கள் வடித்த இரத்தக் கறையுடனும், மேன்மேலும் மலைபோல் குவிந்து வந்த பிணக்குபியல்களுடனும் விளங்கியது. ஒரு கோடியிலிருந்து மறுகோடிவரை பாலாஸ் தேவியினால் ரக்ஷிக்கப்பட்டு வந்ததும் பயங்கரமான யுத்தம் நடந்து வந்ததுமான அந்தப் பிரதேசத்தை ஒரு தைரியசாலியான சேனைத் தலைவன் பார்த்தால், வீரர்கள் தங்கள் அம்புகளை விடுப் பதையும் நாற்புறமும் தங்கள் கத்திகளை விளையாட்டாகச் சுழற்று வதையும் கண்டு, அவர்கள் யுத்தப் பயிற்சியில் ஸாங்கோபாங்க மாக அடைந்திருந்த தேர்ச்சியைக் கண்ணுற்று வியந்தே போயிருப் பான்! தான் கண்ணுற்ற மனிதர்கள் அனைவரும் வீரர்களே என்றும் எண்ணியிருப்பான்!

பேரும் புகழும் அடையவேண்டும் என்ற தாகங்கொண்ட வர்களாய் இரு திறத்தாரும் இவ்வாறு பொருதனர். கூட்டங்கூட்ட மாக ஒருவர்மேல் ஒருவர் விழுந்து தங்கள் உயிர்களை மாய்த்துக் கொண்டனர். புறங்கொடாமல் நின்று பொருது வீர ஸ்வர்க்க மடைந்தனர்.

——o——

## ஐந்தாம் அத்தியாயம்

# தயோமிதியின் அற்புதமான காரியங்கள்

**கதைச் சுருக்கம்:** இன்று நடந்த சண்டையில் தயோமிதி என்பவன் பாலாஸ் தேவியின் சகாயத்தைக் கொண்டு, அதியற்புத மான காரியங்களைச் செய்கின்றான். பாண்டாரஸ் என்பவன் அவனை ஓர் அம்பினால் காயப்படுத்துகின்றான். அந்தக் காயத்தை பாலாஸ்தேவி ஆற்றிவிடுகிறாள். அந்தத் தேவி தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை அறிந்துகொள்ள அவனுக்கு உதவிசெய்து, வீனஸ் தேவி யொழிந்த மற்றைய தேவர்களுடன் அவன் சண்டையிடாதபடியும் தடுத்துவிடு கிறாள்.

பின்பு ஈனியஸ் என்பவன் பாண்டாரஸுடன் சேர்ந்து கொண்டு, தயோமிதியுடன் சண்டையிடுகின்றான். பாண்டாரஸ் கொல்லப்படுகின்றான். ஈனியஸின் நிலையும் மிகவும் ஆபத்கர மானதாக ஆகிவிடுகின்றது. அந்த நிலையிலிருந்து அவன் வீனஸ் தேவியின் சகாயத்தினால் தப்பிப் பிழைக்கின்றான். அவள் தன் மகனை அந்தச் சண்டையிலிருந்து விலக்கிக்கொண்டு செல்லுகை யில், தயோமிதியினால் தன்னுடைய கையில் காயமடைந்து விடுகின் றாள். அவளது மகனை ரக்ஷிப்பதற்காக அப்பொழுது அப்பால்லோவும் அவளுக்கு உதவி செய்கின்றார். அவர் ஈனியஸைத் தூக்கிக்கொண்டு ட்ராய் நகருக்கு ஓடி வருகின்றார். அங்கு பெர்கமஸ் கோவிலில் அவனுக்குச் சிகிச்சை நடக்கின்றது. அவனது புண்ணும் ஆறுகின்றது.

மார்ஸ் பகவான் பிரிந்து கலைந்துபோன துரோஜர்களை ஒன்றாகக் கூட்டி, கிரேக்கர்களுக்கு நேரே நின்று தைரியமாக யுத்தங்கள் செய்யப் பிரயத்தனம் செய்ய ஹெக்டருக்கு உதவிகள் புரிகின்றார்.

இவையெல்லாம் நடந்து வருகையில் ஈனியஸ் போர்க்களத் துக்குத் திரும்பிவந்து விடுகின்றான். துரோஜர்களெல்லாம் சேர்ந்து கிரேக்கர்களில் அனேகரைத் தோற்கடித்துக் கொன்று விடுகின்றனர். அவ்வாறு தோற்றுமடிந்தவர்களில் திலிபோலி மஸ் என்பவனும் ஒருவன். அவனை ஸார்ப்பீடன் என்பவன் ஒழித்துவிடுகின்றான்.

மார்ஸ் பகவானை எதிர்த்துப் பொருவதற்காக ஜூனோதேவி யும், மினர்வா தேவியும் விண்ணுலகத்தை விட்டு இறங்கி வருகின் றனர். அவர்கள் அந்த பகவானை எதிர்த்துப் பொரும்படி தயோ மதியைத் தூண்டுகின்றனர். அவனால் காயமடைந்த மார்ஸ் பகவான் கதறிக்கொண்டு விண்ணுலகை நோக்கி ஓட்டம் பிடிக்

கின்றூர். இவ்வாறு இந்த யுத்தத்தில் ஆரம்பமான முதலாவது சண்டையானது இந்த அத்தியாயத்தில் தொடர்ச்சியாகச் சொல்லப்படுகின்றது.

முந்திய அத்தியாயத்தில் சொல்லிய நடவடிக்கைகள் நிகழ்ந்த இடத்திலேயே இந்த அத்தியாய நடவடிக்கைகளும் நடைபெறுகின்றன.

---

இப்பொழுது பாலாஸ் தேவியானவள் தன் அன்புக்குப் பாத்திரனை திடிதீசனது பெயரையும் கீர்த்தியையும் மற்றெல்லாக் கிரேக்கர்களுக்கும் மேலாக என்றுமழியாமல் இருக்கும்படி உயர்த்தவேண்டும் என்றும், அவனை எல்லோரும் விசேஷமாகப் புகழ்ந்து கொண்டாட வேண்டும் என்றும் உத்தேசங்கொண்டு, தன் சக்திகளையெல்லாம் ஒருங்கே பிரயோகித்து வெகு வேகத்துடனும் ஊக்கத்துடனும் அவனுக்கு உற்சாகத்தை உண்டாக்கினுள். அவனுடைய மனதைக் கொதிப்பித்தாள்.

அப்போது அவன் சிரோபூஷணத்திற்கு மேலாக திவ்விய மான வெளிச்சங்கள் மின்னலைப்போல் மின்னின. பிரகாசத்துடனும் விளையாடின. கிரணங்களைப் பொழியும் அவனது கேடயத்திலிருந்து ஓர் ஒளியும் பளிச்சென்று வீசியது. அதிலிருந்து எழுந்த ஜ்வாலையானது சிறிதும் சலியாமலும் தங்குதடையின்றியும் கொழுந்துகளைப் பொழிந்து வந்தது.

சரத்காலத்தில் வானத்தில் கொளுத்தும் இரத்த நிறத்தயுடைய ஒரு நக்ஷத்திரமானது தேஜோமயமான தனது கோள ரூபத்தை முதன்முதலாக வெளிக் காட்டுகையிலும், பின்புதான் சமுத்திரத்தில் முழுகிய பின்னும் தன்னைக் காண்போரின் கண்கள் கூசும்படி வெளிச்சத்தை ஊசிபோல் எவ்வாறு குத்திப்பொழியுமோ, அவ்வாறு பாலாஸ் தேவியானவள் அந்தத் தலைவன்மீது விசேஷமான கிருபைகளைப் பொழிந்தாள். அதனுல் அவனது ஆயுதங்களிலிருந்து அதியுக்கிரமமான கதிர்கள் ஆறுபோல் பிரவகித்தன.

மும்முரம்மாகக் கொதித்து உக்கிரமாக நடந்து வந்த அந்த யுத்தத்தில், அதிவேகத்தில் கலந்து கொள்ளுமாறு அவள் அந்த யுத்தத்தின் முனைக்கு உந்தித் தள்ளிக்கொண்டு சென்றுள்.

முதன்முதலாகத் தரேசனது புத்திரர்கள் அந்த யுத்தத்திற்கு வந்தனர். அந்த தரேசன் என்பவன் ஒரு பணக்காரனை பூசாரி. அவன் தனவானுகவிருந்தான் என்றுலும், சிறிதும் தோஷமில்லாதவனுக வல்கனது க்ஷேத்திரத்தில் தன் வாழ்நாட்களைக் கழித்து வந்தவன். ஆனுல் அவனுடைய புத்திரர்கள் பேரையும் புகழையும் தரத்தக்க யுத்த சம்பந்தமான வித்தை

களையே வெகு சிரமப்பட்டுக் கற்று வந்தனர். இவ்விருவரும் தங்களது சேனையை விட்டுப் பிரிந்து தங்கள் குதிரைகளிலிருந்து எட்டிக் கீழே குதித்து நிலத்தில் நின்ற வண்ணம் தனித்தனியாக திடிதீசனுடன் சண்டை செய்தனர். கீர்த்தியைச் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆவல் உடையவர்களாகவும் வீரர்களாகவும் இருந்த அந்த சகோதரர்கள் இருவரும் ஒருவரை யொருவர் நெருங்க சமீபத்தில் வந்தனர்.

முதன் முதலாக மனவலியுடைய பிஜியஸ் என்பவன் இடியைப் போல் ஒலிக்கும் தனது வேலைத் திடிதீசன் மேல் எறிந்தான். அந்த பலமான வேலானது அந்த வீரனது தோளுக்கு மேலாகப் பாய்ந்து கேவலம்! காற்றைப் பிளந்து கொண்டு சென்றது! அதன் விசை வீணுகி விட்டது!

ஆனுல் திடிதீசா! அப்பொழுது நீ விடுத்த உனது வேலானது அவ்வாறு பயனற்றுப் போகவில்லை. அது உனது வைரியின் மார்பைத் துளைத்துக்கொண்டு சென்று, அவனை அந்த யுத்த களத்தில் வீழ்த்தி நெடுங்கிடையாகக் கிடத்தி விட்டது. அப்பொழுது அவனது உடன் பிறந்தானுன இதியஸ் என்பவன் திடுக்கிட்டுத் தனது மனநிலை தவறி தைரியத்தையிழந்து விபரீதமாகப் பயந்து கதறிக்கொண்டு, விலை மிக்க தனது இரதத்தையும் செத்துக்கிடந்த தனது உடன் பிறந்தானையும் அந்தக் களத்தில் விட்டுவிட்டுப் புறங்காட்டி ஓட்டம் பிடித்தான். அச் சமயத்தில் வல்க்கன் பகவான் தனது லோகத்தில் இருந்த வண்ணம் அவனுக்குச் சகாயம் செய்யாமல் இருந்திருந்தால், அவனும் அழிந்தே போயிருப்பான். யமபுரத்தின் அழியாத காரிருளில் அவன் அழிந்து போயிருப்பான். அந்த பகவான் தன் உபாஸகனுன அவனுடைய தகப்பனிடம் தான் கொண்டிருந்த அன்பை முன்னிட்டுப் பரிந்து வந்து, புகையைப் போன்ற ஒரு மேகத்தை யுண்டாக்கி அவனை ரக்ஷித்துவிட்டார். இவ்வாறு தந்தையின் தெய்வ பக்தியினுல் மகனுக்கு ஜீவரக்ஷை உண்டாயிற்று.

அப்பொழுது அவன் விட்டுச்சென்ற குதிரைகளும் தேரும் ஜயசீலனுன தயோமிதியின் வசமாயின. அவன் அவற்றைக் கைப்பற்றிக் கொண்டு சென்று தன் கப்பல்களில் பத்திரப்படுத்தி விட்டான். அதனுல் அவன் ஏற்கனவே கொள்ளையடித்து அந்தக் கப்பல்களில் சேர்த்து வைத்திருந்த வஸ்துக்கள் அதிகரித்து விட்டன.

இவ்வாறு நிகழ்ந்து விட்ட அபஜயத்தைக் கண்ணுற்ற துரோஜ ஜனங்கள் ஆச்சரியமும் அவமானமும் அடைந்தவர்களாய்க் கொலையுண்டும் "குடு குடு"வென்று ஓட்டமும் பிடித்து விட்ட தரேசனது மக்களை உற்று நோக்கினர். அப்பொழுது மினர்வா தேவியானவள் யுத்தங்களின் தெய்வத்தின்மேல் இரத்தக் கறை படிந்திருந்த தனது கையை வைத்துப் பின்வரும் வசனங்களை யுரைத்தாள் :—

"யுத்தங்களை நிர்த்தாட்சண்ணியமாய் நடத்தும் தீரரே! உம் சக்தியினால் மஹா வீரர்களும் மண்ணில் மறைந்து விடுகின்றனர். அவர்கள் ரத்த வெள்ளத்தில் மூழ்கி விடுகின்றனர். வானளாவிய மதில்களும், அசைந்தாடி விழுந்து விடுகின்றன. இந்தச் சிரமமான காரியங்களை இரு கக்ஷியிலுமுள்ள தைரியமான வீரர்களே செய்து கொள்ளட்டும்! அது அவர்களது பாடு என்று விட்டு ஒழிப்பீராக!

அதில் உண்டாகும் ஜய-அபஜயங்களையும், லாப-நஷ்டங்களையும், பெருமை-சிறுமைகளையும் அவர்களே பங்கு போட்டுக் கொள்ளட்டும்! அவர்களில் வென்றவர் தோற்றவர் யார் என்பதை மகாதேவரான ஜோவ் பகவான் தீர்மானிக்கட்டும். நாம் இருவரும் இந்தப் பாபங்கள் நிறைந்த பிரதேசங்களை விட்டு விலகிப் போவோமாக! தேவாதி தேவன் சீறிச் சினந்து பழிவாங்கி விடுவார் என்று பயந்து அவரது கோபத்திற்கு ஆளாகாமல் நாம் தப்புவோமாக"! என்றாள்.

மிக்க ஆவேசத்துடன் விளங்கிய அந்த வீரமூர்த்தி அந்த தேவியின் வார்த்தைகளைக் கேட்டுத் தமது வேகத்தைத் தணித்துக் கொள்ள, யுத்தத்தின் அதிஷ்டான தேவரான அவரும் அவரைப் போலவே யுத்தங்களில் உத்ஸாகங் கொண்டுள்ள அந்த தேவியும் அந்தக் களத்தைவிட்டு விலகி அவ் விருவரும் பூஞ்சோலைகள் நிறைந்த ஜாந்தஸ் நதிக்கரைக்குச் சென்று, அங்கிருந்த வண்ணம் யுத்த களத்திலிருந்து கொஞ்சங் கொஞ்சமாகத் தாழ்ந்து, தங்கள் காதுகளில் விழுந்து வந்த சப்தங்களைக் கேட்டு வந்தனர்.

இவர்கள் இவ்வாறு தங்களது காலத்தைக் கழித்து வருகையில், கிரேக்கர்கள் துரோஜர்களைத் துரத்திக் கொண்டு சென்று யுத்தத்தை நடத்தினர். தைரியசாலியான வீரன் ஒவ்வொருவனும் எதிர்க்கக்ஷியில் உள்ள வீரன் ஒருவனைக் கொன்று தீர்த்தான்.

முதன் முதலாக ஓடியஸ் என்பவன் மடிந்து விழுந்து இரத்தம் வடிந்திருந்த மண்ணைக் கவ்வினான். அதிரிதேசனது கையினால் மாண்டு அவன் பெருமையை யடைந்தான்.

மகாவீரனான அந்த ஹலிஜோனியன் ஓட்டம் பிடிக்க நினைக்கத் தன் இரதத்தின் சக்கரங்களைத் திருப்பியபொழுது, ஒரு வேலானது மிக வேகமாக வந்து அவனது முதுகிற் பாய்ந்து, அவனது மார்பைத் துளைக்க, அவன் அக்கணமே புழுதியில் விழுந்து புரண்டான். அவனுடைய ஆயுதங்கள் பூமியைத் தாக்கி எதிரொலிகளைப் பரப்பின; அவனுடைய ஆவியும் தன் வழியே பறந்து சென்றது.

பீஸ்தஸே! அடுத்தாற்போல் உன் முறை வந்தது! இதோமினியஸ்ஸின் நீண்ட இருப்பாயுதத்தின் வேகத்தை நீ அறிய வேண்டியவனாகிவிட்டாய். அதுவே உன் விதியாகி விட்டது!

தனது ஏக புத்திரனும் தனது அன்பிற்குப் பாத்திரனும் தனக்கு ஆனந்தத்தை அளித்து வந்தவனுமான அந்த இதோ மினியஸ்ஸை அவனது தகப்பனுன போரஸ் என்பவன் செழிப் பான தரணியிலிருந்து இந்த ட்ராய் யுத்த களத்திற்கு அனுப்பியிருந் தான். அவனுடைய கிரீட்டன் ஈட்டியானது வெகு தூரத்தி லிருந்து பறந்து வந்து, ரதத்தின் மேல் ஏறிக்கொண்டிருந்த பீஸ்த ஸின் தோளைத் துளைக்க, அவன் அக்கணமே அந்த ரதத்திலிருந்து தள்ளப் பட்டவனுய்த் தரையில் உருண்டு விழுந்தான். அழியாத நிழல்கள் அவன் கண்களைச் சூழ்ந்து கொண்டன.

அதன்பின் வேட்டையாடுவதிலும், காடுகளிலும் வனங் களிலுமுள்ள மிருகங்களை ஹிம்சித்துக் காயப்படுத்துவதிலும் சமர்த்தனுன சியமந்திரியஸ் என்பவன் சாய்ந்து விழுந்தான். வில்லை வளைக்கவும் குறி த வ ரு ம ல் சரங்களைத்தொடுக்கவும் மற்றைய ஏனைய காட்டு வித்தைகள் அனைத்தையும் தயானு தேவி யானவள் அவனுக்குக் கற்பித்து இருந்தனள் என்றாலும், அந்த வித்தைகள் அவனுக்கு இப்போது பயன்படாமல் போயின. அவன் ஓட்டம் பிடிக்கையில் காலன் போன்ற ஒரு வேலானது அவனைத் தடுத்து மடித்து விட்டது. மனேலாஸனது கையி லிருந்து புறப்பட்ட அந்த ஆயுதம் அவனது அகன்ற முதுகின் வழியாய்ப் பாய்ந்து, படபடவென்று துடித்துப் பொங்கிய மார்பைப் பிளந்து கொண்டு செல்ல, அந்த வீரன் இடியைப் போன்ற ஒரு கனத்த சப்தத்தைச் செய்துகொண்டு கீழே விழுந்து மடிந்தான். அவனது பித்தளைப் போர்க் கவசமும் கலகலவென்று ஒலித்துக் கொண்டு தரையில் விழுந்தது.

அதன்பின் அதிதந்திர சாலியான விரிக்குளூஸ் என்பவனது ஆயுள் குறுகி விட்டது! வீரனுன மெரியோன் என்பவன் அவனை நரகலோகத்திற்கு அனுப்பிவிட்டான்.

விரிக்குளூஸே! நீ உன் தகப்பனைப்போலவே காரியங் களில் கை தேர்ந்தவன். சித்திரங்களை அழகாக வரைவதிலும், அவற்றைப்போல் கண்ணைக் கவரும் பண்டங்களை உண்டாக்கு வதிலும் நீ சமர்த்தான்தான்! ஆனல் உனக்கு நல்ல பாக்கியம் இல்லாமல் போய்விட்டது!

பாலாஸின் அன்பிற்குப் பாத்திரனுன அவனுக்கு அந்த தேவியானவள் கப்பல்களையும் கட்டடங்களையும் நிர்மாணம் செய்யும் வித்தைகளைச் சாங்கோபாங்கமாக அப்யாஸம் செய்வித்திருந்தாள். அவனது கைப்படவே பாரிஸின் கப்பற் படைகளெல்லாம் நிறுவப் பட்டிருந்தன. அவைகள் அவனது தேசத்திற்கு நேர்ந்த சகலமான அனர்த்தங்களுக்கும் அதன் அழிவுகளுக்கும் காரணமாயின. அவனுக்கு பாவம்! தெய்வங் களின் ரகஸ்யமான உத்தேசங்களாவது, தன் தேசத்திற்கு நேரக்கூடிய நாசமாவது, தனக்கு வரவிருந்த அழிவாவது தெரியவே தெரியாது. திக்கோ திசையோ தெரியாமல் மனக்

குழப்பத்துடன் அதிர்ஷ்ட ஹீனனுன அந்தக் கலா நிபுணன் ஓட்டம் பிடிக்கையில், மெரியோனது வேலாயுதமானது மரித் தோர் குழாத்தில் அவனைப் புகுத்தி விட்டது! அந்த வேலானது அவனது இடுப்பின் வலது புறமாக வெகு துரிதமாகவும் வேகமாக மாகவும் புகுந்து சென்று, அவனது மூத்திரப் பையையும் எலும் பையும் ஊடுருவித்துளைத்து விட்டது. அதனுல் அவன் சிறிதும் பயனின்றிக் கதறிக்கொண்டு தன் முழங்காலை மடித்த வண்ணம், மர்த்தியலோகத்தை யடைந்தான். அங்கு அழியாப் பெருந்தூக்க மானது அவனுடைய கண்களைத் திறக்க வொட்டாமல் மூடி விட்டது.

மீஜிஸின் பராக்கிரமத்தினுல் வேக கதியையுடைய பிடியஸ் என்பவன் ஓட்டம் பிடித்தான். அவன் அந்தினுருக்கு ஓர் அன்னிய நாட்டுக் கன்னியிடம் பிறந்தவன் என்றுலும் தன் வயிற்றில் பிறவாத அந்தக் குழந்தையைத் தேவ கன்னிகையைப் போல் அழகுள்ளவளும் உதார குணமுள்ளவளும் அந்தினுரின் உத்தம பத்தினியுமான தியானுர் என்பவள் தன் வயிற்றிற் பிறந்த குழந்தையைப் போல் அன்புடனும் வாஞ்சையுடனும் வளர்த்து வந்தாள். ஆனுல் அவள் அவனுக்காகப்பட்ட கவலைகளும் சிரமங்களும் வீணே ஆகிவிட்டன.

அவனுக்குப் பின்புறமாக விருந்த மீஜுஸ் என்பவன் தன் ஈட்டியை அவனது பிடரியில் நன்ருக அழுத்திக் குத்தி விட்டதினுல், அந்த ஆயுதமானது நெற நெறவென்று அவ னுடையதாடைகளை நொறுக்கிப் பொடித்துக்கொண்டு, வேகமாய்ச் சென்றது. அது அவனது குளிர்ந்த நாவையும் இனித்த பற்களையும் பிளந்துவிட்டது.

அதன்பின் பெரிய மனதுள்ளவனும் தேவர்களைப்போன்ற ஸ்வாபமுள்ளனும் வீரனுன தோலோபியனது பிரசித்திபெற்ற வம்சத்தில் தோன்றினவனும், புண்ணிய தீர்த்தமான சியாமந் தரத்தின் கரையில் வசித்து வந்தவனும், அந்த நதியைப் பூஜித்து வந்தவனும், ஒரு தெய்வத்தைப் போலவே மதிக்கப் பட்டு வந்தவனுமான ஹிப்சினுர் என்பவன் இறந்தான்.

யுத்தகளத்திலிருந்து ஓட்டம் பிடித்தவர்களது கூட்டத்தில் அவனும் இறந்ததைக் கண்ணுற்ற யூரிப்பைலஸ் என்பவன் பாய்ந்து அவனுக்கு ஒரு படுகாயம் உண்டாக்க அவன் அதனுல் மடிந்துபோனுன். யூரிப்பைலஸ் அவன் மேல் வேகமாக எறிந்த ஆயுதமானது அவனுடைய அகன்ற புஜங்களின் மேல் விழுந்து கீழ் நோக்கி இறங்கி, அவனது கையைத் துண்டித்துவிட்டது. தேவாராதனைகள் செய்துவந்த அந்தத் திருக்கரத்தை அது வெட்டிவிட்டது. அந்தப் புனிதமான கையிலிருந்து ஒழுகிய இரத்தம் கீழே விழுந்து தன்னைக் கறைப்படுத்திய பொழுது, அதைக் கண்ணுற்ற அந்த யுத்தகளத்திலிருந்த மணலும் நாணிச் சிவந்தது!!

இவ்வாறு இந்தப் புரோஹிதனும் விழுந்து மடிந்தான். யமன் ரத்தக்கறை படிந்த தன் கைகளினுல் அவனது மங்கிப் போன கண்களை மூடிவிட்டான். அவனது விதியும் அவனது மூச்சை அடைத்துவிட்டது. இவ்வாறு அந்த வீரர்கள் பல பாகங்களிலும் சண்டை செய்துகொண்டு சலியாமல் உழைத்து வந்தனர். அவர்களில் திடிதீசன் மாத்திரம் அந்தக் களத்தின் நாற்புறங்களிலும் வெகு உக்கிரமாகப் போர் புரிந்து வந்தான். அவன் மெய்மறந்து இடியைப்போல் கர்ஜித்துககொண்டு, அந்தக் களத்தில் அணிவகுத்து நின்ற திரளான கிரேக்கர்களின் மத்தி யிலும் துரோஜர் குழாத்தின் மத்தியிலும் நுழைந்து சென்ருன். அவன் ஓர் அம்பைப்போல் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குப் பறந்து சென்று, அங்கும் இங்கும், மேலும் கீழும், முன்னும் பின்னு மாகத் திரும்பித் தன் சரங்களைப் பொழிந்தான். அவனைக் கண்ணுற்றவர்களது முகமானது அவனது பற்களின் வெளிச்சத்தில் பிரகாசித்தன.

உயர்ந்த மலைகளிலிருந்து வேகமாகவும் கனமாகவும் வழிந்து வரும் அருவிகள், அம்மலைகளின் அடிவாரங்களிலுள்ள வயல்க ளனைத்தையும் ஒரேயடியாய் முழுகடித்துக்கொண்டும், அங்குள்ள மரங்களை வேரோடு பிடுங்கிக்கொண்டும் புரண்டு செல்லுகின்றன. அவை அவ்வாறு புரண்டு செல்லுகையில் அவற்றில் உண்டாகும் அலைகள் ஏற்கனவே இடிந்துள்ள அணைகளின் வழியாய் ஆர்ப்பரித்துக்கொண்டு ஓட்டமாய் விரைந்து ஓடித் தங்கள் வழியின் குறுக்காகவுள்ள பாலங்களின் மேலும் வழிந்து சென்று, கடைசியாக அந்தப் பிரதேசத்தின் எல்லையிலுள்ள உன்னதமான கரைகளையும் பிளந்து உடைத்து விடுகின்றன. அப்பொழுது அறுவடைக்குப் பக்குவமாக விருக்கும் பொன்னிறக் கதிர்களும், தரைமட்டமாகத் தலைசாய்ந்து கிடக்கும் திராக்ஷைத் தோட்டங் களும் அடியோடு ஒரு பெரும் பாழாக ஆகிவிடுகின்றன. அந்தோ! அது எவ்வளவு பரிதாபமான காட்சியாக ஆகி விடுகின்றது!

ஜோவ் பகவானுனவர் மதகுகளினின்றும் மடமடவென்று கொட்டும் வெள்ளங்களைப்போல் கனத்த மழைகளைப் பெய்து கொண்டு பூமியில் இறங்கிவிட்டால் விவசாயிகளின் சிரமமெல் லாம் வீணுகத்தானே போய் விடும்!

மட்டுமிதமில்லாத கோபங் கொண்டிருந்த அந்த திடிதீசன் அந்த ஜோவ் பகவானைப் போலவே, தன்னையெதிர்த்து வந்த சேனைகளையெல்லாம் புறங்கொடுத்து ஓடும்படி முறியடித்து ட்ராய் நகரத்தார் அனைவரையும் அந்த யுத்தகளத்தி லிருந்து துரத்திவிட்டான்.

இவ்வாறு அந்தக் குரூர பாணியானவன் அந்தச் சேனு சமுத்திரத்தை ஹதம் செய்து, அந்த யுத்தகளத்தை அழித்து விட்டதைக் கண்ணுற்ற லிஸியா நாட்டு வீரர்களின் தலைவன்

மிகவும் துக்கித்து, ரோஷத்துடன் தன் வில்லை வளைத்து அவனை நோக்கி எய்ய ஓர் அம்பைத் தொடுத்து அதன் நாணை இழுத்தான். ஆத்திரத்துடன் காத்திருந்த அந்த அம்பானது தனக்கு நியமிக்கப் பட்டிருந்த குறியை நோக்கி விரைவாகப் பறந்து சென்று, அந்த வீரனது மார்பில் கவிந்திருந்த கவசத்தைத் தனது கூரான முனையினால் உடைத்து, அவனது தோளை ஆழமாகக் குத்தி உட்சென்று, அவனது இரத்தத்தை பானம் செய்தது.

அப்பொழுது அவனுடைய உடலிலிருந்து இரத்த வெள்ள மானது ஆறாகப்பெருகி அவனது பித்தளைக் கவசத்திற்கு சாயமிட்டாற்போல் வழிந்து வருவதைக் கண்ட அந்த வில்லாளி மிகவும் பெருமிதங்கொண்டு, தன் கக்ஷியிலிருந்த வீரர்களை நோக்கிப் பின்வருமாறு வெகு கம்பீரமாக உரத்து உரைத்தான்:—

"துரோஜர்களே! இதோ! இங்கே பாருங்கள், இதோ இந்தப் பக்கமாக உங்கள் குதிரைகளை ஓட்டி வாருங்கள்! கிரேக்கர்களில் அதி வீரனான இவன் இங்கு நமது கையினால் காயப்பட்டுத் தன் இரத்தத்தை வடிக்கின்றான்! காலனுக்கு சமானமான நமது அம்புக்குத் தப்பி அவன் இனி வெகுகாலம் பிழைத்திருக்க மாட்டான்! அப்படி இல்லையென்றால் பீபஸ் பகவான் என்னை இந்த யுத்தத்துக்குச் செல்லும்படி தூண்டின தன் உத்தேசம் வீணே ஆகி விடுமல்லவா"! என்றான்.

இவ்வாறு அவன் தன்னைப் புகழ்ந்துகொண்டு பெருமை யாய்ப் பேசிக் கொண்டிருக்கையில், அந்த இறகு கொண்ட பக்ஷி போன்ற அம்பானது அந்த திடிதீசனுக்குப் பெருத்த வேதனையை மாத்திரம் உண்டாக்கியதேயன்றி, அவனது உயிரை வாங்கிவிட வில்லை. அது தன்னையனுப்பிய வில்லாளியின் கை வரிசையைக் கேலி செய்து விட்டது.

காயம் பட்ட வீரனான அந்த திடிதீசன் தன் இரதத்தின் பின்புறமாகச் சென்று, ஸ்தெனியலின் உதவியை நாடினான். தனக்குக் கை கொடுக்கும்படி அவனை வேண்டினான். அந்த ஸ்தெனியஸ் சட்டென்று தன் ஆஸனத்திலிருந்து கீழே குதித்து, ரத்தத்தைக் கக்கி கொண்டிருந்த அவனது காயத் திலிருந்து அந்த அம்பைப் பிடுங்க, அந்த இரத்தம் அவனது உட்சட்டையின் மேல் மாலை மாலையாய் வழிந்து சென்றது. அப்போது அந்த திடிதீச மகாராஜன் தன் காப்புத் தெய்வத்தை நினைத்துப் பின் வருமாறு பிரார்த்தித்தான்:—

"ஜோவ் தேவரின் திருமகளே! அபஜெயம் என்பதை அணுவளவும் அறியாத அணங்கே! தேவர்களுக்குச் சமானமான என் தந்தை தங்களுக்குச் செய்த வழிபாடுகளினால் அவர் தங்களது கிருபைக்கும் பாத்திரராக இருந்தாலாவது, அல்லது நான் தங்களை மனதார தியானித்துத் தங்களது ஸாந்நியத்தை இந்த யுத்த களத்தில் அறிந்தாலாவது தாங்கள் இப்பொழுது

எனக்கு இந்த க்ஷணத்தில்சகாயம் செய்ய வரவேண்டும். தங்களது விசேஷமான சகாயத்தை எனக்குச் செய்ய வேண்டும். தங்களது ரக்ஷைக்குப் பாத்திரனானவனும் ஒரு தலைவனுமான என்னை இந்த யுத்தத்தில் ஒரு துரோஜ வீரன் தன் சரத்தினால் காயப்படுத்தி விட்டான்! அந்த துரோஜ வீரனை அடுத்துத் தாக்க எனது வேலுக்கு அனுக்கிரகம் செய்யுங்கள். 'இந்தக்கண்கள் மங்கிப் போய்விட்டன. இவை இனி வெளிச்சத்தைக் காணமாட்டா?' என்று பிதற்றிக்கொண்டு பெருமையடித்து வரும் அந்தப் பதரை இந்தக் கரையில் வெட்டித் தள்ளுவீராக!'' என்றான்.

இவ்வாறு திடிதீசன் செய்த பிரார்த்தனையை மினர்வா தேவி செவி சாய்த்துக் கேட்டு, அவனுக்கு அனுக்ரஹமும் செய்தாள். அக்கணமே அவனது நரம்புகள் உறுதியுற்றன. தளர்ந்திருந்த அவனுடைய சக்திகள் சூடும் சுணையும் பெற்றன. தன் அவயங்களெல்லாம் சுறு சுறுப்பும் லகுவும் அடைந்ததை அவனும் அறிந்தான். அவனது மார்பும் துடித்தது. மேன் மேலும் யுத்தத்தைத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்று துணிவு கொண்டது. அந்த தேவியானவள் அவனை நோக்கித் "தைரியமாயிரு! ஒவ்வொரு சண்டையிலும் நீ விஜயனாய் விளங்குவாய். யுத்தத்தில் கண்ணுங் கருத்துமாக இருக்க வேண்டியது உனது கடன். ஓட்டமாய்ச் சண்டைக்கு ஓடு! உன்னை எதிர்த்து வரும் ஒவ்வொரு பகைவனையும் மடக்கு! உன் தகப்பனுக்கு வாய்த்திருந்த வீரசூர பராக்கிரமங்களான சகல நற்குணங்களும் உன்னிடம் இருக்கின்றன. அவற்றை நீ மறைத்திருக்கின்றாய். அவற்றைத் தட்டியெழுப்பு. என் வரப்பிரஸாதத்தினால் நீ தைரியமுடையவனாகி ஆகிவிட்டாய். அந்த தைரியம் உன் மார்பில் பூரணமாக நிறைந்திருப்பதனால் அது பொங்கிப் பூரித்துத் துடிக்கின்றது. தேவர்களுக்குச் சமானமான உன் தகப்பனது நற்குணங்களுடனும் நீ இப்பொழுது விளங்குகின்றாய். இவ்வளவுடன் நில்லாமல் நான் உனக்கு அதிவிசேஷமான ஒரு கிருபையையும் செய்கின்றேன். மனிதர்களுடைய கண்களை மறைக்கும் மப்பு மந்தாரங்களை நான் உன் கண்களிலிருந்து துடைத்து நீக்கி விட்டேன். ஆதலால் நீ இந்த யுத்தத்தில் கலந்து கொண்டிருக்கும் தேவதைகளையும் உன் கண்களாலேயே பார்க்கலாம். ஆனால் நீ மாத்திரம் அந்த தேவர்கள் இருக்கும் இடத்தை நாடிச் செல்லலாகாது. இந்த யுத்தகளம் முழுவதிலும் அவர்கள் திரிவார்கள். நீ அவர்களை எங்கு கண்டாலும் எதிர்க்கலாகாது. மனிதர்களுடைய வீரசூர பராக்கிரமங்கள் அவர்களிடம் செல்லா வாதலால், நீ அவர்களுடன் துடுக்காய்ப் போரிடலாகாது. ஆனால் வீனஸ் தேவியானவள் இங்குள்ள வீரர்களுடன் கலந்துகொண்டு யுத்தஞ் செய்யவந்தால், நீ அவளை மாத்திரம் எதிர்த்துப் பொரலாம். அவளைக் காயப் படுத்தலாம். இதுவே பாலாஸ் தேவியின் ஆக்ஞை'' என்றாள்.

இவ்வாறு சொல்லிவிட்டு, அந்த நீலாயதாக்ஷியானவள் இறகு கொண்ட ஒரு பக்ஷியைப் போல் பறந்து சென்றாள். அவளது கிருபையைப் பெற்ற வீரனும் ஆத்திரத்துடன் எழுந்திருந்து சண்

டைக்கு ஓடினுன். அவன் தன் வழியிலிருந்த தடைகளைக் கண்ணுற்றுக் கொதித்துச் சினங்கொண்டவனுகவும், தன்னை யெதிர்த்துப் பொருது தனக்குச் சிரமத்தை உண்டாக்கிய வீரர்களிடம் கோபங் கொண்டவனுகவும் முன்னிலும் பன்மடங்கான உற்சாகத்துடன் அந்தக் களத்தைக் கடந்து சென்ருன்.

கொடும் பசியினுல் பீடிக்கப்பட்ட ஒரு வரிச்சிங்கமானது சடைபோர்த்த ஆடுகள் கூட்டங் கூட்டமாய் கூடியிருக்கும் ஒரு மந்தையை நோக்கிப் பாய்ந்து வருவதை, வெகு தூரத்திலிருந்து கண்ணுற்ற ஓர் இடையன் அந்தச் சிங்கத்தை நோக்கிக் குறிவைத்து, ஓர் அம்பைவிடுத்து, அதைத்தாக்கிக் காயப்படுத்தி விட்டால், அந்தச் சிங்கமானது தனக்கு நேர்ந்துவிட்ட வேதனையைப் பொறுக்க முடியாமல் இடிபோல் முழக்கஞ் செய்துகொண்டு பொங்கிக் கொதிக்கின்றது. கர்ஜிக்கின்றது. அந்த இடையனும் தன் இடத்தில் ஊன்றியிருக்கக் தைரிய மற்றவனுய் நடுநடுங்கிக்கொண்டு ஓட்டம் பிடித்து விடுகின்ருன்! அப்பொழுது அந்த மந்தையிலுள்ள ஆடுகளும் பயமடைந்து வெருண்டு பல திசைகளிலும் பிரிந்து ஓடி விடுகின்றன. அவை கும்பல் கும்பலாகவும் ஒன்றின்மேல் ஒன்ருகவும் விழுந்து, கடைசியாய் அந்தச் சிங்கத்திற்கே இரையும் ஆகிவிடுகின்றன. அந்தச் சிங்கமானது அவற்றைக் கொன்று அவைகளின் இரத்தத்தினுல் தரையைக் குளிப்பாட்டிவிட்டுக், கடைசியாய்த் தனது பசியையும் ஆற்றிக்கொண்டு எடுத்த காரியத்தை முடித்தோம்! என்ற ஜயகோஷத்துடன் தனது இருப்பிடமாகிய உன்னதமான சிகரத்தை நோக்கித் தாவிக்குதித்து ஓடிவிடுகின்றது.

தீரனை திடிதீசனும் அந்தச் சிங்கத்தைப் போலவே சிறிதும் இளைக்காத வேகத்துடன் தன் சத்துருக்களின்மேல் பாய்ந்தான். ஒரே நொடியில் இரண்டு மகா வீரர்களை சம்ஹாரம் பண்ணினுன். அஸ்திநோஸ் என்பவனது சுவாசம் பறந்து போய் விட்டது. அவன் தரையில் விழுந்துவிட்டான். அவனுக்குச் சமீபமாகவே அவனுடைய பரிவார ஜனங்களின் புரோஹிதனும் குண நிதியுமான ஹைப்பினுர் என்பவனும் இறந்து போனுன்.

திடிதீசன் விடுத்த கொடிய வேலானது காலனைப்போல் பாய்ந்து, அஸ்திநாஸின் மார்பைப் பிளந்தது; அதே சமயத்தில் அவனது அகன்ற பட்டாக்கத்தி ஹைப்பினுரின் புஜத்தை வெட்டி வீழ்த்தியது.

இவ்வாறு தன்னுல் கொலையுண்ட இந்த இரண்டு வீரர்களையும் விட்டு விட்டு, அவன் பின்னும் கோபித்துக் கொதித்துக் கொண்டு முன்சென்று, அபாஸ் என்பவனையும் பாலியீடஸ் என்பவனையும் தாக்கினுன். அவ்விருவரும் மஹாஞானியும் விருத்தருமான யூரிதாமஸ் என்பவரின் புத்திரர்கள். அவர் வருங்கால நிகழ்ச்சிகளையும் ஸ்வப்பனங்களின் ரகஸ்யங்களையும் அறிவதில் சமர்த்தராயிருந்தார். அவர் தன்னுல் கூடிய மட்டும் உபதேசங்

களும் போதனைகளும் செய்து தம் மக்கள் யுத்தத்திற்குச் செல்வதைத் தடுத்தார். ஆனால் அவர்கள் அவரது வார்த்தை யைக் கேட்கவில்லை. யுத்தத்திற்குச் சென்றவர்கள் திரும்பிச் செல்லவுமில்லை. அவர்களது தகப்பனார் புலம்பிக்கொண்டே தன் காலத்தைக் கழித்தார். அவர் தம் மக்களுக்குச்சொன்ன புத்திமதி கள் விழலுக்கிறைத்த நீராகி விட்டன! அவர்களுக்கு நேர்ந்த கதி இன்னது என்று அவர் கனவிலும் அறியவில்லை. அவர்களைத் திடிதீசனது வேலானது ஒழித்துவிட்டது என்பது மாத்திரம் நிச்சயம். தண்டில் சென்றால் இரண்டில் ஒன்று என்பதல்லவா பழமொழி ; ஜயத்துடன் திரும்புவது சந்தேகம் தானே ?

அடுத்தபடியாக இளையோனை ஜர்ந்தஸ் என்பவனும் தூவன் என்பவனும் திடிதீசனது கோபத்திற்கு இலக்காயினர். அவ்விருவரும் பினாப்ஸ் என்னும் கிழவருக்குத் தள்ளாத வயது காலத்தில் பிறந்தவர்கள். அவர் அவ்விருவரையும் வெகு அருமை யாகவும் அன்புடனும் வளர்த்து வந்தார். அவர்களைக் கண்டு மகிழ்ந்தும், அவர்களால் தான் தமது குலம் விளங்க வேண்டு மென்றும் கருதி வந்தார். அவருக்கு விசேஷமான தன தான்ய சம்பத்துக்கள் இருந்தன. அந்த இரண்டு புத்திரர்களைத் தவிர வேறு சந்ததிகள் அவருக்கு இருக்கவில்லை. அவ்விருவர் மாத்திரமே அவர் விசேஷமாக உழைத்து சம்பாதித்து கண்ணும் கருத்துமாய்ச் சேகரித்து வைத்திருந்த ஆஸ்திகளுக்கு பாத்தியஸ் தர்களாக விருந்தனர். அவர்களைக் கொடியோனை காலன் சிறிதும் தயவு தாட்சண்யமின்றி எட்டிப்பிடித்து, நன்றாய்ச் செழித்து வாழக்கூடிய பருவத்தில் அழித்துவிட்டான். ஆதலால் அவர்களது தகப்பனார் வீணாகக் கண்ணீர் வடித்துத் தம் காலத் தைக் கழித்து வந்தார். அவர் மலைபோல் குவித்து வைத்திருந்த தன தான்ய சம்பத்துக்களெல்லாம் இப்பொழுது அன்னிய ஜனங் களுக்குச் சேர்ந்து விட்டன. அவரது வம்சமும் அழிந்துபோய் விட்டது. அவர்களது பெயரைச் சொல்வோரும் இல்லாமல் போய் விட்டனர்.

பின்பு பிரியம் மகாராஜாவின் புத்திரர்களில் இருவர் பளிச் சென்று மின்னும் ஆயுதங்களை ஏந்தியவர்களாய், ஓர் ரதத்தில் ஏறிக்கொண்டும் ஒருவொருக்கொருவர் உதவி செய்து கொண்டும் சண்டைக்கு வந்தனர்.

காட்டரசனை கம்பீரமுள்ள ஒரு சிங்கமானது இரை தேடிச் செல்லுகையில் தனிமையான ஒரு வனத்தில் மேய்ந்து வரும் காளைகளைக்கண்டு அதிவேகத்துடன் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அவற்றின் மத்தியில் குதித்து அவற்றின் பலமும் உறுதியு மான கழுத்துக்களை வளைத்துத் திருகி முறித்து, அவற்றைக் கடைசி யாய்க் கிழித்துத் தரையில் வீழ்த்தி விடுவதுபோல், திடிதீசன் அந்த சகோதரரான இரண்டு வீரர்களின் மேலும் பாய்ந்தான். அவர்கள் தாங்கள் அமர்ந்திருந்த ஆசனங்களிலிருந்து வேரோடு பிடுங்கப்பட்டவர்கள் போல் ஆனார்கள். அவர்களுடைய குதிரை களும் தேரும் ஜயசீலனது கப்பலுக்குக் கொண்டு செல்லப்பட்டன.

அப்பொழுது தேவர்களுக்குச் சமானமான ஈனியஸ் என்பவன், இவ்வாறு தன் கட்சியின் சத்துரு மேன்மேலும் வெற்றியடைந்து வருவதையும், தன் சிநேகிதர்களை அவன் தொடர்ந்து ஓடி வருவதையும் மிகுந்த கவலையுடன் கண்ணுற்று, வீரர்கள் தங்கள் வேல்களைக் "கல கல" வென்று சப்திக்கும்படி ஓசையுடன் ஒருவர் மேல் ஒருவர் சரமாரியாகப் பொழிந்து வந்த அந்தப் புய்லின் ஊடே பறந்து சென்று, வெகு கவனத்துடன் பாண்டாரஸ் என்பவனைத் தேடினான். கடைசியாக வீனஸின் வம்சத்தில் உதித்தவனான அந்த வீரன் லிக்கேயனது மகனும் அதிபராக்கிரசாலியுமான அந்தப் பாண்டாரஸைக்கண்டுபிடித்துப் பின் வருமாறு உரைத்தான் :—

"பாண்டாரஸே! உன் பெருமைகளெல்லாம் இப்பொழுது எங்கே பறந்து போய் விட்டன? இறக்கைகளைக் கொண்டு பறக்கும் உன் அம்புகளும் குறி தவறாத வில்லும் எங்கே? ஒப்பற்ற உன் திறமை எங்கே? இதுவரை உனக்குச் சமானமான பேரும் கீர்த்தியும் உள்ளவன் ஒருவனும் இல்லையென்று பெருங் கீர்த்தியுடன் விளங்கி வந்தனையே! அந்தப் பெருங் கீர்த்தி எங்கே? லிஸியர்கள் தங்களது வம்சம் புகழ்பெற்றது என்று பெருமை யடித்து கொள்ளுகின்றார்களே! அந்தப் பெருமை எங்கே?

அதோ அந்த மனிதனைப் பார்! அவனைக் குத்திக் கிழி! அவன் நம் சேனைகளைச் சிறிதும் சின்னாபின்னமாக்காமல் கூட்டங் கூட்டமாய் ஒரேயடியாய் வெட்டி வீழ்த்தி விடுகின்றான்! அவனது பலம்தான் என்னே! அதியற்புதமாகவல்லவோ இருக் கின்றது! அவன் மர்த்தியன் தானோ அல்லது ட்ராய் ஜனங்கள் தனக்குப் பூஜைகளும் பலிகளும் முறையாகச் செய்யவில்லையென்று கோபங்கொண்டு வெகு தூரத்திலுள்ள விண்ணுலகத்திலிருந்து இறங்கி வந்து அந்த ட்ராய்காரர்களைத் தண்டிக்க வந்த தெய்வமோ, யார் என்று தெரியவில்லை. அவன் யாராயிருந்தாலும் சரி, ஜோவ் பகவானை முன்னிட்டுப் பிரார்த்தனைகள் செய்து, அவரைத் திருப்தி செய். அவன் மனிதனாகயிருந்தால் அவனை அழி! தெய்வமானால் வணங்கிப் பணிந்து நம்மை ரக்ஷிக்க வேண்டு மென்று மன்றாடிப் பிரார்த்தனை செய்!

நாம் கஷ்டங்களிலிருந்து விடுபட்டுத் தப்பிப் பிழைக்க வேண்டும். தெய்வங்களது கோபத்தைப் போன்ற கொடிய அவஸ்தையும் வேறொன்று உண்டா?" என்றான்.

அதைக் கேட்ட அந்த லிஸியன் அவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான்:—"உமது கண்ணுக்குப் புலப்படும் அவன் தீரனான தியோமதியென்றே என் புத்திக்குப் புலப்படுகின்றது. அவனு டைய வேகமுள்ள குதிரைகள் தான் புழுதி படிந்துள்ள அந்தப் போர்க்களத்தில் அவனை அவ்வாறு கரகரவென்று சுற்றிக்கொண்டு சுழன்று ஓடும். உயர்ந்து விளங்கும் அந்தக் கிரீடமும் அவனுடை

யதுதான். ஜ்வாலையுடன் ஜொலிக்கும் அந்தக் கேடயமும் அவனுடையயதுதான்!

அப்படியில்லை யென்றால் ஒரு தேவதைதான் அந்த வீரனைப்போல் மாறுவேஷம் போட்டுக்கொண்டு விளங்க வேண்டும்!

உண்மையில் அங்கு இருப்பது அந்த வீரன்தான் என்றால் தேவலோக வாஸியான ஒரு தெய்வமானது மேகங்களின் இடையில் மறைந்துகொண்டு இருந்த வண்ணம் நான் அவன்மேல் எறியும் அம்புகளை வேறு வழியாய்த் திருப்பி, அவை அவனைத் தாக்காமல் காத்துவரவேண்டும்! அப்படியிருந்தால்தான் அவன் இதுவரை என் அம்புகளுக்குத் தப்பிப் பிழைத்திருப்பான்! இறக்கையுடன் பறக்கும் ஓர் அம்பை நான் அவன்மேல் வேகமாய் எய்தேன். அதுவும் "விர்" என்று துரிதமாகவே சென்று அவனைத் தாக்கியது. அது அவனை ஓங்கியடித்த வேகத்தினால் அவன் மாண்டே போயிருக்கவேண்டும். நரகலோகத்தின் கதவுகளின் முன்னால் போய் நின்றிருக்கவேண்டும். ஆனால் அவன் அவ்வாறு அழிந்து போகவில்லை. ஏதோ ஒரு தெய்வம் நமக்கு விரோதமாகக் கிளம்பி, அவனது தலைவிதியை மாற்றிவிட்டது. இல்லாவிடில் இவ்வாறு இந்தக் கையினால் குறிதவறாமல் நான் விடுத்த அம்புகளுக்கு அவன் தப்பியிருப்பானா? மடிந்தல்லவா போயிருப்பான்! நான் வில் வித்தையில் தேர்ந்தவன், வல்லவன்! இந்த யுத்தத்தில் பாதசாரியாகவே யுத்தம் செய்யவேண்டுமென்று முன்வந்தேன்.

விரைவான கதியுடன் ஓடும் குதிரைகளைப் பூட்டிக்கொண்டு என்னுடைய வேகமாய்ப் பறக்கும் ரதங்களை நான் இங்கு கொண்டுவரவில்லை.

எனக்குப் "பளபள"வென்று மின்னும் பத்து ரதங்கள் இருக்கின்றன. அவைகளை நான் என் வீட்டிலேயே வைத்துவிட்டு இங்கு வந்தேன். அவை இன்னும் லிக்கேயனது ராஜ கோபுரங்களில் அலங்காரமாக இருந்து வருகின்றன. அங்கு அவை தாராளமான போர்வைகளைப் போர்த்திக்கொண்டு நிற்கின்றன. அந்தத் தேர்களுக்குத் தகுதியான இருபது வேகமான குதிரைகளும் அங்கேயே தங்களது தலைவனுடைய ஆஞ்ஞையை எதிர்பார்த்த வண்ணம் சித்தமாக நிற்கின்றன.

புனிதமான இந்தப் புனல்களைக் கடந்து முதன்முதலாக ட்ராய்க்குச் சென்று வருகையில், தீரரான என் கிழவர் 'இந்த வாகனங்களைக் கொண்டு செல். இந்த ரதங்களில் இருந்த வண்ணம் யுத்த களங்களைச் சுற்றி வரலாம். கண்ணில் கண்டவர்களையெல்லாம் கண்டதுண்டமாக வெட்டி ஜெயசீலனாகச் சவாரி செய்யலாம்' என்றார்.

ஆனால் இளங்கன்று பயமறியாது என்ற முதுமொழிப்படி, என் சாமர்த்தியத்திலேயே நம்பிக்கையுள்ளவனாகவும், அதிக

மான செலவில்லாமல் காரியத்தை முடிக்கவேண்டும், சிரமமில் லாமலும் சுருக்கமாகவும் முடிக்கவேண்டும் என்ற ஆவலுள்ளவ ளுகவும் நான் அவருடைய புத்திமதிகளைக் கவனித்துச் சிரத்தை யுடன் கேட்கவில்லை.

அந்தக் குதிரைகளைக் கொண்டு வந்தால் அவைகளுக்கு இந்தப்பஞ்சம்பிடித்த பட்டணத்தில் போதுமான தீனிகிடைக்காமல் போய்விடும் என்று நினைத்து விட்டேன். இங்கு சகலமான சாமான் களும் ஏராளமாக மலைபோல் குவிந்திருக்குமென்று நான் அறிந் திருக்கவில்லை. ஆதலால் நான் என் வில்லையும் கூரான அம்பு களையும் மாத்திரம் எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். என் தேர்களை என் சொந்த தேசத்திலேயே விட்டு விட்டேன்.

என் அன்பனே! சமயம் தவறிப் போய்விட்டது! என் அசட்டுத் தனத்தை நினைத்து நான் என்னை நொந்து கொள்ளு கின்றேன்! எதிரிகளுக்குக் காலனைப்போல விளங்கி வந்த இந்த அம்புகள் இப்பொழுது வலியிழந்து விட்டன! இவைகளினுல் அடிபட்டவர்கள் இப்பொழுது மடிந்து விழுவதில்லை.

திடியஸ்ஸின் மகனும், அத்ரியஸ்ஸின் மகனும் இந்த அம்பு களின் முனைகளுக்கு இலக்கே ஆயினர். அவர்களது கோரமான இரத்தமும் தங்கு தடையின்றிப் பெருகியே தரையின்மேல் வழிந்து வந்தது. என்ருலும் அவையனைத்தும் வீணே ஆயின. அவர்கள் இரத்தத்தை வடித்துப் பயனென்ன? இந்தப் பயனற்ற வில்லினுல் என் வைரிகள் மரிக்கவில்லை. அவர்கள் என்னிடம் கொண்டுள்ள பகையே அதிகரித்து விட்டது!

இந்த வளைவான கொம்புகளை ஒரு கெட்ட முகூர்த்தத்தில் நான் நாணினுல் பிணித்தேன். அசையாமல் தொங்கிக் கொண் டிருந்த எனது அம்பருத் தூணியையும் கையில் எடுத்தேன். ஒரு வீரனுக்கு ஆயுதங்களான ஈட்டியும் கேடயமுமின்றி, இந்த யுத்தத் திற்கு என்னை அனுப்புவித்த என் தலைவிதியை நான் வெகுவாக நொந்து கொள்ளுகின்றேன்.

இந்த துரோஜர்களது களத்தை விட்டு நான் மாத்திரம் உயிருடன் தப்பி என் மனைவியையும், தகப்பனையும் திரும்பவும் என் கண்ணுல் காண்பேனுனல், அப்போது பேரும் புகழும் சம்பாதிக்க வேண்டுமென்று வந்த என் நோக்கங்களை நிறைவேற்றி வைக்காமல் என்னைக் கைவிட்டு விட்ட இந்த வில்லை நான் என் கையாலேயே ஒடித்து "தக தக" வென்று கொழுந்து விட்டு எரியும் நெருப்புக்கு இரையாக்கி விடுவேன்" என்ருன்.

அப்பொழுது தார்தானியரது தலைவன் அவனுக்குப் பின் வருமாறு மறுமொழி பகர்ந்தான்: "அன்பனே! பொறு. பீபஸ் பகவானது பெருங்கிருபையினுல் உனக்குக் கிடைத்த இந்த வில்லை யும் அம்புகளையும் நீ அவமதிக்கலாகாது. வெகுதூரம் வரை செல்

லக் கூடிய அந்த அம்பை நீ இகழலாகாது! புகழ்வதுதான் முறை!

விரைந்து செல்லும் தேரும் தாவிக் குதித்து ஓடும் குதிரைகளும் நமக்கு இப்பொழுது இல்லாமற்போனது ஒரு பெருங்குறைதான் என்ருலும், நாம் அதோ அங்கேயுள்ள வீரனை நோக்கிச் சென்று அவனுடன் கை கலந்து சண்டையிட்டு யார் பலவான் என்பதையும் பார்த்து விடலாம், வா!

நீ இப்பொழுது என் தேரின் மேல் ஏறிக்கொண்டு, அதன் மேலுள்ள உன்னதமான ஸ்தானத்திலிருந்த வண்ணம் யுத்தத்தில் பிரசித்தி பெற்றவையும் என் தகப்பனுருக்குச் சொந்தமுமான குதிரைகளைக் கவனித்துப் பார். அவை நமது இஷ்டப்படி திரும்பவும் நிற்கவும் எதிரிகளைத் துரத்திக் கொண்டு ஓடவும் அவர்களுடைய அடிகளைத் தாங்கவும் தங்களது வேகமான கதியை அதிகரித்துக் கொண்டு ஓடவும் பழகியவை.

அவைகளின் உதவியைக் கொண்டு என்றும் நாம் தைரியமாக இந்த யுத்தகளத்தின் மத்தியில் புகுந்து செல்லலாம், அல்லது ஜோவ் பகவான் நம் எதிரிகளின் கக்ஷியில் தான் இருக்கின்ருர் என்று நமக்குத் தெரிந்துவிட்டால், நாம் க்ஷேமமாகத் திரும்பி ட்ராய்க்கே போய் விடலாம்!

ஆகையால் தாமதியாமல் உன் சாட்டையை எடுத்துக் கொள். கடிவாளத்தைப் பிடித்துக்கொள். வீரனுை உன் ஆவலையும் ஆத்திரத்தையும் அனுசரித்து, உனது இந்தக் கையும் தனது காரியத்தைச் செய்து வரட்டும்! அப்படியில்லை, துவந்த யுத்தம் செய்ய உனக்கு தைரியம் உண்டானுல், உன் வேலாயுதத்தை எடுத்துக்கொள். ரதத்தை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்ருன்.

அவ்வாறு அவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு லிக்கேயனது மகனுை அந்த வீரன் அவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான் :— "இந்தக் குதிரைகள் உனக்குச் சொந்தமானவையாதலால், இவற்றை நீயே ஓட்டுவதுதான் முறை; தங்களது ஏஜமானனது கட்டளைப்படி நடக்கப் பழகிய குதிரைகள் அவன் பிடித்த கயிறுகளையும் அவனது கைப்பிடியையும் மாத்திரமேயனுசரித்து நடக்கும். அதிர்ஷ்டக் குறைவால் நாம் இந்த யுத்தம் வேண்டாமென்று நினைத்து இதை விட்டு விட்டு ஓட வேண்டி வந்து விட்டால், அப்போதும் உன் குரலைக் கேட்டால் தான் இவைகள் தங்களது வேகத்தை அதிகரித்துக் கொண்டு பறந்து ஓடும். இவை அவ்வாறு செய்யாமல் போமாயின், நாமும் இறந்தோரது கணக்கில் சேர்ந்து விடுவோம். இவைகளும் நம்மை வென்றவனது கைவசம் ஆகிவிடும். அவன் இவைகளை வெகு ஆடம்பரங்களுடன் தன் இருப்பிடத்திற்கு ஓட்டிக்கொண்டு செல்லுவான். ஆதலால் அன்பனே! நீயே இவற்றை நடத்து

வாய். ஈட்டியும் கேடயமும் கொண்டு நானே தனியாக இந்தக் களத்தைப் பிடித்து வரும் இந்தப் பீடையை ஒரேயடியாய் அடித்து விடுகின்றேன்!" என்றான்.

இவ்வாறு ஒப்பந்தஞ் செய்து கொண்டு அந்த இரண்டு வீரர்களும் "பளபள" வென்று மின்னும் இரதத்தின் மீது ஏறினர். அதில் பூட்டியிருந்த அதிவேகமாய் பாய்ந்து செல்லும் குதிரைகளும் அந்த யுத்தகளத்தின் மத்தியில் "தடதட"வென்று புகுந்தன. அவைகள் அவ்வாறு வெகு வேகத்துடன் நெருங்கி வருவதைக் கண்டு வெருண்ட ஸ்தெனிலஸ் மகாவீரனை திடிதீசனை நோக்கிப் பின்வருமாறு உரத்து உரைத்தான்:— "அன்பனே! அதிபலவான்களான இரண்டு வீரர்கள் அதோ வருவதை நான் காண்கின்றேன். அவர்களது வருகை அதிபயங்கரமாக விருக்கின்றது. அவர்கள் வெகு ஆத்திரத்துடன் உன்னையே நோக்கிக் கொண்டு வருகின்றனர். லிக்கேயனது புராதன வம்சத்தில் பிறந்தவனும் தேவ வம்சத்தில் பிறந்தவனும் மகானுமான ஈனியஸும் அதோ வருகின்றனர். அவர்களுடன் பொருது நாம் ஜயிப்போம் என்று நான் நம்பவில்லை. இதுவரை யுத்தஞ் செய்து நீ சம்பாதித்த கீர்த்தி போதும்! உன் இரதத்தில் உடனே ஏறு! உன் பிராணனையும் காப்பாற்றிக் கொள். நீயே இந்த யுத்தத்தில் நம் கக்ஷியின் ரக்ஷகன்" என்றான்.

இந்த வசனங்களைக் கேட்டு அந்த வீரன் முகத்தைச் சுளித்துக் கொண்டு, அவனை வெறுப்புடன் உற்றுப் பார்த்துப் பின்வருமாறு பதிலுரைத்தான்:— "வலுவில் வரும் இந்தச் சண்டையை விட்டு விட்டு ஓட்டம் பிடிக்கவேண்டும் என்று நீ எனக்குப் புத்தி சொல்லுகின்றாய்? இழிவையும் அபகீர்த்தியையும் சம்பாதித்துக் கொண்டு புறங் கொடுத்து ஓடவா நீ எனக்கு உபதேசம் செய்ய நினைக்கின்றாய்? என் மனதில் பயமென்பது சிறிதளவும் இல்லை. அது உண்மை என்பதையும், திடிதீசன் இந்த யுத்தத்தில் நடுங்கி ஒடுங்கிப் பயப்பட பிறந்தவன் அல்ல என்பதையும் நீ நன்றாய் ஞாபகத்தில் வைத்துகொள்.

இந்தப் பிரமாண்டமான ரதமானது வேகமாக ஓடுகின்றதில்லை. வெகு நிதானமாகவே ஓடுகின்றது! இது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை! நான் பறவையைப் போல் பறக்கும் என் ஈட்டியை வெகுதூரஞ் செல்லுமாறு எய்யவும் வேண்டியிருக்கின்றது. சக்திகளெல்லாம் உறுதியாகவே யிருக்கின்றன. என் வீரியமும் குறைவுபடாமல் பூர்த்தியாகவே யிருக்கின்றது. ஆதலால் நான் என் தகப்பனுரைப் போலவே இந்தச் சத்துருக்களை எதிர்த்துச் செல்லுவேன்!

"இந்த யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் வரும் பயங்கர ரூபிகளான அந்த இரண்டு வீரர்களையும் இரண்டு துரகங்கள் அதோ! சுமந்து வருகின்றன! அவை அவ்விருவரையும் க்ஷேமமாகத் திருப்பிக் கொண்டு செல்வதையும்

நான் பார்த்து விடுவேன் !! இந்தக் கையினுல் அந்த வீரர்களில் ஒருவனுவது மடிந்து போவான் என்று பாலாஸ் தேவியானவள் சொல்லியிருக்கின்ருள். நான் புறங்கொடுத்து ஓடக்கூடா தென்றும் அவள் எனக்குக் கட்டளேயிட்டிருக்கின்ருள். அவளது சாபத்தைத் தடுக்க வேறு ஒரு தெய்வமும் குறுக்கிடாமல் இருந்து விட்டால் அவ்விருவரும் ஜலசீலனுன ஒரே ஒரு வீரனது கையினுல் மடிந்து போவார்கள். ஆதலால் நான் சொல்வதைக் கேள். என் குதிரைகளே இங்கேயே நிறுத்திவிடு. அவைகளே இந்த ரதத்தில் கெட்டியாகக் கட்டிவிடு. ஈனியஸின் ஆசனம் அதோ ! ஒழிந்திருக்கின்றது. ஓட்டமாய் ஓடி அதில் ஏறி உட்கார்ந்து கொண்டு அதில் கட்டப்பட்டுள்ள தேவலோக வர்க்கத்தைச் சேர்ந்த அந்த இரண்டு துரகங்களேயும் பிடித்துக் கொள். முன்ெருருக் கால் இடியின் கடவுள் ட்ரோஸில் இருக்கையில் அவர் கானிமீடின் சாமர்த்தியத்துக்கு மெச்சி, அவனுக்குச் சில குதிரைகளே வெகுமதியாகக் கொடுத்தார். அந்த குதிரைகளின் வம்சத்தில் பிறந்தவைகளே அந்த இரண்டு குதிரைகளும். கிழக்கிலுதித்து மேற்கே மறைந்துவிடும் சூரியனது மேற்பார்வையிலுள்ள இந்தப் பரந்த உலகில் ஓடிக்கொண்டிருக்கும் குதிரை வர்க்கங்களிலெல்லாம் அவையே சிறந்தவை.

மகானுன அஞ்சைஸிஸ் என்பவன் அந்த துரோஜவாசிகளான அந்த தேவலோகக் குதிரைகளுக்கும் மர்த்தியலோகப் பெண் குதிரைகளுக்கும் பிறந்த ஒரு வர்க்கத்தை பயங்கரனுன லியோமிடானிடமிருந்து ஒருவருக்குந் தெரியாமல் திருடிக் கொண்டு வந்து விட்டான். அந்த வர்க்கத்தைச் சேர்ந்த நான்கு குதிரைகள் அவனது விசாலமான லாயத்தில் இருந்து வருகின்றன. இரண்டு குதிரைகள் ஈனியஸின் வாகனத்தை இங்கு இழுத்துக்கொண்டு வந்திருக்கின்றன. இவ்வாறு தேவப் பிரசாதமும் பாக்கியமும் பெற்ற குதிரைகள் நமக்கு வாய்த்திருந்தால், அவை இந்தப் புகழை உலக முழுவதிலும் பரப்பி விடுமல்லவா ?" என்ருன்.

இவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் அவர்கள் சத்துருக்கள் அவர்களே நோக்கி வெகு துரிதமாகவும் கடுத்த முகத்துடனும் வந்தனர். அப்பொழுது அந்தக் கூட்டத்திலிருந்தவனும் லிக்கேயனது வீர வம்சத்தில் பிறந்தவனுமான சேனுபதி பின்வருமாறு துடுக்குடன் மொழிந்தான்:— "ராஜகுமாரா! கடைசியாய் நீ அகப்பட்டுவிட்டாய்! உன்னேத் தூக்கி அடிக்க வேண்டுமென்று நான் இதுவரை செய்த பிரயத்தனங்களெல்லாம் வீணுயின! இதுவரை என் அம்புக்குத் தப்பியிருந்த உன்னே இப்போது என் வேலாயுதம் குத்திக் கிழித்து விடும்" என்ருன்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் மிகப்பெரிதும் பளுவுள்ளதுமான தன் வேலாயுதத்தைச் சுழற்றி அந்த ராஜகுமாரனே நோக்கி எறிந்தான். அது அவனுடைய விசாலமான கவசத்தின் மேல் விழுந்து "கலகல" வென்று சப்தித்துக்கொண்டு, கெட்டியான, உருண்டை வடிவமுள்ள அந்தக் கவசத்தைப்

பிளந்து உட்சென்று, அவன் தன் மார்பைச் சேர்த்து அணிந்திருந்த இரும்புக் கவசத்தின் மேல் பாய்ந்து, அதையும் துளைத்து அதன்மேல் தொங்கிக் கொண்டு விட்டது. அதைக் கண்ணுற்ற அந்தச் சேனாதிபதி "ஆஹா, இவன் ரத்தம் கொட்டுவதைப் பாருங்கள்! கிரேக்கர்களிலெல்லாம் பிரசித்தனானவன் அல்லவா இவன்? இவனை நாம் வென்றேவிட்டோம்! இந்த மகாசூரன் மடிந்து விழுந்துவிட்டான்!" என்று பெருமையுடன் உரத்துக் கூவினான்.

தயோமதி அதைக் கேட்டு அவனுக்குப் பின்வருமாறு மறுமொழி பகன்றான்:— "அட மடையா! உன் பெருமையை அடக்கு! நான் உன்னை ஏமாற்றியே விட்டேன். உன் வேல் குறி தவறிப்போய் விட்டது. நான் இன்னும் பிழைத்துத்தான் இருக்கின்றேன். இனி என் வேலின் சக்தியையும் பார்ப்போம். நீங்கள் இருவரும் தப்பமாட்டீர்கள்! உங்களில் ஒருவனாவது தனது தேரிலிருந்து தலைகுப்புற விழுந்து தன் இரத்தத்தை தனக்குச் சத்துருவாய் வந்த யுத்த தேவதைக்கு பானகமாக க்கியும் விடுவான்" என்றான்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் எழுந்திருந்து தனது வைரியை நோக்கிக் குறிபார்த்துத் தன் வேலாயுதத்தை எறிந்தான். அந்த ஆயுதத்தைப் பாலாஸ் தேவியும் பின்னாலிருந்து விசையுடன் துரத்தியதால், அது அந்த வைரியின் மர்மஸ்தானங்களில் ஒன்றைத்தாக்கித் துளைத்தது. அது அந்தக் கர்வியான லிஸியனது முகத்தின் நேராகச் சென்று, அவனது முகத்திற்கும் கண்விழிகளுக்கு மத்தியில் ஓர் ஆணி போல் ஊன்றியது. அதனால் அவனுடைய தாடைகளெல்லாம் நொறுங்கிவிட்டன. அவனது வாயினுள் இருந்த நாவும் இரண்டு துண்டாய்ப் போய்விட்டது. பளபளவென்று மின்னிய அந்த வேலாயுதத்தின் முனையும் அவனது உதட்டை ஊடுருவிப் பிளந்துகொண்டு, அதனடியில் இறங்கிவிட்டது! அப்பொழுது அவன் தன் தலையைச் சாய்த்துக்கொண்டு கீழே விழுந்துவிட்டான். அவனது கிரீடமும் பூமியை யிடித்தது. அதனால் பூமியும் அதிர்ந்து நடுங்கியது. அவனுடைய ஆயுத ஆபரணங்களும் கலகலவென்று ஒலித்தன. அதைக் கண்ணுற்ற குதிரைகள் திடுக்கிட்டுப் பயந்து நடுங்கின. அவனது ஆவியும் மிகவும் எரிச்சலுடன் அந்தகனுடைய லோகங்களை நோக்கிப் பறந்து சென்றது!

இவ்வாறு சம்ஹாரம் செய்யப்பட்ட தன் சினேகிதனைக் காப்பதற்காக ஈனியஸ் என்பவன், அந்த சினேகிதனது பிணம் கிடந்த இடத்தை நோக்கித் தன் வேலை நீட்டிக்கொண்டு வேகமாகப் பறந்து ஓடினான். தனக்குக் கிடைத்த இரையைச் சுற்றிக்கொண்டு கடுத்த முகத்துடன் பதுங்கிப் பதுங்கி வரும் ஒரு சிங்கத்தைப் போல், அவன் முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டு, வளைந்து வளைந்து சென்று, அடியற்ற மரம்போல்

விழுந்து கிடந்த அந்த உடலை வெகு பிரயத்தனங்கள் செய்து காப்பாற்றினான்.

அவன் கட்டை போல் கீழே கிடந்த அந்த வீரனது உடலின் மேலாகத் தனது விசாலமான கேடயத்தை உயரத் தூக்கி அதன் அகன்ற நிழலில் அந்த வீரனை மறைத்தான். பின்பு தன் எதிரிகளுக்குப் பயமுண்டாகுமாறு உரத்துக் கூவினான்! அப்பொழுது கிரேக்கர்களெல்லாம் வெகு தூரத்தில் நின்றுகொண்டு அவனைக் கண்ணுற்று வந்தனர். அவர்கள் அனைவரும் இறந்துபோன வீரனது பிணத்தைக் கைப்பற்ற வேண்டுமென்ற ஆவலுடையவர்களாகவே யிருந்தனர் என்றாலும் அதன் அருகில் நெருங்கவும் நடுங்கினர். கடைசியாக அது போனால் போகட்டும் என்று அந்த ஆசையையும் விட்டு விட்டனர்.

அப்பொழுது பயங்கரனான திடிதீசன் தன் தலையைக் குனிந்து அருகிலிருந்த காடுகளிலிருந்து ஒரு பெரிய பாறையை வெகு வேகத்துடன் பிளந்து அதைத் தன் கையில் தூக்கி யெடுத்துக் கொண்டான். அக்கிரமங்கள் மலிந்துள்ள இந்தக் காலத்தில் இரண்டு பலவான்கள் கூட அந்தப் பிரமாண்டமான பாறாங்கல்லைத் தூக்க முடியாது! திடிதீசன் ஒருவனே அந்தப் பெரிய கல்லைத் தூக்கினான்! சுற்றிச் சுழற்றினான்: அவ்வாறு சுற்றிச் தன் வேகத்தை அதிகரித்துக்கொண்டு அவன் அந்த மஹா நாசத்தை தனது சத்துருவை நோக்கி எறிந்தான்! அந்தக் கூரான பாறாங்கல்லானது அவனது தொடையும் இடுப்பும் சேருமிடத்திலுள்ள எலும்பின் மேல் பாய்ந்து அந்த இரண்டு நாடிகளையும் உடைத்து அவைகளை ஊடுருவிச்சென்று, அவனது தோலையும் துளைத்து அதனடியிலிருந்த கெட்டியான எலும்பையும் பொடியாக்கிவிட்டது! அவன் தனக்கு உண்டான வேதனைகளைப் பொறுக்க முடியாமல் தள்ளாடிக்கொண்டு தன் முழங்கால்களின் மேல் சரிந்தான். அவன் கைகளும் வளைந்து போயின. அவை அவனது பிரமாண்டமான தேகத்தைத் தாங்கிக் கொண்டன. அப்பொழுது ஆகாயத்தில் ஒரு மேக மானது திடீரென்று நீந்திவந்து அவனது கண்ணை மறைத்தது. அந்த வீரனும் மப்பு மந்தாரம் கொண்ட அந்த மூடுபனியில் மறைந்து விட்டதினால் அவன் ஒருவரது கண்ணுக்கும் புலப் படவில்லை.

அதிபலவான்கள் நிறைந்துள்ள பெரிய சேனைகளை அடக்கியாண்டுவந்த அந்த மகாவீரன் அந்த இடத்திலேயே இவ்வாறு பெருந்துன்பங்களுக்கு ஆட்பட்டு இறந்து போயிருப் பான். எமனது லோகத்திலுள்ள அழியாத நிழல்களின் கீழும் விழுந்துபோயிருப்பான். ஆனால் அந்த கதிக்கு ஆளாகவில்லை. அவனை வீனஸ் தேவியானவள் காப்பாற்றிவிட்டாள்!

இதியன் வனத்தில் அஞ்சைஸஸுடன் அன்புடைய வளாய் உல்லாஸமாகக் கழித்து வந்த காலத்தை நினைத்துக்

கொண்டு, அந்த தேவி தன் புத்திரனுன அந்த வீரனுக்கு நேர்ந்துவிட்ட ஆபத்தைக் கண்ணுற்றுக் கவலேயும் ஏக்கமும் அடைந்து, அவனே மாத்ரு வாத்ஸல்யத்துடன் காப்பாற்றினுள். வானின்று விழும் வெண்பனியை நிகர்த்த வெண்ணிறமான தன் கைகளால் அவள் தன் பிரிய குமாரனே அணேத்துக் கொண்டாள். தன்னேயும் பளபளவென்று மின்னிய தன் வஸ்திரத்தினுல் மறைத்துக் கொண்டாள். அதனுல் அவன் தன் சத்துருக்களின் கண்களுக்குப் புலப்படவில்லே. அவர்கள் சுழற்றி வந்த கத்திகளினுல் அவளுக்குச் சிறிதும் அபாயமுண்டாகவில்லே. அவர்கள் எறிந்த வேலாயுதங்களும் குறி தவறிச்சென்றன. வேகமாக ஓடி வந்த குதிரைகளிடையிலும், சிறகுகள் கொண்ட பறவைகளேப்போல் சப்தித்துக்கொண்டு பறந்து வந்த அம்புகளின் இடையிலும் அவள் வெகு ஜாக்கிரதையாக அவனேத் தூக்கிக் கொண்டு, அந்த யுத்தகளத்தை விட்டு விலகினுள். அப்பொழுது ஸ்தெனிலஸ் தன் கையைக் கட்டிக்கொண்டு, தனது தலேவனுக்கு உதவிசெய்யாமலும் அவன் கட்டளேகளே கவனிக்காமலும் இருக்கவில்லே. "படபட" வென்று துடித்துக்கொண்டிருந்த தன் குதிரைகளே அவன் அந்த யுத்தத்திலிருந்து விலக்கிக்கொண்டு சென்று, அவைகளேத் தன் தேரில் இறுகக் கட்டினுன்.

பின்பு தார்தனியர்களேக் கொள்ளேயடிக்க ஓடிச்சென்று, அவர்கள் உபயோகித்து வந்த குதிரைகளே முன் செல்ல வொட்டாமல் தடுத்து விட்டான். அவை இழைந்து வழியும் பிடரிமயிருடையவை; தேவாம்சத்துடன் பிறந்தவை. அவற்றை அவன் பிடித்துக்கொண்டு வெகு ஆடம்பரத்துடனும் ஜயகோஷத்துடனும் தன் கப்பலுக்கு நடத்திச்சென்று அங்கே பத்திரப்படுத்தினுன். அதன் பின் அவை துரோஜர்களது கைவசம் திரும்பவில்லே. ஒரு துரோஜ வீரனுடைய ஆணேக்கும் அடங்கியிருக்க வில்லே! வீரர்கள் தங்களேப் போன்ற வீரர்களேயே காமுறுவராதலால் அவன் அந்தக் குதிரைகளேக் காப்பாற்றும் பொறுப்பைத் தன்னேப் போன்ற தைரியசாலியான தபியஸ் என்னும் வீரனிடம் ஒப்பித்து விட்டான்!

அதன் பின் அவன் தன் ரதத்தில் ஏறித், தன் குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு, அந்தக்களத்தில் திடிதீசன் நொறுங்கிப் பொடித்துக் கொண்டிருந்த இடத்தை நோக்கி ஓடினுன்.

இவ்வாறு அவன் காரியங்களேச் செய்து கொண்டிருக்கையில் அவனது வைரியும் வீரனுமான திடிதீசன் தான் கைப்பற்ற நினேத்த பொருள் தன்னெதிரிலேயே மறைந்து போய் விட்டதைக் கண்ணுற்று, அதி கோபங்கொண்டு வீனஸ் தேவியைத் துரத்திக் கொண்டு பறந்து ஓடினுன். அவன் கறுத்த கேடயமும் பயங்கர ரூபமும் உள்ள பாலாஸ் தேவியைப் போலவோ அல்லது இடியைப்போல் மதில்களே இடித்துத் தகர்க்கக் கூடியவளும் கோரரூபமுடையவளுமான பெல்லோனு தேவியைப்போலவோ

இந்த யுத்தகளத்தில் போர் புரிய அனுப்பப்பட்ட தேவியல்ல! பெல்லோனு தேவியானவள் யுத்தகளத்தில் பிரவேசித்து விட்டாளாகில் நெருப்பானது "தக தக" வென்று கொழுந்து விட்டுக்கொண்டு எரியும். பிரமாண்டமான கட்டடங்களும் தடதடவென்று இடிந்து விழுந்து வடும்! வீனஸ் தேவிக்கு சரச விளையாட்டுகள் தான் பிடிக்கும். அவள் இதுவரை யுத்தகளத்தில் பிரவேசித்தும் அறியாள். என்றாலும் சுத்த வீரர்களின் சத்கீர்த்திகளை அழிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பவள் என்று அறிந்திருந்தானுதலால் அந்த திடிதீசன் அணியணியாய் வகுத்து நின்ற அந்தச் சேனையை வெகு துடுக்குடனும் வேகத்துடனும் பிளந்துகொண்டு அவற்றினிடையே சென்று தன் அகலமான ஈட்டியை அந்தத்தேவியை நோக்கி எறிந்தான். அவ்வாறு வெகு துணிவுடன் எறியப்பட்ட அந்த ஈட்டியானது அந்த தேவி அணிந்து கொண்டிருந்த ஜோதி மயமான கவசத்தைப் பிளந்து அவளைத் தாக்கியது. கிருபாநிதிகளான சகல தேவதைகளும் சேர்ந்து நெய்து கொடுத்திருந்த அந்தக் கவசமானது அவளுக்கு அமிர்தம்போல் ரக்ஷையையளித்து வந்தது, என்றாலும் சமஸ்த வஸ்துக்களையும் சம்ஹாரம் செய்யவல்ல அந்தக்கொடிய ஈட்டியானது பனியைப்போன்ற வெண்ணிறமான அந்தத் தேவியின் தேகத்தைத் தீண்டியே விட்டது! அந்தத் தேவியின் வெண்ணிறமான தேகம் சிவந்து போய்விட்டது! பளிச்சென்று விளங்கிய அவளது தேக நரம்புகளிலிருந்து அவளது திவ்யமான ரத்தமானது தாரை தாரையாய்ப் பெருகியது! காயம்பட்ட ஒரு தேவதையின் உடம்பிலிருந்த ரத்தமானது பெருகி ஓட ஆரம்பித்து விட்டால், அந்த இரத்தப்பெருக்குக்கும் அளவு உண்டோ? அந்த இரத்தம் எவ்வளவு புனிதமானது! அதற்கு தோஷமும் உண்டோ? அசுத்தமானதும் அழுகிப் பிணிகளால் மலினமடைந்துமுள்ள மண்ணுலகத்தோராகிய நமது இரத்தத்திற்கும் அதற்கும் எவ்வளவு வித்தியாசம்? தேவர்கள் மனிதருருந்தும் கேவலமான மதுவையருந்தியோ அல்லது "கத கத" வென்று கொதிக்கும் சாராயங்களைப் பருகியோ தங்கள் தசைகளையும் நாடிகளையும் போஷிப்பதில்லையல்லவா! அப்பொழுது அந்த தேவியானவள் தழதழுத்த குரலில் அழுது கொண்டிருந்த சப்தமே அந்தயுத்த களம் முழுவதும் நிறைந்திருந்தது. அவள் தனது புத்திரனைத் தூக்கிக்கொண்டு செல்ல இயலாதவளாய், அவனை அந்தக் களத்திலேயே போட்டும் விட்டாள். அதைக்கண்ணுற்ற பீபஸ் பகவான் அவனைச் சட்டென வாரியெடுத்துக் கொண்டு களைத்துப் போயிருந்த அந்த வீரனை ஒரு மேகத்தினுல் வளைத்து மறைத்து அவனுக்கு உண்டாயிருந்த மரண காயத்தை ஆற்றினுர்!

அதன் பின் அந்த அரசன் அந்த யுத்தகளத்திலிருந்து ஓட்டம் பிடித்துவிட்ட அந்த தேவியை நிந்தித்துப் பின்வருமாறு உரத்துக் கத்தினுன், அவன் போட்ட சப்தத்தில் ஆகாசமெல்லாம் கிடுகிடு வென்று அசைந்து ஆடியது: "ஜோவின் புத்திரியானவள் இரத்த வெள்ளம் பெருகும் யுத்தங்களில் தலையிடுவது தகுமா?

இது உனக்கு அழகா? யுத்தகளம் உன் பெருமைக்கு ஏற்ற தல்லவே! உன்னைப்போன்ற அபலைகளை இரக்ஷிப்பது தானே உனக்கு ஏற்ற காரியம்! ஆதலால் ஓடு! ஓடு! பேடிகளுக்குச் சமாதானம் சொல்வதும் சுந்தரவடிவுடைய ஸ்திரீகளை மோசஞ் செய்வதுந்தானே உன் தொழில். அந்தத் தொழில்களையே செய்ய ஓட்டமாக ஓடு! இன்று உனக்குக் கிடைத்த அடிகளை மறவாமல் நினைத்துக்கொண்டு, இனி யுத்த சம்பந்தமான கவலைகள் நமக்கு வேண்டாம் என்று தீர்மானித்து அவற்றை அறவே துறந்து விடு! ஆயுதங்களின் பெயரைக் கேட்ட மாத்தி ரத்தில் ஒடுங்கிப் பதுங்கிக் கொள்!'' என்றான்.

இவ்வாறு திடிதீசன் கூக்குரலிட்டுக் கத்தியபொழுது, அந்த தேவியானவள் மிகவும் வெருண்டு இன்னது செய்வதென்று தெரியாமல், மனங்கலங்கித் தட்டித் தடுமாறிக் கொண்டு, அந்தக் களத்திலிருந்து ஒரே ஓட்டமாய் ஓடினாள்.

அப்பொழுது இறக்கைகள் கொண்ட ஐரிஸ் என்னும் தேவியானவள் தன்னை ஒரு மேகத்தினால் மறைத்துக்கொண்டு அவளுக்கு உதவி செய்வதற்காக ஒருவரோடொருவர் பொருது வந்த இருதிறத்துச் சேனைகளுக்கும் மேலாக வெகு வேகமாய்ப் பறந்து வந்தாள்.

காம தேவியை அவள் கண்ணுற்ற பொழுது அந்த தேவியின் அழகுகளெல்லாம் வாடி வதங்கி அழிந்து போயிருந்தன. அவளது கன்னம் வெளுத்துப் போயிருந்தது. அவளுக்கு உண்டாயிருந்த காயமும் கன்றிப் போயிருந்தது.

அவர்கள் இருவரும் வெகு தூரத்தில் தனியாக வீற்றிருந்த மார்ஸ் தேவரை நோக்கிச் சென்றனர். அவர் மேகங்களாற் சூழப்பட்டு இடது புறமாகச் சாய்ந்து படுத்துக் கொண்டிருந்தார். அவருக்குச் சமீபத்தில் அவரது ஈட்டியானது இரத்தக் கறையுடன் நின்று கொண்டிருந்தது. அவருக்கு முன்னால் பொற்கடிவாளங் கொண்ட அவருடைய குதிரைகள் நின்று கொண்டிருந்தன.

அந்தத் தேவியானவள் தன் உடன் பிறந்தானை அந்த தேவனை வணங்கி அவரது முழங்காலுக்கும் கீழாகக் குனிந்து கொண்டும் தன் கண்களில் தாரை தாரையாய் நீரை வடித்துக் கொண்டும் வெகு தூரத்திலுள்ள விண்ணுலகிற்கு ஏறிச் செல்வதற்காக அவரது ரதத்தைத் தனக்குத் தருமாறு வேண்டினாள். கெஞ்சிக் கேட்டாள். கொடியவனான திடிதீசன் தனக்கு உண்டாக்கி விட்ட காயத்தையும் அவருக்குக் காட்டினாள். 'கேவலம் ஒரு மர்த்தியன் தேவர்களையும் எதிர்த்து இவ்வாறு செய்து விட்டானே!' என்றாள்.

கறுத்த முகத்தையுடைய மார்ஸ் பகவான் அந்த மகாராணியின் முறையீடுகளை வெகு கவனத்துடன் செவி சாய்த்துக் கேட்டுத்

தன்னுடைய குதிரைகளின் பொற்கடிவாளக் கயிற்றை அவளது கையில் கொடுத்தார். தனக்கு உண்டாயிருந்த துக்கத்தினுல் தன் வாயைத் திறக்கவும் இயலாதவளாய், அவள் அந்தத் தேரி லிருந்த பீடத்தில் உட்கார்ந்து கொண்டு, அந்தத் தேரை வர்ணங் கள் தீட்டிய வில்லேயேந்திய தேவியானவள் ஓட்டிச் சென்ருள். அப்பொழுது சாட்டை குலுங்கியது. அதனுல் எதிரொலி யுண்டா யிற்று. வேக கதியுடைய ரதமும் ஒரு நொடியில் ஆகாயத்தைத் தாண்டிப் பறந்து அதியுன்னதமான விண்ணுலகை அடைந்தது.

அங்கு அவர்கள் அந்தத் தேரை நிறுத்தி விட்டனர். அதில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளும் ஐரிஸ் தேவியினுல் தங்களுக்கு அளிக்கப்பட்ட அமிர்தமான தீனியைத் தின்றுகொண்டு நின்று விட்டன. அதன்பின் அதிகக் காந்தியுள்ளவளான காமதேவி யானவள் தன் தாயினிடஞ் சென்று அடங்காத் துக்கத்துடன் தாரை தாரையாகக் கண்ணீர் வடித்துக் கொண்டு நின்ருள். அவள் அவளேத் தன் கைகளால் வாரியெடுத்து, அவளுக்கு உண் டாயிருந்த காயத்தையும் அதிலிருந்து பெருகிக் கொண்டிருந்த இரத்தத்தையும் கண்டு, “ இந்த அபராதத்தை எந்தத் தெய்வம் உனக்குச் செய்தது ? அதைச் சொல் ” என்ருள்.

அவள் “ ஒரு தெய்வமும் எனக்கு இந்தத் தீங்கைச் செய்ய வில்லே. பாழாய்ப் போன ஒரு துடுக்குள்ள மர்த்தியன் தான் எனக்கு இந்தச் சிறுமையைச் செய்தான் ! அதிகர்வியான தயோ மதிதான் இப்படிச் செய்தான். அவன் செய்த காரியத்தையும் பார் ! நான் என் பிள்ளேயைக் காக்கச் சென்றேன் ! நானே எனது இரத்தத்தை இதோ வடிக்கின்றேன். கிரேக்கர்கள் இப் பொழுது ட்ராயுடன் யுத்தஞ் செய்வதை நிறுத்தி விட்டனர் ! அவர்கள் இப்பொழுது அழிவில்லாத அமரர்களுடன் தான் பொருது வருகின்றனர் !” என்ருள். அதைக் கேட்ட தயோனீ அவளுக்குப் பின்வருமாறு உரைத்து சமாதானப் படுத்தினுள் :— “ என் அம்மணி ! உனக்கு உண்டான இந்தச் சிறுமைகளேச் சற்றுப் பொறுமையுடன் சகித்து வா ! தங்களுக்கு உண்டாகும் சிறுமைகளேச் சிறிய தெய்வங்கள் அனுபவித்துத் தானே தீர வேண் டும்! அது அவர்களது கடமையல்லவா ? ஆதலால் உன் பங்குக்கு ஏற்பட்ட கஷ்டங்களே நீ பொறுமையுடன் அனுபவித்து வருவது தான் நல்லது !

“ மனிதராய்ப் பிறந்தவர்கள் நாம் இழைக்கும் கணக்கற்ற துன்பங்களே அனுபவித்து வருகின்றனர். அவ்வாறு வாடி வருந் தும் அவர்கள் தெய்வங்களின் மேல் பழிக்குப் பழி வாங்க நினேத்து அவர்களுக்குத் தங்களாலான தீங்குகளே உண்டாக்கப் பீடிக்கின் றனர்.

“ அதி பராக்கிரமசாலியான மார்ஸ் பகவானுங் கூட மனிதர்களால் விலங்கிடப்பட்டு பூமியனடியில் நியமிக்கப் பட்டிருந்த வெண்கலக் காரா கிருஹங்களில் பதின்மூன்று மாதம்

அடைபட்டுக் கிடந்தார். கதறியழுதார் ஒன்றும் பயன்படவில்லை. அவருக்கு இடப்பட்டிருந்த விலங்குச் சங்கிலிகளை ஓட்டஸ் என்பவனும் எபியால்டீஸ் என்பவனும் பிடித்துக் கொண்டிருந்தனர். ஹெர்மீஸ் பகவானுனவர் மிகவும் கிருபையுடன் அவரை விடுவித்து விண்ணுலகத்திற்கு ஜாக்கிரதையாகத் திருப்பியெடுத்துச் சென்றிராவிட்டால் மார்ஸ் பகவான் அனேகமாய் அழிந்தே போயிருப்பார்.

மகா தேவியான ஜூனேவும் தனக்கு உண்டாயிருந்த பெருத்த கஷ்டங்களைப் பொறுத்து வந்திருக்கின்றாள். தேவலோக ராஜ்ய நிர்வாகத்தின் ஒரு பாதியை ஏற்று வருபவளும் தேவலோக ராணியுமான அவளை அம்பிட்டிரியானுடைய மகனுன ஹெர்குலிஸ் என்பவன் எமனைப் போன்ற தன் வேலாயுதத்தை அவளது மார்பில் குத்தி ஊன்றிவிட்டான்! அமரர் வம்சத்தில் உதித்தவளே யாயினும் அவள் என்ன பாடுபட்டாள்! அவளது மனம் எவ்வாறு துடித்தது!

மிகக் கொடியோனுன நரகலோக அரசனும் அல்ஸைடீஸின் பராக்கிரமத்தை ஒப்புக்கொள்ளவில்லையா? இரும்பு போன்ற அவனுடைய மார்பையும் அல்ஸைடீஸின் ஈட்டியானது குத்திக் கொண்டு உள்ளே பிரவேசித்து விட்டதே! இறந்தவர்களது உலகத்து அரசனேயாயினும், அவன் தன் ராஜ்யத்திலேயே படுகாயம் பட்டு அதை ஆற்றிக் கொள்ள ஜோவ் பகவானது ஆகாயமளாவிய விண்ணுலகிலுள்ள அரண்மனைக்கு ஓட்டம் பிடித்தானே! அப்பொழுது பியான் என்பவன் திவ்வியமான ஔஷதங்களை அவனது காயத்தைச் சுற்றிப் பெய்து தகதக வென்று கொதித்துக் கொண்டிருந்த அவனுடைய வேதனைகளைத் தணித்து அந்தப் புண்ணையும் ஆற்றினுனல்லவா!

இந்த தியோமிதி ஒரு மதிகெட்ட மானிடப் பதர். சிறிதும் தேவதா விசுவாஸமில்லாதவன். தேவர்களுடைய ஆலயங்களையும் கலக்கி விட்டான்! தேவர்களது ரத்தத்தினுல் தன் அம்புகளையும் சொட்டச் சொட்ட நனைத்து விட்டான்" என்றுகூறினுள்.

பின்பு அவள் தியோமிதியான அந்த வீரனை நோக்கி "அட! இந்தத் துடுக்கான காரியத்தைச் செய்ய உன்னைத் தூண்டியது பாலாஸ் தேவிதான் என்ருலும், நீ உன் பாழாய்ப் போன வேலைக் கொண்டு ஒரு தேவியைக் குத்தி அவளது இரத்தத்தைப் பெருகச் செய்து விட்டாய். அமரர்களுடன் சமர் புரிவோன் எவனுனலும் அவனது ஆயுள் குறுகிப் போவது நிச்சயம் என்பதை நன்ருய் ஞாபகத்தில் வைத்துக் கொள். அவனது பேரும் புகழும் விரைவில் அழிந்து போய்விடும். யுத்தகளத்தில் வீரர்களை வெட்டி வீழ்த்தி அவர்களுடைய பிணங்களையும் மலைபோல் குவித்து விட்டுத், தன் வீட்டை நோக்கிச் சென்று சேருகையில், அவனது காலைக் கட்டிக்கொண்டு அவனை 'அப்பா' என்று அழைக்க சிறு குழந்தைகள் ஒருவரும் இருக்கமாட்டார்கள். நீ எவ்

வளவோ பலசாலிதான் என்ருலும், உன்னையும் வெட்டித் தரையில் வீழ்த்தி, ஒரு வெளுத்த கட்டை போல் வாயைப் பிளந்து கொண்டு கிடக்கும்படி செய்யத்தக்க ஒரு தெய்வம் வரவேண்டும்! வராமல் போகாது! அந்தத் தெய்வம் எங்கிருந்தாவது முளைக்கும்!!

அப்பொழுது வெகுதூரத்தில் வசிப்பவளும் உன் மனைவியுமான எழில் வாய்ந்த இஜியாலே என்பவள் தன் தூக்கத்திலிருந்து கதறிக் கொண்டு எழுந்திருந்து, உன் அடிமைகளை எழுப்புவாள். தன் கணவன் இறந்து போனுனென்று அழுது புலம்புவாள். அதி தைரியவானுயும் பேரும் கீர்த்தியும் புகழும் உடையவனுயும் விளங்கியவன் அழிந்துபோய் விட்டானே என்று அலறுவாள்'' என்ருள்.

பின்பு அவர்கள் அனைவரும் ஜோவ் பகவானிடஞ் சென்றனர். அங்கு நீலாயதாக்ஷியானவள் ஜோவ் பகவானை நோக்கி, அவரிடம் பின் வருமாறு முறையிட்டாள்:—

''கிருபா நிதியான ஜோவ் தேவரே! ஸைப்பிரஸ் ராணிக்கு இந்த ஆபத்து எவ்வாறு உண்டாயிற்று என்பதைத் தங்களது புத்திரியான நான் சொல்லுகின்றேன். கேளுங்கள். அதைச் சொல்ல எனக்கு அனுமதி கொடுங்கள். சிறிது பொழுதுக்கு முன்பாக அவள் கிரேக்க ஸ்திரியின் மனதில் காமத்தீயை யுண்டாக்கி அவளது இளமனதை யுருக்கி அவளைத் தன் வசமாக்கிக்கொண்டு, இன்பம் அனுபவிக்கலாமென்று அவளுக்கு உறுதியும் உற்சாகமும் உண்டாக்கினுள். ஒரு துரோஜனுன இளங்குமாரனுடன் தன் தேசத்தை விட்டு ஓடி விடவும் அவளுக்குப் போதனை செய்தாள். இதுதான் அவள் செய்தது. இதன் பயனுக அவளுக்கு இந்தக் கொடிய காயம் உண்டாகிவிட்டது. தங்கத் திருகும் சொரையும் கொண்ட அவளது கங்கணமானது அவளது கையை இவ்வாறு சிதைத்து விட்டது'' என்ருள்.

தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் பிதாவான அந்த பகவான் அதைக் கேட்டு மிகவும் பெருமிதங் கொண்டு புன்னகையுடன் தன் மகளான வீனஸைத் தன்னருகில் வரும்படியழைத்து ''என் அருமை மகளே! உனக்கு இந்த விசாரங்களெல்லாம் என்னத்திற்கு? இவைகளைக் கவனிக்க வேண்டியது உனக்கு ஏற்பட்ட கடமையல்லவே! ஸரச வித்தைகளும் பிரணய கலகங்களுந்தானே உனது ஸ்வபாவத்திற்கு ஏற்றவை. இன்பந்தரும் புன்சிரிப்புகளும் அன்புடன் அணைத்துக் காதலூட்டும் மாயா விநோதங்களும் மாத்திரம் தானே உன் விசேஷமான உத்தியோகங்கள்! ஆயுத வித்தைகளை மார்ஸ் தேவரும் பாலாஸ் தேவியும் செய்து வரட்டும் என்று அவைகளை நீ ஒழித்து விடு!'' என்ருர்.

இவ்வாறு தேவலலோகத்தில் இவர்களிடையே சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில், அவ்வுலகின் கீழுள்ள பூலோகத்தில்

அந்த யுத்த களத்தில் பயங்கர ரூபியான திடிதீசன் தன் சத்துரு வான தார்தானியனைத் தாக்கினான். தேவர்களது ரத்த சம்பந்தத் துடன் பிறந்த அவன் தன் உயர்ந்த பிறப்பை நினைத்து, அதி கர்வங்கொண்டு தடதடவென்று முன்சென்று, அதியுக்கிர ரூபி யான தினகரனையும் சிறிதும் அச்சமின்றி எதிர்த்தான். தனது வைரி அப்பால்லோ தேவரின் பிரமாண்டமான கவசத்தை இரக்ஷையாக அணிந்து நின்றிருந்தாலும், அவன் தான் நினைத்த படி தன்னெதிரிலேயே கொலையுண்டு ஒழிந்து போய் விட்ட தாகவும் நினைத்து விட்டான். அவன் அந்தத் தலைவன்மேல் மூன்று முறை வெகு வேகமாகப் பாய்ந்து அவனைப் புடைத்தான். ஆனால் அப்பால்லோ பகவானானவர் அந்த மூன்று முறையும் அவனுடைய பிரகாசமான கவசங்களை அசைத்து உரித்து விட்டார்! என்றாலும் அவன் பின்வாங்காமல் நான்காம் முறையும் ஒரு கவசத்தை எடுத்து அணிந்து கொண்டான். அப்பொழுது அமானுஷ்யமான பெருத்த சப்தம் உண்டாயிற்று. அது மேகத்தைப் பிளந்து கொண்டு உரத்த குரலில் பின்வருமாறு உரைத்தது :

"திடியஸ் புத்திரா! இது போதும்! உன் சேஷ்டைகளை நிறுத்து. தேவர்களுக்கும் உனக்கும் உள்ள வித்தியாசம் எவ்வளவு பெரிது என்பதை அறிந்து புத்தியுள்ளவனாகப் பிழை! ஆதியந்த மில்லாதவர்களும் மரணமில்லாதவர்களும் தேவர்களுமான அந்த வானமளாவிய விண்ணுலகில் வசித்து வருவோர்களுக்கும் மர்த்தி யர்களான மாந்தர்களுக்கும் உள்ள வித்தியாசம் எவ்வளவோ பெரிதாயிற்றே! இம்மாந்தர்கள் கேவலப் பிறவியும், பூமியிலுள்ள புழுதியில் அற்பாயுஸுடன் நெளிந்துஊர்ந்து வரும் புழுக்களுக்கும் இழிந்தவர்களும் அழிவுடையவர்களுமன்றோ? இரு திறத்தாருக்கும் உள்ள வித்தியாசம் அஜ கஜாந்திரத்திற்கும் அதிகமாயிற்றே" என்று விண்ணுலகத்திலுள்ள நெருப்பைத் தம் கிரணங்களின் மூலமாய்ப் பொழியும் கடவுளே இந்தச் சுடுசுரங்களைப் போன்ற மொழிகளை யுரைத்தார்.

அதைச் செவியுற்ற திடிதீசன் அந்த தேவரின் கோபத்தைக் கண்டு பயந்து நடுங்கி சில அடிகள் பின் சென்றான்.

அதன் பின் பீபஸ் பகவானானவர் வீனஸ் வம்சத்து வீரனை மிகவுயர்ந்ததும் புண்ணிய க்ஷேத்திரமுமான ட்ராயிலுள்ள தமது புனிதமான கோயிலுக்கு எடுத்துச்சென்றார். அங்கு லாதனா தேவியும் ஹீபியும் அவனது காயத்தை ஆற்றி, அவனுக்கு மிகவும் சக்தியையும் ஊக்கத்தையும் திரும்பவும் அளித்து அவனை ஆசீர் வதித்தனர். அவன் அப்பொழுது மிகவும் காந்தியுடன் பளிச் சென்று விளங்கினான்.

இவ்வாறு இந்த வீரனுக்கு உபசாரங்களைச் செய்த பின்பு, வெள்ளி வில்லைத் தரித்தவரான அந்தப் பிரபுவானவர் மஹானான ஈனியஸைப் போன்ற உருவமும் தோற்றமும் உடைய ஒரு பூதத்தை எழுப்பினார். அந்த பூதமானது ஈனியஸைப் போன்ற

உருவத்தைத் தாங்கியிருந்தது மன்றி, அவனைப் போலவே அவன் யுத்தத்திற்குப் புறப்படுகையில் அணிந்து வந்த பள பளவென்று மின்னும் ஆயுதங்களையும் அணிந்திருந்தது. அப்பொழுது அந்த பூதத்தைச் சுற்றிலும் இரத்தப்பெருக்குடன் கூடிய கோரமான யுத்தங்கள் நடந்து கொண்டிருந்தன. “கலகல” வென்று ஒலிக்கும் கேடயங்களையணிந்துகொண்டிருந்த கிரீஸ் தேசத்தாரும் ட்ராய் நகரத்தாரும் ஒருவர் மேல் ஒருவர் பாய்ந்து மோதி விழுந்து பொருதனர். இது நிற்க.

அச்சமயம் அப்பால்லோ பகவனுனவர் இலியன் கோபு ரத்தின் மேல் நின்று கொண்டு மார்ஸ் தேவரைத் தம்மிடம் வரும் படியழைத்து, ஏற்கனவே உறுமிக்கொண்டிருந்த அந்த ருத்திர மூர்த்தியை நோக்கிப் பின்வரும் வசனங்களையுரைத்து, அந்தச் சண்டையில் கலந்து கொள்ளும்படி அவருக்கு உற்சாகமூட்டினர் :

“மஹா வீரர்களையும் மடித்து வீழ்த்தி விடக்கூடிய புஜ பலமும் ஆயுதபலமுள்ள அஞ்சாநெஞ்சனுன வீர சிங்கமே! ரத்தத்திலே நீந்தி மூழ்கிக் குளிப்பவனே! அரணுன கோட்டை கொத்தளங்களை அடித்துத் தகர்ப்பவனே! உன் சீற்றமும் சின மும் எங்கு சென்றன? அவற்றை மேற்கொண்டு விரைந்து எழுந்திரு. அதோ அங்கே நிற்கின்ற கிரேக்கர்களைப் பயங்கரமான எரிவாய் நிரயம் செல்லும்படி அடித்து ஓட்டித் துரத்து! தேவர்களுக்கு அவன் செய்த பழிக்குப் பழி வாங்கு! மிகவும் இழிந்தவனுன அவன் முதன் முதலாக அதிசுந்தரியான வீனஸைக் கொடுங் கோபங்கொண்டு அடித்தான். அடுத்தபடியாக என்னையும் தாக்கினுன். அவ்வளவுடன் நில்லாமல், தேவலோகவாஸிகள் அனைவரையுமே ஒரு கை பார்த்து விடுகின்றேன் என்று துள்ளு கின்றுன்! துடிக்கின்றுன்! விண்ணுலகத்திலுள்ள தேவர்களுக் கெல்லாம் தேவரும் அழிவில்லாதவருமான தேவாதி தேவரையுங் கூட எதிர்த்துச் செல்வேன், முத்தொழில்களைச் செய்யும் அவரது இடியின் விசையையும் பார்ப்பேன். நெருப்பைப் போன்ற அவருடைய வஜ்ராயுதங்களின் வீரியத்தையும் பார்ப்பேன் என்று இந்த மகாபாவி பெருமையடித்துக் கொள்ளுகின்றுன்!” என்றுர்.

இதைக் கேட்டு அந்த சமர்க் கடவுள் திரேசியனும் வழிகாட்டியுமான அக்காமாஸ் என்பவனைப்போல் வேஷம் தரித்துக்கொண்டு, ஒரே பாய்ச்சலாய் யுத்த சன்னத்தர்களாக விருந்த சகல வீரர்களையும் கிளப்பினுர். துரோஜர்களை மனக் கொதிப்புடன் இருந்த விடம் விட்டு எழும்படி செய்தார். புறங்கொடுத்து விரைவாக ஓடிய ட்ராய் வீரர்களின் தலைவர் களைக் கொதிப்பிப்பதற்காகப் பின்வரும் வசனங்களை வெகு ஆத்திரத்துடன் உரைத்தார் :—

“பிரியம் புத்திரர்களே ! நீங்கள் இன்னும் புறங் கொடுத்தே ஓடுவீர்களா ? பிரியத்தின் பிரஜைகள் மடிந்து போவதைக் கண் ணுற்றுப் பழிக்குப் பழி வாங்காமல் இன்னும் வாளாவிருந்து

விடுவீர்களா? தங்களைத் தடுப்பார் ஒருவருமில்லையென்று கண்டு நம் சத்துருக்கள் நம் ஜனங்களைச் சிறிதும் தங்குதடையின்றிக் கொல்லுகின்றார்களே! இவ்வாறு நம் ஜனங்களை வதைத்துக் கொண்டு அவர்கள் நம் கோட்டை வாசல்வரை கூட வந்து விட்டார்களே! இதற்கு இடங்கொடுக்கலாமா! அதோ அங்கே பார்த்தீர்களா! அதிதீரனான ஈனியஸ் காயம் பட்டு மடிகின்றான். தேவர்களுக்கு சமானமான ஹெக்டரும் ஆயுதப் பிரயோகத்தில் அவனுக்கு மிஞ்சியவனல்லவே! எல்லாரும் விரைந்து செல்லுங்கள். வஞ்சனையின்றிப் பொருது வரும் அந்த வீரனுக்குச் சகாயம் செய்யுங்கள்!'' என்றார்.

அவ்வாறு அவர் உரைத்த அக்கணமே ஒவ்வொரு வீரனது மனத்திலும் ஒரு புதிய ஆத்திரமும் பரபரப்பும் உண்டாயின. தைரியம் பொங்கியது.

முதன்முதலாக ஸார்ப்பீடன் என்பவன் ஹெக்டரை நோக்கிப் பின்வரும் வீரமொழிகளை யுரைத்துத் தனக்கு அப்போது உண்டாயிருந்த உற்சாகத்தையும் ஆத்திரத்தையும் தெரிவித்துக் கொண்டான்:—

''தலைவரே! நான் உங்களை ஒரு கேள்வி கேட்கின்றேன், அதற்குப் பதில் சொல்லும். தங்களுடைய பழைய வீரியமெல்லாம் ஒழிந்து போய் விட்டனவா? நீர் எல்லோரையும் மிரட்டுவீரே! உம்முடைய பிரதாபங்களைச் சொல்லிக் கொண்டு பிரமாதமாகப் பெருமை பேசிக் கொள்ளுவீரே! புண்ணிய ஸ்தலமான ட்ராயின் மதில்கள் பிரியத்தின் சந்ததியாரின் சாமர்த்தியத்தினால் மாத்திரமே அசையாமல் நிற்கும்; அவற்றைப் பாதுகாக்க வேறு ஜனங்களது உதவி ஒன்றும் அவசியமில்லை என்றெல்லாம் மிரட்டுவீரே! அந்த மிரட்டல்களும் பெருமைகளும் இப்போது எங்கு சென்றன? உமது தேசத்தைக் காப்பாற்றுவதில் உருக்கமும் அக்கரையுமுள்ள பந்து மித்திரர்களுடைய சகாயம் இப்போதுதான் இந்த க்ஷணம்தான் வேண்டும்! அவர்கள் தங்களாலான உதவியைச் செய்யாமல் வாளாவிருந்து விடுகின்றனர்!. அவர்கள் வெகு செருக்குடன் பேசிவந்த டம்பமான மொழிகளெல்லாம் இப்போது கேலிப் பரிகாசங்களாக முடிந்துவிட்டன! அவர்களது கக்ஷியில் அன்னிய நாட்டு வீரர்கள் சண்டை பிடித்து வருகையில் அவர்கள் மாத்திரம் வெகு தூரத்தில் எட்டிப்போய் நிற்கின்றனர். ஒரு சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்ட வேட்டை நாய்களைப்போல் நடு நடுங்கிப் போய் நிற்கின்றனர். இங்கிருந்து வெகு தூரத்திலுள்ளதும் நுரைநிறைந்த ஜாந்தஸ் நதி பாயப் பெற்றதுமான அதிவிசாலமான லிஸியா நாட்டில் நான் ஏகாதிபதியாக சர்வாதிகாரம் வகித்து வந்தேன். மனிதர்கள் விசேஷமாக விரும்பும் ஏராளமான தனதானியங்களையும் அழகிற் சிறந்த பத்தினியையும் முலைப் பால் குடிக்கும் ஓர் இளங்குழவியையும் உடையவனாய் நான் சுகமாகவிருந்தேன். இவைகளையும் இவைகளைப் போலவே

மனிதர்கள் விரும்பும் வேறு விசேஷமான சம்பத்துக்களையும் விட்டுவிட்டு, நான் இந்த யுத்தத்தில் சேர்ந்து கொண்டேன். கிரேக்கர்களது ஜயத்தினால் எனக்கு ஒரு விதமான நஷ்டமும் ஏற்படப் போகிறதில்லை. என்றாலும் லிஸியர்களான என் பரிவார ஜனங்களே இந்த யுத்தத்தின் முன்னணியில் நிற்கின்றனர். நானும் அவர்களுக்கு உற்சாகமூட்டிக் கொண்டு வருகின்றேன். அவர்களனைவரும் இந்த மகாவீரனை எதிர்க்க வேண்டுமென்று ஆவலுடன் துடிக்கின்றனர். நீங்களெல்லாம் இவனை நினைத்த மாத்திரம் பயந்து நடுங்குகின்றீர்கள். ஹெக்டரும் இவ்வாறு சோம்பேறியாய் நின்றுகொண்டிருக்கின்றான்! தங்கள் மனைவி மக்களையும் வீடு வாசல்களையும் கோயில்குளங்களையும் காப்பாற் றும்படி அவன் தன் பரிவாரத்திலுள்ள வீரர்களுக்கு ஆஞ்ஞை இடுவதில்லை! வீரனே! இது சரியல்ல! இது தகாது! விரைந்து எழுந்திரு! அபாய ஸ்திதியிலிருக்கும் உன் ராஜ்யத்தை ரக்ஷி! நீ அப்படிச் செய்யாதிருந்தால், உங்கள் கோபுரங்களை யெல்லாம் ஒரு பெரிய பீடையானது ஒரே விழுங்காய் விழுங்கி விடும். உங்கள் குழந்தைகளும் தகப்பன்மார்களும் மனைவிகளும் சிறிதும் தடையின்றியும் கிண்டு கிழமென்ற வித்தியாசமின்றியும் ஒரேயடியாய் அந்தப் பீடைக்குப் பட்சணமாகி விடுவார்கள். உன் வர்க்கத்தவர்களான துரோஜர்களையெல்லாம் எழுப்பு; உனக்கு சகாயம் செய்ய வந்த வீரர்களையும் இந்த யுத்தத்தில் கலந்துகொள்ளும்படித் தூண்டு. அவர்களுக்குப் பக்குவமாகப் போதனை செய். அவர்களது மனத்தை இளக்கு. இந்தக் காரியங்களையே நீ பகல் முழுவதும் யோசனை செய்து வரவேண்டும். இவற்றையே இரவெல்லாம் ஆராய்ந்து இவற்றின் போக்கைக் கவனித்தும் வரவேண்டும். அதி தைரியசாலிகளான கிரேக்கர்கள் சிறிதும் இடைவிடாமலும் தங்கு தடையின்றியும் வெகு பலமாய் நம்மையெதிர்த்து வருகின்றனர். ஆதலால் உன் சினேகிதர்களது க்ஷேமத்தையும் சத்துருக்களது நாசத்தையும் உத்தேசித்து நீ இந்த விஷயங்களை வெகு சிரத்தையுடன் கவனிக்கவேண்டியது அவசியம்'' என்றான்.

உதாரசீலனான ஹெக்டர் இந்த வார்த்தைகளைக் கேட்ட பொழுது, அவனது மனம் உருகியது. இளகியது. படபட வென்று துடித்தது. தன் நண்பன் தன்னைக் கண்டித்துப் பேசிய மொழிகளெல்லாம் நியாயமாகவே யிருந்தமையால், அவன் அவைகளை மறுத்துப் பேசுவது விவேகிக்கு அழகல்ல வென்று நினைத்து அவைகளை மௌனமாகக் கேட்டுவந்தான்.

பின்பு அந்த இராஜகுமாரன் ஒரே பாய்ச்சலாய்த் தன் உன்னதமான இரதத்திலிருந்து வேகமாய்ப் பாய்ந்து கீழே குதித்தான். அப்பொழுது அவன் அணிந்திருந்த வெண்கலக் கவசமானது கலகலவென்று ஒலித்தது. அக்கணமே அவனுடைய இரு கைகளிலுமிருந்த பளபளவென்று மின்னும் இரண்டு ஈட்டிகளும் கரகரவென்று சுழன்றன. அந்த இரண்டு ஆயுதங்களையும் தன் கைகளில் ஏந்திக்கொண்டு, அவன் வாடிச்

சோர்ந்து கிடந்த தன் பரிவார ஜனங்களையெழுப்பி, அவர்களுக்கு ஊக்கமளித்தது மன்றிப் புறங்கொடுத்து ஓடியவர்களையும் மறுபடியும் யுத்தகளத்தை நோக்கித் திரும்பச் செய்து, அணைந்துபோக விருக்கும் நெருப்பைத் திரும்பவும் மூட்டுவதுபோல் ஓய்ந்து போவதாகவிருந்த யுத்தத்திற்குப் புத்துயிர் அளித்தான்.

அதன் பயனாக அவர்களனைவரும் யுத்தத்தில் ஊக்கமுள்ளவர்களாகத் திரும்பினர். தங்களது ஓட்டத்தையும் நிறுத்தி விட்டனர்.

அவர்கள் அவ்வாறு ஆவேசத்துடன் திரும்பவும் யுத்தத்திற்கு வருவதைக் கண்ணுற்ற கிரேக்கர்கள் இதையும் ஒரு கை பார்ப்போமென்று மனவுறுதியுடன் அவர்களை எதிர்த்துச் சிதறிப் போயிருந்த தங்கள் வீரர்களை ஒன்று சேர்த்தனர். இனியும் இவர்கள் என்ன செய்யப்போகின்றார்கள்? இனி யுத்தம் எவ்வாறு குதிர்கின்றது? அதையும் பார்ப்போம் என்று காத்து வந்தனர்.

திருமகளின் திருக்களத்தில் குவிந்து கிடக்கும் அறுவடை செய்த தானியத்திலிருந்து பொன்போன்ற மணிகளைப் பிரிப்பதற்காக, ஒரு குடியானவன் தனது விரிவான முறத்தை வீசிப்புடைக்கையில், அந்தக் குவியலில் கலந்து கிடந்த இலேசான பதரானது அதன் புடைப்பினால் உண்டாகிய காற்றில் அடிபட்டு மேகம் போல் கிளம்பி, புழுதியாய் மாறி, தன்மேல் கிடக்கும் காற்றுடன் சேர்ந்து களஞ்சியத்தின் மேலும் பறந்து சென்று, அங்கு வேலை செய்யும் பணியாட்கள் அனைவரையும் வளைந்து சூழ்ந்து அவர்களின் மேல் படிந்து அவர்கள் அனைவரின் மேலும் ஒரு வெண்மையான தூசியைத் தூவிவிடுகின்றது. அவ்வாறே இந்த கிரேக்க கோஷ்டியாரனைவரும் புழுதியினால் மூடப்பட்டு வெள்ளை வெளேரென்று விளங்கினர். குதித்துக் கொண்டு ஓடிவந்த குதிரைகளும், இடியைப்போல் தடதட வென்று வந்த ரதங்களும் கிளப்பிய புழுதிகள் இருண்ட மேகம் போல் பூமியிலிருந்து எழுந்து ஆகாயத்தை யளாவிக் கொண்டு உயர்ந்து உருண்டு பறந்து சென்றன. மார்ஸ் பகவானும் தன் இருள் போன்ற கறுத்த கேடயத்துடன் அவற்றின்மேல் வட்டமிட்டு வந்தார். அதனால் அந்த இருள் சூழ்ந்த போர்க்களத்தில் இருந்த ஜனங்களுக்கு ஏற்கெனவே உண்டாயிருந்த பயமும் திகிலும் அதிகரித்துவிட்டன. புதிதான பீதிகளும் உண்டாயின. இவ்வாறு ட்ராயைக் கைப்பற்ற வேண்டுமென்ற ஆத்திரங் கொண்டவரான அப்பாலோ பகவான் திருவுளங் கொண்டு தனக்கு நியமித்த இந்தக் காரியத்தைத்தான் இவ்வாறு செவ்வனே நிறைவேற்றிவிட்டதற்காக, மார்ஸ் பகவான் மிகவும் சந்தோஷமடைந்தார்.

நீலாயதாக்ஷியானவள் இந்தச் சண்டையிலிருந்து விலகிக் கொண்டவுடனேயே, மார்ஸ் பகவானானவர் துரோஜவீரன் ஒவ்வொருவனுடைய மனத்திலும் உக்கிரமான ஒரு கிளர்ச்சியை

உண்டாக்கினர். அதே சமயத்தில் வெள்ளி வில் தரித்த பகவானும் தன் புண்ணிய க்ஷேத்திரத்திலிருந்து ஈனியஸை நடத்திக் கொண்டு வந்து அவனை அந்த கோஷம் செய்து வந்த கோஷ்டிகளுக்கு முன் நிறுத்தினர். அவன் தனக்குச் சமானமான அந்தஸ்துள்ள வீரர்களின் மத்தியில் வெகு தைரியமாக நிமிர்ந்து நின்ருன். உயிரிழந்தவனுகவாவது ஆபத்திற்கு ஆளானவனுகவாவது தோன்றவில்லை! அவனுக்கு உண்டாயிருந்த காயத்தினல் அவனது பராக்கிரமத்திற்குச் சிறிதும் குறைவு ஏற்பட்டிருக்கவில்லை. அந்த விஷயமாக அவனைக் சூழ்ந்திருந்த வீரர்கள் ஒருவராவது எவ்விதமான விசாரணையும் செய்யவுமில்லை. அன்று பயங்கரமான காரியங்கள் நடக்கவிருந்தமையால் வாதும் வம்பும் உரைக்கவாவது வழக்குகள் செய்யவாவது ஒருவருக்கும் சாவகாசமிருக்கவில்லை. அப்பொழுது துர்முகியான கலகப்பிரியை ஒருபுறம் கொதித்துக்கொண்டும், அப்பாலோ பகவான் வேறு ஒருபுறம் உரத்துக் கூச்சலிட்டுக் கொண்டும், கீர்த்தி ஸ்வரூபியான தேவி எல்லோரையும் கூவியழைத்துக்கொண்டும் மார்ஸ் பகவான் இடிபோல் கர்ஜனைகள் செய்துகொண்டுமிருந்ததால், அந்த யுத்தகளத்தில் எங்கு பார்த்தாலும் நெருப்பு எரிந்த வண்ணமாயிருந்தது.

அப்போது சத்துருக்களுக்கு இரங்காத தயோமிதியானவன் அஜாக்ஷ சகோதரர்களுடனும் மகாஞனை யுலிஸ்ஸுடனும் எதிரிகள் ஆருய்ப் பெருக்கிய ரத்தத்தில்குளித்தவனுக நின்றுகொண்டிருந்தான். அவர்களுக்குச் சமீபத்தில் நின்றுகொண்டிருந்த கிரேக்க வீரர்கள் தங்கள் எதிரிகள் தங்களைத் தாக்கித் தங்களுக்குச் செய்த பலவிதமான ஹிம்சைகளையும் தொந்தரவுகளையும் எதிர்த்து, அவைகளுக்கு ஈடு கொடுத்து வெகு ஊக்கத்துடனும் உழைத்து வந்தனர். அவர்கள் இருந்த இடம் விட்டு நகராமலும் அதி மௌனமாகவும் சலனமற்ற பயங்கர ரூபிகளாகவும் மாருத ஊழ்வினையைப் போலும் அந்த யுத்தம் முடியும்வரை நிலைபெயராமல் காத்திருந்தனர். அப்போது அந்தப் போர்க்களம், பெரும்புயற் காற்று எழுந்து உயர்ந்து தங்களைத் தாக்கிச் சின்னுபின்னமாக உடைத்துச் சிதறவடித்து ஆகாயத்தைக் கலக்கும்வரை தங்களுடைய பயங்கரமான உருவங்களைக் காட்டிக்கொண்டு ஆகாய வீதியில் ஒன்றன்பின் ஒன்ருய் அணியணியாய் நிற்கும் நீருண்ட மேகங்களைப் போலவும், அதிமும்முரமாக வடதிசையிலிருந்து அடித்த காற்ருனது நன்ருக அடித்துவிட்டு ஓய்ந்து தனது விசையை அடக்கிகொண்டுவிட்டபின் சிறிதும் சலனமின்றி நிம்மதியாக அயர்ந்து தூங்கும் ஒரு திரவ பூதம் (கடல்) போலவும், மர நிழல் கொண்ட மலையுச்சிகளின் மேல் அசைவின்றியும் அமைதியுடனும் தாழ்ந்து தொங்கிக்கொண்டிருக்கும் முத்துப் போன்ற நீராவிக் கூட்டங்களைப்போலவும் இருந்தது.

அப்பொழுது கிரேக்கர்களது தலைவன் தன் சேனைகளைக் கவனிக்காமல் வாளாவிருக்கவில்லை. அவன் சிரமத்தைப் பாராட்டாமல், அந்தக் களம் முழுவதிலும் அணியணியாய் நின்றுகொண்டிருந்த தன் வீரர்கள் சிரேணிகள் ஒவ்வொன்றுக்கும் சென்று

"கிரேக்கர்களே! நீங்கள் ஆண்பிள்ளைகளல்லவா? உங்கள் வீரசூர பராக்கிரமங்களை இங்குக் காட்டுங்கள். யுத்தத்தில் உங்களுக்குக் கிடைக்கக்கூடிய அடிதடிகளுக்கு அஞ்சாதீர்கள். அவற்றை தைரியத்துடனும் மனவுறுதியுடனும் ஏற்று வாருங்கள்! வீரர்களான உங்கள் கௌரவத்தையும் உங்கள் சகபாடிகளுடைய கௌரவத்தையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள்! மேன்மேலும் கீர்த்தியைத் தரத்தக்க கிருத்தியங்களைச் செய்து உங்களது சத்கீர்த்தியை விருத்தி செய்துகொள்ளுங்கள்! ஒவ்வொருவனும் தன் சாகச காரியங்களினுல் தன்னைக் காண் போனது மனோ தைரியத்தையும் வேகத்தையும் உற்சாகத்தையும் அதிகரிக்கச் செய்யவேண்டும். உங்கள் காரியங்களினுல் உங்கள் மனதுகளில் பரஸ்பரம் ஒரு பரபரப்பும் சுறுசுறுப்பும் உண்டாக வேண்டும்.

ஓர் யுத்தத்தில் உண்டாகக் கூடிய ஜயாபஜயங்களை அந்த யுத்தத்தில் கலந்துகொள்ளும் வீரர்களே தீர்மானிக்கின்றனர். ஜெயித்து விட்டால் பராக்கிரமசாலிகளான அந்த வீரர்கள் கீர்த்தியுடன் வாழ்ந்து வருகின்றனர். இல்லை, இந்த யுத்தத்தில் கொலையுண்டார்களானுல் அவர்களை அனைவரும் போற்றித் துதிப்பார்கள். இவ்வாறு வெற்றியுடன் பிழைத்தாலும், வெட்டுண்டு மடிந்தாலும் கீர்த்தியைத் தரக்கூடிய இந்த யுத்த களத்தைக் கண்ணுற்று எவனுவது பயந்து நடுங்கினுல், அந்தப் பேடி மகாபாபியாகவே மதிக்கப்படுவான். அவன் யமனை நேரே எதிர்கொண்டு சென்று, தன் பிராணனை ஒப்புக் கொடுத்து விடுவதுடன் அழியாத இழிவையும் அபகீர்த்தியையுமே சம்பாதித்துக் கொள்ளுகின்றுன்!" என்றுன்.

இந்த மொழிகளை யுரைத்துக்கொண்டே அவன் வேகத்துடன் பறந்து செல்லக்கூடிய தனது வேலைச் சுழற்றியெறிந்தான். அது மகா பலசாலியான தெய்க்குவூன் என்னும் வீரனை இலக்காக்கிக் கொண்டு அவனை நோக்கிப் பறந்து சென்றது.

அந்த தெய்க்குவூன் என்பவன் ஈனியஸின் உற்ற நண்பன். அவனது சொந்த தேசத்தில் அவன் ஜனங்கள் அவனுக்குப் பிரிய மகா ராஜனது உயர்ந்த ராஜ வம்சத்தாருக்குச் செய்வது போலவே சகலமான மரியாதைகளும் வழிபாடுகளும் செய்து வந்தனர். இது வரை நெடுநாளாக நடந்துவந்த இந்த யுத்தத்தில் அவன் எல்லோருக்கும் முதலாக முன்னணியில் நின்று யுத்தஞ்செய்து வந்தான்.

இப்போது ஏக சக்கராதிபதியின் வேலானது அவனது கவசத்தைத் துளைத்து விட்டது! அந்தக் கவசம் மிகவும் மிருதுவாக விருந்ததினுல் அது அதிவேகத்துடன் வந்த அந்த வேலைத் தடுக்கமுடியவில்லை.

அந்த வேல் அவன் அணிந்திருந்த அகன்ற அரைக் கச்சையைக் கிழித்துக் கொண்டு ஊடுருவிச் சென்று, அவனது உடலின்

உட்புகுந்து, கோரமான காயத்தையுண்டாக்கி, அவனது ஆவியை யும் அவனது உடலிலிருந்து பிரித்து வேருக்கி வெளியே ஓட்டி விட்டது. அவ்வாறு வெளியேறிய அவனது ஆவி நரகத்தை நோக்கிச் செல்லவும், அவன் கீழே திடீரென்று விழுந்தான். அப் பொழுது அவன் அணிந்திருந்த ஆயுதங்களெல்லாம் "கல கல" வென்று ஒலித்தன. அதன்பின் பயங்கரனை ஈனியஸ் தனது வாளைச் சுழற்றிக்கொண்டு வந்து ஆர்ஸிலோக்கஸையும் கிரித் தானையும் தாக்கி, அவர்களைப் புழுதியினுள் மறைத்து விட்டான்!

அவர்களது தகப்பனை டயோக்ஸியஸ் என்பவன் அதி தனவானாகவும், தைரியசாலியாகவும் அருங்குணங்கள் நிறைந்த மகானாகவும் நன்ருக நிர்மாணிக்கப்பட்ட வீரி என்னும் நகரத்தில் உன்னதமான தனது சிங்காதனத்தில் வீற்றிருந்தான். அவன் பைலியன் நாட்டுத் தோட்டங்களுக்கும் வயல்களுக்கும் மேன் மேலும் செழிப்பையுண்டாக்கி, அவைகளின் விளைவுகளை அதி கரித்து வருவதும் என்றுங் குறையாமல் யதேஷ்டமாய் ஜலமுள்ளது மான ஆல்பியூஸ் என்னும் தேவநதியின் வம்சத்தில் பிறந்தவன். ஆல்பியூஸ், ஆர்ஸிலோக்கஸை ஈன்ருள். அவனுக்கு டயோக்ளி யஸ் பிறந்தான். ஆகவே இங்கு சொல்லப்பட்டவர்களும் அவனுக்குப் பிறந்தவர்களுமான ஆர்ஸிலோக்கஸும் கிரித்தானும் அந்த ஆல்பியூஸின் மூன்ரும் தலைமுறையில் வந்தவர்கள். அவர் கள் அதி பால்யத்திலேயே யுத்த சம்பந்தமான வித்தைகளில் தேர்ச்சியடைந்து, தங்களது ஜன்ம தேசத்தை விட்டுப் புறப்பட்டுக் கறுத்த நிறமுள்ள தங்கள் கப்பல்களில் ஏறிக்கொண்டு, அதிரி தேசனுக்குப் பரிந்து இந்தச் சண்டைக்கு வந்தவர்கள். இப் பொழுது இங்கு சொல்லியபடி அவர்கள் அகாலமிருத்யுவின் வாய்ப் பட்டு, பிரிஜியன் களத்தில் புகழுடன் மடிந்து விழுந்தனர்.

ஒரு மலையில் இருண்ட காட்டின் மத்தியிலுள்ள குகைகளில் இரத்தத்தைப் புகட்டி வளர்க்கப்பட்டு வந்த இரண்டு சிங்கக் குட்டிகள் இவ்வாறு தான் ஆத்திரத்துடன் சிறிதும் பயமின்றி மைதானத்தை நோக்கி ஓடித் தங்குதடையின்றி, மாட்டுத் தொழு வங்களையும் ஆட்டுப் பட்டிகளையும் பாழாக்கி அழித்து விடுகின் றன. கடைசியாய் அவைகளும் தங்களது குகைக்கு வெகுதூரத் தில் மனிதர்களது வன்மைக்கு வசப்பட்டு, அவர்களது ஈட்டியினல் குத்திக் கிழியுண்டு மடிந்து போய்விடுகின்றன. மலைகளின் மேல் வளரும் தேவதாரு மரங்களைப் போல் சிறிதும் கோணுமல் நெடு நெடுவென்றும் உயரமாகவும் இருந்த அவர்களுடைய அதிசுந்தர மான உடல்கள் பூமியின்மேல் குப்புற விழுந்து கிடந்தன. மகானை மனேல்லாஸன் மிகவும் பரிபவத்துடன் அவர்கள் இரு வரையும் கண்ணுற்றுத் தனது பளிச்சென்று மின்னும் வேலைத் தூக்கிக்கொண்டு, ஜயசீலனுக விளங்கிய தன் எதிரியை நோக்கிப் பறந்து சென்ருன். மார்ஸ் பகவானே இவ்வாறு செல்லும்படி அவனைத் தூண்டினர். அவன் தன் எதிரியினிடம் தான் கொண் டிருந்த பகையையே வெகுவாய்ப் பாராட்டிக்கொண்டு சிறிதும் முன்பின் யோசனை செய்யாமல் ஓடியதால், அந்த தேவன்

அவனுக்கு இவ்வாறு உற்சாகத்தை உண்டாக்கி அவனது தலை விதியையே இளக்கி விட்டது போலாயிற்று.

அவன் அவ்வாறு முன்வருவதைக் கண்ட மகா சூரனுன நெஸ்டாரின் மகன் அவனுக்கு என்ன ஆபத்து வந்துவிடப் போகின்றதோ என்று நடுங்கினுன். தன் க்ஷேமத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும் அவன் கவலை கொள்ளவில்லை. ஹெலனின் கணவன் இறந்து போய்விட்டால் அவனுடைய தேசத்தார் அது வரை வெகு சிரத்தையுடன் செய்த ஏற்பாடுகளும் பட்ட சிரமங்களும் வீணுகி விடுமேயென்று எண்ணிக் கலங்கினுன்.

அதற்குள்ளாக வீரர்கள் இருவரும் சந்தித்து விட்டனர். ஒருவரையொருவர் மிரட்டினர். அவர்களது கைகளிலிருந்த ஈட்டிகள் நடுங்கின. அதைக் கண்ணுற்ற நெஸ்டாரின் புத்திரனுன அந்திலோக்கஸ் தன்னுல் கூடிய சகாயத்தை செய்ய நினைத்துக் கொண்டு, ஒன்று ஸ்பார்ட்டர் அரசனுடன் மடிவது அல்லது அவனுடன் ஜயசீலனுக விளங்குவது என்று தீர்மானித்தவனுய்த் தடதடவென்று வேகமாக முன் வந்தான்.

இவ்விரு வீரர்களையும் கண்ணுற்ற தார்தானியன் தைரியவானேயாயினும், பலத்தில் தனக்கு மீறியவர்களுடன் பொருவது தனக்கு விவேகமல்ல என்று நினைத்து, முன் செல்வதை நிறுத்தி விட்டுப் புறங்காட்டிக் கொண்டு திரும்பிவிட்டான்.

அதன்பின் உயிரற்ற ஆர்ஸிலோக்கஸ், கிரித்தான் என்பவர்களின் உடல்களை கிரேக்கர்கள் தங்களது பக்கத்திற்கு இழுத்துச் சென்றனர்.

பின்பு அவர்கள் யுத்தத்தைத் திரும்பவும் ஆரம்பித்தனர் ; தங்களது காரியங்களை மறுபடியும் கவனித்தனர்.

அப்பொழுது பித்தளைக் கவசங்களை அணிந்திருந்த பாப்பிலகோணியர்களின் தலைவனும் யுத்தத்தில் சிறந்தவனுமான பைலிமீனீஸ் என்பவன் முதன் முதலாகத் தனது இரத்தத்தை வடித்தான். அவன் அதிதேஜஸுடன் நின்றிருந்த இடத்தை நோக்கி, அதிரிதேசன் வெகு குறிப்பாய்ப் பார்த்துத் தன் வேலை அவன்மேல் எய்ய, அது அவன் தொண்டையைத் துளைத்துக் கொண்டு சென்று, அவனுடைய இரத்தத்தைப் பருகிவிட்டது !

அப்பொழுது அவனுடன் இருந்தவனும் அவனிடம் பக்தி விசுவாசமுள்ளவனுமான மிடான் என்பவன் வேகமாய்ப் பறந்துச் செல்லக்கூடிய தன் குதிரைகளை அந்த யுத்தகளத்திலிருந்து திருப்புகையில், நெஸ்டாரின் புத்திரன் ஒரு பாறையைப் பிளந்து அவனை நோக்கி வீசி எறிந்தான். அது அவனது மடங்கியிருந்த கையைத் தாக்கிக்கொண்டு விழுந்தது. அதனுல் அவன் அழிவில்லாத இருளில் ஆழ்ந்து விட்டான். அப்பொழுது விரு

விருத்துப்போன அவனது கையிலிருந்த தந்தக் கட்டுகள்கொண்ட கடிவாளக்கயிறுகள் நழுவிக் கீழே விழுந்து புழுதியில் அழுந்திப் புரண்டு இழைந்தன. அதன் மத்தியில் அவனது மண்டையிலும் ஒரு காயம் உண்டாயிற்று. அதனுல் அவனது உயிரும் மாய்ந்து போய்விட்டது. அவன் கதறிக்கொண்டு தன் பிராணனை விட்டான்.

இவ்வாறு அவனது பிரமாண்டமான உடல் பூமியில் தாழ்ந்து விழுந்து விட்டபொழுது, அவனது கிரீடமானது அந்த யுத்தகளத்திலிருந்த மணலில் வெகு ஆழமாக அழுந்தவே, அவனது தலையும் அவ்விடத்திலேயே ஒரு முளை அடித்ததுபோல் உறுதியாய் ஊன்றிக்கொண்டு நின்று விட்டது. அவனுடைய கால்களும் ஆகாயத்தில் அசைந்து ஆடின. கடைசியாக அவனுடைய குதிரைகள் அவற்றை மிதித்துத் தரைமட்டமாக்கும் வரை அவனது தலை கீழாகவும் கால்கள் மேல் நோக்கியும் நின்று கொண்டிருந்தன.

அப்பொழுது ஜயசீலனுன அந்த இளம் வீரன் (நெஸ்டாரின் புதல்வன்) தனக்குத் தோற்றவனது காலியான ரதத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டு, வெகு ஆடம்பரத்துடன் அதைத்தன் கைவசம் செய்துகொண்டு, தன் கப்பலுக்கு ஓடிச் சென்ருன்.

இதைக் கண்ணுற்ற மகா வீரனுன ஹெக்டர் மிகுந்த எரிச்சலும் கோபமும் ஆத்திரமும் கொண்டு, கிரேக்கர்களின் மேல் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்தான். துரோஜர்களும் கிரேக்கர்களைத் துரத்திக்கொண்டு பின் தொடர்ந்தனர். அவன் தன் பரிவார ஜனங்களுக்கு உற்சாகத்தை உண்டாக்கக் கூடிய வசனங்களைக் கூவியுரைத்துக்கொண்டு, அவர்களது மனத்தில் நெருப்பைப் போன்ற ஆத்திரத்தையும் தேவலோகவாஸிகளது மனத்தில் கோபத்தையும் ஒருங்கே உண்டாக்கி விட்டான்!

அப்பொழுது அதிகுரூரஸ்வபாவமுள்ளவரும் சகலத்தையும் அழித்துவிடக் கூடியவருமான மார்ஸ் பகவானும் உக்ரஸ்வரூபியான பெல்லோனு தேவியும் அவனெதிரில் நின்று நெருப்புக் காடு கொளுத்தி வந்தனர். அவ்விருவரும் அவனது சேனையை நோக்கி இடியைப்போல் கர்ஜித்தனர்.

இதனுல் அந்த யுத்தத்தில் ஒரு பக்கத்தில் ஏற்கனவே உண்டாயிருந்த குழப்பமும் ஆத்திரமும் அதிகரிக்க, மறுபக்கத்தில் வீரர்கள் சுழற்றி வந்த வேலாயுதங்களிலிருந்து மின்னலைப்போன்ற பயங்கரமான ஒளிகள் வீசின. ஹெக்டர் சென்றவிடமெல்லாம் யுத்தத்தின் பகவான் காந்தியுடன் பிரகாசித்துக்கொண்டும் அவனுக்கு முன்பாக ஆரவாரஞ் செய்து கொண்டும், அவனுக்குப் பின்னுல் கோபாவேசத்துடன் கொந்தளித்துக் கொண்டும் சென்ருர்.

அப்பொழுது யுத்த காரியங்களில் தங்கு தடையின்றிக் கண்ணுங் கருத்துமாயிருந்த திடிதீசன், இதையெல்லாம் கண்ணுற்றுத் தன் காரியங்களைச் சற்று நேரம் நிறுத்தினுன். அப்பொழுதுதான் அஞ்சாநெஞ்சனுன அந்த வீரனது மனத்தில் முதன் முதலாகச் சிறிது பயம் தோன்றியது. கபடமற்ற ஒரு குடியானவன் தனது குடிசையை விட்டுப் புறப்பட்டு, முன்பின் பாராமல் காடுகளையும் மலைகளையும் வன வனுந்திரங்களையும் கடந்து பிரயாணம் செய்து வருகையில், பிரயாணிகளின் வழியை மறித்துக்கொண்டும் நுரையைக் கக்கிக்கொண்டும் தன் வழியின் குறுக்காக வரும் ஒரு காட்டாற்றைக் கண்டு, அதைக் கடக்க முடியாமலும் இன்னது செய்வது என்று தெரியாமலும் மனங் குழம்பி நின்று விடுகின்றுன். வெகு தூரம் வழி நடந்து வந்த பின் தன்னெதிரில் பயங்கரமாக உயர்ந்து வரும் அலைகளைக் கண்ணுற்றுக் களைத்துச் சலித்துத் தான் வந்த வழியையே நோக்கித் திரும்பியும் விடுகின்றுன். அவ்வாறு திடிதீசனும் இந்த யுத்தகளத்தில் தான் கண்ணுற்ற குழப்பங்களால் மனமிடிந்து அசைவற்று நின்று விட்டான். சிறிது நிதானித்து அவன் தன் பரிவார ஜனங்களை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான்:—

"கிரேக்கர்களே ! நீங்களெல்லோரும் ஹெக்டரைக் கண்டு நடு நடுங்கிப் பயமடைந்து விட்டதில் ஆச்சரியமில்லை! தனக்கு தெய்வ சகாயம் இருக்கின்றது என்ற நம்பிக்கையுடன் அவன் இந்த யுத்தத்தின் தலைவனுக இந்த யுத்த களத்திற்கு வந்து விட்டான்! அதனுல்தான் அவனது சேனையிலுள்ளவர்களும் அவனையனுசரித்துத் தங்கள் ஆயுதங்களைக்கொண்டு நம்மை எதிர்க்கின்றனர்! நம் ஈட்டிகளையும் வேல்களையும் எதிர்த்துத் தாக்கி அவைகளை முறித்தும் விடுகின்றனர். அதோ அங்கே பாருங்கள்! எதிரிகளுக்கு அழிவையும் நாசத்தையும் உண்டாக்கக் கூடிய ஆயுதங்களுடன் மார்ஸ் பகவானும் நம் சத்துருக்களின் கக்ஷியில் விளங்குகின்றுர். ஆதலால் வீரர்களே! நிதானமாகவும் அமைதியுடனும் பின்வாங்குங்கள்! எதிரிகளுக்கு உங்கள் முகங்களைக்காட்டிக் கொண்டே பின்னடையுங்கள்! உங்கள் வீரசூர பராக்கிரமங்கள் இங்கு பயன்படா! அவைகளில் உங்களுக்குச் சிறிதும் நம்பிக்கை வேண்டாம். இந்த யுத்தத்தில் நமக்கு தேவர்களே சத்துருக்களாக இருக்கின்றனர். இந்த யுத்தமானது நாம் ட்ராயுடன் செய்யும் யுத்தமல்ல"! என்றுன்.

அப்பொழுது கறுத்த நிறமுள்ள ஜனங்கள் நிறைந்திருந்த இரண்டு சேனைகள், கிரேக்கர்களை அணுகின. அந்தச் சேனைகளைச் சேர்ந்த வீரர்களில் இருவரை முதன் முதலாக ஹெக்டர் கொன்றுன். கீர்த்தியைத்தரத்தக்க யுத்த சம்பந்தமான சகல வித்தைகளிலும் பிரசித்தி பெற்றிருந்த அங்கியாலஸ் என்பவனும், நெஸ்தீஸ் என்பவனும் அவனது விசைக்கு வசமானுர்கள். அந்த வீரர்கள் இருவரும் ஒரே ரதத்தில் ஏறிக்கொண்டு, இந்த யுத்தத்திற்கு வந்தனர். இருவரும் ஒருங்கே சேர்ந்து பொருதனர், ஒருங்கே மடிந்தும் போயினர், அதைக் கண்ணுற்ற மகாபலசாலி

யான அஜாக்ஷன் அவர்களது கொலைக்குக் கொலை வாங்கிவிட வேண்டுமென்று தீர்மானித்துப் பெருந்தாகத்துடன் பொங்கிக் கொதித்து எழுந்து, பேராவலுடன் முன் வந்து தன் சத்துருக்களை வெகு வேகத்துடன் தாக்கினான். அவன் தன் பிரமாண்டமான வேலாயுதத்தை வெகு வேகத்துடன் எறிய, அது அம்பியஸ் என்பவனை நோக்கிச் சென்று, அவனது அரைச்சுச்சையையும் உப்பிக்கொண்டிருந்த அவனது வயிற்றையும் துளைத்து விட்டது.

அந்த அம்பியஸ் என்பவன் அபீஸஸ் என்னும் அதிரம் மியமான தேசத்தின் அரசனாக விருந்தவன், அந்த நாடு மிகவும் வளமுள்ளது. அங்கு ஆடு மாடுகள் விசேஷமாகக் கூட்டங் கூட்டமாக விருந்தன. அது தலை சமிருத்தியுள்ளதாகவுமிருந்தது. ஆயினும் என்ன பயன்? விதியை யார்தான் தடுக்க முடியும்? தடுக்க முடியாத விதியினால் உந்தப்பட்டு, அவன் தன் ராஜ் யத்தை விட்டுத் தன் பிரஜைகளுடன் புறப்பட்டு, அவைகளுக் குத் தலைவனாக இந்த யுத்தத்திற்கு வந்து இதில் தன் பிராணனை இழந்தான். அவன் கீழே விழுந்த பொழுது அவனது வெண் கலக் கவசமானது அசைந்து கலகல வென்று சப்தித்துக்கொண்டு கீழே விழுந்தது. அதைப் பறித்துக்கொள்ள வேண்டுமென்ற ஆத் திரத்துடன் பயங்கரனான அஜாக்ஷன் அதை நோக்கி ஒரே பாய்ச் சலாய்ப் பாய்ந்தான்.

அப்படி அவன் பாய்கையில், அவனுடைய எதிரிகள் அவனை நோக்கி எய்த இரும்பினாற் செய்யப்பட்ட அம்புகள், அவன்மேல் ஒரு கனத்த மழை போல் பொழிந்தன. அவையனைத் தும் அவனது கேடயத்தின் மேல் விழுந்த பொழுது, அவை ஒரு பெருத்த காட்டையே நிகர்த்துநின்றன. அப்பொழுது அவன் அதுவரை சூட்டுடனேயே யிருந்த தன் வைரியின் உடலை மிதித் துக் கொண்டு, இரத்தம் வடிந்துகொண்டிருந்த அவனது மார்பி லிருந்து தன் வேலை உருவினான். அவனால் இதைத் தவிர வேறொன்றும் செய்ய முடியவில்லை. அவனைச் சுற்றிலும் அவ னுடைய எதிரிகள் தங்கள் அம்புகளை ஒரு பெருத்த மழையைப் போல் பொழிந்து வந்தமையால், அவன் அந்த எதிரியின் பளபள வென்று மின்னிய ஆயுதங்களையாவது அவனது கம்பீரமான மகுடத்தையாவது பற்றிக் பறிக்க முடியவில்லை. அப்பொழுது அவன் எதிரிகள் அந்தக் களத்தில் திரை திரையாகவும் வரிசை வரிசையாகவும் திரண்டு வந்தனர். அவர்களுடைய ஈட்டிகளும் பளிச்சென்று மின்னின. அவர்கள் கேடயங்கள் இடைவெளி யின்றி ஒன்றி நெருங்கின. அவ்வாறு அவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு, ஓர் இரும்புக் கோட்டை கட்டியது போல் வளைந்து நெருங்கி விடவே அவன் அவர்களுடன் போராட முடியாமல் அவர்களுக்குத் தாழ்ந்து இணங்கி விட வேண்டியதாயிற்று. அவன் அந்த இடத்தை விட்டும் ஓடியே விட்டான்.

இவ்வாறு அவர்கள் பொருது வருகையில், ஹெர்க்குலீசுக்கும் அஸ்தியோஷியாவுக்கும் பிறந்த திலிப்போலிமஸ் என்னும் மகா

வீரன் தடுக்க முடியாத ஊழ்வினையினால் முன்னால் உந்தித் தள்ளப் பட்டவனாக, ஸார்ப்பீடனது சாமர்த்தியத்தையும் பரீக்ஷை செய்து வருகின்றேன்! என்று ஆத்திரத்துடன் முன் வந்தான். இவ்வாறு அல்ஸைடீஸின் புத்திரன் ஜோவின் புத்திரனை எதிர்த்துக் கொண்டு வந்தான். பளிச்சென்று மின்னும் ஆயுதங்களை ஏந்திக் கொண்டு இந்த வீரர்கள் இருவரும் ஒருவரையொருவர் எதிர்த் தனர். ஜோவ் தேவரின் வம்சத்தில் வந்த மகா வீரனும் அவ ரிலும் அதிபராக்கிரமமுள்ள அவரது மகனும் எதிரெதிராக நின்றனர். அப்பொழுது அதிதைரியசாலியான ரோடியன் யுத் தத்தை ஆரம்பிப்பதற்காகத், தன் வேலாயுதத்தை சுழற்று முன், தன் சத்துருவை நோக்கி வெகு கர்வத்துடன் பின்வருமாறு உரத் துக் கூவினான் :—

" இந்த லிஸியன் நாட்டுப் பணிக்கர் இவ்வளவு தூரம் வரு வதற்கு என்ன காரணம்? இவர் நம் ஆயுதங்களைக் கண்டு நடு நடுங்கத்தான் இங்கு வந்தவரா? யுத்தத்தில் கலந்து கொள்ளலாம் என்ற உத்தேசம் இவருக்குச் சிறிதும் இல்லையென்றே தோன்று கின்றது! அட நீ ஒரு வீணன் என்பது எல்லோருக்கும் தெரியுமே! அது உனக்கு மாத்திரம் தெரியாமல் போனதற்கு என்ன காரணம்? முகஸ்துதியினாலேயே காரியங்களைச் சாதித்து விடலாமென்று நம்பி விடாதே! மேகத்தையடக்கி ஆளும் ஜோவ் பகவானது புத்திரனென்று ஜம்பமடித்துக் கொள்ளுவதில் என்ன பயன்? தேவ குலத்தில் பிறந்தவர்களான அந்த வீரர்களுக்கும் உனக்கும் உள்ள வித்தியாசம் எவ்வளவு? அவர்கள் செய்த சாகஸக் காரி யங்களுக்கும் உன் காரியங்களுக்கும் எவ்வளவு வித்தியாசம்? என் தந்தையைப் போன்ற மகா வீரர்களையே ஜோவ் பகவான் பெற்றார். என் தந்தைக்கு பயம் என்பது, எப்படி இருக்கும் என்பது தெரி யாது. அவர் அஞ்சா நெஞ்சர். அவரை மிஞ்சியவர்களோ அடக்கக் கூடியவர்களோ இந்தப் பூலோகத்திலாவது நரக லோகத்திலாவது இருக்கவில்லை. அவரது தோள் வலிமை எப்படி யிருந்தது என்பதை ட்ராய் நாட்டார் அறிவார்கள். அவர் தன் பழியைத் தீர்த்து அழித்துப் பாழாக்கிய கட்டடங்களின் அஸ்தி வாரங்களின் மேல் தான், அதோ அங்கு காணும் கோட்டை கொத்தளங்கள் காணப்படுகின்றன. ஆறு சிறிய கப்பல்களையும் அற்பஸங்கியையுடைய பரிவார ஜனங்களையும் மாத்திரமே கொண்டு, அவர் அந்தப் பட்டணத்தைத் தாக்கினார். அதை ஒரு விசாலமானதும் நிர்மானுஷ்யமானதும் அகண்டமுமான பாலை வனமாக ஆக்கி விட்டார்.

நீ யார்? ஒரு காரியமும் செய்யாமல் கையை அசைக்காமல் நாற்புறமும் சுற்றிப் பார்த்துக் கொண்டு நிற்கின்றாயே, நீ யார்?

தங்களுக்கு நேர்ந்த பழிக்குப் பழி வாங்குவோரில்லாமல் உன் லிஸியன் கோஷ்டியார் மண்ணைக் கவ்விக்கொண்டு மடிந்து விடுகின்றனரே! உன்னைப் போன்ற அபலைகளால் ட்ராய்க்கு என்ன உதவி உண்டாகப் போகின்றது! உண்மையாகவே நீயும்

ஒரு வீரன் சூரன் பலவான் தான் என்ருல், நீ என்னுடன் ஒரு கை பார்க்க வேண்டும்! என் ஈட்டியினுல் கிழிக்கப்பட்டு நீ அழியாத இருட்டறைக்கே செல்ல வேண்டும்.

அந்தப் பாதாள வாஸிகளுக்குப் பலியாக இதோ உன்னை அளித்தேன்!'' என்று அந்த ஹெர்குலீஸ் மகனும் ரோடியா நாட்டு அரசனுமான அந்த வீரன் வெகு துடுக்கான தோரணை யுடன் உரைத்தான். அதற்கு அந்த லிஸியன் அரசன் பின்வரு மாறு பதிலுரைத்தான் :—

"வாராய் இராஜகுமாரா! உன் தகப்பன் துரோஜன் அரசனைத் தலைகுப்புறத் தள்ளினுனென்பது நிஜந்தான். நீதி யில்லாத அந்த ட்ராய் அரசனுக்கு அந்த கதி வந்ததும் நியாயந் தான். அதில் சிறிதும் சந்தேகமில்லை. அந்த ட்ராய் அரசன் இரண்டு குதிரைகளை அபகரித்துக் கொண்டு, அவை தனக்கு யுத்தத்தில் கிடைத்தவையென்றும், அவற்றைத் தான் வைத்துக் கொண்டது நியாயந்தானென்றும் வீண் வாதஞ் செய்ததுமன்றி, அவற்றைத் தேடி வந்த வீரனை வெகுவாய் அவமதித்து கர்வத் துடன் உதாஸீனமான வார்த்தைகளைச் சொல்லிச் சிறுமைப் படுத் திஞன்! இகழ்ந்தான்! அவனுக்கு அந்த கதி வந்தது சரிதான்!

நீ ஒரு பெரிய வம்சத்தில் பிறந்தவனென்று பிதற்றுகிருய்! உனக்கு அந்த வீண் பெருமை தகாது! உன் பெருமையையும் நான் ஒரு கை பார்த்து விடுகின்றேன்! அந்தப் பெருமையை அழித்துவிட்டு நான் எனது பெருமையை அதிகரித்துக் கொள்ளு வேன்! இதோ உன் தலைவிதியையும் பார்! ப்ளூட்டோவின் இருள் சூழ்ந்த இராஜ்யத்திற்கு அனேகர் ஏற்கெனவே சென்றிருக் கின்றனர்! ஸார்ப்பீடனுல் கொலையுண்டு நீயும் அவர்களுடன் போய் சேருவாய்!'' என்ருன்.

இவ்வாறு இவ்விரு வீரர்களும் வாதாடி வழக்குரைத்துக் கொண்டு, ஏககாலத்தில் ஒருவரையொருவர் நோக்கித் தம்தம் வேலாயுதங்களை எய்தனர். இரண்டு ஆயுதங்களும் அவ்வவற் றிற்கு இலக்காகிய வீரர்களை நோக்கிச் சென்று, அவர்களைத் தாக்கி அவர்களுக்குக் காயங்களையும் உண்டாக்கின. ஆனுல் ஸார்ப்பீடன் எய்த வேலாயுதமானது அவனது சத்துருவைக் கொன்றேவிட்டது. வீண் பெருமையடித்து வந்த அந்த வீரனது கழுத்தில் அது நன்ருக ஊன்றிக்கொண்டு நின்று, அவனது தொண்டையைத் துளைத்து, அதன் உட்சென்று அங்கிருந்த பிராணுதாரமான அவனது இரத்தத்தையும் குடித்துவிட்டது.

அப்பொழுது அவனது ஆவியானது "சீ! இனிமேல் இந்தச் சடலத்தில் இருப்பது நமக்குப் பெருமை இல்லை!'' என்று அதைப் புறக்கணித்துவிட்டு இருட்டறைகளைத் தேடிக்கொண்டு ஓடி விட்டது. ஒளியை அடியோடு இழந்த அவனுடைய கண்களும் மூடிக்கொண்டு விட்டன!

என்றாலும் திலிப்போலிமெஸ்ஸே! நீ கோபத்துடன் எறிந்த உன் வேலாயுதமும் வீணாகப் போகவில்லை! அது ஸார்ப் பீடனுடையத் தொண்டையைத் துளைத்துக்கொண்டு உட்சென்று அவனது எலும்பையும் தாக்கிவிட்டது. அதனால் அவனும் ஆவியைத் துறந்தேயிருப்பான்! ஆனால் ஜோவ்பகவான் அவனது சமீபத்தில் இருந்துகொண்டு, அவனுக்கு வரவிருந்த மரணத்தைத் தடுத்துவிட்டார். அப்பொழுது அவன் பரிவாரத்தாராகிய லிஸியன் நாட்டார் அவனைக் களத்திலிருந்து தூக்கிக்கொண்டு ஓட்டம் பிடித்தனர். அவர்களனைவரும் தங்கள் தங்களது கருமங்களிலேயே கண்ணாகவிருந்ததினாலும் தங்களுக்குத் தப்பிப் பிழைக்க வேண்டுமென்ற ஆத்திரமே மேலிட்டவர்களாகவும் இருந்ததினால், அவர்கள் அவனைத் தைத்திருந்த வேலாயுதத்தை யுருவியெடுக்கவில்லை! அதனால் அவர்கள் அவனைத் தூக்கிச் சென்றபொழுது அந்த வேலாயுதமும் அதன் பின்னாலேயே அவனைத் தொடர்ந்துகொண்டு தரதரவென்று இழுபட்டுச் சென்றது!

கிரேக்கர்கள் திலிபோலிமஸின் உயிரற்ற உடலை எடுத்துச் சென்றதைக் கண்ட யுலிஸ்ஸீஸ் "அந்த வீரன் விழுந்தேபோய் விட்டான்" என்று அறிந்து பொங்கிக் கொதித்தான். ஆத்திரமும் ஆவேசமுங்கொண்டான். இந்தப் பழியை எவ்வாறு தீர்த்துக் கொள்ளலாம்! ஜோவ் பகவானது பராக்கிரமசாலியான புதல்வனை நோக்கிச் சென்று அவனைக் கொல்லலாமா அல்லது லிஸியர்களை நோக்கிச் சென்று அவர்களைத் துவம்ஸம் செய்யலாமா? இவ்விரண்டில் எதைச் செய்யலாமென்று யோசனையில் ஆழ்ந்து அவன் சற்றுத் தயங்கினான்.

தெய்வ நியமனமும் ஊழ்வினையும் அவனது முதலாவது யோசனைக்கு விரோதமாகவிருந்தன. அந்த வீரனது மரணத்திற்குக் காரணமாகவிருக்கும் பாக்கியம் யுலிஸ்ஸீஸ்க்கு இல்லாமல் போய்விட்டது. லிஸியன் சேனைகளை நோக்கித் தன் கவனத்தைச் செலுத்துமாறு மினர்வா தேவி அவனைத் தூண்டியதால், அவன் அஸாஸ்டார் குரோனியஸ், ஹாலியஸ் என்னும் வீரர்களைக் கொன்று அவர்கள் உடல்களை அந்தக் களத்தில் வெட்டித் தள்ளினான். அல்காந்தர், பிரத்தானீஸ், நீமான் என்னும் வீரர்களும் அவ்வாறே மடிந்து விழுந்தனர்.

அவர்களைப் போலவே மற்றும் அனேகர் அவனது வாளுக்கு இரையாகி நரகலோகம் புகுந்தனர். அதைக் கண்ணுற்ற ஹெக்டர் கடுங்கோபங்கொண்டு, இருதிறத்து வீரர்களும் அதிமுரமாகச் சண்டைசெய்து வந்த இடத்தை நோக்கி ஆத்திரத்துடன் சென்று அவர்களின் மத்தியில் வெகு வேகத்துடன் துள்ளிக் குதித்தான். அவனது அந்த வரவு வெகு பயங்கரமாகவிருந்தது. அப்போது தனக்கு உதவியாக யாரேனும் வரமாட்டார்களா வென்று ஏங்கியிருந்த ஸார்ப்பீடான் அவனது வரவைக்

கண்டு, அதிதுக்கத்துடனும் தாழ்ந்த குரலுடனும் பின்வரும் வசனங்களையுரைத்து அவனை வேண்டிக்கொண்டான்:—

"என் பிரேதத்தை நம் சத்துருக்கள் கொள்ளையடித்துக் கொண்டு போகும்படி விட்டுவிடாதே! அதை அனுதரவு செய்து விடாதே! இது கேட்பாரற்று கிடக்கின்றது; நாம் தான் கொண்டு செல்வோமே! என்று அவர்கள் கொண்டு செல்லும்படி விட்டு விடாதே! எனது மகனையும் அதிப் பிரீதியுள்ள எனது மனைவியை யும் என் சொந்த தேசத்துக் கடற்கரையையும் திரும்பி பார்க்கும் பாக்கியம் எனக்கு இல்லாமல் போனாலும் போகட்டும்! புண்ணிய பூமியான இலியன் கோட்டை மதில்களின் மத்தியில் பிராணனை விடும் பாக்கியமாவது எனக்கு இருத்தல் வேண்டும்! ட்ராய்க்குப் பரிந்து வந்து நான் இந்த தர்ம யுத்தத்தில் பிரா்ணனை விடுவதால் அந்த ட்ராய் என்னை நினைத்துக் கரைந்துருகிக் கண்ணீரை வடிக்கும் அல்லவா!" என்றான்.

இவ்வாறு இயம்பிய அந்த மகா வீரனுக்கு மறுமொழியொன் றும் பகராமல், ஹெக்டர் தனது தலையை யசைத்துக்கொண்டு, தன் சத்துருக்களுடன் சண்டை செய்வதற்காக அவர்களை நோக்கி ஒரே ஓட்டமாய்ந் பறந்து சென்றான். அவன் தன் சத்து ருக்களை ஒரு சுழற்காற்றைப்போல் சிதற அடித்துத் துரத்தினான். தான் சென்ற வழியெல்லாம் அவர்களுடைய இரத்தத்தை வடித்துப் போர்க்களத்தையெல்லாம் கறைப்படுத்தினான்.

அப்பொழுது தெய்வப் பிறவியில் வந்தவனான ஸார்ப்பீடனை அழுத கண்ணும் சிந்திய மூக்குடனும் இருந்த அவனுடைய நண்பர்கள் எடுத்துச்சென்று, ஜோவ் பகவானுக்கு பிரியமான ஒரு பீச் மரத்தின் நிழலின்கீழ் கிடத்தனர். அங்கு அவர்களுக்குச் சமீபத்தில் இருந்தவனும் அதிதைரியசாலியும் ஸார்ப்பீடனிடம் அத்யந்தப் பிரியமுள்ளவனும் வீரனுமான பில்கான் என்பவன் அவனது தொடையில் அதிபலமாக ஊன்றி நின்றிருந்த வேலாயு தத்தை உருவியெடுத்தான். அச்சமயம் அவனது ஆவியானது தனது கூட்டை விட்டுப் பறப்பதற்குச் சித்தமாகவிருந்ததுமன்றி, அவனுடைய கண்விழிகளின் மேல் நிசியின் நிழல்களும் வட்ட மிட்டுக்கொண்டிருந்தன. என்றாலும் அவன் தப்பிப் பிழைக்கவே பிழைத்தான்! எப்படியென்றால், அப்போது போரியஸ் தேவி யானவள் வட திசையிலிருந்து எழுந்து வந்து மிகவும் ஹிதமாகத் தனது வாடையை வீசி யமபுரத்தின் வாயில்கள்வரை சென்று விட்ட அவனது ஆவியைத் திருப்பியழைத்துவிட்டாள்! அவனும் பிழைத்தான்.

காரியங்கள் இங்கு இவ்வாறு நிகழ்ந்து வருகையில் மார்ஸ் பகவானும் ஹெக்டரும் கிரேக்கர்களின் எதிரில் நின்றுகொண்டு, இடிகளைப்போல் கர்ஜித்து வந்தனர். அதைக் கண்ணுற்ற கிரேக் கர்கள் வெகு கௌரவத்துடனும் சந்தடியோ குழப்பமோ இன்றியும் வெகு நிதானமாகப் பின் வாங்கினார்கள். சத்துருக்களுக்குப் புறங்

காட்டி ஓட்டம் பிடித்தல் இழிவைத்தரும் என்ற திடபுத்தியுள்ளவர் களாய் அவர்கள் ஒருவராவது தங்களது முதுகைத் திருப்பாமல் வெகு நிதானமாகப் பின்னடைந்தனர். அப்படிப் பின்னடைகையி லும் அவர்கள் தங்கள் எதிரிகளை நோக்கிப் பொருதே சென்றனர்.

அப்பொழுது நிகழ்ந்த யுத்தத்தில் மார்ஸ் பகவான் கையினு லும் ஹெக்டர் கையினுலும் சம்ஹாரம் பண்ணப்பட்டு அனேக மான வீரர்கள் இரத்தத்தைக் கக்கிக்கொண்டும், அடிசாய்ந்து பெருமூச்சு விட்டுக்கொண்டும் மணலில் விழுந்தனர். அவர்களுள் யார் முதன்முதலாக விழுந்தனர் என்றும், யார் கடைசியாய் விழுந்தனர் என்றும் சொல்லுகின்றேன் கேளுங்கள்!

மகானுன தெந்திராஸ் என்பவனும், பழைய குதிரைகளை விசேஷமாக உடையவன் என்று பிரசித்தி பெற்றிருந்த ஒரேஸ்டிஸ் என்பவனும், திரிக்கஸ் என்பவனும் கீழே விழுந்து நிலத்தை அழுத் தினர். அடுத்தபடியாக இனேமாஸ் என்பவனும் ஈனுய்ஸின் புத்திரனும் கடைசியாய் ஆரஸ்பியஸ் என்பவனும் புலம்பிக் கொண்டு அவர்களது சமீபத்திலேயே பொத்தென்று விழுந்தனர். அந்த ஆரஸ்பியஸ் என்பவன் பகட்டான பலவர்ணங்கள் தீட்டிய தலைப்பாகையுடன் விளங்கியவன். நீர்வள நிலவளங்களுடன் செழிப்பாக விளங்கிய பியோஷியா நாட்டின் அரசன் மகா தன வானுமாவான். ஹைலி நதி பாயும் பள்ளத்தாக்கான அவனது நாட்டைச் சுற்றிலும் ஏரிகள் விசேஷமாக விருக்கின்றன. அவன் பிரஜைகளும் தங்களது அபிவிருத்தியிலேயே கண்ணுங் கருத்துமா யிருந்தனர். என்றுலும் என்ன பயன்! விதியை யாரே வெல்ல வல்லார்! இவ்வாறு வீரர்கள் தங்கு தடையின்றியும் ஒரேயடியாக வும் சம்ஹாரம் செய்யப்பட்டு வருவதைக் கண்டு, மிகவும் துக்க மடைந்த ஜூனே தேவியானவள் நீலாயதாக்ஷியை நோக்கி,

"ஆஹா, இது என்ன கோரமான காக்ஷி!! துரோஹி களான ட்ராய் ஜனங்கள் தான் இந்த யுத்தத்தில் ஜயிப்பார்களா? நாம் நம் ஜனங்களுக்கு உறுதியாய்ச் சொன்ன வாக்குகளெல்லாம் வீணுகப் போய் விடுமா?

மகா கௌரவமுள்ளவளான ஜோவின் புத்திரியும் தேவ லோக ராணியும் மெனிலாஸுக்குக் கொடுத்த வாக்குகள் எவ்வளவோ வியர்த்தமாகி விட்டனவே! அவனது கையினுல் பிரியத்தின் மதில்கள் இடிபட்டு விழும் என்றல்லவோ அவர்கள் அவனுக்கு சொல்லியிருந்தனர்! இப்பொழுது தேவர்களே தங்க ளுக்குள் முரண்பட்டு யுத்தத்தில் ருசியுள்ளவர்களாய் அந்தக் கோட்டை மதில்களைக் கண் கொட்டாமல் காத்து வருகின்றனரே! கொடுங் கொலைகள் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாகச் சீறிச் சிவந்து விளங்கும் மார்ஸ் பகவான் நம்மிடம் வைரமுள்ள சத்துருக் களுக்கு சகாயம் செய்து வருகின்றனரே! அவர்களது கக்ஷியில் இருக்கின்ருரே! இது என்ன கஷ்டம்! சட்டென்று எழுந்திரு. நாமும் நம் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு புறப்படுவோம்.

அவர்களது பலத்தை நமது பலத்தால் தடுக்கவேண்டும். இனித் தாமதிக்கலாகாது" என்றாள்.

அதைக் கேட்ட மினர்வா தேவியானவள் தானும் அந்த யுத்தத்தில் கலந்துகொள்ள வேண்டும் என்று ஆத்திரப்பட்டாள். வெகு ஆவலுடன் பொங்கிக் கொதித்தாள். தேவலோக ராணியான அவள் பளிச்சென்று விளங்கும் தன் திவ்யமான ரதத்தைக் கொண்டு வரும்படி தன் சேவகர்களுக்குக் கட்டளையிட்டாள். அந்தக் கட்டளைப்பிரகாரம் அவளுடைய திவ்யமான குதிரைகள் தடதடவென்று முன் வந்தன. அவை அழியாப் பசும் பொன்னுலான ஆபரணங்களை அணிந்திருந்தன. அந்த ஆபரணங்கள் பளபளவென்று மின்னின. என்றும் இளையவளான ஹீபிதேவியும் மினர்வா தேவியின் ஆணைகளை நிறைவேற்றுவதற்காக அங்கு வந்து காத்திருந்தாள்.

அவள் மினர்வா தேவியின் தேர் ஓடுவதற்காக அங்கு சுழன்று ஓடும் சக்கரங்களை மாட்டினாள். அந்த ரதத்தின் பளபள வென்று மின்னிய அச்சில் "கணீர்—கணீர்" என்று ஒலிக்கும் பித்தளையினால் செய்யப்பட்ட உருளையையும் அவள் சொருகி முறுக்கினாள். அந்த அச்சானது உருக்கினால் உண்டாக்கப்பட்டு மெருகும் இடப்பட்டிருந்தது.

அந்தச் சக்கரங்களில் எட்டுப் பித்தளைச் சகடக் கால்கள் பிரகாசத்துடன் ஒழுங்காக "தக தக" வென்று கொதித்துக் கொண்டு விளங்கின. அந்தச் சக்கரங்கள் பொன்னால் செய்யப் பட்டிருந்தன. அவற்றின் பட்டாக்களும் அதிதுல்லியமாக விருந்தன. அவையெல்லாம் தேவலோகத்தில் உண்டாக்கப்பட்டவை என்றால் அவற்றின் பெருமையை விசாலமாக விளக்குவது அனுவசியமன்றோ! அந்தப் பொற் சக்கரங்களைச் சுற்றிலும் திவ்யமான சித்திர வேலைப்பாடுகளையுடைய இரண்டு பித்தளைச் தடயங்களும் உருட்டுக்களும் மாட்டப்பட்டிருந்தன.

அந்தச் சக்கரங்களின் தொப்பைக் கட்டுகளிலிருந்த குமிழ்கள் கெட்டியான வெள்ளியினால் செய்யப்பட்டுப் பிரகாசத்துடன் விளங்கின!

அந்தத் தேரில் ஒரு சிம்மாசனமானது இரண்டு பொற் சங்கிலிகளில் மாட்டப்பட்டு ஊசலாடிக் கொண்டிருந்தது. அந்தத் தேரின் பின்புறத்தில் ஒரு வளைந்து கொண்டிருந்த பிரதிமையும் அதன் முன்புறம் வில்லைப் போன்ற ஒரு வளைவும் இருந்தன.

அந்தத் தேரின் சட்டங்களும் விட்டங்களும் வெள்ளியினால் செய்யப்பட்டிருந்தன. அதன் நீண்ட நுகத்தடிகள் பொன்னினாலாக்கப்பட்டிருந்தன. அந்தத் தேரில் பூட்டியிருந்த அழிவற்ற குதிரைகளைப் பிடித்துவந்த கடிவாளக் கயிறுகளும் கூட பொன்னினாலேயே ஆக்கப்பட்டிருந்தன.

இவ்வாறு திவ்வியமான அலங்காரங்களுடன் தன் முன் வந்த தனது ரதத்தைக் கண்ணுற்று, ஏற்கெனவே ஆத்திரப்பட்டுக் கொண்டு துடித்துக் கொண்டிருந்த அந்த தேவி, அந்தக் குதிரைகளைத் தானே சேர்த்துப் பிடித்துக்கொண்டு, 'பழிக்குப் பழிவாங்கி விடுவேன், நமது சத்துருக்கள் அனைவரையும் இந்த யுத்தத்தில் சம்ஹாரம் செய்துவிட்டுத்தான் வேறு வேலை' என்று ஒரு பயங்கரமான ஸங்கல்பத்தையும் செய்துகொண்டாள்.

அதன்பின் பாலாஸ் தேவி, தன் மேலாடையைக் களைந்து விட்டாள். புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதும் பலவிதமான சித்திர வேலைப்பாடுகளுள்ளதும் தேவியான அவளே தனது கைப்படச் சிரமப்பட்டு நெய்ததுமான அந்த எழினியை அவள் அவிழ்த்துச் சுழற்றியபொழுது, அது ஜோவ் பகவானது ஸபா மண்டபத்தின் தரையின்மேல் விழுந்து இழைந்து பெருகிக் கொண்டு சென்றது!

அதன்பின் தேவலோகத்திலிருந்த அதி பயங்கரமும் குரூரமுமான ஆயுதங்கள் அவளுடைய பராக்கிரமமான கரங்களின் வசமாயின. அவளது அகன்ற மார்பில் ஜோவ் பகவானது இரும்பினாலான மார்க்கவசம் பளபளவென்று மின்னிக்கொண்டு விளங்கியது. நாசத்தை விளைக்கக் கூடியதும் கறுத்த நிறமுடையதும் பிரமாண்டதுமான அவளது பயங்கரமான கேடயம் அவளுடைய இரண்டு புஜங்களின் மேலும் பொருந்தித் தொங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கேடயத்தை அணிந்துகொண்டு அவள் சங்கடக் கைவீச்சுடன் துக்க சம்பவங்கள் நிகழவிருந்த அந்த யுத்தகளத்திற்குச் சென்றாள். அந்தக்கேடயத்தின் வட்ட வடிவமான விளிம்பில் பொன்னால் செய்யப்பட்ட ஸர்ப்பங்கள் சீறிக்கொண்டு காவல் காத்துவந்தன. அந்தக் கவசத்தில் பூததயையோ பச்சாத்தாபமோ இன்றிக் குரூரமாக நடத்தப்படும் யுத்த நிகழ்ச்சிகள் ஸகலமும் அதிபயங்கரமாக விளங்கின. ஒரு புறத்தில் வீரர்கள் தங்கள் சத்துருக்களை வேகத்துடன் தாக்குவதும், மறுபுறத்தில் அவர்கள் நடுநடுங்கிப் பயந்து யுத்தகளத்திலிருந்து ஓட்டம் பிடிப்பதும், விடேன் கொடேன் என்ற பிடிவாதத்துடன் வீரர்கள் செய்துவந்த துவந்த யுத்தங்களும், தலையோ காலோ தெரியாமல் அவர்கள் ஒருவரையொருவர் மோதி வந்ததும், தன் தலையில் ஒரு பயங்கரமான பெருத்த சட்டியைக் கவிழ்த்துக் கொண்டு ஒரு பேயானது பிணங்களைத் தின்னும் காட்சியும் அதில் சித்திரிக்கப்பட்டிருந்தன.

அதன்பின் அந்த தேவி தனது பிரமாண்டமான பொன் மகுடத்தைத் தரித்துக் கொண்டாள். அவள் அதை அசைத்த பொழுது அதன் நாற்புறமுமிருந்த கொண்டைகள் நிழலைப் பரப்பிக்கொண்டு திகிலையுண்டாக்கின. அதி பிரமாண்டமான அதன் விரிவான அகன்ற விளிம்பில் நூற்றுக்கணக்கான யுத்த களங்களின் காட்சிகளும் அந்த யுத்தங்களில் அந்வயிக்கும் நூற்றுக்கணக்கான சேனைகளின் உருவங்களும் தீட்டப்பட்டிருந்தன.

இவ்வாறு ஆயுத ஆபரணங்களை யணிந்துகொண்டு, அந்த தேவி உத்தமமான தனது ரதத்தில் ஏறிக்கொண்டாள். அவ்வாறு ஏறிக்கொண்டு தனது அதிகனமானதும் பிரமாண்ட மானதுமான வேலாயுதத்தை அவள் அசைத்த பொழுது அது வளைந்தே போயிற்று! அது சாமான்யமானதல்ல! அதைக் கையில் ஏந்திக்கொண்டு, அவள் கோபதாபத்துடன் பொங்கிக் கொதிக்கையில், அது கர்விகளான தான்தோன்றிகளை மட்டந் தட்டவும் சேனை சமுத்திரங்களை ஒருங்கே தலைகுப்புற வீழ்த்தி அடிக்கவும் கூடியது!!

அந்த தேவி தனது சாட்டையைச் சுழற்றிய பொழுது, தேவ பரம்பரையில் வந்த அந்தக் குதிரைகள் வாயுவேக மனோ வேகமாய்ப் பறந்தன. வழவழவென்று வேலைப்பாடுள்ள அந்த இரதமும் சமுத்திரம் போன்ற அகன்ற ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு, தங்கு தடையின்றிச் சென்றது. அப்பொழுது தேவ லோகத்தின் கதவுகள் அந்தக் குதிரைகளும் இரதமும் சென்ற விசையினால் தாக்குண்டு தாமே திறந்து விட்டன; அவை ஸ்வர்ணத்தினால் உண்டாக்கப்பட்டு இறகுகள் கொண்ட கால பாலகர்களால் காவல் காக்கப்பட்டு வந்தவை.

ஒருவருக்குப்பின் ஒருவராக மாறிமாறி முறைப்படி அந்த வாயில்களைக் காத்துவர ஏற்படுத்தப்பட்டிருந்த அந்த துவார பாலகர்கள் தங்கள் கடமைகளைத் தவறாமல் செலுத்திக்கொண்டு அங்கு நின்றிருந்தனர். அவர்கள் சூரிய மண்டலத்திலுள்ள பளிச்சென்று மின்னும் கோபுர வாசல்களுக்கும் ஆகாசத்திலுள்ள சகல லோகங்களுக்கும் அதிபதிகள், அதிகாரிகள்; அவர்கள் தினகரனது அரண்மனையின் வாசற் கதவுகளை மேகங்களால் மறைத்து விடுவார்கள். அவ்வாறே அவற்றை மறைக்கும் இருட்டையும் வேறு தடைகளையும் இலகுவில் நீக்கி உருட்டித் தள்ளி விடுவார்கள்.

மேற் சொல்லியபடி அந்த தேவலோக அரண்மனையின் கதவுகள் திறந்தபொழுது, அவற்றின் கீல்கள் கலீர் கலீரென்று நல்ல நாதத்துடன் ஒலித்தன. இருபுறமும் இருளால் சூழப்பட் டிருந்தன. திடகாத்திரமும் பிரமாண்டமுமான அந்த உன்னத மான மலையின் உச்சியை ஏறிவிட்டது. காற்றே வியங்தமான அந்தப் பிரதேசத்தின் மத்தியில் ஒலிம்பஸ்ஸின் நூற்றுக் கணக்கான கொடுமுடிகள் தம்மைக் காண்போர் மனதில் திகிலையும் கலக்கத்தையும் உண்டாக்கிக்கொண்டு ஓங்கி உயர்ந்து நின்றன. அவ்விடத்தில் மற்றையோரது அரண்மனைகளுக்கு வெகு தூரத்திலுள்ள தனிமையான ஒரு பிரதேசத்தில் கட்டப் பட்டிருந்த தமது மாளிகையில் சகலமான தேவர்களுக்கும் தேவனும் ஒப்பற்றவருமான இடியின் கடவுள் தமது சீரிய சிங்காதனத்தில் வீற்றிருந்தார்.

அங்குச் சென்றவுடன் நமது இராணி யானவள் நெருப்புடன் சேர்ந்த காற்றைப்போல் வெகு துரிதமாக ஓடிவந்த

தன் குதிரைகளைப் பனியைப்போல் வெளுத்திருந்த தன் கரங்களினால் பிடித்து நிறுத்தி ஜோவ் பகவானை நோக்கிப் பின் வருமாறு முறையிட்டாள்:—

"தேவே! தங்களுக்குச் சிறிதேனும் ரோஷமோ உணர்ச்சியோ இல்லையா?

வெட்கம் நாணம் என்பதும் இல்லையா? இந்த மார்ஸ் உமக்கு விரோதமாகக் கிளம்பலாமா? உமக்குத் துரோகம் செய்யலாமா? நீர் இடிக்கடவுள் ஆயிற்றே! அவனை இடித்துத் தள்ள உமக்குத் திறமை இல்லாமற் போயிற்று! பிறர் பிரவேசிப் பதற்குத் தகாத அந்தப் போர்க்களத்தில் எவ்வளவோ கோப தாபங்களும் அநீதிகளும் நடக்கின்றனவே!

தலைகால் என்பதின்றியும் வர்ஜ்ஜாவர்ஜ்ஜம் என்பதில்லாமலும் எத்தனை கொடுமைகள் நடக்கின்றனவே!

எப்பேர்ப்பட்ட மகா வீரர்களெல்லாம் மடிகின்றனரே! வதைபடுகின்றனரே!

வீனஸ் தேவியும் பயங்கரமான வில்லைத் தரித்த பீபஸ் பகவானும் அந்தப் படுகளத்தில் உண்டாகும் வதங்களைக் கண்ணுற்றுக் களித்து வருகின்றனரே! நான் கஷ்டப்படுவதைக் கண்டு அவர்கள் மிகவும் சந்தோஷிக்கின்றனரே! அது அவர்களுக்கு திருப்தியாயிருக்கின்றதே! இவர்களுக்கு இவ்வளவு மதமா? அதிகார கர்வமா? அதிகாரம் கிடைத்துவிட்டால் அதை இப்படித்தானா மூர்க்கனைப்போல் செலுத்தவேண்டும்! கட்டுக் கடங்காதவர்களும் மட்டுமிதமில்லாதவர்களுமான அவர்களது மதத்தையடக்க ஒரு தெய்வத்திற்கும் சக்தி இல்லையா? தர்மாதர்மம் என்பதும் சிறிதும் இல்லையா? வரம்புகள் கிடையாவா? என் பெருந்தந்தையே! பதில் சொல்லும்! நாம் இந்த மதத்தையடக்க வேண்டாமா? இவ்வாறு மும்முரமாக நடந்துவரும் இந்த யுத்தத்தையும் வீரர்களது வதத்தையும் நாம் நிறுத்த வேண்டாமா?" என்றாள்.

இந்த வசனங்களைப் பொறுமையுடன் செவிசாய்த்துக் கேட்ட இடிக்கடவுள், அவையனைத்தும் நியாயந்தானென்று தீர்மானித்தவராய், அவளை நோக்கி "நீ மகாதேவியான மினர்வாவைத் துணையாகக் கொண்டு புறப்படு. அவள் கொடிய குரூரஸ்வபாவமுள்ள அந்தச் சேனையை அடக்கிவிடுவாள். அவனை வசப்படுத்தி விடுவாள். அந்த மந்திரம் அவளுக்கு நன்றாகத் தெரியும். அவள் அவனைப்பலவிதமாக வாட்டி அவனது கல் மனத்தை இடித்துக் கரைத்து விடுவாள்" என்றார்.

அவ்வாறு அவர் சொல்லியதைக் கேட்ட ஸாட்டர்னியானவள் அவரது ஆணையை நிறைவேற்ற ஆத்திரங்கொண்டு,

தன் வெண்ணிறமான குதிரைகளை அந்த ஆகாய வீதியின் வழியாய்ப் பறந்து செல்லுமாறு தன் சவுக்கினால் அடித்தாள். அப்பொழுது அவளது இரதமானது செங்குத்தாகவிருந்த அந்த தேவலோகத்திலிருந்து விரைவாக உருண்டு இறங்கிவந்து, விரிந்தும் பரந்தும் விசாலமாகவும் உள்ள பூமிக்கும் நக்ஷத்திரங்கள் நிறைந்துள்ள ஆகாச மண்டலங்களுக்கும் மத்தியிலுள்ள பிரதேசத்தில் பிரவேசித்தது.

ஓர் இடையன் உன்னதமான ஒரு மலைச் சிகரத்திலிருந்து கொண்டு தனக்கு எதிரேயுள்ள கங்கு கரையில்லாத விசாலமான பிரதேசத்தைக் கண்ணுக் கெட்டும் வரை உற்று நோக்குவது போல், அந்த சிரஞ்சீவிகளான குதிரைகள் சிறிதும் சலிப்பின்றி அதிவிசாலமாகப் பரந்துள்ள அந்த ஆகாயத்தில் இடியைப் போல் கனைத்துச் சப்தம் செய்துகொண்டு, தாவித்தாவிக் குதித்துக்கொண்டு சென்றன. கடைசியாய் அவை ட்ராய் நகரையும் வந்து சேர்ந்து, அந்நகரில் வெள்ளியைப் போல் பளிச்சென்று மின்னும் ஸிமோயி நதியும் சியமந்தர் நதியும் சங்கமமாகும் புண்ணிய தீரங்களையும் அடைந்தன. அங்கு ஜூனோ தேவியானவள் தன் இரதத்தை நிறுத்தித், தன் திவ்வியமான குதிரைகளையும் அவிழ்த்து விட்டாள்.

அதன் பின்பே அவள், அதுவரைதான் அடைத்து வைத்துக் கொண்டிருந்த தனது மூச்சையும் வெளியே விட்டாள். அவ்வாறு அவள் மூச்சு விட்டபொழுது, அங்கு அடித்துக் கொண்டிருந்த காற்றானது கொதித்துப் புகையாக மாறி விட்டது! அந்த ஸிமோயின் நதிக்கரையோரமெல்லாம் தேவலோகத்திலிருந்து பொழியும் உறைந்த பனியினால் மூடப்பட்டிருந்தது. அங்கு குதிரைகள் தின்னக்கூடிய அமிர்தத்திற்கு சமானமான புற்பூண்டுகளும் விசேஷமாக வளர்த்து வந்தன; ஆதலால் அவள் தன் குதிரைகளை அங்கே அவிழ்த்து விட்டாள். அவை அங்கு மேய்ந்து சிரம பரிகாரம் செய்து கொண்டன. அதன் பின் அவள் ஆர்காஸ் நாட்டாருக்கு ஏற்பட்டிருந்த கஷ்டங்களைத் தீர்ப்பதற்காக, அக் குதிரைகளைத் திரும்பவும் தன் ரதத்தில் பூட்டினாள். அவை ஆகாயத்தில் பறந்து செல்லும் புறாக்களைப்போல், வெகு அழகாகவும் லகுவாகவும் சிறிதும் தங்கு தடையின்றி முன் சென்றன. அப்பொழுது கிரேக்கர்களில் உத்தமர்களும் மகாதீரர்களுமான வீரர்கள் திடிதீசனைச் சுற்றி வளைந்து நின்று கொண்டிருந்தனர். அவர்கள் காட்டிலுள்ள மிருகங்களுக்கு பயத்தையும் பீதியையும் உண்டாக்கிக் கொண்டு இரத்தத்தில் முழுகி நின்ற சிங்கங்களைப் போலவும் நுரையைக் கக்கிக்கொண்டு விளங்கும் காட்டுப் பன்றிகளைப் போலவும் தோன்றினர். தேவலோக ராணியானவள் அந்த வீரர் குழாத்தினுட் பிரவேசித்து ஸ்டெண்டாரைப்போல் தனது தொண்டையை உடைத்துக் கொண்டு பின்வருமாறு ஆர்ப்பரித்தாள்.

அந்த ஸ்டெண்டார் யாரென்றால் சொல்லுவேன் கேளுங்கள். அவன் மகா பலவான், அவனது இரைப்பைகள்

பித்தளையைப்போல் கெட்டியானவை. ஏக காலத்தில் ஐம்பது பேர்கள் ஒன்றுய்க் கூடிச்செய்யும் சப்தத்திற்கு மேலாகவே அவன் உரத்துக் கூவித் தன் தொண்டையை உடைத்துக்கொள்ளுவான்.

அந்த தேவியானவள் அவர்களை நோக்கி "மானங்கெட்ட ஆர்கியர்களே, மானமிழந்தவர்களே! நீங்கள் உங்களது குலத்திற்கே அவமானத்தை உண்டாக்கவேிட்டீர்களே! குலத்தைக் கெடுத்து விட்டீர்களே! பார்வைக்கும் பேருக்கும் மாத்திரம் ஆண் பிள்ளைகளைப்போல் விளங்குகின்றீர்களே! தேவர்களுக்கு சமான மான அகிலேசன் கோபங்கொண்டு சீற்றத்துடன் யுத்தஞ்செய்து வந்தபொழுது, நீங்களனைவரும் உங்கள் சத்துருக்களை அவர்களது கோட்டை மதில்களிலிருந்து விரட்டிடித்தீர்கள். அவர்கள் அனைவரது மனத்திலும் பெருங் கலக்கத்தையும் குழப்பத்தையும் உண்டாக்கி வந்தீர்கள். இப்போது அதே சத்துருக்கள் புற்றிலிருந்து வெளிப்படும் ஈசல்களைப்போல் தங்கள் கோட்டைகளிலிருந்து புறப்பட்டு வெளி வந்து சிறிதும் பயமின்றி இந்த யுத்தகளத்தைக் கைப்பற்றிக் கொண்டு விட்டனர். இந்தக் கடற்கரையையும் ஸ்வாதீனப் படுத்திக்கொண்டு விட்டனர். இந்த சமுத்திரங்களை யும் ஆக்கிரமித்துக்கொண்டு விட்டனர். அவைகள் கூட மிஞ்ச வில்லை!" என்றுள்.

அவளுடைய வசனங்களைக் கேட்டபொழுது, அந்த கிரேக்கர்களுடைய மனதுகளில் புதிய உணர்ச்சியும் உற்சாகமும் உண்டாயின. அப்போது படபடவென்று துடித்துக்கொண்டிருந்த தன் குதிரைகளின் சமீபத்தில் மகாராஜனுன திடிதீசன் இருந்ததைக் கண்ணுற்று, அதீனியன் அணங்கு அவனருகே சென்றுள். அவன்தான் அன்று செய்த காரியங்களினுல் களைத்துச் சலித்தவனுய்த் தரையின்மேல் படுத்து இளைப்பாறிக்கொண்டிருந்தான். லிஸியன் விடுத்த அம்புகளினுல் தனக்குண்டான காயங்களை ஆற்றிக்கொண்டும் தகதகவென்று கொதித்துக் கொண்டிருந்த இரணங்களின் சூட்டைக் குளிர்ந்த காற்றினுல் தணித்துக் கொண்டும் அவன் அங்கே கிடந்தான். அவனுடைய சர்வ அங்கங்களிலுமிருந்து வேர்வையானது பெருத்த முத்துக்களைப்போல் துளித்துளியாய் உருண்டு வந்து கொண்டிருந்தது. அப்போது அவனுக்குத் தான் அணிந்திருந்த பிரமாண்டமான கேடயத்தைத் தாங்கிச் சுமந்து வரவும் சக்தியிருக்கவில்லை. தனது தோளின் மேல் தரித்திருந்த பட்டையான அகன்ற வஸ்திரத்தைத் தளர்த்திக்கொண்டும் கைகால்களை மடக்கிக்கொண்டும் தன் ரணங்களில் கெட்டியாக உறைந்து போயிருந்த இரத்தக் கட்டிகளைக் கழுவிக்கொண்டும் அவன் தன் பரிவார ஜனங்களை விட்டுத் தனியாக அந்த இடத்தில் இருந்தான்.

நமது தேவியானவள் அவனது குதிரைகளின் சமீபத்திற் சென்று சற்று நிதானித்து, மௌனம் நீங்கி, அவனது இரத்தத்தின் வளைவான நுகத்தின் மேல் சாய்ந்து கொண்டு, அவனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தாள்;

"சீர்கெட்ட ராஜகுமாரா; நீயும் திடியஸின் வம்சத்தில் உதித்தவன்தானு! அல்லவென்றே நான் மதிக்கிறேன்! அவன் உருவத்தில் சிறியவனுகவிருந்தாலும் பெருந்தன்மையும் மனவலிவும் உடையவனுகவல்லவா இருந்தான்! வீர சூர பராக்கிரமங்களும் தைரியமும் உள்ளவனுகவே அல்லவா அவன் விளங்கி வந்தான்! கீர்த்தியைத்தரத்தக்க காரியங்கள் ஏதேனும் உண்டென்று அறிந்தால் அவன் அவைகளில் தலையிட்டு சிரமப்பட்டு உழைக்க நான், நான் என்றல்லவா எல்லோருக்கும் முன்னுக வருவான்! சண்டை வேண்டாம் என்று தடுத்தாலும் அவன் சும்மாயிருக்கமாட்டானே! ஒருக்கால் அவன் தன்னந்தனியாகவும் துணைவர் ஒருவராவது இல்லாமலும் வெகு துணிவுடன் தன் சத்துருக்களான தீபர்களை நோக்கிச் சென்றுன். அவர்கள் மத்தியில் உட்கார்ந்து விருந்தும் உண்டான். அங்கு வந்திருந்த கைதேர்ந்த மகாவீரர்கள் அனைவரையும் வலுவில் சண்டைக்கு இழுத்து அவர்கள் அனைவரையும் தோற்கடித்தான். இந்தக் காரியங்களெல்லாம் செய்வதற்காக நான் அவனுக்கு விசேஷமான புஜபலாக்கிரமங்களையும் சலியாமல் போர் புரிவதற்கான மனவலியையும் சக்தியையும் அளித்திருந்தேன். அவ்வாறு சிறிதும் குறைவின்றி நான் உன்னையும் சதா கவனித்துக் காப்பாற்றி வந்திருக்கின்றேன். உன் கைகளுக்கு வலிவைத் தந்தேன். ஆயுதங்களையளித்தேன். பயமோ சோம்பேறித்தனமோ உன்னை இந்த யுத்தத்தில் கலக்க வொட்டாமல் தடுத்துவிட்டது. உன் தகப்பனது இரத்தம் ஒரு சொட்டேனும் உனது உடலிலோ நரம்பிலோ இல்லையென்றே தோன்றுகின்றது! இது இருந்தால் உனக்குச் சிறிதேனும் சுரணையிருக்குமல்லவா" என்றுள்.

அதைக் கேட்டு வந்த வீரன் வெகு சாந்தத்துடன் அந்தத் தேவிக்கு பின் வருமாறு பதிலுரைத்தான்:— "அழிவில்லாத அன்னையே! தாங்கள் எனக்குப் பிரசன்னமாக விருப்பதும் எனக்கு சகாயம் செய்து வருவதும் உண்மையே, நான் அறிவேன். ஒப்புக் கொள்கின்றேன்! இந்த யுத்தத்திற்குப் போகவொட்டாமல் என்னைத் தடுப்பது பயமோ பீதியோ அல்ல என்பது தங்களுக்கு நன்றுய்த் தெரியும், நான் ஒரு சோம்பேறியுமல்ல; நான் ஒரு மழுங்குண்ணிமாங்கொட்டையாக மாறி விடவுமில்லை. எனக்குத் தங்கள் ஆணையும் ஆசீர்வாதமுமில்லை. அது தான் என் குறை!! இந்த யுத்தத்தில் நம் எதிர்க் கக்ஷியிலிருந்து பொருது வரும் தேவர்களின் மேல் நான் எனது வேலையோ ஈட்டியையோ பிரயோகிக்கலாகாது என்று தாங்கள் எனக்கு ஆணையிட்டுத் தடுத்திருக்கின்றீர்கள்! வீனஸ் தேவியை மாத்திரம் நான் தடுக்கலாம் என்றும் தாங்கள் எனக்கு அனுமதி தந்திருந்தீர்கள்! அதனுல் தான் அவளை மாத்திரம் எதிர்த்துப் பொருதேன்! ஆதலால் தேவீ! தங்கள் மேலான ஆணைகளுக்குக் கட்டுபட்டவனுக நான் எது எப்படிப்போனுல் நமக்கு என்ன? என்று வெகு கசப்புடன் வாளாவிருந்து விட்டேன். நம் ஆர்காஸ் சேனைகளுக்கு மாத்திரம் ஊக்கமளித்து வந்தேன். மனிதவர்க்கத்தை மாய்த்து வரும் இந்த மார்ஸ் என்னும் நராந்தகனை நான் இந்த என் கண்

களாலேயே பார்த்து வருகின்றேன். அவர் வெகு கோபத்துடன் இந்த யுத்தகளத்தைச் சுற்றிக்கொண்டு வளைந்து வளைந்து வருகின்றார். அவர் சென்ற விடமெல்லாம் இரத்த வெள்ளத்தையும் இந்தக் கண்களே கண்டன. அவரை நான் எதிர்க்கலாகாது என்று தாங்கள் ஆணையிட்டபடி நான் அவர் முன் செல்லவில்லை'' என்றான்.

அவன் அவ்வாறு சொல்லக்கேட்டு மினர்வா தேவி யானவள் ''திடிதீசா! தீ தைரியவான்தான், பயப்படாதே! நீ மார்ஸ் பகவானையாவது வேறு எந்த தேவதையையாவது கண்டு பயப்படவேண்டாம். அமரர்கள் ஒருவரையுமே நீ லக்ஷியம் செய்யவேண்டாம். நீ அந்த மார்ஸ் பகவானை நோக்கியே, நுரையைக் கக்கிக்கொண்டு ஆத்திரத்துடன் துடிக்கும் உன் குதிரைகளைச் செலுத்து! இது பாலாஸ் தேவியின் ஆணை! அந்தப் பாலாஸ் தேவியே உனக்கு இந்தச் காரியம் சித்தி பெறுவதற்கான பலத்தை இப்பொழுது அளித்திருக்கின்றாள்!

அந்த மார்ஸ் என்பவன் சிறிதும் பகுத்தறிவில்லாதவன்! வியவஸ்தை கெட்டவன்! அவனுக்குத் தன் காடு பிறன் காடு என்பது சிறிதுமில்லை! அவன் ஒரு கக்ஷியிலிருந்து மறு கக்ஷிக்குத் தடதடவென்று கண்ணை மூடிக்கொண்டு மசையனைப்போல ஓடியாடி அலைகின்றான். காற்றைப்போல் பறக்கின்றான் எந்தக் கக்ஷி இளைத்திருக்கின்றது என்று அறிந்து, அங்கு சென்று அங்கேயே தனது கைவரிசையைக் காட்டுகின்றான். தான் செய்த வாக்குறுதிகளைத் தன் இஷ்டப்படி மறுத்தும் விடுகின்றான். ஒரு சமயம் கிரேக்கர்களுக்கு உதவுகின்றான். மறு நிமிஷம் துரோஜர் களுக்கும் சகாயம் செய்கின்றான். அவன் சிறிதும் ஸ்திர புத்தியில் லாதவன்'' என்றாள்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவள் அவனது தேரில் கட்டியிருந்த குதிரைகளை அணுகி, அந்தத் தேரை ஓட்டி வந்த சாரதியைக் கீழே இழுத்துத் தள்ளிவிட்டுத் தானே அந்தத்தேரில் ஏறிக்கொண்டாள். அதிபராக்கிரமசாலியும் வீரவல்லியுமான அந்த தேவி தன் சத்துருக்களின் மேல் பழிவாங்கிவிட வேண்டு மென்று துடித்தாள், அதிபயங்கரமாக விளங்கினாள்! தயோமதியும் அவளைக் கவனித்து அவளுடைய ஆஞ்ஞைகளை நிறைவேற்றுவதி லேயே கண்ணுங் கருத்துமாக விருந்தான். இவ்வாறு இவ்விரு வரும் அந்தத் தேரில் ஏறிக்கொண்டு விட்டதினால் அவர்களது பாரத்தைத் தாங்கமுடியாமல் அந்தத் தேரில் இருசுக்கட்டை வளைந்து போயிற்று! அழுது புலம்பியது. ஒரு மகா வீரனும் ஒரு பெருந்தேவியும் ஒரே தேரில் ஏறி அமர்ந்து விட்டால் அவ்விரு வரையும் அந்தத் தேர் எப்படித் தான் தாங்கும்? அவள் அந்தக் குதிரைகளின் கடிவாளக் கயிறுகளைப் பிடித்துக்கொண்டு, அவை களைத் தன் முழுப்பலத்துடன் அடித்து ஓட்டினாள். நுரையைக் கக்கிக் கொண்டிருந்த அந்தக் குதிரைகளை மார்ஸ் பகவானை நோக்கிச் செலுத்தினாள். அவ்வாறு செலுத்துமுன் அவள்

ஆர்களின் தலைப்பாகையை விரித்து தனது பளிச்சென்று விளங்கும் தலையின் மேல் விரித்துக் கட்டிக்கொண்டு தன் திவ்வியமான முகத்தையும் மறைத்துக் கொண்டாள்.

அதே சமயத்தில் ஈட்டோலியன் வர்க்கத்தவரில் வலிமிக்கவனான பெரிப்பாஸ் என்னும் வீரன் மார்ஸ் பகவானால் வெட்டுண்டு அந்தக் களத்தில் மடிந்து கிடந்தான். அவனைக்கொன்ற அந்த மார்ஸ் பகவான் அவனது பிணத்தை அது குப்புறக் கீழே விழுந்த விடத்திலேயே விட்டு விட்டுத், திடிதீசனை நோக்கிப் பறந்து சென்றான். அந்த பகவானும் அதிதைரியசாலியான அந்த கிரேக்க வீரனும் ஒருவரையொருவர் நோக்கிக் கோபத்துடன் சீறிப் பாய்ந்தனர். அதே க்ஷணத்தில் அதிப்பயங்கரமான அந்த மார்ஸ் பகவானது கையிலிருந்து புறப்பட்ட பிரமாண்டமான ஆயுதமானது அந்த வீரனை நோக்கிச் சிறிதும் குறிதவறாமலும் அவனது குதிரையின் தலைக்குச் சிறிது மேலாகவும் பறந்து வந்தது. அந்த அழிவில்லாத ஆயுதத்தை பாலாஸ் தேவியானவள் தன் கையால் தடுத்து அது திடிதீசனது ரதத்தை அணுகாமலும் வெகு தூரம் விலகிச் செல்லும் படியும் செய்து விட்டாள்.

அதன் பின் திடியஸ்ஸின் புத்திரனும் யுத்தப்பிரியனுமான அந்த வீரன் தனது சக்தியையும் காட்ட ஆரம்பித்தான். அவனது வேலாயுதம் பாம்பைப்போல் சீறிக்கொண்டு புறப்பட்டது. அவனுக்கு உதவியாயிருந்த தேவியும் அதற்கு ஊக்கமளித்து, அதைத் துரிதமாகவும் விரைவாகவும் செலுத்தினாள். அந்த வேல் மார்ஸ் பகவானைத் தாங்கி அவனது கவசத்தைக் கட்டிக் காத்து வந்த அகலமான பட்டையைக் கிழித்து, அவனது வயிற்றையும் துளைத்து விட்டது. அத்துடன் நில்லாமல் அது அவனது இடுப்பையும் ஊடுருவிச் சென்று, அங்கு ஒரு பெருத்த காயத்தையும் உண்டாக்கி விட்டது. பின்பு அவ்வாறு கிழிந்துபோன அந்த தேவனது துவக்கிலிருந்து அந்த வீரன் தன் ஆயுதத்தை வெகு வேகமாக இழுக்கையில் அது புகையைக் கக்கிக்கொண்டும் தகதக வென்று வெப்பத்துடன் கொதித்துக்கொண்டு மிருந்தது.

அப்போது உண்டான வேதனையைப் பொறுக்கமாட்டாமல் மார்ஸ் பகவான் கதறினார். இரைந்து உறுமினார்! உக்காரம் போட்டார். அவர் போட்ட சப்தத்தினால் உலகமெல்லாம் ஒரே நடுக்கத்துடன் நடுங்கியது. அப்பொழுது உண்டான குழப்பம் எப்படியிருந்ததென்றால், ஒருவரையொருவர் கண்டு சந்தித்துவிட்ட சேனைகள் செய்யும் அரவத்தைப் போலவும், கோடிக் கணக்கான வீரர்கள் ஏககாலத்தில் செய்யும் இடி முழக்கத்தினால் ஒரு யுத்த களம் அதிர்ந்து கலங்கி நடுங்குவது போலவும் இருந்தது. அவர் போட்ட கூச்சலைக்கேட்ட இருதிறத்துச் சேனைகளும் திடுக்கிட்டுப் பயந்து திகைத்து தங்களைச் சுற்றி நாற்புறமும் உற்று நோக்கின. பூமியிலும் ஆகாயத்திலும் ஏககாலத்தில் பெருத்த முழக்கங்கள் உண்டாயின. சேனைகள் செய்துவந்த ஆரவாரத்தை அனுசரித்து மண்ணிலும் விண்ணிலும் எதிரொலி உண்டாயிற்று.

அக்னி நட்சத்திரமானது வெகு கொடுமையுடன் ஆகாயத்தின் உச்சியிலிருந்துகொண்டு பூமியைத் தகித்து வருகையில் ஆஸ்டர் பகவானும் தன் சுடுசரங்களை விடுகின்றார். அவற்றினின்றும் வெப்பமான ஆவிகள் கிளம்பி வெகு வியாதிகளுக்கும் நோய்களுக்கும் இருப்பிடமும் அவற்றின் தாயுமான மரணத்தின் பீஜங்களைத் தூவிக்கொண்டு ஆகாயம் முழுவதையும் கறுக்கி விடுகின்றன. அதேமாதிரியான காரிருள் இப்பொழுதும் உண்டாயிற்று. சமர்க் கடவுளும் சண்டையை விட்டுவிட்டு ஆத்திரத்துடன் ஓடி அந்தக் காரிருளின் பின்னுல் மறைந்துகொண்டு, அப்போது அங்கு உண்டாயிருந்த சுழல்காற்றின் வழியாகவே ஓர் ஏணியின்மேல் ஏறுவதுபோல் ஏறி அமரரது உலகை அடைந்து விட்டார்.

தனக்குக் கிடைத்த அடிகளால் நொந்து நோயுற்றுக் கதறிக் கொண்டு, அவர் என்றும் பிரகாசத்துடன் விளங்கும் அந்த ஜோதி மண்டலத்தை அடைந்து, தேவர்களின் பிதாவின் காலடியில் தன் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். தன் தேகத்திலிருந்து ஆருகப் பெருகிக்கொண்டிருந்த திவ்விய மான இரத்தத்தை அவருக்குக் காட்டினுர். பெருமூச்சு விட்டார். பின்பு சிம்மாசனத்தில் வீற்றிருந்தவரும் தேவாதி தேவனும் அமரர்க்கு அதிபதியுமான அந்த சர்வேஸ்வரது சந்நிதானத்தில் பின்வருமாறு மகாவிசனத்துடன் தன் குறைகளை விண்ணப்பித்துக் கதறினுர்:—

“ஜோவ் பகவானுனவர் இவ்வாறு சோம்பேறியாக உட்கார்ந்துகொண்டு தன்முன் நடக்கும் இந்த மகாபாதகங்களைப் பார்த்து வரலாமா? நம் சத்துருக்கள் இன்றைய தினம் அதி தைரியத்துடனும் வீரத்துடனும் நடத்திவரும் இந்த துரோகங்களைக் கண்டும் அவர் அவற்றைப் பொறுத்தும் சகித்தும் வரலாமா? மார்த்தியர்களான மனிதர்களுக்குப் பரிந்து வந்து அமரர்களும் போர் புரிகின்றனரே! அவர்களின் நிமித்தம் அமரர்கள் தம்முள் ஒருவரோடொருவர் முரண்பட்டுக் கோபித்துப் பொங்கி முன்வந்து தீரப்போர் புரிகின்றனரே! எங்களது பெருந்தந்தையே! நாங்களெல்லாம் கேடயமும் ஈட்டியும் தாங்கிய தங்களது மகா துஷ்டையான மகளுடைய பிரஸாதத்தினுல் எங்களுக்குக் கிடைத்த இந்தப் பெருங்கொடுமைகளை மிகவும் பொறுமையுடன் சகித்து வருகின்றோம். நியாயம் அநியாம் என்பதைச் சிறிதும் யோசியாமல் தாங்கள் இந்த ஜோதிர் மண்டலத்தில் இந்தக் கலகத்தை யுண்டாக்கி இதைக் கலக்கியே விட்டீர்கள்! இங்குள்ளவர்களுக்குள் பரஸ்பர விரோதத்தையும் குரோதத்தையும் உண்டாக்கிவிட்டீர்கள்! இது மகா பாதகமாயிற்றே! இந்தக் கொடுமையைச் செய்யலாமா? தாங்கள் சர்வவல்லமையுள்ளவர்கள் என்பதை நாங்களெல்லோரும் நன்ருக அறிந்து நாங்கள் அனைவரும் தங்களைப் போற்றிப் பணிந்து துதித்து வருகின்ரேமே! தங்கள் ஆணைகளைச் சிரமேற்கொண்டு, ‘எள் என்பதற்குமுன் எண்ணெய்’ என்றபடி சிறிதும் தடையோதாமதமோ செய்யாமல்

அவற்றை நிறைவேற்றுவதிலேயே கண்ணுக இருக்கின்றேமே! அவளோ கொடுமைகளைச் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாக இருக்கின்றுள். அதற்காகவே பிறந்திருக்கின்ருள்! அவள் எவ்வ ளவோ துஷ்கிருத்தியங்கள் செய்து வந்தாலும் தாங்கள் அவளிடம் அன்பும் ஆதரவும் உடையவர்களாகவே இருக்கிறீர்கள்! தங்கள் மனதில் உள்ள இரகசியங்கள் யாவும் அவளுக்குத் தெரியும். அவள் அறியாத ரகசியங்களேயில்லை. தாங்களே அவளுக்கு யோசனை சொல்லியும் கொடுக்கின்றீர்கள். அவளைத் தாங்கள் வெகு உருக்கத்துடன் கட்டிக்காத்துக் காப்பாற்றியும் வருகின்றீர் கள். இவ்வாறு தாங்கள் அவளிடம் பிரத்யேகமான வாஞ்சை யுடையவராயிருப்பதினுல் அவளது பெருமைக்கும் பராக்கிரமத் திற்கும் பாக்கியத்திற்கும் அளவு என்பது இல்லவே இல்லை! ஆதலால் இந்த அற்புதமான ஜந்து நிச்சயமாய்த் தங்களது பிரஜைதான் என்று நாங்களெல்லோரும் கருதுவதில் ஏதேனும் தவறு உண்டா? இல்லவேயில்லை! அவளது ஆஞ்ஞைப்படி இந்த தயோமிதி, இந்த மூர்க்கனுன தயோமிதி அமரர்களையும் ஒருகை பார்த்து விடுகின்றேன்! என்று அவர்களுக்கு எதிராகக் கிளம்பித் தன் கையை ஓங்கி உயர்த்தித் தாக்கிவிட்டான்! தேவ கன்னிகையான வீனஸ் தேவியே முதன்முதலாக அவன் ஆயுதங் களுக்கு இலக்கானுள்! அடுத்தபடியாக அவன் என்னையும் எதிர்த்து எனக்கும் காயத்தை உண்டாக்கினுன். அவனுக்குத் தோற்று நான் ஓட்டம் பிடித்தேன். யுத்தத்தின் தேவனுன என்னையே அவன் இந்தப்பாடு படுத்திவிட்டான். நான் இந்த மர்த்தியனுடைய வீரசூர பராக்கிரமங்களுக்குப் பயந்து ஓட்டம் பிடித்துப் பிழைத்தது பெரிய காரியமாகிவிட்டது! என் உயிரும் மிஞ்சியது! மிஞ்சாதென்றே நினைத்திருந்தேன்! மனிதர்களுக்கும் இவ்வளவு மதமா? வெறியா? நான் அப்படி ஓடிப் பிழைத்திரா விட்டால் தாங்கள் என்னையும் இப்பொழுது உயிருடன் பார்க்க மாட்டீர்கள்!! நான் அந்தக் களத்திலேயே மடிந்துபோயிருப்பேன். அல்லது நாற்புறமும் மலைபோல் குவிந்துள்ள பிணங்களின் பாரத் தைத் தாங்கமுடியாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டு அவற்றின் அடியில் கிடந்து வருவேன்! அல்லது வேறு கிரேக்க வீரர்களது அம்பினுல் துளைக்கப்பட்டு அவற்றினுல் உண்டான வலிகளைப் பொறுத்து வருவதே காரியமாகக் கல்பகோடி காலம்வரை அங்கு இருந்து வருவேன்! சமர்த்தியனுதலால் பிராணனை மாத்திரம் இழக்கமாட்டேன்'' என்றுர்.

இவ்வாறு தன்னைக் கண்டித்துக் கடிந்து பேசிய மார்ஸ் பகவானை இடிக்கடவுள் அதிக கோபத்துடன் கண்ணுற்று ஏற இறங்கப் பார்த்துப் பின்வருமாறு சுடச்சுட வெகு வெடுவெடுப்பாய் பதிலுரைத்தார்:—

"அட துரோகி! நன்றி, கெட்ட பதரே! என்னைப் பார்த்து நீ இப்படிப் பேசலாமா? என்மேல் இந்தப் பழியைச் சுமத்தலாமா? தனக்கும் விரோதமாக யாரோ எழுந்து அநியாயம் செய்து விட்ட தாக மார்ஸ் பகவானும் குறை கூறலாமா? முறையிடலாமா?

நீ மஹா யோக்கியனே? சிறிதும் கட்டுங்கடங்காதவனு யிற்றே! இந்த ஜ்யோதிர் மண்டலத்திலுள்ள அனைவரிலும் நீ தானே சிறிதும் நீதியில்லாதவன். உன்னைப் போன்ற அயோக் கியனை நாங்கள் இதுவரை எங்களது கண்ணுலும் கண்ட தில்லையே! தீராத தீவினைகளைச் செய்து எல்லோரிடமும் கலகத்தை விளைவிப்பதே உனது விளையாட்டாக இருக்கின்றது! அதிலேயே நீ சந்தோஷமடைகின்ருய்! ஜனங்கள் அழிவதையும் ஒருவர் மேல் ஒருவர் பாய்ந்து கொடும் போர் புரிவதையும் பார்த்தே நீ திருப்தி யடைகின்ருய். உனது தீக்குணத்திற்கு ஒரு மட்டோ மிதமோ வரம்போ கிடையாது. அடங்காப் பிடாரியான உன் தாயின் குணங்களே உன் மனதில் பூரணமாக நிறைந்திருக்கின்றன. “தாயைப் போல் பிள்ளை நூலைப்போல் சேலை” என்பார்கள். அந்தப் பழமொழியின் உண்மை உன் விஷயத்தில் பிரத்யக்ஷமாக விளங்குகின்றது. நீ அவளுடைய பிள்ளைதானே! அவளைப் பார்த்து அவளுடைய புதல்வனுன நீ இவ்வாறு ஆட்டம் போடு கின்ருய்! குதிக்கின்ருய்! நமது மிரட்டுக்கும் உருட்டுக்கும் விலை யில்லாமல் போய் விட்டது! நயத்திலும் பயத்திலும் நான் செய்யும் உபதேசங்களும் பயனற்றுப் போயின!!

என்ருலும் எனக்கும் உன்னிடம் கிருபை இருக்கவே இருக் கின்றது. நானும் உனக்கு இரங்குகின்றேன். நீ ஜோவ் என்ற பெயருடைய நமது புத்திரனுகவும் இருப்பதால், இந்தக் கஷ்டத்தை வெகு நாள் வரை அனுபவிக்க வேண்டி வராது. அவ்வாறு நீ தேவ குலத்தில் பிறந்திராவிடில், இதற்குள்ளாகவே மின்னலில் பொசுங்கிக் கருகியல்லவோ போயிருப்பாய். இந்த தேவலோகத் திலிருந்தும் தலைகீழாய்க் குப்புறத் தள்ளப்பட்டுக் குட்டிகரணம் போட்டுக் கொண்டு உருண்டு உருண்டு சென்று எரிவாய் நிறைந் துள்ள கற்பாறைகளின் மேல் கதறிக் கொண்டல்லவா கிடப்பாய்? விலங்குகள் பூண்ட தைத்தியர்கள் அங்கு ஏற்கெனவே அழுது புலம்பிக் கொண்டிருப்பது உனக்குத் தெரியாதா”? என்ருர்.

இவ்வாறு தமது தலையசைப்பினுல் மாத்திரமே ஒலிம்பஸ் மலையையே ஆட்டிவிடக் கூடியவரான தேவர் இயம்பினுர்.

பின்பு அவர் தம்முன் இரத்தத்தை வடித்துக் கொண்டிருந்த தேவனை பியான் என்பவனிடம் ஒப்புவித்து அவனுக்குச் சிகிச்சை செய்யும்படி நியமித்தார். அவன் மார்ஸ் தேவனது காயங்களின் மேல் அஞ்சனங்களை மிகவும் மெதுவாகப் பொழிய, அதனுல் மரணம் என்னும் அவஸ்தையை அறியாதிருக்கும் வரத்தைப் பெற்று வந்த அந்த தேவனது புண்ணும் ஆறியது. அவனது சதைக் கொதிப்பும் அடங்கியது.

அத்திப் பழ ரஸத்தைப் பாலாடை ஏட்டில் கலந்தால் எவ்வாறு ஒரு நொடியில் அவ்விரு திரவங்களும் ஒன்ருய்க் கூடித் தயிராக உறைந்து போகின்றனவோ, அவ்வாறு பியோன் பிழிந்த

மூலிகைகளின் ரசமானது அதிதீவிரமாக அப்புண்ணிற் கலந்து அதைத் சுற்றியிருந்த தோலை ஒன்ருகக் சேர்த்து விட்டது. இவ்வாறு அந்த தேவனது இரணத்திலிருந்து தூசி பொழிந்து இரத்தம் வடிவதும் நின்ற பின்னர், அதிலாவண்ணியமுள்ள ஹீபி தேவியானவள் அவனுக்கு அதி திவ்யமானதும் அழிவில்லா ததுமான ஒரு போர்வையைக் கொண்டு வந்து அவன் மேல் போர்த்தி, அவனுடைய அதிபராக்கிரமமான அவயவங்களை மறைத்தாள். அப்போது அவன் தான் இழந்து போயிருந்த பெருமைகளையும் திரும்பப் பெற்றவனுய், வெகு கம்பீரமாகச் சமீபத்தில் அவனது சிம்மாசனத்தைச் சேர்ந்தாற் போல் வைக்கப் பட்டிருந்த ஒரு ஆசனத்தில் அமர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

இவ்வாறு தாங்கள் யோசித்திருந்த காரியங்கள் நிறை வேறிய பின்னர், ஜூனோ தேவியும் பாலாஸ் தேவியும் அந்த திவ்விய லோகங்களை நோக்கிப் பறந்து வந்து தேவர்களது குழாமில் புகுந்து விட்டனர்.

———o———

## ஆறுவது அத்தியாயம்

# கிளாக்கஸ்—தயோமதி உபாக்கியானமும் ஹெக்டர்—ஆந்திரமகி உபாக்கியானமும்

கதைச் சுருக்கம்: முந்தின அத்தியாயத்தில் சொல்லிய படி தேவர்கள் யுத்த களத்தை விட்டு அகன்ற பின் கிரேக்கர்கள் மேலோங்குகின்றனர். அப்பொழுது ட்ராய் நகரத்துச் சோதிடர்களுள் தலைவரான ஹெலினஸ் என்பவர் ஹெக்டரை நோக்கி 'இந்தத் தயோமதியை இந்த யுத்தத்திலிருந்து விலக்கி விட வேண்டும். அந்தக் காரியம் மினர்வா தேவியினுல் தான் ஆகும். அதற்காக ட்ராய் நகரத்து ராணியும் அந்நகரிலுள்ள மற்றைய குலஸ்தீரிகளும் மினர்வா தேவியின் கோயிலுக்குச் சென்று அந்தத் தேவியை பிரார்த்திக்க வேண்டும். ஆதலால் நீ உடனே ட்ராய்க்குச் சென்று இந்தக் காரியத்தைச் செய்' என்று நியமிக்கிருர்.

அவ்வாறே ஹெக்டர் ட்ராய்க்குத் திரும்பிச் சென்று விடுகின்ருன். அப்போது யுத்தம் சற்றுத் தளர்ந்து போகின்றது. அந்தச் சமயத்தில் இரு திறத்துச் சேனைகளுக்கும் தலைவர்களான கிளாக்கஸ் என்பவனும் தயோமிதி என்பவனும் அந்தச் சேனைகளின் மத்தியில் சந்தித்து ஒருவரோடொருவர் பேசிக் கொள்ளுகின்றனர். அவ்வாறு சம்பாஷித்த பொழுது அவர்கள் தங்கள் முன்னோர்கள் ஸ்னேகிதர்களாக விருந்தனர் என்றும், அவர்கள் பரஸ்பரம் உண்டும் களித்தும் வந்தவர்கள் என்றும் அறிந்து தங்கள் தங்கள் ஆயுதங்களை மாற்றிக் கொள்ளுகின்றனர்.

ஹெலினியஸ் நியமித்த பிரகாரம் ஹெக்டர் மினர்வா பூஜையை முடித்து விட்டுப் பாரிஸிடம் சென்று, அவனுக்குப் போதனைகள் செய்து அவனையும் யுத்தத்திற்கு அழைத்து வருகின்ருன். அவ்வாறு புறப்படுமுன் அவன் தன் மனைவியையும் அன்பு நிறைந்தவளுமான ஆந்திரமகியினிடம் சென்று அவளிடம் விடை பெற்றுக் கொள்ளுகின்ருன்.

இந்தச் சம்பவங்களிளெல்லாம் முதன் முதலாக ஸிமோயி நதிக்கும் சியமந்த நதிக்கும் இடையிலுள்ள யுத்த களத்திலும் பின்பு ட்ராயிலும் நடக்கின்றன.

---

இப்பொழுது தேவர்களெல்லாம் இந்த யுத்தத்திலிருந்து விலகிக்கொண்டு விட்டனர். அமரர்களான அந்தத் தேவர்கள் மானிடர்கள் தங்கள் சக்தியையும் யுக்தியையும் புத்தியையும் உபயோகித்துக் கொள்ளட்டும், அவர்கள் எப்படியோ போகட்டும்!

அதனால் நமக்கு ஆவதென்ன? என்று நினைத்தவர்களாய் அந்த யுத்தகளத்தை விட்டு விலகிவிட்டனர்.

இரு திறத்திலும் உள்ள வீரர்கள் தங்கள் சத்துருக்களை நோக்கித் தங்கள் அம்புகளை மழைபோல் பொழிந்தனர். ஆனால் வானமே இருண்டு கறுத்துப்போய் விட்டது! யுத்தத்தில் கலந்து கொண்ட வீரர்கள் சமுத்திரத்திலுண்டாகும் அலைகளைப்போல் திரண்டு, இங்கு மங்கும் இடைவிடாமல் மேன் மேலும் புரண்டு வந்தனர். அப்பொழுது அந்தப் படுகளத்தில் இருபுறமும் எல்லைகளாக விருந்த பிரஸித்தி பெற்ற ட்ராய் நாட்டு ஆறுகளெல்லாம் மடிந்து போன வீரர்கள் வடித்த இரத்த வெள்ளத்தைத் திரட்டிக் கொண்டு, சமுத்திரத்தை நோக்கிச் சிவந்து சென்றன.

அதுவரை நின்றிருந்த யுத்தத்தை மகானான அஜாக்ஷன் மறுபடியும் ஆரம்பித்துத் தன் சத்துருக்கள் நெருங்கி நின்றுகொண்டிருந்த அணியைப் பிளந்து உட்சென்று இன்றைய தினம் யாருக்கு ஜெயமுண்டாகும் என்பதைத் தீர்மானித்து விட்டான். யார் ஜெயிப்பார்களோ? என்று எல்லோருக்கும் உண்டாயிருந்த சமுசயத்தையும் நீக்கி விட்டான்! அவனுடைய வேலாயுதத்திற்கு அக்காமஸ் என்னும் திரேஸிய வீரன்பலியானான். அந்த வேலாயுதம் அவனது பிரமாண்டமான தேகத்தைக் கண்ட துண்டமாக வெட்டி, அதைப் பூமியிலும் தள்ளி விட்டது. பித்தளையினால் செய்யப்பட்ட அந்த பிரமாண்டமான ஆயுதமானது குதிரைகளின் கறுத்த மயிர்களினால் செய்யப்பட்ட குஞ்சங்கள் அசைந்தாடிக் கொண்டிருந்த அந்த வீரனது கிரீடத்தை நோக்கி, இடியைப் போல் சப்தித்துக்கொண்டு சென்று அதை ஒரே அடியில் அடித்துத் தகர்த்து, அதன்பின் அவனது முகத்தில் ஊன்றிக்கொண்டு நின்று விட்டது. அவனுடைய கண்களின் கருவிழிகளும் சுழன்று கொண்டு அழியாத இருளில் அமிழ்ந்து போயின.

அடுத்தபடியாக டியூத்ராஸ் என்பவனது புத்திரனும் விருந்தினரை ஏற்று உபசரிப்பவனும் தனவானும் குணவானுமான அக்ஸைலஸ் என்பவன் அந்த மணற் காட்டில் பட்டு விழுந்து, அதில் தனது இரத்தத்தை வடித்து, அதைக் கறையாக்கினான். அவன் அழகான மதில்கள் சூழ்ந்த அரிஸ்பியில் பிறந்தவன். அதன் அரசனாக அதை ஆண்டும் வந்தவன். அவன் மனித வர்க்கத்துக்கே ஒரு தாயைப்போன்றவன். பாதையோரமாகவுள்ள அவனுடைய அரண்மனையின் வாயில் சதா திறந்தேயிருக்கும். அங்கு சென்று தனவான்கள் சிரம பரிகாரஞ் செய்து கொள்வார்கள். ஏழைகள் தங்கள் களைகளை ஆற்றிக் கொள்வார்கள். கடுத்த முகத்துடன் வந்த திடிதீசனுக்கு அவன் இன்று இரையானான்! இன்று இவ்வாறு கோரமாக வதையுண்ட அவனுக்கு இத்தருணத்தில் உதவி செய்யவோ அல்லது காப்பாற்றவோ உற்ற நண்பர்கள் ஒருவராவது இல்லாமற் போயினர். நல்லோனான அந்த மனுஷன் அந்தோ! மூச்சுப் பேச்சின்றிக் கீழே விழுந்து விட்டான். அவனுக்

குச்சமீபத்தில் அவனை விட்டுப் பிரியாதவனும் அவனது பிருத்தியனுமான கலிஸியஸ் என்னும் கிழவனும் தனது பிராணனை விட்டான்.

யூரியாலஸ் என்ற மகா வீரன் திரேஸஸ் என்பவனை வதைத்தான். அவ்வாறே அவன் ஒவில்தியஸ் என்பவனையும் அந்தக் களத்தில் மடித்துக் கிடத்தினுன். இரட்டைப்பிள்ளைகளான அவ்விருவரும் அவனுக்குச் சமீபத்தில் ஒரேயிடத்தில் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் அதி தைரியமும் அழகும் வாய்ந்தவர்கள். அதிபால்யர்களுமாக விருந்தனர். அவர்கள் அதிரூபவதியான ஒரு வனதேவதைக்கும் புக்கோலியன் என்னும் மகாராஜனுக்கும் பிறந்தவர்கள்.

புக்கோலியன் என்பவன் லயோமிடான் நாட்டிலுள்ள வெள்ளாடுகளின் மத்தியில் வளர்ந்து வந்தவன். அவன் காடுகளில் சஞ்சரித்து வருகையில் அவற்றின் மத்தியில் ஒரு தேவ கன்னிகையின் காமவலையில் அகப்பட்டு அவளுடன் கலந்து அவளிடம் தன் வீரியத்தைச் செலுத்த அவனுக்கு அவளிடம் அதிசுந்தரர்களான இந்த இரண்டு புத்திரர்களும் பிறந்தனர். இவ்விருவரும் இவ்வாறு புக்கோலியன் மகாராஜனுக்கு ஒரு அன்னிய ஸ்திரீயினிடம் பிறந்த தலைச்சன் பிள்ளைகளாவார்கள்.

அதிபால்யரான அவ்விருவரும் தங்கள் ரூபலாவண்ணியங்கள் சிறிதும் குன்ருது தங்கள் கால் கைகளையும் உடல்களையும் நீட்டிக்கொண்டு, அந்தக் களத்தில் அசைவின்றி செத்துக் கிடந்தனர். அப்போது ஈவிரக்கமோ பரிதாபமோ இல்லாதவனும் அவர்களை வென்றவனுமான வீரன் பளபள வென்று ஜொலித்துக் கொண்டிருந்த அவர்கள் ஆயுதங்களைப் பறித்துக்கொண்டு விட்டான்.

அதன் பின் ஆஸ்தியாலஸ் என்பவன் பாலிபீடிஸ் என்பவனுல் வெட்டுண்டு மடிந்து வீழ்ந்தான்.

யுலிஸ்ஸஸின் ஈட்டியானது பிடிதீசனை நரகலோகத்திற்கு ஓட்டித் துரத்தியது.

தியூஸரின் சரத்தினுல் தாக்குண்டு மகா தைரியவானுன அரிதோயன் இரத்தத்தை வடித்தான்.

அதிபயங்கரனுன அல்லீரஸ் என்பவனை நெஸ்டாரின் புத்திரன் வெட்டித் தள்ளினுன்.

பெடாஸஸில் விசேஷமான ஆடம்பரங்களுடன் வாழ்ந்து வந்தவனும் வெள்ளியைப்போல் பளிச்சென்று மின்னிக்கொண்டு ஓடும் சத்தினியோ நதியானது பாய்வதற்காக அதற்குப் படுகை தோண்டிக் கரை கட்டியவனும் மகாதனவானுமான எலாட்டஸ்

என்பவனை வீரர்களின் தலைவனும் மகானுமான ஆகமனன் படுகாயப்படுத்தி எமனுலத்திற்கு அனுப்பிவிட்டான்.

மிலாந்தியஸ் என்பவனை யுரிப்பைலஸ் என்பவன் பலி வைத்தான்.

பிலாக்கஸ் என்பவன் லைட்டஸுக்குப் புறங்காட்டி ஓடினான் என்றாலும் அவனது சிரமம் வீணேயாயிற்று. அவன் தன் பிராணனை விடவே விட்டான்.

அதிர்ஷ்ட ஹீனனான அத்ராஸ்டஸ் என்பவன் அதன் பின் ஸ்பார்ட்டனது வேலினால் குத்தப்பட்டு, வலியிழந்து உயிருடன் அந்த ஸ்பார்ட்டனது வசமாயினான்.

அப்போது நிகழ்ந்த சண்டையில் வீரர்கள் செய்த முழக் கத்தையும் தடதடவென்று அங்குமிங்கும் ஓடுகையில் உண்டான சப்தத்தையும் கேட்டுத் திகிலடைந்த அவனது குதிரைகள், தங்கள் தலைகளைக் குப்புறக் கவிழ்த்துக்கொண்டு ஓட்டம் பிடித்து, ஒரு தாமரிஸ்க மரத்தின் உரமான அடிப்பாகத்தில் மோத, அதனால் அவனது ரதமானது தன் வளைவான நுகத்திலிருந்து வேறுபட்டுப் பிரிந்து சுக்கல் சுக்கலாக உடைந்து சிதறுண்டு போயிற்று. அதன்பின் அக்குதிரைகள் தங்கள் தலைவனைத் தன்னந்தனியே விட்டுவிட்டு, அந்த அகன்ற களத்தைக் கடந்து ட்ராயை நோக்கிக் காற்றைப்போல் சிறிதும் தங்கு தடையின்றி பறந்து ஓடிச்சென்றன. அவன் அப்பொழுது தனது தேரின் சக்கரத்தின் கீழே குப்புற விழுந்து விட்டான். அதைக்கண்டு அதிரிதேசன் அவனைக் கொன்று தன் பழியைத் தீர்த்துக் கொள்ள நினைத்து, அவனது தலைக்கு மேலாக தன் வேலை ஓங்கிச் சுழற்றினான். அச்சமயம் அவனது காலடியில் கிடந்த அந்த வீரன் வெகு வணக்கத்துடன் அவனுடைய முழங் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அதிவினயமாக அவனைப் பின்வருமாறு பிரார்த்தித்தான்:—

"ஐயா நான் அதிபால்யன். எனக்கு உயிர்ப் பிச்சை தாரும்! என்னை உயிருடன் விட்டுவிடும்! அப்படிச் செய்தீ ரானால் என் தந்தை தங்களுக்கு ஏராளமான தனத்தைத் தருவார். தங்களுக்கு நல்ல கியாதியும் உண்டாகும். யுத்தத்தில் சரணமடைந்தவனைக் கொன்றுவிடாமல் தாங்கள் அவனைத் தங்களது கப்பலில் சிறைபிடித்து உயிருடன் வைத்திருந் தீர்கள் என்ற புகழும் உங்களுக்கு உண்டாகும்! தங்களது கூடாரத்தில் நாங்கள் பித்தளையையும் நன்றாய் பதம் செய்த உருக்கையும் குவிப்போம்! உங்களது மனதை இளக்கத்தக்கப் பொன்னையும் பொழிவோம்" என்றான்.

அவ்வாறு அவன் சொன்னதைக் கேட்ட பொழுது, அந்த ஸ்பார்ட்ட வீரனது மனதும் இளகியது. அவன்தான்

மேலே உயர்த்திப் பிடித்துக்கொண்டிருந்த தன் வேலாயுதத்தை அந்தரத்திலேயே நிறுத்திக்கொண்டு, நின்றுவிட்டான். இவ்வாறு சரணமடைந்து உயிர்ப்பிச்சை கேட்பவனை உயிருடன் விட்டு விடுவதுதான் நல்லது என்றும், அவன் இரங்கினான்.

ஆனால் அதிகொடியவனான ஆகமனன் அது தகாது என்று தீர்மானித்து "அபயம், அபயம்" என்று அலறிக் கொண்டிருந்த அந்த வீரனைக் கொன்றே விடவேண்டும், பழியையும் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று வெகு ஆத்திரத்துடன் அங்குற்று அதிரிதேசனை நோக்கிக் கடுகடுத்துப் பின்வரும் வசனங்களையுரைத்தான்:—

அட! மனவலிமை என்பது சிறிது மில்லாத பேடீ! இவர்களுக்கும் அதிரிதீசன் இரங்கலாமா? இந்தப் பயல்களுக்கும் அதிரிதீசன் அபயம் அளிக்கலாமா? ட்ராய் நாட்டார் எவ்வளவு துரோகிகள் என்பது உனக்கு நன்ருய்த் தெரியுமே! அது தெரிந்திருந்தும் நீ அவர்களிடம் தயவும் தாட்சண்யமும் காட்டலாமா? அவர்களுக்கு நீ இரங்குவது வெகு அழகாக விருக்கின்றது! அந்த ட்ராய் வம்சத்தைச் சேர்ந்த ஒருவரை யாவது நாம் நமது கோபத்துக்குப் தப்பிப் பிழைக்க விடக் கூடாது! ஆணோ பெண்ணோ பாலர்களோ விருத்தர்களோ யாரானாலும் சரி, அவர்களைக் கண்டால் அவர்களை வதைத்தே தீரவேண்டும்! நமது வயிற்றெரிச்சலுக்குக் கங்குகரையும் அளவும் உண்டோ? இல்லவே இல்லை! இலியன் நகரை நாம் வேரோடு அழித்துவிடவேண்டும். அங்குள்ளோர் அனை வரையும் நாம் மண்ணில் மறைத்துப் புதைத்து விடவேண்டும். அந்நாட்டுக் குழந்தைகளையும் முலைப்பால் அருந்தும் சிசுக் களையும் கூட நாம் அழித்துத்தான் தீரவேண்டும்! துரோஜர்கள் நம்மிடம் பட்ட பாட்டை நினைத்து உலகத்தி லுள்ள சகலமான ஜனங்களும் அடங்கி ஒடுங்கியிருத்தல் வேண்டும்! அவர்களுக்கு அது ஓர் உதாரணமாகவும் எச்சரிக்கையாகவும் இருக்கவேண்டும்! அகம்பாவிகள் கர்வத்தை விட்டு விடவேண்டும்!" என்ருன்.

இவ்வாறு ராஜாதிராஜன் வெகு ஆத்திரத்துடன் உரைத்த வசனங்களைக் கேட்ட அவனது உடன் பிறந்தானான ஸ்பார்ட்டன் "இது நிஜந்தான். இந்த வீரனுக்கு இரங்குவது அநியாயந்தான்" என்று தன் மனநிலை குலைந்து அவனிடம் அடங்காத வெறுப்படைந்து, தன் மனத்தையும் திடப்படுத்திக் கொண்டான். பின்பு அவன் தன் கால்களைப் பிடித்துக் கெஞ்சிக் கொண்டிருந்த அந்த வீரனை வெகு கோபத்துடன் உதறித் தள்ள, இராஜாதிராஜன் அவனைத் தன் வேலாயுதத்தைக் கொண்டு குத்தித் துளைத்து புழுதியிற் கிடத்திப், படபடவெனத் துடித்துக் கொண்டிருந்த தன் ஆயுதத்தை உருவிப் பிடுங்கி யிழுத்தான். அந்த வீரன் விரைத்துப்போய் விட்டான். இதைக் கண்ணுற்ற விருத்தரான நெஸ்டார் அவனது வீரத்தை

மெச்சி, அவனுக்கு வேன்மேலும் ஊக்கமுண்டாகுமாறு பின் வருமாறு உரைத்தார்:—

"வீரர்களே இதோ பார்த்தீர்களா! நீங்களனைவரும் இந்த யுத்தத்தில் இவ்வாறுதான் ஊக்கமும் உறுதியுமுடையவர்களாய்ப் பொருதல் வேண்டும்! நமது சத்துருக்களில் ஒருவனுவது மீந்து உயிரோடு இருக்கும் வரையில் நமது கக்ஷியில் இருந்து கொண்டு நானும் மார்ஸ் புத்திரன் தான் என்று மார்பைத் தட்டும் ஒரு வீரனது மனமிளகலாகாது! இரங்கலாகாது! சத்துருக்கள் கொடுப்பதாகச் சொல்லும் பணங்காசுகளைத் தொடவும் கூடாது! அதோ தகதகவென்று பளிச்சென்று மின்னிக்கொண்டு, கூட்டங் கூட்டமாக வரும் சேனு சமுத்திரங் களைப் பார்த்தீர்களா? அவர்கள் அனைவரும் உங்களுக்கு இரை யாவார்கள். நீங்கள் முதலில் அவர்களை வெல்லவேண்டும். வென்றபின் உங்களது சிரமத்திற்குத் தகுந்த பிரயோசனம் உங்களுக்குக் கண்டிப்பாய்க் கிடைக்கும்" என்ருர்.

இந்தப் பிரகாரம் கிரேக்கர்கள் தங்கள் கருமங்களிலேயே கண்ணுகவிருந்து யுத்தங்களைச் செய்து வந்திருந்தால், அவர் களுக்கு அக்கணமே அழியாத புகழ் உண்டாகியிருக்கும். ட்ராயும் தனது கோட்டை மதில்களுக்குள் பயந்து நடுங்கி ஒடுங்கிப் பதுங்கி மூச்சுப் பேச்சின்றிப் போயிருக்கும். ஆனுல் காரியங்கள் அவ்வாறு நிகழவில்லை. மகாமேதாவியும் புண்ணி யாத்மாவுமான ஹெலினஸ் என்பவர் ட்ராய்க்கு அன்று வரவிருந்த கஷ்ட தசையைத் தடுத்து விட்டார். தமது நிஷ்களங்க மான மனதினுல் அவர் தெய்வ ஸங்கல்பம் இன்னதுதான் என்று நன்ருக அறிந்து கொண்டு, ஈனியஸும் ஹெக்டரும் சேர்ந்து நின்றுகொண்டிருந்த இடத்துக்குச் சென்று, அங்கிருந்த சகலமான வீரர்களையும் நோக்கிப் பின்வருமாறு தன் மனதி லிருந்த விஷயங்களை வெளிப்படையாகச் சொன்னுர்:—

"உதராசீலர்களே வீரர்களே! இன்றைக்கு இன்னுருக்குத் தான் வெற்றி கிடைக்குமென்று நிச்சயமாகச்சொல்வது ஒரு வருக்கும் முடியாத காரியம்! இந்த நிச்சயமில்லாத காரியத்துக்குச் சம்பந்தப்பட்ட சகலமான கவலைகளையும் பெருமைகளையும் நீங்களே வகித்து வரவேண்டும் என்பது அமரர்களின் திரு வுள்ளம். அவர்களே உங்களுக்கு உற்ற சகாயங்களாகவும் உங் களது தேசத்தின் க்ஷேமத்தைக் கவனித்துக் காத்து வருபவர்களு மாக விருக்கின்றனர். நீங்கள் மிகவும் அறிவாளிகள். ஆதலால் ஒருவரோடொருவர் கலந்து விஷயங்களை ஆலோசனை செய்து வருகின்றீர்கள்; நீங்கள் ஆலோசனைகள் செய்து தீர்மானித்த படியே இந்த ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய சகல மான முயற்சிகளையும் ஊக்கத்துடனேயே செய்யவும் செய்வீர்கள். நான் உங்களை மெச்சுகின்றேன். நீங்கள் அனைவரும் இதோ இந்த நகரத்துக்கோட்டை வாயில்களில் தைரியமாய் சேர்ந்து நின்று கொண்டு இந்த யுத்தத்திலிருந்து புறங்கொடுத்து ஓடும்

நம் சேனைகளைத் தடுக்க வேண்டும். இந்தப் பேடிகள் ஓடிச் சென்று தங்கள் மெல்லியலார்களின் மிருதுவான இரகசியங்களைச் சேருமுன் தடுத்துவிட வேண்டும்! இவர்கள் நம் சத்துருக்களுடன் விளையாடுகின்றார்களேயன்றிச், சிரத்தையுடன் அவர்களோடு போராடுவதாகத் தோன்றவில்லை! இவர்களை நம் சத்துருக்கள் சிறிதும் லட்சியம் செய்வதுமில்லை. உங்கள் அதட்டுகளினாலும் ஆஞ்ஞைகளினாலும் இவர்கள் அனைவருக்கும் ஊக்கமும் உற்சாக மும் உண்டான பின், நாம் அனைவரும் ஒரே மனிதராய் இங்கு அசைவின்றி நின்று கொண்டு, "எந்த ஆயுதம் வந்தாலும் சரி, அதற்கு ஈடு கொடுப்போம்" என்று தீர்மானித்து, நம் எதிரிகளைத் தடுத்து விடுவோம். ஆனால் இதுவரை நடந்த யுத்தத்தினால் நாம் களைப்படைந்து இருப்பதினாலும் நம் எதிரிகள் நம்மை வெகு மும்முர மாக நெருங்கி வருவதினாலும் இந்தக் கஷ்ட காலத்தில் நாம் நமது சைன்னியத்தில் மீந்துள்ள வீரர்களை ஒன்றாகத் திரட்ட வேண் டுவது அத்தியாவசியமாக விருக்கின்றது.

இதன் மத்தியில் ஹெக்டரே! நீ நமது நகரத்துக்குத் திரும் பிச்செல்ல வேண்டும். தேவர்களின் திருவுள்ளம் இன்னபடியிருக் கின்றது என்பதை நமது மாதாவிடம் அறிவிக்க வேண்டும். ட்ராய் நகரத்திலுள்ள பெருந் தேவிமார்கள் அனைவரையும் மினர்வா தேவியின் க்ஷேத்திரத்துக்குச் செல்லும்படி நம் மாதாவான அரசி நியமிக்க வேண்டும். அவர்கள் இலியனின் உச்சியிலுள்ள புண்ணிய க்ஷேத்திரத்தின் கோபுர வாசற் கதவுகளைத் திறந்து உட்சென்று, தேவியின் முன் நைவேத்தியங்களைச் சமர்ப்பித்து, அவளைப் பிரார்த்திக்க வேண்டும். விலைமிக்க வஸ்திரங்கள் வைக் கப்பட்டிருக்கும் அந்த தேவியின் வஸ்திர மண்டபத்திலிருந்து, மிகச் சிறந்த சித்திர வேலைப்பாடுகள் கொண்டதும் பொன்னூல் களால் விசேஷமாகச் சிரமப்பட்டுச் சிங்காரிக்கப்பட்டதுமான ஒரு பெருத்த வஸ்திரத்தைப் பொறுக்கியெடுத்து, அதை அந்த தேவி யின் அதிபுனிதமும் திவ்வியமுமான ஸன்னிதானத்தில் அவள் முழங்கால்களின் முன்னால் விரிக்க வேண்டும். அதன் பின் பன்னிரண்டு இளங்காளைகளை அவளது பலிபீடத்திற்கு நடத்திச் சென்று, பிரார்த்தனைகளைச் செலுத்த வேண்டும். அதை மினர்வா தேவிதான் தன் திருமனது இளகி நம் பிரார்த்தனைகளுக்கு இரங்கி நம் மனைவி மக்களையும் வீடுவாசல்களையும் நம் நகரத் தையும் காத்து ரக்ஷிக்க வேண்டும். சகலத்தையும் நாசம் செய்ய செய்யும் இந்த திடிதீசனது கோபத்திற்கு ஆளாகாமல், நாம் அனை வரும் தப்பிப் பிழைக்க வேண்டும். அந்தப் பெருந்தீயை நாம் வெகு தூரம் துரத்தியடித்தல் வேண்டும். அது நம் சேனைகள் அனைத்தையும் ஒரேயடியாய் அறைத்து விடுகின்றது. ட்ராய் நகரத்தார் அனைவரையுமே புறங்கொடுத்து ஓடும்படி செய்து விடுகின்றது. மர்த்தியர்களது வர்க்கத்தை விட மிக உயர்ந்த குலத்தில் பிறந்தவனான அகிலேசனுங்கூட, நம் சேனைகளுக்கு இவ்வளவு திகிலையும் பயத்தையும் உண்டாக்கவில்லையே! கேவல ஜென்மமெடுத்த இந்த மர்த்தியன் நம்மை என்ன பாடு படுத்தி விடுகின்றான்!

அகிலேசனைக் கண்ட நம் சேனைகள் சிறிதும் கலங்க வில்லையே! அவன் இந்தச் சண்டையில் கலந்து கொண்டிருந்தபொழுது, இந்த யுத்தமானது இவ்வாறு சிறிதும் தங்கு தடையின்றி நடந்து வந்ததா? வீரர்கள் ஒரு பெருத்த வெள்ளத்தைப் போல் திரண்டு புரண்டு வந்தனரா? அவர்களுக்கு இவ்வளவு ஆத்திரமும் ஆவலும் ஆவேசமுந்தான் இருந்தனவா? அவர்கள் இந்த யுத்தத்தில் நிகரற்றவர்களாக விளங்கினர்களா? இல்லையே!'' என்றுர்.

அவரது வார்த்தைகளை ஹெக்டர் மிகவும் பணிவுடன் கவனித்துக் கேட்டுப்பின், ஒரே பாய்ச்சலில் கிடு கிடு வென்று நடுங்கிக் கொண்டிருந்த தன் தேரிலிருந்து பாய்ந்து குதித்தான். தன் கோஷ்டியாருக்கு உற்சாக மூட்டிக்கொண்டு, அவர்களின் நடுவே ஓட்டமாய் ஓடினன். இடி முழக்கங்களுடன் யுத்த ஸன்னத்தர்களாகக் கிளம்பும்படி அவர்கள் அனைவரையும் எழுப்பினன். அவன் சென்றவிடமெல்லாம் அவனைக்கண்ட துரோஜ வீரர்கள் புத்துயிர் பெற்று உற்சாகம் நிறைந்த பிரஸன்னமான முகங்களுடன் விளங்கினர். வெள்ளம்போல் புரண்டு புறங் கொடுத்து ஓடி வந்த அந்த சேனு சமுத்திரமானது அக்கணமே திரும்பித் தங்கள் சத்துருக்களை நோக்கிப் பாய்ந்து சென்றது.

அதன் பின் அவன் தன் சேனைகளின் முன்னல் நின்று கொண்டு, பளபளவென்று மின்னிய இரண்டு ஈட்டிகளை ஆட்டிக் குலுக்கினன். அதைக் கண்ணுற்ற கிரேக்கர்கள் அனைவரும் பீதியடைந்தனர். தங்கள் கால்களை பின் வைத்தனர். இதுவரை ஜயசீலர்களாக விளங்கிவந்த அவர்கள் தங்களுக்கு உண்டாயிருந்த ஜயத்தின் மத்தியில் பயமும் அடைந்தனர். "யுத்தத்தில் ஜயாபஜயங்களைக் கொடுக்கும் ஏதோ ஒரு தெய்வந்தான் நக்ஷத்திர மண்டலங்களிலிருந்து இறங்கி வந்து இவ்வாறு நம்மைப் பழியெடுக்கின்றது!'' என்று அவர்கள் நினைத்தனர்.

அப்போது ஹெக்டர் தன் கோஷ்டியார் அனைவரும் கேட்கும்படி, அவர்களை நோக்கிப் பின் வருமாறு உரத்து உரைத்தான்:—

"தீரர்களான தார்தான்களே! மற்றும் இந்த யுத்தத்தில் சேர்ந்து பொர வேண்டுமென்ற ஆசையுடன் வெகு தூரங்களிலுமிருந்து வந்த அஞ்சா நெஞ்சர்களான வீரர்களே! நான் சொல்வதைச் சற்றுக் கவனமாகக் கேளுங்கள். உங்கள் தந்தைகளும் மூதாதைகளும் எவ்வளவு பராக்கிரமசாலிகளாக விளங்கி வந்தனர் என்பதை மறவாமல் நினைத்து வாருங்கள். நீங்கள் இப்போது இருக்கும் இடங்களில் நிலைபெயராமல் இருந்து வாருங்கள். ஹெக்டருக்கு நீங்கள் இந்த உபகாரம் செய்தால் போதும். அவன் உங்களை அதிகமாக வேறென்றும் கேட்கவில்லை. எனக்கு ஒரு மணி நேரம் சாவகாசம் கொடுங்கள். நம் கோவில்களில் ஹோமங்களைச் செய்யவேண்டும்; நைவேத்தியங்களையும் சமர்ப்பிக்க

வேண்டும். அதற்காக நான் துரோஜன் கோட்டைக்குச் செல்ல வேண்டும். நான் திரும்பி வரும் வரை நீங்கள் உங்கள் இடங்களை விட்டு அகலாதிருத்தல் வேண்டும். நம் நகரத்தாய்மார்களும் நம் பக்திக்கும், வணக்கத்துக்கும் வழிபாட்டிற்கும் அருகர்களான பெரியோர்களும் தெய்வங்களை முன்னிட்டுச் செய்யும் பிரார்த்தனைகள் வீண் போகாவென்று நான் நினைக்கின்றேன்!'' என்றான்.

அவ்வாறு சொல்லிவிட்டு அவன் தன் கால்களை எட்டி யெட்டி வைத்துக்கொண்டு முன் சென்றான். அப்பொழுது அவன் தன் தோளின் பின்புறமாக அணிந்திருந்த பிரம்மாண்டமும் வட்ட வடிவமுமான கேடயமானது அவனது கழுத்தையும் மறைத்துக் கொண்டு கணுக்கால் வரை தொங்கியது. அதை அணிந்து கொண்டு அவன் மேற்சொல்லியபடி முன் சென்ற பொழுது அந்தக் கவசத்தின் பித்தளைத் திருகும் சுரையும் கலகலவென்று சப்தித்தன.

இவ்வாறு தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர் அந்த யுத்த களத்தை விட்டுச்சென்ற பின், சிறிது நேரம் யுத்தமும் நின்றது. அப்போது தைரியசாலியான கிளாக்கஸும் மகானுன திடியஸின் மகனும் அந்த இரு திறத்துச் சேனைகளுக்கும் மத்தியில் ஓரிடத்தில் சந்தித்தனர்.

ஒருவரை விட்டு ஒருவர் நெடுந்தூரத்தில் நின்று கொண்டிருந்த அவ்விரு வீரர்களும் ஒருவரையொருவர் கண்ணுற்றுத் தாங்கள் இருவரும் இந்த யுத்தத்தில் துவந்த யுத்தம் செய்யவேண்டும் என்ற ஆவலுடன் ஒருவரையொருவர் குறி தவறாமல் பார்த்துக் கொண்டே நெருங்கினர். சமீபித்தும் விட்டனர்.

அவ்வாறு சமீபித்தவுடன் திடிதீசன் மற்றவனை நோக்கி "நீ யாரப்பா? மனித வர்க்கத்திலேயே நீதான் தைரியசாலியா? அந்த தைரியசாலியான பெரிய வீரனை திரளான சேனைகள் அணிவகுத்து நின்றுள்ளதும் " புகழ் " என்னும் பெருந்தனத்தைத் தரக்கூடியதுமான இந்த யுத்தத்தில் நமது கண்கள் இதுவரை காணவில்லையே! அந்த வீரன்தான் எப்படியிருப்பானோ, அதையும் நாம் அறியோம்! அவனது அங்கம்—மச்சம்—அடையாளம் தோற்றம் முதலியவைகளையும் அறியோம்! என்றாலும் உன் சேனைகளை வெகுதூரம் பின்னால் விட்டுவிட்டு அவைகளுக்கு முன்னாகவே நீ தைரியமாய் வந்து நிற்கின்றாய்! அதி தைரியசாலிகளும் தீரமுடைய வீரர்களுங்கூட இந்த எனது வேலாயுதத்தைக் கண்டு நடு நடுங்குவார்கள்! நீ இதை அலட்சியமாய் நினைத்து இதையும் ஒரு கை பார்த்துவிடுவோம் என்று இறுமாப்புடன் வருகின்றாய்! மினர்வா தேவியானவள் நெருப்புக் காடு கொளுத்திக்கொண்டிருக்கையில், எங்களைச் சண்டைக்கிழுத்து எங்களது கோபத்தீயை மூட்டுகிறவர்கள் மகா துக்கிகளும், அதிர்ஷ்ட ஹீனர்களுமான தாய் தகப்பன்மாருக்குப் பிறந்தவர்களுமாக ஆவார்களன்றோ?

அப்படியின்றி நீயும் ஒரு தெய்வ பரம்பரையில் பிறந்தவன் தான், தேவலோகத்திலிருந்து வந்தவன்தான் என்றால் நான்

சொல்வதையும் கேள்; நாங்கள் தேவர்களுடன் பொருவதை நிறுத்திவிட்டோம்! தேவர்களுடன் பொருதவனும் மிகவும் துணிவுள்ளவனுமான அந்த லேக்கஸூம் கூடவல்லவோ அல்ப ஆயுஸுள்ளவனுக ஆகிவிட்டான்? ஸ்வர்ணமயமான சூரிய வெளிச்சத்தை அவன் வெகு நாள் கண்ணுற்று வந்தானு? இல்லேயே! புண்ணிய ஸ்தலமான நிஸ்ஸா ஆரணியத்திலிருந்த பாக்கஸ் தேவரையும் அவருடைய உபாஸகர்களேயும் அவன் தன் பளிங்குபோல் தீட்டப்பட்ட இரும்பாயுதங்களினுல் அடித்துத் துரத்தினுன். அவர்கள் பிராணப் பிரதிஷ்டை செய்து பூஜித்து வந்த வேலாயுதங்களெல்லாம் அங்கேயே தரையில் சிதறுண்டு கிடந்தன. அவைகளேச் சுற்றி அவர்கள் கட்டியிருந்த திராக்ஷைக் கொடிகளும், மின்னலேப்போல் இறுகப் பிணித்துக் கட்டியிருந்த ஐவீக் கொடிகளும் சிறிதும் கட்டுக் கலேயாமல் இருந்தன. அப்போது அந்த பாக்கஸ் தேவன் மிகவும் பயந்து நடுங்கியவனுய் தலே குப்புற உருண்டு சென்று, லவண சமுத்திரத்தில் விழுந்தான். அச்சமயம் அங்கிருந்த தெடீஸ் தேவியானவள் அவனேத் தன் கைகளால் ஏந்தித் தாங்கிக் கொண்டதினுல் அவன் அந்த ஆபத்திற்குத்த ப்பினுன்.

என்றுலும் ஒரு தேவனுன அந்த பாக்கஸூக்குத் தான் செய்த சிறுமைகளுக்குத் தகுந்த தண்டனேயை அந்த லேக்காஸ் அனுபவிக்காமல் போகவில்லே! அவனுக்கு நல்ல தண்டனே கிடைக்கவே கிடைத்தது. தங்களது இனத்தானுன ஒரு தேவனுக்கு நேர்ந்துவிட்ட சிறுமைகளேக் கண்ணுற்று மற்றைய தேவர்களும் சும்மாவிருப்பார்களா? அவர்கள் விண்ணுலகத்தில் நித்திய சந்துஷ்டர்களாக இருப்பவர்களாயிற்றே! அவர்களிட்ட சாபத்தினுல் அவனது கண் பொட்டையாய்ப் போய்விட்டது! அவன் வாழ்க்கையில் சிறிதும் ருசியின்றி நடைப் பிணம்போல், தட்டித் தடவி நடந்துகொண்டு உண்ணுவதும் உறங்குவதுமாய்த் தன் காலத்தைக் கழித்துவந்தான். கடைசியாய்த் தன்னேக் கண்டு இரங்குவார் ஒருவருமின்றி நரகலோகங்களேயுமடைந்தான்! அவனே மனிதர்கள் ஒரு மகா பாபியென்று வெறுத்து வந்தனர். அவன் தேவர்களது தீராப் பகைக்கும் ஆளானுன். ஆதலால் நான் தேவர்களுடன் பொரமாட்டேன்.

ஆனுல் நீ பூமியில் உண்டாகும் தானியங்களேயும் பழவகைகளேயுமே யருந்திவந்தவன்தான், மனித வர்க்கத்தில் பிறந்தவன்தான், என்றுல் நானும் உன்னே ஒரு கை பார்க்கச் சித்தம்தான்.

நீ வெகு தைரியமுள்ளவனுயிருக்கின்றுய்! மிகவும் துள்ளுகின்றுய்! உனக்கு அழிவு காலம் அடுத்து நெருங்கி வந்துகொண்டிருக்கின்றது. உன் பிராணனே நீ ஒரு பொருட்டாக நினேக்கவில்லே! இருள் சூழ்ந்த யமபுரத்தின் வாயிலே இதோ நான் திறந்து விட்டேன்! இங்கே வா, அதனுள் செல்'' என்றுன்.

அதைக் கேட்ட அந்த வீரன் அவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான் :—" திடியஸின் மகனுக்கும் நான் யார் என்பது தெரியாதா ? அவனுக்குங்கூட நான் யார், நான் எங்கிருந்து வந்திருக்கின்றேன், யார் எனது தந்தை என்ற விவரங்கள் தெரியாதா ? அவனும் என்னை இந்தக் கேள்விகளெல்லாம் கேட்க லாமா ? மனித வர்க்கமானது மரங்களின் மேலுள்ள இலைகளைப் போலவே யிருக்கின்றது. இளமையில் அவ் விலைகள் பச்சைப் பசேலென்று இருக்கின்றன. முதுமையில் அவை வாடி வதங்கிப் பூமியின்மேல் உதிர்ந்து விடுகின்றன. அடுத்தபடியாக வரும் வசந்த காலத்தில் முன்சென்ற இலைகளைப் பின்பற்றிப் புதிய இலை கள் கொத்துக் கொத்தாக வெளிவருகின்றன். தலையை எடுக் கின்றன. அவைகளும் காலக்கிரமத்தில் அழிந்து போகின்றன. அவைகளுக்குப் பின் வேறு இலைகள் மறுபடியும் உண்டாகின்றன. இவ்வாறே ஜனங்களும் காலக்கிரமத்தில் தலைமுறை தலைமுறை யாகத் தோன்றி அழிந்துபோய் விடுகின்றனர். ஒரு தலைமுறை யார் அழிந்து விட்டபின், வேறு ஒரு தலைமுறையார் தழைத்து ஓங்கி விளங்குகின்றனர். இதுவரை நான் சொல்லியதிலிருந்து நான் யார், எந்தக் குலத்தில் உதித்தவன் என்பது உனக்குத் தெரியாவிடில், நானே என் சரிதையைச் சொல்லுகின்றேன் கேள் ; அந்தச் சரிதை அதிவிசாலமான இந்த உலகம் முழுவதும் பிரசித்தமானது.

"நீர் வளங்கள் நில வளங்கள் நிறைந்ததும் யுத்தத்தில் விருப்பமுள்ள குதிரைகளுக்குப் பேர் போனதுமான ஆர்காஸ் நாட்டின் எல்லைப்புறத்தில் ஒரு கோடியில் ஒரு நகரம் உண்டு. சர்வஞான சம்பன்னரான இயோலியன் ஸிஸிபஸ் என்பவர் அந்தக் கோட்டை கொத்தளங்கள் கொண்ட நகரத்தை முன்னு ளில் ஆண்டு வந்தார். அப்போது அந்த நகரம் ஈபிரி என்னும் பெயருடன் விளங்கி வந்தது. அவருக்கு கிளாக்கஸ் என்ற பெய ருடைய ஒரு புத்திரர் இருந்தார். மகானுன அந்த கிளாக்கஸ் என்பவர் பெல்லரோபோன் என்பவரது தந்தை. அந்த பெல்ல ரோபோன் என்பவர் மனிதர்கள் எல்லோரிலும் அதிசுந்தரராக விளங்கி வந்ததுமன்றி, மனித வர்க்கத்தார் அனைவரையும் ரக்ஷிப் பதிலேயே கண்ணுங் கருத்துமாக விருந்ததினுல் அவரிடம் விளங்கிய வீரசூர பராக்கிரமங்களையறிந்த ஜனங்கள் அனைவரும், அவரிடம் அளவற்ற அன்பும் ஆதரவும் உடையவர்களாயிருந்த னர். அக்காலத்தில் அதிபராக்கிரமசாலியான பிரித்தஸ் என்பவர் ஆர்காஸ் நாட்டின் அரசராகவிளங்கி வந்தார். வணங்காமுடி மன்னரான அந்தப் பிரித்தஸ் பெல்லரோபோனிடம் பொறமை கொண்டு பொங்கிக் கொதித்து வந்தார். அதனுல் அவரது நாட்டுக்கு விசேஷமான கஷ்டங்கள் உண்டாயின. அவர் அதி சிரமமான காரியங்களைச் செய்யும்படி பெல்லரோபோனுக்குக் கட்டளையிட்டு வந்தார், பெல்லரோபோன் அவருடைய ஆணைகளைச் சிரமேற்றுங்கி அவையனைத்தையும் செவ்வையாகவே செய்துவந்தார். அவர் ஒரு சிங்கக் குட்டியாக விளங்கியதால், தனக்கிட்ட காரியங்கள் எவ்வளவோ கடினமாக விருந்தாலும்

அவையனைத்தையும் சிறிதும் சலிப்பும் இளைப்புமின்றித் திருத்த மாக வேலைசெய்து வந்தார். அவ்வாறு சகலமான உத்தம குணங் களுடனும் வீரசூர பராக்கிரமங்களுடனும் விளங்கிய அந்த பெல்லரோபோனைக் கண்டு, அந்தியாவென்பவள் மோகித்து நியாய விரோதமான காமத்தீயுடன் தவித்து வந்தாள். பெருந் தன்மையையே பெருந்தனமாகக் கருதிவந்த பெல்லரோபோன் அவளது காம வலைக்குள் அகப்படவில்லை; அவளுடைய கண்ணி களுக்கு இலக்காகவில்லை. தமது சத்திய விரதத்தையே காத்து வந்தார். அவளுடைய மணிமந்திர அவிழ்தங்களும் மாயாஜாலங் களும் அவரிடம் பலிக்கவில்லை. இவ்வாறு அந்த இளைஞர் தன் மாயைகளுக்கு வசமாகாமல் முயற்சிகளெல்லாவற்றையும் வீணாக்கித், தன்னைப் புறக்கணித்ததைக் கண்டு, அந்த அந்தியா அரசி சினங்கொண்டு தடதடவென்று தன் கணவனை பிரித்த ஸினிடம் ஓடிச் சென்று, தன்னை அந்த வீரன் அவமதித்துவிட்ட தாகக் குய்யோமுறையோ வென்று அலறினாள். புரண்டு அழுதாள். அவன் செய்த பழிக்குப் பழிவாங்கித்தான் தீரும்!'' என்றாள். அதைக்கேட்ட பிரித்தஸ் கொடுங்கோபங்கொண்டு அவனை ஒழித்தே விடுகின்றேன்! என்றால் அவன் அழிந்தே போய்விடுவான்! அதுதான் அவன் தலைவிதி! என்று தீர்மானித் தான்.

என்றாலும் பெல்லரோபோன் தனது விருந்தினனாகவிருந்த தினாலும், தான் நியமித்த காரியங்களனைத்தையும் அவன் சிறிதும் மனங்கோணாமல் செய்து வந்திருந்ததினாலும் அவனை ஹிம்சித்து அவமானப்படுத்துவது தர்மவிரோதமாகுமென்று நினைத்துச் சற்று யோசனை செய்து பிரித்தஸ் மகாராஜன், கடைசியாக அந்த இளங் காளையின் கையில் முத்திரையிட்ட சில பத்திரங்களைக் கொடுத்து, அவற்றை லிஸியாவிற்குக் கொண்டுபோய்க் கொடுக்கும்படி நிய மித்தான். அந்தப் பத்திரங்களில் அவனுடைய சதியாலோசனை கள் விஸ்தாரமாக எழுதப்பட்டிருந்தன.

அப்போது வீரனான பெல்லரோபோன் நல்லாரைக் காக்கும் சகலமான தேவர்களுடைய ஆசியையும் பெற்றவராய், அந்தப் பத்திரங்களை எடுத்துக்கொண்டு வெள்ளியைப்போல் பளிச்சென்று மின்னிப் பிரவகித்துக்கொண்டு ஓடும் ஜாந்தஸ் நதிக்கரையை யடைந்தார். லிஸியா நாட்டரசன் அவரைச் சகலமான மரியாதை களுடன் வரவேற்று உபசரித்து, ஒன்பது நாள் அவருக்கு விருந்து கள் அளித்தான். அவ்விருந்துகளுக்கு அவன் ஒன்பது காளைகளை யும் அடித்துக் கொன்றான். அவ்வாறு ஒன்பது தினங்கள் அந்த அரசனது விருந்தினனாக இருந்தபின், பத்தாம் நாட்காலையில் கதிர வன் கிழக்கில் பளிச்சென்று உதயமாகி இருக்கையில், நெறி தவறாத இந்த இளம் வீரர் தமது அரசன் தம்மிடம் கொடுத்தனுப் பிய பத்திரங்களை அவனிடம் காட்டினார். அதுவரை முத்திரை யிடப்பட்டு இரகசியமாகவிருந்த அந்தப் பத்திரங்களைப் பிரித்துப் பார்த்தபொழுதுதான், அவனுக்கு பிரித்தஸின் துரோகபுத்தி வெளி யாயிற்று. அதில் முதன்முதலாக கமீரா என்னும் கொடிய அரக்

கியை ஒழிக்கவேண்டும், அந்தக் காரியத்தைச் செய்துவர பெல்லரோபோனை நியமிக்கவேண்டும் என்று எழுதியிருந்தது. அந்த கமீரா என்பவள் சாகாவரம் பெற்று வந்த ஒரு கொடிய அரக்கி, ராட்சஸ சுவபாவமுடையவள். நெருப்பைக் கக்கும் நாகப் பாம்பின் வாலைப்போல் ஓர் அகன்ற சிறகையும், அவலட்சணமான ஓர் ஆட்டின் தேகத்தையும் ஒரு சிங்கத்தின் தலையையும் உடையவள். அட்டக் கரியைப்போல் இருந்த மூக்குத்துவாரங்களிலிருந்து நெருப்பானது கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது. அவள் தனது வாயைத் திறக்கையில், அது நாகலோகத்திலிருந்து வரும் வெப்பத்திற்குச் சமானமான சூடுள்ள நெருப்பையே தகதகவென்று கக்கிக்கொண்டிருந்தது.

அவர் ஆகாயத்தில் கோள்கள் நின்ற நிலையை நன்ருய் ஆராய்ந்து அப்போது தேவர்கள் தோற்றுவித்த நற்குறிகளைக் கண்டு அவற்றில் நம்பிக்கையுள்ளவராய் முன்சென்று அந்தக் காரியத்தையும் செய்து முடித்தார்! அந்த துஷ்ட ஜந்துவை சம்ஹாரம் செய்துவிட்டார்.

அதன் பின் அவர் லிஸியா தேசத்தில் வசித்துவந்த ஜோலிமியன் ஜாதியாரைப் போரில் சந்தித்து மனித வர்க்கத்திலேயே குரூரர்கள் என்ற கியாதியையடைந்திருந்த அவர்களனைவரையும் வதைத்தார்.

அதன் பின் அவர் அதிதைரியசாலிகளான அம்மா ஜனங்கள் அனைவரையும் வலுவில் சண்டைக்கு இழுத்து அவர்கள் அனைவரையும் வென்ருர்.

அவருக்குச் சென்றவிடமெல்லாம் ஜெயமே உண்டாயிற்று. தேவர்களெல்லாம் அவரது பங்கிலேயே இருந்தனர்.

ஆனுல் இத்துடன் அவர் சிரமங்கள் தீர்ந்து விடவில்லை.

மேற் சொல்லிய யுத்தங்களிலிருந்து அவர் திரும்பி வருகையில் அவரிடம் பொருமைகொண்டு அவரை விரோதித்து வந்த சில லிஸியா வாசிகள் மறைந்திருந்து சதி செய்ய நினைத்து, அவரைத் தாக்கினர். அவர்கள் வளைந்து வளைந்து சென்ற அந்த தேசத்தின் கடற்கரையோரமாகத் தங்கள் வேலாயுதங்களை ஒரே உயரத்தில் பிடித்துக்கொண்டு நின்றனர். அவர் அவர்களனைவரையும் ஒரேயடியில் மூச்சுப் பேச்சின்றி அடித்து வீழ்த்தி விட்டார். அவர்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்லவேயில்லை.

கடைசியாக அந்த லிஸியா வேந்தன் தான் செய்த காரியங்களை நினைத்து மனம் நொந்து தன் குலதேவதைகளுக்கும் தேவ பரம்பரையில் வந்த அந்த வீரருக்கும் முன்னுல் நின்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். தனது குமாரத்தியையும் தன் ராஜ்

யத்தில் பாதியையும் அவருக்குக் கொடுத்து அவரைத் தன்னிடத் திலேயே வைத்துக் கொண்டான். அவர் அங்கு சகலமான சம்பத்துக்களுடனும் ஆடம்பரங்களுடனும் சுகமாக நெடு நாள் வாழ்ந்து வந்தார். லிஸியா நாட்டுப் பொது ஜனங்களும் அவருக்கு விஸ்தாரமான நிலங்களைக் கொடுத்தார்கள். மிகவும் செழிப்பான பிரதேசங்களிலிருந்து பொறுக்கி அவர்கள் தமக்குக்கொடுத்த காடு களையும் வனங்களையும் திராக்ஷை வயல்களையும் யதேஷ்டமாக தானியங்கள் விளையக்கூடிய நீர்வள நில வளங்களுள்ள பூமிகளை யும் ஆண்டு அனுபவித்துக் கொண்டு அவர் அங்கு வெகு சுகமாக நெடு நாள் வாழ்ந்து வந்தார்.

அவருக்குத் தீரர்களான இரண்டு புத்திரர்களும் சுந்தரி யான ஒரு புத்திரியும் உண்டானார்கள். அந்தச் சுந்தரியைக் கண்ணுற்ற தேவர்களும் அவளிடம் காதல் கொண்டனர். ஜோவ் பகவானே அவளைக் கட்டித்தழுவி மருவினார். அதன் பயனாக அவளிடம் ஸார்ப்பீடன் பிறந்தார்.

அதன் பின் நாளடைவில் பெல்லரோ போனுக்குத் துக்கத்தின் மேல் துக்கமும் கஷ்டங்களுக்கு மேல் கஷ்டமும் வந்தன. அவை அடுத்தடுத்து வந்தமையால் அவர் மனமிடிந்து போனார். கடைசியாய் அவர் மிகவும் மனக்கவலை கொண்டு தெய்வகிருபையையும் இழந்தவராய் மனித சவகாசத்தை அறவே துறந்து விட்டு விசாலமான அலேயன் வனங்களில் சஞ்சரித்துவர இச்சைகொண்டு அங்குச் சென்றார். அந்த வனமானது அதி விசாலமானது. அதி நீளமும் அகலமுமுடையது. நிர்மானுஷ்ய மானது. அதற்குச் செல்லும் வழியில் கல்லும் முள்ளும் நிறைந்து காடுமேடுகளின் மேல் சென்றது.

அதிலாவண்ணியமுடைய அவரது புத்திரி சூரிய கிரணங் களால் தாக்குண்டு பிராணனை விட்டாள்.

அவரது மூத்த குமாரர் ஸோலிமியன் வனத்தில் மார்ஸ் பகவானுடன் பொருது, அந்தக் கொடுங்கோபியினால் கொல்லப் பட்டார். இளைய குமாரனான ஹிப்போலோக்கஸ் மாத்திரம் தப்பிப் பிழைத்தார், அவரே என் தந்தை! அதி கௌரவம் பொருந்திய அவரே என் பிறப்பிற்கும் பெருமைக்கும் காரணர்!

அவரது ஆணையைச் சிரமேற்கொண்டு தான், நான் இந்த துரோஜன் கரைக்கு வந்தேன். அவருடைய உபதேசங்களையே தான் சதாமனனம் பண்ணி வருகின்றேன். அவைகளை அனுஷ் டித்தே பெருங்கீர்த்தியைச் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆவலுள்ளவனாக விருக்கின்றேன். சேனாபதி ஸ்தானத்திற்குத் தகுந்த யோக்யதையையும் சேனைகளை நன்றாக நடத்துவதில் திறமையும் உள்ளோரில் முதல்வனாக விளங்கவேண்டும் என்ப திலேயே கண்ணுங் கருத்தும் உள்ளவனாக விருக்கின்றேன். ஏற்கெனவே என் நாட்டார் பேரும் புகழும் சம்பாதித்திருக்கின் றனர், என்றாலும் அந்தப் பேரையும் புகழையும் மேன் மேலும்

விருத்தி செய்ய வேண்டுமென்னும் நோக்கமுள்ளவனுக விருக்கின்றேன். என் கண்களின் முன்னுல் மகான்களான என் முன்னேர்களையே உதாரணங்களாக வைத்துக்கொண்டு, அவர்களைப்போல் வீரசூர பிரதாபங்களுடன் விளங்கவேண்டு மென்பதையே காரியமாக விருக்கின்றேன்!'' என்ருன்.

அவன் அவ்வாறு சொல்லியதைக் கேட்ட திடிதீசன் மிகவும் சந்தோஷித்தான். அவனது மனது உற்சாகங்கொண்டது. அவன் தனது வேலைத் தன் முன் நிலத்தில் ஊன்றி விட்டுச் சினேக பாவங்கொண்டு, லிஸியன் இராஜ குமாரனை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தான்:—

''வாராய், எனது அதிதியின் பரம்பரையில் வந்த வீரனே! உனக்கு நல்வரவு! நாம் என்றென்றும் இவ்வாறே ஒருவரையொருவர் சந்திப்போமாக! ஒருவரையொருவர் அன்புடன் கட்டித்தழுவுவோமாக! நம் பெரியாருக்குள் பரஸ்பரம் உண்டாயிருந்த உத்தமமான சினேகிதத்திற்கு ஒரு விதமான பங்கமும் வராமல் காத்து வருவோமாக! மகாவீர! நான் ஒரு சங்கதி சொல்லுகின்றேன் கேள். முன்னுளில் நம் மூதாதைகள் பரஸ்பரம் விருந்தினர்களாக விருந்தவர்கள்! ஒரே பந்தியில் இருந்து உண்டு களித்தவர்கள். பலவானுன ஈனியஸூம் தைரியவானுன பெல்லரோபோனும் என்ற அவர்கள் இருவருடைய பெயர்களையும் ஜனங்களெல்லாம் ஒன்ருகச் சேர்த்தே சொல்லுவார்கள். பெல்லரோபோன் என்பவர் எங்களது புராதனமான அரண்மனைக்கு விஜயம் செய்து அதை அலங்கரித்தார். அவர் அங்கு இருபது நாள் தங்கியிருந்தார். அதனுல் எங்களது அரண்மனை பெருமையே அடைந்தது. அவர் வெகு சந்தோஷத்துடனும் குதூகலத்துடனும் வேடிக்கை விளையாட்டுகளிலும் அந்தக் காலத்தைக் கழித்தார். அவ்வாறு சுகமாக அந்தக் காலத்தைக் கழித்த பின் பிரிய நேரிட்ட பொழுது, அந்த வீரர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் பரிசுகள் வழங்கிக் கொண்டனர். உனது மூதாதை என் மூதாதைக்கு ஒரு பொற்கிண்ணத்தையளித்தார். ஈனியஸ் அவருக்கு ஓர் அரைக்கச்சையை அளித்தார். அது அதிவிசேஷமான வேலைப்பாடுகளுடையது. அதற்குச் சமானமான கச்சை உலகத்தில் எங்குமே கிடையாது. அது கெட்டியான தைரியன் சரயத்துடன் ஜாஜ்வல்லியமாகப் பளிச்சென்று மின்னியது.

பெல்லரோபோன் எனது பாட்டனுருக்குக் கொடுத்த சன்மானத்தை நான் என் விலைமிக்க ஆஸ்திகளுள் ஒன்ருக மதித்து வெகு ஜாக்கிரதையுடன் இன்றும் ரக்ஷித்து வருகின்றேன்! அது என் போஜன சாலையில் ஒரு கௌரவ ஸ்தானத்தில் இருந்து வருகின்றது. அது எங்களுக்கு எவ்வாறு வந்தது என்று விசாரித்து, நான் அதன் விருத்தாந்தத்தை அறிந்தேன்.

எனது தந்தையான திடியஸ் என்பவர் அந்தப் பாத்திரத்தை ரக்ஷித்து வரும்படி எனக்கு ஆணையிட்டுச் செல்லுகையில், இந்த விஷயங்களெல்லாம் எனக்கு உரைத்தார்.

நான் இளைஞனாயிருக்கையிலேயே அவர் என்னை விட்டு விட்டுத், தீபிக்குச் சென்றார். இளங்காளைகளானவர்கள் அந்தக் கோட்டை மதில்களின் முன்பாக வெட்டுண்டு மடிவதைக் கண்ணுற்று, அவர்களுக்குப் பரிந்து போர் புரிவதற்காக என் தந்தை அங்கு சென்றார்.

இந்த பூர்வ நடவடிக்கைகளையெல்லாம் மறவாமல் மனத்தில் வைத்தவர்களாய் நாம் இருவரும் ஒன்றாய்ச் சேர்ந்து பிரியா நண்பர்களாக இருப்போமாக!

தெய்வச் செயலால் நாமிருவரும் பரதேசம் போக நேரிட்டால் அப்போது நீ என் அதிதியாக ஆர்காஸுக்கு வந்துவிட வேண்டும். அல்லது நான் உனது அதிதியாக லிஸியாவுக்கு வந்து விடுவேன்.

எனது இந்த வேலுக்கு அதோ அங்கு நிற்கும் துரோஜர்கள் நல்ல பலியே ஆவார்கள். அந்தப் பெருங் களத்தில் அவர்கள் விசேஷமாகக் கொழுத்து நின்று கொண்டிருக்கின்றனர். என் வேலுக்கு அவர்கள் நல்ல தீனியே ஆவார்கள். உன் வேலும் கிரேக்கர்களது ரத்தத்தை வேண்டியமட்டும் நன்றாய்க் குடிக்கும். நல்ல ரத்தக் கறையுடனும் விளங்கும், ஆனால் தயோமதியும் நீயும் மாத்திரம் இனிமேல் ஒருக்காலும் வைரிகளாகவிருக்க வொண்ணாது!

நாம் இப்போது நம் ஆயுதங்களை மாற்றிக் கொண்டு, நாம் இருவரும் நம்மிரு குடும்பங்களுக்கும் தொன்றுதொட்டுள்ள நட்பைக் காப்பாற்றி கொள்ள ஒப்புக் கொண்டு விட்டதாக இந்த இரு திறத்துச் சேனைகளுக்கும் ருஜுப்படுத்தி விடுவோம்!" என்றான்.

இவ்வாறு சொல்லிய பின் தீரர்களான அந்த இரண்டு வீரர்களும் தங்கள் ரதங்களினின்றும் கிழே இறங்கித் தங்கள் கைகளைக் கோத்துக் கொண்டு, தாங்கள் பரம்பரையான நண்பர்கள் என்றும் இனியும் இருக்கப் போவதாகவும் வாக்குறுதி செய்து கொண்டனர்.

அதன் பின் அதி தைரியவானான கிளாக்கஸ் ஜோவ் தேவரது கிருபையினால் ஆஹ்லாத மனமடைந்து இழிவைத் தரத்தக்க எண்ணங்கள் அனைத்தையும் ஒருங்கே ஒழித்து விட்டுத் தாராளமான மனதுடன் தயோமிதியின் ஆயுதங்களை வாங்கிக் கொண்டு, அவற்றிற்குப் பதிலாக அவனுக்குத் தன் ஆயுதங்களைக் கொடுத்து விட்டான். தயோமதியின் ஆயுதங்கள் கேவலம் பித்தளையினால் செய்யப்பட்டிருந்தன. அவைகள் பார்வைக்கு அழகாகவும் இருக்கவில்லை. அவற்றின் விலையும் மிகவும் சொற்பம். அவை கேவலம் ஒன்பது காளைகள் தான் பெறும்.

கிளாக்கஸின் ஆயுதங்கள் என்றாலோ அவை ஸ்வர்ணத்தினாலானவை ; திவ்வியமான வேலைப்பாடு முடையவை. அவற்

றின் விலையும் அதிகம் ; நூறு காளைகளைக் கொடுத்து அவன் அந்த திவ்வியமான ஆயுதங்களை வாங்கியிருந்தான்.

இவ்வாறு இவர்கள் நேசம் பாராட்டிக் கொண்டிருக்கையில் துரோஜ ராஜ்ய துரந்தரனாகிய ஹெக்டர் என்னும் மகா வீரன் ஸீயன் கோட்டை வாசலின் வழியாய் ட்ராய் நகருக்குள் பிரவேசித்தான்.

அங்கு மந்திரங்களாலும் ஸ்தோத்திரங்களாலும் பூஜிக்கப் பட்டு வந்த ஒரு பீச் மரத்தின் நிழலில் ட்ராய் நகரத்துத் தாய்மார் களும் இளம் பெண்மணிகளும் அவனைச் சூழ்ந்து கொண்டு திரளாக வந்தனர். அவர்கள் அந்த யுத்தத்தில் அன்வயித்திருந்த தங்கள் கணவர்கள், உடன் பிறந்தவர்கள், புத்திரர்கள் ஆகிய வீரர்களின் க்ஷேமத்தைக் கோரிக் கவலை கொண்டிருந்தனர்.

தங்களுக்கு வரவிருந்த கஷ்டங்களைத் தவிர்த்துத் தங்களைக் காத்து ரக்ஷிக்க வேண்டுமென்று தேவர்களைப் பிரார்த்தித்து, அவர்களது உதவியை நாடுவதற்காக, அவன் அந்தத் திரளான ஜனங்களை வரிசை வரிசையாகக் கோவிலை நோக்கி ஒழுங்காய்ச் செல்லும்படி நியமித்தான். அதன் பின் அவன் பிரமாண்டமான வளைவுகளின் மேல் கட்டப்பட்டிருந்த பிரியத்தின் அரண் மனைக்கு வந்தான். அரண்மனையானது அந்த வளைவுகளின் மேல் பருத்த தூண்கள் கொண்ட மண்டபங்களுடன் ஆகாயத் தையளாவி நின்றது. மேலும் அந்தத் தூண்களின் மேலேயே பிரிய மகாராஜனுடைய ஐம்பது புத்திரர்களுக்கும் ஆளுக்கொரு அரண்மனையாக ஐம்பது அரண்மனைகள் சலவைக் கல்லினால் கட்டப்பட்டிருந்தன. அவர்களனைவரும் அவ்விடத்தில் தம் தம் அரண்மனைகளில் தனியே வசித்து வந்தனர்.

அந்த அரண்மனைகளுக்கு எதிராகவே பின்னொரு வரிசை யில் பிரியம் மகாராஜனது பன்னிரண்டு புத்திரிகளுக்கும் வெவ்வேறு அரண்மனைகள் கட்டப்பட்டிருந்தன. அந்தப் பன்னிரண்டு ஸ்திரீ ரத்தினங்களும் தங்கள் கணவர்களுடன் சகலமான ஆடம்பரங் களுடனும் சம்பத்துக்களுடனும் தம் தம் அரண்மனைகளில் சுக மாகக் காலங் கழித்துக் கொண்டு இன்புற்றிருந்தனர்! அந்த அரண்மனைகளும் நன்றாகச் செதுக்கப்பட்ட சலவைக்கல்லாலேயே கட்டப்பட்டிருந்தன. அவை முன் சொல்லிய இராஜ குமாரர் களின் அரண்மனைகளின் அழகுக்கு ஒருவிதத்திலும் இணைத்தவை யல்ல.

ஹெக்டர் அங்கு சென்று, தன் அன்னையும் அரசியுமான ஹெக்குபா தேவியைத் தரிசித்தான். அப்போது அவளுடன் லயோ திசியும் இருந்தாள். அந்த லயோதிசியானவள் அழகிற் சிறந்த துரோஜ கன்னிகைகள் அனைவரினும் அழகு மிக்கவளாக விளங்கி வந்தாள். ஹெக்குபா தேவியானவள் தன் மகனை வெகு நேரம் வரை இறுகத் தழுவிக் கொண்டும் அவனது கையை அழுத்திப்

பிடித்துக் கொண்டும் வெகு உருக்கமாக அவனுடன் பின்வரும் வசனங்களை உரைத்தான் :—

"என் கண்ணே ஹெக்டரே! கிரேக்கர்கள் நமது கோட்டை மதில்களை நன்ருகச் சூழ்ந்து கொண்டிருக்கையில், எனது மகன் யுத்தத்திலிருந்து விலகி இங்கு வரவேண்டிய காரணமென்ன? யுத்தத்திலும் பெரிய காரியம் இங்கு என்ன இருக்கின்றது? இலியனது ஆகாய மளாவிய கோபுரத்தில் நின்றுகொண்டு, கையைக் கூப்பி உயரத்தூக்கி சர்வ வல்லமையுமுள்ள தேவனை வேண்டத்தான் நீ வந்தனையோ? சற்று நில், பாக்கஸின் பிரஸாதத்தைக் கிண்ணத்தில் நிரப்பிக்கொண்டு இதோ வந்து விடுகின்றேன்! அதிலிருந்து ஜோவ் தேவரின் பெயரை உச்சரித்துக் கொண்டு, சில சொட்டுக்களை பூமியின் மேல் தெளித்துவிட்டு, பரிவார தேவதைகளுக்கும் வழக்கப்படி செய்யும் வழிபாடுகளையும் செய்வோம். காணிக்கைகளையும் செலுத்துவோம்! அதன்பின் நீ உன் வயிறு நிறைய மட்டும் அந்த மதுவைத் தாராளமாகப் பானம் செய்து, உன் தாகத்தையும் தணித்துக்கொள். அப்படிச் செய்தால் இனிமேல் நடக்கவேண்டிய காரியங்களைச் செய்வதற்கு உனக்கு உற்சாகம் உண்டாகும்; புத்துயிரும் பெறுவாய்! நீ நெடுநாளாகப் பெரும் பாடுபட்டு இந்த யுத்தத்தைச் செய்து வருகின்ருய்! பாபம்! களைத்தும் போயிருக்கின்ருய்! நமது ராஜ்யத்தை இதுவரை ரக்ஷித்து வந்திருக்கும் தைரியசாலியான வீரன் நீ தானே!" என்ருள்.

அதைக் கேட்ட அந்த மகாவீரன் "பாக்கஸின் பிரஸாதங்கள் இந்தப் பக்கம் நாடவே கூடாது! அவைகளைத் தூரத்தில் மூடிப் பூட்டி வைத்து விடவேண்டும். அந்தப் பிரஸாத ரூபமான சாராயமானது தன்னையருந்துபவனைத் தகித்து விடுகின்றது. அது மனித வர்க்கத்தையே பாழாக்கி விடுகின்றது. அங்கங்களுக்கும் பங்கத்தை யுண்டாக்கி விடுகின்றது. துல்லியமான மனத்தையும் சல்லடைக் கண்கள்போல் துளைத்துப் புத்தியை மந்தப்படுத்தி விடுகின்றது. ஆதலால் சேனைத்தலைவர்கள் அந்தப் பானத்தைப் பருகாமல் இருத்தல் வேண்டும். புனிதமான தென்று கருதப்பட்டு வரும் அந்த ரசத்தை எல்லோரும் தேவர்களுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும். அந்த ரஸத்தை அவ்வாறு உபயோகிப்பதுதான் மேல். நானே ஏன் அந்த உத்தமமான கைங்கரியத்தை செய்யலாகாது என்று தாங்கள் கேட்கலாம்? நான் அதைச் செய்ய அருகனல்ல! அதைச் செய்வதற்குத் தகுந்த யோக்யதை எனக்கில்லை. கணக்கற்ற மனிதர்களைக் கொன்று அவர்களது இரத்தத்திஞல் எனது கை நனைந்து கறைப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்டவன் அந்தக் காரியத்தைச் செய்வதற்குத் தகுந்தவனல்லன். கொடிய பாபங்களைச் செய்த இந்தக் கைகளை நான் புண்ணியாத்மாக்கள் வசிக்கும் விண்ணுலகத்திலுள்ள தேவர்களை நோக்கி உயரத்தூக்கலாமா? இது மகா பாபமாயிற்றே!

எல்லாவிதமான நிந்தைகளுக்கும் அருகனுன நான், தேவ நாதரும் மகா பிரபுவுமான அந்தப் பெருங் கடவுளுக்குத் துதி மாலைகள் சாத்தலாமா? அது அவரை நிந்திப்பதாகு மல்லவா? அம்மா! நான் அந்தக் காரியம் செய்யமாட்டேன். தாங்களும் தங்கள் சகிகளான பெருந் தேவிகளும் தாய்மார்களும் மினர்வா தேவியின் கோவிலுக்குச் செல்லுங்கள். நீங்கள் சிறிதும் மாசற்ற செல்விகள். நீங்கள் அனைவரும் மினர்வா தேவியின் ஆலயத்துக்கு ஒழுங்காக வரிசையாகச் சென்று, அங்கு சுகந்த வாசனைத் திரவியங்களைக் கொண்டு ஹோமஞ் செய்யுங்கள். தாராளமாக ஹோமாதிகளைச் செய்யுங்கள்!

உங்கள் வஸ்திரப் பேழைகளிலுள்ள மிகச் சிறந்ததும் விசேஷமான வேலைப் பாடுள்ளதும் பொன்னுல் அலங்கரிக்கப் பட்டதுமான போர்வையை எடுத்துச் சென்று, அதை மினர்வா தேவியின் முழங்காலின் அடியில் விரியுங்கள்! மகாசக்தியும் பெருமைகளும் உள்ள அந்த தேவியின் பலிபீடங்களில், பன்னிரண்டு இளம் காளைகளையும் நைவேத்தியமாக வையுங்கள். அவ்வாறு செய்தபின், மனமுருகிப் பிரார்த்தனைகளும் செலுத்து வீர்களானுல், அந்த மகா சக்தியுள்ள தேவியானவள் மனமிரங்கித் நம் மனைவிமார்களையும் இளங்குழந்தைகளையும் நம் நகரத்தையும் காப்பாற்றுவாள்! திடிதீசனது கோபம் நம்மைத் தாக்காமலும் தடுப்பாள்! நமது நகருக்கு வரவிருக்கும் நாசங்களையும் வெகு வாக விலக்கி விடுவாள். கூட்டங் கூட்டமாக உள்ள நம் சேனைகளை அவள் ஒரேயடியாய்க் கட்டுக்கட்டாக உழுது விடுகின் ருள். ட்ராய் வீரர்கள் அனைவரையும் புறங்காட்டியோடும்படி விரட்டியடித்து ஓட்டிவிடுகின்ருள். தாயே! தாங்கள் இந்தக் காரியத்தை வெகு சிரத்தையுடன் செய்யவேண்டும்.

பச்சைக் குழந்தைபோல் படுத்துறங்கும் பாரிஸை எழுப்பு வதற்காக இதோ நான் போகின்றேன். அவனை இந்தப் போரில் கலந்துகொள்ளுமாறு அழைத்துவர இதோ போகின்றேன். அவனுக்கு மானம் வெட்கம் ஸத்கீர்த்தி என்னும் உணர்ச்சிகள் இன்னும் கொஞ்சம் இருக்கும் என்றே நினைக்கின்றேன். அவனுக்கு என் வீரமொழிகளால் கொஞ்சம் உணர்ச்சியும் உற்சாகமும் உண்டாகும். அவனும் தன் கோழைத்தனத்தை விட்டுவிட்டு ஒரு வீரனைப் போல் கிளம்புவான் என்றே நினைக்கின்றேன். ஆஹா! தெய்வமே! ட்ராய் நாட்டை அழிக்கவந்த இந்தப் பீடையாயும், நமது குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பாயும், பலவிதத்திலும் வெறுக்கத்தக்க வனுயுமுள்ள இந்த மகாபாபியைப் பொறுமையும் தயவுமுள்ள பூமி தேவியானவள் வாரித்தழுவி யெடுத்துக்கொண்டு போய் விட மாட்டாளா? இருள் சூழ்ந்த அதிபாதாளமான லோகங் களில் அவன் விழுந்து அழிந்து போகமாட்டானு? அவன் அப்படிச் சென்ருல் ட்ராய் பிழைத்துக் கொள்ளுமே! இன்னும் அந்தக்காலம் தப்பிப்போகவில்லையே! அந்தக் காலம் வந்தால்

என் கஷ்டங்களும் துக்கங்களும் அடியோடு நீங்கிவிடும்'' என்ருன்.

இந்த வசனங்களைக் கேட்டு அவனது தாய் தன் தோழிமார்களுக்கு அவன் சொன்னபடி காரியங்களைச் செய்ய ஆணையிட்டாள். அவளது ஆணையைக்கேட்ட ஒவ்வொரு பெருங்கிழவியும் பிரஸித்திப்பெற்ற குலமகளும் தடதடவென முன் வந்தனர். பிரிஜியன் ராணியும் விலையுயர்ந்த வஸ்திரங்கள் வைக்கப்பட்டிருந்த தனது அறைக்குள் சென்ருள். அங்கு வெகு சிரமப்பட்டுச் சேகரித்து வைத்திருந்த வித விதமான வாசனைத் திரவியங்கள் அதியுன்னதமான சுகந்தத்தை கமகம வென்று வீசிக்கொண்டிருந்தன. அங்கு சாமான்யமல்லாத விசேஷமான சித்திர வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டிருந்த வஸ்திரங்கள் யதேஷ்டமாக வைக்கப்பட்டிருந்தன. அவைகள் முழுவதிலும் சிறிதும் இடைவிடாமல் ஒவ்வொரு பாகத்திலும் ஸைடோனியன் மங்கைகள் சித்திர வேலைகள் செய்திருந் தனர். அந்த ஸைடோனியன் மங்கைகள் யாரென்ருல், அவர் கள் அனைவரும் இளையோனை பாரிஸ் ஹெலனைத் தூக்கிக் கொண்டு தெலியன் கரையோரமாக வந்தபொழுது, அக்கரையி லுள்ள ஸைடன் நகரிலிருந்து பிடித்துக் கொண்டு வரப்பட்ட ஸாதுக்கள். அங்கு பலவிதமாக நெய்யப்பட்டும் சாயமிடப்பட்டும் வைக்கப்பட்டிருந்த விதவிதமான வஸ்திரங்களை அரசியானவள் வெகு கவனத்துடன் பரிக்ஷை செய்து கடைசியாக மற்றெல்லா வஸ்திரங்களையும் விட அதி விசேஷமாகப் பளிச்சென்று மின்னிய ஒரு வஸ்திரத்தைப் பொறுக்கியெடுத்தாள். அது அதிகாலையில் பளிச்சென்று பிரகாசிக்கும் சுக்கிர நக்ஷத்திரத்தைப்போல் பளபள வென்று மின்னியது. அவள் அந்த வஸ்திரத்தைத் தானே தன் கையில் எடுத்துக்கொண்டு, தன் பரி ஜனங்கள் தன்னை வெகுதூரம் வரை பின் தொடர்ந்துவர முன் சென்ருள். அந்தப் பரிவாரமானது வெகு கம்பீரமாகவும் மெதுவாகவும் நடந்துசென்று, இலியனது அதியுன்னதமான கோபுரத்துக்கு வந்து, வெகு பயபக்தியுடன் பல்லாடியானுடைய மண்டபத்தையடைந்தது. அப்பொழுது பாலாஸ் தேவியின் ஸேவினியாக அந்த க்ஷேத்தி ரத்தைக் காத்துக் கொண்டிருந்தவளும் அந்தினரின் தேவியும் அழகு மிகுந்தவளுமான தியோனி என்பவள், அந்த க்ஷேத்தி ரத்தின் வாயிற் கதவுகளின் தாழ்ப்பாள்களைத் தள்ளினுள். அதன் பின் பாலாஸ் தேவியைச் சேவிக்க வந்த அரசியும் அவருடைய பரிவார ஸ்திரிகளும் தங்கள் கைகளை உயரத் தூக்கிக் கொண்டும் கண்களைப் பிசைந்து மன்ருடிக்கொண்டும் தங்கள் பிரார்த் தனைகளை வாய் விட்டு உரத்துக்கூவிக் கதறினர். அவர்களது அரவம் அந்த விமானம் முழுவதையும் வியாபித்து அதை நிறைத்து விட்டது. அதன் பின் அந்த ஸேவினியானவள் அரசி சமர்ப்பித்த அந்த திவ்யமான வஸ்திரத்தை எல்லோரும் காணும்படி தன் கைகளில் எடுத்துப் பிடித்துக் கொண்டாள். பின்பு அதை அந்த தேவியின் முழங்கால்களின் மேல் சாத் தினுள். கடைசியாகப் பின் வருமாறு பிரார்த்தித்தாள்:—

"பயங்கர ஸ்வரூபமுடைய ஓ தேவியே! ஸதா உக்கிர ஸ்வபாவத்துடன் இருப்பவளே! என்றும் இளைய கன்னிகையே! ட்ராயின் பலமான ரக்ஷையே! அபஜயமென்பது அறியாத பாலாஸ் தேவியே! எங்களுக்குச் சகாயம் செய்வீராக! திடிதீசனது வேலாயுதத்தை முறித்து விடுவீராக! அவன் துரோஜன் கோட்டை வாசலில் மதில்களின் முன்னுல் புழுதியில் குப்புற விழும்படி செய்வீராக! தாங்கள் அவ்வாறு கிருபை செய்ய வேண்டுமென்ற கோரிக்கையுடன் நாங்கள் பன்னிரண்டு இளங் காளைகளைத் தங்களது பலிபீடத்தில் பலியிடத் தீர்மானித்திருக் கின்ரும். அந்தக் காளைகள் இதுவரை நுகத்தில் பூட்டப்படா தவைகள். நாங்கள் அவைகளைப் பக்குவம் செய்து, தங்களது மண்டபத்தில் வைத்தால், அப்போது அவற்றின்றும் எழும் பெருத்த புகையானது எங்களது நன்றியை உரத்துக் கூவிக் கொண்டு, தங்களது கோவில் முழுவதையும் சூழ்ந்துவிடும். ஆதலால் தேவீ! எங்கள் தவத்திற்கும் பிரார்த்தனைக்கும் இரங்கி, எங்களையும் எங்கள் குழந்தைகளையும் எங்கள் நகரத்தையும் ரக்ஷியும் அம்மா!" என்று அந்த உபாஸனி அந்தப் புண்ணிய க்ஷேத் திரத்தில் தனக்கு நியமிக்கப்பட்டிருந்த ஸ்தானத்திலிருந்து வெகு உருக்கத்துடன் பிரார்த்தித்தாள். அங்கு கூடியிருந்த பெரும் பெண்டிர்களும் அவ்வாறே பிரார்த்தினர். ஆனுல் அவர்களுடைய பிரார்த்தனைகள் சிறிதும் பயன்படவில்லை.

இந்தப் பெண்மணிகள் இவ்வாறு அந்த தேவியின் ஸன்ன தியில் தங்கள் பிரார்த்தனைகளைச் செய்து கொண்டிருக்கையில், ஹெக்டர் பாரிஸின் மாளிகைக்குச் சென்ருன். தன் தேசத்தின் பல பாகங்களிலுமிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட ஒப்புயர் வில்லாத கல் தச்சர்களையும் சிற்பிகளையும் கொண்டு அந்த உயர்ந்த மாளிகையானது அந்தப் பாரிஸினுலேயே கட்டப்பட்டது. வெகு ஆடம்பரங்களுடன் விளங்கிய அந்தப் பிரம்மாண்டமான கட்டிடமானது தன் இடத்தில் இருந்தபடியே ட்ராய் நகரை மேல்நோக்கமாய் பார்த்தவண்ணம், பிரியமகாராஜனது மாளிகைக்கும் ஹெக்டருடைய அரண்மனைக்கும் சமீபத்தில் கட்டப்பட்டிருந்தது.

மகாவீரனுனஹெக்டர் அப்போது தன் கையில் அதியற் புதமும் சக்தி மிகுந்ததுமான ஒரு வேலாயுதத்தை ஏந்திக்கொண்டி ருந்தான். அதன் வாயானது சரியாகப் பத்து முழம் நீளமுள்ள தாக விருந்தது. அதன் முனை நல்ல உருக்கினுல் செய்யப்பட்டி ருந்தது. அந்த முனையில் சிறிய பொன் வளையங்கள் மாட்டப் பட்டிருந்தன.

அந்த ஆயுதத்தை அந்த வீரன் ஆட்டிச் சுழற்றிய பொழுது அது ஒரு மின்னல் கொடிபோல் பிரகாசித்தது. இந்தக்கோலத்துடன் அவன் அந்த ஜோதிமயமான கூடங்களும் அறைகளும் நிறைந்த மாளிகையினுட் பிரவேசித்து, அங்குத் தன் உடன் பிறந்தானும் சேனைத் தலைவனுமான பாரிஸைக் கண்டான். அந்தப் பாரிஸின்

ஆயுதங்கள் அவனைச் சுற்றிலும் சிதறுண்டு கிடந்தன. அவன் அவைகளைப்பார்த்து அவற்றின் அழகில் ஈடுபட்டு மகிழ்ந்தவனாகத் தன் கேடயத்தைத் தேய்த்துக் கொண்டும், வில்லுக்கு மெருகிட்டுக்கொண்டும் தனது காலத்தை வீணே கழித்து வந்தான். அவனருகில் ஹெலனும் அவளுடைய பாங்கிமார்களான கன்னிகைகளும் நின்று கொண்டிருந்தனர். அவள் அந்த கன்னிகைகளை நாகரீகமான சித்திர வேலைகளில் நியமித்து அவ்வேலைகளைச் செவ்வெனே செய்யுமாறு அவர்களுக்கு வழி காட்டிக் கொண்டும் கற்பித்துக் கொண்டுமிருந்தாள்.

இவ்வாறு வாளா விருந்தவனை ஹெக்டர் வெகு ஆத்திரத்துடன் கண்ணுற்று அது தகாது என்று எள்ளும் கொள்ளும் வெடிக்கும்படிக் கோபித்துப் பின்வருமாறு உரைத்தான் :—

"ட்ராயினிடம் நீ கொண்டுள்ள துவேஷத்தையும் பகையையும் காட்டுவதற்கு உனக்கு இதுதானா சமயம்? அட மகா பாபீ! குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பே! நாட்டையே நாசம் செய்ய வந்த பெருந் துரோகி! நமக்கு இப்போது பாரிஸும் கிரீஸுமல்லவோ பெருத்த விரோதிகளாகச் சேர்ந்து கொண்டு விட்டனர்! நீ நம்மிடம் வெகுவாகச் சினந்து வெறுப்படைந்திருக்கின்றாய்! அவர்கள் நம்மேல் பழிவாங்கி விட வேண்டுமென்று கொடுங் கோபங் கொண்டு துடிக்கின்றனர். உனக்காகத் தானே உத்தமமான இந்த இலியன் மாநகர்க் காவலர்களும் மகா வீரர்களும் தங்கள் பிராணன்களைத் திரணமாக நினைத்து, அவைகளைப் போர்க் களத்தில் அர்ப்பணம் செய்து வருகின்றனர். அவர்கள் விழுந்து குவிந்து விட்டதினால் அந்தப் பிணக் குவியல்களை இலியனுக்கு நாற்புறமும் கட்டிய கட்டைகள் போல் ஆய்விட்டனவே! உன்னிமித்தமாகத்தானே, நமது வீரர்கள் தங்களது இரத்தத்தை வடிக்கின்றனர். சர்வ நாசங்களுக்கும் மூலமான யுத்தமானது வெகு மும்முரமாக நடந்து வருகின்றது. அட! நன்றி கெட்டவனே! நீயும் ஒரு மனிதனா? இவ்விஷயங்களை நீ சிறிதேனும் கவனிக்க வேண்டாமா? நம் சேனைகளுக்கு உற்சாகத்தை யளிக்க வேண்டுவது உன் கடனல்லவா? எங்களுடன் சேர்ந்து ஊக்கத்துடன் உழைக்க வேண்டுமென்பது ஏன் உன் புத்திக்குப் புலப்படவில்லை? உனக்கு இஷ்டமிருந்தால் எழுந்து வா, இல்லையெனின் இங்கு இருந்த வண்ணம் நீ, நம் சத்துருக்கள் நமக்கு நெருப்பு வைத்துக் கொளுத்துவதையும் அந்தப் பெரு நெருப்பினால் அவர்கள் பிரிஜியர்களான நம் பெருமைகள் அனைத்திற்கும் ஒரேயடியாய்ப் பொங்கல் வைத்து விடுவதையும் பார்த்து வா!" என்றான்.

அப்போது அழகனான அந்த இளைஞன் தன் சகோதரனை நோக்கி, "அண்ணா! நீ இவ்வாறு சிறிதும் ஒளி மறைவின்றி வெளிப்படையாக என்னைக் கண்டித்துப் பேசுவது மிகவும் நியாயமே! அதனால் நீ மகா நீதிமான் என்பதும் சத்திய சந்தன் என்பதும் மிகவும் நன்றாக விளங்குகின்றன. என்றாலும் தாங்கள்

சத்குணம் உள்ள மகா வீரராதலால், நான் இதுவரை இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளாமலும் அங்கு வராமலும் இருந்ததற்காக என்னை இவ்வாறு கடிந்து பேச வேண்டாம்! என்மேல் குற்றங் குறைகளும் சொல்ல வேண்டாம். ட்ராயினிடம் வெறுப்புக் கொண்டு நான் இங்கு ஒளிந்து கொள்ளவில்லை! வெட்கமும் துக்கமுமே என்னைத்தடுத்து விட்டன. என் முகத்தை வெளியில் காட்டவும் எனக்கு தைரியமில்லை! இங்கு மனிதர்களுடைய கண்களுக்குப் புலப்படாமல் மறைவாயிருந்த வண்ணம், உன் உடன் பிறந்தான் தன்னந் தனியனாகத் தனது தலைவிதியையும் இலியனது தலைவிதியையும் நினைத்து நொந்து வருகின்றான். இப்போது இதுவரை நான் துக்கித்து வந்தது போதுமென்றே நினைத்து விட்டேன். ஜயலட்சுமியின் வலையானது இப்பொழுது என் முன் விரிந்து கிடக்கின்றது. அவளது முக விலாசம் என்னை இழுக்கின்றது. எழில் வாய்ந்த ஹெலனும் தன் தலைவனைச் சண்டைக்குச் செல்லும்படி உறுத்துகின்றாள். இன்று நான் வெற்றி பெற்றேனால் என் கத்தியும் கீர்த்தியுடன் விளங்கும். போர் முனையில் நின்று போராட வேண்டியது மனிதர் கடன். தேவர்களது கிருபையினால் தான் அவர்களுக்கு வெற்றியுண்டாக வேண்டும். ஆதலால் நான் என் ஆயுதங்களை அணிந்து கொள்ளும் வரைத் தாங்கள் பொறுங்கள்; தங்களது ஆத்திரத்தைத் தணித்துக் கொள்ளுங்கள். அப்படிக்கின்றித் தங்களுக்கு அவசரமான வேறு காரியங்கள் இருந்தால், அவற்றைக் கவனிக்கச் செல்லுங்கள். சிறிதும் தாமதமின்றித் தங்களைப் பின் தொடர்ந்து கொண்டு பாரிஸ் ஓட்டமாகவே ஓடி வருவான்" என்றான்.

அவ்வாறு அவன் சொல்லியதைக் கேட்ட பிரிய மகாராஜனது வீரகுமாரன் மறு மொழி ஒன்றுமே பகரவில்லை. ஆனால் அப்போது அவனது அருகிலிருந்த ஹெலன் அவனை நோக்கி மிகவும் தாழ்மையுடன் பின்வரும் இனிய வசனங்களை யுரைத்தாள் :—

"கபடமற்ற என் பிரிய சகோதரரே! ட்ராய்க்கு விளைந்த சகலமான பெருத்த கஷ்டங்களுக்கும் நஷ்டங்களுக்கும் காரணமாகிய இந்த துஷ்டையாகிய ஸ்திரீ தன்னை ஹெக்டருக்கு ஒரு சகோதரியாக வரித்துக் கொண்டது எவ்வளவு பொருத்தமாகவிருக்கின்றது! பாருங்கள் சூரியனானது பொன்னைப் போல் பளிச்சென்று பிரகாசித்துக் கொண்டிருந்த ஒரு தினத்தில் நான் பிறந்தேன். அதே தினக்தில் அந்த சூரியன் முன்பாகவே நான் இறந்து போயிருந்தால் அது எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்! இந்த பயங்கரமான காரியங்களெல்லாம் நடப்பதற்கு முன் நான் இறந்து போயிருப்பேனே! அன்றையதினம் ஏன் ஒரு சுழல்காற் உண்டாகவில்லை? ஏன் அது என் உடலைத்தாக்கிச் சென்று அது ஆகாயத்தில் பறக்கும் காக்கை கழுகுகளுக்கு இரையாக ஆக்கவில்லை? அப்படிச் சுழல்கால் தான் ஒன்று உண்டாகவில்லையென்றால் அன்றைய தினம் மேன்மேலும் புரண்டு வரும் அலைகளுமா இல்லாமல் போய்விட்டன! அவைகளின் கீழே விழுந்தாவது நான் ஏன்

அழிந்து போகவில்லை? நான் ஏன் பிழைத்திருக்கின்றேன்? ஆரவாரஞ் செய்து முழங்கும் வெள்ளத்தில் நான் ஏன் அகப்பட்டு மடியவில்லை? என் பிராணனை ஏன் இழக்கவில்லை? தெய்வமானது எனக்குத் துக்கத்தைச் சம்பூர்ணமாகக் கொடுத்து விட்டது? மகா பாபியான நான் அவையனைத்தையும் பொறுத்தேன். அந்த துக்கங்களுலெல்லாம் பாரிஸினால் எனக்கு விளைந்த துக்கம் பெரிது! இந்தப் பாரிஸும் ஒரு வீரனா? இவனும் ஓர் ஆண்பிள்ளையா? இவனினும் அதிகமாக தைரியமுள்ளவனும் நற்குணமே பூஷணமாகவுள்ளவனும் நன்னெறியிலேயே ஒழுக வேண்டுமென்று ஆவலுள்ளவனும் பெருங் கீர்த்தி சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையும் உள்ள ஒரு புருஷன் ஹெலனுக்கு வாய்க்காமல் போய் விட்டானே! அந்தப் பாக்கியம் கூட அவளுக்கு இல்லாமல் போயிற்றே!

நீர் இப்பொழுது பாரிஸுக்காகவும் எனக்காகவும் பலவிதமாகப் பாடுபட்டுக் களைத்துப் போயிருக்கின்றீர்! உம்முடைய கை கால்கள் இளைத்துப் போயிருக்கின்றன! அவைகளை நீட்டிக் கொண்டு சிறிது படுத்து இளைப்பாறும்! தெய்வங்களெல்லாம் ஒன்றுய்ச் சேர்ந்து நம்மெல்லோருக்கும் இந்தப் பெருங் கஷ்டத்தை உண்டாக்கி விட்டன. இந்தக் கஷ்டத்தையும் இனிமேல் வரப் போகும் அவமானத்தையும் இழிவையும் நாம் எல்லோருமே ஒன்றுய்ச் சேர்ந்து அனுபவித்துத் தீர வேண்டும் என்பது அந்த தெய்வங்களின் ஸங்கல்பம்! அந்த அப கீர்த்தியும் இழிவும் இந்த உலகமெல்லாம் பரவி விடும். உலகமுள்ளவரை அழியாமலும் இருந்து வரும். நமது பிற்காலத்தவருக்கு நாம் என்ன அதிவிபரீதமான கெட்ட உதாரணமாகி விட்டோம்! ஆஹா! அவர்களெல்லாம் நம் வெட்கக்கேட்டைக் காவியங்களாகவல்லவோ பாடி விடுவார்கள்."

அதைக்கேட்ட அந்த வீரன் "இளைப்பாறுவதற்கு இது சமயமல்ல! துரோஜர்களை யெல்லாம் அவர்களுடைய சத்துருக்கள் வெகுவேகமாக நெருக்கி வருகின்றனர். அவர்கள் ஹெக்டரின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்து நிற்கின்றனர். அவன் தனது ஆயுதங்களுடன் வரவேண்டும், தங்களைக் காப்பாற்றவேண்டும் என்று துடிக்கின்றனர். யுத்தம் வெகு மும்முரமாக நடக்கின்றது. என் மனதும் வெகு வேகமாகத் துடிக்கின்றது, ஆதலால் கீர்த்தியும் புகழும் கூவியழைக்கும் அந்த யுத்த களத்திற்குச் செல்லும்படி நீர் உமது காதலனைத் துரிதப்படுத்தி அனுப்பும்! நான் இந்தக் கோட்டை மதில்களை விட்டு வெளியேறு முன், அவன் தவருமல் என்னுடன் சேர்ந்து விடும்படியும் செய்யும். மிகக் கொடிய கஷ்டங்களும் துக்கங்களும் விளையக்கூடிய இந்த யுத்தத்திற்கு நான் மறுபடியும் திரும்பிச் செல்லுமுன், ஒரு கணமாவது என் மனைவியையும் இளங் குழந்தையையும் கண்ணுற்றுவர வேண்டும். இன்றைய தினமே நான் இங்குக் காணப்படும் கடைசித் தினமாக ஏற்பட்டு விடலாம். ஆதலால் நான் அவர்களிடம் விடைபெறவேண்டும். பரஸ்பரம் கண்ணீர் விட்டுப் பிரிய

வும் வேண்டும்! துரோஜர்களுக்கு விரோதியான ஒரு தெய்வம் இன்றைய தினம் ஹெக்டரை ஒரு கிரேக்கனது கையினுல் கொல்லுவித்து விடலாம் அல்லவா!'' என்ருன்.

அவ்வாறு சொல்லிவிட்டு அவன் இடிந்த மனத்துடன், பின்ஞல் வரப்போவதை முன்ஞலேயே அறிந்தவனைப் போல், தன் வாழ்க்கைத் துணைவியும் தன் பிராணனினும் அதிகப் பிரியமுள்ளவளுமான தன் மனைவியைத் தேடிச் சென்ருன். அவளைத் தனது அரண்மனையிலெல்லாம் தேடினுன். அவளைக் காணவில்லை. அவனது சிரமம் வீணுயிற்று. அவள் தன் எண்ணிறந்தவேலைக்காரிகளில் ஒருத்தியைமாத்திரம் துணையாகக்கொண்டு, தன் கணவனுக்கு அடுத்தபடியாகத் தனது அன்பிற்கும் ஆனந்தத்திற்கும் காரணனுன தனது இளங் குழவியும், ட்ராய் நாட்டாரின் பெருமையைப் பிற்காலத்தில் நிலைநிறுத்துவான் விருத்தி செய்வான்! என்று எல்லோருடைய நம்பிக்கைக்கும் ஆளாகவிருந்தவனுமான அஸ்தியநாக்ஷன் என்பவனுடன் அந்த அரண்மனையை விட்டு அகன்று வானளாவிய இலியனது உயர்ந்த மண்டபத்துக்குச் சென்று அங்கு வெகு கவலையுடன் நின்றுகொண்டிருந்தாள். அங்கு தன் முன்ஞல் நடந்து வந்த யுத்தத்தையும் கோரமான காட்சிகளையும் கவனித்து அவள் ஏங்கி நின்றுகொண்டிருந்தாள். தன் கணவனது திருவுருவம் விளங்குகின்றதா! என்று அங்கு தோன்றிய வீரர்களது உருவங்களை வெகு கவலையுடன் சோதித்த வண்ணமேயிருந்தாள். அவ்வுருவம் தென்படாமையால் அவளது சிரமம் வீணேயாயிற்று!

தன் நாட்டார் காயம்பட்டு இரத்தத்தை வடித்து வருவதைக் கண்டாள். தானும் தன் கண்ணீரை வடித்தாள். அதனுல் ஒரு பயனும் உண்டாகவில்லை!! இது நிற்க.

எவளது அழகானது தன்னை அனலிலிட்ட மெழுகைப் போல் உருக்கி விட்டதோ, எவளது கற்பும் ஒழுக்கமும் தன்னை வியக்கச் செய்ததோ, எவளைக் காணவேண்டுமென்று தான் வெகு ஆத்திரத்துடன் ஓடி வந்தானே, அவளைக் காணப்பெருத வீரன் அந்தக் கோட்டையின் வாயில்களில் நின்றுகொண்டு "அவள் எந்த வழியில் சென்ருள்? நமது நகரத்துப் பெரும் பெண்டிரெல்லாம் சற்று முன்பாக அழுதுகொண்டு கோவிலுக்குச் சென்றனரே! அவர்களையே பின்பற்றிச் சென்றனளோ? அல்லது ட்ராய் அரண்மனைகளிலுள்ள தன் தோழிமார்களையும் சகோதரிகளையும் தேடிக் கொண்டு சென்றனளோ?'' என்று வினவினுன்.

அப்போது அந்த அணங்கின் பரிஜனங்கள் "கோட்டைக்கும் போகவில்லை. மினர்வாவின் க்ஷேத்திரத்திற்குச் சென்ற பெரும் பெண்டீர் குழாத்தில் சேர்ந்து கொள்ளவும் இல்லை! இன்று யாருக்கு வெற்றி, யாருக்குத் தோல்வியென்பதை அறியவேண்டுமென்ற ஆவல் கொண்டு எங்கள் தலைவி இலியனின் உயர்ந்த செங்குத்தான கோபுரத்திற்குச் சென்ருர்கள்! கிரேக்கர்கள் தங்கள்

வாள்களுடன் வருவதைக்கண்டு ட்ராய் வீரர்கள் ஓட்டம் பிடித்தனர் என்று கேள்வியுற்று, எங்களது அம்மை தம்மை விட்டுப் பிரிந்துச் சென்ற தமது பிராண நாதருக்கு என்ன ஆபத்து வந்து விட்டதோ என்று பயந்து நடுங்கினுர்கள். இந்தச் சங்கதியைக் கேட்டு, இது இப்படியும் இருக்குமா! என்று ஆச்சரியம்பட்டு ஒன்றுந் தோன்ருதவராய் மனங்கலங்கிப் பதறினர். காற்ருய் பறந்தார். அவரது முகத்தில் பயக்குறியும் துக்கமும் நிறைந்திருந்தன. ட்ராய் நாட்டாரின் பெருமையை மேன்மேலும் அபிவிருத்தி செய்வான் என்று தாங்கள் நம்பிவரும் இளங்குழந்தையான அஸ்தியனுக்ஷனேயும் எடுத்துக்கொண்டு ஒரு தாதியுடன் சென்ருர்கள்'' என்றனர்.

இதைக் கேட்டவுடன் ஹெக்டர் சிறிதும் தாமதமின்றித் திரும்பித் தான் வந்த வழியே வெகு விரைவாகச் சென்று, அரண்மனைகள் நிறைந்திருந்த வீதிகளையும் ராஜாக்கள் பவனிவரும் ராஜ பாட்டைகளையும் கடந்து, ஸீயன் கோபுரவாயிலண்டையில் தான் தேடிவந்த தன் மனைவி அழுது புலம்பிக்கொண்டு நிற்பதைக் கண்டான்.

அவனைக் கண்டவுடன் சுந்தரியும் அபகீர்த்தியென்பது சிறிதேனுமில்லாதவளும் அவனது மனைவியும் அயீஷன் என்பவனது செல்வப் புத்திரியுமான அவள் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அவனை நோக்கி வந்தாள்.

அந்த அயீஷன் என்பவன் லீஷியாவிலுள்ள தீபிக்கு அரசனுகவுள்ளவன் விசாலமான நிழலைத்தரும் மரங்களடர்ந்த ஹிப்போக்கஸ் என்னும் பிரதேசத்தின் சர்வாதிகாரியாக விளங்கி வந்தான்.

அப்பொழுது ஹெக்டரின் மனைவியின் தாதி அவளருகே நின்றுகொண்டிருந்தாள். அவளது மார்பின்மேல் அவனது குலத்தின் விளக்காக விளங்கக்கூடியவனும் அவ்வாறு விளங்குவான் என்று எல்லோராலும் எதிர்பார்க்கப்பட்டவனும் அவனது ஏக சந்ததியுமான அவனது புத்திரன் அவளது தோளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சிரித்த முகத்துடன் தொங்கிக்கொண்டிருந்தான். இளங்குழந்தைகளுக்குரிய சகலமான சௌந்தர்யங்களும் லாவண்ணியங்களும் அவன் முகத்தில் பிரகாசித்து விளங்கின. காலைப்பொழுதைப் பளிச்சென்று விளக்கிச்கொண்டு உதிக்கும் சுக்கிரனைப் போல், அவன் காந்தியுடன் விளங்கினுன். இந்தத் தன் சீமந்த புத்திரனுக்கு அதிபுனிதமான சியமந்திர நதியின் பெயரை நினைத்து, சியமந்திரியஸ் என்று ஹெக்டர் நாமகரணம் செய்திருந்தான். தங்களது நகரின் ரக்ஷகனது புத்திரனுன அக் குழந்தைக்கு துரோஜர்கள் அஸ்தியனுக்ஷன் என்று காரணப் பெயரிட்டிருந்தனர்.

அவர்களைக் கண்டவுடன் அந்த மகாவீரன் மௌனமாய்ப் புன்னகை செய்து சந்தோஷித்தான். தன் வீர சூர பராக்கிரமங்

களையும் மன உறுதியையும் அறவே மறந்தான். ஒரு நொடியில் அன்பும் இரக்கமும் கருணையும் உடையவனுய் மாறிவிட்டான். அப்பொழுது கட்டழகியான அவனது இல்லக்கிழத்தி அவனை மிகுந்த கவலையுடன் நிமிர்ந்து பார்த்தாள். ஒரு நோக்கு நோக்கினுள். அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டாள். அதன்பின் தன் தலையைக் குனிந்து கொண்டு அதிதுக்கத்துடன் அடியில் வரும் வசனங்களையுரைத்தாள். அப்பொழுது அவளது மார்பு துக்கக்குறிகளுடன் பெருமூச்சு விட்டுக்கொண்டு துடித்தது. அவள் விம்மி விம்மி அழுதாள்; நடுங்கினுள். அவளுடைய கண்களில் பெருத்த நீர்த்துளிகள் ததும்பிக் கொன்டு நின்றன:

"இளவரசே! தாங்கள் இவ்வாறு துணிவு கொள்ளலாமா? ஐயோ உமக்கு ஏன் இந்த ஆத்திரம், எங்கு ஓடுகின்றீர்கள்? உமக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களும் இடையூறுகளும் எத்திறத்தன என்பதை அறிவீரா? தங்கள் மனைவியையும் மகனையும் இவ்வாறு மறந்து விடலாமா? தங்களை இழந்தபின் எங்களது நிலை எவ்வளவு பரிதாபமாக ஆகிவிடும் என்பதை நீர் யோசித்தீரா? நான் ஒரு தலையில்லாத முண்டமாகவும் இவன் கதியற்ற ஒரு அனுதையுமாக அல்லவோ ஆகி விடுவோம்!

இவ்வளவு துணிவுள்ளவர்களுக்கு ஆயுள் கண்டிப்பாய் குறுகிவிடும் என்பதில் ஐயமில்லை! அது நிச்சயந்தான்; தாங்கள் மடிந்தே போவீர்கள். தங்கள் அருங்குணங்களுக்கே தாங்கள் பலியாகி விடுவீர்கள். தங்கள் குணங்களே தங்களுக்குக் கெடுதியுண்டாக்கிவிடும். பாரிஸுக்குப் பரிந்து சென்று தனித் தனியாய் பொருத வீரர்கள் அனைவரும் மாண்டே போயினர்! அவர்கள் சிரமங்களெல்லாம் வீணேயாயின. இப்பொழுது திரளான வீரர்கள் தங்களொருவரையே எதிர்பார்த்து வருகின்றனர். தாங்கள் மடிந்தே போவீர்கள் என்பதில் என்ன சந்தேகம்? ஆஹா தெய்வங்களே! எனக்கு ஒரே ஒரு கிருபை செய்யுங்கள். அது என்னவெனில் சொல்லுவேன், கேளுங்கள். ஹெக்டருக்கு ஆபத்து வருவதற்குமுன் என்னை மண்ணில் மறைத்துப் புதைத்து விடுங்கள். அது ஒன்றே நான் கோருவது. கஷ்டப்படுவதற்காகவே பிறந்து வாழ்நாளெல்லாம் சிறிதும் வேறுபாடில்லாமல் ஒரே ரீதியாய் கஷ்டத்தையே அனுபவித்துக் கஷ்டத்திலேயே என் ஜன்மம் முடியட்டும்! என் கஷ்டங்களை நான் இப்பொழுது யாருடன் சொல்லியாறுவேன். உன் கஷ்டத்தின் ஒரு பாகத்தை நான் தாங்கிக் கொள்ளுகின்றேன் என்று சொல்ல இப்போது என்னைப் பெற்றவர்கள் ஒருவருமேயில்லை! என் தகப்பனுரது உதவியா தாயாரின் பிரியமான ஆதரவா எனக்கு இப்பொழுது இல்லாமல் போய்விட்டதே! கொடியவனுன அகிலேசன் எங்கள் கோட்டைகளுக்கு நெருப்பு வைத்துக் கொளுத்தினுன்! தீபியைப் பாழாக்கினுன். மகாவீரரான என் தந்தையையும் கொன்ருன். இவ்வாறு இரக்கம் சிறிதுமின்றி என் தந்தையை வென்று ஜெயசீலனுக விளங்கினுன் என்ருலும், அவன் என் தந்தைக்கு நேரிட்ட கதியைக் கண்டு இரங்கினுன். அவருக்கு மரியாதைக் குறைவு ஒன்றும் செய்ய

வில்லை. யுத்தத்தில் பிராணனை விட்ட அவரை அவன் வெகு வாகக் கொண்டாடினான். அவருடைய பிரேதத்தை மற்றைய வீரர்கள் தொடாமல் காப்பாற்றினான். அதைச் சிதையின்மேல் முறைப்படி வைத்துத் தகனமும் செய்தான்.

பின்பு அவ்வாறு அவரது உடல் தகனம் செய்யப்பட்ட இடத்தில், அவன் அவருக்கு மலை போன்ற ஒரு சமாதியையும் கட்டினான். அவ்வாறு கிராமாந்திரத்தில் கட்டப்பட்ட சமாதியை வன தேவதைகளெல்லாம் அலங்கரித்தனர். ஜோவ் தேவரின் புத்திரிகளான அந்த வன தேவதைகள் தங்கள் வன விருக்ஷங்களை அங்கு கொண்டுவந்து நட்டனர். அவற்றின் நிழலில் அவரது பெருமை மேன்மேலும் விருத்தியாய்க் கொண்டு வருகின்றது. அம் மரங்களும் அவரது பெருமையையே காரியமாகக் கொண்டு வளர்ந்து வருகின்றன.

அந்த வீரனது கையினாலேயே வீரர்களான என் ஏழு சகோதரர்களும் மடிந்து வீழ்ந்தனர். அனைவரும் ஒரே கெட்ட நாளிற் நரகலோக வாயிலிற் புகுந்தனர். கொழுத்த மாடுகளையும், பனிபோல் வெளுத்த ஆடுகளையும் மேய்த்துக் கொண்டிருக்கையில் அதிர்ஷ்ட ஹீனர்களான அந்த வீரர்கள் அந்த மந்தை வெளிகளிலேயே தங்களது இரத்தத்தை வடித்தனர்.

காடுகளும் வனங்களும் நிறைந்த ஹிப்போப்பிளேஸியாவின் ராணியாகவேயிருந்தும், என் அன்னையானவர் ஜயகோலங் கொண்டவனால் பிடிக்கப்பட்டுச் சிறைவாசமுஞ் செய்துவந்தார். அவர் கடைசியாய் விடுதலையடைந்தாரென்றாலும், தான் யதேச்சையாய் ஆண்டு அனுபவித்து வந்த தன் ரம்மியமான ராஜ்யத்தையாவது தான் பிறந்த நாட்டு மைதானங்களையாவது திரும்பிப் பார்க்கவில்லை. அந்த பாக்கியம் அவருக்கு இல்லாமல் போய் விட்டது. தன் வாழ்க்கையில் மேன்மேலும் தனக்கு உண்டான கஷ்டங்களை நினைத்து மனமுருகிக் கடைசியாய் அவர் தயானா தேவியின் வில்லுக்கு இரையாகிவிட்டார்.

ஆனால் என் ஹெக்டர் மாத்திரம் உயிரோடிருப்பாரானால், அந்த ஹெக்டரான தாங்களே என் தந்தையையும் தாயும் உடன் பிறந்தாரும் ஆகிய சகலமும் ஆவீர்களன்றோ! தந்தையையும் தாயையும் உடன் பிறந்தாரையும் இழந்து விட்ட நான் தங்களைக்கண்டு என் மனத்தைத் தேற்றிக் கொள்ளுவேனே! ஐயோ தெய்வமே! எனது ஹெக்டரும் மடிந்து விழுந்து விட்டால் இதற்கு முன் என் தாயும் தந்தையும் சகோதரர்களும் இறந்து போனது பொய், இப்போது தான் அவர்கள் இறந்தது மெய், அவர்கள் இரண்டாந்தரம் இறந்து விட்டனர் என்றல்லவா ஆகிவிடும்? அப்பொழுது தங்கள் மனைவியும் இளங்குழவியும் அனாதைகளாகவல்லவோ ஆகிவிடுவார்கள்? தங்களுக்கு உண்டாகும் ஆபத்து அவர்களையும் சூழ்ந்துகொண்டு விடுமே! ஆஹா நீர் ஒரு குலமகளுக்குக் கண

வ்னும் குழந்தைக்கு தந்தையுமாக உயிருடனிருந்து எங்களிரு வரையும் காப்பாற்றி வரமாட்டீரா?

அதோ அங்கே ட்ராய் மதிலேச் சார்ந்து அதிபயங்கரமாக அடர்ந்து நிற்கும் அத்தி மரங்கள் உள்ள இடத்தில் தான் நம் சேனைகளைக் கிரேக்கர்கள் அதி சாமார்த்தியத்துடன் வெகு மும்முர மாகத் தாக்கி வருத்தி வருகின்றனர். இந்தக் கோபுரத்தில் இருந்த வண்ணம் தாங்கள் இந்த முக்கியமான இடத்தைக் காத்து வாருங்கள். அதோ அங்கு ஆகமனன் தன் பயங்கர ஸ்வரூபிகளான ஆட்களைச் சுட்டிக் காட்டிக் கொண்டு நிற்கின்ருன். திடிதீசனும் அஜாக்ஷனும் அந்த இடைவெளியை ஆக்ரமித்துக் கைப்பற்ற மிகவும் முயன்று முன் வருகின்றனர். அந்தப் பழிகாரனை ஸ்பராட்டனும் துடிக்கின்ருன்! அலைகளைப்போல் திரண்டு வரும் தன் ஆட்களைத் தனக்கு முன்ஞல் துரத்துகின்ருன்! நெருப்புக் காடுகள் கொளுத்துகின்கிருன்! இந்த யுத்தத்தில் தங்களுக்குத் தான் ஜயம் என்ற திடமான நம்பிக்கையினுலோ, அல்லது தேவர்களது ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டவர்களாகவோ அதி தைரிய சாலிகளாக நம் சத்துருக்கள் நம்மை இவ்வாறு மும்முறையும் வெகு மும்முரமாகத் தாக்கியடித்து விட்டனர். என் பிரியமுள்ள ஹெக்டரே! தாங்கள் இங்கு இருந்த வண்ணமே இந்த ட்ராயைக் காத்து வாருங்கள். மற்றைய வீரர்கள் ஆயுதங்களணிந்து இந்த யுத்தகளஞ் சென்று இந்தப் போரை புரியட்டும்!'' என்ருள்.

அதைக் கேட்ட அந்த வீரன் ''நங்காய்! நான் இந்த இடத்தை நிச்சயமாய்க் கண்ணுங்கருத்துமாய் காத்தே வருவேன், அதைப்பற்றி நீ கவலைப் படவேண்டாம். அதை மாத்திரமன்றி இந்த யுத்த சம்பந்தமான சகல காரியங்களையுமே நான் கவனித்து வருவேன்.

பேருங் கீர்த்தியும் தரத்தக்க இந்தப் போர்க்களத்தை விட்டு ஹெக்டர் ஓடி விட்டால் அப்பொழுது ஆயுதப் பயிற்சியில் வல்லவர்களென்று புகழெய்திய ட்ராய் மக்களும் நிலத்தைப் பெருக்கிக்கொண்டு இழையும் வஸ்திரங்களை யணிந்து வரும் பெருமிதங்கொண்ட பெருமாட்டிகளும் செல்விகளும் என்னை எவ்வளவோ இகழ்ந்து பேசுவார்களே! நான் முன்ஞளில் சம்பாதித்துள்ள புகழை இழித்துக் கூறுவார்களே! யுத்தங்களுக்குச் சம்பந்தப்பட்ட கடினமான வித்தைகளனைத்தையும் நான் என் இளமையில் வெகுவாய்ச் சிரமப்பட்டு பயின்றேன். இப்பொழுது யுத்தங்கள் நிகழும் களங்களுக்கு விரைந்து முன் செல் என்று மனது என்னை முன்ஞல் உந்தித் தள்ளுகின்றது.

நமது ராஜ்யத்திற்கும் என் தந்தையின் பெருமைகளுக்கும் என் கீர்த்திப் பிரதாபங்களுக்கும் ஒரு விதமான குறைவும் நேரிடாமல் காத்து வர வேண்டியது இப்பொழுது என் கடனுகை விருக்கின்றது. அக்காரியங்களைச் செய்வதற்காக நான் இந்தப்

போர் முனையின் முன்னணியில் நிற்க வேண்டியவனாக இருக்கின்றேன். ஆதலால் நீ எனக்கு மறுக்காமல் விடை தரல் வேண்டும்.

இச்சமயம் நான் உனக்கு ஒரு வார்த்தை சொல்லுகின்றேன் கேள். காரியங்களெல்லாம் விதிப்படி நடந்தே தீரும். அவைகளை ஒருவராலும் தடுக்க முடியாது! அந்த வார்த்தைகளை என் நாக்கு உச்சரிக்கையில் எனது மனது நடுங்கத்தான் நடுங்குகின்றது! அந்த நடுக்கத்தை வர்ணிக்கவும் என்னால் ஆகாது! நகரங்களுக்கெல்லாம் ராஜன் என்று விளங்கி வரும் ட்ராய் நகரே! நீயும் உன் தலையைக் குனிய வேண்டிய நாள் வரவே வரும்! அது வராமல் நில்லாது! உன் வீரர்களெல்லாம் மடிந்து போவார்கள். உன் பெருமைகளுக்கெல்லாம் சிறுமை உண்டாகும். அவையனைத்தும் அழிந்தே போகும்!

என்றாலும் எனது ஆந்திரமகீ! அவையொன்றையும் நினைத்து எந்தன் மனது புண்ணாகவில்லை. நடுங்கவில்லை! என் தாயின் தேகவியோகமோ, என் இனத்தாரின் நாசமோ, நரைத் தலையரான பிரியமகாராஜர் படுகாயம்பட்டு இரத்த வெள்ளத்தில் தத்தளிப்பதோ, என் சகலமான சகோதரர்களும் திணறிக்கொண்டு கடற்கரையில் கிடப்பதோ எனக்குப் பெருந்துக்கத்தை உண்டாக்கி விடாது. உனக்கு உண்டாகக் கூடிய கஷ்டங்களை நினைத்துத்தான் எனக்கு அளவற்ற பெருங்கவலைகள் உண்டாகியிருக்கின்றன. உனக்கு என்ன துக்கங்கள் உண்டாகுமோ என்றே நான் நடுங்குகின்றேன்! அவர்கள் உன்னைச் சிறைப்பிடித்துச் செல்வார்களே, அப்போது நீ நடுங்கிக் கொண்டும் புலம்பிக் கொண்டும் செல்வாயே என்று பயப்படுகின்றேன். அவ்வாறு அவர்கள் என் கண் முன்னால் நான் காணும் படியும் செய்வார்களே என்று நினைக்கின்றேன். அவ்வாறு அவர்கள் செய்வதை நான் பிரத்யக்ஷமாகக் காண்பதாகவும் நினைக்கின்றேன். ஆர்காஸ்காரர்கள் தங்கள் நெசவுத் தறிகளில் வேலை செய்து வருமாறு உன்னை நியமிப்பார்களே! அத்தறிகளில் நம் யுத்தங்களையும் அவைகளில் நாம் பட்ட கஷ்ட நஷ்டங்களையும் உன் பெருந்துக்கங்களையும் சித்திர ரூபமாய் நெய்யும்படி உனக்குக் கட்டளையிடுவார்களே! ஹைப்பீரியத் தீர்த்தத்திலிருந்து சுமக்க முடியாத மிகப்பெரிய பாத்திரங்களில் தண்ணீர் சுமந்து வரும்படி சொல்லுவார்களே! அப்பொழுது நீ உன் கஷ்டங்களைத் தாங்க முடியாமல் என் ஆயுள் குறுகவில்லையே நீடிக்கின்றதே! இந்தச் சுமையைத் தாங்க முடியவில்லையே, இதற்கும் ஒரு முடிவு என்பது இல்லையா என்று கண்ணீர் விட்டுப் புலம்புவாயே, அலறுவாயே, அவர்கள் சிறிதும் இரங்கார்களே, அதோ பார்த்தீர்களா மகாவீரனான ஹெக்டரின் மனைவியை!! என்று உரத்துக் கூவி ஏளனம் செய்து கேலிப்பரிகாசங்களும் செய்வார்களே! அல்லது கர்வங் கொண்ட ஒரு கிரேக்கன் நீர் கண்ணீர் வடிப்பதைக் கண்ணுற்று உனக்குப் பரிந்து வருவோர் ஒருவருமில்லை தன்னை மடக்குவாருமில்லை என்று அறிந்து என் பெயரை உனது காது கேட்கச் சொல்லி உனக்கு ஏற்கனவே உண்டாயிருக்கும்

துக்கங்களை அதிகரித்து விடுவனே! தன்னை மடக்கி மடிப்பாரின்றி அவன் உயிருடனும் வாழ்ந்திருப்பனே! அப்பொழுது எனது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நமது பூர்வத்தில் உண்டாயிருந்த பேரென்ன! கீர்த்தியென்ன! புகழென்ன! இப்பொழுது நேர்ந்து விட்ட அபகீர்த்தியென்ன, கெட்ட பெயரென்ன, இகழ்ச்சியென்ன என்று பல விதமான எண்ணங்கள் உனது மனதில் உதிக்குமே! உனது மனம் புண்ணுகுமே என்றெல்லாம் எண்ணியெண்ணி எனது மனம் புண்ணுகின்றது.

ஆஹா அந்தக் கெட்டநாள் வருமுன் எனது கட்டை குளிர்ந்தே போகவேண்டும்! எனது உடலின்மேல் மண்ணும் மலைபோல் குவிந்துவிடவேண்டும்! அந்த மண்ணில் அழுந்தி நான் அதன் பாரத்தைத் தாங்கி வரவும் வேண்டும். அப்பொழுது உனது ஹெக்டர் அழிவில்லாத நித்திரையில் ஆழ்ந்துகிடப்பான். உனது பெருமூச்சு அவன் காது கொண்டு கேட்கமாட்டான். நீ அழுது புலம்புவதைக் கண்கொண்டு காணவும் மாட்டான்', என்ருன்.

இவ்வாறு சொல்லிய பின்னர், ட்ராய் நகரத்து வீரர் களெல்லாம் சிறந்தவன் என்று பிரசித்திபெற்ற மகா கீர்த்திப் பிரதாபங்களுடன் விளங்கியவனுன ஹெக்டர் அதிலாவண்ணியங் களுடன் விளங்கிய தன் இளங்குழந்தையை நோக்கி அதைப் பிடித்த தனது கைகளை மிகவும் பிரீதியுடன் நீட்டினுள். அப்பொழுது அந்த இளங்குழந்தையானது ஹெக்டரின் தலையில் தகதகவென்று பிரகாசித்துக்கொண்டிருந்த கிரீடத்தையும் அதன் மேல் அசைந்தாடிக்கொண்டிருந்த குஞ்சத்தையும் கண்டு பயந்து, தனது தாதியின் மார்பைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு எழுந்தது, அதைக் கண்ணுற்ற அதன் பெற்ருேர் இருவரும் உள்ளங் களித்து நின்றனர். துன்புற்ற விடத்தும் அன்புடையோர் இன்புறுவது இயல்பன்ருே? தன் மகன் பயந்த காரணத்தை அறிந்து அதைத் தெரிவிக்க நினைத்து ஹெக்டர் தனது நெற்றியில் கட்டப்பட்டிருந்த பயங்கரமான ஆபரணங்களை விரைவாகக் கழற்றினுன். பிரகாசமுள்ள தனது தலை மூடியையும் அவிழ்த்துக் கீழே நிலத்தின்மேல் வைத்தான். பின்பு அவன் அக்குழந்தையை முத்தமிட்டு உயரத்தூக்கிக் கொண்டு அதனை ரக்ஷிக்கவேண்டுமென்று புத்திர வாத்ஸல்யத்துடன் விண்ணுல கிலுள்ள தேவர்களைப் பின்வருமாறு பிரார்த்தித்தான்:—

''விண்ணுலகத்திலுள்ள ஸிம்மாசனத்தில் பொலிவுடன் விளங்கும் தேவரே! அழிவில்லாதவர்களும் பராக்கிரமங்கள் நிறைந்தவர்களுமான சகலமான தேவர்களே! நீங்கள் என் மகனைக் காப்பாற்றுங்கள், ரக்ஷியுங்கள்! தாங்கள் அனைவரும் எனக்கு அளித்தது போலவே, அவனுக்கும் சத்கீர்த்தியை அளியுங்கள். துரோஜர்களைக் காத்துவரவும், அவர்களது ராஜ்யம் சத்துருக்களது கைவசமாகவும் அதை ரக்ஷிக்கவும் தன் தேசத்து வைரிகளுடன் கொடும்போர் புரிந்து வரவும்

"பிற்காலத்தில் தோன்றிய ஹெக்டர்" என்று விளங்குமாறும், அவனுக்கு அனுக்கிரகம் செய்யுங்கள். அவ்வாறு அவன் ஜயசீலனுகவும் மகாவீரனுகவும் மடிந்த வீரர்களின் பிணங்கள் எரிகையில் அவற்றிலிருந்து பறித்துப் பிடுங்கியெடுத்த ஆபரணங் களைக் கையில் கொண்டு வருகையில், அவனைக் காணும் சகல ஜனங்களும் ஒரே மூச்சில் அவனைச் சிலாகித்துச் சுத்த வீரனென்று மதித்து 'இந்த வீரன் தன் தந்தையினும் சிறந்து விளங்குகின் ருன்' என்று கோஷிக்கவேண்டும், அவ்வாறு ட்ராய் ஜனங்கள் ஒரேயடியாய்க் கோஷம் செய்து வருகையில், அவனது தாயும் ஈன்ற பொழுதிற் பெரிதுவக்க வேண்டும். அவளது மனதில் அடங்காத மகிழ்ச்சியுண்டாக வேண்டும். அவளது ஆனந்தம் பொங்கிப் பொழிய வேண்டும்" என்ருன்.

அவ்வாறு பிரார்த்தனைகள் செய்துவிட்டு அவன், அந்தப் பிரார்த்தனைகளைச் செவியுற்று முக மலர்ச்சியுடன் நின்றுகொண் டிருந்த தன் மனைவியின் லாவண்ணியங்களை கண்குளிரக் கவனித்துப்பார்த்து, அதுவரைதான் சுமந்துவந்த தன் வத்ஸனை அவளிடத்தில் கொடுத்தான். அவள் அந்தக் குழந்தை யைத் தன் நறுமணங்கமழும் மார்பின்மேல் சாத்திக்கொண் டாள். தட்டிக்கொடுத்தாள். அதற்கு உண்டாயிருந்த பயத்தைத் தெளிவித்தாள். அதன்பின் அதைப் புன்னகையுடன் பாதாதி கேசம் ஏற இறங்கப் பார்த்தாள். இவ்வாறு கஷ்டகாலத்திலும் சிறிதுபொழுது ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருந்த அவள் தனக்கு இனிமேல் வரவிருந்த துக்கத்தை நினைத்துக் கவலைகொண்டு, புன்முறுவல் செய்த கணமே மனமுருகிக் கண்ணீரும் வடித்தாள்.

அதைக் கண்ணுற்ற அந்த ஆண் மகன் தானு மனமிளகி மிகுந்த அன்பும் கருணைமுடையவனுய் அவனுடைய கண்களி லிருந்து வழிந்துவந்த பாஷ்பங்களைத் துடைத்துப் பின்வரு மாறு உரைத்தான்:—

"ஆந்தரமகீ! என் உயிரின் ஒரு பாதியே! என் ஆத்மாவின் உத்தமபாகமே! நீ ஏன் இவ்வாறு காலம் வருமுன் கவலைப்படுகின்ருய்? உன் மார்பு ஏன் இப்படித் துடிக்கின்றது? சத்துரு ஒருவனுயினும் என் தலைவிதியை அழித்து எழுதி என் ஆயுளைக் குறுக்கி விடமுடியாது! மூச்சுப்பேச்சின்றி நான் மண்ணோடு மண்ணுகப் போகவேண்டுமென்று எனக்கு விதித் துள்ள காலம் வரும்வரை, ஒருவராலும் எனக்கு ஒரு குறைவும் உண்டாகாது! உலகத்திலுள்ள சகலமான ஜீவன்களுக்கும் "ஒருகாலம்" என்பது ஏற்கனவே விதிக்கப்பட்டிருக்கின்றது. நம் ஜன்மமும் அவ்வாறு ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டது தான்! அந்த விதியை எவ்வளவோ பல பராக்கிரமங்கள் உள்ளவர்களும் எதிர்க்க முடியாது! நாம் எங்கேயோடி ஒளிந் தாலும் அதற்குத் தப்பமுடியாது! பயந்தவர்களும் துணிந்தவர் களும் ஆகிய சகலரும் ஒரே ரீதியாய் மண்ணில் அழிந்து போகக்

கூடியவர்களே! இவ்விஷயமாக நான் உனக்கு அதிகமாகச் சொல்லவேண்டுவது ஒன்றும் இல்லை. ஆதலால் நீ நம் வீட்டிற்கு விரைந்துசென்று, அங்கு ஆகவேண்டிய காரியங்களைக் கவனிப்பாய். இராட்டினத்தைச் சுழற்றவோ அல்லது தறியை கவனிக்கவோ செய்வாய்! போர்க்களம் சென்று புகழைச் சம்பாதிக்க வேண்டுவது என் கடன், அதற்காக நான் அங்குச் செல்கின்றேன். அது என்னைக் கூவியழைக்கின்றது. யுத்தகளம் தானே ஆண் மக்களது கர்மபூமி! வீரர்கள் எங்கு பொருகின்றனரோ அங்கு அவர்களெல்லோருக்கும் தலைவனாக நான் விளங்க வேண்டும். எல்லோருக்கும் மேலாகப் பெருங் கீர்த்தியும் சம்பாதிக்கவேண்டும் என்று எப்படி நான் துடிக்கின்றேனோ, அப்படியே நான் சகலமான ஆபத்துக்களுக்கும் ஈடுகொடுத்துக் கொண்டு முன்னணியில் நிற்கவேண்டும்'' என்றான்.

இவ்வாறு சொல்லிய பின் அதிகீர்த்தியுடன் விளங்கிய அந்த வீரன், நாற்புறமும் நிழலைக் குவித்துக் கொண்டிருந்த கொண்டைகளினடியில் கன்னங் கரேலென்று விளங்கும் ஒரு கோபுரம் போன்ற தனது கீரிடத்தைத் திரும்பவும் தன் தலையின் மேல் எடுத்து வைத்துக்கொண்டான்.

அவனது மனைவியான அந்த இளவரசி தனக்கு வரவிருந்த சம்பவங்களையெல்லாம் சிந்தித்துப் பெருமூச்செறிந்து, சிறிதும் மனமின்றி அவனை விட்டுப் பிரிந்தாள். பிரிந்து செல்லுகையில் அவனைத் திரும்ப திரும்பப் பார்த்தாள். அப்படித் திரும்பிப் பார்க்கையில் தாரைதாதரயாகக் கண்ணீரும் வடித்தாள். அதன் பின் மெதுவாய் நகர்ந்து சென்று தனது அரண்மனையை அடைந்து, தனக்கு நேர்ந்துவிட்ட கஷ்டங்களையெல்லாம் உன்னியுன்னிப் பல விதமாகத் துக்கித்தாள். அங்கு இருந்த வண்ணம் அவள் தேவர்களுக்குச் சமானமான அந்தப் புருஷனைக் குறித்து அழுது பிரலாபித்து வருகையில் அவள் பரிவார ஜனங்களனைவரும் அவளிடம் அனுதாபங் கொண்டு தாங்களும் வருந்தினர். புனிதவதிகளான அந்த ஸ்திரீகளனைவரும் அவளது துக்கத்தைத் தங்களது துக்கமாக நினைத்து விம்மியழுது, ஏகோபித்துக் கண்ணீர் வடித்தனர். உயிருடன் இருந்த ஹெக்டர் இறந்து போய் விட்டதாகவே மதித்துத் துக்கம் கொண்டாடினர்.

இது இப்படியிருக்க, இது காறும் தன் பெருமைகளையோ கீர்த்திகளையோ சிறிதும் கவனிக்காமலிருந்த வீரனான பாரிஸ் என்பவன் சட்டென எழுந்து, தன் அரண்மனையை விட்டு வெளியேறி, பளிச்சென்று கண்ணைக்கூசும் கிரணங்களைக் தெரிக்கும் வெண்கலக் கவசங்களையும் ஆயுதங்களையும் தரித்துக் கொண்டு, அந்த நகர வீதிகளின் வழியே ஓடிச்சென்றான். அவன் ஓடிச்சென்றது எப்படி இருந்ததென்றால் சொல்லுவேன் கேளுங்கள்:

நெடுநாள் வரை பெருந் தீனி தின்று கொண்டும் சிறிதேனும் சிரமமான வேலையின்றியும் கொழுத்து திமிர் கொண்டிருந்த

ஒரு குதிரையானது தன் கடிவாளக்கயிறுகளினின்றும் விடுபட்டுத் தொழுவத்தில் துள்ளிக் குதித்துக் கொண்டும், திமிதிமென நிலத்தை இடித்துக்கொண்டும் ஓடுகையில் நிலமானது எப்படிக் கிடுகிடுவென நடுங்குமோ! செல்லமாகப் பெருந்தீனி தின்று கர்வத்துடன் வளர்ந்து வந்த அந்தக் குதிரையானது எப்படிப் பளபளவென்று மின்னிக்கொண்டிருக்கும் தன் இரு அள்ளைகளையும் நக்கிக்கொண்டு, தான் வழக்கப்படி விளையாடி வந்த இடங்களை நோக்கி ஓடுமோ? எப்படி அக்குதிரை தன் பிடரிமயிரானது காற்றினால் அடிபட்டுச் சிக்குண்டு புரண்டு தன் தோள்களின் மேல் பரந்துவிடும்படி சுருக்கிலிருந்து விடுபட்ட தன் தலையை ஆகாயத்தில் உயர்த்திச் தூக்கிக் கொண்டு துள்ளுமோ! அவ்வாறு துள்ளிக்கொண்டு அந்த மைதானத்தில் வெகு தூரத்திலுள்ள பெண் குதிரைகளை நோக்கி ஓடிச்சென்று அவைகளை மோந்து பார்த்து விட்டுக் குதித்துக்கொண்டும் களித்துக்கொண்டும் ஆரவாரஞ் செய்து கொண்டும் தன் களத்திற்கே திரும்பி வந்து விடுமோ அப்படியே இருந்தது பாரிஸின் புறப்பாடு !!

அந்தக் குதிரைக்குச் சமானமான உற்சாகமும் துரிதமும் தைரியமும் மனமகிழ்ச்சியும் கொண்டு, தினகரனைப்போல் கர்ஜிக்கும் ஆயுதங்களுடன் தன் வீர சூர பராக்கிரமங்களில் பூரணமான நம்பிக்கையும் பெருமையும் உடையவனாய், பிரியத்தின் மகனான அந்தப் பாரிஸ் ஹெக்டருடன் புறப்பட்டு அந்த யுத்த களத்திற்கு வேகமாய் ஓடி வந்தான்.

அதைக் கேட்ட அதிகௌரவமுள்ள ஹெக்டர் அவனுக்கு பின்வருமாறு பதிலுரைத்தான் :— "இரத்தப்பற்றினாலும் இப்பொழுது ஆயுதபாணியாக மாறி விட்டதினாலும் நீ எனது உற்ற நேசனாகவே ஆகிவிட்டாய்! யுத்தம் செய்வதில் நீ சமர்த்தன் என்பதை ஒருவரும் மறுக்கவில்லை. உனது தைரியம் உலகப் பிரஸித்தமானது. உனது உடல் வலிவும் பெரிதென்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். என்றாலும் இவ்வளவு தைரியமுள்ள ஒரு ஆத்மாவானது சோம்பியிருக்கின்றதே என்றுதான் எல்லோரும் ஏங்கினார்கள்! ஒரு தெய்வத்திற்குச் சமானமான பாரிஸ் கேவலம் ஒரு நாரியின் பரிசாரகனாக மாறி விட்டானே! உயிருடன் இருக்கின்றானே என்றுதான் எல்லோரும் மனம் வாடினர்! துரோஜர்கள் சொல்லும் சொற்களைக்கேட்டு, என் மனது இரத்தத்தையே வடிக்கின்றது. நீ இனிமேல் செய்யக்கூடிய சாகஸச் செய்கையினால் அந்த அழுக்கைத் துடைத்துவிடுவாய் என்றே நான் மனப்பூர்வமாக நம்புகின்றேன். ஆதலால் விரைவாக வா! அவர்கள் செய்துவரும் பெருங்காரியங்களிலெல்லாம் சேர்ந்து உன்னாலானதையெல்லாம் செய். அவர்கள் உன்னிமித்தம் பெருத்த கஷ்டங்களை அனுபவித்து வருகின்றனர்.

நாம் நம் கிண்ணங்களில் மதுவை நிரப்பி அவற்றைத் தேவர்களுக்குச் சமர்ப்பித்து "இந்தக் கஷ்டங்கள் தீர வேண்டும்!

இவற்றினின்றும் நாம் விடுதலையடைய வேண்டும் என்று பிரார்த்தித்தால் ஜோவ் தேவரது கிருபையினால் இந்தக் கஷ்டங்கள் விலகியே போய்விடும். நம் சத்துருக்களான கிரேக்கர்கள் "இந்த யுத்தத்தில் நமக்குக் கிடைக்க வேண்டியதான வெற்றி நம்மை ஏமாற்றிவிட்டதே!" என்று அழுது புலம்புவார்கள். எரிச்சலுடன் கடலைக்கடந்து வந்த வழியே திரும்பிச் சென்று விடுவார்கள்!" என்றான்.

—:o:—

## பாகம் II

## ஏழாம் அத்தியாயம்

# ஹெக்டரும் அஜாக்ஷனும் புரிந்த யுத்தம்

**கதைச் சுருக்கம் :—** ஹெக்டர் திரும்பி வந்தபின், யுத்த மானது இரு மடங்கு மும்முரமாக ஆரம்பித்து விட்டது. அதனுல் மினர்வா தேவியானவள், கிரேக்கர்களது க்ஷேமத்தைப் பற்றிக் கவலை கொள்ளுகின்ருள். அவள் ஒலிம்பஸ்ஸிலிருந்து இறங்கிச் செல்வதைக் கண்ணுற்று, அப்பால்லோதேவர் அவளை லீயன் கோட்டை வாசலில் சந்திக்கின்ருர். அவர்கள் இருவரும் கலந்து பேசிக் கொண்டு, அன்றைய தினம், இருதிறத்துச் சேனைகளும் ஒன்ருேடொன்று சண்டையிடுவதை நிறுத்திவிட வேண்டும் என்றும், கிரேக்க வீரர்களுடன் தனித்தனியாய்ப் போர் புரியும்படி ஹெக்டரைத் தூண்டிவிட வேண்டும் என்றும், ஒப்பந்தம் செய்து கொள்ளுகின்றனர். கிரேக்க ராஜ குமாரர்களில் ஒன்பது பேர்கள் அவ்வாறு துவந்த யுத்தம் செய்ய ஒப்புக் கொள்ளுகின் றனர். அதன்பின் அவர்கள் இந்த யுத்தத்தில் யாரை யார் முதலில் போர் புரிவதென்பதை நிச்சயிப்பதற்காகச் சீட்டுப் போடு கின்றனர். அந்தச் சீட்டு அஜாக்ஷனுக்கு விழுகின்றது. ஆகவே ஹெக்டரும் அஜாக்ஷனுமாகிய இரண்டு வீரர்களும் பன் முறையும் ஒருவரை யொருவர் தாக்குகின்றனர். அஸ்தமித்து விடுகின்றது. அப்போது அவர்கள் யுத்தத்தை நிறுத்தி விட்டுப் பிரிந்து விடுகின்றனர். அன்று இரவில் அந்தினுர் என்பவர் துரோஜர்கள் அனைவரையும் ஒன்று கூட்டி ஸபையில், நாம் ஹெலனைக் கிரேக்கர்களிடம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்! என்று சொல்லுகின்ருர். அந்த யோசனைக்குப் பாரிஸ் இணங்க வில்லை ; 'நான் அவளை விடமாட்டேன். அவளது ஆடை ஆபரணங்களை வேண்டுமானுல் திருப்பிக் கொடுத்து விடுகின் றேன்!' என்கின்ருன்.

இந்தச் செய்தியை கிரேக்கர்களுக்கு அறிவிக்கவும், இறந்துப் போனவர்களைத் தகனம் செய்யும் வரை யுத்தத்தை நிறுத்தவும் அவர்களது அனுமதியைப் பெற்று வரும்படி, ஒரு தூதனைப் பிரியம் மஹாராஜன் அனுப்புகின்ருர். ஆகமனன் ஹெலனது நகைகளைத் திருப்பி வாங்கிக் கொள்ள மறுத்து விடு கின்ருன். பிணங்களை எரிக்கும் மட்டும் யுத்தத்தை நிறுத்த மாத்திரம் ஒப்புக் கொள்ளுகின்ருன். தகனக் கிரியைகளெல்லாம் முடிந்தானபின், கிரேக்கர்களனைவரும், நெஸ்டார் சொல்லியபடி தங்கள் கப்பல்களையும், தங்கள் பாளையம் இறங்கி இருந்த இடத்தையும் காப்பதற்காக, நாற்புறமும், கோபுரங்களும் அகழும் வேலியுங் கொண்ட ஒரு கோட்டையைக் கட்டுகின்றனர்.

இதைக் கண்ணுற்ற நெப்தியூன் பகவானுக்குப் பொருமை உண்டாகி விடுகின்றது. அவரை ஜூப்பிடர் பகவான் சமாதானப் படுத்துகின்ருர். அன்றிரவு இரண்டு சேனைகளும், விசேஷமாக அன்னபானுதிகளை யருந்திக் களித்து வருகின்றனர். அப்பொழுது ஜூப்பிடர் பகவான், இடி மின்னல்களையும், வேறு பயங்கரமான தோற்றங்களையும் உண்டாக்கித் தமக்குத் துரோஜர்களிடம் கோபம் தான் என்பதை வெளிப்படையாகத் தெரிவித்து, அவர் களுக்கு அதைரியத்தை உண்டாக்குகின்ருர்.

இந்த இருபத்து மூன்று நாள் யுத்தமானது ஹெக்டர் அஜாக்ஷர்களுடைய துவந்த யுத்தத்துடன் முடிகின்றது. அடுத்த தினத்தில் இருதிறத்தாரும் ஒப்புக் கொண்டபடி யுத்தம் நிறுத்தப்படுகின்றது, அதற்குப்பின் ஒருநாளெல்லாம் இறந்தவர் களுக்கு ஈமக்கடன்கள் செய்யப்படுகின்றன. பின்னும் ஒரு தினத்தில் கப்பல்களுக்கு முன்பாகக் கோட்டை கொத்தளங்கள் கட்டப்படுகின்றன. ஆகவே ஏறக் குறைய மூன்று தினங்கள் நடந்த காரியங்கள், இந்த அத்தியாயத்தில் சொல்லப்படு கின்றன.

இவை யனைத்தும் யுத்த களத்திலேயே நிகழ்கின்றன.

---

துரோஜர்களது இராஜ்யத்தின் காவலனுன வீரன் இவ் வாறு சொல்லிவிட்டு வெகு வேகமாக லீயன் கோட்டை வாசலின் வழியே ஓட்டமாக ஓடினுன். அப்பொழுது அனைவரும் பயந்து அலறிக் கதறினுர்கள். பாரிஸும் தன் உடன் பிறந்தானைப் பின் தொடர்ந்தான். அவர்கள் இருவரும் தங்கள் சத்துருக்களை வதைத்தே விடுகின்றது என்று பொங்கிப் பொழிந்த பெருமூச்சும் ஆவேசமும் கொண்டவர்களாகவும், தங்கள் ஆயுத வல்லமை யைக் காட்டியே தீர்ப்பது என்ற நிச்சயம்கொண்டவர்களாகவும், அங்கு வந்து சேர்ந்தனர். அவர்களது தோற்றம் அப்போது எவ்வாறு இருந்ததென்ருல், சொல்லுகிறேன் கேளுங்கள் :— ஒரு பெருங்கடலில் யாத்திரை செய்யும் பிரயாணிகள், வெகு நாளாகத் தங்கள் துடுப்புக்களை வலித்து வந்தும், மறு கரை காணுமல் களைத்தும், தங்கள் சிரமம் அத்தனையும் வீணுனதைக் கண்டு கலங்கியும் இருக்கையில் ஜோவ்பகவனுனவர் அவர் களுக்கு இரங்கி, அவர்களுக்கு அனுகூலமாக அடிக்கும்படித் தமது வாயு கணங்களை அனுப்பி விட்டால், அப்பொழுது அந்தக் காற்றுகள் ரம்மியமாக அடித்துவர அவர்களுடைய மரக் கலங்கள் எவ்வாறு பறக்குமோ அவ்வாறு இவ்விரு வீரர்களின் வரு கையை எதிர் பார்த்து ஏங்கிக் கிடந்த ட்ராய் மக்கள் உற்சாகங் கொண்டு புத்துயிர் பெற்றனர். அவர்களனைவரும் மனவெழுச்சி யுடன் கிளம்பவே, அதுவரை நின்றிருந்த யுத்தம் திரும்பவும் ஆரம்பித்து விட்டது.

அவ்வாறு திரும்பவும் ஆரம்பமான நரபலியில் முதன் முதலாக மஹானுன மெனிங்கியஸ் என்பவன், தைரியசாலியான பாரிஸினுல் வதையுண்டான் ; அவன் அரித்தூஸ் என்பவனுக்கு அழகிற் சிறந்த பிலோமிதாவினிடம் பிறந்தவன், அழகுடன் விளங்கும் ஆரணிப் பிரதேசமே அவனது ஜன்மபூமி.

அவனுக்குப் பின், அயோனியஸ் என்பவன் இருள் சூழ்ந்த பாதாள உலகுக்குள் மறைந்து சென்றுன். ஹெக்டர் ஓங்கி யடித்த ஒரு கனமான அடியானது உருக்கினுல் செய்யப்பட்டிருந்த அவனது கவசத்தையும் பிளந்து கொண்டு, அவனது கழுத்தின் மேல் பளிச் சென்று விழவே, அவன் தன் அவயங்களை நீட்டிக் கொண்டு தரையின் மேல் கட கடவென்று உருண்டு புரண்டான்.

கிளாக்கஸின் வேலாயுதத்தினுல் தாக்குண்ட அதி தைரிய வானுன இபிநூஸ் என்பவன், தனது இரத்தத்தை வடித்தான். அவன் தன் குதிரைகளின் மேல் ஏறுகையில், கிளாக்கஸின் வேலாயுதமானது அவனது தோளிற் பாய்ந்து அங்கேயே ஊன் றிக்கொண்டு நின்று விட்டதால், அவன் தலை குப்புறக் கீழே விழுந்தான். அவனுடைய நரம்புகள் தளர்ந்து, அறுபட்டன. அவனுடைய அவயங்களும் சிறிதும் பயனிலவாய்ப் பொத் தெனத் தரையில் விழுந்தான்.

இவ்வாறு தன் ஆர்கிவ் ஜனங்கள் அழிந்து போவதைக் கண்ட மினர்வா தேவியானவள் அதி விசாலமான ஒலிம்பஸி லிருந்து இறங்கி, பளிச்சென்று மின்னும் பூமண்டலத்தை நோக்கி வெகு வேகத்துடனும், கோபத்துடனும் ஓடி வந்தாள். அவ் வாறு அவள் ஓடிவருவதைக் கண்ணுற்ற அப்பால்லோதேவரும், இலியனது உன்னதமான கோபுரத்திலிருந்து இறங்கி அவளுக்குக் குறையாத வேகத்துடன் ஓர் அம்பைப் போல் விரைந்து, ஓட்ட மாக ஓடி வந்தார். அதி தேஜஸ்விகளான அவ்விருவரும் ஒரு பீச் மரத்தின் நிழலில் ஒருவரை யொருவர் வெகு ஆத்திரத்துடன் சந்தித்தனர்.

அப்போது அப்பால்லோ தேவரானவர் நீலாயதாக்ஷியை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

“ஸர்வ வல்லமையுள்ள ஜோவ் தேவரின் புதல்வியே! என்ன காரணத்தை முன்னிட்டுத் தாங்கள் இவ்வாறு தங்களது விண்ணுலக வாஸஸ்தலங்களை விட்டுவிட்டு ஆத்திரத்துடன் வருகின்றீர்கள். தங்களுக்கு என்ன ஆபத்து வந்து விட்டது? இறக்கை கட்டிக் கொண்டு காற்றுகப் பறக்கின்றீர்கள். இன்று வெகு நேரம் நின்றிருந்த இந்த யுத்தமானது மறுபடியும் இப் பொழுது ஆரம்பித்திருக்கின்றது. இன்றைக்கு மீந்துள்ள பகற் பொழுதில் கிரேக்கர்களுக்கே ஜயத்தைத் தர வேண்டு மென்ற ஆவலுடன்தான் தாங்கள் தலைகால் தெரியாமல் இவ்வாறு ஓடு கின்றீர்களா? தங்களது பகையினுல் விளைந்த பயனை இதுவரை

ட்ராயானது அனுபவித்தது போதாதா? அளவுக்கு மிஞ்சின பயனையே அது இதுவரை அனுபவித்து ஆய்விட்டதே! இப்பொழு தாவது தாங்கள் சாந்தமடைந்து, தங்களது பகையையும் ஒழித்து விடுங்கள், கொடிய வாதத்தையும், தாக்குகளையும் நிறுத்திவிடுங் கள். இன்றைய தினம் யுத்த காரியங்களை நிறுத்திவிடுங்கள். வெகு சீக்கிரத்தில் இது மறுபடியும் கிளம்பவே கிளம்பும். மகத் தான இலியனும் தலைகுனியும். அதில் சந்தேகமில்லை. அதன் மதில்கள் தேவர்களுடைய கைகளாலேயே கட்டப்பட்டிருந் தாலும், அவற்றைத் தரைமட்டமாக்கியே விடுவோம் என்றும் பழி வாங்கியே விடுவோம் என்றும் ஸகலமான தேவதைகளும் ஒன்று சேர்ந்து கொண்டு கங்கணங்கட்டிக் கொண்டிருக்கின்றனர்'' என்றார்.

ஜோவின் புத்திரியான அந்த தேவி அதைக்கேட்டுப் பின் வருமாறு பதிலுரைத்தாள்:— "நான் இதற்காகத்தான் தேவலோக ஸபையைவிட்டு இங்கு வந்தேன். ஒருவரோடொருவர் மும்முர மாகப் பொருதுவரும் இந்த இருதிறத்துச் சேனைகளையும் சண்டை செய்வதை நிறுத்தும்படிச் செய்ய யாரால் இயலும்? யுத்தத்தி லேயே கண்ணும் கருத்துமாகவிருக்கும் இந்த வீரபுத்திரர்களைச் சாந்தப்படுத்தத் தக்க மாயமும் மந்திரமுந்தான் உண்டோ?'' என்றாள்.

அதைக் கேட்ட அந்த தேவர் இதற்கு நான் ஓர் உபாயம் சொல்லுகிறேன் கேளும். கிரேக்கர்களில் சிறந்தவனுடன் ஒரு வீர னோடு துவந்த யுத்தம் செய்யவேண்டும் என்று மஹானான ஹெக் டரது மனதில் ஓர் ஆத்திரத்தை கிளப்பினீரானால், அதையறிந்து கிரேக்கர்களெல்லாம் சீறிக்கொண்டு புறப்படுவார்கள். தங்கள் கோஷ்டியிலுள்ள வீரர்கள் அனைவரிலும், ஹெக்டருக்கு ஸமான மான ஒரு வீரனைத் தேர்ந்தெடுத்து, அவனை ஹெக்டரின் முன்னால் நிறுத்துவார்கள். அப்போது இந்தப் பெரிய யுத்தம் இன்றைய தினம் நின்றுபோம்'' என்றார்.

இது நல்ல யோசனைதான் என்று மினர்வாதேவி ஒப்புக் கொள்ள, அவ்விரு தேவர்கள் தம்தம் இடங்களுக்குத் திரும்பிச் சென்றனர், அந்தக் களத்தைவிட்டு அகன்றனர்.

ஸர்வகஞ்ஞரான ஹெலினஸுக்கு இவ்வாறு இவ்விரு தேவர்களும் ரஹஸ்யமாகச் செய்துகொண்ட ஒப்பந்தம் தெரிந்து விட்டது. அதியுத்ஸாகத்துடன் ஹெக்டரைத் தேடிச் சென்றார். அவனைக்கண்டு பிடித்தார். அவனை நோக்கித் தமது நிர்மலமான மனதில் தோன்றிய விஷயங்களைப் பின்வருமாறு உரைத்தார்:—

"பிரியத்தின் புத்திரா! நான் சொல்லும் வசனங்களைச் சற்றுக் கவனமாகக் கேள்! நான் உன் மித்திரன்! உன் சகோ தரன். உனக்கு இதத்தையே சொல்லுவேன்! நீ இப்போது இங்கி ருந்து புறப்பட்டுச் சென்று இந்த யுத்தத்தைச் சிறிது பொழுது

நிறுத்தும்படி இருதிறத்துச் சேனைகளுக்கும் போதனை செய். அவர்கள் உன் யோசனையை ஏற்றுக்கொண்ட பின், நம் சத்துருக்களது வர்க்கத்தில் மஹாவீரன் எவனுவது உண்டென்ருல் அவன் உன்னுடன் துவந்த யுத்தம் செய்யலாம்!'' என்று உரத்துக் கூவு! இன்றைய தினம் உனக்கு ஒரு விதமான தீங்கும் உண்டாகாது. உன் புகழுக்கும் ஒருவிதமான அழிவும் உண்டாகாது. இது தேவர் ரகஸ்யம், இதை நான் அறிவேன். தேவர்களது வாக்குப் பொய்க்காது. அவர்கள் விதித்தபடியே காரியங்கள் நடக்குமல்லவா'' என்ருர்.

அதைக் கேட்டு அந்த வீரன் மிகவும் மகிழ்ந்து தன் வேலாயுதத்தை எடுத்து, அதை அதன் மத்தியில் குறுக்காகப் பிடித்துக்கொண்டு, அணி அணியாகவும் திரைகள் போலவும் திரண்டுவந்த ட்ராய் நகரத்து இளங்காளைகளை முன்செல்லவொட்டாமல் தடுத்து நிறுத்தினுன். இரு கட்சியிலுமிருந்த சேனைகள் அவனுடைய இருபுறங்களிலும் பிரிந்து நின்றன. இவன் என்ன சொல்லப்போகிருன்! என்ன செய்யப் போகின்ருன். அதைக் கேட்போம், அதைப் பார்ப்போம்! என்று துரோஜர்கள் அவனைக் கவனித்துக்கொண்டு நின்றனர். மஹானுன ஆகமனன் தன்னுடைய கிரேக்கர்களை நோக்கிப் "பொறுமையுடன் இருங்கள். ஆத்திரப்படவேண்டாம்'' என்ருன். அவர்களும் ஆரவாரஞ் செய்வதை நிறுத்திவிட்டு சுவாசம் மாத்திரம் விட்டுக்கொண்டு தத்தம் இடங்களில் நின்றனர்.

அத்தீனியின் அணங்கும் (மினர்வாதேவி) மங்கள ஸ்வரூபீயான தினகர பகவானும் இவ்வாறு இருதிறத்துச் சேனைகளும் சிறிதும் சத்தமின்றி நின்று விட்டதைக் கண்ணுற்று உள்ளூற மனமகிழ்ந்தனர். அவ்விருவரும் இரண்டு கழுகுகளின் உருவத்தைத் தரித்துக்கொண்டு, அங்கிருந்த ஓர் இடத்தில் அசையாமல் உட்கார்ந்துகொண்டு இனி நடக்க இருக்கும் யுத்தத்தைக் கவனிப்போம் என்று காத்திருந்தனர். அப்பொழுது பன்றியின் ரோமங்களைப்போல் பயங்கரமாக விளங்கிய ஈட்டிகளையும் பளபளவென்று மின்னிய கேடயங்களையும் ஏந்திக்கொண்டு அளவு சங்கையின்றிக் கூட்டங்கூட்டமாக வந்த சேனைகள் அந்த யுத்த களத்தை இருட்டில் ஆழ்த்திவிட்டன.

அகன்ற ஒரு சமுத்திரம் முழுவதையும் காரிருளானது நன்ருக மூடிக்கொண்டிருக்கையில் ஜூப்பிட்டர் பகவான் அந்த ஜலப் பிரதேசத்தை மிருதுவாகவும் மெதுவாகவும் தடவிக் கொடுத்து வந்தால், அந்தச் சமுத்திரத்திலுள்ள அலைகள் எவ்வாறு சிறிதும் மூச்சுக்கூடவிடாமல் அடங்கிக்கிடக்குமோ, அந்த சமுத்திரத்தின் தரையும் தனக்கு வரப்போகும் ஆபத்தையே நினைத்துக் கலங்கியிருக்குமோ, அவ்வாறு அந்தச் சேனைகளிலிருந்த வீரர்களெல்லாம் அந்த விசாலமான போர்க்களத்தில் தத்தம் இடங்களில் நெருக்கமாகவும் ஒழுங்காகவும் ஊன்றி அசைவின்றி மௌனமாக உட்கார்ந்து விட்டனர். எள்ளுப் போட்டால்

எள்ளுவிழாது என்றபடி அவர்கள் அந்தப் போர்க்களத்தில் மறைந்துவிட்டனர்.

அப்பொழுது மஹானுன ஹெக்டரும் அதிமௌனமாக விருந்த அந்த இரண்டு சேனைகளின் மத்தியில் வந்து நின்று, அவைகளை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான்:—

"துரோஜ வீரர்களே! ஸகலமான கிரேக்க வீரர்களே! நீங்கள் அனைவரும் நான் சொல்லுவதைச் சற்று செவிசாய்த்துக் கேளுங்கள். என் மனதில் தோன்றும் விஷயத்தையும், ஒரு தெய்வத்தின் ஆஞ்ஞையையும் வெளிப்படையாகச் சொல்லவேண்டுமென்று என் உயிர் துடிக்கிறது. ஜோவ் தேவருக்கு நம் சண்டைகளை நிறுத்தி ஸமாதானம் செய்ய மனமில்லை! அவர் இதில் கலந்திருக்கும் ஸகலமான ஜனங்களுக்குள்ளும் புதிது புதிதான கஷ்டங்களையும் துக்கங்களையும் கிளப்பிவிட்டு, அவர்களுடைய மூளைகளைக் குழப்பிவிடுகின்றார். யுத்தமும் முன்னிலும் மும்மரமாகவே மறுபடியும் ஆரம்பித்துவிட்டது. அது இலியன் மண்ணோடு மண்ணாகத் தரைமட்டமாகும் வரையிலோ அல்லது அதோ! அங்குக் காணும் கப்பல்கள்சாம்பலாகும் வரையிலோ நடந்தே தீரும்! அதில் இப்பொழுதே ஒரு சந்தேகமுமில்லை ஆதலால் கிரேக்க ராஜகுமாரர்களே! என்முன் வாருங்கள், நான்தான் ஹெக்டர் என்று அறிந்து கொள்ளுங்கள், நான்தான் பேசுகின்றேன். தெய்வங்கள் சாக்ஷியாக நான் சொல்லுவதைக் கேளுங்கள்! உங்கள் சேனைகள் அனைத்திலும், அதிபலவானுன ஒரு வீரனைப் பொறுக்கியெடுத்து அவனை என் முன் நிறுத்துங்கள். அதிபலவான் என்று நீங்கள் கருதிவரும் அந்த வீரனை "ஒருகை பார்க்க" இந்த ஹெக்டர் ஸித்தனுகவிருக்கின்றான்! அவ்வாறு நானும் அந்த வீரனும் செய்யும் போரில் நான் இறந்தால் அவன் என் ஆடையாபரணங்களையும், ஆயுதங்களையும் ஸ்வீகரித்துக் கொள்ளட்டும்! அது எனக்குச் சம்மதந்தான். என் உடலை மாத்திரம் அவன் என் நண்பர்களிடங் கொடுத்து விடவேண்டும். என் உடலானது துரோஜர்களது கையினுலும் அவர்கள் இடும் நெருப்பினுலுமே தகனம் செய்யப்படவேண்டும்!

நான் அப்பால்லோ தேவரின் கிருபையில் பூரணமான நம்பிக்கையுள்ளவனுகவே இந்த துவந்த யுத்தத்தில் இறங்குகின்றேன். அவர் உங்கள் வீரனுடைய உடலை நீட்டி மண்ணில் மறைத்து விடுவாரானுல், அதாவது சத்துருவை வெல்லும் பாக்கியம் எனக்கு உண்டாகிவிட்டால் நான் அவனுடைய ஆயுதங்களைப் பீபஸ் தேவரின் கோவிலில் காணிக்கையாகச் செலுத்தி விடுவேன். உயிரற்ற அவனது உடலை, நீங்கள், உங்கள் கப்பல்களுக்கு எடுத்துச் செல்லலாம், அதற்கு நான் சம்மதிக்கின்றேன். அதை நீங்கள் உங்களது தேசத்திற்குக் கொண்டு சென்று அங்கு அடக்கஞ் செய்து, அதன்மேல் ஒரு கோபுரமும் கட்டலாம்! ஒரு மண்டபத்தையும் கட்டலாம்! எதிரொலியைக் கிளப்பிக் கொண்டு வரும் அலைகளையுடைய ஹெல்லஸ்ப்பாண்ட் என்னும் விசாலமான ஸமுத்திரமானது, அந்த வீரனைத் தொழும் பாவனையுடன், அந்த

மண்டபத்தின் அடிப்பாகத்தை மோதிக் குளிப்பித்து வரலாம். பிற்காலத்தில் அவ்வழியே யாத்திரை செய்து செல்லும் ஒரு கப்ப லோட்டி அதைக் கண்ணுற்ருல் இங்கு ஒரு கிரேக்க வீரன் கிடக் கின்ருன், அவன் ஹெக்டரென்னும் மகாவீரனுல் ஒரு யுத்தத்தில் கொல்லப்பட்டவன் என்று சொல்லுவான். அவனது சமாதியின் மேல் நீங்கள் ஒரு கல்லையும் நாட்டி, அதில் அவனது பெயரையும் தீட்டுவீர்கள். அதனுல், நெடுநாள்வரை பின்வரப்போகும் யுகங் களில் உள்ள ஜனங்கள் வெற்றிபெற்ற வீரனது கியாதியையும் கூட அறிவார்கள் '' என்ருன்.

இவ்வாறு அவன் துடுக்குடன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, கிரேக்கர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டனர். அவனைத் தட்டிப் பேச வெட்கினர்; யோசனைகள் செய்தனர். சம்மதிக்க நடுங்கினர் ; பயந்தனர் ; ஒருவரும் பேசவும் இல்லை. கொஞ்சக் காலம் நிசப்தமாகவிருந்தது. கடைசியில் அதிபயங்கர ரூபியான மனேல்லாஸன், அந்த மௌனத்தைக் கலைத்துத் தன் மனம் படபடவெனத் துடிக்க எழுந்து பின்வரும் தூஷணமான வார்த்தை களை உரைத்தான் :—

"கீரிஸ் தேசத்துக் கட்டழகிகளே! கைப்பழக்கம் இல்லாத பெண்மக்களே! உங்களது குலத்துக்கே இழிவைச் சம்பாதித்து விட்ட அதர்மிகளே! பார்வைக்கு மாத்திரம் பராக்கிரமுள்ள புருஷர்களைப்போல் பளிச்சென்று விளங்குகின்றீர்களே ! கோழை மனதுடன் குழைகின்றீர்களே ! உங்களுக்கு வெட்கமில்லையா ? இவ்வாறு பெருந்தன்மையுடன் வந்த ஒரு சத்துருவை எதிர்க்க " இதோ நான் வந்தேன் "! என்று சொல்லிக்கொண்டு கிரேக்கர் களில் ஒருவனுவது முன்வரவில்லை; அவ்வாறு தைரியமுடையவன் ஒருவனுவது நமது கோஷ்டியில் இருக்கவில்லை என்று நம் முடைய சந்ததிகள் அறிவார்களானுல், அப்போது நமக்கு எவ்வளவு அவமானம் உண்டாகும்! மண்ணிலிருந்து பிறந்த நீங்கள் அந்த மண்ணுக்கே இரையாகுங்கள், மண்ணோடு மண் ணாய்ப் போங்கள்! சிறிதும் இரக்கமோ, வெட்கமோ இல்லாத நடைப்பிணங்களே! நீங்களனைவரும் பிணங்களைப்போலவே களி மண்ணுண்டைகளாக இருந்து வாழுங்கள்! இன்றைக்கு உண்டாகக்கூடிய ஆபத்துக்கள் எல்லாவற்றையும் நானே முன் சென்று எதிர்த்துத் தடுப்பேன், நியாயமான ஒரு யுத்தத்தில் தங்கு தடையின்றி யிறங்கித் தன்னுலானதைத் தைரியமாய்ச் செய்ய வேண்டியதே மனிதர்களது கடன்! அவர்களுக்கு ஜயத்தைத் தருவது தேவர்களது கையில்தான் இருக்கின்றது" என்ருன்.

இந்த வார்த்தைகளைச் சொல்லி முடிப்பதற்கு முன், அவன் வெகு ஆத்திரத்துடன் எழுந்து, வலிவுடைய தன் உடலின்மேல் நீலமேகம் போன்ற நிறமுள்ள தன் ஆயுதங்களை அணிந்து கொண்டான்.

கவிசொல்லுகின்றார் :—அதிரிதேசா! அன்றைய தினம் உன்னை மீறிய ஒரு மகாவீரன் உன்னை இந்தப் பிரதேசத்தில், கடலோரத்தில் மூச்சுப் பேச்சின்றி வெட்டி வீழ்த்திக் கிடத்தியே யிருப்பான்! ஆனால் நீ அந்த ஆபத்துக்குத் தப்பினாய்! எப்படி யென்றால், அச் சமயம் உன் கோபதாபத்தைத் தணிக்கவேண்டு மென்று ஆவல் கொண்டு கிரேக்க அரசர்களெல்லாம், ஒரேயடி யாய்த் தடதடவென்று எழுந்து முன் வந்தனர்; அவர்களைக் கண் ணுற்றவர்கள் அனைவரும் திகிலடைந்தனர். அவர்களது தலைவ னான ஆகமனன் முன்வந்து உன் கையைப் பிடித்து இவ்வளவு துணிவு தகாது என்று உனக்குப் பின்வருமாறு புத்திமதி கூறினான் :—

"மனேல்லஸா! இது என்ன பெரிய காரியம், நீ எங்கே ஓடு கின்றாய்? இவ்வாறு சிறிதும் விவேகமில்லாமல், வலுவில் பிரா ணனை விட முன்வரலாமா? கூடிய மட்டும் ஆபத்தைத் தடுத்து வருவதல்லவோ அறிவாளிகளது லக்ஷணம். உனக்கு நேர்ந்துள்ள கஷ்ட நஷ்டங்களும், துக்கங்களும் மகத்தானவைதான் என்பதில் ஒரு ஸந்தேகமுமில்லை. என்றாலும் நீ இவ்வாறு ஆத்திரப்பட்டு முன்வருவது தகாது. இந்த ஹெக்டர் ஸாமானியமானவன் அல்ல! இவன் உன்னைவிடப் பன்மடங்கு அதிகமான வீரசூர பராக்கிரமங் கள் உடையவன்! கைவலியும் தோள் வலியும் மிக்கவன்! இவனை எதிர்த்துச் சென்ற அதிவீரனான அகிலேசனுங்கூட இவனது பராக்கிரமமானது அபாரமானது என்று அஞ்சித் திரும்பி விட்டான்! இந்த வீரனைச் சந்தித்தபோதெல்லாம், அவன் பயந்து நடுங்குவான்! ஆதலால் நீ உன் ஸஹாக்களின் மத்தியில் கவலை யின்றி உட்கார்ந்து கொண்டு, சுகமாக இருந்தவன்! இந்தக் காரி யத்தை நிறைவேற்றுவதற்கு நமது கிரேக்க கோஷ்டிகளில் ஒரு வீரன் இருக்கவே இருப்பான்! அவனுக்கு வேண்டிய ஆயுதங்களை யும் உதவுவோம்! அக்கேயர்களது மரபில் வந்த வீரர்கள் எல்லோ ரிலும், நீ நிகரற்றவன். பேரும் கீர்த்தியும் சம்பாதிக்க வேண்டு மென்று நீ மிகவும் ஆவலும் ஆத்திரமும் கொண்டிருக்கின்றாய்! அந்த ஆத்திரத்துக்குத் தக்கபடி, நீ, வீர, சூர, தைரியங்களும் உடையவன்தான்! என்றாலும் இந்தக் காரியத்தில் பெருத்த ஆபத் துக்கள் நிறைந்திருப்பதினாலும், நமது சத்துரு அதி பலவானாக இருப்பதினாலும், நீ இந்தக் காரியத்தில் பிரவேசியாமல் பின்வாங்கு வதுதான் நல்லது. இந்த யுத்தத்தில் நமக்குத்தான் ஜயமுண் டாகுமென்று, நாம் நிச்சயமாகச் சொல்லமுடியாதல்லவா" என்றான்.

அவன் இவ்வாறு சொல்லிப், பழிவாங்க வேண்டுமென்று ஆத்திரத்துடன் எழுந்த தன் உடன் பிறந்தானது மனதைக் கலைத்து விட்டான். அவனும் தன் உடன் பிறந்தான் சொல்லி யது நியாயந்தான் என்று உணர்ந்து, தன் கோபத்தைத் தணித்துக் கொண்டான். தனது ஆத்திரத்தையும் அடக்கிக் கொண்டான். அன்றைய தினம் தனக்கு நிச்சயமாக நேரவிருந்த கொடுங்கேட் டுக்கும் தப்பினான்! அதைக் கண்ணுற்ற அவனுடைய நண்பர்கள்

ஆனந்தமடைந்து அவன் அணிந்திருந்த ஆயுதங்களை அவிழ்த்துக் கழற்றி விட்டனர்.

அதன்பின் தேவாமிர்தத்துக்கு ஸமானமான மொழிகளைப் பொழியும் நெஸ்டார் என்பவர் மிகவும் கௌரவமாக எழுந்து, அங்கு குழுமியிருந்த ஸகலமான அரசர்களையும் நோக்கிப் பின் வருமாறு தம் திருவாய் மலர்ந்து அருளினார் :—

" ஆஹா, கிரீஸுக்கும், கிரீஸின் பெருமைகளுக்கும் எவ்வளவோ பெருத்த துக்கங்களும், சிறுமைகளும் வந்துவிட்டனவே! காலில் நகம் முளைத்த நாள்முதல், தலை நரைத்த நாள் வரையிலும், தங்களது ஜன்மபூமிக்குச் சேவைகள் செய்து வந்த வயது முதிர்ந்த வீரர்கள், தங்கள் சந்ததியார்கள் இவ்வாறு வெகு கேவலமாக க்ஷீணித்துப் போய்விட்டதைக் கண்டால் அவர்கள் அளவு சங்கையின்றி அழுது புலம்புவார்களே; தங்களது வம்சமே நிந்திக்கத் தக்கதாக ஆகிவிட்டதே என்று வருந்துவார்களே!" என்றார். பின்பு அவர் தன் தேகத்தைப் பார்த்துக்கொண்டு, "பிலியஸ்ஸே! நீயும் நெடு நாளாக ஆயுதங்களை யேந்தி, அவைகளைப் பிரயோகம் செய்திருக்கின்றாய்! ஞானத்திற் சிறந்த கிழவன் என்றும் பெயரெடுத்திருக்கின்றாய்! என்றாலும் நீயுங்கூடத் தங்கு தடையின்றிக் கண்ணீர் வடிப்பாயே! அந்தக் கண்ணீரானது, வெள்ளியைப் போல் நரைத்துள்ள உன் தாடியின் வழியாய் ஓடுமே! கீர்த்தியைத் தரத்தக்க இந்த யுத்தத்தில் ஒவ்வொரு வீரனும் தன்னாலியன்ற மட்டும் வஞ்சனையில்லாமல் பொருதுதான் வந்தான் என்று கேட்பாயானால், தாராள மனமுள்ளவனும் தரணியை யாள்பவனுமான நீ எவ்வளவோ சந்தோஷப் படுவாயே! அவர்கள் சம்பாதித்த கீர்த்தியானது, உனது கீர்த்திதான் என்று மனம் மகிழ்வாயே! ஒவ்வொரு வீரனுடைய பெயரையும், அவன் செய்த ஒவ்வொரு காரியத்தையும், அவனது தகப்பன் பெயரையும், வெகு பிரியத்துடன் விசாரிப்பாயே! மிகவும் சந்தோஷப்படுவாயே! அப்படிக்கின்றி நம் வீரர்கள் அனைவரும் பயந்து நடுங்கிக்கொண்டு நிற்பதையும், நம் வைரிகளில் ஒரே ஓர் ஆளைக் கண்டு அவர்கள் மனமிடிந்து போய்விட்டதையுங் கண்ணுற்றால், அப்பொழுது நீ, 'ஐயோ தெய்வங்களே,' என்று இந்த வலிகுன்றிய உன் கைகளை உயரத் தூக்கிக் கொண்டு, 'கிரீஸுக்கும் இந்த இழிவு உண்டாகி விட்டதே! என் ஆயுள் குறுகிவிடாதா! நான் மண்ணில் மறைந்து மடிந்து போகேனோ!' என்றல்லாவா புலம்புவாய்!

தேவலோகத்தில் வசிக்கும் அழிவில்லாத தேவர்களே! மினர்வா தேவியே! பீபஸ் தேவரே! ஸர்வ வல்லமையுள்ள ஜோவ் தேவரே! என் விருத்தாப்பியத்தை நீக்கி, எனக்கு வாலிபப் பருவத்தைத் திருப்பிக் கொடுக்க மாட்டீர்களா? இந்தக் கைக்கு முன் காலத்திலிருந்த லாகவத்தையும், சக்தியையும், உறுதியையும், விசையையும் கொடுக்க மாட்டீர்களா?

என் இளம் பிராயத்தில் ஜார்டன் நதிபாயும் பிரதேசங்களில் கொடும் போர் நிகழ்ந்த பொழுது, நான் என் சேனையைக்

கொண்டு சென்று, வீயாக் கோட்டை மதில்களைத் தாக்கினேன்; அந்த மதில்கள் அதிர்ந்து நடுங்கின, அன்றியும் ஆர்க்கேடியா வில் உண்டாக்கப்பட்ட ஈட்டிகளைக் கொண்டு தடதடவென்று விரைந்தோடும் ஸீலடான் நதிக் கரையிலும் என் கை வலியைக் காட்டினேன். அங்கு எரிந்தோலியன் என்பவன் எங்களை எதிர்த் துச் சண்டைக்கு வந்தான். 'ஒருகை பார்க்கலாம் வாருங்கள்' என்ருன். அவனை எதிர்ப்பதற்காக வீரசூரப் பிரதாபங்களுடன் சிறந்து விளங்கிய அரித்தூஸ் என்னும் மஹா வீரன் கிளம்பினுன். தன் ஆயுதங்களையும் அணிந்து கொண்டான்! அந்த அரித்தூஸ் என்பவன் மகா வீரன், என்பது உலகப் பிரசித்தமான சங்கதி! அவனுடைய இரும்பினுல் செய்யப்பட்ட தண்டாயுதமானது எவ்வளவு பிரம்மாண்டமானது என்பதும், அதில் எவ்வளவு முண்டு முடிச்சுகள் இருந்தன என்பதும் நமது சமுத்திரத்தின் ஒரு கரையிலிருந்து, மறுகரை வரையிலும் உள்ள ஜனங்கள் அனைவரும் நன்ருக அறிந்திருந்த விஷயம்! அவன் ஒரு வேலாயுதத்தை எடுத்துச் சுழற்றவோ, அல்லது 'கணீர்' என்று சப்திக்கும் ஒரு வில்லை எடுத்து வளைக்கவோ செய்யாமல், இந்தத் தன் கதாயு தத்தை மாத்திரம் கொண்டு, நம் எதிரிகளைப் பொடிப் பொடியா கும்படி நையப்புடைத்து விட்டான்! ஆனுல் அவன் லைக்கர்ஸ் என்பவனுல் கொல்லப்பட்டதும் நிஜந்தான். அந்த லைக்கர்கஸ் அவனுடன் தர்ம யுத்தம் செய்யவில்லை. அவன் ஒரு புதரின் பின்னுல் ஒளிந்து நின்றுகொண்டு, தன் வேலாயுதத்தைக் குறி வைத்து, எறிய, அது வளைந்து வளைந்து வந்து அவனது மார்பை ஆழமாகத் துளைத்து விட்டது. அப்போது நமது வீரனுக்கு இடி யைப் போன்ற தன் கதாயுதத்தினுல் ஒன்றும் செய்ய முடியாமல் போய்விட்டது. அவன் மல்லாந்து விழுந்து விட்டான். இவ்வாறு அவன் தோல்வியடைந்துவிட்ட பொழுது, அவனுடைய ஆயுதங் களை அவனை வென்றவன் பறித்துக்கொண்டு விட்டான். அந்த ஆயுதங்கள் சாமானியமானவையல்ல. அவை நமது எதிரிக் குத் தோற்றவனுன அரித்தூஸுக்கு முன்னுளில் மார்ஸ் பகவானுல் அளிக்கப்பட்டவை. லைக்கர்ஸ் விருத்தாப்பிய தசை யடைந்து தன் கண்ணை மூடிய பொழுது, அவன் அந்தக் கதா யுதத்தை இருத்தாலியனுக்குக் கொடுத்தான். இவ்வாறு கிடைத்த கதாயுதத்தைக் கொண்டுதான், இருத்தாலியன் தடதடவென்று ஓடி வந்து, நம் சேனைகளை எதிர்த்தான். எதிர்த்து அவைகளை நசுக்கினுன். தரைமட்டமாக்கினுன். அதி வீரர்கள் என்றும், மகா வீரர்கள் என்றும், விளங்கிய சகலமான வீரர்களையும், ஒரு கை பார்க்கின்றேன், என்ருன். அப்போது மகாவீரர்கள் என்றும், அதி வீரர்கள் என்றும் பிரசித்தி பெற்றிருந்தவர்களில் ஒருவராவது அவனது வேகத்தை அடக்க எழுந்து முன் வரவில்லை. அவனைக் கண்ணுற்ற அனைவரும் அவனைப் பார்த்து நடுங்கினர். இது என்ன! உலகத்தையே அழிக்க வந்த ஒரு கொடும்புயல் போல் இருக்கின்றதே! என்று பின் வாங்கிக் கொண்டனர், பதுங்கினர். கடைசியாக, அங்கிருந்த வீரர்கள் எல்லோரிலும் வயதிற் சிறிய வனுகிய நான் எழுந்து சென்று, நம் வீரர்கள் எல்லோரும் கண்டு வெருண்டு, பயந்து, புறங்காட்டி வந்த வீரனை எதிர்த்தேன். அப்

போது என்னைவிடச் சிறியவன் ஒருவனுவது நமது கோஷ்டியில் இருக்கவில்லை என்ருலும், நான் அவனுடன் பொருதேன். மினர்வா தேவி எனக்குச் சகாயம் செய்தாள்; என் கைகளுக்கு வலிவைத் தந்தாள். அதனுல் அந்த ராக்ஷசன் தன் பிரம்மாண்டமான உடலை நீளமாக நீட்டிக்கொண்டு திடீரென்று தரையில் பொத் தென்று விழுந்தான்!'' என்ருர்.

மறுபடியும் அவர் தன் தேகத்தைப் பார்த்து, "நீ அப் போதிருந்த நெஸ்டார் தானே! உனக்கு அப்போது இருந்த வலிமை இப்போதும் இருக்கலாகாதா? அப்படி யிருந்தால் இந்த ஹெக்டர் இவ்வாறு பிதற்றுவானு? தனக்குச் சமானமான வீரன் ஒருவன் இருந்தால், அவன் வரட்டும் என்று வம்பு பேசுவானு? ஆதலால் பாலியர்கள் என்றும், வீரர்கள் என்றும், எங்களுக்குச் சமானம் யார் என்றும், வீண் பெருமை பேசிக்கொள்ளும் வீரர் களே! கிரீஸின் உத்தம புத்திரர்களே! மலர்ந்த புஷ்பங்களைப் போல் ரூபலாவண்ணியங்களும், சகலமான சம்பத்துக்களும் உள்ள வர்களாக விளங்கும் வீரர்களே! நம் கோஷ்டிகளிலுள்ள சகலமான ஜனங்களுக்கும் உதாரணமாக விளங்குபவர்களே! மகா வீரர்களது பரம்பரையில் வந்தவர்களே! நீங்கள் இவ்வாறு நடுங்கிக்கொண்டு நிற்கலாமா? இன்று நடக்க இருக்கும் யுத்தத்தை விட்டு விடலாமா? புறங்காட்டலாமா?'' என்ருர்.

இவ்வாறு அவர் வேகத்துடன் கண்டித்துப் பேசிய வசனங் களைக் கேட்ட அரசர்கள் உள்ளக் கிளர்ச்சியடைந்து உற்சாகங் கொண்டனர். கிரேக்கர்கள் அனைவரிலும் உயர்ந்தவர் என்று பிரசித்தி பெற்றிருந்த ஒன்பது அரசர்கள், அதிவேகத்துடன் ஒருங்கே எழுந்தனர்.

முதன் முதலாக மனிதர்களெல்லோர்க்கும் அரசனுன சக்கர வர்த்தி மற்றவர்கள் அனைவரையும் பின்னுல் தள்ளிக் கொண்டு முன் வந்தான். அவனுக்குப் பின்னுல், ஆயுதபாணிகளிற் சிறந் தவனுன திடிதீசன் தோன்றினுன். அவனுக்கு அடுத்தபடியாக அஜாக்ஷன் என்பவன் தன் பிரம்மாண்டமான தேகத்தை உயரத் தூக்கிக்கொண்டு, எல்லோரெதிரிலும் நின்ருன். அவனுக்குப் பின்னுல் ஆயிலிபஸ் வந்தான். இடோமனும், யுத்தக் கடவுளைப் போல் பயங்கர ரூபியான மெர்யானும், அந்தக் கோஷ்டியிலிருந்த னர். அவ்வாறே யூரிவ் பைலஸ் என்பவனும், தோவாஸ் என் பவனும், அவர்களுடன் நின்றனர். கடைசியாக ஞானவானுன யுலிஸ்ஸிஸீடன் அந்தத் தீரர்களது கோஷ்டியானது பூர்த்தியாகி விட்டது. இவர்கள் ஒவ்வொருவரும் அக்காலத்தில், ஒரே மனத் தினராய் சத்தியாக்கிரகம் கொண்டு எழுந்து, 'இந்தத் துவந்த யுத்தத்தை நானே செய்வேன், நானே செய்வேன்,' என்று முன் வந்தனர். அப்போது அவர்களை நோக்கி, பைலியப் பெருந்தகை பின் வருமாறு உரைத்தார்:—

"கீர்த்தியைச் சம்பாதிக்க வேண்டுமென்று நீங்களனை வரும் இவ்வாறு போட்டி போட்டுக் கொண்டு ஒருவர் மேல் ஒரு

வர் விழுந்து முன் வந்தால் உங்களுக்குள் பரஸ்பரம் விரோதம் உண்டாகிவிடும். ஆதலால் இந்தத் துவந்த யுத்தத்தில் யார் இறங்க வேண்டும் என்பது தெய்வ நிர்ணயமாக இருக்கின்றது என்பதை அறிவதற்காக, நாம் இப்போது திருவுளச்சீட்டுக் குலுக்கி அறிந்துவிட வேண்டும். தேவர்கள் எந்த வீரனைத் தேர்ந்து எடுக்கின்றரோ, அந்த வீரனே தன் தேசத்தின் கீர்த்தியை விருத்தி செய்பவனுகை ஆகட்டும். அவனது புகழும் இவ்வுலகில் அழியாமல் நிலவி வரட்டும்'' என்ருர்.

இது எல்லோருக்கும் சம்மதமாக இருந்தது. திருவுளச் சீட்டுக்களும் கொண்டுவரப்பட்டன. அச்சீட்டுக்களை வீரர்களிடங் கொடுக்க, அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு சீட்டில் தங்கள் அடையாளங்களை இட்டனர். அதன்பின் அந்தச்சீட்டுக்கள் அனைத்தையும் சேனைத் தலைவனது மகுடத்தின் கண் இட்டு, அனைவரும் விண்ணுலகை நோக்கித் தங்களது கண்ணையுயர்த்திக் கொண்டும், கைகளைக் கூப்பி உயரத் தூக்கிக் கொண்டும் பின்வருமாறு பிரார்த்தித்தனர் :—

"சர்வ வல்லமையுமுள்ள தேவரே! மனிதர்களெல்லோருக்கும் அவரவர் வினைக்குத் தகுந்தபடி பயனை விதிப்பவரே! கிரேக்கர்களது ராஜ்யத்தை ரட்சிப்பவரே! ஒரு சுத்த வீரனை எங்களுக்கு அளிப்பீராக! இந்தக் காரியத்தை அஜாக்ஷனே அல்லது திடிதீசனே அல்லது ராஜாதி ராஜராக விளங்கும் அந்த வீரரோ செய்து முடிக்கட்டுமே''' என்ருர்கள்.

அதன் பின் நெஸ்டார் அந்தச் சீட்டைக் குலுக்கினர்! தேவநியமனப்படி கிரேக்கர்களனைவரும் விரும்பிய சீட்டுத், துள்ளியெழுந்து, விழுந்தது. அதை அந்தச் சபைக்கு நியமிக்கப்பட்டிருந்த கட்டியக்காரன், தன் கையில் எடுத்துக் கொண்டு, தன் இடப்புறமும் வலப்புறமும் வீற்றிருந்த வீரர்களுக்குக் காட்டி, "ஐயா, இது தங்களுடைய சீட்டுத்தானு? என்று அவர்கள் ஒவ்வொருவரையும் கேட்டான். அவர்களில் ஏண்டீர் 'இது எனதல்ல! எனதல்ல!' என்று சொல்லக் கடைசியாய், அஜாக்ஷன் அதைக் கண்ணுற்று, அது தனது குறியேந்திருப்பதையறிந்து, அதைக் கண்குளிரத் திரும்பத் திரும்பப் பார்த்துக் களிகூர்ந்து, அதைத் தன் முன் வைத்து, உற்சாகத்துடன் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"வீரர்களே! இந்தச் சீட்டு என்னுடையது தான். இது எனக்கு விழுந்ததையறிந்து, நான் சந்தோஷிக்கிறேன் இந்த ட்ராய் வீரனைத் தரை மட்டமாக்கும் பாக்கியம் எனக்கே இருக்க வேண்டும்! ஆதலால் நான் என் காந்தியுள்ள ஆயுதங்களை அணிந்து கொள்ள இதோ செல்லுகின்றேன். நான் திரும்பி வருவதற்குள்ளாக நீங்கள் சனிபகவானுடைய புத்திரனைக் குறித்துப் பிரார்த்தனை செய்யுங்கள். அவரை வேண்டிக் கொள்ளுங்கள். உங்கள் பிரார்த்தனைகளை நம் சத்துருக்கள் அறியலாகாது. நாம்

பிரார்த்தனைகள் செய்கின்றோம் என்று அவர்கள் அறிந்து விடுவார்களானால், அவர்கள் “ நாம் பயந்து போய் விட்டோம்! அதனாற்றான் தேவசகாயத்தை நாடுகின்றோம் ” என்று சொல்வார்கள். ஆதலால் நீங்கள் மௌனமாகவும் இரகசியமாகவும் உங்கள் பிரார்த்தனைகளைச் செய்யுங்கள். வீரர்களே! என்னைச் சிறிது மன்னியுங்கள்! உங்கள் பிரார்த்தனைகளை இரகசியமாகச் செய்யுங்கள் என்று சொன்னேனல்லவா நான் அவ்வாறு சொல்லியது சரியில்லை. உங்கள் பிரார்த்தனைகளை எல்லோரும் அறியும்படி பகிரங்கமாகச் செய்யுங்கள். ஆகாசமும் பூமியும் அறியும் வண்ணம் உரக்கக் கூவி, அந்தப் பிரார்த்தனைகளைச் செய்யுங்கள். அஜாக்ஷன் கண்டு நடுங்கும் வீரனும் ஒருவன் உலகில் உள்ளானா என்று உரத்துக் கூவுங்கள். அந்த அஜாக்ஷன் யுத்த சம்பந்தமான சகல காரியங்களிலும் தேர்ச்சி பெற்றவனாயிற்றே என்று சொல்லுங்கள்.

வீரர்களுக்குப் பிறப்பிடமாகிய ஸலாமிஸ்ஸிலல்லவா நான் பிறந்தேன்? பிறந்தது முதல் யுத்தங்களைச் செய்வதே காரியமாகவும் இருந்து வந்திருக்கின்றேனே, உலகத்தில் ஒருவரிடமும் எனக்குப் பயம் என்பது இல்லையே ” என்றான்.

இவ்வாறு அவன் சொல்லிய பின்னர், அங்குக் கூடியிருந்த கிரேக்க வீரர்களெல்லாம் இடி முழக்கத்தினால் ஆகாயத்தைப் பொடிப் பொடியாகத் தகர்க்குங் கடவுளை நோக்கித், தங்கள் கண்களை உயர்த்திக் கொண்டு, பின்வருமாறு பிரார்த்தித்தனர் :—

“ மனிதர்களது பிதாவே! பரம புருஷரே! லோக நாதரே! ஆகாயமளாவியுள்ள ஐடா மலைக் குன்றில் இருப்பவரே! அங்கிருந்தபடி எல்லோராலும் ஆராதிக்கப்படுபவரே! அதியுன்னதமான விண்ணுலகில் திருக்கோவில் கொண்டு, அங்குத் தம் உயர்ந்த சிங்காதனத்தை அமர்த்திக் கொண்டிருப்பவரே! தேவர்களுக்கெல்லாம் தேவரே! அந்த மில்லாதவரே! அழிவில்லாதவரே! அனந்தரே! நிகரற்றவரே! ஒப்பும் உயர்வும் இல்லாதவரே! இன்றைக்கு நிகழவிருக்கும் யுத்தத்தில் இன்னாருக்குத்தான் ஜயம் உண்டாகும் என்பதை நாங்கள் அறியோம், என்றாலும், தாங்கள் இன்றைய தினம் வெற்றியையும் கீர்த்தியையும் திலமானுக்கே அளிக்க வேண்டும். அப்படிக்கின்றித் தங்களுக்குப் பிரதாப சீலனாகை ஹெக்டாரிடமும் பிரீதியுண்டென்றால் அவர்கள் இருவருக்கும் இன்றைய தினம் வெற்றியையும் கீர்த்தியையும் அளிப்பீராக; இன்றைய தினத்து லாப நஷ்டங்களை அவர்கள் இருவரும் பங்கிட்டுக் கொள்ளுமாறு அருளுவீராக!” என்றனர்.

இவ்வாறு இவர்கள் பிரார்த்தனைகள் செய்து கொண்டிருக்கையில், அஜாக்ஷன், ஜாஜ்வல்லியமாகப் பிரகாசிக்கும் தன் ஆயுதங்களை அணிந்து கொண்டு வந்தான். பிரம்மாண்டமான உருவத்தையுடைய அந்த வீரன் தனது இரும்புக் கவசத்தை

யணிந்து கொண்டு, வெளியில் வந்தபொழுது வெகு காந்தியுடன் விளங்கினன். அவன் வெகு கம்பீரமாக அடிமேல் அடிவைத்துக் கொண்டு அந்த யுத்தகளத்தில் வந்து சேர்ந்தான்.

ஜோவ் பகவானனவர், தன்னிடம் பயபக்தியில்லாத ஜனங்களைத் தண்டிக்க வேண்டுமென்று சங்கல்பம் செய்து கொண்டு, அவர்களுக்குள் அனைவரும் ஒரேயடியாய்க் கூட்டங் கூட்டமாக அழிந்து மடியும்படி அவர்களைத் தூண்டிவிடும், பொழுது எவ்வாறு, திரெஸில் கோவில் கொண்டு விளங்கும், விரிசடைக் கடவுள் தன் சகலமான ஆயுதங்களையும் அணிந்து கொண்டு நிதானமாக எட்டியெட்டி நடந்து வருவரோ, அவ்வாறே, அந்த வீரனை அஜாக்ஷனும் ஒரு தெய்வத்தைப் போலவே, பயங்கரமான ரூபத்துடன் நடந்து வந்தான்.

அவன் கடுத்த முகத்துடன் புன்னகை செய்தான் ; அவன் தடதடவென்று நடக்கையில் பூமியானது நடுங்கியது. அவன் தனது கையில் ஏந்திக் கொண்டிருந்த கெட்டியான பெருத்த வேலானது துடித்தது. கிரேக்கர்கள் அனைவருக்கும் ராக்ஷசனை அவன், அவ்வாறு எல்லோருக்கும் முன்னால் வந்து நின்றான். அவனைக் கண்ணுற்ற ஆர்கிவ்கள் அனைவரும் உள்ளக் கிளர்ச்சியடைந்தனர் ; புத்துயிரும் பெற்றனர். ஆனல் அந்தக் கோலங்களுடன் விளங்கிய அதிபராக்கிரமசாலியான, அந்த வீரனைக் கண்ணுற்ற அவனுடைய எதிரிகளான ட்ராய் நகரத்தார் அனைவரும் நடுக்கத்துடன் துடித்தனர். ஹெக்டரும் கொஞ்சம் யோசனையே செய்தான்! அவனைக் கண்ணுற்ற பொழுது அவனது மனதில் கொஞ்சம் பீதியே உண்டாயிற்று. அதி தைரியமாக விருந்த அவனது மனதும் இடிந்து வலியிழந்து போய் விட்டது ; அது அவனது மார்பில் தொங்கி ஊசலாடித் கொண்டிருந்தது என்றே சொல்லலாம்.

இப்போது அவன் புறங்கொடுத்து ஓடினலும் பயனில்லை ; பயந்தும் பயனில்லை. தானே இந்தச் சண்டையை வலுவில் இழுத்துக் கொண்டான். தன் சத்துருவையும் தன்னருகில் வரவழைத்து விட்டான்.

பிரம்மாண்டமான தனது கேடயத்துக்குப் பின்னல், கடுத்த முகத்துடன் நின்று கொண்டிருந்த அந்தத் திலமான், ஒரு வெண்கலக் கோபுரத்தின் பின் நின்று கொண்டு அந்த யுத்தகளத்தைப் பார்ப்பவன் போல் விளங்கினன். அவனது கேடயமானது, பிரம்மாண்டமான ஒரு கோளவடிவமாக விருந்ததுமன்றி, ஏழு மடிப்புகள் கொண்ட கெட்டியான காளைத் தோல்களால் போர்த்தப் பட்டிருந்தது. அவற்றின் அடியில் இருந்த கெட்டியான அந்தக் கேடயமானது, சகலமான படைக்கலன்களையும் செய்வதில் சமர்த்தனும் ஹைலி யென்னும் தலவாசியுமான திச்சியஸ் என்பவனல் உண்டாக்கப் பட்டிருந்தது.

அந்தக் கேடயத்தை அஜாக்ஷன், பயமென்பதை யறியாத தன் மார்பின் முன்னல் பிடித்துக் கொண்டு தன் வைரியான வீரனை நோக்கி மிரட்டிப் பின்வருமாறு உரைத்தான் :—

“அடா! ஹெக்டர்!! இதோ என் கையைத் தொட்டுப்பார்! என்னைத் தனியாக எதிர்க்க வந்து விட்டா யல்லவா? உனக்கு எவ்வளவு துணிவு! உன் ஒருவனுடைய சக்தியும், சாமார்த்தியமும் எவ்வளவு என்பதையும், கிரேக்கனும் உன் சத்துருவுமான என் சக்தியும், சாமர்த்தியமும் எவ்வளவு என்பதையும் பார்! அகிலேசன் இந்த யுத்தத்திலிருந்து விலகிக் கொண்டு விட்டான் என்றாலும், இங்கு இன்னும் நெஞ்சுறுதியும், ஆயுத வித்தைகளில் தேர்ச்சியும் பெற்ற வீரர்கள் சிலர் இருக்கவே இருக்கின்றனர். அவர்களனைவரும் சுரணை கெட்டுப் போனவர் களுமல்ல! யுத்தத்தில் பழக்க மில்லாதவர்களுமல்ல; அந்த அகிலேசன் அலைமேதும் கடற்கரையில் தன் கையை மடக்கிக் கொண்டு கோபித்துக் கொண்டே கிடக்கட்டும். எங்களுக்கு உதவி செய்வதற்காக அவன் தனது விரலைக்கூட அசைக்க வேண்டாம். ஆயுதங்களைத் தொடவும் வேண்டாம்; கிரீஸில் வீரர்கள் நிறைந்த சேனைகளுக்குப் பஞ்சமேயில்லை. கணக்கற்ற வீரர்கள் இன்னும் இருக்கின்றனர். அவர்கள் எப்படிப் பட்டவர்கள் என்பதை உனக்குத் தெரிவிப்பதற்காகவே, அவர்கள் என்னை உன்முன் அனுப்பி யிருக்கின்றனர். நானும் உன்னுடைய பலம் எப்படிப் பட்டதென்பதைப் பரீட்சிக்கலாம் என்று தான் இங்கே வந்திருக்கின்றேன். என்னைப் பார்! இனி மேல் அதிகமான பேச்சு வார்த்தைகள் வேண்டாம். சட்டென்று சண்டையைத் தொடங்கு, பார்ப்போம்,” என்றான்.

அவ்வாறு பேசிய அஜாக்ஷனை நோக்கி, துரோஜ குமாரனான ஹெக்டர் பின்வருமாறு பதிலுரைத்தான் :—

“திலமானின் மகனே! உன் தேசத்தின் பெருமைக்குக் காரணமும் ஆனவனே! நீ என்னை யாரென்று மதித்தாய்? இவ் வாறு என்னை இந்த மிரட்டு மிரட்டுகின்றாய்? நான் ஒரு சிறிய பயலோ; அல்லது ஒரு ஸ்திரியோ, அல்லது யுத்த களம் என்பதை ஒருக்காலும் பார்க்காதவனோ, அல்லது யுத்தத்தைக் கண்டு பயப்படுபவனோ என்று நினைத்து விட்டாய். நானும் ஒரு வீரன்தான். உன்னுடன் சண்டை செய்யத் தகுந்த யோக்கியதை உடையவன்தான், அவ்வாறு வீரசூர பராக்கிரமங்களுள்ள ஒரு வீரனைத்தான் நீ இப்போது சந்தித்திருக்கின்றாய்! அந்த வீரன் சண்டைகள் செய்வதற்கே பிறந்தவன்! இந்தச் சல சலப்புகளின் இடையில் தான் வளர்ந்து வந்தவன் என்பதை நீ நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொள்; எனக்கு, நான் நின்றுள்ள இடத்தை மாற்றிக் கொள்ளவும், தேரினின்று இறங்கியபின் அதன் மேல் மறுபடியும் ஏறவும், இப்புறமும் அப்புறமும் திரும்பவும் துள்ளித் தாவித் தாக்கவும், மற்றும் யுத்தத்தில் சமயத்துக்குத் தக்க

படி பலவிதமான தந்திரங்களைச் செய்யவும், நன்றாகத் தெரியும். என் வேலாயுதத்தை இடசாரி வலசாரியாகச் சுழற்றுவதில் நான் சமர்த்தன் தான் என்பதை யறிவாய்! எனது கேடயமானது கணீர்! கணீர்! என்று சப்திக்கக் கூடியது. அதைக் கொண்டு எவ்வளவோ உக்கிரமமான யுத்தத்திற்கும் நான் ஈடுகொடுப்பேன். நாம் மாத்திரம் நமது சண்டையை ஒளிவு மறைவின்றியும் வஞ்சக மின்றியும் வெளிப்படையாகவும் செய்ய வேண்டும். ஒருவரை யொருவர் சிறிதும் தாட்சண்யமின்றித் தைரியமாக ஓங்கி யடிக்க லாம்! யதார்த்தமாக என்னுடன் சண்டைக்கு வரும் ஒரு சத்துருவை மோசத்தினால் வெல்ல வேண்டு மென்று நான் கருத வில்லை'' என்றான்.

இவ்வாறு சொல்லியபின், அவன் தன் இடத்தை விட் டெழுந்து தன் எதிரி தரித்திருந்த ஏழுதோல்களைப் போர்வை யாகக் கொண்ட கேடயத்தின் மேல் குறிவைத்துத், தனது நீண்ட வேலாயுதத்தைச் சுழற்றி யெறிந்தான். அவ்வாறு சுழற்றி யெறியப்பட்ட அந்தக் கொடிய வேலாயுதமானது அந்த வைரியின் பித்தளைக் கேடயத்தின் மேல் போர்த்தப்பட்டிருந்த ஆறு காளைகளின் தோல்களையும் கிழித்துக் கொண்டு ஊடுருவிச் சென்று, ஏழாம் தோலின்மேல் ஊன்றிக் கொண்டு நின்றுவிட்டது. அதன்பின் அஜாக்ஷனும் தனது வேலாயுதத்தைப் பிரயோகித் தான். அந்த வலியுள்ள ஆயுதமானது ஹெக்டரின் கவசத்தைக் துளைத்துக் கொண்டு, அதன் உட்சென்று, அவனது மார்க்கவசத் தையும் தாக்கி, அவனது வஸ்திரத்தையும் கிழித்து, அதே முக மாகக் கீழ் நோக்கி அவனது அள்ளைப் புறமாக இறங்கி விட்டது. துரோஜனான அந்த வீரன், அதிஜாக்கிரதையும், தந்திரமும் உள்ளவனாகையினால், சமயமறிந்து தன் தேகத்தை, ஒடுக்கிக் கொண்டு, தனது மார்க்கவசத்திற்குள் தனது உடலைச் சுருக்கிக் கீழே குனிந்து விட்டான்! அதன்பின் வீரர்கள் இருவரும் மேற் சொல்லியபடி துளைக்கப்பட்ட தங்கள் கவசங்களில் ஊன்றி நின்றிருந்த வேலாயுதங்களை உருவிப் பிடுங்கியெடுத்துக் கொண்டு, திரும்பவும் வெகு வேகத்துடன் ஒருவர்மேல் ஒருவர் சீறிக்கொண்டு பாய்ந்து முன் வந்தனர். அப்போது அவ்விருவரும் ஒருவனத்தைக் கலக்கிக் கொண்டு, இரத்த வெள்ளத்தில் குளித்து எழுந்து ஆரவாரத்துடனும், ஆத்திரத்துடனும் வரும் இரண்டு மலைச் சிங்கங்களைப் போலவும், நுரையைக் கக்கிக் கொண்டு, வேகமாகப் பாய்ந்து வரும் இரண்டு காட்டுப் பன்றிகளைப் போலவும் விளங்கினர்.

ஹெக்டர் மறுபடியும் தன் நீண்ட வேலாயுதத்தை அஜாக்ஷனை நோக்கி யெறிந்தான். ஆனால், அது அஜாக்ஷனது கவசத்தில் பட்டவுடன் முனைமுறிந்து மடங்கியே போய்விட்டது. அதையறிந்த ஹெக்டர் சிறிதும் பின்வாங்காமலும், மனந்தளரா மலும் அஜாக்ஷனை நோக்கி, ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்தான். ஆனால் தன் எதிரியின் சேஷ்டைகளைக் கண்கொட்டாமல்

கவனித்துக்கொண்டு வந்த அஜாக்ஷன், அவன் தன்னெதிரில் வருவதைக்கண்டு, முண்டு முடிச்சுகள் கொண்ட தன் வேலாயுதத்தினுல் அவனது கவசத்தை ஓங்கியடித்து, அதைத் துளைத்தே விட்டான். அதிவேகத்துடன் பிரயோகிக்கப்பட்ட அந்த வேலாயுதமானது தன் எதிரியான அந்த துரோஜனது கவசத்தைப் பிளந்துகொண்டு, உட்சென்று, அங்கு நில்லாமல் அவனது கழுத்தையும் தாக்கி விட்டது! அஜாக்ஷனது சக்தியே சக்தி! அதற்குச் சமானமே இல்லை! இப்பொழுது அவனது கழுத்திலிருந்து ஆருகப் பெருகி வழிந்து வந்த கறுத்த இரத்தத்தினுல் அவனது கேடயமும் ஒளிமழுங்கிப் போயிற்று!

என்றுலும் ஹெக்டர், களைத்து ஓய்ந்து போய்விடவில்லை. அவன் மறுபடியும் நிலத்தை நோக்கிக் கீழே குனிந்து, கன்னங்கரேலென்று கூராகவிருந்த ஒரு பிரம்மாண்டமான பெரும் பாறையை அடியோடு பெயர்த்து, அதைத் தன் வலியுள்ள கையில் எடுத்து, அதிவேகத்துடனும் தன் முழு பலத்துடனும் தனது சத்துருவை நோக்கி யெறிந்தான். அது சிறிதும் குறி தவருமல், அஜாக்ஷனுடைய குமிழிபோன்ற பித்தளைக் கேடயத்தின்மேல் பொத்தென்று விழுந்தது. அவ்வாறு விழுந்த அதிர்ச்சியினுல், அந்தக் குவிந்த பித்தளைக் கூடானது எதிரொலியைக் கிளப்பிக் கொண்டு கலகலவென்று உரத்துச் சப்தித்தது!

ஆனுல், அஜாக்ஷன் பயந்தவனு? சும்மாவிருப்பானு? அவன் பயந்தவனுமல்ல! சும்மாவும் இருக்கவில்லை! அவனும் ஒரு பாறையைப் பிளந்தெடுத்து தன் நரம்புகளனைத்தையும் ஒன்றுகச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு அந்தப் பாருங்கல்லைத் தன் தலைக்கும் மேலாக உயரச் சுழற்றி, ஒரு புயலைப்போன்ற வேகத்துடன் ஹெக்டரை நோக்கி யெறிந்தான். அது, தான் சென்றவழியிலிருந்த எல்லாவற்றையும் பாழாக்கிக்கொண்டே சென்றது! அவ்வாறு சென்ற அந்தப் பிரம்மாண்டமான பாறையானது ஹெக்டரின் கவசத்தின்மேல் ஒரு பெருத்த இடியைப் போல் விழுந்து, அதைப் பிளந்து விட்டது. அதன் வீழ்ச்சியினுல், அவனுடைய முழங்கால்களும் தளர்வுற்று ஜில்லென்று விரைத்துப் போய்விட்டன. இவ்வாறு அதிபலவானுன ஹெக்டரும் பொடிப் பொடியாய்ப் போன தன் கவசத்தின் மேல் தன் பெரிய உடலை நீட்டிச் சாய்த்துக்கொண்டு, அந்தப் போர்க்களத்தில் திடீரென்று விழுந்துவிட்டான். ஆனுல் அச்சமயம் இந்த யுத்தத்தைக் கண்ணுற்று வந்த தேவர்கள், சும்மாவிருந்து விடவில்லை. அப்பால்லோ தேவரானவர் ஹெக்டருக்குப் பலமான சிகிச்சைகள்செய்து அவனுக்கு முன்போல் சக்தி தந்தார். அவனும் திரும்பவும் சண்டைக்கு எழுந்து வந்தான்.

அப்பொழுது வீரர்கள் இருவரும் மறுபடியும் யுத்தத்தை ஆரம்பித்துத் தங்கள் பட்டாக் கத்திகளை உருவினர். அவற்றைத் தங்கள் தலைகளின்மேல் விரைவாகச் சுழற்றினர். அவ்வாறு

சுழற்றிய பொழுது அந்தக் கத்திகளிலிருந்து, நெருப்புப் போன்ற மின்னல்கள் பளிச் பளிச்சென்று உண்டாயின.

அச்சமயம் மண்ணுலக விண்ணுலகங்களின் க்ஷேமத்தைக் கவனித்து வரும் லோக பாலகர்களது திருவுள்ளமானது, அங்கிருந்த இருதிறத்துக் கட்டியக் காரர்களின் வாக்குமூலமாக சமஸ்தமான ஜனங்களுக்கும் காது கேட்கும்படி பறையறைந்தது போல் கேட்டது. கிரேக்கர்களது கட்சியிலிருந்து மஹாதிவ்விய ஸ்வரூபியாகிய டால்திபியஸ் என்பவரும், ட்ராய்க் கட்சியிலிருந்த இடியஸ்முனிவரும், எழுந்து முன்வந்து, கத்தியை உருவிக் கொண்டு நின்ற வீரர்களின் மத்தியில் தங்கள் செங்கோல்களை உயரத் தூக்கினர். அவ்விரு வீரர்களையும் தங்களது சண்டை யைச் சற்று நிறுத்தி நிதானிக்கும்படி செய்தனர். அதன்பின் இடியஸ் முனிவர் பின்வருமாறு மிகவும் இதமான மொழிகளை யுரைத்தார்:—

“என் குழந்தைகளே! இதுபோதும்; இந்தச் சண்டையை இத்துடன் நிறுத்துங்கள்! இதுவரை நீங்கள் உங்கள் வீரசூர பராக்கிரமங்களைக் காட்டியது போதும்! நீங்களிருவரும் சகல ஜனங்களுடைய பிரியத்திற்கும் பாத்திரர்க ளானவர்கள். அவ்வாறே ஜோவ் தேவரும், உங்கள் இருவரிடமும் பிரியமுள்ளவ ராகவே இருக்கின்றார். இங்குக் கூடியிருக்கும் இருதிறத்துச் சேனை களிலுமுள்ள சகலமான ஜனங்களுக்கும் உங்களது சாமர்த்தியம் நன்றாகத் தெரியும். அவர்கள் அனைவரும் ஒருவர் கூடத் தவறாமல், உங்கள் பெருமைகளையே புகழ்ந்து பேசி வருகின்றனர். இந்த யுத்தம் உங்களது யுத்தந்தான் என்றும் சொல்லிக்கொள்ளு கின்றனர். இப்பொழுது இரவானது தன் இருண்ட நிழலைச் சாய்த்துக்கொண்டு வருகின்றது. நிசி தேவியானவள் உங்கள் இருவரையும் இந்த யுத்தம் செய்வதிலிருந்து விலக்கிவிடவேண்டு மென்று விரைந்து ஓடிவருகின்றாள்; அவளது ஆஞ்ஞைப்படி நீங்கள் நடப்பீர்களாக!” என்றார்.

அதைக்கேட்ட மஹானுன அஜாக்ஷன் பெரிய மனதுடன் பின்வருமாறு அவருக்குப் பதிலுரைத்தான்:—

“பெரியவரே; மஹா முனிவரே! தாங்கள் இந்த வசனங் களை ஹெக்டருக்குச் சொல்லுங்கள். எங்களது கட்சியிலிருந்த வீரர்களை அவன்தான் முதன்முதலாக இந்தச் சண்டைக்கு வலுவில் இழுத்தான். அவன்தான் இன்று இரவில் இந்தச் சண்டை வேண்டாம், இதை நிறுத்துவோம், என்று எங்களைக் கேட்கவேண்டும். நிசிக்கடவுளின் ஆணையை நாம் சிரமேற் கொள்ளவேண்டும் என்று அவன் எங்களைக் கேட்கட்டும். அப்படி அவன் கேட்டுக்கொண்டால், நான் அதற்குச் சம்மதிக் கிறேன்; அவ்வாறே செய்யவும் செய்கிறேன்; ஹெக்டர் சண்டையை நிறுத்திவிட்டால், நானும் சண்டையை நிறுத்தி

விடுகிறேன். முதலில் அவன் சண்டையை நிறுத்தட்டும்" என்ருன்.

அதைக் கேட்டு அதிகௌரவ புத்தியுள்ள ஹெக்டர் தன் எதிரியை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான்:—

"கிரேக்கர்களின் முன் வைத்து எண்ணப்படுபவனே! தேவர்களது பிரகாசங்களுடன் விளங்குபவனே! உன்னைச் சேர்ந்தோர் அனைவரிலும் சிறந்தவனே! தேக வலியுடன் நன்மனமும் உடையவனே! யுத்த தர்மமானது, நாம் இந்தச் சண்டையை இன்று இத்துடன் நிறுத்த வேண்டுமென்று நம்மைக் கட்டுப் படுத்துகின்றது. நாமும் அப்படியே செய்வோம். நாம் இந்த யுத்தத்தை மறுபடியும் வேருெரு நாள் தொடங்கி, ஒருவரை யொருவர் சந்திக்கும் பொழுது, நமது புகழை நிலைநாட்டி விடுவோம். இந்த யுத்தமானது, பல நாள் வரை நீடித்து நடந்து, கடைசியாக ஒரு நாளில் முடிந்தே தீருமல்லவா? அன்றைய தினம் தெய்வங்களெல்லாம் யாருக்குச் சாவு? யாருக்கு வாழ்வு? என்பதைத் தீர்மானிக்கட்டும். இப்பொழுது இராக்காலமானது, தனது இருண்ட நிழலைச் சாய்த்துக் கொண்டு வருகின்றது. தேவர்களது நியமனமும் நாம் இந்தச் சண்டையை நிறுத்தி விட வேண்டுமென்றே இருக்கின்றது. ஆதலால், நாம் இன்றைய இரவில் இந்தச் சண்டையை நிறுத்தி விடுவோமாக!

அஞ்சா நெஞ்சனை அஜாக்ஷா! நீ உனது கிரேக்க சகோதரர்களிடம் திரும்பிச் செல்! உனது ரக்ஷையிலிருக்கும் ஜனங்களெல்லாம் உன்னைக் கண்டு களிக்கட்டும்! நானும் எங்கள் கட்சியிலுள்ள வீரர்கள் அனைவரிடமுஞ் சென்று சேருவேன். அவர்களுக்கு மகிழ்ச்சியை யுண்டாக்குவேன்.

ஹெக்டர் க்ஷேமமாக உயிருடன் திரும்பி வர வேண்டுமே என்று சர்வ தேவர்களையும் வேண்டிக் கொண்டு, அவர்களைச் சதா துதித்து வருபவளும், துரோஜ ஸ்திரீகளில் உத்தமியுமான எனது மனைவியையும் மகிழ்விப்பேன்.

இன்றையதினத்தை நாம் என்றும் மறவாமல், நமது ஞாபகத்தில் வைத்து வரவேண்டும். அதற்காக நாம் இருவரும் ஒருவருக் கொருவர் ஒரு பரிசு பறிமாறிக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் பிற்காலத்தில் கிரீஸ் நாடும், ட்ராய் நகரும், 'இந்த வீரர்களிருவரும் புகழைச் சம்பாதிக்க வேண்டுமென்று பொருதனரேயன்றி, பகை கொண்டு இந்த யுத்தத்தில் இறங்கவில்லை, இவர்களிருவரும் மகா தைரியசாலிகள் தான், மனவுறுதி கொண்டவர்கள் தான், ஆனல் இவர்கள் தங்களது மனதில் பரஸ்பரம் அன்பும் உடையவர்களாயிருந்தனர்' என்றே சொல்வார்கள்" என்ருன்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே, அவன் நட்சத்திரங்களைப் போல் வெள்ளிப் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதும், குண்டு களும், குமிழிகளும் நிறைந்த சாட்டை வாரை உடையதும், பொன் னினாலும் வெள்ளியினாலும் அலங்கரிக்கப்பட்டதுமான ஓர் உறை யில் வைக்கப்பட்டிருந்த திவ்வியமான வாளை யெடுத்து, அந்த கிரேக்க வீரனுக்குக் கொடுத்தான். உதார குணத்தில் அவனுக்கு இளைக்காத அந்த கிரேக்க வீரன் அதை வாங்கிக் கொண்டு, அதற்குப் பதிலாக அவனுக்கு சூழ்ந்த ஊதா நிறத்துடன் தகதக வென்று ஜ்வலித்துக் கொண்டிருந்த ஒரு திவ்வியமான அரைக் கச்சையை யளித்தான். இவ்வாறு பரிசுகள் பறிமாறிக் கொண்ட பின் அவர்கள் இருவரும் வெகு கம்பீரமான தோற்றத்துடன், அந்தக் களத்தை விட்டகன்று, முறையே கிரேக்கர்களது கோஷ் டியையும் துரோஜர்களது கோஷ்டியையும் நாடிச் சென்றனர்.

இவ்வாறு தங்களை நோக்கித் திரும்பி வந்தஹெக்டரைக் கண்டு, துரோஜர்கள், தங்களது குலோத்துங்கனான அவன், அஜாக்ஷனிடமிருந்து உயிருடன் தப்பி நிராயுதனாகவும், காயம் பட்டு வீரங் குன்றாமலும் வந்து விட்டதைக் கண்ணுற்று அவனை வெகுவாய்க் கொண்டாடி, வரவேற்றனர். அவர்கள் அவனை மேலுங் கீழும் ஏற இறங்கப் பார்த்தனர். அவனது தேகம் முழு வதையும் பரீட்சை செய்தனர். பின்பு அவர்கள், ஒரு தேவனைப் போல் விளங்கிய அந்த வீரனைத் தூக்கிக் கொண்டு, ஆகாய மளாவி நின்றுள்ள தங்களது ட்ராய்க் கோட்டைக்குச் சென்றனர். 'இவனுக்கு என்ன ஆபத்து உண்டாகுமோ' என்று ஏங்கியிருந்த அவர்கள், 'இந்த ஆபத்துக்கு இவன் தப்பி விட்டான்,' என்று ஜயகோஷம் செய்தனர்.

அப்பொழுது சகலமான ஆயுதங்களையும் ஒழுங்காக அணிந்திருந்த கிரேக்க வீரர்கள் மேற்கூறியபடி இந்தப் பெருங் காரியத்தைச் செய்து முடித்த பெருமையுடன் இருந்த அஜாக்ஷனை ஆகமனன் இருந்த விடத்திற்குக் கூட்டிச் சென்றனர். இராஜ ராஜனான, அவன் இந்த வெற்றியைக் கொண்டாடுவதற்காக, ஐந்து வயது நிறைந்த உத்தமமான ஜாதியைச் சேர்ந்த ஒரு காளை யைப் பலியிடும்படி நியமித்தான்.

அது வெட்டுண்டு மடிந்து விட்டது. அதன் பின் அவர் கள், புகையுடன் கொதித்துப் பொங்கி விளங்கிய அந்தக் காளை யின் தோலையுரித்து, அதன் மாமிசத்தைத் துண்டு துண்டாக அறுத்துக் கணுக்கணுவாக வெட்டினர். பின்பு அவர்கள் எல் லோருக்கும், உண் கலங்களை வைத்து, அவற்றில் அந்தக் காளை யின் மாமிசத்தைப் பறிமாறினர். ஒவ்வொருவனும் தன் தன் இடத்தில் அமர்ந்திருந்து கொண்டு, தனக்குப் பறிமாறப்பட்ட துண்டத்தை உண்டான். அப்பொழுது அரசன் அந்தக் காளை யின் அதிபிரம்மாண்டமான முதுகெலும்பின் பாகத்தைத் தன் கையாலேயே எடுத்து, அஜாக்ஷன் முன்னால் வைத்து, அவனுக்கு அதியுன்னதமான மரியாதையைச் செய்தான். இவ்வாறு அந்தச்

சேனையில் இருந்தவர்கள் எல்லோரும் தங்களது கொடிய பசிப் பிணியை ஆற்றிக் கொண்ட பின், உபதேச முறைகள் பலவற்றில் தேர்ந்தவரும் மற்றையோர் அனைவருக்கும் யோசனைகளும் செய்து அவர்களுடைய காரியங்களை அதுவரை நடத்தி வந்தவரும், மஹா ஞானியுமான நெஸ்டார் என்னும் பெருங்கிழவர், தமது மனதிலிருந்த அற்புதமான எண்ணங்களைப் பின்வருமாறு வெளியிட்டார் :—

"அரசர்களே! மகா கெட்ட நாளான இன்றைய தினம் நமக்கு எவ்வளவு நஷ்டங்களை உண்டாக்கி விட்டது, பார்த்தீர்களா? கிரேக்கர்களில் எவ்வளவு பேர் மடிந்து போய் விட்டனர். நமது கோஷ்டியிலிருந்த ஜனங்களில் எவ்வளவு பேர்களை நாம் இழந்து விட்டோம்! இந்த சியமந்தரக்கரையை இரத்த வெள்ளமானது எவ்வாறு அலைகளைப் போல் மோதி அடித்து விட்டது. எத்தனையோ வீரர் குழாங்களெல்லாம் மண்ணில் மறைந்துபோய் விட்டனவே! அந்த வீரர்களெல்லாம் இனி எழுந்து வருவார்களா? இவைகளை யெல்லாம் நீங்கள் யோசியுங்கள்! நான் சொல்வதையுங் கேளுங்கள். எங்களது தலைவரே! எனது வார்த்தையைக் கேளும்! நாளைய தினம், தங்கள் சேனைகள் புதிய சண்டைகளுக்கும், ஆயுதங்களுக்கும் ஆளாகும்படி விடியலாகாது. இந்த யுத்தத்தின் மத்தியில் தங்கள் சேனைக்குக் கொஞ்சம் மூச்சுவிடவாவது சாவகாசம் கொடுங்கள்! அந்தச் சாவகாசத்தில் நாங்கள் இந்த யுத்தத்தில் மடிந்து விழுந்து விட்ட நம் நண்பர்களின் பிரேதங்களைத் தகனம் செய்வோம். இரத்தக் கறையினால் செக்கச் செவேலென்று ஆகிவிட்ட இந்தக் களத்தில் சிதறுண்டு கிடக்கும் அவர்கள் பிரேதங்களை யெடுத்துச் சுமந்து சென்று, நம் கப்பல்களின் முன்னால் ஒரு சிதையை யடுக்கி, அதில் வைத்து அவற்றைத் தகனஞ் செய்தபின், பனியைப் போன்ற வெண்ணிறமான அவர்கள் எலும்புகளைப் பொறுக்கி யெடுத்து, அவற்றை நேர்த்தியான சட்டிகளில் கிரஹித்து வைப்போம். அப்போது எதிர்ப் பக்கத்திலுள்ள அவர்களுடைய குழந்தைகள் அந்தச் சட்டிகளின் மேல் விழுந்து அழுது புலம்புவார்கள். அதன்பின் பெரியோர் சிறியோர் என்ற ஏற்றத் தாழ்ச்சியோ, வித்தியாசமோ இன்றி இறந்தவர்கள் அனைவர்களுடைய பிணங்களையும் ஒரே குவியலாக அடுக்கித் தகனஞ்செய்து, அந்த இடத்தில் எல்லோருக்கும் பொதுவாக, நாங்கள் ஒரு அதியுன்னதமான கோரியையும் கட்டுவோம். அதற்கு அடுத்தாற்போல் நமது பாளையத்தையும், கடற்படையையும், காப்பதற்காக வானளாவிய கோபுரங்களைக் கொண்டு ஒரு பெரிய கோட்டையைக் கட்டுவோம். அந்தக் கோட்டையைச் சுற்றிலும், சமதூரமாக உள்ள இடங்களில் நம்முடைய இரதங்கள் போக்குவரவு செய்வதற்குச் சாதகமாக இருக்குமாறு, விசாலமான வாசல்களையும் அமைப்போம். கடைசியாக அவையனைத்தையும் சுற்றிப் பிரம்மாண்டமான ஓர் அகழையுந் தோண்டுவோம்; அப்படியெல்லாம் செய்தால் கிரேக்கர்களான

நாம் மிகவும் தைரியத்துடனும், பயமின்றியும் திரும்பவும் யுத்தத்திற்குச் செல்லலாம். நம் சத்துருக்கள் எவ்வளவு பயங்கரமானவர்களாக இருந்தாலும் நாம் அவர்களுக்குச் சிறிதும் அஞ்சவே வேண்டாம்'' என்றார்.

இவ்வாறு அந்த மஹாபுத்திமான் செய்த ஹிதோபதேசத்தைக் கேட்ட செங்கோலோந்தி, "இது நல்லது தான்! இது நல்லது தான்!!'' என்று அவருடைய வசனங்களை அங்கீகரித்தார்.

இவ்வாறு கிரேக்கர்களது பாளையத்தில் காரியங்கள் நிகழ்ந்து வருகையில், துரோஜன் ராஜகுமாரர்களும், பெரிய மனிதர்களும், பிரியம்மஹாராஜனது அரண்மனை வாயிலில், கூட்டங் கூட்டமாகக் கூடி உட்கார்ந்து கொண்டு, அன்று இரவெல்லாம் ஆலோசனைகள் செய்து வந்தனர்.

அந்தச் சபையில் பெரியோர், சிறியோர் என்ற மரியாதை யாவது, ஒழுங்கான நடவடிக்கைகளாவது, இன்னார் இன்னின்ன விஷயங்களைத்தான் ஆராய்ந்து யோசனைகள் சொல்லவேண்டும் என்ற நிபந்தனைகளாவது இருக்கவில்லை. அவர்கள் அனைவருடைய மனதிலும் பயமே குடிகொண்டிருந்தது. அவர்களுடைய குரல்களிலும் வார்த்தைகளிலும் குழப்பமும், கவலைகளுமே நிறைந்திருந்தன. அவர்கள் தங்கள் மனம் போனபடி உளறிக்கொண்டிருந்தனர்.

அப்போது அந்தினர் என்பவர், எழுந்திருந்து, அவர்கள் அனைவரையும் நோக்கித் தமது வார்த்தைகளுக்குச் செவிசாய்க்கும்படி அவர்களை வேண்டிக் கொண்டார் :—

"துரோஜர்களே! தார்தான்களே! நம் ஸஹாயிகளே! நேசர்களே! நான் சொல்வதைச் சற்றுக் கேளுங்கள். தங்கள் திருவுள்ளம் இன்னதென்பதைத் தெய்வங்கள் எனக்குத் தெரிவித்துள்ளார்கள். அதையே நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன். அதைக் கேளுங்கள். நாம் வணங்கும் சகலமான தேவர்களும் இட்டுள்ள ஆணையை நிறைவேற்றவே நான் இங்கு எழுந்திருக்கிறேன். ஸ்பார்ட்டாவிலிருந்து நாம் அபகரித்து வந்த சகலமான திரவியங்களையும் இந்த க்ஷணம் நாம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். ஆர்காஸ் ராணியாகிய ஹெலனும் தனது புருஷனைப் பழையபடி சென்று சேரும்படி நாம் விட்டுவிட வேண்டும் என்பதே தேவர்களது திருவுள்ளமாக இருக்கின்றது. நாம் தெய்வங்களின் மேல் ஆணையிட்டுச் செய்து கொண்ட சிநேக பந்தங்களையும் உறவாட்டங்களையும் துறந்து விட்டதனால், அந்தத்தெய்வங்களெல்லாம் நம்மைத் துக்கங்கள் நிறைந்த இந்த யுத்தங்களுக்கு ஆளாக்கிவிட்டன, தெய்வங்கள் ஒருநாளும் நெறிதவறு அல்லவா! அவை செய்யும் அனைத்தும் நியாயந்தானே! நீங்கள் இந்த யோசனையை ஏற்றுக்கொண்டு, அதன்படி நடந்தால் உயிருடன் தப்பி இந்த ஆபத்துகளிலிருந்து விடுபட்டுப் பிழைப்பீர்கள். இதைத் தள்ளி

விடுவீர்களானுல் அதனுல் வரும் கஷ்டங்களையும் அனுபவிப் பீர்கள். இது நிச்சயந்தான்'' என்ருர்.

துரோஜர்களில் விருத்தரான அந்திஞர் இவ்வாறு தம் வசனங்களை உரைத்து விட்டுத் தம் ஆசனத்தில் அமர்ந்துகொண் டார். அப்பொழுது அந்த ஸ்பார்ட்டன் மங்கையிடம் மையல் கொண்டிருந்தவனும், ரூபலாவண்ணியங்களுடன் விளங்கியவனு மான அந்த அழகன் அவருக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான்:-

"அடே! கிழவா! நீயும் ஒரு துரோஜன்தானு? நீ சொல்வ தெல்லாம் ஹிதமாகவே விருக்கின்றன. அவை உன் வயதுக்கும் ஏற்றவைதான்! ஆனுல் அவை ஒரு சுதத வீரனுன என் காதுகளில் விழுகையில் வெகு குரூரமாகவே தோன்றுகின்றன. உன் புத்தி மதிகளெல்லாம் ஒரு துரோக புத்தியின் வார்த்தைதான் என்று நான் மதிக்கின்றேன்.

அடே! கிழவா!! உன் வார்த்தைகளில் தூஷணைகளாவது சித்திரவசனங்களாவது இல்லை என்றே நான் ஒப்புக்கொள்ளுகின் றேன். அவைகளில் தர்க்கத்திற்கும் வியவகாரத்திற்குங்கூட இடமில்லை என்புதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனுல் நீ உன் மனதில் தோன்றிய உன் கருத்துக்களையே உரைத்தா யென்றே நான் கருதுகிறேன். உனது பிராயத்தில் நீ நல்ல புத்தி மதிகளையே சொல்லி வந்தாய். அவைகளும் அக்காலத்தில், அவைகளைக் கேட்டோருக்கு ஹிதமாகவே விருந்தன. ஆனுல் ஞானத்திற்கும் காலம் என்பது உண்டல்லவா? அந்தக் காலம் கடந்து போய்விட்டது. அதுவும் உனது நற்புத்தியும் பறந்துபோய் விட்டன! அதுவும் தெய்வசங்கல்பந்தான்! இது நிற்க. இனி துரோஜர்களென்று விளங்கும் அரசர்களே! நான் சொல்லு வதையும் கேளுங்கள்! ஸ்ப்பார்ட்டாவிலிருந்து கொண்டுவந்த பணம் காசுகளையும் நகை நட்டுக்களையும் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். ஆனுல் அந்தக் கட்டழகியை மாத்திரம் நான்விட மாட்டேன். அது முடியாத காரியம். அது நிச்சயம் தான். தவிர இந்த யுத்தத்தை நிறுத்திவிட்டுச் சமாதானஞ் செய்து கொள் வதற்காக நான் என் சொந்தத் திரவியங்களைக் கூடக்கொடுத்து விடுவதற்குச் சித்தமாகவே யிருக்கின்றேன். அதிலாவண்ணிய முள்ள அந்த ஸ்திரி ரத்தினத்தை மாத்திரம் நான்விடேன், அந்த இரத்தினம் என்றைக்கும் என்னுடையது தான்!'' என்ருன்.

அப்போது, இவ்வாறு மேன்மேலும் விருத்தியாகிக்கொண்டு வந்த வாக்குவாதங்களைத் தடுத்து நிறுத்தி விடவேண்டுமென்று எண்ணங்கொண்டு அதிவிருதத்தனுன பிரியம் மஹாராஜன், தனது ஆசனத்தியிலிருந்து வெகு மெதுவாக எழுந்திருந்தான். அச்சமயம் அவன் ஒரு தெய்வத்தைப் போலவே விளங்கியதால், அங்குக் கூடியிருந்தவர்கள் அனைவரும், அவனையே நோக்கினர். அவன் என்ன சொல்லப்போகின்ருன், அதைக் கேட்போம், என்று அவனையே கவனித்தனர். அவன் சற்று நிதானித்துப் பின்பு,

பின்வரும் சாந்தமான வசனங்களை யுரைத்தான்:— "துரோஜர் களே! தார்தான்களே! நமது உதவிக்கு வந்துள்ள கோஷ்டி களே! இப்பொழுது போஜனகாலம் நெருங்கி விட்டது. ஆதலால் நீங்களனைவரும் போஜனமருந்தி உங்கள் பசிதாகங்களை ஆற்றிக் கொள்ளுங்கள். அதன்பின் நம் கோட்டைகளை நன்ருகக் காவல் செய்யுங்கள், இரவில் காவல் செய்வோரது களைப்புத்தீருமாறு, அவர்களுக்குப் பதிலாக ஜாமத்துக்கு, ஜாமம் வேறு ஆட்களை நியமித்து, மாற்றுங்கள். வழக்கம் போல் சகலருக்கும் வெளிச் சத்தைத் தந்து உவகை யூட்டும் தினகரன் திரும்பவும் புதியதாக உதிக்கும் வரை, இந்தக் காரியங்களைச் செய்யுங்கள். அதன்பின் நாம் நமது தூதனை அதிரிதீசருடைய கப்பல்களின் முன்னிலையில் என் மகனது அபிப்பிரயாயத்தை எல்லோரும் அறியச் சொல்லும்படி நியமிப்போம். தவிர, ட்ராய் நகரத்தார் தங்கள் கோஷ்டியிலிருந்து மடிந்து போனவர்களுடைய பிரேதங்களைத் தகனஞ் செய்து, அவர்களுடைய எலும்புகளைச் சட்டிகளில் கிரஹித்து வைக்கும் வரை சிறிது நேரம் சண்டையை நிறுத்தும்படி நாம் அவர்களைக் கேட்போம். அது ஆனபின் நாம் மறுபடியும் யுத்தத்தை ஆரம் பித்து யாருடைய விதி எப்படி யிருக்கின்ற தென்பதையும் அறிவோம். சர்வ வல்லமையுள்ள ஜோவ் பகவானே யாருக்கு ஜயம் என்பதை தீர்மானிக்கட்டும்" என்ருன்.

இவ்வாறு அந்த மஹாராஜன் தன் வார்த்தைகளை மொழிந்து நிறுத்திய பின், வீரர்கள் எல்லாம் தாங்கள் இருந்த இடத்தை விட்டுப் பெயராமலும், ஆயுதங்களை அணிந்துகொண்டு இருந்தபடியேயும் வெகு ஆத்திரத்துடன் சிறிது பக்ஷணங்களை யருந்தினுர்கள்.

மறுநாள் இளஞ்சிவப்புடன் பொழுதுவிடிந்ததும், இடியஸ் என்பவன் இருள்போன்ற கறுத்த நிறத்துடன் விளங்கிய கிரேக்கர் களுடைய கப்பல்களை நோக்கிச்சென்று, அங்கு யோசனைகள் செய்துகொண்டு குழுமியிருந்த மார்ஸ் பகவானதுபுத்திரர்களைநோக் கிப் பின்வரும் வசனங்களையுரைத்தான். அப்போது அந்தக் கூடா ரத்திலிருந்த அனைவரும் அவன் உரத்துச்சொல்லிய சொற்களுக்குச் செவி கொடுத்துக் கவனமாகக் கேட்டுக்கொண்டு, அவனைச் சுற்றி நின்றனர்: "அத்ரியஸ்ஸின் புத்திரர்களே! கிரேக்கர்களே! நான் சொல்லுவதைச் செவிசாய்த்துக் கேளுங்கள். ட்ராய் நாட்டாரும், ட்ராயின் மஹாராஜரும் என்னுடன் சொல்லியனுப்பிய செய்தியைக் கேளுங்கள். இந்த யுத்தத்திற்குக் காரணனுன பாரிஸ் என்பவன் என்ன சொல்லுகின்ருன் என்பதை நீங்கள் தயவுசெய்து கேளுங் கள். அவன் சொல்லுவதை நீங்கள் அங்கீகரித்து அதன்படி நடக்க வேண்டும் என்றே நான் சகலமான தேவர்களையும் வேண் டிக்கொள்ளுகின்றேன். அவன் கிரீஸ் தேசத்திலிருந்து கொள்ளை யடித்து இலியன் கரைக்குக் கொண்டுவந்த சகலமான தனங்களை யும் இரத்தினங்களையும் நகைநட்டுக்களையும் திரவியங்களையும் திருப்பிக் கொடுத்துவிடுவதாகச் சொல்லுகின்ருன். அவன் அவ்வாறு கொள்ளையடித்தது எங்களுக்குச் சிறிதும் சம்மதமே

இல்லே. அவன் நடுவழியில் கடலுக்கு இரையாகப் போயிருந்தாளு ஞல், அது எங்கள் எல்லோருக்கும் சம்மதமாகவே யிருந்திருக்கும். தவிர அவன் இந்த யுத்தத்தை நிறுத்திவிட்டுச் சமாதானம் செய்து கொள்வதற்காக துரோஜர்களது திரவியத்தில் பெரும்பாகத்தைக் கூடத் தருவதாகவும் சொல்லுகின்ருன். ஆனுல் கட்டழகியான அந்தப் பெண்மணியை மாத்திரம் விடமுடியாது என்கின்ருன். கிரேக்கர்களான நீங்கள் அவளேக் கண்டிப்பாய்த் திருப்பிக் கொடுத்தே விடவேண்டும் என்று ஒரே மனதாய்க் கேட்கின்றீர் கள். ட்ராய் நாட்டாரான நாங்களும் அவ்வாறே செய்யவேண்டு மென்று அவனேப் பலவாருகக் கெஞ்சிக் கேட்டோம். அவன் மாட்டேன் என்கின்ருன். நீங்கள் உரிமையுடன் கேட்டதும் நாங்கள் கெஞ்சிக் கேட்டதும் வீணுயின. அடுத்தபடியாக, தலே வர்களே! நான் உங்களுக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளு கின்றேன். எங்களது கட்சியிலிருந்து வதையுண்டு இறந்துபோன வீரர்களின் பிரேதங்களேத் தகனஞ்செய்து அவர்கள் அஸ்தி களேச் சட்டிகளில் கிரஹிக்கும்வரை, நீங்கள் இந்த யுத்தத்தை நிறுத்தவேண்டுமென்று நாங்கள் உங்களேக் கேட்டுக்கொள்ளுகின் ருேம். அந்தத் தகனக் கிரியைகள் ஆனபின், நாம் இந்த யுத்தத் தைத் திரும்பவும், ஆரம்பித்து, இதில் யாருக்கு வெற்றி, தோல்வி என்பதைத் தீர்மானித்துவிடலாம். மஹாப்பிரபுவாகிய ஜோவ் பகவான் தமது இஷ்டப்படி, யாருக்கு வேண்டுமானுலும் ஜயத் தைத் தரட்டும்'' என்ருன்.

கிரேக்கர்கள் அனேவரும், அவனுடைய சொற்களேக் கவனமாகச் செவி கொடுத்துக் கேட்டனர். அனேவரும் மௌன மாகவே யிருந்தனர். அவன் பேசுகையில், ஒருவராவது அவனேத் தடுத்துப் பேசவில்லே. கடைசியாகத் திடிதீசன் எழுந்தான். அவன் எழுந்திருந்து, பின்வரும் வசனங்களேயுரைத்தான்:—

“நண்பர்களே நமக்கு இது வேண்டவே வேண்டாம். இவர்கள் கொடுக்குந் தனதான்னியங்களுக்கும் திரவியங்களுக்கு மாக நாம் நம் நல்ல பெயரையும் கீர்த்தியையும் பறிகொடுத்த லாகாது! நமக்கு இந்த ஸ்பார்ட்டன் பெண்ணுங்கூடவேண் டாம். நாம் நமது நல்ல கீர்த்தியையே காப்பாற்றவேண்டும். நாம் நம் வீரசூர பராக்கிரமங்களினுல் அவர்களே வென்றே நம் திரவியங்களேயும், அந்த ஸ்திரீயையும் திரும்ப அடையவேண்டும். இதோ பார்த்தீர்களா? அவர்களது கோட்டை மதில்கள் கிடுகிடு வென்று ஆடுகின்றன! அவர்களுக்கு அழிவுகாலம் கிட்டிவிட்டது! ட்ராய் நகர் நடுங்குகின்றது. இன்ருே நாளேயோ அது கீழே விழுந்து தரைமட்டமாகப் போகின்றது'' என்ருன்.

அவ்வாறு அவன் சொல்லியதைக் கேட்ட வீரர்களெல்லாம் அவனுடைய தைரியமான வார்த்தைகளுக்கு வியந்தனர். அவர் களும் மற்றைய சகலமான கிரேக்கர்களும், அவன் சொல்லியது, தங்களுக்குச் சம்மதந்தான் என்பதைத் தெரிவிப்பதற்காக, உரத் துக் கோஷித்தனர். அதன்பின் இராஜாதிராஜன் பின்வரும்

வசனங்களை யுரைத்துச் சமாதானம் செய்துகொள்ள முடியாது என்று மறுத்துவிட்டான்:—

"தூதா! இனிமேல் நடக்கவேண்டியது இன்னது என்பதைச் சொல்லுகின்றேன் செவிசாய்த்துக் கேள்! அதுவே கிரீஸ் நாட்டாரின் மறுமொழியென்றும் அறிந்துகொள்! உங்களது கட்சியிலிருந்து மடிந்துபோய்விட்ட வீரர்களுக்கு மீந்துள்ள வீரர்கள் ஈமக் கடன்களைச் செய்யட்டும். இறந்து போனவர்களுடன் எனக்கு வைரமோ விரோதமோ இல்லை. துரோஜர்களே! நீங்கள் அதோ அங்கு மடிந்து விழுந்து கிடக்கும் உங்கள் வீரர்களின் பிரேதங்களைத் தேடியெடுத்து அவைகளுக்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்யுங்கள். அந்த வீரர்களின் ஆத்மாக்கள் சாந்தியடையக்கூடிய சடங்குகள் எல்லாவற்றையுஞ் செய்யுங்கள். விண்ணுலகத்திலிருந்த வண்ணம் இடிகளையுருட்டும் ஜோவ் தேவரே! நான் சொல்லும் இந்த வார்த்தைகளுக்கு நீரே சாட்சி" என்றான். அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் தனது செங்கோலையும் உயரத் தூக்கி ஆகாயத்தில் சுழற்றினான்.

அதன்பின் அந்தத் தூதன் தனது வரவையும் தனது காரியத்தின் முடிவையும் அறிய ஆவலாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த அரசர்கள் ஒன்றாய்க் கூடிக் குழுமியிருந்த புனிதமான ட்ராய் நகரை நோக்கிச் சென்றான். அங்குச் சென்று சேர்ந்ததும், அவன் அந்த அரசர்களின் சபையில் நின்றுகொண்டு, கிரேக்கர்கள் சமாதானஞ் செய்துகொள்ள மறுத்துவிட்டார்களென்றும், சண்டையை மாத்திரம் கொஞ்சகாலம் நிறுத்த ஒப்புக்கொண்டனர் என்றும் அறிவித்தான். அதன்பின் துரோஜர்களெல்லோரும் தங்கள் தங்கள் அலுவல்களைக் கவனிக்கச் சென்றனர். அவர்களிற் சிலர் அந்தக் களத்தில் விழுந்து கிடந்த தங்கள் உற்றார் உறவினர்களுடைய பிரேதங்களைத் தேடவும், வேறு சிலர் அந்தக் களத்தில் அடர்ந்து நின்ற காடுகளிலுள்ள மரங்களை வெட்டவும் சென்றனர். அவ்வாறு அவர்கள் அக்காட்டு மரங்களை வெட்டியபொழுது பிரம்மாண்டமான சப்தமும் அதன் எதிரொலியும் உண்டாயின.

அச்சமயம் கிரேக்கர்களும் சும்மா இருக்கவில்லை. அவர்களும் தங்கள் கப்பல்களைவிட்டு, அந்தக் கடலின் கரையில் இறங்கி அதன் ஓரமாகப் பச்சைப்பசேலென்றிருந்த காடுகளை வெட்டி, மரங்களை அடுக்கி அவற்றின்மேல் தங்கள் கட்சியிலிருந்து மடிந்து போய்விட்ட வீரர்களின் பிரேதங்களை அடுக்கினர்.

இவ்வாறு இரு கட்சிக்காரரும் தங்கள் வீரர்களுக்கு ஈமக் கடன்களைச் செலுத்த முயன்றனர்.

மறுநாள் அந்த ஆழ்ந்த கடலின் உள்ளிருந்த மண்டபங்களிலிருந்து உலகத்தார் அனைவருக்கும் தன் புனிதமான பிரகாசத்தை வருஷிக்கவேண்டும் என்று நினைத்து தினகர பகவான் மறுபடியும் தனது சுவர்ணமயமான தேரின்மேல் ஏறிக்கொண்டு வந்தான்.

அவனுடைய கிரணங்கள் அங்குள்ள மலைச்சிகரங்களின்மேல் விழுந்தபொழுது, அச்சிகரங்களெல்லாம் ஆழ்ந்த ஊதா வர்ணம் தீட்டியவைபோல் விளங்கின. அப்பொழுது கிரேக்கர்களும் துரோஜர்களும் திரள் திரளாகக் கலந்து ஒருவர்மேல் ஒருவர் விழுந்து, தங்களுக்குப் பெருத்த நஷ்டங்கள் விளைந்த அந்தக் களத்தைச் சோதித்தனர். அங்கு இருகட்சியிலுமிருந்து மடிந்து போனவர்களின் பிணங்கள் மலைபோல் குவிந்து கிடந்தன. அந்தப் பிணங்களெல்லாம் புழுதியில் அழுந்தியும் காயத்தினால் உருவழிந்து போயுமிருந்ததனால், அந்த வீரர்கள் தங்கள் சிநேகிதர்களுடைய பிரேதங்களைக் கண்டுபிடிக்க முடியாதவர்களாயினர். ஆதலால், அவர்கள் அந்தப் பிணங்களின் மேலிருந்த காயங்களை மாத்திரம் தண்ணீர் விட்டுக் கழுவி, அவர்களது மரணத்தைக் குறித்துக் கரைந்து, உருகிக் கண்ணீர் விட்டு, அழுது அந்தப் பிணங்களைப் பின்பு தங்கள் இரதங்களின் ஓரமாக வைத்துத் துக்கங் கொண்டாடினர்.

அப்போது அதிவிவேகியான, பிரியம்மஹாராஜன் அவ்வாறு மித மிஞ்சித் துக்கம் பாராட்டுவது அழகல்ல வென்று அவர்களைக் கண்டித்துத் தடுத்துவிட்டான். அதன்மேல் அவர்களனைவரும், அந்தப் பிணங்களைச் சிறிதும் பேச்சோ மூச்சோ சந்தடியோ யின்றி வெகு துரிதமாகச் சிதைகளின் மேல் வெகு ஒழுங்காக அடுக்கி வைத்து, மனவுருக்கத்துடன், அவைகளை எரித்துவிட்டுப் பின்பு மிகுந்த விசனத்துடனும், அதிநிதானமாகவும் தங்களது புண்ணிய நகரமான ட்ராய்க்குத் திரும்பிச் சென்றனர்.

கிரேக்கர்கள், தங்களது இனத்தாருக்குப் பாராட்டிய துக்கமும் இதற்கு எள்ளளவும் குறைந்ததாக இருக்கவில்லை. அவர்களும் தங்களது கட்சியிலிருந்து பிராணனை இழந்தவர்களுடைய குளிர்ந்த பிணங்களை ஒழுங்காகக் கட்டைகளின் மேல் அடுக்கி வைத்து, துரோஜர்களைப் போலவே, அவைகளுக்குத் தீயிட்டுக் கொளுத்தினர். அவ்வாறு வெகு பயபக்தியுடனும் மனவுருக்கத்துடனும் அவர்களுக்கு ஈமக்கடன்கள் செய்தபின், அவர்களும் மெதுவாகவும் விசனத்துடனும் நடந்து சென்று, தங்கள் கப்பல்களை அடைந்தனர்.

பின்பு தினகரனானவன் அன்றைய தினம் காலைப்பொழுதில் பகலும் இரவும் கூடும் அடிவானத்தில் பிரவேசித்துத் தன் சிவந்த கிரண வெள்ளத்தைப் பொழியுமுன், கிரேக்கர்களெல்லாம் வெந்து தணிந்து போய்விட்ட தங்கள் பாளையத்தையும், கப்பற் படைகளையும் காப்பதற்காக உன்னதமான கோபுரங்கள் கொண்ட, அதி உயரமான அரணான மதில்களையும் கட்டினர். அந்த மதில்களின் இடை இடையே தங்கள் இரதங்களுக்குப் போகவும் வரவும் வசதிகள் இருக்குமாறு, அவர்கள் விசாலமான வாசல்களையும் அமைத்தனர். கடைசியாக இவை யெல்லாவற்றையும் சுற்றி ஒரு பிரம்மாண்டமான அகழையுந் தோண்டினர். தவிர, அவர்கள் தங்களது கோட்டைக்குள் தங்கள் விரோதிகள் பிரவேசிக்காமல்

அவர்களைத் தடுப்பதற்காகப் பூமியில் வெகு ஆழமாகக் குழிகளைத் தோண்டி அவற்றில் பலமான கம்பங்களையும் நாட்டினர். இவ்வாறு கிரேக்கர்களெல்லாம் மிகவும் சிரமப்பட்டு உழைத்தனர்.

அப்போது விண்ணுலகத்திலிருந்த திவ்விய ஸ்வரூபிகளான தேவர்களெல்லாம் தங்களது பிதாவான ஜோவ் தேவரைச் சூழ்ந்து பொலிவுடன் நின்று கொண்டு கேவலம் மனிதர்கள் செய்த இந்த அற்புதமான காரியங்களைக் கண்ணுற்று ஆச்சரியமடைந்தனர்.

அந்த சந்தர்ப்பத்தில் பூமண்டலத்தைக் கலக்கும் திரிசூலத்தை ஏந்தியவரான பெருந்தேவர் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினர் :—

"கர்வம் மிகுந்த இந்தக் கிரேக்கர்களைப் பாருங்கள்! இவர்கள் இந்த அலைமோதும் கடலோரத்தில் இவ்வளவு பிரம்மாண்டமான கோட்டை கொத்தளங்களைக்கட்டி விட்டோம் என்று பெருமையடித்துக் கொள்ளுகின்றனர். நாம் இந்தக் காரியத்தைச் சாதித்து விட்டோம் என்று இவர்கள் குதிக்கின்றனர். இனிமேல் எந்த மானிடப்பதர்கள் நம்மை வணங்குவார்கள்; நம்மைத் துதிப்பார்கள். நமது உதவியை நாடுவார்கள், நம்மைப் பலவான்களென்றுகூட அவர்கள் மதிக்க மாட்டார்களே! அவர்கள் நம் கோயில்களை நாடார்களே! நம் பூசாரிகளையும் சட்டை செய்யார்களே!

இவர்கள் கட்டிவிட்ட இந்த நீண்ட மதில்களைத்தான் பாருங்கள்! இவைகள் சமுத்திரம் வரை நீண்டிருப்பதைப் பார்த்திருக்கிறீர்களா! இவர்கள் ஒரு தேவதையையும் ஆலோசனை கேட்கவில்லை; ஒருவிதமான பலியுங் கொடுக்கவில்லை. இவர்களது கியாதியே கியாதி! அந்தக் கியாதியானது, இளஞ்சூரியன் பொன் போன்ற தன் கிரணங்களைத் தேசோ விசாலமாகப் பொழிவது போல, இந்தப் பூமண்டலத்தில் நெடுந்தூரத்திலுள்ள மூலை முடுக்குக்களில் எல்லாம் பரவிவிடும். அந்தக் கியாதி அழியாமலும் இருக்கும்! அது மேன்மேலும் விருத்தியாய்க் கொண்டிருக்கையில் தேவர்களெல்லாம் இரவு பகலாக உழைத்துத் கட்டியவையும், பளபளவென்று மின்னுபவையும், புராதனமும் திவ்வியமுமான லயோமிடான் ஆலயக்கட்டிடங்கள் கூட இடிந்து, தகர்ந்து, அழிந்து மண்ணோடு மண்ணாய்க் கலந்து அவற்றை நினைப்பாருமின்றிப் போமல்லவா?" என்று ஆழ்கடலின் ஏக சக்கரவர்த்தியான அந்த மஹா தேவர் உரைத்தார்.

அதைக் கேட்டபொழுது உலகத்தை மேகங்களால் மறைத்து விடுபவரும், விண்ணுலகத்தில் பாதியைக் காரிருளில் அழுத்தி விடுபவரும், ஆகிய சர்வ வல்லமையுமுள்ள இடிக் கடவுள், தன் முகத்தைச் சுளித்துக் கொண்டு பின்வருமாறு பதிலுரைத்தார் :—

“மஹாபலவானுன சமுத்திர ராஜ! நீ உன் கோபத்தினுல் இந்த மஹா கெட்டியானதும் அழிவில்லாததுமான உலகத்தின் அஸ்திவாரத்தை அசைத்து ஆட்டிவிடக்கூடியவன் ஆயிற்றே! கேவலம் மர்த்தியர்கள் செய்யக்கூடிய காரியங்கள் எவற்ருல் நமக்குப் பயமுண்டாகும்? பயம் ஏற்படும்? உன்னதமான ஸ்தலங் களில் வசித்து வரும், நம் கோஷ்டியில் உள்ளவர்கள் மஹா எளிய ஒரு பிரஜைக்குங்கூட அவர்களால் என்ன தீங்கு செய்யமுடியும்! சூரியனுடைய கிரணங்கள் சுவாலையுடன் பிரகாசிக்கும் இடங் களில் எல்லாம் உன் அதிகாரம் செல்லுகின்றது. அங்குள்ளோர் அனைவரும் உன்னைப் பாராட்டி வருகின்றனர். அந்த இடங்களி லெல்லாம் உனக்கு என்றென்றும் அழியாத புகழ் கண்டிப்பாக இருந்தே வரும். அது நிச்சயந்தான். அது அவ்வாறிருக்க, அங் குக் கேவலம் மர்த்தியர்கள் வெகு ஆடம்பரத்துடன் எழுப்பி யிருக்குங் கட்டிடமானது பிற்காலத்தில் வரும் சகலமான மனிதர் களுக்கும் கட்புலனுகும்படி என்றென்றும் அழியாமல் இருந்து வருமா? வரவே வராது அது நிச்சயந்தான்.

இப்போது வெகு கம்பீரமாக விளங்கும் அந்த இடத்தின் அடையாளங்கள் கூட, நாளடைவில் அழிந்தே போய்விடும்! அந்தக் கட்டடங்களின், அஸ்திவாரங்களெல்லாம் உன் சக்தியி னுலேயே அழிந்து தகர்ந்து போய்விடும்! அதன்பின் உன் அலை களே அந்தக் கட்டடத்தின் உயர்ந்த பிரம்மாண்டமான மதில்களில் மோதி அவற்றைக் கீழே வீழ்த்திவிடும். அப்பொழுது கரையாக விருந்த இடமெல்லாம் மணற்குவியல்கள் நிறைந்த விசாலமான காடாய்ப்போய்விடும். கடைசியாக, அந்தக் காடும் பாழடைந்து மறைந்து போய்விடும். அது இருந்த இடத்தின் பெயரும் அழிந்து போம்” என்ருர்.

இவ்வாறு தேவலோகத்தில் காரியங்கள் நிகழ்ந்து வந்தன. அன்றைய சாயந்திரம் உருண்டோடும் சூரிய பகவான் கடலை நோக்கி இறங்கி வருகையில், அவரது திருஷ்டியானது கிரேக்கர் களுடைய கோஷ்டிகளின்மேல் விழுந்தது. அவர்கள் அப்பொழுது தங்கள் காளைகளை வெட்டினர். அதன்பின், அதன் ருசியும் மண முங்கொண்ட புகையானது அவர்களுடைய கூடாரங்களிலிருந்து கிளம்பின. அதே சமயத்தில் லெம்நாஸ் கரையிலிருந்து புறப்பட்டு வந்த போர்க் கப்பற் கூட்டமானது பாக்கஸ் பகவானது பிரசாதங் களுடன் வர, அதைக் கண்ணுற்று, கவலையுற்றிருந்த அந்த வீரர் கள் உற்சாகமடைந்தனர். அதிதனவானுன யூனியஸ் என்பவன், நறுமணங் கமழும் சாராயங்கள் நிறைந்த ஆயிரம் ஜாடிகளை இந்த கிரேக்க ராஜனது பாளையத்துக்கு அனுப்பியிருந்தான். அவையே அந்தக் கப்பல்களில் வந்தன. அந்த யூனியஸ் என்பவன், முற் காலத்தில் தன் ஜனங்களுக்குப் பேருபகாரியாக விளங்கிவந்த ஜேஸன் என்பவனுக்கு ஹிப்ஸினபலி என்பவனிடம் பிறந்தவன். தங்களுக்கு வேண்டிய வேறு சாமான்களை அந்த கிரேக்கர்கள் விலைகொடுத்து வாங்கிக்கொண்டனர். இவ்வாறு அந்தப் பெரிய கோஷ்டியாரது போஜனத்திற்கு வேண்டிய சாமான்களெல்லாம்,

ஏராளமாகச் சேகரிக்கப்பட்டன. அவ்வாறு சேகரிக்கப்பட்ட சாமான்களுக்கு அவர்கள் சரியான திரவியங்களை விலையாகக் கொடுத்தே வாங்கினுர்கள் என்று ஏற்கனவே சொன்னேமல்லவா? சிலர், பித்தளையைத் தந்தனர். வேறு சிலர் இரும்பைக் கொடுத்தனர். சிலர், தங்களிடமிருந்த காளைகளையும், வேறு சிலர் தங்கள் அடிமைகளையும் தாங்கள் வாங்கிக்கொண்ட சாமான்களுக்கு விலையாகக் கொடுத்தனர். இவ்வாறு யுத்தகளத்தில் கூடியிருந்த கிரேக்கர்களும் கோட்டை கொத்தளங்களிலிருந்த துரோஜர்களும், அன்று இரவெல்லாம் போஜனஞ்செய்து கொண்டு தங்களது பொழுதைப் போக்கினர்.

இதையெல்லாம் கண்ணுற்ற ஜோவ் பகவான் பொருமை கொண்டு தமது கோபத்தையும் வெளிப்படையாய்க் காட்டினுர். இருண்டு கிடந்த அந்த இராத்திரியில் அவர் தம் செக்கச்சிவந்த மின்னல்களை அம்புகளைப்போல் விண் விண் என்று எறிந்தார். அதைக் கண்ணுற்ற இருதிறத்தாரும் மனமடங்கித் தாழ்மையுடன் தலைவணங்கினர். அவர்களனைவரையும் ஒரு பெருந் திகில் பிடித்துக்கொண்டது. ஆகாய மண்டலத்தை நோக்கி அந்தப் பெருத்த இடிமுழக்கமும் மின்னலும் நகர்ந்து வருகையில், அவர்கள் வெள்ளை வெளேரென்று வெளுத்து நின்றனர். அப்போது அவர்களனைவரும் நடுநடுங்கிப் பயந்து தங்கள் தங்களது கிண்ணத்தை உயரத் தூக்கி, அதிலிருந்து பானகத்தை தாங்கள் அருந்து முன் அதிலிருந்து சில சொட்டுக்களை ஜோவ் தேவரைத் துதித்து அவருக்கென்று நிவேதித்து, அர்ப்பணஞ் செய்தனர். அவ்வாறு அவர்கள் தாராளமாக வார்த்துச் செய்த அர்க்கியமானது ஒரு பெருத்த ஆருகப் பெருகி விட்டது. அதனல் வெம்மையுடன் தவித்து வந்த அந்தப் பூமியின் தாகமும் தணிந்தே விட்டது!

இவ்வாறு கடைசியாக அன்றைய தினம் நெடும் நேரம் வரை, யுத்தக் காரியங்களை ஒழித்து விட்டு நித்திரையுஞ் செய்து அவர்கள் சிரம பரிகாரமுஞ் செய்து கொண்டனர். இரவில் கிடைக்கக் கூடிய இலாபமான சர்வதாப நிவாரணமான சிரமபரிகாரத்தையும் அடைந்தனர்.

———o———

## எட்டாவது அத்தியாயம்

# இரண்டாவது யுத்தமும் அதில் கிரேக்கர்களுக்கு உண்டான கஷ்டமும்

கதைச் சுருக்கம்: ஜுபிட்டர் பகவான் சகலமான தேவர்களை யும் ஒரு சபை கூட்டி, அந்தத் தேவர்கள் இந்த யுத்தத்தில் இறங்கி யுள்ள இரண்டு கக்ஷிகளில் ஒன்றிலும் சேரக்கூடாது என்றும், அப் படித் தன் கட்டளையை மீறிச்சேருவோரைத் தான்தாரது (தலாதல) நரகத்துள் ஆழ்த்தியே விடுவேன் என்றும் பயமுறுத்துகின்றார். மினர்வா தேவி மாத்திரம், கிரேக்கர்களுக்குச் சமயோசிதமான யோசனைகளைச் சொல்லிவரத், தனக்கு அனுமதி தர வேண்டு மென்று பிரார்த்தனை செய்து, அந்த அனுமதியைப் பெறுகின்றாள். அதன்பின் இரு திறத்துச் சேனைகளும் யுத்தத்தில் கலக்கின்றன. ஜுபிட்டர் பகவான் தம் இருப்பிடமான ஐடாமலையில் இருந்து கொண்டு, தம் தராசுகளில் நியாய அநியாயங்களைச் சீர் தூக்கிப் பார்த்து, யார் யாருக்கு எப்படி யெப்படி வெற்றி தோல்விகளைப் பங்கிட வேண்டும் என்று ஆலோசனைகள் செய்கின்றார். கடைசி யாக அவர் தம் கணங்களான இடிமுழக்கங்களை ஏவிவிட்டு கிரேக்கர்களுக்குப் பீதியை உண்டாக்குகின்றார். அப்போது பெருத்த ஆபத்துகளினிடையில் நெஸ்டார் மாத்திரம் தனியாக யுத்தஞ் செய்து வருகின்றார். தயோமதி அவருக்கு உதவி செய்ய வருகின்றான். அவனது சாகசங்களும் ஹெக்டரின் வீரச் செயல் களும் வெகு விசேஷமாக வருணிக்கப் படுகின்றன. அப்போது ஜுனோ தேவியானவள் கிரேக்கர்களது உதவிக்கு வர வேண்டும் என்று நெப்தியூன் பகவானை மிகவும் உருக்கமாகப் பிரார்த்திக் கின்றாள். போதனைகளும் செய்கின்றாள். அவளுடைய பிரயத் தனங்கள் பலிக்காமல் போகின்றன.

அடுத்தபடியாக டியூஸர் என்பவனது வீரச் செயல்களும், அவன் ஹெக்டரினால் காயம்பட்டுப் போர்க்களத்திலிருந்து தூக்கிப் போகப்படுவதும் வருணிக்கப்படுகின்றன.

அதன் பின் ஜுனோ, மினர்வா தேவிகள், கிரேக்கர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்று செய்த பிரயத்தனங்களும் அவை வீணானதும் சொல்லப்படுகின்றன. அந்தப் பிரயத்தனங்களை யெல்லாம் ஜுபிட்டர் பகவான் ஐரிஸின் மூலமாகத் தடுத்து வரு கின்றார். அன்று இரவு வந்தவுடன் சண்டையும் நின்று விடுகின்றது. கிரேக்கர்கள் தங்கள் கப்பல்களுக்கு முன்னுள்ள கோட்டை கொத்தளங்களுக்கும் கோபுரங்களுக்கும் ஓடிப்போய் விடுகின் றனர். ஹெக்டர், தன் சத்துருக்கள் தங்கள் கப்பல்களில் ஏறிக் கொண்டு தப்பியோடி விடாமல் தடுப்பதற்காகத் தன் ஆட்கள் யுத்த களத்திலே இருந்து கொண்டு, அதை இரவெல்லாம் காத்து

வர வேண்டும் என்று உத்தரவிடுகின்ருன். அவர்கள், அந்தக் களம் முழுவதிலும் தீவட்டிகளேயும் பந்தங்களேயும் ஏற்றி வைத்துக் கொண்டு ஆயுத பாணிகளாகவே அன்றைய இரவைக் கழிக் கின்றனர்.

இந்தக் காவியத்தின் ஆரம்பத்திலிருந்து இந்த அத்தியா யத்தின் இறுதி வரையிலும் இருபத்தேழு நாட்கள் கழிந்துவிடு கின்றன. இதில் குறிக்கப்படும் விஷயங்களெல்லாம் தேவசபை யிலும், கடற்கரையை நோக்கியுள்ள களத்திலும் நிகழ்கின்றன.

---

உஷா தேவியின் அழகிய புதல்வியாகிய அரோராவானவள் பனித்துளிகள் படிந்துள்ள புற்றரையின்மேல், தன் சிவந்த கிரணங் களேப் பொழிந்தாள். அப்பொழுது, மேகத்தை யளாவிக்கொண் டிருக்கும் உன்னதமான சிகரங்களேயுடைய ஒலிம்பஸ்ஸில் அப் பொழுது விண்ணுலகிலுள்ள தேவர்களுக்கெல்லாம் தலேவரான ஜோவ் தேவரானவர் நெடுநேரம் மௌனமாக இருந்தார். அந்தச் சபையில் சப்தமே சிறிதும் இருக்கவில்லே. எல்லோரும் அதி பயபக் தியுடன் வாயைப் பொத்திக் கொண்டும், மெதுவாகவே மூச்சை விட்டுக் கொண்டும் அமைதியுடனிருந்தனர். கடைசியாக அந்த தேவாதி தேவர் தமது மௌனத்தைக் கலேத்துப் பின்வரும் வசனங் களேயுரைத்தார். அவ்வசனங்களே எல்லாம் அங்குக் கூடியிருந்த தேவர்களனேவரும் வெகு கவனத்துடனும் பயபக்தியுடனும் செவி சாய்த்துக் கேட்டு நடுக்கமுங் கொண்டனர்:

"விண்ணுலகத்தில் வாழும் அரசர்களே! அழிவில்லாத தேவர்களே! செவி சாய்த்துக் கேளுங்கள்! நமது ஆஞ்ஞையைக் கேளுங்கள்! உங்கள் செவிகளில் விழும் வசனங்களேச் சிரத்தை யுடன் சிரமேற் கொள்ளுங்கள். நமது ஆணேயை ஒருவராலும் மறுக்கவோ மாற்றவோ முடியாது. விண்ணுலகம் அனேத்துமே ஒருங்காகக் கூடி, அதை அசைக்க முயன்ருலும் அது அசையாது, ஊழ்வினேயே நீ அதை நிறைவேற்று! நமது கணங்களே! நீங்கள் அதை அங்கீகாரஞ் செய்யுங்கள்! அதோ அங்குக் காணும் யுத்த களத்தை நாம் வெறுத்துத் தள்ளியிருக்கிருேம். அது நமது கிருபைக்குப் பாத்திரமானதன்று. அந்தக் களத்தில் எந்தத் தேவ ஞகட்டும், தேவியாகட்டும் தனது காலே மாத்திரமே வைத்தலா வது, அல்லது அங்குள்ள இரு கட்சிக்காரர்களுக்கும் தன்னுலான உதவியைச் செய்தாலாவது, அல்லது உதவியைச் செய்கின்றேன் என்று மாத்திரம் ஒப்புக் கொண்டாலாவது, நாம் அந்தத் தேவ னேயே தேவியையோ சிறிதும் தயவு தாட்சண்ணியமின்றி அவ மானப்படுத்தி, அந்தக் களத்திலிருந்து இந்த விண்ணுலகத்திற்கே, திருப்பித் துரத்தியடித்து விடுவோம். அவர்கள் அந்தச் சண்டை யில் வலுவில் பிரவேசிப்பார்களாஞல் அனுவசியமாய்க் காயங்கள் பட்டு இங்குத் திரும்பி ஓடி வருவார்கள். இங்குள்ளவர்கள் அவர் களே மதிக்கமாட்டார்கள். அவமதிக்கவே செய்வார்கள். அல்லது

அவர்கள் இந்தச் செங்குத்தான ஒலிம்பஸ் மலையிலிருந்து குப்புற உருட்டிவிடப்பட்டு உருண்டுருண்டு வெகுதூரஞ் சென்று கடைசியாக இருள் சூழ்ந்த அதிபாதாளமான கார்த்தாரியன் குழியில் விழுந்து கதறுவார்கள். அவர்கள் ஒருவராலும் திறக்க முடியாத பிரம்மாண்டமான கதவுகளையுடைய அந்தக் கொடிய நரகத்திலுள்ள அறைகளில் சிறைபட்டுத், தகதக வென்று காய்ச்சிய சங்கிலிகளால் அந்த அறைகளில் பித்தளைத் தளங்களுடன் பிணித்துக் கட்டுண்டவர்களாய் வேதனை, பொறுக்க மாட்டாமல்கதறுவார்கள், ஆகாயமளாவிய உன்னதமான விண்ணுலகத்தில் அதிமேன்மையாக இருந்து வந்தது போக, அதற்கு நேர் விரோதமாக அதிபாதாளத்தின் மத்தியில் உள்ள ஆழ்ந்த கொடிய நரகத்தில் விழுந்து அழுந்தி வருந்துவார்கள். எனக்கு விரோதமாகக் கிளம்ப வேண்டுமென்று நினைப்பவன், இந்த நரக லோகங்களைச் சதா ஞாபகத்தில் வைத்து வரட்டும். அங்கு நேரக்கூடிய உபத்திரவங்களையும் கஷ்ட நஷ்டங்களையும் நினைத்து நடுங்கட்டும்! சர்வ வல்லமையுமுள்ள நான் தேவாதி தேவன் என்பதையும் அறிந்து அடங்கியிருக்கட்டும்.

விண்ணுலகத்திலுள்ள தேவர்களான நீங்களனைவருஞ் சேர்ந்து, உங்கள் படைகளையும் சேனைகளையும் ஒன்ருகத் திரட்டித் தான் பாருங்கள். எல்லோரும் ஒன்ருகச் சேருங்கள். அவர்களுக்குச் சர்வ வல்லமையும் உண்டா, இல்லையா என்பதையும் பரீக்ஷை செய்து விடுங்கள்!

விண்ணுலகத்தையும், மண்ணுலகத்தையும் சர்வ சாகரங்களையும் ஒன்ருய்ப் பிணித்துக் கட்டிக் கொண்டுள்ளதும், என்றும் அழியாததுமான, நமது பொற் சங்கிலிகளை அவிழ்த்துத் தொங்க விடுங்கள்! அமரர்களும் மர்த்தியர்களும் சகலரும் ஒன்ருய்க்கூடி, ஒரே மனத்தினராய் முயன்று அந்தச் சங்கிலிகளை இழுங்கள்! இடிக் கடவுளான என்னைப் பூமியில் இழுத்துத் தள்ள முடியுமா? என்பதையும் பாருங்கள்! அது உங்களால் ஒருக்காலும் முடியவே முடியாது. உங்களது சிரமமெல்லாம் வீணேயாகும்!

இந்தக் கதையை நீட்டிய மாத்திரத்தில் நான் இங்குள்ள தேவர்களையும் சகலமான சமுத்திரங்களையும் இந்தப் பூமண்டலத்தையும் வேரோடு பெயர்த்து எடுத்துவிடுவேன்! இந்தச் சங்கிலியை நான்தான் ஒலிம்பஸ்ஸின் உன்னதமான சிகரத்தில் மாட்டி வைத்திருக்கிறேன்! இந்தப் பரந்த உலகமும் என் கண்ணெதிரில் திகிலடைந்து நடுங்கித் தொங்கிக் கொண்டிருக்கின்றது! என் ஆட்சியானது அவ்வளவு பெருமையுடையது. அதற்கு வரம்பே கிடையாது. எனக்கு மேலான அதிகாரியும் கிடையாது. ஜோவுக்கும், மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் உள்ள உண்மையான தாரதம்மியம் எவ்வளவு என்பதை உள்ளபடி அறியுங்கள்,'' என்ருர்.

இவ்வாறு அந்தச் சர்வ வல்லமையுள்ள தேவர் இயம்பியதைக் கேட்ட, மஹா பராக்கிரமசாலிகளான மற்றைய தேவர்களில்

ஒருவராவது அவருக்குப் பதில் சொல்லத் துணிந்து முன்வரவில்லை. எல்லோரும் திகிலடைந்தவர்களாய், அத்தியந்த பயபக்தியுடன் விளங்கினர். அந்தத் தேவமண்டலம் முழுவதிலும், அதி மௌனமே வியாபித்திருந்தது. அங்கிருந்த தேவர்களனைவரும், தங்கள் எஜமானரின் முன்பாக நடுக்கத்துடன் நின்றனர்.

கடைசியாக அவரது அத்தியந்தப் பிரீதிக்குப் பாத்திரமானவளும், ஞானஸ்வரூபியுமான தேவி அவரை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தாள் :—

" ஆதியான தேவரே! சகலமான தேவர்களுக்கும் மேலான தேவரே! தேவர்கள் எல்லோராலும் வணங்கப்படும் பெருந் தேவரே! தாங்கள் எங்கள் எல்லோருக்கும் பிதா! எங்களது பிரபு! ரக்ஷகர்! அதி பராக்கிரமசாலி! நாங்கள் அதைச் சிறிதும் மறுக்காமல் ஒப்புக்கொள்ளுகின்றோம்; என்றாலும், தாங்கள் எங்களது ஒரு பிரார்த்தனைக்காவது இரங்க வேண்டும்! மனிதர்கள் தங்கள் கண்களின் முன்னாகவே வீணாக அழிந்து போகின்றனரே! அதைக் கண்ணுற்றுத் தாங்கள் மனமிளக வேண்டாமா? நாங்கள் எங்களது கையை யசைத்து அவர்களுக்கு ஒருவிதமான உதவியாவது செய்யாவிடினும், அவர்களது கஷ்டத்தைக் கண்டாவது மன மிரங்க வேண்டாமா? தங்களது உத்தரவுப்படி நாங்கள் எங்களுக்கு விலக்கான அந்தக் களங்களுள் எங்களது காலை எடுத்தும் வைக்க மாட்டோம்! எங்கள் ஆயுதங்களையும் அந்த ஆர்கிவ்களுக்கு உதவ மாட்டோம். தங்கள் ஆணையைச் சிறிதும் தாண்டமாட்டோம்! அவர்கள் மடிந்துபோவதைக் கண்டு மாத்திரம் துக்கித்து வருந்துவோம்! என்றாலும் என் யோசனைகளை அவர்களுக்குச் சொல்லி அவர்களுக்கு உற்சாகம் உண்டாக்கவாவது எனக்குத் தாங்கள் அனுமதி கொடுக்க வேண்டும்! அப்படிக்கில்லாவிடில் அவர்களனைவரும் ஜோவ் தேவரின் கொடுங்கோபத்திற்கு ஆளாகி, அழிந்து போவார்களன்றோ? " என்றாள்.

இடிகளை மிரட்டி யடக்கி யாள்பவரான அந்தக் கடவுள், தன் அந்தியந்தப் பிரீதிக்குப் பாத்திரையான அந்தத் தேவியை நோக்கி, மிகவும் உன்னதமான சந்தோஷத்துடன் புன்னகை செய்து, அவளது பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டார். பின்பு தமது தேரிலும் ஏறிக் கொண்டார். அப்பொழுது அந்தக் குதிரைகளும் தேரும் சென்ற கதியினால் அதுவரை அசையாமலிருந்த அந்த தேவ மண்டலமே நடுங்கி அசைந்து ஆடியது. தேவலோக பரம்பரையில் வந்த அந்தக் குதிரைகள் பூட்டிய இரதமும் தடதட வென்று உருண்டு சென்றது. சுருண்ட பிடரி மயிர்கள் பொன்மயமாக யிருந்தன. தேவலோகத்திலுள்ள மாசற்ற பொன் ஆபரணங்களை அணிந்துகொண்டு தேவலோகத்திலுள்ள தேவர்களெல்லாம் பொலிவுடன் விளங்கினர். அப்போது அவர்களுடைய ஆபரணங்களிலிருந்து பளிச்சென்று வீசிய காந்தியினால் அன்றைய தினத்துச் சூரியனும், அதி காந்தியுடன் விளங்கினான். அவனைக் கண்ணுற்ற

வர்களுடைய கண்களும் கூசின. அவர்கள் அதைத் தாங்க முடியாமல் தங்கள் கண்களை மூடிக்கொண்டனர்.

அந்தத் தேரின்மேல் வைக்கப்பட்டிருந்த தமது சிங்காதனத்தின் மீது, அந்தத் தேவர் வீற்றிருக்க, அதில் பூட்டியிருந்த குதிரைகள் அதைப் பூமண்டலத்திற்கும் நக்ஷத்திர மண்டலத்திற்கும் மத்தியிலுள்ள விசாலமான ஆகாய வீதியில் இழுத்துக்கொண்டு, பறந்து சென்றன. அழகான சுனைகளும் வேட்டைக்கான காட்டு மிருகங்களும் மலிந்துள்ள உன்னதமான ஐடாமலை உச்சிக்கு அவர் வந்து சேர்ந்தபொழுது, அங்கு வெகு கம்பீரமாக விளங்கிக் கொண்டிருந்த அவர்களது திருக்கோவிலிலிருந்து மந்த மருதமானது சுகந்தங்களை வீசியது. அவரது பலிபீடமும் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

அங்குற்றவுடன் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் தலைவரான அந்தப் புண்ணிய புருஷர் தமது தேரில் பூட்டியிருந்த நெருப்புப் போன்ற தம் குதிரைகளை அவிழ்த்து விட்டார். அமரர் குலத்துதித்த அக்குதிரைகள் அப்போது அங்கு வியாபித்திருந்த நீல மேகங்களைத் தழுவின.

அதன்பின் அவர் தமது ஆசனத்தை அந்த மேகங்களின் உச்சியில் ஓரிடத்தில் நிறுத்தி, அதில் அமர்ந்துகொண்டு, தமது அதிகாரத்துக்கு உட்பட்டதும் தம் காலடியில் பரந்து கிடந்ததுமான பூமண்டலத்தைத் தம் மலர்ந்த கண்களால் கடாட்சித்து வந்தார். அப்போது ட்ராய் நகரும் இருதிறத்தாரது கூடாரங்களும் போக்குவரவுக்கு அனுகூலமாகவிருந்த சமுத்திரங்களும் அவருக்குக் கட்புலனுயின.

இச்சமயம் கிரேக்கர்கள் சிறிது உண்டியருந்தி களைதீர்ந்து, பின்பு வெகு ஆத்திரத்துடன் தங்கள் பிரகாசமான ஆயுதங்களை அணிந்துகொண்டு யுத்த ஸன்னத்தர்களாக விளங்கினர். அவ்வாறே ட்ராய் நகரத்தாரும் நித்திரை நீங்கி யெழுந்தனர். இந்த மிகவும் பயங்கரமான தினத்தில் மிகவுங்கொடிய காரியங்கள் நிகழவிருந்தன. தந்தைகளும், மனைவிகளும், மக்களும், இன்றைய தினம் பெருந்துன்பங்களுக்கு ஆளாக விருந்தனர் !

அப்போது கோட்டை வாயில்களெல்லாம் தங்கள் கதவுகளைத் தாராளமாகத் திறந்தன. அவற்றின் வழியாகத் திரளான ஜனங்கள், ஒரு மதகினின்று வெளியேறும் வெள்ளம்போல் தடதட வென்று வெளி வந்தனர். அவ்வாறு அவர்கள் அலைகள்போல் அணி அணியாய் வந்தபொழுது, அந்தப் போர்க்களமானது இருண்டு போய்விட்டது. அதை ஒரு கறுத்த மேகம் மறைத்து விட்டதுபோலவே தோற்றியது. மனிதர்களும், குதிரைகளும், இரதங்களும் தடதடவென்று வந்து அந்தக் களத்தை இடித்துத் தகர்த்து விட்டனர். நிலம் கிடுகிடுவென்று நடுங்கியது. அவர்கள்

செய்த ஆரவாரம் முதிர்ந்தபொழுது ஆகாயத்திலிருந்து எதிரொலிகளும் உண்டாயின.

பின்பு அந்தச் சேனைகளிலிருந்த வீரர்களனைவரும் தத்தம் இடங்களை அடைந்தபின், உரத்துக் கூவிக்கொண்டு தத்தம் எதிரிகளைத் தாக்கினர். அடித்துக் குத்தினர். ஈட்டிகளை ஈட்டிகளாலேயும், கேடயங்களைக் கேடயங்களாலேயும் எதிர்த்துக் கைகலந்தனர். கணக்கற்ற வீரர்கள் மடிந்து விழுந்து தங்களது நிழலைத் தரையில் சாய்த்தனர். பிற்காலத்தவர் பாடும் காவியங்களுக்கு நாயகராகவும் விளங்கினர்.

அப்போது விர்ரென்று சப்தித்துக் கொண்டு செல்லும்படி, அவர்கள் எய்த அம்புகள் ஓர் இரும்பு மழைபோலவே தோன்றின. தவிர, அந்த யுத்தத்தில் வென்றவர்களும், தோற்றவர்களும் செய்த கோஷங்களும் அழுகைகளும் ஒன்றாய்க் கலந்து விட்டன. வென்றோர் அதி குதூகலத்துடன் கோஷித்தனர். தோற்றவர்கள் தமது ஆவியைத் துறக்கையில் கரைந்து உருகி அழுதனர். அவ்விரு சப்தங்களும் மிகவும் பெருகின. இரத்தம் ஆறாய்ப் பெருகியதால், களமானது சிவப்புக் கறைபட்டதுமின்றி, கால்வைத்த இடமெல்லாம் வழுக்கியும் வந்தது. அந்த யுத்தத்தில் தோற்று உயிர் இழந்த வீரர்களின் பிரேதங்களும், அந்த இரத்த வெள்ளத்தில் மலைபோல் மிதந்து வந்தன. அந்தக் காட்சி பார்ப்பதற்கு மிகவும் பயங்கரமாகவிருந்தது.

அன்று காலையில் உதித்த சூரியனுடைய உத்தமமான கிரணங்கள் தங்களது பிரகாசத்தை அதிகரித்துக்கொண்டு நெடுந்தூரமாகப் பாய்ந்து, மப்பு மந்தாரமில்லாத நீலநிறம் நிறைந்த ஆகாய மண்டலத்தில் தங்களது புனிதமான வெளிச்சத்தைத் தங்கு தடையின்றிக் கொட்டிப் பரப்பிக் கொண்டு வருகையில், இருதிறத்துச் சேனைகளிலுமிருந்த வீரர்கள், தத்தம் சத்துருக்களால் கொலையுண்டு மடிந்து விழுந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர் இளைக்காமல், தங்கள் சத்துருக்கள் தங்களுக்கு உண்டாக்கிய இரண காயங்களைப்போலவே, தாங்களும் அவர்களுக்கு இரண காயத்தையுண்டாக்கிப் பழிக்குப் பழி வாங்கி வந்தனர். அதனால் அந்த யுத்தத்தில் யார் கெலிப்பார்கள். யார் தோல்வியடைவார்கள் என்று தீர்மானிப்பது எளிதாக விருக்கவில்லை. இவ்வாறு அந்த யுத்தமானது ஏற்றத்தாழ்ச்சியின்றி அன்றைய மத்தியானம் உச்சிவரை நடந்து வந்தது.

அப்பொழுது தேவர்களுக்கெல்லாம் பிதாவான அந்தத் தேவதேவர், தம் பொன்னாலான தராசைத் தொங்கவிட்டு அதன் தட்டுக்களை உயர்வு தாழ்வு இன்றிச் சமனாக நிறுத்தினார். இவ்வாறு சமன் செய்தபிறகு, கிரீஸ் நாட்டாருடையவும் ட்ராய் நகரத்தாருடையவும் ஆன தலைவிதிகளைச் சீர்தூக்கக் கனமான குண்டுகளையும் தட்டுகளில் இட்டார். அவ்வாறு இடப்பட்ட பொழுது, கிரீஸ் நாட்டாருடைய குண்டானது அதிகக்கனங்

கொண்டு, பூமியின்மேல் அழுந்தித் தாழ்ந்து விட்டது. கனங் குறைந்த துரோஜர்களின் தட்டு ஆகாயத்தை நோக்கி உயர்ந்து சென்று அதன் முகட்டையும் இடித்து விட்டது! அதன்பின் ஜோவ் பகவான் ஐடாமலையின் உச்சியிலிருந்த வண்ணம் தம் குரூரகணங்களை ஏவ அவை அந்தப் போர்க்களத்தை நிறைத்து விட்டன. அதிபயங்கரமான மேகங்கள் கிரேக்கர்களது தலைக்கு மேல் வந்து இடித்தன. மின்னல்கள் அடுத்தடுத்துக் கனமாகப் பளிச் பளிச்சென்று மின்னின. கடகடவென்று சப்தித்துக் கொண்டு இடிகள் முழங்கின. இவ்வாறு தம் கைவரிசைகளைக் காட்டிக்கொண்டு அவர் கிரேக்கர்களை வாட்டினார். அவர்களுடைய வீரசூர பராக்கிரமங்களை அடக்கிவிட்டார்; அவர்களுடைய மனவலிமையையும் கொளுத்தி விட்டார்.

அவர்களனைவரும், அவரது கோபத்துக்குத் தப்பவேண்டுமென்று, பயந்து, வெருண்டு, களைத்து நாற்புறமும் ஓட்டம் பிடித்தனர். அப்போது அதைக் கண்ணுற்ற மற்றைய தேவர்களும், 'இது என்ன கொடுமை! இன்னும் என்ன ஆபத்துக்கள் விளைய இருக்கின்றனவோ?' என்று நடுங்கினர். ஆகாய வீதியெல்லாம், ஒரே நெருப்புக் காடாய் இருந்தது! மஹாவீரனை இதோமனியஸ்ஸுங்கூட அந்தக் காட்சியைக் கண்டு நடுங்கினான். அவனது தைரியமும் பறந்தோடிப் போய்விட்டது. தங்கள் சத்துருக்கள் யுத்தங்களில் இடிபோல் இடித்து நொறுக்கி ஹதஞ்செய்து வந்தவர்களும், ஒவ்வொருவனும் ஓர் அஜாக்ஷன் என்று கருதப்பட்டு வந்தவர்களுமான மஹாவீரர்கள் அனைவரும் அவ்வாறே மனமிடிந்து போனவர்களாக ஆய்விட்டனர்! இந்த யுத்தத்திற்குத் தலைவனான மஹாராஜனுக்குங்கூட இச்சமயம் சிறிதும் தைரியம் இருக்கவில்லை, அச்சம் நிறைந்தவனாகவே விளங்கினான். அவனது மனமும் கலக்கமுற்றது.

இவ்வளவு ஆபத்துக்களின் இடையிலும் நெஸ்டார் மாத்திரம், தம் இடத்தில் அசையாமல் உறுதியாய் நின்றுகொண்டிருந்தார். என்றாலும் அவருக்கும் மனக் கலக்கம் இருக்கவே செய்தது. தப்பிப் பிழைக்க வழியில்லாத நிலையில் அவர், தீராப் பொறியே என்று அங்கு நின்று கொண்டிருந்தார். அதற்குக் காரணம் என்னவெனில் அதையும் சொல்லுவேன் கேளுங்கள்:— பாரிஸ் எய்த ஓர் அம்பானது நெஸ்டாரது குதிரையின் புருவத்தின்மேல் அதன் பிடரிமயிர்கள் சுருண்டு அசைந்து ஆடிக்கொண்டிருந்த மர்மஸ்தானத்தில் பாய்ந்து, அதன் நெற்றியில் நன்றாக ஊன்றி அழுந்தி அதன் மூளையையும் துளைத்துவிட்டது. அதனால் உண்டான வேதனையைப் பொறுக்க மாட்டாமல் அக்குதிரையானது பித்துப் பிடித்ததுபோல் வெறி கொண்டு பின்னடைந்து, தன் குளம்புகளை ஆகாயத்தை நோக்கி உயரத்தூக்கி ஆட்டி வாயுவைப் பலவாறாக இடித்துத் தாக்கியது. அப்பொழுது நெஸ்டார் தனது உடைவாளையுருவி, உயிர் நீத்த அக்குதிரையின் கடிவாள வாரைத் துண்டித்து, அதினின்று தம் தேரை விடுவித்துக் கொண்டார். அக்கணமே, அதிபயங்கரனான

ஹெக்டர் தனது சுழலும் இரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, ஒரு பேரிடியைப்போல் பெருத்த கூச்சலும் இட்டுக்கொண்டு அக் களத்தின் நடுவில் ஓடிவந்து, ஏற்கனவே அங்கு உண்டாயிருந்த குழப்பத்தை அதிகரித்தான். அன்றையதினமே பைலிய வம்சத்த வர்களது அரசரும் மஹாவிருத்தருமான அவர், அந்த ஹெக்டரின் இணையற்ற வலிமையுள்ள கையினுலேயே உயிர் துறந்திருப்பார்! ஆனுல் தயோமதியானவன் சமயறிந்து குறுக்கே பாய்ந்து விழுந்து தடுத்து, அவரைக் காப்பாற்றிவிட்டான். கணக்கற்ற வீரர்கள் மத்தியிலிருந்த அவன், அவர் அவ்வாறு ஆபத்தான நிலையில் இருப்பதைக் கண்ணுற்று ஒரே பாய்ச்சலில் கிளம்பி, ஓடிவந்து, யுலிஸ்ஸிஸை உரத்துக் கூப்பிட்டான்.

"ஐயோ! யுலிஸ்ஸிஸ் எங்கே? யுலிஸ்ஸிஸ் எங்கேயோ ஓடிப்போகிறுனே! மஹானுன லியர்ட்டிஸின் மகனுக்கு இது தகுமோ? அவன் இவ்வாறு புறங்கொடுத்து ஓட்டம் பிடிக்க லாமா? யுலிஸ்ஸிஸே, நீ இவ்வாறு இழிவும் கௌரவக் குறைவும், அவமானத்திற்கு இடமுள்ள அம்புகளால் முதுகில் குத்துக் காயங் கொண்டு ஓட்டம் பிடித்தால், உனது கியாதியானது அதிகேவல மான சாதாரண ஜனங்களது கியாதிக்குச் சமானமாகத்தானே ஆகிவிடும். உன்னையும் அவர்களோடுதானே சேர்க்கவேண்டி வரும்? கிரேக்கர்களது கௌரவத்திற்குக் காரணரான பைலியப் பெருந்தகையை இந்த ஹெக்டர் மிகவும் ஹிம்ஸிக்கின்றுன். அவனுடைய கோபமும் கொடுமைகளும் சகிக்க முடியவில்லை. நீ திரும்பிவா, அவரைக் காப்பாற்று" என்றுன்.

அவன் இவ்வாறு சொல்லிய வசனங்கள், யுலிஸ்ஸிஸின் காதுகளில் விழவில்லை. அந்தச் சமயத்தில் அந்தப் போர்க்களத் தில் பெருத்த கூச்சலும் குழப்பமும் உண்டாயிருந்ததனுல், அவன் வசனங்கள் விழலுக்கிறைத்த நீர்போலாயின. யுலிஸ்ஸி ஸும் அச்சமயம் அங்கு இருக்கவில்லை. அவன் தன் கப்பல்களை நாடிச்சென்று அங்குப் பதுங்கிக்கொண்டிருந்தான். ஆதலால் அதிதைரிய சாலியாகிய திடிதீசன் உடனே நெஸ்டாரை ரக்ஷிப்பதற்காக ஓடி முன்வந்தான். இங்குக் கூடியிருக்கும் வீரர்கள் அனைவரையும் நான் ஒருவனே எதிர்ப்பேன் என்று வெகு ஆத்திரத்துடன் அவன் தனது குதிரையின் மீது திடீரென்று பாய்ந்து குதித்து, அந்த மஹாராஜரை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான்:—

"எமது பெருந்தந்தையே! இந்த யுத்தத்தில் இறங்கியுள்ள சேனைகளின் பலாபலமானது ஏற்றத்தாழ்ச்சி யுள்ளதாக விருக்கின் றது. இருதிறத்துச் சேனைகளும், சரிசமான முள்ளவையாக இருக்கவில்லை. இந்த யுத்தத்தில் பெருத்த ஆபத்துக்கள் நிகழ விருக்கின்றன. தங்களுக்கு இளையவர்களான வீரர்கள் தங்களை மடக்கியே விடுவார்கள். தங்கள் நரம்புகள் தளர்ந்து போயிருக் கின்றன. அவை முன்னுளில் இருந்ததுபோல், இப்போது இரத்த புஷ்டியுடன் விளங்கவில்லை. தங்கள் சாரதியும் பலங்

குறைந்தவனுக இருக்கின்ருன். தங்கள் குதிரைகளும் விசை யற்றுப் போயிருக்கின்றன. ஆதலால் தாங்கள் சிறிதும் தாமதஞ் செய்யாமல் சரேலென்று எனது இரதத்தில் ஏறி எனது இடத்தில் உட்கார்ந்து கொள்ளுங்கள். அங்கிருந்த வண்ணம் ட்ரோஸ் குதிரைகளின் சாமர்த்தியத்தையும் பாருங்கள். அவை யுத்தங் களில் பிரசித்திபெற்றவை. நாற்புறமும் திரும்பவும், ஒரே இடத்தில் நிற்கவும், எதிரிகளைத் துரத்திக்கொண்டு ஓடவும், வந்த சண்டையை விடாமல் பிடிக்கவும், புறங்கொடுத்து வேகமாக ஓடுவோரைத் துரிதமாகத் துரத்தவும் பழகியவை. அவை ஈனியஸ் என்பவருக்குக் கொஞ்ச காலம்முன்வரை உழைத்து வந்தவை. அவரால் நன்ருகப் பழக்கப்பட்டவை. ஆதலால், தாங்கள் தங்கள் இரதத்தை எங்கள் கோஷ்டியாரிடம் ஒப்பித்து விடுங்கள். நாங்கள் அதை ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவோம். எங்களை நம்புங்கள்.

இதோ பார்த்தீர்களா? இங்குக் காணும் எங்கள் பரிவார ஜனங்கள் அனைவருடனும் நாங்கள் இந்த துரோஜர்களை எதிர்த் துச் சென்று போர் புரிவோம். எங்களுக்குச் சமானமான சத்துருக் களை, இந்த ஹெக்டர் இதுவரை கண்ணிலும் கண்டிருக்க மாட் டான். நாங்களே அவனுக்குச் சமானமான சத்துருக்கள். அவன் மஹா பயங்கரன் என்பது பிரஸித்தந்தான் என்ருலும், அவனுங் கூட எனது வேலைக்கண்டு நடுங்கவே நடுங்குவான். 'நமது சத்து ருவின் இரத்தத்தை எப்போது குடிப்போம், எப்போது நமது ரத்த தாகத்தைத் தணித்துக் கொள்ளுவோம்' என்று அந்த வேலானது வெகு ஆத்திரத்துடன் துடித்துக் கொண்டிருக்கின்றது,'' என்ருன்.

இவ்வாறு அவனுடைய வார்த்தைகளைக் கேட்ட பொழுது யுத்தத்தில் வல்லவரான நெஸ்டார், அவனது யோசனை சரியானது தான் என்று ஒப்புக் கொண்டு, அவனது தேரின் மேல் ஏறிக் கொண்டார். அந்த க்ஷணமே, அவர் விட்டு விட்ட குதி ரைகளின் பாதுகாப்பை, திடிதீசனது குழாத்தைச் சேர்ந்த பிருத்தி யர்களான யூரிமிடானும் தைரியவானுன ஸ்தெனிலஸ்ஸும் ஏற்றுக் கொண்டனர்.

அப்போது அந்த இரதத்தில் ஏறிக் கொண்ட கௌரவம் மிகுந்த அந்த வீரர், அந்த இரதத்தில் பூட்டப்பட்டிருந்த குதிரை களுக்கு அவை செல்ல வேண்டிய வழியைக் காட்டி, அவைகளின் கடிவாளங்களைப் பிடித்துக் கொண்டு மிகுந்த சிரமத்துடன் வயதி ஞல் மெலிந்துள்ள தமது கையை ஓங்கி அவற்றை ஓட்டினுர்.

இவ்வாறு முன்சென்று, அவர்கள் ஹெக்டரைச் சந்தித் தனர். பயம் என்பதை அறியாத அவன் வெகு வேகத்துடனும், தன்னை எதிர்த்து வந்தவர்களைப் பயமுறுத்திக் கொண்டும், தனது இரதத்தை ஓட்டிக்கொண்டு வந்தான். அவனைக் கண்டவுடன் திடிதீசனும் தனது ஈட்டியைச் சுழற்றினுன். அந்த ஈட்டியானது குறி தவறி வெகு வேகமாகச் சென்று, இனியோப்பியஸின் மேல்

34

பாய்ந்து அவனது மார்பில் ஊன்றிக் கொண்டு நின்றுவிடவே, அவன் தன் குதிரைகளின் கடிவாளக் கயிற்றைத் தளர விட்டுத் தனது கையையும் விரித்தான், பிராணனையும் விட்டான். அவனுடைய குதிரைகளும் புறங்காட்டிக் கொண்டு ஓட்டம் பிடித்தன. அவன் பூமியின் மேல் பொத்தென்று விழுந்து அந்தப் போர்க் களத்தையும் நிந்தித்தான்.

தனது பிருத்தியன் இவ்வாறு கொலையுண்டதைக் கண்ணுற்ற மஹானுன ஹெக்டர் மிகுந்த துக்கமடைந்தான், என்றாலும், அந்தக் கொலைக்குக் கொலை, பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்று யோசனை யில்லாதவனாய், அந்தக் களத்தில் தன்னெதிரிலிருந்தோர் அனைவரையுங் கடந்து கொண்டு முன் சென்றான். அவ்வாறு செல்கையில் கோர யுத்தங்கள் செய்வதில் தேர்ந்தவனுன ஆர்ச்சித் காலிமஸ் என்பவன் தனது இடத்திலிருந்து எழுந்து வந்து, மடிந்து போன சாரதியின் ஸ்தானத்தை வகித்து, அந்த இரதத்தை நடத்தவும் ஏற்றுக் கொண்டான்.

அப்பொழுது அந்தக் களத்திலிருந்தோர் அனைவருக்கும், மரணமும் பீதியுமே, பிராப்தமாக இருந்திருக்கும் ; துரோஜர்களனைவரும் தங்களது கோட்டை மதிலினுள் இருந்த வண்ணம், பட்டிகளில் அடைபட்டு நடுங்கிக் கொண்டிருக்கும் ஆடுகளைப் போல், தங்களது இரத்தத்தை வடித்தேயிருப்பர். ஆனால் ஜோவ் பகவான், அதைத் தடுத்து விட்டார். அவர் மிகவும் பயங்கரமாக முழங்கி அந்தப் பிரம்மாண்டமான போர்க் களம் முழுவதிலும் ஒரு பெருத்த இடியை உருட்டி விட்டார். அதனால் உண்டான மின்னலானது திடிதீசனது முகத்தை நோக்கி நேராகப் பாய்ந்து வந்தது. அவனுக்கு முன்னிருந்த பூமியிலிருந்து தீச்சுடரானது கொழுந்து விட்டுக் கொண்டு எழுந்தது. நீல நிறமான கந்தகப் புகை கிளம்பியது.

அதைக் கண்ணுற்ற பொழுது அவன் குதிரைகள் நடுங்கிக் குப்புற விழுந்து தங்கள் தலைகளைச் சாய்த்தன. நெஸ்டாரின் கைகள் நடுங்கின. அவரும் தாம் பயந்து கொண்டதை வெளிப்படையாகத் தெரிவித்து விட்டார். தாம் பிடித்துக் கொண்டிருந்த குதிரைக் கடிவாளக் கயிறுகளை நழுவவிட்டார். பின்பு தமக்கு இன்னும் என்ன பெருத்த ஆபத்து வரப்போகின்றதோ என்ற கவலையுடன் தயோமதியை நோக்கித் திரும்பினர். அஞ்சா நெஞ்சனுன அந்த தயோமதியை நோக்கி அவர் பின்வரும் வார்த்தைகளைச் சொல்லி அவனை எச்சரிக்கவும் செய்தார் :—

“மஹா வீரனே ! உனது சினேகிதனைக் காப்பாற்றுவதற்காக, நீ இவ்வளவு துணிவு கொள்ளலாமா ? உனக்கு இந்தக் காரியம் வேண்டாம். திரும்பிவிடு அதுவே நல்லது, இன்றையப் பொழுது நமக்கு நல்ல பொழுதாக விடியவில்லை. தேவலோக அதிபதியான தேவாதி தேவர் மஹானுன ஹெக்டருக்குச்

சகாயியாக விருக்கின்ருர். நமக்கு ஜயத்தைக் கொடுக்க மறுக்கின்ருர்.

நமக்கு நல்லகாலம் இனிமேல் தான் பிறக்க வேண்டும். அன்றைக்குச் சூரியனும் நம்மைப் பார்த்துப் புன்னகை செய்வார். அன்றைக்கு அவரது திவ்விய சக்தியின் உதவியினுல், கிரீஸ்காரர்கள் ஜய சாலிகளாக விளங்குவார்கள்.

தெய்வத்தின் நியமனங்களை மனிதர்களால் மாற்ற முடியுமோ, முடியாதல்லவா?

ஜோவ் தேவரின் ஆணைக்குப் பணிந்து நடப்பது தான் தங்களுக்குப் பெருமையைத் தரும் என்று விவேகிகள் கருதுவார்கள்" என்ருர்.

இவ்வாறு நெஸ்டார் செல்லிய வசனங்களைச் செவியுற்ற திடிதீசன் "புண்ணிய புருஷரே! அரசர்க்கரசரே!! தாங்கள் மஹா விருத்தர், அனுபவம் நிறைந்தவர், தாங்கள் மொழியும் வசனங்களும் உசிதமாகவே யிருக்கின்றன. என்ருலும், நான் தாங்கள் சொல்லுகிறபடி புறங்கொடுத்து ஓடிவிடலாமா? அப்படிச் செய்தால் இந்த மகாகர்வியான ஹெக்டர் தனக்குப் பயந்து நான் சிறிதும் வெட்கம் இன்றிப் புறங் காட்டிக்கொண்டு, கடற்கரையில் கடுங்காவலுள்ள அரணுன என் கோட்டைக்கு ஓடிவிட்டதாக வல்லவோ பெருமை பேசிக் கொள்ளுவான்? அவ்வாறு அவன் பெருமை பேசிக்கொள்ள நான் இடங் கொடுத்து விட்டால், அது எவ்வளவு இழிவான காரியமாகும் என்பதைத் தாங்கள் யோசித்துப் பாருங்கள். அம்மம்ம! தாயே! பூமாதேவி! அந்தக் கொடிய அவமானம் என்னைச் சூழ்ந்து எனது ஸத் கீர்த்தியை அழிக்குமுன், தாங்கள் என்னை விழுங்கியே விடவேண்டும்! மானமழிந்த பின்னும் ஒருவீரன் வாழலாமா? அவன் அடியோடு அழிந்து போவது அல்லவா நல்லது!" என்று அவருக்குப் பதிலுரைத்தான்.

அதைக் கேட்ட ஜெரினியனுன நெஸ்டார் அவனுக்குப் பின்னும் அடியில் வருமாறு பதிலுரைத்தார்:—

"உன் வீர சூர பராக்கிரமங்களை நான் மெச்ச வேண்டியது அவசியமில்லை, அவையனைத்தும் தெய்வங்களுக்கும் தான் நன்ருகத் தெரியும், அதில் ஒன்றும் சந்தேகமில்லை. இந்த கர்வியான பிரிஜியனுக்கு நீ பயப்படுவாயா? அவன் பெருமைகள் உன்னிடம் செல்லுமா? தனக்குத் திருப்தியாகப் பெருமையடித்துக் கொள்ளட்டும். அவனை யார் சட்டை செய்யப் போகின்ருர்கள்? உனது வலிமையையறிந்ததார் தார்களாவது, தங்கள் வீரர்களைப் பறிகொடுத்துவிட்டு, இரத்தத்தை வடித்துக் கொண்டிருக்கும் ட்ராய் நகர வாசிகளாவது அவனை மெச்சுவார்களா? அவனை ஒரு பொருட்டாகக் கருதுவார்களா? அவர்கள் அவனைச் சிறிதும் சட்டை செய்யார்களே! பிரிஜியாவிலுள்ள ஸ்திரிகள் கூட அவனைச் சிறிதும் சட்டை செய்யார்களே! உனது கத்தியல்லவா,

அவர்கள் பிரிய பந்துக்களாகிய பர்த்தாக்களை வெட்டி வீழ்த்தி, அவர்களுக்கு என்றும் தீராத துக்கத்தை உண்டாக்கி விட்டது! அதை நினைத்த மாத்திரம் அவர்கள் நடுங்குகின்றனரே" என்றார்.

அந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே அவர் தவித்து நடுங்கி நின்றுகொண்டிருந்த அந்த வீரர் குழாங்களின் மேல், தம் துரிதமான குதிரைகளை வெகு வேகத்துடனும் ஆத்திரத்துடனும் ஓட்டினார். அவரது இரதமும் ஓட்டமாக ஓடியது. அதன் வேகத்தினால் ஆகாய முழுவதும், புகையும், புழுதியும், நிறைந்து விட்டன. அந்த வேகம் ஒரு புயல்காற்றைப் போல் தனக்கு எதிர்ப்பட்ட சகலமான பொருள்களையும் அடித்துக் கொண்டு சென்றது. அப்பொழுது துரோஜர்களெல்லாம் உரத்துக் கூச்சலிட்டனர். அந்தக் கூச்சலும் காற்றினால் உண்டான சப்தமும் ஒன்றாய்க் கலந்த பொழுது, அந்தக் களத்தில் பெருத்த முழக்கமே உண்டாயிற்று. அந்தக் களத்தின் பின்புறத்திலிருந்து வாள்களும், வேல்களும், கத்திகளும் பாம்புகளைப் போல் சீறிக் கொண்டு வந்து ஒரு மழை போல் பொழிந்தன.

அவ்வாறு அந்த வீரர் ஓட்டம் பிடித்து விட்டதைக் கண்டு களிப்புற்ற ஹெக்டர் ஒன்றுக்கும் அசையாத மேக மண்டலத்தையும் அசைத் தாட்டக்கூடிய ஒரு கூக்குரல் இட்டுக் கொண்டு அவரைப் பின்வருமாறு இழித்துரைத்தான் :—

"மஹாவீரனே! ஓடுகின்றனையா? மந்திராலோசனை சபைகளிலும், சுக போஜனம் அருந்தும் பந்திகளிலும் எல்லோருக்கும் மேலாக அலங்காரத்துடன் விளங்கி வந்தாய்! இனிமேல் உன் பரிவாரத்திலிள்ளவர்கள் உனக்கு அந்த மரியாதைகளைச் செய்யமாட்டார்கள். அந்த மரியாதைகளை நீ கனவிலும் நினைக்கவேண்டாம். ஓடு! ஓடு! நீ பார்வைக்கு மாத்திரம் ஆண் மகன், ஆனால் ஒரு ஸ்திரியிலும் இழிந்த பேடியே. எங்கள் கோட்டைமதில்களின் மேல் ஏறி விடுவேன் என்றாய். எக்கள் கோட்டைகளையும், கொத்தளங்களையும் தீ யிட்டுக் கொளுத்தி விடுவேன் என்றாய். பிரிஜியாவிலுள்ள பெண்மணிகளையெல்லாம் சிறைப்படுத்தி, அவர்கள் நாடுகளைவிட்டுப் புறநாடுகளுக்குக் கொண்டு செல்வேன் என்று சொன்னாய். இவ்வாறு வெகு டம்பமாக வீரியமெல்லாம் பேசினாய். மனப்பால் குடித்து வந்தாய். அப்பாடா! உனது பெருமிதந்தான் எவ்வளவு? அதற்கு அளவே யில்லையே! அவையெல்லாம் இப்பொழுது பறந்தே போய் விட்டனவே! இதோ பார், இந்தக் கைகளே உனது மார்பைப் பிளக்கும். உன்னைக் கொன்று உனது உடலை வெட்டி வீழ்த்தும். நீ உனது காலை நீட்டிக் கொண்டு மூச்சுப் பேச்சின்றிக் கிடப்பாய்" என்றான்.

அப்பொழுது அவர் இன்னது செய்வது என்று தெரியாமல் தவித்தார். ஒரு பக்கம் பயமும் பீதியும் அவரைப் பின்னே உந்தித் தள்ளின; மறுபக்கம் அவருக்கு உற்சாகமும், தம் சக்தி

களில் நம்பிக்கையும் பிறந்தன. அந்த நம்பிக்கையானது தம் குதிரைகளை நிறுத்தி, ஊன்றி நின்று, மறுபடியும் சண்டைக்குப் போகும்படி அவரைத் தூண்டியது. இவ்வாறு அவர் மூன்று தரம் பின்னடைந்து தயங்கினார். மூன்று தரம் துணிவுடன் முன் சென்றார். அவ்வாறு அவர் மும்முறையும் சென்றதை ஐடாமலைச் சிகரத்திலிருந்து கொண்டு கவனமாகக் கண்ணுற்று வந்த ஜோவ் பகவான், அவரைப் போலவே மும்முறையும் இடி முழக்கங்களுடன் கர்ஜனை செய்தார். அது மகா வீரனான ஹெக்டர் காதிலும் விழுந்தது. அவன் அப்பொழுது பளிச் சென்று மின்னிய மின்னலையுங் கண்டான். அது தனக்கு ஒரு நல்ல சகுனந்தான் என்றும், தனக்கு ஜயம் கிடைப்பது நிச்சயந் தான் என்றும், அவன் தனது மனத்தைத் தேற்றிக் கொண்டான். அவ்வாறு தன் மனதைத் திடப்படுத்திக் கொண்டு, அவன், தன் பரிவார ஜனங்களை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்து அவர்களுக்கு உற்சாகம் ஊட்டினான் :—

“ துரோஜர்களே ! லிஸியர்களே ! தார்தானர்களே !! நீங்கள் அனைவரும் ஒருவர் தவறாமல் நான் சொல்லுவதைக் கேளுங்கள். நீங்கள் அனைவரும் யுத்தங்கள் செய்வதில் பிரசித்தி யடைந்தவர்கள். நீங்கள் ஆளுக்காள் கைகலந்து பயங்கரமாக யுத்தஞ் செய்வீர்கள். இதுவரை நடந்த யுத்தங்களில் நீங்கள் வெற்றி பெற்று அடைந்துள்ள வாகைமாலைகளை, மறவாமல் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் முன்னோர்கள் சம்பாதித்த கீர்த்திகளை மாத்திர மன்றி, உங்கள் வீரசூர பாராக்கிரமங்களையும் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஜோவ் தேவரின் வார்த்தைகளைக் கேட்டீர்களா? வெற்றியும் கீர்த்தியும் ட்ராய்க்குத் தான் கிடைக்கும், ஊழிக்காலம் வரை கிரீஸ்காரர்கள் உழைத்து வருந்துவார்கள் என்றே அவர் சொல்லு கின்றார். அவர்கள் ஏதோ ஒரு பெரிய மதிலைக்கட்டி விட்ட தாகப் பெருமை யடித்துக் கொள்ளுகின்றனர். அதனால் அவர் களுக்கு ஒருவித க்ஷேமமும் உண்டாகப் போகின்றதில்லை. அதற்குப் பின்னால் அவர்கள் பதுங்கிக் கிடக்கின்றனர். அந்த மதில்களால் என்ன ஆகும்? அவை நமக்கு எம்மாத்திரம்? திரணம் அல்லவா? இந்த எனது கையாலேயே அவை தட தடவென்று கீழே விழப் போகின்றன! அவர்கள் வெட்டியுள்ள அகழ்களை நம் குதிரைகள் சிறிதும் இலட்சியம் செய்யாமல் உயர்ந்து பாய்ந்து ஒரே தாண்டாகத் தாண்டி அவற்றிற்கும் அப்பாலுள்ள உயர்ந்த திட்டின் மேல், ஜய கோஷத்துடன் குதிக்கப் போகின்றன! அதோ! அங்கே காலியாக நிற்கும் கப்பல்களைப் பாருங்கள்! அவைகளுக்கு முன்னால் நாம் விரைந்து செல்ல வேண்டும். அவற்றில் இந்த கிரேக்கர்கள் ஏறி விடாமல், நாம் அவர்களது வழியை மறித்துக் கொண்டு நிற்க வேண்டும். ஆதலால் நீங்கள் அனைவரும், அந்தக் கப்பல்கள் ஒவ்வொன் றையும், நெருப்புக்கு இரையாக்குங்கள். அவற்றின்மேல் கொழுந்து விட்டுக் கொண்டு எரியும் கொள்ளிக் கட்டையைச் சுழற்றி எறியுங்கள். அப்படிச் செய்து அதிகம்பீரத்துடனும் பெரு

மையுடனும், ஆடம்பரத்துடனும் விளங்கும் அவர்களுடைய கப்பல்கள் அனைத்தையும் தீயிலும், புகையிலும் புகுத்தி விடுங்கள். அப்படிச் செய்தீர்களானால் கிரீஸ் முழுவதுமே ஒரு பெரிய நெருப்புக்கு இரையாகிவிடும். தன் பெயரைச் சொல்லுவோர் ஒருவர் இல்லாமல், அது அழிந்தே போய்விடும்,'' என்றான்.

இவ்வாறு, வெகு ஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும் தன் வசனங்களை யுரைத்துக் கொண்டே, அவன் தன் தேரின் நுகத்தின் மேல் குனிந்து, தன் உத்தமமான குதிரைகளைத் தட்டிக் கொடுத்தான். அப்போது அவன் அவற்றிடம் அடியில் வரும் வசனங்களை யுரைத்தான் :—

"இப்போது, ஜான்தஸா! ஈத்தோனு! லம்புஸா! நீங்கள் இனி வந்த வேட்டையைத் துரிதமாக நடத்த வேண்டும்! பொடார்கஸா நீயும் புறப்படு! அதை யெல்லாரும் அறிய வேண்டும். நீங்கள் எல்லோரும் ஓட்டமாக ஓடுங்கள்! பயப் படாதேயுங்கள்! இன்றைய தினம் அதி விசேஷமான தினம்! உங்களது க்ஷேமத்தைக் கோரி உங்களது தலைவன், வெகு ஜாக்கிரதையுடன் உங்களுக்குச் செய்துள்ள ஏற்பாடுகளுக்குச் சரியான கைம்மாறுகளைப் புரியுங்கள். உங்களெல்லோருக்கும் இன்று விசேஷமான விருந்துகள் யதேஷ்டமாகச் செய்யப்பட் டிருக்கின்றன. உங்களெல்லோருக்கும் அதிதிவ்வியமான கொட் டாரங்களும் ஏற்பட்டிருந்தன. சுத்தமான உயர்ந்த கோதுமைச் சாதமும் உங்களுக்குப் பரிமாறப்பட்டது. அந்தப் போஜனத்தைக் கேவலம் சாதாரணப் பரிசாரகர்கள் உங்களுக்குப் பரிமாறலாகா தென்று ஓர் இராஜ கன்னியே தன் கையால் பரிமாறினாள். இந்தக் காரியங்களையெல்லாம் ஏற்றமான ஈஹியன் வம்ஸத்தில் வந்தவளும் எனது வாழ்க்கைத்துணைவியுமான எனது மனைவியே செய்தாள்! அவள் அந்தக் கோதுமையைப் பன்முறை யும் சாருயத்தில் நனைத்து ஊறவைத்து, உங்களுக்கு அளித்தாள்.

இப்பொழுது நீங்கள் நம்முடைய சத்துருக்களை வெகு துரிதமாகத் துரத்திக் கொண்டு செல்ல வேண்டும்! தங்கு தடையின்றி இடியைப் போல் கர்ஜிக்க வேண்டும்!

இந்த நெஸ்டார், விசேஷமான பணக்காரன்! அவன் பொன்னாலான ஒரு பொற்கவசத்தை அணிந்து கொண்டு விளங்கு கின்றான்! அதை நான் பிடுங்கிப் பிய்த்து விடவேண்டும். அதற்கு வேண்டிய சகாயத்தை நீங்கள் எனக்குச் செய்யுங்கள்.

திடிதீசனும் அதிக விலையுள்ள ஒரு கவசத்தையும், ஆயுதங் களையுந் தாங்கி வருகின்றான். அந்தச் சுமையையும் அவனது தோளிலிருந்து இறக்கி விடுங்கள்! அவைகள் சாதாரண மானவைகள் அல்ல. வல்க்கன் தேவனே அவைகளைச் செய் திருக்கிறான். அவன் வெகு காலம் சிரமப்பட்டு அவைகளை உண்டாக்கினான்.

இவைகளையெல்லாம் நாம் செய்து விட்டால் அதன்பின் இந்த யுத்தத்தில் நமக்குத்தான் ஜயம் என்பதில் ஐயமில்லை. வீரர்களே! இது உங்களது சாமர்த்தியத்தினுல் தான் ஆக வேண்டும். இன்றைய இரவு இந்தப் போர்க் கப்பல்கள் அனைத்தும் நமக்கே சுவாதீனமாகிவிடும்! இன்றைய இரவிலேயே நமக்குச் சகலமான பெருமைகளும் கீர்த்தியும் உண்டாகிவிடும்,'' என்ருன்.

இந்த வார்த்தையைக் கேட்டவுடன் ஸாட்டர்னியாவின் வயிற்றில் ஒரு பெரிய இடி இடித்தது. அவள் தனது சிங்கா தனத்தை ஓர் ஆட்டு ஆட்டினுள். அதனுல் நக்ஷத்திர மண்டலமே அடியோடு அசைந்தாடியது. அவள் அப்போது நெப்தியூனை விளித்து "நெப்தியூன் இதோ இங்கே வா! அசையாமல் நிற்கும் இந்தப் பூமண்டலத்தையுமே அடியோடு அசைத்து ஆட்டக்கூடிய சக்தியையுடையவனல்லவா நீ? கிரேக்கர்கள் இந்த அக்கிரமமான துரவஸ்தைக்கு ஆளாகித் துன்பப் படுவதைப் பார்த்துக்கொண்டு, நீ வாளாயிருக்கலாமா? நீயும் ஒரு தேவனல்லவா! அழிவில்லாத தேவனே! உனது மனம் ஏன் பொங்கவில்லை? ஈஜீயுங் ஹெலிஸுனும் இன்னும் உன் அடிமைகளாகத்தானே இருக்கின்றனர். அவர்களே இன்னும் தங்குதடையின்றி உன் கோவில்களில் உனக்கு நைவேத்தியங்களை வைத்து வருகின்றனர். கிரீஸிலுள்ள சகலமான தேவர்களும் ஒன்ருய்ச் சேர்ந்துவிட்டால், இந்த இடிக்காரன் என்ன செய்ய முடியும்? அப்போது இவன் தனது தலையைக் கவிழ்த்துக்கொண்டு, தன்னந்தனியே ஒரு மூலையில் கிடப்பான்! அவனுக்கு அப்பொழுது ஹிதஞ்சொல்லுவார் இந்த தேவலோகத்தில் கூட ஒருவருமே யிருக்கமாட்டார்களே! தன் துரோஜப் பிரஜைகள் சாயா லோகத்துக்குள் தடதடவென்று இறங்கிப் போவதை, இவன் தனது ஐடாமலைக் கோபுரத்திலிருந்த வண்ணம் பார்த்து வரவேண் டும். அந்தக் காரியம் உன்னுல்தான் ஆகவேண்டும்! கடுகடுப் பும் சிடுசிடுப்புமுள்ள நன்றிகெட்ட இந்த தெய்வத்திற்கு இப்படித் தான் செய்யவேண்டும்'' என்ருள்.

அதைக்கேட்ட நெப்தியூன், அதிகக் கோபங்கொண்டு, அவளுடைய அதிதுடுக்கும் துணிவுமான இந்த யோசனை தகா தென்று, அதை ஒரேயடியாய் மறுத்துவிட்டான். "தேவி! நீ எங்கள் அரசி! இது என்ன கோபம்! இது என்ன தாபம்! என்ன பைத்தியம்! உமக்கு ஏன் இவ்வளவு ஆத்திரம்! சர்வேசனை எதிர்த்துக்கொண்டு அவனிடம் சண்டைசெய்ய என்னுல் ஆகாது! அவ்வாறு செய்ய நான் புறப்படவும் மாட்டேன்! விண்ணுலகி லுள்ளோர் அனைவரும் ஜோவ் தேவரின் கைக்குக் கீழ்ப்பட்டவரே! அவர்களனைவரும் அவரையே பயபக்தியுடன் வாழ்த்தி வருகின் றனர். அவரது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நடுங்குகின்றனர்'' என்ருன்.

இவ்வாறு இவர்களது ஸம்வாதம் நடந்துகொண்டிருக்கையில், இணையற்ற வீரசூர பராக்கிரமங்களையுடையவனும், தேவர்களைப் போலவே காந்தியுடன் விளங்கியவனும் அன்று நடக்கவிருந்த யுத்தத்தில் கீர்த்தியையடைய வேண்டுமென்று ஜோவ்பகவானது ஆசீர்வாதம் பெற்றிருந்தவனுமான ஹெக்டர் அலைகளைப்போல் ஒன்றன்பின் ஒன்ருக வந்த வியூகங்களைத் துரிதமாக ஓட்டிவந்தான். தன் இரதங்களை ஒழுங்காக நிறுத்தி, அந்தக் களங்களை நிரப்பினுன். உறுதியான கவசங்களையணிந்திருந்த வீரர்களையும் அணியணியாக நிறுத்தினுன். அங்கு நீளமாகவும் ஆழமாகவும் வெட்டப்பட்டிருந்த அகழ்களில் அணிவகுத்து நின்ற அவனுடைய சேனு வீரர்கள், நிலத்தில் அடித்த முளைகளைப்போல் தங்கள் இடங்களைவிட்டுச் சிறிதும் அசையாமல் நின்றுகொண்டிருந்தனர். அம்மம்மா! அது ஓர் அதிபயங்கரமான காட்சியாகவே இருந்தது. அவர்கள் தங்கள் கைகளில் கொழுந்துவிட்டெரியும் கொள்ளிக்கட்டைகளை ஏந்திக்கொண்டிருந்தனர். அவற்றைச் சுழற்றினர்; ஆட்டினர்; அசைத்தனர்; தங்கள் சத்துருக்களுடைய கப்பலுக்கு வெகு தூரத்திலேயே தாங்கள் இருந்தாலும் அவற்றைத் தீயிட்டுக் கொளுத்தியே தீருவோம் என்று பயமுறுத்தினர்.

அப்பொழுது ஜனுதிபன், ஜுனே தேவியினுல் ஏவப்பட்டு ஆவேசமும் தைரியமுங்கொண்டு, மிகவும் சிரமத்துடன் தன் கூடாரங்களெல்லாம் நுழைந்து சென்று, உற்சாகமான மொழிகளையுரைத்துத் தன் வீரர்களுக்கு ஊக்கமூட்டினுன். அவர்களது மார்புகள் படபடவென்று துடிக்கும்படி வெடுவெடுப்பான வசனங்களையுஞ் சொன்னுன். அவ்வாறு விடுவிடுவென்று துரிதமாகச் சென்றபொழுது, அவன் தனது அதிகாரச் சின்னமாகிய, பளபளவெனமின்னும் ஊதா நிறமுள்ள வஸ்திரத்தைத் தன் கைகளில் உயரத்தூக்கிப் பிடித்துக்கொண்டிருந்தான். அவ்வாறு சென்று அவன் அங்கு நிறுத்தப்பட்டிருந்த கப்பல்கள் எல்லாவற்றிற்கும் மத்தியிலிருந்த யுலிஸ்ஸிஸின் கப்பலின் மேல்தட்டில் நின்றுகொண்டான். அங்கிருந்து அவன் உரைத்த வசனங்கள் அந்தக் கப்பல்கள் அனைத்திற்கும் அப்பால் வெகு தூரத்தில் நின்றுகொண்டு அவைகளுக்குக் காவலாகவிருந்த அஜாக்ஷன் அகிலேசன் ஆகியவர்களுடைய கப்பல்களிலுங்கூடக் கேட்டன:—

"ஆர்கிவ்களே! மனித வர்க்கத்திற்கே அவமானத்தை உண்டாக்கிவிட்டவர்களே!" என்று அவன் ஆரம்பித்து உரத்துக் கூவினுன். அந்தச் சப்தத்திற்குப் பதிலாக அப்போது காலியாயிருந்த அந்தக் கப்பல்களிலிருந்து காற்றின் எதிரொலியே உண்டாயிற்று. "நீங்கள் முற்காலத்தில் பிரமாதமான சாகச காரியங்களையெல்லாம் செய்திருப்பதாகப் பெருமையடித்துக் கொண்டீர்களே! அந்த வீரியமெல்லாம் இப்போது எங்கேபோய் விட்டது! நல்ல கொழுத்த விருந்துச் சாப்பாடு தனது வயிற்றில் விழும் வரையிலும், கிண்ணங்களில் வழியவழிய நிறைந்துள்ள சாருயத்தைக் குடிக்கும் வரையிலும் ஒவ்வொரு வீரனும் தான் பய

மற்றவன் என்றும், தான் ஒருவனே நூறு சத்துருக்களை எதிர்ப்பேன் என்றும், அவர்களுக்குப் பதில் சொல்லுவேன் என்றும் பெருமை பேசிக்கொள்ளுகிறான். ஆனால் யுத்தமானது மும்முரமாக முதிர்ந்து விடவாவது நெருப்பு நம்மைச் சூழ்ந்து விடவாவது செய்யும்போது நம் ஆண் பிள்ளைகளில் ஒருவனாவது நம் கண்முன் வருவதில்லை. நம் சத்துருக்களை ஒருவனாவது எதிர்ப்பதும் இல்லை.

சர்வ வல்லமையுள்ள ஜோவ் தேவரே! ஆபத்தில் உழலுவோரின் ஆப்த நண்பரே! என்னைப்போல் துக்கத்தினால் பீடிக்கப்பட்ட அரசன் எவனாவது இதுவரையில் இருந்ததுண்டோ? எனக்குள்ள சக்தி அல்ப சொல்பமானதா? நான் விசேஷமான பராக்கிரமமுள்ளவனல்லவா? நியாயமும் என்கட்சியில் தானே இருக்கின்றது! இருந்தாலும் என்ன பயன்? அவையனைத்தும் வீணேயாயினவே! எனது கீர்த்தி அழிந்துபோய் விட்டதே! அதற்குப் பங்கம் உண்டாகிவிட்டதே. என் ஜனங்களும் கொலையுண்டு, மடிந்து, மாய்ந்து போயினர். எங்கள் நாட்டுக் கடற்கரையில் ஒவ்வொன்றிலுமிருந்து நாங்கள், உமக்கு மனமாரப் பிரார்த்தனைகள் செய்தோமே! நாங்கள் பலியிட்டு ஹோமம் செய்யாத பலிபீடமும் உண்டோ ?

துரோஜர்களது நாசத்தையே கோரி, அவர்களது பெயரும் அழிந்து போகவேண்டும் என்று பிரார்த்தனைகள் செய்துகொண்டு, நான் காளைகளின் கொழுப்பைவிட்டுத் தங்கள் கோவில்களில் இரவும் பகலும் இடைவிடாமல் எரியும் நந்தா விளக்குக்களில் தீபத்தை வளர்த்தி வந்தேன். தயாநிதே! அந்தப் பிரார்த்தனைகள் ஒரு பக்கத்தில் இருக்கட்டும்! இவ்வளவு பெரிய தயவைத் தாங்கள் இப்போது எங்களுக்குச் செய்யவேண்டுமென்று நாங்கள் தங்களைப் பிரார்த்திக்கவில்லை! இப்போது தாங்கள் மிகவும் அற்பமான ஒரு கிருபையைச் செய்தாற்போதுமென்று, நாங்கள் பிரார்த்திக்கின்றோம். இப்போது மிஞ்சி நிற்கும் இந்த வீரர்களாவது ஹெக்டரின் கையிலிருந்து தப்பிப் பிழைக்கவேண்டும். அவ்வளவு கிருபையாவது செய்யும்! கிரீஸ் நாட்டிலிருந்து வந்தவர்களில், இதுவரை மிஞ்சியிருப்பவர்களையாவதுஇரட்சியும்" என்றான்.

இவ்வாறு நராதிபன் பிரார்த்தனை செய்தான். மனம் நொந்து உருகி,அவன் செய்த அந்தப் பிரார்த்தனையைப் பிதாமகரும் செவிசாய்த்துக் கேட்டார். அவரது கோபமுந் தணிந்தது; அவ்வாறு தமது கோபம் தணிந்துவிட்டதை, அவர் அவனுக்குச் சுப சகுனங்களால் அறிவித்தார். அன்றியும் அவர் தங்களது அரசனது பிரார்த்தனையைத், தான் அங்கீகரித்து விட்டதாக, அவனுடைய பிரஜைகளுக்கும் அறிவித்தார். அவர் தமது பிரியத்துக்குப் பாத்திரமானதும், தேவலோக வாசியும் பக்ஷிகளில் உத்தமமானதுமான தமது கழுகை அவர்கள் முன் அனுப்பினார். அது தன் நகங்களில் ஓர் இளமான் குட்டியைப் பிடித்துக்கொண்டிருந்தது. அது ஓர் அதிதிவ்வியமான சுபசகுனம் என்று சொல்லவும் வேண்

டுமோ? தன்னைக் கண்டு பிரமித்து, ஆச்சரியத்துடன் நின்றுவிட்ட அந்தச் சேனைகளின் தலைக்குமேல் வெகு உயரத்தில் அந்தக் கழுகானது வட்டமிட்டது. அதைக் கண்ணுற்ற கிரேக்கர்களனைவரும் வானோம்பியான ஜோவ் தேவருக்குத் தங்கள் பிரார்த்தனைகளைச் செய்தனர். அப்பொழுது அந்தக் கழுகு, தான் பிடித்துக் கொண்டிருந்த அந்த இளமானை ஜோவ் தேவரின் பலிபீடத்தின் முன் விழும்படி நழுவவிட்டது. இதைக் கண்ணுற்றபொழுது, கிரேக்கர்கள் பரவசமடைந்தனர். தங்களுக்குத் தெய்வ கிருபை பூரணமாக இருக்கின்றது என்று தைரியங்கொண்டனர். சற்று முன் சோர்வுற்றிருந்த அவர்கள் அனைவருமே அப்பொழுது ஊக்கங்கொண்டு, மனந்தேறியவர்களாய்த் தங்கள் இடங்களிலிருந்து துள்ளிக் கிளம்பி, முன்னிலும் இருமடங்கு வேகத்துடன் துரோஜர்களின்மேல் கொடுங்கோபத்துடன் சீறிப்பாய்ந்தனர்.

கிரேக்க வீரர்கள் எல்லோருக்கும் முன்னுக முதன் முதலாக திடிதீசன் நுரையைக் கக்கிக்கொண்டிருந்த தன் குதிரையை உந்திக்கொண்டு, அந்த அகன்ற அகழைத் தாண்டி முன்சென்று அதற்கப்பால் அணியணியாய் நெருங்கி நின்று கொண்டிருந்த தன் சத்துருக்களுடைய சேனைகளைத் தாக்கி, அவர்களது அதி பலமான அரணையும் பிளந்தான். தன் வாளையும் துரோஜர்களது இரத்தத்தில் நனைத்து அதற்குச் சிவப்புச் சாயம் ஏற்றினுன்.

அவன் அவ்வாறு தாக்கியபொழுது, பிரதமனது மகனும், இளம்பிராயமுள்ளவனுமான அஜிலாஸ் என்பவன், அவனது கொடிய கோபத்துக்குப் பயந்து வேகமாகப் பறக்கும், தன் குதிரைகளுடன் ஓட்டம் பிடித்தான். என்ருலும் அவனைத் திடிதீசன் உயிருடன் விடவில்லை அவன் அவனை நோக்கி எய்த ஒரு அம்பானது அவனது முதுகைப் பிளந்து அவனைக் குப்புற வீழ்த்தியது. அதனுல் அந்தப் பிரிஜிய வீரன் தனது உயிரைத் துறந்தான். அந்த அம்பும் அவனைக் கொன்றதுடன் நின்று விடவில்லை. அது அவனது மார்பைத் துளைத்துக்கொண்டு வெளியே வந்து விட்டது. அப்போது அந்த வீரன் தனது இரதத்திலிருந்து திடீரென்று கீழே விழுந்தான். அந்த வீழ்ச்சியில் அவன் அணிந்திருந்த ஆயுதங்கள் கலகல வென்று சப்தித்தன. அவனது மார்க்கவசம் பூமியின் மேல் விழுந்த பொழுது, ஒரு பெருத்த இடி விழுந்தது போலவேயிருந்தது.

அவ்வாறு அவன் கீழே விழுந்தபொழுது, தங்களது வழியிலிருந்த தடை நீங்கி விட்டதைக் கண்ணுற்று, கிரேக்கர்களனைவரும் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து கொண்டு ஒரு பெருத்த அலையைப்போல் ஓட்டமாக ஓடி வந்தனர்.

முதன் முதலாக, அதிரிடிகளும், அவர்களுக்குப் பின். அஜாக்ஹர்களும் வந்தனர். அவர்களுக்குப் பின் மார்ஸ் பகவானைப்போல் ஆயுத வித்தையில் சிறந்த மிரியோனீஸும், தேவர்களுக்குச் சமானமான இதோமனும் அந்த மேட்டைக்

கடந்து சென்றனர். அதன் பின் ஈவிமானது மகன் வெகு விரைவாக அந்தச் சத்துருக்களை நோக்கிச் சென்ருன். கடைசியாக இளையோனுன் டியூஸர், தனது வளைந்த வில்லுடன் புறப்பட்டான். திலமானது கவசத்தின் பின்புறத்தில் க்ஷேமமாக விருந்த அந்த சமர்த்தனுன வில்லாளி, தன்னெதிரில் விசாலமாகப் பரந்திருந்த, அந்தப் போர்க்களத்தைக் கண்ணெடுத்து நாற்புறமும் பார்த்தான், அவ்வாறு செய்துவிட்டு அவன் தன் அம்புகளைத் தொடுத்து எய்து, ஒவ்வோர் அம்புக்கும் ஒவ்வொரு சத்துருவை இரையாக்கினுன். அதன் பின் அவன் ஏழுமடியுள்ள அந்தக் கவசத்தின் அடியில் ஒடுங்கி, ஒதுங்கி ஒளிந்துகொண்டு விட்டான். அறிவும் ஆலோசனையுமுள்ள ஓர் இளங் குழந்தையானது தனக்கு ஆபத்து வரும் என்று அறிந்தால், அதற்குத் தப்புவதற்காகத், தானே தனது தாயின் கைகளுக்குள் போய்ப் பதுங்கிக் கொள்ளுகின்றது.

அவ்வாறு அஜாக்ஷன் அந்தப் போர்க்களத்தில் இருந்து கொண்டே, தனது இளையோனை ரக்ஷித்து வந்தான். அவன் நகர்ந்த இடத்துக்கெல்லாம் தானும் செல்வான், அவனுக்கு ஒரு விதமான ஆபத்தும் வராமல், அவனை மறைத்துப் கொண்டு தனது கேடயத்தையும் திருப்புவான்.

இவ்வாறு டியூஸரின் அழிவற்ற அம்புகளால் முதன் முதலாக இரத்தம் வடித்தவர்கள் யார், என்ருல் சொல்லுகிறேன் கேளுங்கள்: முதன் முதலாக விழுந்தவன் ஆர்ஸிலோக்கஸ்; அவனுக்குப் பின் ஆர்மினிஸ் என்பவன் தனது உயிரை நீத்துக் கீழே விழுந்தான், அவனுக்குப் பின் தேவர்களுக்குச் சமானமான லிக்கோபோன் என்பவன் மண்ணின் மேல் தொப்பென்று விழுந் தான். விழுந்த இடத்தில், ஓர் ஆழமான குழியையும் குழித்து விட்டான். அவனுடன் குரோமியஸும், தேத்தாரும், ஒலிபிஸிஸ் டீஸீம் கொலையுண்டு பூமியின்மேல் விழுந்தனர். அதிதைரிய வானுன ஹிமோபயோன் என்பவனும் தனது மூச்சை விட்டு விட்டு, மண்ணின் மேல் மல்லாந்து விழுந்து விட்டான். இவ்வாறு இரத்தத்தைக் கக்கிக்கொண்டு விழுந்த இந்த வீரர்களின் பிணக் குவியல்களின் மேல் மஹானுன மிலானிப்பஸ்ஸின் தேகமும் விழுந்து, அவையெல்லாவற்றிற்கும் ஒரு சிரோபூஷணம் போலவே விளங்கியது.

இவ்வாறு ட்யூஸரின் கைவண்ணத்தின் பெருமையை விளக்கிக் கொண்டு பிணக்குவியல்கள் ஒன்றின் மேல் ஒன்ருய் விழுந்தன. அவன் விழுந்த ஒவ்வோர் அம்புக்கும் ஒவ்வொரு துரோஜனது ஆவியானது அடிமை பூண்டு, அதன்பின்னே சென்றது!

இவ்வாறு அவன் அம்புகள் பறந்து கொண்டிருக்கையில், எதிராளியின் சேனையின் வரிசை இடிந்து வருவதைக் கண்ணுற்ற ஆகமனன் மிகவுஞ் சந்தோஷித்து, அவனைப் பின்வருமாறு பாராட்டினுன்:—

“எனது என்றுங்குன்றாத அன்பிற்குப் பாத்திரனான இளம் வீரனே! இன்று போல் என்றென்றும் உனது இளம் பெருமை குன்றாமல் விளங்கிவரக் கடவது! உன்னைப் பார்த்தும் உனது தைரியத்தையே உதாரணமாகக் கொண்டும் நம் கோஷ்டி யாரனைவரும் நமக்கு நேர்ந்துள்ள நஷ்டங்களை ஈடுசெய்வார் களாக! உனது தேசத்தின் ரக்ஷகனாகவும், உன் தகப்பனது பெருமைக்குக் காரணமாகவும் நீ விளங்குவாயாக! உனது தகப்பன் இரகசியமாக, ஒரு புறநாட்டுக் கன்னிகையை அவளது மஞ்சத்தில் கட்டியணைத்துப் புணர்ந்து விளையாடியதின் பயனாக, அவனது பெருமையை விளக்க வந்த வீரகுமாரா! வீரசூரபராக்கிரமங்களில் பெருமை கொண்டவனாய், அவன் உன்னைத் தான் மகன் என்றும், தனது காமச்சுடரின் பயனாக ஜனித்தவன் தான் என்றும் ஸ்வீகரித்துக் கொண்டான். அவனது அன்பிற்கும் ஆதரவுக்கும் சரியான கைம்மாறுகளையுஞ் செய்கின்றாய்!

இப்போது, ஒரு ராஜாதி ராஜன் கூறும் ஒரு சத்தியமான வார்த்தையையும் கேள்! நம் கைவசமாகாமல், நெடுநாளாக நம் சத்துருக்கள் காப்பாற்றி வரும், இந்த ட்ராய்க்கோபுரங்களைத் தரை மட்டமாக்குவதற்கு மாத்திரம், அதிபராக்கிரமமுள்ள தேவர்கள், எனக்கு அனுக்கிரஹம் செய்வார்களானால், அப்போது, கிரேக் கர்கள் எனக்குப் பாரிதோஷிகமாகக் கொடுக்கும் வரிசைகளுக்கு, அடுத்தபடியான வரிசைகளையும், தனங்களையும், உனக்கு நாங்கள் கொடுப்போம். சுவர்ணத்தினால் செய்யப்பட்ட முக்காலியையோ, அல்லது இரணகளத்தில் திகிலை யுண்டாக்கிக்கொண்டு ஓடும் குதிரைகள் பூட்டித் திவ்வியமாக விளங்கும் இரதத்தையோ அல்லது சிறைப்பிடிக்கப்பட்ட அழகிற் சிறந்த அணங்குகளில் உன் கண்களைக் கவர்ந்தவளையோ நீ இவ்வாறு முழு மனதுடன் எங்களுக்காகப் பட்ட சிரமத்திற்குக் கைம்மாறாக நாங்கள் உனக்கு அளிப்போம்” என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்தவீரன் “என்னை யொழிந்த மற்றைய வீரர்களை இவ்வாறு புகழ்ந்து உற்சாகப் படுத்தும்! ஏற்கனவே உற்சாக நெருப்புக்கொண்டு பொங்கிக் கொதிக்கும் உலையில் மேன்மேலும் நெருப்பைக் கொட்ட வேண் டாம்! என் அம்புகள் ஒவ்வொன்றும் ஓரோர் பிரிஜியனது இரத் தத்தில் குளித்துக் கறைப்படும் வரை நான் எனக்குள்ள சக்தியை இந்தயுத்தத்தில் காட்டிவிடுவேன், அதைப் பரீட்சித்தும் விடுவேன், நாமெல்லோரும் ஒன்றாகக் கூடி நம் சத்துருக்களைத் தாக்க ஆரம் பித்தது முதல் நான் எனது வில்லை ஹெக்டரின் மேலேயே குறி வைத்து வளைத்து வருகின்றேன்! இந்தக் கையிலிருந்து நகங்கள் கொண்ட எட்டு அம்புகள் இதுவரை சென்றன. அந்த அம்பு களும் தைரியமுள்ள எட்டு வீரர்களைக் குத்திக் கொன்று விட்டன. அவர்களும் தங்களது குருதியைக் கக்கிக்கொண்டு கீழே விழுந்து கிடக்கின்றனர்! இதனால் என்ன பிரயோசனம்! இந்த ட்ராய் பட்டணத்து நாயை வெட்டி வீழ்த்தினாலல்லவோ நான் ஒருவீரன்! இவன் இந்த யுத்தத்தை என்ன பாடுபடுத்துகின்றான்! நெருப்புக்

காடாகக் கொளுத்துகின்ருனே! ஏதோ ஒரு தெய்வந்தான் இவனைக் காத்து வருகின்றது! அதனுற்ருன் நான் இவனை இதுவரை ஒழிக்க முடியவில்லை! என்ருன்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் தன் வில்லின் நாணையிழுத்தான்; குணத்தொனி செய்தான்! அதிலிருந்து ஒரு சரத்தையும் விட்டான்! அந்தச் சரமானது ஹெக்டரின் மார்பை நோக்கி இராகம் பாடிக்கொண்டு ஆகாய வீதியில் பறந்து சென்றது. ஆனுல் அது குறிதப்பி, கார்க்கித்தியோனது மார்பைப் பிளந்து, அந்த இராஜகுமாரனது இரத்தத்தைக் குடித்துத் தன் தாகத்தைத் தணித்துக்கொண்டது. அழகிற் சிறந்தவளும் திவ்வியமான ரூபலாவண்ணியங்கள் உள்ளவளுமான காஸ்தியாநீரை என்னும் ஒரு வனதேவதையே இந்தப் புத்திரனைப் பிரியத்தின் வம்சத்திற்கு ஈன்று கொடுத்தவள்! அதிக மழையினுல் நன்ருய் வெடித்துப்போய்விட்ட பாப்பி புஷ்பங்கள் தங்கள் தலையைக் குனிந்துகொண்டு தரையை முத்தம் இடுவதுபோல், அந்த இளைஞன் மண்ணைக் கவ்வினுன். அவனது தலைப்பாகையின் அடியில் அழுந்திப்போய் விட்ட அவனது அதிசுந்தரமான சிரமானது அவனது மார்பின் மேல் தொப்பென்று விழுந்தது.

இவ்வாறு தன் அஸ்திரம் குறிதப்பிப் போவதைக் கண்ணுற்ற அந்த வீரன், அதிகோபமும் ரோஷமுங்கொண்டு, தன் அம்பருத் தூணியிலிருந்து பின்னும் ஓர் அஸ்திரத்தை உருவினுன். அதுவும் குறிதவறி வேகமாய்ப் பறந்து சென்றது! அவ்வாறு வேகமாகப் பறந்துவந்த ரணஸ்வரூபமான அந்த அஸ்திரத்தை பீபஸ் பகவானே ஹெக்டரின் மேல் தாக்காமல் வேறு முகமாகத் திருப்பி விட்டார்; என்ருலும் அந்த அஸ்திரமும் வீணுகவாவது நிரபராதியாகவாவது, நிலத்தில்விழுந்துவிடவில்லை! தைரியமான ஆர்ஸிதாலிமஸ் என்பவனது மார்பைப் பிளந்து அருமையும் அபூர்வமுமான அவனது இரத்தத்தில் தன் சிறகுகளை நனைத்துக் கொண்டு விட்டது.

ஆர்ஸிதாலிமஸ் அடியற்றவனைப்போல் திடீரென்று தன் தலையைச் சாய்த்துக்கொண்டு கீழே விழுந்தான். அவன் அவ்வாறு திடீரென்று விழுந்த சப்தத்தைக்கேட்ட அவனுடைய குதிரைகள் திடுக்கிட்டுப்போயின! அவனுடைய ஆயுதங்கள் கலகலவென்று ஒலித்ததைக் கேட்டு அவைகள் அலறின! தன் சாரதி அவ்வாறு இரத்தம் ஆருகப்பெருகும் அந்த இரண களத்தில் மூச்சுப் பேச்சின்றி வெளுத்து விழுந்து விட்டதைக் கண்ணுற்ற ஹெக்டர் தன் குதிரைகளின் கடிவாளக் கயிறுகளைப் பிடித்துக் கொள்ளும்படி எஸப்ரியோனிஸ் என்பவனை நியமித்துவிட்டுத், தன் தேரை விட்டுக்குதித்து, அந்தக் களத்தில் இறங்கினுன். சகலருக்கும் பிரியமுண்டாகும்படி உரத்துக் கூவினுன். பின்பு, அங்குக் கிடந்த ஒரு பெரும் பாறையைத் தன் கையால் தூக்கி யெடுத்துக்கொண்டு, டியூஸரை நோக்கி ஓடினுன். அதற்கு முன்னதாகவே, அந்த இளங்காளை யூ-மரத்தினுல் செய்யப்பட்டி

ருந்த தன் கெட்டியான வில்லை வளைத்துக்கொண்டும், தன் தோளுக்கு நேராக ஒரு சரத்தை உருவிக்கொண்டும் தன் சத்துருவின் முன் வந்து நின்றான். இறகு போன்ற அவனது அந்தச் சரமானது அவனது கையிலிருந்து பறந்துசென்று, ஹெக்டரைத் தாக்கியது. அவனது கழுத்தும் மார்பும் கூடும் இடத்தைத் தொட்டது. அவனது இரைப்பையும் குடலும் சேரும் குழாயையும் இடித்தது. அப்போது அந்த வீரன் மிகுந்த கோபங்கொண்டு, தன் கையிலிருந்த பெரும் பாறையை ட்டியூஸரின் மேல் வீசியெறிந்தான். அந்த பிரமாண்டமான பாறையின் வீழ்ச்சியினால் டியூஸரது வில்லின் நாண் பொட்டென்று அறுந்துபோய் விட்டது. ஜில்லென்று விரைத்துப்போன அவனது கையும் இனிமேல் நமக்கு இந்த வில்லினால் என்ன பயன் என்று நினைத்து அதை நழுவ விட்டுவிட்டது. அவனும் கீழே விழுந்தான். ஆனால் அதைக் கண்ணுற்ற அஜாக்ஷன் செயலற்று வாளாயிருக்கவில்லை. அவன் தன் அகன்ற கேடயத்தைத் தன் உடன் பிறந்தானுக்கு முன்னாகப் பிடித்துக்கொண்டு அதன் விசாலமான நிழலில் அவனை மறைத்துக்கொண்டான். அக்கணமே மஹானான அலாஸ்டரும் மெஸிஸ்கியூஸும் ஓடிவந்து காயம்பட்டுப் புலம்பிக்கொண்டிருந்த அந்த வீரனைக் கடற்கரைக்குத் தூக்கிச் சென்றனர். ஒலிம்பஸ் நாதரின் உதவி இன்னும் ட்ராய்க்குமேன்மேலும் கிடைத்தே வந்தது. அவர் அந்த துரோஜர்களுக்கு வேண்டிய ஆயுதங்களை நல்கியும், அவர்களது ஹிருதயங்களில் நெருப்புப்போல் வேகத்தையும் ஆத்திரத்தையும் நிறைத்துமே வந்தார். அப்போது அவர்களால் முறியடித்துத் துரத்தப்பட்ட கிரேக்கர்கள், தங்களது கோட்டை மதிலுக்குப் பின்னால் ஓடி ஒளிந்துகொண்டனர். அவ்வாறு ஓடி ஒளிந்துகொள்ள இயலாதவர்கள் அந்த மதில்களைச் சேர்ந்தாற்போலிருந்த அகழ்களில் தடதடவென்று ஒருவர் மேல் ஒருவர் விழுந்து மலைபோல் குவிந்தனர்.

அப்போது அவர்களுடைய சத்துருக்களில் முதல்வனும் மஹானுமான ஹெக்டர், அமானுஷ்யமான சக்தியே பயங்கர உருவெடுத்து வந்தது போல, அந்த யுத்த களத்தில் மேலுங் கீழுமாக நடந்து வந்தான்.

ஒரு சிங்கத்தால் எதிர்த்துத் துரத்தப்பட்ட ஒரு வேட்டை நாயானது எவ்வாறு தனது மார்பு படபடவென்று துடிக்க வெகு ஆத்திரத்துடன் தாவித் தாவிக் குதித்துக்கொண்டு இடை இடையே தன் இடுப்பின் மேல் சாய்ந்து கொண்டோ, அல்லது குதிங்கால்களின்மேல் ஊன்றி நின்று கொண்டோ, இருபுறமும் அப்புறமுந் திரும்பித் திரும்பித் தன்னைக் கவனித்துப் பார்த்துக் கொண்டும் அவ்வாறு திரும்புகையில் தன்னையே ஒரு சுற்று சுற்றிக் கொண்டு ஓடுமோ, அவ்வாறு கிரேக்கர்கள் அனைவரும் அடிக்கடி திரும்பித் திரும்பிக்கொண்டே ஓட்டம் பிடித்தனர்.

என்றாலும், ஹெக்டர் அவர்களைத் துரத்திக்கொண்டே சென்று, அவர்களில் பின்புறம் இருந்தவர்களைச் சம்ஹாரம் செய்தே வந்தான்.

அவ்வாறு ஓட்டம் பிடித்த கிரேக்க வீரர்களில் அனேகர், தங்களது கோட்டை மதிலுக்குச் சமீபமாக விருந்த அகழைத் தாவிக்குதித்துத் தப்பியே விட்டனர்; என்றாலும் அக்கரை சேர்ந்தபின், அவர்கள் மூச்சுவிட முடியாமல் திணறிக் கொண்டு, அந்தத் தரையின்மேல் பொத்தென்று விழுந்தனர். கொஞ்சம் கழிந்தபின் மூச்சு வந்த பொழுது அவர்கள் எழுந் திருந்து தங்கள் கப்பல்களுக்கு முன் சென்று வெகு ஆவலுடன் அணி யணியாக நின்று கொண்டு தங்கள் சேனைகளுக்கு உற்சாக மூட்டினர். தேவர்களது உதவியை நாடினர்; பிரார்த்தனைகளைச் செய்தனர். அப்போது ஹெக்டர் வந்தேன்! வந்தேன்! என்று கடகடவென்று ஓடும் தன்இரதத்தை ஓட்டிக்கொண்டு வெகு ஆத்திரத்துடன் அங்கு வந்தான். அவன் கண்கள், கார்கனது கண்களைப்போல் செக்கச்செவேலென்று கொழுந்து விட்டுக் கொண்டு எரியும் நெருப்பைப் போலிருந்தன. அதைக் கண்ணுற்ற வீரர்கள் அனைவரும் திடுக்கிட்டனர். வாட்டமடைந்தனர், உதிர்ந்தனர். அவன் மார்ஸ்தேவனைப் போலவே விளங்கினான்; ராக்ஷஸனான கார்கனைப்போல் பயங்கரனாகவும், தேவனான மார் ஸைப்போல் திகில் உண்டாக்குபவனாகவுமே விளங்கினான்! அவ் வாறு அவர்கள் மிகவும் கஷ்டமான தசையில் இருந்ததைக் கண் ணுற்ற ஜோவின் பத்தினி மனங் கசிந்து, யுத்தங்களின் அதிஷ்ட தேவதையான ஜயலஷ்மியை நோக்கிப் பின்வருமாறு யுரைத் தாள் :—

"பழிக்குப் பழிவாங்கும் ஆயுதமாகிய இடியைக் கையில் ஏந்தியுள்ளவரும், கறுத்த நிறத்தையுடைய கேடயத்தைக் குலுக்கக் கூடியவருமான பெருந்தேவரின் புதல்வி! இப்போது கடைசிக் காலத்தில் தப்பிப் பிழைக்க வழியின்றி, நாம் இவ்வாறு தவிக்கின் றோமே! நமக்குத் தேவர்களின் கிருபையில்லாமற் போயிற்றே! என்று கிரீஸ்காரர் வருந்திக் கண்ணீர் வடிக்க நாம் இடந்தரலாமா? இவ்வாறு அதிக்குரூரமான விதியின் பயன் முழுவதையும் அவர்கள் ஒரேயடியாய் அனுபவித்து வரும்படி நாம் விட்டுக் கொடுக்க லாமா? தயவோ, தாக்ஷணியமோ இன்றியும் மட்டுமிதமின்றியும், ஒரு பாத்திரத்திலுள்ள பானகமனைத்தையும் ஒரு சொட்டுக்கூட விடாமல், துடைத்து வழித்துப் பருகிவிடுவதுபோல், தேவர்களனை வரும் அவர்களிடம் துவேஷம் கொண்டுவரலாமா? தேவர்களே! ஒரு மனிதன் கோபங்கொண்டு ஓங்கிய கையினால் இவர்கள் அனை வரும் அழிந்து தரைமட்டமாகலாமா? எவ்வளவு பேர்கள் இது வரை ஏற்கனவே விழுந்து விட்டனர்! இன்னும் எவ்வளவு பெயர் கள் விழவிருக்கின்றனர். இந்த ஹெக்டரின் கோபத்தைத் தணிப்ப தற்கு ஒரு தெய்வத்திற்கும் சக்தியில்லாமல் போய்விட்டதா?

இந்தப் படுகொலை நின்ற பாடில்லையே! இது மேன்மேலும் விருத்தியாய்க் கொண்டே வருகின்றதே! இவன் இன்னும் கோபாவேசத்துடன் பொங்குகின்றானே," என்றாள்.

இவ்வாறு ஸர்வேஸ்வரனது பங்காளியான தேவலோக ராணி சொல்லியதைக் கேட்ட நீலாயதாக்ஷி, அவளுக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தாள் :—

" இந்த ஹெக்டரானவன் வெகு நேரத்துக்கு முன்னுகவே, ஆர்காஸ்காரன் ஒருவனுல் கொலையுண்டு போயிருப்பான்! தன் காலை நன்ருக நீட்டிக்கொண்டு, தன் சொந்த தேசத்தின் தரையிலேயே விழுந்தும் இருப்பான்! இந்தக் களங்களில் தன் இரத்தத்தை வடித்தும் இருப்பான். அவன் வடித்த இரத்தத்தினுல், இந்தக் களம் முழுவதும், கறைபட்டே போயிருக்கும். ஆனுல் தேவலோகத்தார் அனைவருக்கும் அதிபதியாக மேலே உட்கார்ந்திருக்கும் அவர் அவ்வாறு நடப்பதைத் தடுத்து விட்டார். நம் பிரயத்தனங்களையெல்லாம் அவர் கேலி செய்கின்ருர் ; அலட்சியம் செய்கின்ருர். நாம் வேண்டுவனவெல்லாம் நியாயமாக இருப்பினும் அவையனைத்தையும் அவர் ஒரேயடியாய் மறுத்து விடுகின்ருர். நம் பிரார்த்தனைகளை அவர் தம் செவிகளிலும் போட்டுக்கொள்ளுவதேயில்லை. இந்தப் பிடிவாதமுள்ள தெய்வம் சிறிதும் அசையமாட்டேன் என்கிறது! கல்லைப்போல் கெட்டியாகவே யிருக்கின்றது. நான் முன்னுளில் செய்த உபகாரங்களை யெல்லாம் மறந்துவிட்டது. அவற்றை நினைத்தாவது என் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றலாகாதா ? மாட்டேன் என்கிறது.

இந்தத் தெய்வத்தின் அபிமான புத்திரனுன ஹெர்க்குலிஸை, இதற்காகவா, நான் பெருத்த ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்றினேன்! யுரிஸ்தியூஸ் என்பவன் அவனை வருஷக்கணக்காக வாட்டி வருத்தி வந்தான். கொடிய ஊழியங்களைச் செய்யும்படி நியமித்தான். கண்டபடியாக வேலை வாங்கினுன். அப்போது இந்தத் தேவன் என்னைக் கெஞ்சினுன். இன்னது செய்வதென்று தெரியாமல் கண்ணீர்விட்டு அழுது என்னைக் கெஞ்சினுன். நான் குண்டு போட்டாற்போல் தேவலோகத்திலிருந்து ஒரே ஓட்டமாக நேராக ஓடிச்சென்று அவனைக் காப்பாற்றினேன். அவனும் விடுதலையடைந்தான். கிரேக்கர்களுக்கு இந்தக் கஷ்டம் உண்டாகும் என்று நான் அன்றையதினம் அறியவில்லையே! அப்படி அறிந்திருந்தேன் என்ருல், புளுட்டோவின் பயங்கரமான வாசலண்டை அவன் சென்றபொழுது, அந்த மூன்று தலை நாய் அவனது பிடிக்கு அகப்பட்டிருக்குமா ? அதை அவன் தன் சங்கிலியினுல் கட்டியிருப்பானு? அவன் ஸ்டிக்ஸ் நதியைத்தான் தாண்டியிருப்பானு ? நரகலோகத்தில் வேறு ஏதேனும் செய்திருப்பானு ? என் சகாயத்தினுல்தானே அவனுக்கு இந்தக் காரியங்களெல்லாம் கை கூடின !

இப்போது தேவர்கள் நிறைந்திருக்கும் இந்த உலகத்தில், இந்தத் தேவனுக்கு மற்றெல்லாவற்றையும்விட என்னிடந்தான் வெறுப்பு உண்டாகியிருக்கின்றது! அவனுக்கு என்னைக் கண்ணுலும் காண விருப்பமில்லை !

தெபீஸ் தேவியைக் கண்டால் உள்ளம் குளிர்ந்து போகின்ருன்! அவள் கேட்டதையெல்லாம் தருகின்ருன்! அவளுடைய பிரார்த்தனைகளை ஏற்றுக்கொள்ளுகின்ருன். மஹா பக்ஷபாதி !! வேறு தெய்வங்கள் ஏதேனும் கேட்டால் தனக்குத்தான் ஸர்வாதிகாரம் இருக்கின்றது என்று கர்வங்கொண்டு "இடி இடி" என்று இடிக்கின்ருன். பயமுறுத்துகின்ருன், அவள் கேட்டதற்கெல்லாம் மாத்திரம், தலையை ஆட்டுகிருன் !

அவளுடைய பிள்ளை ஒரு சிடுமூஞ்சி! அது தன் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக்கொண்டு கிடக்கின்றது. அதன் முகத்தில் எப்போது பார்த்தாலும் கடுகடுவென்று எள்ளும் கொள்ளும் வெடிக்கின்றது! அவன் மகா பொருமைக்கரான்! அவனது முகம் கோணப்படாதாம்! அவனது மனம் குளிர வேண்டுமாம்! அதற்காக என் கோரிக்கைகள் ஒன்ருவது நிறைவேறக் கூடாதாம்! என் கிரேக்கர்களெல்லாம் அழிந்துபோக வேண்டுமாம்!!

இருக்கட்டும்! இருக்கட்டும் !! எனக்கும் ஒரு காலம் வரும்! அப்பொழுது அவன் இந்த நீலாயதாக்ஷியை நாடியே வருவேன். அவளே தன் அத்தியந்தப் பிரீதிக்கும் பாத்திரமானவள் என்று சொல்வான்! இனித் தாமதம் வேண்டாம்! உன் இரதத்தை ஓட்டு! வேகமாக ஓட்டு!! அந்தச் சேனையின் மத்தியில் நடத்தி ஓட்டு!!! நானும் என் ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு வருகின்றேன். உன் பக்கத்திலிருந்த வண்ணம் கூச்சல் போடுகின்றேன். இடித்துப் பொடிக்கின்றேன்! நாம் இருவரும் இவ்வாறு பொருதோமானுல், தேவி! அப்புறமுங்கூட இந்த ஹெக்டர் குதிப்பானு! அட்டஹாசம் செய்வானு? பெருமை பேசுவானு ?

இவன் மனிதர்கள் எல்லோரிலும் சிறந்தவன்தான்! ஆண் பிள்ளைகள் எல்லோரிலும் சிறந்த ஆண் பிள்ளைதான்! கிரேக்கர்களுக்கு எமன் போன்றவன் என்பதும் நிஜந்தான்! அதில் சந்தேகமில்லை! ஆனுல் சாக்ஷாத் ஜூனே தேவியும் பாலாஸ் தேவியும் இரத்தப் பெருக்குடன் விளங்கும் ஒரு யுத்த களத்தில் தங்களது கோரஸ்வரூபத்துடன் விளங்கிவிட்டால், அப்போது ஒரு துரோஜன் எவ்வளவோ பராக்கிரமசாலியாக விருந்தாலும், அவன், அதோ காணும் அக்கரையில் இரத்தத்தை வடித்துக்கொண்டு, வெளுத்துப் போய்த் தன் பிராணனையும் விடுவானல்லவா ? அப்பொழுது அவனுல் உண்டாகியிருந்த பயமும் ஒழிந்து போய்விடும். அவனது இரத்தத்தை நாய்களெல்லாம் மடமடவென்று குடித்துத் தெவிட்டிப் போகும்" என்ருன்.

அவ்வாறு அவன் சொல்லி முடித்ததும் சர்வ வல்லமையுள்ளவளும், தேவலோக ராணியும் ஸாட்டர்னிஸின் மற்றைய சந்ததியுமான ஜூனேதேவியானவள், வெகு ஜாக்கிரதையுடன், தன் குதிரைகளுக்குக் கடிவாளக் கயிறுகளைக் கட்டினுள்.

அதன் மத்தியில் பாலாஸ்தேவியானவள் தான் கட்டிக் கொண்டிருந்த பலவர்ணங்களுங்கொண்ட தன் எழினியை அவிழ்த்து விட்டாள். புஷ்பங்களாலும் திவ்வியமான சித்திரங் களாலும் அலங்கரிக்கப்பட்டதும் பளபளவென்று மின்னுமதுமான அந்த எழினியானது, அவளாலேயே, அவளுடைய திருக்கைகளா லேயே நெய்யப்பட்டிருந்தது. அது தாராளமாக அலையலை யாய்ப் பறந்துசென்று ஜோவ் தேவரின் சபா மண்டபத்தையும் மறைத்துவிட்டது. அவள் தன் பிரம்மாண்டமான கைகளில் தன் தகப்பனது ஆயுதங்களைத் தரித்துக் கொண்டாள். பின்பு, தேவ னுடைய பிரகாசமாக மின்னும், மார்க் கவசத்தையும், தன் விசால மான மார்பில் கட்டிக்கொண்டாள். இவ்வாறு வீர சூர பராக் கிரமங்களுடன் கூடிய அவள் நடுங்கிக் கொண்டிருந்த அந்தரத் தில் ஏறினாள். தன் பிரம்மாண்டமான வேலை எடுத்து ஒரு சுழற்று சுழற்றினாள். அது வளைந்தே போயிற்று. அது சாமானிய மானதல்ல! மிகப் பெரியது! கனமுள்ளது, கெட்டியானது அவளது கோபத்திற்கு இலக்கானவர்களையும் கர்விகளான தான் தோன்றிகளையும் பாதாளத்தில் தள்ளிவிடக் கூடியது. பெருந் தொகையான சேனைகளையும் ஒருபடியாய் இருந்த விடந்தெரியா மல் தலைகுப்புறத் தள்ளி உருட்டி விடக்கூடியது.

ஸாட்டர்னியா தேவியானவள் அவளுக்குத் தனது சாட்டையைக் கொடுத்தாள். அவள் குதிரைகளும் பறந்தன. திரவ ரூபமான ஆகாய வீதியில் அவளது ரதமானது வழவழ வென்று அவளை இழுத்துச் சென்றது. இவ்வாறு இந்த தேவியர் இருவரும் இரதத்தின்மேல் ஏறிவருவதைக் கண்ணுற்ற சுவர்ணக் கிரணமானவையும் இறகுகள் கொண்ட ஹோரைகளால் காவல் செய்து வரப்பட்டவையுமான, தேவலோக வாயிற் கதவுகள் தாமாகவே திறந்தன. அந்த ஹோரைகள் இருவரும் ஒருவர்பின் ஒருவராக முறைப்படி அந்த வாயில்களைக் காத்துக்கொண்டு, சூரியனது காந்தி பொருந்திய வாயில்களிலும் ஆகாய வீதிகளிலும் அதிகாரஞ் செலுத்தி வருபவர்கள்.

தினகரனது சாசுவதமான அந்தக் கதவுகள் மூடியிருக் கையிலும் திறந்து இருக்கையிலும் தேவலோகத்தை மேகத்தால் மறைத்துத் தடுக்கவும், அல்லது மேகங்களிலேயே ஓட்டி விலக்க வும் கூடியவை.

ஜூனோ தேவியும் பாலாஸ் தேவியும் இரதாரூடராக வரு வதைக் கண்டு, அந்தக் கதவுக் கீல்கள் கணகணவென்று ஒலித்தன. மேகங்களும் வழிவிட்டு விலகின. வேறு வேருகப் பிரிந்தன, தேவிமார்கள் இருவரும் தலைகீழாகக் குனிந்துகொண்டு செங்குத்தாக உள்ள தேவலோகத்தை நோக்கித் தங்களது இரதத்தை ஓட்டினர். இது ஜோவ் தேவருக்குச் சிறிதும் பிடிக்க வில்லை. அவரால் இதைப் பொறுக்க முடியவில்லை. ஐடாமலைச் சிகரத்தி லிருந்தவண்ணம், அவர் இந்தக் காட்சியைக் கண்டு வெம்பிக் கொதித்துப் பொங்கினர்.

அவர் வித்யாதரிஸைக் கூட்பிட்டுப் பின்வருமாறு வெகு வெடுப்பான வசனங்களை யுரைத்தார்:—

“தௌமாண்டியா! இந்தக் காற்றுகளுக்கும் மேலாக ஏறிச்சென்று, அவர்களது தேரை நிறுத்து! அதியுன்னதமான தேவனுக்கு விரோதமாக யாரால் யுத்தஞ் செய்ய முடியும்? அவர்கள் இன்னும் பிடிவாதத்துடன் வீண்வாதங்களைச் செய்ய வேண்டுமென்றே துணிந்து, இங்கு வருவார்களானுல், அவர் களுக்கு நான் சொல்லும் வார்த்தைகளைச் சென்று சொல்லு! என் வாக்குப்படியே காரியங்களெல்லாம் நடக்குமல்லவா? நான் விதிப்பதெல்லாம் விதிதானே, அதை மாற்ற யாரால் முடியும்?

அவர்கள் குதிரைகள் அவர்கள் சக்கரங்களிலேயே, அறைந்துபோய், அவற்றின் அடியிலே விழக்கடவன! அவர் கள் தேரும் உடைந்துபோய்ச் சுக்கல் சுக்கலாகி இந்த வானம் முழுவதிலும் சிதறிக் கிடக்க கடவது. என் மின்னலினுல் இந்த அடங்காப் பிடாரிகள் மதிகெட்டுப் போகக் கடவர். எனது மின்னலினுல் தவிக்கப்பட்டு அவர்கள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டு, தலைகீழாகத் தரையில் விழக் கடவர்! பத்து வருஷ பரியந்தம், அவர்கள் இந்த மின்னலினுலும் இடியினுலும் உண்டான ஆழமான காய்ச்சலை அனுபவித்துக்கொண்டு, அழுது, கதறி வரக்கடவர்! இந்தத் தண்டனையை அனுபவித்து வந்தால் தான், மினர்வாவுக்கு ‘நமது கோபம் பொல்லாதது, அதற்குப் பயப்பட வேண்டும்’ என்ற புத்தி உண்டாகும். தனக்கும் சர்வமான சராசரங்களுக்கும் பிதாவான நம்முடன் சண்டையிட நினைப்பதுவுங் கூடாது என்று அறிந்து, அவள் அடங்கிக் கிடப்பாள்!

ஜூனே தேவிக்கு இன்னும் புத்திவரவில்லை. அவள் இன்னும் பிடிவாதமும், தோரணையும் உள்ளவளாகவே இருக் கின்றுள். நமது அதிகாரத்தை மறுப்பதற்குத் தனக்கு ஸ்வாதந் திரியம் இருக்கின்றது என்றே அவள் நினைத்து வருகின்றுள்” என்றுர்!

அவருடைய ஆஞ்ஞைகளைச் சிர மேற்கொண்ட அனந்த வர்ண தேவியானவள் தன் சிறகுகளை விரித்துக்கொண்டு காற்றைப் போல் வேகமாக ஐடாமலையினின்றும் புறப்பட்டு, மகா உன்னத மான ஒலிம்பஸ்ஸின் பனிச்சென்று மின்னும் உயர்ந்த வாயில்களை நோக்கிப் பறந்து சென்றுள். அங்கு ஆகாயத்திலிருந்து வெகு வேகமாக இறங்கிவரும் இரதத்தைச் சந்தித்தாள். அதைக் கண்டவுடனே அவள், தனக்கு ஜோவ் தேவர் இட்ட கட்டளைப் பிரகாரம் அந்த இரதமும், அதில் வீற்றிருந்தோரும் விண்ணுல கத்திலிருந்த திவ்வியமான மாளிகைக்குச் செல்வதைத் தடுத்துத், தேவாதிதேவனது ஆஞ்ஞையைப் பின்வருமாறு அறிவித்தாள்:—

"தேவிமார்களே! இது என்ன வெறி? ஜோவ் தேவரின் கோபத்தையும் ஒருகை பார்க்கலாம் என்ற எண்ணமா? தேவ லோக வாசிகளான உங்களது மனத்திலும் இந்த ஆத்திரம் உண்டாகலாமா? அவர் உங்கள் நடவடிக்கைகளையெல்லாம் நிறுத்தும்படி கட்டளை யிடுகின்றார். அவ்வாறே செய்வீர்களாக! அவர் சொல்லிய வசனங்களையும் சொல்லுகின்றேன். கேளுங்கள். அவைகள் நிறைவேறியே தீரும் என்பதும், அவற்றை மாற்ற வல்லார் ஒருவரும் இலர் என்பதும் உங்களுக்குத் தெரியும். எனது மின்னலானது உங்கள்மேல் பாய்ந்து, உங்களது கவசத்தை யடக்கி, உங்களது மூளையையும் கலக்கட்டும்! அது உங்களைத் தலைகீழாகக் குப்புறத் தள்ளட்டும்! அதனால், நீங்கள் கொழுந்து விட்டு எரிந்துகொண்டு, மண்ணின்மேல் விழக்கடவீர்கள்! உங்கள் குதிரைகளெல்லாம் உங்களது இரதத்தின் சக்கரங்க ளாலேயே அறைபட்டு நசுங்கி அவற்றின் அடியிலே, அழுந்திக் கிடக்கட்டும்! உங்கள் இரதமும் கண்டதுண்டமாகிப் பொடிந்து, இந்த ஆகாய மண்டலமெல்லாம் சிதறுண்டு போகட்டும்! மின்னலினாலும் இடியினாலும் நீங்கள் பலமான காயங்கள் அடைந்து பத்துவருஷ காலம் கதறி, அழுது, நொந்து வரக்கடவீர்கள்! இவ்வாறு கொடிய தண்டனையை அனுபவித் தால்தான், மினர்வாதேவிக்கு அந்தத் தேவரது கோபத்திற்குப் பயப்படவேண்டுமென்ற ஞானம் உண்டாகும். அதன்பின், அவள், தனக்கும், ஸர்வலோகங்களுக்கும் பிதாவான அவருடன் போர்புரியத் துணிவு கொள்ளாள்.

ஜூனோதேவி, இன்னும் பிடிவாதமும் தோரணையும் உள்ளவ ளாகவே இருக்கின்றாள்! அவள், அவரது ஆஞ்ஞையைக் கடக்கத் தனக்குப் பாத்தியதை உண்டென்றே நினைத்தும் வருகின்றாள். என்ற இந்த வார்த்தைகளை உங்களுக்குச் சொல்லி வரும்படி, அவர் என்னை அனுப்பினார்" என்று சொல்லிவிட்டு அவள் ஜூனோ தேவியை நோக்கி,

"ஏண்டி! உனக்கு ஏன் இந்தத் துணிவும், அகம்பாவமும் உண்டாயின? நீ ஏன், இவ்வாறு தேவதேவனுக்கு விரோதமாய் உனது வேலாயுதத்தைத் தூக்கினாய்?" என்றாள்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவள் காற்றின் சிறகுகளின்மேல் ஏறித் தனது இருப்பிடத்தை நோக்கிப் பறந்து சென்று விட்டாள்.

அப்போது ஜூனோவானவள், தனது கோபத்தைத் தணித் துக்கொண்டு பின்வருமாறு இயம்பலானாள்,—

"பழிக்குப் பழி வாங்கக்கூடிய வஜ்ராயுதத்தை ஆட்டி யசைக்க வல்லவராகிய, பெருந் தேவரின் மகளே! பூமியிலுள்ள இழிந்த குலத்திற் பிறந்த இந்த மனிதர்களுக்குப் பரிந்துகொண்டு, நம்மைப்போன்ற உயர்குலத்திற் பிறந்தவர்கள், ஜோவ் தேவருடன் இதுவரை பொருது வந்தது போதும்! அந்தப் போரை, அவர்கள்

இத்துடன் நிறுத்தட்டும், அவர்கள் தங்களது ஊழ்வினைக்குத் தக்க படி, ஒரு முறை வெற்றி பெறுகின்றனர். மறுமுறை, நல்வினை யின்றி, வெட்டுண்டு மடிகின்றனர். அவர்கள் ஜீவனோடிருப் பதும் நசித்துப் போவதும், அவர்களது வினையின் முடிவைப் பொறுத்தேயிருக்கின்றன என்றாலும் ஜோவ் தேவரின் மேலான யோசனைகளை அனுசரித்தபடியே, காரியங்களெல்லாம் சிறிதும் தவறாமல் நடைபெறும். அவை ஒரு பொழுதும் மாறாமல், எப் போதும் மனிதர்களை யடக்கி யாண்டுவரும்'' என்றாள்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவள், பொன்மயமான பிடரிகளை அலங்காரமாகக் கொண்டவையும், தேஜோமயமாக விளங்குபவையுமான மின்னற்கொடிகள் போன்ற தன் குதிரை களைப் பின்புறமாகத் திருப்பினாள். அவை அக்கணமே பதை பதைத்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்றுவிட்டன. அப் பொழுது அங்கிருந்த ஹோரைகள் அவற்றைத் தேரிலிருந்து அவிழ்த்து, தொழுவத்திற்கட்டி, அவற்றின்முன் தீனியையிட்டனர். அமிர்த மயமான அவை அந்தத் தேவலோகத் தொழுவங்களில் இருந்தவண்ணம் இளைப்பாறி வந்தன. அவைகளுடைய இரதமும் பளிங்குபோன்ற அந்த விண்ணுலகத்தின் சுவரின்மேல் சாய்த்து வைக்கப்பட்டது.

அப்போது அந்தத் தேவிமார்கள் இருவரும், மிகுந்த துக்கத் துடனும் வெட்கத்துடனும் தங்கள் துடுக்குகளையும் சேஷ்டைகளை யும் அடக்கிக் கொண்டு, அங்கிருந்த வேறு தேவர்களுடன் கலந்து தத்தம் சுவர்ண ஆசனங்களில் அமர்ந்து கொண்டனர்.

அந்தச் சந்தர்ப்பத்தில் இடிக்கடவுள், தான் அப்போ திருந்த ஐடாமலைச் சிகரத்திலிருந்து ஒலிம்பஸ்ஸின் உன்னதமான ஸ்தானத்திற்குப் போக வேண்டுமென்று நினைத்தார். அவ்வாறு நினைத்த மாத்திரத்தில், அவரது வாகனத்தின் சக்கரங்கள், வாயு வேக, மனோ வேகமாகச் சுழன்று பறந்தன. அவை பிரம்மாண்ட மான ஆகாய வீதியில், தகதக வென்று பிரகாசித்துக் கொண்டு, ஓட்டமாக ஓடிவந்து, அந்த ஒலிம்பஸ் மண்டலத்தை அடைந்தன. அவ்வாறு வந்து சேர்ந்தவுடன் நெப்தியூன் பகவானானவன், குதிரைகளின் கடிவாளக் கயிறுகளை அவிழ்த்தும், தேரையும் அழிவில்லாத அதன் நிலையில் அமர்த்தி நிறுத்தியும் தன் கடமையைச் செலுத்தினான். தணல்போல் பிரகாசத்துடன் ஜ்வ லித்துக் கொண்டிருந்த தன் கிரணங்களை நாற்புறமும் பொழிந்து கொண்டு நின்ற இரதத்தின் மீது அவன் பனிபோன்ற ஒரு திரை யைப் போர்த்தி அதை மறைத்தான்.

இவ்வாறு நெப்தியூன் தன் கடமைகளைச் செலுத்திக் கொண்டு வருகையில், சர்வகாலமும் உலகத்திலுள்ள சகலமான விஷயங்களையும் பார்த்துக் கொண்டும், குறிப்பாகக் கவனித்துக் கொண்டும் வருபவரும், அழிவில்லாதவருமான இடிக் கடவுள் தமது சுவர்ணமயமான சிங்காதனத்தில் அமர்ந்தார். அதியுன்

னதமான விண்ணுலகத்தையே அவர் தமது பாதபீடமாக ஆக்கிக் கொண்டார். அவருக்கு முன்னுல், அவரது காலடியில் விசால மாகப் பரந்திருந்த ஒலிம்பஸ் மலை முழுவதும் கிடுகிடுவென நடுங் கியது. அப்போது அவருக்கு விரோதமாகக் கிளம்பிய தேவதை கள், அவரது முகங்கோணிஞல் தங்களுக்குத் தீங்கே விளையும் என்று பயந்து, மனங் கலங்கியவர்களாகவும் மௌனம் சாதித்துக் கொண்டும், வெகு நடுக்கத்துடன் நெடுந்தூரத்தில் தோன்றினர். அவரும் அவர்களது முகக் குறிப்பினுல், அவர்களது அகத்தில் உறைந்து வந்தகோணல்களையறிந்து அவர்களை நோக்கிப் பின் வருமாறு உரைத்தார் :

"பாலாஸ்! ஜூனே! நீங்கள் ஏன் இப்படித் தேம்புகின் றீர்கள்? உங்கள் மார்புகள் ஏன் இப்படித் துடிக்கின்றன? பதை பதைக்கின்றன? உங்களது யுத்தம் அதி சீக்கிரத்திலேயே முடிந்து விட்டதல்லவா? உங்களது எதிரிலேயே அதிகர்வம் கொண்டிருந்த ட்ராய் நகரும், பின்னடைந்து விட்டதே!! உங் களது கோபத்திற்கு அது இரையும் ஆகிவிட்டதே!! ஏன் நீங்கள் பதில் பேசவில்லை!

சர்வ வல்லமையுடைய மஹாபராக்கிரமசாலியான தேவனை எதிர்க்கலாம் என முயலும் அனைவருக்கும், நான், ஓர் எச்சரிக்கை செய்கின்றேன். அதைக் கேளுங்கள்! நமது சக்திக்குச் சமான மான வேறு சக்தி ஒன்று கிடையவே கிடையாது! நமது கைவலியை மிஞ்சியவரும் ஒருவரும் இல்லை. அது ஒருவராலும் வெல்லக் கூடாதது! விண்ணுலகத்தின் அரசரை அடக்க யாரால் முடியும்? இந்த நக்ஷத்திர மண்டலத்தின் மேல் வீற்றிருக்கும் சகல மான தேவர்களும் ஒன்ருய்ச் சேர்ந்தாலுங்கூட, அது முடியாத காரியமன்றோ? நாம் மாத்திரம் நம் ஆயுதங்களை எடுத்துவிட்டால் உங்கள் உள்ளங்களெல்லாம் துடிக்க வேண்டாமா?

நீங்களெல்லாம் அமரர்கள்தான்! சாவு இல்லாதவர்கள் தான்? என்றுலும் உங்கள் ஒவ்வொருவருடைய சகலமான நாடி களும், அப்போது துடிக்கும்! பயந்து நடுங்கும்! காரியங்களெல் லாம் நான் சொல்லும் பிரகாரமே நடக்கும். ஆதலால் நான் இந்த விஷயத்தை உங்களுக்கு முன்னுடியே சொல்ல வேண்டியது அவசியமாயிற்று.

நமது கையை நாம் உயரத் தூக்குமாறு நம்மைத் தூண்டு பவர் யாராயினும் சரி! அந்தத் தெய்வத்திற்கு இந்த மலையில் அதன்பின் இடங்கிடையாது! அதை நாம் தேவ வமிசத்திலிருந்து நீக்கி விடுவோம்; இங்கிருந்து துரத்தியும் விடுவோம்!!" என்றுர்.

ஜூனே தேவியும் பாலாஸ் தேவியும் இந்தக் கண்டிப்பான வசனங்களைக் கேட்டுக் கிலேச முற்றனர் என்றுலும், இனிமேல் இலியனுக்கு வரவிருந்த கஷ்ட காலத்தை நினைத்துச் சிறிது சந் தோஷங் கொண்டு மனந் தேறினர்.

மினர்வாவின் மனதில் கோபமானது, இரகசியமாகப் புகைந்து கொண்டிருந்தாலும் அவள் அதை வெளிக் கர்ட்டுவது புத்திசாலித்தனமல்ல வென்று அடக்கிக் கொண்டாள்!

ஆனால், ஜோவ் தேவருக்கு இவ்வளவு கோபமா! என்று நினைத்தவளும், தனது மனக் கொதிப்பை அடக்க முடியாதவளு மான ஜூனோ தேவியானவள், அவருக்குப் பின் வருமாறு பதிலு ரைத்தாள் :—

“ விண்ணுலகத்தின் வன்கண்ணாளரே! அதை உமது இஷ்டப் படி ஆட்டி வருபவரே! நீர் என்ன சொன்னீர்? பலமும், சர்வ சக்தியும் உமது சிம்மாசனத்திற்கு ஏற்பட்ட உரிமைகள் தான்! நீர் எங்களைத் தண்டிக்கக் கூடியவர் தான்! எங்களுக்குக் கண்ணீர் விட்டு அழ மாத்திரமே பாத்தியதை உண்டு! இவையெல்லாம் எங்களுக்கு நன்றாகத் தெரியும்.

தங்களது அளவு கடந்த விரோதத்திற்குப் பாத்திரர்களாகி விட்ட கிரேக்கர்களெல்லாம், அளவிட முடியாத கஷ்டங்கள் அனுபவிக்கின்றனர்! அது அவர்களுடைய ஊழ்வினையின் பயன்! நாங்கள் அதைக் கண்ணுற்றுக் கண்ணீர் வடிக்கின்றோம், வருந்து கின்றோம்.

தங்களது ஆணைக்குக் கீழ்ப்படிந்து, நாங்கள் எங்களுக்கு விலக்காகி விட்ட யுத்த களங்களிலிருந்து விலகிவிட்டோம். எங் களது பிரியத்திற்குப் பாத்திரர்களான ஆர்கிவ்களுக்கு ஒருவித மான ஆயுத சகாயமும் செய்யாமல் அவர்கள் கொலையுண்டு, போவதைப் பார்த்தும் வருகின்றோம்! என்றாலும் ஜோவ் தேவரின் கோபத்திற்கு ஆளாகி, அவர்கள் அனைவரும் அடியோடு அழிந்து போகலாகாது! ஆதலால் அவர்களுக்குச் சமயோசிதமான யோசனைகளைச் சொல்லியாவது, நாங்கள் அவர்களது மனத்தில் ஊக்கத்தை உண்டாக்க வேண்டும்! அவ்வாறு செய்து வரவாவது தாங்கள் எங்களுக்கு அனுமதி தரல் வேண்டும்,” என்றாள்.

இவ்வாறு அந்த தேவி சொல்லியதைக் கேட்ட பொழுது மேகங்களைப் பெருக்குகின்றவரும், ஆகாசங்களை யெல்லாம், காரிரு ளால் நிறைத்து விடுபவருமான தேவர் அதற்குப் பின்வருமாறு பதிலுரைத்தார் :

“ யுத்த சன்னத்தர்களாகப் போர்க்களத்துக்கு வரும்படி வீரர்களை உரத்துக் கூவும் பேரிகைகளைக் கேட்டுக்கொண்டு, சூரிய பகவான் நாளைக் காலையில் கிளம்புவான். அவன் அப்போது, சர்வேசுரனாகிய இடிக்கடவுளும், ஆயுதபாணியாக விளங்கு வதையே காணுவான். அப்பொழுது, அந்தப் போர்க்களத்தில் கணக்கற்ற ஆர்கிவ்கள் குவியல் குவியல்களாக விழுந்து விடுவதை யும்பிரகாசமான கண்களையுடைய அவன் காணுவான்! கண்டு என்னபயன்? அவனால் அவர்களுக்கு ஒரு விதமான உதவியைச்

செய்யவோ, அல்லது அவர்களுக்கு உண்டாகும் நாசத்தைத் தடுக்கவோ சிறிதும் இயலாது! மஹானுன ஹெக்டருக்குள்ள யுத்த வெறியுந் தணியாது! அப்போது கப்பல்களெல்லாம் நெருப்புக்கு இரையாகித் தகதக வென்று எரியும். உன் கிரேக்கர்களும் ஓட்டம் பிடிப்பார்கள்! பத்ரோக்ளஸும் கொல்லப்படுவான்! அப்போது அந்தக் கொலேயினுல் நேர்ந்த பழியைத் தீர்த்து விடுவேன் என்று கொடியனுன அகிலேசன், வெடுக்கென்று தனது இடத்திலிருந்து எழுந்து வந்து, இந்தக் களத்தை அழிப்பான், அதுவரை இந்தக் கஷ்டங்களே யெல்லாம் கிரேக்கர்கள் அனுபவித்தே தீர வேண்டும் என்று சில தேவர்கள் தீர்மானித்திருக்கின்றனர். இது அவர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் விதி! இதை மாற்ற வேண்டுமென்று நீ எவ்வளவு ஆத்திரப்பட்டாலும், எவ்வளவு தைரியமாக எனக்கு விரோதமாகக் கிளம்பிக் கலகஞ் செய்தாலும் உன்னுல் சற்றும் ஆகாது! ஆதலால் க்ஷேமமாக இருக்க வேண்டுமென்பது உனது விருப்பமானுல், நீ உடனே இங்கிருந்து பூலோகத்தின் அக் கரையின் கோடிக்கு ஓட்டமாக ஓடு! அங்கு சமுத்திரங்கள் ஓலமிட்டுக் கொண்டிருக்கின்றன. அங்குதான் அயாபிட்டஸும், ஸாட்டர்னும் தங்களுக்கு விதிக்கப்பட்ட சாபத்தை அனுபவித்துக்கொண்டு, தங்களது காலத்தைக் கழித்து வருகின்றனர். அக்கரையின் ஓரமாகவும் நரக லோகத்தில் பாயும் நதியின் மத்தியிலுந்தானே அவர்கள் வசித்து வருகின்றனர். அங்குள்ள அந்தகாரத்தில் நிகழும் கொடுமைகளே விளக்குவதற்குச் சூரியனுடைய கிரணங்கள் ஒன்ருவது பளிச்சென்று பாய்வதில்லே! அங்குள்ள வாயுவும் சிறிதும் சலனமில்லாதது. அதை ருசியாக்குவதற்கு நல்ல காற்று ஒன்றுகூட அங்குச் சென்று அடிப்பதில்லே! ஆதலால் நீ அவ்விடமே சென்று, இன்னும் ஒருமுறை டைட்டானியர்களே (தைத்தியர்களே) ஆயுத பாணிகளாக்கி, எனக்கு விரோதமாகக் கிளப்பு! உன் சாமார்த்தியத்தையும் பார். உன் சிரமங்கள் அனேத்தும் வீணே போகும்! காரியங்களெல்லாம் நான் விதித்தபடியே நடந்தே தீரும்! அது நிச்சயம்தான்,'' என்ருர்.

அப்போது வெளிச்சத்தைத் தரும் விளக்கானது தனது இராப் போர்வையான மேகங்களேத் தனக்குப் பின்புறமாக இழுத்துப் போர்த்துக் கொண்டு சமுத்திரத்தில் வெகு ஆழத்தில் அமிழ்ந்து போய் விட்டது. அதுவரை வெற்றியுடன் குதித்தும், களித்தும் வந்து துரோஜர்கள் அதன் கிரணங்கள் வர வரப் பிரகாசம் குறைந்து வருவதைக் கண்டு கூக்குரலிட்டு அழுதனர். அதே சமயத்தில் தங்களுக்கு உதவியாக வந்த இருளேக் கண்டு கிரேக்கர்கள் அதை வாழ்த்தினர்; சந்தோஷித்தனர்.

அதுவரை வெற்றியுடன் விளங்கியவர்கள் அந்தக் களத்தை விட்டு அகலாமல் அதையே காத்து வந்தனர். அப்போது ஹெக்டர் கப்பலின் சமீபத்தில் இருந்த மதில்களின் அருகில் தன் சேனேத் தலேவர்களது மந்திராலோசனேச் சபை ஒன்றைக்கூட்டி, அச் சபையோர்களேச் சியமந்த நதியின் கரைக்குத் தனியாக

அழைத்துச் சென்றான். அதன் கரையில் இறந்துபோன வீரர்களுடைய சவங்களெல்லாம் சிறு சிறு குவியலாக அங்குமிங்கும் சிதறுண்டு கிடந்தன. ஆதலால் அங்குக் கூடியிருந்த தலைவர்களெல்லாம் சற்றுத் தாழ்ந்திருந்த நிலத்தில் இறங்கித், தங்களது இராஜகுமாரனைச் சுற்றி வளைத்துக் கொண்டு, அவன் தங்களுக்கு இட்ட கட்டளைகளைத் கவனமாய்க் கேட்டு வந்தனர். அவன் தன் கையில் ஒரு பிரம்மாண்டமான ஈட்டியைத் தரித்திருந்தான். அது சரியாகப் பத்து முழ நீளமிருந்தது. பித்தளையினால் செய்யப் பட்டிருந்த முனையையுடைய அந்த ஈட்டியானது ஜாஜ்வல்லியமாகப் பிரகாசித்தது. அதன் மரப் பிடிக்கும் பொன்னால் செய்யப் பட்ட பூண்கள் இடப்பட்டிருந்தன. இவ்வாறு விசேஷமாக அமைந்திருந்த அந்த ஈட்டியின் மீது சாய்ந்து கொண்டு, பெருந் தன்மையுடைய அந்த ஹெக்டர் தன் முன்னால் தனது தலையைக் குனிந்து கொண்டு தனது மனதிலுள்ள எண்ணங்களைப் பின் வருமாறு வெளியிட்டான் :—

"வீரர்களான துரோஜர்களே! நான் சொல்லுவதைக் கவனமாகக் கேளுங்கள்!, தார்தான் குலத்தினரே! தாராள்மாக நமக்கு உதவி செய்ய முன் வந்துள்ள சினேகிதர்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள், இன்றைய தினம் கிரீஸானது, அதன் கப்பல்களுடன் நெருப்பினால் அழிபட்டு, அதற்கு இரையாய்ப் போய்விடும், நாம் வெற்றியுடன் விளங்குவோம். நாம்பட்ட பாட்டிற்கு நமக்கு நல்ல கீர்த்தியுங் உண்டாகும் என்று நினைத்து வந்தோம். ஆனால் நாம் நினைத்தபடிக் காரியங்கள் நடக்கவில்லை, இப்போது இந்தப் பேடிகளை இரட்சிப்பதற்காக இருட்டல்லவா வந்து விட்டது! அது தங்கள் மரச் சுவர்களின் இடையில் ஒதுங்கிக் கொண்டு திகிலுடன் பதுங்கிக் கிடக்கும் இவர்களைக் காப்பாற்றி யல்லவா வருகிறது? ஆதலால் நாமும் அந்த இராத்திரிக் காலத்தை அனுசரித்தே நடத்தல் வேண்டும். அந்தக் காலத்தில் நாமும் நம் குதிரைகளுக்குத் தீனியிட வேண்டும். நாமும் உணவருந்திச் சிரமபரிகாரம் செய்து கொள்ள வேண்டும். ஆதலால் நம் நகரத்திலிருந்து நேராக ஆடுகளையும் மாடுகளையும் தேடிப்பிடித்து வாருங்கள். உறுதி பயக்கும் உணவுகளையும் விசேஷமான உற்சாகத்தைத் தரக் கூடிய பானவகைகளையும் தாராளமாகக் கொண்டு வாருங்கள். மறைந்து போய் விட்ட இந்தச் சூரியனது ஸ்தானத்தில், இந்தக் களம் முழுவதிலும் ஆகாயமளாவிக் கொழுந்து விட்டு எரியும் கணக்கில்லாத பந்தங்களைக் கொளுத்தி வையுங்கள்! தன் செங்கிரணங்களை வெகு ஆடம்பரமாகப் பொழிந்து கொண்டு, கதிரவன், நாளைக் காலையில் பளிச் சென்று புறப்பட்டு வரும் வரை தாராளமாக விறகுகளை யிட்டு, அந்தப் பந்தங்களையும் நெருப்புக்களையும் வளர்த்து வாருங்கள், அவை மேன்மேலும் உயர்ந்து எரிந்து கொண்டு வரட்டும். அப்படிச் செய்யாவிடில் இருட்டாகவும், நிசப்தமாகவும் இருக்கும். இரவை உதவியாகக் கொண்டு இந்த கிரேக்கர்கள் தங்கள் கறுத்த கப்பல்களில் ஏறிக் கொண்டு தப்பி ஓட்டம் பிடித்து விடுவார்கள்! அந்த அயோக்

கியர்கள் அவ்வாறு தங்கள் கப்பல் தட்டுக்களைச் சென்று சேர்வதையும் நாம் தடுத்து விடவேண்டும்! அப்படிச் செய்ய அவர்கள் முயல்வார்களானால், நாம் அனைவரும் அவர்களின் மேல் ஆளுக்கொரு சரத்தைவிட்டு அவர்களுக்குச் சூடுபோட வேண்டும். அடையாளமிட வேண்டும். அவர்கள் ஒவ்வொரு வனும் ஒரோர் அடையாளத்தை சுமந்துகொண்டு செல்ல வேண்டும்! அந்தக் காரியங்களை அவர்களுடைய மனைவிமார்கள் வெகு நாள் வரை அதி ஜாக்கிரதையுடன் சிகிச்சை செய்து ஆற்றிவரல் வேண்டும். அவற்றைக் கண்ணுற்று அவர்கள் புத்திரர்கள் அம்மம்மா துரோஜர்களுடன் பொருவது மிகவும் ஆபத்தான காரியம்! நாம் அதில் பிரவேசிக்கக் கூடாது, என்று நடுங்கவும் வேண்டும். இப்போது நம் ஜனங்கள் அனைவரும் உஷாராக இருக்கும்படி, நம் வைதீக ஆகமப் பூசாரிகள் நம் இலியன் கோட்டை மதில்களைச் சுற்றிக் கொண்டு மணியடித்துக் கொண்டுச் செல்லட்டும். பண்டைய நாளில் செய்த யுத்தங்களில் வெற்றிகளடைந்து வாகைமாலைகள் சூட்டிக் கொண்டு விளங்கும் விருத்தர்களையும் மீசை வராத இளஞ் சிறுவர்களையும், நமது கோட்டை கொத்தளங்களை வளைந்து கொள்ளும்படி எச்சரிக் கட்டும், கூவியழைக்கட்டும், வெகுதூரத்திலுள்ள போர்க் களத்தில் நம் சேனைகள் வேறு காரியமாக யிருக்கையில் நமது ஊர்க்காவல் கெட்டியாக யிருத்தல் வேண்டும். தவிர நமது நகரத்துப் பெரும் பெண்டிர்களெல்லாம் நம் கோபுரங்களில் விளக்குகளை ஏற்றித் தொங்கவிட வேண்டும். நடு ராத்திரியிலுண் டாகும், இருட்டில் மறைந்து கொண்டு, நம் சத்துருக்கள் காவல் இல்லாத நமது நகரத்தைச் சிறிதும் சந்தடியுன்றி முற்றுகை செய்யவோ, கைப்பற்றவோ விடக்கூடாது. இன்றைய தினம் இராத்திரி இந்த நியமங்களை மாத்திரம் நிறைவேற்றினுல் போதுமானது. நாளைய தினம் நாம் வெகு கௌரவத்துடன் நமது கண்களை விழிப்போம் என்றும், தேவர்கள் எல்லாம் ஹெக்டருக்குக் கிருபை செய்வார்கள் என்றுமே நான் நிச்சய மாக நம்புகின்றேன். படுபாவிகளும் வெறுக்கத் தக்கவர்களுமான இந்தந் சத்துருக்கள் தங்களது தலைவிதியையும் விரோதித்துப் பகைத்துக் கொண்டு நெடுந்தூரத்திலிருந்து நீர் நிறைந்த கடலை உழுது கொண்டு வந்தனரல்லவா? அவர்களது கையிலிருந்து இந்த இராஜ்ஜியத்தை விடுவிக்கத் தேவர்களெல்லாம் ஹெக்டருக்கு சகாயம் செய்யவே செய்வார்கள். இந்தச் சத்துருக் களெல்லாம், துரோஜர்களான கழுகுகளுக்குத் தெய்வங்களால் நியமிக்கப்பட்ட இரைகளல்லவா?

இந்தச் க்ஷணம் நாம் நம் எல்லோருடைய க்ஷேமத் தையும் கண்ணுங் கருத்துமாய்க் கவனிக்க வேண்டியது அத்தியா வசியம்.

நாளைக் காலையில் பொழுது புலர்ந்து இளஞ்சூரியன் வாயு மண்டலத்திலுள்ள பிரதேசங்களை விளக்கிக் காட்ட ஆரம்பிக்கும் க்ஷணமே, நம் சேனைகளிலுள்ள ஒவ்வொருவனும் புளிச்சென்று

மின்னும் ஆயுதங்களை அணிந்து கொண்டு வெளியேறி, நம் சத்துருக்களைத் தாக்க வேண்டும். அவர்கள் கப்பல்களை நாம் தீயிட்டுக் கொளுத்த வேண்டும். அந்தத் தீயிலிருந்து எழுந்து வரும் ஜ்வாலையானது இந்த யுத்தகளத்தில் நடக்கும் யுத்தத்தையும் காண வேண்டும்! அப்போது தான் ஜோவ் தேவரின் தராசில் யாருடைய தலைவிதி கனங்கொண்டுள்ள தென்பதை ஹெக்டரும் திடிதீசனும் பரீட்சித்துக் காட்டி விடுவார்கள்!

நாளைய தினம், காலையில் பொழுது புலர்ந்தவுடன், அவனுடைய ஆஸ்திகளனைத்தும் இரத்தத்தினால் நனைந்து, நமது கை வசம் ஆகிவிடும். நாம் அவற்றை வெகு ஆடம்பரத்துடன் கொண்டு செல்வோம்! தெய்வமே! அந்தக் காலைப் பொழுது விரைவில் வர வேண்டுமே!

இந்தக் கூரான வேலினால் அல்லவா அவனது மார்பு துளைக்கப்படல் வேண்டும்! அப்போது அவனைத் தலைவன் என்று கருதி வந்த வீரர்களெல்லாம் இரத்தத்தை வடித்துக் கொண்டு அவனைச் சுற்றிலும் மடிந்து விழுந்து கிடப்பார்களன்றோ!

இது எவ்வாறு நிச்சயமாக நேருமோ, அவ்வாறே, என் வாழ்நாள் முழுவதும் கழிய வேண்டும். தேவர்களே! இழிவான கிழத்தனமோ அல்லது மானமழிந்த சாவோ இல்லாமல் என்னைக் காப்பாற்றுவீர்களாக!

என் வாழ்வும் பெருமையும் அளவற்றனவாக விருக்க வேண்டும். என்னை ஜனங்களனைவரும் பாலாஸ் தேவியைப் பூஜித்து வருவது போலவே பூஜித்து வர வேண்டும். சூரியனைப் போன்ற பெருங்கீர்த்தி யுடையவனாய் நான் பொலிவுடன் விளங்க வேண்டும்!

அடுத்து விடியப் போகும் நாளை தினமே கிரேக்கர்களது வாழ்வின் கடைசித் தினமாக விருத்தல் வேண்டும். அதில் அவர்கள் நசுங்கிப் போகவும் வேண்டும். ட்ராய் நாட்டாருடைய துயரங்கள் அனைத்தும் பறந்து போகவும் வேண்டும்" என்றான்.

இவ்வாறு அந்த வீரன் சொல்லி முடித்தவுடன் அவனைச் சூழ்ந்திருந்த சகலமான வீரர் குழாங்களிலிருந்து ஒரு பெருத்த முழக்கம் உண்டாயிற்று. அந்த முழக்கம் அந்தச் சமுத்திரக் கரைகளில் எதிரொலியை எழுப்பிக் கொண்டு சென்றது. அப்போது ஒவ்வொரு வீரனும் பொறி பறக்க மூச்சு விட்டுக் கொண்டிருந்த தன் குதிரைகளை அவற்றின் நுகங்களிலிருந்து அவிழ்த்து, அவற்றின் கடிவாளங்களையும் கழற்றி, அக்கடிவாளமாட்டிகளைத் தன் இரதத்தின் ஒரு புறத்தில் பத்திரமாகச் சொருகி வைத்தான்.

அதன் பின் ட்ராய் பட்டணத்திலிருந்து, நன்றாகக் கொழுத்த ஆடுகளும், காளைகளும் கொண்டு வரப்பட்டன.

அவைகளுடன் சாருயமும் தாராளமாக வந்தது. எல்லோருக்கும் புஷ்டியைத் தரத்தக்க ஊன் வகைகளும் வந்தன. அப்போது நூற்றுக் கணக்கான காளைகள் அந்தக் கரையோரமாக அடுக்கப் பட்டு, தேவர்களுக்கு நைவேத்தியம் செய்யப்பட்டன. அவை எரிந்து கொண்டிருந்த பொழுது அவற்றிலிருந்து சுழன்று எழுந்த புகைக் காற்றனது ஆகாயம் வரை உயரமாக அடித்துக் கொண்டு சென்றது. இவ்வாறு பக்தி விசுவாசமுள்ள துரோஜர் கள் சிறிதும் அழிவில்லாதவர்களும், பராக்கிரமசாலிகளுமான தேவர்களுக்குத் தங்கள் காணிக்கைகளைச் செலுத்தினர்! அந்தத் தேவர்களெல்லோரும் துரோஜர்களுடைய கோட்டை கொத் தளங்கள் அனைத்தும் தரைமட்டமாக வேண்டுமென்றே அதி வைராக்கிய முள்ளவர்களாக விருந்தனர்.

ஆனால் பிரியத்துக்காவது, அவன் புத்திரர்களுக்காவது, அந்தத் தேவர்களது தயவு கிடைக்கவில்லை. தேவர்கள் எல்லோ ரும் அதிகர்வ கம்பீரமான அந்த ட்ராய் நகரத்தையும் மஹா அப ராதிகளான அந்த நகரத்து ஜனங்களையும் அறவே வெறுத்து வந்தனர்.

இது இவ்வாறு இருக்கையில் அந்த துரோஜர்களது சேனை களிலிருந்த வீரர்களெல்லாம் வெகு உற்சாகத்துடன் ஒழுங்காக வட்டமாக உட்கார்ந்து கொண்டனர். அவர்கள் உட்கார்ந்திருந்த அந்த நிலம் முழுவதும் கொழுந்து விட்டு எரியும் பந்தங்களின் வெளிச்சத்தினுல் பளிச்சென்று பிரகாசித்தது.

இராக் காலத்தில் பளிச்சென்று எரியும் விளக்காகிய சந்திர னைவன் நிர்மயமான நீல நிறம் கொண்ட ஆகாயத்தின் மேல் தன் புனிதமான வெளிச்சத்தைப் பொழிந்து பரப்புகையில், சிறி தேனும் அசைவோ, மூச்சோ, சலனமோ இல்லாத அந்த ஆகாய சமுத்திரமானது கலைவதில்லை. அந்த அதி நிர்மயமான பிர தேசத்தை ஒரு மேகமாவது மறைத்துக் கறைப்படுத்துவதில்லை. அப்போது அந்தச் சந்திரனது சிங்காதனத்தைச் சுற்றிக் கொண்டு பளபளவென்று மின்னும் கிரகங்கள், உருண்டு ஓடுகின்றன. கணக்கற்ற தாரா கணங்கள் அந்த ஜோதி மயமான மண்டலத் தில் பொன்னுல் மெருகு தீட்டப்பட்டவை போல் விளங்குகின்றன. அப்போது அந்தக் கிரகங்கள், அடர்ந்து வளர்ந்த செடிகள் நிறைந்துள்ள இருண்ட காடுகளின் மேல் பொன்னிலும் உயர்ந்த ஒரு பசுமையான மஞ்சள் நிலாவைப் பொழிகின்றன. ஒவ்வொரு மலையின் சிகரமும் வெள்ளித் தகடு போர்த்தது போல் சுத்தமான வெண்ணிறத்துடன் விளங்குகின்றது. மலைச் சரிவுகளும் பளிச் சென்று மின்னுகின்றன. குன்றுகளும் பாறைகளுங் கூடக் கட்புலனுகின்றன. அவை மிகவும் உயர்ந்தவை போலவே விளங்குகின்றன. ஆகாய மண்டலங்கள் எல்லாவற்றிலுமிருந்து வெளிச்சமானது ஒரு பெருத்த வெள்ளம் போல் பிரவஹிக்கின்றது.

அப்போது அவர்களைக் கண்ணுறும் இடையர்களெல்லாம் மிகவும் களி கூர்ந்து, கண் கொட்டாமல் அந்த நீலக் கொட்டகையையே உற்றுப் பார்த்துக் கொண்டு, தங்களுக்கு அவ்வாறு பெரிய உபகாரம் செய்து வரும், அந்த விளக்கைப் போற்றித் துதிக்கின்றனர்.

அதிகம்பீரமாக விளங்கும் இலியனின் முன்னல் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த கணக்கிலடங்காத தணல்களும், அக்கினிக் குண்டங்களும் அவ்வாறே விளங்கின. அவைகளி லிருந்து வீசிய கிரணங்கள் ஏற்கெனவே ஜ்வலித்துக் கொண் டிருந்த ஜாந்தஸ் நதியை முன்னிலும் அதிகமாக விளக்கிக் காட்டின.

அவ்வாறு வெகு தூரத்தில் எரிந்து கொண்டிருந்த அந்த நெருப்புக்களின் சாயையானது, இலியன் கோட்டைகளின் மேல் விழுந்து மின்னின. அவை அந்தக் கோட்டைகளின் ஸ்தூபிகளின் மேல் விழுந்து நடுங்கித் தெறித்தன. அப்போது அங்குக் கிடந்த ஆயிரக்கணக்கான கோரமான பிணக்குவியல்கள், அந்த ஜ்வாலை யில் பளிச்சென்று மின்னிக்கொண்டு, அனைவருக்குங் கட்புல னுயின. அந்தக் களம் முழுவதிலும் நிழலும் வெளிச்சமும் ஒருங்கே ஊசலாடின.

அவ்வாறு எரிந்து வந்த பிணக்குவியல்களை துரோஜர்கள் குவியலொன்றுக்கு ஐம்பது பெயர்களாகக் காவல் காத்து வந்தனர். அவர்கள் தங்கள் பழுப்பு நிறமேறிய ஆயுதங்களைத் தங்கள் மனம்போனபடி ஆட்டியசைத்துச் சுழற்றிய பொழுது, அவை பளிச்சென்ற கனமான பெரு வெளிச்சத்தைத் தெறித்தன. அதைக் கண்ணுற்ற குதிரைகள், தங்களுக்குக் குவித்து வைத்திருந்த கொள்ளைத் தின்றுகொண்டே, உரத்துக் கனைத்தன! ஆத்திரங் கொண்டிருந்த வீரர்களும் எப்போது விடியும் என்று துடித்தனர்.

———o———

## ஒன்பதாவது அத்தியாயம்

# அகிலேசனுக்கு விடுத்த தூது

கதைச் சுருக்கம் :— இவ்வாறு முந்திய நாள் தங்களுக்குத் தோல்வியுண்டாகி விட்டதைக் கண்ணுற்ற ஆகமனன் தாங்கள் ட்ராயை முற்றுகை போடுவதை விட்டுவிட வேண்டும், தங்களது நாடாகிய கிரீஸுக்குத் திரும்பச் சென்று விட வேண்டும் என்று தன் கோஷ்டியிலிருந்தோருக்கு யோசனை சொல்லுகின்முன். அந்த யோசனையைத் தயோமதி மறுத்துப் பேசுகின்முன். நெஸ்டாரும் தயோமதியை ஆதரித்துப் பேசி, அவனது புத்திசாலித் தனத்தையும் புகழ்ந்து உரைக்கின்முன். அவர், தங்கள் காவல் காரர்களை அதிகரிக்க வேண்டுமென்றும் தங்களுக்கு அச்சமயம் உண்டாகிவிட்ட ஆபத்திலிருந்து தப்புவதற்கான உபாயங்களைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக ஒரு சபை கூட்டவேண்டு மென்றும் சொல்லுகின்முர். ஆகமனனும் அவர் சொல்லியபடியே செய்கின்முன். அப்போது நெஸ்டார் அகிலேசனுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டும் என்றும், அதற்காக அவனுக்குத் தூதர்களை அனுப்ப வேண்டும், என்றும் ஆகமனனுக்குச் சொல்லுகிமுர். அந்த யோசனையையும் ஆகமனன் ஏற்றுக் கொள்ளுகின்முன். அதையனுசரித்துத் தூதர்களாகத் தெரிந் தெடுக்கப்பட்ட யுலிஸீஸும், அஜாக்ஷனும் பீனிக்ஸீடன் புறப்பட்டு, அகிலேசனிடம் செல்கின்றனர்.

அவர்கள் ஒவ்வொருவரும், உருக்கமாகவும் ஆத்திரத்துடனும், அகிலேசனுடன் உரையாடுகிமுர்கள். அகிலேசன், அவர்களுடைய வசனங்களைக் கேட்காமல் போனதுமன்றி, அவர்களை வெகுவாக அவமதித்துத் துரத்தியும் விடுகின்முன். பீனிக்ஸை மாத்திரம் தன் கூடாரத்தில் நிறுத்திக்கொள்ளுகின்முன்! தூதர்கள் தாங்கள் உத்தேசித்துச் சென்ற காரியத்தைச் செய்யமுடியாமல், தங்களது பாளையத்துக்குத் திரும்பி வந்து விடுகின்றனர். அதன்பின் சேனைகளெல்லாம் நித்திரை வசமாகிவிடுகின்றன. இந்த அத்தியாயத்திலும் இதற்குப் பின்வரும் அத்தியாயத்திலும் ஒரே இராத்திரிப் பொழுதில் நிகழ்ந்த சம்பவங்கள் சொல்லப்படுகின்றன. இந்தக் காவியம் ஆரம்பித்தது முதல் அது 27-ம் நாள் ஆகின்றது. இவையெல்லாம் கிரேக்கர்களுடைய கப்பல்கள் தங்கியிருந்த கடலின் ஓரத்தில் நிகழ்கின்றன.

---

இவ்வாறு ட்ராய் நகரமானது அன்றைய இரவு முழுவதும் களிப்புடன் அந்தக் களத்தைக் காத்து வந்தது. அப்பொழுது மானமிழந்து, புறங்கொடுத்து ஓடுவோருக்கு எத்துணையும் இரத்தப் பசையென்பது இல்லாமல் வெளுத்த நிறமுடைய பயமானது,

கிரேக்கர்களது முகத்தைத் தன் இருப்பிடமாக்கிக்கொண்டு விட்டது. இன்னும் நமக்கு என்ன ஆபத்து, எப்போது வருமோ, தெய்வநியமனம் எப்படி எப்படியோ? என்ற கவலையே அவர் களது மனதில் குடிகொண்டுவிட்டது. திரேஸியாவின் பனிவடிந் துள்ள கரையின் ஓரத்திலிருக்கும் இருள் சூழ்ந்த குகைகளிலிருந்து புறப்பட்டு, மேற்கிலிருந்தும், வடக்கிலிருந்தும், வீசும் இரண்டு புயற்காற்றுகள் கடலின்மேற் பாய்ந்து, பல்கிப் பெருகி அலைகளின் மேல் அலைகளைக் குவித்துக்கொண்டு சென்று, ஈஜியன் கடலையும் கலக்கி, அதை முறைத்துக் கர்ஜிக்கச் செய்கின்றன. அப்பொழுது கடலின் அடிப்பாகத்தில் கொதித்துக் கொந்தளித்துக் கொண்டி ருக்கும் அலைகள் இப்புறமும் அப்புறமும் அடிக்கின்றன. தாவித் தாவியும் பாய்கின்றன. அவ்வாறு ஆத்திரங்கொண்ட இந்த இருதிறத்துச் சேனைகளிலிருக்கும் கோஷ்டியாரை, விதவிதமான யோசனைகள் கலக்கி வந்தன, ஆட்டின, உறுத்தி வந்தன.

அவர்கள் எல்லோரையும்விட ஆகமனனே மிகவும் அதிக மாகத் துக்கித்தான். அரசனான அவனது பெரிய மனத்தில் லோக க்ஷேமத்தைக் குறித்த அதிவிசேஷமான பெருங்குறைகளே நிறைந்திருந்தன. தன்னொருவனுக்கு மாத்திரம் நேர்ந்துவிட்ட குறைகளைத் தீர்த்துக்கொள்ள அவன் சிறிதும் கவலை கொள்ளவே யில்லை. தன் சமூகத்தாரின் கஷ்டநஷ்டங்களைப் போக்கிவிட வேண்டுமென்றே அவன் கண்ணுங்கருத்துமாகவிருந்தான்.

கிரேக்கப் பெரியோர்களைத் தன் சபைக்கு வரும்படித், தான் இட்ட ஆணையை அவர்களுக்கு இரகசியமாக அறிவித்து வரும்படித், தானே தன் ஆட்களுக்குச் சென்று சொன்னான். அவனது கட்டளைப்படி அவ்வீரர்களெல்லோரும், மிகவும் மௌன மாகவும், ஆழ்ந்த துக்கத்துடனும், இணையில்லாத கவலையுடனும் வந்து தங்களது தலைவனைச் சந்தித்துச் சூழ்ந்துகொண்டனர்.

அவ்வாறு துக்கத்திலாழ்ந்திருந்த அந்த ராஜகோஷ்டியின் மத்தியில், அரசன் எழுந்து நின்றான்; அப்பொழுது அவனுடைய கன்னங்களிலிருந்து கண்ணீரானது தாரை தாரையாய் வெள்ளம் போல் வழிந்து வந்தது. அது ஓர் உன்னதமான பாறையின் உச்சியிலிருந்து சொட்டும் கன்னங்கரேலென்ற நீர்த் துளிகள் ஒன்றாய்ச் சேர்ந்து சிற்றோடைகளாக மாறிச் சிறிதும் சந்தடியின்றி மெதுவாகப் பாயும் அருவிகளைப் போன்றேயிருந்தது!

அரசன் மற்றைய ஜனங்களைவிட அதிக துக்கமுள்ளவனாக வும், மனமிடிந்தவனாகவுமே, தோன்றினான். அவனது மார்பு பெருமூச்சு விட்டுக்கொண்டு படபடவென்று துடித்து வந்தது. அதன் மத்தியில் பின்வரும் வசனங்கள் அவனது மார்பைப்பிளந்து கொண்டு வெளிவந்தன:—

"கிரேக்க புத்திரர்களே!, உங்கள் தலைவனான நான், என் கவலைகளையும், யோசனைகளையும் கஷ்டங்களையுஞ் சொல்லுகின்

றேன்! கேளுங்கள்! இந்த யுத்தத்தில் என்னுடன் ஆயுதபாணி களாய் விளங்கும் வீரர்களே! துணைவர்களே! என்னுடன் சேர்ந்து யுத்தஞ்செய்யும் அரசர்களே!

'ஜோவ் தேவர் மஹா பக்ஷபாதியாயிருக்கின்றார் என்று நாம் முறையிடுவதில் ஏதேனும் அநியாயம் உண்டோ? சிறிதும் இல்லை! அது மிகவும் நியாயமானது! நாம் நல்ல சகுனங்களிலும், குறிகளிலும், நிமித்தங்களிலும் நம்பிக்கை வைத்தது வீணே ஆகி விட்டது. நாம் படும் சிரமங்களுக்கு, நமக்கு மிகவும் மேலான பலனே கிடைக்குமென்று சொன்னார்களல்லவா ? நாம் க்ஷேமமா கத் திரும்பி வருவோம், ஜயகோஷங்களுடன் வருவோம், யுத்தத்தில் கொள்ளையிட்ட பொருள்களை விசேஷமாகக் கட்டிக் கொண்டு வருவோம் என்றெல்லாம் சொன்னார்களே! இப்பொழுது நம் கோஷ்டியார் நம் ஆஸ்திகளையும் நம் ஜனங்களின் பெருமை களையும் ஆகிய எல்லாவற்றையும் ஒருங்கே பறிகொடுத்துவிட்டு, வெட்கமும், மானமும் இழந்து, ஓட்டம் பிடித்தால்தானே மிஞ்சு வார்கள்! சகலருக்கும் மேலானவரும், சர்வ வல்லமையுள்ளவரு மான ஜோவ் தேவர் இவ்வாறு நியமித்துவிட்டாரல்லவா ?

அவர் தமது தலையை மாத்திரம் அசைத்தாரானால் இராஜ் ஜியங்களெல்லாம் அடியோடு உயர்ந்து எழுந்தோ அல்லது அமிழ்ந்து அழிந்தோ போகின்றன! மனிதர்கள் தங்கள் உற்ற துணைகளென்று நம்பியிருக்கும் சகலமான சக்திகளையும் அவர் அடியோடு தகர்த்துப் பெயர்த்து ஆட்டிவிடுகின்றார் ! அவை யனைத்தும் அறவே வலியிழந்து போகின்றன. கோட்டை கொத்தளங்களையும், கணக்கற்ற சேனைகளையும், வீரர்களையும் அவர் மண்ணுக்கு இரையாகிவிடுகின்றார். ஆதலால் வீரர்களே! நமது நாசத்துக்குக் காரணமாகவுள்ள இந்தப் போர்க்களங்களை விட்டு விரைவில் ஓட்டம் பிடியுங்கள். இனி இதை மனத்தால் நினைக்கவேண்டாம், நம் ஜென்ம தேசங்களுக்குச் சென்று, அங்கு நமக்குக் கிடைக்கக்கூடிய சுகங்களை அனுபவிப்போம், விரைந்து செல்லுங்கள். உங்கள் கப்பற்பாய்களையெல்லாம் விரியுங்கள். உங்கள் துடுப்புக்களை எடுத்துக் கொள்ளுங்கள். வெள்ளத்தை விலக்குங்கள். இந்த ட்ராய் விழுந்துவிடும், இதை நாம் பிடித்து விடுவோம் என்ற நம்பிக்கையை அறவே ஒழித்துவிடுங்கள். தேவர்களே அதைக்காத்து விடுகின்றார்களல்லவா?'' என்றான்.

அவன் அவ்வாறு சொல்லியபின், சிறிது பொழுதுவரை அந்த கிரேக்கர்களது சபையில் மௌனமே நிறைந்திருந்தது. வீரர் கள் அனைவரும் கல்லைப்போல் சமைந்து நின்றனர். சிறிதும் அசையவில்லை. வாயையுந் திறக்கவில்லை. மௌனமே சாதித் தனர். அவர்கள் இன்னது சொல்வது, செய்வது என்று அறியாத வர்களாய்த் திகைத்துப் பிரமித்து நின்றனர். அது ஒரு மிகவும் பரிதாபகரமான காட்சியாகவேயிருந்தது.

அப்போது திடியஸ்ஸின் வீரகுமாரன் தன் விழிகளை யுருட்டி, ஆகமனனையுற்றுப் பார்த்துப் பின்வரும் வசனங்களை உரைத்தான்:—

"நாம் நம் பெருமைகளையெல்லாம் இழந்து விடவேண்டும், புறங்கொடுத்து ஓடவும் வேண்டும் என்று அரசர்களே நமக்கு யோசனைகள் சொல்லும்போது, பலவிதமாகவும் சிறுமைகளை யடைந்த வீரன் ஒருவன் உண்டானுல், அவன் ஒருவனே அதற்கு முதன்முதலாக முன்வந்து, சரியான பதில்சொல்ல கடமைப்பட்டி ருக்கிருன். ஆதலால் அரசே! நான் தங்களை எதிர்த்துப்பேச எழுந்திருப்பதை தாங்கள் மன்னிக்கவேண்டும். என்மேல் தாங்கள் கோபங்கொள்ளலாகாது. இந்த சபாதர்மமானது, என்னைத் தைரியமாகப் பேசும்படியே தூண்டுகிறது. இந்த யுத்த களங்களில் உள்ளவர்களில் நீர் ஒருவர்தான் என் பராக்கிரமத்தை இகழ்ந்து கூறுகின்றீர்! இதுவரை அவ்வாறு கூறியவர்களில் நீர்தான் முதல்வராகவும் இருக்கின்றீர். கிரேக்கர்களனைவரும் என்னைச் சூழ்ந்து கொண்டே நிற்கின்றனர். நம் சேனை களனைத்தும் உம் வார்த்தைகளையெல்லாம் கேட்டன. அவர்களில் ஒருவராவது இந்தக் கொடிய வசனங்களை உரைத்தாரில்லை. இவ்வாறு கொடுஞ் சொற்களை உரைப்பவனும் ஒரு பந்து ஆவானு? தலைவ! சர்வமான வாக்கியங்களுக்கும் மரியாதைகளுக்கும் விளை நிலமான தேவர்கள், உமக்கு அரை குறையாக இராஜ பதவிகளை அளித்து விட்டனர்! அவர்கள் உமக்குச் செங்கோல்களையும், கணக்கற்ற ஜனங்களின் மேல் அதிகாரத்தையும் அளித்தனர். ஆனுல் இந்த உலகமனைத்தையும் அடக்கியாளுவதற்கு அவசிய மான உத்தம குணங்களை உமக்குத் தர அவர்கள் மறந்து விட்டனர். தைரியத்தையும் உதார உள்ளத்தையும், அவர்கள் உமக்குக் கொடுக்கவில்லை! தன் மனதில் உறைந்து வரும் பயத் தையும் பேடித்தனத்தையும் மற்றைய எல்லா கிரேக்கர்களுக்கும் புகட்டுவது, ஒரு சுத்த வீரனுக்கு அழகாகுமா, அவன் இவ்வாறு பேசலாமா? நாங்கள் அனைவரும் யோக்யதையில்லாதவர்கள், தான் ஒருவனே பெரியவன் என்று சொல்லிக்கொண்டு அவன் நம்முன் நிற்கின்ருன். நாம் எல்லோரும் ஓட்டம் பிடிக்க வேண் டும் என்று ஆணையிடுகின்ருன். அவ்வாறே நாம் செய்து விட்டால், அதுவும் அவனது ஆணைப்படியே யாகுமன்ருே!

ஆதலால் மானங்கெட்டவனே! நீ இந்த அரசனுன களத்தி லிருந்து விலகிவிடு! உனக்கு வேண்டிய கப்பல்கள் யதேஷ்டமாக விருக்கின்றன. அவை கரையோரமாகவும் இருக்கின்றன. உன்னை யொழிந்த கிரேக்கர்கள் அனைவரும். தங்களால் கூடிய மட்டும் பொருது இந்த ட்ராயைக் கைவசம் கொள்ளவேண்டும், இந்த ட்ராயை அழிக்க வேண்டும் என்று தாங்கள் செய்ய உத்தேசித்த இந்த நல்ல காரியத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பார்கள்! அவர்கள் இங்கேயே இருப்பார்கள், இங்குவிட்டு அகலமாட்டார் கள். கிரேக்கர்கள் அனைவரும் இங்கு விட்டு அகன்ருலும், நான் மாத்திரம் ட்ராயோ நாசே மடியும் வரை இங்கேயேயிருப்பேன்.

நானும் தெனிலஸ்ஸூம் எங்கள் பெயரையும், கீர்த்தியையும் காப்பாற்றுவதற்காக இங்கேயே இருந்து பொருவோம். இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளும்படி எங்களைக் கடவுள்தான் நியமித்தார்! அவரது சகாயத்தைத் துணைகொண்டே, நாங்கள் புறப்பட்டு இங்கு வந்தோம்'' என்ருன்.

அவன் இந்த வசனங்களை மொழிந்து தன் வாயை மூடிக் கொண்ட பொழுது, அவனைச் சுற்றிலும் நாற்புறமும் இருந்த கிரேக்கர்களனைவரும், ஒருங்கே உரத்துக் கூவி ஆரவாரித்தனர், ஒருவர் தவருமல் அவர்கள் எல்லோரும் திடிதீசனைப் புகழ்ந்து உரையாடினர். அதன்பின் அதிஞானவானுன நெஸ்டார் கம்பீரமாக எழுந்து நின்று தம் அபிப்ராயங்களையும் உரைத்தார். அப்பொழுது அனைவரும் அவருடைய வசனங்களை வெகுகவனத்துடன் உற்றுக் கேட்டு வந்தனர்.

''உண்மையான பெருந்தகையே! தேவர்கள் உனக்கு விசேஷமாக உடல்வலிமையும் மனவலிமையும் ஒருங்கே அளித்திருக்கின்ருர்கள். நல்லொழுக்கத்திலும் மனவொழுக்கத்திலும் நீ சிறந்தே விளங்குகின்ருய்! உன் உத்தமமான யோசனைகளை அனுசரித்தே வினைகளையியற்றுவதிலும் நீ எப்போதும் முதல்வனுக விளங்குகின்ருய்! நீ நன்ருய் ஆராய்ந்து அறிந்து சிறந்தவையென்று தீர்மானித்துச் சொல்லும் இந்த உத்தமமான யோசனைகளை கிரேக்கர்களனைவரும் ஏகமனதாகவும் மிகவும் உற்சாகத்துடனும் சரி என்றே மதிக்கின்றனர். நீ அதிதைரியவான். அதிபுத்திசாலியுமானவன். ஆனுல் இளைஞன், ஆதலினுல் 'இளங்கன்று பயமறியாது' என்ற முதுமொழிப்படி, அரசர்களின் மேலும் குற்றங்களைச் சுமத்தினுய், என்ருலும், அரசர்களையும், நிந்தித்துக் கூறினுய், நீ சொல்லியதெல்லாம் உண்மையானதினுல் அதில் தோஷம் ஒன்றுமில்லை.

நீ பிறந்தது முதல் இதுவரை கழிந்த வருஷங்களையெல்லாம் கணக்கிட்டாலுங்கூட நீ நெஸ்டாரின் பிள்ளைக்குச் சமமான வயதுள்ளவனுக ஆகமாட்டாய்! ஆதலால், ஒளிவு மறைவின்றி நீ, வாய்விட்டுச் சொன்ன சொற்களின் உட்கருத்து, இன்னதென்று நான் சொல்லுகின்றேன். அதை நீ உரையாததினுல், உன் வார்த்தைகள் அறைகுறையாகவே யிருக்கின்றன. அதைச் சொல்ல வேண்டியது அவசியமல்லவா? விருத்தனுனதினுல், அதைச் சொல்ல வேண்டியது எனது கடனுகின்றது. நான் சொல்லப்போகும் யோசனையினுல், மஹா ஜனங்களுக்கு அதிருப்தி யுண்டாகாது, அரசரும் அதைத் தோஷமான தென்று கருத மாட்டார்!

யுத்தத்தில் ருசிகொண்டு, ஒருவன் அதிலேயே ஆனந்தமுங் கொள்வானுல், அவன் ஒரு மஹாபாவியும் மஹாசண்டாளனுமே யாவான். அவன் சகலமான சாபங்களுக்கும் அருகன் ஆவான். அவனுக்குத் தருமம் என்பதாவது, நியாயம் அநியாயம் என்ற

வியவஸ்தையாவது கிடையாது. அவன், சொத்து சுதந்திரங் களுக்கும் அனருகன்! அவன் மஹாஞான சூனியன், அந்தகன், பொது ஜனங்களை ஆளவோ, அல்லது தன் சொந்தக் காரியங்களை யேனும் கவனித்து வரவோ அவனுக்கு ஒருவிதமான யோக்கிய தையுங் கிடையாது! அவன் கொலை செய்வதிலேயே கண்ணுங் கருத்தும் காரியமுமாக யிருப்பான். தன் தேசத்தை இரண்டாகப் பிளந்து, தன்னினத்தாரை அழிப்பதிலேயே அவன் சந்துஷ்டியடை கின்றான்!

நீங்கள் இன்றைய இரவில், உங்களது சிரமத்தைப் பரிகாரஞ் செய்து கொண்டு, சரியான காவல்களையும் ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அகழுக்கும், நீங்கள் எழுப்பி யிருக்கும் மதில் களுக்குமிடையில் காவலாளர்களை வையுங்கள். அந்த வேலையை இளையவர்களும் தைரியமுள்ளவர்களும் செய்யட்டும். இவ்வாறு அந்த வேலைகளைச் செய்யத் தக்க ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, அரசே! தாங்கள் வயதிற் பெரிய வீரர்களையெல்லாம் அழைத்து ஒரு சபை கூட்டுங்கள். தங்கள் அதிகாரம் மிகவும் பெரியது. அவ்வாறே தங்கள் கவலைகளும் அதிபாரமானவை; தங்கள் உன்னதமான ஆஞ்ஞைகளே நம் யுத்தங்களின் உயிர்நிலையாக இருக்கவேண்டும். நமக்கு உற்சாகத்தை அளிக்கவேண்டும், நம் யுத்தங்களைச் செவ்வனே நடத்துவதற்கு அவை நமக்கு ஊக்கத்தை அளிக்கவேண்டும். தங்களது அழைப்பை முன்னிட்டு தங்களைக் காண வருவோர்களுக்குத் தகுந்த விருந்துகளையும் மரியாதைகளையும் செய்து திரேஸியாவிலிருந்து கொண்டு வரப் பட்ட உத்தமமான மதுவை அவர்களுக்குக் கொடுத்து அவர்களது சிரமத்தைத் தீருங்கள். மிதமாக விருந்துகள் உண்ட பின்னர் தான், மதுரமான யோசனைகள் மனிதர்களது மனத்தில் உதிக்கும்; ஊற்றெடுத்துப் பெருகும். துக்கத்திலும், துயரத்திலும், துன்பத் திலும், ஆழ்ந்துள்ள ஓர் இராஜ்யத்திற்கு, உத்தமமான யோசனை சொல்லக்கூடிய ஞானவான்களும், அந்த யோசனைகளில் உத்தம மானவைகளைப் பொறுக்கி யெடுக்கக்கூடிய அரசனுமே, உற்ற துணைவர்களும், ஊன்றுகோல்களும் ஆவார்கள்.

அதோ! நம் சத்துருக்களுடைய கூடாரங்களிலிருந்து கொழுந்து விட்டுக்கொண்டு கிளம்பும் ஜ்வாலையைப் பார்த்தீர் களா? துரோஜர்களது நெருப்பானது நம் கப்பல்களுக்கும் வெகு சமீ பத்தில் வந்து விட்டதே. இந்தப் பயங்கரமான வெளிச்சத்தைக் கண்ணுற்றபின் யார்தான், அசைவற்று வாளாயிருப்பர்? அதைக் கண்ணுறும் கண்களுக்கு இன்றை இரவில் தூக்கமும் வருமா? மிகவும் பயங்கரமான இன்றை இராப் பொழுதில் இரு கட்சியாரின் கதியும் இன்னதுதான் என்பது தீர்மானமாகிவிடும். நாளைய தினம் ஒன்று ட்ராய் நீறுபட்டு அழியவேண்டும், இன்றேல் கிரீஸ் மடிந்து விழவேண்டும்,!" என்றார்.

மஹாவிருத்தரும் ஞானவானுமான அவர் இவ்வாறு உரைத் தார். அங்கிருந்த மற்றையோர்கள் அனைவரும் அவருடைய

மொழிகளைத் தலைமேல் தாங்கி அவர் சொல்லியபடியே செய்தனர். காவல்காரர்களெல்லாம், தங்களுக்குக் காட்டிய வழிகளை நோக்கிக் கொண்டு, அந்தச் சபையின் வாயில்களின் வழியாக விரைந்து ஓடினர். நெஸ்டாரின் மகனும், ஆயுதப்பயிற்சியில் பிரசித்தி பெற்றவனும், பெருந்தன்மையுடையவனுமான திரேஸிமோதன் என்பவனே, அந்த உயர்ந்த மேட்டை முதன் முதலாகத் தாவிக் குதித்துச் சென்றடைந்தான். அவனுக்குப்பின் அஸ்கலேப்பஸ், அபால்மன் என்ற யுத்த தேவதையின் இரட்டைப் பிள்ளைகள், அந்த மேடையின்மேல் காவலாக நின்றனர். அவர்களுடன் தேவப்பிரியஸ்ஸும், அபாரியஸ்ஸும் மெரியோனும் கீர்த்தி வாய்ந்த கிரியோனது வம்சத்தில் வந்தவனாகிய லீகோமேதன் என்பவனும் சேர்ந்துகொண்டனர். இவ்வாறு இராக் காவல் செய்து வந்தவர்களுக்கு இவ்வேழு பேர்களும் தலைவர்களாக விளங்கினர். இவ்வேழு வீரர்களுள் ஒவ்வொருவனும் வேலேந்திய நூறு வீரர்களுக்கு மேலதிகாரியாக இருந்தான்.

அதன்பின் கிரேக்கர்கள், தங்கள் விளக்குக்களை ஏற்றினார்கள். கொஞ்சம் உண்டி யருந்தினர். தங்களுக்கு உண்டாயிருந்த இளைப்பையும் ஆற்றிக் கொண்டனர். பின்னர், சிலர் அகழின் ஓரமாக இடைவிடாமல் நின்றனர். மீந்தவர் மதில்களின் காவல்காரர்களாக அமர்ந்தனர். ஜனாதிபன், மஹா ஜனங்களது அபிப்பிராயத்தை அறிய வேண்டுமென்ற ஆவல்கொண்டு அரசர்கள் எல்லோரையும் வரவழைத்து அவர்களைத் தன் விசாலமான கூடாரத்தில் இருத்தி ஒரு சபையாகக் கூட்டினான்.

அவர்கள் அனைவரும், அரசன் தாராளமாகச் செய்த விருந்தில் தங்களுக்குப் பரிமாறப்பட்ட பக்ஷணங்களை அருந்தினர். தங்கள் பசியுந் தாகமும் தணிந்தபின், மேலும் உண்ணுவதையும், குடிப்பதையும் நிறுத்தினர். அதன்பின் நெடுநாளாக ஞானவான் என்று பிரசித்தி பெற்றிருந்த நெஸ்டார், வெகு நிதானமாக எழுந்து பின்வரும் மொழிகளை யுரைத்துச் சபையோருக்கு உற்சாக மூட்டினார் :—

"சர்வமான ஜனங்களுக்கும் ஏகாதிபதியான அரசே! இங்குக் கூடியிருக்கும் சகலமான மன்னர்களுக்கும் அகில தேசாதிபதிகளுக்கும் அதிபரே! எல்லாத் தருமங்களும், நீதிகளும், செங்கோல்களும் தங்கள் திருக்கரங்களிலேயே ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. லக்ஷோபலக்ஷமான ஜனங்கள், தாங்களும், தெய்வங்களுமே தங்கள் ரக்ஷகர்கள் என்று நம்பியிருக்கின்றனர். அரசே! விருத்தனான நான் சொல்லும் ஹிதோப தேசத்தைச் சற்றுச் செவி சாய்த்துக் கேட்பீராக! நான் முதல் முதலாகவும் கடைசியாகவும் சதா தங்களது க்ஷேமத்தையே கோரினவனாகக் கவலைப்பட்டு வருகின்றேன். அரசே! பிறருக்குத் தங்கள் யோசனைகளைச் சொல்வதும், விஷயங்களை ஆழ்ந்து, ஆலோசித்து, ஆராய்ந்து முடிவுகளைச் சொல்லுவதும், ஆதரவுடன் பிறர் சொற்களைக் கேட்பதும், உசிதமான யுத்திகள் ஒன்றையும் உதறித் தள்ளாமல் இருப்

பதும், சர்வ ஜனங்களுக்கும் நன்மையைப் பயக்கக்கூடிய உக்தி களை ஏற்றுக்கொண்டு அவற்றை நிறைவேற்றுவதுமே தங்களுக்கு அழகாகும்; எளியவன் ஒரு நல்ல யோசனை சொல்வானாயின் அதைத் தாங்கள் எள்ளாமல் ஏற்றுக்கொள்ளவே வேண்டும்; அப்போது புத்திசாலியான தாங்களே அந்தக் காரியத்தைச் செய்தவர் என்ற கியாதியும் தங்களுக்கு உண்டாகும்.

ஆதலால் என் மனதிலுள்ள ஒரு கருத்தைச் சொல்லுகின் றேன் செவி சாய்த்துக் கேளுங்கள். அந்தக் கருத்து என் மனதில், அவசரமாக உதித்து விடவில்லை. அது வெகு நாட்களாக என் மனதில் உறைந்து வருகின்றது. அது இன்றோ, நேற்றோ என் மனதில் தோன்றியதல்ல; அது என்னவெனில், பிலிதீசனது கூடா ரத்திலிருந்து தாங்கள் அந்தக் கன்னிகையை வலிய இழுத்துச் சென்றபொழுது, “அது தகாது” என்று நான் அப்போதே சொன் னேன். தங்களது க்ஷேமத்தில் அக்கறையுள்ளவனாக நான், அன்றையதினம் அந்தக் காரியம் வேண்டாம் என்று சொன்னேன். தாங்கள் அதைக் கேட்கவில்லை. தங்களது மனோ பலத்திலேயே திடமாக நம்பினவராகவும், தலைகால் தெரியாத ஆத்திரத்தினால் உந்தித் தள்ளப்பட்டவராகவும், தாங்கள் மனிதர்களாலும், தேவி களாலும் வெகுவாய்ப் பாராட்டப்பட்ட அந்த மனுஷனை எதிர்த் தீர்கள், இகழ்ந்தீர்கள், சிறுமைப் படுத்தினீர்கள், அவனுக்குக் கெடுதியைச் செய்தீர்கள். இப்போது தாங்கள் நமது நாசத்துக்கே காரணமாகவுள்ள அவனது கோபத்தைத் தணிக்கக்கூடிய பரிகா ரம் ஏதேனும் உண்டானால் அதைத் தேடவேண்டியது அவசியம். அதைத் தேடுவீர்கள்! பிரிய வசனங்களோ, அல்லது பரிசுகளோ அவனது மனத்தை இளக்குமானால் அவற்றைச் சொல்வீர்கள், அளிப்பீர்கள்,” என்றார்.

அதைச் செவியுற்ற அரசன் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான்:

“தாங்கள் ஓர் அரசனுடைய பிழைகளைப் பிழையின்றி எடுத்துரைத்தீர்கள். அது மிகவும் நியாயந்தான் என்று நான் ஒப்புக்கொள்ளுகின்றேன்.

ஜோவ் தேவர் செய்துவரும் குன்றாத அனுக்ரஹ மரியாதை களை என்றென்றும் அனுபவித்து வரும் வீரனே மஹா பாக்கியவன்; கணக்கற்ற சேனைகளும் அந்தப் பாக்கியவானுக்கு ஈடாகமாட்டா! அவன் ஒருவனே சகல சாம்ராஜ்யங்களும் நிறைந்தவனாவான். ஜோவ் தேவரின் அனுக்ரஹங்களை அனுபவித்துக் கொண்டு, அவன், அதியற்புதமான ஒரு வீரனாகவே விளங்குகின்றான். அவனது யுத்தத்தை தேவர்களே நடத்திவருகின்றார்கள். அவர்கள் நம் கோஷ்டியிலுள்ளார் அனைவரையும் தலைகுனியவும் செய்கின்றார்கள்!

பிராந்தனைப்போல் ஆத்திரங்கொண்டு நான் ஒரு மஹா வீரனுக்குச் செய்துவிட்ட பிழைகளை அவன் பொறுக்குமாறு நான் இப்போது என்னாலான பரிகாரங்களைச் செய்யவும், அந்த வீரனை யும் தேவர்களையும், மனங்குளிருமாறு வேண்டிக் கொள்ளவும் ஆத்திரமுள்ளவனாகவே யிருக்கின்றேன்.

அந்த மஹானானது மனது மகத்தான வெகுமானங்களினால் திருப்தியடையுமானால், அவைகளைக் கொடுப்பதற்கு, இதோ, நான் சித்தமாக விருக்கின்றேன். இங்குக் கூடியிருக்கும் சகலமான கிரேக்கர்களும், நான் சத்தியமாகச் சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்கள்.

பத்துத்துலாம் நிறையுள்ள, மிகவும் சொச்சமான சுவர்ண மும், அதைப்போன்ற இருமடங்கு பொன்னால் உண்டாக்கப்பட்ட, பளபளவென்று மின்னும் ஜாடிகளும், பாத்திரங்களும், சிறிதும் வழுவின்றி உண்டாக்கப்பட்டவையும் இதுவரை ஒரு காரியத்துக் கும் உபயோகிக்கப்படாதவையும், அடுப்பேறி அனல் கொள்ளாத வையும் பூஜார்ஹமுமான ஏழு முக்காலிகளும், புழுதியெழும்பும் பந்தயச் சாலையில் என்றும் வெற்றியுடன் விளங்கக் கூடியவையும், வேகத்திலும் வலிமையிலும் இணையில்லாதவையுமான பன்னி ரண்டு குதிரைகளையும் கொடுக்கின்றேன். இவ்வாறு இறகு கட்டிக் கொண்டு பறக்கும் குதிரைகளின் மூலமாகக் கெலித்த பந்தயக் கிழிகளுக்கும் அதிகமான ஆஸ்திகளையுடையவன் ஒருவன் இரான்! அவ்வாறு ஒருவன் இருப்பனேல், அவனே மஹா பாக்கிய வன் ஆவான்.

இதுவுமன்றி லெஸ்பாஸானது அந்த வீரனது கைவலிக்குத் தாழ்ந்து தலைகுனிந்தபொழுது, நான் அந்த லெஸ்பாஸிலிருந்த பெரிய வம்சங்களிலிருந்து பொறுக்கியெடுத்து ஸ்வீகரித்துக் கொண்ட ஏழு சுந்தரிகளும் சகல கலைகளிலும் தேர்ந்தவர்கள், தேவர்கள் போன்ற தேக காந்தியுள்ளவர்கள், விசேஷமான ரூப லாவண்ணியங்களும், இணையில்லாத எழிலும் வாய்ந்தவர்கள், அவர்களையும் அவனுக்குக் கொடுக்க நான் சித்தமாக விருக் கின்றேன்.

தவிர, அவனது சிநேகத்தைப் பெறுவதற்காக இதுவரை நெடுநாளாக நடந்துவரும், சச்சரவுகளுக்குக் காரணமான, ஸர்வ ரூபலாவண்ணியங்களுடன் விளங்கும், பிரைஸீஸ் என்னும் பெண் மணியைங்கூடக் கொடுத்து விடுகின்றேன்!

அவளிடம் நான் இதுவரை ஒரு கண மேனும் கொஞ்சிக் குலாவி வரவில்லை என்று நான் சத்தியமாகச் சொல்லுகின்றேன்! அவள் இதுவரை என்னால் தீண்டவும் படாமலே இங்கு இருந்து வருகின்றாள்! சிறிதும் பழுதின்றியே, அவள் இங்கு விட்டும் நீங்குவாள்! மஹா பரிசுத்தையாகவும், என் காமபோகங்களுக்கு ஆளாகாதவளுமாகவுமே, என்னிடம் இருந்துவரும் அவளை, நான்

இந்த நிமிஷம் அவனுக்குக் கொடுத்து விடுகின்றேன். அதன்பின் தேவர்கள் நமக்கு அனுக்ரஹம் செய்து, நம் சேனைகளுக்கு, ஜயத் தையுந் தந்து, நம் சத்துருக்களுடைய கம்பீரமாக விளங்கும் இலி யன்கோட்டை கொத்தளங்களைத் தரைமட்டமாக்கி விடுவார் களானால், அப்போது கிரேக்கர்களெல்லோரும் இலியனில் கிடைத்த சகலமான திரவியங்களையும் பங்கு போட்டு கொள்வார் களல்லவா! அப்போது அவன் தன் கப்பல்கள் கொள்ளும் மட்டும், பொன்னையும் வெள்ளியையும் போட்டு நிறைத்துக் கொள்ளட்டும்! மேலும் அதிதிவ்வியஸ்வரூபியான ஹெலன் ஒருத்தியை மாத்திரம் ஒழிந்த மற்றையோர் எல்லோரையும் விட அழகில் மிக்க துரோஜ ஸ்திரீ இரத்னங்களில் கட்டழகிகளான இருபது பெயர்களை அவனே பொறுக்கி எடுத்துக்கொள்ளட்டும்! அவர்களைக் கட்டி யணைத்துக்கொண்டு, அவன், தன் இஷ்டப்படிக் குறைவின்றிச் சகலமான சுகபோகங்களையும் இன்பங்களையும் அனுபவித்து வரட்டும்!

இன்னும் நான் சொல்லுவதைக் கேளுங்கள். நம் யுத்தங் களெல்லாம் முடிந்து, நாமும் நம் செழிப்பான ஆர்காஸ் கரைகளுக் குச் சென்று, அங்கு இறங்கிய பின்னர் அவன் என் புத்திரனாகவே என்னுடன் வாழ்ந்து வரட்டும். எனக்குச் செய்யப்படும் மரியாதை களுக்குப் பாகஸ்தனாகவும், ஒரேஸ்டிஸுடன் சேர்ந்து, சகலமான ராஜகாரியங்களின் பொறுப்புக்களையும் வகித்து வரட்டும்!

இவ்வளவும் போதாதென்றால், என் அரண்மனையில் மூன்று புத்திரிகள் வளர்ந்து வருகின்றனர். ஒவ்வொருத்தியும் ஒரு மஹா ராஜனது சயனத்தை அலங்கரிக்கத் தக்க சகலமான யோக்கிய தைகளும் உள்ளவள். வயோதிசி, எழில் வாய்ந்த இபிஜினி, பொன்னணி புனைந்த கிரிஸோதிமிஸ், ஆகிய அம்மூவருள் யார் எழில்மிக்கவள் என்று அவன் கண்களுக்குப் படுகின்றனளோ அவளை அவன் சுவீகரித்துக் கொள்ளட்டும். அதற்காக, அவன், எனக்கு ஏதாவது காணிக்கையோ கைம்மாறோ செய்யவேண்டு மென்று நான் கேட்கவில்லை, நானே அந்தப் பெண்களுக்கு ஏராள மான சீதனங்களைத் தருவேன். இதுவரை ஒரு தகப்பன் தன் மகளுக் குக் கொடுத்திராத அபரிமிதமான சீர் சிறப்புக்களையும் சீதனங்களை யும் தருவேன். பின்னும் சகல சாம்ராஜ்ஜியமும் நிறைந்த விசால மான ஏழு நகரங்களையும் அவனுக்கு ஆளத்தருவேன். இனேப்பியும் வீரியும் பிரம்மாண்டமான கோபுரங்களை மகுடங்களாகக்கொண்ட காதமைலியும் திராட்சைக் கொடிகள் விசேஷமாக விளையக்கூடிய தெனப் பிரசித்திப்பெற்ற புண்ணிய நகரமான, பிடாஸஸ்ஸீம், அழகான இப்பீயாவும், கோமளங்கள் நிறைந்த ஹீராம், பூமேவும் வயல்களும், செல்வம் நிறைந்த அந்தியாவும், ஆகிய பசுமையான கரையோரமாக பைலாஸஸின் மணற்காடு வரை யுள்ள பிரதேசம் முழுவதும் அவனது அதிகாரத்துக்கும் சொல் லுக்கும் அடங்கியிருந்துவரும். அந்தப் பிரதேசத்தில் பசுக்கள் தங்கள் இஷ்டப்படி மேய்கின்றன. காளைகள் காலைமுதல் மாலை வரை சலிப்பின்றி உழைத்து வருகின்றன. அங்குள்ள

மனிதர்கள் மஹா தைரியசாலிகள். பூமியும் வெகு தாராளமாகப் பயிர்களைக்கொடுக்கின்றது. அந்த நகரங்களையும் அவற்றைச் சுற்றி உள்ள பிரதேசங்களையும் அவன் சகலமான அதிகாரங்களுடன் ஆண்டு வரலாம்.

அவனது மனதில் உறைந்துவரும் வைரத்தை அணைப்பதற்காக, நான் இவையனைத்தையும் அவனுக்குத் தருகின்றேன். இவைகளுக்கு அவன் இசையவே இசைவான். பெருந்தன்மையுள்ள அவனது மனதும் இளகும் என்றே நான் நிச்சயமாய் நம்புகின்றேன்.

பயங்கரரூபியும் ஒருவரிடமும் தாக்ஷணியம் இல்லாதவரும் ஒருவரையும் விடாதவரும் தயவென்பது சிறிதும் இல்லாதவரும் ஒருவரது பிரார்த்தனைகளையுங் கேளாதவரும் ஆகிய புளூட்டோ தேவர், இருள் சூழ்ந்தும், கொடுமைகள் மலிந்துமுள்ள, அதிபாதாளமான நரகலோகங்களில் வசித்து வருகின்றார். தேவர்களிலெல்லாம் அவரே மிகக் கொடியவர் என்று மர்த்தியர்களெல்லாம் மதித்து வருகின்றனர். அகிலேசன் இவைகளையெல்லாம் ஆழ்ந்து யோசனை செய்வானாக! அவன் எவ்வளவோ பெரியவனாகயிருந்தாலும் நான் அவனைவிட வயதில் மூத்தவனாகவும், எனது அதிகாரம், அவனது அதிகாரத்தினும் மிக்கதாகவும் இருப்பதினால் எனக்கு வணங்கி நடப்பதே அவனுக்கு அழகாகும்,'' என்றான்.

இவ்வாறு அரசன் சொல்லிய பின்னர், மஹா கௌரவம் பொருந்திய நெஸ்டார் பின்வருமாறு உரைத்தார்:—

"ஆகமன மஹாப்பிரபோ! மஹா மகிமையுடன் விளங்கும் அரசே! தாங்கள் வழங்குவதாக ஒப்புக்கொள்ளும் வரிசைகளெல்லாம் ஓர் அரசன் மாத்திரமே வழங்கக் கூடியவை. அவையனைத்தும் மஹாதாராளமான மனத்தையுடைய ஒரு மஹாராஜனுக்கும் பெருமையைத் தருவனவே. ஆதலால் இந்த க்ஷணமே, ஆய்ந்தெடுத்த தூதர்களைப் பிலிதீசனுடைய கூடாரத்துக்கு அனுப்புவோம். யார் யாரை அனுப்பலாம் என்பதையும் நானே சொல்லுவேன். நாம் அனுப்புங் கோஷ்டிகளுக்குத் தலைவனாக பீனிக்ஸ் செல்லட்டும். அவர் மஹாவிருத்தர்; எல்லோரது நன் மதிப்பையும் பெற்றவர், அவருக்கு அடுத்தபடியாக மஹானான அஜாக்ஷனும், அதிமேதாவியான இத்தாக்கஸ்ஸும் செல்லட்டும். தாங்கள் சொல்லியனுப்பும் வார்த்தைகளை அழகாகவும் பிரியமாகவும் சொல்வதற்கு ஹோதியஸ்ஸும் யூரிபேட்டிஸும் கூடச் செல்லட்டும்.

இனி கிரேக்கர்களுடைய மனோபீஷ்டத்தைக் கருணையுடன் கொடுக்கவேண்டுமென்று எல்லோரும் ஜோவ் தேவரை முன்னிட்டுப் பிரார்த்தனை செய்யுங்கள். அதிமௌனமாகவும் உங்கள் கைகளை நன்றாகச் சுத்தி செய்து கொண்டும், பிரார்த்தனை செய்யுங்கள்'' என்றார்.

அவ்வாறு அவர் உரைத்த வசனங்களைக் கேட்ட அவர்கள் அனைவரும் அதுவே சரி என்று ஆமோதித்தனர்.

உடனே அவர்களுடைய பரிசாரகர்கள், அவர்கள் கைகளைச் சுத்தி செய்வதற்காக, அங்குச் சமீபத்தில் ஓடிக்கொண்டிருந்த ஓர் ஓடையிலிருந்து ஜலத்தைக்கொண்டு வந்தனர். சிறுவர்களெல்லாம் பூஜாபாத்திரங்களில் சாருயத்தைப் பொழிந்து நிறைத்தனர். அப்போது அர்க்கியஞ் செய்யப்பட்ட சாருயமானது, அங்கு அவர்களை சுற்றிலுமிருந்த மணற்றரையெல்லாம் ஆருகப் பெருகிற்று. இவ்வாறு பிரார்த்தனைச் சடங்குகளெல்லாம் முடிந்த பின், தூது கோஷ்டிக்கு நியமிக்கப்பட்டிருந்த தலைவர்களெல்லாம் தங்களது தாகத்தைத் தணித்துக்கொண்டு, அரசனது கூடாரத்திலிருந்து வெளியேறினர்.

அப்போது நெஸ்டார், அவர்கள் ஒவ்வொருவரையும், உற்று நோக்கிக் கவனித்து, ஏற இறங்கப் பார்த்து, "அகிலேசனுக்கு ஏற்கனவேயுள்ள மனஸ்தாபத்தை அதிகரிக்காமலும், விஷயங்கள் ஒன்றையும் விடாமலும், அவனுடன் வெகு ஊக்கத்துடன் உரையாடவேண்டும், உங்களால் ஆகக்கூடிய முயற்சிகளனைத்தையும் செய்யவேண்டும்" என்று அவர்கள் அனைவருக்கும் சாங்கோபாங்கமாக உபதேசங்கள் செய்தார்.

யுலிஸ்ஸிஸுக்கு மாத்திரம், வெகு அந்தரங்கமாக "நமது தலைவனுை ஆகமனனை இகழ்ந்து பேசி எப்படியாவது, கிரேக்க சேனைகளைக் காப்பாற்ற வழி தேடவேண்டும்," என்று உபதேசித்தார்.

இந்த நடவடிக்கைகளிலெல்லாம் சிறிதும் சந்தடியின்றி அமைதியாயிருந்த அந்த தூதுகோஷ்டியாரும் தங்களது காரியத்திலேயே கருத்தைச் செலுத்திக் கொண்டு முன் சென்றனர். அப்போது அந்தக் கடலில் உள்ள அலைகள் கரையின் மேல் மோதுவதினுல் உண்டான முணு முணு என்ற சப்தமே அவர்களது காதில் விழுந்தது.

அகண்ட சாகரங்களின் அதிபதியும், பிரம்மாண்டமான பூமண்டலத்தைத் தம் திரவரூபமான கரங்களால் அணைத்துக் கொண்டிருப்ப வருமான நெப்தியூன் பகவானுக்கு, அவர்கள் தாங்கள் உத்தேசித்துச் செல்லும் காரியத்தை நிறைவேற்றித் தரவேண்டும் என்றும், கொடியோனுன ஈலிடஸின் கோபம் தணியுமாறு அருள வேண்டும் என்றும் பிரார்த்தனை செய்தனர்.

அதன்பின், அவர்கள் அந்தக்கரை வழியே நடந்து சென்று மிரிபிடோனியர்களுடைய கூடாரங்களும் கப்பல்களும் நின்று கொண்டிருந்த மணற்பாங்கான இடத்துக்கு வந்து சேர்ந்தனர். அங்கு அவர்கள் தேவர்களுக்குச் சமமான அகிலேசன் மிகவும் வழவழப்பாக, நன்ருக இழைத்த, வெள்ளி

யினுல்ஆக்கப்பட்ட விலைமிக்க உடலை உடையதும், நல்ல வேலைப் பாடுகளையுடையதும் தான் வென்ற தீபிஸிலிலிருந்து கொண்டு வந்ததுமான திவ்வியமான வீணையினின்றும், எழுந்து வந்த இனிய கானங்களைக் கேட்டுக் கொண்டு சுகமாகக் காலத்தைக் கழித்துக் கொண்டிருப்பதைக் கண்டனர். முன்னுளில் வீரர்களும் அரசர்களும் செய்த, என்றும் அழியாப் புகழ்பெற்ற தீரச்செயல் களைப் பாடிக் கொண்டே அவன் அந்த வீணையை வாசித்துக் கொண்டு, தனது மனத்தில் எழுந்த கொடுங் கோபங்களைத் தணித்துக் கொண்டிருந்தான்.

அந்த அகிலேச மஹா ராஜனது பரிவாரத்திலிருந்த அரசர் களில் பத்திரகலுஷன் மாத்திரம் அந்தக் கூடாரத்தில் அவனுக் கென்று இடப்பட்டிருந்த ஓர் ஆசனத்தில் இருந்து கொண்டு, அந்த கம்பீரமான கானத்தைக் கவனித்துக் கேட்டு ஆனந்தித்து வந்தான். அகிலேசன் முடிக்குமட்டும், அவன் அந்தப் பாட்டை மௌனமாகக் கேட்டுக் கொண்டு அவனுக்கு நேராக எதிரில் நெடுநேரம், உட்கார்ந்து கொண்டிருந்தான்.

அந்த கம்பீரமான உயர்ந்த கூடாரத்தை நோக்கி, கிரேக்க தூதர்களனைவரும் ஒருவருக்கும் கட்புலனுகாமல் நடந்துசென்றனர். அவர்களனைவருக்கும் முன்னுக மஹானுன யுலிஸ்ஸிஸே சென்றுன்.

அந்தத் தலைவர்களின் வருகையைக் கண்ணுற்றதும் அகிலேசன் தனது ஆசனத்திலிருந்து சட்டென்று எழுந்து தாவிக் குதித்தான். தன் கையிலிருந்த வீணையை ஒருபுறம் வைத்தான். அவனைப் போலவே ஆச்சரியமடைந்த மினிஹியஸ்ஸின் மகனும் சட்டென்று தனது இடத்தை விட்டு எழுந்தான்.

அப்போது பீலிதீசன், தூதர்களது கைகளைப் பிடித்துக் கொண்டு பின்வருமாறு வசனங்களை யுரைத்தான் :—

"வருக! வருக!! இராஜ புத்திரர்களே வருக! அனைவரும் வருக! என்ன விசேஷம்? நீங்களனைவரும் இங்கு என்ன காரியமாக வந்தீர்கள்? ஏதோ அவசரமும் அத்தியாவசியு மான காரியத்தை உத்தேசித்தோ அல்லது விரைவில் வரவிருக்கும் பெருத்த ஆபத்துக்குப் பயந்தோ தான், நீங்கள் இப்போது இங்கு புறப்பட்டு வந்திருக்க வேண்டும். நீங்கள் கிரேக்கர்கள் தான், என்றுலும் உங்கள் எல்லோருக்கும் நல்வரவு! எல்லோரும் வாருங்கள்! நீங்கள் என் விரோதிகளாக இங்கு வரவில்லை! கிரேக்கர்கள் எல்லோரிலும் நீங்கள் எனக்குப் பிரிய மானவர்கள்" என்றுன்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே, அவன் அந்தத் தலைவர் களைத் தனது கூடாரத்துக்குள் கூட்டிச் சென்று, அங்கு ஊதா வர்ணமான இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்த

ஆசனங்களில் அவர்களை உட்காருவித்தான். பின்பு பத்திரகலுஷனை நோக்கி:

"பத்திரகலுஷா! ஒரு பெரிய கிண்ணத்தில் முதல்தரமான உறைந்த சாருயத்தை வார்த்து, இவர்களுக்குக் கொடுத்து இவர்களைக் களைப்பாற்று! இவர்களது மனத்தைக் குளிர வை. அதோ, அங்குக் காணும் கோஷ்டியார் நம்மிடம் அனுப்பக் கூடியவர்கள் எல்லோரிலும் இவர்களையே, உனது சினேகிதன் மிகவும் கௌரவித்து மதித்து வருகின்றான். இவர்களும் அவ்வாறே அவனை மதித்து வருகின்றனர்" என்றான்.

இவ்வாறு சொல்லக் கேட்ட பத்திரகலுஷன் முதுகெலும்புடன் கூடிய ஒரு பன்றி, ஒரு செம்மறியாடு, ஒரு வெள்ளாடு ஆகிய இவைகளின் மூன்று முழு மாமிசத் துண்டுகளை ஒரு வெண்கலப் பாத்திரத்தில் மலைபோல் அடுக்கிக் குவித்து அந்தப் பாத்திரத்தைக் கொழுந்து விட்டு எரியும் அடுப்பின் மேல் வைத்தான்.

அந்த மாமிசத் துண்டுகள் நன்றாக வேக வேண்டும்; அவற்றைத் தன் விருந்தினர்களுக்குப் பரிவுடன் பரிமாற வேண்டும் என்ற ஆவலுடன் அகிலேசன், அவைகளைத் தானே, தன் கைகளால் நன்றாகக் கீறித் துண்டித்துப் பொடிப் பொடியாகவும் அழகாகவும் நறுக்கியிருந்தான்.

அந்த வெண்கலப் பாத்திரத்தை ஆட்டோமீடான் தன் கைகளால் பிடித்துக் கொண்டிருக்க, பத்திரகலுஷன் அடுப்பில் எரிந்து கொண்டிருந்த நெருப்பை அணையாமல் வளர்த்திக் கொண்டு அதனருகில் இருந்த வண்ணம் வெந்து போனவையை வடித்தான். அப்போது கொழுந்து விட்டுக் கொண்டு எழுந்த நெருப்பின் வெளிச்சத்தில் அந்தக் கூடாரமானது, பளிச்சென்று பிரகாசத்துடன் விளங்கியது. கடைசியாக அந்த நெருப்பு நிதானமாகத் தணிந்தபொழுது அவன், அடுப்பில் தக தகவென்று கொதித்துக் கொண்டிருந்த தணல்களை ஒரு படுக்கை போல் நன்றாகப் பரப்பி, ஆவி வந்து கொண்டிருந்த அந்த மாமிசத் துண்டுகளை திருப்பித் திருப்பி அவற்றின் மேல் வாட்டினான். பின்பு அவன், உப்புக் கிண்ணங்களை எடுத்து வந்து அவற்றிலிருந்து நன்றாகச் சுத்தம் செய்யப்பட்ட உப்பை யெடுத்து அவற்றின் மேல் தூவினான்.

அதன்பின் அவர்கள், பளிச்சென்று மின்னும் வட்டில்களில், ரொட்டியை மலைபோல் குவித்துப் பரிமாறினர். அவைகளை மினிஹியஸ்ஸின் புத்திரனே எடுத்துச் சென்று அந்தப் பந்தியிலுள்ளோர் ஒவ்வொருவர் முன்னிலும் வைத்தான். அவன் யுலிஸ்ஸீஸின் எதிரில் நேராக நின்று கொண்டு, விருந்தினர்கள் ஒவ்வொருவருக்கும் தனித் தனியாக மாம்ச பக்ஷணங்களைப் பகிர்ந்து எடுத்துப் பரிமாறி, அந்த விருந்துக்குச் சம்பரிதமான

சகல உபசாரங்களையும் தன் கைப்படவே செய்தான். முதன் முதலில், அவன், அழிவில்லாதவர்களான அமரர்களுக்குச் சேர வேண்டிய அக்ர பாகத்தை, ஆவலுடன் எரிந்து கொண்டிருந்த அக்னியில் ஆகுதி செய்தான். அதன்பின் அந்தக் கோஷ்டியில் இருந்தோர் அனைவரும், தங்களுக்கு வேண்டிய மட்டும் போஜன வகைகளையும், பானங்களையும் அருந்தித் திருப்தி யடைந்தனர்.

இவ்வாறு போஜனமானபின் அஜாக்ஷன் தாங்கள் வந்த காரியத்தைக் கவனிக்குமாறு பீனிஸுக்குச் சாடை செய்தான். அவன் குறிப்பால் செய்த, அந்த ஜாடையை அங்கிருந்த மற்றையோர் அறியாமல் போகவில்லை. அந்த க்ஷணமே யுலிஸ்ஸிஸும் ஒரு கிண்ணத்தில் ஆவியுடன் பொங்கப் பொங்க கொதிக்கும் சாருயத்தை நிறைத்துக் கொண்டு, தேவர்களுக்குச் சமானமான அகிலேசனை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"அகிலேசன் அரோக திடகாத்திரனாக, அனேகம் ஆண்டுகள் வாழ்க! நீ செய்த இந்த விருந்தினால், உன் விருந்தினர்கள் மிகவுஞ் சந்தோஷ மடைந்தனர். திருப்தி யடைந்தனர். அதிரிதேசன் கூடத் தன் அதிகாரிகளுக்கு இதனினும் அதிகமான மரியாதைகளைச் செய்வதில்லை! ஆகமனனது ஆடம்பரமான கூடாரத்தில் உள்ளது போலவே, உனது சாலையிலும், போஜன பதார்த்தங்கள் தாராளமாகவும் யதேஷ்டமாகவும் குவிந்திருக்கின்றன. என்றாலும், எங்களது மனதில் மிகப் பெரிய கவலைகளே குடிகொண்டிருக்கின்றன. எங்களது மனது ஒரு பெரும் பாரத்தையே தாங்கி வருகின்றது. இதைப் போன்ற விருந்துகளினாலும் விசேஷமான பானங்களினாலும் அந்த மனத்தாங்கல் குறையவில்லை. அதோ அங்குக் காணும் களங்களில் எவ்வளவோ கோரமான காக்ஷிகள் காணப்படுகின்றன. பார்த்தாயா! நாங்கள் எங்கள் கோஷ்டியில் இறந்தாரைக் குறித்துக் கவலைப்பட்டுக் கொண்டுமே வருகின்றோம். தனக்கு என்ன ஆபத்து வருமோ, தன் கதி எப்படியாகுமோ என்று அறியாமல் கிரேக்கர்கள், தங்கள் தலைவிதியை நினைத்துக்கொண்டு துயர்க் கடலின் கரையில் தவித்துக் கொண்டு நிற்கின்றனர்! உனது கையால் தான், தனக்கு ரக்ஷை உண்டாகும் என்றும், நீ தான் தனக்கு உதவி செய்ய வேண்டும் என்றும், அந்த கோஷ்டி நிச்சயமாய் நம்பியிருக்கின்றது! ட்ராயும் அதற்கு நேசமாயுள்ள மற்றையோரும், நமக்கு இதுவரை செய்துள்ள பழிபாவங்களுக்கு நாம், இந்த க்ஷனம் வட்டி போட்டுப் பழிவாங்கிவிட வேண்டும். சிறிதும் தாமதிக்கக் கூடாது. அவர்கள் நம் கூடாரங்களின் மேல் விழ ஆரம்பித்து விட்டனர். அவை நமக்குப் பெரும் பீதியை யுண்டாக்கி விட்டன! தாங்கள் வெற்றி பெற்று விட்டதாகவும் நம் கப்பல்கள் ஒன்றைக்கூட விடாமல் நெருப்புக்கு இரையாக்கி விடுவோம் என்றும் அவர்கள், உரத்துக் கூவுவதும், முழங்குவதும், ஆரவாரிப்பதும், உன் காதில் விழவில்லையோ! தேவர்களுக்கெல்லாம் பிதாவான மஹா தேவர், தாம் அவர்களது கக்ஷியிலிருப்பதாகவே சொல்லிவிட்டார்! அவருடைய சகுனங்களெல்

லாம் அவர்களுக்கே நன்மை செய்பவனாக விருக்கின்றன! அவர்களுக்கு உதவியாகவே அவருடைய இடிகள் இடிக்கின்றன. ஜோவ் தேவரின் பூரண கிருபையுடன் விளங்கும் ஹெக்டர் எவ்வளவு உயரம் குதிக்கின்றான் பார்! இதோ வந்தேன்! பழி வாங்க இதோ வந்தேன் என்றே அவன், உயர்ந்து எழும்பிக் குதிக்கின்றான்! அவன் தேவலோகத்திலிருப்பவர்களையும் பூலோகத்திலிருப்பவர்களையும் ஒருகை பார்த்தே விடுகின்றேன் என்று உறுமுகின்றான், பார்த்தாயா? அவன் மனதிலுள்ள கோபந்தான் என்ன! அவனது ஆவேசந்தான் என்ன! அவன் கண்களிலிருந்து பறக்கும் பொறிகளைத் தான் பார்த்தாயா? அவன் பொழுது விடிய வேண்டும் என்று மாத்திரமே காத்திருக்கின்றான். அப்போது நம் கப்பல்களையும் கிரேக்கர்களையும் அவர்களது பெயரைச் சொல்லக் கூட ஒருவரும் இல்லாமல் கிரேக்கப் பூண்டுகள் அனைத்தையுமே வேரோடு அழித்துத் தீக்கு இரையாக்கி விட வேண்டுமென்று காத்திருக்கின்றான், துடிக்கின்றான். தேவர்களே! என் தேசத்தின் கஷ்டங்களை நினைத்து என் மனது கலங்குகின்றதே உருகுகின்றதே! அவன் அந்த ஹெக்டர் உத்தேசித்த பிரகாரம் அங்கு தீங்குகளெல்லாம் ஒருங்கே வந்துவிடுமோ என்றும், எங்களது தலைவிதியும் அப்படியே யிருக்குமோ என்றும் என் மனது நடுங்குகின்றதே! தேவர்களே! இந்தக் கெட்ட நாளில் நாங்கள் மானமிழந்து தான் போக வேண்டுமா? எங்கள் தலைகளெல்லாம் இந்த துரோஜர்கள் நாட்டில் புழுதியில் உருண்டு, புரளத்தான் வேண்டுமா? இன்றைய தினம் நாங்கள் அழிந்தே தான் போய் விட வேண்டுமா?

அகிலேசா! எழுந்திரு! புறப்படு! திரும்பிவா! இது வரை நீ விலகியிருந்தது போதும்! இப்போதாவது உன் மனதில், இரக்கமோ அல்லது தைரியமோ சிறிதேனும் உண்டாகட்டும்! எழுந்திரு! அதைக் காரியத்தில் காட்டு, ஒளித்து வைத்திருப்பதில் என்ன பயன்? இன்னும் காலந்தவறிப் போகவில்லை! எழுந்திரு! வா! உனக்கு ஜயமே உண்டாகும், நீ இப்போது கையை மடக்கிக் கொண்டு இருப்பாயாயின் நாளடைவில் நம் வீரர்களெல்லாம் அழிந்து போய்விடுவார்கள். அப்போது உன் மனதும் உருகும், அதனால் என்ன பயன்? அப்போது உனது தைரியமுந்தான் என்ன செய்யும், அவையிரண்டும் பயனில்லாமலே போய்விடுமல்லவா? ஆதலால் தேவர்களுக்குச் சமானமான தைரியமுள்ள வீர! இதுவே நல்ல தருணம்! இதைக் கைநழுவ விடாதே! உன் தகப்பனார் உனக்குச் செய்த நல்ல உபதேசங்களை உற்ற சமயத்தில் கைவிட்டு விடாதே! யுத்தத்துக்குப் புறப்பட்ட தன் மகனை, விருத்தனான அந்த பிலிப்ஸ் கட்டித் தழுவி யணைத்துக்கொண்டு அப்போது சொல்லிய வசனங்களை ஞாபகப்படுத்திக் கொள்ளு! அவன் என்ன சொன்னான் என்பதைச் சொல்லுகின்றேன், கேள்.

'என் குழந்தாய்! ஜூனோ தேவியும் மினர்வா தேவியும், உன் ஆயுதங்களுக்குச் சக்தியையும் கீர்த்தியையும், ஜயத்தையும்

கொடுத்து, அனுக்கிரஹிக்கட்டும்! அவையனைத்தும் தேவர்களது கிருபையினால் மாத்திரமே உண்டாகும் என்று நிச்சயமாய் நம்பு, ஆனால் நீ செய்ய வேண்டிய காரியங்களும் சிலவுள, அவற்றைச் சொல்லுகின்றேன் கேள். முதலாவதாக நீ உன் கோபா தாபங்களைத் தணித்துக் கொள்ள வேண்டும். உன் ஆத்திரத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். நயமான வசனங்களாலும் நேர்த்தியான ஒழுக்கத்தினாலும், உன் புகழ் மேன்மேலும் விருத்தியாக வேண்டும். ஆதலால் நீ சண்டை சச்சரவுகளை அறவே ஒழித்துவிட வேண்டும். அவை தான் சகலமான துன்பங்களுக்கும் மூலம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இளைஞரும் முதியோரும் ஒருங்கே ஒன்றாய்ச் சேர்ந்து உன்னைப் போற்றிப் புகழ வேண்டுமென்றால், நீ சாமான்யமும், சகல ஜன சம்மதமுமான நன்னெறிகளைக் கடைப் பிடித்து அவற்றில் ஒழுகி வர வேண்டும்' என்றே சொன்னான்.

அந்தப் புத்திமதிகள் பயனற்றவையென்று நீ, அவற்றை இப்போது உதறித் தள்ளிவிட்டாய். உன் கோபத்தை நீ இப்போதாவது அடக்கமாட்டாயா? உன் உண்மையான மன வலிமையைக் காட்டமாட்டாயா? மஹானான அதிரிதேசனது வேண்டுகோள்களுக்கு மாத்திரம் நீ இப்போது இணங்கினாயானால், மஹாராஜனான அவன் உனக்குத் தகுந்த சன்மானங்களைக் கொடுப்பான். அவை கொடுப்போனுக்கும் கொள்வோனுக்கும் ஏற்றவையாகவே யிருக்கும். அப்படியில்லை, நீ இணங்க மாட்டேன் என்றால்—அது இருக்கட்டும் அதற்கு அப்புறம் வருகின்றேன்—இப்போது அவன் உனக்குக் கொடுப்பதாகச் சொல்லும் வெகுமதிகளை நான் ஒவ்வொன்றாகச் சொல்லுகின்றேன் கேள். அவைகளுக்கு, அளவோ சங்கையோ குறையோ கிடையாது!

பத்துத் துலாம் நிறைந்துள்ள மிகவும் ஸ்வச்சமான சுவர்ணமும், அதைப் போன்ற இரு மடங்கு பொன்னால் உண்டாக்கப்பட்ட பளபளவென்று மின்னும், ஜாடிகளும், பாத்திரங்களும், சிறிதும் வழுவின்றி உண்டாக்கப்பட்டவையும், இதுவரை ஒரு காரியத்திற்கும் உபயோகிக்க படாதவையும், அடுப்பேறி அனல் கொள்ளாதவையும், பூஜார்ஹமுமான ஏழு முக்காலிகளும், புழுதி யெழுப்பும் பந்தயச் சாலையில் என்றும் வெற்றியுடன் விளங்கக் கூடியவையும், வேகத்தினாலும், வலியினாலும் இணையில்லாதவையுமான பன்னிரண்டு குதிரைகளும் அவன் கொடுப்பான். அவ்வாறு இறகு கட்டிக்கொண்டு பறக்கும் குதிரைகளின் மூலமாகக் கெலித்த பந்தயக் கிழிகளுக்கும் அதிகமான ஆஸ்திகளையுடையவன் ஒருவன் இரான். அவ்வாறு ஒருவன் இருப்பனேல் அவனே மஹா பாக்கியவான் ஆவான்.

இதுவன்றி லெஸ்பாஸானது, உன் கைவேலிக்குத் தாழ்ந்து தலைகுனிந்த பொழுது, அந்த லெஸ்பாஸிலிருந்த பெரிய வம்சங்களிலிருந்து, அவன் பொறுக்கியெடுத்துச் சுவீகரித்துக்

கொண்ட சகல கலைகளிலும் தேர்ந்தவர்களும், தேவர்களைப் போன்ற தேக காந்தியுள்ளவர்களும், ரூபலாவண்ணியங்களும் இணையற்ற எழில்களும் வாய்ந்தவர்களுமான, ஏழு சுந்தரிகளையும் ஆகிய இவையனைத்தையும் உனக்குக் கொடுக்க, அவன் சித்தமாக விருக்கின்றான்.

தவிர, உனது சினேகத்தைப் பெறுவதற்காக அவன் இது வரை, நெடுநாளாக நடந்து வரும் சச்சரவுக்குக் காரணமான சர்வ ரூபமானவள் என்னும் பெண்மணியையுங்கூடக் கொடுத்து விடுவான்! அவளிடம் நீயே சுகமனுபவித்து வரலாமென்றும், தான் அவளிடம் இதுவரை ஒரு கணமேனும் கொஞ்சிக் குலாவி வரவில்லை யென்றும், சத்திய மாகச் சொல்லுகின்றான்! அவள் இதுவரை அவனால் தீண்டக்கூடப்படாமல் அங்கிருந்து வரு கின்றாள்! சிறிதும் பழுதின்றியே அவள் அங்கு விட்டு நீங்குவாள். மஹா பரிசுத்தையாகவும் அவனுடைய காம போகங்களுக்கு ஆளாகாமலும் அவனுடன் இருந்துவரும் அவளை, அவன் இந்த நிமிஷம் உனக்குக் கொடுத்து விடுவான். இதன் பின் தேவர்கள், நமக்கு அனுக்கிரஹம் செய்து நம் சேனைகளுக்கு ஜயத் தையுந் தந்து, நம் சத்துருக்களுடைய கம்பீரமாக விளங்கும் இலியன் கோட்டை கொத்தளங்களையும் தரைமட்டமாக்கி விடுவார்களானால், அப்போது கிரேக்கர்களெல்லாம் இலியனில் கிடைத்த சகலமான திரவியங்களையும் பங்கு போட்டுக் கொள் வார்களல்லவா? அப்போதும் நீ உன் கப்பல்கள் கொள்ளும் மட்டும், பொன்னையும் வெள்ளியையும் போட்டு நிறைத்துக் கொள் ளலாம்! மேலும் அதிதிவ்விய ரூபமான ஹெலன் ஒருவளை மாத்திர மொழிந்த மற்றையோர் எல்லோரையும்விட அழகில் மிக்க துரோஜ ஸ்தீரிகளில் கட்டழகிகளான இருபது பேர்களை நீயே பொறுக்கி யெடுத்துக் கொள்ளலாம். அவர்களைக் கட்டியணைத்துக் கொண்டு நீ உனது இஷ்டப்படி, சகலமான சுகபோகங்களையும் இன்பங்களையும் குறைவின்றி அனுபவித்து வரலாம்.

இன்னும் நான் சொல்லுவதைக் கேள், நம் யுத்தங்களெல் லாம் முடிந்து, நாமும் நமது செழிப்பான ஆர்காஸ் கரைகளுக்குச் சென்று, அங்கு இறங்கிய பின்னர், நீ அவனது புத்திரனாகவே அவனுடன் வாழ்ந்து வரலாம். அவனுக்குச் செய்யப்படும் மரியாதைகளுக்குப் பாகஸ்தனாகவும் ஒரேஸ்டீஸீடன் சேர்ந்து சகலமான இராஜ காரியங்களின் பொறுப்புக்களையும் வகித்து வரலாம்!

இவ்வளவும் போதாதென்றால், இன்னும் சொல்லுகின் றேன் கேள். அவனது அரண்மனையில் மூன்று புத்திரிகள் வளர்ந்து வருகின்றனர். அவர்கள் ஒவ்வொருத்தியும் ஒரு மஹா ராஜனது சயனத்தை அலங்கரிக்கத்தக்க சகலமான யோக்கியதை களும் உள்ளவள்! லயோதிசியும் எழில் வாய்ந்த இபிஜியாவும் பொன்வேணிபுனைந்த கிரிரோஸதி மிஸ்ஸீம் ஆகிய அம் மூவருள் யார் அழகு மிக்கவள் என்று உன் கண்களுக்குப் படுகின்றதோ,

அவளையே நீ சுவீகரித்துக் கொள்ளலாம். அதற்காக நீ அவனுக்கு ஒருவிதமான காணிக்கையோ, கைம்மாருே செய்ய வேண்டும் என்று அவன் கேட்கவில்லை. அவனே அந்தப் பெண்களுக்கு ஏராளமான சீதனங்களைத் தருவான். இதுவரை ஒரு தகப்பன் தனது மகளுக்குக் கொடுத்திராத அபரிமிதமான சீர் சிறப்புக்களை யும் சீதனங்களையும் தருவான். பின்னும் சகல சாம்ராஜ்யங்களும் நிறைந்த விசாலமான ஏழு நகரங்களையும் உனக்கு ஆளத் தரு வான். இனேப்பியும் வீர்வும் பிரம்மாண்டமான கோபுரங்களும், மகுடங்களைக் கொண்ட கர்தமலியும் திராட்சைக் கொடிகள் விசே ஷமாக விளையக்கூடிய ரத்னப் பிரசித்தி பெற்ற புண்ணிய நகர மான பீடாஸஸ்ஸீம், அழகான இப்பியாவும், கோமளங்கள் நிறைந்த ஹீராவும், பூமேவும் வயல்களும் செல்வமும் நிறைந்த அத்தியாவும் ஆகிய பசுமையான கரையோரமாகவுள்ள பைலாஸ்ஸீன் மணற்காடு வரையுள்ள பிரதேச முழுவதும் உனது அதிகாரத்துக்கு அடங்கி இருந்து வரும். அந்தப் பிரதேசத்தில் பசுக்கள் தங்களது இஷ்டப்படி மேய்கின்றன. காளைகள் காலை முதல் மாலை வரை சலிப்பின்றி உழைத்து வருகின்றன. அங்குள்ள மனிதர்கள் மஹா தைரிய சாலிகள். பூமியும் வெகு செழிப்பாகப் பயிர்களைக் கொடுக்கின்றது. அந்த நகரங்களையும் அவற்றைச் சுற்றியுள்ள பிரதேசங்களையும் நீ சகலமான அதிகாரத்துடனும் ஆண்டு வரலாம்.

இந்த விசேஷங்களைச் சொல்வதற்காகத்தான் நாங்கள் இன்று இங்கு வந்தோம்! உனக்குச் செய்துவிட்ட தீங்குகளுக்காக மஹாராஜன் எவ்வளவு வருந்துகின்றுன் என்பதையும் உனது நட் பைத் திரும்பவும் அடைவதற்காக அவன் உனக்கு என்னென்ன உபசாரங்கள் செய்யச் சித்தமாக இருக்கின்றுன் என்பதையும் சொல்வதற்காகவே நாங்கள் இங்கு வந்தோம். இவைகள் அனைத் தையும் கேட்ட பின்னுங்கூட, உனது மனம் சிறிதும் இணங்காமல் போகலாமா ?

நீ இவற்றைப் புறக்கணித்துத் தள்ளியும் விடலாம், உனக் குத் தருவதாகச் சொல்லும் மரியாதைகளிலும் அவற்றுல் உனக்கு விளையக் கூடிய லாபத்திலுங்கூட உனக்குப் பிரியமில்லாமல் போகலாம்! என்றுலும் இவ்வளவு தூரம் உன்னைக் கெஞ்சிக் கேட்கும் கிரேக்கர்களுக்குப் பெருந்தன்மையுள்ளவனுன நீ ஏதே னும் ஒரு சிறு உபகாரமாவது செய்தே தீர வேண்டும். அப்படிச் செய்வாயானுல் அவர்கள் உன்னைத் தங்களைக் காப்பாற்றி வரும் தெய்வங்களுள் ஒன்ருக மதித்துப் போற்றித் தொழுது வருவார்கள். உனது ஜன்ம தேசமானது பலவிதமான பெருந்துன்பங்களையும் கஷ்டங்களையும் அனுபவித்து வருவதைக் கண்ணுற்றும் உனது மனம் சிறிதும் இணங்கவில்லையே. நாங்கள் மாத்திரம் உனது பெருமையையும் கீர்த்தியையும் வெகுவாகப் பாராட்டியே வருகின் ருேம்! நாங்கள் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கையில் என்ன சொல்லிக் கொள்ளுகின்ருேம் என்பதையுங் கேள்.

இந்த ஹெக்டர் சிறிதும் தங்கு தடையின்றி முன்னால் சொல்லுகின்றான். கூட்டங் கூட்டமாகச் சேர்ந்திருக்கும் ஜனத் திரள்களை விரட்டியே விடுகின்றான்! அவர்களும் மனம் கலங்கித் திகைத்துப் பின்னடைந்து ஓட்டம் பிடிக்கின்றனர். இப்போது இவன் வெகு பெருமையுடனும் கர்வத்துடனும் துள்ளுகின்றான். தன்னை எதிர்த்து வரக்கூடிய வீரன் ஒருவனாவது இல்லையென்றே குதிக்கின்றான். இவனுக்கு இப்போது கொஞ்சம் நல்ல காலந் தான்! ஆனால் அது அகிலேசனைக் கண்டவுடன் பறந்தே போகும்! அவனது கையினால் தான் அவனுக்கு அழிவு வரப் போகிறது! என்று நாங்கள் சொல்லிக் கொள்ளுகின்றோம்!'' என்றான்.

ஒரு தேவ கன்னிகையின் வயிற்றில் பிறந்தவனான அந்த வீரன் அவையனைத்தையுங் கேட்டு அவற்றிற்குப் பின்வருமாறு பதிலுரைத்தான் :—

"யுலிஸ்ஸிஸே! நான் உண்மையாகச் சொல்லும் வார்த் தைகளைக் கேள்! எனக்குக் கபடமோ, பயமோ கிடையாது. நான் எனது மனதினால் ஆராய்ந்து அறிந்து, அதில் அடக்கிக் கொண் டிருக்கும் விஷயங்களைத்தான், எனது வாயினால் வெளிப்படையாக உரைப்பேன். இதை நீ நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். தவிர, நான் சொன்னபடியே, காரியங்களைச் செய்யவும் செய்வேன். ஆதலால் நான் என் வார்த்தைகளைக் கிரேக்கர்கள் அனைவரும் அறியுமாறே சொல்லுகின்றேன், கேள்! நான் என் காரியத்தி லேயே கண்ணாக இருக்க வேண்டும் என்றும், பிறருடைய காரியங் களில் தலையிடக் கூடாது என்றும் தீர்மானித்து விட்டேன். நான் என் நடவடிக்கைகளை யெல்லாம் ஒழித்து விட்டு என் காலத்தைச் சுகமாகக் கழித்து வருகின்றேன். புதிய புதியதான உபதேசங் களையாவது ஒப்பந்தங்களையாவது சொல்லி, யாரும் என் மனநிலை யைக் கலைக்க வேண்டாம். மனதில் ஒன்றை நினைத்துக்கொண்டு வாயினால் வேறொன்றைச் சொல்லும் ஒருவனை நான் வெறுக் கின்றேன். அவனை நரக லோகத்தின் வாயிலுக்குச் சமான மானவன் என்றே நான் கருதுகிறேன்.

நான் எனது மனதில் செய்துகொண்டுள்ள தீர்மானத்தைச் சுருக்கமாகச் சொல்லுகின்தேன்! அதைக் கவனமாகக் கேள். அந்தத் தீர்மானத்தை அசைப்பதற்கு அதிரிதேசனாலும் ஆகாது. சமஸ்தமான கிரேக்கர்களாலும் ஆகாது! அது நிச்சயந்தான்!

இங்குக் கிரேக்கர்களுக்காக நான் வெகு நாள் கஷ்டப்பட்டு உழைத்தேன். பலவிதமான ஆபத்துகளுக்கும் ஆளானேன். இந்த ஆபத்துக்களையெல்லாம் பொறுத்து வந்தேன். அவைகளால் எனக்கு ஒரு பெருமையும் உண்டாகவில்லை. இப்போது எனக்குக் கொடுக்கப்போவதாகச் சொல்லும் நன்கொடைகளிலும், செய்யப் போவதாகச் சொல்லும் மரியாதைகளிலும் எனக்கு ருசியில்லை, பிரியமில்லை.

யுத்தஞ் செய்யினும் செய்யாமல் வாளாவிருப்பினும் நம் மெல்லோருக்கும் ஒரே பலன் தான் கிடைக்கின்றது. பேடியும் பெருத்த பலவானும், தங்களுக்குக் கிடைக்கும் வெகுமானம் ஒரே திறத்ததாக விருக்கக் காண்கின்றனர். மானமிழந்து மாற்ருனுக்குப் பணிபவனும் அவ்வாறின்றிப் போர்க்களத்தில் தன் பிராணனை விடும்வீரனும், கடைசியில் மண்ணோடு மண்ணாய்ப் போய்விடு கின்றதையும் காண்கின்ரேம். இருவரையுமே உலகமானது பாராட்டி வருகின்றது.

நான் எத்தனையோ அபாயகரமான சந்தர்ப்பங்களில் அகப் பட்டுத் தவித்தேன். எவ்வளவோ சிரமப்பட்டு உழைத்தேன். சரீரத்தைச் சாருக வடித்தேன். அவற்ருல் என்ன பயனைக் கண்டேன்?

எவ்வாறு ஒரு தைரியமுள்ள பக்ஷியானது, தன் திக்கற்ற இளங்குஞ்சுகளைக் கட்டிக் காத்தும், அவைகளுக்கு எவ்விதமான ஆபத்தோ குறைவோ நேரிடாமல் கவனித்தும் இரட்சித்தும் வருகின்றதோ! எவ்வாறு அது இந்தப் பரந்த ஆகாயத்தைச் சுற்றிப் பறந்து சென்று, அந்தக் குஞ்சுகளுக்கு வேண்டிய ஆகாரத் தைத் தேடி, அதைத், தான் ருசிகூடப் பாராமல் அக்குஞ்சுகளுக் குக் கொடுத்து உதவுகின்றதோ, அவ்வாறே நான் இந்த நன்றி கெட்ட கிரேக்கர்களுக்கு இரங்கி, அளவிட இயலாத கடினமான காரியங்களையும் செய்து வந்தேன். மிகவும் சிரமப்பட்டு, அவர் களுடைய மனைவிமார்களையுங் குழந்தைகளையும் காப்பாற்றினேன். ஆஹா தெய்வமே! கனமான ஆயுதங்களை ஏந்திக்கொண்டு சிறிதும் கண்ணைக் கொட்டாமல், நான் எவ்வளவு நாள் இரவெல் லாம் என் இடத்தில், அசையாமல் நின்று வந்தேன்! புழுதியும், குருதியும் நிறைந்துள்ள களங்களில் நின்றுகொண்டு, எவ்வளவு நாள் நெற்றித் தண்ணீர் நிலத்தில் வடியவும், வேர்த்தும் விறுவிறுத் தும் ஊழியங்கள் செய்து வந்தேன்! சமுத்திரக் கரையோரமுள்ள பிரம்மாண்டமான பன்னிரண்டு நகரங்களை அழித்து நிர்மூலமாக் கினேன்! வேறு பன்னிரண்டு நகரங்களைத் தீக்கிரையாக்கினேன். துரோஜ நாட்டு மைதானங்களில் கட்டப்பட்டிருந்த அந்த நகரங் கள் நெடுநாள்வரை புகைந்து கொண்டிருக்கவில்லையோ? அவற் ருல் எனக்கு என்ன லாபம் உண்டாயிற்று? அந்த நகரங்களி லிருந்து நான் வாரி வழித்துக் கொள்ளையடித்துக்கொண்டு வந்த சகலமான திரவியங்களும், அந்த மஹாகர்விமானை அதிரிதேச னுக்கே பாதகாணிக்கையாகச் செலுத்தப்பட்டன! உங்களது மஹா பரரக்கிரமசாலியான அந்தச் சக்ரவர்த்தி அவையனைத்தை யும் வெகு திருப்தியுடன் அங்கீகரித்து ஏற்றுக்கொண்டுவிட்டார். என் வீரர்களுக்கு சில தானங்களை மாத்திரம் செய்துவிட்டு, மீந்தவையனைத்தையும், அவன் தனக்கே வைத்துக்கொண்டு விட்டான்! சிற்றரசர்கள் அனைவருக்கும் ஒருவர் தவருமல், அவன் ஏதேதோ சிறிய அன்மானங்களையுஞ் செய்தான். அவர்கள் அனைவரும் அவற்றை இன்னும், ஆண்டு அனுபவித்துக்கொண்டு வருகின்றனர். அவனுடைய கோஷ்டியிலிருந்தோர் அனைவரிலும்

எனக்கு மாத்திரம் ஒன்றும் கொடுக்கக் கூடாதாம்! எனக்குக் கிடைத்ததைக்கூட நான் திருப்பிக் கொடுத்துவிடவேண்டுமாம்! நம் வீரசூர பராக்கிரமங்களில் நமக்கு எவ்வளவு உன்னதமான மரியாதைகள் உண்டாகின்றன என்பதை நீயே பார்! எனக்குக் கிடைத்த வஸ்துக்களின் மேல்தான் அவனுக்கு அத்தியந்தப் பிரியமும், ஆசையும், ருசியும் உண்டாகின்றன! எனக்குக் கிடைத்த ஸ்திரியினிடந்தான் அவன் தன் காம விளையாட்டுக்களைச் செய்து கொண்டு களித்துத் தன் இராப் பொழுதைக் கழித்து விடுகின்றான்! தன்னிஷ்டப்படி அவன், அந்த ஸ்திரியினிடம் இன்பங்களை அனுபவித்து வரட்டும்! அது இருக்கட்டும்.

இப்போது கிரேக்கர்கள் ட்ராய் நாட்டாருடன் பொருது வருகின்றார்களே! இதற்கு என்ன காரணம்? அதை நீ சொல்லு கேட்போம்! ஒரு ஸ்திரீயை முன்னிட்டுத் தானே, இந்தக் கடற்கரைக்கு ஸமஸ்தமான ஜனங்களும் திரளாகக் கூடி வந்திருக்கின்றனர். அவள் விஷயமாகத் தங்களுக்கு ஏற்பட்ட பழிக்குப், பழி வாங்கவேண்டுமென்ற ஆவல்தானே அவர்கள் அனைவரையும் இங்கு இழுத்து வந்துள்ளது! உத்தமமான குணங்களும் வித்யா விநய ஸம்மன்னங்களும், அவைகளுக்கு ஏற்ற எழில் வாய்ந்த முகவடிவும், அதிரிதேசனுக்குத்தான் பிரியமாக இருக்குமோ? அவனது மனத்தைத்தான் அவை கவருமோ? வேறு ஒருவருக்கும் அவற்றில் ருசியிருக்காதோ?

ஒரு ஸ்திரியானவள் ரூபலாவண்ணியங்களில் சிறந்தவளாகவும், தனது அன்பிற்குப் பாத்திரமானவளாகவும் இருந்தால் அவளை அடையவேண்டுமென்று, புத்தியும். பெருந்தன்மையுமுள்ள ஒரு மனிதன் ஆவல் கொள்வானன்றோ? அதில் ஏதேனும் ஐயம் உண்டோ? நான் காதல்கொண்டிருந்த அந்த அழகி ரூபாலாவண்ணியங்களிலாவது நற்குணங்களிலாவது சிறிதும் குறைந்தவளல்ல! அவள் என் அடிமையாகவேயிருந்தாள். என்றாலும் நான் அவளை என் முழுமனதுடன் போற்றி வந்தேன். அந்த ஸ்திரியை யிழந்தபின் எனக்கு இந்தப் பரிசுகள் சிறிதும் ருசியில்லை. நான் அவற்றைத் திரணமாக மதிக்கின்றேன். வெறுத்துத் தள்ளுகின்றேன்! ஒருமுறை ஏமாந்து போனபின், மறுமுறையும் நான் அரசர்களுடைய வார்த்தைகளில் நம்பிக்கை வைப்பேனா? யுலிஸ்ஸீஸே! இதுவே நான் சொல்லும் மறுமொழி! இனிமேல் நடக்க வேண்டிய காரியங்களை உங்களது அரசன் உங்களுடன் கலந்து யோசித்துக் கொள்ளட்டும்!

இந்தக் கையினால் ஆக்கக்கூடிய உதவி, அவனுக்கு இனிமேல் என்னத்திற்கு? அதனால் அவனுக்கு என்ன பிரயோசனம் உண்டாகப் போகிறது! மனிதர்கள் ஒருவராலும் அசைக்க முடியாத அரண்கள் அவனுக்கு இல்லையா? அவை விசேஷமாக இருக்கின்றனவே! கட்டுக் காவலும் உடைய அவனுடைய போர்க் கப்பல்களைச் சுற்றிலும் அவன் மதில்களையும், வேலிகளையும் கோட்டை கொத்தளங்களையும் கட்டிப் பிரம்மாண்டமான ஓர்

அகமையுந் தோண்டியிருக்கிருனல்லவா? அவனுக்குப் பயப்படச் சிறிதும் காரணமில்லையே! அவன் செய்திருக்கும் அந்த அதியற்புதமான ஏற்பாடுகளின் முன்னுல் பிரியத்தின் மகன் ஒருவனுடைய கோபதாபங்களும், வேகமும், எம்மாத்திரம்! அவை அவனைத் தடுத்தே விடவேண்டுமல்லவா?

நான் கிரீஸுக்குப் பரிந்து சண்டைகள் செய்து வந்த காலத்தில், இந்த ஹெக்டர் ஒருக்காலும் பிரமாதமான காரியங்கள் ஒன்றுமே செய்துவிடவில்லை! இப்போது அவன் என்ன செய்து விடப் போகிருன்! அச்சமயம், அவன் ட்ராய் எல்லைக்குள்ளே இருந்து வந்தான். அதன் எல்லையைக் கடந்து வெளியே வரவில்லை! இலியன் கோட்டை வாயிலிலும் கூடத் தன் முகத்தைக் காட்டுவதற்கு அவனுக்குத் தைரிய மில்லாமற் போயிற்று! எங்கு அகிலேசன், அங்கு வந்துவிடுவானே என்றே பயந்திருந்தான், பதுங்கிக் கிடந்தான்!

ஆனுல், அங்கு அவன் ஒருமுறை வந்தது நிஜந்தான்! அப்போது அவனுக்குக் கொஞ்சம் நல்ல காலம் இருந்தது. அதனுல், அவன் உயிருடன் தப்பினுன். பிழைத்தான்! இப்போது எனக்கும் அவனுக்கும் ஒருவிதமான விரோதமும் இல்லை. அவையனைத்தும் ஒழிந்தே போய் விட்டன!

நாளைய தினம் நாங்கள், தெய்வங்களின் சகாயத்தைக் கோரிக்கொண்டு எங்களது கப்பலின் மேல்பாகத்தில், அவற்றின் பாய்மரங்களை விரித்து உயரத் தூக்கிக் கட்டிப் பிரயாணஞ் செய்வோம். ஹெல்லஸ்பாண்டில், எங்கள் துடுப்புகள் நீரைக் கிழித்துக்கொண்டு போகும் சப்தம் உங்கள் காதுகளில் விழும். ஹெல்லஸ்பாண்டும் எதிரொலி செய்யும். நெப்தியூன் பகவான் மாத்திரம் எங்களுக்குக் கிருபை செய்து தம் காற்றுக் கணங்களை எங்களுக்கு அனுகூலமாக அடிக்கும்படி செய்வாராஞல் நாங்கள் மூன்று நாளில் பித்தியா நாட்டையடைந்து விடுவோம். அந்த நாட்டார் முகமலர்ச்சியுடன் எங்களை வரவேற்பார்கள். அவர்கள் தங்களது பிரியனுன அகிலேசனுக்கு, அவன் இந்தப் பாழான கடற்கரையை நோக்கிப் புறப்படுமுன் அவர்களிடம் ஒப்பித்து வந்த சகலமான ஆஸ்திகளையும் திருப்பிக் கொடுப்பார்கள்.

நெடுநாளாக நடந்துவரும் இந்த யுத்தத்தில் நான் வாரி வழித்துச் சேகரித்துச் சேர்த்து வைத்திருக்கும் சகலமான வஸ்துக்களையும் நான் அங்குக் கொண்டு செல்வேன். பதம் செய்து உருக்கிய செம்பொன்னையும் பளிச்சென்று மின்னும் பித்தளைகளையும் ஆகிய இவைகளையும் நான் பிடித்துக்கொண்ட கட்டழகிகளையும் என்னிடமிருந்து அபகரிக்கப்படாமல் மீந்திருக்கும் வேறு சாமான்களையும் கொண்டு செல்வேன். உங்களது வணங்காமுடி மன்னன் எனக்கு ஒரே ஓர் உத்தமமான வெகுமதியை யளித்தான். லீர்னிஸ்ஸியாவிலிருந்து வந்த கட்டழகியாகிய அந்த

அடிமைப் பெண்ணை அவனே திரும்பப் பிடுங்கிக்கொண்டு விட்டான்.

ஆதலால் நான் சொல்லும் வசனங்களை அவனிடஞ் சென்று சொல்லுங்கள். அவற்றைக் கிரேக்கர்கள் அனைவரும் கேட்கும்படி உரத்துச் சொல்லுங்கள். இழிந்த கோழை மனதுடன் பயந்து நடுங்கும் அந்தப் பாவியைப் பதரென்று மதிக்கும்படி அவர்களுக்குப் போதனை செய்யுங்கள்.

மடத்தனத்தையே தனது ஆயுதமாகக் கொண்டு அவன், மனித வர்க்கம் அனைத்தையுமே பகைத்து வருகின்றான். தனக்குக் கீழ்ப்பட்டுள்ள அனைவரையும் மோசஞ் செய்து ஏமாற்றுவதற்காகப் புதிதுபுதிதான உபாயங்களையும் ஆலோசித்து வருகின்றான். அவர்கள் எல்லோரும் கேவலம் அடிமைகள் என்றே மதிக்கின்றான்! அவனுக்கு வெட்கம் நாணம் என்பது ஒன்றுமே கிடையாது! அப்படியிருந்தும் அவன் என் கண்முன்னால் வரவும் நடுங்குகின்றான். என் முன்னால் வருவதற்கு அவனுக்குச் சிறிதும் தைரியம் கிடையாது. அப்படி வந்தால் அவன் சாவது உறுதிதான் அல்லவா?

அவன் சொல்லியனுப்பிய பேச்சு வார்த்தைகளையும் உபசாரங்களையும் நான் உதறியெறிந்து விட்டதாகச் சொல்லுங்கள். அவற்றை நான் மறுத்து வெறுத்துவிட்டதாகச் சொல்லுங்கள். அவனது உறவு எனக்கு வேண்டவே வேண்டாம்! அவனுடைய யோசனைகளையும் நான் கேட்கவில்லை. அவனது யுத்தத்திலும் நான் சேரமாட்டேன். ஒருமுறை அவனால் மோசம் போனேன், அதுபோதும். இரண்டாந்தரமும் மோசம் போவேனால், அது எனது தோஷமேயாகும். நான் அவனுடைய யோசனைகளுக்குச் சிறிதும் இணங்கேன்! அது நிச்சயந்தான்!

அவனுக்குச் சிறிதும் விவேகம் என்பது இல்லை. அந்த மூடாத்மாவான மஹாராஜாவுக்கு இருந்த புத்தியையும், நியாய அநியாய விவேகத்தையும், ஜோவ் தேவர் அபகரித்துக்கொண்டு ஓடிப்போய் விட்டார். அவன் வெறிகொண்டு, தனது மனம் போன படி அங்குமிங்கும் ஓடித்திரிகின்றான். அப்படியே ஓடித் திரியட்டும்.

அவன் தருவதாகச் சொல்லும் பரிசுகளெல்லாம் எனக்கு வெறுப்பையே உண்டாக்குகின்றன. அவனைப்போன்ற அரசர்களெல்லாம் ஒரு கௌரவமுள்ள மனிதன் முன்னால் நிற்கும் அடிமைகளுக்குச் சமான மாவார்கள்! அவன் தன்னிடமுள்ள சகலமான வஸ்துக்களையும் கொடுப்பதாகச் சொல்லட்டும். நான் மற்றையோரிடமிருந்து பலவந்தமாகப் பறித்துப் பிடுங்கிக் கொள்ளையடித்த சாமான்களையும் கொடுப்பேன் என்று சொல்லட்டும்! ஜனஸ்மிருத்தியுள்ள ஆர்க்கோமினியன் பட்டணத்தின் மலைகளை நிகர்த்து உயர்ந்த பொன்னலைகள்போல் குவிந்துள்ள திரவியங்கள்

அனைத்தையும் தருவேன் என்றும் சொல்லட்டும். ஈஜிப்ட் மைதானத்தில் இந்த உலகத்திற்கே ஓரரசியாக விளங்கும், ஒப்பற்ற தீபியின் கோட்டைக்குள் மலிந்து கிடக்கும் தனங்களையுங் கொடுப்பேன் என்றும் சொல்லட்டும்! அந்தத் தீபி, ஒரு சாமான்யமான பட்டணமோ? அது, ஆயிரக்கணக்கான இராஜ்யங்களைச் செயித்து, அவற்றின்மேல் தனது வெற்றிக் கொடியை நாட்டி யிருக்கின்றதல்லவா? அதன் சேனைகள் நூற்றுக்கணக்கானவை, அதன் கோட்டைவாயில்களின் வழியாக தடதட வென்று சதா வெளியேறிக் கொண்டிருக்கின்றன! ஓரோர் கோட்டையின் அகன்ற வாயிலிலிருந்தும் இருநூறு குதிரை வீரர்களும் இருநூறு இரதங்களும், யுத்தத்திற்காக வெளியேறி கொண்டே இருக்கின்றன அல்லவா! இவ்வாறு லஞ்சங்களின் மேல் லஞ்சங்களை யடுக்கிக் குவித்து வந்தாலும் வயல்களில் குவித்துக் கிடக்கும் புழுதிகளிலும் கடற்கரையிலுள்ள மணல்களிலும் மிகுந்த ஸங்கியை யுடைய பரிசுகளையே வழங்கி, அவன் எனது நட்பைக் கோரினும் நான் அவைகளனைத்தையும் வெறுத்தே தள்ளுவேன்! அந்தப் பரிசுகளைக் கொடுப்பவன் ஒரு மஹா பாவியல்லவா? பெரும் பாதகனல்லவா? அதிரிதேசனது புத்திரி தனது மஞ்சத்தின் அருகில் வருவதற்கும் அகிலேசன் இடங்கொடான். அது நிச்சயமான சங்கதிதான்! அது சரியான சம்பந்தமாகாது! பொன்போன்ற வீனஸைப் போலவே, அவள் ஒருவனது மனதைக் கவர்ந்தாலும், அல்லது சித்திரவேலைகளில் பாலாஸ்தேவியும் பழித்த கைப் பழக்கமுள்ளவளாக யிருந்தாலும் நான் அவளை ஏற்றுக் கொள்ளமாட்டேன். அந்த அதியுன்னதமான சம்பந்தத்தை, அவனுக்கும் மிஞ்சிய கௌரவமுள்ள ஒரு கிரேக்கன் செய்து கொள்ளட்டும். ஒரு கொடியோனது வம்சத்தில் சம்பந்தம் செய்து கொள்வதை நான் ஒரேயடியாய் வெறுக்கின்றேன். தேவர்களது கிருபையினால் நான் மாத்திரம் எனது உயிருடன் என் இராஜ்யங்களுக்குத் திரும்பிச் சென்று சேர்ந்து விட்டேனானால், அப்போது எனது பிதாவான பிலிப்ஸ் மஹாப் பிரபு எனக்குத் தகுந்த ஓர் இல்லக்கிழத்தியை நியமித்து விடுவார்! அங்கு திவ்வியமான ரூபலாவண்ணியங்களுடன் விளங்கும் நெஸ்ஸாலியஸ் அணங்குகள் அனேகர் இருக்கின்றனர்! அவர்களை நான் மனைவிகளாகக் கொள்ளவேண்டும் என்றும் தாங்கள் என்னுடன் சம்பந்தஞ் செய்து கொள்ளவேண்டும் என்றும் அவளுடன் போட்டி போடக் காத்திருக்கும், இராஜாக்களும் அங்கு அநேகர் உளர். அங்குச் சென்று அன்புடனும் பிரியத்துடனும் எனக்குக் கொடுக்கப்படும் மனைவியருடன் கூடி, நான் எனது வாழ்நாளைச் சுகமாகக் கழித்து வருவேன். எனக்குப் பாரம்பரியமாக வரும் ஆஸ்திகளை அனுபவித்துக்கொண்டும், அவற்றிலேயே திருப்தியடைந்தவனாகவும், அதிக ஆசையில்லாதவனாகவும், நான் மஹா பாக்கியவானாக வாழ்ந்து வருவேன். அங்கு இந்த யுத்தமும் சண்டை சச்சரவுகளும், எனது காதுக்கு எட்டவே எட்டா. மனித ஜன்மத்தில் ஒருவன் அனுபவிக்கக் கூடிய சகலமான சுகங்களையும் அனுபவித்துக்கொண்டே நான் அங்கு எனது காலத்தைக் கழிப்பேன்! பொற்குவியல்களைக்

கொடுத்துப் பிராணனை விலைக்கு வாங்கமுடியுமா? முடியாதல்லவா?

அப்பாலோ தேவர் பித்தியாவில் புதைத்து வைத்திருக்கும், கணக்கற்ற சகலமான நிதிகளோ அல்லது ட்ராய் நாடானது சண்டை சச்சரவுகளின்றி வெகு அமைதியாகவும் அதிகார ஆடம்பரங்களுடனும் ஆட்சி செலுத்தி வருகையில் சேகரித்துச் சேர்த்துக் குவித்து வைத்த திரவியங்களோ, நமக்கு ஒரே ஒரு நாளைய ஆயுளைக் கூடத் தரவல்லனவல்ல! ஆட்டு மந்தைகளையும் மாட்டு மந்தைகளையும், ஆஸ்திகளையும், புழுதி நிறைந்துள்ள மைதானங்களில் சவாரி செய்வதில் இணையற்ற வேகமுள்ள குதிரைகளையும் நாம் இழந்து போய் விட்டால், அவற்றை நாம், நம் புஜபலபராக்கிரமங்களினுல் திரும்பப் பெற்று விடலாம்! ஆனுல் நமக்கு ஜீவாதாரமாக விருந்த ஆவியானது நம் உதடுகளை விட்டுப் பறந்து போய்விட்டால், அது பேச்சோ மூச்சோ இன்றி இறந்து போனவர்களை எழுப்புவதற்காகத் திரும்பி வருவதில்லை!

தெடீஸ் தேவியானவர் வெகு நாளைக்கும் முன்னதாகவே என் அதிர்ஷ்டங்களை எனக்குத் தெளிவாகச் சொல்லி விட்டார்! நீடிய ஆயுளோ அல்லது அழியாப் பெரும் புகழோ எது வேண்டும் என்று கேட்டார். நான் இங்கு இந்த துரோஜர்களது நகரத்தின் முன்னுக இருந்து வரத் தீர்மானித்து விடுவேனுகில் எனக்கு ஆயுள் குறுகிவிடும், ஆனுல் அழியாத பெரும்புகழ் உண்டாகும் என்றும், அவ்வாறின்றி நான் என் சொந்த தேசத்திற்குத் திரும்பிச் சென்று விடுவேனுகில், அழியாப் புகழை இழப்பேன் ஆனுல் நான் நெடுநாள் ஜீவித்திருப்பேன், என்றும் சொன்னுர். நான் ஆசைப்பட்டுக் கேட்டு வாங்கி வந்த வரம் தப்பு என்பதை நான் இப்போது தான் நன்ருகத் தெரிந்து கொண்டேன். ஆதலால் கிரேக்கர்கள் எல்லோரும் என்னைப் போலவே மோசம் போகாமல் தேவர்களே! காத்து வாருங்கள்! இந்த ட்ராயை தாங்கள் ஜெயித்து விடுவோம் என்ற ஆசையை ஒழித்துவிட்டு, உடனே சொந்த நாடுகளுக்குச் சென்று, அங்குச் சுகமாகத் தங்களது காலத்தைக் கழித்து வருமாறு தீர்மானித்து விட வேண்டு மென்றே நான் அவர்களுக்கு முன்னுடியே எச்சரித்து உபதேசமும் செய்கின்றேன்! இதை நீங்கள் அவர்களுக்குச் சொல்லுங்கள்!

ஜோவ் தேவர் விண்ணுலகத்திலுள்ள தமது ஸ்தானத்தில் இருந்த வண்ணம் தம் கைகளைத் தூக்கிக் கொண்டு தாம் துரோஜர்களது கக்ஷியிலேயே இருந்து வருவதாக வல்லவோ சொல்லி வருகின்ருர். அவ்வாறு அவர் சொல்லிவரும் வார்த்தைகளை உறுதியாய் நம்பிய துரோஜர்கள் நாளுக்கு நாள் தைரியம் மேலிட்டவர்களாகவும் மேன்மேலும் புகழ் எய்தியவர்களாகவுமே விளங்கி வருவதை நாம் நமது கண்ணுல் பார்க்கின்ருேம்! ஆதலால் நீங்கள் திரும்பிச் சென்று, நமது தீர்மானம்

இன்னதென்பதைக் கிரேக்கர்களுக்குச் சொல்லுங்கள். எல்லோரும் நன்ருய் யோசனைகளேயுஞ் செய்யுங்கள். உங்கள் சேனைகளனைத்தையும் ஒன்ருய்த் திரட்டுங்கள். எல்லோரும் ஒன்ருய்ச் சேர்ந்து, உங்களாலான உபாயங்கள் எல்லாம் செய்து ஒத்துழைத்து, உங்கள் கப்பல்களேயும் சேனைகளேயும், தலேவர்களேயும் தீக்கிரையாக்குவதினின்றும் காப்பாற்றுங்கள். ஒரு தந்திரம் அல்லது உபாயம் பலிக்காமல் போனுல் வேறு உபாயத்தையோ, தந்திரத்தையோ, செய்யுங்கள். அவை பலிக்கலாம். ஆனுல் ஒன்று! அகிலேசன் மாத்திரம், இதுவரை தோல்வியடையாதவனுகவே விளங்கி வருகின்ருன்! அவனே ஜெயிப்பதற்கு ஒருவராலும் ஆகவில்லே. உங்களது ஜெபமும் அவனிடம் பலிக்கவில்லே. இனி நீங்கள் திரும்பிச் செல்லலாம்! இதுதான் என் மறுமொழி! என் மொழிகளே நன்ருக ஆராய்ந்து கொள்ளுங்கள்!

பெரியவரான பீனிக்ஸ் மாத்திரம், இன்றிரவு இங்கு இருக்கட்டும். அவர் வெகு நாளாகக் கப்பல் துறைகளில் உழைத்துக் களேத்துப் போனவர்! மஹா விருத்தர்! அவரது தலேயும் நன்ருக நரைத்துப் போயிருக்கின்றது. உற்ருரும், உறவினரும் உள்ள பித்தியா நாட்டில் அவர் தமது கடைசிக் காலத்தைக் கவலேயின்றிக் கழித்துத் தமது கண்ணே மூட வேண்டும்!

என்ருலும் அவர் தமது இஷ்டப்படியே செய்யட்டும். தமக்கு இஷ்டமானுல் அவர் இங்கேயே இருக்கட்டும், இல்லேயென்ருல் உன்னுடன் திரும்பி வரட்டும், அவர் மஹா விருத்தர்! அவரை நாம் பக்தியுடன் பாராட்டி வர வேண்டும். அவர் தமது இஷ்டப்படியே செய்யட்டும்! அவரை நான் கட்டுப்படுத்தவில்லே'' என்ருன்.

இவ்வாறு பிலியஸ்ஸின் புத்திரன் தன் வார்த்தைகளேச் சொல்லி முடித்தான். அவனேச் சூழ்ந்திருந்த தலேவர்கள் அனேவரும் மௌனத்திஞல் கவரப்பட்டவர்களாகவும், துயரக் கடலில் ஆழ்ந்தவர்களாகவும் அந்தக் கொடிய கண்டிப்பான மறுமொழியைக் கவனமாகக் கேட்டு வந்தனர்.

அதன்பின் பீனிக்ஸ் எழுந்தார். அவரது வெள்ளே வெளேரென்ற தாடியின் வழியே துக்கக் கண்ணீரானது மாலே மாலேயாக வழிந்து வந்தது. கிரேக்கர்களுக்கு உண்டாகிவிட்ட கஷ்டங்களே நினேத்து வருந்திஞர். தாம் அடைந்து விட்ட துக்கத்தை அடக்க முடியாமல் அவர் பின்வரும் வசனங்களேத் தழுதழுத்த குரலில் உரைத்தார் :—

"அமரருக்குச் சமமான அகிலேசா! நீ திரும்பித்தான் போய்விடுவாயா? நம் கோஷ்டியாரனேவரும், காயம் பட்டு இரத்தம் வடித்து வரவும், நம் கப்பல்களேயெல்லாம் தீக்கிரை

யாகவுமே விட்டு விட்டு நீ திரும்பிச் செல்லத்தான் தீர்மானித்து விட்டாயா? சிறிதும், தயவு, தாட்சண்ணியம் என்பன இல்லாமல் நீ, உன் மனதில் இவ்வாறு கொடிய கோபத்திற்கு இடங் கொடுத்து விட்டால், உனது நண்பனுன பீனிக்ஸ், உன்னுடன் இங்கே தங்கியிருக்க எவ்வாறு சம்மதிப்பான். மஹா ராஜரான பீலியஸ், பித்தியாப் பிரதேசத்திலிருந்து உன்னை அக்கேயன் கோஷ்டியாரிடம் அனுப்பி வைத்த பொழுது, நீ அதிபால்யனுக விருந்தாய். உனக்கு, அப்போது ஆழ்ந்த யோசனைகள் செய்வ தற்குச் சிறிதும் திறமை யிருக்கவில்லை. யுத்தகளத்தில் நேரக் கூடிய ஆபத்துக்களையும் நீ அப்போது அறிந்தவனல்ல! அது உனக்கு ஒரு புதிய காரியமாகவே யிருந்தது. யுத்த முறைகள் அனைத்தையும் உனக்குக் கற்பிக்கவும், சபைகளில் சிறந்து விளங்கும் வழிகளையும் யுத்தகளத்தில் எவ்வாறு துணிவுடன் காரியங்களைச் செய்ய வேண்டும் என்பனவற்றை உனக்குப் போதிக்கவும், அவர் எனக்குக் கட்டளை யிட்டார். ஆதலால் நான் ஒரு கணமேனும் உன்னை விட்டுப் பிரிந்து போகும்படி செய்து விடாதே! நாம் எக்காலத்திலும் இணைபிரியாமல் இருக்க வேண்டும், எவ்விதமான கஷ்டம் வந்தாலும் நாம் சேர்ந்திருத்தல் வேண்டும். என் இளமையில் எனது காளைப் பருவத்தில் நான் வெகுகளையுடன் விளங்கி வந்தேன். அப்பொழுது அழகில் சிறந்த சுந்தரிகளும், எழில் வாய்ந்த பெண்மணிகளும் நிறைந்த கிரீஸ் தேசம் முழுவதுமே என்னைக் கண்ணுற்று, மனங் கலங்கியது! அக்காலத்தில் எனக்கிருந்த முகக்களையையும் வடி வழகையும் இப்போது என்னைப் படைத்த கடவுள் எனக்குத் தருவதாக விருந்தாலுங்கூட, நாம் இருவரும் பிரியாமலேயே இருந்து வரவேண்டும்!

எனது தகப்பனுர் தமது கிழப் பருவத்தில் என் தாயின் கையை உதறித் தள்ளிவிட்டு, ஓர் அன்னிய ஸ்திரியின் காம வலையில் சிக்குண்டு அவளே கதி! என்று அவளது காலடியில் கிடந்தார். அப்போது இளையோனுக விருந்த நான் என் தாயின் வேண்டு கோளுக்கிணங்கி, அந்த இளங் கன்னிகையை எனக்கு வசமாக்கிக் கொள்ளவும், அவள் எனது தகப்பனது வசமாகாமல் இருக்கவும் என்னுலான முயற்சிகளை யெல்லாம் செய்தேன். அதைக் கண்டு என் தகப்பனுர் என்னிடம் தீராப் பகை கொண்டு "அசுரகணங்களே! துர்த்தேவதைகளே! இவன் சந்ததியற்றுப் போகட்டும்! இவனது மஞ்சம் மலடாகட்டும்,"! என்று எனது தலையின் மேல் இடிபோன்ற ஒரு பெருஞ் சாபத்தை யிட்டார். அந்தப் பாழாய்ப் போன ஜோவ் தேவரும்!—அவர் என்றும் நரகத்திலேயே அழுந்தி உழன்று வருவாராக!—பாதாளலோக வாசிகளான பேய் பிசாசுகளும் தயவோ, தாட்சண்ணியமோ, இரக்கமோ ஒரு சிறிதும் இல்லாத துபிராசப்பினுவும் என் தகப்பனுரது சாபத்தை ஆமோதித் தனர். அதை எண்ணி எண்ணி கவலைப்பட்டு உருகி, எனது ஏழை நெஞ்சம் புண்ணுகி விட்டது. இன்னது தான் செய்யத் தக்கது என்று தெரியாமல் தடுமாறுகின்றேன்!

ஆஹா ! தேவர்களே ! எனது தந்தையிடம் அன்பில்லாமல் நான், இந்தப் பெரிய பாவத்தைச் செய்து விட்டேன். என்ன பாவஞ் செய்து விட்டேன்! அப்போது ஓர் சமயம் ஓர் ஈட்டியைக் கொண்டு என் தகப்பனுரது மார்பைக் குத்தி அவரைக் கொன்று விடலாம் என்று நினைத்தேன். அந்தக் கெட்ட எண்ணம் வேண் டாம் என்று ஒரு கருணையுள்ள தெய்வம் என்னைத் தடுத்து விட்டது. அதன் பின் நான் எனது ஊரைவிட்டு ஓடியே விடலாம் என்று யோசனைகள் செய்தேன். அந்த யோசனைகள் வேண்டாம் என்று சினேகிதர்கள் என்னை வெகுவாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர். நான் அவர்களுக்கு இணங்கவில்லை. ஓடியே தீருவேன் என்று பிடிவாதம் பண்ணினேன். தங்கள் தூய நல்ல வார்த்தைகள் பயனற்றுப் போவதைக் கண்டு அவர்கள் என்னைப் பலவந்தஞ் செய்து நிறுத்தி விட்டனர். அவர்கள் ஆட்டுக் கொழுப்பையும் கறுத்த காளையின் மாமிசத்தையும் புஷ்டி யான பன்றியின் இறைச்சியையும் தின்னவும், கமகமவென்று மணக்கும் சாருயங்களைக் குடிக்கவும் தினந்தோறும் விருந்துகளை நடத்தினர். என்னைக் காத்துவரப் பலமான காவல்காரர்களை நியமித்தனர். ஒன்பது நாள், இரவெல்லாம் சிறிதும் இமைகொட் டாமல் என்னைக் காத்து வந்தனர். எனது அரண்மனையில் கூரைகளின் மேலும் வாசல்களிலும் தீபங்கள் இமைவிடாமல் மலைபோல் எரிந்து கொண்டிருந்தன. அதனுல் அந்தக் கூரை களும் வாசல்களும் பளிச்சென்று விளங்கி வந்தன. ஆனுல் பத்தாம் நாள் நான் ஒருவருக்கும் தெரியாமல் எனது அரண்மனை யின் கதவுகளையுடைத்துத் திறந்தேன். அப்போது இராத்திரி காலமாக விருந்தது. அது எனக்கு அனுகூலமாக விருந்ததினுல் கோட்டை மதில் மேல் ஏறித் குதித்தேன் !

அதன் பின் நான் தேச சஞ்சாரஞ் செய்ய ஆரம்பித்தேன். அகன்ற விசாலமான கிரீஸ் தேசம் முழுவதும் அலைந்து திரிந்தேன். கடைசியாக அந்த யாத்திரைகளைப் பித்தியாவில் முடித்தேன். அந்த தேசத்து அரசனது அரண்மனையில் தங்கினேன். உன் தகப்பனுர் என்னை முகமன்கூறி வரவேற்ருர். தனக்கு நானும் ஒரு மகன் என்று என்னை மதித்து என்னைப் பாராட்டிச் சீராட்டி ஞர். எனக்குப் பலவிதமான வெகுமானங்களை யளித்தார். யதேஷ்டமான திரவ்யங்களையும் பூமிகாணிகளையுந்தந்தார். இவ்வாறு எனக்குப் பெரியஅனுக்கிரஹங்களைச் செய்தார். அது முதல், மஹா பலசாலிகளான தோலோப்பியர்களும், சமுத்திரக் கரையோரமுள்ள தேச ஜனங்கள் அனைவரும், எனது அதிகாரத் துக்கு உட்பட்டு எனக்குத் தலை வணங்குகின்றனர். அவர் எனக்குச் செய்த விசேஷமான வெகுமானங்களுக்குக் கைம்மாருக நான் உன்னுடன் அன்பு பூண்டு, உனது இளமையில் உனக்கு ஞானுப்பியாசங்கள் செய்து வந்தேன். நீ ஒரு மஹா வீரன் தான். என்ருலும் உபதேசங்களால் தான் உனக்கு மனவுறுதியும் தைரியமும் உண்டாயின. நான் முதன் முதலாக உன்னைக் கையாலெடுத்தபொழுது ஒரு சிறு குழந்தையாக விருந்த உன்னை நான் ஒரு சுத்த வீரனுக மாற்றினேன். பால்யனுன நீயும்

என்னிடம் பிரியமாகவே யிருந்தாய். நான் உன்னைத் தூக்கிக் கொண்டே அங்குமிங்கும் திரிந்தேன். உன்னைச் சுமந்தது எனக்கு மிகவும் இனிமையும் சந்தோஷமுமாகவே யிருந்தது. நீ எனக்கு ஒரு பாரமாகத் தோன்றவில்லை. அப்படி நான் உன்னைக் கையில் எடுத்துச் செல்லாத சமயத்தில், நீ என் முழங்கால்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டேயிருப்பாய். ஒரு கணமும் பீனிக்ஸைவிட்டு அசையாமல் அவனிடமே நின்றும் விடுவாய். பீனிக்ஸ் தன் கையால் எடுத்து ஊட்டிய சாதம் தவிர, வேறு சாதம் ஒன்றும் உனக்குப் பிடியாது. வேறு யாராயினும் உனக்குச் சாதம் ஊட்ட வந்தாலும் நீ அவர்களைக் கண்ணெடுத்தும் பாராய்!

உனது இளம் பருவத்தில் நான் உன்னைக் கட்டியணைத்து வந்ததையும், உனக்கு வேண்டிய இதங்களைச் செய்து வந்ததையும் உன்மேல் காற்றடிக்கவும் சகியாமல் கவனித்து வந்ததையும் நான் சொல்ல வேண்டியது இல்லை, அனுவசியம். தேவர்களெல்லாம் தனக்கு விதித்திருந்த சாபத்தை மாற்றியே விட்டனர் என்று நினைத்து பீனிக்ஸ் உன்னைக் கவனித்துக் காத்து வந்தான். ஒரு தகப்பன் எய்தும் சந்தோஷத்தையும் அடைந்து வந்தான். நீ நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அழகுடன் விளங்கிக் கொண்டும், கல்வி கேள்விகளில் தேர்ந்தும் நற்குணங் களிலும், ஒழுக்கத்திலும் தினே தினே மேலும் சீரடைந்தும் வரு வதைக் கண்ணுற்று நான் என் முயற்சிகளுக்குத் தகுந்த பலன் உண்டாகி விட்டதென்றே களித்து வந்தேன். நான் எனது கிழப் பருவத்தில் வெள்ளி போன்ற மயிருடன் நரைத்தவனாக விளங்கு கையில், நீ எனக்கு ஓர் உபகாரமாகவும் ஆதரவாகவும் ஊன்று கோலாகவும் விளங்குவாய் என்று நினைத்தேன்.

ஆதலால் நீ இந்தக் கோபத்தை விட்டுவிடு. இதனால் உனக்குக் கேடுதான் உண்டாகும்! ஒரு நன்மையும் உண்டாகாது. உனக்கு இது வேண்டாம். ஒரு சுத்த வீரனுக்குக் கடினமான மனது தகாது! அது அவனுக்கு அழகாகாது! மனிதர்கள் எல்லோ ரையும் விட தேவர்கள் தான் பெரியவர்கள். அவர்கள் ஞான மூர்த்திகள். என்றாலும் அவர்களுங்கூட நாம் செலுத்தும் காணிக் கைகளிலும் நோன்புகளிலும் நைவேத்தியங்களிலும் திருப்தி யடைகின்றனர். அபசாரங்களைச் செய்துவிட்ட ஒரு மனிதன் மேற் சொல்லியபடி காணிக்கைகளையும் நைவேத்தியங்களையும் செலுத்தி, அந்தத் தேவர்களின் தயவைச் சம்பாதித்து விடுகின் றான். தினந்தோறும் நாம் செலுத்தும் பிரார்த்தனைகள் அன்றன்று நாம் செய்த பாவங்களைப் போக்கி விடுகின்றன,

பிரார்த்தனைகளெல்லாம் ஜோவ் தேவரின் புத்திரிகள். அவை தேவலோக பரம்பரையைச் சேர்ந்தவை. அவைகளுக்குக் கால் நொண்டியாகவும் முகங்கள் சுருங்கி மடிந்து போயுமிருக்கும், ஆயினும் அவை தாழ்மையான முகக்குறிப்புடனும், களைத்துப் போன கண்பார்வையுடனும், சிறிதும் இடைவிடாமல், அதர்மம் பறந்து செல்லும் இடமெல்லாம் அதைத் தொடர்ந்தே செல்லு கின்றன.

அதர்மமானது வெகு வேகமுடையது. ஒருவருக்கும் தலை வணங்காதது. வரம்புகளுக்கு அடங்காதது. அது, இந்தப் பரந்த விசாலமான பூலோகம் முழுவதுமே நிறைந்து வியாபித்திருக்கிறது. அது மனிதர்கள் அனைவரையும் தனது காலால் மிதித்துக் கூத்தாடுகின்றது. அப்போது பிரார்த்தனைகளெல்லாம், உலகத்திற்கு அதர்மத்தினால் நேர்ந்துவிட்ட கொடுமைகளை விலக்கவும், உலகத்திற்கு ஆறுதல்களைச் செய்யவும், அதர்மத்தின் பின் மெதுவாக நகர்ந்து செல்லுகின்றன. சர்வ வல்லமையுள்ள ஜோவ் தேவரின் புதல்விகளுக்கு யார் செவி சாய்க்கின்றார்களோ அவர்களுடைய பிரார்த்தனைகளை நிறைவேற்றுமாறு அப்புதல்விகள் விண்ணுலகத்தில், சிங்காதனத்தில் அமர்ந்திருக்கும் ஜோவ் தேவரை வேண்டிக் கொள்வர். எந்த மனிதனாவது, அவர்களை அலட்சியம் செய்து தள்ளி விடுவானானால், அப்போது மஹா தேவரான ஜோவ் பகவான் தம் புதல்விகளுக்குப் பரிந்து வந்து பழிவாங்கி விடுகின்றார். அவரது பரிவாரத்திலுள்ள மிகக் கொடிய பழிவாங்கும் குட்டி தெய்வங்கள் அவரது ஆணையை மேற்கொண்டு ஈரமில்லா நெஞ்சர்களான மனிதர்களைத் தகிப்பதற்காக, விண்ணுலகத்தை விட்டுப் பூவுலகிற்கு இறங்கி வந்து விடுகின்றன. ஆதலால் ஒரேயடியாய்த் தலைகால் தெரியாமல், கோபங்களுக்கு இடங்கொடுத்து விடாதே! உலகத்தில் உண்டாகும் சண்டை சச்சரவுகளை நீக்கிச் சமாதானம் செய்வதிலேயே, கண்ணாகை விருக்கும், இந்தத் தேவர்களுக்கு இணங்கி நடந்து விடுவாயாக! ஜோவ் தேவரின் பின் தோன்றல்கள் சகலமான மரியாதைகளுக்கும் உரியவர்கள்!

அவரவர்களுக்கு ஏற்ற மரியாதைகளைச் செய்து வருவதினால், கொடியவர்கள் சாந்தமடைந்து வருகின்றனர்; வலியவர்களும், இணங்கித் தலைகுனிந்து விடுகின்றனர். நாங்கள் சொல்ல வந்த இந்த யோசனைகளை நீ ஆதரியாமல் தள்ளிவிடுவாயானால், ஏற்கனவே கடுங்கோபமும் மனக்கொதிப்புங் கொண்டுள்ள அரசனுக்கு உன்னிடமுள்ள வெறுப்பு முதிர்ந்துவிடும். அது நிச்சயந்தான். அவன் அவ்வாறு உன்னிடம் பகை கொள்வது அவனுக்கு முறையே யாகும். அப்பொழுது, கிரீஸ்காரர்கள் அனைவருமே, ஒன்றாக வந்து, தங்கள் ஆயுதங்களனைத்தையும் தருவதாகச் சொல்லி, உனக்குப் பரிந்து பேசுமாறு உனது நண்பனான என்னைக் கேட்டுக்கொண்டாலும், நான் அந்தக் காரியத்தை ஏற்றுக் கொள்ளமாட்டேன்.

ஆதலால் கிரீஸ்காரர்களது கோஷ்டியில் உள்ள உத்தமர்களும், அதிகௌரவம் பொருந்தியுள்ளவர்களும் உன் மனதுக்கிசைந்தவர்களும், உன்னிடம் அன்பு மிகுதியாகயுடையர்களுமாகிய தூதர்கள் மூலமாக, நமது சேனைத் தலைவனான அரசன், உனக்குத் தகுந்த மரியாதைகளைச் செய்வதாகச் சொல்லியனுப்பி இருப்பதினால், நீ அந்த யோசனைகளைத் தள்ளிவிடாதே! எங்களது சிரமத்தை வீணாக்காதே!

எனது மகனே! பண்டைக்காலத்தில் நடந்த ஒரு விஷயத்தை நான் உனக்குச் சொல்லுகின்றேன் கேள், நம்

புராணங்களில் சொல்லியிருக்கும் ஒரு விஷயத்தை உதாரணமாகச் சொல்லுகின்றேன் கேள். நம் மூதாதைகள் எத்தன்மையினர் என்பதையும், அவர்களது பெருமை எத்திறத்தது என்பதையும், அவர்கள் முன்னுளில் தங்களுக்கு உண்டான பழிகளுக்கு எவ்வாறு பழிவாங்கி வந்தனர் என்பதையும் சொல்லுகின்றேன் கேள்.

காலிடோன் பட்டணமுள்ள, கற்பாறைகள் நிறைந்த மலையில் முன்னொருகால் ஈட்டோலியரிடமிருந்து காலிடோனைப் பிடித்தே விடவேண்டும், அதைத் தங்கள் வசம் ஆக்கிக்கொள்ள வேண்டுமென்று குரீஷியர்கள் மிகவும் பாடுபட்டனர். ஆனுல், அது அவர்களது கைவசம் ஆகக்கூடாது என்று ஈட்டோலியர்கள் அதைக் காத்து வந்தனர். இருகட்சியாரும் முறையே அதைப் பிடிக்க வேண்டும் என்றும், காத்துவர வேண்டும் என்றும் மும்முரமாக முயன்று வருகையில், அவர்கள் கோஷ்டியிலிருந்த வீரர்களில் கணக்கற்றவர் கண்ணை மூடினர்.

வெண்மேனியையுடைய ஸிந்தியா தேவிக்கு நைவேத்தியங்களும், பூசனைகளும் நடவாமல் போய்விட்டன. அதனுல் அவள் சீற்றங் கொண்டு சண்டையைக் கிளப்பிவிட்டாள். அவள் ராக்ஷஸ ரூபமான ஒரு பன்றியை ஈனியஸ் வனத்தின்மேல் செல்ல ஏவி விட, அது அங்குள்ள வயல்களில் விளைந்து பயிராகி அறுவடைக்குப் பக்குவமாக விருந்த கதிர்களைத் தரைமட்டமாக்கி அதைச் சேர்ந்த காடுகளையும், அழித்துப் பாழாக்கி விட்டது. அந்த மிருகம் தன்னை எதிர்த்து வந்த அரசர்கள் அனைவரையும் தன் கொம்புகளால் குத்திக் கிழித்துவிட்டது. கடைசியாக மஹா வீரனுன மீலிகர் என்பவன் அதை வெட்டி வீழ்த்தினுன். அப்போது அது ஒரு பெரிய மலைபோல் தன் உடலை வெகுதூரம் நீட்டிக்கொண்டு திடீரென்று கீழே விழுந்தது. அதன்பின் அதை யார் யார் பங்கு போட்டுக் கொள்வது என்னும் விஷயமாக ஒரு பெரிய விவாதம் உண்டாயிற்று. அதன் பயனுக அதுவரை சிநேகத்துடன் அக்கம்பக்கங்களில் வசித்து வந்த தேசத்தவர்களெல்லாம் விரோதிகளாயினர். அவர்களனைவருமே பலவான்களாக விளங்கினுர்கள், என்ருலும் தைரியவானுன குரிடீஸ் அந்த யுத்தத்தில் தோற்றே போய்விட்டான். மிலிகர், ஒரு இடியைப்போல், தன் சத்துருக்களை இடித்துக்கொன்று வெற்றியுடன் விளங்கினுன்.

அவ்வாறு வெற்றியடைந்த பின்னும் கூட அவனது மனதில் அடங்காக் கோபமானது ஒரு பெரு நெருப்புப் போலவே பற்றியெரிந்து கொண்டிருந்தது. கோபமானது ஞானத்திலும், நல்லொழுக்கத்திலும் சிறந்து விளங்குவோரையுங்கூடத் தன் வசமே ஆக்கிக் கொள்ளுகின்றதல்லவா ?

அப்போது அவன், அல்த்தியாவின் சாபத்திற்கு ஈடுபட்டுத் தன் கோபத்திற்கே ஆளாகிவிட்டான். யுத்தகளத்தில், தான் சென்று வரவேண்டிய காரியங்களனைத்தையும் மறந்து விட்டான். தன் மனைவியுடன் கூடிக்குலாவிக் களித்துக் கொண்டு, தன் காலத்தைக் கழிக்கலாயினுன்.

(அவள் தேவர்களைப்போல் தேக காந்தியுடைய மார்பீஸ் ஸாவுக்கும், இணையற்ற யுத்த வீரனான ஐடாஸ் என்பவனுக்கும் பிறந்தவள். அந்த ஐடாஸ் என்பவனுக்கு எதிராக நின்று யுத்தஞ் செய்யக்கூடிய ஒரு மனிதன் அக் காலத்தில் இருக்கவே இல்லை. அவன், ஒருவருக்குந் தோற்காத ஒரு மஹா வீரனாகவே விளங் கினான். இவ்வாறு இருக்கையில், ஒருக்கால் தினகரனானவன் மார்பிஸ்ஸாவின் அழகையும் ரூபலாவண்ணியங்களையும் கண்டு அவளிடம் மோகங் கொண்டான். அதையறிந்த அவளது கணவன் ஐடாஸ், அவனுடன் சண்டைக்குச் சென்று தன் வில்லை வளைத்தான்! அச் சமயத்தில் அந்தத் தம்பதிகள் இருவரும், தங்க ளுக்கு நேர்ந்துவிட்ட கஷ்டங்களை நினைத்து நினைத்து மனமுருகி உலகோர் அனைவரும் அறியும் வண்ணம், கிளிபத்திரை என்று அழைக்கப்பட்டு வந்த தங்களது புத்திரியின் பெயரை ஆல்கியோன் என்று மாற்றிவிட்டனர். ஆல்கியோன் என்ற சொல்லுக்குத் "தந்தையின் துக்கமும், அழுது புரண்டு வந்த தாயின் துயரமும்" என்று பொருள்.

மேலே சொல்லியபடி வீரனான மிலீகர் அந்தக் கொடிய வாதத்தையும் தர்க்கத்தையும் விட்டு விலகித் தனது மனைவியுடன் தன் காலத்தைக் கழித்துவந்தான். என்றாலும் அவனுக்கு அல்த் தியாவின் சாபத்திலிருந்து விமோசனம் உண்டாகவில்லை. கோபமே உருவெடுத்ததுபோல் விளங்கிய அவள் அதியுக்கிரமாகத் துடித்தாள்! அதிர்ஷ்ட ஹீனனான அந்த மிலீகர், தனது மாமனும், அல்த்தியாவின் சகோதரனுமான இராஜகுமாரனைத் தனது கையா லேயே கொன்று, அவனது விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்டு விட்டான்! அவ்வாறு அவன், தன் கையாலேயே அந்தப் பாப மான காரியத்தைச் செய்தபொழுது, அவள் பூமியின்மேல் விழுந்து, அதைப்பிடித்துத் தட்டிப் பாதாள லோகத்திலுள்ள தேவகணங் களையெல்லாம் பெயரிட்டு அழைத்துத் தன் உடன் பிறந்தானைக் கொன்ற தன் மகனுக்குச் சரியான சாவினைக் கொடுத்துத் தன் பழியைத் தீர்க்கும்படி வேண்டினாள். அதிபயங்கரமான நரக லோகத்திலுள்ள தேவர்களெல்லாம் அவளது சாபத்தைக் கேட்டனர்! நிசாசர்களான செந்நிறங்கொண்ட பிசாசுகளும், அக் கொடிய வசனங்களைக் கேட்டன.

அச்சமயம் குரோஷியர்களால் வளையப்பட்டிருந்த ஈட்டோ லியர்கள் தங்களது ரக்ஷகன் எப்போது வரப்போகின்றான் என்று அவனது வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அவர்க ளுடைய சத்துருக்கள், அவர்களுடைய கோட்டை மதில்களைத் தாக்கித் தகர்த்து வந்தனர். கோட்டையின் வாயிலில் இடிபோல் முழங்கிக் கூச்சலிட்டு வந்தனர். அவர்கள் தங்கள் தேவாலயங் களில் பூசைகள் செய்து வந்தவர்களிலும், அந் நாட்டு விருத்தர் களில், அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கிய பெரியோர் களிலும், சிலரைப் பொறுக்கியெடுத்து, அவனையழைத்து வரும் படி அவனுக்குத் தூதாக அவர்களை அனுப்பினர். அவர்களனை வரும், அந்த வீரனை வெகுவாக வேண்டிக் கொண்டனர். முழுகிப் போகவிருந்த தங்களது இராஜ்யத்தைக் காப்பாற்ற வரவேண்டு

மென்று அவர்கள் அவனை வெகு ஆத்திரத்துடன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர். அவனுக்கு அதிவிசேஷமான பெரிய சன்மானங்களைச் செய்வதாகவும் சொல்லினர்.

ஒப்பும் உயர்வும் அற்ற செழிப்பான நிலத்தில் ஒரே கண்டமாகவுள்ளதும், பின்னமும் துண்டுமில்லாத ஐம்பது ஏக்கரா நிலத்தை அவனுக்குக் கொடுப்பதாகச் சொன்னார்கள். அதில் பாதி பச்சைப்பசேலென்ற புற்றரையாக விருந்தது. மறு பாதியிலிருந்த திராட்சைப்பழத் தோட்டங்கள் அந்த நிலத்தின் சிரோரத்தினம்போல் விளங்கின.

விருத்தனான அவனது தகப்பனாகிய ஈனியஸ்ஸுூம் கூட அங்கு வந்து அவனை வேண்டிக் கொண்டான். அவனைக் கெஞ்சாத வண்ணம் கெஞ்சினான். அதன்பின் அவனுடைய உடன் பிறந்த தங்கை தமக்கைகளும் அவனிடம் வந்து கெஞ்சினர். கடைசியாக, அவனிடம் பகைகொண்ட அவனது தாயான ஆல்த்தியாவுங்கூட அச்சமயம் அவனிடஞ் சென்று அவனை இரந்து கெஞ்சினாள். இதெல்லாம் போதாமல் அவன் நண்பர்களும் அவன் முன்னால் வந்து அவனது காலடியில் வீழ்ந்து கெஞ்சினார்கள். ஆனால் அவன் அவர்கள் ஒருவருக்காவது இணங்கவில்லை. ஒரே பிடிவாதமாகத் தான் வரமாட்டேன் என்று சொல்லிவிட்டான். அதற்குள்ளாக, அவர்களுடைய சத்துருக்கள் ஈட்டோலியாவைத் தங்களது கைவசப்படுத்திக் கொண்டுவிட்டனர். வென்றோம், வென்றோம் என்று ஜயகோஷம் செய்துகொண்டு குதித்தனர். அந்தக் கோஷமானது ஆகாயத்தைப் பிளந்து கொண்டு சென்றது. எதிரொலியையும் உண்டாக்கியது. அவர்கள் கோட்டை மதில்களின் மேல் ஏறினர். கோட்டைக்குத் தீயிட்டுக் கொளுத்தினர், அந்தத் தீயானது, கொழுந்து விட்டுக் கொண்டு ஆகாயத்தை யளாவிச் சுழன்று உயர்ந்து எழுந்தது.

கடைசியாக தேவஸ்வரூபியும், அதிலாவண்ணியங்களுடன் விளங்கியவளுமான, அவனது மனைவியே, அவன் முன் கண்ணீரை வடித்துக் கொண்டும் வாய்விட்டு அலறி அழுது கொண்டும், வாயிலும், மூக்கிலும், கண்களிலும் வழிய வழிய நீரைப் பொழிந்து கொண்டும் வந்து அவனைக் கெஞ்சினாள். அவன் எதிரிகளது கைவசமாகிவிட்ட அந்தப் பட்டணத்தின் அலங்கோலங்களையும், கஷ்ட நஷ்டங்களையும் கோரமான காட்சிகளையும், பச்சை பச்சையாக வருணித்தாள். வீரர்கள் வதையுண்டதையும் அரண்மனைகள் அடியோடு அழிபட்டுப் போனதையும் பெரும் பெண்டிர்களைப் பரபுருஷர்கள் தங்கள் வசமாக்கிக் கொண்டுவிட்டதையும், ஈட்டோலிய ஜாதியார் அனைவருமே அடிமைகளாகப் போய்விட்டதையும் இடித்திடித்துச் சொன்னாள்.

அப்போது, அந்த வீரன், அவளுடைய வார்த்தைகளைச் செவியுற்றுக் கேட்டு மனமிளகி எழுந்து வந்து, தன் சத்துருக்களை முறியடித்து, அவர்களை வென்று, தன் இராஜ்யத்தையும் காப்பாற்றியே விட்டான்!

ஆனால் ஈட்டோலியர்கள் அவன் தங்களுக்கு ஆபத்து வந்த காலத்தில் உதவி செய்யாமல், தங்களை வெகுநாள் வரை இகழ்ந்து கைவிட்டுக் கவனிக்காமல் இருந்ததை நினைத்து நினைத்து மனமுருகி, அவன் தான் செய்த பிழையை எண்ணி வருந்தித் தன் காலத்தைக் கழிக்குமாறு அவனிடமிருந்து விலகினர்.

இந்தச் சரித்திரம் உனக்குத் தெரிந்ததுதான், இதிலிருந்து சகலமான அழிவுகளுக்கும் கோபமே ஏதுவாகின்றது என்று அறிந்து நீ உனது கோபத்தை அடக்குவதற்கான முயற்சிகளைத் தையும் செய்! தாமதிக்காதே! காலம் செல்லுகின்றது. அதோ அங்குக் காணும் கப்பல்கள் தீப்பற்றி யெரிந்து போகும் வரை காத் திராதே! உனக்குக் கொடுப்பதாகச் சொல்லும் வெகுமதிகளை ஏற் றுக்கொள்! வெற்றியைத் தரும் உனது வாளை யுருவு! எங்களது காவல் தெய்வங்களில் ஒன்றாக இருந்து, எங்கள் வந்தன வழிபாடு களையும் வாழ்த்துக்களையுங் கேட்டு வா!" என்றார்.

இவ்வாறு அவர் சொல்லி முடித்த பின், பிடிவாதக்காரனான அந்த அகிலேசன் அவருக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான்:—

"எனது இரண்டாம் தந்தையே! அதிகௌரவமான என் துணைவரே! நான் சொல்லப் போவதை உண்மை யென்றே நம்புங்கள். உங்களது நண்பன் இந்தப் பரிசுகளும் வெகுமானங் களும் வேண்டுமென்று கேட்கவில்லை. மர்த்தியனான ஒருவரிட மிருந்து, அவன் ஒருவிதமான மரியாதைகளையும் விரும்புவதில்லை. ஜோவ் தேவர் எனக்கு யதேஷ்டமாகத் தம் மரியாதைகளைச் செய்து வருகின்றார். என் காரியங்களையும் முடித்து வைக்கின்றார். அவரது திருவருளே என் உற்ற துணையாகவும் அவரது சித்தமே என் வினைகளின் வரம்பாகவும் இருக்கின்றது. நான் இங்கேயே இருந்து வரவேண்டும் என்று அவர் தமது உயர்ந்த ஆணையை யிட்டுவிட்டால், நான் எனது உடலில் ஒரு சொட்டு இரத்தம் வேக மாகக் கொதித்து வரும் வரையிலும் இங்கேயே இருந்து வருவேன்.

என்றாலும், நான் சொல்லும் ஒரு வார்த்தையைக் கேளுங் கள். அதை உங்களது மனதில் மறவாமலும் வைத்துக் கொள் ளுங்கள். அதிரிதேசனுக்குப் பரிந்து வந்து, நீங்கள் இனிமேல் என்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம்! அவனுக்கு வேண்டி நீங்கள் இவ்வாறு கண்ணீர் வடிக்கலாமா? அக்கண்ணீர்த் துளி கள் வாய்க்காலில் ஓடும் ஜலத்தைப் போலவே, யதேஷ்டமாக ஓடுகின்றன! அவனைக் குறித்துத்தான் நீங்கள் இவ்வாறு துக் கிக்கலாமா? அவன் என் பரம சத்ருவல்லவா? அவனுக்காக நீங்கள் இவ்வாறு இரங்கலாமா? அன்னியோன்னியமான நட்பை யுடையவர்களுக்கு மத்யஸ்தர்களும் வேண்டுமா? அவர்களைச் சேர்த்து வைப்பதற்காகப் பற்றற்றவர்களும், நடுநிலைமையை வகித்து வருபவர்களுமான மத்யஸ்தர்கள் அவசியமில்லையே!

நண்பர்கள் எனப்படுவோர், ஏக மனத்தினர்களாகவும், ஒரே காரியத்தில் கண்ணாகவும் அல்லவோ இருப்பவர்கள்? அந்

தக் காரியக்தை நிறைவேற்றுவதில் த்தானே, அவர்கள் அதிக ஆத்திரமுள்ளவர்களாக இருப்பார்கள்! அவர்கள் வெறுத்தாலும் ஒரே விஷயத்தைத் தானே வெறுப்பார்கள்! எதிலும் அவர்கள் ஒரே மனத்தினராகத்தானே இருப்பார்கள்! ஆதலால் நாம் அக்கறையுடன் ஆதரித்து வரும் விஷயமும், வெறுத்துத் தள்ளும் விஷயமும் ஒன்ருகவே இருத்தல் வேண்டுமல்லவா? அவ்விஷயத்தில் நமக்கு அபிப்பிராய பேதம் இருத்தல் ஆகவே ஆகாது! எனது நட்பைக் கோரும் ஒரு மனிதன் என்னைக் கெடுப்பவனைத் தனது பகைவனுகவே கருதி வரல் வேண்டும். எனது பீனிக்ஸே! இது தான் நீர் செய்யக்கூடிய நல்ல காரியம்! நீர் இதையே செய்வீராக! இதைச் செய்து கொண்டு நீர் என்னுடன், என் இராஜ்யத்தையும், என் மரியாதைகளையும் ஆண்டு அனுபவித்து வரலாம். எனது பூரணமான அன்பிற்கும் பாத்திரராகலாம். உம்முடன் வந்த இவர்கள் திரும்பிச் செல்லட்டும். பொழுது விடிந்த பின் நாம் இங்கு விட்டுப் புறப்படுவதையோ அல்லது இங்கேயே இருப்பதையோ தீர்மானிக்கலாம்,'' என்ருன்.

இவ்வாறு சொல்லி முடித்தபின் அவன் அந்த விருத்தருக்குப் படுக்கையைச் சித்தஞ் செய்யும்படியாகத் தன் ஆட்களுக்கு உத்தரவு இட்டான். அது தனது படுக்கையைவிடச் சூடாகவிருக்க வேண்டும் என்றும் அதில் கணக்கில்லாமல் கம்பளிகளை விரிக்க வேண்டும் என்றும் சொன்னுன்.

அப்பொழுது, அதுவரை மௌனமாகவிருந்தவனும், வெட்டெனப் பேசுபவனுமான அஜாக்ஷன் தனது மௌனத்தைவிட்டு விட்டு யுலிஸ்ஸீஸை நோக்கிப் பின் வருமாறு ஆத்திரத்துடன் உரைத்தான் :—

" நமக்கு இனி இங்கு என்ன காரியம்? இங்கு வீணே காலத்தைப் போக்குவானேன்! எழுந்திரு, நாம் இங்கு விட்டுச் செல்லுவோம்! நாம் இவனுக்குப் பணிந்து செய்த பிரார்த்தனைகளினுல் என்ன பயன் உண்டாயிற்று என்பதை நீயே பார்! இவன் சொல்லும் வார்த்தைகள் நமக்குப் பிரியமாகவிருந்தாலும் சரி, பிரியமில்லாவிட்டாலும் சரி! நாம் அவற்றைக் கிரேக்கர்களுக்கு அறிவிக்க வேண்டியது தானே நமது கடமை! அவர்கள் அவைகளைக் கேட்க வேண்டுமென்று ஆவலுடன் காத்திருக்கின்றனர். அவற்றைக் கேட்டபின் மேல் நடக்க வேண்டிய காரியங்களை யோசிக்க வேண்டும் என்று நம் வீரர்களும் பொறுமையுடன் இருக்கின்றனர். இவன் மஹா கர்வி யென்பது எல்லோருக்குந் தெரிந்த விஷயந்தான். இவனது மனதும் கல்லைப்போல் கடினமானதாகவே விருக்கின்றது. இவன் ஒரே பிடியாய் நிற்கின்ருன். தன் நண்பர்களையும் நிந்திக்கின்ருன். இவ்வளவு கொடியவனையும் இரக்கமற்றவனையும் நீ எங்கேனும் கண்டதுண்டா? இது என்ன கடினமான ஈரமில்லா நெஞ்சம்? நமக்குத் தீங்கு செய்துவிட்ட ஒரு சகோதரன் இரத்தத்தை வடித்துக்கொண்டு கஷ்டப்படுகையில் நம்மிடம் வந்து, தன் குற்றங்களை மன்னிக்க வேண்டு

மென்று கெஞ்சினுல் நாம் அவனுடைய அபசாரங்களை மன்னித்தே விடுகின்ரேம்! தனது மகனைக் கொன்றவனையும் ஒரு தகப்பன் மன்னித்து விடுகின்ருன்! ஒரு கொலையாளி தான் செய்த கொலைக்கு சரியான ஈடு செய்துவிட்டால் அவனது குற்றம் மன்னிக்கப்பட்டுப் போகின்றது. அவனும் உயிருடன் வாழ்ந்தே வருகின்ருன். அப்போது, பெருத்த அந்தஸ்திலுள்ள மஹா கர்விகளும் கூடத் தங்கள் கோபத்தை விட்டு விடுகின்றனர்.

(பின்பு அவன் அகிலேசனைப் பார்த்து) உன்னைப்போல் உபசாரங்களுக்கு வசப்படாத ஒருவனை நான் கண்டதில்லை. உன்னை யொழிந்த யாரும் இந்த வெகுமதிகளுக்கு இரங்கவே இரங்குவார்கள். இயல்பாகவுள்ள உனது கன்னெஞ்சத்தை நமது தேவர்கள் மேன்மேலும் அதிகமாகக் கெட்டியாக்கி விட்டனர்! பாவம்! நீ என்ன செய்வாய்! அவர்கள் இந்த இளகாத உருகாத ஒரு மனத்தை உனக்குக் கொடுத்து விட்டனர். அது அவர்கள் உனக்கு இட்ட சாபந்தான்!

நீ கைவசப்படுத்திக் கொண்டிருந்த ஓர் அடிமைப் பெண்ணை அவன் பிடுங்கிக் கொண்டு விட்டான்; அதற்குப் பதிலாக உனக்கு, ஏழு கன்னிகைகளைக் கொடுப்பதாகச் சொல்லுகின்ரேம். அவர்களனைவரும் அந்த அடிமைப் பெண்ணுக்கு இணையான அழகு உள்ளவர்கள் தான்! ஒருத்தியாவது அவளுக்கு இளைத்தவளல்ல! ஆதலால் அகிலேசா! நான் சொல்லுவதைக் கேள், உனக்கு நல்ல புத்தி உண்டாகட்டும். கூரை போர்த்த இந்த உன் கூடாரம், ஒரு புண்ணிய க்ஷேத்திரமாக விருக்கட்டும்! உன் விருந்தாளிகளிடம் பிரியமுள்ளவனுக விரு! கிரேக்க கோஷ்டியிலுள்ளோர் அனைவரும், உத்தம குணங்கள் உள்ளவர்களாய் போற்றிப் புகழ்பவர்கள். அவர்கள் உன் வீர சூர பராக்கிரமங்களை மிகமேலாக மதிக்கின்றனர் என்றும் அறிவாய்,'' என்ருன்.

அஜாக்ஷன் இவ்வாறு சொல்லியதைக் கேட்டபொழுது, கிரேக்கர்களிலெல்லாம், தலை சிறந்து முதல்வனுக விளங்கிய அந்த வீரன், பின்வருமாறு, அவனுக்குப் பதிலுரைத்தான்:—

"யுத்தங்களுக்கெல்லாம் உயிர் போன்றுள்ளவனே! உன் ஜனங்களுக்கெல்லாம் உற்றதுணைவனே! நீ சொல்லியதெல்லாம் வெகு அழகாகத்தான் இருக்கின்றன. ஆனுல், அந்தக் கொடியோனது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் எனக்குக் கோபமே என் அடிவயிற்றிலிருந்து கொழுந்து விட்டுக்கொண்டு எழுந்து வருகின்றது. என் மனது நெருப்பிலிட்டதுபோல் ஒரே எரிச்சலுடன் எரிகின்றது. அது நியாயந்தானே! அது துராக்கிரஹமல்லவே; சத்தியாக்கிரஹந்தானே! அவமானமும், அவமதிப்புஞ் செய்யப்பட்டும் மிகவும் இழிந்த அடிமைகளைப்போல் கருதப்பட்டும் புறங்கணிக்கப்பட்ட, தைரியசாலிகளுக்கும் களங்கமற்ற மனத்தினருக்கும், அது தானே லக்ஷணம்! ஆதலால் வீரர்களே, திரும்பிச் செல்லுங்கள். நம் மறுமொழியையும் கொண்டு செல்லுங்கள். இந்தப் பெருத்த யுத்தத்தில் நாம் இனிமேல் கவலை செலுத்த மாட்டோம். அதோ

அங்குள்ள கப்பல்கள் கவிழ்ந்து விழுந்து நீர் மட்டத்தின் அடியில் அழுந்தி முழுகிப்போகும் வரையிலும், அக் கப்பல்களிலுள்ள சமஸ்தமான கிரேக்கர்களும் கொலையுண்டு அவர்கள் வடிக்கும் இரத்தத்தினல் இந்தக் கன்னங்கரேலென்று விளங்கும் கரை யெல்லாம், இரத்தக் கறையுடன் விளங்கும் வரையிலும், ஹெக்டர் வேகத்துடன் எறியும் பாணங்களால் உங்கள் கப்பல்கள் அனைத் தும் தீக்கிரையாகி, அத்தீயானது எனது கப்பலண்டை வரும் வரையிலும் நம் கையை நாம் அசைக்கவும் மாட்டோம். அதன் பின்தான் அவன் நம் கைவலியை அறிவான்! அந்த துராந்தக னுடைய வேகம் அங்கேயே தடைப் பட்டுப்போம்! அவன் முன் செல்லான், அங்கேயே அவனது ஆட்டம் நின்றுபோம், அவனது கொட்டமும் அடங்கும்!'' என்றான்.

இவ்வாறு அவன் சொல்லிமுடித்ததும், அங்குக் கூடியிருந்த தூதர்களான அந்த அரசர்கள் ஒவ்வொருவரும், இரண்டு கிண் ணங்களில் மதுவை நிறைத்து, அதைத் தாராளமாகத் தரையின் மேல் பெய்து அபிஷேகம் செய்தனர். பின்பு, அவர்கள் அந்த இருண்ட நிழலிலேயே தங்கள் கப்பல்களை நோக்கிச் திரும்பிச் சென்றார்கள். அவர்களுக்குத் தலைவனாக யுலிஸ்ஸீஸே முன் சென்றான்.

இவ்வாறு காரியங்கள் நடந்து கொண்டிருக்கையில், அகிலே சனுடைய சேவகர்கள், ஆட்டு ரோமத்தினல் உண்டாக்கப்பட்ட கம்பளிகளையும் இரத்தினக் கம்பளிகளையும் மிருதுவான பருத்தி யினல் செய்யப்பட்ட விரிப்புகளையும் விரித்து ஒரு படுக்கையைச் சித்தஞ்செய்தனர். விருத்தரான பீனிக்ஸ் அந்தப் படுக்கையில் சுகமாகப் படுத்துக்கொண்டு புண்ணியஸ்வரூபியான தினகரன் தன் திவ்வியமான முகத்தைத் திரும்பவும் காட்டும் வரை தூங்கினர்.

அகிலேசன், அதி விசாலமாக விருந்த தன் கூடாரத்தின் உட்புறத்தில் லெஸ்பியன் வமிஸத்தவளான அழகிற் சிறந்த தயோமேதை என்பவளை இறுகத் தழுவிக்கொண்டு படுத்துறங் கினன்.

கடைசியாகப் பத்திரகலுஷனுடைய மஞ்சமும், அந்தப் பரிசாரகர்களால் விரிக்கப்பட்டது. இரவில் அனுபவிக்கக்கூடிய இன்பங்களையும் சுகபோகங்களையும் அழகிற் சிறந்த ஐபீஸ் என் பவள் அவனுடன் அனுபவித்து வந்தாள். ஸ்கைராஸ் என்னும் பட்டணமானது தன்னல் ஜெயிக்கப்பட்டுத் தன் வசமானபொழுது அகிலேசன், அந்த எழில் வாய்ந்த அணங்கைத் தன் நண்பனுக்கு அளித்திருந்தான். இது நிற்க, கிரேக்கர்களால் நியமிக்கப்பட்டுத் தூது சென்ற வீரர்கள், தங்கள் கோஷ்டியாரின் மத்தியில் அவர் களைக் கடந்து சென்று அரசனது கூடாரத்தை யடைந்தனர்.

அப்போது அங்கிருந்த அக்கேய கோஷ்டியாருடைய தலை வர்களும் பெருமக்களுமான, அனைவரும் ஒருங்கே எழுந்து நின்று

தங்கள் கைகளில் சாருயம் நிறைந்த பாத்திரங்களை யெடுத்து வைத்துக்கொண்டு, அவர்களை வரவேற்றனர்.

அவர்களை நோக்கி அதிரிதேசன் முதன் முதலாகப் பின் வருமாறு வினவினான் :—

"முடிவு என்ன சொல்லு. ஈஸ்வரஸ்வரூபியான வியார்ட்டிஸின் புத்திரா! என்ன முடிவு சொல்லு! அகிலேசன் முதலாகச் சொன்ன தீர்மானங்களை எல்லோரும் அறியச்சொல்லு! அந்த வீரன் திரும்பி வர இசைந்து விட்டானா? அல்லது மறுத்து விட்டானா? நம் கப்பல்களெல்லாம் குப்புறவிழுந்து அழிந்துதான் போகவேண்டுமா," என்றான்.

அதற்கு இத்தாக்கஸ் பின் வருமாறு மறுமொழி பகர்ந்தான் :—

"சர்வதேச ஜனங்களுக்கும் அரசே! அவனது கோபம் தணியவே இல்லை. தங்களது நட்பை அவன் புறக்கணித்து விட்டான். தாங்கள் கொடுப்பதாகச் சொன்ன வெகுமதிகளைத் திரணமாக மதித்துவிட்டான். இவ்வாறு தன்னை நாடித் தன் நட்பைக் கெஞ்சிக் கேட்டதைக்கண்டு அவனுடைய வைரமும் வெறுப்பும் மேன்மேலும் வளர்ந்து வருகின்றன. நம் சேனைகளைக் காப்பாற்ற வேண்டும், அல்லது நம் கப்பல்களை ஆபத்திலிருந்து விலக்கி விடுவிக்க வேண்டும் என்ற கவலை அவனுக்குச் சிறிதும் இல்லவே இல்லை! அது கீரிஸ்காரர்களும் தாங்களுமே செய்ய வேண்டிய கருமம் என்று சொல்லிவிட்டான். பொழுது விடிந்து கிழக்கு வெளுக்கையில், அவன் துடுப்புகளை வலித்து இந்தக் கடலிலுள்ள அலைகள் வெள்ளை வெளேரென்று நுரையைக் கக்குமாறு புறப்படுவானும்; அதுபோல் நாமும் செய்ய வேண்டுமாம்.

'உங்கள் துடுப்புக்களையும் பாய்களையும் எடுத்துக்கொண்டு புறப்படுங்கள். தேவர்களால் ரக்ஷிக்கப்பட்டுவரும் ட்ராய், உங்களுக்கு வசமாகிவிடும் என்று கனவிலும் நினைத்து விடாதீர்கள்! ஜோவ் தேவர் தம் திருக்கரங்களால் அதைக் காத்து வருகின்றார்! அதன் மேல் தம் கையை ஒரு குடை போல் பிடித்துக் கொண்டிருக்கின்றார். ட்ராய் நாட்டாருக்கு இந்த யுத்தத்தில் உற்சாகம் ஊட்டி வருகின்றார்! அவர்களது கியாதி மேன்மேலும் பளிச்சென்று விளங்குமாறு, அவர் அதை வளர்த்தும் வருகின்றார்' என்று கூறுகின்றான். இதுதான் அவனது மறுமொழி.

அவன் பின்னுஞ் சொன்ன வேறு வசனங்களைப் புண்ணியாத்மாக்களான இந்த நம் தூதர்களும், அஜாக்ஷனும் கேட்டனர்! அவன் பீனிக்ஸை மாத்திரம் தன் கூடாரத்தில் நிறுத்திக் கொண்டுவிட்டான். பொழுது விடிந்தவுடன் அவரைத் தனது சொந்தத் தேசத்திற்கு க்ஷேமமாக அனுப்ப உத்தேசமாம்; அங்குச் செல்ல அவருக்கு இஷ்டமில்லையென்றால், அவர் தம் இஷ்டப்படி செய்யலாமாம். அவன் அதிவிருத்தர், அதையும் நாம் கவனிக்க வேண்டும் என்றான்." என்று யுலிஸ்ஸீஸே சொல்லி முடித்தான்.

பெருந்துயரத்தினுல் பீடிக்கப்பட்டவர்களாகவும், இன்னது செய்ய வேண்டுமென்று அறியாது பிரமையுடையவர்களாகவு மிருந்த அந்த அக்கேய கோஷ்டியாரனைவரும், அந்தக் கொடுஞ் சொற்களைக் கேட்டுக்கொண்டு, ஒரே மனத்தினராக அமைதியா கவும் மௌனமாகவுமிருந்தனர். கடைசியாய் திடிதீசனே, அந்த மௌனத்தைக் கலைத்துச் சிறிதும் தங்கு தடையின்றிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

" நாம் ஏன் இந்த கர்விமானுனை அகிலேசனுக்கு நமது பரிசு களையும் வெகுமதிகளையும் அனுப்ப முயல வேண்டும்? அவனது கல்மனதை இளக்க ஏன் முயலவேண்டும்? ஏன் நமது பிரார்த் தனைகளைச் செய்ய வேண்டும்? கெஞ்ச வேண்டும்? தனது தேசத் தின் க்ஷேமத்தையும் பெருமையையும் அலட்சியம் செய்வதே தனக்குப் பேரையும் புகழையும் தரும் என்று அவன் கருதி வருகின் றுன்! அதிலேயே திருப்தியும் அடைகின்றுன்! அவ்வாறு கருதி வருபவனுக்கு நாம் மேன்மேலும் நம் பிரார்த்தனைகளைச் செலுத் தினுல், அவனது கர்வம் அதிகரிக்கத்தானே செய்யும்! அது அவனது வயிற்றிலும் அடங்காமல், அந்த வயிறும் வெடித்துப் போகுமல்லவோ ?

அவன் தன் கோபத்தை யடக்காமல், அதை வளர்த்துக் கொண்டே வரட்டும்! அதன்படியே நடந்தும் வரட்டும்! அவன் தன் இஷ்டப்படி நம் யுத்தங்களிலிருந்து விலகிப் போக வேண்டு மென்றுல், அப்படியே போகட்டும், அல்லது நம்முடன் சேர்ந்து உழைத்து நமக்கு உதவி செய்ய இஷ்டமுண்டானுல் அவ்வாறே செய்யட்டும்! ஜோவ் தேவருக்கோ, அவனுக்கோ இஷ்டமான போது அவன் ஆயுதமேந்தி வரட்டும்! இந்த விஷயங்களை வெறி கொண்ட அவனது மனதோ, அல்லது தேவர்களோ தீர்மானஞ் செய்யட்டும் என்று நாம் விட்டு விடுவோம். நாம் நமது கையால் செய்யக் கூடிய காரியங்களைத் தடுக்க ஒருவராலும் முடியா தல்லவா ? அதை நாம் எப்போதும் செய்யலாமே; அதையே நாம் செய்வோம். இந்தக் காரியத்தை இத்துடன் நிறுத்துவோம். மன வுறுதியினுலும், இரத்த புஷ்டியினுலுமே நமக்கு பலமுண்டா கின்றது. அவை தாராளமாக மதுபானஞ் செய்வதினுலும் நல்ல ஆகாரத்தை அருந்துவதினுலுமே உண்டாகின்றன. ஆதலால் இன்றிரவு நாம் அனைவரும் முறைப்படி உணவருந்தி நமது களைப்பைத் தீர்த்துக்கொள்ளுவோம்! நமது சிரமத்திற்குப் பரிகாரஞ் செய்து கொள்ளுவோம்.

செம்மேனியனுகிய தினகரன் இதோ " வந்தேன், " வந் தேன்" என்று அதிசீக்கிரத்தில் வந்து விடுவான். இந்த நீலகிரி களின் மேல் தன் பொற்கிரணங்களைப் பொழிந்து அவற்றைப் பள பளவென்று தீட்டுவான்!

அப்போது நம் சேனைகளிலுள்ளோர் அனைவரும் பிரகாசத் துடன் மின்னும் தங்கள் ஆயுதங்களை ஏந்திக் கொண்டு, கப்பல்

களின் சமீபத்தில் ஒரே வரிசையாக நெடுந்தூரம் வரை அணி வகுத்து நிற்கட்டும்!

அந்தப் பயங்கரமான சேனையின் முனையில் மஹா வீரனான அதிரிதேசனே தலைவனாக நிற்பான்! என்ன ஆபத்து வந்தாலும் அதைத் தடுப்பதில் முதல்வனாகவும், அந்தச் சைனியத்தின் சர்வாதிகாரியாகவும் அவன் விளங்குவான்," என்றான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட வீரர்கள் அனைவரும் கோஷம் செய்து ஆரவாரித்தனர்.

அதன்பின், அவர்கள் அனைவரும், தேவர்களுக்கு முறைப் படி நைவேத்தியங்களைச் செய்தனர்,

கடைசியாக, அவர்கள், அன்றையதினக் கவலைகளைத் தங்கள் மனத்திலிருந்து ஒழித்துவிட்டு நித்திரைக்கு வசமாயினர். அவர்கள் விரும்பியபடி அந்தக் கூடாரங்கள் அனைத்திலுமிருந்த சேனைகளைத் தூக்க மென்னும் போர்வையானது மறைத்துக் காப்பாற்றி வந்தது! அவர்கள் அந்த நித்திரா தேவதையின் கிருபைகளுக்கு வந்தனம் செலுத்தினர்.

———:0———

## பத்தாம் அத்தியாயம்

# அன்றிரவு தயோமதியும், யுலிஸ்ஸீஸும் செய்த காரியங்கள்

**கதைச் சுருக்கம் :—** அகிலேசன் கிரேக்கர்களது சேனைக்குத் திரும்பி வர மறுத்து விட்டபின், ஆகமனனுக்கு உண்டான கவலையும், துக்கமும், இந்த அத்தியாயத்தில் வெகு உருக்கமாக வருணிக்கப்படுகின்றன. அவன் அன்றிரவு சிறிதும் இளைப்பாராமல், அந்தப் பாளையம் முழுவதும் சுற்றிக் கொண்டு, அலைந்து திரிந்தான். தூங்கிக் கொண்டிருந்த வீரர்களை எழுப்பிக்கொண்டும், தன் கோஷ்டியார் அனைவருக்கும் க்ஷேமத்தைத் தரக்கூடிய முயற்சிகள் அனைத்தையுஞ் செய்து கொண்டுமே, அவன் அவ்விரவைக் கழித்தான். மனேல்லாஸனும், நெஸ்டாரும், யுலிஸ்ஸீஸும், தயோமதியும் தூங்கிக்கொண்டிருந்த மற்றைய சேனைத்தலைவர்களையெழுப்பி வருகின்றனர்.

அவர்கள் அனைவரும் ஒரு யுத்த சபையைக் கூட்டித், தங்கள் சத்துருக்களின் யோசனைகளையும் பிரயத்தனங்களையும் அறிய வேண்டும், அவர்கள் நோக்கங்களைக் கண்டுபிடிக்க வேண்டும், அதற்காகச் சத்துருக்களது பாளையத்துக்குச் சாரணர்களை யனுப்ப வேண்டும் என்று தீர்மானிக்கின்றனர்.

தயோமதி இந்தக் கடினமான காரியத்தைச் செய்து முடிப்பதாக ஏற்றுக் கொண்டு தனக்குத் துணைவனாக யுலிஸ்ஸீஸைப் பொறுக்கியெடுத்துக் கொள்ளுகின்றான்.

அவர்கள் இருவரும் தாங்கள் மேற்கொண்ட காரியமாகச் செல்லுகையில் தன் சத்துருக்களின் மனோநிலையையறிந்து வரும்படி அதே காரியமாக ஹெக்டரினால் அனுப்பப்பட்ட தோலன் என்பவனைத் திடீரென்று சந்திக்கின்றனர். அவனிடமிருந்து, அவர்கள் துரோஜர்களுடைய சேனைகளின் நிலையையும், அவர்களுக்கு உதவியாக வந்த சேனைகளின் நிலையையும், விசேஷமாக ரீஸஸ்ஸின் பிரபாவங்களையும் சமீபத்தில் துரோஜர்களுக்குத் துணை செய்ய வந்த திரேசியச் சேனைகளின் பலாபலங்களையும் அறிகின்றனர்.

அதன்பின் அவர்கள் தங்கு தடையின்றி முன்சென்று, ரீஸஸ்ஸையும் அவனுடைய சேனைத் தலைவர்களில் அனேகர்களையும் கொன்று அந்த அரசனது பிரஸித்தி பெற்ற குதிரைகளையும் பிடித்துக் கொண்டு, ஜயத்துடன் தங்களது பாளையத்துக்குத் திரும்பிவந்து விடுகின்றனர்.

முன் அத்தியாயத்தில் குறிப்பிட்ட இரவிலும் இரு கட்சியாரின் பாளையங்களிலுமே, இந்தக் காரியங்கள் நிகழ்கின்றன.

---

அன்று இரவெல்லாம் சேனைத் தலைவர்கள் அனைவரும் தங்கள் கப்பல்களின் முன்பாகவே படுத்துக் கொண்டு, நித்திரை செய்து, பகலில் செய்து வந்த காரியங்களினுல் தங்களுக்கு உண்டாயிருந்த களையைத் தீர்த்துக் கொண்டனர். ஆனுல் அவர்களது அரசன் மாத்திரம் அவ்வாறு களைப்பாறவில்லை. தன் தேசத்தாரின் க்ஷேமத்தைக் குறித்துப் பலவாருன யோசனைகள், அவனது மனதைத் துளைத்து வந்தன.

ஜோவ் தேவரின் நுட்பமான பிரேரணையினுல் வரும் மின்னல்கள் எவ்வாறு ஒன்றன்பின் ஒன்ருக விட்டு விட்டு மின்னிக் கொண்டும், ஆகாயம் முழுவதையும் ஜ்வாலையுடன் விளங்கும் ஒரு பெரிய நெருப்புக் காடாக ஆக்கிக் கொண்டும் வந்து, இனிமேல் தடதடவென்று வரவிருக்கும், ஆலங்கட்டி மழையையோ அல்லது கனமான பெரும் மழையையோ, முன்னுடியே அறிவித்து விடுகின்றனவோ, அல்லது மிருதுவான பனியைப் பெய்து சமுத்திரக் கரை முழுவதையும் வெள்ளை வெளேரென்ற ஒரு போர்வையினுல் மறைத்து விடுகின்றனவோ, அல்லது பித்தளை போன்ற கெட்டியான தொண்டைகளையுடைய யுத்தக் கடவுளை இடிமுழக்கங்களுடன் உரத்துக் கர்ஜிக்கும்படிச் செய்கின்றனவோ, அவ்வாறு அதிரிதேசனது மனதிலிருந்து அவனது மார்பைப் பிளந்து கொண்டு ஒன்றன்பின் ஒன்ருக அடிக்கடி வெளிவந்த பெருமூச்சுகள் அவனது மார்பில் உறைந்து வந்த கவலைகளையும், துயரங்களையும் தெரிவித்தன.

ஒரு கணம் அவன் ஆகாயமளாவிக் கொழுந்து விட்டு எரியும் வண்ணம் துரோஜர்கள் மூட்டி வைத்திருந்த ஆயிரக் கணக்கான நெருப்புகளைக் கண்ணுற்று மனமிடிந்து போவான். தன் மேலுராய்ந்து கொண்டு, தன்னைக் கடந்து சென்ற காற்ருனது, அந்த துரோஜர்கள் ஜயகோஷத்துடன் பாடிவந்த பாடல்களைத் தனக்குச் செவிப்புலனுக்கிய பொழுது, அவன், அந்த கோஷங்களில் கலந்து வந்த குரல்களில் இன்னின்னவை இன்னின்னுருடையது என்று அறிந்து கொள்வான்.

மறுகணம் தனக்குப் பின்னுலிருந்த தன் கப்பற்படைகளையும் கடற்கரையையும் கண்ணுற்றுக் கவலையுடன் கலங்குவான். அவ்வாறு கண்ணுற்றுத் தன் வர்க்கத்தார் அடைந்துள்ள ஆபத்தான நிலையை யறிந்து அழுங்குவான். தன் தலைமயிரைப் பிடுங்கி, அவற்றை யென்றும் பெயராமல் சதா விண்ணுலகத்தில் கோயில் கொண்டிருக்கும் ஜோவ் தேவருக்குக் காணிக்கையாகச் செலுத்தித் தனக்குக் கிருபை செய்ய வேண்டுமென்று அவரைப் பிரார்த்திப்பான். மனதில் வெகுவாக வேதனைப் படுவான்.

அப்பொழுது தனக்குப் பெரும் புகழும் கீர்த்தியும் வர வேண்டும் என்ற ஆவலும், அவ்வாறின்றி எங்கே இழிவும் அழிவுந்தான் வந்துவிடுமோ என்ற பயமும் அவனது மனதில் போராடின. இன்னேரன்ன ஆயிரக் கணக்கான எண்ணங்கள்

அவனது நெஞ்சைத் துளைத்து வந்தன. அவனது மனது நடுநிலையில் நில்லாமல் தத்தளித்து வந்தது.

இவ்வாறு கொஞ்ச காலத்தைக் கழித்துவிட்டு அவன் ஞானஸ்வரூபியான நெஸ்டாரைக் காண வேண்டும்; அவர் நல்ல யோசனைகளைச் சொல்லுவார், துயரக்கடலில் ஆழ்ந்துள்ள கிரேக்கர்கள் அனைவரையும் காப்பாற்றுவதற்கு நாம் இனிச் செய்யத் தக்க காரியங்களை அவருடன் ஆலோசிக்க வேண்டும் என்று தீர்மானித்து, அவன் தான் ஏங்கி, யுட்கார்ந்திருந்த இடத்தை விட்டுப் பெயர்ந்து எழுந்து, தனது மேல் வஸ்திரத் தைத் தன்னைச் சுற்றிப் போர்த்துக் கொண்டு, பள பளவென மின்னும் பாதரக்ஷைகளைத் தன் கால்களில் மாட்டிக் கட்டிக் கொண்டான். பின்பு ஓர் அரியினின்று உரித்தெடுத்த அரிசருமத்தினால் தன் முதுகை மறைத்துக் கொண்டு, வலி மிகுந்த தன் கையில், ஒரு கூரான ஈட்டியையும் எடுத்துக் கொண்டான்.

இவன் இவ்வாறு காரியங்களில் கண்ணுகைவிருந்து வருகையில், இவனது உடன் பிறந்தானும், இவனைப் போலவே துயரக்கடலில் ஆழ்ந்தவனாய் மனம் வாடி வந்தான். தன் களைப்புக்களை ஆற்றிக் கொண்டு, வாளாவிருக்க மனங்கொள் ளாமல் அவன், தன்னிமித்தம் கிரீஸுக்கு நேர்ந்து விட்ட கஷ்ட நஷ்டங்களையும் துக்கங்களையும் நினைத்து வருந்தி வந்தான். தனக்கு ஏற்பட்ட குறைவுகளைத் தீர்ப்பதற்காக ஏற்கனவே எவ்வளவு கிரேக்கர்கள் தங்களது ஆவியைத் துறந்து விட்டனர். இன்னும் எவ்வளவோ பெயர்கள் அவ்வாறு தங்களது ஆவியைத் துறக்கவும் வேண்டியிருக்கின்றதோ என்று ஏக்கம் கொண்டிருந் தான். அவன் தன் தோள்களின் மேல், ஒரு சிறுத்தைப் புலியுன் புள்ளித் தோலைப் போர்த்துக் கொண்டும், வெகு பிரகாச மாகப் பளிச் சென்று விளங்கிக் கொண்டிருந்த பித்தளையினாலான ஒரு மகுடத்தைத் தன் தலையின் மேல் தரித்துக் கொண்டும், அரசனான அதிரிதேசனை எழுப்ப வேண்டு மென்ற உத்தேசத் துடன் அவனது கூடாரத்துக்குச் சென்றான். அப்போது அதற்கு முன்னதாகவே நித்திரை விட்டு எழுந்திருந்த அதிரிதேசன் தனது கப்பலின் சமீபத்தில் நின்று கொண்டு தன் கவசத்தை அணிந்து கொண்டிருந்தான். இவ்வாறு உடன் பிறந்தார் இருவரும் ஒருவரை யொருவர் சந்தித்துக் களி கூர்ந்தனர் :—

அதன்பின் ஸபார்ட்டன் பின்வருமாறு பேசலுற்றான் :—

"எனது உடன் பிறந்தார், இவ்வாறு பளிச் சென்று மின்னும் கவசத்தை அணிந்து கொள்வதற்கு என்ன அவசரம்! சிறிதும் சப்தமின்றி அமைதியாயிருக்கும் இந்த இராக் காலத்தில் அவர், அங்கு அப்பாலுள்ள களத்தில் நடக்கும் காரியங்களை அறிந்து வரவும், அங்கு துரோஜர்கள் செய்து வரும் நடவடிக்கைகளைக் கவனித்து வரவும், யாரையேனும், சாரணர்

களாகவோ அல்லது வேவுகாரர்களாகவோ, அனுப்பப் போகின்ருரா ?

அந்தக் காரியத்தைச் செவ்வனே செய்து வரத் தக்க வீரன் யார் ? அவனது பெயர் என்ன ? அதைச் சொல்லு வீர்கள் ?

அதிதுணிகரமான அந்தக் காரியத்தைச் செவ்வனே செய்து முடிக்க ஸாமான்யமான ஜனங்களால் இயலாது! அவர்கள் அதிவிசேஷமான தைரியமும் சாதுர்யமும் உள்ளவர்களாகவே யிருத்தல் வேண்டும். அந்தக் காரியமாகச் செல்லும் ஒருவீரன், இந்த இருண்ட இராத்திரியில் துணையின்றியும், தனியாகவுமே சத்துருக்கள் நிறைந்துள்ள பாளையத்தினுள் நுழைந்து சென்று, அங்கு அவர்கள் செய்யும் நடவடிக்கைகளை அறியவேண்டுமே ” என்ருன்.

அதைச் செவியுற்ற அரசன் கீழ்க்கண்டவாறு உரைக்க லானுன் :—

“ நம்மைச் சூழ்ந்துள்ள ஆபத்து மிகவும் பெரியதுதான். என்பதில் சந்தேகமில்லை. சாமான்யமான யுக்திகளினுல் அதை நீக்க முடியாது! கிரீஸைக் காப்பாற்றுவது இப்போது ஒரு இலகுவான காரியமல்ல! அதற்கு உயர்ந்த யோசனைகளும் ஆழ்ந்த தந்திரங்களும் உபாயங்களுமே அவசியமாகின்றன. ஜோவ் தேவர் நம்மிடம் வேற்றுமை கொண்டிருக்கின்ருர். நாம் பணிந்து செய்யும் பிரார்த்தனைகளுக்கு அவர் இணங்கவே யில்லை. ஹெக்டர் செய்யும் பூஜைகளுக்கும் நைவேத்தியங்களுக்குமே இணங்கியவராய், அவர் அவனுக்குத் தலை ஆட்டுகின்ருர்.

இந்த ஹெக்டர் தான் ஒருவனுக, தனது ஒரே ஒரு கையினுல் செய்து முடித்ததைப் போன்ற அற்புதமான காரியங்களை ஒரே ஒரு பெருநாளில் ஒரே ஓர் ஆள் செய்ததைக் கண்ணுல் கண்டவரும் காதால் கேட்டவரும் உண்டோ ! நேற்றுச் சூரியன் அஸ்தமிக்கும் வரை, அவன் செய்த காரியங்களை, நாமே நமது கண்ணுல் கண்டோமே. ஜோவ் தேவரின் தயவுக்குப் பாத்திரனுன அவனுக்கு உண்டாகியிருக்கும் பேருக்கும் புகழுக்கும் அளவு ஏதேனு முண்டோ ? இது என்ன ஆச்சரியம் ! அவன் ஒரு தேவனுக்கோ, பிறந்தவனல்ல ! என்ருலும், அவனுடைய வீரசூரபராக்கிரமங்களெல்லாம், அமானுஷ்யங்களாகவே யிருக் கின்றன.

இனிமேல் உலகத்தில் ஜனிக்கப்போகும் கிரேக்கர்கள் கூட அவைகளை வியந்து உரைப்பார்களல்லவா ? தங்கள் தாதைகளும் மூதாதைகளும் பட்டுவிழுந்து அழிந்துபோன இந்த யுத்தத்தையும் அவர்கள் இகழ்ந்து இழித்துரைப்பார்களே !

நீ இப்போது, நம் கப்பற்படைகளின் ஓரமாக விரைந்து சென்று, மஹா வீரனுன அஜாக்ஷனையும் கிரீட்டின் கிரீடாதி பதியையும் கூப்பிடு. விருத்தரான நெஸ்டாரிடம் நாமே செல்லுவோம்.

காவலர்கள் தங்கள் கடமைகளைச் செலுத்தி வருகின்றார்களா ? என்பதைக் கவனிப்பது அவரது கவலையாகவேயிருக்கட்டும் ! எங்கு, அந்த நெஸ்டாரிடன் மகனும், மெரியோனும் காவல்கள் செய்து வருகின்றனரோ, அங்கேதான் அவரது வாக்குச் செல்லுகின்றது ; அவரது நியமனப்படிக்குக் காரியங்கள் நடந்து வருகின்றன,'' என்றான்.

அந்த வசனங்களைக் கேட்ட ஸ்பார்ட்டன் " தங்களுடைய இந்தக் கட்டளைகளை நிறைவேற்றியபின் நான் அங்கேயேயிருக்கட்டுமா ? அல்லது திரும்பி விரைவில் வரட்டுமா ?'' என்று கேட்டான்.

அதற்கு ஜனாதிபன் " நீ அங்கேயே இரு! இந்தப் பாளையம் அதிவிசாலமானதாக யிருக்கின்றது. இங்குக் குறுக்கும் நெடுக்குமான வழிகளும் கணக்கற்று இருக்கின்றன. ஆதலால் நீ, ஒரு வழி காட்டியின் உதவியில்லாமல் திரும்பி வருவாயானால், நாம், ஒரு வேளைத் திரும்பவும் ஒருவரை ஒருவர் சந்திக்க முடியாமல் போய் விடலாம் ! நீ அங்கிருந்த வண்ணம் சோம்பேறிகளாக விருக்கும் வீரர்களை உற்சாகப்படுத்திக் கூவி யெழுப்பு ! அவர்களுடைய தந்தையாரின் பெருமைகளையும் அவர்களுக்கே இனிவரவிருக்கும் புகழையும் எடுத்துச் சொல்லு.

இந்தச் சமயத்தில் நாம், நம் உன்னதமான அந்தஸ்தையும் உயர்ந்த பிறப்பையும் மறந்து விடவேண்டும். இந்தச் சமயத்தில் நாம், நம் விருதுகளைச் சொல்லிப் பிதற்றிக் கொண்டிருந்தால், அதனால் ஒரு பயனும் உண்டாகாது ! நம் பெருமையை நாம், நமது காரியத்தில் காட்ட வேண்டும் ! பூலோகத்தில் பிறந்த மனிதர்களுக்கு ஓயாமல் உழைத்து வர வேண்டுவது தான் கடன் ! ஜோவ்தேவர் நமக்கு உயிரைக் கொடுத்த பொழுது உபத்திரவங்களையும் கூடக் கொடுத்துவிட்டார் !'', என்று விடை பகர்ந்தான்.

இவ்வாறு சம்பாஷணைகளைச் செய்த பின் அந்த வீரர்கள் இருவரும் தங்கள் தங்கள் காரியமாகச் சென்றனர்.

அரசன் நெஸ்டாருடைய கறுப்புக் கப்பலுக்குச் சென்றான்.

கிரேக்கர்களுடைய ரக்ஷகரும், மஹா ஞானியுமான அவர் தம் ஆயுதங்களையெல்லாம், தன்னைச் சுற்றிப் பரப்பி வைத்துக் கொண்டு தமது படுக்கையில் தமது உடலை நன்றாக நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தார்.

பல வர்ணங்கொண்ட அவரது மேல் வஸ்திரமும் அவரது கேடயமும் பளபளவென மின்னும் அவரது மகுடமும், கூரான முனைகளுள்ள ஈட்டிகளும், அங்கு வைக்கப்பட்டிருந்தன. அந்த வீரர் மஹா விருத்தராகவே யிருந்தாலும், அவர் அந்த விருத்தாப்பிய தசையில் சுகமாகக் காலங் கழிப்பதை வெறுத்து, அந்த

ஆயுதங்களை மாத்திரம், ஆத்திரத்துடன் எடுத்து விடுவாராணல் அவை, அதிகோரமான வதைகளையே செய்துவிடக் கூடியவை!

அச் சமயம் அவர், தூக்கம் பிடியாமல், தமது கையின்மேல் தமது தலையைச் சாய்த்து வைத்துக்கொண்டு, தமது பாளையத்தில் நடக்கும் காரியங்களைக் கவனித்த வண்ணம் இருந்தார்.

விருத்தரும் அரசருமான அவர், தமது அருகே ஓர் ஆள் வருவதைக் கண்ணுற்று, அவனை நிமிர்ந்து பார்த்து "நீ யார்? மற்றைய ஜனங்கள் அனைவரும் உறங்கிக் கொண்டிருக்கையில் இவ்வாறு தன்னந் தனியனாய் இந்தப் பாளையத்தைச் சுற்றி வரும் நீ யார்? நீ என்ன காரியமாக இங்கு வருகின்றாய் என்பதை நான் அறியவில்லை! அதைச் சொல்! உனது நண்பன் எவனையாவது தேடித்தான் வருகின்றாயா? அல்லது இரவில் காவல் காத்துவரும் யாரையாவது நாடி வருகின்றனையா? எட்டி நில்? என்னருகே வராதே! உனது காரியத்தைச் சொல்," என்றார்.

அதைக் கேட்ட அரசன் அவருக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான்:—

"நெலியஸ்ஸின் புத்திரரே! கிரேக்கர்களது பெருமைக்குக் காரணமானவரே! உமது வர்க்கத்திற்கே ஒரு பூஷணமாக விளங்குபவரே! கிரேக்க சேனைகள் அனைத்துக்கும் தலைவனாக விளங்குபவனும் மஹா ஈனனும் அதிர்ஷ்டமில்லாதவனுமான ஆகமனன்தான் இங்கு தங்களெதிரில் நிற்கின்றான். அவனைப் பாருங்கள்! ஜோவ் பகவான் அவனுக்குத் தினந்தோறும் துக்கங்களை உண்டாக்கி வருகின்றார். அவர் அவனுக்கு விளைவித்து வரும் துக்கங்களுக்குக் கணக்கேயில்லை! அவை யனைத்தும் அவனுடைய உயிருடன்தான் தீரும்போல் தோன்று கின்றது!

என்னுடைய இந்த அவயங்கள் கிடு கிடுவென்று நடுங்கு கின்றன! அவைகளைத் தாங்க இந்த என்னுடைய முழங்கால்களால் முடியவில்லை. பெரும் பாரமான இந்தக் கவலைகளையும், துக்கங் களையும் தாங்குவதற்கு எனது மனதிற்குத் தைரியமில்லை. தூக்கத்தினால் உண்டாகும் ருசியை இந்தக் கண்கள் காணவில்லை. "கொஞ்சமேனும் தூக்கம் வராதா!" என்று எனது கண்கள் கெஞ்சுகின்றன!

மனக் கலக்கங் கொண்டவனாகவும், துக்கம் நிறைந்தவனா கவுமே, நான் இவ்வாறு, தன்னந்தனியனாகத் திரிந்துகொண்டு, எனது காலத்தைக் கழித்து வருகின்றேன். இனியும் என்னென்ன ஆபத்துக்கள் வரப்போகின்றனவோ என்ற பயத்தினால், மதி மயங்கியும், இன்னது செய்வதென்ற நிச்சயமில்லாதவனாகியும் பித்துப் பிடித்தவன்போல், அலைந்து திரிந்து வருகின்றேன்.

என்னிமித்தமாக, என் ஜனங்களெல்லோரும் பலவாறான கஷ்டங்களை அனுபவித்து வருகின்றனர். என்னைப் போலவே தாங்களும் கவலைக் கடலில் ஆழ்ந்து கிடக்கின்றீர்கள். தங்களுக்கு

ஓய்வு ஒழிச்சல் என்பது இல்லை யென்பதை நான் அறிவேன். எனக்கு நன்மையைத்தரக் கூடிய யோசனைகள் ஏதேனும் தங்களது மனதில் உதித்தால் அவற்றைத் தாங்கள் எனக்குச் சொல்லித் தங்களது நண்பனுன எனக்கு உதவி செய்யுங்கள்.

இப்போது நாமிருவருமாகச் சேர்ந்து புறப்பட்டு, அகழில் இறங்கி அங்குள்ள வாயில்கள் ஒவ்வொன்றிலும் காவல் செய்து சலித்துத் தளர்ந்து போயிருக்கும் வீரர்களுக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்துவருவோமாக! அவர்கள் பகலில் செய்த காரியங்களினுலும், இரவெல்லாம் கண் கொட்டாமல் காவல் செய்து வருவதினுலும் அலுத்துக் கிடக்கின்றனர். நாம் அப்படிச் செய்யாவிடில், நம் சத்துருக்கள் திடீரென்று வந்து, நம் கோட்டை கொத்தளங்களைத் தாக்கிவிடுவார்கள். நாம் அவர்களது அருகில் இருக்கின்ருேம்! இந்த இராத்திரியும் நள்ளிருளும் அவர்களுக்கு உதவியே யாகிவிடும்,'' என்ருன்.

அதைக் கேட்ட நெஸ்டார் "தெய்வங்களை நம்பு! ஆனுல் இந்த ஹெக்டருடைய கோரிக்கைகளையெல்லாம் ஜோவ் தேவர் நிறைவேற்றி விடுவார் என்பதை நம்பாதே! சஞ்சல ஸ்வரூபிகளான மனிதருடைய மனதுகளில் உதிக்கிற வீணுன யோசனைகளுக்குச் சிறிதும் வேறு பாடில்லாதவரும், ஒரே நிலையிலிருப்பவருமான தேவரது மனதில் உறைந்துவரும் யோசனைகளுக்கும் பொருத்தம் இருக்குமா? அவை இரண்டுக்கும் சம்பந்தம் இருக்குமா? இராதல்லவா!

அடா, அடாது செய்துவரும் ஹெக்டரே! மஹா வீரனுன அகிலேசன் மாத்திரம், தெய்வ வசத்தால் கோபத்துடன் எழுந்து வந்து, உன்னை எதிர்த்தால், அப்போது, நீ என்ன பாடுபடுவாய்! அப்போது நீ எவ்வளவு கஷ்டங்களைப் படுவாய், எவ்வளவு துக்கங்களை அனுபவிப்பாய் என்பதை யாரால் சொல்ல முடியும்? அரசே! தங்களிடம் விசுவாசமுள்ள நெஷ்டார், இதோ, தங்கள் கட்டளைப்படிப் புறப்பட்டுவிட்டான். இனி நாம் மற்றைய வீரர்களையும் எழுப்ப வேண்டும். நமக்கு விசேஷமாக யுலிஸ்ஸுஸிம் தயோமதியும்வேண்டும். பலவான் என்ற கியாதியை யுடைய மிஜீயனும், வேகத்தில் சிறந்தவனுன ஒயிலியஸ்ஸும் வேண்டும்.

அதோ அங்கு நெடுந்தூரத்தில் கடைசியாகவுள்ள நம் உயர்ந்த கப்பல்களுக்கு அதிவிரைவாக ஓடக் கூடிய வேறு சிலரை அனுப்பி, அங்குப் படுத்துறங்கும் மஹானுன அஜாக்ஷனை யும், கிரீட் அரசனையும் எழுப்ப வேண்டும்.

ஸ்பார்ட்டனை எழுப்புவதற்கு நானே செல்வேன்! உனக்கு எப்படிப் பிரியமானவனே அப்படியே அவன் நம்மெல்லோருக்கும் பிரியமானவன்தான். என்ருலும் தனது சகோதரன் கவனித்து வரும் யுத்த காரியங்களில் தானும் கலந்துகொள்ளாமல் அவன் சோம்பியிருப்பதை நான் கண்டித்தே தீருவேன். வீரர்கள் அனைவரையும் அழைக்க வேண்டியது அவனது கடமையல்லவா?

அதுவே அவனுக்கு அழகும் ஆகுமே! அவ்வாறின்றி அவன், எல்லாக் காரியங்களையும் நீயே செய்யவேண்டும் என்றல்லவா இருக்கின்ருன்.

இப்போது நாம் அனைவரும் ஒன்றுசேர்ந்து நம் சரீரங்களைச் சாருகப் பிழிந்து நம் காரியங்களைச் சீராகச் செய்யவேண்டியது அத்தியா வசியமாகிவிடுகின்றதே! இச் சமயம் நாம் நம் முழு மனதுடன் நம் பூரணமான சக்திகளையும் செலுத்தவேண்டிய தருணமாகவல்லவா இருக்கின்றது!" என்ருர்.

அதைக் கேட்டு அரசன், "தாங்கள் நியாயமாகவும், கண்டித்தும் சொல்லும் வார்த்தைகளை நாங்கள் அதிவிநயத்துடன் ஏற்றுக்கொள்ளுகின்ருேம்! என்ருலும் தாங்கள் அவ் வசனங்களை இப்போது சொல்லாமல் இருக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகின்றேன். அவன் பெரிய மனதுடையவன். மஹா ஸாது! அவன் பார்வைக்கு மாத்திரம் அபராதிபோல் தோன்று கின்ருன். ஆனல் உண்மையில் அவன் மனவுறுதியும் தைரியமும் உள்ளவன்தான்! நாம் சர்வாதிகாரிகள் என்று நம்மை மதித்து, நம்மிடம் மட்டு மிதமற்ற மரியாதைகளையுடையவனுக விருக் கின்ருன், நாம் காட்டிய வழியில் செல்வதுதான் தனக்கு முறை யென்றும் அதுவே தனது கடனென்றும் திருப்தியுடன் இருக் கின்ருன்!

நமக்கு நேர்ந்துவிட்ட கஷ்டங்களை நீக்க வேண்டுமென்ற கவலை கொண்டவனுய் அவன், வெகு ஊக்கத்துடன், மற்றையோர் அனைவரும் எழுந்திருக்கு முன் எழுந்திருந்து, எனது கூடாரத்துக்கு வந்தான். தாங்கள் பெயரிட்டுக் குறித்த வீரர்கள் எல்லோரையும் எழுப்பினுன்.

அந்த வீரர்களனைவரும், நம் கப்பல்களின் ஓரமாகவுள்ள மதில்களின் அருகில் நம்மைக் காணச் சித்தமாக விருக்கின்றனர். அங்கு அகழுக்கும் கோட்டை வாயில்களுக்கும் இடையில் உள்ள தும், இராக்காவல்காரர்கள் இருந்து காவல் செய்து வருவதுமான இடத்தில் ஒன்ருகக் கூடிக் காத்திருக்கின்றனர். அங்குதான் நாம் நம் ஆலோசனைகளைச் செய்ய உத்தேசித்திருக்கின்ருேம்!" என்ருன்.

அதைக் கேட்டு, "அப்படியாளுல் சரி, அவனது ஆணையை யாராலும் மறுக்க முடியாது! ஒழுக்கத்தில் உயர்ந்த பெரியோர் ஏனையோருக்கு ஆணையிடுவது முறையேயாகும்!" என்று சொல்லிக் கொண்டு விருத்தரான அந்த வீரர் (நெஸ்டார்) எழுந்திருந்து, பளபளவென மின்னிக் கொண்டிருந்த காலுறைகளைத் தம் உறுதியான கால்களின் மேல் கட்டிக் கொண்டார். பின்பு அவர் தமது ஊதா நிறங்கொண்ட போர்வையையும் அணிந்து, அதன் பொற் கொக்கிகளையும் மாட்டிக் கொண்டார். இரண்டாக மடிக்கப்பட்ட உள் துணியைக் கொண்ட அந்தப் போர்வை யானது அதி மிருதுவான கம்பிளியினுல் உண்டாக்கப்பட்டு அவருக்குக் குளிருக்கு அடக்கமாக விருந்தது. அதன்பின் அவர்

வெகு துரிதமாக எழுந்து, உருக்கிலான தமது வேலாயுதத்தை ஆத்திரத்துடன் எடுத்துக் கொண்டு, தமது கூடாரத்தைவிட்டு வெளிப் புறப்பட்டார். அந்த வேலாயுதமானது அவர் சென்ற விடமெல்லாம் பளிச் பளிச்சென்று மின்னிக் கொண்டு, ஒளியைப் பொழிந்து கொண்டே சென்றது.

அவர், போர்வீரர்கள் படுத்து உறங்கிக் கொண்டிருந்த அந்த போர்க்களத்தின் நடுவே, விரைந்து சென்று, யுலிஸ்ஸீஸின் கூடாரத்தின் முன் நின்று, அந்த வீரனை யுரத்துக் கூவியழைத்தார். அவரது குரலைக் கேட்ட அக்கணமே, யுலிஸ்ஸிஸ் சட்டெனத் துயிலெழுந்து, தனது கூடாரத்திலிருந்து வெளியே புறப்பட்டு ஓடிவந்து, "இதுவரை வராத புதிய ஆபத்து இப்போது என்ன வந்து விட்டது? இப்படித் திடீரெனப் பயப்பட என்ன காரணம்? சிறிதும் சப்தமில்லாமல் இருக்கும் இந்த ராத்திரிக் காலத்தில், நீங்கள் ஏன் இவ்வாறு அலைந்து திரிகின்றீர்கள்?", என்றான்.

அதைக் கேட்ட பைலியப் பெருந்தகை, "ஞானசேகரா! நீ மஹா புத்திமான் என்பது உண்மையே! நீ உன் புத்தி சாமர்த்தியங்களைக் காட்டுவதற்கு உனக்கு இதோ, ஒரு நல்ல சமயம் வந்திருக்கிறது! இப்போது, நமக்கு க்ஷேமத்தைத் தரத்தக்க உபாயங்கள் எவை என்பதை நாம் தேடவேண்டும். நாம் நல்ல யோசனைகளைச் செய்து, இனிச் செய்ய வேண்டிய காரியங்களைத் தீர்மானிக்க வேண்டும். நாம் செய்ய வேண்டிய உபாயங்களென்ன? தந்திரங்களென்ன? இங்கிருந்து ஓட்டம் பிடித்து விடுவது நல்லதா? அல்லது இங்கிருந்தபடியே இந்த யுத்தத்தையே விடாமல் நடத்துவதா? என்ற விஷயங்களை யெல்லாம், நாம் இன்றைய இரவில் தீர்மானித்து விடவேண்டும். இன்றைய இரவு நமது வாழ்நாளில் ஓர் அரிய பெரிய இரவே ஆகும்,!" என்றனர்.

அவரது அந்த மறுமொழியைக் கேட்டவுடன், அவன் தனது கூடாரத்தின் உட்சென்று, வர்ணங்கள் தீட்டப்பட்டிருந்த தனது கேடயத்தை எடுத்துக் கொண்டு திரும்பிவந்து, மற்றைய வீரர்களுடன் சேர்ந்து, அந்தக் களம் முழுவதிலும் சென்றான்.

அவ்வாறு செய்கையில், அவர்கள் தைரியவானான தயோமதியை அவனது கூடாரத்தின் வெளிப்புறத்திலேயே கண்டனர். பாதாதி கேச கவசங்களையும் ஆயுதங்களையும் அணிந்து கொண்டிருந்த அவன், தன்னைப் போலவே தைரியம் நிறைந்த தன் நண்பர்களின் மத்தியில் படுத்துக்கொண்டிருந்தான். அவர்கள் அனைவரும் குமிழ்கொண்ட கேடயங்களின்மேல், தங்கள் தலைகளைச் சாய்த்துக்கொண்டும், தங்கள் உடல்களைத் தாராளமாக நீட்டிக் கொண்டும், படுத்து நித்திரையில் ஆழ்ந்திருந்தனர். அவர்களைச் சுற்றிலும், நெட்டுக்குத்தாக நாட்டப்பட்டிருந்த கூரான ஈட்டிகள் ஓர் அடர்ந்த காட்டைப்போல் விளங்கின. அந்த ஈட்டிகளின் முனைகளிலிருந்து, வெளிச்சமானது, நீர்த்துளி

களைப்போல் மினுமினு வென்று தெரிந்து கொண்டிருந்தது. அந்த வீரன் தனது தலையின் அடியில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த ஓவியமிக்க இரத்தினக் கம்பளத்தின்மேல் சாய்ந்து கொண்டு ஒரு கறுத்த காளையின் தோலின்மேல் காலை நீட்டிப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான்.

நெஸ்டார், அவனைத் தமது காலால் மெதுவாய் அசைத்து யெழுப்பி, அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களையும் யுரைத்தார் :—

“ திடீயஸ்ஸின் புத்திரா ! எழுந்திரு, எழுந்திரு ! தைரியமும் பலமும் உடைய வீரர்களுக்கு ஓய்வும் ஒழிச்சலும் அழகாகுமா ! அவை அவர்களுக்கு இழிவையே தருமல்லவா ? அவர்கள், இரவு நீடிக்கின்றதே, பொழுது இன்னும் விடியவில்லையே ! என்றல்லவோ துடிப்பார்கள் ! அதோ அங்குக் காணும் மலையின் மீதிருந்து, நம் சத்துருக்கள் ஒரு பெருத்த மேகம்போல், நம் கப்பற் படைகளின்மேல் எட்டிப் பாய்ந்து வந்து கொண்டிருக்கின்றனர். அந்த மேகத்தின் நிழலினால் அதன் அடியிலுள்ள நம்முடைய கோட்டை மதில்களும் மறைந்து போகின்றனவோ, அந்தச் சமயத்தில் நீ, நித்திரை செய்யலாமா,?” என்றார்.

அந்த வார்த்தைகளைக் கேட்டபொழுது, அவனுடைய கண்ணிமைகளை மூடிக்கொண்டிருந்த இளநித்திரையானது, அவற்றை விட்டுப் பறந்து ஓடிப்போய் விட்டது.

அந்த வீரன், அக்கணமே, அந்தத் தலைவரை விழித்து நோக்கி, “ அதியற்புதமான விருத்தரே ! தாங்கள் ஓய்வு ஒழிச்சல் என்பது சிறிதும் அறியாது உழைத்து ஒரு மஹாத்மாவாகவே விளங்கி வருகின்றீர்கள் ! தாங்கள் அதிவிருத்தர். உயர்ந்த மரியாதைகளுடனும், கௌரவங்களுடனும் சுகமாகக் காலத்தைக் கழித்து வரவேண்டிய தாங்கள், இந்த வயதில் இந்தக் கடினமா காரியங்களைச் செய்யத் தலைப்பட்டு முன்வருவது தங்களது வயதுக்கு ஏற்றதல்ல ! தூங்கிக் கொண்டிருக்கும் நம்முடைய’ வீரர்களை நமது கோஷ்டியிலுள்ள இளங்கிரேக்கர்கள் எழுப்பட்டுமே,’ என்றான்.

அதற்கு நெஸ்டார் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தார் :—

“ என் நண்ப ! எனது க்ஷேமத்தைக் கோரி நீயுரைக்கும் உபசார மொழிகள், உனது கௌரவ புத்தியையே விளக்கிக் காட்டுகின்றன ! என்னுடைய பிரஜைகளும் என்னுடைய புத்திரர்களும் இந்தக் கடினமான காரியங்களைச் செய்து வரட்டும் என்று கவலை யொழித்து இருந்துவிடலாம் ! அது நியாயமே ஆகும் ! அவர்கள் என்னிடம் வைத்துள்ள பிரீதிப் பக்தியையும், விசுவாசத்தையும் முன்னிட்டு என்னிடம் அதிமரியாதையுடனேயே நடந்து வருகின்றனர். அதனால் அரசனும் பிதா மகனுமான எனக்கு அதிகக் கவலைகளில்லை ! அவை குறைவாகவே யிருக்கின்றன. ஆனால், இப்போது, இந்தக் கடைசிக்காலத்தில் ஓர்

அந்தியாவஸ்தையானது நம்முடைய கோஷ்டியாரனைவரையும் சூழ்ந்து கொண்டு, நம்மை வாட்டி வருகின்றது. நாம் இனி ஒரு நாழிகையேனும் ஒரு கணமேனும் வீணே கழிக்கலாகாது! யுத்தத்தின் முடிவு காலம் கிட்டிவரும் இச்சமயத்தில், ஒவ்வொரு கிரேக்கனும் கத்தியின் முனையில் நிற்பதுபோல், ஒரு கடினமான நிலையில் இருக்கிறன். ஒன்று அவர்கள் இன்று உயிருடன் பிழைப்பார்கள், இன்றேல் பிராணனை இழப்பார்கள். ஆதலால், எனது விருத்தாப்பிய தசையைக் கண்டு நீ மனமிளகி இரங்குவதானல் பால்யனன நீ, விருத்தனன என்னைப்போலவே, இந்தக் காரியத்தில் உடனே இறங்கவேண்டும்! என்னுடைய சிரமங்களையும், கவலைகளையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். மற்றைய வீரர்களை எழுப்பவேண்டும். எவன், தன்னுடைய இராஜ்யத்தின் க்ஷேமத்திற்காகத் தன்னுடைய உடல் பொருள் ஆவி முதலியவைகளைச் சாருய்ப் பிழிகின்றனே, அவனே என்னுடைய அத்யந்த பிருத்யனுவான்,!" என்றுர்.

இவ்விதம் அவர் சொல்லக்கேட்ட அந்த வீரன் தனது முழங்கால் வரைத் தொங்கிக் கொண்டிருந்த ஒரு சிங்கத் தோலை ஆத்திரத்துடன் தனது தோளின்மேல் எடுத்துப் போட்டுக் கொண்டும், தனது பிரம்மாண்டமான ஈட்டியைக் கையில் எடுத்துக் கொண்டும், விரைவாக வெளியேறி, தைரியம் நிறைந்தவனன மீஜீஸ்ஸையும், ஓடுவதில் சமர்த்தன் என்று புகழ் எய்தியிருந்த அஜாக்ஷணையும் எழுப்பி, அவர்களைக் கூட்டிக் கொண்டு அகழ்களை நோக்கி முன் சென்றுன்.

இவ்வாறு எல்லா வீரர்களும், இராக்காவல் செய்து வந்த சைனியங்களின் அருகில் வந்து சேர்ந்தனர். அந்த சைனிகர்கள் அனைவரும், ஆயுத மேந்திக் கொண்டு தூங்கா விழிப்புடன் வியூகங்களாகக் கூடி யிருந்தனர்.

அவர்களுடைய தலைவர்களும், சிறிதும் இளைக்காமல் தங்களருகில் உண்டாகும் சப்தங்களை உற்றுக் கவனித்துக் கொண்டும், தங்களைக் கவர வந்த தூக்கத்திற்கு வசமாகாமல் அதை விலக்கிக் கொண்டும், ஒருவரை யொருவர் நெருக்கிக் கொண்டு இடைவிடாமல் நின்று கொண்டும் அந்தக் களத்தைக் காத்து வந்தனர். விசுவாசமுள்ள நாய்களும் அவ்வாறுதான் தங்களிடம் ஒப்பிக்கப்பட்ட ரோமம் போர்த்த ஆட்டுமந்தைகளைப், பதுங்கிக் கொண்டு கள்ளத் தனமாகத் திரிந்து வரும் துஷ்ட மிருகங்கள் அடித்துத் தின்னுமல், அதிஜாக்கிரதையாகக் காத்து வருகின்றன.

கொடிய பசிப்பிணியினல் பீடிக்கப்பட்டு வாடி வருந்தி இளைத்துக் கிடக்கும் ஒரு பெண் சிங்கமானது, நல்ல காவலுள்ள ஆட்டுமந்தையைக் கண்ணுற்றவுடன் அதன் மேல் பாய்ந்து அதைத் தாக்கித் தனது பசியைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்ற ஆவலோடு மலைகளின் இடையிலுள்ள தன் குகையி

னின்றும் புறப்பட்டுத், தன்வழியிலுள்ள காட்டு மரங்களையும் செடி கொடிகளையும் தனது துரிதமான கதியினுல் அசைத்து ஒலிப்பித்துக் கொண்டும், தனது குரலைக் கேட்கும் ஆட்டிடையர் களுடையவும் நாய்களுடையவும் செவிகள் துளைத்துப் போகும்படி, உரத்து முழங்கிக் கர்ஜனை செய்து கொண்டும், வருகையில் அதைக் குறிப்பால் அறிந்து கொள்ளும் நாய்கள் எவ்வாறு சட்டென்று எழுந்து, நாற்புறமும் தங்களை நன்ருகக் கவனித்துச் சுற்றிப் பார்த்து, தங்களது செவிக்குப் புலனுகும், ஒவ்வொரு சப்தத்தையும் உற்றுக் கேட்கின்றனவோ, அவ்வாறே அந்தக் கிரேக்கர்கள், தங்களுடைய காதுகளுக்கும் கண்களுக்கும் புலனுகும் ஒவ்வொரு சப்தத்தையும் சலனத்தையும் கவனித் துக்கொண்டு, தங்களை ஒருவரும் திடீரென்று தாக்கிவிடலாகாது என்ற கவலையுடன், தங்களுடைய நாற்புறங்களையும் காவல் காத்துவந்தனர். தங்களைக் கடந்து சென்றவர்களின் காலடிச்சப்தம் ஒவ்வொன்றும், அவர்களுக்கு ஏற்கனவே உண்டாயிருந்த திகிலை அதிகரித்து வந்தது. என்ருலும் அவர்கள், தங்களுடைய சத்துருக்களது நகரமான ட்ராயைக் கண்கொட்டாமல் கவனித்தே வந்தனர்.

அந்த அந்தகாரத்தில், அவ்வாறு கண்ணைக் கொட்டாமல் காவல் செய்து வந்த அந்தக் குழாத்தைக் கண்ணுற்று, நெஸ்டார் மிகவும் சந்தோஷித்து, அவர்களை ஏற இறங்கப் பார்த்துப் பின் வருமாறு உரைத்தார் :—

"என்னுடைய புத்திரர்களே! இது மிகவும் நேர்த்தியாக விருக்கின்றது! நீங்கள் உங்களது இராக்காவலை, இவ்வாறு அக்கரையுடன் செய்து வருவதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ந் தேன்! நீங்கள் இவ்வாறு செய்து வராவிடில், ட்ராய் நாட்டார், நம்மை ஒரு பொருட்டாக மதிக்க மாட்டார்களல்லவா? ஆதலால், இவ்வாறே காவலைச் செய்து வாருங்கள். அப்படிச் செய்து வருவீர்களாஞல் கிரீஸ் தேசம் பிழைப்பது நிச்சயம்" என்ருர்.

அவ்வாறு உரைத்து விட்டு, அந்த வீரர், அகழ்களை நோக்கிச் சென்ருர். அப்போது அவரது மகனும் தேவர்களுக்குச் சமானமான மெரியோனும், அவரைப் பின்பற்றி வந்தனர். அவ்விருவரையும் கூட, ஏனைய அரசர்கள், தங்களுடைய மந்திராலோசனைச் சபையில் சேர்த்துக் கொண்டனர். இவ்வாறு ஒன்ருய்ச் சேர்ந்த தலைவர்களெல்லாம், அகழ்கள் அனைத்தையும் கடந்து சென்று, தங்களுடைய ஆலோசனைகளைச் செய்வதற்காக மேட்டுப் பாங்கான ஓரிடத்தில் வட்டவடிவமாக அமர்ந்தனர்.

அந்த இடமானது, அதுவரை ஹெக்டருடைய கொடுமை களுக்கும் கோபாவேசங்களுக்கும் இலக்காகாமலும், சிறிதும் இரத்தக்கறை படாததாகவும் இருந்தது. பழி வாங்கியே தீருவேன்! என்று ஆத்திரத்துடன் துடித்து வந்த அந்த ஹெக்டருக்குத் தப்பிய கிரேக்கர்களெல்லாம், அன்றைய தினம்

இரவு வருமுன், அந்த இடத்துக்கு ஓடிச் சென்று அங்கு அடைக்கலம் புகுந்தனர். அதற்குச் சமீபத்திலிருந்த ஒரு மைதானத்தில், கண்டதுண்டங்களாகத் துண்டிக்கப்பட்டிருந்த முண்டங்கள் அங்கும் இங்கும் குவிந்து கிடந்தன. அந்த ஹெக்டர் தான் சென்ற விடமெல்லாம் தன்னெதிர்ப்பட்ட ஜனங் களைக் கொன்று கொண்டே முன் சென்றனல்லவோ?

அந்த இடத்தில் தான், துக்கம் நிறைந்த மனத்தினரான இந்த அரசர் குழுவினர் எல்லோரும் அவரவர் இடங்களில் அமர்ந்த பின்னர், பிலியஸ்ஸின் புத்திரர் பின்வருமாறு வசனங்களை யுரைத்துச் சபையை ஆரம்பித்தார் :—

"மகத்தான ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டு தத்தளித்துத் தவிக்கும், தனது தேசத்தைக் காப்பாற்றும் நிமித்தம், தனது பிராணனையும் தியாகஞ் செய்யச் சித்தமாகவுள்ள மனோதைரியமுடைய வீரன், எவனாவது ஒருவன் இப்போது இந்தக் கோஷ்டியில் உளனா? அதோ அங்குக் காணும் நம்முடைய சத்துருக்களுடைய பாளையத்துக்குத் தன்னந் தனியனாய்ச் செல்லவோ, அல்லது அங்கு நிலையின்றித் திரிந்து கொண்டிருக்கும் அவர்களது கோஷ்டியிலுள்ள ஒருவனைப் பிடித்து வரவோ, தைரியமுள்ள ஒரு வீரன் இங்கு உளனா? அல்லது, இப்போது நமக்கு மிகவும் உதவியாகவுள்ள இந்த இருளான இராக் காலத்தில் அவர்களது பாளையத்திற்கு அடுத்து நெருங்கிச் சென்று அவர்களுடைய வார்த்தை வசனங்களையும் அறிந்து வரக்கூடியவன் ஒருவன் இங்கு உண்டோ? அவர்கள் நம்முடைய கப்பற்படைகளை முற்றுகை போட்டுப் பிடிக்கத்தான் ஏற்பாடுகள் செய்கின்றனரா? அல்லது ட்ராயிலேயே யுத்தத்தை நடத்தலாமென்று யோசிக்கின்றனரா? என்ற விவரங்களை, ஒரு வீரன் அறிந்து கொண்டு இந்த இரவில் தனக்கு நேரக்கூடிய ஸகலவிதமான ஆபத்துக்களுக்கும் தப்பித் திரும்பி வந்து அவைகளை நமக்குச் சாங்கோபாங்கமாக அறிவிப்பானேல், அவனுக்குப் பிற்காலத்தில் உண்டாகக்கூடிய பேருக்கும் கீர்த்திக்கும் அளவு உண்டோ? பீபஸ் பகவான் பிரகாஸத்துடன் விளங்கிவரும் வரையிலுமோ, அல்லது வாய் கொண்டு வாழ்ந்த மனிதர்கள் இவ்வுலகில், உள்ளளவுமோ, அவனது நாடு அவனுக்குத் தனது நன்றியைச் செலுத்தியே வருமல்லவா? அது அவனுக்கு என்னென்ன பரிசுகளைத் தரும்! தன்னைக் காப்பாற்றிய ஒரு வீரனுக்கு கிரீஸ் செய்யக் கூடிய கைம்மாறுகளுக்கு அளவும் கூற முடியுமோ! அது என்ன செய்தால்தான், அந்தக் கடன் தீரும்! கிரீஸிலுள்ள தலைவன் ஒவ்வொருவனும், ஒரு கறுத்த ஆட்டுக் குட்டியுடன் கூடிய ஒரு செம்மறியாட்டை அவனுக்குப் பரிசாகக் கொடுப்பானே! தாங்கள் செய்யும் சடங்குகள் ஒவ்வொன்றிலும் அந்தத் தலைவர்கள், அந்த வீரனுக்கு மிகவும் உயர்ந்த ஸ்தானத்தையே அளிப்பார்களே! அவர்கள் விருந்துகள் செய்கையில் அவனுக்குத்தானே ஸகலமான மரியாதைகளும் முதன் முதலாகச் செய்வார்கள்!" என்றார்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்த அரசர்களெல்லாம் நடுங்கிப் பயந்து, ஊமைகளைப் போல் தங்களுடைய வாய்களை மூடிக்கொண்டு மௌனமாக விருந்தனர் அப்போது சிறிதும் பயமென்பதறியாத திடிதீசன் மாத்திரம், தனியாக எழுந்து, பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

" தாங்கள் தேடும் மனிதன் இதோ, இங்கே இருக்கின்றான் ! ஆபத்துக்கள் நிறைந்தும் கன்னங்கரேலென்ற இருள் சூழ்ந்து முள்ள அந்தக் களத்தினுள் செல் என்று ஒரு தெய்வமானது எனது மனத்தை உறுத்துகின்றது ! அந்தத் தெய்வத்தின் ஆணையை இதோ, நான், என் சிரத்தின்மேற் கொண்டேன் ! நீங்கள் மாத்திரம் எனக்குத் துணையாக விருந்து, எனக்கு ஊக்க மளிக்கவும் என்னுடைய யோசனைகளை நிறைவேற்றவும், வேறொரு வீரனைப் பொறுக்கியெடுத்து, என்னுடன் அனுப்புங்கள். மனிதர் களுக்குப் பரஸ்பரம் நம்பிக்கையினாலும் பரஸ்பர ஸஹாயத் தினாலுமே பெரிய காரியங்களைச் செய்யவும், பெரிய விஷயங்களை அறியவும் சாத்தியமாகின்றது. புத்திசாலிகள் தங்களைப் போன்ற புத்திமான்களுடன் அளவளாவி வருவதினால் மேன்மேலும் விவேகிகளாக விளங்குகின்றனர். அவ்வாறே ஒரு வீரன் தன் நண்பனை வேறொரு வீரனது மனவுறுதியையும் உற்சாகத்தையும் அதிகரித்து விடுகின்றான். அவனது மனதில் எரிந்து வரும் வீர நெருப்பு மேன்மேலும் கொழுந்து விட்டுக் கொண்டு எரியும்படி, அவன் அதை விசிறி வளர்த்து விடுகின்றான் " என்றான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட வீரர்கள் நான் நான் என்று போட்டி போட்டுக் கொண்டு எழுந்தனர். உற்சாகமும், ஆவலும் உடைய மனத்தினராகிய வீரர்கள் நான் நான் என்று ஆரவாரித் தனர். அவர்களுடைய முகங்கள் தேஜசுடன் விளங்கின.

இந்தக் கடினமான காரியத்தை நாங்கள் மேற்கொள்வோம் என்று அஜாக்ஷர்கள் இருவரும் குதித்துக் கொண்டு எழுந்து வந்தனர். அவ்வாறே தைரியம் மிகுந்த மெரியோனும் நெஸ் டாரின் பராக்கிரமம் மிகுந்த புதல்வனும் முன் வந்தனர். ஸ்பார்ட் டனுங்கூட அவ்வாறு திடிதீசனுக்கு உதவியாக உழைத்து வரத் தனக்கு அனுமதி தரவேண்டுமென்று வேண்டினான். கடைசியாக, மஹானான யுலிஸ்ஸீஸும் அந்தக் காரியத்தில் தன்னை நியமிக்க வேண்டுமென்று கோரினான். அவனது கோரிக்கையே நிறை வேறியது.

இந்தக் காரியத்தில் தங்களை நியமிக்க வேண்டுமென்று போட்டி போட்டுக் கொண்டு கிளம்பிய வீரர்களைச் சமாதானப் படுத்துவதற்காக, மனிதர்க்கரசனான ஆகமனன் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

" வீரர்களில் முன்வைத்து எண்ணப்படுபவனும் நண்பர் களில் உத்தமனும் பயமென்பதே அறியாதவனுமான தயோமதி !

இந்தப் பெருங் காரியத்தைச் செய்வதற்கு நீ உனக்குத் துணைவனாக யாரை வேண்டுமென்றாலும் கூட்டிக் கொண்டு செல்லலாம். நீ கோரும் வீரனை நாங்கள் சிறிதும் தடையின்றி உனக்குத் துணையாக அனுப்புகின்றோம்! உனது காரியத்தை முறைப்படிச் செய்து முடிக்கத் தக்கவன் எவன் என்பது உனது மனத்திற்கு நியாமாய்த் தோன்றுகின்றதோ, அவனையே நீ வரித்துக் கொள்ளலாம். இதில் பக்ஷபாதத்திற்குச் சிறிதும் இடமில்லை! உயர்ந்த குடியிற் பிறந்தவன், அல்லது உயர்ந்த அதிகாரத்தை வகிப்பவன் என்ற காரணங்களை ஆதாரங்களாகக் கொண்டு நீ ஒரு வீரனை உன் துணைவனாக வரிக்கலாகாது. புஜபல பராக்கிரமங்களிலும் புத்தி யுக்திகளிலும் சிறந்தவனையே, நீ வரித்தல் வேண்டும்,'' என்று சொல்லி அந்த அரசன், தன் வசனங்களை முடித்தான்.

அக்கணம் அவன் 'எங்குத் தன் உடன் பிறந்தானைத் தனக்குத் துணைவனாக தயோமதி வரித்து விடுவானோ'! என்ற திகில் கொண்டு துடித்தான். அவனது மார்பு படபடவென்று துடித்தது!

அப்போது, தயோமதி ''தேவர்களுக்குச் சமானமான தயோமதி! உனது மனதுக்கியைந்த வீரனையே! வரித்துக் கொள்! அவனையே துணைக் கொள்,' என்று எனது மனது என்னைத் தாக்குகின்றது. தன் யோசனைகளைச் சொல்லவும் அவற்றின் பிரகாரம் காரியங்களைச் செய்யவும் மஹானான யுலிஸ்ஸீஸ் முன்வந்து நிற்கையில் எனது காரியம் கைகூடிவிடும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அந்த வீரன் மினர்வா தேவியுன் கிருபைக்குப் பாத்திரனாக விருக்கின்றான். அவனை அவள் காத்து வருகின்றாள். அவன் யுத்த காரியங்களில் சிறந்தவன் என்ற புகழுடையவன், கோர யுத்தங்களையும் செய்ய மாட்டுவான். அவனுடைய துணை மாத்திரம் எனக்குக் கிடைத்து விட்டால் எனக்கு வேறு சகாயம் ஒன்றும் வேண்டாம். அழல் கொண்ட அனலில் அடிபட்டு அட்டாலும் அவனது அறிவானது அளவிற் சிறுகாது,'' என்றான்.

அதைக் கேட்ட அந்த ஞானஸ்வரூபி ''பேரும் புகழும் நிறைந்த அந்த வீரர்களின் முன்னால் நீ என்னைப் புகழுவதோ, இகழுவதோ தகாது. நமது யோக்கியதையை உள்ளபடி அறிந்த மனிதர்களின் முன்னால், நமது நண்பன் ஒருவன் நம்மைப் புகழ்தலாகாது, அல்லது நமது விரோதி ஒருவன் நம்மை இகழ்தலாகாது. அதனால் பயனில்லை. அவர்கள் அந்தப் புகழுரையையாவது அல்லது இழி சொல்லையாவது பொருட்டாக்க மாட்டார்கள்.

இது இருக்கட்டும், இப்போது நாம் நமது பொழுதை வீண் போக்காமல் நமது காரியத்தைக் கவனிக்க வேண்டும். இராக்காலம் வெகு விரைவில் குறைந்து கொண்டு வருகின்றது. கதிரவனது வரவை அறிவித்துக் கொண்டு கிழக்குச் சிவந்து கொண்டே வருகின்றது. வான வெளிகளில் மின்னிக்கொண்டிருந்த நக்ஷத்திரங்களெல்லாம் ஒளி குறைந்து கொண்டே வரு

கின்றன. நிசாசரனது இராஜ்ஜிய பாரத்தில் மூன்றில் ஒரு பாகமே மீந்திருக்கின்றது'' என்றான்.

இவ்வாறு, அந்த வீரன் அதியுத்சாகத்துடனும் உருக்கத் துடனும் தன்னுடைய வசனங்களை யுரைத்த பின்னர், மஹா வீரனும் பிரம்மாண்டமான தேகத்தையுடைவனுமான அந்த தயோமதியை அதிபயங்கரமான ஆயுதங்களினாலும் ஆபரணாதி களாலும் அலங்கரித்தனர். அப்போது தைரியவானான திராஸி மேதன், திடிதீசனுக்கு இரண்டு பக்கமும் கூராயுள்ள ஓர் உடை வாளையும் தாராளமான ஒரு மார்புக் கவசத்தையும் அளித்தான். அதன் பின் அவன் திடிதீசனது தலையை மறைத்து அதன்மேல், தோலாலான ஒரு மகுடத்தை வைத்தான். அதற்குச் செண்டாவது, கொண்டையாவது இருக்கவில்லை. அது ஆயுதப் பயிற்சியில்லாத சிறுவர்கள் அணிந்து கொள்ளும், சிரோ பூஷணங் களைக் போலவே விருந்தது. அதில், அவன் முன் செய்த யுத்தங் களில் அடைந்த வெற்றிகளின் சின்னங்களோ வாகை மாலைகளோ அல்லது பூட்டுத் திருகுகளான ஆபரணங்களோ இருக்கவில்லை.

அடுத்தபடியாக யுலிஸ்ஸீஸ் பளிச்சென்று பிரகாசித்துக் கொண்டிருந்த ஒரு வாளையும் பளபளவென்று மின்னிய அம்புகள் நிறைந்த ஓர் அம்பருத் தூணியையும் வில்லையும், தனது கையில் எடுத்துக் கொண்டான். அதன் பின் அவன் தனக்கு மெரியோ னால் அளிக்கப்பட்டதும் தோல்வார்களினால் கட்டப்பட்டதும் நல்ல வேலைப்பாடுகள் உள்ளதுமான ஒரு மகுடத்தைத் தன் தலை யின்மேல் தரித்துக் கொண்டான். அதன் உட்புறத்தில் ஆட்டு ரோமத்தினால் செய்யப்பட்டிருந்த ஒரு மிருதுவான உள் துணியும், வெளிப் புறத்தில் ஒரு காட்டுப் பன்றியின் வெள்ளை வெளேரென்ற பற்களும், ஒழுங்காகக் கட்டப்பட்டிருந்தன. அந்தப் பற்கள் வெளிச்சத்தில் பளிச்சென்று மின்னிய பொழுது உயிருள்ள ஒரு காட்டுப் பன்றியே தனது வாயைத் திறந்து இளிப்பது போல் தோன்றியது! இந்த மகுடத்தைத் தனது முடியில் சூடிக்கொண்ட பொழுது, யுலிஸ்ஸீஸ், அதிபயங்கர ரூபியாகவே விளங்கினான்! இந்தச் சிரோ பூஷணமானது, முதன் முதல் ஐச்வர்யனான ஆன்மின்ஸ்ஸின் புத்திரனாகிய அமிந்தாரிடமிருந்து, ஆட்டோ லிக்ஸ் என்பவன் அவனை மோசஞ்செய்து, அதை அவனிடமிருந்து அபகரித்து அம்மிதாமஸ்ஸீக்குக் கொடுத்து விட்டான். அவன் அதைத் தன்னுடன் சம்பந்தம் செய்து கொண்டு தனக்கு உறவின னாக வந்த மோஸஸிக்கு வெகுமதியாக அளித்து விட்டான். அதன் பின் அது மெரியோன் கைவசமாகிக் கடைசியாக, அது இப்போது ஆலோசனைகள் செய்வதில் சமர்த்தனான யுலிஸ் ஸீஸின் சிரத்தைப் பொருந்தி, அலங்கரித்துக் கொண்டு அதற்கு ஓர் ஆபரணமாக விளங்கியது.

இவ்வாறு ஆயுதங்களும் ஆபரணங்களும் அணிந்து கொண்டு, அவ்விரு வீரர்களும், அந்தச் சபையை விட்டுப் புறப்பட்டு கோணியும் குறுகியும் இருண்டு

மிகுந்த குறுக்கு வழிகளைக் கடந்து சென்றனர். அந்த முகூர்த்தத்தில் மினர்வா தேவியானவள், தான் அவர்கள் அருகிலிருந்துகொண்டு அவர்களது காரியத்தை மங்களகரமாக நிறைவேற்றித் தருவேன் என்று தனது திருவுள்ளத்தை அவர்களுக்கு அறிவிப்பதற்காக ஒரு நீண்ட இறகுகளுள்ள நாரைப் பக்ஷியை அங்கு அனுப்பி வைத்தாள், அது அவர்களுக்கு ஒரு நல்ல சகுனமாக ஆயிற்று. தங்களைச் சுற்றிலும் இருளே சூழ்ந்திருந்தது என்றாலும், அவர்கள் தங்களது செவிக்குப் புலனான கீரிச், கிரீச் என்ற சப்தத்தையும், பறந்து செல்லும் ஒரு பக்ஷியின் இறகுகளிலிருந்து உண்டான விர் என்ற சப்தத்தையுங் கேட்டுக் கவனித்து, அது மினர்வாவின் வாகனமென்றே அறிந்து கொண்டனர். அந்த நாரையானது தனது வலது புறத்திலிருந்து உயர்ந்து பறந்து சென்றதைக் கவனித்து, யுலிஸ்ஸீஸ் நற்சகுனத்தையறிந்து சந்தோஷித்து மினர்வாதேவியைப் பின் வருமாறு துதித்தான் :—

"பழிக்குப் பழி வாங்கும் வஜ்ஜிராயுதத்தைத் தரிக்கவும், பயங்கரமான கேடயத்தைக் குலுக்கி யசைக்கவும் கூடிய தேவரின் புத்திரீ! நான் செல்லும் மார்க்கங்களிலெல்லாம் எனக்கு எப்போதும் துணையாக விருப்பவளே! என்னுடைய சகலமான காரியங்களையும் நடவடிக்கைகளையும், மேற் பார்வை பார்த்துக் கவனித்து வருபவளே! இந்த இருண்ட நிழலின் அடியில் நாங்கள் க்ஷேமமாகச் செல்ல வேண்டும்! உனது கிருபையினால் நாங்கள் எங்கள் கப்பல்களுக்குச் செல்ல வேண்டும்! விசேஷமாக இன்றைய இரவில் என்றும் மறக்கொணாத ஒரு பெருங்காரியம் நடக்க வேண்டும்! அதை நினைத்த மாத்திரத்தில், இனிமேல் பிறக்கப் போகும் துரோஜர்களுங்கூடக் கதறியழுது கண்ணீர் விட வேண்டும்! அவ்வாறு அருள்புரிவீராக," ! என்றான்.

தேவர்களுக்குச் சமானமான தயோமதியும் அப்போது பின்வரும் பிரார்த்தனையைச் செய்தான்:—

"ஜோவ் தேவரின் புத்திரீ! அபஜயமென்பதே யறியாத பாலாஸ்தேவீ! நான் செய்யும் பிரார்த்தனைகளைச் செவி சாய்த்துக் கேளுமம்மா! சர்வாயுதங்களையுமணிந்துள்ள ராஜ ராஜேஸ்வரீ! திடீயஸ்ஸுக்கு அருள் புரிந்தவளே! தகப்பனைக் காத்து இரட்சித்தது போலவே, மகனையுங்காத்து இரட்சியுமம்மா! கிரேக்கர்களுக்கும் தீபர்களுக்கும் முன்னொரு கால் உண்டாயிருந்த வழக்கைத் தீர்த்துச் சமாதானம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் எனது தகப்பன், ஈஸோப்பஸ் நதிக்கரையில் கூடியிருந்த கிரேக்கக்குழாங்களை விட்டுப்பிரிந்து, தீபின் கோட்டைகளுக்குச் சென்று அங்கு ஒரு தூதனுக்குச் செய்யப்படும் மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டும் தான்சென்ற காரியம் நிறைவேறாமற் போனபொழுது, அவர்களிடம் விரோதத்தைக் கொண்டே திரும்பி வந்தான். அப்போது தங்களது சாகசஸத்தினாலும் தாங்கள் அவனுக்கு அளித்த கேடயத்தின் மறைவி

லிருந்து கொண்டும், அவன் தன்னை யெதிர்த்து வந்த கணக்கற்ற இனங்களைத் தன்னந்தனியாக எதிர்த்துப் பொருது, அவர்களனை வரையும் மடக்கிவிட்டான். அப்போது எனது தகப்பனுடன் இருந்து, அவனுக்கு உதவி செய்தீர்! அவ்வாறே எனக்கும் இப்போது உதவி செய்வீராக! தேவபுத்திரீ! தங்களது சகாயத்தைக் கிரேக்கர்களுக்கு முன்போல் செய்து வருவீர்!. கொடிய நுகத்தை யறியாததும் தனது பிறவிக் குணம் மாருததும் விசாலமான நெற்றியும் பிரகாசமான பொன்னுபரணங்கள் கொண்ட கூரான விரிந்த கொம்புகளுமுள்ளதுமான ஓர் இளங் காளையை வெட்டித் தங்களுக்கு நைவேத்தியமாகச் சமர்ப்பிப் பேன்!" என்ருன்.

இவ்வாறு இரண்டு வீரர்களும் தங்களுடைய பிரார்த்தனை களைச் செலுத்தினர்கள். அவற்றை ஆகாயத்திலிருந்து கேட்ட பாலாஸ் தேவியானவள் அங்கீகரித்து ஏற்றுக் கொண்டு, அவர்களது காரியம் செவ்வனே நிறைவேறும் என்று ஆசிர்வதித்தாள்.

அதன்பின், அவ்விரு வீரர்களும், தங்கள் இரைகளைத் தேடிக்கொண்டு ஆவலுடன் நாற்புறமும் பார்த்துக்கொண்டு ஓடும் இரண்டு சிங்கங்களைப் போல், தங்களது மனத்தில் திகில் உண்டாகத்தக்க எண்ணங்களுடன், கருமமே கண்ணுகச் சென்றனர். அந்தப் பிரயாணம் அவர்களுக்கு மிகவும் சலிப்பைத் தருவதாகவே தோன்றியது. இந்த வழி தொலையவில்லையே என்று அவ்விருவரும், ஏங்கி இரங்கினர். அவர்கள் இரத்தப் பெருக்கினுல் கறுத்து அந்தக் களத்தில் ஆங்காங்குக் கிடந்த பயங்கரமான உருவங்களையும், புழுதிக் குவியல்களையும், இரத்தம் வற்ருது நின்றிருந்த குண்டு குழிகளையும், வெட்டுண்டு வீழ்ந்துவிட்ட வீரர்களின் ஆயுதங்களையும், மலைபோல் குவிந்து கிடந்த அவ் வீரர்களின் பிணங்களையும் கடந்து சென்றனர். இது நிற்க.

இச் சமயம், ஹெக்டர், என்ன செய்து கொண்டிருந்தான் என்பதையும் கவனிப்போம்! இவர்கள் இருவருக்கும் இளைக்காத தைரியமுள்ளவனை ஹெக்டரும் அவனுடைய துணைவர்களான ட்ராய் நாட்டு மக்களும் அன்றைய இரவில் சிறிதும் தூங்காமல் அதிவிழிப்புடன் பெருங்காரியங்களைச் செய்தே வந்தனர். ட்ராய் நாட்டுத் தலைவர்களில் உன்னத பதவிகளை வகித்து வந்தவர்கள் அனைவரும் அவனைச் சூழ்ந்துகொண்டு தத்தத்தம் ஆசனங்களில் அமர்ந்தனர். அப்போது அவன், அந்த வீரர்கள் அனைவரையும், நோக்கித் தன் மனதில் உறைந்து வந்த எண்ணங்களைப் பின்வருமாறு வெளிப்படையாக உரைத்தான் :—

" புகழும், பெருமையும், கீர்த்திப் பிரதாபங்களுமுள்ள ஒரு வீரன் இங்கு இப்போது இருக்கின்ருனு? பெரிய காரியங்களை ஆரம்பித்து அவற்றைச் சாதிக்க வேண்டும் என்ற ஆவலுடன் துடிப்பவனே அல்லது மேன்மேலும் உயர்ந்த நிலைமிக்க மரியாதை

களையும் வெகுமதிகளையும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆத்திர முள்ளவனே, ஒருவன் இங்கு இப்போது இருந்தால் அவன் எழுந்து முன் வரட்டும்!

அதோ அங்கு நிற்கும் கப்பல்களில் நடக்கும் காரியங்களை இரகசியமாக அறிந்து கொள்ளவேண்டியது நமக்கு இப்போது அத்தியாவசியமாகவிருக்கின்றது. அந்தக் கப்பல்களுக்குச் சென்று மறைவிலிருந்து கொண்டு, அங்கு நடக்கும் காரியங்களை அறிந்துவந்து, அவற்றை நமக்கு அறிவிக்கத்தக்கசாமர்த்தியமுள்ள ஒரு வீரன், நமக்கு இப்போது வேண்டும்!

அவர்கள் எந்தெந்த ரீதியில் காவல் செய்து வருகின்றனர்? இனிமேல் என்ன காரியங்களைச் செய்யத் தீர்மானித்திருக் கின்றனர்? இதுவரை தோற்றே போயிருக்கும் அவர்கள், புறங்கொடுத்து ஓடிவிடலாம்! என்று யோசனைகள் செய் கின்றனரா? பகலெல்லாம் உழைத்துவந்த களைப்பினால் அவர்கள் இராக்காவல் செய்வதில் ஊக்கங் குறைந்திருக்கின்றனரா? என்ற விஷயங்களை அறிந்து வரக்கூடிய ஒரு வீரன் நமக்கு இப்போது வேண்டும்.

அவனுக்கு அவன் மனதுக்கு இசைந்த ஓர் இரதத்தையும் நம்முடைய சத்துருக்கள் தோற்று ஓடுகையில் விட்டுவிட்டுச் செல்லும், சகலமான வஸ்துக்களையும் கொடுப்பேன்! மற்றெல்லாக் குதிரைகளிலும் அழகிற் சிறந்து விளங்கும், குதிரைகளையும், அவனுக்குக் கொடுப்பேன்! அவனுக்கு அந்தப் பெருங் காரியத்தைச் செய்து முடித்தவன். என்ற பேரும் புகழும் உண்டாகும்!" என்றான்.

அப்போது அந்த துரோஜர்களது குழுவில் தோலன் என்னும் இளம் வீரன் ஒருவன் இருந்தான். அவன் யூமிடீஸ் என்பவனது கைப்புத்திரன் என்று அந்தச் சபையின் கட்டியக் காரனது அருகிலிருந்த ஐந்து கன்னிகைகள் அறிவித்தனர். அவனுக்கு விசேஷமான பித்தளையும் பொன்னும் ஆஸ்தியாக விருந்தன. அவனுக்கு முகலக்ஷணங்கள் குறைவாகவே யிருந்தன வென்றாலும், அவன் ஓடுவதில் சமர்த்தன், நாய் விசையுடையவன். ஓட்டப் பந்தயத்தில் தோற்காதவன் நிகரற்றவன், என்ற புகழை அடைந்திருந்தான்.

அவன் எழுந்திருந்து, ஹெக்டரை நோக்கி இவ் வசனங்களை யுரைத்தான்:—

"ஹெக்டரே! நான் சொல்வதைக் கேள்! எனது தைரியமான மனது இந்தப் பெருங்காரியத்தைச் செய், இந்த நம்முடைய சத்துருக்களின் கப்பல்களைச் சோதித்துவா! என்று என்னைத் தூண்டுகின்றது. நான் இந்தக் காரியத்தைச் செய்யச் சித்தமாயிருக்கின்றேன், ஆனால் முதன் முதலாக நீ, உனது

செங்கோலை ஆகாயத்தை நோக்கி, உயரத் தூக்கி, நான் கேட்கும் வெகுமதிகளை எனக்குக் கொடுப்பதாகச் சத்தியம் செய்ய வேண்டும்.

பிலிதீசன் இந்தக் களத்தின் வழியே சவாரி செய்து கொண்டு செல்லும் பளிச்சென்று மின்னும் இரதத்தையும் அதில் பூட்டியுள்ள அழிவில்லாத குதிரைகளையும் எனக்குத் தருவதாகச் சொல்ல வேண்டும்.

அவ்வாறு தைரியம் சொல்வாயானுல், நான் இதோ துரிதமாகவும் உற்சாகத்துடனும் புறப்படுவேன். உனது எண்ணத்தை நிறைவேற்றுவேன். அவர்களுடைய யோசனைகள் அனைத்தையும் அறிந்து வருவேன். அவசியமானுல், இராஜ ராஜனுன அவர்களது தலைவனது கூடாரத்துக்குச் சென்று அவர்களுடைய ஆலோசனைகளையும் நோக்கங்களையும் அறிந்து வருவேன் " என்ருன்.

அந்த வசனங்களைக் கேட்டபொழுது அந்த வீரன், செம் பொன்னுலான தனது செங்கோலை உயரத்தூக்கி விண்ணுலக வேந்தரைத் தனது சாட்சியாகக் கூவியழைத்துப் பின்வருமாறு யுரைத்தான் :—

"என்றும் அழிவில்லாதவரும், எல்லோருக்கும் தலைவருமான தேவரே ! நான் சொல்லும் இந்த வார்த்தைகளுக்கு நீர் சாக்ஷியாக விரும் ! கார்மேகங் கொண்ட ஆகாய மண்டலத்தைத் தாங்கள் தங்கள் இடிகளைக் கொண்டு இடித்து விடுகின்றீர்கள் ! தோலன் கேட்கும் இந்த வெகுமதிகளை, நான் அவனைத் தவிர வேறு, ஒருவருக்கும் கொடுப்பதில்லை என்றும், அழிவற்ற அந்தக் குதிரைகளை அவனுக்கே பாரி தோஷிகமாகக் கொடுப்பே னென்றும் சத்தியம் செய்கின்றேன் !" என்ருன்.

இவ்வாறு ஹெக்டர் செய்த சத்தியத்தைத் தேவலோக வாசிகள் சிறிதும் கவனிக்கவேயில்லை. அந்தச் சத்தியத்தைத் தாங்கள் ஏற்றுக் கொண்டதை அறிவிப்பதற்கு ஒரு விதமான அடையாளங்களையும் காட்டவில்லை என்ருலும் பயமறியாத அந்த இளங்காளை, அந்தக் களத்தைக் கவனித்துப் பார்த்து வருவேன் ! என்றே துணிந்து அதற்கு வேண்டிய பிரயத்தனங்களைச் செய்தான்.

அவன் முதன் முதலாக ஒரு வளைவான வில்லைத் தனது முதுகின்மேல் குறுக்காகப் போட்டுக் கொண்டான். பின்பு ஓர் ஓநாயின் பழுப்பேறிய தோலைத் தனது தோளின்மேல் போர்த்துக் கொண்டான். அதன் பின் ஒரு கீரியினுடைய பஞ்சுபோல் மிருதுவான ரோமத்தினுல் செய்யப்பட்டிருந்த ஒரு பட்டையைத் தனது தலையைச் சுற்றிக் கட்டிக்கொண்டு, கடைசியாய்த் தனது

கையில் பளிச்சென்று மின்னிய ஒரு கூரான முனையுள்ள வேலாயு தத்தையும் எடுத்துக் கொண்டான்.

இவ்வாறு ஆடைகளும் ஆயுதங்களும் அணிந்துக்கொண்டு, அவன் கடற்கரையை நோக்கிச் சென்றான், அங்கிருந்து திரும்பி வரும் பாக்கியம் அவனுக்கு இல்லாமற் போயிற்று! தான் சென்ற வழியிலேயே தன் காலைத் திருப்பி வைத்து அவன் மீண்டும் வரவில்லை!

அவன் துரோஜர்களுடைய குழாங்களையும் அவர்களுடைய குதிரைகளையும் கடந்து, இன்னும் முன்செல்ல ஆவலுடனும் தூரதிருஷ்டியுடனும், தன் முன்னிருந்த நிர்மானுஷ்யமான ஒரு பள்ளத்தின் வழியே செல்லுகையில், அவனது காலடிச் சப்தத்தைக் கவனித்து அறிந்த யுலிஸ்ஸிஸ் தயோமதியை நோக்கிப் பின்வரு மாறு உரைத்தான் :—

"நண்ப! நம்முடைய எதிரிகளின் காலடிச் சப்தம் எனக்குச் செவிப் புலனாகின்றது; நம்மை நோக்கியோ அல்லது நம்முடைய கப்பல்களுள்ள இடத்தை நோக்கியோ, ஓர் ஒற்றன் ஆவலுடன் வருவதுபோல் தோன்றுகின்றது!

அவன் கடலோரத்தில் பதுங்கி யிருக்கலாம்! அப்படி இல்லையென்றால் அவன், இங்கு மாண்டு கிடக்கும் வீரர்களின் தேகங்களில் இருக்கும் ஆடையாபரணங்களையும், ஆயுதங் களையும் பறித்துக் கொள்ளலாமென்ற உத்தேசங் கொண்டுவரும் ஓர் இராக் கொள்ளைக்காரனாக விருக்கலாம்!

அது எப்படி யிருந்தாலும் இருக்கட்டும். அவன் நமக்கு முன் செல்லட்டும், அவனுக்கும், நமக்கும் இடையில் கொஞ்ச தூரம் உண்டாகட்டும்! அவன் நமக்கு முன் செல்லட்டும், அதன்பின் நாம் அவனுக்குப் பின்னால், திடீரென்று ஓடிச்சென்று, அவனைப் பிடித்து முன் செல்லாமல் நிறுத்தி விடலாம். அப்படியின்றி அவன் நமது கைக்குக் பிடிபடாமலும் நம்மை மீறியும் வேகமாக ஓடி, முன் சென்று விடுவானானால் நாம், அப்போது அவன் நம்முடைய கப்பல்களின் அருகிலும், கடற்கரை யிலுமே ஓடியாடித் திரியும்படி அவனை வளைத்துக் கொள்ளலாம். துரோஜர்களது பாளையத்திற்கும், அவனுக்கும் இடையில் நாம் குறுக்கிட்டு நின்று நம் வேல்களையும், ஈட்டிகளையும் பிரயோகித்து, அவன் ட்ராய்க்குத் திரும்பிச் செல்லுவதைத் தடுத்து விடலாம்! அவனுடைய எண்ணங்களை அடியோடு அழித்து விடலாம்," என்றான்!

அவ்வாறு யோசனைகள் செய்துகொண்டு, அவ்விருவரும் மலைபோல் குவிந்து கிடந்த பிணங்களின் பின்னால் மறைவான ஓரிடத்தில் தங்களுடைய தலைகளைக் குனிந்துகொண்டு ஒதுங்கி

நின்று கொண்டனர். ஒற்றனை தோலனும், சிறிதும் சந்தேக மின்றி அவர்களைக் கடந்து, அந்த வழியே ஓடிச் சென்றான்.

அவன் அவ்வாறு தங்களுக்குப் போதுமான தூரம் முன் சென்றபின், அத் தலைவர்கள் இருவரும், அவனைத் துரத்திக் கொண்டு பின் சென்றனர்.

ஓர் உழவனால் இரண்டு சமபாகமாகப் பங்கிடப்பட்ட ஒரு புற்றரையை இரண்டு ஜோடிக் கோவேறு கழுதைகள் தனித்தனியே உழுது வருகையில் அவைகள் இழுத்துக் செல்லும் கலப்பைகளுக்கும், அக்கலப்பையினால் ஒன்றன்பின் ஒன்றாக உண்டாகும் ஓரோர் புதிய படைச்சாலுக்கும் இடையே எவ்வளவு தூரம் இருக்குமோ, அவ்வளவு தூரமே, ஒற்றனை தோலனுக்கும் இந்த இரண்டு வீரர்களுக்கும் இடையில் இருந்தது.

இவ்வாறு ஓடுகையில் தோலன் சற்று நிதானித்துத் தனக் குப் பின்னால் ஓடிவந்த வீரர்களின் காலடிச் சப்தத்தைச் செவி யுற்றுக் கேட்டு, அவர்கள் ஹெக்டரால் அனுப்பப்பட்டவர்களாக இருக்கலாமோ, என்று ஐயுற்று, தனது ஓட்டத்தை நிறுத்தினான். அவ்வளவில் வீரர்கள் இருவரும் அவனை நெருங்கி, ஒரு வேலாயுதத் தூரத்திற்குள் வந்து விட்டனர்! அவனுடைய வினாக் களுக்கு அவர்கள் பதில் அளிக்கவில்லை! அப்போது தான் அவன், அவர்கள் தன் சத்துருக்கள் என்பதை அறிந்து கொண்டான். நன்றாக வேட்டையாடப் பழகிய இரண்டு வேட்டை நாய்களால் வளைத்துத் துரத்தப்பட்ட ஓர் இள முயலோ அல்லது இருள் சூழ்ந்ததும், முன்பின் விளங்காததுமான காடுகளில் அவ்வேட்டை நாய்களால் பயமுறுத்தப்பட்டு வெருண்டு ஓடும் ஒரு பெண்மானோ, எவ்வாறு தன் கூட்டத்து மிருகங்களுடன் சென்று சேரவொட்டா மல், வழிமறிக்கப்பட்டுப் பிரிந்து ஒரு கணம் கட்புலனாகியும் மறு கணம் மறைந்தும் வெகு தூரம் ஓடிவிடுகின்றதோ, அஃவ்வாறு அந்த துரோஜன் அதிவேகமாகவும், பய நடுக்கத் திகில்களுடனும் ஓடினான்.

கிரேக்கர்கள் அவனை விட்டார்களா? இல்லவேயில்லை! அதிதைரியமுள்ள அவ்விரு வீரர்களும் சிறிதும் இளைக்காமல் அவனை நெருங்கித் தொடர்ந்து துரத்திக் கொண்டு ஓடினர். கடைசியாக அத்த தோலன், அங்கு மதில்களைக் காத்துவந்த தன் சத்துருக்களான கிரேக்க ஸைநிகர்கள் நின்றிருந்த இடத்திலேயே புகுந்து, திடீரென அவர்கள் மத்தியில் விழுந்து விட்டான்! அவர் களுடன் கலந்தும் விட்டான்!

அப்போது பாலாஸ் தேவியின் கிருபையினால் தைரியமான திடிதீசனது மனத்தில் ஒரு பெருந்தன்மையும் தாராளமுமான நல்லெண்ணம் உதித்தது. எங்கு வேறொரு கிரேக்க வீரன் தனக்கு முன்னால் ஓடிவந்து அந்தச் சத்துருவைத் தாக்கிக் கொன்று விடுவானோ? அவ்வாறு செய்தால் அவன் தான் உருவி உயர்த்திக்

கொண்டிருந்த தனது வேலுக்குக் கிடைக்கக்கூடிய பேரையும் புகழையும் அபகரித்துக் கொண்டு விடுவனே! என்று நினைத்து அவன் தனது வேகத்தைத் தணித்துக் கொண்டு சட்டென நின்று விட்டான்.

அதன்பின் அவன் அந்த துரோஜனை நோக்கிப் பின்வருமாறு வசனங்களை உரத்து உரைத்தான் :—

"அடே நீ யார்? யாராயிருந்தாலும் சரி, நில். அப்படி நில்லாமல், நீ முன் செல்வாயானால், இதோ இந்த வேல், உன்னைத் தடுத்து இந்தக் களத்தில் நிறுத்தி நாட்டி விடும்," என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தனது வேலை ஆகாயத்தில் உயரமாக எறிந்தான். அது அவன் எண்ணிய படியே தோலனது தோளைக் கடந்து பூமியில் விழுந்து அங்கு ஊன்றி நின்றுவிட்டது.

அப்போது அந்தப் பாவி, கிறு கிறு வென்று சுழன்று துடித்துக் கொண்டிருந்த அந்த மர ஆயுதத்தின் மேல் சாய்ந்து கொண்டு நின்றே விட்டான். துடி துடி யென்று துடித்தான். அவனது தலை கிறு கிறு வென்று சுழன்றது. அவனைத் திமிர் வாதமும், வலிப்பும் சட்டெனப் பிடித்துக் கொண்டு விட்டன. அவனது பற்கள் ஆடின. கிட்டிக் கொண்டன, கிடு கிடுவென அசைந்தன, அவனது மேனியின் நிறமும் பறந்தே போயிற்று. அது வெளுத்துப் போயிற்று!

அப்போது அவ்வாறு மரம் போல் நின்று விட்ட அவனை, அவ் வீரர்கள் இருவரும்." வந்தோம் வந்தோம்" என்று தொடர்ந்து ஓடி வந்து அவனைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு கொல்ல எத்தனித்தனர். அப்பொழுது அவன் சௌரியமிழந்து அழுத கண்ணும் சிந்திய மூக்குமுடையவனாய்த் தன்னை உயிருடன் விட்டு விடும்படி, அவர்களைப் பின் வருமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்:

"ஐயா, என்னை விட்டு விடுங்கள்! நான் அதிபால்யன்! சிறுவன்! நீங்கள் என்னை உயிருடன் விட்டு விடுவீர்களானால், என் தகப்பனார் உங்களுக்கு, விலைமிக்க பெருந் திரவியங்களை வெகுமதியாகத் தருவார். கணக்கற்ற பித்தளையை உங்களது கப்பலில் கொண்டு வந்து மலைபோல் குவித்து விடுவார். நன்றாக உருக்கிப் பதஞ் செய்யப்பட்ட இரும்பையும், பளிச் சென்று மின்னும் பொன்னையும், அவர் உங்களுக்குக் கணக்கின்றிக் கொடுப்பார்" என்றான்.

அந்த வசனங்களைக் கேட்டு யுலிஸ்ஸிஸ் அவைகளுக்குப் பின்வரும் சமயோசிதமான பதிலை யுரைத்தான் :—

"நீ யாராயிருந்தாலும் சரி, தைரியமாக விரு, சாவுக்குச் சிறிதும் அஞ்சாதே! மற்றைய ஜனங்களெல்லோரும், தங்கள் கண்களை மூடிக் கொண்டு நித்திரையில் ஆழ்ந்திருக்கையில், நீ மாத்திரம் இவ்வாறு, இங்குத் திரிந்து கொண்டிருப்பதற்கு என்ன காரணம்? என்ன காரியம் செய்ய வேண்டு மென்று நீ, இங்கு வந்தாய்? நிசப்தமாக விருக்கும் இந்த நடு ராத்திரியில், நீ இங்கு அலைந்து கொண்டிருக்கக் காரணம் என்ன? எங்களது களத்தில் நடக்கும் காரியங்களை இரகசியமாக அறிந்து செல்வதற்காகத்தான், இங்கு வந்தனையா? உன்னை ஹெக்டர் அனுப்பி வைத்தாரா? அல்லது நீயாகவே துணிந்து வந்தனையா? இங்கு ஏதேனும் கிடைத்தால் அதைக் கொள்ளை யடித்துக் கொண்டு, பிணங் களிடம் நுழைந்து சென்று, இறந்து போனவர்களின் உடல்களின் மேலுள்ள ஆடை ஆபரணங்களையோ, ஆயுதங்களையோ பறித்துக் கொண்டு போகலாம் என்று வந்த ஒரு கொடும் பாவியா?", என்றான்.

அவ்வசனங்களைக் கேட்டதும், ஏற்கனவே வெளுத்துப் போனவனும், பயந்தவனுமான தோலன் தன் உடல் முழுவதும் பாதாதிகேசம்வரை ஸர்வ அவயவங்களும் நடுங்கத் தழு தழுத்த குரலுடன், பின்வருமாறு பதிலுரைத்தான் :—

"ஹெக்டர் சொல்லிய வார்த்தைகளில் நம்பிக்கை வைத்து, ஏமாந்தவனாக வந்தேன். அவன் எனக்கு விசேஷமான வெகுமதிகளைக் கொடுப்பதாகச் சொன்னான். முன் பின் யோசனைகள் செய்து ஆராயாமல் நான் அவைகளை நம்பி விட்டேன். அவன் மஹானான அகிலேசனுடைய இரத்தத்தையே எனக்குத் தருவதாகச் சொன்னான். அதற்கும் மேலான வெகுமதியும் உண்டோ? அகிலேசனுடைய குதிரைகளையும் கூடத் தருவேனென்றும் சொன்னான். அவைகள் இந்த யுத்த களத்திலே ஒரே நொடியில் அதிவேகத்துடன் ஒரே யடியாய்ச் சுற்றி வந்து விடுகின்றனவே! அவைகளுக்குச் சமானமான வேகமுள்ள குதிரைகளும் இல்லையே!

இந்தக் காரியத்தில் பிரவேசிக்க எனக்குச் சிறிதும் இஷ்டம் இருக்கவில்லை. என்றாலும் அவன் இந்தப் பரிசுகளைக் கொடுப்ப தாகச் சொல்லி, ஆசை வார்த்தைகளைக் காட்டி, இந்தக் காரியத்தைச் செய்யும்படி என்னைத் தூண்டி விட்டான்! வெகுவாக உறுத்தினான்.

நீங்கள் என்னென்ன யோசனைகள் செய்கின்றீர்கள், என் னென்ன தீர்மானங்களைச் செய்திருக்கின்றீர்கள்! என்பதை யெல் லாம் அறிந்து வரும்படி என்னை அனுப்பினான். இதுவரை வெற்றி பெறாமல் இருக்கும் நீங்கள் இங்கு விட்டு ஓடிப் போகத்தான் ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கின்றீர்களா? பகலில் பெரிய காரியங்களைச் செய்து வந்ததினால் களைப்புற்று இளைப்பாறிக் கொண்டுதான் இருக்கின்றீர்களா? இராக் காவலில் ஊக்கங்

குறைந்தவர்களாக இருக்கின்றீர்களா ? என்றெல்லாம் அறிந்து வரும்படி, என்னை அனுப்பினுன் ” என்ருன்.

அந்த வசனங்களைக் கேட்டு, யுலீஸ்ஸீஸ் அவனது மடத்தனத்தை இகழ்ந்து, புன்னகை கொண்டு, அவனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான் :—

“ இந்தக் காரியத்தில் நீ மிகவும் துணிவுடன் தான், இறங்கி விட்டாய்! உனக்குக் கொடுப்பதாகச் சொன்ன வெகுமதியும் உயர்ந்தது தான்! அந்த அதிகௌரமான குதிரைகள் தங்களுக்குக் கிடைக்க வேண்டு மென்று வேறு அனேக அரசர்களும் ஆவலுடன் ஆசைப்பட்டுக் கொண்டு வருகின்றனர். அக்குதிரைகள், கேவலம், சாதாரண ஜனங்களுக்கு வசமாவ தில்லை! மஹானுன அகிலேசனுக்குக் கூட அவைகளின் ஆத்திரங்களை அடக்க இயலுவதில்லை! அகிலேசனும் சாமான்ய மானவனே! அவன், அழிவில்லாத ஒரு தேவ கன்னிகையின் வயிற்றில் பிறந்தவனன்ரே ?

ஆதலால் நீ நான் கேட்கும் கேள்விகளுக்கு உண்மையான பதில் சொல்லு! ஒன்றையும் ஒளியாதே! சத்தியத்தையே சொல்லு! இன்றைய இரவு, அந்தத் துரோஜத் தலைவன் எங்கு தங்கி இருக்கின்ருன் ? அவனுடைய குதிரைகள் எங்கே இருக்கின்றன ? துரோஜர்களது கட்சியில் சேர்ந்த மற்றைய அரசர்களெல்லாம், எங்குப் படுத்து உறங்குகின்றனர் ? அவர்கள் என்னென்ன விதமாகத் தங்கள் காரியங்களைக் கவனித்து வருகின்றனர் ? எவ்விதமாகக் காவல்கள் செய்து வருகின்றனர். இனிமேல் இந்த யுத்தத்தில் அவர்கள் என்னென்ன வெல்லாம் செய்ய யோசிக்கின்றனர் ? தங்கள் நகரத்துக்கு வெகு தூரத்திலுள்ள இங்கு வந்து யுத்தஞ் செய்யலாம் என்று நினைத்திருக்கின்றனரா ? அல்லது இந்த யுத்தத்தைத் திரும்பவும் இலியன் கோட்டை மதில்களின் சமீபத்திலேயே செய்ய நினைத் திருக்கின்றனரா ? சொல் ” என்ருன்.

அவ்வாறு யுலிஸ்ஸிஸ் சொல்லக் கேட்ட யூமிதிசன் மகன் அவனுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான் :—

“ தோலனுத்குத் தெரிந்த சங்கதிகளை அவனது நாவு உண்மையாகவே உரைக்கும். அது ஒரு நாளும் பொய் சொல்லி யறியாதது. தன் கூடாரத்தில் ஹெக்டர், ட்ராய் நாட்டுப் பெரிய மனிதர்களெல்லோரையும் ஒன்ருகக் கூட்டி வைத்துக் கொண்டு, அவர்களுடன் விஷயங்களை ஆலோசித்து வருகின்ருன். ஐவஸ் மண்டபத்தில் தான் அவர்கள் கூடி யிருக்கின்றனர். இப்போது அவர்களுடைய பாளையங்களில் அவற் றைக் கருத்துடன் இடைவிடாமல் காத்துவரும் காவலாளர்கள் ஒருவராவது இல்லவே இல்லை, அதோ அங்குத் தெரிகின்றதே! அங்கு புகையுடன் எரியும் நெருப்புள்ள இடத்தில் தான்

துரோஜர்கள் விழித்துக் கொண்டிருக்கின்றனர். ட்ராய் நகரத்தார் மட்டும் தங்கள் நகரத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று கவலை கொண்டு அதைக் காத்து வருகின்றனர். அவர்கள் அதை அக்கறையுடனும் ஜாக்கிரதையுடனும் காத்துக் கொள்வார்கள் என்று திடமான நம்பிக்கை கொண்டு, சுகமாகத் தூங்குகின்றனர்! தங்கள் பெண்டு பிள்ளைகள், இந்த ஆபத்துக்களுக்கு ஆளாகாமல், வெகு தூரத்திலிருப்பதனுல், அவர்களது மனத்தில் ட்ராய் நாட்டாருக்குள்ள பயத்தில் அரைவாசிகூட இல்லை!" என்ருன்.

அதன் பின், யுலிஸ்ஸிஸ் மறுபடியும் அவனை நோக்கி, "உதவிக்கு வந்த தேச வீரர்களெல்லாம், துரோஜர்களின் மத்தியிலேயே படுத்து உறங்குகின்றனரா, அல்லது அந்தக் களத்தில் பலவிடங்களிலும் சிதறிக் கிடக்கின்றனரா?" என்று வினவினுன்.

அதற்கு மறுமொழியாக, அந்த ஒற்றன் பின் வருமாறு உரைத்தான் :—

" அவர்கள் தங்களுடைய சேனைகளை எங்கெங்கே நிறுத்தியிருக்கின்றனர் என்பதைச் சொல்லுவேன், கேள். வளைந்த பற்களும் அதிபயங்கரமான உருவமும் உடையவர்களாகிய பேயர்களும், கரையான்களும் காக்கன்களும், பிலாஸ்கியப் பிரஜைகளும், ஸிஸீஜிகளும், கரையோரமாகத் தங்கி யிருக்கின்றனர்.

அந்தக் கரைக்கு அதி தூரத்திலுள்ளதும், கொஞ்சம் உயர்ந்து மேடாகவும் உள்ள இடத்தில் திம்பிராஸின் பழைய கோட்டை மதில்களுக்குச் சமீபத்தில் லிஸியர்களும், மிஸியர்களும், மியோனியன் மஹா ஜனங்களும், பிரிஜியாவிலிருந்து வந்த குதிரை வீரர்களும் தங்கியிருக்கின்றனர்.

இவர்கள் எல்லோரையும் விட்டு நெடுந்தூரத்திலுள்ள ஒதுக்கமான ஓர் இடத்தில் திரேஸியர்கள் தங்கி இருக்கின்றனர். இவர்கள் அனைவரையும், மஹாராஜ ஆயோனியஸ்ஸின் புத்திரனை ரேஸஸ் என்பவன் சிறிது காலத்துக்கு முன்பாகத்தான் ட்ராய் நாட்டாரின் உதவிக்காக அழைத்து வந்தான். குளிர்காலத்தில் பெய்யும் பனியைப் போன்ற வெண்ணிறமும், காற்றைப் போன்ற வேகமுமுள்ள அவனுடைய குதிரைகள், அதிகம்பீரமாகச் செல்வதை நானே பார்த்தேன். அவனுடைய தேரானது பளிச்சென்று விளங்கும் விசேஷமான வெள்ளிக் கவசங்களுடன் பிரகாசிக்கின்றன. அவன் தன்னுடைய பெருத்த கைகளில் தணல் போல் தகதகவென்று பிரகாசிக்கும் பொன்னுபரணங்களை அணிந்து கொண்டிருக்கின்ருன். பொன்னுலும் வெள்ளியாலும் செய்யப்பட்டதும் அதிவிசேஷமானதுமான ஆபரணச் சுமைகளை அணிவதற்குக் கேவலம் ஒரு மர்த்தியன் அருகனல்ல! அவன் அணிந்திருக்கும் கவசமானது, அதிகெட்டியாய்யிருக்கின்றது. அது

ஒரு தேவனுக்கு அழகு செய்வது என்ருல், அதன் பெருமையைப் பேசவேண்டுவதில்லேயன்ரே?

நான் மஹா அதிர்ஷ்ட ஹீனன். என்னே நீங்கள் ஒன்று உங்களுடைய கப்பல்களுக்குப் பிடித்துக் கொண்டு செல்லுங்கள். அல்லது எனக்குக் கெட்டியும் பளுவுமான விலங்குகளேயிட்டு, இங்கேயே விட்டுவிட்டுச் செல்லுங்கள். நீங்கள் முன் சென்று, நான் சொல்லியவை யெல்லாம் உண்மைதாஞே அல்லது பொய் தாஞே என்று அறிந்து திரும்பி வரும் வரை, நான் எனது தலே விதியை நொந்து கொண்டு இங்கேயே கிடப்பேன்'' என்ருன்.

இந்த வசனங்களேக் கேட்ட திடிதீசன் தனது முகத்தைச் சுளித்துத் கொண்டு, அவனே நோக்கி, "உன்னே நாங்கள் விட்டு விடுவோம் என்ருவது, நீ இனியும் உயிருடன் இருப்போம் என்ருவ துள்ள ஆசையை அடியோடு ஒழித்து விடு! நீ சொல்லிய தெல் லாம் உண்மையென்றே ஏற்பட்டு விட்டாலும்கூட, நாங்கள் உன்னே உயிருடன் விடுவோமா? மாட்டவே மாட்டோம்! எங் களது கைக்கு அகப்பட்ட உன்னே, நாங்கள் இப்போது கொன்று ஒழித்துத் தீர்க்காவிடில், நீ இதற்கும் மேலான சதிகளேயல்லவோ, செய்யத் துணிந்து விடுவாய், அல்லது எங்கள் களங்களேயும், பாளேயங்களேயும், துளேந்து துளேந்து சென்று எங்கள் நடவடிக்கை களேயும் ஏற்பாடுகளேயும் ஆராய்ந்து உளவுகளே அறிவாய்! ஒரு துரோகியானவன் எங்கள் கையில் அகப்பட்ட பின் நாங்கள் அவனே எங்களது கையை விட்டு நழுவ விடுவோமா? மாட் டவே மாட்டோம்! அப்பா! நீ, துரோகஞ் செய்தவன் என்று அறிந்த பின்னும், நீ மேன்மேலும் துரோகஞ் செய்து வரும்படி, உன்னே உயிருடன் விட மாட்டோம்!'' என்று கடிந்து வெட் டெனச் சொன்ஞன்.

அவ்வாறு அவன் சொல்லி வருகையில் அதிர்ஷ்ட ஹீனஞன அச்சிறுவன் மறுபடியும் தன்னே உயிருடன் விடும்படிக் கெஞ்சிக் கொண்டு, திடிதீசனது தாடியை தடவிக் கொடுக்க எத்த னிக்கையில், அந்த வீரன், வேகத்துடன் துடித்துக் கொண்டிருந்த தனது உடைவாளேயுருவி மின்னலேப் போன்ற வேகத்துடன் அவ னது கழுத்தைவெட்டி அவனே இரண்டு துண்டாக்கிக் கீழே தள்ளி ஞன். அவனது மண்டையானது மண்ணில் விழுந்து உருண்டு புரண்டு ஓடியது!

அதன்பின் வீரர்கள் இருவரும், அவனது தலேயங்கிகளேயும் பழுப்பேறிய ஓநாய்த் தோலேயும் வளேயாத வில்லேயும் வேலேயும் அவிழ்த்துப் பிடுங்கிக் கொண்டனர்.

இவைகளனேத்தையும், யுலீஸ்ஸிஸ் தன் கையில் எடுத்து உயரத் தூக்கி ஏந்திக் கொண்டு அவற்றைத் தனக்குச் சகாயஞ் செய்த பாலாஸ் தேவிக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்துப் பின் வருமாறு, அந்தத் தேவியைத் துதித்தான்:—

"ஸர்வ ஆயுதங்களையும் அஸ்திரசாஸ்திரங்களையும் தரித்துள்ள பெரும் தேவீ! எங்களுடைய சத்துருக்களிடமிருந்து நாங்கள் கொள்ளையடித்தும் பறித்தும்விட்ட அந்த வஸ்துக்களை எங்களது காணிக்கையாக ஏற்றுக் கொள்ளுமம்மா? திரேசியக்காரர்களுடைய குதிரைகளை யெல்லாம், நாங்கள் எங்கள் பெரும்பாட்டிற்குப் பலனாக எங்களுக்குக் கிடைக்குமாறு அருள் புரியுமம்மா! தேவ கணங்கள் எல்லோருக்கும் தலைவரான தங்களை நாங்கள் வணங்கித் துதிக்கின்றோம்! எங்களுடைய முயற்சிகளெல்லாம் நற்பயன் பெறுமாறு எங்களுக்கு ஆசீர்வாதஞ் செய்வீராக! நாங்கள் செய்ய வேண்டிய வழிகளைக் காட்டிக் கொண்டு எங்களுக்கு முன் செல்வீராக!" என்று பிரார்த்தித்தான்.

அவ்வாறு பிரார்த்தித்துக் கொண்டே அவன் அந்தக் கொள்ளைப் பொருள்களிலிருந்து ஒழுகிக் கொண்டிருந்த இரத்தத்தை துடைத்துவிட்டு, அவற்றை அங்கு உயர்ந்தும் விரிந்தும் நின்று கொண்டிருந்த ஒரு தாம விருக்ஷத்தின்மேல் வைத்தான்.

அதன் பின் அவன், தாங்கள் முன் சென்ற அவ்வழியே திரும்பி வருகையில், தங்களுக்கு ஓர் அடையாளமாக விருந்து உதவி புரியுமாறு அவ்விடத்தில் கிடந்த செடி செத்தைகளையும், மரக்கிளைகளையும், கொடிகளையும் சுள்ளிகளையும் ஒன்றாகக் கூட்டி அவற்றை ஒரு மலைபோல் குவித்து வைத்தான்.

பின்பு அவ்விருவரும் அந்த நிச்சலமான இரவில், அந்தக் களத்தில் குறுக்கு நெடுக்காகவும் வளைந்துமிருந்த வழிகளையெல்லாம் கடந்து சென்றனர். அவ்வழிகளெல்லாம் இரத்தப் பெருக்கினால் வழுக்கலாக விருந்ததுமன்றி, அவைகளின் இடையில் வீரர்களுடைய ஆயுதங்களும் கவசகேடயங்களும் மலைகள்போல் குவிந்து கிடந்தன. வீரர்களிருவரும் அவைகளின்மேல் ஏறி, இறங்கி, அவற்றைக் கடந்து முன் சென்றனர். கடைசியாக அவர்கள் திரேசியக்காரர்கள் தங்கியிருந்த இடத்தைச் சென்று சேர்ந்தனர்.

அவர்களனைவரும் அன்றைய இரவிற்கு முந்திய மத்தியான காலத்தில் செய்து வந்த காரியங்களினால் தங்களுக்கு உண்டாயிருந்த களைப்பை ஆற்றிக் கொண்டு, அயர்ந்து நித்திரை செய்து வந்தனர். அவர்கள் அவ்வாறு மூன்று வரிசைகளில் படுத்துக் கொண்டிருந்தனர். ஒவ்வொரு வீரனது சமீபத்திலும் அவனவனுடைய குதிரையானது சேணம் முதலிய சகலமான சாமான்களையும் அணிந்து சித்தமாக நின்று கொண்டிருந்தது. அவர்களுடைய ஆயுதங்களும் அவர்களது சமீபத்திலேயே நிலத்தின்மேல் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. அவைகள் நிழல்கொண்ட ஓர் இடத்திலேயே வைக்கப்பட்டிருந்தன வெனினும் பிரகாசத்துடன் விளங்கின. அவர்கள் அனைவருக்கும் மத்தியில், ரேஸஸ் என்பவன் கலையாத நித்திரையில் ஆழ்ந்தவனாய்ச் சிறிதுங்கவலையின்றிப் படுத்துக் கொண்டிருந்தான். வெண்ணிறங் கொண்ட அவனு

டைய குதிரைகளும், அவனுடைய தேருக்குப் பின்புறமாகவே கட்டப்பட்டிருந்தன.

இந்தப் பிரியமான காக்ஷியானது முதன் முதலாக, யுலிஸ் ஸீஸுக்கே கட்புலனுயிற்று. அவன் அதைக் கண்ணுற்று மிகவும், மகிழ்ந்து அதைத் தயோமதிக்குச் சுட்டிக் காட்டி, அவற்றை நாம் அவிழ்த்துக் கொண்டுப் போய்விட வேண்டும்! இவை மஹா விசேஷமான பொருளன்ருே என்று எண்ணங் கொண்டு அவனே நோக்கிப் பின்வரும் வசனங்களேயுரைத்தான் :—

“ இந்த வீரனேயும் இவனுடைய குதிரைகளேயும் இவனது இரதத்தையும் தான் பார்? தோழன் சொல்லிய பிரகாரமே, அவை சுவர்ண மயமான ஆபரணங்களுடன் விளங்குகின்றன. திடிதீசா! நீ மஹா தைரியசாலியன்ருே? இப்போது நீ ஒரு காரியம் செய்ய வேண்டும். உனது தைரியத்தை நீ இப்போது தான் காட்ட வேண்டும். இந்தத் தேருக்குச் சமீபமாகச் சென்று, இந்தக் குதிரை களே அவிழ்த்து விடு! அப்படியே இல்லே! அது ஒரு மஹா அற்ப மான காரியம். அதிலும் மேலான துணிவுள்ள காரியம் ஒன்று செய்யவேவேண்டும், இங்குள்ளோர் அனேவரையும்ஒரேயடியாய்க் கொன்று விடவேண்டும் என்பது உனது இஷ்டமானுல் அப்படியே செய். அவ்வாறு நீ, இந்தக் காரியத்தில் கண்ணுயிருக்கையில், நான் இந்தக் குதிரைகளேப்பிடித்துக்கொள்ளுகின்றேன்” என்ருன்.

இவ்வாறு அவன் சொல்லிய சமயத்தில் பாலாஸ் தேவியின் கிருபையினுல், வீரனுன அவனது உள்ளத்தில் மிகுந்த உற்சாகம் உண்டாயிற்று. அவள் அவனுடைய நரம்புகளுக்கு வலுவைத் தந்தாள். அவற்றை நன்ருக இறுக்கினுள்! இரத்த வெள்ளமானது அவனேப் பின் தொடர்ந்து சென்றது. சத்துருக்களுடைய இரத் தத்தில் கொழுத்துப் போனதும் அதிதாகங்கொண்டிருந்ததுமான அவனது உடைவாளானது அவனுடைய காலடிச் சுவடுகளி லெல்லாம் இரத்தத்தைப் பெய்து அவற்றை நனேத்துக்கொண்டும், அந்தக்களம் முழுவதையும் இரத்தத்தினுல் கறைப் படுத்திக் கொண்டுமே சென்றது. அந்த வாளினுல் வெட்டுண்டு மடிந்து கீழே வீழ்ந்த வீரர்கள் இட்ட கூக்குரல்களின் எதிரொலிகள் அந்தக் கடற்கரை முழுவதிலும், ஒன்றன்பின் ஒன்ருகத் திரும்பத் திரும்பச் செவிப் புலனுயின.

அவனது சாகசம் எவ்வாறு இருந்தது என்பதைச் சொல்லு கின்றேன்! கேளுங்கள்:— பிடிவாதமும் ஆத்திரமும் உள்ள ஒரு சிங்கமானது, தான் இரவில் தங்கியிருந்த தனது குகையை விட்டுப் புறப்பட்டுக் காவலில்லாமலும், தன்னேயெதிர்ப்பவர் ஒருவரும் இல்லாமலும், ஓர் ஆட்டுப் பட்டியின் வேலிகளேத் தாண்டிப் பாய்ந்து, அதனுள் பிரவேசித்து, அங்குள்ள வெள்ளாடுகளேயும், செம்மறியாடுகளேயும் சிறிதும் தங்கு தடையின்றி அடித்துக் கொன்று அவற்றைத் தனது வாயில் நுரைவரும் வரை தின்று விடுகின்றதன்ருே! அவ்வாறே பழிதீர்க்க வேண்டுமென்று துடித்த

அந்த வீரன் ஓய்வு, ஒழிச்சலின்றித் தனக்கு எதிர்ப்பட்டவர்கள் அனைவரையும், தனது கை கொண்டு வதைத்துக்கொண்டே சென்றான். அவ்வாறு அவன் செய்து வந்த வதையினால், திரேஸிய வீரர்கள் பன்னிருவர் தங்கள் உயிரை நீத்துத் தங்கள் உடல்களை அந்தக் களத்தில் கிடத்தினர்.

இவ்வாறு தனது கூட்டாளியானவன் சத்துருக்களுடைய சேனைத் தலைவர்களை வெட்டி வீழ்த்தி வருகையில், யுலிஸ்ஸீஸ் அவனை யனுசரித்து அவனைத் தொடர்ந்தே சென்று, தாங்கள் கைப்பற்ற உத்தேசத்திருந்த, பாலைப்போல் வெண்ணிறமுள்ள குதிரைகளை க்ஷேமமாகத் தங்களுடைய கப்பல்களுக்குக் கொண்டு சென்று சேர்ப்பதற்காக, வழியில் தடையொன்று மில்லாமலிருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன், திடிதீசனால் அங்கீகரிக்கப்பட்டு நிலத்தில் பிணமாய்க் கிடந்த வீரர்களின் காலைப்பிடித்து, அப் பிணங்களைத் தரதர வென்று பின்னால் ஒருபுறமாக இழுத்து ஒதுக்கினான். இந்தக் காரியம், மிகவும், உசிதமாகவே யிருந்தது. அவன் அப்படிச் செய்திரா விட்டால், மூர்க்க குணமும், யுத்தங்களில் உழைத்து வரப் பழகாதவையுமான அக்குதிரைகள் அங்கு வீழ்ந்து கிடந்த பிணக்குவியல்களைக் கண்டு திடுக்கிட்டு, வெருண்டு நடுங்கியே போயிருக்கும்! மேலே சொல்லியபடி பன்னிரு வீரர்களை ஒழித்துத் தொலைத்த பின்னர், அவ்விருவரும் அந்தப்பன்னிருவரின் தலைவனைக் கண்டனர். அக்கணமே அவனைத் திடிதீசனது உடைவாளானது நிலத்தில் ஊன்றி விட்டது.

அப்போது மினர்வா தேவியானவன், ரீஸஸுக்கு ஒரு ஸ்வப்பனத்தை யுண்டாக்கி, அதன் மூலமாக அவனது மரணத்தை அவனுக்கு அறிவித்து விட்டாள். அந்த ஸ்வப்பனத்தில், ஆயுதங்கள் அணிந்திருந்த ஓர் உருவமானது அவனுடைய கூடாரத்தின் முன் வந்து நின்று மாயாவுருவமுள்ளதும், உருக்கினால் செய்யப்பட்டிருந்ததுவுமான ஒரு கத்தியைக்கொண்டு, அவனது மார்பைத் துளைத்து ஊடுருவிச் சென்று, அதை உடைத்து விட்டது. அவ்வாறு ஸ்வப்பனம் கண்டபின், அந்த அரசன் தனது கண்ணைத் திறக்கவும் இல்லை. எழுந்திருக்கவு மில்லை!

இவ்வாறு ஆனபின், வளைக்காத வில்லைத் தரித்திருந்த யுலிஸ்ஸும், அந்த வீரனுடைய பனிபோன்ற நிறங்கொண்ட குதிரைகளைப் பிடித்து நிறுத்தி, அவைகளுக்குக் கட்டப்பட்டிருந்த வெள்ளிக் கடிவாளச் சங்கிலிகளைக் கைக்கொண்டு முன் சென்றான். அச்சமயத்தில் அவன், ரேஸஸ்ஸின் தேரில் மாட்டித் தொங்க விடப்பட்டிருந்த சாட்டைவாரை எடுத்துக்கொள்ள மறந்து விட்டதினால், அதற்காகத் திரும்பிச் செல்ல வேண்டுமென்று தனது கூட்டாளிக்குச் சைகை செய்தான்.

ஆனால் அப்போது திடிதீசன் மேன்மேலும் புதிய ஸாஹ சமங்களைச் செய்ய வேண்டும், இனியும் உண்டாகக் கூடிய இடையூறுகளை நீக்க வேண்டும் என்று ஆத்திரத்துடன் துடித்தான். அவனது மார்பு புடைத்துக்கொண்டு ஆத்திரத்துடன் பொங்கியது. அவன் அச்சமயம் செய்யவேண்டுவது இன்னது என்பதை அறியாமல் மலைத்து நின்றான்.

சொட்டச் சொட்ட இரத்தம் வடிந்து கொண்டிருக்கும் தனது உடைவாளை மறுபடியும் பிரயோகித்து மேன்மேலும் வீரர்களைக் கொன்று, அவர்களை இருள்சூழ்ந்த நரகலோகத்துக்கு அனுப்பி விடுவது நல்லதா! ரீஸ்ஸஸின் கவசங்களும் கேடயங்களும் வைக்கப்பட்டிருந்த இரதத்தை இழுத்துக் கொண்டுபோவது நல்லதா! அல்லது தனது முழுபலத்துடன் எழுப்பிக் கிளப்பி அந்த இரதத்தை ஒரேயடியாய்த் தூக்கிக்கொண்டே போய் விடுவது நல்லதா வென்று பலவாறாக யோசனைகள் செய்து கொண்டு இன்னதுதான் செய்யத் தக்கது, என்று நிச்சயிக்க முடியாமல், சஞ்சல புத்தியுடன் தத்தளித்து நின்று கொண்டிருந்தான்.

இவ்வாறு திடியஸ்ஸின் புத்திரன், சிந்தையில் ஆழ்ந்திருக்கையில், பாலாஸ் தேவியானவள், அவனுக்குப் பிரசன்னமாகி அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களையுரைத்தாள்:—

“எனது மகனே! இது போதும்! இனியும் மேன்மேலும் வீரர்களைக் கொல்லுவதை நிறுத்து! உனது க்ஷேமத்தைக் கவனித்துவா. சாந்தத்துடனும், மன வமைதியுடனும் திரும்பிச் செல்லு! இங்கு உனக்குக் கிடைத்த சகலமான பொருள்களையும் விரைவாகத் திரட்டியெடுத்துக்கொண்டு, உனது கப்பலுக்குச் சென்று, அவற்றை அங்குப் பத்திரப்படுத்திக் கொள்ளு. உன் சத்துருக்களது நகராகிய ட்ராயைச் சில தேவர்கள் காத்து வருகின்றனர். அவர்கள் ஏற்கனவே உன்மீது கோபங்கொண்டிருக்கின்றனர். அவர்கள் கோபத்தையும், வெறுப்பையும் விருத்தி செய்து விடாதே” என்றாள்.

அந்த ஆகாசவாணியின் குரலைக் கவனித்துக் கேட்டபொழுது, அது யுத்தத்தின் அதிர்ஷ்ட தேவியின் குரலென்றே அவனுக்குத் தெளிவாய்த் தெரிந்து விட்டது. அவ்வாறு தெரிந்தவுடன் அவன் தனது, இரதத்தின் மீது விரைவில் ஏறிக்கொண்டு அவளது ஆணைப்படியே செய்தான்.

யுலிஸ்ஸிஸும் தன் கையிலிருந்த வில்லை ஓங்கவே, குதிரைகளிரண்டும் பறந்து சென்றன. அவைகள் சென்ற காட்சியானது காற்றைப்போல் துரிதமாகவும் குளிர் காலத்தில் பெய்யும் வெண்பனியைப் போலு மிருந்தது. அவ்வாறு அவர்கள் அதிவேகமாக வெண் பனியைப்போல் மறைந்து சென்றார்களெனினும், அவர்கள் அங்குக் கூடியிருந்த தங்களுடைய விரோதிகளுக்குக் கட்புலனாகாமலிருக்க வில்லை.

ஜோதியின் கடவுளாகிய தினகரன், தனக்குப் பிரியமான ட்ராய் நகரைக் காத்து வருகையில், மினர்வா தேவி, பறந்து வந்ததைக் குறிப்பாகக் கவனித்து வந்தது மன்றி, அத்தேவியானவள் திடியஸ்ஸின் புத்திரனுக்கு அளித்த அபயத்தையும், இரட்சையையுங்கூடத் தம் கண்ணாலேயே கண்டுவிட்டார். இவையனைத்தையும் கண்ணுற்றபொழுது, அவரது மனது கோபத்துடன் கொதித்தது. அவருக்கு எரிச்சல் உண்டாயிற்று! இந்தப் பழியை எவ்வாறு தீர்ப்பது என்று அவர் தவித்தார். துடித்தார். இவ்வாறு மஹா கோப தாப ஆத்திரங்களுடன் அவர் துரோஜர்களது களத்தில் விரைந்து இறங்கிச் சென்று அதி காலையான அந்தச் சமயத்தில் ஹிப்போக்கூனை யெழுப்பினர்.

அந்த ஹிப்போக்கூன் என்பவன் ரேஸஸ்ஸின் மெய்க் காவலனும், அவனைப் பிரியாதிருந்து வந்த விசுவாசமுள்ள அவனது உற்ற பந்துவும், அவனுக்குச் சமயோசிதமான யோசனைகளைச் சொல்லி வந்த நண்பனுமாவான். அவன் தூக்கம் விட்டு எழுந்த அளவில், யுத்தகளமானது இரத்தக்கறை கொண்டு அலங்கோலமாகவும் குதிரைகள் நின்றிருந்த விடம் காலியாகவுமிருந்தது. அந்தச் சமயத்தில் எப்போதும் போல் விசுவாசமும் பற்றும் உடைய திரேஸியர்கள் கடற்கரையோரத்தில், ஆவலுடன் தங்களது கருமத்தில் கண்ணுயிருந்தனர். ஹிப்போக்கூன் அவர்களை வரையும் நோக்கி, அவர்களெல்லோருக்கும் அந்தப் பன்னிருவீரர்களின் அழிவினுல் நேர்ந்துவிட்ட கஷ்டத்தையுன்னி யுன்னிப் பிரலாபித்துக் கண்ணீர் வடித்தான். ரீஸஸ்ஸின் அழிவைக் கண்ணுற்ற பொழுதுதான் அவனுக்கு அழிவில்லாத துக்கமும், துயரமும், சங்கடமும் உண்டாயின.

அவன் ரீஸஸ்ஸைப் பெயரிட்டுக் கூவியழைத்துக் கொண்டு வந்தபொழுது, அந்த அழைப்புக்கு மறுமொழி வராமல் அது வீணுகி விடவே, அந்தப்பாளையத்தின் பல விடங்களிலுமிருந்து அக்காலத்தில் ஒரு பெருங் குழப்பம் உண்டாகி அது அந்தக்களம் முழுவதிலும் பரவிவிட்டது.

அப்போது துரோஜர்களனைவரும் அன்றைய இரவில் நடந்துவிட்ட சமாச்சாரங்களைக் கண்ணுற்று, ஆச்சரியமும், திகிலும் அடைந்தவர்களாய்க் கதறியலறி யடித்துக்கொண்டு, மலை போல் குவிந்துகிடந்த வீரர்களின் பிணங்களையும் அவர்களுடைய ஆயுத ஆடை ஆபரணங்களையும் தாண்டித் தாவிக் குதித்து விரைந்து ஓட்டம் பிடித்தனர்.

காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்து வருகையில் வீரர்களான திடிதீசனும், யுலிஸ்ஸீஸும் ஹெக்டரின் வேவுகாரனிடமிருந்து தாங்கள் பறித்துக் கவர்ந்த ஆடையாபரணங்களைத் தாங்கள் பதுக்கி வைத்திருந்த மறைவான இடத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கு வந்தவுடன் யுலிஸ்ஸீஸ் முன் செல்லுவதை நிறுத்தவும், திடிதீசன் மேற்கூறிய தோலனது வஸ்திர ஆபரண ஆயுதங்களை

யெடுத்து, அவனிடம் கொடுத்தான். அதுவரையிலும், அவற்றி னின்று தோலனது இரத்தமானது சொட்டிக்கொண்டேயிருந்தது. அதன்பின் அவன் தனது குதிரையின் மீது ஏறிக்கொள்ள வீரர்கள் இருவருடைய குதிரைகளும் சுறுசுறுப்பாகத் தங்களது கால்விசை யைக் காட்டிக்கொண்டு பறந்து இடி முழக்கங்களுடன் கிரேக்கர் களுடைய கப்பல்களை நோக்கிச் சென்றன.

அவ்வாறு அவர்கள் கோஷத்துடன் வந்த வரவை விருத்த ரான நெஸ்டார் முதன் முதலாகச் செவியுற்றுக் கேட்டு அறிந்து, தம்மைச் சுற்றியிருந்த தம் சகபாடிகளை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

“துள்ளிக் குதித்து வரும் குதிரைகளின் காலடிச் சப்தம் எனக்கு கேட்கின்றது! அது அந்தப் பக்கமாக வரவர உரத்துக் கேட்கின்றது. அது எனது காதுக்கு நன்ருகக்கேட்கின்றது! மஹா ஞுன திடிதீசனும் யுலிஸ்ஸீஸும் இன்று சென்ற விடத்தில் யுத்தங் களைச் செய்து வெற்றியடைந்து திரும்பி வருகையில், துரோஜர்கள் வளர்த்து வரும் சில குதிரைகளைப் பிடித்து அவற்றை இங்கு ஓட்டிக்கொண்டு வருவதாக விருக்கலாம் என்று ஊகிக்கின்றேன். தெய்வங்களே! ஊகிக்குமாறே காரியங்கள் உண்மையாக நடந் திருக்கவும் வேண்டும்! அவ்வாறு அருள்புரிவீர்களாக!

என்ருலும் எனது மனத்தில் ஒரு பெருத்த பயமும் குடி கொண்டிருக்கின்றது. அதற்கு ஆதாரம் சிறிதும் இல்லாமல் இருக்கவேண்டும் என்றும் நான் கோருகின்றேன்! எங்கு எண் ணில் மிக்க துரோஜர்கள் நம் வீரர்களை மடக்கி வளைத்து விட்டன ரோ, அவ்வாறு மடக்கி, அவர்களைத் துரத்திக்கொண்டு இந்தக் கரை வரையிலும், தொடர்ந்துதான் வருகின்றனரோ! அல்லது நம் வீரர்கள் அழிந்தே போய் விட்டனரோ! என்றெல்லாம் நினைத்து எனது மனம் புண்ணுகின்றது!” என்ருர்.

அவர் அவ்வாறு சொல்லி முடிப்பதற்குள்ளாக இதோ வந்தோம் வந்தோம் என்று அந்த வீரர்கள் இருவரும் அவர்க ளுக்கு முன் வந்து தங்கள் ஊர்திகளினின்றும் எட்டிப் பாய்ந்து தரையின்மேல் குதித்தனர்.

அக்கணமே கிரேக்கர்களது மனதில், உறைந்து வந்த பய மானது பறந்து ஓடிவிட்டது! அதன் பின் வீரர்கள் இருவரும் பிரிய வசனங்களுடனும், தங்களுடைய கைகளைத் தங்களுக்கு முன் பாக நீட்டிக்கொண்டும் அங்குக் கூடியிருந்த அரசர்களை வணங் கினர்.

அப்போது முதன் முதலாக நெஸ்டார், அவர்களை நோக்கிப் பின்வருமாறு வினவினுர் :—

"நம்முடைய கோஷ்டியார் அனைவருடைய நன்மதிப்புக்கும் ஸ்துதிக்கும் பாத்திரமாகவும், கிரேக்கர்களது சமூகத்தின் பேருக்கும் புகழுக்கும் மூலகாரணமாகவும் இருக்கும் வீர! நான் கேட்கும் கேள்விகளுக்கு விடையளிப்பீராக! இந்தத் துரகங்கள் உங்களுக்கு எங்கிருந்து கிடைத்தன? எவ்வாறு கிடைத்தன? அவற்றை நீங்கள் நம்முடைய சத்துருக்களிடமிருந்து வெற்றியுடன் பிடுங்கி வந்தீர்களா? அல்லது ஏதேனும் ஒரு தெய்வந்தான் உங்களுக்கு இவைகளைப் பரிசாக அளித்ததா? தினகரனது ஜ்வாலையுடன் விளங்கும் இரதத்தை இழுத்துச்செல்லும் அதி சுந்தரமான குதிரைகளுங்கூட இவைகளைப்போல் காந்தியுடனும் உல்லாசத்துடனும் விளங்குவதில்லையே!

நான் கிழவன் தான் என்றாலும் கிழத்தனத்தைப் பாராட்டிக் கொண்டு யுத்தத்தை விட்டு விலகியிருப்பது, எனக்கு இழிவையே தரும் என்று மதித்து, வாளாவிருப்பதை வெறுத்து, ஒரு நாள் கூடத் தவறாமல் இந்த யுத்த களத்தில் நடந்துவரும் சகலமான காரியங்களிலும் சேர்ந்து உழைத்து வருகின்றேன்.

ஆனால் இந்தக் குதிரைகளைப்போல் சக்தியும், சவுந்தரியமும், மற்றைய உத்தம குணங்களும் உடைய குதிரைகளை நான் இது வரை யுத்தங்களில் கண்டதேயில்லையென்று நிச்சயமாய்ச் சொல்லுவென். நீங்கள் தேவலோக வாசிகளுடைய கிருபைக்குப் பாத்திரர்களாக விருப்பதினால் உங்களுக்கு இந்தப் பாக்கியம் உண்டாயிற்று என்றும், ஏதோ ஒரு தெய்வந்தான், உங்களுக்கு இவைகளை அளித்து விட்டது என்றும் நான் நம்புகின்றேன்!

இடியை முழங்கும்படி நியமிக்கும் கடவுளும் உலகத்தையே இரத்தக்கடலில் அழுத்திக் குளிப்பிக்கும் தேவியும் உங்களைக் கிருபையுடன் காத்து வருகின்றார்களன்றோ?" என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட ஞானஸ்வரூபியான இத்தாக்கஸ் அவருக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான்:—

"தாங்கள் சொல்லிய பிரகாரம், இக்குதிரைகள் எங்களுக்குத் தேவப் பிரசாதங்களாகக் கிடைக்கவில்லை. அந்தப் பிரசாதங்கள் அவற்றைக் காட்டிலும் மிகவும் சிறந்தனவாகவன்றோ இருக்கும்? தங்களுக்குக் கட்புலனாகும் இக்குதிரைகள் திரேஸியாக் குதிரைகளின் பரம்பரையில் வந்தவை. திரேஸியா நாட்டு அரசனை நமது சத்துருவைத் திடிதீசன் கொன்றுவிட்டான். தன்னுடைய காவலாளர்களின் மத்தியில் அவன் நித்திரை செய்து வந்தான். அச்சமயம் அவனைத் திடிதீசன் கொல்ல, அவன் நித்திரையிலேயே தனது உயிரை நீத்தான்! தவிர அதே சமயத்தில் அவனுடைய வீரர்களில் பன்னிருவர் அந்தக் களத்திலேயே திணறிக் கொண்டு, தங்களது மூச்சை விட்டு மடிந்து போயினர்!

இந்த மற்றைய வஸ்துக்களையும், பாருங்கள், இவற்றை நாங்கள் தேவனிடமிருந்துப் பிடுங்கி வந்தோம்! அவன் விசையாக ஓடுவதில் சமர்த்தன் என்று மாத்திரம் கியாதி அடைந்திருந்தான். அவனுக்கு வேறு கியாதியும் இருக்கவில்லை! அவன் ஒரு பெரும் பேடி! நாங்கள் அவனை வென்று, கொன்ருேம்! நமது சேனைகளின் பலாபலங்களை அறிந்து வருமாறு ஹெக்டர் அவனை அனுப்பியிருந்தான். இப்போது அவன் இந்த மணற்கரையில் ஒரு தலையில்லா முண்டமாகக் கிடக்கின்ருன்!'' என்ருன்.

இவ்வாறு அவன் தன்னுடைய மொழிகளை யுரைத்த பின்னர், அக் குதிரைகள் இரண்டும் அவர்களுக்கு முன்னிருந்த அகழை ஒரே தாண்டில் தாண்டிப் பறந்து சென்றன. அதைக் கண்ணுற்றபொழுது கிரேக்கர்களனைவரும், சந்தோஷத்துடன் உரத்துக் கூவி, ஆரவாரஞ்செய்து கொண்டு அவற்றைப் பின் தொடர்ந்தனர்.

அதன்பின் அந்த இணையற்ற குதிரைகள் திடிதீசனுடைய அதியுன்னதமான கூடாரத்துக்கு நேராகக் கொண்டு செல்லப் பட்டு, அங்கிருந்த அவனுடைய நிகரற்ற லாயங்களில் கட்டப்பட்ட பொழுது, அவை அந்த லாயங்களுக்கே ஓர் அலங்காரமாக விளங்கின. அப்போது அங்கு ஏற்கனவே கட்டப்பட்டிருந்த குதிரைகள் அவைகளைக் கண்டு கனைத்து நல்வரவு கூறி அவற்றை வரவேற்றன. அங்கிருந்த தொழுவத்தில் கோதுமையானது மலைபோல், தாராளமாகக் குவிக்கப்பட்டிருந்தது.

அதன்பின் தோலனுடைய போர்க் கவசத்தை நீலாய தாக்ஷிக்குக் காணிக்கைகளாகச் செலுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் யுலிஸ்ஸீஸ் அதைத் தயோமதியின் கப்பல்கள் நின்றிருந்த விடத்திற்கு எடுத்துச் சென்று, தயோமதியின் சாயந் தீட்டிய கப்பலின் பின்தட்டின் உச்சியின்மேல் வைத்தான்.

அதற்குப்பின் அவ்விரு வீரர்களும் தங்களுக்கு அருகிலிருந்த கடலில் மூழ்கி, அன்றிரவு அந்தக் களத்தில் தாங்கள் சுற்றிவந்ததினுல் தங்களுக்கு உண்டாயிருந்த வியர்வையையும், இரத்தம் வடித்திருந்த அந்தக்களத்தில் சென்றபொழுது தங்களின்மேல் படிந்துவிட்ட கறைகளையும் அகற்றிக் கொண்டனர். அதன்மேல் அவர்கள் பளிங்குபோல் வழவழவென்று இழைக்கப்பட்டிருந்த தங்கள் ஸ்நான அறைகளுக்குச் சென்று சுகமாக ஸ்நானஞ் செய்து, தங்களுடைய சிரமங்களை யாற்றிக்கொண்டு, தங்களுடைய முழங்கால் முழங்கைகளின் கட்டுக்களுக்குத் தைலங்களைத் தேய்த்துத் தடவி, அவைகளுக்கு உண்டாயிருந்த வலியையும் நீக்கி இளக்கினர். பின்பு முறைப்படி போஜனமருந்திச் சிறிது நேரம் உல்லாசமாகக் கழித்தனர்.

இவ்வாறு சிரமபரிகாரங்களைச் செய்து கொண்டபின், அவர்கள் மறுபடியும் எழுந்திருந்து, முதன்முதலாக பாலாஸ் தேவிக்கு முறைப்படி நைவேத்தியங்களைச் செய்து, தங்கள், தங்கள் ஆஸனங்களில் அமர்ந்து கொண்டு, அந்தத் தேவி தங்களுக்குச் செய்த ஸஹாயங்களை நினைத்து, அகமகிழ்ந்து, அவளைத் துதித்தனர். கடைசியாகத் தங்கள் கிண்ணங்களில் நுரைகளுடன் பொங்கி வருமாறு மதுவை நிறைத்து அதையும் அருந்திக் களிகூர்ந்தனர்.



## பதிஞோராவது அத்தியாயம்

# மூன்ருவது யுத்தம்—அந்த யுத்தத்தில் ஆகமனன் செய்த காரியங்கள்

கதைச் சுருக்கம்: ஆகமனன் ஆயுதங்களைத் தரித்துக் கொண்டு, கிரேக்கர்களுக்குத் தலைமை வகித்து, அவர்களைச் சண்டைக்குக் கூட்டிக்கொண்டு செல்கின்ருன். அவர்களை யெதிர்ப்பதற்காக, ஹெக்டர் தன்னுடைய துரோஜ சைனியங்களைத் திரட்டுகின்ருன். அச்சமயம் ஜூப்பிடரும், ஜூனேவும், மினர்வாவும் யுத்தத்தை ஆரம்பிப்பதற்குக் காலம் வந்துவிட்டது என்று அறிவிக்கின்றனர்.

ஆகமனன் வெற்றியுடன் முன்சென்ருன். "ஆகமனன் காயமடைந்து போர்க்களத்தை விட்டுத் திரும்பிச் செல்லும்வரை ஹெக்டர் யுத்தத்தில் பிரவேசிக்கக் கூடாது" என்று ஹெக்டரிடம் கூறுமாறு ஜூப்பிடர் பகவான் ஐரிஸ்ஸை அவரிடம் அனுப்புகின்ருர். அவ்வாறு ஆகமனன் போர்க்களத்தை விட்டு அகன்ற பின், ஹெக்டர் யுத்தத்தில் பிரவேசித்துத் தன்னுடைய சத்துருக்களில் பெரும்பாலோரை வெட்டி வீழ்த்தி விடுகின்ருன். அப்போது யுலிஸ்ஸீஸும் தயோமதியும், அவனை யெதிர்த்துப் பொருது, அவனுடைய சேஷ்டைகளைச் சிறிதுநேரம் தடுத்து விடுகின்றனர்.

அந்தப் போரில் தயோமதியானவன் பாரிஸ்ஸினுல் காயப்படுத்தப்பட்டுப் போர்க்களத்தை விட்டு விலகவும், யுலிஸ்ஸிஸ் மாத்திரமே, தன்னந் தனியனுக அந்த யுத்தத்தைச் செய்ய வேண்டியவனுக ஆகிவிடுகின்ருன். அவ்வாறு யுத்தஞ் செய்து வருகையில், அவனும் துரோஜர்களால் வளைத்துச் சூழப்பட்டுக் காயமடைந்து, பெருத்த ஆபத்துக்களுக்கு வசமாகி விடுகின்ருன். அப்போது மனேலாஸனும், அஜாக்ஷனும் அவனுக்கு உதவியாக வந்து அவனை அந்த ஆபத்துகளின்றும் தப்புவித்து விடுகின்றனர்.

அதன்பின் ஹெக்டர் அஜாக்ஷனை யெதிர்த்து வருகின்ருன். ஆனுல் வீரனுன அஜாக்ஷன் வெள்ளம்போல் வந்த கணக்கற்ற சத்துருக்களைத் தான் ஒருவனுகவே எதிர்த்துப் பொருததுமன்றிச் சிதறிப் போயிருந்த சகலமான கிரேக்கர்களையும் ஒன்ருகத் திரட்டி விடுகின்றனர்.

இதன் மத்தியில் யுத்தகளத்தில் வேருெரு பாகத்தில் மெக்கோன் என்பவன் பாரிஸ்ஸின் அம்பு ஒன்றினுல் தைக்கப்பட, அவனைக் கிரேக்கர்கள் நெஸ்டாரின் இரதத்தில் எடுத்துப் போட்டுக் கொண்டு யுத்தகளத்திலிருந்து வெகு தூரமாகப்போய் விடுகின்றனர்.

இப்போது நடந்து வரும் யுத்தத்தை தன் கப்பலிருந்து கவனித்து வந்த அகிலேசன், "கிரேக்கர்களில் யார்—யார் காயம் பட்டனர். " என்று அறிந்து வருமாறு, பத்திரகலுஷனை அனுப்பு கின்றான். அவனுக்கு நெஸ்டார், தமது கூடாரத்தில் ஒரு விருந்து அளித்து தன் நேசனான அகிலேசன் இந்தயுத்தத்தில் பிரவேசிக் கும்படி போதனை செய்ய வேண்டும்; அல்லது அகிலேசன் தன் கவசத்தையாவது தனது நேசனான பத்திரகலுஷனுக்குக்கொடுத்து அதைப் போர்த்துக் கொண்டு யுத்தஞ் செய்யுமாறு அவனை அனுப்பவேண்டும் என்ற உத்தேசத்துடன் அன்று வரை அந்த யுத்தத்தில் நிகழ்ந்த காரியங்களையும், தம்முடைய ஞாபகத்தி லிருந்த காரியங்களையும், தம்முடைய ஞாபகத்திலிருந்த புராதன மான வேறு யுத்தங்களில் நிகழ்ந்த காரியங்களையும், விஸ்தார மாக பத்திரகலுஷனிடம் சொல்லுகின்றான்.

பத்திரகலுஷன் நெஸ்டாரின் கூடாரத்திலிருந்து திரும்பி வருகையில், யூரிப்பைலஸ் என்பவனுங்கூட காயமடைந்து விட்ட தைக் கண்ணுற்று, அவனுக்கு வேண்டிய சிகிச்சைகளைச் செய் கின்றான்.

இந்த அத்தியாயம் இருபத்தெட்டாம் நாள் கதையுடன் ஆரம்பமாகிறது. அன்றைய தினம் நிகழ்ந்த பல வகையான நடவடிக்கைகளும், சாகசச் செய்கைகளும் இந்தக் கிரந்தத்தின், பன்னிரண்டு, பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு, இலக் கங்கள் கொண்ட அத்தியாயங்களிலும், பதினெட்டாம் அத்தியா யத்தின் ஒரு பாகத்திலும் சொல்லப்படுகின்றன.

இத்தச் சம்பவங்கள் அனைத்தும் ஐலஸ்ஸின் மண்டபத்தின் சமீபத்திலுள்ள களத்தில் நிகழ்கின்றன

---

புதியதாகப் பொழுது விடியச் செய்து, அந்தப் புதிய நாளைக் கண்டதும், மர்த்தியர்களுக்கு உவகை யுண்டாக்க வேண்டு மென்றும், தேவலோக அரண்மனைக் கூடங்களில் பரிசுத்தமான வெளிச்சத்தைத் தெளித்து அவைகளைப் பொன்னே போல் மின்னும் படி செய்ய வேண்டும் என்றும் எண்ணங்கொண்டு காலை நேர மானது மஞ்சள் நிறங்கொண்டு மத்தோனியஸ்ஸின் மஞ்சத்தி லிருந்து அதிகக் காந்தியுடன் எழுந்தது.

அப்போது ஜோவ் தேவரால் அனுப்பப்பட்டவனும், நாச காரியுமான ஈரிஸ் தேவியானவள், கொழுந்து விட்டு எரிந்து கொண்டும், கண்டோர் மனதில் கலக்கத்தையுண்டாக்கியும் வந்த கொள்ளிக் கட்டையைத் தன் கையில் ஏந்திக் கொண்டு வந்து, தனது வரவை முன்னடியே அறிவிக்கும் அடையாளமாக, அந்தக் கொள்ளிக்கட்டையிலிருந்து எழுந்து வந்த ஜ்வாலையைச் செவ்வானத்தில் பரப்பினாள்.

பின்பு அவள், புயல்களையே ஆடைகளாக உடுத்துக் கொண்டு, கிரேக்கர்களுடைய கப்பல்கள் நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கி, இறங்கி யுலிஸ்ஸீஸின் கப்பலின் மேல் பயங்கர மான உருவத்துடன் நின்று கொண்டு, பூமியும் கடலும் நெருங்கும் படி, இடியைப் போல் முழங்கிக் கர்ஜித்தாள். அவ்வாறு அவள் செய்த சப்தத்தை, அந்தக் கடற்படையின் எல்லையில் வெகுதூரத் தில், தங்கள் தங்கள் கப்பல்களில் இருந்தவண்ணம் அதைக் காத்து வந்த அஜாக்ஷனும் அகிலேசனுங்கூடக் கேட்டனர்.

அந்தத் துர்த்தேவதை அங்கு இருந்த வண்ணம் ஆர்த்தியன் பதங்களை உரத்துப்பாடி, அந்தக் கிரேக்கர்கள் குழாம் முழுவதை யும் ஒரே கலக்காய்க் கலக்கினாள். அப்போது கிரேக்கர்களுடைய கப்பல்களெல்லாம் கிடுகிடு வென்று நடுங்கி அசைந்து ஆடின. அவள் போட்ட சப்தத்தைக் கேட்டோர் அனைவரும் திகில் அடைந்தவர்களாய்த் தங்களது வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு கொதித்தனர். வீரன் ஒவ்வொருவனும் தன் ஆயுதத் தைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டும் என்ற ஆத்திரத்துடன் அதை உறையை விட்டுச் சட்டென எடுத்தான்!

அதுவரை தங்களுடைய முயற்சிகள் பயன்படாமல் போனதை நினைத்து, நினைத்து மனமுருகிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்த அந்த வீரர்கள் 'இதனால் பயனில்லை! இதை ஒழித்துவிட வேண்டும்! முதுகு காட்டித் திரும்பிச் செல்வது இழிவான காரியம்!' என்று சொல்லிக்கொண்டு, 'பழிக்குப் பழி வாங்கியே தீருவோம்'! என்று கொதித்தனர், சீறினர், சூடான மூச்சு விட்டனர். 'யுத்தத்திற்கு வந்தோம்! வந்தோம்!' என்று ஆவலுடன் துடித்தனர்!

இவ்வாறு வீராவேசத்துடன் துடித்து வந்த தன்னுடைய கோஷ்டியாரை, மனிதர்க் கரசனும் உற்சாகப் படுத்திக் கொண்டு வந்தான். அவன் தன்னுடைய கட்டளைகளை உரத்துக் கூவிச் சொல்லிக்கொண்டு, தானே உற்சாகத்துடன் தனது இடத்திலிருந் தும் எழுந்து வந்து, அவர்களுக்கு ஒரு பெரிய உதாரணமாக விளங்கினான். அவர்களுடைய மனதில் பெருங் கிளர்ச்சியை யுண்டாக்கினான். அவன் செய்த காரியங்களைச் சற்று விஸ்தார மாகச் சொல்லுவோம்!

எல்லா வீரர்களுக்கும் முதன் முதலாக, அவன் தனது இடத்தை விட்டு எழுந்திருந்து மற்றைய வீரர்களின் முன்னிலையில் பளபளவென மின்னும், தன்னுடைய ஆயுதங்களை யெடுத்து, அவைகளைத் தன்னுடைய உரமான அவயங்களில் அணிந்து, தனது தேஹத்தை அலங்கரித்துக் கொண்டான். முதன் முதலாக அவன் வெள்ளிப் பூண்கள் கொண்டதும் பளபளவென மின்னுவது மான ரேகைகளைத் தனது உறுதியான கால்களில் ஒரு கவசம் போல் சுற்றிக் கொண்டான். பின்பு ஜாஜ்வல்லியமான ஒரு மார்க் கவசத்தைத் தனது மார்பின் மேல் மாட்டிக் கொண்டான். அந்த

மார்க் கவசமானது முன்னுளில் ஸினிராஸ் அரசனுக்குச் சொந்த மாக விருந்தது. ஸிப்பிரியன் கரையில் ஏக சக்கராதிபதியாக விளங்கி வந்த அந்த அரசன் கிரேக்கர்களுடைய, வீரசூர பராக்கிரமங்களைக் கேள்வியுற்று அந்தக் கிரேக்கர்களின் தலைவனது நட்பைப் பெற நினைத்து, இந்த அதியுன்னதமான கவசத்தை அவனுக்கு ஒரு பரிசாக அனுப்பி விட்டான். அது, இப்போது அவன் ஆகமனனுக்குச் செய்த ஒரு மிகப் பெரிய உபகாரமாகவே ஆகிவிட்டது. அதன்மேல் இள நீலநிறங் கொண்ட உருக்கினுல் ஆக்கப்பட்ட பத்து இரும்புத் தகடுகளும் இருபது தகரத் தகடுகளும் நன்ருக அடித்து நீட்டிய பன்னிரண்டு பொற்றகடுகளும் வரிசை வரிசையாகக் கட்டப்பட்டிருந்தன. கனமான மழையைப் பொழியும் ஒரு மேகக் கூட்டத்தின் மேல், தங்களது தலையைக் குனிந்து கொண்டு பல வர்ணங்களுடன் விளங்கும் வானவிற்களைப் போல், அந்தப் போர்க்களத்தின் ஒரு பாகமாகிய கண்ட ரக்ஷையை நோக்கித் தங்களது படங்களை விரித்துக் கொண்டு சீறி யெழுந்து வரும் பாவனையாக இறக்கை கொண்ட மூன்று நாகங்கள் பலவர்ணங்களுடன் சித்திரிக்கப்பட்டிருந்தன. அவற்றினின்று வீசிய பிரகாசமானது கண்டோர் கண்களைக் கூசும்படிச் செய்தது. வானவில்லானது ஜோவ் தேவரின் அதியற்புதமான வில் என்பதையும், அது தெய்வீகமான மூன்று சின்னங்களையுடைய தென்பதும், மனிதர்களுக்கு ஓர் அடையாளமாக விளங்குமாறு, அது ஆகாய வீதிகளினிடையில் வைக்கப்பட்டுள்ள தென்பதும் நாம் அனைவரும் அறிந்ததன்ருே!

அவனது தோளின் மேல் கட்டப்பட்டிருந்த காந்தியுடன் விளங்கிய ஒரு கச்சையானது, அவனது இடுப்பில் ஒரு புறமாகத் தொங்கிக் கொண்டிருந்தது. அவனது உடைவாளைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தது. பளிச்சென்று மின்னிய வாயை யுடைய அந்த ஆயுதத்தின் கைபிடி பொன்னினுலும், அதன் உறை வெள்ளியினுலும் ஆக்கப்பட்டிருந்தன. பொற்சங்கலிகளும் அதற்கு ஆபரணங்களாக விளங்கின!

அதன்பின் அவன் பிரம்மாண்டமும் வட்ட வடிவமுமான தனது கவசத்தை யெடுத்து அதைத் தன் மேல் போர்த்துக் கொண்டான். அப்போது அதிபயங்கரமான ஓர் இருளானது அந்த அரணைச் சூழ்ந்து கொண்டுவிட்டது! கெட்டியும் விசாலமுமான அதன் விளிம்பில் பத்துப் பித்தளைப் பூண்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இருபது குமிழ்கள் கிரீடங்களைப் போல் அவற்றின் மேல் குவிந்துகொண்டு பிதுங்கி விளங்கின. அந்தக் கவசத்தின் மேல் கருரூபமான ஒரு பிரம்மாண்டமான அரக்கியின் உருவமும் வரையப்பட்டிருந்தது. கவசத்தின் மேல் அந்த அரக்கியின் உருவத்தைச் சிறிதும் இடைவிடாமல் வளைத்துச் சூழ்ந்து கொண்டு கண்டோர் மனத்தைக் கலக்கத்தக்க வண்ணம் விசாலமான பல உருவங்கள் செதுக்கப்பட்டிருந்தன. அதன் உட்பாகத்தில் ஒரு வெள்ளிச் சரடு தொங்கிக் கொண்டிருந்தது. அந்தச் சரட்டின் மேல் இள நீலநிறமும் வெகு நீளமுடையதாய்ச் சிறுசிறு அலை

களைப் போல் ஆரம்பித்து, வளைந்து வளைந்து சென்று வரவரப் பருமனாகிக் கடைசியாக மூன்று தலைகளுடன் இழையும், பாவனையைக் கொண்ட ஒரு ஸர்ப்பம் வரையப்பட்டிருந்தது.

கடைசியாக, அவன் தன்னுடைய புருவங்களின் மேல் நான்கு மடிப்புகள் கொண்ட தனது கிரீடத்தையும் அணிந்து கொண்டான். அப்போது அதற்கு ஆபரணமாகச் செருகப்பட்டிருந்த பிரம்மாண்டமான குதிரை மயிர்க் குச்சமானது வெகு கம்பீரமாக அசைந்தாடியது.

பின்பு, அவன் தன்னுடைய இருகைகளிலும், உருக்கினுலான இரண்டு வேல்களைத் தூக்கியெடுத்துக் கொண்டான். அவை ஆகாயமளாவித் தங்களது காந்தியை வீசிக் கொண்டும், யுத்தகளங்களனைத்திலும் ஒரு பெருத்த வெள்ளம் போல் வெளிச்சத்தைப் பொழிந்து கொண்டும் பிரகாசித்தன.

அக்கணம், யுத்தத்தின் தெய்வமும் ஜூனோ தேவியும், மங்களகரமான கோஷங்களைச் செய்து கொண்டு வந்து, கிரேக்கர்களுக்கே தாங்கள் உதவி செய்யப் போவதாக வாக்குறுதி செய்துவிட்டும், கிரேக்கத் தலைவனது தலைக்கும் மேலாகத் தங்களுடைய கைகளை உயரத் தூக்கிக் கொண்டாடிப், பின்பு அன்று நடக்கவிருந்த யுத்தத்தை எதிர்பார்த்தவர்களாய் மேக மண்டலத்தின் மேல் சாய்ந்து கொண்டனர்.

சாரதிகளெல்லாம் நெருப்புப்பொறி பறக்கத் துடித்துக் கொண்டிருந்த குதிரைகளைத் தங்களுடைய இரதங்களில் பூட்டி, அவற்றை, அகழும் மேடும் சந்திக்கும் இடங்களையடுத்தாற் போலிருந்த பிரதேசங்களில் நிறுத்திக் கொண்டிருந்தனர்.

காலாட்களும், சிறு ஆயுதங்களை யேந்தியிருந்த வேறு வீரர்களும், யுத்தகளத்தை நோக்கி வேகமாக ஓடினர்.

இவர்களுக்குப் பின்னுகவும் இவர்களுக்கு உதவியாகவும் இவர்களை இடைவிடாமல் நெருங்கிக் கொண்டும் ஒருமித்துக் கப்பற் படையைச் சேர்ந்த வீரர்களெல்லாம் தங்களது கறுப்புக் கொடிகளைப் பரக்க விரித்துக் கொண்டு வந்தனர்.

இதுவரை சூரியன் எழுந்து வரவேயில்லை, தாமதித்துக் கொண்டே யிருந்தான். அதையறிந்த அந்த வீரர் குழாமானது சந்தடிகள் செய்து அவனை உரத்துக் கூவி யெழுப்ப, வெளிச்சமும் உண்டாகியது. அக்கணமே அந்த வீரர்களனைவரும் தங்களுடைய பெரிய காரியங்களைச் செய்ய ஆரம்பித்தனர்.

இந்தக் காரியங்களைக் கண்டு ஜோவ் தேவரும் கூட கோபத்துடன் கொதித்து எழுந்து இடிமுழக்கங்களைச் செய்தார், அத்துடன் நில்லாமல் அவர் அன்றைய தினம் மனிதர்கள்

படவிருந்த கஷ்டங்களையும், அன்றைய தினத்தை ஒரு கரிநாளாக ஆக்கவிருந்த கோர வதங்களையும் தமது கண்ணால் பார்க்க லாகாது என்று கருதியவராய், அந்தப் படுகளம் முழுவதிலும் செக்கச் சிவந்த இரத்தத் துளிகளைச் சொட்டச் சொட்டத் தெளித்தார்.

துரோஜச் சேனைகளெல்லாம், ஐலஸ் மண்டபத்தின் சமீபத்திலிருந்து மேட்டுப் பாங்கான நிலத்தைப் பிடித்துக் கொண்டு, அதைச் சுற்றிலும் ஒழுங்காகச் சூழ்ந்து கொண் டிருந்தன. அங்கு ஞானவானான பாலிதாமஸ்ஸும் ஹெக்டரும் நின்று கொண்டு இருந்தனர். அவ்வாறே, ஒரு கலப்புத் தெய்வ மாகக் கொண்டாடப்பட்டு வந்த ஈனியஸ்ஸும் தைரியமுள்ள பாலியஸ்ஸும் தேவஸ்வரூபியான அஜினரும், அத்தினர் மரபில் வந்த இரட்டைப் பிள்ளைகளான வீரர்களும் அங்கிருந்தனர். அவர்களுடன் அழகிய முகமும், சர்வாங்கங்களும் பொருத்தமாக அமையப் பெற்றவனும், அக்காரணங்களால் தேவபரம் பரையில் வந்தவர்களுக்குச் சமானமாகக் கருதப்பட்டவனும் இளைஞனுமான அக்காமஸ்ஸும் இருந்தான்.

அப்போது மஹானான, ஹெக்டர் விசாலமான தனது கேடயத்தைத் தரித்துக் கொண்டு, தன்னுடைய சேனைகளனைத் திற்கும் முன்னாக வந்து நின்று, அவர்களை உற்சாகப்படுத்தி அவர்களுக்குத் தன்னுடைய கட்டளைகளை யுரைத்தான்.

எவ்வாறு செஞ்சுடரானது, பகற்காலத்தில் தனது செந்தணல்களைக் கக்கிக் கொண்டு, மேகத்தைத் துளைத்து அவைகளிடையே பிரகாஸித்தும், இராக் காலத்தில் ஒரேயடியாய் மறைந்தும் வருகின்றதோ, அவ்வாறு, தேவர்களைப் போல்விளங்கி வந்த அந்த வீரன் யணி யணியாய் நின்றிருந்த அந்தச் சேனை களிடையில் கட்புலனாகியும் மறைந்தும் வந்தான். ஒருக்கால் அவன் அவர்களது பின்னணியில் பாய்வான். மறுகணம் அவன் முன்னணியில் பிரகாசத்துடன் விளங்குவான். அவ்வாறு, அவன் சிறிதும் ஓய்வோ, ஒழிச்சலோ இன்றிக் காற்றாய்ப் பறந்து செல்கையில், ஒரு பெரிய நதியில் பளபளவென மின்னிக் கொண்டு வரும் பிரகாசத்தைப் போல் அவனது கையிலிருந்த ஆயுதங்களி லிருந்து வெளிச்சமானது பளிச் சென்று மின்னிக் கொண்டு வரும், அந்த வெளிச்சம் ஆகாயத்தில் உண்டாகும் மின்னலுக்குச் சமான மாகவே யிருந்தது.

நன்றாக விளைந்துள்ள ஒரு வயலில் அறுப்புக்காரர்கள் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து தங்களது உடம்பிலிருந்து வியர்வை யானது சொட்டச் சொட்ட வழிந்து வரும் வரை, வளைவான தங்களுடைய அரிவாள்களால் தானியத்தை யறுப்பின், ஒரு பிரிவினர் மற்றொரு பிரிவினரை நோக்கிக் களிப்புடன் படைச்சால் களின் ஓரமாக விரைந்து ஓடுகையில் எவ்வாறு தானியமானது, அவர்களுடைய கால்களின் அடியில் மலைபோல் குவிந்து

விடுகின்றதோ! அவ்வாறு கிரிஸும் ட்ராயும் இந்தப் போர்க் களத்தை இரண்டாகப் பிளந்து வந்த பொழுது இரு கட்சியிலும் மாண்டு மடிந்து விழுந்த ஜனங்களுடைய பிரேதங்கள் இருமருங்கிலும் மலையாய்க் குவிந்து விட்டன.

அப்போது அங்கிருந்த வீரன் ஒருவனாவது புறங்கொடுத்து ஓடி விடலாம் என்ற இழிவான எண்ணத்தை உடையவனாக இருக்கவில்லை. குதிரை வீரரும் காலாட்களும் ஒருவரை யொருவர் எதிர்த்து ஊக்கத்துடன் பொருதே வந்தனர். வெறிகொண்ட ஓநாய்கள்கூடத் தங்களது இரைக்காக இவ்வளவு ஆத்திரத்துடன் ஒன்றோடொன்று போர்புரிய மாட்டா; அந்த வீரர்கள் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு விசேஷமாக இரத்தத்தை வடித்தும், காயமேற்றுமே வந்தனர். ஒருவராவது சிறிதும் மனந் தளர வில்லை. ஊக்கங் குறைந்தவராகவும் தோன்றவில்லை. அவர்கள் அன்றை தினம், வெற்றியோ வீரஸ்வர்க்கமோ ஆகிய இரண்டில் ஒன்றை அடைந்தே தீரவேண்டும் என்ற உறுதியுடன் உழைத்து வந்தார்கள்.

கலகப் பிரியையான தேவி மாத்திரமே இந்தச் சாக்கோலத்தைக் கண்ணுற்று மட்டில்லாத மகிழ்ச்சியை யடைந்தாள். செக்கச் சிவந்த தன்னுடைய கண்களால் அவள் இந்த இரத்த வெள்ளத்தைக் கண்ணுற்று இன்புற்றாள், தேவர்கள் அனைவரிலும் இந்தக் கலகப்பிரியை தான், இந்தப் பாழுங்களத்தில் நிகழ்ந்து வந்த இந்த இரத்தப் பெருக்கை மேன்மேலும் உற்சாகத்துடன் விருத்தி பண்ணினாள். ஏனைய தேவர்கள் இந்தக் கொடுமைகளைத் தங்களுடைய கண்களால் காண மனமில்லாதவர் களாக, ஒலிம்பஸ் மலையின் மேல், ஒழுங்காக ஒரு வரிசையில் கட்டப்பட்டுப் பளிச் பளிச்சென்று மின்னிக் கொண்டிருந்த தங்கள் தங்கள் பொன்மயமான மண்டபங்களில் தங்கிவிட்டனர்.

ஆனால் போர்க்களத்திலிருந்த இரண்டு கட்சிகளிலும், நாற்புறத்திலுமிருந்து ஒரேயடியாய்க் கிளம்பிய கூக்குரல்களும், குய்யோ, முறையோ என்ற சப்தங்களும் தேவலோகத்தையும் இடித்துப் பிளந்து கொண்டு சென்று, அங்கிருந்த தேவர்களுக்குச் செவிப் புலனாயின. அங்கிருந்த தேவர்களனைவரும் இந்தக் கஷ்டங்களுக்கெல்லாம், பக்ஷபாதியான ஜோவ் தேவரே காரணம் என்று அவர் மேல் குற்றஞ் சாட்டினர்.

இதன் மத்தியில், அழிவில்லாத அந்த ஏகச் சக்கரவர்த்தி யானவர், பளிச் சென்று நல்லொளியுடன் விளங்கிய அளவற்ற கிரணங்களையே தமக்குப் போர்வையாகக் கொண்டு, ஒதுக்கமான ஓர் இடத்தில் தனியாக வைக்கப்பட்டிருந்த தமது உன்னதமான சிம்மாசனத்தின் மேல் கம்பீரமாக உட்கார்ந்து கொண்டு, அங்கிருந்த வண்ணம் சகல சராசரங்களினுடையவும் வினைப் பயன்களை முன்னடியே தீர்மானித்து அவற்றை முறைப்படி நிறை வேற்றியும் வந்தார்.

அவர் இப்பொழுது ஸர்வதோ முகமான தம்முடைய கண்களை உலகத்தை நோக்கித் திருப்பி, இலியன் கோபுரங்கள், ஆகாயத்தை யளாவிக் கொண்டு உயர்ந்து எழுந்து நின்ற இடங்களைக் குறிப்பாகக் கவனித்துப் பார்த்துக் கொண்டது மன்றி அதன் அருகிலிருந்த கடலையும், அக்கடலிலிருந்த கப்பல்களையும், சேனைகள் நின்று கொண்டிருந்த களங்களையும், வெற்றியடைந்த வீரனது ஆத்திரத்தையும் அவனால் வெட்டுண்டு, மடிந்தே போய் விட்ட வீரர்களையும், எமனுலகிற்குச் சென்று கொண்டிருந்த மற்றையோர்களையும் கண்ணுற்று வந்தார்.

இவ்வாறு அதிகாலையில் எழுந்து வந்த கதிரவன், களங்க மற்ற நீல நிறங் கொண்ட அந்த வீதி முழுவதிலும், தன்னுடைய கிரணங்களை மேன்மேலும் அதிகமான பிரகாசத்துடன் பொழிந்து கொண்டு வருகையில், இரு கக்ஷிகளிலும் இருந்த வீரர்கள், சிறிதும் ஏற்றத் தாழ்ச்சியின்றி மடிந்து விழுந்ததினால் இன்ன கக்ஷிக்குத் தான் ஜயம், அல்லது அபஜயம் உண்டாகும் என்று நிச்சயமாய்ச் சொல்ல இயலாமற் போய் விட்டது. இருதிறத்தாரும் ஒருவரை யொருவர் தாக்கி யடித்துச் சிறிதும் தயங்காமல், பழிக்குப் பழி வாங்கிப் பொருது இரத்தத்தை வடித்து வந்தனர்.

ஒதுக்கமான ஒரு பள்ளத் தாக்கிலுள்ள விசாலமான ஒரு காட்டின் ஒரு பாகத்தை யழித்து அங்குள்ள மரங்களை வெட்டி வீழ்த்திக் குப்புறத் தள்ளி, அவற்றை வெளியிற் காயும்படிப் பரப்பி விட்டுக் களைத்துப் போன ஒரு விறகு வெட்டி யானவன், இளைத்துப் போய் விட்ட தன்னுடைய கைகள், 'இனிக் கோடரியை உயரத் தூக்க மாட்டோம், நாங்கள் மரங் களுடன் புரிந்தபோரை இத்துடன் நிறுத்தியே விடுவோம், சிறிது ஓய்ந்தேயிருப்போம்!' என்று கெஞ்சுவதைக் கண்டு, எவ் வாறு தனது சிறிய சோற்று மூட்டையை யெடுத்து, அதைத் தன் முன் அவிழ்த்துப் பரப்பி வைத்துக் கொள்ளுகிறானே, அவ்வாறு கிரேக்கர்களெல்லாம், வெகு ஆத்திரத்துடனும், வேகத்துடனும் பொருது கன்னங்கரேலென்று அணிஅணியாய் நின்றிருந்த தங்கள் சத்துருக்களுடைய வகுப்புகளைத் துளைத்துப் பாதிக் களத்தைப் பாழாக்கி, அக்களத்தின் இடைவழிகளில் சூரிய வெளிச்சத்தைப் புகுத்தினர்.

அப்போது மஹா ராஜனான ஆகமனன், அந்த ஸம்ஹாரங் களை ஆரம்பித்து, முதன் முதலாக துரோஜ சேனையின் ஒரு பகுதிக் குத் தலைவனாகி, அப்பகுதியின் முன்னால் நின்றுகொண்டிருந்த பியனார் என்பவனை வதைத்தான்.

அப்பொழுது, அவனுக்குத் துணைவனாக விருந்த ஆயிலியஸ் என்பவன் தனது அரசனுக்கு நேர்ந்துவிட்ட ஆபத்திற்குச் சரி யான பழியை வாங்கிவிட வேண்டுமென்றே ஆத்திரத்துடன் தனது இரதத்திலிருந்து சட்டெனப் பாய்ந்து குதித்தான். அவ் வாறு குதித்த பொழுது அவன் ஆகமனனது வேலுக்கு எதிராகவே

வந்ததினுல், அவ்வேல், அவன் மண்டையைப் பிளந்து, அதன் உட்சென்று, அவனைத் தரையில் வீழ்த்தி, அவனது உயிரைக் கொண்டே போய்விட்டது !

அதன்பின் அதிரிதேசன், அவ்விரு வீரர்களும் அணிந் திருந்த ஆடையாபரணங்களையும், ஆயுதங்களையும் கழற்றிக் கொண்டு, அவர்களுடைய உயிரற்ற உடல்களை அந்தக் களத்தில் கிடத்தி விட்டான். இளம் பருவமோ, அல்லது அவர்கள் அணிந் திருந்த பளிச்சென்று மின்னிய கவசங்களோ அவ்விரு வீரர்களுக் கும், உதவி செய்யவில்லை. அவை பயனிலவாயின. பனியைப் போன்ற வெண்ணிறங் கொண்ட அவயவங்களும், எழில்வாய்ந்த உடல்களும் கொண்டிருந்த, அவ்விரு வீரர்களின் தேகங்களும், அந்தக் களத்தில் புழுதியில் அழுந்தி, ஆகாயத்தைப் பார்த்த வண்ணம் நிர்வாணமாகக் கிடக்கின்றன !

அவர்களுக்குப் பின் பிரியம் மஹா ராஜனுடைய மக்கள் இரு வர், ஆகமனனுடன் யுத்தஞ் செய்ய வந்தனர். அவர்களில் ஒருவன் பிரியம் மஹா ராஜனது பட்டமகிஷியின் புதல்வன். மற் றையவன், அவனது ஆசை நாயகியின் மைந்தன். சகோதரர்க ளான அவ்விரு வீரர்களும் ஒரே இரதத்தில் ஏறிச் சவாரி செய்து கொண்டுவர, ஒருவன் மற்றவன் பேரில் நாட்டமுடையவனுகவிருந் தான். ஆனுல் இந்தக் காரியங்களை அவர்கள் அதுவரை செய்த தில்லை.

அவர்கள் ஐடா மலைச் சிகரங்களில் தங்களது தகப்பனுக்குச் சொந்தமான அடர்ந்த ரோமங்கள் கொண்ட, ஆட்டு மந்தைகளைக் காத்து வந்தவர்கள். அவர்களை ஒருக்கால், அகிலேசன் அந்த மலைப் பிராந்தியங்களில் கண்டு, இளக்கமான பதைகளால் பிணித் துக் கட்டி, சிறையாகக் கொண்டுபோய் விட்டான். அப்போது அவர்களது தகப்பன் விசேஷமான திரவியத்தை அகிலேசனுக்குக் கொடுத்து, அவர்களை மீட்டான்.

இப்போது அவர்கள் அதிரிதேசனது வாளுக்கு இரையாய் விட்டனர்! வைப்பாட்டி மகனுன ஐஸஸ் என்பவன், ஆகமன னது கத்தியினுல் மார்பில் குத்திக் கொண்டு இரத்தத்தை வடித் தான். அடுத்தபடியாக அவனது உடன் பிறந்தானும் மண்டை பிளவுபட்டு விதியின் பயனை யெய்தினுன் !

அவ்வாறு அவ்விருவர்களையும் அழித்த பின்னர், ஜயசீல னுன ஆகமனன், ஆத்திரத்துடன் அவர்களின் மேல் பாய்ந்து, அவர்கள் அணிந்திருந்த அஸ்திரசஸ்திர வஸ்திராபரணங்களை யெல்லாம் பறித்துக் கொண்டு, அவர்களைப் பிறந்த மேனியுடன் கிடத்தி விட்டான். அவர்கள் அவயவங்களையும் ரூபலாவண் ணியங்களையும் கண்டபொழுது தான் அவனுக்கு, அவர்கள் இன்னுர் என்பது தெரிய வந்தது. இவ்வாறு இவ்விரு சிறுவர்களும் அகால மரணமடைந்ததைத் தங்கள் கண்களாலேயே

கண்ணுற்ற துரோஜர்கள் தங்களுக்கு உதவியாகவிருந்த இவர்கள் அழிந்து விட்டனரே யென்று, கிலேசமும் பயமுங்கொண்டு நாற் புறமும் காற்றைப் போல் ஓட்டம் பிடித்தனர்.

இந்தக் காக்ஷி எவ்வாறு இருந்த தென்று சொல்லுகின்றேன் கேளுங்கள். காடுகளில் மேய்ந்து வரும் ஒரு மதங்கொண்ட சிங்க மானது, ஒரு புற்றரையில் பதுங்கிக் கொண்டிருக்கும் இளமான் களைக் கண்டுவிட்டால், அது அவைகளின் எலும்புகளை முறித்து அவைகளின் உயிர்நிலைகளாகிய மர்மங்களைக் கிழித்தெடுத்து, இரத்தம் சொட்டிக் கொண்டு துடிக்கும் அவற்றின் சதைகளைத் தன்னுடைய இரத்தக் கறைபடிந்துள்ள தாடைகளால் மசித்து அரைத்து விடுகின்றது. அதைக் கண்ணுற்ற அவற்றின் தாயான பெண்மான், அங்குத் தங்கத் தைரியமின்றித் திகிலடைந்து, துரித மாக ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடிச் சலசலவென்று ஒலிக்கும் மரமடர்ந்த காடுகளில் புகுந்து விடுகின்றது. அப்போது அது வெகுவாய்த் தவித்துக் கொண்டு வியர்வையைத் தாராளமாக வடிக்கின்றது. அதன் கண்களிலிருந்தும் நீரானது பெருந்துளிக ளாகத் தாரை தாரையாய் வழிந்து விடுகின்றது! துரோஜ சைனி யத்தின் நிலைமையும் இவ்வாறே இருந்தது.

இவ்வாறு குழம்பி, முறியடிக்கப்பட்டு, முதுகு கொடுத்து ஓடிய கோஷ்டியின் மத்தியில், இரண்டகனான அந்திமாக்கஸின் மக்களும் கொலையுண்டனர். அந்த அந்திமாக்கஸ் என்பவன், லஞ்சங்களை வாங்கிக் கொண்டு துர்ப்போதனைகளைச் செய்தவன். பாரிஸினிடமிருந்து ஏராளமான சுவர்ணத்தைப் பெற்றுக்கொண்டு ஹெலன் பாரிஸினிடமே இருத்தல் வேண்டும் என்று சொல்லியவன்!

அதிரிதேசன் அவர்களுடைய அங்கமச்ச அடையாளங் களைக் குறிப்பாக அறிந்து கொண்டு, அவர்கள் தங்களது க்ஷேமத் தைக் கருதித் தங்களுக்கு இரட்சையைத் தரக்கூடிய ஓர் இடத் தைத் தேடி ஓடிச் செல்லுகையில், அவர்களைத் தடுத்துக் கொன்று துரோகியான அவர்களுடைய தகப்பன் செய்த பழிக்குப்பழி தீர்த்துக்கொண்டான்!

அவ்வீரர்கள் மூர்க்கமுள்ள தங்களுடைய குதிரைகளை யடக்கியாளவோ, பிடித்து நடத்தவோ இயலாமல் பயந்து நடுங்கி அவைகளுக்குக் கட்டப் பட்டிருந்த பட்டுக் கயிறுகளை நழுவவிட்டு விட்டுத் தங்கள் தேரின் மேலேயே தங்கள் முழங்கால்களின்மேல் சாய்ந்து விழுந்து கொண்டு, தங்கள் கைகளை உயரத் தூக்கித் தங்க ளுக்குக் கிருபை செய்ய வேண்டும் என்று அதிரிதேசனைப் பின்வரு மாறு பிரார்த்தித்தனர் :—

“ஐயா, நாங்கள் சிறுவர்கள், எங்களுக்கு உயிர்ப் பிச்சை தாரும்! அவ்வாறு செய்வீரானல், அந்திமாக்கஸ் உங்களுக்கு அபரிமிதமான வரிசைகளை வழங்குவார். தம்முடைய மக்கள்

யுத்தத்தில் கொலையுண்ணுமல் உயிருடன் உளர், கிரேக்கர்களுடைய கப்பல்களில் சிறையாயிருக்கின்றனர் என்று கேட்ட மாத்திரத்தில் அவர், எங்களை மீட்பதற்காக மலைகள் போல் குவிந்துள்ள பித்தளையையும் நன்முய்ப் பதம் செய்யப்பட்ட உருக்கையும், இரும்பையும், மனிதரை வசப்படுத்தக்கூடிய பொன்னையும் உங்களுக்குத் தருவார் !'' என்றனர்.

தங்களுடைய கண்களில் நீரை ஆருகப் பெருக்கிக்கொண்டு, அச்சிறுவர்கள் இவ்வாறு அந்த வீரனை நோக்கிக் கூறிக் கரைந்து உருகி இருந்தனர். ஆனல் அவ்வீரனுடைய காதுகளில் இவ் வசனங்கள் நுழையவேயில்லை. அவனது மனதும் இளகவில்லை. பழி வாங்குவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்த அந்த மஹா ராஜன், அவர்களுக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான்:—

''நீங்கள் அந்திமாக்கஸுக்குப் பிறந்தவர்கள் என்பது நிஜந் தான் என்றல், இன்றையதினம் உங்களுக்கு அந்திம தசை வந்து விட்டது என்றே அறிந்து கொள்ளுங்கள்! நீங்கள் இன்றைய தினம் அழிந்தே போவீர்கள்! சமாதானஞ் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் சென்ற யுலிஸ்ஸீஸையும் உடன் பிறந்தானையுங் கொல்ல எத்தனித்துச் சபை நடுவே எழுந்து நின்ற கொடும் பாவியல்லவா அந்த அந்திமாக்கஸ்!! அவனது பீஜத்திலிருந்து உற்பத்தியானவர்கள் இப்போது, தயைசெய்ய வேண்டும், உயிர் பிச்சை வேண்டும்! என்று மன்றுடுவது வெகு நேர்த்தியாகவே இருக்கின்றது! உங்களுக்குச் சற்றும் இரங்கலாகாது. நீங்கள் மடிந்தே தீரவேண்டும்! நீங்கள் மரித்தே போவீர்கள்! உங்களது மரணமே, உங்களது குலப்பழியைத் தீர்க்கவல்ல பிராயச்சித்தம்'' என்றன்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே, அவன் பிஸாண்டரை அவனது இரதத்திலிருந்து கீழே இடித்துத் தள்ளி, அவனது மார்பையும் துளைத்தான். அக்கணமே அவன் மல்லாந்து விழுந்து தன் உயிரை நீத்தான்!

அதன்பின் அவனது உடன் பிறந்தான், நிலத்தின்மேல் எட்டிக் குதித்தான், அப்போது ஆகமனனது கூரிய வாளானது அவனது கைகளிரண்டையும் வெட்டித் துண்டித்து விட்டதினல், அவனும் அடியற்றவனைப்போல், அங்கேயே விழுந்து விட்டான்.

அதன்பின் அவனது தலையும் துண்டிக்கப்பட்டு அவனது உடலிலிருந்து வேருகப் பிரிந்து, தான் சென்ற விடமெல்லாம் இரத்தக் கறையை யுண்டாக்கிக்கொண்டு, அங்கிருந்த ஜனங்களிடையில் உருண்டு சென்றது.

இவ்வாறு வெற்றிகளையே எய்திய அந்த வீரன் அப்போது, மும்முரமாக யுத்தம் நடந்து வந்த இடத்தை நோக்கிக் காற்றைப் போல் பறந்து சென்றன், தங்களது அரசனே, அவ்வாறு உற்சாகத்துடன் உழைத்து வந்ததைக்கண்ணுற்ற அவனுடைய கிரேக்கப்

பிரஜைகளும் அவனையே பின்பற்றி யொழுகினர். காலாட்கள் தங்களுக்குப் புறங்கொடுத்து பறந்து ஓடிய சத்துரு சைனியங்களி லிருந்த காலாட்களை வதைத்தனர். குதிரைகளும் அவ்வாறே எதிர்க்கட்சிக்காரருடைய குதிரைகளை மிதித்துத் துவைக்க அவை நுரையைக் கக்கிக்கொண்டு அந்தக் களத்தில் விழுந்து விட்டன!

அப்போது வெட்டெனக் காய்ந்திருந்த அந்தக் களத்திலி ருந்து கனமான மேகங்களைப்போல் புழுதியானது எழுந்து வந்து, சேனைகளின்மேல் படிந்து, அவற்றை ஒரேயடியாய்ச் சூழ்ந்து கொண்டு அவைகளின் மேல் சாத்திய ஒரு கறுத்த போர்வையைப் போல் விளங்கியது. ஆகாயமும் மறைந்துபோய் விட்டது.

அந்தக் குழப்பத்தில் பித்தளை லாடங்களைக்கொண்ட குதி ரைகள், வெகு ஆத்திரத்துடன் குதித்துக்கொண்டு, பாய்ந்து சென்றன. அவை, பூமியை இடித்துக்கொண்டு சென்ற பொழுது உண்டான அதிர்ச்சியினால் நிலமும் நடுக்கமுற்றது.

இவ்வாறு மிகப் பெரிய சத்துரு ஸம்ஹாரம் நடந்துவந்தும் அதுபோது மென்று திருப்தியடையாமல், மனிதர்க்கரசன் மேன் மேலும் முயன்று முன்சென்றான். அவ்வண்ணம் அவன் சென்ற பொழுது, அவனது கைக்கு அகப்படாமல் முதுகு கொடுத்து, வெகு தூரம் வரை ஓடிவிட்ட சத்துரு சைனியங்கூட, அவனுடைய வீரச் செயல்களைக் கண்ணுற்று, அதிசயித்தது!

அந்தக் காட்சி எவ்வாறிருந்தது என்று கேட்பீர்களானால் சொல்வேன் கேளுங்கள் :—

எப்போதாயினும் மலைகளின் மேலுள்ள காடுகளில் நெருப் புப் பிடித்து விட்டால், எவ்வாறு அந்நெருப்பு, அலைகளைப்போல் திரண்டு, உருண்டு வருகின்றதோ, கொழுந்து விட்டுக்கொண்டு உக்கிரமமாக எழுந்துவரும் அந்நெருப்புடன் காற்றும் சேர்ந்து விட்டால், எவ்வாறு அக்காடுகளில் வெகு நாளாக வளர்ந்து வந்து, கம்பீரமாக ஆகாயமளாவி நின்று கொண்டிருந்த வயதான மரங்களுங்கூட அடி சாய்ந்து விழுந்து விடுகின்றனவோ, எவ் வாறு அக்காடுகள் முழுவதுமே ஒரேயடியாய்த் தகதகவென்று எரிந்து கொண்டு ஜோதி மயமான ஒரு மலையைப்போல் விளங்கு கின்றதோ, அவ்வாறு அதிரிதேசனது ஆற்றலுக்கு முன்னால் அவனது மாற்றார் மடிந்து விழுந்தனர்.

அப்போது நன்றாக அணிவகுக்கப்பட்டிருந்த துரோஜ வியூகங்களெல்லாம் ஒரேயடியாய் அழிந்து போயின. வீரனான அதிரிதேசன் அச்சமயந்தான் தனக்கு வாய்த்த தருணமென்று அறிந்து, அவர்களின் மேல் தன் கூரான வாளை வெகு விரைவாகச் சுழற்றி வீசி வந்தான். அது அவர்களுடைய ஆவிகளைத் தாராளமாகப் பருகியது. அதைக் கண்ணுற்ற கழுகு கள், அந்த வாளுக்கு, அந்த வீரர்களின் மனைவிமார்களைக் காட்டி

லும் மிகுந்த நன்றியைச் செலுத்தின! அச்சமயம் மஹாவீரனுன ஹெக்டருங்கூடத் தன் வினைப்பயனை யெய்தியிருப்பான்! ஆனுல் ஜோவ் தேவரும், அவனது தலைவிதியும் அவனுடைய ஆவியைக் காத்தன. அதனுல் அன்றைய தினம் குழப்பங்களும் கூக்குரல் களும், கலவரங்களும், கொலைகளும், குப்பைகூளங்களும் குழம்பாய் ஓடிய குருதியும் நிறைந்திருந்த யுத்த களத்தில் எவ்வித ஆயுதங் களுக்கும் இலக்காகாமல் க்ஷேமமாக இருந்து வந்தான்.

இனி, மேலே நடந்த விஷயங்களைக் கவனிப்போம் :—

மேற்கூறிய பிரகாரம் சத்துரு ஸம்ஹாரஞ்செய்து வந்த அதிரிதேசனது வாளுக்கு இரையாகாமல் தப்பிப் பிழைத்த துரோஜ சேனைகளெல்லாம், அவனுக்கு முதுகு காட்டிக்கொண்டு திரும்பித் தங்களது மூதாதையான ஐலஸ் என்பவன் சமாதி கொண்டு அடங்கிக் கிடந்த மைதானத்தின் மத்தியிலிருந்தும், அதன் அருகில் யதேச்சையாய் வளர்ந்து நின்று கொண்டிருந்த அத்தி மரங்களைத் தனக்குச் சிரோ பூஷணமாகக்கொண்டு விளங் கியதுமான ஒரு மேட்டிற்குப் போகும் வழியில் வெகு ஆத்திரத் துடன் தங்களது நகரத்தை நோக்கி விரைவாய் ஓடினர். அதிரி தேசனும் அவர்களுக்குச் சிறிதும் இளைக்காமல் ஆரவாரங்களையும், முழக்கங்களையும், உரத்த கர்ஜனைகளையும் செய்து கொண்டு அதி துரிதமாகவும் வேகமாகவும் அவர்களைத் துரத்திக் கொண்டு சென் ருன். இளைப்போ, சலிப்போ இன்றித் தன் உடம்பிலிருந்து, புகை கிளம்பும் வண்ணம் அவன் உக்கிரமமாகப் பொருது வந்த பொழுது, அவன் தன்னுல் வதையுண்ட சத்துருக்கள் வடித்த இரத்த வெள்ளத்திலேயே குளித்தவன் போலும் விளங்கினுன். இவ்வாறு ஜயசீலனுக விளங்கிய அவன் பீச் மரத்தின் சமீபமும் ஸீயன் கோட்டை வாசற் கதவுகளுக்குச் சமீபமும் வந்து தன் கூட் டாளிகளின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு, அங்குச் சற்று நேரம் தங்கினுன். இதன் மத்தியில் துரோஜச் சைனியர்களெல் லாம் தங்களுடைய வியூக அணி வகுப்புகளிலிருந்து பிரிந்தும், சித றுண்டும், அந்தக் களத்தைச் சுற்றிலுமுள்ள நாற்புறங்களிலும் காற்றைப்போல் பறந்து சென்றனர்.

இராக்காலத்தில் இருட்டில் ஒளிந்துகொண்டு மறைந்து கிடக்கும் எருதுக் கூட்டங்கள் ஒரு சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்டு விட்டால், அவை தங்களது உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன், ஒன்றன் மேல் ஒன்ருக விழுந்து ஆத்திரத்துடன் ஓட்டம் பிடிக்கின்றன. என்ருலும், அவை அந்த இருட்டில் திக்கும் திசையும் தெரியாமலும், தாங்கள் விரும்பியபடித் தப்பிப் பிழைக்க முடியாமலும் தவிக்கையில், அந்தக் குரூர ஜந்துவான மிருகேந்திரன் அவைகளனைத்தையும் ஒன்று கூட விடாமல் பிடித்துக் கிழித்து நூறு துண்டுகளாக ஆக்கி விடுகின்றது!

அதிரிதேசனது ஆத்திரமும், அந்தச் சிங்கத்தின் ஆத்திரத்திற்கும் வேகத்திற்கும், சற்றும் இளைத்ததாகவோ

குறைந்த தாகவோ, இருக்கவில்லை. அவன் ஒரேயடியாய்ச் சிறிதும் தளராமல் பறந்து சென்ருன்; தனக்கு முதுகு கொடுத்து ஓடினவர்களைச் சற்றும் விடாமல் நெருக்கிக் கொண்டு சென்று துரத்தினுன். அவ்வாறு ஓட்டம் பிடித்தவர்களின் பின்னணியில் நின்றவர்களை, இரக்க மின்றித் தனது வாளுக்கிரையாக்கினுன். அப்போது மஹா வீரர்களுங் கூடத் தங்களுடைய இரதங்களி லிருந்து கீழே இழுத்துத் தள்ளப்பட்டனர். அவ்வாறு கீழே உருண்டு விழுந்தவுடன், அவர்களனைவரும் அதிரிதேசனது கத்திக்கு இலக்காகித் தங்களது பிராணனை விட்டனர்.

இவ்வாறு கோபதாபங்களும், அவற்றின் பயனுகக் கோர வதைகளும், மற்றைய கொடுங் காக்ஷிகளுமே, அப்போது அந்தக் களத்தில் நிறைந்திருந்தன. இதெல்லாம் ஆனபின் ஜயசீலனுன அதிரிதேசன் துரோஜர்களது கோட்டையையும் இடித்துத் தாக்கினுன். அவன் அம்மதில்களின் சமீபம் வந்து அவற்றின் மேல் இருந்த கோபுரங்களின் பலா பலங்களையும், உயரத்தையும் கவனித்துப் பார்த்து, அவற்றைத் தரைமட்டமாக்க என்ன வழி யென்பதை ஆலோசித்தான்.

ஆனுல் அப்போது, ஜோவ் தேவர் குறுக்கிட்டு இலியன் மலைச் சிகரங்களிலிருந்து எழுந்து வந்து, அம்மலைகளை ஒரு குலுக்காய்க் குலுக்கி அவற்றின் சரிவுகளினின்றும், நூற்றுக் கணக்கான அருவிகளை வழிந்து ஓடும்படிச் செய்தார். பின்பு, அவர் ஒளியிழந்திருந்த மின்னற் கொடியைத் தமது கையில் பிடித்துக் கொண்டு, பல வர்ணங்களுங் கொண்ட பாவையை நோக்கிப் பின் வருமாறு உரைத்தார் :—

"ஐரீஸ்! நீ, அதிதுரிதமாக, உன்னுடைய பொற் கைகளை விரித்துக் கொண்டு புறப்பட்டு தேவர்களுக்குச் சமான மான ஹெக்டரிடம் செல். அவனுக்கு நமது ஆணையைச் சொல்; ஆகமனன் யுத்தமுனையில் நின்று கொண்டு பொருது, இந்தக் களத்தில் அணி அணியாய் நின்றுள்ள இந்தச் சேனைகளை அழித்து வரும் வரையிலும், இந்த இரண களத்தை அவன் இரத்தக் குழம்பினுல் முழுகடிக்கும் வரையிலும் நீ சும்மா விருத்தல் வேண்டும், அவன் மனம் போனபடி செய்யட்டும் என்று இருத்தல் வேண்டும். உன்னைவிட அந்தஸ்த்தில் குறைந்த கீழ் உத்தியோகஸ்தர்களுக்கு நீ, இந்த யுத்தத்தை ஒப்புவித்து விட வேண்டும், அவன் ஈட்டியினுலோ அல்லது அம்பினுலோ தைக் கப்பட்டுக் காயமடைந்து தனது தேரின் மேலேறி ஓட்டம் பிடிப்பான்! அச்சமயம் ஜோவ் தேவர் உனது புஜ பலங்களை அதிகரித்து விடுவார். உனது மனதிற்கு உறுதியையும், உற்சாகத் தையும் ஊட்டுவர். அப்போது கிரீஸ் காரர்களெல்லாம் தங்க ளுடைய கப்பல்களை நோக்கிக் கொண்டு ஓட்டமாக ஓடுவார்கள். அவ்வாறு ஓடுவோரையெல்லாம் அவன் நெருங்கித் துரத்தலாம். இன்று வெப்பத்துடன் கொதித்துக் கொண்டு விளங்கும் சூரியன் கடலில் இறங்கும்வரையும், பாவனமான இராக் காலமானது

தனது நிழலைத் தந்து நமக்கு விச்ராந்தியைத் தருமளவும் நாம் கிரேக்கர்களைத் தாக்கி யடித்து வருவோம் என்று சொல்!'' என்றார்.

அவ்வாறு அவர் சொல்லி முடித்ததும் ஐரிஸ் தேவி யானவள் அவரது ஆணையைத் தலைமேற் கொண்டு அக்கணமே அங்கு விட்டு அகன்று விட்டாள். பலவர்ணங்களும் தரித் தவளான அவ்வணங்கு, காற்றுக்களையே தன்னுடைய சிறகு களாகக் கொண்டு பறந்து வந்து, மண்ணுலகில் இறங்கி துரோஜர் களது தலைவனை ஹெக்டர், கோட்டைகளின் அகழ்களின் சமீபத்தில் கூடியிருந்த துரோஜச் சேனைகளின் மத்தியில் பளிச் சென்று மின்னிய தனது இரதத்தின் மீது இருக்கக் கண்டு, அவனை நோக்கிப் பின் வருமாறு இயம்பினாள் :—

''பிரியத்தின் புத்திரா ! நான் சொல்வதைக் கேள்! ஜோவ் தேவரது சந்நிதியிலிருந்து நான் வருகின்றேன். அவர் உனக்கு விடுத்த செய்தியைச் சொல்லவே வந்தேன். யுத்த முனையில் நின்று கொண்டு தன்னைச் சூழ்ந்துள்ள வியூகங்களை ஆகமனன் அழித்துப் பாழாக்கும் வரை, அவன் இந்த பூமியை இரத்த வெள்ளத்தில் முழுகடிக்கும் வரை, நீ இந்த யுத்தத்தில் கலவாமல் இருக்க வேண்டும். நீ, உன்னுடைய கீழ் உத்தியோகஸ்தர் களுக்கே இந்த யுத்தத்தைக் கவனித்து வரும்படி உத்திரவு இட வேண்டும். இந்த யுத்தத்தை நடத்தும் பொறுப்பை, நீ அவர் களிடம் ஒப்புவித்து விட வேண்டும்.

இன்று கிரேக்கர்களது தலைவன், ஈட்டியினாலோ, அம்பினாலோ, தைக்கப்பட்டுக் காய மடைந்து தனது தேரின் மேல் ஏறிக் கொண்டு ஓட்டம் பிடிப்பான். அப்போது ஜோவ் தேவர் உனது கைக்கு வலியைத் தருவார். உனது மனத்திலும் ஊக்கத்தை உண்டாக்குவார்.

கிரீஸ்காரர்களெல்லாம், தங்களது கப்பலை நோக்கிக் கொண்டு ஓட்டமாக ஓடுவார்கள். அவ்வாறு ஓடும் அவர்களை நாம் நெருங்கித் துரத்தி ஓட்டி விடலாம். இன்று வெப்பத்துடன் கொதித்துக் கொண்டு விளங்கும் சூரியன், கடலில் இறங்கும் வரையிலும் பாவனமான இராக் காலமானது தனது நிழலைத் தந்து நமக்கு விச்ராந்தியைத் தருமளவும் நாம் கிரேக்கர்களைத் தாக்கி யடித்து வருவோம்!'' என்று தனது வசனங்களை உரைத்து விட்டு அந்தத் தேவி, மறுகணமே மறைந்து போய் விட்டாள் !

அவ் வசனங்களைக் கேட்ட ஹெக்டர், உடனே தனது இரதத்திலிருந்து, ஒரே பாய்ச்சலில் கிளம்பிப் பாய்ந்து பூமியின் மேல் குதித்தான். அவன் குதித்த அதிர்ச்சியினால் பூமியும் நடுங்கியது. அவன் அணிந்திருந்த ஆயுதங்களும் கலகல வென்று சப்தித்தன, பின்பு, அவன் தன்னுடைய இருகைகளிலும்

ஓரோர் கூரான ஈட்டியை எடுத்துப் பிடித்துக் கொண்டு, அலைகள் போல் வரிசை வரிசையாக நின்று கொண்டிருந்த தன்னுடைய சேனாஸமுத்திரங்களை ஒவ்வொன்றாகக் கடந்து, விரைந்து சென்றான்.

அவ்வாறு செல்லுகையில் அவன், அலுத்துக் கிடந்த தன்னுடைய வீரர்களுக்குப் பிரியவசனங்களைச் சொல்லிப் புத்துயிர் அளித்துக் கொண்டும், சத்துருக்களுக்கு முதுகு கொடுத்து ஓடிப் போக விருந்த சைனிகர்களுக்கு உற்சாகம் ஊட்டி அவர்களைப் போர்முனைக்குத் திருப்பிச் செலுத்திக் கொண்டும், அதுவரை யுத்தம் செய்தது போதும் என்று சலிப்புடன் இருந்தவர்களது மனத்தில், கொழுந்து விட்டுக் கொண்டு எரியும் நெருப்பைப் போன்ற புதிய ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் உண்டாக்கிக் கொண்டும் முன் சென்றான்.

அவ்வாறு அவனால் உற்சாகம் ஊட்டப்பெற்ற அவர்கள் தங்களுடைய ஆயுதங்களை ஏந்திக் கொண்டு யுத்தஞ் செய்யச் சித்தமுள்ளவர்களாய்த் தம்தம் இடங்களில் உறுதியாய் நின்றே விட்டனர்!

கிரேக்கர்களும் அவர்களுக்கு இளைக்காமல் ஒரு கை பார்த்தே தீருவோம்! என்ற திடபுத்தியுடன், அங்குமிங்கும் சிதறிக் கிடந்த தங்களுடைய வீரர்களைத் திரட்டிக் கொண்டு யுத்த ஆரம்பத்தை எதிர் பார்த்திருந்தனர். அப்போது ஒவ்வொரு வீரனது மனத்திலும் ஒரு புதிய சக்தியும், புதிய ஆவேசமும்; புதிய மனவுறுதியும், உதித்து ஒரு பெரிய ஊற்றைப் போல் ஊறியது; அவர்களனைவரும் இந்த யுத்தத்தைத் திரும்பவும் முன்னிலும் அதிகமான மும்முரத்துடன் செய்ய வேண்டுமென்று துடித்தனர்! பொங்கிக் கொதித்தனர்! அவர்களது அரசனும், அவர்களுக்குத் தலைமை வகித்து அவர்களுக்கு முன் சென்றான்! அவனுடைய வீரர்களும் ஸைநிகர்களும் அவனையே கண் கொட்டாமல் பார்த்து வந்தனர்! அவனைப்போல் வெற்றியோ அல்லது வீழ்ச்சியோ இரண்டில் ஒன்றை இன்று அடைந்தே தீர வேண்டும் என்று தீர்மானித்தனர்.

புண்ணிய மூர்த்திகளான தேவகன்னிகைகளே! நவ நாயகிகளே! அந்த வீரனான ஆகமனனை முதன் முதலாக எதிர்த்தவர்கள் யார் என்பதையும், அவனது வலியால் தங்களுடைய வலியை யிழந்து விழுந்தவர் யார் என்பதையும் சொல்லுவீர்!

மஹாசாதுவும், ஞான வைராக்கிய ஸம்பன்னனுமான அந்திநாருக்கும் தியானோவுக்கும் பிறந்தவனும், மஹானும், தைரியவானும், இளம் பருவமுள்ளவனும், தனது பிறப்பு முதல் தனது பாட்டனான ஸிஸ்ஸியூஸ் என்பவனால் தடவித் தடவி வளர்க்கப்பட்டு வந்தவனும், பனியைப் போன்ற வெண்ணிறமான ரோமங்களையுடைய ஆடுகள் மேய்ந்து வரும் திரேஸ் தேசத்தில்

வளர்ந்து வந்தவனுமான இபிதாமஸ் என்பவனே, ஆகமன்னது ஆவேஸத்திற்கு முதன் முதலாக இலக்காயினுன்!

தனது சிவந்த கன்னங்களில் அரும்பு போன்ற மிருதுவான மீசை தாடிகள் முளைக்க ஆரம்பித்த கணமே அவன், களங்கமற்ற மனதுடையவனுய் வீரச் செயல்களைச் செய்து ஸத்கீர்த்தியைச் சம்பாதிச்க வேண்டுமென்ற ஆவலுடையவனுக விருந்ததைக் கண்டு, அவனது பாட்டன் ரூபலாவண்ணியங்களில் சிறந்து விளங்கிய தனது குமாரத்தியை, அதாவது, நியாஞேயின் உடன் பிறந்தாளை, அந்த இளங்காளைக்கு, மனைவியாகக் கொடுத்தான். ஆனுல், அவன், தாம்பத்திய சுகபோகங்களை அனுபவிக்க மனமில் லாதவனுய், இந்த யுத்தத்தில் கலந்துகொண்டு, கியாதியையும் பேரையும், புகழையும் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆவலினுல் இழுக்கப்பட்டு இல்லற இன்பங்களை அறவே புறக்கணித்து தன்னுடைய கண்களிலிருந்து நீரைத் தாரை தாரையாய்ப் பொழிந்து, தனது அன்பிற்குப் பாத்திரையான தனது இளமனைவியினிட மிருந்து விடைபெற்றுக்கொண்டு, திரேஸைக் காட்டிலும், தனக்கு, அதிகப் பிரியமான தன்னுடைய ஜன்மதேசங்களுக்குத் தன்னுலான உதவியைச் செய்ய வேண்டுமென்ற ஆத்திரத்துடன் ட்ராயை நோக்கிப் புறப்பட்டுத் துரிதமாக ஓடிவந்து விட்டான். அவன் கறுத்த நிறமுள்ள பன்னிரண்டு கப்பல்களுடன் புறப்பட்டு, பெர்க்கேஸி என்னும், துறைமுகத்தை நோக்கிக், கடல் மார்க்கமாக யாத்திரை செய்து, அவ்விடத்தில் இறங்கி அங்கிருந்துத் தரை மார்க்கமாக, நெடுந்தூரம் வரை பலவிதமான பசி தாகங்களுக்கும், இடையூறுகளுக்கும் ஆளாகி அவற்றிற்கு ஈடு கொடுத்து முன் சென்று, ட்ராய் நகரத்தை அடைந்தான்.

பிரம்மாண்டமான ஆயுதங்களை அணிந்துகொண்டு ஒரு பெருத்த கோபுரம் போல் உயர்ந்து விளங்கிய அவன், இன்றைய தினம் புகழெய்தியே தீரவேண்டும் என்ற பேராவல்கொண்டு, சிறிதும் முன்பின் யோசனை செய்யாமல் தன்னுடைய ஸைனிகர்கள் ஒழுங்காக வகுத்து நின்ற அணிகளின் முன் ஒரேயடியாய்ப் பாய்ந்து சென்று இராஜாதி ராஜனையே யெதிர்த்தான்!

அதிரிதேசன் முதன் முதலாக அவனை நோக்கித் தனது ஈட்டியை விசையுடன் எறிந்தான். ஆனுல் அச்சமயம் அந்த துரோஜ வீரன், தனது தலையைக் குனிந்துகொண்டு விட்டதினுல் அந்த ஈட்டி ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு முன் சென்று விட்டது. அதன்பின் இளம் வீரனுன அவன் ஒரு வேலையெடுத்து அதை அந்த ராஜனுடைய ஹிருதயத்தை நோக்கிக் குறிவைத்துத் தனது முழுவிசையுடன் குத்தினுன். அந்த வேல் அரசனது மார்க் கவசத்தைத் தாக்கிய பொழுது, அது வெள்ளித் தகடுகளாலான பூண்கள் கொண்ட அவனது அகலமான அரைக்கச்சையின் மேல் விழுந்து விட்டது. அதனுல் அதன் முனை முறிந்து போய்விட்டது, காயம் உண்டாகவில்லை.

அப்போது அதிரிதேசன் அவ்வாறு தனது கச்சையின் மேல் ஊன்றிக்கொண்டு நின்று விட்ட அந்த வேலாயுதத்தைத் தாங்கிக் கொண்டு, சற்று நேரம் நின்று, நிதானித்துப் பின்பு அதைத் தனது முழுபலத்துடனும், பிடித்து அசைத்து அந்த இளங்காளையின் கையிலிருந்தும் பிடுங்கி விட்டான். மறுகணம் அவன் இபிதாமஸ் ஸின் கழுத்தின் மேல் சிறிதும் தவருமல் விழும்படித் தனது பளுவான கத்தியைக் கொண்டு ஓங்கி ஓர் அடி அடிக்க, அப்போது அந்தவீரன் ஓர் அடியற்ற பனைபோல், நிலத்தின் மேல் திடீரென விழுந்து விட்டான். இவ்வாறு அதிர்ஷ்ட ஹீனனுன அந்த வீரன் அந்தப் போர்க்களத்தில் படிந்திருந்த புழுதியில் தனது உடலைக் கிடத்தி விட்டு மீளாவுலகத்தை நோக்கிப் பறந்து சென்ருன். நித்தியமான நித்திரையானது சுழன்று கொண்டிருந்த அவனுடைய கண்களை மறைத்து விட்டது!

ஆஹா! உயர்ந்த நல்ல ஸ்திதிக்கு வரக்கூடிய உனக்கு இந்தக் கஷ்டம் வரலாமா? அகால மரணமடைந்தனையே! உனது நாட்டிற்கே ஓர் ஒப்பற்ற பந்துவாக விருந்தனையே! ஸகலமான நற்குணங்களுக்கும் ஓர் ஆலயமாக விளங்கி வந்தனையே, உன்னு டைய எழிலும் இளமையும், நற் குணங்களும் வீணுயினவே!

இனி, இவன் கன்னிகையும், நவவதுவையுமான தனது பாரியையின் அருகிலும் செல்லானே! அவளுக்கு வெகுமதிகளைக் கொடுத்து ஆலிங்கனஞ் செய்யானே! அவளைக் கட்டியணைக்க மாட்டானே! தான் யுத்தத்தில் கொள்ளையடித்துக் கொண்டு வந்த வஸ்துக்களை அவளுக்குக் காணிக்கையாக அவளது காலடியில் வைக்க மாட்டானே! அவன் அவளுக்குத் தன்னுடைய ஐஸ்வரியங் களைத் தாராளமாக அளித்திருந்தானே! இன்னும் மேன்மேலும் அவ்வாறே வரிசைகளை வழங்க வேண்டும் என்று ஆவல் கொண் டிருந்தானே! அவனுடைய வாஞ்சைகளனைத்தும் வீணே ஆயினவே! இப்போது அவனுக்கு அழுவாருமில்லை, இவனது உடலை அடக்கம் செய்வாரும் இல்லை. அதன் மேல் ஒரு துணியை விரித்து மறைப்பாரும் இல்லை! இவ்வாறு இவன், அந்தக்களத்தில் கிடக்கையில், அவனை வென்ற ஜயசீலனுன ஆகமனன் அவனு டைய ஆயுதங்களைப் பறித்துக்கொண்டு போய்விட்டான்!

அப்போது, அங்கு சமீபத்திலிருந்த அந்தினுரின் மூத்த குமாரனுன கூவோன் என்பவன் தனது அத்தியந்தப் பிரியத் துக்குப் பாத்திரனுகயிருந்த அந்த இளையோனது உடலும் உறுப்புக் களும் இரத்தத்தைப் பொழிந்து கொண்டு உருவழிந்து வெளுத்துக் கிடந்த கோரமான காக்ஷியைக் கண்ணுற்று, துக்கத்தினுல் துளைக் கப்பட்ட மனத்துடன் விம்மி விம்மி யழுது கண்ணீர் வடித்தான்.

பின்பு அவன், கழிவிரக்கத்தினுல் காரியமாகாதென்று உணர்ந்து, சற்றுப் பொறுத்துச் சமயம் பார்த்து, அரசனுடைய கண்ணுக்குப் புலனுகாமல் மறைந்திருந்து, அவனையே குறிப்பாய்க் கவனித்துத், தனது ஈட்டியினுல், அவனது முழங்கையைப் பார்த்து

பலமாக ஒரு குத்துக் குத்தினன். உருக்கிய இரும்பினல் உண்டாக்கப்பட்டிருந்த அந்த ஈட்டியானது அவ்வாறு பிரயோகிக்கப்பட்ட பொழுது, அது விசையுடன் துடித்துக் கொண்டு, ஆகமனனது முழங்கையில் சதைப் புஷ்டியான இடத்தை ஊடுருவிக் கொண்டு சென்று, அவனது கையையும் துளைத்து, முள்ளைப் போன்ற தனது கூரான முனைக்குச் சிறிதும் சேதமின்றி, அக்கையின் மேற்புறத்தில் வந்து நின்றுவிட்டது! அப்போதுதான், இராஜாதிராஜன், இது என்ன அதிசயம் என்று திடுக்கிட்டு, அதனைச் சோதித்துப் பார்த்து, அது இன்னது என்று அறிந்து, பின்பு, சிறிதும் பயமின்றித் தனது ஈட்டியைத் தூக்கியெடுத்துக் கொண்டு கூவோனை நோக்கி, விரைந்து ஓடினன்.

அச்சமயம், ஸஹோதர வாத்ஸல்யமுடைய கூவோன், தனது உடன் பிறந்தானது சவத்தை இழுத்துக் கொண்டுவந்து, அதைத் தனது இனத்தார் முன்வைத்து, அதற்குச் சரியான பழி வாங்க முன்வரும்படி, அவர்களைக் கூவியழைத்துக் கொண்டும், இரத்தக் கறையுடன் அந்தக் களத்தில் மூச்சுப் பேச்சின்றிக் கிடந்த அந்தச் சவத்தைச் சிறிதும் மூச்சுவிடாமல் காத்துக் கொண்டும், அதன்மேல் தனது அகன்ற கவசத்தை விரித்து மறைத்துக் கொண்டுமிருந்தான்.

அந்தச் சந்தர்ப்பத்தில் அதிரிதேசன், அவன் பராமுகமாகவிருந்த ஒரு பக்கத்தை நன்ருகக் குறி வைத்துக் கவனித்து, பித்தளையினல் செய்யப்பட்டிருந்த தனது அம்பு ஒன்றை யெடுத்து அதன்மேல் எய்து, அவனைத் துளைத்து விட்டான். அக்கணமே அவனும், இரத்தத்தை வடித்துக் கொண்டிருந்த தனது உடன் பிறந்தானது மார்பின் மேல் குப்புற விழுந்தான். உடனே அரசன் தனது வாளைக்கொண்டு அவனது தலையையும் வெட்டியுருட்டித் தள்ளிவிட, உடன்பிறந்தார் இருவரும் இருள் சூழ்ந்த பாதாள லோகத்திற்குப் பிரயாணஞ் செய்து அங்கு ஒருவர்க்கொருவர் துணையாகச் சேர்ந்து கொண்டனர். அவ்விருவருடைய ஆவிகளும் இவ்வாறு மறைந்து போயின!

அதன்பின் மேன்மேலும் பழிவாங்க வேண்டுமென்று துடித்த ஜயசீலனுன அதிரிதேசன் அத்துடன் நில்லாமல் சித்திர விசித்திரமாகவும் கூர் முனையுள்ளதாகவும் செய்யப்பட்டிருந்த தன்னுடைய ஆயுதங்களைச் சுழற்றிப் பிரயோகித்துக் கொண்டும், அந்த யுத்தகளம் முழுவதையும் சுற்றிக்கொண்டும் துரிதமாக ஓடியாடிச் சென்ருன்.

நீளமான ஈட்டியையும் வெட்டெனத் துண்டிக்கும் பட்டாக் கத்தியையும், பிரம்மாண்டமான பாருங்கல்லையும் பிரயோகித்து அவன், அணிவகுத்து நின்ற தன்னுடைய சத்துருக்களின் வியூகங்களை ஒரேயடியாய்ப் பிளந்து, கணக்கற்ற சேனைகளையழித்து நிர்மூலமாக்கினன். அதுவரை அவனது உடம்பில் ஊறிவந்த இரத்தமானது தகதகவென்று கொதித்துக் கொண்டேயிருந்தது.

அதற்குச் சிறிதும் தோஷம் உண்டாகவில்லை. ஆனால் கூவோனால் அவனுக்கு உண்டான காயத்திலிருந்து ஒழுகிய இரத்தம் இறுகி, அந்தக் காயமும் முற்றிவிட்ட பொழுது, அவனுக்கு மிகக் கொடிய வேதனைகள் உண்டாயின.

மேன்மேலும் மக்களைப்பெறும் பெண்மணிகளுக்குப் பிரஸவ வேதனைகளைத் தாராளமாக உண்டாக்கிச் சொல்லொணுத் துயரங் களை விளைக்கும் கன்னெஞ்சரும், சிறிதேனும் தயவு தாக்ஷண்ணி யங்களில்லாதவருமான, இலித்தியர்களால் உண்டான வேதனை களையும் மிஞ்சிய, அவ்வேதனைகள், அவனது திடமான மார்பைப் பிளந்து அதை அரைத்துப் பொடியாக்கின!

இவ்வாறு கூவோனது ஆயுதத்தின் முள்போன்ற முனை யினால் குத்தப்பட்டு, அதனால் உண்டான வேதனையைத் தாங்க முடியாமல், அவன் வெகுவாகத் தப்பித்துக் கொண்டு, தன் இரதத் தின் மீது ஏறித் தன்னுடைய குதிரைகளின் கடிவாளக் கயிற்றை யும் தனது சாரதியிடம் ஒப்புவித்து விட்டான்.

பின்பு இயல்பாகவே உரத்த குரலுடன் வசனிப்பவனாகிய அவன், அச்சமயம் தனக்கு உண்டாயிருந்த வலியினால், அதிவேக மும் ஆத்திரமுங் கொண்டு, மிகக் கனமான உரத்த குரலுடன் பின் வரும் வசனங்களையுரைத்துத் தன் கோஷ்டியாருக்கு உற்சாக முண்டாக்கினான் :—

"என்னுடைய நண்பர்களே! கிரேக்கர்களே! நீங்கள் இது வரை சம்பாதித்துள்ள வீரசூர பிரதாபங்களை, நழுவவிட்டு விடா தீர்கள்! எனது இந்தக் கையினால் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் காரி யத்தை நடுவில் நிறுத்திவிடாமல் முன் சென்று, மேன்மேலும் முயன்று முடியுங்கள்! ஜோவ் தேவர் செய்யும் இந்த அநியாயத் தையும் பாருங்கள்! அவர் நம்மிடங் கோபங் கொண்டு உங்களது தலைவனை இங்குவிட்டுத் துரத்தி விட்டார்! நான் இங்கு நிற்பது கூட அவருக்குப் பிரியமில்லையாம்! இது என்ன கஷ்டம்!! இன் றைக்கு இன்னும் உச்சிப் பொழுது ஆகவில்லை. இந்தக் காலைப் பொழுதில் மாத்திரம் நமக்குக் கிடைத்த லாபத்தைக் கண்டு, அவர் பொறாமை கொண்டு கொதிக்கின்றாரே!" என்றான்.

இவ்வாறு, அவன் உரைத்த பின்னர், அவனது சாரதி, தனது நீண்ட சாட்டை வாரைச் சுழற்ற, அவன் குதிரைகள் காற்றாய்ப் பறந்தன. இரதமும் புகையைப்போல் புழுதியைக் கிளப்பிக்கொண்டு முன் சென்றது. வேகமாய்ப் பறந்து சென்ற குதிரைகளின் நாசித்துவாரங்களிலிருந்து மேகங்களைப் போன்ற மூச்சுக்கள் கிளம்பின. அவைகளின் இருமருங்கிலுமிருந்து, நுரை யானது பனியைப்போல் வழிந்து வந்தது. இவ்வாறு ஒரு கணப் பொழுதில், ஆகமனனது சாரதியும், மற்றையோரும் விர்என்று பறக் கும் ஓர் அம்பைப்போல் அந்த யுத்தகளத்தைக் கடந்து சென்று

காயமடைந்த தங்களது தலைவனை அவனது கூடாரத்திற்குக் கொண்டு வந்து சேர்த்தனர் !

கிரேக்கர்களது அரசன், மேற்கூறிய பிரகாரம், யுத்த களத்திலிருந்து, பின்னடைந்ததைக் கண்ணுற்ற க்ஷணமே, ஹெக்டர் தன்னுடைய துரோஜ ஜனங்களுக்கும், உதவியரசர்களுக்கும் பின்வரும் உற்சாகமான வசனங்களை யுரைத்து அவர்களுக்குப் புத்துயிர் உண்டாக்கினுன் :—

"தார்தான்களே ! ஸிலியன் வம்சத்தில் வந்தவர்களே ! நான் சொல்லுவதைக் கேளுங்கள். நீங்கள் சாமான்யமானவர்களல்ல ! துவந்த யுத்தங்கள் செய்வதில் சமர்த்தர்கள் என்று நீங்கள் பிரசித்தியடைந்திருக்கின்றீர்கள். உங்களைக் கண்ணுக்கு நேராகக் கண்டவர்களெல்லாம் கிடுகிடுவென்றே நடுங்குவார்கள். இச் சமயம், நீங்கள் முன்னுட்களில் செய்த யுத்தங்களையும் அவற்றில் அடைந்த வெற்றிகளையும் மகான்களான உங்கள் முன்னேர்களின் வீரசூரப் பிரதாபங்களையும் நினைத்துப் பாருங்கள். இன்று நடந்த ஒரு விசேஷத்தையும் பாருங்கள் !

அதோ, கிரேக்கர்களது சேனைத் தலைவன் ஓட்டமாய் ஓடுகின்றுன் ! தன்னுடைய சேனைகளை விட்டே விட்டான். அவைகள் எக்கேடு கெட்டுப் போனுல் நமக்கென்ன என்று அவன் அவைகளைக் கைவிட்டுவிட்டு ஓடிவிட்டான் !

இன்னும் ஒரு விசேஷத்தையும் கவனியுங்கள். ஜோவ் தேவரும் நமக்குத் தான் ஜயம் என்து சொல்லிவிட்டார்! இப்போது நீங்கள் நுரையைக் கக்கிக் கொண்டிருக்கும் உங்களுடைய போர்க் குதிரைகளின் மீது ஏறி, அதோ அங்கு இருக்கும், நம்முடைய சத்துருக்களின் மீது பாய்ந்து செல்லுங்கள் ! நமக்குத் தான் ஜயம் என்ற மனவுறுதியுடன் சென்று என்றும் அழியாப்புகழைத் தரக்கூடிய சாகசங்களைச் செய்யுங்கள்,"!

இதைப் போன்ற வேறு வீர மொழிகளையும் பகர்ந்து, அதிக ஆத்திரத்துடனும், வேகத்துடனும் துடித்த அந்த வீரன், சோர்வுற்றிருந்த தன் ஸைனிகர்களுக்குப் புத்துயிர் அளித்தபொழுது, அவன் சொற்களைச் செவியுற்ற அனைவரது உள்ளமும் தகித்துக் கொதித்தது.

புள்ளிச் சிங்கத்தையோ, அல்லது கொம்புகளையுடைய கரடியையோ பிடித்துக் கிழிக்கும்படித் தனது வேட்டை நாய்களை ஏவி, அவைகளுக்கு உற்சாகத்தையூட்டும் தைரியவானுன ஒரு வேடன், எவ்வாறு உரத்துக் கூவியும், தனது கையை வீசி யசைத்தும் அதிதைரியமும் அதிநம்பிக்கையுமுடைய அந்நாய்களுக்கு ஊக்கமுண்டாக்கி வருகின்றுனே, அவ்வாறே தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர், தன்னுடைய சேனைகளுக்குத் தைரியமுண்டாக்கி வந்தான்.

தவிர வேட்டை நாய்களை ஏவிவிட்டு அத்துடன் நின்று விடாமல் தானும் அம்புங் கையுமாய்த் துள்ளிப் பாய்ந்து அவை யனைத்திற்கும் முன் செல்லும் அந்த வேடனைப் போல், ஹெக்டர், தன் ஸைநிகர்களுக்கு ஊக்கந் தரக்கூடிய வசனங்களை யுரைத்து வந்தது மன்றித், தான் நியமித்தப்படித் தானும் காரியங்களைச் செய்து வந்தான். தானே அவர்களுக்குத் தலைமை வகித்து, அவர்களுக்கு முன் சென்றான். அவ்வாறு முன் சென்று, அவன், கன்னங்கரேலென்று விளங்கிய தன் சத்துருக்களது சேனாசமுத்திரத்தின் மேல் தன் சேனைகளை ஒரு பெரும் மழையைப் போல் பொழிந்து அதைத் தாக்கினான்.

அது எவ்வாறு இருந்ததென்றால் சொல்லுகிறேன், கேளுங்கள். கனமான கறுத்த பெருத்த ஒரு மேகத்தின் வயிற்றில் நிறைந்துள்ள மழைத்துளிகளை ஒன்றாய்த் திரட்டிக் கொண்டு திடீரென்று கிளம்பிவரும் ஒரு புயலானது, எவ்வாறு ஊதாநிறமுள்ள ஒரு கடலைக் கலக்கி, அகாதமான அதன் அடிப்பாகத்திலிருந்து சிறிதும் தங்கு தடையின்றி ஒன்றையொன்று மோதி அடித்துவரும் மலைபோன்ற திரைகளை யெழுப்பி, அந்தக் கடலையே ஒரேகலக்காய்க் கலக்கி விடுகின்றதோ, அவ்வாறு இருந்தது.

கலைமகளே! இவ்வாறு துரோஜனுக்குப் பேரும் புகழும் அளித்துவிட வேண்டுமென்று ஜோவ் தேவர் சங்கல்பம் செய்து விட்டபொழுது, அந்த வீரனால் வீழ்த்தப்பட்டு, மண்ணைக் கவ்வின வீரர்கள் யாவர் என்பதைச் சொல்லுமம்மா?

அஸ்ஸியூஸ், டோலோப்ஸ், ஆட்டோநூஸ் என்பவர்கள் அடியோடு ஒழிந்தனர், அவர்களுக்குப்பின் ஒப்பத்தீஸ், என்பவனும், 'நானும் வந்தேன்,' என்று அவர்களைத் தொடர்ந்து ஓடிச் சென்றான். அவனுக்குப்பின் தைரியமுள்ளவனும், முன்பு நடந்த பல யுத்தங்களிலும் கீர்த்தி யெய்தி யிருந்தவனுமான ஹிப்போநூஸ் என்பவனும், ஒபெல்டியஸ் என்பவனும்,ஓரஸ் என்பவனும், அழிவில்லாத அந்தகாரமான இரவில் மறைந்தனர். அவ்வாறே ஈஸிம்நஸ்ஸூம், அஜிலாஸ்ஸூம், அந்தக் கதியையே அடைந்தனர். இவர்கள் அனைவரும் பிரசித்தி பெற்ற பெரிய வீரர்களே யாவார்கள். இவர்களேயன்றி வேறு அனேக வீரர்களும் அன்று, வெட்டுண்டு மடிந்து மாண்டனர். ஆனால் அவர்களனைவரும் சிறிதும் பிரஸித்தியடையாத சாமான்யமானவர்கள்

மேற்றிசையிலிருந்து, காற்று மழைகளுடனும் புயலுடனும் வரும் ஒரு சுழலானது, எவ்வாறு நோட்டஸ்ஸினால் நிர்மாணிக்கப் பட்டு ஒன்றாய்ச் சேர்ந்து வந்த மேகக் கூட்டங்களைக் கலைத்து விட்டுப் பின்பு, வெகு கொடுமையுடனும் விசையுடனும் முன் சென்று, மலைகளைப் போன்ற கரும்மேகங்களைச் சுமத்தி உருட்டி ஓட்டுகையில் சமுத்திரத்திலுள்ள அலைகள் நுரையைக் கக்கிக் கொண்டும், ஆகாயத்தையளாவித் தங்களது தலையைத் தூக்கிக் கொண்டும் கிளம்பி ஒன்றோடொன்று மோதிச் சமுத்திரத்தின்

அகன்ற அடித்தரையைக் கட்டுலனுக்கி விடுகின்றனவோ, அவ்வாறே, வேகத்துடன் துடித்த ஹெக்டர், சிறிதும் ஓய்வு ஒழிச்ச லின்றியும் தங்குதடையின்றியும், ஒரேமூச்சாய் உழைத்து வந்து, தன்னுடைய சத்துரு வர்க்கத்தாரைத் தலைகுப்புறத் தள்ளி, அவர் களது மனத்தில் குழப்பத்தை யுண்டாக்கி, அவர்கள் திக்குத்திசை யறியாமல் ஓடும்படி செய்து விட்டான். அவர்கள் நாற்புறமும் பறந்து ஓடினர்.

சமீபத்தில் தங்களது அரசனுக்கு உண்டான ஆபத்தினுல் அவர்களது மனவுறுதியும் அடியோடு அழிந்து போய்விட்டது! அப்பொழுது அவர்கள், இன்னது செய்வது என்று அறியாமல் ஏக்கம் கொண்டனர்! அந்தத் தருணத்தில் மரக் கோட்டை களாகிய கப்பல்களில் தங்கியிருந்த கிரேக்கர்களனைவரும் நடுக் குற்றுக் கிடுகிடு வென்று பதறியே போயிருப்பார்கள்! ஆனுல் அந்தக் கஷ்ட தசையை யுலிஸ்ஸீஸ் தடுத்து விட்டான்!

அவன் திடிதீசனைக் கூவியழைத்து அவனை வியந்து பேசி, அவனது உள்ளத்தில் கிளர்ச்சியை யுண்டாக்கி, அவன் பெருமை களை வெளிப்படையாகக் காரியத்தில் காட்டுமாறு உற்சாகமூட்டித் தூண்டினுன்.

"ஆஹா! திடிதீசா, இதைப் பார்த்தாயா! நாம் நமது கையைக் கட்டிக் கொண்டிருக்கலாமா? இது தகுமா, உடனே எழுந்திரு! தாமதியாதே, நாமிருவரும் இன்று சேர்ந்து இந்தச் சண்டையைச் செய்வோம் வா" என்றுன்.

இவ்வாறு அந்த வீரன் சொல்லக் கேட்ட அவனது நண்பனுன திடிதீசன் அவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத் தான்:—

"மனிதர்களுக்கு வெற்றியைத் தரக்கூடிய ஓர் யுத்தம் எவ்வளவு சிரமமுள்ளதாக விருந்தாலும் நான் அதைச் செய்யாமல் இருக்கமாட்டேன். அதைக் கைநழுவ விடமாட்டேன். எந்தவித மான ஆபத்துக்கும் பயப்படவும் மாட்டேன். ஹெக்டர் வரட்டும் நான் அவனிடம் ஒரு கை பார்த்தே விடுகின்றேன். அவனுடைய கோபதாபங்களை இங்குக் காட்டட்டும், அதையும் பார்த்து விடுகின்றேன்!

ஆனுல் ஒன்று! இந்த ஜோவ் பகவான், இந்த துரோஜர் களது கட்சியில் இருந்து கொண்டு அவர்களுக்கு வெற்றியை அளித்து வருகின்ருர்! அது தான் எனக்கு ஒரு பெருத்த கவலையா யிருக்கின்றது. நமக்கு விரோதியாக இவர் புறப்பட்டிருப்பதினுல், இவருக்கு முரணுக நாம் செய்யும் மனுஷ்யப் பிரயத்தனங்கள் அனைத்தும் வீணேயாகுமன்ருே!" என்று சொல்லிக் கொண்டு அவன் பெருமூச்செறிந்தான்!

அவ்வாறு பெருமூச்சு விட்டுக்கொண்டு அவன், பழிவாங்கி விடவேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த தனது இரும்பாயுதத்தை ஓங்கிச் சுழற்றவே, மிகவும் கர்வமும் திமிருங் கொண்டிருந்த தம்பிரியஸ் என்பவன், அங்கு இலக்காகித் தனது தேரிலிருந்து கீழே விழுந்து தனது தலையைச் சாய்த்தான். அடுத்தபடி தொடர்ந்து அவன் யுலிஸ்ஸீஸின் வாளினால் கொல்லப்பட்டுத் தன்னுயிரை நீத்து உன்னத பதவியை யடைந்தான். இவ்வாறு அவ்விருவரையும் வெட்டி மாய்த்து அவர்களது ஆவிகளையும் அழிவில்லாத அந்தகாரத்தில் ஆழ்த்தி விட்டு, அந்த வீரர்கள், அந்த யுத்த களத்தில் சிறிதும் இடைவெளியின்றி நெருங்கி நின்று கொண்டிருந்த சேனைகளின் மத்தியில் நுழைந்தனர்.

தங்களைத் தொடர்ந்து வரும் வேட்டை நாய்களுக்குத் தப்பிவிட்ட இரண்டு காட்டுப் பன்றிகள் இவ்வாறுதான் ஓட்டம் பிடிக்கும். பின்பு சட்டெனத் திரும்பும்; குத்துக்குக் குத்து, காயத்துக்குக் காயம் செய்து, பழிக்குப்பழி வாங்கும்; இன்று காலை முதல் இதுவரை நடந்த யுத்தத்தில் கொடியோனான ஹெக்டர் அடைந்த வெற்றிகள் இவ்வாறு சற்று நேரம் தடைபட்டுப் போயின. கிரீஸ்காரரும் சிறிது நேரம் இளைப்பாறினர் !

மிராம்ஸின் புத்திரர்கள் இந்த யுத்தத்தில் அதிகக் கீர்த்தியுடன் விளங்கினர். அவர்கள் பளிச் சென்று பிரகாசிக்கும் ஒரே இரதத்தின் மீது ஏறிச் சவாரி செய்து வந்தனர். வரும் பொருளுரைப்பதில் மஹாவல்லவனாகிய அவர்களது தகப்பன், அவர்களை இந்தத் துரோஜர் களத்துக்குப் போகலாகாது என்று முன்னாடியே எச்சரித்திருந்தான். ஆனால் அவர்கள் அவனுடைய நல்லுரையைக் கவனிக்கவில்லை. விதியானது அவர்களை இங்கு வலிய இழுத்துக் கொண்டு வந்து விட்டது. அது அவர்கள் பிடரியைப் பிடித்து உந்தித் தள்ளி விட்டது. அவர்கள் தங்களது தந்தை சொல்லின் மிக்க மந்திரமில்லை என்று அறிந்திருக்கவில்லை. ஆதலால், அம் மந்திரம் பயனற்றதாயிற்று. அவர்கள் இந்த யுத்தத்தில் கலந்துகொள்ள வேண்டு மென்று ஆத்திரத்துடன் ஓடி வந்து, இந்த மைதானத்தில் பட்டு விழுந்து அழிந்து போயினர். உஷ்ணமான உதிரமும் அவர்கள் உடல்களில் ஊறுவதை நிறுத்தி விட்டது. அப்போது தயவு தாக்ஷண்ணியம் என்பது சிறிதும் இல்லாத திடிதீசன் அவ் வீரர்கள் அணிந்திருந்த பள பளவென மின்னிக் கொண்டிருந்த ஆயுதங்களைப் பறித்து விட்டான்.

மஹானான யுலிஸ்ஸீஸினால் ஹைப்பிரோக்கஸ் என்பவன் வதையுண்டான். அவ்வாறே யுலிஸ்ஸீஸ், தனவானான ஹிப்போதாமஸ் என்பவனையும் கொன்று, அவனுடைய ஆயுதங்களையும் ஆடையாபரணங்களையும் உபகரணங்களையும் ஸ்வீகரித்துக் கொண்டு விட்டான்.

அப்போது மஹா தேவரான ஜோவ் பகவான் ஐடாமலையி லிருந்த வண்ணம், தம்முன் நிகழ்ந்து வந்த இந்த இரத்தப் பெருக்கைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முன்னிருந்த தராசின் தட்டுகளும் ஏற்றத் தாழ்ச்சி யின்றி சம நிலையிலேயே நின்ற வண்ணமிருந்தன. அன்றைய தினத்தில் இன்னாருக்குத் தான் வெற்றி அல்லது தோல்வி என்பதை அவர் அதுவரை நிச்சயிக்கவில்லை.

அவ்வாறிருக்கையில், பயோனியன் குலத்தில் வந்தவனும் மஹா வீரனும், உலகெங்கும் பிரஸித்தி பெற்றிருந்தவனும் ஆகிய அகஸ்திரோப்பஸ் என்பவன் திடிதீசனுக்குப் பயந்து வெருண்டு, காற்றைப்போல் இறகுகளைக் கட்டிக் கொண்டு தனது கால்விசை முழுவதுடனும் ஓட்டமாய் ஓடினான். அச்சமயம் அவனுக்கு அவனுடைய குதிரைகள் வெகு தூரத்திலும், அவனுடைய சத்துரு வெகு சமீபத்திலுமிருந்ததினால், அவன், நிலைகுலைந்து, சிதறிக் கிடந்த தன்னுடைய சேனைகளின் இடையே காற்றிலும் வேகமாக ஓடினான். அவ்வாறு ஓடுகையில் அவனது ஆவியும் அவனது உடலைவிட்டு ஓட்டம் பிடித்து விட்டது!

அப்பொழுது யுத்தங்களின் பழக்கமும் அனுபோகமுங் கொண்டிருந்த ஹெக்டர், அதைக் கண்ணுற்று, அவனுக்கு உதவி செய்ய ஓட்டமாய் ஓடி வந்தான், எல்லோரையும் உரத்துக் கூப்பிட்டான். அக்குரலினால் ஆகாயமும் இடிந்து போய் விட்டது. அதைக் கேட்டவுடன், சிதறிப் போயிருந்த அவனுடைய சேனைகளனைத்தும் திரும்பி வந்து ஒன்றுகூடின. இந்த விந்தையைக் கண்ணுற்றபொழுது, மஹாவீரனான தயோமிதியும் பீதியை அடைந்து விட்டான், என்றால் ஹெக்டரின் சாமர்த்தியத்தை என்னவென்று சொல்லுவது!

அப்போது திடிதீசன் இந்த யுத்தத்தில், இடை விடாமலும் இணைபிரியாமலும் ஒரு சகோதரனைப் போல், தன்னுடன் உழைத்து வந்த யுலிஸ்ஸீஸை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான்:—

"முதுகு கொடுத்து அதோ அங்கு ஓடிய சேனைகளெல்லாம், இந்த ஹெக்டருடைய குரலைக் கேட்ட க்ஷணம், இதோ! நம்மை நோக்கியே ஓடி வருகின்றன! இது என்ன ஆச்சரியம்! இதைப் பார்த்தாயா? உருண்டு, புரண்டு, திரண்டு வரும் ஒரு புயலைப் போல், இவர்கள் ஆரவாரஞ் செய்து கொண்டு வருகின்றனரே! இந்த யுத்தகளம் முழுவதையும் இந்த ஹெக்டர் தனக்கே ஸ்வாதீன மாக்கிக் கொண்டு விட்டானே! அவனே இங்கு சர்வாதிகாரியாகவும் விளங்குகின்றானே! அவனது சேனைக ளனைத்தும் இங்கு வந்து ஒழுங்காய்க் கூடி விட்டனவே!" என்றான்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே, அவன் தனது பிரம் மாண்டமான வேலாயுதத்தை, அந்த துரோஜ வீரனை நோக்கி

விரைவாக விடுத்தான். அது அதிவேகத்துடன் பறந்து சென்று, குறிதப்பாமல் அந்த வீரன் மகுடத்தின் மேல் அணிந்து கொண்டிருந்த சிறகுகளைத்தாக்கி, வழவழவென இருந்த அவற்றின் கொடுமுடியைத் தகர்த்து அழித்து விட்டது. பின்பு அது ஒரு மூலையை நோக்கிச் சாய்ந்து போய்விட்டது. ஆனால் அந்த துரோஜ வீரனுக்கு அதனால் சிறிதேனும் காயமோ இரணமோ உண்டாகவில்லை. பீபஸ்தேவர், தமது இரத்தத்தாலேயே தனக்குக் கொடுத்திருந்த கிரீடத்தை யணிந்திருந்த அவன், அதனால் காக்கப்பட்டுத் தனது இடத்திலேயே அசைவின்றி நின்று கொண்டிருந்தான்.

என்றாலும், அந்த வேலாயுதத்தின் வீழ்ச்சியினால் அவன் திடுக்கிட்டுக் கலக்கமே யடைந்தான்! அப்போது அவனுடைய கைகளும் முழங்கால்களுமே அவனுக்குத் துணையாய் நின்று, நடுக்கமுற்றுத் தாங்கி வந்தன. மஞ்சுத் துளிகளும், அவனுடைய கண்களைப் பஞ்சைப் போல் மூடிக் கொண்டு விட்டதினால், அவற்றின் ஒளி மங்கிப் போய் விட்டது! அவை சுழன்றன. சிறிது நேரம், அந்தகாரத்திலும் அழுந்தி மறைந்து போய்விட்டன!

அதைக் கண்ணுற்று அதுதான் சமயம், என்று நினைத்துத் திடிதீசன், தனது வேலாயுதத்தை யுருவித் திருப்பி யெடுத்துக் கொள்ளலாமென்று நினைத்து விரைந்து ஓடினான். அதற்குள்ளாக ஹெக்டர் மூர்ச்சை தெளிந்து தனது இரதத்தில் திரும்பி ஏறிக் கொண்டு ஓட்டம் பிடித்து, ஆட்டுமாட்டுக் கூட்டங்கள் போன்ற தன்னுடைய திரளான ஜனங்களின் இடையில் நுழைந்தே விட்டான்!

கிரேக்க வீரன் அவனை விட்டானா! விடுவானா? விடவே யில்லை! அவன் அவனை நெருங்கித் தொடர்ந்து துரத்திக் கொண்டு சென்று, ஆர்ப்பரித்துக் கோஷம் செய்து, அவனைப் பின்வருமாறு இழித்துக் கூவினான்.

“இன்று பறந்து போக விருந்த உனது ஆவியானது, இப்போது தப்பிப் பிழைத்து விட்டது! இதற்குப் பீபஸ் பகவானோ, அல்லது உனது கால் விசையோ தான் காரணம்! அவரைப் பின்னும் ஒரு முறை அடிபணிந்து வாழ்த்து! யமனது வேகத்தையும் மிஞ்சின உனது கால் வேகத்தை நினைத்துச் சிறிது காலம் சந்தோஷித் திரு!

அப்பாலோ தேவர் உன்னுடைய பிரார்த்தனைகளுக்கு விசேஷமான பலன்களை அளித்தே வருகின்றார்! பக்ஷ பாதியும், பராக்கிரமசாலியுமான அந்தத் தேவர், உனக்குத் தமது சகாயத்தை அடிக்கடிச் செய்தே வருகின்றார். இந்தத் திடிதீச னுக்கு மாத்திரம் ஏதேனும் ஒரு தெய்வம் ஒரு கை கொடுத்து உதவுமானால், அப்போது உனக்கு வரத்தக்கதும் வந்தே தீர வேண்டியதுமான மரணம் வரும். அதை நீ தடுக்க முடியாது.

வெட்கமும் மானமும், இழந்தவனே! ஓடு! ஓடு! இன்று நீ புறங் கொடுத்து ஓடி இந்த மானக்கேடான காரியத்தைச் செய்து விட்டாய்! உன்னுடைய துரோஜர்களைக் கைவிட்டு விட்டாய்! உனது துரோகத்துக்குப் பரிகாரமாகக் கணக்கற்ற துரோஜர்கள் இன்று பலியாகப் போகின்றார்கள். அவர்கள் தங்கள் ஆவிகளை இந்தப் போர்க்களத்தில் பறிகொடுக்கப் போகிறார்கள்!'' என்றான்.

இவ்வாறு ஜய கோஷத்துடன் கர்ஜனை செய்து வந்த திடிதீசனை, இந்த யுத்தத்துக்குக் காரணமான ஹெலன் என்னும் கட்டழகியின் ஆசை நாயகனான பாரிஸ் வெகு தூரத்தில் கட்டப் பட்டிருந்த தனது முன்னோனான ஐலஸ்ஸின் பாழடைந்த மண்ட பத்திலிருந்த வண்ணம் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு, இறகுகள் கொண்ட தன்னுடைய அம்புகளை அந்தப் போர்க் களத்தைச் சுற்றிலும் விடுத்து வந்தான். பின்பு அவன், அந்த மண்டபத்தின் ஒரு தூணின் பின்புறமாக மறைந்து கொண்டு, நன்றாக அமர்ந்திருந்து, தனது வில்லை வளைத்துக் கவலையின்றிப் பராமுகமாக விருந்த தனது சத்துருவை நோக்கி ஓர் அம்பை எய்தான்.

அச்சமயம் திடிதீசன், அஸ்திரோப்பஸ்ஸின் மார்க்கவசத் தைக் கழற்றி விட்டு, அவனது மகுடத்தையும் பறித்துப் பிடுங்கிக் கொள்ள வேண்டுமென்று தனது தலையைக் குனிந்து கொண்டிருந் தான். அப்போதுதான், பாரிஸ்ஸும் தனது வில்லைக் குணத் தொனி செய்து, அம்பை விடுத்தான். அந்த அம்பு பயனற்றுப் போகவில்லை. அது, திடிதீசனது காலைத் துளைத்து அதை நிலத் திலும் ஊன்றி விட்டது. அதைக் கண்டு துரோஜன் சந்தோஷித் துக் களித்து ஒரே பாய்ச்சலாய்த் தனது மறைவிடத்திலிருந்து குதித்து எழுந்து வந்து இராஜனான அவனைப் பின் வருமாறு அவ மதித்து உரைத்தான் :—

'' ஆஹா! இவனுங்கூட இரத்தத்தை வடிக்கின்றான், பாருங் கள்! ஏதோ ஒரு தெய்வம், எனது அம்புக்கு அனுக்கிரகத்தைச் செய்து விட்டது! அதனால்தான் அது வேகமாகச் சென்று, இவனுக்கு அந்த ஆபத்தை உண்டாக்கி விட்டது! என்றாலும் அதே தெய்வம் இந்த அம்பைக் கொண்டு இவனது மார்பைத் துளைத்திருந்தால், அது எனக்கு எவ்வளவோ திருப்தியாக இருக் குமே! அப்படிச் செய்திருந்தால் ட்ராய்க்கும் க்ஷேமமுண்டாகு மன்றோ! ஸர்வ நாசங்களையுஞ் செய்து வரும், இந்த நாசகாரனது கைகளுக்குத் தப்பி, அது அப்போது சிறிது பொழுதாயினும் நிதானமாக மூச்சு விடுமே! நாமும் படுகொலைக்குத் தப்பி, நிலை யில் உறுதியாக நின்று கொண்டு, நல்ல முடிவு வரும் வரை இந்த யுத்தத்தையும், செய்து வரலாமே!

இப்போது துரோஜர்களெல்லாம், அம்பைப்போல் கூராக வுள்ள அவனது வேலாயுதத்தைக் கண்டு, அஞ்சுகின்றனரே!

தங்களை நோக்கி ஓடிப் பாய்ந்து வரும் ஒரு சிங்கத்தைக்கண்டு பயந்து, நாற்புறமும் சிதறியோடும் ஆடுகளைப் போலன்றோ அவர்கள் நடுங்குகின்றனர் !'' என்றான்.

அவ்வசனங்களைச் செவியுற்றுக் கேட்டுக் கலங்காதவனும் அஞ்சாநெஞ்சனுமான திடிதீசன், அவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான் :—

" ஆஹா ! வாராய் ! அழகான அபலையைக் கைப்பற்றிப் பிடித்துச் சென்ற அதிவீரா! வாராய்! சுருட்டை மயிருடையவனும் ஸ்திரீயை வென்றவனுமான சுத்த வீரா ! வாராய் ! நீ வீணாக உனது வில்லை வளைத்தாய் ! நெடுந்தூரஞ்சென்று காரிய சாதனஞ் செய்து விடுமென்று நம்பி நீ உனது அம்பையெய்தாய் ! ஆயுதங்களை ஏந்தவோ, அவற்றை உபயோகிக்கவோ நீ கற்றவனல்ல ! ஆண்பிள்ளைகளுக் கழகான காரியங்கள் ஒன்றையேனும் ஒரு நாளும் நீ செய்தறியாய் ! சிறுபிள்ளைகளையோ, பெண் பிள்ளைகளையோ போல் மாத்திரமே நீ விளையாடினாய் ! அவர்களால் ஒரு சுத்த வீரனுக்குச் சிறிது மனஸ்தாபம் உண்டாகுமே யன்றி அவர்களிடம் அவனுக்குச் சிறிதும் கோபமுண்டாகாது ! துரும்புபோன்ற உனது அம்பினால் எனது காலில் ஒரு சிறு கீறல் உண்டாகிவிட்டதைக் கண்டு, பெருமையடித்துக் கொள்ளாதே ! பேடியின் கையிலுள்ள ஓர் ஆயுதமானது இதுவரை எக்காலும் ஒரு சுத்த வீரனுக்கு ஒரு விதமான உபத்திரவமும் செய்ததில்லை !

ஆனால், இதோ பார் ! எனது இந்த அம்பின் வலியை நீ ஒரு நாள் அறியவே அறிவாய்! விதியே அதன் வேகம் என்றும் அது யமனது ஸ்வரூபம் என்றும் அறிவாய்! இதன் ஸ்பரிச மாத்திரத்தில் ஒரு சுத்த வீரன் பட்டு அழிந்து விடுவான்! குழந்தைகள் அனாதைகளாகி விடுகின்றனர். விருத்தர்களான தாய் தந்தையர்கள் கண்ணீர் வடித்துத் தங்களுடைய கன்னங்களைக் கழுவிக் கொள்ளுகின்றனர்! இது பூமியைச் செஞ்சாந்தில் அழுத்தி விட்டு, ஆகாசத்தில் பறக்கும் பக்ஷிகளுக்குக் குறைவில்லாத ஆகாரத்தையும் அளித்து விடுகின்றது ! கடைசியாகக் கட்டழகிகளைத் துயர்க் கடலில் ஆழ்த்தக் கூடிய வஸ்துக்களே மீந்து விடுகின்றன !'' என்றான்.

அச்சமயம் யுலிஸ்ஸீஸ் படபடவெனத் துடிக்கும் மனத்துடன் அவனை நோக்கி விரைந்து சென்று, அவனுக்கு முன் தன்னுடைய கால்களை நன்றாக ஊன்றிக் கொண்டு, குனிந்து நின்று, அவனைத் தைத்திருந்த அம்பை உருவியெடுத்தான். அவ்வமயம், அந்தக் காலிலிருந்து இரத்தமானது வெகுவாக வழிந்து வந்தது. அதன் பின் அவனுக்கு மிகக் கொடிய வேதனையும் உண்டாயிற்று. பின்பு திடிதீசன் தனது வாஹனத்தின் மேல் ஏறிக் கொண்டு தனது கடற்படையை நோக்கி வேகமாகச் சென்றான். அதன் பின் அந்தப் போர்க்களத்தில் யுலிஸ்ஸீஸ் மாத்திரமே மிஞ்சித் தன்னந்தனியனாக ஆகி

விட்டான்! கிரேக்கர்களனைவரும் அக்களத்தை விட்டு ஓட்டம் பிடித்து விட்டனர்.

அதைக் கண்ணுற்ற துரோஜர்கள், அதுவே தகுந்த தருணமென்று நினைத்து, அவனை நோக்கி அலைகளைப்போல் மேன்மேலும் திரண்டு வந்தனர். என்றாலும் அந்த வீரன், சிறிதும் கலங்காமல் தன்னுடைய சக்திகளை யெல்லாம் ஒருங் காகச் சேர்த்துத் தனது மனத்தினுள்ளிழுத்து அடக்கிக் கொண்டு பூரண பிரக்ஞை யுடையவனாய்ப் பின் வருமாறு ஆலோசிக்க லானான். அவன் என்றும் மனந்தளராதவன் என்ற பிரஸித்தி பெற்றவனன்றோ ? :—

" இனிமேல் நாம் செய்ய வேண்டிய தந்திரம் என்ன ? நமக்கு இனியும், ஏதேனும் நன்மை யுண்டாகுமா ? அந்த நன்மை எந்த உபாயங்களினால் உண்டாகும் ? நமக்குப் பிழைக்கும் வழி இன்னும் ஏதேனும் உண்டா ?

இப்பொழுது இந்தப் போர்க் களத்தை விட்டு நான் ஓடி விட்டால், அதிலும் இழிவானதும் அபகீர்த்திக் கிடமானதுமான வேறு காரியம் ஒன்று உளதோ ?

நான் மாத்திரம் ஒருவனாக இந்த யுத்தத்தில் நின்று கொண்டு, சத்துருக்களை யெதிர்த்துப் பொருது வந்தால், எனக்கு என்னென்ன ஆபத்துகள் உண்டாகலாம் ?

இச்சமயம் என் நண்பர்களெல்லாம் பல திக்குகளிலும், சிதறுண்டு போய்விட்டனர் ! என் சத்துருக்களே என்னைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றனர் !

என்றாலும் நான் அதைரியப் படுவானேன் ? மயங்கு வானேன் ? துணிந்தவனுக்குத் துக்கமில்லை ; பேடி தான் பயந்து ஓடுவான் என்பதல்லவோ பழமொழி ! அது உண்மையுமன்றோ! நான் எடுத்த காரியத்தை முடிப்பதற்கு எனக்கு இந்த வாக்கியமே உத்தமமான மந்திரமாகும் ! ஒரு வீரனதுமனவுறுதி, அவன் ரண களத்தில் மரணமடைவதினாலோ அல்லது வெற்றியுடன் விளங்கு வதினாலோ தானே தெளிவாக வேண்டும் ! இவ்வளவெல்லாம் யோசனைகள் செய்து, ஆராய்ந்து அறிந்த பின் எனக்கு ஒரு வீரனது கடமை இன்னது தான் என்பது தெற்றென விளங்கி விட்டது ! அதில் இனிச் சந்தேகமில்லை ! "

இவ்வாறு அவன் தனது மனத்தில் திரும்பத் திரும்பப் பன்முறையும் ஆழ்ந்து, ஆராய்ந்து ஆலோசனைகளைச் செய்து கொண்டிருக்கையில், சத்துரு சேனைகள் அவனுக்குச் சமீபமாக அடுத்தடுத்துக் கொஞ்சங் கொஞ்சமாக நெருங்கி வந்து, அவனைச் சூழ்ந்து கொண்டன. அந்தச் சேனைகளெல்லாம் தங்களுக்குக் காலனைப் போல் வந்த வீரனையே சூழ்ந்து மொய்த்துக்கொண்

டன. அவனும் இங்கு வருவோர் அனைவரும் வரட்டும் என்றே சற்றுப் பொறுத்திருந்தான். அப்போது ஆயுதபாணிகளான கணக்கற்ற வீரர்கள் வெகு விசாலமாக விருந்த அந்தக் களத்தில் அவனை நெருங்கிச் சூழ்ந்து கொண்டனர். அந்தக் கூட்டமானது இரும்பினால் கட்டப்பட்ட வட்டவடிவமான ஒரு பெரிய கோட்டை போலவே தோன்றியது!

ஆரவாரஞ்செய்து கொண்டு உரத்துக் கூவும் வேடர்களும், ஆர்ப்பரிக்கும் வேட்டை நாய்களும் ஒன்ருகக் கூடிச் சூழ்ந்து கொண்ட ஒரு காட்டுப் பன்றியானது எவ்வாறு தனது வக்கிர தந்தத்தை அரைத்துத் தேய்த்துக் கொண்டும், கொடுங் கோபத்துடன் நுரையைக் கக்கிக் கொண்டும், செக்கச் சிவந்த தன் கண்விழிகளில் இருந்து தக தக வெனக் கொதிக்கும் தணலைப் போன்ற ஒளியைப் பொழிந்து கொண்டும், தன்னுடைய கூரான கொம்புகளாலும், கோபக் குறிப்பினுலும் நாற்புறமுள்ள வேடர்களையும் நாய்களையும் சங்கரித்து ஒரு பிரதேசம் முழுவதையும் இரத்தத்தை வடித்து, அதை ஒரு செங்களமாக ஆக்கி விடுகின்றதோ, அவ்வாறு யுலிஸ்ஸீஸ் தன்னைச் சூழ்ந்து கொண்ட துரோஜர்களைத் தனது மனம் போனபடி வேட்டையாடி வந்தான்!

அவ்வாறு யுலிஸ்ஸீஸ் வீர வேட்டையாடி வந்த பொழுது, முதன் முதலாக, திலோப்பஸ் என்பவன், தனது தோளில் துளைக்கப்பட்டுத் திடீரெனத் தரையின் மேல் விழுந்தான். அடுத்த படியாக என்னேமஸ் என்பவனும் கோலுஸ் என்பவனும் எரிவாய் நிரயத்துள் அழுந்திப் போயினர். செந்நிதாமஸ் என்பவன், தனது நாடியின் அடிப் பாகத்தில் குத்துண்டு தரையின் மேல் குப்புற விழுந்து, இரத்தக்கறை படிந்திருந்த புழுதியைக் கவ்வினுன்.

அச்சமயம் ஹிப்பாஸஸ்ஸின் மகனுன சாரோப்ஸ் என்பவனும் தனக்குச் சமீபத்திலிருக்கக் கண்டு, யுலிஸ்ஸீஸ் அவனையும் கொல்ல நினைத்துக் காலதண்டம் போன்ற தனது ஈட்டியும் கையுமாக அவனை நோக்கி ஓடி அவனையும் யமனுலகிற்கு ஓட்டினுன். அப்போது அந்தச் சாரோப்ஸின் உடன் பிறந்தானும் மஹாதைரியசாலியும், பெருந்தன்மையும் தாராள சிந்தையும் உடையவனும், புத்திமானுமான லோக்கஸ் என்பவன் தனது உடன் பிறந்தானைக் காப்பாற்ற வேண்டுமென்று தானிருந்த இடத்தை விட்டுப் பெயர்ந்து, பறந்து ஓடி வந்து யுலிஸ்ஸீஸ்ஸைச் சமீபித்து, அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களையுரைத்தான் :—

"மஹாவீர! யுலிஸ்ஸிஸே! நீ பொறுமையையே பூஷணமாகக் கொண்டவனுயிற்றே! சிரமத்தைப் பாராட்டாமல், பல கருமங்களைச் செய்திருக்கின்ருய்! பல துறைகளிலும் உழைத்து உனது சரீரத்தைச் சாருக வடித்திருக்கின்ருய்!

இந்த யுத்தத்திலும் உன்னுலானதைச் செய்யலாம், என்று முன் வந்திருக்கின்ருய்! ஆனுல் உனக்கு யுத்த சம்பந்தமான ரஹஸ்யங்கள் சாங்கோபங்கமாகத் தெரியாது! அந்த வித்தையை நீ நன்ருகக் கற்றவனல்ல! இன்றைக்கு ஒன்று, நீ இரு சகோதரர்களான எங்களை ஜெயித்து ஹிப்பாஸியன் வம்ஸத்தையே ஒரே யடியாய் அழித்துக் கீர்த்தியுடன் விளங்க வேண்டும், இன்றேல் இந்த எனது வேலுக்கு ஆளாகித் தலை குனிந்து நீ மண்ணில் மறைந்து போக வேண்டும்! இந்த இரண்டில் ஒன்று இன்று ஆக வேண்டும்!"

இவ்வாறு லோக்கஸ் சொல்லிக் கொண்டு, அவன் தனது வேலாயுதத்தால், யுலிஸ்ஸீஸ் தரித்திருந்த விசாலமான கேடயத்தைத் தனது முழுபலத்துடன் தாக்கி இடித்தான். அவ்வாறு அவன் பிரயோகித்த வேலாயுதமானது கணகண வென்று சப்தித்துக் கொண்டு சென்று, யுலிஸ்ஸீஸ் தரித்துக் கொண்டிருந்த கெட்டிப் பித்தளையினுலான கவசத்தைத் துளைத்து அவனது அள்ளையில் அரைவாசித்தூரம் உட்புகுந்து, அவனது அஸ்தியிலும் பாய்ந்து விட்டது! அப்பொழுது அவனது அஸ்தியின் மேலிருந்த தசை மாமிசங்கள் விலகிப்போயின. அஸ்தியும் பளிச்சென வெளிப்பட்டது! ஆனுல் பாலாஸ் தேவியின் கிருபையினுல், அந்த வேலாயுதமானது முன் செல்லாமல் தடுக்கப்பட்டு விட்டதால் அது அவனது உயிரை வாங்க வில்லை! அது வெகு ஆழமாகவே அவனது உடலில் ஊன்றி விட்டது, எனினும் அவனது குடலில் பிரவேசிக்க வில்லை!

இவ்வாறு தனக்குண்டான காயத்தினுல் தனக்குப் பிராண ஹானி உண்டாகி விடவில்லை யென்றறிந்து, யுலிஸ்ஸீஸ் தன்னுடைய கால்களைப் பின் வைத்துப் பின்னடைந்து, சிறிது தூரம் சென்று அவனை நோக்கி மிகுந்த கோபத்துடன் பின் வரும் வசனங்களை யுரைத்தான்:—

"அடபாவி! பாக்கியமில்லாத மானிடப்பாதரே! உனது மரணத்தினுல் எங்கள் கரங்கள் பெருமையை யடைய விருக்கின்றன! உனது தலைவிதியானது, உன்னைத் தொடர்ந்து கொண்டு வருகின்றது! இங்குப் புறப்பட்டுத், தன் பின்னுக வரும்படி அது உன்னைக் கூவியழைக்கின்றது! உங்களது வம்சம் அற்றுப் போக விருக்கின்றது! நான் செய்ய உத்தேசித்திருக்கும் சத்துருஸம்ஹாரம் சிறிதும் தடைபடப் போகின்றது இல்லை! இதோ, இந்த ஆயுதத்தினுல் குத்துண்டு, நீ அழியாத இருளில் புகுவாய்! பாதாள உலகத்திலுள்ள பிசாசுகளுடன் நீயும் போய்ச் சேருவாய்!" என்று சொல்லிக் கொண்டு அவன் தனது அம்பை யெடுத்தான்.

அதைக் கண்ணுற்ற ஸோக்கஸ், திடுக்கிட்டு நடுக்குற்றுப் பயந்து, மனநிலை தவறி, ஓடிப் பிழைக்கலாம் என்று நினைத்துப் புறங்காட்டித் திரும்பினுன், அக்கணமே யுலிஸ்

ஸீஸின் அம்பும் அவனைத் தொடர்ந்து சென்று, அவனுடைய இருபுஜங்களுக்கும் இடையில் பாய்ந்து அவனுடைய நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளியேறி விட்டது! அதனால் அவனது மார்பில் அதி பயங்கரமான ஒரு பெரிய காயம் உண்டாகி விட்டது. அவன் அடியற்ற பனைபோல் திடீரெனக் கீழே விழுந்து விட்டான். அப்போது அவன் அணிந்திருந்த ஆயுதங் களும் கவசமும், கல கல வென்று சப்தித்துக் கொண்டு தரையின் மேல் விழுந்தன.

அதன் பின் அவ்வாறு உயிர்நீத்த, அந்த ஸோக்கஸ்ஸை நோக்கி, யுலிஸ்ஸீஸ், "ஹிப்பாஸஸ்ஸின் பிரஸித்தி பெற்ற புத்திரா! நீ அங்கேயே கிட! பூமிக்குச் சுமையாக அங்கேயே கிட! உனது அல்ப ஆயுள் இன்று விதிவசமாக முடிந்து விட்டது! யுலிஸ்ஸீஸுக்குக் காலம் இன்னும் வரவில்லை! அது வெகு நாட் கழிந்த பின்னரே வரவேண்டும் என்பது தெய்வ ஸங்கற்பம்.

ஆஹா பேதாய்! உனது பிரேதத்தை அடக்கஞ் செய்ய உனது தகப்பன் இங்கு இல்லை; உன் கண்களை மூடுவதற்காக உனது உற்ற தாயும் இங்கு இல்லை! பசியுடன் துடிக்கும் பறவை களே பந்து போன்ற அந்தக் கண்விழிகளைப் பறித்துத் தோண்டி எடுக்கப் போகின்றன! உனது உடலைப் புசிக்க வேண்டுமென்று கீச்சுக் கீச்சென்று உரத்துக் கூவிக்கொண்டு இதோ, கழுகுகள் உயரத்தில் வட்டமிட்டுப் பறக்கின்றன!

எனக்கு அந்திய காலம் வருகையில் கிரீஸ் தேசமே என்னைப் புகழ்ந்து பாராட்டும்; கிரேக்கர்கள் எனக்கு விதிப்படி விசேஷமான உத்தரகிரியைகள் செய்வார்கள், என்றும் அழி வில்லாத சமாதியையும் கட்டுவார்கள்!" என்றான்.

அதன்பின் அவன், தனது சத்துருவின் ஆயுதத்தினால் தனக்கு உண்டாயிருந்த வேதனையைப் பொறுக்கமாட்டாமல், தனது உடலை முறுக்கி வளைத்துக் குனிந்து கொண்டு, அந்த ஆயுதத்தை உருவி யெடுத்தான். அப்போது, அதன் வழியாக அலை போன்ற ஒரு பெருத்த இரத்த வெள்ளம் பெருகி வந்தது. அதைக் கண்ணுற்ற அவனுடைய சத்துருக்களான துரோஜர்கள் மிகவும் மகிழ்ச்சி யடைந்தனர். அத்துடன் நில்லாமல் அவர்கள் அவன் களைத்துக் கிடந்ததையும் கண்ணுற்று அணி அணியாக வந்து அவனைச் சூழ்ந்து கொண்டனர்.

அப்போது அவன், தனக்குத் தப்பிப் பிழைக்க ஒரு வழியேனும் காணாதது கண்டு, தனது உதவிக்கு வருமாறு தன் னுடைய நண்பர்களை உரத்துக் கூவிக்கொண்டே பின்னடைந்து சென்றான். தனது சக்தியனைத்தையும் ஒன்றாய்த் திரட்டிக் கொண்டு மிகவும் உரத்த குரலில் மூன்று முறை அவன் தன் னுடைய நண்பர்களைக் கூவினான். அவனது குரலை நன்றாக அறிந்தவனான மனேல்லாஸன் அம்மூன்று குரல்களும் தனக்குச்

செவிப் புலஞனதையறிந்து, தனது நண்பனுக்கு ஏதோ ஆபத்து வந்துவிட்டது என்று மனங்கலங்கி, இந்த யுத்த காரியங்களைத் தன்னுடன் சேர்ந்து, கவனித்து, நடத்தி வந்தவனும் தன் அருகிலிருந்த வண்ணம் தன்னைக் காத்து வந்தவனுமான, அஜாக்ஷதிலமானைக் கூவியழைத்து,

“நண்ப, நமது யுலிஸ்ஸீஸ் கூவியழைக்கும் சப்தம் எனக்குக் கேட்கின்றது! அவனுக்கு ஏதோ ஆபத்து வந்துவிட்டது போல் தோன்றுகிறது. அவனது அருகில் துணைவர் ஒருவரும் இல்லையென்றும் தோன்றுகின்றது! அவன் மஹா பலவான்தான்! என்றாலும் திரளான ஜனங்களுக்கிடையில் ஒருவன் தனியாக அகப்பட்டுக் கொண்டு அவர்களால் நெருக்கப்பட்டால், அவன் எவ்வளவோ கெட்டிக்காரனுகை விருந்தாலும் அவர்களுக்குத் தாழ வேண்டியது தானே! யுலிஸ்ஸீஸின் ஸஹாயம் மாத்திரம் நமக்கு இல்லாமற் போனுல் நாமெல்லோரும் ஏக்கம் பிடித்தே போகவேண்டும்! அந்தக் கஷ்டத்திற்கு நமக்கு எக்காலும் ஈடு கிடையாமலே போய்விடும்” என்றான்.

பின்பு, அவன் மஹானும், தனது மெய்க் காவலனும், யுத்தக் கடவுளை நிகர்த்தவனுமான அஜாக்ஷனுடன் அந்தக் கூக்குரல் வந்த திசையை நோக்கிச் சென்று, புத்திமானும் மஹா வீரனுமான யுலிஸ்ஸீஸ் வெகுவாக வருந்திக் கொண்டிருந்ததைக் கண்ணுற்றான். அவனைச் சுற்றிலும் கடுத்த முகத்துடன் விளங்கிய துரோஜர்கள் திரளாகக் கூடி நின்று கொண்டிருந்தனர்.

இருள் சூழ்ந்த ஒரு காட்டில் சஞ்சரித்து வரும் கம்பீரமான தோற்றமுடைய ஒரு மானை ஒரு வேடன் காற்றைப் போல் பறந்து செல்லும் தனது வேலாயுதத்தைக் கொண்டுக் காயப்படுத்தி விட்டால், அந்த மான் தனக்கு ஜீவாதாரமான பிராணனனது, துடித்துக்கொண்டு, தனது உடலைவிட்டு, வெளியேறி ஓட்டம் பிடிக்கும் வரை, தனது அள்ளையிலிருந்து, சுத்தமான புதிய இரத்தத்தைப் பொழிந்து கொண்டு, ஒரே பாய்ச்சலில் கிளம்பி எழுந்து உயரப் பாய்ந்து, மலைக்குன்றுகளை வெகுவாகத் தாண்டிக் கடைசியாகக் களைத்துப் போய் ஓர் இடத்தில் விழுந்து விடுகின்றது. அப்போது அக்காடுகளிலுள்ள மலை ஓநாய்கள், களைப்புற்றுச் செயலற்றுக் கிடக்கும், அந்த மிருகத்தைச் சுற்றி வளைத்துக்கொண்டு அதன் அவயங்களைத் தின்று, தங்களது பசியைத் தீர்த்துக் கொள்ள நினைத்துத் தங்கள் தாடைகளால் அதைக் கடிக்க எத்தனிக்கின்றன! அதே சமயத்தில் ஒரு சிங்கமானது அந்தக் காட்டில் வருவதைக் கண்ணுற்றதும் அந்த ஓநாய்கள் பசியினுல் துடித்துக் கொண்டே யிருந்தாலும், மறுகணம் அங்கு நில்லாமல் ஓட்டம் பிடித்து விடுகின்றன! அவற்றின் கூட்டம் கலைந்து போகின்றது. அவற்றின் கொட்டமும் அடங்கி விடுகின்றது. அவை ஒன்றைவிட்டொன்று பிரிந்து நாற்புறமும் பாய்ந்து போய் விடுகின்றன! அதன்பின் அதிகம்பீரமான காட்டரசன் தனது இரையைக் காப்பாற்றிக் கொண்டு விடுகின்றது!

அவ்வாறே யுலிஸ்ஸீஸ் தனக்குண்டான வேதனைகளினுல் மனந்தளராமல் தன்னந் தனியாகவே தன்னை யெதிர்த்து வந்த சேனையில் பாதிக்கு ஈடு கொடுத்து வந்தான்.

அஜாக்ஷனும், அதிரிதேசனும் விரைந்து வந்து அவனைச் சேர்ந்தவுடன், அஜாக்ஷன் கோபுரத்தைப் போன்ற பிரம்மாண்டமான தனது கேடயத்தைச் சுழற்றினுன். அக்கணமே யுலிஸ்ஸீஸை வளைந்து கொண்டிருந்த சத்துரு சேனைகளனைத்தும் நிலை குலைந்து கலைந்து பிரிந்து பயந்து, வெருண்டு நாற்புறமும் ஓட்டம் பிடித்து விட்டது! அதன்பின் அதிரிதேசன், களைப்பினுல் தளர்ந்து கிடந்த யுலிஸ்ஸீஸைத் தனது கையால் தாங்கி யெடுத்துக்கொண்டு, சத்துருக்களிடமிருந்து விடுவித்து, அவனது இரதத்திற்குக் கொண்டு சென்ருன். அதன்பின் ஜயசீலனுன அஜாக்ஷன் தன்னைக் கண்டு பயந்து ஓடின சேனைகளை வெகு துரிதமாகத் துரத்திக் கொண்டு முன்சென்று, முதன் முதலாக பிரியம் மஹாராஜனுடைய புத்திரனுன டோரிக்ளஸ் என்பவனை வதைத்தான். பின்பு அவன், அதிபலசாலியான பண்டோக்லிஸ்ஸைத் தாக்கி அவனையும் காயப்படுத்தினுன். அவ்வாறே அவன் லைஸாண்டரையும் இரத்தம் வடிக்கச் செய்து, அவனையும் தரையில் வீழ்த்தி விட்டான்.

பின்னும் பயங்கர ரூபியான அந்த அஜாக்ஷன், தனது கைவசமான அந்தச் சேனுசமுத்திரத்தைக் கலக்கி வந்த பொழுது, யுத்தவீரர்களும் அவர்களுடைய குதிரைகளும், இரதங்களும் பெரிய மலைகளைப் போல் உருண்டு திரண்டு புரண்டு முன் சென்றன.

அது எப்படி யிருந்ததென்ருல் சொல்லுவேன் கேளுங்கள். குளிர்காலத்தில் பெய்யும் மழையினுல் பிரம்மாண்டமாகப் பெருகி விட்ட ஒரு நீரோடையானது, எவ்வாறு மலையுச்சியிலிருந்து புறப்பட்டு, அம்மலையின் அடிவாரத்திலுள்ள நிலங்களின் மேல் பாய்ந்து வந்து, அங்குள்ள தேவதாரு மரங்களையும் கருங்காலி மரங்களையும் வேரோடு பெயர்த்துத் திரட்டி யெடுத்துக்கொண்டு தடதடவென்று சமுத்திரத்தை நோக்கி ஓடிச் செல்லுமோ அவ்வாறே விருந்தது!

இது இவ்வாறிருக்க, இந்தக் கோர சம்பவங்கள் நடந்து வந்த களங்களுக்கு வெகு தூரத்திலிருந்த ஹெக்டர் என்ன செய்து கொண்டிருந்தான் என்பதையும் கவனிப்போம்.

அவன் கோபதாபங்களுடன் துடித்துக் கொண்டு, இந்த யுத்தகளத்தின் இடது பாகத்தில் இருந்த வண்ணம், அலைகள் போல் திரண்டு வந்த சகலமான யுத்த காரியங்களையும் நடத்தி வந்தான். அப்போது அவனுல் வெட்டுண்டு மடிந்த வீரர்கள், ஓலமிட்டு அழுது புலம்பிக் கொண்டே பரலோகஞ் சென்றனர். அவர்கள் போட்ட பேரரவத்தினுலேயே, அவன், அந்தக் களத்தில் ஒரு கோடி முதல் மறுகோடி வரை வெற்றியுடன் சுற்றி வந்

தான் என்பது பறையறைந்ததுபோல் பிரசித்தமாக விளங்கி விட்டது.

அப்பொழுது, ஆழமான சியமந்திர நதியில், வீரர்களுடைய சவங்கள் மலைபோல் குவிந்து விட்டன. அந்த நதியின் அருகில் இருந்த வண்ணம், நெஸ்டாரும், இதோமினியஸ்ஸும் அந்த வீரனை எதிர்த்துக் கொண்டு, அவனது வேகத்தைத் தணித்து வந் தார்கள். அங்கு யுத்தமும் வெகு மும்முரமாக நடந்து வந்தது. ஹெக்டர் பாதசாரியாகவும் உயர்ந்த தேரின் மேல் இருந்த வண்ணமும், தன்னுடைய சத்துருக்களின் கக்ஷியில் ரூபலாவண் ணியங்களுடன் விளங்கிய வீரர்களைத் தனது கத்தியினால் குத்தியும் வெட்டியும் குரூரர்களாக ஆக்கிக்கொண்டு வந்தான்.

அப்பொழுது, ஹெலனின் ஆசை நாயகனும் தன்னைச் சுற்றி லும் நாற்புறமும் அம்புகளை யெய்து கொண்டே யிருந்தான். அவ் வாறு அவன் விடுத்த அம்புகளில் ஒன்று, வெகு தூரத்திலிருந்த மக்கேயனைத் தாக்கித் துளைத்து, அவனுக்கு ஒரு பெருத்த காயத் தையுண்டாக்கி விட்டது! அந்த அம்பின் அகலமான பிடியும் கிரேக்கர்களது வைத்தியனாகிய அவனது வலதுபுஜத்தில் ஊன்றிக் கொண்டு தெற்றென விளங்கியது! அவனுக்கு இந்த ஆபத்து நேர்ந்து விட்டபொழுது, கிரேக்கர்கள் அனைவருமே, திடுக்கிட்டுப் பயந்து துயரக் கடலில் ஆழ்ந்துவிட்டனர்.

அச்சமயம் இதோமினியஸ், நெஸ்டாரை நோக்கி, "கிரீஸின் பெருமைக்குக் காரணரே! விருத்தரான நிலியஸ்ஸின் வலிய புத்திரரே! நீர் இப்போது உமது இரதத்தில் ஏறும்! விரை வில் இங்கிருந்து ஒரே ஓட்டமாய் ஓடிச்செல்லும்! மஹானுன மக்கேயனையும் உமது கப்பலுக்குக் கொண்டு செல்லும்! நம் சகல மான இரணங்களையும் குணப்படுத்தக் கூடியவனும் அதிவிவேகியு மான ஒரு வைத்தியன், நம் ஜன சமூகத்தைக் காப்பாற்றிவரும் சைந்நியத்தைவிட மிக மேலாக மதிக்கப்பட வேண்டுமன்றோ!" என்றான்.

அவ்வசனங்களைக் கேட்ட விருத்தரான நெஸ்டார், அக் கணமே தமது இரதத்தில் ஏறிக்கொண்டார். ஆஸனத்திலும் அமர்ந்து கொண்டார். அவருக்குச் சமீபமாக, வைத்தீசுவரக் கடவுளது புத்திரனும் காயமடைந்தவனுமான மக்கேயனும் ஏறி உட்கார்ந்து கொண்டு அவருடன் சவாரி செய்தான். நெஸ்டார் கடிவாளக் கயிறுகளைத் தளர்த்தினார். அந்தக் குதிரைகளும், வெட்டெனக் களம் அதிரும்படி, இடியைப் போல் தங்களுடைய கால்களால் இடித்துக்கொண்டும், தடதடவெனப் பெருத்த ஓசை யைச் செய்து கொண்டும், கிரேக்கர்களுடைய கப்பல்களை நோக்கிச் சென்றன.

அச்சமயம் ஹெக்டரது இரதத்தில் அமர்ந்திருந்தவனும், அங்கிருந்த வண்ணம் இந்த யுத்தத்தில் உண்டான லாப நஷ்டங்

களைக் கவனித்துக் கொண்டு வந்தவனுமான ஸிம்பிரியோஸிஸ் என்பவன் பின் வருமாறு பிரலாபித்தான் :—

“ இங்குள்ள கிரேக்கர்கள் காற்றிலும் வேகமாகப் பறந்து செல்லுகையில் தான் வெட்டுண்டு மடிந்து போகின்றனர் என்றால், அதோ அங்கு இந்தக் களத்தில் கூட்டங் கூட்டமாகக் கூடியிருக்கும் துரோஜர்களும் அடியோடு மடிந்து மலைபோல் குவிந்து வருகின்றனர் ! அவர்களது பாரத்தைத் தாங்க முடியாமல், வீரர்களும் இரதங்களும் ஒன்றாய்க் கலந்து கூட்டங் கூட்டமாகக் கும்பலாக ஓட்டம் பிடிக்கின்றனர் !!

எனக்கு அந்த அஜாக்ஷன் நன்றாகத் தெரியுமே ! அதோ அவன் அகன்ற ஏழு அடுக்குக்களுள்ள கவசத்துடன் இந்த யுத்த களத்தில் மற்றெல்லா வீரர்களுக்கும், மேலாக உயர்ந்து பளபளவென மின்னுகின்றானே !

ஆதலால் ஹெக்டர் ! நீ அங்கு ஓடு ! உன்னுடைய குதிரைகளை அவன் இருக்கும் இடத்தை நோக்கி ஓட்டு ! அங்குத்தான் அதிகமான ஆபத்து இருக்கின்றது ! அதைத்தான் நீ இந்த க்ஷணம் நீக்க வேண்டும் ; அங்கு நடக்கும் சண்டையில்தான் மரணாவஸ்தையில் அவர்கள் இடும் அரவமும், மீந்த புத்திரர்கள் இடும் கூக்குரலும் ஒன்றாய்க் கலந்து வருகின்றன” என்றான்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே சிறிதும் தாமதியாமல், அந்தச் சாரதி தனது சாட்டையைச் சுழற்ற, அந்த இரதமானது துரிதமாகத் துள்ளியெழுந்து, சைன்னியங்கள் அணிவகுத்து நின்ற அணிகளின் இடையே சென்றது. சாரதியின் அடியினால் ரோஷங் கொண்ட அந்தத் தேர்க் குதிரைகள் அந்தக் களத்தையே ஒரு கலக்காகக் கலக்கிக் கொண்டு, மலைபோல் குவிந்து கிடந்த வீரர்களுடைய பிணங்களையும் கவசங்களையும் அரைத்துக் கொண்டு, தடதடவென முன் சென்றது.

அவ்வாறு சென்ற அக்குதிரைகளெல்லாம் பட்டு விழுந்த வீரர்களை மிதித்துக் கொண்டு சென்றதினால் அவைகளின் குளம்புகள், அவ்வீரர்களது இரத்தத்தில் அழுந்தித் தோய்ந்து இரத்தக் கறையுடன் விளங்கின ; அவை அதிவேகமாகப் பறந்து சென்றமையால், அக்குளம்புகளிலிருந்து தெறித்து வந்த இரத்தமானது அந்தத் தேரின் முன் பாகத்தில் படிந்து, அதற்குக் கெட்டியான ஒரு செஞ்சாந்தையும் பூசிவிட்டது. அந்தக் குதிரைகள் ஓடிய ஓட்டத்தின் வேகத்தினால் அந்த இரதத்தின் இருசும் தளர்ந்து கீச்சுக் கீச் சென்று கத்தத் தொடங்கியது. அதன் மேலும் இரத்தத் துளிகள் தெறித்தன ! கண்டந்துண்டமாக வெட்டுண்டு, சிதறிக் கிடந்த வீரர்களின் அவயவங்களின் மேல் ஓடிச் சென்ற பொழுது, அந்தத் தேரின் வேகமும் சிறிது குறையுற்றது; அதன் சக்கரங்களும் வேகமாக முன் செல்ல முடியாமல் தடைப்பட்டன.

இவ்வாறு அந்தக் களத்தில் ஓர் இடத்திற்கு வந்து சேர்ந்த பின்னர் ஹெக்டர், அதிமும்முரமாக யுத்தம் நடந்து வந்த ஓர் அரங்கத்தில் தீவிரமாகப் புகுந்து சற்றும் இடையின்றி நெருங்கி, இருண்டிருந்த அந்த வியூகத்தைப் பிளந்து, அங்குச் சிறிது வெளிச் சத்தைச் செலுத்தினான்! தன் கைகளுக்கு அகப்பட்ட பிரம் மாண்டமான பாருங்கற்களையும் பிரயோகித்து, அவன் அந்தச் சத்துரு சைனியத்தின் அணியைப் பிளந்து, அங்குச் சேர்ந்திருந்த சைனிகர்களை அடித்துக் குத்தி, யிடித்து அவர்களை நாற்புறமும் ஓட்டம் பிடிக்கும்படிச் செய்துவிட்டான். அவர்களை நிர்மூலமாக்கி விட்டான்!

இவ்வாறு பிரசண்டமாருதம் போல், தனது குரூரமான சக்தியைக் காட்டி வந்த ஹெக்டர், அஜாக்ஷை மாத்திரம் எதிர்த் துச் செல்லவில்லை. அவனை நெருங்கவும் அஞ்சினான்! அவனு டைய விசேஷமான புஜபல பராக்கிரமங்களை, அவன் சிறிது முன்புதான் பிரத்தியக்ஷமாகக் கண்டு கொண்டிருந்தான். அவற் றைத் திரும்பவும் கண்கொண்டு பார்க்க வேண்டுமென்ற ஆவல் அவனுக்கு உண்டாகவில்லை!

என்றாலும் பக்ஷபாதியான ஜோவ் தேவர் ஹெக்டருக்கே பரிந்து முன் வந்து, அவனது விரோதியாகிய கிரேக்க வீரனது மனத்தில் மயக்கத்தை யுண்டாக்கி, அவனுக்கு ஒரு பெரும் பீதி யையும் உண்டாக்கி விட்டார்!

அவன், ஹெக்டரைக் கண்டு ஆச்சரியப்பட்டு, மனக்குழப் பங்கொண்டு வலியிழந்து, தான் நின்ற விடத்திலேயே, செயலற்று நின்று விட்டான். அவனையறியாமலே அவனுக்கு ஒரு பெருத்த பயம் உண்டாகி விட்டது! அவனது கவசமும் அவனுடைய கண் களுக்கு மங்கியதுபோல் தோன்றியது! அதை அவன் தன் முதுகின் மேல் எடுத்துப் போட்டுக்கொண்டு, தன்னைச் சுற்றிலும் நாற் புறமும் விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டு, மெல்ல மெல்லப் பின்னடைந்து விட்டான்!

இராக்காலத்தில் தான் படுத்துறங்கி வந்த குகைகளிலிருந்து தன்னை வெளியேற்றித் தன்னைச் சூழ்ந்துகொண்டு தன்னையே கண் கொட்டாமல் கவனித்து வரும், கூட்டம் கூட்டமான வேட்டை நாய்களுக்கும் வேடர்களுக்கும் பிடிபடாமல் தப்பிவிட வேண்டும் என்று தவிக்கும் ஒரு பயங்கரரூபியான சிங்கமும் இவ்வாறு தான் தன்னை ரக்ஷித்துக் கொள்ளுகின்றது. அது, கோபமும் ஆத்திரமும், பசியுங்கொண்டு துடித்தே வந்தாலும், அதைச் சற்றும் பொருட்படுத்தாமல் தனது இடத்தைவிட்டு அசை வதில்லை; தன் மேல் ஒரு கனத்த மழைபோல் பொழிந்து வரும் அம்புகளையும், சரங்களையும் சிறிதும் சட்டை செய்வதில்லை, வெகு நேரம் வரை அது அவற்றை ஏற்றே வருகின்றது! கடைசியாக அது மிகவும் மெதுவாகவும், சலிப்புடனும், கடுத்த முகத்துடனும் அந்த இடத்தை விட்டு அகன்று விடுகின்றது.

அவ்வாறே கணக்கற்ற சேனைகளால் தடுக்கப்பட்டவனும், அதிபயங்கரரூபியுமான அஜாக்ஷன் அந்தக் களத்தை விட்டுத் திரும்பினான். அவ்வாறு அடிமேல் அடிவைத்துக் கொண்டு திரும்புகையில், இவ்வாறு காலால் நடந்து திரும்பிச் செல்வது இழிவாயிற்றே என்ற எண்ணம் அவனது மனத்தில் பொங்கிக் கொதித்துக்கொண்டிருந்தது. அடிதவறாமல் அந்த எண்ணம், அவனது மனத்தைச் சுட்டு வந்தது.

மந்தகதியும் விசேஷ பலமுமுள்ள ஒரு யானையானது ஒரு விசாலமான வயலில் பிரவேசித்து மேய்ந்து கொண்டிருக்கையில், கூட்டம் கூட்டமாகத் திரண்டுவரும் சிறுவர்கள் அதைத் துரத்திக் கொண்டு சென்று மரக்கிளைகளை முறித்து அதன் இரு புறங்களிலும் அவற்றைச் சரமாரிபோல் பொழிகையில், அந்த மிருகமானது, அச்சிறுவர்களையாவது, அவர்கள் எறிந்துவரும் கொம்பு களையாவது கிளைகளையாவது சிறிதும் கவனிப்பதில்லை. அது அந்த வயலில் உயர்ந்து வளர்ந்துள்ள பயிர்களை நன்றாகக் கடித்துத் தின்றுவிட்டு, அந்த வயல் முழுவதையுமே பாழாக்கி விடுகின்றது. அதன் தோலின் மேல், தொண்ணூறு அடிகள் விழுந்தாலும், அவற்றால் அதற்கு ஒருவிதமான துன்பமும் உண்டா வதில்லை; அந்த அடிகளுக்குப் பலனாக எதிரொலிகளே உண்டா கின்றன. அந்தப் பொறுமையுள்ள மிருகம் அச்சிறுவர்களின் சேஷ்டைகள் ஒன்றையேனும் ஒரு பொருட்டாகக் கருதுவதுமில்லை. அந்த வயலைவிட்டு அகல்வதுமில்லை. தனது வயிறு நிறையும் வரை, நன்றாகப் பயிர்களை மேய்ந்துவிட்டுப் பிறகு, தனக்கு இஷ்டம் வந்த பொழுது மாத்திரமே, அது வெகு நிதானமாக அந்த வயலைவிட்டு அகல்கின்றது!

அவ்வாறே, அஜாக்ஷனைத் திரளான துரோஜர்கள் தாக்கிக்கொண்டு நெருங்கி வந்தும், அவன் அவர்களுடைய மிகக் கொடுமையான சேஷ்டைகளை வெகு பொறுமையுடனேயே ஸஹித்துக்கொண்டு வந்தான். அவர்கள் அவனது கவசத்தின் மேல் அடித்த அடிகளினால் கணீர் கணீர் என்ற சப்தம் மாத்திரம் உண்டாயிற்றேயன்றி, வேறு பயன் விளையவில்லை. அவன் தனது பெரும் வலியிலேயே, திடமான நம்பிக்கையுடையவனாய்த் தனது இடத்தை விட்டு அசையாமல் நின்று கொண்டு, இப்புறமும் அப்புறமும் திரும்புவான், அப்போது அவனுக்குக் கட் புலனான வீரர்களும் ஸைனிகர்களும் அவனைக் கண்டு பயந்து நடுங்கிப் பின்னடைந்து ஓட்டம் பிடிப்பார்கள். ஒரு கணம் அவன், வெகு துரிதமாகப் பின்னடைந்து செல்வான். ஆனால் அவனது வேக மான கதிமாத்திரம் ஒருவருக்கும் கட்புலனாகாது. மறு கணம், அவன், தனது கண்ணின் கருவிழிகளை உருட்டிக் கொண்டு, அவர்களை உற்றுப் பார்ப்பான். அதைக் கண்ணுற்றபொழுது அவனைத் தொடர்ந்து சென்றவர்கள், மனங்கலங்கித் திகில் அடைந்து பின்னடைந்து ஓட்டம் பிடிப்பார்கள்!

இவ்வாறு இந்த யுத்தத்தில் அணிவகுத்துள்ள இருதிறத்துச் சேனைகளுக்கும் மத்தியில் இடப்பட்ட ஒரு பெரிய அணையைப்

போலவே அந்த அஜாக்ஷன், அசையாமல் நின்று கொண்டிருக்கையில், அவனை நோக்கி அவனுடைய சத்துருக்கள் எய்த இரும்பாலான அம்புகள் ஸர்ப்பங்களைப் போல், சீறிக்கொண்டு வந்து, அவன் மேல் ஒரு பெருத்த மலைபோல் விழுந்தன! அவ்வாறு அவன் மேல் விழுந்த அம்புகளில் பல அவனது அகன்ற கவசத்தின் மேலேயே ஊன்றி நின்று விட்டன. அப்போது அந்தக் கவசத்தின் மேல்பாகமானது அசைந்தாடும் ஒரு பெரிய மரமடர்ந்த காட்டைப் போன்றே தோன்றியது. அனேக அம்புகள் முனை முறிந்து வலிகுன்றி ஒரு தீங்கும் இழைக்க முடியாமல் புழுதி நிறைந்த தரையை மாத்திரம் கீறிக்கொண்டு கீழே விழுந்து விட்டன! தங்களது தாகத்தைச் சாந்தி செய்து கொள்வதற்கு, அவைகளுக்குச் சிறிதேனும் இரத்தம் கிடைக்கவில்லை.

இவ்வாறு அஜாக்ஷன், அந்தக் களத்தில் தன்னந்தனியனாகவும் தனது நிலையிலிருந்து திரியாமலுமிருக்கையில், அதிதைரியமும் மனவுறுதியுமுள்ள யூரிபைலஸ் என்பவன் அவனுக்கு உதவி செய்தே தீரவேண்டும் என்ற ஆவலுடன் மனந்துணிந்து, தனது இடத்தை விட்டுத் துள்ளிக் குதித்துக்கொண்டு, ஓடி முன் வந்தான்.

அவன் மேலும், துரோஜர்கள் தங்களுடைய சரவர்ஷங்களைப் பொழிந்தனர். அந்தச் சரவர்ஷம் அவனை ஒரு பெரிய மேகம்போல் மறைத்து விட்டது. அவன் அப்பொழுது தனக்கு உணவு கிடைக்கவில்லையே! என்று துடித்துக் கொண்டிருந்த தனது வேலாயுதத்தை யெடுத்து, அதைத் தன்னுடைய சத்துருக்களை நோக்கிப் பிரயோகிக்க, அது மஹாவீரனை அபிஸாயோன் என்பவனைத்தாக்கி, அவனது உயிரைப் பக்ஷணம் செய்துவிட்டது. அப்பொழுது செக்கச் சிவந்த இரத்தமானது, அபிஸாயோனது கீறுபட்ட வயிற்றினின்றும் கடகட வென்று பொங்கிக் கொண்டு, ஓர் ஆறுபோல் ஓடி வந்தது! அதன் பின் அவனது முழங்கால்களும் தங்களது வலியை யிழந்து, அவனது உடலைத் தாங்க முடியாமல் “சே! நமக்கு இந்தக் கனம் வேண்டாம்!” என்று அதை அங்கேயே விட்டு விட்டன!

அப்போது அவனை வென்றவனான யூரிப்பைலஸ், அவனுடைய ஆடையாபரண ஆயுதவஸ்திராலங்காரங்களைப் பறித்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்து, அவனது பிணத்தை நோக்கி ஓடிச் சென்றான். அதைக் கண்ணுற்ற பாரீஸ் அவனால் தனது கக்ஷிக்கு உண்டாய் விட்ட பழியைத் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்று நினைத்து, அவனை நோக்கித் தனது அம்பு ஒன்றை விடுத்தான். அந்த ஆயுதம் அந்த வீரனது உறுதியான தொடையின் மேற் பாய்ந்து, அங்கேயே ஊன்றிக்கொண்டு நின்று விட்டது! அதன் முனை மாத்திரம் அந்தத் தொடையின் மேல் ஊன்றிக் கொண்டதேயன்றி அதன் மரப்பிடி உடைந்தே போய்விட்டது!

இவ்வாறு காயமடைந்து விட்ட அந்தக் கிரேக்க வீரன், அப்போது தன்னுடைய, சகபாடிகள் பாளைய மிறங்கியிருந்த பாசறைகளை நோக்கி ஓட்டம் பிடித்தான். அவ்வாறு பின்னடைந்து செல்லுகையில், அவன், தன்னுடைய சகபாடிகளை நோக்கி, அவர்களை மனந் தளராமல் யுத்தஞ் செய்து வருமாறு பின்வரும் வீரமொழிகளை யுரைத்தான் :—

"ஆஹா, என்னுடைய ஸகபாடிகளே! கிரேக்க வீரர்களே! இதுவரை எந்தத் தெய்வமாவது, உங்களது மனவுறுதியை அசைத்ததுண்டா? எந்தத் தெய்வத்திற்காவது இதுவரை அந்தப் பேரோ பெருமையோ கீர்த்தியோ வாய்த்ததுண்டா? இல்லையன்றோ! அவ்வாறிருக்க இப்போது ஏதோ ஒரு தெய்வம் உங்களது மனத்தைக் கலக்கி விட்டது! இது என்ன ஆச்சரியம்! அந்தத் தெய்வந் தான் எது?

இந்தக் கோழை மனம் உங்களுக்குத் தகாது! சிறிதும் தகாது, தகவே தகாது! திரும்பிச் சென்று உங்களுடைய ஆயுதங்களை யெடுத்துக் கொள்ளுங்கள்; அஜாக்ஷனுக்கு உதவி செய்யச் செல்லுங்கள்? இத்தருணம் அவனுக்கு உங்களது ஸஹாயம் அத்தியாவசியமாக விருக்கின்றது! இந்த நிமிஷம் நம்முடைய எதிரிகளெல்லாம் அவனையே குறிவைத்துக்கொண்டு, அவன் மேலேயே சீறிக்கொண்டு வருகின்றனர். அவர்கள் அனைவரையும் அவன் ஒருவனே எதிர்த்துக்கொண்டு நின்றான்! இதுதான் அவன், தைரியத்துடன் செய்யக்கூடிய கடைசியான யுத்தம் என்று நான் நினைக்கின்றேன்! ஆதலால் சிறிதும் தாமதியாமல் நீங்கள் எல்லோரும் எழுந்து விரைந்து வாருங்கள்! எல்லோரும் ஒன்றாய்ச் சேருங்கள்! அந்த வீரன் இருட்டறையில் பிரவேசிக்குமுன், நீங்களெல்லோரும் உங்களாலான உதவியை அவனுக்குச் செய்யுங்கள்! உங்களது தேசத்தையும் ரக்ஷியுங்கள்!" என்றான்.

இவ்வாறு அவன் உரைத்த உருக்கமான மொழிகளைக் கேட்டபொழுது, கிரேக்க வீரர்களனைவரும் உற்சாகத்துடன் திரளாக முன் வந்து, தங்களுடைய கவசங்களை விரித்துப் போர்த்துக் கொண்டும், தங்களுடைய ஈட்டிகளைத் தங்கள் முன்பாக நீட்டிக் கொண்டும் காயமடைந்துவிட்ட தங்களுடைய நண்பர்களைக் காப்பாற்றுவதற்காக முன் வந்தனர்.

இவ்வாறு அவர்கள் வெகு வாத்ஸல்யத்துடனும் கவலையுடனும் நின்று கொண்டிருக்கையில் அஜாக்ஷனே அங்கு வந்து அவர்களுடன் சேர்ந்துகொண்டு விட்டான். அந்த வீரனைக் கண்ட மாத்திரத்தில் ஸைநிகர்கள் அனைவரும், புத்துயிரும் ஆவலும் அடைந்து ஆரவாரத்துடன் அவனைச் சுற்றி வளைந்து கொண்டனர், அந்த வீரனும் அதுவரை நின்றிருந்த அந்த யுத்தத்தைத் திரும்பவும் தொடர்ந்து செய்ய ஆரம்பித்தான்.

இவ்வாறு இருதிறத்துச் சேனைகளும் ஒன்றையொன்று தாக்கிக்கொண்டு வரும் இரண்டு பெரு நெருப்புக்களைப்போல், ஒன்றோடொன்று மோதிக் கொண்டன.

அச்சமயம், நெஸ்டாரின் இரதம் திரும்பிச் சென்றுவிட்டது. அந்த இரதத்தில் கட்டப்பட்டிருந்த குதிரைகள், தங்கள் தேகத்திலிருந்து கிளம்பிச் சொட்டச் சொட்ட வழிந்து வந்த வேர்வையில் குளித்தவை போன்று, அந்த யுத்த களத்தில் வடித்திருந்த இரத்தக் கறையை ஏற்றுக்கொண்டு, கிரேக்கர்களது இரக்ஷகனான மக்கேயன் என்னும் புண்ணியாத்மாவை ஏற்றிச்சென்றன.

அச்சமயம், அகிலேசன் தன் அதிகம்பீரமான கப்பலின் உச்சியிலிருந்த வண்ணம் இந்த யுத்தகளத்தையே உற்று நோக்கிக் கவனித்துக்கொண்டு வந்தான். அந்தக் களத்தைச் சுற்றிக் கொண்டு கிரேக்கர்கள் ஓட்டமாக ஓடுவதும் தங்களுடைய சத்துருக்களைக் கொல்வதும், அவர்களால் கொலை யுண்ணுவதுமாக விருப்பதை, அவனுடைய கண்கள் அவனுக்கு விகசிதமாகத் தெரிவித்தன. தன் பிரிய நண்பனான மக்கேயனைக் கண்ணுற்ற பொழுது தான் அவனது மனம் ஒரு கணம் இளகித் துடித்தது. மற்றைய வீரர்கள் மாய்ந்து மடிந்து போவதைக் கண்ணுற்ற பொழுது அவனுக்கு மனக் கிலேசம் உண்டாகவில்லை.

உடனே அவன், "இனிச் சும்மாவிருத்தல் தகாது; இதற்குச் சரியான பழி வாங்கியே தீரவேண்டும்!" என்று தீர்மானித்து, மினீஷியஸ்ஸின் அதிப்பிரிய புத்திரனை அழைத்து வரும்படி ஓர் ஆளை அனுப்பினான்.

உடனே மார்ஸைப்போல் பெருந் தன்மையுடைய பத்திரகலுஷன் தன் கூடாரத்தை விட்டுப் புறப்பட்டான். அந்தோ! அவன் புறப்பட்டது ஒரு மஹா கெட்ட காலம்! அந்த லக்கினமே அவனுக்கு அழிவைத் தந்து விட்டது! அந்த ஆபத்துக்கள் உண்டாக வேண்டுமென்பது அவனது தலைவிதியாயிருந்தது!

அவன் அகிலேசனிடம் ஓடி வந்து "நண்பா! நீ என்னை விளித்த காரணம் என்ன? உன் ஆணைகள் என்ன? அவைகளை நான் மிகவும் பிரீதியுடனேயே நிறைவேற்றுவேன். உனது ஆஞ்ஞை எதுவோ, அதைப் பத்திரகலுஷன் சிறிதும் தடையின்றி, அன்புடன் ஏற்று நிறைவேற்றுவான். உனது மனத்தைத் திருப்தி செய்வான்" என்றான்.

அதைக்கேட்ட பிலிதீசன், அவனை நோக்கி, "நண்பர்களில் முதல்வனே! எனது மனத்தில் ஸதா குடி கொண்டிருப்பவனே! அதோ, அங்குப் பார்! அந்தக் கோஷ்டியார் எவ்வாறு தவிக்கின்றனர் என்பதைப் பார்! அவர்கள் எவ்வாறு திண்டாடுகின்றனர் என்பதைப் பார்!

இப்பொழுது தான் அவர்களுக்குத் தாங்கள் இழந்துவிட்ட மனிதனுடைய அருமை பெருமைகள் தெரியவரும்! இக்கணம் கிரேக்கர்கள் அனைவரும் எனது காலடியில் வந்து விழுந்து, அழுது புரளுவார்கள்! தன் சிங்காதனத்தில் இருந்த வண்ணம் அதிரி தேசனும் திகிலடைந்து கலங்குவான்! நீ, இக்கணம் நெஸ்டா ரிடஞ்சென்று, காயம்பட்டு அவரது இரதத்தில் ஏறி வந்த வீரன் யார், என்பதை அறிந்து வா? நான் வெகு தூரமாக இந்த இடத் திலேயே இருந்து கொண்டும் அந்தத் தேரின் பின் புறத்தையுமே பார்த்தும் வந்ததினால், அந்த வீரனது உருவம் எனக்கு நன்றாய் விளங்கவில்லை! ஆனால் அது மக்கேயனது உருவம் என்றே எனக்குத் தோன்றுகின்றது, அவனை ஒரு மேகமானது மறைத்து விட்டதினாலும், அவனது முகம் எனக்குப் புலப்படவில்லை. குதிரை களும் என்னைக் கடந்து வெகு வேகமாக ஓடின'' என்றான்!

அதைச் செவியுற்ற அவனது நண்பன் அக்கணமே, அவ னது ஆணையைச்சிரமேற்றாங்கிக் கொண்டு, கப்பல்களும், கூடாரங் களும் திரளாக நின்று கொண்டிருந்த அந்தக் களத்தின் இடையே சென்றான். அப்போதுதான் இரதமேறிச்சென்ற இரண்டு வீரர் களும் அந்த இரதத்தைவிட்டு இறங்கிக்கொண்டிருந்தனர். யூரிமீ டனும் அந்தத் தேரில் கட்டப்பட்டிருந்த குதிரைகளை அவிழ்த்துக் கொண்டிருந்தான். அவை பதபதவென்று துடித்துக்கொண் டிருந்தன. இரதத்திலிருந்து இறங்கிய வீரர்கள் இருவரும், காற் றோட்டமாய் இருந்த கரையோரத்தில் நின்றுகொண்டு தங்களது வியர்வையைத் துடைத்துக்கொண்டும், தங்கள் மேல் படிந்திருந்த இரத்தக் கறையை அலம்பிக்கொண்டும் இருந்தனர். அவர்கள் அவ்வாறு, சிறிது பொழுது இளைப்பாறிக் கொண்டிருக்கையில் சமுத்திரத்திலிருந்து எழுந்து வந்த குளிர்ந்த காற்றானது அவர் களின் மேல் ஹிதமாக அடிக்க, அவர்களது முகத்தில் களையும் திரும்பி வந்தது. அதன் பின் அவர்கள் மேலே நடக்க வேண்டிய காரியங்களை ஆலோசனை செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒரு கூடாரத்தின் உட்சென்று, அதன் நிழலில் தங்களுடைய ஆசனங்களில் அமர்ந்தனர்.

அதன்பின் அவர்கள் நியமித்த பிரகாரம் ஹெக்கமேதை யென்றவள் பானவகைகளைக் கலந்து கொண்டு வந்தாள். அவள் அர்ஸினூஸ் என்னும் ஓர் அரசனது புத்திரி; ஹேமமயமான கேசங்களையுடையவள்; நெஸ்டாரின் ஞானத்தை மெச்சி, அவரது விருத்தாப்பிய தசையில் அவருக்கு ஊழியஞ்செய்து வருமாறு, கிரேக்கர்களனைவரும், ஏகமனத்தினராக அவளை அவருக்கு அளித்திருந்தனர்.

அவள், முதன் முதலாக, நீலச்சாயம் தீட்டிய கால்களை யுடைய ஒரு மேசையைக் கொண்டு வந்து அந்தக் கூடாரத்தின் மத்தியில் வைத்தாள். விசாலமும், வட்ட வடிவமுமான அந்த மேசையின்மேல், ஒரு பித்தளைத் தாம்பாளம் இருந்தது, அது அந்த மேசைக்கே ஓர் ஆபரணம் போல் விளங்கியது. அவள்

புதியதாகப் பிழிந்தெடுத்த தேனையும், உத்தமமான கோதுமை மாவையும் ஆரோக்கியமான உள்ளிப் பூண்டையும் பரிமாறி, அவர்களுக்கு ஒரு ருசியான விருந்தை நடத்தினுள்.

பின்பு, அவள் பூர்விகமும், விசித்திரமான வேலைப்பாடுகளுமுள்ள ஒரு கிண்ணத்தைத் தன்னுடையகைகளிலேயே ஏந்திக் கொண்டு வந்தாள். அது பைலியப் பெருந்தகையால் மிகவும் பிரியமாகவும், அதிபுராதன காலம் முதலும் ஆண்டு வரப் பட்டது, அது பொற்குமிழிகளும், குந்துகளும் இரண்டுகால்களும், நான்கு கைப்பிடிகளும் கொண்டதாக விருந்தது, பளபளவென மின்னிக் கொண்டிருந்த அந்தக் கனகப் பிடிகள் ஒவ்வொன்றின் மேலும் விளிம்பின் மேல் சாய்ந்து குனிந்து கொண்டு, அக் கிண்ணத்திலுள்ள பானகத்தை அருந்தி வரும் பாவனையுடன் பசும் பொன்னுல் நன்ருகச் செதுக்கப்பட்ட இரண்டு கபோதங்கள் இருந்தன. அது மஹா பளுவுள்ளது. என்ருலும் சுறு சுறுப்பைத் தரக்கூடிய அமிர்த பானம், தக தக வென்று பொங்கிக் கொண்டு, அதன் விளிம்புக்கும் மேலாக எழுந்து வருகையில், நெஸ்டார், அதை வெகு வேகமாக உயர்த்தி யெடுத்துக் கொள்வார்.

இந்த அதி திவ்வியமான பாத்திரத்தில் ஒரு தெய்வ கன்னிகையை நிகர்த்த ரூபலாவண்ணியங்களையுடைய அந்த அணங்கு பிராம்ஸியன் சாருயத்தை விசேஷமாகப் பெய்து, ஆற்றிப் பின்பு, ஆட்டின் பாலைக் கடைந் தெடுத்த ஆடையை அதில் கலந்து அந்தச் சாருயத்திற்கு ருசியை உண்டாக்கிக், கடைசியில் அந்தக் குழம்பின் மேல் மாவையும் தூவினுள். அப்போது, அந்தப் பானகமானது கண்ணைக் கவரும்படி மின்னிக் கொண்டு ஜ்வலித்தது. இந்தப் பிரகாரம் கலந்த பானகத்தை அவள் காயமடைந்த அரசனை மக்கேயனுக்காகச் செய்து கொடுத்தாள். அவனும் அதை யருந்தினுன். தமக்காகச் செய்யப்பட்ட மனேரம்மியமான பானகத்தை நெஸ்டார் அருந்தினுர்.

இவ்வாறு இனிமையான இந்தப் பானகங்களை யருந்தித் தங்களுடைய தளர்ச்சிகளையெல்லாம் தணித்துக் கொண்டபின், வீரர்கள் இருவரும், தங்களுக்கு மனம்போனபடி உல்லாசமாகச் சரசசல்லாபங்களைச் செய்து கொண்டு, அன்றைய தினத்தில் மீந்திருந்த பொழுதைக் கழித்தனர்.

இதன் மத்தியில் அகிலேசனுல் அனுப்பப்பட்ட பத்திரகலுஷன் சிறிதும் சந்தடி செய்யாமலும், தன் வரவை முன்னதாகவே அறிவிக்காமலும், அந்தக் கூடாரத்தின் முன் வந்து நின்ருன். அதைக் கண்ணுற்ற விருத்தரான நெஸ்டார், உடனே தமது ஆஸனத்தைவிட்டு எழுந்து வந்து, அந்த வீரனைத் தமது கையில் பிடித்துக் கொண்டு, உன்னதமான தமது ஆஸனத்தை நோக்கிச் சென்ருர். அவருடன் நிதானமாகச் சல்லாபங்கள் செய்து வர அச்சமயம் தகுந்ததல்ல வென்று

நினைத்து, அந்த வீரன் ஆஸனத்தில் அமரவும் மறுத்து, அவரை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"ஐயா! பிரிய வசனங்களைப் பேசிக் கொண்டு பொழுது போக்குவதற்கு இது தருணமன்று! மஹானுன அகிலேசன் மிகுந்த ஆத்திரத்துடன் துடிக்கின்றுன்! அவன் மஹா வீரன். அவனிடம் நான் பரம பக்தியும் பிரியமும் உடையவன்; நுரையைக் கக்கிக் கொண்டு, காற்றைப் போல் பறந்து வந்த வீரனது பெயர் என்ன வென்று அறிய அவன் ஆவலுள்ளவனுயிருக்கின்றுன். சத்துருக் களால் காய மடைந்து விட்ட அந்த வீரன் யார்? நீங்கள் யாரை யுத்த களத்திலிருந்து தூக்கிக் கொண்டு வந்தீர்கள்? என் றெல்லாம் அறிய விரும்புகின்றுன்!

ஐயா! மஹானுன மக்கேயனே இவ்வாறு இரத்தத்தை வடிக்கின்றுனே! இது எனக்கு மிகவும் துக்கமாக விருக்கின்றதே! இதை நான் அகிலேசனுக்கு அறிவிக்க வேண்டும். தாமதிக்க முடியாது, இதோ திரும்புகின்றேன். எனது நண்பன் மஹா ஆத்திரக்காரன் என்பது தங்களுக்குத் தெரியுமே" என்றுன்.

அதைச் செவியுற்றுக் கேட்ட அந்தப் பைலியப் பெருந்தகை, "ஆஹா! இது மிகவும் சந்தோஷகரமான சமாசாரந்தான்! கிரேக்க மக்களிடம் அகிலேசனுக்கு இன்னும் சிறிது தயவும், கருணையும் இருப்பதாகவே தோன்றுகின்றது! நம்முடைய கோஷ்டியார் படும் கஷ்டங்களையும் துக்கங்களையும் அறிய வேண்டும் என்ற ஆவல் அவனுக்கும் உளதோ? மக்கேயனுக்கு உண்டாய்விட்ட ஆபத்து மிகவும் பெரியதன்று! அதினினும் இருமடங்கு பெரிய ஆபத்துக்கள் நமக்கு உண்டாய் விட்டன! நம்முடைய கோஷ்டியாரில் மக்கேயன் மாத்திரம் இரத்தத்தை வடிக்கவில்லை! அவனுக்கு மாத்திரம் இந்த ஆபத்து வந்து விடவில்லை! நம் கடற்படைகளில் பிரஸித்தர்களான யுலிஸ்ஸீஸ் என்ன? ஆகமனனென்ன? தயோமதி யென்ன? மனக் கலக்கமில்லாதவனும், காரியத்திலேயே கண்ணுயிருப்பவனுமான யூரிப்பைலஸ்ஸென்ன? ஆகிய இவர்கள் ஏற்கனவே இரத்தத்தை வடித்து வருகின்றனர்!

ஆஹா! உன் வரவு நல்வரவு ஆயிற்று. இனி நமக்கு நல்ல காலம் பிறக்கும் என்றே நினைக்கின்றேன். இப்போது நமக்கு உண்டாயிருக்கும் கஷ்டங்களை அகிலேசன் சிறிதும் கவனிப்பதில்லை. நமக்கு வந்துள்ள கஷ்டங்கள் போதா. இன்னும் மேன் மேலும் நமக்குக் கஷ்டங்கள் உண்டாக வேண்டும் என்றே அவன், நம்மை நிந்தித்து வருகின்றுன். நம்முடைய கப்பற்படைகளெல்லாம், நெருப்புக் கிரையாகி விட்டதைத் தன் கண்ணுலேயே கண்டும், அவன், தனது கையைக் கட்டிக் கொண்டு வெறுமனே யிருக்கின்றுன். நம் ஸைனியங்கள் அனைத்தும் ஒரே நெருப்பில் எரிந்து, நீறுபட்டு அழிந்து போகட்டும் என்றே அவன் காத்துக் கொண்டிருக்கின்றுன்.

நம்முடைய சத்துருக்கள் அதிவேகமாக நம்மைத் தாக்கி வருகின்றனர் ; அவர்கள் நம்முடைய வீரர்களை ஒருவருக்குப் பின் ஒருவராக வெட்டி வீழ்த்தி அழித்து விட்டனர். இதைக் கண்ணுற்றும், அவன் சிறிதும் கலங்காமல் அமைதியாகவே யிருக்கின்றான். நம்முடைய வீரர்களது மரணத்தில் திருப்தியே யடைந்து வருகின்றான்.

சகலமான ஜீவஜந்துக்களுக்கும் தளர்ச்சியை யுண்டாக்கும், விருத்தாப்பிய தசையானது இப்போது என்னை நோக்கிநிதானமாக வந்து கொண்டிருக்கின்றது. அது காளைப்பருவத்தில் எனக்கிருந்த வீரியத்தையும் வீரசூர பராக்கிரமங்களையும் ஒரேயடியாய் அழித்து ஒழித்து விட்டது. ஆஹா ! முன்னொரு காலத்தில் எனக்கு இருந்த சக்திமாத்திரம், இப்போது இருக்குமானால் நான் இவ்வாறு புலம்புவேனா ?

அக்காலத்தில் நான், இதோ, இந்த உறுதியான எனது கையைக் கொண்டுதான் ஈப்பியன் வீரர்களை வென்றேன். ஈலிஸ் நாட்டுக் காளைகளைச் சிறைப் பிடித்து அவற்றை வெகு சந்தோஷத்துடன் ஓட்டி வந்தேன் ; மஹாவீரனான அத்திமோனியஸ் என்பவனைக் கொன்று அவனது உடலைப் பூமியிற் கிடத்தினேன் ! அப்போது எனது வேகத்திற்குத் தப்பித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆவலுடன் அந்த தேசத்துக்கானவர்கள் அனைவரும் நாற்புறமும்ஓட்டம் பிடித்தனர்.

அச்சமயம் அந்தச் செழிப்பான தேசத்திலிருந்த சகலமான சொத்துக்களையும் நானும் எனது கட்சியாருமே எங்களுக்குச் சுவாதீனஞ் செய்து கொண்டோம், ஐம்பது ஆட்டுமந்தைகளையும் ஐம்பது பன்றிக் கூட்டங்களையும் அவ்வாறே அவ்வளவு வெள்ளாட்டு மந்தைகளையும், உறுமும் பசுமாட்டுக் கூட்டங்களையும், அவற்றைப் போல் மூன்றுமடங்கான நிகரற்ற குதிரைகளையும் பெதும்பைப் பருவமடைந்த ஸகலமான பெண்மணிகளையும், உத்தம சாதியிற் பிறந்த கன்று காலிகளையும் கொள்ளை கொண்டு வந்தோம்.

நான் முதன் முதலாகப் புரிந்த யுத்தத்திலேயே எனக்கு இந்த வெற்றிகளெல்லாம் கிடைத்தன. அப்போது எனது தந்தையும் கிழப் பருவமடைந்திருந்தவருமான நெஸியஸ் என்பவர், தமது மகன் வெற்றியுடன் திரும்பி வந்தான் என்று அறிந்து மிகவும் சந்தோஷித்தார்.

இவ்வாறு ஈலிஸ் ஜயிக்கப்பட்ட பொழுது அந்நாட்டார், தாங்கள் வெகுகாலம் வரை கட்டாமலிருந்த கப்பப் பாக்கிகளைக் கட்டினர். அவற்றைப் பைலியஸ் பெருமக்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர்.

அதிகர்விகளான ஈலியர்கள்தான் இந்த யுத்தத்தை வலுவில் முதன் முதலாக ஆரம்பித்தனர். அவர்கள் பைலிய ராஜ்யத்தில்

முக்காலே மூன்றுவீசத்தையும் பற்றினர். நெலியஸ்ஸின் புத்திரர் களில், வெகு தைரியமுள்ளவர்களாகவிருந்த பன்னிரண்டு சகோ தரர்களில் நான் ஒருவன் மாத்திரமே இப்போது மீந்திருக்கின்றேன். ஈலியர்கள் எங்களைப் பலவாறு வருத்தி வந்ததினால் நாங்களும் ஆயுதபாணிகளாகப் புறப்பட்டு அவர்களை எதிர்த்தோம், வென் றோம்.

அவ்வாறு வென்ற பொழுது, எனது கிழவருக்குப் பொறுக்கி யெடுத்த உத்தமமான முந்நூறு செம்மறியாடுகள் பரிசாக அளிக் கப்பட்டன. அந்த வெகுமானம் அவருக்கு அளிக்கப்பட்டது, சிறிதும் அநியாயமில்லை. அது மிகையும் ஆகாது. தமக்குக் கிடைக்க வேண்டிய வருவாய்களை அவர் வெகுநாளாக இழந்திருந் தார். மகத்தான அவமானங்களையும் அவமதிப்புக்களையும் அவர் ஏற்று வந்தார் ; ஈலிஸ் அரசன் பஹிரங்கமான பந்தய மைதானத் தில் அவரது இரதத்தை முன் செல்ல விடாமல் நிறுத்தினான். வெற்றி பெற்ற அவரது குதிரையையும் தடுத்தான். இதுவே அந்த யுத்தத்திற்குக் காரணமாயிற்று!

நெலியஸ்ஸுக்குப் பரிசளித்தபின் மீந்திருந்த கொள்ளைப் பொருள்களை, மற்றைய ஜனங்கள் பங்குபோட்டுக் கொண்டனர். அந்த வஸ்துக்களெல்லாம் எனது மேற்பார்வையிலேயே எல்லோ ருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டன. அதன்பின் நான் தேவர்களுக்குச் செய்ய வேண்டிய வழிபாடுகளைச் செய்தேன்.

இந்த யுத்தத்தை இன்னும் விஸ்தாரமாகச் சொல்லுகின் றேன் கேள். ஈலிஸ் நாட்டார் யுத்தஞ் செய்வதாகத் தீர்மானித் துக் கணக்கற்ற குதிரைகளையும் இரதங்களையும் திரட்டினர். மூன்று தினங்கள் அவ்வாறு யுத்த தளவாடங்களைச் சேகரித்துக் கொண்ட பின் அதிபால்யர்களான ஆக்டரின் புதல்வர்கள், தங்களுடைய சேனைகளின் தலைமையை வகித்து, பழிபாவங்களுக்கு அஞ்சாது, யுத்தஞ் செய்ய வேண்டுமென்ற ஆத்திரத்துடன் அச்சேனைகளை நடத்திக் கொண்டு வந்தனர்.

நமது பைலியப் பிராந்தியத்தின் எல்லையில், ஒரு கோடியில் இருக்கும் மலையுச்சியில் அதிலாவண்ணியமுள்ள திரியோஸியா இருக்கின்றது. அங்குதான் அதிபிரஸித்தி பெற்ற ஆல்பியூஸ் நதி யானது பல கிளைகளாகப் பிரிந்து பாய்கின்றது. அந்த நதிக்கும் திரியோஸியாவுக்கும் அதிகம் தூரமில்லை. அவர்கள் அந்த நதி யைக் கடந்து வந்து திரியோஸியாவின் அடிவாரத்தில் இறங்கித் தங்களுடைய கூடாரங்களை அடித்தனர்.

அன்றைய இரவில் பூமி முழுவதையும் இருள் சூழ்ந்து கொண்டபின், பாலாஸ் தேவியானவள் தேவலோகத்திலுள்ள தனது ஸ்தானத்திலிருந்து இறங்கி வந்து, பைலியர்களை எச்சரித்து, யுத்தத்திற்கு ஆயத்தம் செய்யுங்கள் என்று ஆஞ்ஞாபித்தாள்,

அத்தேவியின் ஆணையைச் சிரமேற்றுங்கியவர்களாய், பைலியர் களனைவரும் நான், நான் என்ற ஆவலுடன் முன் வந்தனர்.

'நான் கீர்த்தியுடன் விளங்குவேன். நான் மஹா வீரன். என்னை எதிர்க்க வல்லவன் யார்?' என்றெல்லாம், ஒவ்வொரு வீரனும் துள்ளினுன். அவர்கள் அனைவரிலும் நானே அதிகமாக ஆத்திரத்துடன் துடித்தேன். ஆனுல், அவ்வாறு யுத்தத்திற்குச் செல்ல எனது கிழவர் எனக்குச் சம்மதம் தரவில்லை. அவர் என்னைத் தடுத்தார். நான் அதிபால்யன் என்றும் யுத்தத்தில் கொடிய ஆபத்துகள் நிகழலாம் என்றும், எனக்கு என்ன ஆபத்து வந்து விடுமோ என்றும் அவர் பயந்தார். எனது தேரை முன் செல்ல வொட்டாமல் வழிமறித்துத் தடுத்து விட்டதுமன்றி, என்னுடைய ஆயுதங்களையும் பிடுங்கிக் கொண்டு விட்டார்.

ஆனுல் அவருடைய பிரயத்தனங்கள் ஒன்றும் பலிக்க வில்லை! நான் எனது கால்விசையிலேயே பூரணமான நம்பிக்கை யுடையவனுய் இரதங்களிடையே நுழைந்து ஓட்டம் பிடித்துவிட்டேன்! பாலாஸ் தேவி எனக்குத் தனது கிருபையையளித்து உதவினுள். எனக்கு முன் சென்றுள்!

அழகும், வனப்பும், மனேகரமுமுள்ள ஆரிணிநாட்டு வனங்களின் ஓரமாக மினியஸ் நதியானது, சிறிதும் சந்தடியின்றியும் மெதுவாகவும் பாய்ந்து சென்று சமுத்திரத்தில் ஸங்கமமாகின்றது. அங்கு பைலிய சேனைகளின் துரகங்களும், பதாதிகளும் ஒன்று கூடித் தங்கள் தங்கள் ஆயுதங்களையும் கவசங்களையும் அணிந்து கொண்டு, பொழுது விடிவதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர்.

விடிந்தவுடன் நாங்கள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு முன் சென்று சூரியன் உச்சிக்கு வருமுன் ஆல்பியூஸ் நதியின் புனிதமான உற்பத்தி ஸ்தானத்தைச் சேர்ந்தோம். அங்கு சென்று சேர்ந்தபின், நாங்கள் அதிபயபக்தியுடன் ஜோவ் தேவருக்கு வந்தன வழிபாடுகளும் நைவேத்தியங்களும் செலுத்தினேம். பின்பு ஒரு பசுங்கன்றுக் குட்டியைப் பலிகொடுத்து, நீலாயதாக்ஷியைத் திருப்தி செய்தோம். அதன்பின் ஆல்பியூஸுக்கு ஒரு ரிஷபத்தை நைவேத்தியமாகக் கொடுத்தோம். பின்னும் ஒரு ரிஷபத்தைப் பலிகொடுத்து நீலவர்ணம் தரித்தவரான சமுத்திர ராஜனையுந் திருப்தி செய்வித்தோம். வளைந்து வளைந்து சென்ற அந்த நதியின் கரையிலேயே, நாங்கள் அன்றைய இரவெல்லாம் ஆயுதங்களணிந்த வண்ணம் நித்திரை செய்து வந்தோம்.

அப்பொழுது, பயங்கர ரூபிகளான ஈப்பியர்கள் அந்த நகரத்தைச் சுற்றி நின்றுகொண்டிருந்தனர். சகலமான வஸ்துக்களையும் கட்புலனுக்கும் சூரிய பகவான் மறுநாட் காலையில் தம் கிரணங்களைப் பொழிந்து கொண்டு, ஆகாய வீதியில் ஜோதியுடன் கிளம்பி வந்தபொழுது, அவருக்கு அங்குச் கூடியிருந்த ஸர்வதேச ஸைனி

கர்களின் ஆயுதாபரணங்களும் கட்புலனுயின. அது, அதிசோபை யுடன் கூடிய ஓர் அற்புதமான காட்சியாகவே யிருந்தது; யுத்த சம்பந்தமான ஸகல உபகரணங்களும் தளவாடங்களும் தெற்றென விளங்கின.

அப்போது இரு திறத்துச் சேனைகளிலும் கூடியிருந்த தேச மக்கள் ஒருவரை யொருவர் சந்தித்தனர்; ஒரு புறம் பைலாஸ் ஸாரும், மறுபுறம் ஈலிஸ்ஸாருமாக யுத்த ஸன்னத்தர்களாக விளங் கினர். ஆஜியாஸ் ராஜனுடைய மகனும், ஆகமேதை என்ப வளின் கணவனுமான மஹா வீரனே, எனது ஈட்டிக்கு முதன் முதலாக இரையாகி, இரத்தத்தை வடித்துக்கொண்டு மடிந்து விழுந்தான்.

அந்த ஆகமேதை என்பவள் வைத்திய ஸாஸ்திரத்தில் அதிநுண்ணியம் அடைந்திருந்தாள். ஸகலமான மூலிகைகளின் குணங்களையும் உபயோகங்களையும், அவள் நன்ருய் அறிந்திருந் தாள். காலையில் பெய்யும் பனியையேற்று வரும் ஸகலமான புற் பூண்டு செடி கொடி கீரை, பயிர்களின் தன்மைகளை அவள் நன்ருய் அறிந்தவள்.

நான் அவனது இரதத்தைப் பிடித்து அதை யுத்த முனைக்கே ஓட்டிச் சென்றேன். அதைக் கண்ணுற்ற ஈப்பியர்கள் நடுங்கினர். திடுக்கிட்டுப் பதறினர். நிலைகுலைந்து ஓட்டம் பிடித்தனர். இவ் வாறு அவர்களது அணிவகுப்பைக் குலைத்து அவர்களுடைய வீரர் களிலெல்லாம் தலைசிறந்து விளங்கிய வீரனைக் கொன்றபின், நான் ஒரு பெருத்த சுழல்காற்றைப்போல், உக்கிரத்துடனும் வேகத்துட னும் அந்த யுத்தகளத்தையே ஒரு கலக்குக் கலக்கினேன். அப் போது ஒன்றுகூடக் குறைவில்லாமல் கணக்குப்போல் ஐம்பது இரதங்கள் எனது கைவசமாயின. அவற்றை நான் பிடித்துவிட் டேன்; அவற்றை நானும், என்னுடைய பரிவார ஜனங்களும் மஹா ஆடம்பரத்துடனும், ஜெயகோஷத்துடனும் கொண்டு வந்தோம்.

அப்போது அந்தத் தேர்கள் ஒவ்வொன்றிலுமிருந்து ஈரிரண்டு வீரர்கள் தங்களது பிராணனை விட்டுவிட்டு அந்தப் படுகளத்தில் படுத்தனர். ஆக்டரின் மக்களும் அந்த ஸத்துருஸம் ஹாரத்திலேயே தான் அழிந்தனர், இளைஞர்களான அவர்க ளுடைய உடல்களின் மேல் நெப்தியூன் தேவர் தம்முடைய மேக ஜாலங்களை ஒரு போர்வைபோல் போர்த்து மறைத்தார்.

பின்பு மலைபோல் குவிந்திருந்த கேடயங்களின் மீதும், வெட் டுண்டு மடிந்து, மல்லாந்து விழுந்திருந்த வீரர்களுடைய பிணக் குவியல்களின் மீதும் நாங்கள் தாவித் தாவிக் குதித்துச் சென்று, அவர்களுடைய ஆடையாபரண ஆயுதங்களைக் கொள்ளை யிட்டோம். கண்ணுக் கெதிர்ப்பட்ட சகலரையும் நாங்கள் அழித்துக் கொன்ருேம். மீந்தவர்களை அடித்துத் துரத்திஞேம்.

அவர்கள் பூப்பிரேஸியாவிலுள்ள விசாலமான மைதானங்களின் வழியே ஓட்டம் பிடித்தனர். உயர்ந்து விளங்கும் ஒலினியன் பாறைகளையும் காடுகளையும் எல்லைகளாகவுடைய பள்ளத்தாக்குகள் வரை நாங்கள் அவர்களைத் துரத்திக் கொண்டு சென்றோம். அவ்வாறு துரத்திக் கொண்டே நாங்கள் அலிஸியம் நதிவரை சென்றோம். அங்கு, பாலாஸ் தேவி எங்களை நிறுத்தி விட்டாள்! அப்படி நிறுத்திய பின்னும் நான் வெறுங்கையனாயிருக்க வில்லை. சத்துருக்களுடைய சேனைகளின் பின்னணியிலிருந்த வீரர்களை வதைத்து வந்தேன். அன்று காலையில் யுத்தத்தை ஆரம்பித்த இந்தக் கையானது மாலைவரையில், சிறிதும் ஓய்வோ, ஒழிச்சலோ இன்றி, அந்த யுத்தத்தைச் செய்தே வந்தது. அதன் பின், நான் ஜயசீலனாகப் பைலிக்குத் திரும்பினேன்.

அங்கு நாங்கள், தேவதேவரும் மஹா தேவரும் முழு முதற் கடவுளுமாகிய ஜோவ் பகவானுக்கு விசேஷமான காணிக்கைகளைச் செலுத்தினோம். எல்லோரும், என்னை மனிதர்களில் உத்தமன் என்று மதித்து, எனக்கு பஹிரங்கமான மரியாதைகளைச் செய்தனர். இளங்கன்று பயமறியாது என்ற வசனப்படி நான் என்னுடைய வீரசூர பராக்கிரமங்களிலேயே நம்பிக்கை வைத்தனாகவும், என்னுடைய தேசத்தின் க்ஷேமத்தில் அக்கரையும் ஆத்திரமும் உருக்கமும் ஊக்கமும் உடையவனாகவும் இருந்தேன். அந்த இளம் பிராயத்திலேயே நான் என்னுடைய வீரசூர பராக்கிரமங்களையும் கீர்த்தியையும், எல்லோரும் அறியக் காட்டினேன்.

இப்போது அகிலேசன் ஒரு காரியமுஞ் செய்யாமல் கோப தாபங்களுடன் கொதிக்கின்றான், துடிக்கின்றான்! இந்தக் கோப தாபங்களையும் ஆத்திரங்களையும், அவன் கிரீஸுக்கு நன்மையைத் தரக்கூடிய காரியங்களிலன்றோ காட்டவேண்டும்?

மஹா பலவானும், கிரேக்கர்களனைவரையும் காப்பாற்றக் கூடியவனுமான அவன் உயிருடன் இருந்தும், அவனது ஸஹாயமின்றி அந்தக்கிரேக்கர்கள் கூட்டங் கூட்டமாக மடிந்து இருள் சூழ்ந்த மீளாவுலகத்தில், புகுந்துவிட்டால் அப்போது அவன் எவ்வாறு வருந்துவான் ?

நண்ப! எனக்கு இப்பொழுது வெகு நாட்களுக்கு முன் நடந்த ஒரு சம்பவம் ஞாபகத்திற்கு வருகின்றது. அதைச் சொல்லுகின்றேன், கேள். இந்த யுத்தத்தை நடத்துவதற்கு நமக்கு வேண்டிய ஸஹாயங்களெல்லாம் சேகரிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் நானும், யுலீஸ்ஸிஸும், கிரேக்க ஸமுத்திரக் கரையோரமுள்ள நாடு, நகரங்களுக்கெல்லாம் சென்றோம். அந்த யாத்திரையில் நாங்கள் வித்தியாவின் துறைமுகத்தில் இறங்கி அதிதி ஸத்காரம் செய்வதே விரதமாகக் கொண்டிருக்கும் பிலியூஸ் ராஜனது அரண்மனைக்குச் சென்றோம், அவர் எங்களுக்கு அன்ன பானாதிகளை யளித்து உபசரித்தார்.

அச்சமயம் அவர் ஜோவ் தேவருக்கு ஒரு காளையை நைவேத்தியஞ்செய்து கொண்டிருந்தார். அதன் ஊறு பாகத்தை அவர், அக்கினியிலிட்டு ஓமஞ் செய்து அது நன்ருய்த் தீச்சுடர் கொண்டு எரிந்து வருகையில் அதன் மேல் மதுக்களையும் ஆகுதி செய்தார். அப்பொழுது நீயும் அகிலேசனும், உனது பிதாவும் கிழவருவான மினிஷியஸ்ஸூம் அந்தக் காளையின் மாமிஸத் துண்டு களை அந்த அக்கினியின் மேல் திருப்பித் திரும்பிப் போட்டுக் கொண்டிருந்தனர்.

அதே சமயத்தில் அகிலேசன் எங்களைக் கண்டு அதே யாகத்துக்கு நடக்க விருந்த விருந்துக்கு வரும்படி, எங்களை யழைத் தான். நாங்களும், அவனது விருப்பத்திற்கிசைந்து, அவர்களது பந்தியில் உட்கார்ந்து, அந்த மனேகரமான விருந்தை யருந்திக் களிகூர்ந்தோம்.

அதன் பின் நாங்கள், அங்கு வந்த காரியத்தை உங்களெல் லோருக்கும் சாங்கோபங்கோபமாக உரைத்து "நீங்கள் அனைவரும் இந்த யுத்தத்திற்கும் புறப்படவேண்டும்" என்று உங்களை வேண்டினேம். அப்பொழுது நீ இந்த யுத்தத்திற் கலந்து கொண்டு பேரும் புகழும் கீர்த்தியும் பெற வேண்டும் என்று துடித்தாய். அச்சமயம் அந்தச் சபையிலிருந்த பெரியோர்களான மஹா விருத்தர்களெல்லாம், வெகு தாராளமாகவும் கபடமின்றியும், தர்மா தர்மங்களையும் நியாயாநியாயங்களையும் எடுத்து விஸ் தாரமாக வியாக்கியானம் செய்தார்கள்.

பிலியூஸ் உன்னை நோக்கி, "என்மகனே! தைரியமாயிரு!" என்று மாத்திரம் சொன்னர். மினிஷியஸ் என்ன சொன்னர் என் பதையும் சொல்லுகிறேன் கேள்:—

"மஹானுன அகிலேசன், உன்னினும் அதிகமான சாமர்த் தியமுடையவன் தான், அவன் தேவ பரம்பரையிலும் வந்தவன் தான், என்ருலும், வயதில் அவன் உனக்குச் சிறியவன். நீ வயதில் அவனுக்கு மூத்தவன். விஷயங்களை ஆழ்ந்து, ஆராய்ந்து பரிசீலனை செய்வதில் நீ அவனிலும் சமர்த்தன். ஆதலால் நீ நடுநிலைமை வகித்து அவனுக்குச் சமயோசிதமான யோசனைகளைச் சொல்லி அவனுக்கு உதவி செய்ய வேண்டும்" என்றே உன்னு டைய தகப்பனுர் தெஸ்ஸேலியா அரண்மனையில் உனக்கு உபதேசஞ் செய்தார்.

அந்த உபதேசம் அதியுத்தமமான தன்ருே! தந்தை சொல் மிக்க மந்திரமுண்டோ? அதை நீ இப்போது மறந்துவிட்டனையே? இது சிறிதும் முறையன்றே! ஆதலால் நண்ப! ஒரு மனிதன் தனது சினேகிதன் ஒருவனுக்குச் செய்யக்கூடிய ஸஹாய மனைத்தையும் நீ இக்கணமே எனக்குச் செய்து தீரவேண்டும்! ஒரு நண்பனுடைய ஹித வசனங்கள் வேருென்றுக்கும் இளகாத கல் மனத்தையும் இளக்கிவிடுமன்ருே! ஏதேனும் ஒரு தெய்வம் நமது பங்கில் இருந்து

மனமிரங்கி, அகிலேசனது கன்னெஞ்சையும் கரைத்து விடும் என்றே நான் நம்புகின்றேன். தனக்குப் பேரும் கீர்த்தியும் தேவை யில்லை என்று அவன் அவற்றைப்புறக்கணித்தே விட்டாலும், தனது பிரிய நண்பன் ஒருவனது வார்த்தைக்கு அவன் இணங்கவே இணங்குவான்.

அவ்வாறன்றி, நமது கஷ்டகாலத்தை யனுசரித்து ஏதேனும் ஒரு துர்த் தேவதை அகிலேசனுக்குப் போதனை செய்தால், அவனும், அந்தப் போதனைக்கு இணங்கி பீதியடைந்து நமக்கு உதவி செய்ய மாட்டான். தனது கையை அசைக்க மாட்டான். என்றும் வாளாயிருப்பான். நீ யாயினும் மிர்மிடோனியப் பிரகிரு திகளுடன் வந்தால், ஏங்கித் தவித்து வரும் கிரேக்கர்கள் சிறிது மனந்தேறுவார்கள். கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட்டவர் களைப் போல் திண்டாடும் அவர்களுடைய மனவிருள் சிறிது நீங்கும்!

நீமாத்திரம் அகிலேசனது ஆயுதங்களையும் கவசங்களையும் அணிந்து கொண்டு துரோஜர்களின் முன் தோன்றினல், அவர் களனைவரும், திகிலடைந்து மனங்கலங்கி, இந்த யுத்தகளத்தையே விட்டு விட்டு ஒரேயடியாய் ஓட்டம் பிடித்து விடுவார்கள்!

உன்னுடைய சேனைகள் இது வரை இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளவில்லை. அவைகளுக்கு ஒரு விதமான, இளைப்போ, களைப்போ, சலிப்போ உண்டாகவில்லை, அச்சேனைகள் துரோஜர்களைத் தாக்கியடித்தால், ஏற்கனவே யுத்தங்கள் செய்து, சலித்துக் கிடக்கும் அவர்கள், தங்களுடைய ஸகலமான பரிவாரங் களுடன் தங்களுடைய கோட்டைகளுக்குட் சென்று பதுங்கிக் கொள்வார்கள். கிரேக்கர்களும் சிறிது சிரம பரிகாரஞ் செய்து கொண்டு வழக்கம்போல் நிதானமாக மூச்சை விடுவார்கள்'' என்றூர்.

இந்த வசனங்களைக் கேட்ட பொழுது, அவனது பெருந் தன்மையுள்ள மனது இளகியது. அவன் அக்கணமே அந்தக் கூடாரத்திலிருந்து புறப்பட்டு வேகமாக நடந்து, அந்தச் சமுத் திரக் கரையோரம் சென்றான். திரளான ஜனங்கள் கூடியிருந்த அந்த சமுத்திரக் கரையில் பெருத்த கடைகளும், வியாபார ஸ்தலங்களும் இருந்தன. அவ்விடத்தில் தான் மஹானுன யுலிஸ் ஸீஸின் உன்னதமான கப்பற் படைகளும் நின்று கொண்டிருந்தன. காப்புத் தெய்வங்களின் கோவில்களும் அவ்விடத்தில் தான் கட்டப்பட்டிருந்தன.

அங்குச் சென்ற பொழுது பத்திரகலுஷனுக்கு ஒரு மிகவும் பரிதாபமான காக்ஷி கட்புலனுயிற்று! தைரியவானுன ஈவிமானது புத்திரன், கொடிய நோயுற்றுத் தன்னுடைய ஸர்வாங்கங்களி லிருந்தும் இரத்தத்தைப் பிழியப் பிழிய வடித்துக் கொண்டிருந் தான். அவனது முகமும் வாடியிருந்தது. அவனுக்கு உண்டா

யிருந்த இரணத்தில் அச்சமயம் ஓர் அம்பும் ஊன்றி நின்று கொண்டிருந்தது. அந்த இரணத்திலிருந்து வடிந்து கொண் டிருந்த இரத்தமும் அவனைச் சுற்றிலுமுள்ள இடங்களில் எல்லாம் வட்டவடிமாகச் சொட்டிக் கொண்டிருந்தது. தனக்கு உண்டாய் விட்ட ஆபத்துக்களை அவன், மெதுவாக தட்டித் தடுமாறித் தள்ளாடிக் கொண்டு பத்திரகலுஷனுடன் உரைத்தான். அச்சமயம், அவன், அவயங்கள் மாத்திரம் தளர்வடைந்திருந் தனவேயன்றி, அவனது மனம் சிறிதும் தைரியத்தை இழக்க வில்லை.

இந்த ஸ்திதியில் அவனைக் கண்ணுற்ற பொழுது பத்திர கலுஷனது மனம் பரிதபித்துத் துடித்தது. தனது பக்தன் ஒரு வனுக்கு உண்டாய்விட்ட கஷ்டங்களை நிவர்த்தி செய்யவந்த ஒரு தெய்வம் போலவே, அவன் மஹா கிருபையுடன் விளங்கினன். அவன் இரத்தத்தை வடித்து வந்த தனது நண்பனை நோக்கிப் பெரு மூச்சு விட்டுப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

“அந்தோ! பரிதாபம்! கிரேக்கத் தலைவர்களுக்கு இத்தகைய கஷ்டங்கள் வரலாமா? இது என்ன தௌர்ப் பாக்கியம்! மிலேச்சர் கள் வசிக்கும் இந்தக் கடற்கரையில் அழியவா நீங்கள் பிறந்தீர்கள்! இதுதானு உங்களது தலைவிதி! உங்களுடைய இரத்தமும், சதை யும், மாமிசமும் நாய் நரிக்குத் தான் இரையாக வேண்டுமா? உங்களுடைய உற்ருர் உறவினர் இருக்கும் இடத்தையும், உங்க ளுடைய ஜன்ம தேசத்தையும் விட்டு வெகுதூரமுள்ள இங்கு, நீங்கள் உங்களது உயிரை விடவேண்டுமென்று தெய்வங்கள் விதித்து விட்டனவோ?

யூரிப்பைலஸ்! மஹா வீரரே! கிரேக்கர்களுக்கு இனியும் பிழைக்க வழி ஏதேனும் உளதோ? உளதெனில் அதைச் சொல்! வெறிகொண்டு தனது கைவரிசையைக் காட்டிவரும் ஹெக்டரை அவர்கள் இன்னும் எதிர்த்து வருகின்றனரா? அல்லது அவர் களுடைய மஹா வீரர்களெல்லாம் மானமிழந்து மடிந்துதான் போக விருக்கின்றனரா? வெற்றியுடன் நாம் செய்து வந்த யுத்தங் களுக்கும், நமது கியாதிக்கும் இன்று முடிவுகாலம் வந்துவிட்டதா?” என்ருன்.

அதைக் கேட்ட யூரிப்பைலஸ் அவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான் :—

“ நண்ப! நமக்கு முடிவுகாலம் வந்தே விட்டது! கிரீஸ் இராஜ்யம் அழிந்தே போய் விட்டது! இன்றைய தினம் அதனுடைய கியாதிகளெல்லாம் அடியோடு அழிந்தே போய் விட்டன! அதனுடைய பெருமைகளும் வறண்டு வறுமையடைந்து விட்டன! துரோஜர்கள் ஜயசீலர்களாக விளங்குகின்றனர். அவர்கள் நம்மை, நம் கப்பல்கள் வரையுங்கூடத் துரத்திக் கொண்டு வந்துவிட்டனர்! அவர்களது ஸஹாயத்துக்காகப் புதிய

சேனைகள் மேன்மேலும் வந்துகொண்டே யிருக்கின்றன. ஆதலால் அவர்கள் சிறிதும் இளைப்போ, சலிப்போயின்றி அந்த யுத்தத்தை மேன்மேலும் ஊக்கத்துடன் நடத்திக்கொண்டு வருகின்றனர். அவர்களுடைய கோபதாபங்களையும் கொடுமைகளையும் சிறிதும் தங்குதடையின்றி இளைக்காமல் எதிர்த்து வந்த நம்முடைய வீரர் கள் இப்போது குத்தும், வெட்டும், காயமும் பட்டு இரத்தத்தை வடித்துக் கொண்டு, நம்முடைய கப்பல்களில் கிடக்கின்றனர்.

ஆனால் பத்திரகலுஷனே! இது இருக்கட்டும், இப்போது நீ எனக்கு ஓர் உபகாரஞ் செய்! என்னை நீ என்னுடைய கப்பல் களுக்குக் கூட்டிச் செல். மரண வேதனையைச் செய்யும் இந்த அம்பையும் உருவி, இழுத்துவிடு. இளஞ் சூடான ஜலத்தைக் கொண்டு, எனது புண்ணைக் கழுவி, அதன்மேல் படிந்திருக்கும் இரத்தக் கட்டிகளையும் களைந்து எடுத்து எறி. இந்த அம்பு எனக் குச் செய்யும் வேதனைகள் பொறுக்க முடியவில்லை! தைலங்களைத் தடவி அந்த வேதனையை நிறுத்து!

வைத்திய சாஸ்திர மூல புருஷரான கூகரன் போதித்த முறையை அனுசரித்து எனக்குச் சிகிச்சை செய்! அவர் தமது சாஸ்திரத்தை முன்னொருக்கால் அகிலேசனுக்கு உபதேசித்தார். நீ அகிலேசனிடமிருந்து அதைக் கற்றாய். நமது கக்ஷியிலிருந்த பிரசித்தி பெற்ற இரண்டு ரண வைத்தியர்களில் ஒருவரான பொடாவிரியிஸ்ஸை இந்த நிமிஷம் துரோஜ சேனைகள் வளைத்துக் கொண்டிருக்கின்றன. அச்சேனைகளின் மத்தியில் அவர் நின்று கொண்டிருக்கின்றார். மஹானான மக்கேயன் என்னும் மற்றை யவர் காயமடைந்து தமது கூடாரத்தில் படுகிடையாய்க் கிடக் கின்றார். எல்லோருக்கும் சிகிச்சா உபசாரங்களைச் செய்து வந்த, அவருக்கே இப்போது அந்நியருடைய ஸஹாயம் வேண்டியிருக் கின்றது!'' என்றான்.

அதைச் செவியுற்ற அந்த வீரன் யூரிப்பைலஸ்ஸை நோக்கி—"நாம் இனிமேல் செய்ய வேண்டியது என்ன? இனி மேல் நிகழவிருக்கும் நடவடிக்கைகளெல்லாம் தெய்வங்களுக்குத் தானே தெரியும்! அகிலேசனது மஹா ஆஞ்ஞையைத் தலைமேல் வஹித்தவனாக நான் இங்குப் பறந்து ஓடி வந்தேன்; பைலியப் பெருந்தகையின் மறுமொழியை அவனிடம் சொல்வதற்காகவும் இப்போது விரைந்து திரும்பிச் செல்லுகின்றேன். என்றாலும் இந்தக்கணம் உன்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற வேண்டியது அவசியம், அதில் தாமதங்கூடாது'' என்று சொல்லிக்கொண்டே அந்த வீரனைத் தன்னுடைய கைகளில் எடுத்து நிறுத்தி, மெதுவாய் நடத்திக்கொண்டு வந்தான்.

அவ்வாறு தங்களது தலைவனான யூரிப்பைலஸ் நிதானமாக அடிமேல் அடிவைத்துக் கொண்டு வருவதைக் கண்ணுற்ற, அவனுடைய அடிமைகள் எருதுத் தோல்களை நிலத்தின் மேல் விரித்தனர். அவ்வாறு விரிக்கப்பட்ட அந்தத் தோல்களின் மீது

காயமடைந்த அந்த வீரன் தனது காலை நீட்டிக்கொண்டு இருந்தான்.

அதன்பின் பத்திரகலுஷன் அந்த வீரனைத் தைத்திருந்த கப்புங்கிளையுமுள்ள முள்ளுருவமான அஸ்திரத்தை அடியோடு வெட்டியெடுத்து எறிந்து விட்டுக், கசப்பான ஒரு மூலிகையை நன்ருக நசுக்கிப் பிசைந்து, அந்த இரணத்தைக் கழுவி, அதில் அந்த மூலிகையின் சாற்றை யூற்றி அழுத்தித் தேய்த்தான். அக்கணமே இந்த ரணத்தைச் சுற்றிலுமிருந்த சதையின் ஒளி குன்றியது. இரணத்திஞல் உண்டாயிருந்த வேதனையும் ஒரேயடியாய் நின்று விட்டது. இரத்தப் பெருக்கும் அடங்கி விட்டது.

—— o ——

## பன்னிரெண்டாம் அத்தியாயம்

# கிரேக்கர்களது கோட்டை மதிலின் அருகில் நடந்த யுத்தம்

கதைச் சுருக்கம்:—கிரேக்கர்கள் தங்களுடைய அரண்களுக்குள் புகுந்து பதுங்கிக் கொள்ளுகின்றனர். ஹெக்டர் அவர்களைத் தாக்க முயல்கிறுன். ஆனல் அவனுக்கு அவர்களது அரண்மனையைச் சுற்றியிருந்த அகழ்களைக் கடந்து செல்ல முடியாமல் போகின்றது. அப்போது பாலிதாமஸ் என்பவன் துரோஜர்களனைவரும் தங்களது இரதங்களை விட்டு இறங்கிப் பாதசாரிகளாகச் சென்று கிரேக்கர்களைத் தாக்க வேண்டும் என்று யோசனை சொல்லுகின்றுன். துரோஜர்கள் அவ்வாறே செய்யத் தீர்மானித்துத் தங்களுடைய பதாதி சைனியங்களை ஐந்து கூறுகளாகப் பிரித்துக் கிரேக்கர்களைத்தாக்க ஆரம்பிக்கின்றனர்.

அச்சமயம் ஒரு கழுகு தன்னுடைய நகரங்களில் ஒரு ஸர்ப்பத்தைப் பிடித்துக் கொண்டு துரோஜர்களது வாம பாகத்தில் வருவதைக் கண்ணுற்ற பாலிதாமஸ், அது ஓர் அபசகுனமென்று கருதி அவர்களைப் பின் வாங்கி வருமாறு சொல்ல, ஹெக்டர் அதற்கு இணங்காமல் கிரேக்கர்களைத் தாக்கிக் கொண்டு செல்கின்றுன்.

இவ்வாறு இரு திறத்தாரும் ஒருவரை யொருவர் பன்முறையும் தாக்கி மோதுகின்றனர். அப்போது ஸார்ப்பிடன் கிரேக்கர்களது கோட்டையின் ஒரு பாகத்தில் ஒரு சுவரை முதன் முதலாக இடித்து விடுகின்றுன். அதன் மேல் ஹெக்டர் பிரம்மாண்டமான ஒரு பாருங்கல்லை யெடுத்து அந்தக் கோட்டையின் வாயிற் கதவுகள் ஒன்றின் மேல் எறிந்து அந்தக் கதவைப் பலவந்தமாகத் திறந்து விடுகின்றுன். பின்பு அவனும் அவன் சேனைகளும் அந்தக் கதவின் வழியே அந்த அரண்மனைக்குள் பிரவேசித்து கிரேக்கர்களைத் துரத்திக் கொண்டு செல்லுகின்றனர். கிரேக்கர்கள் தங்கள் கப்பல்களுக்கு ஓட்டம் பிடித்து வருகின்றனர்.

---

இவ்வாறு அந்த வீரன் பரமகருணையுடனும் பரிபவத்துடனும், காயம் பட்ட தனது நண்பனுக்குச் சிகிச்சா உபசாரம் செய்து, அவனுடைய தளர்வுகளையெல்லாம் நீக்கிக் கொண்டிருக்கையில், துரோஜர்களும் கிரேக்கர்களும் ஒருவரோடொருவர் கை கலந்து பொருது வந்தனர். அவர்கள் அவ்வாறு பொருது வருகையில் அவர்கள் கேடயங்கள் ஒன்ருேடொன்று மோதின. அப்போது அந்த யுத்த களம் முழுவதிலும் கல கல வென்ற

சப்தமே நிறைந்திருந்தது. இருதிறத்தாரும் விடேன் கொடேன் என்று பொருது வந்ததால் இருகக்ஷியிலிருந்த சைனிகர்களில் அனேகர் தங்களது உயிரை விட்டனர்.

இவ்வாறு யுத்தம் நடந்து வந்த பொழுது கிரேக்கர்கள் வெட்டி யிருந்த அகழ்களாவது கட்டியிருந்த உன்னதமான கோட்டை மதில்களாவது அவர்களுக்கு வெகுகாலம் ரக்ஷையாக இருக்கவில்லை. தங்களுடைய காப்புத் தெய்வங்களுக்கு உரிய பூஜைகளையும் உபசார மரியாதைகளையும் நைவேத்தியங்களையும் செய்யாமல், கிரேக்கர்கள் அந்தக் கோட்டை கொத்தளம் முதலிய அரண்களைக் கட்டியிருந்ததினால், அந்தத் தெய்வங்கள் அவர்களுடன் முரண்பட்டு அவர்கள் எழுப்பியிருந்த மதில் களையும், வெட்டியிருந்த அகழ்களையும் பயனற்றவையாகச் செய்து விட்டன.

தெய்வங்களின் ஸஹாய மின்றி மர்த்தியர்கள் தத்தம் கையால் நிறுவும் அதிகம்பீரமான கட்டடங்கள் வெகுவாக நிலைத்து நிற்குமோ? அவற்றின் ஆருயிர் அற்பமேயன்றோ!

என்றாலும் வீரர்களான ஹெக்டரும் அகிலேசனும் கொடுங் கோபத்துடன் கொதித்து வந்த வரையிலும், ட்ராய்த் திரு நகரத்தார், தங்களுடைய சத்துருக்களை யெதிர்த்து வந்தவரையி லும், கிரேக்கர்கள் கட்டிய இந்தக் கோட்டை கொத்தளங் களும் அகழ்களும் அழியாமலே நின்று வந்தன,

இந்த யுத்தத்தில் ட்ராய் நகரத்து மக்களெல்லாம் பிராணனை யிழந்தனர். அந்நகரும் தீக்கிரையாயிற்று. அதன் பின் கிரேக்கர்களது கட்சியில் மீந்திருந்தவர்களெல்லாம், தங்களுடைய சொந்தத் தேசங்களுக்குத் திரும்பிச் சென்றுவிட் டனர். அப்போது நெப்தியூனும் அப்பால்லோ தேவரும், ட்ராய்க்குச் சமீபமாகக் கடற்கரையை ஒரே குலுக்காய்க் குலுக் கினார்.

ஐடா மலைச் சிகரங்களிலிருந்த நீர் நிலைகள் பெருக் கெடுத்துப் பிரவஹித்து வந்தன. ரீஸஸ், ரோடியஸ் என்னும் சிற்றாறுகள் ஒன்றாய்க் கலந்தன. கரிஸஸ்ஸூம், பேரரவத்துடன் கற்பாறைகளின் மேல் தடதட வென்று வழிந்து வந்தது. ஈலிப் பஸ்ஸூம், கிரானிக்ஸூம் ஒன்றாய்ச் சேர்ந்து, அதிவேகத்துடன் புரண்டு வந்து தங்களாலான நாசங்களைச் செய்தன. அவ்வாறே என்றும் நிறைந்ததும் வற்றாததுமான ஜான்தஸ் நதியும் தனது உற்பத்தி ஸ்தானத்திலிருந்து நுரைகளைக் கக்கிக் கொண்டு புறப்பட்டு வந்து, தன்னாலான நஷ்டங்களைச் செய்தது.

அப்போது அந்த யுத்தத்தில் இரு கக்ஷியில் இருந்தும் மடிந்த, தேவர்களுக்குச் சமானமான, வீரர்கள் தங்களுடைய தலைப் பாகைகளுடனும் கவசங்களுடனும் ஸமோஹி வளைகுடா

வில் விழுந்தனர். அங்கு மோதிவந்த அலைகள், அவற்றைத் தட தட வென்று அடித்துக் கொண்டு ஸமுத்திரத்தை நோக்கிச் சென்றன. அவ்வாறு செல்லுகையில் பீபஸ் பகவான் அவற்றின் வழியை யறிந்து அவற்றை அவை வந்த வழியே திருப்பி விட்டார்! அவைகள் வந்த வழியே திரும்பிப் பாய்ந்து சென்று ஒன்பது நாட்பரியந்தம், கிரேக்கர்கள் கட்டியிருந்த கோட்டை கொத்தளங்களை மூழ்கடித்து மறைத்து விட்டன! அப்போது அவ் வெள்ளத்தின் வேகத்தையும் கனத்தையுந் தாங்க முடியா மல் அசைந்தாடித் தளர்ந்து பெயர்ந் தெழுந்த, அக்கோட்டை களின் அஸ்திவாரங்கள் அந்த வெள்ளத்திலேயே மிதந்து கொண்டு திரும்பவும் கடலை நோக்கிச் சென்று, அதற்கு இரை யாயின! இடிக் கடவுளும் அப்போது வாளாவிருக்கவில்லை. அவரும் தமது ஸ்வரூபத்தைக் காட்டினார். அவரது ஆணைப்படி சமீபத்திலிருந்த மலையிலிருந்து, கணக்கிலடங்காத அருவிகள் சிறிதும் இடைவிடாமல் உருண்டு வழிந்து வந்தன! மடையை உடைத்துக் கொண்டு பாயும் வெள்ளங்களைப் போல் ஆகாயத் தின் ஒரு பாதியிலிருந்து கனமான மழையும் பொழிந்தது.

சமுத்திர ராஜரும் பிரம்மாண்டமான தமது திரிசூலத்தை ஏந்திக் கொண்டு கடுத்த முகத்துடன் முன் சென்று, ஏற்கனவே நடுங்கிக் கொண்டிருந்த அந்தக் கடற்கரையை இடித்துப் பொடி யாக்கினார்! பெரும் பாறைகளையும் குன்றுகளையும் அவற்றின் நிலையிலிருந்து பெயர்த்துத் தகர்த்தார்! அவை அவை களால் மோதுண்டு புழுதியும் தூசியுமாக மாறி உயரக் கிளம்பி, அந்த ஆகாய வீதியையே இருண்ட புகையில் ஒளித்து விட்டன!

இவ்வாறு அதியற்புதமாக நிர்மாணிக்கப்பட்ட அந்தக் கோட்டையானது பட்டுப்போன்ற நொய் மயமான மணலினாலும் வெள்ளத்தினாலும் மூடப்பட்டு ஒரே மட்டமாக விளங்கியது. இப் போது அந்தக் கோட்டை கொத்தளங்களின் குட்டிச் சுவர்கள் கூடக்கட்புலனாகவில்லை! மேற்சொல்லிய நதிகளும் இப்போது, முன் போல் தங்களுடைய கரைகளின் இடையிலேயே ஓடிக்கொண்டு இருக்கின்றன. அவை, தங்களது இயற்கைப்படி குன்றுகளின் இடையில் மில்னல்போல் மின்னிக்கொண்டும், சமவெளிகளில் மெதுவாய்ப் பாய்ந்து கொண்டும் செல்கின்றன. ஆனால் இவை யெல்லாம் அத்தெய்வங்கள் பிற்காலத்தில் செய்த காரியங்கள்.

இந்த யுத்தம் நிகழ்ந்த காலத்தில் அக்கோட்டைகளும், கொத்தளங்களும், திடமாகவே நின்றும், சத்துருக்களை யெதிர்த்தும் வந்தன. கோட்டை வாசல்களின் முன்பாக இடிகளைப்போன்ற அதிர்ச்சி முழக்கங்களுடன், கொடிய யுத்தங்கள் நடந்து வந்தன. உபயகக்ஷியிலிருந்த வீரர்கள், ஒருவரையொருவர் அடித்து மோதிக் கொண்டபொழுது அவர்களுடைய கவசங்கள் கலகலவென சப் தித்தன. அவற்றின் எதிரொலியும் அந்தக்களம் முழுவதிலும் நிறைந்திருந்தது. அச்சமயம் வீரர்கள் வடித்த இரத்தமானது ஆகாயமளாவித் துள்ளித் தெறித்தது. அந்தக் கோட்டைகளின்

மேலிருந்த, கோபுரங்களேயுந் தாக்கி, அவற்றைக் கறைப் படுத்திச் சுத்தமாக்கி விட்டன.

இவ்வாறு ஜோவ் தேவரது கையினுலேயே தாக்கப்பட்டு, அதிபயமும் பீதியுமடைந்த கிரேக்கர்கள், காலியாகவிருந்த தங்களுடைய கப்பல்களே நோக்கிச் சென்று, அவற்றின் அருகில், நெருங்கிப் படுத்துக்கிடந்தனர். அவர்கள் எப்போது ஹெக்டர் வந்து விடுவானே, என்று நடுங்கினர்கள். காற்றுச் சிறிது அசைந்தால் ஹெக்டர் தான் வந்து விட்டான் என்று கலங்குவார்கள்! ஹெக்டருக்கு எவ்வாறு தப்புவோம் என்று ஏங்குவார்கள்! இவ்வாறு சிதறுண்டுபோன அந்தச் சேனு ஸமுத்திரத்தை அவன் ஒரு சுழல்கால்போல் தூற்ற, அந்த வீரர்களும் சைனிகர்களும், வழியோ திசையே தெரியாமல் ஒருவரோடொருவர் மோதி முட்டிக்கொண்டனர். அவ்வாறு அவன், ஸாஹஸக் காரியங்களேச் செய்துகொண்டு, அந்த யுத்தகளம் முழுவதிலும் ஓடியாடித் திரிந்தான்.

வேட்டை நாய்களுக்கும், துணிவுள்ள வேடர் குழாங்களுக்கும் மத்தியில் தன்னுடைய சக்திகளனைத்தையும் ஒன்ருய்த் திரட்டிக்கொண்டு, பயங்கரமான உருவத்துடன் நின்று வரும், ஒரு காட்டுப் பன்றியைப்போல் அல்லது சிங்கத்தைப்போல் அவன் நிர்ப்பயமாய் அங்கு நின்று வந்தான். ஆயுதபாணிகளான சத்துருக்கள் அம் மிருகத்தைச் சூழ்ந்துகொண்டு வளைந்து நின்று தங்களுடைய ஈட்டிகளேயும் வேலாயுதங்களேயும் அதன்மேல் எறிய அவை பாம்புகளேப்போல் சீறிக்கொண்டு வந்து, அம் மிருகத்தின் மேல் ஓர் இரும்பு மழையைப்போல் விழுகின்றன. அந்தக் காட்சி அதிபயங்கரமானதாகத் தோற்றும்!

ஆனல் அம் மிருகத்தின் மனவலிவும் தேகவலிவும் ஆத்திரமும் சிறிதும் குறைவதில்லே! தன்னே யெதிர்த்து வந்தவர்கள் அனைவரையும் அது, தான் மாத்திரம் தன்னந் தனியாய் எதிர்த்து வருகின்றது. அது இப்புறமோ, அப்புறமோ திரும்பினல் அதைக் கண்ணுற்ருேர் அனைவரும் பீதியடைந்து ஒரே ஓட்டமாகப் பஞ்சாய்ப் பறந்து விடுகின்றனர். அது பொங்கிக் கொதித்து நுரையைக் கக்கிக்கொண்டு தன்னுடைய விழிகளே உருட்டி யேற இறங்கப் பார்த்துக்கொண்டு சத்துருக்களின்மேல் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்கின்றது! அவ்வாறு பாய்கையில், அது தற்செயலாய்த், தானே விழுந்து விட்டால் அவ்வீழ்ச்சிக்கு அதன் துணிவே காரணமும் ஆகி விடுகின்றது!

அதைப் போலவே, சத்துருக்களால் நாற்புறமும் சூழப்பட்டிருந்த ஹெக்டர், கோபாவேசங்களுடனும், ஆத்திர ஆவல்களுடனும் பொங்கிக்கொதித்தான்; ஜொலித்தான். தன்னுடைய சேனைகளுக்கு உற்சாகத்தை யூட்டினன். அவர்களுக்கு கிரேக்கர்களுடைய அகழ்களேச் சுட்டிக் காட்டினன்; அப்போது நெட்டுயிர்ப்புடன் துடித்துக்கொண்டிருந்த துரகங்களின் நாசித் துவாரத்

திலிருந்து நெருப்புப் பொறிகள் வெளிக் கிளம்பி வந்தன! அவை, தங்களது காலடியின் கீழிருந்த அகாதமான அகழ்களைக் கண்ணுற்றுச் சீறின, கதறின. அந்த அகழ்களின் அருகிற்சென்று அவற்றின் கரையைச் சேர்ந்த பொழுது அவை கனைத்தன; தரையை யிடித்தன, பிருண்டின. புற்பூண்டுகள் நிறைந்திருந்த அந்தத் தரை, அக்குதிரைகளின் இடியையும் மிதியையும் தாங்க முடியாமல், ஒரேயடியாய் நடுங்கியது. அந்த நடுக்கத்தினுல் உண்டான சப்தமானது, ஆகாயத்தை யளாவி, யுயர்ந்து, எழும்பிச்சென்று, எதிரொலியைக் கிளப்பிற்று.

அப்போது அக்குதிரைகள் தங்களுக்குக் கட்புலனுன, இருண்டும் ஆழமாகவுமிருந்த அந்த அகழ்களை ஆவலுடன் கண்ணுற்றுப் பார்த்தன. அவை அதிவிசாலமாகவும் செங்குத்தாகவும் இருந்தன, அவற்றின் அடிப்பாகம் வெறுந்தரையாகவும் இருந்தது, அங்கு ஜலமோ, புற்பூண்டுகளோ ஆகிய ஒன்றும் இருக்கவில்லை. ஆனுல், அங்குக் கூரான முனைகளுள்ள கழுமரங்கள் மாத்திரம் நெருக்கமாக ஊன்றப்பட்டிருந்தன. அவை ஒரு முட்பன்றியின் முட்களைப் போலவே அடர்ந்திருந்தன. அந்தக் காக்ஷி ஒரு மஹா பயங்கரமான காட்சியாகவே யிருந்தது.

அப்பொழுது, அதிபுத்திசாலியும், அதி தைரியவானுமான பாலிதாமஸ் அந்த அகழின் குறுக்காக விருந்த ஆழமும் ஒடுக்கமுமுள்ள வழியைக் குதிரைவீரர்கள் கடந்து செல்ல முடியாது என்றும், அதைப் பதாதிகளால் தான் கடக்கமுடியும் என்றும் அறிந்து, ஹெக்டரை விளித்து, அவனது ஆத்திரத்தைத் தணித்து அவனுக்குப் பின்வருமாறு யோசனைகள் சொன்னுன்:—

"வாராய்! மஹா வீர! துரோஜப் பிரஜைகளின் தலைவ! வாராய், புறநாடுகளிலிருந்து திரண்டு வந்து, இந்த யுத்தத்திற் கலந்துகொண்ட தலைவர்களே வாருங்கள்! யுத்தத்திற்கு வேண்டிய ஆயுதங்களும், கவசங்களும் ஏராளமாக ஏற்றி நிறைத்துக்கொண்டுள்ள நம்முடைய ரதங்கள் இந்த அகழ்களில் எப்படி இறங்கும்? இவற்றில் நுழையவும் அவற்றிற்கு இயலுமோ? இந்த அகழ்களின் அடிப்பாகத்தில் கழி மரங்களும், பின்புறத்தில் கிரேக்கர்களின் கோட்டை மதில்களும் இருக்கின்றனவே! ஆயிரக்கணக்கான வெட்டும் குத்தும் காயமுமேற்காமல், இந்த அகழ்களைக் கடந்து முன் செல்ல நம்மால் இயலுமோ, இயலாதன்றே?

அவ்வாறு முன் சென்றேம், என்றே வைத்துக் கொண்டாலும், அங்கு ஊன்றி நின்று, போர்புரிய விசாலமான இடமாவது உளதோ? அதுவும் இல்லை! அங்குள்ள இடம் மிகவும் ஒடுக்கமாகவே இருக்கின்றது.

சர்வ வல்லமையுமுள்ள ஜோவ் தேவரின் பூரணமான கிருபை நமக்குச் சித்தமாய்க் கிடைத்து விட்டது, என்ற பெருமிதமும், மதமுங்கொண்டு, விஷயங்களை முன்பின் ஆராய்ந்து

ஆலோசனைகள் செய்யாமல், நாம், பெரிய ஆபத்துக்களும் அபாயங்களும் நிறைந்துள்ள சில காரியங்களில் இறங்கி விட்டோம்! நம்முடைய சத்துருக்களை அடக்கி விட வேண்டும் என்பதுதான் ஜோவ் தேவரின் ஸங்கற்பம் என்பது உண்மையானால், அவர் இந்த நிமிஷமே, இந்த கிரேக்கர்களது நாமத்தையே அழித்து, தங்களது ஜன்ம தேசமான ஆர்காஸை விட்டு நெடுந்தூரத்திலுள்ள இங்கு வந்திருக்கும் இந்த கிரேக்க வீரர்களை அவர் ஒரேயடியாய் வெட்டி வீழ்த்தி விடலாமன்றோ! ஒரே ஒரு பெருநாளில் அவர்களனைவரும் பட்டு விழுந்து மண்ணில் மறைந்து விடலாமே!

அவ்வாறின்றி அவர்களனைவரும் நம்மை நோக்கித் திரும்பி வந்து எதிர்த்து, நம்முடைய பரிவாரத் தாரனைவரையும் தாக்கியடித்து விட்டால், நாம் தப்பிப்பிழைப்பது எப்படி? அப்போது நமது கதி என்னவாகும்? திரும்பிப் பின்னிடைந்து வருவதற்கு நாம் என்ன உபாயங்களைச் செய்யவல்லோம்! இந்த அகழில் ஊன்றி யடிக்கப்பட்டுள்ள ஒரு பெரிய ஆப்பைப் போலன்றோ நாம் இப்புறமும் அப்புறமும் திரும்ப வழி யின்றித் திரு திருவென்று விழித்துக் கொண்டு தவித்து நிற்போம்! அப்போது வீரர்களும் ஸைனிகர்களும் இன்னது தான் செய்ய வேண்டுவது என்பதை அறியாமல் திகைத்துக் கலங்குவார்கள். அப்போது நாமனைவரும் பெரியோன், சிறியோன், தலைவன் தாழ்ந்தோன், ஆண்டான், அடிமை என்ற வித்தியாசங்கள் ஒன்றுமின்றி ஒரேயடியாய் ஒருங்கே மடிந்து அழிந்து போய் விடுவமன்றோ!

இவ்வாறு கிரேக்கர்கள் மாத்திரம் ஜெயித்து விட்டால், ட்ராய் முழுதுமே அழிந்து போம், நாம் அனுபவித்த கஷ்ட நஷ்டங்களைச் சொல்வதற்கு ஓர் ஆள்கூட மிஞ்ச மாட்டான். ஆதலால் வீரர்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள். சற்றும் ஆக்ஷேபஞ் சொல்லாமல் என் சொற்படியே காரியங்களைச் செய்யுங்கள்.

உங்களுடைய போர்க் குதிரைகளை அகழ்களிலிருந்து உடனே திருப்பிக் கொண்டு வாருங்கள். அவற்றின் சாரதிகளை அக் குதிரைகளிலிருந்து கீழே இறங்கி நெருக்கமாக அணிவகுத்து ஒன்றாய்க் கூடி கால் நடையாக இந்த அகழ்களுள் இறங்க அனுப்புங்கள். அனைவருக்கும் தலைவனான ஹெக்டரே முன் செல்லட்டும். அப்படிச் சென்றால் நாம் ஜயசீலர்களாகவே விளங்குவோம். நமது முன்னால் கிரேக்கர்கள் தங்களது தலையைக் குனியவே செய்வார்கள். ஜோவ் தேவரது கிருபை மாத்திரம், நமக்கு இருக்குமானால், இந்த முகூர்த்தமே கிரேக்கர்களது அந்திம காலமாக முடியலாம்!" என்றான்.

இந்த யோசனையானது எல்லோருக்கும் சம்மதமானதாகவும் பிரியமானதாகவுமிருந்தது. தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர், அந்தக்ஷணமே தனது ஆசனத்திலிருந்து விரைந்து துள்ளிக்

கொண்டு எழுந்தான். அவ்வாறு எழுகையில் அவன் அணிந் திருந்த கவசங்கள் கணீர், கணீர் என்று ஒலித்தன.

அரசனெப்படி, குடிகளப்படி என்றபடி தங்களது தலைவ னை ஹெக்டருடைய நடவடிக்கைகளை அனுசரித்து நடப்பவர் களான அவனுடைய பரிவார ஜனங்கள் அவனையே பின்பற்றித் தங்களது இரதத்திலிருந்து இழிந்து கீழே இறங்கி, அந்த யுத்த களத்தில் வந்து சேர்ந்தனர். பின்பு அவர்கள் தங்களது பாளையத்தின் அருகிலிருந்த லாயங்களுக்குத் தங்களுடைய குதிரை களைக் கொண்டு சென்று சேர்க்கும்படித் தங்களுடைய இரதங் களின் சாரதிகளுக்குக் கண்டிப்பான உத்தரவுகளை விடுத்தனர். அந்த உத்தரவுகளின் பிரகாரம் அவர்களுடைய சேனைகள் ஐந்து பெரும் பிரிவுகளாகப் பிரிந்து, தத்தம் தலைவர்களது ஆணைப்படி நடக்கலாயின.

அப்பிரிவுகளில் முதலாவதான பிரிவில் உத்தம குணங் களுள்ள தைரிய சாலிகளான வீரர்கள் நிறைந்திருந்தனர். அவர்களனைவரும் ஒன்ருய்ச் சேர்ந்து ஆலோசனைகள் செய்து யுத்தத்தைத் திரும்பவும் தொடங்கவும் வேண்டும், அதை ஊக்கத் துடன் நடத்தவும் வேண்டும் என்று தீர்மானித்தனர். அவ்வாறே செய்ய வேண்டு மென்றும் துடித்தனர். ஆத்திரங் கொண்டனர். கிரேக்கர்களுடைய கடற்படைகளைத் தீக்கிரையாக்கி விடுவோம் என்று பயமுறுத்தினர்.

இவ்வாறு ஆத்திரத்துடன் முன் வந்தவர்களில் அதி பராக்கிரமமும் கீர்த்தியுமுள்ள மஹானை ஹெக்டரே முதல்வனுக விளங்கினுன். அப்பொழுது அவனுக்குப் பாலிதாமஸும் வீரிய வானை ஸிப்ரோனியஸ்ஸும் அவனை விட்டுப் பிரியாத் துணைவரா யிருந்தனர்.

இரண்டாஞ் சேனையின் முன்னணியில் பிரியதனனை பாரீஸ் பிரகாசத்துடன் பிரமுகனுக விளங்கினுன். அவனுக்குத் துணையாகத் துணிவுள்ள அல்காத்தோஸ் என்பவனும் அஜினரும் சேர்ந்திருந்தனர்.

பிரியம் மஹா ராஜனுடைய புதல்வர்களான தெய்வோவஸும் தீர்க்க திருஷ்டி யுடையோனை ஷெலினஸ்ஸும் மூன்ருஞ் சேனையின் தலைவர்களாக விளங்கினர். அவர்களுக்குத் துணைவனுக மஹா பலவானை ஆஸியூஸ் என்பவன், ஆயுத பாணியாக அவர்களது அருகில் நின்றுகொண்டிருந்தான். அவன் ஹிர்த்தக்கஸ் என்பவனது உத்தமமான பரம்பரையில் வந்தவன். அவன் சவாரி செய்து வந்த அரியின் நிறங்கொண்ட போர்க் குதிரைகளெல்லாம், அரிஸ்பா நாட்டில் உள்ள வளைவான செல்லையின் கரையோரத்தில் மேய்ந்து வந்தவை.

அந்திருரின் புதல்வர்களும், விசேஷமான சுனேகள் நிறைந்த ஐடாமலேயில் உதித்தவனுன ஈனியஸ் என்னும் மஹா வீரனும், நான்காம் பட்டாளத்தின் தலேமையை வகித்து வந்தனர்.

கடைசியாக உள்ள சேனேயானது திவ்விய ஸ்வரூபியும், தேவர்களுக்குப் பிரியனுமான ஸ்ார்ப்பிடனது ஆணேக்கு அடங்கி யிருந்தது. அவனுக்குக் கிளாக்கஸுும் அஸ்டரோப்பியஸ்ஸுும் உதவியாக விருந்தனர்.

ஐந்து பெரும் பிரிவுகளாக விளங்கிய அந்தச் சேனேயின் தலேவர்களிலெல்லாம், ஸார்ப்பிடானே முதல்வனுக விளங்கினுன். துரோஜர்களது குழாத்திலிருந்த அதிதைரியசாலிகளான மற்றைய வீரர்களெல்லாம் அவனுக்கு அடுத்தபடியாகவே தத்தம் சேனே களின் முன்னணிகளில் இருந்து கொண்டு வந்தனர்.

இனிமேல் நடந்த காரியங்களேச் சொல்லுவேன் கேளுங்கள் :—

தங்கள் தங்கள் தேகங்களுக்குப் பொருத்தமான கவசகேட யங்களே யணிந்து கொண்டு, நெருக்கமாக, அணிவகுத்துச் சிறிதும் இடையின்றி நின்று வந்த வீரர்களும் ஸைனிகர்களும் கூடிய அந்தப் பெருஞ் சேனேகள் விரைவாக நகர்ந்து தலேகுப்புற முன் சென்றன. அந்தச் சேனேயோரனேவரும் கிரேக்கர்களுடைய கடற்படைகளேத் தாங்கள் ஏற்கனவே தீக்கிரையாக்கி விட்ட தாகவும், கிரேக்கர்களனேவரும் மூச்சடை பட்டுத் தங்களது காலடியில் விழுந்தே விட்டதாகவும் நினேத்து விட்டனர் !

இவ்வாறு துரோஜர்கள் குழாத்திலிருந்த ஒவ்வொரு வீரனும் அவர்களுக்குத் துணேயாய் வந்த மற்றையோரும் மஹா புத்திமானுன பாலிதாமஸ்ஸின் யோசனேயை யனுசரித்து வரு கையில், ஆலிப்ஸ் என்பவன் மாத்திரம் தனது இரதத்தை விட்டு இறங்காமல், அதிலேயே இருந்த வண்ணம் காரியங்களேச் சாதித்து விடலாம் என்ற பூரணமான நம்பிக்கையுடன், தன் னுடைய பிரஸித்தி பெற்ற குதிரைகளே ஓட்டிக் கொண்டு, இந்த யுத்தத்தை ஒரு கைப் பார்த்தே விடுவேன் என்று முன் சென்ருன். ஐயோ ! இந்த வீரனுக்கு நல்ல அதிர்ஷ்டம் இல்லாமற் போயிற்றே ! இவனுக்கு நல்லோருரைத்த புத்திமதிகள் வீணே யாயின. இவனது தேர் திரும்பி வரவில்லே. அது திரும்பி வந்தது என்று சொல்வதற்கு ஆதாரமான அதன் அடிச் சுவடுகளே அக்களத்தில் ஒருவரும் காணவுமில்லே ! இனி அவனுடைய குதிரைகள், வெற்றியுடன் மகிழ்ந்தனவாய்த் தங்களது தலேவனே மதில் சூழ்ந்த ட்ராய் நகரத்திற்குள், திருப்பிக் கொண்டு வந்து சேர்க்கவும் மாட்டா !

கிரேக்கர்களுடைய கோட்டை மதில்களின் பின்புறத்தில் யமதர்ம ராஜன் தனது அதிகாரத்தைத் தங்கு தடையின்றிச்

செலுத்தி வந்தான். எங்கு பார்த்தாலும், கோரமானவதையும், சாவுமே நடந்து வந்தன. ஓர் இருண்ட மலைபோல் பிணங்கள் குவிந்தன. மஹானுன இதோமினியஸ்ஸும் கிரேக்கர்களை அடியோடே அழித்து விடுவேன் என்று சபதங் கூறினுன், துடித்தான்! அவன் மிகுந்த ஆத்திரத்துடனும் வேகத்துடனும் இடது புறமாகத் தனது இரதத்தை ஓட்டிக்கொண்டு சென்முன்.

அப்போது அந்தக் களத்திலிருந்த கிரேக்கர்கள் அனைவரும் தங்களுடைய கப்பல்களில் ஏறிக்கொண்டு, தப்பிப் பிழைக்கலாம் என்ற எண்ணத்துடன் ஓட்டம் பிடித்தனர். அவர்களுடைய இர தங்களும் துரகங்களும் வெகு துரிதமாக ஓடிச் சென்று அவர்களு டைய கோட்டை மதில்களின் உட்புறம் புகுந்து விட்டன. அவர் களில் கடையாய் வந்தவர்களுங்கூட அரைப்பாகம் மாத்திரமே திறந்திருந்த அக்கோட்டைக் கதவுகளின் வழியே துரிதமாக உட் புகுந்து உயிர் தப்பினர்!

அவ்வாறு அவர்கள் தனது கைக்குப் பிடிபடாமல் தப்பி ஓடிவிட்டதைக் கண்ணுற்ற அந்த இதோமினியஸ், அதனுல் மனந்தளராமல் தன்னுடைய வீரசூர பராக்கிரமங்களிலேயே விசேஷமான பெருமையும், நம்பிக்கையுடையவனுய், அவர்களையே நோக்கி வேகமாய்ப் பறந்து சென்முன். அவனுடைய பரிவார ஜனங்களும், அவனுக்கு மேன்மேலும் உற்சாகம் உண்டாகுமாறு ஆர்ப்பரித்துக்கொண்டு அவனைப் பின்தொடர்ந்து சென்றனர். அவர்கள் செய்த ஆரவாரமும் இரைச்சலும் முழக்கமும் ஆகாயத் தைப் பிளந்தே விட்டன! அவர்கள் கிரேக்கர்களனைவரையும் ஒரேயடியாய்க் கடலில் கவிழ்த்து ஆழ்த்திவிடல் வேண்டும் என்ற பேரவாவுடையோராயிருந்தனர்! ஆனுல் அது நிறைவேருமல் போய்விட்டது!

யுத்தங்களை வெற்றியுடன் செய்பவர்கள் என்ற பேரும் புகழு மடைந்திருந்த லாபிக்ஸ் குலத்தில் உதித்தவர்களும், அதிபலசாலி களுமான இரண்டு மஹா வீரர்கள், கிரேக்கர்களுடைய கோட்டை வாயில்களைக் காத்து வந்தனர். அவர்களில் ஒருவனுன பாலிபீடிஸ் என்பவன், பெரித்தூஸ் என்பவனது இளவல். மற்றையோனுன வியோண்டிமஸ் என்பவன் யுத்தக் கடவுளையே நிகர்த்தவன் என்முல் அவனை விசேஷித்துக் கூற வேண்டியது அவசியமில்லை யன்றே!

இருநிலம் பிளந்து சூழ்ந்துள்ள வேர்களும் கப்புங்கிளையுமாய் ஆகாயமளாவி உயர்ந்துள்ள முடிகளுமுடைய இரண்டு பிரம் மாண்டமான கருவாலி மரங்களைப்போல், அவ்விருவரும் அக் கோட்டை மதிலின் முன் நெடுநெடுவென உயர்ந்து நின்றனர். இலைகளையும் தழைகளையும் சிரோபூஷணங்களாகக் கொண்டும், நீண்ட கிளைகளையும், கைகளையும் அகலமாக விரித்துக்கொண்டும், உயர்ந்த குன்றுகளின்மேல் கம்பீரமாக நின்றுகொண்டு, தம்மேல்

அடிக்கும் பெருங்காற்றுக்கு ஈடுகொடுத்துச் சற்றும் அசையாமல், ஆழ்ந்த வேர்களுடன் உறுதியாய் நிற்கும் இரண்டு பெரிய விருட்சங்களைப் போன்றே, அவ்விரு வீரர்களும் அதிகௌரவமாக நின்றுகொண்டு, அதிவேகமாகவும் மூர்க்கமாகவும் தங்களைத் தாக்கி வந்த ஆலியஸ்ஸையும், அவனைப் போலவே ஆத்திரத்துடனும் துடித்து வந்த அவனுடைய பரிவார ஜனங்களையும் தடுத்து மறித்து வந்தனர்.

அப்போது ஒரேஸ்டிஸூம் ஆக்காமஸ்ஸூம் அவர்களுக்கு முன்புறமாகவும், ஈனோமாஸூம் தூவோனும் பின்புறமாகவும் வந்து அவர்களைத் தாக்கினர். உரத்துக் கூவினர். பேரிரைச்சலிட்டனர். ஆனால் அக் கூக்குரல்களினாலும், இரைச்சலினாலும், கண்ணெட்டும் தூரம் வரை விசாலமாகப் பரந்து கிடந்த அந்தப்போர்க்களங்களில், எவ்விதமான குழப்பமோ, கலக்கமோ உண்டாகவில்லை. அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்தபொழுது, அவர்கள் அணிந்திருந்த கவசங்கள் ஒன்றோடொன்று தாக்குண்டு, பெருத்த சப்தங்களைச் செய்தன. அந்தச் சப்தங்களினாலும் ஒருவிதமான பயனும் உண்டாகவில்லை. அஞ்சா நெஞ்சமும், துவாரபாலகர்களுமான, அவ்விரு சகோதர்களும் 'கடற்படையைக் காக்க வாருங்கள்! அந்தக் கோட்டை மதில்களை இரக்ஷிக்க வாருங்கள்!' என்று தங்களுடைய ஸஹாக்களான கிரேக்கர்களை உரத்துக் கூவியழைத்தனர்!

கறுத்த நிறமான ஆயுத முஸ்தீபுகளும் ஆடையாபரணங்களும் அணிந்திருந்த ட்ராய் நாட்டார் ஒரு பெருத்த மழையைப் போல் தடதடவென்று தங்களை நோக்கி வருவதையும், கோட்டை மதில்களின் மேலிருந்த கோபுரங்களிலிருந்து கிரேக்கர்கள் நிலைகுலைந்து ஒருவர் மேல் ஒருவர் விழுந்துகொண்டு இறங்கி வருவதையும் கண்ணுற்ற பொழுதுகூட, மனக்கலக்கமென்பது அறியாத இவ்விரு வீரர்களும் தாங்கள் காத்து வந்த கோட்டை வாயில்களிலிருந்து, வேகமாக ஒரே பாய்ச்சலில் பாய்ந்து, முன்சென்று, தங்களது மார்பைத் தட்டிக்கொண்டு, சத்துருக்களனைவரையும், தாங்கள் இருவர் மாத்திரமே ஒருகை பார்த்து விடுவோம் என்ற உறுதியுடன் நின்றுவிட்டனர்!

வேட்டை நாய்கள் குரைப்பதையும் வேடர்கள் உரத்துக் கூவுவதையும் கேட்டுத் தங்களுடைய குகைகளிலிருந்து ஆத்திரத்துடன் எழுந்து துள்ளிக் குதித்து வரும் இரண்டு காட்டுப் பன்றிகள் இவ்வாறுதான், தங்களைச் சுற்றி நாற்புறமுமுள்ள பெருத்த மரங்களையெல்லாம் நறநறவென்று முறித்துத் தவிடுபொடியாக்கியும், சிறு செடிகளையும் புற்பூண்டுகளையும் வேரோடு களைந்து அந்தக் காட்டையே அழித்துப் பாழாக்கியும் விடுகின்றன. ஒரு பெருத்த காயமடைந்து அதனால் தங்களுடைய வக்கிரதந்தங்களை நெரித்துத் தீட்டிக் கூராக்கிக் கொண்டு, தங்களுடைய உருண்டு பெருத்த விழிகளை உருட்டிக் கொண்டு தங்களைச் சூழ்ந்துள்ள வேடர்களையும் வேட்டை நாய்களையும் உற்றுப் பார்க்கின்றன! இது நிற்க.

அப்போது நடந்த யுத்தத்தில் சத்துருக்களுடைய வேல்களும் ஆயுதங்களும் கீச், கீச் சென்றும் விர், விர், என்றும் ஓசையைச் செய்து கொண்டு, இவ்விரு வீரர்களது தலையைச் சுற்றிலும் நாற்புறமும் பறந்தன. அவை, அவ்வீரர்களுடைய வெண்கலக் கவசங்களைக் குறிபார்த்துத் தாக்கிய பொழுது, அக்கவசங்கள் கல, கலவென்றும் கணீர், கணீர் என்றும் எதிரொலிகளைக் கிளப்பிக் கொண்டு ஒலித்தன.

இவ்வாறு அதிமும்முரமாக யுத்தம் நடந்து வருகையில், கிரேக்க வீரர்கள் அனைவரும் தங்களுடைய கோட்டைகளையும், தாங்கள் ஒளிந்து கொண்டிருந்த கோபுரங்களையும், தங்களுடைய கடற்படைகளையும் காப்பாற்றுவதற்காகத், தங்களால் கூடிய ஸகல மான பிரயத்தனங்களையும் வெகு தைரியமாகச் செய்து வந்தனர். அப்போது அவர்கள் பெயர்த்தெடுத்து எறிந்த பெருத்த கற்பாறைகளும், தங்களது விற்களிலிருந்து விடுத்த அம்புகளும் ஒன்றுய்க் கலந்து பறந்து சென்ற பொழுது அது ஒரு பெரும் புயல்போலவே தோன்றியது!

உடலைக் குத்தித் துளைக்கும் போரியாஸ் என்னும் குளிர் காற்றுனது நாற்புறமும் அடிக்கையில் உறைபனிக்காலம், "நானும் வந்தேன்-வந்தேன்" என்று இறகுகளை விரித்துக்கொண்டு வரும் ஒரு பறவையைப் போல், அதன் பின்னுல் பறந்து வந்து வானத்தில் தாழ்ந்து தொங்கிக்கொண்டிருக்கும் மேகங்களைத் தாங்கினுல் அம்மேகங்களின் அடிப்பாகத்திலுள்ள பனித்துளிகள் படலம் படலமாக இறங்கி நிலத்தில் படிந்து அந்நிலத்திற்கே ஒரு வெண்ணிறத்தைப் பூசி விடுகின்றனவோ, அவ்வாறு இருதிறத்துச் சேனைகளிலிருந்த வீரர்களும், தங்களுடைய சத்துருக்களின்மேல் சரவருஷங்களைத் தடதடவென்று வேகமாகப் பொழிந்தனர்.

கணக்கிலடங்காத பாறைகளும், கற்களும் கோட்டை மதில்களினின்றும் தங்குதடையின்றி உருண்டு வந்தன! அப்போது அதிகனமும் கெட்டியுமான கவசங்கள் கலகலவென ஒன்றேடொன்று மோதிக் கொண்டு நொறுங்கித் தவிடு பொடியாயின. அவ்வொலிகளின் எதிரொலிகள் அந்த இடங்கள் முழுவதும் வியாபித்துப் பரவிச் சென்று, அவற்றைக் கேட்டோருடைய செவிகளைத் துளைத்து அவற்றைச் செவிடாக்கி விட்டன.

இவ்வாறு நெடுநேரம் யுத்தஞ் செய்து வந்தும் ஒரு பயனுங் காணுத ஆலியஸ் என்பவன் வெட்கி மனமிடிந்து ஒரு பக்கம் துக்கமும் மற்றெரு பக்கம் ஆத்திரமும் தன்னையிழுக்க, ஓர் உன்மத்தனைப்போல் மதிலிலிருந்து பின்வருமாறு பிரலாபித்துத் தேவர்களை நிந்தித்தான் :—

"அமரர்களை இனி யாரேனும் நம்புவார்களா? அவர்களுக்கு வீரசூர பராக்கிரமங்களுண்டு என்று இனிமேலும் யாரேனும் சொல்வார்களா? அவர்களை நேராகத் தரிசிப்போரும் இனி

அவர்களைப் போற்றித் துதிப்பார்களா? முகஸ்துதியும் செய்ய மாட்டார்களன்றோ! ஜோவ் தேவர், இவ்வாறு தம்முடைய அடியார்களை மோசஞ் செய்யலாமா?

ட்ராயின் வீரமென்ன? பலமென்ன? அரணென்ன? ஆயுத முஸ்தீப்புகளென்ன! அவைகளுக்கு இளைப்போ, சலிப்போ, அழிவோ குறைவோ வந்துவிடும் என்று யாரேனும் கனவிலாவது நினைத்திருப்பார்களா? ட்ராயின் முன் கிரீஸ் அழிந்தே போய் விடும், அதிற் சிறிதும் ஐயமில்லை என்றன்றோ எல்லோரும் எண்ணி யிருந்தனர்? கிரீஸின் நாசகாலம் வந்துவிட்டது என்றன்றோ, அனைவரும் திடமாக நம்பியிருந்தனர்?

ஒரு கற்பாறையின் மேல் கட்டப்பட்டுள்ளதும் தங்களை வருக்கும் பொதுவுமான ஒரு தேன் கூட்டைச் சத்துருக்கள் தாக்கி யடிக்க வந்துவிட்டால், சந்து பொந்துகளிலும், கூண்டுகளிலு முள்ள குளவிகளும், வண்டுகளும், எவ்வாறு கூட்டங் கூட்டமாக வெளியில் கிளம்பி வந்து அப்பாறைகளிலேயே ஒரு பேரிருள் போல் மறைத்துக் கொண்டு இளைப்போ சலிப்போயின்றித் தங்க ளுடைய இறக்கைகளால் அச்சத்துருக்களை அடித்தும் புடைத்தும் தங்களது கொடுக்கினுல் அவர்களைக் குத்திக் கொட்டிக் கடித்தும் கொடிய துன்பங்களை உண்டாக்கித் தங்களுக்கு வெற்றியோ, வீழ்ச்சியோ உண்டாகும் வரை, அஞ்சா நெஞ்சமும் தளராத உறுதியுமுடைய ஒரு வீரகணத்தைப் போல் போராடுகின்றனவோ, அவ்வாறே இந்த கிரேக்கர்களும், தங்கள் கைவசமாக இருந்தவை களில் மீந்துள்ள இந்த இடங்களை "விடேன் கொடேன்" என்று வெகு பிடிவாதத்துடன் காத்து வந்தனர்.

ஆனுல் இது என்ன ஆச்சரியம்! ஆஹா தெய்வங்களே! இது என்ன அநியாயம்! எண்ணினுற் போல் இரண்டே இரண்டு வீரர்கள் மாத்திரமே இந்தக் கோட்டை வாயில்களைக் காத்து வருகின்றனர்! ஒரு பெருத்த சேனையையும் முறியடிக்கின்றனர்! இவர்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள தலைவிதிகளையும் மாற்றியே விட்டனர்! இந்த வெட்கக் கேட்டை நான் எங்குச் சென்று முறை யிடுவேன்" என்ருன்.

இவனுரைத்த வசனங்கள், கழிக்கரைப் புலம்பலும் கானகத் துப் புலம்பலும் போல் காற்றில் கலந்து பயனிலவாயின! மாரு மனமுடைய ஜோவ் தேவரின் சித்தத்தை அவை சிறிதும் கலைக்க வில்லை!

அன்றைய தினத்துச் சண்டையில் வெற்றியையும் கீர்த்தி யையும் பெற வேண்டுவது, தேவர்களுக்குச் சமானமானவனும், ஒப்புயர்வற்ற வீரசூர பராக்கிரமங்கள் உடையவனுமான ஹெக்ட ருடைய பொறுப்பாக விருந்தது. அவனைப் போலவே யுத்தத்தில் திடமான நிச்சய புத்தியையுடைய வீரர்கள் அந்தக் கோட்டைகள்

எல்லாவற்றிலும் ஒரே ரீதியாய் நின்றுகொண்டு, தங்களுடைய ஆயுதங்களைப் பிரயோகித்து வந்தனர்.

ஆனால் அந்தக் கோட்டைகளின் வாயில்கள் அனைத்தையும் கிரேக்க சைனிகர்களெல்லாம் சிறிதும் ஏற்றத் தாழ்ச்சியின்றி மோதிப் புடைத்துத் தாக்கினர். அக்கோட்டையின் நீளமான மதில்களின் மேல் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரை நின்றிருந்த கிரேக்க வீரர்கள் தடதடவென்று கற்பாறைகளையுருட்டி விட்டனர்! அது பெருத்த சப்தத்தை யுண்டாக்கிக் கொண்டு வந்த ஒரு கனமான கல்மாரி போலவே யிருந்தது! அப்போது பெரு நெருப்புக்களும் ஜ்வாலையுடன் கிளம்பின. இரு திறத்துச் சேனைகளிலிருந்த வீரர்கள் வீசிய கத்திகளிலிருந்தும் வேலாயுதங்களிலிருந்தும் மின்னலைப் போன்ற ஒளிகள் வீசின.

கவி கூறுகிறார் :— எனக்கு மாத்திரம் ஒரு தெய்வத்தின் கிருபை உண்டானால் நான், அன்று நடந்த பிரகாரமே கூட்டாமலும் குறைக்காமலும் ஒளிக்காமலும் உரைப்பேன்! உற்சாகத்துடன் கேட்டோர் மனம் கொதித் தெழும்படியும் பாடுவேன்.

அன்றைய தினம் ஆறிலுஞ் சாவு நூறிலுஞ் சாவு என்று உயிர் உள்ளளவும் யுத்தத்தைச் செய்தே தீருவோம்! என்ற நிச்சய புத்தியுடையவர்களாயிருந்த கிரேக்கர்கள் தங்களுடைய சத்துருக்களுக்குச் சிறிதும் இளைக்காமல் நின்று யுத்தத்தை நடத்தியே வந்தனர்.

அச்சமயம் அவர்கள் வழிபட்டு வந்த அவர்களது காப்புத் தெய்வங்களெல்லாம், இன்னது செய்வது என்று அறியாமல் தங்களுடைய கைகளைக் கட்டிக்கொண்டு இது இவ்வாறு முடிந்து விட்டதே என்று புலம்பிக் கொண்டு வாளாயிருந்தனர்.

என்றாலும், வர்பித்தயர்கள் சிறிதும் பின்வாங்காமலும் உறுதியாகவும் நின்று, ஆபத்துக்கள் குறைந்தும் பயங்கரமும் ஒடுக்கமுமான அந்த வழியைக் காத்து வந்தது மன்றித் தங்களை யெதிர்த்து வந்த துரோஜர்களைத் தங்குதடையின்றி வெட்டித் தள்ளி, அவர்கள் பிணங்களைத் தங்களைச் சுற்றி நாற்புறங்களிலும் மலைபோல் குவித்து வந்தனர்.

முதன் முதலாக பாலிபீடிஸின் பதமான இருப்பாயுதமானது, தாமானஸ் என்பவனை நோக்கிச் சென்று, அவன் தனது தலையில் முக்காடாக அணிந்திருந்த வெண்கலக் கவசத்தை ஊடுருவிச் சென்று, அவனைக் குத்திக் கீழே வீழ்த்தியது. அந்த ஆயுதத்தினால் நொறுக்கித் தவிடுபொடியாகிவிட்ட தாமானஸ்ஸின் மண்டையும் மூளையும் ஒழுகி வந்து உறைந்த இரத்தத்தில் கலந்து ஒரே குழம்பாக மாறிவிட்டன! அந்த ஆயுதமும் அக்குழம்பைப் பருகித் தனக்குண்டாயிருந்த தாகத்தையும் தணித்துக் கொண்டது. உயிருடன் இருக்கையில் அதிபராக்கிரம சாலியாக விளங்கிய

அந்த வீரன், அப்போது அடியற்ற ஒரு மரம் போல் சாய்ந்து விட்டான். மண்ணுலகிலிருந்து மறைந்து ஒழிந்தே போய் விட்டான்.

அடுத்தபடியாக ஆர்னேஸ்ஸூம் பைஸோனும் தங்களது பிராணனைப் பறிகொடுத்தனர். இந்த யுத்தத்தில் லியோன் டிஸ்ஸூம் பாலிபீட்டிஸூக்குச் சமமாக அவனுக்குச் சிறிதும் இளைக்காமல் சத்துருக்களைக் கொன்று, அவர்களுடைய பிணங் களால் அந்தப் போர்க்களத்தை நிரப்பினான். முதன் முதலாக அவன் ஹிப்போமாக்ஸ்ஸை நோக்கித் தனது வாளையுருவிக் கொண்டு ஓடிச் சென்று, அவனது இடுப்புக் கச்சையைத் துளைத் துக் கிழித்தான். அந்த வீரன் அதைத் தடுக்க முடியவில்லை. அதைக் கண்ட லியோண்டியஸ் அக்கணமே, தனது வாளைச் சட்டென்று ஆட்டியசைத்து வீசிவிட்டான்.

அதேசமயத்தில் அந்திப்போட்டியஸ் என்பவன் தானிருந்த அணிவகுப்பிலிருந்து பிரிந்து வர, அந்த வாள் அவனைத் தாக்கி, அவனை விதியின் வசம் ஒப்புக் கொடுத்து விட்டது. அவ்வாறே அபாமினுஸ் என்பவனும் மேனேன் என்பவனும், அதே சமயத்தில் தங்களது இரத்தத்தை வடித்தனர்.

இவ்வாறு லியோன்டியஸ் சத்துரு ஸம்ஹாரஞ் செய்து வருகையில், கொலை யுண்டவர்களின் சவங்கள் அவனைச் சுற்றிலும் ஒரு பெரிய கோபுரம் போல் மலையாய்க் குவிந்தன.

காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்து வருகையில், துரோஜ சிங்கங்களாகிய மஹா வீரர்களெல்லாம் கிரேக்கர்களுடைய கோட்டை கொத்தளங்களின் மேல் விழுந்து, அவற்றைத் தாக்கி விட வேண்டுமென்ற ஆத்திரத்துடனும் அவர்களுடைய மதில் களையும் கப்பற் படைகளையும் சுருண்டு சுருண்டு வரும் தீயினுட் புகுத்தி விட வேண்டும் என்ற எண்ணத்துடனும் தங்களுடைய தலைவர்களுள் அஞ்சா நெஞ்சனான ஹெக்டரையும், பாலி தாமஸையுந் தொடர்ந்து கொண்டு அவர்களது உதவிக்காக வந்தனர்.

அப்பொழுது தெய்வ நியமனத்தால் உண்டான சில சகுனங்களைக் கண்டு, திகிலடைந்தவர்களும், விபரீதமான காக்ஷிகளைக் கண்டு மனமிடிந்தவர்களுமாய் அவ்வீரர்கள் பாதி வழியில் அக்கரையில் நின்று கொண்டு கண் கொட்டாமல் யுத்த நிகழ்ச்சிகளைப் பார்த்து வந்தனர். திரளாகச் சென்ற அந்தக் கோஷ்டியாரை, ஒரு பெருத்த அபசகுனம் முன் செல்ல வொட்டாமல் தடுத்து விட்டது. அந்த ஆச்சரியமான காட்சி களைக் கண்ணுற்று, அவர்களனைவரும் தாங்கள் நினைத்து வந்த காரியத்தை மறந்து விட்டனர். தங்களது யுத்த வெறியையும் அறவே துறந்தனர்.

ஜோவ் தேவரின் வாகனமான பக்ஷியானது அச்சமயம், இரத்தத்தை வடித்துக் கொண்டிருந்த ஒரு பிரம்மாண்டமான நாகத்தைத் தன்னுடைய நகங்களில் இடுக்கிப் பிடித்துக் கொண்டும் உரத்துச் சப்தம் செய்து கொண்டும் தன்னுடைய இறக்கைகளால் வானத்தை இடித்து அடித்துக்கொண்டும், அங்குப் பறந்து வந்தது. இந்த நாகமானது இரத்தத்தை வடித்துக் கொண்டிருந்த தெனினும் உயிருடனேயே இருந்ததினுல் அது, அந்த பக்ஷியைச் சுற்றிக் கொண்டு, அதைக் கடித்து அதன் தொண்டையில் ஒரு காயத்தை உண்டாக்கி விட்டது.

அப்போது அந்தப் பக்ஷி அந்தக் கடியினுல் தன் உடலில் வியாபித்து விட்ட விஷத்தின் கொடுமையைப் பொறுக்க முடியாமல், மதி கெட்டும், வலியிழந்தும் விண்ணுலகத்தையே இடித்துப் பிளக்குமாறு, உரத்துக் கத்திக் கொண்டு தனது இரையை நழுவவிட்டு விட்டுத் தளர்ந்த வேகத்துடன் ஆகாயத்தைச் சுற்றி வட்ட மிட்டுப் பறந்து கொண்டு, காற்றின் வசப்பட்டு அக்காற்று அடித்து மோதிய வண்ணம் அதன் மேலேயே மிதந்து சென்று மறைந்து விட்டது.

அப்போது, அதன் நகங்களிலிருந்த நாகமானது அவற்றி னின்றும் நழுவி, ட்ராய்த் சேனைகளின் மத்தியில் 'தொப்,' பென்று விழுந்தது. அதைக் கண்ணுற்ற அந்தச் சேனைகளில் இருந்த வீரர்கள், சுருண்டு கிடந்த அந்த நாகத்தைப் பிரித்துப் பார்த்து, அதன் தோலின் மேல், ஜோவ் தேவரின் அபசகுனக் குறிகள் இருக்கக் கண்டு, திகிலடைந்து, நிறம் மாறி வெளுத்துப் போயினர். அவர்களது மார்பு பட படவென்று அடித்தது. அவ்வாறு சிறிது நேரம் துயரக் கடலில் ஆழ்ந்தவர்களாய், அவர் களனைவரும் மௌனமாக விருந்தனர்.

கடைசியாக பாலிதாமஸ், அந்தச் சகுனத்தின் குணுகுணங்களை ஆறத்தீர ஆலோசித்து அந்த மௌனத்தைக் கலைத்து ஹெக்டரை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான்:—

"எனது தம்பி! நான், உனது நன்மையைக் கோரும் முறையில் நல்ல யோசனைகளைச் சொல்லி யிருக்கின்றேன், நீ, அவையனைத்தையும் புறக்கணித்து உதறித் தள்ளிவிட்டாய்! என்னை அலட்சியம் செய்து விட்டாய்! அவையெல்லா வற்றையும் நான் இதுவரை பொறுத்தே வந்திருக்கின்றேன். என்றாலும் யுக்தா யுக்தங்களென்றும் உத்தமமானவை யென்றும், எனது மனத்தில் தோன்றும் யோசனைகளை, நான் சிறிதும் ஒளிக்காமலும், கூட்டாலும், குறைக்காமலும், கறந்த பால் கறந்தபடி, இப்போது உனக்குச் சொல்லுகின்றேன் கேள்,

சண்டை சச்சரவுகள் நேரிட்டு விட்ட காலத்திலும், அவை யின்றி க்ஷேமமாகவும் அமைதியாகவும் வாழ்ந்து வரும்

காலத்திலும், விஷயங்களை ஆராய்ந்து, ஆலோசனைகள் செய்து, வரும் காலத்திலும், யுத்தங்கள் நிகழ்கையிலும், தனது மனத்தி லுதிக்கும் எண்ணங்களை நிர்மயமாய் வெளியிட வேண்டுவது நிஷ் பக்ஷ பாதியும் நடுநிலைமையை வகுப்பவனுமாகிய ஸத்புருஷ னுடைய கடமையாகும்.

நான் உனது அதிகாரத்துக்குட்பட்டவன்தான் எனினும், நான் சொல்லும் யோசனைகளனைத்தும், நான் சிரமேற் கொண்டு கீழ்ப்படிந்து வரும் அந்த அதிகாரமானது மேன் மேலும் விருத்தி யடைய வேண்டும் என்னும் நோக்கத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. ஆதலால் நான் சொல்லும் வசனங்களைச் செவி சாய்த்துக் கவனமாய்க் கேள்; அவற்றைப் புறக் கணித்துப் பயனற்றவையெனத் தள்ளி விடாதே! இன்றையதினம் நீ, இந்த கிரேக்கர்களுடைய கப்பல்களை நோக்கிச் செல்ல வேண்டாம். அக்காரியத்தை நிறுத்து, அக் கப்பல்கள் இன்று உனது கைவசம் ஆகா, அந்தக் காரியம் நமக்குக் கைகூடா தென்று முன்னுடியே அறிவித்து நம்மை எச்சரிப்பதற்காகத்தான் ஜோவ் தேவர் இந்தச் சகுனத்தை அனுப்பி வைத்தார். இது நிச்சயமான சங்கதி. இந்தச் சகுனத்தின் பயன் இன்னது தான் என்பது எனது மனதிற்கு நிஷ்கரிஷையாய்த் தெரிந்து விட்டது. அதை விவரமாகச் சொல்லுகின்றேன் கேள்.

ஜய கோஷத்துடன் இயங்கும் இந்தக் கழுகானது, நமது இடதுபுறமாகப் பறந்து சென்று நமது கோஷ்டியாரது மனதைக் கலக்கி, நமதுமனதில் ஒருபெருத்த பீதியையும் உண்டாக்கிவிட்டது. இப்போது அந்தப் பீதியே நமது மனதில் நிறைந்து உறைந்து வருகின்றது. இந்தக் கழுகு, தான் கவர்ந்து கைப்பற்றிப் பிடித்து வந்த ஸர்ப்பத்தையும் ஆகாயத்தின் மத்தியில் நழுவ விட்டு விட்டது. இதன் கைக்கு எட்டிய பண்டம் இதன் வாய்க்கு எட்டவில்லை! ஸர்ப்பத்தைப் பிடிப்பதற்கு மாத்திரம் அதற்கு அதிர்ஷ்டம் இருந்ததே யன்றி, அதை யடக்கியாண்டு அனுபவிப் பதற்கு அதிர்ஷ்டம் இல்லாமல் போய் விட்டது.

நமக்கும் இந்தக்கதிதான் உண்டாகும் என்பதை இது முன்னுடியே அறிவிக்கின்றது. கிரேக்கர்களுடைய கப்பற்படை களனைத்தையும், நாம் தீயிட்டுக் கொளுத்தி வளைத்து விட்டாலும், இந்த உன்னதமான கோட்டைகளும் கொத்தளங்களும் நமக்குக் கீழ்ப்படிந்து, நமது காலடியில் தரைமட்டமே ஆகி விடினும், நாம் எதிர்பாராத கஷ்ட நஷ்டங்களே நமக்குப் பிராப்தமாகும். அவை, நாம் இதுவரை அனுபவித்து வந்த கஷ்ட நஷ்டங்களை விட மிகவும் கொடியவையாகவும் இருக்கும். அதுவே ஜோவ் தேவரின் திருவுள்ளம் என்பதை இந்தச் சகுனம் நமக்கு முன்னுடியே அறிவிக்கின்றது.

நமக்கு இன்னும் பல துன்பங்கள் மேன் மேலும் வர விருக்கின்றன; நம்முடைய வீரர்களில் மீந்துள்ளோரில்

அனேகர், தங்களது இரத்தத்தை வடிக்க இருக்கின்றனர். நமக்கு இந்தக் கஷ்டங்களெல்லாம் உண்டாகும் என்றே எனது மனதிற்குப் புலப்படுகின்றது. அதனுற்றுன், நான் உனக்கு இந்த யோசனையைச் சொல்லுகின்றேன். வானத்தில் கோள்கள் நிற்கும் நிலையை ஆராய்ந்து, வரும்பொருளுரைப்பதில் வல்லவனுன ஒரு வள்ளுவன் உளனேல், அவன் இன்று நமக்குப் புலனுன காட்சிக்கு இதுதான் பலன் என்று உரைப்பான்'' என்றுன்.

அதைக் கேட்ட ஹெக்டர், கடுத்த முகத்துடனும், கோபத்தினுல் தீப் பொறி பறக்கும் கண்களுடனும் தனது முகத்தைச் சுளித்துக் கொண்டு, அவனைப் பார்த்துத் திரும்பி, அவனை நிந்தித்துப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"இவைதான், நீ எனக்கு யதார்த்தமாகச் சொல்லும் யோசனைகளோ? இவைதான் உன் நாவினின்று எழும் ஹிதோபதேசங்களோ? நீ நியாய அநியாயங்களை நன்றுக அறிந்தவன் தான். அதில் ஐயமில்லை! ஆனுல் நீ மஹா பக்ஷபாதி! அப்படியில்லை, நீ உரைக்கும் யோசனைகள் உண்மையாகவே உனது உள்ளத்தில் உதித்தவைதான் என்றே வைத்துக் கொண்டாலும், நீ ஒரு மஹா உன்மத்தன் என்பதில் சிறிதும் ஐயமில்லை! உனக்கு இருந்த அல்பபுத்தியுங்கூட அமரர்கள் அபகரித்துக்கொண்டே போய் விட்டனர்! தான் புறப்பட்டு வந்த இடத்திற்கே, அந்த அல்ப புத்தியும் திரும்பிச் சென்று விட்டது!

தமது திருவுள்ளம் இன்னதுதான் என்று ஜோவ் தேவர் நமக்கு அறிவிக்கவில்லையா? அவரது வாக்குப் பொய்க்குமா? அவைகளுக்கு முற்றும் மாறுன யோசனைகளைச் சொல்லும் நீ ஒரு பேடியோ, மடையனே, அல்லது பித்தனே ஆகவேண்டுமென்றுே!

அவர், எனக்கு முதன் முதலாக, நல்ல சகுனங்களைக் காட்டினுர். எனக்குத்தான் வெற்றியென்று உறுதியாய்ச் சிரக்கம்பம் செய்தார், வேண்டியார் வேண்டியாங்கு அளித்துக் காக்கும் அக்கடவுள் மனேகரமாக முழக்கியிடித்தார், மேக கர்ஜனைகளையுஞ் செய்தார். இவையெல்லாம் பயனற்றனவென்று நான் கருதுவேனு? மனந்தடுமாறுவேனு? நிலையின்றி ஓடியாடித் திரியும் காற்றையனுசரித்துச் செல்லும் புள்ளினங்களின் போக்கைக் கண்டு மனங் கலங்குவேனு? மாட்டவே மாட்டேன். இது உறுதிதான்.

ஆகாயத்தில் நிலையின்றிப் பறந்தலையும் புள்ளினங்களே! சூரிய சந்திரர்களும் நக்ஷத்திரங்களும் உதிக்கும் இடத்தையோ அல்லது அவை அஸ்தமிக்கும் இடத்தையோ நோக்கி உங்களால் கூடிய தூரம் வரை, உங்களுடைய சிறகுகளை விரித்துக்கொள்ளுங்கள்! வலது புறமாகவோ, இடது புறமாகவோ எப்புறம் வேண்டுமென்றுலும் சிறிதும் கவலையோ தங்குதடையோ இன்றிப் பறந்து செல்லுங்கள்! நான் உங்களைச் சிறிதும் சட்டை செய்புவனல்லன்!

அதியுன்னதமான விண்ணுலக வேந்தரின் ஆணைகளையே நான் சிரமேற்று அவற்றையே நிறைவேற்றுவேன்! மனந் தளராத ஒரு மஹா வீரன் சகுனங்களையும் நிமித்தங்களையுங் கவனித்துத் தானு தன் வாளை அதன் உறையிலிருந்து உருவுகின்றான்? தன் தேசத்தின் நன்மையையும் முன்னேற்றத்தையும் நாடும் அவனுக்குச் சகுனம் என்னத்திற்கு? நாள் நட்சத்திரங்கள் என்னத்திற்கு?

இதெல்லாம் இருக்கட்டும். இந்த யுத்தத்தில் நமக்கு வெற்றி கிடைக்குமோ, கிடைக்காதோ என்று நீ சந்தேகப் படுவதற்கு என்ன காரணம்? அதைச் சற்றுச் சொல்! அதையும் கேட்போம். இந்த யுத்தத்தில் அணிவகுத்துள்ளவர்கள் எல்லோரிலும் நீயே அதிகம் பயந்தவனாக விளங்குகின்றாய்! உன்னினும் பெருத்த பேடியை நான் காணவில்லை. இந்த யுத்தத்தில் உன்னினும் குறைந்த ஊக்கமுடையவனையும் நான் காணவில்லை. உன்னை யொழிந்த எல்லா வீரர்களும் தலைவர்களும் அதோ அங்குக் காணும் கப்பல்களினிடையில் சென்று யுத்தஞ் செய்து, அழிந்தே போகட்டும். பேடியான நீ மாத்திரம் அவர் களைக் கொளுத்தும் நெருப்புக்குத் தப்பியோடி பிழைத்துக்கொள். உனது கோழைத் தனமே உனது ரக்ஷையாக யிருக்கட்டும். ட்ராய் நகரும் அந்த நகரத்து மக்களும் ஒரேயடியாய் ஒரே கட்டையில் வேகட்டும்! அடிமையாய் இருக்கலாம் என்பது உனது விருப்பமாதலால், நீ ஒருவன் மாத்திரம் உயிருடன் பிழைத்திரு,!

ஆனால் அதிஜாக்கிரதையும் ஆலோசனையுமுள்ள உனது மனதில் உதிக்கும் திகிலினாலும் பயத்தினாலும் விளையும் நஞ்சானது நம் வீரர்களது நெஞ்சிற் புகுந்து, அவர்களுடைய ஆற்றலையும் ஆத்திரத்தையும் அவித்து, வெறுப்பையும் தளர்ச்சியையும் உண் டாக்கி, அவர்களுடைய மனவுறுதியையும் கலக்கிவிடும் என்ற ஐயம் எனக்கு உண்டாகும் எனில், இதோ, எனது வேல் அந்த மகா இழிவான காரியத்தைச் செய்ய முன் வரும் பழிகாரனை ஒரேயடி யாக ஒழித்து, அந்தப் பழியைத் தீர்த்துவிடும். அது உனது உயிரை ஒரு நொடியில் இந்தக்கேவலமான உடலிருந்து விடுவித்து வெளியேற்றி விடும் '' என்றான்,

இவ்வாறு வெகு ஆத்திரத்துடன், தன்னுடைய வசனங் களை யுரைத்து விட்டு, ஹெக்டர் தட, தடவென்று கோட்டையின் மதிலை நோக்கி ஓடிச்சென்று, தன்னுடைய கோஷ்டியாரனைவரை யும் கூவியழைத்தான். அவர்களும் அவனது ஆணைப்படி ஓட்ட மாக ஓடி வந்தனர்.

தங்களது வீரன் பறந்துசென்ற வழியிலேயே அவர்களனை வரும், ஆத்திரத்துடன் அவனைத் தொடர்ந்து சென்றனர். அவ் வாறு செல்லுகையில், அவர்கள் உற்சாகத்துடன் செய்த கூக்குரல் களும் அவற்றின் எதிரொலிகளும், விண்ணுலகை இடிபோல் இடித்து முழக்கின.

அச்சமயம் ஐடா மலைச் சிகரங்களில் வீற்றிருந்த ஜோவ் தேவரும் ஒரு சுழல் காற்றைப்போல், தமது சுவாஸத்தைவிட, அச் சுழல் காற்றுனது புழுதிகளைத் திரட்டிக்கொண்டு, கிரேக்கர்களது படையை நோக்கி உருண்டுருண்டு சென்று அவற்றை ஒரு மேகம் போல் மறைத்து விட்டது. அது ஏக காலத்தில் கிரேக்கர்களது மனதில் திகிலையும் பீதியையும் உண்டாக்கி, மஹா வீரனுன ஹெக்டருக்கு ஆற்றலையும் உற்சாகத்தையும் உண்டாக்கி, அன் றைய தினம் அவனுக்குத் தான் வெற்றி என்பதையும் முன்னு டியே அறிவித்து விட்டது. இயல்பாகவே வீரசூர பராக்கிரமங்கள் நிறைந்தவர்களாகவிருந்த அந்த துரோஜ வீரர்களுக்கு, ஹெக்டரு டைய ஒத்தாசையுங் கிடைத்து விட்டதினுல் அவர்கள் மிகுந்த உற் சாகத்துடன் முன் சென்று கிரேக்கர்கள் கட்டியிருந்த, கோட்டை கொத்தளங்களையும் அகழ்களையும் நெருங்கிச் சென்று அவற்றை முற்றுகை போட்டனர்.

அப்போது கிரேக்கர்கள் தாங்கள் மிகுந்த சிரமப்பட்டு எழுப்பிக் குவித்திருந்த மேடுகளையுந் திட்டுக்களையும், உறுதியாகக் கட்டியிருந்த கனமான உத்திரங்களையும் விட்டங்களையும் வெகு பிடிவாதத்துடனும், உறுதியுடனும் காத்தே வந்தனர். என்றுலும், துரோஜர்கள் அந்த மேடுகளையும் திட்டுக்களையும் அடியோடு எரித்து விட்டதுமன்றி உத்திரங்களையும் விட்டங்களையும் பொடிப் பொடியாகப் பிளந்து விட்டதினுல், கிரேக்கர்களது சிரமம் வீணே யாகி விட்டது. கெட்டியாகக் கட்டப்படும் மதில்களுக்கு, ஆதாரமா யிருந்த பிரம்மாண்டமான கட்டடங்களெல்லாம் அஸ்திவாரத்தி லிருந்துப் பெயர்ந்து போயின. பொடிந்து போய்விட்ட சட்ட விட்டங்களிலிருந்து கிளம்பிய புழுதியானது ஒன்றின்மேலொன்றுய் உருண்டு, புரண்டு, குவிந்து, ஆகாய மளாவிச் செல்லும் கனமான மேகங்களைப்போல் பறந்து சென்றது. அப்போது அந்த விட்டங் களும் சட்டங்களும் அந்தப் புழுதியிலேயே தடதடவென்று விழுந்து, அழுந்திப் போயின.

என்றுலும் இந்தப் பயங்கரமான நிகழ்ச்சிகளனைத்தையும் தங்கள் கண்களாலேயே கண்ணுற்ற கிரேக்கர்களோ, சிறிதும் மனங் கலங்கவில்லை. அவர்கள் தங்களுடைய கோட்டைகளின் மேல் அசையாமல் நின்றே வந்தனர்.

அங்கு அப்போது திரளாகக் கூடியிருந்த இருதிறத் துச் சேனைகளிலுமுள்ள வீரர்கள் வீசிய பட்டாக் கத்தி களும், வேல்களும், ஈட்டிகளும் பளபள வென ஒளியை வீசின. கவசங்களை யணிந்திருந்த வீரர்கள் ஒருவரோடொருவர் உராய்ந்த பொழுது, அந்தக் காட்சியானது ஒழுங்காக வைக்கப் பட்ட ஒரு தீபவரிசையைப் போலவே தோன்றியது. அவ்வாறு அணி அணியாய் நின்றிருந்த வீரர்கள் தங்களுடைய விற்களி லிருந்து சிறிதும் இடைவிடாமல் பாம்புகளைப் போல் சீறிக் கொண்டு வரும் அம்புகளை ஒரு பெருத்த மழையைப் போல் பொழிந்தனர்.

அப்போது அஞ்சாநெஞ்சனுன அஜாக்ஷர்களிருவரும் ஒரு கோபுரத்தை விட்டு மறு கோபுரத்தை நோக்கிப் பறந்து செல்வதே மணியமாக விருந்தனர். கிரேக்கர்களுக்கு ஊக்க முண்டாகுமாறு அவ்வீரர்கள் இருவரும் அவர்களுக்கு உள்ளக் கிளர்ச்சியை வுண்டாக்கிக் கொண்டும், தளர்ச்சியடைந்திருந்த வருக்கு உற்சாகத்தை யுண்டாக்கிக் கொண்டும் தாராளமாகவும் கபடமின்றியும் போதனைகளைச் செய்து வந்தனர். அந்தப் போதனைகளைச் செவியுற்ற கிரேக்கர்கள் புத்துயிர்ப் பெற்றுத் துள்ளி யெழுந்தனர். பயந்து நடுங்கிக் கொண்டிருந்த சிலரை, அஜாக்ஷர்கள் மிரட்டினர். அந்த மிரட்டுக்குப் பயந்து அவர் கள் மனந் தெளிந்து முன் சென்றனர். ஏற்கனவே வீர சூர பராக்கிரமங்களும் தைரியமுமுடையவர்களாக விருந்த வீரர்களை அஜாக்ஷர்கள் புகழ்ந்து பாராட்டினர்; அந்தப் புகழுரை யானது, அவர்களை மேன்மேலும் கீர்த்தியைத் தரத்தக்க வீரச் செயல்களைச் செய்யவேண்டுமென்ற அவாவுடன் உந்தித் தள்ளியது :—

" ஆயுதங்களை அணிந்து கொண்டு, என்னுடன் சேர்ந்து உழைத்து வரும் எனது அன்பர்களே! உலகப் பிரஸித்தமான வீரச் செயல்களைச் செய்துள்ள வீரர்களே! அவ்வாறே வீரச் செயல்களைச் செய்து பேரும் புகழும் அடைய வேண்டும் என்று ஆவலுடன் துடிக்கும் ஏனைய வீரர்களே! வீர சூர பராக்கிரமங் களிலும் தந்திர உபாயங்களிலும் உங்களுக்குள்ள திறமைகள், ஆளுக்காள் ஏற்றத் தாழ்ச்சியுள்ளவை தான், என்ருலும், நீங்க ளனைவரும் ஒன்று கூடி உங்களாலான காரியங்களைச் செய்து மனமகிழ்ச்சியடையக் கூடிய ஒரு தருணம் இதோ இன்று உங்களுக்கு வாய்த்திருக்கின்றது. நெஞ்சுறுதியுள்ளவர்கள் மனங் கொதித்து எழுவதற்கும் கோழை மனத்தார் குதித்துக் கொண்டு முன் வருவதற்கும் இதுவரை பேருங் கீர்த்தியும் அடைந்திராதார் வீரச்செயல்களைச் செய்து வெற்றியைப் பெற்று அப்பேருங் கீர்த்தியும் அடைவதற்கும் ஏற்கெனவே பேருங்கீர்த்தியும் அடைந்துள்ளோர் புதிய வெற்றிகளையடைந்து, அக்கீர்த்திகளைப் பெருக்கிக் கொள்வதற்கும் இன்று ஒரு நல்ல தருணம் வாய்த் திருக்கின்றது!

கையைக் கட்டிக் கொண்டு வேடிக்கையைப் பார்த்துக் கொண்டு நிற்போரை, இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளும்படி நீங்கள் உறுத்துங்கள்! உந்தித் தள்ளுங்கள்! கோழை மனத் துடன் தயங்கித் தவிப்பவர்களின் தளர்வையெலாந் தீர்த்து, அவர்களுக்கு ஊக்கமளித்து அவர்களை முன்னணியில் கொண்டு வந்து நிறுத்துங்கள். இந்த ஹெக்டர் மிகவும் துள்ளுகின்ருன், குதிக்கின்ருன்! நீங்கள் அவனுக்கும் மேலாக, உரத்துக் கூவிச் சிங்கநாதஞ் செய்து, அவனது குரலைக் கவிழ்த்து விடுங்கள்.

நமக்கு வெற்றியே வேண்டும், உயிர்ப்பிச்சை வேண்டாம்! என்ற எண்ணமே நம் எல்லோரது மனதிலும் உறைந்து

வருகின்றது. ஆதலால் நீங்கள் உங்களுக்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தைக் கனவிலும் நினையாதீர்கள். இந்த மதிலிலிருந்து எட்டிச்சாடி, நம்முடைய சத்துருக்களைத் தாக்குங்கள், அப்படிச் செய்வீர்களானால், நமக்கு இன்னு மொருமுறை ஜோவ்தேவரின் ஸஹாயம் உண்டாகும்! முன் பொரு நாள் நமக்குப் புறங்கொடுத்து ஓடிச் சென்று இப்போது, திரும்பி வந்துள்ள நம்முடைய சத்துருக்கள் மறுபடியும் தாங்கள் வந்த வழியை நோக்கிக் கொண்டே ஓட்டம் பிடிப்பார்கள்! ட்ராய் நாட்டாரும் திடுக்கிட்டு மனங்கலங்கித் தங்களுடைய கோட்டைகளில் பதுங்கிக் கொள்வார்கள்! அவர்கள் தங்க ளுடைய தலைகளையும் வெளியில் நீட்ட மாட்டார்கள்,'' என்றான்.

இவ்வாறு அவன் சிரத்தையுடனும் உருக்கத்துடனும் உரைத்த மொழிகள் கிரேக்கர்களது மனதில் ஒரு பெருத்த கிளர்ச்சியை உண்டாக்கி விட்டன. அவர்களனைவரும் ஒரே யடியாய் உற்சாகத்துடன் துள்ளிக் குதித்தெழுந்தனர். ஜோதி யுடன் விளங்கினர். முன்னினும் அதிக கனமான கல் மாரிகளைப் பொழிந்தனர். பிரம்மாண்டமான பாறுங்கற்களை யுருட்டி விட்டனர்.

அதி சீதளமான கார்காலமானது தனது கொடுங்கோலை ஓச்சி வருகையில், தமது உன்னதமான ஸ்தானத்திலிருந்த வண் ணம் மஹா தேவரான ஜோவ்பகவான், காற்றும், புயலும் நிறைந் துள்ள மேக ரூபமான தம்முடைய படை வீடுகளைத் திறந்து கூர்மையாகத் தாக்கித் துளைக்கும் பாணங்களைப் பொழிந்து ஒரு பெருத்த உறைபனி வெள்ளத்தினால் பூமி முழுவதையும் மறைத்து விடுகின்றார், அவர் காற்றுகளையும் அடக்கி வானமனைத்தையும் ஒரு பெருந் தூக்கத்தில் ஆழ்த்தியும் அழுத்தியும் விடுகின்றார்.

சிறிதும் சந்தடியின்றி இருக்கும், அச்சமயத்தில் பனிப் புயலானது இடைவிடாமல் நிதானமாகவும், கனமாகவும் பெய்து, முதன் முதலாக மலையுச்சிகளையும், அடுத்தபடியாக பச்சைப் பசே லென்றிருந்த தோட்டங்களையும் வயல்களையும் கடைசியாக மணற்காடான கடற்கரையையும் மூடி விடுகின்றது. அப்போது அந்தப் பனியின் கனத்தைப் பொறுக்க முடியாமல் தவிக்கும் காட்டு மரங்களெல்லாம் வளைந்து குனிந்து தங்களுடைய தலைகளை ஆட்டுகின்றன.

அதே சமயத்தில் வெள்ளை வெளேரென்று மின்னும் ஒரே ஒரு பெரும்போர்வையானது மனுஷ்ய கிருதமான ஸமஸ்த வஸ்துக்களையும், மூடி மறைத்து விடுகின்றது. ஆனால் சகலமான சராசரங்களையும் உறிஞ்சி விடுவதும், உலகத்தை நாற்புறமும் சூழ்ந்து வளைத்துக் கொண்டுள்ளதும் ஸர்வத்தையுங் கரைத்து விடுவதுமான ஸமுத்திரம் மாத்திரம், அந்தப் பனி மழையையும் குடித்து விடுகின்றது.

அவ்வாறே இந்த யுத்தத்தில், இருதிறத்துச் சேனைகளி லும் அணி அணியாய் நின்றிருந்த வீரர்கள் பொழிந்த கல்மாரி யானது மேன் மேலும் விருத்தியாகிக் கொண்டு வந்து, வீரர் களையும் மடித்து வீழ்த்தி, அவர்களுடைய பிணங்களையும் ஆடையாபரண ஆயுதங்களையும் மலைகளாய்க் குவித்து விட்டது. அப்போது அந்த யுத்த களமானது கல்மயமான ஒரு வெண்காடு போலவே தோற்றியது.

இவ்வாறு தேவர்களுக்கு நிகரான ஹெக்டரும் அவனுடைய ஸைந்நிகர்களும் கிரேக்கர்களுடைய கோட்டை கொத்தளங்களைப் பலவந்தமாகப் பிடித்துக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும், அக்கோட்டைகளின் வாயிற் கதவுகளைப் பிளந்து விடவேண்டும் என்று ஆவல் கொண்டு வெகு பிடிவாதத் துடனும் ஊக்கத்துடனும், ஒத்துழைத்து வந்தனர். என்றாலும் வெகு நேரம் வரை ட்ராய் நாட்டாருக்கு ஜயமாவது கிரேக்கர் களுக்கு அபஜயமாவது உண்டாகவில்லை.

கடைசியாக மஹானுன ஸார்ப்பிடன், அந்தக் களத்தில் எல்லோர்க்கும் மேலாக உயர்ந்து வந்தான். மஹா பராக்கிரம சாலியும், ஸர்வ வல்லமையுமுள்ளவரான ஜோவ் தேவர், வீர சூர பராக்கிரமங்களில் நிகரற்றவனும் தனது மகனுமான அவனது மனதில் இந்த யுத்தத்தில் பேரும் புகழும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையை உண்டாக்க, அவன் உற்சாகத் துடன் பொங்கி யெழுந்து வந்தான்.

ஆயுதங்களை யேந்திக் கொண்டு அதிஜோதியுடன் பிரகா சித்த அவன், வெகு தூரத்திலிருக்கையில் எல்லோருக்கும் கட்புல னுகுமாறு உயர்ந்து விளங்கினுன். தனது பிரம்மாண்டமான கேடயத்தையும், அவன் ஆகாயத்தில் உயர்த்தித் தூக்கிக் கொண் டிருந்தான். கோளவடிவமான அந்தக் கேடயத்தில் காளைகளின் கெட்டியான தோல்கள் சுருள் சுருளாக வைத்து அலங்கரிக்கப் பட்டிருந்தன. அந்தக் கேடயம் பித்தளையினுல் உண்டாக்கப் பட்டுக் கனமாகவுமிருந்தது. அதற்கு நீட்டித் தட்டியடித்த பொற்றகடுகளால் கட்டுகளும் கட்டப்பட்டிருந்தன. தன் இரு கைகளிலும் கூரான இரு வேல்களை ஏந்திக்கொண்டு அவன், தன்னுடைய ஸிலியன் சைனியங்களுக்குத் தலைமை வகித்தவனுய், வெகு கம்பீரமாக நடந்து வந்தான்.

கம்பீரமான கதியையுடையனும், மிருகேந்திரனுமான ஒரு சிங்கம் பசிப்பிணியினுல் வாடி, வருந்தி வருகையில், அது ஒரு மலைச்சாரலிலிருந்து, அதன் அடிவாரத்திலுள்ள ஆட்டு மாட்டு மந்தைகளின் மேல் பாய்ந்து, அந்த அடிவாரத்திலுள்ள மைதா னத்தில் கடுத்த முகத்துடனும், கர்வத்துடன் தலையை நிமிர்த்துக் கொண்டும், அக்கம்பக்கங்களிலுள்ள விஷயங்களைச் சற்றும் கவனிக்காமல் அலட்சியமாகவும் தனது மனம் போனபடி, அடி மேல் அடி வைத்துக்கொண்டு உல்லாசமாக நடக்கின்றது.

அப்போது அதிதூரத்திலிருந்து கொண்டு, தன்னை நோக்கி உரத்துக் குரைக்கின்ற மந்தையைக் காக்கும் நாய்களையாவது, தன்னை நோக்கி சரங்களைப் பொழிந்து, தனக்குத் துன்புறுத்தும் இடையர்களையாவது, அது சிறிதும் சட்டை செய்வதில்லை. அந்நாய்களும் இடையர்களும் படும்பாடுகளெல்லாம் வீணேயாகி விடுகின்றன. அது அதிவேகமும் கோபதாபமுமுடையதாய், நுரையைக் கக்கிக்கொண்டு, மேகத்தைப் போல் கர்ஜித்துக் கொண்டும் தனது கைக்கு அகப்பட்டுத் தப்ப முடியாமல் தவிக்கும் இரையைப் பீறிக் கிழித்துக் கொண்டும் தன் வழியே செல்கின்றது!

தேவஸ்ரூபியான ஸார்ப்பீடனும், அந்தச் சிங்கத்தைப் போலவே, நிச்சய புத்தியுள்ளவனாகவும் அளவு கடந்த ஆக்கிரஹத்தை மேற்கொண்டவனாகவும் தன்னுடைய சத்துருக்களின் மேல் பாயவேண்டுமென்று பொங்கிக் கொதித்தான். அவனது முகம் தகதகவென்று ஜொலித்தது! அவன் கிரேக்கர்களுடைய கோபுரங்களை ஏற, இறங்கப் பார்த்தான்! அவையனைத்தையும், தரைமட்டமாக்க என்ன உபாயம் என்பதையும் ஆலோசித்தான். இந்த ஆகாயமளாவி நிற்கும் உன்னதமான மதிலைத் தகர்த்து எறிந்தே விடுவேன் என்றும் சங்கல்பம் செய்து கொண்டான். அதன்பின் அவன், பேருங் கீர்த்தியும் சம்பாதிக்க வேண்டும் என்ற தாகமுடையவனாய்த் தனது நண்பனை மிகுந்த அன்புடனும் ஆதரவுடனும் நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"கிளாக்கஸே! ஜாந்தஸ் நதியும், அதன் உபநதிகளும் பாய்வதும் விசாலமும் செழிப்புமான ஸிலியன் நாட்டு அரசர்களென்று நாம் பெருமையடித்துக் கொள்ளுகின்றோம். புஷ்டியாய் விளைந்துள்ள காடுகளிலும் வனங்களிலும் வயல்களிலும் நம்முடைய கணக்கற்ற ஆட்டு மாட்டு மந்தைகள் தங்களது மனம் போனபடி மேய்ந்து வருகின்றன. நம்முடைய மலைகளிலும், குன்றுகளிலும் வளரும் திராக்ஷைக் கொடிகள் ஊதா நிறமான தங்கள் கனிகளை மட்டுமிதமின்றியும், தங்குதடையின்றியும் நமக்குத் தருகின்றன. தலை குவிந்து வழிந்து, நுரையுடன் பொங்கும் கிண்ணங்களிலிருந்து நாம், அமிர்தத்தினும் மிக்க ருசியான, பானவகைகளை அருந்துகின்றோம்! விருந்துண்ணுகையில் துரித கதியில் பாடிச் சுறுசுறுப்பை யுண்டாக்கும் கர்ணாமிர்தமான கீதங்களையும், வாத்யங்களையும் கேட்கின்றோம்! விருந்துகளை ரஸிக்கின்றோம், இந்த போக போக்கியங்களுக்கெல்லாம் காரணமென்ன?

அதோ! அந்தக் கரையோரங்களிலுள்ள ஜனங்கள் ஏன் நம்மைக் கண்டுக் களிகூர்கின்றனர்? அவர்களனைவரும் ஏன் நாமனைவரும் வீரர்களென்று வியக்கின்றனர்? அவர்கள் ஏன் நாமெல்லோரும் தேவர்களே என்று மதித்து நம்முடைய ஆணைகளைச் சிரமேற்றாங்கி, அவற்றை நிறைவேற்றி விடுகின்றனர்? பெருங் காரியங்களைச் செய்து முடிப்பவர்கள் மாத்திரமேயன்றோ உயர்ந்த மரியாதைகளுக்கு உரியவர்கள் ஆவார்கள்? அவர்கள்

தானே தேவர்களது அளவு கடந்த கருணைகளுக்கும் பாத்திர ராவார்கள்.

இப்போது, நான் உரைத்த பாக்கியங்களும், பெருமைகளும் நமக்கு உண்டாயிருப்பது உண்மைதான்! உடல் வலியிலும் மன வலியிலும் மிஞ்சியவர்களாய் நாம் முன்னணியில் நிற்பவர்கள் தான்! நம்முடைய ஸகபாடிகளின் ஸபையில் நாம் அக்கிரஸ்தானத்தையும் வகித்து வருகின்றோம்! இந்த உத்தமமான அருங் குணங்களை யுடையவர்களாக விருப்பதினால்தான், அவர்கள் நமக்கு இந்த மரியாதைகளையும் உபசாரங்களையும் செய்து வருகின்றனர்!

நம்முடைய ஸைனிகர்களுக்கு நாம் ஆணையிட்டு நியமிக்கும் காரியங்களையும் கடினமான காரியங்களையும் நாமே ஸாதித்து விடுவதை அவர்கள் கண்ணுற்றால், அப்போது அவர்கள், வியப்படைந்து, இவர்கள்தான் உன்னதமான பதவிகளை வகிக்கத் தகுந்தவர்கள் என்று ஏகோபித்துக் கோஷிப்பார்கள். பொறாமைப்படுவார்கள். இவர்களைப் போல் எவரேனும் பெருங் காரியங்களைச் செய்ய முயல்வார்களா, மாட்டவே மாட்டார்கள் என்றும் சொல்லுவார்கள்.

நாம் நம்மாலான பிரயத்தனங்களினாலும் உபாயங்களினாலும், கோழை மனத்தான் என்றும் அஞ்சா நெஞ்சனென்றும் வேற்றுமையின்றி அனைவரையும் நிஷ்பக்ஷபாதமாக விழுங்கி விடும் இருள் சூழ்ந்த இடுகாட்டுக்குச் செல்லாமல் தப்பிவிட முடியுமானால், நான் இந்தக் காரியத்தில் வீணாகத் துணிந்து பிரவேஸிக்க மாட்டேன். பேருங் கீர்த்தியும் வேண்டுமென்ற மோகங்கொண்டு, இந்த இரண களங்களில் பிரவேசிக்கவும் மாட்டேன். இந்த யுத்தத்திற்கு வருமாறு உன்னை வற்புறுத்தவும் மாட்டேன்!

ஆயுளும் வாழ்வும் அநித்தியமானவை. அழகையும், பெருமையையும் அழிக்கும் கிழத்தனம் நமக்கு வரவே வரும்! பசியும் பிணிகளும் நம்மை வாட்டி வருத்தும், இறுதியில் மரணமும் அடைவோம், அதைத் தவிர்க்க முடியாது! பாமர ஜனங்கள் இவ்வாறு நெடுநாள் வாழ்ந்திருந்து, நற்றொண்டுகள் ஒன்றேனும் ஆற்றாமல், தங்களது பிராணனை விடுகின்றனர்.

அவ்வாறின்றி, இயல்பாகவும் அனாயாஸமாகவும் தம்முடைய உடல்களை விட்டு வெளியேறக்கூடிய நம்முடைய பிராணன்களை நாம் தியாகம் செய்வோமாக! புகழைத் தரத்தக்க நற்காரியங்களில் நாம் அவற்றை வலுவில் வழங்க வேண்டும் என்பதே நமது தலைவிதியாயிருக்கலாம். நாம் அவ்வாறு நமது பிராணனைவிட்டு விட்டால், நம்முடைய பின்னோர்கள் நம்மை, மனவுறுதியுடன் பெருங்காரியங்களில் பிராணனை விட்டவர்கள் என்று கொண்டாடுவார்கள்,

அவ்வாறின்றி வெற்றியுடனும் உயிருடனும் வாழ்ந்து வந்தால் மட்டுமிதமில்லாத மரியாதைகளுக்கு நாம் பாத்திரர் களாவோம். ஆதலால், நாம் கீர்த்தியைச் சம்பாதிக்கவோ அல்லது அதைச் சம்பாதிக்கச் செய்யும் பிரயத்தனங்களில் நம் முடைய உயிர்களை வழங்கவோ நிச்சயிப்போமாக!'' என்றான்.

அந்த வசனங்கள், அவற்றை யுரைத்தோனது மனதி லுறைந்து வந்த ஆத்திரத்திற்குச் சற்றும் இளையாததும், அதற்குச் சமானமானதுமான தீவிர உணர்ச்சியை, அவற்றைச் செவி சாய்த்துக் கேட்ட வீரனது உள்ளத்தில் உண்டாக்கின. அவனும் வீராவேசத்துடன் சட்டென்று கிளம்பினான். அப்போது அவ்வீரர் களுடைய சேனைகளும் மிகுந்த உற்சாகத்துடன், தங்களுடைய தலைவர்களைத் தொடர்ந்து கொண்டு, ஓடி வந்தன! தங்களுடைய சத்துருக்களின் மேல் வேகமாய்ப் பாய்ந்து சென்றன. அன்றை தினம் நடக்கவிருந்த யுத்தத்தைத் தங்களிடம் ஒப்புவித்து விட வேண்டும் என்றும் குதித்தன. அவற்றின் வரவால் அந்த யுத்த களமே கறுத்து இருண்டு போய்விட்டது.

அப்போது ஓர் உன்னத ஸ்தானத்திலிருந்து, காரியங்களைக் கவனித்த மெனிஸ்தியஸ் என்பவன், கிரேக்கர்களது கோட் டையை அழித்தேவிட வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒரு பெரும் புயல்போல வந்த சத்துரு ஸைனியங்களைக் கண்ணுற்றான்.

அவன் அச்சமயம் தங்களுடைய கோட்டை கொத்தளங் களை அடுத்து வந்துகொண்டிருந்த சத்துருக்களைத் தடுப்பதற்கு, என்ன உதவி உளது என்று அறிய ஆவல் கொண்டு, தனது இடத்தில் இருந்த வண்ணம், நெடுந்தூரம் வரை தனக்குக் கட்புல னாகிய கோட்டை மதில்களை நாற்புறமும் உற்று நோக்கினான். அப்போது, அதுவரை நடந்து வந்த யுத்தத்தில் திருப்தியடையாத வர்களும், மேன்மேலும் அந்த யுத்தத்தை நடத்தியே தீரவேண்டும் என்று ஆவல் கொண்டவர்களும், சத்துருக்களது இரத்தத்தைத் தங்கு தடையின்றியும், தயவு தாக்ஷண்ணியமின்றியும் தாராள மாக வடித்து வந்தவர்களுமான டியூஸரும் அஜாக்ஷர்களும் நின்றுகொண்டிருந்தது அவனுக்குக் கட்புலனாயிற்று. அவன் அவர்களைக் கூவியழைத்தான். அந்தக் கூக்குரல் அவர்களது காதுக்கு எட்டவில்லை, அது வீணேயாயிற்று!

வீரர்கள் தங்களுடைய தலைகளிலும், உடல்களிலும் தரித் திருந்த கிரீடங்களும், கவசங்களும் ஒன்றோடொன்று உராய்ந்த பொழுது உண்டான சப்தம் கணீர் கணீர் என்று ஆகாயத் தையளாவிக் கொண்டு சென்றது. அதன் எதிரொலி, அந்த யுத்தகளங்களிலெல்லாம் பரவியது. அப்போது கோட்டைக் கதவு களின் கீல்களெல்லாம் காற்றாய்ப் பறந்தன. மதில்களும் அவற்றின் ஒலிக்கு ஒத்து எதிரொலியை விடுத்தன. ஆகாயமே நடுங்கியது; மலைகள் கதறின; தரையும் இடி இடித்தாற்போல் நடுங்கியது;

இந்தக் கலவரத்தினல் தனது கூக்குரல் டியூஸர்க்கும், அஜாக்ஷர்களுக்கும் செவிப்புலனுகவில்லையென்று அறிந்து, மெனிஸ்தியஸ் தூஊஸை நோக்கிக் கீழ்க்கண்டவாறு கூறினன் :

“ இங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிச் சென்று, அஞ்சா நெஞ்சர்களான அஜாக்ஷர்களை நமது உதவிக்கு விரைவாக வரும்படிச் சொல்லு, இந்த யுத்தம் எவ்வாறு முடியும் என்பதை நாம் சொல்ல இயலாது ; ஆனல் பலசாலிகளான அவ்விருவரும் ஒன்ருய்ச் சேர்ந்து உழைத்து வந்தால் நாம், இந்த யுத்தத்தில் நமக்கு உண்டாகக் கூடிய சிரமங்களைச் சிறிது பொறுத்து வரலாகும். நம்முடைய சத்துருக்களில் அதிசூரர்களும், அதிபாரக்கிரமசாலிகளுமான லிஸியன் இராஜகுமாரர்கள், அதோ, நம்மை நோக்கி வருகின்றனர். அவர்கள் அங்கு, இதுவரை, அதி கொடிய யுத்தங்களைச் செய்தே வந்திருப்பார்களானல், இங்கும் அவ்வாறே பொருவார்கள்.

ஆதலால் திலமானுவது இங்குள்ள கோபுரங்களைக் காக்க வரவேண்டும். குறிதப்பாமல் அம்புகளை யெய்பவனை டியூஸரும் அவனுக்கு உதவியாகத் தனது வில்லுடன் சேர்ந்து உழைத்து சத்துருக்களால் நமக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களை ஏற்று, அகற்றி அவர்களைத் திருப்பி முறியடிக்க வேண்டும்” என்ருன்.

அந்த வசனங்களைச் செவியேற்ற அந்தத் தூதன் அக்கணமே, அந்த அரணை கோட்டை மதில்களின் ஓரத்தில் திரளாகக் கூடியிருந்த சைனியங்களினிடையே விரைந்து ஓடிச் சென்று அவ்வீரர்களைத் தேடிக் கண்டு பிடித்தான் ; அவர்கள் புழுதிபடிந்திருந்த கடலோரத்தில் அன்று நடந்து வந்த யுத்தத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். வேர்வையிலும், இரத்தத்திலும் ஸ்நானஞ் செய்தவர்களைப் போலவும் தோற்றினர்.

தூஊஸ் அவர்களிடம், “ தலைவர்களான, மஹா சூரர்களே! பிடியூஸின் புத்திரர் உங்களது உதவியை நாடுகின்ருர். இந்த யுத்தம் எவ்வாறு முடியும் என்பதை நாம் சொல்ல இயலாது. ஆனல் பலசாலிகளான நீங்கள் ஒன்ருய்ச் சேர்ந்து உழைத்து வந்தால் இந்த யுத்தத்தில் நமக்கு உண்டாகக் கூடிய சிரமங்களை நாம் சிறிது பொறுத்து வரலாகும். நம்முடைய சத்துருக்களில் அதிசூரர்களும் அதிபராக்கிரமசாலிகளுமான லிஸியன் இராஜகுமாரர்கள், நம்முடைய கோட்டை கொத்தளங்களை நோக்கிச் சென்றனர். அவர்கள் இங்கு இதுவரை அதிகொடிய யுத்தங்களைச் செய்து வந்திருப்பார்களானல் அங்கும் அவ்வாறே பொருவார்கள். ஆதலால் திலமானுவது அங்குள்ள கோபுரங்களைக் காக்க வரவேண்டும். குறிதப்பாமல் அம்புகளை எய்பவனை டியூஸரும், திலமானுக்கு உதவியாகத் தனது வில்லுடன் விரைந்து வரவேண்டும். நீவிர் இருவருமாகச் சேர்ந்து உழைத்து, சத்துருக்களால் நமக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களை ஏற்று, அவற்றை

யகற்றி, அவர்களேயும் திருப்பி முறியடித்துவிட வேண்டும்" என்ருன்.

அக்கணமே, மஹானுன அஜாக்ஷன் தனது கவனத்தை அந்தக் கோட்டையின் மேற் செலுத்தித் தன்னுடைய ஸஹசரர் களான அந்த யுத்தத்தில் உத்யோகித்து வந்த வீரர்களுக்குப் பின் வருமாறு கட்டளே யிட்டான் :—

"வாராய்! வீரனுன லயிக்கமீடி! உன்னுடைய வீரசூர பராக்கிரமங்களே நீ இப்போது தான் காட்ட வேண்டும்! தைரிய சாலியான ஒயிலியஸ்ஸே! நீயும் உனது சக்தியை இந்த யுத்தத் தில்தான் ஸ்தாபிக்க வேண்டும்! இந்த எனது கையால் நான் நம் முடைய சத்துருக்களேத் துரத்தியோட்டிவிட்டுத் திரும்பி வரும் வரை இந்த யுத்த களத்தின் ஜயாபஜயங்களேயும், லாப நஷ்டங் களேயும் நான் உங்களிடம் ஒப்புவிக்கின்றேன். எனது காரியம் முடிந்தபின், நான் சிறிதும் தவருமல் திரும்பி வந்து, மீந்துள்ள காரியங்களேப் பூர்த்தி செய்வேன்" என்று சொல்லிவிட்டு, அவன் ஏழுமடிப்புள்ள தனது கவசத்துடன் அங்கு விட்டகன்ருன்.

சென்றவிடமெல்லாம் சேதத்தை யுண்டாக்கத் தக்கத் தனது பிரம்மாண்டமான வில்லே, அதிபலவானுன பாண்டியனது, தோளின்மேல் ஏற்றி யெடுத்துக்கொண்டு மஹா தைரியசாலியான டியூஸரும், அஜாக்ஷனேப் போலவே துரிதமாகக் கடற்கரையை நோக்கிச் சென்ருன்.

ஆகாயமளாவியுள்ள கோபுரங்களேச் சூழ்ந்து கொள்ளும் புயல்களேயும், கருமேகங்களேயும்போல் லிஸியன் வீரர்களும், அவர் களுடைய சேனேகளும் கிரேக்கர்களின் உன்னதமான கோட்டை மதில்களின்மேல் பிரஸன்னராயிருந்தனர். அவ்வாறு நெருக்குண்ட கிரேக்கர்கள் இந்த ஏற்றத் தாழ்ச்சியான யுத்தத்தை ஒரு கை பார்த்தே விடுவோம் என்று தீர்மானித்துத் தங்களுடைய சேனே களனேத்தையும் ஒன்ருய்த் திரட்டினர். யுத்தம் திரும்பவும் ஆரம் பித்து, இருதிறத்தாரும் பேரிரைச்சலும், கூச்சலும் போட்டனர். உரத்துக் கூவினர். பட்டு விழுந்தவர் அழுது புலம்பினர். அவர் கள் செய்த சப்தமும் அதனுலுண்டான குழப்பமும் மேன்மேலும் அதிகரித்து, அண்டங்களே நிறைத்து விட்டன!

அப்போது ரூர்க்கங்கொண்ட அஜாக்ஷன் முதன் முதலாகத் தங்களுடைய அரண்களே நோக்கி வந்த சத்துரு கோஷ்டியை வழிமறித்துப், பின் அவர்களது கூட்டத்தின் உட் புறமும் புகுந்து, தீரனுன எபிக்ளீஸ் என்பவனே, நிழலுலாவும் நமனுலகிற்கு அனுப்பி விட்டான், அந்த எபிக்ளீஸ், ஸார்ப்பீடனது உற்ற நண்பன்.

மதில்களிலிருந்து இடிந்து விழுந்த ஒரு பாருங்கல்லின் ஒரு துண்டானது, வீரனுன அஜாக்ஷனது வழியின் குறுக்காகக்

கிடந்தது. தற்காலத்தில் அதிபலசாலியான, ஒரு நாட்டுப்புறத் தான் கூட அதை நிலத்திலிருந்து தூக்க முடியாது. அதிபளுவான அந்தப் பாறையை, அஜாக்ஷன் அதிலகுவாகத் தூக்கிச் சமமாகத் தனது கையில் தாங்கிப் பிடித்துக் கொண்டு வட்டமாகச் சுழற்றி உயர்த்தி யெறிந்தான். நாசப்பிரதானமான அந்தப் பாருங்கல் அதிவேகத்துடன் பறந்து, ஆகாயத்தை யளாவிக் கொண்டு சென்று, லிஸியனுடைய தலைச் சீராவின் மேல் குறிதப்பாமல் இடி போல் பொத்தென விழுந்து, அவனது கிரீடத்தை உடைத்துப் பொடிப் பொடியாய் நொறுக்கி விட்டது. நீர் நிலைகளில் மூழ்குவதில் சமர்த்தர்களான முக்குவர்கள் எவ்வாறு ஆகாய மளாவி யுயர்ந்த செங்குத்தான ஓர் இடத்திலிருந்து தலைகுப்புறப் பாய்ந்து கடலின் அடிப்பாகத்தை நோக்கிச் செல்வார்களோ, அவ்வாறே எபிக்ளீஸ், தனது இருப்பிடத்திலிருந்து திடீரென விழுந்து பெருமூச்செறிந்து, தனது பிராணனையும் விட்டான். ஏற்கனவே சொல்லியபடி, அவனது ஆத்மாவானது முணு முணுத்துக் கொண்டே அந்த லோகத்திற்குள் பிரவேசித்து விட்டது. இது நிற்க.

பயமென்பதறியாத கிளாக்கஸ் அந்தக் கோட்டை கொத்த ளங்களின் அருகே வந்த பொழுது, இறக்கையுடன் பறக்கும் ஓர் அம்பானது, டியூஸர் கையினின்று புறப்பட்டுக் குறிதவருமல் அவனை நோக்கி விர்ரென்று, விரைந்து பறந்து சென்று, அவனைத் தாக்கி மூடப்படாமல், மறைவின்றித் திறந்த வண்ணமிருந்த அவனது கையைத் துளைத்து அதில் ஒரு பெருத்த காயத்தை உண்டாக்கி விட்டது.

ஆனுல் அந்த வீரன், தான் அவ்வாறு காயமடைந்த தாகக் காட்டிக் கொள்ளவில்லை. அவ்வாறு செய்தால், தன்னுடைய சத்துருக்களில் எவனுவது ஒருவன் தன்னைத் தாக்கி விட்டதாகப் பெருமை யடித்துக் கொள்வான் என்றும், தன்னை யிகழ்ந்து பேசுவானென்றும், அதனுல் தன்னுடைய வீரர்கள் முன் செல்லுவது தடைப்பட்டுப் போய்விடும் என்றும் பயந்து, அவன் அந்தக் காயத்தை மறைத்துக் கொண்டு, யுத்தத்தின் மத்தியில் அரைவாசி யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் உன்னதமான தனது இரதத்திலிருந்து குதித்து, வெறுப்புடன் அந்தக் களத்தை விட்டுப் பின்னடைந்து விட்டான்.

இவ்வாறு கிளாக்கஸ், வலியிழந்து, நிதானமாக யுத்த களத்தினின்றும் விலகி விட்டதை, தேவஸ்ரூபியான ஸார்ப்பீடன் கண்ணுற்று மிகவும் வருந்தினுன். அவனது மார்பு ஆத்திர மிகுதியினுல் படபடவென்று துடித்தது. அவன் உடனே தனது இரதத்திலிருந்து ஒரே பாய்ச்சலாய்த் துள்ளிப் பாய்ந்து, குதித்துத் தன்னுடைய சத்துருக்களை நோக்கி, விரைந்து பறந்து சென்ருன். அவ்வாறு சென்ற பொழுது, அவனது விசைக்கு முதன் முதலாக ஆல்க்மயான் என்பவனே இரையானுன்.

ஆல்க்மயானது மார்பை, அவன் தனது கூரான முனையுள்ள ஈட்டியைக் கொண்டு ஆழமாகத் துளைத்தான். அதனால் அங்குத் தனது வாயைத் திறந்து கொண்டு ஓர் அகல மான புண் உண்டாயிற்று. பின்பு அவன் அந்தப் புண்ணிலிருந்து தனது ஈட்டியைத் துரிதமாக உருவிப் பிடுங்கி யெடுத்தான். அப்போது அந்தப் புண்ணிலிருந்து இரத்தமானது ஒரு வெள்ளம் போல் அதிவேகமாகப் பெருக்கெடுத்து, அந்த ஈட்டியின் வழி யாகவே புரண்டோடி வந்தது. அந்த வீரனும் இடியைப் போல் ஒரு பெருத்த அரவத்தைச் செய்து கொண்டு மண்ணின் மேல் சாய்ந்தான். அப்போது அவன் அணிந்திருந்த பித்தளைக் கவச மானது ஒரு பெருத்த ஒலியைச் செய்து கொண்டு நிலத்தை யிடித்தது.

இவ்வாறு வெற்றியடைந்தவனுன ஸார்ப்பீடன் அக்கணமே துரிதமாகக் கிரேக்கர்களது கோட்டையை நோக்கித் திரும்பிச் சென்று, தனது முழு பலத்துடனும், அதை யசைத்தான்; தனது ஸர்வ ஸக்தியையும் பிரயோகித்தான். அதுவும் அசைந்தது! அந்த மதிலிலிருந்து இடம் விட்டுப் பெயர்ந்த கற்கள் கட கடவென்று இளகி உதிர்ந்து விழுந்தன. அவன் அந்தக் கற்களை வேறு வேருகப் பிரித்து உருட்டி விட்டான். இவ்வாறு அழிந்து போன அந்த மதில்களிலிருந்து உதிர்ந்த கல்லும் மண்ணும் அந்தக் களம் முழுவதிலும் புழுதியையும் தூசி யையும் பரப்பிக் கொண்டு அதை ஒரு கனமான புகையைப் போல் கவர்ந்து விட்டது. கடைசியாக அந்த மதில்களில் ஒரு பிரம்மாண்டமான பிளவு உண்டாயிற்று. மதில்களும் காலியாய் விட்டன. அவற்றைக் காத்து வந்தோரும், காற்ருய்ப் பறந்து விட்டனர். ஆகவே கோட்டையின் உட்செல்ல வேண்டு மென்று துடித்துக் கொண்டிருந்த துரோஜர்கள் வெள்ளம் போல் அந்தச் சந்தின் வழியே உட்புகுந்து சென்றனர்!

அக்கணமே டியூஸர், கொல்லென் ஞெலிக்கும் தனது வில்லை, நாணேற்றியிழுக்க, அஜாக்ஷனும் தனது வேலைத் தங்களது வைரியின் மேல் விடுத்தான். இறகைப் போன்ற அலகையுடைய ஆயுதம் அந்தச் சத்துருவின் அரைக் கச்சையின் மீது ஊன்றி நின்று விட்டது. மரத்தாலாகிய மற்றைய ஆயுதமும் அந்தக் கச்சையின் முகப்பைத் துளைத்து ஊடுருவிக் கொண்டு சென்று துடித்தது! ஆனுல் ஜோவ் தேவர், தனது மகனுக்கு நேரிடக்கூடிய ஆபத்துக்களைத் தடுக்க வேண்டும் என்ற நோக்கத் துடன், இந்தக் கொடிய யுத்தத்தைக் கண்ணுற்றுக் கவனித்துக் கொண்டு அவனருகிலேயே யிருந்து வந்ததினுல், அந்த வீரனுக்கு ஒரு தீங்கும் உண்டாகி விடவில்லை.

என்ருலும் அந்த இராஜகுமாரன் பின்வாங்கினுன்; ஆனுல் யுத்தத்தில் புறங்கொடுத்து ஓட்டம் பிடிக்க வேண்டும் என்பது அவனது நோக்கமாக விருக்கவில்லை. இந்தப் பழிக்குப் பழி வாங்கி விட வேண்டும் என்றும், தன்னுடைய சேனைகளுக்கு

உற்சாகத்தை உண்டாக்க வேண்டு மென்றும், முன்னிலும் அதிகக் கொடுமையாகவும் மும்முரமாகவும் யுத்தத்தைச் செய்ய வேண்டும் என்றும் அவர்களுக்கு ஊக்கத்தை யூட்ட வேண்டு மென்பதும், அவனது நோக்கமாக விருந்தது. அந்த நோக்கத் துடன் அவன் தங்களுடைய சத்துருக்களைத் தாங்கள் வென்றே விடுவோம் என்ற நம்பிக்கையும் அதனால் தங்களுக்கே அழியாப் புகழ் உலகத்தில் நிலவிவரும் என்றும் அது எவ்வளவு இனிது என்ற எண்ணமும் தன்னுடைய ஸைனிகர்களுடைய மனதில் ஊறி நிறைந்து உறையுமாறு அவர்களுக்கு உரைத்தான்.

அவனுடைய வசனங்களைக் கேட்டபின், சோர்வுற்றிருந்த அந்தச் சேனையிலிருந்தோரனைவரும் தளர்வு நீத்துப் புத்துயிர் பெற்று, அதிவேகத்துடன் எழுந்தனர். அவன் அவர்களிடம் "லிஸியர்களே! நீங்கள் அதிபராக்கிரமசாலிகள் என்ற பெருமை யடித்துக் கொள்ளுகின்றீர்களே! அந்தப் பராக்கிரமம் எங்கே? அதை இப்போது காணோமே? உங்களது பழங் கீர்த்தியும் முன்னுளில் நீங்கள் சாம்பாதித்திருந்த நன்மதிப்பும் பறந்தே போய் விட்டனவோ! நாம் இப்போது இந்தக் கோட்டையின் மதிலையும் பிளந்தாய் விட்டது! அது திறந்த வண்ணமே யிருக்கின்றது. என்றாலும் நம் சத்துருக்கள் அதன் வாயிலைக் காத்தே வரு கின்றனர். உங்களது தலைவன் மாத்திரம், தான் ஒருவனாகவே அவ்வாறு, காவலுள்ள அந்த வாயிலைக் கடந்து செல்லச் சிரமப் பட்டு வருகின்றான். இதுவரை அவனது சிரமத்திற்கு தக்கப் பலன் கிடைக்கவில்லை! அவனது சிரமமனைத்தும் வீணேயாகி விட்டது! காரியங்கள் இவ்வாறு இருக்கையில் நீங்கள் வாளா விருத்தல் முறையோ? அது தகவே தகாது!

ஆதலால் நீங்களனைவரும் ஒன்றாய்க் கூடுங்கள்; அவனுக்கு உதவி செய்ய வாருங்கள்; அவ்வாறு செய்வீர்களே யாகில் அதோ, நம் சத்துருக்களது அந்தக் கடற்படையின் தலை கவிழ்ந்தே போய்விடும்! பலசாலிகள் பலர் ஒன்றாய்ச் சேர்ந்து உழைத்தால், அவர்களுக்கு எல்லாக் காரியங்களும் கை கூடுமன்றோ!" என்றான்.

இவ்வாறு அவன் பழிப்புக் கிடமின்றிக் கடிந்துரைத்த மொழிகளைக் கேட்ட ஸைநிகர்கள், ஆர்வம் மேற்கொண்டு மனங் கொதித் தெழுந்தனர். ஒன்றாய்க் கூடினர். இடைவெளியின்றி ஒருவரையொருவர் நெருங்கினர். கோட்டையைத் திரும்பவுந் தாக்க மும்முரமாய் முன் வந்தனர். அப்போது தங்களது அணி வகுப்பில் அசையாமல் உறுதியாய் நின்று கொண்டிருந்த கிரேக்கர்களும், அவர்களது வேகத்தைத் தடுத்து வந்தனர். ஒரே திரளாகத் திரண்டு வந்து, அந்த யுத்த களத்தில் தங்களை நாற்புறத்திலும் எதிர்த்து நெருங்கி வந்த சத்துருக்களுடைய கொடுமைகளை, அவர்கள், தாங்களிருந்த இடத்திலேயே, அசையாமல் இருந்து கொண்டு பொறுத்து வந்தனர். அப்போது,

கிரேக்கர்களை, லிஸியர்கள் மடக்கவுமில்லை; லிஸியர்கள் கிரேக்கர்களுடைய கோபுரங்களில் பிரவேசிக்கவுமில்லை!

பிடிவாதக்காரர்களான இரண்டு குடியானவர்கள், அடுத்தடுத்துள்ள தங்களுடைய நிலங்களின் எல்லையோரமாகவுள்ள ஒரேயிடத்தைத் தனது! தனது! என்று தர்க்கித்துக் கோபங்கொண்டு, கடைசியாய்ப் போரிலும், அடி தடியிலும் இறங்கி விடுவதுபோல், இவ்விரு திறத்துச் சேனையோரும் ஒருவரையொருவர் இழுத்தனர். தங்களது வியர்வையை வடித்தனர், ஒருவராவது ஜயிக்கவுமில்லை, தோற்கவுமில்லை; ஓர் அடியோ அல்லது ஓர் அங்குலமோ அளவுள்ள இடத்தை விட்டுக் கொடாமலும், கைப்பற்ருமலும், சாகும்வரை பொருதே தீருவோம்! என்ற பிடிவாதத்துடன் இருகக்ஷியாரும் இருந்தனர். அந்தப் பிடிவாதத்திலேயே மாண்டனர். கிரேக்கர்களால் அந்த மதில்களைக் காத்துவரவாவது, துரோஜர்களால் அவற்றைக் கைவசமாக்கிக் கொள்ளவாவது இயலவில்லை. ஆனுல் ஆண்மை நிறைந்துள்ள அவர்களுடைய மார்புகளைக் கணக்கற்ற அம்புகள் துளைத்தன. அவற்றில் காயங்களுமுண்டாயின. அவர்கள் ஒருவரையொருவர் தாக்கியபொழுது, உரத்த சப்தங்கள் கேட்டன. வீரர்கள் ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்து விழுந்தபொழுது, அவர்களுடைய கவசங்கள் ஒன்றின்மேல் ஒன்று உராய்ந்து கணகணவென்று ஒலித்தன.

அந்தக் கடற்கரை முழுவதிலும் அன்று நிகழ்ந்த யுத்தத்தில் மடிந்தோருடைய பிணங்கள் மலைபோல் குவிந்து கிடந்தன. உன்னதமான கோட்டை கொத்தளங்களின்மேல் நின்று அவற்றைக் காத்துவந்த கிரேக்க வீரர்களும் தங்கள் இரத்தத்தைத் தாராளமாக வடித்தனர். அந்த இரத்தம் அம்மதில்களினின்றும் சொட்டிக் கொண்டிருந்தது.

நேர்மையுள்ளவளும், ஏழையுமான ஒரு கிழவி சலியாமலும் ஓய்வொழிச்சலின்றியும், தான் உழைத்துச் சேர்த்து வைத்திருந்த ஆட்டு ரோமத்தைப் படிகளின் கனத்திற்குச் சரியாக ஒரு தராசில் வைத்து, இம்மியளவும் ஏற்றத் தாழ்ச்சியின்றி நிறுத்துக் கொடுக்கும் வரை, அத்தராசின் இரு தட்டுகளிலும் வைக்கப்படும் படிகளும் ஆட்டுரோமமும் சரியாக நிற்பதில்லை. அவை ஐயத்துக்கே இடந்தருகின்றன! அந்தத் தராசும், ஒரு புறமிருந்து மறுபுறம் அசைந்து ஆடி நடுங்குகின்றது. படிகளின் கனமும் ஆட்டு ரோமத்தின் கனமும் சமமாகிவிட்டால், அப்போது தட்டுக்கள் ஒன்ருே மற்ருென்ருே தாழ்வதுமில்லை; உயர்வதுமில்லை, இருதட்டுகளிலும் சமமான பாரத்தைத் தூக்கிக் கொண்டு துலாக்கோல் அசையாமல் நிற்கின்றது.

இணையற்ற சக்தியையுடைய வீரனுன ஹெக்டர், தெய்வானுக்கிரகத்துடன் வந்து, இந்த யுத்தத்தின் போக்கைத்

திருப்பியவரையிலும், இதன் நிலேயும், அவ்வாறே யிருந்தது. அவன், ஒரு சுழல்கால் போல் அம்மதில்களின் மேல் வேகமாய்ப் பாய்ந்து பறந்து சென்று தன்னுடைய கோஷ்டியாரைப் பன் முறையும், படிப்படியாகவும் வற்புறுத்திக் கூவியழைத்தான். பலவாருக உரத்துக் கதறினன். அவர்களது மனத்தைத் தவிக்கச் செய்தான். அவர்களுக்குச் சுரணையுண்டாக்கினன்:

"துரோஜர்களே! முன் செல்லுங்கள். நீங்கள் மஹா வீரர் கள் ! வலிவுள்ளவர்கள், உங்கள் கைகளைக் கொடுத்து உதவுங்கள். கடற்படையை நோக்கி ஓடுங்கள். விரைந்து செல்லுங்கள், கொழுந்து விட்டுக் கொண்டு எரியும் கொள்ளிக் கட்டைகளைச் சுழற்றுங்கள்!" என்ருன்.

அவ்வார்த்தைகளைக் கேட்ட கணமே அவர்கள் ஓட்டமாக ஓடிவந்தனர் ; அவனது அழைப்புக்கு இசைந்து ஓடி வந்து, திரளாகக்கூடி மதில்களில் ஏறுவதற்காக இயந்திரங்களை உயர்த்தி நிறுத்தினர். அம்மதில்களின்மேலும் ஏறினர். அப்போது பளிச் சென்று மின்னும் ஈட்டிகளும் வேலாயுதங்களும் அந்தக் கோட்டை கொத்தளங்களைச் சுற்றிக் கொண்டு, உயர்ந்து நின்ற ஓர் அடர்ந்த காடுபோல் விளங்கின. துரோஜர்களனைவரும் அந்த ஆகாய மளாவிய மதில்களின் மேல் பிரஸ்ஸன்னராயினர்.

அச்சமயம் தைரியசாலியான ஹெக்டர், தன்னுடைய எதிரிகளின்மேல் எறிவதற்காக, ஒரு பிரம்மாண்டமான பாறை யைத் தூக்கினன். அதன் மேல்பாகம் மாத்திரம் கூரான முனை யுள்ளதாகவும் அடிப்பாகம் செதுக்கப்படாமல் குண்டு குழிகளும் முண்டுமுடிச்சுகளும் உள்ளதாகவுமிருந்தன. துர்ஜனங்களே வாழ்ந்து வரும் இக்காலத்தில் உள்ள அதிபலசாலிகள் இருவர் சேர்ந்தாலும், அவர்களால் அந்தக் கனமான கல்லைத் தூக்க முடியாது. என்ருலும், பனிபோன்ற ஆட்டுமயிர் மூட்டையை ஓர் இடையன் இலகுவில் சுமந்து செல்லுவது போல் இந்தப் பாருங்கல்லை ஹெக்டர் ஒருவனே தூக்கி யெடுத்தான் ; அதைத் தனது தலையின்மேல் ஆகாயத்தில் அசைத்து ஆட்டினன் ! ஒரு தெய்வத்தினுல் மாத்திரம் ஆகக் கூடிய இந்தக் காரியத்தை, ஹெக்டர், ஜோவ் தேவரின் ஸஹாயத்தால் செய்து முடித்தான். அவர், ஆகாயத்தில் தமது ஸ்தானத்திலிருந்த வண்ணம், அதைத் தாங்கி வந்தார். அதன் பளுவும் குறைந்து போயிற்று !

இவ்வாறு அந்தப் பாறையைத் தனது கையில் ஏந்திக் கொண்டு அவன் அந்தக் கோட்டை வாசற்கதவுகளின் முன் வந்து நின்ருன். மூடப்பட்டிருந்த அக்கதவுகள், மிகவும் கெட்டியான வஸ்துக்களால் செய்யப்பட்டிருந்தன. அவை பெருத்த அளவின தாகவும் இருப்புச் சட்டங்களாலும் வெண்கலக்கீல்களாலும் உரப் பிக்கப்பட்டன வாகவும், கெட்டியான மரங்களினுல் செய்யப்பட்ட உத்திரங்களின் மேல் பதிக்கப் பட்டனவாகவுமிருந்தன,

அந்தக் கூரான பாறுங்கல்லை ஹெக்டர் எறிந்த பொழுது அது தன்னெதிர்ப்பட்ட வஸ்துக்களனைத்தையும் பொடிப் பொடியாய்த் தகர்த்துக்கொண்டு சென்று, அந்தக் கதவுகளில் இணைக்கப்பட்டிருந்த பல்கைகளையும் சட்டங்களையும் இடிபோல் தாக்கித் தகர்த்தது, அவற்றைப் பிளந்து கொண்டு உட்புறமும் சென்று விட்டது. அப்போது, அந்தக் கதவுகளைத் தாங்கி வந்த கெட்டியான மர உத்திரங்களெல்லாம் கலகலவென்று நிலை குலைந்தன. ஒன்றுடன் ஒன்று பொருந்தி மூடும் கதவுகளெல்லாம், சில்லுச் சில்லாகத்தெறித்துப் பறந்தன. இவ்வாறு நெற, நெறவென்று நொறுங்கிய கதவுகளிலிருந்த கீல்களெல்லாம், துள்ளிக் குதித்தன. சுழியாணிகளும் கதறிக்கொண்டு பறந்தன.

இவ்வாறு கதவுகளை இடித்து உடைத்த பின், இருட்டைப் போல் விகார உருவத்துடன் விளங்கிய அந்த வீரன், கோபத்துடன் கொதித்துக் கொண்டு தட தடவென்று அந்தக் கோட்டையின் வாயிலின் உட்புகுந்தான். தனது கையிலிருந்த இரண்டு ஈட்டிகளை அசைத்துச் சுழற்றினன். அவை தகதகவென ஒளியை வீசின ; அக்கணமே, அவனது பிரகாசமான கவசத்திலிருந்து, அதி பயங்கரமான ஓர் ஒளி வீசியது ; அவனுடைய கண்களின் இரு விழிகளிலுமிருந்து கொழுந்து விட்டுக்கொண்டு எரியும் தீப்பொறிகள் கிளம்பின. அவற்றைக் கண்ணுற்றோருடைய கண்கள் கூசின. இவ்வாறு அவன் வெகு கம்பீரமாகவும், சிறிதும் தங்கு தடையின்றியும் தன் மனம் போனபடி மனித வர்க்கத்தார் அனைவரிலும் வலிமிகுந்த ஒரு தெய்வத்தைப் போல் மேலும் கீழுமாக நடந்தான்.

அதன்பின் அந்தத் திறந்தவாயிலின் வழியாக துரோஜவீரர்கள் அலைகளைப்போல் திரண்டு வந்து உள்ளே நுழைந்து, அந்த இடத்தை நிறைத்து விட்டனர். இதைக் கண்ணுற்ற கிரேக்கர்கள் திகைத்து ஓட்டம் பிடித்தனர்.

இவ்வாறு நிகழ்ந்த காரியங்களினல் அந்தக் கடற்கரையே ஒரு பிணக்காடாக ஆகிவிட்டது. அதன் மேல் கவிழ்ந்து கொண்டிருந்த ஆகாயமும் வீரர்கள் ஒருவரை யொருவர் தாக்கியடித்த போது, உண்டான சப்தத்தினலும் மாண்டவர்கள் அழுதும் புலம்பியும் கூவியபொழுது உண்டான சப்தத்தினலும் இடிந்துபோய் விட்டது.

---o---

## பதின்மூன்றும் அத்தியாயம்

# நான்காம் யுத்தத்தின் தொடர்ச்சி. கிரேக்கர்களுக்கு நெப்தியூன் பகவான் உதவி. இதோமினியஸின் அற்புதமான செயல்கள்.

கதைச் சுருக்கம்: அஜாக்ஷர்கள் நின்றுகொண்டிருந்த இடத்தின் அருகாமையிலுள்ள கோட்டை வாயிலின் வழியே அந்தக் கோட்டைக்குள் ஹெக்டர் பலவந்தமாகப் புகுந்து விட்டதையும், அதனுல் கிரேக்கர்களுக்கு நேர்ந்துவிட்ட நஷ்டங்களையும் கண்டு மனங்கலங்கிய நெப்தியூன் பகவான் கால்க்காஸின் உருவத்தைத் தரித்துக்கொண்டு வீரர்களான அஜாக்ஷர்களின் முன் வந்து நின்று, ஹெக்டரை எதிர்த்துச் செல்லும்படி அவர்களுக்குப் போதிக்கின்ருர்.

அதன்பின் அவர், கிரேக்க சேனுதிபதிகளில் ஒருவனது உருவத்தைத் தரித்துக்கொண்டு வந்து, தங்களுடைய கப்பல்களுக்கு ஓடிவிட்ட மற்றைய கிரேக்கர்களுக்குத் தைரியஞ் சொல்லுகின்ருர்.

அஜாக்ஷர்கள் அவருடைய போதனைகளை யேற்றுத் தங்கள் ஸைனியங்களை நெருக்கமாக அணிவகுத்து நிறுத்த, அவை ஹெக்டருடையவும் துரோஜர்களுடையவும் சேஷ்டைகளை யடக்கி விடுகின்றன.

இவ்வாறு செய்கையில், வீரச்செயல்கள் அனேகம் நிகழ்கின்றன. இந்த யுத்தத்தில் தன் ஈட்டியை இழந்துவிட்ட மெரியோனிஸ் என்பவன், வேருெரு ஈட்டியைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் இதோமினியஸ்ஸின் கூடாரத்துக்குச் செல்லுகின்ருன். அங்கு இரண்டு வீரர்களும் கலந்து சம்பாஷிக்கின்றனர். பின்பு அவர்கள் யுத்தகளத்திற்கு வருகின்றனர்.

அங்கு இதோமினியஸ், தானே மற்றெல்லோரிலும் மிக்க சூரன் என்பதை ருஜுப்படுத்தி விடுகின்ருன். அவன் ஆதிரியோனிஸ், ஆஸியஸ், அல்காத்தூஸ் என்பவர்களைக் கொன்று விடுகின்ருன். அப்போது தெய்வோபஸ் என்பவனும் ஈனியஸ் என்பவனும் அவனை யெதிர்த்துச் செல்கின்றனர். கடைசியாக இதோமினியஸ், யுத்தகளத்தை விட்டு விலகிப்போய் விடுகின்ருன்.

மெனிலாஸ், ஹெலலைக் காயப்படுத்தி விடுகின்ருன். பிஸாண்டரையுங் கொன்று விடுகின்ருன்.

யுத்த களத்தில் இடது பாகத்திலிருந்த துரோஜர்கள் முறியடிக்கப்பட்டுப் புறங்கொடுத்து ஓடுகின்றனர்.

கவண்கல் வீசுவதிலும், வில்வித்தையிலும் சமர்த்தர்களான லோக்ரியர்கள், ஹெக்டரை ஹிம்ஸிக்கின்றனர். என்றாலும் அவன் சிறிதும் இளைக்காமல் அஜாக்ஷர்களுடன் பொருகின்றான். கடைசியாக லோக்ரியர்களது ஹிம்ஸையை ஸஹிக்க முடியாமல் அவன் தவித்த பொழுது, யுத்த வீரர்களை ஒன்றாய்க் கூட்டிக் காரியங்களை ஆலோசிக்க வேண்டுமென்று பாலிதாமஸ், அவனுக்கு ஒரு யோசனை சொல்லுகின்றான்.

ஹெக்டர் அந்த யோசனையை யேற்றுக்கொண்டு ஒரு சபையைக் கூட்டுகின்றான். அதன்முன் சிதறிப்போயிருந்த துரோஜர்களை ஒன்றாய்த் திரட்டச் சொல்லுகின்றான்; பாரிஸ்ஸைக் கண்டிக்கின்றான்.

பின்பு, பாலிதாமஸ்ஸுடன் சேர்ந்து கொண்டு, அஜாக்ஷனை யெதிர்த்துச் சென்று, அதுவரை நின்றிருந்த யுத்தத்தை மறுபடியும் ஆரம்பித்து நடத்துகின்றான்.

இருபத்தெட்டாம் நாட்செய்திகளே இந்த அத்தியாயத்தில் தொடர்ச்சியாகச் சொல்லப்படுகின்றன.

காரியங்களெல்லாம், கிரேக்கர்களது கோட்டை மதிலுக்கும் கடற்கரைக்கும் இடையில் உள்ள இடத்தில் நிகழ்கின்றன.

---

இவ்வாறு இடிக்கடவுள் பலவானான ஹெக்டரையும் பராக்கிரமசாலிகளான அவனுடைய கோஷ்டியாரையும் அலைகளால் மோதுண்ட அந்தக் கடற்கரையோரமாக அசையாமல் நிற்கும்படி விட்டுவிட்டு, இவர்களது தலைவிதிப்படி நடக்கட்டும் என்று சொல்லி, அவ்விடம் விட்டு அகன்று சென்றார்.

'இன்று மும்முரமாக நடக்க இருக்கும் யுத்தத்தில் நேரிடக்கூடிய கணக்கற்ற கஷ்டநஷ்டங்களை இவர்கள் அனுபவிக்கட்டும், தங்கள் உயிர்களை மாய்த்துக்கொள்ளட்டும்; எக்கேடு கெட்டும் போகட்டும். விதிப்பயனை அனுபவிக்கட்டும்' என்று கைவிட்டு விட்டுத் தமது நோட்டத்தை அந்த யுத்தகளத்திலிருந்து திருப்பித் திரேஸியாவின் மேல் செலுத்தினார்.

தன்னைக் கண்ணுறுங் கண்கள் கூசும்படிப் பொறுக்க முடியாத வெளிச்சத்தைப் பொழிந்து கொண்டு, அவர் அவ்வாறு திரும்பிய பொழுது, யுத்தத்தில் தங்களுக்குள்ள சாமர்த்தியத்தை, உலகோரெல்லோரும் அறியும்படிக் காட்டிவரும் மைஸியர்கள் வசித்துவருவதும், காட்டில் திரிந்து வரும் முரட்டுக் குதிரைகளைப் பழக்குவதில் கெட்டிக்காரர்களான, திறமையுள்ள திரேஸியர்கள் வாழ்ந்து வருவதும், நேர்மையுள்ளவர்களென்றும், நீண்ட ஆயுள்

உள்ளவர்கள் என்று வெகு தூரத்திலுள்ள பிரதேசங்களிலும் பிரஸித்திபெற்ற ஹிப்போமோல்ஜியர்கள் உறைந்துவருவதுமான திரேஸியா நாடு அவருக்குக் கட்புலனாயிற்று.

அந்த ஹிப்போமோல்ஜியர்கள் மஹா பாக்கியவான்கள். முக்காலும், இக்காலும், எக்காலும், அவர்கள் பாக்கியவான்களே! அவர்கள் ஜீவராசிகளின் இரத்தத்தை வடிக்காமல் ஊனை நீத்துப் புலாலை மறுத்து, குற்றம் நீங்கிய பாலையே அருந்துகின்றனர். ஸாத்வீக ஆகாரத்தையே உட்கொள்ளுகின்றனர்.

ஜோவ் தேவர் அவர்களைக் கண்ணுற்று மகிழ்ந்தார்; ட்ராய் நாட்டை அறவே மறந்தார்; அபராதிகளான அவர்களது நாட்டையோ, அல்லது அவர்களுடைய ஆயுதங்களையோ, ஆவியை விடும் ஆட்களையோ, தமது கண்ணாலும் காணலாகாது என்று தமது பார்வையை வேறு திசையில் திருப்பி விட்டார்; தவிர இந்த யுத்தத்தில் இறங்கியுள்ள இருதிறத்தாரில் ஒருவராவது தேவர்களது ஸஹாயத்திற்கு அருகர்களல்ல வென்று மதித்து, தேவலோகவாஸிகளுடைய ஸர்வசக்திகளையும் தாமே ஸ்வீகரித்துக் கொண்டு விட்டார். அவர்கள் தங்களது அதிகாரத்தைச் செலுத்தலாகாது என்றும், ஒரு மேலான உத்திரவும் போட்டு விட்டார்!

இதன் மத்தியில், ஜலராசிகளின் அரசரான நெப்தியூன் பகவான் வாளா விருக்கவில்லை. அவர் இடிக்கடவுளின் நடவடிக்கைகள் அனைத்தையும் கவனித்தே வந்தார். ஸாமோதிரேஸியாவில், தனது அடிவாரத்திலுள்ள பள்ளத்தாக்குகளை மறைத்துக் கொண்டு அவற்றின்மேல் அசைந்தாடும் காடுகள் நிரம்பிய ஒரு மலைச் சரிவின்மேல், அவர் உட்கார்ந்துகொண்டு தமது நீல லோசனங்களைத் தம்மைச் சுற்றிலும், நாற்புறங்களிலும் செலுத்தினார். அப்போது மேகத்தில் மறைந்து, அங்கு மிங்கும் மாத்திரம் தங்களுடைய உயர்ந்த முடிகளைத் தூக்கிக்கொண்டு நின்ற ஐடா மலையின் சிகரங்கள் அவருக்குக் கட்புலனாயின. ஐடா மலையின் அடிவாரத்தில், அழகான இலியன் நகரத்து மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும், ஒளியை வீசிக்கொண்டு மின்னின. மலைக்கும், நகரத்துக்கும் இடையில், கறுத்த நிறமுள்ள கடலும் திரளான கப்பல்களும் இருந்தன. சமுத்திரத்தின் அடியில் ஸ்படிகத்தினால் நிருமிக்கப்பட்டிருந்த தம்முடைய திவ்வியமான மண்டபங்களை விட்டுப் புறப்பட்டுவந்து, அவர் அந்த மலைச்சரிவில் உட்கார்ந்து கொண்டு, ஆவியை யிழந்தும், அழிந்தும் போன தம்முடைய ஆர்கிவ் பிரஜைகளைக் கண்டு கண்ணீர் வடித்தார்.

பின்பு அவர் ஜோவ் தேவரின்மேல் கோபங்கொண்டு, துக்கமும் ஆத்திரமும் தம்மை உறுத்தி உந்தித் தள்ள, அந்தச் செங்குத்தான கற்பாறையின் அடிப்பாகத்தை நோக்கிக் குனிந்து தடதடவென்று இறங்கினார். அவர் அதிவேகத்துடன் துரிதமாகச்சென்றபொழுது அந்த உன்னதமான மலையின் சிகரங்கள், தங்கள் தலைகளை ஆட்டி அசைத்தன. அந்தக் காடுகளும் கலகலவென்று

நடுங்கின. அவர் தமது காலை ஊன்றி வைத்து நடந்து சென்ற பொழுது நிலமும் துடித்தது! அழிவில்லாத அந்தக் கடவுளின் காலடியின் அழுத்தம் எத்திறத்தது என்பதையும் அது உணர்ந்தது! அதிவிசாலமான அந்தப் பிரதேசங்களை அவர் மூன்றே அடிகளில் தாண்டித் தமது நான்காம் அடியை, அதிதூரத்திலுள்ள ஈஜி மலையின்மேல் வைத்து, அதையும் அசைத்து ஆட்டினர்!

அழிவில்லாத அச்சும், கட்டுமுள்ளதும், மர்த்தியர்களால் கட்டப்பட்டதுமான, அவருடைய திவ்வியமான அரண்மனையானது, அந்தக் கடற் கழியில் வெகு தூரத்தில் ஜோதியுடன் விளங்குகின்றது. அங்குச் சென்று சேர்ந்தபின், அவர், காற்றுகளைப் போன்ற வேகமும், பொன்னிறமான பிடரி மயிர்களும், பித்தளைக் குளம்புகளுங்கொண்ட தம்முடைய குதிரைகளை, அவற்றின் கடிவாளங்களைப் பிடித்து நிறுத்தினர். பின்பு அவர் பலமும் சக்தியுமுள்ள தம்முடைய ஸர்வ அவயவங்களிலும், வஜ்ஜிரமும் பொன்னுங்கொண்டு உண்டாக்கப்பட்டு, ஜோதியுடன் விளங்கும் அழிவில்லாத ஆயுதங்களை அணிந்து கொண்டு, தமது இரதத்தின் மேல் ஏறினர்; பொன் சாட்டையைச் சுழற்றினர்; கம்பீரமாகத் தமது ஆசனத்திலும் அமர்ந்தார்; அப்போது அந்த இரதம் பறந்தது!

அப்போது அந்தச் சமுத்திரத்தின், கண்ணுடிபோன்ற ஜல மட்டத்தின் மேல், அந்த இரதத்தின் சக்கரங்கள் வெகு வேகமாகச் சுழன்றுசென்றன. அந்த ஆழமான சமுத்திரத்தில் ஓயாமல் உழன்றுவரும் பிரம்மாண்டமான கொடிய ஜந்துக்கள், அவர் அவ்வாறு சென்றபொழுது அவரையே பின்தொடர்ந்துசென்று அவரைச் சுற்றிக்கொண்டு, துள்ளிக் குதித்து விளையாடின. சுமக்க முடியாத ஸ்தூலசரீரிகளான திமிங்கிலங்களும் அவ்வாறேஅவரைச் சுற்றி விளையாடின. ஆனல் அவைகளின் விளையாட்டு, கண்ணுக்கினிய ஒரு காட்சியாக விருக்கவில்லை. ஓர் அங்க சேஷ்டையாகவே தோன்றியது!

சமுத்திரத்தில் அலைகள் ஓய்ந்து நின்றன; நீர்மட்டத்தின் மத்தியில், ஒரு சம நிலமும் தோன்றியது; சமுத்திரமானது மிகுந்த பெருமையுடனும் மகிழ்ச்சியுடனும் முகமன் கூறித் தனது அரசனை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றது. அவருடைய குதிரைகள் விரைந்து பறந்து வருவதைக் கண்ணுற்ற அலைகளெல்லாம் இருபுறமும் ஒதுங்கி நின்று விட்டன. ஜல நிதிகள், இவ்வாறு, அவரது கம்பீரமான தோற்றத்தையும், வரவையும் கண்டு, இருபுறமும் ஒதுங்கி, விலகி, நின்று விட்டமையால், அவரது தேரின் இருசுகளில் இம்மியேனும் ஈரம் தட்டவில்லை! அவை நனையவேயில்லை, வெட்டென இருந்தன!

அலைகளால் மோதப்படும் தெனிதாஸ்ஸுக்கும், அதே அலைகளை யுடைத்து அவற்றின் வேகத்தை யடக்கிவிடும் இம்ரூஸ்

பாறைக்கும் இடையில் உள்ள, ஜலம் நிறைந்த பிரதேசங்களில் ஓர் ஆழமான குகை இருக்கின்றது. கோள வடிவான ஜலாசயங் களின் அதிபதியாகிய நெப்தியூன் பகவான், விரைந்து ஓடி வந்த தமது இரதத்தை அங்கு நிறுத்திக், குதிரைகளையும் அவிழ்த்து விட்டுத், தமது கையாலேயே அமிர்தமயமான புல்பூண்டுகளை அவைகளுக்குக் கொடுத்துப் போஷித்தார். பின்பு அவர், அழி வில்லாததான பொற் சங்கிலிகளால் அக்குதிரைகளின் பாதத்தின் பின்புறம் வளர்ந்திருந்த ரோமங்களைச் சேர்த்துக்கட்டினார். அவை அங்கேயே நின்றன.

அவைகளை அங்கு நிறுத்திவிட்டு, ஜல நிதிகளின் பிதா வான நெப்தியூன் பகவான், யுத்த களத்தை நோக்கிக் கொண்டு முன் சென்றார்; அப்போது, ஆத்திரத்துடன் அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருந்த ஹெக்டரைத் தொடர்ந்துகொண்டு அவனுடைய அனுசரர்களான துரோஜர்களும், அவனைப் போலவே ஆத்திரம் கொண்டவர்களாய், அக்கம் பக்கத்திலுள்ள வானத்தையே இருட் டிக்கொண்டு வரும் ஒரு பெரிய புயலைப்போலவும், பூமியையே விழுங்கும் ஒரு பெரிய நெருப்பைப் போலவும், யுத்த ஸன்னத்தர் களாக உருண்டு திரண்டு வந்தனர். அந்தக் கலவரத்தில் உண் டான பேரிரைச்சலுக்கும், கூச்சலுக்கும், சப்தத்திற்கும், பதிலாக ஆகாயத்தில் இருந்து பிரம்மாண்டமான எதிரொலிகள் உண்டா யின. கடற் கரைகளிலிருந்தும் அவற்றிற்கு அனுகூலமான பிரதித் தொனிகள் கிளம்பின.

அவர்கள் கிரீஸ் என்னும் பெயரையே ஒழித்து விடுவோம்! என்று வீரம் கூறினர். கிரேக்கர்களுடைய கடற்படைகளை ஏற் கனவே அடியோடு தீக்கிரையாக்கி விட்டதாகவும் மனப்பால் குடித்தனர்!

அப்பொழுது தம்முடைய கிங்கரர்களான பூகம்பங்களின் மூலமாக, உறுதியாய் ஒரு நிலையில் நிற்கும் பூமியையும் அசைத்து ஆட்டிவைப்பவரான நெப்தியூன் பகவான், அந்தப் பிரம்மாண்ட மான கடல்களிலிருந்து எழுந்து வந்து, கால்காஸைப்போல் மானிட வேடம் தரித்துக் கொண்டார். கால்காஸைப் போலவே உரத்த குரலுடனும், கம்பீரமான தோற்றத்துடனும் விளங்கினார். தங்கு தடையின்றி இடைவிடாமல், அவர் இட்டு வந்த கூச்சலைச் செவியுற்றுக்கேட்ட கிரேக்கர்கள் அனைவரும், ஒருவர் தவறாமல் புத்துயிர்பெற்று எழுந்தனர். அக்கூச்சல் ஏற்கனவே கோபதாபங் களுடன் கொதித்துக்கொண்டிருந்த அஜாக்ஷர்களது ஆத்திரத் தை அதிகரித்து விட்டது. அது எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றியதுபோல் ஆயிற்று.

அவர் "வீரர்களே! உங்களால்தான் நம் மனோரதங் களெல்லாம் நிறைவேற வேண்டும். முன்னாளிலிருந்து இதுவரை, உங்களுக்கு இடையறாது நிலைத்து வந்துள்ள பெருமைகளையும், புகழ்களையும், நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்! அவற் றைச் சிந்தித்துப் பாருங்கள்!

பயம் என்பதை மாத்திரம் நீங்கள் அடியோடு ஒழித்து விடுவீர்களானுல் நீங்கள் நம் மெல்லோரையும் ரக்ஷித்தே விடு வீர்கள். அதில் அணுவளவும் ஐயமில்லை. புறங்கொடுத்து ஓடுவது மிகவும் வெட்கக் கேடான காரியமன்ருே! அவ்வாறு செய்வீர்க ளானுல் நாம் இவ்விடத்திலேயே அழிந்து போவது நிச்சயம்!

நம்முடைய மற்றைய கோட்டைகளையும் கொத்தளங்களை யும் ட்ராய் நாட்டார் எவ்வளவோ வேகத்துடனும், விசையுட னும். தாக்கட்டும் அவர்கள் இடித்துப்பிளந்து விட்ட நம்முடைய மதில்களின்மேல், தங்களுடைய சேனைகளை வெள்ளம்போல் கொட்டட்டும். அவற்ருல் நமக்கு ஒருவிதமான நஷ்டமோ, குறை வோ, தீங்கோ, உண்டாகி விடாது; அங்குள்ள கிரேக்கர்கள் அவற்றைக் காப்பாற்றி விடுவார்கள். அவர்கள் அவற்றைக் கைவிடமாட்டார்கள்.

ஆனுல், இந்த யுத்த களத்தின் இந்த பாகம்,—நாம் காத்து வரும் இந்த பாகம் மாத்திரம்—நமது கை சோர்ந்து போய் விடுமா னுல், அதன்பின் கிரேக்கர்களுடைய வீரசூரப் பிரதாபங்களும், பல பராக்கிரமங்களும், ஆகிய அனைத்தும் வீணேயாகிவிடும். நான் உங்களது க்ஷேமத்தைக் குறித்துத்தான் கவலைப் படுகின் றேன். நடுங்குகின்றேன்!

அந்த ஹெக்டர் இந்தப் பக்கத்தில் தான் நெருப்புக் காடு கொளுத்துகின்ருன், நம்மை வாட்டுகிருன்! தனது தெய்வங்களைப் புகழ்கின்ருன். அவை தன் கட்சியிலிருப்பதாகவும் பெருமை யடித்துக் கொள்ளுகின்ருன்; மஹாதேவரான ஜோவ் பகவான் தனது தந்தையென்றும் சொல்லிப் பிதற்றுகின்ருன்!

தேவலோகத்தில் உள்ள ஏதேனும் ஒரு தெய்வம், உங்களது பங்கில் இருந்து கருணை சுரந்து உங்களது உள்ளத்தில் ஒரு பெரிய ஊற்றைப் போல் ஊக்கத்தைப் பெருக்கி, உற்சாகத்தை யுண்டாக்கி, உங்கள் புஜங்களுக்குப் பலத்தை யளிக்குமானுல், கிரீஸூம் தப்பிப் பிழைக்கும். உயிருடன் மிஞ்சும்; அதன் அழிவு காலமும் அற்றுப் போம்; அவர்கள் கடற்படைகளும் ஆபத்துக் களில் இருந்து நீங்கிவிடும். அப்போது ஹெக்டரது சக்தியும் ஜோவ் தேவரின் கைவரிசையும் வீணேயாகிவிடும். அவை தரை மட்டமும் தளவரிசையும் ஆகிவிடும்! இது நிச்சயந்தான்!" என்ருர்.

அதன்பின், அவர் ஆழ்ந்த கடலை அடக்கி யாண்டுவரும் தமது செங்கோலால், அந்தச் சேனைத் தலைவர்களைத் தொட்டார். அக்கணமே அவர்களது தைரியம் நிறைந்த ஹிருதயங்கள் இரும்பைப் போல் இறுகின. தேவரானவரின் பரிசத்தினுல், அவர் களுக்கு அமானுஷ்யமான ஒரு சக்தி உண்டாயிற்று. அவர் களுடைய அவயவங்கள் துடித்தன. தைரியம் நிறைந்துள்ள அவர்களுடைய மார்புகள் உற்சாகத்துடன் பொங்கின.

அதன்பின் சமுத்திர ராஜாவானவர், ஒரு பாறையின் உச்சியில் வீற்றிருக்கும் ஒரு கழுகானது தனது இரையைக் கண்ணுற்ற பின், அதனை உடனே கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்ற ஆத்திரங் கொண்டு அக்கணமே தன்னுடைய சிறகுகளை விரித்துக் கொண்டு ஒரே பாய்ச்சலில் தனது உன்னத ஸ்தானத்திலிருந்து பாய்ந்து, ஆகாயத்தின் வழியாய் வேகமாகப் பறந்து செல்வது போல், ஆத்திரத்துடனும், துரிதமாகவும், அங்கு விட்டுப் பறந்து விட்டார். பரந்த கடலும், அவரை அவர்களுக்குக் கட்புலனுகாமல் மறைத்து விட்டது.

ஊக்கமளிப்பவரான இந்தக் கடவுளின் ஆகமனப் பிரதிகமனங்களை முதன் முதலாகக் கவனித்தவனும், ஆற்றலுடையவனுமான ஆயிலியஸ்ஸின் புத்திரன் அச்சமயம் திலமானை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

“ எனது அன்ப ! ஏதோ ஒரு தெய்வம், மானிட வேடம் தரித்த ஏதோ ஒரு தெய்வம், நமக்கு அனுக்கிரகம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் இறங்கி வருகின்றது. இந்தக் கொடுமைகளைக் கண்டு அஞ்சாதீர்கள், உறுதியாய் நின்று இவற்றைத் தீர்த்து வாருங்கள் என்று அது நம்மை வற்புறுத்துகின்றது.

இது நமது கௌரவமுள்ள கால்காஸ் மஹரிஷியல்ல, இந்தஸ்வரூபம் சட்டென்று திரும்பிய பொழுதே இது ஒரு தெய்வந்தான் என்று அறிந்தேன், இவரது நடையையும் அடிச்சுவடுகளையுங் கூடக் கண்டேன். கண்ணுடி போல் பளிச்சென்று உள்ள இந்த அடையாளங்களே, இவர் ஒரு தெய்வந்தான் என்பதற்குப் போதிய சான்றன்றே ? இதோ, இக்கணமே, நான் இவ்வாறு விசனித்துக் கொண்டு இருக்கையிலேயே எனக்கு ஒரு தெய்வீகமான சக்தி வருகின்றது. நான் சிறகு கொண்டு பறப்பவன் போலவும், காற்றின் மேல் நடப்பவன் போலவுமே தோன்றுகின்றேன்” என்றுன்.

அதைக் கேட்ட திலமான் “ எனது மனதிலும் அதே மாதிரியான உற்சாகம் உண்டாகின்றது ; எனது மனதும் பொங்கிக் கொதிக்கின்றது ; எனது மார்பும் தகதகவென்று எரிகின்றது ; எனது உடலில் புதிய உணர்ச்சிகள் உண்டாயிருக்கின்றன ; அவை என் சக்திகளை எழுப்பி, என்னை எச்சரிக்கின்றன ; என் அவயவங்கள் ஆத்திரத்துடன் துடிக்கின்றன. எனக்கு ஸர்வஸ்வாதீனமுள்ள இந்தக் கையானது துள்ளுகின்றது ; இது, எனது நியமனமின்றியே என் பாணங்களை யெடுக்கின்றது ; அவற்றை அசைத்துக் குலுக்கி அவற்றின் குண குணங்களைப் பரிசோதிக்கின்றது. எனது உடலில் பல பாகங்களிலும் ஊறிவரும் உதிரமானது, எனது மார்பை நோக்கி, எதிராகப் பாய்ந்து வந்து எனக்கு ஏற்கெனவேயுள்ள தைரியத்தை அதிகரிக்கின்றது. அதோ, அங்கு மலைபோல் நம்மை நோக்கி வரும் அந்தச் சத்துருவை எதிர்ப்பதற்கு நான் ஒருவன் மாத்திரம் தனியாய்ச்

சென்றால் போதும் என்றும், பயங்கரமான அந்த ஹெக்டரை நான் ஒருவனே வெட்டி வீழ்த்தி என் காலடியில் கிடத்தி விடலாம் என்றும் நினைக்கின்றேன் !'' என்றான்.

தங்களது உள்ளத்தில் உண்டாகிய கிளர்ச்சியையும், உற்சாகத்தையும், அடக்கிக் கொள்ள இயலாதவர்களாய் அவ்விரு வீரர்களும், தங்களது ஆத்திரத்தை மேலே சொல்லியபடி வெளிப் படையாக ஒருவரோடொருவர் சொல்லிக் காட்டிக் கொண்டனர்.

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில், நெப்தியூன் பகவான், புறங்கொடுத்து ஓடிய கிரேக்கர்களிடஞ் சென்று அவர் களது பயத்தைத் தெளிவித்துத் தேற்றி, அவர்களுக்கும் தைரியத்தை உண்டாக்கினார். கிரேக்கர்கள் எல்லாம், நெடுநாள் பாடுபட்டு உழைத்து வந்த அலுப்பினால் களைத்து வெளுத்து, மூச்சு விடவும் இயலாதவர்களாய்த் தங்களுடைய கப்பல்களில் தவித்துக் கொண்டிருந்தனர். ட்ராய் நாட்டாரெல்லாம் தங்க ளுடைய இனத்தாரை அந்த யுத்தத்திற்கு வரும்படிக் கூவி அழைத்துக் கொண்டும், தங்களுக்குக் கைவசமாகிவிட்ட மதில் களின் மேல் கூட்டங் கூட்டமாகத் தடதடவென்று ஏறிக் கொண்டு மிருந்தனர்.

அதனால் அவர்கள் தங்களை ஒரு பெரும் புயல் வேகமாகத் தாக்கி அடிக்கவே போகின்றது என்று பயந்து, நடுங்கி, கோபாக் கினியையும் சுடச் சுடக் காய்ந்த கண்ணீரையும் பொழிந்து கொண்டு தங்களது நாசகாலம் வந்தேவிட்டது என்று கருதி விட்டனர் ! அச்சமயம் நெப்தியூன் பகவான் அங்கு வரவே அவர் களது பயமும் தெளிய ஆரம்பித்து விட்டது. அவர்களை யறியா மலே அவர்களின் உள்ளங்களில் ஒரு தீவிர உணர்ச்சி உண்டாயிற்று.

சமுத்திர சம்ராட்டின் வசனங்களைக் கேட்டவுடன், முதன் முதலாக டியூஸரும், லீட்டஸும், ஆத்திரத்துடன் எழுந்து முன் வந்தனர். அடுத்தபடியாக தீரனான பெனிலியஸ் யுதிஷ்டிரனாக எழுந்தான் ; ஆயுதப் பயிற்சியில் தேர்ந்தவர்கள் என்று பிரஸித்தி பெற்றவர்களான தோவாஸும், தெய்பிரஸ்ஸும், அவர்களுக்குப் பின், மெரியோனும், தங்களுடைய உள்ளங்களில், ஆத்திரம் ஊறிப் பெருகுவதை யறிந்தனர். கடைசியாக நெஸ்டாரின் புத்திரனும், இவ்வாறே தைரியமும், உற்சாகமும் கொண்டு விளங்கினான்.

நெப்தியூன் பகவான், அவர்களனைவரையும் நோக்கி உரைத்த வசனங்களைச் சொல்லுகின்றேன், கேளுங்கள் :—

“ இளங் காளைகளே! தங்குதடையின்றி மேன்மேலும் விருத்தி யடைந்து கொண்டு உயர்ந்து வளர்ந்து வரும் இளம் வீரர்களே ! இளந் தலைவர்களே ! வீரர்களின் வம்சங்களை விளக்கவந்த தலைவர்

களே! இது உங்களுக்கு ஓர் அழியாத இழிவன்றோ! பெருத்த சிறுமையன்றோ! தீரர்களான கிரேக்கர்கள், வெற்றியுடன் விளங்கு வார்கள். அவர்களது கடற்படை தங்குதடையின்றித் தனது மனம் போல் ஊடாடி வரும். அந்தக் காட்சிகளைக் கண்டுகளிப் போம். அதற்கு தெய்வங்கள் அனுக்கிரஹம் செய்வார்கள், நீங்களும் அனுசரித்து உழைத்து வருவீர்கள் என்றெல்லாம் நான் நம்பி இருந்தேனே! ஐயோ அந்த நம்பிக்கைக்குப் பங்கம் வந்து விட்டதே!

இந்த யுத்தம் கீர்த்தியைத் தரத்தக்கதாக இருந்தும், நீங்கள் இது நமக்கு வேண்டாமென்றும், இதற்கும் நமக்கும் ஒருவிதமான சம்பந்தமும் இல்லை என்றும் இதைக் கைவிட்டு விட்டீர்களே! புறக்கணித்து விட்டீர்களே! கிரீஸ் நாட்டார் இந்நாள் வரை அடைந்திருந்த கியாதியெல்லாம், இன்றைய தினம் அஸ்தமனமாகி விட்டதே! கிரீஸை ஒரு கறுத்த இருள் தன்னுள் அடக்கிக் கொண்டு விட்டதே! இன்றையப் பொழுது ஒரு மகத்தான கெட்ட கரிநாளாகவே விடிந்து விட்டதே! ஐயோ! இது என்ன கஷ்டம்!

ஆஹா! தெய்வங்களே! இன்று நான் கண்ட அதிசயங் களுக்கும், அளவு உண்டோ! இத்தகைய அதியற்புதமான, காரியங்களை நான் இதுவரை எனது கண்ணுல் கண்டதுமில்லை. காதால் கேட்டதுமில்லை. இன்று இவைகளைக் கண்ணுற்று நான் திகைத்தே போய் விட்டேன்!

பன்முறையும் நமக்குத் தோற்றுப் புறங்கொடுத்து ஓடிய துரோஜர்களுக்கு நாம் இப்போது தோற்றுப் புறங்கொடுத்து ஓடலாமா? இழிந்தவர்களான இவர்களது கைவசமாகும்படி நாம் நம்முடைய கப்பற் படைகளை விட்டுவிடலாமா? இவர்கள் ஒழுக்கமோ, நல் இரக்கமோ இல்லாக் கொள்ளைக்காரர்கள்! தான் தோன்றிகள்! புழுதி நிறைந்த போர்க்களத்தில் பேரும் புகழும் பெறு வதற்குப் பிறவாத பதர்கள்! காட்டிலுள்ள துஷ்ட மிருகங்கள் ஒவ்வொன்றும் இது எனக்குத்தான் இரை, இதை நானே தின்பேன் என்று தங்களைத் துரத்தி வருவதைக் கண்ணுற்று ஒரு குன்றினின்று மற்றொரு குன்றை நோக்கித் தாவித் தாவிக் குதித்து ஓடும் இளமான்களுக்கே இவர்கள் சமானம்! சிறிது பொழுதுக்கு முன்புதான் இவர்கள் உங்களுடைய பெயர்களைக் கேட்ட மாத் திரத்தில் திடுக்கிட்டுப் பயந்து நடுங்கித் தவித்து வந்தனர். இவர் கள் உங்கள் கூடாரங்களை நாடலாமா? அவற்றில் தங்களது காலை வைக்கலாமா? அவற்றின் உள்ளே புகலாமா? உங்கள் கப்பல்களை இவர்கள் நெருப்புக்கு இரையாக்கலாமா? இது என்ன வெட்கக் கேடு! காலம் இவ்வாறு தலைகீழாக மாறி விட்டதற்கு என்ன காரணம்? அதைச் சொல்லுங்கள், கேட்கட்டும்! நமது சைனியங் களது நீச புத்தியா? அல்லது தலைவனது குற்றமா?

மூடர்களே! உங்களது தலைவன் ஒரு மஹா துன்மார்க்கன்; மஹா பாபி! அவனது பாவத்திற்காக நீங்கள் உங்களது

பிராணனை விடலாமா? பிராணனையும் இழந்து பாபி யென்றும் பெயர் வாங்கிக்கொள்ள வேண்டுமா? அகிலேசனுக்கு அவமானம் நேர்ந்து விட்டால், அதற்காக நீங்கள் வருந்துவானேன்? அதற்கும் உங்களுக்கும் ஒருவிதமான சம்பந்தமும் இல்லையே! குற்றம் செய்த மனிதன் ஒருபுற மிருக்க, நீங்கள் பழியையும், அவமானத்தையும் ஏற்றுச் சுமந்து வருவானேன்?

நமது தலைவன் கோபத்தினால் தூண்டப்பட்டவனாய்க் குற்றங்களைச் செய்து விட்டான் என்றே வைத்துக் கொள்வோம், என்றாலும் அவன் இன்னும் அநீதிகளையே செய்வான் என்று நீங்கள் ஏன் பயப்பட வேண்டும்?

ஏன் பேடிகளாக விளங்க வேண்டும்? நமக்கு நேர்ந்து விட்ட இந்தத் துன்பத்தை நீக்குங்கள். உங்களது தேசத்தைக் காப்பாற்றுங்கள்! காரியங்களைக் கொஞ்சம் நிதானமாக யோசனை செய்து பார்த்தால் வீரர்களும் மனவுறுதி அடைந்து விடுவார்கள். ஆதலால் வீரர்களே! காரியங்களை ஆலோசித்துப் பாருங்கள். நம்முடைய சத்துருக்களையும் வெல்லுங்கள்.

பேரும் புகழும் பெற வேண்டும் என்று ஆவல் கொள்ளாத நடைப் பிணங்களையும், பயங்கொள்ளிகளையும் நான் சட்டை செய்வதே இல்லை! அவர்களிடம் நான் எனது கோபத்தைக் காட்டுவதுமில்லை. அது அனாவசியம்! அவர்களுக்கு மானமோ வெட்கமோ கிடையாது.

ஆனால் நீங்கள் அந்தக் கோஷ்டியில் சேர்ந்தவர்கள் இல்லை. நமது கோஷ்டியில் உள்ள ஜனங்கள் அனைவரிலும் நீங்களே மிகவும் சிறந்தவர்கள், கௌரவமுடையவர்கள். ஆராய்ந்து எடுத்த உத்தம வீரர்கள்! உங்களது ஏற்றம் குறைந்து போய் விட்டதைக் கண்ணுற்று எனது மனம் உருகு கின்றது, இரத்தத்தை வடிக்கின்றது!

இன்றைய தினம், இந்த யுத்தத்தில் நமக்கு ஏற்படக்கூடிய நஷ்டத்துடன் நம் கஷ்டங்களெல்லாம் தீர்ந்து விடமாட்டா. நமக்கு இன்னும் மேன் மேலும் வேறு கஷ்டங்களும் வர விருக் கின்றன. இன்றைய தினத்தை விடக் கொடிய கெட்ட கரி நாள் ஒன்று, நமக்கு இன்னும் வர விருக்கின்றது. அன்றைய தினம் ஒரு பெருத்த தீவினை நம்மைச் சூழ விருக்கின்றது. ஆதலால் பேரும் புகழும் பெற வேண்டு மென்றோ அல்லது உயிருடன் மாத்திரம் இருந்தால் போதும் என்றோ, இந்த யுத்தத்தில் உயிரைக் கொடுத்து, வீரஸ்வர்க்கம் புகுவது நன்றோ, அல்லது இந்த யுத்தகளத்தில் கலந்து கொள்ளாமல் உயிருடன் தப்பிப் பிழைத்து, அழியா இழிவுடன் வாழ்ந்து வருவது நன்றோ என்று ஆழ்ந்து, ஆராய்ந்து ஆலோசிக்கட்டும்! வீணாகத் தாமதம் செய்வதற்கு இது சமயமல்ல. நமக்கு நன்மையோ அல்லது தீமையோ விளையக்கூடிய காலம் இதோ, அடுத்து வந்து விட்டது!

அதோ கேட்டீர்களா ? அது என்ன பேரரவம் ! நம்முடைய கோட்டை வாயில்கள் உடைந்து தகர்க்கப்பட்டுப் போயின. வெண்கலக் கதவுகள் கல கலவென்று கர்ஜனை செய்து கொண்டு உடைந்து விழுகின்றன. தங்கு தடையின்றி வேகமாக வரும் ஹெக்டர் இடியைப் போல் நம்முடைய மதில்களைத் தாக்கி இடித்துக் கொண்டு வருகின்றான். ஆகையால் வெற்றியோ அல்லது தோல்வியோ ஆகிய இரண்டில் ஒன்று நமககுத் தரக் கூடிய காலமும் இடமும் இது தான். அவை இரண்டும் இங்கு ஒன்றாய்க் கூடி விட்டன " என்றார்.

வாடித் தளர்ந்து கிடந்த கிரேக்கர்கள் இந்த வசனங்களைச் செவியுற்றுக் கேட்டபொழுது, அவர்களுடைய ஹிருதயங்களில் பரபரப்பும், உற்சாகமும் உண்டாயின. தேவர்களுக்குச் சமமான அந்த வசனங்களைச் செவியுற்ற சைனிகர்களெல்லாம் கூட அவ்வாறே அந்தத் தீவிர உணர்ச்சியின் வேகத்திற்கு வசமாயினர். அதன் உக்கிரமமான வெப்பத்தை அவர்களும் அறிந்தனர். நன்றாக அணிவகுக்கப்பட்ட பலமான வியூகங்கள் தங்களை நாற்புறமும் புடைசூழ்ந்து நிற்க, தைரியசாலியான அஜாக்ஷர்கள் இருவரும் உறுதியாய் நாட்டிய ஸ்தம்பங்களைப் போல் தம் தம் இடங்களில் நின்று கொண்டிருந்தனர்.

இவ்வாறு அவர்கள் அணிவகுத்து நெருங்கி நின்ற ஒழுங்கையும், யுத்தத்தை உடனே தொடங்கி அதை நடத்தித் தீர வேண்டுமென்று, அவர்கள் கொண்டிருந்த ஆற்றலையும், பாலாஸ்தேவி கண்ணுற்றிருந்தால் அவளுங்கூட ஆனந்தத்தி லாழ்ந்து செயலற்றுப் பிரமித்து நின்று விடுவாள் ; அல்லது, சமர்க் கடவுள் அந்தக் காட்சியைக் காணும் பொருட்டுத் தமது கடைக் கண்ணைச் சற்றுத் திருப்புவாரானால், அவருங்கூட 'இது மஹா ஆச்சரியம், இதில் சிறிதும் ஐயமில்லை ' என்றே தீர்மானித்து விடுவார்.

கிரேக்க வீரர்கள் தங்களை நோக்கி இறங்கி வந்த ஹெக்டரையும், அவன் செய்ய உத்தேசித்து இருந்த யுத்தத்தையும் எதிர்நோக்கியவர்களாய் அணுவளவும் அசையாத கடுவினையைப் போல் உறுதியாகவும் ஒரு வியூகமாக அணிவகுத்தும் நின்றனர்.

அப்போது அந்தக் களங்களில் எங்கு பார்த்தாலும் மன வுறுதித் தோற்றமாகவே இருந்தது. ஒளியை வீசிக் கொண்டு மின்னிய அந்தக் காட்சியானது, அதிபயங்கரமாகவும் இருந்தது. கவசங்கள் ஒன்றோடொன்று பிணைத்து இணைக்கப்பட்டவை போல் உராய்ந்தன.

கேடயங்கள் மற்றைய கேடயங்களுள் மறைந்தன. ஈட்டிகளும் வேல்களும் ஒன்றன் மேல் ஒன்றாய்ச் சாய்ந்தன ; கோடரிகளும் ஒன்றன் மேல் ஒன்றாய்ச் சாய்ந்தன. கோடரி

களும் கோடரிகளின் மேல் குவிந்து விழுந்தன. வீரர்களுடைய தலைச்சீராக்களும் ஒன்றோடொன்று உராய்ந்தன. ஸைனிகர் களும், தங்களுக்கு முன்னிருந்தவர்களை நெருக்கிக் கொண்டு முன் சென்றனர். ஒரு பூகம்பம் உண்டாகுகையில், அசைந்தாடும் காடுகளையும், வனங்களையும், போல் அவர்கள், தங்களுடைய தலைகளில் அணிந்திருந்த கொண்டைகள், உயர்ந்து ஆடின. அவர்கள் தங்கள் கத்திகளை ஆட்டியசைத்துச் சுழற்றியபொழுது, அவை தங்கள் கூரான முனைகளை ஆகாயத்தின் முகமாய் நீட்டிக் கொண்டு பளிச் பளிச் சென்று மின்னின.

இவ்வாறு நெருக்கமாக அணிவகுக்கப்பட்டிருந்த துரோஜச் சேனைகள் சத்துருக்களை ஸம்ஹாரம் செய்தே தீருவோம்! என்று ஆத்திரத்துடன், துடித்துக் கொண்டும் கண்டோர் மனதில் அச்சத்தையும் பயத்தையும் உண்டாக்கிக் கொண்டும், விரைந்து வேகமாக, முன் வந்தனர். தங்களுடைய சத்துருக்களை ஒரு நொடியில் அழித்துத் தீர்த்து விட வேண்டும், என்ற ஆவல் கொண்டு, அச் சேனைகள் கடுத்த முகத்துடன் முடிகி வந்தன. இவ்வாறு ட்ராய் நாட்டாரே, இந்த யுத்தத்தை முதன் முதலாக ஆரம்பித்தனர். அவ்வாறு ஆரம்பித்தவர்களுள் ஹெக்டரே முதல்வனாகவும் இருந்தான்.

செங்குத்தான குன்றுகள் நிறைந்த ஒரு மலையின்மேல் கன மான மழை பெய்யும் பொழுது, அம் மழையினால் அந்த மலையின் நெற்றியில் உள்ள உருண்டை வடிவமான பிரமாண்டமான ஒரு பாறை தனது இடம் விட்டுப் பெயர்ந்து, பிளந்து விண்டு, கட கடவென்று வேகமாய் உருண்டு, புரண்டு சென்று, அம்மலையின் அடிவாரத்திலுள்ள சமநிலத்தில் திடீரென்று விழுந்து விடுகின்றது. அது அவ்வாறு, ஒரு செங்குத்தான உச்சியில் இருந்து மற்றோர் உச்சியின்மேல் சாடிப் பாய்ந்து, விழுந்து உருண்டு செல்லுகையில், தன் வழியில் தனக்கு எதிர்ப்பட்ட சகலமான வஸ்துக்களையும் பாழாக்கி விடுகின்றது. அது தட தடவென்று மரங்களின் மேல் விழுகையில், அம்மரங்களெல்லாம் நற நறவென்று முறிந்து போகின்றன. அம்மரங்கள் உள்ள காடுகளும், நடுங்குகின்றன. அப்போது அவை முறிவதினாலும், ஆடுவதினாலும், உண்டாகும் சப்தம் பெருத்த எதிரொலிகளைக் கிளப்புகின்றன. அந்தப் பாறையின் சேஷ்டைகள் அத்துடன் நின்று விடுவதில்லை. அது முன் செல்லச் செல்ல, அதன் வேகமும் சக்தியும் அதிகரிக் கின்றன; புகையும் கிளம்புகின்றது. அதன் பின்புறமுள்ள செடி கொடிகளும், மரக்கட்டைகளும், கற்களும், மண்ணும் அதை உந்தித் தள்ளுகின்றன. அப்போது அது சுழன்றுகொண்டும், எட்டிப் பாய்ந்துகொண்டும், இடியைப் போல் உரத்துச் சந்தித்துக் கொண்டும், மேலே சொல்லிய பிரகாரம், சமநிலத்தில் திடீரென்று விழுந்து விடுகின்றது. அத்துடன் அதன் கொட்டமும் அடங்கி விடுகின்றது. ஹெக்டரும் அவ்வாறே தனது காரியங்களைச் செய்து வந்தான்.

அவன் தன் சேனைகள் அனைத்தையும் ஆதிமுதல் அந்தம் வரை முழுவதும் பரீக்ஷித்தான். அவன் கோபத்துடன் விளங்கிய பொழுது, ஸைனிகர்களும் கோபத்துடன் துடித்தனர் ; தாங்கள் அபராஜிதர்கள் என்றே விளங்கினர் ; அவன் கோபந் தணிந்து மௌனம் கொண்டபொழுது. அவர்கள் தத்தம் இடங்களில் அசையாமல் நின்று விட்டனர். இந்தப் பரீக்ஷையினுல் அவன் தனது சேனை, தனக்கு உற்ற உதவியாகு மென்றே அறிந்து கொண்டான்.

இப்பொழுது கிரேக்கர்களெல்லாம், அவனையே இலக்காக வைத்துக்கொண்டு, அவனை நோக்கியே தங்களுடைய அம்புகளை யும், ஈட்டிகளையும், வேல்களையும் எய்தனர். அவனது தலையைச் சுற்றிக்கொண்டு அவர்களுடைய உடைவாள்கள் சுழன்றன ; அவனும் முன்னே, பின்னே செல்ல முடியாமல் ஓர் இடத்தில் நின்றும் விட்டான். அந்த இடத்திலிருந்து அசையவுமில்லை. அங்கு இருந்த வண்ணம், அவன் தன் சைனிகர்களை நோக்கிப் பின்வரும் வசனங்களை பன்முறையும் திருப்பித் திருப்பிக் கூவி யுரைத்தான். அவன் உரத்துச் சொல்லிய வசனங்கள் அவர்கள் மனத்தில் ஒரு பெருத்த நெருப்பை மூட்டிவிட்டன.

" துரோஜர்களே ! தைரியமாயிருங்கள் ! உறுதியாக இருங் கள் ! இதோ பாருங்கள் ! இந்தக் கையானது, அதோ காணும் சத்துருக்களின் சேனையின் ஊடே செல்வதற்கு, உங்களுக்கு ஒரு வழியைக் காட்டித்தரும் ; அவ்வழியே நீங்கள் செல்லலாம். கன் னங்கரேலென்று அணி வகுத்துநின்றுள்ள அந்தச் சேனைகளைப் பிளந்துகொண்டு, நீங்கள் அவற்றின் உள்ளே புகுந்துவிடலாம். நீங்கள் மாத்திரம் நிலையில் பிரியாமல், உறுதியாய் நின்று வருவீர் களாஞல், இவர்கள் அதிபலவான்களாகவே தோன்றினுலும், ஒரு பெருத்த கோபுரத்தைப் போலவே, யுத்த சன்னத்தர்களாக அணி வகுத்து நின்று வந்தாலும், எனது ஈட்டியானது, இவர்களுடைய சேனைகளை நாற்புறமும் சிதறிப் போகும்படி பறக்கடித்துவிடும்.

திவ்வியஸ்வரூபியான ஜூனே தேவியின் மனதில் உறைந்து வருபவரும் அவளுக்கு உற்சாகத்தையளித்து வருபவரும், பெருந்தேவருமான தேவதேவன், இன்றைக்கு நமது பங்கில் இருக் கின்ருர். அவர் தம்முடைய ஆயுதங்களுக்கு ஊக்கத்தையளித்து வருகின்ருர் " என்ருன்.

இந்த வசனங்கள் அந்த துரோஜர்களது ஸைனியத்தி லிருந்த சகலவிதமான வீரர்களின் உள்ளங்களிலும் ஒரு தீவிர உணர்ச்சியை உண்டாக்கிவிட்டது. மற்றெல்லோரையும் விட மேலான பெருங்கீர்த்தியும் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆவ லுடன், தெய்வோபஸ் என்பவன், முதன்முதலாக முன்வந்தான். அவன் அதி நிதானமாகத் தன்னைக் கவனித்துக்கொண்டு அடி மேல் அடிவைத்து நடந்து வருகையில் தனது அகன்ற கேடயத் தையும், தன் முன்னுல் பிடித்துக்கொண்டே சென்ருன்.

அப்போது வீரியவானுன மெரியோன் என்பவன் அந்தக் கேடயத்தையே குறிப்பாய் வைத்துச் சிறிதும் தவருமல், தனது பளபளப்பாக மின்னும் வேலாயுதத்தைக் கொண்டு அதை ஓர் அடி அடித்தான். அந்த வேல் தெய்வோபஸ்ஸின் கேடயத்தின் மேல் போர்த்திருந்த கெட்டியான எருதின் தோலைத் துளைத்தது. ஆனுல் அது அந்தத் தோலை ஊடுருவிக்கொண்டு உட்செல்ல வில்லை. தனக்கு மெரியோன் அளித்த வேகத்துடன், முன் செல் லாமல், அது முனைமுறிந்து பள பளவென மின்னிக் கொண்டு மணலின்மேல் விழுந்துவிட்டது. அந்த துரோஜவீரனும், அவ் வாறு தனக்கு நேர்ந்துவிட்ட ஆபத்தைக் கண்டு, பயந்து, ஸம யோசித புத்தியுள்ளவனுய், அந்த வேலாயுதம் தைத்திருந்த படியே, தனது கேடயத்தைத் தூக்கிக் கொண்டு வெகு தூரமாக ஓடிவிட்டான்.

அதைக் கண்ணுற்ற கிரேக்கன், தான் கொடுத்த அடி வீணுய் விட்டதற்கு வருந்தி, விசனித்து தனது ஆயுதம் சத்துரு வின் உயிரை வாங்காமல் விட்டு விட்டதே, சதிசெய்து விட்டதே, என்று அதைச் சபித்துப் பின்னடைந்து, முன்னதைவிடக் கூர்மை யும் உறுதியுமுள்ள வேருெருவேலைத் தனது கூடாரத்தில் இருந்து தேடி எடுத்து வரவேண்டுமென்ற எண்ணத்துடன், சிடு சிடுத்துக் கொண்டுத் தன்னுடைய கப்பல்களை நோக்கி விரைந்து சென்ருன்.

இதன் மத்தியில் யுத்தமானது, மேன்மேலும் உக்கிரமமாக முதிர்ந்து வந்தது. குழப்பம் அதிகரித்தது, கூக்குரல்களும் விருத்தியாயின. அப்போது யுத்தப்பிரியனும், மென்டாரின் புத் திரனும், உத்தமகுணம் உடையவனுமான இம்பிரியஸ் என்பவன் டியூஸரின் ஆயுதத்திஞல் தாக்கப்பட்டுத் தனது இரத்தத்தை வடித்தான்.

கிரேக்கர்கள், யுத்த ஸன்னத்தர்களாய், ட்ராயின் மேல் படையெடுத்துச் செல்ல வேண்டும் என்று யோசனைகளும் பிரயத் தனங்களும் செய்து வருவதற்குமுன், இந்த இளங்காளை யுத்த சம் பந்தமான கவலைக்கிடமான வசனங்களைக் காதாலும் கேளாத வனுய்ப் பயிர்கள் புஷ்டியாக விளையும் பிடியஸ் நதிக் கரையில் வளர்ந்து வந்தவன்.

தவிர இவன் அதிரூபலாவண்ணியங்களுடன் விளங்கிய தேஜஸ்வியான மெடிஸிகாஸ்டியின் கைகளைக் கோத்து அவளை அணைத்துக் கொண்டு, ஸகலவிதமான இன்பங்களையும் அனுபவித்துக் கொண்டு, வெகு சுகமாக வாழ்ந்து வந்தவன். இந்த சுந்தரி பிரியம் மஹாராஜனுக்கு ஒரு தேவ கன்னிகை யிடம், காந்தர்வ விவாகத்தில் பிறந்தவள். அவளைக் கலியாணம் செய்து கொண்டதிஞல் இவன் ட்ராய் வம்சத்தாருடன் சம்பந்தப்பட்டவ னுனுன்.

இந்த யுத்தத்தில் தன்னுடைய புஜ பல பராக்கிரமங்களைக் காட்டிப் பேரும் புகழும் பெறலாம் என்று ஆத்திரம் கொண்டவனாய் அவன் ட்ராய்க்குப் புறப்பட்டுவந்து ட்ராயிலுள்ள மஹா வீரர்களுக்கு இணையாகவும், வீர சூரப் பராக்கிரமங்களில் அவர்களுக்குச் சிறிதும் இளையாதவனாகவும், பிரியம் மஹாராஜனுடைய புத்திரர்களில் ஒருவனைப் போலவும். அவனது அரண்மனையிலேயே வசித்து வந்தான். பிரியம் மஹாராஜனும், அவனைத் தனது ராஜ்ஜியத்தின் ரக்ஷகர்களில் ஒருவனாக மதித்து, அவனை அதி பிரியத்துடனும் மேலான மரியாதைகளுடனும் நடத்தி வந்தான். இவ்வாறு அதி கௌரவமுள்ள இவனை டியூஸர் தொண்டைக்கும், காதுக்கும் இடையில் குத்திவிடவே, இவன் அந்தத் திலமானது வேலாயுதத்திற்குப் பலகாரமாக முக்கி, முனகிப் புலம்பிக் கொண்டு, மண்ணின்மேல் மடிந்து விழுந்துவிட்டான் !

வெகுதூரத்திற்குக் கட்புலனாகும் ஒரு மலையின் ஆகாய மளாவிய உச்சியின் மேலுள்ள ஓர் உயர்ந்த அசோகமரமானது, உருக்கினால் ஆக்கப்பட்ட ஒரு மழுவினால் வெட்டப்பட்டு விட்டால், அது எவ்வாறு தலை சாய்ந்து விழுந்து பச்சைப் பசேலென்ற தனது கூந்தலையும் கறைப் படுத்திக்கொண்டு விடுகின்றதோ, அவ்வாறு இந்த இளங்காளை, திடீரென்று கீழே விழுந்தான். அவ்வாறு விழுகையில், அவனுடைய ஆயுதங்கள், பிரதித் தொனியைக் கிளப்பிக் கொண்டு ஒலித்தன. அக்கணமே அவனுடைய ஆடையாபரண ஆயுதங்களைப் பறித்துவிட வேண்டுமென்று, டியூஸர் ஓட்டமாக ஓடினான்.

அதைக் கண்ணுற்ற ஹெக்டரும் சிறிதும் தாமதியாமல், அக்கணமே, பள பளவென மின்னிய தனது வேலாயுதத்தை, அவனை நோக்கி விரைந்து விடுத்தான். அதுவும் வேகத்துடன் பறந்து வந்தது. டியூஸர் அதைக் கண்ணுற்று, ஒரு புறமாக விலகியதால், தனது பிராணனுக்கே நேரிடக் கூடிய பெரிய ஆபத்தினின்றும் தப்பித்துக் கொண்டான் !

ஆனால் வேகத்துடன் ஹெக்டர் விடுத்த வேலாயுதமானது, தங்கு தடையின்றி விர் என்ற நாதத்துடன் முன் சென்று, தியாட்டஸின் புத்திரனும் வீரரான நெப்த்யூனின் மரபில் வந்தவனுமான அம்பிமாக்கஸின் ஹிருதயத்தைத் தைத்துத் துளைத்துவிட்டது. அவனது மனவலியும் தெய்வீகமரபும் வீணே ஆயின! அவன் திடீரெனக் கீழே விழுந்து விட்டான். அப்போது அவனுடைய ஆயுதங்கள் கண கணவென்று எதிரொலியைக் கிளப்பின. அவன் தனது மார்பின் மேல் போர்த்திருந்த அகலமான கவசமும் இடியைப்போல் முழக்கம் செய்து கொண்டு, திடீர் என நிலத்தின் மேல் விழுந்தது. அச்சமயம் கண்ணைக்கூசும் கிரணங்களுடன் விளங்கிய அவனது கிரீடத்தைப் பறித்துப் பிடுங்கி விடவேண்டுமென்ற ஆவலுடன், ஜயசீலனான ஹெக்டர் காற்றைப்போல் பறந்து அவனை நோக்கிச் சென்றான். அவன் அவ்வாறு சென்று ஜாஜ்

வல்லியமாய் பிரகாசித்துக் கொண்டிருந்த அந்தத் திவ்விய ஆபர ணத்தைக் கைப்பற்றியும் விட்டான்.

ஆனால் அதைப் பறித்து எடுத்துச் செல்ல, அவனுக்கு அதிர்ஷ்டம் இல்லாமல் போய்விட்டது. ஏனெனில் அதே கணத் தில், ஆண் மகனான அஜாக்ஷனது கரத்திலிருந்து, ஒரு வேலாயுத மானது கரகரவென்று புறப்பட்டுச் சென்று, அந்த ஹெக்டரின் கவசத்தின்மேலிருந்த குமிழியின்மேல் பொத்தென்று விழுந்தது; கணீரென்று ஒலித்ததுமன்றித் தனது விசையினால் அவனையும் தாக்கியது. என்றாலும் அவன் ஒருபெருங் கேட்டுக்கு ஆளாக வில்லை. அதிப்பிரகாசமாகமின்னிய இரும்பினால் உண்டாக்கப்பட்ட கெட்டியான ஒரு கவசத்தை அணிந்திருந்ததினால், அவன் உயிரு டன் பிழைத்தான். இவ்வாறு தடைப்பட்டுப் போகவே அவன் தனது கைக்கு எட்டிய பண்டத்தை நழுவவிட்டுவிட்டான்.

இந்தப் போராட்டத்தில், மேற்கூறிய பிரகாரம் வெற்றி யடைந்த கிரேக்கர்கள், அந்த வீரனது (அம்ப்பிமாக்கஸ்ஸின்) ஆபரணங்களையும், பிரேதத்தையும், தூக்கிக்கொண்டு ஓட்டம் பிடித்துவிட்டனர். அத்தீனியர்களது சேனைத் தலைவர்களாகிய தைரியவானான டிக்கியஸ்ஸுக்கும், தேவஸ்வரூபியான மெனிஸ்தி யஸ்ஸுக்கும், இடையில் மேற்கூறியபடி அநியாயமாக ஆவியை விட்டுவிட்ட அம்ப்பிமாக்கஸ் கிடந்தான். அவனைக் கண்ணுற்றவர் கள்அனைவரும் துக்கம் கொண்டாடி வருந்தினர். இது நிற்க; இம்பீரியஸ்ஸை, உக்கிரஸ்வரூபியாகிய அஜாக்ஷன் கெட்டியாகப் பற்றிப் பிடித்துக் கொண்டு விட்டான்.

தாங்கள் வதைத்துக் கொன்ற ஒரு இளமானை விழுங்கிக் கொண்டிருந்த வேட்டை நாய்களிடம் இருந்து, அதைப் பறித்துப் பிடுங்கிக் கூரான பற்களுள்ள, தங்களது கொடிய கடைவாயில் அதை இறுக்கிப் பிடித்து உயர்த்தித் தூக்கிக் கொண்டு, அதினின் றும் வடிந்த இரத்தம் தங்களது வழியில் உள்ள புற் பூண்டுகளின் மேல் கொட்டிக் கொண்டேவர, அதை ஒரு மைதானத்தின் குறுக் காகச் சுமந்து எடுத்துக்கொண்டு, விரைவாக ஓட்டம் பிடிக்கும் இரண்டு கறுத்த முகமும், பிடிவாதமுமுள்ள சிங்கங்களைப்போல் இவ்விரு வீரர்களும் சேனைத் தலைவனான அம்ப்பிமாக்ஸ்ஸை எடுத்துச் சென்றனர்.

மஹானான அஜாக்ஷன், உம்பர் நாடடைந்துவிட்ட இம்பி ரியஸ்ஸின் உடலிலிருந்து பளிச்சென்று மின்னிக்கொண்டிருந்த ஆயுதங்களைக் கழற்றி எடுத்துவிட்டான். ஆலியஸ் என்பவன் அந்தச் சவத்தின் தலையை வெட்டினான். பின்பு அவர்கள் அந்தத் தலையை ஒரு பந்தைப்போல் தூக்கி எறிந்தனர். அந்தக் கோர மான முகம் ஆகாயத்தில் கரகரவென்று சுழன்று சென்று ஹெக் டரின் காலடியில் விழுந்து விட்டது.

மேற் கூறியபடித் தனது பேரன் கொலையுண்டுவிட்டதினுல் மிகுந்த வெறுப்பும் அடங்காத் துயரமும் கொண்டவரும், மனம் புண்ணுகிவிட்டவருமான சமுத்திர ராஜன், கிரேக்கர்களுடைய மனதில் உற்சாகத்தை உண்டாக்கினுர். அவர்களுடைய கைகளுக்கு ஊக்கத்தை யளித்தார். 'துரோஜர்கள் செய்த பழிக்குப் பழிவாங்கியேவிடுவேன், அவர்களை அழித்தே விடுவேன்' என்று அவர்களை நோக்கிச் சீறினுர்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவர் ஒரு சுழல்கால்போல், வேகமாகப் பறந்து, கிரேக்க சைனியங்கள் தங்கியிருந்த கப்பல்களை நோக்கிச் சென்று, அங்கு இருந்த கிரீட் நாட்டு அரசனும் ஈட்டிப் பிரயோகத்தில் சமர்த்தனனுமான இதோமனைக் கண்டுபிடித்தார்.

அச்சமயம் அன்று நடந்த யுத்தத்தில் ஒரு வீரன் தனது சத்துருவின் வேலினுல் விதிவசமாகக் குத்துண்டுக் காயமடைந்து, நடமாடவும் இல்லாமல் போயினனே! அவனை அவனுடைய சகபாடிகள் தங்களது பாசறைக்குச் சுமந்து செல்ல வேண்டி வந்து விட்டதே! என்ற நிஷ்கபடமான விசாரமும் கவலையும், அவனது நெற்றியில் குடிகொண்டிருந்தன.

அவன் அந்த வீரனைத் தங்களது ஸைனியத்திலிருந்த ரண வைத்தியர்களிடம் அனுப்பிவிட்டுத், தானும் நேராக அந்த யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்ற ஆத்திரத்துடன், தனது கூடாரத்தை விட்டு வெளியேறினுன்.

அப்போது நெப்தியூன் பகவான் ஆகாயத்தையளாவித் தழுவி உயர்ந்துள்ள புளூரான் மலையின் சுண்ணும்புக் காடுகளையும், காலிடான் மலையின் வெண்முடிகளையும் உடைய பிரதேசங்களுக்கு அரசனும் அந்திரியமானின் புத்திரனும், அதிவீரனுமாகிய தோவாஸ்ஸின் குரலுடன் அவனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

"நீங்கள் மதங்கொண்டு பெருமையடித்தீர்களே! துணிவுடன் வீரம் கூறினீர்களே! கிரீஸே ஜெயிக்கும்; இலியன் அழிந்து போம்! அழிந்துபோம்!! என்றீர்களே! அவையெல்லாம் இப்போது எங்கே போயின?" என்ருர்.

இந்த வசனங்களைச் செவியுற்ற அந்த அரசன் "ஐயா! கிரீஸ்காரரின் மேல் ஒரு தோஷமும் சொல்லலாகாது! ஆயுதப் பயிற்சியே அவர்களது தொழில். யுத்தம் செய்வதிலேயே அவர்கள் கண்ணுங் கருத்துமாய் இருப்பவர்கள். இதுவரை அவர்கள் பலகளங்களிலும் நன்ருக யுத்தங்கள் செய்து கைதேர்ந்திருக்கின்றனர்! அவர்கள் அதிபராக்கிரமமுள்ள வீரர்கள்; சிறிதும் பயமறியாதவர்கள், அஞ்சா நெஞ்சர்கள்; மனமிடிந்து முதுகு காட்டாதவர்கள்! அவர்கள் பயத்தினுல் பின்வாங்கவுமில்லை; அபகீர்த்திக்கு அஸ்திவாரமான ஆலஸ்யத்தினுல் சோம்பியிருக்கவுமில்லை.

இது தெய்வ சங்கல்பத்தினல் நமக்கு விளைந்துவிட்ட ஒரு பெருங் கேடு.

ஸர்வ வல்லமையுமுள்ளவரான, ஜோவ் தேவரின் ஆஞ்ஞைப்படிதான், நாம் நம்முடைய சொந்தத் தேசங்களிலிருந்து, புறப்பட்டு, வெகு தூரமுள்ள இந்தப் பிரதேசத்திற்கு வந்து, இங்கு மானமிழந்து, அபகீர்த்தியுடன், அடிபட்டு அழிந்து போகின்ரும்!!

என் அன்பே! முன்பு ஒருக்கால் நடந்த யுத்தத்தில் நீ எல்லோருக்கும் முன்பாக முன்னணியில் நின்றவன்! இப்பொழுதும் நீ உன்னுடைய ஆயுதங்களைப் பிரயோகித்தோ, அல்லது ஆலோசனைகளைச் சொல்லியோ, உன்னலான உதவிகளைச் செய்ய வேண்டும் என்ற ஆத்திரம் உள்ளவன்தான்! நீ இப்பொழுது உன்னலாகக் கூடிய உத்தமமான ஸகல சகாயங்களையும் எங்களுக்குச் செய்யக் கடவாய்! நீ தனியாகச் செய்யக் கூடாத காரியங்களைச் செய்து வருமாறு மற்றையோர்களை வற்புறுத்துவாய்!'' என்ருன்.

கனமான பூகோளத்தின் அழியாத அஸ்திவாரத்தையும் அசைத்தாட்டிவிடக் கூடிய சக்தியையுடைய அந்த மஹா தேவர் அவனுடைய வசனங்களைக் கேட்டு அவற்றிற்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தார் :—

"விசேஷமான இந்தத் தினத்தில், யுத்தத்தைச் செய்வேன் என்று முன்வராமல், தன்னுடைய கப்பல்களில் மானங் கெட்டவனக ஒதுங்கிப் பதுங்கிக் கிடக்க வேண்டுமென்ற நோக்கங் கொண்டவன் ஒருவன் உளனேல், அவன் ஒரு நாளும் தனது ஜன்ம தேசத்தைத் திரும்பிப் பாராமல் போகட்டும்! பாழாய்ப் போனதும் வெறுக்கத் தக்கதுமான இந்தக் கடற்கரையில், அவன் கழுகுகளுக்கும் பருந்துகளுக்கும் இரையாகட்டும்.

நான் சொல்லும் இந்த வசனங்களுக்கு, நானே சாட்சி; என்னைப் பார்! ஒளி வீசும் கொடிய ஆயுதங்களையணிந்து கொண்டு, நான் இங்கு வந்திருக்கின்றேன். நம்முடைய சத்துருக்களை எதிர்த்துப்போராட வேண்டுமென்றே நான் இங்கு வந்தேன். நீயும் என்னுடன் வரவேண்டும். உன்னைக் கூட்டிக் கொண்டு போகவே நான் இங்கு வந்தேன். ஆதலால், நீ துரிதமாகப் புறப்படு. நாமிருவரும் சேர்ந்து இந்தக் களத்தில் யுத்தம் செய்வோம், வா.

இங்குள்ள வீரர்கள் எல்லோரிலும், நாமிருவரும் வீரசூர பராக்கிரமங்களில் தாழ்ந்தவரல்ல. அப்படித் தாழ்ந்தவர்கள் என்றே வைத்துக் கொண்டாலும், நாமிருவரும் செய்யக்கூடிய உதவி ஒருக்காலும் வீணுகாது. மிகவும் வலி குன்றியவர் நன்ருய்ச் சேர்ந்து உழைப்பாயானல் அவர்களுக்கு ஜயமே உண்டாகும். நாம் சிறிதும் பலங்குறைந்தவர்களல்ல. மஹா சூரர்கள்தான்.

இதற்கு இந்த யுத்தத்தில் நம்முடன் பொருத அதிவீரர்களே சாக்ஷி" என்றார்.

இந்த மொழிகளை உரைத்த கணமே, அவர் அப்பொழுது யுத்தம் மும்முரமாய் நடந்து வந்த அரங்கத்தை நோக்கிச் சட்டெனப் பாய்ந்து விரைந்து சென்றார். கிரீட் அரசனும், அவ்வாறே துரிதமாகத் தனது கூடாரத்தை நோக்கித் திரும்பியோடினான்.

பயங்கொள்ளியான மனிதனுக்குத் தெய்வத்தின் கடுங் கோபத்தை அறிவிக்கவோ, அல்லது அநியாயம் மலிந்துள்ள உலகத்திற்கு, இனி வரவிருக்கும் கொடிய யுத்தத்தை முன்னாடியே அறிவித்துப் பயத்தை உண்டாக்கவோ, ஜோவ் தேவரின் திருக் கரங்களிலிருந்து பொட்டென வெடித்துக் கொண்டு புறப்படும் மின்னலைப் போல், அதிவேகத்துடன் அந்த வீரன் பளிச்சென்று மின்னிய வேலாயுதங்களைத் தன்னுடைய இரு கைகளாலும் ஏந்திக் கொண்டும், பிரகாசத்துடன் விளங்கிய கவசங்களையும் ஆயுதங்களையும் அணிந்து கொண்டும், அந்தக் கூடாரத்தினின் றும்வெளியே வந்து கோபதாபத்துடன் தன்னுடைய சத்துருக்களை நோக்கி விரைந்து சென்றான்.

ஜோவ் தேவரின் கரத்திலிருந்து புறப்படும் அந்த மின்னலானது, ஆகாசம் முழுவதையும் ஒரே ஒரு பெரு நெருப்பிலிட்டுக் கொளுத்தி, வெள்ளம் போல் தடதடவென்று நெருப்புப் பொறிகளைக் கக்கிக் கொண்டு ஒரு துருவத்தினின்றும் மறு துருவம் வரை ஜோதியுடன் வேகமாக ஓடுகின்றது. அவ்வாறே அந்த அரசன் மின்னலைப் போல் பறந்து சென்ற பொழுது பளிச்சென்று மின்னிய அவனது போர்க் கவசமானது சேனைக்குழாங்களைக் கண் கூசச் செய்ததுமன்றி, அவர்களது மனதில் ஒரு பெரும் பீதியையும் புகுத்தி விட்டது.

அச்சமயம் மெரியோனிஸ் என்பவன் அவனது கூடாரத்தின் அருகில் வந்து நின்று கொண்டிருந்தான். கிரீட் நாட்டிற்கு கிரீடாதிபதி அவனை நோக்கிப் பின் வருமாறு வினவினான்:—

"என்னுளும் உத்தமமான என் நண்ப ! நீ தனுர் வித்தைகள் அனைத்திலும் தேர்ந்தவன் ; வீரர்கள் நிறைந்துள்ள இந்தப் போர்க்களத்துக்குச் செல்லாமல், நீ இங்குப்பின் தங்கியிருப்பதற்குக் காரணம் என்ன ? ஏதேனும் விசேஷமான செய்தியைச் சொல்லத்தான் நீ இங்கு வந்தாயா ? அல்லது, எனது உத்தமமான நண்பன் ஏதேனும் கொடிய காயமடைந்து இரத்தத்தை வடிக்கின்றானா ?

இங்கு மானமிழந்து வாளாவிருப்பது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை ; இந்த வெட்கங் கெட்ட பிழைப்பை எனது மனம் வெறுக்கின்றது. இன்று நடக்கவிருக்கும் யுத்தத்தில் கிடைக்கக் கூடிய லாப நஷ்டங்களையும், ஜயாபஜயங்களையும் பார்த்து விட

வேண்டுமென்று, எனது மனம் ஆத்திரத்துடன் பொங்கிக் கொதிக்கின்றது" என்ருன்.

அதற்கு மெரியோனிஸ் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான் :—

"யுத்த ஸன்னத்தர்களான கிரீஸ் நாட்டுப் பிரஜைகளை அதி ஜாக்ரதையுடன் இந்த யுத்தத்திற்கு அழைத்து வந்து அவர்களுக்குத் தலைவராகவும் விளங்கும் அரசே! இந்த ஆயுதத்தைப் பாரும். இதுவே எனது துக்கத்தை உங்களுக்குச் சொல்லும்! இந்த ஈட்டியின் தலையானது ஒடிந்து போய் விட்டது. முனைமுறிந்த இதையே நான் ஏந்தி வருகின்றேன்; இதன் தலை, ஒரு துரோஜனுடைய கேடயத்தில் வேரூன்றிக் கிடக்கின்றது" என்ருன்.

அதைச் செவியுற்ற கிரீட்டன், "நண்ப! இங்கு உள்ளே வா! உனக்கு இஷ்டமான ஆயுதங்களைத் தருகிறேன், வாங்கிக் கொள்; உனக்கு வேண்டிய ஆயுதங்கள் எனது கூடாரத்தில் இருக்கின்றன. என்னிடம் ஈட்டிகளும் துரோஜர்களிடமிருந்து நாம் பறித்துவிட்ட வேல்களும் ஏராளமாக விருக்கின்றன. ஏற்கெனவே ஒளியுடன் விளங்கும் அறையின் சுவரையும் அவை தங்களது பிரகாசத்திஞல் மினுக்கி விளக்குகின்றன.

எதிரிக்குத் தூரத்தில் நின்று கொண்டு பிடிக்கும் சண்டை எனக்குப் பிடிக்காது. அம்புகளையும் நான் நம்புவதில்லை. தவறிப்போகக் கூடிய ஈட்டிகளையும் நான் குறிவைத்து எறிவதில்லை. கையுடன் கைகலந்துக் குத்தி யிழுத்துச் செய்யும் சண்டையிலேயே எனக்குப் பிரியம், அதையே செய்து நான் என் எதிரிகளைக் கொன்று அவர்களுடைய ஆடையாபரணங்களையும், ஆயுதங்களையும் பறித்து விடுவேன், அவ்வாறு செய்த சண்டைகளில் நான் கொள்ளையடித்துப் பறித்த வஸ்துக்களையும், உயரமாக மாட்டித் தொங்கிக்கொண்டிருக்கும் ஈட்டிகளையும் பொன்னெளியுடன் மின்னும் கேடயங்களையும் பார்" என்ருன்.

அதைக்கேட்ட மெரியோன் இந்த யுத்தத்தில் நாங்கள் கொள்ளையடித்த வஸ்துக்களுக்கும் குறைவில்லை; உயர்ந்த பொருள்களையே நாங்களும் கவர்ந்து வந்தோம்; ஆனுல் அவை இப்போது எனது கப்பலில் இருக்கின்றன. அங்கு விட்டு வெகு தூரத்திலுள்ள இந்தப் போர்க்களத்தில், முன்னணியில் நின்று கொண்டு நான் வெகு கீர்த்தியுடன் யுத்தம் செய்து வருகின்றேன். எனக்கு இதனிலும் உயர்ந்த வேறு கீர்த்தி வேண்டுமோ? கிரேக்கன் எவனுக்காவது மெரியோனது கீர்த்திப் பிரதாபங்கள் தெரியாமல் இருக்குமாஞல், அவனுக்கு அவற்றைச் சொல்லுமாறு நான் தங்களைத்தான் வேண்டுவேன்!" என்ருன்.

அதைக் கேட்ட இதோமினியஸ், “ உனது வலிமைக்கும், வெல்ல முடியாத சக்திக்கும், யுத்தகளங்களே சாட்சி! அன்றியும் நாம் மறைவிலிருந்து நம் பகைவரைப் பிடிக்க வேண்டுமென்று யோசனைகள் செய்தாலும் அந்தக் காரியங்களைச் செய்யவும் நீ பின்னடைந்தது இல்லை. மிகுந்த சாமர்த்தியம் வேண்டிய அந்தக் காரியங்களைச் செய்வதற்கு மற்றெல்லோரையும் விட நீயே தகுந்தவன் என்று நாங்கள் உன்னைப் பொறுக்கியெடுத்தோம்; அதையும் நீ திருப்திகரமாகவே செய்து முடித்தாய்! உன்னைக் கண்டு பயந்து ஓடியவர்களும், அவ்வாறன்றி உன்னையெதிர்த்து, உன்கையில் அகப்பட்டுத் தப்பிப்பிழைக்க வழியின்றித் திண்டாடித்தத்தளித்துத் திகைத்து நின்ற தீரர்களுமே, அதற்குச் சான்று பகர்வார்கள்!

பீதியினுல் மேனி வெளுத்த பேடிக்கு வீரமேது ? மனவுறுதியேது? அவன் ஓர் இடத்தில் நில்லான், தனது இடத்தை அடிக்கடி மாற்றிக்கொள்வான், அவனது மேனியின் நிறம் மாறி மாறி வரும், அது ஒரு முறை கறுக்கும், ஒருமுறை சிவக்கும், ஒரு முறை வெளுக்கும், அவனது மேனியின் ஸர்வாங்கங்களிலுமிருந்து வியர்வை சொட்டிக் கொண்டேயிருக்கும். அவனது உடம்பும் நடுங்கும்; சிலிர்த்துக் குளிர்ந்து போகும்.

அவனது மனம் துடித்துக் கொண்டு, அவனது மார்பைப் படபடவென்று இடிக்கும்; திகிலும் மரணமும், அவனுக்குப் பீதியை உண்டாக்கிக் கொண்டு அவனெதிரில் உருவெடுத்து வந்து நின்று அவனை உற்றுப் பார்க்கும். அவன் அப்போது கிடுகிடுவென்று நடுங்கும் தன் பற்களை இளித்துக் காட்டுவான், அவனது மயிர் சிலிர்த்து நிற்கும். அவன் ஏக்கத்தினுல் இரத்தம் வற்றிப் போய் விட்ட ஒரு கட்டை போலவே விளங்குவான்.

ஆனுல், அது வீரனது லக்ஷணமல்ல! வீரன் என்பவன் என்றும் அஞ்சாநெஞ்சன்; ஒரு நாளும் நிலையிற் பிரியாதவன்; அவனது நிறம் ஒரு நாளும் மாருது; அவனது உடலும் உறுதியாகவே நிற்கும்; அது நின்ற இடம்விட்டுப் பெயராது. அசையாது வெற்றியோ வீழ்ச்சியோ, ஆகிய இரண்டில் ஒன்றை அடைந்தே தீரவேண்டும் என்ற நிச்சய புத்தியுடன் அவனது பிரக்ஞையும் ஒரு நிலையில் ஸ்திரமாக நின்று வரும், அவனது மன நிலையைக் கலைக்க ஒருவராலும் இயலாது; தானே மற்றையோர்க்கு முன்பாக எதிரியைத்தாக்க வேண்டுமென்ற ஆத்திரந்தான் அந்நிலையைக் கலைக்க வேண்டும்!

தோஷம் சிறிதுமில்லாத உனது பெருமையானது இவ்வாறு இதுவரை நான் சொல்லி வந்த ஸாஹஸ காரியங்களில் பிரசித்தமாக விளங்கியிருக்கின்றது. ஆபத்துக்கள் நிறைந்த இந்த யுத்தத்தில் நீ வேறு ஒருவருக்கும் இயலாத ஸகலமான தந்திரங்களையும் செய்து வந்திருக்கிருய்.

நீ, இந்த யுத்தத்தில் மற்றையோர் எல்லோருக்கும் முன் நின்று பொருது வந்திருக்கின்ருய். அப்போது அகஸ்மாத்தாய் உனக்கு உண்டாகிவிட்ட காயங்களை, நீ பெருமையுடன் ஏற்றும் வந்திருக்கின்ருய். முன்னணியில் நின்று பொருது வரும் மஹா வீரர்கள் எல்லோருக்கும் முன்ஞக உனது மார்பைக் காட்டிக் கொண்டு நின்று போர்புரிவதில் தான் உனக்கு மிகப் பிரிய மென்பதை நீ உலகமறிய நன்ருக விளக்கி விட்டாய்; மற்றைய வீரர்களுக்கு நீ ஒரு உதாரணமாகவும், வழி காட்டியாகவும் வித்தியா குருவாகவும் விளங்குகின்ருய்!

இதெல்லாமிருக்கட்டும்; ஆயுதங்களைப் பிரயோகித்துப் புகழை எய்துங்கள், என்று பேரும் கீர்த்தியும் நம்மைப் பிரியத் துடன் வருந்தியழைக்கையில், அதைச் செவியேற்காமல், நாம் ஏன் சிறு குழந்தைகளைப் போல் பேசிக் கொண்டு இங்கு நிற் கின்ருேம்?

நண்ப! உள்ளே செல், நான் கவர்ந்து சேகரித்து வைத் துள்ள ஈட்டிகளிலும் வேலாயுதங்களிலும் சிறந்தவைகளைப் பொறுக்கி யெடுத்துக் கொள். அவற்றை மஹா கருணையுடன் அவற்றின் சொந்தக்காரருக்கே திருப்பியும் அனுப்பி விடு," என்ருன்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட கணமே, மஹா தைரியசாலி யான மெரியோன், விரைவாக ஒரு வேலை உருவி யெடுத்துக் கொண்டு, 'இதுவரை நின்றிருந்த யுத்தத்தைத் திரும்பவும் செய்வேன். சத்துருக்களனைவரையும் சங்கரித்து விடுவேன்,' என்று சீறிக் கொண்டு வெளிப் போந்து, அந்த யுத்தகளத்தை நோக்கி ஓட்டமாய் ஓடிஞன்.

மனித வர்க்கத்தை ஒரே யடியாய் அழித்துவிடும் மஹா காலாந்தகரும் சர்வவல்லமை யுள்ளவரும், வீரர்கள் எல்லோ ரிலும் முன் வைத்து எண்ணப்படுபவருமான மார்ஸ் பகவான், யுத்தத்திற்குப் புறப்பட்டு விட்டால் அவர் அந்த யுத்தகளம் முழுவ தையும் கவர்ந்து, அதைத் தன் வசமாக்கிக் கொண்டு விடுகின்ருர். அப்போது அவரது அத்தியந்தப் பிரிய புத்திரஞகிய பீஷணன் என்பவன், இறுமாப்படைந்துள்ள வீரர்களது கர்வத்தைப் பங்கம் செய்யவும், கொடுங்கோலோச்சி வரும் அரசர்களை அழித்து, அவர்களது பலத்தைக் குறைக்கவும், கல்லைப் போன்ற இளகாத தைரியத்துடனும், அளவிடற்கரிய வேகத்துடனும் வந்து அவருக்கு உதவி செய்கின்ருன்.

முன்னொருகால் யுத்தப் பிரியர்களான பிரேஜியர்களும், ஆயுதப் பயிற்சியிற் சிறந்தவர்களான எபிரியர்களும், தங்களுக்குள் ஏற்பட்டிருந்த விவாதங்களைத் தாங்களே தீர்த்துச் சமாதானம் செய்து கொள்ளாமல், அவற்றை யுத்தஞ் செய்தே தீர்த்துக் கொள்ள நினைத்து, மார்ஸ் தேவரையும், அவரது புத்திரனையும்,

தங்களது உதவிக்கு வருமாறு வேண்டிக் கொண்டனர்! அவ்விரு வரும் திரேஸிலிருந்து காற்ருய்ப் பறந்து சென்று சிறிதும் தங்கு தடையோ, தயவு தாக்ஷண்ணியமோ இன்றி ஒரு கட்சியாருக்கு ஜெயத்தைக் கொடுத்துச் சந்தோஷிப்பித்தும் மற்றைய கட்சியாரைக் கொன்றும், ஓட்டித் துரத்தியும் விட்டனர். அவ்வாறே கிரீட்டன் சேனைத் தலைவர்களான இவ்விருவரும் யுத்த களத்தை நோக்கிச் சென்றனர். அவர்கள் அணிந்திருந்த ஆயுதங் களிலிருந்து பளிச்சென்று தெரிந்த ஒளியினுல், அந்தக் களம் முழுவதிலும் ஒரு பெரும் பீதி உண்டாகி விட்டது.

அப்போது மெரியோன் தனது துணைவனை நோக்கி, முதன் முதலாக, "நாம் இங்கு வலதுபுறம் சேர்ந்து கொள்ளலாமா அல்லது மத்தியிலிருந்து யுத்தத்தைச் செய்யலாமா? அல்லது இடது பக்கத்திலுள்ள சேனைகளுடன் சேர்ந்து அவர்களுக்கு நம் மாலியன்ற உதவியைச் செய்து அவர்களை ரக்ஷிக்கலாமா? எந்த விடம் சென்ருலும் அங்கங்கு ஆபத்தும் கீர்த்தியும் ஒழுங்காகச் சேர்ந்தே இருக்கின்றன" என்ருன்.

அதைச் செவியுற்ற இதோமன் "நாம் யுத்த களத்தின் மத்தியில் பிரவேசிக்க வேண்டாம், அங்கு நடக்கும் இந்த யுத்தத்தின் முக்கியமான பாகத்தை அதி பராக்கிரமசாலிகளான நம்முடைய வீரர்கள் நடத்தி வருகின்றனர் அமரர்களுக்குச் சமான மான அஜாக்ஷர்கள் இருவரும் அந்த பாகத்தை வெகு ஜாக்கிரதை யுடனும், கண்ணுங் கருத்துமாகவும் காத்து வருகின்றனர்.

வீரனுன டியூஸரும், அங்குள்ள நம்முடைய சத்துருக்களை வதைத்துக் கொன்று, அங்குள்ளவர்களுக்கு ஒரு நமன்போல் விளங்கி வருகின்ருன். இந்தக் களத்தில் நெடுந் தூரத்திலுள்ள வீரர்களின் மீது தன்னுடைய பாணங்களைப் பொழிந்து அவர்களை வாட்டவோ, அல்லது அவர்களை நெருங்கிச்சென்று தவிடுபடும்படி அவர்களுடைய கேடயங்களை இடித்துப் பொடிக்கவோ, அவன் மஹா சமர்த்தன்.

அதி கர்வியான ஹெக்டரின் மதத்தை யடக்க இவர்களே போதும், இவர்கள் கையில் நாம் நம்முடைய கப்பல்களை ஒப்பு வித்து விட்டால், அவைகளுக்கு ஒரு குறைவும் நேரிடாது. ஒரு சமயம் ஜோவ் தேவரே தமது உன்னத சிகரத்திலிருந்து இறங்கி வந்து சரமாரியாய் இடியிடித்துப் பளிச்சென்று மின்னும் நெருப்பை நமது தலையில் கொட்டி நம்மை ஒரேயடியாய் அழித்துக் கவிழ்த்து விடவேண்டு மென்று வந்தாலன்றி நம்முடைய கப்பல்கள் க்ஷேம மாகவே யிருந்து வரும்.

செக்கச் சிவந்த இரத்தக்கறை படிந்துள்ள இந்தக் களத்தில் அஜாக்ஷனுல் வெட்டுண்டு மடிந்து விழாத மனிதன் ஒருவன் உளனேல், அவன் மித மீறிய பராக்கிரம சாலியாகவும், அமானுஷ்யப் பிறவியாகவும், உலகத்திலுள்ள காய்கனிகளை

உண்ணுதவனுமாகவன்றே இருத்தல் வேண்டும்? அவனைப் பாறைகள் இடித்து நசுக்கிப் பொடியாக்குமா? அல்லது இரும்பாயுதங்கள் தான் அவன் மேற்பாய்ந்து அவனுக்குக் காயத்தையுண்டாக்குமா? விசையாய் ஓடுவதில் மாத்திரம், அஜாக்ஷன் அகிலேசனுக்கு இணைத்தவனேயன்றி, ஓர் இடத்தில் ஊன்றி நின்று யுத்தம் செய்வதில் அவ்விருவரும் சமானமானவர்கள் தான்.

ஆதலால் யுத்தத்தில் பிரவேசிக்க வேண்டும் என்று ஆவலுடன் துடித்துக் கொண்டிருக்கும் நமது சேனைகளை இடது பக்கமாகத் திருப்பு. பெருங் கீர்த்தியடைந்தவனுய்ப் பெருவாழ்வோ அல்லது பரம பதமோ, எய்துவாய்'' என்றுன்.

அவ்வாறு அவன் சொல்லிய பின்னர், மெரியோனுனவன் யுத்தக் கடவுளைப் போல் ஆத்திரத்துடன் துடித்துக் கொண்டு இதோமன் குறித்த இடத்தை நோக்கி, வேகமாக ஓடினுன். அவ்வாறு பளிச்சென்று மின்னும் கவசத்தை யணிந்துகொண்டு, தட தடவென்று தங்களுக்கு எதிராக வந்த அந்தச் சத்துருவைக் கண்ணுற்ற துரோஜ வீரர்கள், ஒரு பெருத்த வெள்ளத்தைப்போல் அந்தக் களத்தின் மேல் புரண்டு வந்து, ஒன்ருய்ச் சேர்ந்து தங்களது விசையனைத்தையும் ஒருமித்துத் திரட்டிக் கொண்டு, ஒரு பெரிய அலையைப் போல், அவன் மேல் பாய்ந்தனர். அப்போது சமுத்திரக் கரையில் பெருத்த அமளியும் அரவமும் உண்டாயின.

ஸிரியஸ் என்னும் அக்னி நக்ஷத்திரமானது அதிவெப்பத்துடன், தனது கொடுங்கோலைச் செலுத்தி வருகையில், எதிரான பலதிசைகளிலுமிருந்து புறப்பட்டு வரும் காற்றுக்கள், ஒன்றின் மேல் ஒன்று மோதியடித்து மணல் நிறைந்துள்ள பிரதேசங்களைச் தூற்றி விடுகின்றன; அப்போது நாற்புறங்களிலிருந்தும் புழுதியுடன் கிளம்பி வரும் சுழல் கால்கள் வறண்டுள்ள வயல்களின் மேல் பாய்ந்து சென்று அவற்றை அம் மணல் மாரியினுல் மூடி மேக மண்டலம் வரை உயர்த்தி விடுகின்றன.

இவ்வாறு, ஏக்கமும், ஆசையும், சீற்றமும், ஒன்ருய்ச் சேர்ந்து உந்தப்பட்டவர்களாய்க் கன்னங்கரேலென்று விளங்கிய இருதரத்துச் சேனைகளும் சந்தித்தன. அப்போது ஆகாய மண்டலம் முழுவதும் இருண்டு போய் விட்டது. யுத்தத்தில் இறங்கி இருந்த வீரர்களின் முகங்கள் இரும்பைப் போல் உறுதியாகச் சிறிதும் கலங்காமலும், அசையாமலும், இருந்தன. அந்தக் காட்சி அதி பயங்கரமாக விருந்தது. வீரர்கள் நெட்டுக் குத்தாக ஏந்திக் கொண்டிருந்த ஈட்டிகளெல்லாம், வெகு தூரம்வரை தங்களது வெளிச்சத்தை வீசிக் கொண்டு மின்னின. வீரர்கள் அணிந்து கொண்டிருந்த கவசங்களும் தலைச்சீராக்களும் கேடயங்களும் தெறித்த பிரபையானது திகிலைத் தருவதாக யிருந்தது. நன்ருக மெருகிடப்பட்ட ஆயுதங்கள், தத்தம் சின்னங்களை

அலங்கரித்துக் கொண்டு கொழுந்து விட்டெரிந்து கொண்டு வந்த அந்த நெருப்புக் காட்டின் மத்தியில் பளிச், பளிச்சென மின்னின. அந்தக் காட்சி ஒரு பெருத்த அச்சத்தையே உண்டாக்கிற்று. அதைக் கண்ணுற்ருேர் அனைவருமே, மொத்தத்தில் பயந்து நடுங்கினர். என்ருலும் உறுதியும் தைரியமுங் கொண்டிருந்த வீரர்களது மனத்தில், அது உற்சாகத்தையும், மட்டில்லாத சந்தோஷத்தையுமே உண்டாக்கியது.

ஸாட்டர்ன் என்னும் சனி பகவானுடைய புத்திரர்களான மஹாவீரர்கள், தம்மில் பெரியவர் யார் என்று போட்டி போட்டுக் கொண்டு, ஒருவரோடொருவர் வெகு தீவிரமாய்ப் பொருதனர். அவ்வாறு பொங்கிக் கொதித்துக் கோபத்துடன் எழுந்த வீரர் களில் அனேகர், திரள்திரளாக மடிந்து மாண்டனர்.

ஒரு தேவனுக்கு ஸமானமான, பிலியஸ் புத்திரனுக்கு வெற்றி மகுடம் சூட்ட வேண்டுமென்று கோரிவந்த தெட்டீஸ் தேவிக்கு வசமாகியிருந்த பூலோக சுவர்க்கலோகங்களின் அதிபதி யான ஜோவ் தேவர், அன்றைய தினம், வீரர்களான கிரேக்கர் களுக்கு அபஜயம் உண்டாக வேண்டுமென்று ஸங்கல்பிக்கவும் இல்லை, ஆணையிடவுமில்லை, என்ருலும், அவர், துரோஜர்களது கோட்டை கொத்தளங்களுக்கு வரவிருந்த அழிவைத் தடுத்து, அவற்றைச் சிறிதுகாலம் காத்தே வந்தார்.

அப்போது நெப்தியூன் பகவான், நீலநிறங்கொண்ட தமது ஜல நிவாஸத்திலிருந்து எழுந்து வந்து, தேவலோக அரசனே என்று சிறிதும் யோசனை செய்யாமல், மட்டுமிதமின்றி அவர்மேல் சீற்றம் கொண்டு பாய்ந்து கொடும் போர் புரிந்தார். பழிவாங்கியே விடுவேன் என்று பெருமூச்செறிந்தார். அவர் வெளியிட்ட ஒவ்வொரு ஸ்வாசத்திலும், நெருப்புப் பொறி வெளியாயிற்று. அவர் கிரேக்கர்களது மனத்திலும் ஒரு பெருந்தீயை மூட்டினுர்.

இவ்விரு தேவர்களும் ஒரே மரபினர். ஒரே தேவகணத் தைச் சேர்ந்தவர், ஒருவர்க்கொருவர் இளைக்காத திவ்வியஸ்வ ரூபிகள் ; இருவரும் தேவலோகத்திலேயே பிறந்தவர்கள். ஆனுல் ஜோவ் தேவர் அதிகாரத்தில் மாத்திரம் உயர்ந்தவர். அவர்தான் தேவலோகத்தில் முதன் முதலாகப் பிறந்தவர். தேவர்களையும் மனிதர்களையும் காட்டிலும், அவரே புத்தி ஞான வைராக்கியங் களில் மிக்கவர்.

இந்தக் காரணங்களையும், ஜோவ் தேவர் தனக்கு மிஞ்சிய சக்தியை யுடையவர் என்பதையும் நினைத்துப் பயந்து நெப்தியூன் பகவான் தன் உருவத்தை மறைத்துக் கொண்டு, மானிட வேடந் தாங்கி, அவ்வுருவுடன் வந்து தமது உதவியைக் கிரேக்கர்களுக்கு ரகசியமாகச் செய்து வந்தார்.

இவ்வாறு மஹா பலவான்களாகிய இவ்விரு தேவர்களும் கிரேக்கர்களையும் துரோஜர்களையும், சிக்குகள் நிறைந்த சண்டைச்

சச்சரவுகளில் மாட்டி வளைத்துப் பிணித்து விட்டனர்! அச்சிக்கு கள் கழற்ருவோ, அவிழ்க்கவோ இயலாத சங்கிலிகளைப் போல் மிகவும் கெட்டியாக விருந்தன. இவ்வாறு அவ்விரு கக்ஷியாரை யும் ஒன்ருய்ச் சேர்த்துக் கட்டிவிட்ட அந்த முடிச்சானது, அவர் களது அழிவிற்கே மூலமாகி விட்டது. அவர்களும் ஒருமித்து ஒரே குழியில் பட்டு விழுந்தனர்.

பயங்கரமான ஆயுதங்களைத் தரித்தவனும், யுத்தங் களிலேயே தனது வாழ் நாட்களைக் கழித்துச், சொட்டைத் தலையும் நரைமயிருமடைந்தவனும், மஹா தைரியசாலியுமான இதோமினி யஸ்ஸே, இன்று யுத்த காரியங்களனைத்தையும் நடத்தி வந்தான். முதன் முதலாக அவனது கையாலேயே ஆத்திரியோனிஸ் என்பவன் தனது ஆவியைத் துறந்தான்.

அவன் தனக்குப் பேரும் புகழும் கிடைக்குமென்ற வீணன மனப்பால் குடித்தவனுகவும் பேராசை யென்னும் பைத்தியத்தினுல் பீடிக்கப்பட்டவனுகவும் வெகுதூரத்திலுள்ளதும் வானளாவி யுயர்ந்த கோட்டை மதில்களைக் கொண்டது மான காப்பியஸ் என்னும் இடத்திலிருந்து புறப்பட்டு வந்தவன், ரணபேரிகையின் உரத்த சப்தத்தில் ஈடுபட்டு, ரணதீரன் என்ற புகழை எய்தலாம் என்ற ஆவலுடன் வந்தவன்; ஆனுல் அவனது ஆவலும் ஆற்றலும் வீணுயின. அவன் காஸாந்திராவிடம் காதல் கொண்டு அவளது கையை நாடினுன்; தனது பராக்கிரமத்தைப் பெருக்கி யுரைத்தான்; தான் இந்த யுத்தத்தில் பெறும் வெற்றியே, தான் அவளுக்குக் கொடுக்கும் சீர் என்றும் சொன்னுன்.

இவ்வாறு அவன், தன்னைப்பற்றிப் பெருமையாகச் சொல்லிக்கொண்ட வசனங்களை உண்மையென்றும், தான் அவனுக்குப் பதவியில் தாழ்ந்தவன் தான் என்றும் நம்பிவிட்ட காஸாந்திராவின் தகப்பனுன மஹாராஜன், அந்தச் சம்பந்தத் திற்கு இசைந்தான். மஹாராஜன் இசைந்ததினுல் காரியம் ஆகி விடவில்லை. விதிப்பயனையளிக்கும் தேவர்கள் அந்தச் சம்பந்தத் திற்குத் தங்களது சம்மதத்தைத் தரவில்லை. அவர்கள் மறுத்து விட்டனர்.

தான் மிகப் பெரியவன் என்றும், காஸாந்திரா வென்பவள் தனக்குத்தான் வாழ்க்கைப்படப் போகிருளென்றும் கர்வமும் பெருமையுங் கொண்டு அவன் தனது காலை எட்டியெட்டித் தூர மாக வைத்து அந்தக் களத்தை அளந்து வந்தான். அவ்வாறு உல்லாசமாக நடந்துவந்த பொழுதுதான் கிரீட்டனது ஈட்டி யானது, அவனைக் குத்தித் துளைத்து விட்டது. அந்த ஆயுதத் தின் கூரான முனையை முறித்து அதைத் தடுப்பதற்கு, அவனது மார்க் கவசத்திற்குச் சக்தியில்லாமல் போய்விட்டது. பேரும் புகழும் பெறவேண்டுமென்று அவன் கண்டுவந்த கனவுகள் எல்லாம் பயனற்றுப் போய்விட்டன. அவன் நரகத்திற்குள் பாய்ந்து விழுந்து விட்டான். இவ்வாறு அந்த டம்பாச்சாரி திடீர்

என விழுந்த வீழ்ச்சியை, அவனுடைய ஆயுதங்கள் பறை யறைந்தது போல், எதிரொலியுடன் உரத்து முழங்கின.

அதன்பின், மஹாராஜன இதோமனியஸ், அவ்வாறு மடிந்து விழுந்துவிட்ட அந்த வீரனைத் தாண்டிக் கொண்டு நின்று, "ஆஹா மகா வீர! உனது வாக்கை இவ்வாறு வெகு திறமை யாகவே நிறைவேற்றிவிட்டனை! இலியன் நாட்டாருக்கு, நீ, உன் னுடைய புஜபலபராக்கிரமங்களைக் கொண்டு புரிந்த உதவியே உதவி! பிரிஜிய நாட்டரசன் உன்னுடன் செய்துகொண்ட ஒப்பந்தமே ஒப்பந்தம்! பளிச்சென்று விளங்கும் கீர்த்தியை யுடைய அரசனே! நாங்கள் உனக்குக் கொடுக்க உத்தேசித்தி ருக்கும் மரியாதைகளையும் பரிசுகளையும் இதோ ஏற்றுக் கொள்!

நீ செய்யும் உதவிக்கு ஆர்க்காஸ்காரர் உனக்கு என்ன கைம்மாறு தான் செய்ய மாட்டார்கள்? ட்ராயைப் பிடித்து எங்கள் கைவசமாக்குவதற்காக, நீ, உன்னுடைய சேனைகளை எங்களுடைய சேனைகளுடன் கொண்டுவந்து சேர். அப்படிச் செய்வாயானல் அதிரிதேசனது அதிரூபவதியாகிய குமாரத்தியை நாங்கள் உனக்கே தருவோம்! இது நிச்சயந்தான்! இது இருக்கட்டும். இனி மேலே நடக்க வேண்டிய காரியங்களை ஆலோசிப்பதற்காக, என்னுடன் புறப்பட்டுவா. உன்னுடைய புதிய நேசர்கள் தங்க ளுடைய கப்பல்களில் இருக்கின்றனர். அவர் வழியே செல்வா வாயாக. அங்குக் கிரேக்கர்கள் என்ன சொல்லுகின்றனர் என்பதையும் கேட்பாயாக!" என்று சொல்லிக் கொண்டே அவன் இரத்தம் வடித்துக்கொண்டிருந்த அந்த பிணக் கட்டையை கரகர வென்று இழுத்து எறிந்தான்.

தனது தேரின் முன்னல், அந்தக் கணத்தில் நடந்த இந்தக் கோரமான வதையைக் கண்ணுற்ற ஆலியஸ் என்பவன் தனக்கு உண்டான துக்கத்தை அடக்கிக்கொள்ள முடியாமல் தன்னுடைய திரளான துரகங்களைத் தனது சாரதியிடம் ஒப்புவித்து விட்டு அவனுக்குப் பின்னல் அவனது கழுத்தின் மேல் சாய்ந்துகொண்டு இன்னது செய்வதென்று அறியாமல் ஆத்திரத் துடன் தவித்தான். சுற்றுப் பொறுத்து "இந்தப் பழியைத் தீர்த்தே விடுவேன்! கிரீட்டுக் கிரீடாதி பதியை மடக்கியே விடுவேன்." என்று ஆவலுடன் எழுந்து துள்ளி பாய்ந்து முன் வந்தான்.

ஆனல் கிரீட்டன் சாமான்யமானவன் அல்லவே! அவன் அதி ஜாக்ரதையுள்ளவன் அன்ரே! அவன் தன்னுடைய சத்துரு தன்னை அணுகிவந்த சமயத்தில், அவனது தொண்டையை இலக்காக வைத்துச் சிறிதும் குறி தவருமல் வலிமிக்கத் தனது கெட்டியான ஈட்டியை விசையுடன் பிரயோகித்தான்.

அது அவனது மோவாய்க் கட்டையின் கீழ்ப்பாய்ந்து, அவனது தொண்டையை, ஊடுருவித் துளைத்துக் கொண்டு,

அவனது பின்புறம் சென்றது ; சிறிதும் முனைமுறியாமலும், ஊன மின்றியும் பளிச்சென்று மின்னியது.

ஒரு பெரிய கப்பற்றலைவனுக்கு ஏற்ற பாய்மரமாக விளங்கக் கூடிய மலையகத்தே நிற்கும் கருங்காலியோ, அல்லது வானளாவி வளர்ந்துள்ள பாப்பளார்மரமோ, அல்லது தேவதாருவோ, ஒரு கோடரியினால் பன் முறையும் வெட்டிப் பிளக்கப்படுகையில், அம்மரங்கள் எவ்வாறு கணக்கற்ற காயங்களை யேற்றுக் கொண்டு, நுணுங்கிப் புலம்பிக் கடைசியாகத் தம்முடைய இலைகளை நீளமாகத் தரையின் மேல் விரித்துக் கொண்டு, அடி சாய்ந்து உயிரற்று விழுந்து விடுகின்றனவோ, அவ்வாறே அந்தக் கெட்ட கரிநாளில் மஹாகர்வியான ஆஸியஸ்ஸும், தனது உடலைச் சாய்த்தான். அவன் அருமையாக வளர்த்து வந்த அவனது உடல் நீண்டு கிடந்தது ! ஆருய்ப் பெருகிவந்த இரத்தத்தினால் கறையுண்ட புழுதியைக் கவ்விக் கரைத்துக் கொண்டும், அதிபயங்கரமான தோற்றத்துடன் நுரையைக் கக்கிக் கொண்டும், அவன் அந்தக் கடற்கரையில் கிடந்தான்.

இதைக் கண்ணுற்று நடுங்கிய அவனது சாரதி, சிறிதும் சலனமற்றவனாகவும், மந்த புத்தியினால் உண்டாகிய பய மேலிட்டவனாகவும் தன்னுடைய அவயவங்களைச் சிறிதும் அசைக்க இயலாமல், பிரமித்து நின்று விட்டான். அவன் தனது எஜமானனைக் கொன்ற சத்துருவை விட்டுத் தூரமாக விலகிச் செல்லவுமில்லை ; தனது காப்பிலிருந்த குதிரைகளை வேறு முகமாகத் திருப்பவுமில்லை. தான் நின்ற நிலையிலேயே அவன் தனது சத்துருவினால் குத்துண்டு திடீரென மண்ணின் மேல் விழுந் தான். இவ்வாறு எதிரிக்குச் சிறிதும் சிரமத்தைத் தராமல் அவன் அவனுக்கு இரையானான். அந்திலோக்கஸினால் துளைக்கப்பட்டு, அவன் தான் காத்து வந்த பெரிய தேரின் அடியில் பெருமூச்சு விட்டுக் கொண்டு விழுந்து திணறிக் கடைசியாகத் தனது உயிரை யும்நீத்தான். இவ்வாறு அதிபராக்கிரமசாலியான தங்களது எஜமானனை இழந்து விட்ட அஸியஸ்ஸின் குதிரைகள் நெஸ்டா ரின் இளங் குமாரனது வெற்றிப் பொருளாக ஆகிவிட்டன.

அந்தக் காட்சியைக் கண்ணுற்று வெட்டுண்டவனைப் போல் ஆகிவிட்ட தாயோபோவஸ் என்பவன், அந்தப் பழிக் குப் பழி வாங்கி விடவேண்டும் என்று நினைத்து, தனது சத்துருவை நோக்கி நெருங்கிச் சென்று விசையுடன் பறந்து செல்லும் ஓர் ஆயுதத்தை விடுத்தான், அதைக் கண்ட கிரீட்டன் தனது தலையைச் சட்டென்று குனிந்து கொள்ளவே, அந்த வேலாயுதமானது, அவன் சரித்துப் பிடித்துக் கொண்டிருந்த கேடயத்தை உராய்ந்து, தனக்கு நியமித்த காரியத்தைச் செய்யா மல், அப்புறம் சென்றது. இவ்வாறு அதை விடுத்தவனுடைய உத்தேசம் நிறைவேறாமல் போய்விட்டது. தக தக வென்று கொதிக்கும் ஒரு தணல் நிறைந்த கோளம் போல் விளங்கிய அந்தக் கேடயமானது, கெட்டியான எருதின் தோல்களைக்

கொண்டு உண்டாக்கப்பட்ட, பித்தளைக் கட்டுக்களைக் கொண்ட தாகவுமிருந்தது. அந்த வீரன் அந்த அகன்ற கேடயத்தின் அடிப்பாகத்திலிருந்த கெட்டியான இரண்டு பிடிகளின் உதவி யைக் கொண்டு, அதைத் தன்னுடைய இருகரங்களாலும், உயரத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, அதனடியில் மன அமைதியுடன் க்ஷேமமாகக் கிடந்தான்.

இவ்வாறு ஆபத்துக்குத் தப்பிவிட்ட அவனது தலைக்கு மேலாகச், சிறிதும் பயனின்றி உயர்ந்த தொனியுடன் பாடிக் கொண்டு சென்ற அந்த வேலாயுதமானது, அவனது கேடயத் தின் விளிம்புகளைத் தொட்ட பொழுது அதன் ஸ்வரம் தாழ்ந்தே போய் விட்டது. என்றாலும் அது தன்னை விடுத்த வீரன் ஒரு தீரன் தான் என்பதையும் நிரூபித்து விட்டது! கிரீட்டனது கேட யத்தின் விளிம்பைத் தீண்டிய பின்னர், அது வேறு முகமாகத் திரும்பிச் சென்று மஹா ராஜனை ஹிப்ஸினரது மார்பைத் துளைத்து, அவனது குடலிலிருந்து இரத்தத்தைக் குடித்து, உற் சாகமும் உறுதியும் கொண்டு, அவனைத் தரையில் தாழ்த்தி விட்டது. அவன் ஜனங்களும் தங்களது தலைவனை இழந்து அனாதையாகி விட்டனர்.

அகந்தை மிகுந்த துரோஜன் அதைக் கண்ணுற்று, 'இந்த ஆஸியஸ் தன்னந்தனியனாவும் ஒரு துணைவனின்றியும் எமனுல கம் செல்லலாகாது. இவனுக்கு நேர்ந்து விட்ட பழிக்குப் பழி வாங்குவோர், இங்கு இல்லாமலும் இல்லை; இவனது மரணத்தி னால், நமக்கு உண்டாகி விட்ட நஷ்டத்திற்கும், துக்கத்திற்கும் அளவு மில்லை. இருள் சூழ்ந்த நரகத்தின் வாயில்களுக்கு முன்பாக, உனது வரவை யெதிர்பார்த்த வண்ணம், இதோ இந்த வீரன் காவலாக நின்று வருவான். அந்தகாரமான அந்த நரகலோகத்தில் உனது துணைவனாக அமர்ந்திருந்து இவன் இன்பம் நுகர்ந்து வருவான்!'' என்று உரத்துக் கூறினான்.

இவ்வாறு அவன் அதிகர்வத்துடன் பெருமையடித்துக் கொண்டதைக் கேட்ட பொழுது, கிரேக்கர்கள் அனைவரது மனத் திலும், ஒரு பெருந் திகில் உண்டாகிவிட்டது. அவர்களது மனம் இடிந்தது போல் ஆகிவிட்டது. அதனால் நெஸ்டாரின் புத்திரனுக்கே மற்றெல்லோரையும் விட அதிகமான துக்கம் உண்டாயிற்று. இவ்வாறு ஆழ்ந்த துக்கக் கடலில் மூழ்கியவ னாகவே யிருந்தும், அவன் மிகுந்த ஆர்வத்துடனும், அன்புட னும், தன்கையாலேயே ஹிப்ஸினருக்கு வேண்டிய சிகிச்சா உபச்சாரங்களைச் செய்து கொண்டு, தன்னைப்போலவே துக்கம் நிறைந்த மனத்தினரான மெஸிஸ்தியூஸூம், அலாஸ்டரும் அதி கௌரவமான பிரேதத்தைத் தங்கள் கூடாரங்கள் நிறைந்துள்ள கடற் கரைக்குத் தூக்கி எடுத்துச் செல்லும் வரை, தனது அகன்ற மார்க்கவசத்தால், மறைத்து வந்தான்.

மேற் கூறியபடி ஸாஹஸ காரியங்களைச் செய்த பின்னுங் கூட, இதோமினியஸ் இதுபோதும் என்று நின்று விட வில்லை.

அவன், ஒன்று தனது தேசத்தின் நன்மைக்காகத் தனது பிராணனையும் விட்டுவிட வேண்டும், இன்றேல் சத்துருக்களில் ஒருவனைக் கண்டுப் பிடித்து, தெய்வ சகாயத்துடன், அவனை அந்தகாரம் நிறைந்த எமபுரத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்; அவன் அங்குக் கிடந்த வண்ணம் ஊழிக்காலம் வரை தனது தலை விதியை நொந்து வருந்தி வரவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, நாற்புறமும் சுற்றிப் பார்த்தான்.

அப்போது அல்காத்தூஸ் என்பவன் அவனுக்கு முன்பாக மிகவும் துள்ளிக் கொண்டிருந்தது, அவனுக்குப் புலனாயிற்று. மஹா வீரனான இஸ்தியஸ் என்பவன் அவனது தந்தை. தேவஸ்திரீக ளுக்கு ஸமானமான ரூபலாவண்ணியங்களையுடைய ஹிப்போதமை யென்பவளே அவனது வாழ்க்கைத் துணைவி, அவளும் ஸாமான்ய மானவள் அல்ல, அவள் அஞ்சைஸீஸ் என்பவனின் மூத்த குழந்தை. அவனால் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமு மாய் வளர்க்கப்பட்டு வந்த செல்வி. தன் எழிலாலும், நல்லறிவு நல்லொழுக்கங்களினாலும், ஸகல வண்மையினாலும் அவள் தன்னு டைய பெற்றோரது மனத்தையும், தன்னுடைய கணவனது மனத் தையும் கவர்ந்து மகிழ்ந்தவள்.

அவனும் சாமானியமானவனல்ல; ஒரு காலத்தில் இலியன் நகரத்து இளங்காளைகள் அனைவரிலும் அவனே அதிசுந்தரனாக விளங்கி வந்தான். அவ்வாறே அவளும் ட்ராய் நாட்டுச் சுந்தரச் செல்விகள் அனைவரிலும் ஒப்புயர்வில்லாத பெருஞ் செல்வியாக வாழ்ந்து வந்தாள்.

இப்போது இந்த வீரன் நெப்தியூனது கோபத்திற்கு ஆளாகி இளம்பிராயத்தில் தனது உயிரைத் துறந்துவிட்டான். நெப்தியூன் பகவான், அந்த வீரனது அதிசுந்தரமான கண்விழி களை ஒரு மேகத்தால் மறைத்து விட்டார். அவர் அவனுடைய அவயவங்களையும், அசைக்க முடியாமல் கட்டிவிட்டார். அவை சலனமின்றி நின்றுவிட்டன.

என்றாலும் அவன் கிரீட்டனது வேலுக்குத் தப்பவேண்டும் என்ற எண்ணங் கொண்டு ஒரு பிரயத்தனமாவது செய்யாமல், தனது விதியின் பயனை ஏற்றே தீரவேண்டும் என்று தனது இடத் தில் அசையாமல் நின்றுவிட்டான். காற்றுகள் சலனமின்றித் தூங்கிக் கொண்டிருக்கையில், அசையாமல் நின்று வரும் ஒரு கம்பத்தையோ அல்லது ஆழமான வேர்களையுடைய கருங்காலி மரத்தையோ போல் உறுதியாய் நின்றுகொண்டு அவன் கிரீட் டனது அடியைத் தனது மார்பின்மேல் ஏற்றுக்கொண்டான்.

அந்த அடியை ஏற்றவக் கணமே, அவன் அதற்கு முன் பல களங்களிலும் செய்து வந்த யுத்தங்களில் உறுதியாய் நின்று அங்குக் கிடைத்த அடிகளைத் தாங்கி வந்ததும், அவற்றால் ஒருவிதமான தீங்கு நேராததுமான, அவனது மார்க் கவசம், தவிடு பொடியான பொழுது, அதினின்றும் திகிலையுண்டாக்கத் தக்க ஒரு கோரமான சப்தமும் கிளம்பியது. அப்போது அவன் உள்ளத்திலிருந்து பொங்கிக் கொண்டிருந்த அவனது மார்பும் படபடவென்று அதி வேகமாகத் துடித்து கொண்டு வந்ததினால், இதோமினியஸ்ஸின் நீளமான வேலாயுதமும், நடுக்குற்று, அசைந்தாடிப் பின்னர் அவனது மார்பில், தான் உண்டாக்கிய ரணத்தில் ஊன்றி நின்ற வண்ணம் ஒளியைப் பரப்பிற்று. அவன் குப்புற விழுந்தான். அப்போது அவனது ஜீவாதாரமான செங்குருதியானது, தனது ஊற்றினின்று பெருக்கெடுத்து வெளிப்பட்டு வந்து திரைகளைப்போல் பிரவஹித்து வழிந்து ஓடியது.

அதன்பின் இதோமினியஸ், அன்று தோற்றுத் தலைசாய்ந்த துரோஜ வீரர்களைப் பின்வருமாறு இகழ்ந்துரைத்தான் :—

"வாராய்! தெய்வோவஸு! வீண் பெருமை பேசுவதில் என்ன பெருமை! எங்களது கட்சியிலிருந்து மடிந்துவிட்ட ஒவ்வொரு கிரேக்கனுக்கும் துணையாக இதோ மூன்று துரோஜர்கள் பேய் பிசாசுகளாக மாறிச் செல்லுகின்றனர்! இன்று எனக்கு மூன்றாவதாகப் பலியான இவனை இதோ நான் யமனது நிழலின் கீழிருந்து வருமாறுஅனுப்புகின்றேன்! நீ பிதற்றி வரும் பிரகாரம் நீயும் ஓர் ஆண்மையுள்ளவன் தான், என்றால் எழுந்து என்னருகில் வா, நாமிருவரும் ஒரு கை பார்த்து விடுவோம். ஜோவின் பீஜத்திற்குப் பிறந்தவர்களுடைய வீரத்தையும் வெட்ட வெளிச்சமாக்கி விடுவோம்.

ஜோவ் தேவர் ஒரு மானிட ஸ்திரீயினிடம் மையல் கொண்டு, அவளைச் சேர்ந்து அவளிடம் மைனஸ் என்னும் ராஷ்டிர பதியாகிய மஹாராஜரை உண்டாக்கினார். அபகீர்த்தி யென்பது அணுவளவுமில்லாத தியோகேவியஸ் என்பவர் மைனஸின் தவப் புதல்வர். நான் அவரது மூத்த குமாரன் ஆகவே, நான் ஜூப்பிடர் பகவானது மரபில் மூன்றாவதாக வந்தவன். விசாலமான கிரீட் ராஜியத்திற்கும், அங்குள்ள பராக்கிரமசாலிகளான ஜனங்களுக்கும் அரசனாக நான் அங்கு ஆட்சி செலுத்தி வருகின்றேன். அங்கிருந்து என்னுடைய கப்பல்களிலேயே ஏறிக்கொண்டு நான் இங்கு வந்துள்ளேன். என்னுடைய ஜனங்கள் கணக்கில் அடங்காதவர்கள் ஆவார்கள். அவர்கள் அனைவருக்கும் அரசனாக நான் கீர்த்திப் பிரதாபங்களுடன் விளங்குகின்றேன். உனக்கும், உன் தகப்பனுக்கும், உன் வம்சத்தாருக்குமே ஓர் எமன்போல் வந்தவன் நான் என்பதை அறிவாய்" என்றான்.

துரோஜன், இந்த வசனங்களைச் செவியுற்றுக் கேட்டுத் தன்னந் தனியனாகவும் துணிவுடனும் அந்த கிரீட்டின்கிரீடாதிபதியை எதிர்த்துச் செல்லவோ அல்லது அவ்வாறு எதிர்த்துச்

செல்லத் தனக்குத் துணையாக வரும்படி, வேறு வீரர்களை அழைக்கவோ மனந் துணியாமல் சிறிது நேரம் உழன்று கடைசியாகக் கிரீட்டனை எதிர்த்துச் செல்லத் தனக்குத் துணையாக வருமாறு, ஒரு வீரனை அழைப்பதென்றே தீர்மானித்தான்.

அக்கணமே அவனுக்கு ஈனியஸ்ஸின் ஞாபகம் உண்டாயிற்று. ட்ராய் நாட்டாருடைய சேனைகள் அணிவகுத்து நின்ற வரிசைகளில் எல்லாம், அவன் அவனைத் தேடினான். அப்பொழுது ஈனியஸ் தனக்கு இழிந்தவர்கள் உயர்ந்த ஸ்தானத்தை வகித்து வருவதைக் கண்டு மனம் பொங்கி, பக்ஷபாதியான பிரியம் மஹா ராஜனிடம் வேற்றுமை கொண்டு சினந்தவனாய், வெகு தூரத்திலிருந்த துரோஜச் சேனைகளின் மத்தியில் நின்றுகொண்டிருந்தான்.

மஹா வீரனான அவனது ஸஹாயத்தைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டுமென்ற ஆவலுடன் தைரியவானான தெய்வோஸ் அவனருகிற் சென்று, அவனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான் :—

"வாராய்! துரோஜ ராஜ குமாரா! கீர்த்தியையும் நல்ல மரியாதைகளையும் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆவல் உனக்கு உண்டென்றால், நீ உனது கைத் திறனையும், ஆயுதப் பிரயோகம் செய்வதில் உனக்குள்ள சாமார்த்தியத்தையும் இப்போது காட்டு.

உனது சகோதரனும், உற்ற நண்பனுமான அல்க்காஸ்தூஸ், இப்போது தனது பிராணனை விடப் போகின்றான். அவன் மஹா வீரனும், நம்மெல்லோருக்கும் பிரியமானவனும் அன்றோ! நீ உடனே எழுந்திருந்து, அவனது பிரேதத்தைக் காப்பாற்றுவதற்காவது வா! நீ, இளையவனாக இருக்கையில் அவன் உன்னை மிகுந்த பிரீதியுடன் வளர்த்து உனக்குச் சகலமான வித்தைகளையும் கற்பித்துக் கொடுத்தான். நீங்கள் இருவரும் ஒரே கலத்தில் இருந்து போஜனம் அருந்தியவர்கள்; ஒரே கூரையின் நிழலில் உங்களது காலத்தைக் கழித்து வந்தவர்கள்.

இந்த மஹா கொடியவனும் வன்கண்ணாளனுமான இதோமினியஸ் இதோ இவனைத் தோற்பித்து விட்டான்; இந்தப் பழியைத் தீர்ப்பதற்காவது நாம் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும். ஆதலால் தாமதமின்றி உடனே எழுந்திரு, வா!" என்றான்.

இந்த வசனங்களை அதிநிதானமாகச் செவியேற்றபொழுது, மஹா தைரியசாலியான ஈனியஸ்ஸின் மனமும் இளகியது. அவன் தனது நண்பனுக்கு உண்டாகிலிட்ட ஆபத்துகளுக்கு வருந்தினான். பின்பு தனது மனத்தைத் தேற்றிக்கொண்டு அவன் அடங்காக் கோபத்துடன் தனது இடத்தைவிட்டுப் பெயர்ந்தெழுந்து, அந்த யுத்தத்தில் கண்டிப்பாகக் கலந்துகொள்ள வேண்டுமென்று பொங்கித்துடித்தான்.

இவையனைத்தையும் கவனித்து வந்த கிரேக்கன் "இங்கு வரட்டும் இவன்" என்று தன் சக்திகள் அனைத்தையும் திரட்டி யடுக்கிக்கொண்டு மௌனமாகவே யிருந்தான்.

குன்றுகளும், காடுகளும் நிறைந்துள்ள மலையுச்சியில் வசித்துவரும் காட்டுப்பன்றியானது, பயங்கரமான கொடிய ஆயுதங்களை ஏந்தியவர்களும், காட்டுப் பிராணிகளை வேட்டையாடிக் கொல்வதே காரியமாகவுள்ளவர்களும், விருத்தர்களும், உயர்த்துப் பேசுபவர்களுமான, கிராமிய வாசிகள் நெடுந் தூரத்திலிருந்து கூவுவதையும், ஆர்ப்பரிப்பதையும் கவனித்துச் செவியேற்றால் அது அவர்கள் தன்னை யெதிர்த்துப் பொருதற்கே வருகின்றனர் என்று அறிந்து, தனது தேகத்தை ஒரு குலுக்குக்குலுக்குகின்றது; தனது முதுகையும் வளைக்கின்றது; அப்போது அதன் கூரான முட்கள், அந்தக் குனிந்த முதுகின் மேல் சிலிர்க்கின்றன; தணல் போல் செக்க சிவக்க ஜ்வலிக்கும் அதன் கண்களிலிருந்து மின்னலைப் போன்ற தீப்பொறிகள் பறக்கின்றன. நுரையை வடித்து வரும் தன் வக்கிரதந்தங்களைக் காட்டிக்கொண்டு, அது வேட்டை நாய்களையும் வேடர்களையும் பயமுறுத்தி வெருட்டுகின்றது. இவ்வாறு அது பொங்கிக் கொதித்து வந்தாலும் அதற்கு வேடர் தலைவர்களின் மேல்தான் அடங்காக்கோபம் உண்டாகின்றது.

அந்தக் காட்டுப் பன்றியைந் போலவே, இதோமினியஸ்ஸும் தனது இடத்தில் நின்று வந்தான். அவனது வேலாயுதமும் துடித்தது; அவன் தன் துரோஜ வைரிகளையும் ஒரு முறை தனது கண்ணைத் தாழ்த்திப் பார்த்தான்! அப்போது யுத்தக் கடவுளின் பிள்ளைகளும் இளம் பிராயமுள்ளவர்களுமான அந்திலோக்கஸும், தெய்ப்பிரஸ்ஸும் அவனருகில் இருந்தனர். அவ்வாறே யுத்த களங்களில் பெருங் கீர்த்தி பெற்றிருந்த மெரியோனும் அபாரியஸ்ஸும் அவ்விடத்தில் இருந்தனர். அவர்கள் எல்லோரும் கேட்கும் வண்ணம், அவர்களை நோக்கி இந்த வீரன் பின்வருமாறு உரைத்தான் :—

"என் சக வீரர்களே! நீங்கள் அனைவரும் ஒன்றுய்ச்சேர்ந்து சமயோசிதமாக எனக்கு உதவி செய்யக் கூடிய சமயம் இதோ வந்து விட்டது. ஆதலால் ஒன்றுய்ச் சேருங்கள்! அதோ அங்குப் பாருங்கள்! மஹா வீரனுன ஈனியஸ்ஸே யுத்தத்திற்குப் புறப்பட்டு ஓடிவருகிறுன். அவன் சாமான்யமானவன் அல்ல! ஒரு தேவனுக்கே பிறந்தவன். மனிதப் பிறவிக்குமீறிய மனவுறுதியையுடையவன். இன்னும் இளம் பருவமுள்ளவன், பயமறியாதவன்.

நான் ஆயுதப் பயிற்சிகளைச் செய்தே எனது காலம் முழுவதையும் கழித்துவந்தவன்தான் என்றுலும் கொஞ்சம் தயங்கவே செய்கின்றேன். இவனை எப்படி எதிர்த்துச் செல்வது என்று மயங்குகின்றேன். இப்போது வேறு ஒருவன் எதிர்த்து வருவானுனல், நான் அவனை இக்கணமே எதிர்த்துச் செல்வேன். இந்தக் கை அவனை வெட்டி வீழ்த்திவிடும், இந்தச் சண்டையும்

சச்சரவும் ஒழிந்துபோய்விடும்; யாருக்குக்கீர்த்தி, யாருக்கு வாழ்வு தாழ்வு என்பதையும் தீர்மானித்துவிடும்" என்ருன்.

அவன் அவ்வாறு சொல்லியதைக் கேட்ட அவர்கள் அனைவரும், ஒரே மனத்தினராய், அவனது ஆணைப்படியே செய்தனர். ஒன்ருய்ச் சேர்ந்தனர். அவ்வாறு அவனைச் சுற்றி நின்றுகொண்டு தங்களுடைய கேடயங்களை உயர்த்தித் தூக்கியபொழுது அவனை ஒரு பயங்கரமான காரிருள் சூழ்ந்துவிட்டது.

அப்போது ஈனியஸ்ஸும், தனது நாட்டிலிருந்து திரளாக வந்திருந்த வீரர்களைத் தனது உதவிக்கு வருமாறு கூவியழைகத்தான். அந்த அழைப்புக்கிணங்கி, பாரிஸ்ஸும், தெய்வோவஸும், அஜினரும் அவனுடன் வந்து சேர்ந்தனர். அவர்கள் அனைவரும் துரோஜராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்களும், அந்த வம்சத்தாருக்குத் தங்களாலான உதவியைத் செய்ய ஆத்திரங்கொண்டவர்களுமே ஆவார்கள். அவர்களுடைய சேனைகளும், ஐடா மலையிலிருந்து இறங்கி அதன் அடிவாரத்திலுள்ள மைதானத்திற்குச் செல்லும் ஆட்டு மந்தைகளைப்போல் ஒழுங்காக அவர்களைத் தொடர்ந்து வந்தன.

ஆடுகள் ஒரு மந்தையில் இருந்து இறங்கி வருகையில் அந்த மந்தையின் தந்தையான கடாவானது நிமிர்ந்த தலையும் தைரியமான நோக்கும் கொண்டு அதிகம்பீரமாக அவற்றின் முன்னுல் தனது காலை எட்டி யெட்டி வைத்துக்கொண்டு நடந்து வருகின்றது. அப்போது அந்த மந்தையின் இடையன் அவை அனைத்தையும் தனக்கு நன்ருகத் தெரிந்த மைதானங்களின் வழியே ஓட்டிக்கொண்டு குளிர்ந்த ஜலமுள்ள நீர் நிலையங்களுக்கும், தடாகங்களுக்கும், குளங்களுக்கும் செல்லுகையில் அவற்றைக் கண்ணெடுத்துப் பார்த்து, மிகவும் அகமகிழ்கின்ருன்.

அவ்வாறே ஈனியஸ்ஸும், தன் நாட்டுச் சைனியங்கள் அனைத்தும் அணி அணியாய் நகர்ந்து வந்து, அந்தக் களம் முழுவதையும் நிறைத்து விட்டதைக் கண்ணுற்று மிகவும் சந்தோஷித்தான்

இவ்வாறு சேனைகள் எல்லாம் திரண்டு வந்தபின் யுத்தமானது அக்காத்தூலைச் சுற்றிலுமுள்ள ஸ்தலத்தில் ஆரம்பித்தது. நாற்புறமும், இரும்புக்கோட்டையானது, படிப்படியாய் உயர்ந்தும் அகன்றும் வந்தது. உடைபட்ட மார்க்கவசங்கள் ஒன்ரேடென்று உராய்ந்து, சின்னுபின்னமாய்த் துண்டிக்கப்பட்டுப்போயின. மகுடங்கள் ஒன்றின்மேல் ஒன்ருக விழுந்து, கணகணவென்று ஒலித்தன. அவ்வாறு மார்க்கவசங்களையும் தலைச்சீராக்களையும் இழந்துவிட்ட வீரர்களின் தலைக்கும் மேலாக வேலாயுதங்கள் தங்கு தடையின்றி கீதங்கள் பாடிக்கொண்டு பறந்து சென்றன.

இவ்வாறு நடந்து வந்த இந்த யுத்தத்தில் இரண்டு மஹா வீரர்கள் மற்றெல்லோரையும் விடச் சிறந்து விளங்கினூர்கள். அவர்களுள் ஒருவனுன இதோமினியஸ் ஒரு கட்சியிலும், ஈனியஸ் ஒரு கட்சியிலும் இருந்தனர். இரண்டு யுத்தக் கடவுள்களைப்போல் விதிப்படிக் காரியங்களை நடத்திக்கொண்டு அவ்விருவரும் அங்கு நின்றனர். பரஸ்பர சேனைகளின் இரத்தத்தை வடித்து அந்தக் களத்தைக் கறைப்படுத்திவிட வேண்டுமென்ற ஆவல் மேலிட்டவர்களாய் அவ்விருவரும் ஆத்திரத்துடன் குதித்தனர். அப்பொழுது, துரோஜனது ஆயுதமானது, கிரீட்டனை நோக்கி ஆகாய வீதியைக் கிழித்துக்கொண்டு விர்ரென்று பறந்து சென்றது. பித்தளையினுலாகியிருந்த அந்த யுத்தத்தின் வரவைக் கண்ணுற்ற கிரீட்டன் ஒரு தந்திரம் செய்து, அதற்குத் தப்பி விட்டான். என்றுலும் அந்த ஈட்டியானது ஒரு மஹா வீரனது கரத்திலிருந்து புறப்பட்டு வந்திருந்ததினுலும், ஒரு பிரம்மாண்டமான காட்டைப் போல் இருண்டு அடர்த்தி யுள்ளதாக விருந்ததினுலும் அது அந்த யுத்த களத்தில், தரையில் ஊன்றிப் பாய்ந்து அழுந்தி, அங்கேயே துடித்துக் கொண்டு நடுங்கியது.

அப்போது கிரீட்டன் சும்மா இருந்தானு? இல்லை அவனும் தன் கைவரிசையைக் காட்டினுன். அவன் விசையுடன் ஓர் ஈட்டியை எறிய, அது ஈனேமஸ்ஸைத் தாக்கி, அவனது குழிவான மார்க்கவசத்தைத் தவிடு பொடியாக்கி யுடைத்து வயிற்றையும் குத்திக் கொண்டு, உட் சென்று அதில் ஒரு கோரமான காயத்தையும் உண்டாக்கியது. குடல்களையும் வெளியே பிதுக்கித் தள்ளி விட்டது. அக்குடல்கள் அப்போது புகைந்து கொண்டு தரையின் மேல் உருண்டு ஓடின; அவ்வாறு அவன், அந்தக் களத்தில் தனது உடலை நீளமாக்கி நீட்டிக் கொண்டு கிடந்த வண்ணம், ஆத்திரத்துடன் மண்ணைக் கவ்விக் கொண்டும், பெருமூச்சு விட்டுக் கொண்டும், தனது ஆவியைத் துறந்தான்.

தனது ஆவியைத் துறக்கு முன் அவன் என்ன செய்தான் என்பதையும் சிறிது விளக்குவோம்.

அவன், முதன் முதலாகத் தனது மார்பைத் துளைத்துவிட்ட ஆயுதத்தை உருவி இழுத்துப் பிடுங்கினுன். பின்பு உடைபட்ட கவசத்தையும் திரும்பக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்று முயன்றுன். அச்சமயம் ஈட்டிகளும், வேல்களும், அவனைச் சுற்றிச் சரமாரியாகப் பொழிந்து கொண்டிருந்ததினுல், அந்தக் காரியம் மாத்திரம் அவனுல் முடியவில்லை. தான் அணிந்திருந்த ஆயுதங்களின் கனத்தைத் தாங்குவதற்கே அவனுக்குச் சக்தி இருக்கவில்லை, முதிர்ந்த வயதினுல் அவனுடைய ரத்தமும் குளிர்ந்து போய் விட்டது. தன்னுடைய அவயவங்களை அசைக்கவும் அவனுல் இயலவில்லை, இவ்வாறு ஒரு நிலையில் ஊன்றி நின்று யுத்தத்தைச் செய்ய இயலாதவனுகவே ஆகிவிட்டான். என்றுலும், அவன், தான் இருந்த இடத்தைவிட்டு அகலாமல், தன்னுடைய வீரசூர பராக்கிரமங்களைக் காட்டியே வந்தான்.

இவ்வாறு அன்றைய தினம் நடந்த யுத்தத்தில் அவனுடைய சத்துருக்கள் அவனைத் துரத்தி, உந்தித் தள்ளி வந்ததினால், அவன் களைப்புற்று அலுத்துச் சலித்துத் தள்ளாடித் தள்ளாடிக் கொண்டு தளர்ந்த நடையுடன் நகர்ந்து மேற் சொல்லியபடி அந்த யுத்த களத்தை விட்டு மெதுவாக அகன்றான்.

அவ்வாறு அவன் சென்றதைக் கண்ணுற்றுக் கவனித்து வந்த தெய்வோவஸ் என்பவன் முன்னிலும் அதிகக் கோபங் கொண்டு, கடைசியாக மின்னும் ஓர் ஈட்டியைப் பிரயோகித்தான்; அதுவும் குறி தவறியே போய் விட்டது! என்றாலும் அது விரைந்து முன் சென்று, தைரியசாலியும் இளங்காளையுமான அஸ்கலோப்பஸைக் குத்திக் கிழித்து விட்டது. இவ்வாறு மார்ஸ் பகவானது புத்திரனை அவன் மூச்சடைப்பட்டு புழுதியைக் கவ்விக் கொண்டும், தனக்கு உண்டாகிய காயத்திலிருந்து குருதியை வடித்துக் கொண்டும் மண்ணின் மேல் மடிந்து விழுந்து விட்டான்.

அவ்வாறு அவன் மடிந்து விட்டதை மிகவும் கொடிய சுபாவமுள்ள அவனது தந்தையான மார்ஸ் தேவர் அச்சமயம் அறியவில்லை. ஜோவ் தேவரும், விணைப்பயனும் விதித்தபடி குருதியைப் பொழியும் இந்த யுத்தத்தில் கலந்துக் கொள்ளாமல், அமரர்களும் அத்தருணத்தில் கனகமயமான மேக மண்டலத்திலுள்ள உன்னதமான ஒலிம்பியன் மண்டபத்தில், தங்களுடைய உயர்ந்த சிங்காதனங்களின் மேல் அமர்ந்து அவை கூடியிருந்தனர்; மார்ஸ் தேவரும் அங்கிருந்தார்.

இவ்வாறு உயிரை இழந்து மண்ணோடு மண்ணாகிக் கிடந்த அஸ்கலோப்பஸ்ஸின் உடலைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆவலுடன் இருதிறத்தாரும், அவனது பிணத்தைச் சுற்றி நின்று கொண்டு, யுத்தத்தைத் திரும்பவும் ஆரம்பித்தனர்.

அவனுடைய தலைச்சீராவைப் பிடுங்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆத்திரமுள்ளவனாய் தெய்வோவஸ் என்பவன் காற்றைப் போல் பறந்து சென்று, தகதகவென்று ஜ்வலித்துக் கொண்டிருந்த அந்த ஆபரணத்தை அவனது தலையினின்றும் கழற்றியே விட்டான். அச்சமயம் வன்மையில் மார்ஸ் தேவருக்குச் சமானமானவனும், வலியுடைய வீரனுமான மெரியோனிஸ் என்பவன், அவனை அணுகிச் சென்று, அந்தத் தலைச்சீராவைப் பிடித்துக் கொண்டிருந்த கையை நோக்கித் தனது வேலைப்பிரயோகிக்க, அது அந்தக் கையைத் தாக்கி, ஒரு பெருத்த வேதனையை உண்டாக்கி விட்டது. அவன் தன் கையிலிருந்த அந்தக் கனமான ஆபரணத்தைப் பொத்தெனக் கீழே விழும்படி நழுவ விட்டு விட்டான்.

அவ்வாறு விழுகையில் அந்தக் குழிவுள்ள கிரீடத்திலிருந்து கொல்லென்று ஒரு சத்தம் உண்டாயிற்று. அக்கணமே, தனது

இரையை நோக்கிப் பாய்ந்து செல்லும் ஒரு ராஜாளியைப் போல் அந்தக் கிரேக்க வீரன் விரைந்து சென்று, காயமடைந்த தனது சத்துருவின் கையிலிருந்த வண்ணம், ஆவியுடன் புகைந்து கொண்டிருந்த தனது வேலாயுதத்தை உருவி யிழுத்து எடுத்துக் கொண்டு, ஓட்டமாய் ஓடிச் சென்று, தன்னுடைய சிநேகிதர் களுடன் கூடி விட்டான்.

அப்போது குணவானுன போலிட்டிஸ் என்பவன் அவ்வாறு காயமேற்ற தனது சகோதரனை அடுத்துச் சென்று, அவனுக்கு வேண்டிய சிகிச்சா உபச்சாரங்களைச் செய்து, பின் மிகுந்த உருக்கத்துடன், தன்னுடைய கைகளால் அவனது இடுப்பை வளைத்துத் தூக்கி யெடுத்துக் கொண்டு, அந்த பயங்கர மான களத்தினின்றும் மெதுவாகப் பின்னடைந்து விட்டான்.

அதன்பின், துரிதமாக ஓடும் அவனுடைய துரகங்கள், திவ்வியமான அவனது ரதத்தில் அவனை ஏற்றிக் கொண்டு பறந்து சென்று விட்டன. அவ்வாறு செல்லச் செல்ல யுத்தகளத்தி லிருந்து கிளம்பிய இடியும் ஓசையும், மெல்ல மெல்லக் குறை வாகவே செவிப்புலனுகி வந்தன. கடற்கரையினின்று புலம்பிக் கொண்டும், மணலின் மேல் தனது ரத்தத்தைச் சொட்டச் சொட்ட வடித்துக் கொண்டுமே சென்ற அவனை அக்குதிரைகள் ட்ராய் நகரத்துக்குக் கொண்டு சேர்த்து விட்டன.

இது இவ்வாறு நிகழ்ந்து வருகையில், உபய கட்சிகளிலும் இருந்த வீரர்கள், கோரமான சத்துரு ஸம்காரம் செய்து வந்தனர். அதனுல் அந்தக் களத்தில் இரத்தமானது வெள்ளமாய்ப் பெரு கிற்று. வீரர்களும் தங்களுடைய ஆயுதங்களுடன் மலைகள் போல் விழுந்து குவிந்தனர். பூமண்டலமும், ஆகாய மண்டலமும் ஒலியையும் பிரதியொலியையும் உண்டாக்கின.

அப்போது அதிதைரியவானுன அபாரியஸ் என்பவன் மஹானுன ஈனியஸ்ஸினுல் அடிபட்டுத் தனது இரத்தத்தை வடித் தான். அவன் தைரியமாக அந்தத் தலைவனை நோக்கித் தனது தலையைத் திருப்பிய பொழுது அந்தத் தலைவன் அவனது தொண் டையைத் துளைத்து விட்டான். அவனது தலையும், அதன் மேலிருந்த மகுடத்தினுல் அமுத்தப்பட்டு அவனது மார்பின் மேல் குனிந்து அசைந்து ஆடியது. இவ்வாறு மடிந்து விழுந்துவிட்ட அந்த வீரன் மீது அவனது கேடயமும் தனது உட்புறத்தை வெளியே திருப்பிக் கொண்டு அவன் மேல் கிடந்தது. அவன் கண்களும், அழிவில்லா உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டன.

தூவான் என்பவன் தனது தேகத்தைச் சுற்றித் திருப்பிய பொழுது, அந்திலோக்கஸ் என்பவன் யுத்த முறை தவறி, அவனை முதுகில் குத்திக் கிழித்தான். அவனது ஈட்டியானது அவனது முதுகெலும்பின் ஓரமாக ஓடும் இரத்த நாளத்தைச் சரசரவென்று ஆத்திரத்துடன் இரண்டாய்ப் பிளந்துவிட, அவன் மல்லாந்து

விழுந்து கைகளை விரித்துக் கொண்டு, தனது உதவிக்கு வரும்படி தனது இனத்தாரை வருந்திக் கூவியழைத்தான். ஆனால் அவனது கூக்குரல் பயனற்றுப் போய் விட்டது. கையை விரித்தவன் தனது உயிரையும் துறந்து விட்டான்.

இவ்வாறு அவனைக் கொன்றதினால் பெருமிதம் கொண்ட விஜயன் அவன் மடிந்து கிடந்த இடத்தை நோக்கிக் குதித்து ஓடிச் சென்று அவனது அகன்ற மார்பில் விளங்கிய ஆபரணங்களைப் பிடுங்கிக் கொண்டான்.

அப்போது அவனுடைய சத்துருக்கள் அவனைச் சுற்றி வளைத்துக் கொண்டிருந்ததினாலும், அவனைச் சுற்றிலும் நாற்புறமும் ஆயுதங்கள் கலகலவென்று உரத்து ஒலித்துக் கொண்டிருந்ததினாலும் அவன் அந்தக் கொள்ளைப் பொருள்களைக் கொண்டு ஓடுவதற்குத் தனக்கு ஏற்ற சமயம் வரும் வரைக் காத்திருந்தான். அப்போது அவனுடைய சத்துருக்கள் ஒரு புயலைப் போல் அவனை அடித்துப் புடைத்து வந்தனர். அந்த அடிகளையும் புடைப்புக்களையும் குமிழிகள் நிறைந்துள்ள அவனது கேடயமானது தாங்கி வந்ததினால், அவன் ஒருவிதமான ஆபத்துக்கும் ஆளாகாமலும் சிறிதேனும் ஒரு அடியேனும் படாமலும் க்ஷேமமாகவே இருந்து வந்தான்.

மஹா கௌரவமுள்ள நெஸ்டாரின் விருத்தாப்பிய தசையில், அவரைக் களிப்பிக்கப் பிறந்தவனான இந்த இளங் காளையை வைரிகளது கொடுமைகளுக்கு ஆளாக்காமல் மஹா தேவரான நெப்தியூன் பகவான் அதிஜாக்ரதையுடன் காப்பாற்றினார்.

ஆயுதப் பயிற்சியில் தேர்ந்தவனான அவன் தனக்கு முதன் முதலாகக் கட்புலனான வீரனை யெதிர்த்துச் சென்று பொருததுமன்றித் தன்னை நாடி வந்த சத்துரு ஒவ்வொருவனையும் ஒரு கை பார்த்து விட்டான்.

அவன் அந்த யுத்த களத்தில், ஆபத்துக்கள் நிகழக் கூடிய இடங்களை யெல்லாம் தேடிக் கொண்டே வலுவில் சென்றான். இறகு கொண்ட பறவைகளைப் போல் வேகமாகச் செல்லக் கூடிய அவனது கத்தியானது, தடுக்க முடியாமல் இடைவிடாது அடிக்கும் காற்றைப் போல், அவனது அகாத புத்தியை யனுசரித்து அவன் மனம் போன போக்கெல்லாம் உழைத்து வந்தது. அது அவனது கையினின்றும் விடுபட வேண்டுமென்ற ஆத்திரத்துடன் தூரத்தில் நின்று கொண்டிருந்த ஒரு சத்துருவையே குறிவைத்துக் கவனித்துத் தங்குதடையின்றி அவனை நோக்கிச் சென்றது.

அப்போது ஆலியஸ்ஸின் புத்திரனான அக்காமஸ் என்பவன் அவனருகில் வந்து, அவனது கேடயத்தைக் குறி வைத்து, அதன் முகத்தை நோக்கித் தனது பித்தளை ஈட்டியால்

அதியுக்கிரமமாக ஒரே அடி அடித்தான். ஆனால் நெப்தியூன் பகவான் அந்த அடியை வேறு விதமாகத் திருப்பி, அந்தச் சத்துருவையே ஏமாற்றி விட்டதுமன்றி, அவனது ஆயுதத்தின் முனையையும் முறித்து விட்டார். அந்த ஆயுதத்தின் ஒரு பாதி யானது அந்த வீரனது அகன்ற கேடயத்தில் ஊன்றி நின்று விட்டது. மறுபாதியும் உடைந்து போன அதன் மரப் பிடியும், சிராயாக நிலத்தில் விழுந்து விட்டன.

இவ்வாறு நிராயுதனாக ஆகிவிட்ட அவன் துரோஜர்களது குழாத்தை நாடிச் சென்று, அவர்களுடன் கலந்துவிட்டான். என்றாலும் மெரியோன், அவனை அவ்வாறு செல்லும்படி உயிருடன் விட்டுவிட வில்லை. அவன் காற்றைப் போல் விரைந்து சென்ற பொழுது, மெரியோனது ஈட்டி அவனைத் தொடர்ந்து ஓடிச் சென்று, அவனைத் தாக்கி அவனது வயிற்றின் ஓரத்தில் ஆழமாகக் குத்தி, அங்கு ஒரு துவாரத்தையும் உண்டாக்கி விட்டது. அந்தக் காயத்தினால் அவனுக்குக் கொடிய வேதனை உண்டாக, அவன் தவித்து, பெருமூச்சு விட்டுக்கொண்டு, தனது உடலை இரண்டாய் மடித்து வளைத்துக் கொண்டு, தரையின்மேல் கிடந்தான்.

தன் கால்களைக் கட்டிப் போட்டுள்ள எருதானது கொடிய மரண வேதனைகளை அனுபவித்து வருகையில், அதன் அல்லல் இவ்வாறுதான் பொங்குகின்றது. அப்போது அதன் உருவமும் அந்தப் பிரதேசத்தில் ஒரு பிரம்மாண்டமான மலையைப் போல் கிடக்கின்றது, அதன் உயிர் ஓட்டம் பிடித்து அழிந்து போகும் சமயத்தில், அதன் ஹிருதயமும் பொங்கிக் கொதித்துப் படபட வென்று துடிக்கின்றது.

அவனைத் தோற்பித்து வென்ற வீரன் அவனது உடலி லிருந்து தனது வேலை உருவிப் பிடுங்கினான். அக்கணமே அவனுக்கு யமகிங்கரர்களுடைய பயங்கரமான உருவங்களெல் லாம் ஒன்றாகத் திரண்டுவந்து கட்புலனாயின.

அதன் பின் தைரியசாலியான தெய்ப்பிரஸ் என்பவன் புழுதியில் புதைந்தான். ஹெலெனஸ் மஹாராஜன் திரேஸியா வில் செய்யப்பட்ட அகன்ற அலகுகளை யுடைய தனது பட்டாக் கத்தியை உயர்த்தி வீசி, அந்தத் தெய்ப்பிரஸின் கன்னங்களை அதிவேகமாகவும் பலமாகவும் தாக்க, அவனது மகுடந்தாங்கிய தலையானது, நிலை பெயர்ந்து, ஆடி, நழுவிக் கீழே விழுந்து, அவனைச் சுற்றியிருந்த ஜனங்களிடையில், கட கட வென்று உருண்டு ஓடியது. அதை மஹா அதிர்ஷ்ட சாலியான ஒரு கிரேக்கன் பற்றிப் பிடித்து வைத்துக் கொண்டான். அவனிடமே அது இன்னும் ஒரு பறிபொருளாக இருக்கின்றது. அந்த மகுடத் திற்குச் சொந்தக்காரனாக விருந்தவனும், தேவர்கட்குச் சமான மான வனுமான, அந்த வீரன் இவ்வாறு இருள் சூழ்ந்த எமனுல கம் புகுந்து விட்டான்.

மஹானுன மனேல்லாஸன் இதைக் கண்ணுற்றுத் துக்கத் துடன் ஆத்திரமும் கொண்டு, கொதித் தெழுந்து இந்தப் பழிக் குப் பழி வாங்கியே தீருவேன் என்று துடித்து, அந்த ஜயசீலனை நோக்கித் திரும்பி, அவன் மேல் பாய்ச்சுவதற்காகத் தனது பிரம்மாண்டமான வேலை ஆட்டியசைத்துக் குலுக்கினுன். அப் போது அவனும் இவனுக்கு எதிராகத் தனது வில்லை வளைத்துக் கொண்டு நின்ருன். அப்போது துரோஜன் விடுத்த அம்பானது அந்த வீரனது மார்பின் மேல் பொத்தென்று சிறிதும் குறிதவரு மல் விழுந்தது. ஆனுல் அந்த வீரனுக்கு ஒருவிதமான தீங்கும் உண்டாகவில்லை. அது அந்த வீரன் அணிந்திருந்த கவசத்தின் இரும்புச் சட்டங்களின் மேல் விழுந்து துள்ளிப் பாய்ந்து வேறி டம் சென்று விட்டது.

ஒரு விசாலமான நெல்லடிக்கும் களத்தின் தளத்தின் மேல் நாற்புறமும் திறந்துள்ள கதவுகளின் வழியாகக் காற்ருனது ஒன் ருய்ச் சேர்ந்து அடிக்கையில் அங்குக் குவிந்திருக்கும் தானியத்தின் மேல், ஓர் அகன்ற விசிறியைக் கொண்டு விசையாக வீசினுல், எவ்வாறு பொன் போன்ற தானியம் அந்த ராசியிலிருந்து லகுவா கத் துள்ளிக் கிளம்பித் தெறிக்கின்றதோ, அவ்வாறு அந்த அம்பா னுது, அதிரிதேசனது ஹிருதயத்தைக் காத்து வந்த இரும்புக் கவ சத்தின் மேல் பட்டுத் துள்ளித் தெறித்து, நெடுந்தூரத்துக்கப்பால் பறந்து சென்று விட்டது!

அதன் பின் அதிரிதேசன் தனது சத்துரு ஏமாந்திருக்கும் தருணத்தைக் கவனித்து, விற்பிடித்திருந்த அவனது கையை ஈட்டியைக் கொண்டு குத்திக் கிழித்து, அந்தக் கையையும் வில் லின் மரத்தையும் ஒன்ருய்ச் சேர்த்து ஆணியடித்தாற் போல் தைத்து விட்டான்! அவ்வாறு காயமடைந்த கையுடன் அந்த வீரன் அந்த வேலையும் இழுத்துக் கொண்டே செல்ல, அது தான் சென்ற விடமெல்லாம் இரத்தத்தை யொழுக்கிக் கொண்டே சென்று, மணலைக் கறைப்படுத்தி விட்டது!

அதைக் கண்டு இரங்கிய குணவானுன அஜினுர், அந்தக் காயத்திலிருந்து அந்த வேலை மெதுவாக இழுத்து, அந்தக் காயத் திற்குத் துணியை வைத்துக் கட்டினுர். ஒரு ஸைனிகனிடமிருந்து எடுத்த கவண் கயிற்றின் மிருதுவான ஆட்டு ரோமமானது, அந்தப் புண்ணுக்கு பஞ்சும், கட்டுக் கயிறுமாக உதவின.

மனேல்லாஸ! மஹாவீர! உனக்கு இன்னும் நல்லகாலம் இருக்கின்றது. அதோபார்! விதியின் ஆணையினுல் உந்தப் பட்டுத் தனது பிராணனை இழப்பதற்காக பிஸான்டர் என்பவன், தனது அணிவகுப்பிலிருந்து பிரிந்து துள்ளிக் கொண்டு உனக்கு முன்னுல் வருகின்ருன். உன்னுலேயே அவனுக்கு அந்திய காலம் உண்டாகப் போகின்றது. அதனுல் உனது பேரும் கீர்த்தியும் இன்னும் உயரப் போகின்றன!

ஒரு பெரிய கோபுரத்தைப் போல் உயர்ந்த நெடியனை அந்த வீரன் யுத்த முனையில் வந்து நின்றான். அதிரிதேசன் அவனை நோக்கித் தனது கூரான ஈட்டியை விடுத்தான். அந்த ஈட்டியைக் காற்றானது வெகு தூரத்திற்கு இழுத்துக் கொண்டு, போய் விட்டது. அப்போது பிசாண்டரும் அதிரி தேசனை நோக்கி ஒரு வேலை விடுத்தான். அதுவும் பயனற்ற தாகவே ஆகிவிட்டது. அதிரிதேசனுடைய கவசத்தைத் துளைப்ப தற்கு அதற்குச் சக்தி யிருக்கவில்லை. அது இரண்டாய்ப் பிளந்து தரையின் மேல் விழுந்து விட்டது.

இவ்வாறு தனது முயற்சி பயனற்றுப் போய் விட்ட பின்னும் அவன் சிறிதும் மனந்தளராமலும், தனக்கு வர விருந்த ஆபத்துக் களைச் சற்றேனும் நிதானித்து, ஊஹித்து ஆராயாமலும், தனக்கே ஜெயம் உண்டாகுமென்று வெறுங்கனவு கண்டு கொண்டிருந் தான். அவனது மண்டை காய்ந்து போய் விட்டது. அவன் மஹா கர்வத்துடனும் விளங்கினான்.

அப்போது, ஸ்பார்ட்டன் பிரபு வானவன் ஏற்கனவே வெகு தூரம் வரை பளிச் சென்று மின்னிக் கொண்டிருந்த தனது கத்தியைப், பின்னும் பிரகாசத்துடன் மின்னலைப்போல் விளங்கு மாறு தீட்டிக் கொண்டிருந்தான். பிசாண்டர் அவனை நோக்கிச் சிறிதும் பயமின்றி விரைந்து சென்றான். அப்போது அவனது இடதுகையில் பிரகாசத்துடன் மின்னிய தனது கேடயத்தை உயர்த்தித் தூக்கிப் பிடித்துக் கொண்டும் உறையுடன் கூடிய தனது பரசை வலது கையில் தாழ்த்திப் பிடித்துக் கொண்டு மிருந்தான். அந்தப் பரசின் பிடியானது மேகத்தைப் போல் இருண்ட ஆலிவ் மரத்தினால் உண்டாக்கப்பட்டிருந்தது. இந்த ஆயுதத்தைக் கொண்டு அவன் அதிரிதேசனது தலையின் மேல் ஓங்கி ஒரு பெருத்த அடி அடித்தான். அது அவனது தலையின் மேல் கம்பீரமாகப் பொத்தென்று விழுந்தபோது அவன் அணிந் திருந்த குஞ்சமானது, அவனது கிரீடத்திலிருந்து இளகி ஆடி யசைந்து, தரையின் மேல் விழுந்து விட்டது.

அப்போது அதிரிதேசனும் தனது பட்டாக் கத்தியை வீசினான். அந்தக்கனமான ஆயுதமானது அந்தச் சத்துருவின் மார்பின் மேல் விழுந்து, அதை ஆழமாய்த் துளைத்து விட்டது. அதன் வேகத்தினால் பிஸாண்டரின் எலும்புகள் நொறுங்கிப் பொடிந்து போயின. மஹாவீரனான அவன், புழுதியிலும் ரத்தத் திலும் அழுந்தியவனாய், அங்கு கதறிக் கொண்டிருந்தான். அப்போது கட்டியாய், உறைந்துபோய் விட்ட அவனுடைய கண்விழிகள் தங்களது கோளத்திலிருந்து கோரமாகப் பிதுங்கிக் கொண்டும் இரத்தத்தைப் பொழிந்து கொண்டும், அந்தக் கரை யின் மேல் உருண்டு கிடந்தன.

அவன் அவ்வாறு இரத்தத்தை வடித்துக் கொண்டிருக் கையில் கோபாக் கிராந்தகனாகிய அதிரிதேசன், அவனைக்

காலால் உதைத்து அவமதித்து, அவனுடைய ஆயுதங்களையும் பறித்துக் கொண்டு, வெற்றியுடன் ஆர்ப்பரித்து, அவனை நோக்கிப் பின்வருமாறு உரத்து உரைத்தான் :—

" ஆஹா! இவ்வாறு தான் நாம் கடைசியாக, துரோஜர்களுக்குப் பயம் எப்படியிருக்கும் என்று போதிக்க வேண்டும்! இவ்வாறு தான் அவர்களுக்கு நாம் படிப்பிக்க வேண்டும்! நன்றி கெட்ட ஜனங்களே! உங்களுக்கு யுத்தமும் ஒரு கேடு! இவர்களுக்கு யுத்தத்தில் பிரியமாம்! ஆஹா ஏற்கனவே இவர்கள் எவ்வளவு தீர காரியங்களைச் செய்து விட்டனர்! ஒரு கடற்படையைத் தாக்கியடித்துப் பிடிப்பதே ஒரு பெருத்த காரியம்! அதற்கு மேலான ஒரு பெருத்த காரியத்தை இவர்கள் செய்து விட்டனர்!!

ஒரு ராஜ ஸ்திரீயையே இவர்கள் பலவந்தமாக அபகரித்துக் கொண்டு ஓட்டம் பிடித்து விட்டனர். ஜோவ் தேவரின் ஸஹாயமோ, அல்லது அவரிடம் பயமோ இன்றி நீங்கள் இந்தப் பாப காரியத்தைச் செய்து விட்டீர்கள்! நீங்கள் மஹா தீரர்கள்தான்! உங்களது துராக்கிரஹம் எத்தகையது என்பது இதனால் ஸ்பஷ்டமாக ஏற்படுகின்றது. நன்மையைத் தரக்கூடிய சடங்குகளை நீங்கள் கெடுத்தீர்கள், தடுத்தீர்கள், உயர்ந்த குலத்தில் உதித்த ஒரு ஸ்திரீயைப் பறித்துக்கொண்டு சென்றீர்கள்! எங்கள் வீரர்களை வதைத்தீர்கள். எங்கள் கப்பல்களைத் தீயிட்டுக் கொளுத்தினீர்கள்.

இவ்வாறு ஒன்றன் பின் ஒன்றாகப் பல பழி பாவங்களையும் செய்தீர்கள்! இவற்றால் உங்களது பெருமை குன்றியே போகும்! அதற்கு ஐயமில்லை. பாபங்களும் அபகீர்த்திகளும் மலிந்துள்ள உங்களது பட்டணம் அடியோடு அழிந்து போவது திண்ணம்.

எமது பெருந் தந்தையே! பூவுலகத்திற்கும், வாயுமண்டலங்களுக்கும் பிதாவே! மனிதரது மனத்திற்கு எட்டாத அபாரமான ஞானமுள்ளவரே! தங்கள் திருக்கரங்களிலிருந்துதான் மர்த்தியர்களுடைய தலைவிதிகள் புறப்படுகின்றன என்று எங்கள் பெரியோர்கள் சொல்லுகின்றனர். அது உண்மைதான் என்றால், தாங்கள் இந்த மஹா பாபிகளுக்குத் தண்டனைகள் அன்றோ விதிக்க வேண்டும்? இவர்கட்கு மேன்மேலும் நன்மைகளே உண்டாகின்றனவே! இது யாருடைய கருணை? இந்தக் கருணைக்கு ஊற்று எங்கே இருக்கின்றது? இவர்கள் சிறிதேனும் தெய்வ பக்தியென்பது இல்லாதவர்கள்; சீர்கெட்ட மஹா பாபிகள், மஹா துன்மார்க்கர்கள்; சிறிதும் நீதி இல்லாதவர்கள்!

அளவுக்கு மிஞ்சி அனுபவிக்கும் அதிருசியான பண்டங்களும் பதார்த்தங்களும் தெவிட்டிப் போகின்றன. புளித்துப் போகின்றன. களை தீர்த்துச் சுகந்தரும் நித்திரையும், காதலினால் உண்டாகும் ஆனந்தக் களிப்பும், ருசிகரமான போஜனமும்,

கவலையின்றி ஆடும் ஆட்டங்களும் ஆகிய, மனிதர்கள் அதிகமாக விரும்பி வரும் சகலமான சுகங்களும், தெய்வங்களைத் துதித்துப் பாடும் திருப்பாடல்களின் இன்னிசைகளும் கூட, அளவுக்குமிஞ்சி னால் சலிப்பையே உண்டாக்கி விடுகின்றன.

ஆனால் இந்த ட்ராய்க்கு மாத்திரம் அந்தச் சலிப்பைக் காணோம். இது கோரமான வதைகளைச் செய்வதிலும், நேர்ந்த விடங்களில் எல்லாம் யுத்தங்களைச் செய்வதிலுமே கண்ணுங் கருத்துமாயிருக்கின்றது'' என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் அந்த வீரனது உயிரற்ற உடல் தகதக வென்று பதைத்துக் கொண்டிருக்கையிலேயே அதி லிருந்து அவனது இரத்தக் கறை படிந்த கவசத்தைக் கழற்றி எடுத்து அதைத் தன் பரிவார ஜனங்களிடம் கொடுத்து விட்டான்.

பின்பு, அவன் யுத்தத்தை நடத்திக் கொண்டிருந்த தனது குழுவினுட் சட்டென்று புகுந்து, பைலிமீனஸ் என்பவனது புத்திர னும் மஹா தீரனுமான வீரனைக் கொன்று விட்டான். ஹார்ப் பாலியன் என்ற பெருடன் விளங்கிய அவன், ஆசியாக் கண்டத்தி லிருந்து நெடுந்தூரம் பிரயாணம் செய்து யுத்தப் பிரியனாகிய தனது தந்தையின் பின்னால் இந்த யுந்தத்திற்கு வந்தவன். தனது தகப்ப னிடத்தில், தான் வைத்திருந்த அன்பினால் அவன் தனது ஜன்ம தேசத்தின் கரையை விட்டுப் புறப்பட்டு இங்கு வந்தான். அதோ! அவன் அந்தக் கரையைக் கண்ணெடுத்தும் பாரான் அன்றோ !!

அவன் ஸ்பார்ட்டன் அரசனையே இலக்காக வைத்து அவனை நோக்கித் தனது ஈட்டியை எய்தான். ஆனால் அது பய னற்றதாகவே ஆகிவிட்டது! அவ்வாறு நிராயுதனாகிவிட்ட தனது உயிரையாவது காப்பாற்ற வேண்டும் என்ற ஆத்திரத்துடன் காற் றாய்ப் பறந்தான். தனக்கு ஒளிந்து கொள்ள மறைவிடம் ஒன்றை யும் காணாமல் தத்தளித்துக் கொண்டும், தனக்கு என்ன ஆபத்து நேரிட்டு விடுமோ என்று ஏங்கி அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக் கையில், அவனை மெரியோன் விடுத்த ஓர் அம்பானது அவன் இடுப்பில் குத்திக் கிழித்து விட்டது. அப்போது அவனுடைய உடலும் அங்கு மடிந்து கிடந்தவர்களுடைய உடலுடன் கலந்து விட்டது. விரைந்து சென்ற கூரான முனையை உடைய ஆயுத மானது அவனது இடுப்பிலுள்ள எலும்பைக் குத்திப் பிளந்து, அதன் அடியிலும் பாய்ந்து சென்று அவன் அன்றுபட்ட சிரமத்தி னால் வீங்கிப்பருத்துக் கொண்டிருந்த அவனது மூத்திரப்பையையும் கிழித்துவிட்டது. கடைசியாக, துக்கம் பாராட்டிக் கொண்டிருந்த தன் ஸக வீரர்களது கைகளில் விழுந்து சாய்ந்து கொண்டும் சிறுகச் சிறுகக் கொஞ்சங் கொஞ்சமாகப் பெருமூச்சு விட்டுக்கொண் டும் தனது ஆவியை விடுத்தான். அப்போது அவனது உடலா னது, தரையின்மேல் கிடத்திய ஒரு கொடிய புழுவைப்போல் தோன்

றியது. அதினின்றும், ஜீவாதாரமான செந்நீரானது, ஒரு மலையருவியைப்போல் பொங்கிப் பொழிந்து வழிந்து வந்தது.

அதன்பின், அவனுடைய பிருத்தியர்களான பாப்பலகோனியர்கள், அவனது சவத்தைத் தூக்கியெடுத்து, அவனது இரதத்தில் ஏற்றி, அதை வெகு நிதானமாக அந்தக் களத்திலிருந்து அப்பால் கொண்டு சென்றனர்.

அப்போது புத்திர சோகத்தால் துக்கமடைந்தவனும், அப்பா! என்று தன்னையழைக்க வேறு ஒரு குழந்தையில்லாதவனுமான அவன் தகப்பன், அந்தக் கரையோரத்தில் அவனுக்கு நடந்த கம்பீரமான சவச் சடங்குகளைக் கண்ணுற்று வந்தான். தனது கண்ணீரையும் ஆறாக வடித்தான்; பயனென்ன ? அவனுக்கு நேர்ந்த பழிக்குப் பழி வாங்குவோர், ஒருவராயினும் அப்போது இல்லாமல் போய்விட்டனர், அவன் துக்கக் கடலிலேயே ஆழ்ந்து போய்விட்டான் !

இளைஞனும், உயர்ந்த மரியாதைகளுடன் தனக்கு விருந்தளித்து உபசரித்தவனும், ஒப்பில்லாத நற்குணங்களையுடையவனும், பாப்பலகோனியன் குலத்தார் அனைவராலும் பாராட்டப்பட்டு வந்தவனுமான அந்த வீரனுக்கு நேரிட்டு விட்டதும், மனதை யுருக்கத்தக்கதுமான இந்தக் கொடிய மரணத்தை வெகு தூரத்திலுருந்து கண்ணுற்ற பொழுது, பாரிஸின் மனம் துடித்தது; பரிதவித்து இளகியது; அந்த மனதில் அக்கணமே கோபமும் வேகமும் பொங்கிக் கொதித்தன. அவன் கோபத்துடன் துடித்து வந்த தனது வில்லைத் தனது முழுப் பலத்துடன் வளைத்து, அதில் இறகுகளுடன் ஒரு பறக்கும் பறவையைப்போல் விரைந்து செல்லக்கூடிய ஒரு சரத்தைத் தொடுத்துத் தனது சத்துரு செய்த பழிக்குப், பழிவாங்கி வரும்படி, அவன்மேல் விடுத்தான்.

அச்சமயம், யூச்சினுர் என்ற பெயரையுடைய மஹா தைரிய சாலியான ஒருதலைவன் அந்த அம்புக்கு இலக்காகினுன்! அவன் பெருத்த தனவான் என்றும், தனத்திலும் மிகுந்த குணவான் என்றும் பிரஸித்தியடைந்திருந்தான். அதிகம்பீரமான காரிந்து என்னும் நகரத்தில் அவன் ஆட்சி செலுத்தி வந்தான். அவன் வெகு காலமாக, மஹா ஞானி என்று ஜனங்களால் போற்றப் பட்டு வந்த பாலித்தூஸ் என்பவரது மகன்.

புற நாடுகளில் ஆயுதங்களாலோ, அல்லது தனது அரண்மனையிலேயே நெடு நாள் நோயுற்றுக்கிடந்தோ, அவனுக்கு இளமையிலேயே மரணம் உண்டாகுமென்று அவனது தகப்பனுர் அவனுக்குப் பன்முறையும் உரைத்திருந்தார். அவன் அவருடைய வார்த்தைகளைச் சற்றும் கவனியாமல் ஆயுளை எப்படி இழந்தாலென்ன, என்று நினைத்து, யுத்தஞ் செய்து அதில் இறந்து அழியாத பேரும் புகழும் பெறுவதேமேல் என்று தீர்மானித்து தனது கப்பலில் ஏறி இந்த யுத்தத்துக்கு வந்தான்.

பாரீஸ் விடுத்த கூரான அம்பானது அவனது காதின் கீழ்ப்பாகத்தைத் தாக்கியது. அக்கணமே, அந்த ஒடுங்கிய வழியாக, அவனுடைய அவயவங்களும், வலிகுன்றிப் போய்விட்டதினால், அவை செயலற்றுப் பூமியின் மேல், பொத்தென விழுந்து விட்டன. அழியாத இருளும் அவனை ஒரு நிழலைப் போல் சூழ்ந்து கொண்டது!

அப்போது அந்தக் களமானது ஒரு பெருத்த புழுதியினால் சூழப்பட்டிருந்ததினாலும், அங்குச் சேனைகள் செய்து வந்த ஆரவாரத்தினாலும், செவிடுபடும் பேரரவம் உண்டாகியிருந்ததினாலும், மஹானான ஹெக்டருக்குத் தன்னுடைய சேனைகள் செய்து வந்தனவற்றைக் கண்ணால் காணவோ, காதால் கேட்கவோ இயலாமல் போய் விட்டது.

அந்தப் போர்க்களத்தின் இடது பாகத்திலிருந்த விசாலமான பிரதேசத்தைக் கிரேக்க சேனைகள், கைப்பற்றிக் கொண்டிருந்தன. அங்கேயே சேனைகளுக்கு மேல், உயரமாக ஒரு குடையைப் போல் வெற்றியானது வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அங்கு, அவர்கள் தங்களது விசேஷமான போர்த்திறமையினால், தங்களது மனம் போனபடி, தங்கள் காரியங்களைச் செய்து வந்தனர். அவர்களது காட்டில் வெற்றி மழை பொழிந்து வந்தது! கெட்டியான பூமண்டலத்தை ஆட்டிவைக்கும் பெருந்தேவர் அவர்கட்கு உதவி புரிந்து வந்தார்.

அச்சமயத்தில் ஹெக்டர் அந்தக் களத்தின் நடு மையத்தில் அசையாமல் நின்று கொண்டிருந்தான், அவ்விடத்தில் தான், கோட்டை வாயில்களும் கப்பல்களைக் காப்பாற்றக் கட்டப் பட்டிருந்த அரண்களும் முதன் முதலாக கைப்பற்றப்பட்டன. புராதனமானதும் மிகுந்த ஆழமானதுமான அந்தச் சமுத்திரத்தின் கரையோரத்தில் இருந்து கொண்டு, அஜாக்ஷர்கள் தங்களுடைய கப்பற் படைகளைக் காவல் காத்து வந்தனர்.

கடலில் அடித்து வந்த அலைகளைத் தடுப்பதற்காக, அங்குக் குட்டைச்சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. அந்தச் சுவர்களுக்கும், துரோஜச்சத்துருக்கள் இருந்த இடத்திற்கும் இடையில் வெகு தூரம் இருக்கவில்லை. அவ்விடத்தில் தான் சிறிது பொழுதுக்கு முன் காலாட்படைகளும் குதிரைப் படைகளும் கை கலந்து யுத்தம் செய்தன.

யுத்தக் கோஷ்டியும் அங்கு விசேஷமாக உண்டாகியிருந்தது. அவ்விடத்தில் பியோஷியாவிலிருந்து வந்த சேனைகள் அனைத்தும் ஒன்றாய்க் கூடி இருந்தன. அதிகர்வமுள்ளவர்களும், தங்களுக்கு முன்னும்பின்னுமுள்ள சகலமான வஸ்துக்களையும் துவம்ஸம் செய்து, அவற்றை ஒரேயடியாய் அழித்துவிடக்கூடிய யந்திரங்களையுடைய அயோனியர்களும், லோக்கியர்களும், வித்தியர்களும், இப்பியன் வீரர்களும், அங்குக் கூடி இருந்தனர்.

இவ்வாறு இச்சேனைகள் அனைத்தும் அங்கு ஒன்றாய்ச் சேர்ந்திருந்தன எனினும், இவற்றால் ஹெக்டரின் வேகத்தைத் தடுக்க முடியவில்லை. அவனது போக்கு ஒரு பெருநெருப்பின் வேகத்திற்குச் சமமாக விருந்தது.

ஸ்டிக்கியஸும், வீடாஸும் ஆத்தென்ஸிலிருந்து வந்த உத்தமர்களான இளங்காளைகளின் முன்னணியில் இருந்தனர். அவர்களுக்குத் தலைவர்களாக பியாஸ்ஸும், மஹானான மெனிஸ்தியஸ்ஸும் விளங்கினார்கள்.

ஈப்பியாவிலிருந்து வந்த வீரர் குழாங்களை, பலவானான மீஜிஸ்ஸும், புத்திமானான திரேஸியஸ்ஸும், தைரியவானான அம்பியானும் நடத்தி வந்தனர்.

யுத்தங்கள் செய்வதில் அதிசாமர்த்தியசாலி என்று பிரஸித்தியடைந்திருந்த மிடன் என்பவனும், மனவுறுதியுடனும் ஊக்கத்துடனும் யுத்தம் செய்பவன் என்ற கீர்த்தியுடையவனான புடார்ஸிஸ் என்பவனும், வித்தியர்களை நடத்தி வந்தனர். பின்னவன், பைலாக்கஸ் என்னும் அருங்குணத்தானது மரபில் வந்தவன்; இபிகஸ்ஸின் மகன்; முன்னவன் ஆயிலியஸ் மகன்.

அவன் இளைய அஜாக்ஷனது சகோதரன்; அவன், தனது தகப்பன் ஒரு ஸ்திரியை இரகசியமாகப் புணர்ந்ததினால் உண்டானவன். தனது ஜன்மஸ்தலத்தை விட்டு வெகு தூரத்தில் வசித்து வந்தவன். தன் சஹோதரர்களைக் கொன்றவனது பழியைத் தீர்க்காமல், யுத்தத்திலிருந்து திரும்பி வந்ததற்காக, கொடியவளான தனது மாற்றாந்தாயினால், தனது தகப்பனது ராஜ்ஜியத்திலிருந்து துரத்தப்பட்டு, நாடு கடத்தப்பட்டவன்,

வித்தியர்களுக்குத் தலைவர்களாக விளங்கிய இவர்கள், பியோஷியர்களுடன் சேர்ந்து, ஆயுதபாணிகளாக, ட்ராய் நகரத்துக் கரையோரத்தில் நின்று கொண்டு, அலுப்புச் சலிப்பில்லாமலும், அதிகக் கவனத்துடனும், யுத்தத்தை நடத்தி வருகின்றனர்.

இப்போது அடுத்தடுத்து நெருங்கி நின்று கொண்டும், அலுப்புச் சலிப்பில்லாமலும், அதிகக் கவனத்துடனும், அஜாக்ஷர்கள் இருவரும் இந்த யுத்தக்களத்தில் தளர்வின்றி உழைத்து வந்தனர்.

ஒரே நுகத்தில் கட்டப்பட்டு, ஒன்றுக்கொன்று இளைக்காமல் உழைத்து வரும் இரண்டு உயர்ந்த ஜாதிக் காளைகள், அந்த நுகத்தில் பூட்டியிருக்கும் கலப்பையில் உள்ள பளிச் சென்று மின்னும், கொழுவினால், தரிசாய்க் கிடக்கும் நிலத்தைக் குத்திக் கீறிப்பிளந்து, அங்கு அகலமான சால்களை வெட்டி விடு

கின்றன. அப்போது அவைகளின் பெருத்த அவயவங்களின் மேல், நுரையானது பனியைப்போல் வழிந்து வருகின்றது. வெடுவெடுப்புடன் விளங்கும் அவற்றின் நெற்றியிலிருந்து வியர் வையும் ஆறுகப் பெருகுகின்றது. அஜாக்ஷர்களும் இவ்வாறே யுத்தங்களைச் செய்து வந்தனர்.

மஹானான அஜாக்ஷன், சத்துரு ஸம்ஹாரம் செய்து, சலித்துக் களைப்புற்றுத் தனது சக்திக் குறைவினுல் பெருமூச்சு விட்டுக் கொண்டு, தனது கேடயத்தையும் கையிலிருந்து விட்டு விட்டபொழுது, அவனது பரிவாரத்திலிருந்த வீரர்கள், வரிசை வரிசையாகவும், முறை முறையாகவும் முன் வந்து, அவனது சப்த கோசங் கொண்ட கேடயத்தை எடுத்துச் சுமந்து கொண்டு, அவன் பின் சென்றனர்.

ஆனுல் அவனுடன் சேர்ந்து பொருது வந்த தைரியசாலி யான மற்றைய வீரனை, ஒருவராயினும் தொடர்ந்து செல்ல வில்லை. லோக்கியாவிலிருந்து அவனுடைய பரிவார ஜனங்கள், தங் களுடைய சத்துருக்களை நெருங்கிச் சென்று, அவர்களுடன் யுத்தம் செய்யப் படிக்காதவர்கள்; ஈட்டியை ஏந்தவோ, மகுடத் தைத் தலையில் தாங்கித் தரிக்கவோ, அல்லது சந்திரனைப் போல் உருண்டை வடிவமான கேடயத்தை உயர்த்தித் தூக்கிப் பிடிக்கவோ அறியாதவர்கள்.

ஆனுல் நெடுந் தூரத்திலிருந்து பறக்கக் கூடிய அம்புகளை எய்வதிலும் உரத்துச் சத்தம் செய்து கொண்டு செல்லக் கூடிய உருண்டையான கூழாங் கற்களைக் கவணில் வைத்து வீசுவதிலும் மிகவும் சமர்த்தர்கள். இந்த வித்தைகளில் சமர்த்தர்களான அவர்கள் வெகு தூரத்திலுள்ள ஒரு வீரனைக் குறிவைத்துத் தவருமல் அடிப்பார்கள்; அவனுக்குக் காயத்தை உண்டாக்கு வார்கள்! அவனை நிலத்தில் வீழ்த்தியும் விடுவார்கள்.

இவ்வாறு திலமானது பரிஜனங்கள் பளிச் சென்று மின்னும் தங்களுடைய ஆயுதங்களை ஏந்திக் கொண்டு, திரளாகக் கூடி முன்னணியில் இருந்த வண்ணம், அப்போது சிறிதும் இடை விடாமல் நடந்து வந்த யுத்தத்தில் ஊக்கத்துடன் உழைத்து வந்தனர்.

அவர்களுக்குப் பின்னுல் வெகு தூரத்திலிருந்த லோக்கியன் வில்லாளிகள் விடுத்த கூழாங்கற்களும், அம்புகளும் ஆகாயத்தைக் குத்திக் கிழித்துப் பாய்ந்து சென்றன. அங்கு மோதி வந்த காற் றையும் தடுத்து விட்டன.

அந்தக் கற்களும், அம்புகளும் ஒன்ருய்ச் சேர்ந்து, அவர் களுடைய சத்துருக்களின் மேல், ஒரு பெருத்த மழையைப் போல் பொழிந்தன. அந்தக் கல் மழையையும், சரமாரியையும் ஏற்ற ட்ராய்ச் சேனைகள், நிலைகுலைந்து, நாற்புறமும் சிதறுண்டு போயின!

அப்போது கிரேக்கர்களுக்கு அழியாப் புகழ் கிடைத்தும் இருக்கும் ; கடுங் கோபத்துடன் துடித்து வந்த இலியன்மாரும் தங்கள் கோட்டைகளுக்குள் திரும்பிச் சென்றிருப்பார்கள்! ஆனல் காரியங்கள் அவ்வாறு நிகழவில்லை. புத்திசாலியும், தைரியசாலியும் விவேகியுமான பாலிதாமஸ் என்பவர், அப்போது மஹாரனை ஹெக்டரை நோக்கிப் பின் வருமாறு புத்திமதிகளை உரைத்தார் :—

"ஹெக்டர்! நீ எல்லா விஷயங்களையும் நன்ருக அறிந்தவன் தான், மிகவும் பெரியவன் தான், என்ருலும் நீ, உன்னிடம் விஸ்வாசமுள்ள சிநேகிதர்கள் உனக்குச் சொல்லும் வார்த்தைகளைச் சமுசயமோ, சந்தோஷமோ, பக்ஷபாதமோ இல்லாமல் கேட்க மனமில்லாதவனைப் போலவே தோன்றுகின்ருய்.

உன்னுடைய ஒப்புவமையற்ற வீரசூர பராக்கிரமங்களெல்லாம், ஸகலமான தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் தெரியும். வெற்றியையும் புகழையும் தரக்கூடிய யுத்த தந்திரங்கள் அனைத்தையும் நீ அறிவாய்!

ஆனல் யுத்தங்களைச் செய்வதில் சாமர்த்தியமுள்ள ஒருவனுக்கும், விஷயங்களை ஆழ்ந்து ஆராய்ந்து ஆலோசனைகள் சொல்வதில் சமர்த்தனை வேறு ஒருவனுக்கும் உள்ள வித்தியாசம் எவ்வளவு என்பதை நான் உனக்குச் சொல்லவும் வேண்டுமா? அது உனக்கே தெரியுமன்ரே! தேவர்களனைவரும் பரம கிருபையுடன் உனக்கு அளித்துள்ள ஐசுவரியங்களில் திருப்தி யடைந்தவனுகவிராமல், நீ அவர்களுடைய பிரஸாதங்களனைத்தையுமே ஸ்வீகரித்துக்கொள்ள வேண்டு மென்று சிரமப் படுகின்ருய்! அது வேண்டாம்.

சிலர் யுத்தங்களைச் செவ்வையாய்ச் செய்து இரத்தத்தை வெள்ளம் போல் பொழியத் தக்கவர்கள்! வேறு சிலர், மதுரமாகப் பாடவும், இன்னிசையுடன் கானம் செய்யவும் வல்லவர்கள். அவ்வாறே சிலருக்கு மாத்திரம், ஜோவ் பகவான், விவேகத்தையும் எல்லா விஷயங்களையும் ஆழ்ந்து ஆராய்ந்து ஆலோசனை செய்யும் திறனையும் அளித்திருக்கின்ருர். அவர்களது ஸங்கியை மிகவும் குறைவானது. அவர்கள்தான் தங்களுடைய தேசங்களுக்கும் நாடு நகரங்களுக்கும் ராஜ்ஜியங்களுக்கும் இரக்ஷகர்கள் அவர்கள் தான் என்று நாற்புறமுள்ள நாட்டு நகர வாசிகள் அனைவரும் அவர்களை வாழ்த்துவார்கள்.

இந்த ஸத் குணத்தைத் தேவர்கள் எனது மனத்தில் நிறைத்து வைத்திருப்பது உண்மை என்ற நம்பிக்கை உனக்கு இருக்குமானல், ஹெக்டர்! நீ நான் சொல்வதைக் கவனித்துக் கேட்க வேண்டும். இச் சமயம் நாம் செய்யத் தக்கது இன்னது, இன்னது தான் உசிதம் என்று எனக்குத் தோன்றுவதை நான் சொல்லுவேன். அதை நீ கேட்க வேண்டும்.

நீ இந்தக் களத்தில் முன் செல்லச் செல்ல, உன் முன்பாக ஆபத்துக்களே மேன் மேலும் மலிந்து வருவதை நீயே கண் கூடாகக் காணலாம். இந்த யுத்தத்திற்குச் சம்பந்தப்பட்ட ஸகல மான காரியங்களும், உனது தலையின் மேல் விழுந்த பாரமாகவே இருக்கின்றன. இதையும் நீயறிவாய்.

அதோ அங்குக் காணும் சத்துருக்களின் கோட்டைக்குள் எவ்வளவு துரோஜர்கள் அகப்பட்டுக் கொண்டு தவிக்கின்றனர்! அந்தோ அவர்கள் கிரேக்கர்களுக்குப் பணிந்து, சிறிது நிலை குலைத்து, விழுந்தும் விட்டனர்! நம்மைவிடப் பெரிய சைனியத்தால் தாக்குண்டு, நம்முடைய ஸைனியங்கள், தாங்கள் இருந்த இடத்தைக் காத்து வரவும், இயலாதவர்களாகவன்றோ இருக்கின் றனர்! கப்பல்களின் அருகில், தங்களது ஆவியைத் துறந்து கிடக்கும் நம்முடைய அரும்பெரும் வீரர்களுக்கு அளவு முண்டோ?

நீ இப்பொழுது உன் கோபதாபங்களை நிறுத்த வேண்டும்! உனது பரிவாரத்திலுள்ள தலைவர்களையும், அரசர்களையும், அழைத்து ஒரு சபை கூட்டி, அவர்களுடன், எல்லா விஷயங் களையும் ஆழ்ந்து ஆலோசனை செய்ய வேண்டும். நமது இஷ்டம் நிறைவேறுவதற்கு, நமக்குத் தெய்வானுக்ரஹம் இருக்கின்றதோ? துரோஜர்கள் அதோ! உயரமாக நின்று வரும் கப்பல்களுக்கு நெருப்பிட்டு அவற்றைக் கொளுத்தலாமா? அல்லது அவற்றை விட்டு விட்டுப் பின்னடைந்து வந்து விடலாமா? மேன் மேலும் உண்டாகக் கூடிய ஆபத்துக்களுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளாகாமல் இன்றைய தினம் கிடைத்த வெற்றிகள் போது மென்று, திருப்தி யடைந்து விடலாமா? என்ற விஷயங்களை சபையோர் அனைவரும் ஆலோசிக்க வேண்டும்.

கிரீஸ்காரரது வீரம் இன்னும் அழியவில்லை! அது குறையவும் இல்லை! இன்று அஸ்தமனத்திற்குள்ளாக, அவர்கள் எங்கு நம்மைச் சூரிய பகவானுக்கு விசேஷமான பலியாய்க் கொடுத்து விடுவார்களோ, அவனுக்குச் சேர வேண்டிய கடனைக் கட்டி விடுவார்களோ, தங்களது கடைமையையும் நிறைவேற்றி விடுவார்களோ, என்று நான் மிகவும் பயப்படுகின்றேன், நடுங்கு கின்றேன்.

அகிலேசன், மஹானுன அகிலேசன், அதோ அங்கு அப்பாலுள்ள கப்பல்களின் மேல்தட்டுக்களில் இருக்கவே இருக் கின்றான். அவன் அங்கு இருந்த வண்ணம் இந்த யுத்த களங்களை மேல் நோக்கிக் கொண்டே யிருக்கின்றான்" என்றார்.

இந்த உபதேச மொழிகள் ஹெக்டருக்குப் பிரியமாகவே இருந்தன. அவன் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து தனது இரதத்தி லிருந்து குதித்தான். அப்போது அவனியும் நடுங்கியது. அவன் அணிந்திருந்த ஆயுதங்களும், கல கலவென்று குலுங்கி யொலித்தன. அவன் தனது நண்பனை நோக்கி,

"நண்ப, உன்னாலான தந்திரங்களை எல்லாம் செய்து நீ இந்த இடத்தைக் காத்து வா! சிதறிக் கிடக்கும் துரோஜ இளை ஞர்களை எல்லாம், இங்கே ஒருங்காகக்கூட்டி நிறுத்திவை. அதோ அங்கு நமது வீரர்கள், அலுத்துச் சலித்துக் கிடக்கின்றனர். அவர் களைக் கவனிக்க இதோ நான் செல்லுகின்றேன்,

அங்குச் சென்று, அவர்களுக்கு வேண்டிய ஸஹாயங்களைச் செய்துவிட்டு, விரைவாகத்திரும்பி வந்து, வெற்றி தோல்விகள் யாருக்கென்று நிச்சயமில்லாமல் இருக்கும் இன்றைய காரியத்தைத் தீர்மானித்து விடுகின்றேன்!" என்று சொல்லிவிட்டு, கோபுரம் போல் நெடு நெடுவென உயர்ந்து விளங்கிய அந்த வீரன், அந்தப் பிரதேசத்தை நோக்கிப் புறப்பட்டான்.

அப்போது அவன் தனது கொண்டையில் கட்டிக்கொண் டிருந்த வெண்மையான பீலிகளை அசைத்து ஆட்டினான். அவை அப்போது அடித்து வந்த காற்றையனுசரித்துப் பறந்தன! ஆனால் அவன், பனியால் மூடப்பட்டிருந்த ஒரு பருவதம் நகர்ந்து வருவது போலவே தோன்றினான். அவன் தன்னுடைய கோஷ்டியார் அனைவருக்கும் ஊக்கத்தையும், உற்சாகத்தையும், அளித்துக் கொண்டு, அவர்களுக்கு மத்தியில் பறந்து சென்றான். 'சத்துருக் களை இடியைப்போல் இடித்துப் பொடியாக்கிவிட வேண்டும்; யுத்தத்தைப் பின்னும் தொடங்க வேண்டும்' என்று எல்லோ ருக்கும் கட்டளை இட்டான்.

துரோஜச் சைனியத்திலிருந்த, தைரியம் நிறைந்த வீரர்கள் அனைவரும், அவனது அந்த உயர்ந்த ஆணையைக் கேட்டவுடன், பாந்தஸின் மகனை நோக்கி விரைந்து சென்றனர்.

அப்போது ஹெக்டர் தன்னுடைய கணக்கற்ற சேனாவீரர் கள் அனைவரையும், காணவேண்டுமென்று மிகுந்த ஆத்திரத் துடன், அந்தக் கொத்தளங்களிலும், களத்திலும், அவர்களைப் பன்முறையும் சுற்றிச் சுற்றித் தேடினான். ஆனால், அவர்கள் அவ னுக்குக் கட்புலனாகவில்லை. தெய்வோவஸுவோ, மஹா ஞானி யாகிய ஹெலினஸ்ஸோ, ஆஸியஸ்ஸின் சுதனோ, அல்லது ஆஸியஸ்ஸேதானோ, ஆகிய ஒருவனாவது அவனுக்குக் கட்புல னாகவில்லை. அவர்கள் அனைவரும், சத்துருக்களுடைய ஆயுதங் களால் குத்துண்டுத் கோரமான காயங்கள் ஏற்றுச் சிலர் மரணத் தின் வாய்ப்பட்டுத் தனித்துக்கிடந்தனர். வேறுசிலர் தரையின்மேல் சாய்ந்து, அழுதுபுலம்பி, அனுங்கிக் கொண்டிருந்தனர்; மற்றுஞ் சிலர் ஆழமான புழுதியில் அழுந்திக் கிடந்தனர்; பின்னுஞ் சிலர், அந்தக்கோட்டைகளின் மதில்களின்மேல் இருந்தவண்ணமே தங்க ளுடைய உயிர்களைத் துறந்த வண்ணமே இருந்தனர்.

அப்போது அவனது இடது பாகத்தில், வெகு தூரத்தில் ஒரு கூட்டத்தின் மத்தியில், சுந்தரனானபாரீஸ் இருந்துவந்தான். அது அவனுக்குக் கட்புலனாயிற்று. அங்கிருந்த வண்ணம் பாரீஸ்,

தன்னுடைய சைனிகர்களுக்கு உற்சாக மூட்டிக்கொண்டும், தன்னைச் சுற்றியிருந்த சத்துருக்களை எமனுலகத்திற்கு அனுப்பிக் கொண்டும் இருந்தான். அவனைக் கண்டு சீற்றங்கொண்ட வீரனான ஹெக்டர், பழிப்புக்கிடமான பின்வரும் வசனங்களை ஆத்திரத்துடன் உரைத்தான் :—

"துக்கம் அனுபவிக்கவே பிறந்த பாரிஸ்ஸே! அபலைகளின் அடிமையே! நீ பார்வைக்கு மாத்திரம் மிகவும் ஒழுங்காகவும் அழ காகவும் இருக்கின்றாய்! உனது மனதில் துரோகமும் துர்க் குணமுமே நிறைந்து இருக்கின்றன! தெய்வோவஸு எங்கே? தெய் வத்திற்குச் சமமான பிதாவெங்கே? அஞ்சாநெஞ்சனான அவனது சுதன் எங்கே? சத்துருக்களுக்குக் கடுவினைபோன்ற பலவானான ஹெலினஸ் எங்கே? சற்று முன்வரை நம்முடைய சத்துருக்களுக்கு நடுக்கத்தை யுண்டாக்கிக்கொண்டிருந்த மஹானான ஆத்திரி யோனியஸ் எங்கே?

பழி தீர்த்துவிட வேண்டுமென்று தீர்மானங்கொண்டுள்ள தேவர்கள் உண்மையிலேயே கண்ணாய் இருக்கின்றார்கள்! உன் தலையின்மேல் ஒரு பெருத்த கல் விழவே போகின்றது! ஓர் இருண்ட கறுத்த மேகம்போல், அது உன் தலையின்மேல் தொங்கிக் கொண்டேயிருக்கின்றது! இராஜஸ்தானமாகிய ட்ராய் நகர் தனது அஸ்திவாரத்திலிருந்து, குலுங்கியசைந்து ஆடிக்கொண்டி ருக்கின்றது! உனது நாடு அழிந்து போவதைக் கண்ணுற்று, மன மிடிந்து நீயும் மண்ணின்மேல் விழுந்து மடிந்து போவாய்! எல் லோருமே உனது பழி பாவங்களுக்கு இரையாகப்போகவிருக் கின்றனர்" என்றான்.

அதைக்கேட்டுப் பாரிஸ் அவனுக்குப் பின்வருமாறு பதி லுரைத்தான் :—

"எனது உடன் பிறந்தவனே!, எனது நண்பனே நீ, வேக மும் ஆத்திரமும் கொண்டு இக்கொடிய வசனங்களை உரைத்து விட்டாய்! சொல்லத் தகாத வார்த்தைகளையும் சொன்னாய்! நாம் செய்து வந்த வேறு யுத்தங்களில், எனது நடத்தை பழிப்புக்கிட மாகத்தான் இருந்தது. என்றாலும், அந்த யுத்தங்களிலும் நான் என்னாலான காரியங்களைச் செய்தே வந்தேன். வாளாவிருக்க வில்லை! அப்போது என்னைப் புகழாதவர்களும் இல்லை!

இப்போது, நீ உனது ஆயுதங்களால், அதோ அங்குள்ள அரணையிடித்துத் தகர்த்து, அதைத் தரைமட்டமாக்கிக் கொண்டு வருகையில் நான் இங்கிருந்த வண்ணம் காலனுக்குச் சமமான எனது வில்லை வளைத்துச் சரங்களைத்தொடுத்து, அவற்றைச் சத்து ருக்களின்மேல் விடுத்து, அவர்களையழித்து வெட்டி வீழ்த்தினேன். அவர்களுடைய பிணங்கள் இந்தக் களத்தில் பலவிடங்களிலும் சிதறுண்டு கிடக்கின்றன. நீ தேடிவரும் வீரர்களெல்லாம் கொலை யுண்டு போய் விட்டனர். அதோ அங்கு அப்புறம் காணும் கரையில் மாண்டு கிடக்கின்றனர்.

அவ்வீரர்கள் எல்லோரிலும், இருவர் மாத்திரம் மீந்திருக்கின்றனர். தெய்வோவஸூவும் ரிஷிவரியருமான ஹெலனஸ்ஸூம் மாத்திரம் உயிருடன் இருக்கின்றனர்! அவர்களும் சத்துருக்களின் ஈட்டிகளால் குத்துண்டு, வலிகுன்றிச் செயலற்றுக் கிடக்கின்றனர்!

நீ ஜெயஸ்வரூபி! வெற்றிகள் பெறவே பிறந்தவன். ஆதலால், உனது மனம் தூண்டுவதுபோல் நீ, எங்கு வேண்டுமானுலும் செல்! நான் என்னுடைய உடலையும் ஆவியையும் உன்னிடம் ஒப்பித்துவிட்டு, நீ நியமிக்கும் காரியங்களை ஊக்கத்துடனும், ஆர்வத்துடனும் செய்து வருவேன். இந்தக் கையினுல் செய்யக் கூடிய காரியங்கள் அனைத்தையும் நான் செய்தே தீருவேன். இது உனக்கு நன்ருக ஞாபகமிருக்கட்டும்! உயிருக்கு உயிரை வாங்கவும், அடிக்கு அடியையும் பூசலுக்குப் பூசலையும் தரவும், இந்தக் கை பின்வாங்காது. ஆனுல் ஒன்று, நமக்கு மிஞ்சிய வலியுடையோரிடம் பொருது வெற்றி பெறுவது நம்மால் இயலாத காரியம். தேவர்களன்ருே ஸர்வ வல்லமையும் உள்ளவர்கள்!" என்ருன்.

இந்த வசனங்களைச் செவியுற்றுக் கேட்ட பொழுது, வீரனுன ஹெக்டரது மனக் கொதிப்புச் சற்றுத் தணிந்தது. அதன் பின், அவ்விரு வீரர்களும், அப்போது மும்முரமாய் யுத்தம் நடந்து கொண்டிருந்த இடத்திற்கு ஆத்திரத்துடன் விரைந்து சென்று அதில் கலந்து கொண்டனர்.

அங்குப் பாலிதாமஸ், காயமேற்று இரத்தக் கரையுடன் கிடந்தான். அவனைச் சுற்றிக் கொண்டு ஸிப்ரியோனும், பால்ஸீஸூம், உக்ரஸ்ரூபியான ஆர்த்தியஸ்ஸூம் நின்றுகொண்டிருந்தனர். அவ்வாறே, தேவர்களுக்குச் சமமான பாலிபீதீஸ்ஸூடனும், ஹப்போத்தியோனது மரபில் வந்த தைரியசாலிகளான இரண்டு சகோதரர்களுடனும், பால்மஸ்ஸூம் நின்று கொண்டிருந்தான். இறுதியாகச் சொல்லப்பட்டவர்கள் முந்தின தினந்தான் வெகு தூரத்திலுள்ள அஸ்கானியாவிலிருந்து புறப்பட்டு எழில் மிகுந்த இலியனுக்கு வந்து இன்றைய தினம்இந்த யுத்தத்தில் இறங்கினர்.

தன்னுடைய பயங்கரமான இறகுகளில் ஜோவ் தேவரின் இடிகளைத் தாங்கி எடுத்துக்கொள்ள, கனமான இருண்ட மேகங்களிலிருந்து, ஒரு சுழல்கால் எழுகையில், அதன் வழியிலுள்ள சகல மான வயல்கள் எல்லாம் பாழாகி விடுகின்றன. புயலும் விசையுடன் அடிக்கின்றது. அதன் மேல், அந்தப் புயலானது தனது வேகமனைத்தையும் ஒருங்காய்ச் சேர்த்துத் திரட்டிக்கொண்டு சென்று, நுரைத்த ஆழ்கடலின் மேல் அமர்ந்து விடுகின்றது.

அப்போது அந்தப் புயலினுல் மோதுண்ட ஆழ்ந்த நீர்நிலைகள் நடுங்கிக் கதறுகின்றன. பின்னுல் செல்லும் திரைகள், முன் சென்ற திரைகளை நெருக்கி உந்தித் தள்ளுகின்றன; பல அலைகள்

ஒன்றுய்க்கலந்து ,பெருத்து, அகன்று, உருளுகின்றன ; உயர்ந்து பாய்ந்து நுரைகளைக் கக்குகின்றன. கடைசியாய் அவை கரையை நோக்கி வந்து அதன் மேல் குப்புற விழுந்து விடுகின்றன !

இவ்வாறே வரிசை வரிசையாகவும், நெருக்கமாகவும் அணி வகுக்கப்பட்டிருந்த அந்த சைனியங்கள் திரள் திரளாக வந்தன. தலைவர்கள், ஒருவரையொருவர் உறுத்தி யோட்டி வந்தனர் ! சைனிகன் ஒவ்வொருவனும் தனக்கு முன்னிருந்தவனை நடத்தி, உந்தி நெருக்கிக் கொண்டு வந்தான். அப்போது அந்தக் களங் களில் நெடுந்தூரம் வரை பயங்கரமாகவும், பளிச்சென்றும் மின்னிக்கொண்டு, ஒரு வெளிச்சமானது ஒழுங்காக வீசியது. வீரர்கள் அணிந்திருந்த வெண்கலப் போர்க் கவசங்களும், ஆயுதங்களும், பிரதிபிம்பங்களைக் கிளப்பிக்கொண்டு, பளிச்சென்ற கிரணங்களைப் பொழிந்து வந்தன.

அவ்வாறு பூர்ண பிரகாசத்துடன் விளங்கிய வெளிச்சத் தின் நடுமத்தியில், யுத்தத்தின் முன்னணியில், மனிதவர்க் கத்தையே அழித்து விடும்படி நியமிக்கப்பட்டிருந்த மார்ஸ் தேவரைப் போல் மஹானுன ஹெக்டர் தேஸசுடன் விளங்கினுன். அவனது பிரம்மாண்டமான கேடயமானது, அவனுக்கு முன்னுல் கொழுந்து விட்டெரியும் தணல் போல், தகதகவென்று கொதித்துக் கொண்டிருந்தது. அகன்ற அருக்கனைப் போன்ற அந்தக் கேடய மானது, அந்தக் களம் முழுவதிலும் வெளிச்சத்தைப் பொழிந்து வந்தது. அவனது தலையிலிருந்து அசைந்து ஆடிக் கொண்டிருந்த கிரீடமும் தன் வெண்மையான கிரணங்களைப் பொழிந்து வந்தது. அவன் கண்கள் சிறிதும் கொட்டாமல் விழித்துக் கொண்டு அந்தக்களம் முழுவதையும் உற்று நோக்கி வந்தன.

அவன் தனது கேடயத்தை உயர்த்திப் பிடித்துக் கொண்டு, அதன் நிழலில் ஓரிடம் விட்டு மற்ருேரிடம், மின்னலைப் போல் பாய்ந்து சென்ற பொழுது, அவன் சென்ற இடத்தில் இருந்தோர் அனைவரும் பயமும் பீதியும், திகிலும் அச்சமும் கொண்டனர். அவனது வேக கதியைக் கண்ணுற்ற சூர பராக்கிரமங்கள் நிறைந்த மஹா வீரர்களுங்கூட நடுங்கினர் ! வாடி வதங்கினர் !

இவ்வாறு அதிபயங்கரமான கோலத்துடன், அவன், அந்தக் களத்தில் மேலும் கீழுமாக ஊடாடி வந்தான் ! காலனே அவனது கண்ணில் விளங்கினுன் ! பல ஜாதியரான ஜனங்கள் அனைவரும், அவனைக் கண்டு பயந்து நடுங்கினர். ஆனுல், ஆர்க்கிவ் வர்க் கத்தான் ஒருவனுவது, அவனைக் கண்டு சிறிதேனும் கலங்க வேண்டுமே, அவர்களில் ஒருவனுவது அணுவளவும் அசைய வில்லை !

அப்போது கோபுரம் போல் உயர்ந்துள்ள அஜாக்ஷன் முதன் முதலாகத் தாவித் தாவிக் குதித்து நடந்து, அவனுக்கு முன்வந்து, அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்து, அவனைச் சண்டைக் கிழுத்தான் :—

"அடா, ஹெக்டர்! நீயும் ஒரு வீரனானால் வாடா சண்டைக்கு! ஒருகை பார்த்து விடுவோம்! உனது வெட்டி மிரட்டு களைச் சற்று நிறுத்து! இடிக் கடவுளாகிய ஜோவ் தேவருக்கன்றி, உன்னைக் கண்டோ, உன்னுடைய புஜபல பராக்கிரமங்களைக் கண்டோ, நாங்கள் பயின்ற தனுர்வித்தையும் வீணாகாது! அது பயனற்றுப் போகாது! அதை நாங்கள் கேவலம் ஓர் அழகான ஆபரணமாகக் கருதவில்லை.

இதுவரை கிரீஸுக்கு நேர்ந்துள்ள தாழ்வுகளுக்கு எல்லாம், தெய்வங்கள் தான் காரணமேயன்றி, ட்ராய் நாட்டார் காரண மல்ல என்பதை நீ கெட்டியாய் அறிந்து கொள்ளக் கடவாய்! எங்களுடைய கடற்படைகளை ஆக்கிரமித்து விடலாம், அவற்றைக் கைப்பற்றி விடலாம் என்று நீங்கள் மனப்பால் குடித்து வருகின்றீர் கள். உங்களுடைய துணிவு இணையற்றது தான்! ஆனால் அவை அனைத்தும் வீணாவது திண்ணம்!

ஆஹா! உங்களது துணிவுதான் என்ன! கிரேக்கர் களுக்கும், கைப்பழக்கம், மனவுறுதி என்னும் உத்தம குணங்கள் உண்டு என்பதை நீங்கள் அறியவேண்டும். அவர்களும் மனமும், மெய்யும் உடையவர்கள் தான். எங்களுடைய உன்னதமான கப்பல்கள் உங்களது கைவசப்பட்டு நெருப்பாவதற்கு நெடுநேரத் திற்கு முன்னதாகவே, உங்களது பலமான பட்டணமானது மிகவும் உறுதியாகவும் அரணாகவும் கட்டப்பட்டுள்ளது என்று நீங்கள் கருதிவரும் உங்களது கெட்டியான பட்டணமானது, தெய்வங்களா லேயே கட்டப்பட்டதென்று நீங்கள் கருதிவரும் பட்டணமானது மதிலோடு எங்களுடைய கால்களின் அடியில் விழுந்து, அழுந்தித், தாழ்ந்து, புகைந்து கொண்டு மண்ணில் மறைந்தே போய்விடும். அதில் எள்ளளவும் ஐயமில்லை! அவ்வாறு பாழாகி அழிந்து போய் விட்டபின் விஸ்தாரமான அப்பாழின் நீள அகலங்களை அளப்பது சாத்தியமாக ஆகிவிடும்!

மேலும், நாங்கள் உன்னை இந்தக் களமெல்லாம் துரத்தி வேட்டையாடுவோம். அப்போது மஹா பராக்கிரமசாலியான நீயும் கூட, ஜோவ் தேவரை உனது உதவிக்கு வரும்படி உரத்துக் கூவியழைப்பாய். உனது குரல் அவரது காதில் விழாது. அது வீணே ஆகிவிடும். அந்தக் காலமும் வரவே வரும்.

'முன்பின் யோசனை செய்யாமல் இந்தக் காரியத்தில் இறங்கி விட்டேனே! இது என்னைப் பெருத்த ஆபத்தில் அழுத்தி விட்டதே? வேகமாய்ப் பறந்து ஓடும் என் குதிரைகளுக்குப் பருந்துகளின் இறக்கைகளுக்குள்ள விசையிருந்தால் இப்போது எவ்வளவோ உபகாரமாக விருக்குமே!' என்றும் நீ ஏங்குவாய். மஹாவீரன் என்று பிரஸித்தி யடைந்துள்ள உனக்குங்கூட இந்தக் கவலை உண்டாகும். ஆனால் உனது விருப்பம் நிறைவேறாது.

அதன் பின் வீரனுகிய நீ, உனது பேரையும், புகழையும் காப்பாற்ற வேண்டுவது உனது கடமை என்பதையும் மறந்து விட்டு, யுத்தக் களத்தினின்றும் ஓட்டம் பிடிப்பாய்! அப்போது உன்னுடைய உற்ருரும் உறவினரும் இரைந்து, கொந்தளித்துக் குதிப்பார்கள். அந்தச் சந்தடியிலும், அப்போது கிளம்பும் புழுதி யிலும், உன்னுடைய மானக் கேடும் அபகீர்த்தியும் மறைந்துபோய் விடும்'' என்ருன்.

இவ்வாறு அவன் பேசிக்கொண்டிருக்கையில் அதிசாமார்த் தியமுள்ள ஒரு கழுகானது, தன்னுடைய சிறகுகளை விரித்துப் பட படவென்று அடித்துக் கொண்டு, வந்தேன், வந்தேனென்று அங்குள்ள அனைவருக்கும் முன்னுல் வந்தது.

இவ்வாறு ஜோவ் பகவானது நியமனப்படித் தங்கள் முன்னுல் பிரஸன்னமாகி ஆகாய வீதியின் வழியாய்ச் சென்ற அந்தக் கழுகின் சுபசகுனத்தைக் கண்ணுற்ற கிரேக்கர்கள் அனை வரும், உடனே தங்களுடைய தலைகளை உயர்த்தி நிமிர்த்து அதைப் பார்த்துக் கோஷித்து வாழ்த்தினர். அந்தக் கோஷமானது, பிரமாண்டமான அந்தக் களத்தின் நாற்புறமும் வெகுதூரம் வரை சென்று அவ்விடங்களில் பெருத்த எதிரொலிகளைக் கிளப்பிவிட்டுத் திரும்பி வந்தது. சற்று நேரத்திற்குப்பின் அடங்கிற்று.

அந்த ஒலியும் பிரதி ஒலியும் அடங்கிய பின்னர், ட்ராயின் தலைவன், அஜாக்ஷை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

"அடா! உனக்கு இவ்வளவு பெருமையா! உன்னைப்போல் தன்னைத்தானே போற்றிப் புகழ்பவனை நான் இதுவரை கண்ட தில்லை! தற்புகழ்ச்சியில் நீ மிகவும் தேறிவிட்டாய்! இவ்வளவு குறும்பும், துடுக்கும் எங்கிருந்து கற்ருய்? ஏன் அதிகமாய்த் துள்ளுகின்ருய்? 'துள்ளின மாடு பொதி சுமக்கும்' என்னும் பழ மொழியை நீ கேட்டிலையோ? அதிகமாய்த் துள்ளாதே! உனது பெருமைகள் அனைத்தும், வறுமையே அடையப்போகின்றன!

வானத்தின் அடியில் உள்ள இம்மண்ணுலகில் வாழ்ந்து வரும் கேவலமான மர்த்தியர்களுக்களிக்கும் அல்பாயுளை எனக் களிக்காமல், ஜோவ் தேவரின் உன்னதமான வர்க்கத்திலும், நீலா யதாக்ஷியின் வர்க்கத்திலும், காலைப் பொழுதிற்குக் கனக நிறமூட் டும் தேவனது பரம்பரையிலும் வந்தவர்களுக்கு அளிக்கு நெடுவாழ் வையே தேவர்கள் எனக்கு அளிக்க வேண்டு மென்று நான் அவர் களை வேண்டுகின்றேன். அவர்கள் அவ்வாறு கிருபை செய்வார் களேயானுல், இன்றைய தினம் இந்த யுத்தம் முடிவடைந்துவிடும்; கிரேக்கர்களது பெருமை அடியோடு அழிந்து போய்விடும். ஆர்க் காஸின் அபிதானமும் அற்றுப்போம்!

மதிகலங்கி, மதம் பிடித்துக் கொழுத்துக் கிடப்பவனுகிய நீயும், அதுபரியந்தம் பிழைத்திருப்பாயெனில், நீ ஹெக்டருடைய

வாளுக்கு இரையாக வேண்டுமென்றே காத்திருப்பவனுவாய்! உனக்கு அந்தக் கதி கிடைக்கவே கிடைக்கும். மலைபோன்ற உனது பிணமானது, கடலோரத்தில் நீண்டு படர்ந்து ஒரு பெருத்த படம்போல் கிடக்கும். ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகளுக்கு ஊனும் இறைச்சியும் தந்து, அது ஒரு பெருவிருந்துமாகும்!" என்றான்.

இவ்விதம் சொல்லிய பின்னர், அவன் ஒரு சிங்கத்தைப் போல் தனது தலையை நிமிர்த்திக் கொண்டும், தனது காலை எட்டி யெட்டி வைத்துக் கொண்டும், அந்தக் களம் முழுவதும் நடந்து வந்தான். அப்போது அவனுடைய பிரத்திய கோஷ்டியினர், இடைவிடாமல் உரத்துக் கோஷங்கள் செய்தனர். ஆனால், பூமண் டலமும், சமுத்திரமும் அதிர்ந்து கலகலவென்று மணியோசையைப் போல் சப்தித்தன. அப்போது கிரேக்கர்களுடைய குழாத்தி லிருந்த வீரர்களும் வாளாவிராமல், இடியைப்போல் முழக்கிக் கொண்டு, அந்த துரோஜர்களுக்கு மறுமொழி பகர்ந்தனர்.

ஆனால் அந்தக் களம் முழுவதிலும், ஒலிகளும், பேரிரைச் சல்களும், ஆகாய மண்டலத்தையும் எட்டிப் பிளந்து சென்று, அங்குக் கூடி இருந்த தேவர்களது மந்திராலோசனைச் சபையையும் தாக்கித் தகர்த்து, அங்குச் சகலமான வைபவங்களுடன் அசையா மல் விளங்கியிருந்த ஜோவ் தேவரின் சிங்காதனத்தையும் ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டன!

———o———

## பதினான்காம் அத்தியாயம்

# ஜுனோ தேவியானவள் வீனஸ் தேவியின் மேகலையை யணிந்து கொண்டு ஜுப்பிடர் முன் சென்று அவரை மயக்கியதும் அதனால் விளைந்த பலன்களும்.

கதைச் சுருக்கம் :-மக்கேயனுடன் உட்கார்ந்து போஜனம் அருந்தி வந்த நெஸ்டார், யுத்த களத்திலிருந்து இரைச்சலும் சந் தடியும் மேன்மேலும் அதிகரித்து வருவதை அறிந்து திகிலடைந்து, அங்கிருந்து புறப்பட்டு, ஆகமனனை நோக்கிச் சென்றார்.

அவ்வாறு செல்லுகையில், அவர் அந்த ராஜ குமாரனை, தயாமதியுடனும், யுலிஸ்ஸீஸுடனும், வழியில் சந்தித்து, அவர் களிடம், அப்போது யுத்தகளத்திலிருந்த மிகுந்த ஆபத்கரமான நிலையை அறிவித்தார்.

ஆகமனன், அன்றைய இரவில் தாங்கள் அனைவரும் தப்பியோடிப் பிழைத்து விடலாம் என்று யோசனை சொல்லு கின்றான். யுலிஸ்ஸீஸ் அந்த யோசனை சரி இல்லை என்று அதை எதிர்த்துப் பேசுகின்றான்.

தயோமதி யுலிஸ்ஸீஸை ஆதரித்துப் பேசியதுமன்றி, வீரர் களாகிய தாங்களனைவரும் யுத்தத்தில் காயம்பட்டிருந்தாலும், தாங்கள் யுத்தகளத்துக்குச் சென்று, சைனிகர்களின் மத்தியில் இருந்துகொண்டு அவர்களுக்கு ஊக்கத்தை அளித்தல் வேண்டும் என்று உபதேசம் செய்கின்றான். அவனது யோசனையைச் 'சரி' என்று எல்லோரும் ஒத்துக்கொள்ளுகின்றனர்.

ஜுனோ தேவியானவள், ஜுப்பிடர் பகவான், துரோஜ ரிடம் பக்ஷபாதம் கொண்டிருப்பதை அறிந்து, அது பொறாமல் அவ ருடைய ஏற்பாடுகளைக் கலைத்துவிட வேண்டுமென்று நினைத்து, அதற்கு வேண்டிய பிரயத்தனங்களைச் செய்கின்றாள். இயற்கையி லேயே அதிரூபவதியாகிய அவள், தன்னை வெகு ஜாக்கிரதை யாகச் சிங்காரித்துக் கொண்டு வீனஸ் தேவியின் மாயா ரூபமான மேகலையை வாங்கி அணிந்து கொண்டு, ஜுப்பிடர் பகவானைத் தனது மோகவலையில் பிடிக்கச் செல்லுகின்றாள்.

அவள் நித்திரைக் கடவுளிடம் சென்று, கொஞ்சம் சிரமப் பட்டு ஜுப்பிடரின் கண்களை மூடும்படி அவனைத் தூண்டுகின்றாள். அவன் அவ்வாறே செய்ய, அவள் ஐடாமலைக்குச் செல்லு கின்றாள்.

அவளைக் கண்ட கணமே, ஜூப்பிடர் பகவான், அவளது அழகில் ஈடுபட்டு, அவளிடம் மையல் கொண்டு அவளையணைத்துத் தழுவிக் கொள்ளுகின்றார். கடைசியாக அவர் உறக்கத்திலும் ஆழ்ந்து விடுகின்றார்!

இவ்வாறு அவர் நித்திரை செய்து வரும் சமயம்தான், தனது தருணம் என்று நிச்சயித்து, நெஸ்டார் கிரேக்கர்களைக் காப்பாற்றி விடுகின்றார்.

அஜாக்ஷன் எறிந்த ஒரு பெரும் பாறையினால் அடியுண்டு ஹெக்டர், நிலத்தில் விழுந்து விடுகின்றான். அவனது பிருத்தியர்கள், அவனை யுத்தக் களத்திலிருந்து எடுத்துத் தூக்கிக்கொண்டு செல்லுகின்றனர்.

அதன்பின் பல சில்லரையான காரியங்கள் நிகழ்கின்றன. இவ்வாறு பலவிதமாகவும் மனங்கலங்கி துரோஜர்கள் அலுத்துச் சலித்துப்போகின்றனர்.

இளைய அஜாக்ஷன், ஒரு விசேஷமான ஸஹாய காரியத்தைச் செய்து கீர்த்தியுடன் விளங்குகின்றான்.

---

ஆனால் அதிஜாக்கிரதையுடன் விஷயங்களை விடாமல் கவனித்து வந்த நெஸ்டாருக்கு அறுசுவை கொண்ட விருந்தோ, அல்லது கிண்ணங்களில் வழிய வழியப்பொழிந்து வந்த மதுபானங்களோ ருசிக்கவில்லை. அவர்கள் அருந்திவந்த அன்னபானாதிகள், அவரது மனத்தில் உறைந்துவந்த கவலைகளை நீக்கவில்லை. யுத்த களத்தில் ஸைனிகர்கள் மேன்மேலும் உரத்துக்கூவியழுது வந்த அரவங்கள் அவருடைய செவிகளைத் தாக்கின. அந்த அரவங்களை அவர் நடுக்கத்துடன் கவனித்து வந்தார். கடைசியாகக் காயமேற்றிருந்த தனது நண்பனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

"மக்கேயா! தேவஸ்வரூபி! இந்தப் பெரு நாளில், நமக்கு என்னென்ன பெரிய ஆபத்துக்கள் புதிதாக நேர்ந்துவிட்டன! காரியங்கள் எவ்வாறு இன்று ஒன்றாய்க் கூடிவிட்டன! அவற்றைச் சற்றுச்சொல்லவும் உன்னால் இயலுமோ? அதோ கவனித்துக் கேட்டாயா? ஸைனிகர்களெல்லாம் ஒருவருக்குப்பின் ஒருவராகத் தனித்தும், பின்பு ஏக காலத்தில் ஒன்றாய்க் கலந்தும் கூச்சலிடுகின்றனர்! இப்போது அந்தக் கூச்சலானது, ஒன்றாய்ச்சேர்ந்து பெருத்து நமது கடற்படையை நோக்கி வருகின்றது.

நீ இங்கு இருந்த வண்ணம், உனது மனத்திற்கு இன்பத்தைத்தரும் பானங்களை அருந்திக்கொண்டு, உன்னுடைய மனக் கவலையையொழித்து வா! நீ இழந்துவிட்ட சக்தியை உனக்குத்

திருப்பித்தரவல்ல ஸ்நானத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை ஹெக்கமீடி செய்யட்டும். அவ்வாறு ஸ்நானம் செய்து, நீ உனது காயத்தை ஆற்றிக்கொள். உறைந்து கட்டியாய்ப்போய் உள்ள இரத்தத்தையும் சுத்தி செய்துகொள்! நான் யுத்தகளத்துக்குச்சென்று, நடந்த காரியங்களை விசாரித்து அறிந்து வருவேன்'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

அவர், தனது வீர குமாரனுன திராஸிமீடிஸ்ஸின் கேடயத்தை எடுத்துப் பிடித்துக்கொண்டு யுத்த களத்தை நோக்கி விரைந்து சென்ருர். அன்றைய தினம், அவரது மார்க்கவசத்தை அவரது மகன் அணிந்துகொண்டு யுத்தத்திற்குச் சென்றதினுல், அவர் தனது மகனது கேடயத்தை அணிந்து கொள்ள வேண்டி வந்தது.

பின்பு அவர் ஓர் ஈட்டியை உருவி எடுத்துக்கொண்டு, கதவைத் திறந்து வெளியே வந்து, தனக்குக் கட்புலனுன விஷயங்களைக் கவனித்துப் பார்த்தபொழுது, அக் கண்களும் புண்ணுயின! ஆஹா! அந்தக் கஷ்டங்களையும், துக்கசம்பவங்களையும் நான் எவ்வாறு வருணிப்பேன்! அது என்ன குழப்பம்! என்ன கலவரம்! என்ன அலங்கோலம்,! என்ன கொடுமை! ஸைனிகர்கள் அணிவரும் நிலைகுலைந்து அலைந்து கொண்டிருந்தனர். கோட்டை மதில் இடிந்து பாழாய்க் கிடந்தது. கிரேக்கர்கள் ஓட்டம் பிடித்துக் கொண்டிருந்தனர்.

அதிபுராதனமான சமுத்திரத்தின் மேல்பாகமானது, சந்தடியின்றி மௌனமாகத் தூங்கிக்கொண்டு வருகையில், ஊதா நிறங் கொண்ட அதன் அடிபாகத்திலுள்ள ஆழமான குழிகளில் கிடக்கும் அலைகளெல்லாம், அங்கு விட்டுப்புறப்பட்டுத் துள்ளிப்பாய்ந்து, பெருமூச்சு விட்டுக்கொண்டு, நீர்மட்டத்திற்கு மேலே வீசவும், அடிக்கவும், முயலுகின்றன. அப்போது ஒரு பெரும் புயலும், இந்த நிமிஷமோ, மறுநிமிஷமோ, வந்தேன், வந்தேனென்று பயமுறுத்திக்கொண்டு, ஆகாயத்தில் உயரத் தொங்கிக் கொண்டிருக்கின்றது. ஆகாயத்திலுள்ள மேகங்களும், அதனுல் நெருக்கியழுத்தித் தள்ளப்பட்டு, ஒன்ருய்க்கூடி, அந்த ஆகாயத்திற்கே கன்னங்கரேலென்ற ஒரு சாயத்தைத் தீட்டி, அதை இருட்டவும் செய்து விடுகின்றன, என்ருலும், அந்த ஜல நிதியானது, எவ்வளவோ பலமான காற்றுக்கும் அசைவதில்லை. சிறிதும் சலனமின்றியே இருந்து வருகின்றது. ஆனுல் ஜோவ் தேவர் மாத்திரம், ஒரு தீவிரமான காற்றையேவி விடுத்து விட்டாரென்ருல் அக்கணமே, அந்த ஜல நிதிகள் அவரது ஆணைப்படி உருண்டு புரளுகின்றன.

அவ்வாறே நெஸ்டாரின் மனதும் ஒன்ருேடொன்று முரணும் யோசனைகளால் குழப்ப மடைந்து இருந்தது. சேனைகளுடன் சேருவதா, அல்லது சேனைத் தலைவனை நோக்கி விரைந்து செல்வதா என்ற இரண்டு காரியங்களில், எது சிறந்தது என்று அறி

யாமல், அவர் தத்தளித்து வந்தார். இவ்விரு விஷயங்களையும் அவர் வெகு நேரம், நிதானித்து யோசித்துப் பின்னதையே செய்ய வேண்டும், அதுவே தகுதியுடைத்து, என்று தீர்மானித்து முன் சென்றுர்.

அவ்வாறு செல்லுகையில் அவருக்குக் கட்புலனுன காட்சி களெல்லாம், அவரது உள்ளத்தை உருக்கின. அவருக்கு ஆத் திரமும் ஆவலும் உண்டாயின. அப்போது வீரர்களது ஆயுதங் களும், கவசங்களும் ஒன்ருேடொன்று உராய்ந்து பயங்கரமான ஓசையுடன் ஒலித்தன, அந்த ஒலியே அந்தக் களம் முழுவதிலும், நிறைந்திருந்தது.

பட்டாக் கத்திகள் பளிச் பளிச்சென்று ஒளியை வீசின; ஈட்டிகள் பறந்தன ; வீரர்கள் ஒருவரை ஒருவர் தாக்கியபொழுது உண்டான சப்தங்கள், எதிரொலிகளைக் கிளப்பின. ஸைனிகர்கள் அனைவரும் வீரரைக் கொன்ருே அல்லது தாமே மடிந்தோ வந்தனர்.

அவர் அவ்வாறு செல்லுகையில், அன்றைய யுத்தத்தில் காயமடைந்திருந்த ராஜகுமாரர்கள், அவரைச் சந்தித்தனர். அவர் கள் தங்களது கப்பலில் இருந்து இறங்கி, மெதுவாகக் கரையில் ஏறி வந்து கொண்டிருந்தனர். அவர்கள் யாரெனில் உரைப்பேன் கேளுங்கள்!

அவர்கள் மனிதர்க்கரசனும், தேவஸ்வரூபியுமான யுலீஸ் ஸீஸும், திடிதீசனது உத்தம குலத்தில் வந்த வீரனுமே யாவார்கள். அவர்களுடைய கப்பல்கள், யுத்த களத்தைவிட்டு நெடுந் தூரத்தில் படிப்படியாய்ச் செதுக்கப்பட்ட கரையோரமாக நெடுந்தூரம் வரை நின்றிருந்தன, அந்தக் கடலின் விரிகுடாவில், அவர்களுடைய கப்பல்களனைத்தும் வரிசையாக நிற்பதற்குப் போதுமான இடம் இல்லாமலிருந்மையால், அவர்கள் அக்கப்பல் களை அக்கடலின் ஓரத்தில் அணியணியாய் நிறுத்தி நங்கூரம் பாய்ச்சியிருந்தனர். முதன் முதலாகக் கரை சேர்ந்த கப்பல், மற்றெல்லாக் கப்பலுக்கு முன்னுகவே யிருந்தது.

அவர்கள், தங்களுடைய ஈட்டிகளை ஊன்றி அவற்றின்மேல் சாய்ந்து கொண்டும், யுத்தத்தைச் செய்ய அசக்தர்களாகவும், அன்றைய தினம் எவ்வாறு அஸ்தமிக்குமோ என்ற கவலை கொண் டவர்களாவும் வழி நடந்து வந்தனர்.

நெஸ்டார் தங்களது சமீபமாக வந்ததைக் கண்ணுற்ற பொழுது, அந்தக் கிரேக்கர்களது மனத்தில், இடிஇடித்தாற் போன்ற ஒரு பெருத்த கலக்கம் உண்டாயிற்று. அப்போது அந்தக் கோஷ்டியாரது தலைவன், அவரை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான்:—

"அக்கேயர்களது அபிதானத்திற்குப் புகழையும், பெருமையையும் நல்கிவரும் நெஸ்டார் மஹாப்பிரபோ! புகழைத் தரத்தக்க போர்க்களத்திலிருந்து நீர் புறப்பட்டு வருவதற்கு என்ன காரணம்?

அதிகர்வியான அந்த ஹெக்டரின் வார்த்தைகள் நிறைவேறத்தான் போகின்றனவா? அவனது தற்புகழ்சிக்கு இணையுமுண்டோ? அவன் தன்னை மிகவும் வியந்தன்றோ பேசி வருகின்றான்! நம்முடைய கடற்படையைத் தீயிட்டுக் கொளுத்திச் சாம்பலாக்கி விடுவேன் என்றும், நம்முடைய வீரர்களை ஒரேயடியாய்ச் சங்கரித்து விடுவேன் என்று மன்றோ பயமுறுத்தி வருகின்றான்! அவன் உரைத்த மொழிகள் இவ்வளவு சீக்கிரத்திலேயே நிறைவேறி விட்டனவா? அம்மொழிகளை கிரேக்கர்கள் அனைவரும் தங்களது மனத்தில் இரத்தத்தால் தீட்டிக்கொள்ள வேண்டிய காலமும் அடுத்து வந்து விட்டதா?

நீங்களனைவரும், ஒரே மனத்தினராய், உங்களது அரசனை எனக்கு விரோதமாகக் கிளம்பி, என்னிடம் சினங் கொண்டு, கோபத்துடன், கொதிக்கின்றீர்களா? உங்களது கோஷ்டியில் எனக்குப், பரிந்து முன் வந்து யுத்தம் செய்யக் கூடிய வீரன் ஒருவனாவது இல்லையா? துக்கத்துடன் கண்ணீரை வடித்துக் கொண்டு இந்தக் கரிநாளைக் காண்பதற்காகவா நான் இதுவரை உயிருடன் வாழ்ந்து வந்தேன்! கிரேக்கர்கள் ஒவ்வொருவனும், ஓரோர் அகிலேசனாக மாறி விடுவான் என்று நான் கனவிலும் நினைக்கவில்லையே!" என்றான்.

அம்மொழிகளைக் கேட்ட ஜெரினியான நெஸ்டார், அவனுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தார் :—

"வினைப்பயன் அவ்வாறுதான் விளைந்து விட்டது! ஸர்வ வல்லமையும் உள்ள காலச் சக்கரமானது வினையின் விதியைச் சிரமமாகவே நிறைவேற்றி விட்டது. ஆகாயமளாவிய, தமது அந்தப்புரத்தில் இருந்தவண்ணம் இடியை யிடித்து வரும் ஜோவ் தேவருங்கூடப் பழவினையைக் கடக்க வல்லவர் அல்லர்!

தகர்ந்து இடிக்க முடியாததும், நம்மைக் காத்து வந்ததும், நமது உறுதியான இரக்ஷையாக விளங்கி வந்ததுமான மதிற் சுவரானது, தரைமட்டமாகிப் புழுதியில் அழுந்திப் புதைந்து கொண்டிருக்கின்றது. துரோஜர்களும், ஜயசீலர்களாகத் தங்களுடைய ஆயுதங்களுடன் நம்முடைய கப்பல்கள் வரை சென்று விட்டனர். அவர்களால் வதை யுண்ட கிரேக்கர்கள் இடும் அரவமானது, தெய்வலோகத்தையும் எட்டிச் செல்லுகின்றது. இந்தப் பெரு துன்பத்திலிருந்து விடுபடுவதற்கு, வேண்டிய முயற்சிகளைத் தீவிரமாக செய்வாயாக! பிழைப்பதற்கு ஏதேனும் வழி உண்டென்றால், அதை ஆராய்ந்து கண்டு பிடிப்பாயாக!

இனி நம் ஆயுதங்களால், அதிகமான பயன் உண்டா காது! மார்ஸ் பகவானே நமக்கு ஊக்கமளித்து வந்தாலும் நமக்கு ஜெயம் உண்டாகாது! வாயைப் பிளந்து கொண்டுள்ள இந்த இரணங்கள் நம்மை யுத்தத்திற்கு முன் செல்ல வொட்டாமல் பின் வலிக்கின்றன" என்றார்.

அதைக் கேட்ட அரசன் அவருக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான் :—

"நம்முடைய சைனியங்கள் மடங்கி விட்டதும், விஜயி களான ட்ராய் நாட்டார் நமது உன்னதமான கப்பலில் ஏறி விட்டதும், சில நிமிஷங்களுக்கு முன்வரை நமக்கு உறுதியான அரணாகவிருந்து நம்மைக் காத்து வந்ததுமான மதிலானது மண்ணில் புதைந்து புகைந்து கொண்டிருப்பதும், ஆகிய இவை களனைத்தும், ஜோவ் தேவர் நமக்கு அளித்த தண்டனைகள்தான்! அவருடைய திருக்கரங்களிலிருந்து சுரந்து வந்த இவைகளை நாம் பொறுமையுடன் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்! நெடுந் தூரத்திலுள்ள ஆர்க்காஸிலிருந்து இங்கு வந்துள்ளோம். ஒரே யடியாய் அழிந்து போய்விட வேண்டுமென்றே அவர் நியமித்து விட்டார்!

தெய்வ கடாட்சத்தால், கிரேக்கர்கள் சீரும் சிறப்பும் செழிப்புமாய்ப் பெரு வாழ்வு வாழ்ந்து வந்த நாட்களெல்லாம் பறந்து போய் விட்டன. அவ்வாறு நமக்குக் கிருபையும், உதவியும் செய்து வந்த அந்தத் தெய்வத்தை, அவர்கள் போற்றித் துதித்து, வழிபட்டு வந்த நாட்களும் பறந்து போய் விட்டன! இப்போது, தெய்வலோகமே, நமக்கு விரோதமாகக் கிளம்பி, நம்மை யுத்தத்திற்குச் செல்ல வொட்டாமல், நம்முடைய கைகளைக் கட்டி விட்டது!

அன்றியும், அது, துரோஜர்களுடைய வீரசூர பராக்கிர மங்களை வானளவும் உயர்த்தி வருகின்றது. ஆதலால், நாம், வீணே நமது இரத்தத்தை வடித்துக் கொண்டு இங்கிருப்பானேன்? அதை இப்போதே நிறுத்தி விடுவதன்றோ நன்று! இனிமேலாவது நாம், கடற்கரைக்குச் சமீபமாகவுள்ள நம்முடைய கப்பல்களைப் பிரயாணத்திற்கு சித்தப் படுத்துவோமாக! இதோ, இங்குச் சமீபத்திலுள்ள கப்பல்கள் மாத்திரம், இராத்திரி இருட்டும் வரை, நங்கூரம் பாய்ச்சி இருக்கட்டும், அதன் பின், புயல் போல் மோதிக் கொண்டு வரும் ட்ராய் நாட்டாரும் தங்களது யுத்தத் தைக் குறைத்துக் கொண்டு, சிறிது நேரம் யுத்தத்தை நிறுத்து வார்களேயானால், அப்போது நாம் நம்முடைய எல்லாக் கப்பல் களையும் ஒன்றாய்க் கூட்டி அவைகளுக்குப் பாய்களைக் கட்டிக் கொண்டு ஓட்டம் பிடித்து விடலாம்.

நமக்கு நன்றாகக் கண் கூடாக்கப்பட்ட கேடுகளினின்றும், தப்பி ஓடுவதே நன்று! நாம் தவிர்க்கக் கூடிய ஆபத்துக்களுக்கு

ஆளாகி மடிந்து போவதிலும் அவற்றை ஒதுக்கி விடுவதன்றோ நன்று " என்றான்.

அரசனது மொழிகளைக்கேட்டு, அவனுடைய யோசனைகளை ஒப்பாத ஞானவானான யுலிஸ்ஸீஸ் தன்னுடைய கண்களில் கோபக் குறிகளைத் தெறித்துக் கொண்டு, அவனுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான் :—

" ஐயா ! அரசராகிய உமக்கு இது தகுமா ? உமது நாக்கு நடுங்குகின்றது ; உமது மார்பும் பட படவென்று துடிக்கின்றது ; என்றாலும், நீர் மானக் கேடான மொழிகளையே உரைக்கின்றீர் ! இது என்ன அநியாயம் !!

நீர் நமக்குத் தாழ்ந்த பேடிகளின் தலைவராக விளங்கியிருந்தாலுங் கூட, அவர்கள் உம்மைத் தங்களது தீவினையின் உருவ மென்றே யன்றோ கருதுவார்கள் ! தாங்கள் பெற்ற சாபத்தை நிறை வேற்ற வந்த குலத்தைக் கெடுக்கும் கோடரிக் காம்பு என்றன்றோ அவர்கள் உம்மை மதித்து வருவார்கள் ! நீர் நம்மையொழிந்தவர்களும், நமக்கு இழிந்தவர்களுமான ஜன்மங்களுடைய அரசராகப் பிறந்திருக்க லாகாதா ?

ஜோவ் தேவரின் அனுக்கிரகத்தினால், நாம் யுத்தம் செய்வதில் தேர்ந்தவர்கள் என்று பிரஸித்தி யடைந்திருக்கின்றோம் ; நம்முடைய கோஷ்டியார் யுத்தத்தில் வெற்றியுடன் விளங்கவோ, அல்லது அதில் உயிர் நீத்து வீரருலகம் புகவோ பயின்றவர்கள் ; துணிவுடன் யுத்தங்கள் செய்யவும், சலிப்பின்றிச் சமர்புரியவும், கற்று நாம் நமது இளம் பருவத்தைக் கழித்து வந்தோம். அந்தக் காரியங்களைச் செய்வதிலேயே நாம் இப்போதும் நமது விருத்தாப்பிய தசையைக் கழித்து வருகின்றோம்.

அவ்வாறு இருக்க நீர் தாறுமாறான இந்த யோசனைகளைச் சொல்லி துரோஜர்களது யுத்த களத்தை விட்டுப் புறங்காட்டி ஓடும்படி எங்களுக்குப் போதனை செய்யலாமா ? இது அழகாகுமா ? நம் வீரர்கள், தங்களது இரத்தத்தை ஆறுகளாகவும் நதிகளாகவும் வடித்து வந்திருக்கின்றனர் ! அவை யனைத்தும் வீணாக வேண்டுமா ?

உம் அச்சத்தை வெளிப்படையாகத் தெரிவிக்காமல் இருக்க வேண்டும் என்பது உம் விருப்பமானால், உமது இழிவான வசனங்களை நீர் மிருதுவான தாழ்ந்த குரலில் உரையும். அவை கிரேக்கன் ஒவ்வொருவனுக்கும் செவிப்புலன் ஆகலாகாது !

இவ்வாறு இழிவான எண்ணங்களைச் சிந்திப்பவனும், அவற்றை வெளிப்படையாக உரைப்பவனும், வெட்கத்தை அடியோடு துறந்தவனுமான ஒரு மனிதன் இரான் என்றே நான் நினைத்து வந்தேன். அந்த மனிதனும் உயிருடன் இருப்பதை

இதோ நான் கண்டு விட்டேன்! அந்த மனிதன் யார்? அவன் அணியணியாய் வகுத்து நின்று வரும் திரளான கிரேக்க சேனைகள் அனைத்தும் தங்களது தலைவனுகக் கொண்டவனும், அவர்களின் மேல் சர்வாதிகாரம் செலுத்துபவனும் அவர்களது அரசனுமாகவே விளங்குகின்ருன்! அவனும் இந்த வசனங்களை உரைக்கலாமா?

யுத்தம் எவ்வாறு முடியும் என்று நிச்சயமில்லாமல் இருக்கையிலும், தன்னுடைய வீரர்களும், ஸைனிகர்களும், தங்களாலான வீரசூர பராக்கிரமங்களுடன் பொருது வருகையிலும், சத்துருவுக்குப் புறங்காட்டி ஓடும்படி அவர்களுக்கு இந்த யோசனையைச் சொல்லும் வாக்கும் ஒரு தளகர்த்தனுக்கு அழகாகுமா?

ட்ராய் நாட்டார் நமக்கு இனி என்ன செய்ய முடியும்? அவர்களுக்கு இதுவரை நல்லகாலம் பிறக்கவில்லை! அந்த நல்ல காலத்தை நீர் அவர்களுக்கு வலுவில் உண்டாக்குகின்றீர்! உம்முடைய யோசனைகளினுல் கிரீஸ் முழுவதுமே அவர்களுக்குப் பறிமுதலாகப் போய்விடும்!!

நம்முடைய ஜனங்களைக் கைவிட்டுவிட்டு அவர்கள் கண் காண, நாம் நம்முடைய பாய்களை விரித்துக் கொண்டு, கப்பல்களில் ஏறிப்புறப்பட்டுச் சென்ருல், அவர்கள் மனமிடிந்து போவார்கள்! அவர்களது நாசத்திற்கு நீரே காரணமாவீர்! இது ஓர் அரசனுக்கு ஏற்குமா?" என்ருன்.

இவ்வசனங்களைக் கவனமாகக் கேட்டுவந்த அதிரிதீசன், அவற்றுக்குப் பின்வருமாறு நிதானமாகப் பதிலுரைப்பான் :—

"நீ யுரைக்கும் வசனங்களெல்லாம் நியாயமாகத்தான் இருக்கின்றன. உனது கண்டனமும் நியாயந்தான்; அவை என்னை அம்புகளைப் போல் குத்தித் துளைக்கின்றன.

நம்முடைய கோஷ்டியாரைக் கைவிட்டுவிட வேண்டுமென்று நான் விரும்பவில்லை. வெறுக்கத்தக்க இந்தக் கடற்கரையை விட்டுவிட்டு, கிரேக்கர்கள் ஓட்டம் பிடிக்கவேண்டும் என்றும், நான் அவர்களை வற்புறுத்தவுமில்லை; நான் சொல்லிய வழியினுலன்றி வேறு ஒரு நல்ல வழியினுல் நமக்கு க்ஷேமம் உண்டாகுமென்று யாரேனும் நினைத்தால், அவர்கள் அந்த வழியை விவரமாக எடுத்துரைக்கலாம்; அவர்கள் இளையவர்களோ. முதியோர்களோ, யாராய் இருந்தாலும் சரி; நான் அவர்கள் சொல்லிய வண்ணஞ் செய்யச் சித்தனுயிருக்கின்றேன்" என்று சொல்லி, அவன் தன் வசனங்களை முடிக்குமுன், திடிதீசன், அவனைத் தட்டித்தடுத்துப் பின்வருமாறு பேசினுன் :—

"அந்த நல்ல யோசனையைக் கேட்க வேண்டும்! கேட்க வேண்டும்! என்பது உனது விருப்பமானுல், அதைச் சிறிதும் அச்சமின்றிச் சொல்லும் மனிதன் இதோ, உன் முன் நிற்கின்ருன்,

அவனைப் பார்! அவன் வயதில் சிறியவன் தான் எனினும், நீ, அவன் சொல்லும் வார்த்தைகளை அலட்சியம் செய்யலாகாது! அவற்றைப் புறக்கணிக்கலாகாது. அவன் சொல்லுகிறபடிக் காரியத்தைச் செய்ய மறுத்தலும் ஆகாது. வீரசூர பராக்கிரமங்கள் மிகுந்த திடியஸ்ஸின் மரபில் வந்த ஓர் இளங்காளை, பெரியோர் கூடியுள்ள சபைகளிலும், கோமகர் குழாங்களிலும் முன்நின்று, தன்னுடைய யோசனைகளைச் சொல்லத் தகுந்தவனேயாவான். ஆதலால், இணையற்ற இனிதீசின் மகனுன நான் உரைக்கும் வசனங்களைக் கேள்.

அந்த மஹா வீரனது பெருவாழ்வு கால கதியை யடைந்து விட்டது. அவரது புகழ் உடம்பு, நீருக மாறித் தீபன் கோட்டை மதில்களுள் அழுந்திக் கிடக்கின்றது. அவர் மஹாவீரராக வாழ்ந்து வந்து, இறுதியில் பெருங்கீர்த்தியும் புகழும் உடையவராய், ஜோதியில் கலந்தார். பெருந்தன்மையுள்ள புரோதஸுக்கு மனவலி மிகுந்த மூன்று புத்திரர்கள் தெய்வானுக்கிரகத்தினுல் உண்டானுர்கள். புரோதஸ் என்பவர், கோட்டை கொத்தளங்களுள்ள, பிலியூரான் என்னும் பிரதேசத்தையும், காலிடோனையும் தமக்குச் சொந்தமாகவே ஆண்டு வந்தார். அவரது புத்திரர்களில் மூத்தோரான மீலஸ்ஸும், அக்ரியஸ்ஸும், அக்காலத்து வீரர்கள் அனைவரிலும் சிறந்தவர்களாக விளங்கினர்,

ஈனியஸ் என்பவரே, அவரது மூன்ருவது புத்திரர். அவரது தனயரே என் தந்தை. காலிடானிலிருந்து துரத்தப்பட்டு, அவர் ஆர்காஸுக்குச் சென்று அங்கு வசித்து வந்தார். அங்கு அவர் ஜோவ் தேவரின் ஆணைப்படி ஆர்க்காஸ் நாட்டு அரசனின் குமாரத்தியை மணம் புரிந்து கொண்டு, அத்ராஸ்தஸ் ஆண்டு வந்த அந்த ராஜ்ஜியத்தில், சுகமாகவும், செழிப்பாகவும், தமது வாழ்நாளைக் கழித்து வந்தார்.

திருவருளின் கிருபையை ஏராளமாகப் பெற்றுள்ள அந்த நாட்டில், அவர் தமக்குக் கிடைத்த நிலங்களை உழுது பயிர் செய்து கொண்டும், தம்முடைய திராக்ஷைக் கொடிகள், தங்களது அளவற்ற திரவதிரவியத்தைக் கொடுப்பதிலும், மந்தை மந்தையாய் நிறைந்துள்ள கணக்கற்ற தம்முடைய ஆடுகள் அந்த நாட்டுத் தோட்டம் துரவுகளையும், வயல்களையும் வெள்ளை வெளேரென்று மறைத்துக் கொண்டு, பரந்து மேய்வதையும் கண்ணுற்றுச் சுகமாகக் காலம் கழித்து வந்தார். அவ்வாறு திடியஸ் என்பவர் ஒரு காலத்தில் பெருங் கீர்த்தியுடன் விளங்கி வந்தார். வீரரெல்லோரிலும் முதல்வராகவே அவர் விளங்கி வந்தார்; கிரீஸில் அவரது பெயரைக் கேளாதவன் ஒருவனும் இருக்கவில்லை.

இனி நமது பொதுநலத்தைக் குறித்து, எனது மனத்தில் தோன்றும் எண்ணங்களையும் உரைப்பேன். அவற்றைக் கவனித்துக் கேள்.

காரியங்களையும் அவ்வாறே செய். அப்படிச் செய்தால், நீ என்னை மாத்திரமன்றி எனது தந்தையையும் கௌரவித்தவனாவாய்!

நமது கோஷ்டியிலுள்ள வீரன் ஒவ்வொருவனும், இதுவரை நடந்த யுத்தத்தில் அடிபட்டுக் கெட்டு, நொந்து கிடந்தாலும், அவன் ஏற்ற காரியங்கள் அவனை வருத்தியும் உறுத்தியுமே வந்தாலும், அவன் இந்த யுத்தகளத்தில் முன் நடந்து, மிகுந்துள்ள மற்றைய வீரர்களை அடுத்துச் சென்று, அவர்களுடைய தளர்வுகளை யொழித்து, ஆறுதல் சொல்லி, அவர்களுக்கு ஊக்கமளித்தல் வேண்டும். தான் அடையமுடியாத கீர்த்தியைத் தனது குழாத்தினராவது அடையும்படிச் செய்ய வேண்டும். தானே கைகலந்து யுத்தம் புரிய இயலாதவனாக விருந்தாலும், தன்னுடைய ஸகபாடிகள் செய்துவரும் யுத்தத்தையாவது பார்த்து வர வேண்டும். ஆனால் ஏற்கெனவே காயம் ஏற்றுள்ள நாம் மேன்மேலும் காயமேற்று, நமது வலியைஅறவே இழந்து விடாமல் இருக்கும் நிமித்தம் நமது க்ஷேமத்தையும் உத்தேசித்து ஓர் அம்பு பாயும் தூரத்திற்கு இப்புறமே நிற்கவும் வேண்டும்.

அவ்வாறு அரவமும் குழப்பமும் நிறைந்துள்ள யுத்தகளத்திற்கு, வெகு தூரத்திலிருந்த வண்ணம், நாம் நம்முடைய ஸைனிகர்களுக்கு ஊக்கமளித்துக் கொண்டு தூரமான இடத்தில் நிகழும் இந்த யுத்தத்தை நடத்த வேண்டும்" என்றான்.

இத்துடன் அவன் தன்னுடைய வசனங்களை நிறுத்தி விட்டான்! அவன் வேறொன்றும் உரைக்க வில்லை. அவனது வசனங்களைச் செவிகொடுத்துக் கேட்ட அரசர்கள், அவன் சொல்லிய வண்ணமே செய்வதாகத் தீர்மானித்து, மெதுவாக முன் சென்றனர். அதிரிதேசனே அவர்கள் அனைவருக்கும் முன்னாகச் சென்றான்.

இவ்வாறு ஏற்கெனவே ஊக்கங் கொண்டிருந்த வீரர்களது ஆவலையும், ஆத்திரத்தையும் அதிகரிப்பிக்க வேண்டும் என்று எண்ணங்கொண்டு, சமுத்திர ராஜர், வயோதிக விருத்தனை ஒரு வீரனைப் போல் வேடந் தரித்துக் கொண்டு, அவர்கள் அனைவருக்கும் முன்னால் தோன்றினர்.

அதிகௌரவமுள்ள அந்த வீரர், சேனைத் தலைவனது கையைத் தமது கைகளால், இறுக்கிப் பிடித்துக் கொண்டு, அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தார்:—

"அதிரிதேசா! அதோ பார்! தன்னுடைய நாட்டுச் சேனைகள் புறங்கொடுத்து ஓடுவதைத் தானே நேராகப் பார்த்தும், இந்த அகிலேசன் சிறிதும் மனங் கலங்கவில்லை. சிறிதும் சட்டை செய்யவில்லை! அலட்சியமாகவே இருக்கின்றான்! இவனுக்குக் கண்களும் உளவோ? அல்லது இவன் ஓர் அந்தகனோ? இவ

னுக்கு ஜனுபிமானமோ, ஜாதியபிமானமோ, இதயமோ, இரக்கமோ ஒன்றுமில்லை.

தனது கோபத்தையே அவன் தனது துணைவனுகக் கொண்டிருக்கிருன். அதுவே, அவனைச் சொல்லொணுச் செருக்கில் அழ்த்திவிட்டது. அவன் அதிலேயே அழிந்து போகக்கடவன்! ஜோவ் தேவரும், இந்த மஹா பாவியைச் சிறிதும் தயவோ இரக்கமோ இன்றிக் கை நழுவ விட்டு விடுவாராக! இவனை, அவர் ஆழமான இழிகுழியில் அழுத்தி விடுவாராக!

ஆனுல் உன்னைமாத்திரம் கைவிட்டு விடார். அதோ, அங்குக் காணும் மணற் காடுகளில், துரோஜச் சேனையானது சிதறுண்டு, நாற்புறமும் பறந்து ஓடுவதை நீ அதிசீக்கிரம் காணப் போகின்ருய்! மதம் பிடித்த மன்னர்களும் பேருங் கீர்த்தியும் படைத்த பெருவீரர்களும், ஒருவர் மேல் ஒருவர் விழுந்துகொண்டு, கூட்டங் கூட்டமாக ஓட்டம் பிடிக்கப்போகின்றனர்! அப்போது சுழல் காலைப்போல் உருண்டு வரும் புழுதிகள், மேகங்களைப் போல் அவர்களைச் சூழ்ந்து மறைத்துவிடும்.

இறகுகளைக் கட்டிக் கொண்டு பறக்கும் பறவைகளை யொத்த வேகத்தையுடைய சக்கரங்களைப் பூட்டியுள்ள தங்களுடைய இரதங்களில் ஏறிக்கொண்டு ஓட்டம் பிடித்து, ட்ராய்க்குட் சென்று அங்கு அவர்கள் தங்கள் வெட்கங்கெட்ட முகங்களை ஒளித்துக் கொள்வார்கள்" என்ருர்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவர் ஒரு யுத்த களமே, அதிரும்படி அங்கு இருதிறத்துச் சேனைகளும் உள்ள இருபதினுயிரம் வீரர்களும், ஒருமித்து ஆர்ப்பரித்துக் கூச்சலிட்ட வண்ணம், உரத்த சத்தத்தைச் செய்து கொண்டு அந்த வீரர் குழாத்தின் நடுவே விரைந்து ஓடினர். இருநிலம் பிளக்கும் சூலை ஏந்தி அந்தத்தேவர் அவ்வாறு உரத்தகுரலில் ஒரு பெருத்த கூச்சலிட்டார். அப்பொழுது ஆர்கிவ்வீரன் ஒவ்வொருவனுடைய மார்பும் படபட வென்று துடித்தது. அவர்களில் ஒவ்வொருவனும் இந்த யுத்தத்தைப் பின்னும் செய்யவேண்டும், நான் முந்த வேண்டும் என்று ஆத்திரத்துடன் குதித்தான். அப்போது அந்தப் பயங்கரமான யுத்த களமானது ஒரு மிகவும் மஹா கோரமான ஸ்தலமாகவே தோற்றியது.

காரியங்கள் இங்கு இவ்வாறு நிகழ்ந்து வருகையில், ஸாட்டர்னியா தேவியானவர், ஒலிம்பஸ்ஸின் சரிவிலுள்ள தனது கனக சிம்மாசனத்தில் இருந்த வண்ணம், பூலோகத்தில் நடந்து வந்த காரியங்களைக் கவனித்து வந்தார். மகா மகிமை பொருந்திய, தமது சகோதரர்கள் கிரேக்கர்களுக்குப் புரிந்து வந்த உதவியினுல் அந்த யுத்த களம் சோபையுடன் விளங்கியதைக் கண்ணுற்று, அவர் மிகவும் ஆனந்தித்தார்.

ஆனால், அதே மலையின் உச்சியில், நிழலின் கீழ் வீற்றிருந்த தமது கணவரான ஜோவ் தேவரைக் கண்ணுற்ற பொழுது, அவர் திகிலடைந்து நடுங்கியே போய் விட்டார். அதன்பின், அவர், ஜோவ் தேவரை ஏமாற்ற என்ன உபாயங்கள் செய்யலாம்? எவ்வாறு இவரைத் தந்திரமாக மயக்கலாம்? ஸர்வதோ முகமாக விருக்கும் இவரது கண்ணைக்கட்டுவதற்கு என்ன வழி? என்றெல்லாம் யோசனை செய்தார். கடைசியாக இந்தக் காரியம் நம்மால் ஆகாதா? ஆகவே ஆகும்! அது நிச்சயந்தான், என்று தீர்மானித்து, மிகப் பழயதும், என்றென்றும் பலிக்கக்கூடியதுமான, காம வலையை அவர் மீது வீசத் தீர்மானித்தார்! மஹாபுத்திமானை அவரைத் தமது மோகன ரூபத்தினால் மயக்கி விடுவதென்றே தீர்மானித்து விட்டார்.

இடிக்கடவுளைத் தமது கரங்களில் ஏந்திப் படுக்க விட்டுக் கொண்டு தூங்கச் செய்து விடலாம், என்ற இந்தத் தீர்மானத்துடன், தமது தேஜோமயமானதும், ஏகாந்தமானதுமான, தனது அந்தரங்கமான அறைக்குச் சென்றார். அங்குத் தான் அவர், தமது இட்டம் போல், தம்மை ஆடையாபரணாதிகளாலும், சாந்துப் பொட்டு மைகளாலும், பரிமள சுந்தர சுகந்த வாஸனாதிகளாலும், புஷ்பங்களாலும் அலங்கரித்துக் கொள்வது வழக்கம்.

மற்றைய தெய்வங்கட்குப் புலனாகாமல் இருக்கும் வண்ணமும், அவர்கள் பலவந்தமாகப் பிரவேசிப்பதைத் தடுக்கத்தக்க காவல்களுடனும் இருந்த விசித்திரமான அறையானது, செய்தொழிற் கை தேர்ந்தவனான வல்கன் என்னும் தெய்வச் சிற்பியினால்கட்டப்பட்டது.

ஸார்ட்டர்னியாதேவி, அந்த அறையின் கதவுகளைத் தமது ரகசியக் கோலால் தொட்டார். உடனே அவை திறந்தன! அவர் உள்ளே சென்றவுடன், அந்த ஸ்வர்ண மயமான கதவுகள் முன் போல் தாமாகவே மூடிக் கொண்டன.

தமது அறையிற் பிரவேசித்த பின், ஸார்ட்டர்னியாதேவி முதன் முதலாக மங்களமாக ஸ்நானம் செய்தார்! அதன்பின், தமது தேகம் முழுவதிலும், ஸுகந்தம் வீசும் மிருதுவான பரிமள தைலங்களையும், அமிர்த மயமான திரவங்களையும் பொழிந்து கொண்டார். அப்போது அந்த நறுமணத்தை யுண்ட காற்றுகள், அந்தச் சுகந்தத்தை ஏற்றுக் கொண்டு, தெய்வலோக பூலோகங்களிலும் ஆகாய வீதிகளிலும் பறந்து சென்றன.

தேவஸ்ரூபீ! உமது தேகத்திலிருந்து கிளம்பிய இந்த மதுரமான வாஸனையை முகர்ந்ததினால் தேவர்களது மனதும் மிகவும் திருப்தியடைந்து விட்டது! மர்த்தியர்கள் சமைத்து நிவேதிக்கும் மதுரமான பக்ஷண வகைகளைக் காட்டிலும் அதிகமான இன்பத்தையே, இது, தேவர்களுக்கு அளித்து விட்டது!

இவ்வாறு திவ்வியமான நறுமணத்தைப் பொழிந்து கொண்டே, கூந்தலைப் பின்னுவதில் கைதேர்ந்தவர் என்ற கியாதியை யடைந்திருந்த அந்தத்தேவி, தம்முடைய திருக்கரங்களால் பளிச்சென்று மின்னும் தமது தலையை வாரி முடித்துக் கொண்டார். அவரது கூந்தலின் ஒரு பாகம் அவரது தலையின் மேல் சிறிய மோதிரங்களைப் போல் சுருண்டு விளங்கியது. மற்றொரு பாகம் உருக்கிய பொன்னலைகளைப்போல், அவரது தோள்களின் மேல் தகதகவென்று மின்னியது.

அதன் பின் அவர், பாலாஸ் தேவியினால் சிரமப்பட்டுக் கட்டப்பட்ட, கெட்டியான வர்ணங்களுடன் ஜ்வலித்த, அதி திவ்வியமான ஒரு புடவையையும், தாராளமாக இழைந்து வரும்படி உடுத்திக் கொண்டார். அந்தப் புடவையின் மடிப்புக்களைப் பெருத்த பொற்பிடிகளும். கொக்கிகளும், சேர்த்துப் பிடித்துக் கொண்டிருந்தன.

பின்பு அவர் தமது பொங்கி யெழுந்த பருத்த மார்பைச் சுற்றிலும், ஒரு பொன்னொட்டியானத்தையும் அணிந்து கொண்டார்.

அவருடைய காதுகளில், நெடுந்தூரம் வரை பிரகாசத்தைப் பொழிந்து வந்த காதணிகள், நடுக்கத்துடன் ஜ்வலித்து வந்தன. அக்காதணிகளில் இழைக்கப் பட்டிருந்த வைரங்கள் ஒவ்வொன்றும், மூன்று தலைகள் கொண்ட ஓரோர் நக்ஷத்திரம் போல் பளிச்சென விளங்கின.

பின்பு அவர் புதிதாய்ப் பெய்த பனியினும் வெளுத்ததும், சூரியனது பிரகாசத்தைப் போல் மின்னிக் கண்ணைக் கூசச் செய்வதுமான ஓர் எழினியையும், தமது தலையில் சுற்றிக் கட்டிக் கொண்டார். கடைசியாக அவர் தம்முடைய பாதங்களில், தேவலோக வாசிகள் அணியும் பாதரட்சைகளையும் அழகாக அணிந்து கொண்டார்.

இவ்வாறு தேவலோக ராணியானவர் ஸகலமான, திவ்விய ஆபரணங்களையும் அணிந்து கொண்டு, தனது ஆகாய மளாவிய விமானங் கொண்ட மண்டபத்திலிருந்து வெளிப்புறப்பட்டு, மிகுந்த காந்தியுடனும், கம்பீரமாகவும் அடிமேலடி வைத்துக் கொண்டு நடந்து வந்து, சிரிப்புக் களிப்புக்களுக்கும், காமலீலா விநோதங்களுக்கும் தெய்வமாகிய வீனஸ் என்னும் மோகினி தேவியிடம் சென்றார்.

வீனஸ் தேவியைக் கண்டு, அவரை ஒருபுறமாகத் திருப்பிக் கொண்டு, ஸாட்டர்னியா தேவி, "அம்மா! மனிதர்களுக்குள் ஏற்பட்டுள்ள விவாதங்களை முன்னிட்டுக் கொண்டு, இன்னும் எவ்வளவு காலம், அமரர்களெல்லாம் தங்களுக்குள்ளும் சண்டை சச்சரவுகளைச் செய்து கொண்டு வரவேண்டும்? இந்த யுத்தமும்,

சண்டை சச்சரவுகளும் இன்னும் முடிந்த பாடில்லையே! வீனஸ் தேவி மாத்திரம் ஸார்ட்டனியாவிற்கு மனங் குளிர ஓர் உபகாரம் செய்வாரானல், இந்தக் கிரீஸ்-ட்ராய் சச்சரவு ஒழிந்தே போய் விடுமன்றே!" என்ருர்.

அதைக் கேட்ட ஸித்திரியா தேவி, "ஸர்வ வல்லமைகளும் பொருந்தியவரும், எல்லோருக்கும் பய நடுக்கங்களை உண்டாக்கக் கூடிய வருமான தேவராணியின் விருப்பம் என்ன? அவர் அவற்றைச் சொல்ல வேண்டியது தான் தாமதம், அவர் இஷ்டப் படிச் செய்ய நான் காத்திருக்கின்றேன்!" என்ருள்.

அந்த வசனங்களைக் கேட்ட தேவராணி யானவர், "அப்படியானல், மனிதர்களையும் தேவர்களையும் வசப்படுத்தக் கூடிய மாய மந்திரங்களையும், அவரை வாட்டி வருத்தும் அதி வலியுள்ள காம நோயின் வசீகர சக்தியையும் எனக்குத் தாரும்! மனிதர்களை அதி வேகத்தில் உருக்கும் காமவேட்கையையும் தேவ லோகத்தில் பிறந்தவர்களையும் கூட எரித்து விடும் தூய நெருப் பையும் எனக்குத் தாரும்!!

இதற்கு என்ன அவசியம் என்பதையும் சொல்லுவேன் கேளும். தேவர்களது உற்பத்திக்குக் காரணமானவர்களும் மஹான்மாருமான ஓஷனும், தெடீஸ் தேவியும் பரந்த நிலத் திற்கும், ஆழ்ந்த நீர் நிலைகளுக்கும் அப்பால் வெகு தூரத்தி லுள்ள அதோ அங்குக் காணும் பிரதேசங்கள் வரை தங்களது அதி புராதனமான ஆட்சியைச் செலுத்தி வருகின்றனரே அந்தத் தூர தேசங்களுக்கு நான் விரைந்து செல்லுகின்றேன்!

நான் அவர்களது அன்பு மிகுந்த கரங்களில் கிடந்த வண்ணம் நான் எனது இளம்பருவத்தைக் கழித்தேன். அப்போது விருத்தரான ஸாட்டர்ன் தேவர், ஒலிம்பஸ் மலையிலிருந்து துரத்தப் பட்டுத் தமது ஸர்வலோக ஆதிபத்தியத்தை ஜோவ் தேவருக்கு ஒப்புக் கொடுத்தார். அது முதல், இதுவரை அவர், பூமி—ஜல பாரங்களைத் தாங்க முடியாமல் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக் கிருர்.

இப்போது தேவலோகத்தாருக்கும், பூலோகத்தாருக்கும் ஏற்பட்டுள்ள வியவகாரங்களினல், அந்தப் புராதன நண்பர் களுக்குள்ளும் வேற்றுமை உண்டாகி விட்டதாகக் கேள்விப் பட் டேன். அந்தத் தம்பதிகள், ஆதிகாலம் முதல் நேசமாகவும், சுக மாகவும், வாழ்ந்து வந்தவர்கள்! இப்போது ஆபத்தில் முடிந்து விட்ட, அந்தச் சண்டை சச்சரவுகளைத் தீர்த்துவைத்து, அவர்களை முன்போல் நேசர்களாக ஆக்கி விடுவேனுனல், எனக்கு எவ் வளவு உயர்ந்த மரியாதையும் பெருமையும் உண்டாகும்! அவர் களும், என்னிடம் எவ்வளவு பிரியம் கொள்ளுவார்கள்!

எனது இளமையில் அவர்கள் எனக்குச் செய்துள்ள நன்றி களை மறவாமல் நினைத்துக்கொண்டு அவர்களது விருத்தாப்பிய தசையில், அவர்களுக்குள் உண்டாகிவிட்டவிரோதத்தைத்தீர்த்து, அவர்களை முன்போல் நேசர்களாக ஆக்கலாம். அவர்களுக்கு இந்த உபகாரம் செய்யலாம் என்று எண்ணுகின்றேன்'' என்றார்.

இந்த வசனங்களை மிகுந்த பயபக்தியுடன் கவனமாகக் கேட்டு வந்த காமேஸ்வரி தேவியானவர், ஜோவ் தேவரின் சகோ தரியும், மனைவியுமான அந்தத் தேவியின் வார்த்தைகளுக்கு இணங்கினார். அக்கணமே மதுரமான இனிய வாஸனைகளையும், நறுமணங்களையும் பொழிந்து வந்த அவரது மார்பு பூரித்தது.

அதன் மேல், அவர் அணிந்திருந்த மேகலையும் துடித்துப் பொங்கியது! அது விசித்திரமான வேலைப்பாடுகளுடன், உலோ கங்களாலும் அலங்கரிக்கப்பட்டு இருந்தது. அந்த மேகலையில் பலவிதமான சித்திர விசித்திரங்களும் மனதைக்கவரும் வனப்பும் விசேஷமாக விளங்கின.

அது மஹா ஞானிகளையும் முற்றுந்துறந்த பற்றற்ற துறவி களையும் கூட மயக்கி விரகர்களாக மாற்றத்தக்க சக்தியுள்ளதாக விருந்தது. கனிந்த காதல், இன்னுரையாடி அன்பு புகட்டல், புன்முறுவலுடன் ஆசை தெரித்தல், நயந்து மயக்கல், காமத்தீயை அணையாது காத்தல், நயம்படவுரைத்துத் தன் வசமாக்கல், பெரு மூச்சு செறிந்து மிக்கவலியுடன் அணைத்துப் பிணித்தல், வாய் திறவாமல் மௌனமாகவிருந்து மனக்கருத்துரைத்தல், கண்ணைச் சிமிட்டிக் காதலை யூட்டல் முதலிய அபாரமான சக்திகளையுடைய தாயிருந்த அந்த மேகலையை, அந்த ஸிப்ரியன் தேவி ஸாட்டர்னி யாவின் கையில் வைத்து "இந்தாரும், இதை எடுத்துக் கொள் ளும்! நீர் விரும்பும் அனைத்தும் இதில் இருக்கின்றன!" என்றார்.

ஸாட்டர்னியா தேவியானவர், மாய சக்திகளையுடைய அந்த மேகலையை மலர்ந்த முகத்துடனும், மிகுந்த சந்தோஷத் துடனும், எடுத்துக் கொண்டு, பனியைப் போல் வெளுத்துள்ள தமது மார்பின் மேல் இறுகக்கட்டிக் கொண்டார்.

அதன்பின், வீனஸ் தேவியானவர் ஜோவ்தேவரின் ஸபா மண்டபங்களை நோக்கிச் சென்று விட்டார்.

அக்கணமே, ஸாட்டர்னியா தேவியும், தான் நினைத்து வந்த காரியம் இனிதாக முடிந்து விட்டதை நினைத்து, மகிழ்ச்சியுடன், ஒலிம்பஸ்ஸை விட்டுப் பறந்து சென்றார். அவர் அங்கு விட்டுப் புறப்பட்டு, உன்னதமான பைரியா நாட்டிற்கும், என்றும் இன்பம் தரும் இமாத்தியாவின் கரைக்கும். ஒரு நாளும் உருகாத உறைபனி படிந்துள்ள ஹிமஸ் பர்வதங்களின் மேலும், உயரமாகப் பறந்து சென்றார்! அவ்வாறு அவர்

பறந்து சென்றபொழுது, அவருடைய பாதங்கள் ஒரு முறையேனும் பூமியை அணுகவில்லை.

பின்பு அவர் ஏதாஸின் உன்னதமான சிகரத்திலிருந்து தமது விசையைத் தீவிரமாக அதிகரித்துக் கொண்டு பறந்து சென்று, உருண்டு புரளும் ஆழ்கடலை வேகமாகக் கடந்து எமதர்மராஜனது மாற்ருன் தம்பியாகிய நித்திரா தேவனின் குகையை அடைந்தார்.

அங்குச் சென்றபின், அவர் அந்த தேவனை நோக்கி "ருசியும் இன்பமும்தரும் நித்திரா தேவரே! மனிதர், தேவர் என்ற வித்தியாசம் பாராமலும், ஒருவர் தவருமலும் எல்லோருக்கும் அரசராகவிளங்குபவரே! உமது ஆட்சி மிகவும் பரந்ததன்ரே!

நீர் ஜூனோவின் சித்தப்படி நடக்க எக்கணமும் காத்திருப்பவர் என்பது உண்மையானுல் நித்திரைகளுக்குத் தலைவரே! நீர் இப்போது நான் சொல்லுவதைக் கேட்டு எனக்கு உதவி செய்ய வேண்டும்,எனக்கு அனுக்கிரகம் செய்ய வேண்டும்! ஜோவ் தேவர் காமவின்பங்களை நுகர்ந்தவராய், மெய்ம்மறந்து பரவசராகி ஆனந்தக் கடலில் ஆழ்ந்து கிடக்கையில், நீர் உம்முடைய மிருதுவான பனித்துளிகளை அந்தத் தேவரின் அழியாத திருவிழிகளின் மேல் பொழிய வேண்டும்.

அப்படிச் செய்வீரேயானுல், ஸோம்னஸ் தேவரே! நான் உமக்கு அழியாப் பசும் பொன்னுற் செய்யப்பட்டதும், வல்க்கனுல் நிருமிக்கப்பட்டதும், மிகுந்த ஒளியுடன் விளங்குவதுமான ஒரு பாத பீடமும், ஒரு சிங்காதனமும் காணிக்கையாய்ச் செலுத்துவேன்! நீர் மதுபானமும் மதுரமான போஜனமும் அருந்தி உமது மனம் போனபடி அவற்றின் மேல் சுகமாக வீற்றிருந்து கொண்டு உமது காலத்தை உல்லாசமாகக் கழித்து வரலாம்" என்ருர்.

தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் உண்டாகும் தளர்வுகளையெல்லாம் தீர்க்கவல்லவரான அந்தத் தேவர், அந்தத் தேவியின் வசனங்களைச் செவியுற்றுக் கேட்டு, அவளுக்குப் பின்வருமாறு பதிலுரைப்பார் :—

"தேவ தேவனது மகளே! வானுலகின் வல்லரசியே! இது என்னுல் ஆகக்கூடிய காரியமா? நான் எனது வலையை மற்றைய தேவர்களின் மீது இலகுவில் வீசவல்லவன் தான்! எல்லோருக்கும் பிதாவும், விருத்தரும் ஆன ஓஷன் கூட எனது ஆட்சிக்கு உட்பட்டவர் தான்! அவருடைய அலைகளும், எனக்குப் பயந்து, தங்களுடைய சேஷ்டைகளை எல்லாம் ஒழித்து விட்டுக், கடலில் மௌனமாக விருக்கின்றன. ஆனுல், நான் எவ்வாறு ஜோவ் தேவரின் ஆணையின்றி அதியுன்னதமானவையும், கண்டோர் மதியைக் கலக்க தக்கதுமான அவரது

நெற்றிப் புருவங்களைப் பனிபோன்ற சுகமான நித்திரையில் ஆழ்த்துவேன்? அது மிகவும் துணிவான ஒரு காரியமாகுமன்றோ!

முன்னொருகால், வெகு காலத்திற்கு முன், நான், தங்களது மேலான ஆணைப்படி மிகுந்த துணிவுடன், என்றும் விழிப்புள்ள அந்தக் கடவுளின் கண்களை என்கையால் பொத்தினேன். அவருடைய கண்ணிமைகளின் மேல் என் கையை வைத்தேன்.

அப்பொழுது அவரது புத்திரனும், மஹானுமான அல் ஸைடிஸ் என்பவன், தன்னுடைய சத்துருக்கள் அனைவரையும் ஜயித்து, இலியனைச் சுற்றியுள்ள பாழடைந்த மைதானத்தையும் விட்டு விட்டுக் கடலை உழுது கொண்டு சென்றான். அப்போது அம்மம்மா! ஆழ்ந்த கடலில் இருந்து பொங்கி எழுந்து வந்த அலைகள் எவ்வாறு பொங்கின! புயல்கள் எவ்வாறு சிங்கநாதஞ் செய்தன! அவையனைத்தும், அந்த வீரனைக் கோவான் கரைக்கே அடித்துக் கொண்டு போய்விட்டன!

அப்பொழுது மஹானான ஜோவ் தேவர் நித்திரை தெளிந்து எழுந்தார். ஆஹா இது என்ன துடுக்கு! என்று கோபத்துடன் சீறி, அமரருடைய மாளிகைகளையெல்லாம் ஓர் ஆட்டு ஆட்டிக் குலுக்கினார்! தேவர்களனைவரையும் ஒருவர் மேல் ஒருவர் புரண்டு உருளும்படி உருட்டினார்!

அவர் முக்கியமாக என்னைத்தேடிப் பிடித்தார். 'உனக்கு இவ்வளவு கொழுப்பா? இறுமாப்பா?' என்று கொதித்தார்! என்னையும், ஆகாயமளவிய எனது மாளிகையில் இருந்து தலைகுப்புற விழும்படி கீழ்வானத்தில் உருட்டித் தள்ளியே யிருப்பார்!

ஆனால், நான் இரவுக் கடவுளை நோக்கி வேகமாக ஓடிச் சென்று அவனிடம் அடைக்கலம் புகுந்து அந்த ஆபத்துக்குத் தப்பினேன்! அவர் மிகவும் ஸாத்வீக சுபாவமுடையவர். பூலோக, புவலோகங்களில் உள்ள அனைவருக்கும் அன்பர். தேவர்—மனிதர் முதலிய அனைவருடைய கோபங்களையும் தணிக்க வல்லவர். அவர் தம்முடைய சிறகுகளைப் பரப்பினார்! அந்தப் பெருந் தேவியைக் கண்டு ஜோவ் தேவரும் தலைவணங்கினார். அந்தத் தேவியின் தயவினால், நான், அக்காலம் தப்பி..........இதைத் தாங்களும் அறிவீர்கள்" என்றார்.

அவ்வசனங்களைக் கேட்ட தேவலோக இராணியானவர், தனது பருத்து, உருண்ட, கம்பீரமான, கண்விழிகளை உருட்டிக் கொண்டு அந்தத் தேவரை விழித்துப் பார்த்து, அவருக்குப் பின் வருமாறு பதிலுரைத்தார் :—

"ஸகல ஜனங்களையும்வென்று, விஜயனாக விளங்கியவனும், மஹா பராக்கிரமசாலியும், ஜோவ் தேவரின் புத்திரனுமான, அல் ஸைடீஸைப் போலவே, ட்ராய் நகரமும் ஜோவ் தேவரின்

பெருங்கருணையைச் சம்பாதித்து விட்டதென்றே நீர் நினைக்கின்றீரா? நான் வானுலகத்தின் யஜமானியென்பது உமக்கு ஞாபகம் இருக்கட்டும்! நான் சொல்லுவதைக் கேளும். ஆக்ஷேபம் ஒன்றும் செய்யாமல் காரியத்தைச் செய்யும்! நீர் செய்யும் காரியத்திற்கு உமக்கு மிகவும் உயர்ந்த வெகுமானமே கிடைக்கும்! அந்த வெகுமானம் சாமான்யமானதல்ல! தேவஸ்ரூபியும், சுந்தரிகளில் அதிபால்யையும் உமது அத்தியந்த பிரியத்திற்குப் பாத்திரமானவளும் ஆகிய பாஸித்தாய் தேவியுடன் நீர் ஊழிக் காலம் வரை சுகமாக வாழ்ந்து வரலாம்'' என்றார்.

அவ்வசனங்களைக் கேட்ட நித்திரைக் கடவுள், அந்தத் தேவியை நோக்கி "அப்படியானால், நீர் சொல்லுவது உறுதி தான் என்று சத்தியம் செய்யும்! நரகலோகத்தில் உறுமிக் கொண்டு மோதும் வெள்ளங்களின் மேல், ஆணையிட்டுச் சத்தியம் செய்யும்! அனைவரும் அடிவணங்கும் தெய்வங்கள் உமக்குப் பிணையாக வந்து நிற்கட்டும்! பெருந்தேவியானபூமாதேவி தனது ஒரு கையால் பூமியைத் தாங்கிக் கொண்டும், மற்றொரு கையைப் புனிதமான புனலின் மேல் நீட்டி வைத்துக் கொண்டும், நீர் சொல்லுவது சத்தியந்தான் என்று சொல்லட்டும்! குரோனஸ் ஸுடன் வசிக்கும் கறுத்த தைத்தியர்களையும் அழையும்! ஆழ்ந்த நரகக் குழிகளில் அழுந்திக் கிடக்கும் அவர்களும், உமது வார்த்தைகளைக் கேட்கட்டும்! அவர்களும் உமக்குச் சாட்சியாக இருக்கட்டும்!

எனது அன்பிற்குப் பாத்திரமானவளும், தேவஸ்ரூபியும், சுந்தரிகளில் மிகவும் இளையவளுமான, அந்தப் பாஸித்தாய், என்றென்றும் எனக்கே உரியவள் என்று நீர் சொல்லுவதை அவர்கள் அனைவரும் கேட்கட்டும் !'' என்றார்.

தேவலோக இராணியார், அந்த வசனங்களுக்கு இசைந்து, பூமியின் அடியில் அகாதமான நரக லோகங்களிலுள்ள கன்னங் கரேலென்ற கணங்களையும், மர்த்தியர்களால் தித்தானியர் என்று நாமமிடப்பட்டுள்ள, ஓயாமல் அடித்துவரும் அலைகளின் பயங்கரமான அதிபதிகளையும் வருந்தி அழைத்தார்.

ஒப்பந்தமும் நிறைவேறியது. பின்பு அவ்விரு தேவர்களும் புகைந்து கொண்டிருந்த லெம்நாஸ் தீவின் மேலாகவும், கடலினால் மோதப்பட்ட வயல்களை யுடைய இம்புரூஸ் நாட்டின் மேலாகவும் உயர்ந்து காற்றைப் போல் வேகமாகப் பறந்து சென்றனர்.

அவ்வாறு வேறு ஒருவனுக்கும் கட் புலனாகாமல், அவ்விரு தேவர்களும் இருள் சூழ்ந்த ஆகாய வீதியின் வழியாக நிதானமாக ஒழுகிச் சென்று, ஐடாமலையின் உச்சியில் உள்ள லெக்டாஸ் என்னுமிடத்தில் இறங்கினர். அது நாகரீகமில்லாத கொடிய ஜனங்களின் இருப்பிடம், பிறப்பிடம்.

அங்குள்ள நூற்றுக்கணக்கான சிற்ருறுகள், சல சலவென்ற சப்தத்துடன் பாய்ந்து ஓடுகின்றன ; அவற்றின் பிரதியொலிகளே அந்தக் குன்றுகளின் இடையில் செவிப்புலனுகின்றன.

நித்திரைக் கடவுள் அதன் மேல் தமது காலை யூன்றிக் கொண்டு நின்ற பொழுது, அழகான அந்த ஐடாவின் கொடுமுடி கிடு கிடு வென நடுங்கியது. அதன் குன்றுகள், தங்களுடைய வாயைப் பொத்திக் கொண்டன. அங்குள்ள காடுகளும் அசைந் தாடின. அங்குத் தனக்கு அடுத்து உயர்ந்துள்ள வானவெளிகளை எட்டிப் பிடிக்க வேண்டு மென்ற எண்ணத்துடன், கூரான தன்னுடைய கிளைகளை உயர்த்தி நீட்டிக் கொண்டிருந்த ஒரு தேவதாரு மரத்தின் மேல், இருள் சூழ்ந்த மறைவான ஒரு குகையில், ஒருவருக்கும் கட்புலனுகாமல், இராக் காலத்தில் சஞ்சரிக்கும் பக்ஷியைப் போன்ற உருவத்துடன், நித்திரைக் கடவுள் வீற்றிருந்தார். தெய்வப் பிறவிகள் அவருக்குக் கால்ஸிஸ் என்றும் மனிதர்கள் ஸிமினிடிஸ் என்றும் நாமமிட்டழைப்பார்கள்.

அதன்பின், இவ்வாறு, தான் நினைத்த காரியத்தைச் சாதித்து விட்ட ஜூனோ தேவியானவள், ஐடாவின் உச்சிக்குப் பறந்து சென்ருர். அப்போது பெருந்தேவரான ஜோவ் பகவான், அவரை ஏற இறங்க உற்றுப் பார்த்து தன்வய மிழுத்து அவரிடம் ஆசை கொண்டார்.

வாயுமண்டலங்களனைத்தையும் தீயிட்டுக் கொளுத்தி விடத் தக்க மின்னல்களின் தெய்வமான இந்த மஹா தேவர் அடக்க முடியாத காமத்துடன் தபித்தார் ! காமத் தீயானது, அவருடைய ஸர்வ அங்கங்களையும் எரித்துக் கொளுத்தியது.

முன்பு ஆதியில் அந்தத் தேவியின் அழகுகளில் ஈடுபட்டு எவ்வாறு அவரை இரகசியமாகக் கட்டி யணைத்துக் கொண்டு, அவருடைய மையல்களில் மயங்கி யாழ்ந்து விழுந்து இன்பங்கள் நுகர்ந்து கரைந்து போனுரோ, அவ்வாறே இப்போதும் அவர் அவளுடைய மாயவலைகளில் விழுந்து விட்டார் !

அந்தத் தேவியின் கண்களின் மேலேயே தம் கண்களைக் கொட்டாமல் பார்வையைச் செலுத்தி, அவற்றை உற்றுப் பார்த்து நேத்திரானந்தம் அடைந்தார். பின்பு அந்தத் தேவியின் கையைப் பிடித்துப் பிசைந்தார், கடைசியாகப் பரவசமடைந்து, அந்த தேவியை நோக்கி மிகவும் இனிய வானுலகத்திலிருந்து, எனது தேவி இங்கு வரக் காரணமென்ன ? அவள் குதிரைகளும், தக தகவென்று ஜோதியுடன் பிரகாசிக்கும் இரதமும் ஏன் இங்கு வர வில்லை ?” என்று கேட்டார்.

அதற்கு அந்தத் தேவி, பின்வருமாறு பதிலுரைத்தார் :—

“பரந்த நிலத்திற்கும், ஆழ்ந்த நீர்நிலைகளுக்கும், அப்பால் வெகு தூரத்தில் தங்களது ஆட்சியைச் செலுத்தி வருபவர்களும்,

அழிவில்லாத தேவர்களுடைய பெற்ருேரும் மஹான்மாருமான, கௌரவமுள்ள ஓஷனும் விருத்தாப்பிய தசையிலுள்ள தெடீஸ் தேவியும் இருக்கும் இடங்களை நோக்கி நான் விரைந்து செல்லுகின்றேன். எனது இளம்பிராயத்தில், அவர்கள் என்னை மிகுந்த அன்புடனும் ஆதரவுடனும் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர். அந்தத் தம்பதிகள் வெகு நாள் முதல் நேசமாகவும் வாழ்ந்து வந்தவர்கள். இப்போது அவர்களுக்குள் பரஸ்பர விரோதம் ஏற்பட்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன்.

பூமியின் மீதும், கடல்களின் மேலும் ஆகாய வீதிகளின் வழியாகவும், எனது இரதத்தை இழுத்துக் கொண்டு செல்லச் சித்தமாகவிருக்கும் எனது பாய்மாக்கள் ஐடாமலையின் அடிவாரத்தில்காத்துக் கொண்டிருக்கின்றன. ஸர்வ வல்லமையும் உள்ள தங்களது சம்மதத்தைப் பெறுவதற்காகவே நான் ஒலிம்பஸ் மாளிகையை விட்டு இங்கு வந்தேன். கடல்களின் அடியில் வெகு ஆழத்தில், விருத்தரான ஓஷன் வசிக்கும் குகைகளைத் தங்களையறியாமல் சென்று தரிசிக்க எனக்கு இஷ்டமில்லை!'' என்ருர்.

ஜோவ் தேவர் "அதற்கு இன்று என்ன அவசரம்! வேறு ஒருநாள் ஆகாதா? எனது காமமானது ஆவலுடன் துடிக்கின்றது. அது ஒரு நிமிஷமேனும் தாமதியாது. அதன் ஆத்திரம் இப்போது நிறைவேறியே யாக வேண்டும்! இந்த முகூர்த்தத்தில், நாம் நமது கருத்தைக் கேளீ விலாசங்களில் செலுத்துவோம்! இந்தச் சில நிமிஷங்களில் நாம் மதன லீலா விநோதங்களைக் கொண்டாடுவோம்! மண்ணுலகிலோ விண்ணுலகிலோ பிறந்த ஒரு பெண்மணியைக் கண்டு, இத்தகைய காமத் தீயானது, எனது மனத்தை இதற்கு முன் ஒருநாளும் எரித்ததில்லை.

இக்ஸியானது இணையற்ற தேவியை இறுகத் தழுவிப் புணர்ந்து, தேவர்களுக்குச் சமமான கீர்த்தியையுடைய பிரித்தூஸை நான் ஜனிப்பித்த பொழுதுகூட எனக்கு இவ்வளவு காம ஆத்திரம் உண்டாகவில்லை.

சுந்தரியான தானேயின் மேல் காதற் பொன் மாரியைப் பொழிந்தேன். அது ஜீவரூபமாக மாறி ஆணுய்ப் பெருகி, தீரனும் வீரனுமான பெரிஸ்யூஸ்ஸின் பிறப்புக்குக் காரணமாயிற்று. அப்போதும் எனக்கு இவ்வளவு ஆத்திரம் இருக்கவில்லை.

தீபன் தேசத்துத் தருணிகள் இருவரிடம் தாபங் கொண்டு, அவர்களிடம் இன்பம் அனுபவித்தேன்; அவர்களில் ஒருத்தியிடம் பாக்கஸ்ஸும், மற்றையவளிடம் அல்ஸைடிஸும் பிறந்தனர். அவர்களிடம் எனது காமத்தீயானது இவ்வளவு மும்முரமாகச் செல்லவில்லை.

அழகும் யௌவனமும் பொருந்திய பீனிக்ஸின் மகளிடமுங் கூட என் மனது இவ்வாறு உருகிச் செல்லவில்லை. எனக்கு அவளிடம், தேவர்களுக்குச் சமானமான, ராதமந்தஸும், மைனுஸும் பிறந்தனர்.

லாதனுதேவியின் லாவண்ணியங்கள் நிறைந்த வதனத்தையோ, அல்லது அவளினும் அழகு மிகுந்த சிரீஸ்தேவியின் கம்பீரமான உருவத்தைக் கண்டோ, நான் இவ்வாறு வாடி வதங்கவில்லை!

உன்னிடம்கூட, நான், இக்கணம் ஆசை கொண்டு துடிப்பதுபோல், இதுவரை துடித்தது இல்லை. இப்போது, என் நரம்புகளில் ஊறிவரும் இரத்தமானது, ஹிதமாகக் கொதித்துக்கொண்டு வருகின்றது'' என்றார்.

இவ்வாறு அவர் பேசி முடித்தபின், களியூட்டி மயக்கும் கண்களையுடைய அந்தத் தேவியானவர், செவ்வானம்போல் சிவந்த மேனியுடன் பிரகாசித்துக்கொண்டு அந்தத் தேவருக்குப் பின்வருமாறு பதிலுரைத்தார் :—

"காமலீலைகளைச் செய்வதற்கு இதுதான் இடமா? ஐடா மலையின் உச்சியில் மர்த்தியர்களும் அமர்ந்திருக்க, அவர்கள் கண் முன்னால், நாம் விரகர்களாக விளங்கலாமா? ரமிக்கலாமா? அப்போது, நம்முடைய உற்றாரும், உறவினரும், நண்பரும் நம்மைக் கண்ணுற்றால், நமது இன்பம் துன்பமாகவே தீருமன்றோ! அதனால் நமக்கு இழிவே உண்டாகும்! தேவர்கள் அதை வேடிக்கையாய்ப் பேசி வருவார்கள். தேவலோகமே, அதை ஒரு கதையாய்ச் சொல்லி வருமே!

ஆத்திரத்திற்கு நான் இங்கு வசப்பட்டு விட்டேன் என்றால், இனி நான், எவ்வாறு, தேவர்களது மாளிகையைக் கண்ணெடுத்துப் பார்ப்பேன்! ஸபையில் கூடியிருக்கும் தேவர்களின் மத்தியில் தான் எப்படிச் செல்வேன்? அவர்களுடன் எப்படி உறவாடுவேன்!

தங்கள் கைகளிலிருந்து விடுபட்டு அங்கங்கள் குலைந்தவளாய் நான் செல்லும் பொழுது, தேவர்கள் அனைவரும் என்னையே பார்க்கின்றார்கள் என்றன்றோ நான் நினைத்துக் கொள்வேன்!

மனம்போல் காமலீலைகளைச் செய்து வரவும், உல்லாசமாகக் காலத்தைக் கழித்து வரவும், வல்க்கன், அதிதிவ்வியமான திறமையுடன் தங்களுக்கு ஒரு சயனக் கிருஹத்தை நிர்மாணித்திருக்கின்றானே! நாம் அந்தக் கிருஹத்திற்குச் செல்வோம்; உமது தாபத்தைத் தணித்துக் கொள்ள வேண்டுமென்றால், நீர் அந்த ஒதுக்கமான இடத்துக்கு வாரும். அங்கு நீர் சிற்றின்பத்திலுள்ள உமது ஆசையைச் சுகமாக நிறைவேற்றிக் கொள்ளலாம்'' என்றார். அந்தத் தேவி இந்த வசனங்களைச் சொல்லிவிட்டு வாயை மூடிக் கொண்டார்.

அதன்பின் மேகங்களை அடக்கி ஆள்பவரும், மட்டற்ற காமத்துடன் துடித்து வந்தவருமான ஜோவ் தேவர், புன்னகை கொண்டு, அந்தத் தேவியை நோக்கிப் பின்வரும் இன்சொற்களை இயம்பினர் :—

"தேவியவர்களே! மனிதர்களோ, நாம் அனுபவித்துவரும் இன்பங்களை, ஆனந்தங்களைக் காணமாட்டார்கள். பொன்மய மான வானத்தில், மேகத்தின் மறைவில், நாம் அனுபவித்துவரும் ஆனந்தங்கள் ஒருவருக்கும் கட்புலனுகா!

ஆகாயவீதியில் கிரணங்களை அம்புகளைப்போல் பொழிந்து வருபவனும், தனது அகன்ற கண்களால் இந்தப் பரந்த பூமண்ட லமனைத்தையும், கண்கொட்டாமல், பார்த்து வருபவனுமான, சூரி யனுக்குக் கூட நமது லீலைகள் கட்புலனுகா!" என்ருர். ஜோவ் தேவர், அந்தத் தேவியைக் கண்கொட்டாமல் உற்றுப்பார்த்துக் கொண்டே இந்த வசனங்களை உரைத்தார்.

அப்போது அவரது காமத் தீயானது, சிறிதும் அடங்காமல், மேன்மேலும் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டே வந்ததினுலும், அதை அடக்க அவரால் இயலாமல் போனதினுலும், அவர் ஆத்தி ரத்துடன் அந்தத் தேவியின் மேல் தம் கைகளைப் போட்டு, அவ ரைக் கட்டி அணைத்துக் கொண்டார்.

அப்போது பூமிதேவியானவர், அதைக் கண்டு சந்தோ ஷித்து, ஜோவ் தேவரின் நியமனமின்றியே, தமது மார்பினின்றும் பலவிதமான கந்தமூலங்களையும், தாமாகவே மலர்ந்த புஷ்பங்களை யும் சொரிந்தார்; அன்று மலர்ந்த ஊதா புஷ்பங்கள், கனமாக விழுந்து அங்கு ஒரு மிருதுவான கம்பளமாக மாறின, அதன்மேல் தாமரைப் புஷ்பங்கள் கொத்துக் கொத்தாக விழுந்து, ஓர் உயர்ந்த மெத்தையைப்போல், பொங்கி யெழுந்தன. நீலோற்பலப் புஷ்பங் களும் திடீரெனப் பாய்ந்து, அந்த மெத்தையைச் சுற்றிலுமுள்ள புற்றரைகளில் விழுந்து, அலங்கரித்தன. செஞ்சுரைபோல் விளங் கும் குங்குமப் பூக்கள் அந்த மலையின் மேல் சரமாரியாக விழுந்தன. அப்போது அந்த மலையும் தகதக வென்று செந்தழலுடன் மின்னியது!

மிருதுவான இன்பக் கடலில் ஆழ்ந்திருந்தவர்களும், காற்றையே தங்களைச் சுற்றித் திரையாகக் கொண்டவர்களு மான அந்தத் தெய்வத் தம்பதிகளை, பொன்மயமான மேகங்கள், மற்ருெருவருக்கும் கட்புலனுகாமல் மறைத்துவிட்டன. ஆகாயத்தி லிருந்து பூமியின் மேல் விழுந்த நொய்தான பனித்துளிகள் அந்த மலைக்கு ஒரு நறுமணத்தையே யூட்டின. அம்மலையிலிருந்து எழுந்த காற்றும், கமகம வென்று சுகந்தத்துடன் வீசியது.

கடைசியாகக் காமநோயினுல் துடித்து வந்த இடிக்கடவுள், சிற்றின்பத்திற்கும், நித்திரையினுல் வரும் இனிய சுகத்திற்கும்

வசப்பட்டவராய்த் தமது தலையைச் சாய்த்தார். பேருறக்கத்திலும் அழுந்திப் போய்விட்டார்!

இப்போது, தமது செய்தியை நெப்தியூன் பகவான் காதில் போடவேண்டும் என்ற எண்ணங் கொண்டு, எல்லோருக்கும் எப் போதும் இனிதே செய்து வருபவரான நித்திரைக் கடவுள், சிறிதும் சந்தடி இன்றிப் பறக்கும் இறக்கைகளின்மேல் ஏறிக் கொண்டு கடற் படைகள் நின்றிருந்த இடத்தை வந்தடைந்தார். அவருக் குத் தனது வரவை முன்னுடியே அறிவிக்காமலும், அவருக்குக் கட்புலனுகாமலும், திடீரென அவருக்கு முன்னின்றுகொண்டு, அவர், அந்தக் கடவுளை நோக்கி பின்வரும் இன்னுரைகளை யுரைத் தார் :—

"எழுந்திரும்! நெப்தியூனே! எழுந்திரும்! இதுதான் தருணம். இதுதான் நமக்கு வாய்க்கத் தக்க நல்ல தருணம்! செருக்கடைந்துள்ள ட்ராய் நாட்டாரின் கொட்டத்தை, சிறுபொழு தாவது அடக்குவதற்கு, இதுதான் தருணம்! இப்போது ஜோவ் தேவர் ஆனந்தக் கடலில் மூழ்கிக் கிடக்கிருர். எனது தூபங்கள் அவரது திருமுடியைச் சுற்றிச் சுழன்று வருகின்றன! பொன் மயமாக விளங்கும் அவற்றைக் கண்ணுற்று, அவர் களித்து வருகின்ருர். ஜூனே தேவியிடம் அவர் கொண்டுள்ள காதலும், ஸோம்னஸ் தேவனது இனிய பாசங்களும், அதிபயங்கரமானவை யும், என்றுங் கொட்டாதவையுமான அவருடைய கண்களை இப் போது மூடியுள்ளன."

இந்த வசனங்களை உரைத்த பின்னர், நித்திரைக்கு அதிபதி யான அக் கடவுள், மனிதருடைய கண்ணிமைகளின் மேலும், தமது இனிய நொய்தான பனியைப் பொழிய வேண்டுமென்ற எண்ணத்துடன், அவர்களை நோக்கிப் பறந்து சென்ருர்.

இவ்வாறு, நித்திரைக் கடவுள் உரைத்த வசனங்களைக் கேட்ட பொழுது, நெப்தியூன் பகவானுக்கு ஏற்கனவே இருந்த ஊக்கம் அதிகரித்து, அவர் புத்துயிர் பெற்று எழுந்து யுத்தத்தின் முன்னணிக்குச் சென்று, அங்கு எல்லோருக்கும் மேல் உயர்ந்து ஒரு கோபுரம் போல் நின்று கொண்டு பின்வருமாறு சுடச்சுட உரைத்தார் :—

"முன்னுளில் சுத்த வீரர்களென்ற புகழுடன் விளங்கியவர் களே! கிரேக்கர்களே!! அப்பேருக்கும் கீர்த்திக்கும் நீங்கள் இன் னும் உரியவர்கள் தான், என்ருல், நீங்கள் இன்று மீந்துள்ள பாதி நாளை துரோஜர்களுக்கு விட்டுக் கொடுக்கலாகாது! அவ்வாறு விட்டுக் கொடுக்கலாமா?

ஹெக்டர் உங்களது கப்பல்களின் அருகில் வந்து இடியைப் போல் முழங்கலாமா? கொடியவனுன அகிலேசன் கோபங் கொண்டு விலகி இருக்கையில், இவன், இந்த ஹெக்டர், இடை விடாமல் துள்ளுகின்ருன். உங்களது கடற்படைகளைத் தீக்கிரை

யாக்கிவிடுவேன் என்றுமிரட்டுகின்ருன்! வீரனுன அகிலேசனே இழந்தோமென்று நீங்கள் மனம் வருந்தினீர்கள். இப்போது அந்த நஷ்டத்தை அடியோடு மறந்து, உங்களது மனத்தையும் சமாதானப்படுத்திக் கொண்டு விட்டீர்கள்!

முன்போல், இன்றும், நீங்கள், வீரசூர பராக்கிரமங்களுடன் விளங்குவீர்களாளுல், உங்களுக்கு வேறு ஒருவருடைய உதவியும் வேண்டியதில்லே! பேரும் புகழும் பெறவேண்டும் என்ற ஆவலானது, உங்களில் யாரேனும் ஒருவனது மார்பைக் கொளுத்துமாயின், அவன் இக்கணமே தனது தலேப்பாகையைச் சிறிதும் அசையாமல் இறுக்கிக் கட்டிக்கொண்டு, ஆயுதபாணியாக உறுதியுடன் நிற்கவேண்டும். வலியுள்ள கிரேக்கன் ஒவ்வொருவனும், அதிகெட்டியான தனது ஈட்டியை ஏந்த வேண்டும். அவ்வாறே, வலிவுடைய கிரேக்கன் ஒவ்வொருவனும், தனது அதிவிரிவான கேடயத்தைப் பிடித்துக்கொள்ளவும் வேண்டும். பலங் குறைந்த வீரர்கள் கனங் குறைந்த ஆயுதங்களே ஏந்திக்கொள்ளட்டும்; கனத்த கேடயங்களேப் பெருத்த வீரர்கள் பிடித்துக்கொள்ளட்டும்! இவ்வாறு ஆயுதங்களே அணிந்து கொண்டு நீங்கள் விளங்குவீர்களேயாளுல், ஹெக்டர் நம்மைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டான்; ஓட்டமே பிடிப்பான்; கிரேக்கர்களே! நானே உங்களுக்கு வழிகாட்டுவேன்" என்ருர்.

ஸைனிகர்கள் அனைவரும் அவ்வாறே செய்யச் சம்மதித்தனர். பின்பு, அவர்கள் தங்களுக்கு ஏற்ற ஆயுதங்களே மாற்றி அணிந்துகொண்டனர். அவர்களுடைய தலேவர்களும் சுறுசுறுப்புடன் தங்களுடைய ஆயிரக்கணக்கான ஸைனிகர்களே அணி அணியாய் வகுத்தனர். மேலும், காயமேற்றும், நோயினுல் வலி குன்றியும் கிடந்த அரசர்களும், தங்களாலான உதவியைத் தங்கள் கைகொண்டே செய்து, இந்தச் சேனேகளே வரிசை வரிசையாகக் கிரமப்படுத்தினர். வலி மிக்க வீரர்கள், கெட்டியும் கனமுமான ஆயுதங்களேயும், வலி குறைந்தவர்கள் இலேசான கேடயங்களேயும் ஏந்திக்கொண்டனர்.

இவ்வாறு, பளிச் சென்று பிரகாசிக்கும் பித்தளேக் கவசங்களேப் போர்வையாகக் கொண்ட அந்தச் சேனு சமுத்திரமானது நெப்தியூனேத் தலேவனுகக்கொண்டு, மிகுந்த உற்சாகத்துடன் முன் சென்றது. அப்போது அவர்களின் முன்பாக, அவர் தமது உடைவாளேச் சுழற்ற, அது திடுக்கிட்டுப் பயந்து நடுங்கும் ஆகாய வீதியைப் பிளந்துகொண்டு செல்லும் மின்னலேப்போல் தக தகவென்று ஒளியை வீசியது.

இவ்வாறு, தரையைக் குலுக்கியாட்டும் திறமையையுடைய அக்கடவுள், தமது முழுப் பலத்துடன் புறப்பட்டு வந்தபொழுது, மர்த்தியர்கள் மதியிழந்து மேனி வெளுத்தனர்; கிடுகிடுவென்று பயந்து நடுங்கினர்!

அப்போது ட்ராய் நாட்டைக் காத்துவந்த மஹாவீரனான ஹெக்டர், மதம் மிகுந்த தன்னுடைய கோஷ்டியாருக்கு ஆயுதங்களை அணிவித்துத் தன்னந்தனியனாகத் தான் மாத்திரம் ஒருவனாகச் சென்று, ஒரு தெய்வத்தையே எதிர்த்துப் போர் செய்யத் தீர்மானித்துவிட்டான். இவ்வாறு சகல வல்லமையும் பொருந்திய ஸமுத்திர ராஜா ஒருபுறம், ஹெக்டர் மறுபுறமாக, ஒரு தேவரும், அற்புதப் பிரகிருதியாகிய ஒரு மனிதனும், ஒருவரையொருவர் எதிர்த்து நின்றனர்!

அப்பொழுது, ஆர்ப்பரித்து, இரைந்து, கர்ஜனைகளைச் செய்யும் சமுத்திரமானது, தனது பெருந்தலைவனின் ஆணையைச் சிரமேற்கொண்டு, பிரமாண்டமான அலைகளாய்ப் பொங்கி யெழுந்து கப்பல்களைச் சுற்றிலும் ஒரு பெருத்த நீர்ச் சுவரைச் சமைத்துவிட்டது. அப்போது கடல்களெல்லாம், கரைகளைப் பிடித்துக்கொண்டு அவற்றின்மேல் தொங்கின! இரு திறத்துச் சேனைகளும் எதிர்த்தன! பூமியானது இடியைப் போல் இடித்துக் கொண்டு அதிர்ந்தது. கடல் கர்ஜித்தது! கொடிய பெரும் புயல்கள் ஆழ்கடலின் அடியிலுள்ள இருட்டறைகளைத் தாக்கி யடித்துத் தூற்றுகையில், அவ் வறைகளினின்று எழும் எதிரொலிகள், இச்சேனைகளும் கடலும் இசைத்த பேரொலிக்கு ஒரு கூறும் இணையாகா. இவை அவற்றைக் காட்டிலும் இரு மடங்கு அதிகம் உயர்ந்தே இருந்தன! இயோலியன் மண்டபத்திலிருந்து, புறப்பட்டுச் சென்று, மரங்களிடையே ஊளை இட்டுக்கொண்டு சென்று, பெருங்காடுகளை அடியோடு அழித்துவிடும் கொடுங் காற்றுகள்கூட இவ்வாறு உரத்து உறுமுவதில்லை! அருவிகளைப் போல் தடதடவென்று பொழியும் தீப்பொறிகள், வறண்டுள்ள ஒரு வனத்தையை பற்றிக்கொண்டு, அவ்வனத்துக்கு நிழலாகவுள்ள மரங்களையும் விழுங்கி எரித்து வருகையில் அம் மரங்களும்கூட இவ்வாறு உரத்து ஒலித்து நற நறவென்று முறிந்து தெறிப்பதில்லை.

இரு திறத்துச் சேனைத் தலைவர்களும் இதற்கும் அதிகமாக எதிரிகளைத் தாக்கும் படித், தங்களுடைய சேனைகளை மிகுந்த வேகமாகத் துரத்தி ஓட்டினர். அச் சேனைகள் ஒன்றையொன்று சந்தித்தபொழுது உண்டான பேரரவம் ஆகாயத்தையே ஒரு கலக்குக் கலக்கி, அதில் எதிரொலிகளைக் கிளப்பிவிட்டது.

அப்போது பலவானான ஹெக்டர் தங்கு தடையின்றிச் செல்லும் ஒரு பல்லியத்தை யெடுத்து, அதைத் தனது முழு பலத்துடன், அஜாக்ஷனது மார்பைக் குறிவைத்து விடுத்தான். இவ்வாறு முதன்முதலாகப் பிரயோகம் செய்யப்பட்ட அந்த ஆயுதமானது சிறகுகொண்ட பறவை பறப்பதுபோல் விரைந்து சென்றது. ஆனால், அஜாக்ஷன் தனது மார்பின்மேல் குறுக்காக அணிந்திருந்த கச்சைகள், அந்தப் பல்லியத்தை முன்செல்ல விடாமல் தடுத்துவிட்டன. அவன் தனது கேடயம் நழுவாமல் இருப்பதற்கு ஒரு கச்சையையும், தனது கத்தியைப் பிடித்து

வருவதற்கு ஒரு கச்சையையுமாக, இரண்டு கச்சைகளைக் கட்டிக் கொண்டிருந்தான்.

இவ்வாறு தனது வேலானது விரைந்து சென்றும், வீணே யாகிவிட்டதைக் கண்டு வெறுப்புற்ற அந்த துரோஜ வீரன், அந் வேலைத் தனக்கு வாய்க்கு வந்தபடி வைது வசைச் சொற்களால் இழித்துக் கூறிக்கொண்டே தானும் பின்னடைந்தான்.

ஆனால் அவன் அஜாக்ஷனுக்குத் தப்பிவிடவில்லை. கப்பல் களுக்கு அடிப் பாரம் போடவும் அவற்றை அசையாமல் நிலையில் நிறுத்தவும் உதவுமாறு பிரமாண்டமான கூழாங்கற்கள் அந்த வீரனது காலடியில் மலைபோல் குவிக்கப்பட்டிருந்தன. அவ்வாறு மணலில் அழுந்திக் கிடந்த பிரமாண்டமான பாறையை அந்த வீரன் பறித்துப் பெயர்த்தெடுத்துக் கரகரவென்று சுழற்றினான்! அது விர்ரென்று பறந்துசென்று ஹெக்டரது மார்பையும், தொண்டையையும் பலமாய்த் தாக்கியடித்துக்கொண்டு, அவற்றின் மேல் சரியாகப் பொத்தென்று விழுந்தது.

அதனால் ஹெக்டர் அணிந்திருந்த கவசம் அழிந்து உடைந்து, கலகலவென்ற சப்தத்துடன் நிலத்தின்மேல் விழுந்து விட்டது. கிறுகிறுவென்று சென்ற அந்தப் பாறையின் வேகம், அத்துடன் தணிந்துவிடவில்லை. அது ஒரு தீப்பிடித்த பந்தைப் போல் கரகரவென்று சுழன்று முன்சென்று, புழுதியில் விழுந்து, புகையைக் கக்கிக்கொண்டு, பூமியையும் ஆழமாக அழுத்தி உழுது விட்டது.

ஆகாயத்திலிருந்து புறப்பட்டுச் செக்கச் சிவந்த நிறத்துடன் சீறிக் கொண்டுவரும் இடியானது, ஜோவ் தேவருக்குப் பிரீதியான ஓர் ஓக் மரத்தின்மேல் திடீரென விழுந்து, மலைபோன்ற அந்த மரத்தைக் கொளுத்திவிட, அது சாம்பலாய்க் குவிந்து கிடக்கை யில், அதினின்றும் கன்னங்கரேரென்ற கறுத்த புகைகளும், மஞ்சள் நிறமான கந்தகப் புகைகளும் எழுகின்றன. அப்போது பிரமித்து, மேனி வெளுத்து நிற்கும் மனிதர்கள், அந்த ஆச்சர்யத் தைக் கண்ணுற்றவர்களாய், ஸர்வ 'வல்லமையும் உடைய ஜோவ் தேவரின் பயங்கர ஸ்வரூபந்தான் இது!' என்று பயந்து நடுங்கிக் கொண்டு அவரை வணங்குகின்றனர்!

அவ்வாறே மஹானுன ஹெக்டரும், அந்தக் கடற்கரையில் குப்புற விழுந்து கிடந்தான். தளர்ச்சியடைந்த அவனது கரமானது, தான் தாங்கிவந்த ஈட்டியை நழுவவிட்டுவிட்டது! அவன் சென்றவிடமெல்லாம் அவனைத் தொடர்ந்து சென்ற கேடய மானது கீழேவிழுந்து கிடந்த, தனது தலைவனுக்குமேல் ஒரு நிழல் போல் அகன்று விரிந்துகொண்டு நின்றது! களைத்துப் போய்விட்ட அவனது தலையும் அவனது தலைச்சீராவின் அடியில் சாய்ந்து விழுந்துவிட்டது! அவன் தாங்கிவந்த அதிபளுவான மலை போன்ற போர்க் கவசங்கள் மிகவும் தாழ்ந்த சப்தத்துடன் சந்தடி

யின்றித் தரையை நோக்கி இறங்கிவந்து, அதன்மேல் செத்த பிணம்போல் பொத்தென விழுந்தது.

அப்போது திரளான ஜனங்கள் கூடியிருந்த, அந்தக் களத்தில் ஓர் உரத்த ஜெய கோஷமே நிறைந்திருந்தது. ட்ராயைத் தாங்கித் தரித்துக் காப்பாற்றி வந்த அந்த வீரன் தரையின்மேல் சரிந்து விழுந்து விட்டதைக் கண்ணுற்ற கிரேக்கர்கள், அவன் இறந்துபோய் விட்டதாகவே எண்ணி மனப்பால் குடித்தனர்! அவர்களனைவரும் அவனைப் பிடித்துவிட வேண்டுமென்று ஆவல் கொண்டு, ஒரே மூச்சாய், ஏக காலத்தில், அவனை நோக்கிப் பாய்ந்தனர். மாரியைப்போல் சரங்கள் பறந்தன. அச்சரங்களைக் காட்டிலும் பருமனான ஈட்டிகளும் வேல்களும் அவ்வாறே பறந்தன. இவ்வாறு பறந்து சென்ற சரங்களும், ஈட்டிகளும், வேல்களும், அந்தக் களத்தின்மேல் கவிந்திருந்த ஆகாயத்தை அடியோடு அடைத்துத் தடுத்து விட்டன!

அவனைச் சுற்றிலும், பாம்புகளைப்போல், சீறிக்கொண்டு சென்ற இரும்பாயுதங்கள், ஒரு பெரும் மழையாய்ப் பொழிந்து வந்தன. எனினும், அவன் காயம் ஒன்றேனும் ஏற்காமல், க்ஷேமமாகவே அந்தக் களத்தில் கிடந்தான். பாலிதாமஸும், தேவஸ்வரூபியான அஜிநாரும், அல்ஸைஸ் வீரனும், லிஸியன் வர்க்கத்துச் சேனைகளின் தலைவர்களான தைரியமுள்ள வீரன் ஒவ்வொருவனும், ஆகிய அவனது நண்பர்கள் அனைவரும், தங்கள் கேடயங்களை அவன் மேல் உயரத் தூக்கி மறைத்துப் பிடித்துக் கொண்டு, அவனைச் சுற்றிலும் வட்ட வடிவில் நின்றனர்.

அதன்பின், அலறிப் புலம்பிக் கொண்டிருந்த அந்த வீரனைத் துக்கம் நிறைந்த அவனது பரிவாரஜனங்கள் அதிஜாக்ர தையுடன் பரஸ்பர ஸகாயம் செய்தழைத்து, அவனது தேருக்குத் தூக்கிச் சென்றனர். காற்றினும் வேகமாகச் செல்லக்கூடிய அவனுடைய பாய்மாக்கள் தங்கள் வாயினின்றும் நுரையைக் கக்கிக் கொண்டு அந்த யுத்த களத்திலிருந்து புறப்பட்டு, அந்தத் தேரைத் துரிதமாக இழுத்துக் கொண்டு சென்று, ட்ராய் நகரை யடைந்தன. அந்தத் தேர், மந்தகதியுடன் மெதுவாகப் பாய்ந்து உருண்டு செல்லும் ஜாந்தஸ் நதியின் கரையோரமுள்ள மினுமினு வென மின்னும் மைதானத்தை அடைந்தவுடன், ஹெக்டரின் பரிசனங்கள் தங்களின் தலைவனை அந்த நதியின் கரையோரத்தில் மலர்கள் மலிந்து கிடந்த ஓர் இடத்தில் இறக்கி, அவனைச் சுற்றிலும் தண்ணீரைத் தெளித்தனர்.

பின்பு, அவர்கள் அவனை யெடுத்து, அவனது முழங் காலின் மேல் நிறுத்தினர், அப்போது, அவன், தனது உடம்பி லிருந்து ஒழுகி வந்த உறைந்த இரத்தத்தை வடித்துக் கொண்டும், அடிக்கடி திரும்பத் திரும்பக் களைப்புற்றுத் தனது தலையை

அந்தக் கரையின்மேல் தணித்துச் சாய்த்துக் கொண்டும் கிடந்தான். அவ்வாறு கிடக்கையில், அவன் விட்டு விட்டு மூச் செறிந்து கொண்டும், ஆகாயத்தில் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்த மேகங்களை அரைக் கண்ணுல் பார்த்துக் கொண்டும், சுழன்று கொண்டிருந்த தன் கண்களை, விழிப்பதும், மூடுவதுமாகவும் இருந்தான்.

இவ்வாறு துரோஜ வீரன் யுத்தகளத்தை விட்டுப் புறங் கொடுத்து ஓடியதைக் கண்ட கிரேக்க வீரன் ஒவ்வொருவனும், உற்சாகங் கொண்டு இரு மடங்கு வேகத்துடன் அந்தக் களத்தின் உள்ளே பிரவேசித்தான்.

முதன் முதலாக, ஆயிலியன் அஜாக்ஷன் என்பவன், தனது வேலை விடுக்க அதன் கூரான முனையினுல் துளைக்கப்பட்ட ஈனேப்ஸின் மகன் இரத்தத்தை வடித்தான்.

ஸத்னியஸ் என்னும் அந்த மஹாவீரன், ரூபலாவண்ணி யங்களிற் சிறந்தவளான நையீஸ் என்பவளின் புதல்வன். வெள்ளியைப் போன்ற வெண்ணிறமான ஸத்னியோ நதித் தீரத்தில் தன் ஆட்டு மந்தைகளை மேய்த்துக் கொண்டிருக்கையில் அவள் அவனைப் பெற்றெடுத்தாள்.

அந்த வேல் அவனது வயிற்றை ஓர் ஓரமாகக் கிழித்துக் கொண்டு அவனது உடம்பினுள் சென்றது. அந்த வீரன் மல்லாந்து கீழே விழுந்து விட்டான். அப்போது அழிவில்லாத இருள் அவனுடைய இரு கண்களையும் மூடிவிட்டது.

இதன்பின் அந்த வீரனது பிணத்தைச் சுற்றிலும் ஒரு கொடிய யுத்தம் தீவிரமாக நடைபெற்றது. கிரேக்கர்களும், அவர்களுக்குப் பின் துரோஜர்களும், முறை முறையாக அடுத் தடுத்து இரத்தத்தை வடித்தனர்.

இதைக் கண்ணுற்ற பாலிதாமஸ் என்பவன், இந்தப் பழியைத் தீர்த்தேவிட வேண்டுமென்று கொதித்தெழுந்து, தான் இருந்த இடத்திலிருந்து யுத்தகளத்திற்குச் சமீபமாக வந்து, துடித்துக் கொண்டிருந்த தனது வேலைப் புரோத்துனரை நோக்கிக் குலுக்கினுன். வேகமாய்ப் பறந்து சென்ற, அந்த வேலானது அவனது புஜத்தைத் துளைத்துக் கொண்டு செல்ல, அவன் தரையின் மேல் தாழ்ந்து விழுந்து குருதி நிறைந்த புழுதியைக் கவ்வினுன்.

இந்தக் காரியத்தில், இவ்வாறு வெற்றியடைந்த அந்த வீரன் தனக்குத் தோற்றவனை நோக்கி, "இதோ பார்த்தாயா, இவ்வாறு தான் நாங்கள் எங்களது ஆட்சியைக் இந்தக் களத்தில் செலுத்தி வருகின்ருேம்! பாந்தஸ்ஸின் வம்சத்தில்

வந்த வீரர்கள் இவ்வாறு தான் தங்களுடைய ஆயுதங்களை ஏந்தி வருகின்றனர். குறி தவறாத இந்தக் கரத்தினின்றும் பறந்து செல்லும் சரங்களில் ஒன்றேனும் வீணாகாது! ஒவ்வொரு சரமும் ஓரோர் கிரேக்கனது மார்பைத் துளைத்துக் கொண்டு உட்சென்று, அங்குள்ள அவனது இரத்தத்தில் தனது முனையைத் தோய்த்துக் கொள்ளும். உன்னை வெட்டி வீழ்த்திய அந்த வேலாயுதத்தின் மேலேயே சாய்ந்த வண்ணம், நீ உனக்கு முன்னுள்ள இருள் சூழ்ந்த வழியைத் தட்டித் தடவிக் கொண்டு நடந்து சென்று புளுட்டோ தேவரது எரிவாய் நிரயங்களான மண்டபங்களுக்குச் செல்!" என்றான்.

இவ்வாறு அவன் உரைத்த சொல்லானது ஆர்கிவின் ஒவ்வொருவனுடைய உள்ளத்தையும் துளைத்துத் துன்புறுத்தியது, மற்றெல்லோரையும்விட அஜாக்ஷனது மனமே அதிகமாகத் துடித்துக் கொதித்தது! பாலித்தமாஸுக்குத் தோற்ற வீரன் அலறிக் கொண்டு தன்னருகில் விழுந்தபொழுது, அவன் அவனது கொடிய சத்துருவை நோக்கித் தனது கூரான இரும்பாயுதத்தை வேகமாய் விடுத்தான். அதைக் கண்ட அந்தச் சத்துரு ஒருபுறமாகச் சாய்ந்து குனிந்து, தனது உயிரை வாங்கவேண்டுமென்று பறந்துவந்த அந்த எமனுக்கு தப்பியே விட்டான்; என்றாலும், அந்த ஆயுதம் வீணே போகவில்லை! ஆர்க்கிவ் லோக்கஸ்ஸே! அது உனது பிராணனை இழுத்துக் கொண்டே போய்விட்டது. விதியின் பயன் இவ்வாறு விளைந்து விட்டது. கடப்பாரெவரே கடுவினையை? உனது உயர்ந்த குடிப்பிறப்பினால், உனக்கு ஓர் உதவியும் உண்டாகவில்லை. அந்தச் சரத்தின் மேல் ஏறிப் பறந்துவந்த யமதர்மராஜனுடைய கைகள் உன்னை எட்டிப் பிடித்து விட்டன!

அவனை அழித்து விடும்படி நியமித்த தெய்வத்தின் ஆணையைச் சிரமேற் கொண்டு, அதை நிறைவேற்றுவதற்காக அந்தச் சரமானது, சரசரவென்று விரைந்து ஓடிச் சென்று அவனது கழுத்தும் தலையும் சேருமிடத்தை நோக்கி, நேராகப் பாய்ந்துத் தாக்கிக் கூட்டைப் பிளந்து, அவற்றைக் கூட்டிப் பிணித்திருந்த நரம்புகளையும் இரண்டாய் அறுத்து விட்டது! அப்போது துண்டாய்ப் போய்விட்ட அவனது மண்டையே முதன் முதலாக அந்தக் களத்தின் மேல் விண்டு விழுந்து கடகட வென்று உருண்டு சென்றது. வேலாயுதத்தின் அடி சிறிதும் குறி தவறாமல், சரியாகவே விழுந்ததினால், அவனது உடலானது அப்போது நிமிர்ந்தே நின்றது, தலை யுருண்டு புரண்டு சென்ற பின்னரே அதுவும் மணலின் மேல் கடகட வென்று உருண்டு சென்றது.

அப்போது, ஒரு கோபுரம்போல் நெடு நெடுவென உயர்ந்த வனான அந்த அஜாக்ஷன், பாலிதாமஸ்ஸை நோக்கிப் பின் வருமாறு இழிந்த வசனங்களை உரத்துக் கூறினான் :—

“அட! பெருமைப்பேய் பிடித்த பாலித்தாமஸ்ஸே! உன் கண்களைச் சற்று இங்குத் திரும்பிப்பார்! இந்தக் களத்தில் தனது உடலை நீட்டிக்கொண்டு, இதோ கிடக்கும் இந்த வீரர்களைப்பார்? இவன் யார்? புரோத்தினரை நீங்கள் பிரேதனுக்கினீர்களே, அவனுக்கு இவன் இணையான வீரன்தானே? அவனைக் கொன்ற பழிக்கு இவன் ஈடு செய்து விட்டானு? சொல்! இவனது சாயலை யும் உருவத்தையும் முகத்தையும் நன்ருகக் கவனித்துப்பார்! இவன் சாமான்ய மனிதனுகவாவது, இழிந்த குலத்தில் உதித்தவனுக வாவது தோன்றவில்லை! இவன் சாயல்களையும் உடற் கூற்றை யும் பார்த்தால், இவன் அந்தினரின் உடன் பிறந்தானே, அல்லது அவனது மகனே ஆதல் வேண்டும் என்று நான் ஊகிக்கின் றேன்!” என்ருன்.

செந்நீர் வடித்துக்கொண்டு மண்ணின் மேற்கிடந்த அந்தச் சிறுவன் இன்னுன் என்று இவனுக்கு நன்ருய்த் தெரிந்திருந்தும், இவன் மேற்கூறிய வசனங்களை யுரைத்துக் கலகலவென்று நகைத் தான். அந்தக் காட்சியைக் கண்ணுற்ற ட்ராய் அனைத்துமே கரைந்துருகிக் கண்ணீர் வடித்தது. அவர்கள் வீண்பு லம்பல் களுடன் நின்றுவிடவில்லை. வேகத்துடன் கொதித்துவந்த அக்கா மஸ் என்பவன், அந்தப் பழிக்குப் பழி வாங்கியே தீர்த்தான்!

வதையுண்டு உயிரைவிட்ட புரோத்தினரின் உடலை, அவ னது சகோதரனுன புரோமாக்கஸ் என்பவன் இழுத்துக்கொண்டு சென்றபொழுது, அக்காமஸ் அவனது மார்பைத் துளைத்துப் பின் வருமாறு உரைத்தான்:—

“அகந்தை நிறைந்த ஆர்க்கிவ்களே! உங்கள் எல்லோருக் கும் இதுதான் கதி! நீங்கள் எல்லோரும் எங்களுடைய ஆயுதங்க ளுக்கு இரையாகப் போகின்றீர்கள்! இந்த யுத்தத்தில் நிகழக் கூடிய பலவிதமான கஷ்ட நஷ்டங்களுக்கும், வெட்டுக் காயங்க ளுக்கும், ட்ராய் நாடு அன்றி, கர்வங்கொண்ட கிரீஸுங் கூட ஆளாகிவிடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

மஹா வீரனுன எனது உடன் பிறந்தானை நீங்கள் கொன்றீர் களே! இதோ அந்தக் கொலைக்கு ஈடாக உங்களது புரோமாக்கஸ் தன் உயிரை இழந்துவிட்டான்! பாருங்கள். விதிவசமாய்த் தனக்கு நேர்ந்துவிட்ட பழிக்குப் பழிதீர்ப்பதற்காக, அவன் ஒரு சகோதரனை விட்டு விட்டே சென்ருன். அந்தச் சகோதரனும் பழிக்குப் பழி வாங்கி விட்டதினுல், அவன் அதிருப்தியுடன் புளூட்டோவின் பவனத்திற்குள் பிரவேசிக்கவில்லை!” என்ருன்.

இந்த வசனங்களைக் கேட்ட பிறகு கிரேக்கர்கள் அனைவரும் மனங் கலங்கினர். அவர்களுடைய உள்ளங்களைப் பெருந் துக்கம் உறுத்தித் துளைத்து விட்டது. ஆனுல், அந்தத் துக்கமானது மஹா தைரியவானுன பெனிலியஸ்ஸின் மனத்தையே மிகவும் அதிக மாகத் துளைத்தது. அவன் பெருமையடித்துக்கொண்டு பிதற்றிய

கர்வியை நோக்கித் திரும்பினன். அக்கணமே மக்களிற் பதடியான அந்தத் தற்பெருமைக்காரன், அந்த யுத்தகளத்தை விட்டு ஓட்டம் பிடித்துவிட்டான்! தன்னிலும் மிக்கவலிமையுடைய அந்த வீரனுக்குத் தப்பியே விட்டான்!

ஆனல், பெனிலியஸ் விடுத்த வேல் வீணுகிவிடவில்லை. இளைஞனை இலியோனியஸ் அந்த வேலையேற்று அதற்கு இரையாயினன். அவன் ஹெர்மிஸ் தேவனிடமிருந்து, பொருளீட்டும் தந்திரங்கள் அனைத்தையும் கற்றிருந்தவனும், மற்றைய துரோஜர்கள் எல்லோரையும்விட அதிமேலான கிருபையை ஹெர்மீஸினிடமிருந்து பெற்றிருந்தவனும், அதிதனவானுமான போர்பாஸ் என்பவனது ஒரே பிள்ளை.

பெனிலியஸ் விடுத்த வேலானது, அவனது கண்ணையே நோக்கிக் குறிதவருமல் சென்று, அதைக்குத்தி, அக் கண்ணின் விழியை அது பதிந்திருந்த சதையினின்றும், தோண்டியெடுத்து, வெளியே தள்ளிவிட்டு, அவனது கழுத்தையும் துளைத்துக்கொண்டு சென்றது! அவனை அந்தக் களத்தில் உருட்டிவிட்டது! அப்போதாயினும் அந்தப் பேடி அடங்கியிருக்கவில்லை. அவன் தன்னுடைய ஆயுதங்களை உயரத் தூக்கினன்! அதுவும் வீணுயிற்று. ஏனெனில், அவனது சேஷ்டையை கவனித்த பெனிலியஸ், மிகுந்த சீற்றங்கொண்டு தனது அகன்ற அலகுள்ளவாளை அவன் மேல் விரைந்து வீச, அது அவனது தலையை வெட்டி அவனுடைய தோள்களைத் திறந்து விட்டது! அக்கணமே அவனது தலையும் தலைப்பாகையும் நிலத்தை நோக்கிக் கலகலவென உருண்டு விழுந்தன.

அப்போதும் தனது வேலானது இரத்தத்தை வடித்துக் கொண்டிருந்த இலியோனியஸ்ஸின் கண்ணிலே ஊன்றி நின்று கொண்டிருந்ததைக் கண்ணுற்ற பெனிலியஸ் அந்த வேலைக் கொண்டே இலியோனியஸ்ஸின் இரத்தக்கறை படிந்திருந்த முகத்தை உயரத் தூக்கியெடுத்துக்கொண்டு, துரோஜர்களை நோக்கிப் பின்வரும் தூஷணையான வசனங்களை யுரைத்தான் :—

"வாரீர்! துரோஜர்களே! மஹானுன உங்களது இலியோனியஸ்ஸை இதோ பாருங்கள்! ஓட்டமாக ஓடிச்சென்று அவனுடைய தகப்பனிடம், அவனது கதையைச் சொல்லுங்கள்! தனக்கு நேர்ந்துவிட்ட துக்கத்தை நீத்து, அவன் பித்துப் பிடித்தவன்போல் கதறி அலறட்டும்! அவனது குரலோசை அவனுடைய உயர்ந்த மாளிகைகளைப் பிளக்கட்டும்! அவற்றினின்று புறப்படும் பிரதித்தொனியானது, புரோமாக்கஸ்ஸின் வீட்டிற்கும் செல்லட்டும்! இந்தக் கெட்ட செய்தி அவனது தாயின் காதிலும் விழட்டும்!

இந்த யுத்தத்தில், வெற்றியடைந்தபின், நாங்களெல்லாம் ஜயசீலர்களாய் கிரீஸுக்குச்சென்று களித்து வருகையில், உத்தமியான புரோமாக்கஸின் மனைவி, அவனது கதியை யறிந்து எவ்

வாறு மனமிடிந்து, வாடிவதங்கித் துக்கிதுத் வருவாளோ, அவ்வாறு இலியோனியஸ்ஸின் தாயும் அலறிக் கதறட்டும்'' என்றான்.

இவ்வாறு கொடிய வசனங்களை யுரைத்துக் கொண்டே அவன் அந்தத் தலையை உயர எறிந்தான். இந்த வசனங்கள் அனைத்தையும் கேட்ட துரோஜர்கள் திடுக்கிட்டு நடுங்கி, நாற்புறமும் ஓட்டம் பிடித்தனர்! கிரேக்கர்களது கடற்படையையும் கோட்டை மதிலையும் கண்டு நடுங்கினர். தங்களனைவருக்கும் வரவிருந்த நாசத்தை நினைந்து மனம் வாடினர்!

ஜோவ் தேவரின் புத்திரிகளே! ஒலிம்பஸ் மலையின்மேல் ஒளியுடன் விளங்குபவர்களே! எல்லாக் காரியங்களையும் கண் கொண்டு பார்த்து வருபவர்களே! அவை அனைத்தையும் அப் போதைக்கப்போது குறித்து வருபவர்களே! நவ கன்னிகைகளே!

இறுமாப் படைந்திருந்த இலியனை, நெப்தியூன் பகவான் தலைகுனியச்செய்தபொழுது, எந்தத் தலைவன், எந்த வீரன் முதன் முதலாக நிலத்தில் சாய்ந்து, தனது இரத்தத்தை வடித்து, அந்த நிலத்தை நனைத்தான் என்பதைச் சொல்லுங்கள்.

கிரேக்கர்கள் எல்லோரிலும் எந்த வீரனுக்கு நீங்கள் அழியாப் புகழை அளிக்கப்போகின்றீர்கள்? அந்த வீரனை வாழ்த்தி நீங்கள் அவனுக்கு வீரக் கற்கள் நாட்டப்போகின் றீர்கள்? அவனது பெயரையும் சொல்லுங்கள்!

அஜாக்ஷ மஹாவீர! நீதான் முதன் முதலாக மைஸியன் ஸைனியங்களின் தலைவனான ஹிர்ட்டியஸ் என்பவனை இரத்தக் கறை படிந்திருந்த யுத்த களத்தில் வெட்டி வீழ்த்தினாய்.

பால்ஸீஸ் என்பவனையும், மெர்மர் என்பவனையும், நெஸ் டாரின் மகன் குழித்து மூடினான்.

மோரிஸ்ஸையும், ஹிப்போஷியனையும், தைரியவானான மெரியோன் வதைத்துக்கொன்றான்.

டியூஸர் விடுத்த சரங்களால் தங்களது இரத்தத்தை வடித் துக்கொண்டு, தீரனான பெரிப்பீடிஸூம், புரோத்தூவனும், மடிந் தோர் குழாத்திற் கலந்து விட்டனர்.

மெனிலாஸின் ஈட்டியினால், அள்ளையிற் குத்துண்ட ஹைப் பெரினர் அடியற்ற பனைபோல் விழுந்து, தன்னுடைய குடிகளை அனாதைகளாக்கி விட்டான். அழியாத பேரிருள் அந்த வீரனைச் சூழ்ந்து கொண்டது; அப்போது அவன் ஏற்ற காயத்தின் வழியாகவே அவனது ஆத்மாவும் ஆத்திரத்துடன் துடித்துக் கொண்டு வெளியேறி வந்து விட்டது!

ஆனால், ஆயிலியஸ்ஸின் மகனுக்கு முன்னுகத்தான், கணக்கிலடங்காத மஹா வீரர்கள், மடிந்து விழுந்து மலைபோல் குவிந்தனர்; அவ்வாறே அபரிமிதமான ஸைனிகர்களும் அவன் முன் ஓட்டம் பிடித்தனர். வேட்டையாடுகையில் அதிவிரைவாய் ஓடுபவனும் மிருகங்களைத் துரத்திக்கொண்டு செல்வதில் கிரேக்கவர்க்கத்திலேயே அதிசமர்த்தனுமான இளைய அஜாக்ஷனே இந்த யுத்தத்தில் சிறந்து விளங்கினான்!



## பதினைந்தாம் அத்தியாயம்

# கப்பல்களின் சமீபத்தில் நடந்த ஐந்தாம் யுத்தம்—அஜாக்ஷனது அற்புதச் செயல்கள்

கதைச் சுருக்கம்:— ஜூப்பிட்டர் நித்திரை தெளிந்து எழுந்திருந்து, துரோஜர்கள் அகழ்களிலிருந்து துரத்தப்பட்டுப் போய்விட்டதை அறிகின்றார். ஹெக்டர் மூர்ச்சை அடைந்து கிடக்கின்றான். நெப்தியூன் தேவர், கிரேக்கர்களது தலைவனாக விளங்குகின்றார். ஜூனோ தேவியானவள், தன்னை மயக்கி ஏமாற்றி விட்டதையறிந்து, அவர் அந்தத் தேவியின் மேல் கோபங் கொண்டு கொதிக்கிறார். ஜூனோ தேவியார் மிகுந்த தாழ்மை யுடன் மன்னிப்புக் கேட்டுக் கொள்கின்றார். ஜூப்பிட்டர் சாந்த மடைந்து விடுகின்றார்.

பின்பு அவருடைய ஆணைகளை ஐரிஸுக்கும் அப்பால்லோ தேவர்க்கும் அறிவிப்பதற்காக ஜூனோ தேவியார் அனுப்பப் படுகின்றார்.

அந்தத் தேவி தேவர்களது சபைக்குச் சென்று, அங்குள்ள தேவர்களை முன்னிட்டு ஓர் அதியற்புதமான பிரஸங்கம் செய்து அவர்களை ஜூப்பிடருக்கு விரோதமாகக் கிளம்ப வேண்டுமென்று வற்புறுத்துகின்றார்!

விசேஷமாக அவர் மார்ஸ் பகவானுக்கே மிகுந்த ஆத் திரத்தை உண்டாக்குகின்றார். அவர் அக்கணமே ஆயுதம் அணிந்து கொண்டு, யுத்தகளத்திற்குப் போகத் துடிக்கின்றார். அவ்வாறு செல்வதை மினர்வா தேவியார் தடுத்து விடுகின்றார்!

ஐரிஸும், அப்பால்லோவும், ஜூப்பிடரின் ஆணையை நிறைவேற்றுகின்றனர். யுத்தகளத்தை விட்டு விலகும்படி நெப்தி யூனுக்கு ஐரிஸ் ஆணையிடுகின்றார். நெப்தியூன் மிகுந்த சங்கடத் துடனும் மனக் கொதிப்புடனும் அவ்வறே செய்யச் சம்மதிக் கின்றார்.

அப்பால்லோ ஹெக்டரிடம் சென்று, அவனுக்குத் தைரியம் சொல்லிப் புத்துயிரளித்து, அவனை யுத்தகளத்துக்குத் திரும்பவும் கூட்டிவந்து, அவனுக்குமுன் தனது கொடியைப் பிடித்துக் கொண்டு சென்று, யுத்தத்தின் போக்கைத் திருப்பி விடுகின்றார்.

அவன், கிரேக்கர்கள் கட்டியிருந்த கோட்டை மதிலின் பெரும் பாகத்தை உடைத்துவிட, துரோஜர்கள் அதன் வழியே உட்புகுந்து, கிரேக்கர்களுடைய கடற்படைகளின் முதல் வரிசை யில் நின்று கொண்டிருந்த கப்பல்களுக்குத் தீயிட ஆரம்பிக்கின் றனர்.

ஆனால், அவனுடைய முயற்சிகள் நற்பயன் அடைவதில்லை. அவையனைத்தையும், மூத்த அஜாக்ஷன் கெடுத்து விடுகின்றான். கணக்கற்ற சேனைகள் ஸங்கரிக்கப் படுகின்றன.

---

இப்போது அந்த துரோஜர்கள், அந்தப் பிரம்மாண்டமான அகழைக் கடந்து அதிவிரைவாக ஓட்டம் பிடித்துப் பறந்து சென்றனர். அவ்வாறு செல்லுகையில், வீரர்களில் அனேகர் மூச்சு விட முடியாமல் திண்டாடித் திணறிக் கொண்டு, தரையின் மேல் விழுந்தனர். சிறிது மூச்சு வந்த பின், அவர்கள் தங்களுடைய இரதங்கள் நின்ற இடத்தையடைந்து, அங்குச் சிறிது தாமதித்துப் பெருமூச்செறிந்தனர். அவர்களுடைய கன்னங்களில் பயமும், கண்களில் ஏக்கமும் நடுக்கமுமே குடிகொண்டிருந்தன.

இதன் மத்தியில், காமக் கனவுகளைக் கண்டு களித்து வந்த தேவதேவரான ஜோவ் தேவர், கனவு தெளிந்து எழுந்து ஐடாமலையின் உச்சியில் தமது சீரிய சிங்காதனத்தின் மேல் ஏறி உட்கார்ந்து விட்டார். தம்மைச் சுற்றிலும் பரந்து கிடந்த யுத்தகளத்தை, அவர் மேலும் கீழும் நாற்புறமும் உற்றுப் பார்த்தார். அப்போது துரோஜர்கள் புறங்கொடுத்து ஓடுவதும், கிரேக்கர்கள் அவர்களைத் துரத்திக்கொண்டு வருவதும், அவருக்குக் கட்புலனாயின. வெற்றி கொண்டபின் அவர்கள் பொலிவுடன் விளங்கினர். தோற்ற துரோஜர்கள், அந்தக் களத்தின் நாற்புறமும் சிதறிக் கிடந்தனர். இவ்விரு திறத்தாருக்கும் மத்தியில், ஸமுத்திர ராஜர், வெகு கம்பீரமாக ஓங்கி உயர்ந்து விளங்கினார்.

அப்போது தனக்குச் சிறிது தூரத்தில் துக்கித்துக் கண்ணீர் விட்டு புலம்பிக் கொண்டிருந்த, தன்னுடைய பரிஜனங்களால் சூழப்பட்டவனாய், இரத்தத்தைச் சொரிந்து கொண்டு மஹானான ஹெக்டர், மண்ணின் மேல் சாய்ந்து கிடந்தது அவருக்குக் கட்புலனாயிற்று. அப்போது அவனுடைய ஐம்புலன்களும் தளர்ந்து போயிருந்தன. அவன் உயிரும் நமனுலகம்செல்லும் தறுவாயில் இருந்தது. ஜோவ் பகவான் அவனை உருக்கத்துடன் உற்று நோக்கித் தன்னை வஞ்சித்த ஜூனோ தேவியிடம் கொடுங்கோபம் கொண்டு அந்தத் தேவியை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

" அட நீயா! உன் துர்க்குணம் இன்னுமா ஒழியவில்லை! எக்காலும் மாறாத என் ஆணைகளை நீ இன்னுமா மறுத்து வருகின்றனை? தீமைகளை மேன்மேலும் பெருக்குவதே மணியமாக விருக்கின்றனை!

உன் மாய மந்திரங்களினால் தேவர்களுக்குச் சமமான ஹெக்டர், தன்னுடைய சத்துருக்களுக்குத் தாழ்ந்தே விட்டான். இதுவரை வெற்றியுடன் விளங்கிவந்த அவனுடைய வீரர் குழாங்களும் இந்தக் களத்தை விட்டு ஓட்டம் பிடித்து விட்டனர்!

உன் மோச வலையில் விழுந்து நாம் மோசம் போனோம்! ஆயினும் சர்வ வல்லமையுமுள்ள நம்மை, நீ மீற முடியுமா? அதி பராக்கிரமமுள்ள இந்தக் கையை யெதிர்த்துப் போராட உன்னால் முடியுமா?

முன்னொருகால் நான் உன்னை ஒரு பிண்டமாய்ப் பிடித்துக் கட்டி, தகதகவென்று பிரகாசிக்கும், தேவமண்டலத்தின் உச்சியில், ஒரு பொற் சங்கிலியில் கட்டித் தொங்கவிட்டேன். அப்போது நீ எவ்வாறு கதறினாய். அதைக் கண்டு சினங்கொண்ட தேவர்கள், எவ்வாறு கொதித் தெழுந்து என்னை எதிர்த்தனர்? அவர்கள் கொதிப்பு என்ன பயனைத் தந்தது? இவை யனைத்தையும் நீ மறந்து விட்டனையோ? ஒலிம்பியன் மண்டபத்திலிருந்து அவர்கள் அனைவரையும் நான் தலைகுப்புறத் தள்ளினேன்; அவர்கள் அனைவரும் கரகரவென்று, சுழன்று, மதிமயங்கி, மூச்சடைபட்டுக் கீழே விழுந்தனர்.

தேவர்களுக்குச் சமமான ஹெர்க்குலீஸை முன்னிட்டே நான் இந்தக் காரியங்களைச் செய்தேன். என் அருமையான அந்த மகன் நிமித்தம், நான் அவ்வாறு பழி வாங்கினேன். என்றாலும் எனக்கு அதனால் திருப்தி உண்டாகவில்லை.

அந்த வீரன் கோவன் கரையோரமாக யாத்திரை செய்து வந்த பொழுது அவன் கப்பல் உடைந்து போய்விட்டது. அவன் தத்தளித்துக் கொண்டிருந்தான். அப்போது உன்னுடைய துர்ப் போதனைக்கு இணங்கி, உன்னால் தூண்டப்பட்ட கோரியாஸ் என்பவன், அவனைத் திருப்பித் திருப்பித் தாக்கி, மோதியடித்தான். அப்போது அவனது உயிருக்கே ஆயிரக்கணக்கான ஆபத்துக்கள் உண்டாயின. அவை அனைத்தினின்றும் நான் அவனைக் காப்பாற்றி, அவனுடைய ஜன்ம பூமியான ஆர்க்காஸுக்கு அனுப்பி வைத்தேன்.

இப்போது நாம் சொல்லும் வசனங்களைக் கவனமாய்க் கேட்டு அவற்றை மறவாமல் ஞாபகத்தில் வைத்து வா! நமது கோபம் பொல்லாதது. நம்மிடம் உனக்குக் கொஞ்சம் பயமிருக்கட்டும். உன்மேல் பழிவாங்க வேண்டுமென்று நாம் விரும்பவில்லை. வலுவில் நம்மைச் சண்டைக்கு இழுக்க வேண்டாம். நம் கோபத்திற்கும் ஆளாக வேண்டாம். உன்னுடைய மாயா ஜாலங்களும், தேனினும் இனிய இன் சொற்களும், நயவஞ்சகங்களும் கபடமான ஆசார உபசாரங்களும் இனி நம்மிடம் செல்லா! இது நிச்சயம்! பத்திரம்" என்றார்.

இடிக்கடவுள் இவ்வாறு தட தடவென்று உரைத்த கொடிய வசனங்களைக் கேட்டு, அவருக்குச் சமமான பதவியை யேற்றவரும், அவரைப் போலவே வல்லமை யுள்ளவருமான ஜூனோ தேவி திடுக்கிட்டுப் பயந்து மனங் கலங்கி, அழுது கொண்டு,

நடு நடுங்கிப் பின் வரும் மொழிகளை மிகுந்த தாழ்மையுடன் உரைத்தார் :—

" நன்னெறியைக் கடைப் பிடித்து ஒழுகும் வலிமிக்க அரசர் களின் மேலும், அன்னபானுதிகளைக் தங்கு தடையின்றிச் செழிப்பா யளித்து வரும் பூமியின் மேலும், எல்லோரையும் அணைத்து வரும் ஆகாசத்தின் மேலும், தங்கள் கருந்திரைகளின் மேலும், பூதகணங்களும் பேய் பிசாசுகளும் ஒன்றின் மேல் ஒன்று விழுந்து கொண்டுச் சறுக்கி வழுக்கிச் செல்லும் அதிபயங் கரமான பாதாள நரக லோகங்களில் பாய்ந்து செல்லும் பிரமாண்ட மான ஸ்டிக்ஸின் மேலும், அனைத்தையும் ஆக்கியளித்து அழிக்கும் புனிதரான தங்கள் சிரத்தின் மேலும் என்னுடைய மாருக்கற்பின் மேலும், ஆகிய இவை அனைத்தின் மேலும், ஒவ்வொன்ருக ஆணையிட்டுச் சத்தியம் செய்து, நான் சொல்லுவதைத் தயவு செய்து கேட்க வேண்டும்.

ஸமுத்திர ராஜன், ட்ராய் நாட்டை இரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்க வேண்டுமென்ருவது, அவன் இந்த யுத்த களத்தில் மனம் போனபடி திரிந்து வர வேண்டுமென்ருவது, நான் ஒரு வித முயற்சியும் செய்யவில்லை. ஒருவிதமான மந்திர தந்திரங் களையும், மாய மோசங்களையும், பிரயோகம் செய்யவில்லை. அவன் தானுகவே, ஆத்திரங் கொண்டும், இரக்கத்துடனும், தன்னுடைய அன்பர்களான கிரேக்கர்களுக்குப் பரிந்து சென்று, அவர்கள் பங்கிலிருந்து, சண்டை செய்து, தங்கள் ஆணையை மீறிவிட்டான்.

இது எனக்கு முன்னுடியே தெரிந்திருந்தால், தங்கள் பிரியையான நான் ஜூனே, அவனுக்கு நற்புத்தி புகட்டி யிருப் பேன்! தேவாதி தேவனது ஆணையை மறுக்கொணுது, அதற்குக் கீழ்ப்படிந்து நடப்பதே நமது கடன் என்று அவனுக்கு உபதேசம் செய்து இருப்பேன் " என்ருர்.

இந்த வசனங்களைக் கேட்டவுடன், தேவலோகத்தின் அழிவில்லாத தந்தையான ஜூப்பிடர், சந்தோஷமாய்ப் புன்முறுவல் கொண்டு, சுந்தரி! தேவராணி!! நான் நினைப்பது போலவே நீயும் நினைக்கின்ருயா? அப்படியானுல் கர்வங் கொண்ட இந்தக் கடலரசனுக்கு அவனுடைய கடமை இன்னது என்பதை நாம் அதிசீக்கிரமே அறிவிப்போம்; அவனும் அவ்வாறே நடப்பான். நாம் காட்டும் வழியிலன்றி வேறு வழியில் நடக்க அவன் துணியவும் மாட்டான்.

நீ உன் நாக்கினுல் உரைத்து வருகின்றது உண்மையே என்பது உண்மையானுல் அதோ அங்குக் காணும் ஒலிம்பியன் மலையின் மேல் பொலிவுடன் விளங்கும் சபைக்குச் சென்று, நமது ஆணையை அங்குள்ள அனைவருக்கும் கேட்கும் வண்ணம் உரத்து எடுத்து உரைப்பாயாக!

நானுவர்ண ஸ்வரூபியான ஐரிஸ்ஸுக்கும் நம் மேலான ஆணையை அறிவித்து விட்டு, வெள்ளி வில்லைத் தரித்துள்ள தெய்வத்தையும் கூப்பிடு!

அவன் கீழே இறங்கிச் சென்று, இந்த யுத்த களத்திலிருந்து விலகித் தன்னுடைய ஜல சாம் ராஜ்ஜியத்திற்குச் செல்லும்படி ஸமுத்திர ராஜனுக்கு உத்திரவு இடட்டும்.

பீபஸ்ஸும் விரைந்து வரட்டும். அதற்குள், மஹா வீரனான ஹெக்டர் தன் களைப்பை ஆற்றிக் கொண்டு, யுத்தத்தை மறு படியும் ஆரம்பித்துச் செய்வதற்காக எழுந்து வருவான். பீபஸ் பகவானைக் கண்ட மாத்திரத்தில், ஹெக்டரின் இளைப்பும், களைப்பும், தளர்வுகளும் பறந்தே போய் விடும். அவன் தன் னுடைய பெருங் கவலைகளை ஒழித்து விட்டுப் புத்துயிர் பெறுவான். எமனுலகம் வரைச் சென்ற, தன்னுடைய ஐம்புலன்களையும் ஐய மின்றித் திரும்ப அடைவான்.

ட்ராய் நாட்டார், கிரேக்கர்களை அகிலேசனது கடற் படை வரைக்கும் கூடத் துரத்திக் கொண்டு செல்வார்கள். அவர்கள் அந்த வீரனது காலின் கீழ் ஆயிரக் கணக்காய் மடிந்து விழுவார்கள். அவனும் இரக்கத்தை அறவே துறவாமல், இந்த யுத்த களத்திற்குப் பத்திரகலுஷனை அனுப்புவான். ஆனால் அதனால் ஒரு பயனும் உண்டாகாது! என்றாலும் அவன் மிகவும் அற்புதமாகவே யுத்தம் செய்வான். அம்மம்ம! எவ்வளவு இளங் காளைகள், இலியன் மதிலின்கீழ் அவனால் மடியுண்டு விடுவார்கள்! என் பிரிய புத்திரனும், தேவஸ்வரூபியான ஸார்ப்பீடனும்கூட, அவனால் தாக்குண்டு மடிந்து விடுவான். கடைசியாக அவனும் ஹெக்டரது வேலினால் மடக்கப்பட்டுத் தனது பிராணனை விட்டு விடுவான்.

இவ்வாறெல்லாம் நடக்கும்வரை மஹானான அகிலேசன் தனது இடத்தைவிட்டு அசையமாட்டான்! கடைசியாக அவன் தனது இடத்தை விட்டுப் பெயர்ந்து எழுந்திருப்பான்! அப்போது நடக்க விருக்கும் காரியங்களை நான் எவ்வாறு விரித்துரைப்பேன்! அவன் எழுந்திருக்கும் க்ஷணத்திலேயே, தேவர்களுக்கு நிகர்த் தவனான ஹெக்டர் தனது உயிரை விட்டு விடுவான்!

ஹெக்டரின் மரணம் நிகழும் முகூர்த்தத்திலிருந்தே, இந்த யுத்தத்தின் போக்கு முற்றும் மாறிவிடும். பாலாஸ் தேவி தன்னா லான உதவிகளைச் செய்வாள். இலியனும் தீப்பிடித்து எரியும். அந்த நாள் வரும் வரை ஜோவ் தேவரின் கோபமும் தணியாது. தெய்வலோகவாசிகளும் ஒருவராயினும் கிரீஸுக்கு உதவிசெய்ய வரலாகாது.

அகிலேசனது பேரும் கீர்த்தியும் நட்சத்திர மண்டலம் வரை உயரும்படி செய்வதாக நான் ஒரு தெய்வத்தின் வாக்கைக்

கொடுத்தேன் ; அந்த வாக்கு தவருது ; அது உறுதிதான் என்று ஸர்வ வல்லமையுமுள்ள நான் எனது தலையையும் அசைத்தேன். இவ்வாறு நாம் அளித்த வாக்கு தவருது, ஊழ்வினையானது அதை நிறை வேற்றியே தீரும்!'' என்ருர்.

ஸர்வ வல்லமையுமுள்ள கடவுள் இவ்வாறு இட்ட கட்டளை யைக் கவனித்துக் கேட்டு வந்த தேவலோக ராணியானவர், மிகுந்த நடுக்கத்துடன் அந்த ஐடாமுடியினின்றும் புறப்பட்டு, ஒரு குண்டு பாய்வது போல், தேவலோகத்தை நோக்கி விரைந்து பறந்து சென்ருர்.

தான் சஞ்சாரம் செய்து வந்த நாடுகளின் பரப்பையும், விசாலத்தையும், தன் மனத்தினுல் சிந்தித்துவரும் ஒரு யாத்திரிகன், எவ்வாறு தன் மனத்தை ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குச் செலுத்துவானே, குன்றுகளையும் அவைகளுக்கு இடையிலுள்ள பள்ளத்தாக்குகளையும், சமவெளிகளையும் எவ்வாறு துரிதமாகத் தாண்டிச் செல்வானே, அவ்வாறே ஜூனே தேவியானவள், புண்ணியாத்மாக்கள் வஸித்து வந்த மாளிகைகளை நோக்கி விரை வாகப் பறந்து சென்ருள். தேவர்கள் வேகத்திற்கும், மனிதரது மனேவேகத்திற்கும் உவமை கூறுவது தகாதெனினும், விஷயத்தை விளங்க வைப்பதற்காகவே, இவ்வாறு ஒற்றுமை கூறப்பட்டது.

வலிமிக்க விண்ணேரெல்லாம் அங்கு அமைதியுடனும், மௌனமாகவும் கூடியிருந்தனர். வெண்கலக்கசிதமான அந்த மண்டபத்தின் உள்ளே பிரவேஸித்து, அதன் நடுவில் அந்தத் தேவி சென்ற பொழுது, அந்தத் தேவர்கள் அனைவரும், அவருக்குத் தலைவணங்கி, வந்தன வழிபாடுகளைச் செய்தனர். நிறைந்த கிண்ணங்களுடன் அவர்கள் அந்தத் தேவியை வரவேற் றனர். அவர்கள் அனைவரையும் சுற்றிக் கொண்டு, அப்போது அமிர்தமானது ஆருகப் பெருகி வந்தது.

அழகில் சிறந்த தெமிஸ் தேவியானவள், அந்தத் தேவிக்கு முதன் முதலாகப் பானகம் நிறைந்த பொற் கிண்ணத்தை யளித்து, அந்தத் தேவியின் மனத்தில் உறைந்து வரும் கவலை என்ன வென்று, மிகவும் உருக்கத்துடன் வினவினுள். அந்த வினுவிற்கு, வெண்பணியளான அந்தத் தேவி பின்வருமாறு விடைபகர்ந்தார்:—

"நான் உனக்கு என்ன சொல்லட்டும்! விண்ணுலகை ஆண்டுவரும் வன்கண்ணன், தன் எண்ணத்தை நிறைவேற்று வதே கண்ணுங் கருத்துமாய் இருக்கின்ருன். ஓரேப் பிடியாகவு மிருக்கின்ருன். அவனது மனம் சிறிதும் இளகவில்லை; அவனது நெஞ்சம் உருகவில்லை. உனக்கு இவ்வளவு தெரிந்தால் போதாதா?

தேவலோக வாஸிகளெல்லாம் விருந்துண்ணக் காத்திருக் கின்றனர். அவர்கள் உன் வரவை எதிர்பார்த்தவர்களாகவிருக் கின்றனர். அவர்களுக்குரிய உபசாரங்களைச் செய். நீ அங்குச்

செல்; அமிர்தத்தைக் கிண்ணங்களில் வழிய வழியப் பொங்கும் படிப் பொழிந்து, சபையோர் அனைவருக்கும் சுற்றிச் சுற்றி பரிமாறு.

ஆனால் ஜோவ் தேவர் ஆகாய மண்டலமும் நடுங்கும்படித் தமது கொடிய கட்டளையை இடுவார். அவைகளைக் கேட்போர் அனைவரும் இடி இடித்ததுபோல் திடுக்கிட்டுப் போவார்கள். மகத்தான ஆபத்துக்கள் வரவிருக்கின்றன என்று அவர் பயமுறுத்து வார். அவற்றைக் கேட்டு மனித வர்க்கமே ஆச்சரியப்பட்டு, அடங்காத் துக்கத்தில் ஆழ்ந்துவிடும். அவர்களது மனமும் பனிக் கட்டியைப்போல் உறைந்து போகும்; விண்ணுலகத்தில் இருந்த வண்ணம் ஸதா அமிர்தபானம் செய்து கொண்டு விருந்துகளை அருந்திவரும் அமரர்களும், அவ்விருந்துகளை ரஸிக்கமாட்டார் கள்" என்றார்.

இந்த வசனங்களை உரைத்துவிட்டு அந்தத் தேவியானவர், மிகுந்த மனச் சலிப்புடன், தன் ஆசனத்தில் அமர்ந்தார். அப்போது தேவர்கள் ஒவ்வொருவர் முகத்தையும் கவலையானது, ஒரு பயங்கரமான காரிருளைப்போல் மூடிவிட்டது.

அவ்வாறு அவர்களுடைய மனத்திலெல்லாம், அவர்களுக்கு ஜோவ் தேவரிடம் இருந்த வெறுப்பு அதிகரித்து வருவதைக் கண் ணுற்ற அந்தத் தேவி, தான் மூட்டிய கால நெருப்பு நன்றாகப் பிடித்து விட்டது என்று சந்தோஷித்துப் புன்முறுவல் கொண்டார். அந்தத் தேவியின் உதடுகள் பொலிவுடன் விளங்கின. என்றாலும் மடிப்புகள் விழுந்திருந்த அந்தத் தேவியின் நெற்றியிலும் விற் போல் வளைந்துள்ள புருவத்திலும் மாறாத கவலையும், ஆழ்ந்த துக்க மும் குடிகொண்டிருந்தன.

அப்போது அவர் மறுபடியும் அந்தச்சபையோரை நோக்கி, பின்வருமாறு உரைத்தார் :—

" வலிமிக்க விண்ணுலக வாசிகளே! நான் சொல்லுவதைக் கவனித்துக் கேளுங்கள்! ஜோவ் தேவரை எதிர்த்துப் போராடு வது பெருத்த பைத்தியக்காரத்தனமே யாகும். அவர் எல்லோருக் கும் மேலாக உன்னத ஸ்தானத்தில் வீற்றிருக்கின்றார். அங்கிருந்த வண்ணம் அதிகார கர்வியான அவர், சில்லரைத் தெய்வங்களான நீங்கள் அவருக்கு வேண்டா வெறுப்புடன் செய்துவரும் பணி விடைகளைக் கண்ணுற்று வருகின்றார். மிதமிஞ்சிய தமது பராக் கிரமத்தினால் அவர் உங்கள் அனைவரையும் மிகக் கொடுமையுடன் அடக்கி ஆண்டு வருகின்றார். விண்ணுலக வாசிகளின் பத்திரா சனங்களனைத்தையும் ஆட்டி அசைக்கின்றார். பனைபோல உயர்ந்து விளங்குபவர்களான உங்களை வளைத்து விடுகின்றார். அமரர்களே! அவருக்கு அடிபணியுங்கள். அடங்கியிருங்கள், அவரது ஆணை அனைத்தையும் சிரமேற் கொண்டு நிறைவேற் றுங்கள்!

மஹாதேவரான மார்ஸ்பகவானே! நீரே காரியத்தை ஆரம்பித்து எல்லோருக்கும் வழிகாட்டும்! அஸ்கலேபஸ்ஸைப் பாரும்! அவன் இறந்து கிடப்பதைப் பாரும்! அதைக் கண்டு முணுமுணுக்கவோ, மூச்சுவிடவோ செய்யாதேயும்! பத்திரம்! அன்புடனும், பெருமையுடனும், "என் பிள்ளை" யென்று பராட்டிச் சீராட்டி, வளர்த்து வந்தீரே! அது உண்மைதான் என்றால், இதோ பாரும்! அந்த அன்புக்கும், பெருமைக்கும் பாத்திரனான உமது மகன் அடியற்று அழிந்து கிடக்கின்றான்!" என்றான்.

தீரனான மார்ஸ் தேவன், தனது மகன் வதையுண்டான் என்று கேட்டு மிகவும் மனங் கொதித்து எழுந்து புத்திர சோகமும் பெருந்தேவர்க்குரிய கடமையும் போராடி வந்த தனது மார்பைப் புடைத்துக்கொண்டு, பின்வருமாறு பயங்கரமாக ஆரம்பித்தார் :—

"அமரர்களே! மார்ஸ் தேவனது வணக்கத்தையும் ஒழுக்கத்தையும் காட்டுகின்றேன், பாருங்கள்! அவன் எவ்வாறு ஜோவ் தேவரின் ஆணைகளை நிறைவேற்றுவான் என்பதையும் பாருங்கள்! தேவர்களே! என்னை மன்னியுங்கள்! என்னைத் தடுக்காதீர்கள்!

நான் எனது பழிக்குப் பழிவாங்கியே தீருவேன்! நமக்குத் தடுக்கப்பட்டுள்ள அதோ காணும் களங்களுக்கு, சமர்க் கடவுளே முதன் முதலாகத் தடதடவென்று இறங்கிச் சென்று, இறந்தவனுக்கு நேர்ந்த பழியைத் தீர்த்து விடுவேன். இடியானது என் தலையின் மேல் விழுந்து, என்னைப் பொசுக்கி மலைபோல் குவிந்து கிடக்கும் பிணங்களின் மேல் என்னைக் கடகட வென்று உருட்டி விட்டாலும், விடட்டும், நான் துணிந்து விட்டேன்."

இவ்வாறு சொல்லிக் கொண்டு அவர், யுத்தத்திற்குச் செல்வதற்காகத் தம்முடைய குதிரைகளை இரதத்தில் பூட்டும்படி "பயம்", "பயந்தோட்டம்" என்னும் தம்முடைய பிருத்தியர்களுக்குக் கட்டளை இட்டார். பின்பு அவர் பயங்கரமான ஆயுதங்களையணிந்து கொண்டு, தமக்கு நேர்ந்த பழிக்குப் பழிவாங்கிவிட வேண்டுமென்று ஆத்திரத்துடன் அங்குவிட்டுப் பறந்து சென்றார். அந்த ஆயுதங்களின் ஒளியானது ஆகாயத்தையே மறைத்து விட்டது. அந்த ஒளிகளும் திரும்பி வீசின!

இவ்வாறு தமக்கு விரோதமாகக் கிளம்பினவர்களின் மேல், ஜோவ் தேவர் தமது கோபத்தைச் செலுத்தியிருந்தாரேயானால், அமரர்களில் பாதிபேர் அழிந்தே போயிருப்பார்கள்!

ஆனால் அந்த ஆபத்தைப் பாலாஸ் தேவியார் தடுத்து விட்டார். அவர் அமரரது மரபிற்கே வரக்கூடிய ஆபத்தை முன்னதாகவே தடுத்துவிடவேண்டும் என்று எண்ணியும், இந்தத் தேவனது ஆத்திரத்தைத் தடுப்பதற்காகவும், தமது நீலச் சிங்காதனத்தைவிட்டுப் புறப்பட்டு, ஒரே பாய்ச்சலில், அந்தத் திவ்விய மண்டபத்திற்குள் பிரவேசித்து, மூர்க்கனான மார்ஸின் கேட

யத்தையும், ஈட்டியையும், வெடுக்கெனப் பிடுங்கி, அவனது பிர மாண்டமான தலைச் சீராவையும் அவனது தலையினின்றும் கழற்றி, ஆத்திரத்துடன் துடித்த நராந்தகனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

"உனக்கு ஏன் இந்த அடாத கொடுங் கோபம்! ஜோவ் தேவருடனா நீ சண்டை செய்கின்றாய்? உன்னால் அவரை வெல்ல முடியுமா? உன் கட்சி தோற்றே போய்விட்டது! நீ இடிக் கடவுளின் மேலான ஆணைகளைக் கேட்டுப் பயந்து நடுங்கி ஒடுங்கி யிருக்க வேண்டாமா?

மஹாராணியான ஜுனோ தேவியின் வசனங்களைக் கேட் டும் உனக்கு நல்லறிவு உண்டாகவில்லையா? அவருடைய மொழி கள் வீணேயாயினவா? உன் சத்துருக்களால் துரத்தியடிக்கப் பட்டு, அவமானத்தால் ஆகாசமண்டலங்களுக்கு ஓட்டமாய் ஓடி வரவேண்டுமென்று நீ கோருகின்றாயா? அது உனக்குச் சம்மதம் தானா? உன் குற்றத்திற்கு உம்பர் நட்டார் அனைவரையும் உள் ளாக்கி விடலாமா?

அப்படிச் செய்வாயானால், ஜோவ் தேவர் இலியனையோ கிரீஸையோ கண்ணெடுத்தும் பாரார். அப்போது, விண்ணுலகமே ஒரு விவகார மண்டலமாய் மாறிவிடும்! குற்றவாளிகளும் குற்ற மற்றவர்களும் ஒரேயடியாய்ச் சிறிதும் வேற்றுமை இன்றி விதியின் பயனை அனுபவிப்பார்கள். ஒலிம்பியன் ராஜ்ஜியமும் அழிந்து ஒரு பெரும் பாழாக ஆகிவிடும்.

ஆதலால் உன் மகன் அக்கிரமாகக் கொலையுண்டான், என்று சொல்லுவதை நிறுத்து! அவனுக்குச் சமமான மகா வீரர் கள், ஏற்கனவே அனேகர் அழிந்து போயினர். அனேகர் இனி யும் மடியப் போகின்றனர்! மனித வர்க்கமே மரணச் சீட்டுடன் வந்திருக்கையில், ஒருவன் தான் அதற்கு விலக்காக வேண்டும் என்று கோரலாமா? மூடாத்மாவான மனிதனது பிரார்த் தனைக்குத் தேவனது ஆணையும் இணங்கவேண்டுமோ?" என்றார்.

பாலாஸ் தேவியார் இவ்வாறு அதட்டியுரைத்த வசனங் களைக் கேட்ட அந்த வீரர், தமது ஆசனத்தில் ஊன்றி உட்கார்ந்து விட்டார். அவர் கடுத்த முகத்துடன், மேன்மேலும் ஓங்கியெழுந்து வந்த பெரு மூச்சுக்களை அடக்கிக் கொண்டு, தமது இடத்தில் அமைதியுடன் அமர்ந்து விட்டார்.

பின்பு ஸாட்டர்னியா வென்னும் ஜுனோ தேவியான வள், ஜோவ் தேவரின் ஆணைப்படி, சிறகுகளுடன் கூடிய ஐரிஸ்ஸையும், பகலின் கடவுளையும் அழைத்து, "அதோ, அங்குத் தூரத்தில், சுனைகள் மலிந்த உன்னதமான ஐடாமலையின் உச்சியில் இடிக்கடவுள் வீற்றிருக்கின்றார். அங்குச் செல்லுங்கள். அவருடைய கட்டளைகளைச் செவிமடுத்துக் கவனமாகக் கேளுங்

க்ள். நம்மெல்லோருக்கும் பிதாவான அவரது ஸன்னதியில், கைகட்டி, வாய்பொத்தி நில்லுங்கள். அவருடைய பயங்கரமான ஆணைகளை ஏற்று, அவற்றை நிறைவேற்றுங்கள்" என்று கதறினர்.

அவ்வாறு உரைத்து விட்டு, அவர் தமது ஆசனத்தில் அமர்ந்த கணமே, பகலுக்குப் பளிச்சென்று வெளிச்சத்தைத் தரும் தேவரும், விவித வாகனங்களுடன் விளங்கும் ஐரிஸ் தேவியும் அந்த ஆகாய வீதியில் பறந்து சென்றனர். சுனைகளையும், வேட்டைக்கான கொடிய காட்டு மிருகங்களையும் காப்பாற்றி வரும் அழகான ஐடாமலைக்கு அவ்விருவரும் காற்றைப்போல் வேகமாகச் சென்றடைந்தனர்.

ஆதியும், மத்தியும், அந்தமும் இல்லாத தேவர் அங்குத் தான் வீற்றிருந்தார். தம் தலையைச் சிறிது மாத்திரம் அசைத்து உலகத்தையே, நடுங்கச் செய்பவரும், அதை அடக்கியாள்பவரும், உறிதியாக நின்று வரும் துருவங்களை அசைத்து ஆட்டுபவருமான அந்தத் தேவரை அவர்கள் தரிசித்த பொழுது, அவர் நறுமணங்கமழும் ஒரு பனி மழையில் மறைந்து கிடந்தார், பொன் நிறமும் ஊதா நிறமுங் கொண்ட மேகங்கள் அவரைச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தன.

அவர்கள் ஆகாய ராணியின் ஆணைப்படி அணுவளவும் தாமதியாமல் தம்மிடம் வந்து சேர்ந்து விட்டதையும் தமது ஆணைப்படிக் காரியங்களைச் செய்வதையும் கண்ணுற்று, இடிக்கடவுள் மிக மகிழ்ந்தார். பின்பு, அவர், தம்மைக் கண்டோர் மனத்தில் பீதியை யுண்டாக்கத்தக்க தமது புருவத்தின் மேல், கம்பீரமான ஒரு புன்முறுவலைக் கொண்டவராய்க் கிரணங்களைச் சரமாரியாய்ப் பொழியும் வில்லையேந்திய ஐரிஸ் தேவியை நோக்கி பின்வருமாறு உரைத்தார் :—

"ஐரிஸ்! நீ இங்கிருந்து இறங்கிச் சென்று, நமது ஆணையை மடையனும் மூர்க்கனுமான ஸமுத்திர ராஜனுக்குச் சொல்! ஒன்று அவன் இந்த யுத்த களத்தை விட்டுத் தனது அகழ்களுக்குச் செல்ல வேண்டும். அல்லது, இந்தக் கொலைக் களத்தை விட்டு ஆகாய மண்டலங்களுக்கு வந்து அங்கு உயிருடன் வாழ்ந்து வர வேண்டும்; இந்த இரண்டில், ஒன்றை அவன் செய்ய வேண்டும் என்று சொல்.

இதற்கு, அவன் மறுப்பானேல், அவன் தனக்குக் கேடு வரும் முன்னம், நாம் அவனுக்கு மூத்தவர் என்பதையும், அதிகாரத்தில் நாம் அவனுக்கு மிஞ்சியவர் என்பதையும், ஆராய்ந்து பார்க்கட்டும்.

ஸர்வவல்லமையும் உள்ள தேவ தேவன், ஸகலமான ஆயுதங்களையும் ஏந்திக் கொண்டு, இறங்கி விட்டால், அப்போது உண்

டாகக் கூடிய அனர்த்தங்களையும், அலங்கோலங்களையும் என்னுடன் போராடவா இவன் துணிந்து விட்டான்? இவனுக்கு அதிகாரம் தந்தவன் நான் அன்றோ? தேவனுக்கும் ஸமானம் உண்டோ, எதிர்த்துப் போராட இந்த ஆத்திரக்காரனால் முடியுமா? '' என்றார்.

ஸர்வ வல்லமையும் உள்ள தேவர் இவ்வாறு சொல்லிய வசனங்களைக் கேட்ட அந்தத் தேவி, இடியன் முடி சிகரத்தி லிருந்து. இறகு கொண்டு பறக்கும் ஒரு பக்ஷியைப்போல் வேகமாகப் பறந்து சென்று, புனிதமான, இலியனைச் சேர்ந்தாள். போரியாஸானது மும்முரமாக அடிக்கையில், எவ்வாறு கடகட வென்று பொழியும் ஆலங்கட்டிகளோ, அல்லது ஆட்டு ரோமத்தைப் போன்ற பனித்துளிகளோ, ஆகாயத்தை ஊடுருவிக் கொண்டு விழுமோ, அவ்வாறு ஐரிஸ் தேவியானவள், மேக மண்டலங்களிலிருந்து இறங்கி வேகமாகக் குதித்து, நீலமேனி யனான நெப்தியூனைக் கண்டு அவனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தாள் :—

'' விண்ணுலக வாசியான நமது பெருமானின் ஆணையை அறிவிக்கின்றேன்; ஆதரவுடன் கேள் என்னைப்பார்! நான் ஜோவ் தேவரின் தூதியென்பதையும் அறிந்து கொள்!

தேவர்களுக்கு விளக்கான இந்த யுத்தங்களிலிருந்து, நீ விலகிவிட வேண்டுமென்றும், அவ்வாறு விலகி உன்னுடைய அகழ்களுக்கோ, அல்லது, ஆகாய மண்டலங்களுக்கோ போய்விட வேண்டுமென்றும் அவர் உனக்குக் கட்டளை இடுகின்றார். இவ் விரண்டில் ஒன்றை நீ செய்யமறுப்பாயெனில், உனக்குக் கேடு வருமுன்னர், அவர் உனக்கு மூத்தவர் என்பதையும் நீ ஆராய்ந்து பார்க்கக் கடவை என்றும் அவர் சொல்லுகின்றார்.

ஸர்வ வல்லமையுமுள்ள தேவதேவன், ஸகலமான ஆயு தங்களையும் ஏந்திக்கொண்டு இறங்கி வந்து விட்டால், அப்போது உண்டாகக் கூடிய அனர்த்தங்களையும் அலங்கோலங்களையும் எதிர்த்துப் போராட, ஆத்திரக்காரனான உன்னால் முடியுமா? உனக்குச் சகலமான அதிகாரத்தையும் கொடுத்த தேவனுடன் நீ போராடலாமா? தேவதேவனுக்கு நீ சரியானவனா? சமமான வனா? ''என்றாள்.

இந்த வசனங்களைச் செவியேற்ற ஸமுத்திர ராஜன். சீற்றங் கொண்டு, அந்தத் தேவிக்குப் பின்வருமாறு பதி லுரைப்பார் :—

'' அகமதி நிறைந்த இந்த ஆகாச ராஜனுடைய இந்த வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம்? பாகத்தில் தனக்கு கிடைத்த விண்ணுலகங்களை அவன் தனது மனம் போனபடி ஆண்டு

வரட்டும்; நான் அவனுக்கு அடிமைப்பட்ட தேவனுமல்லன், அவனுடைய பரிவாரத்தானு மல்லன்

ஸாட்டர்னுக்கும், பூமண்டலத்தின் அழியாத் தெய்வ மாகிய ரீயாதேவிக்கும் புத்திரர்களாக நாங்கள் மூன்று சகோதரர் கள் பிறந்தோம். பெற்றோர் ராஜ்ஜியங்களெல்லாம் எங்களுக்குப் பங்கு போட்டுக் கொடுக்கப்பட்டன. எங்களது அதிகாரம் எங்கு செல்லும் என்பதை நாங்கள் நன்ருய் அறிவோம்! இருள் சூழ்ந்த பாதாள லோகத்தைப் புளூட்டோ ஆண்டு வருகின்ருன் ; பரந்தமேகங்களின்மேலும், தாராகணங்கள் நிறைந்துள்ள ஆகாச வளிகளின் மேலும், விண்ணுலக வாசியான ஜோவ்தேவன், ஏகச்சக்கராதி பதியாகத் தங்கு தடையின்றித் தன் அதிகாரத்தைச் செலுத்தி வருகின்ருன். அதிபுராதனமான அலேகளுக்கு அடியில் என் அரண்மனேயை அமைத்துக் கொண்டு, நான் அங்குள்ள அதிபுனிதமான அகழ்களிலிருந்து கிளம்பும் இரைச்சல்களே அடக்கிக் கொண்டு வருகின்றேன்.

ஒலிம்பஸ்ஸுும், இந்தப் பூமியும் எங்கள் எல்லோருக்கும் பொது. அவ்வாறிருக்க, ஆகாயத்தில் அட்டகாசம் செய்துவரும் இவனுக்கு இங்கு என்ன வேலே ? இவனது அதிகாரம் இங்குச் செல்லுமா? அதோ நெடுந்தூரத்திலுள்ளமேகங்களின்மேல்,அவன் தனது அதிகாரத்தை காட்டட்டும். கோலேந்திகளான இளந் தம்பிமார்களே வெருட்டி யுருட்டி மிரட்டட்டும்! பயந்து நடுங்கிக் கொண்டு பணிவிடைகள் செய்து வருபவர்களும், தேவ பரம் பரையில் இரண்டாம் தலேமுறையில் வந்தவர்களுமான தன்னு டைய குழந்தைகளுக்கே அவன் தனது கட்டளேயை இட்டு வரட்டும் !" என்ருர்.

அவ்வசனங்களேக் கேட்ட அந்தத் தேவி, "ஐயா ! வெள் ளங்களின் தலேவரே ! இந்தக் கொடிய மறுமொழியையா நான் தேவராஜனுக்குக் கொண்டு செல்லட்டும் ? இது சிறிதும் தகாது, இது சரியல்ல, நியாயமல்ல ; உமது மூர்க்க குணத்தை விட்டு விடும். உமது மனத்தை நல்ல வழியில் திருப்பும். இன்னும் காலம் தவறிப் போகவில்லே.

ஒரு நல்ல மனிதன் தன்னுடைய தவறுகளுக்கு வருந்து வது தனக்கு இழுக்கைத் தரும் என்று ஒருக்காலும் நினேக்க மாட் டான். தங்களேயும், தெய்வங்களேயும் அவமதிக்கும் துஷ்டர் களேத் தண்டித்து வருவதற்காக, மூத்த ஸகோதரர்களுக்கெல்லாம் அஸுர கணங்கள் பிருத்தியர்களாயிருக்கின்றனர்" என்ருள்.

இந்த வசனங்களுக்கு அந்தத் தேவர் பின்வருமாறு மறு மொழி பகர்ந்தார் :—

" விவேக புத்தியுள்ள மந்திரியினுல், விசேஷமான நன்மை களே உண்டாகும். உம்முடைய யோசனேகளே ஏற்றுக்கொண்டு,

என் பிடிவாதத்தினுல் விளையக் கூடிய பெருங்கேடுகளுக்குத் தப்பும் நிமித்தம், நான் அதிபலவானுன ஜோவ்தேவன் சொல்லிய படியே செய்கின்றேன். கொடுங் கோபத்துடனேயே இந்த யுத்த களத்தையும் விட்டு அகன்று விடுகின்றேன்.

நாங்கள் இருவரும் ஏற்றத் தாழ்வில்லாத கௌரவமும், பிறப்புமுடையவர்கள். அவன் என்னை இவ்வாறு மிரட்டுவது சிறிதும் நியாயமல்ல வென்றே நான் எண்ணுகின்றேன். அதோடு, அவன் ஹெர்மீஸுக்கும், பாலாஸுக்கும், தேவ லோகராணிக்கும், தான் கொடுத்த வாக்குறுதியை மறந்தவனுய், துரோகிகள் வாழும் இந்த இலியனுக்கு மாத்திரமே சகாயம் செய்வானுனல், தேவலோக வாசிகளில் பாதிப்பேர் அவனுக்கு விரோதிகளாய் ஆகிவிடுவார்கள். அவனுடைய அக்கிரமங்களை மற்றைய தேவர்கள் ஒரு வேளை மன்னித்து விட்டாலும், அதோ அங்குக் கம்பீரமாக விளங்கும் கட்டிடங்களைக் கிரீஸ்காரர்கள் தரைமட்டமாக்கித் தகர்த்து இடித்து விட்டாலன்றி நெப்தியூனது கோபமானது தணியவே தணியாது என்று அவனுக்குச் சொல்லுவீர்" என்ருர்,

இந்த வசனங்களை உரைத்துக்கொண்டே, அவர் மிகுந்த கோபத்துடன் தடதடவென்று புறப்பட்டு, ஜல ஸமிருத்தியான கடலில் ஆழ்ந்துவிட்டார்!

தமது உன்னதமான ஸ்தானத்திலிருந்து இந்த ஸம்பவத்தைக் கண்ணுற்று வந்த இடிக்கடவுள், தினகரனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தார் :—

" திரவரூபமான தன்னுடைய கைகளைக்கொண்டு, பூமண்டலத்தை அணைத்துக் கொள்பவனும், தன்னுடைய பூகம்பங்களால் பூமியை அசைத்து ஆட்டுபவனுமான அந்தத் தேவனை, அதோ பார்! அவனுக்குக் கடைசியாகப் புத்திவந்து விட்டது! நமக்கு விரோதமாக எழுந்து கலகம் செய்யலாகாது, யுத்தம் செய்யலாகாது என்று அவன் அடங்கி விட்டான். தனக்குச் சொந்தமான சமுத்திரங்களை நாடிப்போகின்ருன். நமது கோபத்துக்குப் பயந்து நடுங்குகின்ருன்!

அவன் அப்படிச் செய்திராவிட்டால், தேவலோகத்திலுள்ள சகலமான தேவர்களுடைய சிங்காதனங்களையும் ஒரே குலுக்காகக் குலுக்கிக் சக்கர வளையம்போல் ஆட்டிவைக்கும் நமது கோபத்தினுல், அவனுடைய அகாதமான அழ்கடல்களெல்லாம் கூடத் அடித்தரைவரை நெருப்புக்கிரையாக வன்ருேபோயிருக்கும்! அதிபாதாளமான நரகலோகங்களில் கிழவனுன ஸாட்டர்ன் தேவனைச் சுற்றி வளைத்துக்கொண்டுவரும் பரிவார தேவர்களுங் கூட, அப்போது நமது இடிமுழக்கங்களைக் கேட்டிருப்பார்கள்!

அவன் செய்ய நினைத்த குற்றம் மிகவும் பெரியது. அதை அவன் செய்திருந்தால், அவனுக்குச் சரியான தண்டனையும்

கிடைத்திருக்கும்! அந்தக் குற்றத்தைச் செய்யாமல் பின்வாங்கியதால், அவன் அந்தத் தண்டனைக்குத் தப்பினான். அந்தக் குற்றத்தை மாத்திரம் அவன் செய்திருந்தால், மஹாபலவானான அவனுக்குங்கூட நம்முடன் பொருவது அசாத்தியமான காரியம் என்று அறிந்திருப்பான்!

ஆதலால், எனது மகனே! நீ அந்த யுத்த களத்திற்குச் சென்று, எனது அகன்ற கொடியை உன்னுடைய கைகளில் ஏந்திக் கொண்டு வேகமாகக் குலுக்கு; ஏற்கனவே நடுங்கிக் கொண்டிருக்கும் கிரேக்கர்கள் மனதைக் கலக்கு.

தேவர்களுக்குச் சமானமான ஹெக்டரை மாத்திரம் விசேஷமான அக்கரையுடன் பாதுகாத்துக்கொள். ஏற்கனவே தைரியமுள்ள அவனுக்கு மேன்மேலும் உற்சாகத்தைக் கொடுத்து, அவனது மனம் பொங்கும்படிச்செய்,! தன் முழு பலத்துடன் யுத்தத்திற்கு முன் செல்லும்படி அவனைத் தூண்டு!

அக்கேயன்மார் யுத்தத்திலிருந்து புறங்கொடுத்தோடித் தங்களுடைய கப்பல்களில் ஏறிச்சென்று, ஹெல்லஸ்ப்பாண்டு சேரும் வரை இலியன் வெற்றியுடன் விளங்கட்டும்! அதன் பின் கிரீஸ்காரரும் சிறிது சிரம பரிகாரம் செய்து கொள்ளட்டும்!'' என்றார். அந்தத் தேவரின் ஆணைப்படியே, ஜோவின் ஆணைப்படியே, ஜோவின் மகனும் காரியங்களைச் செய்தான்.

அப்போது பீபஸ் பகவான், அந்த இடியன் மலைச் சரிவிலிருந்து, அம்புபோல் செங்குத்தாய்ப் பாய்ந்து, அம் மலையின் அடியில் இருந்த சம நிலத்தை நோக்கிச் சென்ற வேகத்தை எவ்வாறு வருணிப்பேன்!

ஆகாய வீதியில் ஸர்வ ஆடம்பரங்களுடன் சஞ்சரித்து வரும் ராஜாளி சலசலவென்று காற்றடித்துவரும் அந்த ஆகாய வீதியில் பறந்துவரும் மணிப் புறுவைத் துரத்திக்கொண்டு செல்லுகையில், அந்தச் சூரிய பகவானது வேகத்தில் பாதி வேகத்துடன் கூடச் செல்லுவதில்லை!

சூரிய பகவான் அங்கு வந்தபொழுது, ஹெக்டர் ஜாந்தஸ் நதியோரத்தில் உட்கார்ந்திருந்தான். அவன்மேல், காற்றும் ஹிதமாக அடித்துக் கொண்டிருந்தது. அதனால், அவனுக்குப் போன உயிரும் கொஞ்சம், கொஞ்சமாகத் திரும்பிவந்துகொண்டிருந்தது. அவனுடைய நாடிகள் துடித்தன. அவனுடைய அவயவங்களும் ஜீவகளையுடன் உயர்ந்து எழுந்தன. அப்போது, அவனுடைய பிரிய நண்பர்களும் அவனுக்குக் கட்புலனாயினர். அவனுடைய சங்கடங்களை ஜோவ் பகவான் தமது மனதில் நினைத்த மாத்திரத்தில், அவையனைத்தும் பறந்துபோய்விட்டன.

அந்த வீரனை நோக்கி, கனக நிறம்வாய்ந்த பகற்பொழுதின் அதிபதியான தேவன், "மஹானான ஹெக்டர், யுத்த களத்துக்கு

வெகுதூரத்தில் உட்கார்ந்து இருப்பானேன்? என்ன துக்கம், என்ன காரியம், உன்னை யுத்தத்திற்குப் போவதினின்றும் தடுத்து விட்டது?'' என்றான்.

தளர்வுற்றிருந்த அந்த வீரன் தனது தலைக்குமேல், பளிச் சென்ற வெளிச்சத்துடன் நின்ற அந்தத் தேவனது உருவத்தைக் கண்டு, அதுவரை மூடியிருந்த கண்களை அரைவாசி திறந்து, "மரண நித்திரையில் அழுந்திக் கிடக்கும் ஹெக்டரை, இவ்வாறு அதட்டி யெழுப்பும் தெய்வம் யாரோ தெரியவில்லை; அந்தத் தெய்வத்தை நான் வாழ்த்துகின்றேன்!

என்றுந் தவருத எனது உடைவாளானது கிரேக்கர்களைச் சங்காரம் செய்து, அவர்களுடைய இரத்தத்தைக் குடித்துக் கொண்டும், யுத்த களத்தில் அவர்களுடைய பிணங்களைக் குவித்துக்கொண்டும் வருகையில், அதிபலவானுன அஜாக்ஷன், என்னை ஒரே ஒரு அடியில் அடித்துக் கொன்று, பாதாள உலகத் திற்கு அனுப்பிவிடுவான் என்று எல்லோரும் சொல்லி வந்தார் களே! அந்தக் கம்பீரமான மொழி பொய்யாகிவிட்டதோ? நான் இன்னும் உயிருடன் பிழைத்துத் தானே இருக்கின்றேன்! என்னுல் வதையுண்டவர்களின் உயிர்கள் தடதடவென்று இறங்கிப்போவது போலவும் தோன்றுகின்றது. இருள் சூழ்ந்த நரகத்தில் நிகழும் கோர நடவடிக்கைகளும், எனது கண்முன் தவழ்ந்து செல்லு கின்றன'' என்றான்!

அதைக் கேட்ட அப்பாலோ தேவர், "உனக்கு இனிக் கவலை வேண்டாம்! என்னைப்பார்! உனது மனத்தையும் தேற்றிக்கொள். உனக்கு உதவி செய்வதற்காகவே, இடிக் கடவுள் என்னை இங்கு அனுப்பி இருக்கின்றார்! நான் யாரென்று உன்னுடைய கண்களைத் திறந்து உற்றுப் பார்!

உனது உற்ற தெய்வமான பீபஸ் பகவான் தன்னுடைய ஆயுதங்களை ஏந்திக்கொண்டு உனது பங்கிலிருந்து, உனக்கு உதவி செய்வான். பீபஸ் பகவான் இன்னும் உன்னையும் ட்ராயையும் இரட்சிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாக விருக் கின்றான்.

ஆதலால், நீ, வீர மொழிகளை உரைத்து உன் வீரர்களை உற்சாகத்துடன் முன் செலுத்து! வேகமுள்ள உன் குதிரை களையும் கப்பலை நோக்கி வேகமாக ஓட்டு! தீப்பொறிகளைக் கக்கிக்கொண்டு ஓடும் உன்னுடைய குதிரைகளுக்கு நானே வழி காட்டியாக இருப்பேன்! கிரேக்கர்கள் அனைவரையும், கடலில் விழும்படி தலை குப்புற ஓட்டிவிடுவேன்'' என்றார்!

ஜோவ் தேவரின் புத்திரர் இவ்வாறு ஆகாயத்தில் இருந்த வண்ணம், தைரியசாலியான ஹெக்டருக்குத் தம்முடைய வசனங் களை யுரைத்து, அவனது மனத்தில் அழியாத ஆற்றலை உண்டாக்கினர்.

பெருந்தீனி தின்று பெருத்துப் போய்விட்ட ஒரு குதிரையை, அதன் தொழுவத்தில் கட்டாமல் விட்டு விட்டால், அது தனது லாயத்தில் இருந்து வெளியேறித் தடதடவென்று புறப்பட்டு வெளியே பாய்ந்து ஓடுகின்றது. அப்பொழுது, அது தனது வழியில் உள்ள மரங்களைத் தாண்டி, முட்டி, மோதியதனுலும், அவைகளால் மோதுண்டதனுலும், தனது இருபுறமும் சொட்டச் சொட்ட வழிந்துவரும் வியர்வைகளைக் கழுவிக்கொள்ளவும், தனது உடலில் உண்டாகி விட்ட இரத்தக் கொதிப்பைத் தணித்துக் கொள்ளவும், ஒரு பெருத்த நீர் நிலையை நோக்கி ஓடுகின்றது. அச் சமயம், அது, கடிவாளக் கயிறு இல்லாத தனது தலையை ஆகாய மளாவித் தனக்கு எட்டின மட்டும் உயர்த்திக் குலுக்கி ஆட்டு கின்றது. அப்போது, சிடுக்குவிடுத்து, ஒழுங்காக வாரப்பட்டிருந்த அதன் பிடரிமயிர் கட்டழிந்து, அதன் தோள்களின் மேல் பறக் கின்றது. இத்தகைய ஆர்ப்பாட்டங்களுடன், அது, தனக்கு நன்ருகத் தெரிந்த சமநிலத்தில் மேய்ந்துவரும் பெண் குதிரைகளை நாடிச் சென்று, அவற்றை முகர்ந்து பார்க்கின்றது. அதன் பின், அது அதிகுதூகலத்துடன், தான் மேய்ந்து வரும் வயல்களை நோக்கித் துள்ளிக் குத்து ஓடி விடுகின்றது !

சூரிய பகவானது வசனங் கேட்டு மனம் பூரித்த ஹெக்டரும், இந்தக் குதிரையைப் போலவே மிகுந்த உற்சாகத் துடன் பறந்து சென்ருன், அவனது பிருத்தியர்களும் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர்.

மலையாட்டையோ அல்லது கலைமானின் பெண்ணி னத்தையோ, வேட்டையாடிப் பிடிக்க வேண்டுமென்ற எண்ணத் துடன் புறப்பட்டுச் சென்ற வேடர்களும், அவர்களுடைய நாய் களும், ஒன்ருய்ச் சேர்ந்து, தங்களுடைய காரியங்களை ஆரம்பிக்கையில், அந்த மிருகங்கள், வேடர்களுடைய கொடுமை களுக்கு ஆளாகாமல், கற்பாறைகளின் இடையில் ஒளிந்து கொண்டு, க்ஷேமமாகப் பதுங்கிக்கொள்ளுகின்றன. அச்சமயம், அவை வேடர்களுடைய கொடுமைகளுக்கும், அவர்களால் உண்டாகக் கூடிய மரணத்திற்கும் தப்பி விடுகின்றன !

ஆனுல் அதே சமயத்தில் ஒரு சிங்கமானது அவர்கள் வழியின் குறுக்கே வந்து விட்டால், அம்மம்ம ! அப்போது என்ன கலவரம் உண்டாகி விடுகின்றது !! அக்கணமே வேடர்கள் நாடி வந்த இரைப் பொருளான மிருகங்களும் வேடர்களும் பறந்து ஓடிப் போய் விடுகின்றனர்.

அவ்வாறே இதுவரை தங்களுடைய சத்துருக்களைத் துரத்திக் கொண்டும், மலைபோல் அவர்களுடைய பிணங்களைக் குவித்துக் கொண்டும், இரத்தத்தை ஆருகப் பெருக்கிக்கொண்டும், அதிலேயே நடந்து முன் சென்று கொண்டும் ஜயசீலர்களாக விளங்கிய கிரேக்கர்கள், உக்கிரஸ்வரூபியான இந்த ஹெக்டரைக் கண்ட உடனேயே மேன்மேலும் வெற்றிபெற வேண்டுமென்று

தாங்கள் கொண்டிருந்த ஆவலை அறவே மறந்தனர் ; பிழைத்தால் போதும் என்ற பயத்தில் ஆழ்ந்தனர் !

இந்தப் பயங்கரமான ஸம்பவத்தைக் கண்ணுற்றபொழுது, தோவாஸ் என்பவன் துயர்க் கடலிலேயே ஆழ்ந்து போய் விட்டான் ! ஈட்டோலியாவிலிருந்து வந்த வீரர்கள் எல்லோரிலும் அவனே மிகுந்த தைரியசாலி. தனது ஈட்டியை வெகு தூரம் வரை செல்லும்படி எய்வதில் அவன் அதிஸமர்த்தன் ; ஆளுக்காள் எதிர்த்து நின்று கை கலந்து யுத்தம் செய்யவும் அவன் அஞ்சாதவன் ; இனிய வசனங்களை அழகாக எடுத்துரைத்துத் தன்னைக் கேட்டோரை தன்வசப்படுத்துவதிலும் அவன் அதிநிபுணன். இந்தக் காரியத்தில் அவனை ஒரு தெய்வத்திற்கே இணையாகச் சொல்லலாம். சமயோசிதமான நல்ல யோசனைகளைச் சொல்லுவதிலும், இவனுக்குச் சமமான வீரர்கள் அந்தக் கிரேக்கர்களது குழாத்தில் அனேகர் இருக்கவில்லை.

ஹெக்டரைக் கண்ணுற்ற பொழுது அவன், " அஹோ ! தெய்வங்களே ! இது என்ன கொடுமை ! இது எனது கண்ணைத் துளைக்கின்றதே ! இருள் சூழ்ந்த ஸ்டிஜியன் நரகத்திலிருந்து புறப்பட்டு இந்த ஹெக்டர் வருகின்றனே ! சிறிது முன்புதானே இடிபோன்ற அஜாக்ஷன், இவனை நம் கண்முன்பாக அழித்துக் கொன்று வீழ்த்தினன் ; எந்தத் தெய்வமோ இவனை இந்தப் பயங்கரமான யுத்தகளத்திற்குத் திரும்பவும் கொண்டுவந்து விட்டதே ! இது என்ன கஷ்டகாலம் ! கிரேக்கர்களில் பாதிபேர் மாண்டு கிடக்கின்றனரே ! இது போதாதோ ? மீந்துள்ளவர்களையும் அழித்துவிட வேண்டுமென்று எந்தத் தெய்வமோ, கங்கணம் கட்டிக்கொண்டு விட்டதே !

ஜோவ் தேவரே ! உம் உறுதியான ஆணையின்றி, இவன் இங்கே வரமாட்டான் ! இது நிச்சயந்தான் ! அம்மம்ம ! இவன் இன்னும் உயிருடன் இருப்பதுமன்றி, நம்மெல்லோரையும் துரத்திக் கொண்டு வருகின்றனே ! நம்மை வென்றும் வருகின்றன் !

என்றாலும், எனது துணைவர்களே ! நான் சொல்லும் யோசனைகளைக் கேட்டு, இவனது கொழுப்பைக் கொஞ்சம் அடக்குங்கள் ! கிரேக்கர்களில் பெரும்பாலோர், நமது கடற்படைக்குச் சென்று, அதைக் காத்து வரட்டும். இரத்தக் கொதிப்புடன் துடிப்பவர்களான சிறு பான்மையோர், இங்கேயே அசையாமல் நின்றுகொண்டு, இனி நடக்கவிருக்கும் யுத்தத்தின் ஆரம்பத்திலிருந்தே இவனை யெதிர்த்தும் இங்குப் பெருத்த குழப்பத்தை உண்டாக்கிக் கொண்டும் வரட்டும் !

நீங்கள் உங்களுடைய ஆயுதங்களை இவ்வாறு நீட்டிக் கொண்டு நில்லுங்கள் ! தன்னைப் போலவே வீராவேசங் கொண்ட சத்துருக்கள் தன்னை யெதிர்த்து வருகின்றனர் என்று கண்டு, இந்த ஹெக்டரும் நடுங்கட்டும் ! இவனும் பயம் என்பது எவ்வாறு இருக்கும் என்பதை அறியட்டும் " என்றான்.

இவ்வாறு இந்த வீரன் உரைத்த வசனங்களைக் கேட்ட கிரேக்கர்கள் எல்லாம், இவன் சொல்லிய வண்ணமே செய்தனர். அவர்கள் அனைவரும், தங்களுடைய அணிகளில் நெருங்கி நின்று கொண்டு, அந்த விசாலமான களத்தை நிறைத்து விட்டனர்.

அஜாக்ஷர்கள் இருவரும், டியூஸரும், மெரியோனும், கிரீட்டர்களுடைய தலைவனும், மார்ஸ் தேவருக்கு ஸமமான மிஸீஸும் தங்கள் தங்கள் சேனைகளை யுத்த ஸன்னத்தர்களாகும்படி ஆணை இட்டனர்! அவர்கள் தங்களுடைய சேனாவீரர்களைத் தட்டியெழுப்பி, அவர்களுக்கு ஊக்கமளித்தனர்! சத்துருவை நாடிச் சென்று, அன்று நடக்கவிருக்கும் யுத்தத்தை தைரியத்துடன் நடத்தும்படி, அவர்களுக்குக் கண்டிப்பான உத்திரவுகளை இட்டனர்!

அவர்களின் பின்புறத்தில்! கடற்படையின் இருமருங்கிலுமிருந்து, அதைக் காப்பாற்றவும், கடற்கரைகளை எதிரிகள் ஆக்கிரமிக்காமல் தடுப்பதற்கும் கணக்கற்ற சேனாவீரர்கள் ஆயுதபாணிகளாக நின்று கொண்டனர்.

அவர்கள் எல்லோருக்கும் முன்பாக துரோஜர்கள் திரள் திரளாகத் தடதடவென வந்தனர்! அந்த துரோஜர்களது தலைவரான ஹெக்டரே அவர்கள் எல்லோருக்கும் வழிகாட்டிக் கொண்டு, உயர்ந்த ஒரு கோபுரத்தைப் போல் அவர்களின் முன்னாக வந்தான்.

இவ்வாறு யுத்தம் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருந்த துரோஜர்களையும், அவர்களது தலைவனையும், உருண்டு புரண்டு வரும் ஒரு வெள்ளத்தைப் போல் இழுத்துக் கொண்டு, பீபஸ் பகவானும் முன் வந்தார். அப்போது பளிச்சென்று விளங்கும் அவரது சிரமானது, மேகங்களில் மறைந்தே போய் விட்டது! அவர் தமக்கு முன்னால் ஜோவ் தேவரின் பிரமாண்டமான கேடயத்தை உயர்த்தித் தூக்கிப் பிடித்துக் கொண்டுமிருந்தார். அதன் பிரகாசமானது, ஒரு மிகுந்த கெட்ட சகுனமாகவே தோன்றியது! அதினின்றும் விழுந்த நிழலும் அந்த யுத்த களத்தையே மறைத்து விட்டது! சத்துருக்களைச் சிதறடிப்பதற்கும், மனிதர்களைப் பயமுறுத்துவதற்கும் உதவிவருமாறு இந்த அழிவில்லாத கேடயத்தை வல்க்கன் தேவன், ஜோவ் தேவனுக்கு ஒரு வெகுமானமாக அளித்திருந்தான்.

இந்தக் கேடயத்தைக் கண்ணுற்ற பொழுது, கிரேக்கர்கள், இக்கணமோ, அடுத்த கணமோ, தங்களுக்கு ஒரு பெருத்த ஆபத்து வர இருக்கின்றது என்று நினைத்துத் திகில் அடைந்தனர்; ஒடுங்கினர்! பலபாகங்களிலுமிருந்த அவர்களுடைய அணிகளிலிருந்து, குய்யோ, முறையோ, என்ற கூக்குரல்கள் எழுந்தன! அந்தக் கூக்குரல்கள் எல்லாம் ஒன்றுய்க்கூடி, ஆகாயத்தையே நிறைத்தும் விட்டன!

வீரர்கள் விடுத்த சரங்களெல்லாம் அவற்றைக் கண்டோர் கலங்கும்படிச் சீறிக்கொண்டு வேகமாகப் பறந்து சென்றன ! வீரர் களின் விற்களின் நாண்களிலிருந்து குதித்தெழுந்த அம்புகள், பல்வேறு விதமான இராகங்களுடன் இசைத் தொலித்தன. அந்த அம்புகளில் சில சுத்த வீரர்களைக் கொன்று, அவர்களது உடலில் ஊறிவந்த இரத்தத்தைக் குடித்தன. மற்றுஞ் சில அவ்வாறு கொடுங் கொலை செய்யாமலும், தங்களது தாகம் தணியாமலும், மண்ணின்மேல் விழுந்து விட்டன !

பீபஸ்பகவான், ஜோவ் தேவரின் கேடயத்தை ஏந்திப் பிடித்துக் கொண்டு, அந்த யுத்த களத்தில் சிறிதும் அசையாமல் நின்றுவந்த வரைக்கும், அன்றைய தின யுத்தமானது எவ்வாறு முடியுமென்பது நிச்சயிக்க முடியாமல் சந்தேகத்துக்கு இடமாகவே இருந்தது. அவர் அந்தக் கேடயத்தை ஆகாயமளாவி உயரத் தூக்கிப்பிடித்துக் குலுக்கியாட்டி, சைனிகர்களது காது செவிடு படும்படி உரத்துக் கூவியும், அவர்களுடைய கண்கள் கூசும்படி பளிச்சென்று மின்னியும் வந்தபொழுது, கிரேக்கர்கள் ஒவ்வொரு வரது மனத்திலும் இடி இடித்தாற் போன்ற பீதி உண்டாயிற்று. அவர்கள் வலி குன்றிப் பயத்தின் வசமாயினர்.

இரண்டு கொடிய சிங்கங்கள் மலைச்சரிவிலிருந்து இறங்கி வந்து, அதன் அடிவாரத்திலுள்ள இருள் சூழ்ந்த காட்டில் வசித்து வரும் ஸகலமான மிருகங்களையும் ஸம்ஹாரம் செய்து வருகையில், தங்களது காவலனை இழந்துவிட்ட காளைகள் எவ்வாறு வெளிச்ச மில்லாத அந்த இருட்டில், திக்கும் திசையும் தெரியாமல் சிதறுண்டு நாற்புறமும் ஓட்டம் பிடிக்குமோ, அவ்வாறே கிரேக்கர்ககளும் தங்களது அணியிலிருந்து பிரிந்து நாற்புறமும் ஓட்டம் பிடித்தனர்.

ஆகாயத்திலிருந்த வண்ணம் பீபஸ்பகவான் அவர்களுக்குப் பயத்தை உண்டாக்கி வந்தார். அவர்களுக்குப் பின்புற மிருந்த ட்ராய் வீரர்களும், ஹெக்டரும் இடியைப் போல் முழக்கம் செய்தனர். அப்போது வீரர்கள் மலைகளைப் போல் இடிந்து குவிந்து விழுந்தனர். இந்தச் சத்துரு ஸம்ஹாரத்தில் ஹெக்டரே முதல்வனாக முன்னணியில் நின்றான்.

முதன்முதலாக, மஹாவீரனான ஆர்ஸேஸிலாஸ் என்பவனும், அவனுக்குப் பின், ஸ்டிக்கியஸ்ஸூம் தங்களது இரத் தத்தை வடித்தனர். இவர்களில் ஒருவன், வீரர்களான பியோஷி யர்களின் மாறாத அன்பிற்குப் பாத்திரமானவன். மற்றவன், மெனிஸ்தீயூஸின் அன்பனும் அவனுக்குச் சமமான வீரசூர புஜபல பராக்கிரமங்களுடையவனுமாக விருந்தவன்.

ஈனியஸ் என்பவனையும் மீடான் என்பவனையும் இயாஸ் என்பவனையும் வெட்டித் தொலைத்தான்! பின்னையவன் பீலஸ்ஸின் மரபில் வந்தவன்! அத்தீனியர்களுக்குத் தலைமை வகித்து, அவர்களைக் கூட்டிவந்தவன். அதிர்ஷ்ட ஹீனனான

மீடான் என்பன், ஆயிலியஸ் மரபினின்றும் உதித்தவன். அவன் அஜாக்ஷனுக்குச் சகோதரன் என்னும் முறையில் பிரதிலோம ஜாதியில் பிறந்தவன். கோபங் கொண்ட மரபியின் சூழ்ச்சியினால் வீட்டிலிருந்தும், நாட்டிலிருந்தும், துரத்தப்பட்டவனாக, அவன், பைலேஸியில் வசித்து வந்தான். அவனுடைய ஆற்றல்களும் ஆயுளும் இங்குச் சொல்லிய பிரகாரம் ட்ராயில் அஸ்தமித்துப் போய்விட்டன!

அடுத்தபடியாக, மெஸிட்டிஸ் என்பவன் பாலிதாமஸ் அழித்து ஒழித்து விட்டான்! வீரியவானான குளோனியஸ்ஸே! உன்னை, மஹாவீரனான அஜினர் அடித்துக் கொன்று விட்டான்!

வெட்கம் கெட்ட தயோக்கஸ் என்பவன் மானமிழந்து, யுத்தகளத்தை விட்டுப் புறங்கொடுத்து ஓடினான்! அவனை நோக்கிப் பாரிஸ் ஓர் அம்பை எய்ய, அது அவனைத் தோளில் குத்திக் கிழித்து விட்டது.

எச்சியஸ் என்பவனைப் போலிட்டிஸின் ஆயுதமானது வெட்டித் தள்ளிவிட்டது.

இவ்வாறு தோற்றும் உயிரையும் துறந்துவிட்ட வீரர்களை எல்லாம், வெற்றி பெற்ற துரோஜர்கள் ஒரு மலைபோல் அடுக்கி, அவர்கள் அணிந்திருந்த ஆயுத ஆடை ஆபரணங்களைப் பறித்துக் கொண்டனர்.

அப்போது எஞ்சி நின்ற கிரேக்கர்கள், இன்னது செய்வ தென்று அறியாதவர்களாய், மதிமயங்கித் திகைத்து நாற்புறமும் ஓடினர். அவ்வாறு ஓடியவர்களில் சிலர் தட்டுத் தடுமாறிக் கொண்டு, கீழே விழுந்து மடிந்தனர். சிலர் அகழ்களை நாடிச் சென்று அவைகளுள் ஒளிந்து கொண்டனர்.

இவ்வாறு அவர்களில் சிலர் திகிலுடன் நாற்புறமும் ஓட்டம் பிடித்துக் கொண்டும், மற்றும் சிலர் மூச்சு விடவும் முடியாமல் திணறிக் கொண்டுமிருக்கையில், அந்தக் களத்தில் யமதர்ம ராஜன், தனது பயங்கரமான உருவத்தைத் தரித்துக் கொண்டும், தன்னுடைய ஸர்வாதிகாரங்களையும் செலுத்திக் கொண்டும் ஸைனிகர்களைச் சங்கரித்து வந்தான்.

அப்பொழுது இராவைப்போல் கறுத்த கவலைகளில் ஆழ்ந் திருந்தவனும், மஹா தைரியசாலியுமான ஹெக்டர், தடதட வென்று ஓடிவந்து, கொள்ளையடித்து வந்தவர்களைத் தடுத்து, அவர்களுக்குக் கிரேக்கர்களுடைய கடற்படைகளைச் சுட்டிக் காட்டிப் பின்வரும் வசனங்களை யுரைத்து, யுத்தத்தை ஊக்க முடன் செய்யும்படி வற்புறுத்தினான் :—

"தெய்வங்களின் மேல் ஆணையாய்ச் சொல்லுகின்றேன், கேளுங்கள்! எவன் ஓட்டம் பிடிக்கின்றானோ, எவன் ஒன்றும் செய்யாமல் கையைக் கட்டிக்கொண்டு நிற்கலாம் என்று மாத்திரம் நினைக்கின்றானோ, அவனை இதோ! இந்தக் கை வெட்டித்தள்ளி விடும்! இந்தக் கையினால் அவன் மடிந்தே போவான்! அப்போது கண்ணீர் வடிக்கும் அவனது சகோதரியானவள் குழிந்து போய் விட்ட அவனது கண்ணை மூடவும் வரமாட்டாள்! அவனுடைய நண்பர்களில் ஒருவனாயினும் அவனுக்குக் கட்டை யடுக்கவும் வர மாட்டான்!! கிடைத்தற்கரிய இந்த நல்ல தருணத்தில், கொள்ளை யடிக்கலாம் என்று நினைத்தவனை, பக்ஷிகள் சுக்கல் சுக்கலாகக் கிழித்துவிடும்! நாய்களும் அவனை விழுங்கிவிடும்!" என்றான்.

இவன் இவ்வாறு சுடு சரங்களைப் போல் உரைத்த வசனங் களைக் கேட்ட பொழுது, வீரர்களின் சாட்டைகள் எதிரொலிகளைக் கிளப்பிக் கொண்டு ஒலித்தன! குதிரைகள் பறந்தன! இரதங்கள் எல்லாம் புழுதியையும் புகையையும் கிளப்பிக் கொண்டு, துள்ளிக் குதித்தோடின! ஸைனிகர்கள் தலைகால் தெரியாமல் ஒருவர் மேல் ஒருவர் விழுந்து கொண்டு, தடதடவென்று ஓடினர். அப்போது அவர்கள் இட்ட கூக்குரல்களும் இரைச்சல்களும் அந்தக் கடற் கரையையே நடுங்கும்படி செய்து விட்டது! குதிரைகள் இடியைப் போல் முழங்கின, நீரும் நிலமும் ஒன்றாய்ச் சேர்ந்து நடுங்கின, கர்ஜ்ஜித்தன.

அப்போது அதுவரை அந்த அகழியின் ஓரமாக அசையாமல் நின்று கொண்டிருந்த அப்பாலோ தேவர், அந்த அகழின் மேட்டின் மேல் தட தடவென்று ஏறினார். அவர் அவ்வாறு ஏறவே அந்தப் பிரம்மாண்டமான மேடானது ஒரேயடி யாய்த் தட தடவென ஆழ்ந்து அமிழ்ந்து போய் விட்டது.

அவ்வாறு அழிவடைந்துவிட்ட அந்த மேடானது அத்துடன் நில்லாமல் அந்த அகழிலேயே கடகடவென்று உருண்டு சென்று, அந்த அகழின் குறுக்காகத் திடீரென உண்டாக் கப்பட்ட ஒரு நீளமும் அகலமுமான பாதையாக மாறிவிட்டது. அப்போது அதைக் கடக்க முடியாமல் பயங்கரமாய்ச் சேறும் சகதியுமாய்க் கிடந்த பிரதேசமானது, இவ்வாறு ஓர் உறுதியான பாதையாக மாறி விடவே, அதன் மேல் குதிரைகளும், வீரர்களும், ரதங்களும், திரள்திரளாகச் சொல்லலாயின.

இந்த அற்புதத்தைக் கண்ணுற்று அதிசயித்த ஜனங்கள், இவ்வாறு சமமாகத் தாழ்ந்து விட்ட சமநிலத்தின் மேல் நிதான மாக நடந்து சென்றனர். தக தகவென மின்னும் கேடயத்தைப் பிடித்துக் கொண்டு, சூரிய பகவானானவர் அவர்களுக்கு முன் சென்றார். அவ்வாறு முன் சென்று, அவர், கிரேக்கர்களது கோட்டையின் பிரம்மாண்டமான மதிற் சுவரைத் தனது கையினால் ஒரு குலுக்குக் குலுக்கி அசைத்து ஆட்டினார்!

அப்போது அந்த மதிலின் மேலிருந்த கோபுரங்களெல்லாம் அசைந்தன. கொத்தளங்களும் இடிந்து விழுந்து விட்டன.

விளையாட்டிலேயே கண்ணுங் கருத்துமாய் உள்ள ஒரு சிறு குழந்தையானது, கடலோரத்தில் நின்று கொண்டு, அங்குள்ள மணலில் வீடுகளைக் கட்டிக் கொண்டு வருகையில், அதன் மனம் மாறுபட்டு அது வேறொரு விளையாட்டை நினைத்துக் கொண்டால் அது எவ்வாறு அந்த மணல் மாளிகைகளையும், அவற்றின் கோபுரங்களையும் ஒரேயடியாய் அழித்து விடுமோ, அவ்வாறே சூரியபகவானே! உனது கை பட்ட மாத்திரத்தில், அந்தக் கிரேக்கர்கள் கட்டி இருந்த கோபுரங்களும், மதில்களும் மாயமாய் அழிந்தே போயின. அவ்வாறு ஆயிரக் கணக்கான ஜனங்கள் அரும்பாடுபட்டுச் செய்த காரியங்கள் அரைக்கணத்தில் அழிந்து போகின்றன.

அப்போது கிரேக்கர்களெல்லாம், மிகுந்த ஏக்கத்துடன் நாற் றிசையும் உற்று நோக்கினர்; இன்னது செய்ய வேண்டும் என் பதை அறியாமல், தேவலோகத்திலுள்ள சக்தி மிகுந்த தேவர்க ளனைவரையும், தங்களது உதவிக்கு வரும்படி ஓயாமல் பிரார்த்தித் தனர்!

பின்னும் அந்தக் கிரேக்கர்கள், தங்களுடைய ஸைனிகர் களைப் புகழ்ந்தும், மிரட்டியும், கண்டிப்பான கட்டளைகளை இட்டும், உற்சாகப்படுத்தினர்; அன்றியும், அவர்கள் வாய்விட்டு அலறிக் கூக்குரலிட்டும், கண்ணீர் சொரிந்து அழுதுகொண்டும், கைகளைக் கூப்பிக் கொண்டும், தேவர்களைப் பலவாறுகப் பிரார்த்தித்தனர்.

மஹாவிருத்தரும், அனுபவம் முதிர்ந்தவருமான நெஸ்டாரே எல்லோருக்கும் முன்னின்று, தன்னுடைய குழந்தைகளின்க்ஷேமத் தைக் கோரிப் பிரார்த்தனை செய்யும் ஒரு தகப்பனைப்போல், தம்முடைய தேசத்தாரின் க்ஷேமத்தைக் கோரிக் கண்ணீர்விட்டு அழுதுகொண்டு, பின்வருமாறு சகலமான தெய்வங்களையும் முன் னிட்டுப் பிரார்த்தித்தார்:—

"ஜோவ் தேவரே! எப்போதாயினும் எவனாயினும் ஒரு கிரேக்கன், தான் வேண்டிக் கொண்டபடி, தசையுடன் கூடிய பக்ஷணத்தைத் தனது தேசத்திலுள்ள உமது கோவிலில் உமக்கு நைவேத்தியமாகச் செலுத்தியிருந்தாலாவது, எங்களது தேசத் தைத் திரும்பிப்பார்க்க வேண்டுமென்ற ஆசையுடன், நாங்கள் எங் களது ஆட்டுமந்தையிற் பிறந்த தலைச்சன் ஆட்டுக் குட்டியை உமக்குக் காணிக்கையாகச் செலுத்தி இருந்தாலாவது, எங்களது மனோபீஷ்டத்தை நிறைவேற்றித் தருவதாக நீர் உமது தலையை ஆட்டி அசைத்திருந்தாலாவது, தேவராகிய நீர் கருணையுடன் எங் களுக்குச் செய்த வாக்குறுதியை நிறைவேற்றும். இன்று எங்களது கடற்படையை இந்தத் தீக்கிரையாக்காமல் காப்பாற்றும்!

இதுவரை மீந்திருக்கும் கிரேக்கர்களையாவது காப்பாற்றும்!" என்றார்.

இவ்வாறு மனமுருகப் பிரார்த்தனைச் செய்த மகரிஷியின் வசனங்களைக் கேட்டு, அந்த அழிவற்ற தேவர் மனமிரங்கினர். அக்கணமே ஆகாய மண்டலமானது, இடிமின்னல்களுடன் கிடு கிடுவென்று நடுங்கியது. இந்த லக்ஷணங்கள், தங்களுக்கு வரப் போகும் க்ஷேமத்தைத்தான் குறிப்பிடுகின்றன என்று ஏமாந்து போன துரோஜர்கள், பெருமிதங் கொண்டு, தாங்கள் தேவர்களு டைய கிருபைக்குப் பாத்திரர்களாகி விட்டதாக நினைத்து, முன்னி லும் அதிவேகமாக உற்சாகங் கொண்டனர்.

இரண்டு பெரும் புயல்கள் அடித்து வருகையில், கடல்களுக் கும், ஆகாயத்திற்கும் வித்தியாசம் தெரிவதில்லை. அவை ஒன்றாய்க் கலந்துபோய் விடுகின்றன. அப்போது கடலின் அடிப்பாகத்தி லுள்ள பள்ளங்களிலிருந்து உறுமிக்கொண்டு, மலைகளைப்போல் எழுந்து வரும் நெடுந்திரைகள், ஓர் உன்னதமான கப்பலின் இரு புறங்களின் மேலும் ஏறிப்பாய்ந்தால், அந்தக் கப்பலின் உடலா னது வெள்ளத்தில் மூழ்கியே போய்விடுகின்றது. அந்த வெள்ளங் கள், அந்தக் கப்பலின் அள்ளைப் புறங்களிலுள்ள சட்டங்களையும், பலகைகளையும், கீல்களையும் பிளந்து நொறுக்கி விடுகின்றன.

அவ்வாறே துரோஜ வீரர்கள் உரத்தக் கூக்குரலிட்டுக் கொண்டு, திரண்டு எழுந்து வந்து, தங்களுக்கு எதிர்ப்பட்ட சகல ரையும் மடக்கி முறியடித்துக் கிரேக்கர்களின் மதில்களின்மேல் ஏறியே விட்டனர். அப்போது அந்த மதில்களின் இருபுறங்களிலு மிருந்த இரு திறத்தாரது சைனியங்களும் ஆயிரமாயிரமாகத் திரண்டு ஒருங்கே எழுந்தனர். கப்பல்களில் ஏருக் கட்டைகள் நறநறவென்று முறிந்தன. இருதிறத்தாரும் விடுத்த சரங்கள் ஒரு பெரிய மாரிபோல் பொழிந்தன. கடலில் நின்றிருந்த கப்பல்களின் மேல் தட்டிலிருந்தவர்களும், ஒருவர்மேலொருவர் ஆயுதங்களை எறிந்து பரிமாறிக் கொண்டனர். பின்னையவர் கொடுந் தண்டங் களையும், முன்னையவர் ஈட்டிகளையும் பிரயோகித்தனர்.

கிரேக்கர்களுடைய கோட்டை கொத்தளங்களைச் சுற்றிக் கொண்டு இருதிறத்துச் சேனைகளும், இவ்வாறு திணறிக் கொண்டு இடிமுழக்கங்களுடன் இந்த யுத்தத்தை நடத்தி வருகையில், பத்திர கலுஷன் காயமேற்றுக் கிடந்த தனது நண்பனும் குணவானுமான யூரிப்பைலஸ்ஸுக்குச் சிகிச்சைகள் செய்து கொண்டு தனது கூடா ரத்திலேயே உட்கார்ந்திருந்தான். அவன், தனது நண்பனது இரணங்களின் மேல் அவற்றை ஆற்றக்கூடிய தைலங்களைப் பொழிந்து கொண்டும், அவனுடைய அவயவங்களைப் இதமாகப் பிடித்துத் தடவிக் கொடுத்து, அவற்றின் நோவுகளை ஆற்றிக் கொண்டும், இனிய வசனங்களை யுரைத்து, அவனுடைய மனக் கவலைகளை மாற்றிக்கொண்டும் இருந்தான்! இன்மொழியே மனக் கவலையை மாற்றவல்ல மருந்தன்றே?

ஆனால் கிரேக்கர்களுடைய படைக் கப்பல்களை நோக்கி, துரோஜர்கள் வெற்றியுடன் தடதட வென்று ஏறி வருவதைக் கண்ணுற்றபொழுது, அவன் தனது இடத்தை விட்டுச் சட்டென்று எழுந்து தனக்கு உண்டாயிருந்த துக்கத்தை அடக்கமாட்டாமல், வாய்விட்டு அலறிப் புலம்பினான். தன்னுடைய கைகளைப் பிசைந்து கொண்டான், தைரியம் ஊறிவந்த தன்னுடைய மார்பிலும், அடித்துக்கொண்டான். பின்பு அவன் தன்னுடைய நண்பனை நோக்கிக் கூறினான் :—

"உனது நிலை இன்னும் கவலைக்கிடமாகவே இருக்கின்றது ; எனினும் நான் இங்குவிட்டுப் புறப்பட்டுப் போகவேண்டும் ! ஆஹா இந்தக் கொடிய ஆபத்துக்களைக் கண்ணுற்றுப் பார்த்தும், நான் இங்கு வாளாவிருக்கலாமா ? அகிலேசனது மேலான ஆணையைச் சிரமேற்கொண்டு இதோ நான் புறப்படுகின்றேன். இங்கு நிகழ்ந்து வரும் அலங்கோலங்களை, நானே என்னுடைய கண்ணால் நேராகப் பார்த்துத் தவிக்கின்றேன் !

அகிலேசன் தன்னுடைய தேசத்தின் நலத்தைக் கோரியாவது, ஆயுதபாணியாகக் கிளம்பி யுத்தத்தில் பேருடனும், கீர்த்தியுடனும் பிரகாசமாக விளங்க வேண்டும் என்று வற்புறுத்துவதற்கு இதோ நான் விரைந்து ஆத்திரத்துடன் செல்லுகின்றேன். ஏதாவது ஒரு தெய்வம் நமது பங்கிலிருந்து அவனது மனதை இளக்கலாகாதா ? அன்பு மாறாத நண்பன் ஒருவனுடைய வார்த்தையை அவன் கேட்க மாட்டானா ? கேட்பான் என்றே நான் நம்புகின்றேன் !"

இவ்வாறு அவன் கூறிவிட்டுக் காற்றையும்விட வேகமாக, அந்தக் கூடாரத்திலிருந்து துள்ளிப் பாய்ந்து யுத்தகளத்தைவிட்டுப்புறப்பட்டுச் சென்றான்.

அப்போது அணியில் பிரியாமல் நின்றுவந்த கிரேக்கர்கள், தங்களையெதிர்த்துத் தாக்கி வந்த துரோஜர்களுடைய அடிகளையும், இடிகளையும் யேற்றுத் தாங்கிக் கொண்டு, எண்ணில் மிக்க அந்தச் சத்துருக்களை மடக்க முயன்று வந்தனர். ஆனால் அம்முயற்சிகள் பயன்படவில்லை.

துரோஜர்கள், ஊசிமுனையும் நுழைய இடமின்றி நெருங்கி நின்ற அந்த கிரேக்கர்களது அணிவகுப்பைப் பிளந்து கொண்டு, அவர்களுடைய கடற்படைகளையும், கூடாரங்களையும் கவர முயன்றனர். அவர்களுடைய முயற்சியும் பயன்படவில்லை.

பல்லாடியாக் கலையில் கைதேர்ந்த ஒரு கப்பற் சிற்பியானவன், எவ்வாறு முண்டும் முடிச்சுமுள்ள மரத்தை இழைப்புளி கொண்டு இழைத்து, அக்கப்பலின் சர்வ அங்கங்களையும் வழவழப்பாக ஆக்கி, அக் கப்பலின் பாகங்கள் அனைத்தும் ஒன்றோடொன்று பொருந்தியிருக்குமாறு, அவையனைத்தையும் தனித்

தனியே, அளவுக்குத் தகுந்தபடி சிறிதும் ஏற்றத் தாழ்ச்சியின்றி, சரியாகவும், வரிகோணுமலும், இணைத்து விடுகின்றனரோ, அவ்வாறே இருதிறத்துச் சேனைத் தலைவர்களும் வெகு திறமையுடனும், கவனத்துடனும், தங்கள் தங்கள் அணிகளைக் கலையாமல் நிறுத்திக் கொண்டு, ஒருவர்க்கொருவர் சளைக்காமல் நின்று வந்தனர்.

இருதிறத்து வீரர்களும், சிறிதும் ஓய்வும் ஒழிச்சலுமின்றி உறுதியாய் நின்று பெருங்காரியங்களைச் செய்தனர். கப்பல்களில் இருந்த வீரர்களும் ஒருவர் தவருமல், அவ்வாறே அலைகளைப் போல் தங்களை மோதி வந்த சத்துருக்களுக்கு ஈடு கொடுத்துக் கொண்டு அசையாமல் நின்று வந்தனர்.

அப்போது மற்றெல்லாக் கப்பல்களுக்கும் மேலாக உயர்ந்து நின்றுகொண்டிருந்த ஓர் அதிகம்பீரமான மரக்கலத்தின் சமீபத்தில் மஹானுன அஜாக்ஷனும், தேவர்களுக்குச் சமமான ஹெக்டரும் சந்தித்தனர். இணையற்ற இவ்விரு வீரர்களும் அதிதிவ்விய மான அந்த வஸ்துவைப் பிடித்துக்கொள்ள முயன்றனர்! ஆனுல் அதைச் சுற்றி நின்றுகொண்டிருந்த மற்றைய மரக்கலங்களைத் தீயிட்டுக் கொளுத்துவதற்குப் பின்னையவனுன ஹெக்டரினுல் இயலவில்லை. அது சத்துருக்களின் வசமாகாமல் அவற்றைக் காப்பாற்றுவதற்கு முன்னையவனுலும் இயலவில்லை. ஒருவன் கரையின் மேலிருந்த வண்ணமும், மற்றவன் அந்தக் கப்பலின் மேலிருந்த வண்ணமும் விடேன் கொடேன் என்று போராடி வந்தனர்.

கடத்தற்கரிய கடுவினையைப் போன்றே, முன்னையவன் விளங்கப், பின்னையவன் ஒரு தெய்வத்தைப்போல் காரியங்களைச் செய்து வந்தான்.

அப்போது கிளைட்டியஸ்ஸின் மகன், கொழுந்து விட்டெரியும் ஒரு கொள்ளிக்கட்டையைத் தன்னுடைய கையில் ஏந்திக் கொண்டு, மிகுந்த துணிவுடன் அந்த உயர்ந்த மரக்கலத்தை நோக்கி ஓடி வந்து அந்தக் கொள்ளிக்கட்டையைச் சுழற்றினுன். ஆனுல், அவனை அக்கணம் திலமானுடைய ஈட்டியானது குத்திக் கிழித்து அவனுடைய உயிரை மேல் உலகத்திற்கு ஓட்டி விட்டது. அவன் ஓர் இடியைப்போல் திடீரென்று கீழே விழுந்து மடிந்தான். அக்கணமே அவனது கையிலிருந்த கொள்ளிக்கட்டையும் கிழே விழுந்து அவிந்து விட்டது! இவ்வாறு அவன் அந்தக் கப்பலின் பின்பாகத்தில் மண்ணேடு மண்ணுய்த் தனது உடலை நீட்டிக்கொண்டு கிடந்ததை மஹானுன ஹெக்டர் அவனை அதிதுக்கத்துடன் ஏற இறங்கப் பார்த்துப், பின் வருமாறு கரைந்து உருகினுன் :—

“ஐயோ! துரோஜர்களே! நீங்கள் அனைவரும் இங்கு வாருங்கள். லிஸியன் பரம்பரையில் வந்த வீரர்களே! நீங்கள் அனைவரும் உங்கள் இடங்களில் அசையாமல் நில்லுங்கள்; ஆபத்துக்கள் நிறைந்துள்ள இந்த இடத்தைப் பத்திரமாகக்

காத்து வாருங்கள்! கிளாட்டியஸ் ராஜாவின் புத்திரன். இதோ கிடக்கிருன், பாருங்கள்! அவனுடைய ஆயுதங்களைக் கழற்றி அவனைக் காப்பாற்றுங்கள், அவனுடைய சவச்சடங்குகளையும் இடையூறின்றிக் குறைவற நிறைவேற்றுங்கள்" என்ருன்!

இவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தன்னுடைய சத்துருவை நோக்கித் தன்னுடைய ஈட்டியை விடுத்தான். ஆனால் அஜாக்ஷன் அதன் அடிக்கு ஆளாகாமல் தப்பியே விட்டான்! என்ருலும் அந்த வேலின் வேகம் வீண் போகவில்லை. அதிர்ஷ்டஹீனனுன லிக்கோப்ரோன் என்பவனை அது குத்தித் தாழ்த்தி விட்டது. அவன் தன்னுடைய உடலை நீட்டிக்கொண்டு விழுந்து விட்டான்.

நெடு நாட்களுக்கு முன் தனது சொந்தத் தேசத்தை விட்டு விட்டு நாடோடியாகத் திரிந்து வந்த அவன், அன்னிய தேசத்துப் பிரபுவான அஜாக்ஷனை அண்டிக் கொண்டு, அவனுக்கு அடிபணிந்து அணுவளவும் கோணுமல், அடிமைத் தொழில் புரிந்து கொண்டு, அவனது ஆதரவில் இருந்து வந்தவன். தான் உயிருடன் இருக்கையில், எவ்வாறு அவன் தனது மனதிற்கிசைந்த எஜமானை விட்டு ஆபத்திலும், சம்பத்திலும் அகலாமல், அவனருகிலேயே இருந்த வண்ணம், அவனுக்கு அன்புடன் பணிவிடை செய்து வந்தானே, அவ்வாறே இப்போதும், அவனது உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தனது உயிரையும் வழங்கி விட்டான்!

அந்த உயர்ந்த கப்பலின் பின்பக்கத்திலிருந்து, கடலோரமுள்ள மணற்கரையின் மேல் அவன்குப்புற விழுந்த பொழுது உயிரற்ற அவனது உடலானது அந்தத் தரைக்குப் பெருத்த பாரமாக நீண்டு கிடந்தது! இந்தக் காட்சியைக் கண்ணுற்று நெஞ்சு துளைக்கப் பட்டவனுன அஜாக்ஷன், தனது தம்பியும் இந்த யுத்தத்தில் சேர்ந்து கொள்ள வேண்டுமென்று, ஆத்திரங் கொண்டு பின்வரும் வசனங்களை உரைத்து அவனது மனத்தில் தீவிரமான எண்ணத்தை உண்டாக்கினுன் :—

" டியூஸரே! இதோ பார்த்தாயா? நமது நண்பன் இணை பிரியாத அன்பன்! இதோ பார்! இந்தக் கரையின் மேல் ஒரு கட்டையைப் போல் தன்னுடைய உடலை நீட்டிக் கொண்டு கிடக்கிருன்! இவன் இறந்து போய் விட்டான். இவன் நம்மிடம் ஒரு தகப்பனைப்போல் அன்புடையவனுக இருந்தான். நமது யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலுடனும் இவன் ஒரு தந்தையின் கவலையுடனும் தனது ஜன்ம தேசத்தை விட்டு இங்கு வந்தான்.

இந்த அதிதுக்ககரமான மரணத்திற்கு ஹெக்டரின் துவேஷமே காரணம். நாம் இந்தப் பழிக்குப்பழி வாங்கியே தீர வேண்டும்; பரம சத்துருவான அவன்மேலேயே இந்தப் பழிக்குப்

பழி வாங்க வேண்டும்! ஊழ்வினைகள் உறைந்து வரும் அந்தச் சரங்கள் எங்கே? பீபஸ் பகவானிடம் நாம் அப்பியாசம் செய்த பொழுது வளைக்கக்கற்ற வில் எங்கே? '' என்றான்.

இந்த வசனங்களைக் கேட்டு ஆத்திரம் கொண்ட டியூஸர், தன் உடன் பிறந்தானுக்குத் தன்னாலான உதவி எல்லாம் செய்ய வேண்டும் என்ற ஆவலுடன் தனது பிரம்மாண்டமான வில்லை எடுத்து, அதை அவனெதிரில் பகிரங்கமாகக் காட்டினான். அப்போது சரங்கள் நிறைந்த அம்பறாத்தூணி, அவனது தோள்களின், மேல் தொங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய அம்பு பாம்பைப் போல் சீறியது! வில்லின் நாணும் கணகணவென்று ஒலித்தது.

அப்போது பைசினாரின் மகனும், வீரசூர பிரதாபங்களுடன் விளங்கியவனுமான கிளைட்டஸ் என்பவன், அந்த யுத்தங்களில், வீரர்கள் யுத்த சன்னத்தர்களாக நெருங்கி நின்று கொண்டிருந்த இடங்களைத் துளைத்துக் கொண்டு, அவற்றின் நடுவே தன்னுடைய குதிரைகளை ஓட்டினான். திடுக்கிட்டுப் புறப்பட்ட குதிரைகளின் கடிவாளக் கயிற்றினை அவன் கலகலவென்று வேகமாக ஆட்டிக் குலுக்கி, அவற்றைத் துரிதமாக ஓட்டினான்!

பாலிதாமஸ்ஸே! இவன் உனக்கு மிகவும் பிரியமானவன்! பேரும் புகழும் பெற வேண்டுமென்ற ஆவலுடனேயே, இவன் முன் சென்ற பொழுது, டியூஸரின் கூரான அம்பு இவனைப் பின் தொடர்ந்து வந்து குத்திக் கீழே தள்ளி விட்டது! இசையுடன் பறந்து வந்த அந்தக் கொடிய அம்பானது, அவனது அழகான கழுத்தைத் துளைத்துச் செல்லவே, பாலப்பருவம் நீங்கி அப்போதுதான் இளம்பருவமடைந்திருந்த அந்தச் சின்னஞ் சிறு வீரன், இவ்வாறு பலவந்தமான மரணத்துக்கு ஆளாகினான்!

இவ்வாறு, அவன் தனது உன்னத ஸ்தானத்திலிருந்து உருண்டு கிழே விழுந்து விடவே, தலைகுப்புற ஓடும் அவனுடைய குதிரைகள், காலியாகி விட்ட அவனது தேரையும் விட்டு விட்டுப் பிரிந்து ஓட்டமாக ஓடி நெடுந்தூரம் சென்று விட்டன.

அப்போது, அஸ்திநூஸே! இந்தக் கஷ்டமான சம்பவத்தைக் கண்ணுற்றுக் கிலேசமுற்ற பாலிதாமஸ், அக்குதிரைகளைத் தடுத்துப் பிடித்து, அவற்றைப் பத்திரமாகக் காத்து வரும்படி உன்னிடம் ஒப்புவித்து விட்டு, இந்தப் பழிக்குப்பழி வாங்கி விட வேண்டுமென்று சத்துருக்களின் கூட்டத்தினுள் நுழைந்து விட்டான்!

தீராக் கோபத்துடன் அவன் ஓங்கியடித்த அவனுடைய கத்தியானது, கூர்மையையடைந்தது, அவன் பிரயோகித்த ஒவ்வோர் அடியும் அவனுடைய சத்துருக்களின் மேல் விழுந்தது, பலமாகவே விழுந்தது!

இதன்பின் தைரிய சாலியான டியூஸர் தன்னுடைய நாட்டின் நன்மையைக் கருதியவனுய், பின்னும் ஒருமுறை ஆராய்ந்து எடுத்த ஒரு சரத்தை ஹெக்டருடைய மார்பைத் துளைக்கும்படி, குறிதவருமல் விடுத்தான். அந்த ஆயுதம் மாத்திரம் தனக்கு நியமித்த வழியிலேயே, தங்கு தடையின்றிச் சென்றிருந்தால், ஹெக்ட மஹாவீர! அன்றைய தினமே நீ, அடியற்று விழுந்திருப்பாய்! அது ஒரு விசேஷ தினமாகவும் விளங்கியிருக்கும்!

ஆனல் அன்றைய தினம், ஹெக்டர் அழிந்து போக வேண்டுமென்று அமரர்கள் எல்லாம் ஆணையிட்டிருக்கவில்லை. மனிதர்களது ஊழ்வினைக்குத் தகுந்தபடி பலனளிப்பவரும், ஸர்வக்ஞரும், ஏகசக்ராதிபதியுமான ஜோவ் தேவர், அவனை இன்றைய தினம் மரணத்தினின்றும் தடுத்து விட்டார்.

மேலும் ஹெக்டரைக் கொல்லும் பாக்கியம் டியூஸர் கைக்கு இருக்கவில்லை. தனது வில்லின் கெட்டியான நாணை அவன் எட்டும் தூரம் வரை இழுத்த பொழுது, அது கட்புலனுகாத ஒரு கையினுல் அடியுண்டு இரண்டாக அறுந்து போய் விட்டது. அக்கணமே, அந்த வில்லும் தொப்பெனக் கீழே விழுந்தது. பித்தளை முனையைக் கொண்டிருந்த அம்பும் தனக்கு நியமித்த பாபத்தைச் செய்யாமல் குற்றமற்றதாகவும், தன்னுடைய வலியை இழந்ததாகவும் செத்தது போல் புழுதியின் மேல் விழுந்து விட்டது.

இதைக் கண்ணுற்ற அந்த வில்லாளி மஹானுன அஜாக்ஷனை விளித்துப் பின்வருமாறு கதறினுன் :—

" ஏதோ ஒரு தெய்வம் நாம் கருதிச் செய்யும் காரியங்களைத் தடுத்து வருகிறது; நம்முடைய சத்துருக்களான துரோஜர்களுடைய பங்கில் இருந்து வரும் ஏதோ ஒரு தெய்வம், என்றும் இளையாத என்னுடைய கையில் நான் பிடித்திருந்த வில்லைத் தாக்கி யடித்து, யுக்திசாமார்த்தியத்துடன் தன்னினின்று புறப்படும் சரங்களுக்கு அதிதீவிரமான வேகத்தைக் கொடுக்கக் கூடியதாக முறுக்கித் திரித்த நாணைப் பிளந்தே விட்டது!"

இதைச் செவியேற்றுக் கேட்ட அஜாக்ஷன், அவனுக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான் :—

" தெய்வ நியமனம் இவ்வாறு இருப்பதினுல், நீ அந்த வில்லை எறிந்து விடு! உன்னுடைய அம்புகளையும் அடுக்கிக் கட்டி வைத்து விடு!

வேலெடுத்து வினைகள் செய்வதற்கு, உன்னுடைய கைகளே உனக்குப் போதும். அவைகள் வலி குறைந்தவைகள் அல்ல. ஆதலால் உனது வேலை எடுத்துக்கொள். இந்த அம்பருத்துணி

யையும் ஓர் இடத்தில் வைத்து விட்டு, உனது பிரம்மாண்டமான கேடயத்தைத் தூக்கிக் கொள்.

யுத்தத்தின் முன்னணிகளில் நின்று கொண்டு ஸாஹஸ கிருத்தியங்களைச் செய்து பேரும் கீர்த்தியும் பெற வேண்டுமென்று நீ துடித்து வரும் உனது தாகத்தைத் தீர்த்துக்கொள். உன்னுடைய வீரசூர பராக்கிரமங்கள் நம்முடைய மற்றைய வீரர் களுக்கு ஒரு வழி காட்டியாகவும், உதாரணமாகவும் இருக்கட்டும். அவர்கள் மேன் மேலும் ஊக்கமும் உற்சாகமும் கொள்ளட்டும்.

நம்முடைய சத்துருக்கள், ஏற்கனவே மஹா தீரர்கள்தான்! பயங்கரஸ்வரூபிகள்தான்!! ஆனால் நெடு நாட்களாக வெற்றிகளே பெற்று வந்திருப்பதினால், அவர்கள் இப்பொழுது தற்பெருமைக்கு ஆளாகிவிட்டனர். நம்முடைய கடற்படைகள் அனைத்தையும் தங்கள் வசம் ஆக்கிக்கொள்ளவோ அல்லது தாங்கள் நமது கப்பல் ஒன்றை யேனும் பிடித்துக் கொள்ளவோ, அவர்களால் எளிதில் இயலாது. அவ்வாறு செய்ய வேண்டுமாயின் அவர்கள் இரவு பகலாய்க் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டும். வியர்வையை வடிக்க வேண்டும், தங்கள் இரத்தத்தையும் ஆறாகப் பொழிய வேண்டும்.

அவர்கள் அனைவருமே ஒன்றாகத் திரண்டு வரட்டும்! நாம் ஒருகைப் பார்த்து விடுவோம்! அவர்களை யெதிர்த்தே தீருவோம்! நான் இனிச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை! யுத்தத்தைச் செய்ய வேண்டியது தான் நமது கடமை!'' என்றான்.

அவ்வசனங்களைக் கேட்ட டியூஸர், தன்னை மோசம் செய்து விட்ட தனது வில்லை, ஒரு மூலையில் வைத்து விட்டு, நான்கு மடிப்புக்கள் உள்ள கவசத்தைத் தனது தோளின் மேல் கட்டிக் கொண்டு, அசைந்தாடும் அசுவ ரோமங்களால் பிரம் மாண்டமாக அலங்கரிக்கப்பட்டதும், கொண்டையில் செண்டுடன் விளங்கியதுமாகிய ஒரு கிரீடத்தைத் தனது அழகான தலையின் மேல் தரித்துக் கொண்டான். பின்பு அந்த வீரன் பளிச் சென்று ஒளியை வீசி வந்த ஒரு பித்தளைக் கூரிட்ட ஓர் ஆயுதத்தை ஏந்திக் கொண்டு தனது தமையனை வந்தடைந்தான்.

இதைக் கண்ணுற்ற ஹெக்டர், மட்டற்ற களிப்படைந்து, தன்னுடைய சைனிகர்களை நோக்கிப் பின் வரும் வசனங்களை உரைத்தான் :—

''லிஸியாவிலிருந்தும், டார்டானஸ்ஸிலிருந்தும், ட்ராயி லிருந்தும், வந்த சேனா வீரர்களே! உங்களுடைய பெருமை யையும், உங்களுடைய கீர்த்திப் பிரதாபங்களையும் மறவாமல் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்! நம்முடைய சத்துருக் களின் கப்பல்களைத் தீயிட்டுக் கொளுத்தி, உங்கள் புகழையும் பரப்புங்கள்!

இப்போது ஜோவ் தேவர் நம் பங்கில் இருக்கின்ருர். மஹா கர்வியான இந்த வில்லாளியின் கையிலிருந்த தனுசை அவரே இப்போது முறித்தார். அதை நானே என் கண்ணுல் பார்த்தேன்.

அடியார்க்கு எளியரான ஜோவ் தேவரே! தங்களுடைய அழகிய சின்னங்களைத் தலையின்மேல் தாங்கித் தரித்து வரு வோருக்குத் தாங்கள் செய்து வரும் அனுக்கிரகங்கள் வெளிப் படையாக விளங்குகின்றன. அவ்வாறே தங்களுடைய கோபத் திற்கு இலக்காகித் தங்களால் அனுதரவு செய்யப்பட்டுக் கைவிடப் பட்ட தேசங்கள், மலினமடைந்து தாழ்ந்து வருவதையும் நாங்கள் அப்போதைக்கப்போது இலகுவில் பார்த்தே வருகின்ருேம். கிரேக்கர்களது கதி, நமது கதி! அவ்வாருக இருக்கின்றது.

ஆதலால் வீரர்களே அவர்களது கஷ்ட காலத்தையும், நமது நல்ல காலத்தையும் கவனித்து, அதற்குத் தகுந்தபடி உங்களுடைய சக்திகளைக் காட்டி யுழைத்து வாருங்கள்.

மரணமே ஒருவருக்கு உண்டாகக் கூடிய பெருங்கேடு! அனைவரும் அந்த விதிக்கு அடங்கியவர்களே! என்ருலும் நமது நாட்டின் நிமித்தம் நமது உயிரை, நாம் வழங்குதல் ஓர் உத்தம மான கருமமாகுமன்ருே!

ஒரு வீரன் போரில் தனது உயிரைத் துறப்பானேல், அவன் தனது தேசத்தைக் காப்பாற்றி விடுகின்ருன். தன்னுடைய மக்களையும் அடிமைத்தனத்திலிருந்து நீக்கி விடுகின்ருன். நன்றி மறவாத தேசத்தாரனைவரையும் தனக்குக் கடனாளியாக ஆக்கி விடுகின்ருன். அவனைப் போலவே வீரசூர பராக்கிரமங்கள் நிறைந்த அவனுடைய நண்பர்கள், அவனுக்குக் கிடைத்த பெரும் பேற்றைப் பாராட்டி வருவார்கள். அவனது மனைவி புகழுடன் வாழ்ந்து வருவாள். அவனுடைய சந்ததியார் எடுத்த காரியங்களெல்லாம் இனிதாகவே முடியும். நெடுநாளைக்குப் பின் தோன்றும் அவனுடைய மரபினரும் அவனுடைய அருஞ் செயல் களைச் சொல்லிச் சொல்லி அகமகிழ்வார்கள்'' என்ருன்.

இந்த வசனங்களால், துரோஜர்கள் மனம் அனைத்தும் உயிர்த்தெழுந்தன. அப்போது தேவர்களுக்குச் சமமான அஜாக்ஷனும், கிரேக்கர்களான தன்னுடைய ஸைனிகர்களை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தான் :—

''ஆர்க்கிவ் மரபில்வந்த வீரர்களே! சூரர்களே! உயர்ந்த பேரு டனும் புகழுடனும் விளங்க வந்த ஆர்காஸுக்கு இந்தப் பெருத்த அவமானமும் இழிவும் வந்து விட்டதே! ஐயோ! இது என்ன கஷ்டம்! உயிருடன் வாழவோ, அல்லது உயிரை இழக்கவோ வேண்டும் என்று தீர்மானிக்காமல், நீங்கள் இன்னும் எவ்வளவு காலம் இந்தத் தொல்லை மிகுந்த எல்லைக்குள் கிடந்து உழலுவீர்கள்?

உங்கள் கப்பல்களை மாத்திரம் துரோஜர்கள் தீயிட்டுக் கொளுத்த ஆரம்பித்து விட்டால், அப்போது தப்பிப் பிழைப்பதற்கு உங்களுக்கு என்ன உபாயங்கள் இருக்கின்றன? அதோ பாருங்கள்! அவர்கள் நெருப்புகள் சிறுகச் சிறுக நமக்கு அருகே வந்து கொண்டிருக்கின்றன! அவற்றினின்றும் எழும் தணல்கள் நமக்கு அதிசமீபத்தில் தெறித்தும் விழுகின்றன.

தன் பிருத்தியர்களை ஹெக்டர் எவ்வளவு ஆத்திரத்துடன் கூவி அழைக்கின்றான் பாருங்கள்! அவன் அழைப்புக் கிணங்கி துரோஜர்களும் எவ்வாறு திரண்டு வருகின்றார்கள் என்பதையும் பாருங்கள்! ஆடிப் பாடிக் களிப்பதற்காக, அவன் அவர்களை அந்தப் பயங்கரமான குரலுடன் கூப்பிடவில்லை.

'உங்களுடைய உயிரை வழங்க வாருங்கள், யுத்தத்தில் நிகழக் கூடிய ஸகலமான கஷ்ட நஷ்டங்களையும் ஏற்க வாருங்கள்' என்றே அவன் அவர்களைக் கூவி அழைக்கின்றான்.

வேதாந்தம் பேசவோ, அல்லது, தர்க்கங்கள் செய்யவோ இது தருணமன்று! உங்களுடைய தலைவிதிகளெல்லாம் உங்களுடைய கைகளிலேயே இருக்கின்றன. திருவற்ற இந்தத் தீயோனால், இதுகாறும் பலவாறாக நெருக்குண்டு, பெரும்பாடு பட்டு நாம் பிடித்துள்ளதும், ஒன்றும் விளையாததுமான இந்த மணற் கரையை நாம் காத்து வருவதினும் உறுதியுடன் நின்று ஒரே யுத்தம்செய்து, ஒரேஒருநாளில் நம்முடைய கஷ்டங்களையோ, அல்லது உயிர்களையோ புறங்காணுவதன்றோ மேல்!" என்றான்.

அந்த வசனங்களைக் கவனித்துக் கேட்டு வந்த கிரேக்கர்கள், தங்கள் தலைவனைப் போலவே ஆத்திரங்கொண்டு, தகதகவென்று ஒளியுடன் விளங்கினார்கள். வேகத்துடன் கொதித்த அவர்களது இருதயம் ஒவ்வொன்றும் கீர்த்தியைப் பெற வேண்டும் என்ற தாகத்துடன் துடித்து வந்தது.

அதன் பின் இரு திறத்தாரும், யுத்தத்தை ஆரம்பித்து பரஸ்பர ஸம்ஹாரங்களைச் செய்து வந்தனர்.

கிரேக்கர் கக்ஷியிலிருந்த போஷியனான ஷெடியஸ் என்பவன், ஹெக்டரினால் அடியுண்டு மாண்டான். துரோஜர் கட்சியிலிருந்த லயோதமஸ் என்பவன் அஜாக்ஷனால் குத்திக் கிழிக்கப் பட்டுக் கீழே விழுந்தான்; அவன் அந்தினாரின் புராதன மரபில் வந்தவன்; பதாதிகளின் தலைவனாக விளங்கியவன்.

எப்பியன் வீரர்களது தலைவனும், பயங்கர ரூபியுமான ஓட்டஸ் என்பவனை பாலித்தாமஸ் என்பவன் மணலின் மேல் மடித்தான். இவ்வாறு அவனைக் கொன்று வெற்றியுடன் விளங்கிய வீரனை நோக்கி, தைரியசாலியான மீஜிஸ் என்பவன் தனது வேலாயுதத்தை விடுத்தான். ஆனால் அந்த விஜயன், அதற்குத் தலை

குனிந்து, தப்பித் தன்னை நாடிவந்த நமனையும் புறக்கணித்து விட்டான். பீபஸ் தேவரே! உத்தமமான அவனது உயிரை நீரே காப்பாற்றினீர்!

ஆனால் அவ்வாறு சென்ற வேலாயுதமானது வீணே ஆகி விட வில்லை. கிரீஸ்முஸ் என்பவனது மார்பு அதனை ஏற்றுக் கொண்டது. அப்போது அவனது கட்டையானது இரத்தத்தைச் சொட்ட சொட்ட வடித்துக் கொண்டு, அந்தச் சேறும் சக்தியுமாக வழுக்கி வந்த கரையோரத்தில் பொத்தென விழுந்து விட்டது! அப்போது அவனுடைய பிரகாசமான ஆயுத ஆபரணங்களை, அவனை வென்ற மீஜிஸ் பறித்துக்கொண்டு ஓடினான்.

அச்சமயம் புராதனமான லயோமிடான் வம்சத்தில் உதித்தவனும், லாம்ப்பஸின் புத்திரனும், அதற்குமுன் நடந்த யுத்தத்தில் "நன்றாக யுத்தம் செய்தவன்" என்ற பேரும்புகழும் உடையவனாக விளங்கியவனுமான டோலோப்ஸ் என்பவன், தட தடவென்று ஓடி வந்து, தன்னுடைய வேலாயுதத்தைக் கொண்டு, கண கண வென்று ஒலித்து வந்த மீஜிஸ்ஸின் கேடயத்தை நட்ட நடுவில் குத்தினான்.

அந்த மீஜிஸ் என்பவன் வளைந்து செல்லும் செல்லையின் கரையில் வாழ்ந்து வந்தவன்; பராக்கிரமம் மிகுந்த யுத்த வீரன் என்ற புகழ் பெற்றவன்.

அவன் அணிந்திருந்த ஸ்வர்ணக் கவசமானது யூவித்தீஸ் என்னும் அரசனால் அளிக்கப்பட்டது. அது நன்றாகக் கட்டப்பட்டிருந்தது மன்றிப் பல கொப்புக்களாலும், குமிழ்களாலும், இறுக்கிக் கட்டப்பட்டிருந்தது. முன்னாளில் மீஜிஸின் தகப்பனான பைலியஸ் என்பவன், தன்னுடைய சத்துருக்களின் பட்டணங்களை முற்றுகையிடவும், யுத்தங்கள் செய்யவும் சென்று வெற்றியுடன் விளங்கிய பொழுது, அந்தக் கவசமானது அவனைக் காப்பாற்றி வந்தது. அதிவிசேஷமான அதே கவசம், இப்போது அவனது மகனையும் காப்பாற்றி விட்டது.

அதன்பின், அவன் துரோஜனது தலையை நோக்கிச் சரியாகக் குறிவைத்துத் தனது ஈட்டியை விடுத்தான். அந்த துரோஜனது கிரீடத்தின்மேல், தைரியன் சாயங்கள் கொண்டு நன்றாகப் புதிதாக வர்ணம் தீட்டப் பெற்ற துராய்கள் உயர்ந்து அசைந்தாடிக் கொண்டிருந்தன. மீஜிஸின் ஈட்டியினால் அடிக்கப் பெற்ற பொழுது, அந்த ஊதாத்துராய்கள் கட்டவிழ்ந்து புழுதியின் மேல் விழுந்து பள பளவென்று மின்னின.

இவ்வாறு இவர்கள் பொருது வருவதைக் கண்ணுற்று வந்த ஸ்பார்ட்டா அரசனானவன், மீஜிஸிஸ்ஸுக்கு உதவி செய்யவேண்டும் என்ற ஆவலுடன் சட்டென்று புறப்பட்டு ஓடி வந்து அவனது சமீபத்தில் நின்றான்; அவன், தன்னுடைய உறுதியான வேலா

யுதத்தைக் கொண்டு, டோலாப்ஸின் தோளைத் துளைக்க, அது, படபடவென்று துடிக்கும் மார்பை ஊடுருவிச் சென்று, அதன் வழியே தனது முனையைக் காட்டிக் கொண்டு வெளியே வந்தது. அப்போது அந்த வீரன் இடி இடித்தாற் போன்ற சப்தத்துடன், தனது கட்டையை நீட்டிக்கொண்டு திடீரெனக் கீழே விழுந்தான்.

அப்போது, அவ்வாறு பிராணனை விட்டு விட்ட அந்த வீரனுடைய ஆயுத, ஆடை, ஆபரணங்களைப் பிடுங்க வேண்டுமென்ற ஆவலுடன், கிரேக்கர்களெல்லாம் ஒருவர் மேல் ஒருவர் விழுந்து முன்வந்தனர். அதைத் தடுக்கும்படி, ஹெக்டர் தன்னுடைய இனத்தாரைத் தூண்டிக் கிளப்பினுன். அவனுடைய வார்த்தைகளைச் செவியேற்றுக் கேட்டவர்களில் மற்றெல்லோரையும் விட மிலானிப்பஸ் என்பவனுக்கே விசேஷமான ஆத்திரம் உண்டாயிற்று.

அவன் ஹிஸித்தேயனது மகன் ; உக்கிரஸ்வரூபி ; துணிவும், தைரியமும் உடைய ஓர் இளம் வீரன் ; கிரேக்கர்கள் கடலைக் கடந்து ட்ராய்க்கு வருமுன்னர், அவன் தன்னுடைய பிரமாண்டமான காளைகளைப் பேர்க்கோட்டி என்னும் மைதானங்களில் மேய்த்துக் கொண்டு, தனது காலத்தைக் கழித்து வந்தவன் ; தனது தேசத்திற்குக் கெடுதி நேரிட்டுவிட்டபொழுது, அவன் அதைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆவலுடன், தன்னுடைய காளைகள் மேய்ந்து கொண்டிருந்த மைதானங்களை விட்டு விட்டு, இலியனுக்கு வந்து இந்த யுத்தத்தில் கலந்து கொண்டு, யுத்த காரியங்களில் சிறந்து விளங்கினுன், இந்த உபஹாரத்துக்காக அவனைப் பிரியம்மஹாராஜன், தனது மரபில் வந்த இளவரசர்களையொப்பச் சிறிதும் குறைவின்றிச் சகலமான மரியாதைகளுடனும் தனது அரண்மனையில் இருத்தி வைத்துக் கொண்டான்.

அவன், தன்னுடைய சைனியங்களுக்குத் தலைமை வகித்துக்கொண்டு, அவற்றின் முன் நிற்பதைக் கண்ணுற்று, அவனே இந்தக் காரியத்தைச் செய்யத் தக்கவன் என்று எண்ணி, ஹெக்டர் அவனை நோக்கிப் பின்வருமாறு உரைத்து உற்சாகப்படுத்தினுன் :—

" அதோ பார் ! மிலானிப்பஸ் ! அதோபார் ! டோலாப்பஸ் அதோ கிடக்கின்ருன் ! நமது உறவினனுன இராஜபுத்திரன் இவ்வாறு தனது பிராணனை விடலாமா ? தன்னை மிஞ்சியவர்களால் அன்ரே இவன் கொலையுண்டு விழுந்து விட்டான் ? இரண்டு சத்துருக்களுக்கு இடையில், இவன் ஒருவனுக அகப்பட்டுக்கொண்டு, அவர்களுக்கு இரையாகி விட்டான் ! அதோ பார் ! அவர்கள் இரத்தம் கொட்டிக்கொண்டிருக்கும் அவனுடைய ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு ஓடுகின்றனரே ! எழுந்திரு ! புறப்பட்டுவா !

சத்துருக்களுக்குத் தூரத்தில் இருந்துகொண்டு இதுவரை பொருது வந்தது போதும். உனது தேசத்துச் சத்துருக்களுடன்

ங்கைகலந்து யுத்தம் செய்ய வேண்டிய சமயம் இதோ வந்து விட்டது! அவ்வாறு சண்டை செய்ய வா! ஒன்று, கிரீஸ்காரர்கள் தங்களுடைய பேரும், புகழும், கீர்த்தியும் அழிந்து ஒரேயடியாய் அடியோடு பாழாகப் போகவேண்டும்! அல்லது மாடமாளிகை களும் கூடகோபுரங்களும் உடைய இலியன் தனது ஆழமான அஸ்திவாரக்கல் முதல் தலையுச்சி வரை அதிர்ந்து தகர்ந்து தரை மட்டமாக வேண்டும்! சகலரும் ஒரேயடியாய்க் கீழே விழுந்து, ஒரே படுகுழியில் அழுந்திப் புதைந்து போகவேண்டும்! இவ்விரண் டில் ஒன்று ஆகவேண்டும்!" என்றான்.

இந்த வசனங்களை உரைத்துவிட்டு ஹெக்டர் தன்னுடைய சத்துருக்களை நோக்கிச் சரசர வென்று முன் சென்றான். மெலானிப் பஸ்ஸும் அவனைப் போலவே ஆத்திரத்துடன் கொதித்தான்.

அப்போது அஜாக்ஷன் கிரேக்கர்களை நோக்கி, "வாரீர் கிரேக்கர்களே! உங்களுடைய கீர்த்திகளைக் காப்பாற்றிக் கொள் ளுங்கள். உங்களுடைய மான மரியாதைகளையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள். அவமானத்தால் ஒருவனுக்கு விளையக்கூடிய இன் னல்கள் இன்னின்னவை என்பனவற்றையும் உன்னி உன்னித்தெளி யுங்கள். நீங்கள் ஒருவர்க்கொருவர், பரஸ்பர மரியாதையுள்ள வர்களாக விருந்துகொண்டு, ஒருவர்க்கொருவர் ஊக்கமளித்து வாருங்கள். உங்களுடைய உள்ளங்கள் பரஸ்பர மரியாதை களையும், ஊக்கமும் உற்சாகமும் கொண்டு கொதிக்கட்டும்!

சுத்தவீரர்கள்தான் யுத்தத்திற்கு முடிவு கட்டுவார்கள். வெற்றி பெற்றவர்கள் கீர்த்தியுடன் விளங்குவார்கள். பிராணனை விட்டுவிட்டவர்கள் போற்றப்படுவார்கள்; கீர்த்தியைத் தரக் கூடிய யுத்தத்தில் பயந்து நடுங்கும் பேடிக்கு மரணம் பிராப்தமா வதுமன்றி, மரணத்தினும் மிகக் கொடியதான என்றுமழியாத இழிவும் உண்டாகி விடுகின்றது" என்றான்.

இவ்வாறு அவன் ஜனங்களுக்குச் செய்த ஹிதோபதேச மானது வீணாக ஆகிவிடவில்லை; அது ஒவ்வொரு கிரேக்கன் மனத்திலும் ஊடுருவிச் சென்று, அங்கு வேரூன்றி நின்றுவிட்டது.

அவர்கள் ஒன்று சேர்ந்து கூட்டங் கூட்டமாக வந்து, அந்தக் கடற்படையின் ஓர் ஓரத்தில், ஒரு கெட்டியான பித்தளை மதில்போல் நின்றனர். அவர்களுடைய கவசங்கள் ஒன்றோ டொன்று உராய்ந்தன. அவர்கள், அவ்வாறு அணி அணியாய், ஒழுங்காக நின்றபொழுது, அவர்களுடைய கேடயங்களில் இருந்து வீசிய ஒளியானது, ஆகாய மண்டலத்தையும் வியாபித்துவிட்டது.

அதைக் கண்ணுற்றபொழுது துரோஜர்கள், முன்செல்வதை நிறுத்தி விட்டனர்; முன் செல்லும்படி அவர்களுக்கு ஜோவ் தேவர் ஊக்கமும், உற்சாகமும், தைரியமும் அளித்து வந்தும், அது பயனி லதாக ஆகிவிட்டது.

அப்போது ஆத்திரத்துடன் நெருப்புப்போல் பொங்கிக் கொதித்து வந்த ஸ்பார்ட்ட வீரன், உரத்துக் களித்து, அட்டகாசம் செய்து கொண்டு, முதன் முதலாக நெஸ்டாரின் வீர குமாரனை நோக்கிப் பின்வருமாறு உரைத்துத் தனது காரியத்தில் ஊக்கத்துடன் உழைக்குமாறு, அவனுக்கு உற்சாகமுண்டாக்கினன்:—

"உறுதியாய் நின்று இடைவிடாமல் யுத்தத்தைச் செய்யக் கூடியவனும், ஓட்டம் பிடிப்பவர்களைத் துரத்துவதில் ஊக்கம் உடையவனுமான உனக்குச் சமமான ஆயுதம் ஏந்திய இளம் வீரன் ஒருவன் உளனே? இல்லவே இல்லை! அவ்வாறிருக்க நீ தூரத்தில் விலகி இருக்கக் காரணம் என்ன? ஒரு காரியமும் செய்யாமல் ஏன் இங்கு நிற்கின்றாய்? உன்னுடைய உறுதியான ஈட்டியைத் தைரியமாகப் பிரயோகம் செய்து ஒரு துரோஜனையாவது குத்திக் கிழித்து, அவனுடைய குருதியை ஆறாகப் பெருக்கு" என்றான்.

அவன் அவ்வாறு சொல்லிவிட்டுத் தன்னுடைய சைனிகர்கள் நிறைந்திருந்த அணிவகுப்புக்குத் திரும்பிச் சென்றுவிட்டான்.

அக்கணமே அந்த இளைஞன் யுத்த ஆவேசம் மேலிட்டவனாய், ஆத்திரத்துடன் தடதடவென்று எழுந்து, எல்லா அணிகளுக்கும் முன்சென்று, தனது ஈட்டியை எய்து, பின் தன்னைச் சுற்றிலும் ஒரு காரிருள்போல் சூழ்ந்துகொண்டு நின்று வந்த சேனைகளை உற்றுப் பார்த்தான்.

அவ்வாறு நின்று வந்த அந்த வீரனைக் கண்ணுற்று நோக்கிய துரோஜ சைனிகர்கள், திடீரென பீதியடைந்து பின் வாங்கினர். அவன் எறிந்த வேல் பாம்பைப்போல் சீறிக்கொண்டு ஆகாயத்தைத் துளைத்துக்கொண்டு, வேகமாகச்சென்றது. அந்த ஆயுதத்தை, மெனிலாப்பஸ் முன்சென்று அதிதைரியத்துடன் தனது மார்பின்மேல் யேற்றுக்கொள்ள, அது அவனது ஹிருதயத்தைத் துளைத்து விட்டது. அவன் ஒருபெருத்த இடியைப்போல் சப்தத்தைச் செய்துகொண்டு, திடீரென்று கீழே விழுந்தான். அப்போது அவன் ஆயுதங்களும், எதிரொலியைக் கிளப்பிக் கொண்டு "கொல்"லென்று கீழே விழுந்தன. அகலமான அவனது மார்க்கவசமும், தரையைத் தட்டிக்கொண்டு தாளம் போட்டு வந்தது.

இவ்வாறு அவனை வெட்டி வீழ்த்திய விஜயன் அவனுடைய ஆயுத, ஆடையாபரணாதிகளைக் கவர்ந்துவிட வேண்டுமென்ற ஆவலுடன், அவன் மேல் ஒரே பாய்ச்சலில் பாய்ந்தான்; வெகு தூரத்திலிருந்து ஒரு வேடன் எய்த அம்பினால், தாக்குண்டு தனது ஹிருதயத்திலிருந்து தகதகவென்று கொதிக்கும் இரத்தத்தை வடித்துவரும் ஒரு பெண்மானின்மேல் எவ்வாறு ஒரு வேட்டை நாய் ஒரே மூச்சாய் வேகமாய்ந் பாய்ந்து, அதன் அள்ளைகளைக்

கிள்ளிக் கிழித்து விடுமோ, அவ்வாறே இவன் மெனிலாப்பஸ்ஸை ஆக்கிரமித்து வாட்டினுன்.

இதைக் கண்ணுற்ற ஹெக்டர், இது என்ன ஆபத்து! என்று அக்கணமே அவனது உதவிக்காகக் காற்றைப்போல் பறந்து அவனிடம் வந்தான். அவனது வரவைக் கவனித்த மஹா வீரனுன அந்திலோக்கஸ், அவனிடம் தனது ஜம்பம் சாயாது என்று நினைத்துச் சட்டென்று பின்னடைந்து ஓட்டம் பிடித்து விட்டான்.

ஒரு மைதானத்தில் மதோன்மத்தனுய்த் திரிந்துகொண்டிருந்த ஒரு துஷ்ட மிருகமானது ஓர் இடையனது நாயையோ, அல்லது அவனது காவற்காரனையோ கொன்று கிழித்து விட்டுத், தான் ஒரு பெரிய ஸாகஸ காரியத்தைக் செய்துவிட்டதாகப் பெருமையடித்துக்கொண்டு, தன்னைச் சுற்றி நாற்புறமும் பார்த்துக் கொண்டு நிற்கையில், அது தன்னை வளைத்துக்கொண்டு நெருங்கி வரும் பேரரவங்களைச் செவியேற்ருல், எவ்வாறு அது, தான் அடித்துக்கொன்ற மிருகத்தின் மாமிஸத்தையோ, அல்லது, மனிதனது மாம்ஸத்தையோ, முகர்ந்துகூடப் பார்க்காமல் தன்னுடைய சத்துருக்கள் தன்னிடம் வருமுன், ஓட்டமாக ஓடிச்சென்று காட்டின் நடுவில் உள்ள தனது குகைக்குள் புகுந்து, ஒளிந்து, தப்பித்துத் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு விடுகின்றதோ, அவ்வாறே இந்த இளைஞனும், நடுக்குற்று ஓட்டம் பிடித்தான்!

அதைக் கண்ணுற்ற துரோஜர்கள் அனைவரும், உரத்தக் கூவிப் பெருத்த ஆரவாரம் செய்தனர். பெருத்த கற்களையும், அம்புகளையும் ஒரு கனத்த மாரிபோல் அவன் மேல் பொழிந்தனர்! அக் கற்களும் அம்புகளும் ஒரு பெரும் புயலை நிகர்த்து விளங்கின. ஆனுல், அவன், இந்தக் கல்மாரிக்கும், சரமாரிக்கும் தப்பிப் பிழைத்தே விட்டான். தன்னுடைய இனத்தாரின் அணியை க்ஷேமமாகவும் அடைந்து விட்டான். அங்குச் சென்றபின், அவன் புத்துயிர் பெற்று பின்னும் தனது மார்பைத் தட்டிக்கொண்டு, விட்டேனு, பார்! என்று ஆத்திரத்துடன் துடித்தான்.

இப்போது ஜோவ் தேவரின் மேலான ஆணையைச் சிரமேற்கொண்டு, அதை நிறைவேற்றியே தீரவேண்டுமென்று துடித்து வந்த துரோஜர்கள் அலையலையாய்த் திரண்டு வந்த கிரேக்கர்களுடைய கப்பல்களில் ஏறி, அவற்றை நிறைத்து விட்டனர். தெட்டிஸ்தேவியின் பிராத்தனைக்கு இணங்கி தேவாதி தேவர், கிரேக்கர்களுடைய ஆத்திரத்தையும் உற்சாகத்தையும் குலைத்து, அவர்களைத் துயர்க் கடலிலும் துன்பக் கடலிலும் ஆழ்த்திவிட்டார். அதே சமயத்தில் ட்ராய் வீரர்கள் அனைவரையும் வெற்றியினுல் பளிச்சென்று அலங்கரித்தார்; அவர்களது மனத்தில் உற்சாகத்தையும் ஊறவைத்தார். அவர்களது கைவலியையும் விருத்தி செய்தார்!

அவர், கிரேக்கர்களுடைய கடற்படை தீப்பற்றி எரிய வேண்டும், அவற்றினின்றும் எழும் ஜ்வாலைகள் ஆகாயமளாவி ஓங்கி உயர்ந்து பாய்வதைத் தாம் தமது கண்ணுல் பார்க்க வேண்டும் என்ற கவலைகளுடன் ஐடா மலையின் சிகரங்களின்மேல் வாடிய முகத்துடன் வீற்றிருந்தார். அவ்வாறு அக் கப்பல்களைத் தீக்கிரையாக்கிய பின்புதான் யுத்தத்தின் போக்கும் மாறும், துரோஜர்கள் ஓட்டம் பிடிப்பார்கள், இலியனும் சத்துருக்கள் கைவசப்பட்டுத் தகதகவென்று தகனம் ஆகும் என்று வருங்கால நிகழ்ச்சிகளைத் தம் மனத்தில் வரையறுத்து வகுத்துக்கொண்டார்.

அவ்வாறே அவர் காரியங்களை நிறைவேற்றுவதற்காக, ஹெக்டரைக் கிளப்பி அவனுடைய மனத்தில் அமானுஷ்யமான ஆத்திரத்தையும் வேகத்தையும், கோபதாபங்களையும் உண்டாக்கி, அவனுடைய சத்துருக்களின்மேல் ஒரு மின்னலைப்போல் பாயும் படியும் அவனை நியமித்தார்.

மனிதர் இயற்றும் பழி பாவங்களுக்குத் தக்க தண்டனைகளை விதிக்கவேண்டுமென்று மார்ஸ்தேவர் தீர்மானித்து விடுவாராஞல் அப்போது அவர் பிரமாண்டமான வேலாயுதத்தை அவ்வாறு தான் ஆட்டி அசைத்துக் குலுக்குவார். அதன் பயனுகத் திரளான சேனைகளும் ஒரேயடியாய் அழிந்து போகின்றன.

விசாலமான வரைகளை வளைத்துக்கொண்டு, மண்ணுலக விண்ணுலகங்களை ஒரே விழுங்காய் விழுங்கிவிடும் ஒரு பெரும் நெருப்பும் கூட இந்த ஹெக்டரைப்போல் காந்தியுடன் மாலை மாலையாய் உருண்டு வருவதில்லை. அவன் அடங்காக் கோபத் துடன் துடிக்கின்ருன். நுரையைப்போல் வியர்வையை வடிக் கின்ருன். எள்ளும், கொள்ளும் வெடித்ததுபோல் கடுகடுத்த அவனுடைய புருவங்களின் அடியில் செக்கச் சிவந்த அவனுடைய இரு விழிகளும், இரண்டு விண்வீழ் கொள்ளிகள் போல் ஜொலித்தன. காந்தியுடன் விளங்கிய அவனது கிரீட மானது, அவனது தலையின்மேல் மூடப்பட்ட நெருப்பைப் போல் தகதகவென்று எரிந்தது. அவன் இப்புறமோ, அப்புறமோ தன்னுடைய தலையை அசைத்த பொழுது, அது மின்னிக் கொண்டு ஒளியை வீசியது; ஜோவ் தேவரின் கருணையிஞ லேயே அவனுக்கு இந்தப் பெருமைகள் உண்டாயின. தம் திவ் வியமான கிரணங்களை அவர் அவன்மேல் வழிய வழியப் பொழிந்து, இருதிறத்துச் சேனைகளின் மேலும் தாம் பக்ஷபாத மின்றிச் சொரிந்து வரவேண்டிய பிரகாசம் முழுவதையும் அந்த ஒரே ஓர் ஆளின் மேலேயே சொரிந்து வந்தார்.

ஹெக்டர் இவ்வளவு பெருமைகளுடன் விளங்கிஞன், எனி னும் அவனுக்கு நல்ல அதிர்ஷ்டம் இருக்கவில்லை! பாலாஸ் தேவி யின் பிடிவாதத்திஞலும், பெலிதீசனது பலமான ஈட்டியிஞலும் அவன் அதிசீக்கிரமே அழிய வேண்டியவஞக இருந்தான். என் ருலும்,ஜோவ் தேவர் அவனது அழிவுக் காலத்தை சிறிது நிறுத்தி

வைத்து, அவனுக்குப் பழைய விணைப்படிக் கிடைக்க வேண்டிய கீர்த்தியை அவன் ஒரு நாளேனும் அனுபவித்து வருமாறு அருள் புரிந்தார்.

பேரும் கீர்த்தியும் பெற வேண்டுமென்ற ஆத்திரமே மேலிட்டவனாய் விளங்கிய அவனது மார்பு பொங்கிக் கொதித்தது. தனது கண்ணுக்கு எதிர்ப்பட்ட சத்துருக்கள் அனைவரையும் தீயிட்டுக் கொளுத்திவிட வேண்டுமென்ற ஆத்திரத்துடன், அவனுடைய கண்களிலிருந்து நெருப்புப் பொறிகள் பறந்தன. தன் முன் வந்த சத்துருக்கள் அனைவரையும் ஒருவரையேனும் விடாமல் பிடித்துக் கொன்றுவிட வேண்டும் என்றும் அவன் துடித்தான்.

சைனிகர்கள் அதிநெருக்கமாய் நின்று வந்த அணிகளையும், யுத்தம் அதிமும்மரமாய் நடந்து வந்த இடங்களையும் குறிவைத்துக் கொண்டே அவன் மிகுந்த ஊக்கத்துடனும் முழுபலத்துடனும் தன்னுடைய காரியங்களைச் செய்து வந்தான். கிரேக்கர்களுடைய வியூகத்தை அவன் நாற்புறங்களிலும் தாக்கியடித்தான், என்றாலும் அது சற்றேனும் அசையவில்லை! அது ஒரு கோபுரத்தைப் போல் சிறிதும் சலனமின்றி நின்றுகொண்டு அவன் வேகத்திற்கு ஈடுகொடுத்தே வந்தது.

அதிபுராதனமான ஸமுத்திரத்தின் கரையில் நீட்டிக்கொண்டிருக்கும் ஓர் உயர்ந்த பாறையானது, காற்றால் அடியுண்டும் அலைகளால் மோதுண்டும், அவற்றால் சிறிதும் கெடுதியடையாமல் அந்த உன்னதமான ஸ்தானத்தில் இருந்த வண்ணம், தன்னுடைய தலைக்குமேல் அடிக்கும் பேரரவத்தைக் கேட்டுக் கொண்டும், தனது அடிவாரத்திலுள்ள நீர்மலைகள் ஒன்றோடொன்று மோதியடித்து, பொடிப் பொடியாய்த் தகர்ந்து நொய்போல் அரைந்து போவதைப் பார்த்துக் கொண்டும் வருவதுபோல், அந்தக் கிரேக்க வியூகமானது உறுதியாக நின்று வந்தது.

அப்போது, ஆகாய வாஸியாகிய ஜோவ்தேவரிடம் இருந்து புறப்பட்டு வரும் ஒரு பெரும் நெருப்பைப்போல், அந்த ஹெக்டர் தன்னைச் சுற்றிலும், நாற்புறமும் நெருப்பைக் கக்கிக் கொண்டு, கிரேக்கர்கள் அனைவரின் மேலும் பாய்ந்தான்.

ஆகாயத்திலுள்ள மேகங்களின் மேல் தொங்கிக் கொண்டிருக்கும் ஓர் அலையானது, தடதட வென்று கீழே இறங்கிப் பெரும் புயல்களின் சேர்க்கையினால், பிரமாண்டமான, உருவடைந்து, ஒரு கப்பலின் மேல் பொழிகையில் அக் கப்பலின் மேல் தட்டுக்கள், அந்த வெண்ணிறமான நுரைகளின் அடியில் மறைந்து விடுகின்றன.

அப்போது அடித்துவரும் புயற் காற்றானது, அக்கப்பலின் பாய்மரங்களின் உச்சியை அளாவிக்கொண்டு ஊளையிடுகின்றது. அப்பாய்மரங்களில் கட்டி இருக்கும் கயிறுகளின் மேலும்,

வடங்களின் மேலும், அது அடிக்கையில் அதனின்றும் இனிய இசைகளும் கிளம்புகின்றன.

அப்போது அக் கப்பலிலுள்ள பிரயாணிகள் அனைவரும் பயத்தினால்மேனி வெளுத்துத் திகிலடைந்து, அலுத்து, நடுக்குற்று, விரைத்துப் போகின்றனர். அப்போது கடலில் மோதிவரும் ஒவ்வோர் அலைக்கும், அக்கப்பலில் உள்ள பிரயாணிகள் பலியாகி விடுகின்றனர்.

ஹெக்டரும் அவ்வாறே கர்ஜித்தான்; அந்தக் கப்பற் படைகளை ஒரு கலக்குக் கலக்கினான். அப்போது கிரேக்கர்களும், அவனுடைய கண்களுக்கு அந்த நுரை நிறைந்த வெண் கடலைப் போன்றே தோன்றினர். நீர்வளமிக்க ஒரு விசாலமான மைதானத்தின் நடுவில், அடர்ந்து செழித்து வளர்ந்துள்ள புற்றரையில், தங்கள் மனம்போனபடி யதேச்சையாய் மேய்ந்து வரும் எண்ணிறந்த காளைகளைக் கண்ணுறும் ஒரு சிங்கமானது, தடதடவெனத் தனது குகையிலிருந்து புறப்பட்டு, வெளிவந்து, அக் காளைகளைக் காத்து வரும் இடையனது கண்ணெதிரிலேயே, அவற்றின் மேல் பாய்ந்து விடுகின்றது. அப்போது அந்த இடையன், நடுநடுங்கிக் கொண்டு திகிலடைந்து, நெடுந்தூரம் ஓட்டம் பிடித்துவிடுகின்றான். காளைகளும் கூட்டத்திலிருந்து கலைந்து, சிதறுண்டு, நாற்புறமும் ஓட்டம் பிடித்து விடுகின்றன, அப்போது அந்தச் சிங்கமானது அந்தக் கூட்டத்திலுள்ள மிகப் பெரியதான ரிஷப ராஜனைக் குறிவைத்துப் பிடித்து, அடித்து, அதைக் கொன்று கீழே வீழ்த்திவிடுகின்றது.

அவ்வாறே ஜோவ் தேவருக்குச் சமமான வேகத்துடன் கொதித்த ஹெக்டரின் முன்னால் சகலமான கிரேக்கர்களும், திரள் திரளாக நாற்புறமும் பறந்து சென்றனர். அவன் அந்தச் சிங்கத்தைப் போலவே, ரிஷப ராஜனைப் போன்ற ஒரு வீரனைப் பிடித்து அவனை வதைத்தான். மைஸீனியனான பெரிபீசன் என்னும் அந்த வீரன் பெருங் கீர்த்தியுடன் விளங்கி வந்தவன்; மஹா புத்திமானானவன். தனுர் வித்தையிலும் தேர்ந்தவன் என்று பிரஸித்தி அடைந்து இருந்தவன். பயங்கரனும், கோபத்துடன் விளங்கியவனுமான யூரிஸ்தியஸ்ஸுக்குப் பரிந்து எழுந்து முன்வந்து, அல்ஸைடிஸுடன் பொருதவன்! கோப்ரியஸ்ஸின் புதல்வன். துர்க்குணமே வடிவெடுத்து வந்த தன்னுடைய தகப்பனைப் போலன்றி, அவனுக்கு முற்றும் மாறான சத்குண ஸம்பன்னனாக விளங்கியவன். தனது நல்லொழுக்கத்தினாலும், நன்னடத்தையினாலும், தன் குலத்துக்கே பேரும், புகழும், கீர்த்தியும் சம்பாதித்தவன். யுத்தத்திற்கும், சுக ஜீவனத்திற்கும் சம்பந்தப்பட்ட ஸகல கலைகளையும் பயின்று வந்த தன்னாட்டு இளைஞர்கள், அனைவரிலும் அவனே சிறந்து விளங்கியவன். என்றாலும் தன்னிலும் வலிமிக்க ஹெக்டரினால் மடிய வேண்டும் என்பது அவனது தலைவிதியாய் இருந்தது.

ஹெக்டர், அவனது பிரமாண்டமான கேடயத்தின் ஓர் ஓரத்தை நோக்கி வேகமாகப் பாய்ந்து, அதை ஓர் உதை உதைத்தான். அப்போது பெரீபீசன் தலைகுப்புறக் காலைக் கிளப்பிக் கொண்டு, மல்லாந்து திடீரெனக்கீழே விழுந்தான். அவனது வெண்கலக் கிரீடம் கலகலவென ஒலித்தது. அவ்வாறு நிலத்தில் சாய்ந்து விட்ட அந்த வீரன்மேல், அவனை வென்ற துரோஜன், ஊன்றி உட்கார்ந்து, தனது கூரான வேலை அவனது மார்பில் குத்தித் துளைத்தான். அவனைச் சூழ்ந்துகொண்டு நாற்புறமும் நின்றிருந்த அவனுடைய நண்பர்கள், அவனுக்கு உதவி செய்து, அவனைச் சத்துருவின் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டுமென முயன்றனர். ஆனால் அவர்கள் வரும்முன் அவனது காரியம் முடிந்து விட்டது. ஆகவே அவர்களில் சிலர் ஓடிப் பிழைத்தனர்; மற்றையோர் அவனுக்குக் கிடைத்த கதியையே அடைந்தனர்.

இவ்வாறு முன்னணியிலிருந்து ஓட்டித் துரத்தப்பட்ட கிரேக்க சைனிகர்கள், தங்களுக்குப் பின்னால் சமுத்திரக்கரையோரமாகவிருந்த பின்னணியை நோக்கிச் சென்று, அதனுள் நெருங்கி நுழைந்து கொண்டு, ஒரு கெட்டியான ஆப்பைப்போல், தங்களுடைய கூடாரங்களின் சமீபத்தில் நின்றனர். அவர்களைச் சுற்றிலும், கப்பலின் பின்னணிகளெல்லாம், உயர்ந்த மதில்களைப்போல் விளங்கின. அந்தக் காட்சி அவர்களது மனத்தைக் கலக்கியது. அவர்கள் கவலை கொண்டவர்களாய் விளங்கினர்.

ஆனால் யுத்தத்தில் புறங்கொடுத்து ஓடுவது சுத்த வீரர்களுக்கு அழகாகாது என்ற எண்ணமும் அவர்களது மனத்தை அப்போது உறுத்தியது. ஆகவே அவர்கள் உடனே தங்களது கோழைத்தனத்தை ஒழித்துவிட்டு, தைரிய சீலர்களாய் பின்னும் யுத்தத்தைத் தொடர்ந்து செய்வதென்றே துணிந்தனர். இப்போது அவர்களுக்கு உண்டாகியிருந்த பிராண பயமே யுத்தத்தை முன் சென்று முனைந்து செய்வதற்கு ஒரு பெருந் தூண்டுகோலாக மாறி விட்டது.

அப்போது அந்தச் சேனையிலிருந்த வீரன் ஒவ்வொருவனும், தன்னருகில் நின்றவனுக்குத் தைரியமும், ஊக்கமும் ஊட்டி வந்தான். அந்தக் கிரேக்க ஸைனியம் முழுவதிலும், தீரஸ்வரமே நிறைந்திருந்தது.

அச்சமயம் கிரேக்கர்கள் அனைவருக்கும், ரக்ஷகராக விளங்கிய வரும், மஹா ஞானியுமான நெஸ்ட்டாரே, அவ்வாறு அவர்களுக்கு உபதேசம் செய்து வந்தவர்களில் தலைசிறந்து விளங்கினர். அவர் அந்தக் கடற்கரைகள் அனைத்தையும் கிரேக்கர்கள் தங்கள் ஸகலமான முயற்சிகளாலும் காப்பாற்ற வேண்டும் என்று ஹித வசனங்களாலும், இரந்தும் உபதேசம் செய்து வந்தார்.

அவ்வீரர்கள் தங்கள் முன்னோர்களின் வீரசூர பராக்கிரமங்களையும், அவ்வாறே தங்கள் பேரையும் புகழையும் மேன் மேலும்

விருத்தி செய்து வர வேண்டும் என்று பச்சை மரத்தில் அடித்த ஆணிபோல் உரைத்தார் :—

“ அன்பர்களே ! ஆண்மையுடன் விளங்குங்கள் ! இன்றைக்கு நமக்குக் கிடைக்கக் கூடிய வெற்றி தோல்விகளும், இலாப நஷ்டங்களும் மானஅவமானங்களும் நம்மெல்லோருக்கும் பொதுவே யாகுமென்று நன்ருக உணர்ந்தவர்களாய், ஊக்கமும் உற்சாகமும் கொண்டு பரஸ்பர ஸகாயிகளாக உழைத்து வாருங்கள். இந்த யுத்தத்திற்குப் புறப்பட்டு வருகையில், நீங்கள் என்ன எண்ணங்களுடனும், உத்தேசங்களுடனும் வந்தீர்கள் என்பதையும், இதுவரை உங்களுக்குக் கிடைத்துள்ள ஜயாபஜயங் களையும், இனிமேற் கிடைக்கக் கூடிய லாப நஷ்டங்களையும், நன்ருக ஆலோசித்துப் பாருங்கள் !

உங்களது மனைவிமாரும், மக்களும், பெற்றோரும், உங்கள் விஷயமாக எவ்வாறு கவலையுடன் காலங் கழித்து வருகின்றனர். என்பதையும் நினைத்துக்கொள்ளுங்கள் ! உங்களுடைய நாடுகளில் நரைத்த தலையுடன் உட்கார்ந்திருக்கும் உங்களுடைய தந்தை மார்களை நினைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய மரபில் பேரும் கீர்த்தியுமடைந்து விளங்கி யிருந்த உங்களுடைய முன்னோர்களை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.

அவர்கள் அனைவரும் என்னைத் தங்களுடைய பிரதி நிதியாக நியமிக்கின்றனர். என் மூலமாக அவர்கள் தங்களுடைய கருத்துக்களை வெளியிடுகின்றனர். உங்கள் எல்லோருக்கும் உபதேசம் செய்ய வேண்டு மென்று அவர்கள் என்னை வேண்டு கின்றனர். தங்களுடைய க்ஷேமத்தையும், கீர்த்தியையும் நீங்கள் தான் காக்க வேண்டும் என்று அவர்கள் முறையிடுகின்றனர்.

இன்றைய யுத்தத்தினுல் உங்களுக்குத் தெய்வங்கள் விதித் திருக்கும் கதி இன்னது என்பதும் தெரிந்து போகும். இன்றைய தினமே உங்களுடைய சோதனை தினம் என்று அறிந்து கொள்ளுங்கள் ! இன்றைக்கு வாய்த்திருக்கும் தருணத்தை மாத்திரம் நீங்கள் நழுவவிட்டு விடுவீர்களேயாணுல், உங்களுடைய செல்வங்கள் அனைத்தும் ஒரேயடியாய் அழிந்து போகும் !” என்ருர்.

அந்த வார்த்தைகளைக் கேட்டபொழுது, அவரைச் சுற்றி யிருந்த கிரேக்கர்கள் அனைவரும் உற்சாகத்துடன் பொங்கி யெழுந் தனர் ; சீறினர் ; வீராவேசத்துடன் பெருமூச் செறிந்தனர்.

அச்சமயத்தில் மினர்வா தேவியும் தன்னுலானதைச் செய்து, ஞானஸ்வரூபியான நெஸ்டாரின் மொழிகளைக் கேட்டு, ஆவேசங்கொண்டு விளங்கிய அவர்களது ஆற்றலை அதிகரிப்பித்து வளர்த்தார். அவர் கிரேக்கர்கள் அனைவரையும்

சுற்றிக் கொண்டு மறைத்துவிடும்படி ஜோவ் தேவர் நியமித் திருந்த பனிபோன்ற இருளை அடியோடு அகற்றினுர். அக்கணம், அவர்களுக்கு அந்த யுத்த களம் முழுவதும் வெட்டெனக்கட்புலனு யிற்று ; அனைத்தும் பளிச்சென விளங்கின ; அந்தப் போர்க் களத்தின் மேல் ஒரு கிரணமானது சட்டெனப் பாய்ந்தது. அப்போது கடற்கரைகளும், கடற்படைகளும், கடலும், அவர் களுக்கு ஒருங்கே கட்புலனுயின. அவர்கள் ஹெக்டரைக் கண்டனர்.

யுத்தகளத்திலிருந்து ஓட்டம் பிடித்துக் கொண்டிருந்தவர் களையும், அவ்வாறு ஓட்டம் பிடியாமல் தங்கள் தங்கள் இடத்தில் ஊன்றி நின்று யுத்தம் செய்து வந்தவர்களையும் கண்டனர் ! பளிச் சென்று வீசி அடித்து வந்த அந்த வெளிச்சத்தில், அந்த விஸ்தார மான யுத்தகளமானது சிறிதும் களங்க மின்றி அவர்கட்குப் புலனுயிற்று.

முதன் முதலாக மஹானுன அஜாக்ஷனது உருவமே அவர் கட்குப் புலனுயிற்று. அவன் அந்த யுத்தகளத்திற்கே அக்ரேஸனுக விளங்கினுன். தனது பிரம்மாண்டமான உருவத்திற்குத் தக்கவாறு, அவன் மிகக் கம்பீரமாகவும் விளங்கினுன். ஏற்றக் குறைச்சலின்றிச் சரியாக இருபது முழம் நீளம் உள்ளதும், இரும்புக் குந்துகளைச் சிரோ பூஷணமாகக் கொண்டதுமான, ஒரு கட்டியக் கோலை அவன் தன்னைச் சுற்றிச் சுழற்றிக் கொண்டிருந்தான். அவன் மற்றைய வீரர்களைப் போல், குறித்த சிலவிடங்களில் நின்று யுத்தம் செய்யாமல், தன்னுடைய கூட்டத்தார் அனைவரது தலைக்கும் மேலாக உயர்ந்து நகர்ந்து வரும் ஓர் உன்னதமான கோபுரம் போன்றே விளங்கினுன். தேவர்களுக்குச் சமமான அந்த வீரன், அந்தக் கப்பல்களின் மேல் தட்டுகளில் தன் காலை எட்டி யெட்டி எடுத்து வைத்து நடந்து கொண்டு, ஒருபுறமிருந்து மறுபுறம் வரை உலாவி வந்தான் !

துள்ளிக்குதித்தோடும் குதிரைகளைச் சவாரி செய்யப் பழக்கிச் சமர்த்தனுக விளங்கும் ஒரு வீரன், தனது ஆணைப்படி நடக்கப் பயிற்றிய நான்கு போர்க் குதிரைகளை நீர்வளம் மலிந்த ஒரு மைதானத்திலிருந்து, பொது ஜனங்கள் நடமாடும் ஒரு பெரும் வழியின் வழியே, ஒரு பெரும் பட்டினத்திற்கு ஓட்டிக் கொண்டு வருகையில், அவன் தனது திறமையே தனக்கு க்ஷேமத்தைத்தரும் என நம்பி, அக் குதிரைகளை அப்புறம் இப்புறம் இழுத்துத் திருப்புகின்ருன். அவையும் அவனை அனுசரித்து அவனது நியமனப்படி ஓடுகின்றன. அப்போது அவன் அக் குதிரைகளில் ஒன்றின் மேலிருந்து மற்றென்றின் மேல் தாவிக் குதித்துப் பாய்ந்து உட்கார்ந்து கொள்கின்ருன், ஒரு கணம் ஒரு குதிரையின் மேலும் மறுகணம் வேறொரு குதிரையின் மேலும் பாய்கின்ருன். அப்போது அவனைச் சுற்றியுள்ள ஜனங்களெல்லாம், அவனையே கண் கொட்டாமல் வியந்து பார்க்கின்றனர்.

இவ்வாறே அஜாக்ஷன் ஒரு கப்பலிலிருந்து மற்றொரு கப்பலுக்கு விரைவாகப் பறந்து சென்றான். யுத்தத்தில் அவன் வைத்திருந்த ஸைனியங்களும், அவனை மட்டற்ற வியப்புடன் கண்ணுற்று வந்தனர்.

அவனைப் போலவே வேகத்துடனும் ஆத்திரத்துடனும் துடித்து வந்த ஹெக்டரும், தன்னுடைய சத்துருக்களை மிரட்டி உருட்டினான். இடியைப் போல் முழக்கத்துடன் அவர்களைப் பயமுறுத்தினான்; துரோஜர் குழாத்தின் முன்பாகக் கொடுங் கோபத்துடன், தானே சரசரவென்று சென்று, வளைவுகள் மிகுந்த அந்தக் கடற்கரையின் ஓரங்களில் தங்கள் கூரான ஆயுதங்களை ஒழுங்காகக் காட்டிக் கொண்டு நின்றிருந்த கிரேக்கக் கப்பல்களின் மேல் பாய்ந்தான்.

இவனது இந்தப் பாய்ச்சல் எவ்வாறு இருந்தது என்றால் சொல்லுவேன் கேளுங்கள்.

அன்னப் பறவைகளோ, அல்லது, நாரைகளோ கூட்டங் கூட்டமாகப் பறந்து செல்வதைக்காணும் ஓர் அதிபலமுள்ள கழுகானது, அப் பக்ஷிக் கூட்டங்கள் ஊணருந்தும் நிமித்தம் கீழ் இறங்குவதை கண்ணுற்றால், எவ்வாறு அது ஆகாயமளாவி உள்ள தனது உன்னதமான இடத்திலிருந்து ஒரே பாய்ச்சலில் பாய்ந்து, தனது சிறகுகளின் நிழலினால் தரையில் உள்ள நீர்நிலைகளை மறைத்து விடுகின்றதோ, அவ்வாறே இருந்தது!

சர்வ வல்லமையும் உள்ள ஜோவ் தேவரே, அவனுக்கு ஊக்கமளித்துக் கொண்டு, அவன் முன் சென்றார். அவனைப் பின் தொடர்ந்து சென்ற ஸைனிகர்களுக்கும், அவர் அவ்வாறே ஆத்திரத்தையும் மனக்கிளர்ச்சியையும் உண்டாக்கினார்.

அப்போது இருதிறத்து வீரர்களும் சந்தித்தனர். யுத்த முழக்கம் ஆகாயம் வரை இடித்தது. கப்பல்களின் முன்னணிகளில் வீரர்கள் ஒருவரையொருவர் மும்முரமாகத் தாக்கியடித்தனர்! அந்த அடிகளையேற்ற கப்பற்றட்டுகளும் உரத்துச் சப்தித்தன. அவ்வாறு பொருது வருகையில், அவர்கள் காட்டிவந்த ஆத்திரத்தையும், நீங்கள் கண்ணுற்றிருந்தீர்களேயானால், இவர்களுடைய கொடுமையைத் தணிக்க வல்லோர் ஒருவரும் இலரோ, இவ்வாறு இடைவிடாமல் அருஞ்செயல்களைச் செய்து வரும் இவர்களுக்கு, அலுப்பு சலிப்பு என்பது இலதோ ? என்றே நீங்கள் ஐயுற்றிருப்பீர்கள்.

யுத்தம் படிப்படியாய் நடந்து வருந்தோறும், அவர்களுடைய வீரியமும் மேன்மேலும் முதிர்ந்து வந்தது போன்றும், ஓரோர் கணமும் அக்கணத்திற்றான் யுத்தம் ஆரம்பம் ஆனது போன்றுமே தோன்றியது. மரணமடைவது திண்ணம் என்றும் மனவுறுதியே உற்ற துணை என்றும் நம்பியவர்களாய், கிரேக்கர்கள்

தங்களுடைய சத்துருக்களுக்குச் சிறிதும் இளைக்காமல் யுத்தத்தை இடைவிடாமல் செய்து வந்தனர்.

கர்விகளான துரோஜர்கள் தங்களுக்குத் தான் ஜயம் கிடைக்கப் போகிறது என்ற பெருமிதத்துடன், தாங்கள் கொளுத்திய தீயினுல் சமுத்திரமே ஒரேயடியாய்க் கொழுந்து விட்டுக் கொண்டு எரிந்து வருவதாகவும், தாங்கள் கொன்ற வீரர்கள் வடித்து வந்த இரத்தத்தினுல் சமுத்திரமே ஒரு சிவந்த சேருக மாறிவிட்டதாகவும் நம்பி விட்டனர்!

இவ்வாறு ஒரு சாரார் மனப்பால் குடித்துக் கொண்டும், மற்ருெரு சாரார், அந்த யுத்தத்தில் தங்களுக்குத்தான் வெற்றி கிடைக்கப் போகின்றது என்ற திடமான நம்பிக்கையுடன் யுத்தத்தை இடைவிடாமல் நடத்தி வந்தனர்.

அப்போது, அஞ்சா நெஞ்சனே! ஹெக்டரே! ஒருவராலும் தடுக்க முடியாத விசையுள்ள உனது கைதான், முதன் முதலில் அந்தக் கடற்கரையில் சத்துருக்களுடைய கப்பலொன்றைப் பிடித்தது! அந்தக் கப்பலில் தான் பிரோதிசிலாஸ் புறப்பட்டு வந்தான்! துயருற்ற, துன்பம், நிறைந்த ட்ராய்க் கரைக்கு முதன் முதலாக வந்த கப்பலும் அதுதான்! யுத்தத்தில் ஈடுபட்டிருந்த இருதிறத்துச் சேனைகளும் இதைக் காப்பாற்ற வேண்டுமென்றும், கவர்ந்துகொள்ள வேண்டுமென்றுமே, தங்களாலான முயற்சிகளை யெல்லாம் செய்து வந்தன.

அந்த முயற்சிகளில் அவர்கள் தங்களது இரத்தத்தைத் தாராளமாகத் தங்குதடை இன்றி வடித்து வடித்தனர். அவர்களுடைய மார்புகள் அந்த இரத்தக் குழம்பில் குளித்தவை போல் விளங்கின. அப்போது அங்கு வீரர்கள் ஒருவரை ஒருவர் நெருக்கி நின்று வந்ததினுல், அவர்களுக்குத் தங்களது வேலாயுதத்தைக் குறிபார்த்து எறியவோ, அல்லது வில்லை வளைக்கவோ இடமில்லாமல் போய்விட்டது. அவர்கள் ஆளுக்காள் எதிர்த்து நின்றுகொண்டு, கைகலந்து மும்முரமாகச் சண்டை செய்து வந்தனர். அவர்கள் தங்கள் சத்துருக்களால் காயமடைந்தும், அவர்களுக்குக் காயம் உண்டாக்கியும் வந்தனர்!

அவர்கள் தங்களுடைய உடைவாள்களையும், கோடரிகளையும், கத்திகளையும், சிறிய ஈட்டிகளையும் கொண்டு தங்களுடைய சத்துருக்களின் மார்புகளைத் துளைத்து வந்தனர். அப்போது உடைவாட்கள் படபடவென்று ஒலித்தன. கவசங்கள் ஒன்ருேடொன்று உராய்ந்து கலகலவென்று சப்தித்தன. கோடரிகள் திடுதிடுவெனப் பிளிறின. நீண்ட பட்டாக் கத்திகளில் சில ஆகாயத்தில் பளபளவென மின்னின; வேறு சில, தரையின் மேல் விழுந்து, தகதகவென ஒளியை வீசின. வீரர்கள் வடித்துவந்த இரத்தத்தினுல் அந்தக் கடற்கரையானது கறையுற்றது, வழுக்கியது. அவர்களுடைய உயிரற்ற உடல்கள் அக்கடலில் மோதி

வந்த பயங்கரமான மலைகள் போன்ற அலைகளை மேலும் பெரியனவாகத் தோற்றுவித்தன.

அப்போது கோபதாபங்களும் வேகமும் சிறிதும் தணியாமல், ஹெக்டர் தன்னுடைய வலிமிக்க கையினால், ஒரு கப்பலின் உயர்ந்த பின்னணியத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, தன்னுடைய அனுசரர்களைக் கூவியழைத்து, அவர்களுக்குப் பின் வருமாறு தனது ஆணையையிட்டான் :—

"விரைந்து வாருங்கள்! ஓட்டமாக ஓடி வாருங்கள்! நெருப்பைக் கொண்டு வாருங்கள்! பத்துவருஷ காலம் நாம் இடைவிடாமல் உழைத்து வந்த காரியம் இன்று முடிந்துவிட்டது! நாம் கோரிவந்த நல்ல நாளும் வந்துவிட்டது! அதோ! அங்குக் காணும் சத்துருக்களின் கடற்படையை அழித்துவிட்டு நாம் ஜயஜோதியுடன் விளங்குவோம்! இந்த நல்ல நாளை, நாம் ஜய கோஷத்துடன் கொண்டாடுவோம்!

மனவலியிழந்த பயங்கொள்ளிகளான நம்முடைய முதியோர் சொல்லிவந்த கோழைத்தனமான வார்த்தைகளைக் கேட்டு வந்ததினால், நாம் இதுவரை ஜயசீலர்களாக விளங்கவில்லை! ஜோவ் தேவரின் மாயவலையினுள் சிக்குண்டு நமது காலத்தைக் கழித்து விட்டோம்!

இப்போது யுத்தத்திற்கு வருமாறு அவரே நம்மை இடியைப் போல் உரத்து, இடித்துக் கூவியழைக்கின்றார்! இந்தப் பெரு நாளில் அவர் நம்முடைய எல்லா ஆசைகளையும் நிறைவேற்றுகின்றார்! நம்முடைய சக்திகள் அனைத்தையும் கிளப்புகின்றார்! நம்முடைய மனவேட்கைகளை ஆதரித்து வருகின்றார்!" என்றான்.

இவ்வாறு அவன் சொல்லி முடித்தபின், அந்த துரோஜ வீரர்கள் எல்லோரும் அவனுடைய கண்டிப்பான ஆணையைச் சிரமேற்கொண்டு, கிரேக்கக் குழாங்களின் மேல் ஒரு புதிய பெரு வெள்ளம் போல் விழுந்து தாக்கினர். அவர்கள் விடுத்த வேலாயுதங்கள் கிரேக்கர்களின்மேல் ஒரு கனமான மழையைப் போல் பாய்ந்தன.

அதைக் கண்ணுற்ற அஜாக்ஷனும் பிரமித்துக் தன்னுடைய வேகத்தைத் தணித்துக் கொண்டு நிதானித்தான், முன் வைத்திருந்த தனது காலையும் பின்வைத்தான். தான் அன்று உயிருடன் பிழைப்பானோ, அல்லது தனது உயிரை இழப்பானோ என்றும் மனம் கலங்கினான். என்றாலும், அவன் தனது மன வுறுதியை இழந்து விடவில்லை. தனது தலைவிதிக்குத் துணிந்து தனது அருகில் எந்த வீரன் வருகிறான், அவனையும் ஒருகை பார்த்தே விடுவோம் என்ற நிச்சய புத்தியுடன், அவன் கப்பலின் துடுப்புகள் வைக்கப்பட்டிருந்த இடத்திலேயே நின்றான். தன்னிடம் ஒப்புவிக்கப்பட்டிருந்த அந்தக் கடற்படையைக்

கடைசிவரைக் காத்தே விடுவதென்ற தீர்மானத்துடன், அவன் தனது ஈட்டியைக் குலுக்கிக் கொண்டும் உயரத் தூக்கிக் கொண்டும், தன் சத்துருக்களை நோக்கி நீட்டிக் காட்டிக் கொண்டும் இருந்தான். அத்துடன் நில்லாமல், அவன் தன்னுடைய கிரேக்க வீரர்கள், தங்களுடைய எதிரிகளால் மோதுண்டு மடிந்து வருவதையும், அவர்களுடைய அம்புகளுக்கும் நெருப்புக்களுக்கும் ஆளாகி வருவதையும் கண்ணுற்றுச் சிறிதும் தளர்வடையாமல், அவர்களுடைய காதுகள் செவிபடும்படி பின் வரும் வீரமொழிகளை யுரைத்தான் :—

"வீரர்களே! நண்பர்களே! நாம் என்றும் அன்புடன் போன்றும் வீரப் பெயர்களை வகிப்பவர்களே! நீங்கள் ஒரு காலத்தில் மார்ஸ் தேவரின் புத்திரர்களாக விளங்கியவர்களே! சத்துருக்களுக்கு இடியைப் போன்றவர்களே!

உங்களுடைய பழங் கீர்த்திகளை மறவாமல் சிந்தித்து வாருங்கள்! மஹான்களான உங்களுடைய முன்னோர்களின் அருங் குணங்களையும், உங்களுடைய அருங் குணங்களையும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்!

இந்தப் பெரிய ஆபத்திலிருந்து தப்புவதற்கு உங்களுக்கு யார் உதவி செய்யப் போகின்றார்கள்? எங்கிருந்து உங்களுக்கு உதவி வரப்போகின்றது? உங்களுக்கு வரவிருக்கும் ஆபத்தான ஊழ்வினையைத் தடுப்பதற்கு உற்றதுணை எங்குளது?

புறங்கொடுத்து ஓடலாம் என்றால், அதற்குத் துணை வருவார் இல்லை! வழியில் உபசரிப்பார் இல்லை! அடைக்கலம் புகுதற்கான ஒரு நகரமும் இல்லை! இந்த இடத்தில் இருந்தபடிதான் நீங்கள் உங்களுடைய உயிரைக் காக்கவோ, அல்லது அதைக் காப்பாற்றிக் கொள்ளவோ வேண்டும், வேறு வழி இல்லை!

அதோ! அங்கு நமது சத்துருக்களான துரோஜர்கள் நிற்கின்றார்கள். அகாதமான சமுத்திரம் இதோ இங்கு அலைமோதுகின்றது. நீங்கள் நின்று வரும் இந்த நிலமும் உங்களுடைய சத்துருவுக்குச் சொந்தமானது! உங்களுடைய சொந்தத் தேசங்கள் இங்கிருந்து மிகவும் வெகு தூரத்தில் இருக்கின்றன! உங்களுடைய க்ஷேம லாபங்களெல்லாம் உங்களுடைய புஜபலபராக்கிரமங்களையே பொறுத்து இருக்கின்றன!" என்றான்.

இந்த மொழிகளை அவன் மிகுந்த ஆத்திரத்துடனும் வேகத்துடனும் உரைத்து விட்டு, மேன்மேலும் வார்த்தைகளைச் செலவிடுவதில் பயனில்லை என்று நினைத்து, தனது கைவரிசையைக் காட்டத் தீர்மானித்துச் சத்துரு சங்காரம் செய்வதின் பொருட்டுத் தனது வேலாயுதத்தைச் சுழற்றி வீசினான். கொழுந்து விட்டுக்கொண்டு எரியும் கொள்ளிக்கட்டைகளைத் தன்னுடைய கையில் ஏந்திப் பிடித்துக் கொண்டு, கிரேக்கர்களுடைய கறுத்த

கப்பலை நோக்கித் துணிவுடன் வந்த துரோஜ வீரன் ஒவ்வொரு வனையும் குறிவைத்து அந்த வீரன் தன்னுடைய ஆயுதத்தைப் பிரயோகித்தான்.

அந்த ஆயுதம் சிறிதும் குறிதவருமல் பாய்ந்து சென்று அதிர்ஷ்ட ஹீனர்களான அவ்வீரர்களைக் குத்திக் கொன்று, அக் கப்பல்களின் பின்னணியத்தில் வீழ்த்தி விட்டது. இவ்வாறு ஒரே நொடியில் மஹாவீரர்களான பன்னிருவர், வீரகேசரியான அஜாக்ஷனுல் அடிசாய்ந்து மடிந்து விழுந்தனர். அவர் களுடைய ஆவிகளும் நரகலோகத்தின் நிழலை அடைந்தன.

———o———

## பதினாறும் அத்தியாயம்

# ஆறாவது யுத்தம் :—பத்திரகலுஷனுடைய பராக்ரமச் செயல்களும் அவனது மரணமும்

கதைச் சுருக்கம் :—பதினொன்றாவது அத்தியாயத்தில் சொல்லிய படி பத்திரகலுஷன் நெஸ்டாரின் வேண்டுகோளுக்கிணங்கி, அகிலேசனிடம் சென்று இந்த யுத்தத்தில் கிரேக்கர்களுக்கு உதவி செய்யத் தனக்கு அனுமதி தரவேண்டுமென்றும். அகிலேசன் தன்னுடைய வீரர்களையும் கவசங்களையும் தனக்குத் தர வேண்டுமென்றும் மன்றாடிக் கேட்கின்றான்.

அகிலேசன் அதற்கு இணங்கி, பத்திரகலுஷன் கிரேக்கர்களுடைய கப்பல்களை மாத்திரம் சத்துருக்களிடம் இருந்து மீட்க வேண்டுமென்றும் அதன் பின் அவன் சத்துருக்களைத் தொடர்ந்து போகக் கூடாது என்றும் வற்புறுத்துகின்றான்.

அகிலேசனது கவசம், குதிரைகள், சேனைகள், சேனைத் தலைவர்கள் முதலிய அங்கங்கள் வர்ணிக்கப்படுகின்றன,

அதன்பின் அகிலேசன், தனது நண்பனுக்கு வெற்றி உண்டாக வேண்டுமென்று தெய்வங்களைப் பிராத்தித்து, அவைகளுக்கு ஒரு நைவேத்தியம் செய்கின்றான்.

பத்திரகலுஷனும், மிர்மிடோன்கள் என்னும் வீரர்களுடன் யுத்தகளத்திற்குச் செல்கின்றான்.

அவ்வாறு அகிலேசனுடைய கவசங்களை அணிந்து கொண்டு வந்த பத்திரகலுஷனைக் கண்ணுற்ற துரோஜர்கள், அகிலேசனே தங்களை எதிர்க்க வந்து விட்டான் என்று நம்பி, அகாதமான துயரக் கடலில் ஆழ்ந்து விடுகின்றனர்.

பத்திரகலுஷன் அவர்களைக் கிரேக்கர்களுடைய கப்பல்களில் இருந்து வெகு தூரத்திற்கு ஓட்டி விடுகின்றான். ஹெக்டர் பறந்து ஓட்டம் பிடிக்கின்றான், ஸார்ப்பீடன் கொல்லப்படுகின்றான். அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று ஜூப்பிடர் செய்த ஜபம் பலிக்காமல் போகின்றது.

இந்த யுத்தத்தில் நடந்த வேறு சில விஷயங்களும், வர்ணிக்கப் படுகின்றன. அவற்றின் இடையில் பத்திரகலுஷன், அகிலேசனுடைய ஆணைகளை மீறி ட்ராய் நகரின் கோட்டை மதில்கள் வரைத், தனக்குத் தோற்ற சத்துருக்களைத் துரத்திக் கொண்டு செல்கின்றான்.

அங்கு அப்பாலோ தேவர், அவனை மடக்கி நிராயுதனுக் ஆக்கி விடுகின்றார், அச்சமயம் யூபோர்பஸ் என்பவன் அவனைத் தாக்கிக் காயமுண்டாக்கி விடுகின்றான். ஹெக்டர் அவனைக் கொன்று விடுகின்றான்.

இத்துடன் இந்த அத்தியாயம் முடிகின்றது

---

இரத்தக் கறை படிந்த அந்தக் கடற்கரையில், இவ்வாறு இருதிறத்துச் சேனைகளும் பொருது வருகையில், கன்னங்கரே லென்ற அந்தக் கப்பல்களில் மடிந்து விழுந்து விட்ட வீரர் களுடைய பிணங்கள் தீப்பற்றிப் புகைந்து எரிந்து வந்தன.

இதன் மத்தியில் பத்திரகலுஷன், தன்னுடைய கண்களி லிருந்து கண்ணீரைத் தாரை தாரையாக, ஒரு பெரு மாரிபோல் பொழிந்து கொண்டு, அகிலேசனை நோக்கிப் பறந்து சென்றான். செங்குத்தான ஒரு பாறையிலிருந்து பாயும் கறுத்த அருவிகளும் கூட அவனுடைய கண்ணீரினும் அதிகமான வேகத்துடன் அப்பாறையின் அடிவாரத்திலுள்ள நிலங்களில் பாய்வதில்லை.

அப்போது தேவஸ்வரூபியான பிலிதீசன் தனது மிகப் பிரியனான உயிர்த்தோழன் படுங் கஷ்டங்களைக் கண்ணுற்று இரங்கி மனமுருகி, அவனை நோக்கித் தழுதழுத்த குரலில் பின் வரும் வசனங்களை யுரைத்தான் :—

"பத்திரகலுஷா! உன்னுடைய மார்பு ஏன் இப்படித் துடிக்கின்றது! உனக்கு என்ன கஷ்டம் வந்து விட்டது? வீரனுக்கு அழகில்லாத இந்தக் கண்ணீரை நீ தடதட வென்று சொரிவ தற்குக் காரணம் என்ன? ஒரு தாயின் அன்புமிக்க மார்பி லிருந்து பிரித்து அகற்றி விடப்பட்ட ஓர் இளம் குழந்தை ஒரு சிறு பெண்ணுங் கூட இவ்வாறு விம்மி விம்மிப் புழுங்கி அழமாட்டாதே! ஒரு சேயானது தனது அன்னையின் முழங்காலைக் கட்டிப் பிடித்துத் தொங்கிக் கொண்டும், அவளுடைய கைகளை எட்டித் தொத்திப் பிடித்துக் கொண்டும் அழுகையில், அந்த அன்னை நான் இப்போது உன்னைக் கண்டு தவிப்பதினும் அதிக மாகத் தவிக்கமாட்டாளே! என்னென்ன துக்கங்களால் மன முருகியவனாய், நீ உனது நண்பனான என்னை நாடி வருகின்றனை? உனக்கு வேண்டுவது என்ன? ஐயோ அதைச் சொல்லு! அதைத் தடையின்றி ஒளிக்காமல் சொல்லு!

எனக்கு நேர்ந்த கஷ்டங்களை நினைத்துத்தான் நீ வருந்து கின்றனையோ? என்னுடைய சைனிகர்களுக்கு ஏதேனும் ஆபத்து வந்து விட்டதோ? அல்லது நமது ஜன்மதேசத்திலிருந்து ஏதேனும் துக்கமான சமாச்சாரங்கள் வந்து விட்டனவோ?

நம்முடைய பிதாக்கள் ஆரோகதிடகாத்திரர்களாய் சுகவாஸி களாய் இருக்கின்றார்களா? அவர்களுடைய க்ஷேமத்தை யன்றோ

நாம் முதன் முதலாகவும் மிகுந்த அன்புடனும், கவலையுடனும், கோரி வர வேண்டும்! உன்னுடைய பிதாவாகிய குணசீலர் மினிஷியஸ் சுகமாக விருக்கின்றாரா? விருத்தரான பீலியஸ் பூர்ண ஆயுளுடன் விளங்குகின்றாரா? விருத்தர்களான அவர்கள் தங்களுடைய புத்திரர்களின் பராக்கிரம விசேஷங்களைக் கேட்டு இன்புற்று வருகின்றார்களா? அல்லது ஸாமான்யமான வேறு யாருக்காயினும் ஏதேனும் ஆபத்துக்கள் உண்டாகி விட்டனவா? அவற்றைக் குறித்துத்தான் நீ இவ்வாறு இரங்குகின்றனையா?

கிரேக்கர்கள் என்று பேரும் கீர்த்தியும் கொண்டு விளங்கியவர்களில் மீந்துள்ளவர்கள் அதோ அங்குத் தங்களுடைய கப்பல்களில் தீக்கும், கத்திக்கும் இரையாகி மடிந்து போகின்றனரே! அதிகர்வியான தங்கள் அரசனுடைய அநீதிக்குப் பலியாகி வருகின்றனரே! என்றுதான் நீ கலங்குகின்றனையா?

உனது துக்கத்திற்குக் காரணம் எதுவாய் இருந்தாலும் சரி, அதைஎனக்கு ஒளியாமல் உரைப்பாயாக! உனது கவலைகளில் ஒரு பாகத்தை, உன்னுடைய நண்பனான நான் ஏற்றுத் தாங்கிக் கொள்வேன்!" என்றான்.

இந்த வசனங்களை உரைத்த கணமே, அவன் ஒரு பெருமூச்செறிந்தான், அதனால் அவனது மார்பே பிளந்து போவது போல் ஆயிற்று. சற்றுப் பொறுத்து அவன் பின்னும் ஒருமுறை பெருமூச்சு விட்டான்.

அதன் பின் பத்திரகலுஷன் அவனை நோக்கிப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான் :—

"கடைசியாக இப்போதாவது உன்னுடைய மனது கிரீஸுக்காக இளகட்டும்! இரங்கட்டும்! நீயும் ஒரு கிரேக்கன் தான். ஒரு காலத்தில் நீயே அவர்கள் அனைவரினும் உத்தமனாக விளங்கினை! ஐயோ, நான் என்ன செய்வேன்!

கிரீஸுக்குநேரிட்டுள்ளகஷ்டத்தைத் தடுக்கக் கூடியவனான வீரன் ஒவ்வொருவனும், இப்போது காயங்களால் குத்துண்டும், இரத்தத்தை வடித்துக் கொண்டும், தனது கூடாரத்தில் விழுந்து கிடக்கின்றான்.

யூரிப்பைலஸ்ஸும், திடிதீசனும், அத்ரியஸ்ஸின் புத்திரனும், ஞானஸ்வரூபியான யுலிஸ்ஸீஸும் கடற்படையின் அருகில் அழுது புலம்பிக் கொண்டு கிடக்கின்றனர். தங்களுக்குக் கிடைத்த அடிகளையும் புடைகளையும், தங்களது நாட்டிற்கு உண்டாகிவிட்ட கஷ்டங்களையும் உன்னியுன்னி அவர்கள் பெருமூச்சு விட்டுக் கதறுகின்றனர்.

ஹிதமான வைத்திய முறைகளாலும், சிகிச்சைகளாலும் அவர்களுடைய நோய்களை ஆற்றிவிடலாம். உன்னுடைய

மனத்தைக் கரைக்கத்தக்க மருந்தைத்தான் நான் காணவில்லை! ஆஹா தெய்வமே! என் நெஞ்சம் உன் நெஞ்சைப் போல் கன்னெஞ்சாக ஆகாமல் இருக்க வேண்டுமே! உன்னுடைய பெருமையினால் என்ன லாபம்? என்ன பயன்?

உன்னுடைய நாட்டிற்கு அந்திய காலம் வந்திருக்கின்றது, அது திண்டாடுகின்றது, தவிக்கின்றது, அதை நீ புறக் கணித்து விட்டாய்! நீ முன் வந்து அதை ரக்ஷிக்க வேண்டும், என்று உன்னை வேறு எந்த நண்பன், அல்லது வேறு எந்த மனிதன் வேண்டினால் நீ மனமிரங்குவாயோ, அதைச் சொல்? அந்த மனிதனை நான் காணவில்லை.

நம்முடைய சந்ததியார் ஊழிக்காலம் உள்ளளவும் இந்த அதிகடினமும், தயவு தாக்ஷணியமற்றதுமான உனது ஸ்வாபத்தை இழித்துக் கூறுவார்கள்; சபிப்பார்கள்!

அட இரக்கமற்ற ஜன்மமே! நீயும் மனிதவர்க்கத்தில் பிறந்தவன்தானா? ஆம் என்றால், ஸதிபதிகள் மனமொத்துச் சேர்ந்ததினால், பிறந்தவனல்ல நீ என்பது நிச்சயம். ஒரு வீரனது காதலும், உனது பிறப்புக்குக் காரணமாக இருந்திராது! கருணாத்ரியான ஒரு தேவதையும் உன்னை ஈன்றிருக்க மாட்டாள்! ஒரு கொடிய கற்பாறையின் கர்ப்பத்திலிருந்துதான் நீ உற்பவித் திருக்க வேண்டும்! அன்றேல் ஆரவாரங்களுடன் மோதிவரும் அலைகளும் புயல்களும் நிறைந்த ஸமுத்திரமே உன்னைப் பெற்ற அன்னையாய் இருத்தல் வேண்டும்! உன்னுடைய இழிவான ஒழுக்கங்களையும், நடயுடை பாவனைகளையும், இரக்கமற்ற கல் நெஞ்சத்தையும் கவனித்துப் பார்த்தால் நீ ஒரு முரடன், கொடுமை களின் அவதாரம் என்றே தோன்றுகின்றது.

துர்நிமித்தங்களால் நீ மன நடுக்கமுற்றோ, அல்லது ஜோவ் தேவரேனும் தெட்டிஸ் தேவியேனும் உனக்கு இட்ட ஆணைகளை மறுக்க முடியாமலோ, நீ உன் கையைக் கட்டிப் போட்டுக்கொண் டிருக்கின்றாய் என்றே எண்ணுகின்றேன். அப்படியானால் நான் மாத்திரம் மிர்மிடோனியர்களைக் கூட்டிக் கொண்டு யுத்தகளத் திற்குள் பிரவேசிப்பேனானால், கிரேக்கர்கள் சிறிது மனம் தேறுவார்கள்; அவர்களுடைய முகமும் தெளியும், பொலிவுடன் விளங்கும். உன்னுடைய அதிபயங்கரமான ஆயுதங்களை மாத்திரம் அணிந்து கொண்டு நான் யுத்தத்திற்குச் சென்றால், மஹா கர்விகளான ட்ராய் நாட்டார் திகிலடைந்து துடிப்பார்கள், நடுங்குவார்கள், யுத்தகளத்தை விட்டு ஓட்டமும் பிடிப்பார்கள்.

இவ்வாறு செய்தால், நீ நேராக யுத்தகளத்துக்கு வராம லேயே இந்த யுத்தமானது இன்றைய தினம் கிரேக்கர்களுக்கு வெற்றியாக முடிந்துவிடும். உனது உருவமே நம் சத்துருக்களைப் பயமுறுத்தி, ஓட்டிவிடும். புதிய சேனைகளுடன் நாம் துரோஜர் களைத் தாக்கினால் இதுகாறும் ஓய்வு ஒழிச்சலின்றி உழைத்துச்

சலித்துக் கிடக்கும் அவர்கள் நம்முடைய கப்பல்களை விட்டு விட்டு ஓட்டம் பிடிப்பார்கள். கிரேக்கர்களது கஷ்டமும் சிறிது தணியும். அவர்கள் சிறிது பொழுதாயினும் தாராளமாக மூச்சு விடுவார்கள்'' என்றான்.

ஆஹா பத்திரகலுஷா ! உனக்கு வரவிருக்கும் வினைப்பயனை அறியாமல் நீ இவ்வாறு பிதற்றுகின்றாய் ! அகிலேசன் தன்னுடைய ஆயுதங்களை உனக்கு தரவேண்டுமென்று நீ அவனைத் தழு தழுத்த குரலுடன் கெஞ்சிக் கேட்கின்றாய் ! ஆகா, நீ அவனுடைய ஆயுதங்களுடன் உன்னுடைய மரணத்தையும் சேர்த்தே கேட்டு விட்டாய் ! அதனால் நன்மையுடன் தீமையும் விளையப் போகின்றது ! உன் நண்பன் மூச்சு விடுகின்றான், அது உனக்கு வரவிருக்கும் கேட்டை முன்னடியே உனக்கு அறிவித்து விடுகின்றது ! அவன் அவ்வாறு பெருமூச்சு விட்டுக் கொண்டு உனக்குப் பின்வருமாறு பதிலும் உரைத்தான்:—

" பத்திரகலுஷா ! உனது அன்பனான அகிலேசனுக்குப் பயம் என்பது எவ்வாறிருக்கும் என்பதே தெரியாது ; ஜோவ் தேவரின் வார்த்தைகளையோ, அல்லது சோதிடர்களின் அபிப்பிராயங்களையோ அவன் கேட்பது இல்லை, கவலையுடன் எச்சரித்து வரும் ஓர் அன்னையின வசனங்களையோ ஆலோசனைகளையோ அவன் கருதுவதும் இல்லை.

அந்தக் கொடும்பாவி ஆகமனனது கர்வமே எனது மனதில் வேரூன்றி நிற்கின்றது. ஆஹா, அவன் எனக்கு எவ்வளவு தீமைகள் செய்து விட்டான் ! அந்தத் தீமைகளையே நான் இடைவிடாமல் சிந்தித்து வருகிறேன். அவையே என்னை உறுத்தி வருகின்றன. அவைதான் என்னுடைய மந்திரிகள் ! அவைதான் என்னுடைய கோபத் தீயை வளர்த்து வருகின்றன !

எல்லோருக்கும் மேலான உயர்ந்த பதவிக்கு அவனை நான்தான் உயர்த்தினேன். எனக்குத் துரோகம் செய்யக்கூடிய அதிகாரத்தையும் நான்தான் அவனுக்குக் கொடுத்தேன். அந்த அதிகாரத்தை அவன் என்மேல் செலுத்தியே விட்டான், நான் அதன் பயனை அனுபவித்து விட்டேன், இன்னும் வெகு காலம் வரை அனுபவித்தே வருவேன், அதை நினைத்து, நினைத்து, மனம் நொந்து வருவேன்.

நான் அருமையாய்க் கருதிவந்த அந்தப் பெண்மணியை அவன் என்னிடமிருந்து, பலவந்தமாகப் பிடுங்கிக் கொண்டு விட்டான்.

கறுத்த விழிகளையுடைய அந்தப் பெண்ணை அவன் பலவந்தமாகப் பறித்துக் கொண்டு விட்டான் ! எவ்வளவோ தினங்கள் ஓய்வும் ஒழிவும் இன்றி நன்றாய்ப் பொருது, நான் அவளைப் பிடித்து வந்தேன். அவளது தகப்பனுடைய ராஜ்ஜியத்தைப்

பிடித்த பொழுது, அவள் அந்த ராஜ்ஜியத்துடன் எனக்கு வசமா ளுள்; தவிரவும் கிரேக்கர்கள் அனைவருமே அவளை எனக்கே ஏக மனதாக அளித்தனர். இவ்வாறு பலவற்றாலும் சொந்தமான அவளை, அவன் பலவந்தமாகப் பிடுங்கிக் கொண்டு விட்டான்! மனவுறுதியும், தைரியமும் உள்ள என்னை அவன் இவ்வாறு அவ மானமும் அவமரியாதையும் செய்து, மிகவும் இழிந்த அடிமைக்கு இணையாக ஆக்கிவிட்டான்.

நாம் இதைப் பொறுத்துத்தான் வரவேண்டும். என்னுடைய கஷ்டங்களெல்லாம் பழங்கதைகள்! அவற்றைச் சிந்திப்பதில் பய னில்லை. நம்முடைய கோபதாபங்களைத் தணிக்க வேண்டிய காலம் கடைசியாக இப்போது வந்தே விட்டது! இந்தக் காலத்தை நான் எதிர்பார்த்தே இருந்தேன். நான் குறிப்பிட்டிருந்த நாள் வந்துவிட்டது.

இந்த யுத்தத்தை ஹெக்டர் என் கப்பல்களுக்குக் கொண்டு வந்து விடுவான், அவற்றைத் தீயிட்டுக் கொளுத்துவான், அந்தத் தீயானது என்னுடைய கண்களை உறுத்தும், பொசுக்கும்; அவன் இடும் கூச்சலும், இரைச்சலும், சப்தமும், எனது காதைத் துளைக் கும் என்றே நான் எதிர்பார்த்திருந்தேன்! அந்நாளும் வந்து விட்டது. ஆதலால் பத்திரகலுஷா! நீ இந்த யுத்தத்திற்குச் செல்! அகிலேசனுடைய ஆயுதங்களையும் கவசங்களையும் அணிந்து கொண்டு சென்று பிரஸித்திபெற்ற ட்ராய்க் களத்தில் யுத்தங்களைச் செய்து, மனக்களிப்பைத் தரத்தக்க வெற்றிகளுடன் விளங்கு! யுத்தப் பிரியர்களான என்னுடைய மிர்மிடோனியர்களைக் கூட்டிக் கொண்டு யுத்தத்திற்குச் செல்! நம்முடைய கடற்படைகளைக் காப்பாற்று! இந்தக் காரியத்தை எனதாகக் கருதிச் செய்து விஜயனாக விளங்கு !

பயந்து நடுக்குற்று மடிந்தவர்போக மீந்துள்ள சிற்றளவின ராகிய அவர்களுடைய கூட்டத்தைப் பார்! அதோ அவர்கள், தாங்கள் புறக்கணித்து வந்துவிட்ட நிலத்தின் ஓரமாக நிற்கின் றனர். இலியன் முழுவதுமே அவர்களுடைய கப்பல்களில் இறங்கு கின்றது. அதையும் பார்! துரோஜர்கள் ஒரு கறுத்த மேகத்தைப் போல் திரண்டு வருகின்றனர்! அதிசீக்கிரத்தில் ஒரு பெருத்த புயலைப்போல் அந்தக் கப்பல்களில் இறங்கி அவற்றைத் தாக்கு வார்கள்.

என்னைக் கண்ணுற்ற பொழுது ட்ராய் நாட்டார் இவ்வாறு துள்ளினார்களா? கொட்டம் அடித்தார்களா? உற்சாகத்துடன் பொங்கினார்களா? இல்லவே இல்லை! தகதக வென்று ஜ்வலிக்கும் இந்த எனது கிரீடத்தைக் கண்ணுற்றபொழுது, அவர்கள் மதி இழந்து பிரமித்தனர். கிடுகிடுவென நடுங்கினர். தீயோனாகிய இவன் மாத்திரம் எனது நட்பை இழவாமல் இருந்திருந்தால், இதற் குள்ளாக அந்த ட்ராய் நாட்டில் பாதியை அந்த விசாலமான பள்ளம் ஒரேயடியாய் விழுங்கி இருக்குமே !

சத்துருக்களுடைய பாளயங்களைக் கண்டோ, கோட்டைகளைக் கண்டோ, இப்போது துரோஜர்கள் சிறிதும் பயப்படுவதில்லை! அங்கே அகிலேசன் இல்லை. அதனுல் தான் அவர்களுக்குக் கோட்டை கொத்தளங்களைப் பற்றிச் சிறிதும் கவலை இல்லை! திடியஸ்ஸின் புத்திரனது ஈட்டியானது அங்குத் தன்னுடைய ஒளியை வீசவில்லை! உன்னுடைய சேனுதிபதியும் தன்னுடைய வீரர்களை இந்த யுத்தத்திற்கு வரும்படி வருந்தி அழைப்பது இல்லை.

ஹெக்டரின் கோஷமும் கூக்குரலுமே என்னுடைய காதில் விழுகின்றன. அவன் சீறுகின்ருன், தீப்பொறி பறக்குமாறு மூச்சு விடுகின்ருன். உங்கள் அனைவரையும் வதைக்கும்படித் தன்னுடைய வீரர்களுக்கு ஆணையிடுகின்ருன். வதையுண்ட உங்கள் வீரர்களின் பெயர்களையும் எல்லோரும் அறியும்படி உரத்துக் கூவுகின்ருன்.

என்ருலும் பத்திரகலுஷா! இன்னும் காரியம் மீறிப் போகவில்லை. நீ இப்போது உடனே புறப்பட்டு அந்தக் களத்துக்குச் செல்! இக்கணமே அந்தக் கப்பல்களைக் காப்பாற்று! மேன்மேலும் ஓங்கி வரும் நெருப்புக்களை அணை! தங்களுடைய ஜன்ம தேசங்களுக்குத் திரும்பிச் செல்வதற்கு வேண்டிய சகாயங்களைக் கிரேக்கர்களுக்குச் செய்!

மேலும் நான் சொல்லும் வேறு விஷயங்களையும் கவனமாய்க் கேட்டு, அப்பிரகாரம் காரியங்களைச் செய். ஒரு சிநேகிதன் உனக்கு இடும் கட்டளைகளை மறவாமல் உனது ஞாபகத்தில் வைத்துக் கொள். அவன் தனது பெயரையும், கீர்த்தியையும், பெருமைகளையும், உன் வசமே ஒப்புவித்திருக்கின்ருன். நீ செய்யக் கூடிய பெருங் காரியங்களுக்குக் கைம்மாருக, அவன் இழந்துவிட்ட கட்டழகியை, அக்கேயர்கள் அனைவரும் ஒருமித்து அவனுக்குத் திருப்பிக் கொடுப்பார்களென்று அவன் நம்பிக் கொண்டிருக்கிருன்!

தங்குதடை இன்றிச் சத்துருக்களுடைய சைனியங்களின் உட்புகுந்து, நீ உன்னுடைய விசையனைத்தையுங் காட்டு! நெருப்புக் காட்டைக் கொளுத்து!

ஆனல் ஹெக்டரை மட்டும் தொடாதே. அவன் எனக்கே இரையாக வேண்டியவன், நானே அவனைக்கொல்லப் பிறந்தவன்.

ஜோவ் தேவரே புறப்பட்டு வந்து, துரோஜ சேனைகளின் தலைமையை வகித்து யுத்தத்தைச் செய்தாலும், நான் சொல்லும் வசனங்களை மறவாமல், மனதில் வைத்துக் கொண்டு நெறி தவருமல் யுத்தத்தைச் செய்! என்னுடைய பேரும் கீர்த்தியும் கெடாமல் பார்த்துக்கொள்.

உனது ஆத்திரத்தையும் அடக்கிக் கொள்! நம்முடைய கப்பற் படைகளை ரக்ஷித்தவுடன். யுத்தத்தை நிறுத்திவிடு!

அதற்கப்புறமும் சத்துருக்களைத் தொடர்ந்து துரத்திக்கொண்டு செல்லாதே! கிரேக்கர்களை இழுத்துக்கொண்டு இலியன் கோட்டை மதில்களின் சமீபம் செல்லாதே! ஏனெனில் நம்மிடம் விரோதம் கொண்ட ஏதேனும் ஒரு துர்தேவதை உன்னை மடக்கிவிடும். பீபஸ் பகவான் எப்போதும் ட்ராய் நாட்டாரின் கட்சியிலேயே இருப்பது உனக்குத் தெரியுமன்றோ? அவரைப் போன்ற ஒரு தெய்வம் உன்னை அழித்துவிடும். அழிவைத் தரத்தக்க இந்த ஆபத்திலிருந்து விடுபட்ட பின், மேலே நடக்க வேண்டிய காரியங்களைக் கிரேக்கர்களே செய்து கொள்ளட்டும்! மற்றைய காரியங்கள் எல்லாம் ஊழ்வினைப்படி நடக்கட்டும்!

"அழிவில்லாதவர்களும், ஸர்வவல்லமைகளும் உள்ளவர்களும், வானுலகில் வசித்து வருபவர்களுமான ஓ தேவர்களே! அப்பாலோ தேவரே! பாலாஸ் தேவியே! அதிவன்மைகளையும் உடைய ஜோவ் தேவரே! இது உங்களுக்குச் சம்மதம் தானா? துரோஜன் ஒருவனாவது உயிருடன் மிஞ்சலாகாது என்பதும், கிரேக்கப் பூண்டே அற்றுப்போக வேண்டும் என்பதும் உங்கள் நியமனமா? நாங்கள் மாத்திரம் இந்த ஆபத்துக்குப் தப்பிப் பிழைக்கலாகாதா? அந்த மஹா பாபிகளது பட்டணத்தை நாங்கள் மாத்திரம் அழிக்கலாகாதா?" என்றான்.

இந்த வீரர்கள் இருவரும் இவ்வாறு சம்பாஷித்துக் கொண்டிருக்கையில், மஹாதேவரான ஜோவ் பகவான் துரோஜர்களுக்கு வெற்றியைத் தந்து அவர்களை அனுக்கிரகித்து வந்தார். அஜாக்ஷன்மீது ஓர் அயவர்ஷம்போல் அபரிமிதமான அம்புகள் பொழிந்தன. உரத்த சப்தத்துடன் அடித்து வந்த அந்தப் பெரும் புயலைத் தாங்கவோ, அதற்கு ஈடு கொடுக்கவோ, அவனால் இயலவில்லை. அவனுடைய கைகள் சலித்துப்போயின. அதனால் அவனது கேடயமும் அவனுக்கு ஒரு பெருத்த சுமையாகவே இருந்தது. அவனுடைய சத்துருக்கள் விடுத்த ஈட்டிகளும் வேல்களும் அவனது மகுடத்தின்மேல் கணகணவென ஒலித்துக்கொண்டு விழுந்தன. அவன் வழக்கம்போல் நிதானமாக மூச்சுவிட முடியாமலும் திணறினான். படபடவென்று பெருமூச்சும் சிறுமூச்சும் விட்டான். அவன் தேகத்திலுள்ள நோயுற்றிருந்த எல்லா அவயவங்களிலிருந்தும் வியர்வையானது ஆறுய்ப்பெருகியது. இவ்வாறு அவன் அலுத்தும் சலித்தும், தன்னுடைய சத்துருக்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல், அவர்களுக்குத் தாழ்ந்துபோய் மிகவும் சிரமப்பட்டான்! மூச்சு விடவும் திணறினான். என்றாலும் சத்துருக்களது ஸைனியம் ஒன்றாயினும் அவனை அவன் இருந்த இடத்தில் அணுவளவேனும் அசைக்கவில்லை! அவனைச் சுற்றிலும் நாற்புறத்திலும், ஆபத்துக்கள் ஒன்றின்மேல் ஒன்றாக வந்து கொண்டிருந்தன. அவனுடைய சத்துருக்களும் அவன் மேல் தங்களுடைய ஆயுதங்களைச் சரமாரியாகப் பொழிந்து அவனுக்கு மூச்சுவிடக் கூட இடங்கொடாமல் அவனைத் துன்புறுத்தியே வந்தனர்.

நட்சத்திர மண்டலத்திற்கும் மேலான உலகத்தில் கோயில் கொண்டிருக்கும் கலைத்தெய்வங்களே! கிரேக்கர்களுடைய

கப்பற்படைகள் எவ்வாறு துரோஜர்களது தீக்கு வசமாகி எரிந்தன என்பதை முதன் முதலாகச் சொல்லுங்கள்!

கடுத்த முகத்துடன் விளங்கிய ஹெக்டரானவன், தனது சமீபத்தில் நின்றுகொண்டு, அசோக மரத்தினுலான ஈட்டியைச் சுழற்றிக்கொண்டிருந்த பயங்கர ஸ்வரூபியான அஜாக்ஷனை நோக்கித், தன்னுடைய கத்தியை ஆட்டிக் குலுக்கிக் குறிதவருமல் அவனது ஈட்டியை நோக்கி எறிந்தான். அந்தப் பட்டாக் கத்தியானது, அந்த ஈட்டியின்மேல் பொத்தென்று விழுந்து, அதன் பித்தளை முனையை முறித்தே விட்டது! அதன் பின்னும் அந்த வீரன் அந்த ஈட்டியை சுழற்றிக்கொண்டே இருந்தான் அதனுல் என்ன பயன்? அந்தப் பித்தளை முனையும் கலகலவென்று ஒலித்துக் கொண்டு தரையின்மேல் விழுந்தது. அப்போதுதான் அந்த மஹா வீரனுக்கு அது கட்புலனுயிற்று! அவன் 'ஓகோ இது தெய்வ சங்கல்பம்தான்! ஜோவ் தேவரே இவ்வாறு செய்துவிட்டார்! அவரை எதிர்த்துப் பொருதல் அடாத காரியம்' என்று அந்தச் சம்பவத்தை ஒரு அபசகுனமாகக் கருதிப் பின்னடைந்தான்.

அக்கணமே நாற்புறங்களிலுமிருந்து கொள்ளிக் கட்டைகள் சீறிக்கொண்டு தடதடவெனப் புறப்பட்டுவந்து கிரேக்கர்களுடைய கப்பல்களின்மேல் ஒரு கனத்த மழைபோல் பொழிந்தன. அதனுல் அங்கு ஒரு பெரும் நெருப்பு மூண்டு விட்டது. கப்பல்களின் உன்னதமான பின்னணியங்களில் அந்த நெருப்பின் ஜ்வாலைகள் சுழன்று சுழன்று கிளம்பின. புகையும் ஆகாயத்தை அளாவிக்கொண்டு உயர்ந்து உருண்டு உருண்டு சென்று அங்கு விரித்துக் கட்டப் பட்ட படலங்கள்போல் விளங்கின.

இவ்வாறு உயர்ந்து எழுந்து வந்த நெருப்பின் ஜ்வாலையைக் கண்ணுற்ற தேவஸ்வரூபியான அகிலேசன், தன்னுடைய துடையைத் தட்டி அடித்துக்கொண்டு பத்திரகலுஷனை நோக்கி, "பத்திர கலுஷா! இனித் தாமதம் வேண்டாம். விரைந்து எழுந்து ஆயுதங்களை அணிந்துகொள்! கவசத்தைக் கட்டிக்கொள்; அதோ பார்! அங்கு ஜ்வாலை எவ்வாறு உயரக் கிளம்புகின்றது! பளபளவென மின்னும் சமுத்திரமும் தீப்பற்றிக்கொண்டு செக்கச்செவேலென்று விளங்குகின்றது. பறந்து வரும் நெருப்பானது நம்முடைய கப்பல்களுக்குச் சமீபம் வருமுன் நீ உன்னுடைய ஆயுதங்களை அணிந்துகொள்! கிரேக்கவர்க்கமே தங்களது பெயரைச் சொல்லுவாரும் இன்றி, அடியோடு அழிந்து போகுமுன் ஆயுதம் ஏந்திக் கொண்டு யுத்தத்திற்குப் புறப்படு! நான் விரைந்து சென்று, என்னுடைய சேனைகளைக்கொண்டு வருகின்றேன்" என்று அலறினுன்.

அவ்வாறு அந்த வீரன் உரைத்தபடியே, அவனது நண்பனும் மிகுந்த ஆத்திரத்துடனும் சந்தோஷத்துடனும் காரியங்களைச் செய்தான்.

அவன் தன்னுடைய அவயவங்களைப் பித்தளைக் கவசங்களால், மூடிக்கொண்டான். முதன் முதலாகத் தன் உறுதியான

கால்களுக்குக்கட்டி இருந்த உறைகளை வெள்ளிப் பிடிகளால் சுற்றிக் கட்டினான். பின்பு ஆயிரக் கணக்கான சாயங்கள் கொண்டதும், தணலைப்போல் தகதகவென்று ஜ்வலித்து வந்ததுமான மார்க் கவசத்தைத் தன்னுடைய மார்பின் குறுக்காக மாட்டிக்கொண்டான். பளபளவென காந்தியுடன் விளங்கும் பொற் குமிழ்கள் பதிக்கப் பெற்றிருந்த தன்னுடைய உடைவாளையும் தன்னுடைய விலைமிக்க அரைக்கச்சையில் செருகிக்கொண்டான்! அது அப்போது ஒரு நட்சத்திர மேகலையில் பதிக்கப்பட்டது போலவே விளங்கியது.

பின்பு அவன் அகிலேசனது கவசத்தைத் தன்னுடைய அகன்ற புஜங்களின்மேல் பரப்பி அணிந்து கொண்டான். அகிலேசனது தலைச் சீருவும் அவனது தலையின்மேல் அசைந்து ஆடியது.

இவ்வாறு பயங்கரமான ஆயுதங்களையும் அணிந்து கொண்டு, அவன் அப்புறமும் இப்புறமும் திரும்பினான். அப்போது அவனது காந்தியைக் கண்ணுற்ற தினகரனும், திறன் அழிந்தே போயினான்! வெட்கிப் போயினான்!

அப்போது பிலிதீசனது வேலாயுதம் மாத்திரம் எஞ்சி நின்றது. அதைப் பத்திரகலுஷன் தனது கையால் தீண்டவும் இல்லை! அதைப் பிலிதீசன் அன்றி வேறு ஒருவராலும் தூக்கி எடுத்து ஏந்தவும் இயலாது.

நிழலைத் தரும் அடர்ந்த மரங்கள் உள்ள பிலியன் மலைச் சரிவில் இருந்த ஒரு மரத்தை முற்காலத்தில் சீரோன் என்பவன் அடியோடு வெட்டி முறித்து, அதைச் சீவி இழைத்து ஆயுத வடிவாக்கி, அவ்வாயுதத்தைப் பிலிதீசனது தந்தைக்கு அளித்தான். அவனுடைய மகனான பெருந்தோளான் மாத்திரமே அந்த ஆயுதத்தை ஏந்தும் சக்தி உடையவனாக விளங்கினான். அது சத்துருக்களுக்கு எமன் போலவும் யுத்தகளங்களைக் கலக்கும் ஒரு பயங்கரஸ்வரூபமாகவும் விளங்கியது.

அதன்பின் புகழுடன் விளங்கிய பெயரை வகித்தவனும், தனது தலைவனது அன்பிற்கும், நன்மதிப்பிற்கும் அடுத்தபடியாகப் பாத்திரமானவனும், சமாதான காலத்தில், தனது தலைவனது நண்பனாகவும், யுத்த காலத்தில் அவனுடன் ஒத்துழைப்பவனாகவும் இருந்த மஹாதைரியவானான ஆட்டோமீடான் என்பவன் பத்திரகலுஷனுடைய இரதத்தில், பக்ஷிகளைப் போல் பறக்கக் கூடிய குதிரைகளைப் பூட்டினான்.

ஜாந்தஸ், பாலியஸ் என்னும் அக்குதிரைகள் அமரர்களது பரம்பரையில் வந்தவை. காற்றினின்றும் பிறந்தவை! காற்றைப் போல் விரைந்து வேகமாகச் செல்லவும் கூடியவை! இறகுகளை உடையவளும், அதிவேகம் உடையவளுமான பொட்டார்ஜி

என்னும் கின்னரியானவள், சுகமாகக் காற்று அடித்து வந்த கடற் கரையில் ஜூப்பிடருடன் கலந்து கருத்தரித்து அவ்விரு குதிரை களையும் பெற்றாள்;

அவ்விரு குதிரைகளுடன் அந்தச் சாரதியானவன் வேக முள்ள பிடாஸஸையும் சேர்த்துக் கட்டினான்! அது ஒரு காலத்தில் ஆயுஷனது பெருமைக்குக் காரணமாக இருந்தது. தற்காலம் அது அகிலேசனது ஏற்றத்திற்குக் காரணமாக விருக்கின்றது. அது மர்த்திய லோகத்தில் பிறந்தது தான் எனினும், சக்தியிலும், வேகத்திலும், அழகிலும், தேவ பரம்பரையில் வந்த குதிரைகளுக்கு இணையாகவே இருந்தது.

அகிலேசன், தன் கூடாரங்களில் ஒன்றில் இருந்து மற்றொன்றிற்கு விரைந்து ஓடிச் சென்று, சத்துருக்களது இரத் தத்தை வடிப்பதற்காக ஆயுதம் ஏந்திக்கொண்டுப் புறப்படும்படித் தனது மிர்மிடோனிய வீரர்களை உற்சாகப்படுத்தினான். கடுத்த முகமும் பயங்கர உருவமும் உடைவர்களும், பீதியை உண்டாக்கு பவர்களுமாகிய அந்தப் படை வீரர்கள், தங்கள் சத்துருக்களை எமனுலகுக்கு அனுப்பியே தீருவோம், என்று சீறிக்கொண்டு, தங்களது தலைவனைச் சுற்றிக்கொண்டு நின்றனர்.

பெரும் தீனி தின்றபின், தங்களுடைய வயிற்றை வற்ற வடித்துத் துடிப்பிக்கும் கொடுங் தாகத்தைத் தணித்துக் கொள்ளு மாறு, நீர் நிறைந்துள்ள குளங்களைத் தேடிக் கொண்டு ஓடும் ஓநாய்களைப் போல், அவர்கள் கடுத்த முகங்களுடன் விளங்கினர்.

ஒரு காட்டில் தாங்கள் புதிதாக அடித்துக் கொன்ற ஓர் உயர்ந்த கலைமானின் இரத்தத்தைக் குடித்துத் தங்களுடைய தொண்டையை நனைத்துக் கொண்ட பின்னும், அந்த ஓநாய்க் கூட்டமானது அதில் திருப்தி அடையாமலும் மேன்மேலும் அதிகரித்து வரும் தாகத்தைத் தணித்துக் கொள்வதற்காகவும் கன்னங்கரேலென நீர் நிறைந்த குட்டைகளை நோக்கி ஓடுகின்றது. அப்போது அந்த ஓநாய்களின் அடிவயிறுகள் தொப்பையைப் போல் பிதுங்கி விளங்குகின்றன. அவற்றின் நாக்குகளும், வாயி னின்று வெளிப்பட்டுத் தொங்கிக் கொண்டு அசைந்தாடுகின்றன! அவற்றின் கண்களில் இருந்து தீப்பொறிகள் பறக்கின்றன! கன்னங்கரேலென்ற அவற்றின் கடைவாய்களில் இருந்து இரத்தம் சொட்டுகின்றது. மாமிச பிண்டங்களும் உதிர்கின்றன! இவ்வாறு பெரும் தீனி தின்றும் திருப்தி அடையாமல் அவை மேன்மேலும் இரையைத் தேடிக் கொண்டே ஓடுகின்றன.

அவ்வாறே கடுத்த முகத்துடனும், அதிபயங்கரமான வீராவேசத்துடனும், எமனே உருவெடுத்து வந்தது போலவும், அந்த மிர்மிடோனியப் பிரகிருதிகள் விரைந்து ஓடோடியும் வந்தனர். அவர்களின் மத்தியில், ஓர் உயர்ந்த இடத்தில், மஹானான அகிலேசன் நின்றுகொண்டு அவர்களை ஒழுங்காக

நிறுத்தி அவர்களுக்கு இந்த யுத்த சம்பந்தமான தன்னுடைய ஆணைகளை யுரைத்தான்.

ஜோவ் தேவரின் அன்பிற்குப் பாத்திரனான அந்த வீரன், எண்ணிறற் போல் கணக்காக ஐம்பது துடுப்புகளைக் கொண்ட ஐம்பது கப்பல்களுடன் இலியன்கரையை நோக்கி வந்தவன். துணிவும் தைரியமும் நிறைந்தஅவனுடைய சைனிகர்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து வீரர்கள் தலைவர்களாக விருந்தனர். அனைவரையும் மிஞ்சிய புஜபலாக்கிரமும் அதிகாரமும் உடைய அவனே அந்தச் சேனைக்குப் பெருந் தலைவனாக விளங்கினான்.

முதன் முதலாகத் தெய்வ பரம்பரையில் வந்தவனாகிய மெனிஸ்தீயஸ் என்பவன் முன்வந்தான். ஜோவ் பகவானது புத்திரனும், ஜலநிதியும், பூவுலகத்தைக் குளிப்பிப்பவனும், தேவஸ்வரூபியுமான ஸ்பெர்ஷியஸ்ஸே! அந்த மெனிஸ்தீயஸ் என்பவன் உனது புத்திரன். மானிட ஜன்மமெடுத்த ஒரு ஸ்திரீ உன்னுடன் சேர்ந்து, அவனைப் பெற்றெடுத்தாள்! மெனிஸ்தீயஸின் உற்பத்தி இவ்வாறு இருக்க, இதை அறியாத ஜனங்கள் அவனது அன்னையைப் போரஸ் என்பவன் மணந்து கொண்டதினால், அவனைப் போரஸ்ஸின் புத்திரன் என்று அழைப்பாராயினர்.

அவனை அடுத்தாற் போல், யூட்டோரஸ் என்பவன் வந்தான். அவனை ஸரஸியும், சிங்கார நடனங்களில் சமர்த்தையுமான பாலிமீ என்பவள் இப்போது தான் பகிரங்கமாக வெளியே அனுப்பி வைத்தாள். வஞ்சகனான செல்லெனியஸ் என்னும் தேவன் அந்தப் பாலிமீயினிடம் காதல் கொண்டு, அவள் வளைந்து வளைந்து ஓடி ஆடித் துரிதமாக நடித்து வந்த பொழுது, அவளையே கண்கொட்டாமல் பார்த்து வந்ததுமன்றி, அவள் தயானே தேவியின் நடிகைப் பெண்களின் கூட்டத்திலிருந்து பிரிந்து, தனது இருப்பிடமான உயர்ந்த மாளிகைக்குச் சென்ற பொழுது, அவளைத் தொடர்ந்து சென்று, பலவந்தமாக அவளைப் பிடித்து அவளிடம் தனது காமத் தீயைச் செலுத்தித் திருப்தி அடைந்தான். இவ்வாறு இவ்விருவரது சேர்க்கையினால் பிறந்தவனான இந்தப் புத்திரன், தனது தகப்பனைப் போல் ஒரு தேவனுக்குச் சமானமாக விளங்கி வந்ததுமன்றி, தனது தாயைப் போல் வேட்டைகள் ஆடுவதில் அதிவேகமும் ஸாமர்த்தியமும் உள்ளவனாக விளங்கினான்.

இவ்வாறு செல்லெனியஸ்ஸுடன் இரகசியமாக உறவாட்டம் செய்து கொண்டிருந்ததையும், அவள் தன்மகள் தான் என்பதையும் அறியாமல் இருந்த அவளது தகப்பனும், அதிபலவானும், தேவர்களையும் மயக்கத்தக்க வசீகர சக்திகளையுடையவனுமான இச்சிக்கிளியஸ் என்பவன், அவளுக்குப் பலவிதமான பரிசுகளும் வெகுமதிகளும் கொடுத்து வசப்படுத்தி, அவளைக் கலியாணமும் செய்து கொண்டான். அதன்பின் அவள் தன் கர்ப்பத்தில் இரகசியமாக உண்டாகியிருந்த செல்லெனியஸ்ஸின் புத்திரனைக் காலக்கிரமத்தில் ஈன்று எடுத்து தன் தந்தையினிடம் கொடுத்தாள்.

அந்தத் தந்தையும் அக்குழந்தையைத் தன் மகனெனவே கருதிப் பாராட்டிச் சீராட்டி வந்தான்.

அவனை அடுத்தாற் போல் பிஸாண்டர் வந்தான். அவன் ஈட்டியையும் வேலையும் சுழற்றுவதிலும், அம்புகளை நெடுந்தூரம் செல்லுமாறு எய்வதிலும் தேர்ந்தவன். அந்த வித்தைகளில் நிகரற்றவன். இமாத்தியன் பரம்பரையில் வந்தவர்களில், அவனை நிகர்த்த கைவன்மையுடையவன் இருக்கவே இல்லை. அவனை மிஞ்சியவன் ஒருவன் உண்டு என்றால், அவன், பத்திரகலுஷா ! நீ தான்.

நான்காவது படைக்கு பீனிகஸ் என்பவன் கண்ணும் கருத்துமாய்த் தலைமை வகித்து வந்தான்.

கடைசிச் சேனைக்கு லியாஸிஸ்ஸின் வீர குமாரன் தலைவனாக விளங்கினான்.

செய் தொழிலில் கண்ணும் கருத்தும் மாறுதக் கவலையும் உள்ளவனான அகிலேசன் மேற்கூறிய தலைவர்களை அழைத்து, யுத்த காரியங்களை ஒழுங்காக்கிப் பின்னர், அவர்கள் அனை வரையும் நோக்கிப் பின் வருமாறு கண்டிப்பான கட்டளைகளை யுரைத்தான் :—

“பூவுலகெங்கும் பரந்துள்ள புகழ் பெற்ற மிர்மிடோனியர் களே ! பயங்கரஸ்வரூபிகளே தீரர்களே ! இந்த துரோஜ கூட் டத்தாரை, நீங்கள் எவ்வாறெல்லாம் மிரட்டிக் கொண்டு எதிர்த்துச் சென்றீர்கள் என்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள்! அவர்கள் நம்மை எவ்வாறெல்லாம் திட்டினர், வைதனர், இகழ்ந் துரைத்தனர் என்பதையும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். அவற்றை எல்லாம் கேட்டுக் கேட்டு நம்முடைய செவிகளும் துளைபட்டுப் போயின !

‘பிலியஸ்ஸின் புத்திரா ! புஜபராக்கிரமங்களில் சிறந்தவனே! மிக்கவனே ! உனக்கு நேர்ந்த சிறுமைகளையே நினைத்து நினைத்து மனம் வருந்தி நொந்து வருபவனே ! வணங்காமுடி மன்னா ! இந்தப் பிரசித்தமான போர்க்களத்தில் நாம் மிகுந்த பேரும் புகழும் கொண்டு விளங்கலாமே ! உன்னுடைய கோபமும் தாபமும் தானே அதற்குத் தடையாக விருக்கின்றன ! கோப தாபம் சண்டாளம் என்றல்லவோ நம்முடைய பெரியோர் உரைத் தனர் ! அந்தக் கோபம் சிறிதும் தணியாமல், ஒரு பெரும் தீயைப் போல் மேன் மேலும் வளர்ந்தே வந்து கொண்டிருந்தால், நாம் இங்கு இருப்பானேன் ? நமக்கு இங்கு என்ன வேலை ? தலைவர் களே ! எல்லோரும் திரும்புங்கள், உங்கள் நாடுகளை நாடிச் செல்லுங்கள் !’ என்றெல்லாம் அன்றே நீங்கள் அனைவரும் உங்கள் கப்பல்களில் கிடந்த வண்ணம், தத்தளித்து மனக் கொதிப்புடன்

உரைத்து வந்தீர்கள்! இவ்வசனங்களை அன்றே நீங்கள் என்னிடம் உரைத்து வந்தீர்கள்!

இப்போது வீரர்களே! உங்களது மனக்கவலையை ஒழித்து விடுங்கள். அங்கே பாருங்கள்! நம்முடைய சத்துருக்களான துரோஜர்கள் அதோ அங்கு நிற்கின்றனர்! உங்களுடைய பட்டாக் கத்திகளை இரத்தத்தில் குளிப்பாட்டுங்கள்! நீங்கள் உள்ளியவனைத் தையும் இன்றே நீங்கள் எய்துவீர்கள்! உங்களது மனம் குளிரும்! சத்துருக்களை அடித்துக் கொன்று உங்களுடைய கைகளும் சலித்துப் போகும்" என்றான்.

இவ்வாறு அவன் தன்னுடைய சைனிகர்களின் இருதயத்தில் ஊக்கமும் உற்சாகமும் உண்டாக்கிக் கொண்டு வருகையில், அவனுடையவசனங்களைக்கேட்டுவந்த அவனுடைய அனுசரர்கள் மேன் மேலும் திரண்டு நெருங்கி வந்தனர். அணி அணியாய்த் திரண்டு வந்த அவர்கள் ஊசி நுழையவும் இடங் கொடாமல், ஆப்பு அடித்ததுபோல் அடுத்தடுத்து, அடர்த்தியாய் நின்றனர். யுத்த வீரர்களுடைய ஆயுதங்களெல்லாம் ஒரு பெருத்த இரும்புக் கோட்டையைப் போல், மேன் மேலும் விசாலமாகவும் அடர்ந்தும் பெருகின. அவை அனைத்தும் அவனைச் சுற்றிக் கொண்டு ஒரு கெட்டியான கோட்டையைப் போல் விளங்கின.

காற்றிற்கும் புயல்களுக்கும் இளகாமல் நின்று வரும் வண்ணம், ஒரு கெட்டியான ஒரு வட்டக் கோட்டையைக் கட்டி வருகையில், எவ்வாறு ஒரு சிற்பியானவன், பெருங் கற்களைப் பொருத்திச் சேர்ப்பானோ, எவ்வாறு அவனைச் சுற்றிலும் அந்தக் கோட்டை மதிலானது மேன் மேலும் உயர்ந்துவருமோ, அவ்வாறே கிரேக்க வீரர்களெல்லாம், தலைக்குத் தலை நேராக வரிசையாகவும் கிரீடத்துடன் கிரீடம் உராய்ந்து கொண்டும், கூட்டம் கூட்டமாக வந்தனர். அப்போது அவர்களுடைய கவசங்கள் ஒன்றை ஒன்று மோதி யுந்தின! ஒவ்வொரு வீரனும் தன் முன் சென்ற வீரனை நெருக்கிக் கொண்டு வந்தான். அப்போது அந்தச் சேனை சமுத் திரத்தில் கூடி இருந்த வீரர்களின் தலை அணிகளாக விளங்கிய கொண்டைகளெல்லாம், ஒரு சமுத்திரத்தில் மிதக்கும் புஷ்பவனம் போல் தோன்றின. அவைகளின் அடையாளங்கள் கட்புலனாகவில்லை! காற்றால் அடிபட்டு, அவை இப்புறமும் அப்புறமும் அசைந்து ஆடின.

இந்த யுத்தகளத்தின் ஒரு கோடியில் நெடுந் தூரத்தில் மஹா வீரனான ஆட்டோமிடான் என்பவன் ஸர்வ ஆடம்பரங் களுடனும் ஒளியுடனும் விளங்கினான். மற்றொரு கோடியில் பத்திரகலுஷன் விளங்கினான். அவர்கள் இருவரும் இணை பிரியாத இரு சசோதரர்கள் போலவே ஆயுதம் ஏந்தி, இந்த யுத்தத்தை நடத்த முன் வந்தவர்கள்! ஒரே விதமான ஆக்திரமும், ஆற்றலும் உடையவர்கள்! ஈருடலும் ஒருயிரும் கொண்ட இரண்டு நண்பர்களைப் போல் அவர்கள் விளங்கினர்.

வீரர்கள் இவ்வாறு அணி அணியாக அமர்ந்து வருகையில், தெய்வ சிந்தனையில் ஈடுபட்டவனான அகிலேசன் தேவர்களை வழிபடுவதற்காகக் குளிர் நிழலைத்தரும் தனது கூடாரத்தில் உள்ள தனதானிய செல்வங்கள் நிறைந்த பொக்கிஷத்தை நோக்கிச் சென்றான். அங்கு மடிப்புக் கலையாத வித விதமான போர்வை களும், வஸ்திரங்களும், விலை உயர்ந்த கம்பளங்களும், பொன் நூலினால் செய்யப்பட்ட உறுதியான ஜமக்காளங்களும் குவிந்து கிடந்தன. அவை அனைத்தும் பொன்னடிக் கரசியான தெய்வம் அவனுக்குப் பரிசாக அளித்து இருந்தவை.

அந்தக் கூடாரத்தில் இருந்ததும், பண்டைக் காலத்து முறைப்படி உண்டாக்கப் பட்டிருந்ததும், செக்கச் சிவந்த மதுவை பானம் செய்வதற்காக, அதுவரை பிலியஸ்ஸின் புத்திரனன்றி வேறு மனிதன் ஒருவனாலாயினும் உபயோகிக்கப்படாமல் இருந்ததும், அதே பிலியஸ்ஸின் மகனன்றி வேறு ஒருவனாலும் தேவர்களுக்கு நைவேத்தியம் வழங்கவும் உபயோகிக்கப்படாமல் இருந்ததுமான ஒரு கிண்ணத்தை எடுத்தான். பிலியஸ்ஸின் மகனும் ஜோவ் தேவருக்கன்றி, மற்றைய வேறு எந்த தெய்வத் திற்கும் தனது கையை உயர்த்தி நைவேத்தியம் எடுத்தது கிடை யாது.

இந்தப் பாத்திரத்தில் அவன் முதன் முதலாகக் கந்த கத்தைப் போட்டுத் தேய்த்து, அனலில் காய்ச்சிச் சுத்தி செய் தான். பின்பு அதை ஓடும் தண்ணீரில் கழுவினான். பின்பு தன் னுடைய கைகளையும் சுத்தி செய்து கொண்டான். அதன் பின் அவன் ஒரு சிறு பொழுது பலி பீடத்தின் மேல் அசையாமல் நின்று கொண்டு, ஆகாயத்தைக் கண்கொட்டாமல் உற்று நோக்கினான். அதன்பின், அவன் அந்தப் பலி பீடத்தின் நடுவில், அந்தக் கிண்ணத்தில் இருந்த செந்நிறம் கொண்ட சாராயத்தைப் பொழிந்து, தனது இஷ்ட தேவதையைப் பின்வருமாறு வேண்டினான் :—

“அனைவருக்கும் தலைவரே! எல்லோருக்கும் உயர்ந்த இடத்தில், உயர்ந்த சிங்காதனத்தில் அமர்ந்து இருப்பவரே! பிலாஸ்கிய, டோடானிய ஜோவ் தேவரே! மஹா பிரபோ! உறைந்த பனியும் குளிர்ந்த புகையும் சூழ்ந்துள்ளதும், வெண்ணிற மானதும், இன்னிசையுடன் பாடுவதுமான டோடானா மலையின் மத்தியில் உள்ள உன்னதமான சிகரத்தில் கோயில் கொண்டிருப் பவரே!

அரும் தவம் புரிந்து வருபவர்களான செல்லி வர்க்கத்தார், அந்த டோடானாச் சோலைகளைச் சுற்றி வருகின்றனர். அவர்கள் தங்களுடைய கால்களைக் கழுவுவதும் இல்லை! புழுதிகளைத் துடைப்பதும் இல்லை. அவர்கள் நிலத்தின் மேலேயே படுத்து உறங்குகின்றனர். இவ்வாறு அவர்கள் கொடுந்தவம் புரிந்து வருகின்றனர். அந்தச் சோலைகளில் உள்ள கருங்காலி மரங்கள்

சலசலவென ஒலிப்பதையே அவர்கள் உம்முடைய ஆணைகளெனக் கருதி வருகின்றனர். காற்றின் மூலமாக மெதுவாகச் செவிப் புலனுகும் சப்தங்களையே உம்முடைய ஆணைகள் என்றும் மதித்து வருகின்றனர்.

முன்னுளில் நீர் என்னுடைய பிரார்த்தனைகளைச் செவி சாய்த்துக் கேட்டது போல், இப்போதும் தயவு செய்து என்னுடைய பிரார்த்தனைகளைக் கேட்பீராக! தெட்டீஸ் தேவியின் பிரார்த்தனைகளுக்கு இணங்கித் தாங்கள் எனக்குப் பெருமையையும், கிரேக்கர்களுக்குச் சிறுமையையும் மனக்கவலையையும் கொடுத்து அருளினீர்! இதோ நான் இப்போது செய்யும் காரியத்தையும் சற்றுக் கவனிப்பீர்!

ஆபத்துக்கள் மலிந்துள்ள இந்த யுத்த களத்திற்கு நான் இதோ, என்னுடைய மிகப்பெரிய நண்பனும் உத்தமனுமான பத்திரகலுஷனை அனுப்புகின்றேன்! அங்குச் செல்வதற்கு அவனுக்கு நான் அனுமதி கொடுத்து விட்டேன். ஆனால் நான் மாத்திரம் இன்னும் இங்கு உறுதியாகவே இருக்கின்றேன். எனது தீர்மானத்தில் இருந்து நான் இளகவில்லை, என்னுடைய கப்பல்களிலேயே அடைபட்டுக் கிடக்கின்றேன். எனது உடலிற் பாதியான பத்திரகலுஷனை அனுப்பி விட்டு மீந்த பாதி உடலுடன் மாத்திரமே, நான் இங்கு இருந்து வருகின்றேன்!

பிரபோ! அவனை அதிஜாக்கிரதையுடன் கண்ணுங் கருத்துமாகக் காத்து வாரும்! அவனுக்கு மனவுறுதியையும், ஊக்கத்தையும் அளியும்! யுத்தம் செய்கையில் அவனது புஜபலத்தை மேன்மேலும் வளர்த்து வாரும்! அவன் தன்னந் தனியனுகப் பொரும் பொருட்டு அதிவேகத்துடன் தன்னை நெருக்கி வருவதைக் கண்டு ஹெக்டரும், இவனது வீர சூர பராக்கிரமங்களுக்கெல்லாம், அகிலேசன்தான் காரணம் என்றன்றே நான் நம்பி இருந்தேன்! அது பெருந்தவறு! என்று ஏங்கவேண்டும்.

சத்துருக்களினுலும், அக்கினியினுலும் உண்டாகக் கூடிய ஆபத்துக்களில் இருந்து கிரேக்கர்களுடைய கப்பல்கள் காப்பாற்றப் பட்டபின், அவன் வெற்றியுடனும் புகழுடனும் திரும்பி வரட்டும்! அவனுடைய ஆயுதங்களைக் காப்பாற்றும்! அவனுடன் செல்லும் பந்து மித்திரர்களையும், பரிவாரத்தாரையும் காப்பாற்றும்! அவனை க்ஷேமமாகத் திருப்பிக் கொண்டு வந்து, என் முன் நிறுத்தும்!'' என்ருன்.

மஹா தேவரான ஜோவ் பகவான் இவனது பிரார்த்தனையின் ஒரு பாகத்தை மாத்திரம் நிறைவேற்றச் சம்மதித்தார்! ஊழ்வினையின் வலியினுல் மற்றைய பாகம் நிறைவேருமற் போய் விட்டது. கடப்பார் எவரே கடுவினையை! அவனது பிராத்தனைப் பிரகாரம் கடற் படைகள் காப்பாற்றப் பட்டன. அந்தப் பிரார்த்தனை மாத்திரம் நிறைவேறியது. பத்திரகலுஷனை உயிருடன்

க்ஷேமமாகத் திருப்பிக் கொண்டு வந்து தன்னிடம் சேர்த்தல் வேண்டும் என்று அவன் செய்த பிரார்த்தனையைக் காற்றானது அடித்துக்கொண்டு போய் விட்டது! அது நிறைவேறவும் இல்லை.

இவ்வாறு பிரார்த்தனை ஒன்றைச் செய்து விட்டுக், கன்னெஞ்சனான அகிலேசன் தன் கூடாரத்தை நோக்கித் தடதடவென்று ஓட்டம் பிடித்து, அன்றையத் தினத்தில் நடக்க விருந்த யுத்தத்தின் முடிவை, மிகுந்த ஆவலுடனும், ஆத்திரத்துடனும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

இதன் மத்தியில், பத்திரகலுஷனது ஆணைப்படிக் காரியங்களைச் செய்து வந்த சேனைகள், துரோஜர்களைத் தாக்கி, யுத்தத்தை ஆரம்பித்தனர். அவர்களுடைய ஆத்திரம் எவ்வாறு இருந்தது என்றால் சொல்லுவேன், கேளுங்கள்.

விளையாட்டுக் குழந்தைகளின் இம்சைகளைப் பொறுக்க மாட்டாமல், தங்களுடைய புற்றுக்களில் இருந்தும், கூடுகளில் இருந்தும் கூட்டம் கூட்டமாகப் புறப்பட்டு வெளியேறிப் பெருவழியே பறந்து சென்று, அங்குச் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் நிரபராதியான ஒரு வழிப்போக்கனைத் தாக்கிக், கூரான தங்களுடைய கொடுக்குகளினால் அவனைக் குத்தித் துளைக்கும் குளவிகளைப்போல், அவர்கள் கொடுங் கோபத்துடன் விளங்கினர்.

மேலும் எவ்வாறு அக்குளவிகள் எல்லாம் ஒருங்கே தங்களுடைய கொடுக்குகளைத் தீட்டிக்கொண்டு எழுந்து பேரரவம் செய்து கொண்டு வந்து தங்களுடைய அரக்கு மாளிகைகளையும், அவற்றில் ஐங்காரம் செய்யும் தங்களுடைய குஞ்சுகளையும் காப்பாற்றி விடுகின்றனவோ, அவ்வாறே கிரேக்க சேனா சமுத்திரங்கள் தங்களுடைய கூடாரங்களில் இருந்து புறப்பட்டு வெளியே வந்து ஆரவாரம் செய்தன. அச்சேனைகள் ஏந்திவந்த ஆயுதங்களும் மிகுந்த கூரான முனைகளுடன் விளங்கின. அவர்கள் ஆத்திரத்தைக் கண்ணுற்ற பத்திரகலுஷனும், மேன்மேலும் ஊக்கமும் உற்சாகமும் கொண்டான், என்றால் அதை அதிகமாக வர்ணிப்பது அவசியமன்றன்றோ ?

அவர்கள் அனைவரையும் நோக்கிப் பத்திரகலுஷன் பின்வரும் வீர மொழிகளையுரைத்து, அவர்களுக்கு ஏற்கனவே இருந்த ஆத்திரத்தை அதிகரிப்பித்தான் :—

"வாரீர் வீரர்களே! அகிலேசனது பாராட்டிற்குப் பாத்திரமானவர்களே! முற்காலத்தில் நீங்கள் செய்துள்ள பெருங்காரியங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்! மேன்மேலும் வீரதீரச் செயல்களைச் செய்யுங்கள்! தேவர்களுக்குச் சமமான வீரனே உங்களது தலைவன் என்பதை உலகமறியப் பறை சாற்றுங்கள்! ஏற்கனவே பெரும் கீர்த்தியுடன் விளங்கும் அவனுக்கு மேன்மேலும் புகழைச் சம்பாதித்துக் கொடுங்கள்!

நீங்கள் செய்து வரும் யுத்தங்களை அகிலேசன் நேராகவே கண் கொண்டு பார்த்து வருவதாக நினைத்துக் கொள்ளுங்கள்! தைரியமாக நின்று இந்தப் போரைப் புரியுங்கள்! அகமதி நிறைந்தவனும், அரசனுமான ஆகமனனைக் காப்பாற்றுங்கள்! அவனுக்கு அவமானத்தை உண்டாக்குங்கள் ’’ என்ருன்.

அந்த வசனங்களைக் களிப்புடன் செவியேற்ற அந்த வீரர்கள், உற்சாகம் மேலிட்டவர்களாகத் தங்கள் கப்பல்களை நோக்கி ஓட்டமாக ஓடினர். அக்கப்பல்கள் அப்போது தணலினுலும், புகையினுலும் சூழப்பட்டிருந்தன. அப்போது அவர்கள் இட்ட கூச்சல் ஒரு கரையில் இருந்து மற்ரெரு கரைக்குச் சென்று அங்கிருந்துப் பிரதித்துவனியுடன் திரும்பி வந்தது. அக் கூச்சல்கள் காலியாக விருந்த கப்பல்களையும் சென்றுத் தாக்கின. அக்கப்பல்களில் இருந்து வந்த அரவம், மற்றைய ஓசைகள் அனைத்தையும் காட்டிலும், அதிகக் கனமாகவிருந்தது.

அப்போது ஒரு சிறு யுத்தமும் நின்றிருந்தது. அனைவரும் தங்களைச் சுற்றிலும் நாற்புறத்திலும் தங்களது கண்ணேட்டத்தைச் செலுத்தினர். அப்போது மஹானுன அகிலேசனது பளிச் சென்று மின்னும் கவசம் அவர்களுக்குக் கட்புலனுயிற்று.

அவனைத் துரோஜர்களும் கண்டனர். பயங்கர ஸ்வரூபியாகிய அகிலேசனே தங்களுக்கு அருகே வந்து விட்டான் என்று அவர்கள் கருதினர்! அக்கணமே அவர்கள் அவ்வுருவத்தை உற்றுப் பார்த்தனர், நடுக்கங் கொண்டனர், ஓட்டமும் பிடித்தனர்!

பரம் பொருளுக்குச் சமமான பத்திரகலுஷா! அப்போது நடந்த யுத்தத்தில், யுத்தம் மும்முரமாக நடந்து வந்த இடத்தையும், குழப்பம் மிகுந்திருந்த இடத்தையும் நோக்கி, உன் வேல் தான் முதன் முதலாகப் பறந்து செனறது.

அதிர்ஷ்ட ஹீனனுன புரோதியைலஸ்ஸை இலியன் கரைக்குக் கொண்டு சென்ற மிகப் பிரசித்திபெற்ற கப்பலின் பின்னணியைத்தின் அருகில், பயோனியனும் வீரனுமான பைரிக்மீஸ் என்பவன் நின்று கொண்டிருந்தான். நீர்வளம் உள்ளதும், வளைந்து வளைந்து ஓடுவதுமான ஆக்கியஸ்ஸின் கரையோரங்களில் வசித்து வந்த தன்னுடைய பரிவாரங்களைக் கூட்டிக் கொண்டு, அவன் இந்த யுத்தத்திற்கு வந்தவன்.

பத்திரகலுஷனது வேலானது அவனது தோள் பட்டையைத் தாக்கிக் குத்தி, அவனது உயிரையும் எமனுலகத்திற்கு அனுப்பி விட்டது. அந்த வீரன் அலறி அடித்துக் கொண்டு, அடியற்ற பனைபோல், மண்ணின் மேல் சாய்ந்து விட்டான்!

தங்கள் நாட்டரையன் இவ்வாறு தங்கள் முன்னுகவே அழி வடைந்ததைக் கண்ணுற்ற அவனுடைய அனுசரர்கள், அணி வகுப்பில் இருந்து பிரிந்து, நாற்புறமும் சிதறுண்டு, வெகு தூரத்தில் இருந்த ஒரு சமவெளியை நோக்கி ஓட்டம் பிடித்தனர்.

அப்போது படர்ந்து வந்த நெருப்பு பத்திரகலுஷனுடைய கைவலியினுல் தணிந்து பின்னடைந்து விட்டது. அவிந்தும் போய்விட்டது. அப்போது பாதி வெந்த கப்பலிலிருந்த துரோஜர் களும் தங்களது கர்வத்தைப் புறக்கணித்துவிட்டு, அக்கப்பலில் இருந்து பின் வாங்கினர்.

இவ்வாறு நெருப்பும் அணைந்து, புகையும் ஒழிந்த பின்னர் கிரேக்கக் கடற்படைகளெல்லாம் சந்தோஷித்து, நிர்ப்பயமாய்த் தங்கள் தங்கள் இடங்களில் கவலை இன்றி நின்றனர். அப்போது சத்துருக்களான துரோஜர்கள் ஒருவர்மேல் ஒருவர் திரள் திரளாக விழுந்து, தலைதெறிக்கக் குழம்பியோடினர்.

இவ்வாறு வெற்றியடைந்த கிரேக்கர்கள் எதிரிகளிடம் இருந்து திரும்பப் பிடித்த கப்பல்களின் மேல் தட்டுக்களின் மேல் ஏறி ஜயகோஷம் செய்தனர். அவர்கள் செய்த கோஷத்தினுல் நட்சத்திர மண்டலமும் இடிந்தே போய்விட்டது. அப்போது அந்த யுத்த களம் எவ்வாறு இருந்தது என்பதை விளக்க ஓர் உபமானமும் சொல்லுவோம் :—

கனமான கார்மேகங்கள் ஒரு மலையின் சிகரத்தைக் கவர்ந்து, அதன் நாற்புறங்களிலும் உள்ள பரந்த ஆகாயமண்டலத் திற்குப் போர்த்தப்பட்ட ஒரு கூரைபோல் விளங்குகையில், இடிக் கடவுள் திடீரென வந்து, ஒரு கிரணத்தைப் பளிச்சென வீசி, அக் கார் மேகங்களினுல் உண்டான இருளைத் துளைத்துப், பட்டப்பகல் போன்ற ஒரு வெட்ட வெளிச்சத்தை உண்டாக்கி விட்டால் அப் போது எவ்வாறு குன்றுகளும், மலைகளும் காந்தியுடன் விளங்கு கின்றன, நெடுந்தூரத்தில் உள்ள பாறைகளும் கட்புலனுகின்றன. அவ்வாறே அந்தப் பிரதேசத்தில் உள்ள அருவிகளும், சிற்ருறு களும், பள்ளத்தாக்குகளும் காடுகளும், அடவிகளும் விகசிதமா கின்றன. அதிரம்மியமான பரந்த காட்சியானது நேத்திரானந்த மாகவே இருக்கின்றது. அளவிட முடியாத ஆகாய மண்டலம் முழுவதும் ஜோதி மயமாய்ப் பிரகாசிக்கின்றது.

இவ்வாறு ட்ராய் ஜனங்கள் கடற்படைகளில் இருந்து துரத் தப்பட்டுப் புறங்கொடுத்து ஓடி அந்த யுத்த களத்தில் நாற்புறமும் சிதறுண்டு கலைந்த பின்னும், இந்த யுத்தமானது நின்றுவிட வில்லை. அது மேன்மேலும் நடந்து வந்தது. கிரேக்க வீரன் ஒவ்வொருவனும், தன் சத்துருக் கக்ஷியிலிருந்த ஓரோர் வீரனையும் கொன்ருன். மனவலியும் ஊக்கமும் கொண்ட பத்திரகலுஷனே அவர்கள் அனைவருக்கும் முதல்வனுக விளங்

கிறான். அவன் சிறிதும் ஓய்வோ, ஒழிச்சலோ இன்றி நாற்புறமும் பறந்து சென்றான்.

அப்போது அரியிலிக்ஸ் என்னும் ஒரு வீரன் ஒரு புறமாகத் திரும்பினான். அச்சமயம் அவனுடைய துடையைப் பத்திரகலுஷனுடைய ஆயுதம் ஒன்று குத்திக் கிழித்துப் பெருங்காயம் ஒன்றை உண்டுபண்ணி விட்டது. விசையுடன் விடுக்கப்பட்டதும், பித்தளையினாலான கூரான முனையுள்ளதுமான அந்த வேலாயுதமானது அந்தத் தொடையைத் துளைத்துக்கொண்டு சென்று, அதன் உள்ளிருந்த எலும்பைச் சுக்கல் சுக்கலாக நொறுக்கிவிட்டது. அதன் பின் அவன் தலைகீழாகத் தொப்பெனக் கீழே விழுந்து விட்டான்!

அடுத்தபடியாக தோவாஸே! உனது முறை வந்தது. அச்சமயம் நீ நிராயுதனாக விருந்தனை! அப்போது உனது மார்பானது ஸ்பார்ட்டனது வேலை வரவேற்று அதற்கு இடமளித்தது.

அதன்பின் அம்பிடஸ் என்பவன் தன்னுடைய கையை ஓங்கிக்கொண்டு வந்தான். அவனைப் பைலிதீசனது அம்பானது வழிமறித்துத் தடுத்தது. அவனுடைய துடையைத் துளைத்து, அதிலிருந்த தசையனைத்தையும் குத்திக் கிழித்து விட்டதுமன்றி, அவனுடைய நரம்புகளையும் அறுத்து விட்டது. இருளும் அவனுடைய கண்களை மூடிவிட்டது. அவனும் தனது உயிரைத் துறந்தான், நின்றவிடத்திலேயே மடிந்து விழுந்தான்!

ஒரே மாதிரியான ஆயுதங்களை அணிந்துகொண்டிருந்த நெஸ்டாரின் புத்திரர்கள் இருவர், லிஸியன் வீரர்களாக விளங்கிய இரு ஸகோதரர்களை எதிர்த்துத் தாக்கினர். இளம் வீரனை அட்டிம்னியஸ் என்பவன், மஹானான அந்திலோக்கஸ் என்பவனால் அள்ளையில் குத்தப்பட்டு அடியற்ற மரம்போல் தரையில் விழுந்து தனது பிராணனை விட்டான். அப்போது தனது உடன் பிறந்தானுக்கு நேர்ந்த ஆபத்தைக் கண்ணுற்று மனமிடிந்து இரங்கி இரத்தத்தை வடித்தவனும் சகோதர வாஞ்சை மிக்கவனுமான மாரீஸ் என்பவன் நிலத்தில் கிடந்த தனது சகோதரனின் உயிரற்ற உடலைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆவலுடனும் தனது உடன்பிறந்தானைக் கொன்றவனைத் தொலைத்துப் பழிவாங்கி விடவேண்டும் என்னும் ஆத்திரத்துடனும், அவனை நோக்கிக் காற்றைப்போல் பறந்து வந்தான்.

ஆனால் தேவர்களுக்குச் சமமான திராஸிமேதன் அவனுடைய கையும் தோளும் சந்திக்கும் இடத்தை நோக்கிக் குறிவைத்து ஓர் அடி அடித்து, அவனுடைய வேகத்தைத் தணித்தேவிட்டான்; அதனால் அவனுடைய கையானது இரத்தத்தைக் கக்கிக்கொண்டு பொத்தெனப் புழுதியின்மேல் விழுந்தது. அக்கணமே அங்கிருந்த புழுதியானது, அவனுடைய உடல் முழுவதையும் நன்றாக மூடியும் விட்டது. அவன் இரத்தத்தை வெள்ளம்போல் பொழிந்துகொண்டு தனது ஆவியைத் துறந்தான்! தலையையும் சாய்த்தான்.

இவ்வாறு இரண்டு சகோதரர்கள் வேறு இரண்டு சகோதரர்களால் கொலையுண்டு மடிந்தனர். அவ்விருவரும் ஸார்ப்பீடனுடைய நண்பர்கள்; அமிஸோடாரஸ்ஸின் புத்திரர்கள். அந்த அமிஸோடாரஸ் என்பவன் மனிதர்களிடம் வைரங்கொண்ட அரக்கிகளுடைய போதனைகளையும் உபதேசங்களையும் ஏற்று, கிமேரா என்னும் கொடிய மிருகங்களை வளர்த்து வந்தவன். அவனது மக்கள் வேல் வித்தையில் தேர்ச்சி பெற்றிருந்தனர் ; எனினும், அத்தேர்ச்சி பயனிலதாக ஆகிவிட்டது. தங்கள் தகப்பனுடைய பழிபாவங்களுக்கு இரையாக அவர்கள் தங்கள் உயிர்களை வழங்கினர்.

அப்போது உண்டான இந்தக் குழப்பத்தில் ஆயிலியஸ் என்பவன், கிளியோபுலஸ் என்பவனை நிராயுதனாக்கி அவனை உயிருள்ள பலியாகத் தரையில் வீழ்த்தினான். ஆனால் அந்த துரோஜன் வெகுநேரம் உயிருடன் இருக்கவில்லை. தாகத்துடன் துடித்துவந்த ஆயிலியஸ்ஸின் உடைவாளானது தகதகவெனக் கொதித்துக் கொண்டிருந்த அவனது இரத்தத்தைக் குடித்துத் தனது தாகத்தைத் தணித்துக் கொண்டது. அவ்வாறு தனது தாகத்தைத் தணித்துக்கொண்ட அந்த ஆயுதமானது, விசேஷப் புகையைக் கிளப்பிக்கொண்டு அவனது தொண்டையில் ஊன்றியும் நின்றுவிட்டது. இருண்ட மேனியனாகிய இயமனும் அவனது கண்களை மூடிவிட்டான். இரக்கமற்ற ஊழ்வினையே அவனது அழிவிற்குக் காரணமாயிற்று!

இந்த இருதிறத்துச் சேனைகளிலுமிருந்த வீரியவானான லிக்கன் என்பவனும், பயங்கர ரூபியான பெனிலியஸ் என்பவனும் பேரும் கீர்த்தியும் பெற வேண்டுமென்ற ஆவலினால் உந்தித் தள்ளப்பட்டு, ஒருவரை யொருவர் எதிர்த்துக் கொண்டு முன் வந்தனர். ஒருவர்மேலொருவர் வேலாயுதங்களை விடுத்தனர். ஆனால் அவை பயனற்றுப் போயின. அதன் பின் அவர்கள் தங்களுடைய எல்லா ஆயுதங்களையும் கேடயங்களையும் அணிந்து கொண்டு ஒருவரையொருவர் அணுகிவந்து, தங்களுடைய வாட்களை உருவினர்.

அப்போது துணிவு மிக்க லிக்கான் தனது பியோஷியாச் சத்துருவின் தலைச் சீராவில் அசைந்து ஆடிக்கொண்டிருந்த கொண்டையைக்குறிவைத்துப் பலமாக ஓங்கி ஓர் அடி அடித்தான். அந்த அடியில் அவனது வாள் முறிந்துபோய் விட்டது.

அதன் பின் பெனிலியஸ் என்பவன், தனது வைரியின் கழுத்தும் தலையும் கூடும் இடத்தை நோக்கி அதன் மேல் தவறாமல் விழுமாறு குறிவைத்துத் தனது கத்தியைப் பிரயோகித்தான். அவ்வாறு சரியாக விழுந்த அடியினால் அவனது தலை துண்டிக்கப் பட்டு, அவனது சர்மத்தின் மேல் சரிந்து விட்டது, அவனது உடலும் அக்கணமே புழுதியைப் படுக்கையாய்க் கொண்டு மண்ணில் மறைந்துவிட்டது.

நியாமஸ் என்னும் வீரன் இந்த யுத்த களத்தில் இருந்து ஓட்டம் பிடிக்க எத்தனித்தான்; அவ்வாறு ஓட்டம் பிடிப்பதற்காக, அவன் தன்னுடைய குதிரைகளைத் தேரில் பூட்டிக்கொண்டு, அவற்றை ஓட்ட எத்தனிக்கையில், மெரியோன் என்பவன் அவனது தோளைத் துளைத்து, அவனைத் தரையில் வீழ்த்தினான். அப்போது அவன் குருதியைச் சொரிந்து கொண்டு தனது தேரின் பின்புறமாக உருண்டு கீழே விழ, அவனுடைய கண்கள் ஒளி மங்கின, இடையறாத இருட்டு அவற்றை மூடிவிட்டது.

அடுத்தபடியாக எரிமாஸ் என்பவன் தனது வினைப்பயனுக்கு இலக்காயினான். கீரீட்டனது இரும்பாயுதம் அவனது வாயைப் பிளந்துவிட்டது. அந்த இரும்பாயுதமானது அவனது மூளையின் அடிப்பாகத்தைத் துளைத்து அதன் உட்சென்று, அங்கிருந்த மெல்லிய எலும்புகளை எல்லாம் நொய்யாக அரைத்து, அவனுடைய பற்களையும், அப்போது உண்டான இரத்த வெள்ளத்தில் அழுத்திவிட்டது. அவனுடைய வாயும், கண்ணும், நாசித் துவாரங்களும் ஒரு பெருத்த வெள்ளத்தைப்போல் இரத்தத்தைப் பொழிந்தன. அந்த இரத்தம் வழிந்து சென்ற வழியே அவன் தேம்பித் தேம்பி அழுது கொண்டு தனது உயிரையும் விட்டான்.

ஓர் இடையனது கண்ணோட்டத்தை இழந்து விட்ட ஓர் ஆநிரை, ஒரு சமவெளியில் சிதறுண்டு கிடக்கையில், திரளான ஓநாய்கள் அந்தக் காவலில்லாக் கூட்டத்தைக் கண்டுவிட்டால் பயந்து நடுங்கும் அந்தச் சாது ஜன்மங்களை அவை எவ்வாறு ஏற இறங்கப் பார்த்து, அவற்றைக் கிழித்து விடுகின்றனவோ, அவ்வாறே கிரேக்கர்கள் அனைவரும் தங்கள் சத்துருக்களின் மேற் பாய்ந்து அவர்களைத் தாக்கினர். ட்ராய் நாட்டார், தங்கள் புராதனகீர்த்திப் பிரதாபங்கள் அனைத்தையும் ஒரேயடியாய் மறந்துவிட்டு ஓட்டம் பிடித்தனர்.

இவ்வாறு ட்ராய் நாட்டாரை முறியடித்த பின்னரும், தேவஸ்வரூபியான அஜாக்ஷன் ஆத்திரம் மிகுந்தவனாகவே விளங்கினான். அவன் ஹெக்டரைக் கண்கொட்டாமல் பார்த்து வந்தான். தகதகவென்று ஜ்வலித்துக்கொண்டிருந்த அவனது வேலாயுதமும், ஹெக்டரின் மார்பின் மேலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தது.

ஆனால் யுத்த காரியங்களில் அனுபவம் மிகுந்தவனான துரோஜத் தலைவன், இவ்விஷயத்தில் சிறிதும் அஜாக்ரதை உள்ளவனாக இருக்கவில்லை. அவன் தன்னுடைய அகன்ற தோள்களின் மேல் பிரமாண்டமான கவசம் ஒன்றைப் போர்த்திக் கொண்டே, கிரேக்கர்கள் பொழிந்துவந்த சரவர்ஷத்தை வெகு கவனமாக உற்று நோக்கி வந்தான். கிரேக்கர்கள் பொழிந்த சரமாரியானது, கணகணவென்ற மணி யோசையைப்போல் ஒலித்துக்கொண்டு, அவனது மார்க்கவசத்தின்மேல் விழுந்தது.

கிரேக்கர்கள் மேன்மேலும் வெற்றிபெற்று வருவதைத் தானே நேரில் கண்ணுற்றதும், அவன் தன்னுடைய நடவடிக்கைகளை நிறுத்திவிட்டுத் திரும்பி, அவ்வமயம் எஞ்சி நின்ற தன் இனத்தாரைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணம் கொண்டு, அவர்களுடன் ஓட்டம் பிடித்தான்.

ஜோவ் தேவரது திருக்கரமானது, ஒரு பெரும் புயலை நிர்மாணம் செய்து, கொடுங்காற்றுகளையும் விடுத்து ஆகாய வீதியை இருட்டிவருமாறு மேகங்களை உருட்டி வருகையில், அந்தக் கன்னங்கரேலென்ற நீராவிக் கூட்டங்கள் பூமியில் உள்ள வயல்களின் மேலாக உயர்ந்து பறந்து சென்று கதிரவனையும் மறைத்துப் பொன்னிறமான ஆகாய வீதிகளையும் மாசுபடுத்தி விடுகின்றன.

அவ்வாறே கிலியும், பயமும், நடுக்கமும் துரோஜர்களை அந்தக் கப்பல்களில் இருந்து ஓட்டித் துரத்தி விட்டன. அவர்கள் அந்த இருள்சூழ்ந்த அந்தக் களத்தின் வழியே ஓட்டம் பிடித்தனர்.

ஹெக்டரும் கூட ஓட்டம் பிடித்தான்! நெருப்பைப்போல் வேகமாகப் பறக்கும் அவனுடைய துரகங்கள் அணி வகுப்பில் இருந்து கலைந்து சிதறிக்கிடந்த சைனியங்களின் வழியாகத் தலைகால் தெரியாமலும், அவற்றை யுருட்டிக்கொண்டும், தங்களது தலைவனைத் தரதரவென்று இழுத்துக்கொண்டும் சென்றன. அச்சமயம் அவனுக்குப் பின்புறமாய் நெடுந்தூரம்வரை நின்று கொண்டிருந்த துரோஜ வீரர்கள் தட்டுத் தடுமாறிக்கொண்டு இன்னது செய்வதென்று அறியாமல் மாண்டு விழுந்தனர்.

கணக்கற்ற வீரர்கள் அவ்வாறு ஒரேயடியாய் அந்த அகழில் மாண்டு விழுந்தபொழுது, அவர்களின் பிணக்குவியலானது, அந்த அகழில் அடித்த ஓர் ஆப்பைப் போலவே விளங்கியது. ரதங்கள் ரதங்களின்மேல் விழுந்தன. அவற்றின் உத்திரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்து படபடவென்று முறிந்தன. அவற்றில் கட்டப்பட்டிருந்த குதிரைகளும் மதி இழந்து, பித்துப் பிடித்தவைபோல், தங்களுடைய நுகத் தடிகளை முறித்தன. ஆபத்தில் இருந்து தப்பிப் பிழைக்க வேண்டும் என்ற ஆத்திரத்துடன், அவை தங்களருகில் இருந்த செங்குத்தான மேடுகளில் ஏற முயன்றன. ஆனால் அந்த முயற்சிகளெல்லாம் வீணேயாயின. அவற்றின் சாரதிகளும் நுரையைக் கக்கிக்கொண்டு தரையின்மேல் விழுந்து விட்டனர்.

அப்போது பின்னணியில் இருந்த வண்ணம் கோபதாபங்களுடன் கொதித்துவந்த பத்திரகலுஷன் உரத்த கூச்சலிட்டுக்கொண்டு பறந்து வந்தான். அந்தக் கூச்சல்களினால் ஆகாயமும் பூமியும் அதிர்ந்து நடுங்கின, அங்குக் குழப்பமே குடிகொண்டு விட்டது.

இவ்வாறு அவர்கள் விரைந்து ஓட்டம் பிடித்தபொழுது எழுந்த கனமான புழுதிகள், அவர்களை நன்ருகச் சூழ்ந்து மூடி மறைத்து விட்டன. அவை மேகங்களைப்போல் ஒன்றின்மேல் ஒன்ருகக் கிளம்பி ஆகாயத்தையும் மறைத்து விட்டன. அப்போது அவர்களுடைய குதிரைகள் பயந்து வெருண்டன. அவை, தங்களின்மேல் ஏறி வந்தவர்களும், ஒருவர்பின் ஒருவராகப் பிராணனை விடுத்து வந்தவர்களுமான தங்களுடைய தலைவர்களைக் கீழே தள்ளிவிட்டு, ட்ராய் நகரைச் சேரவேண்டுமென்ற ஆத்திரத்துடன் அந்தக் களம் முழுவதிலும், தங்களது மனம் போனபடிச் சஞ்சரிக்கலாயின.

இவ்வாறு இந்த யுத்தத்தில், வீரர்கள் ஒருபுறம் தங்களது இரத்தத்தை வடித்துக் கொண்டும், வேறு ஒரு புறத்தில் கூட்டங் கூட்டமாகத் தங்களது உயிரை நீத்துக்கொண்டுமிருக்கப், பின்னும் ஒரு புறத்தில் அவர்களுடைய இரதங்களும், துரகங்களும், யுத்த ஆயுதங்களும் அழிந்து கொண்டே இருந்தன.

இரதங்களின் இருசுகளின் இடையில் அகப்பட்டுக்கொண்ட வீரர்கள் இரத்தத்தை வடித்துக்கொண்டுக் கதறியழுது வந்தனர். இவற்ருல் அங்கு ஒரு பேரரவம் உண்டாயிற்று.

இவ்வாறு சத்துருக்களை அடக்கி, முறியடித்து, வெற்றியுடன் விளங்கிய விஜயன், அப்போது, அந்தப் பேரரவங்களைக் காட்டிலும், அதிகமாக உரத்தக் கூவிக்கொண்டே இருந்தான்! அந்தப் பிலியஸ்ஸின் குதிரைகளும் தங்குதடை இன்றியுழைத்து வந்தன. அழியாப் புகழ்பெற்ற அக்குதிரைகள் ஒரு கரையில் இருந்து மறுகரைக்குப் பாய்ந்துகொண்டே இருந்தன.

அப்போது சக்கரம் போல் கடகடவென்று சுழன்று வந்த பிலியஸ்ஸின் இரதமானது உயர்ந்து கிளம்பி, அந்த அகழைத் தாண்டி, அக்கரையில் குதித்து, அங்குப் புகைந்து கொண்டிருந்த சத்துருக்களின் அணிகளில் புகுந்து புறங்காட்டி ஓட்டம் பிடித்துக் கொண்டிருந்த வீரர்களை வழிமறித்துத் தடுத்து, ஹெக்டரையும் அணுகி, அவனையும் வெருட்டியது! அவனும் ஓட்டம் பிடித்தான்! பத்திரகலுஷன் அவனை நோக்கித் தனது ஈட்டியைக் குலுக்கியாட்டினுன். ஆனுல் அதனுல் ஒரு பயனும் விளையவில்லை. அவனைக் கொல்லும் பாக்கியம் பத்திரகலுஷனுக்கு இருக்கவில்லை.

சரத் காலத்தில், ஜோவ் பகவான் உக்கிரஸ்வரூபத்துடன், கொடுங்கோபங் கொண்டு வேகமாகத் தன்னுடைய சக்திகளைக் காட்டி வருகையில் இடைவிடாமல் பொழியும் கனத்த மழையினுல் பூமியானது அம்மழையின் கனத்தைத் தாங்கமுடியாமல் தவிக்கின்றது.

மனித வர்க்கத்தில் பிறந்த மகாபாபிகள் ஆதியும் அந்தமும் இல்லாத அறநெறிகளை மீறி நடந்து வருகையிலோ, அல்லது

நியாய பரிபாலனம் செய்து வர நியமிக்கப்பட்ட அதிகாரிகள் கைக் கூலி வாங்கிக் கொண்டு அநியாயத் தீர்ப்புக்களைச் செய்கையிலோ அனர்த்தங்கள் உண்டாகின்றன !

அந்த அனர்த்தங்களை உண்டாக்குகையில், ஜோவ் தேவர் நதிகளின் ஆழமான படுகைகளில் இருந்து வெள்ளத்தை கிளப்பு கின்றார். ஆகாய மண்டபத்தில் உள்ள பல மடைகளையும் ஒன்று விடாமல் திறந்து விடுகின்றார். அப்போது குன்றுகளில் இருந்தும், மலைகளில் இருந்தும் வேகமாய்ப் பாய்ந்து வரும் அருவிகளும் அவருடைய ஆணைகளைச் சிரமேற்றாங்கித் தடதடவென இறங்கி வந்து, அடிவாரத்தில் உள்ள நிலங்களை ஒரேயடியாய் மூடி விடுகின்றன. அவை மலைகளையும் அடியோடு தகர்த்துப் பெயர்த்து அடித்துக்கொண்டு போய்விடுகின்றன. அப்போது உண்டாகும் வெள்ளப் பெருக்கும் சமுத்திரத்தைச் சென்று சேரும் வரை உரத்துக் கதறுகின்றன. அப்போது மனிதனுக்குத்,தான் மகா அற்பன் என்பதும் தன் முயற்சிகளெல்லாம் வீண் என்பதும் புலனாகின்றன.

இவ்வாறு முன்னணியில் நின்ற சேனைகளை முறியடித்துத் துரத்திவிட்ட பின், ஜயசீலனான வீரன், தான் மேலே செய்ய வேண்டிய காரியங்களைக் கவனிப்பதற்காகத் தன்னுடைய கப்பல் களை நோக்கிச் சென்றான். அவ்வாறு தங்குதடையின்றி ஓட்ட மாகச் செல்லுகையில் துரோஜ சேனையில் அவனுக்கு எதிர்ப்பட்ட ஒரு பாதி அழிந்தே போய்விட்டது. மறுபாதியில் இருந்த சைனிகர்கள் புறங்கொடுத்து ஓட்டம் பிடித்தனர். அன்றைய தினம் அவர்கள் உயிருடன் பிழைத்தனர்.

வெள்ளியைப் போல் பளபளவென ஸிவோயிஸ் நதி பாயும் இடத்திற்கும், கோட்டை கொத்தளங்கள் ஆகாயத்தை அளாவிக் கொண்டு உயர்ந்து நின்ற இடத்திற்கும் மத்தியில், கிரேக்கர் களுடைய கடற்படைகள் தங்கி இருந்தன. யுத்தகளத்தில் இருந்து கிளம்பிய புழுதிகளும், வீரர்கள் வடித்த இரத்தமும் அவ்விடத்தில் ஒன்றாகக் கலந்து சேறும் சக்தியும் மிகுந்ததினால், அவ்விடம் பார் வைக்கு மிகவும் பயங்கரமாக விருந்தது.

பத்திரகலுஷனும் அதே இடத்தில் பயங்கரமான கடுத்த முகத்துடன் நின்று கொண்டு, புழுதியையும் இரத்தக் கறையையும் ஏற்றுக் கொண்டு, தன் இனத்தாரை வெல்லவந்த துரோஜர் களின் மீது தனது வேகத்தைச் செலுத்தி, அவர்களைச் சங்கரித்து வந்தான். முதன் முதலாக அவனது தீயைப் போன்ற சுடு சரத் தினால் குத்தப்பட்டு புரோனஸ் என்பவன் தனது பிராணனை விடுத்தான். அந்தச் சரமானது அவனது கவசத்தைத் துளைத்துக் கொண்டு உட்சென்று அவனது அஞ்சா நெஞ்சைப் பிளந்து விட்டது.

அடுத்தபடியாக, தெஸ்டார் என்பவன் தனது உயிரை நீத்தான்; அவன் பத்திரகலுஷனைத் தனது கண்ணால் கண்ணுற்ற மாத்திரம் பயந்து நடுங்கி மனமிடிந்து செயலற்றுத் தரையின் மேல் விழுந்தான். அவனுடைய கண்கள் அழகு இழந்து ஆழத்தில் அழுந்தி விட்டன. தனது சத்துருவின் முன்நின்று சண்டை பிடிக்கவோ, அல்லது புறங்கொடுத்து ஓட்டம் பிடிக்கவோ அவனுக்குச் சக்தி இல்லாது போயிற்று. அவன் ஆசனத்தில் கூனிக் குறுதி ஒடுங்கி, உட்கார்ந்து விட்டான்.

இந்த யுத்தத்தில் இருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு பேடியைப் போல் நடுங்கிக் கொண்டு, அவன்தனது இரதத்தின் வேகத்தைக் குறைத்துத் தன்னுடைய குதிரைகளின் கடிவாளக் கயிறுகளையும் தளர்த்தி வருவதைப் பத்திரகலுஷன் கவனித்து, அவன் மேல் குறிவைத்துத் தனது வேலாயுதத்தைப் பிரயோகிக்க, அது அவனுடைய கன்னங்களின் நடுவே ஊன்றிப் பாய்ந்து, அவனை இரதத்தினின்றும் கீழே உருட்டித் தள்ளிவிட்டது.

சமுத்திரக் கரையோரமாக உயர்ந்து நீட்டும் ஒரு பாறையின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு மீன் பிடிக்கும் ஒரு செம்படவன், கண்ணைக் கொட்டாமல் தன்னுடைய கயிற்றையும் கோலையும் கவனித்துக் கொண்டு வருகையில் தனது தூண்டிலில் ஒரு பருத்த மீனானது அகப்பட்டுத் திணறிக் கொண்டிருப்பதைக் கண்டு விட்டால், எவ்வாறு அவன் அதை இலகுவாக இழுத்து விடுகின்றானோ, அவ்வாறே வாயைப் பிளந்து கொண்டிருந்த இந்தப் பேடியைப் பத்திரகலுஷனுடைய முட்கள் மலிந்த வேலாயுதமானது, அதிலகுவாக மாட்டிப்பிடித்துக் கொண்டது. அவன் அதை அசைத்து இழுத்தான். அக்கணமே கிரேக்கன் சொல்லிய பிரகாரம், அவன் கீழே விழுந்துவிட, அவனது ஆவியும் கோழைத்தனம் மலிந்த அவனது கூட்டைவிட்டுப் பறந்து வெளியேறி விட்டது.

அதன்பின் பத்திரகலுஷன் எரியாலஸ்ஸை நோக்கிப் பாய்ந்தான். அவன் பாறையைப் போன்ற ஒரு பெருத்த கல்லைத் தூக்கி அவன் மேல் அதிவேகமாக எறிந்தான். பிரம்மாண்டமான அந்தப் பாறைத் துண்டமானது, சிறிதும் குறிதவறாமல், அவனது கிரீடத்தின் மேல் பொத்தென விழுந்தது. அதன் மேல் பாகத்தை உடைத்ததுமன்றி, அவனது தலையையும் இரண்டாய்ப் பிளந்து விட்டது. அந்த வீரன் பெருமூச்சு விட்டுக் கொண்டு பூமியின் மேல் பொத்தெனக் கீழேவிழ, அக்கணமே அவன் எமன் வசப்பட்டு இருள் சூழ்ந்த நரகலோகத்தில் புகுந்துவிட்டான்.

அதன்பின் இபால்டிஸஸும், இச்சியஸ்ஸஸும், அடிசாய்ந்து விழுந்து புழுதியில் அழுந்தினர். இவ்வியஸ்ஸஸும், இவிப்பஸ்ஸீம், பாலிமிலுஸஸும் பிராணனை விடுத்தனர். அவர்களுக்குத் துணையாக அம்போதிரஸ்ஸஸும் எரிமாஸ்ஸஸும் சென்றனர். கடைசி

யாகத் திலிப்போலிமஸ்ஸுவும், பைரீஸ்ஸுவும் தங்களுடைய குருதியை வடித்தனர்.

பத்திரகலுஷன் சென்ற விடமெல்லாம் இந்த சத்துரு ஸங்காரம் அதிகரித்துக் கொண்டே வந்தது. சத்துருக்களும், தங்கள் உயிரை நீத்து வந்தனர். அவர்கள் பிணங்களும் மலை போல் குவிந்தன.

இவ்வாறு தைரியமிக்க நண்பர்கள் புழுதியில் அழுந்திக் கொண்டும், அந்த யுத்தகளத்தில் திண்டாடித் திணறிக் கொண்டும் வருவதைக் கண்ணுற்ற ஸார்ப்பீடன், அந்தக் களத்தில் இருந்து அப்போது புறங் கொடுத்து ஓடிக்கொண்டிருந்த மற்றைய ஆட்களை நோக்கிக் கண்டித்துப் பின்வருமாறு நிந்தித் துரைத்தான் :—

"ஆஹா ! இது என்ன கொடுமை ! நமது ஏற்றத்திற்கு இந்தத் தாழ்வு வந்து விட்டதே ! பளிச் சென்று விளங்கிய நமது கீர்த்திக்கு மாசு ஏற்பட்டுவிட்டது ! நம் ஆயுதங்களுக்கு மல்லவா அவமானம் உண்டாகி விட்டது !

மானமிழந்தவர்களே ! போராட்டம் மலிந்துள்ள இந்தக் களத்தில் இருந்து ஓட்டம் பிடியுங்கள் ! தொலையுங்கள் ! வேறு ஒருவருடைய உதவியுமின்றி இந்த ஒரே கை, இந்த யுத்தத்தை நடத்தி வரும் ! இந்தக் கையே இந்த யுத்தத்தை முடித்துத் தீர்த்துவிடும்.

இந்த வீரன் அணி அணியாய் உள்ள ஸைனியங்கள் அனைத்தையும் ஒரேயடியாய் அரைத்து விடுகின்றான். இவனது கைவலியையும் நான் பார்த்து விடுகின்றேன் ! இந்தக் காரியத்தை நான் ஒருவனே செய்வேன் !" என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தனது இரதத்தில் இருந்து எட்டிப் பாய்ந்து குதித்தான். அதைக் கண்ணுற்ற பத்திரகலுஷனும், அவனைப் போலவே தானும் தனது வாகனத்தில் இருந்து கீழே இறங்கித் தனது சத்துருவின் வரவையும், அதன்பின் நிகழ விருந்த யுத்தத்தையும் மிகுந்த ஆத்திரத்துடன் எதிர் பார்த்தவனாக விருந்தான்.

மலையுச்சியில் உள்ள இரண்டு கழுகுகள் தம்முள் வேற்றுமை கொண்டு, ஒன்றோடொன்று பொர வேண்டு மென்ற ஆத்திரத் துடன் தங்களுடைய சிறகுகளைப் பட படவென்று அடித்துக் கொண்டு கீழே பாய்ந்து பொருகையில், அவை ஒன்றை ஒன்று குத்திக் கிழித்துக் கீச்சுக் கீச்சென்று உரத்துக் கத்துகின்றன. அப்போது உண்டாகும் அரவத்திற்குப் பாலைவனத்தில் இருந்து எதிரொலிகள் கிளம்புகின்றன. அந்த எதிரொலியானது அங்குள்ள பாறைகளையும் தாக்குகின்றது, அந்தப் பாறைகளும், அந்த

எதிரொலியை அனுசரித்துக் கதறுகின்றன. இந்தக் கழுகுகளைப் போலவே ஆயுதபாணிகளாகிய இவ்விரு வீரர்களும், ஒருவருக் கொருவர் ஆத்திரங் கொண்டு, அறவே சிறிதும் குறைவின்றி ஒருவர்க்கொருவர் இளைக்காமல் பொருது வந்தனர்.

இவ்வாறு இவ்விருவரும் பொருது வருவதைக் கண் கொட் டாமல் கவனித்து வந்த ஜோவ் தேவர் அந்தப் போர் எவ்வாறு முடியும் என்று முன்னுடியே அறிந்து, தனது சகோதரியும் பத்தினியுமான தேவியை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தார் :—

"காலம் நெருங்கி வந்து கொண்டிருக்கின்றது. தேவர் களுக்குச் சமமான எனது மகன் விசாலமான பிரிஜியா நாட்டிற்கு இரையாக வேண்டும், அவனது உடல் அந்நாட்டின் தரையின் மேல் பொத்தென விழ வேண்டும், அதில் அழுந்திப் போகவும் வேண்டு மென்று ஊழ்வினைகள் விதித்து விட்டன.

அதோ அவன் ஏற்கனவே எமனுலகத்தின் வாயிலுக்கு வந்து விட்டானே! அதன் சமீபத்திலும் நிற்கின்றானே! பயங் கரஸ்வரூபியான, இந்தப் பத்திரகலுஷனுடைய கைகளால் ஐயோ! அவன் மாளப் போகின்றானே! அவனைப் பெற்ற எனது மனம் தவிக்கின்றதே! நான் என்ன செய்வேன்? எனது மனம் ஒரு நிலையில் நிற்கவில்லையே! அவனுக்கு வரவிருக்கும் கடுவினைக்கு அவனை ஆளாக்காமல் தடுத்துப் பிடித்து இழுத்து இந்த யுத்தத்தில் நடக்கக்கூடிய பலவாறான கஷ்டங்களிலிருந்தும் பெரும்பாடுகளில் இருந்தும் அவனை விலக்கி நெடுந் தூரத்திலுள்ள லிஸியாவுக்கு அவனைச் க்ஷேமமாக அனுப்பி விடட்டுமா? அல்லது அவனை எனது புதல்வர்கள் எல்லோரிலும் சிறந்த வீரனாக அவனை அவன் விதிப்படி நடக்கட்டும் என்று கைநழுவ விட்டு, தெய்வீக மான அவனது இரத்தத்தைப் பொழிந்து இந்த யுத்த களத்தைச் செழிக்க வைக்கட்டுமா? இந்த இரண்டு காரியங்களில் நான் எதைச் செய்யட்டும்? சொல்" என்றார்.

அவ்வசனங்களைச் செவியுற்றுக் கேட்ட அந்த ஒளிவீசும் கண்ணுடையவள் அவருக்குப் பின்வருமாறு பதிலுரைத்தாள் :—

"வாரீர்! விண்ணுலக வேந்தரே! தாங்களும் இவ்வாறு விசனிக்கலாமா? இவை தங்களுக்கு அழகாகுமா? மர்த்தியர் களுக்கு விதிக்கப்பட்டுள்ள ஆயுட் காலம் அற்பமே யன்றோ? இந்த ஆயுட் காலமும் மனிதவர்க்கம் உண்டாவதற்கு முன்னுகவே ஏற்படுத்தப்பட்ட தன்றோ? அவ்வாறிருக்க ஜோவ் தேவர் குறிப்பிட்ட ஒரு மனிதனுடைய ஆயுட் காலத்தை மாத்திரம் நீட்டி வைக்கலாமா? தேவர்களுக்குப் பிறந்த எவ்வளவோ புத்திரர்கள் எமனுக்கு இரையாகப் போகின்றனர்! அதி கௌரவத்துடன் விளங்கும் இலியன் முன்பாக அவர்கள் அனைவரும் தங்கள் உயிரைவிட விருக்கின்றனர்!

இவ்வாறிருக்க உமது மகனுக்கு மாத்திரம் அந்தக் கதி வர லாகாது என்று கவலை கொண்டு நீர் அவனைக் காப்பாற்றி விடுவீராஞல், விண்ணுலகத்தில் வீற்றிருக்கும் தேவர்கள் ஆக்ஷே பிப்பார்கள்! ஜோவ் தேவர் பக்ஷபாதி என்று முணு முணுப் பார்கள்!

இவன் வீரசூர பராக்கிரமங்கள் நிறைந்தவன். இந்த யுத்தத்தில் இவனுக்கு அதியுன்னதமான பேரையும் கீர்த்தியையும் அளியும்! இவனது ஆவியானது ஆகாயத்தை நோக்கி விரைந்து வருகையில் உயிரற்ற இவனது உடல் உறங்குவது போல் நித்திரைக் கடவுளுக்கு வசமாகட்டும்! அதன்பின் நித்திரைக் கடவுளும் எமதர்மராஜனும் தங்களது கட்டளைப்படி உயிர் நீங்கிய சடலத்தை அவனது ஜன்ம தேசத்திற்குக் கொண்டு செல்லட்டும்.

அப்படிச் செய்வீராஞல் பிற்காலத்தவர் அவனைப் போற்றிப் பாராட்டி வருமாறு அவனுடைய உற்ருரும் உறவினரும் அவனுக்கு சலவைக் கல்லினுல் ஒரு சமாதியையும், மண்டபத்தையும் கட்டு வார்கள். நீருய்ப் போய் விட்ட அவனது தேகத்திற்கு நிரந்தர மான ஆராதனையும், வழிபாடுகளும், மரியாதைகளும், செலுத்து வார்கள். அவனது பெருமை என்றென்றும் குன்ருது நின்று வரும். இறந்தவர்களுக்கு இதினும் மேலான மரியாதைகளும் கௌரவங் களும் உண்டோ?" என்ருள்.

இவ்வசனங்களைச் செவியேற்றுக் கேட்ட மேக அதிபதி யானவர், தமது தேவியின் நியாயங்கள் சரிதான் என்றும், அவற் றைத் தட்டிப் பேச முடியா தென்றும் அறிந்து, அவற்றிற்கு இசைந்து அந்த வீரனுக்கு ஏற்கனவே நியமிக்கப்பட்டிருந்த விதிப்படிக் காரியங்கள் நடக்கட்டும் என்று சம்மதித்து விட்டார்.

இந்த நடவடிக்கைகளைக் கவனித்து வந்த ஆகாய மண்டலங்கள் அனைத்தும் தங்களது தேவனது புத்திரனுக்கு வர விருந்த பெருங் கேட்டை நினைத்துத் துக்கித்துக் கதறுவாராயினர். அப்போது அவர்கள் வடித்த கண்ணீரானது இரத்தமாக மாறி அந்த யுத்த களம் அனைத்திலும் சரமாரியாகப் பொழிந்து அதை நிரப்பி விட்டது.

தனது சொந்தமான லிஸியன் நாட்டில் சுகமாக ராஜ்ய பாரம் செய்து வந்த தமது மகன், அந்த நாட்டின் கரைகளுக்கு வெகு தூரத்தில் உள்ள இந்தப் போர்க் களத்தில் அவனது முன்வினைப் பயனுல் பிராணனை இழக்கப் போகின்ருனே யென்று வெகுவாகத் துக்கங் கொண்டு ஜோவ் தேவர் அந்தக் களத்தி லிருந்து தம்முடைய திருக் கண்களை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டார்.

இப்போது இவ்வீரர்கள் இருவரும் தத்தம் ஆயுதங்களை அணிந்து கொண்டு ஒருவரை ஒருவர் எதிர்த்தனர். ஒவ்வொரு

வனும் தனது கேடயத்தை உயரத் தூக்கிக் கொண்டான். தனது வேலாயுதத்தையும் உயரத் தூக்கிக் கொண்டு குறி பார்த்தான். அப்போது பலவானுன பத்திரகலுஷனுடைய கையில் இருந்து பறந்து சென்ற ஆயுதமானது வலிமிக்க திராஸிமேதனது இடுப்பைத் துளைத்துக் கொண்டு சென்று, அந்த இடுப்புக் கட்டுக்களுக்கு காரணமாய் இருந்த நரம்புகளைத் துண்டந் துண்டமாக அறுத்து விட்டது. அவ்வாறு அறுத்து விடவே அந்த இடுப்பானது, அவனது பளுவைத் தாங்கமுடியாமல் தளர்ந்து போயிற்று. அவனும் அடியற்றமரம்போல் தொப்பெனக் கீழே விழுந்து, இரத்தக் கறை படிந்திருந்த அந்த யுத்த களத்தின் மண்ணைக் கவ்விஞன்.

ஆனுல் அவ்வாறு மடிந்து விழுமுன், அந்த லிஸியன் வீரன் தனது கைவலியைக் காட்டாமல் இருக்க வில்லை. அவனும் இரண்டு அம்புகளை எய்தான். அவை விர்ரென்று சப்தம் செய்து கொண்டு பறந்து சென்றன. அவற்றில் ஒன்று ஒருபுறமாகக் குறி தவறி வேகத்துடன் பறந்து சென்றது, பயனற்றுப் போய் விட்டது! மற்றையது தீப்ஸ் நாட்டில் பிறந்து வளர்ந்ததும் அதி வேகமுள்ளதும் அகிலேஸனுடைய அன்பிற்குப் பாத்திரமானதுமான பீடாஸஸ் என்னும் உத்தமமான அசுவத்தைக் குத்திக் கிழித்து, அதை நமனுலகத்திற்கு அனுப்பி விட்டது! அது அக்குதிரையின் தோளின் கணுவில் ஊன்றி நின்றவளவில் அக்குதிரை தட்டித் தடுமாறித் தள்ளாடிக் கொண்டு, கிறுகிறுவென்று சுற்றி, இரத்தம் குழம்பி இருந்த புழுதியில் உருண்டு புரண்டு, சேறும் சகதியும் நிறைந்த வழுக்கலான போர்க்களத்தில் சறுக்கி விழுந்து நிலத்தைப் பிருண்டியது.

அது அவ்வாறு திடீரென்று, விழுந்த பொழுது, அதற்குக் கட்டப்பட்டிருந்த சேணம் பொட்டென அறுந்தது. அக்கணமே அது இழுத்துச் சென்ற தேரின் இருசுகள் நறநறவென முறிந்தன. அந்தத் தேரும் அசைந்து ஆடியது.

அப்போது தைரியம் மிகுந்த ஆட்டோமிடான் என்பவன், அந்தத்தேருக்குப் பூட்டப்பட்டிருந்த மற்றைய பாய்மாக்களின் ஆத்திரத்தைத் தணிக்க வேண்டும், அந்தத் தேருக்குச் சுமையாக விருந்த இறந்து போய்விட்ட குதிரைகளின் சவத்தை ஒழித்து விடவேண்டும் என்று ஆவல் கொண்டு அதற்குக் கட்டப்பட்டிருந்த கயிறுகளைத் தனது கத்தியால் துண்டித்து விட்டான். அக்கணமே மீந்திருந்த குதிரைகள் அவன் நியமித்தப்படி கடிவாளக் கயிற்றை அனுசரித்து முன் செல்ல, அவன் தேரும் புழுதி நிறைந்த அந்தக் களத்தில் மெதுவாக ஓடிச்சென்றது.

அதன் பின் மலை போல் உயர்ந்த மற்றைய வீரர்கள் மேன்மேலும் ஆத்திரங்கொண்டு யுத்தத்தைச் செய்ய வேண்டுமென்று முன் வந்தனர். முதன் முதலாக ஸார்ப்பீடனுனவன் தன் மிகக்கனமான ஈட்டியைச் சுழற்றிஞன். அது அவனது தோளிற்கு மேலாக உயர்ந்து பாய்ந்து சென்றது. ஆனுல் அவன்

அதை ஒரு குறியை நோக்கி விடுக்காததினால், அது வானத்தின் வழியே வீணாய்ப் பறந்து சென்று, தனது வேகத்தை வியர்த்த மாக ஆக்கி விட்டது.

அச்சமயம் பத்திரகலுஷனும், அம்பை விடுத்தான். அது அவ்வாறு வீணாக ஆகவில்லை. என்றும் தவறாத அவனது அம் பானது, ஸார்ப்பீடனது மார்பின் மேலேயே கண்ணுங் கருத்துங் கொண்டு சென்று அதன் மேற் பாய்ந்து, அவனது உயிர் நிலையைக் குத்திக் கிழித்தது. இரும்பைப் போல் இளகாத அவனது ஹிருதயத்தை இறுக்கிக் கட்டி வந்த உறுதியான நரம்புகளை அந்த அம்பானது சுக்கல் சுக்கலாக அறுத்தே விட்டது.

அப்போது ஒரு கப்பற் தலைவனுக்கு உதவக்கூடியதும், உத்தமமானதும், ஒரு மலையின் மேல் வளர்ந்து வருவதுமான கருவாலி மரமோ அல்லது உயர்ந்த அரச மரமோ அல்லது தேவதாருவோ கோடரியினால் வெட்டப் பட்டால் எவ்வாறு ஆடியசைந்து அழுது புலம்பிக் கொண்டு, தனது சிரோ பூஷணங் களைத் தரையின் மேல் பரப்பிக் கொண்டு, அடிசாய்ந்து விழுந்து விடுகின்றதோ, அவ்வாறு அரசனை அவன் அடிசாய்ந்து கீழே விழுந்தான்.

தேவ வடிவங்கொண்ட அவனது தேகமானது அப்போது அவனது இரதத்தின் முன்பாக நீண்டு மல்லாந்து விழுந்து விட்டது. இவ்வாறு அவன் மரணாவஸ்தை அடைந்து, மேனி வெளுத்து, ஆறாய்ப் பெருகிய இரத்த வெள்ளத்தினால் கறை யுற்ற புழுதியில், அழுந்திக் கொண்டு அந்தக் கடற்கரையில் பெரு மூச்சு விட்டுக்கொண்டு கிடந்தான்.

அச்சமயம் அவனது நிலையானது ஒரு சிங்கத்தின் காலடி யில் அகப்பட்டுக் கொண்டு, அவஸ்தைப்படும் ஒரு காளையின் நிலைக்குச் சமமாக இருந்தது. ஒரு கொடிய சிங்கமானது தனது கைவசப்பட்டுப் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கும் ஒரு காளை யின் அவயவங்களைத் தனது கடைவாயில் நுரையைத் தள்ளிக் கொண்டு, அரைத்துப் பொடித்து, நொறுக்கித் தின்று, அந்தக் காளையின் உடலில் இருந்து புகையுடன் கிளம்பி வழிந்தோடும் இரத்தத்தைக் குடித்து வருகையில் அந்தக் காளையின் அடிவயிற் றில் இருந்து கிளம்பும் பெருமூச்சும் அது இருமும் இரைச்சலும் அதை அனுசரித்துக் காட்டினின்றும் உண்டாகும் எதிரொலியும், எவ்வாறு தாழ்ந்த சப்தத்துடன் வெளிப்படுமோ, அவ்வாறே அவனது நிலையும் இருந்தது.

இவ்வாறு மூச்சு விடமுடியாமல் திணறிக் கொண்டு மரண மடையும் தறுவாயில் அந்த வீரன் லிஸியன் சேனைகளின் தலை வனை விளித்து அவனுக்குப் பின்வருமாறு கட்டளை இட்டான். அதுவே அவனுக்குக் கடைசியாக இட்ட கட்டளையாகும் :—

“கிளாக்கஸ்! என்னுடைய வசனங்களைக் கவனித்துக் கேள்! மனவுறுதியுடன் இரு. ஒரு நாளும் ஊக்கத்தைக் கைவிட்டுவிடாதே. தைரியத்தை இழந்து விடாதே. சர்வ நாசங்களையும் செய்யக் கூடியதும், பேரும் கீர்த்தியும் தரக்கூடியதும், ஆபத்துக்களும் அபாயங்களும் நிறைந்ததுமான இந்த யுத்த களத்தில் தங்கு தடை இன்றியும், பின் வாங்காமலும் யுத்தத்தை நடத்துவதே உனது முதற் காரியமாக இருக்கவேண்டும்.

நீ என்னுடைய படைகளுக்குத் தலைமை வகித்து, அவற்றின் முன் செல்ல வேண்டும். அவற்றின் முன்னணியில் நின்று போர் புரிய வேண்டும். உயிருடன் இருப்பவர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கவேண்டும். இறந்தவர்களுடைய இடங்களில் வேறு ஆட்களைக் கொண்டுவந்து நிறுத்த வேண்டும். ஸார்ப்பீடன் கடைசியாகத் தனது பிராணனை விடுகையில், தனது மரணத்துக்குப் பழி வாங்கிவிட வேண்டுமென்று தன்னுடைய ஆட்களுக்கு ஆணையிட்டான் என்றும், அந்தக் காரியத்தைச் செய்ய அவர்கள் தவறக் கூடாது என்றும் சொன்னான் என்று நீ அவர்களுக்குச் சொல்ல வேண்டும்.

இந்த என்னுடைய ஆபரணங்களையும் ஆயுதங்களையும் ஒரு கிரேக்கன் கவர்ந்து அலங்கரித்துக் கொள்வதை கிளாக்கஸ் ஸும் கண்டு பொறுப்பானா? அதை அவன் கண்டு வெட்கித் துக்கிப்பானன்றோ? அவனது துக்கத்திற்கும், வெட்கத்திற்கும் அளவும் இருக்குமோ? ஆதலால் ஓர் உற்ற நண்பனைப்போலும், ஒரு சுத்த வீரனைப்போலும், ஊக்கத்துடன் இந்த யுத்தத்தைச் செய். எனது உடலைக் காப்பாற்று. என்னிடம் அக்கரை கொண்டு என்னுடைய உரிமைகளைக் காப்பாற்றுவதற்காக, என்னைப் போலவே பொருது வெற்றியுடன் விளங்கு! மற்றெல்லா வீரர்களும் நம்மிருவரையும் பெரிய உதாரணங்களாகக் கருதி, உன்னைப் போல் பொருது வீரர்களாக விளங்கவோ அல்லது என்னைப் போல் போர்க்களத்தில் மரிக்கவோ முன் வரவேண்டும்” என்றான்.

இந்த வசனங்களை உரைத்தவுடன் அவனது ஆவி பறந்து போய்விட்டது. அதே வேதனையுடன் வெளிவந்து கொண்டிருந்த அவனது ஊழ்வினை அடைந்து விட்டது, அவன் மரணத்திற்கு ஆளாயினான். இருளும் அவனுடைய கண்களை மூடி விட்டது.

அப்போது அவனை வென்ற வீரன் பெருமிதங் கொண்டு அவனை அவமதிக்க வேண்டுமென்று எண்ணிக் கட்டைபோல் கீழே கிடந்த அந்த ராஜகுமாரனது உடலின்மேல் ஏறி, அவனது மார்பின்மேல் தன்னுடைய கால்களை வைத்து மிதித்துக் கொண்டு, படபட வென்று துடித்துக் கொண்டிருந்த அவனது மார்பில், தான் எய்த ஆயுதத்தை உருவினான். அப்போது அவனது மார்பில் இருந்த நரம்புகளும், தகதகவென்று புகைந்து கொண்டு அந்த ஆயுதத்தோடு ஒட்டிக்கொண்டு வெளிவந்தன. அப்போது இவ்வாறு அவனது மார்பில் உண்டான பெருத்த காயத்தில் இருந்து

இரத்தமானது பெருத்த வெள்ளத்தைப் போல் பிரவகித்து வந்தது. அந்த இரத்தம் ஓடிய வழியிலேயே அவனது ஆவியும் ஓட்டம் பிடித்து விட்டது.

அதிபராக்கிரமசாலியான தங்களது தலைவன் இவ்வாறு கொலையுண்டதினாலும், தங்களை முன்னே செலுத்திக் கொண்டு செல்ல ஒரு நாயகனற்றுப் போனதினாலும் காற்றைப்போல் பறந்து செல்லக் கூடிய அவனுடைய குதிரைகள் முன் செல்லாமல் தாங்கள் நின்றவிடத்தைவிட்டு அசையாமல் நின்றுவிட்டன. அப்போது அவற்றைப் பின் தொடர்ந்து வந்த மிர்மிடோனியர்கள் அவற்றைப் பிடித்து நிறுத்திவிட்டனர்.

இவ்வாறு உறுதுணையை அறவே இழந்து விட்டவனும் துக்கத்தினால் குத்தித் துளைக்கப்பட்டவனும் அதிர்ஷ்ட ஹீனனுமான கிளாக்கஸ் நமனுலகத்திற்கு ஏகிக்கொண்டிருந்த வீரனுரைத்த வசனங்களைச் செவியேற்றுக் கேட்டான். அவன் கைகளில் ஒன்று டியூஸரின் கொடிய பாணத்தினால் துளைக்கப்பட்டு வலி இழந்து நோயுற்றுக் கிடந்தது. அதனால் அவன் திடமாகவும் வலியுடனுமிருந்த தனது மற்றைய கையையே தனக்கு உதவி என்று நினைத்திருந்தான். ஆனால் இந்தச் சமயத்தில் அந்த ஒரு கையினாலுங்கூட ஒரு காரியமும் ஆகாது என்று அறிந்து அவன் பீபஸ் பகவானை நோக்கிப் பின்வருமாறு பிரார்த்தித்தான் :—

“ அனைத்தையும் கண்கொண்டு பார்த்துவரும் பெருந்தேவரே ! தாங்கள் லிஸியாக் கரையிலும் புனிதமான இலியனிலும் கோயில் கொண்டிருப்பதாக அனைவரும் உரைத்து வருகின்றனர். ஒளியுடன் விளங்கும் தங்கள் சன்னதி எங்கிருந்தாலும் இருக்கட்டும். தாங்கள் எவ்விடத்தில் எழுந்தருளி இருப்பினும், புண்பட்டு வருந்தும் ஏழைக்குத் தாங்கள் ஆறுதலையே செய்து வருவீர்கள் ! புண்ணை ஆற்றுவதில் தாங்கள் மிகுந்த வல்லமை உடையவர்கள் ! ஆறுதலை அளிக்கக் கூடிய ஸகலமான வித்தைகளிலும் வல்லவரான தேவரே! எனது பிரார்த்தனையையும் செவிசாய்த்துக் கேட்பீராக !

ஐயனே ! எனது இரத்தம் உறைந்து கட்டியாய்ப் போய் விட்டது. நோவினால் துளையுண்ட எனது புஜம் துடிக்கின்றது ! என்னுடைய ஸர்வ அங்கங்களையும் குத்தும் வலியும் துளைக்கின்றன ! இந்த ஈட்டியைத் தூக்கிக்கொண்டு நிற்கவும் நான் சக்தி இல்லாதவனாக இருக்கின்றேன். பேரும் புகழும் தரக்கூடிய யுத்தகளத்தினின்று வெகுதூரத்தில் நின்றுகொண்டு பெருமூச்சு விடுகின்றேன் !

மஹானான ஸார்ப்பீடன் புழுதியில் ஆழ்ந்து அழிந்து கிடக்கின்றான். தமது புத்திரனான அவனைக் காப்பாற்றுவதற்காக

ஜோவ் தேவரும் முன் வரவில்லை! அவன் பாக்கியம் சிறிதும் அற்ற வனாக ஆகிவிட்டான்!

நீரே ஆரோக்கியத்தின் அதிர்ஷ்ட தெய்வமாவீர்! கொலை யுண்டு கிடக்கும் எனது நண்பனின் கட்டையைக் காப்பாற்றுவதற் காக வேண்டிய உதவிகளை நீரே எனக்குச் செய்வீராக! தாங்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் எனக்குக் கிருபை செய்ய வல்ல வர்கள்! தங்களது கிருபையினால் எனக்கு முன்போல் சக்தி உண் டாகும், நானும் என்னுடைய ஸைனிகர்களுக்குத் தலைமை வகித்து இந்த யுத்தத்தை நடத்துவேன்" என்றான்.

இந்த வசனத்தை அப்பாலோ தேவர் செவியேற்றுக் கேட் டார். அக்கணமே தம்மை வணங்கி நின்ற அவனது உடலில் இருந்து ஒழுகிக் கொண்டிருந்த இரத்தப் பெருக்கைத் தமது திருக் கரத்தினால் நிறுத்தி விட்டார். பின்பு அவர் அவனது உடலில் காயம் உண்டாகியிருந்த இடத்தில் உறுத்தி வருத்திய வேதனை களையும் நிறுத்தினார். அப்போது அவனது மார்பும் புத்துயிருடன் பொங்கியது. அது மேன்மேலும் ஊக்கமடையுமாறு அவர் அவனது உள்ளத்தில் ஒரு வேகத்தையும் புகுத்தினார்.

இவ்வாறு தெய்வ சஹாயத்தினால் புத்துயிர் பெற்றெழுந்த அந்த மஹா வீரன் திடமாக ஊன்றி நின்றுகொண்டு, தன்னுடைய தளர்வையெல்லாம் நீக்கித் தனக்கு ஊக்கமளித்து உதவிய அழியாப் பெருங் கடவுளின் அருங்கருணையைப் போற்றினான்.

பின்பு அவன் முதன் முதலாகத் தனது நாட்டுச் சேனை களைத் தட்டி எழுப்பி அவர்களை உற்சாகப்படுத்தினான். அடுத்த படியாகப் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்று ட்ராய் நாட்டாரை ஆயுதபாணிகளாக வரும்படி உரத்துக் கூவியழைத்தான். அவ் வாறு கூவி அழைத்துக் கொண்டு அவன் அந்த யுத்த களத்தில் ஓரிடமிருந்து மற்றோர் இடத்திற்கு எட்டி யெட்டிக் காலை வைத்துக் கொண்டு, துரிதமாக நடந்து வந்தான்.

அஜினரையும் பாலிதாமஸ்ஸையும் ஆத்திரப்படுத்தி யெழுப்பினான். அதன்பின் ஈனியஸ்ஸையும் ஹெக்டரையும் அணுகினான். அவர்களையும், அவர்களது பரிவாரத்தில் இருந்த ஸகலமான ஜனங்களையும் நோக்கிப் பின்வருமாறு வீரமொழிகளை யுரைத்து அவர்களுக்கு இந்த யுத்தத்தில் ஆத்திரத்தை உண்டாக் கினான் :—

"பெரியோர்களே! அன்போ ஆதரவோ சிறிதும் இல்லாத பெரியவர்களே! உங்களது எண்ணந்தான் என்ன? நீங்கள் என் னென்ன யோசனைகள் செய்து வருகின்றீர்கள்? ட்ராய் நாட்டா ரின் நண்பர்களை இவ்வாறு அறவே மறந்து விட்டீர்களா? இது தகுமா? அழகாகுமா?

அதிதாராளமுள்ள மனத்தினரான அவர்கள் நெடுந்தூரத்தில் உள்ள தங்களது தேசத்தில் இருந்து இங்கு வந்து தங்களுக்குச் சம்பந்தமில்லாத புறநாட்டான் ஒருவனுடைய சண்டை சச்சரவுகளில் தலை இட்டுக் கலந்து கொண்டு, தங்களுடைய உயிர்களை வழங்கிய வீரர்களாக விருக்கின்றனரே, பிராணனைப் போக்குகின்றனரே!

அதோ பாருங்கள்! மஹானான ஸார்ப்பீடன் புழுதியில் அழுந்திக் கிடக்கின்றான்! அவன் செய்தொழிலில் வலிமை மிக்கவனாகவும், யோசனைகள் சொல்லுவதில் அதிபுத்திமானாகவும் விளங்கி வந்தவன். அறத்தைக் காத்தும், தன்னுடைய ஜனங்களுடைய சுதந்திர உரிமைகளை இழவாமல் அவற்றைக் காப்பாற்றியும் வந்தான். அவனது இனத்தானான லிஸியர்கள் அனைவருக்கும் இது ஒரு பெருத்த நஷ்டமாக விளைந்து விட்டது. உங்களுக்கும் இது ஒரு நஷ்டம் தான்! ஐயோ பத்திரகலுஷன் அவனை வெட்டி வீழ்த்திவிட்டான்! அவனது பிணமும் அதோ அங்குள்ள களத்தில் தன் அவயவங்களை நீட்டிக்கொண்டு கிடக்கின்றது! நம்மெல்லோருக்கும் மிகப் பிரியனான அவனது பிரேதத்தை மற்றவர் பற்றிக் கொள்ளும்படி விட்டுக் கொடுக்காதீர்கள். அவனுடைய ஆடை ஆபரண ஆயுதங்களைப் பறித்துக் கொண்டதாக கிரேக்கர்கள் பெருமையடித்துக் கொள்ளவும் இடங்கொடுக்காதீர்கள். அவனுடைய பிரேதத்தை அவமதித்து அலங்கோலப் படுத்திச் சிறுமைகளுக்கு உள்ளாக்கித் தாங்கள் இறந்துவிட்ட வீரர்களது பழியைத் தீர்த்துக்கொண்டே விட்டோம் என்று கிரேக்கர்கள் பிதற்றுவதற்கும் இடங்கொடுக்காதீர்கள்'' என்றான்.

இவ்வாறு அவ்வீரன் உரைத்த பின்னர் அவனுடைய வசனங்களைச் செவியேற்றுக் கேட்ட வீரர்கள் அனைவரும் அவனுடன் கலந்து துக்கம் பாராட்டினர்.

தங்களுக்கு நேர்ந்துவிட்ட நஷ்டத்தை அறிந்தபொழுது ட்ராய் நாட்டார் அனைவரும் ஒரேயடியாய்க் கலங்கித் துடித்தனர். உறுதியான ஒரு தூணைப்போல் நின்றுகொண்டு தனது தேசத்தை ஆதரவுடன் தாங்கி வந்தவனாகவும், தங்களுக்கு உற்ற துணைவனாகவும் இருந்த அவன் கொலையுண்டதைக் கேட்டதும் அவர்கள் அனைவரும் பெரும் துக்கத்தால் துளைக்கப்பட்டுப் போனார்கள்.

'சத்துருக்களால் வளைக்கப்பட்டு முற்றுகை போடப்பட்டிருந்த அரணான ட்ராய் நகரத்தை விடுவிப்பதற்காகப் பெருத்த சேனைகளைத் திரட்டிக்கொண்டு வந்த வீரன் பட்டு விழுந்து விட்டானே! ட்ராய் நகரை விடுவிக்க வந்த வீரர்கள் அனைவரிலும் பெருங்கீர்த்தியுடன் விளங்கிய வீரன் மடிந்து போயினனே' என்று அவர்கள் கண்ணீர் வடித்து வருந்தினர்.

பின்பு கழிவிரக்கத்தினுல் காரியம் நடவாதென்று அறிந்து அவர்கள் தங்கள் மனத்தைத் தேற்றிக்கொண்டு ஆத்திரத்துடன் விரைந்து முன் சென்றனர். அப்போது ஹெக்டரே முதன் முதலாகத் தன் சத்துருக்களை நோக்கிப் பாய்ந்து சென்று பழிக்குப் பழி வாங்கியே தீருவேன் என்று அளவிடற்கரிய வேகத்துடன் பொங்கிக் கொதித்தான்.

துரோஜர்களது கட்சியில் காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்து வருகையில், உக்கிரஸ்வரூபியான பத்திரகலுஷன், ஸார்ப்பீடனது கட்டையின்மேல் ஊன்றி நின்று கொண்டு தன் ஸைனியங்களை நோக்கிப் பின்வரும் வீர மொழிகளை யுரைத்தான். அஜாக்ஷனுக்கும் இவ்விஷயத்தில் ஊக்கத்தை உண்டாக்கினுன். வீரர்கள் அனைவரும் அவனுடைய வசனங்களைக் கேட்டு புத்துயிர் கொண்டு பொங்கிக் கிளம்பினர்:—

"வீரர்களே! உங்களது ஆண்மையைக் காட்டுங்கள்! முன்னுளில் நீங்கள் இருந்த நிலையிலேயே இருந்து வாருங்கள்! அன்றியும் இனி நிகழவிருக்கும் பெருங்காரியங்களைக் கவனித்து ஆராய்ந்து, அவற்றிற்கு தகுந்தபடி அதிகமான ஊக்கமும் கொள்ளுங்கள்!

உன்னதமான நம்முடைய மதில்களை வளைத்து விடுவேன் என்று வீரம் பேசிய வீரன் இப்போது தனது உடலை நீட்டிக் கொண்டு வெள்ளைவெளேரென்று இந்தக் களத்தில் கிடக்கின்ருன். அவனது உடலைக் காப்பதற்காக எண்ணிறந்த துரோஜர்கள் காற்றைப்போல் பறந்து வருகின்றனர். அவனைக் கொன்றதினுல் காரியங்கள் யாவும் நிறைவேறிவிடவில்லை. ஆனுல் அரை வாசிக் காரியம் தான் ஆயிற்று. பின்னும் அரைவாசிக் காரியம் மீந்திருக்கின்றது. நமக்குக் கிடைத்த பெரும் பொருளைக் கை சோரவிடாமல் நாம் காத்துவரவேண்டும். அப்படிச் செய்தால்தான் நமது புகழ் பூர்த்தியடையும். நமது காரியமும் முடியும்.

ஆதலால் விரைந்து செல்லுங்கள். அவனுடைய ஆயுதங்களைப் பறியுங்கள் கழற்றுங்கள், அவனைச் சுற்றிலும் பிணங்களைக் குவியுங்கள். அவனது உடலைக் காக்க வரும் லிஸியர்களை நமனுலகத்திற்கு அனுப்புங்கள். அவர்கள் அவனுக்குத் துணையாகச் செல்லட்டும்" என்ருன்.

இவ்வாறு அவன் இட்ட கொடிய கட்டளையைக் கேட்ட வீரர்கள் துள்ளிக் குதித்து வேகத்துடன் முன் வந்தனர். அவனுடைய இரு மருங்கிலுமிருந்த சேனு சமுத்திரமானது ஒன்ருய்க் கலந்தது. ஒருபுறமிருந்த ட்ராய் நாட்டாரும் லிஸியர்களும் உரக்கக் கூவி ஆர்ப்பரித்துக்கொண்டு வந்து கிரேக்கர்களைத் தாக்கினர். மறுபுறமிருந்த தெஸ்ஸாலியர்களும் கிரேக்கர்களும் அவர்களுக்கு இடங் கொடாமல் அவர்களை எதிர்த்து வந்தனர். பயங்கரமான முழக்கங்களைச்செய்து கொண்டு அவர்கள் அந்தக் களத்தை

வளைத்துக்கொண்டனர். அப்போது அவர்களுடைய கவசங்களும் ஆயுதங்களும் ஒன்றேடொன்று உராய்ந்தன. அதனுல் அந்தக் களம் முழுவதிலும் கணீர் கணீர் என்ற சப்தமே நிறைந்து விட்டது.

இவ்வாறு கொடுமைகள் பல நிகழ்ந்து வந்தன எனினும், ஜோவ் தேவர் அவற்ருல் திருப்தி அடையவில்லை. அவற்றை மேன் மேலும் பெருக்க வேண்டுமென்று எண்ணங்கொண்டு, அவர் சர்வ நாசங்களையும் உண்டாக்கும் இரவை யுண்டாக்கினுர். அப்போது ஒருவரையொருவர் கடுத்து மிரட்டிவந்த சேனைகள் காரிருளில் மறைந்து போயின.

ஜோவ் தேவரின் மகனைச் சுற்றி நின்று வந்த வீரர்கள். தங்கள் அருகில் இருந்து பொருதவர்கள் தங்கள் துணைவர்களோ அல்லது பகைவர்களோ என்று அறியாமல் குழம்பித் தடுமாற்ற மடைந்து ஒருவரை ஒருவர் தாக்கியடித்து வந்தனர். இருளில் நிகழ்ந்து வந்த இந்தப் போராட்டத்தில் இருதிறத்துச் சேனைகளி லிருந்தும் பெருந்தொகையினரான வீரர்கள் தங்களுடைய உயிரை நீத்தனர். இவ்வாறு பின் தொடர்ந்து சென்று அவர்கள் ஜோவ் தேவரின் மகனைக் கௌரவப் படுத்தினர். இது அவனுக்குப் பெரும் பாக்கியமாக முடிந்து விட்டது.

இந்த யுத்தத்தில் முதன் முதலாகக் கிரேக்கர்களது வலி குன்றியது. மஹா வீரனுன எபிஜீயஸ் என்பவன் அடியற்ற பனை போல் திடீரென விழுந்தான். அகாக்கிளியஸ்ஸின் மகனுன இவன், உன்னதமான மதில்கள் கொண்ட புதியம் என்னும் நகரில் இருந்து வந்தவன். அங்கு ஒரு கொலை புரிந்து அந்தக் குற்றத்திற்கு ஏற்ற தண்டனைக்குத் தப்ப நினைத்து அவன் தனது சொந்த ஊரை விட்டு ஓட்டம் பிடித்து வந்து பிலியஸ்ஸினிடத்திலும் வெள்ளிக் கால்கொண்ட தேவியினிடத்திலும் அடைக்கலம் புகுந்தவன். அவன் அவர்களால் அகிலேசனுக்கு உதவிபுரியுமாறு ட்ராய்க்கு அனுப்பப்பட்டு, இந்த யுத்தத்திற்கு வந்து இங்கு உயிரையும் நீத்துத் தன்னுடைய உறவினனுக்குத் தானளித்த தீங்கின் பலனை யடைந்துவிட்டான்.

அவன் திருவற்ற தனது கையைக் கொண்டு ஸார்ப்பீடனது கட்டையைத் தீண்டிய வளவில், கெட்டியான ஒரு பெரும் பாறைத் துண்டம் அவனது தலையின்மேல் இடிபோல் விழுந்தது. ஹெக்ட ரினுல் முழு பலத்துடனும் எறியப்பட்ட அந்தப் பாறை அவனு டைய மண்டையைச் சரியாக இரண்டு பாகங்களாகப் பிளந்து, அவனது கட்டையைத் தரையின்மேல் வீழ்த்தி, நீட்டிக்கிடத்தி விட்டது.

அப்போது பத்திரகலுஷன் ஆத்திரத்துடன் யுத்தத்தின் முன்னணிக்கு ஓடோடியும் வந்து, தனது இரையின் மேற்பாயும் ஒரு பருந்தைப்போல், துரோஜ லிஸியச் சேனைகளின்மேல் தாவிப் பாய்ந்தான்.

இரக்கமும் கருணையும் உருவெடுத்து வந்தது போல் விளங்கிய கிரேக்க வீர! நீ அப்போது முழுபலத்துடன் வீசி எறிந்த கனமான கல்லானது ஸ்தெனிலாஸை நோக்கிப் பாய்ந்து சென்று அவனையும் கொன்று, அவனது பிணத்தையும் புழுதியில் அழுத்திப் புகுத்தி விட்டதென்றால், உனது மனதில் அச்சமயம் உறைந்து வந்த துக்கமும் கையின் விசையும் எவ்வளவின என்பது இயம்பவும் இயலுமோ? அப்போது ட்ராய்ச் சேனைகள் உனக்கு அதி சமீபத்திலேயே நின்றிருந்தன வெனினும், அவை உன்னை அணுகவும் அஞ்சின; பின்னடைந்தன.

உனது கைவலியைக் கண்டு மலைத்தன. பயம் என்பது எவ்வாறு இருக்கும் என்பதை அறியாத ஹெக்டரும் கூட அன்று பயம் என்ற பாடத்தைப் படித்தான்! அதன் விஸ்வரூபத்தையும் அறிந்து கொண்டான்!

கை தேர்ந்த ஒரு வீரன் ஒரு பந்தயக் களத்திலோ, அல்லது தன்னை யெதிர்த்து வரும் சத்துருவை நோக்கியோ, விசையுடன் தனது ஈட்டியை எய்தால், அந்த ஈட்டி எவ்வளவு தூரம் செல்லுமோ, அவ்வளவு தூரத்திற்கும் அப்பால் துரோஜர்கள் தங்களுடைய அணிகளில் இருந்து பின்னடைந்து ஓட்டம் பிடித்து விட்டனர்.

அதை யறிந்த கிளாக்கஸ் இது என்ன வெட்கக் கேடு! என்று நினைத்து யுத்தகளத்தை நோக்கித் திரும்பினான். அதைக் கண்ணுற்ற மற்றைய வீரர்கள் அனைவரும், புத்துயிரும் உற்சாகமும் கொண்டு அவனைப் பின்பற்றினர்.

அப்போது வயது முதிர்ந்த தள்ளாமையினால் தட்டுத் தடவிக் கொண்டிருந்த கால்க்கானது ஏக புத்திரனான பாதிகிளியஸ் என்பவன் அவனது ஆத்திரத்திற்கு இலக்காயினான். விஸ்தாரமான அவனது இராஜ்யமானது, பூமியெங்கும் பரந்து கிடந்தது. ரமணீயமான வனங்கள் சூழ்ந்த கம்பீரமான மாளிகைகளும், வேறு விதமான ஆஸ்திகளும் அவனுக்கு விசேஷமாக விருந்தன. ஆனால் அவற்றால் அவனுக்கு ஒருபயனும் உண்டாக வில்லை.

இளங்கன்று பயமறியாது என்றபடி ஓட்டம் பிடித்துக் கொண்டிருந்த லிஸியர்களை இளம் வீரனை கிளாக்கஸ் துரத்திக் கொண்டு செல்லுகையில், நடுவழியில் அவன் பாத்திக்கிளியஸ் ஸைச் சந்தித்து அவனைக் கொன்றான். கிளாக்கஸ் விடுத்த ஒரு சரமானது அவனது மார்பைத் திடீரெனக் குத்தித் துளைக்கவே அவன் அடியற்ற பனை போல் கீழே விழுந்தான். அப்போது அவன் வீழ்ந்த வீழ்ச்சியினால் பூமியும் அதிர்ந்து அந்தக் களம் முழுவதிலும் எதிரொலிகள் உண்டாயின.

தங்களுடைய வீரர்கள் ஒருவர் பின்னொருவராக இவ்வாறு வதையுண்டதை அக்கேயர்கள் ஒருபுறம் துக்கம் பாராட்டி வர, அதே சமயத்தில் மறுபுற மிருந்த துரோஜர்கள் ஜெய கோஷங்கள் செய்து கொண்டு அந்தக் களத்தையே ஒரு கலக்குக் கலக்கினர். இறந்தவர்களுடைய ஆடை ஆபரண ஆயுதங்களைப் பறிக்க வேண்டு மென்ற ஆத்திரத்துடனும் அவர்கள் திரள் திரளாக ஓடி முன் வந்தனர். கிரேக்கர்கள் அவர்களை யெதிர்த்துத் தடுத்தனர். இவ்வாறு துரோஜர்களும் கிரேக்கர்களும் அந்தப் பிணத்தை நாடி வந்த பொழுது, அந்தக் கூட்டமானது இரும்பினால் கட்டப்பட்ட கோட்டை போல் தோற்றியது.

அதன் பின் யமதர்ம ராஜனது நிழல் கொண்ட நிலையங்களில் வசித்து வருமாறு மெரியோனால் அனுப்பப்பட்ட தைரிய சாலியான லவ்கோனஸ் என்பவன் தனது பிராணனை விடுத்தான். அவன் புனிதமான ஐடா மலையில் வஸித்துக் கொண்டு அங்கு ஜோவ் தேவரை ஆராதித்து வந்தது மன்றி, அவரைப் போலவே பலராலும் நன்கு மதிக்கப்பட்டு வந்தவன். மெரியோன் விடுத்த வேலாயுதமானது அவனது தாடைக்கும் காதுக்கும் இடையில் பாய்ந்து ஊடுருவிச் சென்றது. அக்கணமே அவனது ஆவியானது அந்தத் துவாரத்தின் வழியாக வெளியேறி விட்டது.

இவ்வாறு வெற்றி யடைந்த மெரியோனை நோக்கி, ஈனியஸ் என்பவன் தனது ஈட்டியை விடுத்தான். ஆனால், மெரியோன் தனது தலையை நீட்டிக் குனிந்து கொண்டு, அந்த ஈட்டிக்குத் தப்பி உயிருடன் பிழைத்தே விட்டான். எமனையும் ஏய்த்து விட்டான். ஈனியஸ்ஸின் ஈட்டியானது மெரியோனின் கவசத்திற்கும் மேலாகச் சீறிக் கொண்டு பறந்து சென்றது. அதனாலும் மெரியோனுக்கு ஒருவிதமான தீங்கும் உண்டாகவில்லை. அது விர் என்று பறந்து முன் சென்று, நடுக்கத்துடன் தரையைத் தாக்கி அங்கு ஊன்றி நின்று விட்டது. இவ்வாறு மஹானான ஈனியஸ் விடுத்த ஈட்டியானது பயனற்றுப் போய் விட்டது.

இதைக் கண்ணுற்ற அந்த வீரன் பெருங் கோபத்துடன் பொங்கி யெழுந்து மெரியோனை நோக்கிப் பின் வருமாறு உரத்து உரைத்தான் :—

" அடா! நீ மஹா வேகமும் விசையும் உள்ளவன்தான் என்பதை நான் அறிவேன்! மாய ஜாலங்கள் செய்து மான்னிய வஸ்துக்களை அபகரிப்பதிலும் நீ சமர்த்தன் தான்! எனது ஈட்டி மாத்திரம் நான் குறிவைத்தபடி சென்றிருந்தால், அது உன்னுடைய சேட்டைகளை ஒரேயடியாய் அடக்கி யிருக்கும். உன்னைத் தரை மட்டமாக ஆக்கியிருக்கும்!" என்றான்.

இவ்வாறு தன்னை அவமதித்துத் தற்பெருமை அடித்துக் கொண்ட அந்த ஈனியஸ்ஸை நோக்கி மெரியோன் " ஆஹா வாரீர், தார்தான் தலைவரான மஹா வீரரே வாரீர்! வாரீர்!!

நீர் ஒரு மஹா வீரர் தான்! மனிதருடைய வீரசூர பராக்கிரமங்களி ளுல் ஆகாதது ஒன்றுமே இல்லை என்று நீர் நம்பி இருக்கின்றீர். ஆனால் உமக்குச் சமமான வலியுள்ள ஒரு வீரன் உம்மையும் வெட்டி வீழ்த்திப் புழுதியில் புதைத்து விடுவான் என்பதை நீர் அறியீர் போலும்!

இதோ இந்த எனது ஈட்டிக்கு நீர் இரையாக வேண்டு மென்பது உமது தலைவிதியாக இருந்தால் அந்தத் தலைவிதி நிறை வேறியே தீரும்! அதைக் கடக்க உம்மால் ஆகாது. உம்முடைய பிதற்றல்கள் எல்லாம் வீணேயாகும். வெற்றியும் ஜயமும் யாருக்கும், எப்போதும், தெய்வ நியமனத்தால் அன்றோ வருவன? இந்த நிமிஷம் நீர் புளூட்டோவின் கரைக்கு விரைந்து செல்வீர்! உமக்குச் செலவு கொடுப்பது என் பாக்கியம்; உமக்குத் துணை வருவது அவன் பாக்கியம்!'' என்றான்.

இதைக் கேட்ட மனிஷியஸ்ஸின் மகன் இதற்குப் பின்வரு மாறு பதிலுரைத்தான் :—

"என் நண்ப! வாதாடி வழக்குரைப்பது வீரர்களுக்குச் சிறிதும் அழகில்லை. வெட்டிப் பேச்சைக் கேட்டு, ட்ராய் மக்கள் பயந்து போகார்கள். காரியத்தைக் கைவிடவும் மாட்டார்கள், உங்க ளுடைய கத்திகள் அவர்களை வதைத்து நரகலோகத்திற்கு அனுப்ப வேண்டும், அப்போது தான் உங்களது பெருமை புலனாகும். பேச்சும் வார்த்தையும் பிரசங்க மேடையில் பொலிவுடன் விளங்க லாம்; அவை போர்க்களத்தில் பயன் தரா! பேரும் புகழும் தரக் கூடிய வீரச் செயல்களே போர்க்களத்திற்கு ஏற்றவை!'' என்றான்.

அதன்பின் பத்திரகலுஷன் போர்க்களத்தை நோக்கிப் பறந்து சென்றான், மெரியோனும் அவனைப் பின்பற்றினான். அப்போது அந்தக் களத்தில், பெருஞ்சப்தங்கள் புதிதாகக் கிளம் பின. வீரர்கள் ஒருவரையொருவர் பாய்ந்து தாக்கினர். அப் போது அவர்களுடைய கவசங்களும், தலைச்சீராக்களும், ஒன்றோ டொன்று உராய்ந்து மோதிக் கிலுகிலுவென ஒலித்தன. அவர்கள் ஒருவரையொருவர் சரமாரியாகப் புடைத்து வந்தபொழுது, அந்தச் சப்தமானது கனத்துப் பெருத்து வந்தது.

சலகலவென்று ஒலிக்கும் பள்ளத் தாக்கிலோ, அல்லது மலையின்மேலோ உள்ள மரங்களை ஒரு விறகுவெட்டியானவன் வெட்டி வருகையில் எவ்வாறு அவனது கோடரியின் சப்தமானது பள்ளத்தாக்கின் வழியாகவும் மலைப்பிராந்தியத்தின் வழியாகவும் நமது காதுக்கு எட்டுகிறதோ, எவ்வாறு அந்த விறகுவெட்டி அடி மேல் அடிஅடித்து மரங்களை வெட்டி வருகையில் அந்த மரங்கள் நெறநெறவென முறிந்து படபடவென உரத்த சப்தத்துடன் நாற் புறமும் விழுந்து விடுகின்றனவோ, எவ்வாறு இந்தச் சப்தங்கள் அனைத்தும் வெகுதூரம் வரை எதிரொலிகளுடன் கேட்கப்படுகின்

றனவோ, அவ்வாறே இந்த யுத்தகளத்தில், எல்லாப் பாகங் களிலும், பெருத்த அரவங்களும் இரைச்சல்களும் அவற்றின் எதிரொலிகளுமே நிறைந்து இருந்தன. வீரர்கள் காட்டு மரங் களைப் போல், தடதடவென மடிந்து விழுந்தனர். அவர்களுடைய ஆயுதங்களும் கவசங்களும் அவ்வாறே ஓசைகளுடன் உடைந்து ஒடிந்து முறிந்து விழுந்தன. இது நிற்க.

மஹானுனை ஸார்ப்பீடனது அழகான தேகமானது புழுதியி லும் இரத்தத்திலும் அழகிழந்தும், சத்துருக்கள் விடுத்த அம்புகளால் தைக்கப்பட்டும், தனது அந்தஸ்துக் கேற்ற ஆபரணுதி அடையாளங்கள் அனைத்தையும் இழந்தும், சாமான்ய மான வீரர்களுடைய தேகங்களின் இடையில் அந்த மணற் காட்டில் கிடந்தது. இருதிறத்துச் சேனைகளிலும் இருந்த தலைவர் கள் அந்தப் பிரதேசத்தைக் கவர்ந்துவிட வேண்டுமென்று ஆத்திரம் கொண்டு அதைச் சுற்றி வளைத்துக் கொண்டு பொரு தனர். அந்தப் பிணத்தைச் சுற்றிலும் நாற்புறமும் ஒரு பெரும் போர் உண்டாயிற்று.

ஓர் இடையனது சாலையின் தாழ்வாரத்தில் வைக்கப்பட் டுள்ள நுரையுடன் மேன்மேலும் பொங்கிக் கொதித்து வரும் ஒரு பால் பானையைக் கண்ணுற்ற ஈக்கள், எவ்வாறு சிறிதும் ஓய்வோ ஒழிச்சலோ இன்றிக் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து ரீங்காரம் செய்து கொண்டு, அந்தப் பாலை மொய்க்க அதைச் சுற்றியே வருமோ, எவ்வாறு அவை ஓட்டி ஓட்டித் துரத்தினும் திரும்பத் திரும்பப் பானையை நோக்கியே வருமோ, அவ்வாறே இருதிறத்துச் சேனைகளும் ஸார்ப்பீடனது சடலத்தைக் கைப்பற்றப் போராடினர்.

இந்தக் கொடிய யுத்தத்தை ஜோவ் தேவரானவர் கடுத்த முகத்துடன் கட்புலனுக்கிக் கொண்டார். பகற் பொழுது நீடித்து வருகின்றதே என்று அறிந்த அவர் கண்களில் தீப்பொறிகள் பறக் கின்றன! இவ்வாறு யுத்தகளத்தைக் கண்கொட்டாமல் பார்த்து வருகையில், அவரது மனமானது அமைதியுடன் இருக்கவில்லை. இந்தப் பழிக்கு எப்படிப் பழி வாங்குவது? யார் யாருக்கு எவ்விதம் வினைப்பயனை அளிக்க வேண்டும்? அந்த வினைப்பயனை இக் கணமே அளித்துவிடலாமா? ஹெக்டருக்கு ஊக்கமும் பலமும் அளித்துப் பத்திரகலுஷனை வெட்டி வீழ்த்தி விடலாமா? இந்த நிமிஷத்தில் அவனது ஜெய கோஷத்தையும் கொண்டாட்டத்தை யும் கொட்டத்தையும் அடக்கி விடலாமா? அவனை அற்ப சந்தோஷியாக ஆக்கிவிடலாமா? அவன் வெட்டி வீழ்த்திய நமது மகன் ஸார்ப்பீடனது சடலத்தின் மேல் அவனது தேகத்தையும் மூச்சுப் பேச்சின்றி நீட்டிக் கிடத்தி விடலாமா? அல்லது மற்றும் வேறு அனேக வீரர்களையும், அகால மரணத்திற்கு உள்ளாக்கி இந்த யுத்தத்தின் உக்கிரத்தையும், கோஷத்தையும், இதனுல் அவர்களுக்கு உண்டாகக் கூடிய பேரையும் புகழையும் விருத்தி செய்யலாமா?

இவ்வாறு அவர் பலவாருகச் சிந்தித்து வந்தார். ஆழ்ந்து யோசனைகள் செய்தார். கடைசியாக அவர் அகிலேசனது ஆப்த நண்பனும், ஆற்றலுடையவனுமான அந்த வீரனுக்குப் பேரும் கீர்த்தியும் அளித்து, அவனை ஒழித்து விடலாம் என்று தீர்மானித்தார். அவனது அந்தியக் காலம் சோபையுடன் அஸ்தமிக்கட்டும் என்று தீர்மானித்து, அவன் தன் சத்துருவை நோக்கிச் செல்லுமாறு அவனைத் தூண்டினுர். இருள் சூழ்ந்த பாதாள உலகத்திற்கு அவன் செல்லுகையில் அவனுக்குத் துணைவர்களாக செல்லுமாறு வேறு வீரர்களையும் நியமித்தார். துணையின்றி அவன் அந்த கனது உலகம் புகலாகாது! என்று கருதினுர். பின்பு அவர் ஹெக்டரது மனதில் அதிபயங்கரமான திகிலை உண்டாக்கினுர்.

அவன் அக்கணமே தனது தேரில் ஏறிக் கொண்டு தன்னுடைய பரிவார ஜனங்களையும் தன்னைப் பின்பற்றி வரும்படிக் கூப்பிட்டான். ட்ராய்க்கு வரவிருக்கும் கொடிய வினைப்பயனையும் ஜோவ் தேவருடைய கிருபைகள் குறைந்து வருவதையுங் கண்டு அவன் மனம் இடிந்து சோர்ந்து போனுன். தெய்வ நியமனம் எவ்வாறு இருக்குமோ என்று பதைபதைத்துத் துடித்தான்.

அதுவரை வீரர்களான லிஸியர்கள் தங்களது அரசனைச் சுற்றி நின்று கொண்டே அதைக் காத்து வந்தார்கள். ஹெக்டரது கட்டளைக்குப் பின்னரே அவர்கள் அந்த உடலை மற்றைய பாமர வீரர்களுடைய உடல்களின் மத்தியில் கிடக்குமாறு விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தார்கள்.

அப்போது ஜோவ் தேவர் நியமித்த பிரகாரம் பிரம்மாண்டமான சேனைகள் சங்கரிக்கப்பட்டன. அந்த யுத்தகளத்தைச் சுற்றிலும், எல்லாப் புறங்களிலும் வீரர்கள் குவியல் குவியலாக மாண்டு விழுந்தனர். அவர்களுடைய உயிரற்ற உடல்கள் பயங்கரமான மதில்கள் போல் ஒன்றின்மேலொன்ருக விழுந்து உயர்ந்தன. கடைசியாகக் கிரேக்கர்கள் மிக முயன்று தாங்கள் நாடி வந்த பொருளைக் கைப்பற்றியே விட்டனர். தங்களால் கொலையுண்ட ஸார்ப்பீடனுடைய ஆடை ஆபரணங்களைப் பறித்துக் கொள்ளை அடித்தனர். அவனுடைய பிரகாசத்துடன் விளங்கிய ஆயுதங்களைப் பத்திரகலுஷன் எடுத்துக் தானே வைத்துக் கொண்டான். அவனிடம் இருந்து பறிக்கப்பட்ட மற்றைய பொருள்கள் எல்லாம் பத்திரகலுஷனுடைய கப்பலை அலங்கரித்தன.

அதன்பின் மேகங்களின் அதிபதியான ஜோவ் தேவர் விண்ணுலகத்தில் தமது ஆசனத்தில் அமர்ந்து கொண்டு, பீபஸ் பகவானை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார் :—

"வாராய் எனது பீபஸே! நீ உடனே பிரிஜியன் போர்க்களத்தை நோக்கி இறங்கிச் சென்று, அங்குக் கொலையுண்டு கிடக்கும் ஸார்ப்பீடனை இங்குக் கொண்டு வந்து, புழுதியினுல்

பழுதடைந்து, இரத்தப் பெருக்கினுல் அழகும் உருவும் அழிந்து கிடக்கும் அவனது உடலை ஸ்படிகம் போன்ற தெள்ளிய வெள்ளத்தில் குளிப்பித்துக் கழுவி, அவனுடைய அவயங்கள் அனைத்தின் மேலும் அமிர்தமயமான வாசனைத் திரவியங்களைப் பொழிந்து, திவ்வியமான வஸ்திரங்களைக் கொண்டு அவனது சடலத்தை அலங்கரித்து இந்தச் சடங்குகளை நிறைவேற்றிய பின், புனிதமான அவனது பிரேதத்தை மௌனஸ்வரூபியான நித்திரையிடமும் மரணத்தின் அதிர்ஷ்ட தேவதையினிடம் சேர்த்து விடு.

அழியாப் புகழை உடையவனுன அவனது உடம்பை அந்தத் தேவர்கள் அவனுடைய நண்பர்களிடம் கொண்டு செல்வார்கள். அவர்கள் அவனுக்கு ஒரு சமாதியும் மண்டபமும் கட்டுவார்கள். உயிரைத் துறந்துவிடும் மாந்தர்களுக்குச் செய்யப்படும் மரியாதைகள் அனைத்தையும் நாம் இவனுக்குச் செய்யவேண்டும். செய்வோம். அதிகமாக நாம் வேறு என்ன செய்ய வல்லோம்! அந்த மரியாதைகளால்தான் என்ன பயன்?'' என்றுர்.

அப்பாலோ தேவர் "அப்படியே!" என்றுர். பின்பு அவர் தலைவணங்கித் தண்டனிட்டு, அந்த ஐடாமலையின் உச்சியில் இருந்து புறப்பட்டு, யுத்த களத்தை நோக்கி வேகமாய்ப் பறந்து சென்று, அங்கு மூச்சு அடைபட்டுக் கிடந்த அந்த வீரனைத் தூக்கி அவனை ஒரு மேகத்திஞல் மூடி மறைத்துக் கொண்டு, வெள்ளி போல் பளிச்சென்று மின்னும் ஸிமோயிக் கரையை அடைந்து தன்னலங்கருதாது பிறர் நலத்தைக் கோரிச் சண்டை புரிந்து அவன் அடைந்த பெருங் காயங்களைத் தண்ணீர் விட்டுக் கழுவி, வலிவும் உறுதியுமான அவனுடைய அவயவங்களைத் தேவர்க்குரிய ஆடைகளைக் கொண்டு போர்த்தி, அலங்கரித்து, அமிர்த மயமான இனிய நறுமணங்களை அவனது உடலின் மேல் பனி போல் பொழிந்து, அவ்வுடலுக்குத் திரும்பவும் தெளிவும் பொலிவும் உண்டாக்கி, அவனுக்குப் பழைய உருவத்தையும் கொடுத்து விட்டார்.

அதன்பின் இணையற்ற வேகமும் அமைதியான கதியும் உடையவர்களும், இரட்டையர்களுமான நித்திரைக் கடவுளும் மிருத்தியு பகவானும் ஜோவ் தேவரது கட்டளைப்படி ஸார்ப்பீடனது உடலை வாங்கி எடுத்துக்கொண்டு ஒரே நிமிஷத்தில் லிஸியா நாட்டிற்குச் சென்று அங்கு அதை அவனுடைய நண்பர்களின் மத்தியில் வைத்தனர். அவர்கள் அதைக் கண்ணுற்றுப் பலவாருக அழுது புரண்டு பிரலாபித்து அவனது ஆத்மாவுக்கு அளவிறந்த மரியாதைகளைச் செய்து அவனைக் கௌரவித்தனர்.

இதன் மத்தியில் பத்திரகலுஷன் அந்தப் போர்க்களத்தில், தன்னுடைய சேனைகளை ஒரு பெருத்த வெள்ளத்தைப்போல் செலுத்திக் கொண்டு அதிவேகமாகச் சென்றுன். அவனுடைய குதிரைகள் நுரையைக் கக்கின. அவன் அவைகளின் கடிவாளக் கயிறுகளையும் இளக்கித் தளர்த்து விட்டான்.

ஆஹா ! பத்திரகலுஷா ! உனக்கு வரவிருந்த விதியை நீ அறிந்திலே! தலையோ காலோ தெரியாமல், நீ துரோஜ வீரர்களை நோக்கி மிகுந்த ஆத்திரத்துடனும் கோபத்துடனும் பறந்து சென்றனை ! ஊழ்வினையையும், ஸர்வ வல்லமையுள்ள ஜோவ் தேவரின் ஆணைகளையும் ஒருவராலும் கடத்தற்கரிது என்று உனது நண்பன் உன்னை எச்சரித்து இருந்தான்; அவ்வாறு அவற்றைக் கடக்க எண்ணுவதும் கூடாது என்று கட்டளையும் இட்டிருந்தான். அவற்றைக் கடந்தே தீருவேன் என்று நீ துடித்தாய்; உனது துணிவு வீணே ஆய்விட்டது.

அந்தக் கடவுள் சாமான்யமானவர் அல்ல. தடைகள் செய்யவோ யாராலும் இயலாது. அவருடைய கட்டளைகளைக் கேட்ட மாத்திரத்தில், மஹா வீரர்களும் திகைத்தே போவார்கள்; அதி தைரியசாலிகளும் மதி மயங்கித் தயங்கி நிற்பர். உலகம் யாவையும் தாமுள வாக்கலும், நீக்கலும், நீங்கலா வலகிலா விளையாட்டுடையவராகிய அவர் உன்னை இன்று உந்தித் தள்ளி ஞர். உன்னை ஒழித்துவிட வேண்டும் என்று கருதியே, அவர் உன்னை இவ்வாறு உறுத்தி உந்தித் தள்ளினுர் !

என்ருலும் மஹா வீரா ! தைரியம் மலிந்தவனே ! உனது கையினுல் முதன் முதலாக மடிந்தவர்கள் யாவர் ? பழிவாங்க வேண்டும் என்ற ஆத்திரத்துடன் நீ பொருது வந்தபொழுது, கடைசியாக யார் உன்னுல் அழிக்கப்பட்டுப் புழுதியில் அழுந்திப் போயினர் ? உனக்குக் கோபதாபங்களை யூட்டி, நீ இந்த சத்துரு சங்காரம் செய்யும் பொருட்டும் நீயும் இதில் அழிந்து போகும் பொருட்டு மன்றே தேவர்களே உன்னை இழுத்துக் கொண்டு சென்றனர் ! இறந்தவர்களது கணக்குப் பெருக வேண்டுமென்று எண்ணியே அவர்கள் உனக்கு இந்தக் காரியத்தை நியமித்தனர்.

முதன் முதலாக அத்ரஸ்டஸ் அடிசாய்ந்து விழுந்தான். ஆட்டோநூஸ் என்பவன் அவனுக்குப் பின் சென்ருன். அதற்குப் பின் எச்சிக்குளுஸ் என்பவன் அவர்களைப் பின்பற்றினுன். அடுத்தபடியாக இளையோனுன மிகாஸ் என்பவன் தனது இரத்தத்தை வடித்தான். அதன்பின் எபிஸ்டாரும் பிலானிப்ஸ்ஸுும் மண்ணைக் கவ்வினர். இவர்களுடன் இந்தப் படுகளம் நிறைந்து போகவில்லை. வீர சிரோன்மணிகளாகிய இலாஸஸ்ஸுும் முலியஸ்ஸுும் இவர்களுக்குப்பின் மடிந்து விழுந்தனர்; அவர்களுக்குப் பின் பிலாப்டிஸ் ஈடில்லாக் காரிருளில் நுழைந்து விட்டான். மற்றைய வீரர்களெல்லாம் காரியங்கள் விதிப்படி நடந்து தீரும் என்று எண்ணியவர்களாய், அணியில் இருந்து கலந்து ஓட்டம் பிடித்தனர்.

இந்தச் சமயத்தில் ட்ராயானது, அவனுடைய ஒப்பற்ற வீர சூர சௌரிய பராக்கிரமங்களுக்கு ஆட்பட்டு அவனுக்கு அடங்கித் தலைகுனிந்து போயிருக்கும். ஆனுல் தேசுடன் விளங்கும் பீபஸ் தேவரானவர், அந்நகரில் உள்ள புனிதமான கோபுரத்தில் இருந்து

கொண்டு, அந்த ஆபத்து வருவதினின்றும் அதைக் காப்பாற்றி விட்டார்.

பத்திரகலுஷன் மூன்று தரம் ட்ராய் நகரின் கோட்டை கொத்தளங்களைப் பலமாகத் தாக்கினான். அப்பாலோ தேவரும் மூன்று தரம் தனது கொழுந்து விட்டெரியும் கவசத்தை அவனுக்கு முன் ஆட்டி அசைத்துக் காட்டினார். பத்திரகலுஷன் நான்காம் தடவையும் அந்தக் கோட்டையைத் தாக்கினான். அப்போது மேக மண்டலத்தையும் பிளந்து கொண்டு வந்த தொனியானது அங்கு கேட்கப் பட்டது. அது சாமான்யமான மனிதரது குரலின் ஓசையினும் அதிகமாகத் தொனித்தது.

"பத்திரகலுஷா! போதும் நிறுத்து. தேவர்கள் பாதுகாத்து வரும் இந்த மதிலானது உனது வேலைக் கண்டு அஞ்சாது. அசையாது; இதற்கு அழிவு காலம் இன்னும் வந்துவிட வில்லை! உன் நண்பனும் உன்னிலும் பதின்மடங்கு வலியுள்ளவனுமான அகிலேசனுங்கூட இதை அசைக்க இயலாது! அவனுக்கு இது இணங்காது; தலைவணங்காது!" என்றது.

ஆகாயத்தில் திவ்வியமான ஒளிகளைச் சரமாரியாகப் பொழிந்து வரும் தேவர் இவ்வாறு உரைத்தார். இதைச் செவியுற்ற அந்தக் கிரேக்கன், அவருக்குத் தலைவணங்கிப் பெரும் பீதியுடன் பின்னடைந்தான்.

இங்குக் காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்து வருகையில், ஸீயன் கோட்டை வாசல்களில் இருந்த ஹெக்டர், பெரு மூச்சு விட்டுக் கொண்டிருந்த தன்னுடைய குதிரைகளைத் தட்டிக் கொடுத்துக் கொண்டு நிறுத்தித், தன்னுடைய ஸைனியங்களை யுத்த களத்திற்குச் செலுத்தி, யுத்தத்தைச் செய்யலாமா? அல்லது அவை அனைத்தையும் ட்ராய் நகரத்துக் கோட்டைக்குள் இழுத்து ஓட்டி அடைத்து விடலாமா? இந்த இரண்டு காரியங்களில் எதைச் செய்யலாம் என்று ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

இவ்வாறு அவன் யோசனைகள் செய்துகொண்டிருக்கையில், பீபஸ் பகவானுனவர் ஸங்கர ஸாகரத்தின் சமீபத்தில் ஆட்சி செலுத்தி வந்த ஆஸியஸ் என்னும் அரசனது உருவத்தை வகித்துக் கொண்டு, அவனருகில் வந்து நின்றார்.

ஹெக்குபா தேவீ! அவன், ஆஸியஸ் யார் தெரியுமா? அவன் உனது உடன் பிறந்தான் தான்; தைமாஸுக்குப் பிறந்தவன்; அவன் வலி மிக்க வீரன்; அதிகர்வி! தைரியவான்; இளம் பிராயம் உள்ளவன்.

பீபஸ் அவன் உருவத்தில் ஹெக்டரை "நோக்கி இது என்ன மானக் கேடான காட்சி! தெய்வமே இவன் ஹெக்டர்தானா? யுத்த களத்தில் ஹெக்டரும் கையைக் கட்டிக் கொண்டு நிற்பானா?

என்னுடைய சக்தியும் வேகமும் மாத்திரம் உனக்கு இருக்குமானால், இந்த உனது ஈட்டியும் வெற்றியுடன் விளங்கும்! இந்தக் கோழைத்தனத்திற்கும் பயத்திற்கும் சிறிதும் ஆதார மில்லையென்பதும் உனக்கு உடனே நன்றாகத் தெரிந்துவிடும்.

ஆதலால் ஹெக்டர்! சட்டெனப் போர்க்களத்தை நோக்கிக் கிளம்பு. அங்குதான் பேரும் புகழும் கிடைக்க விருக்கின்றன. பத்திரகலுஷனுடைய இரத்தத்தை வடித்து அதில் உனது மானக் கேடுகளைக் கழுவியலம்பிவிடு. அப்பாலோ தேவரே ஒரு வேளை உனது பங்கில் இருந்து உனது வேலுக்கு வெற்றியை அளித்தா லும் அளிக்கலாம். உனது ஈட்டியால் குத்துண்டுதான் அவன் பத்திரகலுஷன் பிராணனை விடவேண்டும் என்பதும் தெய்வ நிய மனமாய் இருக்கலாம்" என்றான்.

சகலமான ஜீவராசிகளுக்கும் ஊக்கத்தை அளிக்கும் தேவர், இவ்வாறு உரைத்து விட்டுக் காற்றாய்ப் பறந்து சென்று, அந்தக் களத்தில் யுத்தம் மிகவும் மும்முரமாக நடந்து வந்த இடத்தில் புகுந்து விட்டார். அவர் வேகமாகப் பறந்து செல்லக் கூடிய தமது இரதத்தை ஓட்டிச் செல்லும்படி ஸெப்ரீ யோனுக்கு நியமித்தார். அவனது சாட்டை பட படவென்று ஒலித்தது. குதிரைகளும் யுத்த களத்தை நோக்கி வேகமாகப் பறந்தன.

இந்தச் சமயத்தில் கிரேக்கர்களது மனமானது மிகவும் தளர்வடைந்திருந்தது. அந்த மனத் தளர்ச்சியை அப்பாலோ தேவர் பன்மடங்கு அதிகரித்தது மன்றி, அக்கணமே துரோஜ மகன் ஒவ்வொருவனது மனத்தையும் ஊக்கத்தின் ஊற்றாக மாற்றி விட்டார், அவர்கள் அனைவரும் புத்துயிர் பெற்று வேகத்துடன் துடித்தனர்.

ஆனால் ஏற்கனவே யுரைத்த பிரகாரம் பத்திரகலுஷன் நெடுநேரம் மனமிடிந்து அடங்கி இருக்கவில்லை. இந்த யுத்தத்தைத் திரும்பவும் தொடர்ந்து செய்தே தீர வேண்டும் என்று அவன் ஆத்திரத்துடன் துடித்தான்; அவன் முகம் தேசுடன் விளங்கியது; ஒரு வேலாயுதத்தைத் தனது இடது கையிலும் ஒரு கற்பாறையைத் தனது வலது கையிலும் எடுத்துக் கொண்டு, அந்தக் கற்பாறையைத் தனது முழு பலத்துடன் தனது சத்துருவை நோக்கி எறிந்தான். மேல் பாகத்தில் கூரான முனை யையும், அடிபாகத்தில் முண்டு முடிச்சுக்களையும் கொண்டிருந்த அந்தக் கற்பாறையானது, ஸெப்ரியோன் மீது விழுந்து அவனது தலையை அரைத்துக் கசக்கி விட்டது.

அதனால் பிரியம் மஹாராஜனது சோர புத்திரனை அவனு டைய முகமும் புருவங்களும் கண்களும், உருவிழந்து ஒரே ஒரு பிண்டமாய் மாறி விட்டது. அவனுடைய இரு விழிகளும் ஒளி

இழந்து அவற்றின் குழிகளில் இருந்து தெறித்து எழுந்து நிலத்தில் விழுந்து விட்டன. அதுவரை அவனது கடிவாளக் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்த அவனது சாரதியும் அந்தத் தேரில் இருந்தபடியே தாக்குண்டு, தலைகுப்புறக் கீழே விழுந்து விட்டான். அப்போது அவனது ஜீவனும் மிகுந்த சங்கடத்துடன் இருட் டறைகளை நாடிப் பறந்து சென்று விட்டது.

இவ்வாறு தனது சத்துரு அழிந்து போய்விட்டதைக் கண் ணுற்ற ஜயசீலனுன பத்திரகலுஷன் மிகுந்த கர்வங் கொண்டு, அவனையும் அவன் இனத்தாரையும் பின்வருமாறு இழித்துரைத் தான் :—

“ஆஹா தெய்வமே! அதோ அங்கு அவன் எவ்வளவு நேர்த் தியாய் மல்யுத்தம் செய்கிருன் பார்த்தீர்களா? அவனது சாமார்த் தியம் அதியற்புதமாக விருக்கின்றது!கண்ணுக்கினியகாட்சியாகவே இருக்கின்றது! நம்முடைய சத்துருக்களான பிரிஜியர்கள், முங்கிக் குளிப்பதில் அதிசமர்த்தர்களாகவே விளங்குகின்றனர்! அவர்கள் எவ்வளவு இலகுவாக மண்ணிலும் மறைந்து விடுகின்றனர் என்பதைச் சற்றுக் கவனித்துப் பாருங்கள்! இவர்கள் கற்ற வித்தை இவ்வளவுதானு? மண்ணில் மறைந்து போகும் வித்தை களையே கற்றனர் போலும்” என்ருன்.

அதன் பின் பயங்கரஸ்வரூபியான பத்திரகலுஷன், தான் வெட்டி வீழ்த்திய வீரனது உடலில் விளங்கிய ஆடை ஆபரணங் களைக் கைப்பற்றிப் பறித்துக் கழற்றி விட வேண்டுமென்று ஆத்தி ரங்கொண்டு அவனை நோக்கித் தட தடவென்று விரைந்து பறந்து சென்ருன்.

பயங்கரமும் துணிவும் உள்ள ஒரு சிங்கமானது காடு களையும் வனங்களையும் ஒரே பாய்ச்சலில் பாய்ந்து தாண்டிச் சென்று, அவற்றிற்கு அப்பாலுள்ள ஆட்டுப் பட்டிகளை அடியோடு அழித்து விடுகின்றது. கடைசியில் ஒரு வேடன் விடுத்த அம்பினுல், அதன் துணிவுள்ள ஹிருதயமும் துளையுண்டு அது குப்புற விழுந்து விடுகின்றது. மட்டு மிதமில்லாத அதன் துணிவே, அதன் அழிவிற்கு காரணமாய் விருக்கின்றது. அவ்வாறே பத்திர கலுஷனுடைய மித மீறிய மூர்க்கஸ்பாவமே அவனது நாசத்துக்கு மூலமாகி விட்டது.

ஸெப்ரீயோனது தேகத்தின் மேல் பாய்ந்து வந்ததைக் கண்ணுற்ற மஹா தைரியசாலியான ஹெக்டர், அக்கணமே தனது தேரில் இருந்து எட்டிப் பாய்ந்து, அந்தத் தேகத்தைக் காப்பாற்ற முயன்ருன். அதனுல் யுத்தம் மீண்டும் ஆரம்பித்தது.

தாங்கள் சங்கரித்துக் கொன்று விட்ட ஒரு பெண் மானைக் கைப்பற்றிக் கொல்ல வேண்டு மென்று ஆவல் கொண்ட வனேந்திரர்களான இரண்டு பிரமாண்டமான சிங்கங்கள், எவ்

வாறு ஒன்றோடொன்று சண்டை போடுமோ அவ்வாறே இவ்விரு நரசிங்கங்களும் ஸெப்ரீயோனது பிரேதத்தைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்று பொருதனர்.

கடும்பசியினால் துடிக்கும் அவ்விரு சிங்கங்களும் 'அந்த இரை தனக்கே வேண்டும்! தனக்கே வேண்டும்' என்று ஆவல் கொண்டு அதைக் கைப்பற்றத் தம்மாலான முயற்சிகள் அனைத்தையும் செய்கின்றன. இருள் சூழ்ந்த அந்தக் காடனைத்தும் நடுங்கும்படி கர்ஜனை செய்கின்றன. அந்தக் கர்ஜனைகளின் எதிரொலிகளும் அந்தக் காட்டில் நிறைந்து விடுகின்றன!

ஸெப்ரீயோனது தலையை ஹெக்டர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்; பத்திரகலுஷன் அவனது காலைப் பிடித்துக் கொண்டு தர தரவென்று இழுத்தான். இவ்வாறு இவ்விரு வீரரும் "விடேன் கொடேன்" என்று அந்தப் பிணத்திற்காகப் போராடினர்.

அச்சமயம் அவர்களைச் சுற்றிலும் நாற்புறமும் இருந்த வீரர்கள் ஒருவரோடு ஒருவர் கைகலந்து மும்முரமாகச் சண்டை செய்தே வந்தனர். குழப்பமும், கொந்தளிப்பும், பயமும், நடுக்கமுமே அப்போது அந்தக் களத்தில் கொடுங்கோல் செலுத்தி வந்தன. இருதிறத்துச் சேனைகளிலுமிருந்து கணக்கில் அடங்காத வீரர்கள் மடிந்து பட்டனர்.

மலைகளால் வளைத்துச் சூழப்பட்டு இருண்டுள்ள காடுகளின் நடுமத்தியில், ஒரு பெருங்காற்றானது உரத்து உறுமிக் கொண்டு அடித்து வருகையில், அக்காடுகளில் உள்ள மரங்களின் இலைகளும் கிளைகளும் சிலசமயங்களில் அம்மரங்களும் கூட அக்காற்றின் வசப்பட்டு ஆகாயத்திற்குப் பறக்கின்றனர். அச்சமயத்தில், அடர்ந்து பெருத்து வளர்ந்துள்ள கருங்காலி மரங்களுங்கூடப் படபடவென்று நெரிந்து போகின்றன. அந்தக் காடுகளில் உள்ள வனதேவதைகளுங் கூட நடுங்கித் துடித்துக் கதறுகின்றனர். சலசலவென்று ஒலிக்கும் புதர்களும், இப்புறமும் அப்புறமும் சாய்ந்து விசையுடன் அசைந்தாடுகின்றன. கடைசியாக அந்தக் காடு முழுவதுமே ஒரேயடியாய் அடிபெயர்ந்து மளமளவென்று சரிந்து முறிந்து விழுந்து விடுகின்றது.

இந்த யுத்தமும் அவ்வாறே நிகழ்ந்தது. இருதிறத்துச் சேனைகளும் பயங்கரமான இந்த யுத்தத்தில் கலந்து ஒருவரையொருவர் மோதியடித்து வந்த பொழுது உண்டாகிய சப்தமும் குழப்பமும், வேகமும், அந்தக் காட்டில் உண்டாகும் சப்தத்திற்கும் வேகத்திற்கும் சற்றும் குறைவற்றதாகவே தெரியவில்லை.

மேன்மேலும் இடைவிடாமல் மாரியைப்போல் பொழியும் சரங்கள் தடதடவென்று அந்தப் பிணத்தின் நாற்புறமும் பொழிந்தன; அப்போது அவை இடை விடாமல் ஒலித்துவரும் ஒரு

மணியைப் போல் கலகலவெனச் சப்தித்தன. வீரர்கள் தங்க ளுடைய விற்களின் நாண்களிலிருந்து அம்புகளை இடைவிடாது விடுத்தனர். அவை குதித்துத் துள்ளித் தங்களுக்கு இலக்காகிய வீரர்களை நோக்கிப் பறந்து சென்றன. அவ்வாறே கற்பாறை களும் அணிஅணியாய்ப் பறந்து சென்றன. அவற்றில் சில, விசை யற்று அந்தக் களத்திலேயே விழுந்து விட்டன. கெட்டியாகவும், கனமாகவுமிருந்த வேறு சில, தங்களுக்கு இலக்காக நியமிக்கப்பட்ட வீரர்களை நோக்கிச் சென்று, அவர்களுடைய கேடயங்களைத் தாக்கியடித்து, அவற்றினின்றும் ஒலிகளைக் கிளப்பின.

இவ்வாறு மேகங்களைப் போன்ற ஒரு சுழல் கால் எழுந்து அடித்து வந்து கொண்டிருந்த அந்தக் களத்தில், மிருதுவான புழுதியில் அழுந்தியவனுய், மஹா வீரனுன அவன் அசைவற்றுக் கிடந்தான். பிராணனை இழந்து விட்ட அவன் கட்டையானது தனது கையில் இருந்த கடிவாளக் கயிறுகளையும் மறந்தே விட்டது.

இவ்வாறு யுத்தம் நடந்து வருகையில், சூரியபகவானுனவர் அதிபயங்கரமான தனது சக்கரத்தை உருட்டிக் கொண்டு, ஆகாய வீதியில் பாதியைக் கடந்து, அங்கிருந்த வண்ணம் தகதகவென்ற ஜ்வாலையுடன் கொதித்து வந்தார்.

அப்போது இருதிறத்துச் சேனைகளின் மேலும் சரமாரியானது ஏற்றத் தாழ்ச்சியின்றிப் பொழிந்து வந்ததால் கணக்கற்ற வீரர் கள் நரகலோகம் புகுந்தனர். மாலைப்பொழுதில் அந்தப்பகவா னது தேரின் சக்கரங்கள், சமுத்திரத்தை நோக்கிக் கீழே இறங்கிக் கொண்டிருக்கையில், கிரேக்கர்கள் வெற்றியடைந்து மிக்க மகிழ்ச்சி யுடன் விளங்கினர். அப்போது அவர்கள் அந்தக் களத்தில் நிறைந்திருந்த குழப்பத்தையும், கலவரங்களையும் பொருட்படுத் தாமல் முன்சென்று, அதன் மத்தியில் கிடந்த தங்களால் தோற் கடிக்கப்பட்ட வீரனது உடலை, அதன் ஆடை ஆபரண ஆயுதங் களுடன் தரதரவென இழுத்துக் கொண்டே போய் விட்டனர்.

அதன் பின் முன்யோசனை இல்லாதவனும் மூர்க்கனுமான பத்திரகலுஷன், முன்னிலுமதிகமான ஆவலுடனும், ஆத்திரத் துடனும், இந்தச் சத்துருக்களை அழித்தே விடுவேன்! என்று சீறிக் கொண்டு அவர்களின் மத்தியில் பாய்ந்தான். அவன் மூன்று தரம், அந்தச் சத்துரு ஸைன்னியத்தின்மேல் மார்ஸ் தேவரைப் போல் வேகமாகப் பறந்து சென்று, ஒவ்வோர் தடவை யும் மும்மூன்று வீரர்களை மீளா உலகத்திற்கு அனுப்பி வைத்தான்.

பத்திரகலுஷா! அத்துடன் உன்னுடைய கீர்த்திப் பிரதா பங்களும் பூர்த்தியடைந்து விட்டன; அவை அஸ்தமித்துப் போயின! கீர்த்திப் பிரதாபங்களுடன் விளங்கி வந்த உனது சரட்டை உனது ஊழ்வினை அறுத்து விட்டது. முறுக்கி இருந்த அந்தக் கயிருனது, முறுக்குப் பிரிந்து கன்னங் கரேலென்று கீழே விழுந்து விட்டது! நீ ஒரு விசேஷமான மரபில் உதித்தவன்,

அந்த மரபு உன்னுடன் அற்றுப் போய் விட்டது. நீயே அந்த மரபின் கரிகாலனாக விளங்கி விட்டாய்!

பயங்கர ரூபியான அப்பாலோ தேவர், உன்னை நடு வழியில் தடுக்க, எமதர்ம ராஜனும் உன்னை அங்கு வந்து சந்தித்தான். தேவர்களும் உனக்குப் பரிந்து வரவில்லை! நீ தாமதமின்றி மீளா வுலகத்திற்குள் புகுந்து விட்டனை!

இவன் எவ்வாறு தனது பிராணனை இழந்தான் என்பதை நான் சொல்லுவேன் கேளுங்கள்:—

கனமான இருண்ட மேகங்களில் கரந்து உறைந்து வந்த அந்த அப்பாலோ தேவர் பத்திரகலுஷனை அணுகி, அவனுக்குப் பின்னாக வந்து அவனை நோக்கி, ஒரு பலமான அடித்தார். அவன் அதனால் திடுக்கிட்டுத் திகைத்துப் போனான். கனமான அந்த அடியானது, அவனுடைய கழுத்தின் மேலும் புஜங்களின் மேலும் விழுந்தது.

அப்போது அவனுடைய கண்கள் பளிச்சென்று மின்னலைப் போல் வெளிச்சத்தை வீசின. அவனுடைய ஐம்புலன்களும் தங்களது மரபை மறந்து தடுமாறி மயங்கிக் கிறுகிறுவென்று இருளில் மறைந்து விட்டன; அவனது தலைச் சீராவும் துள்ளிப் பாய்ந்து நெடுந்தூரம் பறந்து சென்று சமவெளியில் திடீரென விழுந்து கொல்லென்று ஒலித்தது.

அவன் அணிந்திருந்த அகிலேசனது வெற்றிக் கொண்டையும், புழுதியும் இரத்தக் கறையும் கொண்டு பழுது அடைந்து போய்விட்டது. ஒரு நாளும் நிலத்தை நோக்கி குனிந்தறியாத அந்தக் கொண்டைக்கு இன்று இவ்வாறு சிறுமை உண்டாய் விட்டது. நெடுநாட் போர்ப் பழக்கங் கொண்ட அந்தக் கொண்டையானது, அன்றுவரை சிறிதும் மாசுபடிந்ததே கிடையாது; யுத்த களங்களில் எல்லாம் அது தேசுடனேயே விளங்கி வந்தது. அமரர் மரபில் உதித்தும், உன்மத்தனாகவே விளங்கி வந்த அகிலேசனுடைய கன்னங்கதுப்புகளை அதுவரை காத்து வந்தது.

அது இப்போது ஹெக்டரின் மகுடத்தை அலங்கரிக்க வேண்டும், அதன் மேல் அசைந்தாட வேண்டும் என்று ஜோவ் தேவர் ஆணையிட்டு விட்டார்! என்றாலும், ஹெக்டரும் அந்தப் பாக்கியத்தை நெடு நாள் அனுபவிக்க வில்லை. விதியும் அதனை நிறைவேற்றும் தேவனும் அவனைப் பின்பற்றியே வந்தனர்! இது நிற்க.

இவ்வாறு பத்திரகலுஷனுடைய ஈட்டியானது சுக்கல் சுக்கலாக நொறுங்கி உடைபட்டுக் கீழே விழுந்து விட்டது. அவனது தேகத்தைத் தாராளமாக மறைத்து வந்த கேடயமும் அவனது கையினின்றும் நழுவித் திடீரென்று கீழே விழுந்து விட்

டது அவனது அரைக் கச்சையும் அவிழ்ந்து அந்தக் களத்தை ஒரு துடைப்பம் போல் பெருக்கிக் கொண்டு இழைந்து சென்றது.

இவ்வாறு தனக்கு உண்டான ஆபத்தை அறிந்த அவனது மனம் திடுக்கிட்டது. அந்த மனத்தின் உறைவிடமான மார்பை மறைத்து, அதைக் காப்பாற்றி வந்த அந்தக் கவசமும் கழன்று வேருக விழுந்து விட்டது, அவனது அவயவங்களேயும் எலும்பு களையும் ஒன்ருய்ப் பிணைத்துவந்த கீல்கள் அனைத்தும் கடகட வென்று தளர்ச்சியடைந்து விட்டது. நாடிகள் அனைத்தும் திடுக் கிட்டு அசைந்தன.

உன்மத்தன் போல் திகைத்துத் திருதிருவென்று விழித்துக் கொண்டு உற்றதுணைவர் ஒருவருமின்றி, அவன் அவ்விடத்தில் ஊன்றியே நின்று விட்டான். மனிதரை மிஞ்சிய வலியை உடைய தேவர்களது கைவலி இவ்வாறிருந்தது !!

அப்போது பாந்தஸ்ஸின் புத்திரனும், கீர்த்திப் பிரதாபங் களுடன் சிறந்து விளங்கியவனும் யூபோர்பஸ் என்ற பெயரை யுடையவனுமான டார்டானிய இளங்காளே ஒருவன் அங்கு இருந் தான். அவன் நுரையைக் கக்கிக்கொண்டு வேகமாக ஓடும் குதிரைகளை அடக்கியாள்வதிலும், வில்வித்தையிலும், விசையுடன் கால் கொண்டு ஓடுவதிலும் இணையற்றவனுக விளங்கியவன். அவன் ஆயுதப் பிரயோகம், யுத்த தர்மம், தனுர் வித்தை முதலிய வைகளை அப்பியஸித்து வருகையிலேயே இருபது மஹா வீரர் களை அவர்களுடைய இரதங்களில் இருந்து உருட்டித் தள்ளியவன்.

அவனுடைய கெட்டியான ஈட்டியானது பத்திரகலுஷ னுடைய உடலைத் துளைத்து உட்சென்று அதனுள்ளிருந்த குருதி யைக் கரகரவென்று கறந்து விட்டது. அவன், அவனை அடித்துப் புடைத்து, அவனுக்கு அளவற்ற காயங்களை உண்டாக்கி அத் துடன் தன்னுடைய சேட்டைகளை நிறுத்திக் கொண்டான். அவனிடம் அதிகமாகத் தனது ஆற்றலைக் காட்டவில்லை.

இவ்வாறு நிராயுதனுக ஆகிவிட்டபின்பும் பத்திரகலுஷ னுடைய ஆத்திரம் மாத்திரம் தணியவில்லை; அவன் தனது உடலில் ஊன்றித் தைத்துக்கொண்டிருந்த நீளமும் கூர்மையுயான அஸ்திரத்தைத் துரிதமாக உருவியெடுத்து எறிந்து விட்டுச் சட்டென முதுகுகொடுத்துத் திரும்பித் தன்னுடைய இனத்தாரது கூட்டத்தினுள் புகுந்து விட்டான்.

இவ்வாருக தெய்வ நியமனமும் ஆட்கொல்லியாகிய ஈட்டி யும் ஒன்ருய்ச் சேர்ந்து இவனைக் காயப்படுத்தி விட்டதினுல், இவன் நடுக்குற்றுப் பயந்து, தனது உயிரையாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையுடன் தன்னுடைய உற்ருரையும் உறவினரையும் நோக்கி ஓட்டம் பிடித்துச் சென்று, விதியை

வென்று விடலாம் என்று நினைத்தான்; ஆனால் அவனது யோசனை வீணேயாகி விட்டது. ஜோவ் தேவரின் ஆணைகளை யாரே கடக்கவல்லார்?

இந்த வீரன் இவ்வாறு இரத்தத்தை வடித்துக்கொண்டு ஓட்டம் பிடிப்பதைக் கண்ணுற்ற பேராற்றலுடையோனான ஹெக்டர் இவன் புகுந்த சேனா சமுத்திரத்தைப் பிளந்து கடந்து உட்புகுந்து, இவனைத் துரத்திக்கொண்டே சென்று இவனை நோக்கித் தனது வேல் ஒன்றை விடுக்க, அது இவனது ஓட்டத்தை அடக்கி, இவனை நமனுலகத்திற்குக் கூட்டிக்கொண்டு சென்று விட்டது! இவன் தீடிரெனக் கீழே தரையின்மேல் விழுந்துவிட்டான். அப்போது இடி இடித்தாற்போல் ஒரு பேரரவம் கேட்டது. இவனுடைய ஆயுதங்களும் கவசங்களும் கொல்லென ஆரவாரித்தன.

பத்திரகலுஷனுடன் கிரேக்க சமூகமே அழிந்துபோய் விட்டது என்றும், கிரேக்கர்களது கோஷ்டியில் எஞ்சியிருந்த வீரர்கள் அனைவருமே அக்கணம் அழிந்து படுவர் என்றும் நினைக்க இடமுண்டாகிவிட்டது.

ஒரு காட்டில் தனது மனம் போனபடி வசித்து வந்த காட்டு அரசனான சிங்கமானது வெயிலினால் வாட்டமடைந்து திரிந்து வருகையில், அந்தக் காட்டின் ஓரமாகவுள்ள பாலைவனத்தின் எல்லையில் இருக்கும் ஒரு சுனையின் அருகே தன்னைப்போலவே தாகத்தினால் பீடிக்கப்பட்டு வந்துள்ள ஒரு முட் பன்றியைச் சந்தித்து விட்டால், அப்போது அவ்விரு மிருகங்களும் அந்தச் சுனை "தனது தனது" என உரிமை பூண்டு போராடித் தத்தம் கண்களில் தீப்பொறி பறக்க, ஒன்றை ஒன்று தாக்கிப் பாய்ந்து, தங்களுடைய தாடைகளினின்றும் இரத்தத்தைக் கக்குகின்றன.

கடைசியில் அந்த மிருக ராஜனே வெற்றியடைந்து விடுகின்றது. தாகத்தைத் தணித்துக் கொள்ளலாமா வென்று வந்த முட்பன்றியானது, அந்தத் தாகத்தைத் தணித்துக் கொள்ளாமலே அந்தச் சிங்கத்தினால் சின்னா பின்னமாகி, கீறுண்டு தனது பிராணனையும் இழந்து விடுகின்றது,

அவ்வாறே கணக்கற்ற வீரர்களை மடக்கி அவர்களது ஆவியைப் பறக்கடித்து வந்தவனான பத்திரகலுஷன் தனது ஆவியைத் துறந்தவண்ணம், அவன் ஹெக்டரின் காலடியில் கிடக்கையில், ஹெக்டர் கடுத்த முகத்துடன் அவனைக் கண்ணுற்றுப் பின்வருமாறு ஜயகோஷம் செய்தான்:—

"பத்திரகலுஷா! இவ்விடமே கிட! ட்ராயைப் புரட்டி விடுவேன் என்று பெருமையடித்து வந்தாய்! பேரும் கீர்த்தியும் சம்பாதித்து விடலாம் என்றும் களித்து வந்தாய்! அந்தக் களிப்பும் பெருமையும் ஓய்வுற்று உன்னுடன் இங்கேயே கிடக்கட்டும்!

இலியனை அனலுக்கு இரையாக்கி விடுவேன், இலியன் நகரத்து வனிதைகளைச் சிறைப்பிடித்து அவர்களுடன் கிரீடைகள் செய்து கொண்டு விநோதமாகக் காலங் கழிப்பேன் என்றெல்லாம் மனப்பால் குடித்து வந்தனை! அந்த மனப்பாலும் வெளுத்துப் போய் விட்டது! அடமூடா, மடையா, இலியன் நகரத்து மதில் களைச் சத்துருக்களது வசமிருந்து மீட்கவேண்டும் என்றும், அந் நகரத்திலுள்ள சுந்தரிகள் உன்னைப்போன்ற பதர்களுக்கு வசமா காமல் இருக்கவேண்டும் என்றுமே நான் எனது சரீரத்தைச் சாருக வடித்து இந்த யுத்தத்தைச் செய்தேன்.

இப்போது உனது பிணத்தைக் கழுகுகளுக்கு உணவாக அளித்து விடுவேன். உனது அரிய நண்பனுன அகிலேசனும் உனக்கு இப்போது ஒருவிதமான உதவியும் செய்ய இயலாது! இன்று விசேஷமான யுத்தம் நடக்கும் என்று அந்த வீரன் அறிந்திருக்கலாம். நீ புறப்பட்டு வருகையில் அவன் உனக்குப் பலவிதமான ஆப்தமொழிகளை யுரைத்து மிருக்கலாம்; யோசனை களையும் சொல்லி யிருக்கலாம்.

'எனது தைரிய மிக்க நண்ப! ஹெக்டரைக் கொன்று, இரத்தக் கறைபடிந்த அவனுடைய ஆயுதங்களைக் கவர்ந்து கொண்டே நீ திரும்பி வருவாயாக; வெற்றி இன்றித் திரும்பி வரவும் வேண்டா!, என்று அவன் உனக்கு உரைத்தனன் போலும்! அந்த வசனங்களைச் செவியேற்றுப், பத்திரகலுஷனும் புறப்பட்டு வந்தான். அவன் இவ்வாறு தீவிரமாகப் புற நாட்டையும் அடைந்து விட்டான்" என்றான்.

ஆகாயத்தைத் திருதிருவென்று உற்றுப்பார்த்தவண்ணம் தன்னுடைய விழிகளைப் பிதுக்கிக்கொண்டு மல்லாந்து கிடந்த அந்த வீரன், அந்த வசனங்களைச் செவியேற்றுக் கேட்டு இருக்கை யிலேயே, தன்னை வென்றவனை நோக்கித் தழு தழுத்த குரலில் பின்வருமாறு உரைத்தான்:—

"அடா வீண் வம்பனே! அடா, உனக்கு ஏன் இந்த வீணான ஜம்பமும் பெருமையும். போதும் போதும், பேசாமல் உனது வாயை மூடு.

தெய்வங்கள்தான் ஸர்வ வல்லமைகளையும் உடையவர்கள் என்பதை அறிந்துகொள். இந்தக் காரியத்தை ஜோவ் தேவரும், அப்பாலோ தேவருமாகச் செய்தனரே யன்றி, இது உன்னால் செய்யப்படவில்லை. நான் செய்தேன் நான் செய்தேன் என்று நீ சொல்லிவரும் காரியங்கள் அனைத்தையும் தெய்வங்களே! நிறைவேற்றியிருக்கின்றன.

அந்தத் தெய்வங்களே என்னை நிராயுதனாக்கி எனது வலிமையை அழித்து வீழ்த்தி விட்டன. உனக்குச் சமமான சக்தி யுடைய மர்த்தியர்கள் இருபதின்மர் தருமயுத்தம் செய்ய

வேண்டும் என்ற ஆவலுடன் என்னையெதிர்த்து வந்திருப்பார்களே யானால், அவர்கள் அனைவரையும் நான் வெட்டி வீழ்த்தி மண்ணிற் புதைத்தே இருப்பேன்; அந்த யுத்தத்தில் அவர்கள் அழிந்தே போய் இருப்பார்கள்.

முதன் முதலாக ஊழ்வினையும் பீபஸ் பகவானும் எனது வலியைக் கறந்தனர். அதன்பின் யூபோர்பஸ் எனது வலியைப் பின்னும் கறந்தான்; கடைசியாக நீ என்னைச் சதியினால் வென்றாய். இப்போது துடுக்குடன் துள்ளுகின்றாய்.

நான் கடைசியாகச் சொல்லும் இந்த வார்த்தையையும் கேள். தெய்வங்களே எனது நாவில் இருந்து கொண்டு அவ்வச னங்களை உரைக்கின்றன என்றும், அவை உனது சாவு மணியை அடிக்கின்றன என்றும் அறிந்து கொள்.

பழிபாவங்களுக்கு அஞ்சாத மானிடப் பதரே! எனக்கு வந்த கதியானது உனக்கும் உடனே வரும். கொடிய ஊழ்வினை யானது உனது தலையின்மேல் பெருத்த கல்லைப் போட்டுவிடப்போ கின்றது. அது தொங்கிக் கவிழ்ந்து கொண்டிருக்கின்றது. உனது அழிவு காலம் அடுத்து வந்துகொண்டிருக்கின்றது. நீ உனது அந்திம தசைக்கு வந்து அங்கு இப்போது நின்றுகொண்டிருப்பதை யும் இதோ நான் காண்கின்றேன். அகிலேசனது கையால் நீ வெட்டுண்டு விழுவதையும் இதோ நான் காண்கின்றேன்" என்றான்.

இந்த வசனங்களை உரைத்த பின்னர், அவன் சோர்வை அடைந்து விட்டான். அவனது ஆவியும் ஒரு மண்பிண்டமாக மாறி, விட்டது. அவனது அழகான தேகத்தைவிட்டுப் பிரிய மன மின்றிப் பிரிந்து ஓட்டம் பிடித்து விட்டது. அப்போது அதற்கு ஆடை ஆபரணமாகிய அலங்காரங்கள் ஒன்றும் இருக்கவில்லை. அது நிலை நிச்சயமில்லாததும், துக்கம் மேலிட்டதுமான ஒரு பூத மாக மாறி வாழ்க்கையின் அப்பால் உள்ளதும், அல்லல்களே நிறைந்ததும், கோர உருவம் கொண்டதுமான அக்கரையை நோக்கிப் பறந்து போய்விட்டது.

பத்திரகலுஷனுடைய வசனங்களைக் கேட்ட ஹெக்டர் சற்று நிதானித்து யோசனைகள் செய்தான். தனது காலடியில் கிடந்த அந்த வெளுத்த பிரேதத்தையும் ஏறஇறங்கப் பார்த்தான். பின்பு அதை நோக்கி அடியில் வரும் வசனங்களையும் உரைத் தான் :—

" அமங்கலமான இந்த மொழிகள் எங்கிருந்து வருகின்றன? இவை எமனையும் இழித்துப் பழிக்கின்றன! என்னை முன்னிட்டும் இழித்துரைக்கின்றன! இதற்கெல்லாம் என்ன காரணம்! காரியங் களெல்லாம் இவ்வாறே நிகழ்ந்து தீருமோ? ஹெக்டரின் வேலி னால்தான் அகிலேசன் அழிய வேண்டும் என்று அவனது தலையில்

எழுதி இருந்தால் ஆகாதோ? என்ருலும் தெய்வசங்கல்பம் இன்னது என்று அறிய யாரால் முடியும்?''

இவ்வாறு சலிப்புடன் உரைத்துவிட்டு மூச்சுப் பேச்சின்றிக் கிடந்த அந்த வீரனது மார்பை அழுத்தி, அதினின்றும் தனது ஈட்டியை உருவியெடுத்துக் கொண்டு, அவனது பிணத்தை உயரத் தூக்கி யெறிந்து விட்டு, இரத்தம் சொட்டிக் கொண்டிருந்த அந்த ஈட்டியைக் குலுக்கிப் பத்திரகலுஷனுடைய தைரியம் மிகுந்த சாரதியைத் தாக்கினுன்.

பத்திரகலுஷனுடைய சாரதி ஒரு சாதாரணமான கோழை மனதுள்ளவனுக இருந்திருப்பானு? அவன் அதி தைரியசாலியாக வன்ருே இருந்திருப்பான்! துரிதகதியுடையவனுன ஆட்டோமிடான் என்னும் அவன் அக்கணமே தன்னுடைய குதிரைகளின் கயிறுகளைத் தளர்த்தி விட்டுத் தனக்கு முன் நெடுந்தூரத்திலிருந்த களங்களை நோக்கித் தனது இரதத்தை ஓட்டிக்கொண்டு பறந்து போய்விட்டான். இவ்வாறு சென்று சென்று, அவன் ஜோவ் தேவரது கிருபையினுல் தனக்குக் கிடைத்தவையும், தனது தேரை இழுத்து வந்தவையும், அழியாப் புகழ் பெற்றவையுமான அந்தக் குதிரைகளையும், ஹெக்டரின் கோபத்திற்கு இரையாக்காமல் காப்பாற்றியே விட்டான்.

———o———

## பதினேழாவது அத்தியாயம்

# பத்திரகலுஷனுடைய உடலைக் கவர வேண்டுமென்ற ஆவலுடன் இருதிறத்துச் சேனை வீரர்களும் புரிந்த ஏழாவது போர். மனேல்லாஸனுடைய வீரச் செயல்கள்

கதைச் சுருக்கம்: பத்திரகலுஷன் இறந்த பின் அவனது பிணம் சத்துருக்கள் கைவசப்படுவதைத் தடுக்க வேண்டும் என்ற ஆவலுடன் அதை மனேல்லாஸன் காப்பாற்றி வருகிறான்.

அதைக் கவர்ந்துவிட வேண்டுமென்ற ஆவலுடன் யூபோர்பஸ் முன்வந்து, தன் முயற்சிகள் பயனடையாமல் தோற்றுக் கொல்லப்படுகின்றான்.

அதன்பின் ஹெக்டர் அதே காரியமாக முன்வருகிறான். அதைக் கண்ணுற்ற மனேல்லாஸன் பின்னிடைந்து சென்று சிறிது பொழுதுகெல்லாம் அஜாக்ஷனைத் துணையாகக் கொண்டு திரும்பி வந்து ஹெக்டரைத் துரத்தி ஓட்டிவிடுகிறான்.

கிளாக்கஸ் என்பவன் இதைக் கண்ணுற்று, ஹெக்டரை நோக்கி, அவ்வாறு புறங்கொடுத்து ஓடுவது இழிவான காரியம் என்று இடித்துக் கூற, ஹெக்டர் பத்திரகலுஷனிடமிருந்து, தான் பறித்துக் கொண்ட கவசத்தை அணிந்து கொண்டு, போர் முனையை நோக்கித் திரும்பி வந்து, நின்றுபோன யுத்தத்தைத் திரும்பவும் நடத்துகின்றான்.

கிரேக்கர்கள் வலி குன்றுகின்றனர். சிதறியும் போகின்றனர். அவ்வாறு சிதறுண்டு போனவர்களை அஜாக்ஷன் ஒன்றாகத் திரட்டுகின்றான்.

அப்போது ஈனியஸ் என்பவன் துரோஜர்களை ரக்ஷித்து வருகின்றான். அதன்பின் ஈனியஸ்ஸும் ஹெக்டரும் ஒன்றாகச் சேர்ந்து, அகிலேசனது இரதத்தைப் பிடிக்க வேண்டுமென்று பிரயத்தனங்கள் செய்கின்றனர்.

அது பயன்படாமல் போகின்றது. அந்த இரதத்தை ஆட்டோமிடான், ஒரேயடியாய் ஓட்டிக்கொண்டு போய்விடுகின்றான். அப்போது அகிலேசனது குதிரைகளுங்கூடப் பத்திரகலுஷனுடைய மரணத்திற்கு வருந்துகின்றன,

அச்சமயம் ஜூப்பிடர் பகவான் பத்திரகலுஷனுடைய பிரேதத்தை ஒரு கனமான மேகத்தினுல் மறைக்கின்றார். மனத்தை யுருக்கத் தக்க ஒரு பாமாலையும் அஜாக்ஷனுல் பாடப்படுகின்றது.

மனேல்லாஸன், அந்திலோக்கஸ்ஸை அகிலேசனிடம் அனுப்பிவைத்து, அவனுக்குப் பத்திரகலுஷனுடைய மரணத்தை அறிவிக்கின்றான்.

பின்பு, அவன், யுத்தகளத்திற்குத் திரும்பி வந்து தன்னுடைய சத்துருக்களால் அடியும் புடையும் ஏற்றுக் கொள்கின்றான். என்றாலும் அவனும் மிரியோனிஸுும், அஜாக்ஷர்களது உதவியினுல், பத்திரகலுஷனுடைய பிரேதத்தைக் கைப்பற்றி, அதைத் தங்களுடைய கப்பலுக்கு எடுத்துக் கொண்டு போய்விடுகின்றனர்.

இவை அனைத்தும் இருபத்தி எட்டாம் நாள் சாயங் காலத்தில், ட்ராயின் முன்னுள்ள களங்களிலும், மைதானங்களிலும் நிகழ்கின்றன.

---

தேவர்களுக்குச் சமானமான பத்திரகலுஷன் ஏற்கனவே சொல்லி உள்ள பிரகாரம் காயங்களால் துளைக்கப்பட்டவனாய்ப் பாமர ஜனங்களுடைய பிணங்களின் மத்தியில், அந்தத் தனித்த கரையில் கிடந்தான். அதைக் கண்ணுற்ற மஹானுன மனேல்லாஸன் மிகவும் பரிபவமடைந்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று தீர்மானித்து யுத்தத்தின் முன்னணியை நோக்கி, ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்தான்.

தன்னுடைய அனுராகங்களின் பயனுகத், தான் கருத்தரித்துத் தாங்கிச் சுமந்து வேதனைகளை அனுபவித்துப் பெற்ற தனது தலைச்சன் கன்று, தனது வயிற்றினின்றும் நழுவி விழுந்தவுடன், அந்தக் கன்றை எவ்வாறு ஒரு பசுவானது சுற்றிச் சுற்றி வளைந்து வருமோ, அவ்வாறே மனேல்லாஸனும் பத்திரகலுஷனுடைய பிரேதத்தைச் சுற்றி சுற்றி வளைந்து வந்தான்.

உதவி செய்பவர் ஒருவரும் இன்றிப், பிறந்த மேனியுடன் கீழே கிடக்கும் கன்றுக் குட்டியைக் கவலையுடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு, அதனை வளைந்து வரும் அந்தத் தாய்ப் பசுவைப் போலவே மனேல்லாஸனும் அந்தப் பிணத்தை அணுகி வந்தவர்களை எதிர்த்தும் தடுத்தும் வந்தான். அப்போது அவனது அகன்ற மார்க்கவசமானது, தக தகவென்று ஒளியுடன் விளங்கியது; அவனுடைய ஈட்டிகளும், கொழுந்து விட்டெரியும் தணல்கள் போல் ஜ்வலித்தன.

அப்போது வில்வித்தையில் தேர்ந்தவனுன பாந்தஸ்ஸின் மகன் யூபோர்பஸ் அந்தப் பிணத்தைக் கண்ணுற்றுப் பார்த்து,

அதைக் காத்து வந்த நண்பனை நோக்கிப் பின்வருமாறு இழித்துரைத்தான் :—

" அதிரிதேசா ! இந்தக் கை தான் பத்திரகலுஷனை வெட்டித் தள்ளியது தெரியுமா ? உனக்கு இந்தத் துணிவு வேண்டாம் ! இவனுக்குக் கிடைத்த கதியே உனக்கும் கிடைக்கும். ஆதலால் உன்னுடைய சேட்டைகளைச் சிறிது அடக்கு !

என்னுடைய வீரசூர பராக்கிரமங்களினால் நான் சம்பாதித்த இந்த வஸ்துக்களை மரியாதையுடன் என்னிடம் விட்டுவிட்டுத் தூரமாகச் செல். உனக்கும் இவைகளுக்கும் ஒருவிதமான சம்பந்தமும் கிடையாது. இந்தப் பிடிவாதம் வேண்டாம். பேரும் கீர்த்தியும் எனக்குத்தான் சேர்ந்தவை என்று அறிந்து அவற்றை எனக்கு ஒப்படைத்து விட்டு, உயிருடன் ஓடிப் பிழை " என்றான்.

இவ்வாறு அந்த துரோஜ வீரன் உரைத்த வசனங்கள் உருக்கிக் காய்ச்சிய ஈயத்தைப் போல், ஸ்பார்ட்டன் மஹாராஜனுடைய காதுகளில் எரிச்சலுடன் விழுந்தன. அவற்றைக் கேட்டவுடன் அவன் ஆத்திரமும் சங்கடமும் மேலிட்டவனாய், அந்த துரோஜனை நோக்கிப் பின்வருமாறு இழித்துரைத்தான் :—

" ஜோவ் தேவரே ! உமக்குச் சிரிப்பு உண்டாக வில்லையா ! உன்னதமான சிங்காதனத்தில் வீற்றிருக்கும் நீர், மானிடப் பதர்கள் இவ்வாறு பெருமை அடித்துக் கொள்வதைக் கேட்டும், நகையாமல் இருக்கின்றீரே ? தங்களுக்குச் சிறிதும் ஸ்வாதீனமில்லாத சக்திகள் அனைத்தும் தங்களுக்கே உள என்று இவர்கள் பெருமையடித்துக் கொண்டு வருகின்றனரே !

காடுகளில் நடமாடி வரும் சிங்கங் கூட இவ்வாறு தன்னுடைய சக்திகளை நினைத்து இறுமாப்பு அடையக் காணேம் ! ஒரு சிறுத்தைப் புலியுங் கூட இவ்வாறு பெருமிதங் கொண்டு தனது சத்துருவான சிவிங்கியுடன் போராடத் துணிவதில்லை ! முட்பன்றியும் அடங்கியே இயங்குகின்றது ! இவை அனைத்தும் நாட்டில் வாழும் குடிகளுக்கு மிக்க அச்சத்தையும் பீதியையும் உண்டாக்கும் மிருகங்கள் !

இவ்வாறிருக்க மனிதன் மாத்திரம் தான் மஹா சூரன் என்று வீணே பெருமை யடித்துக் கொள்கின்றான் ! இவ்வாறு வீண் பெருமை அடித்துக் கொள்ளும் மானிடப் பதர்களில் இந்தப் பாந்தஸ்ஸின் புத்திரர்களை மிஞ்சியவர்களை நான் காணவே இல்லை ! ஆஹா ! இவர்களது கர்வந்தான் என்னே ? அதற்கு அளவும் காணவில்லை. இவர்கள் தங்கள் வாயில் வந்தபடியெல்லாம் பிதற்றுகின்றனர் !

சிறிது பொழுதின் முன்புதான், இந்த வீணனது சகோதரனை ஹைப்பெரினர் என்பவன் எனது கத்திக்கு இரையாகிப்

பொத்தெனப் பூமியில் விழுந்தான். அவன் வெகு துடுக்குடன், எங்களுடன் ஒரு கை பார்க்கலாம் என்று முன் வந்தான். அவனுடைய துடுக்கும் அகமதியும் அவலமாயின. அவன் தனது பிராணனை இழந்து, புழுதியில் அழுந்திப் போனதை நானே இந்த எனது கண்களால் கண்டேன். தன்னைக் கட்டிக் கொண்ட பொற்கொடிக்குப் புருஷனும், பெற்றவளுக்குப் பிள்ளையும் இல்லாமல் அவன் பட்டு விழுந்து விட்டான்.

ஆதலால் சிறு பயலே! உனக்கு இந்தத் துடுக்கு வேண்டாம்! உனக்கும் அவனது கதியே கிடைக்கும். உனது உடன் பிறந்தானுக்குத் துணைவனுகவும், அவனுக்கு ஊழியங்கள் செய்யவும், நீயும் அவனைத் தொடர்ந்து இருள் சூழ்ந்த ஸ்திஜியன் உலகத்திற்கே செல்வாய்!

அந்தக் கதிக்குத் தப்ப வேண்டும் என்பது உனது விருப்பமானுல் நீ உனது சேஷ்டைகளை அடக்கிக் கொள்ளலாம்! ஆனுல், அந்தப் புத்தியும் யோசனையும் காலா காலத்தில் கீழ் மக்களுக்கு உண்டாகா. துன்பம் வரும் வரை அவர்கள் இறுமாப்புடனேயே இருந்து அத்துன்பத்தை அனுபவிப்பார்கள். அதன் பின்னர் தான் அவர்களுக்கு ஞானேதயம் உண்டாகும், ஆனுல் அதனுல் என்ன பயன்?" என்ருன்.

இந்த வசனங்களைக் கேட்டுச் சற்றும் மனங்கலங்காத யூபோர்பஸ் அவனுக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான் :—

அந்தச் செய்தி எல்லாம் தெரியும்! அது ஒரு பக்கம் இருக்கட்டும்! எனது உடன் பிறந்தானது இரத்தத்தை வடித்த நீ இப்போது உனது இரத்தத்தை வடிப்பாய். நீ பட்ட கடனையும் தீர்ப்பாய். நாம் ஒரு கை பார்க்கலாம் வா!

கண்ணீர் விட்டுக் கதறி, அழுது கொண்டிருக்கும் அவனுடைய தகப்பனுர் உனது தலையைக் காண வேண்டும் என்று துடிக்கின்ருர். தனது வாழ்க்கைத் துணைவனை இழந்த அவனது கைம் பெண்ணும், தனது மணவரிசை மஞ்சத்தில் கண்ணீர் வடித்துக் கொண்டு கிடக்கின்ருள். உன்னை வென்று உன்னுடைய ஆடை ஆபரண அலங்கார ஆயுதாதிகளைப் பறித்து, அவற்றை நான் அவ்விருவருக்கும் எனது காணிக்கையாகச் சமர்ப்பிப்பேன்! கணவனை இழந்த காரிகையும், தனயனை இழந்த தந்தையும் அவைகளைக் கண்ணுற்றுத் தங்கள் துக்கங்களைச் சிறிது பொழுதாயினும் மறந்து மனம் தேறுவார்கள்.

ஆதலால் பேரையும் புகழையும் தரத் தக்க இந்த யுத்தத்தைச் செய்யத் தாமதிக்காமல் இக்கணமே முன் வருவாயாக! நம் அதிர்ஷ்டம் புகழ் ஆயுள் முதலியவற்றைத் தேவர்கள் தீர்மானிக்கட்டும்!" என்ருன்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் அதிதுரிதமாகத் தனது ஈட்டியை விடுத்தான். அது விரைந்து சென்று மனேல்லாஸனது அரைக்கச்சையின் மேல், குறி தவருமல் தொப் பென்று விழுந்தது. கொல்லென்று சப்தித்தது. ஆனல், அதனல் மனேல்லாஸனுக்கு ஒருவிதமான தீங்கும் உண்டாகி விடவில்லை. பித்தளையினலான அந்த அரைக் கச்சையின் மேல் அது விழுந்த பொழுது, அதன் முனை முறிந்து போய் விட்டது. அதன் வலியும் குன்றியது.

அப்போது மஹானை அதிரிதேசன் சகல ஜீவராசி களுக்கும் தகப்பனை ஜோவ் தேவரைக் கூவி யழைத்துக் கொண்டு தனது ஈட்டியையும் விடுத்தான். அது மாத்திரம் பயனற்றுப் போய்விட வில்லை. அது யூபோர்பஸை நோக்கிக் குறி தவருமல் சென்று அவனது உடலிற் பாய்ந்து, அவனது தொண்டையைத் துளைத்துக் கொண்டு உட் சென்று, அவனை அந்த யுத்தகளத்தில் மடித்து வீழ்த்தி விட்டது.

அந்த ஈட்டியானது, அவனது தொண்டையைத் துளைத்துக் கொண்டு சென்ற பொழுது அவனது கழுத்தில் ஒரு பயங்கரமான படுகாயம் உண்டாகி விட, அதன் பயனுக அந்த வீரன் குப்புற விழுந்தான். அப்போது அவனுடைய ஆயுதங்களும் கொல் லென்று ஒலித்துக் கொண்டு தரையின் மேல் விழுந்தன.

அப்போது தேவ கன்னிகைகளையும் அழகு பெறச் செய்து அவர்களுக்குப் பெருமையைத் தரக் கூடியதும், இரத்தினுபரணங் களாலும், பொன்னுபரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டதும், பொன் போல் பிரகாசித்தும் வந்ததுமான அவனுடைய சுருட்டை மயிர்கள் புழுதியினல் அழுக்கடைந்தும், இரத்தக் கறைபட்டு அழகு குன்றியும், அந்தக் கடற் கரையில் அலங்கோலமாகக் கலைந்து சிதறுண்டு கிடந்தன.

நீர்வள நிலவளங்களாற் சிறந்து, என்றும் பச்சைப்பசே லென்று விளங்கும் ஒரு வனத்தில் பனியைப் போன்ற வெண்ணிற மான அழகிய சிறு புஷ்பங்களைச் சிரோபூஷணமாகக் கொண்டு விளங்கும் ஓர் இளம் ஆலிவ் மரமானது, தனது தலையை உல்லாச மாக உயரத் தூக்கிக் கொண்டு, தன்மேல் அடிக்கும் மிருதுவான காற்றை யனுசரித்து ஒய்யாரமாக அசைந்து ஆடிவருகையில், ஆகாயத்தின் உச்சியில் இருந்து அதன் மேல் அடிக்கும் ஒரு சுழல் கால், அந்தச் சிறிய மரத்தையும் அதன் நிழலில் உள்ள மற்றைய மரங்களையும் ஒரேயடியாய் வேரோடுபிடுங்கி வீழ்த்தி விடுகின்றது.

அப்போது அந்த மரமானது அழகும் ஆயுளும் இழந்து, இரமணீயமான தனது பாத்தியில், பூமியின் மேல் சாய்ந்து விழுந்து விடுகின்றது. அவ்வாறு அழகும் ஆயுளும் குன்றிக் கிடக்கையிலும், அதன் தோற்றம் மாத்திரம் ரமணீயமாகவே இருக்கின்றது !

அவ்வாறே இளையோனும் எழில் வாய்ந்தவனுமாகிய யூபோர்பஸ் அந்தப் போர்க்களத்தில், வடிவழகும் வலியும் இழந்து கீழே விழுந்து கிடக்கையிலும், அவனது பிரேதம் பொலிவுடன் விளங்கியே வந்தது.

எழில் வாய்ந்தவனும், இளையவனுமாகிய யூபோர்பஸ் இவ்வாறு மண்ணின் மேல் மல்லாந்து கிடக்கையில், கொடிய ஸ்வாபமுமுடையோனுன ஸ்பார்ட்டன் அவன் ஆயுதங்களைப் பறித்து எடுத்து விட்டான். அப்போது இவ்வாறு தனக்குக் கிடைத்த வெற்றியினுல் கர்வங்கொண்டவனுகவும் தான் பறித்துப் பிடுங்கிக் கொள்ளை கொண்ட வஸ்துக்களை அடிக்கடி கண்ணுற்றுப் பார்த்துப் பெருமையுடன் களித்தவனுகவும் ஜயசீலனுகவும் விளங்கிய, கோபுரம் போல் உயர்ந்தவனுன அந்த வீரனை ட்ராய் மக்கள் நோக்கிப் பயந்து நடுங்கிப் புறங் கொடுத்து ஓட்டம் பிடித்தனர்!

ஒரு மலையின் மேல் உறங்கி வரும் சிங்கமானது, தான் அடித்துக் கொன்ற காளையின் மேல் நின்று கொண்டு, இடிமுழக் கம்போல் கர்ஜனை செய்து கொண்டு, தன்னுடைய தாடைகளில் இருந்து புகைகள் கிளம்புமாறு அதிவேகத்துடன் அக் காளையின் இறைச்சியைப் புசித்து வருவதைக் கண்ட பட்டிக் காட்டு நாய்களும், குறும்பர்களும், அச் சிங்கத்தின் கொடிய கோப தாபங்களுக்குப் பயந்து நடுங்கி, மேனி வெளுத்துப் பதுங்கிப் பதுங்கி ஓட்டம் பிடித்து, வெவ்வேருகச் சிதறுண்டு நெடுந்தூரம் சென்று விடுகின்றனர்.

அந்த நெடுந் தூரத்தில் இருந்த வண்ணம் அந் நாய்கள் இடைவிடாமல் குரைத்தும் கூச்சலிட்டும் வருகின்றன, குறும்பர் களும் கதறுகின்றனர். அப்போது அக் கூக்குரல்களுக்கும், கூச்சல் களுக்கும் அக்கம் பக்கத்தில் உள்ள பள்ளத்தாக்குகள் ஒத்துப்பாடு கின்றன. துரோஜர்களது அவஸ்தையும் அச்சமயம் அவ்வாறே இருந்தது.

இதன் மத்தியில், இந் நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்த அப்பாலோ தேவருக்குப் பொருமை உண்டாகி விட்டது! மனேல்லாஸனது வெற்றியைக் கண்டு அவர் பொங்கிக் கொதித் தார்! அவன் பறித்துப் பிடுங்கிய பண்டங்களைத் திரும்பப் பிடுங்கி விட வேண்டுமென்று அவர் மஹானுன ஹெக்டரை உறுத்தினர். அநாகரீகர்களான ஸிக்கோனியர்களுக்கு யுத்தாப்பி யாசம் செய்வித்து வந்த மெனீஸ் என்பவரது உருவங் கொண்டு அவர் ஹெக்டரின் முன் தோன்றிப் பின் வருமாறு உரைத்தார்:—

"அப்பா! நான் சொல்வதைச் சற்றுக் கவனித்துக் கேள். இந்த அகிலேசனுடைய குதிரைகள் அமரர்களது குலத்தில் உதித் தவைகள். நீ அவைகளைத் துரத்திக் கொண்டு துரிதமாக ஓடு கின்ருய்; அதனுல் உனக்கு ஒருவிதமான நன்மையும் உண்டா

காது. அந்தக் காரியம் வேண்டாம். அதை நிறுத்தி விடு! மனிதப் பிறவியான மார்த்தியன் ஒருவனுக்கும் அவை இணங்கா; வசமாகா. அகிலேசன் ஒருவனுக்கு மாத்திரமே அவை வசப்படும்; அவன் மஹான்; நீ அந்தக் குதிரைகளை நெடு நேரம் துரத்திக் கொண்டுசென்ருய்! அதனல் உனக்கு ஒருபயனும் உண்டாக வில்லை. அது வெறும் விளையாட்டாகவே விளைந்து விட்டது. அது போதும், அதை நிறுத்தி விடு!

மஹானன யூபோர்பஸ் மடிந்து போய் விட்டான். அவனைப் பார்த்தாயா? ஸ்பார்ட்டனல் கொலையுண்டு அவன் இறந்து போய் விட்டான். பயமென்பது சற்றும் அறியாத அவனது மார்பில் தக தகவென்று எரிந்து வந்த நெருப்பு அடி யோடு அணைந்து போய் விட்டதே!" என்று கதறி விட்டு அப்பாலோ தேவர் சிறகுகள் கொண்ட ஒரு பறவையைப் போல், துரிதமாகப் பறந்து சென்று யுத்த காரியங்களில் கண்ணுங் கருத்து மாய் இருந்த மர்த்தியர்களுடன் கலந்து விட்டார்.

அவருடைய வசனங்கள் ஹெக்டரின் மனத்தில் அழுந்திப் பதிந்தன. அவை சொல்ல வொண்ணுச் சோர்வையும், கவலை யையும் உண்டாக்கி விட்டன. அவன் அந்த யுத்தகளம் முழு வதையும் ஏறஇறங்கக் கவலையுடன் கரகரவென்று கண்ணெடுத்துப் பார்த்தான். அக்கணமே இரத்தக் கறைப் படிந்து, மூச்சு அடை பட்டுக் கிடந்த அந்த வீரனது உடல் அவனுக்குக் கட்புலனு யிற்று.

அந்த வீரன் அப்பொழுது குப்புற விழுந்து கிடந்தான். அவன் காயங்களில் இருந்து இரத்தமானது ஒரு சுனையைப் போல் பெருகிக் கொண்டிருந்தது. பள பளவென மின்னிய அவனுடைய ஆயுதங்களும், அவனை வென்ற வீரனுடைய கை களில் மின்னின, விளங்கின.

அதன் பின் ஹெக்டர் ஒளிவீசும் கவசங்களால் தனது தேகத்தை மறைத்துக் கொண்டு, அந்தச் சேனு சமுத்திரத்தை ஊடுருவிக் கொண்டு உட்சென்று, வானமும் இடிந்துபோகும்படி, உரத்து முழக்கிக் கூச்சலிட்டான். அது வல்க்கன் பகவான் விடுத்த ஒரு கொடிய தீயைப் போல், பெருக் கெடுத்துக் கொண்டு முன் சென்று அந்தக் களத்தில் கூடி இருந்த நானு தேசத்துச் சேனைகளையும், ஒரு கலக்குக் கலக்கி அவர்களனை வருக்கும் ஊக்கத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது.

ஹெக்டரின் குரலைச் செவியுற்றுக் கேட்ட அதிரிதேசன், அதனல் விளையக்கூடிய பிரமாதங்களை முன்னடியே அறிந்தவ னய்ப் பின்வருமாறு ஆலோசனைகள் செய்யலானன். மனே தைரியம் மிக்கவனும், ஒருவனலும் அசைக்க முடியாத நிச்சய புத்தியுள்ளவனுமான அதிரிதேசனும் மனம் கலங்கினன். முன் யோசனைகள் செய்தான் :—

“இந்தப் பத்திரகலுஷன் எனக்குப் பரிந்து வந்து எனது மான மரியாதைகளைக் காப்பாற்றுவதற்காகப் பொருது, அந்தப் போரில், தனது பிராணனையும் பறிகொடுத்து விட்டான்! அவனது பிணத்தை இந்தப் போர்க்களத்தில் விட்டு விட்டு நான் போகலாமா? எனது நண்பனுடைய ஆயுதங்களையும், அவனது கட்டையையும் விட்டுவிட்டுப் போய்விடலாமா? அல்லது, நான் ஒருவனுகவே ஹெக்டரையும், அவனுடைய சைனியங்களையும் எதிர்த்துப் பொரலாமா? தேவர்கள் பக்ஷபாதங் கொண்டு சகாயம் செய்துவரும் கட்சியில் உள்ள ஒரு வீரனை வேருெரு வீரன் எதிர்த்துச் சென்று போர் புரிவது அந்தத் தேவர்களையே எதிர்த்துச் செய்யும் போருக்குச் சமமாகுமன்ருே!” என்று யோசனைகள் செய்தான்.

கடைசியாக, “கிரீஸே! எனது பிறந்த நாடே! நான் இப்போது, ஒரே ஒரு முறை இந்தப் போர்க்களத்தைவிட்டுப் புறங்காட்டி ஓடுவதற்கு மன்னிக்க வேண்டும். நான் ஹெக்டருக்குப் பயந்து ஓடவில்லை. தெய்வத்துக்குப் பயந்தே அடங்குகின்றேன்; ஓடுகின்றேன்.

என்ருலும் அஜாக்ஷனது குரலோசை மாத்திரம் எனது காதுக்கு எட்டுமாஞல், நான் இந்தத் தெய்வத்திற்கோ, தேவ கோஷ்டிக்கோ, சிறிதும் பயப்படவே மாட்டேன். அஜாக்ஷனது உதவி மாத்திரம் எனக்குக் கிடைக்குமாஞல், நாங்கள் இருவரும் ஒன்ருய்ச் சேர்ந்து உழைத்து இந்த யுத்தத்தைத் திரும்பவும் செய்வோம். தோல்வியை வெற்றியாக மாற்றுவோம். இந்தப் போர்க்களங்கள் எல்லாவற்றிலும் இந்த யுத்தத்தைச் செய்வோம். அகிலேசனுக்கும் எங்களுக்கும் அத்தியந்த பந்துவாகிய பத்திரகலுஷனுடைய உயிரற்ற உடலைத் திரும்பவும் கவர்ந்து அதை அகிலேசனிடம் சமர்ப்பிப்போம்” என்றெல்லாம் ஆலோசனைகள் செய்தான். இதற்குமேல் யோசனைகள் செய்வதற்கு அவனுக்கு அவகாசம் இருக்கவில்லை.

ட்ராய் நாட்டு மக்கள் திரள்திரளாக வந்து அந்தக் கடற்கரையை நிறைத்து விட்டனர். அந்தப் பிரதேசம் முழுவதுமே இருண்டு போய்விட்டது. அவர்கள் அட்டகாசங்கள் செய்து கொண்டும், பயமுறுத்திக் கொண்டும் வந்தனர். ஹெக்டரும் அவர்களுக்குத் தலைமை வகித்துக்கொண்டு அவர்கள் முன் வந்தான்.

இந்தக் கொடிய காக்ஷியைக் கண்ணுற்றுக் கலக்கமடைந்த மனேல்லாஸன், அந்தப் போர்க்களத்திலிருந்து மெதுவாகப் பின்னடைந்து விட்டான்; சலிப்புடன் பெருமூச்சு விட்டுக் கொண்டு தனது நண்பனது பிரேதத்தையும் அதுகிடந்தவிடத்திலேயே விட்டும் விட்டான்!

தன்னைச் சுற்றி உள்ள வேடர்களும், வேட்டை நாய்களும் இடும் கூக்குரல்களைக் கேட்க முடியாமலும், அவ்வேடர்கள்

பெரும் புயலைப்போல் பொழியும் சரங்களைத் தாங்க முடியாமலும் தவிக்கும்பொழுது, ஓர் ஆட்டுப் பட்டியினுள்ளே புகுந்துவிட்ட சிங்கமானது, இவ்வாறுதான் சிறிதும் பயமின்றி அந்தப் பட்டியை விட்டு அகன்று போய்விடுகின்றது.

அது அந்தப் பட்டியில் இருந்து துரிதகதியுடனே ஓட்டம் பிடித்தாலும், தன்னை வளைத்துக்கொண்டுள்ள மனிதர்களையும், மிருகங்களையும் பயமுறுத்தி மிரட்டிக் கொண்டே செல்லுகின்றது. அப்பொழுது அதன் சினமானது, அதன் உள்ளங் கவர்ந்து எழுந்து ஓங்கி விளங்குகின்றது. அது தன்னுடைய கண்களை உருட்டி விழிக்கும்போது அவற்றினின்றும் தீப்பொறிகள் பறக்கின்றன.

இவ்வாறு புறங்கொடுத்து ஓடி ஸ்பார்ட்டர்களது அணி வகுப்பின் உட்புகுந்துவிட்ட மனேலலாஸன், தனது சத்துருக்களை நோக்கித் திரும்பித் தனது மார்பைத் தட்டினன். இவர்களை விட்டேனு? என்று புத்துணர்ச்சியுடன் பொங்கினன். அவன் அங்குக் காரிருள்போல் வெளிச்சத்தை மறைத்துக் கொண்டு நின்றிருந்த சேன சமுத்திரங்களையும், மேனேக்காய்ப் பார்த்தான். அந்தக் களத்தை ஒரு மேகம்போல் மறைத்துக்கொண்டிருந்த புழுதியூடு அவன் உற்று நோக்கியபொழுது, அவனுக்குத் தேவர்களை நிகர்த்த அஜாக்ஷனது உருவம் கட்புலனயிற்று.

அந்த மஹா வீரன் அந்தக் களத்தின் இடது புறத்தில், சிறிதும் மனந்தளராமல் உறுதியாய் நின்றவண்ணம், தன்னுடைய ஆயுதங்களை வீசிக்கொண்டும், காயமேற்று இரத்தக் கறை படிந்தவனகவும் யுத்தத்தை மும்முரமாக நடத்திக் கொண்டிருந்தான். தினகர பகவானது நடவடிக்கைகளால் அவனுடைய வீரர்கள் பெரும் பீதியும் கவலையும் அடைந்திருந்ததை அறிந்து, அவன் அவர்களுடைய கவலைகளை நீக்கி அவர்களுக்குத் தைரியமும் ஊக்கமும் உற்சாகமும் அளித்துக் கொண்டிருந்தான்.

மனேலலாஸன் அவனை நோக்கி, "அஜாக்ஷா! எனது அன்பா! ஓட்டமாக ஓடு! நமது அன்பிற்குப் பாத்திரமான பத்திர கலுஷனது பிணத்தைக் காப்பாற்று! அவனது பிணத்தையும் நாம் அகிலேசனிடம் ஒப்பித்தல் வேண்டும். அது, நாம் அக்கறையுடன் செய்ய வேண்டிய கடமை. அந்தக் காரியத்தையாவது நாம் செய்தல் வேண்டும். அதற்கு மேலாக நாம் செய்யக் கூடியது ஒன்றுமே இல்லை. இது ஒரு பெருங் கஷ்டமல்லவா! அவன் இப்போது நிர்வாணமாகக் கிடக்கின்றான். அவனுடைய ஆயுதங்களையும் நம் சத்துருக்கள் பறித்துக் கொண்டுவிட்டார்கள். ஒளி மிகுந்த அந்த ஆயுதங்களைப் பறித்துக் கொண்டு விட்டதற்காக, ஹெக்டர் மிகவும் பெருமையடித்துக் கொள்கின்றான்!" என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட பொழுது அஜாக்ஷனது மனது இளகித் துடித்தது.

உடனே அவ்விரு வீரர்களும் தங்களுக்கு உண்டாகிவிட்ட நஷ்டங்களுக்குச் சரியான ஈடு செய்துவிட வேண்டு மென்று தீர்மானித்துக் கோபத்துடன் பொங்கி யெழுந்து, நெருங்கி நின்றுகொண்டிருந்த சேனைகளைத் துளைத்துக் கொண்டு உட்சென்று திரும்பவும் யுத்தத்தை ஆரம்பித்தார்கள். இதற்குள்ளாகக் கொடியோனும், பிடிவாதக்காரனுமன ஹெக்டர், பத்திரகலுஷனுடைய தலையைக் கைப்பற்றிக் கொண்டு, அவனது உடலை துரோஜத் தெய்வங்களுக்குக் காணிக்கையாக அளிக்க ஏற்பாடு செய்து விட்டான். பத்திரகலுஷனுடைய தலைவிதி இவ்வாறிருந்தது.

ஆனல் அஜாக்ஷன் தனது கோபுரம் போன்ற உயர்ந்த கேடயத்தை உயரத் தூக்கியசைத்து ஆட்டியதைக் கண்ணுற்றவுடன், அந்த துரோஜ வீரன் ஹெக்டர் ஒரே பாய்ச்சலில் தனது தேரின் மேல் ஏறிக்கொண்டு, அந்தப் போர்க்களத்தை விட்டுத் திரும்பி ஓட்டம் பிடித்தே விட்டான்.

அவனுடைய பிருத்தியர்கள் அவன் இந்த யுத்தத்தில் சம்பாதித்த கீர்த்தியை எல்லோரும் அறியும் வண்ணம், அவன் பற்றிப் பறித்த பத்திரகலுஷனுடைய பள பளவென மின்னிய கவசங்களையும், ஆயுதங்களையும் ட்ராய் நகருக்குக் கொண்டு சென்றனர்.

இவ்வாறு ஹெக்டரும் அவனுடைய பிருத்தியர்களும் பத்திரகலுஷனுடைய பிரேதத்தை விட்டுவிட்டு ஓட்டம் பிடித்த பொழுது, மஹா வீரனை அஜாக்ஷன், தனது விசாலமான அகன்ற கேடயத்தை உயரத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, அதிபயங்கரமான அதன் நிழலில் கிடந்த அந்தப் பிரேதத்தைக் காத்துக் கொண்டு, சிறிது நேரம் அதன் முன்னும் சிறிது நேரம் அதன் பின்னுமாக நின்று வந்தான்.

அந்தகாரம் நிறைந்த ஓர் அடவியின் மத்தியில், வேடர்களுக்கும் வேட்டை நாய்களுக்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கும் ஒரு பெண் சிங்கமானது, எவ்வாறு பிங்கல வர்ணங் கொண்ட தனது குட்டிகளைக் காப்பாற்றுவதற்காக, அடி மேல் அடி வைத்துக் கொண்டு அவற்றைச் சுற்றி வருகின்றதோ அவ்வாறே அஜாக்ஷனும், பத்திரகலுஷனுடைய பிரேதத்தை பிரதக்ஷணம் வந்து காத்து வந்தான்.

மேலும், எவ்வாறு அந்தச் சிங்கமானது மனமடங்காத உற்சாகத்துடன் பொங்கி எழுந்து, தன்னுடைய சக்திகள் அனைத்தையும் ஒன்ருய்த் திரட்டிக் கொண்டு, நெருப்புப் பொறிகளைத் தெறித்துவரும் தன்னுடைய இருவிழிகளின் மேலும் தன்னுடைய இருண்ட புருவங்களைத் தாழ்த்திக் கொண்டு மனக் கலக்கத்துடன் விளங்குகின்றதோ, அவ்வாறும் அவன் விளங்கினன்.

இவ்வாறு இருக்கையில், இந்தப் பழிக்குப் பழி தீர்த்தே விட வேண்டும் என்ற தீர்மானங் கொண்ட பெருந் தன்மை

யுடையோனுன ஸ்பார்ட்ட சக்கரவர்த்தி, அவனே நெருங்கி யணுகவும் அவனுக்கு ஏற்கெனவே யுண்டாகி இருந்த துக்கம் மேன்மேலும் விருத்தி அடைந்து விட்டது.

அந்தச் சமயம், இந்த யுத்தத்திற் கலந்து உதவி புரிய வந்த லிஸியன் வீரர்களுக்குத் தலைவனுன கிளாக்கஸ் என்பவன், யுத்த களத்திலிருந்து புறங்காட்டி ஓடிய ஹெக்டரை இழித்து, அவனை நோக்கிப் பின் வரும் நிந்தனையான மொழிகளை யுரைத்தான் :—

"ஹெக்டரின் வீரசூர பராக்கிரமங்களை இனி நான் எந்த ஹெக்டரிடம் காண்பேன்! அவன் ஓர் ஆண் மகனைப் போன்ற உருவுடன் மாத்திரம் விளங்குகின்றனனே யன்றி அவனிடம் ஆண்மையைக் காணவில்லையே! ஏ! தலைவா! இது ஒரு வீரனுக்கு அழகாகுமா? உனது கீர்த்தியை எல்லோரும் பரக்க உரைத்தனரே! தகைமை யில்லாத ஒருவனைப் போற்றிப் புகழ்வது ஒரு பயனற்ற காரியம் அன்றோ!

நீ இப்போது இந்த யுத்தம் வேண்டாம் என்று திரும்பி விட்டனை. இனி நீ, உனது பிறந்தகமான ட்ராய் நகரைக் காப் பாற்றுவதற்கு வேண்டிய வேறு உபாயங்களை ஆராய்வாயாக. இலியன் இராஜ்ஜியத்தைக் காப்பாற்றுவதற்கு உன் ஒருவனுல் மாத்திரம் இயலுமா, அல்லது பிறநாட்டு வீரர்களது உதவியும் வேண்டுமா என்பதை நீ இப்போது ஆராய்தல் வேண்டும்.

இதுகாறும் நீ வீண் பெருமைகள் பேசி வந்தனை! இனியும் உன்னிமித்தம் லிஸியர்கள் தங்களது உயிரை வழங்குவார்களா? நீ அவர்களைத் துறந்து விட்டனை! நன்றி மறந்தவனுன உன்னிடம் இருந்து எங்களுக்கு என்ன கைம்மாறு கிடைக்க விருக்கின்றது? உனது நண்பனுன ஸார்ப்பீடனை நீ அனுதரவு செய்தனை! அதுவே உனது இழி குணத்தை வெளிப்படுத்தி விட்டது. அதற்கு வேறு சாட்சி வேண்டாம். மஹானுன ஸார்ப்பீடன் பட்டு விழுந்து விட்டான். அந்தப் பழியை இன்னும் தீர்க்க வில்லை! அவனைப் போலவே மீந்துள்ள நாங்களும் கூட எங்க ளுடைய உடல்களைப் பறி கொடுத்து உங்களுடைய கோட்டை மதில்களைக் காப்பாற்ற வேண்டுமா?

ட்ராய்க்குப் பரிந்து வந்து, யுத்தம் செய்து அவன் அந்த யுத்தத்தில் தனது உயிரை வழங்கினுன். நீ அவனை அங்கேயே விட்டு விட்டாய். அவனது பிரேதத்தை நாய் நரிகளும் ஆகா யத்தில் பறக்கும் காக்கை கழுகுகளும் கொத்தித் தின்கின்றன. நீ இவ்வாறு அவனைக் கைவிடலாமா?

எனது ஆணைப்படி நடக்கச் சித்தமுள்ள லிஸியன் ஒருவன் எவனுவது இங்கு இருப்பானேல், நான் அவனுக்கு 'ட்ராய் எக்கேடு கெட்டுப் போனுல் நமக்கு என்ன? நீ இங்கு விட்டுத் திரும்பிச் செல்!' என்றே ஆணை இடுவேன்.

பேரும் கீர்த்தியும் சம்பாதிக்க வேண்டும், பிறந்த நாட்டைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆவல்களுடன் அன்றோ ஒரு வீரன் தனது கத்தியை உருவிக் கொண்டு யுத்தத்தில் இறங்க வேண்டும். இந்த ஆவல்கள் ஒரு மனிதனுக்கு தேவர்களது கிருபையினுல் மாத்திரமே உண்டாகத் தக்கவை.

இவ்வகையான ஆவல்களை யுடைய ஓர் ஆண் மகனுவது துரோஜ ஜனங்களுள் இருப்பானுனுல், இந்தத் தாகத்துடன் ஒரே ஒரு துரோஜனுவது துடிப்பானுனுல், இன்னும் மேன் மேலும் முயன்று சேர்ந்து உழைத்து, இந்தத் தோல்வியை வெற்றியாக மாற்றிவிடலாம். அதோ! அங்குக் கிடக்கும் பிணத்தையும் ட்ராய் மதிலுக்குள் இழுத்துக் கொண்டு வந்து விடலாம்.

ஆஹா! பத்திரகலுஷனுடைய பிரேதத்தை மாத்திரம் நாம் பிடித்து எடுத்து வந்து விட்டால் ஸார்ப்பீடனது ஆயுதங்களையும், புனிதமான அவனது பூத வுடலையுங் கூட நாம் திரும்பவும் அடைந்து விடுவோமா? அப்போது நாம் கீரீஸ்காரருக்கும், அகிலேசனது அன்பனுக்கும் சரியான உத்தரம் அளித்தவர்களாகவும், நமது அன்பனுன ஸார்ப்பீடனுக்கு ஏற்ற மரியாதை செய்தவர்களாகவும் ஆகிவிடுவோம்.

ஆனுல் இவ்வாறெல்லாம் வார்த்தைகளைச் செலவழிப்பதினுல் பயனில்லை. பயன் ஒன்றுமே இல்லை! அஜாக்ஷன் வெகு தூரத்தில் வருவதைக் கண்ட கணமே ஹெக்டர் நடுங்குகின்ருன். பயந்து, பதுங்கி நெடுந்தூரம் முதுகு கொடுத்து ஓட்டம் பிடித்து விடுகின்ருன்.

நெருப்புப் பொறியுடன் கோபக் குறி கொண்டு கொதிக்கும் அவன் கண்ணெதிரில் நீ நிற்கவும் மாட்டாய்! இப்போது ஓட்டம் பிடிப்பதிலேயே நோட்டமாகவும் இருக்கின்ருய்!" என்ருன்.

இவ்வாறு இழித்துரைக்கப்பட்ட அந்த துரோஜ வீரன் அந்த லிஸியத் தலைவனைக் கடுத்த முகத்துடன் உற்றுப் பார்த்து, அவனுக்குப் பின் வருமாறு நிதானமாகவும் அதி கம்பீரமாகவும் மறு மொழி பகன்ருன் :—

"எனது நண்ப! உன்னைப் போன்ற ஒரு வீரன் ஹெக்டரது காது கேட்கும்படி இம் மாதிரியான வசனங்களை உரைத்தல் தகுமா? உனது இனத்தார் அனைவரிலும் நீயே மஹா புத்திமான் என்று நான் மதித்திருந்தேன். இந்த இழி சொற்கள் ஒரு புத்திமானுக்குச் சிறிதும் அழகில்லை. நான் அஜாக்ஷனைக் கண்டு பயப்படுகின்றேனு? எனது பிருத்தியர்களைக் கைவிட்டு விட்டு ஓடுகின்றேனு?

நீ முன் யோசனை இன்றி தாறு மாருகச் சொல்லிய வார்த்தைகள் அனைத்தும் வீண் என்று நான் சொல்லி

விடுவேன், நிரூபித்து விடுவேன். அது என்னால் ஆகக் கூடிய காரியம்தான். வீரர்கள் தங்கள் இரத்தத்தை வெள்ளம்போல் வடித்துவரும் இந்த யுத்த களத்தில், அவர்களுடன் கலந்து மும்முரமாக இந்த யுத்தத்தைச் செய்யவும், தடதடவென்று ஓடும் குதிரைகளின் பேரிடிபோன்ற காலோசைகளைக் கேட்கவுமே நான் துடிக்கின்றேன். அவைகள் தான் எனக்கு இன்பத்தைத் தருகின்றன.

ஆனால் ஜோவ் தேவரின் மேலான ஆணையை ஒருவராலும் கடக்க முடியாது என்பது, உனக்கு நன்றாகத் தெரியுமன்றோ! அதிபலவான்களையும் அவர் உதிர்த்து வாட்டி விடுகின்றார்; தைரிய சீலர்களை மயக்கி விடுகின்றார். ஒருகணம் அவர் ஒரு பராக்கிரம சாலிக்குப் பேரும் புகழும் அளித்து அவனைப் பெருமைப் படுத்துகின்றார்! மறு கணம் அதே வீரனது நெற்றியைச் சுற்றிக் கட்டியுள்ள தூமலர் வெற்றி மாலையை அறுத்துவிடுகின்றார்!

நீ இப்போது என்னுடன் வா. அதோ அங்கு நின்று வரும் வியூகங்களுள் நாம் நுழைந்து செல்வோம். நெருங்கி நின்றுள்ள அந்த வியூகங்களிடையே நமது வழியை வெட்டிக்கொண்டு முன் செல்லுவோம்! வா! நான் பயங்கொள்ளிதானா என்பதை நீயே இன்று நேரில் காண்பாய்! ஹெக்டரைக் கண்ட மாத்திரம் நடுங்காத கிரேக்கனும் உளனோ என்பதையும் அந்த கிரேக்கர்கள் தலைவன் இன்னும் அந்தப் பிணத்தைக் காத்துவரத் துணிவுடையவன் தானா என்பதையும் நீயே கண்கூடாகக் காண்பாய்!'' என்றான்.

இவ்வாறு உரைத்துவிட்டு, அவன் தன்னுடைய வீரர் குழாங்களை நோக்கிப் பின்வருமாறு உரத்துக் கூவினான்:—

''துரோஜர்களே! தார்தான்களே!! லிஸியர்களே!! மற்றும் உள்ள துணைவர்களே, நேசர்களே! வாருங்கள். எனது அன்பர்களே! நீங்கள் அனைவரும் மஹா வீரர்கள், ஆண்மையுள்ளவர்கள், பேரும் புகழும் உடையவர்கள். இப்போது உங்களது ஆண்மையைக் காரியத்தில் காட்டுங்கள். உங்கள் புராதனமான பெருமைகளை மறவாமல் நினைத்து வாருங்கள்.

என்னைப் பார்த்தீர்களா? ஹெக்டரான நான், மஹா வீரன் என்று பெருமையடித்துவரும் அகிலேசனுடைய ஆயுதங்களை அணிந்து கொண்டு பளிச்சென்று விளங்குகின்றேன். இவற்றை நான், அந்த அகிலேசனது நண்பனிடம் இருந்து பறித்து எடுத்தேன். இவை எனக்கே சொந்தமாகி விட்டன'' என்றான்.

இவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் அந்தப் போர்க்களம் முழுவதிலும் எட்டியெட்டி நடந்தான்; அப்போது அவனுடைய கிரீடத்தில் கட்டப்பட்டிருந்த கன்னங் கரேலென்ற துராய்கள் அவனது தலையின்மேல் அசைந்து ஆடின.

பின்பு அவன் அந்த விசாலமான யுத்த களம் முழுவதிலும், ஒரு முறை சரசரவென்று தன்னுடைய திருஷ்டியைச் செலுத்தினுன். அப்பொழுது ஒரு கணம் அவன் பத்திரகலுஷனிடமிருந்து பறித்துப் பிடுங்கிய, பிரகாசத்துடன் விளங்கிய ஆடை ஆபரண ஆயுதங்களை அவனுடைய பிருத்தியர்கள் மணல் மலிந்த கரையோரத்திலுள்ள புனிதமான இலியன் க்ஷேத்திரத்திற்குக் கொண்டு செல்வதும், மறு கணம் அவர்கள் நெடுந்தூரம்வரை பெருங் கூட்டமாகச் செல்லுவதும் அவனுக்குக் கட்புலனுயிற்று. கட்டுக்கள் அவிழ்ந்த அவனது போர்க் கவசமும் அந்தக் களம் முழுவதிலும் சிதறுண்டு கிடந்தது. பிரமாண்டமான அந்தச் சுமையையும் அவனுடைய பிருத்தியர்கள் ட்ராய்க்கு எடுத்துச் சென்று கொண்டிருந்தனர்.

இவ்வாறு தன்னுடைய சொந்தமான போர்க் கவசத்தை அவிழ்த்து எறிந்துவிட்டு, பத்திரகலுஷனிடம் இருந்து தான் பறித்த அதிதிவ்வியமும் அழிவில்லாததுமான ஆயுதங்களை அணிந்து கொண்டு அவன் அங்கு நின்றுன். அந்த ஆயுதங்கள் கேவலம் மனிதர்களால் உண்டாக்கப்பட்டவை அல்ல. அவற்றைத் தெய்வலோக வாசிகளே தங்கள் கைகளால் செய்து மனிதர்களுக்குப் பரிசாக அளித்திருந்தனர். அவர்கள் அவற்றை முதன் முதலாகப் பிலியூஸ்ஸுக்குப் பரிசாக அளித்தனர். விருத்தனுன பிலியூஸ் என்பவன், அவற்றை அகிலேசனுக்கு அளித்தான். தனது தகப்பனைப்போல் நெடுநாள் வாழ்ந்துவரும் பேறு பெற்றிலனுதலால், அகிலேசன் அந்த ஆயுதங்களை இப்போது அணியாதொழிந்தான். அவனது ஊழ்வினை இவ்வாறிருந்தது!

இவ்வாறு வெற்றிச் செருக்குடன் வெகுதூரத்தில் இருந்து நாற்புறமும் ஒளியை வீசிக்கொண்டு நின்ற அந்த வீரனுன ஹெக்டரைக் காற்றினுல் அடியுண்டு நிலையின்றித் தவித்து வரும் வானத்தையுங் கூடத் தமது இடியினுற் பொடித்து விடும் தேவர் இரக்கத்துடன் கடாட்சித்தார். ஏகாந்தமான ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு அவர் ஊழ்வினைப்படிக் காரியங்கள் நிகழ்ந்து வருவதை மிகவும் கருத்துடன் கவனித்து வந்தார். சற்றுப் பொறுத்து அவர் அலங்காரமான ஆபரணங்களுடன் விளங்கிய தமது திருமுடியை அசைத்தார். அப்போது ஒலிம்பஸ் பர்வதமே திடுக்கிட்டு அசைந்து நடுங்கியது. அவர் அப்பொழுது பின்வரும் வசனங்களை உரைத்தார்:—

“ஆஹா! இது என்ன பரிதாபம்! அட மடையா! உனக்கு வரவிருக்கும் அழிவை நீ அறிந்திலே! இந்தப் பெருமையின் வாழ்வெல்லாம் ஒரு கணம் தான் என்பதையும், பின்னுல் உனக்கு என்ன கதிகள் வரக்காத்திருக்கின்றன என்பதையும் நீ அறியாய்! தேவலோகத்தில் செய்யப்பட்டதும், அதிதிவ்வியமாகப் பிரகாசிப்பதுமான கவசத்தை அணிந்து கொண்டு நீ அதிகம்பீரமாக நிற்கின்றனை. உன்னைக் கண்ட சேனைகளெல்லாம் அகிலேசனே வந்து விட்டதாக நினைத்து நடுங்குகின்றனர்.

மஹானுன அகிலேசனது அத்தியந்த நண்பனுன பத்திர கலுஷன் உனது அம்பினுல் குத்துண்டு உயிர் நீத்துக் கீழே கிடக்கின்ருன். இவ்வாறு மடிந்து விழுந்து விட்ட அதிபராக்கிரமசாலியான வீரனிடமிருந்து நீ இந்த ஆயுதங்களைப் பறித்து எடுத்து விட்டனே! இவை சாமான்யமானவை அல்ல. மனிதரில் சிரேஷ்டனுன ஒரு மஹா வீரன் இவற்றை ஒருக்கால் அணிந்திருந்தான் என்பதை நீ அறிந்திலே.

என்ருலும் நீயும் சிறிது பொழுது உன்னுடைய காலத்தைச் சுகமாகக் கழி. எனது பிரசாதத்தினுல் நீயும் ஒரு தினம் பேரும் கீர்த்தியும் புகழும் உடயவனுய் விளங்குவாய். மிகுந்த ஆடம்பரத்துடனும் ஜ்வாலேயுடனும் விளங்குவாய்!

அதன்பின் உனது ஒளி மங்கிவிடும்! அப்போது என்ன என்ன துக்கங்கள் சம்பவிக்கும் என்பதையும் நான் சொல்ல வேண்டுமா? அப்பொழுது யுத்தத்திலிருந்து திரும்பி வரும் ஹெக்டரை வரவேற்பதற்காக அந்திரமகியானவள் ஆனந்த பாஷ்பத்துடன், அவனே எதிர்கொள்ள எழுந்து வரமாட்டாள். உனது சோர்வுற்ற உடலில் நீ அணிந்துள்ள பிலிதீசனுடைய ஆயுதங்களேக் கழற்றி விடுவதற்காக, அவள் அன்பும் ஆத்திரமும் இயைந்த உபசாரங்களுடன் உன் முன் வரமாட்டாள்" என்ருர்.

பின்பு அவர் கடுத்த முகத்துடன் தம்முடைய தலேயை அசைத்தார். அதைக் கண்ணுற்ற சில்லறைத் தேவர்கள், அவர் சொற்படிக் காரியங்கள் நடந்தே தீரும் என்றும், மேல் நடக்கவிருக்கும் நடவடிக்கைகள் அனேத்தும் அவருக்குச் சம்மதம் தான் என்றும் அறிந்து கொண்டனர்.

அப்போது ஜோவ் தேவரின் நியமனப்படிப் புத்துயிர் கொண்டு, ஆத்திரத்துடன் துடித்தெழுந்த ஹெக்டரின் ஸைனிகர்கள், ஒரே நொடியில் தங்கள் தங்களுடைய ஆயுதங்களே ஏந்திக்கொண்டு எழுந்து வந்து அவனேச் சுற்றி வளேத்துக் கொண்டனர்.

அவனும் அந்தத் தேவரின் கிருபையினுல் பூரணமான சக்தியுடையவனுய் விளங்கினுன். அவனுடைய அவயவங்கள் பொங்கிப் பெருத்தன. அவனுடைய இரத்த நாளங்களனேத்திலும், ஒரு நூதனமான உணர்ச்சியானது திடீரெனக் கிளம்பி' அவற்றின் வழியே வெகு துரிதமாக ஊறிச் சென்றது.

அவனுடைய தேகத்தில் இருந்த இரத்தமும், அதிவேகத்துடன் பெருத்த அலேகள் போல் மோதியது. மார்ஸ் தேவரே தடதடவென்று ஆத்திரத்துடன் வந்து அவனுடைய மனத்தைத் தம்முடைய இருப்பிடமாக்கிக் கொண்டு விட்டார்.

அதன் பின் அவன் தன்னுடைய துணேவர்களுக்கும் ஸைனிகர்களுக்கும் உற்சாகம் உண்டாகுமாறு அவர்களுக்குத்

தன்னுடைய ஆணைகளை உரக்க உரைத்தான். அவ்வாறு உரைத்துக் கொண்டே அவன் அந்த யுத்த களம் முழுவதிலும் எட்டி எட்டி நடந்தான். அப்போது அவனுடைய தோற்றமும் நடையும் அகிலேசனையோ, அல்லது ஒரு தேவனையோ நிகர்த்து இருந்தன.

அவன் ஒரு கணம் மெனிஸ்தீஸனையும், கிளாக்கஸ்ஸை யும், மிடானையும், கண்ணெடுத்துப் பார்த்து அவர்களை உற்சாகப் படுத்தினன். மறுகணம் போர்ஸிஸ்க்ரோமியஸ், ஹிப்போத்தாஸ் என்பவர்களை நோக்கி அவர்களது மனத்தில் அனல்போன்ற வேகத்தை உண்டாக்கினன். மஹானை தெர்ஸிலோக்கஸ்ஸின் மனத்திலும் அவ்வாறே ஆத்திரம் உண்டாயிற்று. ஹெக்டரின் கூக்குரலைக் கேட்ட அஸ்திரோப்பியஸும், வரும் பொருளுரைப் பதில் வல்லவனை இன்ஞேமஸ்ஸும் உள்ளம் பொங்கினர்.

"ஸைநிகர்களே! நீங்களனைவரும் நான் சொல்லுவதைக் கேளுங்கள்! சேய்மையிலும், அண்மையிலுமிருந்து, பல நாடுகளிலு மிருந்து திரண்டு வந்துள்ள கணக்கற்ற வீரர்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள்.

ஆடம்பரங்களுடன் பெருமை கொண்டாட வேண்டு மென்றுவது, நமது ஜனத்தொகையைப் பெரிதென்று பகட்டுடன் விளக்குவதற்காவது இந்த யுத்தத்தை ஒரு மஹா ஸபா போல் கொண்டாடிக் களிப்பதற்காவது, நாங்கள் உங்களை வெகு தூரத் தில் இருந்து வரும்படி வேண்டி அழைக்கவில்லை. இந்த யுத்தத் தில் கலந்து உழைக்க வேண்டுமென்று. விரும்பியே உங்களை அழைத்தோம். நீங்களும் யுத்தம் செய்யவே வந்தீர்கள்.

வலி மிகுந்த ஒரு சத்துருவை, புறங்காட்டி யோடும்படித் துரத்தவும், நமது வீடு வாசல்களையும் மனைவி மக்களையும், மற் றும் நமக்கு இப்போதுள்ள ஆஸ்திகளையும் காப்பாற்று வதற்காக வும், நமக்குப் பின் வருவோருக்கு வரக்கூடிய கேடுகளை நீக்கு வதற்காகவுமே, நீங்கள் இங்கு வந்தீர்கள்.

இதன் நிமித்தம், நீங்கள் எங்களுடைய ஆஸ்திகளை அனு பவித்து வருகின்றீர்கள். அன்னபானுதிகளை அருந்தி இன்புறு கின்றீர்கள். யுத்தஞ் செய்து அலுத்துப் போய்விட்ட ட்ராய் நாட்டில் மீந்துள்ள வஸ்துக்கள் அனைத்தையும் நீங்களே ஆராய்ந்து பொறுக்கி யெடுத்துக் கொள்கின்றீர்கள்.

ஆதலால் இப்பொழுது, நீங்கள் மான மரியாதைகளும் உபசாரங்களும் செய்யப்படும் பத்திரகலுஷனுடைய ஆடை ஆபரணங்களில் ஒருபாதியை அவனும், மறுபாதியை ஹெக்டரும் பங்கிட்டு எடுத்துக் கொள்ளலாம். இந்தப் பெருங் காரியம் செய் ததினுல் வரும் பெயரையும் புகழையும் அவ்விருவரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளலாம்!" என்றுன்.

இவ்வாறு அவன் சொல்லிய வசனங்களைக் கேட்ட அந்தச் சேனை சமுத்திரமானது, தன்னுடைய பீதியையும், பயத்தையும் அறவே ஒழித்து விட்டது. வீரர்கள் ஒருவரோடொருவர் சேர்ந்து நெருங்கினர். தங்களுடைய ஈட்டிகளை நீட்டினர். அணிவகுப்பில் இருந்து சிறிதும் கலையாமல் கிரேக்கர்களை நோக்கி ஆத்திரத்துடன் சென்றனர். வீரன் ஒவ்வொருவனும் அஜாக்ஷனையே குறிவைத்துக் கொண்டு சென்றான். அவனிடமிருந்து பத்திரகலுஷனுடைய பிரேதத்தைக் கவர்ந்து பேரும் புகழும் அடைய வேண்டுமென்று துடித்தான்.

ஆயினும் என்ன பயன்? அவர்களுடைய ஆவலும், ஆத்திரமும் அவலமேயாயின. எண்ணிறந்த வீரர்கள், அந்தக் களத்தில் பட்டு விழுந்தனர்; அவர்களுடைய பிரேதங்கள் அந்தக் களத்தைப் பரப்பி யிருந்தன! பத்திரகலுஷனுடைய பிரேதத்தைச் சுற்றிலும் எத்தனையோ வீரர்கள் பலியாக விழுந்தனர்!

இவ்வாறு துரோஜர்கள் ஒரு பெருத்த புயலைப்போல் திரண்டு வருவதை நெடுந் தூரத்தில் இருந்து கண்ணுற்ற மஹானை அஜாக்ஷன், இந்த யுத்தத்தில் தனக்கு உதவி வந்த வீரனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான்:—

"எனது நண்பா, நமது அழிவு காலம் இன்று வந்தே விட்டது. ஐயோ! இது என்ன கஷ்ட காலம்! நாம் புரிந்த யுத்தங்களும், அவற்றில் நாம் அடைந்த புகழும், பெருமையும் இன்றுடன் முடிந்தே போய் விடும்!

இந்த துரோஜப் போர்க் களத்தில் கழுகுகளுக்கு இரையாகக் கிடக்கும் இந்தப் பிணத்தைக் காத்து வருவதால் மாத்திரம் நமது காரியம் முடிவு அடைந்து விடாது! நாமும் மடிந்து போக வேண்டியது தான்! பத்திரகலுஷனுக்கு நேர்ந்து விட்ட கெட்ட கதியானது என்னுடைய நண்பா! உனக்கும் எனக்கும் மற்றுமுள்ள நம்முடைய எல்லா வீரர்களுக்குமே கிடைத்து விடலாம்!

அதோ அங்கு பார்த்தாயா? அதிபயங்கரமான ஹெக்டர் ஒரு பெருத்த புயலைப்போல் ஆரவாரம் செய்துகொண்டு வருகின்றான்! அந்தப் புயல் நெடுந்தூரம் பறந்து வருகின்றது! வெகு கொடியதாக அடித்துத் தாக்குகின்றது! நம்முடைய தலைகளின்மேல் ஓர் இடிபோலும் இடித்து முழங்குகின்றது!

நம்முடைய கிரேக்கர்களில் எவருக்காயினும், நமது கூக்குரல் காதுக்கு எட்டுமானால், அவர்கள் அனைவரையும் கூவி அழை! அவர்களில் அதி தைரியமுள்ள வீரர்களைக் கூப்பிடு! இத் தருணம் அவர்கள் அனைவரும் வந்தே தீரவேண்டும்!" என்றான்.

இவ்வாறு நியமிக்கப்பட்ட அந்த வீரன் உரத்துக் கூவிய பொழுது அவனது குரலானது, அந்த அகன்ற போர்க்களம்

முழுவதும் பரவியது. அந்தக் களத்தின் நாற்புறத்திலுமிருந்து அதன் பிரதியொலியும் கிளம்பியது! அவன் எவ்வாறு கூவினன் தெரியுமா, சொல்வேன் கேளுங்கள் :—

" மனிதர்களை அடக்கியாளும் பெருமை வாய்ந்த தலைவர்களே! அரசர்களே! தேவர்களின் கிருபையினல் புகழுடன் விளங்குபவர்களே! அதிரிதேசர்கள் இருவராலும் தக்க மரியாதைகளுடன் போற்றப்படுபவர்களே! ஆர்கிவ் வர்க்கத்தினர் அனைவருக்கும் துணைவர்களே! அவர்களைக் காத்து ரக்ஷிப்பவர்களே! எல்லோரும் வாருங்கள்!

எனது குரல் உங்கள் எல்லோருக்கும் நன்ருய்த் தெரியுமன்ருே! வெகு தூரத்தில் இருப்பவர்களுக்கும் எனது குரல் நன்ருய்த் தெரியுமே! இந்தக் களத்தில் கிளம்பியுள்ள மேகம்போன்ற புழுதியினல், நான் உங்கள் அனைவரையும் காண முடியவில்லை. அதனல் நீங்கள் என்னை அனுதரவு செய்ய வேண்டாம். நீங்கள் அனைவரும் வாருங்கள்.

தங்குதடை இன்றியும் முழு மனத்துடனும் தாராளமாக உங்களுடைய ஆயுதங்களைப் பிரயோகியுங்கள். பத்திரகலுஷனுடைய பிரேதத்தை இந்த ட்ராய் நாய்கள் கவர்ந்து செல்லாமல் காப்பாற்றுங்கள்!" என்ருன்.

இந்தக் கூக்குரலைக் கேட்டு, அதன்படி காரியங்களைச் செய்வதற்காக ஆயிலியனுன அஜாக்ஷன் முதன்முதலாக முன் வந்தான். அவன்வெகு விரைவாக நடந்து முன்வந்து, தன்னுலான உதவியைச் சிறிதும் தங்கு தடை இன்றிச் செய்தான்.

அதன் பின் விருத்தாப்பியத்தினல் வலிகுன்றியிருந்த இதோமினியஸ் என்பவன் சிறிது நிதானமாக வந்தான். அவனுக்குப் பின் ஒரு வீரனைப்போல், கோபதாப ஆத்திரங்களுடன் கொதித்துத் துடித்த மெரியோன் வந்தான்.

அவனுக்குப் பின் நெடுந்தூரம் வரை ஒருவர்பின் ஒருவராக வந்த வீரர்களையும், அவர்களது தொகையையும் யாரால் சொல்ல முடியும்? அது என்னல் ஆகக்கூடிய காரியமல்ல! ஆனல் அவர்கள் அனைவரும் கிரேக்கர்கள்தான் என்ருலும், அவர்கள் அனைவரும் பேரும் கீர்த்தியும் சம்பாதிக்க வேண்டும் என்று துடித்தனர் என்று மாத்திரமே நான் சொல்லுவேன்.

இவர்கள் அனைவரையும் தாக்கி அடிக்க வேண்டும் என்ற ஆத்திரத்துடன், ஹெக்டர் தன்னுடைய பிருத்தியர்களைக் கூட்டிக்கொண்டு முன் வந்தான். அவனுடைய சேனையில் இருந்த ட்ராய் நாட்டார் அனைவரும் ஒரே மனத்தினராய்ப் பெருங் கூச்சலிட்டுக் கொண்டு தடதட வென்று முன் வந்தனர்,

ஒரு நதியானது பெருக்கெடுத்துத் தன்னுடைய இரு கரை களையும் புரட்டிக் கொண்டு ஒரு சமுத்திரத்தை நோக்கி ஓடிச் சென்று தன்னுடைய சிற்றலைகளுடன், அந்தச் சமுத்திரத்தில் கலக்குமிடத்து, அந்தச் சமுத்திரத்தில் உள்ள மலைபோன்ற பெருந் திரையானது, நுரையைக் கக்கிக் கொண்டு அச்சிற்றலைகளை மோதிவிட்டால், அந்நதியின் வேகமானது, அதன் முகத்துவாரத் திலேயே ஒரேயடியாய்த் தணிந்துபோய் விடுகின்றது. அப்போது சமுத்திரமும் பொங்கிக் கொதித் தெழுந்து, கொந்தளிப்புடன் தனது ஸ்வரூபத்தையும் காட்டிவிடுகின்றது. அந்த நதிக்கரையும் வெகுதூரம் வரை அதிர்ந்து நடுங்குகின்றது. அப்போது அதன் இரைச்சல்களைக் கேட்டு, வெகுதூரத்தில் உள்ள பெரும் பாறை களும், உக்காரம் போட்டுக் கொண்டு உறுமிப் பிரதித் தொனிகளை உண்டாக்குகின்றன. அந்தக் களத்தில் அவ்வமயம் நடந்த காரி யங்களெல்லாம், இவ்வாறு ஆறுங்கடலுமாய்க் கலப்பது போலவே இருந்தன.

அப்பொழுது பித்தளையினுல் உண்டாக்கப்பட்ட கவசங்களை அணிந்து கொண்டு, வட்ட வடிவமான அணிவகுப்பில், உறுதி யாக அகலாது நின்று வந்த பயங்கர ஸ்வரூபிகளான அக்கேய ஸைனிகர்களும், துரோஜர்களுக்குச் சிறிதும் இளைக்காமல், தங்க ளுடைய ஸ்தானங்களில் நின்றே வந்தனர்.

இவ்வாறு இருதிறத்துச் சைனிகர்களும் யுத்தம் செய்யத் தீர்மானித்து நிற்கையில், ஜோவ் தேவரானவர், அந்த யுத்தகளத் தில் ஒரு பேரிருளைப் புகுத்தி விட்டார்! அப்போது இரவைப்போல் அந்தக் களத்தைக் கவர்ந்துவிட்ட அந்த இருளில், அவர் ஒளி யுடன் விளங்கிய இருதிறத்து வீரர்களுடைய ஆடை ஆபரணங் களையும் ஆயுதங்களையும், தலை அணிகளையும் மறைத்து விட்டார்!

இதற்கு என்ன காரணம் என்ருல் சொல்லுவேன் கேளுங்கள் :—

பத்திரகலுஷன் என்னும் மஹா வீரன் உயிரோடு இருக் கையில் ஜோவ் தேவரின் அன்பிற்குப் பாத்திரமாகவே வாழ்ந்து வந்தவன். அவருக்கு அப்பிரியம் உண்டாகுமாறு அவன் ஒரு நாளும் நடந்து வரவில்லை. அவருக்குப் பிரியனுகவே வாழ்ந்து வந்தான். ஆதலால் அவனுடைய பிரேதமானது ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகளுக்கு இரையாகும்படி விடலாகாது என்று கருதி அவர், அதை மிக விசேஷமான கவலையுடனும் கருத்துடனும் காத்து வந்தார்.

இப்போது நடந்த இந்த யுத்தத்தில் கிரேக்கர்கள் முதன் முதலாகத் தாக்கப்பட்ட பொழுது, அவர்கள் அந்த அடியைத் தாங்க இயலாமல் புறங்கொடுத்துத் தாழ்ந்தனர். அதுதான் தருணம் என்று கண்ட துரோஜர்கள், உடனே பத்திரகலுஷனு டைய பிரேதத்தைப் பிடித்துக் கொண்டனர்.

அப்போது கிரேக்கர்கள், ஒரே மூச்சாய், மிகுந்த ஆவலும் ஆத்திரமுங் கொண்டு பின்னும் ஒன்ருய்க் கூடி அஜாக்ஷ திலமானைத் தங்கள் தலைவனுகக் கொண்டு, அன்று நடந்த பழி யைத் தீர்த்தே விடுவோம் என்று திரும்பித் திரளாக வந்தனர்.

பிலியூஸின் மகனுன திலமானுக்கு அஜாக்ஷன் என்றும் இரண்டாவது பெயர் உண்டு. அவன் ரூபலாவண்ணியங் களிலும், உயரத்திலும், உயர்விலும், அஜாக்ஷனுக்கு மாத்திரம் அடுத்தவனுக விளங்கியவன்.

அவன் தனக்கு முன்பாக யுத்தத்தின் முன்னணியில் நின்ற சத்துருவின் சேனைகளை வெட்டிப் பிளந்து கொண்டு தலைகால் தெரியாமல் வேகமாக அவர்களைத் தாக்கினுன்.

தன்னைக்கண்டு பயந்த வேடர்களும், குரைக்கும் வேட்டை நாய்களும் அடைக்கலம் புகுந்துள்ள ஓர் அடர்ந்த காட்டினுட் புகுந்து, அவ்வேடர்களையும் வேட்டை நாய்களையும் அடித்து, அவை கள் சிதறுண்டு நெடுந்தூரம் வரை ஓட்டம் பிடிக்கும் படித்துரத்தி விடும்ஒரு மலை மேல் வாழும் காட்டுப் பன்றியைப் போல், அஜாக்ஷ திலமான் துரோஜர்களைத் தாக்கி யடித்தான்.

மனவலிவுடைய பிலாஸ்கஸின் மரபில் வந்தவனும் லித்தூஸின் புத்திரனுமான ஹிப்போத்தூஸ் என்பவன், பத்திர கலுஷனுடைய பிரேதத்தை அந்த யுத்த களத்தில் தர தரவென்று இழுத்துக் கொண்டு சென்ருன்.

அவன் பந்திரகலுஷனுடைய கணுக்கால்களைக் குத்தித் துளைத்து, அவ்வாறு உண்டாக்கிய இரண்டு புண்களின் வழியே கயிறுகளைப் பாச்சி அவனுடைய பாதங்கள் இரண்டையும் சேர்த் துக்கட்டி விட்டான். இந்தப் பெரும் பாவத்திற்குப் பலன் அவனுக்குக் கைமேல் கிடைத்து விட்டது!

மஹானுன அஜாக்ஷனது வேலானது அந்தப் பழியைத் தீர்த்து அவனது இரத்தத்தை ஆருய்ப் பெருக்கியதுமன்றி, அவன் அணிந்திருந்த பித்தளையிலான தலைச் சீராவின் இரு கன்னங் களையும் இரண்டாய்ப் பிளந்து விட்டது. அதனுல் அந்தத் தலைச் சீராவானது தவிடு பொடியாக நொறுங்கி விட்டது மன்றி, அதுவும் அதைக் கட்டி யிருந்த குதிரை மயிரும், அந்தக் களத்தில் விழுந்து உருண்டு புரண்டன. அவனும் நரம்பு தளர்ந்தவனுய்த் தரையின் மேல் குப்புற விழுந்தான். அப்பொழுது அவன் மண்டையைத் தாக்கிய அடியின் வேகத்தினுல், அவன் மூளையும் பளிச் சென்று பிதுங்கிக் கொண்டு வெளியே வந்து விட்டது.

இவ்வாறு தன் காரியம் பலிக்காமற் போகவே, அவன் பத்திரகலுஷனுடைய காலை விட்டு விட்டு, அவனைப் போலவே

பரிதாப நிலையை யடைந்து, அவனுக்கு ஒரு உற்ற நண்பனுக, அவன் மேலேயே விழுந்து விட்டான்.

அவனுடைய தேசமானது, லாரிஸ்ஸாவுக்கும் அப்பால் நெடுந் தூரத்தில் இருக்கின்றது. அவன் பெற்ரேர்கள் அவன் விஷயமாகக் கொண்டிருந்த கவலைகளும், பட்டபாடுகளும் வீணே யாயின. இந்தப் பாவிப் பிள்ளை இவ்வாறு அற்ப ஆயுளில் அழி வடைந்து விட்டான்! இந்த இளங்காளை மஹானுன அஜாக் ஷனுல் வெட்டுண்டு வீழ்ந்து இருள் சூழ்ந்த நரக உலகம் புகுந்து விட்டான்!

இச்சமயத்தில் ஹெக்டர் சும்மா இருக்கவில்லை. அவனது வேலானது பின்னும் ஒருமுறை அஜாக்ஷனை நோக்கிப் பறந்தது. அது ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு, ஓர் எமனைப் போல் தன்னையே நோக்கி வருவதைக் குறிப்பாய்க் கவனித்த அந்தக் கிரேக்கன், ஒரு புறமாக விலகிக் கொண்டு, உயிருடன் தப்பிப் பிழைத்தான்.

ஆனுல் அந்த வேலானது, ஒரு பாம்பைப் போல் சீறிக் கொண்டு முன் சென்று, போஷியப் பிரகிருதிகள் அனைவரிலும் தலைசிறந்த தைரியமுள்ள வீரனும், உத்தமமான அரும்பெருங் குணங்களுடையவனும், மஹானுன இப்பீட்டஸ்ஸின் புத்திரனும் மனவுறுதி உள்ளவனுமான ஷீடியஸ் என்பவனைக் குத்திக் கிழித்துத் தரையில் நீள நெடுக வீழ்த்தி விட்டது. பிரஸித்தி பெற்ற அரணுன கோட்டை கொத்தளங்களுள்ள பானேப்பே என்னும் சிறிய பட்டினத்தைத் தனது தலைநகரமாகக் கொண்டு, அதன் சுற்றிலு மிருந்த பிரதேசமனைத்தையும் அவன் ஆண்டு வந்தவன்.

ஹெக்டருடைய வேலானது அவனது தொண்டையில் ஆழ மாகப் பாய்ந்து அங்கு இரத்தத்தைக் குடிந்து, தனது தாகத்தைத் தணித்துக் கொண்டு, அவனது தோளையும் ஊடுருவித் துளைத்துக் கொண்டு சென்று அங்கேயே நின்று விட்டது. அப்போது அந்த வீரன் பொத்தென்று விழுந்து விட, அவன் அணிந்திருந்த பளு வான ஆயுதங்கள் கல கலவென்று சப்தித்தன. அந்தப் பெரும் சப்தம், அந்தப் போர்க்களம் முழுவதையும் பரவிச் சென்று, எதி ரொலியைக் கிளப்பிற்று.

அப்போது, திலமானுல் கொல்லப்பட்ட ஹிப்போத்தூஸின் பிரேதத்தை போர்ஸிஸ் என்பவன் காத்து வந்தான். திலமான் அவனையும் தன்னுடைய ஈட்டியினுல் குத்தி அவனது வயிற்றைக் கிழித்து விட்டான். அந்த போர்ஸிஸ் அணிந்திருந்த போர்க்கவச மானது அந்த ஈட்டியின் வீழ்ச்சியினுல் படீர் என்று வெடித்து உடைந்து போய் விட்டது மன்றி அந்த ஈட்டி அவ்வீரனது குடலை யும் பிதுக்கிவிட, அது தட தடவென வெளியே ஓடி வந்தது. அவன் ஒரு கொடிய வலிப்பு நோயினுல் தவிப்பவன் போல்,

பதை பதைத்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டு அந்தக் களத்தின் மணலின் மேல் கிடந்த வண்ணம், வலி இழந்த தன்னுடைய இரு கைகளாலும், புழுதியை அள்ளிப் பிடித்துக்கொண்டு, தன்னுடைய உயிரை விட்டான்.

இந்த ஆபத்தைக் கண்ணுற்ற துரோஜர்கள், தங்கள் மேல் ஓர் இடி விழுந்து விட்டது போல் திடுக்குற்றுப் பயந்து, ஒரேயடியாய்ப் பின்னடைந்து விட்டனர். அதை யறிந்த ஆர்கிவ்கள், ஜயகோஷத்துடன் முன் சென்று, இறந்தவனுடைய தேகத்தில் இருந்த ஆடை ஆபரண ஆயுதங்களைக் கழற்றிக் கொள்ளை கொண்டனர்.

இந்தச் சமயத்தில் இவ்வாறு கிரீஸினுல் நிர்ப்பந்தப் படுத்தப் பட்ட ட்ராய்ச் சேனையானது தன்னுடைய சத்துருக்களுக்குத், தோற்றுக் கீழ்ப்படிந்து, யுத்தகளத்தை விட்டுப் புறங் காட்டித் தன்னுடைய கோட்டை கொத்தளங்களுக்கு ஓட்டம் பிடித்தே யிருக்கும்! மேலும், இப்போது ஜோவ் தேவர் தங்களுக்கு விரோதமுள்ளவராகவே யிருந்தும், கிரேக்கர்கள் தங்களுக்கு இயல்பாகவே உள்ள பொறுமையுடனும் இன்று கிடைத்த வெற்றியினுல் களிப்படைந்தவர்களுமாக, மேன் மேலும் ஊக்கத்துடன் உழைத்து இந்த யுத்தத்தின் போக்கையே மாற்றி யிருப்பார்கள்!

ஆனுல் காரியங்கள் அவ்வாறு நிகழவில்லை. பீபஸ் பகவானுனவர் விருத்தனுன பெரிபாஸ்ஸைப்போல் தன் உருவத்தை மாற்றிக் கொண்டு, ஈனியஸ்ஸின் முன் சென்று, இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளுமாறு அவனுக்கு உருக்கமாக உபதேசம் செய்தார்.

அந்தப் பெரிபாஸ் என்பவன், ஈனியஸ்ஸின் தந்தையான அங்கைஸிஸ் என்பவனுக்கு வெகு காலம் அன்புடன் தொண்டுகள் புரிந்தவன். மஹா புத்திமான் என்றும், அந்தப் புத்திக் கேற்ற சாமர்த்தியசாலி என்றும் பிரஸித்தி யடைந்திருந்தவன்.

பீபஸ் பகவான் "தலைவ! ட்ராய் நாடானது தரைமட்டமாகி விட வேண்டுமென்று தெய்வங்கள் தீர்மானித்து விட்டன, என்றுலும் அதைக் காப்பாற்றியே தீர வேண்டுமென்று நீங்களனைவரும் உங்களாலான முயற்சிகள் அனைத்தையும் செய்தீர்கள். உங்கள் முயற்சிகள் இதுவரை உங்களுக்கு நற்பயனை அளிக்கவில்லை. இனியும் நீங்கள் செய்யக் கூடிய உபாயங்கள் ஏதேனும் உளவோ?

இது வரையிலும் உங்கள் வீரர்கள் கள்ளங் கபடமின்றி உண்மையாகவே உங்கள் நன்மையைக் கோரியவர்களாய்த் தங்கள் வீரசூர பராக்கிரமங்களுடனும், எண்ணிறந்த தங்களுடைய ஸைனிகர்களுடனும், தங்கள் யுத்த தந்திரங்களனைத்தையும் பிரயோகித்து, உழைத்து வந்திருக்கின்றனர்.

அவ்வாறு உழைத்து வந்து அவர்கள் அடியோடு பாதாளத்தில் முழுகிப் போக இருந்த இந்த ராஜ்ஜியத்தை எதிரிகளிடமிருந்து காப்பாற்றியும் இருக்கின்றனர். அந்தக் காரியம் எளிதில் ஆகி விடவில்லை ; மிகவும் கடினமானதாகவே இருந்தது. அவ்வாறு நெடுங்காலம் உழைத்து, அவர்கள் விதியையும் வென்று விட்ட னர் ; அதைப் புறக் கணித்தும் விட்டனர்.

ஆனால் இப்பொழுது, நீங்கள் என்ன செய்கின்றீர்கள், என்றால், அதையும் சொல்லுவேன் கேளுங்கள். உங்களுடைய நடவடிக்கைகள் உங்களுக்கு மானக் கேட்டைத் தருவனவாகவே இருக்கின்றன. உங்களுக்கு இப்போது நல்ல காலம் தான். ஜோவ் தேவரும், தாம் உங்கள் பங்கில் இருப்பதாகவே சொல்லு கின்றார். அவர் உங்களுடைய யுத்தத்தில் கலந்து கொண்டு உங் களுக்கு உதவி செய்தும் வருகின்றார்.

இவ்வாறிருக்க நீங்களே, உங்கள் தம்மில் ஒருவரோடொரு வர் சண்டை யிட்டுக் கொள்கின்றீர்கள். இது மிகவும் வெட்கக் கேடான காரியம். ஜோவ் தேவருக்கு ட்ராய் நகர் அழிந்து போக வேண்டும் என்ற விருப்பமில்லை. ஆனால் உங்களுடைய காரியங்களைக் கண்டு, அவர் வெறுப்படைந்து, தாமே இந்த ட்ராயை அழித்து விடுவார் !'' என்றார்.

இவ்வாறு, வேற்று உருவத்துடன் தன்முன் தோன்றிய தேவர், இன்னார் என்று அறிந்த ஈனியஸ் ஹெக்டரை விளித்துப் பின்வருமாறு கதறினான் :—

"ஐயோ ! இது என்ன அவமானம் ! வெட்கக் கேடு ! அழி வில்லாத இழிவு ! நமது கோழைத் தனத்தை நான் என்னென் றுரைப்பேன் ! நாம் அதற்கு இரையாகி விட்டோமன்றோ !

நாம் நம்முடைய கோட்டை கொத்தளங்களை நோக்கி யோடுகின்றோமே ! யுத்தத்தையும், இன்று அதில் நமக்குக் கிடைக் கக் கூடிய வெற்றிகளையும் புறக்கணித்து விட்டு ஓடுகின்றோமே !

ஒரு தெய்வமே இப்போது என் உள்ளத்தில் புகுந்து. 'ஜோவ் தேவர் ட்ராய் நாட்டாருக்கு உதவி செய்கின்றார், அதிற் சிறிதும் ஐயமில்லை ! என்று உரைக்கின்றது. அந்த வசனத் தைக் கேட்டு என்னுடைய உள்ளமும் பொங்கிக் கொதிக்கின்றது. அது ஒரு தேவ வாக்குத்தான் என்பதில் சமுசயமில்லை'' என் றான்.

அவ்வாறு உரைத்து விட்டு, அவன் அப்போது யுத்தம் மும் முரமாக நடந்து வந்த முன்னணியை நோக்கி விரைவாகப் பறந்து சென்றான். இவ்வாறு அவன் துணிந்து சென்றதே அவன் தங்க ளுக்குக் காட்டிய வழி என்று உன்னி, அவனுடைய பிருத்தியர்க ளெல்லாம் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர்.

அப்போது முதன் முதலாக லியோக்கரிட்டஸ் என்பவன் அவனது வாளுக்கு இரையாகிக் குருதியை வடித்தான். அவன் மஹா வீரஞன லேகோமீடி என்பவனது பிரிய நண்பன். என்ருலும் அந்த வீரனது கேண்மை அவனுக்குப் பயனளிக்க வில்லை!

அந்த லேகோமீடி என்பவன், தன் நண்பன் அடி சாய்ந்து விழுவதைக் கண்ணுற்று, அவனுக்கு உண்டாகிவிட்ட ஆபத்திற்கு வருந்தி விரைவிலேயே அந்தப் பழிக்குப் பழிவாங்கி விட வேண்டும் என்று ஆத்திரத்துடன் தன் ஈட்டியைப் பிரயோகித்தான். அது சீற்றத்துடன் உருண்டுருண்டு அதி வேகத்துடன் சென்று அபிஸோனது மார்பைப் பார்த்துத் தாழ்ந்து அதைக் குத்தி, அவ்விடத்திலேயே துடித்துக் கொண்டு நின்றது.

அந்த வீரன் நிலவள நீர் வளங்களுள்ள பள்ளத் தாக்குக்கள் நிறைந்த பயோனியா வென்னும் பிரதேசத்தில் இருந்து வந்தவன். அஸ்திரோப்பியஸ்ஸே! அது உனக்குத் தெரியுமன்ருே! அந்தஸ்திலும் பேரிலும், கீர்த்தியிலும் அவன் உனக்கு அடுத்த படியில் இருந்தவன் அன்ருே?

இவ்வாறு அபிஸோன் கொலையுண்டதைக் கண்ணுற்ற அஸ்திரோப்பியஸ், அதிக துக்கங்கொண்டு, தடதடவென்று எழுந்து யுத்தம் செய்ய முன் சென்ருன். அவனது ஆற்றலும் வீணே ஆகிவிட்டது.

அப்போது கிரேக்க வீரர்கள் எல்லாம், அணியினுள் அணியாகவும், இரக்கமின்றி உறுதியாகவும், ஒருவரது மார்க் கவசத்தால் மற்றையோரது மார்க் கவசத்தை மறைத்துக் கொண்டும் அந்த வீரனது—அபிஸோனது—பிணத்தைச் சுற்றி நின்றனர். அவர்களுடைய கைகளில் இருந்த ஈட்டிகளும் ஒரு கோட்டை போல், அவர்களை வளைத்துக்கொண்டு சிலிர்த்து நின்றன. அந்தக் காட்சியானது, பித்தளையினுல் கட்டப்பட்ட அரண்போலவும், ஓர் இருப்புக் காடுபோலவும் தோன்றியது!

மஹாஞன அஜாக்ஷன், அவ்வாறு நின்று வந்த சேஞ சமுத்திரத்தைச் சிறிதும் கண்கொட்டாமல் நெடுநேரம் கவனித்து உற்றுப் பார்த்த பின்பு, அச் சமுத்திரத்தை, ஒரு சிறு வட்ட வடிவமான கோளம் போன்ற ஓர் அணி வகுப்பில் திரட்டியடைத்து அதில் நின்று வந்த வீரர்களெல்லாம் சாகுமளவும் யுத்தம் செய்தே தீரவேண்டும் என்று ஒரு கண்டிப்பான உத்திரவை இட்டான்.

அவனும் அவர்களுக்கு நடுமத்தியில் ஓர் இடத்தில் நின்று கொண்டு, அவர்கள் அனைவருக்கும் ஊக்கமும் உறுதியும் அளித்து வந்தான். இவ்வாறு அவ்விடத்தில் ஊன்றி நின்றுகொண்டு, அவர்கள் இந்த யுத்தத்தை அதிமும்மரமாக நடத்தித் தங்களுடைய சத்துருக்களால் காயமடைந்தும் அவர்களுக்குக் காயங்களை உண்டாக்கியும் வந்தனர்.

அப்போது அந்த யுத்த களமானது ஒரு பெரும் புகையில் ஆழ்ந்து போய்விட்டது. ஒரு மலையருவியைப் போல் வீரர்கள் வடித்து வந்த இரத்தமும் அந்தக் களத்தை நிறைத்து மறைத்துத் தோய்த்து விட்டது. கிரேக்கர்கள், மலைகள்போல் பட்டு விழுந் தனர். அவ்வாறே துரோஜர்களும் பட்டு விழுந்தனர்! இருதிறத் தாரும் இரத்தத்தை வடித்தனர். இவ்வாறு இரு கட்சியிலுமிருந்து மடிந்து விழுந்த வீரர்களின் பிணங்கள், அந்தப் போர்க் களத் தைச் சுற்றியிலும், மேன் மேலும் உயர்ந்து எழும் பர்வதங்களைப் போல் விளங்கின.

கிரேக்கர்கள் ஒழுங்காக நெருங்கி இருந்துகொண்டு, தங்களது முழு பலத்துடன் பொருது வந்தனர். அதனால் அவர் களுக்குச் சேதமானது மிகக் குறைவாகவே இருந்தது மன்றி அவர் கள் இந்த யுத்தத்தை மேலோங்கிய கையுடனும் நடத்தி வந்தனர்.

இந்த யுத்தமானது ஒன்றையொன்று தாக்கி அடிக்கும் இரண்டு பெரு நெருப்புக்களைப்போல் முதிர்ந்து ஒரு கணம் உயர்ந்து எழுந்தும், மறு கணம் தாழ்ந்து தணிந்தும் வந்தது.

அப்போது ஒரு பெருத்த இருளானது அந்தக் களம் முழுவ தையும் கவ்விவிட, யுத்தமும் சிறிது நேரம் ஓய்ந்து நின்று விட்டது. சூரியனும், சந்திரனும், வாயு மண்டலத்தில் உள்ள எல்லாத் தாரா கணங்களும், அடியோடு அழிந்தே போய் விட்டன போலவும் தோன்றியது. கதிரவன் அவர்கட்குக் கட்புலனாவில்லை. ஆகாய வீதியைத் துலக்கி, விளக்கி வந்த ஒளிகளும் அணைந்து போய் விட்டன போலவே தோன்றியது.

பத்திரகலுஷனுடைய பிரேதம் கிடந்த இடத்தில் தான் இவ்வாறு பேரிருள் கவிழ்ந்திருந்தது. அதை யொழிந்த மற்றைய இடங்களில் சூரிய வெளிச்சம் பூரணமாகப் பிரகாசித்து வந்த தினால், வீரர்கள் அங்கு தங்கு தடையின்றிப் பொருது வந்தனர். அங்குக் கவிந்திருந்த ஆகாயத்தை ஒரு சிறிய மேகங்கூட மறைக்க வில்லை. நெடுந்தூரம் வரை வானமானது தெளிவாகவே விளங்கி வந்தது.

மலைகளின் மேலும் மருந்துக்குக் கூட ஒரு புகையும் படிந் திருக்கவில்லை! பொன் வண்ணத்துடன் விளங்கிய சூரிய பகவான், தன்னுடைய கிரணங்களை மிகவும் பலமாகவே பொழிந்து வந்தார். ஆதலால் அந்த அகன்ற ஆகாய வீதியானது பட்டப் பகலைப்போல் ஜ்வாலையுடன் விளங்கியது.

இவ்வாறு ஓரிடம் இருளுக்கும், மற்றைய இடமெல்லாம் வெளிச்சத்திற்கும் வசமாக விருந்த இந்தப் பெருங்களத்தில், நாற் புறமும் சிதறிப்போய்விட்ட இருதிறத்துச்சைனிகர்களும், ஊக்கமும் உணர்ச்சியும் அறவே அற்றுப்போய் விட்டனர். அவர்கள் இந்தப் போரில் விருப்பற்றவர்களாய், மிகுந்த வெறுப்புடன் ஓரோர்

அம்புகளை, இங்கு மங்கும் இலக்கு வைக்காமல் எய்து வந்தனர். ஆனால் இந்த அம்புகள் வீணாகி விடவில்லை. அவை தாங்கள் சென்ற விடங்களில் தங்களுக்கு எதிர்ப்பட்ட வீரர்களைத் தாக்கிக் கொன்ற பின்னரே தரையில் விழுந்தன.

இவ்வாறு பத்திரகலுஷன் கிடந்த பிரதேசத்தைக் காரிருளும், காளைகளின் களே பரங்களும் மறைத்து விட்டன. யுத்தமானது அங்குதான் மும்முரமாக நடந்தது. அங்குதான் வீரர்கள் தங்களுடைய இரத்தத்தை வடித்தனர்.

இதன் மத்தியில் பின்னணியில் இருந்த நெஸ்டாரின் புத்திரருடைய பிருத்தியர்கள், தங்களுடைய சத்துருக்களால் முறியடிக் கப்பட்டுப் புறங்கொடுத்து ஓடிப்போய் விட்டனர். என்றாலும் அவர்கள் தாங்கள் சென்ற விடத்திலேயே ஊன்றி நின்று கொண்டும் நெடுந்தூரம் வரை தங்களுடைய கத்திகளை வீசிக் கொண்டும் அந்தப் பரந்த களத்தில் குட்டிச் சண்டைகளைச்செய்து வந்தனர். பைலியப் படைகளைக் கப்பல்களில் இருந்து அனுப்பிய பொழுது, அவை அவ்வாறே செய்து வரவேண்டுமென்பது நெஸ்டாரின் உத்தரவாக இருந்தது.

பேரும் கீர்த்தியும் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆவலுடன், இந்தச் சண்டைகளைப் பிடித்துவந்த அந்த இளஞ் சகோதரர்கள், அப்போது அகிலேசனது ஆப்த நண்பன் அடைந்த ஆபத்தை அறிந்திலர். அந்த வீரன் யுத்தம் செய்வதிலேயே ஆனந்தமுடையவனாய்ப் பேருடனும் புகழுடனும் ஆயுதப் பிரயோகம் செய்து கொண்டு, ட்ராயை அழித்து வருவதாகவே அவர்கள் கருதி வந்தனர்.

அந்தச் சமயத்தில் பத்திரகலுஷனுடைய பிரேதத்தைச் சுற்றிலும் ஒரு பெரும் போர் நிகழ்ந்து வந்தது என்பதை நாம் அறிவோம். அப்போரை நடத்தி வந்த வீரர்கள், தங்களுடைய கடமைகளை அதிதீவிரமாகவே நடத்தி வந்தனர், அவர்கள் மூச்சும் விட முடியாமல் திணறினர். யமதர்மராஜனது வேலையும் வெகு மும்மரமாக நடந்து வந்தது. படை வீரர்கள் படபட வென்று பட்டு விழுந்து மாண்டனர். பிணங்கள் மலைகள் போல் குவிந்தன.

தங்களுடைய பகை வீரர்களால் தாழ்த்தி வீழ்த்தப்பட்ட வீரர்களுடைய குழாங்களின் கால்களும் பாதங்களும் புழுதியிலும் வேர்வையிலும் இரத்தத்திலும் மறைந்துபோயின. அவர்கள் தங்களுடைய வியர்வையையும் இரத்தத்தையும் ஒரு மாரியைப்போல் சொட்டச் சொட்ட வடித்தனர். புழுதியானது அந்தப் போர்க் களத்தினின்றும் மேகங்களைப்போல் ஒன்றன்பின் ஒன்றாகக் கிளம்பின. அடித்தும், புடைத்தும், கொலைகள் செய்தும், அவர்களுடைய கைகள் சலித்தன. சலித்த கைகளில் சில, துண்டு

துண்டாக வெட்டுண்டு செய் தொழில் ஒழிந்தன. அவர்களுடைய கண்களில் இருளும் புகுந்து விட்டது.

தாங்கள் வெட்டிக் கொன்ற ஒரு காளையின் சருமமானது, ஆவியைக் கிளப்பிக்கொண்டு கொதித்து வருகையில், அந்தத் தோலைப் பதனிடும் வலிவுள்ள ஆட்கள் கொழுப்பும் குருதியும் மலிந்துள்ள அத்தோலின் இருபுறமும் நின்றுகொண்டு, அதைத் தங்களது முழு பலத்துடனும் ஒரு புறமிருந்து மறுபுறம்நீட்டி இழுத்து, அதன்மேல் பாகத்தையும் நீட்டி இழுத்து, அதன்மேல் பாகத்தை அழுத்தித் தேய்த்து வருவதுபோல் கிரேக்க சேனைகளும், துரோஜசேனைகளும், அந்தப்பிணத்தைச் சுற்றி நின்று கொண்டு, அதை "விடோம், கொடோம்" என்று அதற்காகப் போராடி வந்தனர்.

இருதிறத்திலுமிருந்த வீரர்கள் தங்களுடைய வியர்வையையும் உதிரத்தையும் வெள்ளம்போல் வடித்து, அந்தப் பிணத்தைக் குளிப்பாட்டியும் விட்டனர். இவ்வாறு அந்தப் பிணத்தைத் தங்களுடைய கப்பல்களுக்குக் கொண்டுபோக வேண்டுமென்று கிரேக்கர்களும், அதைத் தங்களுடைய கோட்டைக்குக் கொண்டு போக வேண்டுமென்று துரோஜர்களும் தங்களுடைய முழுபலத்துடன் உழைத்து வந்தனர்.

இந்தக் காட்சியைக் கண்ணுற்ற பாலாஸ் தேவியோ, மார்ஸ்தேவரோ, இதைத் தடுக்கமுடியவில்லை. மத்தியஸ்தம் செய்யவும் முன்வரவில்லை; பாலாஸ் தேவிக்குக் கோபதாபங்கள் உண்டாகிவிட்டால், அவரது மார்பு பொங்கிக்கொதிக்கும். மார்ஸ் தேவர் சினங்கொண்டால் சர்வலோகங்களும் ஒன்றோடொன்று முரண்பட்டுப்பொருது தவிடு பொடியாகிவிடும். அவ்விருவருக்கும் இந்தப் போரில் நடந்த நடவடிக்கைகளெல்லாம் சம்மதமாகவே இருந்தன.

எங்கு பார்த்தாலும் கோப தாபங்களும், கோரமான நடவடிக்கைகளுமே கட்புலனாயின. தமது நண்பனான அந்த மஹா வீரனுக்கு இவ்வாறு மரியாதைகள் நடக்க வேண்டுமென்று ஜோவ் தேவரே ஆக்ஞாபித்துவிட்டார்! அவருடைய ஆணையை யாரால் மீற முடியும்? மறுக்க முடியும்?

இவ்வாறு யுத்த களத்தில் காரியங்கள் நிகழ்ந்து வருகையில், அகிலேசனானவன், வெகு தூரத்தில் இருந்த தன்னுடைய கப்பல்களில் காலை நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தான். அன்றைய தினம் நடந்து விட்ட ஆபத்துக்களை அவன் அறிந்திருக்கவில்லை. பத்திரகலுஷன் பட்டு விழுந்ததையும் அவன் ட்ராய் கோட்டை மதிலின் கீழ் புழுதியில் அழுந்தித் தனது உடலை நீட்டிக் கொண்டு கிடந்ததையும் அறியாதவனாகிய அகிலேசன் அவன் வெற்றியுடனும் பெருமையுடனுமே யுத்த களத்திலிருந்து திரும்பி வரப்போகின்றான் என்று எண்ணி, அவன் திரும்பி

வருவதையே மிகவும் ஆவலுடன் எதிர் பார்த்தவனுய் அவ னுக்குச் செய்ய வேண்டிய மரியாதைகளையும் முன்னுடியே ஏற் பாடு செய்து வந்தான்.

ஆனுல் அவன் பிரயத்தனங்கள் அனைத்தும் வீணேயாயின. வணங்கா முடியையுடைய இலியனை வணக்கும் பாக்கியத்தைத் தன்னுடைய நண்பனுக்குத் தேவர்கள் அளிக்க வில்லையென்பது அவனுக்கு மிகவும் நன்ருகவே தெரிந்து இருந்தது. என்ருலும் அவன் ஏற்கனவே சொல்லியபடியே பிரயத்தனங்களைச் செய்துவந் தான். அந்தப் பெருங்காரியம் ஒருக்கால் அவனுல் ஆகலாம் என் பதை, தெட்டிஸ் தேவியானவள் அவனுக்கு அன்று நடக்க வேண் டிய விஷயங்கள் அனைத்தையும், உரைக்காமல் மறைத்துவிட்டாள்!

இறந்த வீரனது பிரேதத்தைச் சுற்றிலும், யுத்தமானது சிறிதும் இடைவிடாமலும், தங்கு தடை இன்றியும் நடந்தே வந்தது. இருதிறத்து வீரர்களும் ஒருவரோடொருவர் பொருது காயப் படுத்தியும், காயங்களேற்றும், இரத்தத்தை வடித்துக்கொண்டு மடிந்து மலைகள் போல் குவிந்து விருந்தனர்.

இந்த யுத்தத்தில் கிரேக்கர்கள் கக்ஷியில் கூலியாட்களாகச் சேர்ந்து உழைக்க வந்தவர்களும்கூடக் கீழ்க்கண்டவாறு கூறினுர் கள்:—

“ஏற்றத் தாழ்ச்சியின்றியும் ஒருவருக்கொருவர் இளைக்கா மலும், இருதிறத்தாரும் பொருதுவரும் இந்நாளில், இந்த யுத் தத்தை விட்டுப் புறங்கொடுத்து ஓடுபவன் நாசமாய்ப் போகக் கடவன்! நாமே அவ்வாறு செய்தாலும், இந்தப் பூமியானது நமது கண் முன்னதாகவே அகன்று வெடித்து, நம்மை விழுங்கி, நமது இரத்தத்தைக் குடிக்கட்டும்! நம்மையே பலியாகக் கொள்ளட்டும்.

கிரேக்கர்கள் பத்திரகலுஷனைப் பறி கொடுத்தனர். தங்க ளுடைய மானம் மரியாதைகளையும் இழந்தனர் என்று துரோஜர்கள் கர்வங்கொண்டு பெருயைடித்துப் பேசிக் கொள்ளுமுன், முதன் முதலாக நாமெல்லோரும் அழிந்து போவோம்!” என்றனர்.

இவ்வாறு இவர்கள் வீர கோஷம் செய்து வந்ததைக் கேட்ட துரோஜர்கள், ஏகமனத்தினராகவும், ஒரே குரலிலும் பிரார்த்தித் தனர்.

“ஜோவ் தேவரே! இன்று எங்களுக்கு ஜயத்தையே தாரும்; இன்றேல் எங்களனைவரையும் அந்தப் பிணத்தின்மேல் மலைபோல் குவித்து விடும்!” என்று உரத்துக் கூவினர்.

அதன்பின் இருபுறத்திலுமிருந்த ஆயுதங்கள் ஒன்றன் மேலொன்ருய்ப் பாய்ந்து, ஓசையை யெழுப்பின. கணகணவெனக் கிளம்பிய அந்த சப்தமானது, ஒரு பெருங் கூச்சலாக முதிர்ந்து

வளர்ந்து, பித்தளையினுலான விமானத்தைப் போல் பூமிக்கு மேலாக உயர்ந்து கவிழ்ந்து கொண்டிருந்த ஆகாயத்தின் முகட்டையும் இடித்துத் தகர்த்து விட்டது. அடியும், புகையும், ஓசையும், ஒலியும், இவ்வாறு இந்தக் களத்தில் நடைபெற்று வருகையில், மஹாஞன அகிலேசனுடைய குதிரைகள் அந்த யுத்த ரங்கத்திற்கு வெகு தூரத்தில் துயர்க்கடலில் ஆழ்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தன.

தெய்வத்திற்குச் சமமான தங்களுடைய தலைவன் தங்களுடைய கண்ணெதிரிலேயே கொலையுண்டதையறிந்து, அவை கண்ணீர் வடித்தன. மனிதருக்கு உண்டாய் விட்ட துக்கங்களில் அவைகளும் கலந்து கொண்டன. அந்தத் துக்கங்களில் பங்கு கொண்டன, செய் தொழிலும் ஒழிந்தன.

அவற்றை யெழுப்பி ஓட்டிக் கொண்டு முன் செல்ல வேண்டும் என்று நினைத்து ஆட்டோமிடான், அவற்றின் கடிவாளக் கயிறுகளைக் குலுக்கினுன்; அசைத்து ஆட்டினுன், சாட்டையினுல் அவற்றையடித்தான். நயமாகவும், பயமாகவும், பிரிய வசனங்களையும், கொடுஞ் சொற்களையும், உரைத்தான், என்ன செய்தும் பயன் படவில்லை. அவை யுத்த முனையை நோக்கியோ அல்லது ஹெல்லஸ் பான்டை நோக்கியோ செல்லச் சிறிதும் மனங் கொள்ளாமல் தாங்கள் நின்ற விடத்திலேயே துக்கத்தில் அழுந்திய வைகளாய்ப் பிடிவாதமாக அசையாமல் நின்று விட்டன.

தோஷம் என்பது சிறிதும் இல்லாத ஓர் உத்தம புருஷனே அல்லது உத்தம ஸ்திரியோ அடக்கம் செய்யப்பட்டுள்ள சமாதியின் மேல் ஒருவராலும் எக்காலும் அகற்ற முடியாதபடி ஊன்றி நாட்டப்பட்ட ஒரு பளுவான சமாதிக் கல்லைக் கொண்டு ஒரு கை தேர்ந்த சிற்பியினுல் உருவாக்கப்பட்ட சுத்த வீரனது சமாதியின் மேல் சின்னமாக வைக்கப் பட்டுள்ள போர்க் குதிரையைப் போலவும், அவை அசைவற்று நின்று விட்டன. அப்போது அவை வடித்த கண்ணீரானது அவற்றின் முகத்தின் வழியே திரண்டு உருண்டு பெருந்துளிகளாக மாறிச், சொட்டுச் சொட்டாகப் புழுதி மயமான தரையின் மேல் விழுந்து, ஒன்ருய்க் கலந்து கோர வடிவை யடைந்தன.

சிறிது பொழுதிற்கு முன், பிறை வடிவமாக விளங்கிய அவற்றின் கழுத்துக்களைச் சுற்றி அலங்கரித்துக் கொண்டு அதிகம்பீரமாக அசைந்தாடி வந்த அவற்றின் பிடரி மயிர்கள் இப்போது நிலைகுலைந்து விரிந்து அவற்றின் அடியில் இருந்த புழுதியில் இழைந்து வந்தன. சோர்வடைந்திருந்த அவற்றின் தலைகளும் நிலத்தை நோக்கிக் குனிந்து தொங்கின.

அச்சமயம், ஜோவ் தேவரும்கூட அவற்றை நோக்கி மனங் கரைந்து உருகினுர்; என்ருல் அவை எம்மாத்திரம் துக்கம் கொண்டாடிச் கொண்டிருந்தன என்று இயம்பவும் வேண்டுமோ?

ஜோவ் தேவர் அக்குதிரைகளை நோக்கி இரக்கம் கொண்டு பின் வரும் மொழிகளை யுரைத்தார் :—

" அழிவில்லாத அமரர் மரபில் பிறந்த குதிரைகளே ! உங்களுக்கு நல்ல அதிர்ஷ்டம் இல்லாமல் போய்விட்டதே ! உங்களுக்குக் கிழத்தனமோ, மரணமோ உண்டாகாது ! அவ்வாறு இருந்தும் பயனில்லையே ! மர்த்தியர்கள் அனுபவிக்கும் மரண துக்கங்களை நீங்களும் அவர்களுடன் அனுபவிக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், நாம் உங்களை அவர்களிடம் ஒப்புவிக்க வில்லையே !

ஐயோ ! இது என்ன பரிதாபம் ! புழுதி நிறைந்த இந்தப் பூமண்டலத்தின் மேல் ஸ்வாசம் விட்டுக் கொண்டோ அல்லது ஊர்ந்து கொண்டோ வாழும் ஜந்துக்களிலெல்லாம் மனிதனினும் இழிந்த பிறவி ஒன்று உண்டோ ? மனிதனைவிட பலவீனமானதும் அவனைக்காட்டிலும் அதிகமான துக்கங்களை அனுபவித்து வருவதும், அவனினும் மிக்க மூர்க்கத்தனமும் அதிவேகமும் உள்ளதுமான ஒரு மஹா இழிவான ஜந்து எந்த ஜீவராசிகளில் உளது ? அவர்களுடைய வர்க்கமே இழிவிலும் இழிவானது ; துக்கம் நிறைந்தது !

ஆதலால், அவர்களுக்காக நீங்கள் வருந்த வேண்டாம். உங்களுடைய அழுகையையும் துக்கத்தையும் நிறுத்துங்கள். பிரியத்தின் மகன் தன்னுடைய திவ்வியமான இரதத்தில், உன்னதமான ஆசனத்தில் வீற்றிருக்க அந்த இரதத்தை நீவிர் இழுத்துச் செல்ல வேண்டுமென்பது நமது விருப்பமில்லை. அவ்வாறு ஒருக்காலும் நிகழாது !

அவனுக்கு இன்று ஒரு காரியம் ஜெயமாக முடிந்து விட்டது, கைகூடி விட்டது ! அதை நினைத்து அவன் சிறிதும் முன்பின் யோசனைகள் செய்யாமல் பிதற்றுகின்றான் ; பெருமையடித்துக் கொள்ளுகின்றான் ! இனிமேல் அவனுடைய ஜெபங்கள் ஒன்றும் பலிக்காது. இனிமேலும் அவனுக்கு ஜெயம் உண்டாகாது ; அது நிச்சயந்தான். அவ்வாறு தீர்மானித்து விட்டோம்.

இனி நாமே உங்களுடைய நரம்புகளுக்கு ஊக்கத்தையும் விசையையும் அளிப்போம் ! நாமே உங்களுக்குப் புத்துயிர் அளித்து உங்களது உள்ளம் பொங்கும்படிச் செய்வோம் ! யுத்தமானது எவ்வாறு மும்முரமாகவும் வேகமாகவும் நடந்து வந்தாலும் நீங்கள் அதற்காகக் கவலைப்பட வேண்டாம். அந்த யுத்த களத்தின் மத்தியிலேயே நீங்கள் மிகவும் விரைவாகப் பறந்து செல்லுவீர்கள். ஆட்டோமிடானும் உங்களை உங்கள் கப்பல்களுக்குத் பத்திரமாகக் கொண்டு சேர்ப்பான்.

ட்ராய் நகரத்தாருக்கு இன்னும் கொஞ்சம் நல்லகாலம் இருக்கின்றது. அவர்கள் செய்ய வேண்டிய அட்டூழியங்கள் இன்னும் சில எஞ்சி நிற்கின்றன. அவர்களால் இந்தக் களமானது

இன்னும் மேன்மேலும் பாழடைய வேண்டியதாக இருக்கின்றது. அவர்கள் இன்று இந்தக் கடற்கரை வரையிலும் சத்துரு சங்காரங் களும் கோரமான வதைகளும் செய்வார்கள்.

அவர்கள் மேன்மேலும் வெற்றியுடன் விளங்குவதைப் பீபஸ் பகவானும் பார்த்தே வருவான். அவன் அஸ்தமிக்கும் வரைதான் அவர்களுக்கு இந்த நல்ல காலம் இருக்கும். அவன் மறைந்துவிட்டால் புனிதமான இருளானது எல்லோருக்கும் நிழலைத் தந்து எல்லோருடைய முகங்களையும் மூடியே விடும் '' என்றார்.

அவ்வாறு உரைத்துவிட்டு, அவர் அந்த அழிவில்லாத குதிரைகளின் உள்ளங்களில் மட்டுமித மில்லாத உற்சாகத்தை யூட்டி அந்த யுத்தகளத்தை நோக்கிச் செல்லும்படி அவற்றைத் துரிதமாக உறுத்தினார். அப்போது அவை தங்கள் பிடரிமயிரில் படிந்திருந்த புழுதிகளை உதறித் தட்டி யெறிந்துவிட்டு எழுந்து, தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்த பத்திரகலுஷனுடைய ரதத்தை இழுத்துக் கொண்டு ஒரேயடியாய் அந்த யுத்தகளத்தின் மத்தியில் துரிதமாக ஓடின.

அவ்வாறு இரதத்தை இழுத்துக் கொண்டு ஓடிய அக் குதிரைகளின் தோற்றமானது, கீச்சுக் கீச்சென்று கத்திக் கதறிச் சிதறுண்டு மைதானத்தில் நாற்புறமும் ஓடும் பெட்டைத் தாராக் களினிடையில் பறந்து செல்லும் ஒரு பருந்தை நிகர்த்ததாக இருந்தது.

இவ்வாறு வெகு வேகமாய்ப் பறந்து சென்று, தங்களுக்கு நேரவிருந்த ஆபத்தினின்றும் தப்பியபின், அக்குதிரைகள் அதே வேகத்துடன் தங்களுடைய சத்துருக்களை அழித்துவிட வேண்டு மென்றும் முன் சென்றன.

அப்போது அந்த இரதத்தில் இருந்த ஆசனத்தில் தேர்ப்பாக னை ஆட்டோமிடான் மாத்திரமே வீற்றிருந்தான். அவன் தன் னுடைய ஈட்டிகளால் அக்குதிரைகளைக் குத்தியும் கடிவாளக் கயிறுகளை இறுக்கியும், தளர்த்தியும் பிடித்துக் கொண்டு, அந்த ரதத்தை முன் செலுத்தி வந்தான். அவன் இவ்வாறு திண்டாடித் திணறிக் கொண்டு வருவதைக் கண்ணுற்ற வீரியவானான ஆல்கி மிடோன் என்பவன் அவனுடைய ரதத்தின் அருகில் சென்று, அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"தன்னந் தனியாகவும், துணைவன் ஒருவனாவது இல்லா மலும் இவ்வாறு அதிமும்முரமாக நடக்கும் இந்த யுத்தத்தில் இவ்வளவு துணிவுடன் முன் வந்து போர் புரியுமாறு எந்தத் தெய்வம் உனக்கு உபதேசம் செய்து விட்டது? அது எளிதான காரியம் அல்லவே! ஐயோ உனது நண்பன் கொலையுண்டு விட்டானே! ஹெக்டரும், அகிலேசனுடைய ஆயுதங்களை மிகுந்த ஆடம்பரங்களுடன் அணிந்து கொண்டு இந்த யுத்த ரங்கத்தில் வெகு கம்பீரமாக விளங்குகின்றானே!" என்றான்.

அவ்வசனங்களைச செவியுற்ற தேர்ப்பாகன், ஆஹா! இது ஒரு மிகவும் நல்ல காலம்! அதிதைரியவானுன ஆல்கிமிடோனை என் கண்ணுல் காணும் பாக்கியமன்றோ எனக்கு இப்போது கிடைத்து விட்டது! தெய்வப் பிறவிகளான இந்தக் குதிரைகளை அடக்கவல்லவன் அவன் ஒருவன் தான் அன்றோ! அந்தக் காரியத்தில் அவனுக்குச் சமானமான சாமர்த்தியம் உள்ள கிரேக்கன் வேறேயொருவனும் உளனே! அவன் அக்குதிரைகளின் கயிறுகளைத் தளர்த்தி விட்டுவிட்டாலே அவை தங்களுடைய வேகத்தைத் தணித்து விடுமன்றோ!" என்று எண்ணினுன்.

அதன்பின் அல்கிமிடோனைப் பார்த்துக் கீழ்க்கண்ட வசனங்களை உரைத்தான் :—

"பத்திரகலுஷன் உயிருடன் இருந்த பொழுது, அவன் அவைகளின் கோபதாபங்களையும் சண்டித் தனத்தையும் அடக்கி வந்தான். இப்போது பத்திரகலுஷன் அழிந்து போய்விட்டான். அவனது பெயர் மாத்திரமே மீந்து நிற்கின்றது. ஆதலால் நான் உனக்கு இந்தச் சாதனத்தை விட்டுக் கொடுத்து விடுகின்றேன். இந்தக் குதிரைகளை அடக்கியாளும் காரியத்தை உன்னிடம் ஒப்புவித்து விடுகின்றேன். யுத்த காரியத்தை நான் பார்த்துக் கொள்கின்றேன்" என்முன்.

இந்த வசனங்களைக்கேட்ட ஆல்கிமிடோன் ஆத்திரத்துடன் பொங்கியவனுய், குதிரைகளின் கடிவாளக் கயிறுகளை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு, ஒரே பாய்ச்சலில் பாய்ந்து தேரின் மேல் ஏறி சாரதியின் ஆசனத்தில் அமர்ந்து கொண்டான். அக்கணமே அவனது நண்பனும் ஆசனத்தினின்றும் இறங்கினுன்.

இதைக் கண்ணுற்ற ட்ராய்த் தலைவனுன ஹெக்டர் ஆச்சரியமும் திகிலும் அடைந்தவனுய் தன்னருகில் யுத்தம் செய்து வந்த ஈனியஸ்ஸை விளித்துப் பின்வருமாறு கதறினுன் :—

"ஐயோ! இது என்ன விந்தை! என்ன ஆச்சரியம்! நான் காண்பது கனவா நனவா? இது அழிந்தே போயிற்று என்றன்றோ நாம் நம்பி இருந்தோம்! இது இன்னும் விசையுடனேயே இருக்கின்றதே? தனது தலைவனை இழந்துவிட்ட இந்த அகிலேசனது இரதத்தைப் பாரும். இதில் பூட்டியுள்ள குதிரைகள் வெகு துரிதமாகவும் களிப்புடனும் நம்மையே நோக்கி வருகின்றன. யுத்த சன்னத்தராக நின்று வரும் நம்மை வலுவில் சண்டைக்கும் இழுக்கின்றன.

அவற்றை ஓட்டிவரும் ஆளுக்குச் சிறிதும் திறமை இல்லை என்று தோன்றுகின்றது. அக்குதிரைகளை இக்களத்தில் சரியான வழியில் ஓட்டவும் வகையறியாதவன் என்றே தோன்றுகின்றது! அதனுல் நாம் அவர்களைத் தாக்கியடித்தால், அவர்கள் நம்மை

யெதிர்த்து நம் எதிரில் நிற்கவும் நிற்பார்களா ? மாட்டவே மாட்டார்கள்! ஆதலால் என்னுடைய அன்பரே! நம்முடைய சேனைகளை எல்லாம் ஒன்றுய்த் திரட்டும்! நாமே வெல்லுவோம்" என்றுன்.

வீனஸ்ஸின் புத்திரனும் இந்த யோசனையை ஆதரித்து அதற்கு இசைந்துவிடவே, வீரர்கள் இருவருமே, தங்களுடைய கெட்டியான கவசங்களைத் தங்களுடைய முதுகுகளின்மேல் விரித்துப் போர்த்துக் கட்டிக் கொண்டனர். பித்தளையினுல் ஆக்கப்பட்டிருந்த அந்த அகன்ற கவசங்களின் மேற்புறம் தகதக வென்று பிரகாசத்துடன் விளங்கியது. குவிந்து விசாலமாகவிருந்த அவைகளின் உட்புறத்தில் கெட்டியான எருதுத் தோல்கள் பிணைக்கப்பட்டிருந்தன.

அவர்களைத் தொடர்ந்து கொண்டு குரோமியஸ்ஸும் அவனுக்குப் பின்னுல் அரீடஸ்ஸும் சென்றனர். இவர்கள் ஒவ்வொருவனும் அந்த உன்னதமான குதிரைகள் தன் வசந்தான் ஆகும் என்று நினைத்து வந்தான். அந்தோ! பயமறியாத அந்த இளைஞர்கள் அருங் காரியங்களைச் செய்துவிடப் போகின்றோம் என்று பொங்கிக் கொதித்தனர்; முன் சென்றனர். அவர்களுடைய முயற்சிகள் எல்லாம் வீணேயாயின. அவர்கள் இந்த யுத்தத்தில் இருந்து திரும்பி வரவும் இல்லை.

இவ்வாறு தன்னை யெதிர்த்துக் கொண்டு ஹெக்டரும் ஈனியஸ்ஸும் இளையவர்களான குரோமியஸ்ஸும் அரீட்டஸும் ஒன்றுய்ச் சேர்ந்து வருவதைக் கண்ணுற்றுங்கூட ஆட்டோமிடான் தனது நிலையிலிருந்து கலையவில்லை. மனங் கலங்கவுமில்லை. அவன் யுத்தத்திலேயே கண்ணுங் கருத்துமாகவிருந்து அதை நடத்தி வந்தான். அழிவற்றவரான பரம்பொருளைப் பிரார்த்தித்தான். தனது தேக மனே பலங்களை எல்லாம் ஒன்றுய்த் திரட்டிக் கொண்டான். அதன்பின் சிறிதும் பயமில்லாத திடமான மனத்துடன் தனது நண்பனை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"நுரையைக் கக்கிக் கொண்டிருக்கும் இக்குதிரைகளை எனக்குப் பின்னுல் நெருக்கமாக நிறுத்து. அவற்றின் மூச்சு என் தோள்களின் மேல் விழட்டும். இந்த யுத்தம் மிகக் கொடியதாகவே நடக்கப் போகின்றது. நமது சத்துருவும் துணிந்தே யிருக்கின்றுன்.

ஹெக்டரோ நம்மை இப்போது எதிர்த்து வருகின்றுன். ஒரு பொருளைக் கவர்ந்துவிட வேண்டும் என்று மாத்திரம் அவன் தீர்மானித்து விட்டானுகில் அவன் ஒருகை பார்த்தே விடுவான். அதை நடுவில் கைசோரவிட மாட்டான். ஒன்று தன் காரியத்தில் சித்தி பெறுவான். இன்றேல் அதில் தனது உயிரை விடுவான்" என்றுன்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் அந்த யுத்தகளமுழுவதும் தனது குரல் கேட்குமாறு கூவித் தன்னுடைய வர்க்கத்தாரனை

வரையும் அழைத்தான். அவன் விசேஷமாக அந்தக் களத்தில் தன்னைச் சுற்றிலும் வீரர்கள் நெருங்கியிருந்த வண்ணம் ஓரிடத்தில் யுத்தத்தை நடத்தி வந்த அதிரிதீசனுக்கு உதவியாகவிருந்த அஜாக்ஷர்களை அந்தக் கூட்டத்திலிருந்து வரும்படி யழைத் தான் :—

“ அஜாக்ஷர்களே ! இந்தப் பக்கம் திரும்புங்கள் ! இங்கு ஆபத்து மலிந்து கிடக்கின்றது. இந்த நிமிஷம் இங்கு உங்களது உதவி வேண்டும்.

அந்தப் பிணம் அங்கேயே கிடக்கட்டும். அதைச் சுற்றி வளைந்துகொண்டுள்ள அவனுடைய நண்பர்கள் அதைக் காத்து வரட்டும்.

உயிருடன் இருக்கும் நாங்கள் இங்கு மிகக் கொடிய ஒரு சத்துருவினிடம் அகப்பட்டுக் கொண்டு தவிக்கின்றோம். எங்களைக் காக்க வாருங்கள். நாங்கள் நிர்க்கதியாக நிற்கின்றோம். எங்க ளுக்கு ஒரு துணையுமில்லை. ஹெக்டரின் கைவலியையும், ஈனியஸ் ஸின் சீற்றத்தையும் தாங்க எங்களால் முடியவில்லை. அவர்கள் மஹா பலசாலிகள்தான் என்றாலும் நான் எனது சக்தியைக் காட் டியே தீருவேன்! அதைத் தடுக்க யாராலும் முடியாது. அவ் வளவே என் கடமை. அதன்பின் ஜோவ் தேவரின் திருவுள்ளப் படிக் காரியங்கள் முடியட்டும் ” என்றான்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் தனது ஈட்டியை வீசி எறிய, அது “விர்” என்று சப்தஞ் செய்துகொண்டு உயர மாகப் பறந்து சென்று, இளைஞனை அரிட்டஸின் கவசத்தைத் தாக்கியுடைத்து அதன் உட்புகுந்து அவனது கச்சையையும் துளைத்து விட்டது. விசித்திரமான வேலைப்பாடுகளுடன் விளங்கிய அந்தக் கச்சையைத் துளைத்ததுடன் நில்லாமல் அந்த ஈட்டி யானது அவனது அடிவயிற்றினுள்ளும் புகுந்து அங்கேயே ஊன்றி நின்றுவிட்டது.

ஒரு பிரம்மாண்டமான கோடரியானது தசைப் புஷ்டி யுள்ள ஒரு தடித்த ரிஷபத்தின் அகன்ற நெற்றியின்மேல் சிறிதும் குறிதவறாமல் தனது முழு வேகத்துடன் தவழ்ந்து விழுந்து, அந்த நெற்றியைப் பிளந்து அந்த ரிஷபத்தின் இரு கொம்புகளின் மத்தி யிலும் அசையாமல் ஊன்றி நின்று விடுகையில், எவ்வாறு அந்த ரிஷபம் தனது கனமான தேகத்தைத் தூக்கிக் கொண்டு பன்முறை யும் துள்ளித் துள்ளி யெழுந்து பாய்ந்து கடகடவென்று உருண்டு சென்று, கடைசியாய்த் தனது பிராணனை விட்டு விடுகின்றதோ, அவ்வாறே இந்த இளங் காளையும் கரணங்கள் போட்டுக்கொண்டு உருண்டுருண்டு சென்று தனது ஆவியை விட்டான்.

அவனது ஆவியும் ஆகாயத்திற் கலந்து விட்டது, அவனைக் கொன்ற அந்த ஈட்டியும் தகதகவென்று கொதித்தும்.

படபடவென்று அடித்தும் வந்த அவனது குடலில் நின்றவண்ணம் துடித்தது.

இதன்பின் துரோஜச் சத்துருவானவன் ஆட்டோமிடானை நோக்கித் தனது வேலாயுதத்தை விடுத்தான். அவன் அந்த வேலாயுதம் தன்னையே நோக்கி வருவதைக் கவனித்து தனது தலையைக் குனிந்துகொண்டு அதற்கு இலக்காகாமல் தப்பிவிட்டான். இவ்வாறு வீணுகப் போய்விட்ட அந்த வேலாயுதம் அந்த வீரனது தலைக்கும் மேலாகச் சீறிக்கொண்டு பறந்து சென்று, அந்தப் போர்க்களத்தில் நெடுந்தூரத்திலுள்ள ஓரிடத்தில் ஊன்றிப் பறந்து நின்றுகொண்டு, நெடுநேரம் துடித்துப் பின் தனது வேகத்தைத் தணித்துக் கொண்டது.

இதன்பின் இவ்விரு வீரர்களும் பளிச்சென்று விளங்கும் தங்களுடைய கத்திகளை ஒருவர்மீது ஒருவர் வீசி, இந்தக் காரியத்தை ஒரே யடியாய்த் தீர்த்துவிடுவோம் என்று ஆத்திரத்துடன் பொங்கினர். காரியமும் அவ்வாறே நிகழ்ந்திருந்தால் வீரர்கள் இருவரும் மாண்டு போயிருப்பார்கள். ஆனுல் அது அவ்வாறு நிகழவில்லை.

அவர்களுடைய கத்திகள் ஒன்றையொன்று தாக்கிய பொழுது உண்டான சப்தத்தைச் செவியுற்ற அஜாக்ஷர்கள் இருவரும் சட்டெனத் தைரியத்துடன் முன்வந்து வீரர்கள் இருவரையும் பிரித்து விலக்கிவிட்டனர்.

அக்கணமே ஹெக்டர் தனது வர்க்கத் தவரான துரோஜர்களது அணிவகுப்பை விட்டு விலகி ஓட்டம் பிடித்துவிட்டான். தங்களுக்குத் துணைவனுக வந்து தங்களுக்காகத் தனது பிராணனையும் வழங்கிய அந்த வீரனை அவன் இரத்தம் வடிய வடிய அந்தக் களத்திலேயே விட்டுவிட்டான்!

அப்போது ஆட்டோமிடான் அந்த உயிர் துறந்த வீரனுடைய ஆயுதங்களைப் பறித்து எடுத்துக்கொண்டு "பத்திரகலுஷா! இவனை நான் உனக்கு ஒரு சிறு நைவேத்தியமாகப் பலியாகக் கொடுக்கின்றேன்! இதை ஏற்றுக்கொள்! இந்தக் காரியத்தைச் செய்து நான் என் துக்கத்தை ஆற்றிக்கொண்டேன். உனக்குச் செய்யவேண்டிய மரியாதைகளையும் செய்துவிட்டேன். இதனுல் உனது ஆத்மா சாந்தமடைந்து விடாது என்ருலும், என்னுல் கூடியதை நான் செய்துவிட்டேன்" என்று உரத்துக் கதறினுன்.

அப்பொழுது அவனது தோற்றமானது ஓர் ஆண் பன்றியைக் கொன்று அதைச் சின்னு பின்னுமாகக் கிழித்துவிட்டு, அதன்மேல் தனது காலை வைத்துக்கொண்டு ஊன்றி நிற்கும் ஒரு சிங்கத்தைப் போலவே யிருந்தது. அவன் கடுத்த முகத்துடனும் இரத்தக் கறைகள் படிந்த பயங்கரமான உருவத்துடனும் விளங்கினுன்.

இவ்வாறு பயங்கரமான உருவத்துடன் விளங்கிய அவன் ஒரே பாய்ச்சலில் பாய்ந்து தனது தேரின்மேல் ஏறிக்கொண்டு, அரிட்டஸினிடமிருந்து தான் பறித்துவந்த ஆயுதங்களைத் தனது ஆஸனத்தின்மேல் தொங்கும்படி மாட்டிவிட்டான்.

இந்தச் சந்தர்ப்பத்தில் மினர்வா தேவியானவள் வாயு மண்டலத்திலுள்ள தமது மண்டபத்திலிருந்து அதிவேகமாகத் தட தடவென்று இறங்கி வந்து ஓய்ந்து போய்விட்ட இந்த யுத்தத்தைப் பின்னும் துவக்கினுள். இதுவரை கிரேக்கர்கள், தோல்வி யடைந்தது போதும், இனிமேல் அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று மனமிரங்கிய இடிக் கடவுள் அந்த நீலாய தாக்ஷியை மேற் சொல்லியபடி அனுப்பி வைத்தார்.

உலகத்திலுள்ள ஜீவராசிகளுக்கு வரவிருக்கும் ஆபத்துக் களை முன்னுடியே அறிவிப்பதற்காகப் பெருந்தேவரான ஜோவ் பகவான், இருண்டு கறுத்த மேகங்களின்மேல் தமது சென்னிற மான வில்லை வளைத்து வீசி விடுகின்ருர். அப்போது ஜீவராசி களெல்லாம், காற்ருலும் மழையாலும் ஆகாயத்தில் பெரும் புயல்கள் உண்டாகுமென்ரே, அல்லது மனிதர்கள் ஒருவரோ டொருவர் முரண்பட்டுச் சீறிச் சினந்து போரிடுவர் என்ரே ஊஹித்து மனங் கலங்குகின்றன.

கன்று காலிகளெல்லாம் வானமே இடிந்து விழுமோ என்று நடுக்குற்றுத் தங்களுடைய தலைகளைத் தொங்கப்போட்டுக் கொள்ளுகின்றன. உழவர்களும் தாங்கள் உழுதுகொண்டிருந்த வயல்களில் பாதியை விட்டுவிட்டு ஓட்டம் பிடித்து விடுகின்றனர்.

மினர்வாதேவியும் இந்தக் கார்முகிலைப் போன்ற ஒரு கறுத்த மேகத்தால் தன்னை மறைத்துக்கொண்டு, அந்த யுத்த களத்தை நோக்கிப் பறந்து சென்று, பீனிக்ஸின் உருவத்துடன் பூமியில் இறங்கி, ஸ்பார்ட்ட அரசன் நன்ருக அறிந்திருந்த அந்தப் பீனிக்ஸின் குரலில் அவனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தார் :—

“ஸர்வ ஜனப் பிரியனும் அகிலேசனது ஆப்த நண்பனு மான இந்த வீரன் துரோஜக் கோட்டைகளின் அடியில் நாய் நரி களுக்கு இரையாக விழுந்து விட்டானே! இது கிரீஸுக்கு நேர்ந்துவிட்ட ஒரு பெருத்த மானக்கேடான காரியம் என்றன்ரே, பிற்காலத்தவர்களெல்லாம் சொல்லுவார்கள்! உனக்காகப் பரிந்து வந்து செய்த யுத்தத்தில் அவன் தனது உயிரை யிழந்து விட்டா ளுதலால், எல்லோரிலும்கூட உனக்குத்தானே அதிகமான மானக் கேடு உண்டாய்விட்டது” என்ருர்.

அவ்வசனங்களைச் செவியுற்றுக் கேட்ட அத்திரியஸ்ஸின் புத்திரன் “ஐயா பெரியவரே! எனது தந்தையே! பூரண ஆயுளுடன் விளங்குபவரே? நெடு நாளைய அனுபவத்தினுல்

ஞான ஸம்பன்னராக விளங்குபவரே! எனது அன்பிற்குப் பாத்திரனை எனது நண்பனது பிரேதத்தை இங்கு அசையாமல் இருந்துகொண்டு காத்து வரவேண்டும் என்பதே எனது விருப்ப மாக விருக்கின்றது. அதினும் மேலான காரியம் ஒன்று உளதோ, இல்லவே இல்லை.

அந்தக் காரியத்தைச் சாதிக்க எனக்கு மினர்வா தேவியின் கிருபை வேண்டும். இந்தக் கையானது இந்த யுத்தத்தில் வெகு வாக உழைத்து அலுத்து ஓய்ந்து கிடக்கின்றது. மினர்வாதேவி யின் கிருபையினுல்தான் இதற்குப் பின்னும் சக்தி வரவேண்டும். அவர் அவ்வாறு செய்வாரானுல், நான் இந்தக் குழப்பத்தை ஒரே யடியாய் அடக்கிவிடுவேன்.

இந்த ஹெக்டர் ஒரு பெரு நெருப்பைப்போல் தகிக்கின்றுன். அவன் ஒருவனுக்குத்தான் நாங்கள் பயப்பட்டுப் பின் வாங்கு கின்றேம். அவனுக்கு ஜோவ் தேவரின் கிருபைகள் பூரணமாக விருக்கின்றன. அவர் அவனது தலையைக் காப்பாற்றி வருகின்றுர்'' என்றுன்.

இவ்வாறு எல்லாத் தேவர்களிலும் தானே முதன்முதலாக வரிக்கப்பட்டதை யறிந்து மனமகிழ்ந்த மினர்வா தேவியானவர் அவனது மனத்தினுட் புகுந்து அங்குத் தனது சுவாசத்தைச் செலுத்தினுர். அக்கணமே அவனது தளர்வெல்லாமொழிந்தன. அவன் புத்துயிரும் பெற்றுன். தன் சத்துருக்களிடம் மட்டற்ற மார்ச்சரியத்துடன் துடித்தான். அவர்கள் தனக்கிழைத்த பழிக்குப் பதிலாக ஒரு பழி வாங்கியே விடவேண்டும், அவர்களது இரத்தத் தைப் பிழிந்து விடவேண்டும், அவர்களுடன் அடங்காப் போர் புரியவேண்டும் என்று கோபத்துடன் பொங்கினுன்.

தனக்குத் தீங்கிழைத்துவிட்ட ஒரு பிராணியைப் பிடித்து வதைத்துக் கொன்று தீர்த்துவிட வேண்டும் என்று தீர்மானித்து விட்ட ஒரு குளவியானது, முதன்முதலில் தன்னுடைய முயற்சிகள் வீணேயாகிவிடினும் அது மனந் தளராமல் தன்னுடைய சக்திகள் அனைத்தையும் திரட்டிக்கொண்டு, தனது சத்துருவின் இரத்தத் தைக் குடித்தே தீருவேன் என்ற ஆவலுடன் துடிக்கின்றது. வாயுவிற்கும் வெப்பத்திற்கும் பிள்ளையாகப் பிறந்த அந்த ஆண் மகவு சிறிதும் வேகம் தணியாமல் தனது இறகுகளை விரித்துக் கொண்டு அலுப்போ, சலிப்போ, களைப்போ இல்லாமல் தனது சத்துருவை நோக்கித் திரும்பித் திரும்பிச் சென்று அதனைத் தாக்கிக் கொட்டுகின்றது.

அந்தக் குளவியைப் போலவே பொங்கிக் கொதித்த அதிரிதேசனும் தன்னுடைய சத்துருக்களை நோக்கிப் பாய்ந்தான். தான்கொடுத்த ஓரோர் வேலாயுதத்தையும் தனது முழு வேகத் துடனும் விடுத்தான். அச் சமயத்தில் அவனெதிரில் ஒரு துரோஜன் நின்று கொண்டிருந்தான். அவன் பேரும் புகழும்

உடையோனுகவே விளங்கிவந்தான். அந்த விஷயத்தில் அவனுக்கு ஒரு குறைவும் இருக்கவில்லை. ஈஷியனது புத்திரனுன அவன் போடேஸன் என்ற பெயரை வகித்திருந்தான். அவன் தனமிகுதியுடையவனுகவும், தைரிய லெக்ஷ்மியின் கடாக்ஷத்தைப் பெற்றவனுகவுமிருந்தான். மேலும் அவன் ஹெக்டரின் அன்பிற்குப் பாத்திரனுகவும் அவனது இணைபிரியாத் துணைவனுகவும் அவனது விருந்தாளியாகவும் இருந்தவன்.

அதிரிதீசன் விடுத்த வேலானது அந்தப் போடேஸனது இடுப்பிலிருந்த அகன்ற கச்சையைத் தாக்கிக் குத்திக் கிழித்து அவனது தேகத்தை யூடுருவிச் சென்று, அவனைத் தரையில் தள்ளியும் விட்டது. அவன் பொத்தென விழுந்தான். அப்பொழுது அவன் அணிந்திருந்த பிரம்மாண்டமான கவசங்கள் தரையில் திடீரென விழுந்தன. எதிரொலியைக் கிளப்பிக் கொண்டு கொல்லென ஒலித்தன.

அப்பொழுது அப்பால்லோ தேவரானவர் ஆஸியஸ்ஸின் புத்திரனுன பினேப்ஸைப்போல் வேஷந் தரித்துக் கொண்டு, ஹெக்டரின் சமீபத்தில் திடீரென வந்து நின்ருர். மஹானுன ஆஸியஸ் என்பவர் கொந்தளித்துக் கொதிக்கும் திரைகள் மலிந்த கடலோரமுள்ளதும், நீர்வள நிலவளங்கள் மலிந்ததுமான அபிடாஸ் என்னும் செழிப்பான நாட்டில் மிகுந்த செல்வத்துடன் ஆட்சி செலுத்தி வந்தவர் என்பது பிரஸித்தமன்ருே?

பினேப்ஸைப் போல் வேஷந் தரித்து வந்த அப்பால்லோ தேவர் ஹெக்டரை நோக்கி "வாராய்! ராஜகுமாரா! முன்னெரு கால், நீ பேரும் புகழும் பெற்ற வீரர்கள் எல்லோரிலும் முதல்வனுகவே விளங்கி வந்தனை! அந்தக் காலம் அழிந்து போய் விட்டது! இப்போது உனது பெயரைக் கேட்டு எந்தக் கிரேக்கன் பயப்படுகின்ருன், ஒருவனையுங் காணேும்!

நீ இப்போது மனேலல்லாஸனுக்கு இணங்கத்தான் போகின்றனையா! எக்காலத்திலும் ஒருவராவது இவனை ஒரு சுத்த வீரன் என்று மதிக்கவுமில்லை. யுத்த களத்தில் இவனைக் கண்டு கலங்கவுமில்லை. என்ருலும் இவன் இப்பொழுது நீங்கள் இதுவரை நெடுநேரம் போராடிக்காத்து வந்த இந்தவஸ்துவைத் தான் ஒருவனுகவே பறித்துப் பிடித்துக் கொண்டு வெற்றியுடன் விளங்குகின்ருன். நமது சேனையும் ஓட்டம் பிடிக்கின்றது. கீர்த்திப் பிரதாபங்களுடன் விளங்கியவனுன போடேஸனும் இவனது கையாலேயே தனது இரத்தத்தை வடித்து விட்டான். ஹெக்டரின் நண்பனுன அவன் தனது பிராணனை விட்டு விட்டான்; அந்தப் பழியைத் தீர்ப்பதற்கு ஒருவரையும் காணேன்" என்ருர்.

இதைக் கேட்டவுடன் ஹெக்டரின் முகம் வாடியது; அவனது மனம் கலங்கியது. ஒரு கறுத்த மேகம் அவனைச் சூழ்ந்து கொண்டது. அவன் துக்கக்கடலில் ஆழ்ந்து விட்டான். அக்

கணமே, ஆத்திரமும் கோபமும் அவனை உறுத்த அவன் தனது ஈட்டியை விரைந்து எடுத்துக் கொண்டு தன்னுடைய சத்துருக்களை நோக்கிச் சர சரவென்று சென்றான்.

அச்சமயம் அழிவில்லாத தேவரான ஜோவ் பகவான் ஐடாமலையையும் அதன் அடிவாரத்திலிருந்த பிரதேசத்தையும் தனது நிழலால் மறைத்துக் கொண்டிருந்த, தமது கறுத்த நிற முள்ள அகன்ற கேடயத்தை ஒரு குலுக்குக் குலுக்கினார். அப்பொழுது சுருண்டு சுருண்டு சென்ற ஒரு மேகமானது அந்த மலையைச் சூழ்ந்து வளைந்து அதைக் கவர்ந்து விட்டது. அதன் பின் அம் மேகத்தினின்று இடிபோன்ற ஒரு கர்ஜனையும் உண்டா யிற்று. ஐடாமலையும் அதனருகிலிருந்த சிறு குன்றுகளும் தத்தம் அஸ்திவாரங்களிலிருந்து அசைந்து நடுங்கின. ஜோவ் தேவரின் ஆணைப்படி கிளம்பி வந்த மின்னல்களின் வெளிச்சத்தில் அக் குன்று களெல்லாம் பளிச்சென விளங்கின.

எப்புறமும் பார்த்துவரும் அவரது ஒருகண்ணோட்டத்தினால் மாத்திரம் தோற்றவரெல்லாம் வெற்றியுடன் விளங்கினர். வென் றவர் வேகமாய்ப் பறந்து ஓடி விட்டனர். இது என்ன விபரீதம்! என்று கிரேக்கர்கள் திடுக்கிட்டுத் திகைத்தனர்; ஓட்டமும் பிடித் தனர். அவ்வாறு ஓட்டம் பிடித்தவர்களுக்குத் தலைவனாகப் பெலினியஸ்ஸே முன் சென்றான். பியோஷியாவிலிருந்து வந்த வனும் தைரிய சீலனுமான அவன் தன்னுடைய சத்துருக்களை யெதிர்த்துச் செல்ல வேண்டு மென்ற எண்ணத்துடன் அவர்களை நோக்கித் தனது தலையைத் திருப்பியதைக் கண்ணுற்ற பாலிதாமஸ் அவனை நெருங்கி யணுகி, ஒரு சிறிய வேலினால் அவனது தோளை வெட்டிச் சரித்து விட்டான்.

அதன்பின் லீட்டஸ் என்பவனும் ஹெக்டரினால் மணிக் கட்டுத் துளைக்கப்பட்டவனாய் அந்தப் போர்க்களத்தை விட்டு அகன்றான். தனது மணிக்கட்டு துளைக்கப்பட்டதினால் அவனுக்கு விசேஷமான வேதனை யுண்டாயிற்றெனினும் அவன் அதைச் சற்றும் பாராட்டாமல் தனது பிரம்மாண்டமான வேலாயுதத் தைப் பற்றிப் பிடித்தான். ஆனால் அவன் தனக்கு ஒரு காலத்தில் லகுவாக விருந்த அந்த வேலாயுதத்தை இப்போது அசைக்கவும் இயலாதவனாயினான்.

ஹெக்டர் இவ்வாறு தனக்குக் கிடைத்த வெற்றியைத் தொடர்ந்து சென்றதைக் கண்ணுற்ற இதோமன் அவனது மார் பைக் குறிவைத்துத் தகதகவென்று ஒளி வீசும் தனது ஈட்டியை விடுத்தான். ஆனால் அது பயனற்றுப் போய் விட்டது. அது ஹெக்டரின் மார்க் கவசத்தைத் தாக்கிய பொழுது, அதன் முனை முறிந்து போய் விட்டது. அதைக் கண்ணுற்ற ட்ராய் நாட்டார் களித்தனர். ஆரவாரஞ் செய்து குதித்தனர். அவர்களது கூக்குர லானது அந்தக் களத்தையே கவர்ந்து விட்டது.

அதன்பின் பிரியத்தின் புத்திரனுன ஹெக்டர் தன்னுடைய உன்னதமான ரதத்தின் உச்சியில் கம்பீரமாக நின்று கொண்டிருந்த அந்தக் கிரீட்டனை நோக்கித் தனது பிரம்மாண்டமான மர உலக்கையைச் சுழற்றி யெறிந்தான். அதுவும் குறி தப்பி விட்டது. எனினும் தட தடவென்று சென்ற அந்தத் தண்டமானது பயனற்றுப் போய் விடவில்லை. அது வீரனுன மெரியோனது தோழனும் சாரதியுமான ஸீரானஸ் என்பவனைத் தாக்கி யடித்து மண்ணில் வீழ்த்தி விட்டது.

பாவம்! அவன் எழில் வாய்ந்த லிக்ட்டஸ் என்னும் தனது நாட்டை விட்டுப் புறப்பட்டுப் பேரும் புகழும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆவலுடன் இந்த யுத்தத்திற்கு வந்தவன்!

இவ்வாறு அவன் அடியேற்ற பின்னர், மெரியோன் பாத சாரியாக நின்று பொருதான்; அந்தப் போரில் அவனும் தனது உயிரை இழந்து மண்ணைக் கவ்வியே இருப்பான். தனது சத்துருவான துரோஜனது வெற்றிக்கும் களிப்பிற்கும் காரணமாகவும் விளங்கி யிருப்பான்; ஆனுல் அந்தக் கதிக்கு அவன் ஆளாகவில்லை. மனவலியுள்ள அவனது தோழனுன ஸீரானஸ் தனக்குக் கிடைத்த அடியைப் பொறுத்துக் கொண்டே விரைந்து எழுந்து முன் சென்று, வேகமாக ஓடச்சித்தமாகவிருந்த குதிரைகள் பூட்டிய இரதத்தைத் திரும்பக் கொண்டு வந்து அதைத் தனது தலைவனுக்கு முன்பாக நிறுத்தி அவனைக் காப்பாற்றியே விட்டான். தான் மாத்திரம் உயிருடன் தப்பிப் பிழைக்கவில்லை.

அவன் தனது உயிரை வழங்கித் தனது தலைவனது உயிரைக் காப்பாற்றினுன். எவ்வாறெனில், துரோஜன் விடுத்த ஆயுதமானது அவனது கன்னத்திற்கும் காதுக்கும் இடையில் பாய்ந்து சென்று அவனுடைய பற்களைத் தட்டி யுதிர்த்து, அவனது நாவையும் துண்டித்து விட்டது. அப்போது அவன் தனது ஆஸனத்திலிருந்து குப்புற விழுந்து பாரின் மேல் புரண்டு உருண்டு சென்றுன். குதிரையின் கடிவாளக் கயிறுகளும் அவனுடைய உயிரற்ற கைகளினின்றும் நழுவி விழுந்து விட்டன.

அப்போது மெரியோன் இந்த யுத்தத்தில் தனக்கு வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையை அறவே ஒழித்து விட்டுத் தனது இரதத்தின்மேல் இருந்த வண்ணம் தனது தலையைக் குனிந்து கொண்டு, அந்தக் குதிரைகளின் கடிவாளக் கயிறுகளை இழுத்துப் பிடித்து, அவற்றை வேகமாக ஓட்டி, அந்த யுத்தகளத்தை விட்டு அகன்று விட்டான். இவன் செய்த இந்தக் காரியம் இதே மினியஸ்ஸுக்குச் சம்மதமாகவே யிருந்தது. மெரியோன் தனது சாட்டையைச் சுழற்றினுன். குதிரைகள் பறந்தன. இரதமும் வேகமாகப் பறந்து சென்று கடலோரத்திலிருந்த கப்பல்களைச் சேர்ந்து விட்டது.

ஜோவ் தேவரே இவ்வாறு இந்த யுத்தத்தில் வலுவில் தலையிட்டுப் பக்ஷபாதத்துடன் துரோஜர்களது பங்கில் நின்று, அவர்

களுக்குப் பேரும் புகழும் அளித்து விட்டதை விரைவாகவும் தெளிவாகவும் அறிந்த அமரரை நிகர்த்த அஜாக்ஷ திலமான் அத்திரிஸையின் புத்திரனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான் :—

“ஐயா! பார்த்தீரா இந்த அநியாயத்தை! சர்வவல்லமையுள்ள ஜோவ் தேவரின் கை வரிசை தெற்றென விளங்குகின்றதே! நமக்குச் சேர வேண்டிய வெற்றியை அவர் துரோஜர்கள் பக்கமாக வன்றோ திருப்பி வருகின்றார்! இது எல்லோருக்கும் கண் கூடாகத் தெரிகின்றதே! நமது சைனியத்திலிருக்கும் ஆட்கள் விடுத்து வரும் சரங்கள் ஒவ்வொன்றையும் அவர் ஓரோர் கிரேக்கனது மார்பை நோக்கியே பாய்ச்சுகின்றார். ஒன்றையேனும் அவர் வீணாக்குவதில்லை. சரத்தை விடுத்தவன் வலி குன்றியவனா அல்லது வலிமிக்கவனா என்று அவர் தரா தரம் பார்ப்பதில்லை! நிச்சயிப்பதில்லை. துரோஜச்சரம் ஒவ்வொன்றுக்கும் ஓரோர் கிரேக்கனைப் பலி கொடுத்து விடுகின்றார்.

நம் வேலாயுதங்களுக்கு அவர் அத்தகைய பாக்கியத்தை அளிப்பதில்லை. நம் ஆயுதங்களை நாம் ஒரு பெருத்த மழைபோல் இடைவிடாமல் பொழியினும், அவையனைத்தையும் அவர் வீணே ஆக்கிவிடுகின்றார். அவை ஒவ்வொன்றும் பயனற்றதாகவே ஆகிவிடுகின்றது.

இவ்வாறு அந்த தேவர் நம்மைக் கைவிட்டு விட்டாலும், நாம் மனந் தளராமல், மனிதரால் ஆகக்கூடிய முயற்சிகளையும் யுக்திகளையும் கைக்கொண்டு நம்மால் ஆவனவனைத்தையும் செய்வோமாக! நம்முடைய கப்பல்களில் உள்ள நம்முடைய ஜனங்கள் நாம் திரும்பி வரவேமாட்டோம் என்று ஏங்கி நிற்கின்றனர். தங்களுக்கு இன்னும் என்னென்ன ஆபத்துக்கள் வருமோ என்று பயந்து நடுங்குகின்றனர். தங்களுடைய கஷ்டங்களுக்கும் நஷ்டங்களுக்கும் ஒரு முடிவோ எல்லையோ காணாமல் தவிக்கின்றனர். தங்களுடைய கோட்டை வாயில்களில் ஹெக்டர் நின்று கொண்டு இடிபோல் முழங்கிக் கொண்டிருப்பதைக் கேட்டு அவர்கள் மதி கலங்குகின்றனர்.

ஆதலால் நாம் பெருமையுடன் பாராட்டிவரும் இந்தப் பிணத்தையாவது இப்போது வெற்றியுடன் எடுத்துச் சென்றால் அதைக் கண்ணுற்று அவர்கள் சிறிதேனும் ஆறுதல் அடைவார்கள், களிப்படைவார்கள்!

மேலும் இந்தத் துக்கச் செய்தியைப் பிலிதீசனது காதில் போடுவதற்காக நாம் ஒரு வீரனையனுப்பவும் வேண்டும். அவன் சமுத்திரக்கரையில், வெகுதூரத்தில் இருக்கிறான். பாவம்! அவனுக்குத் தனது நண்பனும், தனது அன்பிற்குப் பாத்திரனுமான பத்திரகலுஷன் பிரேதனாய் விட்டான் என்பது தெரியாது! அது நிச்சயந்தான். அதில் சமுசயமில்லை. அவனிடஞ்சென்று அந்தச் செய்தியை அறிவிக்கத் தக்கத் திறமையுள்ள ஒரு வீரனை நான்

இந்தக் கோஷ்டியில் காணவில்லை. நம்முடைய ஆட்களும் குதிரைகளும் சேனைகளும் நம்முடைய ஸகலமான பரிவாரங்களும் ஒரே இருட்டில் மறைந்துகிடக்கின்றன" என்று கூறிவிட்டு ஜோவ் தேவரை நோக்கிப் பிரார்த்தித்தான் :—

"மண்ணுலக விண்ணுலகங்களைப் பராமரிக்கும் பிரபுவே! அரசே! அன்புமிக்க தந்தையே! நான் பணிவுடன் செய்யும் பிரார்த்தனையைக் கேட்பீராக! இந்த மேகத்தை விலக்கும்! ஆகாய வீதியில் திரும்பவும் பகலொளியைப் பரப்பும்! என் கண்களுக்கு வெளிச்சத்தைத்தாரும்!

அஜாக்ஷனுக்குத் தாங்கள் இந்தக் கிருபையை யாயினும் செய்யும்! இதைச் செய்தாற் போதும்! கிரேக்கர்களான நாங்கள் அழிந்துதான் போகவேண்டுமென்று தங்களது திருவுள்ளமானல் நாங்கள் தங்களது ஆணைக்கு ஆட்படுகின்றோம். பகலவன் கண்ணெதிரிலாவது எங்களது பிராணனைவிடவேண்டுமென்பது எங்களது விருப்பம். இம்மட்டாவது அருள்புரிவீராக" என்றான்.

இவ்வாறு அவன் கண்ணீர் பொழியப் பொழிய அழுது கொண்டு உரைத்த வசனங்களையும், செய்த பிரார்த்தனைகளையும் செவிசாய்த்துக்கேட்ட ஜோவ் தேவர் மனமிரங்கினார். ஆகாயத்தை மறைத்து வந்த மேகங்களை விலக்கினார். அக்கணமே சூரிய பகவானும் தன்னுடைய பூரண கிரணங்களுடன் பளிச்சென விளங்கினான். வீரர்கள் அணிந்திருந்த கவசங்களும், கத்தி கேடயங்களும் ஜோதியுடன் பிரகாசித்தன.

இவ்வாறு தனது பிரார்த்தனை பலித்ததைக் கண்ணுற்ற அஜாக்ஷன் அதிரிதேசனை நோக்கித் திரும்பவும், "அதிரிதேசா! அதிரிதேசா! இதுதான் சமயம்! இதுதான் தருணம்! உன்னைச் சுற்றி நாற்புறமும் பார்! இந்த யுத்தத்தில் இன்னும் இதுவரை அந்திலோக்கஸ் உயிருடன் மிஞ்சியிருப்பானெனில், அவனே இந்தத் துக்கச் செய்தியை மஹாராஜன அகிலேசனுடைய காதுகளில் போடட்டும், அவனே சென்று இந்தச் செய்தியை அவனுக்கு அறிவிக்கட்டும்" என்றான். அதிரிதீசனும் அக்கணமே அவ்வாறு செய்ய அவ்விடம் விட்டு அகன்றான்.

இடையர்களால் நெடுநேரம் ஹிம்சிக்கப்பட்டும், வேட்டை நாய்களால் அலட்டி யுருத்தப்பட்டும் களைத்து அலுத்து விறைத்துப்போய்விட்ட ஒரு சிங்கமானது தன்னைச் சுற்றிலும் நாற்புறமிருந்துவரும் நூற்றுக்கணக்கான அம்புகளால் தாக்கப்பட்டுக் குத்தும் குழியும் காயமும் ஏற்று வந்தும், தகதகவென்று செக்கச் சிவக்க எரியும் கொள்ளிக்கட்டைகளைக்கண்டு பயந்து நடுங்கி வந்தும், அது தனது தைரியத்தைச் சிறிதளவும் தளரவிடுவதில்லை. பசியினால் துடிக்கினும் அது தனது மனத்துணிவை இழந்துவிடுவதில்லை. இருள் நீங்கிப் பொழுது புலர்ந்து ஒளி வரும் வரை, அது

தான் தாக்கிவந்த ஆட்டு மந்தையின் அருகிலேயே பதுங்கிக் கிடந்து, கடைசியாக வெளிச்சமான பின் மிகுந்த சங்கடத்துடனும் கவலையுடனும் முகத்தைச் சுளித்துக்கொண்டு தான் தேடி வந்த இறைச்சியைச் சிறிதும் ருசிகூடப் பார்க்காமல் அவ்விடத்தை விட்டு அகன்று விடுகின்றது.

அந்தச் சிங்கத்தைப் போலவே அதிரிதீசனும் அங்கங்கள் தளர்ந்து மனமிடிந்து மெதுவாக வெறுப்புடன் அடிமேல் அடிவைத்துக்கொண்டு ஆபத்துக்கள் மலிந்துகிடந்த அந்த இடத்தைவிட்டு அகன்றான், பத்திரகலுஷனது பிரேதத்தைச் சத்துருக்கள் எங்கு பறித்துக்கொண்டுபோய் விடுவார்களோ என்ற கவலை அவனது மனத்தைவிட்டு அகலவில்லை. ஆதலால் அவன் தனது பரிவாரத்தை நோக்கி அவர்களைப் பலவாறாக எச்சரித்தான். அவர்களுக்குத் தனது கட்டளைகளையுமிட்டான் :—

"வாரீர் வீரர்களே! நான் உங்களிடம் ஒப்புவிக்கும் இந்தப் பிரேதத்தை நீங்கள் காத்து வாருங்கள்! பிணமாகக் கிடக்கும் இவருடைய நற்குணங்களை மறவாமல் உங்களது மனத்தில் சிந்தித்து வாருங்கள்.

ஆஹா! பிறர்க்கு உதவி செய்வதில் இவர் எவ்வளவு திறமையுடன் விளங்கினார்! சாந்தமான ஒழுக்கமும் நடை உடை பாவனைகளும் ஸாத்துவீக ஸ்வபாவமும் உடையவராகவுமேயன்றோ இவர் விளங்கினார்! ஆஹா இவர் இறந்து போய் விட்டனரே. இவரது தலைவிதி அவ்வாறு இருந்தது. உயிருடன் இருக்கையில் இவர் ஓர் உத்தம நண்பராக விளங்கினார். ஒரு மஹா வீரராகவே இந்த யுத்தத்தில் பொருதார். தனது உயிரையும் நீத்தார். இதுவன்றோ உண்மையான பெருமை" என்றான்.

அவ்வாறு உரைத்துவிட்டு அந்தச் சேனைத் தலைவன் அணியாக நின்று கொண்டிருந்த சேனைகளைக் கடந்து பறந்து சென்றான். தன்னைச் சுற்றிலும் நாற்புறத்திலுமுள்ள வீரர்களை ஏற இறங்க உற்றுப் பார்த்துக்கொண்டே அவன் அந்தச் சேனைகளைக் கடந்து வேகமாகப் பறந்து சென்றான்.

ஆகாய வீதியின் நடு மையத்தில் தங்களுடைய சிறகுகளை விரித்துக்கொண்டு பறக்கும் பறவைகள் அனைத்தினும் கூர்மைமிக்க கண்ணோட்டமுடையதும், பறவைகளில் உத்தமமானதும், பக்ஷி ராஜன் எனக்கருதப்படுவதுமான துணிவு மிகுந்த கருடன், அந்த ஆகாய வீதியில் பவனி வருகையில் கீழே வெகுதூரம் வரை பறந்துகிடக்கும் தோப்புத் துரவுகளின் மேல் தனது பார்வையைச் செலுத்தி அவை அதிமெதுவாக அசைந்தாடுவதைக் கவனித்து வருகையில், அங்கு பயந்து நடுங்கிக்கொண்டு சஞ்சரித்துவரும் ஒரு முயலைக் கண்டு விட்டதும், அது உடனே ஒரே பாய்ச்சலில் அம்முயலின் மேற் பாய்ந்து அம்முயல் துடிக்கத் துடிக்க அதனைப்

பற்றிப் பிடித்துத் திரும்பவும் மேகமண்டலங்களுக்குப் பறந்துசென்று அங்கு அதன் உயிரை உறிஞ்சி விடுகின்றது.

அதிரிதீசனும், அந்தப் பக்ஷிக்குச் சிறிதும் இளையாத வேகத்துடனும் ஆற்றலுடனும் தனது பார்வையை அந்த யுத்த களத்தில் இப்புறமும் அப்புறமும் செலுத்தினன். கடைசியாகத் தான் நாடி வந்த வீரன் தன்னுடைய ஸைனிகர்கள் தளர்வுரு வண்ணம் அவர்களுக்கு ஊக்கமளித்துக்கொண்டும், தன்னைச் சுற்றிலும் நாற்புறமுமிருந்த சத்துருக்களை நமனுலகுக்கு அனுப்பிக்கொண்டும் அந்த யுத்த களத்தின் இடது பக்கத்தில் இருந்ததைக் கண்ணுற்று அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"ஜோவ் தேவரின் அன்பிற்குப் பாத்திரனே ! இங்கு என்னருகில் வா! துக்கம் மிக்க ஒரு செய்தி! அதினும் மிக்க துக்ககரமான செய்தியை நீ இதுவரை கேட்டிருக்கவே மாட்டாய்! காரியங்களெல்லாம் நமக்கு விரோதமாகவே திரும்பி விட்டன. நமக்கு ஆபத்தாகவும் முடிந்து விட்டன. அவற்றை நீயே உனது கண்ணுலும் பார்த்துவிட்டாய். இலியனுக்கு வெற்றி உண்டாய் விட்டது, அக்கேயர்கள் அழுது புலம்புகின்றனர்.

இம்மட்டோ! பத்திரகலுஷன் அதோ கரையோரத்தில் செத்துக் கிடக்கின்ருன். அவனது உடல் வெளுத்துக்கிடக்கின்றது. அவனது கை ஓய்ந்துபோய் விட்டது. கிரீஸ்காரருக்கு அவனுல் இனி ஒருவிதமான உதவியும் உண்டாகாது.

ஆதலால், நீ இக்கணமே நம்முடைய கப்பல்களை நோக்கிப் பறந்து சென்று, அகிலேசனிடம் அவனது பிரிய நண்பன் எவ்வாறு இறந்து பட்டான் என்பதைச் சொல். உடனே ஓடிச் சென்று அவனுக்கு இந்தச் செய்தியைச் சொல். அவன் வருந்துவான். துக்கிப்பான். துக்கம் மேலிட்டு அவன் நிர்வாணமாகிக் கிடக்கும் அந்தப் பிணத்தைத் திரும்பிப் பற்றிப் பிடித்து விட வேண்டுமென்ற ஆவலுடன் தானே விரைந்து வருவான்.

பத்திரகலுஷனுடைய ஆயுதங்களையும் கவசத்தையும் ஹெக்டர் கொள்ளை கொண்டு போய் விட்டான். அவை இப்பொழுது அவனிடமே இருக்கின்றன !" என்ருன்.

அந்த இளம் வீரன் இந்தத் துக்கச் செய்திகளை மிகவும் மௌனமாகச் செவி சாய்த்துக் கேட்டு வருகையில், அவனுடைய அழகான கண்களிலிருந்து கண்ணீரானது வெள்ளம் போல் பெருகி வந்தது. அவன் தேம்பித் தேம்பி யழுதான். இந்தப் பெருந் துக்கத்தினுல் அவனது மனம் பொங்கி எழுந்தது. புழுங்கியது. அப்போது அவன் தனது மனத்திலிருந்த சங்கடங்களை வெளிவிட்டுச் சொல்ல முயன்ருன். ஆனுல் அந்தக் காரியம் அவனுல் முடியவில்லை. அவனது நா எழவில்லை. ஒரு வார்த்தையேனும் சொல்ல அவன் இயலாதவனுயினுன்!

அச்சமயம் அவன் தன்னருகிலிருந்த வீரியவானுன லயோ டக்கஸ்ஸினிடம் தன்னுடைய ஆயுதங்களை வீசி எறிந்து விட்டுக் கண்களில் நீர் பெருகவும், சோர்வுற்ற மனத்தினனுகவும் இந்தத் துக்க சமாசாரத்தை அகிலேசனுக்கு அறிவிக்க விரைந்து ஓடிச் சென்முன்.

லயோட்டக்கஸ் அவனது இரதத்தை ஓட்டிக்கொண்டு முன் சென்றுன். அப்போது பைலியப்போர் வீரர்கள் தங்களுடைய சத்துருக்களால் வெகுவாக நெருக்கப்பட்டு ஹிம்சைகளை அனுப வித்து வந்தனர். மனேல்லாஸன் அவர்களுக்குத் துணைவனுக விருந்து அவர்களுக்குத் தன்னுலான உதவிகளைச் செய்து கொண் டிருந்தான். அவனும் அப்பொழுது, தான் அதுவரை பைலியர் களுக்குச் செய்து வந்த உதவி போதும் என்று தீர்மானித்து, அவ் வுதவியைச் செய்து வர திராஸிமேதனை நியமித்து விட்டுத், தானே பத்திரகலுஷனுடைய பிரேதத்தை நோக்கிச் சென்றுன்.

அங்குச் சென்று சேர்ந்த பின் அவன் தன்னுடைய வீரர் களையும் சேனைகளையும் நோக்கிக் கூறினுன் :—

"அதோ பாருங்கள்! அந்திலோக்கஸ் அகிலேசனை நாடி ஓடுகின்றுன். என்றுலும் வீரர்களே! அகிலேசன் நமது உதவிக்கு வருவான் என்று நீங்கள் நம்பி யிருக்கவேண்டாம், அவன் கொடுங் கோபத்துடன் துடிக்கினும் அளவிட முடியாத துக்கத்தை அனுப வித்துவரினும் துரோஜ சத்துருக்களுடன் யுத்தஞ்செய்ய முன்வரவே மாட்டான். அவன் இப்பொழுது நிராயுதனுகவும் இருக்கின்றுன்.

ஆதலால் நமது கைதான் நமக்கு உதவி என்று உறுதியுடன் நாம் நமது காரியங்களைச் செய்ய வேண்டும். நமது கை வலிபினு லேயே நாம் இந்தப் பிரேதத்தைத் திருப்பிப் பற்றி விடவேண்டும்.

இந்த துரோஜர்கள் தங்குதடையின்றி ஒரு பெருத்த மழை போல் நம்மை மோதியடிக்கின்றனர். இந்த ஆபத்துக்குத் தப்ப வேண்டுமென்றுல் நான் சொன்னது தான் சரியான உபாயம். வேறென்றையும் நான் காணவில்லை. நமது தலை விதியும் அதிர்ஷ் டமும் இவ்வாறு இருக்கின்றன" என்றுன்.

அப்போது அஜாக்ஷன் அவனை நோக்கி "நல்லது, நீ சொல் லியது அனைத்தும் உண்மையே! நாம் அப்படியே செய்வோம். மெரியோனைத் துணைக் கொண்டு நீ இந்த உத்தமனுன வீரனது பிணத்தைத் திருப்பி யெடுத்துச் செல்.

நானும் வீரியவானுன எனது உடன் பிறந்தானும், முன் னின்று நம்மைத் தாக்கி வரும் ஹெக்டரையும் அவனுடைய பரி வாரத்தாரையும் பார்த்துக் கொள்ளுகிறேம். அவர்கள் நம்மை மீளாமல் பார்த்துக் கொள்ளுகிறேம். நம்முடன் போர் புரிய வேண் டும் என்ற ஆவலுடன் எவ்வளவு சேனைகள் வேண்டுமென்றுலும்

வரட்டும். நாம் அவைகளைக் கண்டு பயப்படுவர்கள் அல்ல. ஒரு கைபார்த்தே தீருவோம். ட்ராய்க்காரருடைய கைவலியும் எவ்வளவு என்பதை நாம் ஏற்கனவே அறிந்திருக்கின்றோம். அதைப் பரீக்ஷை யும் செய்து விட்டோம். அந்தப் பரீக்ஷையில் நாமே இளைக்காதவர் கள் என்பதையும் அறிந்து விட்டோம் '' என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே வீரர்களான அவனும் அவனது உடன் பிறந்தானும் அந்தப் பிணத்தைத் தரையினின் றும் உயரத் தூக்கி எடுத்தனர். அக்கணம் அதைக் கண்ணுற் றோர் அனைவரும் ஒருமித்துக் கொல்லெனக் கோஷித்தனர்; ஆர வாரித்தனர். துரோஜர்களும் உரத்துக் கூவிக்கொண்டு எழுந்து அதுவரை நின்றிருந்த யுத்தத்தைத் திரும்பவும் தொடர்ந்து ஆரம் பித்தனர்.

ஒரு காட்டில் அதிவேகமாகவும் மும்முரமாகவும் ஆத்திரத் துடனும் வேட்டையாடும் வேடர்களால் அடிபட்டுக் காய மடைந்த ஒரு முட்பன்றியின் மாம்ஸத்தைத் தின்ன வேண்டும் என்ற அடங்காப் பசிதாகங்கள் கொண்டவையும் பெருந்தீனியில் பிரியமுள்ளவையுமான வேட்டை நாய்கள், அந்த முட்பன்றியை இருள் சூழ்ந்த அக்காட்டின் ஓரமாக அதிவேகமாகத் துரத்துகின் றன. அடங்காக் கோபத்துடனும் கடுத்த முகத்துடனும் துடிக் கின்றன. தடதடவென்று ஓடுகின்றன என்றாலும் அவற்றின் ஆத் திரமும் விசையும் இச்சமயம் இந்த யுத்த களத்தில் இவ்விரு திறத்துச் சேனைகளும் காட்டிய ஆத்திர விசைகளை மிஞ்சியிருப்ப தில்லை.

ஆனால் அந்தப் பன்றியானது தங்களை நோக்கித் திரும்பித் தன்னுடைய தகதகவென்று ஜ்வலிக்கும் கண்களை யுருட்டிப் பார்த்துவிடுமானால், அவ்வேட்டை நாய்கள் உரத்து ஊளையிட்டுக் கொண்டும் அக்காட்டைச் சுற்றி வளைத்துக் கொண்டும் ஓட்டம் பிடித்து விடுகின்றன.

இந்தக் கிரேக்க துரோஜச் சண்டையும் இந்த முட்பன்றி வேட்டையைப் போன்றே யிருந்தது. கிரேக்கர்கள் பின்னடைந்து ஓட்டம் பிடித்தனர். துரோஜர்கள் அவர்களின் மேல் ஒரு பெருத்த வெள்ளத்தைப்போல் அலையலையாய்ப் பாய்ந்து விழுந்து தாக்கினர். கனமான தங்களுடைய பெருத்த வாட்களைக் குலுக்கியசைத்தனர். ஈட்டிகளையும் வேலாயுதங்களையும் மலைபோல் சொரிந்தனர்.

ஆனால் அவர்களது கொட்டமனைத்தும், அஜாக்ஷனைக் கண்டவுடன் அடங்கிப்போய் விட்டது. அவன் அவர்களை நோக்கி சற்றுத் திரும்பினான். அக்கணமே அவர்கள் திடுக்கிட்டுப் பயந்து நடுங்கி மனவலியையுமிழந்தனர். மேனி வெளுத்தனர். யுத்த களத்தைத் துறந்து ஓட்டமும் பிடித்தனர்.

ஆனால் இவ்வாறு அஜாக்ஷர்கள் இருவரும் அந்தப் பிணத்தை உயரத் தூக்கிப் பிடித்து எடுத்துச் சென்ற பொழுது

அவர்களுக்குப் பின்புறத்தில் யுத்தமானது முன்போல் ஆரம் பித்து அதிமும்முரமாக நிகழ்ந்து வந்தது. அந்தக் களத்தில் குழப்பமும் சந்தடியும், கோரமான வதைகளும் அடிதடிகளுமே மேலோங்கி விளங்கின. சைனிகர்களும் துரக, ரதங்களுடன் தலை கால் தெரியாமல் நாற்புறமும் ஓட்டம் பிடித்துக் கொண்டு இருந்தனர்.

அலைபோல் பாய்ந்து வரும் நெருப்புக்கும் காற்றுக்கும் இரையாகி விட்ட பட்டணங்களில் கூட இத்தகைய கோரமான கொடுங்காட்சிகளைக் காண்பது அரிது என்பதில் ஐயமில்லை. யாதாயினும் ஒரு பட்டணமானது அவ்வாறு காற்றுக்கும் நெருப் புக்கும் இரையாகி விட்டால் அப்போது அப்பட்டணத்தில் ஆகாயமளாவி விளங்கும் உன்னதமான மாளிகைகள் இருண்ட மேகங்களில் மறைந்து போய் விடுகின்றன. தேவர்கள் குடி கொண்டிருக்கும் திவ்யமான கோயில்களும் தகதகவென்று எரிந்து நறநறவென்று வெடித்துத் தரைமட்டமாக விழுந்து விடுகின்றன.

அக்கோவில்களும் மாளிகைகளும் இடிந்து விழும் பொழுது உண்டாகும் சப்தமானது அக்கட்டடங்களையே ஊடுருவிக் கொண்டு ஒரு பெருத்த வெள்ளத்தைப்போல் வேகமாகச் செல்லு கின்றது. அப்போது உண்டாகும் புகையும் பெருத்த படலங்கள் போல் வானளாவி உயர்ந்து பறந்து சென்று துருவ மண்ட லத்தையும் ஆக்ரமித்து அதனை இருட்டி மறைத்து விடுகின்றது.

வீரர்கள் இருவரும் தாங்கள் போற்றிப் பாராட்டி வந்ததும், அதிபளுவுள்ளதுமான அந்தப் பிணத்தை அதிமரியாதையுடன் சுமந்து சென்றனர். அதன் பெரும்பாரம் தாங்காமல் அவர்கள் வியர்த்துப் போயினர்.

செங்குத்தான ஒரு மலையுச்சியிலிருந்து கல்லும் முள்ளும் நிறைந்த ஒரு காட்டுப் பாதையின் வழியாக, இரண்டு கோவேறு கழுதைகள் தங்கள் முழு பலத்துடன் ஒரு பிரம்மாண்டமான துலத்தையோ அல்லது கனம் மிக்கதும் கைக்கடங்காததுமான ஒரு நீண்ட கொடி மரத்தையோ இழுத்துச் செல்லுகையில் அவை மூச்சுவிட முடியாமல் திணறித் தவிக்கின்றன. திரண்டு உருண்ட வியர்வைத் துளிகளை வடிக்கின்றன. அப்போது அந்தப் பருமனான மரக்கட்டைகள் அந்தக் குன்றின் சரிவில் இறங்கி நிதானமாகச் சரிந்து செல்லுகின்றன. அஜாக்ஷர்கள் செய்த காரியமும் இவ்வாறேயிருந்தது.

பெருந் தேகத்தானான அஜாக்ஷன் அதன்பின் அப்போர் முனையில் நின்று கொண்டு சிறிது நேரம் இளைப்பாறினான். அப் போது சத்துரு சைனியமானது ஒரு பெருத்த மலையருவியைப் போல் தடதடவென அவனைக் கடந்து உருண்டு வந்தது. அவ்வருவியை அவன் தன்னுடைய ஆயுதங்களால் சின்னாபின்ன மாக வெட்டித் துண்டித்து விட்டான்.

அக்காலத்தில் தடதடவெனப் பொழிந்த மழையினுல் பெருக்கெடுத்துக் கரைபுரண்டு ஓடும் ஒரு நதியானது தனது தண்ணீரை விசாலமான ஒரு சம நிலத்தில் வெகு தூரம் வரை பரப்பி வருகையில் அச்சம நிலத்தின் மத்தியிலுள்ள ஒரு குன்ருனது அந்நதியை இரண்டாகப் பிளந்து அதன் வேகத்தைக் குறைத்துத் தணித்து அதில் உண்டாகும் அலைகளைச் சுழல்களாக மாற்றி வெகுதூரம் வரை ஓட்டித் துரத்தி விடுகின்றது.

துரோஜச் சைனியமான பெரும் வெள்ளத்தைப் பர்வத ராஜன் போன்ற அஜாக்ஷனும் இவ்வாறே வழிமறித்துத் தடுத்துப் பிரித்துச் சுழற்றியடித்து ஓட்டிவிட்டான்.

துரோஜ வீரர்கள் அந்தக் குன்றை அணியணியாய் நெருங்கி வந்து அதன் பின்புறத்தில் அதை மோதும் அலைகளைப் போல் அஜாக்ஷனைத் தாக்கினர்.

ஈனியஸ் ஒரு பெரும் புயலைப் போல் கிரேக்கர்களைத் தாக்கி யடித்தான். கொடுங்கோபங் கொண்ட ஹெக்டர் துடித்தான். அவனது தேகத்திலிருந்து வியர்வையானது நுரை நுரையாய் வடிந்தது.

ஆகாய மண்டலத்தில் உயரமாகத் தனது இரு சிறகுகளை யும் ஏற்றத் தாழ்ச்சியின்றி விரித்து வட்டமிட்டுக் கொண்டு தொங்கும் ஒரு ராஜாளியானது சிறகு முளையாத தங்களுடைய இளங் குஞ்சுகளைக் கொத்தி எடுக்கும் பாவனையுடன் அவற்றைப் பயமுறுத்தி வருவதைக் கண்ணுற்று இடைவிடாமல் கத்திக் கொண்டு பறந்துவரும் தாய் நாரைகளைப் போல், நெருங்கித் திரளாக நின்றுவந்த கிரேக்கர்கள் ஒழுங்காகவும் அணியிற் பிரியா மலும் ஒரு கெட்டியாக அடித்த ஆப்பைப் போல் பின்னிடைந்து சென்றனர்.

துரோஜத் தலைவர்கள் விரட்டித் துரத்திய பொழுது கிரேக் கர்கள் ஓட்டம் பிடித்தனர், பறந்தனர். மிரண்டு வெருண்டனர். கூக்குரலிட்டுப் புலம்பினர், கதறினர். யுத்தகளத்தில் வெட்டப் பட்டிருந்த அகழ்களின் உள்ளிலும் புறத்திலும் அவற்றின் கரை யோரங்களிலும் கிரேக்கர்களுடைய ஆயுதங்கள் பளபளவென மின்னிக் கொண்டு சிதறுண்டு இரைந்து கிடந்தன.

இந்தப் பயங்கரமான காரியத்தை ஜோவ் தேவரே இவ்வாறு நியமித்து நடத்தி வைத்தார். வீரசூரர்களுடைய ஸம்ஹாரமானது தங்குதடையின்றி நடந்து வந்தது. வீரர்கள் தங்களது இரத்தத்தை அந்தக் களத்தில் தாராளமாக வடித்து வந்தனர்.

———o———

## பதினெட்டாம் அத்தியாயம்

# அகிலேசனது துக்கமும், அவனுக்கு வல்க்கன் தேவன் செய்து கொடுத்த புதிய கவசமும்

கதைச் சுருக்கம் :— பத்திரகலுஷனது மரணமானது அந்திலோக்கஸின் மூலமாக அகிலேசனுக்கு அறிவிக்கப் படுகின்றது. அகிலேசன் வெகுவாகத் துக்கிக்கின்றான்.

அவனுடைய அழுகைகளையும் புலம்பல்களையும் கேட் டறிந்த தெட்டிஸ் தேவி அவனைத் தேற்றுவதற்காகத் தன் னுடைய பாங்கிகளான சமுத்திர கன்னிகைகளுடன் வருகின்றாள். அப்போது தாயும் மகனும் பேசிக் கொள்ளுகின்றனர்.

அதன்பின் ஜூனோ தேவியின் ஆணைப்படி ஐரீஸ் தேவி அகிலேசன் முன் தோன்றி கிரேக்கர்களுடைய கோட்டைகளின் அகழ்களின் மேல் வந்து நிற்கும்படி அவனுக்குக் கட்டளை யிடுகின்றாள்.

அவன் அவ்வாறு அங்கு வந்து நின்றவுடன் யுத்தத்தின் போக்கே மாறிவிடுகின்றது. கிரேக்கர்கள் பத்திரகலுஷனுடைய பிரேதத்தை எடுத்துக் கொண்டு ஓட்டம் பிடித்து விடுகின்றனர்.

அதன்பின் துரோஜர்கள் ஒரு சபை கூடி, விஷயங்களை ஆராய்கின்றனர். அச்சபையில் ஹெக்டரும் பாலிதாமஸும் மாறான அபிப்பிராயங்களை உரைக்கின்றனர். அந்த யுத்தகளத்தி லேயே தாங்கள் இருந்து வரவேண்டும் என்று ஹெக்டர் சொல்லு கின்றான்.

சபையோர் அந்த அபிப்பிராயத்தை ஆதரித்து அவ் வண்ணமே செய்வதாகத் தீர்மானிக்கின்றனர்.

அதன்பின் அகிலேசன் பத்திரகலுஷனது உடலைக் கட்டிக் கொண்டு புலம்புகின்றான்.

தெட்டிஸ் தேவி தனது புத்திரனுக்குப் புதிய கவசமும் ஆயுதங்களும் கொண்டு வருமாறு வல்க்கன் தேவனது அரண் மனைக்குச் செல்லுகின்றாள்.

வல்க்கனது அற்புதமான வேலைகள் வருணிக்கப் படுகின்றன.

கடைசியாக அகிலேசனுக்காக வல்க்கன் வார்த்துக் கொடுத்த திவ்யமான கவசமும் வர்ணிக்கப்படுகின்றது.

இருபத்தி ஒன்பதாம் நாள் மாலையிலும் அன்றைய இரவிலும் நடந்த காரியங்கள் இந்த அத்தியாயத்தில் விவரிக்கப் படுகின்றன.

கடற்கரையில் அகிலேசனுக்காகக் கட்டப்பட்டிருந்த கூடாரத்திலும் அதன்பின் வல்க்கன் தேவனது அரண்மனையிலும் இக்காரியங்கள் நிகழ்கின்றன.

---

இவ்வாறு இந்த யுத்தமானது கொழுந்து விட்டுக்கொண்டு எரியும் ஒரு பெருத்த நெருப்பைப் போல் அதிவேகமாக நடந்து வந்தது. அது ஒரு கணம் துரிதமாகவும் மறு கணம் நிதானமாக வும் நடந்தது.

இதன் மத்தியில் நெஸ்டாரின் புத்திரன் ஜலஸ்மிருத்தியுடன் அகன்று ஓடும் ஹெல்லஸ்பாண்ட்டுக்கு யுத்தச் செய்தியைக் கொண்டு சென்று சேர்ந்து விட்டான்.

அங்கு அகிலேசன் தன்னுடைய கப்பல்களில் காற்றடிக்கும் திசையில் பாய்மரங்களின் மேல் விரித்துக் கட்டப்பட்டிருந்த பாய் களின் நிழலில் சிந்தையிலாழ்ந்தவனாய் உட்கார்ந்திருந்தான். விதியின் பயனாக விளைந்துவிட்ட கொடுமைகளனைத்தும் அவன் மனதில் முன்வந்து நின்று அவனைத் துயர்க் கடலில் அழுத்தி விட்டன. அவன் பின் வருமாறு யோசனைகள் செய்தான் :—

“ ஆஹா ! இந்த கிரேக்கர்கள் சிறிது முன்புதானே வெற்றி யுடன் விளங்கினர். இப்போது இவர்கள் இந்த யுத்தத்தை விட்டு புறங்காட்டி ஓடுகின்றனரே. இவர்களுக்கு இப்போது ஏதோ ஆபத்து வந்துவிட்டது போல் தோன்றுகின்றதே! அது என்ன ஆபத்தோ தெரியவில்லையே !

துக்கத்தின் கொடுமைகளைத் தாங்க முடியாமல் நான் அவற்றின் அடியில் அழுந்திப் போய்விட வேண்டும் என்று நெடு நாட்களுக்கு முன் தேவர்கள் எனக்கு ஒரு சாபமிட்டிருந்தனர். அந்தச் சாபம் இன்று நிறைவேறி விடுமோ ! அந்தத் தினம் இன்று வந்து விட்டதோ !

தெட்டீஸ் தேவியார் இவ்வாறன்றோ எனக்கு முன்னாடியே அறிவித்திருந்தார். மிர்மிடோனியப் பிரகிருதிகளில் மிகவும் உத்தமனான வீரன் கேவலம் ஒரு துரோஜனது கையினால் மாண்டு போவான் ; கண்ணை மூடுவான் ; மண்ணில் மறைந்து போவான் என்றன்றோ அவர் சொல்லியிருந்தார்; அவரது ஆணை நிறை வேறி விட்டதோ ? அந்த வீரன் விழுந்து விட்டானோ, அவன் பத்திரகலுஷன் தானோ ?

யுத்த களத்தினின்றும் விரைவில் வந்து விடு, ஹெக்டரின் ஸைனியங்களுடன் போராட வேண்டாம் என்றெல்லாம் நான் அவனுக்கு எச்சரித்திருந்தேனே ! அவையனைத்தும் வீணே ஆயி னவோ ? ஆஹா இது என்ன சங்கடம் !''

இவ்வாறு பலவாறான எண்ணங்களால் இவன் தனது மனத்தைப் புண்படுத்திக்கொண்டு இருக்கையில், அந்திலோக்கஸ் அவனுக்கு முன்வந்து நின்று தன்னுடைய கண்களினின்றும் தாரை தாரையாக நீரைப் பொழிந்து கொண்டு, பின்வருமாறு புலம்ப லுற்றான் :—

''பீலியஸ்ஸின் புத்திரா ! அதி துக்ககரமான ஒரு சமாசாரத் தைச் சொல்லவே நான் இங்கு வந்தேன் ! அதை நீ கேட்க வேண்டும்.

மஹா பாபியான நான்தான் அதை உனக்கு அறிவிக்க வேண்டுமென்று நம்மவர்கள் என்னைப் பலவந்தமாக அனுப்பிவிட் டார்கள்.

பத்திரகலுஷன் பட்டு விழுந்து விட்டான். அவர்களெல் லோரும் அவனது பிரேதத்தைக் கவர்ந்துவிட வேண்டுமென்று அங்குப் போராடி வருகின்றனர். நிர்வாணமாகக் கிடக்கும் அவ னது பிரேதத்திற்காக அவர்கள் போராடி வருகின்றனர். அவன் ஆயுதங்களை ஹெக்டர் பறித்துக் கொண்டு விட்டான் '' என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட பொழுது ஒரு பெரும் பீதியா னது அந்த வீரனைப் பிடித்துக் கொண்டது. அது அவனது உடல் முழுவதையும் அங்க மங்கமாகத் துளைத்து விட்டது. பெருந் துக்கம் அவனது மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. அவ னது மனது இருளில் மறைந்து விட்டது.

அவன் திடீரெனத் தரையின்மீது விழுந்து புரண்டான். அந்தத் தரையின்மீது தக தகவென்று கொதித்துக் கொண்டு மலை போல் குவிந்து கிடந்த சாம்பலை யெடுத்து தனது அதி சுந்தரமான தலையின்மேல் தூவிக் கொண்டான்.

அதன் பின் அவன் தன் பட்டுப் பீதாம்பரங்களையும் பொன் மயமான தலை மயிரையும் அலங்கோலப் படுத்திக் கலைத்துக் கொண்டான். தன் வஸ்திரங்களைப் புழுதியிற் புரட்டினான். தலைமயிரைச் சின்னா பின்னமாகக் கிழித்துச் சிக்குப் படுத்திக் கொண்டான்.

கல்லும் முள்ளுமாகக் கிடந்த அந்த வெறுந்தரையில் விழுந்து துக்கம் நிறைந்த தனது மார்பை யடித்துக் கொண்டு புரண்டான், உருண்டான், வீழ்ந்தான், தரையிலேயே வேரூன்றி வளர்ந்தவன் போலும் தோன்றினான்.

அப்பொழுது அவனுலும் பத்திரகலுஷனுலும் சிறை பிடிக்கப்பட்டு அடிமைகளாக விருந்த சுந்தரிகள், தங்களுடைய ஆடையாபரணுதிகளைக் கலைத்துக் கொண்டு, அந்தக் கூடாரத்தின் அந்தப்புரத்திலிருந்து அலறியடித்துக் கொண்டு வெளியே வந்து அவனைச் சுற்றி நின்று கொண்டு தங்களுடைய வெளுத்த மார்பையடித்துப் புடைத்துக் கொண்டனர். அவ்வாறு அடித்துப் புடைத்துக்கொண்டு அலுத்துச் சலித்துக் கடைசியாய்த் தரையின்மீது விழுந்தும் விட்டனர்.

இவ்வாறு அகிலேசனும் அவனுடைய அடிமைப் பெண்களும் துக்கம் பாராட்டிக் கொண்டிருக்கையில், மஹா வீரனை நெஸ்டாரின் புத்திரன் அந்த யுத்த களத்தில் ஒருபுறமாக இருந்த வண்ணம் அதி ஸாகஸமான காரியங்களைச் செய்து கொண்டிருந்தான்.

பித்துப் பிடித்தவன் போல் பிதற்றிக் கொண்டு துக்கத்தில் ஆழ்ந்தவனுகவே யிருந்தும் அவன் தன்னுடைய ஆயுதங்களை யணிந்து கொண்டு, ஆத்திரத்துடன் போர் புரிந்தே வந்தான். அப்போது அவனுடைய சத்துருக்கள் அவனைத் தாக்கியடிக்க வந்தனரெனினும் அவன் அவைகளுக்கு இலக்காகாமல் தப்பியும் வந்தான்.

இவ்வாறு இங்குக் காரியங்கள் நிகழ்ந்து வருகையில், சமுத்திரத்தில் வெகு தூரத்தில் ஆழமான இடங்களில் கட்டப்பட்டிருந்த தம்முடைய அரண்மனைகளில் வயோ விருத்தரான நெரியஸ்ஸுடனும், மற்றைய சமுத்திர தேவதைகளுடனும், ஸ்படிக மயமான சிங்காதனத்தில் வீற்றிருந்த தேவ மாதாவின் செவிகளுக்கும் இந்த உரத்த கூக்குரல்கள் எட்டிவிட்டன.

அவர் அக்கூக்குரல்களைக் கேட்டுத் துயருற்றுத் தாமும் பெருமூச்சு விட்டு அனுங்கினுர்.

அப்போது அவரைச் சுற்றி வளைந்து நின்று கொண்டிருந்த நீரதைகளும் சமுத்திரத்தைப் போல் நீல நிறத்துடன் விளங்கிய மற்றைய தெய்வ கன்னிகைகளும் தங்களது தலைவியை யனுசரித்து அழுது புலம்பினர்.

தாலியாவும் ஸர்வ ஜலாசயங்களின் ஸ்வரூபியாக விளங்கிய கிளாஸியும் சாந்தஸ்வரூபியாகிய நிஸியாவும் வெள்ளியைப் போல வெண்ணிறங் கொண்ட ஸ்பியோவும் அங்கு வந்து சேர்ந்தனர்.

ஸைமோதோயியும் ஸைமோடோஸியும் அங்குற்று அந்தத் தேவியின் அருகில் இருந்தனர். மிருதுவான குளிர்ந்த பார்வையையுடைய ஆலியா தேவியும் நீல நிறங்கொண்ட தன்னுடைய கண்களில் கலக்கம் நிறைந்தவளாய் அங்கு இருந்தனள்.

ஆக்டியாவும் லிம்னோரியாவும் தங்களது தலைமயிரைக் கோபுரங்கள் போல் உயர்த்திக் காட்டினர். அவர்களுக்குப் பின் புரோட்டாவும் டோரிஸ்ஸூம் பனோப்பேயும் தோவாவும் வேருஸா வும் டோட்டோவும் மெலித்தாவும் சாந்தஸ்வரூபியான அக வேயும், ஸூமுகியான அம்பித்தோயியும் வந்தனர்.

அவர்களுக்குப்பின் சகோதரிகளும் ஒரே சாயலான கண் ணோட்டமுடையவர்களான கல்லியாநிராவும், கல்லியாநஸாவும் அங்குற்றனர்.

நிதானமான தீக்ஷமேனியும் துரித கதியுள்ள தைன மேனியும் அடுத்தபடியாக அலைகளைப் பிளந்துகொண்டு அங்கு வந்து சேர்ந்தனர்.

அவ்வாறே ஐயீரா என்பவள் பச்சைப் பசேலென்று விளங்கிய திரைகளைப் பிரித்துக்கொண்டு வந்தனள். நிமிர்த்தீஸி யென்பவளும், அப்ஸியூதிஸியுடன் தனது தலையை உயர்த்தி நிமிர்த்துக்கொண்டு வந்தனள்.

ஜோதி ஸ்வரூபியான கலாட்டியா என்பவள் சமுத் திரத்தின் தரை மட்டத்திலிருந்த முத்து மயமான தனது மஞ்சத்தை விட்டு எழுந்து வந்தனள். ஒரித்தியாவும் கிளிமேனி யென்பவளும் இவர்களுக்குப் பாங்கிகளாக விளங்கினர். இவர் களது கூட்டத்தில் மேராவும் அம்பினோமியும் சேர்ந்து கொண்டனர்.

கறுத்த மேனியளான ஜெனிராவும், அழகு வாய்ந்த ஜனஸ்ஸாவும், நிமிளை வர்ணமான கூந்தல்களையுடைய அமாத் தீயியும் வந்தனர்.

இவர்களைப் போலவே அந்த ஆழ்ந்த சமுத்திரத்தில், தத்தம் புனிதமான திவ்ய ஆசனங்களில் வீற்றிருந்த மற்றைய கன்னிகைகளும் அந்த ஜோதி மயமான வஸந்த மண்டபத்தை வந்தடைந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் தங்களது துக்கத்தை யடக்கிக்கொண்டு யானைத் தந்தத்தை நிகர்த்த வெண்ணிறமான தங்களது மார்பை மெதுவாக அடித்துக் கொண்டனர்.

அப்போது தெட்டிஸ்தேவி பின்வருமாறு துக்கித்து அழுது புலம்பினுள் :—

"சமுத்திரத்தைக் காத்து ரக்ஷித்துவரும் ஸகோதரிகளே! நான் சொல்லும் வசனங்களைச் செவிசாய்த்துக் கேளுங்கள்! நியாய அனியாயங்களை ஆராய்ந்து பாருங்கள்! தெட்டிஸ்தேவி யின் கஷ்ட நஷ்டங்களும் கூக்குரல்களும் குறைகளும் முறையீடுகளும் முறையோ அன்றோ என்பதை நீங்களே தீர்மானியுங்கள்!

நான் ஒரு மர்த்தியப் பிரகிருதியாக விருந்தாலே எனது கதி மிகவும் பரிதபிக்கத் தக்கதாக விருக்கும். அமர்த்தியையாக விருந்தும் இப்போது எனது கதி அளவு கடந்து மிகுந்த பரிதாபத் துக்கே இடமானதாக விருக்கின்றது!

தேவர்களுக்குச் சமானமான ஒரு மஹா வீரன் எனது படுக்கையினின்றும் உதித்தான். வீரர்களென்று விளங்கிய அனைவரினும் அவனே உத்தமனாக விளங்கினான். ஓர் அழகான ஒலிவ விருக்ஷத்தைப்போல் நான் அவனை என் கையாலேயே தடவித் தடவி மிக்க கவலையுடன் கண்ணுங் கருத்துமாக வளர்த்து வந்தேன். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக பூலோகத்திலேயே ஒப்பும் உயர்வும் அற்ற அழகுள்ளவனாக வளர்ந்து வந்தான்.

அவனை நான் ட்ராய் நகருக்கு அனுப்பிவைத்தேன். அவன் திரும்பி என்னிடம் வந்து சேரலாகாது என்று தேவர்கள் விதித்து விட்டனர். அவன் இனித் திரும்பி வரமாட்டானே! நான் என்ன செய்வேன்! அவனுக்கு நெடுநாள் ஜீவித்துவரும் பாக்கிய மில்லையே! அல்ப ஆயுளில் மறைந்து போனானே! இனியும் அவன் தன்னுடைய கமலக் கண்களைத் திறந்து கதிரவனைக் காணுவனோ, அவன் சுகமாகவாவது தனது பிராணனை விடுவனோ? அதுவும் நிச்சயமில்லையே! துக்கத்துடனேயே தனது பிராணனை விடுவனே!

அவனுடையபிரலாபங்களை நீங்கள் கேட்கவில்லையா? அவன் கதறுகின்றானே! இந்தக் கடல் முழுவதும் அது பிரதித்வனியுடன் முழங்குகின்றதே! அவற்றைத் தணிக்க என்னால் இயலவில்லையே! எனக்குச் சக்தி இல்லையே!ஐயோ! நான் என்ன செய்வேன்! அழுது புலம்புவல்லால் வேறு என்ன செய்ய வல்லேன்? அழுது புலம்பி யாவது ஆறுதலடையலாமென்ற எண்ணத்துடன் நான் இதோ செல்லுகின்றேன்.

பெற்ற மனம் பித்தல்லவா? பெற்றவளாகிய எனது மனம் துடிக்கின்றது, தவிக்கின்றது. எனது அரும் புதல்வனுக்கு அழு தாவது நான் எனது துக்கத்தைத் தணித்துக் கொள்வேன்" என்றாள்.

இவ்வாறு சொல்லிவிட்டு அந்தத் தேவி தாராளமாகக் கண்ணீரைப் பொழிந்து கொண்டு, அத் தண்ணீரில் அமிழ்ந்து குளித்தவள் போல் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு, சமுத் திரத்தின் அடியிலிருந்த குகைகளினின்றும் வெளியேறினாள்.

அவளைப் போலவே துயர்க்கடலில் ஆழ்ந்திருந்த அவளு டைய பாங்கிமாரும், அவளுக்குத் துணையாக அவளுடன் சென் றனர். அப்போது அக் கடலில் மோதியடித்து வந்த அலைகள் கலைந்து பிரிந்து தாராளமாக அகன்று வழி விட்டன.

வெள்ளியைப் போல் பளிச் சென்று மின்னிய அக் குதிரை களின் இடையே அந்தத் தேவியின் பாங்கிகள் அவளைப் பின் தொடர்ந்து சென்றனர். அப்பாங்கிகளின் கூட்டம் வெகு தூரம் வரை நீண்டிருந்தது. அந்தக் கூட்டமானது அலைகளின் மத்தியில் வழிநடந்து சென்று கடைசியாக துரோஜர்களது கரையை யடைந்தது. அதன்பின் அந்தத் தேவிமார்கள் இரண்டிரண்டு பேர்களாக அந்தக் கரையின் மேல் ஏறினார்கள்.

அப்பொழுது அமர்த்தியையான அந்த மாதாவானவள் அங்கு அழுது புலம்பிக் கொண்டிருந்த தனது புத்திரனை யணுகி அவனருகில் நின்று கொண்டு அவனுடன் கூடித் தானும் அழு தாள். அவ்விருவரும் ஒருமித்துக் கூவியழுத சப்தமானது அந்தக் கடற்கரை முழுவதும் பரந்து சென்றது. வெள்ளிக் காலளான அந்தத் தேவி தன்னுடைய பிரலாபங்களைப் பின் வருமாறு ஆரம் பித்தாள் :—

"எனது மகன் அழுவானேன்? புலம்புவானேன்? நீ விரும்பிய வரத்தை நமது பெருந் தேவர் உனக்கு கொடுத்தே விட்டார்! உனது விருப்பப்படிக் கிரேக்கர்களனைவரும் துக்கத்தி லாழ்ந்து திண்டாடித் தவிக்கின்றனர்!

இவ்வாறு உனது மனோரதம் நிறைவேறி யிருக்க நீ அழுவா னேன்? வாடியிருப்பானேன்? உனது சங்கடத்தை எனக்குச் சொல்லு. அதை ஒளிக்க வேண்டாம். வெளிப்படையாக வாய் விட்டுச் சொல்லு, தாய்க்கு மிஞ்சிய கவலையும் உளதோ? நான் உன் கவலைகளைத் தீர்ப்பேன். உன் குறைகளை நான் தீர்த்து வைப்பேன்! என்னிடம் உனக்கு நம்பிக்கை யில்லையா?" என்றாள்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்த வீரன் அடிவயிற்றி னின்றும் அனுங்கிப் பெருமூச்சு விட்டுக் கொண்டு அவளுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான் :—

"நிவர்த்தி யில்லாத துக்கக் கடலில் நான் இப்பொழுது விழுந்து தவிக்கின்றேன். இடிக் கடவுளின் தயவு எனக்குப் பூர்ணமாக விருந்தும் எனது துக்கம் தணியவில்லை.

ஆஹா! பத்திரகலுஷா! தேவீ எனக்கு இனியும் சுகமு முண்டோ! நானே பரமசுகியென்று பெருமை யடித்துக் கொண்டு வந்தேனே! அந்தப் பெருமைக்கு வறுமை வந்து விட்டதே! இதற்காக யாரின் மேல் பழி வாங்குவது! பழிவாங்கித்தான் என்ன பயன்? யாருக்குப் பிரீதி?

என் வீரர்கள் அனைவரிலும் எனக்குப் பத்திரகலுஷனிடம் தான் விசேஷமான பிரீதியாயிருந்தது. மனித வர்க்கத்தில் வேறு ஒருவரிடத்தும் நான் அவ்வளவு அன்பு வைத்திருக்கவில்லை. என்னைவிட அவனையே நான் அதிகமாக மதித்து வந்தேன், அவன் கொலையுண்டு விட்டான்,

பீலியஸ்ஸுக்குத் தேவர்களே வார்த்துக் கொடுத்த ஆயுதங்களும் போய் விட்டன. அதியற்புதமும் பளு நிறைந்தவையுமான அந்த ஆயுதங்களை இப்போது ஹெக்டர் அணிந்து வருகின்றான்.

தேவலோக வாஸிகள் அனைவரும் ஒரு மிகவும் கெட்ட நாளில் உம்முடைய ரூபலாவண்யங்களை ஒரு மர்த்தியனுக்கு அர்ப்பணம் செய்தனர், அந்த நாள் கரிநாளாகக் கடவது !

அவ்வாறின்றி நீர் ஒரு சமுத்திர கன்னிகையாக மாத்திரம் இருந்திருந்தால், இப்போது நீர் உமது சமுத்திர ராஜ்யத்தை உல்லாஸமாகவும் சுகமாகவும் ஆண்டு வருவீர். பிலியஸ்ஸும் தனது அந்தஸ்துக்குச் சமமான மானிடக் கட்டழகியை மணந்து கொண்டு பேராசைகளை யொழித்துவிட்டு மிகவும் சுகமாக வாழ்ந்து கொண்டிருப்பான்.

தங்களது துக்கக் கருவில் பிறந்த அதிர்ஷ்ட ஹீனனான ஒரு வீரன் நிமித்தம் பலவாறான துக்கங்கள் நிகழ்ந்து விட்டன. இன்னும் பல துக்கங்களும் கஷ்ட நஷ்டங்களும் நிகழவிருக்கின்றன. அதிர்ஷ்ட பலஹீனனான அந்த மகன் அதி சீக்கிரத்தில் கொல்லப்படுவான். அதன்பின் மேன் மேலும் புதிது புதிதான கஷ்டங்களும் துக்கங்களும் உண்டாகும்.

விதிப்பயன் வந்தே தீரும், அதைத் தடுப்பார் யாருமில்லை. யாராலும் அதை மாற்ற இயலாது.

பத்திரகலுஷன் இறந்துபோய்விட்ட பின் அகிலேசனுக்கு உயிரின் மேல் ஆசை அற்றுப் போய்விட்டது. உயிர் வாழ்வது கசப்பாக விருக்கின்றது.

அதிகர்வியான ஹெக்டரின் மார்பை நான் பிளக்க வேண்டும்! எனது பழியைத் தீர்க்க வேண்டும். எனது அம்பின் மேல் அவனது பிராணன் துடிக்க வேண்டும். அவனுடைய கோப தாபங்களுக்கு எனது அம்பே கொள்ளியாக வேண்டும்! அவை வெந்து பொசுங்கிப் போக வேண்டும்!

இவ்வாறு இனிமேல் காரியங்கள் நிகழ வேண்டும். இதற்காகத்தான் நான் இனி உயிர்தரித்து வரல் வேண்டும். எனது பிராணனைப் பிடித்துக் கொண்டிருத்தல் வேண்டும். என்னுடைய விருப்பங்கள் நிறைவேறும் வரை நான் மானமில்லாமல் மனித வர்க்கத்தின் முன் நடமாட மாட்டேன்" என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்தத் தேவியானவள் ஒரு பெருத்த வெள்ளமாகத் தனது கண்ணீரை வடித்தாள். பின்பு அவள் அவனை நோக்கி "ஆஹா, மகனே ! சாகும் தறுவாயிலிருக்கும் உன்னை நான் கண்டுவிட்டேன், பழிக்குப் பழிவாங்காமல்

இறந்த பின் நான் உன்னைக் காணுவேனு? அந்தக் காரியத்தை நான் செய்ய மாட்டேன். ஹெக்டர் பட்டுவிழுந்த பின்னரே உனக்கு மரணம் வரட்டும் " என்றுள்.

அதைக் கேட்ட பொழுது அகிலேசன் "அதுதான் சரி! ஹெக்டர் மடிந்து விழட்டும்! அதன்பின் நானும் எனது பிராணனை விட்டுவிடுகிறேன்!

பத்திரகலுஷன் தனது ஜென்ம தேசத்திலிருந்து நெடுந் தூரத்திலுள்ள இந்தப் போர்க் களத்தில் விழுந்து கிடக்கின்றுன். அவன் எனது உதவியைக் கோரினுன். அந்த உதவியை நான் செய்தேன் என்றுலும் அதனுல் நற்பயன் உண்டாக வில்லை. அது வீணே யாய்விட்டது. அவன் பின்னும் எனது உதவியைக் கோரிக்கொண்டே அடியற்ற பனைபோல் தனது ஆவியை விடுத் தான்.

ஆதலால் நானும் எனது ஜன்ம தேசத்துக்குத் திரும்பிப் போவேன் என்னும் யோசனையை இன்றே எனது மனத்திலிருந்து ஒழித்துவிட்டேன்!

ஆஹா, இன்று எவ்வளவு கெட்ட நாள்! நமது வீரர் களுக்கு நேர்ந்த ஆபத்துக்குச் சரியான ஈடு இன்னும் செய்து ஆக வில்லை. நூற்றுக் கணக்கான வீரர்கள் பட்டுமடிந்து விட்டனர். அவர்களுடைய ஆத்மாக்கள் தங்களுக்கு நேர்ந்த பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று முறையிடுகின்றன, கதறுகின்றன! அகிலேசனது கையினுல் ஹெக்டர் மாண்டால்தான் அவைகள் திருப்தியடையும். அவனைத் தொலைக்கும்படி அவை என்னை உறுத்துகின்றன.

நான் அஞ்சா நெஞ்சன் என்றும் எதற்கும் துணிந்தவன் என்றும் அதிக் குரூரன் என்றும் உலகமெல்லாம் பிரஸித்தி பெற் றவன் என்றுலும் நான் இங்கு இப்பொழுது சோற்றுக்குக் கேடாக வும் நிலத்துக்குப் பாரமாகவும் சோம்பியிருந்து வருகின்றேன்.

செய்தொழிலில் திறமையுள்ளவரும் யோசனைகள் சொல்வதில் சமர்த்தருமான வேறு ஜனங்கள் அநேகர் இருக்கின்றனர். நான் சைனியங்களை அழிப்பதில் சமர்த்தன். அவர்கள் சைனியங்களைக் காப்பாற்றுவதில் என்னைவிட அதிசமர்த்தர்கள், அவர்கள் உயிரு டன் இருந்தால் உலகத்திற்கு க்ஷேமமுண்டாகும். என்னுல் உலகத் துக்கு அதிகமான நாசந்தான் உண்டாகின்றது.

எனக்குக் கிருபை செய்யுங்கள். ஆனுல் ஐயோ தேவர் களே! விண்ணுலகத்தில் வஸிக்கும் கருணு நிதிகளே! மனிதர்களு டையவும் தேவர்களுடையவும் மனதிலிருந்து கோபதாபங்களையும் பழிக்குப்பழி வாங்கவேண்டும் என்ற ஆத்திரத்தையும் ஒழித்து விடுங்கள். உயிர் என்பது எல்லோருக்கும் வெல்லமல்லவா?

அதனினும் மிக்க பிரியத்துடன் மன்பதைகள் விரும்பும் பொருள் வேறு ஒன்றும் உளதோ ? அதுவே ஓர் ஆத்மாவுக்கு ருசியுள்ள தாக விருக்கின்றது! தேனைப்போல் இனிக்கின்றது!

இந்தக் கோபதாபங்களும் ஆத்திரங்களும் இரத்தக் கொதிப்பில் உற்பத்தியாகின்றன. பலவிதமான விஷக்காற்றுகள் ஒன்ருய்க் கூடியதுபோல் இவை அந்த இரத்தக் கொதிப்பில் நின்று புறப்பட்டு மனிதனுடைய மனத்தையே இருள்போல் சூழ்ந்து விடுகின்றன. அதை இருட்டி விடச்செய்து விடுகின்றன.

சாகும்வரை தன்னைப் பகைக்கும்படி இந்த ஆகமனன் என்னை வெறுத்து எனது மனத்தை முறியடித்து விட்டான். போனது போகட்டும். நடந்தது நடந்தாய் விட்டது. அந்தக் கோபத்தை நான் தணித்து விட்டேன். தலைவிதிப்படிக் காரியங் கள் நடக்கட்டும் என்று நான் அடங்கி விட்டேன்; தணிந்து விட்டேன்!

நல்லது, இது இருக்கட்டும், இப்பொழுது நான் எனது நண்பனைக் கொன்ற கொலை பாதகனைக் கண்டு பிடித்து அவனைக் கொல்ல வேண்டும். அல்லது எனது பிராணனை விடவேண்டும். தெய்வ நியமனம் எப்படியோ அப்படியே காரியம் நடக்கட்டும். விதியின் வலியை அதிபலவானும் மீறமுடியாது!

ஜோவ் தேவரின் ஒப்பற்ற மகனும் மஹானுமான அஸ்ஸீ டிஸ், ஜூனோ தேவியின் கோபத்துக்கு ஆளாகிக் கடைசியாகத் தனது உயிரை விட்டு விட்டான். சர்வசராசரங்களையும் ஸம்ஹா ரம் செய்யும் யமதர்மராஜனுக்கு இரையாகி மடிந்து போய் விட் டான். அகிலேசனும் அவ்வாறே வெளுத்து வீரிய மிழந்து மடிந்து விழுந்து விடுவான். கிரேக்கர்கள் மனமிடிந்து போவார்கள். ட்ராய் நாட்டாரும் பயந்தெளிந்து விளங்குவார்கள்!

ஆதலால் நான் இக்கணமே இந்த யுத்தகளத்தில் பிரவே சித்துத் தடதடவென்று ஓடிச் செல்வேன். அற்ப ஆயுளில் ஒரு மனிதன் சம்பாதிக்கக் கூடிய பேரும் புகழும்பெறுவேன். ஒரு கைப் பெண்ணைத் தனது நீண்ட தலைமயிரை விரித்துக் கொண்டு வெறி பிடித்தவள்போல் அதை வெட்டிப் பற்றி வேருடன் பிடுங்கச் செய்ய என்னுல் ஆகாதா ? இந்த சாமர்த்தியம் எனக்கு இல்லையா ? அவளது மார்பு பெரு மூச்சு விட்டுக் கொண்டு துடிக்காதா ? அவளது கண்களிலிருந்து நீரானது மெதுவாகப் பெருகாதா ? இந்தக் காரியங்கள் என்னுல் ஆகாதா ? ஆகவே ஆகும் அதில் எள்ளளவும் ஐயமில்லை !

கட்டழகிகளும் கண்ணீர் விட்டுக் கொண்டு அழுது புரளு வார்கள், அப்பொழுது அவர்களுடைய மேனிகள் வாடி வதங்கி வெளுத்து ஒரு புதிய அழகுடன் விளங்கும்,

ஆதலால் தாயே! நீர் என்னைத் தடுக்க வேண்டாம்! நிறுத்த வேண்டாம், அதனால் பயனில்லை நீங்கள் வந்த வழியே திரும்பிச் செல்லுங்கள், நான் என்னுடைய ஆயுதங்களை நோக்கிச் செல்லு வேன்! அவைகளை எடுத்துக் கொண்டு யுத்த முனைக்குச் செல்லுவேன்.

அங்கே அதிசீக்கிரத்தில் இரத்த வெள்ளமானது ஒரு பெருத்த அருவியைப்போல் புரண்டு வரும். அந்த இரத்த அலையை அகிலேசன் தான் கிளப்பி விட்டான், அது மேன் மேலும் ஓங்குமாறு பெருக்குகின்றான் என்று எல்லாரும் சொல்லு வார்கள் '' என்றான்.

நீலமேக வர்ணம் தாங்கிய அந்தத் தெட்டிஸ் தேவியான வள் ஊழ்வினையின் பயன் இவ்வாறு ஆய்விட்டதே என்று ஏங்கி அடக்கமாகவும் மெதுவாகவும் பெரு மூச்சு விட்டுக் கொண்டு தனது மகனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தாள் :—

"எனது மகனே! நம்முடைய கோஷ்டியாருக்கு நேர்ந்து விட்ட ஆபத்துக்களைத் தீர்க்கவேண்டும் நம்முடைய? நண்பர்களுக் குச் சகாயம் செய்ய முன் செல்ல வேண்டும் என்று நீ துடிப்பது சரியே. அது மிகவும் மெச்சத் தகுந்தது தான். அதுவே தீரர்களது கடமையாகும்.

ஆனால் நிராயுதனாகவிருக்கும் நீ எவ்வாறு இந்த யுத்த களத்துக்குச் செல்லுவாய், உன்னுடைய பளபளப்பான ஆயுதங் கள் அனைத்தையும் இந்த துரோஜச் சத்துரு பிடுங்கிக் கொண்டு விட்டானே! அகமதியும் துடுக்கும் நிறைந்த இந்த ஹெக்டர் அந்த ஆயுதங்களை வெகு கம்பீரமாகத் தரித்துக் கொண்டு திரிகின்றா னன்றோ; ஆனால் ஒன்று! அவனுக்கு அழிவு காலம் அடுத்தே வருகின்றது, அவன் ஆடம்பரங்களெல்லாம் அடியோடு அழிய விருக்கின்றன.

அவையெல்லாம் வீண் தான் என்றாலும் ஒரு சிறு பொழுது, நீ, பொறுமையுடன் இரு. உனது உதாரசிந்தையைச் சிறிது நேரம் அடக்கி வைத்துக்கொள். ஆத்திரப்படாதே, சூரியோதய சமயத்தில் நான் தவறாமல் திரும்பி வருவேன். வல்க்கனிடம் சென்று ஜாஜ் வல்லியமாய்ப் பிரகாசிக்கும் திவ்யமான ஆயுதங் களை வாங்கிக்கொண்டு வருவேன். அவனைக் கொண்டே செய் வித்து ஒரு பிரம்மாண்டமான ஆயுத மூட்டையையும் கொண்டு வருவேன் '' என்றாள்.

இங்ஙனம் தனது மகனுக்கு ஆறுதலான வசனங்களை யுரைத்துவிட்டு, அந்தத் தேவி தன்னுடைய சமுத்திர கன்னி கைகளை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்து, அவர்களைத் தத்தம் இடங்களுக்குச் செல்லும்படி விடை கொடுத்து அனுப்பி விட்டாள் :—

"என்னுடைய ஸஹோதரிகளான கடற் கன்னிகைகளே! பாதாள லோகங்களில் இருக்கும் உங்களுடைய ஸ்வஸ்தானங்களுக்கு நீங்கள் செல்லுங்கள். புனிதரான நமது தந்தையின் ஸன்னதிக்கு விரைவிற் சென்று அவருக்குப் பணிவிடைகள் செய்யுங்கள்.

நக்ஷத்திர மண்டலங்கள் வரை உயர்ந்து ஒளியுடன் விளங்கும் ஒலிம்பஸ் மலையில் வஸித்து வரும் தெய்வத் தச்சனைத் தேடிக்கொண்டு நான் செல்லுகின்றேன், என்று மஹா விருத்தரான நமது பிதாவிடம் சொல்லுங்கள்" என்றாள்.

இந்தக் கட்டளையை யேற்ற அந்தக் கடற் பச்சை நிறங் கொண்ட வனிதைகள் அக்கணமே அலைகளின் அடியில் இறங்கி விட்டனர். அதன்பின் தெட்டிஸ் தேவி பின்னும் ஒரு முறை தேவலோகத்துக்கு ஏறிச் சென்று தேவர்களுடைய மாளிகைகளின் வெண்கல மயமான வாயிலைச் சேர்ந்து விட்டாள்.

இதன் மத்தியில் வெறி பிடித்தவன் போல் தலை கால் தெரியாமல் வேகமாகத் தங்களைத் தாக்கி வந்த ஹெக்டருக்குப் பயந்து, கிரேக்கர்களெல்லாம் அகன்று விரிந்த ஹெல்லஸ்ப்பாண்டுக் கரையை நோக்கித் தலைகுப்புற ஓட்டமாக ஓட்டம் பிடித்தனர். இதுவரையிலும் பத்திரகலுஷனது பிரேதத்தைச் சுமந்து வந்த அவர்களுடைய தலைவர்கள் தங்களது வழியில் மலிந்திருந்த குழப்பங்களைக் கடந்து அவைகளுக்கு அப்பால் கூடாரங்கள் கட்டப் பட்டிருந்த கடற்கரைக்கு வந்து சேரவில்லை. அக்கடற்கரையிலும் குழப்பமே மலிந்து மேலோங்கி யிருந்தது.

துரகங்களும், காலாட்களும் ஒருவருக்கொருவர் இளைக்காமல் அதிவேகத்துடன் கலந்து கிரேக்கர்களைத் துரத்தி வந்தனர். அவர்கள் கிரேக்கர்களுக்குப் பின்னால், அவர்களை நெருங்கிக் கொண்டும் ஒரு பெருத்த வெள்ளத்தைப் போல் தாக்கிக் கொண்டும் இடியைப் போல் முழக்கிச் சத்தமிட்டுக் கொண்டும் வந்தனர்.

ஹெக்டருடைய கோபதாபங்களும், நன்றாய் முதிர்ந்த பயிர்களுடன் விளங்கும் வயல்களில் பிரவேசித்து அவற்றை யெரித்து வரும் ஒரு பெருந்தீயைப் போல், அந்தக் கிரேக்கர்களின் சைனியங்களின் மேல் சென்றன. பட்டு விழுந்த பத்திரகலுஷனை அவன் மூன்று தரம் காலைப் பிடித்துத் தரதரவென்று இழுத்தான். அதைக் கண்ணுற்ற துரோஜர்கள் மூன்று தரம் உரத்துக் கோஷித்து வானத்தின் உச்சியையும் இடித்தனர். ஆனால் அஜாக்ஷ சகோதரர்கள் இருவரும் அம்மூன்று தரமும் ஹெக்டரை மடக்கியே விட்டனர். அவனுக்குத் தணியவுமில்லை, விட்டுக் கொடுக்கவுமில்லை.

அவ்வாறு மூன்று தரம் தடுக்கப்பட்டும் மனந்தளராமல் ஹெக்டர் பின்னும் பின்னும் திரும்பியே வந்தான். அவன் அடி

பட்டுத் திரும்பியோடுவதும் திரும்பி வந்து அடிப்பதுமாகவே சிறிது பொழுது தனது காலத்தைக் கழித்தான். அதற்குள்ளாக அவனுடைய சைனிகர்களில் பெரும்பான்மையோர் அலுத்துச் சலித்து அவனை விட்டு விட்டுப் பிரிந்து போயினர். சிலர் கிரேக்கர்களால் மோதுண்டு மடிந்து போயினர்.

அப்பொழுது தன்னையண்டிக் கொண்டு மீந்திருந்தவர்களை அவன் உரத்துக் கூவி அழைத்து அவர்களுக்கு உற்சாகமுண்டாகுமாறு, வீர மொழிகளை உரைத்தான். அவன் கிரேக்கர்களுக்கு ஓர் அடி பின்னிடையவுமில்லை, தான் நின்ற நிலையில் நின்று அசையவுமில்லை.

பசியுடன் துடிக்கும் ஒரு சிங்கம் அடித்துக் கொன்ற ஒரு மிருகத்தின் பிரேதத்தைக் கவர்ந்து விடவேண்டும் என்று முயன்று வரும் இடையர்களுடைய முயற்சிகள் பயன்படாமல் வீணாவது போலவே, இவனுடைய முயற்சிகளும் வீணாகிவிட்டன.

இன்றையத் தினம் இவன் பத்திரகலுஷனைத் தூக்கிக் கொண்டே போயிருப்பான். அலுப்புச் சலிப்பின்றி இன்று செய்து வந்த யுத்தத்தில் மிக மேலான வெற்றியும் பேரும் புகழும் அடைந்தேயிருப்பான். ஆனால் ஜூனோ தேவியானவள் அதற்குத் தடைகளை யுண்டாக்கி விட்டாள்.

வாயுமண்டலங்களில் கோயில் கொண்டு ஸர்வ வல்லமைகளுடனும் விளங்கும் அந்த ஜூனோ தேவி அதி ரகஸ்யமாகத் தனது நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு தூதியை யனுப்பி ஹெக்டரின் வேகத்தை யடக்கிவிட்டாள்.

அம்புகளைச் சரமாரியாகப் பொழியும் வில்லை ஏந்தியவளும் தான் நினைத்த உருவத்தைத் தரிக்கவல்லவளும் பற்பல வர்ணங்களுடன் விளங்கியவளுமாகிய அந்தத் தூதி ஒரு பெருஞ் சுழல் காலைப் போல் தனது காலடியில் மிகுந்த ஆழத்திலிருந்த கடற்கரைக்கு வந்து தன்னுடைய கப்பல்களில் காலத்தைக் கழித்து வந்த அகிலேசனைக் கண்டு பின்வரும் வசனங்களை யுரைத்தாள்:—

"பீலியஸ்ஸின் புத்திரா! எழுந்திரு! தேவர்களுக்குச் சமானமான தீரனே! எழுந்திரு! இந்த யுத்தத்தில் உன்னுடைய இனத்தாருக்கு உன்னாலான உதவியைச் செய். பத்திரகலுஷனைக் காப்பாற்று! அவன் நிமித்தமாக ஆரம்பித்த இந்த ஜனஸம்ஹாரம் நமது கப்பற்படை வரைக்கும் கூட வந்து விட்டது! இரு திறத்தாரது சேனைகளும் ஒன்றின்மேல் ஒன்றாக மோதி வருகின்றன. வீரர்கள் காயமேற்று மண்ணில் மடிந்து விழுகின்றனர். அவனை ட்ராய்க்கு இழுத்துச் செல்ல வேண்டுமென்று நம் சத்துருக்கள் போராடுகின்றனர்.

அவனைக் கொன்ற பின்னுங் கூட ஹெக்டருடைய கோப தாபங்கள் தணியவில்லை. அவனது பிணத்தை நாய்களுக்கு இரையாக்கி விடவேண்டுமென்றும் அவனது தலையை ஒரு மேட்டில் நட்டுவிட வேண்டும் என்றும் அவன் தீர்மானித்து விட்டான். அந்த மேட்டையும் குறித்து விட்டான்.

பெருங் கீர்த்தியுடன் விளங்க வேண்டுமென்பது உனது விருப்பமானால் உடனே எழுந்திரு. உனது நண்பனுக்கு உண்டாய்விட்ட அவமானத்தையும் உனக்கு உண்டாகக் கூடிய அழிவில்லாத அப கீர்த்தியையும் ஒழித்துவிடு " என்றாள்.

இவ்வசனங்களைக் கேட்ட அகிலேசன் அந்தத் தேவியை நோக்கி " தேவி! தங்களை அனுப்பியது யார்? வானளாவிய தேவ லோகத்திலிருந்து தான் தாங்கள் வருகின்றீர்களா?" என்று வினவினான்.

அந்தக் கேள்விக்கு ஐரிஸ் தேவி பின்வருமாறு மறுமொழி பகன்றாள் :—

" பிலிதீசா! நான் ஜோவ் தேவரின் தேவியாரால் அனுப் பப்பட்டு இங்கே வருகின்றேன். விண்ணுலகிலுள்ள ஸகலமான ராஜ்யங்களுக்கும் தேவியும் அழிவில்லாதவருமான அந்தத் தேவி யார் என்னை அனுப்பினார். உச்சஸ்தானத்தில் ஏகாந்தமாக உட்கார்ந்திருக்கும் தேவருக்காவது, விண்ணுலகிலுள்ள ஸபா மண்டபத்தில் வீற்றிருக்கும் மற்றைய தேவர்களுக்காவது, எனது வருகை தெரியாது!" என்றாள்.

இந்த வசனங்களைக் கேட்டு மேன்மேலும் ஆத்திரத்துடன் பொங்கிக் கொண்டிருந்த அகிலேசன் அந்தத் தேவியை நோக்கிப் பின்வருமாறு கதறினான் ,—

" தேவி! தாங்கள் வந்து என்ன பயன்? ஒரு பயனுமில்லை. எனக்கு ஆயுதம் என்பது ஒன்றுமில்லை. ஆயுதமின்றி நான் எவ்வாறு யுத்தம் செய்வேன்? இங்குத் தங்கியிருக்க எனக்குச் சிறிதும் இஷ்டமில்லை. எனினும் வேறு வழியில்லை. நாளைக்குப் பொழுது புலரும் சமயத்தில் தெட்டிஸ் தேவி எனக்கு வல்க்கன் தேவனால் உண்டாக்கப்பட்ட ஆயுதங்களைக் கொண்டு வருவார். அதுவரை நான் இங்குப் பல்லைக் கடித்துக் கொண்டு இருப்பேன்.

திலமானது திடமான கேடயத்தையன்றி வேறு எந்தக் கேடயத்தையாயினும் நான் எனது கையினால் தீண்டலாமா? அந்தக் கேடயத்தை அஜாக்ஷன் தரித்துக் கொண்டிருக்கின்றான். அதைத் தரித்துக்கொண்டு அவன் எனது நண்பனைக் காத்து வருகின்றான். தனது கெட்டியான கத்தியினால் நம்முடைய சத்து ருக்களை வெட்டி அவர்களுடைய பிணங்களை மலைபோல் குவிந்து வருகின்றான். அந்த மஹா வீரன் மினிஷீயஸ்ஸின் மகனைக் காப்

பாற்றி வருகின்ருன். அகிலேசன் செய்யவேண்டிய காரியத்தை அவன் செய்து வருகின்ருன்!'' என்ருன்.

அம்மொழிகளைச் செவியேற்ற ஐரிஸ்தேவி ''உனக்கு ஆயுதங்கள் இல்லை என்பதை நாங்கள் அறிவோம். என்ருலும் ஆயுதங்களின்றியே நீ யுத்தத்துக்குச் செல்லலாம்.

நீ உன்னுடைய சத்துருக்களை மிரட்டிக்கொண்டும் பயமுறுத்திக்கொண்டும் சென்ருலே போதுமானது. அகிலேசன் அந்த அகழின்மேல் வந்து நின்று விட்டால் மாத்திரமே கர்விகளான ட்ராய் மக்கள் அங்கங் குலைந்து போவார்கள். அவர்களது மனம் இடிந்துபோய்விடும். அவர்கள் பயந்து நடுங்குவார்கள்.

மஹானுனை அவன் ஒரு முறை தனது பார்வையைக் கிரேக்கர்களின்மேற் செலுத்துவானுனல், அவர்கள் புத்துயிர் பெறுவார்கள். மனவுறுதியும் ஊக்கமும் பெறுவார்கள். புறங்கொடுத்து ஓடுவது இழிவான காரியமென்று தீர்மானித்துத் தத்தம் இடங்களில் ஊன்றி நின்றே விடுவார்கள்'' என்ருள்.

இந்த வசனங்களை யுரைத்துவிட்டு அந்தத் தேவி ஆகாயத்தில் மறைந்து விட்டாள்.

அக்கணமே அந்த வீரனும் தனது இடத்தைவிட்டுப் பெயர்ந்து எழுந்தான். பாலாஸ் தேவியும் அவனுடைய புஜங்களின் மீது தனது கவசத்தைப் பரப்பினுள். அவனுடைய புருவங்களின் மேல் பொன் மயமான ஒரு மேகத்தையும் வளைத்துக் கட்டினுள். அப்போது அவனது தலையின்மேல் ஒரு ஜோதியானது தகதகவென்று விளங்கியது.

சமுத்திரக்கரையோரமுள்ள ஒரு பட்டணமானது சத்துருக்களால் முற்றுகையிடப்பட்டுத் தீக்கும் இரையாகிவிட்டால், அப்பொழுது அதினின்று எழும் புகைகள் மேகத்தில் மறைந்துள்ள ஆகாயத்தை நோக்கி யுயர்ந்து சுருண்டு சுருண்டு செல்லுகையில் அச் சமுத்திரக் கரையினின்றும் வெகுதூரத்திலுள்ள ஒரு தீவில் வசிக்கும் ஜனங்கள் அந்நகரைக் கண்ணுறுவார்களானுல், அவர்களுக்கு அந்நகரவாஸிகள் யுத்த சன்னத்தராக ஆயுதங்களையேந்தி நிற்பவர்போல் விளங்குவார்கள். அதன் பின் அதி சீக்கிரத்தில் கதிரவன் தன்னுடைய கிரணங்களை மறைத்துக்கொண்டு கடலில் ஆழ்ந்து விட்டால், அப்பொழுது அந்நகரில் எரிந்துகொண்டிருக்கும் நெருப்புக்கள் மலையின்மேல் வைத்த விளக்குக்களைப்போல் கொழுந்து விட்டுக்கொண்டு எரிகின்றன. அவ்விளக்குகளினின்று வீசும் ஒளியானது வெகுதூரம் வரையில் பாய்ந்து செல்லுகின்றது. ஆகாய மண்டலத்தின் உயர்ந்த விமானமும் அந்த ஒளியையேற்று இரத்தச் சாயையுடன் விளங்குகின்றது.

அகிலேசனது தலையும் இவ்வாறே ஜோதிகளுடன் விளங்கியது. அவனது தலையினின்றும் செங்கதிர்கள் ஒன்றின்மேலொன்

ருகக் கிளம்பி விண் முகட்டை யெட்டி, அவ்விடத்தினின்றும் திரும்பிச் சிவந்த நிறத்துடன் தரையை நாடி வந்தன.

அந்த வீரன் ஒரு பெருங் கூட்டமாகத் தன்னைச் சூழ்ந் திருந்த ஸைனியங்களின் மத்தியிலிருந்த தனது இடத்தை விட்டுப் புறப்பட்டு நெடுந்தூரம் சென்று அங்கிருந்தவண்ணம் கோட்டை கொத்தளங்களுக்கும் மேலாகக் கேட்குமாறு உரத்துக் கூவினான்.

மினர்வா தேவியும் அவ்வாறே தனது முழுபலத்துடனும் உரத்துக் கூவினாள். இவ்விருவரது கூக்குரல்களும் ஒன்றாய்க் கலந்தன. சப்தம் மேன்மேலும் அதிகரித்து வந்தது. ட்ராய் நகரம் முழுவதும் அதைக்கேட்டு ஆச்சரியமடைந்து விட்டது. கடற்கரை களும் எதிரொலிகளைப் பரப்பின.

ஒரு கோட்டையின் மதில்களின்மேல் நின்றுகொண்டு ஒருவன் யுத்தம் ஆரம்பித்துவிட்டது, யுத்தம் ஆரம்பித்துவிட்டது என்று வெண்கலத்தினாலான ஓர் எக்காளத்தை உரத்து ஊதினால், அதன் வாயினின்றும் எழும் சப்தமானது கீச்சுக் கீச்சென்று முழங் கிக்கொண்டு நெடுந்தூரம் வரை சென்று அனைவரையும் எச்சரிக் கின்றது. அந்தச் சப்தத்தின் எதிரொலிகள் ஆகாயத்தையும் நோக்கி மிதந்து செல்லுகின்றன. அப்போது வட்ட வடிவாகக் கட்டப்பட்டிருக்கும் கோட்டை கொத்தளங்களும் கெட்டியான கோபுரங்களும் அவ்வொலியை யனுசரித்து ஓலமிடுகின்றன. இது நாமெல்லோரும் அனுபவசித்தமாக அறிந்த விஷயம்.

மஹாவீரனான அகிலேசனும் அவ்வாறே வெண்கலம் போன்ற தனது குரலால் கணீரென்று உரத்துக் கூவினான். அவனது குரலைக்கேட்ட ஸைனிகர்களான அனைவரும் தங்களு டைய ஆயுதங்களை நழுவவிட்டு விட்டனர். செயலொழிந்தனர், நின்றனர், நடுங்கினர்.

அவர்களுடைய இரதங்கள் புறங்கொடுத்து உருண்டன. குதிரைகள் துள்ளிக்குதித்து ஓட்டம் பிடித்தன. யுத்த களம் முழுவ தையும் குழப்பம் வியாபித்து விட்டது, துரகபதாதிகள் மோதுண்டு விழுந்தனர். பிரேதங்கள் வேறுபாடின்றி ஒன்றாய்க் கலந்து குவிந்தன.

அகிலேசனது தேகத்தின்மேல் ஒரு மின்னல் அதியற்புத மாக விளையாடி வருவதைக் கண்ணுற்று, அந்த யுத்த களத்தி லிருந்தோரனைவரும் திகைத்துக் கண் கூசினர். அதைத் தாங்க முடியாமல் அவர்கள் தங்களுடைய இருவிழிகளையும் ஒருபுறமாகத் திருப்பிக்கொண்டனர்.

தனது அகழினின்றும் அவன் மூன்று தரம் அதிபயங்கரமாக உரத்துக் கூவினான். அதைக்கேட்ட துரோஜர்கள் அம் மூன்று முறையும் மதிமயங்கிப் பிரமைகொண்டு தங்களது நிலையினின்றும் பிரிந்து ஓட்டம் பிடித்தனர்,

இந்தக் கலவரத்தில் வீரர்கள் பன்னிருவர் முன்பின் தெரியாமல் ஆத்திரத்துடன் அகிலேசனைத் தாக்கினர். அச்சமயம் அவர்களுடைய இரதங்களும் ஓடிவந்து அவர்களை நசுக்க அவர்கள் அவற்றின் இடையில் அடிக்கப்பட்ட ஆப்புகளைப்போல் அகப்பட்டுக்கொண்டு அந்நிலையில் நின்று தங்களை விடுவித்துக் கொள்ள முடியாதவர்களாய்த் தங்கள் ஈட்டிகளின்மேல் வலுவில் பாய்ந்து தங்களுடைய உயிர்களை மாய்த்துக்கொண்டனர்.

இவ்வாறு துரோஜர்களுடைய சேஷ்டைகள் அடங்கி விட்டதினாலும் அவர்களுடைய அம்புகளின் ஹிம்சைகள் அறவே ஒழிந்துபோய் விட்டதினாலும், கிரேக்கர்கள் அந்த யுத்தத்தில் கொலையுண்ட தங்களுடைய மஹா வீரனான பத்ரகலுஷனது பிரேதத்தைக் கைப்பற்றியே விட்டனர். நெடுங்காலம் போராடி வந்து அவர்கள் தங்களது காரியத்தில் வெற்றியடைந்து விட்டனர். ஓர் உன்னதமான பாடையில் அந்த மஹா வீரனது உயிரற்ற சடலம் ஏற்றி வைக்கப்பட்டது. அவ்வீரனது துணைவர்கள் அந்தச் சவத்தைச் சுற்றி நின்று கொண்டு துக்கங்கொண்டாடிக் கண்ணீர் வடித்தனர்.

மஹா வீரனான அகிலேசன் மாத்திரம் அப்பிணத்தின்மேல் தனது தலையைக் குனிந்து கொண்டு இறந்து போய்விட்ட தனது அந்த நண்பனைக் குறித்து பலவாறாக அழுது புலம்பினான். அவனது அழுகையும் புலம்பல்களும் பயனிலவாயின :—

''சிறிதுபொழுது முன்வரை வெற்றியுடன் விளங்கி வந்தனையே! உனக்கு என்னுடைய குதிரைகளையும் இரதத்தையுங் கொடுத்து இப்பொழுதுதானே நான் உன்னை இந்தப் போருக்கு அனுப்பினேன்! போர்க்களம் செல்லுகையில் மிகவும் பொலிவுடன் விளங்கினையே ! உனக்கு இந்தக் கஷ்டம் வந்து விட்டதே. உனது கதி இவ்வாறு மாறிவிட்டதே! பிரக்ஞையற்று வெள்ளை வெளேரென்று வெளுத்துக் கிடக்கின்றனையே! வெட்டி வீழ்த்திய கட்டையைப்போல் கிடக்கின்றனையே! உன்னுடைய காயங்கள் தான் எத்தனை! அவற்றின் வாய்களும் எவ்வளவு பருமன்!'' என்றெல்லாம் கதறினான்.

அவற்றால் என்ன பயன்? மாண்டார் மீண்டும் வருவரோ வாரார், வாரார் !

இதன் மத்தியில் ஆகாய வீதியில் அலுப்புச் சலிப்பின்றிச் சஞ்சரித்துக் கொண்டு தன்னுடைய செங்கதிர்களைப் பொழிந்து வந்த சூரிய பகவான் ஜீனோதேவியின் மேலான ஆணைப்படித் தனது காலம் வருவதற்கு முன்னாகவே சிறிதும் மனமில்லாமல், சமுத்திர ராஜனுடைய அலைகளில் தனது தலையை ஒளித்துக் கொண்டு மறைந்து போய்விட்டான். அக்கணமே அக்கேய கோஷ்டியாரும் தங்களுடைய காரியங்களை நிறுத்திவிட்டு இளைப்பாறினர்.

அப்பொழுது அந்த யுத்தகளத்தில், தடுமாறித் திணறிக் கொண்டு தவித்துப், பயந்து நின்ற துரோஜர்களும், அலுத்துச் சலித்துக் கிடந்த தங்களுடைய குதிரைகளைத் தேர்களினின்றும் அவிழ்த்துவிட்டு, யுத்த காரியங்களை ஆராய்வதற்காக அவசரமாக ஒரு சபையைக் கூட்டினர். அந்தச் சபைக்கு வீரர்கள் அனைவரும் ஆத்திரத்துடன் வந்து நின்றனர். யுத்தகளத்தில் அகிலேசனைக் கண்ணுல் கண்டுவிட்ட அவர்கள் அவனுலேயே தங்களுக்கு அழிவுண்டாகும் என்று நடுங்கி, நெடுநேரம் உட்கார்ந்து தர்க்கமும் ஆலோசனையும் செய்வதற்கு அது சமயமல்ல வென்று கருதி அச் சபையில் உட்காரவும் அஞ்சினர்! உட்காரவேயில்லை. ஒருவராயினும் நெடுநேரம் பேசவுமில்லை. அனைவரும் மௌனமாகவே நின்றனர்.

கடைசியாகப் பாந்தஸின் புத்திரனும் இறந்த கால நிகழ்ச்சிகளை ஆதாரமாக வைத்துக் கொண்டு வரும் பொருள்களை உணர்வதில் வல்லவனுமான பாலிதாமஸ் என்பவன் தங்களுக்குக் கெடுதியே யுண்டாகும் என்று பயந்து பின்வருமாறு தனது அபிப்பிருயத்தை வெளியிட்டான். அவன் ஹெக்டரின் ஆப்த நண்பன். அவனுக்குச் சமமான வயதானவன். அவர்கள் இருவரும் ஒரே நாள் இரவில் பிறந்தவர்கள். ஒருவன் நல்லுரை யுரைப்பதில் புத்திமான், மற்றையோன் செய் தொழிலில் தேர்ந்தவன் :—

"என் நண்பர்களே! நீங்கள் அனைவரும் சிறிதும் ஒளிவு மறைவின்றி இந்தச் சபையில் உங்களுடைய அபிப்பிராயங்களைச் சொல்லுங்கள். எனது அபிப்பிராயத்தை நான் சொல்லுகின்றேன்! அதையும் கேளுங்கள், இந்த இடத்தில் ஆபத்துக்களே மலிந்து கிடக்கின்றன; நாம் இங்கு இருக்கலாகாது. ட்ராய் கோட்டைக்கும் இதற்கும் வெகு தூரமிருப்பதுமன்றி, இந்தக் கடற் கரையில் ஒரு வஸ்துவும் கிடைப்பதில்லை.

ஆதலால் நாம் நமது பாளையத்தை நாளைக் காலை விடியுமுன் இங்கிருந்து அகற்றி விடுவதே நலம் என்று எனக்குத் தோன்றுகின்றது. அதுவே நான்உங்களுக்குச் சொல்லும்யோசனை.

கிரேக்கர்கள் இவ்வளவு கொடிய பயங்கரரூபிகளாக விருப்பார்கள் என்று நான் நம்பியிருக்கவில்லை. அவர்களது அரசனுக்கும் சேனுதிபதிக்கும் பிரமாதமான மனஸ்தாபங்களும் சண்டை சச்சரவுகளும் ஏற்பட்டிருந்ததினுல் அவர்கள் ஊக்கங் குறைந்தவர்களாகவே யிருப்பார்கள் என்றும் நம்முடைய சேனைகளே கிரேக்கர்களை மீறி வென்று விடும் என்றும், எண்ணியவர்களாய் நாம் நம்முடைய சைனியங்களை யெல்லாம் ஆயிரக்கணக்காக நின்று வந்த கப்பல்களின் சமீபத்தில் கொண்டு சென்று பாளைய மிறங்கினேம், அதி தைரியமாகவும் மனந் துணிந்துமே நாம் இந்தக் காரியத்தைச் செய்தோம்.

ஆனுல் நான் இப்போது பிலிதீசனைக் கண்டு நடுங்குகின்றேன். அவனது மனே வேகமானது இப்போது இந்தக் கடற்

க்ரையைக் கடந்து விட்டது மன்றி இதுகாறும், இருதிறத்துச் சேனை களும் நெடு நாளாக விடேன் கொடேன் என்று சமமான வெற்றி தோல்விகளுடன் போராடி வந்த இந்த யுத்தகளத்தையும் கடந்து விட்டது. இனி அவர்கள் ட்ராயைப் பிடிக்க வேண்டும் என்றே துடித்துக் கொண்டு ஆத்திரத்துடன் முன் வருவார்கள்.

ஆதலால் நாம் அதை இழந்து விடலாகாது. அதைக் காப்பாற்ற வேண்டும், நமக்குப் பேரும் புகழும் கிடைக்காவிடினும், உயிருடனுயினும் தப்பிப் பிழைக்க வேண்டும் என்று நினைத்து இனி நடக்கவிருக்கும் காரியங்களைச் செய்ய வேண்டும். நாம் அனைவரும் இப்போதே இலியனுக்கு விரைந்து ஓட்டம் பிடித்தல் வேண்டும். இந்த இராப் பொழுது நமக்கு உதவியாக இருக் கின்றது. கிரேக்கர்கள் இப்பொழுது யுத்தஞ் செய்வதை நிறுத்தி யிருக்கிறுர்கள். அவர்களுடைய கொடுமைகளும் ஓய்ந்திருக் கின்றன.

நாளைக் காலையில் கதிரவன் நாம் இங்கிருக்கக் கண்ணுற்ற வுடனேயே அவனது உதவியைக் கொண்டு கிரேக்கர்கள் தங்களதுகைவலிவு அனைத்தையும் நம்மேல் செலுத்துவார்கள். நாம் பலவாருன கொடுமைகளுக்கும் ஆளாவோம். அதில் சந்தேக மில்லை.

இந்த யோசனையானது இப்போது நம்மில் சிலருக்குப் பிடிக் காமலே யிருக்கலாம். அவர்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டோம் என்று தள்ளி விடலாம், புறக்கணித்து விடலாம். ஆனுல் நாளைய தினம் அவர்கள் இன்னது செய்ய வேண்டும் என்று அறியாமல் தயங்கித் தவிப்பார்கள்! அப்போது நாம் ட்ராய்க்குச் சென்று சேர்ந்து விட மாட்டோமா; தெய்வம் நமக்கு அந்த ஸகாயம் செய்யாதா என்று ஏங்குவார்கள், அவ்வாறு அவர்களது எண்ணம் நிறைவேறி விட்டால் அப்போது அவர்கள் அளவுக்கு மிஞ்சி ஆனந்தித்துக் குதிப்பார்கள்.

நான் உரைத்தபடி நமக்கு ஒருவிதமான கெடுதிகளும் உண் டாகலாகாது, நமக்கு உண்டாகக் கூடிய கஷ்டங்களை நினைக் கவும் எனது மனது நடுங்குகின்றது. அவை பலிக்காமல் இருக்க வேண்டும். அதற்கான முயற்சிகளனைத்தையும் நாம் முன்னுடியே செய்தல் வேண்டும்.

நமக்கு என்ன கதி கிடைத்தாலும் கிடைக்கட்டும், நாம் மாத்திரம் தீர ஆலோசனைகளைச் செய்து விஷயங்களை ஆர அமர ஆராய்ந்து காரியங்களை முறைப்படி செய்ய வேண்டும். நல் லுணர்வே நமக்கு உற்றதுணை என்று நாம் கருத வேண்டும்.

கோட்டைவாயில்களிலும் கொத்தளங்களிலும் நின்றுகொண்டு நம்முடைய நகரத்தார் நமது நகரத்தைக் காத்துவரல் வேண் டும். பொழுதுவிடிந்தபின் நாம்பற்பலவிடங்களிலும் நின்றுவருமாறு

நம்முடைய சேனு வீரர்களை நியமிக்கலாம். அவர்கள் அவ்விடங்களில் ஆயுதபாணிகளாக அணிவகுத்து நின்று கொண்டு தங்கள் தங்கள் உன்னதமான கோபுரங்களைக் காத்து வருவார்கள்.

அப்போது அதிகுரூரனுன அந்த வீரன் வந்தால் வரட்டும். வந்து நம்மை மிரட்டட்டும். வெருட்டட்டும். உன்மத்தனைப் போல் அதி வேகத்துடன் நம்முடைய கற்சுவர்களின் மேல் விழுந்து தாக்கட்டும். தனது பழிக்குப் பழி வாங்கிக்கொள்ளட்டும். அல்லது கும்பல் கும்பலாக ஆயிரக்கணக்கான தன்னுடைய சேனைகளைக் கொண்டு வந்து இந்த யுத்தகளத்தைச் சுற்றிலும் குவிக்கட்டும். அவர்கள் இந்த களத்தைச் சுற்றிச் சுற்றி ஓடி அலுத்துப் போகட்டும். கடைசியாக அவ்வாறு அலுத்துப் போய்விட்ட அவனுடைய குதிரைகள் அவனுடைய கப்பல்களையே நாடித் திரும்பி ஓட்டம் பிடிக்கட்டும்!

இவ்வாறு செய்வானுயின் அவனது வேகம் தணிந்தே போய்விடும், அவன் சலித்துப் போய் விடுவான். அலுத்துக் களைத்து விழுந்தும் விடுவான். அவன் நமது பட்டணத்தைப் பிடித்து அதைத் தரை மட்டமாக்குவதற்கு முன், நாய்களும் நரிகளும் அவனைப் பற்றிப் பிடித்துக் கிழித்தே விடும்" என்முன்.

இந்த யோசனை சரியானதென்று ஹெக்டருக்குத் தோன்றவில்லை. அவன் அதைப் புறக்கணித்து விட்டுப் பொங்கி எழுந்து பின்வரும் வசனங்களை யுரைத்தான்:—

"என்ன! திரும்பிச் செல்வதா? முதுகு காட்டி ஓடுவதா? அளவில் அணுவுங் குறையாத ஸகலமான உபகரணங்களும் பூரணமாகவுள்ள நம்முடைய சேனைகளை திரும்பவும் நமது கோட்டைக்குள் செலுத்தி அங்கு அடைந்து விடுவதா? இது என்ன யோசனை?

நாம் இதுகாறும் ஒன்பது வருஷ காலம் அந்தக் கோபுரங்களில் அடைப்பட்டுக் கிடந்தோமே, வீரர்களே! அது உங்களுக்குத் தெரியுமே, அது போதாதா? இலியன் பட்டணம் ஒரு வற்றுத பித்தளைக் களஞ்சியம் என்றும், ஓய்வில்லாத பொற்கனிகளை யுடையது என்றும் முன்னுள் முதல் பிரஸித்தியடைந்துள்ளது. இது உலகப் பிரஸித்தியான விஷயம்,

நாம் அந்தப் பட்டணத்தின் மதில்களின் உள்ளில் பதுங்கிக் கிடந்து வந்த பொழுது நமக்கு என்ன பெருமை யிருந்தது? இழிந்தவர்களாகவே, காலத்தைக் கழித்து வந்தோம். நம் ஆஸ்திகளை யெல்லாம் தரையில் குழித்துப் போட்டிருந்தோம். நம் சகலமான பண்டங்களும் கெட்டு அழிந்து போய் விட்டன. அவைகளைக் கொள்ளை யடித்துக் கைப்பற்றிய பிரிஜியர்கள் அவைகளை யெடுத்துத் கொண்டு பல திசைகளிலும் ஓடிச் சென்று அவற்றை அனுபவித்து ஆனந்தித்து வருகின்றனர். மதங்

கொண்ட மியோனியர்கள் ட்ராய் நாட்டார் இட்ட பயிர்களின் பலனை அழித்து வருகின்றனர்.

இன்னும் ஒருமுறை கடைசியாக, ஆயுதங்களை யேந்திக் கொண்டு யுத்தத்துக்குச் செல், வெற்றியுடன் விளங்கு என்று மஹா தேவரான ஜோவ் தேவர் என்னை இப்போது வருந்தியழைக் கின்ருர். கிரேக்கர்களையும் அவர்களுடைய மரக் கோட்டைகளில் அவர் அடைத்து விட்டார். தேவர்களே ஊக்கமளித்து முன் விடுக்கும் ஒரு வீரனை நீங்கள் தடுக்கலாமா? அந்த வீரனது உற்சாகத்தைக் குறைக்கலாமா? அவனது மனத்தை இளக்க லாமா? துரோஜன் எவனுவது புறங்கொடுத்து ஓடுவானு? அப்படி எவனுவது ஓட முயன்ருல் நான் அவனைத் தடுத்தே விடு வேன்!

ஆதலால், பாலிதாமஸ் சொல்லிய யோசனை ஒருபுறம் இருக் கட்டும். அதினும் சிறந்த நல்ல யோசனை ஒன்றை நான் சொல்லு கின்றேன், கேளுங்கள்.

நீங்களனைவரும் இப்போது அலுத்துச்சலித்திருக்கின்றீர்கள். ஆதலால் முதன் முதலாக உசிதமான அன்னபானுதிகளை யருந்தி உங்களுடைய சிரமங்களைத் தீர்த்துக் கொள்ளுங்கள், அதன்பின் முறைப்படி உங்களுடைய காவல்களைச் செய்து வாருங்கள்.

உங்களில் யாராயினும் ஒருவனுக்குத்தன்னுடைய ஆஸ்தியை யும் பணங்காசுகளையும் எவ்வாறு காப்பாற்றுவது என்னும் கவலை யிருந்தால் அவன் அவையனைத்தையும் உடனே இங்கு கொண்டு வந்து நம்முடைய சேனைகளுக்குப் பங்கிட்டுக் கொடுக்க கடவன். நம்முடைய நாட்டுச் சத்துருக்கள் அவற்றைக் கொள்ளை யடித்துக் கொண்டு போக விடுவது தகாது. அதைக் காட்டிலும் அவற்றை நம் இனத்தாருக்குத் தாராளமாக வழங்கி விடுவதே மேலாகும்.

நாளைக் காலையில் செங்கதிரோன் கிழக்கில் தோன்றித் தன் னுடைய வெங்கதிர்களைப் பொழிந்து உலகத்திலுள்ள குளிரைப் போக்கி வெப்பத்தை யுண்டாக்குவான். அக்கணமே நாமனை வரும் நம்முடைய ஆயுதங்களை அதோ அங்குக் காணும் கப்பல் களின் மேல் சரமாரியாகச் சொரிவோம்.

அகிலேசன் மஹா பராக்கிரமசாலிதான் என்றே வைத்துக் கொள்வோம். அவன் தனது முழு பலத்துடனும் அங்கு வரு வான் என்றும் வைத்துக் கொள்வோம். அவன் அவ்வாறு வந்தால் அவனுக்குத்தான் ஆபத்து உண்டாகும்!

அவன் தான் கெடுவான். நான் அவனுடன் பொருது ஒரு கை பார்த்தே விடுவேன். தேவர்களே! இந்தக் காரியத்தில் ஒன்று எனக்குக் கீர்த்தியைத் தாருங்கள், அல்லது என்னைக் கொன்று அவன் கீர்த்தியுடன் வாழட்டும். இந்த யுத்தத்தில்

தப்பிப் பிழைப்பவன் கீர்த்திப் பிரதாபங்களுடன் வாழ்ந்து வரட்டும்.

மார்ஸ் தேவர் நம் அனைவருக்கும் தேவர். அவர் பாரபக்ஷமற்றவர். எல்லோரையும் சமமாகப் பார்ப்பவர். ஒரு யுத்தத்தில் ஒரு வீரன் பன்முறையும் வெற்றியுடன் விளங்குகின்றான். கடைசியாய் அவன் தோல்வியே யடைந்து மடிந்தும் போய் விடுகின்றான் " என்றான்.

இந்த வசனங்களைச் செவி சாய்த்துக் கேட்ட அவனுடைய சைனிகர்கள் பெருங் கூச்சலிட்டுக் களித்து ஆரவாரித்தனர். அவர்களிற் பெரும்பாலோரின் பகுத்தறிவைப் பாலாஸ் தேவியார் கறந்து விட்டார். அவ்வாறு பகுத்தறிவை யிழந்துவிட்ட அந்த ஜனங்கள் தங்களது மூடத்தனத்திலேயே முழு நம்பிக்கையை வைத்தவர்களாய்ப் பாலிதாமஸின் நற்புத்தியை நழுவ விட்டு ஹெக்டரின் கெட்ட புத்தியையே நல்லதென்று அதையே ஆமோதித்தனர்! இது நிற்க.

இரவின் அதிபதியானவன் இப் பூமண்டலத்தை இருளில் மறைத்துக் கொண்டு நெடுங்காலம் தனது ஆட்சியைச் செலுத்தி வந்தான்.

அப்பொழுது கிரேக்கர்களுடைய கோஷ்டியினரனைவரும் பத்திரகலுஷனைச் சுற்றி நின்று கொண்டு பிரலாபித்தனர். அவர்களனைவரிலும் பிலிதீசனே பெருந் துக்கங் கொண்டவனாய் விளங்கினான்.

அவனுடைய அவயவங்களெல்லாம் சோர்வடைந்து குளிர்ந்து போயின, களிமண்ணைப் போல் குளிர்ந்து கிடந்தன. அதுவரை சத்துருக்களைச் சங்கரித்து, அவர்களது இரத்தத்தைப் பூசிக்கொண்டு விளங்கிய அவனுடைய கைகள் தளர்வடைந்த அவனுடைய அவயவங்களைப் பிடித்துக் கொண்டு நின்றன. அவனுடைய கண்களிலிருந்து கண்ணீரானது பொழியப் பொழிய வடிந்து வந்தது. அவன் விம்மி விம்மி அழுது தனது மார்பு பிளந்து போகும்படி பெருமூச்சு விட்டான்.

கடுத்த முகமும் கொடிய மனமுமுடைய காட்டு வாஸியான ஒரு சிங்கம் தனது வழக்கம் போல் அன்றிச் சற்றுக் காலங் கழித்துத் தனது குகைக்குத் திரும்பி வந்து பார்க்கையில், அது கொள்ளையிடப்பட்டிருப்பதையும் அக் குகைக்குச் செல்லும் வழியில் உள்ள காட்டின் எல்லைகளிலும் பள்ளங்களிலும் மனிதர்களின் காலடிச் சுவடுகள் இருக்கவுங் கண்டு, அவற்றை மோந்து பார்த்துப் பின், தனது குகையில் தன்னுடைய குட்டிகளைக் காணாது பயங்கரமான துக்கத்தினால் துளைக்கப்பட்டு, அக் குட்டிகளைத் தேடிக் கொண்டு அப்பாலைவனத்தின் வழியே கர்ஜ்ஜித்துக் கொண்டு செல்கின்றது. அப்போது அதன் பிரலாபத்தையும்

புலம்பலையும் அனுசரித்து அக் காடுகளும் பிரலாபித்துப் புலம்பு கின்றன.

அவ்வாறே அகிலேசனும் பிரலாபித்தான். அழுதான், கதறினான். தன்னுடைய மிர்மிடோனியர்களை நோக்கி மிகவும் ஆத்திரத்துடன் பறை யறைந்தது போல் பின்வரும் வசனங்களை உரைத்தான், ஓலமிட்டான்:—

"ஆஹா! தெய்வங்களே! நான் செய்த வாக்குத் தத்தம், வாக்குறுதி வீணாகவன்றோ ஆகிவிட்டன! விருத்தாப்பியத்தினால் தளர்ந்திருந்த மெனிஷியஸ்ஸைத் தேற்றுகையில் நான் அவரது பிரிய குமாரனை விசேஷமான கொள்ளைப் பொருள்களுடன் எழில் வாய்ந்த உபந்தியாத் துறைக்கு க்ஷேமமாகத் திருப்பிக் கொணர்ந்து சேர்த்து விடுவேன் என்று சத்தியஞ் செய்தேன்!

இது சர்வ வல்லமையுள்ள ஜோவ் தேவருக்குப் பிடிக்க வில்லை; அவர் ஒரு நர மனிதனுக்கு இவ்வளவு துணிவா, தைரி யமா, இறுமாப்பா? மதியீனனான ஒரு மனிதன் இவ்வாறு பெருத்த யோசனைகளைச் செய்யலாமா என்று என்னைப் புறக்கணித்து எனது கொட்டத்தை யடக்கி விட்டார்.

இந்த மஹா வீரனும் இவனது நண்பனும் ஒரே யடியில் அழிந்து போக வேண்டும். எங்கள் இருவருடைய இரத்தத்தையும் இந்த ட்ராய்க்களம் உறிஞ்ச வேண்டும், அவ்வாறு உறிஞ்சி இந்தக் கரையோரமுள்ள மணலெல்லாம் கறுத்துப் போக வேண்டும் என்று அவர் நியமித்து விட்டார்!

என்னைப் பெற்ற அதிர்ஷ்ட ஹீனையான எனது அன்னை யும் எனது அழிவை நினைத்து அழுது புலம்புவாள், விருத்தரான எனது தந்தையும் இனி என்னைப் பாரார்.

எனது அன்ப! பத்திரகலுஷா! நான் இவ்வாறு வீண் பொழுது போக்கி வருகின்றேன் என்று வருந்தாதே! நான் இன்னும் ஒரு சிறுபொழுது இங்கு தாமதித்துப் பின் நீ சென்ற அந்தகாரம் நிறைந்த அந்த வழியிலேயே விரைந்து உன்னைத் தொடர்ந்து கொண்டு வருவேன்.

உனது பொன் மேனியைப் பூமியில் அடக்கஞ் செய்யுமுன், ஹெக்டருடைய தலையை நாங்கள் உனது ஆத்மாவுக்கு ஒரு நைவேத்தியமாக, பலியாக அளிப்போம். அவனுடைய தலையை யும் ஆயுதங்களையும் உனது சமாதியின் முன் கட்டித் தொங்க விடுவோம். துரோஜர்களது மரபில் வந்த உத்தம வீரர்கள் பன்னிருவர், இதோ, இந்தக் கையினால் தங்களுடைய உயிரை விடுவார்கள். அப்பொழுதுதான் நமது பழி தீரும். கொழுந்து விட்டுக் கொண்டு எரியும் உனது சிதையைச் சுற்றிலும், அவர் களுடைய ஆவிகள் சுற்றிச் சுழன்று வரும்.

அதுவரை நான் இங்கேயே கிடப்பேன். உனது தேஹத்தின் மேல் நெருங்கிப் படுத்துக் கிடப்பேன். கண்ணீர் விட்டு அழுவேன். அவ்வாறு அழுத கண்ணீரை உனது குளிர்ந்த முகத்தில் வடிப்பேன். உனது மார்பின் மேல் விழுந்து தேம்பித் தேம்பி, அழுவேன், புரளுவேன்.

அப்பொழுது இந்த யுத்தத்தில் சிறை பிடிக்கப்பட்ட துரோஜர்களும் உன்னைக் குறித்து அழுது புலம்பித் துக்கம் பாராட்டிக்கொண்டு அசையாமல் நின்று விடுவார்கள். இரவெல்லாம் அழுவார்கள். பகலெல்லாம் முணுமுணு வென்று பெருமூச்சு விடுவார்கள். என்னுடைய ஆயுதங்களினாலும் உன்னுடைய கைவலியினாலுமே இதுவரை இக்காரியங்கள் நிகழ்ந்து விட்டன. அடுத்தடுத்து நின்று முறையாகத் தாளம் போடுபவர்களைப் போல் நாம் இருவரும் நமது கத்தியினால் நம்முடைய சத்துருக்களை வெட்டி வீழ்த்தினோம். விசாலமான இந்தப் போர்க்களத்தையும் பாழாக்கினோம்" என்றான்.

இவ்வாறு சொல்லிய பின்னர், அவன் தன்னைச் சுற்றிலும் நின்று துக்கித்துக்கொண்டிருந்த தன்னுடைய பரிவாரத்தார்களை நோக்கி, அந்த வெளுத்துக் கிடந்த பிரேதத்தைக் கழுவவும், உத்தமமான அந்தச் சரீரத்தின் மேலிருந்த இரணங்களைச் சுத்தம் செய்யவும் ஆணையிட்டான்.

அவர்கள் அவனது ஆணைப்படி பிரம்மாண்டமான ஆகிருதியுள்ள ஒரு பெரிய கொப்பரையைக் கொண்டு வந்து, கொழுந்து விட்டு எரிந்து வந்த ஓர் அடுப்பின் மேல் வைத்து, அந்த அடுப்பில் கொள்ளிக்கட்டைகளை ஒரு மலை போல் குவித்தனர். அப்போது அவ்விடமிருந்து எழுந்த நெருப்பானது அந்தக் கொப்பரையின் அடியினின்றும் இரண்டு பிரிவாகப்பிரிந்து அதைச் சுற்றிக்கொண்டு ஆகாயமளாவி யுயர்ந்து எரிந்தது.

அதன்பின் அவர்கள் அந்த வாயகன்ற கொப்பரையில் தண்ணீரைத் தடதடவென்று கொட்டினர். அந்தத் தண்ணீர் சூடேற்று அந்தக் கொப்பரையின் விளிம்பு வரை நுரையுடன் பொங்கி எழுந்தது. அப்பொழுது அவர்கள் அந்த உடலை மிகுந்த பயபக்தியுடன் குளிப்பாட்டி அதன் மேலிருந்த ரணங்களில் பரிமளத் தைலங்களைப் பொழிந்து அதன் அவயவங்களிலும் எண்ணெயிட்டுத் தேய்த்து, ஒரு திவ்யமான உயர்ந்த படுக்கையில் நீளமாகக் கிடத்தினர். பின்பு அவர்கள் அப்பிணத்தை ஒரு சுத்தமான வஸ்திரத்தினால் மறைத்துக் கடைசியாக அதன்மேல் பால் போல் வெளுத்த வேறு ஒரு வஸ்திரத்தையும் போர்த்தினர். இறுதியாக, அவர்கள் திரும்பவும் துக்கம் பாராட்டிக் கொண்டு அழுது புலம்பிப் பெருமூச்சு விட்டனர்.

பூலோகத்தில் காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்து வருகையில் விண்ணுலகத்தில் வீற்றிருக்கும் ஸர்வ வல்லமையுமுள்ள ஜோவ்

தேவர் தமது ஸஹோதரியும் பத்தினியுமான ஜூனோ தேவியை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தார் :—

"கடைசியாக நீ பிடித்த காரியத்தைச் சாதித்தே விட்டாய்! மஹானுன பிலியஸ்ஸின் புத்திரனும் ஆயுதபாணியாய் எழுந்து விட்டான். உன் பிரியர்களான கிரேக்கர்களும் இவ்வாறு உனது அனுக்கிரகத்தைச் சம்பாதித்து விட்டனர்.

இது இருக்கட்டும். எனக்கு ஒரு விஷயம் மாத்திரம் தெரிய வில்லை. அதை நீ விளங்கச் சொல்லவேண்டும். இந்த கிரேக்கர்கள் தேவ பரம்பரையில் வந்தவர்களா? நீயும் அந்த வீரர்களின் அன்னையா?" என்றார்.

இந்த வசனங்களைச் செவியுற்ற அந்த மஹாதேவி உள்ளங் கொதித்துக் கோபித்துத் தன்னுடைய கண்களில் தீப்பொறிகளைத் தெறித்துக் கொண்டு அவரை உருட்டி விழித்துப் பார்த்து, "நீர் இந்த வார்த்தைகளைச் சொல்லலாமா? இவைகளுக்கு என்ன பொருள்? இவை என்ன வார்த்தைகள்?

கேவலம் மனிதர்களுமன்றோ இந்த உதவியைச் செய்வார் கள்? சாதாரணமான யுத்தியும் யோசனைகளுமுடைய மனிதர் களுக்குங் கூட இந்த வெற்றிகள் கிடைக்குமே!

அவ்வாறிருக்க விண்ணுலகத்தில் வீற்றிருக்கும் வீர தெய் வங்களில் இரண்டாந் தெய்வமாக மதிக்கப்படுபவளும் தேவ லோக ராணியும் இடிக் கடவுளான ஜோவ் தேவரின் பத்தினியும் ஆகிய நான் வாளாவிருக்கலாமா? இவ்விரு திறத்தாரில் ஒருவரது கக்ஷியில் இருக்கலாகாதா? அவர்களுடைய லாப நஷ்டங்களைக் கவனித்து வரலாகாதா? தோல்விகளை விலக்கி அவர்களுக்கு வெற்றியை அளிக்கலாகாதா? அவர்களது விணப்பயனைத் தடுத்து அவர்களை ஆட்கொள்ளலாகாதா? அபராதிகளான ஒரு நாட் டாரை அடித்துக் கொன்று எனது பழியைத் தீர்த்துக் கொள்ள லாகாதா?" என்றாள்.

இவ்வாறு தேவலோக தம்பதிகள் இருவரும் தர்க்கித்துக் கொண்டிருக்கையில், வெள்ளிக் காலளான பெருந்தேவி வல்க்க னுடைய மாளிகைக்குச் சென்று அடைந்து விட்டனள்.

அழிவற்ற அம்மாளிகையின் பெருமையை வருணிப்பது அசாத்தியமான காரியமேயாகும். நெடுந்தூரம் வரை ஒளி வீசிக் கொண்டு பிரகாசத்துடன் விளங்குமாறு தேவர்களால் வெண்கலத் தினால் நிருமாணிக்கப்பட்ட கட்டிடங்கள் அனைத்தினும் அதுவே அதியுன்னதமாக விளங்கியது. அங்கு அந்தத் தேவி முடவனான அந்தச் சிற்பியைக் கண்டனள்.

அப்பொழுது அவன் கொல்லுலைகள் அவனைச் சுற்றிலும் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தன. அவன் அவைகளில் உண்டான புகையினுல் மறைக்கப்பட்டவனுகவும் அவற்றி னின்றும் எழுந்த ஆவியினுல் வெந்து வியர்வையை வடித்துக் கொண்டும் ஓர் உலையிலிருந்து மற்ருேருலைக்குப் பறந்துகொண்டு மிருந்தான். அவன் உலைகளிலிருந்த துருத்திகள் உரத்த சப்தத் துடன் காற்றைக் கக்கிக்கொண்டு கடலில் உண்டாகும் அலைகளைப் போல் ஒன்றையொன்று மோதி கர்ஜனை செய்து வந்தன.

அன்றைய தினம் அவன் அதிவிசேஷமான ஒரு காரியத் தில் கண்ணுங் கருத்துமாகத் தனது கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தான். தனது மாளிகையில் உபயோகித்து வருவதற் காக அவன் இருபது முக்காலிகளை நிர்மாணித்துக் கொண்டிருந் தான். அவை அதிவிந்தையாக நிருமிக்கப்பட்டிருந்தன. கெட்டிப் பொன்னுலான, வேக கதியுள்ள சக்கரங்களின் மேல் ஏற்றி வைக்கப்பட்ட பொழுது அவை இயல்பாகவே உயிருடன் பிறந்தவை போல் இடம் விட்டு இடம் உருண்டு சென்றன. தேவர்களின் குறிப்பறிந்து அவை அவர்களுடைய திவ்யமான மாளிகைகளையெல்லாம் சுற்றிக்கொண்டு தாமாகவே நகர்ந்து வந்தன.

அவைகளுக்கு அழகான பிடிகள் உண்டாக்க நினைத்து அந்தத் தேவன் புஷ்பச் சித்திரங்கள் வெட்டியிருந்த அச்சுக்களில் தகதகவென்று கொதித்து வந்த பொன்னை உருக்கி யூற்றிக் கொண் டிருந்தான். அவன் உத்தேசித்தபடி அந்த அச்சு தனது இடம் விட்டுப் பெயர்ந்து செல்லச் சித்தமாக விருக்கையில், நீலமேனி யளான தேவியும் அங்கு வந்து சேர்ந்தனள்.

தேவர்களுக்குச் சமானமான எழில் வாய்ந்தவளும் ஜடை யாகப் பின்னிய தனது கூந்தலை ஊதா நாடாக்களால் கட்டிக் கொண்டு விளங்கியவளுமான சாரீஸ் தேவி என்னும் அவனது தர்ம பத்தினியே, அந்தத் தேவி அவனுடைய மாளிகையில் புகு வதை முதன்முதலாகக் கவனித்தனள். அவள் அந்த ஜலாசய தேவியைக் கண்டு, புன்னகை கொண்டு, அவளது மிருதுவான கையை அன்புடன் மெதுவாகப் பிடித்துக்கொண்டு பின்வரும் வசனங்களை உரைத்தனள் :—

"வாரீர் தேவி! இவ்வாறு தாங்கள் அபூர்வமாக இங்கு தயவு செய்ததற்குக் காரணம் என்ன? தங்களது வரவு நல்வர வாகுக! தங்களுக்கு எல்லா நன்மையும் உண்டாகுக! தங்களது உத்தேசம் எவ்வாருக யிருக்கினும் தங்களது வரவு நல்வரவாகவே ஆகுக!

தாங்கள் இதுவரை இங்குத் தய வு செய்ததில்லை. ஒரு சுப முகூர்த்தத்திலேயே தாங்கள் இங்கு வந்ததாக நான் மதிக்கின் றேன். இந்தச் சுப முகூர்த்தத்தில் தாங்கள் எனது அந்தப்புரத்

தில் இன்சுவையுடன் கூடிய பக்ஷணங்களை அருந்த வாரீர் என்று இன்சொற் கூறி, அவள் அந்தத் தேவராணியை வெள்ளியினுலான நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட்டதும் மற்றும் பல விதம் வித மான சித்திரங்கள் கொண்டதுமான ஓர் உயர்ந்த சிங்காதனத்தில் இருத்தினுள்.

அதன்பின் அவள் அந்தத் தேவியின் பாதத்தின் அடியில் ஒரு பீடத்தையும் வைத்துத், தனது கணவனுன வல்க்கனை நோக்கி, "வல்க்கன் தேவரே! இங்கு வாரும்! தெட்டிஸ் தேவி யானவர் உமது தயவை நாடி இவ்விடம் வந்திருக்கின்ருர்!" என்ருள்.

வல்க்கன் தேவன், "தெட்டிஸ் தேவிக்கு நாம் நம்மாலான காரியங்களனைத்தையும் செய்யக் கடமைப் பட்டிருக்கின்ரேம். அவர் நமக்கு எப்போதும் பிரியமானவர். அவரது நாமத்தை நாம் என்றென்றும் போற்றிப் பாராட்டி வருகின்ரேம். நான் அங்க ஹீன னுகப் பிறந்ததைக் கண்ணுற்று என்னிடம் வெறுப்படைந்து எனது தாயார் தேவலோகத்திலிருந்து என்னை உருட்டித் தள்ளிவிட்ட பொழுது, இந்தத் தெட்டிஸ் தேவியும் யூரினேமியுமே என் சங்க டங்களைத் தீர்த்து வைத்தனர். என்னிடம் கருணை கொண்டு என்னை யெடுத்துத் தங்களது மெதுவான மார்போடணைத்து என் னைத் தேற்றினர்.

இளையோனுக விருந்தும் நான் அப்பொழுதுங் கூட இந்தக் காரியங்களைச் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாக விருந்தேன். சங்கிலிகளும் வளையல்களும் கங்கணங்களும், சரங்களும் மற்றும் அவர்களுடைய விளையாட்டுக் கருவிகளையும் நான் செய்தே வந் தேன். அவர்கள் ஒன்பது வருஷ காலம் என்னை ஓர் இருட்டறை யில் அடைத்து வைத்து, என்னை இரக்ஷித்தனர். மனிதருக்கோ அல்லது தெய்வங்களுக்கோ கட்புலனுகாமல் அந்த இருட்டறை யில் நான் எனது காலத்தைக் கவலையின்றிக் கழித்து வந்தேன். ஒரு பெரும் பாறையில் ஆழமாகக் குடைந்திருந்த ஒரு குகையில் நான் எனது காலத்தைக் கழித்து வந்தேன். அப்பொழுது அலைக ளுடன் மோதி வரும் கடலானது எனது தலைக்குமேல் முணு முணு வென்று இரைந்து கொண்டிருந்தது.

இப்போது அந்தத் தேவி நமது மாளிகைக்கு வந்து அதனை மகிழ்வித்து விட்டார். நாம் களிப்படைந்து விட்டோம். இவ் வாறு அவர் நமக்குச் செய்த கருணைகளுக்கு நான் எவ்வாறு கைம் மாறு செய்ய வல்லேன் என்பதை நீ உரைப்பாயாக!

தெட்டிஸ் தேவி! எங்களது பந்தியில் அமர்ந்து நாங்கள் செய்யும் அதிதி ஸத்காரங்களை ஸ்வீகரிப்பீராக. எங்கள் உப சாரங்களை ஏற்றுக் கொள்வீராக. அதுவரை நான் எனது உலைக் கூடத்துக் காரியங்களை நிறுத்திவிட்டுக் கர்ஜனை செய்யும் என் துருத்திகளையும் அடக்கி விடுகின்றேன்" என்ருன்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே, முடவனுன அந்தச் சிற்பச் சிரேஷ்டன் தனது பட்டறையிலிருந்து எழுந்து, அவலக்ஷண மான இணையற்ற சிறிதும் பெரிதுமான தன் கால்களைச் சாய்த்துச் சாய்த்து நடந்து சென்று, துருத்திகளை நிறுத்தி விட்டுத் தன்னுடைய தொழிற் கருவிகளை அவற்றின் பெட்டிகளில் ஒழுங்காக அடுக்கி வைத்து அவற்றைப் பூட்டினன்.

பின்பு புகையும் புழுதியும் படிந்திருந்த அந்தத் தர்மசீலன் நெருப்பின் அருகில் இருந்து வேலை செய்து வந்ததினுல் பழுப்பு நிறம் அடைந்துவிட்ட தன்னுடைய உரமான கைகளையும் மயிரடர்ந்திருந்த தனது மார்பையும் ஒரு கடற் பஞ்சினுல் நன்ருக அழுத்தித் தேய்த்துத் துடைத்துக் கொண்டான்.

இவ்வாறு தனது தேகத்தைச் சுத்தம் செய்து கொண்ட பின், அனலுக்கரசனுன அந்தத் தேவன் சிவந்த வஸ்திர மணிந்து, பிரம்மாண்டமான தனது செங்கோலைப் பாங்காக ஏந்திக் கொண்டு, நொண்டி நொண்டி முன் வந்தான்.

பொன்னுல் உருவாக்கப்பட்டு உயிருடன் விளங்கிய இரண்டு பெண்ணுருவங்கள் அந்த மஹாராஜனது இரு கால்களையும் தாங்கி வந்தன. அவை தாமாகவே சஞ்சரித்தும் சுவாஸ உச்சுவாஸங்கள் செய்தும் வந்தன. அவைகளுக்கு நாவன்மையும் பகுத்தறிவுங் கூட இருந்தன. தேவலோகத்தில் நிர்மாணம் செய்யப்பட்டிருந்ததினுல் அவைகளுக்குச் சாஸ்திரஞானமும் இருந்தது. தேவலோகத்திலுள்ள விந்தைகளுக்கு அளவும் உளதோ? இவ்வாறு விசித்திரமாக நிர்மாணம் செய்யப்பட்டிருந்த வாகனங்களின் மேல் அமர்ந்து தனது காலை யுயர்த்தியும் தாழ்த்தியும் அழுத்திவைத்துக் கட கட வென்று அவ்வாகனங்களை உருட்டிக் கொண்டு அவன் கவலையுடன் வீற்றிருந்த தெட்டிஸ் தேவியின் அரியாசனத்தின் அருகில் சென்று சேர்ந்தான்.

அங்குச் சென்று அதனருகில் ஒளியுடன் விளங்கிய ஓர் ஆசனத்தின் மேல் அமர்த்தப்பட்ட பின் அவன் வெள்ளிக் காலளான அந்தத் தேவியை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

"தேவி! வருக! தங்களது வரவு நல்வரவாகுக! தாங்கள் வெகு நாள் பராமுகமாகவே யிருந்து விட்டீர்கள். இப்பொழுது இந்த மாளிகைக்கு விஜயஞ் செய்து இதைப் புனிதமாக்கி விட்டீர்கள்! தங்களது உத்தேசம் என்னவோ! தரும நிதியான தெட்டிஸ் தேவி! தங்களது ஆணை என்ன? அதைத் தாங்கள் அறிவிக்க வேண்டுவது தான் தாமதம். அதனை வல்க்கன் மிகுந்த ஆனந்தத்துடனும் ஆவலுடனும் ஏற்று நிறைவேற்றுவான். அது அவனது கடமையே யாகும்" என்ருன்.

அப்பொழுது அந்தத் தேவி தனது மகனுக்கு நேர்ந்திருந்த ஆபத்துக்களை நினைத்துத் துக்கித்துக் கொண்டிருந்தனள்.

அவளுடைய கண்களில் தெறித்த நீர்த்துளிகள் ததும்பி நின்று கொண்டிருந்தன. அவள் வல்க்கனுக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தனள் :—

"வல்க்கா! வல்க்கா! இப்போது எனது மார்பைத் துளைத்து வரும் துக்கத்துக்கு இணையான துக்கங்கள் எப்போதாயினும் எந்தத் தேவனையோ தேவியையோ பீடித்தது உண்டோ? எண்ணிறந்த அநேகமான தேவிமார்களிருக்க ஜோவ் தேவர் தெட்டிஸ் தேவியின் மீது தானு இவ்வாறு அபாரமான கவலை களைச் சுமத்த வேண்டும்! அவளுக் கென்றே அவர் இந்தக் கஷ்டங்களைச் சேர்த்துவைத்திருந்தாரோ !

ஜலதேவதைகள் அனேகர் இருக்க என்னை மாத்திரம், என்னை ஒருத்தியை மாத்திரம் ஒரு மனிதனுக்கு மனைவியாகக் கொடுத்தனர். என்னைப் பலவந்தப் படுத்தி ஒரு மனிதனுக்கு மணம் செய்வித்தனர்.

இப்போது எனக்கு வயதாகி விட்டது. பலவிதமான கஷ்டங்களும் நஷ்டங்களும் அனுபவித்துக் கெட்டு நொந்து கிடக்கின்றேன். எனது கடைசிக் காலத்தில் இந்தப் பெருந் தண்டனையையும் அவர் எனக்கு விதித்து விட்டார்!

எனது வயிற்றிலிருந்து தேவர்களுக்குச் சமானமான ஒரு வீரன் உதித்தான், வீரன் என்ருல் அந்தப் பெயர் அவனுக்கே தகும். அதற்குச் சிறிதும் ஐயமில்லை. ஓர் அழகான செடியைக் கட்டிக் காத்து வளர்ப்பது போல் நான் அவனை வெகு கவலை யுடனும் கருத்துடனும் வளர்த்து வந்தேன். அவனும் வளர்ந்து மேன்மேலும் விர்த்தியடைந்தான். நாட்டிற்கே நாயகனுகவும் விளங்கினுன்.

நான் அவனை ட்ராய்க்கு அனுப்பினேன். ஒரு கெட்ட வேளையில் அவனை அனுப்பினேன். இனி அவன் தனது ஜன்ம தேசத்தின் எல்லையைத் திரும்பி மிதிக்க மாட்டானே! அந்நாட்டிற் குத் திரும்பி வரவு மாட்டானே ! ஐயோ, நான் என்ன செய்வேன்! அவன் இப்போது உயிருடனேயே இருந்தாலும் தனக்கு நேர்ந்து விட்ட துக்கங்களையே எண்ணியெண்ணி நெஞ்சம் நைந்து புண் பட்டுத் தினே தினே வாடி வருகின்ருனே! நான் ஒரு தேவியே என்ருலும் அவனுக்கு வர விருக்கும் கெடுதியைத் தவிர்க்க என்னுல் இயலவில்லையே!

கிரேக்கர்கள் அனைவரும் ஒரே மனத்தினராய் அவனுக்கு ஒரு பெண்மணியை நன்கொடையாக அளித்தனர். அந்த ராஜ குமாரியை மனிதர்க்கரசன் அபகரித்து, அவளைத் தனக்கு அடிமை யாகவும் வைத்துக் கொண்டு விட்டான். இதை முன்னிட்டு அவன் துக்கித்து வந்தான். இவ்வாறு துக்கித்து வருகையில், கிரேக்கர் களை அவர்களுடைய சத்துருக்கள் நெருக்கி வருத்தி வந்தனர்.

அந்த ஹிம்ஸையைப் பொறுக்க முடியாமல் அவர்கள் அவனிடம் ஓடி வந்து அவனது உதவியை நாடினர். அவனுக்கு விசேஷமான பரிசுகளைத் தருவதாக ஏற்றுக்கொண்டனர். தங்களுடைய பெரிய மனிதர்களையும் அவனிடம் தூதாக அனுப்பினர். இவற்ருல் ஒன்றும் பயனுண்டாகவில்லை. அவன் ஆயுதம் ஏந்த மாட்டேனென்று சொல்லிவிட்டான்.

ஆனால் தன் ஆயுதங்களையும் குதிரைகளையும் ஸைனியத்தையும் மாத்திரம் அந்த யுத்தத்தில் இறங்கியிருந்த தனது நண்பனுக்குத் தந்து உதவினான். அவன் அந்த ஆயுதங்களையும், அஸ்வங்களையும் ஆட்களையும் கொண்டு ட்ராய்க்குச் சென்று பொருது, ட்ராயையும் பிடித்தேன் என்று சொல்லும் சமயத்தில், பீபஸ் பகவான் அவனைக் கொன்றுவிட்டார்! ஹெக்டர் ரூபமாக வந்து அவர் அவனைக் கொன்றுவிட்டார். அக்கணமே அவன் தன்னுடைய கவசத்தையும், ஆயுதத்தையும், பேரையும், கீர்த்தியையும் துறந்துவிட்டான்.

ஆதலால் உமக்காவது என்னிடம் மனம் இரங்கட்டும்! என் பிரார்த்தனைகளைக்கேட்டு, நீராவது இரங்குவீரா? அற்ப ஆயுளுடைய இந்த மகனுக்கு அழிவில்லாத ஆயுதங்களைத் தருவீரா? அவன் அவற்றை அழகுடன் அணிந்து கொண்டும் சகலமான ஆடம்பரங்களுடனும் இந்தப் போர்க்களம் செல்ல வேண்டும். அவனுக்கு அந்தியகாலம் வரும்வரை அவன் பெருங் கீர்த்தியுடையவனாய் விளங்கவேண்டும்'' என்றாள்.

தெய்வச் சிற்பியான அந்த விஸ்வகர்மா அவளுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான்:—

"அம்மணி! வல்க்கனால் ஆகக்கூடிய சகாயம் அனைத்தையும் அவன் உமக்குச் செய்தே தீருவான் என்று உறுதியாய் நம்பிக்கொண்டு உம் கவலைகளை ஒழித்துவிடும்! அனைவரும் ஆவலுடன் எதிர்பார்க்கும் ஆயுதங்களையெல்லாம் நான் உண்டாக்குவேன். தலைமுறை தலைமுறையாக வரும் ஜனங்களெல்லாம் அவற்றைக் கண்ணுற்று அதிசயித்துப் பிரமித்து நிற்பர். அவையனைத்தும் உலகத்தையே மயக்கிவிடும். நான் அதிசாமர்த்தியமான அக்காரியங்களைச்செய்ய வல்லவன்தான்!

அகிலேசனுக்கு வரவிருக்கும் வினைப்பயன்களை விலக்கி அவனை ஒளித்தோ அல்லது அவன் மீது விழவிருக்கும் கொடிய அடியை வேறு புறமாகத் திருப்பியோ விட்டால் நான் அதிபலவானாகவே விளங்குவேன்'' என்றான்.

இவ்வாறு சொல்லிய பின்னர், அக்னி கணங்களின் பிதாவாகிய அந்தத் தேவன் கடினமான தன்னுடைய காரியங்களைக் கவனிக்குமாறு தன்னுடைய உலைக் கூடங்களுக்குச் சென்றான்.

அங்குச் சென்றபின் அவனது ஆணைப்படி அவன் துருத்திகள் தங்களுடைய இருப்புவாய்களைத் திறந்து கொண்டு உரத்துக் கூவிக் கூச்சலிட்டன. உலைகளெல்லாம் கொழுந்து விட்டுக் கொண்டு எரிந்தன. இவ்வாறு துருத்திகளும் உலைகளும் கிளப்பிய ஒலிகள் ஒன்றையொன்று தாக்கி அடித்து எதிரொலிகளைப் பரப்பின. அக்கணமே அவ்வெதிரொலிகள் காற்றிலும் கலந்து விட்டன. அப்பொழுது ஏககாலத்தில் இருபது உலைகள் தீப்பிடித்துக்கொண்டன. வல்க்கனது ஆணைப்படி அவை உயர்ந்தும் தாழ்ந்தும் ஒலித்தன. பிரசண்டமாருதம்போல் கொந்தளித்து எழுந்தன. மெதுவாக மந்தமாக வீசின.

இவ்வாறு அந்த உலைகள் எரிந்து வருகையில் நெருப்பானது பாம்புபோல் சீறிக்கொண்டு நாற்புறமும் ஜ்வாலையை வீசியது. அப்பொழுது வெள்ளியும் உறுதியான பித்தளையும் தகரமும் கெட்டித் தங்கமும் உருண்டை வடிவமான பிரம்மாண்டமான கிராதிகளாக உருட்டப்பட்டன.

ஆழமாக ஊன்றி நிறுத்தப்பட்டிருந்த அழிவில்லாத கம்மாலைகளின் முன் இருந்த வண்ணம் அவன் உருக்கிய லோகவஸ்துக்களைத், தனது இடது கையால் ஓர் இடுக்கியைக் கொண்டு தனது மனம் போலத் திருப்பிக்கொண்டும், தனது வலது கையில் ஏந்தியிருந்த ஒரு பிரம்மாண்டமான சக்தியினால் அந்த லோகங்களைத் தடதடவென்று நைய அடித்துக்கொண்டும் வந்தான். வில்லைப்போல் வளைந்து கவிந்துள்ள ஆகாயத்தில் அந்த அடிகள் எதிரொலியைக் கிளப்பின.

அவன் முதன் முதலாக பிரம்மாண்டமும் கெட்டியுமான ஒரு கவசத்தை உண்டாக்கினான். அதன் உடலில் விசித்திரமாக வெட்டப்பட்டிருந்த விதம் விதமான சித்திரங்கள் பளிச்சென்று பிரகாசித்தன. அதன் விளிம்பில் மூன்று மடிப்புக்களுள்ள ஒரு வளையமும் விளங்கியது. வட்டவடிவமான அந்தப் பெருங் கவசம் ஒரு வெள்ளிச் சங்கிலியில் மாட்டப்பட்டும் தாராளமான அதன் மார்பு ஐந்து சட்டங்கள் கொண்டு இணைக்கப்பட்டும் இருந்தது. அதன் முகப்பில் திவ்வியமான சித்திரவேலைகளும் செய்யப்பட்டிருந்தன.

அதிநிபுணனான அந்த விஸ்வகர்மாவின் மனப்பான்மையும் கற்பனா சக்தியும் அந்தக் கவசத்தில் தெற்றெனப் பளிச்செ விளங்கியது. அதில் அவன் பூமியையும் விண்ணுலகையும் சமுத்திரத்தையும் வரைந்திருந்தான். அலுப்புச் சலிப்பின்றி யுழைத்து வரும் ஆதித்தனையும், வட்டவடிவமான பூரணச் சந்திரனையும் அவ்வாறே அதில் வரைந்தான். அன்றியும் வானளாவி யுயர்ந்து கவிந்துள்ள கொட்டகையின் உச்சியில் ஜ்வலித்துக்கொண்டு வெளிச்சத்தைப் பொழிந்துவரும் விண்ணொளிகளையும் அவ்விடம் தோற்றுவித்தான். வடவானில் பளிச்சென்று மின்னிவரும் அறு

மீன் கூட்டமான கிருத்திகை நக்ஷத்திரத்தையும், இரஷபராசிக்கு அதிபதிகளான ஐந்து நக்ஷத்திரங்களையும், அவற்றினும் அதிக மான வெளிச்சத்துடன் விளங்கும் மிருக சீர்ஷ மஹா நக்ஷத்திரத் தையும் வரைந்தான்.

வாயுமண்டலத்தின் குறுக்கேயுள்ள விட்டத்தைச் சுற்றிக் கொண்டுவரும் துருவ நக்ஷத்திரமும் தன் பொன்போன்ற கண் களால் மேலே குறிப்பிட்ட நக்ஷத்திரங்களைக் கண் கொட்டாமல் உற்றுநோக்கிக்கொண்டு வருவதுபோல் அந்தச் சித்திரத்தில் வரை யப்பட்டிருந்தது.

துருவ நக்ஷத்திரமானது பரந்த ஆகாய வெளியில் உன்னத மான ஸ்தானத்தில் இருந்தவண்ணம் ஏற்றத் தாழ்ச்சியில்லாத வெளிச்சத்துடன் மின்னிவருது நாம் எல்லோரும் அறிந்த விஷயம். அது கொழுந்து விட்டுக்கொண்டு எரியும் தனது நெற்றியைக் கடலில் மூழ்கிக் கழுவுவதேயில்லை.

இம்மட்டோ! அந்தக் கவசத்தின்மேல் இரண்டு நகரங்கள் பளபளவென மின்னிக்கொண்டு விளங்கின. அவற்றில் ஒன்று சாந்தமுள்ளதாகவும், மற்றையது யுத்த சன்னத்தமுள்ளதாகவு விளங்கியது.

சாந்தம் சமிருத்தியாக விருந்த ஸ்தலத்தில் புனிதமான அலங்காரங்களும் மனதிற்கினிய விருந்துகளும் திவ்வியமான நடனங்களும் வதுவை மணச்சடங்குகளும் கண்டோர் மனத்தைக் களிப்பித்தன. அந் நகரத்தார் புதிதாக மணம் செய்விக்கப்பெற்ற மங்கைகளைத் தீவட்டி விளக்குக்களுடன் அவரவர்களுடைய மண வறைகளுக்கு அழைத்துச்சென்று கொண்டிருந்தனர். நடன சிகாமணிகளான இளைஞர்கள் மெதுவாய் ஊதிவந்த குழலுக்கும் தம்புராவின் வெள்ளிக் கம்பிகளிலிருந்து எழுந்த நாதத்திற்கும் இசைந்து ஆடல் பாடல்களுடன் அந் நகரை வட்டம் வட்ட மாகச் சூழ்ந்து வளைந்து வந்தனர். அந் நகரத்துப் பெரும்பெண் டிர்களெல்லாம் அதன் அழகான தெருக்களில் தங்கள் தங்கள் வீட்டுவாயில்களில் வரிசையாக நின்றுகொண்டு இந்தக் காட்சி களைக்கண்டு களித்து வந்தனர்.

மற்றைய நகரத்திலெனிலோ, அந்நகரவாஸிகள் அங்குள்ள நியாயஸ்தலத்தில் திரள் திரளாகக் கூடியிருந்தனர். அவ்வூரான் ஒருவன் கொலையுண்டதைச் சிலர் ஒரு மூலையில் நின்று தர்க்கித்து வந்தனர், மற்ருேரிடத்தில் ஒருவன் தான் கடனைத் தீர்த்து விட்ட தாகவும் மற்றையவன் கடன் தீரவில்லையென்றும் வாதாடிக் கொண்டு தங்களது வழக்கை மஹா ஜனங்கள் சட்டப்பிரகாரம் தீர்மானம் செய்ய வேண்டும் என்று முறையிட்டனர். இரு கட்சி யாரும் தத்தம் சாக்ஷிகளைக் கூட்டிக்கொண்டு நின்றனர். பொது ஜனங்களும் ஓரோர் கக்ஷியை ஆதரித்துக்கொண்டு நின்றனர்.

நியாயஸ்தலத்துக் காரியங்களை மேற்பார்வை பார்த்துவர நியமிக்கப்பட்டுள்ள கட்டியக்காரர்கள் அத்தலத்தில் கூச்சல்களை யும் சந்தடிகளையும் செய்து வந்த ஆட்களை அடக்கிக் கொண்டு கட்டியக் கோல்களை யேந்தியவர்களாய் அவர்களைச் சுற்றிவளைந்து கொண்டு ஒரு மோதிரம்போல் நின்று வந்தனர்.

இவ்வாறு அமைதியுடனும் வணக்கத்துடனும் விளங்கிய அந்தப் புனிதமான இடத்தில் கல்லினால் செதுக்கப்பட்டிருந்த ஆஸனங்களில் தருமநிதிகளான பெரியோர்கள் அமர்ந்திருந்து, சிரக்கம்பம் செய்துகொண்டு, வழக்குகளையும் வாக்குவாதங்களையும் கேட்டு வந்தனர். அவர்கள், ஒருவருக்குப் பின் ஒருவராக எழுந்து தங்களது அதிகாரச் சின்னமான செங்கோலை யெடுத்துக் கொண்டு மிகவும் கம்பீரமாக எழுந்து நின்று அந்தந்த வழக்கில் தாங்கள் செய்த தீர்மானத்தை யுரைத்தனர்.

அவர்களுக்கு முன்னால் எல்லோருக்கும் கட்புலனாகும் வண்ணம் இரண்டு பொற்குவைகள் வைக்கப்பட்டிருந்தன. வழக் குக்களை நீதிமுறையில் நியாயமாகத் தீர்த்தவருக்குப் பரிசாக அளிப் பதற்காக அவை நியமிக்கப்பட்டிருந்தன.

இவைகளுக்கு முற்றும் மாறான வேறொரு காட்சியும் அதில் தோற்றுவிக்கப்பட்டிருந்தது. தகதக வென்று பளிச்சென விளங்கும் ஆயுதங்களும் பயங்கரமான யுத்தமும் அதில் சித்திரிக்கப்பட்டிருந் தன. ஒரு பட்டணத்தைப் பிடித்துக் கொண்ட வெவ்வேறான இரண்டு பலமான சேனைகளில் ஒன்று அப்பட்டணத்தைக் கொள்ளையிடுவது போலும், மற்றையது அதனைத் தீயிட்டுக் கொளுத்துவது போலும் அதில் வரையப்பட்டிருந்தது.

இவ்வாறு சத்துரு சைனியங்கள் அந்நகரைக் கொள்ளை கொண்டும் நெருப்புக் கிரையாக்கிக் கொண்டும் வருகையில் அந் நகர வாஸிகள் அதி ஜாக்கிரதையுடனும் சந்தடியின்றியும் தங்க ளுடைய ஆயுதங்களை அணிந்து கொண்டு சத்துருக்களைப் பிடிப்ப தற்கான கண்ணிகளை வைத்து வந்தனர்.

அப்பொழுது அவர்களுடைய மனைவிகளும், மக்களும், தள்ளாமையினாலும் வயோதிகத்தினாலும் மெலிந்திருந்த அவர்களு டைய பெற்றோரும் அவர்களையே கண்கொட்டாமல் உற்றுப் பார்த்துக் கொண்டு தத்தம் கோபுரங்களில் நின்று வந்தனர்.

பாலாஸ் தேவியும் மார்ஸ் தேவரும் தங்களுக்குச் செய்த உதவியினால் தைரியங் கொண்ட அந்நகரத்தார் முன் செல்லுகின் றனர். அந்தத் தெய்வங்களே அவர்களை நடத்திக் கொண்டு முன் சென்றனர். அவர்களுடைய உருவங்களும் பளிச்சென விளங்கும் அவர்களுடைய ஆடைகளும் ஸ்வர்ணத்தினாலேயே ஆக்கப்பட் டிருந்தன. அந்தத் தெய்வங்கள் அனைவருக்கும் மேலான கண்ணி யமும் தெய்வத் தன்மையும் பொருந்தியவையாகவே விளங்கின.

கண்ணி வைப்பதற்குத் தகுதியான ஓர் இடத்தைக் கண்டு பிடித்த பின் அந்நகரத்தார் தங்களுடைய கவசங்களைப் போர்த்துக் கொண்டு வெள்ளியைப் போல் மின்னும் ஓர் ஆற்றங் கரையில் நின்றிருந்தனர். அதினின்றும் நெடுந்தூரத்தில் இரண்டு ஒற்றர் களும் ஒளிந்து பதுங்கிக் கொண்டிருந்தனர். தாங்கள் பதுங்கி யிருந்த இடத்திலிருந்த வண்ணம் அவர்கள் ஆடுகளோ மாடு களோ அந்த ஆற்றங் கரைக்கு நீரருந்த வருகின்றனவா என்றும் கவனித்து வந்தனர்.

அடுத்தாற்போல் அதிசீக்கிரமாக வெண்மயிர் போர்த்த ஆட்டுமந்தைகள் அந்த மைதானங்களின் குறுக்காகச் சென் றன. ஆண் சிங்கம் போன்ற இளங்காளைகளும் அவற்றின்பின் அதி கம்பீரமாக மெதுவாக நகர்ந்து சென்றன. இரண்டு இடையர் களும் அவைகளுக்குப் பின் சென்றனர். கண்ணிகட்கு அஞ்சாத வரும் கரவிலா நெஞ்சத்தவரும் தமக்குக் கட்புலனுயிரேரைச் சங்கிக்காதவருமான அவ்விடையர்கள் தங்கள் குழல்களை ஊதிக்கொண்டு அக் கன்றுகாலிகளின் பின்னால் சென்றனர்.

ஒளிவீசும் ஆயுதங்களை அணிந்து வந்த சேனு சமூகங்கள் மற்றோரிடத்தில் திடீரென வெழுந்து தங்களுடைய வாத்தியங்களை ஊதினர். வீரர்கள் மடிந்து விழுந்தனர். அவர்களது உடல்கள் பூமியின் மேல் மலைபோல் குவிந்தன. ஆட்டு மந்தைகளும் மாட் டுக் கூட்டங்களும் ஒரேயடியாய் இரத்தத்தை வடித்துக் கொண்டு அந்த மைதானங்களில் கிடந்தன. அவற்றின் மத்தியில் இடையர் களும் மந்தை காப்போரும் அவ்வாறே மடிந்து கிடந்தனர்.

அப்பொழுது எருதுகள் இரைந்து உக்காரம் போட்டன. அந்த உக்காரத்தைக் கேட்டவுடன் அந்நகரத்தை வளைந்து முற்றுகை போட்டு வந்த சத்துருக்கள் தங்களது இடம் விட்டுச் சட்டென எழுந்து தங்களுடைய குதிரைகளின்மீது ஏறிக்கொண்டு முன் சென்று, யுத்தத்தில் கலந்து தீவிரமாகப் பொருதும் பட்டும் விழுந்தனர்.

உருக்கி வார்த்த வெள்ளிக் குழம்பைப்போல், வழிந்து சென்ற நதியின் ஓரத்தில் அவர்கள் உடல்கள் மலைபோல் குவிந் தன. அந்நதியில் அலைகளுடன் மோதிக் கொண்டிருந்த வெண் ணிறமான நீரில் அவ்வீரர்கள் வடித்த இரத்தத் துளிகள் விழுந்த பொழுது, அந்த நீரும், தான் அழுக்கடைந்து அசுசியானதை யறிந்து நாணித் தலை குனிந்தது.

அப்போது அங்கு ஓரிடத்தில் அமளியும் மற்றோரிடத்தில் சண்டை சச்சரவும் மலிந்து கிடந்தன. சிறை பிடிக்கப்பட்ட ஒரு வீரனை நோக்கி அவனைப் பிடித்தவன் ஒரு வாளை ஓங்கிக்கொண்டு நின்றான். புதிதாகக் காயமேற்று இரத்தம் வடித்து வந்த ஒரு வீரனை அவனது சத்துரு உயிருடன் பிடித்துக் கொண்டிருந்தான்.

வேறு ஒருவன் உயிரை நீத்த ஒரு சத்துருவின் உடலைத் தரதர வென்று இழுத்துக் கொண்டிருந்தான். இங்கும் அங்கும் வேறிடங் களிலிருந்த சில வீரர்கள் தங்களது கைக்கு அகப்பட்ட பிணங்களை வெட்டிக் கிழித்துக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு ஊழ்வினையானது அந்தக் களத்தில் தனது அதி காரத்தைச் செலுத்திக் கொண்டு தாண்டவமாடி வந்தது. மனி தரது இரத்தம் வெள்ளமாகப் பெருகியது. அந்தக் காட்சி அதி பயங்கரமாக விருந்தது. இவ்வாறு அந்த யுத்தம் முழுவதுமே அந்தச் சித்திரத்தில் விசிதமாக விளக்கப்பட்டிருந்தது. அது பளிச்செனக் கட்புலனுயிற்று. அந்தச் சித்திரத்தில் வரைந்திருந்த வீரன் ஒவ்வொருவனது உருவமும் எடுப்பாகயிருந்தது மன்றி, அவனது நிலையையும் காட்டி நின்றது. ஒவ்வோர் உருவமும் உயிருடனே அல்லது பிணக் கோலங் கொண்டோ விளங்கியது.

அதன்பின் அந்தத் தேவசிற்பி அந்தக் கவசத்தில் ஆழமாக உழுத ஒரு வயலையும் வரைந்தான். நெற்றித் தண்ணீரை நிலத் தில் வடித்து உழைத்து வரும் உழவன் மூன்று தரம் திரும்பத் திரும்ப உழைத்து உழுது செப்பனிட்ட நிலம்போல் அவ்வயல் விளங்கியது. திரளான உழவர்கள் பளிச்சென மின்னும் கொழுக் களைப் பிடித்துக் கொண்டு வளைவான நுகத்தடிகளைத் திருப்பி வந்தனர்.

அந்த வயலின் ஒருபுறமிருந்து மறுபுறம் வரை அவர்கள் உழுதுகொண்டு திரும்பி வருகையில், அவர்களது முதலாளி தனது குடத்தில் தண்ணீரை நிறைத்துக் கொண்டு வந்து இடைவிடாமல் அவர்களைச் சந்தித்து அவர்களது தாகத்தைத் தணித்து வருகின் ருன். அந்த ருசியான நீரையருந்தியபின் அவர்கள் பின்னும் தங்க ளது கருமமே கண்ணுகைச் செல்கின்றனர். கலப்பைகள் மறுபடியும் திரும்பிச் சென்று நிலத்தைப் பிளக்கின்றன. அவற்றின் பின்பக்கத் தில் நிலமானது வரிசை வரிசையாக உருண்டு உருண்டு உயர்ந்து வருகின்றது. அந்தச் சித்திரம் உருக்கி வார்த்த பொன்னின்மேல் வரையப் பட்டிருந்தது. எனினும் கறுப்பாகவே விளங்கியது.

அந்தக் கவசத்தின் மற்ருெரு பாகத்தில் நன்ருய் விளைந்த தானியத்தின் பாரந்தாங்காமல் அசைந்தாடிக் கொண்டிருந்த ஓர் உயர்ந்த வயலும் வரையப்பட்டிருந்தது. திரளான அறுப்புக்காரர் கள் அரிவாளும் கையுமாய்க் குனிந்துகொண்டு அங்கு வரிசையாக நின்று வருவதும் கட்புலனுயிற்று. மேடுபள்ள மின்றிச் சமமாக்கப் பட்ட வயல்கள் ஒருபுறம் நெடுந்தூரம் வரை வரிசை வரிசையாகக் கன்னங் கரேலென விளங்கின. அவ்விடத்தில் அரிக்கட்டுகள் ஒன்றின்மே லொன்ருகக் குவிந்து கிடந்தன. அறுப்புக்காரர்கள் தானியங்களைச் சரசரவென்று அந்த நாடெங்கும் குவித்து வருகின் றனர். அவர்களுக்குப் பின் தானியம் கொய்வோர் வந்து கதிர் களைத் திரட்டிக் கட்டுக்களாக அடுக்குகின்றனர். கடைசியாகச் சிறு குழந்தைகளும் வருகின்றனர். கதிர்களின் கட்டுக்கள் அவர்

களின் கைகளில் அடங்காவாதலால் அவர்கள் விடுதியான கதிர்களையே யேந்தி நிற்கின்றனர்.

வயல்களுக்கு உடையவனும் நாட்டுப் புறத்தானுமான வேளாண்மைக்காரன் இவையனைத்தையும் கண்டுகளித்து உளம் மகிழ்கின்றான். அவனைச் சுற்றிலும் பின்னும் தானியங்கள் மலைகள் போல் குவிகின்றன. அடர்ந்தும் படர்ந்தும் வளர்ந்துள்ள ஓர் ஓக்கு மரத்தின் விசாலமான நிழலில் புற்றரையின் மேல் ஒரு விருந்தும் ஏற்பாடு செய்யப்பட்டு அவ்விடம் போஜன பதார்த்தங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. விருந்துச் சமையலுக்கு வேண்டிய கொழுத்த காளைகளை இளைஞர்கள் வெட்டிக் கொன்று நறுக்குகின்றனர். அவற்றைப் பெண்மணிகள் சமைத்துப் பக்குவப் படுத்துகின்றனர். அறுப்புக்காரர்கள் அவற்றை வயிறுற அருந்திக் களைதீர்த்துக் கொள்ளுகின்றனர்.

அதற்கு அடுத்தபடியாகப் பொன்போன்ற மஞ்சள் நிறங் கொண்ட ஒரு திராக்ஷைப் பந்தலும் விளங்கியது. பழங்கள் நன்ருய்ப் பழுத்திருந்தன. பழங்களின் பாரத்தைத் தாங்க முடியாமல் கொடிகளெல்லாம் தலை வணங்கிக் குனிந்து கொண்டிருந்தன. செக்கச் சிவக்கப் பழுத்துக் கொத்துக் கொத்தாகத் தொங்கி வந்த பழங்களெல்லாம், வெள்ளிபோல் மின்னிய பந்தற்கால்களின்மேல் சுருண்டு கொண்டு அதிரமணீயமாக மின்னுகின்றன. அந்தப் பிரதேசம் முழுவதையும் சுற்றி ஓர் இருப்பு வேலியும் கட்டப்பட்டிருந்தது. அந்த வேலியின் உட்பிரதேசத்தில் பளபளவென மின்னும் தகரச் சட்டங்களும் அப்பந்தல்களுக்கு அணிகலங்களாக வைக்கப்பட்டிருந்தன.

இந்தப் பந்தலுக்குள் செல்வதற்காக வளைவுகளுள்ள ஒரு மெதுவான பாதைபோடப்பட்டிருந்தது. அவ்வழியே எழில்வாய்ந்த கட்டழகிகளும் இளங்காளைகளும் வருஷா வருஷம் அறுவடைக் காலத்தில், தாங்கள் பறித்த செங்கனிகளைத் தங்களுடைய தலைகளின்மேல் கூடைகளில் வைத்துக் கொண்டு வரிசை வரிசையாக உல்லாசமாகச் செல்வதும் பொறிக்கப் பட்டிருந்தது.

இவ்வாறு இளைஞர்கள் செல்லுகையில் அவர்களுக்குக் களிப்பு உண்டாகும்படிக் கம்பிகள் கட்டிய ஓர் இசைக் கருவியை ஒருவன் மீட்டிவந்தான். அந்த இசைக் கருவி லீனஸ்ஸின் துக்கத்தைத் தாழ்ந்த குரலில் மனமுருகப் பாடுகின்றது. இவ்வாறு அவ்விளஞ் சிறுவன் கானஞ் செய்து கொண்டு முன் செல்ல மற்றைச் சிறுவர்களும் செல்விகளும் மெல்லியகுரலில் அவனுக்கு இசைபாடிக் கொண்டும் இசைக்கருவியின் ஸ்வரத்திற்கும் இராகத்திற்கும் தக்கபடி நிதானமாகவும் துரிதமாகவும் முறைப்படி நடனங்கள் செய்து கொண்டும் அவனைப் பின் தொடருகின்றனர்.

பின்னும் ஓர் இடத்தில் காளைகள் தலையை நிமிர்த்திக் கொண்டு கம்பீரமாகத் துடுக்குடன் கூட்டமாக முன் செல்லு

கின்றன. அவை தங்கள் உயர்ந்த கொம்புகளை உயர்த்திக் கொண்டு உறுமுகின்றன. அவை வரையப்பட்டுள்ள பொன்னும் உறுமுவதுபோல் தோன்றுகின்றது. அவ்வாறு உறுமிக்கொண்டு அவை தங்களுடைய மேய்ச்சல் நிலங்களுக்குத் தடதடவென்று விரைந்து ஓடுகின்றன.

அந்த மைதானங்களின் ஓரங்களில் உள்ள நாணல்களின் வழியாக வேகமாக ஓடும் வெள்ளமும் செவிடு படும்படி முழங் கிக் கொண்டு ஓடுகின்றது.

பொன்னாலுண்டாக்கப்பட்ட நான்கு இடையர்கள் அவற் றைக் காவல் காத்துக் கொண்டு நிற்கின்றனர். கடுத்த முகத்துடன் விளங்கிய ஒன்பது நாய்களும் அந்தக் கூட்டத்தில் இருந்தன. இவ்வாறு நிர்மாணமாகி யிருந்த அந்த மந்தையின் மேல் அதன் அருகிலிருந்த ஒரு காட்டிலிருந்து இரண்டு சிங்கங்கள் தட தடவென்று ஓடிவந்து பாய்ந்து அந்தக் காளைகளுக்குத் தலைமை வகித்திருந்த ஒரு பெருங் காளையைப் பிடிக்கின்றன. அந்தக் காளை உரத்துக் கூவுகின்றது. நாய்களும் இடையர்களும் அச்சிங்கங் களைத் தடுக்க முயல்கின்றனர். அவர்களது முயற்சிகள் பயனற்றுப் போகின்றன.

அச்சிங்கங்கள் அக்காளையை அடித்துக் கொன்று அதன் கறுத்த இரத்தத்தையும் குடிக்கின்றன. அச்சிங்கங்களைத் தாக்கிச் செல்லுமாறு இடையர்கள் தங்களுடைய நாய்களை மிகுந்த உற் சாகத்துடன் பன்முறையும் ஏவித் துரத்துகின்றனர். ஆனால் அவை முன்செல்ல மனமில்லாதவனவாய்ப் பின்னிடைந்து தங்க ளுக்குக் கிடைக்கக் கூடிய தீனியையும் துறந்து விட்டுச் சிங்கங் களால் தங்களுக்கு நேரிடக் கூடிய கோரமான ஆபத்துகளுக்கு அஞ்சித் தூரமாக ஓடிச் சென்று அங்கு நின்ற வண்ணம் குரைக் கின்றன.

இதன்பின் வல்க்கன் வரைந்துள்ள அதி ரமணீயமும் அடர்த்தியுமான வனங்களை நம்முடைய கண்கள் நாடிச் செல்லு கின்றன. அவனது கைத்திறன் அதிவிசேஷமானது. அங்கு வனங் கள் மாத்திரமன்றி நீண்ட புற்றரைகளும், மாட்டுத் தொழுவங் களும் ஆட்டுப்பட்டிகளும், அவற்றின் இடையில் அங்கு மிங்கும் சிறுகுடிசைகளும் காணக் கிடக்கின்றன. வெண்மயிர் போர்த்த ஆடுகளும் அங்கு உண்டு. அந்தக் காட்சி முழுவதும் அந்த ஆடு களின் நிறத்ததாகவே விளங்குகின்றது.

இந்தக் காட்சிக்குப் பின் ஒரு நடனத்தின் சித்திரமும் அங்குக் காணப்படுகின்றது. இத்தகைய சித்திரமானது முன் னாளில் ஒருக்கால் ஒரு கிரீடன் அரசியின் உவகைக்காக உன்னத மான நாஸ்ஸஸ்ஸில் டிடாலியச் சிற்பிகளால் செய்யப்பட்டி ருந்ததை நாம் கண்டிருக்கின்றோம். அந்தச் சித்திரத்தில், எழில் வாய்ந்த இளஞ் செல்வர்களும் செல்விகளும் கைகோத்துக்

கொண்டு கூட்டங் கூட்டமாகக் கூடி நடித்து வந்தனர். அங்கு விளங்கிய கன்னிகைகளெல்லாம் இலேசான நூலினுல் உண்டாக்கப்பட்ட உள்ளாடைகள் அணிந்திருந்தனர். ஆடவர்களும் மழமழப்பான அங்கிகளையணிந்து கொண்டு இருபாலாரும் அதி ஸௌந்தரியமாக விளங்கினர். பெண்டிர்களுடைய கூந்தல்களில் புஷ்ப மாலைகள் இணைத்துப் பின்னப் பட்டிருந்தன. ஆடவர்கள் அணிந்திருந்த வெள்ளிக்கச்சைகளினின்றும் தொங்கிக் கொண்டிருந்த தகதகவென்று மின்னும் பொன்னுலான உடைவாள்கள் அவர்கள் இருமருங்குகளிலும் ஆபரணங்களாக விளங்கின.

நாட்டியம் நன்ருகப் பயின்ற அவர்கள் ஒரேயடியாய் ஒரு கணம் தங்களது இடம் விட்டுப் பெயர்வார்கள். மறுகணம் குனிவார்கள். தங்களுடைய தேகங்களைப் பலவிதமாக வளைப்பார்கள். ஒழுங்காக மாறிமாறிப் பரிமாறுவார்கள். கண்டோர் திகைத்துப் பிரமிக்கும்படிப் பின்னல்போல் ஊர்ந்து நகர்வார்கள். இமைப் பொழுதில் கட்புலனுகும் முன் அதிவேகமாகத் தடதடவென்று முன் வருவார்கள். பின்பு ஒரேயடியாய் எட்டிப் பாய்ந்து பரபரப்புடன் அந்த வளைவான அரங்கத்தில் கலந்து கொண்டு விடுவார்கள்.

அப்பொழுது அவர்களை அடையாளங்கள் கொண்டு அறிவதும் அரிதாகிவிடும். கரகரவென்று சுழலும் ஒரு சக்கரத்தைப் போலவே அவர்கள் சுற்றி வருவார்கள். அந்தச் சக்கரம் வேகமாகச் சுழலுகையில் எவ்வாறு அதன் சகடக்கால்கள் கட்புலனுவதில்லையோ அவ்வாறே அவர்களும் சக்கரம் வளையம்போல் சுழன்று வருகையில் கட்புலனுவதில்லை. அவர்களைச் சுற்றிக் கொண்டு நிற்கும் திரளான ஜனங்கள் அவர்களைக் கண்ணுற்று அதிசயித்துப் பிரமித்துப் பரவசமாகி நிற்கின்றனர்.

அவர்களின் மத்தியில் சுறுசுறுப்புள்ள இரண்டு மல்லர்கள், கழைக்கூத்தாடிகள் துள்ளிக் குதிக்கின்றனர். அவர்கள் மேலும் கீழுமாகத் துள்ளியும் குதித்தும் தங்களுடைய இளக்கமான அவயவங்களை வளைக்கின்றனர்.

இவ்வாறு வேடிக்கை விநோதங்கள் நிறைந்த இந்த விளையாட்டுகளெல்லாம் ஆனபின் அவர்கள் எல்லோரும் ஒன்ருய்ச் சேர்ந்து ஒரு பல்லவி பாடுகின்றனர். கூட்டமும் கலைந்து விடுகின்றது.

இவ்வாறு அந்த அகன்ற கவசத்தை வார்த்து முடித்தபின். அந்தச் சிற்பி கடைசியாக அதைச் சுற்றிலும் ஒரு சமுத்திரத்தையும் உண்டாக்கினுன். அந்தச் சமுத்திரத்தில் அடித்த அலைகளெல்லாம் உருக்கி வார்த்து ஓடும் வெள்ளியைப்போல் அந்தக் கவசத்தின் விளிம்பில் ஒரு வேலியைப்போல் வளைந்து மோதி வந்தன.

இவ்வாறு இந்தக் கவசத்தை வார்த்தபின் அந்தத்தேவன் ஒரு வீரனுக்கு வேண்டிய மற்றைய வஸ்துக்களையும் உண்டாக்கினான். தணல்களினும் மேலாகச்சிறந்து பிரகாசிக்கும் இரும்பினால் ஒரு மார்க்கவசத்தையும், எளிதில் அடித்து நீட்டக் கூடிய தகரத்தினால் கால்களுக்கு வேண்டிய ரக்ஷைகளையும், பற்பல சித்திரவேலைப் பாடுகளமைந்த ஒரு மகுடத்தையும், கடைசியாக ஒரு பொற் கொண்டையையும் அவன் உண்டாக்கினான்.

இவ்வாறு செய்து முடித்த இந்த வஸ்துக்களை அவன் தெட்டிஸ் தேவியின் முன்னால் அவளுக்குப் பாதகாணிக்கையாக வைத்தவளவில், அந்தத் தேவி காந்தியுடன் விளங்கும் அந்தத் திவ்யமான பொருள்களை யெடுத்துக் கொண்டு, ஆகாய வீதியைப் பிளந்து பறந்து செல்லும் ஒரு ராஜாளியைப் போல் ஒலிம்பஸ் பனி வரையின் சிகரத்திலிருந்து வானமார்க்கமாக ஓட்டமாய்ப் பறந்து சென்று விட்டனள்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்

# அகிலேசனும் ஆகமனனும் சமாதானம் செய்து கொள்ளுதல்

கதைச் சுருக்கம் :— வல்க்கன் செய்த கவசத்தைத் தெட்டிஸ் தேவியானவள் தனது மகனிடம் கொணர்ந்து கொடுக்கின்ருள்.

தனது மகனது மித்திரனுடைய தேகம் அழுகிப் போகாமல் காப்பாற்றுகின்ருள். பின்பு சைனியங்களை ஒன்ருய்த் திரட்டித் தனது பகை ஒழிந்து விட்டது என்று சொல்லுமாறு தனது மகனுக்குப் போதிக்கின்ருள்.

ஆகமனனும் அகிலேசனும் தங்கள் பகை ஒழிந்து விட்டதாகப் பகிரங்கமாக உரைக்கின்றனர். அவ்வமயம் சொற்பொழிவுகளும் பரிசுகளின் பரிமாற்றமும் வேறு சடங்குகளும் நடைபெறுகின்றன.

யுத்தத்தைத் தொடங்கிவிட வேண்டுமென்று அகிலேசன் துடிக்கின்ருன். சேனைகள் இளைப்பாறிய பின்னரே யுத்தத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று யுலிஸ்ஸீஸ் செய்த யோசனையைத் தடுக்க முடியாமல் அதற்கு அகிலேசன் இணங்குகின்ருன்.

பரிசுகளெல்லாம் அகிலேசனது கூடாரத்துக்குக் கொண்டு செல்லப்படுகின்றன. அங்கு பத்திரகலுஷனுடைய பிரேதத்தைக் கண்ணுற்ற பிரைஸீஸ் என்பவள் அதன் மேல் விழுந்து புலம்புகின்றனள்.

அகிலேசனும் தனது நண்பனைக் குறித்துப் புலம்புகின்ருன். அன்னபானுதிகளை அருந்தவே மாட்டேன் என்று ஒரேயடியாய்ப் பிடிவாதஞ் செய்கின்ருன்! அச்சமயம் ஜூப்பிட்டர் பகவானது ஆணையை மேற்கொண்டு மினர்வா தேவியானவள் ஒலிம்பஸ் மலையினின்றும் இறங்கி வந்து அவனுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றுகின்ருள்.

அவன் தன்னுடைய ஆயுதங்களை அணிந்துகொள்ளுகின்ருன். அவனது தோற்றம் வருணிக்கப்படுகின்றது.

அவன் தன்னுடைய குதிரைகளை நோக்கித் தனது நண்பனுகிய பத்திரகலுஷனுக்கு நேர்ந்த மரணத்துக்கு அவையே காரணமென்று அவற்றைக் கடிந்து பேசுகின்ருன். அப்போது அக் குதிரைகளுள் ஒன்றுக்கு மனிதரைப் போல் பேசுந் திறமை

உண்டாகின்றது. அதி அற்புதமான திறமையுடன் விளங்கிய அக் குதிரை ஆவேசங் கொண்டு, அவனுக்கு வரவிருக்கும் கதியை உரைக்கின்றது.

அகிலேசன் அந்த அதிசயமான அபசகுனத்தைக் கண்டு மனங்கலங்காமல் ஆத்திரத்துடன் யுத்தம் செய்யச் சரேலென்று முன் செல்லுகின்ருன்.

முப்பதாம் நாளின் நிகழ்ச்சிகள் இவ்வத்தியாயத்தில் சொல் லப்படுகின்றன. இவை கடற் கரையில் நிகழ்கின்றன.

---

உலகைக் கவர்ந்துள்ள இருளைப்போக்கி வெளிச்சத்தைத் தரவேண்டும், மர்த்தியர்களுக்குப் பகலவனைப் புதிதாகப் பிரசன்ன மாக்க வேண்டும், அவர்களைக் களிப்பிக்க வேண்டும், தேவ லோகம் முழுவதும் பொன் போன்ற சோபையுடன் விளங்குமாறு ஜ்வலிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இளஞ் சிவப்பேறிய நிறமும் நாணமுங் கொண்ட அரோரா தேவியானவள் அலை களின் மேல் தனது செஞ்சென்னியை உயரக் கிளப்பிக் கொண்டு எழுந்து வந்தாள்.

அக்கணமே தேவியுந் தாயுமான தெட்டீஸ் தேவி வல்க்கனிட மிருந்து, தான் பெற்ற அழிவில்லாத திவ்யமான அமர ருடைய கவசங்களையும் ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு தனது மகனிடம் விரைந்து சென்ருள். அப்போது அவளது மகன் பத்திரகலுஷனது பாடையின் மேல் நீண்டு படுத்துக் கொண்டு கண்ணீர்விட்டு அழுது கொண்டிருந்தான். அவனை யொழிந்த மற்றைய வீரர்களெல்லாம் பத்திரகலுஷனது மரணத்திஞல் உண்டாய்விட்ட பெருந்துக்கங்களை நினைத்து நினைத்து தனித் தனியாகத் துக்கித்துக் கொண்டு நின்றனர்.

தெட்டிஸ் தேவியானவள் அவ்விடம் பிரஸன்னமான பொழுது அந்தப் பிரதேசம் முழுவதும் அதி திவ்யமான ஒரு சோபையுடன் விளங்கியது. அந்தத் தேவி தனது மகனது கையை மெதுவாகப் பிடித்துக் கொண்டு அவனை நோக்கிப் பின் வரும் வசனங்களை உரைத்தாள் :—

“ என் மகனே ! இந்தப் பெரும் துக்கத்தை அடக்கு. இவ் வாறு நீ மனம் தளர வேண்டாம். இந்தக் கேடு மனிதர்களால் உண்டாகவில்லை. தேவர்களே இந்தக் கேட்டை உண்டாக்கி விட்டனர். இது நீ நன்ருக அறியத் தக்கது.

இதோ பார் ! நான் கொண்டு வந்திருக்கும் ஆயுதங்களைப் பார் ! வல்க்கனே இவற்றைச் செய்து உனக்கு அளித்திருக்கின் ருன், இவற்றிற்கு நிகரும் உண்டோ ? இவை உனக்கு ஏற்ற ஆயு தங்கள்தான் என்பதில் ஐயமில்லை, தேவர்களும் இவைகளை

யேந்தித் தங்களை அலங்கரித்துக் கொள்ள விரும்புவார்கள்" என்றாள்.

இந்த வசனங்களைச் சொல்லிக் கொண்டே அந்தத் தேவி யானவள், தான் சுமந்து வந்த அந்தத் திவ்யமான மூட்டையைத் தரையின் மீது தொப்பெனப் போட்டாள். அந்த மூட்டை விழுந்த பொழுது அதனுட் சேர்த்து வைக்கப்பட்டிருந்த ஆயுதங்கள் கல கலவென ஒலித்தன. அந்த விடத்தைச் சுற்றி யிருந்த சமுத்திரக் கரைகளினின்றும் கூட கணீர்—கணீர் என்ற ஓசை எழுந்தது. அப்போது அங்கு கூடியிருந்த மிர்மிடோனியர்கள் திடுக்கிட்டுப் பயந்து பின்னிடைந்து, பளிச் சென்று விளங்கிய அந்த அகன்ற கேடயத்தினின்றும் தங்கள் கண்களைத் திருப்பினர்.

ஆனால் வீரனான அகிலேசன் மாத்திரம், சிறிதும் அசையாமல் உறுதியாக நின்று கொண்டு அந்தக் காட்சியைக் கண்ணுற்று உற்சாகங் கொண்டான். அவனது மார்பு பொங்கி யெழுந்தது. அவனுக்கு அதி தீவிரமான ஆற்றல் உண்டாயிற்று. அவன் ஒரு தேவனைப் போல் ஆவேசத்துடன் கொதித்தான். பயங்கரமான அவனுடைய கண் விழிகளினின்றும் தீப் பொறிகள் பறந்தன. அத்தீப்பொறிகள் இடை விடாமற் பெருகி வரும் ஓர் ஆற்றைப் போல் பளிச்சுப் பளிச்சென மின்னின.

தனக்குக் கிடைத்த திவ்யமான பிரஸாதத்தை அவன் இப்புறமும் அப்புறமும் திருப்பித் திருப்பி பார்த்தான். அழிவில்லாத வனான தெய்வத் தச்சன் தனக்குச் செய்து கொடுத்த அந்தக் கவசத்தின் அமைப்பையும் வனப்பையும் பார்த்துப் பார்த்து அவன் மனமாறக் களித்தான்.

"தேவீ! இணையற்ற வனப்புடன் பளிச்சென விளங்கும் இந்த திவ்யமான ஆயுதங்களைத் தெய்வத் தச்சனன்றி வேறு யாரே செய்ய வல்லார்? அவரே இதைச் செய்தார் என்பது சொல்லா மலே விளங்கும். இனி இந்த இரணகளத்துக்குச் செல்ல எனக்கு விடைதாரும்.

உயிர்நீத்த எனது நண்பனது உடலை நினைக்குந்தோறும் எனது மனம் பதைக்கின்றது! ஐயோ நான் என்ன செய்வேன்! அவனது உயிரானது அவன் ஏற்ற பெருத்த காயங்கள் வழியாக வன்றோ பறந்து போய் விட்டது! அவற்றை ஈக்களும், துர்நாற்றம் வீசும் புழுக்களும் மொய்த்துக் கெடுத்து விடுமே" என்றான்.

இந்தவசனங்களைக்கேட்டு நீலாயதாக்ஷியான அந்தத் தேவி தன் மகனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தாள் :—

"என் மகனே! உனக்கு அந்தக் கவலை வேண்டாம். அதை அறவே அகற்றி விடு. இறந்து பட்ட உனது நண்பனது உடலை ஒருவரேனும் தீண்டமாட்டார்கள். வருஷக்கணக்காக

அது அழிவின்றியே இருக்கும் ; உயிருடன் இருக்கையில் இருந்த வண்ணமே அது பொலிவுடன் இருந்து வரும். இனி நீ மேலே நடக்க வேண்டிய காரியங்கள் இருப்பதனுல் அவற்றைக் கவனிப்பாயாக.

உன்னைப் போன்ற அந்தஸ்துள்ள கிரேக்கர்களின் முன் சென்று நீ உனது சினத்தை ஆற்றிக் கொண்டு, இந்த அளவு கடந்த பிரம்மாண்டமான யுத்தத்தில் இறங்கி, இதனைத் தங்கு தடையின்றி நடத்துவாயாக. உனக்கு வேண்டிய ஆற்றல்களையும் சக்திகளையும் தேவர்கள் உனக்கு வரையாது கொடுத்தருளு வார்கள் " என்றுள்.

அதன் பின் அந்தத் தேவியானவள் அந்த வீரனது பிணத்தின் நாசித் துவாரங்களில் அமிர்தத் துளிகளைப் பிழிந்து, அப்பிணத்தின் மேலெல்லாம் கெட்டியான அதே அமிர்தத்தைத் தாராளமாகவும் பொழிந்தாள். அக்கணமே அப்பிணத்தை மொய்த்து வந்த ஈக்கள் அதனை விட்டு அகன்று ஓட்டம் எடுத்து விட்டன. அத்துடன் அந்தப் பிணத்தை ஒருவரும் தீண்டவு மில்லை. அது அழுகாமலும் இருந்து வந்தது.

தேவியின் ஆணைப்படி அகிலேசனும் கடற்கரைக்குச் சென்றுன். அப்போது அவன் செய்த கோஷத்தை அனுசரித்து அந்தக் கடற்கரைகளும் எதிரொலிகளைக் கிளப்பின. யுத்த வீரர்கள் அவனது குரலைக் கேட்டனர். கப்பல்களில் காரியங்களைக் கவனித்து வந்த வேலைக்காரர்களும், அக் கப்பல்களைக் கடலில் ஓட்டிச் செல்லும் மாலுமிகளும் தங்களுக்கு நன்ருகத் தெரிந்திருந்த அவனது குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு, அதிசயித்து எழுந்து வந்து ஒரே திரளாக நெருங்கிக் கூடினர். யுத்தகளத்தில் சத்துருக்களை நடுங்கும்படி செய்பவனும், இந்த நாள்வரை வெகு காலமாக யுத்தத்திலிருந்து விலகியிருந்தவனும் ஆகிய அந்த வீரன் ஆயுதங் களுடன் பளிச் சென்று விளங்குவதைக் காண வேண்டு மென்ற ஆவலுடன் அவர்கள் முன் வந்தனர். அங்கு ஒரே பெருத்த கூட்டம் கூடி விட்டது.

திடிதீசனும், யுலிஸ்ஸீஸும் முதன் முதலாக அவ்வாறு முன் வந்தனர். தங்களுக்கு உண்டாயிருந்த காயங்களினுல் நன்ருக நடக்க முடியாமல் நொண்டிக் கொண்டும், தங்களுடைய ஈட்டிகளின் மேல் சாய்ந்து கொண்டும் வந்து, அவர்கள் அப்பொழுது தங்களுக்கென்று அந்தச் சபையில் வைக்கப்பட் டிருந்த ஆசனங்களில் அமர்ந்தனர்.

கடைசியாக மனிதர்க்கரசனுன அதிரிதீசனும் வந்தான். அஜினுரின் புத்திரனுல் அவனும் பலமாகக் காயப்பட்டிருந்தான்.

இவ்வாறு கூட்டப்பட்ட சபையின் நடுவில் அகிலேசன் எழுந்து நின்று பின்வரும் வசனங்களை உரைத்தான் :—

"அரசே! காமவெறி கொண்டு நாமிருவரும் கருவிழிகள் கொண்ட ஒரு கன்னிகையை முன்னிட்டுத் தீராப் பகை கொண் டோம். ஒருவரோடு ஒருவர் முரண்பட்டு மூர்க்கமாகச் சண்டையும் செய்தோம். அந்தச் சண்டை முற்றுவதன் முன் அதைத் தயான் தேவியானவள் தடுத்திருந்தால் அது எவ்வளவோ நன்ருயிருந் திருக்கும்.

அந்தத் தேவி தனது அம்பை விடுத்திருக்கலாகாதா? அவ் வாறு விடுத்திருந்தால் நம்முடைய அல்லல்கள் எல்லாம் ஆரம்பத் திலேயே அழிந்து போயிருக்கு மன்ருே? அவை மேன் மேலும் விருத்தி அடைந்து வெளிப்படையாகப் பளிச்சென விளங்காமலும் அழிந்து போயிருக்கும்; காரியம் அவ்வாறு நிகழ்ந்திருந்தால் இப் பொழுது உனது நிலைமையும் எனது நிலைமையும் கிரேக்க சமூகத்தைச் சேர்ந்த அனைவரது நிலைமையும் மிகவும் மேன்மை யானதாக யிருக்கும். நமது கட்சியிலிருந்த வீரர்களில் அநேகர் இந்த ட்ராய்க் கரையின் புழுதியில் அழிந்து போயிருக்க மாட்டார்கள். நமது இரத்தமும் ட்ராய் நகரத்து வயல்களுக்கு வளமாக மாறியிராது. அவ் வயல்களும் செழித்து வனப்புகளுடன் விளங்கா.

நாமிழைத்த தீங்குகளை நம்முடைய கிரேக்கர்கள் வெகுநாள் வரை உன்னி யுன்னி வருந்திக் கண்ணீர் வடிப்பார்கள். இந்த விஷயத்தைப் பற்றி இனிப் பேசுவதில் ஒருபயனுமில்லை. நடந்தது நடந்தாய் விட்டது. இதை மறந்து விடுவோமாக! நமது ஊழின் வினைப்படி இது நடந்து விட்டது என்று மனந் தேறுவோமாக!

ஐயோ, மரணத்துக் குள்ளாகவே வேண்டிய நான்—கேவ லமான ஒரு மனிதன்—ஏன் இவ்வாறு தீராக் கோபங் கொண்டு பொங்கினேன்! இதனுல் ஒரு பயனும் இல்லை யென்று இன்று நான் கண்டு விட்டேன். இக்கணமே எனது கோபத்தையும் தணித்து விட்டேன். இனிமேல் நாம் இந்த யுத்தத்தைத் தொடர்ந்து செய்வோமாக!

இதுவரை கிரீஸ்காரர்கள் இரத்தத்தை வடித்தபடியே இலியன் நாட்டாரும் தங்களது இரத்தத்தை வடித்தே தீர வேண்டும். இப்பொழுது நம்முடைய சைனியத்தார் அனைவரை யும்கூவி அழைத்துத் திரட்டுங்கள். நம் எல்லோர் எதிரிலும் ட்ராய் நாட்டார் மீண்டும் ஓரிரவு தைரியத்துடன் இங்கு பாளையமிருக்கத் துணிவு கொள்ளுகின்றனரா என்று ஒருகை பார்த்து விடுவோம். அவர்களில் அதி பலவானுன வீரனும் இந்தக் கையைக் கண்ட வுடன், தனது பரிவார, தளவாடங்களுடன் ஒளிந்து ஓட்டம் பிடித்து விடுவான்! இந்த ஆபத்துக்குத் தப்பினேமே என்று களித்து இன்புறுவான்" என்ருன்.

இவ்வாறு இவன் சொல்லி முடித்தவுடன், இவனுடைய சொற்களைச் செவியேற்றுக் கேட்டு வந்த கிரேக்கர்கள் இவனது

கோபம் தணிந்து விட்டது என்று அறிந்து ஆர்ப்பரித்தனர். இவனுடைய யோசனைகளை அங்கீகரித்தனர். இவனது பெயரை உரத்துக் கூவினர்! பிலிதீசனுக்கு வெற்றி வருக என்று கோஷித்தனர்.

இவ்வாறு பிலிதீசனது சொற்பொழிவும் கிரேக்கர்களது ஆரவாரமும் நடந்து வருகையில், உன்னதமான தனது சிங்காதனத்தில் அசைவின்றி வீற்றிருந்த மனிதர்க்கரசன் அவ்வாறு வீற்றிருந்த வண்ணமே பின்வருமாறு பேசலுற்றான் :—

"கிரேக்க மக்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள்! சந்தடியின்றி மௌனமாக இருந்து கேளுங்கள்! உங்களது அரசன் சொல்லும் வசனங்களை ஒருமனப்பட்டுப் பட்சபாத மின்றிச் செவி சாய்த்துக் கேளுங்கள். சிறிது நேரம் உங்கள் சந்தடியையும் களிப்பையும் நிறுத்தி வையுங்கள்.

சந்தோஷிக்கவும் களிக்கவும் இது தகுந்த தருணமன்று. முன் யோசனையின்றி ஆத்திரமாக ஒரு காரியத்தையும் செய்யாதீர்கள். நமக்குத் தீமையை உண்டாக்கத் தக்க ஆரவாரங்களையும் ஆர்ப்பரிப்புக்களையும் அறவே ஒழித்து விடுங்கள்.

உத்தமனான ஒருவன் பேசுகையில் நாம் மட்டு மரியாதையின்றி வரம்பு கடந்து முணு முணுத்தாலும், முறை தவறிச் சிரக்கம்பமோ அல்லது புகழுரையோ செய்தாலும் அவை அவனுக்கு நாம் செய்யக் கூடிய பெருத்த அவமதிப்பே யாகும். நாம் மேற் கொண்டுள்ள காரியத்தை அவை கெடுத்து விடும். மேலும் கிரேக்கர்களே! இதுவரை நிகழ்ந்து வந்த கொடிய விவாதங்களுக்கு நான்தான் காரணமென்று என் மேல் அந்தப் பழியையும் சுமத்தாதீர்கள்! அன்று, அகிலேசனது கையினின்றும் நான் அவனுக்குக் கிடைத்த ஸ்திரீ ரத்தினத்தைப் பலவந்தமாகப் பிடித்துப் பறித்த பொழுது மஹா கோபிஷ்டரான ஜோவ் தேவரும் சர்வ வல்லமையுமுள்ளதும் எல்லோரையும் அடக்கியாளுவதுமான ஊழ்வினையும், மஹா பாதகிகளான எரின்னிகளுமே எனக்கு அடங்காக் கோபத்தை விளைத்து அதை மேன்மேலும் வளர்த்து என்னை உறுத்தினர். இதை நீங்கள் அறிய வேண்டும். தேவர்களது நியமனத்தை மீறி நான் செய்யக் கூடியது என்ன இருக்கின்றது?

அகிலேசனுடன் முரணவேண்டுமென்று நான் ஒரு நாளும் நினைக்கவேயில்லை. இதெல்லாம், ஏட்டி தேவியின் காரியம். அவள் பெருத்த பழிகாரி என்பது எல்லோரும் அறிந்த விஷயமாயிற்றே! ஜோவ் தேவரின் புத்திரியும் அதிக பயங்கர ரூபியுமான அவள் மனித வர்க்கத்தில் சண்டை சச்சரவுகளைக் கிளப்பி விடுவதே மணியமாக விருப்பவளன்றோ?

அவள் என் மனதுட் புகுந்து விட்டனள். அதிகர்வியான அவள் தன்னுடைய கோபதாபங்களைச் சாமானிய ஜனங்களிடம் காட்டலாகாதா? அப்படி அவள் செய்வதில்லை. மகாவீரர்களின் மண்டைகளின் மேலன்றோ அவள் தன்னுடைய உன்னதமான அடிகளை ஊன்றி வைத்து விடுகின்றாள்.

அவ்வாறு அவர்களது தலையின் மேல் தன்னுடைய அடிகளை வைத்து விட்டுச் செல்லுகையில் அந்த வீரர்களுக்குப் பலத்த காயங்கள் உண்டாகின்றன. அவற்றினின்றும் இரத்தம் கொதித்துக் கொண்டு ஒழுகுகின்றன. அந்தக் காயங்கள் நெடு நாள் வரை ஆறுவதில்லை. அவளுடைய ஹிம்சைகளுக்குத் தப்பவும் ஒருவராலும் இயலுவதுமில்லை.

முன்னாளில் அவள் தேவர்களின் அரண்மனைகளின் மத்தியில் உல்லாசமாக நடமாடிக் கொண்டிருந்தனள். அவ்வாறு இருக்கையில் அவள் ஒருக்கால் ஜோவ் தேவரையே ஓர் ஆட்டு ஆட்டுவாள்! அவர் மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் பிதா. உலகத்துக்கே சக்ரவர்த்தி. அவரையும் இவள் மிஞ்ச விடவில்லை. அவரைக் குறிவைத்தும் இவள் தன் விஷபாணங்களில் ஒன்றை விடுத்தாள். அதன் பயனாக, அந்த ஜோவ் தேவர் ஜூனோ தேவியின் மாய வலைகளிலும் ஸ்திரீகளுக்கு இயற்கையாகவே உள்ள கபட நாடகத்திலும் அகப்பட்டுத் தவித்தார். அந்தக் கதை உங்கள் எல்லோருக்கும் தெரியுமன்றோ! அந்தச் சமயம் ஜோவ் தேவர், ஆல்க்மினா தேவியைப் புணர்ந்து அவளிடம் கர்ப்பத்தை உண்டாக்கி அந்தக் கர்ப்பமும் முதிர்ந்து ஒன்பது மாதம் ஆகியிருந்தது. ஜோவ் தேவரும் தமக்கு அழியாமல் புகழும் தீர்க்க ஆயுளுமுள்ள ஒரு புத்திரன் பிறப்பான் என்று அவனது பிறப்பை எதிர்பார்த்திருந்தார்.

அவர் அவ்வாறு முறை தவறிப் புணர்ந்து அனுபவித்த இன்பத்தையும் அதனால் விளைந்த கர்ப்பத்தில் பிறக்கவிருந்த மஹாசூரனான தமது மகனுடைய வீரசூர பராக்கிரமங்களையும் தமது சபையிலிருந்த தேவர்களுக்கும் தேவிகளுக்கும் சிறிதும் கூச்சமின்றி வெளிப்படையாக எடுத்துரைத்துப் பெருமை கொண்டார். 'இன்றைய தினம் நம்மிடமிருந்து ஒரு குழந்தை பிறக்கப் போகின்றது. அந்தக் குழந்தை இராஜாதி இராஜனாக விளங்குவான். அவன் சகலரையும் அடக்கி ஆளுவான்' என்று வெகு கம்பீரமாக உரைத்தார்.

அப்போது ஸாட்டர்ஸினியா தேவியானவள் ஜோவ் தேவரை நோக்கி, "நீர் சொல்லுவது நிஜந்தான் என்று சத்தியம் செய்யும். உமக்குப் பிறக்கவிருக்கும் உமது அபிமான புத்திரனுக்குச் சகலமான பாக்கியங்களையும் அளிப்பதாக நிச்சயமாகச் சொல்லும்!" என்று கேட்டாள்.

அவளது கபடத்தை அறிந்திராத அந்த இடிக்கடவுள் அவள் கேட்டபடியே செய்வதாகத் தமது வாக்களித்தார். தேவர்கள் வாக்கும் மாறுமோ ? இவ்வாறு அவரது உறுதியான வாக்கைப் பெற்று மகிழ்ச்சி அடைந்த அந்த ஸாட்டர்னியா தேவி யானவள் அதிக விரைவில் ஒலிம்பஸ்ஸின் உன்னதமான சிகரத்தை விட்டுப் புறப்பட்டு, அக்கேயர்களது ஆர்காஸுக்குச் சென்ருள்.

அச்சமயத்தில் ஸ்தெனிலஸ்ஸின் மனை விக்குக் கர்ப்பம் உண்டாகி ஏழு மாதங்கள் கூடப் பூர்த்தியா வில்லை. அந்தக் கர்ப்பம் அப்போது தான் உருவாகிக் கொண் டிருந்தது. நிதானத்தில் வெளியேவரவிருந்த அந்தக் கர்ப்பத்தை ஸாட்டர்னியா தேவியானவள் விரைவில் வெளிவரும்படிச் செய் ததுமன்றி, அல்க்மினுவின் முன் சென்று, சரஸசல்லாபங்களும் வேடிக்கை விநோதங்களுஞ் செய்து அவளைக் களிப்பித்து அவ ளுடைய பிரஸவ வேதனைகளை அடக்கிக் கர்ப்பம் முதிர்ந்து அன்று வெளி வரவிருந்த சிசுவையும் கர்ப்பத்தினுள்ளேயே அடக்கியும் விட்டாள்.

இவ்வாறு செய்துவிட்டு அவள் ஸாட்டர்னியஸ்ஸை நோக்கி, ' நீர் உமது வாக்குத் தத்தத்தை மறவாமல் நிறைவேற்று வீராக ! என்றும் அழிவில்லாத ஜோவ் தேவரின் வர்க்கத்தில் இன்று ஒரு குழந்தை பிறந்திருக்கின்றது, அவன் ஸ்தெனிலஸ்ஸின் வர்க்கத்தில் பிறந்து இருக்கின்ருன், அவன் உமது வாக்குப்படி இராஜாதி இராஜனுக வாழவேண்டுமென்று நீர் ஆசீர்வதிப்பீராக'' என்ருள்.

அப்போது தாம் செய்த சத்தியத்தில் கட்டுப்பட்டவராய் இடிக்கடவுள், கலங்கினுர் ! துயர்க் கடலில் ஆழ்ந்து விட்டார் ! அவரது மனம் துடித்தது. அவர் புலம்பினுர், கோபங்கொண்டு பொங்கினுர் ! பின்பு இடிக்கடவுள் சற்று யோசனை செய்தார். அமிர்தத்தைத் தலையின் மேல் தாங்கி வந்த தமக்கு இவ்வாறு கோபங்கள் உண்டாவானேன் ? என்று யோசித்தார்.

அப்போது அவர் அமிர்தஸரஸான தமது தலையின் மேல் சகலமான கலகங்களுக்கும் தீராச் சண்டைகளுக்கும் சச்சரவு களுக்கும் தாயான அந்த ஏட்டிதேவி அங்கு வீற்றிருப்பதைக் கண்டார். உடனே அவர் அவளைப்பற்றிப் பிடித்துக்கொண்டு, தம்முடைய சபையோர் அனைவரின் முன்னிலும், அவளுக்கு ஒரு கொடுஞ்சாபத்தைக் கொடுத்தார். 'அமரர்கள் அவைக் களத்தி லுள்ள ஆசனங்களை இவள் இனி ஒரு நாளும் அலங்கரிக்கலாகாது! இந்தச் சாபம் ஒரு நாளும் மாருது !' என்ருர்.

அவ்வாறு சாபத்தை உச்சரித்தகணமே அவர் அவளைத் தலைகுப்புற விழும்படி உருட்டி விட்டார். அன்று முதல் அவள் ஒலியுடன் விளங்கும் ஒலிம்பஸ்ஸினின்றும் நக்ஷத்திர மண்டலத்

தினின்றும் துரத்தப்பட்டவளாக இந்தப் பூமண்டலத்தில் விழுந்து விட்டாள்.

அந்தச் சண்டாளி அதுமுதல் இதுவரை குழப்பங்களும் வேற்றுமைகளும் பாராட்டிவரும் மனிதர்களுடைய குழாங் களிலேயே இருந்து வருகின்றுள். இது ஜோவ் தேவரின் ஆணை அன்றோ! அவரது ஆணையை யாரால் மீறமுடியும்! இது நிற்க.

தமக்கு நேர்ந்துவிட்ட கெடுதியை மாற்ற ஜோவ் தேவ ராலும் முடியாமற் போயிற்று. அவர் தமது மகனுக்கு நேர்ந்து விட்ட கஷ்டங்களைப் பன்முறையுஞ் சிந்தித்து வருந்தினுர். இந்தச் சண்டாளியைப் பலவாருகச் சபித்தார். உள்ளூர உருகினுர்.

ஜோவ் தேவரைப் போலவே நானும் ஏமாந்து போய்விட் டேன். அதுதான் சமயம் என்று அறிந்து இந்தக் கொடியோர்னை ஹெக்டர் நமது களத்தில் பிணங்களை மலைபோல் குவித்து விட்டான். எனது கோபத்தினுல் விளைந்துவிட்ட சீர்கேடுகளை நீக்கவல்ல உபாயங்களும் உண்டோ? எனது புத்தியீனத்தினுல் உண்டாகிய நஷ்டங்களுக்கு ஈடு செய்யவும் என்னுல் இயலுமோ?

யுத்தம் செய்வதில் தேர்ந்த என்னுடைய சைனியங்களையும் என்னுடைய திரவியங்களையும் அனைத்தையும் இதோ, நான் உனக்குக் கொடுத்து விட்டேன். உனது கூடாரத்திற்கு வந்திருக் கையில் யுலிஸ்ஸீஸ் உனக்குக் கொடுப்பதாக வாக்களித்த சகல மான வஸ்துக்களையும் இதோ நான் இக்கணமே என்னுடைய கப்பல்களிலிருந்து அனுப்பிவிடுவேன். நீ இவைகளை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

ஏற்றுக்கொண்டு சாந்தமடைய வேண்டும். எங்கள் அனை வருடைய பிரார்த்தனைக்கும் இணங்க வேண்டும். உன் ஆயுதங்களைத் திரும்பவும் தரித்துக் கொள்ளவேண்டும். முன் போல் நீ இரணகளத்தில் பிரஸன்னனுகப் பொலிவுடன் விளங்க வேண்டும்" என்றுன்.

இவ்வசனங்களைக் கேட்டு மனம் இளகிய அகிலேசன், அவைகளுக்குப் பின்வருமாறு மறுமொழி பகர்ந்தான் :—

"சர்வதேச ஜனங்களுக்கும் அரசே! தங்களது மேலான ஆணையானது நம்முடைய பரிவாரத்தார் அனைவரும் சிரமேற் கொள்ளத் தக்கதன்றே? தாங்கள் உரைத்தபடி பரிசுகளை எனக்குக் கொடுக்கவே செய்யலாம், தங்களது மனம் போல் செய்வோம்! தாங்கள் எப்படிச் செய்தாலும் அது நமக்குச் சம்மதந் தான். யுத்தம் செய்யவேண்டும் என்பது தான் நமது ஆவலாக இருக்கின்றது. அதற்குத் தாங்கள் அனுமதி தந்தால் போதுமானது.

நாம் இவ்வாறே பேசிக் கொண்டே யிருந்தாலாவது அல்லது ஒரு கண நேரம் மாத்திரம் யுத்தத்தை நிறுத்திவிட்டா

லாவது, நாம் செய்ய வேண்டியப் பெருன காரியம் நிறை வேருமல் தடைப்பட்டு போகின்றது. அந்தத் தடையை நாம் நீக்கிவிடல் வேண்டும்.

நமக்கு எதிராக அணிவகுக்கும் துரோஜர்களை இதோ இந்த எனது ஈட்டியானது குத்தித் துளைக்கப் போகின்றது. அவர்கள் அணிகலைந்துத் திண்டாடித் திணறிப் போவார்கள் ; திகைத்துப் போவார்கள். அவர்களுடைய சேனைகள் அனைத்தும் நாற்புறமும் சிதறிச் சென்று அழிந்து போகும்.

இவ்வாறு நான் செய்யும் காரியங்களைக் கிரேக்கன் ஒவ்வொருவனும் கண்ணுற்றுப் பார்க்க வேண்டும். தானும் அவ்வாறே செய்ய முன்வர வேண்டும், ஆவல் கொள்ள வேண்டும், இன்று செய்யவேண்டிய காரியம் இன்னது என்பதை யும் அறிந்து கொள்ளவேண்டும் " என்ருன்.

பிலியஸ்ஸின் புத்திரன் இவ்வாறு உரைத்த பின் மந்திரா லோசனைகளில் சமர்த்தனும் மகாபுத்திமானுமான இத்தாக்கஸ் என்பவன் அவர்களது மொழிகளுக்குப் பின்வருமாறு பதில் உரைத் தான் :—

"தேவர்களைப் போல் நீர் எந்தக் கஷ்டமான காரியங் களுக்கும் இளைக்காதவர்தான் ; எனினும், நம்முடைய சைனிகர் களெல்லாம் இளைத்தும் களைத்தும் அலுத்துமேயிருக்கின்றனர். அவர்கள் உணவருந்த வேண்டும், இளைப்பும் ஆறவேண்டும். தேவர்கள் நியமனப்படியும் உமது தலைமைகொண்டும், இனித் திரும்பவும் நடக்க இருக்கும் யுத்தமானது நெடுங்காலம் அதி யுக்கிரமமாகவே நடைபெறும். ஊக்கமும் உற்சாகமும் இரத்தக் கொதிப்புமே நமக்கு வீரியத்தை அளிக்கின்றன. தாராளமாக மதுபானம் செய்தும் உண்டியருந்தியும் வந்தால் மாத்திரமே அந்த வீரியமானது அதிகரிக்கின்றது. அவைகளே வீரர்களுக்கு க்ஷேமத்தைத் தந்து அவர்களைக் காக்கவல்லவை. தான் வலிமை மிகுந்தவனென்று பெருமை பேசிக்கொள்ளும் ஒரு மகாவீரனுங் கூட அந்த இரட்சைகளின்றி ஒரு நாளாயினும் யுத்தத்தை நடத்த முடியுமோ ?

தைரியமுள்ள ஒரு மனிதன் ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பிக்க, முன்வரலாம் என்பதை நான் ஒப்புக் கொள்ளு கிறேன். ஆனால் அவனுக்கு மாத்திரம் பிறருடைய ஆதரவும் சகாயமும் இல்லாமற் போய்விடுமாயின், தன்னந்தனியனுகப் பொருது வரும் அவனது தேகபலம் சிறிதுசிறிதாகக் குறைந்து போய்விடும். அவன் கடைசியாகத் தனது சத்துருவுக்கு இணங் கியே போய்விடுவான். போஷணைக் குறைவினுலும் தான் செய்யும் கடினமான காரியங்களினுல் விளைந்த களைப்பினுலும் அவனது தேகம் மெலிந்து போகும். அச்சமயம் அவனது உடல் கூனிக் குனிந்துபோம். அவன் தனது மதியையும் இழந்து போவான்.

ஆனால் உறுதி பயக்கத்தக்க அன்னபானாதிகளை அருந்தித் தன் களைப்புகளை தீர்த்துக் கொண்டு தளர்வில்லாத தேக மனோ பலங்களுடன் ஒருவன் யுத்தத்திற்குப் புறப்படுவானாயின் அவன் சளைக்காமல் அந்த யுத்தத்தை நடத்துவான். யுத்தந்தான் சளைத்துப் போகும்.

ஆதலால் நம் சேனைகளில் உள்ள அனைவருக்கும் ஆரோக்கியமான அன்னபானாதிகளை அளிக்க வேண்டுமென்று நம்முடைய ஆட்களுக்கு ஆணையிடும்.

அகிலேசனுக்கு நீர் கொடுப்பதாகச் சொன்ன வெகு மதியைச் சகலமான கிரேக்கர்களுக்கும் மத்தியில் சபை நடுவே வைக்கும்படி கட்டளையிடும்.

அதன்பின் ஜனதிபனான நீர் ஸகலமான ஜனங்களின் மத்தியிலும் எழுந்து நின்று திரிகரணசுத்தியுடனும் அதிபயபக்தி யுடனும், அந்த மாசற்ற கன்னிகை உம்மிடம் வந்த பொழுது எவ்வாறு தோஷமற்றவளாக விருந்தனளோ அவ்வாறே இப்போதும் உம்மிடமிருந்து விலகுகின்றாள், அவளிடம் நீர் உமது காமத்தைச் செலுத்தவில்லை, இன்பங்களை அனுபவிக்கவில்லை என்று சத்தியம் செய்ய வேண்டும்.

இந்தச் சடங்கு நடந்தேறிய பின், எல்லோருக்கும் ஒரு திவ்யமான விருந்து நடத்த வேண்டும். இதுகாறும் நடந்துவிட்ட மரியாதைக் குறைவுகளுக்குத் தகுந்த ஈடும் செய்யப்படல் வேண்டும்.

ஆதலால் அரசே! சகலருக்கும் மேலான அதிகாரியாகிய தாங்கள் இனித் தங்களுடைய ஆணைகளை வரம்பு கடந்து செலுத் தாதிருப்பீராக! நியாய வரம்புகளையும் பிறருடைய உரிமைகளின் வரம்புகளையும் கடவாது இருப்பீராக!

தங்களது ஆணையினால் துன்பமடைந்து விட்டவர்களுக்கு நியாயஞ் செலுத்தி அவர்களைச் சமாதானம் செய்வது எந்நாளும் அரசர்களுக்குப் புகழைத் தரும்" என்றான்.

அரசன் அவ்வசனங்களைக் கேட்டு அவனை நோக்கி "உன் னுடைய சொல் முற்றும் சரியே; உன்னுடைய வார்த்தைகள் மகிழ்ச்சியைத் தருகின்றன. நீ உத்தமமான ஞானஸ்வரூபியாக விளங்குகின்றனை; ஞானத்திரள்களையே நீ, மூச்சு விடுகின்றனை!

நீ விதித்த பரிகாரங்கள் அனைத்தையும் நான் மிகுந்த சந்தோஷத்துடனேயே சித்தம் செய்வேன். நீ சொல்லிய பிரகாரம் நான் யதார்த்தமாகவும் சத்தியம் செய்வேன். தெய்வம் எனக்கு நன்மையைத் தந்து என்னைக் காப்பாற்றட்டும்,

நீ நியமித்த பிரகாரம் இப்போது இங்கு கூடியிருக்கும் கிரேக்கர்கள் சிறிது நேரம் இங்கேயே தாமதிக்கட்டும். இந்தச் சிறிய தாமதத்தை மகானுன அகிலேசனும் பொறுத்துக் கொள்ளட்டும். நம்முடைய கப்பல்களிலிருந்து வரிசைகளெல்லாம் இங்கு வரவேண்டும். அவற்றை நான் அகிலேசனுக்குச் சமர்ப்பிப்பேன். அதன்பின், ஜோவ் தேவரின் சந்நதியில் எங்களுக்குள் உறுதி யான ஒப்பந்தம் நிறைவேற வேண்டும்.

இந்தக் கடமையை நமது இளஞ் செல்லக் கோஷ்டியார் நிறைவேற்றுவார்கள். அந்தக் கோஷ்டியை யுலிஸ்ஸீஸே! நீயே பொறுக்கி யெடுத்துச் சேர்ப்பாயாக!

நாம் கொடுக்கும் வரிசைகளெல்லாம் இங்கு ஒழுங்காக வர வேண்டும். அவைகளின் பின்னுல் கடைசியாக நாம் சிறை பிடித்த கட்டழகிகள் வரவேண்டும். ஜோவ் தேவருக்கும் அதோ அங்கு பிரகாசிக்கும் தினகரனுக்கும் பிரியமான நைவேத்தியமான ஆண் பன்றியை தால்திபியஸ் கொண்டு செல்லட்டும்" என்ருன்.

அவ்வசனங்களைச் செவிசாய்த்துக் கேட்டு வந்தவனும் பிடிவாதக்காரனுமான ஈஸிடிஸ் என்பவன் அரசனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

" இந்தக் காரியத்துக்கு இப்போது என்ன அவசரம்? இது ஒரு விசேஷமான காரியமன்று. இந்தக் காரியத்தை நாம் சற்றுப் பொறுத்துச் செய்யலாம். இந்த யுத்த நெருக்கடி ஒருவாறு ஒழிந்த பின்பும் எனது மார்பில் கொதித்து வரும் கோபாக்கினியின் சூடு ஒழிந்து அவிந்துபோன பின்புமே நாம் இந்தச் சடங்குகளைச் செய்யலாம். அதுவரை இவைகளை நிறுத்தி வைப்போம்.

நம்முடைய வீரர்களெல்லாம் ஹெக்டரினுல் கொலையுண்டு தங்களுடைய முகங்களை வானத்திற்குத் திருப்பிக் காட்டிக் கொண்டு மல்லாந்து கிடக்கின்றனர். அவர்கள் காயங்க ளெல்லாம் வாயைப் பிளந்து கொண்டிருக்கின்றன. இந்த நொடி யில் நாம் இந்த யுத்தத்தை மேன்மேலும் தொடர்ந்து நடத்த வேண்டுமென்று அவை நம்மை உறுத்துகின்றன. அதனுல் நான் இக்கணமே இதோ! இந்த யுத்தத்தைச் செய்ய வேண்டுமென்று எனது முழு பலத்துடன் உரக்கக் கத்துகிறேன், கதறுகிறேன்.

இந்த யுத்தம் முடிந்தபின், நாம் வெற்றி பெற்றபின், நாம் அனைவரும் தாராளமாகப் பானங்கள் செய்யலாம். நம்முடைய கிண்ணங்களில் வழியவழியப் பானங்களை விட்டுப் பருகலாம், சட்ரஸங்களும் நிறைந்த பட்சய பரமான்னங்களை உண்டு களிக்க லாம், நமது அலுப்புச் சலிப்புகளை நீக்கிக் கொண்டு இளைப்பாற லாம், களைதீர்த்துக் கொள்ளலாம், மகிழலாம்.

இப்பொழுது நம்முடைய சத்துருக்களின் இரத்தத்தைப் பானம் பண்ண வேண்டுமென்று நான் தீராக் கோபத்துடன் துடிக்கின்றேன். அதுவரை நான் ஆகாரம் செய்யவே மாட்டேன், பச்சைத் தண்ணீரைப் பல்லில் ஊற்றமாட்டேன்.

எனது நண்பன் அதோ அங்கு விழுந்து கிடக்கின்றான். அவனது கட்டை வெளுத்துக் கிடக்கின்றது. இரணங்களும் காயங்களும் நிறைந்து அவனது உடல் அலங்கோலமாகக் கிடக்கின்றது. அவனுடைய கால்கள் ஜில்லிட்டுப் போயிருக்கின்றன. அவை வெளிக்கதவைச் சுட்டிக் காட்டிக் கொண்டு கிடக்கின்றன. இந்தப் பழிக்குப்பழி வாங்கியே தீரவேண்டும் என்று நான் துடிக்கின்றேன், ஆவல் உள்ளவனாக இருக்கின்றேன்.

எனது மனத்தில் வேறு அற்பமான கவலையோ ஆசையோ எண்ணமோ இல்லவே இல்லை. அவைகளுக்கு அங்குச் சிறிதேனும் இடமே இல்லை. நம்முடைய சத்துருக்களுக்குப் பெருத்த காயங்களை உண்டாக்கி அவர்களைக் கொல்லவேண்டும். யுத்த களம் முழுவதும் இரத்த களமாக விளங்கவேண்டும். காயமேற்ற வீரர்கள் குய்யோ முறையோ என்று கதறி ஓலமிடவேண்டும். அவர்களைச் சித்திரவதை செய்யவேண்டும். சிலுக்கச் சிலுக்க இது தான் நான் விரும்பும் விருந்து!'' என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட யுலிஸ்ஸீஸ் இவைகளுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான் :—

''கிரேக்கர்களில் முன்வைத்து எண்ணப் படுபவனே! வீரர்களில் முதல்வனே! இணை இல்லாத தைரியம் உடையவனே! பயங்கரமான யுத்தங்கள் நடைபெறும் களங்களில் வெற்றியுடன் பிரசித்தனாக விளங்குவது உனது பெருமை! அதுவே உனது பிரதாபம்!

நெடுநாளைய அனுபோகமும் நிதானமான ஆழ்ந்த யோசனைகளைச் செய்வதும் எனது பெருமைகளாக விளங்குகின்றன. ஆதலால் நான் சொல்லும் ஹிதவசனங்களைக் கேட்பாயாக! நியாயத்துக்கு இணங்கியும் நடப்பாயாக!

தைரியமிகுந்த வீரனுக்குங்கூட அதிசீக்கிரத்தில் யுத்தத்தில் சலிப்பு உண்டாகி விடுகின்றது. இரத்தக் கறைகள் படிந்த ஒரு யுத்த களத்தில் மடிந்த வீரர்களுடைய பிணங்கள் மலைபோல் குவிந்து வரினும் அந்த யுத்தத்தினால் உண்டாகும் லாபம் மிகவும் சிறிதே ஆகும். அந்த விசயத்தினால் உண்டாகும் லாபம் அற்பமேயாகும்.

மேலும் யுத்த காலங்களில் வெற்றி தோல்விகள் ஒரு முறைப்படி நிகழ்வதில்லை. அவற்றை, ஒரு துலாக்கோல் கொண்டு நிச்சயிக்க முடியாது. அந்தத் துலாக்கோலை ஜோவ் தேவர் மாத்

திரம் ஒரு சிறிதளவு அசைத்து விடுவாரானல், வெற்றியுடன் விளங்கியவன் ஒரு நொடியில் இறந்து போய்விடுகின்றன். மஹா வீரர்களும் அதிதைரியசாலிகளும் தினந்தினம் ஆயிரக்கணக்காக மடிந்து விழுந்து போகின்றனர். அவர்கள் அனைவர்க்கும் அழுது புரளுவது என்றால், அந்த அழுகைக்கும் புரளுகைக்கும் முடிவு என்பது உண்டோ? அந்தத் துக்கக் கொண்டாட்டத்திற்கு முடிவேயில்லை. ஊழிக்காலம் வரை அழுது புரண்டாலும் பயன் ஏதேனும் உண்டோ இல்லவே இல்லை.

கிரேக்கர்கள் இறந்து போனவர்களுக்காகப் பட்டினி கிடந்து கொண்டாடுவதில்லை. வீரர்கள் மடிந்து போய்விட்டால் அன்றைய தினம் மாத்திரம் அவர்களுக்குத் துக்கம் பாராட்டினல் போதுமானது.

ஒரு வீரன் தனது கண்ணை மூடிக்கொண்டு மண்ணில் மறைந்து போய் விட்டால், அவனுக்குப் பின்னுள்ள வீரர்களைக் காப்பாற்ற வேண்டுவது நமது கடனாகின்றது. ஆதலால் நாம் தாராளமாக உண்டி அருந்தி நம்முடைய களைப்புக்களைத் தீர்த்துக் கொண்டு நமது தேகத்தைத் திடப்படுத்திக் கொள்ளவேண்டும். பலவகையான பானங்களையும் ரஸங்களையும் பானம் செய்து சுறு சுறுப்புக் கொண்டு உற்சாகத்துடன் துள்ளவேண்டும்.

அவ்வாறு உண்டியும் பானமும் அருந்தியபின், அதன் பயனாக நம்முடைய வீரர்களது மனத்தில் யுத்தத்திற்கு வேட்கை உண்டாக வேண்டும். தாங்கள் யுத்த களத்தில் கீர்த்தியுடன் விளங்கவேண்டும், தங்களைப் பார்த்து அனைவரும் அதிசயிக்க வேண்டும் என்ற ஆத்திரம் அனைவர்களுக்கும் உண்டாக வேண்டும். பலவீனர்களான நம்முடைய சத்துருக்களின் மேல் அவர்கள் புதிது புதிதான கொடுமைகளைச் சுமத்த வேண்டும்.

இதற் கெல்லாம் ஒரு சிறு பொழுது இடை கொடுத்தால் மாத்திரம் போதும், அதன்பின் நம்முடைய வீரர்கள் ஒருவராயினும் இந்த யுத்தத்திற்சேரும்படித் தங்களுக்கு இரண்டாந் தரம் அழைப்பு வரவேண்டு மென்று காத்திருக்க மாட்டார்கள்.

அவ்வாறின்றி எவனாயினும் ஒருவன் தன்னை இரண்டாந் தரம் வந்து அழைக்க வேண்டு மென்று நம்முடைய கப்பல்களில் பதுங்கிக் கொண்டும் பின் வாங்கிக் கொண்டும் கிடப்பானேல் அவன் தனக்கு அழிவுகாலம் வந்து விட்டது என்றே அறிந்து கொள்ளுவான். காரியம் அவ்வாறு ஒருக்காலும் நிகழாது. நாம் அனைவரும் ஒரே திரளாகக் கூடி இந்த யுத்தத்திற்குச் சென்று, கர்வங் கொண்ட இந்த ட்ராய் நகரின் மேலே ஒரே பாய்ச்சலில் பாய்வோமாக” என்றான்.

இதன்பின் யுலிஸ்ஸீஸ், அகிலேசனுக்கு நியமிக்கப்பட்ட வரிசைகளை அரசனது கூடாரத்திலிருந்து கொண்டு வருமாறு

தன்னுடைய தூதர்களை அனுப்பினுன். அவர்கள் யாரெனில் சொல்லுவேன் கேளுங்கள்.

பைலியப் பெருந்தகையின் பின்னேனுனை நெஸ்ட்டாரின் புத்திரர்களும் கோடையிடியைப்போல் விளங்கியவர்களுமான தியாஸ் மெரியோன் என்பவர்களும், கிரியோதியன் மரபில் வந்த லயிக்கோமீடிஸும் மெலனிப்பஸ்ஸும் ஆவார்கள்.

யுலிஸீஸின் வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் அவ் விளைஞர்கள் அவனது கட்டளையை நிறைவேற்ற முன் வந்தனர். எல்லோருக்கும் மத்தியில் அவர்கள் பளிச்சென மின்னிய இருபது தாலங்களையும் அவற்றின் அதி திவ்யமான ஆறு முக்காலிகளையும் ஒரே அணியில் வைத்தனர். அவைகளுக்குப் பின் ஈராறு (பன்னிரண்டு) துள்ளிக் குதிக்கும் போர்க்குதிரைகள் வந்தன.

அவைகளுக்குப் பின் சிறை இருந்த கட்டழகிகள் எழுவர் வரிசையாக வந்தனர். எட்டாமவளாகப் பிரைஸீஸ் என்பவள் அன்று மலர்ந்த ரோஜா புஷ்பத்தைபோல் அவர்களுக் குப்பின்னுல் அந்தக் கோஷ்டியின் கடைசியில் வந்தனள். அந்தத் திவ்யமான கோஷ்டியானது அவளுடன் பூர்த்தி அடைந் தது.

இந்தப் பரிவாரத்தின் முன்னணியில் முதல்வனுக மகானுன இத்தாக்கஸ் பொன்னுலடித்த தாலந்துகளைச் சுமந்து வந்தான். ஏனைய வஸ்துக்களை எல்லோரும் காணும்படியாக அந்தச் சபையிலுள்ள வீரர்கள் ஒழுங்காகப் பரப்பி வைத்தனர்.

அந்தக் காட்சியானது பார்வைக்கு வெகு கம்பீரமாக இருந்தது. அது கண்டோர்களது கண்ணைக் கூசச் செய்தது. அப்போது ஆகமனன் எழுந்தான். தாலத்தியப்பியஸ்ஸும் பலியிட நிச்சயிக்கப்பட்டிருந்த பன்றியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இருந்தான். கிரேக்கர்களின் நாயகன் தனது உடை வாளின் அருகில் உறையினுட் கிடந்த அகன்ற பட்டாக் கத்தியை உருவி, அதைக் கொண்டு பலியாக இருந்த அந்த மிருகத்தின் புருவத்தில் வளர்ந்திருந்த கெட்டியான கட்டை மயிரைக் கத்தரித்து அவைகளைத் தேவர்களுக்கு நிவேதனமாக அளித்துவிட்டுத், தான் வேண்டிய வரங்களைச் சிந்தித்து அவற்றை ஞாபகப் படுத்திக் கொண்டான்.

பின்பு அவன் தெய்வங்கள் தனக்குச் சாக்ஷியாக இருக்க வேண்டுமென்று பிரார்த்தித்து விட்டுத் தன் கைகளை உயரத் தூக்கிக் கொண்டும், மப்போ மந்தாரமோ மாசோ படிந்திராத ஸ்படிகம்போன்ற வானத்தின் கரையில் தனது கண்களைப் பதித்துக் கொண்டும் நிதானமாகவும் உறுதியாகவும் பின் வரும் வசனங்களை உரைத்தான். அவன் உரைத்த மொழிகளை அவனுடைய பரிவார

ஜனங்கள் மிகுந்த அமைதியுடன் கவனித்துக் கேட்டனர். கிரேக்கர்கள் அனைவருமே அவ்வசனங்களை மிகுந்த பயபக்தியுடனும் பணிவுடனும் கேட்டுப் பரவசமாகி அவனைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தனர்.

"விண்ணுலகிலுள்ள பெருந்தேவரே! எல்லா நன்மைகளையும் அளிப்பவரே! எல்லாம் அறிந்தவரே! எல்லாவஸ்துக்களையும் கண்கூடாகப் பார்த்து வரும் ஜோவ் தேவரே! நீரே எனது முதலாவது சாக்ஷியாக இருப்பீராக!

பூமி தேவியே! ஆகாயத்தில் சுழன்று வரும் ஜோதியே! பிரேதலோகத்தை ஆளுபவர்களும், நெறி பிறழ்ந்து கொடுங்கோலோச்சும் அரசர்களுக்கும் பொய்ச் சாக்ஷி சொல்லுவோருக்கும் கொடிய தண்டனைகளை விதித்துப் பீடிப்பவர்களுமான குரூர தெய்வங்களே! நீங்கள் அனைவரும் எனக்குச் சாக்ஷியாக இருப்பீர்களாக!

கருங்கண்ணியான அந்தக் கன்னிகை என் காதல்களுக்கு இணங்காதவளாகவும் பரிசுத்தையாகவுமே, இங்கிருந்து விலகுகின்றாள். இது உண்மை. இது மாத்திரம் பொய்யாக யிருக்குமாயின், தெய்வம் என்னைக் கொடிய தண்டனைகளுக்கு ஆட்படுத்தட்டும். ஒரு பெருத்த இடியானது அபராதியான எனது தலையின் மேல் நேராக வந்து விழுந்து என்னைத் தரைமட்டமாக்கட்டும்" என்றான்.

இந்த வசனங்களை உரைத்துக் கொண்டே அவன் அந்த மிருகத்தைத் தனது ஆயுதங் கொண்டு ஓங்கி அடித்து அதற்கு ஓர் ஆழமான காயத்தை உண்டாக்கினான். அந்த மிருகமும், இரத்தத்தை வடித்துக் கொண்டு தரையின் மேல் உருண்டு புரண்டது. அதன்பின் இந்தச் சடங்கை உடனிருந்து நடத்தி வைத்த புரோகிதன் இவ்வாறு பலியாக வெட்டப்பட்ட அந்த மிருகத்தை நுரைகளுடன் கொந்தளித்துக் கொண்டிருந்த சமுத்திரத்தில் மீன்களுக்கு இரையாகுமாறு உருட்டி விட்டான்.

அதன் பின் அகிலேசன் "கிரேக்கர்களே! நான் சொல்லுவதைச் சற்றுச் செவி சாய்த்துக் கேளுங்கள். நாம் அனுபவிக்கும் குறைகளும் துக்கங்களும் நமக்கு ஜோவ் தேவராலேயே விதிக்கப்பட்டவை என்று அறிவீர்களாக!

அவ்வாறு இல்லையெனில், அதிரிதேசன் நமக்குக் கோபமூட்டுவானா? எனது கையிலிருந்த அந்தப் பெண்மணியை எனது சம்மதமின்றிப் பறித்துச் செல்வானா? ஜோவ் தேவரின் கண்டிப்பான மேலான ஆணையினால் தான் இந்த யுத்தம் நமக்கு நஷ்டமாக முடிந்து விட்டது. அவரே கிரேக்கர்கள் அழிந்து போகும்படி ஆணையிட்டு விட்டார். நம்மெல்லோரையும் அவர் தான் புறக்கணித்து விட்டார்.

ஆதலால் வீரர்களே உங்களது மனதைத் தேற்றிக் கொள்ளுங்கள். மனத்திற்கினிய அன்னபானாதிகளை அருந்தி மகிழ்ச்சி யடையுங்கள், திருப்தி அடையுங்கள். அகிலேசன் உங்களது வரவை எதிர்பார்த்திருப்பான். இந்த யுத்தம் மேலும் நடைபெறுமென்று நம்பிக்கை கொண்டிருப்பான்" என்றான்.

இந்த வசனங்களைக் கேட்டவுடன் ஆத்திரத்துடன் கூடி யிருந்த அந்தக் கூட்டமானது ஒரு நொடியில் கலைந்து விட்டது. கிரேக்கர்கள் அனைவரும் தங்களுடைய கறுத்த நிறங் கொண்ட கப்பல்களுக்குத் திரும்பிச் சென்றனர்.

அகிலேசனும் தனது கூடாரத்திற்குச் சென்றான். அவனுடைய பரிவாரஜனங்கள் அவனுக்கு அளிக்கப்பட்ட பரிசுகளைத் தங்கள் தலை குனியச் சுமந்து கொண்டு அவன் முன்னே சென்றனர். அவனுடைய மெய்க்காவலர்களான வீரர்கள் அப் பண்டங்களை அலுப்புச் சலிப்பின்றி அவனுடைய கூடாரங்களில் பரப்பி வைத்தனர். மேலும் அவர்கள் அவனுக்குப் பரிசாக அளிக்கப்பட்ட குதிரைகளை அவனுடைய லாயங்களுக்கு நடத்திச் சென்றனர். அக்குதிரைகள் நுரைகளை இடைவிடாமல் கக்கிக் கொண்டிருந்தன. சிறையிருந்த கட்டழகிகளும் தங்களுடைய புதிய இருப்பிடங்களுக்கு அகன்று சென்றனர்.

காமதேவனது தேவியை நிகர்த்தவளும் ஒளியுடன் விளங்கியவளுமான பிரைஸீஸ் தேவியும் அவர்களின் பின்னால் மெதுவாக நடந்து சென்றாள். அவ்வாறு நிதானமாகச் செல்லுகையில், அவள் தனது வழியில் பத்திரகலுஷன், ஆழமான படுகாயங்கள் பட்டுக் கீழே கிடப்பதைக் கண்டு மனமிடிந்து துக்கித்தாள். அதி தெய்வீக அழகும் மேனியுமுடையவளான அவள் அவனது உடலின் மேல் குப்புற விழுந்து துக்கத்துக்கு இடமாகி விட்ட தனது மார்பைப் புடைத்துக் கொண்டு புலம்பினாள். பொன் போன்ற தனது தலைமயிரையும் பிரித்து விரித்துக் கொண்டாள். அச்சமயம் அவள் துக்கக் கடலில் ஆழ்ந்தவளாகவே யிருந்தும் அதிசுந்தரியாகவே விளங்கினாள். நீர்த்துளிகளுடன் ஜ்வொலித்த தன்னுடைய குளிர்ந்த கண்களை நிமிர்த்திக் கொண்டு அவள் அந்த வீரனைக் குறித்துப் பின் வருமாறு பிரலாபித்தாள் :—

"ஐயோ! என்றும் எனது அன்பிற்குப் பாத்திரனான இளங்காளையே! என்றும் கருணையுடன் விளங்கியவனே! எனது மனம் ஒருக்கால் கவலைக் கடலில் ஆழ்ந்து கிடந்த பொழுது எனக்கு ஆறுதல் சொல்லித் தேற்றி இதம் சொல்லிய நண்ப! நான் உன்னை விட்டுப் பிரிந்த பொழுது நீ உயிருடன் விளங்கினை! பொலிவுடன் விளங்கினை! களிப்புடனும் உல்லாசத்துடனும் விளங்கினை!

இப்போது உயிரில்லாத உன் சடலத்தையன்றோ நான் காண்கின்றேன். உனது உடல் களிமண்ணைப்போல் குளிர்ந்து

கிடக்கின்றதே!' எனது ஜீவ யாத்திரையில் எனக்கு லபிக்கும் துக்கங்களுக்கும் துயரங்களுக்கும் ஓர் எல்லையை, நான் காண வில்லையே! துக்கங்கள் மேன்மேலும் அலைகள்போல் திரண்டன் ரே வருகின்றன! அந்த அலைகள் ஓய்ந்த பாடில்லையே! அவைகள் ஓயும் என்று சொல்லவும் இயலாதுபோல் தோன்றுகின்றது!

எனது கன்னிப் பருவத்தில் என்னுடன் கூடிவிளையாடி எனது மனதை முதன் முதலாகக் கவர்ந்த என் காவலர் இந்த யுத்தத்தில் இந்த என் கண்களின் முன்னதாகவே தனது உயிரை விட்டு மடிந்தார்! வீரர்களான எனது உடன் பிறந்த மூவரும் அவ்வாறே ஒரே கெட்டநாளில் இருள் சூழ்ந்த நெறியில் நடந்து சென்று மீளா உலகம் புக்கனர்.

அப்போது போர்க்களத்தில் விழுந்து அழுதுபுரண்ட என்னைக்கண்டு, நீர் அனுதாபங்கொண்டு என்னை வாரி எடுத்தீர். கணவனை இழந்த எனக்கு ஆறுதல் அளித்தீர், எனது கண்ணீரை யும் துடைத்தீர். அகிலேசன் என்னைக் காப்பாற்றுவான் என்று எனக்கு உறுதியான வாக்களித்தீர். அவனது பட்டமகிஷிகளில் முதல்வியாகவும் அவனது பேரன்புக்கு நான் மாத்திரமே பாத்தி ரையாகவும் இருப்பேன் என்று சொல்லியிருந்தீர். ஆன்றோர் விதித்துள்ள முறைப்படியே மணச் சடங்குகளை நடத்தி இந்த மணம் செய்யப்படுமென்றும் என்னை அவனது சொந்தமான நாட்டின் அரசியாக ஆக்குவேன் என்றும் சொல்லியிருந்தீர்.

இவ்வாறெல்லாம் சொல்லித் தாங்கள் எனக்கு ஆறுதலை அளித்திருந்தீர்கள். தங்களது நன்றியை நான் மறக்கவில்லை. எனக்கு உபகாரம் செய்த தங்களுக்கு இந்தக் கேடு வந்துவிட்டதே என்று உன்னி யுன்னி நான் கண்ணீர் வடிக்கின்றேன். நான் தங்களுக்குச் செய்யும் இந்த உபசாரத்தைத் தாங்கள் தயவுசெய்து அங்கீகரித்தல் வேண்டும். பிறர் துக்கம் பார்த்துச் சகியாமல் வருந்திய தங்களுக்காக மாத்திரமே இந்தக் கண்ணீர் வழிந்து ஓடு கின்றது" என்றாள்.

இவ்வாறு அவள் கரைந்து உருகிப் புலம்புவதை அனு சரித்து அவளைப் போலவே சிறையிருந்த அவளுடைய தோழி மாரும் கரைந்து உருகினர், விம்மி அழுதனர். ஆனால் அவர்கள் தங்களுக்கு நேர்ந்துவிட்ட ஆபத்துக்களைக் குறித்துத் துக்கித்தார் களே அன்றி பத்திரகலுஷனது மறைவுக்காகத் துக்கித்து வருந்த வில்லை.

அச்சமயம் சேனைத் தலைவர்கள் அனைவரும் முன் வந்து அகிலேசனைச் சுற்றி வளைந்து கொண்டனர். அவர்கள் 'தங்களைக் காப்பாற்ற வேண்டும், அகிலேசன் அருள்புரிய வேண்டும்,' என்று அவனைக் கெஞ்சினர். அவன் அவர்களுடைய முறையீடுகளைக் கேட்டுப் பெருமூச்செறிந்தனனேயன்றி அவர்களது வேண்டு

கோனுக்குச் சற்றும் இணங்கவில்லை, தான் இருந்த இடத்திலேயே அசையாமல் இருந்தான்.

“அகிலேசனுக்கு இதம் செய்ய வேண்டும் என்ற கவலை கொண்ட நண்பன் ஒருவனுயினும் இங்கு உளனேல் அவன் இவ்வாறு ஆத்திரப்படலாகாது. சற்றுப் பொறுமையுடன் இருத்தல் வேண்டும், அதோ! அங்கு காணும் சூரியன் தாழும்வரை ஒருதின மாவது நான் அழுது புலம்பி அலறவேண்டும், துக்கம் பாராட்ட வேண்டும். அதற்கு இடந்தாருங்கள், அதுவரைத் தாமதியுங்கள்” என்று சொல்லிக்கொண்டு அவன் வீரர்களைப் புறக்கணித்துவிட்டு வேறு புறமாகத் தனது முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

என்ருலும், அவர்கள் பின்னும் கெஞ்சாதவண்ணம் கெஞ்சியே வந்தனர். அத்ரியஸ்ஸின் மரபில் வந்த சகோதரர்களான அரசர்களும் நெஸ்டாரும் இதோமினியஸ்ஸும் ஞானவானுன யுலிஸ்ஸீஸும் பீனிக்ஸும் அகிலேசனுக்கு உண்டாயிருந்த துக்கத்தையும் கோபத்தையும் தணிக்கத் தொடங்கித் தங்களாலான முயற்சிகள் அனைத்தையும் செய்தனர். ஆனுல் அவர்கள் முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப்போயின. அவனது சினத்தை ஆற்றவோ அல்லது அவனது துக்கத்தை மாற்றவோ அவர்களால் இயலாது போய்விட்டது. அவர்கள் அக் காரியத்தைச் செய்வதற்கு ஆற்றலற்றவர்களாக ஆயினர்.

அவன் அனுங்கினுன். பித்தனைப்போல் பிதற்றினுன், கதறினுன், அழுதான், அவனது மனமே இடிந்துபோய்விட்டது, அப்போது அவனது நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளிவந்த வசனங்களை உரைப்பேன் கேளுங்கள்:—

“பத்திரகலுஷா நீயுமா இந்தக் கஷ்டத்துக்கு ஆளானுய்! நம் விருந்தாளிகளுக்கு ருசிகரமான பதார்த்தங்களை நீயே ஒருக்கால் நம்முடைய கூடாரங்களில் பரிமாறினுயே! அகிலேசன் ஒருக்கால் இந்த யுத்தத்திற்குப் போவேன் என்று துடித்தான். அப்போது, நீ அவனுடன் தங்கியிருந்து அவனுக்கு இதங்கள் செய்து அவனைப் பாதுகாத்து ரக்ஷித்து அவனது பிரியா நண்பனுக விளங்கினுய்!

ஆனுல் உனக்கு இப்பொழுது விளைந்து விட்ட கதி என்ன? அதிசீதளமான யமனது கரங்களுக்கன்ரே நீ இப்போது வசமாகி விட்டனை? உனது கொலைக்குச் சரியான பழிவாங்கினுலன்றி எனது மனம் சமாதானம் அடையுமோ? எனது ஆத்திரம் தணியுமோ? நான் உனக்கு அளிக்கக் கூடியவிருந்து அதுவன்றி வேறு ஏதேனும் உளதோ?

பழுத்த பழம் வயோதிக விருத்தரும் எனது பிதாவுமான பிலியஸ் இறந்து போய்விட்டால் அதினும் அதிகமான துக்கம் எனக்கு ஏதாயினும் உண்டாகுமோ? எனது மார்பு பிளந்தேபோய்

விடுமன்றோ? அவர் பாவம் இப்போது வியாதியில் இருக்கின்றார். தனது மகனுக்கு என்ன ஆபத்து வந்து விட்டதோ, அவனைப்பற்றி என்ன துக்கச்செய்தி தனக்கு எட்டப் போகின்றதோ என்று அவர் தவித்து நடுங்கிக் கொண்டிருக்கின்றார் என்றே நான் எண்ணுகின்றேன்.

எனது ஏகபுத்திரனும் அதி தைரியவானுமான நியோதாலிமஸ் என்பவன் மண்ணில் மறைந்துபோய் விடுவானாகில், எனக்கு அதினும் அதிகமான துக்கமும் ஒன்று உண்டாகுமோ? அந்தப் புத்திரனும் இதுவரை உயிருடன் இருக்கின்றானோ என்பதையும் நான் அறியேன்.

நான் என் காரியங்கள் அனைத்தையும் புறக்கணித்து விட்டு நெடுந்தூரத்திலுள்ள இந்த யுத்தகளத்தில் மிகவும் அருவருக்கத்தக்க இந்த யுத்தத்தைச் செய்து வருகின்றேன். இந்தக் கொடிய வினைப்பயனை, இந்தக் கஷ்டத்தை நான் எப்படிப் பொறுத்து வருவேன்! காரியம் இவ்வாறு நிகழ்ந்துவிட்டதால் நான் எப்படி வாளாவிருப்பேன்!

அகிலேசனுக்கன்றோ இந்தக் கதிவர இருந்தது? காரியமும் அவ்வாறு நடந்திருந்தால் அவனது நண்பன் உயிருடன் பிழைத்திருப்பான். பத்திரகலுஷன் உயிருடன் தப்பி விடுவான். அனாதையாய் விட்ட என் இளங்குமாரனை ஒரு தந்தையின் அன்புடன் வளர்த்து வருவான். ஸிரோஸ் தீவினின்று கடலைக் கடந்து அவனது தந்தையின் ராஜ்யத்துக்கு அவனைக் கூட்டிச் செல்வான். அந்த ராஜ்யத்தின் பரப்பையும், அங்குள்ள உன்னதமான அரண்மனைகளையும் அவனுக்குக் கண் குளிரக் காட்டித் தருவான் என்றெல்லாமன்றோ நான் நினைத்திருந்தேன்.

எனது தந்தையான பிலியஸ் தேவருக்கு இப்போது தேகத் திடம் குறைந்துபோய்விட்டது. ஒரு வேளை அவர் இறந்தே போயிருக்கலாம். இன்றேல் வயதும் கவலையும் முதிர்ந்தவராய்த் தனது கட்டையை வெறுப்புடன் இழுத்துக் கொண்டிருக்கலாம்! நான் அழிந்து பட்டேன், விதிக்கு வசமானேன் என்ற துக்க சமாச் சாரம் அவரது மனத்தைத் துளைக்கும்வரை அவர் தம் கட்டையுடன் ஒட்டிக்கொண்டிருக்கலாம். அதன்பின் ஏற்கனவே யமபுரம் நோக்கி விரைவாகச்சென்று கொண்டிருக்கும் அவரது ஆவியானது சிறிதும் தயங்காமல் ஒரே அடியாய் இருள் சூழ்ந்த உலகங்களில் ஆழ்ந்துபோய்விடும்!''

இவ்வாறு அவன் பெருமூச்சு விட்டுக்கொண்டு தனது மனதிலிருந்த சங்கடங்களை வெளியிட, அவனைச் சுற்றியிருந்த வீரர்கள் அவனை அனுசரித்துத் தாங்களும் துக்கித்தனர். அவன் தனக்குப் பின்,விட்டு வந்த நாடு நகரங்களையும் தந்தையையும் தனயனையும் நினைத்து அவர்களும் வருந்திக் கண்ணீர் வடித்தனர்.

இவ்வாறு அவர்கள் அனைவரும் ஒன்றாய்க் கூடித் துக்கித்து வந்ததைத் தேவராஜனும் கண்ணுற்றார். அவர் அவர்களது நிலைக்கு வருந்தி நீலாயதாக்ஷியை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார்:—

"அகிலேசன் மீது உனக்கு இருக்கும் அன்பு இவ்வளவுதானா? இதுவரை அவனைக் காப்பாற்றியது போதும் என்று நீ அவனைக் கைவிட்டு விட்டனையா? யுத்தத்தில் சிறந்தவனான அவனை நீ கைவிட்டு விட்டனையா? அதோ அங்கு பார்! சாக்குத் துணிகளான தங்களுடைய சிறகுகளை அகலமாக விரித்துக்கொண்டு கப்பற் பாய்கள் அதோ பறக்கின்றன!

அங்கு அவன் சோர்வடைந்து கிடக்கின்றான். அவனுக்கு என்ன கஷ்டம் வந்து விட்டது என்று கேட்பார் ஒருவரையும் காணோம்!

இறந்து போய்விட்ட தனது நண்பனைக் குறித்து அவன் புரண்டு அழுகின்றான். பசியினாலும் தாகத்தினாலும் அவனுடைய சக்திகள் முழுவதும் அழிந்து போகுமுன், அவனுக்கு அமிர்தத்தை ஊட்டி, அவனது உடலுக்கு உறுதி அளிக்குமாறு, நீ விரைந்து செல்" என்றார்.

அந்த ஆணையைச் சிரமேற் கொண்டவளாய் அந்தத்தேவி அந்த உன்னதமான விண்ணுலகத்திலிருந்து இறங்கிக் கீழேயுள்ள மண்ணுலகத்தை நோக்கி, ஓர் அம்பைப்போல் பாய்ந்துசென்றாள். அவள் ஒரு ஹார்ப்பியைப் போல் கிரீச் சென்று கத்திக்கொண்டும் பரந்த ஆகாய வீதியில் தன் அகன்ற சிறகுகளை விசாலமாக விரித்துக்கொண்டும் பறந்து சென்று, அகிலேசனை விரைந்து அணுகி அவனது மார்பில் தேவர்களது பானமாகிய அமிர்தத்தைப் பொழிந்தனள். தேவர்களும் விரும்பும் அந்த ருசியான அமிர்தத்தை அவனுக்கு அளித்துவிட்டு அவள், தான் வந்தபடியே அதிக விரைவில் மண்ணுலகைவிட்டு விண்ணுலகை நோக்கிப் பறந்து சென்று விட்டனள்.

அப்போது அதியற்புதமான காரியம் ஒன்று நிகழ்ந்தது. அதை நான் எவ்வாறு வர்ணிப்பேன்! கிரேக்கர்களுடைய கப்பல்களிலிருந்து சேனா வீரர்கள் ஒரு பெருத்த வெள்ளத்தைப்போல் தடதடவென்று புறப்பட்டு வந்து, அந்தப் போர்க்களம் முழுவதையும் ஆக்கிரமித்து விட்டனர். அது இடைவிடாது பெய்யும் ஒரு பெரிய கனமான மழையையும் அதனாலுண்டாகும் வெள்ளத்தையும் போலவேயிருந்தது.

அது வடக்கிலிருந்து புறப்பட்டு வந்து அடிக்கும் போரியாஸ் என்னும் கொடுங் காற்றைப் போலவே இருந்தது. அந்தக் கொடுங் காற்று பிராணிகளின் உடலை ஊடுருவித் துளைத்து விடுகின்றது. தன் எதிர்ப்பட்ட பனித்திரள்களை மைதானங்களிற் சிதறி

அடித்து விடுகின்றது. அது கறுத்த மேகங்களைத் தாக்குகையில் அம்மேகங்களிலுள்ள ஆட்டுமயிர்ப் போன்ற வெண் கதிர்கள் பளிச்சுப் பளிச் சென்று மின்னிக்கொண்டு ஆகாய மண்டலமனைத் தையும் ஒரு வெண்காடாக ஆக்கிவிடுகின்றன.

வீரர்களுடைய மகுடங்களும் அவ்வாறே அலையலையாகவும் வரிசை வரிசையாகவும் வந்தன. அவர்களுடைய கேடயங்களும் பளிச்சுப் பளிச்செனக் கிரணங்களைத் தெறித்தன. அக்கிரணங்கள் அக்கேடயங்களுக்கு முன்னும் பின்னும் இருந்த மற்றைய வீரர் களின் கேடயங்களின் மேலும் பாய்ந்தன. மேலும் அவை தாங்கள் புறப்பட்டுச் சென்ற திக்குகளையே நோக்கித் திரும்பியும் வந்தன. இவ்வாறு அக்கிரணங்கள் அலைகள் போல் முன்னும் பின்னுமாக மோதி வந்ததினுல் அந்த யுத்த களமானது ஜ்யோதிர் மயமாக விளங்கியது.

அப்போது வீரர்கள் அணிந்திருந்த பளிச்சென்று விளங்கிய அகன்ற மார்க் கவசங்களும் கூரான கிரணங்களைத் தெறித்துவந்த ஈட்டிகளும் ஒரே ஒரு பெரிய ஆறுபோல் ஒன்ருகக் கலந்து ஒன் றின் மேல் ஒன்ருக எழுந்து, தகதக வெனப் பிரகாசித்தன.

யுத்தகளத்தின் மத்தியில் குதிரைகள் துள்ளிக் குதித்துக் கொண்டு வருகையில் அந்தப் பிரதேசம் கிடுகிடுவென நடுங்கியது. ஆகாயவெளி அனைத்தும் ஒரே ஜோதியுடன் கொழுந்து விட்டு எரிந்தது. அந்த ஜோதியானது அக்கம் பக்கங்களிலிருந்த வயல் களை நோக்கி நகையாடுவது போலத் தோன்றியது.

இவ்வாறு விளங்கிய அந்த யுத்த களத்தின் நடுமையத்தில், தேவர்கள் அணியத் தகுந்த ஆயுதங்களை அணிந்து கொண்டு அகிலேசன் எல்லோருக்கும் மேலாக உயர்ந்த ஓர் உன்னதமான கோபுரம்போல் விளங்கினுன். அந்த ஆயுதங்கள் அக்கினி பக வானுக்கு அதிபதியான வல்க்கனுல் உண்டாக்கப்பட்டு இவனுக்கு அளிக்கப்பட்டவை என்பதும், அவை அந்த தேவனுடைய அழி வில்லாத பட்டடைகளின் மேல் வைத்து உருவாக்கப்பட்டவை என்பதும் நமக்குத் தெரியும்.

இவ்வாறு ஆயுதபாணியாக விளங்கிய அந்த வீரனது மனத்தில் தனது நண்பனுக்கு நேர்ந்துவிட்ட மரண நிமித்தம் துக் கமும், அந்தப் பழிக்குப் பழிவாங்கிவிட வேண்டும் என்ற ஆத்திர மும் பொங்கிக் கொதித்தன. அவனுடைய கண்களின் விழிகள் கோபாக்கினியுடன் ஜ்வலித்துக் கொண்டு சுழன்றன! அவன் தன்னுடைய பற்களை நறநற வென்று நெறித்தான். காலம் கழிகின் றதே என்று கோபதாபங்களுடன் தவித்தான்.

அவ்வாறு தவித்துக்கொண்டு யுத்த சன்னத்தர்களாக விளங்கிய இருதிறத்துச் சேனைகளையும் ஒருமுறை மேல் நோக் காகப் பார்த்துவிட்டு இன்று ஒரு பெருத்த யுத்தம் நிகழும்,

சேனைகள் தங்களது இரத்தத்தை வரையாது வடிப்பார்கள் என்றே நினைத்தான்.

அப்போது அவன் தனது தொடைகளில் வெள்ளிக் கவசங்களைக் கட்டிக் கொண்டிருந்தான். அவனது மார்பை ஒரு பொற் கவசம் அலங்கரித்து வந்தது. பித்தளையினாலான அவன் உடைவாள் நானுவர்ணங்கள் கொண்ட ஓர் அரைக் கச்சையில் கெட்டியாகச் செருகப்பட்டிருந்தது. அந்த உடைவாளில் நட்க்ஷத்திரங்களைப் போல ஜொலிக்கும் இரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தமையால் அது அவனது அள்ளையில் ஒரு பக்கமாகத் தொங்கிக் கொண்டிருக்கையில், பளிச்சுப் பளிச்சென மின்னியது.

அவனது கேடயமோ அது ஓர் அகன்ற பூரணச் சந்திரனைப்போல் வெகுதூரம் வரை ஜ்யோதி மயமான கிரணங்களைப் பொழிந்து வந்தது. அது அப்போர்க்களத்தையே ஊடுருவிப் பாயும் கிரணங்களைப் பொழியும் ஒரு பெரிய விளக்கைப் போலவே விளங்கியது.

பயத்தினால் மேனி வெளுத்தவராய் இரவில் கடலில் சஞ்சரித்துவரும் கப்பலோட்டிகளுக்குத் தாங்கள் யாத்திரை செய்துவரும் விசாலமானக் கடலில் ஒதுக்கான ஓர் இடத்தினின்றும் ஆகாயமளாவிக் கொண்டு எரியும் ஒரு தீபம் தன்னுடைய கிரணங்களை வீசிக்கொண்டு எரிவது புலனாகுமாயின், அந்தத் தீபமானது வெகுதூரத்திற் காணப்படும் ஓர் உயர்ந்த மலையின் உச்சியில் எரிந்து வரும் ஒரு வெளிச்சம் போலவே அவர்களுக்குத் தோன்றுகின்றது. அப்போது அக் கப்பலோட்டிகள் அவ்வெளிச்சத்தைக் கண்டு திகைத்துப் போகின்றனர்; அதனையே திரும்பத் திரும்பக் கண்கொட்டாமல் பார்க்கின்றனர். தங்களது கண்ணீரையும் ஆறாகப் பெருக்குகின்றனர்.

அப்போது அக்கடலில் ஒரு பெருத்த புயலும் உண்டாகின்றது. அப்புயல் உரத்து உறுமுகின்றது. அக்கப்பலோட்டிகளை, அது சமுத்திரத்தில் நெடுந்தூரம் வரை ஓட்டியும் விடுகின்றது.

அகிலேசனது தோற்றத்திற்கும் அதனால் விளைந்த பயனுக்கும் இதனையே உபமானமாகக் கூறலாம். இது நிற்க.

அடுத்தபடியாக அவனது தலையில் ஓர் அழகிய கிரீடம் பூஷணமாக விளங்கியது. அதன் பின்புறத்தில் அவனது செழிப்பான துராயானது காற்றிற் பறந்த வண்ணம் தொங்கிக் கொண்டு ஊசலாடியது. நோய்களையும், பெருவாரியான வியாதிகளையும் யுத்தத்தையும் உதிர்த்து வரும் செக்கச் சிவந்த அக்னிநட்க்ஷத்திரத்தைப்போல் தகதக வென்று மின்னும் அவனுடைய தலைமயிர்களினின்றும் பொற்கிரணங்கள் ஒளியை வீசின. இரத்தினங்களைப் போல் ஜ்வலித்து வந்த அவனுடைய வெற்றிக் கொண்டைகள்

கடகட வென்று அசைந்து ஆடின. அப்பொழுது அவற்றினின்றும் சில புஷ்பங்கள் நெகிழ்ந்து உதிர்ந்து கீழே விழுந்தன.

அச்சமயம் அந்த மகாவீரன் தன்னைத் தானே ஒரு முறை பார்த்துத் தனது பெருமையையும் கட்டழகையும் கம்பீரமானத் தோற்றத்தையும் கண்டு வியந்தான். தன்னுடைய ஆயுதங்களை யும் எடுத்துத் தூக்கி அவற்றையும் உற்று நோக்கினான். அவற்றை எவ்வாறு ஏந்திப் பிடித்தால் அவை தனக்கு இலகுவாக இருக்கு மென்று பரீட்சை செய்தான். அவை எவ்வளவு தூரம் எவ்வளவு வேகத்தில் செல்லத் தகுந்தவை என்றும் பரீட்சை செய்தான்.

தனது மனத்தில் உறைந்து வந்த ஒரு சக்தியினால் உற்சா கம் மேலிட்டவனாய் அவன் ஆகாயத்தில் நீந்துபவன் போலவே தோன்றினான். தன்னுடைய அவயவங்கள் ஒவ்வொன்றும் ஓரோர் சிறகைப்போல் தன்னை உயரக் கிளப்பிக்கொண்டு வருவது போல வும் அவனுக்குத் தோன்றியது.

பின்பு அவன் தனது பிதா தனக்குக் கொடுத்திருந்த ஈட்டியை ஓர் ஆட்டு ஆட்டிக் குலுக்கினான். அது அதிகக் கன மும் பிரமாண்டமுமான ஓர் ஈட்டி. அதைத் தூக்குவதற்கு கிரேக்கன் ஒருவனாலும் இயலாது.

முற்காலத்தில் வாழ்ந்திருந்த கீரான் என்பவன் ஆகாய மளாவி மேகத்தில் மறைந்து கிடந்த பீலியான் மலை யின் உச்சியிலிருந்து ஓர் அசோக மரத்தை ஒரேயடியாய் வேருடன் வெட்டித் தள்ளி, அதினின்றும் இந்த ஈட்டியைச் செதுக்கிச்சீவி அகிலேசனது தகப்பனுக்கு அளித்திருந்தான்.

இவ்வாறு வீரர்களுக்கு அழிவையும் போர்க்களங்களுக்குக் கலக்கத்தையும் உண்டாக்கத் தக்கதும், மற்றொருவராலும் எடுத்து ஏந்த முடியாததுமான இந்த ஈட்டியைத் தீரனான அகிலேசன் தனது ஆயுதமாகக் கொண்டான்.

இவ்வாறு இவன் ஆயுத ஆபரணங்கள் அணிந்து வருகை யில், ஆட்டோமிடானும் அல்ஸிமஸ்ஸும் அவனது தெய்வ பரம் பறையில் வந்த குதிரைகளையும் ஒளியுடன் விளங்கிய இரதத்தை யும் சித்தப்படுத்தினர். அக்குதிரைகளின் இருபுறமும் வெள்ளி யினாலான வார்க்கயிறுகள் இணைந்து கொண்டிருந்தன. தீப் பொறிகளைக் கக்கிக் கொண்டிருந்த அவைகளின் வாய்களில் தக தகவென்று ஜொலித்து வந்த கடிவாளங்கள் கட்டப்பட்டு இருந் தன. தந்தக்குமிழ்கள் பதிக்கப் பெற்றிருந்த அக்கடிவாளக் கயிறு கள் அக் குதிரைகளின் பின்புறமாகத் திருப்பப்பட்டு அவற்றின் முதுகின்மேல் அசைந்தாடிக் கொண்டு தளர்ந்து இறுதியாக அவை பூட்டிய இரதத்தில் கட்டப்பட்டிருந்தன.

அதன்பின் அந்த இரதத்தின் சாரதியானவன் தனது கையி லிருந்த சாட்டையை ஒரு முறை சுழற்றிக் கொண்டு, ஒரே அடி யாய்ப் பாய்ந்து அந்த இரதத்தின் மேல் விரைவாக ஏறினன். அப்பொழுது தேவர்களுக்கே உரிய ஆயுதங்களை அணிந்து கொண்டு பொலிவுடன் விளங்கிய அகிலேசனும் தனது இரதத் தின்மீது ஏறித் தனக்குத் துணைவனுக இருந்த வீரனுடைய தலைக் கும் மேலாக உயர்ந்துள்ள ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொண் டான். அக்கணமே அந்தப் போர்க்களம் முழுவதிலும் ஒரு பெருத்த பரபரப்பு உண்டாயிற்று. அது, தீயிடப்பட்ட ஒரு பெருங்காடு போலவே தோற்றியது.

ஆகாய வீதியில் கொழுந்து போன்ற வெளிச்சத்தைப் பொழிந்து கொண்டும் பகற் பொழுதைத் திரும்பத் திரும்பத் தந்து தனது இரதத்தில் ஏறி சவாரிச் செய்யும் பீபஸ் பகவானுங்கூட அகிலேசனுக்கு மிஞ்சிய காந்தியுடன் விளங்கியதில்லை. இவ் வாறு இருதிறத்துச் சேனைகளுக்கும் மேலாக உயர்ந்தும், அனை வருக்கும் பீதியை உண்டாக்கிக் கொண்டும் நின்ற அகிலேசன் தன்னுடைய குதிரைகளை நோக்கி அவற்றிற்குப் பின்வருமாறு கண் டிப்பான ஆணைகளையிட்டான் :—

“புடார்ஜிஸின் மரபில் உதித்தவர்களான ஸாந்தஸே! பலியஸ்ஸே! நீங்கள் தேவர்களது மரபில் வந்தவர்கள் என்று பெருமை அடித்துக் கொள்ளுகின்றீரல்லவா ? அந்தப் பெருமை வீண் போகலாகாது! உங்களுடைய காரியங்களைத் துரிதமாகச் செய்யுங்கள்.

நீங்கள் யாரைச் சுமந்து செல்லுகின்றீர்கள் என்பதையும் நன்ருக ஞாபகத்தில் வைத்து வாருங்கள். நீங்கள் உங்களது மரபைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுவது நியாயந்தான், எனி னும் உங்களது எஜமானனையே, அதினும் மேலான கவலையுடனும் பொறுப்புடனும் காத்து வாருங்கள்! சத்துரு சங்காரம் செய்யப் பிறந்த இந்த வாளினுற் பட்டு விழும் சேனு சமுத்திரத்தின் ஊடே என்னைக் கொண்டு செல்லுங்கள். பத்திரகலுஷனைக் கைவிட்ட மாதிரி என்னை விட்டு விடாதீர்கள். நான் உங்களது எஜமான் என்பது ஞாபகமிருக்கட்டும்.” என்ருன்.

அவன் சொல்லிய அந்த வசனங்களைக் கேட்டு அவற்றின் கருத்தை நன்ருக உணர்ந்த குணசாலியான சாந்தஸ் என்னும் குதிரையானது, அக்கணம் கிரேக்கர்கள் இருந்த அபாயமான நிலையை அறிந்தது போலவே தோற்றியது. அது தனது தலை யைத் தொங்கப் போட்டுக்கொண்டு, பொன்னுலான சக்கரங்கள் நான்கு கொண்ட அந்தத் தேரின்முன் தவித்துக் கொண்டு நின்றது. அது தனது பிடரியின்மேல் விசேஷமாக வளர்ந்து தனக்கு ஓர் அணிகலம் போல் விளங்கிய மயிரையும், மண்ணில் படும்படித் தாழ்த்தியது.

அப்போது ஓர் அத்தியாச்சரியகரமான காரியமும் நிகழ்ந்தது. அதை நான் எவ்வாறு உரைப்பேன். அக்குதிரைக்கு நாவன்மை பிறந்தது. ஜனனீ தேவியினால் இயலாத காரியமும் உண்டோ? அந்தத் தேவியின் ஆணைப்படி அக்குதிரை, தான் அதுவரையிருந்து வந்த மௌன நிலையை ஒழித்து விட்டுப் பின்வருமாறு, வரும்பொருள்களை உரைத்தது :—

“ அகிலேசா ! ஆம் ! நீ சொல்லியபடியே நாங்கள் செய்வோம் ! இன்றைக்கு ஒரு நாள் மட்டும் கோபதாபங்களைப் பொறுத்துவந்து, உன்னை இந்த யுத்த களத்தில் சமுத்திரம்போல் அடித்துவரும், திரைகளைக் கடந்து பத்திரமாகச் சுமந்து செல்வோம். ஆனால் உனக்கும் ஒரு நாள் அழிவு காலம் வரவே வரும். அதற்கு எங்களுடைய தவறுகள் காரணமாக இரா, கடவுளே உனது அழிவை நியமிக்கின்றார்.

உனது நண்பனான பத்திரகலுஷன் எங்களுடைய பிழைகளினாலாவது, எங்களது வேகக்குறைவினாலாவது பட்டு அழிந்து போகவில்லை. தெய்வங்களின் வலியினால் மாத்திரமே அவனுக்கு அழிவு உண்டாய்விட்டது. பகலைப் பளிச்செனத் தோற்றுவிப்பவனும், தன்னுடைய பிரகாசமான கிரணங்களை வெகுதூரம் வரைச் செல்லும்படி செய்து வருபவனுமான அந்தப் பெருந்தேவனே, அவனுடைய ஆயுதங்களைப் பற்றிப்பிளந்து எறிந்து விட்டான்.

நாங்கள் அவனை நேராகவே கண்டோம், நாங்கள் அவனைக் கண்ணாரக் கண்டது உண்மைதான் என்பதையும் அவன் எங்களிடம் ஒப்புக் கொண்டான்.

எங்களால் ஆவது ஒன்றுமேயில்லை ! நாங்கள் காற்றினும் வேகமாக ஓடிச் சென்றாலும், மேற்றிசையினின்று அடிக்கும் புயலை நாங்கள் அடித்துத் துரத்தி விட்டாலும் தான் என்ன பயன் ? அவற்றால் பயன் ஒன்றும் ஆவது இல்லை.

தேவர்கள் உனது மரணத்தைப் பிடிவாதத்துடன் கோரி நிற்கின்றனர். மர்த்தியர்களாகட்டும் அமர்த்தியர்களாகட்டும், அனைவரும் விதிக்கு வசமானவர்கள்தான் அன்றோ !”

இவ்வாறு அகிலேசனது தலைவிதியை உரைத்தபின், அக்குதிரை தனது வாயை மூடிக்கொண்டு விட்டது. தெய்வப் பிரகிருதிகளான துரகதேவதைகள் அதன் வாயை மூடிவிட்டன.

அவ்வசனங்களைச் செவியேற்ற பின்னும், மனந்தளராத அந்த வீரன் ஆத்திரத்துடனும் அடங்காக் கோபதாபங்களுடனும் அந்தக் குதிரையை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தான் :—

" நீ சொல்லுகிற படியே காரியங்களெல்லாம் நடக்கட்டும்! சகுனங்களும் நிமித்தங்களும் என்னை என்ன செய்யும்? நான் அவைகளைப் பொருட் படுத்துபவனல்ல.

எனது தலைவிதி எனக்கு நன்ருய் தெரியும். நான் எனது ஆவியை விடுவேன், என் அத்தியந்தப் பிரியர்களான என்னுடைய பெற்ருேரைப் பார்க்கும் பாக்கியத்தை இழந்து போவேன். எனது ஜன்ம பூமியின் கரையையும் எனது கண்ணுல் பாரேன். இவ்வளவு தானே?

இவையெல்லாம் நான் அறிந்தவைதான், இவையெல்லாம் தெய்வ நியமனம், நடந்தே தீரும் என்ருல் நடக்கட்டுமே! நான் இருளில் மறைந்து போவது நிச்சயம். அது தெய்வ சங்கல்பம். அது இருக்கட்டும், இப்போது ட்ராய் அழியவே வேண்டும்" என்ருன். இவ்வசனங்களைச் சொல்லிக்கொண்டே அவன் போர் முனையை நோக்கிச் சர சர வென்று ஓடினுன்.



## இருபதாவது அத்தியாயம்

# தேவர்களுக்குள் நிகழ்ந்த போரும் அகிலேசனுடைய அருஞ் செயல்களும்

**கதைச் சுருக்கம்:** அகிலேசன் யுத்த களத்திற்குத் திரும்பிச் சென்ற பின் ஜூப்பிடர் பகவான் தம்முடைய பரிவாரத் தேவர்களை எல்லாம் ஒன்றாகச் சபை கூட்டி, அவரவர்கள் தத்தம் இஷ்டப்படி எந்தக் கட்சிக்கு வேண்டுமென்றாலும் உதவி செய்யலாம் என்றார்.

அப்பொழுது தேவர்களுக்குள் நிகழ்ந்த யுத்தத்தின் கொடுமை வர்ணிக்கப் படுகின்றன.

அகிலேசனை எதிர்த்துச் செல்லுமாறு ஈனியஸ்ஸுக்கு அப்பால்லோ தேவர் உறுத்தித் தைரியஞ் சொல்லுகின்றார்.

நெடு நேரம் சம்பாஷணைகள் செய்த பின் இவ்விரு வீரர்களும் பொருகின்றனர். இந்தப் போரில் நெப்தியூனது உதவியினால் ஈனியஸ் உயிருடன் தப்பிப் பிழைக்கின்றான்.

அகிலேசன் மற்றைய துரோஜர் களின் மேற்பாய்ந்து அவர்களைத் தாக்கி அடிக்கின்றான். ஹெக்டரையும் கொல்ல விருக்கும் தருணத்தில், அவனை அப்பால்லோ தேவர் ஒரு மேகத்தால் மறைத்து, யுத்த களத்தை விட்டு எடுத்துச் செல்லுகின்றார்.

அதன் பின் அகிலேசன் துரோஜர்களைத் துரத்திக் கொண்டு சென்று அவர்களில் அநேகரை வதைத்து விடுகின்றான்.

இந்நிகழ்ச்சிகள் முப்பதாம் நாளிலேயே ட்ராயின் முன்னுள்ள களத்திலேயே நிகழ்கின்றன.

---

இவ்வாறு ஆயுதமேந்தியவர்களான கிரேக்கர்கள் தங்களுடைய கப்பல்களின் அருகில் பிலிதீசனைச் சுற்றிக் கொண்டு, 'சண்டையைச் செய்வோம், எதிரிகளது இரத்தத்தை வடிப்போம், அவர்களை வருத்தி வாட்டுவோம்' என்று ஆவேசத்துடன் நின்றனர்.

அப்போது ட்ராய் மக்கள் சமீபத்திலிருந்த ஒரு மேட்டின் மேல் கறுத்த நிறங்கொண்ட ஆடை ஆபரண ஆயுதங்களை அணிந்து கொண்டு, அன்று நடக்கவிருந்த சண்டையின் வேகம்

எவ்வாறு இருக்குமோ என்று நடுக்கங்கொண்டு, அதன் துவக்கத்தை எதிர்பார்த்தவர்களாக ஆவலுடன் இருந்தனர்.

அப்பொழுது ஜோவ் தேவரும் அன்று நடைபெற வேண்டிய காரியங்களை ஆலோசிப்பதற்காகத் தேவர்களை எல்லாம் நக்ஷத்திர மண்டலத்திற்கு வர அழைத்து வரும்படித் திமிஸ்ஸுக்குக் கட்டளையிட்டார். அந்த தேவியும் ஒலிம்பஸ்ஸின் நூறு சிகரங்களையும் அளாவியுயர்ந்து வேகமாய்ப் பறந்து சென்று, தேவலோகங்களில் இருந்த சகலமான தேவர்களையும் ஜோவ் தேவரின் சபைக்கு வரும்படி அழைத்தாள். தேசுடைய அந்தத் தேவர்களும் அழியாத ஆணித்தரமான வைரக் கற்களாலிழைக்கப்பட்ட ஜோவ் தேவரின் விமானத்திற்குத் தங்களுடைய நீண்ட பரிவாரங்களுடன் வந்தனர்.

அந்தச் சபைக்கு வராதவர்கள் ஒருவருமே இல்லை. நீர்வள நிலவளங்களுடன் செழித்து விளங்கும் கிராம தேவதைகளோ அல்லது புஷ்பச் சோலைகளில் கோயில் கொண்டிருந்த ஒரு தேவனோ தேவியோ ஆகிய ஒருவராயினும் அந்தச் சபைக்கு வராமல் இருக்கவில்லை. நிழல் நிறைந்த காடுகளில் உறைந்து வரும் செங்கூந்தல் ஏந்திய வனதேவதை ஒவ்வொருத்தியும், வெள்ளியைப்போல் மின்னும் வெள்ளத்தை அடித்துக்கொண்டு வேகமாய்ச் செல்லும் நீலாயதாக்ஷியான ஜலதேவதை ஒவ்வொருத்தியும் அங்கு வந்தனள்.

ஆனால் புனிதமான சமுத்திரத்தின் அடியில் ஆழமான இடத்தில் தனது புராதன ஆட்சியைச் செலுத்திக்கொண்டு, தனது சிங்காதனத்தில் அமர்ந்திருந்த தொண்டு கிழவனும் பிதாமகனுமான ஓஷன் மாத்திரம் அங்கு செல்லவில்லை.

வல்க்கனால் ஒளிவீசும் கம்பங்களையும் விட்டங்களையும் கொண்டு விமான வடிவில் நிருமிக்கப்பட்ட சலவைக் கற் சிங்காதனங்களில் அந்தத் தேவர்க ளெல்லாம் வட்ட வடிவில் உட்கார்ந்து கொண்டனர்.

அப்பொழுது திரிசூலத்தை ஏந்திப் பிடித்துக் கொண்டு தனது ஆட்சியை ஆழ்கடலிற் செலுத்தி வந்த தேவனான ஓஷனுக்கும் அந்தத் தெமிஸ் தேவி உரத்துக் கூறிய குரல் கேட்டது. அவன் அக்கணமே தனது சமுத்திர ராஜ்யத்தை விட்டுப் புறப்பட்டு விண்ணுலகம் சேர்ந்து, அங்கு தனக்கு நியமிக்கப்பட்டிருந்த ஆஸனத்தில் அமர்ந்து கொண்டு மனிதர்க்கும் தேவர்க்கும் தேவனானதேவாதி தேவனை நோக்கிப் பின்வருமாறு வினவினான் :—

"விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் ஆண்டுவருபவரும் தம்முடைய பயங்கரமான கரங்களில் இடியைப் பிடித்துக் கொண்டு இருப்பவருமான தேவாதி தேவன், தேவர்கள் ஒருவர் தவறுமல் அனைவரையும் இவ்வாறு ஒரு பெருஞ்சபைக்கு அழைக்க

வேண்டிய உத்தேசம் என்ன? அவரது எண்ணம் என்ன? விஷயம் என்ன? கிரீஸுக்கும் ட்ராய்க்குமுள்ள விரோதந்தான் இங்கு ஆலோசிக்கப்படப் போகின்றதோ? அவர்கள் ஏற்கனவே ஒருவரோடொருவர் வேற்றுமை கொண்டு யுத்த களத்தில் எதிர் எதிராக நிற்கின்றார்கள், ஒருவர் மேல் ஒருவர் சீறுகின்றனர். யுத்த முனையில் யமதர்ம ராஜனும் வெகு ஆத்திரத்துடன் நின்று வருகின்றான்!" என்றான்.

மேகத்தை அடக்கி ஆள்பவரான அந்தப் பெருந் தேவர், அம்மொழிகளுக்குப் பின் வருமாறு மறுமொழி உரைத்தார் :—

"நீ சொல்வது உண்மைதான். மனித வர்க்கத்தாரின் நன்மையிலேயே நாட்டங்கொண்டுதான் நாம் இன்று இங்கே தேவர்களது சபையைக் கூட்டியிருக்கின்றோம்; மர்த்தியர்களான மானிடப் பிறவிகள் இவ்வாறு அநியாயமாய் மடிந்து போவதைக் கண்ணுற்று ஜோவ் தேவரும்கூட வருந்தலாயிற்று.

நெடுந்தூரத்திலுள்ள ஒலிம்பஸ்ஸின் மலைச் சிகரத்தில் ஒதுக்கான ஒரு தனித்த இடத்தில் நம்முடைய சகலமான ஆடம்பரங்களுடன் அமர்ந்திருந்து கொண்டு நாம் வினையானது நம்முடைய ஆணைகளை நிறைவேற்றி வருவதைப் பார்த்து வருவோம்.

ஆதலால் தேவலோக வாசிகளே! நீங்கள் இங்கிருந்து இறங்கிப் பூலோகஞ் செல்லுங்கள். உங்களுக்கு யாரிடம் அன்பும் ஆதரவும் இருக்கின்றதோ, அந்தக் கட்சிக்கு உங்களாலான உதவியைச் செய்து வாருங்கள்.

அகிலேசன் ஒருவருக்கும் அடங்காதவன். அவன் ஒருவன் மாத்திரம் தன்னந் தனியனாய்ப் பொருது வருவானேல் இந்த ட்ராயானது அதிவிரைவில் தரைமட்டம் ஆகிவிடும் என்பது திண்ணம், அதில் ஐயமில்லை. சிறிது நேரத்திற்கு முன்னர்தான், அந்த ட்ராய் நாட்டாரது சேனையானது அவனைக் கண்ட மாத்திரத்தில் பயந்து நடுங்கியது. இப்பொழுது அவன் கோபாவேசத்துடன் பொங்கி எழுந்து வருவானேல் அந்தச் சேனை என்ன செய்யும்?

ஆதலால் தேவர்களே! நீங்கள் அவர்களுக்கு உங்களாலான உதவியைச் செய்யுங்கள். அவ்வாறு செய்ய நீங்கள் மறுப்பீர்களானால், புண்ணிய க்ஷேத்திரமாகிய இலியனது உத்தமமான கோட்டை மதில்கள் இன்றே அதிர்ந்து தரைமட்டமாக விழுந்து விடும். இலியன் பாழாகலாகாது என்பது நமது விருப்பமாக இருந்தாலும் அது விழுந்தே விடலாம்" என்றார்.

இவ்வாறு சொல்லி அந்த ஜோவ் தேவர் அங்கு கூடியிருந்த மற்றைய தேவர்களது மனத்தில் ஒரு கிளர்ச்சியையும் உற்சாகத்தையும் உண்டாக்கினார்.

அவர்கள் விசேஷமான கோபாவேசங்களுடன் பொங்கினர். அந்தத் தேவர்கள் யுத்தத்தில் அன்வயித்திருந்த இரண்டு கட்சியில் தங்களுக்கு இஷ்டமான ஒரு கட்சியில் மற்றைய கட்சிக்கு விரோதமாகச் சேர்ந்து கொண்டனர்.

தேவாதி தேவனது தேவியாகிய பயங்கரஸ்வரூபியும், பிரம்மாண்டமான பூமண்டலத்தை நீல நிறங்கொண்ட தனது ஆயுதத்தினுல் மறைக்குந்தேவனும், ஆயுதப் பிரயோகத்தில் அதிசாமர்த்தியம் வாய்ந்த கன்னிகையும், மனிதர்க்கு நன்மைபயக்கும் கலைகளின் தெய்வமாகிய ஹெர்மீஸும், அக்கினியின் தெய்வமும் கறுத்த நிறத்தவனுமான வல்க்கனும், ஆகிய இவர்கள் ஒரே நொடியில் கிரேக்கர்களுடைய கப்பல்களை நோக்கி ஓட்டம் பிடித்தனர். இந்த தேவர்களும் தேவிகளும் அந்தக் கப்பல்களில் வந்து இறங்கிய பொழுது, அவை தடதடவென நடுங்கி அதிர்ந்தன.

ட்ராயின் உதவிக்காக லட்டோனுவும் பீபஸும் வந்தனர். அக்னியையே கிரீடமாக உடைய மார்ஸ் தேவரும், சிரிப்பும் களிப்புமுள்ள தேவியும், பொன்போன்ற நன்னீரைப் பெருக்கிக்கொண்டு செல்லும் ஆறுகளின் தெய்வமான ஜாந்தஸ்ஸும், வெள்ளிவில் ஏந்தியவளும் வேட்டை ஆடுவதில் சிறந்தவளுமான மாசில்லா மடந்தையும் வந்தனர்.

இவ்வாறு முன்வந்த தேவர்கள் தங்களாலான உதவிகளைச் செய்யத் தொடங்கு முன்னரே ஆர்கிவ் வீரன் ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் வீரசூர பராக்கிரமங்களினடியாகப் பிறந்த களிப்பும் உற்சாகமும் பொங்கி எழுந்தன.

அப்பொழுது நெடுங்காலம் வரை யுத்தத்தில் கலந்து கொள்ளாமலிருந்தவனும், அந்தக் களத்திற்கே பீதியை உண்டாக்கி அதைக் கலக்கக் கூடியவனுமான அகிலேசன் தன்னுடைய ஆயுதங்களைத் தரித்துக் கொண்டு பளிச்சென ஒளியுடன் விளங்கினுன். அவன் தன்னுடைய பரிவார ஜனங்களின் முன்னனியில், அவர்கள் எல்லோருக்கும் முன்னுகப் பயங்கர உருவத்துடன் நின்றுன். அதைக் கண்ணுற்ற ட்ராய் நாட்டார் அனைவரும், பயந்து வெருண்டு மேனி வெளுத்தனர். தோற்றவர் போலவும் பிணங்கள் போலவுமே தோன்றினர். அந்தக் கட்சியிலிருந்த மகா சூரர்களும் கூட நெஞ்சிடிந்து நடுக்குற்றுப் பயந்து துடித்தனர். மார்ஸ் பகவானைப் போன்ற மற்றெரு போர்க்கடவுளும் வந்துவிட்டாரோ என்று கலங்கினர்.

ஆனுல் சக்திவாய்ந்த தேவர்கள் தேவலோகத்திலிருந்து இறங்கிவந்து அந்தப் போர்க்களத்திற் புகுந்து யுத்தத்தை மும்முரமாக நடத்திய பொழுது, ஒரு கனத்த குழப்பம் உண்டாயிற்று. வீரார்கள் ஒவ்வொருவரும் ஒரு கணம் கோபத்துடன் பொங்கினர். மறு கணம் பயந்து நடுங்கி வெளுத்தனர். இவ்வாறு அவர்களது முகமானது அடுத்தடுத்து மாறுபாடுகளுடன் விளங்கியது.

அதன்பின் கலகப் பிரியையான டிஸ்கார்ட் என்னும் தேவி யானவள் எல்லோரையும் பயமுறுத்தினுள். அவளது கூக்குரலை அனுசரித்துப் பூமண்டலமே எதிரொலி செய்துகொண்டு நடுங் கியது. யுத்தத்தில் அன்வயித்திருந்த பல தேசத்தவரான எல்லா வீரர்களும் சரேலென்று பாய்ந்து சென்று தங்கள் தங்கள் ஆயுதங் களைக் கைப்பற்றினர்.

அவ்வாறு நடுக்குற்றுக் கலங்கி வந்த அக்கடற்கரைகளின் ஊடே மினர்வா தேவியானவள் ஒரு கணம் உரத்துக் கூவிக் கொண்டும் மறுகணம் கிரேக்கர்களுடைய மதில்களின் சமீபம் நின்றுகொண்டும் கர்ஜனைகள் செய்தனள்.

மார்ஸ் தேவர் தனது கிருபைக்குப் பாத்திரப்பட்ட ட்ராய் நகரின் மேல் சுற்றிப் பறந்து வட்ட மிட்டுக் கொண்டிருந்தார். அவர் செய்த ஆரவாரங்களும் மிரட்டுக்களும் உருட்டுக்களும் ஆகாயத்தையே நிறைத்து விட்டன. அந்தப் பிரதேசம் முழு வதும் இருண்ட பெரும் புயல்களில் மறைந்தே போய் விட்டது. கனமான மேகங்கள் அந்த நகரின் மேல் கவிழ்ந்து விழுந்ததினுல் பகலிலேயே இரவும் வந்து இருண்டு விட்டது போல் தோற்றியது.

இலியனின் உச்சியிலிருந்த தம்முடைய அதி உன்னதமான கோபுரங்களிலிருந்த வண்ணம் அந்த மார்ஸ் தேவர் தமது திவ்ய மான குரலில் உற்சாகமான, மொழிகளை உரைத்து, துரோஜா வீரன் ஒவ்வொருவனுடைய மனத்திலும் ஊக்கத்தையும் உறுதி யையும் கோபாவேசத்தையும் தடதடவெனப் பொழிந்தார்.

பின்பு அவர் அழகான தனது மலையிலிருந்து பிரவகிக்கும் ஸிமோயீயை உரத்துக் கூவி அழைத்தார். அப்போது அந்த மலையானது அடியோடு அதிர்ந்து ஆடியது. அங்கிருந்து வேக மாக ஓடிக் கொண்டிருந்த நதியும் அசைவற்று நின்று விட்டது.

டிராயின் மேல் ஆகாயத்தில் தேவாதி தேவனும் இடிகளை உருட்டி விட்டார். பளிச்சு பளிச்சென மின்னல்களும் உண்டா யின. அவைகளின் அரவங்களும் வெளிச்சங்களும் பிரதி தொனி களுடனும் பிரதி ஒலிகளுடனும் கலந்து பூமண்டலத்தையே ஒரு துருவம் முதல் மறு துருவம் வரை ஆட்டிக் கலக்கி விட்டன.

டிராயின் அடிப்புறத்திலிருந்த நெஞ்சுறுதியுள்ள நெப்தியூன் பகவானும் டிராயின் தரையை அசைத்து ஆட்டி வந்தார். உறுதியான கற்பாறை போன்ற அந்தத் தரையும் அதிர்ந்தது. காடுகளெல்லாம் அலைகள் போல் அசைந்தாடின. மலைகள் தங்களுடைய தலைகளை நாற்புறமும் விரித்துக் கொண்டு ஆடின. அந்த மலைகள் அனைத்திற்கும் மேலாக இருந்த ஐடாக் காடுகளும் நிலைகுலைந்து கம்பித்தன. அம் மலையின் மேலிருந்து ஒழுகி வந்த நூற்றுக் கணக்கான ஆறுகளும் தங்களது உற்பத்தி

ஸ்தானத்திலிருந்து பெருக்கெடுத்துக் கனத்த வெள்ளத்தைப் பொழிந்து கொண்டு வந்தன.

இவ்வாறு உண்டான அதிர்ச்சியினுலும் குழப்பத்தினுலும் அசைந்தாடிய ட்ராய் நகரத்துக் கோபுரங்கள் எல்லாம் அந் நகரைச் சுற்றியுள்ள மைதானத்தில் வெறியுடன் கூத்தாடும் ஒரு கட்குடியனைப் போல் அசைந்தாடின. அப்பொழுது பந்து களைப் போல் இங்கும் அங்கும் ஊடாடி வந்த கப்பல்கள் மூச்சுவிட முடியாமல் தவித்த கடற்கரையை நையப் புடைத்தன.

அப்பொழுது பிரேத உலகில் இருள் மூண்ட பாதாளத்தில் ஏகாதிபத்தியம் வகித்து வந்த உக்கிரஸ்வரூபியான புளூட்டோ என்னும் யமதர்ம ராஜனுங்கூட, இது என்ன ஆபத்து என்று திடுக்கிட்டுத் தனது தலையை உயர்த்தி நிமிர்த்தினுன். எங்கு தனது இருள் சூழ்ந்த ராஜ்யத்தில் நெப்தியூன் புகுந்து விடு வானே? அவ்வாறு புகுந்து அந்த ராஜ்யத்தில் நடந்து வந்த காரியங்களை வெட்ட வெளியாக்கி விடுவானே ? மனிதரனைவருமே பயந்து வெளுத்து வந்ததும் தேவர்களுக்கும் பயத்தைத் தரக்கூடி யதுமான தனது அருவருப்பு நிறைந்த ராஜ்யத்தில் புகுந்து அங்கு நிகழ்ந்து வந்த பயங்கரமான வியாபாரங்களை ஒழித்து விடுவானே என்று நடுங்கி, அந்தத் தேவன் தனது சிங்காதனத்திலிருந்து ஒரே பாய்ச்சலில் கீழே குதித்தான்.

அமரர்கள் இவ்வாறு தான் போர் புரிவார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் போராடுகையில் இத்தகைய அதி பயங்கர மான கோர சம்பவங்களே நிகழ்கின்றன. அவை உட்கவிந்த பிரம்மாண்டமான நமது உலகைச் சில்லு சில்லாகப் பிளந்து விடு கின்றன.

வெள்ளியைப் போல் பளிச்சென விளங்கிய அம்புகளை உடைய பீபஸ் பகவானுனவர், முதன் முதலாகக் கடலரசனுன நெப்தியூனை எதிர்த்துச் சென்று, அந்த யுத்தக்களத்தை ஒரு கலக்கு கலக்கினுர். ஆயுதங்களின் கடவுளும் பிரம்மாண்டமான தமது பெருத்த தேகத்தை, யுத்தத்தில் வெற்றியை வழங்குபவளான பலாஸ் தேவியின் முன்னுல் கொண்டு வந்து நிறுத்தினுர். மே தேவியின் புத்திரன் லடோனு தேவியை எதிர்த்துச் சென்றுன்.

தினகரனது உடன்பிறந்தவளும் அம்பருத்தூணியையேந்திய வளுமாகிய தயானு தேவி தேவலோக ராணியும் அதி மகிமை பொருந்தியவளுமான ஸாட்டர்னியா தேவியைச் சண்டைக்கு இழுத்தாள், ஒருகை பார்த்து விடுவோம் வா ! என்று உறுமினுள். பொன்னுலாகிய அவளுடைய அம்புகள் அவளது அள்ளைப் புறத்தில் கலகலவென ஒலித்தன!

கடைசியாக நெருப்புப் போல் உக்கிரமாகத் துடித்து வந்த வல்க்கன் தேவனைப் பொன்னிறமான மணலின் மேல் உருண்டு

புரளும் புனிதமான வெள்ளங்களின் தேவன் எதிர்த்துச் சென்றான். அவனைத் தேவ பரம்பரையில் வந்தவர்கள் அஜாந்தஸ் என்றும், மனிதவர்க்கத்தார் சிபாமந்தரன் என்றும் பெயரிட்டு அழைப்பார்கள்.

இவ்வாறு தேவர்களெல்லாம் ஒரு கட்சியிலோ அல்லது மறு கட்சியிலோ சேர்ந்து பொருது வருகையில், அகிலேசன் அமானுஷியமான ஆவேசத்துடன் துடித்தான். அவனது தேகம் முழுவதும் தக தகவெனக் கொதித்தது. அவன் ஹெக்டர் எங்கே ஹெக்டர் எங்கே என்று அவனையே தேடினான். அவனைத் தேடிய வண்ணமே அவன் தன்னுடைய கண்களை நாற்புறமும் செலுத்தினான். அவனையே காண வேண்டுமென்று பொங்கினான், அவ்வாறு ஆத்திரம் கொண்டு அவன் ஒரு மின்னலைப் போல், அணிவகுத்து நின்ற சேனைகளின் மத்தியில் பாய்ந்தான். அவனது இரத்தத்தை யுத்தக் கடவுளுக்கு முட்ட முட்டப் பானமாக அளிப்பேன் என்றும் சபதஞ் செய்தான்.

இவ்வாறு பொங்கிக் கொதித்து முன்வந்த அவனை ஈனியஸ் முதன் முதலாக எதிர்த்து வந்தான். அவனை அப்பால்லோ தேவர் அந்த வீரனது வழியில் நடுமத்தியில் ஓர் ஆப்பைப் போல் அசையாமல் நிறுத்தி விட்டார். இந்த யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை அவனுக்கு இருக்கவில்லை. ஆனால் அப்பால்லோ தேவர் அவனை ஓர் அஞ்சா நெஞ்சனாக ஆக்கி, அவனுக்கு ஊக்கத்தை அளித்து விட்டதினால், அவரது பலவந்தத்தினாலும் அவர் பயமாகவும் நயமாகவும் அவனுக்குச் செய்த போதனையினாலும், அவன் இந்த யுத்தத்தில் கலந்து கொண்டான்.

அந்த அப்பால்லோ தேவர் அரச பரம்பரையில் வந்த லைக்யோனைப் போலவே குரலும் பாவனையு முடையவராய் வந்து, அகிலேசனைச் சற்று நிதானித்து ஏற இறங்கப் பார்த்துப் பரீட்சை செய்யுமாறு தூண்டினார்.

" இந்த யுத்த களத்திற்கு வெகு தூரத்திலுள்ள களங்களில் இருந்து கொண்டு நீ இந்த தேவீ புத்திரனைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அலட்சியம் செய்து வந்தனை, உன்னாலாகுமானால் என்னுடன் போருக்கு வா, என்று இவனை வலுவில் இழுத்தனை, அந்த விஷயங்களை எல்லாம் இப்பொழுது உன்னிப்பார்" என்றார்.

அஞ்சிஸின் வம்சத்தில் வந்தவனான அந்த ஈனியஸ் அவ்வசனங்களைக் கேட்டு, " நான் பிலிதீசனை எதிர்க்க வேண்டுமென்று நீ எனக்குச் செய்யும் உபதேச மெல்லாம் வீண். அது என்னால் ஆகாது. அவனை நான் ஏற்கனவே ஒருக்கால் சந்தித்தாய்விட்டது. காற்றைப் போல் பறக்கும் அவனது வேலாயுதத்தின் வேகத்தையும் நான் கவனித்து இருக்கின்றேன். அப்போது நான் கிடு கிடுவென்று பயந்து நடுங்கியே போய்விட்டேன். பயப்படாமல் தைரியமாய் இருக்கவில்லை.

நாங்கள் ஐடாமலையின் உச்சியில் ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தோம். அப்போது அவன் அவ் உச்சிகளினின்றும் சமவெளிகளை நோக்கி ஓடும்படி எங்களை அடித்துத் துரத்தினான். எங்களுடைய வீரர்களை நாற்புறமும் சிதறும்படி அடித்தான். எங்களுடைய ஆட்டு மந்தைகளையும் அடியோடு அழித்து விட்டான். லிர்னியஸ்ஸும், பிடாஸஸும் சாம்பலாய்ப் போயினர், அழிந்து பட்டனர். ஜோவ் தேவரின் கிருபையினால் மட்டுமே நான் அன்று உயிருடன் பிழைத்தேன்.

அன்று அவர் என்னைக் காப்பாற்றாமல் இருந்தாரெனில் கொடியோனான அகிலேசனும் மினர்வா தேவியும் என்னை அடியோடு வெட்டி வீழ்த்தி யிருப்பார்கள். அவ்விருவரது பலத்தினால், நான் அன்று நொறுங்கி எனது உயிரை நீத்தே யிருப்பேன். அவன் சென்ற இடமெல்லாம் அந்தத் தேவி அவனுக்கு முன்னால் பளிச் சென்று வழி காட்டிக் கொண்டு சென்றாள். வெண்கலத்தினாலான அவனது கத்திக்கு அவன் சத்துருக்களது இரத்தத்தை அபிஷேகமுஞ் செய்தான்.

அகிலேசனை எதிர்த்துச் சென்று உயிருடன் பிழைத்துத் திரும்பி, வருவதற்கு மனிதனாய்ப் பிறந்த எவனால் ஆகும்? அழிவில்லாத தெய்வங்கள் எல்லாம் அவனை இந்தப் பயங்கரமான போர்க்களத்தில், கண்ணும், கருத்துமாய் அவனது அம்பு ஒன்றாயினும், வீண் போகாமல் காத்து வருகின்றனர். கடவுள் மாத்திரம் எனக்கு உதவி செய்வாரானால் அவன் ஒரு வெண்கலக் கோபுரம் போலவே அதிக பலவானாகத் தோற்றினாலும் எனது இந்தக் கை அவனது சக்தியை அடக்கி விடும்'' என்றான்.

அந்த வசனங்களைக் கேட்ட ஜோவ் தேவரின் புத்திரன் அவைகளுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான் :—

''நீ அந்தப் பெருந்தேவரை வணங்கி வழிபடு! அப்படிச் செய்வாயானால் முன்னாளில் எவ்வாறு அகிலேசன் புஜபலபராக்கிரமங்களுடனும் தேசுடனும் விளங்கினானோ, அவ்வாறே நீயும் பொலிவுடன் விளங்குவாய்!

நீ தேவமாதாவாகிய வீனஸ்ஸின் புத்திரன்! அவன் சமுத்திரராஜனது ஒரு சகோதரியின் மகன்தானே! உனது குலம்தானே ஏற்றமுடையது!! வயது முதிர்ந்த சமுத்திரராஜனது வம்சத்தின் மூல புருஷரான ஜோவ் தேவரே உத்தமமான உனது பரம்பரைக்கு மூல புருஷர். ஆதலால் அந்த தேவரை வணங்கி வழிபட்டுப் பின்னர் உனது ஆயுதத்தை ஒரே ஒருமுறை அவனை நோக்கி ஓங்கி உயரத்தூக்கி அடித்தாய் எனில், அவன் அழிந்தே போய் விடுவான். மனிதப் பிறவியான அவனுடைய பிதற்றல்களைக்கண்டு, நீ சிறிதும் பயப்படவேண்டாம்'' என்றார்.

இவ்வாறு சொல்லியபின் அந்த உருவமானது அவனது உள்ளத்திலும் புகுந்து அங்கு ஊக்கத்தை ஊட்டிவிட்டது.

அவ்வாறு தைரியம் கொண்ட அந்த வீரன் அக்கணமே, நெருங்கிக் கூட்டமாகக் கூடியிருந்த அந்தச் சேனைகளை நெருக்கிக்கொண்டு சென்றான். அவ்வாறு அவன் துணிவுடன் முன் வந்ததைக் கண்ணுற்ற வெண்கரத்தரசி அவனைத் தலை முதல் கால்வரை கவனித்துப் பார்த்துத் தேவர்கள் அனைவரையும் ஒன்றாய்க்கூட்டி அவர்களை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தாள் :—

“தேவர்களே! இப்போது ஒரு பெருங் காரியம் நடக்கப் போகின்றது. அதை நீங்கள் கவனித்துப் பாருங்கள்! அதை நீங்கள் கண்ணும் கருத்துமாய் ஆவலுடன் பார்க்கவேண்டும், அதோ பாருங்கள்!

மகானான ஈனியஸ்ஸும் தடதடவென்று ஆத்திரத்துடன் இந்த யுத்தத்திற்கு ஓடிவருகின்றான். அவன் பிலிதீசனையே நோக்கி வருகின்றான்.

பீபஸ்பகவான் அவனைத் தூண்டுகின்றார். அவரே அவனுக்குச் சக்தியையும் அளித்து வருகின்றார். அவனது துணிச்சலைத் தணித்து விடுங்கள்; இவ்வளவு துணிவுடன் அவன் முன் வரலாகாது!

அது முடியாதென்றால், நமது அன்பிற்குப் பாத்திரனான வீரனுக்குத் துணையாக இருப்பதற்காவது உங்களில் யாரேனும் ஒருவர் இங்கிருந்து இறங்கிச்செல்ல வேண்டும். அவனது உயிரைக் காப்பாற்றவும் அவனது கீர்த்தியை மேன்மேலும் விருத்தி செய்யவுமன்றோ, தேவலோகபாலகரான நாம் இங்கு இந்த பூலோகத்திற்கு இறங்கி வந்தோம்! அதிதிவ்யமான கீர்த்தியுடன் விளங்கிய மரபில்வந்த அவனுக்கு ஐயோ, தேவிமார்கள் எல்லாம் அதிசீக்கிரம் குறுகிவரும் ஆயுளையன்றோ அளித்து விட்டனர்! அவர்கள் விதித்தபடியே காரியங்கள் நடக்கட்டும்! என்றாலும் அவன் யுத்தம் முடிந்த பின்னரே தனது உயிரை விடவேண்டும் என நான் கோருகின்றேன்.

ஆதலால் இச்சமயம் தேவர்களில் யாராயினும் ஒருவர் அவனுக்கு விரோதமாகச்சென்று அவனைக் குறுக்கிட்டுக் காரியங்களைக் கெடுத்து விடாமல் இருக்கவேண்டும். அந்த உத்தேசத்துடன், நீங்கள் அவனிடம் சென்று இன்றைய தினம் எந்தத் தேவர்கள், எந்தெந்தக் கட்சியிலிருந்து உதவி செய்கின்றனர் என்று அவனுக்கு அறிவியுங்கள்.

ஒளியுடன் விளங்கும் தேவர்கள் அனைவரும் ஒழுங்காய்த் திரண்டு ஆயுதபாணிகளாக யுத்தத்துக்குச் வந்து விடுவார்களாயின் மனிதப் பிறவிகளான மர்த்தியர்கள், அப்போது உண்டாகக் கூடிய அபாயங்களுக்கு எவ்வாறு ஈடுகொடுப்பார்கள்? அவற்றினின்றும் எவ்வாறு தப்புவார்கள்” என்றாள்.

அதைக் கேட்டவுடன் அழிவில்லாத அஸ்திவாரமுடைய உறுதியான பூமண்டலத்தையும் அசைத்து ஆட்டிவிடக்கூடிய வருண நெப்தியூன் தேவன் பின்வரும் மொழிகளை உரைத்தான்:—

“மனிதர்களது சக்தி எவ்வளவு அற்பமானது என்பது நம் எல்லோருக்கும் தெரிந்திருந்தும், தேவலோகவாசிகளும் அதிபல வான்களுமான நாம் ஏன் நமது சக்தியைக்கொண்டு அவர்களுக்கு விரோதமாக அவர்களை எதிர்த்துச்செல்ல வேண்டும்? அதோ அங்கு காணும் குன்றின்மேல் இருந்த வண்ணம் நாம் இந்த யுத்தத்தைக் கண்ணெடுத்து பார்த்து வந்தால் போதுமே. மர்த்தி யர்களுக்கு விதித்துள்ள கதியை அவர்கள் அடையட்டும் என்று நாம் அவர்களை விட்டு விட்டுச் சும்மா இருப்பதே தகுதி.

அவ்வாறின்றி ட்ராய்க்கு உதவி செய்யவேண்டும் என்னும் எண்ணத்துடன் சேனு பலம் மிகுந்த தேவனுவது அல்லது ஒளியின் தேவனுவது முன் வந்து அகிலேசனைத் தடுத்தாலும் அல்லது யுத்தத்தை ஆரம்பித்தாலும் அக்கணமே நாம் அந்தத் தேவர்களின்மேல் ஒரே பாய்ச்சலில் விரைந்து பாய்வோம். அப்போது இந்த யுத்தம் அதிவிரைவில் முடிந்துபோம் என்பதில் சிறிதும் ஐயமில்லை, அப்போது உண்டாகும் சேதங்களையும் குழப்பங்களையும் கண்டு அந்தத் தேவர்கள் பிரமித்துப்போவார்கள். இன்னது செய்வதென்று அறியாமல் திகைத்து நிற்பார்கள். நமது காலடியிலிருக்கும் பூலோகத்தையும் அவர்கள் ஜெயசாலிகளான நமக்கு விட்டுக்கொடுத்து விடுவார்கள், வலிகுன்றிப் போவார்கள்” என்றுன்.

இவ்வாறு சொல்லிய பின்னர், கிருலியன் நெப்தியூன் என்னும் பெயரை உடைய கொடுங்கோல் மன்னனுன அந்த சமுத்திரராஜன், தனது இடத்தைவிட்டு எழுந்து எல்லோருக்கும் முன்னுக, வழி காட்டிக்கொண்டு முன்சென்றுன். அப்போது அந்தப் போர்க்களத்தில் அவர்களுக்கு முன்னுல் ஓர் இறுகிய மண்மேடும் அதைச் சுற்றிலும் அகழிகளும் இருந்தன. (முன்னுளில் கடலிலிருந்து புறப்பட்டுவந்த ஓர் அரக்கன் அந்த ட்ராயின் கரையைப் பிளந்து சூறையாடி அல்ஸைடீஸை நாட்டிற்குள் துரத்தியபொழுது அந்த அல்ஸைடீஸே அந்த மேட்டையும் அகழ்களையும் கட்டினுனும். மினர்வா தேவியின் உதவியைக்கொண்டு துரோஜர்கள் அவைகளைக் கட்டினுர்களாம்) இந்த இடத்திற்கு நெப்தியூனும் கிரேக்கர்களது ஸஹாயிகளான தேவர்களும் சென்றனர். அப்போது மேகங்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டன. ஆகாயமும் அவர்களை ஒரு திரைபோல் மறைத்து வந்தது.

எதிர்க்கட்சியில் சேர்ந்து கொண்ட மற்றைய தேவர்களெல்லோரும், அப்பால்லோ தேவரைச் சூழ்ந்து கொண்டனர். அவர்கள் அனைவரும் வெள்ளிபோன்ற சிமோயி நதிக்கு நிழலைத் தந்துவந்த அழகான மலைகளின் உச்சியில் இருந்தனர்.

இவ்வாறு தேவர்களின் இவ்விரு கட்சிகளும் வட்டவடிவில் நெருங்கி உட்கார்ந்துகொண்டு, இனிமேல் செய்ய வேண்டுவது என்ன என்று வருங்காலக் காரியங்களை ஆராய்ந்து அவற்றை வரை யறுக்கவேண்டுமென்று கண்ணும் கருத்துமாய் இருந்தனர்.

அப்போது யுத்தம் ஆரம்பிக்க வேண்டிய காலம் சமீபித்து விட்டது! எல்லோரும் யுத்தத்தை ஆரம்பியுங்கள் என்று ஜோவ் தேவர் தமது உயர்ந்த ஆசனத்திலிருந்து உரத்துக் கூவினர். அந்தக் கூக்குரலானது எதிரொலியையும் கிளப்பியது. வானமே நடுங்கியது எனினும் இரு கட்சியிலும் இருந்த தேவர்கள் அவருடைய கூக்குரலையாவது அவைகளின் எதிரொலியையாவது கவனிக்காமல் இருந்து விட்டனர், யுத்தத்திற்குக் கிளம்பவில்லை.

இதன் மத்தியில் தடதடவென்று ஓடிவந்த சேனைகள் அலைகள்போல் திரண்டு முன்வந்தன. அந்தக் களத்தை மறைத்தே விட்டன. அவர்கள் திமுதிமென வந்தபொழுது அக்களத்தின் மத்தியபாகமானது கிடுகிடுவென்று அதிர்ந்தது. கவசங்கள் போர்த்தப் பெற்றிருந்த போர்க் குதிரைகளும், பளிச்சென்று விளங்கிய ஆயுதங்களை ஏந்திய வீரர்களும் அங்குப் பிரஸன்ன ராயினர். அவர்களுடைய கவசங்களிலிருந்தும் ஆயுதங்களிலி ருந்தும் வீசிய ஒளியானது, வெண்கலத்தினின்றும் வீசும் ஒலியைப் போல் அந்த யுத்த களத்தையே ஜோதிமயமாக மாற்றிவிட்டது.

இருதிறத்தாருடைய சேனைகளின் நடுவிலிருந்த களமானது, அதி பயங்கரமாகத் தோற்றியது. அக்களத்தின் ஒரு புறத்தில் மகானுன அகிலேசனும், மறுபுறத்தில் அதி தைரியவானுன ஈனியஸ்ஸும் நின்றிருந்தனர்.

ஈனியஸ் ஒரு பெருத்த கோபுரத்தைப்போல் எட்டியெட்டிக் காலை வைத்துக்கொண்டு முதன் முதலாகத் தனது சத்துருவை நோக்கி முன் வந்தான். அப்பொழுது அவனது கிரீடத்தில் அசைந்து கொண்டிருந்த துராயானது ஒரு நாட்டியக்காரனைப் போல் மேலுங் கீழும் இப்புறமும் அப்புறமும் கடகடவென்று சுழன்றது. தனக்கு ரக்ஷையாக அவன் தனது கேடயத்தைக் கொண்டு தனது மார்பை முற்றிலும் மறைத்துக் கொண்டிருந்தான். அவன் இப்புறமும் அப்புறமும் திரும்பியபொழுது அவன் கையி லிருந்த ஈட்டியானது தணலைப்போல் கொழுந்து விட்டுக்கொண்டு அவனுக்கு முன் பிரகாசித்தது.

ஆனல், பிலிதீசன் இவ்வாறு ஒருவிதமான ஆடம்பரங் களுடனும் விளங்கவில்லை. தனது சத்துருவைச் சந்தித்து அவ னுடன் போர் புரிய வேண்டுமென்ற ஆத்திரத்துடன் மாத்திரம் அவன் துடித்துக் கொண்டு தடதடவென்று தலைகால் தெரியாமல் அவசரமாக ஓடி வந்தான்.

கோபமும் தாபமும் உள்ள ஒரு சிங்கமானது, திரளான ஜனங்கள் வசித்து வரும் ஒரு நகரத்து மக்கள் அனைவரும் ஒரே

யடியாய் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு தன்னை நோக்கி வரு வதைக் கண்டால், அது முதன் முதலாகத் தன்னுடைய சத்துருக் களைச் சிறிதும் சட்டை செய்யாமல், அலட்சியமாகவும், நிர்ப்பய மாகவும், தனக்கு நிகர் யாருமில்லை என்ற கர்வத்துடனும் ஒய்யார மாக எட்டியெட்டி நடந்து செல்கின்றது.

கடைசியாக தைரியவானுன ஒரு வீரன் தன்னை எதிர்த்து வந்து விட்டால் அது, தான் மாத்திரமே ஒண்டியாய் அவனை எதிர்த்து அவனது ஈட்டியின் வலிமையையும் பரீட்சித்து விடு வோம் என்று அவனை முன்னிட்டுத் திரும்புகின்றது. பின்னர் சீறு கின்றது. தாழ்ந்த குரலுடன் அவனை நோக்கித் தனது பல்லை இளிக்கின்றது. நுரையைக் கக்குகின்றது. தன்னுடைய கண் விழி களையும் உருட்டுகின்றது. தனது வாலைக் கொண்டு தனது அள்ளைகள் இரண்டையும் மாற்றி மாற்றி அடித்துக் கொள்ளு கின்றது. அப்போது அந்த அள்ளைகள் தடதடவெனப் பொங்கிக் கொதித்து அடுத்துக் கொள்ளுகின்றன.

பின்பு அது தனது வேகம் முழுவதையும் ஒன்ருய்த் திரட்டிக் கொண்டு, ஒன்று தனக்கு நேர்ந்த சிறுமைகளுக்குப் பழிவாங்கி விடுவது, அல்லது தனது உயிரை மாய்த்து விடுவது என்று தீர்மானித்துத் தன்னுடைய பற்களை நறநறவென்று அரைக்கின்றது.

இவ்வாறு கோபதாபங்கள் கொண்டுள்ள ஒரு சிங்கத்தைப் போலவே, அகிலேசனும் ஈனியஸ்ஸை நோக்கிப் பாய்ந்தான். ஈனியஸ்ஸும் ஒரு சிங்கத்தைப்போலவே அவனை எதிர்த்து நின் ருன். இவ்வாறு இவ்விரண்டு சிங்கங்களும் கைகலந்து யுத்தத்தை ஆரம்பிக்கு முன், தெட்டிஸ் தேவியின் கர்ப்பத்தில் உதித்தவன், வீனஸின் மகனை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தான் :-

" ஈனியஸ் இவ்வளவு தூரம் இந்த யுத்தத்திற் பிரவேசித்து வருவதற்கு என்ன காரணம்? அகிலேசன் ஆயுதங்களைப் பதம் பார்க்க வேண்டுமென்று தான் அவன் இந்த யுத்தத்துக்கு வந்து விட்டனனு? பிரியத்தின் ராஜ்யத்தைக் கைப்பற்றி அதனை ஆள லாமென்று ஆசை கொண்டனனு? ட்ராய் சிங்காதனத்திற்குத் தானும், யோக்கியதையும் பாத்தியதையும் உள்ளவன்தான் என்று தனது யோக்கியதையையும் பாத்தியதையையும் ஸ்தாபிக்கத் தான் முன் வந்து விட்டனனு?

இது இருக்கட்டும் அகிலேசன் உனது ஈட்டிக்கு இரை யாகி விட்டான் என்றே வைத்துக்கொள்வோம். என்ருலும் பக்ஷபாதியான ட்ராய் அரசன் உனக்குத் தனது ராஜ்யத்தை வெகுமதியாகக் கொடுக்க மறுத்து விடலாமன்ரே? அவனுக்கு எண்ணிருந்த புத்திரர்கள் இருக்கின்றனர். அவர்கள் உன்னை வென்று உனது பெருமையை அழித்து விடலாம்! அவன் அவர் களிடம் மட்டற்ற அன்புடையவனுக இருக்கின்ருன்!

நான் சொல்லும் இவ்விஷயங்கள் அனைத்தும் தவறு, அவற்றில் சிறிதேனும் உண்மையில்லை, அவன் உன் விஷயத்தில் நன்றி உள்ளவனாக இருப்பான் என்று வைத்துக் கொண்டாலும் அவன் உனக்கு என்ன வெகுமதி அளிக்கப் போகின்றான்? விசால மான ஒரு பூமியை அளிப்பதாகச் சொல்லி யிருக்கின்றனனா? அல்லது ஒரு பெருத்த காடோ, செழித்த நாடோ, திராக்ஷைக் கொடிகள் வளரும் குன்றுகளோ, தானியங்கள் விளையக்கூடிய வயல்களோ ஆகிய இவைகளில் ஏதேனும் கொடுப்பதாக அவன் எப்பொழுதாயினும் உனக்கு வாக்களித்துளனோ?

இவ்வாறு நான் குறிப்பிட்ட காடுகளையும் நாடுகளையும் குன்றுகளையும் வயல்களையும் தோட்டந்துரவுகளையும் கொடுப்ப தாக அவன் சொல்லியிருந்தாலும் அவற்றில் உனக்கு என்ன பயன் உண்டாகும்? உனக்கு ஏற்பட்டுள்ள தலைவிதி மாறி விடுமா? உனக்கு அதிர்ஷ்டம் பொங்குமா?

நீயும் அகிலேசனை அவ்வளவு சீக்கிரம் மறந்து விடலாமா? பளபளவெனப் பிரகாசிக்கும் இந்த ஈட்டியை நீ முன்னொருகால் பார்த்திருக்கின்றாய் என்று நான் நினைக்கின்றேன். அப்போது மகானான ஈனியஸ், நீ தான், அதைக்கண்ணுற்று பயந்து நடுங் கினான். அப்போது அவன் அதிவேகத்துடன் பெற்றேன், பிழைத் தேன் என்று ஐடாமலையினின்று ஓட்டம் பிடித்தான். அவன் லிர் ஸஸ்ஸினிடம் சென்று சேரும்வரை தனது தலையைக் கூடத் திருப் பிப் பார்க்கவேயில்லை!

நாங்களும் அதை நோக்கியே சென்றோம். அவ்வூரிலிருந்த ஆகாயமளாவிய கோட்டைமதில்கள், நாங்கள் முன் செல்வதை நெடுநேரம் வரைத் தடுக்க இயலாமற் போயின. அம்மதில்களைப் பாலாஸ் தேவியும் ஜோவ் தேவரும் நாங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து அழித்துத் தரைமட்டம் ஆக்கினோம், புழுதியிற் புகுத்தினோம், மேலும் அங்கு நாங்கள் அந்த நாட்டு ஜனங்கள் அனைவரையும் சிறைபிடித்துக் கிரேக்கச் சங்கிலிகளினாற் கட்டினோம். அச்சமயம் அந்த மகானான ஈனியஸ் வெகு துரிதமாகத் தலை தெறிக்க ஓட்டம் பிடித்தான்! இது உண்மையாக நடந்த காரியம்.

இவ்வாறு எனக்குக் கிடைக்க வேண்டிய லாபத்தை அடையாமல் நான் முன்னாளில் ஏமாந்து போய் விட்டேன். அந்த லாபத்தைத் தெய்வங்கள் இப்போது எனக்கு அளிக்கப் போகின்றனர். ஆதலால் நான் சொல்லுவதைக் கேள். முந்தாதே திரும்பிச் செல், உனக்கு வரவிருக்கும் ஆபத்தை முன்னறிந்து அதற்குத் தப்பிக்கொள். மூடாத்மாக்கள் தான் ஆபத்து வரும் வரைக் காத்திருப்பார்கள். அது வந்தபின் மோசம் போனோமே என்று வருந்துவார்கள். அப்போது தான் அவர்களுக்கு நல்ல புத்தி பிறக்கும் " என்றான்.

இந்த வசனங்களுக்கு அஞ்சீஸின் மகன் பின்வருமாறு மறு மொழி பகர்ந்தனன் :—

" அட நீ இந்த வசனங்களை யாருக்குச் சொல்லுகிறாய்! உன்னைக் கண்டு பயப்படும் ஒருவனுக்கன்றோ நீ இவைகளைச் சொல்ல வேண்டும்? யுத்தம் என்பது இன்னது என்று அறியாத குழந்தைக்கன்றோ நீ இவ்வசனங்களை உரைக்க வேண்டும்? நாம் திருணமாக நினைக்கும் ஆட்களுக்கன்றோ, நீ இவ்வுரைகளைச் சொல்லவேண்டும்?

உத்தம குலத்திற் பிறந்தவர்களை இழித்துக் கூறியும், அவர்களிடம் ஓர் ஆண்மகனுக்கு அழகில்லாத கர்வத்தைச் செலுத்தியும், ஒருவன் அவர்களைச் சண்டைக்கு இழுக்கலாம்.

ஆனால் நாம் இருவரும் மிகவும் உயர்ந்த குலங்களில் உதித்தவர்கள், அக்குலங்களின் பெருமைகளை உலகோர் அனைவரும் ஏகோபித்து உரத்துக் கோஷிக்கின்றனர். உன்னுடைய வார்த்தைகள் நமது மரபிற்கு அழகாக இருக்கவில்லை. நாம் இருவரும் அதிபராக்கிரமசாலிகளான வீரர்களுக்குப் பிறந்தவர்கள். நம்முடைய தந்தைகள் உயர்ந்த கீர்த்தியுடன் விளங்கியவர்கள், மேலும் நாம் இருவரும் இரண்டு தேவலோக மாதர்களுக்குப் பிறந்தவர்கள். நமது பிறப்பு ஒருபாதி மனிதப் பிறப்பு, மறுபாதி தெய்வப் பிறப்பு.

இன்றைய தினம் தெட்டீஸ் தேவியின் புத்திரனோ அல்லது வீனஸ்ஸின் வயிற்றிலிருந்து வந்தவனோ ஆகிய இவ்விருவர்களில் ஒருவன் இறப்பது நிச்சயம். அப்பொழுது தேவலோக வாசிகள் அந்த மரணத்தை முன்னிட்டுத் தங்களது கண்ணீரை ஆறாய்ப் பெருக்குவார்கள். ஏனெனில் இவ்வாறு உன்னதமான குலத்தில் உதித்து வந்த இரண்டு வீரர்கள் பொருவரேல், அவர்களது போரானது வாய் வர்த்தைகளுடனே அல்லது வாக்கு வாதத்துடனே முடிவு பெறாது!

இது காறும் நான் சொல்லியது போதாது. எனது பிறப்பின் விசேஷத்தை இன்னும் அதிகமாக அறிய வேண்டுமென்று நீ விரும்புவாயாயின் சொல்லுவேன் கேள். அந்தக் கதையை இந்தப் பரந்த உலகிலுள்ள ஜனங்கள் அனைவரும் திரும்பத் திரும்பச் சொல்லி வருகின்றனர். அது அதியற்புதானது; அதைச் சொல்லுவேன் கேள்.

ஜோவ் தேவரின் மூத்த புதல்வரான டார்டான்ஸ் என்பவரே எங்களது மூலபுருஷர். அவர் அதிபுராதன காலத்தில் வாழ்ந்து வந்தவர். அவரிடம் இருந்து தான் நாங்கள் உற்பத்தியானோம். அவர் டார்டானியாவுக்குப் கோட்டை மதில்களை எழுப்பினார். அப்போது இலியன் நகரம் இருக்கவில்லை. வெகு காலத்திற்குப் பின்னர்தான் அந்த நகரம் உண்டாயிற்று. அங்கு பல

பாஷைகளையும் பேசும் ஜனங்கள் இப்போது வசித்து வருகின்றனர். அப்போது அங்கு பிறந்த ஜனங்கள் எல்லோரும் ஊற்றுகள் நிறைந்துள்ள ஐடாமலையின் அடிவாரத்தில் நிழல் பரந்திருந்த நிலங்களைப் பயிர் செய்வதே போதுமென்று திருப்தி உள்ளவராக இருந்தனர்.

டார்டான்ஸ்ஸுக்கு மகனுன இரித்தோனியஸ் என்பவர் உண்டானுர். அவர் ஒருக்கால் தனவான்கள் நிறைந்துள்ள ஆசியாக் கண்டத்து அரசர்களுக்கெல்லாம் தலைவராகவும், அதி தனவானுகவும் விளங்கினுர். விசாலமான அவருடைய மேய்ச்சல் நிலங்களில் ஒன்றுகூடக் குறையாத மூவாயிரம் பெண் குதிரைகள் மேய்ந்து வந்தன. அக்குதிரைகளின் மூவாயிரம் குட்டிகளும் தத்தம் தாய்மாரின் சமீபம் இருந்து தீனி அருந்தி வந்தன.

அந்த வீரம் நிறைந்த குதிரைகளைக் கண்டு அவற்றின்மேல் காமங் கொண்ட போரியாஸ் தேவன், தனது உருவத்தை ஓர் அடர்ந்த பிடரிமயிர் கொண்ட குதிரையைப் போலும் தனது குரலை ஒரு குதிரையின் குரலைப் போலவும் மாற்றிக் கொண்டு அவைகளிடம் காதல் கொண்டு கொஞ்சிக் கனைத்து, அந்தப் புள்ளிகள் நிறைந்த அழகான குதிரைகளுடன் அந்த மைதானத்தைச் சுற்றி வந்தான். அவன் அந்தக் குதிரைகளுடன் சேர்ந்ததினுல் அப்போது பன்னிரண்டு நிகரற்ற வேறு குதிரை வம்சங்கள் உண்டாயின.

அவை தங்களுடைய தாய்க் குதிரைகளைப் போன்ற விரைவும் தகப்பனைப் போன்ற காற்ருய்ப் பறக்கும் வேகமும் உடையவையாயிருந்தன. அவை மைதானத்தின் மேல் ஓடி விளையாடி வருகையில் தங்கள் பாதங்களை நிலத்தின் மேல் மிகவும் மெதுவாக வைத்த பொழுது, புற்கள் வளையவில்லை, இளம் பயிர்களும் தங்களது தலையைத் தணிக்கவில்லை. மேலும் அலைகளின்றி அமைதியாக அடங்கியிருந்த கடல்களின் ஓரமாக அவை பறந்து சென்றபொழுது, உவர்நீர் கொண்ட பனியும் அக்கரைகளின் மேல் துளிகளாக உறைந்து உருண்டு விழவில்லை.

இரித்தோனியஸ் இத்தகைய பெருமைகளை உடையவராய் விளங்கியவர். அவரிடமிருந்து புண்ணியாத்மாவான ட்ரோஸ் உதித்தார். அவரே துரோஜரது வம்சத்துக்கு அந்தப் பெயரைத் தந்தவர். அவர் இல்லறம் புகுந்து மணம் செய்து கொண்டு மூன்று புத்திரர்களைப் பெற்ருர், அவர்களுக்கு ஐலஸ், அஸ்ஸாரகஸ், கானிமீட் என்று பெயர்.

கானிமீட் என்பவர் தேவர்களைப் போன்ற ரூபலாவண்ணியங்களுடனும் ஒப்புயர்வற்ற வீரசூரப் பராக்கிரமங்களுடனும் விளங்கினுர். அவரிடம் விசேஷமான அன்புகொண்ட தேவர்கள், ஜோவ் தேவருக்குப் பானம் பரிமாறுவதற்கு அவர் தான் தகுந்தவர் என்று மதித்து அவரை விண்ணுலகத்திற்குப்

பலவந்தமாகக் கொண்டு சென்றனர். ஜோவ் தேவர் மற்றெல்லாத் தேவர்களாலும் ஆராதிக்கப்படும் விருந்தாளியன்றோ? அமிர்த பானத்துடன் தேவர்கள் செய்யும் விருந்திற்குப் பெருமையையும் சோபையையும் அளிப்பவர் ஜோவ் தேவர் அன்றோ?

கானிமீடொழிந்த மற்றைய இரண்டு புதல்வர்களும் தங்களது மரபிலிருந்து இரண்டு கிளைகளாகப் பிரிந்தனர். ஐலஸ்ஸின் மரபிலிருந்து லயோமீடான் என்பவர் பிறந்தார். அவருக்கு டித்தோனியஸ் என்பவர் பிறந்தார். இந்த டித்தோனியஸ் இப்போது பல கவலைகளையும் மேற்கொண்டு அவை காரணமாக மெலிந்து விருத்தராக விளங்குகின்றார். அவருக்குச் சகோதரர்களாக ஹெக்டரின் பிதா வீரசூரரான பிரியமும், அழியாக் கௌரவம் உள்ள இரட்டையர்களான கிளைட்டியஸ்ஸும், லாம்பஸ்ஸும், யுத்தகளத்தை ஓர் இடியைப் போல் கலக்குபவரான ஹிஸித்தயோன் என்பவரும் பிறந்தனர்.

மகானான அஸ்ஸாரகஸுக்கு கேப்பிஸ் என்பவர் பிறந்தார். அவர் அஞ்சீஸைஸையும், அஞ்சீஸைஸ் என்னையும் பெற்றனர். எங்களது வம்ச பரம்பரை இத்தகைய ஏற்றமுடையது.

நம் எல்லோருக்கும் அதிர்ஷ்டவசத்தால் நற்குலத்தில் ஜனனம் உண்டாகின்றது. ஆனால் ஜோவ் தேவரின் கிருபையாலும் கருணையினாலும் மாத்திரமே நமக்கு நற்குணமும் நன்மனமும் உண்டாகின்றன. அவர்தான் வீரசூரங்களுக்கு மூலம். வரம்பென்பது சிறிதும் இல்லாத அதிகாரம் செலுத்துபவரான அவர் தமது சித்தப்படி மனிதர்களுக்குத் தைரியத்தை அளிக்கின்றார். அந்தத் தைரியத்தை அகற்றியும் விடுகின்றார். அவருக்கு நிகர் யார் உளர்?

சொற்களத்தில் நாம் வெகுநேரம் போராடலாம்; வாதாடலாம்; அதனால் பயன் என்ன? தூஷணைகளுக்கு எல்லை இல்லை, முடிவுமில்லை. மெய்யோ, பொய்யோ, நியாயமோ அநியாயமோ என்பவற்றைச் சற்று நிதானித்து ஆராயாமல், நமது நாவானது தடதடவெனச் சரங்களை விடுகின்றது.

நமக்குத் தீங்கு நேர்ந்துவிட்டால் நாம் அதற்குப் பிரதியாகத் தீங்கையே செய்து விடுகின்றோம். கக்ஷிகள் ஒன்றுக்கொன்று இளைப்பதில்லை, தோல்வி அடைவதுமில்லை. பொல்லாங்குகளை உரைப்பதில் எல்லோருக்கும் சமமான சக்தியே இருக்கின்றது.

தெருவில் நின்று சண்டை சச்சரவுகளைச் செய்யும் ஸ்திரிகள் தான் இந்த வாய்ச் சண்டையில் நம்மை மிஞ்சி விடுகின்றனர் என்று ஒருவாறு சொல்லலாம். அந்த ஸ்திரீகள் நம்மைப் போலவே, தெருவிலுள்ளோர் அனைவரும் தங்களைச் சூழ்ந்து நின்றுகொண்டு வேடிக்கை பார்த்து வருகையில், சிறிதும்

பயனின்றித் தங்களுடைய கோபதாபங்களைப் பறை அறைந்தாற் போல், பறக்க அடிக்கின்றனர். ஆதலால் நீ, இந்தப் பேச்சு வார்த்தைகளை இத்துடன் நிறுத்து.

யுத்தகளத்திற்கு வந்தபின் நாம் நமது பலாபலங்களைக் காட்ட வேண்டுமே அன்றி வீண் வாதங்களில் காலங் கடத்த லாகாது. இதுவரை நீ எனக்குச் செய்த அவமரியாதைகளுக்கு இதோ சரியான உத்தரம் தருகின்றேன். இதை ஏற்றுக்கொள். இதோ எனது ஈட்டி பறக்கின்றது பார் " என்றான்.

அவ்வாறு சொல்லிய வண்ணமே அவன் தனது முழுபலத் துடன் தனது ஈட்டியை விடுத்தான். அவ்வாறு விடுக்கப்பட்ட அந்த ஈட்டியானது, அகிலேசனது கேடயத்தைத் தாக்கிக் கணீர் என்று ஒலித்துக் கொண்டு அதன்மேல் ஆழமாக ஊன்றியும் விட்டது. இடிபோல் முழக்கங் கொண்டு வந்த அந்த ஈட்டியை வழிமறித்துச் சந்திக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் பிலிதீசன் தனது பயங்கரமான கேடயத்தைத் தனது கையை நீட்டித் தூர மாகப் பிடித்துக் கொண்டு இருந்தான். அந்தக் கேடயத்தை அந்த ஈட்டி தாக்கிய பொழுது அது கிடுகிடுவென்று நடுங்கியது. பின்பு அந்த ஈட்டி கீழே தரையின் மேலும் விழுந்தது.

அளவிடற்கரிய அந்த ஈட்டி அவ்வாறு விழுமுன் அதைக் கண்ணுற்ற அகிலேசனும் அஞ்சினான். மனநிலையுங் குலைந்தான். ஆனால் அவன் அவ்வாறு அஞ்சுவதற்குப் போதுமான காரணம் இருக்கவில்லை. ஏனெனில் ஒருவராலும் மாற்றமுடியாத மந்திர சக்தியானது தேவலோகத்தில் நிருமிக்கப்பட்டிருந்த அவனுடைய ஆயுதங்களைக் காப்பாற்றி வந்தது. அந்த ஈட்டியின் முனையானது அகிலேசன் அணிந்து கொண்டிருந்த கவசத்தின் உறுதியான இரண்டு தகடுகளை ஊடுருவிச் சென்று மூன்றும் தகட்டினையும் தாக்கியது. ஆனால் அந்த மூன்றும் தகட்டினையும் துளைத்துக் கொண்டு உட்செல்ல அதற்கு இயலாமற் போயிற்று. அப்பொழுது அது அவ்விடம் நின்று தனக்கு நேர்ந்த களைப்பை ஆற்றிக் கொண்டது.

அந்தக் கவசமானது பற்பல உலோகங்களினால் உண்டாக் கப்பட்ட ஐந்து தகட்டினாற் செய்யப்பட்டிருந்ததுமன்றி அதன் பல பாகங்களும் விதம் விதமாக வார்க்கப்பட்டிருந்தன. வெளிப்புறம் விளங்கிய தகடானது பித்தளையினாலும், உட்புறத் தகடுகள் தகரத் தினாலும், அவற்றின் நடுவிலுள்ள தகடுகள் பொன்னினாலும் ஆக்கப்பட்டிருந்தன. ஈனியஸ்ஸின் ஈட்டியானது இந்தப் பொற் தகட்டைத் தாக்கிய பொழுது தான் அதன் முனை முறிந்து போயிற்று.

அப்பொழுது அதுவரை வாளா நின்றுவந்த மகானான அகி லேசன் சுறுசுறுப்புடன் நெடு நெடுவென உயர்ந்து விசையும் வலி யுமுள்ள தனது ஈட்டியை விடுத்தான். அது காற்றாய்ப் பறந்தது ;

அவ்வாறு தீவிரமாய் பறந்து சென்ற அந்த ஈட்டியானது அந்த டார்டானது கவசத்தின் அடிப்பாகத்தை நன்ருய் குத்தித் துளைத்துவிட்டது. அப்பொழுது அந்தக் கவசத்தில் உபயோகப் படுத்தப்பட்டிருந்த பித்தளைத் தகடு எதிரொலியைக் கிளப்பிக் கொண்டு கணீர் என்று ஒலித்தது. அந்த ஒலியினும் அதன் எதிரொலியே மிகவும் பலமாக இருந்தது!

பிலிதீசன் விடுத்த ஆயுதமானது டார்டானது கவசத்தின் மிருதுவான விளிம்பின் வழியாய் வெகு இலகுவாக உட்சென்று அவன் தனது தேகத்தின் மேல் அங்கியாக அணிந்திருந்த மெத்தை போன்ற தோற் போர்வைகளையும் துளைத்துவிட்டது. அப்பொழுது ஈனியஸ் தனது தேகத்தைக் குறுக்கிக் குனிந்து கொண்டு, உடைந்து போய்விட்ட தனது கவசத்தையே தனக்கு மேல் உயர்த்திப் பிடித்துக்கொண்டான்.

அந்தக் கவசத்தில் அச்சமயம் உண்டாயிருந்த துவாரங் களின் வழியாய் அண்ணுந்து ஆகாயத்தையும் நோக்கினுன். அப் பொழுது அந்த ஈட்டியானது தனக்குப் பின்புறம் கடகட வென்று துடித்துக் கொண்டிருப்பது அவனுக்குக் கட்புலனுயிற்று. அப் பொழுது அவன் நமக்கு ஆபத்து இவ்வளவு அண்மையில் வந்து விட்டதே என்று பயந்தான், நடுங்கினுன். அவனது தீவிர உணர்ச்சியும் சிலிர்த்துப் போய்விட்டது. அப்பொழுது பல நிறங் கொண்ட ஒரு வெளிச்சமானது தன்னை நோக்கி நீந்தி வருவதும் அவனுக்குக் கட்புலனுயிற்று.

அச்சமயம் அகிலேசன் பயங்கரமான சப்தங்களைச் செய்து கொண்டு உருவிய கத்தியுடன் அவனை நோக்கி வேகமாக ஓடி வந்தான். இவ்வாறு அந்தச் சத்துரு தன்னை நோக்கி வருவதைக் கண்ணுற்ற ஈனியஸ் மயக்கந் தெளிந்து சுறுசுறுப்புடன் தனது முழு பலத்தையும் ஒன்ருய்த் திரட்டிக் கொண்டு ஒரு பெருத்த பாருங்கல்லைப் பெயர்த்து எடுத்துக் கொண்டான். அது அளவில் மிகப் பெரியது. வலியிழந்த மானிடப் பதர்கள் வாழும் இக்காலத் தில் அக்கல்லை இரண்டு மனிதர்களால்கூட இருந்த இடம்விட்டுப் பெயர்க்க இயலாது.

அப்பொழுது தம்முடைய பூகம்பங்களின் மூலமாய்ப் பூமியை ஆட்டி வைப்பவரான சமுத்திர ராஜன் இந்த ஆபத்தைக் கண்ணுற்றுத் தம்மைச் சுற்றியிருந்த தேவர்களை நோக்கிப் பின் வரும் வசனங்களை யுரைத்தார் :—

"அஹோ தேவர்களே! அதோ அங்கு பாருங்கள்! ஈனி யஸ்ஸுக்குப் பெரிய ஆபத்து வந்துவிட்டது. அவனை அகிலேசன் ஒருகணத்தில் அந்தகனது உலகுக்கு அனுப்பிவிடப் போகின்ருன். பீபஸ்ஸே இந்த ஆபத்துக்குக் காரணம். பீபஸ்ஸின் சகாயம் இருந்தாலும் பயன் ஒன்றும் உண்டாகவில்லை. கேவலமான ஒரு மனிதன் அந்தக் கடவுளையும் மடக்கி விடுகின்ருனே!

இந்த வீரன் ஈனியஸ் அதி நீதிமான். ஒரு பாவமும் அறியாதவன், நிரபராதி. அபராதிகள் ஒரு புறமிருக்க இந்தச் சுத்தாத்மா தனது இரத்தத்தை வடித்து வருகையில், நாம் அதைக் கண்ணுற்று வாளாயிருக்கலாமா? அவர்களுடைய பாபத்திற்கும் அநீதிக்கும் இவன் பலியாவதை நாம் பார்த்து வருவது நீதியாகுமா? சகலமான தேவர்களுக்கும் அவன் நிமித்தம் நைவேத்தியங்களும் காணிக்கைகளும் இடைவிடாமல் செலுத்தப்பட்டன.

அவன் இந்தப் பாவிகளான ட்ராய்க்காரரது கட்சியில் நின்று பொருது வந்தாலும், நாம் அவனைக் கைவிடலாகாது. நாம் அவனைக் காப்பாற்ற வேண்டுவது அவசியம். நம்மாலான உதவியை நாம் அவனுக்குச் செய்தே தீரவேண்டும். அவன் தலை விதிப்படி நடக்கட்டும் என்று நாம் அவனைக் கைவிட்டு விட்டால், அவன் மிஞ்சிப் பிழைக்க மாட்டான்.

வருங்காலத்தில் தார்தானியரது வம்சத்திற்கு மூலபுருஷனாக விளங்க இருக்கும் இவனை ஜோவ் தேவர் இவ்வாறு அனுதரவு செய்வதும் அவருக்கு அழகில்லை. இந்த வம்சத்தின் ஆதி புருஷன் ஜோவ் தேவரின் கிருபையைச் சம்பாதித்தவன். அவன் ஒரு மகான். ஜோவ் தேவரும் அவனிடம் அன்பு கொண்டிருந்தார். அந்த அன்பானது இதுவரை இந்த வம்சத்தாருக்கு ஒரு பரம்பரைக் குலதனமாக இருந்தே வருகின்றது.

சராசரங்கள் அனைத்தையும் கவனித்து வரும் அவருக்கு இப்பொழுது பிரியமும் பாபிகளான அவனது வர்க்கத்தவரும் சிறிதும் பிடிக்க வில்லை. அவர்கள் அனைவரும் அவருக்குக் கசப்பாகவே யிருக்கின்றனர். அவர்களுக்கு இந்த யுத்தத்தில் வெற்றி உண்டாகாது. ஆதலால் அவர்களது ராஜ்யம் இந்த மகானுன ஈனியஸ்ஸுக்கே கிடைத்துவிடும். இவனுடைய புத்திரர்களும் அவர்களுடைய புத்திரர்களுமே இந்த ராஜ்யத்தை ஆண்டு வருவார்கள்'' என்று பூமியைக் குலுக்கும் பெருங் கடவுள் இவ்வாறு உரைத்தார்.

அவ்வசனங்களுக்கு மறுமொழியாகப் பளிச்செனக் கூசும் கண்களை உடையவளான தேவலோக மகாராணியான பெருந்தேவி பின்வருமாறு உரைத்தாள் :—

"நெப்தியூன்! நீ சொல்லுவதை நாம் செவிசாய்த்துக் கேட்டோம். டார்டான் இளவரசன் நீ உரைத்தபடியே மிகவும் உயர்ந்தவனுகவும் இருக்கட்டும். அவன் பலியே ஆகட்டும் அல்லது உயிருடன் தப்பிப் பிழைக்கட்டும். அவ்விஷயத்தை நீ கவனித்துக் கொள், அது உனது கவலை!

பாலாஸும் நானும் இந்த துரோஜ வர்க்கத்தை அடியோடு அழித்து விடுவதாகச் சத்தியம் செய்திருக்கின்ருேம். தேவர்கள் ஒரு காரியத்தைச் செய்வதாகத் தீர்மானித்துவிட்டால் அக்காரியம்

நடந்தே தீருமன்ருே ? அக்காரியத்தினின்றும் அவர்கள் பிறழ் வாரோ ?

அந்த இராஜ்யம் தடதட வென்று இறங்கிக் கொண்டு வருகின்றது. அந்த துரோஜர்களுக்கு வருங் கேட்டை ஒரு கணமேனும் தடுக்கவோ அல்லது ஒருவனையாயினும் காப்பாற்றவோ மாட்டோம் என்று நாங்கள் சத்தியம் செய்துள்ளோம்.

ட்ராய்நகர் நெருப்புக்கு இரையாகி அந்நெருப்பும் ட்ராய் மக்கள் வடிக்கும் இரத்தத்தினுலேயே அணைந்துபோமளவும், அந்நாட்டின் கட்டிடங்கள் அதிர்ந்து விழுந்து பாழடைந்து, அந்தப் பாழ்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோமளவும் எங்களாலான கொடுமைகளைச் செய்வோ மென்றே நாங்கள் விரதங் கொண்டுள்ளோம் " என்ருள்.

அதைக் கேட்ட சமுத்திர ராஜனும் யுத்தத்தில் இறங்கினுர், அவர் இறங்கிய பொழுது, அந்த யுத்தகளத்தில் அம்புகள் விர் என்று கூச்சலிட்டுக் கொண்டு நாற்புறமும் பறந்து கொண்டிருந்தன. அவைகளின் நடுவிலே அவரும் வளைந்து வளைந்து சென்ருர். மகா வீரரான அவர் அதிவிரைவாகவும் விசையுடனும் அந்தக் களத்தை ஊடுருவிக்கொண்டு குறுக்காகப் பறந்தார். அவ்வாறு பறந்து செல்லுகையில் அவர் அகிலேசனுடைய கண்களை ஒரு கனமான இருளால் மூடினுர். பின்பு அவர் மகானுன ஈனியஸ்ஸின் கவசத்தில் ஊன்றி நின்று கொண்டிருந்த ஈட்டியைப் பிடுங்கி அதனை அதன் தலைவனது காலடியில் எறிந்தார்.

இவ்வாறெல்லாம் செய்தபின், அவர் தெய்வ பலத்தினுல் டார்டான் இளவரசனை உயரத் தூக்கிக் கொண்டு ஆகாய மார்க்கமாகச் சுமந்து சென்ருர். அடி சருக்காமல் பூமியை மெதுவாக அழுத்திக் கொண்டு போர்புரிந்து வரும் வீரர்களின் தலைக்குமேல் குதித்துப் பாய்ந்து வரும் குதிரைகளுக்கும் மேலாக உயர்ந்து பறந்து அவர் அந்த வீரனைத் தூக்கிச் சென்ருர்.

அவ்வாறு சென்ற அவ்விருவரும் அந்த யுத்த களத்தின் பின்புறத்தில் நெடுந்தூரத்தில் மந்த புத்தி உள்ளவர்களான காக்கன்கள் காவல் புரிந்து வந்த அதன் எல்லையில் இறங்கினர். அங்கு சென்றபின் நெப்தியூன் பகவான் தமது நிஜஸ்வருபத்தை வகித்துக் கொண்டு திணறித் தவித்துக் கொண்டிருந்த வீரனுன ஈனியஸ்ஸை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தார் :—

"வாராய், அரசிளங்குமர ! வீரசூர பராக்கிரமங்கள் மிகக் குறைந்தவனுன உன்னை எந்தத் தெய்வம் இவ்வாறு இந்த யுத்தத்தில் அகிலேசனை எதிர்க்கும்படி தூண்டிவிட்டது? நீ இனி மேலாவது ஜாக்கிரதையுடன் பிழைப்பாயாக ! உனது பிராணனை வலுவில் விட்டுவிடாதே! அகால மரணத்துக்கு ஆளாகிவிடாதே! வருங்காலத்தில் உனக்குப் பல நன்மைகள் உண்டாகப் போகின்

றன. அந்த நன்மைகளை இழந்து விடாதே! வரவிருக்கும் பெரு வாழ்வைப் புறக்கணித்து விடாதே.

உனக்கு விரோதியாயிருக்கும் இந்தப் பயங்கரஸ்வரூபி ஒரு மகாவீரன்தான், என்றாலும் இவனுக்கும் அழிவுகாலம் வரவே வரும். இவனுக்கும் அந்திய காலம் ஒன்று விதிக்கப்பட்டிருக் கின்றது. அந்த நாள் வந்துவிட்டால், அப்பொழுது இவனைப் புழுதியில் புதைத்து விடுவார்கள். அப்பொழுதுதான் உன்னுடைய புஜபல பராக்கிரமங்கள் பளிச்செனப் பிரகாசிக்கும். அச்சமயம் உன்னை மீறிய வீரன் ஒருவனையாவது கிரேக்க வர்க்கத்தில் காண் பது சிறிதும் இயலாத காரியமாகவே முடிந்துவிடும். இது நிச்சயம் தான்'' என்றார்.

இவ்வசனங்களை உரைத்து விட்டு அந்தத் தேவர் அவனை விட்டு அகன்றார். அந்த வீரன் அங்கு கிடந்த வண்ணம் இது என்ன விந்தை என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தான். பின்பு அந்தத் தேவர் அகிலேசனது கண்ணின் முன்னால் பெய்து கொண்டிருந்த மூடுபனியை விலக்கி விட்டார். அப்பொழுது சடிதியில் திடீரென ஒரு வெள்ளம்போல் வந்த ஒரு பெருத்த வெளிச்சத்துடன் அந்த யுத்த களமானது தனக்குக் கட்புலனா னதை அறிந்து ஆச்சரியமடைந்து, அகிலேசன் பின்வரும் வசனங் களை உரைத்தான் :—

"இது என்ன அற்புதம்! என்ன விந்தை! அதியாச்சரிய மான என்னென்ன விஷயங்கள் எனது மனத்தில் உதிக்கின்றன! காற்றைப் போல் இறகுகளைக் கட்டிக் கொண்டு பறந்து சென்ற எனது ஈட்டியானது இங்கு என் அருகில் கிடக்கின்றது. இந்த நிமிஷம் இப்போது எனது கத்திக்கு இரையாக இருந்த இந்த டார்டன் வீரன் எங்கோ மறைந்து போயினனே! எனது கத்திக்குத் தப்பிப் போயினனே!

மனிதர்களிடம் மாத்திரம் தான் நாம் இந்த யுத்தம் செய்து வருவதாக வன்றோ நினைத்தேன். காரியம் அப்படியில்லையே! இந்தச் சத்துருவைத் தேவர்களன்றோ கட்டிக் காத்து வருகின் றனர்? இது நிச்சயம் தான், என்றாலும் இருக்கட்டும்.

இவன் எவ்வளவோ பெரியவனாய் இருந்தால் என்ன? இவன் சைனியங்களுக்கு முன் எதிர்த்து நில்லான். தன்னுடைய துணைவர்களான தேவர்கள் அனைவரையும் கூட்டிக் கொண்டு பறந்தே போய் விடுவான்! ஓட்டம் பிடித்து விடுவான். இது வரைப் பொறுத்தது போதும் என்று திருப்தி அடைந்து விடுவான்! ஆதலால் இப்பொழுது இவனை யொழிந்த மற்றைய வீரர்கள் தங்களது இரத்தத்தை வடிக்கட்டும்'' என்று அதிவேகத்துடன் உரைத்து விட்டுத் தன்னுடைய கிரேக்க சைனிகர்களை நோக்கிப் பின் வருமாறு உரத்துக் கூவினான். ஆத்திரத்துடன் அவன் உரைத்த மொழிகளைக் கேட்ட அந்தத் திரளான சைனியங்களும்

ஆவலுடன் பொங்கி எழுந்தனர், காரியத்திலே கருத்தைச் செலுத்தினர் :—

" கிரேக்கர்களே ! இந்த யுத்தத்தில் ஓர் ஆளுக்கு ஓர் ஆளாகவும் ஓர் ஆயுதத்திற்கு ஓர் ஆயுதமாகவும் எதிர்த்து இந்த யுத்தத்தைச் செய்யுங்கள். எனக்குத் தேவர்களது தயவு இருந்தாலுங் கூட, என்னொருவனால் மாத்திரம் இந்தச் சத்துரு சைனியங்களை ஒரே யடியாகப் பொருது அழிக்கவோ, அல்லது அவர்கள் அனைவரையும் அடித்துத் துரத்தி ஓட்டவோ இயலாது.

மார்ஸ் தேவரே யாகட்டும், கோபதாபங்களும் வேகமுமுள்ள மினர்வா தேவி யாகட்டும், தன்னந் தனியர்களாக வேறு எந்த தேவனாலாவது தேவியாலாவது இந்தப் பெருத்த வெள்ளம் போன்ற சேனைக்கு முன் நின்று போர் புரிய இயலாது. ஆனால் அகிலேசன் அளிக்கக் கூடிய உற்சாகம் அனைத்தையும் தேகசகாயத்தையும், அவனது செய் தொழிலினால் உங்களுக்கு உண்டாகக் கூடிய உள்ளக் கிளர்ச்சியையும் ஆகிய அனைத்தையும், இன்று அவன் உங்களுக்கே அளித்து விடுவான். இந்த எனது மனத்தில் தோன்றும் யோசனைகளையும் கை கால்களால் ஆகக் கூடிய காரியங்களையும் நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்.

அதோ அங்கு காணும் அகன்ற களத்தில் அளவு கடந்து யுத்தத்திலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும் சைனியங்களை ஊடுருவிக் கொண்டு, இந்தக் கையானது பாய்ந்து சென்று அவை அனைத்தையும் மிரட்டி ஓட்டும், எனது ஒரே ஒரு ஈட்டியினால் அந்தப் பெருவெள்ளம் போன்ற சேனையானது சிதறுண்டு மெலிந்து போய்விடும் " என்றான்.

இவ்வாறு இவன் கதறிக் கொண்டிருக்கத், தேவர்களுக்குச் சமானமான ஹெக்டரும் இவனுக்கு இளைக்காத ஊக்கத்துடனும் யுத்தத்தில் கொண்ட களிப்புடனும் தனது ட்ராய்ச் சேனைகளை உற்சாகித்துக் கொண்டிருந்தான் :—

" துரோஜர்களே! யுத்தத்திற்குப் புறப்படுங்கள்! ஹெக்டரே உங்களுக்குத் தலைவனாக விளங்குகின்றான் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள் ! மகா கர்வியான பிலியஸ்ஸின் புத்திரனுடைய பிதற்றல்களைக் கண்டு மயங்கா தீர்கள் ! மனந் தளரா தீர்கள். நமது தலைவிதியை நாம் நமது காரியத்தினால் தான் தீர்மானித்தல் வேண்டும். நம்முடைய கத்திகளைக் கண்டு பயந்து நடுங்கும் இந்த கிரேக்கப் பதர்கள், வீரர்களான நம்மை நோக்கி இழி சொற்களை உரைத்து இகழ்கின்றனர், இழித்துக் கூறுகின்றனர்.

நாஸ்திகனும் மகா பாபியும், இம்மி அளவும் வலியில்லாதவனுமான ஒருவன் தேவர்கள் அனைவரையும் ஒருகை பார்த்தே விடுகின்றேன் என்று துடிக்கின்றான், வீரகோஷம் செய்கின்றான்.

ஆனல் ஆகாயத்தில் ஓர் இடி மாத்திரம் இடித்து விட்டால் அவன் தன்னுடைய அவயவங்கள் அனைத்தையும் ஒடுக்கிக் கொண்டு நடுங்குகின்றான், பதுங்குகின்றான்.

இந்த அகிலேசன் அந்த இனத்தைச் சேர்ந்தவன். வீண் பெருமை அடித்து வரும் இவனைக் கண்டு உங்களது தலைவன் முதுகு காட்டி ஓடமாட்டான், பின்னிடைய மாட்டான், இவனது மனம் இரும்பைப் போல் கெட்டியாகவே இருக்கட்டும். இவனது கைகள் நெருப்பையே கொட்டட்டும். அந்த நெருப்பும் இரும்பும் உங்களது ஹெக்டரின் முன் நில்லா! ஹெக்டர் அவற்றை முறியடித்தே விடுவான். பழிவாங்க வேண்டு மென்று துடிக்கும் அவனது மனம் துணிந்தே இருக்கின்றது, தைரியமுள்ள தாகவே இருக்கின்றது. அவனது கையும் கோரமான சத்துரு வதம் செய்ய வேண்டு மென்றே துடிக்கின்றது " என்றான்.

இவ்வாறு நெருப்புப் பொறி பறக்குமாறு மூச் செறிந்து கொண்டு, அந்த வீரன் தனது மனக் கொதிப்பை வெளியிட்டான். அக்கணமே அவனது தலையைச் சுற்றிலும் ஒரு பெருத்த வனத்தி லுள்ள மரங்களைப் போல் ஈட்டிகள் எழுந்தன. வீரர்கள் இட்ட கூக்குரல்கள் ஒன்றன் மேல் ஒன்றாக ஓங்கின. ஆகாய வீதி யெங்கும் ஒரு பெருஞ் சந்தடி உண்டாயிற்று. வீரர்கள் ஒருவரை ஒருவர் அடுத்தனர், நெருங்கிச் சேர்ந்தனர். ஒன்றாகத் திரண்டு யுத்தத்தில் இறங்க முன் வந்தனர்.

ஆனல் அச்சமயம் ஆகாயத்தின் உச்சியில் பிரகாசித்துக் கொண்டிருந்த பீபஸ் பகவான், "தெட்டிஸ் தேவியின் தெய்வப் புதல்வனுடன் தனித்து யுத்தம் செய்ய வேண்டாம். மற்றைய வீரர்களுடன் யுத்தஞ் செய்வதுதான் உனக்கு மேலான நன்மையைத் தரும். நீ அகிலேசனது கையில் அகப்படலாகாது. அவனுடைய கொடுமைகளுக்கு இலக்காகலாகாது. நீ அவனுடைய வீரசூரப் பராக்கிரமங்களைச் சோதனை செய்தலாகாது " என்றெல்லாம் அவனை எச்சரித்தார். அவனும் ஒளியின் கடவுள் உரைத்த வசனங்களைச் செவி சாய்த்துக் கவனமாய்க் கேட்டு, அவர் உரைத்த வண்ணமே தன்னுடைய வீரர்களின் அணிவகுப்பின் உட்புகுந்து, மேல் நடக்க விருந்த யுத்தத்தை எதிர் பார்த்திருந்தான்.

அப்பொழுது அதிபயங்கரனாகிய அகிலேசன் வானமும் செவிடுபடும்படி உரத்துக் கூவிக் கொண்டும், ட்ராய் நாட்டுச் சேனைகள் அனைத்தையும் ஒரே தாக்காகத் தாக்கிக் கொண்டும் அளவிறந்த ஆற்றலுடன் பறந்தான். அவ்வாறு அவன் சென்ற பொழுது, இப்பிட்டியான் என்பவன் அவனது ஆற்றலைத் தாங்க முடியாமல், தனது சேனையின் முன்னாக நின்றிருந்தபடியே மடிந்து விழுந்தான்.

அந்த வீரன் மகா சூரனாக விளங்கியவன். அவனைத் தொடர்ந்து வந்த திரளான அவன் துணைவர்களும் அவ்வாறே

மகா சூரர்கள் தான். அவன் மகானுன ஒற்றியந்திடீஸ் என்பவனது வம்சத்தில் உதித்தவன். சமுத்திரக் கன்னிகையான நெய்சித்தேவி ஒருத்தி அவனது அன்னை. பனியைச் சிகரமாகக் கொண்ட திமோலஸ்ஸின் நிழலில் கோட்டை கொத்தளங்களுடன் விளங்கி வந்த ஹைடி என்னுமிடத்திலிருந்து கொண்டு அவன் தனது நாட்டை ஆண்டு வந்தவன்.

அகிலேசனைக் கண்டு அவன் அதிகக் கோபத்துடன் குதித்தெழுந்த பொழுது, அந்த வீரனது கத்தியானது அவனது தலையை இரண்டாய்ப் பிளந்து விட்டது. அவ்வாறு இரண்டாகப் பிளவுண்ட அவனது முகமானது இரண்டு சரிபாகங்களாக அவனது உடலின் இருபுறமும் விழுந்து விட்டது. அப்போது கல கலவென்று உரத்து ஒலித்த தன் கவசங்களுடன் அவன் தொப் பென்று நிலத்தைப் பிடித்துப் பிளந்து கொண்டு கீழே விழுந்தான்.

அவ்வாறு கீழே விழுந்த அவனைக் கண்ட அகிலேசன் பின் வருமாறு பெருமை அடித்துக் கொண்டு ஆரவாரஞ் செய்தான் :—

" ஒற்றியன்திடீஸா! இவ்விடமே கிட! கீகி என்றபட்டணம் உன்னைப் பெற்றேன் என்று பெருமை கொண்டுள்ளது. ஆயினும் ஏன்? இந்த துரோஜர்களது மண்ணே உன்னைக் கவ்வி விட்டது. இது உனக்கு இடுகாடாக ஆகிவிட்டது, பெருத்த அலைகள் புரண்டு வரும் ஹில்லஸ் நதியின் ஓரமாக இருக்கும் வளம் பெற்ற அழகான வயல்களையும் அலைபோல் பொன்னைக் கொழிக்கும் போஷக நதியான ஹெர்மஸ்ஸையும் நீ நழுவ விட்டு விட்டனை " என்று அவமதித்து உரைத்தான்.

அந்த வீரன் இந்தச் சொற்களைச் செவி கொடுத்து கேட்டானு? இல்லை. அவன் அப்பொழுது நிழல் பரந்துள்ள மீளா உலகம் புக்கு, அங்குத் தனது கண்ணை மூடிக் கொண்டு தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தான். அப்போது அவனது பிரேதத்தின் மீது ஓடிச் சென்ற கிரேக்க வீரர்களின் ரதங்களின் சக்கரங்கள் அந்தப் பிரேதத்தைச் சின்னு பின்னுமாகப் பிளந்து தங்களுடைய அச்சுக்களை அந்த மகா வீரனது இரத்தத்தில் தோய்த்துக் கொண்டன.

அவனுக்குப்பின் அடுத்தபடியாக அந்திஞரின் புத்திரனுகிய திமோலியன் என்பவன் தன் ஆவியை நீத்துப் புழுதியில் அழுந்தினுன். அவன் ஒரு பெரிய மூர்க்கன், ஆத்திரக்காரன். அந்தத் துர்க்குணமே அவனது அழிவுக்குக் காரணமாயிற்று.

அகிலேசனது ஆத்திரம் மிகுந்த இருப்பாயுதமானது அவன் மேல் ஒரேயடியாய்த் திடீரெனத் தனது முழு வேகத்துடனும் பாய்ந்து, தட தடவென்று அவனது வெண்கலக் கீரிடத்தைப் பிளந்து, சிறிதும் தடையின்றி அவனது மண்டையைந் தவிடு பொடியாக்கி நொறுக்கிவிட்டது. அவ்வாறு நொறுக்குண்டு

பொடிந்துபோன அவனது மண்டையின் துண்டங்கள் அவனது இரத்தத்திலேயே கலந்து கொண்டு குழம்பின.

இதை ஹிப்போதாமஸ் என்பவன் கண்ணுற்றான். அந்தக் காட்சி அவனது மனத்தை இடித்து விட்டது, ஒரு பெரும்பீதியும் அவனைப் பிடித்துக்கொண்டது. உடனே அவன் தனது இரதத்தை விட்டுத் திடீரெனக் கீழே குதித்து ஓட்டம் பிடிக்கவும் யத்தனித்தான். ஆனால் அவனது மனோரதம் நிறைவேறவில்லை. அகிலேசன் விடுத்த ஓர் ஈட்டியானது அவனது ஓட்டத்தைத் தடுத்தே விட்டது. பதை பதைத்துத் தவித்துக் கொண்டிருந்த அவனை அந்த ஈட்டியானது ஒரு குத்துக் குத்திக் காயப்படுத்தி அவனது உடலை அந்தக் களத்தில் ஓர் ஆணியைப் போல் அடித்து ஊன்றி விட்டது. அவனும் தேம்பித் தேம்பி அழுதுகொண்டு தன் ஆவியை விடுத்தான்.

கடலோரத்தில் உயர்ந்த விடத்தில் உள்ள ஹெலிஸீயில் நெப்தியூனுக்குக் கட்டப்பட்டுள்ள கோவிலில் பலியிடும் காளையுங் கூட அவனினும் அதிகமாக உரத்துக் கூவிக் கதறுவதில்லை யெனில், அவனுடைய கூச்சல்கள் எவ்வாறு இருந்தனவென்று நீங்களே அறிந்து கொள்ளலாம். அப்பொழுது அவனைச்சுற்றிலு மிருந்த கற்பாறைகள் அவனது கூக்குரலுக்குப் பதிலளித்தன. எதிரொலிகளைப் பரப்பின. இந்தக் கூக்குரல்களும் அவைகளுக்குக் கைம்மாறாகப் பாறைகளிலிருந்து கிளம்பிய எதிரொலிகளும் சமுத்திர ராஜனுக்கு மிகவும் திருப்தியாகவே யிருந்தன.

அதன்பின் பழிவாங்குவதே கண்ணும் கருத்துமாக இருந்த அகிலேசனது சீற்றமானது பாலிடோரின் மேற் பாய்ந்தது. அவன் பிரியம் மகாராஜனுக்குத் தள்ளாத விருத்தாப்பிய தசையில் கடைசியாகப் பிறந்த அரும்புதல்வன், அவன் பந்தய ஓட்டத்தில் ஒருவருக்கும் இளைக்காதவன். காற்றைப்போல் விரைந்து ஓடும் கால்களை உடையவன். பிரியத்தின் குமாரர்கள் அனைவரிலும் அவனே கடைசியாகப் பிறந்தவன். பிரியத்தின் மட்டற்ற அன்பிற்கும் பிரியத்திற்கும் பாத்திரமானவன்.

இளங்கன்று பயமறியாது என்ற வசனப்படி அவன், தான் செல்லத்தகாத இந்த யுத்த களத்தை நோக்கி மடத்தனமாக ஓடிச் சென்று, அந்த மடத்தனத்தினால் விளைந்த வினையை அனுபவித்தான். இதற்குமுன் ஒரு யுத்த களத்திலாயினும் பிரவேசித்ததே இல்லை, இன்று முதன் முதலாக அக்களத்தில் இறங்கி இவ்வாறு தனது உயிரை மாய்த்துக் கொண்டான்.

தன் ஆற்றலையும் வேகத்தையும் தன்னைச் சுற்றியிருந்தோர் முன் காட்ட வேண்டுமென்ற ஆவலுடன் அவன் தன் இரதத்தை அந்தக் களத்தைச் சுற்றிலும் ஓட்டினான். அவனது தற்புகழ்ச்சி நெடுநேரம் நிலைத்திருக்கவில்லை! அவன் இறந்த கணமே அந்தப் புகழ்ச்சியும் அவனது வேகமும் ஒரேயடியாய் ஒருங்கே

மறைந்து போயின. அவன் தனது இடுப்பைச் சுற்றிக் கட்டிக் கொண்டிருந்த கச்சைகளைத் தனக்குப் பின்புறமாக இணைத்துப் பூட்டிக் கொண்டிருந்தான். அவனது கவசத்தின் பின்புறத் தகடு களும் அப்பின்புறத்திலேயே ஒன்றோடொன்று பொருத்தப்பட்டு பொன் வளையங்களால் பிணைக்கப்பட்டு மிருந்தன. அந்த ஸ்தானத்தில் பலமாகத் தாக்குண்டு, அவன் தனது உயிரை விடுத்தான்.

அகிலேசனது இருப்பாயுதமானது அவனைத் தாக்கி அவ னது நாபியை ஊடுருவிச் சென்ற கணமே, அவன் கீச்சுக் கீச் சென்று கதறிக்கொண்டும், தன்னுடைய முழங்கால்களை மடித்துக் கொண்டும் குப்புறவிழுந்தான். அப்போது அவன் உடலினின்றும் பிதுங்கி வெளிவந்த அவனுடைய குடல்கள் தரையின்மேல் கட கடவென்று விழுந்தன. கைகளும் ஒன்றையொன்று கட்டிக் கொண்டன. இருளும் அவனைச் சூழ்ந்து கொண்டது. அவனது காலமும் கழிந்து விட்டது.

இவ்வாறு இரத்த வெள்ளத்தில் அழுந்திக் கோரமாக விழுந்துகிடந்த இந்த அதிர்ஷ்ட ஹீனனான பாலிடோரின் பரிதாப மான கதியை ஹெக்டர் கண்ணுற்ற பொழுது, அவனுக்கு உண் டான துக்கத்தினால் அவனுடைய கண்கள் ஒளி குன்றின, அவை களை ஒரு கனத்த மேகம் மறைத்துவிட்டது. இந்தக் கஷ்டத்தைக் கண்ணுற்றபின், அவனது ஆத்திரம் மேன்மேலும் அதிகரித்தது, தனக்கு வெகுதூரத்தில் நடந்துவந்த யுத்தத்தில், தான் உடனே கலந்து கொள்ளவேண்டும், இனி ஒரு கணமும் தாமதித்தல் தகாது என்று தீர்மானித்துக் கொண்டு, அவன் அகிலேசனை எதிர்த்து அவனுக்கு நேராகப் பறந்து சென்றான்.

அந்த அகிலேசனுடைய சேனைகளின் அணிவகுப்பும் தோற்ற மும் அதி பயங்கரமாக இருந்தன, அங்கு வந்தவுடன் அவன் தனது ஈட்டியை வெகு வேகமாகச் சுழற்றினான். அப்பொழுது அந்த ஈட்டியினின்று எழுந்த வெளிச்சமானது கொழுந்து விட்டுக் கொண்டு எழுந்து, அலையலையாய் மோதிய ஒரு பெருந்தீயைப் போன்றிருந்தது.

அதைப் பிலியஸ்ஸின் புத்திரனும் கண்ணுற்றான். உள்ளம் பூரித்தான். அவனது மார்பு பொங்கி எழுந்தது, தனக்குச் சமான மான ஒரு சத்துரு தன்னை எதிர்த்து வருவதை அறிந்து அவன் மகிழ்ந்தான். அவன் ஹெக்டரை நோக்கிப் பின்வரும் மொழிகளை உரைத்தான் :—

"ஆஹா ! பாருங்கள்! கறுத்த சனியன்கள் புடை சூழ வரும் இந்த மனிதனைப் பாருங்கள் ! அகிலேசனைக் கொன்ற இந்த மனிதன் அவனது உற்ற நண்பனே ஆவான். ஹெக்டரது வேலும் பிலிதீசனது வேலும் இனி யுத்த களங்களில் ஒன்றையொன்று கண்டு மடங்கா !" என்று தான் மேன்மேலுஞ் சொல்ல வந்த

வேறு மொழிகளையும் சொல்லி முடிக்குமுன் அவன் கடுத்த முகத்துடனும் பழிவாங்கியே தீரவேண்டும் என்ற ஆத்திரத்துடனும் பொங்கிய நேத்திரங்களுடனும் ஹெக்டரை ஏறஇறங்க உற்று நோக்கிக் கடைசியாக, "வா! வா! உனது விதியை ஏற்றுக் கொள்!" என்று சொல்லிவிட்டுத், தனது வாயை மூடிக்கொண்டான். வேறு வார்த்தைகள் ஒன்றும் அவன் உரைக்கவில்லை.

அவ்வசனங்களைக் கேட்டுச் சிறிதும் மனங்கலங்காத ஹெக்டர் அவனுக்குப் பின்வருமாறு மறுமொழி உரைத்தான்:—

"உன்னைக் கண்டு பயந்து நடுங்கும் ஓர் ஆளிடமன்றோ நீ, இந்த வசனங்களை உரைக்க வேண்டும்? வீர, சூரப் பராக்கிரமங்களில்லாத ஒரு சிறு பயலிடமன்றோ நீ இவ்வசனங்களை உரைக்க வேண்டும்? உன்னைப் போல் நாங்களும் மிரட்டுவோம், இதனால் என்ன பயன்? சிறுமையும் பெருமையும் மாறி மாறிக் கலந்து வருமேயன்றி இதனால் என்ன பயன் உளது?

என்னைக் காட்டிலும் நீ மிகச் சிறந்த வீரன் தான் என்பதை நான் நன்றாக அறிவேன். ஆனால் ஒரு மனிதனுக்கு யுத்தத்தில் வெற்றியைத் தேவர்களன்றோ அளிக்கின்றனர்? நான் எளியவனே எனினும், தேவர்கள் என்பங்கிலிருந்து எனது அம்புக்குத் துணையாய்ச்சென்று, அந்த அம்பை என்னைக் காட்டிலும் வீர சூர பராக்கிரமங்களில் மிகுந்த ஒருவனது மார்பில் புகுத்தி விடலாமல்லவா?" என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தன் அம்பை விடுத்தான். அக்கணம் பாலாஸ் தேவியானவள், காலனைப்போல் சிறகுகளுடன் சென்ற ஆயுதத்தின் மேல், தனது திவ்யமான சுவாஸத்தைச் செலுத்தி, அகிலேசனுக்கு நெடுந்தூரத்தில் செல்லும்படி அதனைத் துரத்தி விட்டாள். அவ்வாறு நியமிக்கப்பட்ட அந்த ஆயுதமானது ஹெக்டரையே நாடித் திரும்பிப் பறந்துவந்து தனது தலைவனான அந்த மகா வீரனது காலடியில் விழுந்து விட்டது.

அதன்பின் அகிலேசன் தனக்குப் பகைவனாக வந்த அந்தச் சத்துருவை ஒழித்துவிட வேண்டும், தனது பகையைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தான். அப்பொழுது அவன் மார்பும் கண்களும் வேகத்துடன் பொங்கிக் கொதித்தன. தக தக வென்று ஜொலித்தன.

அக்கணம் தனது பிரியத்துக்குப் பாத்திரனான ஹெக்டருக்கு உதவி செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் அப்பால்லோ தேவர், அவனருகில் வந்து அவனைத் திரை போன்ற மேகங்களாற் சுற்றி மறைத்து விட்டார்.

அதைக் கண்ணுற்ற பிலிதீசன் மனக் கொதிப்பு மேலிட்டவனாய் அவனை மூன்று தரம் தனது முழு வேகத்துடனும் தாக்கி

னான். ஆனால் அவனுடையமுயற்சிகள் பயன்படாமற் போயின, அவனது ஆயுதமானது அம்மூன்று முறைகளிலும் நோவென்பது அறியாத வாயுவையே துளைத்துச் சென்றது. அவன் நான்காம் முறையும் தனது ஈட்டியைப் பிரயோகித்தான். அது அப்பொழுதும் மேகங்களை நோக்கிச் சென்று அவற்றினுள் மறைந்து விட்டது.

இவ்வாறு தன் முயற்சிகள் வீணாகி விட்டதைக் கண்டு அவன் கோபங்கொண்டு பொங்கினான். அவனது முகத்தினின்றும் வியர்வையானது தக தக வென்று நுரைபோல் வடிந்தது. அப்பொழுது அவன் பின்வருமாறு உரத்துக் கூவினான் :—

"அட பாவி! நீ இதற்குமா தப்பிப் பிழைத்து விட்டாய்! இப்பொழுதும் முன்போல் பின்னும் ஒருமுறை முதுகுகாட்டி ஓட்டம் பிடித்துப் பிழைத்தேவிட்டாய்! பக்ஷபாதியான ஜோதிஸ்வரூபியும் உன்னைக் காப்பாற்றிவிட்டார். இருக்கட்டும், உனக்கு நியாய மாக வரவேண்டிய கதி வந்தே தீரும், அது நெடுநாள் தாமதமின் றியும் வரும். அகிலேசனுக்கு மாத்திரம் ஏதேனும் ஒரு தெய்வம் உதவி செய்யுமானால் இது நிச்சயந்தான்.

மானமிழந்து போர்க்களத்தினின்றும் முதுகுகொடுத்து ஓட்டம் பிடித்தாயன்றோ? ஓடு! ஓடு! நீ முதுகு கொடுத்து ஓடிய இந்த மானக்கேட்டையும் பழியையும் தீர்ப்பதற்காக இன்று துரோஜர்கள் ஒரேயடியாய்க் கூட்டங் கூட்டங்களாகப் பலியா வார்கள், பிணமாவார்கள், பேயாய்ப் போவார்கள்" என்றான்.

அவ்வாறு கூறிக்கொண்டே அவன் கணக்கற்ற வீரர்களின் மேல் தனது வேகத்தைச் செலுத்தி அவர்களை மாய்த்து நமனுல கத்திற்கு அனுப்பினான். அப்பொழுது திரியோப்ஸ் என்பவன் கழுத்திற் குத்துண்டு துடித்து கீழே வீழ்ந்து இரத்தக்கறை படிந் திருந்த அந்த இரண களத்தில் உருண்டு புரண்டு சென்றான்.

அதன் பின் அகிலேசன் அவனை அவன் கிடந்த இடத்தி லேயே விட்டுவிட்டுத் தப்பியோட முயன்ற மகானான பிலிட்டரின் புத்திரனான திமூக்கஸ் என்பவனைத் தடுத்து நிறுத்தினான். அந்த திமூக்கஸ் என்பவன் சமானியமான ஒரு வீரனல்ல, அவன் மலை போன்ற ஒரு பெருத்த தேகமும் வலிவுமுள்ள ஒரு மகா வீரனாக விளங்கியவன். என்றாலும் அகிலேசனது அளவுமிக்க வேலானது அவனது ஆழமான உடலைக் கீறிப் பிளந்து, அவனது ஆவி பறந்து ஓடுவதற்கு ஓர் அகன்ற பாதையையும் உண்டாக்கி விட்டது.

அவனுக்குப் பின் மகா வீரர்களான வல்கானஸ்ஸூம், தார் தானஸ்ஸூம் தங்களுடைய ஆவிகளைத் துறந்து தங்கள் தகப் பன்மாரைத் துயரக் கடலில் ஆழ்த்தி விட்டனர். அவ்விருவரும் ஒரேநொடியில் தங்களது தேரினின்றும் குப்புறவிழுந்து அதே

நொடியில் பாதாள உலகம் புக்கனர். அவர்களில் ஒருவன் ஈட்டி யினுலும், மற்றையவன் கத்தியினுலும் மாண்டு, தனது உயிரை நீத்தான். அவர்கள் இவ்வாறு வெவ்வேறு விதமாக வதையுண்டு ஒரே விதமான மாறில்லாத தங்களது கடுவினையின் பயனை எய்தினர். இவ்வாறே இளையோனுன அலாஸ்ட்டரும் தனது இரத்தத்தை வடித்தான். அவனது அழிவுக்கும் அனைவரும் இவ் வண்ணமே சிறிதும் குறைவின்றி இரங்கினர். அவன் இளங் காளையாகவும் எழில்வாய்ந்தவனுமாகவே இருந்தும், அவற்ருல் அவனுக்குச் சிறிதும் நன்மை உண்டாகவில்லை. அப்பெரும் பேறு கள் அவனது உயிரைக் காப்பாற்ற இயலாதவையாயின.

அகிலேசா! அவனும் உன்னைப் போலவே ஸர்வாங்க சுந்தரனுகவும் இளம் பிராயத்தவனுகவுமே இருந்தான். தனக்கு உயிர்ப் பிச்சை தரவேண்டுமென்று அவன் தன்னுடைய கைகளைக் கூப்பிக்கொண்டு உன்னைக் கெஞ்சாதவண்ணம் கெஞ்சினுன். நீ அவனுக்கு இரங்கவில்லை. உனது மனம் கல்லாக இருந்தது. பாவம்! அந்த இளங்காளைக்கு அதிர்ஷ்டம் இல்லாமற்போய் விட்டது! அவன் தன்னுலான தந்திரங்களையும் உபாயங்கள் அனைத்தையும் செய்தான், மன்ருடினுன், பிரார்த்தனை செய்தான், வேண்டினுன், கெஞ்சிக் கூத்தாடினுன். என்ன செய்தும் பயன் படவில்லை. உனது அந்தக் கல்நெஞ்சு கரையவில்லை. கொடி யோனுன உனது உள்ளம் இளகவில்லை, மனந்தளரவில்லை.

அச் சிறுவன் அகிலேசனுடைய கால்களைப் பிடித்துக் கொண்டு கீழே விழுத்து துடித்துக் கரைந்து அழுது கொண்டிருக் கையிலேயே, அக்கொடியோன் தனது உடைவாளைக்கொண்டு அவனது அள்ளையைக் குத்திக் கிழித்து விட்டான். அப்போது பட படவென்று துடித்த அந்த அள்ளையினின்றும் இரத்தமானது ஒரு பெரிய ஊற்றைப்போல் பெருக்கெடுத்து வெள்ளம்போல் புரண்டு ஓடி அவனது உடலை முழுக்கிவிட்டது. அத்துடன் அவனது மூச்சும் அடைப்பட்டுப் போய்விட்டது. அவனது துடிப்பும் ஓய்வுற்றது.

இவ்வாறு அகிலேசனது ஈட்டி சலிப்பின்றி அப்போர்க் களத்தில் மேன்மேலும் சஞ்சாரம் செய்து முன்சென்று மூலியஸ் ஸின் தலையைப் பிளந்து அதை ஊடுருவிச்செல்ல, அந்த வீரனும் திடீரெனக் கீழே விழுந்தான். அவனைத் தைத்த ஈட்டியானது, அவனுடைய இரு காதுகளையும் துளைத்துக்கொண்டு, அவற்றின் குறுக்கிலிட்ட ஒரு சட்டம்போல் விளங்கியது.

அவனுக்குப்பின் எச்சிக்கலுஷா! உனது ஆவியே அகிலே சனுடைய உடைவாளுக்கு இரையாயிற்று. அவ்வாளானது உனது உயிரை உனது உடலினின்றும் வேருகப் பிரித்துவிட்டது. பிரம் மாண்டமான அந்த உடைவாள் அவனது முகத்தில் ஆழமாகப் பாய்ந்துசென்று, அவனது மூளையைத் துளைத்துச் சூடுகொண்டு அவ்விடத்திலேயே புகைந்து கொண்டு நின்றது. அவன் சொரிந்த

செந்நீர் அவனுடைய கண்களின்மேல் மிதந்து வந்தது, அவன் தனது ஆவியையும் துறந்தான்.

அவனுக்குப் பின்னுல் அதிதைரியவாஞன டியூக்கேலியன் தனது உயிரை விடுத்தான். வலிவுள்ள அவனுடைய முழங்கையும் நரம்புகளும் கூடியிருந்த கணுவை நோக்கி அகிலேசன் ஓர் ஆயுதத்தை விடுத்தலும், அந்த ஆயுதம் குறி தவருமல் அந்தக் கணுவைத் தாக்க, அவன் அச்சமயம் தனக்கு உதவாது போய் விட்ட கையைத் தளரவிட்டு விட்டுத், தனக்கு வரவிருந்த தலை விதியை எதிர்பார்த்துக்கொண்டு சிறிதும் செயலற்றவனுகவே நின்று விட்டான்.

அச்சமயம் அகிலேசனது உடைவாளானது அவனது கழுத்தை நோக்கிக் குறி தவருமல் பாய்ந்து விழுந்து அவனுடைய அகன்ற புஜங்களினின்றும் அவனது துராய் கொண்ட தலையைத் துண்டித்து விட்டது. அவனது முதுகெலும்பைச் சார்ந்து ஒட்டிக் கொண்டிருந்த சதையும் தெறித்து விழுந்தது. அவனது உடல் புழுதியில் அழுந்தியது. அவனது பிணம் கவனிப்பாரின்றி அந்தக் களத்தில் நீண்டு கிடந்தது.

அவனுக்குப் பின் செழிப்பான திரேஸியா நாட்டில் உதித்த பேரும் புகழும் பெற்ற வம்சத்தில் வந்த பைரியஸ் என்பவனது புதல்வனுன ரிக்மாஸ் என்பவன் தனது வினையைத் தீர்த்துக் கொண்டான். அகிலேசனது ஈட்டியானது அவனது வயிற்றைத் துளைத்துக் கிழித்துவிட்டது. இடியைப்போல் கர்ஜனைகள் செய்து கொண்டிருந்த அந்த மகாவீரன் தனது இரதத்தினின்றும் திடீ ரெனக் குப்பற விழுந்தான்.

தனது தலைவன் இவ்வாறு திடீரென உடலை நீட்டிக் கொண்டு விழுந்து உயிர் நீத்து விட்டதைக் கண்ணுற்ற அவனது சாரதி அவனது இரதத்திற் பூட்டியிருந்த குதிரைகளைக் கடிவாளக் கயிறுகளைக்கொண்டு பிடித்து அவற்றை ஒருபுறமாகத் திருப்பினுன். அவ்வாறு செய்கையில், பிலியனது ஈட்டியானது, அவனது முதுகைக் குத்திக்கிழித்துவிட்டது. இவ்வாறு மாண்ட அந்த பிருத் தியனது உடலும் அவனது தலைவன் உடலின்மேலேயே நீண்டு விழுந்து விட்டது.

வளைந்து வளைந்து செல்லும் ஒரு பள்ளத்தாக்கானது ஒரே யடியாகத் தீக்கிரையாகி விடுகையில், அத்தீயானது அப்பள்ளத் தாக்கின் இருபுறங்களிலுமுள்ள அரிதாள்களைக் கொளுத்திவிடு கின்றது. அவ்வாறு தீக்கிரையான அந்த அரிதாள்கள் நறநற வென்று வெடிக்கின்றன. அந்தத் தீயும் மலைச் சரிவுகளின்மேல் படர்ந்துசென்று ஆகாயமளாவி வளர்ந்து நிற்கும் மரங்களையும் எரித்து விடுகின்றது. ஆகாயத்தையும் அளாவிக்கொண்டு ஒரு பெரு நெருப்பைப்போல் கொழுந்து விட்டுக்கொண்டு எரிகின்றது.

அது இப்புறமும் அப்புறமும் நாற்புறமும் பரந்து ஒரு பெருத்த நீர் வீழ்ச்சியைப்போல் கர்ஜனையும் செய்கின்றது!

அவ்வாறே வீரனுன அகிலேசனும் தன் எதிர்ப்பட்ட வீரர்களைச் சங்கரித்துக்கொண்டு அந்தக் கடற்கரையில் அதிவேகமாகவும் விசையுடனும் சென்றான். அப்பொழுது அவனைச் சுற்றிலும் நாற்புறமும் பெருத்த நாசமே நடனம் புரிந்துவந்தது. யுத்தகளமும் குருதி வெள்ளத்தில் ஆழ்ந்துபோய்விட்டது.

சரத் காலத்தில் அறுவடை செய்யப்பட்டு ஸ்ரீதேவியின் புனிதமான கூடங்களில் மலைபோல் குவித்துள்ள கணக்கில் அடங்காத தானியங்களைக் குத்தி மிதித்துச் சுற்றிச் சுற்றிக்கொண்டு சிறிதும் சலிப்பின்றி உழைத்து அடித்துவரும் காளைகளைப்போல் அகிலேசனது வெறிகொண்ட குதிரைகளும் அவனது இரதத்தை அந்தக் களத்தில் கடகடவென்று இழுத்துச்சென்று அணிவகுத்து நின்ற அவனுடைய சத்துருக்களை ஒரேயடியாய் மிதித்து உதைத்துத் துவைத்து விட்டன. வீரர்களின் உடல்கள் நொறுங்கி அழிந்தன. அவர்களது ஆவிகளும் பறந்துபோயின.

அவ்வாறு மடிந்து விழுந்துவிட்ட அந்த வீரர்களின் உடல்களின் மேல் அக்குதிரைகள் பறந்து சென்ற பொழுது, அவைகளின் குளம்புகளினின்றும் தெறித்து விழுந்த கறுத்த இரத்தத்துளிகள்புகையைக் கிளப்பிக் கொண்டு அக்குதிரைகள் இழுத்துச்சென்ற இரதத்தின் மேல் விழுந்து அதைக் கறைப்படுத்தி விட்டன. ஆணிச்சலாகைகள் கொண்ட அந்தத் தேரின் சக்கரங்கள் மலைபோல் குவிந்து கிடந்த வீரர்களின் பிணங்களைச் சின்னுபின்னுமாகப் பிளந்து கொண்டு வெகு துரிதமாக ஓடின. அப்பொழுது அந்தத் தேரின் அச்சுக்களும் கீச்சு கீச்சென்று கதறியழுது கொண்டு இரத்தத்துளிகளையும் கடகடவென்று சொரிந்தன.

இவ்வாறு புழுதியினுல் கறுத்தும் இரத்த வெள்ளப் பெருக்கினுல் கோரமாகவும் விளங்கிய இந்தப் பிணக்குவியல்கள் மேன்மேலும் உயர்ந்து வருவதை அகிலேசன் ஓர் உயர்ந்த ஸ்தானத்திலிருந்து கொண்டு கண்ணுற்று வந்தான். என்றுலும் பழிக்குப் பழி வாங்கி விடவேண்டும் என்ற அவனது தாகம் மாத்திரம் தணியவில்லை. அவன் மேன்மேலும் கோபத்துடன் பொங்கியே வந்தான்.

அழியாப் புகழ் எய்த வேண்டுமென்ற ஆவலுள்ளவர்கள் இவ்வாறுதான் துடிப்பார்கள்.

## இருபத்தோராவது அத்தியாயம்

# சியமந்திர நதியின் கரைகளிலும் அந்த நதியின் படுகைகளிலும் நடந்த யுத்தம்

கதைச் சுருக்கம் :—துரோஜர்கள் அகிலேசனுக்குப் புறங் காட்டி ஓட்டம் பிடிக்கின்றனர். அவர்களிற் சிலர் ட்ராய் நகரத்தையும் மற்றையோர் சியமந்திர நதியையும் நோக்கி ஓடுகின்றனர். அகிலேசன் அவர்களைத் தாக்கி அடித்து அவர்களிற் பெரும்பாலோரைச் சங்கரித்து விடுகின்றான்.

பத்திரகலுஷனுடைய ஆத்மா திருப்தி அடையுமாறும் அவனுக்குப் பலியிடவேண்டுமென்ற உத்தேசத்துடனும் அவன் துரோஜ வீரர்கள் பன்னிருவரை உயிருடன் சிறைபிடித்து விடுகின்றான். லிகயான் என்பவனையும் கொன்று விடுகின்றான்.

சியமந்திர நதியானது தன் அலைகளால் முழுவேகத்துடன் அவனைத் தாக்குகின்றது. நெப்தியூன் தேவனும் பாலாஸ் தேவியும் அகிலேனுக்கு உதவி புரிகின்றனர். அப்போது சிமோயா நதியானது சியமந்தர நதியுடன் சேர்ந்து விடுகின்றது. கடைசியாக ஜூனோ தேவி நியமித்தபடி நெப்தியூன் தேவர் அந்த நதியை வற்றச் செய்து விடுகின்றார்.

இவ்வாறு இந்த யுத்தம் முடிந்த பின்பு மற்றைய தேவர்களெல்லோரும் தங்களுள் முரண் கொண்டு ஒருவரோடொருவர் பொருகின்றனர்.

இவ்வாறு தேவர்கள் தங்களுக்குள் பொருது வருகையில் அகிலேசன் தனது கொடுந் தொழிலைச் செய்து வருகின்றான். துரோஜர்களில் மீந்திருந்தவர்களை ட்ராய் நகரத்துக்குள்ளே ஓடும்படித் துரத்தி அடித்து விடுகின்றான்.

அஜினர் என்பவர் மாத்திரம் இவனுக்குப் புறங்கொடாமல் இவனை எதிர்த்து நிற்கின்றார்.

அப்பால்லோ தேவர் அகிலேசனை ஏமாற்ற நினைத்து அவன் முன் அஜினரின் உருவத்துடன் நிற்கின்றார். அகிலேசன் அவ்வாறு நின்ற அஜினரைத் துரத்தி ஓடிக்கொண்டிருக்கும் சமயத்தில், துரோஜர்கள் தங்களுடைய நகரத்தினுட் புகுந்து உயிருடன் தப்பிப் பிழைத்து விடுகின்றனர்.

முந்திய அத்தியாயத்திற் சொல்லிய நடவடிக்கைகள் நிகழ்ந்த தினமே இவை அனைத்தும் நிகழ்கின்றன.

சியமந்தர நதியின் கரைகளிலும் அதன் படுகைகளிலும் இவை நிகழ்கின்றன.

---

இப்போது அவர்கள் ஜோவ் தேவரிடமிருந்து உற்பத்தியானதும், அழிவில்லாததும், மந்த கதியை உடையதுமான ஜாந்தஸ் நதியை நோக்கி ஓட்டம் பிடித்தனர். அந்த நதியை அடைந்தவுடன் அவர்கள் இரண்டு பிரிவாகப் பிரிந்து ஒரு பாகத்தார் அந்த நதியின் ஓரமாக மைதானத்தின் குறுக்காய்ப் பாய்ந்து அங்கிருந்து வேறு வேறான பாதைகளின் வழியாய்ப் புகுந்து ட்ராய் நகரத்தை நோக்கிப் பறந்து ஓடினர்.

சிறிது பொழுதுக்கு முன்மாத்திரம் எதிரிகளுக்கு இளைக்காமல் வெற்றியுடன் யுத்தத்தை நடத்தி வந்த அவர்களுடைய சேனைகள், இப்பொழுது அதே சத்துருக்களால் துரத்தப்பட்டு அவர்களுக்குப் புறங்கொடுத்து மானம் இழந்து நடுக்கத்துடன் ஓட்டம் பிடிக்கின்றனர். இவ்வாறு புறங்கொடுத்து ஓடிய இவர்களை ஸாட்டர்னியா தேவியானவள் ஒரு கனத்த மஞ்சினால் மறைத்து விட்டதுமன்றி, இவர்களுக்குப் பின்புறத்திலும் மலை போல் மேகங்களை உருட்டி விட்டனள்.

அதனால் இவர்களில் ஒருபாகத்தார் அந்த ஜாந்தஸ் நதியில் இறங்கினர். அப்பொழுது விருத்தனான ஜாந்தஸ் ஒரு சிங்கம் போல் கர்ஜித்தான். அவனது ராஜ்யத்தில் அந்த ஜாந்தஸ் நதியில் மின்னலைப்போல் மின்னி அடித்துக் கொண்டு வந்த அலைகள் வெண்ணிறமான அந்நதியின் கரைகளை மோதின. அப்பொழுது அந்த ஸைனிகர்களின் கூக்குரல்களும் அலைகளின் அரவமும் ஒன்றாய்க் கலந்து அந்நதியின் கரைகளில் எல்லாம் எதிரொலிகளைப் பரப்பின. அந்நதியால் இங்கும் அங்கும் இருந்த சுழல்களில் துள்ளிக்குதித்துத் தட்டித் தடுமாறிக் கொண்டு தவித்து வந்த குதிரைகளும், கீச்சுக் கீச்சென்று ஓலமிட்டு அலறியழுத வீரர்களும் அந்நதியிலேயே அமுந்தி மாண்டனர்.

தாங்கள் வசித்து வந்த ஒரு களத்தில் ஒரு பெருந்தீயானது எழுந்து தங்களைத் தொடர்ந்து வந்து விட்டால், அத்தீயின் வெப்பத்தைத் தாங்க முடியாமல் தத்தளிக்கும் வெட்டுக்கிளிகள் எல்லாம், எவ்வாறு அக்களத்திலிருந்து ஓட்டம் பிடிக்கின்றனவோ, அவ்வாறே இந்தச் சைனிகர்களது ஓட்டமும் இருந்தது. அணி வகுப்பில் நின்ற தங்களுடைய இடங்களை விட்டுப் பெயர்ந்து மேகங்கள் கவிந்திருந்த திசையை நோக்கி ஓடிய சைனிகர்கள், கூட்டங் கூட்டமாகச் செல்லும் வெட்டுக் கிளிகளைப்போல் அந்நதியின் வெள்ளத்தில் இறங்கி அதற்கு இரையாயினர்.

இவ்வாறு அகிலேசனது வீரத்தினாலும் வேகத்தினாலும் இந்த ஜாந்தஸ் நதியில் வீழ்த்தித் தள்ளப்பட்ட துரோஜர்களும் அவர்களுடைய குதிரைகளும் இடும் கூக்குரலும் அழுகையும்

மேன்மேலும் மலிந்து வந்ததினால், அந்த நதியானது அவைகளை ஏற்று அவைகளுக்குக் கர்ஜனையுடன் விடையளித்தது.

அதன் பின் அந்த வீரன் இரத்தக் கறை படிந்துள்ளதும், சத்துரு சங்காரம் செய்து வந்ததுமான தனது ஈட்டியை ஒரு புறம் எறிந்து விட்டான். அது கடலோரம் முளைத்திருந்த தாமரிஸ்க் என்னும் பூண்டுகளின் மத்தியில் விழுந்து மறைந்து போய்விட்டது.

பின்பு அவன் தேவனைப்போல் அந்தக் கடலினின்று அடித்து வந்த அலைகளையும் எதிர்த்துக் கொண்டு சென்றான். அப்பொழுது அவன் கையிலிருந்த உடைவாளானது அந்த அலைகளுக்கும் மேலாக உயர்ந்து பளிச்சென்று வெளிச்சத்துடன் விளங்கியது.

அவன் அந்த நதியில் ஒருகணம் முழுகுவதும் மறுகணம் தனது வாளைக் கரகரவென்று சுழற்றிச் சுற்றுவதுமாகத் தனது சத்துருக்களைத் தேடிப் பிடித்து அவைகளை வதைசெய்து வந்தான். அப்பொழுது மடிந்த வீரர்களின் அரவத்துடன் அந்த நதியும் கதறி அழுதது. அவன் தன்னுடைய சத்துருக்களை இடைவிடாமல் மேன்மேலும் அடித்துக் காயப்படுத்தி வந்ததினால் அந்த நதியே செக்கச் சிவந்து போய் விட்டது. அங்கு அடித்து வந்த அலைகளிலும் இரத்தம் சுழன்று வந்தது.

இவ்வாறு நுரையுடன் விளங்கிய அந்த வெள்ளத்தைக் கடந்து கொண்டு துரோஜர்களில் மீந்திருந்தவர்கள் அதிவேகமாய்ப் பறந்து சென்று அந்த நதியின் ஓரமாக இருந்த கற்பாறைகளின் இடையிலும், வளைந்து வளைந்து சென்ற குகைகளிலும் பதுங்கிப் படுத்து ஒளிந்து கொண்டனர்.

ஒரு பெரு மீனானது கடலில் ஒரு பெரும் புயலை எழுப்பிக் கொண்டு ஆரவாரம் செய்து வருகையில், சிறுமீன்கள் எவ்வாறு கூட்டங் கூட்டமாக அதன்முன் பறந்து ஆழமில்லாத மேட்டுப் பாங்கான இடங்களுக்குச் செல்லுகின்றனவோ, அவ்வாறே இந்த சைனிகர்களும் அணிவகுப்பினின்றும் பிரிந்து, ஒருவர் மேல் ஒருவர் விழுந்து, மிகவும் ஆழமும் தூரமும் உள்ள குகைகளைத் தேடுவாராயினர். அவ்வாறு புகலிடம் காணாது தவித்து வந்தவர்கள், அந்த நதியில் அடித்து வந்த அலைகளில் சிக்குண்டு துடித்துப் பதை பதைத்தனர்.

இவ்வாறு சத்துரு சங்காரம் செய்துவந்த அகிலேசனுக்கும், சிறிது நேரத்திற்குப் பின் சற்று இளைப்பே உண்டாயிற்று. அப்பொழுது அவன் அந்த துரோஜர் குழாத்தினின்றும், பன்னிரண்டு இளங்காளைகளை உயிருடன் பொறுக்கிக் கரைக்குப் பிடித்து வந்தான். அவர்களுடைய திவ்யமானதும் விலை உயர்ந்ததுமான அரைக் கச்சைகளைக் கொண்டு அவன் அவர்களுடைய கைகளைக் கட்டிவிட்டான். அந்தக் கச்சைகள், அவ்விளங் காளைகளுக்கு

இதுவரை கம்பீரமான உயர்ந்த திவ்ய ஆபரணங்களாக விளங்கி வந்தவை. இப்போது அவையே அவர்களுக்கு விலங்குகளாகவும் ஆகிவிட்டன. அந்த இளம் வீரர்களை அவனுடைய பரிவாரத் தார் அவன் கப்பல்களுக்குக் கொண்டு சென்றனர். இவர்கள் அனைவரையும், பத்திரகலுஷனது ஆத்மாவுக்குப் பலியிட வேண்டு மென்று அவன் கருதியிருந்தான்.

இதன்பின் அவன் பின்னும் ஒருமுறை அந்நதியில் மூழ்கிய போது, அவனது வழியில் இளைஞனும் பிரியம் மஹாராஜனது மகனுமான லிக்கேயன் என்பவன் நின்று கொண்டிருந்தான். ஒலியைக் கிளப்பும் இருப்புக் கோடரியைக் கொண்டு ஒருவன் தனது இரதத்தின் சக்கரத்துக்குக் கட்டையாக உபயோகிக்க வேண்டி, ஒரு முசுக்கொட்டை மரத்தின் பசுங்கிளைகளை வெட்டித் தரிப்பது போல், அகிலேசன் அவனைச் சிறிது காலத்திற்கு முன்னர் அவனது தகப்பனது ராஜ்ஜியத்திலேயே சிறைபிடித்து அவனை லெம்நாஸ் தீவில் அடிமையாக விற்றிருந்தான். அந்த லெம்நாஸ் தீவிலிருந்த ஜேஸனது புத்திரன், அகிலேசன் குறித்த விலையைக் கொடுத்து அந்த அடிமையை வாங்கிக்கொண்டான். அச்சமயம் லெம்நாஸ் தீவின் கரையோரமிருந்த தயாளுவான ஈஷன் என்பவன் அவ்வாறு அடிமைத் தனத்திலிருந்து விடுபட்ட அந்த அரசிளங்குமரனை அழகான அரிஸ்பி நாட்டுக்குக் கொண்டு சென்றான்.

அங்கு சிலகாலம் கழித்த பின்னர், அவன் பத்து தினங் கட்கு முன்னர்தான் தனது தகப்பனது இராஜ்யத்துக்கு வந்து பராதீனத்தை ஒழித்து ஸ்வாதீனமாகக் காலம் கழித்துக் கொண்டு சுகமாக இருந்தான்.

ஆனால் விதியை யாரால் வெல்ல முடியும்? தெய்வத் தினிடம் முரண்பட்டு விரோதம் பாராட்டுவதில் யாது பயன்? அதே தெய்வம் இந்த இளைஞனை முன்னுளிற் சிறைபிடித்திருந்த பழைய சத்துருவின் கைவசமே ஆக்கிவிட்டது.

இப்பொழுது அந்தச் சத்துருவின் கையை விட்டு நழுவு வதற்கு இவனுக்கு வழியின்றியும் போய்விட்டது. முன்னைய யாத்திரையினும் மிகக் கொடிய யாத்திரையைச் செய்ய வேண்டுவதே இப்போது இவனது காரியமாகிவிட்டது.

அகிலேசன் தனக்கு நன்றாகத் தெரிந்திருந்த அந்த இளங் குமரனது முகத்தைக் கண்டவுடன், அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தான் :—

“ஆஹா, மகா வல்லமைகளையுடைய தேவர்களே! என் னென்ன விந்தைகள் எனக்குக் கட்புலனாகின்றன! வெற்றியுடன் விளங்கும் நம்முடைய ஆயுதங்கள் எல்லாம் வலிமை உடையவை தான்! அவற்றின் வன்மைக்குச் சிறிதும் குறைவில்லை. அவை களின் வன்மை வீண்போகவில்லை.

அதோ அங்கு மலைமலையாய் மடிந்து கிடக்கும் துரோஜர்கள் எல்லாம் இனிப் புத்துயிர் பெற்றுக் காலனுலகிலிருந்து புறப்பட்டு வந்து என்னுடன் பொருவார்களென்றே நான் நினைக்கின்றேன். அது நிச்சயந்தான்; இதோ இந்தச் சிறையான சிறுவனைப் போலவே அவர்களும் இந்தப் போர்க்களத்தில் என்னை எதிர்த்து வருவார்கள்.

நான் இவனை அதிசமீபத்தில் சிறைபிடித்து லெம்னாஸில் அடிமையாக்கி விற்றுவிட்டேன். இப்போது இவன் இங்குத் தப்பி வந்திருக்கின்றான். துரோஜ ராஜ்யத்தில் பதுங்குகின்றான். அளவிடற்கரிய ஆழமுள்ள சமுத்திரத்தில் ஒளிந்து கொள்வதற்கு இவனுக்கு இடம் இல்லாமல் போய்விட்டது. இந்த சமுத்திரம் இவனுக்கு இடந்தரவில்லை, அடைக்கலம் தரவில்லை. கணக்கற்ற இவனுடைய இனத்தாரைப் போர்க்களம் செல்லவொட்டாமல் தடுத்துவரும் இந்தச் சமுத்திரம் இவனைத் தடுக்க இயலாது போயிற்று.

ஆஹா! அதோ பார், அவன் திரும்பிவருகின்றான். பறந்து செல்லும் எனது நல்ல ஈட்டியே! அவனை ஒருகை பார்! நிலையின்றி அலைந்து திரியும் இவனுக்குப் படுகுழியில் ஓர் இடமும் உளதோ என்று பார்! இந்தச் சுறுசுறுப்புள்ள இளங் கோவை இந்தப் பூமியானது இப்போதாயினும் இறுகப் பிடித்துக் கொள்ளுமா என்று பார்! ஹெர்குலிஸையுமன்றோ இந்த பூமியானது வலியப் பிடித்துக் கொண்டுவிட்டது!" என்றான்.

அப்போது அந்தச் சிறுவன் பெருங் பீதியுடன் பயந்து நடுக்குற்று தன்னுடைய மகுடத்தையும் முகமூடியையும் கழற்றித் தூர எறிந்துவிட்டுத் தன்னுடைய ஈட்டியும் கேடயமும் பயனற்றவை, தன்னைக் காக்க இயலாதவை என்று அவைகளையும் அந்தப் போர்க்களத்தில் நழுவவிட்டுக், கிடுகிடுவென்று நடுங்கிக் கொண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டும் அந்த நதியினின்றும் ஓட்டம் பிடித்தான். அவ்வாறு ஓடுகையில் அவனது முழங்கால்கள் ஒன்றோடொன்று முட்டிக் கொண்டன!

அதன்பின் அவன் பயத்தினால் மேனி வெளுத்து, அகிலேசனை அணுகிக் கண்ணீர் வடித்து அழுது அவன் கால்களைப் பிடித்துக் கொண்டு கதறினான். தனது இளம் பிராணனை இழக்க அவனுக்கு மனம் இருக்கவில்லை. அவனது மனமும் தன்னை அணுகி வந்து கொண்டிருந்த நமனைக் கண்டு நடுங்கியது. அக்கணமே அகிலேசன் அவ்விளைஞனைக் காயப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் தனது ஈட்டியை உயர்த்தினான். அதே சமயத்தில் அச்சிறுவன் அகிலேசன் கால்களைப் பிடித்து அவற்றை முத்தமிட்டு அவன் முன்னால் அடிசாய்ந்த மரம் போல் காலை நீட்டிக்கொண்டு விழுந்தான்.

அவன் தனது கை ஒன்றினால் அகிலேசனுடைய கால்களை இறுகக் கட்டிக் கொண்டும், மறுகையினால் தனது இரத்தத்தைப்

பருகித் தனது தாகத்தைத் தணித்துக்கொள்ள எண்ணித் தனக்கு மேல் நேராகத் தொங்கிக் கொண்டிருந்த அகிலேசனது ஈட்டியைத் தடுத்துக் கொண்டும், கல்லையுங் கரைக்கத் தக்க வசனங்களைத் தனது மனம் உருகத் தழுதழுத்த குரலில் உரைத்தான் :—

"மஹாவீர ! அகிலேசா ! என்னைப் பார் ! என்னை நீ நன்ருய் அறிவாய் ! முன்னுளில் நான் உன்னுல் சிறைபிடிக்கப் பட்டவன். லிக்கேயன் மறுபடியும் உன் அடியில் விழுந்து துடிக் கின்ருன், தவிக்கின்ருன். இந்த ஏழையின் மீது சிறிது கருணை கூர்ந்து இரங்கு !

ஸ்ரீ தேவியின் பிரஸாதங்களை நான் முன்னொருக்கால் உன்னிடமிருந்து அருந்தியவன், இந்த ஏழையை நீ, முன்னொருக் கால் சிறை பிடித்து நெடுந்தூரமுள்ள லெம்னுஸுக்குக் கொண்டு சென்றனை. இவனைத் தந்தை உற்ருர் உறவினர் முதலானவர் களிடமிருந்தும் கடலோரத்திலுள்ள இவனது பிறந்த நாட்டி லிருந்தும் பிடித்துச் சென்றனை. அன்றைய தினம் இந்த ஏழையைச் சிறை மீட்பதற்கு உனக்கு நூறு காளைகளைக் கப்பமாக கொடுத் தனர். இன்று மாத்திரம் நீ, எனக்குக் கிருபை செய்வாயானுல் உனக்கு விசேஷமான திரவியங்கள் கிடைக்கும்.

நான் முன்னுளில் அனுபவித்த கஷ்ட நஷ்டங்களினின்றும் சிறுமைகளினின்றும் இன்னும் மீளவில்லை. அவைகளின் குறிகளை இன்றும் நீ, என்னிடம் காணலாம். நான் இங்கு வந்து இன்னும் பன்னிரண்டு தினங்கள் கழியவில்லை, இளஞ்சூரியன் என்னைப் பன்னிரண்டு தரம் மாத்திரமே கடாட்சித் திருக்கின்ருன்!

ஐயோ! என் தலைவிதியே! ஜோவ் தேவர் என்னைப் பின் னும் உனது கைவசமே ஆக்கிவிட்டார்! கொடிய தீவினையானது நான் தனக்குப் பலியாக வேண்டு மென்று என்னை இறுக்கு கின்றது.

பிரியம் மகாராஜனுக்கும் அதிரூபவதியாகிய வயோதி தேவிக்கும் நான் பிறந்தவன். அந்த தேவியானவர் லிலிஜியாவின் புத்திரனை ஆல்தீசனுடைய புத்திரி. ஆல்தீசர் அதிப்பிரஸித்த மான பிடாஸஸ் என்னும் ஊரில் வெள்ளி போன்ற நிறமுடைய சத்னியோ நதி பாயும் பிரதேசங்களை ஆண்டு கொண்டு வசித்து வந்தார். அந்த தேவிக்கு இரண்டு புத்திரர்கள் உண்டானுர்கள். அவர்கள் இருவரும் துக்கம் அனுபவிக்கவே பிறந்தனர்.

அவ்விரு சகோதரர்களது இரத்தத்தையும் ஒரே ஒரு ஈட்டியே குடிக்கப் போகின்றது. எனது உடன் பிறந்த பாலிடோர் ஏற்கனவே அந்த ஈட்டிக்கு இரையாகி விட்டான். அவனுக்குப்பின் நானும் அதே ஈட்டிக்கு இரையாகப் போகின் றேன்,

ஐயோ! நான் எவ்வாறு அந்த பயங்கரமான ஈட்டிக்குத் தப்புவேன்? எவ்வாறு அந்த ஆயுதத்திற்குத் தப்புவேன்? எவ்வாறு ஓடிப் பிழைப்பேன்? ஏதோ ஒரு பூதமே என்னை அந்த ஆயுதத்திற்கு இரையாகுமாறு உந்தித் தள்ளுகின்றது! மாண்டு போக வேண்டுமென்பதே எனது தலைவிதியாக இருக்கின்றது!

உனது மனது எள்ளளவேனும் இளகி ஈரம் இரக்கம் தயவு முதலியவைகளுக்கு இடந் தருவதாக இருந்தால், என்னைக் கருணையுடன் கடாட்சிப்பாய்! நான் ஹெக்டரது மரபில் வந்தவன் என்று நீ என்னை அறவே வெறுக்க வேண்டாம். அவனது தாயின் வயிற்றில் இந்த ஏழை பிறக்கவில்லை. உனது அன்பனான பத்திரகலுஷனைத் தொலைத்த ஹெக்டரைப் பெற்ற தாய் என்னைப் பெறவில்லை'' என்று மாரிபோல் கண்ணீரைச் சொரிந்து கொண்டு இளையோனான அந்த ராஜகுமாரன் உரைத்தான்.

அகிலேசன் அவ்வசனங்களைச் சிறிதேனும் செவிகொடுத்துக் கேட்கவில்லை. அவனது மனம் தளரவில்லை, அவன், அச்சிறுவனுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தான் :—

"உயிர்ப் பிச்சை தரவேண்டும் என்றாவது பணம் தருவேனென்றாவது பேசவேண்டாம். பத்திரகலுஷன் இறந்து போய் விட்டான். அவனுக்கு இந்தக் கதி வந்தபின், இந்தக் களத்தில் என்னை எதிர்த்து வருபவன் எவனாயினும் அவன் மரித்தே போவான். அவனை நான் கொன்றே தீருவேன். அது திண்ணம்.

அன்றியும் வெறுக்கத் தக்கவர்களான பிரியத்தின் வம்சத்தவர்கள் ஒருக்காலும் எனக்குத் தப்ப மாட்டார்கள். ஆதலால் எனது அன்பனே! நீ உனது உயிரை விடவேண்டியது தான். நீ இவ்வாறு அழுது புலம்புவதில் என்ன பயன்?

மஹானும் அருங் குணங்கள் நிறைந்தவனுமான பத்திரகலுஷன் இறந்து போய்விட்டனன். அவன் உன்னிலும் மிகச் சிறந்தவன். அவன் இறந்துபோக வேண்டுமென்று அவனது தலையில் எழுதியிருந்தது. அவ்வாறிருக்க அவனிலும் அதி கேவலனான நீ உனக்கு வரவிருக்கும் மரணத்தைக் குறித்து வருந்துவானேன்? நீ என்னைப் பார்க்கவில்லையா, நான் யார் என்பதை அறியவில்லையா?

பூலோகத்தில் பிறந்த ஒரு மனிதன் பெறக்கூடிய எல்லாப் பேறுகளையும் பெற்றவன் நான். அவைகள் அனைத்தும் எனக்கு ஆபரணங்களாகவே விளங்குகின்றன. அவை என்னிடம் அடைக்கலம் புகுந்துள்ளன. நான் ஒரு மஹா வீரனது புதல்வன். ஒரு தேவியே எனது தாய் என்றாலும் எனக்கும் ஒரு நாள் அழிவு வரவே வரும், அதன் வருகையைத் தடுக்க ஒருவராலும் இயலாது. அன்றைய தினம் ஓர் ஈட்டி, ஓர் அம்பு, அல்லது ஒரு சூலாயுதத்தினால் இரவிலோ, பகலிலோ நான் தாக்கப்பட்டு இறந்தே போய்

விடுவேன். என்னினும் வலிமிக்க ஒரு வீரனுலாவது அல்லது ஒரு சூழ்ச்சியினுலாவது நான் மரித்துப் போவது நிச்சயம். மரணமும் வினைப்பயனும் என் தலையின்மேல் கவிழ்ந்துகொண்டே இருக்கின்றன. அவற்றைக் கடக்க என்னுல் ஒருக்காலும் ஆகாது, இயலாது! ஆதலால் நீயும் உனது உயிரை விடு'' என்ருன்.

கடைசியாக அவ்வசனத்தை உரைத்த கணமே அவன் அச்சிறுவனை ஒரே வெட்டில் வெட்டிவிட்டான். அவ்விளங் குமரனும் அடியற்ற பனைபோல் தரையின்மேல் சாய்ந்து விழுந்து விட்டான். அவனது கை செயலற்றுப் போய்விட்டது, தனது ஈட்டியையும் நழுவ விட்டு விட்டது. அவனது தேகம் பாதாதி கேசம் பயமிகுதியினுல் நடுங்கியது.

அச்சமயம் அகிலேசன் தனது பட்டாக் கத்தியைச் சட்டென்று உருவி எடுத்து அதன் அலகை அவனது கழுத்தில் குத்திப் புதைக்க, அதன் வழியாக அவனது இரத்தமானது கதகத வென்று கொதித்தது. புகையும் கிளம்பியது. அச்சிறுவன் திணறிக் கொண்டு தரையின் மேல் குப்புற விழுந்தான். அப்போது அதிதாகத்துடன் துடித்துக் கொதித்துவந்த அந்த நிலமானது அவனது உடலிலிருந்து தடதட வென்று வந்த இரத்தத்தைக் குடித்துத் தனது தாகத்தைத் தணித்துக் கொண்டது.

வெற்றியுடன் விளங்கிய வீரனை அகிலேசன் அப்போது அந்தச் சிறுவனது உடலை அந்த இரத்த வெள்ளத்திற்கு ஒரு பலியாக அதிலேயே எறிந்து விட்டு, அது அந்த நதியில் மிதந்து வருகையில் அதை நோக்கிப் பின்வருமாறு இழித்துக் கூறினுன் :—

''லிக்கேயா! அங்கேயே கிட! அவ்விடமேகிட! உனது உடல் ஊதி உப்பிப்பருத்து மீன்களுக்கு உணவாகட்டும்! அவை இரத்தம் படிந்து கோரமாக விளங்கும் உன்னுடைய காயங்களைத் துளைத்து அவற்றிலுள்ள இரத்தத்தை உறிஞ்சட்டும்! அவ்விடத்தில் உனக்கு அபரக்கிரியைகள் நடவா. தனது மகனை இழந்த ஒரு தாய் அவ்விடம் வந்து கண்ணீர்விட்டு அழவும் மாட்டாள். வேகமாக ஓடும் சியமந்தரன் உன்னை உருட்டிக் கொண்டு சென்று ஆழ்கடலில் சேர்த்து விடுவான்.

அந்த சியமந்தரன் அலைகள் ஒவ்வொன்றும் ஓரோர் நீர் வாழும் கொடிய ஜந்துவை இழுத்து வரும்; அந்த ஜந்துக்கள், உலகத்தில் சுக ஜீவிகளாக வாழ்ந்து வந்த அரசர்களின் கொழுத்த தேகங்களிலுள்ள மாமிசத்தைத் தங்கு தடைகளின்றியும் தண்டனைகளின்றியும் விருந்துண்டு வரும். ட்ராயும் துரோஜ வம்ச பரம்பரை அனைத்தும் அவ்வாறே நசிந்து போம். அவர்களுக்கு இவ்வாறு அழிவுண்டாக வேண்டுமென்பதே எனது கோரிக்கை. அவர்களிடம் எனக்குள்ள தயவும் தாட்சண்ணியமும் இவ்வளவு தான்.

நீங்கள் அனைவரும் சியமந்தர நதியை ஆராதித்து வணங்கி வந்தீர்களே, அதனுல் உங்களுக்கு இப்பொழுது என்ன நன்மை உண்டாயிற்று? உலகத்தில் அந்த நதிக்கு விசேஷமான மரியாதைகளும் வரிசைகளும் வழங்கப்பட்டன. அது அழியாப் புகழும் எய்தியது தான். அவற்ருல் என்ன பயன்? நீங்கள் காளைகளை வெட்டி அவற்றை சியமந்தரனுக்குப் பலியிட்டீர்களே! அவை வீணேயாயின! அதிவிரைவும் சுறுசுறுப்பும் உள்ள உங்களுடைய பாய்மாக்களைக் கொன்று, அவைகளை நீங்கள் அந்நதியிலுள்ள மூலை முடுக்குக்களில் நைவேத்தியங்கள் செய்கின்றீர்கள், அவையும் வீணுயின. அந்நதியின் அதிபதி உங்களுக்கு இவ்வாறு வெகுமானங்களைக் கொடுத்து வருகின்ருன். இந்தக்கொடுங்கேடே உங்களுக்குப் பிராப்தமாகின்றது.

கிரேக்கர்களுக்கு நீங்கள் இழைத்த பழிகள் அறவே தீரும்வரை காரியங்கள் இவ்வாறுதான் நடக்கும். இவ்வாறு நடந்தால்தான் எங்களது ஆப்த நண்பனும் அன்பிற்குப் பாத்திரனுமான பத்திரகலுஷனுடைய ஆத்மா சாந்தி அடையும். அகிலேசன் சிறிது காலம் யுத்த களத்தைவிட்டு விலகியிருந்ததற்கு இதுவே பரிகாரம்'' என்ருன்.

இவ்வாறு அகிலேசன் தற்பெருமையுடன் உரைத்த வசனங்களைச் செவியேற்ற சியமந்தர ராஜனுக்கு அடங்காக் கோபமுண்டாய்விட்டது. அவன்சீற்றத்துடன் பொங்கி எழுந்தான். தனது நதியை இவ்வாறு அவன் இழித்துரைத்ததைக் கேட்டு, அவனுக்கு அடங்காக் கோபம் மூண்டு விட்டது. இந்த அகிலேசனது கொழுப்பையும் கொட்டத்தையும் அடக்கவும், ட்ராயை ரக்ஷிக்கவும் என்னென்ன உபாயங்கள் செய்யலாம், எந்தெந்த தெய்வத்தின் உதவியைக் கோரலாம் என்று அந்த நதிக்கடவுள் ஆலோசித்து வந்தான்.

இவ்வாறு அவன் யோசித்து வருகையில் அந்த வீரன் தன் சகலமான ஆயுதங்களையும் அணிந்து கொண்டு மஹா வீரனை அஸ்திரோப்பியஸ்ஸைச் சண்டைக்கு இழுக்க நினைத்து, அவனை நோக்கிப் பாய்ந்து வந்தான்.

அந்த அஸ்திரோப்பியஸ் என்பவன் அதிபுனிதமான ஆக்ஸியன் நதியிலிருந்து பிறந்த உன்னதமான பரம்பரையில் வந்தவன். அங்கு அதிரூபலாவண்ணியங்களுடன் விளங்கிய பெரிபியா என்னும் ஒரு கண்ணிகை இருந்தனள். நாற்புறமும் நற்புனல்கள் சூழப் பெற்ற ஒரு நன்னதியின் தேவன் ஒருவன், அவளிடம் காதல் கொண்டு அவளை மணந்தான். அந்த மணத்தில் இந்தப் பரம்பரை உற்பத்தியாயிற்று.

இவ்வாறு மிக உயர்ந்த மரபில் வந்த வீரனை நோக்கித்தான் அகிலேசன் இப்போது பாய்ந்தான். ஆனுல் அந்த வீரன் அகிலேசனுக்குச் சிறிதும் பயப்படவில்லை. அவன், தான் இருந்த இடத்

திலேயே உறுதியாக நின்று வந்தான். பின்பு அவன் இரண்டு ஈட்டிகளைச் சுழற்றிக் கொண்டு அந்த நதியினின்றும் புறப்பட்டு முன்னுக்கு வந்தான். தனது புனலில் கணக்கற்ற வீரர்களைக் கொன்று குவித்து அதனை அசுத்தப் படுத்திய பிலிதீசனது மண்டையை உருட்டிவிட வேண்டும் என்று ஆத்திரங் கொண்ட அந்த நதியும் அவனுக்கு உதவியாகவே இருந்து அவனை முன் செல்லத் தூண்டியது.

இவ்வாறு வீரர் இருவரும் ஒருவரை ஒருவர் நெருங்கி வருகையில், அகிலேசன் தனது சத்துருவை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

" நீ யாரடா! மனித வர்க்கத்திலேயே மிகச் சிறந்த வீரனோ நீ? நீ யார்? எங்கிருந்து வந்தனை? உனது குலமென்ன? நமது அடங்காக் கோபத்திற்கு இலக்காகி வருமாறு ஒரு பிள்ளையைப் பெற்றவன் அதிர்ஷ்டமில்லாதவனே யாவன் " என்றான்.

அதற்கு மறுமொழியாக, அஸ்திரோப்பியஸ் பின்வரும் வசனங்களை உரைத்தான் :—

" பிலியஸ்ஸின் மகனே! எங்களது கீர்த்தி பெற்ற வம்சத்தை வரிசைக்கிரமமாகச் சொல்லி விரித்துரைப்பதினால் பயன் என்ன? நான் பியோனியா என்னும் மலைநாட்டிற்கு அரசன். அந்நாட்டு மலைச்சரிவுகளுக்கு அதிபதி. கூரான ஈட்டிகளை ஏந்தியுள்ளவர்களான என்னுடைய நாட்டாரையே இந்த யுத்தத்திற்குக் கூட்டி வந்திருக்கின்றேன். இலியனுக்கு உதவி செய்ய வேண்டு மென்ற நோக்கத்துடன் புகழ்களுக்கு உறைவிடமான இந்த யுத்தகளங்களுக்கு நான் வந்து இன்றைக்குப் பத்து தினங்களாகின்றன. இன்றைய தினகரன் பத்தாம் முறை உதித்து வருகின்றான்.

தன்னருகிலுள்ள சிற்றாறுகளும் ஓடைகளும் கொண்டு வரும் வெள்ளங்களால் பெருத்து விளங்குவதும், அவ்வாறு பெருத்த அந்த அதி வெள்ளத்தில் வேர் அறுந்து மிதக்கும் பிராந்தியங்கள் முழுவதையும் தனது நீரினால் நிறைத்து விடுவதுமான ஆக்ஸியஸ் என்னும் நதியே என் பிதா. அவர் தமது ஈட்டியின் வலிமையினால் பெருங் கீர்த்தியும் புகழும் எய்தியவர். நீ இப்போது உனது கையைத் தூக்கு! ஒரு கை பார்! உன்னை இப்போது எதிர்த்து வரும் வீர குமாரனையும் நீ, ஒருகை பார்க்கலாம் " என்றான். இந்த வசனங்களை அவன் பயமுறுத்திக் கொண்டே உரைத்தான்.

சத்துருக்களான வீரர்கள் இருவரும் இவ்வாறு ஒருவரை ஒருவர் நோக்கிக் கொண்டு முன் வந்தனர். தன் இருகைகளாலும் ஈட்டிப் பிரயோகம் செய்வதில் சமர்த்தனான அஸ்திரோப்பியஸ் ஒரு கணத்தில் இரண்டு ஈட்டிகளை விடுத்தான். அவற்றில் ஒன்று அகிலேசன் அணிந்திருந்த கவசத்தைத் தாக்கியதே அன்றி, அதைத் துளைத்துக் கொண்டு உட்புகவில்லை. மற்றையது அகிலே

சினந்து கரத்தைத் தாக்கிக் குத்தியது. அவ்வாறு சேதிக்கப்பட்ட அந்தக் கரமானது அப்போது இரத்தத்தைக் கடகடவென்று ஒரு சுழல் போல் வடித்தது. அந்த ஆயுதம் அதன் பின் நிலத்திற் பாய்ந்து அங்கேயே ஊன்றி நின்று விட்டது. அடுத்த கணத்தில் பிலியனது ஈட்டியானது ஒரு மின்னலைப்போல் வேகத்துடன் பறந்து சென்றது, ஆனால் அது பயனற்றே போய்விட்டது. அது குறியும் நெறியும் தவறி ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு அதன் வழியே சென்று சீற்றத்துடன் அந்த நதியின் உயரமான கரையிற் பாய்ந்து பூகோளத்தின் மத்திய பாகம் வரையும் ஆழமாகத் துளைத்துக் கொண்டு சென்று அவ்விடத்திலேயே ஊன்றிப் பதிந்து நின்ற வண்ணம் துடித்து வந்தது. அதன்பின் பிலிதீசன் தனது அள்ளை யோரமாகத் தொங்கிக் கொண்டிருந்த தனது உடைவாளை உருவிக் கொண்டு, முன்னிலும் இருமடங்கு ஆத்திரத்துடன் தனது சத்துருவை நோக்கிப் பாய்ந்தான். அச் சமயம் அவனது சத்துரு நிலத்தில் ஊன்றி நின்ற தனது ஈட்டியைப் பிடித்து அசைத்துக்கொண்டிருந்தான்.

அவன் அந்த ஈட்டியை உருவிப் பிடுங்கி விட வேண்டுமென்று மூன்று தரம் முயன்றான், அம் மூன்று முறையும் அதைப் பிடுங்குவதற்கு அவனால் இயலாமற் போய் விட்டது. நான்காம் முறையும் அவன் அந்த ஈட்டியைப் பிளந்து விடலா மென்றும் முயன்றான். அந்த முயற்சியும் வீணே ஆய் விட்டது, அந்த ஈட்டியை பிளந்து விட வேண்டு மென்று குனிந்து கொண்டிருக்கையில், அவன் குப்புற விழுந்தும் விட்டான். அப்பொழுது அவனது வயிறு கோரமான காயமேற்றுக் கீறுண்டு கிழிந்து பிளந்து போய் விட்டது.

அவனுடைய குடல்கள் தகதகவென்று புகையைக் கக்கிக் கொண்டு கட கடவென்று நிலத்தின் மேல் விழுந்தன. தன்னை வென்ற வீரனது காலடியில் அவன் வயிறு பதைக்கத் துடித்துக் கொண்டு கிடந்தான். அவனுடைய கண்கள் இருண்டு போயின. அவனது ஆவியும் பறந்து ஓடிப் போய் விட்டது.

அப்பொழுது அவனை வென்ற வீரன், இறந்து பட்ட அவனது தக தகவென்று பிரகாசிக்கும் கவசத்தை அவனது உடலினின்றும் கழற்றிப் பெருமிதங் கொண்டு பின்வருமாறு தனது வெற்றியைத் தானே பாராட்டி உரைத்து மகிழ்ச்சி அடைந்தான் :—

"உனது பெருமை இவ்வளவு தான்! அதற்கும் அழிவு காலம் வந்து விட்டது! ஜோவ் தேவருடைய மக்களுடன் பொருது வர வேண்டு மென்று துணிந்து வருவோரது கதி இதுதான் என்பது இப்பொழுது பட்டப் பகல் போல் வெளிச்சமாகி விட்டது! இதுவே அவர்களது தலை விதி!

ஒரு நதியினின்று பிறந்த வம்சத்திற் சேர்ந்தவன் என்றென்றோ, நீ, உன் குலத்தின் பெருமையை என்னிடம் உரைத்

தாய்! மஹானுன ஸாட்டர்னியஸ் தேவனே எனது குலத்தின் மூலபுருஷன், அவ்வாறிருக்க ஒரு ஜலோற்பவனுன நீ, உனது குல நலம் பேசுவது தகுமோ? அழகோ? நான் பிலியஸ், இயாக்கஸ், ஜோவ் என்னும் பெரியோரது பரம்பரையில் வந்தவன்.

ஓட்டம் பிடிக்கும் நதிகளைக் காட்டிலும் இடிக் கடவுள் எவ்வளவோ உயர்ந்தவர். அவரது வம்ச பரம்பரையில் வந்த வர்கள் உனது ஜலப் பரம்பரையைக் காட்டிலும் எவ்வளவோ உயர்ந்தவர்கள். முன் காலத்தில் எப்பொழுதாயினும் சியமந்தரன் தனது வலிமையைக் காட்டி யிருக்கலாம், நதிகளின் சமார்த்தியத் தையும் அவன் அப்பொழுது நிரூபித்திருக்கலாம். என்ருலும் ஜோவ் தேவரைக் கண்டால் அவன் நடுங்கவே நடுங்குவான்.

அவரது மகனுடன் யுத்தத்திற்குச் செல்லவும் அஞ்சுகின் ருன். இந்தச் சண்டையில் அச்சிலூஸ் பிரவேசித்தாலுங் கூட அவனும் வெற்றி அடைய மாட்டான், அவன் முயற்சிகள் எல்லாம் வீணே ஆகிவிடும்.

சமுத்திரத்திலுள்ள அலைகளெல்லாம் ஒன்று சேர்ந்து ஆர வாரத்துடன் வந்தாலுங் கூட, அவற்றின் ஆற்றலுங் கூட இவ் வாறே பயனற்றுப் போம். கடல்களுக்கும் நதிகளுக்கும் ஊற்றுக் களுக்கும் சுனைகளுக்கும் கூடப் பிறப்பிடமாகிய ஜலாசயங்களை உடையதும் ஒரு நாளும் அழிவில்லாதது மான சமுத்திரமும் ஜோவ் தேவரின் இடிபோன்ற குரலைக் கேட்ட மாத்திரம் திகில டைந்து விடுகின்றது. அப்போது அது பாதாளத்தில் ஒதுங்கிக் கிடக்கும் தன்னுடைய குண்டுகளிலும் குழிகளிலும் பள்ளங்களிலும் பதுங்கிக் கொண்டு பயந்து நடுங்கிக் கிடக்கின்றது" என்ருன்.

அவ்வாறு உரைத்த பின்னர் அவன் அந்த நதிக்கரையில் ஊன்றி நின்று கொண்டிருந்த தனது கத்தியை உருவி எடுத்துக் கொண்டு அவ்விடம் விட்டு அகன்ருன். ஆவியை இழந்த வீர னுன அவனது சத்துருவும் தனது உறைந்த இரத்தத்தில் அழுந்திக் கிடந்தான். அப்பொழுது அந்த நதியில் அடித்து வந்த அலைகள் அந்தக் கறை படிந்திருந்த பிரேதத்தைக் கழுவின. பெரு அலைகள் ஒன்றன் பின் ஒன்ருக வந்து அப்பிணத்தை அடித்துத் தாக்கின. இவ்வாறு அந்தப் பிணமானது அந் நதியின் இரு கரைகளுக்கும் மத்தியில் முன்னும் பின்னுமாய் உருண்டு புரண்டு கொண்டு அந் நதியில் சுற்றிச் சுற்றி நீந்தி வந்த விலாங்கு மீன் களுக்கும் அப்பொழுது நதியில் வாழ்ந்து வந்த மீன்களுக்கும் உணவாகக் கிடந்தது. இந்த வீரனைப் போலவே வெட்டுண்டு இறந்து போய் விட்ட அந்த துரோஜக் கட்சியைச் சேர்ந்த மஹா வீரர்களும் அந் நதியின் நாற்புறமும் சிதறுண்டு கிடந்தனர்.

அப்போது அந்த யுத்த களத்தின் ஓரமாக விரைந்து சென்ற அவர்களது குழாத்தைக் கண்ணுற்ற அகிலேசன் சீற்றங் கொண்டு அவர்களின் மேல் பாய்ந்து திராஸியஸ், அஸ்த்திப்

பிளஸ், நீஸஸ் என்பவர்களைக் கொன்றான். டைமன், தெர்ஸிலோக்கஸ், ஏனியஸ் என்பவர்களும் வெட்டுண்டு மடிந்து விழுந்தனர்.

அன்று அந்த நதியின் ஆழத்தில் மூலை முடுக்குக்களிற் சஞ்சரித்துக் கொண்டிருந்த மஹானான சியமந்தரன் மாத்திரம் பின் வருமாறு உரத்துக் கூச்சலிட்டுப் பேசாமலிருந்திருப்பானேல் இவர்கள் மட்டு மிதமின்றி இன்னும் கணக்கில் அடங்காத வேறு அநேக வீரர்களும் அவனது ஈட்டிக்கு இரையாகி நரகம் புகுந்தே இருப்பார்கள். அவன் வசனங்கள் அந்த நதியின் இருகரைகளி னின்றும் எதிரொலிகளைக் கிளப்பின. அவன் சொல்லியதாவது:—

"வாராய்! மர்த்தியர்கள் அனைவரிலும் முன் வைத்து எண்ணப் படுபவனே! தேவர்கள் அனைவரும் உன் பங்கில் இருக்கின்றனர்! நீ ஒப்பற்ற தைரியமுடையவன். தேவர்களுக்குச் சமானமான வன்மையுடையவன்.

துரோஜர்கள் அனைவரையும் கொன்று விடும்படிக்கும் அவர்கள் எல்லோருடைய மண்டைகளையும் உருட்டி விடும் படிக்கும் ஜோவ்தேவர் உனக்கு ஆணையிட்டிருக்கலாம். அதற்குத் தகுந்த கை வலிமையுங் கூடக் கொடுத்திருக்கலாம், என்றாலும் நீ என்னிடம், உனது கோபத்தைச் செலுத்துவானேன்? நீ என்னிடம் உனது கோபத்தைச் செலுத்துவது தகாது.

நீ செய்து விட்ட காரியத்தை நீயே பார்! எனது நதி யானது பிணக் குவியலினாற் தூர்ந்து போய் விட்டது. ஜலம் ஓடு வதில்லை. கால்கள் சமுத்திர ராஜனுக்குக் கொண்டு சென்று செலுத்தும் கப்பங்களும் ஒரேயடியாய் நின்று போய் விட்டன. அக் கால்கள் மலைபோல் உருண்டு சென்று கொண்டிருந்தன. அவை அனைத்தும் இப்போது நின்று விட்டன!

உனக்கு இந்த ஆத்திரம் வேண்டாம். உனது ஆற்றலை நிறுத்தி விடு. இதுவரை நமக்குச் செய்த தீங்குகள் போதும், உனது சத்துரு சங்காரத்தினால் ஒரு தேவனுக்கு வியப்பு உண்டாய் விட்டது என்று அறிந்து திருப்தி அடைந்து உடனே நீ, வந்த வழி நோக்கித் திரும்பிச் செல்!" என்றான்.

அந்த நதியானது மனித உருவுடன் அவன் முன் தோன்றி இவ் வசனங்களை உரைக்கக் கேட்ட அந்த மஹா வீரன் பின்வரு மாறு மறுமொழி பகர்ந்தான்:—

"புனிதமான நதியே! நீ சொல்லியபடியே நாம் செய் வோம். ஆனால் அதற்கு முன் ட்ராய்க்கு விதிக்கப்பட்டிருக்கும் விதி நிறை வேற வேண்டும். அதுவரை நாம் நம்முடைய நட வடிக்கைகளை நிறுத்த மாட்டோம். அந்த நாட்டின் கோபுரங் களின் உள்ளில் இருக்கும் துராத்மாக்கள் துடிக்கும் வரையிலும்,

நம்முடைய ஆயுதங்களைக் கண்டு அவர்கள் மதி கலங்கும் வரை யிலும், நம்முடைய ஆத்திரமும் கோபமும் தணியா. ஒன்று அந்த ட்ராய் நகரின் கோட்டையைக் காத்து வரும் ஹெக்டர், இந்த ஈட் டிக்கு இலக்காகி இதைக் கறைப் படுத்த வேண்டும்; இன்றேல் அடியோடு மாண்டு போக வேண்டும், இந்த இரண்டு காரியங் களில் ஒன்று ஆக வேண்டும்" என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தனது இரதத்தை தனது சத்துருவை நோக்கித் தட தடவென்று விரைந்து ஓட்டிக் கொண்டுச் சென்றான். அப்பொழுது ஸ்வர்ணச் சாயையை உடைய வெள்ளங் கொண்ட அந்த நதியானது வெள்ளி வில் தரித்த தேவனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தது:—

"ஜோவின் புத்திரரே! ட்ராயைக் காக்கும் நிமித்தம் பீபஸ் பகவான் தன்னுடைய புனிதமான கிரணங்களைச் சொரிய வேண் டும், வெற்றி பெறும்படி அவன் ட்ராய்க்கு ஊக்க மளிக்க வேண் டும், ஹைப் பீரியன் விழும் வரை சகலமான ஜனங்களின் முகங் களும் பயங்கரமான இருளில் மறைந்து போக வேண்டும் என்பன தேவாதி தேவனுடைய ஆணைகள் அல்லவா? அவைகள் கண்டிப்பாகவும் தெளிவாகவும் இருக்க வில்லையா?" என்றது.

அந்தக் கேள்விக்கு ஒரு விதமான பதிலும் வரவில்லை. அந்நதிக் கடவுளின் சிரமம் வீணே ஆயிற்று. வீர சூரப் பராக்கிர மங்கள் மிகுந்த வீரனை அகிலேசன் சிறிதும் மனந்தளராமல் அங்குக் கொந்தளித்துக் கொண்டிருந்த அலைகளை உழுது கொண்டே மிகத் துணிவுடன் முன் சென்று வந்தனன். அப்போது அந் நதியின் கடவுள் அதி கோபங் கொண்டு அந் நதிக் கரையின் மேலாக உயர்ந்து எழுந்து மோதினான். அவனது அடிவயிற்றி லிருந்த ஆழமான குழிகளிலிருந்து பெருத்த இரைச்சல்கள் உண்டா யின. அந்நதியே முழங்கியது. மாண்டவர்களுடைய கண்டங்களை யும் முண்டங்களையும் அந் நதியில் அடித்து வந்த அலைகள் அதன் கரைகளின் மேல் மலைகள் போல் குவித்தன. அவ்வாறு குவித்த பிணங்கள் ஒன்றின்மே லொன்றாக மேலுங் கீழுமாக விழுந்து தடுமாறின. அவைகளின் முன்னிலையில் மோதிய அலை கள் திரைகள் போல் உயர்ந்து எழுந்தன. அத்திரைகளின் இடையில் ஆழமான அகழ்களும் உண்டாயின. அவ்வாறு உயர்ந்து மோதிய திரைகள் அந் நதியை விட்டு ஓடியவர்களுக்கு ஒரு திரை போல் அவர்களை மறைத்து உதவி செய்தன. அதன் பின் அத்திரைகள் அகிலேசனது தலைக்கு நேராகத் தாழ்ந்து தணிந்து இடியைப் போல் சப்தத்தைச் செய்து கொண்டு அவனை நாற்புறமும் சுற்றி வளைத்து விட்டன. அதி கனமான அவனது கேடயமும் அவ்வாறு அவனை நோக்கிப் பாய்ந்து வந்த அலை களின் முன் வளைந்து போயிற்று. அவனுடைய கால்களும் தரை யிற் பாவி நிற்கவில்லை. விசையுடன் ஓடி வந்த அந்த வெள்ளத் தைப் பிளந்து பிரிக்கவும் அவனால் இயல வில்லை. அவன்

திகைப்புடன் தள்ளாடிக் கொண்டு சறுக்கி அந்த வெள்ளத்தின் நடுவில் வீழ்ந்தான்,

அவ்வாறு விழுந்து உருண்டு புரண்டு சென்று அவன் அந் நதிக்கரை ஓர மிருந்த ஒரு காட்டு மரத்தை வந்தடைந்தான். அம்மரமானது தன்னுடைய கிளைகளைப் பரப்பி விரித்துக் கொண்டு அந்நதியின் மேலும் குவிந்து கொண்டிருந்தது. அதினின்றும் கீழே வளைந்து தொங்கிக் கொண்டிருந்த ஒரு கிளை யின் மேல் தன்னுடைய கால்களை ஊன்றி வைத்துக் கொள்ளலாம் என்று எண்ணி அவன் அக்கிளையைப் பிடித்தான். அது அதற்கு ஆபத்தாகவே முடிந்து விட்டது.

அவனது பாரம் தாங்க முடியாமல் அந்த மரமானது தனது வேரினின்றும் பெயர்ந்து கரையின் மேல் சாய்ந்து விட்டது. அதன் வீழ்ச்சியினுல் அந்த நதிக்கரை முழுதுமே திடுக்கிட்டுத் துடித்துப் பெருமூச்சு விட்டதுமன்றி, அதன் அடிவாரத்திலிருந்து எல்லாப் பொருள்களையும் நசிப்பித்தும் விட்டது. அம் மரத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த இலைகள் அந்நதியின் வெள்ளத்தில் தட தட வென்று விழுந்த பொழுது அவ் வெள்ளங்கள் பளிச்சுப் பளிச்சென்று மின்னல் போல் மின்னின. அம் மரத்தின் பருமனுனஅடிமரம் கொந்தளித்துக் கொண்டிருந்த அந் நதியின் குறுக்காக விழுந்து அதற்கு ஒரு பாலம் போலவும் விளங்கியது.

அதைக் கண்ணுற்ற வீரன் தனது பளுவான சரீரத்தை அம் மரத்தின் மேல் அசையாமல் ஒரு நிலையில் நிறுத்தி அதன் மேல் தனது கையையும் ஊன்றிக் கொண்டு உயர்ந்து அந் நதியினின்றும் துள்ளி யெழுந்து அதன் கரையின் மேல் தாவிக் குதித்து விட்டான். அப்பொழுது அங்கு பயங்கரமான இருண்ட அலைகள் அடித்து வந்தன. அவற்றின் இரைச்சல் மேன் மேலும் அதிகரித்தது.

ட்ராய் நகரை அழிக்கக் கங்கணங் கட்டிக் கொண்டு பொங் கிக் கொதித்து வந்த வீரனை அடியோடு அழித்து விடவேண்டு மென்ற பேராவல் கொண்ட அந்த நதிக் கடவுள், தனது கோபத் தைத் தணித்துக் கொள்ளாமல் தன்னை அவமதித்த வீரனைத் தொடர்ந்தே வந்தார். அப்போது மிகவும் பெரிய அலை ஒன்று அங்கு அடித்தது. அது அந் நதிக் கரையையும் பிளந்து விட்டது.

அதைக் கண்ணுற்ற அகிலேசன் விண்ணுலாவும் பறவை களில் எல்லாம் மிக்க வேகமும் வலிமையும் உள்ளதும் யுத்தத்தில் பிரியமுள்ளதுமான கழுகைப்போல் தனது வேகத்தை அதிகரித்துக் கொண்டு ஓர் ஈட்டி பாயுந் தூரம் துள்ளிக் குதித்து ஓட்டம் பிடித் தான். அவ்வாறு அவன் பாய்ந்து குதித்துச் சென்ற பொழுது அவனது கவசமானது அவனது குதியை அனுசரித்துக் கல்கல் என ஒலித்தது. அப்பொழுது அவன் தன்னைத் தொடர்ந்து வந்த அலைகளை அனுசரித்து அப்புறமும் இப்புறமும் முன்னும்

பின்னுமாக நாற்புறமும் திரும்பிக் கொண்டு வளைந்து வளைந்து சென்றான். அவ்வாறு அவன் வளைந்து வளைந்து சென்ற விடங்களில் எல்லாம் அந்த அலைகளும் அவனைத் தொடர்ந்தே சென்றன. அவை அதிவிரைவில் ஒன்றாய்க் கூடி அவனுடைய குதிக்காலையும் எட்டிக் குரைத்தன!

என்றும் வற்றாத ஜீவ வாய்க்கால்களைக் கொண்டு, தன்னுடைய நிலங்களைச் செழிப்பித்து தன்னுடைய செடி கொடிகளை வளர்த்து வருவதற்காக, ஒரு குடியானவன் குமிழி போல் தண்ணீரை மேன் மேலும் தெறித்துவரும் ஒரு நதியிலிருந்து மேடு பள்ளங்களில்லாத சமமான படுகைகளுள்ள வாய்க்கால்களின் வழியே, அந் நதியின் தண்ணீரைக் கொண்டுவருகின்றான். மேடான உயர்ந்த இடங்களிலிருக்கும் வெள்ளங்களையும் கொண்டு வருகின்றான். அந் நீரோட்டத்துக்குத் தடையாக இருந்த மரம் மட்டைகள், செடி கொடிகள், புற்பூண்டுகள், கல்மண் முதலிய அனைத்தையும் விலக்கி அப்புறப் படுத்தி விடுகின்றான். அவ் வாய்க்கால்களின் வழியைத் தனது மண் வெட்டி கொண்டு வெட்டிச் செப்பனிட்டு, வரையும் கட்டி விடுகின்றான்.

அப்பொழுது கடகட வென்று உருண்டு செல்லும் கூழாங் கற்களின் மேலும் குன்றுகளின் அடியிலும் பாயும் நீர் வீழ்ச்சிகள் மேன்மேலும் உரத்து சப்தித்துக் கொண்டு சல சல வென்று ஓடி வருகின்றன. அவை அவனுக்கு முன் சென்று அவன் செய்த காரியங்கள் எல்லாவற்றையும் கலைத்து அழித்து விடுகின்றன. கல் மண் மரம் செடி முதலியவைகளை நாற்புறமும் சிதறிப் பரப்பி விடுகின்றன. அவன் பாடுபட்டுச் செய்த காரியங்கள் நிறைவேறாமல், அவற்றைப் பாழாக்கி விடுகின்றன. மேலும் அவை சமநிலத்திலும் பிரவேசித்துப் பல கிளைகளாகப் பிரிந்து ஓடிப் பள பள வென்று மின்னுகின்றன. நதிக் கரசனது காரியங்களும் அவ்வாறே இருந்தன.

என்றாலும் அகிலேசன் அவற்றிற்கு இலக்காகாமல் அதி வேகமாய்ப் பறந்து கொண்டே முன் சென்றான். ஆனால் வேகம் மிகுந்த சியமந்தர நதியும் அவனைத் தொடர்ந்து கொண்டும் அவனுக்கு முன்னாகப் பாய்ந்து கொண்டுமே புரண்டு சென்றது. இவ்வாறு தட தட வென்று துரித மாகத் தன்னைத் தொடர்ந்து வந்த வெள்ளத்திற்குத் தப்ப வேண்டு மென்று அவன் எவ்வளவோ வேகத்துடன் முயன்றும் அவனுடைய முயற்சிகள் பயன்படாது போயின. அவன் மனிதவர்க்கத்தாரில் தலை சிறந்தவனாகவே விளங்கியவன் தான் எனினும், தெய்வங்களுக்கு அவன் எப்பொழுதாயினும் ஒப்பாவனோ, மாட்டானன்றோ?

தன்னைத் தொடர்ந்து வந்த பெருவெள்ளத்தைத் தடுத்து விடவேண்டு மென்று அவன் பன் முறையும் திரும்பினான். இவை அனைத்தும் நம்முடைய சத்துருக்கள் தானே? இவற்றின் திறத்தையும் ஒரு கை பார்த்து விடுவோம் என்று அவன் அவைகளுடன்

அதிதைரியமாகப் போராடினான். ஆனால் மலைபோல் உயர்ந்து பரந்து வந்த வெள்ளமானது அவனுக்கு வசமாகவில்லை. அது அவனது முதுகைத் தாக்கிக் கொண்டும் அவனது தலையின் மேல் தட தட வென்று விழுந்து கொண்டுமே வந்தது. என்றாலும் அவன் சிறிதும் மனம் தளராமல் தன்னை இவ்வாறு எதிர்த்து வந்த வெள்ளத்தைத் திருப்பி அடிக்க வேண்டும் என்று அதனுடன் தைரியமாகப் போராடிக் கொண்டே வந்தான். வெள்ளத்தையும் அதில் அடித்து வந்த அலைகளையும் சிறிதும் பொருட்டாக்காமல் அவற்றின் மேல் தாவித் தாவிக் குதித்துக் கொண்டே வந்தான்!

இவ்வாறு அலைகளுடன் வெகு நேரம் போராடி வந்ததினால் இந்த அகிலேசனும் களைப்படைந்து விட்டான். அவனுடைய முழங்கால்களும் ஓய்ந்து போயின. அவனுடைய கால்களின் அடியிலிருந்து சேறும் சகதியும் சரிந்து ஒழுகின. அப்போது மஹா வீரனை அவன் அகன்ற வானுலகத்தை நோக்கித் தன் நேத்திரங்களைத் திருப்பிக் கொண்டு கடுங்கோபத்துடனும் தழுதழுத்த குரலுடனும் பின்வருமாறு முறையிட்டான், கதறினான், புலம்பினான் :—

" அகிலேசனுக்கு இரங்கி அவனுக்கு உதவி செய்ய முன் வரும் தெய்வம் ஒன்றாயினும் இல்லையா? அவனுக்கு வரவிருக்கும் இழிவையும் அழிவையும் ஒழிப்பதற்குத் திறமுள்ளவர் ஒருவருமே இல்லையா? ஜோவ் தேவரே! இன்று எனக்கு வரவிருக்கும் அவமானத்தையும், அபகீர்த்தியையும் நீர், முன் நின்று தடுப்பீராக! வருங்காலத்தில் நீர், எனக்கு வரவிருக்கும் விதிக்கு என்னை ஆளாக்கலாம். தேவர்கள் அனைவரும் எவ்வளவோ உறுதிகள் சொல்லியிருந்தனர். அவைகள் ஒன்றையேனும் நான் நம்பவில்லை.

தெட்டீஸ் தேவியும் பொய்யுரை செய்தனளே என்று தான் அவளது மகன் முறையிடுகின்றான். அவள் இவ்வாறு செய்யலாமா? ட்ராய் நகரத்து மதில்களுக்கு முன்னால் அவன் பேரும் புகழும் சம்பாதிப்பான், அதன்பின் பீபஸ் பகவானுடைய அம்புகளினால் அவனுக்கு அழிவு உண்டாகும் என்றன்றோ அவள் அறிவித்தனள்? ஆஹா! அந்த வார்த்தை வீணாயிற்றே!

உக்கிரமான கொடும் போர் நிகழும் இந்தக் களத்தில் நான் எனது ஆவியைத் துறந்திருக்கலாகாதா? ஒரு சுத்த வீரனது கையினால் அடிபட்டு ஒரு மஹா வீரனைப் போல் நான் எனது கட்டையைக் கிடத்தியிருக்க மாட்டேனா? ஹெக்டரது ஈட்டியானது எனது அஞ்சா நெஞ்சைப் பிளக்காதா? எனது ஆவி துடிக்கின்றதே, அது ஆபத்துக்கு ஆளாகி விட்ட எனது ஆத்ம நண்பனை விரைவிற் சென்று சேராதா?

ஐயோ, அவ்வாறு ஆகவில்லையே! அகிலேசனுக்குப் பொருந்தாத கேடே உண்டாகிவிட்டதே! தைரியமும் பெருந்

தன்மையும் உடையவர்களுக்கு மானக்கேடு உண்டாகி விட்டால் அந்தக் கேடு பெருங் கேடன்றோ!

இழிகுலத்தில் பிறந்த ஒரு பட்டிக்காட்டான் பெருமழை பொழிந்து வந்த ஒரு தினத்தில் ஒரு வாய்க்காலைக் கடந்து வருகையில் ஒரு வெள்ளமானது தடதடவென்று வந்து அவனை அடித்துக் கொண்டு போய் விடுகின்றது. அவனது அனுதைப் பிணமும் சமுத்திரம் போய்ச் சேர்ந்து விடுகின்றது! அந்தக் கெட்ட கதிதான் எனக்கு வரவிருக்கின்றதோ ? ஆ தெய்வமே '' என்று கதறினுன்.

அவனது கூக்குரலைக் கேட்ட நெப்தியூனும் பாலாஸும் அவனுக்கு உதவி செய்ய வேண்டுமென்ற ஆவலுடன் மானிட வேடங் கொண்டு அவனருகில் வந்து அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தனர்.

முதன் முதலாகச் சமுத்திர ராஜன் அவனை நோக்கிப் "பிலியஸ்ஸின் புத்திரா! உனது கவலையை அகற்றி விடு, பயத்தையும் விட்டுவிடு! அதோ பார், தேவர்கள் எல்லோரும் உனது உதவிக்காக இறங்கி வருகின்றனர். எங்களையும் பார்! கருணகரனும் காலமறிந்து உதவி செய்பவனுமான நெப்தியூனும், நீலாயதாக்ஷியுமே, இங்கு உன் எதிரில் பிரசன்னராய் இருக்கின்ருேம்! ஜோவ் தேவரே எங்களை அனுப்பினுர். நீ, இந்த இடத்திலேயே அசையாமல் இரு. இந்தக்கொடிய வெள்ளத்தின் வேகமும் ஆற்றலும் இதோ தணிந்துபோம்!

கொடுங் கோபங் கொண்ட அதன் அலைகளுக்கும் திரைகளுக்கும் நீ, ஆளாக வேண்டுமென்று உன் தலையில் எழுதவில்லை. மேலும் தேவர்கள் உனக்கு ஒரு நல்ல யோசனையைச் சொல்லி அனுப்பியிருக்கின்றனர், அதையும் கவனித்துக் கேள்.

மூச்சு விடாமலும் சிறிதும் மனந்தளராமலும் யுத்தத்தைச் செய்துவா! உனது உடைவாளையும் அதன் உறையில் சொருகாதே! தொங்கவிடாதே! ட்ராய் மக்கள் தங்களது நகரத்துக்குள் ஓடி ஒளிக்கும் வரை யுத்தத்தைத் தொடர்ந்துசெய்தே வா! உன்னுல் முறியடிபட்டு அவர்கள் அனைவரும் அந்த நகரத்துக் கோட்டைக்குள் ஓடிச் சென்று தவித்துத் திணறும்வரை அவர்களைப் புடைத்து வா, அவர்கள் அனைவரும் உனக்குப் புறங் கொடுத்து ஓட்டம் பிடித்து விடுவார்கள்.

ஹெக்டர் ஒருவன் மாத்திரம் உன்னை எதிர்த்து நிற்பான். உன்னுல் கொல்லவும் படுவான். அவனது இரத்தமானது உனது ஈட்டியின் மேல் படிந்து தகதகவென்று பொங்கிக் கொண்டு வழியும். வெற்றியும் கீர்த்தியும் உனக்குத்தான் என்று தேவர்கள் தீர்மானித்து விட்டனர்'' என்ருர்.

இவ்வாறு இவ்விரு தேவர்களும் தங்களுக்கு நியமிக்கப்பட்ட காரியத்தைச் செய்துவிட்டு (அதாவது யோசனையைச்

சொல்லி விட்டு) விண்ணுலகத்திலுள்ள ஜோதி மயமான தங்களுடைய மாளிகைகளுக்கு விரைந்து ஏறிச் சென்றனர்.

இவ்வாறு தேவர்கள் உரைத்த வாக்குக்களைக் கேட்ட வீரன் தனது மனத்தைத் தேற்றிக்கொண்டு புத்துயிரும் பெற்றான். ஆத்திரமும் சுறுசுறுப்பும் அடைந்தான். ஒரேயடியாய்த் துள்ளிப் பாய்ந்து யுத்தகளத்தினுட் புகுந்தான்.

அப்போது அந்தப் பரந்த களமெல்லாம் நீரினுள் மூழ்கி இருந்தது. அப்போது அந்த வெள்ளத்தில் ஒன்றோடொன்று மோதி வந்த அலைகளின் மேல் அகிலேசனால் கொல்லப்பட்ட வீரர்களின் உடல்கள் மிதந்து கொண்டு தாண்டவம் ஆடிக் கொண்டு வந்தன. அவர்களுடைய ஆயுதங்கள் அவ்வுடல்களைச் சுற்றி நாற்புறமும் சிதறுண்டு கிடந்தன. அச்சமயம் அந்த வெள்ளத்தில் உருண்டு சென்ற வீரர்களுடைய பொன் மகுடங்களும் திறந்த வண்ணமிருந்த மார்க் கவசங்களும் பளிச்சுப் பளிச்சென மின்னின.

அவ்வாறு மேன்மேலும் புரண்டு வந்த அலைகளின் மேல் அந்த வீரன், உயர்ந்து குதித்துக் கொண்டும் துள்ளிக் கொண்டும் முன் சென்றான். அலைகள் தாழ்ந்த இடத்தில் அவன் தனது காலை நிலத்தில் ஊன்றி வைத்து நீரைக் கடந்து கொண்டும், அவை உயரமாகக் கிளம்பிய பொழுது அவற்றின் மேல் துள்ளிப் பாய்ந்து கொண்டும் சென்றான். அவ்வாறு அவன் அந்த அலைகளைக் கடந்து சென்ற பொழுது அங்கு பெருத்த அரவம் உண்டாயிற்று. அதை அனுசரித்து அலைகளும் பிரதித் துவனியைக் கிளப்பின.

இவ்வாறு பாலாஸ் தேவியின் சகாயத்தினால் அழிவில்லாத ஆற்றலையும் வீரசூரப் பராக்கிரமங்களையும் கொண்டு விளங்கிய இவனை அந்த சியமந்தர நதியானது ஒரேயடியாய்த் திரண்டு வந்து தாக்கியும் அதன் ஆற்றல்கள் பயனற்றுப் போய்விட்டன.

ஆனால் சாந்தஸின் ஆத்திரமும் எரிச்சலும் மாத்திரம் தணியவில்லை. அவன் ஒரு பெரும் மேகத்தைப்போல் கர்ஜித்துக் கொண்டும் தன்னுடைய அலைகளை மலைபோல் உயரத் திரட்டிக் கொண்டும், கரைகளின் மேற் பாய்ந்து அவற்றைக் கவர்ந்து ஸிமோயியை நோக்கிப் பின்வருமாறு அலறினான் :—

"எனது உடன் பிறந்த வெள்ளமே! விரைந்து வா! ஒரு தெய்வத்தையும் அடக்கி வரும் இந்த மர்த்தியனது குறும்பை அடக்கு. அவ்வாறு நீ செய்யாவிடில் நம்முடைய வீரர்களில் மிக்க தைரியம் உள்ளவர்களுங்கூட இந்த யுத்தத்திலிருந்து விலகி விடுவார்கள். இலியனும் கோபுரம் போல் உயர்ந்துள்ள தனது பதவியிலிருந்து தலைகுப்புற விழுந்து உருண்டு போம்.

ஆதலால் உன்னுடைய சிற்றாறுகளை அழைத்து, முழக்கும் படி அவர்களுக்குக் கட்டளையிடு. உனது பல ஊற்றுக்களிலும்

உள்ள ஜலங்கள் அனைத்தையும் ஒருங்கே சேகரித்து உனது ஜல நிதியை திரட்டிக்கொள். அவ்வாறு திரட்டிக்கொண்ட பின் உடைந்து போன வீரர்களின் கட்டைகளையும் சுமை சுமையாக வாரி வழித்துக்கொண்டு கறுத்த மேகங்களுடன் எழும்பிச் சென்று அவை அனைத்தையும் கரைத்து அவனது தலையில் கொட்டு.

அவனைப்பார்! சிறிதேனும் தங்கு தடையின்றி ஓடுகின்றான். இந்த வெள்ளங்களைச் சிறிதேனும் சட்டை செய்கிறானில்லையே! இவற்றைக் கடந்து கொண்டே தடதடவென்றன்றோ ஓடுகின்றான்! போர் புரிவதில் சமர்த்தரான தேவர்களுங் கூடத் தன்னுடைய சத்துருக்கள் தான் என்று மதித்து அவர்களையும் வெகு தைரியத்துடன் வலுவில் சண்டைக்கு இழுக்கின்றானே!

ஆனால் ஒன்று நாமிருவரும் மாத்திரம் ஒன்றாய்ச்சேர்ந்து கோபத்துடன் கொதித்தெழுந்து சென்று அவனை எதிர்த்தால், அப்பொழுது அவனுடைய கோபதாபங்களும் புஜபலபராக்கிரமங்களும் தேவர்களைப்போன்ற கண்ணுக்கினிய தோற்றமும், அவனுக்குச் சிறிதும் பயன்படா. துரோஜர்களது கண்களைக் கூசிப் பயமுறுத்திவரும் அவனுடைய ஆயுதங்கள் இருள் மூண்டுள்ள நம்முடைய பள்ளங்களில் உருண்டுருண்டு சென்று அங்கு ஒடுங்கிக்கிடக்கும், அவனும் கடகடவென்று உருண்டு சென்று மலைபோல் குவிந்துள்ள ஒரு மணல் மேட்டின் ஆழமான அடிவாரத்தில் அம் மணலில் புதைந்து கிடப்பான். உலகத்தையே பயமுறுத்திக் கலக்கிவரும் இவனுக்கு இந்தக் கதி வரவே வரும்.

இந்தக் களத்தில் அப்போது உண்டாகும் நாசத்தினால் அளவிடற்கரிய குழப்பம் விளைந்து விடும். அவனது சாவுச் சடங்குகளைச் செய்வதற்கு ஒரு கிரேக்கனாயினும் மீந்திருக்க மாட்டான். அவனுடைய எலும்புகளைப் பொறுக்கவாவது அவற்றை அடக்கஞ் செய்யவாவது கையுள்ள ஒரு கிரேக்கனாவது எஞ்சி நிற்கமாட்டான். இவ்வாறுதான் இவனுக்கு இந்தக் குளிர்மிகுந்த இடத்தில் இறுதிச் சடங்குகளும் ஈமக்கடன்களும் நிறைவேறும். இவனும் இந்தக் கடலின் அடியில் ஜலத்தின் மத்தியில் சமாதிகொள்வான்'' என்றான்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே இறந்த வீரர்களது உறைந்த இரத்தத்தினால் பருமனடைந்தும் அவர்களுடைய பிணங்கள் தன் மீது மிதந்து வந்ததினால் வீக்கமுங்கொண்ட அந்த நதிக்கரசன், அந்த வீரன்மேல் ஒரேயடியாய் ஆத்திரத்துடன் தடதடவென்று இறங்கி அவனைத் தாக்கினான். அதன்பின் அவன் தன்னுடைய படுகைகளில் விழுந்து முணுமுணுத்துக் கொண்டு பொங்கிப் பிதற்றினான். அப்போது அவன்மேல் அடித்து வந்த அலைகளின் உச்சியில் தோன்றிய, ஆழ்ந்த ஊதா நிறங்கொண்ட நுரையானது வெண்ணிறமாக மாறிவிட்டது.

அகிலேசன் முன் செல்லச் செல்ல அந்தக் கறுத்துச் சிவந்த அலைகளும் அவனது அடிமேல் அடிவைத்துக்கொண்டு அவனை

இரத்த வெள்ளத்திலும் தொடர்ந்து சென்றன. அவை அவனைச் சூழ்ந்துகொண்டு அவனை இரத்த வெளத்திலும் அழுத்தி விட்டன!

அவனது அந்த ஆபத்தான நிலைமையைக் கண்ணுற்ற தேவலோக இராணியானவள் பயந்து நடுங்கினாள். அதைரியம் அடைந்தாள், கலங்கினாள், ஐயோவென்று கதறினாள். வலக்கனது உதவியையும் வேண்டினாள் :—

"வல்க்கா! வல்க்கா! எழுந்துவா! இந்த யுத்தத்திற்கு வா! வெள்ளம் குறும்பு செய்கின்றது, நம்மை அலட்சியம் செய்கின்றது. அபசாரங்கள் செய்து விட்டது. உனது கையினால் தான் இந்த அகமதி அடங்கவேண்டும்! உன்னால்தான் இது அழிந்து படவேண்டும்! உன்டைய கொள்ளிகளையெல்லாம் ஒன்றாய்க் கொளுத்து, உன்னுடைய உலைகளை எல்லாம் ஒன்றாய்க் கூட்டு. அவைகளுக்கு உதவி புரியுமாறு நமது ஆணைக்கு உட்பட்ட காற்றுக்கள் கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் புறப்பட்டுத் துரித மாகத் தடதடவென்று வரும்.

விருத்தனுன சமுத்திரராஜனது ஆணைக்கு உட்பட்ட இந்தக் காற்றுக்கள் எனது சொல் ஒன்றைக்கேட்ட மாத்திரம் வேகமாக அடித்து, இவ்வாறு இந்தக் கடலில் நம்முடன் போர் செய்ய முனைந்து முன் வந்துவிட்ட இந்தச் சத்துருவின்மேல் உனது அக்கினிமயமான செங்குழம்பைப் பொழியும்! பிணங்களை யும் ஆயுதங்களையும் சின்னு பின்னமாக்கி, இந்த இடத்தையே ஒரு பெரிய பாழாக ஆக்கிவிடும். அப்போது நம்மைச் சீறிவந்த நதிகள் எல்லாம் தங்களது அடித்தரை வரைத் தீப்பற்றி ஒரேயடி யாய் எரிந்துபோம்!

நீ, சினங்கொண்டு எழுந்து விட்டால் வேறு ஒருவரும் உன்னை எதிர்த்து வாராரன்றோ? ஆதலால் உடனே எழுந்திரு. உன் சக்தியை எல்லோரும் அறிய விளக்கிக் காட்டு. இந்த வெள்ளம் அனைத்தையும் ஒரேயடியாய் உறிஞ்சிக் குடித்து விடு. மரங்களையும் படபடவென்றும் நறநறவென்றும் முறித்து விழுங்கி விடு, நதிக்கரைகளை எல்லாம் சுட்டுச் சாப்பலாக்கி விடு. நாம், போதும் என்று சொல்லி இந்த ஆணையை மாற்றும் வரையிலும், இந்த அக்கினிக் கணங்கள் அலுப்புச் சலிப்பின்றித் தங்களால் ஆன நாசங்கள் அனைத்தையும் செய்து வரட்டும்" என்றாள்.

சர்வ வல்லமையும் உள்ள அக்னி பகவான் அவளது ஆணையைச் சிரமேற்கொண்டு, அவள் நியமித்தபடியே காரியங் களைச் செய்தான். அகன்று விசாலமாகப் பரந்திருந்த அந்த யுத்த கள முழுவதிலும் அளவிடற்கரிய சுவாலைகளைப் பொழிந்தான். வீரர்கள் மடிந்து விழ விழ, அவன் அவர்களை அவ்வக்கணமே விழுங்கியும் வந்தான். அவர்கள் விழுந்துவிட்ட நிலத்தையும் சுட்டுக் கொளுத்தினான்.

அப்பொழு அந்த நதியின் அகன்ற படுகைகளும் ஒடுங்கி விட்டன. அவற்றில் பாய்ந்து வந்த ஜலமும் பொங்கிக்கொதித்தது. சரத் காலத்தில் போரியாஸ் காற்ருனது ஆகாய வீதியைச் சுழற்றிக்கொண்டு அடித்து வருகையில் எவ்வாறு தண்ணீர் பாய்ச்சப் பட்ட தோட்டங்களுங் கூட ஒரே கணத்தில் வறண்டுபோய் விடுகின்றனவோ, அவ்வாறே நெருப்புப் பொறியைக் கக்கும் காற்ருனது நாற்புறமும் செல்லும்படி வல்க்கன் மூச்செறிந்தபொழுது, அந்தப் போர்க்களமானது வெள்ளவெளேரென்று நீறு படர்ந்திருந்தது.

அந்தத் தீக்காற்று முதன் முதலாகக் கோரைப் புற்களின் மேற் பாய்ந்து அவற்றைப் பஸ்பமாக்கி விழுங்கியது. அப்பொழுது அப்புற்களினின்றும் எழுந்த நெருப்பு அப்புற்றரையின் ஓரமாக வளைந்து வளைந்து சென்று தன் வழியில் அணி யணியாய் நின்று கொண்டிருந்த மரங்களைப் பிடித்து அவற்றைச் சம்பாராக்கி விட்டது. புஷ்பங்களுடன் விளங்கிய தாமரைக் கொடிகளும், உணவலிக்கும் தாமரைக்காத்தருவும், படர்ந்து வளரும் வன விருக்ஷங்களும், கொடு முடிகொண்ட கோபுரம்போல் வளரும் புங்க மரமும் ஆகிய எல்லாவிதமான மரங்களும் வெந்து சாம்பராயின.

நதிக்கரையில் நீரின் ஓரமாக வளர்ந்து வந்த அலரி மரங்கள் எல்லாம் அந்த நெருப்பின் முன் பாம்பைப்போல் சீறின. தங்களுடைய தண்டுகளிலிருந்த ரசத்தைக் கக்கின.

நதிக்கரைகளிலிருந்த மரங்களின் கதி இவ்வாருக, நதியில் அடித்துக்கொண்டிருந்த அலைகள் சுவாலையுடன் தகதகவென்று பிரகாசத்துடன் விளங்கின. அங்கு நீந்தி வந்த மீன்கள் மூச்சு விட முடியாமல் திணறின. விலாங்கு மீன்கள் எல்லாம் மரணவஸ்தை அடைந்து சுருண்டு கிடந்தன. செதில்கள் கொண்ட சிறு மீன்களிற் சில, கூட்டங் கூட்டமாகத் துள்ளி உயரக் குதித்தன. சில அந்த நதியின் வெள்ளத்திலேயே அழுந்தி மூழ்கின. அவ்வாறு துள்ளிக் குதித்தும் வெள்ளத்தில் அழுந்தியும் உயிருடன் பிழைக்கத் தவறியவைகள் மூச்சடை பட்டுத் தங்களது வயிற்றை ஆகாயத்தை நோக்கி மல்லாந்து காட்டின.

இவ்வாறு பெருஞ்சோர்வு அடைந்த அந்த நதியானது கடைசியாகத் தனது தலையை நிமிர்த்து உயர்த்தி, வல்க்கன் தேவனை நோக்கி வாய்குழறித் திணறித் தேம்பிக்கொண்டு, பின் வரும் வசனங்களை உரைத்தது:—

“வல்க்கா! வல்க்கா! ஐயோ! இது என்ன அநியாயம்? உனது வலிமையை யாரே அடக்கவல்லார்! நான் சோர்ந்தேன், தோற்றேன், அடி சாய்ந்தேன். நான் உனக்குச் சரியான நிகரான சத்துருவல்ல. இந்த யுத்தத்தைச் செய்ய என்னுல் இயலாது. நான் தாழ்ந்து விட்டேன். இலியன் அழிந்துபோக வேண்டு

மென்பது அதன் விதியானல் அது அழிந்தே போகட்டும். ஆஹா! ஐயோ உன் சுடு சரங்களை என்மீது விடவேண்டாம்! ஐயோ, இது போதும்!" என்றது.

இவ்வாறு அந்நதி கதறியதெனினும் வல்க்கனது கல்மனம் கரையவில்லை. அந்நதியை நெடுந்தூரம் வரையும் ஒரு பெருந் தீ சூழ்ந்து வளைந்து கொண்டது. அவ்வாற்றின் நீர் வெப்பங் கொண்டு குமிழி குமிழியாய்க் கொதித்தது.

அக்குமிழிகளினின்றும் பாம்புகளின் சீற்றம்போல் சப்தமும் உண்டாயிற்று. ஒரு பெரிய வேள்விக்கு வேண்டிய மாமிசத்தைப் பக்குவம் செய்யும் நிமித்தம் ஒரு கொப்பரையின் அடியில் மூட்டப் பட்டுள்ள நெருப்பானது, அதன் மேற்புறம் கொழுந்து விட்டுக் கொண்டு எழுவதுபோல், மேன்மேலும் சுழன்று சென்ற கொடிய தீக்கொழுந்துகளால் சூழப்பட்டிருந்த அந்நதியிலுள்ள நீர்த்திரள் கள் நுரையைக் கக்கின. அவற்றினின்றும் கனத்த புகைகள் கிளம்பின.

தனது ஓட்டமும் வேகமும் தடைபட்டுக் கூட்டில் அடைபட்டது போல், ஓர் ஏரியில் தேக்கப்பட்ட ஒரு கனத்த வெள்ளமானது கொதிக்கின்றது. தன்னை ஊடுருவித் துளைத்து வரும் புகைகளால் தாக்குண்டு சலனமற்றுப் போய் விடுகின்றது, அதன் அடிப்பாகமும், தகதகவென்று எரிகின்றது, கொதிக்கின் றது, ஒளியுடன் பிரகாசிக்கின்றது. இந்த நதியும் அவ்வாறே திண்டாடி வந்தது.

அப்போது அது, இந்த வல்க்கன் கல்நெஞ்சன் மனந் தளரான் என்று அறிந்து தேவாதி தேவனை விண்ணுலக வேந்த னது பட்டமகிஷியைக் குறித்துப் பின்வருமாறு பிரார்த்தனை செய்தது :—

" அம்மா ! ஸாட்டர்னியா தேவி ! உமது மகன், என்மேல் தானு தனது கொடுங்கோபம் அனைத்தையும் செலுத்த வேண்டும்? நான் தானு அவனது கண்ணுக்கு இலக்காக வேண்டும் ! அவன் இவ்வாறு என்னைப் பாழாக்கலாமா? என்னிலும் வலிமிகுந்த தேவர்கள் ட்ராயின் பங்கில் இருக்கின்றார்களே, அவர்களின் மேல் அவன் செல்லலாகாதா? தயவு செய்து அவனுடைய வீர சூர பராக்கிரமங்களை அவர்களின்மேல் செலுத்துமம்மா !

நான் தங்களது ஆணைப்படி நடப்பவன். நான் அடக்கிக் கொள்ள வேண்டும் என்று தாங்கள் ஆணையிடுவீர்களானல், நான் அவ்வாறே என்னுடைய சேட்டைகளை அடக்கிக் கொள்ளு கின்றேன் ! அம்மா போதும் போதும்! இந்த சர்வசங்காரக்கார னது கைவலியைத் தணியுமம்மா! இதோ நான் சத்தியமாகச் சொல்லும் ஒரு சபதத்தையும் கேளும் !

நான் இனி இலியனுக்கு உதவி செய்யமாட்டேன். கிரேக்கர்கள் அதனைச் சுற்றிலும் தீயிட்டுக் கொளுத்திப் பாழாக்கும் வரை, ஒரேயடியாய் துரோஜர்களது பெயரே அற்றுப் போகும் வரை நான் இலியனுக்கு உதவி செய்யமாட்டேன். தனது விதிப் பயனை அது அனுபவிக்கட்டும் என்று விட்டு விடுகின்றேன்" என்றது.

இவ்வாறு மனங்கரைந்து அது உருகிச் செய்த பிரார்த்தனையைக் கேட்ட ஸாட்டர்னியா தேவி மனமிரங்கி, அக்னி தேவனைக் கோபம் தணிந்து சாந்தம் அடையும்படி ஆணையிட்டாள் :—

"உனது நெருப்புக்களை எல்லாம் திரும்பி வரச்சொல். அவற்றை இழுத்து விடு! மனிதர்களுடைய சண்டை சச்சரவுகளில் தலையிட்டுக் கொண்டு ஒரு தேவனுடன் முரணுதே, ஒரு தேவனைப் பகைத்துக் கொள்ளாதே" என்றுள்.

அக்கணமே அந்த நெருப்புக்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் தணிந்து அவிந்து போய் விட்டன. அதன் பின் பல வாறு பிரிந்து பாய்ந்து வந்த ஜலங்கள் எல்லாம், முன்போல் கரைபுரண்டு வழக்கப்படி பரந்து ஓடத் தலைப்பட்டன.

ஜூனோ தேவியின் ஆணைப்படி இவ்வாறு வல்க்கனும் நதிகளும் தங்களுக்குள் ஏற்பட்டிருந்த சண்டையை நிறுத்திக் கொண்டபொழுது, யுத்தப் பிரியர்களான தேவர்கள் ஒருவரோடொருவர் முரணிக் கொடும் போர் புரியலாயினர். தேவலோக வாசிகளான அவர்களுடைய மார்புகளில் கொடுஞ்சினமானது பின்னும் அதிவேகமாகக் கிளம்பிப் பொங்கி எழுந்து வந்தது.

அவர்களுடைய திவ்யமான ஆயுதங்கள் கலகலவென்று சப்தித்துக் கொண்டு ஒன்றோடொன்று மோதின, அப்போது உண்டான சப்தமானது, ஒருபெரும் பீதியை உண்டாக்கியது. ஆகாயத்தில் ஒரு பெருத்த இடியும் இடித்தது. அதனுல் அங்கு விண்ணுலகிலிருந்த பெருத்த பறையும் பேரொலியுடன் முழங்கியது. அது தன்னடியிலிருந்த அகன்ற பூமண்டலத்தில் இறங்கி அதைத் தாக்கிய பொழுது, அது நடுநடுங்கி விம்மிவிம்மிப் புலம்பியது.

காரியங்கள் இவ்வாறு பயங்கரமாக நிகழ்ந்து வருவதை ஜோவ் தேவர் ஒரு விளையாட்டாகவே கருதிக் கொண்டு களித்து வந்தார். தேவர்கள் ஒருவரோடொருவர் பொருது வருவதைக் கண்ட அவர் அந்தப் போரில் தமக்கு ஆகவேண்டியது ஒன்றுமே இல்லை என்று கவலையற்றிருந்தார். அப்பொழுது யுத்தங்களின் தேவன் வெண்கலத்தினுலாக்கப் பட்டிருந்த தனது ஈட்டியைத் தூக்கிக்கொண்டு யுத்தங்களை நடத்தி வரும் தேவியை நோக்கிச் சென்று, அவளை முன்னிட்டுப் பின்வரும் வசனங்களைச் சிடுசிடு வென்று கடிந்துரைத்தான் :—

"உன்னை ஏன் இந்தப் பைத்தியம் பிடித்து விட்டது? நீ ஏன் இவ்வாறு ஆட்டம் போடுகின்றனை? தேவர்களது மனத்தில் நீ இவ்வாறு வேற்றுமைகளை உண்டாக்கலாமா? அவர்களை ஒருவருக்கொருவர் ஆகாமல் அடித்து விட்டாயே. தேலோகமே இந்தச் சண்டையில் இறங்கி விட்டதே! இது என்ன ஆச்சரியம்!

உனக்கு வெறிதான் பிடித்து விட்டதா? அந்த வெறியினுல் ஒரு தேவனையும் எதிர்க்கும்படி ஒரு மர்த்தியனைக் கிளப்பி விட்டனையே! தெய்வ பக்தி இல்லாததும் பாபமே நிறைந்தது மான உனது கையில் நீ திடிதீசனது வேலை ஏந்தி எடுத்துக் கொண்டு சென்றனை! தேவர்களது இரத்தத்திலும் அதனைக் குளிப்பாட்டினை! இது என்ன புத்தியீனம்! என்ன பைத்தியம்!" என்ருன்.

இவ்வாறு வசனங்களை உரைத்துக் கொண்டே அந்தத் தேவன் அவள் ஏந்திக் கொண்டிருந்ததும் நெடுந்தூரம் எதிரொலியைப் பரப்பக் கூடியதும் அவளது தந்தையான ஜோவ்தேவரின் சின்னத்தைத் தனது பயங்கரமான முகத்தில் பதித்துக் கொண்டிருந்ததுமான அழிவில்லாத காப்புக் கவசத்தை ஓங்கி அடித்தான்!

பேரிடியின் உருவத்தைத் தாங்கிக் கொண்டிருந்த அந்தக் கவசம் விரைவாக எட்டிப் பார்த்து விட்டு ஓட்டம் பிடித்துவிடும் சிறிய இடியையும், இடுக்கி போல் வளைந்து வளைந்து மின்னும் மின்னல்களையும் புறங்காட்டி ஓட்டி அடிக்கவல்லது!

இவ்வாறு தன்னையும் தனது தந்தையின் ஆயுதத்தின் உருவத்தையும் இவன் அவமதித்ததைப் பொருத அந்தத் தேவி தனது வலிமிக்கக் கையினுல், அப்போர்க்களத்தை அடுத்த நிலத்திற்கு எல்லைக் கல்லாக நடப்பட்டிருந்த ஒரு பெரும் பாறையைப் பெயர்த் தெடுத்தனள். முண்டு முடிச்சுகள் கொண்டதும் பிரம்மாண்டமான பருமனுமுள்ளதுமான அந்தக் கருங்கல்லானது ஆதிகாலம் தொட்டு அங்கேயே நடப்பட்டிருந்தது. இந்தக் கல்லைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு அந்தத் தேவி ஒரு தெய்வமான தன்னைக் கொல்ல வந்த அந்தப் பாபியை நோக்கி விடுத்தாள்! அவன் அக்கணமே ஒரு இடிபோல் திடீரெனக் கீழே விழுந்தான். பெரும் பூதம்போன்ற அவனது உடல் ஏழு ஏக்கரா விஸ்தீரணம் உள்ள அகன்ற பூமியை மறைத்து விட்டது.

இவ்வாறு அந்தப்பாறை அவனைத் திடீரெனத் தாக்கி அடித்ததினுல் அவனது மிக உறுதியான நரம்புகள் தளர்ந்து போயின. அவன் அந்தக் களத்தில் திடீரென விழுந்தான். அப்பொழுது அவனுடைய ஆயுதங்கள் கொல்லென ஒலித்தன. அந்த உயர்ந்த ஓசையினுல் அந்தக் களம் முழுவதிலும் எதிரொலிகள் கிளம்பின.

இவ்வாறு அவனை ஒரு பொருட்டாகக் கருதாமல் ஒரு நொடியில் தரை மட்டம் ஆக்கிவிட்ட அந்தத் தேவியானவள், தான் அடைந்த வெற்றியைக் கண்டு களித்து, அடங்காத மந்த ஹாஸங்கொண்டு, தரைமட்டம் ஆகி விழுந்து விட்ட அந்தத் தேவனை நோக்கிப் பின்வருமாறு இழித்துக் கூறினாள் :—

" அட மூர்க்கா ! மட்டு மரியாதை என்பதை அறியாத மடையா! உனது சக்தியைக் காட்டிலும் மினர்வா தேவியின் சக்தியானது எவ்வளவு மடங்கு அதிகமானது என்பது உனக்கு இன்னும் தெரியவில்லையா ? இது என்ன துணிவு ?

ஜூனோ தேவியை எதிர்த்துக் கொண்டு கிளம்பினையே, அந்த மனத்தை அந்த தேவியானவள் பாலாஸின் கையினால் அடக்கி விட்டாள் ! உனக்குச் சரியான நற்புத்தியும் புகட்டி விட்டாள் ! துரோகப் புத்தியுடன் கிளம்பிக் கலகம் செய்த உனக்குக் கிடைத்த இந்த மானக்கேடு நியாயமல்லவா ?

துரோக புத்தி உள்ளவர்களான ட்ராய் நாட்டாருக்குப் பரிந்து வந்து அவர்களது கட்சியில் இருந்து கொண்டு அவர்களுக்கு உதவி புரிந்த உனக்கு விளைந்த இந்த அவமானம் மிகவும் தகுதியானது தான் ! "

இந்த வார்த்தைகளை உரைத்த பின்னர் அந்தத் தேவி தன்னுடைய கண்களை வேறு முகமாகத் திருப்பிக் கொண்டாள். அப்போது அக்கண்களினின்றும் நாற்புறமும் வீசிய கிரணங்கள் திவ்வியமான வெளிச்சத்தைத் தெறித்தன.

அப்போது ஜோவ் தேவரின் புதல்வியான ஸிப்ரி என்பவள் தரையின் மேல் குனிந்து கொண்டு காயம் பட்டுக் கிடந்த அந்தத் தேவனுக்குத் தனது மிருதுவான கையைக் கொடுத்தாள். அவன் அந்தக் கையைப் பிடித்துக் கொண்டு மெதுவாக எழுந்தான் ! காயங்களினால் வலியும் நோவுங் கொண்டிருந்த அவன் மூச்சு விடவும் இயலாமல் திணறிக் கடைசியாக அந்தத் தேவியின் அழகான கையின்மேல் சாய்ந்து கொண்டுஅந்தக் களத்தை விட்டு அகன்றான்.

ஜோதி மயமாக விளங்கும் விண்ணுலகத்தின் அரசி இந்தக் காரியத்தைக் கண்ணுற்ற பொழுது, அவளுக்கு எரிச்சலும் அடங்காக் கோபமும் உண்டாயிற்று.

' ஆஹா ! இது என்ன அலட்சியம்! என்ன துடுக்கு!' என்று துடித்துக் கொண்டு அவள், யுத்தத்தில் வெற்றியே தனது பூஷணமாக உடைய தேவியை விளித்துப் பின்வருமாறு உரைத்தாள் :—

" அதோ பார் ! மார்ஸின் கட்சிக்கு வந்து விட்ட யோகத்தைப் பார் ! ஆஹா, என்ன உதவி ! சிரித்துக் களித்துக் கொஞ்சிக் குலாவிக் காதலூட்டும் தேவியன்றோ வந்து விட்டனள் !

அவனை ஒருவராலும் வெல்ல முடியாதே? அவளுடைய கர்வத்தைத் தான் பார்! ஒருவரையும் லட்சியம் செய்யாமல், அவள் எல்லோரும் காணத் தனது தலையை நிமிர்த்திக் கொண்டு கம்பீரமாக ஊர்ந்து செல்லுகின்றாள்! பாலாஸ் தேவி அவளைத் தொடர்ந்து சென்று தாக்குவாளா? தைரியம் இருந்தால் செல்லட்டும்!" என்றாள்.

இந்த வார்த்தையை மினர்வா தேவியானவள் புன்சிரிப்புடன் செவியேற்று, அவ்விருவர்களையும் பின் தொடர்ந்து சென்று, அவர்களைப் பிடித்துப்பின், காமினியின் மார்பில் மெதுவாக ஒரு தட்டுத் தட்டினாள். அந்தக் காமசுந்தரி மினர்வாவைத் தடுக்கவில்லை. அவளது ஆவி ஓட்டம் பிடித்து விட்டது. காதலர் இருவரும் அக்கணமே அந்நிலத்தில் கைகோத்த வண்ணம் நீண்டு கிடந்தனர்.

அதைக் கண்ணுற்ற மினர்வா தேவி "துரோஜர்களின் கோட்டைகளைக் காத்து வருவோர்களுக்கெல்லாம் இந்த வீரர்களுக்குக் கிடைத்த கதியே கிடைக்கட்டும்! இந்த வீனஸ்தேவி எவ்வாறு என்னை மிரட்டிப் பயமுறுத்தினாளோ அவ்வாறே இந்தப் பிரிஜீயா வீரனும் கிரேக்க தெய்வங்களை மிரட்டட்டும், வெருட்டட்டும், அப்போது ட்ராய் நகரத்தின் அடியில் மிகுந்த ஆழத்திலுள்ள கல்லும் பெயர்ந்து நகர்ந்து போம்" என்றாள்.

ஜூனோ தேவி அவளது வசனங்களைக் கேட்டுப் புன்முறுவல் கொண்டு ஆமோதித்தனள். இதன் மத்தியில் மர்த்தியர்களது சக்திக்கு மீறிய இந்த யுத்தத்தில் தேவர்களும் கலந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணங் கொண்ட சமுத்திர ராஜன் ஒளியின் கடவுளைச் சண்டைக்கு இழுத்தனன் :—

"நம்மைச் சுற்றிலுமுள்ள இந்தக் களங்களில் வீரர்கள் ஒருவரோடொருவர் முரண்பட்டு யுத்தஞ் செய்து வருகின்றனர். அவர்கள் இடும் சப்தம் செவிடு படுகின்றது. அச்சப்தம் வானோங்கிச் சென்று விண்ணுலகத்தையும் முட்டித் தாக்கி, எதிரொலியையும் திருப்பிக் கொண்டு வருகின்றது. இந்நிலையில் நாம் வாளாயிருத்தல் தகுதியோ? நாம் சோம்பியிருக்கலாமா? ஒரு காரியமும் செய்யாமல் மானம் மரியாதைகளையும் இழந்து நாம் நமது தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு இங்கு விட்டுப் புறப்பட்டுத் திரும்பி, ஒலிம்பியன் இறைவனிடம் செல்லலாமா?

எழுந்திரு, புறப்பட்டு வா, உனது கை வரிசையைக் காட்டு உன்னாலானதைச் செய். இந்தச் யுத்தத்தை நான் ஆரம்பிக்க மாட்டேன்; இந்தச் சண்டைக்கு முந்துவது எனது பெருமைக்கும் வயதுக்கும் பொருந்தாது, அழகாகாது.

இந்த் துரோஜர்கள் எனக்குப் பெரும்பிழைகள் இழைத்திருக்கின்றனர். உன்னையும் அவர்கள் பலவாறு அவமதித்திருக்கின்ற

னர். அவை அனைத்தையும் மறந்துவிட்டு நீ அவர்களுக்கு உதவி யாகவே நிற்கின்றனை! இந்த துரோஜர்களது ராஜவம்சத்தைக் காத்தே தீருவேன் என்று ஒரே பிடிவாதமாய் இருக்கின்ருய்!

அதி கர்விகளான இந்த லயோமிடான்களைக் காக்க வேண்டு மென்று ஆத்திரப் படுகின்ருய்! அந்த லயோமிடான் அரசன் நம்மை வணங்கி வேண்டிக் கொண்ட பொழுது, நீயும் நானுமாக அவன் நிமித்தம் ஒரு வருஷ காலம் ஓயாமல் உழைத்து வந்தோமே? அதை நீ மறந்து விட்டாயா? இந்த வருஷமும் முடியுமா என்றன்ரே ஏங்கியிருந்தோம்!

ஜோவ் தேவரின் ஆணைப்படி ட்ராயின் மதில்களை நான் எழுப்பினேன். அதோ அங்குக் காணும் பிரம்மாண்டமான கொத்தளங்களும் அகழ்களும் அரண்களும் அவ்வாறே என் கைப்படவே கட்டப்பட்டன.

அப்பொழுது எழில் வாய்ந்த ஐடாமலையின் பள்ளத் தாக்குக் களின் ஓரமாகக் குளிர் நிழலைத் தரும் சோலைகளில் தலையைக் குவித்துக் கொண்டு இரைந்து உக்காரம் போடும் மாட்டு மந்தைகளை மேய்ப்பதும், அவைகளை ஓட்டிக் கொண்டு செல்லு வதும் உனது கடமையாக இருந்தது.

சுழன்று வரும் பருவ காலங்களில் நம்மை வணங்கிக் கொண்டாட வேண்டிய தினங்கள் வந்த பொழுது, மோசக்கார ஞன அந்த இராஜன் இந்தப் பெருங் காரியங்களைத் தனக்கு முடித்துக் கொடுத்த நம்மைக் கடுத்த முகத்துடன் அதட்டியது மன்றி, நாம் தேவ அம்சத்தவர்கள் என்பதையும் கவனியாமல், நம்மை இகழ்ந்து அவமதித்து நமக்குச் செலுத்த வேண்டிய காணிக்கைகளைச் செலுத்தவும் மறுத்து விட்டான். மேலும் இவன் நம்மிடம் ஊழியம் செய்து வந்தவர்களையும் நமக்கு வழிபாடு செய் யலாகாது என்று மிரட்டினுன்.

இவன் ஒரு மிகவும் மதி கெட்டவன்! காட்டு மிருண்டிகள் வசித்து வரும் தூர தேசங்களில் தான் நாம் வசித்து வரவேண்டும் என்று நமக்குத் தண்டனையும் விதித்து விட்டான். அவனுடைய கொடுமைகளைப் பொறுக்க முடியாமல் சினங் கொண்டு, நாமிரு வரும் விண்ணுலகை நோக்கி விரைந்து இறக்கை கட்டிக்கொண்டு பறந்தோம், ஓட்டம் பிடித்தோம். இந்தத் துரோகியான அரசன் நமக்கு இழைத்த தீமைகளுக்கு பழி வாங்க வேண்டு மென்று தீர் மானித்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தையும் செய் தோம்.

இவ்வாறிருக்க மஹா கர்வியான இந்த இலியனுக்கு நீ இதம் செய்கின்ருய்! நன்றி கெட்ட இந்த ஜாதியாரை நான் வதைத்து வருவது போல் நீயும் வதைக்க வன்ரே வேண்டும்? இவர்கள் பிள்ளைகளையும் இனிமேல் இவர்களுக்குப் பிறக்க இருக்கும் பிள்ளை

களையும் நான் அழிப்பது போல், நீயும் அழித்து விடல் வேண்டும்! ட்ராயின் அஸ்திவாரத்தையும் ஆழமாகத் தோண்டி, அதைத் தகர்த்து விடவேண்டும்'' என்றான்.

அந்த வசனங்களைக் கேட்ட அப்பால்லோ தேவர் அவை களுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தார் :—

"மனிதர்களுக்குப் பரிந்து யுத்தஞ் செய்வது விவேகத்துடன் விளங்கும் விண்ணுலகத்தாருக்கு அழகாகுமா? அழகாகாது!

மனிதன் எம்மாத்திரம்? அவன் துன்பங்கள் அனுபவிக்கவே பிறந்தவன். தங்களுடைய பிறப்புக்கும் போஷணைக்கும் அவர்கள் பூமியை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றனர். வருஷத் தொரு முறை வரும் வசந்த காலத்தில் சூரியனைக் கண்டு களித்து வனப்புடன் விளங்கும் இலைகளைப் போல் இவர்கள் ஒரு சிறிது பொழுது மின்னிப் பின்னர் உதிர்ந்து தரையின் மேல் விழுந்து விடு கின்றனர்! இந்தக் கோரமான காட்சியை அவர்களே நடத்திக் கொள்ளட்டும்! இவ்வளவு இழிவான இந்தக் காரியத்தில் ஏற்ற முள்ள அமரர்கள் பிரவேசிக்கலாகாது'' என்றார்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே, அவர் தமக்கு மேலான அந்தத் தேவரை வணங்கி விட்டுத் திவ்யமான கிரணங்களை வெகு தூரம் வரை பொழிந்து வந்து தமது முகத்தை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டார்!

இவ்வாறு பின்னிடைந்து சென்ற அந்தத் தேவனை நிழல் மலிந்துள்ள காடுகளில் வேட்டை யாடுபவளும் அம்பறாத்தூணி களை உடையவளுமான ஆர்ட்டிமிஸ் தேவி தடுத்து நிறுத்திப் பின் வருமாறு நிந்தித்தாள், கண்டித்தாள் :—

"முதியோனான சமுத்திர ராஜனுக்கு வெற்றியும் பெருங் கீர்த்தியும் அளித்து விட்டு, இளையோனான பீபஸ் இவ்வாறு ஓட்டம் பிடிக்கலாமா? நான் ஒரு மஹா வீரன், எனது கூரான அம்புகள் மிகக் கொடியவை, எனது வில்லும் வெள்ளி வில் என் றெல்லாம் பெருமை அடித்துக் கொண்டிருந்தனையே! அந்த ஆடம்பரமெல்லாம் எங்கே? அவை எல்லாம் வீணே ஆயின! நான் பூமண்டலத்தைக் குலுக்கும் பெருந் தேவனுக்குச் சமமான சக்தியுள்ளவன். அவனுக்குக் குறைந்தவனல்ல என்று, நீ இனி மேல் அதோ காணும் தேவர்களது சபையில் பெருமை யடித்துக் கொள்ளாதே'' என்றாள்.

வனங்களுக்கு அரசியான அந்தத் தேவதை இவ்வாறு தன்னைக் கண்டித்ததை அந்தத் தேவன் மௌனத்துடன் செவி சாய்த்துக் கேட்டனன். ஆனால் ஸாட்டர்னியா தேவியானவள் அவளை அவ்வாறு இலகுவில் விட்டு விடவில்லை. அந்த தேவி ஒரு தேவனை இகழ்ந்து பேசியது அவளுக்குப் பொறுக்க முடிய

வில்லை, அவள் அவனை நோக்கிச் சீற்றத்துடன் பின் வரும் வசனங்களை உரைத்தாள் :—

" தேவீ! நீ சர்வ வல்லமைகளுடனும் விளங்கும் தேவாதி தேவனுக்கு விரோதமாகக் கிளம்பி விட்டனையே, அவனெதிராக வந்து விட்டனையே! உனக்கு ஏன் இந்த கர்வம்? இந்தக் குறும்பை உண்டாக்கி விட்டது எது?

பெண் இனத்திற்கே நீ ஒரு நமனாக விளங்க வேண்டுமென்று ஜோவ்தேவர் உனக்கு ஒரு வரம்கொடுத்து விட்டார் என்பதால் அதனால் நீ இவ்வாறு தலைகால் தெரியாமல் குதிக்கலாமா?

அபலைகளான ஸ்திரீகள் உன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நடுங்குகின்றனரே! உனது இனத்திற்கே நீ ஒரு நமனாக விளங்குகின்றனையே! புலியைப் போல் கல் நெஞ்சுடன் கொதிக்கின்றனையே!

உன்னுடைய அம்புகள் குறி தவறுமற் பாய்ந்து சென்று காட்டிலுள்ள துஷ்ட ஜாதி மிருகங்கள் அனைத்தையும் ஒரேயடியாய் அழித்து அவற்றை மலை போல் குவித்து விடுகின்றன என்பது உண்மைதான். அதனால் உனது மூளை கலங்கிப் போகலாமா?

நீ உன்னுடைய கைவரிசைகளை அதி சூர வீரப் பாராக்கிரமங்களுள்ள தெய்வங்களிடம் காட்டலாமா? இது என்ன துணிவு? நீ, எனக்குச் சரியாக என் எதிரில் நின்று சண்டைக்கு வரலாமா? நமக்குச் சமான மில்லாதவர்களுடன் போர் செய்வது தகாது என்று இனி மேலாவது அறிந்துகொள் " என்றாள்.

இவ்வாறு சொல்லிக் கொண்டே, அந்தத் தேவி, ஆர்ட்டிமிஸ் தேவியின் மணிக்கட்டுக்களைக் கோபத்துடன் இறுகப் பிடித்து, அவற்றைத் தனது இடது கையில் அடக்கிக் கொண்டு தனது வலது கையினால் அந்தத் தேவியின் வில்லின் நாணை அவிழ்த்து, அவளது அம்பறுத்தூணியையும், அதன் மேல் கம்பீரமாக அசைந்தாடி வந்த வெற்றிக் கொண்டையையும் கழற்றி விட்டாள்.

அப்பொழுது அந்த வில் சர சரவென்று அவளது கன்னப் பொறிகளைச் சுற்றிக் கொண்டு சுழன்றது. அவள் இப்புறமும் அப்புறமும் வளைந்து வளைந்து வந்து அந்த வில்லின் அடிக்குத் தப்பிக் கொண்டாள். அப்பொழுது அம்பறுத் தூணியிலிருந்து தெறித்து விழுந்த அம்புகள் எல்லாம் கிலு கிலுவென்று குலுங்கிக் கொண்டு அவளைச் சுற்றியுள்ள நிலத்தில் விழுந்து புழுதி மலிந்திருந்த அந்தக் களத்தில் மிருதுவான அடையாளங்களைச் செய்தன.

இவ்வாறு தோல்வியுற்ற அந்த வேடுவச்சி அந்த யுத்தகளத்தினின்று வேகமாகப் பறந்து ஓட்டம் பிடித்து விட்டாள். அப்

பொழுது ஒரு பெருத்த வெள்ளம் போல் அவளுடைய கண்களி னின்றும் பெருகி வந்த நீர்ப் பெருக்கைத் தடுக்க அவளால் இயல வில்லை.

ஒரு ராஜாளியானது ஆகாயத்தில் உயர்ந்து பறந்து வருகை யில், அதைக் கண்ட அதிசாதுவான கபடமறியாத ஒரு புரு, பாறைகளின் இடையிலுள்ள ஒரு பொந்திற்கு ஓட்டமாக ஓடி ஒளிந்து கொண்டு, தனது மரண காலம் கிட்டிவரும்வரை அங் கேயே பதுங்கிக் கொண்டு, இரு புறங்களையும் தனது மார்பினுல் புடைக்கின்றது. அவ்வாறே இந்த ஆர்ட்டிஸ்மிஸ் தேவியும் ஓடி ஒளிந்து கொண்டாள்.

அப்பொழுது, லட்டோனு தேவியானவள் அவளைக் கண்டு இரங்கி, அவளுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்ய வேண்டு மென்று விரைந்து சென்றனள். அதை ஹெர்மிஸ் தேவன் கண் ணுற்று தனக்கும் அந்த யுத்தத்தில் கலந்து கொள்ள இஷ்டமில்லை என்பதை அறிவித்தான். அவன் சொல்லியதாவது :—

"விண்ணுலகில் இடிமுழக்கங்களால் இராப் பொழுதை உண்டாக்கும் தேவனுக்கு ஆநந்தத்தைத் தரும் தேவியை நான் எவ்வாறு கண்ணெடுத்துப் பார்ப்பேன்? ஒப்பற்ற தேவியே! நீயே விண்ணுலகஞ் சென்று பொருது வெற்றியுடன் விளங்குவாயாக! இந்த யுத்தத்தில் கிடைக்கக் கூடிய லாபங்கள் ஒன்றையேனும் நான் விரும்பாதிருப்பினும் என்னுடைய கீர்த்திப் பிரதாபங்களையும் வெற்றியையும் எல்லோரும் அறிய உரைப்பாயாக!" என்ருன்.

அவ்வாறு சொல்லிவிட்டு அவன் அங்குவிட்டு அகன்ருன். அதன்பின் தோல்வியுற்ற தயானு தேவியின் யுத்தச் சின்னங்கள் அங்கும் இங்கும் புழுதியின் மேல் பளபளவென்று மின்னிக் கொண்டுக் கிடந்ததைக் கண்ட லட்டோனு தேவியானவள், கீழே குனிந்து அங்குச் சிதறிக் கிடந்த அம்புகளையும் விழுந்திருந்த வில் லையும் பொறுக்கி எடுத்துக் கொண்டாள். பின்பு அவள் அந்தத் தேவியையே தொடர்ந்து கொண்டு அவளது இருப்பிடமாகிய விண்ணுலகத்தை நோக்கி விரைந்து சென்ருள்.

மனத் தடுமாற்றத்துடன் அவள் அங்குச் சென்று தேவாதி தேவனது சந்நிதியை அடைந்து, அழுத கண்ணும் சிந்திய மூக்கு மாய் அவனுடைய முழங்கால்களை இறுகக் கட்டிக்கொண்டு தேம் பித்தேம்பி அழுதாள். அப்பொழுது அவள் அணிந்துகொண்டிருந்த அமிர்த மயமான மேகலையானது கலைந்து அவளது மார்பின்மேல் படபட வென்று அடித்துக் கொண்டு அசைந்து ஆடியது.

மஹா தேவரான பிதாமகர் அதைக் கண்ணுற்று, புன் சிரிப் புக் கொண்டு ஒன்றும் அறியாதவர் போல் நடித்து, "என்மகளே! உனக்கு இந்தத் துன்பத்தை விளைத்த தேவன் எவன் சொல்! நான் அவனுடைய கைகளைத் துண்டித்து விட்டு மறுகாரியம் பார்ப் பேன்" என்ருர்.

அவள் கூச்சமும் நாணமும் மேலிட்டவளாய் 'அந்தத்தேவ ரது பட்டமகிஷியே தான் அவ்வாறு செய்தது' என்ருள்.

அவ்வாறு சொல்லியவுடன் அவளது முகத்தில் பிரகாசித் துக் கொண்டிருந்த பிறைச்சந்திரனும் வாடி மறைந்து போய் விட்டது.

இவ்வாறு இவ்விருவரும் விண்ணுலகில் சல்லாபம் செய்து கொண்டு வருகையில், அப்பால்லோ தேவர் தடதட வென்று சரிந்து இறங்கிப் புண்ணிய நகரமாகிய இலியனுட் புகுந்தார்.

அப்பொழுது அந்த நகரைப் பாதுகாத்து வந்த தேவன், அந்நகரத்துக் கோட்டை மதில்கள் பத்திரமாக இருக்கவேண்டுமே என்று கவலை கொண்டு நடுங்கினுன். சத்துருக்களது கைவசமாக வேண்டுமென்பது அந்நகரின் தலைவிதியாக இருக்கவில்லை எனினும், அந்தத் தேவன் கிரேக்கர்களை நினைத்துப் பயந்தே வந்தான்.

அதன்பின் கூக்குரல்களும் ஆரவாரமும் அபாயங்களும் மலிந்திருந்த அந்தப் போர்க்களத்தில், அப்போது யுத்த காரியங் களைக் கவனித்துக் கொண்டு உற்சாகத்துடன் விளங்கிய தேவர் கள் எல்லோரும் ஆயுதங்கள் ஏந்திய வண்ணம் ஒலிம்பஸ்ஸுக்குத் திரும்பி விட்டனர். அவருட் சிலர் வெற்றிச் செருக்குடன் விளங் கினர். தோல்வியுற்ற சிலர் சினத்துடன் பொங்கினர். இவ்வாறு முறையே உற்சாகமும் சோர்வும் நிறைந்தவர்களான அந்தத் தேவர்கள் அங்குச் சென்று தேவநாதனைச் சுற்றி வைக்கப்பட் டிருந்த தத்தம் ஆசனங்களில் அமர்ந்தனர்.

இது இவ்வாறு இருக்க, அப்போது யுத்த களத்தில் அகிலேசன் என்ன செய்து வந்தான் என்பதைக் கவனிப்போம் :

வீரர்கள் தங்களது இரத்தத்தை வடித்துக் கொண்டும் உயிரை நீத்துக்கொண்டுமிருந்த அந்தக்களத்தில் அவன்மாண்டு விழுந்துவிட்ட வீரர்களையும் உருண்டு புரண்டு வந்த குதிரைகளை யும் மிதித்துத் துவைத்துக் கொண்டு முன் சென்ருன்.

பாபங்களும் குற்றங்களும் மலிந்துள்ள நகரங்கள் தேவர்களு டைய சாபங்களுக்கு இலக்காகி விட்டால் அவை எவ்வாறு வேக மாய்ப் பாயும் தீக்கு இரையாகி விடுமோ, அவ்வாறே இலியன் நக ரத்துக் குடிகள் வெளுத்த மேனியராய் விளங்கினர். அவர்களிற் சிலர் உயிர் துறந்து மண்ணின்மேல் விழுந்தனர். வேறு சிலர் தப்பிப் பிழைக்க ஓட்டம் பிடித்தனர். அப்போது அங்குக் கிளம் பிய செஞ்சுடர்கள் ஆகாய மண்டலம் அனைத்தையும் கவர்ந்து விட்டன. அம்மண்டலம் அனைத்தும் செக்கச் செவேலென்று விளங்கியது.

இவ்வாறு அகிலேசன் கொதித்துத் தபித்து நெருப்புக் காடு கொளுத்தி வந்தான். அன்று முழுவதும் அங்கு சாவும் அதற்குச் சிறிதும் இளைக்காத ஏக்கமும் பலவிதமான கஷ்டப்பாடுகளும் கொடுமைகளுமே மலிந்து கிடந்தன.

அப்போது வயோ விருத்தரான பிரியம் மகாராஜன் ஓர் உன்னதமான கோபுரத்தின் மீது நின்றுகொண்டு, அந்த வீரனது கைத்திறத்தினால் உண்டாகிய நாசங்களைத் தனித்தனியாய்க் குறிப்பிட்டுக் கவனித்து வந்தனன். அகிலேசனது பிடிக்குத் தவறிப் பிழைக்க வேண்டும் என்று துரோஜர்கள் சிதறுண்டு நாற்புறமும் ஓட்டம் பிடிப்பதையும், அவர்களைத் துரத்தி வந்த அவ்வீரன் அவர்களை அணுகி வருவதையும் அவன் கண்ணுற்றான். அவனைத் தடுப்பவரோ அவனது ஆற்றலைக் குறைப்பவரோ அல்லது துரோஜர்களுக்கு உதவி செய்பவரோ ஒருவரையாவது அவன் காணவில்லை.

மெதுவாக அடிமேல் அடி வைத்து நகர்ந்துகொண்டும், வயதின் மிகுதியால் வாடி வதங்கிய தனது வதனத்தில் அசைவின்றிக் குடிகொண்டிருந்த விசனக் குறிகளைக் கொண்டும், அதிவேகத்துடன் பெருமூச்சு விட்டுக் கொண்டும் அந்தக் கோட்டை மதில்களைவிட்டு அகன்றான்.

அவ்வாறே கீழே இறங்கி வருகையில், அவன் அம்மதில்களைக் காவல் செய்து வந்த காவற்காரர்களை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

“ நமது நகரத்துக் கோட்டை வாசல்களின் கதவுகளைக் கண்ணுங்கருத்துமாகக் காத்துவரும் காவற்காரர்களே! நம்முடைய ஜனங்கள் திரள் திரளாகப் பறந்து ஓடி வருகின்றனர். அவர்கள் நமது நகரினுள் தடையின்றிப் புகுந்து கொள்ளுமாறு நீங்கள் காவல் செய்து வரும் கதவுகளை அகலமாகத் திறந்து வையுங்கள்.

அதோ பாருங்கள்! அவன் சிறிதும் தங்குதடையின்றி அவர்கள் எல்லோரையும் துரத்திக்கொண்டு வருகின்றான்! மேலும் பார்த்தீர்களா! அவன் கால் வைத்த இடமெல்லாம் கரியாகிக் கொண்டே வருகின்றது! அந்தக் கரிக் குறிகளையும் பாருங்கள் !

ஆதலால் ஒரே ஓட்டமாக ஓடிவரும் நம்முடைய சேனைகள் நமது கோட்டைக்குள் புகுந்து களை தீர்ந்து மூச்சுவிட ஆரம்பிக்கும் சமயத்தில், நீங்கள் கதவுகளைச் சாற்றி வெண்கலத் தாழ்ப்பாள்களையும் இறுகப் போடுங்கள். அவர்களாயினும் நமனுக்கு இரையாகாமல் தப்பிப் பிழைக்கட்டும் ” என்றான்.

அதிவிருத்தனான அந்த மஹாராஜன் இவ்வாறு உரைத்தான். உடனே ஒன்றுடன் ஒன்று பொருந்தி மூடிக் கொள்ளும் கோட்டை வாசற் கதவுகள் அகலமாகத் திறந்தன. அக்கதவு

களின் கீழ்களும் சுழியாணிகளும் மணிகள் போல் ஒலித்தன. பறந்தோடிவரும் வீரர்களை வரவேற்கும் எண்ணத்துடன் பீபஸ் பகவானும் தடதடவென்று முன் சென்றார். சத்துரு சங்காரம் செய்து வந்தவனைப் புறங்கொடுத்து ஓடும்படி அடித்தார். அவனுக்குப் பயந்து புறங்கொடுத்து ஓடிவந்தவர்களைக் காப் பாற்றினார்.

கும்பல் கும்பல்களாகத் திரண்டுவந்த துரோஜர்கள் அந்தக் கோட்டை வாயிலை நோக்கி ஓடிவந்து அங்கு சேர்ந்தனர். அவர்கள் 'அப்பாடா ! இந்தப் போட்டுக்குக் கடைசியாக பிழைத் தோம். நமக்கு ஒரு வழியும் கிடைத்து விட்டது' என்று களித் தனர்.

அவ்வாறு களித்தவர்களாய் அந்தக் கோட்டை வாயில்களை நோக்கி ஓடிவந்த சேனைகளை நான் எவ்வாறு வருணிப்பேன் !

அவர்கள் அனைவரும் தாகத்தினால் வற்றி வறண்டு கிடந் தனர். அவர்களுள் ஒருவனுக்காவது உற்சாகமோ ஊக்கமோ இருக்கவில்லை. அவர்கள் அனைவரின் மேலும் அந்தக் களத்தின் புழுதிகள் அனைத்தும் படிந்திருந்தன. வலி குன்றிய தங்களுடைய பாதங்களால் அவர்கள் அந்த வெறுங்களத்தை இடித்து வந்தனர். பின்பு அவர்கள் தங்களுடைய சக்திகளைத் திரட்டிக் கொண்டு பெருமூச்சு விட்டுப் பதை பதைத்து வாடிச் சோர்ந்து, காலை எட்டி எட்டி வைத்துக் கொண்டு ட்ராயை நோக்கிச் சென் றனர். ஆனால் ட்ராய்க்குச் சென்ற வழி தொலையவேயில்லை ! அது இன்னும் வெகு தூரத்திலேயே இருந்தது !

இவ்வாறு தனது கையை விட்டு நழுவி ஓட்டம் பிடித்து விட்டவர்களைக் கண்டு, கொடுங்கோபங் கொண்ட அகிலேசன் " இவர்களின் மேல் எனக்குள்ள பழிக்குப் பழி வாங்கியே தீரு வேன் ! அதன் பின்னர் தான் எனக்குள்ள யுத்த வேட்கை தீரும்." என்று மேன்மேலும் இந்த யுத்தத்தைச் செய்ய வேண்டுமென்ற ஆவலும் தாகமும் கொண்டவனாய், ஈட்டியும் கையுமாக அவர் களைத் துரத்திக் கொண்டே சென்றான்.

அக்கணமே கிரேக்கர்கள் அழியாப் புகழ் எய்திருப்பவர்கள், ட்ராய் ஜனங்களும் மானம் இழந்து புறங்கொடுத்து ஓடித் தங்களது கோட்டைக்குள் ஒளிந்து கொண்டு இருப்பார்கள். ஆனால் காரியங்கள் அவ்வாறு நிகழவில்லை.

பரிசுத்தமான ஜ்வாலைகளை அம்புகளைப் போல் வீசும் தேவன், அந்த ட்ராய் நகரைக் காப்பாற்றி அதன் கீர்த்தியை மீண்டும் நிலைநிறுத்த வேண்டுமென்ற எண்ணங் கொண்டவனாய், திடீரெனக் குனிந்து வந்த இளையோனை அஜினருக்குத் தனது திவ்யமான சக்தியைப் பிரஸாதமாகக் கொடுத்து உதவினான்.

இந்த அஜினுர், அந்திருரின் புத்திரன். ஒருவனுக்கும் தலே வணங்குபவன்ல்லன், துணிவும் தைரியமும், நிறைந்தவன். அவனுக்கு உதவி செய்ய உத்தேசங் கொண்ட பகவான் அங்கிருந்த ஒரு பீச் மரத்தருகில் மேகங்களினிடையில் மறைந்து இருந்த வண்ணம் விணைப்பயனைத் தடுத்து வந்தார்.

அப்போது அந்த இளங்காளை உற்சாகத்துடன் அகிலேசனைக் கண்ணுற்ருன். அவனது மார்பு துடித்தது. பலவிதமான எண்ணங்கள் அவனது மார்பைத் துளைத்து அங்கு போராடின.

ஒரு புயற் காற்று அடிக்குமுன் ஜலாசயங்கள் எல்லாம் கொந்தளித்துக் கொண்டு எழுவதும் புரளுவதும் போல், அவன் மனந் தடுமாறினன். பின்பு அவன் சிறிது நிதானித்து அமைதியுடன் பின்வருமாறு தனது மனத்துடன் ஆராய்ச்சிகள் செய்து வந்தான் :—

"என் மனமே! நீ, இப்பொழுது என்ன சொல்லுகின்ருய்? நான் இந்தப் போர்க் களத்தில் உண்டாகும் ஆபத்துக்களுக்கு ஆளாகாமல் தப்பி ஓடுவது நல்லதா? ஏனைய சைனியங்களைப் போல் ஓட்டம் பிடித்து அவர்களைப் போலவே மரணத்திற்கும் ஆளாகி விடலாமா?

அதோ! அவ்வழியே சென்ற துரோஜர்கள் அனைவரையும் அவன் சற்று முன்னர்த்தான், என் கண்ணெதிரில் கொன்று தீர்த்துவிட்டான். அந்த வழியிற் சென்ருல் நான் அவனுக்குத் தப்பிப் பிழைக்க முடியாது! அந்த ஆசை வீண் என்ருலும், பாமர சைனிகர்களைப் போல் அவன் அடியில் மடிந்து விழுவது இழிவான காரியமென்றே நான் மதிக்கின்றேன். அது எனக்கு ஏற்றமாகாது. இழிவையே தரும்.

அதோ அங்குக் காணும் ஐடா வனங்களுக்கும் அதைச் சுற்றியுள்ள நிழல் நிறைந்த சோலைகளுக்கும் செல்லும் குறுக்கான வேறு வழியை நோக்கி நான் செல்லுகையில், அவர்கள் என்னைக் கடந்து இந்த ட்ராய் மதில்கள் வரை ஓடிவிடிவார்களானுல், நான் அவர்களுக்குக் கட்புலனுகாமல் தப்பியே விடுவேன்.

குளிர்ச்சி தரும் நதிக்கு ஒளிந்து ஓடிச் சென்று முழுகுவேன். இந்தக் களைத்த உடலானது சுமந்து வரும் புழுதிகளையும் இரத்தக் கறைகளையும் கழுவிக் கொண்டு, இரவானது தனது கருந்திரையைப் பரப்பியவுடன், என்னுடைய துரோஜ நண்பர்களுடன் சேர்ந்து விடலாம்.

இவ்வாறு செய்து விட்டால் என்ன? இதற்குத் தடைகள் உண்டாகுமானுல் அப்போது என்ன செய்யலாம்?

எனக்கு ஏன் இந்தவிதமான வீணுன யோசனைகளும் தர்க்கங்களும் தடுமாற்றங்களும் உண்டாகின்றன?

வருவது வந்தே தீருமன்றோ? விதியின் வலைக்குள் அகப் பட்டுக் கொண்டாய்விட்டது, அதன் வலி குறைந்து போகுமென்று நான் ஐயங் கொள்ளுவானேன்?

இக்கணமே இந்தக் கொடியோனை அகிலேசன் என்னையே குறிவைத்து உற்றுப் பார்த்து வருபவனாக இருக்கலாம். இந்த ட்ராய் மதிலைக் கடந்து, நான் செல்லுமுன் அவன் என்னை வெட்டி வீழ்த்தியும் விடலாம். அவன் விசை மிகுந்தவன். அவனுக்குப் பயந்து ஓட முயல்வது வீண் தான். அவனுடைய சக்தி சாமர்த்தியங்கள் அபாரமானவை. அவன் எதிரில் நிற்பவன் இறந்து போவது திண்ணம், என்றாலும் இராஜ்யத்தை முன்னிட்டு, யுத்தஞ் செய்வதே நன்று. எல்லோருமறிய இந்த இடத்திலேயே எனது விதியை ஏற்றுக் கொள்வது நன்று.

என்றாலும் அவனும் மன்னவன் தானே மர்த்தியன் தானே விண்ணவன் அல்லவே, அவனும் ஒருநாள் மரிப்பவன் தான். அது நிச்சயம். பூதேவியின் சகலமான புத்திரர்களையும் போல் அவனும் ஒருநாள் இரும்பின் வலியை அறிந்தே தீருவான்.

இந்த பயங்கர ரூபியின் மனதில் ஒரே ஒரு தேவன் உறைந்து வருகின்றான். அவன் ஒருவனே இவனுக்கு ஊக்கத்தை அளித்து வருகின்றான். ஜோவ் தேவர் ஒருவரது கிருபையினால் மட்டுமே இவன் இவ்வாறு கிருபையுடன் விளங்குகின்றான்!''

இவ்வாறு தனக்குத் தானே பேசிக்கொண்டு அவன் மன அமைதியுடனும் தன்னுடைய சக்திகள் அனைத்தையும் ஒருங்கே திரட்டிக்கொண்டும் அசைவின்றித் திடமாக அவ்விடத்திலேயே நின்று விட்டான். அவனது மார்பு யுத்தம், யுத்தம் என்றதாகத் துடன் விம்மி விம்மிப் புடைத்தது.

அடர்ந்து, வளர்ந்த மரங்களுள்ள ஒரு காட்டின் நடுவில் உறைந்துவரும் ஒரு சிவிங்கிப் புலியானது, தன்மேல் அம்புகள் ஒரு மாரி போர் பொழிந்து வருகையில், தனது இடத்தைவிட்டு எழுந் திருந்து, பயப்படவோ புறங்காட்டி ஓடவோ கல்லாதது. உரத்துக் கூவும் வேடர்களது தொனியையும், சந்தடி செய்துவரும் வேட்டை நாய்கள் குரைப்பதையும் கேட்கின்றது. அடிபட்டாலும் காயமேற் றாலும் அது தனக்கு உண்டாகிய நோவைக் கவனிப்பதில்லை. முள்ளைப்போல் முனையுள்ள வேலானது அதன் மார்பைத் தைத் துக் குத்தினாலும் அது அதனால் மனந் தளருவதில்லை. அந்த வேலின் வேகமே வீணாகி விடுகின்றது. அந்த வேடர்களுக்கோ வேட்டை நாய்களுக்கோ இணங்கி வசமாகாமல் அந்தக்கொடிய சிவிங்கியானது பறந்து ஓட்டம் பிடித்து விடுகின்றது. தன்னை வேட்டையாட வந்தவன் தன் எதிரில் வந்தால் அது அவனைக் கிழித்துக்கொன்று விடுகின்றது. இன்றேல் அவனது அம்புக்கு இலக்காகித் தனது உயிரை நீத்து விடுகின்றது.

அந்தப் புலிக்குச் சற்றும் இளைக்காத மன உறுதியும் ஆற்றலும் உடையவனான அந்த அந்தினாரின் வீர குமாரன் முன்சென்று அகிலேசனை எதிர்த்தான். புறங்கொடுத்து ஓடுவது இழிவைத் தரும் என்று உன்னி மேலே நடக்கவிருந்த யுத்தத்தையும் எதிர்ப்பார்த்தவனாய் இருந்தான். வட்ட வடிவான அகன்ற தனது கேடயத்தை அவன் தனக்கு முன்பாக உயர்த்திப் பிடித்துக்கொண்டு தனது சத்துருவின்மேல் தனது ஈட்டியை ஓங்கி உயர்த்தி எய்யுமுன் அவனை விளித்துப் பின்வரும் வசனங்களை உரைத்தான்:—

"ஆஹா! தனக்குக் கிடைத்துவிட்ட கீர்த்தியை இந்த அகிலேசன் எவ்வளவு பெருமையுடன் பாராட்டுகின்றான்! கர்வம் அடைந்து வருகின்றான்! இந்த ட்ராய் நகரையே வேரோடு அழித்து துரோஜர்கள் என்னும் பெயரையே குழிதோண்டிப் புதைத்து விடுவேன் என்றன்றோ துடிக்கின்றான், குதிக்கின்றான்! அந்த ஆசை நிறைவேறாது, அது வீண் என்பதை அறிந்து கொள்வாயாக! நாம் அனுபவிக்கக் கடமைப் பட்டுள்ள கஷ்ட நஷ்டங்கள் இன்னும் ஆயிரக்கணக்காக இருக்கின்றன. அவ்வாறே நாம் செய்ய வேண்டிய பிரயத்தனங்கள் இன்னும் ஆயிரக்கணக்காக இருக்கின்றன. எங்களுடைய பெற்றோர்களும் எங்களுடைய குழந்தைகளும் எங்களை இந்த தர்ம யுத்தத்திற்கு அனுப்பியிருக்கின்றனர். ட்ராயின் மக்கள் இன்னும் வீரர்களாகவே விளங்குகின்றனர். அவர்களது சங்கியையும் குறையவில்லை.

நீ ஒரு மஹான் தான் எனினும் நீயும் இந்தப் பிரிஜியன் களங்களில் விழுந்து உனது இரத்தத்தை வடிக்கலாம், இவற்றைக் கறைப் படுத்தலாம்" என்றான்.

அவ்வாறு உரைத்துக்கொண்டே அவன் தனது ஈட்டியை இணையற்ற வேகத்துடன் எய்ய, அது அவனது சத்துருவின் முழங்காலைத் தாக்கி அடித்தது. அப்போது அந்தச் சத்துருவின் முழங்காலில் கட்டப்பட்டிருந்த சட்டங்கள் அந்த ஈட்டியின் அடியில் கழன்று விழுந்து, கலகலவென்று ஒலித்தன, எனினும் அவன் தேவர்களால் செய்யப்பட்டிருந்த கவசங்களை அணிந்திருந்ததினால், அவனுக்கு அந்த ஈட்டியினால் ஒருவிதமான தீங்கும் உண்டாகவில்லை. அவன் தானிருந்த இடத்திலேயே ஒன்றும் அறியாதவன்போல் அசைவற்று நின்று வந்தான்.

அதன்பின் அகிலேசன் இவ்வாறு துணிவுடன் தன்னைத் தாக்கவந்த அந்தச் சத்துருவை நோக்கித் தடதடவென்று முன்சென்று அவனை ஒரேயடியாய், ஒழித்து விடவேண்டும், என்று எண்ணித் தனது கையை ஓங்கினான். ஆனால் அப்பால்லோத் தேவர் ஒரு தேவனுக்குச் சமானமான அந்த துரோஜனைக் காப்பாற்றவேண்டும், அவனுக்கு அபகீர்த்தி வரலாகாது என்று ஆவல் கொண்டு அவனை மேகங்களினால் மறைத்து விட்டார்.

இவ்வாறு தன்னைப் பிடிக்க வேண்டுமென்று ஓடிவந்த அகிலேசனது கைக்குப் பிடிபடாமலும், மண்ணவர் ஒருவரது கண்

ணுக்கும் புலப்படாமலும், வெற்றியுடனும் அந்த நல்ல அதிர்ஷ்ட முள்ள சிறுவன் அந்த யுத்தகளத்தினின்று பின்னிடைந்து விட்டான்.

இதன் மத்தியில் துரோஜர்கள் க்ஷேமமாகப் பின்னிடைந்து செல்லவேண்டும் என்ற ஆவலுடையவராக விருந்த அந்த அப்பாலோ தேவர் அஜினுரைப்போல் வேஷமும் குரலும் உருவமும் தரித்துக்கொண்டு, அகிலேசனது கோபத்துக்குத் தப்பி அவனை விட்டு ஓட்டம் பிடித்து விட்டார்! என்ருலும் அவ்வாறு பறந்து சென்ற அந்தத் தேவனை அந்த வீரன் வேகமாகக் கொடுங்கோபத் துடன் துரத்திக்கொண்டே சென்ருன்.

அப்போது அவ்விருவரும் அந்தக் களங்களின்மேல் நெடுந் தூரம் தங்களது காலை எட்டி எட்டி வைத்துக்கொண்டு ஓடினர். சியமந்தர நதியானது மெதுவாக ஓடிக்கொண்டிருந்த இடத்தில் தங்களது வேகத்தை அதிகரித்துக்கொண்டனர். அவ்வாறு ஓட்டம் பிடித்து வருகையில் தன்னைத் தொடர்ந்து வந்த வீரன் தனக்கு ஓர் அடித் தூரத்தில் மாத்திரம் இருந்ததைக் கண்ணுற்ற அந்தத் தேவன் அவனுக்கு வசப்படுவதுபோல் நடித்து, அவன் தன்னைப் பிடிக்க வந்தபொழுது கடற்கரையை நோக்கி ஓட்டம் பிடித்து விட்டார்!

இவ்வாறு இவர்கள் ஒருவரை யொருவர் துரத்திக்கொண்டு வருகையில், ஏற்கனவே பறந்து கொண்டிருந்த துரோஜ ஸைனிகர்கள் அனைவரும் முனைந்து, முன்னிலும் அதிகமான வேகத் துடன் ஓடி ட்ராய்க்குள் பிரவேசித்து விட்டனர். அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் திரண்டு விழுந்து கொண்டும் சிறிதாயினும் தங்கு தடையின்றியும் தயங்காமலும், யார் ஓடிப்பிழைத்தனர், யார் பட்டு விழுந்தனர் என்று ஒருவருடனும் ஒரு கேள்வியும் கேளாமலும், ஒருவருடனும் உரையாடாமலும் ஓடினர்.

அங்கெங்கும் ஒரே அமளியும் குழப்பமுமாக இருந்தது. அனைவரும் ஓட்டம் பிடிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தனர். அப்பொழுது அவர்கள் அடிக்கடி திடுக்கிட்டுக் களி கூர்ந்து நிற்பர். ஒருபுறம் திகிலடைந்தவராகவும் மறுபுறம் மகிழ்ச்சி கொண்டவராகவும் விளங்குவர், குழம்புவர்!

இறுதியில் வெண்ணிறத்துடன் விளங்கிய ட்ராய் நகரானது தனது கோட்டை வாயில்களை அகிலேசனது முகத்திற்கு எதிராக மூடித் தாழிட்டுக்கொண்டு விட்டது.

இவ்வாறு ட்ராய் நகர் இக்கொடிய வினைக்குத் தப்பிய பின், அந்நகரின் உதவிக்கு வந்த, நானுதேசத்தவரும் 'அப்பாடா' என்று வழக்கம்போல் மூச்சுவிடலானுர்கள்!

———o———

## இருபத்திரெண்டாம் அத்தியாயம்

## ஹெக்டரது மரணம்

கதைச் சுருக்கம்: துரோஜர்கள் தங்களுடைய கோட்டை மதில்களுக்குட் பிரவேசித்து ஆபத்துக்களினின்றும் விடுபட்டபின், ஹெக்டர் மாத்திரம் அகிலேசனை எதிர்த்துப்போர் செய்வதற்காகப் பின்தங்கி விடுகின்றான்.

அகிலேசன் ஹெக்டரை அணுகி வருவதைக்கண்டு பிரியம் மகாராஜன் மனமிழந்து போகின்றான். அவனுடன் பொருத லாகாது. கோட்டைக்குள் வந்துவிடு என்று அவன் தனது மகனுக்குப் புத்தி சொல்லுகின்றான். ஹெக்குபாவும் அவ்வாறே செய்யும்படி ஹெக்டரை வேண்டுகின்றாள்.

ஆனால் அவ்விருவர்களது வேண்டுகோளும் பயன்படுவ தில்லை. தான் செய்ய வேண்டிய காரியங்கள் என்ன என்று ஹெக்டர் தன்னுள் ஆலோசிக்கின்றான்.

அவ்வாறு செய்து வருகையில் அகிலேசன் அவன் அருகில் வர, அவன் செய்து கொண்டிருந்த தீர்மானங்களும், மன உறுதி யும் கலைந்து போகின்றன. கடைசியில் அவன் ஓட்டம் பிடித்து விடுகின்றான்.

மூன்று முறை ட்ராய் மதில்களைச் சுற்றிக்கொண்டு ஓடிய ஹெக்டரை அகிலேசன் பின் தொடர்ந்து செல்லுகின்றான்.

அப்போது ஹெக்டரது நிலையை தேவர்களெல்லாம் கவ னித்து ஆலோசிக்கின்றனர்.

மினர்வா தேவியானவள் அகிலேசனுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற விருப்பத்துடன் விண்ணுலகினின்றும் இறங்கி வருகின்றனள். அவள் தைபோவஸு என்பவனைப்போல் வேஷந் தரித்துக் கொண்டு வந்து ஹெக்டரை ஏமாற்றி விடுகின்றாள். அவன் யுத்தஞ் செய்யத் தீர்மானித்து அதில் கொல்லப்படு கின்றான்.

அகிலேசன் அவனது பிரேதத்தை, பிரியத்துக்கும் ஹெக்கு பாவுக்கும் முன்னால் தனது தேரில் கட்டிக்கொண்டு, தரதரவென்று இழுத்துச் செல்லுகின்றான்.

அவர்கள் அழுது புலம்புகின்றனர். கண்ணீர் வடிக்கின் றனர். ஏங்குகின்றனர். காரியங்கள் இவ்வாறு நிகழ்ந்துவிட்டதை

அறியாது தனது அந்தப்புரத்தில் ஒதுக்கமான ஓர் உள்ளில் இருந்து கொண்டு வந்த ஆந்திரமகியின் காதில் இந்தக் கூக்குரல் விழு கின்றது, அவள் கோட்டை மதில்களில் ஏறி இறந்துபட்ட தனது கணவனைக் கண்டு மூர்ச்சை அடைகின்றாள். அவளது பெருந் துயரும் அழுகைகளும் வருணிக்கப்படுகின்றன.

முப்பதாம் நாளிலேயே இந்தக் காரியங்கள் நிகழ்கின்றன. இவை ட்ராய் மதில்களின் அருகிலும் அந்நகரின் கோட்டை கொத்தளங்களின் மேலும் நிகழ்கின்றன.

---

இவ்வாறு கன்றுகாலிகளின் மந்தைகள்போல் கூட்டங் கூட்டமாக விருந்த இலியர்கள் எல்லோரும் வேட்டைக்காரர் களால் துரத்தப்பட்ட மான்களைப்போல், நடுநடுங்கிப் பயந்து ஒடுங்கி தங்களுடைய அரண்களுக்கு விரைந்து ஓட்டமாக ஓடினர். அங்கு க்ஷேமமாகச் சென்று சேர்ந்த பின், அவர்கள் தாங்கள் வடித்து வந்த உவர்ப்பான கண்ணீர்த் துளிகளை நன்றாகத் துடைத்துக் கொண்டு தங்களுடைய கிண்ணங்களில் சாறுயத்தை வழிய வழிய நிறைத்துக் குடித்துத் தங்களுக்கு அன்றைய தினம் உண்டாயிருந்த களைப்புகளை ஆற்றிக் கொண்டனர்.

அணிவகுப்பினின்றும் சிறிதும் கலையாமலிருந்த கிரேக்கர் களும் நன்றாகக் கட்டப்பட்ட ஒரு கூரையைப்போல் தங்களுடைய கேடயங்களைத் தாழ்த்திப் பிடித்துக் கொண்டு, கோட்டை மதில் களின் ஓரமாக நெருங்கித் தடதட வென்று சென்று, அம்மதில் களின் கீழ் விசாலமாகப் பரந்திருந்த வயல்களை அடைந்தனர். அவர்களது கூட்டமானது ட்ராய் நகரத்தின் கோபுரங்களின் நிழல் வரையுங்கூடப் படர்ந்து அந்நிழலை ஆக்கிரமித்து விட்டது.

அப்போது மஹானுபன ஹெக்டர் மாத்திரமே அங்குத் தனி யாக நின்று விட்டான், விதியின் வலியினால் அவன் அங்கு ஸீயன் கோட்டை வாசலின் முன் ஒரு கல்லைப்போல் அசையாமல் நின்று விட்டான். தன் உறுதியான ஆயுதங்களைப் பிரயோ கித்துவிடல் வேண்டும் என்ற தீர்மானத்துடனும், இந்நாள் வரை வெகு நாளாகத் தான் காத்து வந்த ட்ராயை இன்னும் காத்தே வரல் வேண்டும் என்னும் விரதமுடையவனாகவும் அவன் அங்கு நின்றான்.

அப்போது அப்பால்லோ தேவர் தம்முடைய சகலமான ஆடை ஆபரண ஆயுதங்களுடனும் திருக்கோலங்களுடனும், அகிலேசனுக்கு முன் பிரஸன்னமாகி, யுத்தத்தினால் களைப்புற் றிருந்த அவனை நோக்கித் திரும்பிக் கொண்டு பின்வரும் வசனங் களை உரைத்தார் :—

''பீலியஸ்ஸின் புத்திரனது நோக்கம் என்ன ? ஒரு தேவனை இவ்வாறு ஒரு மனிதன் துரத்திக்கொண்டு செல்லலாமா ? இது

என்ன மரண தைரியம்? மரண வேகம்? தேவர்களது சித்தத்தை நீ அறிய மாட்டாய், உனக்கு அந்தச் சக்தி இல்லை. தேவர்கள் செய்யக் கருதியிருக்கும் காரியங்களைக் குறிப்பாக அறியவும் உன்னுல் இயலாது.

இப்போது ட்ராயானது இந்தக் களத்தைவிட்டு அகன்றே போய்விட்டது. இதனுல் உனக்கு என்ன பயன் உண்டாய் விட்டது. இதுவரை நீ பட்டபாடெல்லாம் வீணே ஆய்விட்டன. இப்போது நீ செய்த முயற்சிகளும் வீணே ஆகும். துரோஜர் களுடைய சேனைகளெல்லாம் ட்ராய்க் கோட்டைக்குள் க்ஷேம மாகப் புகுந்து விட்டன. நீ இங்கு கோட்டையின் வெளியில் நின்று கொண்டு ஒரு வெறியனைப்போல் கோபங்கொண்டு ஒரு தேவனை யன்றே எதிர்த்து வருகின்றாய்'' என்றார்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்த வீரன் கோபங் கொண்டு துடித்து "என்ன சொன்னீர்? பக்ஷபாதியான தினகரரே! இந்த யுத்தத்தில் நான் வெற்றியுடன் விளங்கு வதைக் கண்ணுற்றுப் பொருமை கொண்டு இதன் மத்தியில் குறுக் கிட்டு என்னை தடுக்கின்றீரே? இது உமக்கு அழகாகுமா?

நீர் தடுத்திராவிட்டால் இவ்வளவு ஜனங்கள் இலியனுக் குள் புகுந்திருப்பார்களா? அவர்களிற் பெரும்பாலோரை நான் தடுத்திருப்பேனே! அப்போது அடைக்கலம் பெற்றவர்களின் தொகை அற்பமாகவன்றே இருந்திருக்கும்? நீர் இந்த யுத்தத்தில் பிரவேசிக்காமல் இருந்தால் துரோஜர்கள் எவ்வளவோ பேர்கள் மேல் மூச்சும் கீழ்மூச்சும் விட்டுக்கொண்டு மண்ணைக் கவ்வியிருப் பார்களே! நியாயமாக எனக்குக் கிடைக்க வேண்டிய பேரையும் கீர்த்தியையும் நீர் அபகரித்து விடுகின்றீரே!

தேவர்கள் எல்லோரிலும் மிகவும் சக்தி வாய்ந்த நீர் மோசஞ் செய்வதிலும் ஒரு பெருந் தேவராகவன்றே விளங்கு கின்றீர்! உமக்கு இந்த அபகீர்த்தி வேண்டாம், வேண்டவே வேண்டாம். ஒரு தேவன் இவ்வாறு இழிதொழிலைச் செய்யலாமா? ஆஹா, இது என்ன சங்கடம், கஷ்டம்? தேவனுகப் பிறந்து இவ் வாறு ஒரு மனிதனை வஞ்சிக்கலாமா? மனிதனது சங்கடத்தை நீக்குபவனும் இல்லையே! அவன் வடித்த கண்ணீர் வீணே ஆகின்றதே'' என்றான்.

இவ்வாறு சொல்லிக் கொண்டு அவன் கடுத்த முகத்துட னும் அதிதீவிரமாகவும் தடதட வென்று விரைந்து எட்டி யெட்டிக் காலை வைத்துக் கொண்டும், ஒரு கோபுரம் போல் உயர்ந்து அந்த நகரத்தை நோக்கிச் சென்றான்.

ஓர் ஓட்டப் பந்தயத்தில் கெலித்துக் கம்பீரத்துடன் விளங் கும் ஒரு குதிரையானது, இலக்கின் சமீபமாக வந்தவுடன் இரு

மடங்கு ஆத்திரத்துடன் பறந்து செல்வது போல், அகிலேசன் தனது சத்துருவின் மேல் பாய்ந்தான்.

இவ்வாறு இவன் ஒரு பெருத்த நெருப்பைப் போல் பளிச் சென்று அந்தக் களத்தின் குறுக்காகப் பறந்து செல்லுவதை, அக் களத்தில் நிகழ்ந்து வந்த, நடவடிக்கைகளைக் கண்ணும் கருத்து மாகக் கவனித்து வந்த பிரியம் மகாராஜன் முதன் முதலாகக் கண் ணுற்றான்.

அதி உக்கிரமான சரத்காலத்தில் புயலும் காற்றும் அடித்து வரும் ஓரிரவில் நள்ளிருளில் ஓரியான் நட்சத்திரமானது ஏனைய நக்ஷத்திரங்களின் ஒளியைக் கவர்ந்து தன்னொளியைப் பளிச் சென்று பொழிந்து வருகின்றது. அப்பொழுது அந்த நக்ஷத்திரத் தின் தோற்றமானது, இன்று அகிலேசனது தோற்றத்தைப்போல் அரைவாசிப் பயங்கரத்துடனும்கூட விளங்குவதில்லை.

கடுத்த முகத்துடனும் கனத்த ஒளியுடனும் விளங்கிய அவ னது தோற்றத்தை வருணிப்பது ஒருவருக்கும் இயலாத காரியம். அவன் மூச்சுவிட்ட பொழுது தகதகவென்று தீப்பொறிகள் பறந் தன. அவற்றால் சூடுண்ட காற்றும் சிவந்தது. அது காய்ச்சல் களையும் பெருவியாதிகளையும், ஜீவ ஜந்துக்களின் உயிர்ச் சேதங் களையும் உண்டாக்கி விட்டது. அவன் அணிந்திருந்த கவசமும் அவ்வாறே கொதித்தது. தகதக வென்று ஜ்வலித்தது.

இந்தக் காட்சியைக் கண்ணுற்ற பெருந்தகையோனான பிரியம் மஹா ராஜன், தனது கண்ணீரைப் பெருக்கிப் புலம்பலா னான்! அவன் விருத்தாப்பியத்தினால் நரைத்துப் போயிருந்த தனது பெருந் தலையில் அடித்துக் கொண்டான். வாடிப் போய்விட்ட தன்னுடைய கைகளை உயர்த்தினான். தேவலோக வாசிகளான தெய்வங்களை நோக்கிப் பிரார்த்தித்தான். சோர்வினால் பலவீன மடைந்து விட்ட குரலுடன் அன்பு மிக்க தனது மகனைக் கூவி அழைத்தான்.

அந்த மகன் அப்பொழுது அகிலேசனை எதிர்க்க வேண்டும், அவனது வலியையும் பரீக்ஷித்துவிட வேண்டும், என்ற தீர்மானம் உள்ளவனாய் ஸீயன் கோட்டை வாசலில் நின்று கொண்டு இனி நடக்க விருந்த யுத்தத்தை எதிர் பார்த்தவனாய் இருந்தான்.

துயரக் கடலில் ஆழ்ந்திருந்த அந்த வீரனது தகப்பன் அவனைக் கண்ணுற்றுக் கோட்டை மதில்களின் மேல் நின்று கொண்டு அவனை நோக்கித் தன்னுடைய கைகளை நீட்டிக்கொண்டு பின்வருமாறு அவனைக் கெஞ்சினான் :—

"ஹெக்டர்! ஹெக்டர்! என் அன்பனே! நீயே என் னுடைய மக்கள் அனைவரிலும் அதி பராக்கிரமசாலியும், எனக்கு மிகப் பிரியமானவனு மன்றோ? இங்கு நில்லாதே! நீ கொலை

யுண்டு போய் விட்டதாகவும் உனது கட்டையை நான் காண்பது போலவுமே எனக்குத் தோன்றுகின்றதே! இந்தக் களத்தையே நாசம் செய்ய வந்த அந்த நமனுல் நீ கொல்லப்பட்டு உனது உடல் கட்டை போல் நீண்டு கிடப்பதை நான் காண்பது போலவே எனக்குத் தோன்றுகின்றது!

அட அகிலேசா! இரக்கமற்ற பாவி! நீ எனக்குச் சத்துரு வாக விளங்குவது போலவே, தேவர்களுக்கும் சத்துருவாக விளங்குவாயாக! அவர்கள் ஒருவரும் உனக்கு ஒருவிதமான நன்மையும் செய்யாமற் போகட்டும்! அவர்கள் அனைவரும் உனக்குச் சத்துருக்களாகவே ஆகட்டும்! கொடிய கழுகுகள் உன்னைக் கிழித்து உன்னுடைய அங்கங்களைக் கடற்கரையைச் சுற்றிலும் இறைக்கட்டும்! உனது மாமிசம் அடங்காப் பசியுள்ள நாய்களுக்கு இரையாகட்டும்! அதைத் தின்று அவற்றின் ஆவலும் ஆத்திரமும் அதிகரிக்கட்டும்!

இதுவரை சூரர்களான மக்கள் எனக்கு எத்தனை பேர் இருந்தனர்! ஐயோ! அவர்கள் இருந்து என்ன பயன் ஆயிற்று?

அவர்கள் அனைவரையும் பாழாய்ப் போன உன்னுடைய கைகள் அழித்து விட்டனவே. அவர்களை நீ நெடுந் தூரத்திலுள்ள தீவுகளில் அடிமைகளாக வன்றோ விற்று விட்டனை. அவர்கள் அங்கு மான மிழந்து இழிவான ஊழியங்களை யன்றோ செய்து வரு கின்றனர்? அவர்களுடைய மான மரியாதைகளையே அழித்து விட்டனையே! மானம் இழந்த பின் வாழலாமா? அவர்கள் இறந்து போயிருந்தால் அது ஒரு பெருமையாக இருந்திருக்குமே!

நான் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையிலேயே என்னு டைய கண்கள், கண்மணிகள் போன்ற என்னுடைய புத்திரர்கள் இருவரைத் தேடுகின்றனவே! ஐயோ! நான் அவர்களைக் காண வில்லையே! ஒரே தாயின் வயிற்றில் பிறந்த அவ்விருவரையும் நான் காணேனே! எனது பாலிடோர் எங்கே! எனது அன்பு மிக்க லிக்கேயன் எங்கே! அவர்கள் இறந்து தான் போயினரோ?

அதோ அங்கு காணும் சத்துருக்களது பாளையத்தில் அவர்கள் உயிருடன் இருப்பார்களானுல், அவர்களை மீட்ப தற்காக மலைகளைப் போலல்லவோ நான் பொன்னைக் குவிப்பேன்? நான் கொடுக்கக் கூடிய கனக மலைகளுக்கும் வேறு திரவியங் களுக்கும் அளவுஞ் சொல்ல முடியுமோ?

லிலிஜியா தேசத்து அரசனுன அவர்களது பாட்டன் தனது இராஜ்ஜியத்துடன் தனது புத்திரியையும் எனக்குத் தந்தனன். அந்தப் பாட்டனுடைய ஆஸ்திகள் அனைத்தும் அவர்களுக்கே பிறப்புரிமைகளாகக் கிடைத்திருக்கின்றன! ஆஹா தெய்வ கிருபை யினுல் அவர்கள் இப்போது உயிருடன் இருக்கலாகாதா? அவ்

வாறு உயிருடன் இல்லை என்றால் அவர்கள் ஸ்திஜியன் கரையில் சோறும் தண்ணீரும் மின்றிக் களைத்து வெள்ளை வெளே ரென்று வெளுத்துப் பிசாசுகள் போல் அலைந்து திரிபவர்களாக இருக்க வேண்டும்! காரியம் அவ்வாறு இருக்குமானால் அவர்களது அன்னை எவ்வாறு துக்கிப்பாள்? எவ்வாறு விசனப்படுவாள்? அதற்கு எல்லையும் உண்டோ? எனது துன்பத்திற்கு அளவுதான் இருக்குமோ? அந்த விசனங்களையும் துக்கங்களையும் துன்பங் களையும் உரைக்கவும் யாவராயினும் வல்லவர்கள் ஆவார்களோ?

என்றாலும் ஹெக்டர்! நாங்கள் உன்னை மாத்திரம் இழந்து விடாமல் இருப்போமானால், அந்தத் துயரமும் அவளுக்கும் எனக்கும் நேர்ந்து விட்ட கஷ்டங்களும் ட்ராய்க்கு நேரக் கூடிய கஷ்டங்களும் பெரும் பாரமாகத்தோன்ற மாட்டா. அவைகளை நாங்கள் பொறுத்தே வருவோம், ஆதலால் இப்போதாயினும் அகிலேசனை விட்டு விலகி விடு. கோட்டைக்குள் நுழைந்து வந்து விடு.

இன்னும் காலம் தவறிப் போக வில்லை. உனது உயிரைக் காப்பாற்றிக் கொள். உனது தகப்பனது உயிரையும் காப்பாற்று. எங்கள் எல்லோரையும் காப்பாற்று. உத்தமனான உனது உயிரைக் காப்பாற்றிக் கொள்.

கேவலமான தனது உயிரை மாத்திரம் காப்பாற்றிக் கொள்வது ஓர் உத்தம வீரனுக்கு இழிவைத் தரும் என்று கருதுவா யானால், உனது அரும் பெரும் கீர்த்தியையாயினும் காப்பாற்றிக் கொள்.

இதோ! என்னைப் பார்! வெள்ளி போல் நரைத்துள்ள என்னுடைய ரோமங்களைப் பார். இவைகளைக் கண்டாவது மனமிரங்கி உனது உயிரைக் காப்பாற்றிக் கொள்.

இதுவரை நான் அனுபவித்து வரும் கஷ்ட நஷ்டங்களையும், துன்பங்களையும், துக்கங்களையும், கணக் கிட்டுப் பார். இவ்வளவு கஷ்டங்களையும் அனுபவித்து வந்தும் எனக்கு இன்னும் ஆசா பாசங்கள் ஒழியவில்லை. உயிரின் மேலுள்ள ஆசை அகலவில்லை. நான் ஒரு மஹா பாபி. மூப்பினால் என்னுடைய கால்கள் தளர்ந்து விட்டன. ஒரு காரியத்திற்கும் உதவாத, வாஞ்சையும் ஆத்திரமுமே இப் போது என்னிடம் எஞ்சி நிற்கின்றன.

மஹா தேவனான ஜோவ் தேவன் இந்தப் பாபியினிடம் கோபங் கொண்டு இவனை இவ்வாறு பலவாறாகப் புண்படுத்தி ஆட்டி வைக்கின்றான். எனது கஷ்டங்களைக் கண்டோரும் எனக்கு இரங்குகின்றனர்.

எனது நல்ல அதிர்ஷ்டம் அடியோடு அற்றுப் போய் விட்டது. கசப்பு ஏறிய துரதிஷ்டத்தின் சக்கையையே நான்

இப்போது அருந்துகின்றேன். என் கண்ணை மூடும் தருணத்தில் என்னுடைய பந்து ஜனங்களின் மரணத்தையும் பார்க்கும்படி அந்தத் தேவன் விதித்து விட்டான். இனி மீந்துள்ள தினந்தோறும், துக்கமே அனுபவிக்க வேண்டு மென்றும் விதித்து விட்டான்! என்னுடைய வீரர்கள் கொலையுண்டு மடிந்து போவார்கள். எனது மணக்கட்டில் கவிழ்ந்து புரண்டு பாழாகி விடும். என் புத்திரிகள் கற்பிழப்பர். எனது நகரமும் நீருகி விடும். என் இளங் குழந்தைகள் தரையில் மோதுண்டு இரத்தத்தை வடிப்பார்கள். இவை அனைத்தையும் இவை போன்ற வேறு கொடுமைகளையும் நான் என் கண்ணுல் காண வேண்டு மென்பது அவரது விருப்பம் போலும்!

இவ்வளவும் போதாது என்று நானே கடைசியாக அவரது கொடுங் கோபத்திற்கு இலக்காகித் தலைசாய்ந்து விடலாம்! சகல ஆடம்பரங்களுடனும் நான் வீற்றிருந்த எனது இராஜ சபா மண்டபத்தின் வாயிற் படிகளில் நான் விழுந்து அவைகளின் மேல் எனது இரத்தத்தை வடித்து விடலாம்! நான் எனது அழிந்து போன ராஜ்யத்தில் எஞ்சி நின்ற ஒரு குட்டிச் சுவர் போல் சமைந்து விடலாம். எனது உடல் பாப சாம்ராஜ்யங்கள் நிறைந்ததாய் சங்கடமான ஆடம்பரங்களுக்கும் இருப்பிடமாக விளங்கி விடலாம். அப்போது அதுவரை எனது வீட்டுக்கு காவல் புரிந்து வந்த நாய்கள் தங்களது கடும்பசியை ஆற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆவல் கொண்டு கண்டந் துண்டமாக வெட்டப் பட்ட தங்களது எஜமானனுடைய உடலிலுள்ள இரத்தத்தையும் தசைகளையும் நக்கி வரலாம்.

என்றுலும் தேவர்களே! என்னுடைய புத்திரர்களின் விஷயமாக நான் உங்களுக்கு வந்தனமே அளிக்கின்றேன். அவர்கள் நற்கதி அடைந்து விட்டனர். அவர்கள் அனைவரும் போர்முனையில் நின்று தங்களுடைய உயிர்களை விடுத்தனர். அவர்கள் நல்ல மரணத்தையே அடைந்து விட்டனர்.

இளமையிலும் ஆண்மையுடன் விளங்கி வருகையிலும் கள்ளங் கபடு இன்றிச் சத்துருவை எதிர்த்துச் சென்று அவனுல் மார்பினில் குத்துண்டு காயமேற்று உயிரை நீப்பவனே உத்தம மரணத்தை எய்துகின்றுன்.

நெடு நாளாக வளர்ந்து விருத்தியடைந்து முற்றிப் போய் விட்ட கடுவினைகள், வயது முதிர்ந்து தளர்வடைந்து சத்துருக்களைத் தடுக்க இயலாமல் இருக்கும் நரைத்தலையர்களைப் புறக்கணித்து விடுகின்றன. பூஜார்ஹமான அவர்களுடைய அவயவங்களை மண்ணில் மறைத்து அவர்களது உருவையும் கலைத்து விடுகின்றன. அவர்கள் உடம்பில் ஊறி வந்த சிறிதும் சூடில்லாத இரத்தத்தையும் நாய்களுக்குப் பானமாக ஊற்றி விடுகின்றன. இது தான் துன்பம், இதினும் மேலானத் துன்பம் இல்லை.

விதியின் பயனை அனுபவிக்கவேண்டியது மனிதரது மாருக் கடன்தான் எனினும், இவ்வாறு முதிர்ந்த வயதின் இறுதியில் இன்னல்களை அனுபவிப்பது மிகவும் வருந்தத் தக்கது, வெறுக்கத் தக்கது, துக்ககரமானது'' என்ருன்.

இவ்வாறு கூறிக்கொண்டு பிரியம் மகாராஜன் தனது தலையிலிருந்த வெண்மயிர்களை வெடுக்கென்று பிடுங்கி இழுத்துத் தூரத்தில் எறிந்து விட்டான்! அக்கணம் அவன் பட்ட பாட்டையும் துடித்த துடிப்பையும் ஒருவாற்ருனும் விரித்து உரைத்தல் யாருக்கும் இயலாத காரியம்.

அப்பொழுது ஹெக்டரின் அன்னையும் அங்கு வந்து அவனுடன் சேர்ந்தனள். அவளும் பலவாருகப் பிரலாபித்தனள். அவளைக் கண்ணுற்ற ஹெக்டரின் மனம் சிறிதேனும் இளகவில்லை. அவள் தனது மேகலையைக் கழற்றிவிட்டுத் தனது மார்பை அவனுக்குக் காட்டி, உவர்ப்பான கண்ணீரைத் தாரை தரையாகச் சொரிந்து கொண்டு, பின் வருமாறு கதறினள் :—

“என் மகனே! எனக்கு உபகாரஞ் செய். எனக்கு ஒரு உதவி செய். பெரியோர்களது வார்த்தையை வணக்கத்துடன் ஏற்றுக்கொள். உன்னைப் பெற்றவளது பிரார்த்தனையைச் செவி சாய்த்துக்கேள்.

இந்தக் கைகளைக் கொண்டு நான் எப்போதாயினும் உன்னை அன்புடன் அணைத்துக் கட்டிக் கொண்டு இருந்திருந்தாலாவது, அல்லது இந்த மார்பின் மேல் உன்னைச் சாய்த்துக்கொண்டு உன்னுடைய பாலசேஷ்டைகளையும் பிடிவாதங்களையும், கூக்குரல்களையும், தணித்துச் சமாதானப்படுத்தி இருந்தாலாவது நீ இவ்வாறு எங்களை இந்த விருத்தாப்பியத் திசையில், புறக்கணித்துக் கைவிடலாகாது. எங்களை நிர்க்கதியாக விட்டு விடலாகாது.

நீ நம்முடைய கோட்டை மதில்களுக்குள் சென்று, அங்கு ஆபத்துக்கு ஆளாகாமல் க்ஷேமமாக இருந்து கொண்டு நம்முடைய சத்துருக்களைத் துரத்தி விடலாம். உனது சத்துரு ஒரு கடுங்கோபி, சிறிதும் இரக்கமோ தயவோ தாக்ஷண்ணியமோ இல்லாதவன். அவனை எதிர்த்துக் கொண்டு நீ தன்னந்தனியனுய்ச் சென்ருல், ஐயோ நான் என்ன செய்வேன்! அவன் உன்னைக் கொல்லாமல் இருக்கவேண்டுமே!

தெய்வமே! அவன் உன்னைக் கொன்று விட்டால், உன்னைக் கொன்று உனது உதிரத்தை வடித்து விட்டால், நான் என்ன செய்வேன்? அதிகௌரவமாக விளங்கி வந்தவனை உனது கட்டையைக்கூட அவன் கௌரவமாக ஒரு பாடையில் வைக்கமாட்டானே? உனது மனைவியோ, அல்லது உனது அன்னையோ அப்போது உனக்காகக் கண்ணீர் விட்டு அழமாட்டார்களே!

எங்களுக்கு மறைவான ஓர் இடத்திலன்றே நீ ஓர் அநாதையைப் போல் பிராணனை விடுவாய்! நாங்கள் அன்புடனும் பக்தியுடனும் செய்யக்கூடிய ஈமக்கடன்கள் ஒன்றுமில்லாமல் வெட்டவெளியான பாழ்பட்ட நிலங்களில் உனது கட்டையானது காக்கை கழுகுகளுக்கு இரையாகுமே!" என்றாள்.

இவ்வாறு பிரியம் மஹாராஜனும் அவனது தேவியான ஹெக்குபாவும் தங்களுடைய கண்ணீர் கன்னத்தில் ஒரு நீர் அருவி போல் வழிந்து வருமாறு புலம்பிக் கொண்டிருந்தனர்.

ஆனால் ஹெக்டர் மாத்திரம் சிறிதும் மனந்தளராமல் ஒரே நிலையில் நின்று வந்தான். அவனது புத்தி கலங்கவில்லை. உறுதியும் இளகவில்லை. தான் கொண்ட கருமத்தைச் செய்தே தீரவேண்டுமென்று தீர்மானித்தவனாக இருந்தான். அவ்வாறு அசைவற்று நின்ற அவன் 'தன்னுடைய சத்துரு தன்னை நோக்கிக் கொடுங் கோபத்துடன் எப்போது முன்வருவான், அவனை ஒரு கைபார்த்து விடுவோம்' என்று அவனை எதிர் பார்த்தவனாகவே யிருந்தான்.

அப்போது அவனுடைய கண்களில் தீப்பொறிகள் பறந்தன. காட்டிலும் வனத்திலுமுள்ள விஷமூலிகைகளைத் தின்று அவற்றிலுள்ள விஷங்களில் சரிபாதியை நன்றாக விழுங்கியதனால் வயிறு வீங்கித் தனது வங்கினுள் சுருண்டு கிடக்கும் ஒரு நாகமானது தனது புதரின் அருகே வரும் வழிப்போக்கனைக் கண்டு அவனைக் கடிக்க வேண்டுமென்ற ஆத்திரத்துடன், அவனையே கவனித்துப் பொங்குகின்றது. தனது கோபம் அனைத்தையும் ஒருங்கே திரட்டிக்கொண்டு உறுதியுடன் விளங்குகின்றது. அப்போது செக்கச் சிவந்துள்ள அதன் உருண்டையான கண்கள் தழல்போன்ற சுடரை விட்டுக்கொண்டு கண்டோர் கண்களைக் கூசச் செய்கின்றன.

ஹெக்டரும் அந்த நாகத்தைப்போலவே ஒரு கோபுரத்தின் கீழ் தனது கேடயத்தின் மேல் சாய்ந்து கொண்டு பின் வருமாறு ஆலோசனைகளில் ஆழ்ந்தவனாய் நின்று கொண்டிருந்தான் :—

"நான் இப்போது எங்கு செல்லலாம்? எனது வழி எங்கு உள்ளது? இந்தக் கோட்டை மதிலுள் செல்லலாமா? இது ஒரு தர்மசங்கடமாகவன்றோ இருக்கின்றது? எந்த வழிச் சென்றாலும் பேருங் கீர்த்தியும் போய் அவமானமே உண்டாகும்!

கோட்டை வாயிலின் முன் நின்று கொண்டு அதிகர்வியான இந்தப் பாலிதாமஸ் பலரும் அறியும்படி பகிரங்கமாகக் கூச்சலிடுகின்றானே, பிதற்றுகின்றானே, இவனுக்கு இடங் கொடுக்கலாமா? இவனுடைய யோசனையின்படி நான் நடக்க வில்லை, அதைக் காலாகாலத்தில் நிறைவேற்றவில்லை, காலத்தைக் கை நழுவ விட்டு விட்டேன். இவனது யோசனைப்படி அன்றைய தினம் இராத்திரியில் காரியங்களைச் செய்து விட்டு நானும்

ஓட்டம் பிடித்திருந்தால், எத்தனையோ ஜனங்களை நான் காப் பாற்றி இருக்கலாம்! அவனுடைய நல்ல யோசனையை நான் அலட்சியஞ் செய்து உதறித் தள்ளிவிட்டேன்! அதனால் என்னு டைய ஜனங்கள் எல்லோரும் மாண்டு போயினர். அது ஒரு மஹா மூடத்தனம் என்பதை நான் இப்போது தான் அறிகிறேன்.

என்னுடைய தேசத்தார் பெருந்துயரும் துக்கமும் அடைந்து அழுது புலம்புகின்றனர் என்று எனக்குத் தோன்றுகின்றது. அவர் கள் அனைவரிலும் இழிந்த கீழ்மக்கள் என்னைத் தூற்றி உரைக் கும் வசைச்சொற்களே, என்னுடைய செவிகளைத் துளைக்கின்றன!

முன்பின் யோசனை செய்யாமல் மூர்க்கனைப்போல் ஒரே பிடிவாதமாக நின்று இந்த யுத்தத்தை நான் செய்து வந்ததினாற் றான் காரியங்கள் இவ்வாறு கேடாய் முடிந்து விட்டன என்று அவர்கள் உரைக்கின்றனர். என் நற்குணங்களை அறியமாட் டாத அவர்கள் அந்நற்குணங்களே இந்த அனர்த்தங்களை விளைத்து விட்டன என்று பிதற்றுகின்றனர். இது நியாயமா? அன்று.

அவர்கள் தங்களுக்குத் தோன்றியபடி அலப்பிக் கொண் டிருக்கட்டும். அதை நான் கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை. நான் கோட்டைக்குள் திரும்பிச் செல்வதென்றால், வெற்றி யுடனும் கீர்த்தியுடனுமே திரும்பிச் செல்ல வேண்டும். எனது தேசத்திற்கு வைரியாகிய கொடியோனைப் புழுதியில் அழுத்திவிட்ட பின்னரே நான் திரும்பிச் செல்ல வேண்டும். இது உறுதிதான்.

இல்லை, நான் அழிந்து தான் போகவேண்டும் என்பது என் தலைவிதியாக இருந்தால், நான் என்னுடைய நகரத்தார் காண அவர்கள் முன்னாலாவது, போர்க்களத்தில் பட்டுவிழுந்தாவது எனது பிராணனை விடவேண்டும்! எனது நகரத்துக் கோட்டை மதில்களைக் காத்தவண்ணம் நான் என் பிராணனை விடவேண்டும். நான் எனது நகரத்துக்கு இந்தத் தொண்டாயினும், ஆற்ற வேண்டாமா ?

இதுவும் வேண்டாமென்று இவ்வாறு காரியங்களைச் செய் யாமல் நான் நிராயுதனாய் எனது சத்துருவிடம் சென்று சந்தி செய்ய நினைத்து எனது போர்க் கவசத்தையும் மகுடத்தையும் ஈட்டியை யும் அவனது பாதத்தில் வைத்துவிட்டு, இந்த நகரத்தைக் காப்பாற்றிச் சமாதானம் செய்துகொள்ளத்தக்க திட்டங்களைப் பேசி வரலாமா ?

இந்த யுத்தத்திற்கும் நமது நாட்டின் அழிவுக்கும் காரண மான மஹா அபராதங்களாகிய பத்தினி அபகரணத்துக்கும், திறையாகச் சென்ற திரவியத்தை வழிமறித்துத் தடுத்ததினால் விளைந்த நஷ்டத்திற்கும், ஏற்ற ஈடுகளுடன் அப்பத்தினியையும் திரவியங்களையும் திருப்பிக் கொடுத்து விடலாம். அதுவே நியாய

மாகத் தோன்றுகின்றது. ஆக்ஷேபமின்றிக் கொடுத்து விடுவோம். மேலும் இலியனில் இப்பொழுது மீந்துள்ள திரவியங்களில் பாதி யையும் கூடக் கொடுத்து விடுவோம். இவை அனைத்தையும் கொடுப்பதாக ட்ராய் நாட்டார் சத்தியஞ் செய்து கொடுப்பார்கள். அப்போது துரோஜர்களுடைய பலவாறுன சிறுமைகளுக்கு ஆளான கிரேக்கர்கள் ஒரு வேளை சமாதானம் அடைந்து விட லாம். எங்கள் ஆஸ்திகளைப் பங்கிட்டு ஒரு பாதியை எடுத்துக் கொண்டு திருப்தி அடைந்து அவர்கள் எங்களுடைய கோட்டை மதில்களை விட்டு அகன்று விடலாம்.

இது என்ன யோசனை ! இந்த யோசனை ஏன் என் மனதில் உதிக்கின்றது ?

நான் நிராயுதனுய்ப் பழிக்குப் பழி வாங்கியே தீருவேன் என்று துடிக்கும் இந்த வைரி, என்னிடம் இரக்கம் கொள்ளுவான் என்று நம்புவதற்கு என்ன ஆதாரம் இருக்கின்றது ? அபலையான, ஒரு ஸ்திரீயைப் போல் தானே, நான் அவனது காலடியில் விழுந்து மடிய வேண்டும் ? அவன் என்னை ஓர் அடியேனும் அடிக்க வேண்டிய அவசியம் இராதே ?

ஓர் மரத்தடியில் ஒதுங்கும் இரண்டு மனிதர்களைப் போல வும், தேச சஞ்சாரம் செய்து வருகையில், சந்திக்கும் இரண்டு வழிப் போக்கர்களைப் போலவுமா நாங்கள் இங்கு யோக க்ஷேமங் களை விசாரிக்கப் போகின்ருேம் ? இல்லையே ! நெடுநாள் பழகியவர் கள் போல் அமைதியுடன் பேசுவதற்கு இது தருணம் அல்லவே !

மாலை வேளையில் சோலையில் உலாவி வரும் இளங்காளை களையும் இளஞ் செல்விகளையும் போல், சரச சல்லாபங்கள் செய் வதற்கு இதுதானு சமயம் ! இப்போது நாம் இறங்கியிருப்பது யுத்த மன்ருே ? அதை அன்ருே நாம் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து வரல் வேண்டும் ! இதில் யாருக்குத் தோல்வி, யாருக்கு வெற்றி என்பதைத் தெய்வங்களே தீர்மானிக்கட்டும் ” என்றெல்லாம் பலவாருகச் சிந்தனை செய்து வந்தான்.

இவ்வாறு இவன் சிந்தனைகள் செய்து கொண்டிருக்கையில், இவனது சத்துருவாகிய கிரேக்கன் இவனை அணுகி வந்து விட் டான். பயங்கரமான அவனது கொண்டைச் செண்டு அதி உன்னதமான அவனது தலையின் மேல் இருந்த வண்ணம் அசைந் தாடியது. அந்தப் பீலியனது வலது கையிலிருந்த ஈட்டியும் தன் னுடைய கிரணங்களை அந்நாடெங்கும் பளிச்சென வீசியது. அதனைக் கண்டோருடைய கண்களும் கூசின. மின்னலைப் போன்ற அவனது மார்க்கவசமானது ஜோவ் தேவரது மின்னலைப் போலும், அதிகாலையில் உதிக்கும் இளஞ் சூரியனைப் போலும் செங்கதிர்களைப் பொழிந்து வந்தது.

அவனை ஹெக்டர் உற்றுப் பார்த்தான். அப்போது அவன் கண்முன்னுல், பீதியையும் பயத்தையும் உண்டாக்கக் கூடிய

உருவங்களே தோன்றின. அவற்றைக் கண்டு அவன் ஒரு தேவனுல் தாக்கி அடிக்கப்பட்டவன் போல் திடுக்கிட்டுப் பயந்து பின்னிடைந்து ஓட்டம் பிடித்தான்.

அவ்வாறு ஓட்டம் பிடித்தவனை அகிலேசன் இறக்கையுடன் பறக்கும் ஒரு காற்றைப் போல் துரத்திக் கொண்டு சென்ருன். இவ்வாறு தான் வானவெளியில் இலகுவாகவும் அதி விசையுடனும் பறந்து செல்லும் இயல்புடைய ஓர் இராஜாளி ஆனது பதைபதைத்துத் தவிக்கும் ஒரு புருவைத் துரத்திக் கொண்டு செல்லும். அது அந்த வான வீதியில் கள்ளத்தனமாகச் சுழன்று பறந்து தனது இரையைப் பிடித்த விட்ட பொழுதோ அல்லது அது தன் கைவசம் ஆக்கி விட்டது என்று எண்ணும் பொழுதோ, தனது அலகை விரித்துக் கிரீச் சென்று கத்திக் கொண்டு, உயரக் கிளம்புகின்றது. பின்பு அது சரியாகக் குறி பார்த்துத் திடீரென்று தன்னுடைய சிறகுகளை விரித்துக் கொண்டு அந்தப் புருவின் மேல் பாய்ந்து அதைத் தன்னுடைய நகங்களால் பிடித்து விடுகின்றது.

இந்த இராஜாளியையும் புருவையும் போலவே சிறிதும் ஏற்றத் தாழ்ச்சியில்லாத ஆற்றலுடன், இவ்விரு வீரர்களும் இந்த ஓட்டத்தை நடத்தி வந்தனர். ஒருவன் கடுங் கோபத்துடன் துடிதுடித்துக் கொண்டு, மற்றவனைத் துரத்தி வந்தான். மற்றவன் பயமேலிட்டவனுய் உயிருடன் தப்பிப் பிழைத்தாற் போதும் என்ற ஆவலுடன் தனது கால் கொண்ட விசையோடு விரைந்து ஓடினுன்.

இவ்வாறு ஒருவன் மற்றவனைத் துரத்திக் கொண்டும், பின்னவன் ஓட்டம் பிடித்துக் கொண்டும், அவ்விருவரும் கொஞ்ச காலம் அந்த ட்ராய் நகரத்தின் கோட்டையை வட்ட வட்டமாகச் சுற்றிக் கொண்டே ஓடி வந்தனர். ட்ராய் நகரத்தைக் காவல் காத்து வருவதற்காக அதைச் சுற்றிலும் நாற்புறத்திலும் மைதானத்தின் மத்தியில் கட்டப்பட்டிருந்த ஆளோட்டியின் கீழாகவே அவர்கள் இவ்வாறு ஓடி வந்தனர்.

அதன்பின் அவர்கள் அங்கு விசாலமாக அகன்று கிடந்த ஓரிடத்தில் நீண்ட கிளைகளுடன் விளங்கிய ஓர் அத்தி மரத்தின் நிழலில் மேற்கூறிய விதமே போராடி வந்தனர். அவ்விடம் அதி விசாலமாகப் பரந்து கிடந்ததினுல் அங்கு ஒருவன் மற்றவனைத் துரிதமாகத் துரத்தவும், துரத்தப்பட்டவன் அதிவேகமாக ஓடவும் போதுமான வசதிகள் இருந்தன. அப்பொழுது அவர்கள் சென்ற விடமெல்லாம் புகையைப் போன்ற புழுதியில் மறைந்து போய் விட்டது.

அதன்பின் அவர்கள் சியமந்திர நதியின் இரண்டு ஊற்றுகளுள்ள இடத்தை நோக்கிப் பாய்ந்து குதித்துக் கொண்டு சென்ற

னர். லோகப்பிரசித்தமான அந்த இரண்டு ஊற்றுகளும் பூமியைப் பிளந்து கொண்டு உயரக் கிளம்புகின்றன.

அவற்றுள் ஒன்று பூமியினின்றும் தகதகவென்று கொதித்துக் கொண்டு வெடிக்கும் துவாரங்கள் வழியாக உயரக் கிளம்பி வருகின்றது. அதனின்றும் எழும்புகையும் தழலும் ஆகாயத்தை அளாவிச் சென்று வாயுமண்டலங்களையும் கவர்ந்து விடுகின்றன. மற்றைய ஊற்றுனது வெயிற் காலத்தில் தன் இரு கரைகளிலுமுள்ள பச்சைப் பச்சையான தரைகளின் மேல் புரண்டு ஓடுகின்றது. அது கண்ணுடியைப் போல் அதிகம் குளிர்ச்சியையுமுடையது.

இவ்வாறு பொங்கிவரும் இவ்விரு ஊற்றுக்களும் சலவைக் கல்லினுல் கட்டப்பட்டுள்ள ஓரோர் தொட்டியை நிரப்பி விடுகின்றன. நன்ருகச் செதுக்கி மழ மழ வென்று இழைக்கப் பட்ட அத் தொட்டிகளின் படுகைகள் இவ்வாறு பாய்ந்து வரும் அச்சிற்ருறுகளின் நீர்த்துளிகளை ஏற்றுக் கொள்ளுகின்றன.

கிரேக்கர்களுடைய கொடுமைகளினுல் திகிலும் பயமும் உண்டாவதன் முன்னர், அதாவது இந்நாட்டில் அமைதி நிலவி வந்த நாளில் துரோஜச் சீமாட்டிகள் இந்தத் தொட்டிகளில் தங்களுடைய அழகான வஸ்திரங்களைத் தோய்த்து வருவது வழக்கம்.

இந்தத் தடாகங்களின் வழியே இவ்விரு வீரரும் ஒருவனை ஒருவன் துரத்துவதும் மற்றையவன் ஓடுவதுமாக வேட்டையாடி வந்தனர். மஹாவீரனுன ஹெக்டர் ஓட, அவனினும் வலிமிக்க வீரனுன அகிலேசன் அவனைத் துரத்திக் கொண்டு சென்ருன். இவ்வாறு இவர்கள் வெகு துரிதமாக ஓட்டம் பிடித்து வந்தனர். இவர்கள் கேவலம், ஒரு பந்தயத்தைக் கெலிக்க வேண்டு மென்று ஓடினவர்கள் அல்ல, சாமானியமான ஒரு பரிசு பெறுவதற்காக அவர்கள் அன்று இவ்வாறு அரும்பாடு படவில்லை.

மஹானுன ஹெக்டரின் ஆயுளே அன்று விரைவாக ஓட்டம் பிடித்துக் கெலிப்பவர்களுக்குக் கொடுக்கப்படும் பந்தயப் பொருளாகவும் வெகுமதியாகவும் ஆகிவிட்டது!

காலக் கிராமத்திற் பூத உடலை நீத்துப் புகழுடம்பு எய்திய மஹா வீரர்களுடைய பராக்கிரமங்களைக் கொண்டாடிப் பாராட்டுவதற்காக, ஈமக் கடன்கள் செய்யவேண்டும், திருவிழாக்கள் நடத்த வேண்டும் என்று இராஜங்கத்தார் விடுத்த ஆணைப் படிப் பந்தயங்கள் நடந்து வருகையில், அப்பந்தயங்களில் கெலிப்பவர்களுக்குப் பொன்னுலான ஒரு முக்காலியோ அல்லது அழகிற் சிறந்த ஓர் அணங்கோ பரிசாகக் கிடைக்கும் என்று அறிந்து விட்டால், எவ்வாறு இளங்காளைகள் ஆத்திரம் மண்டிப் பொங்கித் தங்களுடைய விரைந்தோடும் குதிரைகளைப் பந்தயக் கோட்டைக்

கடந்து செல்லும்படி ஓட்டுவார்களோ, அக்கணம் வேடிக்கைகள் பார்த்துக் களிக்க வந்த ஜனங்கள் எவ்வாறு அக்காளைகளையும் குதிரைகளையும் நோக்கித் தங்களது முகத்தைத் திருப்புவார்களோ, அவ்வாறே ஹெக்டரும் அகிலேசனும் ட்ராய் நகரத்து மதில்களைச் சுற்றிக் கொண்டு மூன்று தரம் பறவைகளைப் போல் ஓட்டமாக ஓடிச் சென்றனர். அப்போது, விண்ணுலகில் வீற்றிருந்த தேவர் களும் தங்களுடைய தலைகளை நீட்டிக் கொண்டு இந்த யுத்தத்தை இமை கொட்டாமல் கண்ணுற்று வந்தனர்.

அப்போது மண்ணவருக்கும் விண்ணவருக்கும் தலைவரான தேவர், இவ்வாறு மண்ணுலகில் நடந்து வந்த வேட்டையை ஆவலுடன் கவனித்து வந்தார். அவர் தேவர் குழாத்தை நோக்கிப் பின்வரும் வசனங்களை உரைத்தார் :—

" இது என்ன காட்சி, இது தேவர்களும் கண்ணெடுத்துப் பார்க்கத் தக்கதோ ? தேவாதி தேவனுக்குப் பிரியனான அந்த வீரனைப் பாருங்கள். சத்துருவினால் துரத்தப்பட்டு அவன் அந்த நகரத்தைச் சுற்றிக் கொண்டு ஓடுகின்றானே, பார்த்தீர்களா ?

அருங் குணங்கள் நிறைந்த ஹெக்டரின் பக்கமே எனது மனம் செல்லுகின்றது. அவனுடைய கஷ்டங்களும் துக்கங்களும் எனது உள்ளத்தைத் தாக்குகின்றன. ஹெக்டர் மிகுந்த தெய்வ பக்தி உள்ளவன். அவன் கணக்காக நூறு நூறாகக் காளைகளை நமக்குப் பலிகொடுத்திருக்கின்றான். நம்மைத் திருப்தி செய்வதி லேயே கண்ணுங் கருத்துமாக இருப்பவன். அவன் நன் மனதுடன் செய்த ஹோமங்களினின்று கிளம்பிய மதுரமான வாசனையை உடைய புகைகளை ஐடா மலையின் உச்சியிலும் ட்ராய் நகரத்துக் கோபுரங்களிலும் இருந்தவண்ணம், தேவர்கள் எல்லோரும் சந்தோஷத்துடன் ஏற்று ஆனந்தித்தனர்.

இப்போது அவனது நிலைமையைப் பாருங்கள்! அவன் புகலிடம் காணாமல் ஆலாய்ப் பறக்கின்றான், 'தனக்கு என்ன ஆபத்துக்கள் வந்தாலும் வரட்டும், அவை அனைத்தை யும் அனுபவித்தே தீரவேண்டும், அவற்றிற்குப் பயப்படுவதினால் ஆவது ஒன்றுமில்லை, எனது தலை விதிப்படி நடக்கட்டும்' என்று அடங்கிய மனத்துடன், ஓடுகின்றான், பாருங்கள்! அதிகக் கொடியோனாகிய அகிலேசனும் அவனைத் துரத்திக் கொண்டு அவனைத் தொடர்ந்து கொண்டே அவன் பின்னால் அடுத்து ஓடி வருகின்றான்.

தேவர்களே ! நீங்கள் மஹா புத்திசாலிகள். நீங்கள் இந்த விஷயத்தைக் கலந்து ஆலோசியுங்கள்! இது உங்களுடைய கவனத்திற்கும் ஆலோசனைக்கும் ஏற்றதேயாகும்.

இவனுக்கு வரவிருக்கும் கேட்டிற்கு இவனை ஆளாக்காமல் இவனைப் பிடித்துப் பின்புறமாக இழுத்து விடுவது நன்றோ,

அல்லது இவனுக்கு விதித்துள்ள தலைப் பொறிப்படி, இவன் கொடியோனுகிய பிலிதீசனுல் மாண்டே போகட்டும் என்று விட்டு விடுவது நன்றே என்று யோசனை செய்யுங்கள்.

இவன் ஒரு மிகவும் நல்ல மனிதன் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்ருர். அவர் பேசி முடிந்த பின்னர், பாலாஸ் தேவியானவள் பின்வரும் வசனங்களை உரைத்தாள் :—

''தேவர்களே! இது என்ன அநியாயம்! தன்னுடைய சத்துருக்களின் மேல் பழிவாங்குவதற்காகவே கொக்கி போன்ற இடிகளை ஏந்தி உள்ளவரும் ஆகாய வீதிகளைப் புகைகளால் நிறைத்து இருட்டி விடுபவரும் ஆகிய இந்தத் தேவர் மஹா அபராதியான ஒரு துரோஜனது ஆயுளை நீட்டி வைக்கலாமா? இந்த துரோஜன் யார்? இவன் கேவலம் ஒரு மனிதன், மண்ணில் மறையக் கூடியவன்; இறக்க வேண்டுவதே இவனது தலை விதி.

இவரது யோசனை தகாது என்று இந்தத் தேவசபையில் ஒருவராயினும் தட்டிப் பேசலாகாதா? குறை யிருந்து முறையிட லாகாதா? ஜோவ் தேவரின் பக்ஷபாதத்தைக் கண்டு ஒரு தெய்வத்திற்காயினும் எரிச்சல் உண்டாகவில்லையா? அவரது செயல் அநியாயமானது என்று சொல்லிக் கண்டிக்க ஒரு தெய்வமாயினும் இங்கு இல்லையா?'' என்ருள்.

இந்த வசனங்களைக் கேட்ட தேவநாதன், ''நல்லது உன் இஷ்டப்படியே செய். இங்கிருந்து தாமதமின்றிப் புறப்பட்டுச் செல், உன்னுலானதைச் செய். விதிப்படிக் காரியங்கள் நடப்பதை நான் தடுக்க வில்லை, அவை தத்தம் வழியே செல்லட்டும்'' என்ருர்.

அவர் அவ்வாறு உரைத்த கணமே, திரித்தோனியா தேவியானவள், அக மகிழ்ச்சியுடன் சிறிதும் தாமத மின்றி அதி விரைவாக அங்கு விட்டுப் பறந்து சென்ருள். அவள் ஆகாய வீதியைக் கிழித்துப் பிளந்து கொண்டு தடதட வென்று இறங்கினுள். அவ்வாறு பிளவு பட்டதினுல் ஆகாய வீதியில் உண்டாகிய சாளரங்களின் வழியாக அவள் தனது தலையை நீட்டிக் கொண்டு அதிவேகமாக இறங்கினுள்.

காடு, வனம், வனந்தரங்களையும் அரணியங்களையும், துளைத்துக் கொண்டும், நன்ருக மூச்சைப் பிடித்துக் கொண்டும் ஓடும் ஒரு வேட்டை நாயானது, வேகமாகப் பறந்து செல்லும் ஓர் இளமானைத் துரத்துகையில், அந்த மானுனது ஒரு புதரிலோ தூற்றிலோ புகுந்து ஒளிந்து கொள்ளலாமென்று முயன்று, அம் முயற்சிகள் பயன் படாமை கண்டு, கிடு கிடு வென்று அசைந்தாடும் அடர்த்தியான தோப்பின் நடுப் பிரதேசத்தில் புக நினைத்துத் தனது உடம்பைக் குலுக்கிக் குறுக்கி ஒடுக்கிக் கொண்டு ஒடுகின்றது. அந்த முயற்சியினுலும் அதன் உத்தேசம் நிறை வேறுகிறதில்லை. அது வீணே ஆகி விடுகின்றது.

இவ்வாறு அது தான் நினைத்த காரியத்தைச் சாதிக்க முடியாமல் தவித்து வருகையில், அதன் நாசித் துவாரங்களினின்று வெளியாகும் பெருமூச்சானது பனித்துளியாக மாறி அக் காட்டில் அடித்துவரும் காற்றையும் அசுத்தமயமாக ஆக்கிவிடுகின்றது.

அப்போது அந்த வேட்டை நாயானது அந்தக் காற்றின் வழியாக வரும் துர்நாற்றத்தையே மோப்பம் பிடித்துக்கொண்டு தான் துரத்திவந்த மிருகம் அங்குதான் இருக்கவேண்டுமென்று தீர்மானித்து அந்த மானைச் சுற்றிச் சுற்றி வளைந்து துரத்திக் கொண்டு செல்லுகின்றது.

அவ்வாறே வளைந்து வளைந்து சென்ற இந்த துரோஜனை விஜயனுன அகிலேசனும் அடிமேல் அடிவைத்துக்கொண்டு வளைந்து வளைந்து சென்று, அந்தக் களம் முழுவதிலும் சுற்றிச் சுற்றித் துரத்திக்கொண்டு பின் சென்ருன். அப்போது ஹெக்டர் 'உயரமான தார்தான் கோபுர வாயிலைச்சென்று சேர்ந்து விடவேண்டும், அங்கிருந்து தன்னைக் கண்டு இரங்கும் நண்பர்கள் தனது உதவிக்கு வருவார்கள், உயரமான அந்தக் கோபுரங்களிலிருந்து அவர்கள் மலைபோல் சொரியும் சரங்கள் கோட்டை மதில்களின் கீழ் தன்னை துரத்திக்கொண்டு வந்த தனது சத்துருவின்மேல் விழுந்து அவனை மாய்த்துவிடும்' என்ற எண்ணத்துடன். பன்முறையும் அக் கோபுர வாயிலை நோக்கிக் குனிந்தான். ஆனல் அகிலேசன் அவன் செய்த முயற்சிகள் அனைத்தையும் தடுத்து அவனைச் சமவெளிக்கே துரத்திவிட்டான்.

ஹெக்டர் தனது தாயகமான ட்ராய் நகரைப் பன்முறையும் நோக்கினன். தனது உதவிக்கு யாரேனும் வருவாரோ என்று ஏற இறங்கப் பார்த்தான். ஒருவரும் வரவில்லை, ஏக்கங்கொண்டான். அவனது ஆவல் நிறைவேறவில்லை.

காற்றைப்போல் பறந்துகொண்டிருக்கும் ஒருவனை வேறொருவன், துரத்திக்கொண்டு வருவது போலவும், அப்போது இருவரும் ஒருவருக்கொருவர் இளைக்காமல் வேகமாக ஓடுவது போலவும், அவ்வாறு ஓடிக் கடைசியில் தான் ஓட முடியாமலும் மற்றையவன் தன்னைப் பிடிக்க முடியாமலும் போக, அவ்விருவரும் இனி இது போதும் என்று தங்களது ஓட்டத்தை நிறுத்திவிட்டது போலவும் கனவுகண்ட இரண்டு ஜனங்கள் போலவே, இவர்கள் இருவரும் திகைத்தனர்.

ஒருவனுல் வேகமாக ஓடமுடியவில்லை. இருவரும் பதைத்தனர், துடித்தனர், பெருமூச்செறிந்தனர்; என்றுலும் ஒருவன் ஓடிக்கொண்டும் மற்றையவன் அவனைத் துரத்திக்கொண்டுமே, அவர்கள் அந்தக் கோட்டை மதில்களைச் சுற்றி வந்தனர். வீரர்கள் ஒருவருக்காயினும் வெற்றியோ தோல்வியோ உண்டாகவில்லை. அவர்கள் பட்டபாடு வீணே ஆயிற்று.

அச் சமயம் அவ்வாறு நெடு நேரம் வரையிலும் தனது உடல் வலியுடனும் விதி வலியுடனும் தனது சத்துருவினுடன் போராடி வந்த ஹெக்டருக்கு யார் உதவியாக வந்தார்? அந்த தெய்வத்தின் பெயர் என்ன என்பதை நாமகளே! உரைப்பீராக.

பீபஸ் பகவானே அவ்வாறு அவனுக்கு உதவி செய்து வந்தார். யுத்தமானது முதிர்ந்து அதிமும்மரமாக நடந்து வருகையில், அதன் இறுதியில் பீபஸ்பகவானனவர் அவனது முழங்கால்களுக்கு உறுதியையும் நரம்புகளுக்குச் சக்தியும் வழங்கினர்.

அதை அறிந்த மஹா வீரனை அகிலேசன், தான் உயரத் தூக்கிப் பிடித்துக்கொண்டிருந்த தனது ஈட்டிக்குச் சேரவேண்டிய வெற்றியையும் புகழையும் வேறு கிரீக்கன் ஒருவனுயினும் அடித்துக்கொண்டு போய்விடலாகாது என்று நினைத்துத் 'தனது சத்துருவை ஒருவரும் எதிர்க்கலாகாது, அவனைத் தடுக்கலாகாது, அவனுக்கு வழி விடவேண்டும், அன்றைய தினத்திய யுத்தத்தில் அவர்கள் எவ்வாற்ருனும் தலையிடலாகாது' என்று தன்னுடைய ஸைனிகர்களுக்குச் சமிக்ஞை செய்தான்.

அச்சமயம் ஜோவ் தேவர் மண்ணுலக வாசிகளின் ஊழ்வினைகளையும் அவ்வுலகில் நிகழும் நடவடிக்கைகளையும் காட்டும் பொற்றட்டுக்கள் கொண்ட தமது தராசினை எடுத்தார். அந்தத் தராசில் அன்று பொருது வந்த இரண்டு வீரர்களுடைய வினைப் பயன்களையும் ஓரோர் தட்டில் வைத்துச் சமன்செய்து அவற்றைச் சீர்தூக்கிப் பார்த்தார்.

அப்போது ஹெக்டரின் வினைப்பயன் கொடியதாக இருந்ததனுல், அவனது தட்டே துலைக்குத் தாழ்ந்து விட்டது. அவனது தட்டில் பிணங்கள் மலைபோல் குவிந்தன. அந்தச் சுமையை நரக லோகம் ஏற்றுத் தாங்கிக்கொண்டது. அதுவரை ஹெக்டருடன் இருந்து வந்த பீபஸ் பகவான் தராசின் தீர்ப்பை அறிந்தவுடன் அவனை விட்டு அகன்று விட்டார்!

அக் கணமே இந்த யுத்தம் இவ்வாறுதான் முடியுமென்று அறிந்துகொண்ட பயங்கர ரூபியான மினர்வா தேவியானவள், கொடியோனுன பிலிதீசனிடம் சென்று வெற்றிக் களிப்புடன் அவனை நோக்கிப் பின்வருமாறு கோஷித்தாள் :—

"ஜோவ் தேவரின் அன்பைப் பெற்றவனே! நம்முடைய கஷ்டங்கள் எல்லாம் இன்றுடன் ஒழிந்துபோம், முடிவடைந்து போம். பளிச்சென்ற கீர்த்தியுடன் விளங்கும் வெற்றியானது தன்னுடைய பூரணமான கிரணங்களைக் கிரேக்கர்களின் மீது பொழிகின்றது.

ஹெக்டர் பட்டு விழுவான். மஹா வீரனை ஹெக்டர் பட்டு விழுவான். இது காறும் கீர்த்தியுடன் விளங்கி வந்தானே,

மட்டு மிதமில்லாத புகழுடன் விளங்கி வந்தானே, சலிப்பென்பது இல்லாமல் யுத்தம் செய்து வந்தானே அந்த ஹெக்டர் பட்டு விழு வான்! உன் கையினுலும் என் கையினுலுமே அவன் மாளப் போகிருன்!

அவனது கை விசையினுலாவது கால்விசையினுலாவது அவனுக்கு ஒரு பயனும் உண்டாகாது! அவனைக் கட்டிக்காத்து வரும் தினகர தேவனுலும் அவனைக் காப்பாற்ற முடியாது!

அதோ அங்கு பார்! அவன் தேவர்களை அண்ணுந்து பார்த்துக்கொண்டு அவர்களைக் கெஞ்சுகின்ருன். கூத்தாடுகின் ருன், தனது உதவிக்கு வருமாறு வேண்டுகின்ருன்! அதனுல் அவனுக்கு ஒரு நற்பயனும் உண்டாகவில்லை. இரக்கம் என்பது இம்மியும் இல்லாத ஜோவ் தேவரின் காலடியில் விழுந்து புரளு கின்ருன்!

நீ இங்கு இரு. சிறிது இளைப்பும் ஆற்றிக்கொள், நானே அந்த துரோஜனைப் பிடரியைப் பிடித்து உந்தித் தள்ளிக்கொண்டு வருவேன்! தனக்கு வந்தே தீரவேண்டியதும் தவிர்க்க முடியாத துமான கடுவினையை எதிர்கொண்டு செல்லும்படிக்கும் அவனை உறுத்துவேன்'' என்ருள்.

அந்த வீரன் அந்தத் தேவியின் திருவாக்கைக் கேட்டு மகிழ்ந்து அவள் சொன்ன வண்ணமே செய்தான். தனது ஈட்டி யின்மேல் சாய்ந்துகொண்டு இளைப்பாறினுன்.

அப்பொழுது யுத்தப் பிரியையான அந்தத் தேவியானவள் தனது முகத்தையும் நடையுடை பாவனைகளையும் கைகளையும் தெய்போவஸ்போல் மாற்றிக்கொண்டும், ஹெக்டருக்கு உதவிசெய் பவள்போல் நடித்துக்கொண்டும் அவனது பக்கமாக அணுகி அதிர்ஷ்ட ஹீனனுன அவனை நோக்கித் தனது குரலையும் மாற்றிக் கொண்டு பின் வருமாறு உரைத்தாள் :—

“ஹெக்டர்! ஹெக்டர்! இந்தக் கஷ்டத்தை நான் நெடுங் காலம் கண்டு பொறுத்து வந்தாய் விட்டது. இனியும் இவைகளைக் கண்டு பொறுத்து வர என்னுல் ஆகாது. உனது ஓட்டத்தைக் கண்டு நான் ஆருத் துயரமும் துக்கமும் அடைந்தே விட்டேன். சுத்த வீரர்களைப்போல் நாம் இப்போது இங்கு அசையாமல் நிற்க வேண்டும். இங்கு விளையும் இலாப நஷ்டங்களை இரண்டு சகோதரர்கள்போல் ஏற்றுப் பங்கிட்டுக் கொள்ளல் வேண்டும்'' என்ருள்.

அதைக்கேட்ட ஹெக்டர் “இராஜ புத்திரா! நாம் இருவரும் இரத்தத்திலும் கீர்த்தியிலும் சம்பந்தப்பட்டவர்கள். என்னுடைய உடன் பிறந்தார் அனைவரினும் நீயே எனக்குப் பிரியனுனவன். பிரியம்மஹாராஜனுக்கு ஹெக்குபாதேவியிடம் பிறந்தோர் அனை

வரினும் நீயே என்னிடம் நெடு நாளாக மாருத அன்புடையவன். எனது மேலான அன்புக்கு மாத்திரமன்றி, அதிமேலான மரியாதைக்கும் பாத்திரமானவன். நமது குலத்தில் கணக்கில் அடங்காதவர் வாளாவிருக்கையில் நீதானே உனது உயிரையும் ஒரு பொருட்டாக மதிக்காமல் எனது உயிரைக் காக்க முன் வந்தாய்'' என்ருன்.

பின்னும் அந்தத் தேவி அவனை நோக்கி "எனது தகப்பனும் எனது தாயும் நான் இங்கு வருவதைத் தடுத்தனர், மிகவும் மன்ருடிக் கெஞ்சினர், என்னுடைய நண்பர்கள் என்னுடைய கால்களைக் கட்டிக் கொண்டனர், நான் எனது இடத்தை விட்டு அசையக் கூடாது என்று ஆணையிட்டனர், ஆனுல் நான் அவர்கள் அனைவரையும் புறக்கணித்து விட்டு உன்னிடம் வைத்துள்ள அன்பின் மிகுதியால் உந்தித் தள்ளப்பட்டு இங்கு வந்தேன்.

ஆதலால் வா போகலாம். பெரும் கீர்த்தியும் தரவல்ல இந்த யுத்தத்தையும் ஒருகை பார்த்து விடுவோம். நம்முடைய இருப்பாயுதங்களைப் பளிச் சென்று தீட்டுவோம், நம்முடைய ஈட்டிகளையும் தீட்டுவோம். ஒன்று, இந்த அகிலேசனை இந்தப் போர்க்களத்தில் வெட்டி நீள நெடுகத் தள்ளுவோம்; இன்றேல் அவன் கையால் தோற்றுக் காயமடைந்து நம்முடைய கீர்த்திப் பிரதாபங்களை அவனுக்கு அளித்து விடுவோம்'' என்ருள்.

இவ்வாறு கபடமான வார்த்தையை உரைத்து விட்டு அந்தத் தேவியானவள் அவனுக்கு முன்னுல் விரைந்து நடந்தாள்.

அப்போது அதுவரை தனது சத்துருவைக் கண்டு பயந்து ஓடிக் கொண்டிருந்த தார்தான் வீரனுகிய ஹெக்டர் உடனே தனது ஓட்டத்தை நிறுத்தி விட்டான். சத்துருக்கள் இருவரும் கடுத்த முகத்துடன் சந்தித்தனர். சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். ஹெக்டரே முதன் முதலாக மௌனம் நீத்துப் பின் வரும் வசனங்களை உரைத்தான். அப்போது அவன் தலையில் அணிந்திருந்த பயங்கரமான சிறகுகள் மிகுந்த விசையுடன் அசைந்தாடின :—

"பிலியஸ்ஸின் புத்திரா! இது போதும். நீ மூன்று தரம் ட்ராய் நகரத்தின் கோட்டை மதில்களைச் சுற்றி வந்ததையும் அந் நகரத் தலைவனைத் துரத்தி வந்ததையும் ட்ராய் மக்கள் பார்த்தாய் விட்டது.

இப்போது உனது தலைவிதியையும் எனது தலைவிதியையும் ஒருகை பார்த்து விட வேண்டும் என்று என்னை ஒரு தெய்வம் உறுத்தி வருகின்றது. ஒன்று நான் உன்னைக் கொல்வேன். அல்லது உன்னுல் கொல்லப்படுவேன், சாவேன். இந்த இரண்டில் ஒன்றைச் செய்வேன்.

என்றாலும் இந்த யுத்தத்தைத் தொடங்கு முன் நாம் சற்று நம்முடைய காரியங்களை நிறுத்துவோம். இந்த யுத்தத்தைச் சிறிது நேரம் நிறுத்தி வைப்போம்.

இந்தக் கடும் போரை நடத்த வேண்டிய நியாயமான முறைகளை நாம் விண்ணுலகிலுள்ள சகலமான பெருந்தேவர்களுக்கும் முன்னாக வரையறுத்துக் கொள்வோம். அவர்கள் நமக்கு மத்தியஸ்தர்களாக விளங்கட்டும். இந்தக் கீழுலகத்தில் நடக்கும் எல்லாக் காரியங்களுக்கும் அவர்களே என்னாளும் சாக்ஷிகளாக விளங்குபவர்கள். நாம் சம்மதித்துச் செய்து கொள்ளும் ஒப்பந்தங்களை அவர்கள் சிறிதும் பழுதில்லாமல் பாதுகாத்தும் வருவார்கள்.

அவர்கள் முன்னாக நான் இதோ சத்தியம் செய்கின்றேன், கேள். ஜோவ் தேவர் எனது இந்தக் கையினால் உனது பேரும் புகழும் பெற்ற தேகத்தை வெட்டி வீழ்த்தி எனக்கு வெற்றியையும் தருவாரானால், அப்போது நான் உனது தேகத்திற்கு ஒருவிதமான அவமரியாதையும் செய்ய மாட்டேன். வெற்றி பெற்றோனுக்குச் சேர வேண்டிய உன்னுடைய ஆயுதங்களை மாத்திரம் நான் பற்றிப் பிடுங்கிக் கொள்ளுவேன். அவை நீங்கிய உனது உடலை நான் ஒருவிதமான அலங்கோலத்துக்கும் உட்படுத்த மாட்டேன். அதைக் கிரேக்கர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுவேன். இவ்வாறு நீயும் சத்தியம் செய். நான் அதிகம் கேட்கவில்லை'' என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்தக் கொடுங் கோபியான கிரேக்கத் தலைவன் ஹெக்டரை நிந்தனையுடன் உற்றுப் பார்த்தான். கோபம் நிறைந்த அவனுடைய கண்களிலிருந்து தீப்பொறிகள் தழல்கள் போல் வீசின. அவன் "உன்னுடைய ஆணையும் சத்தியமும் வேண்டாம், அவற்றைக் கேட்க எனக்குச் சிறிதும் மனமில்லை. இது சமயமும் இல்லை. நீ எங்களால் வெறுக்கப்பட்டவன். நாங்கள் உன்னை வெறுக்க வேண்டியது நியாயம்! உன்னுடன் அகிலேசன் ஒருவிதமான ஆணையோ சத்தியமோ செய்யமாட்டான்!

ஆடுகளும், மதங் கொண்ட ஓநாய்களும் செய்துகொள்ளும் ஒப்பந்தங்களையும், மனிதர்களும், மூர்க்கங் கொண்ட சிங்கங்களும் செய்து கொள்ளும் உடன்படிக்கைகளையும் போன்ற ஒப்பந்த உடன்படிக்கைகளைத்தான் நான் இதோ எல்லாத் தெய்வங்களின் முன்னும் செய்கின்றேன். அவர்களே எனது உடன்படிக்கைகளுக்குச் சாட்சியாக இருக்கட்டும்.

தீராத வைரம், அழிவில்லாத பகை இவைகளையே நான் உறுதியாய்க் கடைப் பிடித்து வருவேன். ஒரே நிலையில் நிற்பேன். அடங்காக் கோபங் கொண்டு சற்றும் இடை விடாமல் இந்த யுத்தத்தைச் செய்வேன். எனது மனதில் வேறு எண்ணங்

களுக்கு இடமே இல்லை. மரணத்தினால் தான் எனது கோபத்திற்கும் சங்கல்ப சபதங்களுக்கும் உயிருக்கும் முடிவு உண்டாகும்.

ஆதலால் காலத்தை வீணாக்காமல் இதுவே உற்ற தருணம் என்று தீர்மானித்து உன்னுடைய சக்திகளனைத்தையும் கிண்டிக் கிளறி ஒன்றாய்த் திரட்டிக் கொண்டு, ஒரு மனத்தினனாய் உனது பராக்கிரமம் அனைத்தையும் காட்டு, ஒருகை பார்ப்போம். போக்குச் சாக்கும் தந்திரமும், தவணையும் வேண்டாம், இதுவரை நடந்து வந்தவை போதும்.

பாலாஸ் தேவியே உன்னை எனது ஈட்டிக்குப் பலியாக அளிக்கின்றாள் என்று நன்றாய் அறிந்து கொள். சந்தேகம் வேண்டாம். பாலாஸ் தேவியின் தயவினாலேயே நான் உன்னைக் கொல்லப் போகின்றேன். கிரேக்கர்களது உடலினின்று உன்னால் வெளியேற்றப்பட்ட பிராணன் ஒவ்வொன்றும் இப்போது உன்னைக் கொத்தித் தின்ன வேண்டுமென்று உன்னைச் சுற்றிலும் வட்ட மிட்டுத் திரிந்து கொண்டிருக்கின்றது. நமனுலகத்திற்கு வரும்படி அவை உன்னை அழைக்கின்றன " என்றான்.

இந்த வசனங்களைச் சொல்லிக் கொண்டே அவன் தனது வேலாயுதத்தை அவனை நோக்கி விடுத்தான். ஆனால் ஹெக்டர் தன்னைக் குறிவைத்துக் கொண்டு தன்னையே நோக்கி வந்த அதற்கு இலக்காகாமல் விலகிக் கொண்டான். அவன் சமய மறிந்து குனிந்து கொண்டதினால் அந்த வேலாயுதமானது அவனது தலையின் மேலாக உயர்ந்து பாடிக் கொண்டு சென்று தனது விசையைக் காற்றில் கழித்து விட்டது. அது கடைசியாய்த் தரையின் மேல் விழுந்த பொழுது மினர்வா தேவியானவள் அதைக் கண்ணுற்று ஓடி வந்து, அதைப் பொறுக்கி எடுத்து ஹெக்டருடைய கண்ணுக்குப் புலப்படாமல் அதை மஹாராஜனை அகிலேசனிடம் சேர்த்து விட்டாள்.

இவ்வாறு இந்த வேலாயுதத்தின் கொடுமைக்குத் தப்பிப் பிழைத்த ஹெக்டர் மிகுந்த மகிழ்ச்சியும் உற்சாகமும் அடைந்து, தனது ஈட்டியைக் குலுக்கிக் கொண்டு ட்ராய்க்குச் சத்துருவாய் விளங்கிய பயங்கரஸ்வரூபியான அகிலேசனை நோக்கிப் பின்வருமாறு கர்ஜ்ஜித்தான் :—

" இராஜ புத்திரா ! அந்த வேலாயுதத்திற்கு ஒரு ஜீவனைப் பலி கொடுத்து விடுவதாக நீ பெருமை அடித்துக் கொண்டு குதித்தாய். அது தவறிப் போய் விட்டது. எனது தலைவிதி தேவர்களை அன்றோ சார்ந்திருக்கின்றது ?

நீ மஹா கர்வி. உனது தெய்வ சங்கல்பம் இன்னது என்பது தெரியாது. எனது அதிர்ஷ்டம் எப்படி இருக்கின்றது என்பது உனக்குத் தெரியாது.

பெருமை அடித்துக் கொள்வது மனிதர் பயின்று வரும் வித்தைகளில் ஒன்று தானே! நம் மனக் கவலைகளைப் பிறர் காணுமல் மறைத்துக் கொள்வதற்கும் பொய்யும் பித்தலாட்டமுஞ் சொல்லிப் பிறரைப் பயமுறுத்துவதற்கும் அது விசேஷமாக உதவு கின்றது.

நான் சொல்லும் ஒரு வார்த்தையைக் கவனித்துக் கேள். எனக்கு எந்த கதி வந்தாலும் வரட்டும், போர் முறைக்கு மாருகப் பொருது ஒருவன் என்னைக் காயப் படுத்தவோ கொல்லவோ முடியாது. நான் புறங்காட்டிச் சென்று எனது உயிரை இழக்கவு மாட்டேன். எனது ஆவியை நானே சிறிதும் பயமின்றி எனது மார்பிலிருந்து விடுவேன். இவ்வளவு போதும்.

இதோ நான் எனது ஆயுதத்தை விடுகின்றேன். இதன் விசையையும் பார்! இது உனது மனத்தில் ஆழ்ந்து ஊன்றிப் பதிந்து நின்று எனது தேசத்திற்கு நேர்ந்துள்ள கஷ்டங்களையெல் லாம் அடியோடு ஒழித்துக் கட்டும்" என்ருன்.

இவ்வாறு தெய்வத்தை வேண்டிக் கொண்டு அவன் விடுத்த அந்த ஆயுதமானது சிறிதும் குறிதவருமல் முன் சென்றது என்ருலும், அது வீணே ஆயிற்று. குறிதவருமல் கூற்றைப்போல் சென்ற அந்த ஆயுதத்தை அகிலேசன் தரித்திருந்த தெய்வீகமான கேடயமானது தடுத்து மடக்கி விட்டது. பின்பு அந்த ஆயுதம் கணகண வென்று சப்தித்த அந்த வட்ட வடிவமான கேடயத்தினின்றும் துள்ளிக் குதித்து, நிலத்தின் மேல் திடீரென விழுந்து அதனைப் பலமாய் தாக்கியது.

இவ்வாறு தனது வேலாயுதம் வீணுகி விட்டதை ஹெக்டரும் பார்த்தான், அப்போது அவனிடம் வேறு வேலாயுதம் ஒன்று இருக்கவுமில்லை. தனக்கு வெற்றியைத் தரக்கூடிய வேறு உபாயத்தை அவன் காணவுமில்லை. இந்த ஆபத்தில் அவன் தெய்வோபஸ்ஸை உரத்துக்கூவி விளித்துத், தனக்கு ஓர் ஆயுதம் உதவுமாறு வேண்டினுன்.

ஆனல் அவனது குரல் வீணே ஆயிற்று. தெய்வோபஸ் அங்கு இருந்தாலல்லவோ அவன் ஹெக்டருக்கு உதவி செய்ய வருவான்?

ஆதலால் இன்னது செய்வதென்று தெரியாமலும் சிறிதும் சுகமில்லாமலும் அவன் அவ்விடத்திலேயே நின்றுவிட்டான். பின்பு அவன் ஒரு பெருமூச்செறிந்தான், பின்வருமாறு பிரலாபித்தான்:—

"இதுதான் எனது பாக்கியம்! இது தெய்வ நியமனந்தான்! எனது அந்திய காலமும் அடுத்து வந்துவிட்டது. தெய்வோபஸ்ஸை வைநான் கூவி அழைத்தது அவனது காதுக்கு எட்டியிருக்குமென்று

நினைத்தேன், அவன் இப்பொழுது இங்கு இல்லையென்று நினைக்கின்றேன். கோட்டை மதில்களில், அவன் தக்க காவல்களுடன் பத்திரமாக இருக்கின்றான் போலும்.

ஒரு தெய்வமல்லவா என்னை மோசம் செய்து விட்டது? பாலாஸ் தேவி! இது நீர் செய்த சதிதான்! இனி நான் செய்யத் தக்கது ஒன்றுமில்லை. இரத்தத்தை வடித்து உயிரையும்விட வேண்டியது தான்.

இப்போது எனக்கு அடைக்கலம் தருவாரோ, ஆதரிப்பாரோ ஒருவரும் இல்லை. விண்ணுலக வாசிகளும் என்னைக் கைவிட்டு விட்டனர். மஹா தேவரான ஜோவ் தேவர் என்னை விட்டுப் பிரிந்துபோய்விட்டார். முன்னாளில் எனக்குப் பெரிய உபகாரியாகவும் என்னிடம் அன்பு கொண்டவராகவும் இருந்த ஜோவ் தேவரின் புத்திரரும் என்னைப் புறக்கணித்து விட்டார். ஆதலால் விதியை நோவதில் பயனில்லை. வருவது வரட்டும். அதனை முகமன் கொண்டே மரியாதைகளுடன் ஏற்றுக் கொள்வேன்.

நான் அழிந்து போவது திண்ணந்தான் என்றாலும் ஒரு மஹான் என்ற பெருங் கீர்த்தியுடையவனாகவே நான் இறப்பேன். கடைசியாக ஒரு பெருங் காரியத்தைச் செய்து வருகையிலேயே நான் எனது பிராணனை விடுவேன். வருங்காலத்தில் உலகத்தில் இருப்பவர்கள் எல்லோரும் அதனைச் செவியுற்றுக் கேட்டு வியப்படைவார்கள், என்னைப் போற்றுவார்கள்'' என்றான்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் மட்டுமிதமில்லாக் கோபத்துடன் தனது பளுவான பட்டாக் கத்தியை அதன் உறையினின்றும் உருவித் தனது கையில் ஏந்திக் கொண்டு, தனது முழு பலத்துடனும் விசையுடனும் அகிலேசனை நோக்கிப் பாய்ந்து சென்றான்.

அப்பொழுது அவனது தோற்றமானது எப்படி இருந்ததென்றால் சொல்லுவேன் கேளுங்கள் :—ஜோவ் தேவரின் வாகனமான தைரியமுள்ள பக்ஷிராஜன் தன்னுடைய இரு சிறகுகளையும் ஏற்றத் தாழ்ச்சியின்றிச் சரியாய் விரித்துக்கொண்டு ஆகாயத்திற் பறந்து வருகையில், தன்னைக் கண்டு பயந்து துடித்து நடுங்கும் ஒரு முயலைக் கண்டுவிட்டால், அது எப்படி அம்மேக மண்டலங்களினின்றும் அம்முயலின் மேல் பாய்ந்து அதன் வேகத்தைத் தடுத்துவிடுகின்றதோ, அவ்வாறே இருந்தது.

அகிலேசனும் அவனுக்குச் சிறிதும் குறைவில்லாத வீரிய சவுரியங்களுடன் அவனை எதிர்க்க முயன்றான். அவன் தததகவென்று பிரகாசிக்கும் வட்ட வடிவமான கவசத்தைத் தனது மார் பின் முன்னால் கட்டிக் கொண்டான். அம்மம்ம! அந்தக் கவசத்தின் ஒளியை நான் எவ்வாறு வர்ணிப்பேன். நான்கு மடிப்புக்கள் கொண்ட வட்ட வடிவமான அவனது மகுடத்தின் மேல் கட்டப்

பட்டிருந்த மெருகு தீட்டிய குதிரை மயிர்க் குச்சமானது அவன் அப்புறமும் இப்புறமும் அசைந்தாடிய பொழுது சூரிய வெளிச் சத்தை ஏற்றுக்கொண்டு பளிச் சென்று மின்னியது. அது வல்க் கனுல் செய்யப்பட்டதன்றே? அவன் நடந்த பொழுது அவனது உருவம் ஒரு பெரு நெருப்பைப் போலவே ஜ்வலித்தது!

தாராகணங்கள் அனைத்தும் நன்ருய்த் திரண்டு உதிக்கை யில் ஆகாய மண்டலமானது ஒளிமயமாக விளங்குகையில், ஸ்வயம்பிரகாசமுள்ள வீனஸ்ஸே மற்றைய எல்லா நக்ஷத்திரங் களையும் காட்டிலும் அதிகமான ஒளியுடன் விளங்குகின்றது. அவ் வாறே மஹாணுன அகிலேசனது ஈட்டியின் முனையும் மிகுந்த ஒளி யுடன் விளங்கியது. அவன் அந்த ஆயுதத்தைத் தனது வலது கையில் ஏந்திக்கொண்டு சுழற்றினுன், தனது சத்துருவைப் பாதாதி கேசம் நிதானமாக ஏற இறங்க உற்றுப் பார்த்தான். அவனைப் பரீக்ஷித்தான், அவனை எவ்வாறு குத்திக் காயப்படுத்த லாம், கொல்லலாம் என்று ஆலோசித்தான்.

பத்திரகலுஷன் அணிந்திருந்த உறுதியும் தாராளமும் கெட்டியுமான கவசத்தை அக்கணம் ஹெக்டர் அணிந்திருந்ததி ஞல், அவனது உடல் முழுவதும் பத்திரமாகவே இருந்தது. அதில் ஓர் இடத்திலாயினும் ஒரு பிளவேனும் காணவில்லை. கடைசியாக அந்தக் கவசத்தின் தொண்டையும் கழுத்தும் சேர்ந்து இசைக்கப் பட்டிருந்த இடத்தில் ஒரு சிறு சந்து இருப்பதை அறிந்து அதன் வழியே அவனது தலைவிதியை நுழைத்துச் செலுத்தி விடலாம் என்று தீர்மானித்து, அந்தத் துவாரத்தின் வழியாகவே சரியாகக் குறிபார்த்துத் தனது ஆயுதத்தை விடுத்தான்.

ஹெக்டர்! அக்கணமே நீ அதிர்ஷ்ட ஹீனனுக ஆகி விட்டனை! உனது மரண காலமும் அடுத்து வந்துவிட்டது, என்ருலும் அகிலேசனது ஆயுதமானது உனது மூச்சுக் குழாயைத் துளைத்துவிடவுமில்லை. உனது சொற்றிறத்தை அழித்துவிடவு மில்லை!

வாசகர்களே! அந்த மஹா வீரனுன ஹெக்டர், அச்சமயம் இரத்தத்தை வடித்துக்கொண்டு குனிந்து குப்புற விழுந்து விட் டான். அதைக் கண்ணுற்ற அகிலேசன் தனக்கு வெற்றி உண் டாய் விட்டது என்று பெருமிதங் கொண்டு பின் வருமாறு உரத்துக் கூவினுன் :—

"அப்பாடா! கடைசியாக இந்த ஹெக்டரும் இந்தக் களத் தில் நீள நெடுக விழுந்தே விட்டான். இவனை வெட்டித் தள்ளி யாகி விட்டது. தான் பத்திரகலுஷனைக் கொன்றதற்கு ஒருவரும் பழிவாங்க மாட்டார்கள் என்றே இவன் நினைத்திருந்தான். அடா ஹெக்டர்! இப்போது உனக்கு இந்தக் கதி வந்துவிட்டதே என்று நீ வருந்து கின்ருய்! இந்த ஞானம் உனக்கு அப்போதல்லவோ இருந் திருத்தல் வேண்டும்? என்ன கெடுதி வந்து விடுமோ என்று நீ

பயந்து நடுங்கி யிருத்தல் வேண்டும், இப்போது நடுங்குவதில் என்ன பயன் ?

போர்க் களத்தைவிட்டு விலகியிருந்த அகிலேசன் முன் போலவே வீரசூர பராக்கிரமங்களுடனும் கோபதாபங்களுடனும் துடித்துக்கொண்டே இருந்தான். அவன் சிறிது பொழுது பொறுத் திருந்து இப்போது உனது பழிக்குப்பழி வாங்கியே விட்டான். உனது சக்தியையும் சத்கீர்த்தியையும் புழுதியில் ஆழப் புதைத்தே விட்டான்.

நாங்கள் செய்த நற்கிரியைகளினுல் அலங்கரிக்கப்பட்ட வனுய் எங்களது அன்பனுன பத்திரகலுஷன் இப்போது சுகமா கத் தூங்குகின்றுன். அவனை நாங்கள் என்றும் போற்றுவோம், அவனது மரணத்துக்கு என்றும் வருந்துவோம்.

உன்னுடைய வலிமிக்க சத்துருக்களாகிய நாங்கள் உன் னைச் சித்திரவதை செய்து சின்னு பின்னமாகக் கிழித்து எங்க ளுடைய கோபதாபங்களைத் தீர்த்துக் கொள்வோம். உன்னைக் காக்கைகளும் கழுகுகளும் கொத்தும். உன்னுடைய அவயவங் களை நாய் நரிகள் விழுங்கும்" என்றுன்.

அப்போது தன்னை நோக்கி வந்துகொண்டிருந்த யமனைக் கண்டு தளர்வடைந்த ஹெக்டர், அகிலேசனை நோக்கிப் பின் வரும் வசனங்களை உரைத்தான் :—

"உனது உயிரின்மேல் ஆணை! உன்னைப் பெற்றேர்மேல் ஆணை! வரங்களைத் தரும் புனிதமான பிரார்த்தனைகளின்மேல் ஆணை! என்னை கிரேக்கநாய்களுக்குமாத்திரம் காட்டிக் கொடுத்து விடாதே! அவைகள் என்னைக் கிழிக்கும்படி செய்துவிடாதே!

என்னுடைய தாயுந் தகப்பனும் ஆறி மனந்தேறுமாறு எனக்குச் சாமானியமான ஈமக்கடன்களை நடத்திவை. அவர் கள் அளிக்கும் விசேஷமான திரவியங்களைக் கொண்டு ஒரு பரணியையாவது வாங்கி அதில் என்னுடைய அஸ்திகளை அடக்கிவை. ஹெக்டருடைய சாம்பல் அவனது ஜென்ம தேசத் திலேயே கிடக்கட்டும்" என்றுன்.

இவ்வசனங்களைக் கேட்ட அகிலேசன் சிறிதும் மனம் இள காமல் அவனுக்குப் பின் வருமாறு பதிலுரைத்தான். அப்போது அவன் கண்களினின்றும் தழல் போன்ற தீப்பொறிகள் பறந்தன :—

"படுபாவி! பெரும் பாதகா! உனக்கு வரமும் வேண்டுமா? உன்னிஷ்டம்போல் நான் ஒரு காரியமும் செய்யேன். அது நிச் சயந்தான்! எனது பிறப்புக்கு காரணமானவர்கள் தானுகட்டும், வரங்களைத் தரும் புனிதமானப் பிரார்த்தனைகள் தானுகட்டும்,

எனது மனத்தைக் கலக்க முடியாது. நான் சொன்னபடியே செய்வேன், சிறிதும் தவறேன்.

கூடுமானால் இரத்தம் சொட்டும் உனது பிணத்தின்மேல் நடக்கும் விருந்தில் கலந்து கொள்ளவும் எனக்கு இஷ்டந்தான். சீ எனக்கு அது வேண்டாம்! உன்னுடைய கட்டையை நான் நாய்களுக்கே விட்டுக் கொடுத்து விடுவேன்.

ட்ராய் நாட்டார் அனைவரும் எனக்கு லஞ்சமாக ஆயிர மாயிரமாகத் தங்களுடைய ஆஸ்திகள் அனைத்தையும் கொண்டு வந்து கொட்டட்டும், குவிக்கட்டும், தார்தானியனாகிய பிரிய மும், கண்ணீர் விட்டுக் கதறி அழும் அவனது மனைவியும் தங்க ளது இரஜ்யத்திலுள்ள திரவியங்கள் அனைத்தையும் திரட்டிக் கொண்டு வந்து எனக்குத் தந்து, தங்களது மகனைத் தகனம் செய்வதற்குத் தங்களுக்கு அனுமதி கேட்கட்டும், அல்லது அவனை அடுக்கி வைக்கும் சிதையில் ஒரு கட்டைக் காயினும் நெருப்பு வைப்பதற்குத் தங்களுக்கு அனுமதியளிக்க வேண்டுமென்று கேட் கட்டும்.

நான் இணங்கவே மாட்டேன், அவர்கள் தங்களது மக னை ஹெக்டரைக் கட்டையில் வைப்பதற்கும் நான் இடங் கொடேன், உன்னுடைய அங்கங்கள் அனைத்தும் காக்கைகளுக் கும் கழுகுகளுக்குமே இரையாக வேண்டும். அவைகளுக்கு ஏற் பட்ட இரையினின்றும் ஓர் அங்கத்தையேனும் வஞ்சித்துப் பிடுங்கமாட்டேன் !" என்றான்.

இவ்வாறு அகிலேசன் உரைத்த கொடிய வசனங்களைக் கேட்ட பொழுது மரணாவஸ்தையில் அழுந்திக் கிடந்த அந்த வீரன் பின்னும் அவனை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

" அடா, அப்பா ! நீ கொடியோன், கன்னெஞ்சன், இரங் காத பாவி என்பதெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். துர் தேவதைகளும் உனது கன்னெஞ்சை இரும்பைப்போல் கெட்டி யாக்கி விட்டன! உனது நெஞ்சு ஒன்றுக்கும் இளகாமல் போகட்டும் என்று அவர்கள் உன்னைச் சபித்து விட்டனர்.

என்றாலும், உனக்கும் ஒரு காலம் வரும் என்பதை நீ நினைத்துக் கொள். அப்பொழுது ஊழ் வினையின் பயனும் தேவர்களின் கோபமும் ஒன்றாய்க்கூடி உன்னை அழித்துவிடும். இந்தப் பழியும் பாவமும் வீண் போகா, இவற்றின் பலனை நீ அனு பவித்தே தீருவாய், இது நிச்சயம்.

நீ எனக்குச் செய்த துரோகத்துக்குத் தகுந்த தண்டனை யைப் பீபஸ் பகவானும் பிரியம் மஹாராஜாவும் உனக்குக் கொடுத்தே தீருவார்கள். தங்களது பழியையும் தீர்த்துக் கொள்ளு

வார்கள். இந்த ஸீயன் கோட்டை வாயிலின் முன்பாகவே அவர்கள் உன்னை வெட்டிக் கிடத்துவார்கள் " என்றான்.

இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே அவன் தனது வாயை மூடிக்கொண்டு, தனது ஆவியையும் துறந்தான். திண்டாடித் திணறிக் கொண்டு அவன் விட்டு வந்த மூச்சைத் துர் தேவதைகள் அடைத்து விட்டன! கூற்றுவனும் அவனைத்தொட்டான். அப்போது அவன் கண்கள் உறைந்து கெட்டியாகி விட்டன. அவனது ஆவியும்,தான் உறைந்து வந்த அவனது காத்திரமான உடலை விட்டுப் பிரிந்து விட்டது. அது அந்தகாரம் நிறைந்த மறு உலகத்திற்கு ஓடிப்போய்விட்டது. அப்போது அவனது உடல் ஓர் உயர்ந்த களிமண் மலைபோல் விளங்கியது. அவனது ஆவியானது துக்கம் நிறைந்த ஒரு பேயையோ பிசாசையோ போல் வஸ்திரமில்லாமலும் அழுது புலம்பிக் கொண்டும் நிர்மானுஷ்யமான அந்தக்கடற்கரை ஓரமாகத் தவழ்ந்து கொண்டு நிலையில்லாமல் திரிந்து வந்தது.

இவ்வாறு மரணமடைந்துவிட்ட வீரனை அகிலேசன் தன்னுடைய விழிகளால் உற்று உருட்டிப் பார்த்தான். சிறிது யோசனையும் செய்தான். அவனது செவிப்புலன் அடைபட்டே போயிற்று என்று அறிந்தும் அவன் அவனை நோக்கிப் பின் வருமாறு மொழிகள் உரைத்தான் :—

"முதன் முதலாக நீசா! ஜோவ் தேவரும் மற்றையத் தேவர்களும் நியமிக்கும் சமயத்தில் நான் உன்னைத் தொடர்ந்து வருவேன் " என்றான். அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தான் கொன்ற வீரனது உடலிலிருந்த ஆடை ஆபரணங்களைக் கழற்றினான். பின்பு அவனது உடம்பில் உண்டாயிருந்த காயத்தில் ஊன்றி நின்று புகைந்து கொண்டிருந்த ஈட்டியைப் பின்புறமாக உருவி இழுத்து, அதைத் தரையின் மேல் எறிந்தான்.

அப்போது அந்தப் பிணத்தைக் காணத் திரண்டுவந்த கிரேக்கர்கள், அவனுடைய வீர லக்ஷணத்தையும் விசேஷமான உருவத்தையும் கண்டு வியந்தனர். அக்கூட்டத்திலிருந்த சில அயோக்கியர்கள் அந்த மஹானது சவத்தின் முகத்தை வெட்டி அதன் அழகைக் குலைத்தனர். மற்றுஞ் சிலர் அவனை இழித்துக் கூறினர், அவனை நிந்தித்தனர் :—

" ஆஹா! இந்த ஹெக்டருக்கு வந்த வாழ்வையும் பாருங்கள்!சிறிது முன்னர் தான் இவன் ஜோவ் தேவரைப்போல் நம்முடைய கப்பல்களின் மேல் மின்னலைப் பொழிந்து வந்தான். ஊழ்வினையைப்போல் நம்மைப் பறக்கடித்து வந்தான்!" என்றனர்.

அப்போது மஹானான அகிலேசன் தன் வீரர்களும் பிருத்தியர்களும் தன்னைச் சுற்றிக் கொண்டிருக்க, அந்த வீரனது

உடலின்மேல் தன்னுடைய கால்களை ஊன்றி வைத்துக் கொண் டும், நெடு நெடுவென்று உயர்ந்து நின்று கொண்டும் அவர் களனைவரும் கேட்குமாறு உரத்த குரலில் பின் வரும் வசனங் களை உரைத்தான் :—

"இராஜகுமாரர்களே! சேனைத் தலைவர்களே! என் நாட்டாரே! நண்பர்களே! சர்வ வல்லமையுமுள்ள தேவர்களது சித்தமானது இப்போது கடைசியாக இந்தப் படுபாவியை நமது கைவசமாக்கி விட்டதால், ட்ராய் நகரும் நமக்கே வசமாய் விட்ட தன்றோ?

வீரர்களே! விரைந்து செல்லுங்கள்! இனியும் மீந்துள்ள காரியங்களைத் துரிதமாகத் தொடர்ந்து செய்யுங்கள். தங்களது பெருந் தலைவனுன ஹெக்டர் இறந்து போய் விட்டதினுல் துரோ ஜர்கள் தங்களுடைய கோபுரங்களை விட்டு விட்டு ஓடிப்போய் விட்டனரா, காவலாளிகளை நீக்கி விட்டனரா, அல்லது அக் கோபுரங்களில் இன்னும் இருந்து வருகின்றனரா என்று பாருங்கள்.

பத்திரகலுஷா! என் தெய்வமே! நான் ஏன் இவ்வாறெல் லாம் பிதற்றுகின்றேன்? ட்ராயினுல் எனக்கு ஆகவேண்டியது என்ன? அதனுல் எனக்கு என்ன லாபம்? பேருங் கீர்த்தியும் புகழுந்தான் எனக்கு எதற்கு? உன்னை ஒழிந்த மற்றைய விஷயங்களை என் மனம் ஏன் நாடுகின்றது?

கூற்றுவன் உன்னுடைய கண்களை மூடி விட்டான், அவற் றிற்கு முத்திரையும் வைத்து விட்டான். உன்மேல் விழுந்து அழுவாரோ உன்னைக் குறித்து இரங்குவாரோ, உன்னைப் பாராட்டு வாரோ, ஒருவரையும் இங்குக் காணேன். உனது பிணமும் அடக்கஞ் செய்வார் அற்று இங்குக் கிடக்கின்றது.

எனது ஆயுள் எனது உள்ளத்தில் உறைந்து வரும் வரை யிலும் எனது பிரியனுன உனது உருவம் எனது மனத்தை விட்டு அகலுமோ? உனக்காக உன்னுடைய ஆப்த நண்பர்களும், அன் பர்களும் நிழல் கொண்ட சோக நாடான பாதாள லோகத்தில் ஏற்றிய விளக்குகள் அவிந்து அணைந்து போய்விடினும், எனது விளக்குகள் ஒரு நந்தா விளக்காகவே எரிந்து வரும், எனது விளக்கு அணையாது. நான் இறந்த பின்னும் அது எனது நிழலில் இருந்த வண்ணம் எரிந்து வரும், எனது நிழலிலும் அனலைப் பரப்பி வரும். அது நிச்சயந்தான்.

அது இருக்கட்டும், இப்போது கிரேக்கர்களே! கிரேக்க புத்திரர்களே! ஹெக்டருடைய பிணத்தை ஜயகோஷத்துடன் இங்கு கொண்டு வாருங்கள், பாருங்கள், ஹெக்டர் ஒழிந்தான், இலியனும் ஒழிந்தது என்று பாருங்கள். இவ்வாறு பாடிக்கொண்டு கடற்கரையை நோக்கி நிதானமாக நகர்ந்து வாருங்கள்" என்றுன்.

இவ்வாறு சொல்லிய பின் அவனது மனத்தில் ஒரு மிகக் கெட்ட எண்ணம் உதித்தது. ஹெக்டரின் மேல், தான் கொண்டிருந்த வைரத்தைத் தீர்த்துக் கொள்வதற்கு இதுதான் சமயம், பழியைத் தீர்த்துக் கொள்ள இதுதான் தருணம் என்று அவன் எண்ணினான்.

இந்த எண்ணம் அவனுக்காவது ஹெக்டருக்காவது இருந்த பெருமைக்கு அழகாக, ஏற்றதாக இருக்கவில்லை. அவன் ஹெக்டரின் பலமான கணுக்கால்களைக் குடைந்து, அக்கால்களில் இரண்டு துவாரங்களை உண்டாக்கி அவற்றின் வழியே கயிறுகளைச் செலுத்தி அக்கால்களைக் கட்டினான். பின்பு இக்கால்களைத் தனது இரதத்தின் சக்கரங்களுக்குப் பின்னால் உயரமாகக் கால் மேலாகவும் தலை கீழாகவும் கட்டிக் கொண்டு தனது இரதத்தை ஓட்டினான்.

அப்பொழுது ஹெக்டரின் அதி சுந்தரமான தலையானது அந்த யுத்தக் களமுழுவதிலும் தரதரவென்று இழைந்து சென்றது. அவ்வாறு செல்லுகையில் ஹெக்டரை வென்றவனான அகிலேசன் இரத்தம் துளிதுளியாகச் சொட்டிக்கொண்டிருந்த தன்னுடைய கைகளை உயரத் தூக்கிக்கொண்டு அதிகர்வத்துடன் அந்த இரதத்தில் நின்று வந்தான்.

அவன் தன் குதிரைகளை ஒரு தட்டுத் தட்டினான். அக்கணமே அவை துள்ளிப் பாய்ந்தன. அவனது இரதமும் துரிதமாகப் பறந்தது, புழுதிகள் அதைச் சுழன்று எழுந்தன. அவை அதனை மேகங்களைப் போல் மறைத்து விட்டன.

இவ்வாறு தேரின் பின்புறமாகக் கட்டி இழுத்துச் செல்லப் பட்டதினால் ஹெக்டரின் பெருமையும் கம்பீரமும் அழிந்து போய் விட்டன. திவ்வியமான அவனது முகமும், நீண்டு தொங்கித் தவழ்ந்து கொண்டிருந்த அவனது கேசமும் அந்த யுத்த களத்தில் புரண்டு சென்று அத்தரைக்கு இரத்தக் கறையை உண்டாக்கி விட்டன. அவை மணலிலும் கன்னங் கரேலென்ற கோடுகளைக் கீறி விட்டன. இவ்வாறு அந்த வீரன் தான் பிறந்த தேசத்திலேயே அலங்கோலமும் அவமரியாதையும் அடைந்தவனாகவும் தன்னைச் சுற்றிலுமிருந்த தன்னுடைய வைரிகள் தன்னைக் கண்டு கொக்கரிக்கவும். பழிக்கவும், தன்னுடைய பெற்றோரின் கண் காணவும், அவர்கள் முன்னாலேயே இழுத்துச் செல்லப்பட்டான்.

இந்தக் கஷ்டத்தை அவனது அன்னையே முதன் முதலாகக் கண்டு துக்கித்தனள். அவள் தன்னுடைய புனிதமான நரைத்த கூந்தல்களை விரித்துக் கொண்டு மயிர்களைப் பற்றிப் பிடித்துக் கிழித்தாள். தனது ராஜ பதவிக்குரிய எழினிகளைக் கழற்றி அவற்றைத் தூரமாக எறிந்தாள். தனது நெஞ்சைப் பிளந்து கத்திக்

கதறிக் கொண்டு அவனுக்கு நேர்ந்துவிட்ட பெருங் கேட்டிற்கு வருந்தினுள்.

அவ்வாறு அவள் அழுது புலம்புகையில், அவளது கணவனும் ஹெக்டரது தகப்பனும் புத்திர சோகத்திருல் துயருற்றிருந்தவனுமான பிரியம் மஹாராஜன் அவளை அனுசரித்து அழுது கொண்டும் பெருமூச்சு விட்டுக் கொண்டும் இருந்தான். துக்கம் நிறைந்த அவனுடைய கன்னங்களின் வழியே கண்ணீரானது ததும்பி வழிந்து வந்தது.

மேலும் அந்த ட்ராய் நகரமே ஒரேயடியாய்த் துக்கத்தில் ஆழ்ந்து விட்டது. அதன் முகமும் துக்கக் குறியுடன் விளங்கியது. சத்துருக்கள் அந்நகருக்குத் தீயிட்டுக் கொளுத்தி இருப்பின், அதனுல் விளையக் கூடிய துக்கத்தினும் இந்தத் துக்கம் குறைவாக இருக்கவில்லை.

ஹெக்டருக்கு நேர்ந்த கேட்டினுல் அந்நகருக்குப் பெருங் கொடுமைகளே விளைந்து விட்டன. ட்ராய் நகரைச் சத்துருக்கள் தீயிட்டுக் கொளுத்தியிருந்தால், அத்தீயானது வரவரப் பெருகி அந்நகரத்தின் அஸ்திவாரக் கற்களினின்று சிகரங்கள் வரை சுழன்று கிளம்பி அதிகம்பீரமும் உன்னதமுமான அதனுடைய கோட்டைகளின் மேலும் பாய்ந்து விட, அதன் தணல்கள் ட்ராயை ஒரேயடியாய்க் கொளுத்தி, ஆகாயத்தையும் அளாவி விடும். அப்போது அந்நகர் ஒரு பெரும் பாழைப் போலவே தோன்றும். இன்று அந்நகர் அவ்வாறே சிறிதும் அலங்கோலக் குறைவின்றி விளங்கியது.

இவ்வாறு நிலை குலைந்து சீர் கெட்ட அந்த இராஜ்யத்தின் அதிர்ஷ்டஹீனனுன மஹாராஜன் மனந்தடுமாற்றமுற்று வெறி பிடித்தவன் போல், டார்டான் கோட்டை வாயிலை நோக்கி விரைந்து சென்றுன். அங்கு தன் முன் நின்றவர்களை நெருக்கிக் கொண்டு துரோஜர்கள் திரள்திரளாக நின்று கொண்டிருந்தனர். வெறி பிடித்தவன் போல் பிரியம் மஹாராஜன் ஓடி வந்ததினுல் அவர்களால் அவனைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

மஹத்தான கஷ்டமோ துக்கமோ வந்துவிட்டால் அப்பொழுது பலவீனர்களும் பலவான்களைப் போலவே விளங்குவார்களன்றே? துக்கமானது அவனது மார்பைப் பிளந்து கிழித்தது. துக்கத்தின் கொடுமையால் அவன் நிலையின்றி அங்கும் இங்கும் ஓடினுன், என்ன பயன்?

கடைசியாக அவன் அந்தக்களத்திற் படிந்திருந்த புழுதியில் விழுந்து புரண்டு தன் இனத்தார் ஒவ்வொருவரையும் தனித்தனியாகப் பேரிட்டு அழைத்துப் பின்வருமாறு புலம்பினுன் :—

“ஐயோ! விடுங்கள்! என்னை விடுங்கள்! அவன் என்னைக் கூப்பிடுகின்றான்! அந்தக் கூற்றுவன் என்னைக் கூப்பிடுகின்றான்! அவனிடம் செல்ல என்னை விடுங்கள்! தடுக்காதீர்கள்!

எனது மகனைக் கொன்ற கொலை பாதகனிடம் நான் மாத்திரம் சென்று அவன் காலில் விழுவேன். இந்தக் கோட்டை மதிலிலிருந்து நான் ஒருவன் மாத்திரமே செல்வேன். எனக்கு வழி காட்டவோ துணையாகவோ நீங்கள் ஒருவரும் வரவேண்டாம். நான் உங்களைக் கூப்பிடவில்லை.

ஒருக்கால் எனது துக்கத்தைக் கண்டாவது அவன் சிறிது இரங்குவான் என்று எண்ணுகின்றேன். இல்லையென்றால் எனது கிழத்தனத்தைக் கண்டாவது அவனது மனம் இளகலாம்.

அவனுக்கும் ஒரு தகப்பன் இருக்கின்றான், அவனும் என்னைப் போன்ற ஒரு மனிதன் தான். அவனுக்கும் மூப்பும் துன்பமும் உண்டு. சாகாமலும் சுகமாகவும் இருந்து வர அவன் ஒரு வரம் வாங்கிக் கொண்டு வரவில்லை. என்னையும் என் வர்க்கத் தாரையும் பிடித்து வாட்டும் இந்தச் சனியனைப் (அகிலேசனைப்) பெற்ற பொழுது அவனுக்கு இருந்த சக்தியும் பலமும் இப்போது அவனுக்கு இல்லை.

அந்தப் பாழாய்ப் போனவனது கையினால் என்னுடைய வீர மக்கள் இளங்காளைகள் எத்தனை பெயர்கள் தலை சாய்த்து விழுந்து விட்டனர்! ஐயோ, அவர்கள் தலை குப்புற விழுந்து குழியில் மறைந்து போயினரே!

ஹெக்டரே! உன்னையும் அவன் ஹதம் செய்து விட்டான். தேவர்களுக்குச் சமானமான வீரமுள்ள உன்னையும் அவன் அழித்து விட்டான். உன்னை இழந்தபின் எனது மனம் இடிந்தே போயிற்று. எனது ஆவியும் ஆருத்துயரத்துடன் அந்தகனது உலகத்தை நாடிச் செல்லுகின்றது!

நீ உனது தகப்பனைத் தழுவிக் கட்டிக்கொண்டு அவனது மார்பில் கிடந்த வண்ணம் உனது சாதுவான பிராணனைக் கவலையின்றி விட்டிருந்தாய் எனில், அப்போது அந்தக் காலன் வந்து உன்னை அழைத்துச் சென்ற பொழுது, உன்னுடைய தாய் தந்தையரான நாங்கள் இருவரும் உன்மேல் குனிந்து விழுந்து புரண்டு புலம்பி உருகிக் கண்ணீர் விட்டுக் கதறி அழுதிருப்போமே, கண்ணீரை ஆறாய்ப் பெருக்கியிருப்போமே, அப்போது எங்களுக்குச் சற்று சமாதானம் உண்டாயிருக்குமே, எங்களது துக்கத்தை மறந்து சற்று ஆறுதல் அடைந்திருப்போமே, எங்களது அளவு கடந்த துக்கத்தை நாங்கள் வடித்த கண்ணீரில் கரைத்திருப்போமே” என்றான்.

இவ்வாறு அந்தத் தகப்பன் தரையில் புரண்டு அழுதான். அப்போது இலியன் நகர முழுவதிலும் தாரை தாரையாகக் கண்

ணீர்விட்டு அழுதுகொண்டு அவனைச் சுற்றிலும் நின்றது, அந்தக் கண்ணீர் ஆருய்ப் பெருகியது.

அவ்வாறு அழுது கொண்டிருந்த ட்ராய் நகரத்துப் பெரும் பெண்டீர்களுள் மஹா ராணியாகிய ஹெக்குபா தேவியும் இருந்த னள். அவளுடன் அவளுடைய பாங்கி மார்களும் கண்ணீர் விட்டு அழுது கொண்டு அவளைப் பின்தொடர்ந்து வந்தனர். அவள் "ஐயோ தெய்வம் ஏன் என்னை இவ்வாறு வதைத்து வாட்டுகின்றது? இந்தப் பாழும் வாழ்வும் ஆயுளும் எனக்கு வேண்டவே வேண்டாம். எனது ஆயுள் ஏன் இன்னும் நீடிக் கின்றது? அது ஏன் குறுகவில்லை?

இது வரை நடந்து விட்ட கொடுமைகளை எல்லாம் நான் பொறுமையுடன் பார்த்து வந்தேனே, அது போதாதா?

என் மகனே! உனது மரணத்தையும் நான் என் கண்ணுல் பார்க்க வேண்டுமென்று தெய்வம் எனது ஆயுளை வளர்த்தி விட் டதோ? அஹோ ஹெக்டர்! சிறிது பொழுது முன் வரை நீ உன் பெற்ருேருடைய பெருமைக்கும் சந்தோஷத்திற்கும் காரணமாக விளங்கி வந்தனையே! ட்ராய் நாட்டின் ஜனங்கள் அனைவரும் உன்னையே போற்றி வந்தனரே! ட்ராய்க்கு ஓர் ரக்ஷகனுக விளங்கி வந்தனையே! இந்நாள் வரை அதன் க்ஷேமத்திற்கும் புகழுக்கும் நீயே காரணமாக விளங்கி வந்தனையே! அந் நாட்டாரின் தலைவனுகவும் நிகரற்ற வீரனுகவும் தெய்வமாகவுமன்ருே நீ விளங்கி வந்தனை!

ஆஹா இது என்ன காலக் கொடுமை! என்ன காலவித்தி யாசம்! ஒரே கரி நாளில் நீ சுணையற்ற சவமாக மாறி விட்டனையே! உனது உடலும் உயிரற்ற ஒரு பிடி களிமண்ணுக மாறிவிட்டதே" என்று புலம்பினுள்.

இதுவரை ஹெக்டர் இறந்து போனுன் என்ற இந்த துக்கச் செய்தியானது அழகிற்சிறந்தவளான ஆந்திரமகிக்கு எட்டவில்லை, இதுவரை ஒருத்தியாயினும் அவளிடம் சென்று அவனுக்கு நேர்ந்து விட்ட ஆபத்தை அறிவிக்க வில்லை. அவன் சீயான் கோபுரவாச லின் முன்னுக நின்று வந்ததையும் அவள் அறிந்தவளல்ல.

தனது மாளிகையின் அந்தப்புரத்தில் வெகு தூரத்தில் ஒதுக்கமான ஓர் இடத்தில் இருந்த வண்ணம் அவள் கவலையுடன் புலம்பிக் கொண்டே தனது நெசவுத் தறியைக் கவனித்துக் கொண்டு வந்தாள். கண்டோர் மலைக்கத்தக்க அதிரம்மியமான புஷ்பங்களை, இடையிடையே இசைத்து ஒரு வஸ்திரத்தை நெய்து கொண்டு அந்தத் தனிமையான இடத்தில் இருந்த வண்ணம் தனது காலத்தைக் கழித்து வந்தாள்.

அப்போது அழகான கூந்தல்களையுடைய, அவளது பணிப் பெண்கள் அவளுடைய கணவன் திரும்பி வருவதை எதிர் பார்த்து அவனது ஸ்நானத்திற்காக ஒரு பித்தளை அண்டாவில் ஜலத்தை நிரப்பி அதைக் காய்ச்சி வந்தனர். ஆனால் அந்தோ அவளது கணவன் தனது வீட்டுக்குத் திரும்பி வரவில்லை. அவள் பட்ட பாடெல்லாம் வீணே ஆயின. அச்சமயம் அவன் ஸ்நானமின்றி, இரத்தத்தை வடித்துக்கொண்டு சமுத்திரக் கரையிலன்றோ கிடந்தான்?

அவர்கள் அனைவரும் அவனது வரவை எதிர் பார்த்துச் சலித்து இருக்கையில், கோட்டை மதிலின் சமீபத்தில் உண்டான குழப்பங்களும் கூக்குரல்களும் சப்தமும் அவளது காதுக்கு எட்டின. அவற்றைக் கேட்ட பொழுது அவளுடைய அவயவங்கள் அனைத்தும் ஒருங்கே திடுக்கிட்டு நடுங்கின. அக்கணமே யானைத் தந்தத்தை நிகர்த்த அவளது கையிலிருந்து நெசவு நாழியானது திடீரெனக் கீழே விழுந்துவிட்டது. அதன் காரணம் இன்னதென்று அறியாமல் ஆச்சரியப்பட்டு, அவள் தன்னுடைய பாங்கிமார்களை அழைத்துப் பின்வரும் வசனங்களை உரைத்தாள் :—

" என் சகிகளே ! வாருங்கள், வாருங்கள் ! என் காதுகளைத் துளைக்கும் இந்த அழு குரலுக்கு என்ன காரணம்? இது எங்கிருந்து வருகின்றது ? இது எனது அன்னையின் குரலென்பது நிச்சயம்.

எனது உடல் நடுங்குகின்றது ! என்னுடைய முழங்கால்கள் வலுவை இழந்து விட்டன ! தட்டித் தடுமாறுகின்றன ! என்றுமில்லாமல் இப்போது எனது மார்பு பட பட வென்று துடிக்கின்றது !

ஏதோ ஒரு பெருந்துக்கம், என்று மில்லாத கஷ்டம், இதோ துரோஜ நாட்டுக்கு வரப் போகின்றது என்பதை அது முன்னுடியே அறிவிக்கின்றது. ஆஹா, தெய்வங்களே ! அவ்வாறு துக்கம் நேரிடுவதைத் தடுப்பீர்களாக! இந்தக் கவலையை உண்டாக்கும் துர் நிமித்தங்களை நீக்கி விடுவீர்களாக ! இவற்றைத் தூரமாகத் துரத்துவீர்களாக !

அஞ்சா நெஞ்சரான எனது ஹெக்டர் எங்கு அகிலேசனுக்கு எதிராகச் செல்லுவாரோ என்று என் மனம் கலங்குகின்றது! எங்கு அவர் நமது கோட்டைக்குள் நுழைவதினின்றும் தடுக்கப்பட்டும் ஓடுகின்றாரோ, என்றெல்லாம் என்மனம் ஏங்குகின்றது ! எனது மனது பயப்படுகின்றது ! அவர் கொலையுண்டார் என்றே நினைத்து என் மனம் பதறுகின்றது !

அவர் ஜனங்களின் மத்தியில் க்ஷேமமாக இருந்து வரமாட்டார், சத்துரு தன்னிடம் வரும் வரைக் காத்திருக்க மாட்டார், அது அவருக்குச் சிறிதும் பிடிக்காது, அது பேடித்தனம், வீரனுக்கு அழகல்ல என்று மதிப்பவர், விதிப்படிக் காரியங்கள் நடக்கட்டும்,

பேரும் புகழும் கீர்த்தியும் அடைந்தே தீருவேன் என்று துணிவு கொண்டவராய், அவர் யுத்தத்தின் முன்னணிக்கே விரைந்து சென்று விட்டனரோ ? இந்தப் பெருந்தாகமே அவரது ஆயுளைக் குறுக்கி விட்டதோ ? அவர் கூற்றுவனது கை வசம் ஆகிவிட்டனரோ? அவரது தாகமும் ஒரேயடியாய்த் தணிந்து விட்டதோ ?" என்றாள்.

அதன்பின் அவள் துக்க மிகுதியால் பித்துப்பிடித்தவள் போல் மெய்ம்மறந்து தள்ளாடித் தள்ளாடிக்கொண்டு நடந்தாள். அவளது உள்ளம் பெரும் பீதிகளுக்கு இடமாகி விட்டது.

அவளது முகத்தில் துக்கமும் விசனமும் குடிகொண்டன. இந்தக் கோலங்களுடன் அவள் தனது மாளிகையில் உள்ள கூடங்களையும் அறைகளையும் இடைவெளிகளையும் தாண்டிக்கொண்டு காற்றைப் போல் பறந்தாள். அவளுடைய பாங்கிமாரும் அவளைப் பின்பற்றி வந்தனர். அவ்வாறு ஓடோடியும் வந்து, அவள் மதில்களின்மேல் ஏறி நாற்புறமும் சுற்றிப் பார்த்தாள்.

அப்பொழுது அவளது ஆவியைக் கவரும் ஒரு பொருள் அவளுடைய கண்களுக்குச் சட்டெனப் புலனாயிற்று. தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர் தரையின்மேல் தர தரவென்று இழுத்துச் செல்லப்படுவது அவளுக்குச் சட்டெனப் புலனாகி விட்டது.

அக்கணமே அவளுடைய கண்கள் சுழன்றன, இருளும் அவற்றை மூடி விட்டது. அவள் சோர்ந்தனள். திடீரெனத் தரையின் மேல் வீழ்ந்தனள்.

அவளது ஆவியும் மேனியின் நிறமும் பறந்தன. அவள் தனது தலையில் அணிந்திருந்த அழகான ஆபரணங்களும் அவைகளைச் சேர்த்துக் கட்டி யிருந்த சரடுகளும் வலைகளும் அவற்றின் மேல் சிரோ பூஷணமாக விளங்கிய மலர் மாலையும் ஆகிய இவை அனைத்தும் அவளுடைய எழினி மகுடங்களுடன் வெகு தூரத்தில் பறந்து போய் விட்டன.

இவ்வாறு சேர்ந்து விழுந்து விட்ட இவை அனைத்தும் அவளது கல்யாண சமயத்தில் வீனஸ் தேவியினால் அவளுக்குச் சீதனமாக அளிக்கப்பட்டவை.

இவ்வாறு சோர்ந்து விழுந்து விட்ட அவளுக்குக் கை கொடுத்து எழுப்பி விட வேண்டுமென்ற ஆவலுடன் அவளுடைய பாங்கிமார்கள் அவளைச் சுற்றி நின்றுகொண்டு அழுது கண்ணீர் வடித்தனர். இறந்தே போனவள் போல் தோன்றிய அவள் அவர்களுடைய உபசாரங்களால் சிறிது மூர்ச்சை தெளிந்து எழுவாள், பலவாறாகப் புலம்புவாள், பின்னும் மூர்ச்சை அடைவாள், எழுவாள், புலம்புவாள் ! அவள் இவ்வாறு புலம்பினாள் :—

"என் பிராண நாதா! நான் துக்கம் அனுபவிக்கப் பிறந்தவள் என்றால், தாங்களுமா துக்கம் அனுபவிக்க வேண்டும்? நம் இருவருக்கும் ஒரே தலைவிதியா? ஒரே விதமான கஷ்ட ஜீவனமா? ஒரே ஒரு கெட்ட நக்ஷத்திரமன்றோ, பிரியம் மஹா ராஜனது மாளிகையின் மேலும் நிழல் கொண்ட ஹிப்போப் பிளேஷியாவின் மேலும் தனது பார்வையைச் செலுத்தி விட்டது? இது நிச்சயந்தான். இந்த அனர்த்தங்களுக்கெல்லாம் அது தான் காரணம்.

நம்மைப் பெற்றோர் வேறு வேறானவர்கள், நாம் வேறு வேறான தேசங்களிலும் பிறந்தோம், வெவ்வேறு காலங்களில் பிறந்தோம் என்றாலும், நமது தலைவிதி மாத்திரம் ஒரே தலைவிதி யாய் இருக்கின்றது. அதில் ஒரு வித்தியாசமும் இல்லை.

ஆஹா! மஹானான அயீஷனுக்குப் பெண்ணாக நான் ஏன் பிறந்தேன்? அவர் ஏன் என்னைப் பாராட்டிச் சீராட்டிக் கட்டுக் காவலுடன் வளர்த்தார்? நான் பிறவாமலே இருந்தே னெனில் அது நன்றாக இருந்திருக்குமே?

மறைந்து போய் விட்ட என் கணவரது ஆருயிரே! ஆவியே! நீ, இவ்வாறு என்னைத் தவிக்க விட்டு விட்டுப் போய் விடலாமா? இருள் சூழ்ந்த மீளா உலகத்துக்குப் போய் விட்டனையே! என்னை வேண்டா மென்று உதறித் தள்ளி விட்டுப் போயினையே! எனது ஜன்மம் பாழாகி விட்டதே, தனி யாயினேன்!

எனக்கு இப்போது, ஒரே ஒரு குழந்தைதானே கதியாக இருக்கின்றது? அதைவைத்துத் தானே ஆறுதல் அடைய வேண்டும்? பத்து மாதம் சுமந்து பலவிதமான நோவுகளை அனுபவித்து அதைப் பெற்றெடுத்தேன். அதிர்ஷ்டங் குறைந்தவர்களான எங்களது காதலின் பயனாக அந்தக் குழந்தையும் இந்தத் துக்கம் அனுபவிக்கவே பிறந்தது! இனியும் அக் குழந்தை தனது தகப்பனை நோக்கிப் புன்னகைகொள்ளுமோ? அதற்கு உதவும் நண்பரும் ஒருவராயினும் இலரே! அதைக் கட்டிக் காத்து வர ஒரு தகப்பனும் இல்லையே!

வேற்றுமை யின்றி எல்லோரையும் ஒரேயடியாய் வெட்டி வீழ்த்தி விடும் சத்துருவின் வாளுக்கு இரையாகாமல் இந்தப் பெருத்த ஆபத்தினின்றும், அது தப்பி விட்டாலுங் கூடப் பெருங் கேடுகளும் தீமைகளும் அக் குழந்தையைச் சூழ்ந்து கொண்டே இருக்குமே! அக் குழந்தைக்கு இன்னும் என்னென்ன துன்பங்கள் வர விருக்கின்றனவோ, நான் அறியேனே!

யாராயினும் வேற்று மனிதன் ஒருவன் அவனை அவனது வீட்டை விட்டுத் துரத்தி விட்டு அவனுடைய முன்னோர்களின் பூமிகாணிகளையும் நிலங்களையும் கவர்ந்து கொண்டு அவற்றை உழுது பயிர் செய்து வருவான்,

ஐயோ, அவனது பிதா பிதிர்லோகம் புக்கதினமே, அவன் ஓர் அனுதையாக ஆகிவிட்டான், இது என்ன சங்கடம்! அவனை ஒருவரேனும் முகமலர்ந்து கூப்பிடமாட்டார்கள், அவனுடன் உற வாடமாட்டார்கள். தங்களது குழுவினில் புக வொட்டார்கள், தூரவே விலக்கி விடுவார்கள்,

எப்போதும் அவன் கவலை கொண்டவனுகவே இருந்து வருவான். அழுதழுது தன் கண்ணீரிலேயே மூழ்கிக் கிடப்பான். சுகமாக வாழுபவர்கள் அவனைச் சட்டை செய்ய மாட்டார்கள். அவன் அவர்களுடைய வஸ்திரங்களைப் பிடித்துக் கொண்டு தொங்குவான், அல்லது அவர்களைக் கண்டு பயந்து அவர்கள் காலைக் கட்டிக்கொள்வான். அவனுடைய தகப்பனது உப்பைத் தின்று களித்தவர்கள் அவனுக்கு ஒரு சொட்டுத் தண்ணீரோ அல்லது ஒரு பிடிச் சோருே கொடுக்க மாட்டார்கள்! அன்பு மிகுந்தவர் யாரேனும் ஒருவர் ஒரு வேளை சாதம் போட்டு அவனது பசியை ஆற்றலாம், மறுதினம் அவன் முன்பு போலவே சோற்றுக்கு அலைந்து திரிவான். இதுவே இரக்கம் செட்டு சிக்கனம் தாராளம் என்று உலகம் மதித்து வருகின்றது!

தாயும் தகப்பனும் உயிருடன் வாழ்ந்திருக்கப் பாக்கியம் பெற்ற சிலர் அவனைச் சிறிதேனும் கவனிக்க மாட்டார்கள்! அவன் தந்தையை இழந்தவன் என்று இரங்க மாட்டார்கள். அவனை நோக்கிப், போ போ, உன் அப்பன் இங்குச் சாப்பாட்டுக்கு வரவில்லை, போ, என்று விரட்டுவார்கள். பாவிப் பிள்ளை கண்ணீர் விட்டுக் கொண்டுத் திரும்பி வரும்!

இவ்வாறு சென்ற விடமெல்லாம் சீச்சீ என்று சிறுமைப் பட்டுக் கண்ணீரைத் தாரை தாரையாய்ச் சொரிந்து கொண்டே எனது அஸ்தியனுக்ஷன் வருவதாகவே எனக்குத் தோன்று கின்றது. அவ்வாறு எண்ணுங்கால் என் மனம் கலங்குகின்றது.

இவ்வாறு மேன் மேலும் சிறுமைகளையே ஏற்று வேறு வழி யில்லாமல் அவன் கடைசியாக என்னையே நோக்கி வருவான். கணவனை இழந்து விட்ட தனது அன்னையான என்னையே நாடி வந்து அழுது புலம்புவான், என்னுலும் அவனுக்கு ஓர் உதவியும் செய்ய இயலாது போய் விடும். அவன் படும்பாடெல்லாம் வீணே ஆய்விடும்.

அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் செல்வமாக வளர்ந்தவன். அவனைக் கண்ணில் வைத்து இமையில் மூடி வந்தோம். அவன் மேல் காற்றும் பலமாக அடிக்கச் சகி யோம்! அவன் இராஜ குமாரர்களுடன் விளையாடி வந்தவன். ருசியான வஸ்துக்களையே அருந்தி வளர்ந்து வந்தவன். வெயில் தாழ்ந்து காற்றும் ஓய்ந்து அமைதி நிலவி வரும் மாலை வேளையில் அவன் தனது செவிலித் தாயின் மார்பின் மேல் மிருது

வான பஞ்சணை மெத்தையின் மேல் படுத்து உறங்குவது போல் உறங்கி வந்தவன்.

இவ்வாறு சுகமாக வாழ்ந்து வந்த அவன் என்னென்ன கஷ்டங்கள் எல்லாம் அனுபவிக்கப் போகின்றானோ? விதியின் பயனை அனுபவிக்காமலும் தீருமோ ?

நல்ல காவலும் கோட்டை மதில்களும் உள்ள இலியன் நகரவாசிகள் அனைவரும் உன்னை அஸ்தியனாக்ஷா! அஸ்தியனாக்ஷா! என்று அழைத்து வருவார்களே, இப்போது அந்த ட்ராயைக் காவல் செய்து வந்த உனது தந்தைமறைந்து போய் விட்டதினால் அந்த நகரவாசிகளும் உன்னை மறந்தேபோய் விட்டனரே! உனது பெயர் மறைந்தே போய் விட்டதே!

ஐயோ! அதிர்ஷ்டம் இல்லாத பிள்ளையே! பாக்கியமில்லாத பிள்ளையே! இது இருக்கட்டும்.

எனது ஹெக்டரே! தாங்கள் இப்பொழுது தங்களுடைய பெற்றோருக்கோ அல்லது மனைவிக்கோ கட்புலனாகாமல் நெடுந் தூரத்தில் வெட்ட வெளியில் வானத்தைப் பார்த்துக் கொண்டு கிடக்கின்றீரே!

நான் தங்களிடத்து வைத்துள்ள அன்பினால் தாங்கள் யுத்தத்திலிருந்து வெற்றியுடன் திரும்பி வரும் பொழுது தங்களுக்குச் சாத்த வேண்டு மென்று ஆவலுடன் நான் ஒரு வீரவஸ்திரத்தையும் அலங்காரமான நிலையங்கியையும் நெய்து வந்தேனே! அவை வீணாகி விட்டனவே! அவற்றால் தங்களுக்கு இனி என்ன பயன்? அவற்றைத் தீயிட்டுக் கொளுத்தி விடுவேன்!

அவை நெருப்புக்கே இரையாகட்டும்! ஐயோ கெட்ட காலமே, இறந்தவருக்கு அதனால், ஒருவிதமான பெருமையும் உண்டாகா தெனினும் அது இவ்வாறாயினும் பலி ஆகட்டும், நெருப்புக்கு இரையாகட்டும்! இவ்வாறு பலியிட்டு உயிரோடிருப்பவர்களாவது பெருமையடையட்டும்!'' என்று அந்தப் பெருமாட்டி புலம்பினாள், சலித்துப் பெருமூச்சு விட்டனள். அவளுடைய பாங்கிகளான பெரும் பெண்டிர்களும் அவளை அனுசரித்துப் பெருமூச்சு விட்டனர். அவள் கண்ணீர் சொரிந்த பொழுது அவர்களும் கண்ணீர் வடித்தனர்.

———o———

## இருபத்து மூன்றும் அத்தியாயம்

# பத்திரகலுஷனை முன்னிட்டுச் செய்த ஈமக்கடன்களும் மரியாதைகளும் பந்தயவிளையாட்டுக்களும்

கதைச் சுருக்கம்: அகிலேசனும் மிர்மிடோனியர்களும் பத்திரகலுஷனுடைய உடலுக்கு மரியாதைகள் செய்கின்றனர்.

ஈமக்கடன்கள் நடந்து விருந்தும் உண்டபின், அகிலேசன் கடற்கரைக்குச் சென்று நித்திரை செய்து வருகையில் அவனது நண்பனது ஆவி அவன் முன் தோன்றித் தன்னை யடக்கம் செய்யும்படி வேண்டுகின்றது.

மறுநாட் காலையில் பிரேதத்தைத் தகனம் செய்வதற்காக விறகு சேகரித்துக்கொண்டு வரும்படிச் சைனிகர்களெல்லாம் கோவேறு கழுதைகள் பூட்டிய கட்டை வண்டிகளுடன் அனுப்பப் படுகின்றனர்.

சவத்தின் ஊர்வலம் வருணிக்கப்படுகின்றது.

கிரேக்கர்கள் தங்களது தலைமயிரை இறந்தவனுக்குக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். கடைசியாக அகிலேசன், பல மிருகங்களையும் தான் சிறைப்பிடித்த பன்னிரண்டு துரோஜர்களையும் பத்திரகலுஷனது கட்டையின் முன் பலியிடுகின்றான்.

பின்பு அவன் கட்டைக்குத் தீயிட்டு வாயுபகவானுக்கும் நைவேத்தியங்கள் செய்கின்றான். அந்த பகவான் ஐரிஸ்ஸின் வேண்டுகோளுக்கு இணங்கி எழுந்து வந்து பெருத்த நெருப்புக்களை மூட்டி யெழுப்புகின்றார். இரவெல்லாம் நெருப்பு எரிகின்றது.

மறுநாட்காலையில் பத்திரகலுஷனது எலும்புகள் பொறுக்கி யெடுத்து ஒரு பொற் கிண்ணத்தில் இடப்பட்டு அவனுக்கு ஒரு சமாதியும் கட்டப்படுகின்றது.

இவ்வாறு ஈமக்கிரியைகள் நடந்தேறிய பின்னர் அகிலேசன் பந்தய ஆட்டங்களை ஆரம்பிக்கின்றான். தேரோட்டம், குஸ்தி, மல்யுத்தம், ஓட்டம், துவந்த யுத்தம், வளையம், அம்பெய்தல், ஈட்டி விடுத்தல் ஆகிய ஆட்டங்கள் நடைபெறுகின்றன.

அந்த ஆட்டங்களில் போட்டியிட்டுக் கலந்து கொண்டவர்களுடைய வெற்றி தோல்விகள் ஆகிய விஷயங்கள் இந்த அத்தியாயத்தின் பெரும் பாகத்தில் சொல்லப்படுகின்றன.

முப்பதாம் நாட் செய்திகள் இந்த அத்தியாத்தில் முதன் முதலாக முடிவாகச் சொல்லப்படுகின்றன. அன்றைய இரவில் பத்திரகலுஷனது ஆவியானது அகிலேசன் முன் வருகின்றது. முப்பத்தோராம் நாள் தகனத்துக்கு வேண்டிய விறகு வெட்டுவதில் கழிந்து விடுகின்றது. முப்பத்திரண்டாம் நாளில் பத்திரகலுஷனுடைய தேகம் கொளுத்தப்படுகின்றது. முப்பத்து மூன்ரும் நாளில் விளையாட்டுக்கள் நடைபெறுகின்றன.

இவையனைத்தும் பெரும்பாலும் கடற்கரையிலேயே நிகழ்கின்றன.

---

இவ்வாறு கொலையுண்டு புழுதியில் அழுத்தப்பட்டுக்கிடந்த, தனது தலைவனைக் குறித்துத் துக்கித்து, அழுது புலம்பிக்கொண்டு, ஆந்திரமகியும், அவளைப் புடைசூழ்ந்து வந்த ஸ்திரீகளும், ட்ராய் நகரத்தினுட் புகுந்து சென்றனர்.

அப்போது அவனது உடலானது புழுதிபடிந்தும் உறைந்த இரத்தத்தை வடித்துக்கொண்டும், கன்னங் கரேலென்ற கறுத்த நிறங்கொண்டும், செவிடுபடும்படி அலைமோதும் விசாலமான ஹெல்லஸ்ப்பாண்ட்டுக் கரையின்மேல் கிடந்தது.

அச்சமயம் யுத்தத்திலேயே கண்ணுங் கருத்துமாக விளங்கிய மிர்மிடோனியர்களை யொழிந்த மற்றைய கிரேக்கர்களனைவரும் கடற்கரையினின்றும் புறப்பட்டுத் தங்களுடைய கப்பல்களை நோக்கிச் சென்றுவிட்டனர். மஹாரனை அகிலேசன் அவர்களை மாத்திரம் ஒன்ருய்க் கூட்டி நிறுத்திக்கொண்டு, தான் இனிச் செய்யவேண்டும் என்று தீர்மானித்திருந்த காரியத்தை அவர்களுக்குத் தெரிவித்தான் :—

"இந்த யுத்தத்தில் என்னிடமிருந்து உழைத்துவரும் வீரர்களே! எனது நண்பர்களே! புகையைக் கிளப்பிக்கொண்டு துடிக்கும் உங்களுடைய குதிரைகளை அவற்றின் இரதங்களினின்றும் அவிழ்த்து விடாதீர்கள்! யுத்தம் முடிந்து விடவில்லை! நாம் செய்ய வேண்டிய காரியங்கள் இன்னும் பலவுள. நீங்களனைவரும் ஒவ்வொருவனும் தன் தன் இரதத்தை ஒழுங்காக வரிசையாக ஓட்டிக்கொண்டு செல்லவேண்டும்.

இறந்துபோய்விட்ட நமது பத்திரகலுஷனுக்கு நாம் செய்ய வேண்டிய முறைப்படி மரியாதைகளைச் செய்யவேண்டும். ஓய்ந்து உட்கார்ந்தோ, உணவருந்தியோ நமது களைப்பை நாம் ஆற்றிக் கொள்ள நினைக்கு முன், நாம் செய்ய வேண்டிய சடங்குகள் சில மீந்திருக்கின்றன. நமது கொடுந்துக்கம் தணிய வேண்டுமென்ருல் நாம் அச் சடங்குகளை நிறைவேற்றவேண்டும்!" என்ருன்.

அவனது ஸைனிகர்கள் அவன் சொல்லியவண்ணமே செய்தனர்.

முதன் முதலாக, அகிலேசனும் அவனுக்குப்பின் அந்த ஸைனிகர்களும், பத்திரகலுஷனைச் சுற்றித் தங்களுடைய இரதங்களை மூன்று தரம் வலமாக ஓட்டினர். மூன்றுதரம் அழுது புலம்பினர். மூன்றுதரம் துக்கித்தனர். அப்பொழுது அவர்கள் வடித்த கண்ணீரானது, அவர்களுடைய ஆயுதங்களை நனைத்துக் குளிப்பாட்டிவிட்டதுமன்றி, மணலின் மேலும் விழுந்து பனிபோல் படிந்துவிட்டது.

அந்த மஹாவீரனது மரணத்தை முன்னிட்டு அழுது புலம்பி வந்தவர்களுடன், அகிலேசனது அன்னையான தெட்டிஸ் தேவியும் சேர்ந்து கொண்டனள். கல்லைப்போன்ற அவர்களுடைய மனதுகள் கரைந்து உருகின. அவர்களுடைய கண்கள் நீரைச்சொரிந்தன.

ஆனல் அவர்கள் எல்லோரையுங் காட்டிலும், பீலிதீசனே, அதிகமாகத் துக்கித்து வந்தான். அவன் இடைவிடாமல் அடுத்து அடுத்துப் பெருமூச்சு எறிந்தும் வந்தான். அதனல் அவனது மார்பு பிளந்தே போய்விடும்போல் தோற்றியது. அவனுடைய கண்களினின்றும் கண்ணீரானது அருவிகளைப்போல் வழிந்து வந்தது. அவன் சத்துருசங்காரஞ்செய்து இரத்தக் கறைபட்டு இன்னும் சிவந்தேயிருந்த தன்னுடைய கைகளைத் தனது நண்பனது குளிர்ந்து போய்விட்ட மார்பின்மேல் வைத்துப், பின்வருமாறு பிரலாபித்தான் :—

"பத்திரகலுஷா! உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக! நான் சொல்லும் வசனங்களைக் கேட்டு, புளுட்டோவின் பாழடைந்த கடற்கரையில் சஞ்சரித்து வரும் உனது உத்தமமான ஆவியானது சாந்தியடையட்டும்!

இதோ பார்! அகிலேசன் தனது வாக்கைப் பூரணமாக நிறைவேற்றிவிட்டான்! நமது இரத்தத்தை வடித்த மஹா ரண பாதகனை ஹெக்டர் இப்போது உனது காலடியில் தனது உடலை நீட்டிக்கொண்டு கிடக்கின்ருன். இன்னும் பார்! இவனது கட்டையை நான் இப்போது நாய்களுக்கே உணவாக அளிக்கப் போகின்றேன்! பயந்து நடுங்கிக்கிடக்கும் துரோஜ மரபினர் பன்னிருவரை நான் ஒரே கணத்தில் பலியிடப்போகிறேன்! அவ்வாறு பலியிட்டு நமது பழியைத் தீர்ப்பேன். அந்தப் பலியை நம்முடைய தெய்வங்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வார்கள், திருப்தியடைவார்கள். அவர்களுடைய ஆவிகள் உனது சிதையைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டுவரும்!" என்ருன்.

இவ்வாறு கடுத்த முகத்துடன் இந்த வசனங்களையுரைத்துவிட்டு, அவன் பத்திரகலுஷனது சிதையின் முன்னுக ஹெக்டரைத் தூக்கியெறிந்தான். அப்போதும் ஹெக்டரின் உடலிலிருந்து உதிரம் வடிந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சியானது அதி பயங்கரமாகவிருந்தது. அவன் புழுதியின்மேல் குப்புற விழுந்தான்.

அப்போது அவனைச் சுற்றியிருந்த மிர்மிடோனியர்கள், தங்களுடைய போர்க் கவசங்களைக் கழற்றிவிட்டுத் தங்களுடைய குதிரைகளையும் அவிழ்த்து விட்டனர்.

அதன்பின் அவர்களனைவரும், அகிலேசனது கறுத்த கப்பலில் அடுத்தடுத்துப் பூரணமாக நடந்தவந்த ருசியான விருந்துகளை யருந்தச் சென்றனர்.

அப்பொழுது, அகிலேசனது பாகசாலையில், அவனது பரிசாரகர்கள், நன்ருகக் கொழுக்குமாறு வளர்த்திருந்த பன்றிகளை நெருப்பிலிட்டு வாட்டினர்; அவைகளினின்றும் எழுந்த இருள் போன்ற புகைகள் ஆகாயத்தையளாவிச்சென்றன. முட்களையுடைய அந்த ஜந்துக்கள் அவ்வாறு நெருப்பிலிட்டு வாட்டி வதைக்கப்பட்டபொழுது, வீறிட்டுச் சீறின. அவ்வாறே பிரம் மாண்டமான காளைகளும் உரத்துக் கத்திக்கொண்டு அந்த நெருப்பில் வீழ்ந்தன. அவைகளைப்போல் உரத்துக் கூச்சலிடத் திராணியற்ற வெள்ளாடுகளும், சற்றுத் தாழ்ந்த குரலில் கத்திக்கொண்டு தங்களது ஆவியைத் துறந்தன. செம்மறியாடுகள், தெய்வமே! யென்று சிறிதும் சந்தடி செய்யாமல் இறந்தன.

கட்டைபோல் நீண்டுகிடந்த வீரனை பத்திரகலுஷனுடைய உடலைச் சுற்றிலும், அந்தப் பன்றிகளும், காளைகளும், ஆடுகளும் வடித்த இரத்தமானது ஒன்ருய்க் கலந்து, ஒரு வெள்ளம் போல் பெருக்கெடுத்து ஓடியது.

இவ்வாறு விருந்துக்கான பக்ஷயங்கள் பக்குவமாகி வருகையில், ஆர்கிவ் அரசர்களில் ஒரு கோஷ்டியார், இந்த யுத்தத்தில் உயர்ந்த வெற்றியுடன் விளங்கிய மஹா வீரனை (அகிலேசனை) இராஜாதிராஜனிடம் அழைத்துக்கொண்டு வந்தனர். அதுகாறும் துக்கம் பாராட்டிக் கொண்டேயிருந்து வந்த வீரன் தனது நண்பனது பிணத்தைவிட்டு அகலச் சிறிதும் மனமில்லாமலேயிருந்தும், அவர்களது அழைப்புக்கிணங்கி, அவ்விடத்தைவிட்டு, மிகுந்த வெறுப்புடன் அகன்று அரசனது கூடாரத்தையடைந்தான்.

அப்போது அவன் மெய்காப்பாளரும் கட்டியக்காரரும் தங்களது கடமைப்படி, எரியும் சூட்டைகளைத் தங்களது கையில் ஏந்திக்கொண்டு ஒரு முக்காலியின் மேல் வைக்கப்பட்டிருந்த ஒரு கிண்ணத்தைச் சுற்றி நின்றனர். அவர்கள், வெற்றியுடன் விளங்கிய தனது கையில் படிந்திருந்த மாற்ருனது இரத்தக் கறையை அலம்பிக் கழுவிக்கொள்ளும்படி அவனை வேண்டினர். அவன் அவர்களது வேண்டுகோளுக்கு இணங்காமல் அதனை மறுத்துப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"என் அன்பா! பத்திரகலுஷா! விண்ணுலகத்தில் வீற்றிருக்கும் தேவர்கள் எல்லோரிலும் முதல்வராகவும், மிகப் பெரியவராகவும், ஸர்வவல்லமையுள்ளவராகவும் விளங்கும் ஜோவ் தேவரின்மேல் ஆணையிட்டு நான் சொல்வதைக் கேள்!

இந்தச் சிதையில் நான் உன்னை வைத்து உனக்கு ஒரு பசும் புல் போர்த்த சமாதியைக் கட்டிப், புனிதமான உனது மயிரையும் கத்தரிக்கும் வரை, ஒரு சொட்டுத் தண்ணீராயினும் என்னை நாடாது! தொடாது! சிரத்தையுடனும் பக்தியுடனும் நான் உனக்குச் செய்யும் சடங்குகள், ஒருவேளை என்னுடைய துக்கங்களைத் சிறிது தணித்து எனக்கு ஆறுதலையுண்டாக்கலாம்! நானும் உயிர் தரித்து வரலாம்!

இந்த விருந்துக்காகத் தாமதிக்க வேண்டுமென்றோ இந்த விருந்தை யருந்த வேண்டுமென்றோ எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. என்றாலும், மனிதர்கள் அனைவர்க்கும் அரசே! தாங்கள் வற்புறுத்திக் கேட்டுக் கொள்வதால், நான் தங்களிஷ்டப்படி இங்குச் சிறிதுநேரந் தங்கி, இந்த விருந்தை யருந்தச் சம்மதிக்கின்றேன்.

நாளைப் பொழுது விடிந்தவுடன் அரசராகிய தாங்கள் ஒரு காரியத்தைக் கண்ணுங் கருத்துமாய்ச் செய்தல் வேண்டும். அதிலேயே தங்களது கவனம் செல்லல் வேண்டும். கிரீஸ்காரர்கள் அனைவரும் தங்களது வீரனது சிதையைச் சித்தப்படுத்தல் வேண்டும். அதற்காகக் காடுகளை யெல்லாம் வெட்டித் தாழ்த்த உத்திரவாக வேண்டும். என்றும் அகலாத நிழலின் கீழ் உறங்கி வரும் வீரர்களுக்கு அவ்வாறு சடங்குகள் செய்வது நமது மரபு. இவ்வாறு சடங்குகளனைத்தும் நிறைவேறிய பின், நமது வீரனது மண்ணுடல் கொழுந்துவிட்டுக் கொண்டு எரியும் தீக்கு இரையாக வேண்டும். அதன்பின், நம்முடைய சேனை சமுத்திரங்கள் தத்தம் இடங்களுக்குச் செல்லலாம்" என்றான்.

இவ்வாறு அவன் உரைத்த வசனங்களை அவர்களனைவரும் செவிசாய்த்துக் கேட்டு, அவ்வாறே செய்தனர். பசிப்பிணியையும் நீர் வேட்கையினால் உண்டாகிய வறட்சியையும் தீர்த்துக்கொண்டனர். நித்திரையும் செய்தனர். அன்றைய உழைப்பினால் தங்களுக்கு உண்டாயிருந்த அலுப்பையும் களைப்பையும் தீர்த்துக்கொண்டனர்.

அப்போது மஹானான பிலிதீசன் என்ன செய்துகொண்டிருந்தான்? அவன், பாறைகளை மோதி உடைந்துபோன அலைகள் ஓலமிட்டுக் கொண்டுவந்த கரையின் மேல் தனது உடலை நீட்டிப் படுத்துக்கொண்டு, தனக்குள்ளேயே அனுங்கிப் புலம்பிப் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தான்.

அப்பொழுது அவனுடைய இருமருங்கிலும், யுத்தப்பிரியர்களான மிர்மிடோனியர்கள் தங்களது அணிவகுப்பினின்றும் கலைந்து பிரிந்து, ஓரோரிடத்தில் நின்று வந்தனர். அங்குக் குழப்பமே நிறைந்திருந்தது.

துரோஜன் கோட்டை மதிலைச் சுற்றிச் சுற்றி ஹெக்டரை வேட்டையாடித் துரத்திக்கொண்டு சென்றபொழுது உண்டான

அலுப்பினுலும் சலிப்பினுலும் ஓய்ந்து போய்விட்ட அவனுடைய அவயவங்கள், அங்கிருந்த பசும்புற்றரையோரம் தொப்பென விழுந்துவிட்டன. கடைசியாக, அந்தக் கடலின் ஆழமான அடிப் பாகத்திலிருந்து எழுந்து உருண்டுருண்டு வந்த திரைகளின் மிருது வான ஓசையினுல் அவனது களேப்புத் தீர்ந்தபொழுது, அவன் சுக மாகத் தூங்கினுன். நித்திரைக் கடவுளும், அவனைத் தன் மிருது வான கரங்களில் தாங்கிக்கொண்டான். அவனது தளர்வெல்லாம் தீர்த்தான்.

அவ்வாறு தூங்குவதற்காக அவன் தன் கண்களை மூடிக் கொண்ட பொழுது, பத்திரகலுஷனது வாடின உருவம், அவன் முன் எழுந்து வந்தது, அது தன்னை நோக்கி எழுந்து வருவது போலவும் அவனுக்குத் தோன்றியது. பத்திரகலுஷன் உயிருட னிருக்கையில் அணிந்து கொண்டிருந்த ஆடைகள், உயரம், குரல், குளிர்ந்த பார்வை முதலிய அடையாளங்களுடனும் அவ்வுருவம் விளங்கியது. இவ்வாறு அவனுக்கு நன்ருய்த் தெரிந்திருந்த அந்த உருவம் அவனது தலேயின் மேல் உயரமாக வட்டமிட்டுக்கொண்டு பின்வரும் வசனங்களை யுரைத்தது :—

“ அகிலேசனும் தூங்குகின்ருனே? நான் உயிருடனிருக் கையில், அவன் என்னிடம் மட்டற்ற அன்பும் ஆதரவும் உள்ள வனைப் போல் நடித்தான்! தனது பிரிய நண்பனுன பத்திரகலுஷன் மறைந்து போனபின்பு, எனது நண்பனுன அகிலேசனும் தூங்கு கின்ருனே? நான் உயிருடன் இருக்கையில் அவன் என்னைத் தாங்கித் திரிந்தான். எனக்கு அளவிடற்கரிய நன்மைகளைச் செய் தும் வந்தான். இப்போது அவன் என்னை மறந்தே போய் விட்டான்.

நான் அந்தரத்தில் நிலேயின்றி அலேந்து திரிந்துகொண்டிருக் கின்றேன். என்னைக் கவனிப்பார் ஒருவருமில்லே; எனது பிணம் அடக்கஞ்செய்வாரற்று, வெள்ளேவெளேரென்று வெளுத்துக்கிடக் கின்றது! அதற்கு முறைப்படி அடக்கச் சடங்குகள் செய்ய வேண்டும். அப்போதுதான் அது பாதாள லோகங்களுக்கு நுழைந்து செல்லும். அதுகாறும், அது, தங்குமிடம் ஒன்றேனுமின்றி, அலேந்து திரிந்துகொண்டேயிருக்கும்.

அடக்கஞ் செய்வாரின்றி, அந்தகனது உலகில் நிலேயின்றிச் சுற்றிச் சுற்றிச் சுழன்று வரும் ஜீவன்களைப் பூதங்களும் பிரேதப் பிசாசுகளும் இடம்விட்டு இடம் ஓடித் திரியும்படித் துரத்திக் கொண்டே வருகின்றன வென்று நம் முதியோர் சொல்லக் கேட் டிருக்கின்ருேம். மீளாவுலகுக்குக் குறுக்காகவுள்ள ஆற்றைக் கடக்க அவை இடங்கொடுப்பதில்லே.

இந்த உதவி, நீ எனக்குச் செய்வதாகக் கைமேல் கைவைத் துச் சத்தியஞ் செய். நாம் அக் கரைக்கு மாத்திரம் சென்று சேர்ந்து விட்டோமெனில், அதன் பின் நமது ஆத்மாவானது அங்கிருந்து

திரும்பி இக் கரைக்கு வரவே வராது. எனது உடலைத் தகனம் செய்து, எண் திசையினின்றும் எழும் நெருப்பும் கடைசியாக ஆகாயத்தையளாவிச் சென்று விடுமாயின், அதன் பின், அகிலேசனும், அவனது நண்பனும், சந்திக்க மட்டார்கள். அதன் பின், நாம் நம் மனதுகளில் தோன்றும் எண்ணங்களை நம் அன்பர்களுக்கு அறிவிப்பது என்பதும் இல்லை.

இவ்வாறு சடங்குகள் நடைபெருவிடில், நாம் நம்முடைய அத்தியந்தப் பிரியர்களை விட்டுவிட்டு அகன்று, தன்னந்தனியராகப் பிதற்றிக் கொண்டு அலைந்து திரிவோம்.

நான் பிறந்தது முதல், என்னைவிட்டுச் சற்றும் விலகாமல் என்னைப் பற்றிக்கொண்டே வந்த எனது தலைவிதியானது, என்னை இவ்வுலகத்திலுள்ள மக்களினின்றும் பற்றிப் பிடித்துப் பிரித்து இழுத்துக்கொண்டு போய்விட்டது.

அந்தத் தலைவிதியானது உன்னையும் விடாது. உன்னையும் இழுத்துச் செல்ல வேண்டுமென்று அது காத்துக்கொண்டேயிருக்கின்றது. மஹா வீரனும், தேவர்களுக்குச் சமானமாக விளங்குபவனுமான நீயுங்கூட, துரோஜர்களுடைய கோட்டை மதில்களின் முன் விழப்போகின்றனை! அவ்வாறே உன் தலையிலும் எழுதியிருக்கின்றது.

ஆதலால், நான் சொல்வதைக் கேள். இதுகாறும் நான் சொல்லிய பிரகாரம், நேசபாசம் மாத்திரமன்றித் தலைவிதியும் நம்மிருவரையும் ஒன்ருகப் பிணைத்திருப்பதால், எனது அஸ்தியையும் உனது அஸ்தியுடன் அடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய். நாமிருவரும் இணைபிரியாமல் சேர்ந்தே வாழ்ந்து வந்தோம், ஒன்ருகவே வளர்ந்து வந்தோம். ஒரே வீட்டிலும் வஸித்து வந்தோம். ஒரே கலத்தின் முன் உட்கார்ந்து ஆகாராதிகளை அருந்தி வந்தோம். தேவமாதாகிய உனது அன்னை உனக்கு ஒரு பொற்கிண்ணத்தை அளித்துள்ளாள். அந்தப் பொற்கிண்ணத்தில் நம் இருவருடைய பஸ்மங்களையும் கலந்து, ஒரேயிடத்தில் அடக்கஞ் செய்யத்தக்க ஏற்பாடுகளைச் செய்!" என்றது.

அவ்வசனங்களைக் கேட்ட பொழுது அகிலேசன், "என் அன்ப! இது, நீதானு? இருள் சூழ்ந்த அந்தகனுடைய லோகங்களிலிருந்து பின்னுமொருமுறை திரும்பிவந்து இப்போது என் கண்முன் தோன்றுவது நீதானு? ஓர் உடன் பிறந்தானைக் காட்டிலும், என்னிடம் மேலான அன்புடையவனன்ருே? ஓர் ஆத்மாவின் மனக்குறைகள் அனைத்தையும் ஒழித்து அதற்குச் சாந்தியைத் தரத்தக்க சடங்குகள் அனைத்தையும் நாங்கள் செய்வோம். செய்தே ஆய்விட்டது என்று நிச்சயமாக நினைத்துக்கொள்.

பாவிப் பிள்ளாய்! இங்கே வா! நான் உன்னைக் கடைசியாக இன்னும் ஒருமுறை கட்டித் தழுவிக் கொள்ளட்டும்! ஒரு

முத்தம் தரட்டும்! இங்கே வா, ஒரு முறை கடைசியாக உன்னைத் தழுவியணைத்து எனது துக்கத்தை ஆற்றிக் கொள்ளுகின்றேன்'' என்றான்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே, அவன் பத்திரகலுஷனுடைய ஆவியைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுமாறு தன்னுடைய நீண்ட கைகளை மிகுந்த ஆவலுடன் நீட்டினான். ஆனால் அந்த ஆவியானது, அவன் கண் முன்னாக, ஓர் இலேசான புகையைப்போல் ஆகாயத்தில் பறந்து போய்விட்டது. அப்பொழுது தாழ்ந்த குரலில் அழும் ஓர் ஓசையும் அவனுக்குச் செவிப்புலனாயிற்று.

இவ்வாறு மனங்கலங்கி அவன் நித்திரைவிட்டு எழுந்தான். பொன் போன்ற நித்திரையின் பாசங்களைவிட்டு, விடுபட்டு விழித்து எழுந்தபொழுது, அவன் திடுக்கிட்டு ஆச்சரியமுமடைந்தான். உடனே அவன், தான் கிடந்த மணற்றரையினின்றும் எழுந்திருந்து, கவலையுடன் தனது கையை உயரத் தூக்கிக் கொண்டு, பின்வருமாறு ஆலோசனைகள் செய்யலானான் :—

“ இது உண்மைதான்! நிச்சயம் தான்! மனிதன் இறந்து போன பின்பும், அவனுடைய ஆசாபாசங்கள், அவனை விட்டு அகன்று போவதில்லை. அவற்றின் ஒரு பாகம் அவனை ஒட்டிக் கொண்டேயிருக்கின்றது. அவனது மனமானது அழிவில்லாதது, அது எஞ்சியே நிற்கின்றது. உடலின் ஆதாரமில்லாதிருந்தும், அவனது உருவம் அழிந்து போவதில்லை. அது காற்றைப் போலவும், கனமில்லாத நிழலாகவும் இருந்தே வருகின்றது.

அடுத்தாற் போல் நிகழ்ந்த யுத்தத்தில், தனது உயிரைத் துறந்த எனது நண்பனது ஆவியானது, இன்றிரவு, வாடின முகத்துடன், அழுது புலம்பிக்கொண்டு, என்னண்டை வந்து நின்றது. உயிருடனிருக்கையில் அவன் என்னுடன் பழகிவந்த பிரகாரமே, அந்த ஆவி எனக்குப் புலனாயிற்று. என்முன் வந்தது. ஐயோ, இது என்ன விபரீதம்! உருவத்தில் சிறிதும் பேதமில்லை. உருவத்திற்கு உயிர் மாத்திரம் இல்லை! அந்தோ, இது என்ன கஷ்டம்!'' என்றான்.

இவ்வாறு அவன் பேசிக் கொண்டிருக்கையில் அவனுடைய இரு கண்களும், தாரைதரையாகக் கண்ணீரைப் பொழிந்தன. அழுதழுது அக்கண்களிரண்டும் வீங்கிப் போயின.

அப்பொழுது ஞாயிறு பகவானும், இளஞ்சிவப்பு நிறங் கொண்ட தன்னுடைய கைவிரல்களுடன், அவ்விடம் தோன்றிக் கண்ணீர் வடித்துப் புலம்பி நனைந்து வாடியிருந்த சைனிகர்களின் முகங்களைச் சுட்டிக் காட்டினான். அவன், இறந்து வெளுத்துக் கிடந்த வீரனது முகத்தின் மீதும் தன்னுடைய கிரணங்களை வீசினான்.

இது இவ்வாறிருக்க, ஆகமன மஹாராஜன், சவச் சடங்கு களுக்கு வேண்டிய சிதையை யடுக்குவதற்கும், அதன் மேல் வைப் பதற்கும் வேண்டிய விறகு கொண்டு வரு நிமித்தம், கோவேறு கழுதைகளையும் வண்டிகளையும் பொறுக்கியெடுத்த வீரர்களுடன் அனுப்பினான். இந்தக் காரியத்தைப் பொறுப்புடன் செய்து வரு மாறு, அவன் மெரியோனுக்குக் கட்டளையிட்டான்.

அவர்கள், மரத்தை வெட்டுவதற்கான கோடரிகளையும், கனமான முட்டிகளை ஏற்றிக் கொண்டு வருவதற்கான ஆஞ்சான் கயிற்றையும், இன்னோரன்ன வேறு கருவிகளையும், உபகரணங் களையும் கொண்டு சென்றனர்.

முன்னணியில், கொழுத்த, பலமுள்ள கோவேறு கழுதைகள், அடிமேலடிவைத்துக் கொண்டும், நிதானமாக முன்னும் பின்னும் வழியைக் கவனித்துக் கொண்டும், பத்திரமாகச் சென்றன. அவை, குன்றுகளையும், சரிவுகளையும், செங்குத்தான காடுகளையும் பாறைகளையும் ஏறிச் சென்றன. மேடும் பள்ளமுமாகவும், கரடு முரடாகவுமிருந்த அந்தக் காட்டில் வளர்ந்து நின்ற புதர்களின் மேல் அவர்களுடைய வண்டிகள், தடதடவென்று சென்ற பொழுது, அவை கிலுகிலு, கடகட, வென்று ஒலியை யெழுப்பின. அப்போது அவ்வண்டிகளின் அச்சுக்கள் மோதுண்டு துள்ளிப் பாய்ந்தன.

அவ்வண்டிகளும், கோவேறு கழுதைகளும், ஆட்களும், மலையினின்று இறங்கி வந்த அருவிகள் பாயப் பெற்ற ஐடாமலையி லுள்ள விசாலமான அடவிகளை வந்தடைந்த பொழுது, அவர் களுடைய கோடரிகளின் சப்தம் உரத்துக் கேட்டது. அவை அக்காட்டு மரங்களை வெட்டிய பொழுது எழுந்த சப்தங்கள், பிரதித் தொனிகளைக் கிளப்பின. காடுகளின் நாற்புறமிருந்த ஓக்கு மரங்கள், தங்களது தலையை நீட்டிக் கொண்டு வேருடன் பெயர்ந்து விழுந்தன. அப்போது இருள் சூழ்ந்திருந்த புதர்களும், மரக் கூட்டங்களும், இடிபோல் உரத்து முழங்கின. அதன்பின், அவை, சலசல வென்று நெறிந்து முறிந்து, தடதட வென்று, இடி போல் திடீரெனக் கீழே விழுந்தன.

இவ்வாறு முறிந்து விழுந்த மரங்கள் சிதையின் மேல் அடுக்கி வைத்து எரிப்பதற்குத் தகுதியாக இருக்குமாறு, கிரேக்கர் கள், அவைகளின் கிளைகளையும் இலைகளையும் வெட்டிச் சீவினர் கள். மெதுவாய், நிதானமாய் நடந்துவந்த கோவேறு கழுதைகள் அந்தக் காட்டின் வழியே திரும்பி வந்தன. காடு வெட்டச் சென்ற திடமான வேலைக்காரர்களும், தங்களுக்கு இடப்பட்டிருந்த கட்டளைப்படிச் சமமான விறகுச் சுமைகளைத் தூக்கிக் கொண்டு கடலோரமிருந்த மணற்கரையை யடைந்தனர். அங்கு வந்தபின், மஹானான அகிலேசன் தங்களுக்குக் காட்டிய ஓர் இடத்தில், அவர்கள் தங்கள் தோள்களிலிருந்து அச்சுமைகளை யிறக்கினர். வருங்காலத்தவர், பத்திரகலுஷ அகிலேசர்களது சமாதியென்று

பக்தியுடன் வலம் வருமாறு நியமிக்கப்பட்ட, ஓர் இடத்தைச் சுற்றிலும், அவர்கள் தங்கள் விறகுச் சுமைகளை யிறக்கிவைத்தனர்.

அதன்பின், அந்த வீரன் தன் ஸைனிகர்கள் அனைவரும், ரதாரூடர்களாய்ச் சகலமான யுத்தக் கோலங்களுடனும் அங்கு வரவேண்டுமென்று ஆஞ்ஞாபித்தான். அவனது அந்த ஆஞ்ஞைப் பிரகாரம், சைனிகன் ஒவ்வொருவனும் பளிச்சென ஜ்வலிக்கும் ஆடையாபரணங்களை யணிந்துகொண்டும், தன்னுடைய ஆட்களுடனும் பிருத்தியர்களுடனும், தன் தன் இரதத்தின் மேல் ஏறிக் கொண்டான். இரதங்களனைத்தும் முன்னணியிற் சென்றன. அவை, தகதகவென்று மின்னிக் கொண்டு செல்லும் ஒரு நீண்ட கொடி போல் விளங்கின.

இரதங்களுக்கு அடுத்தாற்போல், காலாட் படைகள் சென்றன. அவைகள் சென்ற பொழுது மேகம் போன்ற புழுதிகள் எழுந்தன. அவை இருண்ட புகை போல் வானளாவி உயர்ந்து எழுந்து அந்த யுத்தக்களம் முழுவதையும் மறைத்து விட்டன.

இவைகளுக்குப் பின், மீந்திருந்த கிரேக்க கோஷ்டியினர் துக்கம் பாராட்டிக் கொண்டு வந்தனர்.

இவ்வாறு அனைவரும் இடுகாடு வந்து சேர்ந்த பொழுது, பத்திரகலுஷனது பிரேதமானது, அவர்களின் மத்தியில் ஒரு பாடையின் மேல் வைக்கப்பட்டது. அதன்பின் அவர்கள் அனைவரும் தங்களுடைய தலைகளிலிருந்து பிடுங்கிய ரோமங்களை அந்தப் பிணத்தின் மேல் எறிந்தனர்.

அடுத்தபடியாக, அகிலேசன், மகத்தான கிலேசத்துடன், அந்த வீரனது தலையைத் தன்னுடைய கைகளிரண்டிலும் தாங்கிக் கொண்டு, அங்கு நீட்டிக் கிடத்தப்பட்டிருந்த அந்த மஹானது தேகத்தின் மேல் குனிந்தான்.

அதன்பின் தகனம் செய்வதற்கு நியமிக்கப்பட்டிருந்த இடத்தில், அவர்கள் பத்திரகலுஷனை முறைப்படி ஒழுங்காக வைத்து, அவனைச் சுற்றிலும், காட்டிலிருந்து கொண்டுவந்த விறுகுகளைக் குவித்தனர்.

மஹானான அகிலேசன், அப்பொழுது ஓர் ஒதுக்கான இடத்தில் விலகி நின்று கொண்டு, கடவுளைத் தியானித்து வந்தான். பின்பு, அவன், புனிதமான ஸ்பெர்க்கியஸ் நதிக்குக் காணிக்கையாகச் செலுத்துவதாக வேண்டிக் கொண்டு, தனது இளம்பிராய முதல், மிகுந்த பயபக்தியுடனும் கண்ணுங்கருத்துமாகவும் வளர்த்து வந்த, பொன் போன்ற தன்னுடைய சுருட்டை மயிர்களைத் தனது தலையினின்றும் பற்றிப் பிடித்து, அவற்றின் ஒரு பாகத்தைப் பிடுங்கிப், பெருமூச்சு விட்டுக்கொண்டு தன்னெதிரிலிருந்த ஆழ்கடலில் அர்ப்பணம் செய்தான்.

பின்பு அவன், தனது உருண்ட கண்களால் அந்தப் பெருங் கடலைச் சுற்றி சுற்றி விழித்துப் பார்த்து, அடியில் வருமாறு பிரலாபித்தான் :— ஸ்பெர்க்கியஸ் தேவரே! தாறுமாருக அடித்து வரும் அலைகளிற் சிக்குண்டும், தனது பிறந்த தேசத்தின் கடற் கரையின் மேல் சுகமாகப் புரண்டும் வரும் ஸ்பெர்க்கியஸ் தேவரே! நாங்கள் இங்கிருந்து திரும்பி வந்தபின் தங்களுக்கு இந்தக் கேசங் களைச் சமர்ப்பிப்பதாகவும், நூற்றுக் கணக்கான காளைகளை பலி யிடுவதாகவும் வேண்டிக் கொண்டோம். எங்களது எண்ணம் நிறைவேறவில்லை. அது வீணுகிவிட்டது.

வெள்ளி போல் பளிச்சென்று விளங்கும் தங்களுடைய அலைகள் கொந்தளித்துக் கொண்டு எழும் தினத்தில், சுத்தி செய்து பவித்திரமாக்கப்பட்ட மண்டபங்களின் நிழலின் கீழ் விளங்கும் தங்களது ஸந்நிதியிலுள்ள வேதிகைகளை, நமது நாட்டிலுள்ள ஸகலவிதமான பரிமள புஷ்பங்களாலும் அலங்கரித்துத் தங்க ளுக்கு ஒன்றுகூடக் குறையாமல் ஐம்பது ஆடுகளை வெட்டி, அவற்றின் இரத்தத்தை வடித்துத், தங்களுக்கு நைவேத்தியம் செய்வதற்காக, என் தகப்பனரும் வேண்டிக் கொண்டார். அவரது வேண்டுதலும் வீணுகி விட்டது.

இனிமேல் அகிலேசன் தனதுதேசத்தைப் பார்ப்பது என்பது இல்லை! ஜன்ம தேசத்துச் சமவெளிகளை அவன் பார்க்கப் போவது இல்லை! அது நிச்சயந்தான். அந்த ஆசை வீணே ஆகிவிட்டது. இனி இந்த மயிர்களை என்ன காரியத்துக்காக நான் வளர்க்க வேண்டும்? இவற்றைப் பத்திரகலுஷனே பாதாள லோகங்களுக்குக் கொண்டு செல்லட்டும்!" என்ருன்.

இவ்வாறு, பத்திரகலுஷனது உடலின் மேல் குனிந்து பிரார்த் தனை செய்து கொண்டே, அந்த வீரன், தனது புனிதமான தலை மயிரை, அவனது குளிர்ந்த கையில் வைத்தான்.

அதன்பின், கிரேக்கர்கள், பின்னும் ஒரு முறை தங்களுக்கு நேர்ந்துவிட்ட கஷ்டங்களை நினைத்துப் பலவாருகப் பிரலாபித் தனர், துக்கித்தனர், கண்ணீர் வடித்தனர். அவர்களது துக்க மானது இத்துடன் அஸ்தமித்தே போயிருக்கும். ஆனல் அது அவ்வாறு முடியவில்லை.

அப்போது மஹானும் வீரனுமான அகிலேசன், நரபதியை நோக்கிப் பின் வரும் வசனங்களை யுரைத்தான் :—

"அதிரிதீசா! இது போதும்; இத்துடன் இதை நிறுத்து; சேனைகளெல்லாம் இளைப்பாறட்டும்; அழுது கொண்டிருக்கும் ஸைனிகர்களெல்லாம் தங்கள் தங்கள் இடங்களுக்குச் செல்லட் டும். சேனைத் தலைவர்கள் மாத்திரம் இந்தச் சிதையின் அருகில் இருந்தால் போதும். இனிமேற் செய்ய வேண்டிய கருமங்களை

நாமே செய்வோம். இந்த தேகத்தை நாமே தகனம் செய்வோம்" என்றான்.

அக்கணமே சேனைகளெல்லாம், தத்தம் கப்பல்களுக்குத் திரும்பிச் சென்றன. அதன்பின், இறந்தவனது அஸ்தியை அடக்கஞ் செய்துவர நியமிக்கப் பட்டவர்கள், அந்தக்களத்தில், திரிகோண வடிவத்தில், ஓர் உயரமான கோபுரத்தை நிருமித்தனர். நூறு அடி நீளமும், நூறு அடி அகலமும் கொண்ட அந்தக் கட்டிடமானது, ஓங்கியுயர்ந்து, நாற்புறமும் பரந்து வளர்ந்தது. அதன்பின் அந்தக் கோபுரத்தின் உச்சியில் அவர்கள் அந்த வீரனை பத்திரகலுஷனது பிரேதத்தை வைத்தனர்.

அதன்பின் நன்றாகக் கொழுத்திருந்த ஆடுகளையும், கன்னங்கரேலென்ற காளைகளையும் பத்திரகலுஷனது பிரேதத்தின் மேல் வெட்டினர். அவ்வாறு வெட்டப்பட்ட அம்மிருகங்களின் கொழுப்புக்களை அகிலேசன் அந்த வீரனது பிணத்தின்மேல் வைத்து, அதை நன்றாக மறைத்து, அம்மிருகங்களின் உடலில் மீந்த பாகங்களை அதைச் சுற்றிக் குவித்து வைத்தான். அதன்பின், அவன் தேனும் சுகந்த தைலங்களும் நிறைந்த குடங்களை அந்தச் சிதையைச் சுற்றிலும் தாழ்ந்து தொங்கும்படி கட்டினான்.

அப்பொழுது அதிபயங்கரமாக அழுது புலம்பித் தங்களது உயிரை வழங்கிய துரிதகதியையுடைய நான்கு குதிரைகள் அந்தச் சிதையின்மேல் எறியப்பட்டன. மேலும், பத்திரகலுஷனால் போஷிக்கப்பட்டு வந்த ஒன்பது நாய்களிலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட இரண்டு நாய்கள், தங்களது எஜமானது சமீபத்தில் நின்று அவனுடைய குற்றேவல்களைச் செய்து வருமாறு வெட்டித் தள்ளப்படடன.

இவையெல்லாம் ஆனபின்னர் பயங்கரமான ஒரு பெருத்த பலியும் இடப்பட்டது. அதைச் சொல்லவும் என்னுடைய மனதும் நாவும் கூசுகின்றன! சிறைப் பிடிக்கப்பட்டிருந்த துரோஜர்கள் பன்னிருவர் பட்டு விழுந்தனர்!

அதன்பின், சிதைக்கு நெருப்பிடப்பட்டது. அந்த நெருப்பானது அதிமும்முரமாகவும், உக்கிரத்துடனும் உயர்ந்தெழுந்து இவையனைத்தையுஞ் சுட்டுச்சாம்பராக்கி விட்டது. அது தனது பெரும் பசியையும் தீர்த்துக் கொண்டு விட்டது. பலியிடப்பட்ட மிருகங்களும், மனிதர்களும் இவ்வாறு ஒன்றாய்க் கலந்து கூடி ஒரே ஒரு பெரு நெருப்புக்கு இரையாகி விட்டனர்.

இவ்வாறு கொடிய கோரமான சவச்சடங்குகளைச் செய்து நெருப்பினின்றும் எழுந்து தன்னைத் தாக்கிய ஜ்வாலைகளினாலும், புகைகளினாலும், புழுதியும் அழுக்கும் படிந்தவனாக விளங்கிய அகிலேசன், ஓர் உயர்ந்த மேட்டினில் நின்று கொண்டு, தனது நண்பனது ஆத்மாவை முன்னிட்டு கேட்டோர் நடுங்கும்படி பின் வருமாறு உரத்துக் கத்தினான் :—

"பத்திரகலுஷா! எனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகுக! உனக்கு நேர்ந்த பழிக்குப்பழி யாரேனும் வாங்குவார்களா என்று ஏங்கிக் கிடந்தனையே! அந்த ஏக்கத்தினால், உனது ஆவியும், ஆலாய்ப் பறந்து கொண்டு ஒரு பிசாசுபோல் திரிந்து கொண்டிருந்ததே! நான் சொல்லப் போவதைச் சற்றுச் செவி சாய்த்துக் கேள்! அதனால் உனக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகும்! பாலை நிலமான புளூட்டோவின் கரையோரத்தில் சஞ்சரிப்பவளாயினும், நீ என்னுடைய வசனங்களைக் கேட்டுச் சந்தோஷமடைவாய்!

அகிலேசன், உனக்குக் கொடுத்திருந்த வாக்கைச் சற்றும் குறைவின்றிப் பூர்த்தியாக நிறைவேற்றியே விட்டான். உனது ஆத்மாவின் சாந்திக்காக, அவன் பன்னிரண்டு துரோஜர்களைப் பலி கொடுத்து விட்டான். அகிலேசன் இத்துடன் நிற்கமாட்டான். இந்தப் பன்னிரண்டு வீரர்களுக்கு விதித்த கதியினும் மிகக் கொடிய கதியையே, அதற்கு விதித்திருக்கின்றான். அது தகன ஸம்ஸ்காரங்கள் பெறாமல், பசித்துள்ள நாய்களுக்கு ஆகாரமாகப் போகின்றது. அந்நாய்கள் அவனது பிரேதத்தைக் கண்டதுண்டமாகக் கிழிக்கப் போகின்றன" என்றான்.

இவ்வாறு அவன் பேசிய பொழுது, அவனைச் சுற்றியிருந்தோர் அனைவரும் திடுக்கிட்டுப் பயந்து நடுங்கினர். ஆனால், அவனது மிரட்டும் உருட்டும் வீணே ஆயின. ஹெக்டரின் பிரேதத்தைத் தேவர்கள் கண்ணுங் கருத்துமாகக் காத்து வந்ததினால், அவனது எண்ணம் நிறைவேறாமற் போய் விட்டது.

விண்ணுலக வாஸியான வீனஸ் தேவியானவள், அச்சமயம் ஹெக்டரின் தலைக்கு நேராக உயர்ந்து வட்டமிட்டுக் கொண்டு வந்தனள். அவள் திவ்வியமான வாசனையுள்ளரோஜாப் புஷ்பத்தைப் போன்ற இளஞ்சிவப்புள்ள தைலங்களை அவன் மேற் பொழிந்து கொண்டு, அன்றைய இரவு முழுவதும், மறு நாளும், இடைவிடாமல் அவனைக் காத்து வந்தனள். அச்சமயம், அவனது உடலைக் கிழித்துத் தின்னவேண்டுமென்ற ஆவலுடன் அக்களத்தில் திரிந்து வந்த இரத்தப் பிரியமுள்ள வேட்டை நாய்களையும் அந்தத் தேவி துரத்திக் கொண்டே யிருந்தனள்.

புண்ணியஸ்வரூபியான பீபஸ் பகவானும் வீனஸ் தேவிக்கு இளைக்காமல், ஹெக்டரது தேகத்தைக் கண்ணுங் கருத்துமாகப் பாதுகாத்து வந்தார். சூரியனுடைய கிரணங்களாலும், சூரியனது வெப்பத்தினாலும் அவனுடைய நரம்புகளும் தசைகளும் வாடாமலிருந்து வரவும், அவனது மாம்ஸம் சுருங்கிப் போகாமலிருந்து வரவும் அவர் அவனைச் சுற்றிலும் நாற்புறமுமிருந்த காற்றுக்களை ஒரு திரைபோல் ஒன்றாய்த்திரட்டி, அவனைச் சுற்றி வளைத்துக் கட்டினார்.

இது காறும் பத்திரகலுஷன் கிடந்த சிதையானது புகையவுமில்லை. அதிலிருந்து நெருப்பு இருண்ட புகையுடன் கிளம்பவு

மில்லை. அகிலேசன், அதனருகில், அதைத் தொட்டாற் போல் நின்று கொண்டு பிரார்த்தனைகள் செய்து வந்தான். அவன், ஆகாய வீதியில் உலாவி வரும் தேவர்களை யெல்லாம் துதித்து வணங்கினான்.

மிருதுவான இளங்காற்றையடிக்கும் ஜீபர் தேவருக்கும், வடபுறமிருந்து கொடுங் காற்றையடிக்கும் போரியால் தேவருக்கும் தான் செலுத்துவதாகச் சங்கற்பித்துக் கொண்டிருந்த பலிகளை யெல்லாம் செலுத்தினான். நைவேத்தியங்களையும் வழங்கினான்.

பின்பு பத்திரகலுஷனுடைய சிதையிலிட்ட நெருப்பை ஊதி, மூட்டி, அதை வளர்க்குமாறு அவன் விண்ணுலகில் வீற்றிருக்கும் தேவர்களையெல்லாம் ஆகாய வீதியில் வந்து, தங்களது மூச்சைச் செலுத்துமாறு வேண்டினான்.

அவனுடைய பிரார்த்தனைகள், இறக்கைகளையுடைய ஐரிஸ் தேவியின் செவிக்கு எட்டின. அக்கணமே, அவள் விண்ணுலகத்திலுள்ள தேவர்களது சபா மண்டபத்தை நோக்கிப் பறந்து சென்றனள். அவள், வம்பும், வீணும் பேசுவதே காரியமாக ஸகலமான தேவர்களும், விருத்தரான ஜீபர் தேவரின் உயர்ந்த விசாலமான முற்றத்தில் வீற்றிருக்கக் கண்டனள். அவள், தனது வாகனமான, வர்ணந் தீர்த்த வில்லின்மேல் அமர்ந்த வண்ணம் அவர்களின் முன் பளிச்செனத் தோன்றினாள். அப்போது அந்த முற்றத்திற் பாவியிருந்த பாறைகளெல்லாம், பளப் பள வென மின்னின.

அவளைக் கண்டவுடன், விருந்துண்ண உட்கார்ந்திருந்த அந்தத் தேவர்களெல்லாம், ஒரேயடியாய் எழுந்திருந்து, அப்பொழுது நடந்து வந்த சடங்குகளில் சேர்ந்து கொண்டு, தங்களுடன் உணவருந்த வேண்டுமென்று அந்தத் தேவியை வேண்டினர். அந்தக் கோஷ்டியிலிருந்த ஒவ்வொருவரும் அந்தத் தேவியைத் தனித் தனியாக வேண்டிக் கொண்டனர். ஆனால் அந்தத் தேவிஅவர்களது வேண்டுகோளுக்கு இணங்கவில்லை.

அவள், "உங்களது விருப்பத்தை நிறைவேற்ற என்னால் இயலாது. புனிதனான ஓஷன் பகவானையும், பாதாளலோகத்திலிருந்து திரண்டு வரும் ஜலகண்டங்களையும், காணவேண்டுமென்ற எண்ணத்துடன் நான் விரைந்து செல்கின்றேன். சிறிதும் தோஷமற்றவர்களான இத்தியோப்பியர்கள், நெடுந்தூரத்திலுள்ள சமுத்திரத்தின் கரையோரத்தில் பச்சைப் பசேலென்று விளங்கும் ஓரிடத்தில் இந்தச் சமயத்தில், நூற்றுக்கணக்கான காளைகளை வெட்டிப் பலியிட்டு வருகின்றனர். அதைப் பார்ப்பதற்காக, தேவலோக வாசிகளெல்லாம் வந்திருக்கின்றனர். அவர்களுடன் அமர்ந்திருந்து நானும் சுகமாக விருந்துகள் அருந்தப் போகின்றேன்.

இங்கு பிலியஸ்ஸின் புத்திரன், மேற்கிலிருந்தும் வடக்கி லிருந்தும் அடித்து வரும் மாருதங்களுக்கல்லவோ நைவேத்தியங் கள் ஸமர்ப்பிக்கின்றான்! அக்காற்றுகள் நன்றாக அடிக்கவேண்டு மென்று அவைகளைப் பிரார்த்திருக்கின்றான். பத்திரகலுஷனது சிதையின்மேல் உங்களது கவனத்தைச் செலுத்துங்கள். மருத் துக்கள் அவன்மேல் அடித்து வரவேண்டுமென்று வேண்டிக் கொள்ளுங்கள். அவை அவன்மேல் அடிக்கட்டும். நீங்கள் வழங் கும் அதிதிவ்யமான வரிசைகளையும், கொழுந்து விட்டுக் கொண்டு எரியும் நெருப்பைப்போல் தகதக வென்று ஒளியுடன் விளங்கும் காணிக்கைகளையும் எடுத்துக்கொண்டு அந்த மருத்துக்கள் ஆகாய மளாவிச் சென்று அவற்றை அங்குள்ள தேவர்களிடம் சமர்ப் பிக்கட்டும்!" என்றாள்.

இந்த வசனங்களை யுரைத்துக் கொண்டே அவள் அதி விரைவில் அவர்களுக்குக் கட்புலனாகாமல் மறைந்து விட்டனள். அக்கணமே சகலமான மருத்துக்களும், ஒரு பெரும் புயல் போல் எழுந்து ஒன்றாய்த் திரண்டு எழுந்து வந்து பத்திரகலுஷன் மீது அடித்தன. அந்தப் பெருங் கடுங் காற்றானது, இடி முழக்கத் துடன் அடித்த பொழுது, மேக ஜாலங்கள் குவியல் குவியல்களாக எழுந்து முன் வந்து ஒன்றோடொன்று மோதிக் கொண்டன. இவ் வாறு ஆகாய மண்டலத்தினின்று பூமண்டலத்தை நோக்கிக் குனிந்து வந்தபெருஞ் சமுத்திரத்தைச் சந்தித்து உறவுகொண்டாட வேண்டும் என்ற ஆவலுடன் பூமண்டலத்ததிலுள்ள சமுத்திரங் களின் ஆழமான இடங்களிலிருந்த ஜலத்திரைகள் மலைகள் போல் வெதும்பி யெழுந்தன.

அச்சமயம், அந்தப் பெருங்காற்றையும் புயலையும் தாங்க மாட்டாமல், ட்ராய் நகரத்துக் கோட்டை மதில்கள் அதிர்ந்து அசைவுற்றன. கடைசியாக அந்தப் புயலானது, அதி வேகத்துடன் பத்திரகலுஷனுடைய சிதையைத் தாக்க, அந்தச் சிதையானது ஆர்ப்பரித்துக் கொண்டு எரிந்து வந்த பெரு நெருப்பில் கலந்து நறநறவென்று வெடித்தது. இவ்வாறு அன்றைய இரவெல்லாம் அந்த நெருப்பானது ஆகாயத்தை யளாவிக் கொண்டு தாராளமாக எரிந்து கொண்டு வந்தது.

அகிலேசனும், அந்த இரவு முழுவதும் பத்திரகலுஷனது ஆத்மாவானது, சாந்தி யடைய வேண்டு மென்ற ஆவலுடன், ஒரு பொற் கிண்ணத்திலிருந்து தைல திரவியங்களை யெடுத்து ஆகுதிகள் செய்து வந்தான். உற்றார், உறவினர் ஒருவருமின்றி அநாதையாகிவிட்ட ஓர் ஏழைத் தகப்பன் தனது ஏக புத்திரனை யெரித்து விட்ட சாம்பரின் மீது விழுந்து அழுது புலம்புகையில், எவ்வாறு அவன், கடைசியாக எஞ்சி நின்ற ஓர் எலும்பைச் சிறிது களிப்புடன் எடுத்துத் தீயிலிட்டுச் சுட்டு, அதையும் சாம்பராக்கிக் கிண்ணத்திலிட்டு, அடக்கஞ் செய்யும் வரைக் கண்ணீரைப் பெருக்கி வருவனோ, அவ்வாறே அகிலேசனும் அந்தக் கடற்கரை யைத் திரும்பத் திரும்பச் சுற்றிக் கொண்டு வந்தான். அன்றைய

இரவெல்லாம், அவன் அவ்விடத்திலேயே இருந்து கழித்தான். அந்த நெருப்புகள் எரிந்து வருவதையும் பார்த்துக் கொண்டே வந்தான். கடைசியாக நெருப்பும் தணிந்து போய் விட்டது.

அப்போது அருணோதயமும் ஆய்விட்டது. காலை நக்ஷத்திரமும், இரவின் திரைகளை நீக்கிக் கொண்டு முன் வந்து, பிரகாசம் மிகுந்த தினகரனது வரவை அறிவித்தது. அந்த நக்ஷத்திரத்தின் மேலேயே அதைத் துரிதமாகத் தொடர்ந்து கொண்டு, அரோராவின் வெப்பமுள்ள கிரணங்களும், 'வந்தோம், வந்தோம்!' என்று துரிதமாக ஓடிவந்து பொன்மயமாகிய பகலொளியை அந்தப் பரந்த கடலின் மேற் பொழிந்தன.

அப்போது நெருப்பின் ஜ்வாலையும் அடங்கிவிட்டது. கிரீச்சுக் கிரீச்சு என்று கத்திக் கொண்டிருந்த காற்றுக்களும், புயல்களும், தங்கள் தங்களுடைய குகைகளை நோக்கித் திரும்பிச் சென்று விட்டன. அந்த மருத்துக் கணங்கள் தங்களது உறைவிடமாகிய திரேஸியாக் கடலை நோக்கிச் சென்ற பொழுது, அந்தக் கடல் நீர்களெல்லாம், அவைகள் சென்ற வழியே இடித்து முழக்கிக் கொந்தளித்தன.

பின்பு அகிலேசன், தனது அழுகையை நிறுத்திவிட்டு, அந்தச் சிதை வைக்கப் பட்டிருந்த இடத்தினின்றும் அகன்று சிறிது தூரஞ் சென்று சுகமாகத் தூங்கினான்; களைப்பாறினான். அவனது துக்கமும் ஒருவாறு ஓய்ந்தது. அவ்வளவில், கிரேக்கர்களனைவரும் திரண்டு வந்து, அவனை வளைந்து கொண்டு நின்றனர். அப்போது உண்டான சந்தடியினால் அவனது தூக்கம் கலைந்து போய் விட்டது. அவனும் தனது கண்ணை விழித்துக் கொண்டான்.

இவ்வாறு அரைத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்ட அவன், தன் கண்களைத் துடைத்துக் கொண்டு அவற்றைச் சுழற்றி வந்த அந்த அரைத்தூக்கத்தையும் விலக்கி விட்டுத் தன்னெதிரில் நின்றவீரர்களை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

" அக்கேயன் மரபினரான அரசர்களே! அரசிளங்குமரர்களே! நாமனைவரும், முதன் முதலாகச் செக்கச் சிவந்த சாராயத்தைக் குடித்து விட்டு, நம்மை வருத்தி வாட்டும் இந்தக் கொடிய துக்கத்தைத் தணித்துக் கொள்ளுவோம்.

பின்பு, சவச்சடங்குகளுக்கு ஏற்பட்ட முறைப்படி, நமது வீரனது எலும்புகளை அதி ஜாக்கிரதையுடன் பொறுக்கியெடுப்போம். அவை இந்தக் குவியலில்—இதன் மத்தியில்—தனியாகவும், வெளிப்படையாகவும் கிடக்கின்றன. நமக்கு எளிதிற் கட்புலனாகின்றன. அவற்றை நாம் எளிதிற் கண்டு எடுத்து விடலாம். அவனுடைய எலும்புகளிற் சில அவனுடன் நாமெரித்த குதிரைகள்

எலும்புகளுடனும் மனிதர்களுடைய எலும்புகளுடனும் அந்தச் சிதையின் ஓரமாக நாற்புறங்களிலும், ஒன்ருேடொன்று கலந்து கிடக்கின்றன.

நமது பத்திரகலுஷனுடைய அஸ்திகளை, நாம் இரண்டாய் மடித்த வலைகளில் வைத்துக் கட்டி ஒரு பொற் கிண்ணத்தில் அடுக்கி வைக்க வேண்டும். நான் அவனைப் பின் பற்றிப் பாதாள லோகத்திற்குச் செல்லும் வரை, அவை அங்கேயே யிருத்தல் வேண்டும். அவைகளுக்கு முறைப்படி வழிபாடுகளும் சடங்குகளும் நடக்கவும் வேண்டும். அந்தக் காலத்தை முன்னிட்டு, அவனுக்கும் எனக்கும் பொதுவாக, இந்த மணலின் மேல் ஓர் அதிசாமானியமான சமாதியை பயபக்தியுடன் கட்டுங்கள்.

இப்போது இது போதும். பிற்காலத்தில் வரும் கிரேக்கர்கள், இவனுக்கு அதிக கம்பீரமான ஒரு கட்டிடத்தைக் கட்டுவார்கள். நாம் இவனுக்குச் செய்த மரியாதைகளையும், அவர்கள் தங்களுடைய காவியங்களில் குறிப்பிடுவார்கள் !" என்ருன்.

கிரேக்கர்கள் அனைவரும் அவன் சொன்ன வண்ணமே செய்தனர். பத்திரகலுஷனது சிதையின் நாற்புறமும், உயர்ந்து தகதகவென்று கொதித்துக் கொண்டிருந்த தணல்களின் மேல், அவர்கள் கன்னங்கரே லென்ற சாராயத்தைத் தாராளமாகப் பொழிந்தனர். அப்போது அந்தத் தணல்கள் அணைந்து சாம்பராகிக் குவிந்து தணிந்து விட்டன. அதன்பின், அகிலேசனுடன் சேர்ந்து துக்கித்து அழுது வந்த அவனுடைய தோழர்கள், தங்களுடைய கண்களினின்று நீரைச் சொரிந்து கொண்டு, பத்திரகலுஷனுடைய எலும்புகளை பொறுக்கியெடுத்து, அவற்றை ஒரு பொற் கிண்ணத்திலிட்டனர். பின்னர், அவர்கள், பத்திரகலுஷனது பவித்திரமான அஸ்திகளைக் கொண்ட அந்தக் கிண்ணத்தை ஒரு வஸ்திரத்தால் மூடிக் கொண்டு தங்களது கூடாரத்துக்குத் தூக்கி யெடுத்துச் சென்றனர். அதன்பின் அவர்கள் பத்திரகலுஷனுக்கு ஓர் உயர்ந்த சமாதியையும் எழுப்பினர் ; அவனது பிரேதத்தை வைத்துச் சுட்ட இடத்தைச் சுற்றிலும் நாற்புறமும் ஆழமான பள்ளங்களைத் தோண்டி, அங்கு அஸ்திவாரமுங் கட்டினர். அதன் மத்தியில் ஏராளமான மண்ணையும் மலைபோல் குவித்தனர். இவ்வாறு இறந்தவனுக்குச் சமாதியைக் கட்டி முடித்தனர்.

இவையெல்வாம் முடிந்தபின், சேனைத் தலைவனை அகிலேசன், தேனீக்கள் போல் மொய்த்துக் கொண்டு திரண்டு வந்த ஸைனிகர்களை அவ்விடத்தில் நிறுத்திப் பின், அவர்களுக்குத் தலைமை வகித்து அவர்களை விசாலமான சமவெளிகளுக்கு மத்தியில் கூட்டிச் சென்று, அங்கு அவர்களை வட்ட வடிவில் அணிவகுத்து நிறுத்தினுன்.

அதன்பின், ஈமக்கடன்களுக்கு இறுதியில் செய்யப்படும் பந்தய ஆட்டங்களுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. கிரேக்கர்

களுடைய கப்பல்களிலிருந்து காளைகளும், கோவேறு கழுதைகளும், கம்பீரமான தோற்றத்தையுடைய பந்தயக் குதிரைகளும், அணி யணியாய், நிரை நிரையாய் வந்தன. கிண்ணங்களும், முக்காலி களும் வந்தன. ஜோதிமயமாகப் பிரகாசித்த பித்தளைப் பாத்திரங் களும், அப் பாத்திரங்களினும் மிக்க பிரகாசத்துடன் விளங்கிய பெண்மணிகளும் வந்தனர்.

புழுதி நிறைந்த அந்தப் பந்தயச் சாலையில், ஓடிக் கெலிக்கும் வல்லோர்க்கு வழங்குவதற்காக நியமிக்கப்பட்ட பரிசுகள் அங்கு முன்னணியில் வைக்கப்பட்டன.

ஸர்வ ஸௌந்தர்யங்களும் ஒருங்கே பொருத்தமாக அமையப் பெற்றவளும், தையல் வேலையில் தேர்ந்தவளும், தறியில் தளராது உழைத்து வரப் பழகியவளுமான ஒரு ஸ்தீரியும், இருபதுபடி கொள்ளக் கூடியதும், பளிச் சென்று மின்னும் இரண்டு பிடிகள் உள்ளதுமான ஒரு வாயகன்ற கிண்ணமும் இந்தப் பந்தயத்தில் கெலிப்பவர்களுக்கு முதற் பரிசாக நியமிக்கப்பட்டன.

கோவேறு கழுதையுடன் கலந்து சூல் கொண்டதும், நுகத்தில் அதுவரைக் கட்டப்படாததும், மனிதரால் பழக்கப்படா ததுமான ஒரு பெண் குதிரையானது இரண்டாம் பரிசாகக் கொடுப் பதாக நியமிக்கப்பட்டது.

பேதைப் பருவம் நீங்காததும், காமவேட்கையறியாததுமான ஒரு பந்தயக் குதிரையானது மூன்ருவது பரிசாக வைக்கப்பட்டி ருந்தது. அது தாராளமான நான்கு கை உயரமுள்ளதும் அதிகம் பீரமாகப் பளபளப்புள்ளதுமாக விளங்கியது. இரண்டு பொன் தாலந்து நாணயங்கள் நான்காம் பரிசாக வைக்கப்பட்டிருந்தன. கடைசியாக, ஐந்தாம் பரிசாகக் கொடுப்பதற்கு ஒரு ஜோடி வாய கன்ற கிண்ணங்களும் வைக்கப்பட்டிருந்தன. இவையனைத்தையும் அழகாகவும், ஒழுங்காகவும் அந்தக் களத்தில் அதனதன் இடத் தில் அமர்த்தி வைத்துவிட்டு, வீரனை அகிலேசன் தனது இடத்தை விட்டுப் பெயர்ந்து எழுந்து நின்று கொண்டு, தன்னு டைய பரிவார ஜனங்களை நோக்கிப் பின்வருமாறு வசனங்களை யுரைத்தான் :—

“வீரர்களே! கிரேக்கர்களே! பந்தயக் குதிரைகளை யடக்கி யாளுந் திறமையுடைய வீரர்களுக்குப் பரிசாக அளிப்பதற்காக, நான் தீர்மானித்து வைத்திருக்கும் இந்த வஸ்துக்களைப் பாருங்கள்.

நம்முடைய அழிவற்ற குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு நாமும் இந்தப் பந்தயத்தில் இறங்கி விட்டால், இந்தப் பரிசுக ளனைத்தையும் நாமே அடைந்து விடுவோம். வேறு ஒருவராலும் இவற்றை அடையமுடியாது. நம்முடைய குதிரைகள் ஒப்பும் உவமையுமற்ற ஒரு மரபினில் பிறந்தவை. இவற்றை சமுத்திர

ராஜன் பிலியஸ்ஸுக்குக் கொடுக்க, அவர் தமது மகனுன எனக்கு அளித்தார். ஆனுல் நமது திறமையைக் காட்டுவதற்கு இது சமய மல்ல. துக்கம் கொண்டாடிவரும் இந்நாளில், நாமும் இந்தப் பந்தயங்களில் கலந்துகொள்ளுமாறு அந்தக் குதிரைகளைக் கொண்டு வருவதும் அழகல்ல.

அவற்றின் பிடரிமயிர்களை வாரியலங்கரித்து வந்தவனும், அவைகளின் வழவழப்பான கழுத்தை நீவித் தடவிக்கொடுத்து வந்தவனுமான பத்திரகலுஷன் போய் விட்டானே! மனிதர் களாகிய நம்மைப்போலவே, அவைகளும் இந்தத் துக்கத்தைப் பாராட்டிக்கொண்டு வாட்டத்துடன் ஒதுங்கி நிற்கின்றன! அவை இந்த மணலின்மேல் விழுந்து, அழகு பொருந்திய தங்களுடைய சிரோ பூஷணங்களை விரித்துக்கொண்டு புரளுகின்றன.

ஆதலால் தங்களுடைய குதிரைகள் கெலிக்கும், தங்க ளுடைய இரதங்கள் காற்றுய்ப் பறக்கும் என்ற நம்பிக்கையுள்ள ஜனங்களே இந்த விசேஷமான பந்தய ஆட்களுக்குப் பிரயத் தனங்கள் செய்யட்டும்; முன் வரட்டும்!" என்றுன்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட வீரர்களனைவரும், இந்தப் பந்தயத்தில் இறங்க வேண்டுமென்று பொங்கிக்கொதித்து, ஆத்தி ரத்துடன், தத்தம் இடங்களினின்றும் எழுந்தனர்.

முதன் முதலாக, அதிவிரைவாக ஓடும் குதிரைகளையுடைய வன் என்றும் உயர்ந்து துள்ளிக் குதித்து ஓடும் துரகங்களை அடக்கக் கூடியவன் என்றும் பியரியா நாடெங்கும் பிரசித்தியுடன் விளங் கியவனுகிய யூமிலஸ் என்பவன் தனக்கே முதற்பரிசு கிடைக்கும் என்று எண்ணிக்கொண்டு முன் வந்தான்.

அவனைப்போலவே சிறிதும் இளையாத ஆத்திரத்துடனும் ஆவலுடனும், டிராஸ் நாட்டுக் குதிரைகளை அதிவிரைவாக ஓட்டிக்கொண்டு திடிதீசன் தடதடவென்று முன் வந்தான். அக் குதிரைகள் இந்த யுத்தத்தில் சிறிது பொழுதுக்கு முன்னர்த்தான் தங்களது தலைவனுக்கு உழைத்து வந்தவை. அப்போது அவற்றில் ஒன்றையேனும், அந்தத் தலைவனது கையினின்று பற்றிப் பிடுங்க ஒரு தேவனுலுங்கூட இயலாமற் போய்விட்டது!

அதன்பின், மனேலாஸனுனவன், பொடார்கஸ் என்னுங் குதிரையையும், இராஜாதிராஜனது பிரஸித்திபெற்ற பந்தயக் குதிரையையும் கொண்டு வந்தான். ஈத்தி என்ற பெயருடைய அந்தக் குதிரையைத் தனவானுன ஈச்சிப்போலஸ் என்பவன் ஆகமனனுக்கு அளித்திருந்தனன். அந்த ஈச்சிப் போலஸ் மிகுந்த தனவானுக விளங்கி வந்தானேயன்றிச் சிறிதும் தைரியமில்லா தவன். அழியாப் புகழ் பெறுவதைக் காட்டிலும், இழிவைத்தரும் பணத்தைச் சேகரிப்பதே மேலானது என்று நம்பினவனுய், அவன் இந்தக் குதிரையை மாத்திரம் ஆகமனனுக்குக் கொடுத்துவிட்டு,

இந்த யுத்தத்தில் சேர்ந்து கொள்ளாமல், தனது காலத்தைச் சுகமாகத் தனது வீட்டிலேயே கழித்து வந்தவன்!

அவனுக்குப்பின், அந்திலோக்கஸ் என்பவன், தனது பைலியக் குதிரையைத் தட்டிக்கொடுத்து உத்ஸாஹப்படுத்திக் கொண்டு முன் வந்தனன். அப்போது அவனது மார்பு படபட வென்று துடித்தது. அனுபவம் மிகுந்த நெஸ்டார், தனது மகனை அவனுக்கு அக்குதிரையின் கடிவாளக் கயிறுகளைக் கொடுத்துச் சமயோசிதமான புத்திமதிகளையுமுரைத்து அவனது ஆத்திரத் தைத் தணித்தார். அதிவிருத்தரான அவர் பயனற்ற வசனங்களை யுரைக்கவுமில்லை; புத்திமானான அவரது மகன் அவற்றை அலக்ஷ் யம் செய்யவுமில்லை. அவருடைய வசனங்களை அவன் கவனமாகக் கேட்டு வந்தான் :—

"எனது மகனே! பயமறியாத ஓர் இளங்கன்றைப்போல், நீ ஆத்திரப்பட்டுத் துடித்து வந்தாலும், நீ நம்முடைய தேவர் களது அன்பிற்குப் பாத்திரனாகவும், சகலகலைகளையும் கரை கண்டவனாகவுமே விளங்குகின்றனை! கலைமகளின் கருணைக்குப் பாத்திரனாகவும் விளங்குகின்றனை! காற்றைப்போற் பறக்கும் சக்க ரத்தை இலக்கைச் சுற்றி விரைவாக ஓட்டுந் திறமையை நெப் தியூன் பகவானும் ஜோவ் தேவரும் உனக்கு அளித்திருக்கின்றனர். உலகத்தில் உள்ள மற்றைய ஜனங்களுடன் நீ எவ்வாறு ஒழுகி வரல்வேண்டும் என்று நான் உனக்குப் புத்திசொல்ல வேண் டுவது அவசியமில்லை.

இப்பொழுது என்னுடைய குதிரைகள் மெல்ல மெல்லத் தான் நடக்கின்றன. அவற்றின் விசை ஓய்ந்து போய்விட்டது. உன்னுடன் போட்டிக்கு வருபவர்கள் விசையுள்ளவர்கள் என்ற பிரஸித்திபெற்றவர்களாக விருக்கினும், நீ அவர்களைக் கண்டு சிறிதும் பயப்படவேண்டாம். அவர்களுடைய யோசனைகளையும் நோக்கங்களையும் பலாபலங்களையும் நீ உன்னுடைய யோசனைகள், நோக்கங்கள், பலாபலங்களுடன் சீர் தூக்கி ஆராய்தல் வேண்டும்.

தந்திரங்களினாலும், யுக்தியினாலும், புத்தியினாலுமன்றிப் பலத்தினாலும், சக்தியினாலும் மாத்திரமே பரிசுகளைப் பெறுவது முடி யாத காரியம். ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு என்பது உண்மை யான பழமொழி.

கைப் பழக்கமுள்ள ஒரு மரவேலைக்காரன் யுக்தியினாலும் தந்திரங்களினாலுமன்றோ, ஓக்கு மரங்களை வழவழவென்று இழைக் கின்றான்! அவன் அந்த மரத்தை வெட்டெனவும், மெத்தெனவும் அடித்துப் பிளப்பதில்லை. அவனைப் போலவே ஒரு மாலுமியும், பொங்கிக் கொதிக்கும் ஆழ்கடலில், பெரும் புயலானது ஊளை யிட்டுக்கொண்டு வருகையில், தனது உபாயத்தினாற்றான் தனது கப்பலை நிர்ப்பயமாய் ஓட்டிச் செலுத்துகின்றான்.

இவர்களைப் போலவே, யுக்திகளையும் தந்திரங்களையும் கையாள்பவனே பந்தயங்களில் கெலிக்கின்றான். கீர்த்தியுடனும் விளங்குகின்றான். ரதங்களையும், துரகங்களையும் மாத்திரம், நம்பியிருப்பவர்களுக்கு வெற்றி கிடைப்பது அதிதுர்பலம். அது கிடைக்கவே கிடைக்காது. அவர்கள் தங்களது கைக்கு அடங்காத, பழக்கமில்லாத குதிரைகளைச் சவாரி செய்துகொண்டு இலக்கை நோக்கி ஓடுவார்கள், குதிரையோடும் பாதை அகன்றதா அல்லது குறுகியதா என்று அவர்கள் ஆலோசிப்பதில்லை. இவ்வாறு, முன் யோசனையோ, செய்தொழிலிற்றிறமையோ இன்றி, அவர்கள் இந்தப் பந்தயங்களில் இறங்கித் தோற்றுப் போகின்றனர். அவர்கள் படும்பாடு, வீணேயாகின்றது.

ஆனால், புத்திசாலியும், சவாரி செய்வதில் சமர்த்தனுமான ஒருவனிடம் அதி சாமான்யமான குதிரைகளே யிருப்பினும், அவன் தைரியமாகப் பந்தயத்துக்குச் சென்று அதில் நிச்சயமாய்க் கெலித்தே விடுகின்றான். அவன் தனது கண்ணை இலக்கின் மேலேயே அசையாமல் வைத்துக்கொண்டு, தன் முன்னால் நெடுந்தூரம்வரைக் காணும் பந்தயச் சாலையையே கவனித்து வருகின்றான். குதிரையின் கயிற்றையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, அதைத் தான் நினைத்த வழியிலேயே செலுத்துகின்றான். சமயோசிதமாக அந்தக் கயிற்றை இழுத்துப் பிடித்துக் கொள்ளுகின்றான், அல்லது தளர்த்தி விடுகின்றான். இவ்வாறு குதிரையை நடத்தி வருகையில், அவன் தனது இலக்கின்மேல் கண்ணுங் கருத்துமாகவே இருந்து வருகின்றான். பந்தயச் சாலையில் எல்லோருக்கும் முன்னாகச் செல்பவனை, அவன் இடைவிடாமல் கவனித்துக் கொண்டும் வருகின்றான்.

ஆதலால் உனது இலக்கு இன்னது என்பதை நீ சரியாகக் குறித்து வைத்துக் கொள். அது இலகுவிலேயே காணக்கூடியது தான். அதோ! அங்கு, அழிந்து பட்டுப்போன ஒரு பழைய மரத்தின் அடிப்பாகம் பூமிக்கு மேல் ஒரு முழம் உயரமாகத் தெரிகின்றது பார்! அதுதான் இலக்கு.

அது, முற்காலத்தில் அதிகம்பீரமாக விளங்கி வந்த ஒரு ஓக் மரத்தின் மீந்த பாகமாக இருத்தல் வேண்டும், அல்லது புயற்காற்றில் அடிபட்டு அடியோடு அழிந்துபோகாமல், அடிப்பாகத்துடன் மட்டும் நின்றுவரும் உறுதியான ஒரு தேவதாரு மரமாக இருத்தல் வேண்டும். நெடுந்தூரம் வரைக்கும் உயர்ந்து விளங்குமாறு, அதைச் சுற்றிலும், ஒரு கற்கோட்டை கட்டப்பட்டிருக்கின்றது. அந்தக் கற்கோட்டையைச் சுற்றிலும், சக்கரங்களின் மேல் இயங்கும் இரதங்கள் செல்வதற்கான ஒரு பாதையும் இருக்கின்றது. ஒருக்கால் இது முன்னாளில் இறந்து போனவர்களுக்குக் கட்டப்பட்ட ஒரு சமாதியாகவிருக்கலாம். அல்லது முற்காலத்திலும், தற்காலத்தில் போலவே, ஒரு பந்தய இலக்காக விளங்கி வந்திருக்கலாம்.

இதன் மேலேயே இடைவிடாமல் கண்ணுங்கருத்தும் வைத்தவனாய், உனது இடப்பக்கமுள்ள குதிரையின்மேல் சிறிது சாய்ந்துக் கொண்டு, நிதானமாக முன் செல்வாயாக. உனது வலது புறத்துக் குதிரையின் கயிற்றைத் தாராளமாகத் தளர்த்திவிட்டுக் கொண்டு, அதனைத் துரிதமாக ஓட்டு; அப்பொழுது நீ உனது கையினால் மற்றைய குதிரையின் கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருப்பாயெனில், அது தனது தலையைக் கொஞ்சம் திருப்பும். கடைசியாக, உன்னுடைய தேர்ச் சக்கரங்கள் இந்த இலக்கைச் சுற்றிக்கொண்டே உருண்டு செல்லும். அப்போது அந்தத் தேர்ச் சக்கரங்களின் உருண்டையான குடமானது, அந்த இலக்கைத் தேய்த்துக் கொண்டே அப்பால் செல்வது போலும் தோன்றும். என்றாலும், உன்னுடைய தேருக்கும் குதிரைகளுக்கும் ஒருவிதமான தீங்கும் நேரிடாதிருக்குமாறு, நீ மலைபோல் குவிந்துள்ள அந்தக் கற்களை விலகியே, உனது இரதத்தை ஓட்டிச் செல்லவேண்டும். சிறிது கவனக் குறைவினால் மாத்திரம், நீ தவறிக் கீழே விழுந்து விடுவாயானால், அப்பொழுது பிற ஜனங்களுக்கு மகிழ்ச்சியும் எனக்கு இகழ்ச்சியுமே உண்டாகி விடும்.

மிகுந்த ஆத்திரத்துடன் உனக்குப் போட்டியாக வருபவன், தெய்வமரபில் வந்ததும், அட்ராஸ்டஸ் என்பவனை ஏற்றிக் கொண்டு சென்றதுமான ஒப்பற்ற குதிரையையே ஏறிச் சவாரி செய்துவரினும், அல்லது அதிகர்வியாகிய லஸிடிமானது தேரைச் சக்கர வளையமாகச் சுழற்றிக்கொண்டு வந்ததும், உலகத்தில் சகலமான தேசங்களிலும் பிரசித்தி பெற்று விளங்கியதுமான அந்த மிகவுயர்ந்த மரபினில் வந்த குதிரையையே சவாரி செய்துகொண்டு வந்தாலும், நான் சொல்லும் இந்த உபாயங்களை மாத்திரம் நீ கவனித்து, அவற்றின்பிரகாரம் நீ ஒழுகி வருவாயெனில், நீ சிறிதும் கவலையின்றியும், திடசித்தனாகவும், இந்த இலக்கைத் தாண்டிப் போகலாம்; புத்தியோ, யுக்தியோ இல்லாமல், வெறும் வேகமும், விசையுமட்டும் உள்ளவர்களைக் கடந்து வெகுதூரம் முன் சென்று விடலாம்!" என்றார்.

இவ்வாறு தான் சொல்ல விரும்பிய விஷயங்களனைத்தையும் ஒன்றுவிடாமல் சொல்லியபின், அந்த விருத்தர், அங்கு தளர்ந்து விரைந்துத் தமது ஆசனத்தில் அசைவற்று அமர்ந்துகொண்டார்.

அதன்பின் கடைசியாக, மெரியோனிஸ் என்பவன் எழுந்து வந்தான். அவன் கடைசியாக வந்தவன் தான். எனினும், இந்தப் பந்தயத்தில் கலந்துகொண்டு, இதைக் கெலிக்கவேண்டும் என்று ஆத்திரத்துடன் முன்வந்தவர்கள் ஒருவருக்காயினும் இளைத்தவன் அல்லன்.

இவ்வாறு முன்வந்த வீரர்கள் அனைவரும், தத்தம் வாகனங்களின் மீது ஏறிக்கொண்டனர். அதன்பின் அவர்கள் தத்தம் அடையாளங்களைக் கொண்ட சீட்டுக்களை வரிசையாக வைக்க, அகிலேசன் அவைகளனைத்தையும் தனது மகுடத்திலிட்டுக் குலுக்

கிக் கீழே யெறிந்தான். அப்போது, முதல் சீட்டானது இளம் நெஸ்டாருக்கும், இரண்டாவது யூமிலஸ்ஸுக்கும், மூன்ருவது நரேந்திரனது உடன்பிறந்தானுக்கும் விழுந்தன. மிரியோனிஸ் ஸே! உனக்கு நான்காம் சீட்டு விழுந்தது. கடைசிச் சீட்டானது இவர்கள் அனைவரினும் தைரியம் மிக்கவனுன தயோமதிக்கு விழுந் தது.இந்த ஒழுங்கில், அவர்கள் அனைவரும் வரிசையாக நின்று கொண்டு, பந்தயத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று துடித்தனர்.

அப்பொழுது அகிலேசன், அந்தச் சமவெளியின் எல்லையை அவர்கள் அனைவருக்குஞ் சுட்டிக் காட்டி, அவ்விடத்திலிருந்து கொண்டு பந்தயத்தில் சவாரி செய்து வந்தவர்களைக் கவனித்து, அவர்களின் வெற்றி தோல்விகளைத் தீர்மானிக்குமாறு விருத்தனுன பீனிக்ஸை அவ்விடத்திற்கு அனுப்பினுன்.

அக்கணமே அந்தக் குதிரை வீரர்களனைவரும், அந்த எல்லைக் கீற்றினின்று துள்ளிக் கொண்டு எழுந்தனர். தத்தம் ஆயுதங்களை உயர்த்திக் குலுக்கினர். அவையனைத்தும் ஒருமித்துக் கலகலவென ஒலித்தன. அவர்களுடைய உள்ளமும் கண்களும், கூக்குரல்களும், பந்தய இலக்கையே நாடிச் சென்றன. அப் பொழுது, சமுத்திரக்கரையினின்றும் அந்தச் சமவெளி வரையும் உயர்ந்துள்ள பூமியானது இடியிடித்ததுபோல் அதிர்ந்தது. அவ் வாறு அவர்கள் சவாரி செய்து கொண்டு சென்ற பொழுது, கனத்த மேகங்களைப்போல், புழுதியானது எழுந்து வந்தது. அவர்கள் சவாரி செய்து வந்த குதிரைகள், அந்தப் புழுதியில் கட்புலனுகா மல் மறைந்து போயின வெனினும், அவை அதினின்றும் எழுந்த சுழல் காற்றையும் துளைத்துக்கொண்டு பறந்தன. அவைகளின் நீண்ட பிடரி மயிர்களும் கட்டவிழ்ந்து, அவற்றின் தோள்களின் மேல் ஒரு புறமாய்க் கிடந்தன. அவை வேகமாக ஓடுகையில், அப்பிடரி மயிர்கள் காற்றில் அடிபட்டு மிதந்தன, அசைந்தாடின.

புகையைக் கக்கிக் கொண்டும், துள்ளித் துள்ளிக் குதித்துக் கொண்டும், வேகமாக முன்சென்ற இரதங்கள், ஒரு கணம் வானத் தின் முகட்டையிடிப்பது போலவும், மறுகணம் மண்ணைத் தொடு வது போலவும் தோன்றின. அப்பொழுது பேருங் கீர்த்தியும் பெற வேண்டும் என்ற பேரவாக் கொண்டவர்களும், வெற்றிபெற வேண்டுமென்பதே கண்ணுங் கருத்துமாகவும் விளங்கியவர் களுமான அந்த வீரர்களெல்லாம் காற்றைப்போல் பறந்து சென் றனர், தத்தம் குதிரைகளின் மேல் ஆகாயத்தில் தொங்குபவர்கள் போன்றே தோன்றினர். வீரர்கள் ஒவ்வொருவரும் ஆத்திரத்துடன் தத்தம் தலையை நிமிர்த்திக் கொண்டும், கடிவாளக் கயிற்றின்மேல் சரியாகச் சாய்ந்து கொண்டும், பெருமூச்சு விட்டுக்கொண்டும், கைகளை நீட்டிக் கொண்டும், உரத்துக் கூவிக்கொண்டும், அந்தச் சமவெளியோரமாகச் சவாரி செய்து கொண்டு சென்றனர்.

கடைசியாக அவர்களனைவரும், அந்த இலக்கைச் சுற்றி வளைத்துக் கொண்டிருந்த கடைசியான சுவரை யடைந்தனர்.

பந்தயக் குறியும், அவர்களனைவருக்கும் தெற்றென விளங்கியது, அதைக் கண்டவுடன், அவர்களனைவரும், ஒருவர் தவருமல், மட்டற்ற ஆத்திரத்துடன் பொங்கினர். ஒவ்வொரு வீரனும் தனக்கே வெற்றி கிடைக்கும் என்று முன்னிலும் இருமடங்கு நம்பிக்கை கொண்டான்; அவ்வாறே இருமடங்கு ஊக்கத்துடனும், ஆற்றலுடனும் தனது வாகனத்தை ஓட்டினன். அப்போது அந்தச் சமுத்திரக் கரையானது அதிர்ந்து போய்விட்டது; பாதை தவிடு பொடியாகி விட்டது; இடியைப்போல் முழக்கிக் கொண்டு, ஒவ்வொரு வீரனும் கடலை நோக்கிச் சென்றுன்.

முதன் முதலாக, வீரிஷியன் துரகங்களின் மீது அமர்ந்து சவாரி செய்த யூமிலஸ் என்பவன் எல்லோருக்கும் முன்னுகப் பறந்து சென்றுன். ட்ரோஸ் குதிரைகளின் மேல் சவாரி செய்து வந்த தயோமதி யென்பவன் அவனுக்கு அடுத்தபடியாக அவனைத் தொடர்ந்து சென்றுன். அவனது குதிரைகள், யூமிலஸ்ஸின் மேலேயே தங்களது சுவாஸத்தை விடுவன போலவும், அவனது இரதத்தின்மேல் பின்புறமாக ஏறுவன போலவும் தோற்றின. அவைகளின் உஷ்ணமான மூச்சுக் காற்றுனது, அவனது முதுகு முழுவதையும் நன்ருய்த் தாக்கியடித்தது. அவற்றின் நிழல், தனது தலைக்குமேல் ஆடுவதும் அவனுக்குப் புலனுயிற்று. அக்கணமே அவன் இந்தப் பந்தயத்தில் தோற்றுப் போயிருப்பான், அல்லது அவனுக்கு வெற்றி கிடைப்பது சந்தேகமாகவே முடிந்திருக்கும்; ஆனல் காரியம் அவ்வாறு நிகழவில்லை,

அத்தருணத்தில், அவன் பங்கிலிருந்த பீபஸ் பகவான், அடங்காக் கோபத்துடன் திடிதீசனை நோக்கிச் சென்று, அவன் கையிலிருந்த சாட்டை வாரை அடித்துப் பிளந்து விட்டார். ஆகவே, அதுவரை, அந்தச் சமவெளியில் அவனுடைய ஒப்பற்ற குதிரைகள் பட்டபாடெல்லாம் வீணுயின.

அப்பொழுது அன்றைய தினம் தனக்குக் கிடைக்கும் என்று தான் நம்பியிருந்த பேரும் புகழும், கீர்த்தியும், இவ்வாறு நஷ்டமாகி விட்டதே யென்று கோபத்துடன் துடித்த திடிதீசனுடைய கண்கள் நெருப்புப்போல் கொதித்தன.

தனது அன்பிற்குப் பாத்திரனுன திடிதீசனுக்கு இவ்வாறு உண்டாகிவிட்ட இந்த மோசடியைக் கண்ணுற்ற பாலாஸ் தேவியானவள், மனம் நொந்தவளாய் அக்கணமே திடீரெனத் தனது இடத்திலிருந்து எழுந்து ஒரே பாய்ச்சலில் தனது பிருத்தியனிடம் சென்று, அவனிடம் அந்தச் சாட்டை வாரையேயெடுத்துத் திருப்பியடித்து, அவனுடைய குதிரைகளுக்கும் ஊக்கத்தையளித்தனள். அத்துடன் நில்லாமல், அவள், அவனது எதிரியின் இரதத்தை நோக்கி ஓங்கி ஓர் அடி அடித்தனள்.

அந்த அடியினுல், அவனது இரதமும் அதன் ஏர்க்காலும், வேறுவேருகப் பிளந்து போயின. அதைக் கண்டு திடுக்கிட்ட

அவனுடைய குதிரைகள், முன் செல்வதை யொழித்து விட்டுச் சட்டென நின்றுவிட்டன. அவனது தேரும், அந்தச் சமவெளியில், கடகடவென்று உருண்டு, புரண்டு போயிற்று. அவனும், தனது ஆசனத்திலிருந்து, தலைகுப்புறத் திடீரெனத் தனது தேரின் சக்கரத்தின் சமீபத்தில் விழுந்து விட்டான். குத்தும் காயமுங் கொண்டு, அழகழிந்து, உருமாறிப் போயிருந்த அவனது முகமும், முழங்கையும் தொப்பெனக் கரையின் மேல் விழுந்தன. அந்தக் காயத்தினால், அவனது மூக்கும், வாயும், மார்பும், உருவழிந்து ஒரே பிண்டமாக விளங்கின. துக்கமானது அவனது வாயை அடைத்து விட்டது. அவன் கண்களினின்றும் நீரானது தாரை தாரையாய்ப் பொழிந்து வந்தது.

இவ்வாறு அவன் வலியிழந்து கிடந்ததைக் கண்ட திடிதீசன், இது தான் தனது சமயம் என்று அறிந்து, களிப்புடன் வெகு தூரம் பறந்து ஓட்டம் பிடித்து விட்டான். ஏற்கெனவே தன்னை யொத்தாரும், மிக்காரும் இல்லாதவனாக விளங்கிய அவனுக்கு மினர்வா தேவியும் அனுக்கிரகிக்க, அவன் துரிதமாக முன்சென்று, இந்தப் பந்தயத்தைக் கெலித்து விட்டான்.

இந்தப் பிரகாரம் மினர்வா தேவியானவள், அவனுக்குச் சகாயஞ் செய்து, இந்தக் கடினமான பந்தய ஓட்டத்தில் அவனுக்கு வெற்றியையளித்து மாலையையும் சூட்டினாள்.

இவனுக்கு அடுத்தாற்போல் நெடுந்தூரத்தில் மனேல்லாஸன் வந்தான். அப்போது இளைய நெஸ்டார், தன்னுடைய குதிரைகளுக்கு ஊக்கம் ஊட்டுமாறு அவைகளை நோக்கிப் பின் வரும் வசனங்களை யுரைத்தான் :—

"என்னுடைய சலியாத குதிரைகளே! இந்நாள் வரை நீவிர் இருவரும் எனக்குப் பல விதத்தினும் அன்புடன் உழைத்து வந்திருக்கின்றீர்கள்! இப்பொழுதும், இத்தருணத்திலும், நீங்கள் உங்களது திறமையைக் காட்டல் வேண்டும். திடிதீசனது குதிரைகளுக்குச் சமமாக நாம் ஓடுவோம் என்ற நம்பிக்கை நமக்கு இல்லை. அவைகள், இயல்பாகவே, காற்றைப் போல் பறக்கக் கூடியவை. அவைகளுக்கு மினர்வா தேவியும் உற்சாகம் ஊட்டுகின்றாள். அதனால் அவை தங்களது தலைவனுக்கு இன்றையப் பந்தயத்தில் வெற்றியையளித்து விட்டன.

நாம் அதிரிதேசனையாவது பிடிக்கலாமல்லவா ? அவனது பெட்டைக் குதிரை உங்களை மிஞ்சி வேகமாக ஓடலாமா ? ஒரு பெட்டைக் குட்டிக்கு நீங்கள் தோற்கலாமா ? உங்களது சிரத்தைக் குறைவினால், நாம் இந்தச் சமவெளியில், கடைசியாகப் பின்தங்கி விடுவோமானால், நமக்குக் கடைசியான பரிசுதானே கிடைக்கும் ? அது மிகவும் இழிவாயிற்றே !

அப்பொழுது விருத்தரான நெஸ்டார் உங்களுக்குத் தமது கையால், ஒரு பிடிபுல்லுங்கூடப் போடமாட்டாரே ! அவரது

கோபம் மேன்மேலும் விருத்தியாகுமே! அதனால் நீங்கள் மாண்டும் போவீர்களே !

ஆதலால், தாமதம் வேண்டாம். விரைந்து முன் செல்லுங்கள். அதோ பாருங்கள்! அந்த ஒடுக்கமான வழி இப்போது ஒழிந்திருக்கின்றது. இதுவே நமக்கு வாய்க்கத்தக்க நல்ல தருணம். இந்தத் தருணத்தை நாம் கைவிடலாகாது. இதை ஏற்றபடி யுபயோகித்து லாபத்தையடைய வேண்டும்!" என்றான்.

தங்களது தலைவன், இவ்வாறு தங்களைப் பயமுறுத்தி யுரைத்த வசனங்களைக் கேட்ட அந்தக் குதிரைகள், தடதட வென்று முன்னிலும் அதிகமான வேகத்துடன் நிலத்தையிடித்துக் கொண்டு முன் சென்றன. அப்பொழுது, ஏற்கெனவே சந்தடிகள் நிறைந்திருந்த அந்த யுத்தகளமானது, பின்னும் அதிகமாகக் குழம்பியது.

அப்போது அந்திலோக்கஸ் அந்த ஒடுக்கமான வழியின் அகலத்தையும், நீளத்தையும், மிகவும் நுட்பமாக ஆராய்ந்தான். பனிக்காலத்தில் கட்டிகட்டியாக மலைபோல் விழுந்த பனிக்கட்டிகளின் வேகத்தினால் பிளவுண்ட ஒரு பாறையானது அந்த வழியின் ஓரத்தில் விழுந்து சிறுகச் சிறுகக் கரைந்து போயிருந்தது. அந்த வழியில் ஒரே ஓர் ஆள் மாத்திரம் செல்வதற்கு இடமிருந்தது. ஆதலால் ஒரு பெருங் கூட்டமுள்ள வழியில் நுழைந்து முன் செல்வதைக் காட்டிலும், இந்த ஒடுக்கமான வழியிற் செல்வதே நல்லது என்று அந்த ஸ்பார்ட்டன் தீர்மானித்தான். அவனது குதிரைகளும், அவன் நியமித்த பிரகாரம் அவ்வழியே புகையையும் புழுதியையும் கிளப்பிக் கொண்டும், அவனது இரதத்தை இழுத்துக் கொண்டும் முன் சென்றன.

இவ்வாறு துணிவு நிறைந்துள்ள இந்த இளங்காளை முன் செல்லவேண்டும் என்ற ஆவலுடன், தனது இரதத்தில் ஏறிக் கொண்டு, அந்த மலைச்சரிவின் ஓரத்திலேயே சவாரி செய்து வந்தான். அதைக் கண்ணுற்ற அதிரிதீசன், திடுக்கிட்டு நடுக் குற்றுக் குனிந்து பார்த்து, தனக்குப் போட்டியாகத் தன்னை யெதிர்த்து வந்த இவனது துணிவைக் கண்டு ஆச்சரியமடைந்து,

"இது போதும். நிறுத்து! உன்னுடைய குதிரைகளை நிறுத்து! இவ்வாறு இந்த ஒடுக்கமான பாதையில் சவாரி செய்யலாமா? இது என்ன பைத்தியம்? விசாலமான சமவெளிக்குச் செல்லலாகாதா? அவ்விடத்தை நோக்கிச் செல். நீ அவ்வாறு செல்லாவிடில் நாம் இருவரும் விழுந்து அழிந்து போவது நிச்சயம்!" என்று கதறினான்.

இவ்வாறு அதிரிதீசன் இட்ட கூக்குரலை அந்திலோக்கஸ் சிறிதும் கவனிக்கவில்லை. அது வீணே ஆயிற்று. அந்திலோக்கஸ் முன்னிலும் அதிவேகமாகப் பறந்தான். தன்னுடைய

குதிரைகளின் கயிறுகளையும் அவன் ஒரேயடியாய் வீசி யெறிந்தும் விட்டான். அப்பொழுது அந்திலோக்கஸ்ஸே! உனது தேரானது, அரசனது தேருக்கும் முன்னுகவே பறந்து போய் விட்டது!

இளங்காளைகள் போட்டி போட்டுக்கொண்டு, தங்களுடைய வட்டுக்களை யெறிகையில் அதிவிசையுடன் ஒருவன் எறியும் வட்டானது எவ்வளவு தூரம் செல்லுமோ, அவ்வளவு தூரம், அந்திலோக்கஸ்ஸின் தேரானது முந்திச் சென்றுவிட்டது.

அப்போது அவன், இரதங்கள் ஒன்ருேடொன்று மோதி விடலாம்; அதனுல், அவை கிலுகிலுவென்று நெறிந்து பாழாகி விடலாம்; குதிரைகளும் ஒன்ருேடொன்று முட்டி மோதிக் கொண்டு, அந்தச் சமவெளியில் கடகடவென்று உருண்டு, புரண்டு, போய்விடலாம்; வெற்றியின் மேலும் பரிசின் மேலும் ஆவல் கொண்டு முன் சென்ருல் காரியம் கெட்டே போய்விடும்; தனக்கு ஆபத்தும் உண்டாகும் என்று அறிந்து பயந்தான்.

அதற்குத் தப்ப நினைத்து, அதிஜாக்கிரதையுடன் தனது குதிரையைப் பின்புறமாக யிழுத்துப் பிடித்துக் கொண்டு, அக்கணம் தன்னைக் கடந்து பறந்து சென்ற தனது போட்டிக்காரனை விளித்துப் பின்வருமாறு இழித்துக் கூறினுன் :—

“அட, மட்டு மரியாதை விவேகம் என்பது சிறிதுமில்லாத மடப்பயலே! தொலை, போ! நான் உன்னை விட்டவனல்ல! இந்தப் பரிசை நான் உனக்கு விட்டுக் கொடுத்துவிடுவேன் என்று நீ நினைக்க வேண்டாம். இப்பொழுது நீ என்னை ஏமாற்றி விட்டாய்! இனிப் பொய்யை மெய்யென வுரைத்துச் சத்தியமுஞ் செய்து, அந்தப் பரிசை அடையவேண்டும் என்று நினைத்து விட்டனை போலும்!” என்று கூவினுன்.

அதன்பின் அவன் தன்னுடைய குதிரைகளை நோக்கிப் பின்வருமாறு உரத்துக் கூச்சலிட்டான் :—

“விரைந்து செல்லுங்கள்! தைரியமாகச் செல்லுங்கள்! இந்தப் பந்தயக் கிழியைக் கெலியுங்கள், உங்களுக்குப் போட்டியாக விளங்கும் குதிரைகள் வயது முதிர்ந்தவை; அவைகளுக்கு இளங்குதிரைகளுக்குள்ள ஊக்கமும் வீரியமும் இல்லை; அவைகள் இந்தப் பந்தயச் சாலையில் ஓடிக் களைத்துப் போம்; அவைகள் உங்களுக்கே வெற்றியையும் அளித்துவிடும்!” என்ருன்.

அக்குதிரைகளும் அவன் சொன்ன வண்ணமே செய்தன. அவை அக்கணமே அந்திலோக்கஸ்ஸின் குதிரைகளின் குதிக்கால்களை நோக்கிக் காற்ருய்ப் பறந்து சென்றன. அப்பொழுது அவையே அந்தப் பந்தயத்தைக் கெலித்துவிடும் என்ற நம்பிக்கையும் உண்டாயிற்று.

இதன் மத்தியில், கிரேக்கர்களெல்லாம், ஓர் அரங்கத்தில் கூட்டங் கூட்டமாக வளைந்து நின்று கொண்டு, அந்த மைதானத்தில் பந்தயக் குதிரைகள் புழுதியைக் கிளப்பிக் கொண்டு, துள்ளிக் குதித்து ஓடிவருவதைக் கண்ணுற்று வந்தனர். அவர்களைக் கிரீட்ட நாட்டு அரசன் முதன் முதலாகக் கவனித்தான். அவன் அந்த அரங்கத்தின் மேல் உயர்ந்திருந்த ஒரு மேடையின் மேல் உட்கார்ந்திருந்தான்.

அந்த இடத்தில் இருந்த வண்ணம், அவன் ஐயந்திரிபு மயக்கம் என்னும் முக்குற்றங்களுக்கும் இலக்காகாமல், அந்தப் பந்தயத்தில் முதன்முதலாக முன் வந்த வீரனைத் தெற்றெனக் கவனித்து வந்தான். வெகுதூரத்திலிருந்து தன் குதிரைகளுக்கு உற்சாகமூட்டிக் கொண்டு உரத்துக் கூவி வந்த அவனது சப்தமும், அவனுக்குச் செவிப் புலனாயிற்று, முதன்முதலாக வந்த குதிரையின் கூரான கண்களும் அவனுக்குத் தெற்றெனக் கட்புலனாயின. அந்தக் குதிரையின் அகன்ற முகத்தில், பூரணச் சந்திரனைப் போல் வெண்மையான ஒரு வெளிச்சமும், தகதகவென விளங்கியது. அதைக் கண்டவுடன், அவன் தனது இடத்தை விட்டுப் பெயர்ந்து எழுந்து கிரேக்கர்களை நோக்கிப் பின்வருமாறு உரைத்தான் :—

"அதோ அங்கு வரும் குதிரைகள், என் கண்களுக்கு மாத்திரந்தான் தென்படுகின்றனவா ? அவை, இதுவரை இவ்வழியில் முன் வந்து கொண்டிருந்த வீரனுடைய குதிரைகள் தானே ? உங்களில் சிலருக்கோ, அல்லது எல்லோருக்குமோ, அவனையன்றி வேறான தலைவன் ஒருவன் வருவது புலனாகின்றதோ ?

முன்னால் வந்த குதிரைகள் அதிவிரைவாக ஓடக்கூடியவை; அவற்றை மிஞ்சியவை இல்லவேயில்லை ; அவற்றை ஏதோ ஒரு தெய்வம், வழிமறித்து, ஊனமாக்கித் தடுத்து விட்டது. அதனால் தான் அவை இந்தக் களத்தின் மத்தியில் எங்கோ விழுந்துவிட்டன. இது நிச்சயம் தான். ஏனெனில் அவை இந்த இலக்கைச் சுற்றிக் கொண்டு வந்ததன் பின் எனக்குக் கட்புலனாகவில்லை. அவற்றை நான் நாற்புறமும் தேடினேன். எனது சிரமம் வீணாகி விட்டது. ஒருக்கால் அவற்றின் கயிறுகள் சாரதியின் கையினின்று நழுவிப் போயிருக்கலாம். அல்லது, அவன் திடீரெனத் தேரினின்று கீழே நடுவழியில் தொப்பென விழுந்து உருண்டு போயிருக்கலாம், அப்பொழுது அவன் குதிரைகள் பயந்து மிரண்டு, சரியான வழியை விட்டு விலகிப் போயிருக்கலாம் !

என்னுடைய கண்கள் மங்கிப் போய் விட்டன. எனக்கு ஒன்றும் தெளிவாய் விளங்க வில்லை யென்று நினைக்கின்றேன். ஆதலால், வேறு யாரேனும் ஒருவனை இங்கு எழுந்து வரச் சொல்லுங்கள். அவன் விஷயங்களைக் கவனித்து, நடந்த காரியத்தை எனக்குச் சொல்லட்டும். என்றாலும், எனது பார்வைக்கு எட்டிய மட்டில், அவனது உருவத்தையும் சாயலையும் கவனித்தால்,

அவன் முன்னைய யுத்தங்களில் கீர்த்தியுடன் விளங்கிய மஹானுன ஈட்டோலியன் அதிபதி யென்றே தோன்றுகின்றது '' என்றான்.

அவ் வசனங்களைச் செவியுற்றுக் கேட்ட ஆயிலியஸ், ஆத்திரத்துடன் அவனை நோக்கிப் பின்வரும் மொழிகளை யுரைத்தான்:—

"ஐயா விருத்தரே! உமக்கு ஏன் இந்த ஆத்திரம்? நீர் அதி சீக்கிரத்திலேயே இந்தப் பந்தயத்தில் இன்னாருக்குத்தான் பரிசு என்று தீர்மானித்து விட்டீரே! இந்தப் பந்தயத்தைக் கவனித்து வருவோரில் நுண்ணிய பொருள்களை நன்றாகக் காணக் கூடிய திண்ணியர் இருக்கின்றனர். அதிபால்யர்களும் இருக்கின்றனர். அவர்கள் ஒருவராயினும், இந்தப் பந்தயத்தில், இன்னாருக்குத்தான் வெற்றி, தோல்வி, என்று தீர்மானிக்க முன்வரவில்லை.

யூமிலஸ்ஸின் குதிரைகள் தான், இந்தப் பந்தயத்தின் ஆரம்பத்தில் இருந்தது போல், இப்போதும் உயரத் துள்ளிக் குதித்துக் கொண்டே வருகின்றன. அவையே இந்தப் பந்தயத்தில் தம்மை யெதிர்ப்பாரின்றி முதன் முதலாக முன் வந்து கொண்டிருக்கின்றன. அவன் தன்னுடைய குதிரைகளின் கடிவாளக் கயிறுகளைக் குலுக்குவது எனக்கு நன்றாகத் தெரிகின்றது. அவன் இந்தச் சமவெளியில் செய்து வரும் ஜயகோஷங்களும் எனக்கு நன்றாகச் செவிப்புலனாகின்றன '' என்றான்.

அதைக் கேட்டுச் சீற்றங்கொண்ட இதோமினியஸ் அவனை நோக்கிப் பின் வருமாறு உரைத்தான் :—

"இது என்ன மட்டு மிதமில்லாத, மரியாதை யற்ற பேச்சு! என்ன அகம்பாவம்! ஆக்ஷேபங்கள் செய்வதும், குற்றங் காண்பதும், குறைகள் கூறுவதுமே உனது தொழிலாகி விட்டது. இங்குக் கூடியிருக்கும் கிரேக்கர்கள் அனைவரினும் நீயே கடையவன், நீயே சிறிதும் புகழில்லாதவன்! மஹா கர்வி! இவ்வாறு நம்மை இழித்துக் கூறியவனுக்கு நாம் என்ன மறுமொழி சொல்லவல்லோம்! ஒரு கிண்ணத்தையோ, அல்லது ஒரு முக்காலியையோ பந்தயம் வைக்கலாம். இந்தக் காரியத்தை நமது அரசன் தீர்மானிக்கட்டும். முட்டாள்களது கொட்டம் குட்டுப் பட்டால் தான் அடங்கும் '' என்றான்.

அப்போது அந்த வசனங்களைக் கவனித்துக் கேட்டு வந்த அஜாக்ஷனுக்கு அடங்காக் கோபமாகி விட்டது. அவன் வெட்டெனப் பேசி இந்த வழக்கைத் தீர்த்தே யிருப்பான். பழிச் சொல் ஒவ்வொன்றையும் மேன் மேலும் உயர்ந்த பழிச் சொல்லாலே கண்டித்தும் இருப்பான். இதுவும் ஒரு கொடும் போராகவே விளைந்திருக்கும்.

ஆனல், தெட்டிஸ் தேவியின் புத்திரனும், தேவர்களுக்குச் சமானவனுமான மஹா வீரன், அதிபயங்கரமான தோற்றத்துடன் அக்கணம் தன்னிடம் விட்டுப் பெயர்ந்து எழுந்து பின் வரும் வசனங்களை யுரைத்து, அஜாக்ஷனைத் தடுத்து விட்டான் :—

"தலைவர்களே! சற்றுப் பொறுங்கள்! இவ்வாறு வாதாடி வழக்குரைப்பது உங்களுக்கு அழகன்று. இவ்வாறு வேறு எவரேனும் வாதாடுவதை நீவிர் கண்டால் அவர்களை நீங்கள் இகழ்வீர்களன்றோ? இப்போது, அதோ பாருங்கள்! அந்தக் குதிரைகள் தட தடவென்று நமக்குச் சமீபத்தில் வருகின்றன. அவை இங்கு வந்து சேர்ந்த பின் உங்களது வழக்குத் தீர்ந்தே போய்விடும்!" என்றான்.

அவன் அந்த வசனங்களைச் சொல்லி முடிக்கு முன், அவனது அருகில், இடிபோல் சப்தம் செய்து கொண்டும், புழுதி யைத் கிளைத்துக் கொண்டும், அந்தத் தேரின் சாரதி, தனது தேரை ஓட்டிக் கொண்டே வந்து விட்டான். அவன் தனது தலையின் மேல் உயரமாகத் தனது சாட்டைவாரைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டு வந்தான்.

துள்ளிக் கொண்டு வந்த அவன் குதிரைகளின் கால்கள் நிலத்தில் பாவமுமில்லை; அவனது இரதமும் சுழல்கால் போல் சுழன்று கொண்டிருந்த புழுதியில் உருண்டும் சென்றது. அப்போது அந்த இரதமானது, அந்த மேகத்தின் பின் புறத்தில், தகரத் தையும் பொன்னையுங் கலந்து உருக்கிய ஒரு குழம்பைப் போல், தக தகவென்று பிரகாசித்தது. அவ்வாறு பறந்து சென்ற அந்தத் தேரின் சக்கரங்களின் அடிச்சுவடுகளும் ஒருவருக்காயினும் புலப் படவில்லை. அத் தேரில் பூட்டி யிருந்த மூர்க்க சுபாவங்கொண்ட குதிரைகள், தங்களது கதியை அதிவேகமாக அதிகரித்துக் கொண்டு சென்றதால், அவை பறப்பன போல் தோன்றினவே யன்றி, ஒரு பந்தயத்தில் ஓடுவன போல் தோன்றவில்லை.

இவ்வாறு திடிதீசன், அதிவேகமாக ஓடிவந்து, பந்தய இலக்கில் வெற்றியுடன் விளங்கினன். உடனே அவன், பளிச் சென்று விளங்கிய தனது தேரினின்றும் கீழே யிறங்கி, மணலின் மேல் துள்ளிக் குதித்தான்.

அப்போது அதி வேகமாக ஓடிய ஓட்டத்தினல் சூடும் கொதிப்பு மடைந்திருந்த அவனுடைய குதிரைகளின் மேலிருந்து, வியர்வையானது தாரை தாரையாக வழிந்து வந்து ஆருய்ப் பெருகியது. அவற்றை ஓட்டுகையில் இடைவிடாமல் சுழன்று வந்த அவனது சாட்டையும், தனது சேஷ்டையை ஒழித்துவிட்டுத் தனது தேரின் சட்டத்தின் குறுக்காகத் தொங்குவதாயிற்று.

மஹா தைரியவானன ஸ்தெனிலஸ்ஸிடம், அப்பொழுது முக்காலி கொண்ட தட்டும், பளிச்சென மின்னுங் கண்களை

யுடைய ஒரு பெண்மணியும் முதற் பரிசாக வழங்கப்பட்டன. அவன் அவைகளை அடங்கா மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டான். அவனுடைய பரிவாரத்தார்களும் மிகுந்த சந்தோஷத்துடன் ஆர்ப் பரித்துக் கொண்டு, அப்பரிசுகளை அவனது கப்பலுக்கு எடுத்துச் சென்றனர்.

அதன்பின், அந்த வீரனே (திடிதீசனே) தன்னுடைய குதிரைகளைத் தனது தேர்க்கால்களினின்றும் அவிழ்த்து விட்டான்.

கைவன்மையின்றித் தந்திரத்தினுல் மாத்திரமே, அதிரிதே சனைக் கடந்து சென்றவனுன இளம் நெஸ்டார் அதன்பின், இந்தப் பந்தயச் சாலையில் இரண்டாவனுக வந்தான்.

தன்னைத் தொடர்ந்து வந்த தேரை முந்த வேண்டுமென்ற ஆவலுடனும், வேகமாக ஓடும் ஒரு குதிரையை நிகர்த்த வேகத் துடனும், அதிரிதேசன் இளம் நெஸ்டாருக்குப் பின்னுல் அதிசமீ பத்தில் விரைந்துஓடிவந்தான். அப்போதுஅவனது குதிரையானது தனது குதிக்காலால் மாத்திரம் நிலத்தைத் தொட்டுக் கொண்டும், உருண்டுவந்தஅவனதுதேரின்சக்கரத்தைத் தனது வாலால்துடைத் துக் கொண்டுமே சென்றது. அந்த மைதானத்தில் சவாரிசெய்து வந்த அவ்விரு வீரர்களுக்கு மிடையில் சிறிது பொழுதுக்கு முன் னிருந்த தூரமானது இப்போது, இவ்வாறு குறுகிப் போய் விட்டது. விரைந்து செல்லுமியல்புடைய ஈத்தி யென்னும் அக்குதிரை இவ்வாறு தான் இழந்த இடத்தைத் திரும்பவும் அடைந்து விட்டது. ஒரே பாய்ச்சலில், ஒரே நிமிஷத்தில் அது முன்னேற்றம் அடைந்து விட்டது.

அதற்குப் பின்னுல் நெடுந் தூரத்தில், மெரியோன் அதைத் தொடர்ந்து கொண்டு வந்தான். அவனுடைய குதிரைகள், நிதானப் பிரகிருதிகளாக வந்ததுமன்றி, அவைகளுக்கு இந்த ஓட் டங்களில் பழக்கமும் இருக்கவில்லை. கடைசியாக, அத்மீடஸ்ஸே! உனது அதிர்ஷ்டஹீனனுன மகன், தனது உடைந்து போன இரதத்தின் மீது ஏறிக் கொண்டு வந்தான். அந்த இரதத்தை அவனது குதிரைகள் மெதுவாகவே இழுத்து வந்தன.

அகிலேசன் அந்தப் பரிதாபமான காட்சியைக் கண்டு இரங்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"ஆஹா! இந்தக் கஷ்டத்தைப் பாருங்கள்! கிரேக்கர்கள் அனைவரிலும் ஒப்பும் உயர்வுமின்றி, புத்தியுடனும், சாமார்த்தியத் துடனும் விளங்கி வந்த இந்த மனிதனைப் பாருங்கள். அதிபலவா னுக விளங்கிய இவன், இந்தப் பந்தயத்தில் எல்லோருக்கும் கடைசியாக வன்றோ விளங்குகின்றுன்! இவன் முதற் பரிசைப் பெறத் தகுந்தவன். எனினும் அதைப் பெறும் பாக்கியம் இவனுக்கு இல்லாமற் போய் விட்டது. மஹானுன திடிதீசன் அந்த முதற் பரிசை நியாயமாகவே அடித்துக் கொண்டு போய்

விட்டான்! ஆதலால், இரண்டாவது பரிசையாவது இவனுக்கு அளிப்பது யுக்தமாயிருக்கின்றது" என்ருன்.

அதைக்கேட்ட கிரேக்கர்கள் அனைவரும், அவன் சொல்லியதே சரியென்று உரத்து ஆரவாரித்துத் தங்களது சம்மதத்தைத் தெரிவித்தனர். இவ்வாறு அவர்களது சம்மதப்படி, இந்த இரண்டாம் பரிசு யூமிலஸ்ஸுக்கே கொடுக்கப்பட்டிருக்கும்.

ஆனல், அதற்கு இளையோனை நெஸ்டர் இணங்க வில்லை. அவன் தனக்குச் சேரவேண்டிய பரிசைத் தனக்குத் தந்தே தீர வேண்டும் என்று ஆத்திரத்துடன் முன்வந்து, அகிலேசனுடைய யோசனையை மறுத்துப் பேசினன் :—

"பிலியஸ்ஸின் புத்திரா! நான் இதற்குச் சம்மதிப்பேன், போனல் போகட்டும் என்று இதை விட்டுக் கொடுத்து விடுவேன் என்று நீ நினைக்க வேண்டாம். இந்தப் பெண் குதிரையானது நியாயமாக எனக்குத்தான் சேர்ந்தது. அதற்குச் சிறிதேனும் ஐயமில்லை.

மனிதர்களது புத்தியை மயக்குவதில் வல்லவர்களான தேவர்கள், இவனையும், இவனது குதிரையையும் நிலத்தின்மேல் வீழ்த்தி விட்டனர். அதற்கு நாம் இரங்குவானேன்! ஒரு வேளை இவன் சரியான பலிகளையும் நைவேத்தியங்களையுஞ் செய்யாமலும், தேவர்களது சகாயத்தைக் கோராமலும் இருந்திருக்கலாம்! அல்லது தான் செய்வதாகச் சொல்லியிருந்த நைவேத்தியங்களைச் செய்யாமல் இருந்திருக்கலாம். அதனல் இவனுக்கு இந்தப் பரிசு கிடைக்காமற் போயிற்று.

இது இருக்கட்டும். உனது நண்பனுக்கு ஓர் உயர்ந்த மரியாதை செய்து உனது மனது களிப்படைய வேண்டும், யூமிலஸ்ஸுக்கு ஏதேனும் ஒரு பரிசு அளித்து அவனைக் கனப்படுத்த வேண்டும் என்பது உனது விருப்பமானல், அதற்கு நான் ஓர் உபாயம் சொல்லுகின்றேன் கேள். அதிரூபலாவண்ணியங்களுடன் விளங்கும் எண்ணிறந்த கன்னிகைகளையும், குதிரைகளையும், பளபளவென மின்னும் பொற்கட்டிகளையும், நீ உன்னுடைய விடுதிகளில் ஏராளமாகச் சேர்த்து வைத்திருக்கின்றனை. அவைகளிற் சிறந்தவற்றைப் பொறுக்கியெடுத்து, நீ அவனுக்குத் தாராளமாக வழங்கலாம். அதைக் கண்ணுறும் கிரேக்கர்கள் அனைவரும் உனது தாராளமான உதாரகுணத்தை மெச்சுவார்கள்.

எனக்குக் கிடைக்கவேண்டிய இந்தப் பரிசை நான் விட்டுக் கொடுக்கமாட்டேன். அது நிச்சயந்தான்! இதை எவனுவது தொடுவானுயின், வீரர்களே அவன் எனது சத்துருவேயாவான்" என்ருன்.

இவ்வாறு இந்த இளைஞன் உரைத்த வசனங்களால், ஒருவருக்கும் மனஸ்தாபமோ கோபமோ உண்டாகவில்லை. தனது

நண்பன் ஒருவன் இவ்வாறு தன்னை நன்மொழிகளால் பாராட்டியதைக் கேட்டு, அகிலேசனும் புன்னகை கொண்டான்.

"அந்திலோக்கஸே! நீ சொல்லியபடியே நாம் செய்வோம். நீ நியமித்த பரிசுகளை நாமே, நாம் சேகரித்துவைத்துள்ள நிதிகளிலிருந்து வழங்குவோம்.

யூமிலஸ்ஸே! முன்னாளில் கீர்த்தியுடன் விளங்குய அஸ்திரோப்பியஸ் அணிந்து வந்திருந்ததும், பித்தளைத் தட்டுகளால் சேர்த்துப் பிணைக்கப்பட்ட மேல் மூடியுள்ளதுமான மார்க்கவசத்தை நாம் உனக்கு வழங்குவோம். அது ஒரு சாமானியமான பரிசு என்று நினைக்க வேண்டாம். அதன் விளிம்பில் கட்டப்பட்டுள்ள வெள்ளித் தகடுகள் பளபளவென மின்னுகின்றன. இதை நாம் உனக்குத் தருவோம்" என்றான்.

பின்பு, அவனது ஆணைப்படி, ஆட்டோமிடான் என்பவன் அந்த மார்க்கவசத்தை யெடுத்துக் வந்து அவனது கையில் கொடுத்தான். இவ்வாறு தனது நண்பனால் சிறப்பித்துப் பாராட்டப்பட்ட யூமிலஸ்ஸின் உள்ளம் பூரித்தது, அடங்கா மகிழ்ச்சியடைந்தது.

அதன் பின் மனேல்லாஸன் தனது இடம் விட்டு எழுந்தான். அப்போது அவனது கட்டியக்காரன் அவனது கையில் செங்கோலைக் கொடுத்து ஜனங்கள் செய்து வந்த ஆரவாரத்தையும் கூச்சலையும் அடக்கினான்.

அதன் பின், மனேல்லாஸன், தான் அரசன் என்பதையும் கவனியாது, நெஸ்டாரின் புத்திரன் தன்னைத் தந்திரத்தினால் வென்று விட்டான் என்று ஆத்திரங் கொண்டு மனம் புழுங்கிப் பின் வரும் வசனங்களை யுரைத்தான் :—

"அந்திலோக்கஸ்ஸே! நீ, இந்த இளம் பிராயத்திலேயே இதுகாறும், புத்திமான் என்ற கியாதியுடன் விளங்கி வந்தனை. இந்த ஒரு தகாத காரியத்தினால், அந்தக் கியாதிக்கு மாசு உண்டாய் விட்டது. கிரேக்கர்களே! எனது பேருங் கீர்த்தியும் அபகரிக்கப்பட்டுப் போய் விட்டது! எனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய பரிசும் கிடைக்கவில்லை.

என்னுடைய கஷ்ட நிஷ்டூரங்களை உங்களுக்குச் சொல்லுகின்றேன்; கேளுங்கள்; அவற்றைக் கேட்டபின், இங்குள்ள தலைவன் ஒருவனாயினும் நம்மை ஓர் அபராதியென்றாவது, அல்லது நம்முடன் போட்டிக்கு வந்தவனைக் கண்டு நாம் பொறாமை கொண்டோம் என்றாவது மதிக்கமாட்டான். மேலும் உள்ளதை உள்ளவாறு உரைத்து இந்தக் காரியத்தைத் தீர்மானிப்பதற்கு நமக்கு அதிகாரம் இருக்கவே யிருக்கின்றது. அதை யார் மறுக்கக் கூடும்? எல்லோருக்கும் தெளிவாக விளங்கக் கூடிய இந்தக்

காரியத்தில் விவாதமோ, தர்க்கமோ எதற்கு? அது அநாவசியம்!

நான் உன்னை நோக்கி, அட, எழுந்திருந்து நில், இந்தப் பரிசு உனக்கு நியாயமாகக் கிடைத்ததென்று நீ சத்தியம் செய்வாயா? என்று கேட்பேனானால், அது அக்கிரமம், அநியாயமான கேள்வியென்று யாராயினும் சொல்லுவார்களா? அவ்வாறு எந்த கிரேக்கன் சொல்லுவான்?

உனக்கு மனவுறுதியுண்டெனில், நீ உனது இடம் விட்டு எழுந்து, உனது இரத்தத்தின் முன் நின்று கொண்டு குதிரைகளை யோட்டுஞ் சாட்டைவார்களையும் உயரத் தூக்கிக் கொள், உன்னுடைய குதிரைகளையும் கையால் தொட்டுக் கொண்டு நான் வெற்றியிலேயே வேட்கையுடையவனாக இருந்தேனேயன்றி, மோசக் கருத்து உள்ளவனாக இருக்கவில்லை என்று சத்தியஞ் செய்! எந்தத் தேவன் இந்தப் பூகோளத்தைத் தன் திரவரூபமான கரங்களால் வளைத்து அணைத்துத் தழுவிக் கொண்டிருக்கின்றானோ, எவனுடைய பயங்கரமான பூகம்பங்களினால்இந்தப் பூமியானது பொங்கியெழுகின்றதோ, அவன் மீது ஆணையிட்டுச் சத்தியஞ் செய்!" என்றான்.

இந்த வசனங்களைப் புத்திமானான அந்தத் தலைவனும் மௌனமாகக் கவனத்துடன் கேட்டுப் பின்பு, அவனுக்குப் பின் வரும் சாந்தமான மறு மொழி புகன்றான்:—

"ஐயா! இளையோன் தவறுகள் செய்திருந்தால் அவற்றை மன்னிப்பீர்கள்! பெரியோராகிய தாங்கள், எளியேனான நான் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும். வயதிலாவது, அறிவிலாவது நான் தங்களுக்குச் சமானமானவனல்லன். அறியாப் பிள்ளைகள் தப்புந் தவறுஞ் செய்வார்கள் என்பது தங்களுக்குத் தெரியும். அவர்களுக்குத் திடசித்தமென்பது இல்லை; அவர்கள் தலை கால் தெரியாமல் ஆத்திரத்துடன் துடிப்பார்கள் என்பனவெல்லாம் தாங்கள் அறிவீர்கள்.

தாங்கள் தங்களது கோபத்தைத் தணித்துக் கொள்ளுவீர்களானால், நானும் இந்தப் பரிசை விட்டுக் கொடுத்து விடுகின்றேன். தங்களுடைய அரிய நட்பையே நான் எனது பெரும் பேறாகக் கருதுகின்றேன். தங்களுடைய பகையைச் சம்பாதிக்க வேண்டும், அல்லது தேவர்களின் மேல் ஆணையிட்டுச் சத்தியம் செய்ய வேண்டும் என்று நான் விரும்பவில்லை. ஆகையால் இந்தப் பெண் குதிரையை மாத்திரமன்றித் தாங்கள் வேறு எதை விரும்பினாலும், அதையும் தங்களுக்குக் கொடுப்பதற்கு நான் சித்தனாக விருக்கின்றேன்" என்றான்.

இவ்வாறு அந்திலோக்கஸ் உரைத்த கணமே, இந்த விவாதத்திற்குக் காரணமாகவிருந்த அந்தப் பெண்குதிரையானது

அரசனுக்கு விட்டுக் கொடுக்கப்பட்டது. அப்பொழுது அவனது மனம், அடங்கா மகிழ்ச்சியுடன் பொங்கியது. வசந்த காலத்தில் நிலமட்டத்திற்கு மேலாகப் பொங்கியுயர்ந்து விளையும் பயிரானது தன்னுடைய பசுங்கதிர்களைத் தாங்கிக் கொண்டு நிற்கையில், காய்கறிகளும் தானியங்களும் தழைத்துச் செழித்து வளர்ந்து, அவற்றைக் காலைப் பொழுதில் நோக்குவோருக்குத் தம்மேல் படிந்துள்ள பனித்துளிகளுடன் நகையாடிப் பளிச்சென மின்னுவது போல், இந்த ஸ்பார்ட்டனும் மகிழ்ச்சியுடன் விளங்கினான். அவனது முகம், களிப்புடன் மலர்ந்து மின்னியது. அப்போது அவன் பன்மடங்காகச் சந்தோஷத்துடன், பின் வரும் வசனங்களையுரைத்தான் :—

"இளம்பூரணா! வயதிற் சிறியோனாயினும், நீ பெருந்தன்மையுடனேயே விளங்குகின்றனை! நாம் இருவரும், இந்தச் சச்சரவை இனியும் மேன்மேலும் வளர்க்காமல், ஒழித்து விட்டுச் சமாதானம் செய்து கொள்ளுவோம்!

எனக்கு இணங்கிவிட்ட உனக்கு இணங்க வேண்டிய முறை அதிரிதீசனான எனக்கு இப்பொழுது வந்துவிட்டது. தெளிவும், நிலையிற் பிரியாததுமான உனது மனதை ஆத்திரமும் வேகமும், ஒரு கணநேரம் கவர்ந்து, இந்தச் சண்டையை யுண்டாக்கி விட்டன. ஆனால், அவற்றால், அந்த மனத்தைப் பிளக்க இயலாமற் போயிற்று!

எனது அன்பனே! அவ்வாறு கோபதாபங்களுக்கு ஆளாகாமல், பெருந்தன்மையுடன், சண்டை சச்சரவுகளை வேரோடு களைவதே ஆன்றோரது முறை. ஆஹா! உன்னைப்போல் பிறருக்குத் தீங்கிழைக்கவும், தாம் தீங்கிழைத்தவர்களைப் பின்னர்த் திரும்பவும் நண்பர்களாக ஆக்கிக் கொள்ளவும் ஆற்றலுடையோர், மிகச் சிலரேயுளரன்றோ?

'அறியாத்தனத்தினால் இந்த அபராதம் நிகழ்ந்து விட்டது. என்று இரங்கி, எனது குற்றத்தைப் பொறுத்தல் வேண்டும், இதற்குத் தக்க ஈடுசெய்து விடுகின்றேன்!' என்று நீ முன் வருவது, உன்னைப் பெற்றோனுக்கும், உனக்கும் உள்ள உத்தம குணங்களை விளக்குகின்றன. ஒருவருக்கொருவர் இளைக்காத அன்புடனும் ஆதரவுடனும், தந்தையும் தனயனும் ஆகிய நீங்கள், எனக்காகப் படாத பெரும்பாடுகள் பல பட்டிருக்கின்றீர்கள். எனக்குப் பல பேருபகாரங்களும் செய்திருக்கின்றீர்கள். இந்தப் பரிசை நீயே வைத்துக்கொள். இதை நான் உனக்கே விட்டுக்கொடுத்து விடுகின்றேன். இதனால் நான் ஒரு வணங்காமுடி மன்னன் அல்லன் என்றும், சுயநலங் கருதாது எனது நண்பனது நன்மையைக் கோருபவன் என்றும் உலகெலாம் அறியட்டும்!" என்றான்.

இவ்வாறு சொல்லி, அவன் தனது சினத்தைத் தணித்துக் கொண்டு, அந்தக் குதிரையை அவ்விளம் வீரனது நண்பனான

நூமானது கையில் பிடித்துக் கொடுத்து விட்டான். அந்த வீரனும் பளபளவெனப் பொலிவுடன் விளங்கிய அக் குதிரையைப் பெற்றுத் திருப்தியடைந்து, அதைத் தனது கப்பலுக்கு அனுப்பி விட்டான்.

பின்னர் மெரியோனுக்குப் பொன்தாலந்து நாணயங்கள் பரிசாக அளிக்கப்பட்டன.

கடைசியாக, ஐந்தாம் பரிசாகிய இரட்டையான கிண்ணம் மாத்திரம் எஞ்சி நின்றது. அந்தக் கிண்ணத்தை அகிலேசன், கண்ணியரான நெஸ்டாரிடம் தானே எடுத்துச் சென்று, தான் அதை அவருக்குக் கொடுக்க நிச்சயித்த காரணத்தையும் பின்வருமாறு உரைத்தான் :—

"புண்ணியராகிய பெருந்தகையே! எங்களது தந்தையே! தாங்கள் இதை ஏற்றுக் கொள்ளுங்கள். பத்திரகலுஷனது அரிய ஞாபகச் சின்னமாக, இதைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள்!

பத்திரகலுஷன் மாண்டு மறைந்தே போய் விட்டான். இனி அவன் ஒருக்காலும் திரும்பி வரவே மாட்டான். அவனைக் கண்டு குளிர்ந்த நம் கண்களுக்கு அவன் மறைந்தே போய்விட்டான்.

நெடுந்தூரம் பறந்து செல்லுமாறு, அம்பை எய்யவோ, இரும்பு வளையத்தை உயரத் தூக்கி யெறியவோ, பிரம்மாண்டமான கட்டியக் கோலை ஏந்தவோ, பந்தய ஓட்டத்தில் விரைந்து ஓடவோ, அல்லது யுத்த களத்தில் மற்போர் புரியவோ, இப்பொழுது தங்களால் இயலாது. இளம்பிராயத்தில் இக்காரியங்களில் தங்களுக்கிருந்த சக்தியை முதிய வயதானது அபகரித்துக் கொண்டு போய்விட்டது.

என்றாலும் தங்களது பழங் கீர்த்தியானது இன்றும் குன்றாது இருந்தே வருகின்றது. ஆதலால் தாங்கள் எனக்கு இதுகாறும் செய்துள்ள நன்றிகளை நினைத்து நான் தங்களுக்குத் தரும் இந்தப் பரிசைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்!" என்றான்.

அவன் கையில் ஏந்திக் கொண்டிருந்த பொற்கிண்ணத்தையும் அவன் கூறிய வசனங்களையும் கேட்டுங் கண்டுங் களித்த விருத்தரும், கௌரவம் பொருந்தியவருமான அந்த அரசர் பின்வருமாறு பதிலுரைத்தார் :—

"எனது மகனே! உன்னிலும் வயதில் முதிர்ந்தவனான நான், உனது அன்புள்ள நண்பன் என்பதையும், உனது பாராட்டுக்கும் உபசாரத்திற்கும் பாத்திரமானவன் என்பதையும், உன்னுடைய உசிதமான நன்மொழிகள் ருஜுப்படுத்தி விட்டன. நீ சொல்வது முற்றிலும் உண்மையே. விருத்தாப்பியத்தினால் ஏற்பட்ட பலக் குறைவினால், இந்தக் கைகளும், அவயவங்களும் தளர்ந்து போய்விட்டன; தங்களது வலியையிழந்து விட்டன.

ஆஹா! பூப்பிரஸீயத்திலும், பைலியக் கரையிலும் முன்னுளில் வாழ்ந்திருந்த வீரர்கள் அனைவரிலும் நானே தலைவனாக விளங்கி வந்தேன். அந்த வீர சூர பராக்கிரமங்களெல்லாம் இப்போது என்னைவிட்டு அகன்றே போயின. அந்த வலியும் சக்தியும் எனக்கு இப்போதும் இருந்தால் நானும் ஒரு கைபார்த்தே தீருவேன்! பிரஸித்தி பெற்ற பராக்கிரமசாலியாகிய அமாரின்ஸிஸின் திருவிழாவை முன்னிட்டு நடத்தப்பட்ட ஒவ்வொரு போட்டி விளையாட்டிலும், நானே வெற்றியுடன் விளங்கி வந்தேன். தைரியம் மிகுந்த ஈப்பியர்களென்ன, ஈட்டோலியர்களென்ன, பைலியர்களென்ன ஆகிய இவர்கள் அனைவரும் கலந்து கொண்டு, அந்த ஆட்டங்களில் போட்டி போட்டுக் கொண்டு முன்வந்தனர். அவர்கள் எனது புகழுக்கே வழிகாட்டினர்.

நான் கிளைட்டோமீடிஸ்ஸுடன் குஸ்தி பிடித்தேன்; அவனது வலியையழித்தேன். ஆன்ஸியஸ்ஸுடன் சண்டையிட்டு அவனைத் திருப்பித் தள்ளி மணலின் மேல் புரட்டி உருட்டி விட்டேன், இபிலிக்கஸ்ஸினும் வேகமாக விரைந்து முன்னுக ஓடிக் கெலித்தேன். ஈட்டியை எறிவதில், வைலியஸ்ஸையும், பாலிடோரஸ்ஸையும் மிஞ்சினேன்.

ஆக்டரின் மக்கள் மாத்திரம் குதிரைப் பந்தயத்தில் கெலித்தார்கள் என்பது உண்மைதான். அவர்கள் எண்ணில் மிஞ்சியவர்களாக இருந்தனர். அவர்களுக்கு யுக்தியோ, சக்தியோ இருக்கவில்லை. கீர்த்தியுடன் விளங்கிய இரட்டையர்களான அந்த ஆக்டரின் பிள்ளைகள் இருவரும் நான் மேற்கூறியபடி, 'நெஸ்டார் என்பவன் எல்லாப் பரிசுகளையும் ஒன்றன்பின் ஒன்றாய் அடித்துக் கொண்டு போகின்றானே!' என்று ஆத்திரங் கொண்டு, 'முண்டனுக்கு இரண்டாள்' என்ற பழமொழிப்படி தங்களது தேரின்மேல் துள்ளிக்குதித்து ஏறிக்கொண்டு, ஒருவன் குதிரைகளைச் சாட்டை கொண்டு அடித்து ஓட்டியும், மற்றவன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு ஒத்துழைத்து அந்தப் பந்தயத்தில் கெலித்தனர்.

இவ்வாறு ஒரு காலத்தில் நான் மிகவும் பலமுள்ளவனாக விளங்கினேன். எங்களைப் போல் இந்தக் காரியங்களைச் செய்து வருவதற்கு இப்போது இளங்காளைகள் தோன்றியிருக்கின்றனர். இக்காரியங்களை அவர்களே செய்யட்டும்! அவர்களுக்கு நான் இளைத்தவன்தான். வயோதிகர்கள் வலியிழந்தவர்கள் தானன்றோ! நான் முற்காலத்தில் அரங்கங்களில் அக்ரேசனாக விளங்கி வந்தவன்தான், எனினும் இப்போது இளைத்தவன்தான்.

எனது மகனே! இனிமேல் நடக்கவேண்டிய காரியங்களைச் செய்! தாராளமான அன்புடன் முன் சென்று, நண்பனான நமது வீரனுக்குச் செய்ய வேண்டிய அபர மரியாதைகளைச் செய்.

நீ இவ்வாறு பெருந்தன்மையுடனும், அன்புடனும் உன் கையாலேயே எனக்கு அளிக்கும் பரிசுகளை நான் மனமுவந்து ஏற்

றுக் கொள்ளுகின்றேன். மேலும், இங்குக் கூடியிருக்கும் எண்ணி றந்த கிரேக்கர்களில், வயது வந்த பெரியோர்களையும் என்னையும் கௌரவித்துப் பாராட்டாதவன் ஒருவனுவது இல்லை யென்றும் அறிந்து நான் மகிழ்கின்றேன். முறையாக நீ செலுத்தும் மரியா தைகளுக்குத் தகுந்த பலனை, என்றும் மாருத விண்ணுலக வாசி கள் உனக்கு வருங்காலத்தில் ஒரு நாள் அளிப்பார்களாக!" என்று பரிசையேற்றுப் பெருமைகொண்ட பூரண ஆயுளுடன் விளங்கிய அந்த விருத்தர் உரைத்தார்.

அகிலேசனும் அவருடைய மொழிகளைச் செவியேற்றுக் கவனித்துக் கேட்டு அவரினும் பெரிதுவந்தான்.

இது நிகழ்ந்தபின், கைகளில் கனமான உறைகளையணிந்து கொண்டு முஷ்டியுத்தங்களைச் செய்யத் தைரியத்துடன் முன்வந்த வீரர்களுக்கு அளிப்பதற்காக நியமிக்கப்பட்ட பரிசுகளை அக்களத் திற்குக் கொண்டு வரும்படி ஆணையிடப்பட்டது.

ஆறுவயதுள்ளதும், நுகமேந்தியறியாததும், வேறு வித மான காரியங்கள் ஒன்றுமே செய்து அறியாததுமான ஒரு கம்பீர மான கோவேறு கழுதையானது, முதன்முதலாக அந்த வட்ட வடிவான அரங்கத்திற்குக் கொண்டு வரப்பட்டு, அங்கு ஒரு மரத்தில் கெட்டியாகக் கட்டப்பட்டது. அதற்கு அடுத்தாற்போல், கெட்டியும், பெரிதும், வட்டவடிவமுமான ஒரு பெரிய கிண்ணமும் வைக்கப்பட்டது.

அப்பொழுது அகிலேசன் எழுந்து நின்றுகொண்டு, "இந்தக் கடினமான முஷ்டியுத்தத்தைச் செய்யப் போதிய சாமர்த் திய முள்ள கிரேக்கர்கள் இருவர் இங்கு உளரெனில், அவர்கள் எழுந்து முன்வரலாம்! அவர்களில் ஒருவன், தன்னைச் சண்டைக் கிழுக்கும் ஆயுதபாணியான சத்துருவொருவனை யெதிர்த்து வந்து, அவனது நீண்ட ஆயுதம் கீழே தாழும் முன், அதனடியில் சரசர வென்று ஓடவேண்டும். கெலிப்பவனுக்கு, அப்பால்லோ தேவர் இந்தப் பரிசையளிப்பார். கிரேக்கர்களும், அவனை வெற்றி பெற்ற மஹாவீரன் என்று போற்றிப் பாராட்டுவார்கள். இவ்வாறு துணிவுடன் முன்வந்து இந்தப் பந்தயத்தைக் கெலிப்பவனுக்கு இந்தக் கோவேறு கழுதையையும், தோற்றவனுக்கு இந்தப் பெருங் கிண்ணமும் பரிசாக அளிக்கப்படும்" என்ருன்.

இந்த வசனங்களைக் கேட்டு, மஹானுன ஈப்பியூஸ் என்பவன், 'நான் இந்தப் பயங்கரமான யுத்தத்தைச் செய்வேன்!' என்று சொல்லிக் கொண்டு தனது இடத்தை விட்டுப் பெயர்ந்து எழுந்து வந்தான். பெரிய தேகத்தையுடையவனுன அவன், அங்குக் கூடியிருந்த அனைவருக்கும் மேலாக உயர்ந்து விளங் கினுன். அவன், பரிசாக நியமிக்கப்பட்டிருந்த மிருகத்தைத் தனது கையிற் பிடித்துக்கொண்டு, தன்னைச் சுற்றிலுமிருந்த கிரேக்கர் களனைவரையும் நோக்கிக் கீழ்க்கண்டவாறு உரைத்தான்.

"இந்தக் கிண்ணத்தைத் தூக்கிக் கொண்டு செல்லத் தக்கவன் யாராயினும் ஒருவன் இங்கு இருப்பனேல், அவன் முன் வரலாம், அவன் தனது பிராணனைக் கொடுத்து விட்டு, இந்தப் பரிசைப் பெற்றுக் கொள்ளலாம்! இந்தக் கோவேறு கழுதை எனக்குத்தான் சேரத் தக்கது என்பதை மறுப்பவன் எவனேனும் இங்கு உளனோ? இந்தப் பந்தயத்தைக் கெலித்தவன் நான்தான் என்பதில் சந்தேகம் கொண்டவனும் ஒருவன் இங்கு உளனோ? அவ்வாறு நினைப்பவன் ஒருவன் இங்கு உளனேல், அவன் எழுந்து முன் வரலாம்!

யுத்தகளத்தில் வேறு வீரர்கள் கீர்த்தியுடன் விளங்குகின்றனர் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகின்றேன். இந்தப் போட்டி யுத்தத்தில் முதலாவது மரியாதைகள் பெறத் தகுந்தவன் நான் தான், என்பதை யார் மறுக்கக் கூடும்? தவிர, சகலமான வித்தைகளிலும் வல்லவனாக விளங்குவதற்கு யாராலாகும்! அது ஆகாத காரியம்.

ஆதலால், எனக்குப் போட்டியாக, என்னை யெதிர்க்க வேண்டுமென்று நினைப்பவன் ஒருவன் இங்கு உண்டானால், அவன் எழுந்து முன் வரட்டும். முதன் முதலில், அவன் தனது அதிர்ஷ்டம் எவ்வாறு இருக்கின்றது என்பதை நன்றாக அறிந்து கொள்ளட்டும். அவனது உடல் முழுவதையும் இந்தக் கையானது நன்றாகப் புடைக்கப் போவது திண்ணம். அவனுடைய எலும்புகளையும் இந்தக் கையானது நொறுக்கிப் பிசைந்துவிடும். அதுவும் நிச்சயந்தான். அது அவனது தேகத்தை இடித்துப் பொடியே ஆக்கிவிடும்.

ஆதலால், இவ்வளவுக்கும் துணிந்து ஒருவன் முன் வருவானெனில், அவன் வரட்டும், அவனுடைய பரிசனங்களும் அவனுடன் வரட்டும். அவனது உடலானது நசுங்கி நொறுக்குண்டு இந்தக் களத்தில் கிடக்கையில், அவர்கள் அதை எடுத்துத் தூக்கிக் கொண்டு செல்லலாம்!" என்றான்.

இவ்வாறு அந்த அரக்கன் சொல்லிய வசனங்களைச் செவியுற்றுக் கேட்ட, அங்கு கூடியிருந்த ஜனங்கள் எல்லோரும், இடியிடித்தது போல் மனங்கலங்கிப் பித்தரைப் போல் விளங்கினர்; அவனையே உற்றுப் பார்த்தனர்; மெய் மறந்தனர்; சொல்லிழந்தனர்; மௌனமாயினர்.

கடைசியாக யூரியாலஸ்ஸே! அவனுடைய சக்தியையும் பார்த்து விடுவோம், என்று நீயே தைரியத்துடன் முன் வந்தனை. உனது தகப்பனும், மஹாவீரன் என்று பிரஸித்தி பெற்றவனுமான மெஸிஸ்தியூஸைப் போல் அவனுடைய சக்தியையும் பார்த்து விடுவோம் என்று நீயே தைரியத்துடன் முன் வந்தனை.

முன்னாளில் உனது தகப்பனும், மஹாவீரன் என்று பிரஸித்திப் பெற்றவனுமான மெஸிஸ்தியூஸைப் போல் பேருங் கீர்த்தியும்

சம்பாதிக்க வேண்டும் என்ற ஆத்திரத்துடன் நீ முன்வந்தனே. முன்னுளில் உனது தகப்பன் தீப்ஸில் நடந்த பந்தயங்களில் வெற்றியுடன் விளங்கிப் பெரும் பரிசுகளைப் பெற்றவன். ஈடிப்பஸ் மரணமடைந்த பொழுது, அவனை யுத்தேசித்துப் பாராட்டி நடத் தப்பட்ட பந்தயங்களில் உனது தந்தை ஒருவனே கோஷ்டியாரனை வரையும் தோற்கடித்தனன்.

இந்தப் பந்தயத்தில் தனது நண்பனுக்கு வெற்றி கிடைக்க வேண்டுமென்று ஆவலும் ஆத்திரமுங் கொண்டு, மஹானுன திடிதீசன் அவனைத் தூண்டினுன். தானே யெழுந்து அவனது இடுப்பில் கச்சையை இறுக்கிக் கட்டினுன்; உயிரை வாங்கக் கூடிய கனமான குண்டுகளையுடைய கையுறைகளையும் அவ னுடைய மணிக்கட்டுகளில் கட்டினுன்.

அப்பொழுது இவ்விரு வீரர்களும், மல்யுத்தம் செய்வதற்கு நியமிக்கப்பட்டிருந்த அரங்கின் நடுவில் நின்றனர். அவர்கள் இரும்பைப் போன்ற தங்களுடைய கைகளை உயரத் தூக்கிச் சமன் செய்து கொண்டு, பின்பு யுத்தத்தை ஆரம்பித்தனர். அவர்கள், தங்களுடைய இருப்புக் கையுறைகளால் ஒருவரை யொருவர் இடித்து மோதினர். அப்பொழுது அவர்களுடைய தாடைகள் நறநறவென்று நொறுங்கி, அந்த இருப்புறைகளை யனுசரித்துப் பிரதியொலியைச் கிளப்பின. அடியும் இடியுங் கொண்டு சிதைந்து போய்விட்ட அவர்களுடைய உடல்களின் பல அவயங்களினின்றும் வேர்வையானது ஆருகப் பெருகியது. இவ்வாறு சிலகாலம் இந்த யுத்தம் நிகழ்ந்தது.

கடைசியாகத் தனது சத்துருவானவன் சிறிது அஜாக் கிரதையாக விருந்த தருணம் பார்த்து, ஈப்பியூஸ் என்பவன் அவனது கன்னத்தில் ஒரு பலமான அறை அறைந்தான். எதிர்க்க முடியாத ஈப்பியூஸின் பிரம்மாண்டமான கைவன்மைக்கு இலக் காகிய யூரியாலஸ், அவனது கைகளின் கீழ் அடியற்ற பனைபோல் திடீரெனத் தனது உடலை நீட்டிக் கொண்டு விழுந்து விட்டான்.

காற்றுக்களும் நீர்நிலைகளும் உறுமிக் கர்ஜனை செய்து வருகையில், ஒரு பேரலையினுல் அடித்துக் கொண்டு வரப்பட்டுக் கரையில் மோதுண்ட ஒரு பெரிய மீனைப்போல், கணக்கிலடங்காத காயங்களைக் கொண்ட இந்த வீரன் இரத்தத்தை வடித்துக் கொண்டு, அந்தக் களத்தில் விழுந்து துடித்து வந்தான்.

இவ்வாறு கீழே விழுந்து துடித்து வந்த தனது சத்துருவை எழுப்புவதற்காக, அவனை வென்றவன், அவனுக்கு அலட்சியமாக ஒரு கைகொடுத்து உதவி, அவனை அவனுடைய பரிசனங்களுடன் சேர்த்து விட்டான். தட்டித் தடுமாறித் தன்னுடைய கால்களை யிழுத்துத் தள்ளாடிக் கொண்டு சென்ற அவனை, அவர்கள் தங்க ளுடைய கரங்களில் ஏந்திக் கொண்டு சென்றனர். அப்பொழுது

அவனது தலையானது அவனது தோள் பட்டையின் கீழ் அசைந்து ஆடியது. அவனுடைய வாயினின்றும், நாசித் துவாரங் களினின்றும், இறுகிப் போன இரத்தக் கட்டிகள் கடகடவென வெளிவந்தன. அவன் அங்கு நிறைந்துள்ள புழுதியையே தனது போர்வையாகக் கொண்டும், நினைவழிந்தவனாகவும், மெய்ம்மறந் தவனாகவும் அங்குக் கிடந்தான். இவ்வாறு அவனது உயிரையே உயர்ந்த விலையாக வழங்கினான். அவனுடைய பரிசனங்களும், நண்பர்களும், இரண்டாம் பரிசாகிய கிண்ணத்தை ஏற்றுக் கொண்டனர்.

அகிலேசன், மூன்றாம் பந்தய ஆட்டம் ஒன்றையும் வைத்து, அதற்குப் போட்டி போட்டு வரும்படி "தன்னுடைய கோஷ்டி யினருள் தைரியமுள்ளவர்கள் முன் வரலாம், சமமாகப் பரப்பி யுள்ள மணற்கரையில், மல்லயுத்தம் செய்வதற்குத் துணிந்துள்ள வர்கள் முன் வரட்டும்" என்றான்.

அந்தப் பந்தயத்தில் வென்றவர்க்குப் பரிசு அளிப்பதற்கு ஈராறு இடபங்களின் விலைக்கு ஈடான ஒரு பிரம்மாண்டமான முக்காலியும் கொண்டுவரப்பட்டது. அந்த யுத்தத்தில் தோற்றவ னுடைய மனதைத் தேற்றுவதற்காக நான்கு இடபங்களுக்கு ஈடான ஓர் அடிமைப் பெண்ணும் இரண்டாம் பரிசாக நியமிக்கப் பட்டனள்.

தோள்வலியைத் தோற்றுவிக்கும் இந்தப் பந்தயத்தை நடத்தப் போவதாக அந்த வீரன் உரைத்த கணமே, கோபுரம் போல் உயர்ந்த அஜாக்ஷனும், யுலிஸ்ஸீஸும் அந்தப் பந்தயத்தில் ஈடுபடுவதாக ஆத்திரத்துடன் தத்தம் ஆசனங்களினின்றும் எழுந்தனர். உறுதியான அவயவங்களுடன் விளங்கிய அவ்வீரர் கள் இருவரும், அந்த அரங்கத்தின் மத்தியில் ஒருவருக்கொருவர் எதிராக நின்றனர்.

அப்பொழுது அவ்விருவரும் தங்களுடைய கைகளால் ஒருவரை யொருவர் இறுக்கித் தழுவிக் கொண்டு நின்றவர் போலவே விளங்கினர். தங்களுடைய கைகள் இரண்டையும் கோத்துக் கொண்டு நின்ற அவ்விரு வீரர்களுடைய தலைகளும், புஜங்களும் ஒன்றை யொன்று சந்தித்தன. அவர்களுடைய பாதங்கள் மாத்திரம் ஒன்றையொன்று சந்திக்காமல், சிறிது தூரம் விட்டு விலகி உறுதியாகவும் அசையாமலும், நிலத்தில் பதிந்து நின்றன.

கார் காலத்தில் ஊளையிட்டுக் கொண்டு அடித்து வரும் காற்றுக்கும் புயலுக்கும் ஈடுகொடுத்து வருமாறு, ஒரு தச்சனால் உச் சியில் சேர்த்துப் பிணைக்கப்பட்ட இரண்டு கைம் மரங்களையும், அவற்றின் அடியிலுள்ள விசாலமான இடத்தின் மத்தியில் அசை யாமல் நின்றுகொண்டு அவற்றைத் தாங்கி வரும் கெட்டியான கம்பத்தையும் போலவுமே, இவ்விரு வீரர்களும் விளங்கினர்.

அப்பொழுது தைரியம் நிறைந்த இவ்விரு வீரர்களுடைய தேகங்களும் ஒன்றை யொன்று பற்ற வேண்டுமென்ற நோக்கத் துடன், தலை தாழ்ந்தன; அச்சமயம், அவர்களது தேகத்திலிருந்து மயிர்க்கால்கள் ஒவ்வொன்றினின்றும் வியர்வையானது, கச கச வென்று கசிந்தது. அவர்கள் ஒருவரையொருவர் இடித்தனர். அந்த இடிகளுக்கு எதிரொலிகள் விடை பகர்ந்தன! அவர்களிரு வரும், ஒருவன் மற்றவனுடைய அள்ளைகளையும், தோள்களையும் தொடைகளையும் பிடித்து, அழுத்திக் கசக்கிய பொழுது, அவை கிழங்குகள்போல் பொங்கி வீங்கின. அவற்றினின்றும் இரத்தக் காயங்கள் கொண்ட கொப்புளங்களும் எழுந்தன.

யுலிஸ்ஸீஸ் தந்திரசாலியும் யுக்திகளில் தேர்ந்தவனுந்தான் எனினும், அவனால் பலவானான அஜாக்ஷனைப் புரட்டிப் பூமியின் மேல் வீழ்த்த முடியாமற் போயிற்று. பலவானான அஜாக்ஷனு லும், தந்திரங்களில் வல்லவனும், காரியத்தின் மேலேயே கண்ணுங்கருத்துமாக ஜாக்கிரதையுடனிருந்த கபடியுமான தனது சத்துருவைப் புரட்டியுருட்டவும் இயலாது போயிற்று. இவ்வாறு பலசாலியும், தந்திரசாலியுமான இவர்கள் இருவரும் நெடுநேரம் பொருது வந்த இந்த யுத்தத்தைக் கண்ணுற்று வந்த ஜனங்களும் சலித்துப் போயினர்.

அப்போது மஹானான திலமான், யுலிஸ்ஸீஸை நோக்கித் " தலைவ! நாம் இப்போது இரண்டில் ஒன்று செய்தல் வேண்டும்; ஒன்று நான் உன்னைத் தூக்குகின்றேன், இல்லையெனில் நீ என் னைத் தூக்கு; இந்த இரண்டு காரியங்களில் ஒன்றை நாம் செய்தல் வேண்டும்; நமது சக்தியை நாம் காட்டல் வேண்டும். அதன் பின் ஜோவ் தேவர் இந்தக் காரியத்தைத் தீர்த்து வைக்கட்டும் " என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டே அவன், தனது ஒப்பற்ற சக்தியனைத்தையும் ஒன்றாய்த் திரட்டிக் கொண்டு, ஒரேயடியாய்த் தரையிலிருந்து உயரக் கிளம்பினான். அப்பொழுது யுலிஸ்ஸீஸ், சமயோசிதமாகத் தனது சக்தியை யுபயோகித்து, அவனது பிடிக்கு அகப்படாமல் நழுவி, அவனுடைய கணுக்காலைப் பார்த்து, நரம்பு கள் கூடுமிடத்தைக் குறிவைத்து, ஓர் அடி அடித்தான். அதனால், பிரம்மாண்டமான தேகத்தையுடைய அரக்கனைப் போன்ற அந்தத் திலமான், திடீரென மல்லாந்து விழுந்து விட்டான். அவனை அத்துடன் விட்டுவிடலாகாதென்று நினைத்து, யுலிஸ்ஸீஸ் அவனது மார்பின் மேலும் விழுந்து படுத்துக் கொண்டான். அப்பொழுது அங்குக் கூடியிருந்த ஜனங்கள் இட்ட கூச்சல்கள் கல கல வென்று ஆகாயத்தைத் துளைத்துக் கொண்டு சென்றன.

பின்பு யுலிஸ்ஸீஸ் அஜாக்ஷனைத் தூக்கி யெடுக்க முயன் றான். ஆனால் அவனை அசைக்க முடிந்ததேயன்றி, உயரத் தூக்க முடியவில்லை. அவன் தன்னுடைய முழங்கால்களை ஒன்றோ

டொன்ருகப் பிணைத்துப் புரட்டிக் கொண்டு, தனது சத்துருவின் பிரயத்தனங்களை வியர்த்தமாக்கி விட்டான்.

அதன்பின் அவ்விருவரும் ஒருவரை யொருவர் பிடித்துக் கட்டிக் கொண்டு போராடினர். அவர்கள் உருண்டுருண்டு புரண்டனரேயன்றி, ஒருவருக்கொருவர் தோற்கவோ, இளைக்கவோ இல்லை. இவ்வாறு கௌரவம் மிக்க அவ்விருவரும் உருண்டு புரண்டு அந்தப் போர்க்களத்தில் படிந்திருந்த புழுதி யைப் புனிதமாக்கியது மன்றிச் சண்டையிலேயே கண்ணுங் கருத்துமுள்ளவர்களாகவும், மனத்தளர்வில்லாதவர்களாகவுமே தோன்றினர்.

அவர்கள் பின்னும், ஒருவன் மற்றவனை நோக்கி, மேன் மேலும் சீறிக் கொண்டு யுத்தத்துக்கு எழுந்தனர். அப்பொழுது மஹாஞன அகிலேசன் பின்வரும் வசனங்களை யுரைத்து அவர் களைச் சமாதானஞ் செய்து அந்தப் பரிசை அவ்விருவர்க்கும் பகிர்ந்து கொடுத்தான் :—

“ எனது நண்பர்களே! நீங்கள் பெருந்தன்மையும், பெரும் பலமும் உள்ளவர்கள். இதுவரை நீங்கள் போராடியது போதும். உங்களது சீற்றத்தை இத்துடன் நிறுத்துங்கள். உங்களுடைய அளவிறந்த சக்திகளை இச் சண்டையில் செலவழித்து நீங்கள் அலுத்துப்போக வேண்டாம். அது வீணேயாகும், இந்தப் பந்த யத்தில் நீங்கள் இருவருமே வெற்றியடைந்து விட்டீர்கள்.

உங்களினும் மிக்க வீரர்களாவது, பலவான்களாவது யாரா யினும் இங்கு இருப்பார்களாஞல் அவர்கள் முன் வரட்டும். உங்களைப் போல் பொருது, அவர்களும் தங்களது சௌரியத்தை எல்லாருமறிய விளக்கிக் காட்டட்டும்!” என்ருன்.

இவ்வாறு இந்த வீரன் உரைத்த வசனங்களை, அந்தத் தலை வர்கள் இருவரும் மனமொத்துக் கேட்டு அவனுரைத்த வண்ணமே செய்தனர். பின்பு அவர்கள் அலுத்துப் போயிருந்த தங்களுடைய சரீரங்களின் மேல் படிந்திருந்த புழுதிகளைத் துடைத்து விட்டு, புதிய வஸ்திரங்களை அணிந்து கொண்டு, மேல் நடந்த பந்தயங் களைப் பார்க்க வந்தனர்.

அப்பொழுது விசையுடன் ஓடுவதற்காக போட்டி போட் டுக் கொண்டு முன்வரும் இளைஞர்களுக்கு அளிப்பதற்கான பரிசு கள் அடுத்தபடியாகத் தீர்மானிக்கப் பட்டன.

சரியாக ஆறுபடி கொண்ட ஒரு வெள்ளிக் கிண்ணமானது முதற்பரிசாக நியமிக்கப்பட்டது. அது நிறையிலும், வேலைப் பாட் டிலும் வேறு ஒன்றுக்கும் இளைக்காதது. சித்திர வேலைகளில் கை தேர்ந்தவர்களான ஸைடோனியர்களால் மெருகிடப்பட்ட அக் கிண்ணமானது, திவ்வியமான உயர்ந்த சித்திர வேலைப்பாடுக

ளுடன் பளிச்சென விளங்கியது. அந்த அருமையான பாத்திரத்தைத் தைரியசாலிகளான டயர் நாட்டுக் கப்பற் பிரயாணிகள் ஸைடனிலிருந்து, தங்களுடைய மரக்கப்பல்களிற் ஏற்றிக் கொண்டு வந்து லெம்னியன் துறைமுகத்தில் தேவாஸுக்குக் கொடுத்தனர்.

இவ்வாறு பெருமை வாய்ந்த அந்த உத்தமமான பரிசானது, வம்சக்கிரமத்தில் நல்லோனான யூனியஸ்ஸுக்குக் கிடைத்தது. அவன் அதனை லிக்கேயனுக்குத் தர அவனால் அது மஹா தைரியசாலியான பத்திரகலுஷனுக்கு ஓர் உயர்ந்த பரிசாக அளிக்கப்பட்டது. அது, அதே பத்திரகலுஷனுடைய அபரக் கிரியைகளின் இறுதியில் செய்யப்பட்ட இந்தப் பந்தயத்தில் வென்றவனுக்குப் பரிசாக இப்போது விளங்குகின்றது.

இந்தப் பந்தயத்தில் இரண்டாவனாக விளங்குபவனுக்குக் கொடுப்பதற்காக நன்றாகப் போஷிக்கப் பட்டுக் கொழுத்து விளங்கிய ஒரு காளையும், மூன்றாவதாக ஓடி வந்தவனுக்கு ஓர் அரைத் தாலந்து நாணயமும் பரிசுகளாக வைக்கப் பட்டன.

அப்பொழுது அகிலேசன் தனது இடம் விட்டுப் பெயர்ந்து எழுந்து தனது பரிசனங்களை நோக்கி "இந்த ஓட்டப் பந்தயத்தில் பரிசுகளைப் பெறவேண்டும் என்ற ஆவல் உள்ளவர்கள் எழுந்து நில்லுங்கள்! இந்தச் சமவெளியில் உங்களது திறமையைக் காட்டுங்கள்; இந்தப் பரிசுகளை எடுத்துச் செல்லுங்கள்" என்றான்.

அவ்வாறு அந்த வீரன் சொல்லியகணமே, ஆயிலிய அஜாக்ஷன், தனது இடம் விட்டு எழுந்து அந்தப் பந்தயத்தில் கலந்து கொள்ள முன் வந்தான். அவனுக்குப் பின் யுலிஸ்ஸீஸ் வந்தான். மூன்றாவதாகத் தன்னைப்போன்ற இளஞர்களை மிஞ்சிய வேகம் உடையவனான நெஸ்டாரின் புத்திரனும் கடைசியாக வந்தனன். ஓட்டத்தில் சமர்த்தர்களான இம் மூவரும் ஒரு வரிசையில் சித்தமாய் நின்றனர். பந்தயத்துக்குக் குறிப்பிட்டிருந்த எல்லையைப் பிலிதீசன், தனது கையினால் சுட்டிக் காட்டினான். மூவரும் உடனே புறப் பட்டனர்.

ஆயிலியயஸ் இந்தப் பந்தயத்தில் முதல்வனாக விளங்கினான். அவனுக்கு அடுத்தாற்போல், அவனது அடிமேல் அடிவைத்துக் கொண்டு, யுலிஸ்ஸீஸ் அவனைத் தொடர்ந்து வந்தான். ஆயிலியஸ்ஸுக்குப் பின்னால் அவனைத் தொடுபவன் போலவே, அவனை நெருங்கிக்கொண்டே, அவன் ஓட்டமாக ஓடிவந்தான். நூல் நூற்று வரும் எழில் வாய்ந்த ஓர் இளங்குமரியின் மார்பு, அவளுடைய கொங்கைகளின் வனப்பை வெளிப்படையாய்க் காட்டிக் கொண்டு, அவளது இராட்டினக்கதிரைத் தொடர்ந்து கொண்டே, அத்துடன் ஓடுவதுபோல் ஓடும் நூலைப்போல், கண்டோர் களிக்கும் வண்ணம் அவன் தனது எதிராளியைத் தொடர்ந்து கொண்டே ஓடினான். அவனது அடிச்சுவட்டினின்றும் புழுதியானது எழும் முன்னம், இவன் அச்சுவட்டின்மேல், தனது காலை

யும் வைத்து வந்தான். அப்பொழுது அவனினின்று எழுந்த தகதக வென்ற மூச்சானது, ஆயிலியஸ்ஸையும் தாக்கியது.

கிரேக்கர்கள் அனைவரும் இதைக் கண்ணுற்று வியந்தனர்; அவனே கெலிக்கவேண்டுமென்று விரும்பினர்; மனதார வேண் டினர்; கண்ணைக் கொட்டாமல் அவனையே உற்றுப் பார்த்து வந்தனர். இவ்வாறு அவன் காற்ருய்ப் பறந்து செல்லுகையில் அவனுக்கே வெற்றி கிடைக்க வேண்டும் என்று பிரார்த்தித்தும் வந்தனர்.

இவ்வாறு துடித்துக்கொண்டு, "விடேன், கொடேன்" என்று பதை பதைத்து வேகமாக ஓடிச்சென்ற அந்தத் தலைவன், அந்தப் பந்தய இலக்கை மூன்று தரம் திரும்பித் திரும்பிப் பார்த்துப் பாலாஸ் தேவியை நினைத்து, 'தேவீ! எனக்கு அருள்புரிவீர்!' என்று மனமாரப் பிரார்த்தித்தான்.

அக்கணமே, அந்தத் தேவியும் இடம் விட்டுப்பெயர்ந்து இறங்கி வந்தனள். அவளது திவ்விய சக்தியினுல் அவனது தளர்வு எல்லாம் ஒழிந்து போயின. அவனும் புத்துயிர் பெற்று ஆகாயத் தில் நீந்துபவன் போலவே தோன்றினுன். அவனுடைய பாதங்கள் நிலத்தில் பாவி, ஊன்றி நிற்கவில்லை. அவனுடைய அவயவங்கள் ஒவ்வொன்றிலும் ஓரோர் இறக்கை முளைத்து விட்டது போலவே அவனுக்குத் தோற்றியது.

இச்சமயத்தில் நல்ல அதிர்ஷ்டமில்லாதவனுன அஜாக் ஷன், அந்தப் பரிசைத்தான் பறிக்கப்போவது நிச்சயம் என்று தீர்மானித்துக்கொண்டு அதிவேகத்துடனும், மூர்க்கத்துடனும் முன் வந்தான். ஆனுல் அவனது எண்ணம் நிறைவேறவில்லை. பாலாஸ் தேவியானவள் அவனைப் புரட்டி விட்டாள். அவன் தட்டுத் தடுமாறிக்கொண்டு, சாணமும், இரத்தமும் கலந்து, உறைந்து சகதியாகி வழுக்கி வழியைத் தடுத்து வந்த கரையோர மாகத் தலைகுப்புற விழுந்து விட்டான். இந்த இடமானது பத்திரகலுஷனுக்குச் சிதை அடுக்கப்பட்ட இடத்திற்கும், அச் சிதைக்குத் தீயிட்டபொழுது அத்தீயை வளர்ப்பதற்காகப் பலி யிடப்பட்ட மனிதர்களும், மிருகங்களும் வதையுண்ட இடத்திற்கும் சமீபமாக இருந்தது.

இவ்வாறு இந்த ஓட்டப் பந்தயத்தில் அன்வயித்த இந்த வீரன், கசுமலங்களைப் பூசிக்கொண்டும், களிமண் சாந்தை அணிந்து கொண்டும், பார்வைக்கு அருவருப்பாகவும், தன்னை நொந்து கொண்டும், அங்குக் கீழே கிடந்தான். அவனுக்கு இரண் டாம் பரிசாக நியமிக்கப்பட்டிருந்த கொழுத்த ரிஷபந்தான் கிடைத்தது. விலைமிக்க முதற் பரிசை யுலிஸ்ஸீஸே அடித்துக் கொண்டு போய் விட்டனன்!

அப்போது இவ்வாறு முதற் பரிசைப் பெருமல் ஏமாந்து போன அந்த வீரன் தனக்குக் கிடைத்த இரண்டாம் பரிசாகிய அந்த வலிமிக்க கம்பீரமான மிருகத்தின் கொம்பைப் பிடித்துக் கொண்டு, கிரேக்கர்களை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"இது எனது தலைவிதிதான்! எனக்கு நல்ல அதிர்ஷ்டம் இல்லை! எனக்கு ஜயமில்லாமற் போயிற்று! போனது போகட்டும். கேவலம் மனிதனுன எனக்கு ஒரு தேவியன்ருே சத்துருவாய் வந்தனள்! தனது தயவுக்கு பாத்திரனுன ஒருவனுக்குப் பரிந்து வந்து, அவள் அவனை உறுத்தி விரைவாய் ஓட்டினுள்! இன்றைக்கு வெற்றியடைந்தது பாலாஸ் தேவியேயன்றி, யுலிஸ்ஸீஸ் ஆகமாட்டான்!" என்ருன்.

தன்மேற் படிந்திருந்த அழுக்குக்களையும், உறைந்த இரத்தப் பொருக்குக்களையும் உதறி உதிர்த்துக்கொண்டு அவன் மேற்கூறியவாறு உரைத்த வசனங்களைக்கேட்டு, அங்குக் கூடியிருந்த சேனு சமூக மனைத்தும் கொல்லென்று சிரித்தது! அந்தச் சிரிப்பின் எதிரொலியும் அந்தக் கடற்கரை முழுவதும் பரவிவிட்டது!

இவ்வாறு வீரர்களிருவரும் வாதித்துக்கொண்டும், ஒருவரையொருவர் நிந்தித்துக்கொண்டும், தெய்வத்தைப் போற்றியும் தூற்றியும் தங்கள் பொழுதைப் போக்கி வருவதைக் கண்டு ரஸித்தவனுன அந்திலோக்கஸ் தன்னுடன் போட்டிக்கு வருபவர் ஒருவரும் இலர் என்று அறிந்து, மெதுவாக முன்சென்று, சமத்காரமாகச் சில வசனங்களையுரைத்துவிட்டு, மூன்ரும் பரிசைத் தானேயெடுத்துக் கொண்டான் :—

"புத்தியிலும் வயதிலும் நமக்கு மூத்தோருடன் நாம் ஏன் வாதாடி வழக்குரைத்தல் வேண்டும்? அதனுல் என்ன பயன்? அவர்களை எக்காலத்தும் தேவர்கள் அன்புடன் ஆதரித்து வருகின்றனர். அவர்கள் செழிப்புடன் வாழுகின்றனர். நான் சொல்வதில் ஏதேனும் பிழை உண்டா, என்பதை நீங்களே பாருங்கள்.

அஜாக்ஷன் என்னிலும் முதியோன். அவனுக்குக் கிடைக்க வேண்டிய பரிசை நான் அவனுக்கு விட்டுக்கொடுக்கவேண்டியது நியாயமே! அவ்வாறே அவன் அவனுக்கு வயதிலும் ஞானத்திலும் முதிர்ந்தோனுன யுலிஸ்ஸீஸுக்குச் சேரவேண்டிய பரிசை விட்டுக் கொடுக்க வேண்டியதும் நியாயமன்ருே?

காலங்கண்ட அந்தத் தொண்டு கிழத்திற்குத், தேகத்திலாவது மனத்திலாவது தளர்வென்பது சிறிதும் காணேும். இதனுல் அந்த வீரர், மிகவும் செழிப்பான காலத்தில் பிறந்தவர் என்பது விசிதமாக விளங்குகின்றது. இப்போதும் தான் அவரைப் பாருங்கள்! சுறுசுறுப்புள்ளவர்கள் மாத்திரமே ஓடக்கூடிய இந்தப் பந்தய ஓட்டத்திலும், அவர் எத்துணை விசையுடன் ஓடுகின்ருர்!

அகிலேசர் ஒருவர்தான் அவரினும் விசையாக ஓடக் கூடியவராக விளங்குகின்றார். அகிலேசருக்குச் சமானமான ஒரு மனிதனும் உண்டோ? அவ்வாறு சமானமானவன் ஒருவன் உளன் எனில், அவன் அகிலேசரை மிஞ்சியவனாகவும், அமானுஷ்யப் பிரகிருதியு மாகவேயிருத்தல் வேண்டும்!'' என்றான்.

இந்த வசனங்களின் பலன் அவனுக்கு அக்கணமே கிடைத்துவிட்டது. இவற்றைச் செவிசாய்த்துக்கேட்ட பிலிதீசன் மெய்ம்மறந்து ஆனந்த பரவசனாயினான். அவன், "சமயோசித மாகவும், சமத்காரமாகவும் என்னைப் புகழ்ந்த உனக்கு இதற்கும் மேலான பரிசே தகுதி. உனது நண்பனைப் பாராட்டி நீ மொழிந்த புகழுரைகளைக் கேட்ட கிரேக்கர்கள் உனக்குத் தகுந்த மரியாதை களைச் செய்யாமல் வாளாவிருப்பரோ? மாட்டாரன்றோ! இதோ இந்தத் தூய தங்கத் தாலந்து ஒன்றைப் பெற்றுக்கொள்!'' என்றான்.

அந்தச் சிறுவனும் அந்தத் தாலந்தைப் பெற்றுக்கொண்டு திருப்தியடைந்து அங்கு விட்டு அகன்றான். அங்குக் கூடியிருந் தோரனைவரும் அந்த நெஸ்டார் புத்திரனை, 'இவன் தந்தைக் கேற்ற மகன்தான்!' என்று வியந்தனர்.

அதன்பின் அகிலேசன், ஒரு மார்க்கவசத்தையும், ஓர் ஈட்டியையும், மகுடத்தையும் எடுத்து வந்து, அவைகளை அந்தக் களத்தில் எறிந்தான். வெண்கலத்தினாலாக்கப்பட்டிருந்த அந்தப் பளுவான ஆயுதாபரணங்கள் கலகலவென்று சப்தித்தன. அவை யனைத்தும், சமீபகாலம்வரை தேவனான ஸார்ப்பீடனை அலங்க ரித்து வந்தவை. பத்திரகலுஷனும் அவற்றை ஒரு சிறுபொழுது அணிந்து அலங்கரித்துக்கொண்டு பெருமையுடனும், வெற்றியுட னும் வாழ்ந்து வந்தான்.

அகிலேசன் தன்னுடனிருந்த ஜனங்களை நோக்கி, "நமது கோஷ்டியில் உள்ள தைரியம் மிகுந்தவர்கள், இப்பொழுது முன் வரலாம்! இந்த ஏற்றமான, விலை மிகுந்த பரிசைப் பெறுவதற்குத் தகுதியுள்ளோன் என்ற மன உறுதியையுடையோன் எவனேனும் ஒருவன் இங்கு உளனேல், அவன் எழுந்து முன் வரட்டும். அவன் தனது இருப்புக் கவசமணிந்துகொண்டு நம்முடைய சகலமான சைன்னியங்களின் முன்னாக வந்து நின்று, தன்னைப்போலவே கவசமணிந்துள்ள மற்றொரு வீரனைச் சண்டைக்கு இழுக்கட்டும்.

எவன், தனது சத்துருவின் மேல் பொருத்தி இணைக்கப் பட்டுள்ள கவசத்தை ஊடுருவிப் பிளந்து, அவனது உடலையும் குத்திக் காய முண்டாக்கி, அந்தக் காயத்தினின்று ஒழுகும் இரத் தத்தினால், அவனது கவசத்தைக் கறைப்படுத்துவானோ, அவனுக்கு முன்னாளில் அஸ்திரோப்பியஸ் என்பவன் தரித்து வந்த இந்த வாளாயுதம் பரிசாக அளிக்கப்படும்.

இது திரேஸியா அலகுடனும் பொற்குந்துகளுடனும், குமிழ்க ளுடனும் விளங்குகின்றது. அவனது வெட்டுக்கும்குத்துக்கும்

இதுவே பரிசு. அவன் இதைத் தனது பக்கத்தில் ஓர் ஆபரணமாக அணிந்துகொள்ளலாம். அதன்பின் இதோ இங்குக் காணும் இந்த ஆயுதாபரணங்களை அவ்விரு வீரர்களும் தங்களுக்குள் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளலாம். மேலும், இந்தப் பந்தயத்தில் துணிவுடன் இறங்கும் அந்த இரண்டு வீரர்களுக்கும், பந்தயத்தின் இறுதியில், நம்முடைய கூடாரங்களில், ஒரு புஷ்டியான விசேஷமான விருந்தும் நடத்தப்படும்'' என்ருன்.

இந்த வசனங்களைச் செவியுற்றுக் கேட்டவுடன் மஹானுன திடியஸ்ஸின் புத்திரனும், பெருந் தேகமுடையோனுன அஜாக்ஷ திலமானும் ஆத்திரத்துடன் எழுந்தனர்.

பிரகாசத்துடன் விளங்கிய இருப்புக் கவசங்களைத் தரித்துக் கொண்டிருந்தவர்களும், பயங்கரரூபிகளுமான அவ்விருவீரர்களும், தங்களுடைய நண்பர்களனைவரும் வட்டமாகக் கூடியிருந்த அரங்கின் மத்தியில் ஓரோர்புறத்தில் நின்றனர். அம்மம்ம! அந்தக் காட்சி அதியற்புதமாக விருந்தது! அதைக் கண்ணுற்ற ஆர்கிவ்களின் மனமானது அடங்கா மகிழ்ச்சியுடன் பொங்கிப் படபட வென்று துடித்தது!

இவ்வாறு ஆயுதபாணிகளாக நின்ற அவ்விருவரும்நெடுநேரம் காலத்தைக் கழிக்காமல், ஒருவர் மேலொருவர் மூன்றுதரம் பாய்ந்தனர்; மூன்று தரமும் குறிதவறித் தோற்றனர்; இளைக்காமல், பின்னும் மூன்று தரம் தொடர்ந்து தாக்கினர். கடைசியாக அஜாக்ஷனுடைய ஈட்டியானது அவனது எதிரியின் அகன்ற கவசத்தைத் துளைத்து, அதில் ஒரு பிரம்மாண்டமான துவாரத்தையும் உண்டாக்கி விட்டது. ஆனுல் அந்த ஈட்டியானது, அந்தச் சத்துருவின் மார்பை மூடிக் காத்து வந்த பாகத்தை ஊடுருவிச் செல்ல முடியாமல் முனை முறிந்து, அவ்விடமே நின்று விட்டது.

ஆனுல் அந்த எதிரிக்கு இவ்விதமான தடைகள் ஒன்றுமே உண்டாகவில்லை. அவன் தனது ஈட்டியைத் தனது எதிரியின் கவசத்தின் ஓர் ஓரத்தையே இலக்காகக் கொண்டு, அதையே ஓங்கியடித்து, அந்த ஈட்டியை அவனது கழுத்துப் புறமாக ஆழ்த்தி யிறக்கினுன்.

அவ்வாறு அவன் தனது ஈட்டியைச் செலுத்தியதைக் கண்ணுற்ற கிரேக்கர்களனைவரும், தங்களது பெருவீரனுன அஜாக்ஷனுக்கு ஆபத்து உண்டாய் விடும் என்று பயந்து நடுங்கியவர்களாய், "இது போதும், இந்தப் போராட்டத்தை இத்துடன் நிறுத்துங்கள், பரிசை இருவரும் பங்கிட்டுக் கொள்ளுங்கள்," என்று கூக்குரலிட்டு முறையிட்டனர்.

என்ருலும், வெற்றியாளனுன திடிதீசனுக்கே முதற் பரிசு கொடுக்கப்பட்டது மன்றி அவனுக்கே பட்டாக் கத்தியும், குமிழிகள் பதித்த அரைக்கச்சையும் அளிக்கப்பட்டன.

அதன்பின், அதிவீரனுன அகிலேசன் ஒரு பிரம்மாண்டமான வட்டு வடிவமான இருப்புக் கட்டியைக் கடகட வென்று நிலத்தின் மேல் உருட்டினுன். அது ஒரு பெருத்த இடியைப்போல் முழங்கிக் கொண்டு உருண்டு சென்றது. கிரேக்கர்களனைவரும் அதனைச் சூழ்ந்து கொண்டு நின்று அதன் பருமனையும், கனத்தையும், உருவத்தையும் கண்டு அதிசயித்தனர், பிரமித்தனர். அது உலையிலிட்டு உருக்கப்பட்டுப் பின்பு தீயினுல் உருவாக்கப் பட்டது.

இந்தப் பிரம்மாண்டமான வட்டை அயீஷன் என்பவன், தனது கையினுல் தூக்கி யெடுத்து, ஆகாயத்தில் சுழற்றி யெறிவது வழக்கமாம். இந்த அரக்கனை அகிலேசன் வென்று, கொன்று, பெரும்பாரமும் அதிவிசேஷமுமான இந்த உண்டையையும், தனது மற்றைய கொள்ளைப் பொருள்களுடன் சேர்த்து வைத்திருந்தனன்.

"வட்டு வடிவமான இந்த இரும்புக் கட்டியைக் கீதம் பாடிக் கொண்டு ஆகாயத்தில் செலுத்தத் தக்க ஆற்றலுடையவர் யாரேனும் இங்கு உளர் எனில், அவர் முன் வரலாம்" என்று அகிலேசன் கூறினுன். மேலும் அவன், "இந்தக் கிண்ணத்தை உருட்டித்தள்ளக் கூடியவன் யாரேனும் ஒருவன் உளனேல், அவன் எழுந்து நிற்கட்டும். எவன், இதை மற்றையோரைக் காட்டிலும் அதி தூரத்தில் வீசியெறிவனே, அவனே இதைப் பரிசாக எடுத்துக் கொள்ளலாம்,

அவன் ஆட்டுமந்தைகள் மேய்வதற்கான மைதானங்களும் தானியங்கள் விளைவதற்கான வயல்களுமுள்ள விஸ்தாரமான ஆஸ்தியையுடையவனுயிருப்பானேல் அவனுக்கு இரும்புக்குப் பஞ்சமே உண்டாகாது. இந்த இரும்புக் கண்டத்திலிருந்து அவனுடைய உழவர்களும், குடியானவர்களும், பல வருஷங்கள்வரை தங்களுக்கு வேண்டிய ஆயுதங்களை யுண்டாக்கிக் கொள்ளலாம். தங்களுக்கு வேண்டிய கலப்பைக் கொழுவுகளுக்கோ, சக்கரங்களுக்கோ, அல்லது கிராம வாழ்க்கைக்கு அத்தியாவசியமாகிய வேறு ஆயுதங்களுக்கோ, அவர்கள், தங்களுக்கு அருகிலுள்ள நகரத்தாரது உதவியை நாடவேண்டிய அவசியம் உண்டாகாது" என்ருன்.

இவ்வசனங்களைக் கேட்டபொழுது, மனவுறுதியுடைய பாலிபீட்டிஸ் என்பவனும், சாமானியமான மனிதர்களைக் காட்டிலும் மிகுந்த பலத்துடன் விளங்கியவனுன லியோண்டியஸ் என்பவனும் எழுந்தனர் ; அவர்கள் அந்தக் கூட்டத்தின் முன் வந்து நின்றனர். அவ்விருவரையும் எதிர்ப்பதற்காக, மஹானுன அஜாக்ஷன் எழுந்தான்; ஈப்பியூஸும் எழுந்தான். இவர்கள் அனைவரும் வரிசையாக நின்றனர் ;

அந்தப் பிரம்மாண்டமான இருப்பு வட்டை முதன்முதலாக ஈப்பியூஸ் எடுத்து எறித்தான். அந்த வட்டானது, கரகரவென்று

சுழன்றுக் கொண்டு, அங்கு கூடியிருந்த ஜனங்களின் மேலாக உயர்ந்து பறந்து சென்றது.

லியோன்டியஸ் எறிந்தபொழுது, அது சிறிது அதிக தூரங் கடந்து சென்றது.

மூன்றாவதாக, தேவர்களுக்குச் சமானமான அஜாக்ஷன் தனது சக்தியனைத்தையும் ஒருங்கே திரட்டிக் கொண்டு அதைத் தூக்கி யெறிந்தான். அப்பொழுது அது முன்னையவர் இருவரும் எறிந்த பொழுது சென்ற தூரத்தினும், அதிகமான தூரத்திற் சென்றது.

கடைசியாகப் புஜபலம் நிறைந்தவனை பாலிப்பீட்டிஸ் என்பவன் அந்த வட்டுப் போன்ற பிண்டத்தை ஆத்திரத்துடன் எறிந்த பொழுது, அது முன்னையவர் மூவரும் எறிந்த தூரத்தையும் கடந்து கரகரவென்று சுழன்று முன் சென்றது. ஓர் இடையன் ஆட்டுக்குக்குழை பறிக்கும் தனது துரட்டியைக் கரகரவென்று சுழற்றி எறிந்தால், அது எவ்வாறு நெடுந் தூரஞ் சென்று அங்கு மேய்ந்து கொண்டிருக்கும் ஆடுகளின் மத்தியில் விழுமோ, அவ்வாறு, நெடுந் தூரத்திற் சென்று அந்த இரும்பு வட்டானது விழுந்தது. அவன் நண்பர்கள் அனைவரும் ஆச்சரியமடைந்து, ஆரவாரித்து ஒன்றாய்ச் சேர்ந்து கூச்சலிட்டுக் கொண்டு முன் சென்று, அந்தப் பளுவான பரிசைப் பெயர்த் தெடுத்தனர்,

அதன்பின் அகிலேசன் "வில் வித்தையிலும், அம்புகள் எய்வதிலும் வல்லவர்கள் முன்வந்து போட்டியிட்டு விளையாட லாம், குணத்தொனி செய்யும் வில்லை வளைக்க வல்லவர்கள் முன் வரலாம்," என்று தன்னுடனிருந்தவர்களை நோக்கி யுரைத்து, அவர்களின் முன்னிலையில், அந்த அரங்கத்தின்மத்தியில் இருபது கோடரிகளைத் தூக்கி யெறிந்தான். அவற்றில் பத்துக் கோடரிகள் இரண்டு ஓரமும் கூரானவைகளாகவும், மீந்த பத்துக் கோடரிகள் ஓர் ஓரம் மாத்திரம் கூர்மையுள்ளவைகளாகவும் இருந்தன.

பின்பு அவன் முதல்தரமான கப்பலொன்றைச் சிறிது பொழுது அலங்கரித்து வந்த ஒரு பாய்மரத்தை அந்தக் கடலோரத்தில் மணற்பாங்கான ஓர் இடத்தில் நாட்டினான். அதன் உச்சியில், அவன் பால் போன்ற வெண்ணிறமான ஒரு புறாவைக் கட்டுவித்து, அந்தக் கட்டிலிருந்து விடுபட வேண்டு மென்று தவித்துக் கொண்டிருந்த அந்தப் புறாவையே வில்லாளிகளின் இலக்காகவும் நிச்சயித்தான்.

"அதோ! அங்கு படபட வென்று துடித்துக் கொண்டிருக்கும் பக்ஷியைத் தனது அம்பினால் அடிப்பவனுக்கு, யுத்தத்திற் பகைவெல்ல வல்ல இந்த இருமுனைகளும் கூராகவுள்ள பத்துக் கோடரிகள் பரிசாக அளிக்கப்படும். புறாவைக் கட்டியிருக்கும்

கயிற்றைத் தனது வில்லால் அடிப்பவனுக்கு, ஒருமுனை மாத்திரமே கூர்மையாகவுள்ள மற்றைய பத்துக் கோடரிகள் அளிக்கப்படும்" என்றான்.

அப்போது வில்வித்தை பயின்றவனான மெரியோன், அந்த வசனங்களைக் கேட்டவுடன் சரேலென்று எழுந்து முன் வந்தான். அவ்வாறே அவ்வித்தையில் சமர்த்தனான டியூஸரும் முன் வந்தான்.

அவர்கள் தங்களுடைய பெயர்களைச் சிறு சீட்டுக்களில் எழுதி, அவற்றைத் தங்களது மகுடத்திலிட்டுக் குலுக்கினர். அப்பொழுது, பின்னயவனது சீட்டுபறந்து எழுந்து வந்தது. உடனே, அவனது வில்லின் நாணிலிருந்து, ஓர் அம்பானது, "விர்" என்ற சப்தத்துடன் விரைந்து பறந்து சென்றது.

ஆனால் அதற்கு நல்ல அதிர்ஷ்டம் இருக்கவில்லை. டியூஸரே! அம்புக்கும் வில்லுக்கும் அதிபதியாகிய பீபஸ் பகவானை நீ நினைத்தாயில்லை! உனக்கு வெற்றி கிடைத்தால் ஏதாயினும் பலி செலுத்துவேன் என்றோ, அல்லது முதலிற் பிறந்த ஆட்டுக் குட்டிகளை அர்ப்பணம் செய்வேன் என்றோ, நீ வேண்டிக்கொள்ள வில்லை. அவ்வாறு செய்யாத பிழையினால், நீ சரியாகக் குறிவைத்து விடுத்த அம்பும் குறிதவறி, ஒரு புறமாகத் திரும்பி விட்டது. புறாவை அடிக்கத் தவறிவிட்டது! அதைக் கட்டியிருந்த கயிற்றை மாத்திரம் அறுத்தது.

அப்போது அவ்வாறு துண்டிக்கப்பட்ட கயிறானது அந்தப் பாய்மரத்தின் அடியிலே விழுந்துவிட, அந்தப் பறவையும், தனது சிறகை விரித்துக்கொண்டு ஆகாயத்திற் பறந்து வந்தது. அச் சமயம், அங்குக் கூடியிருந்தோர் இட்ட கூச்சலினால், கடலும், கரையும், ஆகாயமும் ஒன்றாய்க்கூடி ஆரவாரித்தன.

அதே சமயத்தில் மெரியோன், தான் அந்தப் பறவையை யடித்தே தீரவேண்டும், அதற்கு ஒரு காயம் உண்டாக்க வேண்டும்! என்று ஆவலுடன் ஆலோசித்துத் தீர்மானித்துக் கொண்டு, தனது வில்லையெடுத்து நாணேற்றி, அம்பைத் தொடுத்து, அதனை அம்பரத்தை நோக்கி விடுத்தான். அவன் ஆகாயத்தில் மேன்மேலும் உயர்ந்து பறந்து வந்த அந்தப் புறாவைக் கண்கொட்டாமல் கவனித்துக் கொண்டே தெய்வத்தையும் பிரார்த்தித்தான் :—

"இந்தச் சரமானது ஆகாயத்தை ஊடுருவிச் செல்லுமாறு அருள்புரிவீராக! முதற்பிறந்த ஆட்டுக்குட்டிகளைத் தங்களுக்குப் பலியாகத் தருகின்றேன். வேறு வேள்விகளும் இயற்றி, எனது நன்றியைச் செலுத்துகின்றேன்!" என்று வேண்டிக் கொண்டான். அதன் பயனாக, ஆகாயத்தில் மேகங்களின் இடையில் வட்ட மிட்டுப் பறந்து கொண்டேயிருந்த அந்தப் புறாவானது, மெரியோ

னது கூரான சரத்துக்கு இலக்காகி விட்டது. அந்தச் சரம் அதனைக் குத்தித் துளைத்து ஊடுருவிப் பாய்ந்துவிட, அதனால் அந்தப் புரு தனது இரத்தத்தை வடித்துக் கொண்டு, அவனது காலடியிலேயே பொத்தென விழுந்து விட்டது.

இவ்வாறு குத்துண்டு தவித்து வந்த அந்தப் பறவை, தனது ஆவியைத் துறக்குமுன் வலிகுன்றிய தன்னுடைய சிறகுகளை விரித்துக்கொண்டு, உயரப் பறந்து சென்று பாய்மரத்தின் மேல் அமர்ந்து, அங்கு ஒரு கணம் தொங்கிப் பின், முன்போல் தன்னுடைய சிறகுகளை விரித்துக் கொண்டு திடீரெனக் கீழே விழுந்து, கடைசியாகத் தனது ஆவியை ஆகாயத்திற் கலந்து விட்டது.

அங்குக் கூடியிருந்த ஜனங்கள் இதைக் கண்ணுற்றுக் களித்து, இடிபோல் முழக்கி ஆர்ப்பரித்துத் தம் மகிழ்ச்சியைக் கொண்டாடினர். மெரியோனும் தனக்குக் கிடைத்த பரிசைத் தன்னுடைய கப்பல்களுக்குக் கொண்டு சென்றான்.

அபரக் கிரியைகளை யொட்டி நடத்தி வந்த இந்த ஆட்டங்களை, இனி முடிந்துவிடல் வேண்டுமென்று கருதி, அகிலேசன் கடைசியாக அந்த அரங்கத்தின் மத்தியில் ஒரு பிரம்மாண்டமான ஈட்டியையும், மிகுந்த திறமையுடன் வரையப்பட்ட சித்திரப் புஷ்பங்களைக் கொண்டதும், மாசற்ற பிடியுள்ளதும், அதுவரை அடுப்பேறி அனலினால் கறுப்படையாததுமான, வாயகன்ற ஒரு தாம்பாளத்தையும் வைத்தான். அவ்வாறு வைத்து விட்டு, அவன், "தத்தம் வில்லை வளைத்துச் சரசர என்று செல்லும் சரத்தை விரைவாகச் செலுத்த வல்லவர்கள், போட்டி போட்டுக் கொண்டு முன் வந்து எல்லோரும் அறியத் தங்களது திறமையைக் காட்டலாம். இந்தப் பரிசுகளைப் பெற்றுக் கொள்ளலாம்!" என்றான்.

இந்தப் பெரும் பரிசையும் தானே அடைய வேண்டும் என்ற ஆசையுடன் மஹானான மெரியோன் முன் வந்தான். மனிதர்க்கரசனான மஹாராஜனும், இந்தப் பந்தயத்தில் ஈடுபடுதல் தனக்கு இழுக்காகாதெனக் கருதித் தானும் முன் வந்தான். இவ்வாறு, அரசனே அந்தப் பந்தயத்தைக் கௌரவிக்க எழுந்ததைக் கண்ணுற்றவுடன், பிலிதீசன், அவனருகிற் சென்று, பின்வரும் வசனங்களையுரைத்தான் :—

"நாட்டாரனைவருக்கும் அரசே! தாங்களே நற்குணத்திலும், வீரசூர பராக்கிரமங்களிலும் எல்லோருக்கும் மேலானவர் என்று கிரேக்கர்கள் அனைவரும் கோஷிக்கின்றனர்! பாராட்டுகின்றனர்! வீரர்கள் விரும்பும் ஆட்டங்கள் அனைத்திலும் தாங்களே சிறந்தவர்கள், வல்லவர்கள் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

தாங்களே அவர்களது பெருந்தலைவர் என்பதும், உத்தம குணங்கள் அனைத்தும் ஒருங்கேயுடையவர் என்பதும் அவர்கள்

அறிந்த விஷயம். தாங்கள் இந்தப் பாத்திரத்தைப் பரிசாக எடுத்துக் கொள்ளுங்கள். தங்களது உடன் பிறந்தானுக்குப் பரிந்து வந்து இந்த யுத்தத்திற் கலந்து கொண்ட வீரனை மெரியோனுக்கு நாம் பிரகாசத்துடன் விளங்கும் இந்த ஈட்டியைக் கொடுப்போம். அவன் இதைத் தரித்துக்கொள்ளட்டும்" என்றான்.

அரசனும், மஹாவீரனை அகிலேசனே இவ்வாறு தன்னைப் புகழ்ந்து உரைத்ததைக் கேட்டு மகிழ்ந்து, வெண்கலத்தினாலாகிய ஈட்டியை மெரியோனுக்கே கொடுத்து விட்டான்.

தனக்குக் கொடுக்கப்பட்ட பாத்திரம் பூஜாக் கிரியைகளில் மாத்திரம் உபயோகிக்கப்படல் வேண்டும் என்று நியமித்து, அவன் அந்தத் திவ்வியமான தட்டத்தைத் தால்த்திபியஸ்ஸின் கையிற் கொடுத்து, அதைப் பத்திரமாகப் பாதுகாத்து வருமாறு திட்டமுஞ் செய்தான்.



## இருபத்து நான்காம் அத்தியாயம்

# ஹெக்டரின் உடல் மீட்கப்பட்டது

கதைச் சுருக்கம்: ஹெக்டரின் உடலை மீட்கும் விஷயமாகத் தேவர்களெல்லோரும் ஆலோசனை செய்கின்றனர். அவ்வுடலை துரோஜரிடம் திருப்பிக் கொடுக்கச் சம்மதிக்குமாறு அகிலேசனுக்குப் போதனை செய்வதற்காக, ஜூப்பிட்டர் பகவான், அவனிடம் தெட்டிஸ் தேவியையும், அவனிடம் நேராகச் சென்று அவ்வுடலை இரந்து கேட்குமாறு பிரியம்மஹாராஜனுக்குப் போதனை செய்வதற்காக ஐரிஸ் தேவியையும் அனுப்புகின்றார்.

பிரியம் மஹா ராஜனது மனைவிக்குத் தனது கணவன் அவ்வாறு செய்வது சம்மதமாக விருக்கவில்லை. அவள் தனது கணவனைத் தடுக்கின்றாள். ஆனால் பிரியம் மஹா ராஜன் அவள் ஆட்சேபங்களைப் புறக்கணித்து விட்டு, அகிலேசனிடம் செல்லப் புறப்படுகின்றான். அப்போது ஜூப்பிட்டரின் நியமனத்தால் அவனுக்கு ஒரு சுபசகுனம் உண்டாகின்றது. அவன் தனது காரியம் இனிதாக முடியும் என்ற மனவுறுதியுடன் புறப்படுகின்றான்.

அகிலேசனுக்கு அளிப்பதற்காக அவன் ஏராளமான பரிசுகளை ஒரு வண்டியில் ஏற்றிக்கொண்டு வரும்படித் தனது தூதனாகிய இடியஸ்ஸுக்குக் கட்டளையிட்டுவிட்டுத் தனது இரதத்தில் ஏறிக்கொண்டு புறப்படுகின்றான்.

அப்போது மெர்க்குரி பகவான், ஓர் இளைஞனது ரூபந்தரித்துக் கொண்டு, விண்ணுலகிலிருந்து கீழே இறங்கி வந்து, பிரியம் மஹா ராஜனை அகிலேசனது கூடாரத்துக்குக் கூட்டிக்கொண்டு செல்கின்றார்.

வழியில் அவ்விருவரும் சம்பாஷித்துக் கொள்ளுகின்றனர்.

பிரியம் மஹா ராஜன் அகிலேசனுடைய கூடாரத்தையடைந்த பொழுது அவன் போஜனம் அருந்திக் கொண்டிருக்கின்றான். பிரியம் மஹா ராஜன் அகிலேசனது காலடியில் விழுந்து தனது மகனது உடலைத் தரவேண்டுமென்று பிரார்த்திக்கின்றான்.

அகிலேசனும் மனமிரங்கிப் பிரியம் மஹா ராஜனது பிரார்த்தனைக்கு இணங்கியது மன்றி, அவனைத் தனது கூடாரத்தில் ஓர் இரவு இருத்திக்கொண்டு, மறுநாட் காலையில் ஹெக்டரது உடலுடன் அனுப்பி விடுகின்றான்.

துரோஜர்களனைவரும் பிரியம் மஹா ராஜனை வரவேற்க ஓடிவருகின்றனர். ஆந்திரமகி, ஹெக்குபா, ஹெலன் முதலியோர்

ஹெக்டரது உடலின்மேல் விழுந்து புலம்புகின்றனர். அவனுக்கு ஈமக்கடன்கள் நடத்துகின்றனர்.

இந்த அத்தியாயத்தில் பன்னிரண்டு நாளைய நிகழ்ச்சிகள் சொல்லப்படுகின்றன.

அந்தப் பன்னிரண்டு நாட்களும் ஹெக்டரது உடலானது அகிலேசனது கூடாரத்திலேயே கிடந்தது. அவனது சவச்சடங்குகள் நடக்கும் வரை இரு கட்சியாரும் பின்னும் பன்னிரண்டு நாட்கள் வரை யுத்தத்தை நிறுத்தி வைக்கின்றனர்.

இந்நிகழ்ச்சிகளிற் சில அகிலேசனது கூடாரத்திலும், சில ட்ராயிலும் நடைபெறுகின்றன.

---

இவ்வாறு பந்தயங்களெல்லாம் நிகழ்ந்த பின், கிரேக்கர்களனைவரும், அந்தக் கடற்கரையினின்றும் கலைந்து, தங்களுடைய கறுத்த கப்பல்களை யடைந்து விட்டனர். அவர்களனைவரும் தங்களுடைய ஆயுதங்களைக் கழற்றிவிட்டுத் தாராளமாகத் தங்களுடைய உடல்களை நீட்டிக்கொண்டு களைப்பை ஆற்றிக்கொண்ட பின், அறுசுவையுடன் கூடிய அன்னபானாதிகளை யருந்திவிட்டுப் பின்பு, தங்களுடைய சகலமான கவலைகளையு மொழிக்க வல்லதான சுகமான நித்திரைக்கு வசமாயினர்.

ஆனால் அகிலேசன் மாத்திரம் அவ்வாறு செய்யவில்லை. அவன் தனது அரிய நண்பனது உருவத்தையே மனத்தில் கொண்டு, வியசனித்துத் துக்கத்திற்கு வசமானவனாய், வேறு ஒருவருக்கும் கட்புலனாகாமல், அழுது புலம்பிக்கொண்டும், சகல கவலைகளையும் ஒழிக்கவல்லதான நித்திரையின் ருசியை அருந்த மனமில்லாமலும், தனது கட்டிலின்மேல் சோர்ந்து கிடந்தான். அவ்வாறு அந்தப் படுக்கையில் கிடந்தவண்ணம், அவன், தனது நண்பனான பத்திரகலுஷனையே நினைத்துக்கொண்டு, அப்படுக்கையைச் சுற்றிற் புரண்டு வந்தான்.

தனது நண்பனது வசீகரமான உருவமும், அன்பு நிறைந்த மனமும், என்றுங்குன்றாததும், இளையாததுமான இளம்வலிமையும், அஞ்சாநெஞ்சும், தானும் அவனும் ஒத்துழைத்த காரியங்களும், ஒருவருக்கொருவர் துணையாய் நின்று கவனித்து வந்த யுத்த காரியங்களும், இருவரும் ஒன்று கூடிச் செய்துவந்த பெருங் கடல் யாத்திரைகளும், யுத்தங்களும் ஆகிய அனைத்தும் அவனது நினைவிற்கு வந்தன. அவைகளை நினைத்து நினைத்து அவன் கரைந்து உருகினான்.

இவ்வாறு நெடுநேரம் அவைகளையே எண்ணியெண்ணி மனம் புழுங்கிக் கண்ணீர் விட்டு அழுதான்; அவன் ஒரு கணம்

குப்புறப் படுத்துக்கொள்ளுவான். மறுகணம் மல்லாந்து கிடப்பான்; ஒரு புறமாகப் புரளுவான்; திரும்பி மறுபுறம் புரளுவான்.

"பொழுது விடியவில்லையே! சூரியன் உதிக்கவில்லையே! தாமதமாகின்றதே!" என்று துடிப்பான்.

மேற்கூறிய உபாயங்களால் தனது மனம் அமைதியடையாதது கண்டு, அவன் உடனே திடீரெனத் தனது படுக்கையை விட்டு எழுந்து தன்னந் தனியனாய், அகன்ற விசாலமான கரையை நோக்கிச் செல்வான். "இந்தக் கடலுடனாவது நம்முடைய குறைகளைச் சொல்லி, ஆறலாம்" என்று நினைத்துக்கொண்டு, அவன் அங்குத் தன்னந் தனியனாய் அலறிப் புலம்பிக்கொண்டிருக்கையில், காலைப்பொழுதானது, தன்னுடைய செங்கிரணங்களை அலைகளின்மேல் நீட்டிக்கொண்டு உயர்ந்து வந்தது.

அவ்வாறு அது உதித்தவுடன் அவன் ஒரு கணமும் தாமதியாமல், தன்னுடைய துரிதமுள்ள துரகங்களைத் தனது இரதத்திற் பூட்டினான். அந்த இரதமும் பறந்தது. அத்துடன் ஹெக்டரின் பிரேதமும் தடதடவென்று பின்சென்றது. பத்திரகலுஷா! ஹெக்டர் இவ்வாறு மூன்று முறை உனது சமாதியைச் சுற்றி இழுத்துச் செல்லப்பட்டபின், அகிலேசனது கூடாரத்துக்கு அதிதுரிதமாக அனுப்பப்பட்டான். அதன் பின் அந்த வீரன் தீரா நித்திரைக்கு வசமாயினான்.

இவ்வாறு ஹெக்டருடைய தேகம் மனிதர் ஒருவராலும் கவனிக்கப்படாமலும், மரியாதைகள் செய்யப்படாமலும், அசுத்தங்கள் மலிந்த புழுதியில் கிடந்தது; எனினும் அதைத் தேவலோகத்தவர்கள் புறக்கணித்து விடவில்லை.

அந்தத் தேகத்தைப் பீபஸ் பகவான் விசேஷமான கவலையுடன் கவனித்துக் காத்தே வந்தார். பெருத்த காயங்களுக்கும், கொடுங் காற்றுக்களுக்கும் இரையாகாமல் அவர் அதைக் காத்தே வந்தார். விஷக்காற்றானது, அந்தப் போர்க்களத்தை அலங்கோலப்படுத்திக்கொண்டு மோதி வந்தபொழுது, பீபஸ்பகவான் ஹெக்டரின் புனிதமான பிரேதத்தின் மீது தமது பொன்மயமான கவசத்தைப் பரப்பி வந்தார். இதைக் கண்ணுற்ற தேவர்களனைவரும் மனமிரங்கிப் பரிதாபங்கொண்டனர்.

அவனது பிரேதத்தை அவனது கொடிய சத்துருவின் கையினின்றும் தந்திரமாகப் பறித்துப் பிடுங்கி விடவேண்டும் என்று ஹெர்மீஸ் இச்சைக்கொண்டனன். ஆனால் அவனது விருப்பத்திற்கு நெப்தியூனும், பாலாஸ் தேவியும் மனமிளகாத பிடிவாதக்காரியான தேவலோகராணியும் இணங்கவில்லை.

இளையோனான பாரிஸ் ஒன்றுமறியாத இடைப்பையனாக விளங்கி வந்தபொழுது; சிற்றின்பத்தில் ஆசைகொண்டவனாய்,

தங்கள் ரூபலாவண்ணியங்களைச் சிறிதும் கண்ணெடுத்தும் பாரா மல் புறக்கணித்துவிட்டு ஒரு சிப்பிரியச் சிறுக்கியை வரித்தது முதல், இவர்களிருவரும் ட்ராயினிடம் தீராப்பகை கொள்ளலானார்கள்.

இவ்வாறு பத்து தினங்கள் கழிந்தன. பத்தாம் நாட்காலை யில் கதிரவனொளி வீசியபொழுது, தேவலோகத்தில் தேவர்களெல் லோரும் தத்தம் ஆசனங்களில் அமர்ந்து கூடியிருக்கையில் அப் பால்லோ தேவர் சொல்லலானார் :—

"தேவர்களே! நீங்கள் இவ்வாறு இரக்கமற்றுப் போக லாமா? உங்களுடைய புனிதமான க்ஷேத்திரங்களில் ஹெக்டர் பன்முறையும் பலிகள் செலுத்தியிருக்கின்றனன் அன்றோ? அந்தப் பிராணிகளின் இரத்தம் உங்களுடைய க்ஷேத்திரங்களில் ஆறுகப் பெருகவில்லையா?

நீங்கள் இதுவரை அவனது கட்டை குளிர்ந்து கிடக்கப் பார்த்து வரலாமா? அவனது உடல் துரோஜர்களுக்குக் கட்புல னும் ஆகலாகாது என்று நீங்கள் இன்னும் பிடிவாதம் செய்ய லாமா? தடுக்கலாமா? அவனது மனைவியும், பெற்றதாயும், மகனும், தகப்பனும் அவனுக்கு இறுதிக்கடன்களைச் செய்யலா காது என்று நீங்கள் மறுக்கலாமா?

மஹா பாபியான அகிலேசன் ஒருவன் மாத்திரம் உங்களது பிரியத்துக்குப் பாத்திரனாகி விட்டனனோ? அவன் இரும்பைப் போன்ற இளகாத கன்னெஞ்சன்; மிகக்கொடியோன்; ஒருவ ருக்கும் இணங்காதவன்; அவன் கோபாவேசமும், செருக்கும் மலிந் தவன்; தன்னையெதிர்க்கத்தக்கவர் ஒருவரும் இல்லையென்ற பெரு மிதங்கொண்டவன்; அந்தப் பெருமிதத்தால் நாடு முழுவதையும் பாழாக்குகின்றான். அவன் காட்டில் திரியும் கொடிய மிருகங்களின் தலைமையை வகிக்கும் ஒரு சிங்கத்தைப் போலன்றோ துடிக் கின்றான், குதிக்கின்றான்! அவன் ஒரு மனிதனா?

வெட்டுவதிலும், குத்துவதிலும், கொலைகள் புரிவதிலுமே பிரியமுள்ளவனாக இருக்கின்றான்! அந்தக் கொடுந் தொழில்கள் புரிவதிலேயே ஆவலும், ஆனந்தமும் கொள்ளுகின்றான்! தன்னைச் சுற்றியுள்ள பிராந்தியங்களையெல்லாம் கவர்ந்து கொள்ளுகின்றான்; உலகத்தையழிப்பதற்காகவே, தான் உயிருடனிருப்பதாகவும் நினைக்கின்றான்! அவனுக்கு மானம் அவமானம் என்பது சிறிதும் இல்லை; அவன், சிறந்த எண்ணங்கள் சிறிதும் இல்லாதவன். பெரும்பாவம், பெரும்புண்ணியம், என்பவை எவையென்றும் அவன் ஒரு நாளும் அறியாதவன்.

இவ்வாறு, மனிதவர்க்கத்திற்கு ஏற்படக்கூடிய சுகதுக் கங்கள் ஒன்றுக்குமே கலங்காதவன். ஒரு விஷயத்தைக் குறித்து மாத்திரம் அவன் துக்கிக்கின்றான்; வாடிவருந்துகின்றான்; மனங்

கலங்குகின்ருன். அது இன்னது என்று உங்களெல்லோருக்கும் தெரியும்.

தெய்வ நியமனப்படி ஒரு மனிதன் ஒரு நண்பனையோ, அல்லது ஓர் உடன் பிறந்தானையோ, அல்லது ஒரு புத்திரனையோ, இழந்து விடுகின்ருன். தெய்வ நியமனம் நிறைவேறிவிடுகின்றது. அவன் சிறிது பொழுது துக்கம் பாராட்டிவிட்ட பின்பு, அந்தத் துக்கத்தை ஒழித்து விடுகின்ருன்.

ஊழ்வினையின் பயனுக மனிதனுக்கு அடியும் பூசலும் காயமும் உண்டாகின்றன. அவற்றை ஏற்றுக்கொள்ளவே மனிதன் இவ்வுலகில் ஜன்மம் எடுக்கின்ருன். ஆனுல், இவனுக்கு, இந்த அகிலேசனுக்கு இந்த ஞானமில்லை.

இதுவரை தான் செய்து வந்த கொடுமைகள்போதும் என்று இவன் நினைக்கவுமில்லை, மேன்மேலும் கொடுமைகள் செய்ய வேண்டுமென்றே துடிக்கின்ருன். தேவர்களுடைய உத்திரவுகளையும் மீறுகின்ருன். தேவர்களது கோபத்தையும் ஒரு கை பார்ப்போம் என்று துள்ளுகின்ருன்.

இறந்து குளிர்ந்துபோய்விட்ட இந்த ஹெக்டரது கட்டையை இவன் தரதரவென்று வேகமாக இழுத்துச் செல்வதை இதோ பாருங்கள்! ஒரு பிணத்தின் மேலும் இவன் இவ்வளவு வெறுப்புக் கொள்ளலாமா? இது தகுமா? தருமமாகுமா, முறையாகுமா? இவன் பலவான்தான், தைரியமுடையவன்தான், என்ருலும், இவனுக்கு நீதியிலும், நன்னெறியிலும் சிறிதேனும் பற்ருே, விசுவாஸமோ இல்லவேயில்லை! மனித முறையையும், தெய்வ நியமங்களையும் இவன் அறவே புறக்கணித்து வருகின்ருன்!''

இவ்வசனங்களைச் செவியுற்றுக் கேட்ட ஜூனே தேவியானவள், இவைகளுக்குப் பின்வருமாறு பதிலுரைத்தாள் :—

''தேவலோகவாஸிகளே! நீவிர் இவ்வாறு பக்ஷபாதமாகத் தீர்ப்புச் செய்யலாமா? இந்த இரண்டு வீரர்களையும் சமமாகப் பார்க்கலாமா? இருவருக்கும் சமமான மரியாதைகளைச் செய்யலாமா? தெட்டிஸ்தேவியின் புத்திரனுடைய விசேஷமான உயர்ந்த மரியாதைகளைச் சொல்லுவேன் கேளுங்கள். வில்லரசியான என்னுடைய சொற்களைச் சிறிது செவிசாய்த்துக் கேளுங்கள்.

ஹெக்டர் கேவலமான ஒரு மானிடப் பிறவி. அவன் மனித யோனியிற் பிறந்தவன்.

அகிலேசன் அமரர்களான உங்களது மரபில் உதித்தவன். ஒரு மனிதனுக்கு, ஒரு தேவதையின் வயிற்றினின்று பிறந்தவன். அந்தத் தேவதையை நாமே பிலியஸ்ஸுக்குக் கொடுத்தோம். அவன் தெய்வத் தன்மை பொருந்தியவன் என்றும், தங்களுக்

கெல்லாம் பிரியமானவன் என்றும், தேவர்களே அவனைத் தேர்ந் தெடுத்தனர். நீங்களனைவரும், அவர்களது திருமணத்தைச் சீராக நடத்தி வைத்தீர்கள், ஒளியுடன் விளங்கும் உங்கள் ஸ்தானங் களிலிருந்து நீங்களனைவரும் இறங்கிச் சென்று அந்தக் கலியா ணத்தை நடத்தி வைத்தீர்கள்.

அந்தக் கலியாண மண்டபத்தில் இந்தக் கந்தர்வ தேவ னும் பிரஸன்னமாயிருந்து அப்போது நடந்த விருந்துகளை யருந்தி னான். திருப்தியடைந்தான். அங்குக் கூடியிருந்த ஸங்கீத கோஷ்டியாருடன் சேர்ந்து பெருமையுடன் நின்று பாடினான். இளைஞனை இவன் தனது தம்பூராவையும் மீட்டினான்'' என்றாள்.

இவ்வாறு தனது பட்டமகிஷி உரையாடியதைப் பொறுத இடிக்கடவுள், அவளைத் தடுத்துச் சொல்லலானாள் :—

''போதும் போதும், உன்னுடைய கோபதாபங்களை நிறுத்து. உன்னுடைய கோபதாபங்களால், இந்தத் தேவலோக மண்ட பமும் தீக்கிரையாக வேண்டாம். நீ சொல்லிய பிரகாரம், அவர் களுடைய யோக்கியதைகளும், பெருமைகளும் ஏற்றத் தாழ்ச்சி யுள்ளவைகள் தான். அந்த விஷயத்தில் அவ்விருவரும் சமமானவ ரல்லர்.

அது இருக்கட்டும். ஆனால் துரோஜ வம்சத்தில் உதித் தோர் அனைவரிலும், ஹெக்டர்தான் எனது கிருபைக்கும், என்னை யொழிந்த மற்றெல்லாத் தெய்வங்களின் கிருபைக்கும் பாத்திரனாக விளங்குகின்றான். அவன் நம்முடைய க்ஷேத்திரங்களில் தன்னு டைய நைவேத்தியங்களை இடைவிடாமல் நன்றியுடன் சமர்ப்பித்து வருகின்றான். மனிதராய்ப் பிறந்தவர்கள் தேவர்களுக்கு வேறு எவ்வாறு வழிபாடுகள் செய்வார்கள்? புனிதமான நமது பலி பீடங்களில் அவன் சமர்ப்பித்த ஆகுதிகளும், நைவேத்தியங்களும் உத்தமமான நறுமணத்துடன் ஸதா புகைந்து கொண்டிருக் கின்றன.

என்றாலும் இந்த உத்தமனுடைய உடலைத் திருட்டுத் தன மாகத் தூக்கி வந்து விடவேண்டும் என்ற யோசனையை நாம் ஒரு நாளும் ஆதரிக்க மாட்டோம். தெட்டிஸ் தேவியானவள் அந்தப் பிரேதத்தை இரவும் பகலும் காத்துவருகின்றாள், இது இருக்கட்டும்.

நீ விரைந்து சென்று, நீலாயதாக்ஷியை மேலே நமது சபா மண்டபத்துக்கு வரும்படி யழைத்து விட்டு வா. பிரியம் கொடுப்ப தாகச் சொல்லும் இடுதண்டத்தைப் பெற்றுக் கொண்டு அந்தப் பிணத்தை விட்டுக் கொடுக்குமாறு அவள் தனது கொடிய ஸ்வபா வமுள்ள மைந்தனுக்குப் போதனை செய்யட்டும்'' என்றார்.

அவர் வேறு ஒன்றும் சொல்லவில்லை. அவ்வசனங்களைக் கேட்ட கணமே ஐரிஸ் தேவியானவள், ஒரு சுழல்காற் போல்

உருண்டுருண்டு அந்த ஆகாய மண்டலங்களினின்றும் பறந்து சென்றனள். ஒரு விண் வீழுங் கொள்ளியைப் போல் அவள் சமுத்திரத்தின் வதனத்தை வாரி வழித்துப் பெருக்கிக் கொண்டு சென்றனள் ; அந்தக் கன்னிகை, கன்னங்கரேலென்ற ஆழ்ந்த நீர் நிலைகளின் மேல், பளிச்சென்று குதித்துப் பாய்ந்து சென்றனள், அவ்வாறு செல்கையில் அவள் அந்நீர் நிலைகளில் ஆழ்ந்தும் முழுகினள். அவள் விசாலமாக அகன்றுள்ள ஸாமாஸ் காடுகளுக்கும் உன்னதமான சிகரங்களை உயரத் தூக்கிக் கொண்டு விளங்கும் இம்பிரஸ் பர்வதத்திற்கும் இடையிலுள்ள கடலில் தடதடவென்று இறங்கினள்.

அப்பொழுது அவள், கை கொண்டு விலக்கிய அலைகள் கல கலவென்று ஒலித்தன, எதிரொலிகளையும் கிளப்பின. அவள் அவ்வாறுமூழ்கி, அக்கணமே தான் உத்தேசித்து வந்த இடத்தை நோக்கி ஓர் அம்பைப் போல் பாய்ந்துசென்று அந்தப் பிரம்மாண்டமான இருண்ட கடலைத் துளைத்துக் கொண்டு சென்றாள். மரணத்தை யுண்டாக்கும் விஷங் கலந்த இரையைக் கொண்ட வளைவான தூண்டிலிருந்து அடியில் ஆழமாகச் சரிந்து போகும் ஈயக்கட்டியைப் போல் அந்தத் தேவியானவள், தன்னைச் சூழ்ந்து கொண்டிருந்த அலைகளை ஊடுருவிக் கொண்டு சென்று, தெட்டிஸ் தேவி துக்கம் பாராட்டிக் கொண்டு காலங்கழித்து வந்த இரகஸியமான குகையை யடைந்தனள்.

அங்கு இருந்த வண்ணம் அந்தத் தெட்டிஸ் தேவியானவள், தன்னைப் போலவே துக்கித்துக் கொண்டிருந்த புண்ணிய ஸ்வரூபியான ஸமுத்திர ராஜனது புத்திரிகளான நீலகேசிகளின் மத்தியில் உட்கார்ந்து கொண்டு, தேவர்களுக்குச் சமானமான தனது மகனுக்கு, விதியின் பயனாக வரவிருக்கும் ஆபத்துக்களையும் துன்பங்களையும் நினைத்து நினைத்து, மன முருகி அழுது கொண்டிருந்தனள்.

வர்ணகசிதமான வில்லேந்திய தேவி, அவளைக் கண்டு "தெட்டிஸ் தேவி! எழுந்திரு, பாதாளலோகத்தில் உள்ள உனது ஆஸனத்தை விட்டு எழுந்திரு! ஜோவ் தேவர் உன்னை அழைக்கின்றார். இது அவரது ஆணை!" என்றாள்.

அந்தப் பெருந்தகையாள் "நான் பகைமை கொண்டுள்ள தேவலோகங்களுக்கு வரும்படி ஜோவ் தேவர், தனது தெட்டிஸ் தேவியை அழைக்கக் காரணமென்ன? என்ன காரியமாக அவர் என்னை அங்குவர அழைக்கின்றார்? நான் தேவர்களின் முன் செல்லத் தக்க பெருமைகளைப் பெற்றிலனே! சிறுமைகள் மலிந்தவளான நான் எங்ஙனம் அவர்களுக்குக் கட்புலனாவேன்? என்னைக் கண்ணுறும் அவர்கள் வருந்துவார்களன்றோ? என்னுடைய துக்கங்கள் ஒருவருக்கும், ஒருக்காலும் புலனாகுதல் ஆகாது என்றன்றோ, நான் இவ்விடத்தில் எனது காலத்தைக் கழித்து வருகின்றேன்? என்றாலும், ஸர்வவல்லமையும் உள்ள தேவாதி தேவனது

ஆணையை மேற்கொண்டு இதோ வந்தேன் !" என்று ஒரு கறுத்த எழினியினுல் தனது தலையை மறைத்துக் கொண்டு எழுந்தாள்.

நீளமாக இழைந்து வந்த அந்த எழினியானது அவளது சுந்தரமான தேகத்தை அலங்கரித்தது. தனது துக்கத்தை அதி கம்பீரமாக அடக்கிக் கொண்டிருந்த அவள், இந்தக் கோலத் துடன் புறப்பட்டனள்.

ஐரிஸ் தேவி வழிகாட்டிக் கொண்டு முன் செல்ல இவ்விரு தேவிமார்களும், ஜலநிதிகளைக் கடந்து விண்ணுல கெய்தினர். ஜலநிதிகளும் அவர்களுக்கு வழிவிட்டு ஒதுங்கிச் சென்றன. தேவி மார் இருவரும் கரையேறினர்; மறுகணம் அவ்விருவரும் ஒரே பாய்ச்சலிற் பாய்ந்து ஆகாய மண்டலங்களையும் அடைந்து விட்டனர்.

அங்கு மின்னல் போல் பிரகாசித்து வந்த மண்டபத்தில் அவர்கள் தேவாதி தேவன் வீற்றிருக்கக் கண்டனர். மற்றைய தேவர்களெல்லோரும் அவரைச் சூழ்ந்து அமர்ந்திருக்க, அந்தச் சபையானது அதிசோபையுடன் விளங்கியது.

வியசனம் நிறைந்த வதனத்துடன் தெட்டிஸ் தேவியா னவள் அந்த மண்டபத்தை யணுகவும், மினர்வா தேவியானவள், தனது ஆசனம்விட்டு எழுந்து, துக்காக்கிராந்தையான அவளுக்கு ஆசனமளித்தனள். அப்போது ஜூனோ தேவியுங்கூட அவளைக் கண்டு மனமிளகி, அவளைத் தேற்ற வேண்டுமென்று தீர்மானித்து தங்கள் கையாலேயே அவளுக்கு ஒரு கிண்ணத்தில் அமிர்தத் தைப் பொழிந்து தந்தனள். அவள் அதை ருசி மாத்திரம் பார்த்து விட்டுக் கிண்ணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டனள்.

அப்போது தேவர்களுக்கும், மர்த்தியர்களான மனிதர் களுக்கும் தேவரான புண்ணியபிதா பின்வரும் வசனங்களை யுரைக்கலானுர் :—

"வாராய் எழில் வாய்ந்த தெட்டிஸ் தேவி! நீ மிகுந்த துக்கத்துடனேயே இங்கு வருகின்றனை; பெற்ற மனம் துடிக் கின்றது! இந்தத் துயரங்கள் உன்னை வெகு நாள் வாட்டுமன்ருே? நாம் உன்னுடைய கவலைகளை யெல்லாம் அறிவோம்; நாமும் உன்னுடன் வருந்துகின்ருேம். அவைகளை விரித்துரைக்க வேண் டிய அவசியமில்லை.

வருவது வந்தே தீருமாதலால், ஊழ்வினைக்கு இணங்கி இயங்குவதே உனக்கு நன்மையைப் பயக்கும். ஜோவ் தேவரது ஆணையையும் கவனித்துக் கேட்பாயாக.

விண்ணுலக வாசிகளனைவரும் கடந்த ஒன்பது நாட்களாக, ஹெக்டரின் விஷயமாகச் சபைகூடி ஜோவ் தேவரைப் பிரார்த்தித்

தனர். ஹெக்டரின் பிரேதத்தை அவனது சத்துருவினிடமிருந்து ஹெர்மீஸ் திருட்டுத் தனமாக அபகரித்து வந்துவிட வேண்டுமென்று, அவர்களனைவரும் ஒரே மனத்தராய்த் தீர்மானித்தனர். ஆனால் நாம் அதற்கு இணங்கவில்லை.

உனது மகனே அந்தச் சவத்தைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும், அக் கொடையினால் அவனது பேருங் கீர்த்தியும் முன்னிலும் அதிகமாக விளங்க வேண்டும் என்பதே நமது திருவுள்ளம்.

ஆதாலால் நீ இவ்விடம் விட்டு விரைந்து சென்று அவனுக்கு நமது ஆணையை அறிவிப்பாயாக! அவனுடைய கொடுமைகளை இதுவரை பொறுத்து வந்த தேவர்கள் இனியும் பொறுக்க மாட்டார்கள் என்று அவனுக்கு உரைப்பாயாக! நமது கோபாக்கினிக்கு ஆளாகாமல் இருக்குமாறு அவனை எச்சரிப்பாயாக!

நமது கோபத்துக்கு அஞ்சுபவனானால், அவன், வீரமரணம் எய்திய இந்த ஹெக்டரை, இனியும் பித்துப் பிடித்தவன் போல் சிறுமைப் படுத்தலாகாது; அவனது தகப்பன் கொடுப்பதாகச் சொல்லும் திரவியங்களைப் பெற்றுக் கொண்டு அவனது பிரார்த்தனைக்கு இணங்கட்டும். அவனது தகப்பன் மிகவும் துக்கித்துப் புலம்பி வருகின்றான். நன்கொடைகளுடன் சென்று உனது மகனை வேண்டிக் கொள்ளுமாறு, ஐரிஸ் தேவி அவனுக்குப் போதனைகள் செய்வாள். அவனது பெருமைக்கும், விருப்பத்திற்கும் தகுதியான எல்லாக் காரியங்களையும் உனது மகன் செய்யக்கடவன். அவன் வேண்டுவன அனைத்தையும் அவன் தரக்கடவன்!'' என்றார்.

வெள்ளிப் பாதங்களையுடையவளான அந்தத் தேவியானவள் அவருடைய வசனங்களைக் கவனித்துக் கேட்டதும், அக்கணமே பனி மேவியுள்ள ஒலிம்பஸ் மலையினின்றும் கீழே யிறங்கினள். அப்பொழுது உரத்துக் கூவியழுங்குரலும், உன்னதமான கூடாரத்தையுங் குலுக்கியசைத்த அக்குரலின் எதிரொலியும், அவளுக்குச் செவிப்புலனாயின.

இவ்வாறு அலறியழுது கொண்டிருந்த அகிலேசனுக்கு நன்மையுண்டாகுமாறு அவனுடைய நண்பர்கள், தேவர்களுக்கு நைவேத்தியங்களையும் பலிகளையும் சமைத்து வந்தனர். அதுவரை அவன் ஊண் அருந்தவுமில்லை, நீர் பருகவுமில்லை, அவையனைத்தும் ஆறிப்போயின. இவ்வாறு பயனற்று வீணாய்ப் போய்விட்ட அவற்றை அவனுடைய உடனிருந்தோர் அப்புறப்படுத்தி விட்டனர். என்றாலும் அவன் தன்னுடைய அழுகைகளையும் புலம்பல்களையும் நிறுத்தவில்லை. அவன் வாய்விட்டு அலறியும், கண்ணீர் விட்டு அழுது கொண்டுமேயிருந்தான்.

அவ்வாறு அழுதுகொண்டிருந்த அவனை அவனது அன்னையான தெட்டிஸ் தேவியானவள் அணுகி, அவனருகில் அமர்ந்

திருந்து, அவனது கையை அழுத்தி நெருக்கிப் பிடித்துக்கொண்டு, பின்வரும் மிருதுவான மொழிகளை யுரைத்தனள் :—

"என் மகனே! நீ இத்துக்கத்தை எவ்வளவு காலம் பாராட்டுவாய்? வாடிவதங்கிப் போய்விட்டனையே! உயிரையே விழுங்கக்கூடிய இந்த வியசனத்தில், ஏன் உனது மனது ஆழ்ந்து விட்டது? இது வீணான காரியமன்றோ?

நமது வாழ்க்கையில் நேரும் துன்பங்களைத் தீர்த்து இன்பம் பயக்கும் அன்ன பானாதிகளையும், வனிதைகளின் உறவாட்டங்களையும் இவ்வாறு நீ புறக்கணிக்கலாமா? இனியுள்ள காலத்தையேனும் நழுவவிடாமல் கைப்பற்றிக் கொள்வாயாக! உனது வாழ்நாள் குறைந்து கொண்டே வருகின்றது. உனது ஆயுள் குறுகிக் கொண்டே வருகின்றது. மீந்துள்ள காலத்தில் அனுபவிக்கக்கூடிய இன்பங்களனைத்தையும் நுகருதல் உனது கடமையன்றோ? இதோ, நான் சொல்வதைக் கேள்.

ஜோவ் தேவரின் ஆணையை உனக்கு அறிவிப்பதற்காகவே, நான் இங்கு வந்தேன். நீ அவரது கோபத்தின் எல்லையைக் காண முயல்வது தகாது என்று அவர் ஆணையிடுகின்றார். அவரது கோபத்துக்கு இலக்காகாமல் தப்பிப் பிழைக்க வேண்டும் என்ற பயம் உனக்கு இருக்குமானால், நீ மஹானான ஹெக்டரின் உடலையும், அவனுடைய ஆடையாபரணங்களையும், இனி ஒரு கணமேனும் தாமதியாமல் அவனுடைய சுற்றத்தாருக்கு விட்டுக் கொடுத்துவிடு. அவைகளை இங்கு நிறுத்தி வைத்துக் கொள்ளாதே. உணர்ச்சியிழந்து மண்ணாய்ப் போய்விட்ட அந்தப் பிணத்தின் மேல் பழிவாங்க வேண்டுமென்று நீ கொண்டுள்ள கோபதாபங்களையும் ஒழித்துவிடு. அந்தப் பிணத்திற்கு ஈடாக அவர்கள் கொடுக்கும் பொருள்களைப் பெற்றுக்கொண்டு அதை அவர்களிடம் கொடுத்துவிடு!" என்றாள்.

இந்த வார்த்தைகள் அகிலேசனுக்கு இதமாகவே தோன்றின. அவன், "இது தேவரது திருவுள்ளமாக விருப்பதால், நாம் அப்படியே செய்வோம். ஈட்டுப் பொருள்களை அவர்கள் தரட்டும்" என்றான்.

இவ்வாறு அன்னையும் மகனும் பேசிக் கொண்டிருக்கையில், ஒலிம்பஸ் மண்டபத்திலிருந்த ஜோவ் தேவர் ஐரிஸ் தேவியை துரோஜர்களது கோட்டைக்குச் செல்லுமாறு கட்டளையிட்டார் :—

"சிறகுகளையுடைய தேவீ! நீ புனித நகருக்கு விரைந்து சென்று அந்நகரத்து அரசனைத் தனது மகனை மீட்குமாறு உறுத்து! அவன் தன்னந்தனியனாக இலியன் கோட்டைகளை விட்டுச் செல்லட்டும். அதிகுரூரனான அகிலேசன் ஏற்றுக் கொள்ளக்கூடிய வஸ்துக்களை எடுத்துச் செல்லட்டும். அவன் தன்னந்தனியனாகவும் செல்லட்டும். இதுவே நமது ஆணை.

அவனுக்குத் துணையாக, அவனையணுகி, துரோஜன் வேறு ஒருவனாயினும் செல்லலாகாது. மரித்தவனது உடலை மரியாதை யுடன் ஒழுங்காகத் தேரில் தூக்கி வைப்பதற்காகவும், சவத்தை யேற்றிக்கொண்டுள்ள இரதத்தை இழுத்துச் செல்லும் கோவேறு கழுதைகளைத் தன் கைப்பட நிதானமாக நடத்திச் செல்லவும், ஒரு வயது வந்த ஆள் ஒருவன் மாத்திரம் அவனுடன் செல்லலாம்.

அவன், தனக்கு மரணமோ, அல்லது வேறு எவ்விதமான ஆபத்தோ உண்டாகும் என்று கவலைப்படவேண்டாம். நமது ஆதரவு இருப்பதால், அவன் சத்துருக்களினிடையில் க்ஷேமமாகச் செல்லலாம். நாம் அவனைக் காப்பாற்றுவோம்.

அவனை ஹெர்மீஸ், அகிலேசனிடம் கூட்டிச் செல்வான். அவன், அவனது உயிரைக் காத்துக்கொண்டு அவனுக்கு வழித் துணையாகச் செல்வான்.

அகிலேசன் மிகக் கொடியோன் தான், எனினும் அவன் பிரியம்மஹாராஜனது முதிர்ந்த பிராயத்தை முன்னிட்டு, அவனுக்கு ஒருவிதமான தீங்கும் இயற்றமாட்டான். விருத்தனை அவனது ரோமம் ஒன்றையேனும் தொடவும் மாட்டான். அவன் மகாதைரியசாலி யென்பது உண்மைதான், எனினும், அவனது மனத்தில் அருங்குணங்களும் உளவாகும்; அது திண்ணம். அற நெறிப் பற்றும், அடைக்கலம் புகுந்தோரைக் காக்கவேண்டும்என்ற ஆற்றலும் உடையோனாகவே அவன் விளங்குவான்" என்றார்.

இவ்வாறு அவர் சொல்லி முடித்த கணமே, சிறகுகள் கொண்ட ஐரிஸ் தேவியானவள் தனது வில்லை வளைத்துக் கொண்டு கீழேயிறங்கி அழுது புலம்பிக் கொண்டிருந்த பிரியம் மஹாராஜனது மாளிகையை நோக்கி விரைந்து சென்றனள்.

அங்கு அந்த மஹாராஜனுடைய புத்திரர்கள், அனைவரும் தங்களது தந்தையின் சிங்காதனத்தின் அருகில் இருந்த வண்ணம், அழுது புலம்பிக் கண்ணீரை வடித்துக் கொண்டு அந்நீரிலேயே முழுகியவர்களாய், வினவுவோரும் விடையளிப்போரும் போல், ஒருவருக்குப் பின் ஒருவர் பெருமூச்சு விட்டுக்கொண்டு, உட்கார்ந் திருந்தனர்.

விருத்தனை அவர்களது தந்தை, தனது முகத்தைப் பிறர் காணாவண்ணம் தனது வஸ்திரத்தினால் மூடிக்கொண்டு, அவர்களின் மத்தியில் கிடந்தான். அந்தக் காட்சி மிகவும் பரிதாபகரமாகவேயிருந்தது! வெறிபிடித்தவன் போல், அவன் தன்னுடைய கைகளில் சாம்பலைப் பிடிப்பிடியாக எடுத்துக் கொண்டு, அதனைத் தன் கழுத்தின் மேலும், தலையின் மேலும் மாரிபோல் தூவிப் பொழிந்து கொண்டான்.

துக்கமே உருவெடுத்து வந்தது போல் விளங்கிய அவனுடைய புத்திரிகள், ஓர் அறையினின்றும் மற்றோர் அறைக்கு நட

மாடிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் கதறிப் புலம்பிய அழுகுரல், அந்த அரண்மனை முழுவதும் நிரம்பியிருந்தது. சிறிது பொழுது முன்வரை, தங்களது பெருமைக்கும் இன்பத்திற்கும் காரணராகவிருந்த வீரர்கள் அனைவரும், இப்போது மூச்சுப் பேச்சின்றி உயிரிழந்தவர்களாய், வெளுத்த கட்டைகளைப் போல், ட்ராய் நகரத்தைச் சுற்றிலுமுள்ள களங்களில் கிடப்பதை நினைத்து, அவர்கள் ஓலமிட்டு வந்தனர்.

இவ்வாறு நடுநடுங்கிக்கொண்டு கிடந்த அந்த அரசனது முன்பாக, ஜோவ் தேவரின் தூதன் பிரசன்னனாகி, அவனது காதுக்குச் சமீபமாகச் சென்று, பின்வரும் மொழிகளை மெதுவாகவும் ரகஸியமாகவும் மெல்லிய குரலில் உரைத்தாள் :—

“எனது தந்தையே! என்னைக்கண்டு பயப்பட வேண்டாம். நான் நற்செய்தியையே கொண்டு வந்திருக்கின்றேன்; தீச்செய்தி யொன்றையும் கொண்டு வரவில்லை. ஜோவ் தேவரே என்னை இங்கு அனுப்பியுள்ளார். ஜோவ் தேவர் உம்மைக் கைவிட வில்லை. இன்னும் அவர் உம்மைக் காத்தே வருகின்றார்.

ஹெக்டர் நிமித்தம், நீர் இந்தக் கோட்டையை விட்டு வெளியேற வேண்டும், கொடியோனான அகிலேசன் அங்கீகரித்து ஏற்றுக்கொள்ளத் தக்க பொருள்களைக் கொண்டு செல்ல வேண்டும், நீர் தனியாகவும் செல்ல வேண்டும் என்றெல்லாம் ஜோவ் தேவர் ஆணையிடுகின்றார்.

உமது அருகில் வேறு துரோஜன் ஒருவனும் இருக்கக் கூடாது, இறந்தவனை மரியாதையுடன் ஒழுங்காகத் தூக்கி வைப் பதற்கும், சவத்தை யேற்றியுள்ள இரதத்தை இழுத்துச் செல்லும் கோவேறு கழுதைகளைத் தன் கைப்பட நிதானமாக நடத்திச் செல்லவும் கூடிய ஒரு வயது வந்த ஆள் மாத்திரமே தங்களுடன் செல்லலாம்.

தங்களுக்கு மரணமோ அல்லது வேறு யாதாயினும் அபாயமோ உண்டாகும் என்ற கவலை வேண்டாம். அவரே தங்களைத் தங்களுடைய சத்துருக்களின் கூட்டத்தினுள் கூட்டிச் செல்லுவார். ஹெர்மீஸ் தங்களைக் கூட்டிக் கொண்டு பிலிதீச னிடம் செல்லுவான். அவன் தங்களது உயிரைக் காப்பாற்றிக் கொண்டும் தங்களது வழித்துணைவனாகவும் வருவான்.

அகிலேசன் அதிகொடியவன் தான் எனினும், அவன் தங்களது முதிர்ந்த வயதைக் கவனித்துத் தங்களுக்கு ஒருவிதமான தீங்கும் செய்யமாட்டான். தங்களது மயிரிழை யொன்றையேனும் அவன் தீண்டமாட்டான். இவ்வளவு தைரியம் நிறைந்துள்ள அவனது மனதில் சிறிது அருங்குணமும் திண்ணமாக இருக்கும். அறநெறியிற் பற்றும், தன்னையடைந்தோரைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆவலும் உடையவனாகவே அவன் இருப்

பான்" என்ருள். இம்மொழிகளை யுரைத்துவிட்டு, மறுகணமே அவள் மறைந்து போய்விட்டனள்.

அதன்பின் பிரியம் மஹாராஜன், சாந்த குணமுள்ள தன்னுடைய கோவேறு குதிரைகளை அவைகளுக்குரிய சாமான்களுடன் இரதத்திற் பூட்டும்படிக்கும் அகிலேசனுக்குக் கொடுக்க எடுத்துச் செல்லும் பொருள்களை வைத்துக் கொள்வதற்காக ஒரு பளபளப்பான பெட்டியை அந்தத் தேரில் வைக்கும்படிக்கும் நியமித்தான். தந்தையினிடத்துத் தாங்கள் வைத்திருந்த அன்பே தங்களது அணிகலமாகக் கொண்டு விளங்கிய அவ்வரசனுடைய புத்திரர்கள் அவன் சொல்லிய வண்ணமே செய்தனர்.

பின்னர், அந்த மன்னன் பரிமளம் வீசும் தேவதாரு மரங்களாலான விட்டங்கள் கொண்ட உயர்ந்த கூரைகளுள்ளதும், தனது இராஜ்யத்துத் திரவியங்கள் அனைத்தும் சேமித்து வைக்கப்பட்டிருந்ததுமான கலியாண மண்டபத்திற்குச் சென்று, தனது பட்டமகிஷியை யழைத்து அவளை நோக்கிப் பின் வரும் வசனங்களை யுரைத்தான் :—

"அரசனுக விருந்தும் பெருந்துக்கம் அனுபவித்து வரும் எனக்குத் துணைவியாய் நின்று, என்னுடன் அந்தத் துக்கத்தை அனுபவித்து வரும் அதிர்ஷ்டஹீனையே! இப்போது உனது கணவனது மனத்தையுறுத்தி வரும் கஷ்டங்களைச் சொல்லுவேன் கேள் :—

ஜோவ் தேவரின் தூதன் விண்ணுலகினின்றும் இறங்கி வந்ததை நான் கண்டேன். இந்தக் கோட்டை கொத்தளங்களை விட்டுப் புறப்பட்டு, அகிலேசனிடம் சென்று, அவனுக்குத் தகுந்த பரிசுகளையளித்து, அவனது மனதை யிளக்கி, அதோ அந்தக் கப்பற்படைகள் நிற்குமிடத்தில் கொலையுண்டு கிடக்கும் ஹெக்டரின் பிரேதத்தைத் திருப்பிப் பெற்றுக் கொள், என்று ஜோவ் தேவர் ஆணையிடுகின்ருர். இந்த யோசனை உனக்குச் சம்மதமா? உனது அபிப்பிராயமென்ன? கருத்து என்ன? அதைச் சொல்.

சத்துருக்கள் நிறைந்துள்ள இந்தக் கூட்டத்தைக் கடந்து செல், உனது சத்துருவை நாடிச்செல் என்றே எனது மனது என்னை உறுத்துகின்றது" என்ருன்.

விருத்தனுன அரசன் இவ்வாறு சொல்லியதைக் கேட்டவுடன் ஏற்கெனவே விசனப்பட்டுக் கொண்டிருந்த ஹெக்குபா தேவியானவள் முன்னிலும் அதிகமாகத் திரும்பவும் கதறியழுது புலம்பலுற்ருள் :—

"ஆஹா! இது என்ன விபரீதம்! உமது மனம் கலங்கி விட்டது. ஒரு நிலையில் நில்லாமல், அது எங்கெங்கோ அலைந்து திரிகின்றது! இது நிச்சயந்தான். முற்காலத்தில் மனிதரெல்லாம்

வியக்கும்படி ஆழ்ந்த யோசனைகளைச் சொல்லி வந்த உமது விவேகம் இப்போது எங்கு போய்விட்டது? முற்காலத்தில், ஒரு முறை பிரிஜியா நாட்டார் உமது விவேகத்தையறிந்து வியந்து கொண்டாடினர். புறநாட்டாரும் அவ்வாறே உம்மைப் பாராட்டினர். இப்போது அந்த விவேகமெல்லாம் அவிவேகமாகவன்றோ மாறி விட்டது! உமது மனம், கலங்கிக் குழம்பி விட்டது. தடுமாற்ற மடைந்து விட்டது. இடிந்து போய் விட்டது.

சத்துருக்கள் திரளாகக் கூடியிருக்கும் கூட்டத்தில் தன்னந் தனியாகப் போகவா நினைத்தீர்? இது என்ன துணிவான காரியம்? நமது குலத்தையே குலைத்துவிட்ட கொலை பாதகனை எப்படி நீர் முகமெடுத்துப் பார்க்கத் துணிந்து விட்டீர்? உமது மனம் கல்லாய்ச் சமைந்து விட்டதோ? உருக்கி விட்ட இரும்பாகவும் மாறி விட்டதோ? காலனுடைய கண்களை நிகர்த்த அவனுடைய கண்களையும், மஹா உத்தமனான ஹெக்டரைக் கொன்று இன்னும் அவனது இரத்தக் கறையுடன் விளங்கும் அவனுடைய கைகளையும் கண்ணெடுத்துப் பார்க்க நினைத்தீரே! எனது பிராண நாதா! இது தகாது. இந்தக் காரியம் வேண்டாம்!

அவன் கருணையென்பதைச் சிறிதும் அறியாதவன். அவனால் கொலையுண்ட தங்களுடைய புத்திரர்களே, அவன் எவ்வளவு தயவும் தாக்ஷண்ணியமும் இல்லாதவன் என்பதற்குச் சான்று பகர்கின்றனர்! ஆஹா, அவர்கள் எவ்வளவு தைரியத்துடன் விளங்கினார்கள். அவர்களில் எவ்வளவோ பெயர்கள் மடிந்து போய் விட்டனரே!

தங்களது கௌரவம் என்ன, அந்தஸ்து என்ன, வயது என்ன? தாங்கள் அந்தக் கோபிஷ்டனை முன்னிட்டுக் கொண்டு செல்லலாமா? அதனால் என்ன பயன் உண்டாகும்? தாங்கள் இந்தக் காரியம் செய்யலாகாது.

துக்கம் நிறைந்துள்ள இந்த அரண்மனையினுள்ளேயே நாம் நம்மை அடைத்துக் கொண்டு கிடத்தல் வேண்டும். நமக்கு மீந்துள்ள கரிநாட்களை நாம், அழுது புலம்பியே கழித்தல் வேண்டும். தானே துக்கமனுபவிக்கவும், தனது பெற்றோருக்குத் துக்கத்தை யுண்டாக்கவுமே பிறந்த ஹெக்டரை நினைத்து நாம் நாளும் அழுது புலம்பி நமது காலத்தைக் கழிப்போம்.

அவன் ஓர் ஆகாத நாளில் பிறந்தான். அன்று முதலே அவன் நாய் நரிகளுக்கும், காக்கை கழுகுகளுக்கும், பீலியஸ்ஸின் புத்திரனுக்கும் பலியாக வேண்டும் என்று அவனது தலை விதியாகி விட்டது.

தான் மிகவும் உயர்ந்த குலத்தில் பிறந்தவன், தனது தேகத்தில் ஊறிவரும் உதிரமானது மிகவும் உத்தமமானது என்றெல்லாம் பிதற்றிவரும் இந்தப் பீலியஸ்ஸின் புத்திரனது இரத்

தத்தை வடித்தாலல்லவோ எனது கோபம் தணியும்! ஆஹா, அப்படிச் செய்தாலல்லவோ நான் இந்தக் கொடுமைகளுக்கும், சிறுமைகளுக்கும், சரியான ஈடு செய்தவளாக ஆவேன்!!

ஈஸ்வரா! இது ஆகுமா? ஹெக்டர் சாதாரணமான, பாமர மனிதன் ஒருவனைப்போலவே மரித்தானு? இழிந்தவனைப் போலவே அவன் தனது சுவாஸத்தை விடவில்லையே! அவன் தனது ஆயுட் காலத்தின் இறுதி வரையிலும், தனது பிராணன் போகும் தருணம் வரையிலும், வீரனைப்போல் போர் புரிந்தே வந்தனனே; அந்தப் போரில் தனது இரத்தத்தைச் சாருக வடித்தனனே! தனது தேசத் தின் உரிமைகளைக் காப்பாற்றும் நிமித்தம் நிகழ்ந்த யுத்தத்தில், ஒரு மஹா வீரனைப்போல் போர் புரிந்து, தனது உயிரை நீத்து விழுந் தனனே!" என்ருள்.

அந்த வசனங்களைக் கேட்ட அந்தப் புனிதனுன வயோ விருத்தன், சிறிதும் மனங் கலங்காமலும், தனது நிலையினின்றும் பிரியாமலும், தனது வாழ்க்கைத் துணைவிக்குப் பின் வரும் வசனங்களை மறுமொழியாக வுரைத்தான் :—

"என்னைத் தடுக்க வேண்டாம்; இரவிற் சஞ்சரிக்கும் பக்ஷியைப் போல் அபசகுனமான வசனங்களை யுரைத்து எனது மனதில் பயத்தையும் அச்சத்தையும் உண்டாக்க வேண்டாம். தெய்வமே இந்தப் பிரகாரம் எனக்கு ஆணையிடுகின்றது. ஆத லால் உன்னுடைய பிரயத்தனங்க ளெல்லாம் வீண்தான். மனி தனுகப் பிறந்தவன் ஒருவன் இந்த யோசனையைச் சொல்லி யிருந்தாலுங்கூட, அப்போதும் நான், சகுனமோ, ஆருடமோ, அல்லது சோதிடமோ கேட்டுப் பின் வாங்கமாட்டேன். சோதி டனே, அல்லது வரும் பொருளுரைப்பதில் வல்லவனே ஒருவன் என்னைத் தடுத்தாலும் நான் அவனுக்கு இணங்குபவனல்ல.

நானே எனது கண்ணுல் கண்ட ஒரு தேவியே என்னி டம் வந்து இந்த ஆணையை எனக்கு அறிவித்தனள். நான் அவளைப் பிரத்தியக்ஷமாகக கண்டேன். அவளுடைய வசனங் களை என் காதாலும் கேட்டேன். ஆதலால் நான் அவள் சொன்ன படியே காரியங்களைச் செய்வேன். அவளது வார்த்தையே உறுதி யாய் நிற்கும்.

தேவர்களே! உங்களது கட்டளைப்படி இதோ நான் புறப் படுகின்றேன். அதோ அங்குக் காணும் யுத்த களத்தில் நான் பட்டு விழுந்து மடிந்து போக வேண்டும் என்று நீங்கள் விதித்திருப் பீர்களானுல், உங்களது விருப்பம் நிறைவேறட்டும். அது எனக்குச் சம்மதந்தான். எனது மகனைக் கொன்றவனது கையினுலேயே நானும் மாண்டு போவேன். வதையுண்ட மகனுக்குத் துணை யாக அவனது அதிர்ஷ்டஹீனனுன தகப்பனும் செல்லட்டும்.

"ஜில்" என்று குளிர்ந்து கிடக்கும் எனது மகனது கட் டையை ஒரு முறையேனும் கட்டித் தழுவுவதற்கு, எனக்கு இந்த

ஒரு தருணம் வாய்த்ததே, இது எனது ஓர் அதிர்ஷ்டந்தான்! நான் கடைசியாக வடிக்கும் கண்ணீரும் அவனது இரத்தத்துடன் கலந்து ஓடுமன்றோ?" என்றான்.

இந்த வசனங்களைச் சொல்லிக் கொண்டே அவன், தனது களஞ்சியங்களைத் திறந்து, அவற்றினின்றும், பளபளவெனப் பிரகாசிக்கும் வர்ணங்கள் தீர்த்த பன்னிரண்டு விலையுயர்ந்த கம்பளங்களையும், அதே ஸங்கியையுள்ள மார்க் கவசங்களையும், மேற்போர்வைகளையும், பன்னிரண்டு திவ்வியமான எழினிகளையும் பொன்னூலினால் நெய்யப்பட்ட உறுதியான, மடங்காத வஸ்திரங்களையும், இரண்டு முக்காலிகளையும், அவைகளுக்கு இரட்டிப்பான ஸங்கியையுள்ள பளபளவென மின்னும் பெரிய தட்டங்களையும் மிகச் செழிப்பான சுரங்கத்திலிருந்து தோண்டியெடுக்கப்பட்ட பத்துத் தாலந்து நாணயமும் எடுத்துக் கொண்டான். கடைசியாக, தான் முன்னாளில் திரேஸியா நாட்டாருடன் செய்து கொண்ட உடன்படிக்கைப் பிரகாரம், தனக்குக் கிடைத்த, உயர்ந்த வேலைப்பாடுகளுள்ள ஒரு கிண்ணத்தையும் மேற்கூறிய பண்டங்களுடன் எடுத்துக் கொண்டான்.

ட்ராய் நாட்டார், ஹெக்டரின் பிரேதத்தைக் கடைசியாக ஒரு முறை காணுமாறு அதைத் திருப்பிக் கொண்டு வர அகிலேசனது அனுமதியைப் பெறுவதற்காக அவன் சேகரித்துக்கொண்ட இந்த வஸ்துக்களெல்லாம் அவனது பெருமைக்குக் குறைந்தவையாகவே தோன்றின.

அப்போது, மஹாதுக்கியான அந்தத் தகப்பன், தனக்கு உண்டாயிருந்த தளர்ச்சியினால் மனந் தடுமாறியவனாய்த் தன்னைச் சுற்றி நின்று கொண்டிருந்த தன்னுடைய ஏவலாளர்களின் மேலும், பிருத்தியர்களின் மேலும், பித்துப் பிடித்தவன் போல் சீறினான். அவர்கள் ஒவ்வொருவனும் தனக்கு நியமிக்கப்பட்டிருந்த கடமைகளைக் கண்ணுங் கருத்துமாகவும் சீராகவும் செய்தே வந்தனன் எனினும், பிரியம்மஹாராஜன் அவர்களைக் கண்டு சிடு சிடுத்தே வந்தான். அவர்கள் செய்து வந்த காரியங்களனைத்திலும் குற்றங்கள் கண்டே வந்தான். தன்னெதிர்ப்பட்ட ஆள் ஒவ்வொருவனையும் நிந்தித்தும் வந்தான். ஒருவனையாவது அவன் சாந்த முகத்துடன் காணவில்லை. அவனது முகத்தில் எள்ளுங் கொள்ளும் வெடித்தன.

"இங்கே என்னடா செய்கின்றீர்கள்? வெட்டிப் பயல்களா! கூழைக் கும்பிடு போடும் குழாங்களே! கூழாங்கற்களே! இங்கு என்ன செய்கின்றீர்கள்? இங்கு என்னெதிரில் நிற்காதீர்கள். தூரப் போங்கள். உங்களது அழும்முகத்தைக் காட்டிக் கொண்டு என்னெதிரில் வரவேண்டாம். உங்களுடைய வீடுகளில் உங்களுக்கு ஒரு வேலையும் இல்லையா? ஒரு கவலையும் இல்லையா? ஒரு துக்கமோ சங்கடமோ இல்லையா? எனக்கு மாத்திரந்தான் துக்கம் வந்து விட்டதா?

என் ஜனங்களனைவரும் என்னைக் கண்டு தான் தபிக்க வேண்டும், இரங்க வேண்டும், எனது துக்கமே என் ஜனங்களது பெருங்காட்சியாக விருக்க வேண்டும், என்று ஜோவ் தேவர் விதித்து விட்டாரா? துக்காஸனத்தில் அவர் என்னை அமர்த்தி விட்டாரா? இது அவருக்குத் தகுமா? சிறிதும் தகாது. அவரது சக்தியை நீங்களும் சிறிது அறியவேண்டும். நீங்களும் மடிந்து விழ வேண்டும்!

கடின ஸ்வரூபியாகிய அந்தத் தெய்வம் உங்களெல்லோரையும் அழித்து விட்டது. மஹானுன ஹெக்டரை நான் மாத்திரம் இழந்து விடவில்லை. அவனது மரணத்தினுல் எனக்கு மாத்திரம் நஷ்டம் உண்டாகி விடவில்லை. உங்களது ஒப்பற்ற காவலனுக விளங்கி வந்தவன் போய்விட்டான். உங்களைக் காப்பாற்றி வந்த சக்தியானது மறைந்து போய் விட்டது.

இனி இந்தப் பிரிஜியா நாடு முழுவதிலும் உங்களது இரத்தமானது வெள்ளமாகப் பெருகும். அந்த வெள்ளத்தினுல், அந்நாடு முழுகியும் போகும். அது அவ்வாறு போவதை இதோ, நான் காண்கின்றேன். உங்களது நகரமும் தீக்கிரையாகிப் புகைந்து பாழாய்ப் போகும். அந்த நாசத்தையும் இதோ நான் என் கண்களால் பார்க்கின்றேன்.

தேவர்களே! அந்தக் கெட்ட நாள் வருமுன், என்னை இங்கு விட்டு அனுப்பி விடுங்கள். புளூட்டோ தேவரின் பயங்கரமான மண்டபத்திற்குச் செல்ல, இதோ நான் சித்தமாக விருக்கின்றேன். சிறிதும் தாமதமின்றிச் செல்ல விருப்பமுள்ளவனுகவே யிருக்கின்றேன்'' என்று இவ்வாறு பிதற்றிக் கொண்டு அவன், தன்னுடனிருந்த தன் நண்பர்களை விலக்கினுன்.

ஆனுல், அவர்களைக் கை கொண்டு விலக்க, அவனுக்குச் சிறிதும் சக்தியிருக்கவில்லை. ஆதலால், அவர்கள், அவனைப் போலவே புலம்பி வந்தனரெனினும், அவனது வெறியையும், கோபத்தையும் அதிகரிப்பிக்கலாகாது என்று கருதி அவன் நியமித்தபடியே அவனை விட்டுப் பிரிந்து சென்றனர்.

அதன் பின், அவன் தன்னுடைய கோபத்தையும் வெறியையும், தன்னுடைய புத்திரர்களின் மேற் செலுத்தினுன். அது ஒரு பெருந்தவறு என்பதை அவன் அப்போது அறிந்திலன். அவன் தன்னுடைய பிள்ளைகளான பாலிட்டிஸ், பாரிஸ், அகாத்தான் என்பவர்களைக் கூவியழைத்தான். அவன் அவர்களைக் கோபத்துடன் பயமுறுத்தி யழைத்ததை, அவனுடைய மற்றைய மக்களான தெய்வோவஸுவும் தயஸ்ஸும், ஹிப்போதவுஸ்ஸும், பம்மானும், வரும் பொருள்களையறிவதில் சமர்த்தனுன ஹெலினஸ்ஸும், உதாரசீலனுன அந்திப்போனும் கேட்டனர். அளவிறந்த அவனுடைய புத்திரர்களில் இந்த ஒன்பது பெயர்கள் மாத்திரமே அச்சமயம் மீந்திருந்தனர்.

அவன் அவர்களை நோக்கி, "பாக்கியமென்பது சிறிது மில்லாத ஒரு தகப்பனுக்குப் பிள்ளைகளாகப் பிறந்த உங்களால் என்ன பயன்? உங்களால் எனக்கு ஒரு பெருமையும் உண்டாக வில்லை! சிறுமைகளே உண்டாகி விட்டன. நீங்களனைவரும் ஏன் ஹெக்டருக்குப் பரிந்து சென்று யுத்தஞ் செய்யவில்லை? அந்த யுத்தத்தில், நீங்கள் ஏன் உங்களுடைய உயிர்களை வழங்க வில்லை? ஏன் இன்னும் உங்களுடைய உயிர்களை வைத்துக் கொண்டு இருக்கின்றீர்கள்?

ஐயோ, நான் ஒரு பெரும்பாவி! அதி பராக்கிரமசாலியான எனது புத்திரன் கொலையுண்டு போய் விட்டனன்! பிரியத்தின் மரியாதையைக் கெடுக்கப் பிறந்த நீங்கள் மாத்திரம் இன்னும் உயிருடன் இருக்கின்றீர்கள். யுத்த வீரர்களில் பிரஸித்தி பெற்ற வனும், அதிதைரியவானுமான மெஸ்டாரும், தடதட வென்று தங்கு தடையின்றிப் பிறர் திடுக்கிடும்படித் தனது இரதத்தை ஓட் டிச் செல்வதில் சமர்த்தனை டிராயிலஸ்ஸும், கடைசியாக மஹா னை ஹெக்டரும் மறைந்து போய் விட்டனர். ஹெக்டரை ஒரு தெய்வப் பிறவி யென்றே சொல்லவேண்டும், அவன் மனித வர்க்கத்திற் சேர்ந்தவனே யல்ல வென்பது நிச்சயம்.

இளம் பிராயத்தவரான இவர்களனைவரையும் கண்ணில் லாத மார்ஸ் பகவான் கொன்று விட்டான். வீர சூர பராக்கிரமங்க ளில்லாத, இந்தப் பசுப் போன்ற சாதுப் பிள்ளைகளை விட்டு விட்டு, அவன், அவர்களைக் கொண்டு போய் விட்டான். இந்த மந்தை யினால் இப்போது எனக்கு என்ன பயன்? இவர்கள், மூக்கில் மூன்று பருக்கை வர, விலாப் புடைக்க விருந்தருந்துவதிலும், மட்டு மித மின்றியும், மனம் போன படியும் ஆடுவதிலும் பாடுவதிலும் தங்களது பொழுதைப் போக்கி வருகின்றனர். போஜனப் பிரியர் கள்; ட்ராய்க்கே இழிவைத் தந்த கடையர்கள்!

அடே தடியர்களா! எனது மகனைத் திருப்பிக் கொண்டு வர நான் புறப்பட்டுக் கொண்டிருக்கையில், நீங்கள் ஏன் எனது இரதத்தை வேகமாக ஓட்டாமல் நிற்கின்றீர்கள்!" என்றான்.

துக்க சாகரத்தில் ஆழ்ந்து கிடந்த தங்களது தந்தையின் விருத்தாப்பிய தசையைக் கவனித்து, அத் தந்தையைக் கௌர வித்து வந்த அந்தப் புத்திரர்கள், அவனது கோபத்தைப் பொருட் படுத்தாமல், அவனது இரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தினர். அதன் பின், அவர்கள் மேற் குறிப்பிட்ட பெட்டியை, அந்தத் தேரில் இருந்த உயர்ந்த பீடத்தில் வைத்துக் கட்டினர்.

அழுத்தமான வஸ்துக்களைக் கொண்டு அழகாக நிர்மாணிக்கப் பட்டிருந்த அந்தப் புதிய இரதமானது ஒளியுடன் பிரகாசித்தது. அந்தத் தேரின் நுகமானது புன்னை மரத்தினாற் செய்யப்பட்டு விலை மிக்க குந்துகளும் கட்டுக்களுங் கொண்டதாக விருந்தது மன்றிக் கடிவாளக் கயிறுகளைக் கொள்ளுவதற்காகத்

தொங்கு வளையங்களையுங் கொண்டதாகவுமிருந்தது. ஒன்பது முழம் நீளமுள்ள அந்தத் தேர்க் குதிரைகளின் வார்கள், நிலத்தில் இழைந்து, அதைப் பெருக்கித் துடைத்துக் கொண்டு சென்றன. இந்தச் சாமான்களை அவர்கள், நன்ருக இழைக்கப்பட்ட அந்தத் தேரின் ஏர்க்காலுடன் சேர்த்துக் கட்டினர்.

பின்பு அவர்கள் அக் கடிவாளக் கயிறுகளைப் பிறழாமற் பிடித்துக் கொள்ளுவதற்காக, ஒரு வளையத்தையும் அந்த ஏர்க் காலில் அடித்தனர். அதன் பின் அதன் வழியே அக் கடிவாள வார்களைச் செலுத்தி அவற்றின் நுனிகளைச் சேர்த்து, அதன் அடியில் இறுக்கி முடிந்தனர்.

பின்பு, ஹெக்டரின் பிரேதத்திற்குக் கிரயமாகக் கொடுக்க நியமித்திருந்த வஸ்துக்களைக், கண்ணீர் வடித்துக் கொண்டு துக்கக் குறியுடன் விளங்கிய பிருத்தியர்கள், நான்கு சக்கரங்கள் கொண்ட அந்த இரதத்தில் ஏற்றினுர்கள். அந்த வஸ்துக்களைத் தாங்க மாட்டாமல், அந்த இரதமும் பெருமூச்சு விட்டுப் புலம்பியது.

கடைசியாக, அவர்கள் துரோஜ அரசனுக்கு மைஸியாவினுல் வெகுமானமாக அளிக்கப் பட்டிருந்தவையும், ஒன்றுக் கொன்று இணையாத இணையாகவும் விளங்கிய கோவேறு கழுதைகளை நுகத்தருகில் கொண்டு வந்து நிறுத்தினர்.

அந்தச் சுந்தரமான பரிமாக்களை, அவன் வெகு நாளாகப் பிரியமாகக் கவனித்து வந்தவனுதலால், அவற்றை அவனே தன்கைப்படப் பிடித்துத் தனது தேரில் பூட்டிக் கொண்டான். அச்சமயம் அவன், பெருந் துக்கத்தில் ஆழ்ந்தவனுக இருந்தும், இந்தக் காரியத்தை வேறு ஒருவருக்கும் விட்டுக் கொடுக்க வில்லை. இந்தக் காரியம் செய்கையில், வயோதிகனுகிய அவனது தூதன், அவனுக்கு உடனிருந்து உதவி செய்து வந்தனன்.

இவ்வாறு இவ்விருவரும் இந்தப் பெருமை வாய்ந்த பரிமாக்களை அதிஜாக்கிரதையாகத் தேரில் பூட்டிக் கொண்டிருக்கையில், ஹெக்குபா தேவியானவள், புலம்பிக் கொண்டு மிகுந்த கவலையுடன் அவனது அருகில் வந்தனள். தேவர்களுக்கு நைவேத்தியம் செய்வதற்காக வைக்கப் பட்டிருந்த கம கம வென்று மணம் வீசும் சாருயம் வழிந்து கொண்டிருந்த ஒரு பொற்கிண்ணத்தைத் தனது வலதுகையில் ஏந்தியவளாய், அவள் அக்குதிரைகளின் முன்வந்து நின்றுகொண்டு, அக்கிண்ணத்தை அந்த மஹாராஜனுடைய கரங்களிலளித்துப் பின் வரும் வசனங்களையுரைத்தாள்:—

“இதை வாங்கிக் கொள்ளும்! இதை ஜோவ் தேவருக்கு அர்ப்பணம் செய்யும்! தாங்கள் ஒரு குறைவும் தீங்குமின்றி அவரது அருளால், நமது அரண்மனைக்கு எங்களிடம் திரும்பிவர வேண்டும், என்று பிரார்த்தித்துக் கொண்டு, இந்தச் சாருயத்தை அவருக்குக் காணிக்கையாகப் பொழியும்.

தங்களுக்கு நேரிடக் கூடிய ஆபத்துக்களுக்குப் பயப்படா மலும், என்னுடைய கவலைகளைப் புறக்கணித்தும், தெய்வ நியமனத்திஞலோ, அல்லது தங்களது மனவுறுதியையே கடைப் பிடித்தோ, தாங்கள் இந்தத் துணிவான காரியத்தில் இறங்கிவிட் டீர்கள்.

ஐடாமலைச் சரிவில் உள்ள உன்னதமான தமது ஸ்தானத் தில் இருந்து கொண்டு, அதன் கீழ் பாழடைந்து கிடக்கும் தங் களது ராஜ்ஜியத்தைக் கண்ணுற்று வரும், அந்தத் தேவரைப் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். சிறகுகள் கொண்ட தமது தூதனைத் தமது உன்னதமான ஸ்தானத்திலிருந்து அனுப்பித்தர வேண்டுமென்றும், அந்தத் தூதன், மங்களமான சுபசகுனங்க ளுடன் தங்களுக்கு வழித்துணையாக முன்செல்ல வேண்டும் என்றும் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள்.

பக்ஷிவர்க்கங்களில் பராக்கிரமசாலியான பக்ஷிராஜன், ஆகாயத்தில், வலது புறத்தில் உயரமாகப் பறந்து வரட்டும்; அந்தச் சகுனத்தைப் பார்த்துக்கொண்டும், தேவர்களது அனுக் கிரஹத்திஞல் தைரியமடைந்தவராகவும், தாங்கள் ஜோவ் தேவர் நியமிக்கும் வழியே நிர்ப்பயமாகச் செல்வீர்களாக! தங்களது பிரயா ணத்தைச் செய்வீர்களாக!

அந்தக் கடவுள் நற்குறிகள் தர மறுப்பரேல், தாங்கள், தங்க ளுடைய யோசனைகளை யொழித்துவிட்டு, எனது வார்த்தையைக் கேளுங்கள்; நல்ல வார்த்தையைத் தள்ளாதீர்கள்!" என்றுள்.

இவ்வசனங்களைக் கேட்ட பிரியம் மஹாராஜன் அவளுக் குப் பின் வருமாறு பதிலுரைக்கலாஞன் :—

"விண்ணுலகில் வீற்றிருக்கும் தேவருக்கு நாமனைவரும் நமது கையை யுயர்த்தித் தூக்கி வணங்க வேண்டியது முறையே யாகும். நமக்கு ஜோவ் தேவர் செய்வதினும் மேலான உயர்ந்த நன்மைகளைச் செய்பவரும் உளரோ?" என்றுன்.

அவ்வாறு சொல்லிக்கொண்டே. அவன், நீரோட்டம் மிகுந்த ஜீவ நதியினின்றும் அதி சுத்தமான ஜலத்தைக் கொண்டு வரும்படித் தன்னருகில் நின்றிருந்த ஒரு பரிசாரிகையை நியமித் தான். அவள் அக்கணமே ஒரு கூஜாவில் ஜலத்தையும், ஒரு தட்டத்தையும் கொண்டு வந்தாள்.

அவன் அந்த ஜலத்திஞல் தன்னுடைய கைகளைச் சுத்தம் செய்து கொண்டு, தனது பட்டமகிஷி நிறைத்து வைத்திருந்த பொற்கிண்ணத்தை யெடுத்துக் கொண்டு, தனது அரண்மனை வாயிற்படிகளின் மத்தியில், அந்தக் கிண்ணத்திலிருந்த ரோஜா நிறங்கொண்ட சாருயத்தைப் பொழிந்து தன்னுடைய கண்களை

உயர நிமிர்த்திக் கொண்டு, ஜோவ் தேவரைப் பின்வருமாறு பிரார்த்தித்தான் :—

“ஆதிமூலமே! ஒப்புயர்வற்ற பெருந்தேவரே! தேவலோகத்தை ஒரு குடைக்கீழ் ஆண்டுவரும் ஏகாதிபதியே! புனிதமான உயர்ந்த ஐடாமலையில் ஆராதிக்கப்படுவரே! கன்னெஞ்சனை அகிலேசனிடம் செல்ல எனக்கு வழிகாட்டுவீராக! ஒரு தகப்பனது பிரார்த்தனைக்கு இணங்குமாறு அவனது மனத்தை இளக்குவீராக!

தங்களுக்கு இது சம்மதமானால், அதோ, அங்குள்ள ஆகாயத்திலிருந்து, தங்களது புனிதமான பக்ஷிவாகனத்தை அனுப்பி வைப்பீராக! அது எனக்கு ஓர் உத்தமமான நற்சகுனமாகக்கடவது! பராக்கிரமசாலியான பக்ஷிவர்க்கங்களின் ராஜன் ஆகாயத்தில் வலது புறமாக உயரப் பறந்து வரட்டும்.

தாங்கள் அப்படிச் செய்வீர்களானால், தங்களை யிறைஞ்சிக் கெஞ்சும் அடியேன், தங்களது கிருபையினால் தைரியமடைவேன். ஜோவ் தேவரே வழிகாட்டுகின்றார் என்று சிறிதும் பயமின்றி எனது பிரயாணத்தைச் செய்வேன்!” என்றான்.

ஜோவ் தேவர் இந்தப் பிரார்த்தனையைக் கேட்டார். உன்னதமான தமது சிங்காதனத்திலிருந்துகொண்டே, தமது பக்தன் கோரியவாறு, புனிதமான சுபசகுனமாகிய தமது பக்ஷியையும் விடுத்தார்.

பக்ஷிவர்க்கங்களை யெல்லாம் அதிசாமர்த்தியத்துடன் வேட்டையாடுவதில் வல்ல, துரித கதியையுடைய அந்தப் பக்ஷி ராஜன் அக்கணமே அங்குவிட்டுப் புறப்பட்டது. தேவர்களெல்லாம் அதற்குப் பெரிக்னேஸ் என்ற சிறப்புப் பெயர் அளித்திருந்தனர்.

ஓர் அரண்மனையின் வெளிவாசலைப்போல் அகன்றுள்ள தன்னுடைய சிறகுகளை விரித்துக்கொண்டும், அந்தப் பிராந்தியம் முழுவதையும் தன்னுடைய சிறகுகளின் நிழலில் மறைத்துக் கொண்டும், அந்தப் பக்ஷிராஜன் வலப்பக்கமாகத் தாழ்ந்து இறங்கி வட்டமிட்டது. அவ்வாறு வட்டமிடுகையில், அதன் சிறகுகள் சப்தித்தன. அந்தச் சப்தத்தையனுசரித்து எதிரொலிகளும் கிளம்பின.

அப்போது அதைக் கண்ணுற்றவர்களுடைய முகங்களனைத்தும் மகிழ்ந்து மலர்ந்தன. அதுவரை அழுது புலம்பி வந்தவளான பெருமாட்டியும், நடுக்கத்தினால் தன்னுடைய கண்களினின்று வழிந்து வந்த நீரைத் துடைத்து விட்டாள்.

ஆத்திரத்துடன் துடித்துக்கொண்டிருந்த அரசனும், அக்கணமே துரிதமாகத் தனது இரதத்தின் மீது துள்ளிப் பாய்ந்தான்.

அவனது விசையினுல், அவனது அரண்மனையின் பித்தளைக் கதவு களும் தாக்குண்டு ஒலித்தன. வெகுமதிகளை ஏற்றுக்கொண்டு நின்ற, நான்கு சக்கரங்கள் கொண்ட வாகனத்தைக் கோவேறு கழுதைகள் இழுத்துக்கொண்டு முன்சென்றன. அவற்றின் கடிவாளக் கயிறுகளை இடியூஸ் என்பவன் பிடித்துக்கொள்ள, பிரியம் மஹாராஜனே அவற்றின் வார்களைப் பிடித்துக் கொண்டான்.

இவ்வாறு பிரயாண ஸன்னத்தமான அந்த இரதமானது அங்குக் கூடியிருந்த நண்பர்களின் மத்தியினின்றும் புறப்பட்டு நிதானமாக உருண்டு சென்றது.

அவ்வாறு செல்கையில், பிரியம் மஹா ராஜனுடைய பரிச னங்கள், அவனைக் காண வேண்டுமென்று அவனது வழியில் இரு புறமும் காத்திருந்தனர். அவன் அடிமேல் அடிவைப்பதுபோல், மெல்லச் செல்வதைக் கண்ணுற்று, அவர்கள் அழுது புலம்பிக் கண்ணீர் வடித்தனர்; காரியங்கள் விதிப்படி நடக்கட்டும்! என்று ஏக்கங் கொண்டனர்; அவன் தங்களைக் கடந்து சென்ற பொழுது அவர்கள் தங்களுடைய கைகளை உயரத் தூக்கிக் கொண்டு அவனைக் கண்ணெடுத்துப் பார்த்தனர்! மேலும் அவர்கள், அவன் தங்களது கண்ணுக்கு மறையும் வரையிலும், அவனையே கண் கொட்டாது பார்த்தும் வந்தனர்.

தன்னுடைய பிரஜைகளுக்கு ஒரு பிதாவைப்போல் விளங்கி வந்த அவன், கடைசியாகத் தன் வழியேயுள்ள ஆளில்லாக் காடு களையும் வயல்களையும் கடந்து கொண்டு, தன்னந்தனியனுக முன் சென்ருன். அவனுடைய பிரஜைகள் இலியனுக்குத் திரும்பிச் சென்றனர்.

அவன், இவ்வாறு சமவெளியின் குறுக்காகச் சென்றதை மஹா தேவரான ஜோவ் தேவரும் கண்ணுற்ருர். அதிர்ஷ்ட ஹீனர்களான மனிதர் படும்பாட்டைப் பார்த்து இரக்கமுங் கொண் டார்! உடனே, அவர் ஹெர்மீஸைப் பார்த்துக் கூறலானுர் :—

" மர்த்தியர்களுக்கு உதவி செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாக உள்ளவனே! அவர்களுடைய பிரார்த்தனைகளைக் கவனிப்பவனே! அதோ அங்கு பார்!

உனது உதவிக்கு அருகனுன ஒருவன், அதோ அங்கு தவிக் கின்ருன். நீ மனிதர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற உதாரசீலமுடையவனென்பது உண்மையெனில், உடனே இங் கிருந்து புறப்பட்டுச் சென்று அந்தப் பெரிய மனிதனைக் காப்பாற்று. அவனைக் குறிப்பாகக் கவனித்து வரும் சத்துருக்களை விலக்கு. அவனை க்ஷேமமாக அகிலேசனது கூடாரத்துக்குக் கூட்டிச் செல்!" என்ருர்.

அந்தத் தேவன், 'ஆஹா, அப்படியே!' என்று ஜோவ் தேவரின் ஆணையைச் சிரமேற்கொண்டு பொன்மயமான தன்னுடைய சிறகுகளை மடக்கியொடுக்கிக் கட்டி வைத்துவிட்டுப் பின்பு அதியுயரமான ஆகாய வீதிகளிலும், அகன்ற பூமண்டலத்திலும், கங்குகரையில்லாத கடல்களைத் தாவிக்கொண்டு, தான் செல்கையில் தன்னைத் தாங்கிச் செல்லக்கூடிய மருத்துக்களின் சிறகுகளின் மேல் ஏறினான்.

பின்பு, அவன் நித்திரையைத் துரத்தியோட்டவும், விழிப்புடன் இருக்கும் கண்களைச் சுகமாக இளந்தூக்கம் பிடிக்கும்படிச் செய்யவுங்கூடிய மந்திர தண்டத்தையும் எடுத்துக்கொண்டான். இந்த ஆயுதத்தை யேந்திக்கொண்டு, துரித கதியுடையவனான அந்த ஹெர்மீஸ் தேவன், ஆகாய மார்க்கமாகப் பிரயாணம் செய்து கடைசியாய், எதிரொலிகளுடன் முழங்கும் ஹெல்லஸ்ப்பாண்டுக் கரையில் குனிந்து இறங்கினான்.

அப்போது, அவன், கம்பீரமும், திவ்வியமான உருவமுமுடைய ஓர் அழகான சிறுவனைப்போல் விளங்கினான். ஒரு ராஜ வம்சத்திலுதித்த, ரூபலாவண்ணியங்களுள்ள ராஜகுமாரனைப் போலவே விளங்கினான். அப்பொழுது சந்தியா காலமாகவிருந்தது. அந்தச் சந்தியா காலமானது, பகலவனது வெப்பம் மிகுந்த வதனத்தை மறைத்து விட்டதுமன்றிப் பூமண்டலத்திலுள்ள வயல்களின் மேல், மங்கலான ஓர் இருண்ட போர்வையையும் போர்த்து விட்டது.

இதற்குள்ளாக, விருத்தனான அரசனும், அவனது துணைவனும் சலவைக் கல்லினால் கட்டப்பட்ட புராதன நகராகிய இலியனை வளைந்துகொண்டு பாயும் வெள்ளி போன்ற ஐலஸ் நதியோரம் வந்து தங்களுடைய இரதங்களை நிறுத்தி, அவைகளில் கட்டப்பட்டிருந்த குதிரைகளையும் கோவேறு கழுதைகளையும் அவிழ்த்துவிட்டு, அவைகளுக்கு உண்டாயிருந்த களைப்பையாற்றிக் கொண்டிருந்தனர்.

அப்போது உண்டாயிருந்த மந்தாரமான நிழலில், தங்களருகில் ஒரு மனிதன் வருவது, பிரியம் மஹா ராஜனது துணைவனுக்கு முதன் முதலாகக் கட்புலனாயிற்று. அதைக் கண்டவுடன், அவன் பிரியம் மஹா ராஜனை நோக்கிப் பின்வருமாறு கூவினான் :—

"ஐயோ, அரசே! ஒரு சத்துரு நம்மை நோக்கி வருவது போல் எனக்குத் தோன்றுகின்றது. ஜாக்கிரதையாயிருங்கள். ஆபத்துக்கள் மலிந்துள்ள இந்தக் காரியத்தில், தாங்கள் அதி ஜாக்கிரதையாக விருத்தல் வேண்டும். நாம் அதிசீக்கிரத்தில் அழிந்தேபோய் விடுவோம் என்று நான் மிகவும் பயப்படுகின்றேன். நமது ஸ்திதி மிகவும் அபாயகரமானதாக விருக்கின்றது. நாம் காரியங்களை நன்றாக ஆராய்ந்து செய்தல் வேண்டும்,

இங்கிருந்து ஓட்டம் பிடிப்பது நல்லதா, அல்லது விருத்தர்களும், கதியொன்று மில்லாதவர்களுமான நாமிருவரும், அவனுடைய காலடிகளில் விழுந்து, அவனது கிருபையைக் கெஞ்சிக் கேட்பது நல்லதா என்பதை நாம் இப்போது யோசிக்க வேண்டும், நாம் இருவரும் விருத்தர்கள் ; வேறு துணையொன்று மில்லாதவர்கள் !" என்றான்.

ஏற்கெனவே துக்கக் கடலில் ஆழ்ந்திருந்த மஹாராஜன், இந்த வசனங்களைக் கேட்டு முன்னிலும் அதிகமாகக் கலக்கமடைந்து நடுங்கினான். அவனது முகமும் வெளுத்தது; ரோமங்கள் சிலிர்த்தன ; மனதும் இடிந்து போயிற்று, அவனது மேனியின் நிறமும் மாறுவதும், முன்போல் திரும்புவதுமாக இருந்தது, அவனது நாட்பட்ட உடலும் திடுக்கென நடுங்கியது !

அப்போது ஹெர்மீஸ் தேவன், அவனுக்கு முகமன் கூறி, அவனை வாழ்த்தி, அவனது ராஜஹஸ்தத்தை ஸ்பர்சித்துப் பின் வரும் மிருதுவான வசனங்களையுரைத்து, அன்புடன் அவனை யோகக்ஷேமம் விசாரித்தான் :—

"ஐயா, பெரியவரே ! தந்தையே ! மர்த்தியர்கள் அனைவருடைய நேத்திரங்களும், பத்திரமான நித்திரையின் முத்திரைக்கு அடங்கியிருக்கும் இத் தருணத்தில், இந்நிசிராத்திரியில், தாங்கள் எங்கு யாத்திரை செய்கின்றீர்கள் ?

தங்களுடைய சத்துருக்களான கிரேக்கர்கள் இங்கு எண்ணிறந்தவர்களாகவும், அதிபலவான்களாகவும் இருப்பதைத் தாங்கள் அறியவில்லை போலும் ! தங்களிடமுள்ள இந்தத் திரவியங்களைக் கண்ணுற்றால், அவர்கள் தங்களைவிட்டு விடுவார்களா? தங்களது வர்க்கத்தையே அடியோடு அழித்துவிட வேண்டும் என்றன்றோ அவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கின்றனர் ? தங்களது இனத்தாரைத் தீராக் கோபத்துடன் தொடர்ந்தும் வருகின்றனர். அவர்களைத் தாங்கள் எவ்வாறு காப்பாற்றப் போகிறீர்கள் ? தாங்கள் யௌவனம் கடந்தவர்கள் ! தங்களது துணைவனும் பலவீனனான ஒரு விருத்தன் !

என்றாலும், தாங்கள் பயந்து மனந்தளராதீர்கள், நான் தங்களுக்குத் துணையாக வருகின்றேன். விருத்தரான தங்களுக்கு என்னால் ஒருவிதமான தீங்கும் நேரிடாது. கிரேக்கர்களிடமிருந்து நான் தங்களைக் காப்பாற்றுவேன் ! புத்துயிர் பெற்று வந்த எனது தந்தையைப் போலவே தாங்கள் விளங்குகின்றீர்கள் ! அவரது சாயலையே தாங்கள் தாங்கிக் கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றுகின்றது !" என்றான்.

"எனது மகனே ! உன்னுடைய வசனங்களனைத்தும் உண்மையே ! அவற்றால், உன்னுடைய அருங்குணமும் பெருத்

தன்மையும் விளங்குகின்றன. நீ மனமாட்சி யுடையவன் என்பதும் அறியக் கிடக்கின்றது.

எனக்குத் தடையாயுள்ள ஆபத்துக்களெல்லாம் பெரியவை தான். அதில் சந்தேகமில்லை. ஆனால், அடிமேலடி வைத்துச் செல்லும் எனது நடையைக் கவனித்து வரும் தேவர்கள், உன்னை எனக்கு வழித் துணைவனாக அனுப்பி யிருப்பதினால், நான் என்னுடைய கவலைகளை யொழித்து விட்டேன்.

உனது வரவு நல்வரவாகுக ! உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகுக ! உனது உருவமாவது, முகச் சாயலாவது, மனோதர்மமாவது, மர்த்திய வர்க்கத்தாருடையனவாகத் தோன்றவில்லை !'' என்று அந்த தேவர்களுக்கு ஸமானமான விருத்தன், அச் சிறுவனுக்கு மறுமொழி பகர்ந்தான்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்தத் தேவதூதன், "தங்களுடைய வசனங்கள் அனைத்தும் உண்மையல்ல ; ஆயினும் அவைகளில் விசேஷமான பிழைகளும் இல்லை, தங்களது பொக்கிஷத்தில் இப்போது மீந்துள்ள விலைமிக்க வஸ்துக்களைத் தங்களது நண்பனான ஒருவனிடம் கொடுத்து வைக்கலாமென்று தான்,.இந்த நிர்மானுஷியமான மைதானத்தின் மத்தியில் தன்னந் தனியனாகக் கொண்டு செல்கின்றீரா ? தங்களது ஜன்ம பூமியையும் ஒரேயடியாய் விட்டு விடலாம் என்று தீர்மானித்தோ, அல்லது இவைகளைக் கொண்டு வேறிடம் செல்லலாம் என்றோ ஓட்டம் பிடிக்கின்றீரா ?

ட்ராய்க்கு ரக்ஷகனும், அதன் பெருமைக்குக் காரணனுமாக விருந்த தங்களது ஒப்பற்ற மகன் வதையுண்டபின், தாங்களும் ட்ராயை விட்டு ஓடி விட்டால், அதன்பின் ட்ராயின் கதி என்னவாகும் ?'' என்று கேட்டான்.

இந்த வசனங்களைக் கேட்டுத் திடுக்கிட்டுப் பயந்த அந்த அரசன், அந்தத் தூதனை நோக்கி, "அப்பா, நீ யார் ? எங்கிருந்து வந்தனை ? ஒரு புத்திரனைப் பறிகொடுத்துத் தவித்து வரும் ஒரு தகப்பனது மனத்தை இவ்வாறு கிண்டிக் கிளறி விசாரணை செய்கின்றனையே ! தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர் இறந்து பட்டதும் நன்றாக அறிந்திருக்கின்றனையே நீ யார் ?'' என்று கேட்டான்.

அக் கேள்விகளுக்கு ஹெர்மீஸ் பின்வருமாறு மறுமொழிகள் பகர்ந்தான் :—

"தாங்கள் இவ்வாறு என்னை வினவலாகாது ! இது மிகவும் கஷ்டம் ! எனது மனம் தவிக்கின்றது. இந்தச் சங்கடமான விஷயத்தைத் தாங்கள் அளவுக்கு மிஞ்சியே விசாரிக்கின்றீர்கள் !

தேவர்களுக்குச் சமானமான ஹெக்டர், கிரேக்கர்க்ளின் இரத்தத்தில் மூழ்கியவனுய்க் கீர்த்தியுடன் செய்து வந்த யுத்தங்களை இந்தக் கண்கள், பன்முறையும் பார்த்திருக்கின்றன ! அவன் ஜோவ் தேவரைப் போல், ஆயிரக்கணக்கான கப்பல்களைத் தீயிட்டுக் கொளுத்தியதையும் கிரேக்க சேஞ சமுத்திரத்தின் ஒரு பாதியை அவ்வாறே தீக்கிரையாக்கியதையும் நான் பார்த்தேன் !

ஐயோ, நான் அவன் ஸாகஸங்களைப் பார்த்து வந்தேனேயன்றி, அச்சமயங்களில் நான் ஒருவிதமான உதவியும் புரியவில்லை. கொடியோனுன அகிலேசனது கோபத்துக்குப் பயந்து நான் அவனுக்கு ஒத்தாசை செய்யவில்லை. அப்போது எரிந்து வந்த நெருப்பைக் கண்டு மாத்திரம் சந்தோஷித்து வந்தேன்.

நான் மிர்மிடோனியரது வம்சத்தைச் சேர்ந்தவன் ; அகிலேசனது ஊழியன் ; நாங்கள் இருவரும் எங்களது ஜன்ம தேசத்திலிருந்து ஒரே கப்பலில் ஏறி இங்கு வந்தோம். பேருங் கீர்த்தியுமுடைய வம்சத்தில் வந்த பாலிக்டோர் என்பவர் எனது தகப்பனுர். அவர் தங்களைப் போலவே வயது முதிர்ந்தவர் ; பிரஸித்தியும் பெற்றவர் ; அவர், தமது ஏழு புத்திரர்களில் எவனைத் தமது அரசனுக்கு ஊழியம் செய்ய அனுப்பலாம் என்று சீட்டுப்போட்ட பொழுது, அந்தச் சீட்டானது கடைக்குட்டியாகிய எனக்கு விழுந்தது.

இந்த யுத்த களத்தில் இந்தப் பாகத்தைக் காவல் செய்து வர வேண்டுவது எனது கடமையாக நியமிக்கப்பட்டிருக்கின்றது. இது ஒரு கடினமான கடமையேயாயினும், நான் இதைச் செய்தே வருகின்றேன்.

பொழுது விடிந்தவுடன், கிரேக்கர்கள், உங்களுடைய கோட்டைகளைத் தாக்குவார்கள். இப்போது அவர்கள் நித்திரையை யொழித்து விட்டு, எப்போது விடியும், எப்போது யுத்தத்திற்குச் செல்வோம் என்று ஆத்திரத்துடன் உட்கார்ந்திருக்கின்றனர். அவர்களுடைய தலைவர்கள், அவர்களுடைய ஆத்திரத்தையும் ஆவலையும் தணிப்பதற்கு மிகவும் சிரமப்படுகின்றனர் " என்ருன்.

இந்த வசனங்களைக் கேட்ட துக்கிதனுகிய அந்தச் சக்கரவர்த்தி, அவனைப் பின்னும், பின்வருமாறு வினவுவானுயினன்:—

" நீ கொடியோனுன பிலிதீசனது பரிவாரத்தில் சேர்ந்தவன் தான் என்ருல், உனக்கு எனது அரும்புதல்வனது தேகம் எங்கு வைக்கப்பட்டிருக்கின்றது என்பது தெரிந்திருக்குமே ! அந்த இடத்தை நீ எனக்குச் சொல்லு, உண்மையாகச் சொல்லு.

அவனது உடல் என்னவாயிற்று? இந்த ஆளில்லாக் காட்டில் நடமாடும் நாய்களும் நரிகளும் அதைப் பிய்த்து விட்ட

னவா ? அங்கமங்கமாகக் கிழித்து விட்டனவா ? அல்லது தண்ணென்று குளிர்ந்து விட்ட அவனது கட்டை ஊனம் ஒன்றுமின்றியே இன்னும் இருக்கின்றதா ?'' என்றான்.

தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் மத்தியிலிருந்து மத்தியஸ்தம் செய்பவனாகிய அந்தத் தேவன், அவ்வசனங்களைக்கேட்டு, அவ் வினாக்களுக்குப் பின்வருமாறு விடையளித்தான் :—

" ஐயா ! தேவர்களது கிருபைக்கு இலக்காகிய பாக்கியவானே ! தங்களது ஹெக்டரை நாய்களாவது கழுகுகளாவது கடித்துக்கிழித்துவிடவில்லை, அவனது உடல்சிறிதும்பங்கமின்றியேயிருக்கின்றது. அது ஒரு கூடாரத்தில் கிடக்கின்றது. அதைக் கவனிப்பார் ஒருவரும் இல்லை. இந்தப் பன்னிரண்டு நாளாக அது அந்தக் கூடாரத்தில் கிடக்கின்றது. அதைப் புழுக்கள் தீண்டவுமில்லை ; அதன் மேல் காற்று அடிக்கவுமில்லை, அது சிறிதும் மாசு படியாமலே யிருந்து வருகின்றது.

சிவந்த கிரணங்களை அமைதியுடன் பொழிந்து வரும் அரோரா தேவியைப் போலவே, அகிலேசன், ஹெக்டரது உடலைத் தனது நண்பனது சமாதியைச் சுற்றித் தரதரவென்று இழுத்துக் கொண்டு செல்கின்றான்.

ஆயினும் அது உருவத்திலாவது அங்கங்களிலாவது சிறிதும் அலங்கோலமின்றியே முன் போல் பொன் மேனியுடன் விளங்குகின்றது. உயிருடன் இருக்கையில் பொலிவுடன் விளங்கிய வண்ணமே, அவன் இப்போதும் சகல லக்ஷணங்களுடனும் விளங்குகின்றான். மரணமடைந்த பின்னும் அவனது தேகம் கம்பீரமாகவே விளங்குகின்றது. அவனது உடலை கிரேக்கர்கள் பன்முறையும் வெட்டினர், குத்தினர், எனினும் அதன் மேல் ஒரு கறையேனும், காயமேனும் இல்லை ; காயங்களனைத்தும் மூடிவிட்டன.

ஏதோ ஒரு தெய்வம் அவனைக் காத்து வருகின்றது. அந்தத் தெய்வம் அவனைக் கைவிடாமல், அவனது பொன் மேனிக்குச் சிறிதேனும் குறைவு வராமல் காத்து வருகின்றது. அப்படியில்லையெனில், தங்களிடம் மட்டற்ற நன்றி பாராட்டி வந்த அவனைத் தேவலோக வாஸிகளனைவருமே, அவன் இறந்த பின்னும் அவனிடம் அன்புடையராக விருக்கின்றனர் என்பது நிச்சயம் !'' என்றான்.

தேவலோகத்திலிருந்து வந்த வழித் துணைவன் இவ்வாறு பிரியம் மஹாராஜனுக்குச் சொல்லவும், அந்த விருத்தனான மஹாராஜன், அவ்வசனங்களைக் கேட்டு மனமகிழ்ந்து, அவனை முன்னிட்டுப் பின்னும் பின்வரும் மொழிகளை யுரைத்தான் :—

" விண்ணுலகிலுள்ள தேவர்களுக்கு இடைவிடாமல் மரியாதைகளும், வந்தன வழிபாடுகளும் செலுத்தி வருபவன்

பெரும் பாக்கியமுள்ளவனேயாவான். எனது மகன் அதிபராக்கிரமசாலியாக விளங்கி வந்த பொழுதும், அவன் ஒலிம்பியன் உலகத்தில் வஸித்துவரும் தேவர்களை ஒருநாளும் மறக்கவேயில்லை. மனிதர்களுடைய நற்குணங்களனைத்தையும் ஒன்று விடாமல் கவனித்து வரும் தேவலோகவாஸிகள், நல்லோருடைய கட்டைகளையும் கருணையுடன் காத்து வருவரன்றோ!

இது இருக்கட்டும். குழந்தாய்! நான் உனது பெருந்தன்மையைப் பாராட்டுகின்றேன்! ஹெக்டரிடம் நீ வைத்துள்ள அன்பிற்குப் கைம்மாருக, நான் இதோ இந்தக் கிண்ணத்தை உனக்குத் தருகின்றேன். இதை ஏற்றுக்கொள்.

இதுகாறும் நமக்குத் தயவு செய்து வந்த தேவர்கள் நமது முன்னுள்ள பிரயாணத்தையும் கவனித்தே வருவார்கள். ஆதலால் நீ என்னைப் பிலிதீசனது கூடாரத்திற்கு க்ஷேமமாகக் கூட்டிக் கொண்டு செல்லலாம்" என்றான்.

அவ்வசனங்களைக் கேட்ட மானிட வேடந்தாங்கிய அந்தத் தேவன், "அரசே! நான் இளைஞன். எனக்கு ஆசை புகட்ட வேண்டாம்! இளைஞர்கள் எளிதில் நெறிதவறி விடுவார்கள் என்பது தாங்கள் அறிந்த விஷயம். எனது தலைவனுன இராஜகுமாரனுக்கு அறியாமல் ரகசியமாய்த் தாங்கள் எனக்குத் தரும் வெகுமதிகளை நான் கைநீட்டி வாங்கலாமா? அவற்றை நான் எங்கு கொண்டு சென்று ஒளிப்பேன்? எங்களது யஜமானன் காரியங்களில் உழைத்து வருகையில், நாங்கள் இவ்வாறு சம்மானங்கள் வாங்கி வந்தால், இவைகளெல்லாம் கொள்ளைப் பொருள்களாகவன்றோ மதிக்கப்படும்!! தண்டனைக்கு உட்படாத இந்தச் சம்மானங்கள் அனைத்தும் நியாயமாக ஏற்பட்ட மேல்வரும்படிகளென்றே கருதப்படும்! ஆயினும் கள்ளமோ, கபடமோ இன்றி நான் எனது யஜமானனுக்கு விசுவாஸத்துடன் உழைக்கக் கடமைப்பட்டவன். ஆதலின் நான் இந்தக் குற்றத்தைச் செய்யவே மாட்டேன்! எனது மனது நடுங்குகின்றது. இது ஒரு பெருங் குற்றமாதலின், இதற்கு ஏற்ற தண்டனையும் கொடிதாகவேயிருக்கும் என்று நான் பயப்படுகின்றேன்.

நான் தங்களை ஆர்காஸ் வரையிலும் கூட்டிக் கொண்டு செல்வேன்; அதற்குச் சித்தமாக விருக்கின்றேன்; அந்தக் காரியம் எனக்குப் பிரியந்தான்; தங்களது உயிரைக் காப்பாற்றிக் கொண்டு தங்களுக்கு வழித்துணைவனுக வருவேன்; பாதையில்லாத வனவனுந்தரங்களிலும், இரைந்து முழங்கும் கடல்களிலும் தாங்கள் யாத்திரை செய்கையில், தங்களது ஹேமத்தை நாடியவனுய் நான் தங்களது ஸேவகனுக வருவேன்" என்றான்.

இவ்வசனங்களை யுரைத்தகணமே, அவன் பிரியம் மஹாராஜனது தேரின்மேல், ஒரே பாய்ச்சலில் பாய்ந்து, குதிரைகளின் கடிவாளக் கயிறுகளைப் பிடித்துக்கொண்டு சாட்டையைச்

சுழற்றினான். அப்பொழுது அந்தக் குதிரைகள், தங்களை ஊக்கத் துடன் உறுத்தி ஓட்டிவந்த அந்தத் தேவனுக்கு முன்பாகத் தாங்கள் அதுவரை அறிந்திராத வேகத்துடன் பறந்தன. இவ் வாறு சென்று, அவை, கோட்டை மதில்களைப் போல் இடைவழி யின்றி நெருங்கி நின்றுகொண்டிருந்த கப்பல்களை வந்து அடைந்தன.

அப்போது அந்தக் கப்பல்களின் காவற்காரர்கள் போஜன மருந்திக் கொண்டிருந்தனர். சாருயக் கிண்ணங்கள் கைவிட்டுக் கைமாறிக் கொண்டிருந்தன. அவர்களைக் கண்டதும், மனிதரூபந் தரித்தவனான அந்த தேவதூதன், அவர்களை நோக்கித் தனது மந்திரக்கோலைச் சுழற்றினான். அக்கணமே அவர்கள், தங்கள் கண்களைத் திறந்த வண்ணம் ஸ்வப்னாவஸ்தைக்கு ஆளாயினர்; ஆழ்ந்த நித்திரைக்கும் வசமாயினர்.

பின்பு அவன் அந்தக் கோட்டையின் கெட்டியான கதவு களை உயரக் கிளப்பி, அவற்றின் தாழ்ப்பாழ்களையும் கழற்றி, அகழ்களின் குறுக்காகத் தனது இரதத்தைக் கடகடவென்று ஓட்டிக்கொண்டு சென்றான். இவ்வாறு ஒருவருக்கும் கட்புல னாகாமல், அவர்கள், சத்துருக்கள் நிறைந்திருந்த பாளையம் முழு வதையும் கடந்து சென்றனர்.

கடைசியாக அவர்கள் பிலிதீசனது உன்னதமான கூடாரத் திற்கும் வந்தனர். அந்தக் கூடாரத்தின் கூரையானது தேவதாரு மரக்கம்பங்களால் உயரமாகக் கட்டப்பட்டுச், சதுப்பு நிலத்தி லிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட நாணல்களைக் கொண்டு மூடப் பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் மரச்சட்டங்களாலான ஒரு வேலியும் போடப்பட்டிருந்தது. இவ்வாறு சைனிகர்களால் நியமிக்கப்பட்ட ஆடம்பரங்கள் மிகுந்த, அந்தப் பிரம்மாண்ட மான மண்டபத்தில், அதன் நாயகன் வீற்றிருந்தான்.

அந்த மண்டபத்தின் கதவு மிகவும் பெரியதாகவிருந்தது. அதன் கனம், அகலம், உயரம் முதலியவைகளுக்கு ஏற்ற அளவில் ஓர் அதியற்புதமான நீண்ட உறுதியான தேவதாரு மரமே அதற்குத் தாழ்ப்பாழாகவும் இடப்பட்டிருந்தது. அந்தக் கனமான தாழ்ப்பாழை அதிபலவான்களான கிரேக்கர்கள் மூவர் முயன் றாலும் நிலத்திலிருந்து உயர்த்தி யெடுக்க முடியாது. ஆனால் மஹானான அகிலேசன் ஒருவனே, அதைத் தனியாக மூடமுடியும். ஹெர்மீஸ் அந்தக் கதவை விசாலமாகத் திறந்தே விட்டான்! அவன் தேவனல்லவா? தேவர்களால் ஆகாத காரியமும் உண்டோ?

பின்பு, தேவஸ்வரூபியான அந்த வழித்துணைவன், தேரி னின்று விரைந்து இறங்கிப், பிரியம்மஹாராஜனை நோக்கிப் பின் வரும் வசனங்களை யுரைத்துத், தான் யார் என்பதையும் தெரிவித் துக் கொண்டான் :—

“ அரசே ! நான் சொல்வதைச் செவிசாய்த்துக் கேளும் ! தங்களுக்கு இதுவரைத் துணையாக வந்தவன் கேவலம் மனிதன் ஒருவனல்ல என்பதை அறிந்து கொள்ளும். நான் ஹெர்மீஸ். விண்ணுலகினின்று இங்கு இறங்கி வந்தவன். சகல கலைகளுக்கும் அதிபதி; ஜோவ் தேவரின் தூதன்.

எனது காரியம் முடிந்துவிட்டது! போய்வருகின்றேன். நான் அகிலேசனுக்குக் கட்புலனுதலாகாது. ஆதலால், இதோ பறந்துசெல்லுவேன்! நீர் க்ஷேமமாக முன் செல்லும்.

எல்லோருக்குமே தேவர்களது தரிசனம் எளிதில் கிடைக்கக் கூடியதல்ல. எளிய மானிடப் பிறவிகளான மர்த்தியர்களுக்கு அது அபூர்வமாகவே லபிக்கக் கூடியது. இப்போது தாங்கள் சிறிதும் பயமின்றி உள்ளே செல்லுங்கள். உங்களுக்கு வேண்டியதைக் கேளுங்கள். ஹெக்டரின் வெண்மயிர் தாங்கிய தந்தையின் மேலும், அவனது தாயின் மேலும், அவனது புத்திரன் மேலும் ஆணையிட்டு, அவனது மனதைக் கரையுங்கள். அந்தக் கன்னெஞ்சன் மனமிரங்கிக் கொடுக்கக் கூடியவையனைத்தையும் கொடுக்க வேண்டுமென்று அவனைப் பிரார்த்தியுங்கள் !” என்றான்.

இந்த வசனங்களை யுரைத்தபின், அந்தத் தேவன் ரூபமானது, பிரியம்மஹாராஜனுக்குக் கட்புலனுகாமல் மறைந்து போய்விட்டது. அக்கணமே அது விண்ணுலகிற்குப் பறந்தேகி விட்டது. பிரியம்மஹாராஜனும் இவ்வாறு தேவர்களது அருளினல், தைரியங் கொண்டவனாய், அவ்விடத்திலேயே தனது இரதத்தை விட்டுக் கீழே இறங்கினான். வயது சென்ற தனது துணைவனை அந்தத் தேரின்மேலேயே யிருத்திவிட்டுத் தான் மாத்திரம் கீழேயிறங்கினான்.

அதிகம்பீரமாகவும், பயபக்தியுடனும், அவன் அடிமேலடி வைத்துக் கொண்டு அந்தக் கூடாரத்திலிருந்த பல அறைகளையுங் கடந்து சென்று, கடைசியாக அகிலேசன் தனது அந்தரங்கக் கூடாரத்திலிருந்ததைக் கண்டான்.

அந்த மஹாவீரன் அங்கு உட்கார்ந்திருந்தான். தைரியம் மிகுந்தவனான அல்லிமஸ்ஸும், மஹானான ஆட்டோமிடானும் அவனுடைய மெய்க்காப்பாளராக விருந்தனர். தங்களது அரசன் போஜனமருந்தி வருகையில் இவ்விருவரும் அவனருகிலிருந்து அவனை உபசரித்து வருபவர்கள்; மற்றைய வீரர்கள் அவனுக்கு நெடுந்தூரத்தில் மிகுந்த பயபக்தியுடன் அவனைச் சுற்றி நின்று கொண்டிருந்தனர்.

இவர்கள் ஒருவருக்காயினும் கட்புலனுகாமல் பிரியம்மஹாராஜன், அந்த அந்தப்புரத்தில் நுழைந்து, அகிலேசன் முன்னால் குப்புறவிழுந்து அவனை நமஸ்கரித்தான். அப்போது தான் அங்கிருந்தோரனைவரும் பிரியம்மஹாராஜனைக் கவனித்தனர்! அவர்

கள், 'இது என்ன ஆச்சரியம், ஒரு கிழவன் இவ்வாறு நமது அரசனை அடிபணிகின்றனனே, இவன் எங்கிருந்து திடீரென வந்தான்' என்று ஆச்சரியப்பட்டுப் பிரமித்தனர்.

அடிபணிந்த அரசன் அகிலேசனுடைய முழங்கால்களைத் தழுவிக்கொண்டு கண்ணீர்விட்டு அழுதான், அதனால் அகிலேச னுடைய கைகள் நனைந்து போயின.

தனது மரபினிற் சிறந்தவர்களையும், அவர்களெல்லோரிலும் உத்தமனாக விளங்கியவனையும், குருதி கக்கும்படி செய்து கொன்று கறைக்கப்பட்ட அந்தக் கொடியகைகளையும், பிரியம்மஹாராஜன் இறுகப் பிடித்து முத்தமிட்டான்!

தான் புரிந்த ஒரு கொலையானது ஒரு பெரும் பாவமென்றும், அதனால் தனக்குப் பெருந் தண்டனை விதிக்கப்படும் என்றும் அறிந்து, தனக்கு வரவிருக்கும் அந்த தண்டனைக்குத் தப்பிவிட வேண்டும் என்று பயந்து, தனது பிறப்பிடம் விட்டு ஓடும் ஒரு கொலையாளியானவன் மூச்சு விடாமலும், மேனி வெளுத்தும், திகைத்தும், தனது நாட்டு எல்லையைச் சேர்ந்து விடுகையில், எவ்வாறு அந்நாட்டார் அவனைக் கண்கொட்டாமல் பார்த்து வருவார்களோ, ஆச்சரியப்படுவார்களோ, அவ்வாறே அகிலே சனும், பிரியம்மஹாராஜனைக் கண்ணுற்றுப் பிரமித்தான்! அவனது மெய்காவலரும் அவ்வாறே மதிமயங்கி ஆச்சரியப்பட்டு நின்றனர்.

அனைவரும் ஊமைகளைப் போல் வாயை மூடிக்கொண்டு இருந்தனர் என்றாலும் அவர்கள் அனைவரும், இவன் யார்? இவன் எவ்வாறு இங்குற்றான்? இவனது நோக்கம் யாது? என்று தத்தம் கட்புலனால் வினவுவார் போல் தோற்றினர்! ஒவ்வொருவனும் தன்னுடனிருந்த மற்றையோனை நோக்கினான்; ஆனால் ஒருவ ராயினும், தனது வாயைத் திறந்து ஒரு வார்த்தையேனும் சொல்ல வில்லை. மௌனமே சாதித்து வந்தனன்.

கடைசியாக, அகிலேசனது தயவை நாடிவந்த அரசனே, தான் வந்த காரியத்தைத் தெரிவித்துக் கொண்டான் :—

"தேவர்களது தயவிற்குப் பாத்திரனாக விளங்கும் வீர! உனது தந்தையின் விருத்தாப்பியத்தை நினைத்து, என்னைப் பார்த்து இரங்குவாயாக! விருத்தாப்பியனான அந்தத் தந்தையைப் போலவே, நானும் வெள்ளியைப் போன்ற நரைத்த மயிருடனும், போற்றத்தக்க முக விலாசத்துடனும் தோன்றுவது உனக்குப் புலனாகலாம். தட்டுத்தடுமாறி நடுங்கும் அவனுடைய அவயவங் களையும், தள்ளாத தேகத்தையும், இதோ பார்!

இந்த விஷயங்களிலெல்லாம் தந்தையும் நானும், சமமா கவே விளங்குகின்றோம். ஆனால் நான் மாத்திரம், பாக்கியமற் றவன்; துயர்க்கடலில் ஆழ்ந்து கிடக்கின்றேன்.

என்ருலும் அவனும் மனிதன்தான். சுகமாகக் காலங்க ழித்து வந்த அவனும், இப்போது ஊரையும் நாட்டையும் விட்டு, எவ்விடத்திலாயினும் அநாதையாகத் திரிந்தே வரலாம்! பராக் கிரமசாலியான ஒரு சத்துருவினுல் துரத்தப்பட்டு, அவன் ஓடு வதை நீயே பார்க்கவும் நேரிடலாம்; தழுதழுத்த குரலில் புலம்பிக் கொண்டும், தஞ்சம், தஞ்சம், என்று கெஞ்சிக்கொண்டும் அவன் ஊரூராய் ஓடிக்கொண்டுமேயிருக்கலாம், அதை நீயும் பார்க்கலாம் என்றே நான் நினைக்கிறேன்.

என்ருலும் அவன் ஒரு விஷயத்தை நினைத்து ஆறுதலடை யலாம், மனந்தேறலாம். தான் கண்குளிரப்பார்த்து ஆனந்திக்கத் தக்க ஒரு புத்திரன், தனக்கு இன்னும் இருக்கின்ருன், என்ற சொல்லை அவன் கேட்டு வருகின்ருன். அச்சொல் அவனுடைய காதுகளில் விழுகின்றது. அச்சொல்லைக் கேட்டு, அவன் தனக்கு நல்லகாலம் பிறக்கும் என்று கருதித், தனது சத்துருவைத் துரத்தி யோட்டுவதற்காக உனக்குச் சொல்லியனுப்பலாம்!

ஆனுல் என் துக்கங்களுக்கு அவ்விதமான ஆறுதல் இல்லையே! எனக்கு நல்லகாலம் பிறக்கும் என்ற எண்ணமோ, நம்பிக்கையோ, சிறிதும் இல்லை! என்னுடைய மக்களில் உத்தமர் களும், அதிதைரியசாலிகளுமாக விளங்கியவர்கள் கொலையுண்டு மாண்டுபோய் விட்டனர்!

ஆஹா, அவர்களது வம்சத்தின் பெருமையை நான் என் னென்று சொல்வேன்! அவர்களனைவரும், கிரீஸ்காரர்கள் இலிய னுக்கு வருமுன் பிறந்தவர்கள். அன்பிற்குப் பாத்திரமும், அன்பு முடைய பல தாய்மார்கள் அவர்களைப் பெற்றெடுத்தனர். அவர் களில் பத்தொன்பதின்மரை ஒரே தாய் பெற்றெடுத்தனள்.

அவர்களனைவரும் இறந்து போயினர். அவர்களனைவரை யுங்குறித்து இந்தப் பிரியம் பன்முறையும் இரத்தத்தை வடித்தான்; அழுது புலம்பினுன். அவனது அழுகைக்கும் கணக்குண்டோ? அவர்களனைவரையும் இழந்த நஷ்டத்திற்கு ஈடு செய்வதற்காக அவனுக்கு ஒரு புத்திரன் மீந்திருந்தான்.

அவனே தங்களைக் கடைசிவரைக் காப்பாற்றுவான், தங்களைக் கைவிடமாட்டான் என்று அவனுடைய நாட்டார் நம்பி யிருந்தனர். அவனையும் உனது கோபம் கொன்றுவிட்டது! தனது நாட்டின் நன்மைக்காகப் போர்புரிந்து வந்த அவனுக்கு நல் லதிர்ஷ்டம் இல்லாமற் போய் விட்டது. அவன் உனது வாளுக்கு இரையாகி விட்டான்!'' என்ருன்.

மேலும், அவன், ''அவன் நிமித்தமாக நான் என்னுடைய சத்துருக்களது பாளையத்தையெல்லாங் கடந்து இங்கு வந்தேன்; அவன் நிமித்தமாக நான் இவ்வாறு காலடியிலும் விழுந்தேன்;

உனது கோபத்தைத் தணிக்கத்தக்க பெருத்த வெகுமதிகளையும் நான் இதோ கொண்டு வந்திருக்கின்றேன்!

ஆதலால், ஓர் அனாதையின் துக்கங்களையும் குறைகளையும் கேட்டு, அவன் வேண்டுவதைத் தருவாயாக! தேவர்களையும் மனங்குளிரச் செய்வாயாக!

உனது தகப்பனை நினைத்துப், பின்னர் எனது முகத்தையும் பார்! அவன் என்னைப் போலவே அனாதையாகவும், விருத்தனாகவும் இருப்பதாக உனது கண்ணுக்குப் புலனாவான். என்றாலும் அவனுக்கு என்னைப்போன்ற துக்கம் இல்லை; அந்த ஒரு விஷயத்தில் அவன் எனக்கு இளைத்தவனே யாகின்றான்.

பெருந்துக்கங்கள் அனுபவிப்பவர்களில், என்னையே முன் வைத்து எண்ணவேண்டும்.

எனது நாட்டையும் குலத்தையும் நசிப்பித்துப் பாழாக்கி வந்தவனை அடிபணிந்து, அவன் முன் வீழ்ந்து புரளவும், அவனுடைய கால்களைக் கட்டவும் வேண்டும் என்பது எனது தலைவிதியாக விருக்கின்றது! எனது குழந்தைகளைக் கொன்ற கொலைபாதனிடம் சென்று பிச்சை கேட்கவேண்டும் என்றும், அவர்கள் வடித்த இரத்தத்தின் கொதிப்புடன் புகைந்து வரும் கரங்களை முத்தமிட வேண்டும் என்றுமன்றோ என் வினை என்னை ஆட்டிவருகின்றது!'' என்றான்.

இந்த வசனங்களைக் கேட்ட அந்த வீரர் தலைவனது மனமும் இரங்கிக் கரைந்தது; அவன் தனது தகப்பனை நினைத்தான்; அவனது கொடிய மனமும் இளகியது.

பின்பு அவன், தன் முன் குப்புறவிழுந்து கிடந்த விருத்தனது கன்னத்தைத் தன் கையாலேயே மெதுவாகத் திருப்பினான்.

அதன்பின் அவ்விருவரும் ஒருவருக்குப்பின் ஒருவராய் வாய்விட்டு அலறித் துக்கம் பாராட்டினர்.

இவ்வாறு அவ்விருவரும் வடித்த கண்ணீரானது ஒன்றாய்க் கலந்து, ஓர் அலைபோல் மோதிக்கொண்டு ஓடியது. அவ்விருவரில் ஒருவன், கீழே தரையில் கிடந்தவண்ணமும், மற்றையவன் அவனுக்கு மேல் வணக்கத்துடன் மெதுவாகக் குனிந்துகொண்டும், கண்ணீர் வடித்துக் கரைந்து உருகினர். ஒருவன் தனது தந்தையை நினைத்துக்கொண்டும் மற்றையவன் தனது மகனை நினைத்துக்கொண்டும் புலம்பினான்.

ஆனால், அகிலேசனது மனத்தில் இரண்டு துக்கங்கள் ஒன்றோடொன்று போராடின. ஒரு கணம் அவன் தனது தந்தையை நினைத்தும், மறுகணம் தனது நண்பனை நினைத்தும் அலறியழு

தான், இவ்வாறு வீரர்களிருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் புலம்புவராயினர்.

அவர்களது அழுகையானது, ஒரு தொத்து வியாதியைப் போல், அவ்விருவரையும் வாட்டி, அவர்களது மனத்தையும் இளக்கி விட்டது. அவ்விருவரும், உலகத்தையே முழுக்கத்தக்க ஒரு பெருத்த மழைபோல் கண்ணீரை வடித்தனர். அவர்கள், பார்வைக்கு மாத்திரம் மஹா வீரர்களைப்போல் தோன்றினர்களே யன்றிக் கேவலம் மனிதர்களைப்போலவே மனங் கலங்கினர்கள்.

இவ்வாறு சிறிதும் பயனின்றிக் கரைந்துருகித் துக்கம் பாராட்டிச் சலித்தபின், கடைசியாக அகிலேசன் தனது உன்னத மான சிங்காதனத்திலிருந்து எழுந்தான். எழுந்து பூஜ்யதைக்கு அருகரான அரசரைக் கைகொடுத்து எழுப்பினன். அவரது வெளுத்த தாடியையும், கம்பீரமான உருவத்தையும் ஏற இறங்கப் பார்த்தான். ஓங்கியுயர்ந்து நின்ற தனது உடலையும் தாழ்த்திக் கொண்டான்.

பின்பு அவன், துன்பக் கடலில் ஆழ்ந்து கிடந்த அவ்வர சனைத் தேற்ற நினைத்து, அவனை நோக்கிப் பின்வரும் வசனங்களை யுரைக்கலானன் :—

"ஐயா! பாக்கியங்களையிழந்துவிட்ட அரசே! தங்களுக்கு என்ன பெருத்த ஆபத்து வந்து விட்டது? கொடுங் கோபத்தினல் தங்களது வம்சத்தையே அழித்துவிட்ட மனிதனை நேராகப் பார்க்க வேண்டுமென்று துணிந்து, இவ்வாறு துணைவன் ஒருவனுவது இல்லாமலும், தன்னந்தனியனுகவும், சிறிதும் பயமின்றிச் சத்துருக் களையுங் கடந்து வந்து விட்டீர்களே! தாங்கள் அனுபவித்துவரும் கஷ்டங்களைப் பொறுத்து வருவதற்கு ஏற்ற இரும்பைப்போன்ற உறுதியான ஒரு மனத்தைத் தேவர்களே தங்களுக்கு அளித்து விட்டனர் என்பது நிச்சயம்! ஆதலால் எழுந்திருங்கள்:

தங்களுடைய கவலைகளைப் புத்திபூர்வமாக ஆராய்ந்து, அறிவு என்னும் ஆயுதத்தால் அகற்றுங்கள்; மனந்தேறுங்கள். அழுது புரளுவதினல் பயனில்லை. கஷ்டங்களைப் பொறுத்து வரவே மனிதன் பிறந்தவன். இதுவே தேவர்களது மறுத்தற்கரிய கொடிய ஆணை! அவர்கள் மாத்திரந்தான் பாக்கியவான்கள்; நல்ல அதிர்ஷ்டமுடையவர்கள்; அவர்கள்தான் சுயேச்சை யுள்ள வர்கள்; பந்தமற்றவர்கள்.

ஜோவ் தேவரின் உன்னதமான சிங்காதனத்தின் அருகில் இரண்டு கிண்ணங்கள் என்றும் நின்று வருகின்றன. அவற்றில் ஒன்றினின்று தீமையும், மற்ருென்றினின்று நன்மையும் உற்பத்தி யாகின்றன, அவ்விரண்டினின்றும், அவர் மர்த்தியனுன மனித னது கிண்ணத்தை நிரப்புகின்ருர். சிலருக்குப் பாக்கியங்களையும்,

வேறு சிலருக்குத் துக்கங்களையும் அளிக்கின்றார். பெரும்பாலோர்க்கு இந்தச் சுகதுக்கங்களைக் கலந்து விடுகின்றார்.

கலப்பில்லாத துக்கங்களையே அனுபவிக்கப் பிறந்தவன் மஹாபாபிதான் என்பதில் ஐயமில்லை. பலவிதமான துன்பங்களால் தொடரப்பட்டும், உண்ணச் சோறின்றித் திண்டாடிக் கொண்டும், மண்ணுலத்தாராலும், விண்ணுலகத்தாராலும் ஒதுக்கப்பட்டவனாய் அவன் ஊரூராய்த் திரிகின்றான்.

மஹா பாக்கியவான்களும் உண்மையான பூரண சுகம் அனுபவிப்பதில்லை. அவர்களது அதிருசியான பானத்திலும், கவலையென்னும் கசப்புக் கலந்தேயிருக்கின்றது.

ஆஸ்தியிலும், ஆண்மையிலும், பிலியஸ்ஸை மிஞ்சியவர்களாக விளங்கி வாழ்ந்தவர்கள் எவரேனும் உண்டோ? அவனது ஜனன காலத்தில் எந்தெந்த நக்ஷத்திரங்களெல்லாம் கூடியிருந்து அவனை வாழ்த்தின! அவனது இஷ்டப்படி அவனுக்கு ஓர் இராஜ்யம் அளிக்கப்பட்டது. ஒரு தேவதையும் அளிக்கப்பட்டனள். தேவர்கள் தங்களாலான வரங்களையெல்லாம் அவனுக்கு அளித்தனர். அவைகளுடன் அவன் பொலிவுடன் விளங்கினான்.

என்றாலும் அவனையும் சனியன் விடவில்லை. அவனது கடைசிக் காலத்தில், அவனையும் ஒரு பீடை பிடித்துக்கொண்டது. அவனுக்குப் பின்னர் இராஜ பதவியையேற்று, இராஜ வம்சத்தை நிற்கச் செய்வதற்கு அவனுக்கு ஒரே ஒரு புத்திரன்தான் மீதியாக இருக்கின்றான்.

ஐயோ கஷ்டம்! அவனும் புறநாட்டில், அகாலத்தில், அற்ப ஆயுளில் அழிந்து போவான் என்று தேவர்கள் விதித்திருக்கின்றனர்.

அந்தப் புத்திரன்தான் நான்! நான் இதோ, இங்கு ட்ராயில் இருக்கின்றேன். என்னைப் பாரும்! எனது தகப்பனது தள்ளாத காலத்தில், அவரைக் கட்டிக் காத்துவரும் பாக்கியம் எனக்குத் தினேதினே குறைந்து வருகின்றது! உமது சாபத்துக்கு இலக்காகி, நான் உயிரை வைத்துக் கொண்டு, எனது நாளைக் கணக்கிட்டு வருகின்றேன்.

விருத்தரே, நீரும் சிலகாலம் சுகமாகவே வாழ்ந்து வந்தீர்! ஒருகாலம் அதிதனவானாகவும், பின்னொரு காலம் புத்திரபாக்கியத்துடனும், சிறந்து விளங்கினீர். அகன்று பரந்துள்ள பிரிஜியா நாடும் ஆனந்தமயமான ஸ்தலங்களைக் கொண்ட லெஸ்பாஸும், அளவு கடந்த அகன்ற கடற்கரையைக் கொண்ட ஹெல்லஸ்ப்பாண்ட்டும் உமது செங்கோலுக்கு அடங்கியிருந்தன.

இப்போது, அந்தத் தேவர், தமது கையை மாற்றிக் கொண்டு, கசந்த கிண்ணத்தை நிரப்பி உமக்குக் கொடுக்க நினைத்து விட்டார்! இதை மாற்றவல்லார் எவரேனும் உளரோ? சூரிய பகவானாலும் இதை மாற்ற இயலுமோ? அதிர்ஷ்டஹீனர்களான வீரர்கள், கூட்டங் கூட்டமாகப் பட்டு விழுவதைத் தானே, அவனும் கண்ணுற்று வருகின்றான்! யுத்தமும், மனிதர் வடிக்கும் இரத்தமுமே, உம்முடைய கோட்டைகளை வளைத்துக் கொண்டன!

நடக்கவேண்டியது நடந்தே தீருமன்றோ? கடப்பாரெவரே கடுவினையை? ஆதலால், தங்களுடைய துக்கங்களைப் பொறுமையுடன் ஏற்று வாருங்கள்! இறந்தாரைக் குறித்து அவ்வாறு அழுதுபுலம்ப வேண்டாம், இதனால் பயன் ஒன்றும் இல்லை! இது வீண்! ஸ்திஜியாக் கரைக்குச் சென்றவனைத் திருப்பியழைக்க உம்மால் இயலாது!

"தங்களைப் பார்த்தால், எனக்குப் பரிதாபமே உண்டாகின்றது. தங்களுக்கு இன்னும், மேன்மேலும், துக்கங்கள் உண்டாகுமோ என்றே நான் இரங்குகின்றேன்" என்றான்.

அவ்வசனங்களைக் கேட்டுப், பிரியம் மஹாராஜன், "தேவர்களது பிரியத்துக்குப் பாத்திரனாக விளங்குபவனே! ஈமக்கடன்கள் ஒன்றுமின்றி, ஹெக்டர் கடற்கரையில், வெறுந் தரையில் கிடக்கின்றான். ஆதலால், நானும் இவ்விடமே மண்ணோடு மண்ணாய்ப் போக விரும்புகின்றேன். எனக்கு ஹெக்டரைத் திருப்பிக் கொடு. அவனது பிரேதத்தை இந்தக் கண்கள் பார்க்கட்டும். எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம்.

இந்தப் பரிசுகளை ஏற்றுக்கொள். நீ உனது இஷ்டப்படி இந்த அளவற்ற வஸ்துக்களை அனுபவித்து வரலாம். உனது ஜன்ம தேசத்திற்கும் க்ஷேமமாகக் கடலைக் கடந்து செல்லலாம். ட்ராயின் மேலுள்ள உனது கோபத்தையும் தணித்துக் கொள்ளலாம். இவ்வாறு செய்து இரக்கமும் தயவும் பாராட்டுவாயானால், விருத்தனும், பலவீனனுமான உனது தகப்பன் உன்னைக்கண்டு களித்து, நெருங்காலம் வாழ்ந்து வருவான்!" என்றான்.

இவ்வசனங்களைக் கேட்ட அகிலேசன், கோபங்கொண்டு, தன்னுடைய கண்களில் தீப்பொறிகள் பறக்க, பிரியம் மஹாராஜனை நோக்கி, "ஐயா! இது போதும். மேன்மேலும் எனது மனத்தைக் கரைக்க வேண்டாம். கண்ணீர் வடித்து மனதைக் கலைக்கவேண்டாம். உமது ஹெக்டரைத் திரும்பித் தந்து விடலாமென்று நானே நினைத்திருக்கின்றேன்.

நான் சொல்லுவதையும் சற்றுக் கேளும். அமரர் பரம்பரையில் வந்தவரான எனது அன்னை இங்கு வந்திருந்தார். ஜோவ் தேவரே அவரை இங்கு அனுப்பியிருந்தார். அவர் அனுதியான

சமுத்திர ராஜனது புதல்வி. வெள்ளிக்கால்களுடன் விளங்கும் பெருமாட்டி.

நீரும், தேவர்களது நியமனமின்றி இங்கு வந்தவரல்ல. நீர், தன்னந்தனியாகவும் இங்கு வரவில்லை. உமக்கு மிஞ்சிய தைரியத்தை ஒரு தெய்வமே உமக்கு அளித்திருப்பதுமன்றி, அது உம்மை இங்கு உந்தித் தள்ளிக்கொண்டும் வந்திருக்கின்றது. எனது கூடாரத்தின் கனமான கதவுகளின் தாழ்ப்பாளைச் சாமானியமான ஒரு மனிதன் கழற்ற முடியுமா? முடியாத காரிய மன்றோ? மேலும், நம்முடைய வெளிக்கோட்டைகளைக் கடந்து உட்புகவாவது, நம்முடைய காவற்காரர்களை ஏமாற்றவாவது, நம்முடைய இளங்காளைகளில் அதிதைரிய முள்ளவர்களாலும் இயலாது!! ஆதலால் சற்றுப் பொறுமையுடன் இருங்கள். மௌனமாகவிருங்கள்!

இல்லையெனில், நான், பரம்பொருளான ஜோவ்தேவரின் ஆணையையும் புறக்கணித்து விடுவேன்! உமது பிடிவாதம் தகாது என்று உமக்கும் அறிவித்து விடுவேன். என்னுடைய முழங்கால்களை விட்டு விடும்! கெஞ்சிக் கூத்தாடும் இந்தத் தந் திரங்களையும் விட்டுவிடும். எனது மனத்தில் நான் செய்துள்ள தீர்மானத்தையும் கலைக்க வேண்டாம்!'' என்ருன்.

விருத்தனுன பிரியம் மஹாராஜன் அக்கணமே நடுக்குற்றுப் பயந்து தணிந்து விட்டனன். அகிலேசனும் அவ்வளவில் ஒரு சிங்கத்தைப்போல் சரேலென்று எழுந்து வெளியேறினுன். ஆட்டோமிடானும், அல்ஸிமஸ்ஸுூம் அவனைத் தொடர்ந்து அவ னுடன் சென்றனர். தனது நண்பனை யிழந்தபின், அகிலேசன் அவ்விருவரையும் வெகுவாக மதித்துக் கௌரவித்து வந்தனன். அவ்விருவரும் பிரியம் மஹாராஜனது தேரிலும் வண்டியிலும் பூட்டப்பட்டிருந்த குதிரைகளையும் கோவேறு கழுதைகளையும், நுகத்திலிருந்து அவிழ்த்து விட்டு, பிரியம் மஹாராஜனது விருத்த னுன துணைவனையும் கூடாரத்துக்குக் கூட்டிச் சென்றனர்.

அதன்பின் அவர்கள், மஹானுன ஹெக்டருக்கு ஈடாகக் கொடுக்கக் கொண்டுவரப்பட்ட கணக்கற்ற திரவியங்களை, அந்தக் காந்தியுடன் விளங்கிய இரதத்தினின்றும் இறக்கிச் சுமந்துவந்து அவற்றை ஒருமலைபோல் குவித்தனர். இறந்தவனை மூடிமறைத்துச் சுற்றிக் கட்டுவதற்காக, அவர்கள் இரண்டு திவ்வியமான போர் வைகளையும், ஓர் அகன்ற இரத்தினக் கம்பளத்தையும் மாத்திரம் எடுக்கவில்லை, அவற்றை விட்டு விட்டனர்.

பின்பு அவர்கள், தங்களுடைய வேலைக்காரிகளைப் பிரியம் மஹாராஜனது கண்ணுக்கு மறைவான ஓர் இடத்திற்கு வரும் படியழைத்து, ஹெக்டரின் பிரேதத்தைக் குளிப்பாட்டி, அதற்கு எண்ணெயிடும்படி நியமித்தனர்.

அந்தப் பிரேதத்தைக் கண்ணுற்ருல், பிரியம் மஹாராஜன் புத்திர வாஞ்சை மேலிட்டுப் பொங்கிக் கொதிப்பான்; பிலிதீச னும் தீராக் கோபத்துடன் சீறுவான்; பிரியம் மஹாராஜன் விருத் தன் என்ருவது, இது ஜோவ் தேவரின் ஆணையென்ருவது அவன் தயவு தாக்ஷண்ணியம் பார்ப்பவனல்லன்; மேன்மேலும் பொங்கும் அவனது கோபத்தைத் தணிக்க ஒருவராலும் இயலாது என்றெல்லாம் அறிந்தவர்களாதலால், அவர்கள் இவ்வாறு செய்தனர்.

இந்தக் காரியம் நடந்த பின்னர், அவர்கள் அந்தப் பிரேதத் தின் மேல், மேற் சொல்லியவாறு வஸ்திரங்களை விரித்துப் போர்த்தினர்; அதன்பின், அகிலேசனே அதனைப் பாடையின் மேல் தூக்கி வைத்தான். கடைசியாக அந்தச் சவம், பிரியம் மஹாராஜனது தேரின்மேல் ஏற்றப்பட்டது.

அப்பொழுது அகிலேசன் விம்மி விம்மியழுது, தனது நண் பனை பத்துரகலுஷனை நினைத்துப் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"எனது அன்பனே! வெளிச்சத்திற்கு ஒருக்காலும் புலனு காமல் மறைவாக விருக்கும் அந்தகாரத்தில் புகுந்துவிட்ட ஆத் மாக்களுக்கு, மர்த்தியர்கள் செய்யுங் கருமங்களால் அதிருப்தி யுண்டாகும் என்பது உண்மைதான், என்ருல், நீ இப்போது என்னை மன்னித்தல் வேண்டும்.

தேவர்களது மறுக்க முடியாத ஆணையை மேற்கொண்டு அதை நிறைவேற்றுவதற்காகவே நான் இப்போது இந்தப் பிரே தத்தைத் திருப்பிக் கொடுக்கின்றேன். இவனது தகப்பன் அளித்த பரிசுகள் அனைத்தும், என்றென்றும் உனக்கே உரியவையாகட்டும். உனது ஆத்மாவுக்கு அவை பூஷணமாக விளங்கட்டும். உனது சமாதியை அவை அலங்கரிக்கட்டும்!" என்ருன்.

இவ்வசனங்களை யுரைத்து விட்டு, அவன் தனது கூடா ரத்தின் உட்புகுந்து, தனது திவ்யமான சிங்காதனத்தில் அமர்ந்து கொண்டான். அவ்விடத்தில் அவனுக்கு நேராக ஓர் ஆசனத் தில் விருத்தனுன பிரியம் மஹாராஜனும் அமர்ந்து கொண்டான். அப்பொழுது, தேவர்களை நிகர்த்த அந்தப் பெருந் தலைவன், பிரியம் மஹாராஜனை நோக்கிச் சாந்தமாகப் பின் வரும் வசனங் களை யுரைத்தான் :—

"ஐயா! அதோ பாரும், தங்களது விருப்பப்படி, ஆவி யிழந்த தங்களது மகனை நான் தங்களிடம் சேர்த்து விட்டேன். அவன் தனது காலை நீட்டிக் கொண்டு சவமாய்ப் பாடையில் கிடக்கின்ருன். தினகரன் நாளைக் காலையில் கீழ்வானத்தில் சாயந் தீட்டியவுடனே, அவனை நீர் காணலாம். அவனைக் காண

வேண்டுமென்று ஏங்கிக் கிடக்கும் உம்முடைய கண்களும் அவனைக் காணலாம்.

புனிதமான இந்த இராத்திரி காலத்தில், நாம் நம்முடைய கவலைகளை யொழித்து விட்டு, இனி நடக்க வேண்டிய காரியங்களை நிதானமாக ஆராய்தல் வேண்டும். அதன்பின் இளைப்பாறவும் வேண்டும்.

எனது தந்தையே! இது காறும் துக்கித்து, வெந்து நொந்துள்ள தாங்களும் பிராணாதாரமான இந்தச் சாமானியமான உபசாரங்களையும், சிரமபரிகாரங்களையும் செய்து கொள்ள வேண்டும். தாங்கள் அவற்றை வேண்டாமென்று தள்ளலாகாது.

தேவஸ்வரூபியாகிய நியோபியும் கூட அவ்வாறு செய்யவில்லை. அவளும் குழந்தைகளைப் பெற்றவள் தான். அவளுக்கும் தங்களுக்குண்டான துக்கங்களைப் போன்ற துக்கங்கள் உண்டாயின. அவளுடைய குழந்தைகளான இளங்காளைகள் அறுவரும், இளஞ் செல்விகள் அறுவரும், ஆகப் பன்னிருவர் ஒரேஒரு கெட்ட நாளில் ஸ்டிஜியன் நிழலைத் தரிசித்தனர். முன்னையவர்கள் அப்பால்லோவின் வெள்ளி வில்லினால் கொலையுண்டனர்; பின்னையவர்களை ஸிந்தியா தேவியின் சரங்கள் சமவெளியில் சாய்த்து வீழ்த்தி விட்டன.

திவ்வியஸ்வரூபியான லாதனு தேவிக்குச் சமானமான உயர்ந்த மரபில் வந்தவளெனினும், அவளது கர்வமானது தேவர்களால் தண்டிக்கப் பட்டது. லாதனு தேவிக்கு இரண்டே குழந்தைகள் இருந்தன. தனக்குப் பன்னிருவர் குழந்தைகளாக இருந்ததை நினைத்து நியோபி தேவி இறுமாப்படைந் திருந்தனள். அந்தப் பன்னிருவரையும், லாதனுதேவியின் மக்கள் இருவரும் அழித்துப் பழி தீர்த்துக் கொண்டனர். அப் பன்னிருவரும், தங்களுடைய இரத்தத்திலேயே ஊறியும், புழுதியில் அழுந்தியும், தங்களைக் கவனிப்பார் ஒருவருமின்றி, ஒன்பது நாட்கள் வானத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தனர்.

அச்சமயம், ஜோவ் தேவர், அவர்களுடைய நாட்டாரனைவரையும் கல்லாகச் சமைத்து விட்டார். ஆதலால், அவர்களுக்காக அழவாவது, அவர்களுடைய பிரேதங்களை அடக்கஞ் செய்யவாவது ஒருவராயினும் இருக்கவில்லை.

கடைசியாகத் தேவர்களே மனமிரங்கி, அந்தத் துக்க மக்களுக்கு ஒரு சாமாதியைக் கட்டினார்கள்.

தேவர்களது மற்றொரு ஆணைப்படி, நியோபியும் ஒரு பாறையாக மாறிவிட்டனள். அவள் வடித்து வரும் கண்ணீரானது இப்போது கல்லும் முள்ளும் நிறைந்த பாலைவனங்களைக் கடந்து கொண்டு ஆறாய்ப் பெருகி வருகின்றது. அவ்விடத்தில் தான்

அச்சிலுஸ் நதியும் உற்பத்தியாகின்றது. நதிதேவதைகளெல்லாம், அந்நதியின் மூலஸ்தானத்தைச் சுற்றிப் பின்னல் கோலாட்டம் போட்டுக் கொண்டு விளையாடி வருகின்றனர்.

அவளும், தனது துக்கங்களுக்குத் தானே சாக்ஷியாக, முண்டும், முடிச்சும், கல்லுங் கரடும் மலிந்துள்ள ஸிபிலஸ் என்னும் சிகரத்தின் உச்சியில் நின்றுவருகின்றாள். அந்தப் பாறையும் அதினின்று வழிந்து வரும் கண்ணீரும் சாசுவதமாதவே யிருக்கின்றன. அவற்றிற்கு அழிவேயில்லை.

அரசே! இம்மாதிரியான கஷ்டங்களை வேறு தகப்பன்மாரும் தாய்மாரும் அனுபவித்தே வந்திருக்கின்றனர். அவர்களை நினைத்து உமது துக்கத்தைத் தணித்துக் கொள்ளும்; மனந்தேறும். இப்போது, தேவர்களே உமது ஹெக்டரைக் குறித்துக் கவலைப் படுவதாகத் தோன்றுகிறது. ஆதலால், மனிதர்கள், அவனைக் குறித்து, அழுது புலம்பாமலாவது, அவனை அடக்கஞ் செய்யாமலாவது இருத்தல் கூடாது; தகாது, இனி அதி சீக்கிரத்தில் உமது கண்ணீரானது, உம் கன்னங்களின் வழியாகத் தாரைதாரையாக வழிந்து வரலாம். இலியனிலுள்ள மற்றையோருடைய கண்களும் அவ்வாறே ஊற்றெடுத்து, ஆறுய்ப் பெருகலாம்" என்றான்.

இவ்வசனங்களை யுரைத்து விட்டு, அவன் தனது இடத்தை விட்டுப் பெயர்ந்தெழுந்து, வெள்ளியைப் போன்ற ரோமங்களை யுடைய ஒரு செம்மறியாட்டை ஆராய்ந்து பிடித்தான். அதனை, அவன் மெய்க்காவலர்கள் கொன்று, புகைந்து கொண்டிருந்த அதன் அவயவங்களை அதன் தோலினின்றும் வேருகப் பிரித்துத் துண்டந் துண்டமாக அறுத்து நறுக்கினர். பின்பு அவர்கள் ஒவ்வொருவனும் அந்த மாமிசத்துண்டங்களை நெருப்பின் மேலிட்டு வாட்டி, அந்நெருப்பானது ஜ்வாலையுடன் எரியுமுன் அத்துண்டங்களைச் சரேலென்று எடுத்தும் வந்தனர்.

அதன் பின் அவர்கள், தகதகவென்று மின்னிய தட்டங்களில் ரொட்டியை நிரப்பினர். அத்தட்டுக்களை ஆட்டோமிடான், அந்தப் பந்தியைச் சுற்றி யெடுத்து வர, அவைகளிலிருந்த போஜன பதார்த்தங்களைத் தலைவனுகிய அகிலேசனே, ஒவ்வொருவனுக்கும் பரிமாறினன். அவ்வாறு பரிமாறப்பட்ட ருசியான பக்ஷணங்களை யருந்தி அவர்களனைவரும் தங்களுடைய களைகளைத் தீர்த்துக் கொண்டனர்.

இவ்வாறு பசிப்பிணியாற்றிக் கொண்ட பொழுது அகிலேசன், தனது உடலில் ஒரு புதிய உணர்ச்சி யுண்டாவதை யறிந்து ஆச்சரியப் பட்டுத் தனக்கு விருந்தாக வந்திருந்த வேந்தனை மலர்ந்த முகத்துடன் கண்ணுற்றுப் பார்த்தான். அவ்வாறே விருந்தாக வந்த வேந்தனும், தன்னை யுபசரித்த வீரனை, ஏற இறங்க உற்று நோக்கினன். அவனது தேவர்களைப் போன்ற

திவ்வியமான தோற்றமும், கம்பீரமான பருமனும், அவனுடைய கண்களைக் கவர்ந்தன.

இளங்காளையின் ஸௌந்தரிய வதனமும் பெருந்தகைமையும் அவனது உள்ளத்தைக் கொள்ள, அந்த விருத்தனது சாந்த சீலமும், உதாரகுணமும், அவ்விளங்காளையை மயக்கி விட்டன.

இவ்வாறு ஒருவரையொருவர் நெடுநேரம் மூச்சுப் பேச்சின்றி, மௌனமாக உற்றுப் பார்த்து வந்தனர். ஒருவராயினும் ஒரு வார்த்தையேனும் உரையாடவில்லை. அந்நேரம் அங்கு அமைதியே நிலவி வந்தது. கடைசியாக ஹெக்டரின் பிதாவானவன் பின்வரும் வசனங்களை யுரைத்தான் :—

"ஜோவின் அன்பிற்குப் பாத்திரனே! கவலைகளும் யோசனைகளும் மலிந்துள்ள, எனது தலையைச் சாய்த்துச் சிரமபரிகாரஞ் செய்து கொள்ள நினைக்கின்றேன். நித்திரையின் பனித்துளிகளில் மூழ்க விரும்புகின்றேன். அதற்கு அனுமதி தருவாயாக! அதிர்ஷ்டம் குறைந்த எனது மகன், இறந்தோரது கணக்கில் சேர்ந்த தினம் முதலாக, இது காறும் புழுதியே எனது பாயும் படுக்கையுமாக ஆகிவிட்டது. அழுது புலம்பிக் கண்ணீர் வடித்து இந்த. என்னுடைய நேத்திரங்களுக்கும் இனிய நித்திரைக்கும் பொருத்தம் உண்டாகவில்லை. அவை பரஸ்பர விரோதிகளாயின. எனது கஷ்டங்களும் நான் எறிந்த பெருமூச்சுக்களுமே இதுவரை என்னுடைய உணவுகளாக விருந்தன.

இன்று பெரிந்தன்மையுடன் நீ என்னை உபசரிப்பதால், நான் உனது விருந்தை ஏற்றுக் கொண்டு உயிரையும் தாங்கிவர உடன்படுகின்றேன்" என்றான். அவ்வாறு அவனுரைத்த வசனங்களைக் கேட்ட அகிலேசன், மிருதுவான ஊதா நிறங் கொண்ட பட்டுக்களும், ரோமங்களால் நெய்யப்பட்ட கம்பளங்களும் விரித்த ஒரு படுக்கையை அவனுக்குச் சித்தம் செய்யும்படி நியமித்தான்.

அந்த ஆணையை மேற்கொண்ட அவனுடைய அனுசரர்கள், தீவர்த்திகளைப் பிடித்துக் கொண்டு அவ்வாணையை நிறைவேற்றுவதற்காக முன் சென்றனர். படுக்கைகளை விரித்து, அவற்றின் மேல் கம்பளங்களையும் பரப்பி வைத்தனர்.

பின்பு அகிலேசன், பிரியம்மஹாராஜனை நோக்கி, "என் தந்தையே! தாங்கள் இனி நித்திரை செய்யலாம்" என்றான். மறு கணம், அவன் மிகுந்த ஆத்திரத்துடன், "ஆனால், தாங்கள் இங்கு படுத்து உறங்குவது உசிதமல்ல! தங்களது க்ஷேமத்தைக் கவனியுங்கள்! தாங்கள் இங்கு படுத்து உறங்கினால், தங்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிடலாம் என்று நான் பயப்படுகின்றேன்.

தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்! இச்சமயம், இங்கு உறங்காமல் விழித்துக்கொண்டிருக்கும் ஆர்கிவ் வீரன் எவனா

யினும் ஒருவன் நம்முடன் கலந்து ஆலோசனைகளைச் செய்யவோ, அல்லது நம்முடைய உத்திரவுகளைப் பெறவோ, இந்தத் திறந்துள்ள நமது கூடாரத்தின் அருகில் திடீரென வந்து, ஒரு சமயம் தங்களையும் கண்டுவிட்டானெனில், நாம் தங்களுக்குச் செய்துள்ள உபசாரங்களுக்கு விக்கினங்கள் உண்டாகிவிடுமே யென்று நான் பயப்படுகின்றேன் !

புண்ணிய ஸ்வரூபியாகிய தாங்கள் இவ்விடம் பிரஸன்னராகவிருப்பதை அவன், பிறனெவனுக்காயினும் தெரிவித்து, அச் செய்தியானது நரேந்திரனுக்கும் எட்டிவிடில், அவன் தாங்கள் ஈடு செய்வதற்காகக் கொண்டு வந்திருக்கும் திரவியங்களை மறுத்துவிடலாம்; தங்களுடைய பிரார்த்தனையையும் உடனே கவனிக்காமல், ஒத்திவைத்து விடலாம்; தாமதித்து விடலாம்!

ஆதலால் தாங்கள் கேட்க விரும்பிய விஷயங்கள் இன்னும் ஏதேனும் உளதேல், அதனை உடனே வேகமாகச் சொல்லுங்கள்! தங்களது ஹெக்டரை அடக்கஞ் செய்ய எவ்வளவு நேரம் பிடிக்கும்? அதுவரை நாம் நம்முடைய ஆயுதங்களைப் பிரயோகிக்காமல் இருப்போம்; அவ்வாறேயிருக்கும்படி நம்முடைய பரிவாரத்தாருக்கும் ஆணையிடுவோம் !" என்றான்.

இவ்வசனங்களைச் செவியேற்ற அந்தச் சக்கரவர்த்தி, இறந்தவனுக்கு நாங்கள் செய்யத்தக்க மரியாதைகளனைத்தையும் செய்ய அனுமதி தரவேண்டும் என்பது உனது இஷ்டந்தான் என்றால், நீ ஒரு பெருத்த உபகாரம் செய்தல் வேண்டும்.

அது என்னவெனில் இலியன் நகரத்தார் அனைவரும் தங்களுடைய கோட்டை மதில்களின் உள்ளிலேயே பதுங்கிக்கிடப்பதும், சத்துருக்களுக்கு மிகவும் பயந்திருப்பதும் உனக்குத் தெரியும். இடைக் குன்றுகள் நம்முடைய கோட்டை மதில்களினின்றும் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன என்பதும், தகனக் கிரியைக்கு வேண்டிய மரங்களுள்ள காடுகள் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன என்பதும் உனக்குத் தெரியும்.

எங்களுடைய துக்கங்களைச் சொல்லியழுது புலம்பிப் பரவுவதற்கு எங்களுக்கு ஒன்பது நாள் வேண்டும்; பத்தாம் நாள் சவச் சடங்கும் விருந்தும் நடக்கும்; அதற்கு அடுத்த தினம், அவனுக்கு ஒரு மண்டபம் கட்டுவோம்.

அதன் பின்னும் நாங்கள் யுத்தம் செய்ய வேண்டும் என்பது தேவர்களது திருவுள்ளம் ஆமாயின், பன்னிரண்டாம் நாள் நாங்கள் திரும்பவும் யுத்தத்திற்கு வருவோம்" என்றான்.

இவ்வசனங்களைக் கேட்ட தலைவன் "சரி, இந்தப் பிரார்த்தனைக்கு நாம் இணங்குகின்றோம். நீர் வேண்டியபடியே காரியங்

களைச் செய்யலாம். அவை முடியும் வரை நம்முடைய ஆயுதங்கள் உறைகளில் உறங்கிக் கிடக்கும், ட்ராயும் அழியாது" என்றான்.

பின்பு அவன், அந்தக் கிழவனது மனதிலுள்ள பயங்களை யொழிப்பதற்காக, அவனுக்குத் தனது கையையளித்து, விடை கொடுத்து அனுப்பிவிட்டுத் தனது கூடாரத்தின் உள்ளில் திரும்பினான். அங்கு ஸர்வ ஸௌந்தரியங்களும் ஒருங்கே மலர்ந்து அமையப் பெற்றவளான பிரைஸீஸ் என்னும் கட்டழகியானவள், வீரனை தனது ஆண்மகனை ஆவலுடன் கட்டியணைத்துக் கொள்ளக் காத்திருந்தனள்.

அரசனும் அவனது துணைவனும் பலவிதமான மனக் கவலைகளுக்கு இடந்தரும் கனவுகளைக் கண்டுகொண்டு அந்தக் கூடாரத்தின் முன் மண்டபத்தில் தங்கினர்.

அப்போது, இரவும் வந்துவிட தேவர்களும் மனிதர்களும், நித்திரையினால் வரும் சுகத்திற்கு வசமாயினர்.

ஆனால், கருமமே கண்ணுங் கருத்துமாயிருந்த ஹெர்மீஸ் மாத்திரம் தூங்கவில்லை; தன்னுடைய கண்களை மூடவுமில்லை. விழித்துக்கொண்டே யிருந்தான். அரசன் திரும்பி வரவில்லையே, கோட்டை கொத்தளங்களைத் தாண்டி அவன் சுகமாக வரவேண்டுமே யென்னும் கவலையையுடையவனாகவும், அவன் வரும்வரை காவலாளர்களுடைய கண்களை மறைத்துக்கொண்டும் விழித்துக் கொண்டிருந்தான்.

நெடுநேரம் வரை அரசன் வராமலிருந்ததையறிந்து, வலிமிகுந்தவனான அவன் தனது இடம்விட்டுப் பெயர்ந்து இறங்கி வந்து, அரசனது தலைக்குமேல் வட்டமிட்டுப் பறந்துகொண்டு, "என் ஐயனே, தாங்கள் உறங்குகின்றீரா? ஹெக்டரைத் திரும்பப் பெற்றோ மென்று திருப்தியடைந்து விட்டீரா? தூங்குகின்றீரா? கிரேக்கச் சேனைகளிடமாவது, அவர்களது அரசனிடமாவது தங்களுக்குச் சிறிதும் பயமில்லையா?

தாங்கள் இங்கு இருப்பதைக் கொடியோனான அதிரிதீசன் கண்டுவிடுவானெனில், அவன் தங்களை இங்கேயே பிடித்து நிறுத்தி விடுவான்; இங்கிருந்து அகலவொட்டான்; இதுவரை உயிருடன் மீந்திருக்கும் தங்களுடைய புத்திரர்கள், தங்களை மீட்பதற்காக அவனிடம் மன்றாடவும் வேண்டி வரும். விருத்தரான தங்களை அவன் உயிருடன் விடுவதற்காக, அவர்கள், தங்களது அரண்மனையில் மீந்துள்ள ஸகலமான திரவியங்களையும் அவனுக்குக் கப்பங் கட்டவும் வேண்டிவரும்!" என்றான்.

இந்த வசனங்களைக் கேட்டு அந்த விருத்தன், நித்திரையினின்று எழுந்து, தனது நண்பனையும் எழுப்பினான். ஹெர்மீஸ் தேவன் முன் செல்ல, அவன் கோவேறு கழுதைகளை நுகத்தில்

பூட்டித் தானே தன்னுடைய கைகளைக் கொண்டு அவைகளைப் பிடித்துக்கொண்டு, சத்துருக்களின் பாளையத்தைச் சிறிதும் சந்தடியின்றிக் கடந்து ஊர்ந்து சென்முன்.

இவ்வாறு அவர்களது ரதமானது ஊர்ந்து நகர்ந்து சென்று, ஜோவ் தேவரின் புத்திரனும், அழிவில்லாதவனுமான ஜாந்தஸ்ஸின் மஞ்சள் நிறமுள்ள நதிக்கரைக்கு வந்தவுடன் இறகுகளுடன் இயங்குந் தேவனுன ஹெர்மீஸ் அவர்களுக்குக் கட்புலனுகாமல் மறைந்து விட்டனன். அவன் ஒரே கணத்தில் ஒலிம்பஸ் மலைக்குப் பறந்து ஓட்டம் பிடித்து விட்டான்.

அச்சமயம் அரோரா தேவியானவள், தன்னைச் சுற்றிலும், பொற்கிரணங்களைப் பொழிந்து கொண்டுவந்து, பளிச்சென்று மின்னும் வெளிச்சத்துடன் விளங்கிய கதவுகளிடையே நுழைந்து வந்து, பகற்பொழுதை யளித்தனள்.

ஞானமூர்த்தியும் அரசனும் தங்களது துக்கத்துக்குக் காரணமான பெரும் பாரத்தைத் தங்களது வாகனத்தில் ஏற்றிக்கொண்டு அதி கம்பீரமாகவும் நிதானமாகவும் இலியனுக்குச் சென்றனர்.

இலியன் கோபுரத்தின் உச்சியிலிருந்த கஸாந்திரா தேவியானவள், விருத்தனுன தனது தகப்பனுடைய வாகனங்கள் துக்கத்துடன் வருவதை முதன் முதலாகக் கண்ணுற்றனள்.

துக்கக் கோலங்கள் நிறைந்த அந்த வாகனங்கள் தன்னருகில் வந்தவுடன், அவள் தனது அருமைச் சகோதரன் பேச்சு மூச்சின்றிப் பாடையின் மேல் காலை நீட்டிக்கொண்டு கிடப்பதைக் கண்ணுற்றுத் தனது கண்ணீரை ஆருய்ச் சொரிந்தனள். அக்கண்ணீரானது, மடையையுடைத்துக் கொண்டு பாயும் ஆற்றைப் போல், அவளுடைய அழகான கண்களின்றும் ஊற்றெடுத்துப் பெருகி வழிந்து ஓடியது.

அச்சமயம் அவள் அலறியடித்துக்கொண்டு பின் வருமாறு கதறினுள்; அதனுல் இலியனிலுள்ளோர் அனைவரும் திடுக்கிட்டுப் போயினர் :—

"அதிர்ஷ்டஹீனர்களான ட்ராய் நகரப் பெண்களே! ஆண்மக்களே! இங்கு வாருங்கள்! உங்களது பார்வையை இங்குச் செலுத்துங்கள்!

முன்னுளில் உங்களது வீரன், தான் செய்த யுத்தங்களில் வெற்றி பெற்றுத் திரும்பி வந்த பொழுதெல்லாம், அவனை வரவேற்பதற்காக நீங்கள் ஜயகோஷத்துடனும், ஆடம்பரங்களுடனும், அளவுகடந்த ஆனந்தத்துடனும் திரள் திரளாக ஒருவரை யொருவர் மோதி உந்தித் தள்ளிக்கொண்டு முன் வந்தீர்களே! அது உண்மைதானெனில், பிணமாக மாறி வரும் அதே வீரனை, துக்கத்துடன் அலறியடித்துக்கொண்டும், கண்ணீர் வடித்துக்கொண்டும் வந்து ஏற்றுக்கொள்ளுங்கள்.

அப்பொழுது, அவனுடைய வெற்றிகளை யெல்லாம் உங்களுடைய வெற்றிகளென்றே கொண்டாடினீர்கள்! இப்பொழுது அவனுடைய அழிவினுல் உங்கள் அனைவருக்குமே அழிவுகாலம் வந்துவிட்டது!'' என்றனள்.

அந்த வசனங்களைக் கேட்ட ஜனங்கள் அனைவரும் கூட்டங் கூட்டமாகத் திரண்டு, மைதானத்தை நோக்கி வந்தனர். அந்த இலியன் கோட்டையினுள் ஓர் ஆணுயினும், பெண்ணுயினும் தங்கியிருக்கவில்லை. அவர்களனைவரும் ஒரே துக்கத்தில் ஆழ்ந்தவர்களாக விளங்கினர். அனைவருடைய முகங்களும் துக்கக் குறியுடன் விளங்கின. ட்ராய் நகர் அனைத்தையும் ஒரே துக்ககரமான கூக்குரல் கவர்ந்துவிட்டது.

சவத்தைச் சுமந்து வந்த வண்டியை அவர்கள் ஸீயாக் கோட்டை வாயிலின் முன் சந்தித்து, அதன் சக்கரங்களின் மேல் தொங்கிக்கொண்டு பலவாருகப் பிரலாபித்தனர்.

வீரனுடைய தாயும் மனைவியும், ஆருத் துயரத்தில் மூழ்கியவர்களாய், வெறிகொண்டு, அவனது வெளுத்த முகத்தை முத்தமிட்டனர். தங்களுடைய கூந்தல்களை விரித்துக்கொண்டு மயிர்களை வேரோடு பிடித்து இழுத்தனர். இவ்வாறு ஆருத் துயரத்துடன் துக்கித்துப் புலம்பிக்கொண்டு, அவர்கள், அந்தக் கோட்டை வாயிலிலேயே விழுந்து விட்டனர்.

அன்றையப்பொழுது அத்தனையையும் அவர்கள் அங்கேயே பெருமூச்சு விட்டுக்கொண்டும், புலம்பிக்கொண்டுமே கழித்திருப்பார்கள். ஆனுல் தேவர்களை நிகர்த்தவனுன பிரியம் மஹாராஜன் அவர்கள் அவ்வாறு செய்வதைத் தடுத்து விட்டான்.

அவன் அவ்வாறு அவர்கள் புலம்பிக்கொண்டிருப்பதைக் கண்ணுற்று, ''சிறிது பொழுது உங்களுடைய துக்கங்களை அடக்கிக் கொள்ளுங்கள்; முதலில் இந்தத் தேர் அரண்மனைக்குச் செல்லட்டும், அங்குச் சென்று சேர்ந்தபின், நீங்கள், உங்களுடைய மனம்போனபடி பிணத்தின்மேல் விழுந்து பிரலாபித்து உங்களுடைய ஆருத் துயரைக் கொண்டாடுங்கள்'' என்ருன்.

அவனது வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில், அலைகள் போல் திரண்டு வந்த ஜனங்கள், இரண்டு பிரிவாகப் பிரிந்தனர். அப்போது உண்டான இடைவழியின் வழியாக, அந்தச் சவந் தாங்கிய தேரானது, மெதுவாக உருண்டு சென்றது. அதன்பின், ஜனங்களும், முன்போல் ஒன்ருய்த் திரண்டு, அத்தேரின் பின் சென்றனர். அவர்கள் அரசனது அரண்மனைக்குச் சென்று அங்கு அப்பிணத்திற்குச் செய்யப்பட்ட சங்கடக் கிரியைகளனைத்தும் நிறைவேறும் வரையும் காத்திருந்தனர்.

இவ்வாறு அங்குக் கூடியிருந்த அவர்களனைவரும், ஓல மிட்டு, அலறியழுது ஓய்ந்தபின், அவர்கள் அந்தப் பிணத்தை சர்வ அலங்காரங்களும், ஆபரணங்களும் நிறைந்த ஒரு மெத்தை யின் மேல் வைத்தனர்.

பாடகர்கள், சோகரஸம் நிறைந்த பாடல்களைப் பாடிக் கொண்டு அந்தப் பிணத்தைச் சுற்றி நின்றனர். அவர்கள், அழுது புலம்பிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, துக்கத்தைக் குறிக்கும் ஒப்பாரிக் கண்ணிகளைப் பாடினர். அவர்கள் சிறிது நேரம் பாடுவதும், சிறிது நேரம் பாட்டை நிறுத்திவிட்டுக் கண்ணீர் வடிப்பதுமாக விருந்தனர். அவர்களுடைய பாடல்களை யனுசரித்து, அவர்களுடைய கண்களும் நீரை வடித்தன. துக்கத் துடன் அவர்கள் பாடிய பாடல்களின் ராகத்திலும் சோகரஸமே மலிந்து கிடந்தது. இவ்வாறு அவர்கள் தாங்கள் தங்களது மனத் தினின்றும் பொங்கியெழுந்து வந்த துக்கத்தை அடக்க முடியாமல் அழுதுகொண்டே, தங்களது அடிவயிற்றினின்றும் தேம்பி யரற்றினர். அவ்வாறு தேம்பியழுது, அரற்றி ஓய்ந்த பொழுது அவர்கள், பின்னும் தங்களது துக்கத்தையடக்க முடியாமல், மெய்ம்மறந்து பலவாறுகப் பிரலாபித்தனர். அவர்களது அழுகை யும், கூக்குரலும் தங்களுடைய இராகதாளங்களுக்கு இசைந் திருக்கவில்லை.

அங்குக் கூடியிருந்தோரனைவரும் மேற்கூறியவாறு அழுது கொண்டிருக்கையில், அந்த வீரனது பத்தினியானவள், முதன் முதலாக அவனது பிணத்தை நோக்கிப் பறந்து சென்றனள். பாலைப் போன்ற வெண்ணிறமான தன்னுடைய கைகளால், அவள் அவனது கழுத்தைச் சுற்றிப் பிடித்து, அணைத்துக்கொண்டு பின் வருமாறு பிரலாபித்தனள் :—

"அஹோ, எனது ஹெக்டரே! எனது பிரபோ! எனது பிராணநாதா! காளைப் பருவத்தில் தங்களை நமன் என் கண்முன் னின்று பறித்துக்கொண்டு போய்விட்டனனே! இருள் சூழ்ந்த மீளாவுலகங்களுக்கன்றோ தாங்கள் சென்றுவிட்டீர்கள்! இனித் திரும்பி வரமாட்டீர்களே! என்னைத் தவிக்கும்படித் தன்னந் தனியே விட்டுவிட்டீர்களே! நிர்க்கதியாக விட்டுவிட்டீர்களே! எனது ஜன்மம் பாழாகி விட்டதே! நான் தனியளாக ஆகிவிட் டேனே! அனாதையாக ஆகிவிட்டேனே!

கவலைகளும் கஷ்டங்களும் அனுபவித்து வந்த பொழுது, நாமிருவரும் நமது புத்திரனைக் கண்ணெடுத்துப் பார்த்து அக் கவலைகளையும், கஷ்டங்களையும் மறந்து வந்தோம்! எனக்கு இப் போது அவன் ஒருவனைத் தவிர வேறு கதியில்லை. அவனும் இப்போது தன்னை ஆதரிப்பவர் ஒருவருமின்றி ஓர் அனாதையாகி விட்டான்! அந்தப் புத்திரன் காளைப் பருவம் அடையப் போவது மில்லை; நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து எனது கண்களைக் குளிர்விக்கப் போவதுமில்லை.

இலியனது ரக்ஷகராக விளங்கிய மஹாவீரரே! தாங்கள் மறைந்து போய்விட்டீர்களே! இனி இந்த நகரமானது நெருப்புக் கிரையாகி இந்த மைதானத்தில் ஒரு சாம்பற் குவியலாகவே ஆகப் போகவிருக்கின்றது!

இந்த நகரத்துப் பெண்டிர்களை அன்னைபோற் காத்து ரக்ஷிக்க இனி யார் இருக்கின்றனர்? ஒருவரும் இல்லையே! இந்த நகரத்துச் சின்னஞ்சிறு குழந்தைகளையாவது, இந்த யுத்தக் கொடுமைகளினின்றும் காப்பாற்ற வல்லவர்களாயினும் யாரேனும் உளரோ? அவ்வாறு காப்பாற்றத் தக்கவர்கள் ஒருவரையாயினும் காணேனே!

சத்துருக்களுடைய கப்பல்கள் அக்குழந்தைகளை ஏற்றிக் கொண்டு அன்னிய நாடுகளுக்குச் செல்லுமே! அவர்களுடைய தாய்மாரான இந்நகரத்துப் பெண்டிர்கள், அவர்கள் எப்போது வரப்போகின்றனர் என்று காத்து ஏங்கித் தவிப்பரே!

என் மகனே! நீயும் அவர்களைப் போல், முரட்டு ஜனங்கள் வசிக்கும் நாடுகளுக்குச் செல்லலாகுமே! உன்னைப் பெற்ற எனக்குத் துணையாக என்னுடன் கஷ்டங்களை யனுபவித்துக்கொண்டு வரும் என் செல்வமே, நான் எவ்வாறு உன்னைப் பிரிந்திருப்பேன்?

நம்மை வென்றவர்களில் எவனாயினும் ஒருவன், உன்னைத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டு, உருவிய கத்தியுங் கையுமாய் உன்னை நடத்திச் செல்வனே! ஐயோ, தயவு தாக்ஷண்ணியம் என்பது சிறிதுமில்லாத ஒரு தலைவனுக்குப் பணிவிடைகள் செய்து வருமாறு உன்னை நியமித்து விட்டால், நான் என்ன செய்வேன்! எவ்வாறு சகிப்பேன்!

இன்றேல், யுத்தகளத்தில் மகானுன ஹெக்டரினால் கொல்லப்பட்டு மரணமடைந்து மண்ணிற் புதைந்துபோன ஒரு கிரேக்கனது மகனோ, அல்லது உடன் பிறந்தானோ, ஹெக்டர் இழைத்த பழிக்குப்பழி வாங்கிவிட வேண்டுமென்று கருதி, அவனது மரபிலுதித்த அவனது மகனான உன்னைக் கொன்று தனது பகையைத் தீர்த்துக் கொள்ளலாம்; உன்னை ட்ராய்க் கோட்டை மதில்களினின்றும் தலைகுப்புற உருட்டித் தள்ளிவிடலாம்; பகைவருக்குச் சிறிதும் இரங்காத உனது தந்தை தனது சத்துரு ஒருவனையாவது ஒருக்காலும் உயிருடன் தப்பிவிடவில்லை, யென்பது அனைவருமறிந்த விஷயமன்றோ?

இந்தக் கண்ணீர்களுக்கும் இந்தத் துக்ககரமான காட்சிகளுக்கும் அவருடைய அத்தகைய கொடுமைகளே மூல காரணம்! இவைகளனைத்தும் அக்கொடுமைகளினின்றும் விளைந்தவை; அவருடைய பெற்றோர்கள் இந்தத் துக்கங்களை பெரும் பொறுமையுடனேயே அனுபவித்து வந்தனர். அவர்கள் அனுபவித்து வந்த துக்கங்கள் மிகப்பலவே யெனினும், அவரது வாழ்க்கைத் துணைவியாகிய நான் அனுபவித்த கஷ்டங்களே அவற்றினும் அதிகம்!

என் பிராணநாதரே! தாங்கள் இறக்குந் தருணத்தில், தாங்கள் ஏன் என் கையைப் பிடித்துக் கொள்ளவில்லை? தங்களது கடைசியான கட்டளையை ஏன் தாங்கள் எனக்கு உரைக்கவில்லை? அத்தருணத்தில் தாங்கள் ஏதேனும், ஒரு வார்த்தையாவது சொல்லியே யிருப்பீர்கள்!

அது துக்கத்தைத் தருவதாகவேயிருந்தாலும், அது எனது ஆப்தவாக்கியமாகவன்றோ இருக்கும்! அந்த வாக்கியத்தை நான், என்றும் மறவாமல் மனனம் பண்ணிக்கொண்டே வருவேனே! அதைப் பிறருக்குச் சொல்லும் பொழுதெல்லாம், கண்ணுங்கண்ணீருமாக அழுதுகொண்டேயன்றோ உரைத்து வருவேன்! அது எனது மனத்தில் அழுந்திப் பதிந்து ஊன்றிக் கிடக்குமே! அதை நான் அடிக்கடிச் சிந்தித்தன்றோ வருவேன்! காற்றிற் பறந்து போகும்படி விட்டுவிடமாட்டேனே!" என்று அலறிப் புலம்பினுள்.

இவ்வாறு அலறிக் கொண்டு, அவள் தன்னைச் சுற்றியழுது கொண்டிருந்த பாங்கிமார்களை நோக்கிக் கதறினுள். அவர்களும் அவளை யனுசரித்து அணுங்கினுர்கள், பெருமூச்சுவிட்டார்கள்.

அதன்பின், துக்கத்திலாழ்ந்துகிடந்த ஹெக்டரின் அன்னை தன்னுடைய துக்கங்களைப் பின்வருமாறு உரைத்துக் கதறினள்:—

"என் மகனே! உத்தம மகனே! எனது பேரன்பிற்குப் பாத்திரனே! எனது வர்க்கத்தார் அனைவரினும், உன்னை அன்றோ தேவர்கள் மிகவும் மேலாக மதித்து வந்தனர்! நீ இறந்த பின்னுங் கூட, உன்னையன்றோ அந்த அமரர்கள் அன்புடன் கண்ணெடுத்துப் பார்த்து வருகின்றனர்!

என்னுடைய மற்றைய புத்திரர்களை அகிலேசன் சிறைப் பிடித்தான். அவர்களுக்குக் கையிலும் காலிலும் விலங்குகளை மாட்டினுன்; அவர்களைப் புறநாடுகளிலும் அடிமைகளாக விற்று விட்டான். எனது இந்த மகனை மாத்திரம் அவன் அவ்வாறு விலங்குகளுக்கு ஆளாக்கவில்லை.

இவனுடைய ஆத்மாவானது புகழுடனேயே பறந்து சென்று விட்டது. இவன் ஒருவிதமான பந்தங்களுக்கும் உட்படாமல், வீரனுகவே ஸ்திஜியாக் கரைக்குச் சென்று விட்டனன்!

மகனே! இரக்கமென்பது இம்மியளவுமில்லாத அந்தப் பாவியின் ஆணைப்படி உனது புனிதமான தேஹம், அவனது நண்பனது சமாதியைச் சுற்றிச் சுற்றித் தரதரவென்று இழுத்துக் செல்லப்பட்டது! அவனது அந்த நண்பனை நீ உனது கையாலேயே கொன்றனையன்றோ! இதனுல் அகிலேசன் அடைந்த பெருமையென்ன? ஒரு பிணத்தை அவமதித்தனனே! இதனுல் அவனுக்குக் கிடைத்த புகழென்ன, லாபமென்ன? அவனது பராக்கிரமமாவது உயர்ந்ததா?

இப்போது நீ, உயிரிழந்து பிணமாகவே கிடக்கினும், உயிருள்ளவனைப் போலவே, ஜீவகளை சிறிதும் குன்றுமலே விளங்குகின்றாய்! உன்னுடைய அங்கங்களும், அவயவங்களும் சிறிதும் வாட்டமின்றியே விளங்குகின்றன. உனது உடலில் ஒருவிதமான வேதனையோ, முகத்தில் ஒருவிதமான காயமோ, கீறலோ, கோளாறோ இல்லவேயில்லை. அவை சிவப்பாகவும் செழிப்பாகவுமே விளங்குகின்றன!

பாதாள லோகத்து நிழல்களை யலங்கரிக்குமாறு, பீபஸ் பகவானது வெள்ளி வில்லானது உன்னை அந்தப் பிரதேசத்திற்கு மெதுவாகவும் அனுயாஸமாகவும் யனுப்பியபொழுது நீ எவ்வாறு பொலிவுடன் விளங்கினையோ, அவ்வாறே இப்போதும் சிறிதும் வாடாமலும் வதங்காமலும் விளங்குகின்றனை!'' இவ்வாறு சொல்லிக்கொண்டு, அந்தப் பெருந்தேவி, அழுது புலம்பினாள்; உருகினாள்.

அவளுக்குப் பின், சோர்வுற்றிருந்த ஹெலனும் மிகுந்த உருக்கத்துடன், பிரமாதமாகத் துக்கம் பாராட்டிக் கொண்டு, அந்தப் பிணத்தின் அருகில் வந்தனள். ஜ்வலித்துக் கொண்டிருந்த வாய்க்கால்கள் போன்ற அவளுடைய கண்களினின்றும் நீரானது, உருண்டையான மணித்திரள்கள் போல் தடதடவென உதிர்ந்து வந்தது. அவள் பின்வருமாறு புலம்பியழுதனள்:—

"அன்புமிக்க நண்பரே! இனிய ஒழுக்கங்களையும், நிலையிற் பிரியாத மனவலிமையையும் தேவர்கள் தங்களுக்கு அளித்திருந்தனர். பாரிஸ் என்னை இந்த ட்ராய்க் கரைகளுக்கு எடுத்து வந்து இன்றைக்கு இருபது வருஷங்கள் ஆகின்றன. அந்த இருபது வருஷங்களையும் நான், துக்கியாகவே கழித்து வந்தேன்.

தேவர்களைப் போன்ற உருவத்துடன் விளங்கிய அந்தச் சுந்தரவதனன், வடிவழகன் ஆசைவார்த்தைகள் உரைத்துப் பேதையான என்னை இங்குத் தந்திரமாக இழுத்து வந்து விட்டனன். அதற்கு முன்னாக நான் எனது ஆவியைத் துறந்திருந்தேனாுல், இந்த அனர்த்தங்கள் ஒன்றுமே விளைந்திராது. நான் அப்போது இறந்து போயிருந்தால் நலமாக விருந்திருக்கும்!

என்றாலும் தாங்கள் என்னை நோக்கி ஒரு கொடுஞ் சொல்லாயினும் உரைத்ததில்லை! எனக்கு ஒருவிதமான தீங்கும் இழைத்ததில்லை! அந்த தௌர்ப்பாக்கியம் எனக்கு உண்டாயிருக்கவில்லை. தங்களது நாசத்துக்கு நான் தான் மூலம் என்று மற்றையோர் என்னை வைதும், திட்டியும், நிந்தித்தும் வந்தபொழுது, தாங்கள் என்னைப் பார்த்து இரங்குவீர்கள். தங்களைக்கண்டு நான் கண்ணீர் வடிப்பதை நிறுத்திக் கொள்வேன்.

தங்களது உடன் பிறந்தவன் எவனாயினும் ஒருவன், கர்வங் கொண்டு என்னை அலட்சியஞ் செய்தாலாவது, அல்லது தங்க

ளுடைய சகோதரிகளில் எவளாயினும் இறுமாப்புடன் என்னைப் புறக்கணித்து தனது ஆடையை ஒதுக்கிக் கொண்டு விலகிச் சென்றுலாவது, தாங்கள் அப்போது தங்களது இன்சொல்லால் என்னுடைய ஸகலமான வேதனைகளையும், சங்கடங்களையும் போக்கிவிடுவீர்கள். இவ்வாறு தாங்கள் எனது ரக்ஷகராக விளங்கி வந்தீர்கள்! தங்களது மறைவுக்கு நான் அழுது புலம்புகின்றேன்.

இந்த நாட்டிற்கு விளைந்த கேடுகளனைத்திற்கும், தங்களது மறைவிற்கும், எனது துக்கங்களுக்கும், பாவியேன் நானே காரணமானேனே என்றும் நினைத்து, என்னை நொந்து கொண்டே புலம்புகின்றேன். என்னால் விளைந்து விட்ட இந்த விதிப் பயனை நினைத்து நான், என் ஆயுள்ளளவும் அழுது புலம்புவேன்.

ஐயோ! தாங்கள் மறைந்து விட்டீர்களே! பாவியேன் ஹெலனுக்கு ஆறுதல் சொல்வார் ஒருவரும் இல்லையே! அவளை அன்புடன் ஆதரிப்பார் ஒருவரும் இலரே!

இந்த ட்ராயின் விசாலமான வீதிகளில் நான் ஒருவருக்கும் வேண்டாதவளாய் அலைந்து திரிவேனே! ட்ராய் நாட்டார் என்னைக் கண்ணெடுத்தும் பாரார்களே! என் இனத்தாரும் என்னைப் புறக்கணித்து விடுவார்களே! என்னைக் கண்டு அஸூயையும் கொள்ளுவார்களே! எனது தலைவிதியின் கொடுமையே கொடுமை!" என்று அதிஸுந்தரியான ஹெலன், துக்கத்துடன் கண்ணீரை ஆறுகப் பெருக்கிக் கொண்டு புலம்பினாள்.

எழில் வாய்ந்த அந்தக் கட்டழகி, அவ்வாறு கதறி யழுதைக் கண்ணுற்ற அவளுடைய அருகிலிருந்தோரனைவரும், மனங் கரைந்து வருந்தினர். அவளது துக்கமானது, அவளைச் சுற்றி அருகிலிருந்தோரனைவரையும் ஒரு தொத்து வியாதி போல் பற்றிப் பிடித்துக் கொண்டது. அது மேன்மேலும் ஒரு மலை யருவி போல் அதிகரித்து வருவதைக் கண்ட பிரியம் மஹா ராஜன், அதைத் தடுக்க நினைத்து, "துரோஜர்களே! முறைப்படி நடத்த வேண்டிய சடங்குகளைச் செய்யுங்கள்! காடுகளை யழியுங்கள்! சிதையை யடுக்குங்கள், பன்னிரண்டு நாட்களுக்கு நமக்கு ஒருவிதமான பயமும் இல்லை. சத்துருக்களாலாவது, ஒற்றர்களாலாவது நமக்கு ஒருவிதமான இடையூறுகளும் உண்டாகா. இறந்தவனுக்கு ஏற்ற மரியாதைகள் செய்வதற்கு அகிலேசன் அனுமதி தந்திருக்கின்றான்" என்றான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட கணமே அவ்விடம் குழுமியிருந்த துரோஜர்களனைவரும் தங்களுடைய கோவேறு கழுதைகளையும், காளைகளையும் தங்களுடைய கட்டை வண்டிகளிற் பூட்டிக்கொண்டு புறப்பட்டு, கோட்டை வாயிலின் வழியாக ஒரு கனத்த வெள்ளம் போல் ஓடிச் சென்று, ஐடாமலைச் சிகரத்திலிருந்த மரங்களை அடியோடு சாய்த்து, அவற்றைத் தங்களது நகரத்துக்கு உருட்டிக் கொண்டு வந்தனர். இந்தக் காரியத்தைச்

செய்து முடிப்பதற்கு அவர்களுக்கு ஒன்பது நாட்கள் பிடித்தன. அம் மரங்களைக் கொண்டு அவர்கள் நிறுவிய கட்டிடமானது ஒன்பதாம் நாளின் இறுதியில், ஆகாயத்தையே அளாவி நின்றது.

பத்தாம்நாட் காலையில், பகலவன் பளிச் சென்று பிரகாசிக்கையில், தேவர்களுக்குச் சமானமான அந்த வீரனது உடல், அந்தச் சிதைக்கு எடுத்துச் செல்லப்பட்டு, அதன் உச்சியின் மேல் வைக்கப்பட்டது. சிதைக்கு நெருப்பும் வைக்கப்பட்டது. அப்போது அதினின்றும் கொழுந்து விட்டுக் கொண்டு எழுந்து வந்த அக்கினியின் ஜ்வாலையையும், உருண்டுருண்டு சுழன்று உயர்ந்து சென்ற புகையையும், துரோஜர்களனைவரும், அருவிகளைப் போல் கண்ணீரைப் பொழிந்து கொண்டு நின்று, உற்று நோக்கினர்.

அருண பகவானது மகளான அரோரா தேவியானவள், இளஞ்சிவப்பான தன்னுடைய கிரணங்களுடன் மஞ்சுபடிந்திருந்த மைதானத்தில் பிரவேசித்தபொழுது, அந்த துரோஜக்குழாமானது மறுபடியும் அந்தச் சிதையைச் சுற்றிக் கொண்டு அழுது புலம்பியது.

அதன்பின், அவர்கள், அதுவரை அணையாமல் எரிந்து கொண்டிருந்த நெருப்பின் மேல் சாருயத்தை யூற்றி யணைத்தனர்.

அதன்பின், ஹெக்டர் நண்பர்களும், உடன் பிறந்தாரும், கண்ணீரை வடித்துக் கொண்டு அவன் பனிபோன்ற வெளுத்த எலும்புகளைப் பொறுக்கியெடுத்து, அவற்றை ஒரு பொற் கிண்ணத்திலிட்டு, அந்தப் பொற் கிண்ணத்தை இடையிடையே பொன்னூல்கள் கொண்டு நெய்யப்பட்ட அதி மிருதுவான ஊதாப்பட்டு வஸ்திரங்களால் மூடி மறைத்தனர்.

கடைசியாக அவர்கள், அந்தப் பொற் கிண்ணத்தின் மேல் புனிதமான மண்ணைப் பரப்பி அதன் மேல், இறந்தவனுக்கு ஞாபகச் சின்னமாக ஒரு சமாதியையும் எழுப்பினர்.

இந்தச் சடங்குகளனைத்தும், அன்றைய தினம் அருணோதயம் முதல் அஸ்தமனம் வரை நடந்தன. அவைகள் பூர்த்தியாகும் வரை பலசாலிகளான காவல்காரர்களும் ஒற்றர்களும் நாற்புறமும் நின்று காவல் காத்து வந்தனர்.

அதன்பின், ட்ராய் நாட்டாரனைவரும், சிறிதும் சந்தடி செய்யாமலும் மெதுவாகவும், வாடி வதங்கிய வதனங்களுடனும், திரும்பவும் பிரியம் மஹா ராஜனது அரண்மனைக்குச் சென்றனர்.

அங்குச் சென்று சேர்ந்த பின்னர், அவர்கள் அன்று தாங்களியற்றிய புண்ணிய கருமங்களினுல் தங்களுக்கு உண்டாயிருந்த களைகளைத் தீர்த்துக் கொண்டனர். இறந்தவனை முன்னிட்டுக்

கடைசியாகச் செய்யப்பட்ட விருந்திலும் கலந்து கொண்டனர். அவ்விருந்தில் அவர்கள் மிகுந்த சங்கடத்துடனேயே கலந்து கொண்டனர்! இவ்வாறு இலியன் பட்டணமானது தனது வீரனைக் கௌரவித்தது. மஹா வீரனான ஹெக்டரின் ஆத்தமாவும் சாந்தி யடைந்து துயின்றது.

இறைவனது அருளால் இலியதமும் முடிந்தது.

———0———

## இலியதம் என்னும் கிரேக்க காவியத்தை ஆங்கில மொழியில் காவியமாக இயற்றிய அலெக்ஸாண்டர் போப் என்னும் மகா கவியின் குறிப்பு

இதுகாறும், நாம் இலியதக் கதையை விஸ்தாரமாக உரைத்து விட்டோம். அகிலேசனது சினத்தையும், அதனுல் விளைந்த கேடுகளையும் கண்டோம்.

இவ்விஷயங்களை மாத்திரம் காவியமாகப் பாட வேண்டுமென்று ஹோமர் நோக்கங் கொண்டிருந்ததினுலும், ஹெக்டரின் மறைவின் பின் நிகழ்ந்த நடவடிக்கைகளைப் பாட வேண்டியது தமது வரம்புக்கு மிஞ்சியது என்றும், அது பெருங் காவியங்களின் முறையன்று என்றும் கருதியபடியால் அவர் அவைகளைப் பாடவில்லை.

என்ருலும், ஹெக்டரின் மறைவின்பின், இலியனில் நிகழ்ந்த விஷயங்களை யறிய நம்முடைய வாசகர்கள் ஆவலுள்ளவர்களாக விருப்பார்களாதலால், அவற்றைக் கீழே சுருக்கமாக எழுதுகின்ருேம்.

அவ் விஷயங்கள் ரோமானிய மகா கவியாகிய விர்ஜில் என்பவரியற்றிய இனியதம் என்னும் காவியத்தில் இரண்டாம் அத்தியாயத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

கிரேக்கர்கள் ஒருமரக் குதிரையினுட் புகுந்து கொண்டு, அதை ட்ராயினுட் புகுத்தி, அது அங்குச் சென்ற பின் வெளிப்பட்டு, ட்ராய் மக்களை வென்று, அந்நகரைத் தங்கள் வசமாக்கிக் கொண்டனர்.

இலியதத்தில் இருபத்திரண்டாம் அத்தியாயத்தில், ஹெக்டர் தனது மரண சமயத்தில் அகிலேசனை நோக்கி யுரைத்த பிரகாரம், அகிலேசன், பாரிஸ் விடுத்த அம்பு ஒன்றினுல், தனது குதிக்காலில் தாக்குண்டு, ட்ராய் நகரின் முன்னுல் பட்டு விழுந்து தனது பிராணனை விடுத்தான். அதிர்ஷ்டஹீனனுன பிரியம் மஹாராஜன், அகிலேசனது மகனுன பிர்ரஸ் என்பவனுல் கொல்லப்பட்டான்.

அகிலேசன் இறந்தபின், அஜாக்ஷன் வல்க்கனது கவசத்துக்காக யுலிஸ்ஸீஸுடன் போராடித் தோற்று, நோவுங்கொண்டு, தன்னுயிரைத்தானே மாய்த்துக் கொண்டான்.

பாரிஸ் இறந்தபின்னர், ஹெலன் பாரிஸ்ஸின் ஸஹோதரனுன தைவோவஸுவைக் கலியாணஞ் செய்து கொண்டாள். ட்ராய் நாடு கிரேக்கர்களது வசமான பொழுது, அவள் தனது

முதலாவது கணவனுன மாேைல்லாஸனுடன் சமாதானம் செய்து கொள்ள நினைத்து, அந்தத் தைவோவஸாவைக் கிரேக்கர்களிடம் காட்டிக் கொடுத்து விட்டனள். மேைல்லாஸனும் அவளைத் திரும்பவும் பிரியத்துடன் ஏற்றுக் கொண்டான்.

ட்ராயினின்று திரும்பி வந்தபின், ஆகமனன் தனது மனைவி கிருதமனஸ்திரீயின் சதியினுல், இஜிஸ்தஸ் என்பவனுல் கொல்லப்பட்டான். இந்த இஜிஸ்தஸ் என்பவன், ஆகமனன் ட்ராய்க்குச் சென்றிருந்த பொழுது, கிருதமனஸ்திரீயின் சோரநாயகனுக விருந்து அவளுடன் ரமித்து வந்தவன்.

தயோமதியானவன், ட்ராயின் வீழ்ச்சியின் பின்னர், தனது நாட்டுக்குச் செல்ல, அந்நாட்டார் அவனைப் புறக்கணித்து விட்டனர் ; துரத்தியே விட்டனர். ஈஜியேல் என்னும் அவனுடைய கற்பில்லா மனைவி அவனைக் கொல்லவும் ஏற்பாடு செய்தனள். அவன் கடைசியாக அப்பூலியாவுக்குச் சென்ருன். அந்நாட்டு அரசனுகிய தானூஸ் என்பவன் அவனை அன்புடன் வரவேற்று ஆதரித்து, உபசரித்து, அவனுக்குத் தனது ராஜ்யத்தில் பாதியையும் தந்தனன். அவன் எவ்வாறு தனது அந்தியதசையை யடைந்தான் என்பது நிச்சயமாகத் தெரியாது.

நெஸ்டார் தமது தேசமாகிய பைலாஸில் தமது மக்களுடன் சுகமாகக் காலங் கழித்தார்.

யுலிஸ்ஸீஸாம், கடலிலும் கரையிலும் பிரயாணங்கள் செய்து, கணக்கற்ற கஷ்டங்களும் நஷ்டங்களும் அனுபவித்துக் கடைசியாகத் தனது சொந்த நாடாகிய இத்தாக்காவுக்கு க்ஷேமமாக வந்து சேர்ந்தான். அவனுடைய யாத்திரைகள், அதிசயம் என்னும் கிரந்தத்தில் ஹோமராலேயே சொல்லப்பட்டிருக்கின்றன.

———o———

